ஸ்ரீ



# ஸ்ரீமஹாபாரதம்.

## அநுசாஸனபர்வம்



கும்பகோணம் காலேஜ், ரிடயர்ட் ஸம்ஸ்க்ருதபண்டிதர்

மஹாவித்வான்

சதாவதானம், ஸ்ரீ - உபய - வே॥ ஸ்ரீ

**தி. ஈ. ஸ்ரீநிவாஸாசாரியர்**

அவர்களால் மொழிபெயர்க்கப்பெற்று,

கும்பகோணம் காலேஜ், ரிடயர்ட் தமிழ்ப்பண்டிதர்

**ம. வீ. இராமாநுஜாசாரியரால்**

பதிப்பிக்கப்பெற்றது.

விலை ரூபா 6: தபால்சார்ஜ் வேறு.

MADRAS:

PRINTED AT THE COMMERCIAL PRESS,

TRIPLICANE.

1923

ஸ்ரீ:

## ஸ்ரீ மஹாபாரதம்

# அநுசாஸன பர்வம்.



## விஷயஸூசிகை.

### தானதர்மபர்வம்.

6353

அத்யாயம். பக்கம்.

விஷயஸூசிகை.



அத்யாயம்.

விஷயஸூசிகை முற்றிற்று.

ஸ்ரீ:

ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:.

ஸ்ரீ க்ருஷ்ணத்வைபாயநாய நம:.

# ஸ்ரீ மஹாபாரதம்



## அநுசாஸநபர்வம்.

### முதலாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம்.



1 நாராயணம் நமஸ்க்ருத்ய நரஞ்சைவ நரோத்தமம்।
தேவீம் ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோ ஜயமுதீரயேத்॥

**(யுதிஷ்டிரர் சோகித்ததும், பீஷ்மர் கௌதமியையும் வேடன்முதலியோரையும்பற்றிய கதையைச் சொல்லித் தேற்றியதும்.)**

யுதிஷ்டிரர், [2]சரதல்பத்திற்படுத்திருக்கும் மஹாத்மாவும் தோல்வியடையாதவருமான பீஷ்மரிடம்அணுகி நமஸ்கரித்துப் பின்வருமாறு வினவலானார். "பிதாமஹரே! யாருக்கும்தெரியாத பலவகைகளான ஆறுதல்களை நீர் உரைத்தீர். இப்படிப்பட்ட இந்தச்சொல்லைக் கேட்டும் என்மனத்தில் ஆறுதலுண்டாகவில்லை. பிதாமஹரே! இந்தவிஷயத்தில் ஆறுதலுக்குப் பலவிதமானகாரணங்களை உரைத்திருக்கிறீர். பலகாரணங்களாலும், தீமைசெய்தகுற்றத்திற்கு ஆறுதலேது? வீரரே! உமதுசரீரம் அம்புகளால்நிரப்பப்பட்டுக் கடும்புண்பட்டிருப்பதைக்கண்டு என்பிழைகளையே நினைக்கும்எனக்கு ஆறுதலுண்டாகவில்லை. புருஷப்புலியே! உதிரத்தால் அங்கம்நனைந்து, அருவியைப்பெருக்கும் மலைபோன்ற உம்மைப்பார்த்து, மழைக்காலத்துத் தாமரைமலர்போலக் கஷ்டப்படுகிறேன். பிதாமஹர் எனக்காக யுத்தத்தில் [3]எதிரிகளால் இந்நிலைமையை அடைவிக்கப்பட்டதைப்

---

1 உரைவிசேஷத்தை ஆதிபர்வம் முதலாவதுபக்கம் குறிப்பிற்காண்க.

2 பாணங்களாலாகிய சயனம்.

3 எதிர்த்து யுத்தஞ்செய்தவர்களான தங்களாலென்பது கருத்து.

பார்க்கிலும் அதிககஷ்டம் எனக்கு என்னவிருக்கிறது? மற்ற அரசர்களும் புத்ரர்களோடும் பந்துக்களோடும் எனக்காக மரணமடைந்தனர். இதைவிட அதிககஷ்டம் என்ன இருக்கிறது? அரசரே! நாங்களும் த்ருதராஷ்ட்ரபுத்ரர்களும் ஆசைக்கும் கோபத்திற்கும்வசப்பட்டு இந்தஇகழத்தக்ககார்யத்தைச்செய்து என்னகதியை அடையப் போகிறோம்? ஜனங்களுக்கதிபரே! இந்நிலைமையை அடைந்திருக்கும் உம்மைப் பாராமலிருப்பதே துர்யோதனனுக்கு நலமென்றுநினைக்கிறேன். அரசரே! வேண்டினவர்களுக்கு மரணத்தையும் துயரத்தையும்செய்தநான் வெறும்தரையில் கஷ்டப்படும் உம்மைப்பார்த்து ஆறுதலையடையாமலிருக்கிறேன். குலத்தைக்கெடுத்த துராத்மாவான துர்யோதனன், க்ஷத்திரியதர்மமாகிய இந்தயுத்தத்தில் ஸேனைகளோடும் தம்பிமாரோடும் கொல்லப்பட்டான். அவன், இப்போது தரையில் விழுந்திருக்கும் உம்மைப் பார்க்கவில்லையே. அதனால் மரணமே மேலென்றுநினைக்கிறேன். நான் இவ்வுலகத்தில் ஜீவித்திருப்பதை மேலாகநினைக்கவில்லை. வீரரே! வ்ரதம்தவறாதவரே! முன்னமே நானும் ஸஹோதரர்களுடன்கூடப் பகைவர்களால்கொல்லப்பட்டிருப்பேனாயின், பாணங்களினால்பீடிக்கப்பட்டு மிகத்துயரப்படும்உம்மைப் பார்த்திருக்கமாட்டேன். ஓ! வேந்தரே! நாங்கள் பாவச்செய்கையுள்ளவர்களாகவே ப்ரம்மதேவரால் படைக்கப்பட்டோமென்பது திண்ணம். அரசரே! எனக்கு நன்மைசெய்யவிரும்புவீராயின் வேறு உலகத்திலாவது நாங்கள் பாபத்தினின்றுவிடுபடும்வகையை எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"சிறந்தபாக்யமுள்ளவனே! கர்மத்தின்வசத்திலிருக்கும்உன்னைக் காரணமென்று நீ நினைப்பது எப்படி? இந்தக்கர்மங்களின்ஸ்வரூபம் புலன்களுக்கும்எட்டாத நுட்பமன்றோ? இந்தவிஷயத்தில் யமன், கௌதமி, காலன், வேடன், ஸர்ப்பம்இவர்களின்ஸம்பாஷணையாகிய இந்தப்பழமையானசரித்ரத்தைக் கூறுகின்றனர். காமக்ரோதங்களற்ற கௌதமியென்னும் ஒருகிழவி இருந்தாள். அவள், பாம்பினால்கடிக்கப்பட்டுஇறந்துபோன தன்மகனைக் கண்டாள். பிறகு, அர்ஜுனகன்என்னும் ஒருவேடன் கோபமுற்று நரம்புச்சுருக்கினால் அந்தஸர்ப்பத்தைச் சுருக்கிட்டுக் கௌதமியினிடம்கொண்டுவந்து, 'மிக்கபாக்யமுள்ளவளே! உன்புத்ரனைக்கொன்ற நீசப்பாம்பு இதுதான். இதை எவ்வகையால் கொல்லலாம்? தீயில்போடலாமா? துண்டுதுண்டாகத் துணிக்கலாமா? சீக்கிரம்சொல். குழந்தையைக் கொன்ற இந்தப்பாவி நீண்டகாலம்ஜீவித்திருப்பது தகாது' என்று

சொன்னான். அதைக்கேட்ட கௌதமி, 'அர்ஜுனகா! நீ அறிவில்லாதவன். இந்தப்பாம்பை நீ கொல்லக்கூடாது; இதை விட்டுவிடு. விதியிருக்கும்போது மதியுள்ளவன் எவன் தன்னைப்பெரியவனாக நினைப்பான்? புண்ணியத்தினால் லேசாயிருக்கும்மனிதர்கள் ஜலத்தில் ஓடங்கள் மிதப்பதுபோல, [1]உலகத்தில் மிதக்கின்றனர். பாவத்தினால் பாரமுள்ளவர்கள் ஜலத்தில்விழுந்தஆயுதம்போல [2]அமிழ்ந்துபோகின்றனர். இப்படி இந்த ஸர்ப்பத்தைக்கொல்வதனால் இந்தக்குழந்தை இறவாமலிராது. இந்தஸர்ப்பம்ஜீவித்திருந்தால் அது உனக்கு என்ன கெடுதலாகும்? இந்தஉயிருள்ளப்ராணியின் உயிரைப்போக்குவதால் அளவற்றஉலகத்தில் எவன் இறப்பில்லாமலிருப்பான்?' என்றுசொன்னாள். அதற்கு வேடன், 'எனக்குத்தெரியும். எப்போதும் யோகத்திலிருக்கும்பெரியோர்கள் இவ்வுலகத்தில் குணங்களையும் குற்றங்களையும் அறிகிறதில்லை. ஸ்வார்க்கத்தைப்பற்றியஅவர்களின் உபதேசங்கள் நல்லவைகளாகவேயிருக்கும். ஆதலால், இந்தநீசஸர்ப்பத்தைக்கொல்லப்போகிறேன். சாந்தியைவிரும்புகிறவர்கள் நேர்ந்தகாலத்தையும் விட்டுவிடுவார்கள். கார்யத்தைக் கவனிப்பவர்கள் (ஸமயம்நேர்ந்தபொழுது அக்கார்யத்தைச்செய்து) உடனே துயரத்தை விட்டுவிடுவார்கள். என்றும்துயரப்படுகின்றவர்களுக்குப் பாக்யம் கெடுகின்றது. ஆகையால், இந்தப்பாம்பைக்கொன்றதனால் துன்பத்தை விட்டுவிடு' என்றுசொன்னான். கௌதமி, 'நம்போன்றவர்களுக்குத் துயரமேயில்லை. ஸாதுக்கள் எப்போதும் தர்மத்தையே உயிராகக்கொண்டவர்களல்லரோ? நாள்தோறும் துயரப்படுகிறவர்கள் [3]சிறுவர்கள். நான் அப்படியல்லேன். தர்மம் கெடும். இந்தஸர்ப்பத்திற்கு நான் அதிகாரியல்லேன். ப்ராம்மணர்களுக்குக் கோபமேயிருப்பதில்லை. கோபத்தினால் பிறரைப்பிடிப்பது ஏது? நல்லவனே! கோபத்தைத் தணித்துப்பொறுத்துக்கொள். இவ்வரவத்தை விட்டுவிடு' என்று சொன்னாள். வேடன், 'இதைக்கொல்வதனாலுண்டாகும் புண்யமே எனக்கு அழிவில்லாதலாபமாகும். உடனேகிடைக்கும்லாபம் தேவபூஜைகளினாலுண்டாவதைவிடச் சிறந்தது. காலக்ரமத்தினால்கிடைக்கும்புண்யலாபம் இப்படிப்பட்டஅயோக்யனைக்கொல்வதனால்உடனே கிடைக்கும்' என்றுசொன்னான். கௌதமி, 'பகைவனைப்பிடித்துக் கொல்வதனால் என்னபயன்கிடைக்கும்? கையிலகப்பட்ட சத்ருவை விடாமலிருப்பதனால் மனத்திற்கு என்னமகிழ்ச்சியுண்டாகும்? நல்லவனே! நமது பாம்பின்விஷயத்தில் நான் ஏன் பொறுமலிருப்பேன்?

[1]பற்றற்றிருக்கின்றனர். [2]நரகத்தை அடைகின்றனர். [3]அறிவில்லாதவர்.

முக்திக்குஸாதனமாகியகார்யத்தை நான் ஏன்செய்யாமலிருப்பேன்?’ என்றுசொன்னாள். வேடன், ‘கௌதமியே! இந்தஒருஸர்ப்பத்தினால் அனேகரைக்காப்பாற்றுவது தருமமேயன்றி [1]அனேகரால் இவ்வொன்றைக்காப்பாற்றுவது தகாது. குற்றஞ்செய்தவனைத் தர்மத்திற்காக விலக்கிவிடுகின்றனர். நீயும் இந்தப்பாவியானஸர்ப்பத்தை விலக்கிவிடு’ என்றுசொன்னான். கௌதமி, ‘வேடனே! இந்தப்பன்னகம் கொல்லப்படுவதனால் என்புதல்வன் ஜீவிக்கப்போவதில்லை. இதைக்கொல்வதில் வேறொருப்ரயோஜனமும் எனக்குத் தெரியவில்லை. வேடனே! ஆகலால், ஸர்ப்பத்தை உயிருடன் விட்டுவிடு’ என்றாள். வேடன், ‘தேவேந்திரன் வ்ருத்ராஸுரனைக்கொன்று மேன்மையையடைந்தானல்லனோ? சிவபெருமானும் யஜ்ஞபுருஷனைக் கொன்று ஹவிர்ப்பாகத்தை அடையவேயடைந்தார். தேவர்கள்செய்ததை நீயும்செய். சீக்கிரம் ஸர்ப்பத்தைக் [2]கொல். உனக்கு ஸந்தேஹம்வேண்டாம்’ என்று சொன்னான். சிறந்தமஹிமையுள்ள அந்தக் கௌதமி,வேடனால் ஸர்ப்பத்தைப்பற்றிப் பலமுறைஉரைக்கப்பட்டும், அதற்குத்தீங்குசெய்ய எண்ணங்கொள்ளவேயில்லை. சுருக்கினால்நெருக்கப்பட்டுக் கொஞ்சம்மூச்சுவிட்டுக்கொண்டிருந்த அந்தப்பன்னகம் கஷ்டப்பட்டுத் தைர்யப்படுத்திக்கொண்டு மனிதனைப்போல மெல்ல வார்த்தைசொல்லத்தொடங்கிற்று. ‘அர்ஜுனகா! தெரியாதவனே! இந்தக்குழந்தைவிஷயத்தில் என்குற்றமேது? பராதீனமாயிருக்கும் என்னை நான் எண்ணாமலே யமன் கட்டளையிட்டான். அவன் கட்டளையினால் இந்தச்சிறுவனைக்கடித்தேனேயன்றி இவன்மேல் பகையினாலாவது உணவின்விருப்பத்தினாலாவது நான் கடிக்கவில்லை. வேடனே! பாவம் ஏதாவதிருக்குமாயின் அது அந்தயமனுடையது’ என்றது. வேடன், ‘நாகமே! மற்றொருவனுக்குவசப்பட்டு நீ இந்தத் தீங்கைச்செய்திருந்தாலும் நீயும் இதற்குக் காரணந்தானே? ஆதலால், நீயும் குற்றவாளிதான். ஸர்ப்பமே! ஒருமண்பாத்ரம்செய்வதற்குத் தடி சக்ரமுதலியவையும் காரணங்களாகநினைக்கப்படுவது போல நீயுமாகிறாய். பாவம்செய்தவனை நான் கொல்லவேண்டும். பன்னகமே! நீயும் பாவம்செய்தவனாகிறாய். ஸர்ப்பமே! உன்னையும் இதற்குக் காரணமாகத்தானே நீயேசொல்லுகிறாய்’ என்றுசொன்னான். ஸர்ப்பம், ‘அந்தத்தடிசக்ரம்முதலியவையெல்லாம் எப்படித்

1 ‘இது ஒன்றைக்கொன்றால் அனேகரைக் காப்பாற்றியதாகும். இல்லாவிட்டால் இதனால்கடிக்கப்பட்டு அனேகர் இறந்துபோவார்’. என்பது கருத்து.

2 கொல்ல அனுமதிகொடு என்பதுபொருள்.

தாமேகார்யம்செய்யத்தகாதவையோ அப்படித்தான் நானும். ஆத
லால், என்மேல் குற்றத்தை நீயே நினைக்கமாட்டாய். அல்லது அந்த
மண்பாத்திரத்தின்காரணங்களும்ஒன்றையொன்று நடத்துகின்றவை
யென்று நீ நினைக்கிறாயாயின் ஒன்றையொன்று நடத்துவதனால் எது
நடத்துவது, எதுநடத்தப்படுவது என்பதில் ஸந்தேஹமும் உண்டா
கிறது. இவ்வாறாயின், என்மேல்மட்டும்குற்றமில்லை. நான்மட்டும்
குற்றவாளியல்லேன். குற்றவாளியல்லாதவென்னை வதம்செய்யத்
தகாது. பிழையிருப்பதாக நீ நினைத்தால் அந்தப்பிழை பொதுவில்
ஏற்படும்' என்றுசொல்லிற்று. வேடன், 'இதற்குக்காரணமாகாவிடின்
இதைச் செய்யாதவனாயிருப்பாய். மரணத்துக்கு நீயும் காரணம்.
ஆதலால், நீ கொல்லத்தகுந்தவனென்று நான் நினைக்கிறேன். பன்
னகமே! கெட்டகார்யம் செய்யப்பட்டும் அது செய்தவனைப்பற்றாதா
யின் அந்தக்காரணத்தினால் குற்றம்செய்தவனெவனும் [1]கொல்லத்
தக்கவனாகான். ஏன்மிகுதியாகப்பேசுகிறாய்?' என்றுசொன்னான்.
ஸர்ப்பம், 'செய்யப்படும்பொருள் ஒன்றில்லாவிடின், காரணமிருந்தா
லும் இல்லாவிடினும் செய்கையுண்டாகாது. ஆதலால், இவை
எல்லாம் ஸரியானகாரணங்களாகவிருக்க எனக்குமட்டும் என்ன
விசேஷமென்பதைச் சொல்லவேண்டும். வேடனே! உண்மையில்
நானும் காரணமென்று நீ நினைத்தால் இந்தவிஷயத்தில் என்னையும்
ஏவுகிறவன் வேறுஒருவன் இருக்கவேண்டும். ஒருப்ராணியைக்கொல்
வதில் உனக்கு என்னபயன்?' என்று கேட்டது. வேடன், 'கெட்ட
புத்தியுள்ளவனே! நீசப்பாம்பே! குழந்தையைக்கொன்ற கொடுஞ்
செய்கைக்காரனாகிய நீ என்னால் கொல்லப்படவேண்டியவன்தான்.
கொல்லப்படத்தக்கவனாயிருப்பவன் என்ன அதிகமாகப்பேசுகிறாய்?'
என்று சொன்னான். ஸர்ப்பம், 'வேடனே! யாகத்தில் ஹோமங்
களைச்செய்யும் ரித்விக்குக்கள் எப்படி அதன்பயனை அடைவதில்லை
யோ அப்படியேதான் நானும் இந்தச்செய்கையின்பயனுக்கு உரிய
வனல்லேன்' என்றது. யமனால் ஏவப்பட்ட அந்தப்பன்னகம் அவ்
வாறு சொல்லிக்கொண்டிருக்கையில், யமனும் அங்கேவந்து பன்னகத்
தைப்பார்த்துப் பேசலானான். 'பன்னகமே! நான் காலத்தினால் ஏவப்
பட்டு உன்னை ஏவினேன். இந்தக்குழந்தையென்னும் ப்ராணியின்
மரணத்திற்கு நீயும் காரணமல்லை; நானும்காரணமல்லேன். காற்றா
னது பலவிடங்களிலிருந்து மேகங்களை இழுத்துக்கொண்டுவரும்
போது அவைகள் காற்றுக்கு உட்பட்டிருப்பதுபோல நான் காலத்து

[1] குற்றத்திற்குத் தண்டனையே அற்றுப்போமென்பது கருத்து.

க்குஉட்பட்டிருக்கிறேன். ஸர்ப்பமே! ஸாத்விக ராஜஸ தாமஸங்களாகிய தன்மைகளனைத்தும் காலத்தை அநுஸரித்தேப்ராணிகளிடத்தில் செல்லுகின்றன ஸர்ப்பமே! ஆகாயத்திலும் பூமியிலுமுள்ள ஜங்கமங்கள் ஸ்தாவரங்களனைத்தும் காலத்தால் நடத்தப்படுகின்றவை. இவ்வுலகமே காலத்துக்குட்பட்டது. இவ்வுலகத்தில் செய்கைகளும் ஒழிவுகளும் அவற்றின்பயன்களும் அனைத்தும் காலத்தின் வசத்திலிருப்பவையென்று நினைக்கப்படுகின்றன. பன்னகமே! ஆதித்யன், சந்த்ரன், விஷ்ணு, ஜலம், காற்று, இந்த்ரன், அக்னி, ஆகாயம், பூமி, மித்ரனென்னும் தேவதை, மேகம், வஸுக்கள், அதிதிதேவதை, நதிகள், ஸாகரங்கள், சந்தி, அசந்தி இவையெல்லாம் அடிக்கடி காலத்தினால் ஆக்கவும் அழிக்கவும் படுகின்றன. ஸர்ப்பமே! இவ்வாறு அறிந்திருந்தும் என்னைக் குற்றவாளியாக நீ நினைப்பது எவ்வகை? இப்படியிருந்தும் என்னிடத்தில் பிழையிருக்குமாயின் நீயும் பிழையுள்ளவன்தான்' என்றான். ஸர்ப்பம், 'ம்ருத்யுவே! உன்னைக் குற்றவாளியென்றாவது குற்றமில்லாதவனென்றாவது நான் சொல்லவில்லை. உன்னால் நான் ஏவப்பட்டவன் என்றமட்டுந்தான் சொல்லுகிறேன். காலத்தின்மேல் குற்றமிருந்தாலுமிருக்கட்டும்; இல்லாமலிருந்தாலுமிருக்கட்டும். குற்றம் நாம் பரிசோதிக்கவேண்டியதன்று. ஏனெனில், அதற்கு நாம் அதிகாரிகளல்லோம். அந்தக்குற்றத்தை என்னிடத்திலிருந்து விலக்கிக்கொள்வது எனக்கு எப்படி முக்யமோ அப்படியே ம்ருத்யுவுக்கும் குற்றமில்லாமலிருக்க வேண்டுமென்பது என்னுடையப்ரயோஜனம்தான்' என்று ம்ருத்யுவுக்குச்சொல்லி, அர்ஜுனகனைப்பார்த்து, 'ம்ருத்யுசொன்னதைக் கேட்டாயா? நிரபராதியான என்னை நீ சுருக்கிட்டுத் துன்பப்படுத்தத்தகாது' என்று சொல்லிற்று. வேடன், 'ஸர்ப்பமே! ம்ருத்யுவின்சொல்லையும் உன்சொல்லையும் கேட்டேன். பன்னகமே! அவ்வளவினாலேயே உன்னிடத்தில் குற்றமில்லாமை ஏற்படவில்லை. இந்தச்சிறுவன் இறந்துபோனதற்கு நீயும் ம்ருத்யுவும்தாம் காரணம். உங்கள் இருவரையும் காரணங்களாக நினைக்கிறேனேயன்றி, காரணமாயிருக்கும் உன்னைக் காரணமல்லாதவனாக நான் நினைக்கவில்லை. பெரியோர்களுக்குத் துன்பத்தைத் தரும்துராத்மாவும் கொடியவனுமான ம்ருத்யுவையும் இகழவேண்டும். பிறருடைய தீங்குக்குக் காரணமாகிய உன்னையுமே நான் கொல்லப்போகிறேன்' என்றுசொன்னான். யமன், 'நாங்களிருவரும் ஸ்வதந்த்ரமற்றவர்கள்; காலத்துக்குட்பட்டவர்கள்; கட்டளையிட்டதைச் செய்பவர்கள். நீ நன்றாக ஆராய்ந்து பார்ப்பாயாயின் எங்களிடத்தில்

குற்றம் நினைக்கத்தகாது' என்று சொன்னான். வேடன், 'யமனே! பன்னகமே! நீங்களிருவரும் காலத்திற்குட்பட்டவராயின், உங்கள் மேல் எனக்குஸந்தோஷமாவது கோபமாவது ஏன்உண்டாகவேண்டும்? இதை அறியவிரும்புகிறேன்' என்று கேட்டான். ம்ருத்யு, 'வேடனே! (உலகத்தில்) எந்தச்செய்கையுண்டானாலும் அதெல்லாம் காலத்தினால் நடத்தப்படுவதென்பதை முன்னமே உண்மையாக நான் சொல்லியிருக்கிறேன். ஆதலால், நாங்களிருவரும் காலத்திற்கடங்கினவர்கள்; சொன்னதைச்செய்பவர்கள். வேடனே! நீ எங்களைக் குற்றவாளிகளாக ஒருகாலும் நினைக்கத்தகாது' என்று சொன்னான். அந்தத்தர்மவிஷயமான ஸந்தேஹம் வந்தபோது, காலபுருஷனே நேரில்வந்து, பன்னகத்தையும் ம்ருத்யுவையும் அர்ஜுனகனென்னும் வேடனையும்பார்த்துச் சொல்லலானான். 'வேடனே! நானும்இந்த யமனும் இந்தப்பன்னகமும் இந்தக்குழந்தை இறந்ததற்குமுதற்காரணங்களல்லோம். ஆதலால், நாங்கள் குற்றவாளிகளல்லோம். அர்ஜுனகனே! இந்தக்குழந்தைசெய்தகர்மந்தான் எங்களைத் தூண்டிற்று. இவனிறந்ததற்குக்காரணம் வேறுஒருவனல்லன். தன் கர்மத்தினாலேயே இவன் கொல்லப்பட்டான். இவன்செய்த கர்மத்தினாலேயே இவன் மரணமடைந்தான். இவன் மரணத்திற்குக்காரணம் இவன் கர்மந்தான். நாங்களனைவரும் கர்மத்திற்குட்பட்டவர்கள். இவ்வுலகத்தில் கர்மம் ஒருபாகஸ்தன். ஒவ்வொருவனுக்கும் தன்தன் வினைச்சம்பந்தமே இலக்கணம். கர்மங்கள் எங்களை ஏவுகிறதற்குத்தக்கபடிதான் நாங்கள் ஒருவரையொருவர் ஏவுகின்றோம். செய்கிறவன் மண்ணுண்டைகளினால் விரும்பினவற்றையெல்லாம் செய்துகொள்வதுபோல, மனிதன் கர்மங்களைச்செய்து அவற்றின்பலனைப்பெறுகிறான். நிழலும்வெய்யிலும் எப்போதும்இடைவிடாமல் நெருங்கிச் சேர்ந்திருப்பதுபோல, கார்யமும் கர்த்தாவும் முன்வினைகளால் சேர்க்கப்பட்டிருக்கின்றனர். ஆதலால், நான், யமன், ஸர்ப்பம், நீ, இந்த ப்ராம்மணக்கிழவி இன்னும்யாரும் இந்தச்சிசுமரணத்திற்குக் காரணமல்லோம். அந்தச்சிசுவே காரணம்' என்றான். தர்மராஜனே! காலபுருஷன் அவ்வாறுசொல்லும்போது கௌதமியென்னும் ப்ராம்மணி, உலகமெல்லாம் தம்கர்மத்தைக் காரணமாகவுடையனவென்று அறிந்து அர்ஜுனகனைப்பார்த்து, 'இந்தவிஷயத்தில், காலமும் ஸர்ப்பமும் யமனும் காரணங்களல்லர். தான்செய்தகர்மங்களினால் இந்தப் பாலன் காலம்வந்தபோது மரணமடைந்தான். என்னுடைய இந்தப் பிள்ளை மரணமடையத்தக்ககர்மம் நானும் செய்திருக்கிறேன். கால

மும் ம்ருத்யுவும் செல்லட்டும் அர்ஜுனகா! பன்னகத்தை விட்டு விடு' என்றுசொன்னாள். பிறகு, ம்ருத்யுவும் காலனும் பன்னகமும் வந்தவாறே சென்றனர். அர்ஜுனகனும் கௌதமியும் துயரமற்றவர்களாயினர். அரசனே! இதைக்கேட்டு ஆறுதலடை. துயரப்பட்டுக்கொண்டிராதே. யுத்தங்களில் ஜயிப்பவனே! மூவுலகங்களும் தம் கர்மங்களில் சார்ந்திருப்பவையென்றறி. அரசர்கள் இறந்துபோனதற்குக் காரணமானசெய்கை உன்னாலும் துர்யோதனனாலும் செய்யப்பட்டதன்று; காலத்தினால் செய்யப்பட்டதென்றறி" என்றுசொன்னார். சிறந்தபராக்ரமசாலியும் தர்மந்தெரிந்தவருமான யுதிஷ்டிரர், இவ்வாறு பீஷ்மர்சொன்னதைக்கேட்டுத் துயரமற்றிருந்தார்.

---

## இரண்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(இல்லறத்தின்சிறப்பைவிளக்கும் ஸுதர்சனன்கதை.)

யுதிஷ்டிரர், "பேரறிவாளரும் எல்லாச்சாஸ்த்ரங்களிலுந்தேர்ந்தவரும் புத்திமான்களிற்சிறந்தவருமான பிதாமஹரே! இந்தப்பெருங்கதையை நான் கேட்டேன். அரசரே! திரும்பவும் அறம்பொருள்களடங்கிய ஒருவிஷயத்தை நீர் சொல்லக் கேட்கவிரும்புகிறேன். அதனை எனக்கு உரைக்கக்கடவீர். தர்மத்தைக்கைப்பற்றி மரணத்தை வென்றவனான இல்லறத்தோன்யாவன்? வேந்தரே! இந்தக்ருஹஸ்த தர்மத்தை உள்ளபடி எனக்குச் சொல்வீராக" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"அரசனே! இல்லறத்திலிருப்பவன் தர்மத்தைக்கைப்பற்றி ம்ருத்யுவைஜயித்தான் என்னும் விஷயத்தில் இந்தப் பழையசரித்ரத்தைக் கூறுகின்றனர். ப்ரஜைகளைப்படைத்தவராகிய மனுவுக்கு இக்ஷ்வாகுவென்னும் ஒருமைந்தன் பிறந்தான். ஸூர்யனைப்போல ப்ரகாசிக்கும் அவ்வரசனுக்கு நூறுபுத்ரர்கள் பிறந்தார்கள். பாரதனே! தர்மாத்மாவும் ஸத்யமானபராக்ரமமுடையவனும் இக்ஷ்வாகுவின் பத்தாவதுபிள்ளையுமான தசாச்வனென்பவன் மாஹிஷ்மதிநகரில் அரசாட்சிசெய்தான். மிக்கதர்மிஷ்டனும், எப்போதும் ஸத்யத்திலும் தவத்திலும் தானத்திலும் மனவூக்கமுள்ளவனும், தனுர்வேதத்திலும் வேதத்திலும் எப்போதும் பயிற்சியுள்ளவனுமான மதிராச்வன்என்றுபூமியில்புகழ்பெற்றஅரசன் தசாச்வனுடையபுத்ர

ளுகவிருந்தான். மிகுந்தபாக்யமும் பராக்ரமமும் தைர்யமும் தேக வன்மையுமுள்ள த்யுதிமானென்னும் அரசன், மதிராஶ்வனுடைய மைந்தன். த்யுதிமானுக்கு ஸுவீரனென்னும் பெயரினால் எல்லா உலகங்களிலும் கீர்த்திபெற்றவனும் மிக்கதர்மிஷ்டனும் தர்மத்தில் மனமுள்ளவனும் நிரம்பின பொக்கசமுள்ளவனும் மற்றொருதேவேந்த்ரன்போன்றவனும் அரசனுமாகிய ஒருபுத்ரனிருந்தான். ஸுவீரனுக்கு, ஆயுதம்பிடித்தவர்கள் எல்லாரிலும் சிறந்தவனும் எல்லா யுத்தங்களிலும் வெல்லக்கூடாதவனும் துர்ஜயனென்று பெயர் பெற்றவனுமான ஒருபுத்ரன் இருந்தான். இந்த்ரனுக்கு நிகரான உருவமுள்ள துர்ஜயனுக்கு அக்னிக்கொப்பான காந்தியுள்ளவனும் மஹாராஜாவும் ராஜரிஷிகளிற்சிறந்தவனுமான துர்யோதனன் என்னும் ஒருபுத்ரனிருந்தான். இந்த்ரனுக்குநிகரானவீர்யமுள்ளவனும், யுத்தங்களில் பின்வாங்காதவனுமான அந்தத்துர்யோதனனுடைய தேசத்தில் இந்த்ரன் நன்றாக மழைபொழிந்தான். அக்காலத்தில் அவனுடையநகரத்திலும் தேசத்திலும் ரத்னங்களும் தனங்களும் பசுக்களும் பலவகைப்பயிர்களும் நிரம்பியிருந்தன. அவனுடைய அந்தத்தேசத்தில் எங்கும் லோபியாகவும் ஏழையாகவும் நோயாளியாகவும் இளைத்தவனாகவும் ஒருமனிதனும் இருக்கவில்லை. அவன் மிக்கஅன்புள்ளவனும் இன்சொல்சொல்லுகிறவனும் பொறுமைஅற்றவனும் பொறிகளைஅடக்கினவனும் தர்மத்தில்மனமுள்ளவனும் தயையும் பராக்ரமமுமுள்ளவனும் தற்புகழ்ச்சியில்லாதவனும் விதிப்படி யாகங்களைச்செய்தவனும் அடக்கமும் புத்திக்கூர்மையுமுள்ளவனும் ப்ராம்மணர்களிடம் அன்புள்ளவனும் சொல்தவறாதவனும் யாரையும் அவமதியாதவனும் கொடையாளியும் வேதங்களிலும் வேதாங்கங்களிலும் கரைகண்டவனுமாகஇருந்தான் பாரதனே! பாவத்தைப்போக்குவதும் குளிர்ந்ததண்ணீருள்ளதும் ஆரோக்யத்தைத்தருவதுமாகிய நர்மதையென்னும் தேவநதி தன்தேவதாரூபத்தோடு அந்தப்புருஷஶ்ரேஷ்டனான துர்யோதனன்மேல் காதல்வைத்தது. அரசனே! அப்பொழுது அவ்வரசனுக்கு அந்தநதிதேவதையினிடம் தாமரைமலர் போன்ற கண்களையுடையவளும் அழகினால் காட்சிக்கினியவளுமாகிய ஸுதர்சனையென்னும் பெயருள்ளகன்னிகை பிறந்தாள். யுதிஷ்டிரா! சிறந்தபெண்ணாகிய துர்யோதனன்மகள்போல அழகுள்ளவள் பெண்களில் யாரும் அதற்குமுன்னிருந்ததில்லை. அக்னிபகவான், சரத்கால ஸூர்யனுக்குநிகரானஒளியுள்ள அழகிய மானிடஉருவத்தையெடுத்துக்கொண்டு அந்தஸுதர்சனையென்னும் ராஜகுமாரியைநேரில்விரும்

பிஞன். பிதாவுக்குப் பணிவிடைசெய்ய நிச்சயஞ்செய்துகொண்ட அவள், பிதாவிஞல் அக்னிஹோத்ரசாலையில் நியமிக்கப்பட்டு அக்னி கார்யம்செய்ய ஆரம்பித்தாள். மனத்தைக்கவர்வதாகிய அவளுருவத்தைக்கண்டு அக்னிபகவான், மன்மதனுல் தூண்டப்பட்டு அவளைத் தன்மனைவியாகச்செய்துகொள்ள ரஹஸ்யமாக ஆரம்பித்தான். 'குற்றமற்றஅங்கமுள்ளவளே! தாமரைமலர்போன்றகண்களும் மான்குட்டிபோன்றபார்வையும் பூர்ணசந்த்ரனுக்குநிகரானமுகமும் வாழைமரம்போன்ற தொடைகளும்உடையவளே! என்னிடம்நேசித்து என்னை அடையக்கடவாய். தாமரையிதழ்போன்றகண்களுள்ளதும் கொடிகள்போன்ற புருவங்களிஞல் அழகியதும் மனத்தைக்கவர்வதுமாகிய இந்த உன்அழகானமுகத்தை நான் கண்டபிறகு என்னை மன்மதன் பீடிக்கிருன். பிறைச்சந்த்ரனுக்கொப்பானதும் கூந்தலால் அலங்கரிக்கப்பெற்றதும் தாழம்பூமடல்போல அழகியதுமான உன்நெற்றியைக் கண்டஎன்னை அனங்கன் மிகத்துன்பப்படுத்துகிருன். இளவெய்யிற்பட்டுமலர்ந்த தாமரைமலர்போன்றதும் வேர்த்து மயிர்பொடித்திருப்பதும்கோவைப்பழம்போன்ற அதரமுடையதும் மிக்கஅழகான விலாஸமுடையதுமான உனதுமுகம் என்னை மிகவும் மயக்குகிறது. தந்தங்களின்கிரணமென்னும்கயிற்றிஞல் கட்டப்பட்டதுபோல வெளிப்படாமல் காப்பாற்றப்பட்டஉன்வாக்கும் இளந்துளிர்போன்ற இந்த நாவும் என்மனத்தை இழுக்கின்றன. உனதுபற்கள் ஏற்றத்தாழ்வில்லாதவையாகவும் பளபளப்பாகவும் அழகானவடிவமுள்ளவையாகவும் நெருக்கமாகவும் இருக்கின்றன. [1]ப்ராம்மணன்மனைவியே! அழகாயிருக்கிருய். நீ தயைசெய்து என்னையடையக்கடவாய். அழகியதும் அழகியகடைக்கண்பார்வையுள்ளதுமாகிய உனதுமுகம் உள்ளத்தைக்கவர்கிறது. அச்சமுள்ளவளே! ஒன்ருேடொன்றுசேர்ந்தவையும் ஹாரங்களாலும் ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பெற்றவையும் பழுத்தவில்வக்கனிகள்போன்றவையும் தளராதவையுமான உன்இரு கொங்கைகளும் அணைதற்குரியன. ஆழ்ந்தநாபியுடன் அழகாயிருக்கும் சிறந்தநிறமுள்ளவளே! என்னை அடையக்கடவாய்' என்று சொன்ஞன். மஹாத்மாவான அக்னிதேவஞல் ரஹஸ்யத்தில் இவ்வாறுசொல்லப்பெற்ற அந்தப்பெண் மனத்தில் கொஞ்சம்நடுக்கமுற்று வெட்கத்துடன் பேசலாஞள். 'ஐயா! மேற்குலத்தில்பிறந்த கன்னிகைகளைக்கொடுப்பதற்கு முக்யமாகத் தாய்தந்தையரும் சுற்றத்தாரும் அதிகாரிகள் அல்லரோ? பாணிக்ரஹணத்துக்குரிய மந்த்ரங்க

1 அக்னி ப்ராம்மணவடிவாயிருந்ததாகத்தெரிகிறது.

ளைச்சொல்லி அக்னியில்ஹோமம்செய்து பெரியோர்களின்ஸபையில் விவாஹம்செய்தபெண்ணுக்குக் கணவனே தஞ்சம். தேவனே! ஆதலால், நான் ஸ்வதந்த்ரமுள்ளவளல்லேன். என்தந்தையைக் கேள்' என்றாள். அதன்பிறகு, சிலகாலத்துக்குப்பின் துர்யோதன ராஜன் யாகத்துக்குரியபொருள்களைச்சேகரிப்பதில்ஸமர்த்தர்களான மந்த்ரிமார்களையழைத்து, 'நான் யாகம்செய்யப்போகிறேன். என க்குவேண்டியபொருள்களைச் சேகரிக்கவேண்டும்' என்றுசொன் ஞன். பிறகு, அந்தராஜாவினுடையவேள்வியானது ப்ராம்மணோத்த மர்களால் ஆரம்பிக்கப்பட்டபோது அக்னிபகவான் அந்தணவடிவத் துடன் அரசனிடம் கன்னியைக் கேட்டான். அவ்வரசனே அவ னுக்குப்பெண்கொடுக்க எண்ணம்கொள்ளவில்லை. 'இவன் ஏழை; நமதுவர்ணம் அல்லன்' என்றுநினைத்து, அவன் அந்தப்ராம்மணனுக் குக் கன்னிகையைக்கொடுக்க எண்ணங்கொள்ளவில்லை. அம்மஹாத் மாவான அரசன் யாகதீக்ஷையெடுத்துக்கொண்டபிறகு, ஹோமத்திற் காக வேதிகையில்வைக்கப்பட்ட அக்னி மறைந்தது. பிறகு, அவ்வர சன் மிகப்பயந்து பொறிகள்கலங்கி மந்த்ரிகளையும் ப்ராம்மணர்களை யும்நோக்கி, 'என்யாகத்தில் ஜ்வலித்த அக்னிபகவான் மறைந்து போனது யாதுகாரணம்பற்றியிருக்கலாம்? மந்த்ரங்களில்தேர்ச்சியுள் ளவர்களும் வேதங்களில்கரைகண்டவர்களுமாகிய அநேகப்ராம்மணர் களையும் மந்த்ரங்கள்தெரிந்தரித்விக்குக்களையும்கொண்டு அக்னியைப் பூஜிக்கலாமா?' என்றுகேட்டான். பிறகு, ரிக் ஸாமம் யஜுஸ்என் னும்வேதங்களில் கரைகண்டவர்களும் வேதங்களின்உண்மைப்பொரு ள்களை அறிந்து தேர்ந்தவர்களுமான ப்ராம்மணர்கள் ஸோமலதையை முன்னிட்டு, ரஹஸ்யமான நாமங்களெல்லாவற்றையும்சொல்லி அக் னியை அழைத்தனர். பிறகு, சரத்கால்ஸூர்யனுக்குநிகரானஒளி யுள்ள மஹாத்மாவான அக்னிபகவான், மிக்ககாந்தியுள்ளஉருவத்தை எடுத்துக்கொண்டு அந்தப்ராம்மணஸ்ரேஷ்டர்களைநோக்கி, 'நான் துர் யோதனன்புதல்வியை எனக்காகக்கேட்கிறேன்' என்றுசொன்னான். பிறகு, அந்தப்ராம்மணர்களனைவரும் வியப்புற்றவர்களாகி விடியற் காலம் எழுந்து அக்னிபகவான்சொன்னதை அவ்வரசனுக்கு அறிவித் தனர். அந்தப்புத்திமானான அரசன் ப்ரம்மநிஷ்டர்களானப்ராம்மணர் களின் அந்தச்சொல்லைக்கேட்டவுடன், மிக்கமகிழ்ச்சியுற்று, 'ஆக' என்றுசொன்னான்; அந்த அக்னிபகவானைப்பார்த்து, 'ஓ! அக்னிபக வானே! நீர் இவ்விடத்திலேயே எக்காலமும் [1]இருக்கவேண்டும்.

1 'ஸாந்நித்யம்' என்பது மூலம்.

இதுதான் (கன்யாசுல்கம்)' என்று கேட்டுக்கொண்டான். அக்னிபகவானும் அவ்வாறே ஆகட்டுமென்று அவ்வரசனுக்குச் சொன்னான். அதுமுதல் இப்பொழுதும் மாஹிஷ்மதிநகரத்தில் அக்னிபகவானுடைய ஸாந்நித்யமிருக்கிறது. அதை ஸஹதேவன் திக்விஜயம் செய்தபோது கண்டானல்லவோ? அதன்பிறகு, 1துர்யோதனராஜன் அந்தக்கன்னிகைக்கு அலங்காரம்செய்து கோடிஉடுத்து மஹாத்மாவான அக்னிபகவானுக்கு அவளைக் கொடுத்தான். அக்னிபகவான் ஸுதர்சனையென்னும்ராஜகன்னிகையை, யாகத்தில்நெய்த்தாரையை வாங்கிக்கொள்வதுபோல, வேதத்தில் சொன்னவிதியோடு வாங்கிக்கொண்டான். அவளுடைய அழகினாலும் ஒழுக்கத்தினாலும் குலத்தினாலும் தேகக்கட்டினாலும் ஒளியினாலும் அவள்மேல் அக்னிபகவான் அன்புகூர்ந்து அவளிடத்தில் கர்ப்பத்தையுண்டாக்கினான். அவளுக்கு அக்னிபகவானால் ஸுதர்சனன் என்னும்பேருள்ள புத்ரன் பிறந்தான். அந்தஸுதர்சனன் அழகில் நிறைமதிக்கு நிகராகவிருந்தான். அவன் குழந்தையாயிருக்கையிலேயே நித்யமும் சிறந்ததுமான வேதமுழுமையும் ஓதினான். அக்காலத்தில் ந்ருகன் என்னும் அரசனுக்குப் பிதாமஹனாகிய ஓகவான்என்னும் ஓர் அரசன் இருந்தான். அவனுக்கு ஓகவதியென்னும்கன்னிகையும் ஓகரதன்என்னும்புத்ரனும் இருந்தனர். ஓகவானென்னும் அரசன் தேவதையைப்போன்ற உருவமுள்ள அந்த ஓகவதியென்னும்பெண்ணை வித்வானான அந்தஸுதர்சனனுக்கு மனைவியாகக்கொடுத்தான். அரசனே! அந்தஸுதர்சனன் அந்தஓகவதியுடன்கூடக்குருக்ஷேத்ரத்தில் க்ருஹஸ்தாச்ரமதர்மத்தைச் செய்துகொண்டிருந்தான். ப்ரபுவே! வேந்தனே! சிறந்தஅறிவும்விளங்கும்மஹிமையுமுள்ள அந்தஸுதர்சனன், 'நான்க்ருஹஸ்தனாகஇருந்தேயமனை வெல்வேன்' என்று சபதம்செய்தான். அரசனே! அக்னியின் புத்ரனானஸுதர்சனன் அந்தஓகவதியைநோக்கி, 'நீ எவ்வகையிலும் விருந்துவந்தவனுக்கு விரோதம்செய்யலாகாது. என்னஎன்னவகையினால் விருந்துவந்தவன் த்ருப்தியடைவனோ அவற்றையெல்லாம் தன்னைக்கொடுப்பதாகவிருந்தாலும் ஒருகாலும் நீ ஆலோசிக்கவேண்டாம் இந்தவ்ரதம் எப்போதும் என்மனத்திலேயே இருக்கிறது. அழகானநிதம்பமுடையவளே! இல்லறத்தோருக்குவிருந்துக்குமேற்பட்டதொன்றுமில்லை. அழகியதொடைகளையுடையவளே! சிறந்தவளே! என்சொல்லில் உனக்கு நம்பிக்கையிருக்குமாயின் நீ, மாறுமல்இந்தச் சொல்லை எப்போதும் உள்ளத்தில்வைக்கக்கடவாய். மங்களமுள்ள

---

1ஸபாபர்வம் 32-ம் அத்தியாயம்பார்க்க; அங்கு நீலராஜன் என்றிருக்கிறது.

வளே! குற்றமற்றவளே! என்னிடம் உனக்கு நம்பிக்கையிருக்குமாயின் நான் வெளியிற் போயிருந்தாலும் வீட்டிலிருந்தாலும் அதிதியை நீ அவமதிக்கத்தகாது' என்று சொன்னான். அப்போது ஓகவதியானவள் அவனைநோக்கிச் சிரமேல்கரங்குவித்து, 'எனக்கு உமது கட்டளையினால் செய்யத்தகாதது எதுவும் எவ்வகையிலும் இல்லை' என்று சொன்னாள். அரசனே! ஸுதர்சனனைவெல்லக்கருதி ஸமயம் பார்த்திருந்த யமனானவன் எப்போதும் வீட்டில் அவனைப் பின்தொடர்ந்துகொண்டிருந்தான். அக்னியின்புத்ரனான அந்தஸுதர்சனன், ஸமித்துக்கள்கொண்டுவரச்சென்றபோது, ஓர் அழகுள்ள அதிதியான ப்ராம்மணன் அந்த ஓகவதியைப்பார்த்து,'பெண்ணரசியே! இல்லறத்திற்குரியதர்மத்தில் உனக்கு நம்பிக்கையிருக்குமாயின் இப்போது எனக்கு நீ விருந்துசெய்வதை நான் விரும்புகிறேன்' என்றுசொன்னான். மன்னவ! புகழ்பெற்ற அந்தராஜகுமாரி அந்தப்ராம்மணனால் இவ்வாறு சொல்லப்பெற்றவளாய் வேதத்தில் சொல்லிய விதிப்படி அவனை வரவேற்றாள். அவள் அந்தப்ராம்மணனுக்கு ஆஸனத்தையும் பாத்யத்தையும் அளித்து அவனைப்பார்த்து, 'உமக்கு ஆகவேண்டியதென்ன? உமக்கு நான் எதைக் கொடுக்கக்கடவேன்?' என்று கேட்டாள். உடனே, அந்தப்ராம்மணன் அந்தராஜபுத்ரியான ஓகவதியை நோக்கி, 'சிறந்தபெண்ணே! எனக்கு நீதான்வேண்டும். நீ சங்கியாமல் இதைச்செய்யக்கடவாய். அரசியே! இல்லறத்திற்குரியதர்மத்தில் உனக்கு நம்பிக்கையிருக்குமாயின் நீ உன்னையே அளித்து என் விருப்பத்தை நிறைவேற்றக்கடவாய்' என்று சொன்னான். அந்த ப்ராம்மணன் அந்தராஜகுமாரியினால், வேண்டத்தக்கமற்றப்பொருள்களைக்கொடுப்பதாக ஆசைகாட்டப்பட்டும் அவன் தன்னைக்கொடுப்பதைத்தவிர வேறொன்றையும் அவளிடத்தில் விரும்பவில்லை. அந்த ராஜகுமாரியோவெனில் முதலில் தன்கணவன் சொன்னதைநினைத்து நாணமுற்று அந்தப்ராம்மணச்ரேஷ்டனுக்கு 'அப்படியே ஆகட்டும்' என்று மறுமொழிசொன்னாள். அந்தப்ரம்மரிஷி உடனே நகைத்துக்கொண்டு உட்கார்ந்தான். அவளும் இல்லறத்தைவிரும்பின கணவன்சொல்லைநினைத்துக் கூடஉட்கார்ந்தாள். அப்போது கொடிய எண்ணமுள்ளயமனால் எக்காலமும் சுற்றம்போலஅநுஸரிக்கப்பட்ட ஸுதர்சனன் ஸமித்துக்களையெடுத்துக்கொண்டு வந்துசேர்ந்தான். அந்தஸுதர்சனன் ஆச்ரமத்துக்கு வந்தவுடன், அந்தஓகவதியை, 'நீ எங்கேபோயிருக்கிறாய்?' என்று பலமுறை கூவினான். அப்போது அந்த ஓகவதியானவள் தன்கணவனுக்கு மறுமொழி சொல்லவில்லை.

பர்த்தாவின் நியமத்தைக் காப்பாற்றுகிறவளாகிய அந்தப் பதிவ்ரதையானபெண் அந்தப்ராம்மணன்கைகளினால்தொடப்பட்டதனால் தான் எச்சிலாகிவிட்டதாக நினைத்துத் தன்கணவனிடம் வெட்கப்பட்டவளாகவும் ப்ராம்மணன்கோபத்துக்குப் பயந்தவளாகவும் ஒன்றும் பேசாமலிருந்தாள். பிறகு, அந்தஸுதர்சனன், 'என்ன இது? அந்தக் கற்புள்ள பெண் எங்கே? அவள் எங்கே போனாள்? பதிவ்ரதையும் ஸத்யம் தவறுதவளும் எப்போதும் நேரானநடையில் விருப்பமுள்ளவளுமான ஓகவதி, முன்போல நகைத்துக்கொண்டு இப்போது என்னை ஏன் எதிர்கொண்டு அழைக்கவில்லை? எனக்கு இதைவிடப்பெரிதென்னவிருக்கிறது?' என்று சொன்னான். ஆஶ்ரமத்திலிருந்த ப்ராம்மணன் அந்தஸுதர்சனனைநோக்கி, 'ஓ! அக்னிபுத்ரனே! நான் ப்ராம்மணன்; அதிதியாகவந்திருக்கிறேனென்று அறி. ப்ராம்மண! உத்தமனே! இந்தஉன்மனைவி பலவிதங்களான அதிதிஸத்காரங்களை எனக்குச் செய்யவேண்டினளாயினும் இவளையே நான் விரும்பினேன். அழகியமுகமுள்ள இவள் தன்னைக்கொடுப்பதென்னுமுறையினால் என்னை ஆராதிக்கிறாள். இந்தவிஷயத்தில் வேறு எது தகுதியானதோ அதை நீ செய்யலாம்' என்றுசொன்னான். யமன், 'இந்தஸமயத்தில் ப்ரதிஜ்ஞைதவறும்போது இவனைக்கொல்வேன்' என்று நினைத்து இருப்புத்தடியைக் கையில்எடுத்துக்கொண்டு அந்த ஸுதர்சனனைத் தொடர்ந்துகொண்டிருந்தான். ஸுதர்சனன் மனத்திலும் செய்கையிலும் பார்வையிலும் சொல்லிலும் பொறாமையையும் கோபத்தையும்விட்டுப் புன்னகையுடன், 'ப்ராம்மணோத்தமரே! 1* * *. எனக்கு மிக்கஸந்தோஷம். வந்தவிருந்துக்குத் த்ருப்திசெய்விப்பதுதான் க்ருஹஸ்தனுக்கு முக்யமான தர்மம். எந்தக்ருஹஸ்தனால் விருந்தினன் பூஜிக்கப்பெற்றுச் செல்கிறானோ அவனுக்கு அதைவிடப் பெரியதர்மம் மற்றொன்றும் இல்லையென்று அறிஞர் சொல்லுகின்றனர். என்உயிரும் மனைவியும் மற்றுமுள்ள பொருள்களனைத்தும் அதிதிகளுக்குக் கொடுக்கத்தக்கவையென்பது நான் கொண்டிருக்கும் வ்ரதம். ப்ராம்மணரே! இந்தச் சொல்லை மனத்தில் ஐயப்படாமல் நான் சொல்லியிருக்கிறேனென்று என்னுடம்பைத்தொட்டு நான் ஸத்யம்செய்கிறேன். கர்மானுஷ்டானம் செய்பவரில்சிறந்தவரே! நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், புத்தி, ஆத்மா, மனம், காலம், திசைஆகிய இப்பத்துப்பொருள்களும் மனிதர்களின் தேகங்களிலிருந்துகொண்டே நல்வினையையும் தீவினையையும் எப்போதும் பார்க்கின்றன. இப்போது நான்சொன்ன



1 'ஸுரதம் தேஸ்து' என்பது மூலம்.

இந்தச்சொல் பொய்யன்று. இந்தஸத்தியத்தினால்என்னைத்தேவர்கள் காக்கவாவது எரிக்கவாவது செய்யலாம்' என்றுசொன்னான். பாரதனே! அப்போது எல்லாத்திசைகளிலும் 'இது உண்மை' என்றும் 'இதுபொய்யன்று' என்றும் இவ்விதம் அடிக்கடிசப்தமுண்டாயிற்று. உடனே அந்த ப்ராம்மணன், வாயுபகவானைப்போல ஆகாயத்தையும் பூமியையும் தன்தேகத்தினால் வ்யாபித்துவளர்ந்தவனாக அந்த ஆச்ரமத்திலிருந்து வெளிவந்தான். அந்தப்ராம்மணன் வேதஸ்வரமமைந்தகுரலுடன் மூன்று உலகங்களிலும் ஒலிபரவும்படி தர்மந்தெரிந்த அந்தஸுதர்சனனைப் பேரிட்டு அழைத்துச் சொல்லலானான்.

'குற்றமற்றவனே! உனக்கு நன்மையுண்டாகக்கடவது. நான் தர்மதேவதை; உன்னை அறிவதற்கு வந்தேன். உன்னுடைய உண்மையை அறிந்தபிறகு உன்மேல் எனக்கு மிகுந்த அன்புஉண்டாயிருக்கிறது. எப்போதும் ஸமயம்பார்த்துக்கொண்டு உன்னைத்தொடர்ந்துகொண்டிருக்கும்இந்தயமன் உன்னுடையஉறுதியினால்வெல்லப்பட்டு வசப்படுத்தப்பட்டான். மனிதர்களில் உத்தமனே! பதிவ்ரதையும் நல்லொழுக்கமுள்ளவளுமாகிய இந்த உன்மனைவியைக் கண்ணெடுத்துப்பார்க்கவும் சக்தியுள்ளவன் மூவுலகங்களிலுமில்லை, உன்னுடைய குணங்களாலும் இவளது கற்புக்குரிய குணங்களாலும் இவள் காப்பாற்றப்பட்டிருக்கிறாள். இவள் யாராலும் வெல்லக்கூடாதவள். இவள் எதுசொன்னாலும் மாறாது. தான்செய்த தவப்பயன்பெற்றவளும் ப்ரம்மஜ்ஞானமுள்ளவளுமாகிய இந்தமிக்கபாக்யவதியானவள் உலகத்தின் பாவத்தைப்போக்குவதற்காக ஒருபாதிச்சரீரத்தினால் ஓகவதியென்றே பெயருள்ள சிறந்த நதியாகிவிடுவாள்; மற்றொருபாதிச் சரீரத்தினால் உன்னை அனுஸரித்திருப்பாள். யோகசக்தியானது இவளுக்கு வசப்பட்டிருக்கிறது. நீ உன்தவத்தினால் ஸம்பாதிக்கப்பட்ட உலகங்களுக்கு இவளுடன் கூடவேசெல்லுவாய். எங்கேபோனவன் திரும்பிவருவதில்லையோ அந்த அழிவில்லாத உயர்ந்த லோகங்களை நீ இந்தச்சரீரத்தோடே அடைவாய்.' யமன் உன்னால் ஜயிக்கப்பட்டான். உனது சக்திமிகச்சிறந்தது. உனதுசக்தியினால் ஐந்துபூதங்களையும் தாண்டி மனோவேகம்பெற்றிருக்கிறாய். இந்த இல்லறவொழுக்கத்தினாலேயே காமக்ரோதங்களையும் ஜயித்தாய். [1]அரசனே! ராஜபுத்ரியானஸுதர்சனையும் உனக்குப்பணிவிடைசெய்து விருப்பையும் பற்றையும் சோம்பலையும் அஜ்ஞானத்தையும் பிறருக்குத்தீங்குசெய்வதையும் முழுவதும் ஒழித்துவிட்டாள்' என்றான். மஹிமைபொ

1 ராஜகுமாரிக்குப்பிறந்ததனால், 'அரசனே!' என்றது.

ருந்தியதேவேந்த்ரனும் ஆயிரம் வெள்ளைக் குதிரைகள் பூட்டப்பட்ட சிறந்தரதத்திலேறிக்கொண்டு அவனிடம்வந்தான். இவ்வாறு யமனை யும் தன்மனத்தையும் புண்யலோகங்களையும் தேகத்திலுள்ள ஐந்து பூதங்களையும் புத்தியையும் காலத்தையும் கர்வத்தையும் விருப்பு வெறுப்புக்களையும் ஸுதர்சனன் ஜயித்தான். புருஷஶ்ரேஷ்டனை யுதிஷ்டிரனே! ஆதலால், இல்லறத்திலிருப்பவனுக்கு விருந்தைவிட மற்றொருதெய்வமில்லையென்பதை மனத்தில் ஆராய்ந்துபார். பூஜிக் கப்பெற்ற அதிதி மனப்பூர்வமாக ஆசீர்வதிப்பதினாலுண்டானபுண்யத் திற்குஈடானபுண்யம் நூறுயாகங்களினாலும் உண்டாவதில்லையென்று அறிஞர் கூறுகின்றனர். பூஜிக்கப்படாத அதிதி முன்செய்த நல்ல தானங்களையும் நற்கருமங்களையுங்கூட ஆட்டிவிடுவான். நல்லொழு க்கமுள்ள யோக்கியனான விருந்தினனை அடைந்து பூஜியாமலிருப்பவ னெவனோ அவனுக்கு அந்த அதிதி தன்பாவத்தைக்கொடுத்து அவ னதுபுண்யத்தை எடுத்துக்கொண்டு செல்வான். மைந்தனே! ஒரு க்ருஹஸ்தனால் முன்னர் யமன் எப்படி வெல்லப்பட்டானென்பதைப் பற்றிய இந்தஒருசிறந்தகதையை உனக்குச் சொன்னேன். மேன் மைபெறவிரும்புகிறவன் தனத்தையும் புகழையும் ஆயுளையும் தருவ தும் எல்லாப்பாவங்களையுமழிப்பதுமாகிய இந்தச்சிறந்தசரித்திரத்தை நினைவில்வைக்கவேண்டும். பாரதனே! ஸுதர்சனனுடைய இந்தச் சரித்திரத்தை எந்தவித்வான்நாள்தோறும் உரைப்பனோ அவன் புண்ய லோகங்களை அடைவான்" என்று சொல்லினர்.

## [1] மூன்றாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(ப்ராம்மணத்தன்மை ஜன்மத்தினால் வருவதேயன்றி இடையில் வாராதென்பதைப்பற்றிய மதங்கன்கதை.)

யுதிஷ்டிரர், "தர்மிஷ்டர்களிற்சிறந்தவரே! நீர் புத்தியும் கேள் வியும் ஒழுக்கமும் அடக்கமும் பிராயமும் இன்னும்பலவகையான குணங்களனைத்தும் பொருந்தினவர். அறிவிலும் புத்திக்கூர்மை யிலும் தவத்திலும் இதுவரையிலிருந்த ஸத்புருஷரெல்லாரினும் நீர்

1, 3, 4, 5 இந்த அத்யாயங்கள் வ்யாக்யானபாடத்தில் 27, 28, 29-வது அத்யாயங்களாயிருக்கின்றன. இவை இங்கு இல்லாவிடில், அடுத்த அத் யாயத்தில், 'ப்ராம்மணத்வத்தை மற்றமூன்றுவர்ணத்தாரும் பெறுவது அரி தாயின்' என்று அனுவாதமாக எடுத்திருப்பது பொருந்தாது.

சிறந்தவரென்பதில் ஐயமில்லை. ஆதலால், உம்மிடத்தில் தர்மம் கேட்கிறேன். கேட்கப்படத்தக்கவர் உம்மைக்காட்டிலும் வேறொருவர் உலகத்தில் பிறந்தவர்களில் இல்லை. ராஜஸ்ரேஷ்டரே! க்ஷத்ரியனும் வைஸ்யனும் சூத்ரனும் எதனால் ப்ராமணத்தன்மையை அடையலாம்? அதனை எனக்கு விரித்துரைப்பீராக. அரசரே! பிதாமஹரே! தவத்தினாலும் 'மிகச்சிறந்தஸம்ஸ்காரத்தினாலும் வேதமோதுவதனாலும் மற்றமூன்றுவர்ணத்தாரும் ப்ராம்மணத்தன்மையை அடைவது அரிதானால், ப்ராம்மணனாக விரும்புகிறவன் அதனையடையும்வகை யாது?' என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"யுதிஷ்டிர! ப்ராம்மணத்தன்மையானது க்ஷத்ரியர்முதலான மூன்றுவர்ணத்தாரும் பெறுவதற்கரிது. அஃது எல்லாப்ராணிகளுக்கும் மேற்பட்டஇடம். அப்பா! உலகவாழ்க்கையில் அநேகம்ஜன்மங்களையெடுத்துப் பலமுறைபிறந்துகொண்டிருக்கையில் ஒருமுறையில் ப்ராம்மணனாகப் பிறக்கிறான். யுதிஷ்டிர! இந்தவிஷயத்திலும் மதங்கனுக்கும் பெண்கழுதைக்கும் நடந்த ஸம்பாஷணையாகிய இந்தப்பழமையான சரித்ரத்தைக்கூறுகின்றனர். அப்பா! ஒருப்ராம்மணனுக்கு ஒத்தவர்ணப்பெண்ணினிடத்தில் எல்லாக்குணங்களும் நிரம்பினவனாகிய மதங்கன் என்னும் பெயருள்ள ஒரு புதல்வன் பிறந்தான். குந்திபுத்ரனே! பகைவர்களைக்கொல்பவனே! அவன் யாகத்திற்காகத் தந்தையால் அனுப்பப்பட்டுக் கழுதைகள்கட்டிவிரைவாகச் செல்லும்தேரில் ஏறிச்சென்றான். அரசனே! அவன் தேரிழுக்கும் இளையவயதுள்ளகழுதையை அதன்தாயின் முன்னிலையில் சாட்டையினால் மூக்கில் அடிக்கடி அடித்தான் மூக்கில் அடிக்கப்பட்ட அந்தக்கழுதையைக்கண்டு பிள்ளையின்மேல் அன்புள்ள அந்தப் பெண்கழுதை, 'மைந்தனே! வ்யஸனப்படாதே. சண்டாளன் உன்னை அடிக்கிறான். ப்ராம்மணன் கொடியவனாயிருப்பதில்லை. ப்ராம்மணன், எல்லாப்ராணிகளுக்கும் அன்பனென்று சொல்லப்படுகிறான். எல்லாப்ராணிகளுக்கும் கற்பிக்கும் ஆசார்யனாகிய ப்ராம்மணன் அடிப்பானோ? பாவத்தையே இயற்கையாகவுடைய இவன், வாலிபனான (உன்னிடத்தில்) தயைசெய்யவில்லை. இவன் தன்பிறப்பைக் கர்வப்படுத்துகிறான். செய்கையே பிறப்பை நிச்சயப்படுத்துகிறது' என்றுசொல்லிற்று. அந்தப்பெண்கழுதையின் இந்தக்கொடியசொல்லைக்கேட்டு, மதங்கன் தேரிலிருந்து விரைவாகஇறங்கி அந்தப்பெண்கழுதையை நோக்கி, 'ஓ! நற்குணமுள்ளகழுதையே! என் தாய் யாராலே கெடுக்கப்பட்டாள்? என்னைச்சண்டாளனென்று எப்படி அறிகிறாய்? என்

னுடையப்ராம்மணத்தன்மை யாரால்கெட்டது? மிகத்தெரிந்ததே! இவற்றையெல்லாம் உண்மையாகவும் தெளிவாகவும் எனக்குச்சொல்லவேண்டும்' என்றுகேட்டான். அந்தப்பெண்கழுதை, 'நீகள்மயக்கமுள்ள ப்ராம்மணப்பெண்ணினிடம் சூத்ரனுனநாவிதனுக்குப் பிறந்தவன். அதனால், நீ சண்டாளனுகிறாய். அதனால், உன்ப்ராம்மணத்வம் போயிற்று' என்றது. இவ்வாறு சொல்லப்பட்ட மதங்கன், மறுபடியும் வீட்டுக்குத் திரும்பிச்சென்றான். அவன் திரும்பிவந்ததைக் கண்டு அவன்தந்தை, 'யாககார்யம் நிறைவேற்றுவதற்காகப் பெரிய வேலையில்நியமிக்கப்பட்டநீ ஏன் திரும்பிவந்தாய்? உனக்கு ஸுகமில்லையா? என்ன?' என்றுகேட்டார். அதற்கு, மதங்கன், 'பிதாவே! சண்டாளஜாதியிலும் மற்ற இழிவானஜாதியிலும்பிறந்தவன் எப்படி ஸுகமுள்ளவனுவான்? இந்தத் தாயைப்படைத்தவனுக்கு ஸுகமேது? தந்தையே! மானிடஜாதியாயிராத இந்தப்பெண்கழுதை என்னைப்பார்த்து ப்ராம்மணப்பெண்ணினிடம் சூத்ரனுக்குப்பிறந்தவனென்று தெரிவிக்கிறதே! ஆதலால், நான் பெருந்தவம் செய்யப்போகிறேன்' என்றுசொன்னுன்; இவ்வாறு பிதாவுக்குச்சொல்லி நிச்சயம் செய்துகொண்டு புறப்பட்டான். பிறகு, பெரியகாட்டில்சென்றுமிக்க பெருந்தவம்செய்தான். அந்தமதங்கன் தன் நற்செய்கையினுலாவது மிகச்சிறந்தஜாதியை அடையக்கருதித் தவம்செய்து, தவத்தினுல் தேவர்களுக்கும் தாபத்தையுண்டுபண்ணினுன். அவ்வாறு தவம்செய்யும் அவனைநோக்கி, தேவேந்திரன், 'மதங்கா! மானிடர்க்குரியஸுகங்களைவிட்டு நீ ஏன் தவம்செய்கிறாய்? ஐயோ! உனக்கு வரம்தருகிறேன். நீ விரும்புவதைக்கேள். நீ அடையக்கூடியதாக உன்மனத்திலிருப்பதையெல்லாம் சொல்லலாம். தாமதம்வேண்டாம்' என்று கேட்டான். அதற்கு மதங்கன், 'நான் ப்ராம்மணத்வம்விரும்பி இந்தத்தவம்செய்யஆரம்பித்தேன். உன்னிடத்தில் அதைஅடைந்துநான் செல்வேன். இந்தவரம்தான் நான் கேட்பது' என்றுசொன்னுன். இந்தச்சொல்லைக்கேட்டு இந்த்ரன் அவனைநோக்கி, 'மதங்க! நீ ப்ராம்மணத்வத்தை வேண்டுகிறாய். அது கிடைக்காது. மதிகெட்டவனே! ஆத்மசுத்தியில்லாதவர்கள் பெறக்கூடாத ப்ராம்மணத்வத்தைவேண்டுகிறநீ அழிந்துபோவாய். ஆதலால், உடனே ஒய்ந்துவிடு. எல்லா ப்ராணிகளிலும் எதுசிறந்ததோ, எது தவத்திற்கும் மேற்பட்டதோ அந்தச்சிறந்த ப்ராம்மணத்வத்தைவிரும்புகிறநீ விரைவில்கெடுவாய். தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் மானிடர்களுக்கும் எது மிகப் பரிசுத்தமென்று நினைக்கப்பட்டதோ அதைச் சண்டாளப்பிறப்பில் பிறந்தவன் எவ்வகையிலும் அடையமுடியாது' என்றுசொன்னுன்.

6353

## நான்காவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

### (மதங்கன்கதைத் தொடர்ச்சி.)

இந்த்ரனால் இவ்வாறு உரைக்கப்பட்ட மதங்கன், மனவுறுதியுடனும் நியமந்தவறாமலும் நூறுவர்ஷகாலம் ஒற்றைக்காலால் அசையாமல் நின்றான். பெரும்புகழ்பெற்றஇந்த்ரன், அப்போது திரும்பவும் அவனிடம்வந்து, 'அப்பா! அடைவதற்கரிதான ப்ராம்மணத்தன்மையைவேண்டுகிற நீ அதை அடையமாட்டாய். மதங்கனே! உயர்ந்தஜாதியைவிரும்புகிறநீ கெடுவாய். புத்ரனே! ஆய்ந்துபாராத கார்யத்தைச் செய்யாதே. நீ செய்வதும் தர்மத்தின்வழி அன்று. வழிதப்பித்தேடுகிறநீ எவ்வகையிலும் உருப்படமாட்டாய். மதிகெட்டவனே! நீ இந்தப்பிறப்பில் ப்ராம்மணத்தன்மையைப் பெறுவதுமுடியாது. பெறக்கூடாததை விரும்புகிறநீ விரைவில்கெடுவாய். மதங்கனே! பலமுறை என்னால் தடுக்கப்பட்டிருந்தும் மேலானஜாதியைத் தவத்தினால் உண்டாக்கிக்கொள்ளவே கருதுகிறாய். எப்படியும் உருப்படாய். திர்யக்ஜாதியில்பிறந்தவையனைத்தும் மானிடஜன்மத்தை அடையுமாயின், சண்டாளனாகவாவது [1]புல்கஸனாகவாவது பிறப்பதுதிண்ணம். மதங்கனே! இவ்வுலகத்தில் புல்கஸன்முதலான கீழ்ஜாதியாகக்காணப்படுகிறவன், வெகுகாலம் அந்தஜாதியிலேயே சுற்றுகிறான். (திரும்பத்திரும்ப ஜனிக்கிறான்.) அவ்வாறு ஆயிரம் தடவையானபிறகு, அவன் சூத்ரஜன்மத்தை அடைகிறான்; அதன் பிறகு சூத்ரஜன்மத்திலும் பலமுறை சுற்றுகிறான். அவ்வாறு முப்பதுமுறையானபிறகு, அவன் வைஶ்யஜன்மத்தை அடைகிறான். அந்த வைஶ்யஜன்மத்தில் வெகுநாள் சுற்றுகிறான். பிறகு, அறுபதுமுறையானபின் க்ஷத்ரியனாக ஜனிக்கிறான். அதில் அறுபதுமுறைஜனித்த பிறகு ப்ராம்மணஜாதியில் தாழ்வானஜன்மத்தையடைகிறான். தாழ்ந்தப்ராம்மணனாகவே வெகுகாலம் பலமுறை ஜனிக்கிறான். அவ்வாறு இருநூறுமுறைஜனித்தபிறகு, ஆயுதம்பிடித்துஜீவிக்கும் ப்ராம்மணனாகிறான். வெகுகாலம் ஆயுதம்பிடித்துஜீவித்துக்கொண்டு அந்தப் பிறப்பிலேயே மாறிமாறிப் பிறக்கிறான். அவ்வாறு முந்நூறுமுறை ஆனபிறகு ஜபம்செய்யும் ப்ராம்மணனாக ஜனிக்கிறான். அதையடைந்தும் வெகுகாலம் அந்தஜாதியிலேயே சுற்றுகிறான். அவ்வாறு

1 மாகதஜாதிப்பெண்ணினிடம் சண்டாளனுக்குப்பிறந்தவன்.

நானூறுமுறையானபிறகு, [1]ஸ்ரோத்ரியன் என்பவனாகப் பிறக்கிறான். அவன் அந்தஸ்ரோத்ரிய ஜன்மத்திலேயே வெகுகாலம் மாறிமாறிப் பிறக்கிறான். புத்ரனே! ஆதலால், துயரமும் மகிழ்ச்சியும் விருப்பும் வெறுப்பும் அதிககர்வமும் அதிகப்பேச்சும் தாழ்வான ப்ராம்மணனிடம் வந்துசேருகின்றன. அந்த ப்ராம்மணன் மேற்சொன்னபகைகளைவெல்லுவானாயின், அப்போது நற்கதியை அடைவான். அவ்வாறின்றி அப்பகைகள் அவனைவெல்லுமாயின் பழுத்தபனங்கனிபோல [2]விழுவான். மதங்கா! இவற்றையெல்லாம் நிச்சயமாகத்தெரிந்துகொண்டு, நான் உனக்குக்கட்டளையிட்டபடி வேறுவரம்கேள். ப்ராம்மணனாவது சிறிதும் முடியாது' என்று சொன்னான்.

---

## ஐந்தாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

### (மதங்கன்கதைத் தொடர்ச்சி.)

இந்த்ரனால் இவ்வாறுசொல்லப்பட்ட மதங்கன், மனவுறுதியோடு நியமந்தவறாமல் த்யானம்செய்துகொண்டு ஆயிரம்வர்ஷகாலம் ஒற்றைக்காலால் நின்றான். பலாஸுரனையும் வ்ருத்ராஸுரனையும் கொன்றவனான தேவேந்த்ரன் ஆயிரம்வர்ஷகாலங்களுக்குப்பின் அவனைப்பார்க்கவந்து, முன்சொன்னசொல்லையே திரும்பவும் சொன்னான். அதற்கு, மதங்கன், 'இந்த ஆயிரம்வர்ஷகாலமும் நான் ஐம்புலன்களையும் அடக்கி மனஉறுதியுடன் ஒற்றைக்காலால் நின்றேன். ப்ராம்மணத்வத்தை ஏன் அடையத்தகாது?'' என்றுகேட்டான். இந்த்ரன், 'சண்டாளஜன்மத்திற்பிறந்தவனுக்கு ப்ராம்மணத்வம் எவ்வகையிலும் கிடைக்காது. நீ வேறுவரங்கேள். உனது இந்தப்ரயாஸம் வீண்போகலாகாது' என்றுசொன்னான். இவ்வாறு சொல்லக்கேட்ட மதங்கன், மிகத்துயரமுற்றவனாகி, கயைக்குச்சென்று, நூறுவர்ஷகாலம் காற்கட்டைவிரலால் நின்றான். யாருக்கும்செய்யமுடியாததவத்தைமேற்கொண்டு இளைத்து உடம்பெல்லாம் நரம்புகளோடித் தோலும் எலும்புமாயிருந்து தர்மத்திலேயேமனம்வைத்து அவன் தவம் புரிந்தானென்று நமக்குக்கேள்வி. வரன்கொடுக்கவல்லவனும் கொடுப்

---

1 வேதங்களைப் பொருளுடன் அறிந்து அனுஷ்டிப்பவன்.

2 தாழ்ந்தஜன்மத்தில் பிறப்பான்.

பவனும் எல்லாப்ராணிகளுக்கும் நன்மையைக்கருதுகிறவனுமான தேவேந்திரன், தவம்செய்யும்மதங்கன்முன்வந்து அவன்கையைப்பிடித்து, 'மதங்கா! நீ இந்தஜன்மத்தில் ப்ராம்மணனாவது விரோதமாகக் காணப்படுகிறது. ப்ராம்மணத்வமானது அநேகம்சத்ருக்களால்சூழப்பட்டது; அடைவதற்கு மிகக்கடினம். பிராம்மணனைப் பூஜிப்பவன் ஸுகம்பெறுகிறான்; பூஜியாதவன் துன்பமுறுகிறான். எல்லாப்ராணிகளின் [1]யோகக்ஷேமங்களும் ப்ராம்மணனிடத்தில் ஒப்பிக்கப்பட்டிருக்கின்றன. ப்ராம்மணன் த்ருப்தியடைவதனாலேயே பித்ருக்களும் தேவர்களும் த்ருப்தியடைகின்றனர். மதங்கா! எல்லாப்ராணிகளிலும் ப்ராம்மணன் உயர்ந்தவனென்று சொல்லப்படுகிறான். ப்ராம்மணன் எதைஎதை எப்படிஎப்படி நினைக்கிறானோ அதைஅதை அப்படிஅப்படியே செய்யக்கூடியவன். இந்தப்ரபஞ்சத்தில் பலயோனிகளில் பிறந்தபின், ஒருதடவையில் ப்ராம்மணஜன்மத்தையடைகிறான். ஆதலால், ஆத்மசுத்தியில்லாதவர்கள் பெறுதற்கரிதான ப்ராம்மணத்வத்தைவிட்டு நீ வேறுவரம்கேள். உனக்கு இந்தவரம் கிடைக்காது' என்றுசொன்னான். மதங்கன், 'துயரத்தினால்பீடிக்கப்பட்ட என்னைப் பின்னும் ஏன் துயரப்படுத்துகிறாய்? செத்தவன்னைச்சாவஅடிக்கிறாய். நீயும் ப்ராம்மணத்தன்மையையடைந்து மேலாக விரும்பாமலிருப்பதற்காக, உன்னைப்பற்றியே நான் துயரப்படுகிறேன். ப்ராம்மணத்வம் அரிதாகவும் மற்றமூன்றுவர்ணத்தாரும் பெறத்தகாததாகவுமிருந்தும் அவ்வருமையான ப்ராம்மணத்தன்மையைப்பெற்றும் மனிதர்கள் எப்போதும் அதற்குத்தக்க ஒழுக்கமுள்ளவர்களாயிருப்பதில்லை. கிடைக்கத்தகாதசெல்வத்தைஅடைந்தவன்போல ப்ராம்மணத்தன்மையை அடைந்தவன் அதை அலக்ஷ்யம்செய்தானானால் அவன் பாவிகளிலும் மிகக்கெடுதலானபாவிகள் எவரோ அவர்களிலும் தாழ்ந்தவன். ப்ராம்மணத்வத்தைப் பெறுவதுங்கடினம்; கிடைத்ததைக் காப்பாற்றுவதுங்கடினம். கிடைக்கத்தகாததையடைந்தும் மனிதர்கள், அதன்படி ஒழுக்கமுடையவர்களாயிருப்பதில்லை. இந்த்ரனே! நான் [2]ஒன்றிலேயேமனத்தைச்செலுத்தி [3]இரண்டைவிட்டு, 'நான், எனது' என்ற பற்றில்லாதவனாகி அஹிம்ஸை புலன்களையடக்கல் இவற்றைக்கைப்பற்றியிருந்தும், ஏன் ப்ராம்மணனாகத் தகுந்தவனல்லேன்? புரந்தரனே! நான் தர்மந்தெரிந்தவனாயிருந்தும் என்தாயின் குற்றத்தினால் இந்தநிலைமையை அடைந்தேனே? இந்தஎன்விதியாது?

---

1 சாந்திபர்வம் 488-ம் பக்கம் 1, 2, குறிப்பிற்காண்க.
2 ப்ராம்மணத்வத்திலேயே. 3 சீதோஷ்ணம், ஸுகதுக்கமுதலியன.

விதியை முயற்சியினால்வெல்லுவது முடியாதென்பது திண்ணம். ப்ரபுவே! எதற்காக முயற்சிசெய்தேனோ அந்தப்ராம்மணத்வத்தை நான் பெறவில்லையே? தர்மந்தெரிந்தவனே! இந்நிலைமையில் உன் அனுக்ரஹத்துக்கு நான் உரியவனாகவும் கிஞ்சித்தேனும் புண்யம்செய்தவனாகவுமிருந்தால், எனக்கு நீ வரம்கொடுக்கக்கடவாய்' என்று கேட்டான். அப்போது தேவேந்த்ரன் அவனைப்பார்த்து, 'வரம்கேள்' என்றுசொன்னான். தேவேந்த்ரனால் அனுமதிகொடுக்கப்பெற்றமதங்கன், 'நான் நினைத்தபடி ஸஞ்சரிப்பவனும் நினைத்தஉருவம் எடுப்பவனும் ஆகாயத்தில் பறக்குந்திறமையுள்ளவனும் ஆகக்கடவேன். ப்ராம்மணர்களுக்கும் க்ஷத்ரியர்களுக்கும் விரோதமின்றிமரியாதையையும் நான் பெறக்கடவேன். புரந்தரனே! எப்படி என்னுடையகீர்த்தி அழிவில்லாமலிருக்குமோ அப்படி நீ செய்யக்கடவாய். தேவனே! உன்னைத் தலையால்வணங்கி வேண்டுகிறேன்' என்று சொன்னான். இந்த்ரன், 'மதங்கனே! நீ செல்லலாம். நீகேட்டது கேட்டபடியே உடனே நடக்கும். உலகத்திலுள்ள ஸ்த்ரீகளனைவரும் செல்வத்தைக் குறித்துச்செய்யும் கர்மங்களில் உன்னையே பூஜிக்கப்போகின்றனர். சந்தோதேவன்என்று க்யாதிபெற்று ஸ்த்ரீகளால் பூஜிக்கப்படத்தக்கவனாவாய். புத்ரனே! உனது கீர்த்தியும் ஒப்பற்றதாக மூவுலகங்களிலும்பரவும்' என்றுசொன்னான். தேவேந்த்ரன் இவ்வாறு அவனுக்குவரம்கொடுத்து மறைந்தான். மதங்கனும் உயிரைவிட்டு அந்த [1] உயர்ந்தநிலைமையை அடைந்தான். பரதஶ்ரேஷ்டனே! இவ்வாறு, 'ப்ராம்மண்யமென்பது மனிதர்களில் உயர்ந்தநிலைமை. அது பெறுதற்கரிது' என்று மஹாத்மாவான இந்த்ரனாலேயே சொல்லப்பட்டது" என்றார்.

## ஆறுவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் விஶ்வாமித்ரருக்கு ப்ராம்மண்யம் வந்ததைக்கேட்டது.)

யுதிஷ்டிரர், 'மனிதர்க்கதிபதியும் புருஷஶ்ரேஷ்டரும் தர்மாத்மாவுமான மஹாராஜரே! ப்ராம்மணத்வத்தை மற்றமூன்றுவர்ணத்தாரும்பெறுவது அரிதாயின்,மஹாத்மாவான விஶ்வாமித்ரரென்னும்

1 தேவத்தன்மையை அடைந்தும் ப்ராம்மணத்தன்மையை அடையவில்லை என்பது.

க்ஷத்திரியர் ப்ராம்மணத்வத்தையடைந்தது எப்படி? அதன்உண்மை யைக்கேட்க விரும்புகிறேன். பிதாமஹரே! எனக்கு அதைச்சொல்ல வேண்டும். பிதாமஹரே! அளவற்றமஹிமையுள்ளவிஸ்வாமித்ரர், தமது தவவன்மையினால் மஹாத்மாவான வஸிஷ்டருடைய நூறுபுதல் வர்களையும் விரைவில் அழித்துவிட்டாரல்லரோ? கோபத்தினால் தே கத்தில் ஆவேசங்கொண்டவிஸ்வாமித்ரரால், காலபுருஷனுக்கும் யம னுக்கும் ஒப்பானவர்களும் கொடியபராக்ரமமுள்ளவர்களுமாகிய அனேகம்ராக்ஷஸர்கள் படைக்கப்பட்டார்கள். அனேகப்ரம்மரிஷிகள் நிரம்பினதும் வித்வான்களான ப்ராம்மணர்கள்பொருந்தினதுமாகிய சிறந்த குசிகவம்சம் இம்மானிடலோகத்தில் நிலைபெறுத்தப்பெற்றது. ரிசீகருடையபுதல்வனும் சிறந்ததவமுள்ளவனுமாகிய சுனச்சேபன் மஹாயாகத்தில் பசுவாகச்செய்யப்பட்டிருந்தும் (அவரால்) விடுவிக் கப்பட்டான். அந்தச்சுனச்சேபன், ஹரிச்சந்த்ரனுடையயாகத்தில் தனதுமஹிமையினால் தேவர்களை ஸந்தோஷப்படுத்தி, சிறந்தஅறி வுள்ளவிஸ்வாமித்ரருக்குப் புத்ரனானான். மன்னரே! தேவர்களால் கொடுக்கப்பட்டு விஸ்வாமித்ரரால் ஜ்யேஷ்டபுத்ரனாக எடுத்துக்கொள் ளப்பட்டஅவனை, விஸ்வாமித்ரபுத்ரர்ஐந்நூற்றுவரும் நமஸ்கரியாமை யால், சண்டாளராகும்படி அவரால் சபிக்கப்பட்டனர். வேண்டின வர்களான வஸிஷ்டபுத்ரர்களால்விடப்பட்ட த்ரிசங்கு என்னும் இக்ஷ் வாகுவம்சத்தரசன், விஸ்வாமித்ரரால் அன்புடன் தலைகீழாகஸ்வேஸ்வர் க்கத்திலேற்றப்பட்டு இப்போதும் தென்திசையைச்சார்ந்திருக்கி றான். விஸ்வாமித்ரரின்ஸஹோதரி தேவரிஷிகளாலும் ப்ரம்மரிஷிக ளாலும்தேவர்களாலும் கொண்டாடப்பட்டகௌசிகிஎன்னும் புண்ய நதியாகச் செய்யப்பட்டாள். விஸ்வாமித்ரர் தவத்திற்கு இடையூறு செய்த [1]பஞ்சசூடையென்றுசொல்லப்பட்ட ரம்பையென்னும் சிறந்த அப்ஸரஸ், அவர்சாபத்தினால் கல்லாயினாள். அப்படியே, மேன்மை பொருந்தியவஸிஷ்டர், முற்காலத்தில்விஸ்வாமித்ரருடையபயத்தினால் [2] தம்மைக்கட்டி ஜலத்தில்மூழ்கவைத்து, மறுபடியும் கட்டறுந்துஎழு ந்தார். அதுமுதல் அந்தநதி, மஹாத்மாவானவஸிஷ்டருடைய அந் தச்செய்கையினால், [3]விபாசைஎன்னும் புகழ்பெற்ற புண்யமான மஹா நதியாயிற்று. ப்ரபுவும் பெருமைபொருந்தினவனுமான தேவேந் த்ரன், விஸ்வாமித்ரருக்கு ஸ்துதியினால்வசப்பட்டு அவர்மேல் அன்பு

---

1 ஐந்துலவை தரித்தவள்.

2 விவரம் ஆதிபர்வம் 707 - ம் பக்கத்திற்காண்க.

3 ஆதிபர்வம் 707 - ம் பக்கம் குறிப்பிற்காண்க.

கூர்ந்து அவரைச் [1]சாபத்தினின்றுவிடுவித்தான். அவர் வடதிசையைச் சார்ந்து உத்தானபாதன்புத்ரனை த்ருவனுக்கும் ஸப்தரிஷிகளுக்கும் நடுவில் எப்போதும் ப்ரகாசிக்கிறார். கௌரவரே! இவையும் இவை போன்ற இன்னும் அநேகசெய்கைகளும் க்ஷத்ரியரானவிஸ்வாமித்ர ரிடம் இருந்தனவென்பதனால் எனக்கு ஆச்சர்யமுண்டாயிருக்கிறது. பரதஸ்ரேஷ்டரே! இம்மைதெவ்வாறு உண்டானதென்பதை உண்மையா கச் சொல்லக்கடவீர். வேறுதேகம்புகாமல் அவர் ப்ராம்மணரான தெப்படி? பிதாமஹரே! இதையெல்லாம் எனக்குஉள்ளபடி சொல்ல வேண்டும். மதங்கனுக்குப்போலத்தானே இவருக்கும். பரதஸ் ரேஷ்டரே! மதங்கன் ப்ராம்மணனாகாதிருந்தது ஸரி. சண்டாளஜாதி யில்பிறந்தவன் ப்ராம்மணனாவது எது? இதைப்பற்றி எனக்குச்சொல் லும்" என்றுகேட்டார்.

## ஏழாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(விஸ்வாமித்ரருக்கு ப்ராம்மணத்தன்மைவந்தது.)

பீஷ்மர் சொல்லத்தொடங்கினர். "அப்பா! குந்திபுத்ரனே! முன்னர் விஸ்வாமித்ரர் ப்ராம்மணரானதும் ப்ரம்மரிஷியானதும் எப் படி என்பதை விசதமாகச் சொல்லுகிறேன்; கேள். பரதஸ்ரேஷ்டனே! பரதனுடையவம்சத்தில் விதிப்படி யாகங்களைச்செய்தவனும் தர்மத் தைக்காப்பவரிற்சிறந்தவனுமான மிதிலன் என்னும் ஓர் அரசனிருந் தான். அவனுக்கு மஹாராஜாவாகிய ஜன்னுவென்னும்புத்ரனிருந் தான். மஹாத்மாவான அந்தஜன்னுவுக்குக் கங்காதேவி பெண்ணா னாள். அவனுக்குக் குணங்களில் தந்தைக்கொப்பானகுணமுள்ள வனும் பெரும்புகழ்பெற்றவனுமாகிய ஸிந்துத்வீபன்என்னும்புத்ர னுண்டானான். பஹுபலசாலியான பலாகாஸ்வன்என்னும் ராஜரிஷி ஸிந்துத்வீபனுடையபுத்ரன். தர்மமே இரண்டாவதுஉருவங்கொண்டு

1 'விஸ்வாமித்ரர், த்ரிசங்குவுக்குயாகம்செய்விக்கும்போது, 'சண்டாள னுக்குயாகம்செய்விக்கும் நீ சண்டாளனுவாய்' என்று வஸிஷ்டபுத்ரர்கள்கொ டுத்தசாபத்தினால், பஞ்சம்வந்து பசியினால்வருந்தினகாலத்தில் நாயமாம்ஸத் தைத் திருட்டுத்தனமாகக்கொண்டுவந்து சமைக்கத்தொடங்கும்போது இந் த்ரன் பருந்துருபமாக அதைக் கொண்டுபோனான். அப்போதே அவர் சாப த்தினின்றுவிடுபட்டு இந்த்ரனைத் துதித்தார். மழைபெய்து பஞ்சம்நீங்கிற்று' என்பது பழையவுரை.

வந்ததுபோன்ற வல்லபனென்பவன் பலாகாஸ்வனது மைந்தன். இந்த்ரனுக்கொப்பானபராக்ரமமுள்ளகுசிகன் வல்லபனதுபுதல்வன். குசிகனதுமைந்தனாகிய சிறப்புற்ற காதியென்னுமரசன் ஸந்ததியற்றவனாகி ஸந்ததியைவேண்டித் தபோவனத்தில் வாஸஞ்செய்தான். அவன் வனத்தில்வஸிக்கும்போது புவியில்நிகரற்ற அழகுள்ளவளாகியஸத்யவதியென்றுபெயருள்ள [1]கன்னிகை பிறந்தாள். ப்ருகுவம்சத்தில்பிறந்தவரும் ச்யவனருடையபுத்ரரும் பெருந்தவத்திலிருப்பவரும் மஹிமைபொருந்தினவருமான ரிசீகரென்பவர் அந்தக்கன்னிகையைக்கேட்டார். பகைவர்களையடக்குபவனாகியகாதியென்பவன் அம்மஹாத்மாவானரிசீகரைத் தரித்திரரென்றுநினைத்து அவருக்கு அந்தப்பெண்ணைக் கொடுக்கவில்லை. மறுத்தபின் செல்லத்தொடங்கின அம்முனிவரைப்பார்த்து மறுபடியும் அந்தராஜஸ்ரேஷ்டன், 'எனக்கு ஒருகன்யாசுல்கம் கொடுக்கவேண்டும்; அதன்பிறகு என்பெண்ணை மணம் புரிவீர்' என்றுசொன்னான். அதற்கு ரிசீகர், 'அரசர்களில்சிறந்த அரசனே! உனது பெண்ணுக்காக உனக்கு என்னசுல்கத்தை நான் கொடுக்கவேண்டும்? தடையின்றிச் சொல். அதில் உனக்குச் சங்கைவேண்டாம்' என்றுகேட்டார். காதி, 'ஓ! பார்க்கவரே! ஒற்றைக்காது கறுத்தவையும் சந்த்ரகிரணம்போல (வெண்மையாக) ப்ரகாசிப்பவையும் வாயுவேகமுள்ளவையுமான ஆயிரம்குதிரைகளைக் கொடும்' என்றுகேட்டான். ப்ருகுவம்சத்தில்சிறந்தவரும் ச்யவனரது புத்ரரும் சக்தியுள்ளவருமாகிய ரிசீகர், உடனே, ஜலத்திற்கதிபதியும் அதிதியின்குமாரனுமான வருணபகவானைப்பார்த்து, 'தேவஸ்ரேஷ்டனே! ஒற்றைக்காதுகருமையும் சந்த்ரன்போன்றநிறமும் காற்றைப்போலவேகமுமுள்ள ஆயிரம்குதிரைகளை உன்னிடம் யாசிக்கிறேன்' என்றுகேட்டார். அதிதியின்புத்ரனான வருணபகவானும் ப்ருகுவம்சஸ்ரேஷ்டரான ரிசீகரைப்பார்த்து, 'அவ்வாறே ஆகட்டும். எந்த இடத்தில் நீர் நினைப்பீரோ அந்தவிடத்திலேயே குதிரைகள் எழும்பும்' என்றுசொன்னான். ரிசீகர்நினைத்தமாத்திரத்தில் சந்த்ரன்போன்றநிறமுள்ளவையும் மிக்கவேகமுள்ளவையுமான ஆயிரம்குதிரைகள் கங்கையின்ஜலத்தினின்று எழும்பின. கான்யகுப்ஜதேசத்திற்கருகில் அந்தச்சிறந்த [2]கங்கைத்துறையை அஸ்வதீர்த்தமென்று இப்போதும் மனிதர்கள் கூறுகின்றனர். அப்பா! ரிஷிகளிற்சிறந்த ரிசீகர் உடனே ஸந்தோஷத்துடன் அந்தச்சிறந்தஆயிரம்குதிரைகளையும்

1 'ஸுதாத்' என்பது வேறுபாடம். 'யாகத்தினால்' என்பது பழையவுரை.
2 'தீரம்' என்பது 'தீர்த்தம்' என்று இருத்தல்வேண்டும்.

பெண்ணுக்குப்பரிசமாகக் காதிக்குக் கொடுத்தார். பிறகு, காதி யென்னும்அரசன் வியப்புற்றுச் சாபத்திற்குப்பயந்து அந்தப்பெண் ணுக்கு அலங்காரங்களைச்செய்து அவளை ரிசீகருக்குக்கொடுத்தான். அந்தச்சிறந்த ப்ரம்மரிஷியானரிசீகர் விதிப்படி அவளைப் பாணிக்ர ஹணம்செய்துகொண்டார். அவளும் அவரைப் பதியாகவடைந்து மிகமகிழ்வுற்றாள். பாரதனே! அந்தப்ரம்மரிஷி அவளுடையஒழுக் கத்தினால் ஸந்தோஷமடைந்து அந்தச்சிறந்தபெண்ணுக்கு வரமளிப் பதாகச் சொன்னார். ராஜஸ்ரேஷ்டனே! அந்தப்பெண் அவர்சொன் னதையெல்லாம் தன்தாய்க்குச் சொன்னாள். அப்போது அவள் தாய், நாணத்தினால் சிறிது தலைகுனிந்திருக்கும்மகளை நோக்கி, 'பெண்ணே! உன்பர்த்தாவானவர், எனக்கும் ஸந்ததியைக்கொடுத்து அனுக்ரஹம் செய்யக்கடவர். அவர் சிறந்ததவமுள்ளவர்; ஸமர்த்தர்' என்று சொன்னாள். அரசனே! பிறகு, அந்தப்பெண் விரைவாகச்சென்று தன் தாயின்கருத்தை முழுதும் தெரிவித்தபோது அவளைப்பார்த்து ரிசீ கர், 'நீயும் அவளும் குணமுள்ள பிள்ளையைப் பெறுவீர்கள். பெண் ணரசியே! உன்தாயினுடையவேண்டுகோள் வீணாகத்தகாது. குண ங்களில்சிறந்தவனும் நமதுஸந்ததியைவ்ருத்திசெய்கிறவனுமான சிற ந்தபுத்ரனும், தாய்வம்சத்தைவ்ருத்திசெய்யும்ஸஹோதரனும் உனக் குப் பிறக்கப்போகின்றனர். சிறந்தவளே! ருதுஸ்நானம்செய்தபிறகு, உன்தாய் அரசமரத்தையும் நீ அத்திமரத்தையும் தழுவிக்கொள் ளுங்கள். உடனே விரும்பினதையடைவீர்கள். வெளுத்தபுன்னகை யுள்ளவளே! மந்த்ரத்தினால் ஜபிக்கப்பட்டுப் பரிசுத்தமாயுள்ள இவ் விரண்டு [1]ஹவிஸுகளையும் உன்தாயும் நீயும் உண்ணுங்கள். அதனால், புத்ரர்களையடைவீர்கள்' என்றுசொன்னார். பிறகு, ஸத்யவதி மகிழ் ந்து ரிசீகர் சொன்னதைத் தாய்க்குச்சொல்லி, அவ்விரண்டு ஹவிஸு களையும் காண்பித்தாள். பிறகு, தாயானவள் தன்பெண்ணான ஸத்ய வதியைப்பார்த்து, 'பெண்ணே! மூத்தவளாகிய நான் சொல்வதைச் செய். குற்றமற்றவளே! தாயாகிய என்சொல்லில் உனக்குக் கௌர வமிருக்குமாயின் உன்பர்த்தா மந்த்ரத்தினால் ஸம்ஸ்காரம்செய்து உன க்குக்கொடுத்தஹவிஸை நீ எனக்குக்கொடு; என்னுடையஹவிஸை நீ எடுத்துக்கொள். வெளுத்தபுன்னகையுள்ளவளே! இரண்டுமரங் களையும் நாமிருவரும் மாற்றிக்கொள்வோம். எவனும் தன்ஸந்ததி சிறந்ததாகவும் குற்றமில்லாததாகவுமிருக்கவிரும்புவான். மஹிமை

---

1 இந்தக்கதையை, சாந்திபர்வம் 156 - ம் பக்கத்தில் பரசுராமர்ஜனனம் சொல்லுமிடத்தும் காண்க.

பொருந்திய ரிசீகரும் இந்தவிஷயத்தில் இவ்வாறேசெய்திருக்க வேண்டுமென்பது வெளிப்படை. அழகிய இடையுள்ளவளே! அதனால், எனக்கு உன் ஹவிஸிலும் உன்மரத்திலும் எண்ணமிருக்கிறது. ஸஹோதரன் சிறந்தவனாக எப்படியுண்டாவானென்பதைத்தான் நீ நினைக்கவேண்டும்' என்றுசொன்னாள். ஸத்யவதியும் அவள்தாயும் அவ்வாறேசெய்தனர். யுதிஷ்டிர! பிறகு, அவ்விருவரும் கர்ப்பங்களைத் தரித்தனர். ப்ருகுவம்சஸ்ரேஷ்டரான ரிசீகமஹரிஷி கர்ப்பந்தரித்திருந்ததம்மனைவியான ஸத்யவதியைக்கண்டு துயரத்துடன், 'சிறந்தவளே! ஹவிஸை நீ மாறுதலாகஉட்கொண்டிருக்கவேண்டுமென்பது நிச்சயம். மரத்திலும் மாறுதல் நடத்தப்பட்டதென்பதில் ஸந்தேஹமில்லை. என்னால், ப்ரம்மதேஜஸ் அனைத்தும் உன்னுடையஹவிஸிலும் க்ஷத்ரியசக்திமுழுதும் உன்தாய்ஹவிஸிலும் பொருத்தப்பட்டன. மூன்றுலகங்களிலும் புகழ்பெற்றப்ராம்மணனை நீயும், அப்படியே சிறந்தக்ஷத்ரியனை உன்தாயும் பெறுவீர்களென்று நான் இதைச் செய்தேன். சிறந்தவளே! நீயும் உன்தாயும் மாறுதல்செய்துவிட்டபடியால், உன்தாய் சிறந்தப்ராம்மணனைப் பெறுவள். அன்புள்ளவளே! நீயோவெனில் கொடியசெய்கையுள்ள க்ஷத்திரியனைப் பெறுவாய். பெண்ணரசியே! தாயினிடத்திலுள்ள அன்பினால் சரியான காரியம் செய்யாமற்போனாய்' என்றுசொன்னார். தர்மராஜனே! அந்தப்பெண்ணரசியானஸத்யவதி அதைக்கேட்டுத் துயரத்தினால்கொதிப்புற்று, அறுக்கப்பட்டஅழகியகொடிபோலத் தரையில் விழுந்தாள். காதியின்பெண்ணும் ரிசீகரின் மனைவியுமான அந்தஸத்யவதி மூர்ச்சைதெளிந்தபிறகு பார்க்கவஸ்ரேஷ்டரான தன்பர்த்தாவைத் தலைவணங்கிநமஸ்கரித்து, 'ப்ரம்மஜ்ஞானிகளிற்சிறந்தவரே! உம்முடைய பார்யையானநான் ப்ரார்த்திக்கிறேன். ப்ரம்மரிஷியே! அனுக்ரஹம் செய்யும். எனக்கு க்ஷத்ரியனானபுத்ரன் உண்டாகாமலிருக்கவேண்டும். ப்ராம்மணரே! கொடியசெய்கையுள்ள பேரன்பிறந்தாலும் பிறக்கட்டும். என்பிள்ளை அப்படியிருக்கலாகாது. இந்தவரத்தை எனக்குக் கொடுக்கவேண்டும்' என்றுகேட்டாள். மிகச்சிறந்ததவமுள்ளரிசீகர், 'அப்படியே ஆகட்டும்' என்று தம்மனைவிக்குச் சொன்னார். பிறகு, அந்தஸத்யவதி ஜமதக்னியென்னும் சிறந்தபிள்ளையைப் பெற்றாள். அரசர்க்கரசனே! புகழ்பெற்றவளான காதியின்மனைவி ரிசீகமஹரிஷியின் அனுக்ரஹத்தினால், வேதங்களைவெளியிடுகிறவரும் ப்ரம்மரிஷியுமான்விஸ்வாமித்ரரைப்பெற்றாள். அதனாலேதான் சிறந்த தவமுள்ளவிஸ்வாமித்ரர், க்ஷத்ரியராயிருந்தும் ப்ராம்மணத்வத்தை

அடைந்து பின்னும் ப்ராம்மணஸந்ததியை உண்டுபண்ணினர். அவருடையபுத்ரர்களும், மஹாத்மாக்களும் ப்ராம்மணவம்சத்தைவ்ருத்திசெய்கிறவர்களும் தவத்தில்சிறந்தவர்களும் ப்ரம்மஜ்ஞானிகளும் கோத்ரங்களுக்குமுதற்புருஷர்களுமாகவே இருந்தனர். பகவானுனமதுச்சந்தன், தவவன்மையுள்ளதேவராதன், அக்ஷீணன், சகுந்தன், பப்ரு, காலபதன், பெயர்பெற்றயாஜ்ஞவல்க்யன், சிறந்ததவமுள்ள ஸ்தூணன், உலூகன், யமதூதன், ஸைந்தவாயனனென்னும்ரிஷி, மகிமைபொருந்தியபர்ணஜங்கன், [1]காலவமஹரிஷி, வஜ்ரனென்னும்ரிஷி, க்யாதிபெற்றஸாலங்காயனன், லீலாட்யன், நாரதன், கூர்ச்சாமுகன், வாதுலி, முஸலன், வக்ஷோக்ரீவன், ஆங்க்ரிகன், நைகத்ருக், சிலாயூபன், ஸிதன், சுசி, சக்ரகன், மாருதந்தவ்யன், வாதக்னன், அச்வலாயனன், ச்யாமாயனன், கார்க்யன், ஜாபாலி, ஸுச்ருதன், காரீஷி, ஸம்ச்ருத்யன், பரன், பௌரவன், தந்து, கபிலமஹரிஷி, தாடகாயனரிஷி, உபகஹனன், ஆஸுராயணரிஷி, மார்த்தமரிஷி, ஹிரண்யாக்ஷன், ஜங்காரி, பாப்ரவாயணி, பூதி, விபூதி, ஸூதன், ஸுரக்ருத், அராலி, நாசிகன், சாம்பேயன், உஜ்ஜயனன், நவதந்து, பகநகன், ஸேயனன், யதி, அம்போருதன், சாருமத்ஸ்யன், சிரீஷி, கார்த்தபி, ஊர்ஜயோனி, உதாபேக்ஷி, நாரதியென்னுமஹரிஷி ஆகிய விச்வாமித்ரர்மைந்தர்களனைவரும், வேதங்களைவெளியிட்டமஹரிஷிகள். தர்மராஜனே! அதனாலேதான் க்ஷத்ரியரானவிச்வாமித்ரர் சிறந்ததவமுள்ள ப்ரம்மரிஷியானார். யுதிஷ்டிர! ரிசீகரால்வைக்கப்பட்ட அந்தமந்த்ரம் பெரிது. பரதச்ரேஷ்டனே! சந்த்ரன்ஸூர்யன் அக்னிஇவர்களுக்கொப்பானமஹிமையுள்ள விச்வாமித்ரருடைய ஜனனமுழுதும் உள்ளபடி உனக்குச் சொல்லப்பட்டது. அரசச்ரேஷ்டனே! இன்னும் எந்தஎந்த விஷயத்தில் உனக்கு ஸந்தேஹமிருக்கிறதோ அந்தஅந்தவிஷயங்களிலும் என்னைக் கேள். உன்ஸந்தேஹங்களைப் போக்குவேன்" என்றார்.

## எட்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(வீதஹவ்யராஜனும் அவன்வம்சமும் ப்ராம்மணரானவரலாறு.)

யுதிஷ்டிரர், "குருவம்சச்ரேஷ்டரே! பேசுகிறவர்களிற்சிறந்தவரே! ப்ராம்மணத்வத்தைப்பெறுவது மிகக்கடினமென்று நீர்சொல்லிய இந்தச்சிறந்தசரித்ரத்தை நான் கேட்டேன். மஹாராஜரே!

---

1 மூலத்தில் 'காவலர' என்றிருக்கிறது.

பிதாமஹரே! ராஜாவான விஸ்வாமித்ரர்ப்ராம்மணத்வத்தைஅடைந்த வகையெல்லாம் உம்மால் விரிவாக உரைக்கப்பட்டது. அறிஞரிற் சிறந்த அரசரே! அவற்றையெல்லாம் நான்கேட்டேன். கௌரவர்களை வ்ருத்திசெய்கிறவரே! எங்களுக்கு மேலானஞானம் உம்மாலேதான் உண்டாகிறது. ப்ரபுவே! கங்காபுத்ரரே! வீதஹவ்யனென்னும் அரசன் ப்ராம்மணத்வத்தை அடைந்ததாக நான் கேட்டிருக்கிறேன். அதைப்பற்றித்தான் (இப்போது) கேட்கவிரும்புகிறேன். அரசரிற் சிறந்த அவன், வரத்தினாலேயா தவத்தினாலேயா என்னசெய்கையினால் ப்ராம்மணத்தன்மையை அடைந்தானென்பதை எனக்கு உரைக்கக் கடவீர்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினர்.

"அரசனே! பெரும்புகழோனாகிய வீதஹவ்யனென்னும்ராஜரிஷி, பெறுதற்கரிதும் உலகங்களினால் கொண்டாடப்பெற்றதுமாகிய ப்ராம்மணத்வத்தை அடைந்தவகையைக் கேள். அப்பா! ப்ரஜைகளைத்தர்மமாகரக்ஷித்த மஹாத்மாவானமனுவுக்குச் சர்யாதியென்று பெயர்பெற்றவனும்தர்மத்திலூக்கமுள்ளவனுமான ஒருபுத்ரன் இருந்தான். ஜயிப்பவரிற்சிறந்தஅரசனே! அவன்வம்சத்தில் ஹைஹயன் தாலஜங்கனென்னும் இரண்டு அரசர்கள் வத்ஸதேசத்திலிருந்தனர். அரசர்க்கரசனானபாரதனே! ஹைஹயனுக்குப் பத்துமனைவிகளிடம் போரில்பின்வாங்காமல் வெற்றிபெறும் சூரர்களும் தேகவன்மையும் ஒரேவிதமானஉருவமும் மஹிமையுமுள்ளவர்களுமான நூறுபிள்ளைகள் உண்டாயினர். அவர்கள் தனுர்வேதத்திலும் எல்லாவேதங்களிலும் உழைத்திருந்தனர். வேந்தனே! ஜயிப்பவரிற்சிறந்தவனும் திவோதாஸனுக்குப்பாட்டனுமாகிய ஹர்யஸ்வன் என்றுபெயர்பெற்ற அரசன் காசிதேசத்திலிருந்தான். புருஷஸ்ரேஷ்டனே! வீதஹவ்யனென்றுபெயருள்ள ஹைஹயனுடையமைந்தர்கள்காசிதேசத்திற்கு வந்து கங்கைக்கும் யமுனைக்கும்நடுத்தேசத்தில் நடந்தபோரில் அந்த ஹர்யஸ்வனைக் கொன்றனர். மஹாரதர்களும் யாரிடத்திலும் அச்சமற்றவர்களுமான அந்தவீதஹவ்யன் புதல்வர்கள், அவ்வரசனைக்கொன்றபின் வத்ஸதேசத்தின் அழகானராஜதானிக்குத் திரும்பிச்சென்றனர். தேவதையைப்போன்றவனும் தர்மமே இரண்டாவதுஉருவமெடுத்துநேரேவந்ததுபோன்றவனுமாகிய ஹர்யஸ்வன்மைந்தனை ஸுதேவன் காசிராஜாவாகப் பட்டாபிஷேகம் செய்யப்பெற்றான். தர்மத்தில் மனமுள்ள அந்தஸுதேவன் பூமியைஆண்டுகொண்டிருக்கும்போது வீதஹவ்யன் மைந்தர்களனைவரும் அங்கே வந்து யுத்தத்தில் அவனை ஜயித்தனர். அவனை யுத்தத்தில் ஜயித்தபிறகு அவர்கள் வந்தவிதமே

திரும்பிச்சென்றனர். அதன்பிறகு, ஸுதேவன்புதல்வனாகிய திவோ தாஸனென்பவன் காசிராஜாவாக அபிஷேகம்செய்யப்பெற்றான். அரச ச்ரேஷ்டனே! சிறந்த பராக்ரமமுள்ள திவோதாஸன் மன உறுதி யுள்ளவர்களான வீதஹவ்யன் புத்ரர்களின்பராக்ரமத்தையறிந்து இந் த்ரனது கட்டளையினால் ப்ராம்மணர்களும்க்ஷத்ரியர்களும் வைச்யர்க ளும் சூத்ரர்களும் நிரம்பினதும் மிக்கபொருட்குவியல்களையுடைய தும் நிரம்பின கடைகளோடும் கடைத்தெருக்களோடும் கூடியதும் இந்திரனது அமராவதியைப்போன்றதுமான வாராணஸியென்னும் ராஜதானியைக் கோமதிநதியின்தென்கரையில் கங்கையின் வடகரை யோரத்தில் உண்டுபண்ணினான். பாரதனே! அரசரிற்சிறந்தஅந்தத் திவோதாஸராஜன் அங்கே வஸிக்கையில் வீதஹவ்யபுத்ரர்கள் திரும் பவும்வந்து சூழ்ந்துகொண்டனர். சிறந்தபலமும்பெரும்புகழுமுள்ள அந்தத்திவோதாஸனென்னும் அரசன், ஊரிலிருந்துவெளிப்பட்டுத் தேவாஸுரயுத்தத்திற்கொப்பான பயங்கரமானயுத்தத்தை அவர்க ளுக்குக் கொடுத்தான். மஹாராஜனே! அவன் நூறுதினங்கள்நட ந்த அந்தயுத்தத்தில் யானைகுதிரைகள் முதலியவாஹனங்கள் பெரும் பாலும் அடிபட்டதனால் சோர்வையடைந்தான். அரசனே! பிறகு, யோர்வீரர்களிறந்தும் பொக்கசங்கள் செலவழிந்தும் போனதனால் திவோதாஸராஜன் நகரைவிட்டு ஓடத்தலைப்பட்டான். பகைவரை வெல்லுகிறவனே! அவ்வரசன், சிறந்தஞானமுள்ளபரத்வாஜரின் அழ கான ஆச்சிரமத்திற்குச்சென்று கரங்குவித்து அவரைச்சரணமடைந் தான். ப்ருஹஸ்பதியின் மூத்தகுமாரரும் நல்லொழுக்கமுள்ளவரும் புரோஹிதருமானபரத்வாஜர், அந்தத்திவோதாஸராஜனைப்பார்த்து, 'அரசனே! நீவந்தகார்யம் யாது? எல்லாவற்றையும் எனக்குச்சொல். உன்விருப்பத்தை நான்செய்வேன். அதில் எனக்கு ஆலோசனை யில்லை' என்றுகேட்க, அவ்வரசன், 'பகவானே! வீதஹவ்யன்புத்ரர் களினால் எனதுகுலமே போரில் அழிக்கப்பட்டது. நான்ஒருவன் துயரப்பட்டு உங்களைச் சரணமடைந்தேன். பகவானே! சிஷ்ய னென்று அன்புவைத்து நீர் என்னைக்காப்பாற்றக்கடவீர். கெட்ட செய்கைக்காரரான வீதஹவ்யபுத்ரரால் என்வம்சத்தில் நானொருவ னே மிச்சமாகச்செய்யப்பட்டேன்' என்றுசொன்னான். மஹானு பாவரும் சிறந்தசக்தியுள்ளவருமான பரத்வாஜர், அவனை நோக்கி 'ஸுதேவன்மைந்தனே! பயப்படவேண்டாம்; பயப்படவேண்டாம். உனதுபயம்விலகிப்போகட்டும். வேந்தனே! நான் உனக்குப் புத்ர னைக்குறித்து ஒருயாகம்செய்வேன். அந்தப்பிள்ளையால் அநேக ஆயி

ரம்வைதஹவ்யர்களை நீ அடிப்பாய்" என்றுசொன்னார். பிறகு, அந்த ரிஷி அவ்வரசனுக்குப் புத்ரகாமேஷ்டியைச் செய்தார். பிறகு அந்தத்திவோதாஸனுக்கு ப்ரதர்த்தனனென்னும்புத்ரன்பிறந்தான். பாரதனே! சிறந்தஞானமுள்ள பரத்வாஜருடைய யோகசக்தியினால் அவன் பிறந்தவுடன் பதின்மூன்றுவயதுள்ளவனாகவளர்ந்து, வேதம், தனுர்வேதம் எல்லாவற்றையும் சொன்னான். உலகத்திலுள்ள சக்திகளனைத்தும் அவன் தேஹத்தில் ப்ரவேசித்திருந்தன. பிறகு, கவசம் தரித்து வில்லெடுத்துத் தேவரிஷிகளாலும் துதிக்கப்பெற்று வந்திகளால் விருதுகள்படிக்கப்பெற்ற அந்தப்ரதர்த்தனன் உதயமானஸூர்யன்போல விளங்கினான். அவன் தேரிலேறிக் கத்திகட்டிக்கொண்டு ஜ்வலிக்கின்ற அக்னிபோலவிளங்கினான். அவன், வில்லை உதறிக்கொண்டு மழைபொழியத்தொடங்கும் மேகம்போலப் புறப்பட்டான். திவோதாஸன் அவனைக்கண்டு மிகமகிழ்வுற்றான். திவோதாஸன், வீதஹவ்யன்புத்ரர்கள் எரிக்கப்பட்டதாகவேமனத்தில் நினைத்தான். பிறகு, அவன் ப்ரதர்த்தனனை இளவரசனாகப் பட்டாபிஷேகம்செய்வித்து, தான் க்ருதார்த்தனனாக நினைத்தான். பிறகு, திவோதாஸராஜன் வீதஹவ்யபுத்ரர்களை வதம்செய்வதற்காக, தன்புத்ரனும் பகைவர்களைஜயிப்பவனுமான ப்ரதர்த்தனனை அனுப்பினான். பராக்ரமசாலியும் பகைவர்களின்நகரங்களை ஜயிப்பவனுமான ப்ரதர்த்தனன் ரதமேறிக்கங்கையை விரைவாகத்தாண்டி வைதஹவ்யர்களின் நகரத்துக்குச் சென்றான். வீதஹவ்யபுத்ரர்களும் மிகப்பெரிதானதேரொலியைக்கேட்டு நகரங்கள்போன்றவையும் அயலார்தேர்களைமுறிப்பவையுமான ரதங்களில்ஏறிப் புறப்பட்டனர். சித்ரயுத்தம்செய்யத்தக்க புருஷஸ்ரேஷ்டர்களான வீதஹவ்யபுத்ரர்கள் கவசங்களைப்பூண்டுவில்லெடுத்துச் சரமாரிகள்பொழிந்துகொண்டு புறப்பட்டு ப்ரதர்த்தனனைச் சந்தித்தனர். யுதிஷ்டிர! பலவகைகளான ரதக்கூட்டங்களுடன் இமயமலையின்மேல் மேகங்கள் மழைபொழிவதுபோல ப்ரதர்த்தனராஜன்மேல் அஸ்த்ரங்களைப்பொழிந்தனர். சிறந்த பராக்ரமசாலியான ப்ரதர்த்தனராஜன் அவர்களின் அஸ்த்ரங்களை அஸ்த்ரங்களாலேயே தடுத்து இடிக்கும்அனலுக்கும்ஒப்பானசரங்களினால்அவர்களை அடித்தான். அரசனே! அவர்கள், நூறாயிரக்கணக்கான அர்த்தசந்த்ர பாணங்களினால் சிரங்கள் துணிக்கப்பட்டு உதிரத்தினால் அங்கங்கள் நனைந்து வெட்டப்பட்ட [1]பலாசமரங்கள்போல்விழுந்தனர். வீதஹவ்

---

1 பலாசமரங்களின்மலர்கள் ரக்தம்போலச் சிவந்திருப்பதனால் உவமையாயின.

யன் தனதுபுத்ரர்கள்எல்லாரும்கொல்லப்பட்டபிறகுதனதுநகரத்தை விட்டு ப்ருகுமஹரிஷியின் ஆஸ்ரமத்திற்குஓடினன். வீதஹவ்யராஜன் ப்ருகுமஹரிஷியை அடைக்கலம்அடைந்தான். அந்தவீதஹவ்யனுக்கு ப்ருகுவானவர் அபயம் அளித்தனர்; தம்சிஷ்யர்களின் நடுவில் அவனுக்கு வேறுஆஸனத்தையும் அளித்தனர். உடனே ப்ரதர்த்தனனும் விரைவாகத்தொடர்ந்து அங்கேவந்தான். அவன் ப்ருகுவின் ஆஸ்ரமத்தையடைந்து, 'ஓ! ஓ! மஹாத்மாவான ப்ருகுவின்சிஷ்யர்கள் யார் இந்த ஆஸ்ரமத்திலிருக்கின்றனர்? நானும் முனிவரைக்காணவிரும்புகிறேன். என்னை அவருக்குத் தெரிவியுங்கள்' என்றுசொன்னன். அந்த ப்ருகுவானவர் அவனைத்தெரிந்துகொண்டு உடனேஆஸ்ரமத்திலிருந்துவெளியில்வந்து அந்தராஜஸ்ரேஷ்டனை முறைப்படி உபசரித்தார்; அவனைப்பார்த்து, 'அரசர்க்கரசே! பூமிக்கதிபதியே! உனக்கு ஆக வேண்டியகார்யம் என்ன? சொல்' என்றுகேட்க, அவ்வரசன் தான் வந்தகாரணத்தை அவருக்குத் தெரிவிக்கலானன். 'ப்ராம்மணரே! இந்தவீதஹவ்யனென்னும்அரசன் இங்கிருந்து விட்டுவிடப்படவேண்டும். அந்தணரே! இவனதுபுத்ரர்களினல் என்வம்சமெல்லாம் அழிக்கப்பட்டது; என்னுடைய காசிதேசமும் ரத்னக்குவியலும் அபஹரிக்கப்பட்டன. பராக்ரமத்தினல்கர்வங்கொண்ட இவ்வரசனது நூறுபுத்ரர்கள், என்னல் கொல்லப்பட்டனர். இப்போது இவனைவதம்செய்து என்பிதாவின்கடனைத் தீர்க்கப்போகிறேன்' என்ருன். தர்மத்தைக் காப்பவரிற்சிறந்தவரான ப்ருகு, வீதஹவ்யன்மேல் கருணைகூர்ந்தவராய் ப்ரதர்த்தனனைப்பார்த்து, 'இங்கே க்ஷத்திரியன்எவனுமில்லையே? இவர்களனைவரும் ப்ராம்மணர்களல்லரோ?' என்றுசொன்னர். ப்ருகுவின் இந்தஉண்மையானசொல்லைக்கேட்டு ப்ரதர்த்தனன், ஸந்தோஷம்அடைந்து அவர்பாதங்களைப்பிடித்துக்கொண்டு மெதுவாக, 'பகவானே! இப்படிச்செய்தும் நான் க்ருதார்த்தனனேன்; ஸந்தேஹமில்லை. ஏனெனில், நான் என்பராக்ரமத்தினல், இந்தவீதஹவ்யராஜனைத் தன்ஜாதியை விடும்படிசெய்தேன். ப்ராம்மணரே! எனக்கு விடைகொடும். எனக்குக்ஷேமமுண்டாகும்படி நினைக்கக்கடவீர். ப்ருகுவம்சத்தலைவரே! இவ்வரசன் தன்ஜாதியை என்னல் விடுவிக்கப்பட்டானல்லனே?' என்றுசொன்னன். மஹாராஜனே! பிறகு, ப்ருகுவினல்விடைகொடுக்கப்பட்ட ப்ரதர்த்தனராஜன் விஷத்தை விட்டுவிட்டஸர்பம்போலவந்தவழியேசென்ருன். மஹாராஜனே! அந்த வீதஹவ்யன், ப்ருகுவின் அந்தச்சொல்மாத்திரத்தினலேயே ப்ரம்மரிஷியும் ப்ரம்மஜ்ஞானியுமானன். அவனது புத்ரனை க்ருத்ஸமதன்

உருவத்தில் இரண்டாவது இந்த்ரன்போல இருந்தான். அவன் அஸுரர்களால், 'நீதான் இந்த்ரன்' என்று பிடிக்கப்பட்டானும். அந்த மஹாத்மாவான க்ருத்ஸமதனுடைய சிறந்த [1]ஶ்ருதியானது ரிக்வேதத்திலிருக்கிறது. அரசனே! அந்தக்ருத்ஸமதன் அதனுல் ப்ராம்மணர்களால் பூஜிக்கப்படுகிறுன். அந்தச்சிறப்புள்ள க்ருத்ஸமதன்என்னும் ப்ரம்மரிஷி ஜிதேந்திரியனுகவிருந்தான். அந்தக்ருத்ஸமதனுக்கு ப்ராம்மணனுன ஸாவைநஸன் என்னும்புத்ரன் உண்டானுன். ஸாவைநஸனுடையபுத்ரன் விதஸ்த்யன். விதஸ்த்யனுடையபுத்ரன் சிவஸ்தன். சிவஸ்தனுடையபுத்ரன் ஶ்ரவஸ்என்னும்ரிஷி. ஶ்ரவஸினுடைய புத்ரன் தமஸ்என்பவன். ப்ரகாசனென்னும் ப்ராம்மணஶ்ரேஷ்டன் தமஸின்புதல்வன். ஜயிப்பவரிற் சிறந்தவனுன வாகிந்த்ரன் ப்ரகாசனுடைய புத்ரன். வேதங்களிலும் வேதாங்கங்களிலும் கரைகண்டவனுனப்ரமதி வாகிந்த்ரனுடையபுத்ரன். ப்ரமதிக்கு க்ருதாசியென்பவளிடம் ருருவென்னும் மைந்தன் பிறந்தான். ருருவுக்கு ப்ரமத்வரையினிடம் சுனகனென்னும் புத்ரனுண்டானுன். சுனகனுடைய புத்ரர் சௌனகர் என்னும் ப்ரம்மரிஷி. அரசர்க்கரசனே! க்ஷத்ரியத்தலைவனே! க்ஷத்ரியனுகவிருந்த வீதஹவ்யராஜன் ப்ருகுவின் அனுக்ரஹத்தினுல் இவ்வாறு ப்ராம்மணத்வத்தையடைந்தான். அரசனே! க்ருத்ஸமதனுடைய இந்த வம்சத்தை உனக்கு விரிவாகச் சொன்னேன். மஹாராஜனே! மற்றுமென்ன கேட்கிறுய்?" என்றுர்.

## ஒன்பதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(முயற்சியின் சிறப்பு.)

யுதிஷ்டிரர், "சிறந்த ஞானமுள்ளவரும் எல்லாக்கலைகளிலும் நிபுணருமான பாட்டனுரே! தெய்வம் முயற்சியென்னும் இரண்டனுள் எது சிறந்ததாகும்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானுர்.

"யுதிஷ்டிர! இந்த விஷயத்திலும் வஸிஷ்டருக்கும் ப்ரம்மதேவருக்கும்நடந்த ஸம்பாஷணையாகிய இந்த ஒரு பழையசரித்ரத்தைக் கூறுகின்றனர். முன்னர் மஹிமைபொருந்திய வஸிஷ்டர், ப்ரம்மதேவரைப்பார்த்து, 'ஊழ்வினை மனிதன்முயற்சியென்னும் இரண்ட

1 அவன் பார்த்தமந்த்ரம். மந்த்ரங்கள் நித்யமாயிருந்தாலும் ஒவ்வொரு மஹாத்மாவுக்கு யோகமஹிமையினுல் புத்திக்குப் புலப்பட்டதுகாரணமாக அவரவர் பார்த்த மந்த்ரங்களென வழங்குகின்றன.

னுள் எது சிறந்தது?' என்றுகேட்டார். அரசனே! பிறகு, தாமரை மலரில் பிறந்தவரும் தேவர்க்கும் தேவருமான ப்ரம்மதேவர் காரணங் களும் கார்யங்களும் அடங்கிய இன்சொல்லைச் சொல்லலானார். 'வித் திலிருந்து முளை முளைக்கிறது. முளையிலிருந்து இலையுண்டாகிறது. இலையிலிருந்து காம்புஉண்டாகிறது. காம்பிலிருந்து கிளையுண்டா கிறது. கிளையிலிருந்து மலர்உண்டாகிறது. மலரிலிருந்து கனியுண் டாகிறது. கனியினால் வித்துஏற்படுகிறது. வித்திலிருந்து திரும்ப வும் உற்பத்தி ஆகிறது. வித்தில்லாமல் ஒன்றும் உண்டாவதில்லை. வித்தின்றிப் பழமில்லை. வித்திலிருந்து வித்துண்டாகிறது. வித் தில்லாவிடில் பலனில்லை. விதைவிதைப்பவன் நிலத்தையடைந்து எவ் வகையான விதையை விதைக்கிறானோ அவ்விதமான பலனை அடை வதுபோல, நல்வினைக்கும் தீவினைக்கும் தக்கபலனை மனிதன் அடை கிறான். [1]நிலமில்லாமல் விதைக்கப்பட்டவிதை பயன்படாததுபோல, முயற்சியில்லாத ஊழ்வினை பயன்படுவதில்லை. செய்வினை பூமியாகவும் ஊழ்வினை விதையாகவும் கூறப்படுகின்றன. நிலமும் வித்தும் சேர்வத னால் வித்திலிருந்து பயிர்வளர்கின்றது. செய்பவன் தன் செய்கை யினால் உண்டானபலனைத் தானே அனுபவிக்கிறான். செய்ததும் செய்யாததும் உலகத்தில் ப்ரத்யக்ஷமாகக் காணப்படுகின்றன. நல் வினையினால் இன்பமும் தீவினையினால் துன்பமும்உண்டாகின்றன. கார் யத்தைச் செய்பவன் பாக்யத்தினால் நோக்கப்பெற்று எல்லாவற்றிலும் லாபத்தை அடைகிறான். செய்யாதவன் தன் நிலைகுலைந்து புண்ணில் உப்புநீர் விட்டதுபோன்ற துயரத்தை அடைகிறான். தவத்தினால் தேஹத்தின் அழகும் பலவகைரத்னங்களும் கிடைக்கின்றன. முயற்சி யினால் எல்லாம் கிடைக்கின்றன. முயற்சிசெய்யாதவனுக்கு அதி ருஷ்டத்தினால் வருவது ஒன்றுமில்லை. அவ்வாறே ஸ்வர்க்கமும் காமஸுகமும் தான்விரும்பினஐஸ்வர்யமும் இவையனைத்தும் இங்கே செய்த முயற்சியினால் அடையப்படுகின்றன. நக்ஷத்ரங்களும் தேவர் களும் நாகர்களும் யக்ஷர்களும் சந்த்ரன் ஸூர்யன் வாயு இவர்களனை வரும் மனிதர்களாயிருந்து, முயற்சியினால் தேவத்தன்மையை அடை ந்தவர்கள். செல்வமும் ஸ்நேஹர்களும் ராஜ்யமும் குலமும் தேஜ ஸும் கர்மம்செய்யாதவர்களுக்கு அனுபவிக்கக்கிடைக்காதவை. ப்ராம் மணன் தூய்மையினாலும் க்ஷத்ரியன் பராக்கிரமத்தினாலும் வைஸ்யன் விடாமுயற்சியினாலும் சூத்ரன் பணிவிடையினாலும் ஐஸ்வர்யத்தை அடைகின்றனர். தானம்செய்யாதவனையும் பயந்தவனையும் முயற்சி

[1] பலிக்கத்தக்க பூமியில்லாமல்.

யில்லாதவனையும் சோம்பேறியையும் சூரத்தனமில்லாதவனையும் தவமில்லாதவனையும் [1]செல்வங்கள் அடைவதில்லை. மூன்றுலகங்களும் தேவர்தானவரனைவரும் எவரால்படைக்கப்பட்டனரோ அந்தப்பகவானான விஷ்ணு, இப்போதும் கடலில் தவம்செய்கிறார். தம்தம்செய்கைகளுக்குப் பயனில்லாமல்போமாயின், உலகம் தெய்வத்தையே எதிர்பார்த்துக்கொண்டு, ஒன்றும் செய்யாமலிருந்துவிடும். அப்போது எல்லாம் வீணாய்ப்போம். மானிடர் எப்பயும் முயற்சியைச்செய்யாமல் தெய்வத்தையே நம்பியிருப்பவன், ஆண்மையில்லாத கணவனையடைந்தபெண்போல வீணாகவருத்தப்படுகிறான். புண்யபாவங்களுக்குத் தேவலோகத்தில் சீக்ரமாகப் பயனுண்டாவதுபோல மானிடலோகத்தில் உண்டாவதில்லை. செய்யப்படும்முயற்சியானது தெய்வத்தை அநுஸரித்தேயிருக்கிறது. முயற்சியில்லாதபோது தெய்வமானது யாருக்கும் எதையும் கொடுக்கமாட்டாது. தேவர்களிலும் அவரவர் நிலைமைகள் நிலையற்றனவாகக் காணப்படுகின்றனவே. தெய்வத்தையே ஸாதிப்பவனுக்கு அது செய்கையில்லாமல் எப்படிநிற்கும்? தேவர்கள் இவ்வுலகத்தில் யாருக்காகவும் முயற்சிசெய்வதில்லை. அவர்கள், 'நாம் தாழ்த்தப்படுவோம்' என்று அசக்தினால் கொடிய இடையூற்றையே உண்டுபண்ணுகின்றனர். ரிஷிகளுக்கும் தேவர்களுக்கும் எப்போதும் விரோதமிருக்கிறது. தெய்வமும் காரணமாயிருப்பதனால் அது இல்லையென்று யார் சொல்லக்கூடும்? தெய்வாதீனமாக நடக்கும்கார்யம் உண்டாவதெப்படி? இவ்வுலகிற்போலவே தேவலோகத்திலும் சிறந்தஸுகம் அடையப்படுகிறது. தானே தனக்கு நண்பன். தானே தனக்குப்பகைவன். தான்செய்ததற்கும் செய்யாததற்கும் தானே ஸாக்ஷி. செய்கருமம் ஒன்று கெடுமாயின் பெருமுயற்சியால்கூடிவரும். நல்வினையும் தீவினையும் புண்யமும் பாவமும் முயற்சியில்லாதவனுக்கு வருமா? தேவலோகமும் புண்யபலனே. எவையும் புண்யங்களாலேயே அடையப்படுகின்றன. புண்யமில்லாத மனிதனையடைந்து, தெய்வம் என்ன என்னசெய்யக்கூடும்? முன்னர், [2]யயாதி ஸ்வர்க்கத்தினின்று தள்ளப்பட்டு நழுவிப் பூமியில்விழுந்தபோது அவனுடையதௌஹித்ரர்கள் தம்தம்புண்ணியகர்மங்களினால் அவனைத் திரும்பவும் ஸ்வர்க்கத்திலேற்றினர். முன்னர், [3]ஐலனென்றுபெயர்பெற்றவனும்பூமிக்கதிபதியுமான புரூரவன் என்னும்ராஜ

---

1 இவர்களுக்கு ஒரு லாபமும் கிடைக்கிறதில்லை.

2 இவன் கதை ஆதிபர்வம் 272-ம் பக்கமுதல் காண்க.

3 இலையின்மகன்.

ரிஷி, ப்ராம்மணர்களின்சொல்லினால்ஸ்வர்க்கம்அடைந்தான். அச்வமேதமுதலானயாகங்களினால் மேன்மைபெற்ற கோஸலதேசாதிபதியான ஸௌதாஸன் (வஸிஷ்ட) மஹரிஷியின் சாபத்தினால் ராக்ஷஸத்தன்மையை அடைந்தான். வில்லாளிகளான அச்வத்தாமாவும் பரசுராமரும் ரிஷிபுத்ரர்களாயிருந்தும் வேதோக்தமானகர்மத்தினால் [1]ஸ்வர்க்கம்பெறவில்லை. இரண்டாவது இந்த்ரன்போன்றவஸுவென்பவன், அநேகயாகங்கள்செய்தும் ஒருபொய்சொன்னதனால் பாதாளலோகத்தினடியிற்சென்றான். விரோசனன்புதல்வனான பலி, தேவர்களால் தர்மமென்னும்கயிற்றினால் கட்டப்பட்டவனாகி, விஷ்ணுவின்முயற்சியினால் பாதாளத்திலிருக்கும்படி [2]செய்யப்பட்டான். அப்படியே, இந்த்ரனுடையரதத்தின்நடுவில் நிலைபெற்றிருந்த [3]ஜனமேஜயன், ப்ராம்மணஸ்த்ரீகளைவதம்செய்தபோது தெய்வத்தினால் ஏன் தடுக்கப்படவில்லை? அறியாமையால் ப்ரம்மஹத்தியையும் சிசுஹத்தியையும்செய்து பாவத்தினால்ஆக்ரமிக்கப்பட்ட [4]வைசம்பாயனரென்னும்ப்ரம்மரிஷி தெய்வத்தினால் ஏன் [5]தடுக்கப்படவில்லை? முன்னர் ந்ருகனென்னும்ராஜரிஷி மஹாயாகத்தில் ப்ராம்மணர்களுக்குத் தவறுதலாகக் கோதானம்செய்ததனால் ஓணான்ஜன்மத்தையடைந்தான். துந்துமாரனென்னும் ராஜரிஷி ஸத்ரயாகம்செய்தே மூப்பையடைந்தான். அவன், அன்பினால் தேவர்கள்கொடுத்தவரனை வாங்கிக்கொள்ளாமல் கிரிவ்ரஜமென்னும்ஊரில் [6]தூங்கினான். மிக்கபலசாலிகளான த்ருதராஷ்ட்ரபுத்ரர்களால் கவரப்பட்ட பாண்டவர்களின்ராஜ்யம் திரும்பவும் அவர்களால் மீட்டுக்கொள்ளப்பட்டதும் கைவன்மையாலன்றித் தெய்வத்தாலன்று. தவத்தில் உறுதியுள்ளவர்களும் கடுமையானவ்ரதங்களை அனுஷ்டிப்பவர்களுமான முனிவர்கள் சாபம்கொடுப்பது தெய்வத்தின்வன்மையினாலா? அன்று; தமதுசெய்கையினாலேதான். உலகத்தில் ஆசையும் அறிவின்மையுமுள்ள பாவியானமனிதனுக்குக் கிடைக்கத்தகாதனவெல்லாம்கிடைத்தும் அவனை அவைகள் விட்டுவிடுகின்றன. தெய்வம் அவனைக் காப்பதில்லை. மிகச்சிறியநெருப்

---

1 அசுவத்தாமா தூங்கினவர்களைக்கொன்றதனாலும், பரசுராமர் தம்புண்யலோகங்களை ராமர் பாணத்தினால் தடுத்ததனாலும்.

2 இங்கு, 'க்ருப:' என்பது 'க்ருத:' என்றிருத்தல் வேண்டும்.

3, 4 இவர்கள் வேறு.

5 நன்மைக்கும்தீமைக்கும் செய்தவனே உத்தரவாதியாதலால், தெய்வத்தைச்சாட்டலாகாதென்பது கருத்து

6. 'முயற்சியை விட்டிருந்தான். தேவர் வரம்கொடுத்தாலும் பெற்றுக்கொள்ளும்முயற்சியில்லாதவனுக்கு அது பயன்படாது' என்பது கருத்து.

பாயினும் காற்றினால்தூண்டப்பட்டுப் பெரிதாவதுபோலத் தெய்வம் முயற்சியுடன்சேர்ந்து நன்றாக அபிவ்ருத்தியடைகிறது. எண்ணெய் வற்றுவதினால் தீபம் மங்கிப்போவதுபோல முயற்சிக்குறைவினால் தெய்வம் ஓய்வடைகிறது. இவ்வுலகில் முயற்சியில்லாதமனிதன், பெரியதனக்குவியலையும்வேண்டினசௌக்யங்களையும்பெண்களையும் அடைந்தும் அநுபவிக்கத் திறமையில்லாதவனாகிறான். விதியினால் நன்றாகக்கொடுக்கப்பட்டதும் தேவர்களால்காப்பாற்றப்பட்டதுமான பொருளையும்கூட, இவ்வுலகில், விடாமுயற்சியுள்ள மஹாத்மாவான மனிதன்தான் அநுபவிக்கிறான். முயற்சியினால் கார்யங்களைச்சாதிப்பவன், செலவிடும் தன்மையனாயினும் அவனைச் செல்வங்கள் அடைகின்றன. மானிடலோகத்தைவிடத் தெய்வலோகம் சிறந்ததன்று. மனிதர்களின்வீடுகளும் மிக்கஅதிகச்செல்வம் நிரம்பினவையாகக்காணப்படுகின்றன. [1]தேவர்களின்வீடுகளும் ஸ்மசானத்துவீடுகளுக்குஒப்பாகக் காணப்படுகின்றன. இந்தப்ராணிவர்க்கங்களுள் முயற்சியில்லாதவன் பலனைப் பெறுவதில்லை. வழிதப்பிநடப்பவனைத் தெய்வம் தடுப்பதில்லை. ஸ்வதந்த்ராதிகாரம் தெய்வத்தின்கண்ணில்லை. குருவைச் சிஷ்யன் அநுஸரிப்பதுபோல மனிதன்செய்த சிறந்தகர்மத்தைத் தெய்வம் அநுஸரிக்கிறது. விடாமற்செய்யப்பட்ட முயற்சியே ஆங்காங்கு நடத்துகிறது ரிஷிஸ்ரேஷ்ட! இவற்றையெல்லாம் நான் உனக்குச் சொன்னேன். எப்போதும் முயற்சிதான் பலனுள்ளதென்று உண்மையாகக்கண்டறிந்து, விடாமுயற்சியினால் தெய்வத்தைத்தூக்கிவிட்டு விதியும்வினையும்சேருவதனால் ஸ்வர்க்கத்தின்வழியை அடையலாம்' என்பதுதான் வஸிஷ்டருக்கு ப்ரம்மதேவர் உரைத்தது" என்றார்.

---

## பத்தாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

### (நல்வினைதீவினைகளின்பயன்.)

யுதிஷ்டிரர், "பரதஸ்ரேஷ்டரே! மஹான்களிற்சிறந்தவரே! பலனுள்ளனவாகிய எல்லாக்கர்மங்களின் பலன்களையும்பற்றி யான் கேட்பதற்கு மறுமொழிசொல்லவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

---

1 முயற்சியில்லாமல் தேவர்களுக்குஞ் செல்வமில்லை.

"ஆ! ஆ! பாரதனே! யுதிஷ்டிர! நீ என்னைக் கேட்பதற்குச் சொல்வேன். ஒருவன், தான் வெகுநாளாக விரும்பின [1]கதியை இறந்த பின் அடைவது எந்தக்கர்மத்தினாலென்பது ரிஷிகளுக்கும் ரஹஸ்ய மானது. அதைச் சொல்லுகிறேன்; கேள். எவன் எந்தஎந்தத் தேஹங்களினால் என்னஎன்ன கர்மங்களைச் செய்கிறானோ அவன் அந்தஅந்தத் தேஹங்களினால் அவ்வவற்றின்பலன்களை அனுபவிக் கிறான். நல்லது அல்லது கெட்டதாகிய எந்தக்கர்மத்தை எந்த எந்த நிலைமையிற்செய்கிறானோ அந்தக்கர்மத்தை ஜந்மந்தோறும் அந்தஅந்த நிலைமையிலேயே அனுபவிக்கிறான். மனத்துடன் சேர்ந்த ஐம்புலன்களினாலும் இந்தத்தேஹத்தில் செய்யப்பட்டகர்மம் அழிவ தில்லை. இவனது நல்வினைக்கும் தீவினைக்கும் அந்தஐம்புலன்களும் ஆறாவதான மனமும் எப்போதும் ஸாக்ஷிகள். வந்தவிருந்திற்குக் [2]கண் ணைக்கொடுக்கவேண்டும்; [3]மனத்தைக் கொடுக்கவேண்டும்; உண்மை யும் அன்புமுள்ள வாக்கைக் கொடுக்கவேண்டும்; பின்செல்லவேண் டும். அவனிடம் காத்திருக்கவேண்டும். அதுவே இவ்வைந்து தக்ஷி ணைகளோடுகூடிய ஒருயாகம். முன் தெரியாதவனும் பசித்தவனு மான வழிப்போக்கனுக்கு மனமகிழ்ச்சியோடு அன்னமிடுபவன் எவ னோ அவனுக்குப் புண்யபலன் பெரிது. தரையில்படுப்பதென்னும் வ்ரத முள்ளவர்களுக்கு வீடுகளும் மஞ்சங்களும் உண்டாகின்றன. மர வுரிகளையுடுப்பவர்களுக்கு வஸ்த்ரங்களும் ஆபரணங்களும் உண்டா கின்றன. தவத்தைச் செல்வமாகக்கொண்டு யோகத்தில் மனத்தைச் செலுத்தினவர்களுக்குக் குதிரைகளும் தேர்களும் வருகின்றன. த்ரேதாக்னியின் அருகில்படுக்கும் அரசனுக்குப் பராக்ரமம்விருத்தியாகி றது. சுவைகளைக்கட்டினவனுக்குச் செல்வம்வருகிறது. மாம்ஸங் களைவிட்டவன் பசுக்களையும் குமாரர்களையும் அடைகிறான். தலைகீழா கத்தொங்கியும் ஜலத்திலேயேயிருந்தும் தவளைபோல் ஜலத்தில்படுத் தும் தவம்செய்யும் மனிதன் விரும்பின போகங்களைப் பெறுகிறான். அதிதிபூஜைசெய்வதற்காகப் பாத்யத்தையும் ஆஸனத்தையும் தீபத் தையும் அன்னத்தையும் தங்குமிடத்தையும் கொடுப்பது, ஐந்து தக்ஷி ணைகளோடுகூடிய யாகமாகிறது. [4]வீராஸனத்தையும்வீரசயனத்தை

1 பயனை. 2 கண்ணோக்கவேண்டும். 3 அன்புவைக்கவேண்டும்.

4 வீராஸனம், யுத்தங்களில் நிலைமாறாமலிருப்பது. வீரசயனம், போர்க் களத்திலேயே பீஷ்மரைப்போலப் படுப்பது. வீரஸ்தானம், யுத்தத்தில் பின் வாங்காமல்நிற்பது. இங்கு, வீராஸனம்=போர்க்களம்; 'அதில் வீரசயனம் என்னும் மரணத்தை அடைந்து, வீரஸ்தானமான ஸ்வர்க்கம் சென்றவனுக்கு' என்பது பழையஉரை.

யும் வீரஸ்தானத்தையும் அடைந்திருப்பவனுக்கு, எல்லா விருப்பங்
களும் பொருந்தியும் அழிவில்லாமலும் இருக்கின்ற லோகங்கள் வரு
கின்றன. அரசனே! தானம்செய்வதனால் தனலாபத்தையும் மௌன
மிருப்பதனால் ஆஜ்ஞைசெலுத்தும் தகைமையையும் தவத்தினால் ஸுக
போகங்களையும் ப்ரம்மசர்யவ்ரதத்தினால் ஆயுர்வ்ருத்தியையும் ஒரு
வன் அடைகிறான். அழகும் ஐச்வர்யமும் ஆரோக்யமும் பிறருக்குத்
தீங்கு செய்யாமையின் பயன்களாக அனுபவிக்கிறான். கனிகளையும்
கிழங்குகளையும் புஜிப்பவனுக்கு ராஜ்யமும், இலைகளைப்புஜிப்பவனுக்கு
ஸ்வர்க்கமும் உண்டாகின்றன. அரசனே! [1]ப்ராயோபவேசம் செய்ப
வனுக்கு எல்லாவுலகங்களிலும் ஸுகமுண்டாவதாகச் சொல்லப்படு
கிறது. [2]சாகவ்ரதம் செய்பவன் பசுக்கள் நிரம்பினவனாகவும், புல்லைப்
புஜிப்பவன் ஸ்வர்க்கம்போகிறவனாகவும் ஆவான். மூன்றுகாலமும்
ஸ்நானம்செய்பவன் ஸ்த்ரீகளை அடைவான். வாயுபக்ஷணம் செய்ப
வன் யாகபலனை அடைவான். பொய்யாமையால் ஸ்வர்க்கத்தையும்
வ்ரதத்தினால் உயர்குலத்தையும் அடைகிறான். ஜலபானம்செய்கிற
வன், விடாமல் அக்னிஹோத்ரம்செய்யும் பரிசுத்தனான ப்ராம்மண
னாக ஜனிக்கிறான். காற்றைப் புஜிப்பவனுக்கு ராஜ்யமும், உண்ணாமல்
உபவாஸமிருப்பவனுக்கு ஸ்வர்க்கமும் வருகின்றன. அரசனே! பன்
னிரண்டு வர்ஷகாலம் தீக்ஷித்துக்கொண்டு உபவாஸத்தையும் ஸ்நானத்
தையும் செய்வதனால், [3]ஸ்வர்க்கலோகத்திற்கும் மேற்படுகிறான். எல்
லாவேதங்களையும் ஓதுவதனால் துயரத்தினின்றும் உடனே விடுபடு
கிறான். படித்தவேதங்களை மறவாமலிருப்பதனால் ஸ்வர்க்கத்தையும்,
அவற்றின் பொருளை அறிவதனால் மோக்ஷத்தையும் அடைகிறான்.
வைராக்யத்துடன் வேதத்தை ஜபம் செய்பவர்களுக்கு, ஸ்வர்க்கமும்
மோக்ஷமும் பலனாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. மனப்பூர்வமாகத்
தர்மத்தைச்செய்பவன் ஸ்வர்க்கலோகத்தை அடைகிறான். மதிகெட்
டவர்கள் எதைவிடமுடியாதோ, தேஹம்தளர்ந்தும் எது தளராதோ,
உயிர்போம்வரையில் உள்ள ரோகம் எதுவோ அந்த ஆசையை
எவன் விடுகிறானோ அவனுக்குத்தான் ஸுகம். கன்றானது அநேக
ஆயிரம் பசுக்களில் தன் தாயைத்தெரிந்து அடைவதுபோல, முன்
செய்தகர்மம் செய்தவனைத் தொடர்கிறது. பூக்களும் கனிகளும் யாரா
லும் கட்டளையிடப்படாமலே, தம்தம்காலம் கடவாமல் (உண்டாவது)

---

1 சாந்திபர்வம் 377-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

2 கறிகளை விலக்குவது.

3 மேலுலகத்தையடைகிறான்.

போல முன்செய்தகர்மமும் காலத்தில் வெளிப்படுகின்றது. மூப்ப டைபவனுக்கு மயிர்கள் நரைக்கின்றன; பற்கள் தளருகின்றன; கண் காதுகள் ஒய்ந்துபோகின்றன; ஆசை ஒன்றும்மட்டும் மாறுவதில்லை. எவன்மேல் தந்தை ஸந்தோஷமடைகிறானோ அவன்மேல் ப்ரம்ம தேவர் ஸந்தோஷிக்கிறார். எவன்மேல் தாய் த்ருப்திஅடைகிறாளோ அவனால் பூமிதேவியே பூஜிக்கப்பட்டவளாகிறாள். எவனால் உபாத் யாயர் த்ருப்திசெய்விக்கப்படுகிறாரோ அவனால் ப்ரம்மமே பூஜிக்கப் பட்டதாகிறது. இம்மூவருக்கும் பூஜைசெய்தவன் எவனோ, அவன் எல்லாத்தர்மங்களையும் செய்தவனாகிறான். இம்மூவரையும் ஆதரியாத வன் எவனோ அவனுடைய க்ரியைகளனைத்தும் பயனற்றவை" என்றார்.

பீஷ்மருடைய இந்தச் சொல்லைக்கேட்டு, கௌரவஶ்ரேஷடர்க ளனைவரும் ஆச்சர்யத்துடன் மனமகிழ்ந்து மிகுந்தபக்தியுள்ளவர்க ளாயினர். பாரதரே! பீஷ்மர், மறுபடியும், "மந்த்ரத்தை வீணாக உபயோகித்தாலும் ஸோமலதையை வீணாகப்பிழிந்தாலும் அக்னி யில் வீணாக ஆஹுதிசெய்தாலும் என்ன (தோஷங்கள்) உண்டோ அவையெல்லாம் வீணாகப்பேசுவதிலுண்டாகின்றனவென்று ரிஷியி னால் சொல்லப்பட்டதை உனக்கு நான் சொன்னேன். நல்வினைதீவி னைகளின் பலன்கள் வருவதைப்பற்றி இதற்குமேல் நீ என்னகேட்க விரும்புகிறாய்?" என்றுகேட்டார்.

---

## பதினோராவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(பூததயை பக்தி இவைகளின் மேன்மையை விளக்குவதான இந்த்ரனுக்கும் ஒரு கிளிக்கும் நடந்த ஸம்பாஷணை.)

யுதிஷ்டிரர், "தர்மந்தெரிந்தபிதாமஹரே! பூததயையின் சிறப் புக்களையும் பக்தியுள்ள ஜனங்களின் மேன்மைகளையும்பற்றிக் கேட்க விரும்புகிறேன். அவற்றை எனக்குச் சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"இந்தவிஷயத்திலும் இந்த்ரனுக்கும் நல்லதன்மையுள்ள ஒருகிளி க்கும்நடந்த ஸம்வாதமாகிய ஒருபழையசரித்ரத்தைக் கூறுகின்றனர். காசிராஜனுடையதேசத்தில், ஒருவேடன் விஷமுள்ளபாணத்தை எடு த்துக்கொண்டு சேரியிலிருந்து புறப்பட்டு மானைத்தேடிப்போனான்.

அங்கு ஒரு பெரியவனத்தில், மான்கள் அருகிலிருக்கக்கண்டு மாம்ஸத்திலாசைப்பட்ட அந்தவேடனால் பாணம் தொடுக்கப்பட்டது. தடுக்கமுடியாதபாணத்தையுடைய அந்தவேடன் மிருகத்தை அடிக்கவிரும்பினபோது, பாணம்குறிதப்பினதனால், அந்த காட்டிலுள்ள ஒரு பெரியமரம் அடிக்கப்பட்டது. கொடியவிஷம்தடவின பாணத்தினால் மிக்கவேகத்துடன் குத்தப்பட்ட அம்மரம், காய்களும்இலைகளும்உதிர்ந்து உலர்ந்துபோயிற்று. அம்மரம்அவ்வாறானபோது, அதன்பொந்துகளில்வெகுநாளாகவஸித்திருந்தஒருகிளி, அம்மரத்தின்மேலுள்ளபற்றினால் தன்னிருப்பிடத்தை விடவில்லை. நன்றியறிந்ததும் தர்மத்தில் மனமுள்ளதுமாகிய அந்தக்கிளி வெளியில்ஸஞ்சரியாமலும் இரையெடாமலும் களைத்தும் குரல்தழுதழுத்தும் மரத்துடன்கூடவே உலர்ந்தது. சிறந்தகுணமுள்ளதும் மேலானஸ்வபாவமுள்ளதும் மனிதர்க்குமேற்பட்டநடக்கையுள்ளதுமான அந்தக்கிளி (அம்மரத்தைப்போலவே) துக்கத்தையும் ஸுகத்தையும் அநுபவித்திருக்கக்கண்ட தேவேந்த்ரன் திகைப்படைந்தான். அதன்பிறகு, இந்த்ரன், 'இந்தப்பக்ஷி திர்யக்ஜாதிகளுக்கு இருக்கத்தகாதகருணையை அடைந்திருப்பது எவ்வகை?' என்றுநினைத்தான். பிறகு, 'இதில் ஆச்சர்யப்படவேண்டியதில்லை. எல்லாப்ராணிகளிலும் (குணம்குற்றம்) எல்லாம் காணப்படுகின்றன' என்னும்எண்ணமும் இந்த்ரனுக்குஉண்டாயிற்று. பிறகு, இந்த்ரன் மானிடஉருவெடுத்து, ஓர் அந்தணன் வடிவமாகப் பூமியில் இறங்கி, அந்தப்பக்ஷியைப்பார்த்து, 'ஓ! பக்ஷிகளில்சிறந்த கிளியே! (உன் தாயாகிய) [1]தாக்ஷாயி, உன்னால் நல்லஸந்ததிஉள்ளவளாகிறாள். கிளியாகிய உன்னை நான் கேட்கிறேன். இந்தமரத்தை நீ ஏன்விடாமலிருக்கிறாய்?' என்று கேட்டான். இந்த்ரனால் இவ்வாறு கேட்கப்பட்டகிளியானது, அவனுக்குத் தலைவணங்கி நமஸ்காரம்செய்து, 'தேவராஜாவே! உனக்கு நல்வரவு! நான் தவத்தினால் உன்னைத் தெரிந்துகொண்டேன்' என்றுசொல்லிற்று. பிறகு, தேவேந்த்ரன், 'ஸரி! ஸரி!' என்று சொல்லி, 'என்ன அறிவு!' என்று மனத்திற்கொண்டாடினான். இவ்வாறு, சிறந்தசெய்கையுள்ளதும் தர்மத்தையேமுக்யமாகக்கொண்டதுமாகிய அந்தக் கிளியைப்பார்த்து, இந்த்ரன், தான்கேட்பது பாவமென்றுதெரிந்திருந்தும், கேட்கத்தொடங்கினான். 'இலைகளும் கனிகளும்இன்றி உலர்ந்து பக்ஷிகளுக்காதரவற்ற இம்மரத்தை ஏன்காக்கிறாய்? இது பெருவனமாயிருக்கிறதே. புத்திசாலியே! இலைகளினால்மூடப்பட்டபொந்துகளும் ஸஞ்சரிக்கப் போதுமான இடமுமுள்ள இன்னும்அநேக அழகானமரங்கள் இந்தப்

1 தக்ஷன்மகள்.

பெரியவனத்திலிருக்கையில், முதிர்ச்சியடைந்து சக்தியற்று ரஸம்வற்றி ஒளிகெட்டுப்போனநிலையற்றஇம்மரத்தை,புத்தியினால்ஆராய்ந்து பார்த்து விட்டுவிடு' என்றான். அந்தஇந்த்ரன்சொல்லைக்கேட்டுத் தர்மாத்மாவான அந்தக்கிளி, மிகவும்நீண்டபெருமூச்செறிந்து, துயரத்துடன் பின்வருமாறு சொல்லத்தொடங்கிற்று. 'இந்த்ராணியின்கணவனே! தேவர்க்கதிபதியே? யாராலும்வெல்லமுடியாத, தேவர்களிருக்கும் உலகத்திலிருக்கும் நீ, நான் சொல்வதைத் தெரிந்துகொள். அனேகநற்குணங்கள்பொருந்தியஇம்மரத்தில்நான்பிறந்தேன்; இளமைப்பருவத்தில் நன்றாகப் பாதுகாக்கப்பட்டேன்; பகைவர்களாலும் பிடிக்கப்படாமலிருந்தேன். குற்றமற்றவனே! தயையும் பக்தியுமுள்ளவனை வேறுஇடம்செல்லாமலிருக்கும் என்விஷயத்தில் அனுக்ரஹம்வைத்து, என்ஜன்மத்தை என்பயன்படாமல்செய்கிறாய்? நான் அன்பும் பக்தியுமுள்ளவன்; [1]அக்னியைத்தீண்டேன். உபகாரிகள் விஷயத்தில் தயைசெய்வதுதானே தர்மத்திற்கு முக்கியமானலக்ஷணம். தயைசெய்வதே, நல்லோர்களுக்கு எப்போதும் மனத்ருப்தியைஉண்டாக்குகிறது. எல்லாத்தேவர்களும் [2]தர்மத்திலுள்ள ஸந்தேஹங்களை உன்னிடத்திலேயே கேட்கின்றனர். அதனாலேதான் நீ தேவஶ்ரேஷ்டர்களுக்கும் அதிபதியாகப் பட்டாபிஷேகம்செய்யப்பட்டிருக்கிறாய். இந்த்ரனே! வெகுகாலமாகவிருந்தமரத்தை நான் விடும்படி, நீ சொல்லலாகாது. நல்லஸ்திதியிலிருந்ததை அடுத்துப் பிழைத்தவன்,கெட்டஸ்திதிக்குவந்தவுடன் அதை எப்படிவிடலாம்?' என்றது. அதனுடைய அழகான சொல்லினால் மகிழ்வுற்ற இந்த்ரன், அது தயைவைத்ததைப்பற்றி த்ருப்தியடைந்து, தர்மந்தெரிந்த அந்தக்கிளியைப்பார்த்து, 'ஒருவரம்கேள்' என்றுசொன்னான். எப்போதும் பிறர்நோவாமையையே பெரிதாகக்கருதின அந்தக்கிளி, அம்மரம் செழிப்பதையே வரமாகக்கேட்டது. அந்தக்கிளியினுடைய உறுதியானபக்தியையும் நிரம்பின நல்லொழுக்கத்தையும் அறிந்து, ஸந்தோஷமடைந்தஇந்த்ரன், உடனே அம்மரத்தின்மேல் அம்ருதம்பொழிந்தான். அதனால், கனிகளும் இலைகளும் அழகானகிளைகளும் உண்டாயின. கிளியினுடையஉறுதியானபக்தியினால் அம்மரமும் செழித்தது. மஹாராஜனே! தயையின்பயனாகிய அந்தச்செய்கையினால் கிளியும் தன்ஆயுள்முடிந்தபிறகு இந்த்ரலோகத்தை அடைந்தது. மனிதர்க்கதிபதியே! இவ்வாறு பக்தியுள்ளவனை அடைந்தவன், கிளியை அடைந்தமரம்போலவே எல்லாக்கார்யங்களின் ஸித்தியையும் அடைவான்" என்றார்.

---

1 பாவம்செய்யேன். 2 'தர்மஸம்சயாந்' என்றபாடம்கொள்ளப்பட்டது.

# அநுசாஸனபர்வம்.

## பன்னிரண்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(ப்ராஹ்மணர்களின் சிறப்பு.)

[1]யுதிஷ்டிரர், "பாரதரே! அரசரே! பூஜைக்கும் நமஸ்காரத்திற்கும் உரியவர் யாவர்? நீர் யாரை விரும்புகிறீர்? முடிவான ஆபத்தை அடைந்திருக்கும்போதும், உமதுமானம், இம்மானிடலோகமனைத் துள்ளும் யாரிடத்தில் செல்லுகிறது? இம்மையிலும் மறுமையிலும் நன்மைபயப்பது யாது?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"எவர்களுக்குப் பரப்ரம்மமேஉயர்ந்தபொருளோ, எவர்களுக்கு ஞானமே [2]ஸ்வர்க்கமோ, தவமே வேதாத்யயனத்திற்குக் கருவியோ அந்தப்ராம்மணர்களை நான் விரும்புகிறேன். எவர்களில் சிறுவர்களும் கிழவர்களும் தகப்பன்பாட்டன் வரிசையாகவந்த கர்மாநுஷ்டானமென்னும் பாரத்தைச் சோர்வின்றி வஹிக்கின்றனரோ, அவர்கள் மேல் எனக்கு விருப்பமிருக்கிறது. அப்பா! யுதிஷ்டிர! எல்லா வித்தைகளையும் நன்றாகக்கற்பிக்கப்பட்டவரும் அடக்கமுடையவரும் நயமாகப்பேசுகிறவரும் எப்போதும் கேள்வியையும் ஒழுக்கத்தையும் விடாதவரும் ப்ரம்மஜ்ஞானிகளுமான ஸாதுக்கள், அரசர்கள் கேட்க விரும்பியபோது, ஸபைகளில் கூட்டம்கூட்டமாகச்சேர்ந்து ஹம்ஸங்கள்போலவும் தேவலோகத்துமேகங்கள் (=அமுதம்பொழியும் மேகங்கள்) போலவும் மங்களகரமாகவும் மதுரமாகவும் தெளிவாகவும் இம்மையிலும் மறுமையிலும் ஸுகத்தைத்தரும்படியும் பேசினபேச்சுக்களைக் கேட்கிறோமல்லவா? ஸபைகளில் மதிக்கப்பெற்றவர்களாயும் அறிவும் குணமும் நிரம்பினவர்களாயுமுள்ள எவர்கள், மேற்சொன்னவர்களிடம் கேட்கின்றனரோ அவர்களிடத்திலும் என்றும் எனக்கு விருப்பமுண்டு. அரசனான யுதிஷ்டிரனே! செவ்வையாகப் பாகம் செய்யப்பட்டவையும் சுத்தமுள்ளவையும் சுவைமுதலிய) சிறப்புள்ளவையுமான உணவுகளை ப்ராம்மணர்களின் த்ருப்தியைக் கருதி ஶ்ரத்தையுடன் எக்காலமும் போடுகிறவர்கள் எவரோ அவர்க

1 முதல் அரைஸ்லோகம் வேறுபாடம். கிருஷ்ணாசார்யர் பதிப்பின்படி 'கௌரவத்தைக் கொடுப்பவரே! அரசரே! நமஸ்கரிக்கத் தக்கவர்களென்று இந்த்ரனால் சொல்லப்பட்டபடி நீர் நினைத்தும் விரும்பியுமிருக்கிறவர்கள் யார்?' என்று பொருள் கொள்ளவேண்டும். ஐந்தாவது அத்யாயத்தில் மதங்கனுக்கு இந்த்ரன்சொன்னதையனுஸரித்துக் கேட்டதாகும்.

2 பரமஸுகமோ.

ளிடத்திலும் எனக்குவிருப்பமுண்டு. போர்க்களத்தில் போர்செய்வது முடியும். வெறுக்காமல் கொடுப்பது முடியாது. யுதிஷ்டிர! உலகத்தில் [1]சூரர்களும் [2]வீரர்களும் வெகுவாயிருக்கின்றனர். அவர்களை எண்ணிப்பார்க்கையில் இல்லையென்னுமலும் முகங்கோணுமலும் கொடுக்கும் தானசூரன் மேற்பட்டவன். தானம்செய்பவன் நல்லஜன்மத்தை அடைந்து ஸாதாரணப்ராம்மணனுவான்; பிறகு, பந்துக்களுள்ள மேற்குலத்தில்பிறந்து, அடைதற்கரிய புருஷார்த்தத்தையடைவான். சாந்தனே! நான் மறுஜன்மத்தில் ஹீனப்ராம்மணனுகவாவது ப்ரம்மகுலத்தில் பிறந்து, தர்மத்தைவிடாமல் தவத்தையும் ஞானத்தையும் முதன்மையாகக் கொண்டிருப்பேனுயின், அத்ருஷ்டமுள்ளவனுவேன். பாண்டுபுத்ரனே! எனக்கு உன்னைவிட மேலான அன்பன் இவ்வுலகத்தில் இல்லை. பாரதனே! ப்ராம்மணர்கள்மட்டும் உன்னைவிட அதிக அன்பர்கள். கௌரவஶ்ரேஷ்டனே! எனக்கு ப்ராம்மணர்கள் உன்னைவிட மிக்கஅன்பர்களென்னும் ஸத்யத்தினுல், சந்தனுஇருக்குமுலோகங்களுக்கு நான் செல்லக்கடவேன். என் தந்தையும் தந்தைக்குத் தந்தையும் மற்றவேண்டினவர்கள் எவரும் ப்ராம்மணர்களைவிட அதிக அன்பர்களாக எனக்கிருந்ததில்லை. இவ்வுலகத்தில் நற்கருமங்களைச் செய்யும் ப்ராம்மணர்கள்விஷயத்தில் சிறிதாவது பெரிதாவது யாதொரு அபராதமும் எனக்கிருந்ததில்லை. பகைவரைத்துன்புறச்செய்பவனே! செய்கையினுலும் மனத்தினுலும் வாக்கினுலும் ப்ராம்மணர்களுக்கு நான் என்னசெய்தேனே [3]அதைப்பற்றி இப்போது எனக்கு வருத்தமில்லை. என்னை ப்ராம்மணப்ரியனென்று உலகத்தார் சொல்லுகின்றனர். அந்தச்சொல்லினுல் நான் த்ருப்தியடைந்திருக்கிறேன். இதுதான் எல்லாத்தூயவற்றிலும் சிறந்ததென்று நினைக்கப்படுகிறது. ப்ராம்மணர்களை ஸந்தோஷப்படுத்துவதனுல் பாவம்நீங்கி, பரிசுத்தமானலோகங்களிருப்பதை நான் பார்க்கிறேன். குழந்தாய்! விரைவாகவோ காலங்கடந்தோ அவ்வுலகங்களுக்கே நான் போகவேண்டும். யுதிஷ்டிர! 'உலகத்தில் பெண்களுக்குக் கணவனைப்பற்றியதே தர்மம்; அவனே தெய்வம்; அவனே கதி; வேறு இல்லை' என்பதெப்படியோ அப்படியே க்ஷத்ரியனுக்கு எல்லாம் அந்தணர்தாம். பத்து வயதுள்ள ப்ராம்மணேத்தமனையும் நூறுவயதுள்ள க்ஷத்ரியனையும் பிதாவும் புத்ரனுமாக அறியவேண்டும். அவர்களுள், ப்ராம்மணன் பிதா. ஒருபெண் கணவனிறந்தபோது [4]மைத்துனனைக் கணவனுகச்

---

1 எடுத்ததை முடிப்பவர். 2 பராக்ரமமுள்ளவர்.

3 தீமை செய்யாமையால் பின்பு வருத்தமில்லையென்பது கருத்து.

4 ஆதிகாலத்திலுள்ள தர்மம். அது கலியில் நீக்கப்பட்டது.

செய்துகொள்ளுகிறாள். பூமியும் ப்ராம்மணன் கிடையாதபொழுது க்ஷத்ரியனை ராஜாவாகச்செய்துகொள்ளுகிறது க்ஷத்ரியர்கள் புரோஹிதர்களுடன்சேர்ந்து, ப்ராம்மணர்களிடம் அநுமதிபெற்று, ராஜ்யத்தை அடையவேண்டும். ப்ராம்மணர்களை ரக்ஷிப்பதனால் அரசனுக்கு ஸ்வர்க்கமும் அவர்களின்கோபத்தினால் முடிவில்லாதநரகமும் வரும். கௌரவச்ரேஷ்டனே! நீயும் ப்ராம்மணர்களை, புத்ரனைக்காப்பாற்றுவதுபோலவே காப்பாற்றவேண்டும்; குருவைப்போலவே பணியவேண்டும்; அக்னியைப்போலவே பூஜிக்கவேண்டும். உள்ளும்புறமும்ஒத்தவர்களும் ஸாதுக்களும் ஸத்யசீலர்களும் எல்லாப்ராணிகளுக்கும் நன்மைசெய்வதிலேயே ஊக்கமுள்ளவர்களும் கோபித்தால் ஸர்ப்பங்களைப்போன்றவர்களுமான அந்தணர்களை க்ஷத்ரியன் எப்போதும் உபசரிக்கவேண்டும். யுதிஷ்டிர! மஹிமைக்கும் சாந்தத்திற்கும் எப்போதும் பயப்படவேண்டும். மஹிமைசாந்தம் இவ்விரண்டிலும் அகப்படாமல் விலகியிருக்கவேண்டும். அவ்விரண்டுந்தாம், உடனே கார்யத்தைச்செய்யும். மஹாராஜனே! சிறந்த தவமுள்ளப்ராம்மணர்கள் கோபித்தால் கெடுத்துவிடுவர். ப்ராம்மணஸ்த்ரீகளைத் தாயைப்போலப்பூஜித்துத் தூரத்திலிருந்து நன்றாகக்காப்பாற்றவேண்டும். கோபமில்லாதவன்விஷயத்தில் பிழைசெய்வதனால் நீண்டகாலம் நரகத்தை அநுபவிப்பான். ப்ராம்மணனைக் கோபியாமலிருக்கச்செய்வதனால், அவனுக்கு மஹிமை தவம் இரண்டையும் கொடுத்ததாகும். ப்ராம்மணனுக்குத் தானஞ்செய்ததில் மிச்சமெடுத்துக்கொள்ளாமலிருப்பவன், அவனது தவம்மஹிமையிரண்டிலும் பாகம் அடைவான். ஆமேய்ப்பவன், கையில்தடியெடுத்துக்கொண்டு கொட்டிலை எக்காலமும் காப்பதுபோல, ப்ராம்மணர்களிடமிருக்கும் ப்ரம்மதேஜஸை க்ஷத்ரியன் காக்கவேண்டும். ப்ரம்மதேஜஸ் நிரம்பின ப்ராம்மணர்களை, மக்களைத் தந்தை காப்பதுபோலக் காப்பாயாக. அவர்களின்வீடுகளில் ஜீவனத்திற்காக என்ன இருக்கிறதென்று கவனிக்கக்கடவாய்.

## [1]பதின்மூன்றாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(அதிதிபூஜையின்சிறப்பையும் கோபத்தின் இழிவையும்பற்றி நான்கு வேதங்களுக்கும் நடந்தஸம்பாஷணை.)

புத்ரனே! இந்தவிஷயத்திலும் நாலுவேதங்களும் ஒன்றோடொன்று பேசிக்கொண்டதாகச்சொல்லும் ஒருபழையகதைசொல்லுகிறார்கள். அதைக் கேள். ரிக்வேதமானது, 'க்ருஹஸ்தாச்ரமத்திலிருந்து அக்னிஹோத்ரம் செய்துகொண்டிருப்பவனுடைய புண்யத்தையெல்லாம், ஸாயங்காலத்தில் வந்து பூஜிக்கப்படாத அதிதி வாங்கிக்கொள்ளுகிறான்' என்றது. யஜுர்வேதம், 'ப்ராம்மணன் வாயில் செய்யப்பட்ட [2]ஹோமம் சிந்துவதில்லை; வற்றுவதில்லை. அதன்புகை மேலே போவதுமில்லை. ஆதலால், அது அக்னிஹோத்ரத்திலும் மிகச்சிறந்தது' என்றது. ஸாமவேதம், 'தந்தையையும் தாயையும் ப்ராம்மணனையும் கொல்லுவதையும் நிந்திப்பதையும் தவிர, மற்றெந்தப்பாவத்தையும் அதிதி த்ருப்தியடைவதனால் போக்கிவிடுவான்' என்றுசொல்லிற்று. அதர்வணவேதம், 'கோபமுள்ளவன், எந்தயாகம் எந்தத்தானம் எந்தத்தவம் எந்தஹோமம் செய்தாலும் அவற்றையெல்லாம் யமன் கொண்டுபோகிறான். கோபக்காரன் செய்யும்செய்கை பயன்படாமல் போகிறது' என்று சொல்லிற்று.

---

## பதினான்காவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(ப்ராம்மணன் பதிவ்ரதை இவர்களின்சிறப்பு.)

அரசர்க்கரசனே! தர்மத்தை அநுஷ்டிப்பவரிற்சிறந்தவனே! இன்னும் தர்மங்களைக்கேள். இந்த விஷயத்தில் இந்த்ரன், அக்னி, ஸூர்யன், இந்த்ராணி இவர்களுடைய பழமையான ஒருசரித்ரம் கூறுகின்றனர். அதை நான் சொல்லுகிறேன்; கேள். இந்த்ரனானவன், 'நான், எனதுராஜ்யத்தில் காமக்ரோதங்களற்றவர்களான ப்ராம்மணர்

---

[1] 13-வது அத்யாயமுதல் 29-வது அத்யாயம்வரையுள்ளவை வ்யாக்யான பாடத்தில் இல்லாதவை.

[2] ப்ராம்மணனுக்கு இடும் அன்னம்.

களைப் பார்க்கிறேன் இந்த ஸத்யவாக்யத்தினால் இந்தக்குடத்தின் கால்பாகம் நிரம்பட்டும்' என்றுசொன்னான் அக்னி. 'ப்ராம்மணர்கள் உண்ணுதவிடத்தில் நான் உண்பதில்லையென்னும் இந்த ஸத்யவாக்யத்தினால் இந்தக்குடத்தின் (மற்றொருகாற்பாகம்) நிரம்பட்டும்' என்று சொன்னான். ஸூர்யன். 'பசுக்களுக்காகவும் ப்ராம்மணர்களுக்காகவும் நான் எனதுசக்திக்குத்தக்கபடி உஷ்ணத்தை உண்டுபண்ணுகிறேன். இந்தஸத்யவாக்யத்தினால் இன்னுமொருகாற்குடம் நிரம்பட்டும்' என்றான். இந்த்ராணி, 'நான் செய்கையினாலும் எண்ணத்தினாலும் சொல்லினாலும் இந்த்ரனை அவமதிப்பதில்லையென்னும் இந்தவாக்யத்தினால் குடத்தின்மற்றொருகாற்பாகமும் நிரம்பட்டும்' என்றுசொன்னாள்.

## பதினைந்தாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(மத்ராராஜன் யாகமுதலியவற்றைப்பற்றி வ்யாஸரைக்கேட்டதும், க்ருஷ்ணனுக்கும் வ்யாஸருக்கும் ஸம்பாஷணையும்.)

குந்திபுத்ரனே! மத்ரதேசத்தரசனுக்கும் மஹாத்மாவானவ்யாஸருக்கும் நடந்தஸம்வாதமாகிய ஒருபழையசரித்ரத்தையும் இவ்விஷயத்தில் உதாரணமாகக் கூறுகின்றனர் மன்னா! உனதுயஜ்ஞகார்யம் நடத்தப்படும்போது, அந்தவ்யாஸபகவான், யாகவிஷயமாகச்சொன்னதை நீ கேட்டாயல்லவோ? மத்ரராஜன், வ்யாஸரைநோக்கி, 'பகவானே! புண்யதீர்த்தங்கள் எவை? பலன்களைத்தரும் ஆச்ரமங்கள் எவை? யாகத்தினால் ஆராதிக்கப்படுகிறவன் யார்? யாகம் யார்? யூபஸ்தம்பம் யார்? எங்கும் வியாபிப்பவன் யாவன்? யாகத்தில் ஸாமகானங்களின்ஸ்வரங்களினால் ஆராதிக்கப்படுகிறவன் யார்? யாகத்தில் அழகானபாஷைகளினால் பாடப்படுகிறவன் யார்? வேதவாக்யங்களாலும் ஸ்தோத்ரங்களாலும் துதிக்கப்படுகிறவன் யாவன்? அத்வர்யுக்கள் என்னும்ரித்விக்குக்கள், யாகத்தில் யாருக்காக ஹவிஸைப் பாகம் செய்கின்றனர்? வர்ணாச்ரமதர்மத்திலும் பசுக்களிலிருந்துஉண்டான பால் வெண்ணெய்முதலியவற்றிலும் ஸோமரஸத்திலும் இருப்பவன் எவன்? ஓங்காரமாயிருப்பவன் எவன்? வேதப்பொருள்சேருமிடமாயிருப்பவன் எவன்? எவனுடைய அறிவு உலகத்திற்குச் சிறந்ததென்று சொல்லுகிறார்கள்? மஹரிஷியே! இவற்றையெல்லாம் உம்மைக் கேட்கிறேன்; எனக்குச் சொல்லும்' என்றுகேட்டான்.

வ்யாஸர், 'பரிசுத்தமனமுள்ளவர்களும் வேதத்தை முதன்மையாகக்கொண்டவர்களுமான ப்ராம்மணர்கள், உலகத்தில் எவருடைய அறிவு சிறந்ததென்றும் பிறப்புக்களில் எவருடைய பிறப்புச் சிறந்ததென்றும் சொல்லுகின்றனரோ, அப்படிப்பட்ட இந்தக்ருஷ்ணரிடம் இந்தக்கேள்வியைத் தெரிவிக்கலாம்' என்று சொன்னார். அதைக் கேட்டு, யாகத்திலொருப்ராம்மணர், 'வீரனை மத்ரராஜனே! 1என்றும் பால்யரும் க்ஷத்ரியதர்மத்தையும் பொருளையும்விடாதவரும் வஸுதேவருக்குத் தேவகியினிடம்ஜனித்தவரும் யாதவர்களில்சிறந்தவருமான தாமரைக்கண்ணர் க்ஷத்ரியராயிருந்தாலும் வேதங்களை அறியத் திறமையுள்ளவர்' என்றுசொன்னார். வாஸுதேவர், 'பராசரபுத்ரரே! ப்ரம்மாவுக்கொப்பானவரும் சிறந்த அறிவும் எல்லாருக்கும்மேலான தேஜஸும்பொருந்தியவருமாகிய நீர் தர்மராஜாவின் யாகத்தைப்பற்றிக் கேட்கப்பட்டபோது தர்மராஜாவுக்கும் உலகத்துக்கும் எதுநன்மையோ அதனை பிராம்மணர்களிடம் அன்புவைத்துச் சொல்லக்கடவீர்' என்றுசொன்னார். அதற்கு வ்யாஸர், 'நீர் என்னைப்பார்த்துச் சொன்னதற்கு மறுமொழி முன்னமே கூறப்பட்டது. இப்போது இந்தஸபையில் உலகத்திற்கெல்லாம்மூத்தவரும் உலகமெல்லாமாயிருப்பவரும் (ப்ரம்மதேவர்பிறந்த) சிறந்தநாபியுள்ளவருமான உம்மைப் போன்றவரிருக்கையில் இவ்வரிய கேள்விக்குத் தெளிவானமறுமொழி சொல்லி ஸந்தேஹநிவ்ருத்திசெய்வதற்கு நான் சக்தனல்லேன்' என்றுசொன்னார். அதற்கு, க்ருஷ்ணபகவான், 'ஓ! மஹரிஷியே! நீர்சொல்லத்தகுந்ததும் விஷ்ணுவைப்பற்றிஸரியாகஉரைப்பதுமாகிய வசனத்தை நீர்சொல்லக்கடவீர். உள்ளபடி அறியுந்திறமைஉமக்கு இருப்பதனால் நான் ஸந்தோஷமடைகிறேன். ஆனால், யாகத்தின் அங்கங்களைப்பற்றியகேள்விக்கு முடிவுசொல்லக்கடவீர்' என்றார். யாதவஸ்ரேஷ்டரானக்ருஷ்ணன் சொல்லிமுடித்தபிற்கு,வ்யாஸர் ப்ராம்மணர்களுடன்கூட, தேவர்களுக்கும்தேவரானவிஷ்ணுவும் வஸுதேவரின்புத்ரருமாகிய கண்ணபிரானைக் கரங்குவித்து நமஸ்கரித்துச் சொல்லலானார்.

'உலகங்களைப்படைத்தவரே! உமக்கு அளவில்லை. உமது இந்த உருவமானது எல்லாவற்றிற்கும் முற்பட்டதும் பின்னரும் அழியாததும் மாறுததுமாயிருக்கிறது. உம்மை யார் அறிவார்? வேதவாக்யங்களிலும் இவ்வளவுதான் சொல்லப்படுகிறது. இவ்வுலகத்தை நீர் தாம் தந்தைபோல நடத்துகிறவர்' என்றார்.

1 மூப்பில்லாதவர்.

பதினைந்தாவது அத்யாயம்.

தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(விஷ்ணுவின் மஹிமை.)

முன்னர், த்வாரகாநகரத்தில், இந்தமுனிஸ்ரேஷ்டரானவ்யாஸர், கண்ணன் வேதரூபியாகவும் ப்ராம்மணரூபியாகவும் இருப்பதாகச் சொல்லியிருக்கிறார். அதைச் சொல்லுகிறேன்; கேள். வ்யாஸர், 'தத்வஜ்ஞானியானவன், க்ருஷ்ணனே யாகத்தின் ரூபமாயிருப்பவ ரென்றும் விஷ்ணுவென்றும் தெரிந்துகொண்டு, எல்லாப்ராம்மணர்க ளுக்கும் உபதேசிக்கிறான். ப்ராம்மணன், த்ரிவிக்ரமாவதாரம்செய்த விஷ்ணுவே வஸுதேவபுத்ரரென்றறிந்து தத்வஜ்ஞானம்பெற்றபிறகு தான் ப்ராம்மணத்தன்மையை அடைகிறான். 'யாகமும் விஷ்ணு. யாகத்தினால் ஆராதிக்கப்படுகிறவரும் விஷ்ணு. எல்லாவற்றிற்கும் ஈஸ்வரரான விஷ்ணு க்ருஷ்ணனே. வேதவாக்யங்களும் வேதாங்கங் களும் க்ருஷ்ணனே' என்றறியும்ப்ராம்மணன் பரப்ராம்மத்தை அடை கிறான். யாகத்தைச்சேர்ந்த அங்கங்களனைத்தும் விஷ்ணுவைச்சார்ந் தவை. நான்கு ரித்விக்குக்களால்செய்யப்படும் சாதுர்ஹோத்ரமென் னும் கர்மமும் விஷ்ணுவினுடையதுதான். அவற்றில், முழுபக்தி யோடு எல்லா உபசாரங்களினாலும் க்ருஷ்ணபகவானே ஆராதிக்கப் படுகிறார். (அதனால்) ப்ராம்மணர்கள் புண்யலோகங்களை அடைகின்ற னர். யாகத்தில்பிழியப்பட்ட ஸோமரஸத்தை நல்லபக்தியுடன பானம் செய்கின்றவர்களும், தத்வஜ்ஞானம் அடைந்து சிறந்தகர்மத்தை ஆச ரிக்கின்றவர்களும் தங்களுக்குப்ரியமான ஈஸ்வரரூபத்தைத் தனிமை யாக த்யானிப்பவர்களும் நியமத்தின் உண்மையை அறிந்தவர்களுமான வர்கள் மேலுலகைச்சேர்ந்து நிலைபெறுகின்றனர். 'ஓம்' என்பதை த்யானம்செய்யும் ப்ராம்மணன், பாபச்செய்கையுள்ளவனாயினும் நரக மார்க்கத்திற்குச் செல்லான். 'எல்லாம் வாஸுதேவரான க்ருஷ்ணன்' என்று த்யானம்செய்யும் ப்ராம்மணர்கள் கெட்டகதியை அடையார். யாகத்தைச்சேர்ந்த ஒவ்வொருகர்மத்தையும் ஆரம்பிக்கும்போதும் நடத்தும்போதும் முடிக்கும்போதும் நெய், யாகம், ஸ்ருக்குஸ்ருவம் என்னும் யாகபாத்ரங்கள், யாகம்செய்யும்யஜமானன், யாகபலன், பத்னி, [1] யாகசாலை, அன்னங்கள், ஸமித்துக்கள், புரோடாசம் என் னும் ஹோமத்ரவ்யம், ரித்விக்கு ஆகிய எல்லாம் விஷ்ணுவென்று ஏப்

[1] 'பத்நிசாலா' என்பது மூலம்.

போதும் அறிகிறவன், அந்தவிஷ்ணுவை அடைகிறான்; இஷ்டலாபத்திற்குரியகார்யங்களில் இஷ்டப்ராப்தியையும் அனிஷ்டநிவ்ருத்திக்குரியகார்யங்களில் அனிஷ்டநிவ்ருத்தியையும் அடைவான்.

---

## பதினேழாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(விஷ்ணுவின் மஹிமைத் தொடர்ச்சி.)

கர்யக்ரோதங்களைவிட்டு எல்லாப்ராணிகளையும் ஸமமாகநினைத்து ஸ்ரத்தையோடு தானம்செய்வதையும் சாந்தகுணத்தையும் பூஜையையும் ஸத்யத்தையும் தர்மத்தையும் நல்லசெய்கையையும் எவன் செய்துவருகிறானோ ஸ்ரத்தையினால் பரிசுத்தமுள்ள அவன் எல்லா யாகங்களுக்கும் தகுதியுள்ளவன். எந்தயாகத்தில் எல்லாப்ராணிகளும் த்ருப்தியடைந்து எல்லாக்ரியைகளும் சாஸ்த்ரத்தில்சொன்னபடி நடக்கின்றனவோ, தர்மத்திலும் த்ரவ்யத்திலும் குறைவுபடாமல் அப்படிப்பட்டயாகம் செய்பவர்கள், பரிசுத்த ஆத்மாக்களாய்ப் புண்ய பலன்ஒன்றையே அடைகின்றனர். ப்ராம்மணர்கள் நியமத்தோடும் நம்பிக்கையோடும் [1] ஓரெழுத்தும் [2] ஈரெழுத்துமாகிய ஒருவனையே எப்போதும் பூஜிக்கின்றனர். அறிந்து, சிறிதுபூஜைசெய்தாலும் ஸாதுக்களுக்குக்கதியாகிய அந்தஈஸ்வரனை அடைவது திண்ணம். காமக்ரோதங்களினால்மூடப்பட்டுப் பாபசிந்தனையுள்ளவர்களும் க்ருஷ்ணனிடத்தில் பக்திவைத்து நாமஸங்கீர்த்தனம்செய்வாராயின், அவர்களுடையஆத்மா பரிசுத்தமாகி நல்லஞானம் அடைந்து யாகங்களைச் செய்து முடிவில் கீர்த்தியையும் புண்யலோகங்களையும் அடைவார். [3] நான்குபாதங்களும் [4] மூன்றுகுணங்களுமுடையதும் [5] பரப்ரம்மத்தையே தலையாகவுடையதுமான ஒருவேதம், ப்ராம்மணர்களுக்கிருந்தது. த்ரேதாயுகம்வந்தபோது ஒவ்வொருபாதத்தை ஒவ்வொரு வேதமாக ப்ராம்மணர்கள் கூறினர். அந்தக்ருஷ்ணனே அநந்ததலையென்றறி.

[1] அகாரம். [2] ஹரி, விஷ்ணு, க்ருஷ்ண.
[3] ரிக், யஜுஸ், ஸாமம், அதர்வணம்.
[4] மந்த்ரம், ப்ராம்மணம், அர்த்தவாதம்.
[5] 'ப்ரம்ம' என்பது இங்கே, உபநிஷத் அல்லது வேதாந்தம்.

## பதினெட்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(விஷ்ணுவின் மஹிமைத் தொடர்ச்சி.)

எல்லாவேதங்களும் எல்லாவேதப்பொருள்களும் [1] எல்லாச் சாஸ்த்ரங்களும் எல்லாயாகங்களும் யாகங்களால் ஆராதிக்கப்படும் தேவர்கள்யாவரும் க்ருஷ்ணனே. மத்ரராஜனே! க்ருஷ்ணனை உண்மையாக அறியும்ப்ராம்மணர்கள் எவரோ அவர்களுக்கு எல்லாயாகங்களும் முடிந்தவைதாம். வேதங்களினால் தத்வத்தையுணர்ந்தப்ரம்மரிஷிகளால் அறியக்கூடியவரும் தேவர்க்கும்தேவருமான க்ருஷ்ணமூர்த்தி, ஈஸ்வரராயிருப்பதனால் மூவுலகங்களிலும் எல்லாயாகங்களையும் எல்லாப்ராம்மணர்களையும் ப்ரம்மாண்டத்தையும் வ்யாபித்தாநின்றார். இந்த்ரன் யாகம்செய்து முதன்மையானஈஸ்வரனைப் பூஜைசெய்யும்போது, இந்தக்ருஷ்ணபகவான் அன்புடன்சொல்லலானார்.

'இந்த்ரன் வேதத்தின் உண்மைப்பொருளைக்கொண்டு என்னை அறியவில்லை. என்மேல்பக்திவைத்து அந்தப்பக்தியினால் மனப்பரிசுத்தமாகி மேன்மையடைந்தான். என்னை ப்ரபஞ்சத்திற்குத் தலையாகவும் ப்ரபஞ்சத்திற்குக் காரணமாகவும் எனக்கொருகாரணமில்லாதவனாகவும் ப்ரபஞ்சரூபியாகவும் எல்லாவற்றிலும் மிகச்சிறந்தவனாகவுமட்டும் எல்லாரும் அறிகின்றனர். நான் எங்கும் எக்காலமும் இருப்பவன். [2] நித்யமானஆத்மாவுக்கு ஈஸ்வரனும் எல்லாவேதமும் அக்னியும் நானே. நான் குணமற்றவனும் அளவற்றமஹிமையுள்ளவனுமாயிருப்பவன். எல்லாத்தேவர்களும் புத்தியினால் அனேக அவதார உருவங்களைத் தேடிப்பார்த்து, வாஸுதேவமூர்த்தியையே யாகங்களினால் ஆராதிக்கின்றனர். இம்மூன்றுலோகங்களிலும் க்ருஷ்ணனுடையநாமத்தைச்சொல்வதனால் எல்லாஸுகங்களையும் மிகுதியாகப் பெறுகின்றனர். யாகம்செய்கிறவர்கள் யாகங்களினால் ஆராதிப்பது க்ருஷ்ணனையே. யுத்தவீரர்கள் பராக்ரமங்களினால் ஆராதிப்பதும் க்ருஷ்ணனையே. விவேகிகள் ஜபஸ்தோத்ரங்களினால் ஆராதிப்பதும் க்ருஷ்ணனையே. அஜ்ஞானம்தொலைந்தமுக்தர்களும் க்ருஷ்ணனையே ஆராதிக்கின்றனர். வித்யையுள்ளவர்கள் யாகங்கள்செய்து, ஸோமபானம்பண்ணிப் பாபங்கள்போனபிறகு, க்ருஷ்ணன் ப்ரத்யக்ஷமாக வேண்டுமென்று ப்ரார்த்திக்கின்றனர். இவ்வாறே, எல்லா ஆஸ்ரமத்

---

[1] தர்மசாஸ்த்ரமுதலியவை. [2] 'சாஸ்வதேச' என்பது மூலம்.

தாரும் நன்றாகத்தவம்செய்து, முடிவில் என்னால்வ்யாபிக்கப்பட்ட பெரிய தேவலோகமெல்லாவற்றையும்கடந்து, மோக்ஷலோகத்தை யடைகின்றனர். என்னை அறிகிறவர்கள், துன்பமற்றலோகங்களுக்குச்செல்கின்றனர். என்னைத்யானம்செய்வதற்காகத் தீக்ஷையெடுத்துக்கொள்ளுகிறவர்கள், பாவம்விலகித் தேஜோரூபர்களாகித் தேவலோகமாகிய மேலுலகத்தை அடைகின்றனர். வாஸுதேவனாகிய என்னையறிந்து ச்ரத்தையோடும் உத்ஸாஹத்தோடும் பூஜிப்பவர், உலகத்தில் பூஜிக்கப்படுகின்றனர். பக்தியினால் நான் ஸந்தோஷம் அடைந்து பக்திசெய்கிறவனுக்கு ஸத்வகுணத்தைக் கொடுக்கிறேன். ஸத்வகுணம் அடைந்தவன், மோக்ஷமகேங்கி என்னிடம்வருகிறான்' என்று சொன்னார். 'உலகத்தில் பரிசுத்தமான ஸூர்யன், சந்த்ரன்முதலிய சுடர்களும் மூவுலகங்களும் அவற்றின் அதிபதிகள்மூவரும் மூன்று அக்னிகளும் [1] ஐந்து ஆஹுதிகளும் எல்லாத்தேவர்களும் க்ருஷ்ணனே' என்றுசொன்னார். மத்ரராஜன் ரிஷிகளுடன்கூட இந்தவ்யாஸர்சொல்லைக்கேட்டு மனமகிழ்ந்து அவரையும் க்ருஷ்ணனையும் சாஸ்த்ரப்படி பூஜித்தான்" என்றார். கவியும் பராசரமஹரிஷியின்புத்ருமாகிய வ்யாஸர்சென்றபிறகு, அவர்சொன்னதைக்கேட்டு, மஹாத்மாவானபீஷ்மர் தலைபூமியில்படும்படி க்ருஷ்ணனுக்கு நமஸ்காரம்செய்தார்.

---

## பத்தொன்பதாவது அத்யாயம்

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி)

(க்ருஷ்ணன் பீஷ்மரைக் கருடர்கதையைச் சொல்லச்சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! சிறந்தகைகளையுடையவரே! நீர் முன்னம் அர்ஜுனனைப்புகழ்ந்தபோது, 'கருடர் பக்ஷிகளுள்ளெல்லாம் சிறந்தவர்' என்றுசொன்னீர் அதைக்கேட்டதில் என்புத்தி ஆவலுடன்செல்லுகிறது. பகைவரைவாட்டுகின்றவரே! கருடர்பக்ஷிகளுள் ச்ரேஷ்டரானது எவ்வகை? அவர் நல்லசிறகுள்ளவரும் வினதையின் குமாரரும் நாகங்களுக்குச் சத்ருவும் ஆனதெப்படி? அவருடையபலமும் ஸாமர்த்யமும் எப்படிப்பட்டவை? பாரதரே! இதைச்சொல்லக் கடவீர்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

---

[1] ப்ராண, அபான, வ்யான, உதான, ஸமான என்ற ஐந்துப்ராணவாயுக்களுக்கும் ஆஹுதியாகப் போஜனத்தொடக்கத்தில் அன்னத்தைப்பிடித்துச் சாப்பிடுவது.

"வஸுதேவபுத்ரரே! சிறந்தகைகளையுடையவரே! உம்மால் தேவகி நல்லபுத்ரனைப் பெற்றவளானாள். எனக்கு ஸந்தோஷத்தை வ்ருத்திசெய்கிறவரே! தர்மராஜன்சொல்லைக் கேட்டீரா? 'கருடனைக் குறித்துச் சொல்லும்' என்று யுதிஷ்டிரன் என்னைக் கேட்கிறான். சிறந்தமஹிமையுள்ளவரே! உம்மால் உத்தரவுகொடுக்கப்பெற்று இவனுக்குச் சொல்லக்கருதுகிறேன். சிறந்தகைகளையுடைய சௌரியே! கேசவரே! முதலும் முடிவுமில்லாததாகிய காலத்தில் நீர்தாமே ஸுபர்ணரென்றும் கருடரென்றும் சொல்லப்பட்டவர். மாதவரே! ஆதலால், முதலில் உம்மைக்கேட்டுக்கொண்டு, புத்திசாலியான தர்மபுத்ரனுக்குப் பக்ஷிஸ்ரேஷ்டரான கருடரைப்பற்றிச் சொல்லக்கருதுகிறேன்" என்றார். க்ருஷ்ணன், "என்னை நீர் எப்படி அறிவீரோ அப்படி யுதிஷ்டிரரும் அறிவார். கருடன்எப்படியுண்டானானென்பதை நீர் இவருக்குத் தெளிவாகச்சொல்லும்" என்று சொன்னார்.

---

## இருபதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(அருணன், பிறந்ததும், விநதையைச்சபித்ததும்.)

[1] பீஷ்மர், "யுதிஷ்டிரனே! சிறந்தகைகளையுடைய அரசனே! பக்ஷிகளிற்சிறந்தவரும் விநதையின்புத்ரரும் மிக்கபலசாலியுமான கருடரைப்பற்றிக்கேள். அவர் எப்படி ஸுபர்ணரும் கருடரும் ஆனாரென்பதையும் ஸர்ப்பங்களை ஏன் கொல்லுகிறாரென்பதையும் சொல்லுகிறேன்; கேள். அப்பா! அரசனே! நான் முன்னம் அழகானகைலாஸசிகரத்தில், ஆயிரக்கணக்கான ம்ருகங்களை வேட்டையாடும்போது, சிறந்தபுத்திமானான பரசுராமரை ஸந்தித்தேன், அப்பா! நான் அவரைக்கண்டவுடன் ஆயுதங்களெல்லாவற்றையும் விட்டுவிட்டு முதலில் அவருக்கு அபிவாதனம்செய்து வணக்கத்துடன் அருகிலிருந்தேன். பேசிமுடியும்போது எனக்கு வரம்கொடுக்கத்தொடங்கின அந்தப்பரசுராமரிடம் கருடருடையபலத்தையும் பராக்கிரமத்தையும்பற்றிக் கேட்டேன். யுதிஷ்டிர! அவரும் அன்புடன் எனக்கு இதைச் சொல்லலானார். 'தக்ஷப்ராஜாபதிக்குக் கத்ருவென்றும் விநதையென்றும் இரண்டு பெண்கள் இருந்தனர். மரீசியின்குமாரரும் மஹிமையுள்ளவருமான கச்யபர், அவ்விருவரையும் சாஸ்த்ரப்படி விவாஹம் செய்துகொண்

---

[1] கருடன்கதை ஆதிபர்வம் 20 - வது அத்யாயமுதல்சொல்லியிருப்பதற்கும் இங்குசொல்வதற்கும் வித்யாஸமிருக்கிறது:

டார். மிகச்சிறந்ததவமுள்ள கச்யபர், அந்தமனைவிகளின்மேல் அன்புகூர்ந்து, அவர்களுக்கு வரமளித்தார். அவ்விருவருள் கத்ருவென்பவள், எல்லாரும் ஒரேசக்தியும் ஒரேமஹிமையுமுள்ள ஆயிரம்பிள்ளைகள் ஏககாலத்தில்பிறப்பதைக் கேட்டாள். பரதச்ரேஷ்டனே! விநதையென்பவள், வேகத்திலும் பராக்ரமத்திலும் கத்ருவின்பிள்ளைகள் ஆயிரவருக்குமொப்பான வீரர்களான இரண்டுபிள்ளைகளைக் கேட்டாள். சிறந்ததவமுள்ளகச்யபர் அவ்விருவருக்கும், 'அப்படியேயாகுக' என்றுசொல்லி வரத்தைக்கொடுத்தார். பிறகு, தாம் முதலில்வரம்கொடுத்தபடி அவ்விரண்டுமனைவிகளிடத்திலும அவ்வகையானகுமாரர்களை உண்டாக்கினர். கத்ரு, ஆயிரம் முட்டைகளையும் விநதை மிகஅழகிய சிறந்த இரண்டுமுட்டைகளையும் பெற்றனர். கத்ருவிநதைகளுடைய அந்தமுட்டைகளை சீராவிப்பாண்டகூடியகுடங்களில் வேலைக்காரர்கள் வைத்தனர். பிறகு, ஐந்நூறுவருஷங்களுக்குப்பின், கத்ருவின்பிள்ளைகளானஸர்ப்பங்கள் முட்டைகளிலிருந்து வெளிப்பட்டனர். மஹாத்மாக்களான அந்தநாகர்கள்பிறந்தபோது, சிறந்தபலமும் ஒளியுமுள்ள அவர்களைக்கண்டு, புத்ரனில்லாதவளும் புத்ரனைப்பற்றியவருத்தமுள்ளவளுமானவிநதை, ஐந்நூறுவருஷமாகியும் புத்ரனுண்டாவதைக்காணமையால், 'இந்தமுட்டையினால் நான் என்னசெய்யப்போகிறேன்' என்று சொல்லி ஒருமுட்டையை உடைத்தாள். அவள், அரைக்குமேல் வலியசரீரமுள்ளவனும் கீழ்ப்பாகமில்லாதவனுமாக முட்டையினின்று சிறகில்லாமல்வெளிப்பட்ட சிறந்ததைர்யசாலியான ஒருபுத்ரனைக் கண்டாள்; அப்படிப்பட்டஉருவமுள்ளபிள்ளை முழுச்சரீரமில்லாமலிருந்ததைக்கண்டு, புத்ரனைப்பற்றிய துக்கத்தினால் கண்ணீர்விட்டாள். அவ்வாறுஇருந்தஅந்தப்பக்ஷியும் ஸந்தோஷமில்லாமல் [1]சீர்ததும்பும்கண்களையுடைய தாயாரைப்பார்த்து, 'நீ இந்தவிஷயத்தில் [2]அவஸரப்பட்டாய். நான் கெட்டேன். முன்னே எவ்வளவுகாலம் கடந்துபோனதோ அவ்வளவுகாலம் பின்னேயும் காவாமல்போனாய். நாங்களிரண்டுபுத்ரர்களும் காற்றைவிடமிக்கபலசாலிகளாகப் பிறப்போம். என் தாயே! நீ கோபத்தினாலும பொறாமையினாலும் மூடப்பட்டு என்னை இவ்வாறுசெய்துவிட்டாய். ஆகலால், நீ அடிமையாவாய். ஐந்நூறுவருஷகாலமாக எவளுடன்கூடக் கலகப்படுகின்றாயோ அவளுக்கே தாதியாவாய். மஹானுபாவையானதாயே! பலவான்களில்சிறந்தபலசாலியான இந்தஎன் இளையஸஹோதரன், உன்னை அடிமைத்தன்மையிலிருந்து விடுவிப்பான்' என்று கண்ணீர்விட்டுக்கொண்டுசொன்னான்.

---

[1] 'பர்யச்ருநயந:' என்பது 'பர்யச்ருநயநாம்' என்றிருத்தல் வேண்டும்.
[2] 'சபலாசீஹ' என்பது 'சபலாஸீஹ' என்றிருத்தல் வேண்டும்.

## இருபத்தோராவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(கத்ருவும்விநதையும் பந்தயம் ஏற்படுத்திக்கொண்டது.)

பாரதனே! மகனைப்பற்றிய பயத்தினால் பிடிக்கப்பட்டவளும் சாபத்திற்குப் பயந்தவளுமான விநதை, தன்புத்ரன்குறித்தகாலத்தை எதிர்பார்த்திருந்தாள். பிறகு, ஐந்நூறுவருஷங்களாகிய பாகம் கடந்த போது, மஹாபராக்ரமசாலியும் பலசாலியும் ஸர்ப்பங்களைப் புஜிப்பவரும் அழகானமுகமுள்ளவரும் கிரீடமுள்ளவரும் குவிந்த இறகுள்ளவரும் ஆமைநகங்கள்போன்ற நகங்களுள்ளவரும் சிவந்தகண்களும் பருத்தகழுத்தும் குட்டைக்கால்களும் பெரியசிரஸும் உருவமுமுள்ளவருமான கருடர் பிறந்தார். பரதஸ்ரேஷ்டனே! அண்டம் உடைந்து வெளிப்பட்டவனும் முதற்புத்ரனுமான அருணன், ஸூர்யோதயகாலத்தில் கீழ்த்திசையைச்சார்ந்து ஆகாயத்தில் காணப்படுகிறான். அவன் ஸூர்யனைப்போலச் சிவந்திருப்பதனால் [1] அருணன் என்று பெயரிடப்பட்டான். பன்னகங்களைப்புஜிப்பவரும் ஆகாசத்தில் பறப்பவருமாகிய கருடர் பிறந்தவுடன் தாயைவிட்டு எல்லாத்திசைகளிலும் விரைவாகஓடினார். அரசனே! அவர் ப்ரம்மதேவரால் அளிக்கப்பெற்ற ஆஹாரத்தினாலும் வேண்டினவைஎல்லாவற்றினாலும் கௌரவிக்கப்பட்டு உடனே அதிகமாகவளர்ந்தார். அந்தப்பக்ஷி தம்மிச்சைப்படி அங்கேவளர்ந்துகொண்டிருக்கையில் கத்ருவும் விநதையும் கடலோரம்போயினர். குளித்துத் தண்ணீர்குடித்து விரைவாகத்திரும்பிவரும் உச்சைஸ்ரவமென்னும்குதிரையை அவ்விருவரும் அருகில்கண்டனர். அப்போது, கத்ருவானவள் நகைத்துக்கொண்டே விநதையைப்பார்த்து, 'சிறந்தவளே! இந்தக்குதிரையின் நிறமென்ன? உனக்குத்தோன்றுவதைச் சொல்' என்றுகேட்டாள். அதற்கு, விநதை, 'அரசியே! இந்தக்குதிரை ஒரேநிறமுள்ளதுதான்; அதாவது முழுதிலும்வெளுப்பென்று நான் நினைக்கிறேன். சிறந்த மனமுள்ளவளே! நீதான் இந்தக்குதிரையின் நிறத்தை என்னென்று எண்ணுகிறாய்?' என்றுசொன்னாள். அதற்கு, கத்ரு, 'கல்யாணி! இந்தச்சிறந்தகுதிரை முழுதும் வெளுப்பென்பது உன்கருத்து; பெண்ணரசியே! வேறுநிறமிருப்பதைப்பற்றிப் பந்தயம்வைப்போமா? சொல்' என்றாள். விநதை, 'பெரியவளே! நீ என்னுடன் பந்தயம்

---

[1] சிவப்பு, ஸூர்யன்.

வைப்பாயாகில், நமக்கு என்னபந்தயமிருக்கலாம்? அதை அறிந்த பிறகு, உன்னுடன்பந்தயம் வைப்பேனோ வைக்கமாட்டேனோ' என்று சொன்னாள். கத்ரு, 'கறுத்தகண்களையுடையவிநதையே! குதிரை ஒருநிறம் பலநிறமென்னும்விஷயத்தில், நீ தோற்றால் எனக்கடிமையாகக்கடவாய்; நான் தோற்றால் உனக்கடிமையாவேன். உனக்கு இஷ்டம்தானா? அரசியே! தாஸியாகும்படி பந்தயம்கட்டுவதில் எனக் கிஷ்டமிருக்கிறதில் ஸந்தேஹமில்லை. ஸத்யத்தைப்பிடி. உனக்கு ஸுகமுண்டாகக்கடவது. நானும் ஸத்யத்திலிருப்பேன்' என்று சொன்னாள்.

---

## இருபத்திரண்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(கத்ரு நாகங்களை உச்சைச்ரவத்துக்கு வால்மயிர்களாகஏவியது.)

விநதை, 'அவ்வாறேஆகட்டும்' என்றுசொல்லிப் பந்தயம்வைத்துவிட்டுப் [1]படுத்துக்கொண்டாள். கத்ருவும், 'அப்படியே' என்று சொல்லித் தன்பிள்ளைகளைப்பார்த்து, 'பிள்ளைகளே! நான் விநதையுடன்கூட உச்சைச்ரவஸ்என்னும்குதிரையைப்பற்றிப் பந்தயம்போட்டிருக்கிறேன். ஸர்ப்பங்களே! அதைக் கேளுங்கள். அந்தக்குதிரை பலநிறங்களுள்ளதென்று நான் சொன்னேன்; ஒருநிறமுள்ளதென்று அவள் சொன்னாள். பிள்ளைகளே! நான்தோற்றாலும் அவள் தோற்றாலும் அடிமையாகவேண்டும். ஸந்தேஹமில்லை. அந்தக்குதிரை ஒரேநிறமுள்ளதுதான்; சந்த்ரனுக்கும் வெண்தாமரைமலருக்கும் ஒப்பானநிறமுள்ளது. பிள்ளைகளே! ஆதலால், நான்தான் தோற்று அடிமையாவேனென்பதில் ஐயமில்லை. ஆதலால், நீங்கள் பின்வாங்காமல், முழுதும்வெண்மையான அந்தச்சிறந்த குதிரையின்வாலில் மைநிறமானமயிர்களாகச் சேருங்கள்' என்றுசொன்னாள். அதற்கு, ஸர்ப்பங்கள், 'தாயே! வஞ்சகமாகஜயிப்பது நன்மையாகாது. எங்களுடைய உண்மையானசொற்களைக் கேள். இப்படிச்செய்வதில் இக்காலத்திலும் எதிர்காலத்திலும் புண்யமில்லை. தாயே! ஆதலால், நமதுகுலத்துக்கேகெடுதலும் தர்மத்திற்குவிலக்குமான மோசஞ்செய்துஜயிப்பதை எவ்வகையிலும் செய்யாதே. நாங்கள் அதர்மத்தி

---

[1] 'பந்தயத்தைப்பற்றி ஸந்தேஹித்துக்கொண்டிருந்தாள்' என்றும் பொருள்கொள்ளலாம். சிந்தித்துக்கொண்டிருந்தாள் என்றபடி.

னுல்ஜயிப்பதை எங்கேயாவது கருதுவோமாயின், 'அப்படிச்செய்யா தீர்கள்' என்று நீ கட்டாயமாகத் தடுக்கவேண்டியவளல்லேயோ? அப்படிப்பட்ட நீ ஆசையினுல்மயங்கி, பாபத்தைவிட்டு ஸரியான எண்ணத்துடனிருக்கும் யோக்யர்களான எங்களேயும் பாபத்தில் சேர்க்க நினேக்கிருயே? தாயே! திரும்பவும் இப்படிப்பட்ட உன்சொல்லேக் கேளாமலிருக்கும்படி உன்னேவிட்டுப் பத்துத்திசைகளிலும் ஓடிப் போவோம். கர்வத்தினுல் கார்யாகார்யங்களே அறியாமல் தப்புவழியில் போகும்குருவையும் விடும்படி சாஸ்த்ரம் விதிக்கிறது' என்று கூறின. கத்ரு, 'என்னேக் கெட்டவழியிலிருந்து திருப்புவதற்காகக் காரணங்களோடு நீங்கள்சொல்லிய பலசொற்களேயும் கேட்கிறேன். அவற்றை நான் விரும்பவில்லே. மதிகெட்டவர்களே! இதைத்தவிரவேறுவகையில் அந்தப்பந்தயத்தை ஜயிக்கமுடியாதே. பிள்ளேகளே! நான் சொன்னதைக்கேட்டு வஞ்சகமாகஜயித்து எனக்கு க்ஷேமத்தைச் செய்யுங்கள். பிள்ளேகளே! நாளேக்காலேயில் நான்தோற்றுப் பந்தயத்தின்விதிப்படி விநதைக்கு வேலேக்காரியாகிவிடுவேனென்பது திண்ணம். இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும்பயன்படுவதற்காகத் தான் தாயார்கள் பிள்ளேகளே விரும்புகிருர்கள். உங்களேப் புத்ரர்களாக அடைந்ததனுல் எனக்கு இந்தவிருப்பம் கெட்டுப்போயிற்று. புத்ரன் தாய்தந்தையரை இவ்வுலகத்திலும் வேறு உலகத்திலும் கரையேற்றவேண்டியவன். இதில் புதுமையொன்றுமில்லே. பரிசுத்தம்செய்வதனுலேதான் [1] புத்ரன் ஆகிருன். மனேவேகமுள்ள எனதுபுத்ரர்களே! ஆதலால், நீங்களும் என்ஆபத்தைத் தாண்டுவிப்பதற்காக மைநிறமுள்ளவால்மயிர்களாகி உச்சைஃச்ரவம் என்னும் சிறந்த குதிரையைச் சேருங்கள். அதர்மம் எல்லாவற்றையும் நான் அறிவேன். விநதை, வஞ்சகத்தினுல்தான் வெல்லப்படவேண்டியவள். எனது அடிமைத்தன்மை உங்களேயும் துயரப்படுத்தும். வஞ்சகத்தினுல் ஜயிப்பது நலமா, தோற்று அடிமையாவது நலமாவென்ற இரண்டையும் நிச்சயிக்கும்போது ஜயிப்பதுதான் தர்மம். அதுதான் ஸிலாக்யம். அதர்மமாக ஜயிப்பதனுலுண்டாகும்பாபம் உங்களேயும்தான் தொடும். ஆனல், பெரியோர்சொல்லேச்செய்வதனுல் தர்மமும் உண்டாகும் என்றுள்.

[1] 'பு' என்பது பரிசுத்தம்செய்வதென்னும் பொருளுள்ளது.

## இருபத்துமூன்றாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(விநதை அடிமையானது.)

அந்த ஸர்ப்பங்கள், கோபமுற்றதாயின்சொல்லைக்கேட்டு வருத்தத்துடன் ஒப்புக்கொண்டன. மற்றும்சில அவளைவிட்டுத் திசைகளில் ஓடிப்போயின. எப்போதும் பகையையேபாராட்டுகிறவளாகிய நாகமாதாவானகத்ருவானவள் திசைகளில் ஓடின நாகங்களின்மேல் மிகவும்கோபமுற்று, 'பாண்டுவம்சத்தில் வில்லாளிகளிற்சிறந்தவனும் குந்திபுத்ரனுமானதனஞ்சயனுக்கு நாலாவதுதலைமுறையில் ஜனமேஜயனென்னும் அரசன் பிறக்கப்போகிறான். குருவம்சத்தைத்தாங்குகிறவனான அவ்வரசன் கோபித்து ஸர்ப்பயாகம் செய்யப்போகிறான். அந்தயாகத்தில் உங்களை அக்னியினால் கொல்லப்போகிறான்' என்று சாபம்கொடுத்தாள். இங்ஙனம்கோபித்த நாகமாதாவானவள் தர்மத்தைவிடாமலிருந்த நாகங்களைப்பார்த்துப் பெரியோரைவிட்டதனால் உண்டான இந்தச்சாபம் மாறாதென்றும்சொன்னாள். தர்மத்தைச்செய்யும் பன்னகங்கள் இவ்வாறுசபிக்கப்பட்டதனால் கோபித்து எப்போதும்பகைசெய்பவளாகிய தாயைவிட்டுப் பலதிசைகளிலும்சென்றன. அவைகளுள், அவள்சாபத்தைப் பெறாதஸர்ப்பங்கள்மட்டும் அந்தக் குதிரைக்குக் கறுத்த நிறமுள்ளவால்மயிர்களாயின. அந்தப்பிள்ளைகள் வாலிலிருந்ததைக்கண்டு மனமகிழ்ந்தகத்ருவானவள் விநதையை நோக்கி, 'இந்தக்குதிரையைப்பார். சிறந்தவளே! இது ஒருநிறமா? அன்று? நமதுபந்தயம் நன்றாகநிச்சயமாகிவிட்டது. பெண்ணரசியே! [1] ஜலத்தினின்றுகரையேறும்போது இந்தக்குதிரையைப்பார்' என்று சொன்னாள். பார்ரதனே! நேரான எண்ணமுள்ள விந்தாதேவி கடாடமாக நடக்கும் தன்ஸஹோதரியைப்பார்த்து, 'மங்களமானவளே! ஆ! ஆ! பார்ப்போம்; போவோம்; நாம் நல்லபந்தயம் வைத்துக்கொண்டோம். நானாவது உனக்கடிமையாவேன். நீயாவது எனக்கடிமையாவாய்' என்று சிறிதுநகைத்துக்கொண்டே சொன்னாள். குருஶ்ரேஷ்டனே! அவ்விரண்டுஸஹோதரிகளும் பந்தயத்தை இவ்வாறு உறுதிப்படுத்திக்கொண்டு, தங்களுக்குத் தங்களையே ஸாக்ஷியாகவைத்துக்கொண்டு, அந்தக்குதிரையைப் பார்த்தனர். அந்த விநதை சந்த்ரகிரணங்களைப்போன்ற வாலுள்ளதும் மனோவேகமுள்ளது

[1] அப்போது இருக்கும்நிறம் ஸரியானதென்று கருத்து.

மான அந்தவெண்மையான குதிரையின்வால் கறுத்திருந்ததைக்கண்ட வுடன் துக்கத்தையும் வெட்கத்தையும் அடைந்து, கண்ணீர்த்துளி கள் சொட்ட, 'இந்தக்குதிரையின்வால் கறுப்பாகத்தானிருக்கிறது. நீ ஜயித்துவிட்டாய். நான் அடிமையானேன். சிறந்தவளே! உன் னிஷ்டத்திற்குட்பட்ட தாஸியானஎன்னை உன்வேலைகளில் ஏவலாம். ப்ரபுக்களின் இஷ்டங்களை வேலைக்காரிகள் செய்யவேண்டியவர்களென் பதில் ஸந்தேஹம்இல்லை' என்று மெல்லச்சொன்னாள்.

## இருபத்துநான்காவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(கத்ரு அம்ருதம்கொணர்ந்தால் அடிமைநீங்குமென்று கருடருக்குச் சொல்லியது.)

அதன்பிறகு, கத்ருவானவள் நகைத்துக்கொண்டே, தர்மத்தை அநுஷ்டிப்பவளாகிய விநதையை வேலைக்காரியைப்போல ஏவினாள். அவளும் அவள்சொன்னதையெல்லாம் செய்தாள். தாமரைமலர்கள் போன்ற கண்களையுடைய விநதையானவள் முகமலர்ச்சி குன்றாமலும் மனம்சலியாமலும் கோபமும் துன்பமுமில்லாமலும் கத்ரு கட்டளை யிட்டகார்யங்களைச் செய்தாள். அவள் வேலைக்காரியாகவே இந்த நாற்றிசைகளிலும் நடந்தாள். பிறகு, கருடருக்குப் பலமும் கர்வமும் வ்ருத்தியாயின. அரசனே! கர்வம்மேற்கொண்டு ஸமீபத்திலோடும் கருடரைத் தேவரிஷியாகியநாரதர் கண்டார். (அந்த) தேவரிஷியான நாரதர் அந்தக்கருடரைப்பார்த்து நகைத்துக்கொண்டு, 'நீ பலத்தினால் எப்போதும் கர்வம் அடைந்து, 'நான்' என்ற எண்ணத்துடன், நாக ராஜனுடையமாதாவான கத்ருவுக்கு வேலைக்காரியாகி அவள் வீட்டுக் குள்ளிருக்கும் தாயையும் கவனியாமலிருக்கிறாயே? ஏன் எப்போதும் இவ்வளவுகர்வம் மேற்கொண்டிருக்கிறாய்?' என்று கேட்டார். அதற்கு வைநதேயர், 'சிறந்தபுத்தியுள்ளவரே! நான் புத்ரனிருக்கையில் என் தாய் பரிதாபப்படத்தக்க அடிமையானாளா? அது என்னகாரணம்?' என்று நாரதரைக் கேட்டார். பிறகு, நாரதரிஷி, 'ஓ! பக்ஷியே! உன்தாய் முன் நாகமாதாவானகத்ருவுடன் பந்தயம் போட்டபோது, அவள் தன்பிள்ளைகளைக்கொண்டு வஞ்சகமாக உன்தாயை வென்று விட்டாள்' என்றுசொன்னார். கருடர், 'பகவானே! என்தாய் வஞ்சகமாகஜயிக்கப்பட்டதெப்படி? அதை நடந்தபடி எனக்குச்

சொல்லும். கேட்டபிறகு, அதன்மேல்நடக்கவேண்டியதை அறிந்து கொள்வேன்' என்றுகேட்டார். ஓ! பரதஸ்ரேஷ்டனே! அப்போது நாரதர், நடந்தவற்றையெல்லாம் நடந்தபடி அந்தக்கருடருக்குச் சொன்னார். அதைக்கேட்டபின், கருடர்மனத்தில் கோபமுண்டாயிற்று. பகைவரைத் துன்புறச்செய்யும் பக்ஷிராஜர் பன்னகங்களனைத்தையும் அவற்றின் தாயையும் இகழ்ந்து கோபத்தோடும் துக்கத்தோடும் விரைவாகக்கிளம்பித் தம்தாய் மிகக்கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் இடத்திற்குச் சென்றார். அங்கே துயரமுற்று ஜடைதரித்து அழுக்கடைந்து இளைத்து மேகத்தினால் மூடப்பட்டஸூர்யகாந்தி போல இருக்கும் தம்தாயைக் கண்டார். அவருக்குத் துக்கத்தினாலும் கோபத்தினாலும் கண்களினின்றும் கண்ணீர் பெருகிற்று. மேல் முயற்சிசெய்வதிலேயே உறுதியான எண்ணமுள்ளவரும் தர்மாத்மாவுமான பக்ஷிராஜர், தாம்செய்வதையும் செய்யாமலிருப்பதையும்பற்றித் தம்தாயிடம் ஒன்றும்சொல்லாமல் கத்ருவைப்பார்த்தே பின்வருமாறு சொல்லலானார். 'நீ எனக்கு மூத்ததாயாகவிருக்கிறாய். நீ என் தாயை நியாயமாகஜயித்திருந்தாலும் அநயாயமாகஜயித்திருந்தாலும் அதெல்லாம நியாயமென்றே நான் நினைக்கிறேன். அம்மா! ஆனால், நான்புத்ரனிருக்கும்போது இவள் அநாதையாகவும் துயரமுள்ளவளாகவும் இருக்கலாமா? தர்மந்தெரிந்தவளே! என்னைப்பற்றி அவளை நீ விட்டுவிடுவதுநலம்' என்றார். சிறந்தபுத்தியுள்ள வைநதேயருடைய சொல்லைக்கேட்டுத் துஷ்டபுத்தியுள்ள கத்ருவானவள் இயற்கைமாறித் துயரமேற்கொண்டு, 'விநதையின்மகனே! உனக்கும் உன் தாய்க்கும் விருப்பத்தை நான் எவ்வகையிலும் செய்யமாட்டேன். ஆகாயத்தில்பறக்கும்பறவையே! வேண்டாதவனை நீ என்னிடம் ஏன்பேசுகிறாய்?' என்றுசொன்னாள். இவ்வாறு அன்பில்லாமலும் கொடுமையாகவும்பேசும் தயையற்ற கத்ருவைக் கருடர் உண்மையும் அன்புமுள்ளசொற்களினால் நயப்படுத்தத்தொடங்கினார். 'நற்குணங்கள் நிரம்பின பெண்ணரசியே! நீ என்தாய்க்கு அன்புள்ள மூத்தஸஹோதரி. எனக்கு நீ பெரியதாய்; ஸந்தேஹமில்லை' என்றார். கத்ரு, 'ஆகாயத்தில்பறக்கும் பறவையே! நினைத்தபடியெல்லாம் செல்லுகிறவனே! உன்னிஷ்டப்படி செல்லலாம். பக்ஷியே! இன்சொற்களினால் நீ உன்தாயைத் தாஸியாகாமற்செய்வது முடியாது. பறவையே! விநதையின்மகனே! அம்ருதம்கொண்டுவருவாயாயின் உனது இந்தத்தாயை எனக்கடிமையாயில்லாமல் பார்க்கலாம். இது திண்ணம்' என்றுசொன்னாள்.

## இருபத்தைந்தாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(கச்யபர், கருடருக்கு யானை ஆமைகளின் வரலாறு கூறியது.)

மிகுந்தசக்தியுள்ளகருடர், 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லி அம்ருதம் கொண்டுவருவதாக ப்ரதிஜ்ஞைசெய்து உடனே பிதாவினிடம் சென்று, 'நான் உண்மையும் அன்புமுள்ளசொற்களைப் பலமுறைசொல்லி என்தாய்க்கு விடுதலையைக் [1] கேட்டேன். கத்ருவோ ஒப்புக்கொள்ளவில்லை. அவள் இடியைப்போன்றபலசொற்களை என்மேல் ப்ரயோகித்தாள். பகவானே! பெரும்புகழ்பெற்றவரே! என்தாயாகியவிநதை தாஸியாயிருக்கிறாள். கத்ருவானவள் அவளை ஏவுகிறாள். 'இவள் தாஸி' என்றும் சொன்னாள். பிறகு, 'அம்ருதம் கொண்டுவா; விநதை விடப்படுவள்' என்றுசொன்னாள். (அதன்மேல்) நான் தாயைவிடுவிப்பதற்காக அவள் சொன்னதை அங்கீகரித்து, 'அம்ருதம்கொண்டுவருவேன்' என்றுசொல்லி, உடனே அதைக் கொண்டுவரப் [2] புறப்பட்டேன்' என்றுசொன்னார். அதற்கு அவர் பிதா, 'அம்ருதம் தேவர்களாலும் பெறமுடியாதது; நீ கொண்டுவருவதெப்படி? புத்ரனே! அது காவற்காரர்களால் மிகவும் காக்கப்படுகிறது. அதைச் சொல்லுகிறேன்; கேள். ஐயா! மிகவும் நன்றாக நாலுபக்கமும் தண்ணீரால்சூழப்பட்டு ரக்ஷிக்கப்பட்டிருக்கிறது. அதன்பிறகு, ஜ்வலிக்கின்ற அக்னியினால் ரக்ஷிக்கப்பட்டிருக்கின்றது. அதற்குப்பிறகு, பதினாயிரமும் நூறாயிரமும் பத்துலக்ஷமுமாகிய கிங்கரர்கள்என்னும் [3] ராக்ஷஸர்களும் அதிஜாக்ரதையுடன் அம்ருதத்தைக் காக்கின்றனர். குழந்தாய்! சக்திஆயுதங்களும் தடிகளும் சூலங்களும் சதக்நி(பீரங்கி)களும் பட்டஸங்களும் இடிக்கொப்பானகற்களும் அந்தக்காவற்காரர்களின் ஆயுதங்கள். குழந்தாய்! இந்த்ரனுடையகட்டளையினால் அந்தக்காவற்காரர்களுக்கு வெளிப்பக்கம் பெரிய இரும்புவலையினால் மூடப்பட்டிருக்கிறது அப்பா! விநதையின்புத்ரனை பக்ஷியே! வஜ்ராயுதத்தைத்தரிப்பவனை இந்த்ரனாலும் தேவர்களாலும் நாகர்களாலும் கத்திகள், கற்கள், ஜலமுதலியவற்றினாலும் இவ்வாறு நன்றாகக்காக்கப்பட்ட அம்ருதத்தை நீ எப்படி விரும்பு

[1] 'யச்சாப்யநுஜ்ஞாம்' என்பது, 'யாச்ஞாம்யநுஜ்ஞாம்' என்றிருத்தல் வேண்டும்.

[2] 'ப்ரார்த்தித:' என்பது, 'ப்ரஸ்தித:' என்றிருத்தல் வேண்டும்.

கிறாய்?' என்றுசொன்னார். கருடர், 'பிதாவே! நான் புத்ரனென்ற ஸ்வதந்த்ரத்தினால் இந்த என்நிச்சயத்தைச் சொல்லுகிறேன்; கேளும். பலவாலும் உபாயந்தெரிந்தவனுமாக இருக்கிறேன். இன்னும் நான் என்னசெய்யவேண்டுமென்று நீர் நினைக்கிறீர்?' என்றுகேட்டார். ஸந்தோஷமடைந்த பிதாவானவர், பலமுறைசிரித்துக் கருடரைப்பார்த்து, 'அப்பா! மிகக்கொடியஆமை யானை இரண்டினையும் நீ பக்ஷிப்பாயாயின், அதனால், உன்பலம் அளவிடக்கூடாததாகுமென்பதில் ஸந்தேகமில்லை. அம்ருதத்தையும் கொண்டுவரத்தக்கவனாவாயென்பது திண்ணம்' என்றுசொன்னார். கருடர், 'மஹானுபாவரே! அந்த க்ரூரமானயானையும் ஆமையும் எங்கேயிருக்கின்றன? பிதாவே! பலம் அதிகப்படுவதற்காக அவற்றை நான் பக்ஷிப்பேன்' என்று கேட்க, கச்யபர் சொல்லலானார். 'முன்னே தேவக்கூட்டங்களாலும் ஏறமுடியாமலிருந்த உரகமென்னுமலை ஆகாயத்தைத்தடுத்ததுபோலக் கடற்கரையிலிருக்கிறது. தாழ்வரைகளில் மரங்கள் எப்போதும் புஷ்பித்திருக்கும் அம்மலை அனேக [1] கவ்யூதிகள் அகலமுள்ளது. அப்பா! மிக்கவன்மையுள்ளயானையினால் அம்மலையில் வழியுண்டாக்கப்பட்டது. புத்ரனே! பதினறுகவ்யூதி உயரமுள்ள அம்மஹாபர்வதம் அந்தயானைபோவதனாலும் வருவதனாலும் தேய்ந்துபோய்விட்டது. அப்பா! அவ்வளவுஉயரமானமலை, தரைமட்டமானவழியாகச் செய்யப்பட்டது. அந்தயானை தண்ணீர்குடிப்பதற்காக அந்தவழியே சென்று யுத்தம்செய்யக்கருதுகிறது. அந்தமலைக்கப்பால் தாமரைமலர்நிரம்பின கனகம்என்றுபெயர்பெற்ற மடுவொன்றிருக்கிறது. அம்மடுவில் மிக்கபலமுள்ள ஓர் ஆமையிருக்கிறது. அந்தஆமை அனேக கவ்யூதி அகலமுள்ளது. அந்தஆமையும் யானையும் தேகஅளவிலும் மனவூக்கத்திலும் தேகவன்மையிலும் ஒன்றுக்கொன்று ஒப்பானவை. பூர்வஜன்மத்தில்அறிவில்லாமல் ஒருவரையொருவர் கொல்லக்கருதின மதுகைடவர்கள்தாம் இந்தயானையும் ஆமையுமாக மறுஜன்மம் எடுத்திருக்கின்றனர். அந்தயானை தண்ணீர்குடிப்பதற்காக அம்மடுவில் எப்போதுபோகிறதோ அப்போது மஹாபலசாலியான ஆமை கோபத்துடன் அதை எதிர்த்துச்செல்கிறது. நீரிலிருக்கும்ஆமையானது அடிக்கடி மூழ்கிக்கிளம்பி நகங்களாலும் பற்களாலும் அந்தயானையின் துதிக்கைநுனியைக் கிழிக்கிறது. சிறந்தயானையும் தாகித்துத் தண்ணீர்குடிக்கப்போய்க் கால்களாலும் துதிக்கைநுனியாலும் தந்தங்களினாலும் ஆமையைத்தடுக்கிறது. அந்தஆமையானது தண்

---

[1] கவ்யூதி = இரண்டுயோஜனையளவு; யோஜனை = இரண்டுமைல்.

ணீரைவிட்டுக் கரைக்குப்போகாமலே யானைக்கூட்டத்தலைவனை அந்தமஹாகஜத்தை நகங்களாலும் பற்களாலும் தடுக்கிறது. தண்ணீர்குடிக்கவந்தயானை அதனால் தடுக்கப்பட்டு ரக்தத்தினால் துதிக்கை நுனிநனைந்து ஈரமாகவே திரும்பவும்தன்வனத்திற்குச்செல்லுகிறது. புத்ரனே! உன்னால்முடியுமாயின் நீ போய் அவ்விரண்டும்சேர்ந்திருக்கும்போது தின்றுவிடு. பலசாலிகளான அவை தனித்துஜாக்ரதையாயிருக்கும்போது பிடிக்கமுடியாதவை' என்றுசொன்னார்.

## இருபத்தாறுவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(கருடர் யானையையும் ஆமையையும் தூக்கிச்சென்று ஒருமரக்கிளையில் உட்கார்ந்ததும், அதுமுறிய அதைத்தூக்கிச்சென்று கடற்கரையில்போட்டதும்.)

கருடர், 'பகவானே! அந்தயானையையும் ஆமையையும் ஒரே காலத்தில் நான் பிடிப்பதற்குஎப்படிக்கூடும்? அதற்கு உபாயத்தை நீர் சொல்லவேண்டும்?' என்றுகேட்க, கச்யபர், 'அந்தயானையானது யுத்தம்செய்யக்கருதிச் சற்றுநேரமிருக்கும்போது அந்தஆமையும் யுத்தம்செய்யவிரும்பித் தண்ணீரினின்று அடிக்கடி விரைவாக மேலே கிளம்பும். அப்பா! பக்ஷிராஜாவே! ஆமைவெளிக்கிளம்பியும் யானை அதன்மேல் கவனம்வைத்துமிருக்கையில் நீ பிடிக்கலாம். இதற்கு வேறுஉபாயம்இல்லை' என்று விடைகூறினார். அவரால் இவ்வாறு சொல்லப்பட்டகருடர் அந்தச்சிறந்தவனத்திற்குச்சென்று மேகம் போலும் மலைபோலுமிருக்கும் அந்தப்பெரியயானையைக் கண்டார். பாரதனே! அந்தயானை முன்சொன்ன அம்மலைவழியில் வந்தது. அதைக்கண்டவுடன் அம்மஹானுபாவரானகருடருக்கு மயிர்கள் சிலிர்த்தன. அரசனே! யானையையும் ஆமையையும் புசிக்கக்கருதினவரும் உக்ரரூபமுள்ளவரும் மஹாத்மாவுமானகருடருக்கு அப்போது மிகப்பெரியமகிழ்ச்சியுண்டாயிற்று. அப்போது மிக்கபலசாலியான அந்தக்கருடர், ச்ரமப்பட்டு அங்கத்தையெல்லாம் குறுக்கிக்கொண்டு மிக்கவேகத்துடன் அந்தயானையைப் பின்தொடர்ந்தார். அந்தப் பலசாலியும் பெருமூச்சுள்ளதுமானகஜராஜன், அவ்வாறு அந்தவழியைக் கடந்து களைத்ததினால் களைப்பைத்தீர்ப்பதற்காகப் பெருமூச்செறிக்

௩௩. அதன்மூச்சுக்காற்றினாலும் மதஜலத்தின்மணத்தினாலும் அவ வானையைத்தடுக்கும் பெரியஆமையானது மேலேகிளம்பிற்று. இந்த்ர னுக்கும் ப்ரஹ்லாதனுக்கும்நடந்ததுபோல அந்தப்பெரியஆமைக்கும் யானைக்கும்நடந்த கடும்சண்டையைப் பக்ஷிராஜர்பார்த்தார். பார்த்த னே! அந்தயானைக்கூட்டத்தரசு றனித்துதிக்கையினால் தண்ணீரைத் தொடும்போதே ஆதைப்பற்களாலும் நகங்களாலும் ஆமைதடுத்தது. அவ்வாறே யானையும் மூழ்கிக்கிளம்பும்ஆமையைக் கால்களாலும் துதிக்கையினாலும்தடுக்க அவ்விரண்டிற்கும் சற்றுநேரம் பயங்கரமான காட்சியுள்ளயுத்தம் நடந்தது. அரசனே! பிறகு, ஆமை அந்தஜலத்தி னின்று கரைக்குவந்தது. அந்தயானை தோற்கச்செய்யப்பட்டிருந்தும் தண்ணீரைவிரும்பியிருந்ததனால் திரும்பிப்போகவில்லை. தாகத்தினால் தண்ணீரைவிரும்பினயானை மெதுவாகப் பின்னே நகர்ந்தது. யுத்தத் தைவிட்டுப் பின்னேநகரும் அந்தயானையைக்கண்டு ஆமையானது இந்த்ரன் அஸுரனையெதிர்ப்பதுபோல மிகவிரைந்து எதிர்த்தோ டிற்று. கோபத்துடன்கரையேறின அந்தஆமை (தண்ணீரை) அடை யாத அந்தயானை இரண்டையும் கருடர் சேர்த்துப்பிடித்தார். பலவா னான அவர் அந்தச்சிறந்தயானையை இடக்காலினாலும் துடிக்கும் ஆமையை வலக்காலினாலும்பிடித்தார். சிறந்தஸர்ப்பங்களைக்கொல்லு கிறவரும் தோல்வியடையாதவருமாகியகருடர் சிறகுகளினால் மேலுல கத்தையும் இடைவெளியையும் (மறைத்துக்கொண்டு) அங்கிருந்து விரைந்துகிளம்பினார். கருடர்விரைவாகப்பறக்கும்போது வஜ்ராயுதத் தினால் செய்யப்பட்டவைபோன்ற மிகக்கூர்மையான அவருடைய நகங்களினால் உறுதியாகப்பிடிக்கப்பட்ட அவ்விரண்டும் உடனே உயி ரைவிட்டன. பலவானாகிய கருடர், கால்களும் கழுத்துக்களும் தளர் ந்துபோன அவ்விரண்டினையும் பிடித்துக்கொண்டு கூத்தாடுகிறவர் போல ஆகாயத்தில் விளையாடிக்கொண்டு விரைவாகச்சென்றார். அர சனே! அதன்பிறகு அவற்றைத்தின்னக்கருதின அந்தவீரர், பூமியில் இடம்பார்த்தும் தாம்உட்காருவதற்குப்போதுமானமரம் ஒன்றையும் பார்க்கவில்லை. அரசர்க்கரசனே! பிறகு, சிறந்தபராக்ரமமுள்ளகருடர் தேவர்களின்வனமாகிய நைமிசாரண்யத்தைச்சார்ந்துசிறுகிளைகளாலும் பெருங்கிளைகளாலும் மறைக்கப்பட்டதும் இரண்டுயோஜனை உயர முள்ளதும் நாற்புறத்திலும் காணூறுமுழம்பரவியஅடியுள்ளதும் இமய மலைச்சிகரம்போன்றதுமான ஒருமரத்தைக்கண்டார். அம்மரத்தின்ஒரு கிளை அடியும்லைந்தியும்உறுதியானதும்வஜ்ராயுதம்போன்றஇலைகள்நிறை ந்ததும் ஐந்துயோஜனைநீளமுள்ளதுமாயிருந்தது. வைநதேயர், அவ்

விரண்டையும்பிடித்துக்கொண்டு உண்பதற்காக அந்தக்கிளையில் வேகமாக உட்கார்ந்தார். அவருடையவேகத்தினால் அந்தக்கிளை விழுந்தது. அரசனே! அதுவிழுவதையும் அதன்கீழே வஸுக்களும் வைகானஸர்கள்என்னும்யதிகளும் வாலகில்யர்களும் இன்னும்அநேக ரிஷிகளும் கூட்டமாக யாகம்செய்துகொண்டிருப்பதையும் கண்டார். பாரதனே! அவ்விடத்தில் அந்தயதிகள் தேவர்களோடு (வஸுக்களோடு) உட்கார்ந்திருப்பதைப்பார்த்தபிறகு பக்ஷிராஜருக்குப் பயமுண்டாயிற்று. அந்தப்பக்ஷிராஜர் அந்தக்கிளையை மூக்கினாலும் அந்த ஆமையையும் யானையையும் கால்களினாலும் பிடித்துக்கொண்டே கிளம்பி விளையாடுகிறவர்போல ஆகாசத்திற்சென்றார். பெரியபாரங்களைத்தூக்கிக்கொண்டுகிளம்பின அந்தப்பக்ஷியைப்பார்த்து, 'வீரனும் தர்மத்திலெண்ணமுள்ளவனுமாகிய இந்தப்பக்ஷிராஜன் பெரியபாரங்களைஎடுத்துக்கொண்டு விளையாடுகிறவன்போல ஆகாயத்தில் செல்லுகிறான். இவனைப்போலச்செய்ய யாருக்கும் இயலாது. [1]குருவான பாரத்தைவஹிப்பதனால் இவனுக்கு, 'கருடன்' என்றுபெயரிருக்கட்டும்' என்று அந்தரிஷிகள்எல்லோரும் கூறினர். அந்தக்காரணத்தினாலேயே வஸுக்களும் தேவர்களும்கூடப் பக்ஷிராஜருக்கு, 'கருடன்' என்றேபெயரிட்டனர். அந்தப்பக்ஷி பூமியெல்லாம்திரிந்து ஆங்காங்கு ஓடி மரத்தின்கிளையைப் போடக்கருதியும் ஓரிடத்தையும்காணவில்லை. ஒருதேவதூதன் மேலிருந்து, 'கருடா!' என்றழைத்து, 'விநதாபுத்ரனே! மிக்கபலசாலியே! ஸமுத்ரக்கரையில் குலிந்தரென்னும் ஒருஜாதியாரின்மேல் இந்தமரக்கிளை போடத்தக்கது. அவர்கள் தர்மத்திலெண்ணமில்லாதவர்கள்' என்று தெளிவாகப்பேசின அசரீரவாக்கைக் கேட்டார். அதைக்கேட்டு, கருடர் உடனே பாவத்தொழில்உள்ளவர்களும் அறிவீனர்களுமான அந்தக்குலிந்தர்களின் இருப்பிடமாகிய கடற்கரைக்குச் சென்றார். அந்தப்பக்ஷிஸ்ரேஷ்டர் அந்த இடத்தைச்சேர்ந்து அங்கே கிளையைப் போட்டார். அரசனே! அப்போது அந்தக்கிளையினால் இருபத்தாறுதேசங்கள் அழிக்கப்பட்டன. அரசருட்சிறந்தவனே! சிறந்தசக்தியுள்ளகுலிந்தர்களின் இருப்பிடமும் மிக்கபயங்கரமுமான அந்தத்தேசம் இப்போது, [2]'சாகாபதகம்' என்று பெயர்பெற்றிருக்கிறது.

[1] பெரிய. [2] பக்ஷி கிளைபோட்ட இடம்.

## இருபத்தேழாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(கருடர் அம்ருதம்கொணர்தற்காக ஸ்வர்க்கஞ்சென்றது.)

நியமமுள்ளபக்ஷிராஜர் அந்தக்குவிந்தர்களின்தேசத்தைஅழித்த பிறகு ஸந்தோஷத்துடன் மலைச்சிகரத்தில்உட்கார்ந்து அந்தயானை ஆமைஇரண்டையும் பக்ஷித்தார். பகைவரைவாட்டுபவனே! அவற் றின்ரக்தத்தையும் கொழுப்பையும்குடித்து ஒப்பற்றவன்மையையும் உத்ஸாஹத்தையும்அடைந்த பக்ஷிஸ்ரேஷ்டரானகருடர் இந்த்ரலோகத் திற்குச்சென்றார். அம்ருதத்தை ரக்ஷிப்பதற்காக இரவும்பகலும் பொறிகளுடன்ஜ்வலிக்கின்ற அக்னிபகவானைப்பார்த்து நமஸ்காரம் செய்தபிறகு பக்ஷிராஜருக்கு மிக்கபயம் உண்டாயிற்று. ஜலத்திற் கும் காவற்காரர்களுக்கும் அவர் பயப்படவில்லை. தாம்பக்ஷியாயிருப் பதையும் அக்னிஜ்வலிப்பதையும்கண்டு பயந்தார். பிறகு, அந்தக் கருடர் ப்ரம்மதேவரிடம்சென்று அவரைக் கண்டார். [1] பக்ஷிராஜ ரானகருடர், மஹாத்மாவானப்ரம்மதேவருக்குவந்தனம்செய்து கை கூப்பித் தெளிவாகத் தாம்நினைத்ததைச் சொல்லலானார். 'பகவானே! நான் என்தாயை அடிமைத்தன்மையிலிருந்துவிடுவிப்பதற்காகப் பெ ரியகார்யத்தில் ஆரம்பமுள்ளவனென்றும் தர்மத்தில் நிச்சயமுள்ளவ னென்றும் குற்றமற்றவனென்றும் அறியும். ஈஸ்வரரே! நான் கத் ருவினிடத்திற்கு அம்ருதம்கொண்டுபோகவேண்டும். தேவரே! அப் போதுதான் என்தாய் அடிமைத்தனத்தினின்று விடப்படுவாள். ஈஸ் வரரே! தேவலோகத்தில் அக்னிபகவான் இந்த்ரனுடையகட்டளையி னால் எப்போதும் ஜ்வலித்துக்கொண்டு அம்ருதத்தைக் காப்பாற்று கிறான். தேவஸ்ரேஷ்டர்களுக்குமீஸ்வரரே! ப்ரபுவே! அக்னிஜ்வ லிப்பதையும் நான்பக்ஷியாயிருப்பதையும்கண்டு எனக்கு அதிகபய முண்டாகிவிட்டது. நான்அக்னியைத்தாண்டுவதற்கு எப்படிமுடி யும்? வரமளிக்கும்ப்ரபுவே! அதற்கு உபாயம்சொல்ல நீரே ஸமர்த் தர்' என்றார். பெரும்பாக்யமுள்ளதர்மராஜனே! அவ்வாறுவருத் தப்படும் அந்தக்கருடரைப்பார்த்து ப்ரம்மதேவர் பலமுறைநகைத் துக்கொண்டு அக்னியைத்தணிக்க உபாயம்சொல்லலானார். 'குழந் தாய்! ப்ராணிகளின்சரீரத்திலிருக்கும்அக்னிகூடப்.பாலினாலும் நெய்

[1] 'பன்னகேச்வரः' என்பது 'பதகேச்வரः' என்றிருத்தல் வேண்டும்.

யினாலும் அடங்குகிறது. பூமியில்ஜ்வலிக்கும் அக்னியைப்பற்றிச் சொல்லவேண்டுமா? நீ வெண்ணெயையாவது பாலையாவது அக்னியில் பொழி. பிறகு, விருப்பப்படி செல்லலாம். உன்னை அக்னி தகிக்காது' என்றார்.

---

## இருபத்தெட்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(கருடர் வஜ்ராயுதத்தைக் கௌரவிப்பதற்காக ஒற்றையிறகை விட்டது.)

பறவைகளுக்கரசரானகருடர் ப்ரம்மதேவர்சொல்லைக்கேட்டு வெண்ணெய்கொண்டுவருவதற்காக ஓர் இடைச்சேரிக்குச் சென்றார். அவ்விடத்தில் கடைந்துகுடத்தில்வைத்திருக்கும் வெண்ணெயைக் கண்டு உடனே அதைஎடுத்துக்கொண்டு அந்த அம்ருதம்பாதுகாக்கப்படும் இடத்துக்குச் சென்றார். மஹாபலசாலியான அந்தக்கருடர் அவ்விடத்தில் ஜலத்தைக்குறுக்காகத்தாண்டி அக்னியைக்கண்டு விலகி அதில் வெண்ணெயைப் போட்டார். ஜ்வாலைகளோடுகூடியிருந்த அந்த அக்னி வெண்ணெயினால் த்ருப்திசெய்விக்கப்பட்டு வேகமடங்கி எரியாமல் புகையைமட்டும்விட்டது. கருடர், மனமகிழ்ச்சியுடன் அந்தஅக்னியை விரைவாகக்கடந்து சிறகுக்காற்றினாலேயே ராக்ஷஸர்களைத்தள்ளித் தாண்டிவிட்டார். கருடர்சிறகுக்காற்றினால் அடிக்கப்பட்டஅவ்வரக்கர்கள் ஆயுதங்களையும் கேடகங்களையும் போட்டுவிட்டுத் தலைகளும் முழங்கால்களும் கீழேபடவிழுந்தனர். மேற்கிளம்பிச் சுற்றியிருக்கும்நாகங்களைக்கொன்று ஆர்களின்சந்தினால் சக்ரத்தையும்தாண்டித் தலையினால்வலையைக்கிழித்துக்கொண்டு ஓடினார். வேகத்தில் வஜ்ராயுதத்துக்கு ஒப்பானகருடர் வலையைத் தலையால் கிழித்தவுடன், அம்ருதத்தை விரைவாகத் தூக்கிக்கொண்டார். அம்ருதத்தை எடுத்துக்கொண்டகருடர் காற்றைப்போல விரைந்தோடினார். பிறகு, இந்த்ரன் தேவர்களுடன்கூட யுத்தஸந்நாஹம் செய்தான். அதன்பிறகு, மாதலியென்னும்ஸாரதியினால் பொன்மாலைபூண்ட ஹரிகளென்னும்குதிரைகள்பூட்டப்பட்டதும் ஸூர்யனுக்கும் அக்னிக்கும்ஒப்பான ஒளியுள்ளதுமாகிய தேரில் விரைவாக ஏறினான். வ்ருத்ராஸுரனையும், பாகாஸுரனையும் வதம்செய்தவனும் வஜ்ராயுதம்தரித்தவனும் மிக்கபலசாலியுமானஇந்த்ரன் கூரானவஜ்ராயுதத்தைஓங்கிக்கொண்டு கருடரை எதிர்த்துச்சென்றான். அரசனே! அப்படியே கருடரும் வஜ்ரபாணியானஇந்த்ரனை எதிர்த்துச்சென்றார். அப்

போது இந்த்ரன் மாதலியைப்பார்த்து, 'குதிரைகளை வேகமாக நடத்து' என்றுசொன்னான். உக்ரமானவேகமும் பராக்ரமமுமுள்ள இந்த்ரன் மிக்கபயங்கரமான சிறந்தவஜ்ராயுதத்தைக் கருடர்மேல் எறிந்தான். தேவேந்திரன் வஜ்ராயுதத்தை விடத்தொடங்குவதைத் தெரிந்துகொண்ட பக்ஷிராஜாவானகருடர் மிக்கவேகமாகச்சென்றார். ப்ரம்மாவினிடம்[1]வரம்பெற்ற சிறந்தஆயுதமென்றறிந்து கருடர் இந்த்ரனைநோக்கி, 'வ்ருத்ராஸுரனைக்கொன்றவனே! இந்த உன்வஜ்ராயுதம் ப்ரம்மாவினுடைய[2] வரம்பெற்றது. அதனால், அதை வெகுமானிக்கக்கருதி ஒற்றையிறகை விடுகிறேன். வ்ருத்ரனைக்கொன்றவனே! உனக்குச்சக்தியிருக்குமானால் உன்னுடையமுழுபலத்தையுங்காட்டி இந்தச்சிறந்த ஆயுதத்தினால் என்னை அடிப்பாயாக. நான் ஒருதீங்குமில்லாமற்செல்கிறேன்' என்றுசொன்னார். பாரத! உடனே இந்த்ரன் தன்முழுபலத்துடனும் வஜ்ராயுதத்தை மிக்கவேகமாகப் போட்டான். அது கருடரை அதிகமாகத் தாபப்படுத்தவில்லை. அரசனே! பிறகு, ஆகாயமார்க்கமாகஸஞ்சரிக்கும்தேவரிஷிகள் அந்த வஜ்ராயுதம் பக்ஷியின் சிறகில் ஒட்டிக்கொண்டிருக்கக்கண்டு, 'இந்தக்கருடனென்னும் பக்ஷிதான்[3] ஸுபர்ணன். ஏனெனில், வ்ருத்ராஸுரனைக்கொன்ற தேவேந்த்ரனது என்றுமழியாத சிறந்தஆயுதம் இவனதுசிறகில் ஒட்டிக்கொண்டதே' என்னும்வசனத்தைக் கூறினர். பராக்ரமசாலியான கருடர்என்னும்பக்ஷி, ஸுபர்ணரானது இவ்விதமாகும். அவரை அக்னியென்றும் விஷ்ணுவென்றும் வேதங்களினால் மிகத்துதிக்கப்பட்டவரென்றும் புண்யங்களின் பலன்களைத்தருகிறவரென்றும் ரிஷிகள் அறிகின்றனர். அப்போது மயில்கள், ஸுபர்ணருடைய சிறியஇறகுகளை எடுத்துக்கொண்டன. அந்தமயில்களெல்லாம் கர்வமடைந்து இந்த்ரனை எதிர்த்தோடின.

---

## இருபத்தோன்பதாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(கருடர் அம்ருதங்கொணர்ந்ததும், விநதை அடிமைநீங்கியதும் கருடர் திரும்பவும் அம்ருதத்தை இந்த்ரனிடம் கொடுத்ததும்.)

ஆயுதங்களில்சிறந்த வஜ்ராயுதம் ஒட்டிக்கொண்டதையும் ரிஷிகள் துதிப்பதையும் கண்டவுடன் தேவேந்த்ரன், கருடரைப்பார்த்து, 'ஸுபர்ணனே! உன்னுடையமஹிமையை நான் அறியவில்லை. அத

---

[1] 'லப்தவரஃ' என்பது 'லப்தவரம்' என்றிருத்தல்வேண்டும்.
[2] 'வரோலப்தஃ' என்பது 'வரலப்தஃ' என்றிருத்தல்வேண்டும்.
[3] சிறந்தசிறகுகளை உடையவன்.

ஞல், யுத்தம்செய்தேன். இதைவிட வேறுவிதமாக நான் அம்ருதத்தை ரக்ஷிக்கமுடியாது. இந்தவஜ்ராயுதம் என்னுடன்கூடவே யாதொருபயனுமில்லாமல் போனபடி திரும்பிற்று' என்றுசொன்னுன். பாரதனே! இவ்வாறுசொல்லி இந்த்ரன் திரும்பிப்போனபிறகு, கருடர் அம்ருதத்தை எடுத்துக்கொண்டு விரைவாகக் கத்ருவினிடம்சென்று, 'அந்த அம்ருதத்தை என்தாய்க்காக நான் விரைந்து கொண்டுவந்தேன். தர்மத்திலிருப்பவளாகிய அந்தவிநதை இனி அடிமையாயில்லாதிருக்கவேண்டும்' என்றுசொன்னுர். கத்ரு, 'விநதையின்புதல்வனே! உனக்கு நல்வரவு. நீ அம்ருதம்கொண்டுவந்தது நன்று. 'புத்ரனே! சிறந்தவளாகிய உன்தாய் இனி அடிமையாயிராமல் ஸ்வதந்த்ரையாயினுள்' என்றுசொன்னுள். அவள் இவ்வாறுசொன்னபிறகு அந்த விநதையும் தன்வீடுசேர்ந்தாள். பலவான்களிற்சிறந்தவராகிய கருடர், நியாயப்படி (அம்ருதத்தைக்) கொண்டுவந்தபிறகு, தம்தாயை மோசமாகஜ்யித்ததைநினைத்தும் அந்தக்குதிரைக்குக் கறுத்தவால்மயிர்களாயிருந்தநாகங்களைக் கொல்வதைப்பற்றி நிச்சயம்செய்தும் கத்ருவைப்பார்த்து, 'நீ வஞ்சகமாகத்தானே ஜயித்தாய். ஆதலால், அந்யாயம்' என்றுசொல்லி, உடனே அம்ருதத்தை எடுத்துக்கொண்டு வேகமாக ஆகாயத்தில் கிளம்பினுர். தோல்விஅடையாதகருடர் அம்ருதத்தைஎடுத்து விரைவாகச்செல்லக்கண்டு நாகமாதாவான கத்ருவானவள் 'வைநதேயனே! கெட்டபுத்தியுள்ளவனே! உத்தமமான அம்ருதத்தைக்கொண்டுவந்து ஏன் திருப்பிக்கொண்டுபோகிறுய்? ஒருக்காலும் பாபம்செய்யாதே' என்றுசொன்னுள். அதற்கு, கருடர், 'என்தாய்க்காக நீ அம்ருதம்கொண்டுவாவென்று கட்டளையிட்டதுபற்றி நான் இப்போது அம்ருதம்கொண்டுவந்தேன். விரைவாக அம்ருதமும் கொண்டுவரப்பட்டது. என்தாயும் விடப்பட்டாள். எங்கிருந்து இதைக் கொண்டுவந்தேனே அவ்விடத்திற்கே நான் மறுபடியும் கொண்டுபோகிறேன்; 'அம்ருதத்தை எனக்குக் கொடு' என்று நீசொல்லியிருந்தால் அப்படிச் செய்திருப்பேன்; செய்யாமலுமிருப்பேன். ஏனெனில், நீ அம்ருதத்துக்குத் தகாதவள்; நான் தர்மத்தோடும் ஸத்யத்தோடும் விநதையை மீட்டுக்கொண்டேன்' என்றுசொன்னுர். உடனே கருடர் அங்கிருந்துசென்று, புரந்தரனைநோக்கி, 'வ்ருத்ரசத்ருவே! உனது இந்தஉத்தமமான அம்ருதம் என்தாய்க்காக என்னுல் கொண்டுபோகப்பட்டது; கொண்டுபோனபடியே திரும்பியும் கொண்டுவரப்பட்டது. இதை வாங்கிக்கொள். தேவராஜனே! நாகமாதாவுக்கு அடிமைத்தொழில் செய்துகொண்டிருந்த என்தாய் இந்த அம்

ருதம்கண்டதினாலேயே விடப்பட்டாள்' என்று சொன்னார். ஆயிரம் கண்களையுடையதேவேந்த்ரன் இதைக்கேட்டு ஸந்தோஷமடைந்து கருடரைவெகுமதித்து, 'நல்லகார்யம், நல்ல கார்யம்' என்றுசொன்னான். இந்திரனிடம்காத்திருக்கும் ரிஷிகளும் தேவர்களனைவரும் விஸ்வேதேவர்களும் ஸந்தோஷம் அடைந்தனர். பரதச்ரேஷ்டனே! பிறகு, ரிஷிகள்தேவர்கள்எல்லாரும் மகிழ்ச்சியடைந்து இந்த்ரனைப் பார்த்து, 'கருடன் இங்கே வரம்பெறவேண்டும்' என்றுகூறினர். பிறகு, இந்த்ரன், 'இந்தப்பக்ஷிராஜனைகருடன் தானே வஸுதேவருடையக்ருஹத்தில் ஐம்புலன்களையும்நடத்தும் காமன்ரக்கண்ணனை க்ருஷ்ணனைக் தர்மரக்ஷணம்செய்வதற்காகத் தன்னுருபாகத்தினால் அவதரிக்கப்போகிறான்' என்றுசொன்னான் பாண்டவஸ்ரேஷ்டனே! பக்ஷிராஜாவும் வைநதேயரும் ஸுபர்ணருமாயிருக்கும் கருடரைப் பற்றி உனக்குச் சொன்னேன். உனக்கு நன்மையுண்டாகக்கடவது. பரதஸ்ரேஷ்டனே! இந்தக்கருடருடையசரித்ரம் சொல்லப்பட்டது. சிறந்தகைகளையுடையவனே! இன்னும் உனக்கு என்னசொல்வேன்?" என்றுசொன்னார்.

---

## முப்பதாவது அத்யாயம்.

### தானகர்மபர்வம். (தொடர்ச்சி.)



(வாக்குக்கநந்தரேய்கதைக் கொடாதது ப்ராம்மணர்பொருளைப் புஜித்தது பகிய நரிகுரங்குகளின் கதை.)

யுதிஷ்டிரர் "போற்றிவுள்ளபிதாமஹரே! இவ்வுலகத்தில் ப்ராம்மணர்களுக்கு வாக்குத்தத்தம்செய்துவிட்டு லோபத்தினால் கொடாமலிருப்பவர்கள் எவ்வகையாகிறார்கள்? தர்மம்செய்பவரிற் சிறந்தவரே! சொன்னபடிகொடாமலிருக்கும் துராத்மாக்களான மனிதர்களின் தர்மத்தைப்பற்றி எனக்குத் தெளிவாகச் சொல்லக்கடவீர்' என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"சிறிதானாலும் பெரிதானாலும் கொடுப்பதாகவாக்குத்தத்தம் செய்ததைக் கொடாமற்போகிறவன் எவனோ அவனுடையஎல்லா எண்ணங்களும் நபும்ஸகனது விவாஹம்போலப் பயனற்றவையாகும். பரதஸ்ரேஷ்டனே! அந்தப்பாவியானவன் என்றைத்தினம் பிறக்கிறானோ, என்றைத்தினம் இறக்கிறானோ அவற்றினிடையில் அவன் செய்தஹோமம் தானம் தவம் ஆகியபுண்யங்கள் அனைத்தும் கெடுமென்று தர்மசாஸ்த்ரங்கள்தெரிந்தவர்கள் சொல்லுகின்றனர். பரதஸ்

ரேஷ்டனே! தர்மசாஸ்த்ரம்தெரிந்தவர்கள் மிக்கமேக்கமுள்ளபுத்தி யினால் ஆராய்ந்து, 'கறுத்தகாதுள்ளகுதிரை ஆயிரத்தைத் தானம் செய்து இந்தப்பாவத்தினின்றும் விடுபடுகிறான்' என்றும் சொல்லு கின்றனர். பாரதனே! இந்தவிஷயத்தில் நரிக்கும் குரங்குக்கும் நடந்த ஸம்வாதமாகிய ஒருபழையசரிதரத்தையும் கூறுகின்றனர். வீரனே! அவ்விரண்டும் முந்தியமானிடஜன்மத்தில் நட்பாயிருந்து பிறகு நரியும் குரங்குமாகிய வேறுபிறப்பை அடைந்தன. ஆங்காங்கு கலந்துபேசுவதனால் அவற்றிற்கு முன்னர்போன்று ஸ்நேஹம்உண்டா யிற்று. பிறகு, மயானத்தின்நடுவில் பிணங்களைத்தின்றுகொண்டிருக் கும் நரியைக்கண்டு, முன்ஜன்மம்மறவாத குரங்கு, 'மயானத்தில் நாற்றமெடுத்த அருவருப்பானபிணங்களைத் தின்னுகிறாயே? நீ முன் னர் மிகக்கொடியபாபகார்யம் என்னசெய்தாயோ?' என்றுகேட்டது. இவ்வாறு கேட்கப்பட்டநரி, வானரத்தைப்பார்த்து, 'ஓ! குரங்கே! நான் ஒருப்ராம்மணனுக்கு வாக்குத்தத்தம்செய்ததைக் கொடுக்க வில்லை. அதனால், இந்த இழிவானபிறப்பில் பிறந்திருக்கிறேன். ஆத லால், பசித்தபோது இவ்வுணவை உண்ணுகிறேன்' என்றுசொல் லிற்று. அரசனே! திரும்பவும் நரி குரங்கைப்பார்த்து, 'நீ என்ன பாபகார்யம் செய்தாய்? எதனால் குரங்காகப்பிறந்தாய்?' என்று கேட்டது. அதற்கு, குரங்கும், 'ப்ராம்மணர்களுடைய கனிகளைத் தின்று குரங்கானேன். ஆதலால், தெரிந்தவன் ஒருபோதும் ப்ராம் மணன்பொருளை எடுக்கலாகாது; எல்லையைப்பற்றி விவாதம்வந்த போது ப்ராம்மணன்பொருளை விட்டுவிடவேண்டும்; வாக்குத்தத்தம் செய்ததைக் கொடுத்துவிடவேண்டும்' என்றுசொல்லிற்று. அர சனே! இந்தவிஷயம் தர்மந்தெரிந்த ஒருப்ராம்மணன் புண்யமான பழையகதையைச் சொல்லும்போது நான் கேட்டது. அரசனே! பாண்டவனே! ப்ராம்மணனைப்பற்றிய இந்தக்கதையை முன்னர் வ்யாஸர்சொல்லும்போது திரும்பவும்கேட்டேன். 'ப்ராம்மணர்களின் தனத்தைஎடுக்கலாகாது. அவர்கள்விஷயத்தில் எக்காலமும் பொறுத் தல் வேண்டும். சிறுவராயினும் வறிஞராயினும் அசக்தர்களாயினும் அவர்களை அவமதிக்கலாகாது. 'கொடுக்கிறேன்' என்றுசொன்ன தைக் கொடுக்கவேவேண்டும். ப்ராம்மணோத்தமனுக்கு ஆசையை உண்டாக்கலாகாது' என்பதுதான், எனக்கு ப்ராம்மணர்கள் எப் போதும் உபதேசிப்பது. அரசனே! முதலில் உண்டாக்கப்பட்ட [1] ஆசையினால் தூண்டப்பட்டப்ராம்மணனே ஸமித்துக்களில் ஜ்வலிக்

[1] பலன்கிடைக்குமென்ற எண்ணம்.

கும் அக்னிபோலாகிறானென்று சொல்லப்படுகிறது. அரசனே! ப்ராம்மணன் முதலில் ஆசையுண்டானதனால் கோபித்து எவனைப் பார்ப்பனோ அவனை விறகை அக்னி எரிப்பதுபோல் எரித்துவிடுவானல்லனோ? பாரதனே! அவனே ஸந்தோஷமடைந்து வாக்கினால் ஆசிர்வாதம் செய்வானாயின் அந்தராஜாவின்தேசத்திற்கு மருந்து போலாகிறான். ப்ராம்மணன் கோபியாமையானது வேண்டினவற்றையெல்லாம் அளிதது புத்ரர்களையும் பேரர்களையும் பசுக்களையும் சுற்றத்தாரையும மந்த்ரிகளையும் நகரத்தையும் தேசத்தையும் அபிவ்ருத்தி செய்யும். அரசனே! ஆயிரம்கிரணங்களையுடைய ஸூர்யனிடத்தில் ஒளிகாணப்படுவதுபோல இந்தச்சிறந்தமஹிமை பூமியில் ப்ராம்மணனிடத்தில் காணப்படுகிறது. பரதஸ்ரேஷ்டனே! யுதிஷ்டிரனே! ஆதலால், ஒருவன் நல்லஜன்மத்தை அடையவிரும்புவானாயின், 'கொடுக்கிறேன்' என்றுசொன்னதைக்கொடுக்கவேவேண்டும். ப்ராம்மணனுக்குக் கொடுப்பதனால் எல்லாவற்றிலும்மேலான ஸ்வர்க்கமானது முக்யமாக அடையக்கூடியதென்பது திண்ணம். தானமென்பது உயர்ந்த கார்யமன்றோ? இவ்வுலகத்தில் செய்யும்தானத்தினால் தேவர்களும் பித்ருக்களும் ஜீவிக்கின்றனர்; ஆதலால், தெரிந்தவன் ப்ராம்மணர்களுக்குத் தானங்களைச் செய்யவேண்டும். பரதஸ்ரேஷ்டனே! ப்ராம்மணன் முதன்மையான புண்யதீர்த்தமென்று சொல்லப்பெறுகிறான். எந்தஸமயத்திலும் ப்ராம்மணன் பூஜிக்கப்பெறாமல் செல்லலாகாது" என்றார்.

---

## முப்பத்தோராவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(தாழ்ந்தவருக்கு உபதேசிக்கலாகாதென்பதற்கு உதாரணமான ஒருரிஷி சூத்ரன் இவர்களின்கதை.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! ராஜரிஷியே! ஸ்நேஹிதனது ஸ்நேஹம்காரணமாகக் கீழ்க்குலத்தோனுக்கு உபதேசம்செய்கிறவனெவனோ அவனுக்குப் பாவம்உண்டாகுமா? உண்டாகாதா? இதைத் தெளிவாகச் சொல்லவேண்டுகிறேன். தர்மத்தின்வழி நுட்பமானது. அதில் மனிதர்கள் மயங்குகின்றனர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

க "அரசனே! இவ்விஷயத்தில் முன்னர் ரிஷிகள் நியாயங்களையும் சாஸ்த்ரங்களையும் அனுஸரித்துப்பேசிக்கொண்டிருந்ததை நான்கேட்

டபடியே முறையாகச் சொல்லப்போகிறேன். என்சொல்லைக் கேள். ஜாதியில்இழிவானவனுக்கு உபதேசம்செய்யக்கூடாது. அப்படி உபதேசிப்பதில் உபதேசிப்பவனுக்குப் பெரும்பாவம் சொல்லப்படுகிறது. இவ்வுலகத்தில் சூத்ரனுக்கு வேதத்தை ஓதுவிக்கவும் யாகம்செய்விக்கவும்கூடாது. பரதசிரேஷ்டனேயுதிஷ்டிரனே! அரசனே! உபதேசிக்கத்தகாதவனுக்கு உபதேசிக்கும்விஷயத்தில் முன்னர் அழகான இமயமலைச்சாரிவில பிராம்மணர்களின் ஆஸ்ரமத்தில்நடந்ததாகிய ஓர் உதாரணம் நான் சொல்லுகிறேன்; கேள். பரதசிரேஷ்டனே! அந்த இமயமலைச்சாரிவில் அனேகவிருக்ஷக்கூட்டங்களும் பலவிதச்செடிகளும் கொடிகளும்நிரம்பினதும் மிருகங்களாலும் பக்ஷிகளாலும் அடையப்பட்டதும் ஸித்தர்கள் சாரணர்களென்னும் தேவஜாதியர்களின் ஸங்கீதசப்தமுள்ளதும் அழகாகப்புஷ்பித்த காடுகளையுடையதும் அனேகம்ப்ரம்மசாரிகளாலும் தபஸ்விகளாலும் ஸூர்யனுக்கும் அக்னிக்கும்ஒப்பானவர்களும் நியமங்களையும் உபவாஸங்களையும் த்யானத்தையும்விடாதவர்களும் தீக்ஷையுள்ளவர்களும் ஆகாரத்தைக்கட்டினவர்களும் பரிசுத்தமனமுள்ளவர்களுமாகிய மஹானுபாவர்களான ப்ராம்மணர்களாலும் வாலகில்யர்களென்னும் அனேகம்ஸந்யாஸிகளாலும் வியாபிக்கப்பட்டதும் வேதகோஷங்கள் முழங்கிக்கொண்டிருப்பதும் பரிசுத்தமுமான ஓர்ஆஸ்ரமம் உண்டு. தயாளகுணம்பொருந்தினஒருசூத்ரன் விருப்பங்கொண்டு அந்தஆஸ்ரமத்திற்கு வந்தான்; ரிஷிகளால் கௌரவிக்கவும்பெற்றான். பாரதனே! தேவர்களைப்போன்றவர்களும் பலவகையானதீக்ஷையைவகிப்பவர்களும் சிறந்தமஹிமையுள்ளவர்களுமான அம்முனிவர்களைக்கண்டு மகிழ்ந்தான். பரதசிரேஷ்டனே! பிறகு, அவனுக்குத் தவம்செய்ய எண்ணமுண்டாயிற்று. பாரதனே! அவன், [1]குலபதியென்று சொல்லப்பட்டவரும் அந்தரிஷிக்கூட்டங்களுக்குத் தலைவருமான ஒருரிஷியின்பாதங்களைப்பிடித்துக்கொண்டு, 'ஓ! ப்ராம்மணோத்தமரே! உங்களனுக்ரஹம்பெற்றுத் தவம்செய்யக்கருதுகிறேன். அதற்காகவந்தஎனக்கு நீர் ஸந்யாஸம் கொடுக்கக்கடவீர். ஸாதுக்களிற்சிறந்தபகவானே! நான் ஜாதியில் சூத்ரன்; தாழ்ந்தவர்ணத்தான்; உங்களுக்குப்பணிவிடைசெய்யவிரும்புகிறேன். சரணமடைந்த என்விஷயத்தில் தயைசெய்யக்கடவீர்' என்றுகூறினான். அந்தக்குலபதியானவர், 'சூத்ரன் ஸந்யாஸிவேஷத்தைஎடுத்து இங்கேஇருக்கமுடியாது. சுசுரூஷையில் ஊக்கமுள்ளவனாயிரு. அதற்குஎண்ணமிருந்தால் இருக்கலாம். சுசுரூஷையினு

[1] ஆதிபர்வம் 2-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

லேயே மேலானலோகங்களையடைவாய். ஐயமில்லை' என்றுசொன்ஞர். அரசனே! அந்தரிஷியினுல் இவ்வாறுசொல்லப்பட்ட அந்தச் சூத்ரன், 'இதற்கு நான் என்னசெய்யலாம்? எனக்குத் தவம்செய்யத்தான் விருப்பமிருக்கிறது. ஆ! ஆ! தெரிந்தது. இப்படியே இருக்கட்டும். எனதுவிருப்பத்தை நானே செய்துகொள்வேன்' என்றுநினைத்தான். அவன் அந்தஆஸ்ரமத்திற்குத்தூரத்தில்சென்று ஒருகுடிசைகட்டிக்கொண்டான். பரதஸிரேஷ்டனே! அந்தக்குடிசையில் திண்ணையையும் ஸமபூமிகளையும் தேவதாக்ருஹங்களையும்அமைத்துத் தவம்செய்துகொண்டு ரிஷியானுன். ஸ்நானம்பண்ணி நித்யகர்மமுடித்துப் [1]பூதபலிகொடுத்து ஹோமத்தைச்செய்து தேவதார்ச்சனக்ருஹத்தில் தேவதையையும் பூஜித்தான். நிச்சயித்தநியமந்தவருமல் கனிகளைப்புஜித்துக்கொண்டு புலன்களை அடக்கித் தனக்குக்கிடைத்த காய்கனிகளால் வந்தவிருந்தினர்களையும் முறைப்படி எக்காலமும்பூஜித்தான். அவனுக்கு இவ்வாறு மிகநீண்டகாலம்சென்றது. பிறகு, அவனுடையஅந்தஆஸ்ரமத்திற்கு ஒருரிஷியானவர் தற்செயலாய்வந்தார். (அவன்) அவரை நல்வரவுவிசாரித்து விதிப்படி பூஜைசெய்து இனியஸம்பாஷணைகள்ஸம்பாஷித்து வந்தகார்யத்தைவிசாரித்துத் திருப்திசெய்வித்தான். பரதஸிரேஷ்டனே! வேந்தனே! சிறந்தப்ராம்மதேஜஸுள்ளவரும் தர்மத்தில்மனமுள்ளவரும் தவத்தில் உறுதியுள்ளவருமாகிய அந்தரிஷி அந்தச்சூத்ரனைப்பார்ப்பதற்கு அவனுஸ்ரமத்திற்கு இப்படியே அனேகம்தரம்போனுர். பரதஸிரேஷ்டனே! பிறகு, அந்தச்சூத்ரன், அம்முனிவரைப்பார்த்து, 'பித்ருக்களுக்கு ஸ்ராத்தம் செய்யப்போகிறேன். அவ்விஷயத்தில் நீர் எனக்கு அனுக்ரஹம் செய்யக்கடவீர்' என்றுகேட்டான். பரதஸிரேஷ்டனே! அவனுக்கு அம்முனிவர், 'ஆகட்டும்' என்றே விடைகூறினர். அந்தச்சூத்ரன் ஸ்நானம்செய்து, அம்முனிவர்பாதத்துக்கு ஜலம்கொண்டுவந்தான். பரதஸிரேஷ்டனே! பிறகு, காட்டிலுள்ளதர்ப்பங்களையும் காய்முதலியவற்றையும் பரிசுத்தமானபீடத்தையும் தர்ப்பாஸனத்தையும் கொண்டுவந்தான். பிறகு, அம்முனிவர், அந்தச்சூத்ரன் தெற்குமுகமாகத்திரும்பிக்கொண்டு தர்ப்பாஸனத்தை மேற்கேதலையாகப் போட்டது முறைத்தவறென்பதைக்கண்டறிந்து, 'இந்தஆஸனத்தைக் கிழக்குத்தலையாகப் போடு. நீயும் வடக்குமுகமாகஇருப்பதுதான் சுத்தம்' என்று அவனுக்குச் சொன்ஞர். சிறந்தபுத்தியுள்ள அந்தச்சூத்ரன் அந்தரிஷியினுல்சொல்லப்பட்ட தர்ப்பம் அர்க்யமுதலானவற்றை

---

[1] பிராணிகளுக்கன்னம்போடுவது.

யெல்லாம் அவர்விதித்தபடி ஸரியாகச் செய்தான். அவன் தர்மமார்க் கத்திலேயேயிருந்துகொண்டு சிராத்தகார்யங்கள் நடத்தும்போதெல் லாம் [1] ஹவ்யகவ்யங்களின்விதிகளனைத்தையும் அம்முனிவர் சொன் னார். அம்முனிவர் அவனுடையபித்ருகார்யம் முடிந்தபின் அவனால் அனுப்பப்பட்டுத் திரும்பிச்சென்றார். வனத்தில் தவம்செய்துகொண் டிருந்த அந்தச்சூத்ரமுனிவன் நீண்டகாலத்துக்குப்பிறகு இறந்தான். அந்தப்புண்யத்தினால் அவன் ஒருமஹாராஜாவின்குலத்தில் சிறந்த பராக்ரமமுள்ளவனாகப் பிறந்தான். அப்பா! அந்தரிஷியும் அப்படியே மரணமடைந்தார். அந்தப்ராம்மணர், அவனுக்குட்பட்ட புரோ ஹிதகுலத்தில் பிறந்தார். இவ்வாறு ஒரேகாலத்தில் அவ்விரண்டு குலங்களிலும்பிறந்த அந்தச்சூத்ரன்ரிஷிஇருவரும் காலக்ரமத்தினால் வளர்ந்து கலவிகளில் தேர்ந்தவராயினர். ரிஷியானவர் அதர்வண வேதத்திலும் மற்றுமவேதங்களிலும் மிகத்தேர்ச்சியடைந்தார்; கல்ப ஸூத்ரங்களின்படி யாகமுதலான கிரியைகள்செய்வதிலும் சோதிட சாஸ்த்ரத்திலும் மேன்மையை அடைந்தார். தத்வசாஸ்த்ரத்திலும் அவருக்கு மிக்கவிருப்பம் விருத்தியாயிற்று. அந்தராஜபுத்ரன் அவ னது தந்தைபிறந்தபிறகு மந்திரிகளால் ராஜாவுக்குரியசடங்குகள் செய்விக்கப்பட்டு ராஜாவாகப் பட்டாபிஷேகம்செய்யப்பட்டான். ராஜ்யபட்டாபிஷேகம்செய்யப்பட்ட அரசனால் அந்தரிஷி புரோஹித ராக [2] அபிஷேகம்செய்யப்பட்டார். பரதசிரேஷ்டனே! அவ்வரசன் அவரைப் புரோஹிதராகவைத்துக்கொண்டு ஸுகமாகவிருந்தான்; ப்ரஜைகளைக்காப்பாற்றிக்கொண்டு தர்மமாக ராஜ்யத்தைஆண்டான். புண்யாஹவாசனமும் யாகமுதலானதர்மகார்யங்களும் நடக்கும்போ தெல்லாம் அரசன் புரோஹிதரைப்பார்த்துப் புன்னகையாகவும் வெளிப்படையாகவும் பலமுறைசிரித்தான். தர்மராஜனே! இவ்வாறு அனேககாலங்களில் புரோஹிதரைப்பார்த்து நகைத்தான். அவ்வர சன் பலமுறைநகைப்பதையும் எப்போதும் புன்சிரிப்போடிருப்பதை யும்கண்டு அந்தப்புரோஹிதர் கோபமுற்றார். பிறகு, யாருமில்லாத போது அந்தப்புரோஹிதர் அரசனிடம்போய் இனியஸம்பாஷணை களினால் அரசனை ஸந்தோஷப்படுத்தினார். பரதசிரேஷ்டனே! அப் போது அந்தப்புரோஹிதர் அரசனைநோக்கி, 'ஓ! சிறந்தபராக்ரம சாலியே! நீ எனக்கு ஒருவரம்தர நான் விரும்புகிறேன்' என்று கேட்டார். அதைக்கேட்டஅரசன், 'ப்ராம்மணோத்தமரே! ஒருவா

[1] தேவர்க்கும் பித்ருக்களுக்கும் உரிய அன்னம்.

[2] நியமிக்கப்பட்டார்.

மென்ன? நூறுவரங்களை உமக்குக் கொடுப்பேன். உம்மிடத்திலிருக்கும்நேசத்தினாலும் கௌரவத்தினாலும் உமக்குக்கொடுக்கத்தகாதது எனக்கு ஒன்றுமில்லை' என்றுசொன்னான். அதற்குப்புரோஹிதர், 'அரசனே! நான் ஒருவரம்தான் கேட்கிறேன். உனக்கு என்னிடத்தில் அன்பிருக்குமாயின் நீ அதை உடனே வாக்குத்தத்தம்செய்; ஸத்யம்சொல்; பொய்சொல்லாதே' என்றுசொன்னார். யுதிஷ்டிர! அரசன், 'அப்படியே ஆகட்டும்; தெரிந்தால் சொல்வேன். அறியாமல் சொல்லமாட்டேன்' என்று அவருக்கு மறுமொழிசொன்னான். பிறகு, புரோஹிதர், 'புண்ணியாஹவாசனமும் யாகமுதலானகிரியைகளும் தோஷசாந்திக்காகச்செய்யும் ஹோமங்களும் நடக்கும்போதெல்லாம் நீ என்னைப்பார்த்து ஏன் நகைத்துக்கொண்டேயிருக்கிறாய்? நீசிரிப்பதனால் என்மனம் வெட்கப்படுகிறது. அரசனே! உன்ஸத்யத்தின்மேல் ஆணைவைத்திருக்கிறேன். நீ உண்மையல்லாததைச் சொல்லலாகாது. இதற்குக் காரணமிருக்கவேண்டும். நிஷ்காரணமாக உனக்குச் சிரிப்புவாராது. எனக்குத் தெரிந்துகொள்வதில் ஆவல் மிகஅதிகமிருக்கிறது. எனக்கு உண்மையைச்சொல்' என்றுகேட்க, அரசனானவன், 'பிராம்மணரே! நீர் இவ்வாறு கேட்டபிறகு, சொல்லத்தகாததாயிருப்பினும் அதை அவசியம் சொல்லத்தான்வேண்டும். அந்தணரே! ஒரேமனத்துடன் கேளும். ப்ராம்மணோத்தமரே! பூர்வஜன்மத்தில்நடந்ததைத் தெரிந்துகொள்ளும். ப்ராம்மணரே! எனக்குப் பூர்வஜன்மம் ஞாபகமிருக்கிறது. ஊக்கத்துடன் என்சொல்லைக் கேளும். நான் முன்ஜன்மத்தில் சூத்ரனாகப் பிறந்து தவம்செய்யநிச்சயமுள்ளவனாயிருந்தேன். ப்ராம்மணோத்தமரே! நீரும் அப்போது உக்ரமானதவமுள்ளரிஷியாயிருந்தீர். குற்றமற்ற ப்ராம்மணரே! ரிஷிசிரேஷ்டரே! அப்போது நீர் என்மேல் அன்புகூர்ந்து என்னை அனுக்ரஹிப்பதில் எண்ணமுள்ளவராய் ஸ்ராத்தகார்யம்நடந்தபோது ஆஸனத்திலும் தர்ப்பங்களிலும் ஹவ்யகவ்யங்களிலும் எனக்கு ஸரியானமுறையைக் கற்பித்தீர். உமதுசெய்கையிலுள்ள இந்தக்குற்றத்தினால் நீர் புரோஹிதராகப் பிறந்தீர். ப்ராம்மணோத்தமரே! நான் ராஜனாகப் பிறந்தேன். காலத்தினுடைய வித்யாஸத்தைப் பாரும் எனக்கு உபதேசம்செய்ததற்காக உமக்கு இந்தப்பலன்கிடைத்தது. ப்ராம்மணோத்தமரே! பெரியவரே! இந்தக்காரணத்தினாலேதான் உம்மைப்பார்த்து நான் நகைப்பது. உம்மை அவமதிப்பதற்காகநகைக்கவில்லை. அந்தணரே! நீர் ஆசாரியர். உமக்கு இந்தவித்யாஸம்நேர்ந்ததனால் எனக்குத் துயரமாயிருக்கிறது.

அதனால் என்மனம் கொதிக்கிறது. உமது பூர்வஜன்மம் எனக்குத் தெரிந்திருப்பதனாலேதான் உம்மைப்பார்த்து நகைக்கிறேன். உம்முடைய கடுந்தவம்கூட உபதேசத்தினாலன்றோ இப்படிக் கெடுக்கப்பட்டது? நீர் புரோஹிதக்கணத்தைவிட்டு மறுபடியும் க்ஷேமத்தை அடையமுயலும். பிராம்மணரே! இதிலிருந்து இன்னம் இழிவான ஜன்மத்தை நீர் அடையலாகாது. பிரியமானப்ராம்மணரே! பொருள்களை வாங்கிக்கொள்ளும் ஆத்மசுத்தமுள்ளவராகக்கடவீர்' என்றுசொன்னான். பிறகு, அரசனால் அனுப்பப்பட்ட ப்ராம்மணர் அனேகம் ப்ராம்மணர்களுக்குப் பொருள் பூமி க்ராமங்கள் முதலியவற்றையெல்லாம் தானம்செய்தார்; க்ருச்ரங்கள் என்னும் ப்ராயச்சித்தங்களையும் சாஸ்திரத்திலசொன்னபடி ப்ராம்மணோத்தமர்களால்செய்வித்துக்கொண்டு, தீர்த்தயாத்ரைசெய்து, ப்ராம்மணர்களுக்குக் கோதானமுதலான பலதானங்களையும்செய்து, ஆத்மசுத்தியை அடைந்து, ஆத்மஜ்ஞானமுள்ளவராய், முன்னிருந்த ஆஶ்ரமத்துக்கே சென்று பெருந்தவம்செய்தார். ராஜஸ்ரேஷ்டனே! அதன்பிறகு, அந்தப்ராம்மணர் சிறந்ததவப்பயனைப்பெற்று அந்தஆஶ்ரமத்தில் வஸித்திருந்தவரெல்லாராலும் மதிக்கப்பெற்றிருந்தார்; ராஜஸ்ரேஷ்டனே! ரிஷியாயிருந்தும் இவ்வாறு பெருங்கஷ்டத்தை அடைந்தார். ஆதலால், தாழ்ந்தவர்ணத்தாருக்கு ப்ராம்மணன் உபதேசம்செய்யலாகாது. அரசனே! அந்தணன் உபதேசிப்பதை எப்போதும் விட்டுவிடவேண்டும். உபதேசம்செய்யும் ப்ராம்மணன் துன்பம்அடைவான். ராஜஸ்ரேஷ்டனே! பிராம்மணன் ஒருநாளும் ஆசைப்படலாகாது. தாழ்ந்தவர்ணத்தாருக்கு வாக்கினால் ஒன்றும்சொல்லலாகாது. ப்ராம்மணர், க்ஷத்திரியர், வைசியர் என்ற மூன்றுவர்ணத்தாரும்தாம் [1] த்விஜர்கள். அரசனே! இவர்களுக்குச்சொல்வதனால் ப்ராம்மணன் கெடான். ஆதலால், ஸாதுக்கள் யார்முன்னிலையிலும் எதையும் சொல்லலாகாது. தர்மத்தின்வழி நுட்பமானது; மனத்தூய்மையில்லாதவர்கள் அறியக்கூடாதது. ஆகலாலேதான் முனிவர்கள் சிரத்தையுடன் மௌனத்திற்காகத் [2] தீக்ஷையைத்தாங்கொள்ளுகின்றனர். அரசனே! சொற்குற்றத்திற்குப்பயந்துதான் அவர்கள் ஒன்றும்பேசுவதில்லை. தர்மத்தைச்செய்பவரும் குணங்கள்நிரம்பினவரும் உண்மையையும் மனம்வாக்குகாயங்களின் ஒற்றுமையையும் அடைந்திருப்பவருமான ஸாதுக்களும் வாக்கினால் தவறாகச்சொல்வதனால் இவ்வுலகத்தில் பாவத்தைஅடைகின்றனர். அறியாமல் எவனாவது ஒருவனு

---

[1] இருபிறப்பாளர். [2] நியமம்.

க்கு உபதேசம்செய்யலாகாது. ஒருவனுக்கு உபதேசம்செய்வத ஞல், அவனுடையபாபத்தை ப்ராம்மணன் அடைவான். ஆதலால், தர்மத்தில் ஆசைப்படும் அறிவுள்ளப்ராம்மணன் ஆராய்ந்துபேசவேண் டும். பொருளாசையால்செய்யப்படும்உபதேசமானது உபதேசிப்ப வனைக் கெடுத்துவிடும். ஒருவனால்வினவப்பட்டவன், தான்சொல்வ தில்லையென்று ஸங்கல்பமிருப்பதாகச் சொல்லவேண்டும். தான் எத ஞல் தர்மத்தை அடையலாமோ அந்தஉபதேசத்தைத்தான் செய்ய லாம். உபதேசத்தைப்பற்றியதெல்லாம் உனக்கு என்னால் சொல்லப் பட்டது. பெருங்கஷ்டமிருப்பதனால் இவ்வுலகத்தில் உபதேசிப்பது பிழை" என்றார்.

## முப்பத்திரண்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(லக்ஷ்மி தான்வஸிக்குமிடங்களையும் வஸியாதஇடங்களையும் ருக்மிணிக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், " ஐயா ! பாதஸ்ரேஷ்டரானபிதாமஹரே ! எப்ப டிப்பட்டபுருஷர்கள் அல்லது ஸ்த்ரீகளிடத்தில், 'ஸ்ரீ' என்ற லக்ஷ்மி யானவள் எப்போதும் குடியிருக்கிறாள்? அதை எனக்குச் சொல் லும்" என்றுகேட்க, பீஷ்மர், சொல்லலானார்.

"இந்தவிஷயத்தில் முன்நடந்திருக்கும்சரித்ரத்தை நான்கேட் டபடி உனக்குச்சொல்வேன். ப்ரத்யும்னனுடையதாயான ருக்மிணி யானவள் க்ருஷ்ணனுடன் இருக்கையில் நாராயணருடையமடியிலிரு ந்துகொண்டு ப்ரகாசிப்பவளும் தாமரைமலர்போன்றமுகமுள்ளவளு மாகிய ஸ்ரீதேவியைக்கண்டு ஆச்சர்யத்தினால் அழகானகண்கள்மலர்ந் தவளாய், 'மூன்றுலோகங்களுக்கும் நாதராயிருப்பவரின் காதலியே! ப்ருகுமஹரிஷியின் பெண்ணே! நீ எந்தப்பிராணிகளை அடைகிறாய்? யாரிடத்தில் நிலைபெற்றிருக்கிறாய்?[1] யாரை நீ அடைவதில்லை? உண் மையாக எனக்குச் சொல்லு' என்றுகேட்டாள். ருக்மிணிதேவியி ஞல் கண்ணன்முன்னிலையில் இவ்வாறுகேட்கப்பட்ட சந்திரன்போ ன்றமுகமுள்ள ஸ்ரீதேவியானவள் க்ருபைகூர்ந்து ப்ரியமாகஅழை த்து இன்சொல்லாகச் சொல்லலானாள். 'அழகும் தைர்யமும் வேலைத் திறமையுமுள்ளவனும வேலைசெய்துகொண்டிருப்பவனும் கோபமில்

[1] 'காஸிநஸேவஸே' என்றபாடம் கொள்ளப்பட்டது.

லாதவனும் தெய்வபக்தியுள்ளவனும் நன்றிமறவாதவனும் ஐம்புலன்களையும் அடக்கினவனும் ஸத்வகுணம் எப்போதும் தலையெடுத்தவனுமாகிய மனிதனிடம் நான் நித்யமாகவஸிக்கிறேன். தொழில்களைச் செய்யாதவனிடத்திலும் நாஸ்திகனிடத்திலும் ஜாதிஸங்கரம்செய்பவனிடத்திலும் நன்றிகெட்டவனிடத்திலும் ஒழுக்கந்தவறினவனிடத்திலும் கொடுஞ்செய்கையுள்ளவனிடத்திலும் அடக்கமில்லாதவனிடத்திலும் பெரியோரிடத்தில் பொறுமைப்படுகிறவனிடத்திலும் நான் வஸிப்பதில்லை. பராக்ரமமும் தேகவன்மையும் மனஉத்ஸாஹமும் கௌரவமும்குறைந்து எல்லாவற்றிற்கும் துயரப்பட்டும் கோபித்தும் நினைத்ததைநடத்தமாட்டாமலுமிருக்கிற மனிதர்களிடத்தில் நான் இரேன். மனததில் மேன்மேல் பயனைக்கருதாதவர்களும் இயற்கையிலேயே மனச்சோர்வை அடைந்தவர்களும் அல்பத்தில்திருப்தி அடையும் தன்மையுள்ளவர்களுமாகிய மனிதர்களிடம் நான் ஒருகாலும் நன்றாயிருப்பதில்லை. தர்மத்தை அநுஷ்டிப்பவரும் தர்மந்தெரிந்தவரும் பெரியோரை அடுப்பவரும் அடக்கமுடையவரும் பிறர்மனத்தை அறிகிறவரும் காலத்தைச் சிறிதும்வீணாக்காதவரும் தானத்திலும் சுத்தத்திலும் ஊக்கமுள்ளவரும் புலன்களையடக்குவதையும் தியானம்செய்வதையும் தத்வஜ்ஞானத்தையும் விரும்புகிறவரும் கோவினிடத்திலும் ப்ராம்மணர்களிடத்திலும் பக்ஷமுள்ளவருமான மஹாத்மாக்களிடம் எப்போதும்வஸிக்கிறேன். அழகும் அடக்கமுமுடையவரும் தேவதைகளிடத்திலும் ப்ராம்மணர்களிடத்திலும் பக்தியுள்ளவரும் வீடுகளையும் பாத்ரங்களையும் சுத்தமாகவைத்துக்கொண்டு பசுக்களையும் தான்யங்களையும் ஊக்கத்துடன்பார்ப்பவருமாகிய பெண்களிடத்தில் எப்போதும் வஸிக்கிறேன். தர்மத்தை அறிந்தவரும் தம்தர்மத்தை அநுஷ்டிப்பவரும் அடக்கத்துடன் பெரியோர்களுக்குப் பணிவிடைசெய்வதில் ஊக்கமுள்ளவரும் சுத்தமனமும் பொறுமையும் ஸாமர்த்தியமுமுள்ளவருமான புருஷர்களிடத்திலும் பொறுமையும் அடக்கமும் ஸத்யமும் நல்லஇயற்கையும் மனம் வாக்குக்காயங்களின் ஒற்றுமையுமுள்ளவர்களும் தேவர்களையும் ப்ராம்மணர்களையும்பூஜிப்பவர்களுமான பெண்களிடத்திலும் வஸிக்கிறேன். பண்டங்களைக்காப்பாற்றாதவளும் ஆராய்ந்துசெய்யாதவளும் எப்போதும் கணவனுக்குவிரோதமாகப்பேசுகிறவளும் பிறர்வீட்டில்நோக்கமுள்ளவளும் நாணமற்றவளுமான பெண்ணை விட்டுவிடுகிறேன். ஆசையுள்ளவளும் காரியத்தில்திறமையில்லாதவளும் தூர்வமுள்ளவளும் சுத்தமில்லாதவளும் கலகத்தில்மனமுள்ளவளும் தூக்

கம் அதிகரிப்பவளும் எப்போதும் படுத்திருப்பவளுமானஸ்த்ரீயை விட்டுவிடுகிறேன். எப்போதும்உண்மையுள்ளவர்களும் காட்சிக்கினியவர்களும் அழகும் குணங்களுமுள்ளவர்களும் கற்புள்ளவர்களும் மங்களாசாரங்களுள்ளவர்களும் அலங்காரமுள்ளவர்களுமான மங்கையர்களிடம் வஸிக்கிறேன். வாகனங்களிடத்தும் கன்னிகைகளிடத்தும் ஆபரணங்களிடத்தும் யாகங்களிடத்தும் மழைபொழியும்மேகங்களிடத்தும் புஷ்பித்ததாமரைக்கொடிகளிடத்தும் சரத்காலத்திய நக்ஷத்ரவரிசைகளிடத்தும் யானைகளிடத்தும் மாட்டுக்கொட்டில்களிடத்தும் அரசர்களின்ஸிம்மாஸனங்களிடத்தும் புஷ்பித்தகருநெய்தல்களும் தாமரைகளுமுள்ள தடாகங்களிடத்தும் அன்னங்களும் அன்றில்களும் கூவுதலினால் விளங்குகின்றவையும் கரையிலுள்ளமரங்கள் ஜலத்தில்தழைந்திருப்பதனால் சோபிப்பவையும் முனிவர்களாலும் ஸித்தர்களாலும் ப்ராம்மணர்களாலும் அடையப்பட்டவையும் எப்போதும் ஜலம்மிகநிரம்பினவையும் ஸிம்மங்களினாலும் யானைகளினாலும் கலக்கப்பட்டஜலமுள்ளவையுமான நதிகளிடத்தும் நான் வஸிக்கிறேன். மதயானையினிடத்தும சிறந்தவ்ருஷபத்தினிடத்தும் அரசனிடத்தும் ஸிம்மாஸனத்தினிடத்தும் ஸாதுக்களிடத்தும் எப்போதும் வஸிக்கிறேன். எந்தவீடுகளிலுள்ளஜனங்கள் காலத்தில் அக்னிஹோத்ரம்செய்துகொண்டும் கோக்களையும் ப்ராம்மணர்களையும் தேவர்களையும்பூஜித்துக்கொண்டும் புஷ்பங்களினால் அர்ச்சனைசெய்துகொண்டுமிருக்கின்றனரோ அந்தவீடுகளில் நித்யவாஸம்செய்வேன். எக்காலமும் வேதாத்யயனம்தவறாதப்ராம்மணர்களிடத்தும் எப்போதும் தம்கடமையில் ஊக்கமுள்ள க்ஷத்ரியர்களிடத்தும் பயிர்செய்வதில் ஊக்கமுள்ளவைஸ்யர்களிடத்தும் எக்காலமும் பணிவிடையில் ஊக்கமுள்ள சூத்ரனிடத்தும வஸிக்கிறேன். நாராயணரிடத்தில்மட்டும் முழுஅன்புடன் வேறெங்கும்மனம்செலுத்தாமல் சரீரமெடுத்து வஸிக்கிறேன். ஏனெனில், மிகப்பெரியதர்மமும் ப்ராம்மணர்களிடத்தன்பும் யாரும்விரும்பத்தகுதியும் அவரிடத்திலிருக்கின்றன. 'அரசியே! மற்றவிடங்களில் நான் இவ்வாறு சரீரத்தோடிருப்பதுமில்லை. இவ்வாறு என்னால் பேசவும் முடியாது. எவனிடத்தில் என்கருத்தினால் நான் இருக்கிறேனோ அவன் புண்யம, புகழ், பொருள், இன்பம எல்லாவற்றிலும் மேலாகிறான்' என்றாள்" என்றுசொன்னார்.

## முப்பத்துமூன்றாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(நன்றிகொன்றவரின் ப்ராயச்சித்தவிஷயமான வத்ஸநாபரின்கதை)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! நன்றிமறந்தவர்களுக்கு ப்ராயசசித்தமென்னவென்றுசொல்லும். ஐயா! சிறந்தவைகளையுடையவரே! எந்தஅறிவீனர், தாய்தந்தையரையும ஆசார்யரையும் அவமதிக்கின்றனரோ, மற்றுமவர் வெட்கமில்லாமல செய்நன்றிமறக்கின்றனரோ அவர்களுடையுங்கதியை உண்மையாகக்கேட்க விரும்புகிறேன்" என்றுசொல்ல, பீஷ்மர் சொல்லததொடங்கினர்.

"அப்பா! நன்றிமறந்தோருக்குப் பலவர்ஷகாலம் நரகமே. தாய்தந்தையர்ஆசார்யர்களிவர் சொற்படிநடவாதவர், பூச்சி புழு எறும்புஜாதிகளிலும் மரம்செடிமுதலியஸ்தாவரங்களிலும பிறக்கின்றனர். திரும்பவும் அவர்கள் மானிடப்பிறப்பிலபிறப்பது அரிது. இந்தவிஷயத்திலும ஒருபழையசரித்ரத்தைக் கூறுகின்றனர். அதைச் சொல்லுகிறேன். மிகத்தெரிந்தவரும் நியமந்தவறாதவருமாகிய வத்ஸநாபரென்னும்ஒருமஹரிஷிஇருந்தார் அந்தப்ப்ரம்மரிஷி புற்றுமூடும்படியிருந்து மிகப்பெருந்தவஞ்செய்தார். பாரதச்ரேஷ்டனே! அவர்தவம் செய்யும்போது தேவேந்திரன் மின்னலுள்ளமேகங்களைக்கொண்டு மிகவும்அதிசமானமழையைப் பொழிந்தான். அங்கே இந்த்ரன் ஏழு நாள் மழைபெய்வித்தான். அந்தப்ராம்மணர் கண்ணைமூடிக்கொண்டு அந்தமழையை ஏற்றுக்கொண்டார். குளிர்காற்றோடுகூடிய அம் மழைவிழும்போது இடியினால்அடிக்கப்பட்டபுற்றானது நுனிசிதறிக் கரைந்துபோயிற்று. புற்றுக்கரைந்துபோனபிறகு மஹாத்மாவானவத்ஸநாபர் மழையினால அடிக்கப்படும்போது தர்மதேவதை அவர்மேல் தயைசெய்து நல்லெண்ணம்வைத்தது; மிக்கதர்மிஷ்டராகத்தவம் செய்யும் அந்தப்ப்ரம்ரிஷியை நினைக்கும்போது தர்மதேவதையின் இயற்கையில்அமைந்தநல்லெண்ணம் உடனே வெளிப்பட்டது. தர்மதேவதை அழகுள்ளதும் மிகப்பெரிதுமான எருமையின்வடிவமாகத் தன்னைச்செய்துகொண்டு வத்ஸநாபரைக்காப்பதற்காக நாலு கால்களாலும் மேலேநின்றது. தர்மத்தைக்காப்பவரிற்சிறந்த பரதஸ்ரேஷ்டனே! காற்றோடுகூடியமழையோய்ந்தவுடனே தர்மதேவதை எருமை வடிவத்துடனேயே புற்றைவிட்டு மெள்ளவிலகிச்சென்றது. மழை ஓய்ந்தபோது அந்தச்சிறந்ததவமுள்ளவத்ஸநாபர் திசைகள்திறந்திருப்பதையும் மலைச்சிகரங்களையும் பூமியெல்லாம் ஜலத்தினால்நனைக்கப்

பட்டுத் தடாகங்களெல்லாம் தண்ணீர்நிரம்பியிருப்பதையும்கண்டு மகிழ்ந்தார். அவர் ஆச்சர்யத்துடன், 'நான் யாரால் இந்தமழையினின்றும் காப்பாற்றப்பட்டேன்?' என்று நினைத்தார்; உடனே அருகில்நின்ற எருமையைக் கண்டார். 'விலங்குஜாதியிலேயும் தர்மத்தில்அன்புள்ளது காணப்படுவது என்னவியப்பு' இந்தப்புண்யமானமஹிஷம் இதோ கற்பாறையின்மேல் நிற்கிறது; ஆனால் பருத்து வன்மையுள்ளதாயிருக்கிறது. இதனிடம் மாம்ஸம் மிகுதியாயிருக்கும்' என்று நினைத்தார். மறுபடியும் அம்முனிவருக்குத் தர்மத்தைப்பற்றியஎண்ணம் பின்வருமாறு உண்டாயிற்று. 'நன்றிமறந்தவரும் நம்பினவனைக் கொன்றவரும் நரகமடைவார்கள். நன்றிகெட்டவர்களுக்கு ப்ராணனை விட்டாலன்றி வேறுஎவ்வகையினும் பரிகாரம் எனக்குத் தெரியவில்லை. மாதாபிதாக்களைக்காப்பாற்றாமலும், குருதக்ஷிணைகொடாமலும் நன்றிமறந்தும்இருப்பதற்கு மரணம்தான் முடிவானப்ராயச்சித்தம் என்று தர்மசாஸ்த்ரமறிந்தவர் சொல்லுகின்றனர். அப்படிச் செய்யநினைத்தாலும் பிறர்செய்வதைமறுக்காமலிருந்தாலும் அது பெரியஉபபாதகம். ஆதலால், ப்ராயச்சித்தம்செய்வதாக ப்ராணனை விடுவேன்' என்றுநினைத்தார். இவ்வாறுபிராயச்சித்தம்செய்யக்கருதி மனத்தில் தேகப்பற்றைவிட்டு மேருமலைச்சிகரம்சென்று தேகத்தை விட முயற்சிபண்ணிய தர்மந்தெரிந்தமுனிவர் தர்மதேவதையினால் கையில் பிடிக்கப்பட்டார். தர்மதேவதை, 'ஓ! வத்ஸநாபரே! மிகத் தெரிந்தவரே! அனேகநூற்றாண்டுகள்ஜீவிப்பவரே! பற்றைவிட்டுத் தேகத்தைவிடுவதனால் உம்மிடத்து ஸந்தோஷம்அடைந்தேன். தர்மத்தைக்காப்பாற்றுகிறவர்களனைவரும் நன்மையையும் தீமையையும் இவ்வாறே ஆலோசிப்பர். ஆனால், உமக்கு ஒப்பு யாருமில்லை. உம்முடையமனம் தடைப்படவில்லை. நீர், யாதொருகெடுதலுமின்றித் தர்மத்தை முழுதும்நடத்தசக்தியுள்ளவர். மிகத்தெரிந்தவரே! நீர் பரிசுத்த ஆத்மாவாகிறீர். நீர் நீண்டகாலம் ஜீவிப்பவராகத் திரும்பிச் செல்லும்' என்றுசொல்லிற்று" என்றார்.

## முப்பத்துநான்காவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(ஸ்த்ரீபுருஷர்களின்சேர்க்கையில் யாருக்குஸுகமதிகமென்பதைப்பற்றிய பங்காஸ்வனன்கதை.)

யுதிஷ்டிரர், "அரசரே! ஸ்த்ரீபுருஷர்களின்புணர்ச்சியில ஸ்பரிசஸுகம் யாருக்கு அதிகமாயிருக்குமென்னும் ஐயத்துக்கு ஸரியான நிச்சயம்சொல்லக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

“இந்தவிஷயத்தில் பங்காஸ்வனனென்னும் அரசன்மேல் இந்த்ரனுக்குப் பகையுண்டானதைப்பற்றிய ஒருபுராதனசரித்ரத்தைச்சொல்லுகின்றனர் ஓ! புருஷஸ்ரேஷ்டனே! முன்னர் மிக்கதர்மிஷ்டனான பங்காஸ்வனனென்னும் ஒருராஜரிஷி இருந்தான். மிக்கபலசாலியான அந்தராஜரிஷி புத்ரனில்லாமலிருந்ததனால் புத்ரனைக்கருதி அக்னிஷ்டுதம் என்றுபெயருள்ளதும் இந்த்ரனுக்குத் துவிரோதமுமான யாகத்தைச் செய்தான். அந்தயாகம் மனிதர்களுக்கு ப்ராயச்சித்தத்திற்காகவும் புத்ரபலனுக்காகவும் விதிக்கப்படுகிறது. சிறந்தமஹிமையுள்ளவனும் தேவர்க்கதிபதியுமானஇந்த்ரன் அந்தயாகம்நடப்பதையறிந்து நியமந்தவறாத அந்தராஜரிஷியின்வழுவைத் தேடிக்கொண்டிருந்தான். அரசனே! அம்மஹாத்மாவினிடம் இந்த்ரன் தவறுதலைக் கண்டுபிடிக்கவில்லை. பிறகு, சிலகாலஞ்சென்றபின் அவ்வரசன் வேட்டைக்குச் சென்றான். இந்த்ரன், ‘இதுஸமயம்’ என்றுநினைத்து அவ்வரசனைப் புத்திமயங்கச்செய்தான். இந்திரனால் புத்திமயக்கப்பட்ட அந்தராஜரிஷி ஒற்றைக்குதிரையோடுதிரிந்து திசைதெரியாமல் பசிதாகங்களினால் வருத்தமுற்றான். அரசனே! அவன் இங்குமங்கும்திரிந்து களைப்பினாலும் தாகத்தினாலும் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கையில் சிறந்த தண்ணீர்நிரம்பின ஓர் அழகியதடாகத்தைக் கண்டான். அப்பா! அவன் அந்தத்தடாகத்தில் இறங்கிக் குதிரையைத் தண்ணீர்குடிப்பித்தான். தண்ணீர்குடித்தகுதிரையை மரத்தில்கட்டி அந்தராஜஸ்ரேஷ்டன் தானும்அதிலிறங்கி ஸ்நாநம்செய்தவுடன் பெண்ணுருவம்அடைந்தான். அந்தராஜஸ்ரேஷ்டன் தான் பெண்ணாக்கப்பட்டதைக்கண்டு வெட்கி மனத்தில் கவலைமேலிட்டுப் பொறிகளும் புத்தியும்கலங்கி, ‘நான் எப்படிக் குதிரைமேல் ஏறுவேன்? எப்படி ஊருக்குப்போவேன்? அக்னிஷ்டுதமென்னும்யாகம்செய்து என்தர்மபத்னியினிடம் மிக்கபலசாலிகளான நூறுபுதல்வர்கள் பிறந்திருக்கின்றனரே. அவர்களுக்கும் என்சொந்தமனைவிக்கும் நகரத்திலும் தேசத்திலுமுள்ள ஜனங்களுக்கும் நான் என்னசொல்வேன்? மென்மையும் இளைப்பும் பிறருக்குட்படுதலும் நகையும் விளையாட்டுமுதலியவையும் தேக ஒளியும் பெண்களின்சிறப்பில்ஆசையும் பெண்களின்குணங்களென்று தர்மங்களின்உண்மைகளைத்தெரிந்தரிஷிகள் சொல்லுகின்றனர். தேகப்பயிற்சியும் வன்மையும் சூரத்தனமும் புருஷனுக்குரியகுணங்கள். எனக்குப்புருஷத்தனம்போய்விட்டது. எதனாலேயோ பெண்தன்மையுண்டாயிற்று. பெண்ணாயிருப்பதனால் நான் மறுபடியும் எப்படி அந்தக்குதிரையேறக்கூடும்?’ என்றுநினைத்தான். அப்பா! பெ

அந்தராஜஸ்ரேஷ்டன் மிக்க துக்கத்துடன் குதிரையின்மேலேறி ஊருக்குத்திரும்பிவந்தான். பிள்ளைகளும் மனைவியும் வேலைக்காரர்களும் பட்டணத்தோரும் தேசத்தாரும் அவனைக்கண்டு, 'இதுஎன்ன' என்று மிக்கவியப்புற்றனர். பேசுகிறவரில்சிறந்தவனும் பெண்ணுருவங்கொண்டவனுமான அந்தராஜரிஷி, 'நான் நிரம்பியசேனைகள்சூழ்ந்துவர வேட்டையாடப்போனேன். தெய்வத்தினால் மதிமயங்கித் திரிந்துகொண்டு பயங்கரமானகாட்டில் நுழைந்தேன். மிகபயங்கரமான காட்டில் தண்ணீர்விருப்பத்தினால் வருத்தப்பட்டு அறிவுதப்பியநான் பார்க்கமிகஅழகியதும பறவைகளினால்சூழப்பட்டதுமான ஒருதடாகத்தைக் கண்டேன்; அதில் ஸ்நானம்செய்ததும் பெண்ணானேன். அது தெய்வத்தினாலென்பது நிச்சயம். ஸந்தேஹமில்லை. மக்களிடத்தும் மனைவிகளிடத்தும் பொருளிலும் எனக்குஆசைதீரவில்லை' என்றுசொன்னான். பெண்ணுருவடைந்த அந்தராஜஸ்ரேஷ்டன் அதன்பிறகு பேர்களையும் கோத்ரங்களையும்சொல்லித் தன்மனைவிகளையும் மந்த்ரிகளையும் அழைத்துத் தன்புத்ரர்களைப்பார்த்து, 'பிள்ளைகளே! வனம்போகப்போகிறேன். நீங்கள் அன்புடன் ராஜ்யத்தை அனுபவியுங்கள்' என்றுசொன்னான். அவ்வரசன் நூறுபுத்ரர்களுக்கும் ராஜ்யபட்டாபிஷேகம்செய்வித்துக் காடுசென்றான். அந்தப்பெண்ணான அரசன் காட்டிற்குச்சென்று ஓர்ஆஸ்ரமத்தில் ஒருரிஷியை அடைந்தான். ஆஸ்ரமத்தில் அந்தரிஷியினால் அந்தப்பெண்ணுக்கு நூறுபுத்ரர்கள் உண்டாயினர். பிறகு, அவள் அந்தப்புத்ரர்கள் எல்லாரையும் அழைத்துக்கொண்டு முந்தியபுத்ரர்களிடம்வந்து, 'நீங்கள், ஆணாயிருந்தபோது எனக்குப் பிறந்தபிள்ளைகள்; இந்த நூற்றுவரும் பெண்ணானபிறகு பிறந்தவர்கள். புத்ரர்களே! நீங்களனைவரும் ஸஹோதரஸ்நேஹத்துடன் ஓரிடத்தில் ராஜ்யத்தை அனுபவியுங்கள்' என்றுசொன்னாள். பிறகு, அந்தஸஹோதரர்கள் சேர்ந்து ராஜ்யத்தை அனுபவித்தனர். கோபத்தினால் அழுந்துக்கொண்டிருந்த தேவேந்த்ரன், அவர்கள் ஸஹோதரஉணர்ச்சியோடு உயர்ந்தராஜ்யத்தைஅனுபவிப்பதைக்கண்டு, 'இந்தராஜரிஷிக்கு நான்செய்தது உதவியானதேயன்றித் தீங்காகவில்லையே' என்றுநினைத்தான். தேவர்க்கரசனான இந்த்ரன், உடனே ப்ராம்மணவடிவங்கொண்டு, அந்தநகரத்துக்குச்சென்று, அந்தராஜாவின்முந்தியகுமாரர்களைக்கண்டு, 'ஒரு தந்தைக்குப்பிறந்த ஸஹோதரர்களுக்கே ஸஹோதரஸ்நேகமிருப்பதில்லை. தேவர்களும் அஸுரர்களும் கச்யபரின்புத்ரர்கள்தாம். கச்யபபுத்ரர்களானதேவாஸுரர்கள், ராஜ்யத்தைப்பற்றியே கலகப்பட்ட

னர். நீங்கள் பங்காஸ்வனனுக்குப்பிறந்தவர்கள். மற்றவர்கள் ரிஷிக்குப்பிறந்தவர்கள். உங்கள்பிதாவின் ராஜ்யத்தை ரிஷியின்பிள்ளைகள் அனுபவிக்கிறார்கள்' என்று மித்ரபேதஞ்செய்தான். இந்திரனால்கலைக்கப்பட்ட அந்தப்புத்ரர்கள் யுத்தத்தில் ஒருவரையொருவர் கொன்றனர். அந்தரிஷிபத்னியானவள் அதைக்கேட்டு மனம்கொதித்து அழுதாள். அப்போது இந்திரன் ப்ராம்மணரூபமாக அவளருகில் வந்து, 'சிறந்த முகமுள்ளவளே! எந்த துக்கத்தினால் வருத்தப்பட்டு நீ அழுகிறாய்?' என்றுகேட்டான். அந்தப்பெண் அந்தப்ராம்மணனைக்கண்டு அழுதுகொண்டே, 'ப்ராம்மணரே! எனது இருநூறுபிள்ளைகளும் காலத்தினால் அழிக்கப்பட்டனர். ப்ராம்மணரே! நான் முன்னே ராஜனாயிருந்தேன். ப்ராம்மணோத்தமரே! அப்போது அழகிய ரூபமுள்ள நூறுபிள்ளைகள் எனக்குப் பிறந்தனர். ப்ராம்மணோத்தமரே! ஒருகால் நான் வேட்டைக்குப்போயிருந்தபோது பெருங்காட்டில்திரிந்து ஒருதடாகத்தில் ஸ்நானம்செய்தவுடன் பெண்ணாய்விட்டேன். அதன்பிறகு, பிள்ளைகளை ராஜ்யத்தில்வைத்துவிட்டுக் காடு புகுந்தேன். ப்ராம்மணரே! பெண்ணாகப்போனஎனக்கு ஓர் ஆச்ரமத்தில் மஹாத்மாவான ஒருரிஷியினால் நூறுபிள்ளைகள் பிறந்தனர். அவர்களை நான் பட்டணத்தில்கொண்டுபோய்ச்சேர்த்தேன். ப்ராம்மணரே! காலம்வந்ததினால் அந்தப்புத்ரர்களுள் பகையுண்டாயிற்று. ப்ராம்மணரே! தெய்வத்தினால்பீடிக்கப்பட்டநான் இதற்காகத் துயரப்படுகிறேன்' என்றுசொன்னாள். இந்திரன் துயரப்படும் அவளைக்கண்டு, 'அம்மா! முன்னே யஜமானனாயிருந்தஎன்னை அழையாமல் இந்திரத்வேஷமுள்ளயாகத்தைச்செய்து எனக்குத் தாங்கமுடியாததுயரத்தை நீ உண்டுபண்ணினாய்; மதிகெட்டவளே! நான் இந்திரன்; நீசெய்தபகையைத் தீர்த்துவிட்டேன்' என்ற கடினமான சொல்லைச் சொன்னான். அந்த பங்காஸ்வனனென்னும் ராஜரிஷி இந்திரனைப்பார்த்து அவன்பாதங்களில் தலையால்வணங்கி, 'தேவசிரேஷ்டனே! நான் புத்ரனைவிரும்பி அந்தயாகத்தைச் செய்தேன். அந்த விஷயத்தில் தயைசெய்து என்னை க்ஷமிக்கவேண்டும்' என்றுசொன்னான். அவன் காலில்விழுந்ததனால் ஸந்தோஷமடைந்த தேவேந்திரன் அவனுக்கு வரம்கொடுப்பதற்காக, 'ஓ! அரசனே! உனக்கு எந்தப்பிள்ளைகள் பிழைக்கவேண்டும்? ஆணாயிருக்கையில் பிறந்தவர்களா? பெண்ணாயிருக்கையில் பிறந்தவர்களா? எனக்கு இதைச் சொல்' என்றுகேட்டான். அந்தரிஷிஸ்த்ரீ உடனே இந்த்ரனைப்பார்த்துக் கைகூப்பிக்கொண்டு, 'இந்திரனே! எனக்குப் பெண்ணாயிருக்

கையில்பிறந்தபிள்ளைகள் ஜீவிக்கவேண்டும்' என்றுசொன்னாள். இந்திரன் ஆச்சர்யமடைந்து அந்தஸ்த்ரீயைப்பார்த்து, 'உனக்கு ஆணாயிருக்கையில பிறந்தபிள்ளைகள் வெறுக்கத்தக்கவரானதேன்? அவர்களிடத்திருப்பதைவிடப் பெண்ணாயிருக்கையில் பிறந்தபிள்ளைகளிடத்தில் அதிகமான அன்பு எப்படி? அந்தக்காரணத்தைக் கேட்கவிரும்புகிறேன். எனக்கு நீ சொல்லவேண்டும்' என்று மறுபடியும் கேட்டான். அதற்கு அந்தஸ்த்ரீ, 'இந்திரனே! ஸ்த்ரீக்குப் புத்திரஸ்நேஹம் அதிகம் புருஷனுக்கு அப்படியில்லை. ஆதலால், ஸ்த்ரீயாயிருக்கையில பிறந்தவர்கள் ஜீவிக்கவேண்டும்' என்றுசொன்னாள். இவ்வாறுசொல்லக்கேட்ட இந்திரன், தயையுடையவனாகி, 'உண்மைபேசுகிறவளே! உன்னுடையபுதார்களெல்லோரும் இப்போது ஜீவிக்கட்டும். அரசர்க்கரசனே! நல்லதவமுள்ளவனே! உனக்கு ஆண்தன்மைவேண்டுமா? பெண்தன்மைவேண்டுமா? 'உனக்கு எதுவேண்டுமோ அந்தவரத்தைஎன்னிடத்தில்கேள்' என்றுசொன்னான். அந்த ஸ்திரீ, 'இந்திரனே! பெண்தன்மையைத்தான்விரும்புகிறேன். ஆண்தன்மையை விரும்பவில்லை' என்றுசொன்னாள். அவளால் இவ்வாறு சொல்லப்பட்டதேவேந்திரன் அவளைப்பார்த்து, 'அரசனே! ஆண்தன்மையைவிட்டுப் பெண்தன்மைக்குஆசைப்படுவதெப்படி?' என்று கேட்க, பெண்தன்மையிலிருக்கும் ராஜஸ்ரேஷ்டன், 'இந்த்ரனே! ஸ்த்ரீபுருஷர்களின்சேர்க்கையில ஸ்த்ரீக்குத்தான் எப்போதும் இன்பம்அதிகம். இந்தக்காரணம்பற்றி ஸ்த்ரீதன்மையையே நான் வேண்டுகிறேன். தேவஸ்ரேஷ்டனே! உண்மையாகவே ஸ்த்ரீயாயிருப்பதில் எனக்கு அதிகஸந்தோஷம் இந்தஸ்த்ரீத்தன்மையிலேயே திருப்தி அடைந்திருக்கிறேன். தேவராஜனே! நீசெல்லலாம்' என்று மறுமொழிசொன்னான். தேவேந்திரன், 'அப்படியே இருக்கட்டும்' என்றுசொல்லி, அந்தப்பெண்ணினிடம்விடைபெற்றுக்கொண்டு ஸ்வர்க்கத்துக்குச் சென்றான். மஹாராஜனே! "இவ்வாறு பெண்ணுக்குத்தான் அதிகஇன்பமென்றுசொல்லப்படுகிறது" என்று கூறினார்.

---

முப்பத்தைந்தாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(தீவினைகளைநீக்கி நல்வினைகளைச் செய்பவர் கடவுளினருளைப்பெறுவரென்பது.)

யுதிஷ்டிரர், "இவ்வுலகவாழ்க்கையில் தனக்கு நன்மையை விரும்பினமனிதன் என்னசெய்யவேண்டும்? எப்படிப்பட்டஒழுக்க

முள்ளவனுகி உலகவாழ்க்கையை எப்படிநடத்தவேண்டும்?' என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானுர்.

"ஒருவன் தன்தர்மங்களைச்செய்து பரிசுத்தமானமனத்துடன் நாராயணரிடத்திலும் சங்கரரிடத்திலும் பக்திவைத்து ஸாதுக்களைப் பூஜித்து த்யானித்து ஜபம்செய்யவேண்டும். தேகத்தினுற்செய்யப் படும் மூன்றுவகைக்கர்மங்கள் வாக்கினுற்செய்யப்படும் நான்குவகைக் கர்மங்கள் மனத்தினுல்செய்யப்படும் மூவகைக்கர்மங்கள் ஆகப்பத்து வகைக்கர்மங்களையும் விடவேண்டும். உயிரைப்போக்குவது திருடு வது பிறர்மனைவிகளைத்தொடுவது ஆகிய தேகத்தினுல்செய்யப்படும் பாவங்கள் மூன்றையும் முற்றும் விடவேண்டும். அரசர்க்கரசனே! கெட்டபேச்சு, கடுஞ்சொல், கோட்சொல்வது, பொய்சொல்வது இந்நான்கையும் வாக்கினுலும் செய்யலாகாது; மனத்தில் நினைக்கவு மாகாது. பிறர்பொருளைவிரும்பாமை, எல்லாப்பிராணிகளிடத்தும் அன்பு, புண்யபாபங்களுக்குப் பலன்உண்டென்றநம்பிக்கை இம் மூன்றுவகைக்கர்மங்கள் மனத்தினுல்செய்யவேண்டியவை. ஆதலால், மனிதன் வாக்கினுலும் காயத்தினுலும் மனத்தினுலும் கெட்டகர்மத் தைச் செய்யலாகாது. இவ்வுலகத்தில் நல்லகர்மங்களையேசெய்து நாராயணரிடத்தில்பக்தியுள்ளவன் அவருடைய அநுக்கிரஹத்தினுல் யாருக்குமதெரியாதமேலானபதத்தை அடைவான்" என்றுர்.

---

முப்பத்தாறுவது அத்யாயம்.

தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(தர்மபுத்திரர், உலகவாழ்க்கையிலுள்ளதுக்கத்தை எடுத்துச்கூறி, பீஷ் மரை வைஷ்ணவதர்மத்தைநர்சொல்லும்படி கேட்டது.)

யுதிஷ்டிரர், "ஐயா! பிதாமஹரே! இவ்வுலகத்தில் மேலான பொருளையடையாமலிருக்கும்ஜனதுரித்தம் பரிதபிக்கிறது. பாவங் களைப்போக்குகிறவராகிய நாராயணரைத்தவிர தாவரமும்ஜங்கமமு மாகிய இவ்வுலகனைத்தும் அநித்யமாகத்தோன்றுகிறது. தாமரைக் கண்ணராகிய நாராயணர்தாமே உலகத்துக்கெல்லாம் அந்தர்யாமியான புருஷர். குற்றமற்றவரே! அந்தநாராயணராகவேயிருக்கும் இந்தக் கண்ணபிரானுடையமகிமையனைத்தும் உம்மால் கேட்கப்பட்டதாக விருக்குமே" என்றுசொல்ல, பீஷ்மர், சிறந்த அறிவுள்ளயுதிஷ்டி ரனே! யுத்தத்தில் என்னுல் காணவும்பட்டது" என்றுசொன்னுர்.

பிறகு, யுதிஷ்டிரர் சொல்லலானார். "ராஜஶ்ரேஷ்டரே! ராஜதர்மங்களனைத்தும், நாரதரால்சொல்லப்பட்ட பூர்வசரித்திரமனைத்தும், [1]மூன்றுவிதத்துன்பங்களையும்போக்குவதும் ரஹஸ்யமுமாகிய நாராயணருடையசரித்திரமும் உம்மிடத்திலிருந்து நான் கேட்டேன். மஹானுபாவரே! என்மேல் அனுக்ரஹம்வைத்து ஒரேதெய்வப்பற்றுள்ளவர்களின் தர்மங்களும் நியமங்களும் சுருக்கியும் விரித்தும் உம்மால் சொல்லப்பட்டன. அந்தப்பகவானே உலகத்தைக்காப்பவரென்பதும் அதிதிகளைப்பூஜிக்கும்விரியும தவங்களும் அனுஷ்டானங்களும் வேதவாக்யங்களில் நன்றாகக்கூறப்பட்டவையும் பொருள்களினால்நிறைவேற்றத்தக்கவையும் அக்னிஹோத்ரத்தை அனுஸரிப்பவையுமான வாஜபேயமுதலியயாகங்களும் தவத்திலிருக்கும் ப்ராம்மணர்களுக்குரிய பலவகை ஜபங்களென்னும்யாகங்களும் ப்ராம்மணர்கள்செய்யும் பதினொருவகை [2]ஹவிர்யாகங்களும் அவைகளின்பலன்களின்வேறுபாடுகளும் வானப்ரஸ்ததர்மங்களும் சொல்லப்பட்டன. சிறந்தஅறிவுள்ளவரே! ஒவ்வொருநாளும் ப்ராம்மணர்கள்செய்யத்தக்க [3]பஞ்சமஹாயஜ்ஞங்களும் வேதத்தைக்கேட்பதனாலுண்டாகும் புண்யங்களும் பிரம்மயஜ்ஞத்தின்பலனும் வேதத்திற்சொல்லப்பட்டவ்ரதங்களின்விதிகளும் வேதோக்தங்களான நித்யகர்மங்களும் [4]ஸ்வாஹா [5]ஸ்வதா இவற்றைச்சொல்வதும் யாகமுதலியவற்றிற்கும தானதர்மங்களுக்குமுள்ளபயன்களும் நான்குஆஶ்ரமங்களில் ஒன்றுக்குமேல்ஒன்றைஅடைவதிலுள்ளபலனும்தனித்தனியே ஒவ்வோர்ஆஶ்ரமத்தில்மட்டும் நிலைபெற்றிருப்பதின்பயனும் மாஸத்திலும் பக்ஷத்திலும் உபவாஸமிருப்பதின்பயனும் தெளிவாகஉரைக்கப்பட்டன. ஆகாரத்தைவிட்டவர்களுக்கும் பஞ்சாக்னிமத்தியில் தவஞ்செய்பவர்களுக்கும் வீரமார்க்கமாகிய யுத்தமரணத்தை அடைந்தவர்களுக்கும் நித்யம் அக்னிஹோத்ரம்செய்பவர்களுக்கும் உள்ளலோகங்களும் சொல்லப்பட்டன. வேனிற்காலத்தில் பஞ்சாக்னிமத்தியிலிருந்தும் பனிக்காலத்தில் தண்ணீரிலிருந்தும் மழைக்காலத்தில் தரையிற்படுத்தும் தவம்செய்பவரின் தவப்பயனும் சொல்லப்பட்டது. இவ்வுலகத்தில் தேசஸஞ்சாரம்செய்யும் ப்ராம்மணர்களுக்குச்சொல்லியபலனும் அன்

---

[1] (1) ஆத்யாத்மிகம் = தேகத்திலுண்டாகும் பிணிமுதலியன. (2) ஆதிதெய்விகம் = மழை, காற்று, இடிமுதலியன. (3) ஆதிபௌதிகம் = தேள், பாம்புமுதலிய ப்ராணிகளாலுண்டாகும் துன்பமுதலியன.

[2] அன்னஹோமத்தோடுகூடியயாகங்கள்.

ஆதிபர்வம் 559-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

தேவர்க்குக்கொடுப்பது. [5] பித்ருக்களுக்குக்கொடுப்பது.

தர்மங்களில் நிச்சயமுண்டாயிற்று. சிறந்தஞானமுள்ள கௌரவஸ்ரேஷ்டரே! எது பிறப்பு இறப்பு மூப்புகளைப் போக்குகிறதோ அந்தத்தர்மத்தை உமது அநுக்கிரகத்தினால் கேட்கவிரும்புகிறேன். தாபத்தை உண்டாக்கும் வைதரணீநதியும் கத்திகளாயிருக்கும் இலைகளுள்ள அந்த அஸிபத்ரவனமும் நெருப்பினால்கொதித்துக்கொண்டிருக்கும் குண்டங்களும் கத்திமுனையில்நடக்கவேண்டியவழியும் கூர்மையானமுட்களினால் மிக்கபயங்கரமான இருப்புஇலவமாமும் தாய்தந்தையர்களுக்காகவும் ஸ்நேஹிதர்களுக்காகவும் தமக்காகவும் மனிதர்கள் செய்தபாவங்களின் கடினமான பலனாயிருப்பனவென்று வியாஸமஹரிஷிசொன்னார். [1]கும்பிபாகமென்னும்நரகத்தில்தகிக்கப்பட்டும் சூலங்களினால்கதறக்கதறக் குத்தப்பட்டும் ரௌரவமென்னும்நரகத்தில்போடப்பட்டு அடிகளினால்அங்கங்கள் நசுக்கப்பட்டும் கதறக்கதற வெட்டப்பட்டுத் தங்கள்உதிரத்தையே குடித்துக்கொண்டும் கட்டுவதனால் கூவிக்கொண்டும் தண்ணீர்தாகத்தினால் உடம்பெல்லாம் உலர்ந்தும் தழுதழுத்தும் பிரஜ்ஞைதப்பியும் எல்லாத்துயரங்களினாலும் மேற்கொள்ளப்பட்டும் அலறிக்கேட்டுக்கொண்டுமிருக்கும் கோரமனிதர்களிடத்தில் யமனுக்குத் தயையில்லையே! வேதனையினால்கஷ்டப்படுகின்றவர்கள் பத்துத்திசைகளும்நிரம்பும்படியன்றோ கதறுகின்றனர்! ஒருவன் தன்பந்துக்களுடன்சேர்ந்து உலகஇன்பங்களை அநுபவிப்பதற்காகப் பாபங்களைச்செய்கிறான். அவற்றின்கஷ்டமானபயனை எமனுடையவீட்டில் அவ்வொருவனே அநுபவிக்கிறான். மலமூத்திரங்கள் எலும்பில்சேறுகப்பிடித்துக்கொண்டு அனேகஜந்துக்கள் நிரம்பியிருக்கும்கர்ப்பப்பையில் மலமூத்ரம்புழுஇவற்றின் நடுவில்வஸிப்பதாகியகதியை எதனால் ஒருவன் அடையாமலிருப்பன்? கர்ப்பவாஸத்திற்குமேற்பட்டவேறுநரகம ஏற்படுத்தப்படவில்லை. நரகவாஸத்தினால் உண்டாக்கப்பட்டபயன்தான் கர்ப்பவாஸமென்றுசொல்லப்படுகிறது. கர்ப்பத்தினின்றுபிறந்தவன் துயரங்களால் அதிகப்பட்டவனாகிறான். அவனுக்குத் துக்கங்கள்நீங்கவேண்டும்என்னுமான்ச நினைவேறுகிறதில்லை. ஏனெனில், மனிதன்பிறந்தவுடன் மனத்திலும் வாக்கிலும் தேகத்திலும்உள்ளகஷ்டங்கள் அவனுக்கு வந்துசேருகின்றன. பயங்கரமான அந்தத்துன்பங்களினால் நெருக்கப்பட்டு ஸ்வாதீனம் தப்பிப்போகிறான். அந்தத்துன்பங்களினால் தன்வசமில்லாமலே கர்ப்பத்தில்புகுந்து திரும்பவும்ஜனிக்கிறான். மனிதன் ஸ்வதந்த்ரமில்லாமலே முயற்சிக்கிறான்; ஸ்வதந்த்ரமில்லாமலே நடக்கிறான்; ஸ்வதந்த்ர

[1] சாவில்போட்டுவேகவைப்பது.

மில்லாமலே மூப்பினுல் உருமாறிப்போகிறுன்; ஸ்வதந்த்ரமில்லாமலே மூப்பினுல் தேகத்தளர்ச்சியையும் அடைகிறுன். இவ்வாறு மனிதர்களுக்குக் காலநிச்சயமில்லாமல் எக்காலத்திலும் மரணம் வந்தேதீருகிறது. ஒருவன் கர்ப்பத்திலேயே இறக்கிறுன். மற்றொருவன் பிறக்கும்போதே இறக்கிறுன். அநேகர் பிறந்தபின் இறக்கின்றனர். மற்றும்சிலர் யௌவனப்ராயத்திலிறந்துபோகின்றனர். சிலர் நடுவயதில் விழுந்துபோகின்றனர். முதிர்ந்தவன் இறந்தவனேதான். ப்ரம்மதேவனுயிருந்தாலும் ஜன்மத்திற்கஞ்சாதவன் யார்? ஐயா! மரணத்தின்கையில் அடங்கிய என்னைப்போன்றவனுக்குச் சொல்லவேண்டுமா? கௌரவஸ்ரேஷ்டரே! இந்தப்பயம் என்மனத்தில் எப்போதும் புகுந்துகொண்டிருக்கிறது. சிறந்தபுத்தியுள்ளவரே! காலத்தைச்சரீரமாகவுடைய பரமாத்மாவினிடத்தில் எப்போதும் அடங்கியிருந்தும் அவருடையகுணங்களை அறியாதநான் சற்றுநேரமும் ஸுகம்பெறவில்லை. இன்னுஞ்சிலர் பலவகைஉணவுகளினுல் வளர்க்கப்பட்டும் பலவகை உடுப்புக்களினுல்போர்த்தப்பட்டும் சந்தனமுதலியவைகளால் அவயவங்களிலும்பூசப்பட்டும் ரத்னங்களினுலும் முத்துக்களினுலும் அலங்கரிக்கப்பட்டும் பலவகைவாகனங்களிலேறிச்சென்று (யாவராலும்) வசீகரியாகக்கொண்டாடப்படும் யௌவனத்தினுல் ப்ரகாசிக்கும் அழகுள்ளவர்களும் மெதுவாகத்தளர்நடைநடக்கின்றவர்களும் அன்புள்ளவர்களும் மனத்திற்கினியவர்களுமான சிறந்தபெண்களோடு தடையின்றி வெகுகாலம் ரமித்துக்கொண்டிருந்தும் அளவற்ற ஒளியுள்ளதானசரீரத்தையும் உயிரையும் ஸுகானுபவத்தில் ஆசைதீராமலேவிட்டுவிட்டுச் செல்லுகின்றனர். ஸ்வர்க்கத்திலும் அதற்குமேலுலகத்திலுமுள்ளஐச்வர்யம்கூட நிலையற்றதுதான். தேவர்களும் விதிக்குட்பட்டவர்களே. ஆதலால், தேவத்தன்மையையும் யான் விரும்பவில்லை. ஆசைகளுக்கு முடிவில்லை ஆசையற்றவன்தான் நிவ்ருத்திமார்க்கத்தையடைகிறுன். தர்மங்களெல்லாம் உலகங்களைச் சேர்ப்பதற்காகவே உள்ளவையென்பதில் ஸந்தேஹமில்லை. தர்மந்தெரிந்தவரே! அவை [1] ஸஞ்சலுக்குலமானமானவையென்று வ்யாஸ மஹரிஷி சொன்னார். ஆதலால், ஸஞ்சலின்செய்கையில்லாதநேரான வழியிருக்கையில் தெரிந்தவனெவன் கடினமான துக்கமார்க்கத்தில் ஏறுவான்? இவ்வுலகத்தில் எல்லாவற்றிலும் ப்ரியமானதன் ஆத்மாவை ஸஞ்சலுக்குலமானமாக எவன்செய்வான்? ஜங்கமங்களும் ஸ்தாவரங்களுமாயுள்ளஎல்லாஉயிர்களும் இவ்வுலகத்திலிருந்து வேறுலகத்திற்

[1] மேலுங்கீழும் ஆடிக்கொண்டே இருப்பவை.

வையும் ஜனனத்தைத்தருகின்றவையுமான தர்மங்களே மிகுதியாக விளங்குகின்றன. எல்லாக்காரணங்களிலும் மூலப்ரக்ருதிதான் நித்யமென்றுசொல்லப்படுகிறது. இவ்வாறு காரணங்களைசசேர்ந்த தர்மங்கள். மேலானமூலப்ரக்ருதியை ஆஸ்ரயித்திருக்கின்றன. உலகத்தில் காட்சிக்கப்பட்டவற்றையும் அகப்படாதவற்றையும் காண்பிக்கும் ப்ரக்ருதியையே சிறந்ததாக அறிகின்றனர். ஸத்வகுணத்தைத் தலைமையாகவுடைய க்ருதயுகம்முடிந்து திரேதாயுகம்பிறக்கையில் ப்ராம்மணர்கள் விஷயஸுகங்களைவிரும்பும்போது அந்தத்தர்மம் மறைந்தது. கௌரவனே! அரசனே! கலியுகத்தில் கெட்டமார்க்கங்களான தர்மங்கள் தலைப்பட்டபொழுது நல்லதர்மத்தின் நடமாட்டமே ஓய்ந்துபோயிற்று. ப்ரம்மாதிதேவர்களும் எக்காலமும் எவனிடத்தில் பக்திசெய்கின்றனரோ அந்தஉலகருசியும் பற்றில்லாதவனுமாயிருக்கும் புருஷனமட்டும் நித்யனென்றறிய வேண்டும். அவனை நாராயணனென்றும சாசுவதமானபரப்ரம்மமென்றும் அறி. வேந்தனே! சரீரத்தினால் அவனுடையஆராதனமாகிய கர்மத்தைச் செய் மனத்தினால் அவனை த்யானம்செய் வாக்கினாலும் எப்போதும் அவன்நாமத்தைச்சொல். அடையத்தக்கதும் அழியாததும் புனர்ஜன்மமில்லாததுமாகிய அவனுடையஸ்தானத்தையடை. சிறந்தகைகளையுடையவனே! இவ்வாறு விஷ்ணுவைஆஸ்ரயித்தபிறகுதான் ஸம்ஸாரமென்னும் பேய் விடுமென்பதை உனக்குச் சொன்னேன். இன்னும் என்னகேட்க நினைக்கிறாய்" என்றார்.

---

## முப்பத்தெட்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி)

(உலகஸ்ருஷ்டியைப்பற்றி நாரதருக்கும் ஸனத்குமாரருக்கும் ஸம்பாஷணம்.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! பிராணிகள் ஜனனமரணக்கடலில் கஷ்டப்படுகையில் எதையடைந்தபின் கஷ்டத்தை அடையாவோ அதை எனக்குச்சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"இந்தவிஷயத்திலும் ஸாதுக்களானஸனத்குமாரருக்கும் நாரதருக்கும்நடந்த ஸம்பாஷணமாகிய ஒரு பழமையானசரித்ரத்தைக் கூறுகின்றனர். மிகப்புகழ்பெற்றஸனத்குமாரபகவான் ப்ரம்மாவின் புத்ரர். ஸனகர், ஸனந்தனர், ஸநாதனர்என்னும் மூன்றுப்ராம்மநிஷ்

டார்கள் ஸநத்குமாரருக்கு முன்பிறந்தவர்களென்று சொல்லப்படுகின்றனர். அவர்களனைவரும் பிறந்தபோதே ஞானிகளென்றுகேள்வி. அவர்களுள் நாலாமவரானஸநத்குமாரபகவான் யோகசாஸ்த்ரம்தெரிந்தவரில்சிறந்தவரென்று மஹரிஷிகள் கூறுகின்றனர். பெயர்பெற்ற வஸிஷ்டமுனிவர் ப்ரம்மாவின் ஐந்தாவதுபுதல்வரென்று சொல்லப்படுகிறார். திரிசூலம்தரித்தவரும் அறிவிற்கெட்டாத ஸ்வரூபமுள்ளவருமாகிய பகவானானசிவபிரான் ஆறாமவர். அவருக்குப்பின்னிட்ட மரீசிமுதலான இதரமற்றரிஷிகள் அருணனுடையயாகத்தில் ப்ரம்மாவின்மனத்தினால் அக்னியினின்றும்உண்டானவர். மரீசிக்குஇளையவர் ப்ருகு. ப்ருகுவுக்குஇளையவர் அங்கிரஸ். அங்கிரஸுக்குப்பின் பிறந்தவர் அத்ரி. அத்ரிக்குப்பின்பிறந்தவர் புலஸ்தியர். வித்வானும் சிறந்தமஹிமையுள்ளவருமான புலஹர் புலஸ்தியருக்கு இளையவர். அளவிடக்கூடாதமஹிமையுள்ள இவர்கள் பிரம்மாவினிடம்பிறந்தவர்களென்று தெரிந்தவர்களால் சொல்லப்படுகின்றனர். மஹாராஜனே! முதல்ஆசார்யரும் சிறந்தவரும் ஸமர்த்தரும் ஸர்வவ்யாபியும் அளவற்றபெருமையுள்ளவரும் உலகத்துக்குத்தந்தையுமாகிய ப்ரம்மதேவர் இவர்களெல்லாரையும் உண்டுபண்ணினார். இவர்கள் மிருந்தத்வமுள்ளவர்களாய்த் தமதுதவவன்மையினாலேயே தேகங்களோடேயே இறவாமலிருந்தனர். அவர்களுள் ஸனகர்முதலானவர்கள் (தேகம் இந்திரியமுதலிய) எல்லாவற்றையும் அழியச்செய்து தேகமென்னும்பந்தத்திலிருந்துவிடுபட்டுப் பரமபதத்தை அடைந்தனர். மகிமையுள்ளவரும் யோகந்தெரிந்தவருமாகிய ஸனத்குமாரர்மட்டும் யோகத்தைக்கைப்பற்றி அதினாலுண்டானசிறந்தசக்தியினால் மூவுலகங்களிலும் ஸஞ்சரித்துக்கொண்டிருந்தார். அரசர்களிற்சிறந்தஅரசனே! பெரும்புகழ்பெற்றருத்திரர் எட்டுஅங்கங்களும் மிகப்பெருகியயோகசக்தியை அடைந்தார் மற்றவர்கள குறுகியஎட்டங்கங்களுள்ளயோகத்தை அடைந்தனர். அப்பா! ராஜச்ரேஷ்டனே! மரீசிமுதலானவர்களனைவரும் ஸ்ருஷ்டிசெய்வதற்காகவே கட்டளையிடப்பட்டனர். அவர்களின்ஸ்ருஷ்டியை நான் சொல்லுகிறேன்; கேள். இவர்கள் ஏழுபிரம்மாக்களென்று புராணங்களில் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றனர். வேதங்களிலும் [1] கிலஸ்ருதிகளிலும் அவ்வாறே எல்லாரும் சொல்லப்பட்டிருக்கின்றனர். ஸந்தேஹமில்லை. இதிகாஸங்களிலும் புராணங்களிலும் நெடுநாளாக இது சொல்லப்படுகிறது. வேதாந்தங்களில்கரைகண்டப்ராம்மணர்கள் இந்த [2] ஏழுப்ராம்மாக்களையும்

[1] ஸம்ஹிதைகளிற்சேராமல் தனித்திருக்கும்ரிக்குக்கள்.
[2] மரீசிமுதலானவர் அறுவரும் ருத்ரரும்சேர்ந்து எழுவர்.

வரங்கொடுப்பவரென்றுசொல்லுகின்றனர். அப்பா! மஹாராஜனே! ரூபத்தோடும் ரூபமில்லாமலுமிருக்கும் [1]ஏழுகூட்டத்தாராகிய பிதிரு தேவதைகள் மேற்சொன்னஏழுவரின் புத்ரர்களென்றுசொல்லப்படுகின்றனர். அரசர்க்கரசே! தேவர்களும் பிதுருதேவர்களின்புத்ரராகளென்றுகேள்வி. இவ்வுலகங்கள் தேவர்களினாலேயாளப்பட்டிருக்கின்றனவென்று நமக்கெட்டிருக்கின்றோம். அரசனே! க்ருஷ்ணத்வைபாயனர் தேவஸ்தானர் தேவலர் காச்யபர் கௌதமர் கௌண்டின்யர் பாரத்வாஜர் மார்க்கண்டேயர் தேவமதர் என்னும் ரிஷிகளிடத்தும் இதை நான் கேட்டிருக்கின்றேன். அரசர்க்கரசே! என்னுடைய பிதாவும் சிராத்தகாலத்தில் சொல்லியிருக்கிறார். பாரதனே! எல்லாவற்றிற்கும் நீ என்னிடமிருந்து கேட்கிறாயோ அந்தச்சிறந்தரஹஸ்யமும் பரமாத்மாவுக்குப்பிரியமுமான வேதாந்தம் இனிச்சொல்லுவேன். அரசனே! அந்தவிஷயத்தைப்பற்றிச் சந்தேகம் தீர்த்தவர்களான ஸனத்குமாரருக்கும் நாரதருக்கும் நடந்த ஸம்வாதத்தை மனமும்புத்தியும் வேறுஇடத்திற்செல்லாமல் கவனித்துக்கேள். ஸனத்குமாரபகவானைவர் தமதொளியினால் எல்லாவற்றிற்கும்மேலாக விளங்கினர். பேரொளியுள்ள ஸனத்குமாரர் கைக்கட்டைவிரல் அளவான உருவத்தோடு என்றிரிந்துகொண்டிருந்தார். அரசனே! ஒருகால் அம்மஹானுபாவர் மேருமலையின்மேல் ப்ரம்மநிஷ்டரான நாரதமுனிவருடன் சேர்ந்தார். அப்பா! பிரம்மதேவரிடத்தில் உண்மைப்பொருளை ஆராய்ந்துகொண்டிருப்பவரான அவ்விரண்டுபேர்களும் [2]ப்ரம்மஜ்ஞானம் பெறக்கருதினவராய் ப்ரம்மதேவர் ஸமீபத்தில் ஒருவரையொருவர் ஸந்தித்தனர். அரசனே! பகைவரையடக்குகிறவனே! அப்போது புத்திக்கூர்மையும் சாஸ்த்ரஜ்ஞானமுமுள்ளவரும் சரீராத்மஜ்ஞானமுள்ளவரும் உலகமுழுதறிந்தவரும் சிறந்த மஹிமையுள்ளவருமான நாரதமுனி புத்திக்கூர்மையிலும் சாஸ்த்ரஜ்ஞானத்திலும் சரீராத்மஜ்ஞானத்திலும் அறியவேண்டிய விஷயங்களெல்லாவற்றையும் அறிவதிலும் உலகத்தைஅறிவதிலும் மிகச்சிறந்தவரும் வேதப்பொருள்களெல்லாவற்றிலும் சாஸ்த்ரங்களெல்லாவற்றிலும் மிகத்தேர்ந்தவரும் ஸாங்க்யத்தையும் [3]யோகத்தையும் உள்ளங்கைநெல்லிக்கனிபோல் அறிந்தவருமான ஸனத்குமாரபகவானைப்பார்த்து 'ஓ! மஹரிஷியே! அவ்யக்தமென்னப்பட்ட மூலப்ரக்ருதியைச்சார்ந்த [4] இருபத்துமூன்

[1] வஸு, ருத்ர, ஆதித்ய, ஸோம, யம, அங்கிரஸ், அக்னி.

[2] தத்வங்களின்ஞானம். [3] தேகமனப்பயிற்சிஞானம்.

[4] மஹத்; அஹங்காரம்; ஞானேந்த்ரியம் ஐந்து; கர்மேந்த்ரியம் ஐந்து; மனம்; ப்ருதிவி, அப்பு, தேயு, வாயு ஆகாயம்ஆகிய பூதங்கள் ஐந்து; சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்தங்களாகிய தன்மாத்ரைகள் ஐந்து.

றுதத்வங்களின்உற்பத்தியையும் பிரளயத்தையும் தெளிவாகக் கேட்க விரும்புகிறேன். அத்யாத்மம் அதிபூதம் அதிதெய்வமென்னும்விஷயங்களையும் காலத்தின்ஸங்க்யையையும் ஸ்ருஷ்டியையும் இவ்வுலகமெல்லாம் எவனை ஆதாரமாகப்பற்றியிருக்கிறதோ, எவனால் வியாபிக்கப்பட்டிருக்கிறதோ, எவனையடைந்தவர்கள் இவ்வுலகத்துக்குத் திரும்பி வருவதில்லையோ அந்தஸ்ருஷ்டிகர்த்தாவான பரமபுருஷனையும் நீர் சொல்லக்கடவீர்' என்றுகேட்டார். அதற்கு, ஸனத்குமாரர் சொல்லலானார். 'சிறந்தபுத்தியுள்ளவரே! உலகம யாரை ஆதாரமாகப்பற்றியிருக்கிறதோ,' பரமபுருஷனென்று யாரைச சொல்லுகின்றனரோ அந்தநிர்மலனை நாராயணனைப்பற்றிச் சொல்வதைக் கேளும். உலகம் எவனை ஆஸ்ரயித்திருக்கிறதோ அவன்தான் நாராயணனென்பவன். ஸ்ருஷ்டிப்பவனும் சட்டளைபிடுகிறவனும் போஷிப்பவனும் காப்பாற்றுகிறவனும் ஸ்வாமியாயிருப்பவனும அவனே ஆத்மத்யானம்செய்யுமஸந்யாஸிகள் அவனையடைந்து (பிறகு உலகத்திற்குத்) திரும்புவதில்லை. நாரதரே! நீர்கேட்டதற்கு நான்சொல்லக்கூடியது இவ்வளவுதான். இதற்குமேல அவன்தன்மையை நான் அறியேன். அவன் எவ்வளவு; நான் எவ்வளவு. ரிஷிஸிரேஷ்டரே! அவன் முயன்று ஸ்ருஷ்டிப்பதில்லை. இருபத்துமூன்றுதத்வங்களையும் அத்யாத்மம் அதிபூதம் அதிதெய்வம்என்பவைகளையும் காலத்தின்ஸங்கியையையும் (காலத்துக்குத்தக்கபடி) ஸ்ருஷ்டியையும் இவையெல்லாவற்றையும்பற்றி வரிசையாகக்கேளும். ப்ரம்மநிஷ்டர்களும் எப்போதும் ஆத்மவிசாரம்செய்பவர்களுமாகிய ப்ராம்மணர்கள், தமஸ்என்னும் மூலப்ரக்ருதியிலிருந்து உண்டாகுமஸ்ருஷ்டியைத தாமஸஸர்க்கமென்றுசொல்லுகின்றனர். அதற்கு அனேகநாமங்களை அறிஞர் கூறுகின்றனர். அவற்றை உமக்குச் சொல்வேன். அதை நீர் மனஊக்கத்துடன் கேளும. பிரமமரிஷியே! [1] மஹார்ணவம், [2] அர்ணவம், ஜலம், முக்குணங்கள், வேதம், தவம், யாகம், தர்மம, பகவான், விபு, ப்ராணன், ப்ரளயாக்னி, அக்கினி, ஆகாயம், காலமென்னும்இவைகள ஈஸ்வரனுடையசரீரமாகிய ப்ரக்ருதியின்பெயர்கள். ப்ராம்மணஸ்ரேஷ்டரே! இவை சாஸ்த்ரத்தை அனுஸரித்து என்னால் உரைக்கப்பட்டன. (காமக்ரோதமுதலான) மலகங்களைவென்றவரே! தத்வஜ்ஞானமுள்ள ப்ராம்மணர்கள நாலுயுகங்களையும் அனேகமாயிர [3] சதுர்யுகங்களை

[1] பெருங்கடல். [2] கடல்.

[3] நாலுயுகம்சேர்ந்தது ஒருசதுர்யுகம், தேவயுகம் ஆயிரம்சேர்ந்தது ஒருகல்பம்.

யும் ஆயிரம்கல்பங்களையும் காலப்பிரிவுகளாகச்சொல்லுகின்றனர். யோகமும் ஸாங்க்யமுந்தெரிந்தவர்கள் அழிவில்லாதமூலப்ரக்ருதிக்குப் பதினாயிரம்கல்பங்கள் பெரிய [1]ராத்ரியென்றும் அவ்வளவேபகலென்றும் சொல்லுகின்றனர். ராத்ரியில் தூங்கியிருந்தபகவான் ராத்ரியின் முடிவில் விழித்துக்கொண்டார். விழித்துக்கொண்டபிறகு [2]ஜலத்தை ஸ்ருஷ்டித்தார். அந்தஜலத்தில் தமது [3]வீர்யத்தை விட்டார். அது பொன்மயமான [4]அண்டமாயிற்று. எல்லாவற்றிற்கும்ஆத்மாவும் ஸ்வாமியுமானஈஸ்வரர் பிறகு, 'நானே இவர்' என்றுசொல்லி அவ்வண்டத்தில் ஹிரண்யகர்ப்பரென்னப்பட்ட ரிஷிபர்னப்ரம்மாவை முட்டைக்குள்ளிருக்கும்ஜலத்தைப்போலப் படைத்தார். நடந்தது நடக்கிறது இனிநடப்பது ஆகியஎல்லாவற்றிற்கும்கர்த்தாவும் குற்றமற்றவரும் பெரியசக்தியுள்ளவரும் உலகத்துக்கு ஸுகத்தைஉண்டுபண்ணுகிறவரும் ஸ்வயம்புவும் [5]அணிமா [6]லகிமா [7]ப்ராப்தி [8]ஈசித்வமுள்ளவரும் ஒளியுள்ளவருமான நான் என்றுசொல்லப்படும் மஹாத்மாவானப்ரம்மதேவரைத் தேகமுள்ளவராகப் படைத்தார். பெரும்புகழுள்ளபகவான் இதுவரையில்படைத்து அந்தர்த்தானமானார். இந்தப்ரம்மதேவருக்கு ஆயிரமகல்பங்கள் இரவென்றும் அவ்வளவே பகலென்றும் வேதங்களிலும் வேதாங்கங்களிலும் கரைகண்டவர் சொல்லுகின்றனர். அந்தக்தமஸ்என்னும் மூலப்ரக்ருதியிலிருந்த ப்ரம்மதேவர் முறையே ஸ்ருஷ்டியைச் செய்யலானார். அவர் அகமென்று சொல்லி [9]அகங்காரமென்றபெயருள்ள சாஸ்வதரானபரமேஷ்டியென்னும் ப்ரம்மாவைப் படைத்தார். அகமென்னப்பட்ட அகங்காரத்தினால் உலகங்கள் வ்யாபிக்கப்பட்டன. அகங்காரம்பிரவேசிப்பதினாலேதான் பிராணிகள் பிரக்ருதியென்னும்கடலில் மூழ்குகின்றன. தேவர்களும் ரிஷிகளும் தானவர்களும் மனிதர்களும் யக்ஷர்களும் கந்தர்வர்களும் கின்னரர்களும் மேலுங்கீழுமாகவும் குறுக்காகவும் மூழ்கிக் கிளம்புகின்றனர். மூன்றாவதுஸ்ருஷ்டிசெய்த இந்தப்ரம்மதேவருக்கும்

---

[1] ராத்திரியென்பது ப்ரளயம்; பகலென்பது ஸ்ருஷ்டி.

[2] முக்குணங்களையும் மாறச்செய்தாரென்பது கருத்து.

[3] சேதனசக்தியை. [4] முட்டை.

[5] அணுவாதல். [6] இலேசாதல். [7] நினைத்தஇடத்தைச்சேருவது. [8] தாம் நினைத்தபடி எல்லாவற்றையுமடக்கிவைத்து ஒன்றைக்கூடியதனால் முறையே இவற்றிற்கு எதிரான மஹிமாவும் கரிமாவும் ப்ராகாம்யமும் வசித்வமும் கொள்ளப்படும்.

[9] மூலப்ரக்ருதியிலிருந்துவந்த அந்த ப்ரம்மா மஹத்; அவரிடமிருந்து வந்தவர் அகங்காரமென்றறிக.

மூவாயிரங்கல்பங்கள் இரவென்றும் அவ்வளவேபகலென்றும் சொல்லுகின்றனர். அகங்காரம் பூமி, ஜலம், தேயு, வாயு, ஆகாயமென்னும் ஐந்துமஹாபூதங்களையும் அவற்றின்குணங்களென்று ப்ராம்மணர்கள் சொல்லும், சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்தங்களென்னும் ஐந்துபூதகுணங்களையும் படைத்தார். இவ்வைந்துகுணங்களிலும் பற்றுள்ளவர்கள் ப்ரக்ருதியென்னும் உடலில் அகப்பட்டு ஸ்வாதீனந்தப்பினவர்களாகிச் சேற்றில்புதைந்த யானைகளைப்போலக் கரையேறுவதில்லை. மேற்சொன்ன பூதஸ்ருஷ்டியாகிய நான்காவதுஸ்ருஷ்டியைச்செய்த அகங்காரத்துக்கு இரண்டாயிரஞ்சதுர்யுகங்கள் பகல்; அவ்வளவே இரவு. இதுதான் [1] அனந்தமென்னும்பெயர்பெற்ற ஐந்தாவதுஸ்ருஷ்டியென்றுசொல்லப்படுகிறது. ஐயா! வேதத்திற்சொல்லியபடி [2] பத்துஇந்திரியங்களும் பதினோராவதுமனமும் இவ்வுலகமனைத்தும் படைக்கப்பட்டன. மற்றப்பூதங்கள் மனத்தைப்போல வலிமையுடையவல்ல. [3] இதிலிருந்துண்டானது ஆறாவதுஸ்ருஷ்டியென்று ப்ராம்மணர்கள் சொல்லுகின்றனர். இதற்குஆயிரஞ்சதுர்யுகம் பகல்; இரவும் அவ்வளவே. [4] ஊர்த்வஸ்ரோதஸ்ஸென்பது ப்ரம்மாவின் ஏழாவதுஸ்ருஷ்டியென்று அறிகின்றனர். [5] அதஸ்ரோதஸ் எட்டாவதென்றும் [6] திர்யக் ஒன்பதாவதுஸ்ருஷ்டியென்றும் சொல்லப்படுகின்றன. குற்றமற்றமஹரிஷியே! இவ்வொன்பதுஸ்ருஷ்டிகளும் [7] இருபத்துநான்குதத்வங்களாக எண்ணப்பட்டிருக்கின்றன. மஹரிஷியே! அழிவற்றவரும் ப்ரக்ருதிக்கும் மூலப்ரக்ருதிக்கும் ஆதாரமும் பரப்புமானநாராயணர் இவையனைத்துக்கும் ஆதிகாரணமென்று முன்னமே சொன்னேன். இனிஇவ்வெவற்றிற்கு மேலுள்ள ஈச்வரனென்பதையும் அத்யாத்மம் அதிபூதம் அதிதைவமென்னுமிவற்றையும்பற்றி நான் கேட்டும் கண்டுமுள்ளபடி ஸரியாகச்சொல்வேன். அதை என்னிடம் தெரிந்துகொள்ளும்.

[1] அளவில்லாதது.

[2] கண், காது, நா, மூக்கு, உணர்ச்சி ஆகிய ஐந்துஞானேந்த்ரியங்கள்; வாக்கு, கை, கால், பாயு (ஜலமலங்களைவிடுவது,) உபஸ்தம், (வீர்யத்தைவிடுவது) ஆகிய ஐந்துகர்மேந்திரியங்கள்

[3] விருப்புவெறுப்புமுதலியவை

[4] மேலாகநிற்கும்மானிடர் தேவர்முதலியவர்கள்.

[5] கீழ்நோக்கிச்செல்லும்செடிமுதலியவை.

[6] குறுக்காயிருக்கும் பசுபக்ஷிமுதலியன

[7] பூதங்கள்ஐந்து, குணங்கள்ஐந்து, ஞானேந்திரியங்கள்ஐந்து, கர்மேந்திரியங்கள்ஐந்து, மனம்ஒன்று, அஹங்காரம்ஒன்று, மஹத்ஒன்று, பிரக்ருதிஒன்று.

## முப்பத்தொன்பதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

- ✦ -

(அத்யாத்மம் அதிபூதம் அதிதெய்வம் என்பவற்றை விவரிப்பது.)

அதஸ்ரோதஸ் திர்யக்ஸ்ரோதஸ் இவ்விரண்டிற்கும் ஊர்த்வ ஸ்ரோதஸ்ஸென்னும்ஸ்ருஷ்டியே [1]ஸம்வாஹமென்றறியத்தக்கது. கர்மேந்திரியங்களைந்துக்கும் புத்தி ஸம்வாஹம்; ஞானேந்திரியங்களைந்துக்கும் மனம் ஸம்வாஹமென்று சொல்லப்படுகிறது. மனத்திற்குச் சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்தங்களென்னும் ஐந்துகுணங்களான பஞ்சபூதங்கள் ஸம்வாஹமென்றுசொல்லுகின்றனர். உயர்ந்தஸ்தானத்திலிருப்பவராகிய ப்ரம்மதேவர் எல்லாப்ராணிகளுக்கும் ஸம்வாஹரென்றறியவேண்டும். இவ்வுலகதர்மங்களிலும் இவைகளிற்கும்மேற்பட்ட தர்மங்களிலும் நீர் ஸமர்த்தரன்றோ? ஸம்வாஹமென்னும்ப்ரம்மதேவனுக்குப் பகலின்முடிவில் பிரளயகாலாக்னியானது ஜ்வாலைகளினால் உலகத்தைஎரித்துவிடுகிறது. அதனால் ஸ்தாவரங்களும ஜங்கமங்களுமாகிய எல்லாப்பொருள்களும் பஞ்சபூதங்களும் எரிக்கப்பட்டுத் தமதம்காரணங்களில சேர்ப்பிக்கப்படுகின்றன. பூமியானது அப்போது பிரளயகாலாக்னியினால் தர்ப்பங்களும் முட்களும மரம்செடிகளும் புற்பூண்டுகளும்எரிக்கப்பட்டு ஆமைமுதுகுபோலாகிறது. ஜங்கமங்களுந் ஸ்தாவரங்களும் பூமியில் லயித்தபிறகு பூமியும் பிரளயமாகிறது. பிறகு, கந்ததன்மாத்திரையழிந்து நுண்ணியதாகிப் பூமி ஜலமாகவேஆகிறது. பிறகு, ஸூர்யனுடையகிரணங்களினாலே ஜலமும் குடிக்கப்படுகிறது. ப்ராம்மணோத்தமரே! அப்போது ஜலத்தின்ஸாரமாகிய ரஸதன்மாத்திரையும் ஸூர்யனிடத்தில் லயமாகிறது. பிறகு, ஆகாயத்திலுள்ளபிராணிகளை அவ்வனல் எரிக்கிறது. அப்போது ஆகாயமே அனலாயிருக்கிறதென்றுசொல்லுகின்றனர் அவ்வாறுஜ்வலிக்கும்அக்னியைப் பலமும் வேகமும்மிகுதியாயுள்ளகாற்றானது மிகுந்ததனதுபலத்தினால் அழித்துவிடுகிறது. அந்தக்காற்றை ஸூர்யன் இழுத்துக்கொள்ளுகிறான். வாயுவின்குணமான ஸ்பரிசதன்மாத்திரையை ஆகாயம் விழுங்கிவிடுகிறது. அப்போது காற்றுஅடங்கிப்போகிறது. ஆகாயமட்டும் சப்தத்துடன் நிற்கிறது. அப்பொழுது, ஆகாயத்தினுடைய அந்தச்சப்ததன்மாத்திரையை மனம் வாங்கிக்கொள்ளுகிறது. அந்தஆகாயம் சப்தமென்னுங்குணம்போய் உருவமட்டும்நிற்கிறது. ஐயா! பிறகு, திசை

---

[1] இங்கு, நடத்துவது என்பதுபொருள்.

உருவமாயிருக்கும் ஆகாயத்தையும் மனமானது புசித்துவிடுகிறது. ஆகாயரூபமழிந்து [1]ஸங்கல்பமாகியரூபம் விருத்தியாயிருக்கிறது. [2]சித்தமானது தனது சக்தியினால் ஸங்கல்பரூபத்தை இழுத்துக்கொள்ளுகிறது. முனிச்ரேஷ்டரே! பிறகு அகங்காரம் சித்தத்தை விழுங்கிவிடுகிறது. சித்தம்போனபிறகு அகங்காரம் மஹத்தாகிறது. பிரஜைகளைப்படைக்கும் மஹத்தென்னும் பிரம்மதேவர் அவ்வகங்காரத்தை இழுத்துக்கொள்ளுகிறார். அகங்காரம்கெட்டபிறகு மஹத்தென்று சொல்லப்படும் பிரம்மதேவர் விளங்குகிறார். மூன்றுலோகங்களிலும் மூன்றுமூர்த்திகளிலும் முதன்முதலாக உண்டானவரும் கடினமும் த்ரவமுமாயிருப்பதும் மூவகைக்குணமாகவுடையதுமான இவ்வுலகமனைத்தையும் படைத்தவருமான பிரம்மதேவர் வ்யக்தம் அவ்யக்தமென்னும் காரியகாரணங்களனைத்தையும் விழுங்கிவிடுகிறாரென்பது நிச்சயம். அழிவில்லாதப்ரக்ருதிக்கு இதுதான் பிரளயம். இதை நான் உமக்குச்சொன்னேன். [3]அத்யாத்மம் [4]அதிபூதம் [5]அதிதெய்வங்களைப்பற்றியும் சொல்லுகிறேன். ஆகாயம் முதலாவதுபூதம்; ச்ரோத்ரேந்திரியம் (செவி) அதன் அத்யாத்மம்; சப்தம் அதிபூதம்; திசைகள் அதிதெய்வதம். வாயு இரண்டாவதுபூதம்; [6]த்வகிந்திரியம் அத்யாத்மம்; ஸ்பரிசம் அதிபூதம்; வித்யுத் (மின்னல்) அதிதெய்வதம். தேஜஸ் மூன்றாம்பூதம்; [7]சக்ஷுரிந்த்ரியம் அத்யாத்மம்; ரூபம் (நிறம்) அதிபூதம்; ஸூர்யன் அதிதெய்வதம். அப்பு நான்காம்பூதம்; ரஸனேந்த்ரியம் (நா) அத்யாத்மம்; ரஸம் (ருசி) அதிபூதம்; வருணன் அதிதெய்வதம். பூமி ஐந்தாம்பூதம்; க்ராணேந்த்ரியம் (மூக்கு) அத்யாத்மம்; கந்தம் அதிபூதம்; [8]வாயு அதிதெய்வதம். ஐந்துபூதங்கள் அவற்றின் அத்யாத்மம் அதிபூதம் அதிதெய்வதமென்னும் இந்த நான்கையும் சொன்னோம். இனி இந்த்ரியங்களையும் அவற்றின் அத்யாத்மம் அதிபூதம் அதிதெய்வதங்களையும் சொல்வோம். பாதம் அத்யாத்மம்; செல்லுமிடம் அதிபூதம்; விஷ்ணு அதிதெய்வதம். கை அத்யாத்மம்; செய்யப்படும்தொழில் அதிபூதம்; இந்த்ரன் அதிதெய்வதம். பாயு அத்யாத்மம்; (ஜலமலங்களைவிடுவது) அதிபூதம்; மித்ரன் அதிதெய்வதம். உபஸ்தம் அத்யாத்மம்; ஆனந்தம் அதி

[1] எண்ணம். [2] ஸங்கல்பத்திற்கு ஆதாரம்.

[3] ஞானத்திற் குரியது. [4] இந்த்ரியம்; அந்த அந்த இந்த்ரியங்களுக்கு விஷயமாகிய சப்தமுதலிய குணங்கள். [5] அவ்வவற்றிற்கு அதிஷ்டானதேவதை.

[6] உணரும்இந்த்ரியம். [7] கண்

[8] முன்சொன்னவாயு பூதம்; இங்கு வாயு தேவதை.

பூதம்; [1]பிரஜாபதி அதிதெய்வதம். வாக்கு அத்யாத்மம்; பேசுஞ் சொல் அதிபூதம்; அக்னி அதிதெய்வதம். மனம் அத்யாத்மம்; நினைப்பது அதிபூதம்; சந்திரன் அதிதெய்வதம். [2]அகங்காரம் அத்யாத்மம்; [3]அபிமானம் அதிபூதம்; [4]விரிஞ்சன் அதிதெய்வதம். புத்தி அத்யாத்மம்; நிச்சயம் அதிபூதம், ப்ரமமா அதிதெய்வதம். [5]இவ்வாறு அரூபியானபகவான் எல்லாவற்றையும் ஒரேகாலத்தில் படைக்கவும் ஒரேகாலத்தில் அழிக்கவும்செய்கிறார். எனெனில், [6]விளையாட்டுக்காக. ஸூர்யன் கன்ன கிரணங்களை விரிப்பதும் சுருக்குவதும் போல அரூபியானபகவான் நுணங்கொன்னைப்படும் விகாரப்பொருள்களைப் படைப்பதும அழிப்பதும ஸமுத்ரத்திலிருந்து அலைகள் எழும்புவதும அமுங்குவதும காற்றினால் மின்னலோடும முழக்கத்தோடும் மேகம ஆகாயத்தில் விளம்புவதும அவ்விடத்திலேயேமறைவதும் ஆமையானது தன்அங்கங்களை விருமபியபடிநீட்டுவதும் திரும்பஇழுத்துக்கொள்வதும் எப்படியோ அப்படியே அரூபியானபகவான் (ஸத்வம ரஜஸ் தமஸ்என்னும் குணங்களின் பரிணமங்களான) உலகங்களை வெளிப்படுத்துவதும் உள்ளடக்குவதும். இப்படி இருபத்தைந்தாம்தத்வமாகியபகவான் சேதனரும் பரிசுத்தருமாகஇருப்பவர். பிரகிருதியானது அவரோடுஸம்பந்தப்படுவதனால் உணருகிறது. யாருக்கும்புலப்படாதபகவான் கிரியைசெய்யும்போதும் செய்யாமலிருக்கும்போதும் பிரகிருதியும்அவரைப்போலவே எப்போதுமிருக்கிறது. (அவர் கிரியைசெய்தால தானுமசெய்கிறது; செய்யாவிட்டால் செய்யாமலிருக்கிறதென்பது.) முப்பத்தைந்தாவது க்ஷேத்ரமாகிய பிரகிருதியை அறிந்திருப்பவருமாகிய நாராயணரென்னும் பெயருள்ளபுருஷர்தாம் இயற்கையாக கிரியைகள்செய்பவர்' என்றார். அரசனே! ஞானியான ஸநத்குமாரரால இந்தவிஷயம் இவ்வாறு நாரதருக்குச் சொல்லப்பட்டது. பராம்மணன் இதைக்கேட்பதனால் எல்லாயாகங்களின்பயன்களையும அடைவான்," என்று பீஷ்மர் சொன்னார்.

[1] பரம்மாவின் பெயா ஒருதேவதைக்கே பெயர்களால் அதிகாரவேறுபாடுண்டு என்பது இந்த்ரன் மஹேந்தரன்என்னும்பெயர்களைபபற்றி மீமாம்ஸையில் காணலாம்

[2] மகத்திலிருந்துண்டானது

[3] நானென்கிறஎண்ணம் [4] பரமமாவின்பெயர்.

[5] கண்காதுமுதலிய ஐமபுலன்களையும பூதங்களிற்சொல்லியிருபபதனால் அலைவ இங்கே கூறப்படவில்லை அவற்றிற்கும் இவ்வாறே ஊகித்துக் கொள்ளலாம் [6] யாதொருபிரயோஜனத்தையும்கருதாமல்.

## நாற்பதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(பிரம்மதேவர் நாராயணரைப்பற்றித் தேவர்களுக்குச்சொல்லியகதையில், கருடர்க்கும் கசியபருக்கும் ஸம்பாஷணை.)

யுதிஷ்டிரர், "மிகதெரிந்தகௌரவசிரேஷ்டரே! பிதாமகரே! த்ரேதாக்னிகளைத் தம்தேகத்திலேயே ஆவாஹனம்செய்து தவத்தையும் [1]ஜபயஜ்ஞத்தையும் [2]மானஸயாகத்தையும் வெளியாகங்களையும் செய்துகொண்டும் அக்னிக்குமேற்பட்டதில்லையென்னும் உறுதியான எண்ணத்தோடிருக்கும்ப்ராம்மணர்கள் அடையும்கதியாது? அவர்கள் என்னகருத்துள்ளவர்களென்பதை உம்மிடத்தில் தெளிவாகக் கேட்கவிரும்புகிறேன்" என்றுகேட்க, பீஷ்மர்சொல்லலானார்.

"பாரதனே! இந்தவிஷயத்தில விஷ்ணுவுக்கும் கருடருக்கும் நடந்தஸம்பாஷணமாகிய ஒருபழையசரித்ரத்தை உனக்குச் சொல்லுவேன். அமிர்தமஉண்டானபோது ஆறுபதினாயிரம்வருஷகாலம்தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் தேவாஸுரயுத்தமென்னும் சண்டை நடந்தது. அந்தயுத்தத்தில் தேவர்கள் மிகக்கொடியவர்களான அஸுரர்களால்கொல்லப்பட்டனர். அஸுரஸ்ரேஷ்டர்களால்கொலைப்பட்ட தேவர்களைக்காப்பவர் யாருமில்லை. பயமடைந்ததேவர்கள் அஸுரர்களால் கொல்லப்படும்போது காப்பவனைத்தேடித் தேவஸ்ரேஷ்டர்களுக்குமீஸ்வரரும் மிகத்தெரிந்தவருமான ப்ரம்மதேவரை அடைந்தனர். ப்ரம்மாவானவர் அந்தத்தேவர்களைக்கண்டு ஐம்பொறிகளும் மனமும்கலங்கி அவர்களுடன்கூடப் பகவானான விஷ்ணுவைச் சரணமாகஅடைந்தார். அரசனே! அப்போது தேவர்களோடுகூடிய ப்ரம்மாவானவர் குற்றமற்றவரானநாராயணரைக் கைகூப்பித் துதிக்கலானார். 'பக்தர்களிடம்அன்புள்ளவரே! தாமரைக்கண்ணரே! தலைமையானஈஸ்வரரே! பாவங்களையொழிப்பவரே! பரமாத்மாவே! விகாரமற்றவரே! நாராயணரே! உம்முடையஉருவத்தை த்யானிப்பதனாலும் உம்முடையநாமங்களை நினைப்பதனாலும் உம்மை ஆராதிப்பதனாலும் உம்மைப்பற்றிய தவம்த்யானம் முதலியவற்றைச் செய்வதனாலும் ஞானிகள் மோக்ஷத்தை அடைகின்றனர். இப்போது உம்மை நமஸ்கரிக்கிறோம். எல்லாஉலகங்களுக்கும் முதற்பொருளே! எல்லா

---

[1] மந்த்ரஜபம்செய்வது. [2] கடவுளைமனதால்தியானித்து வழிபடுதலையே அக்னியில்ஹோமஞ்செய்வதாகக்கொள்வது.

வற்றிற்கும் அந்தர்யாமியே! அறிவுக்குமெட்டாத மஹிமைபொருந்திய வரே! நடந்தவை நடக்கப்போகின்றவையெல்லாவற்றிற்குமீஸ்வரரே! எல்லாப்ராணிகளுக்கும் முக்கியமாயுள்ளநாதரே! உமக்கு நமஸ்காரம். நீர் தேவர்களுக்குந்தேவர்; எல்லாஉபாஸனைகளுக்கும் முக்யமான விஷயம் உலகத்தின்விருத்திக்கும் சேதமிடமும் உலகத்திற்குமேற்பட்டவருமாயிருக்கிறீர் வீரரே! ஜயிப்பவரிற்சிறந்தவரே! அஸுரர் முதலானவர்களால் மிகவும் துன்பப்படுத்தப்பட்டதேவர்களையும் உலகங்களையும் உலகபாலகர்களையும் ரிஷிகளையும் காப்பாற்றக்கடவீர் ஆறு அங்கங்களோடும் உபநிஷத்துகளோடும் ரஹஸ்யமென்னப்பட்ட தியானமார்க்கங்களோடும் இதிஹாஸபுராணங்களோடும் ஓங்காரத்தோடும் [1] வஷட்காரத்தோடுங்கூடின வேதங்கள் உம்மையே உத்தமமானயஜ்ஞமென்றுகூறுகின்றன. நீர் பவித்ரங்களுக்கும் பவித்ரம்; மங்களங்களுக்கும் மங்களம். நீரே தவஞ்செய்பவருக்குத் தவம்; தேவர்களுக்குந்தேவதை' என்னும் இது முதலான ஸ்தோத்திரங்களினாலும் [2] ரிக் ஸாமம் யஜுஸ் என்னும் வேதங்களினாலும் தேவர்களும் ப்ரம்மரிஷிகளும் எல்லோருஞ்சேர்ந்து விஷ்ணுவைத் துதித்தனர். அப்போது ஆகாயத்தில், 'நீங்கள் என்னுடன்கூடவே அஸுரர்களை யுத்தத்தில் வெல்லப்போகிறீர்கள்' என்னும் வாக்யானது மேக கர்ஜனைபோலக் கம்பீரமான குரலோடு உண்டாயிற்று பிறகு தேவர்களும் தானவர்களும் யுத்தஞ்செய்துகொண்டிருக்கையில் சார்ங்கம் சக்கரம் கதைகளேந்திப் பேரொளியோடுகூடியபகவான் கருடன்மேலேறித் தந்தேஜஸினால்பிறரையெரிப்பவர்போல அங்கே தோன்றினார்; தமதுசிறந்தகைகளின் வன்மையினால் அஸுரர்களனைவரையும் வதிவிட்டார். மஹாராஜனே! தைத்யர்கள் தானவர்களில்முதன்மையானவர்கள் அவரை யுத்தத்தில் நெருங்கினவுடன் தீயையண்டின விட்டிற்பூச்சிகள்போல அழிந்தனர். பேரறிவுள்ள அந்தப்பகவான் அஸுரதானவரனைவரையும் ஜயித்தபிறகு தேவர்கள்பார்த்திருக்கும்போதே அங்கேயே மறைந்தார். அளவற்றமஹிமையுள்ள அந்த விஷ்ணு அந்தர்த்தானமானதைக்கண்டு ஆச்சர்யத்தினால்கண்களை மலர்ந்ததேவர்கள் ப்ரம்மதேவரைநோக்கி, 'பகவானே! எல்லாஉலகங்களுக்குமீஸ்வரரே! பிதாமஹரே! இது மிக்கஆச்சர்யமாக நடந்திருக்கிறது. இதை எங்களுக்குச் சொல்லக்கடவீர். பிரபுவே! இந்தத் தேவாஸுரயுத்தத்தில் நாம் யாரால் காப்பாற்றப்பட்டோமோ அவர்

[1] ஹோமஞ்செய்யும்மந்த்ரம்.

[2] அதர்வணவேதம் ரிக்கில் சேர்ந்ததாகக்கருத்து.

எங்கே? அவர் உண்மையில் யார்? நம்மைக்காப்பாற்றிவிட்டுப் பேசாமலே வந்தபடி திரும்பிச்சென்ற திவ்யரூபமுள்ளவர் யார்? அவரை நாங்கள் அறிந்துகொள்ளவிரும்புகிறோம். எங்களுக்குச்சொல்லக் கடவீர்' என்றுகேட்டனர். ராஜனே! தேவர்களெல்லாராலும் இவ்வாறுகேட்கப்பட்டவரும் சொல்லும்பொருளுமுணர்ந்தவருமாகிய ப்ரம்மதேவர் பத்மநாபரது ஆதிஸ்வரூபத்தைப்பற்றிச் சொல்லலானார்.

'உலகங்களுக்கெல்லாமீச்வரரும் குணங்களற்றவரும் குணங்களுள்ளவரிற்சிறந்தவருமாய் அந்தர்யாமியுமான அந்தப்பகவானை உலகம் ஸரியாக அறியத்திறமையில்லாதது. தேவர்களே! அந்தவிஷயத்தில் கருடருக்கும் ரிஷிகளுக்கும்நடந்த ஸம்பாஷணையாகிய ஒருபழமையான இதிஹாஸத்தை உங்களுக்குச் சொல்வேன். முற்காலத்தில் இமயமலையின்மேலே ப்ரம்மரிஷிகளும் ஸித்தர்களும் ஸர்வேச்வரனைப் பற்றிப் பலவிதமானஸம்பாஷணையைச் செய்துகொண்டிருந்தனர். அவர்கள்பேசிக்கொண்டிருக்கும்பேச்சு முடியும்போது சக்ரத்தையும் கதையையும்வகித்த திருமாலின் வாஹனமும் சிறந்தமஹிமையுள்ளவருமான பக்ஷிராஜர் அங்கே வந்தார். மஹாபராக்ரமசாலியும் மிக்க பலசாலியும் மிகுந்தஒளியுள்ளவரும் வேகமுள்ளவரிற்சிறந்தவருமான அந்தவைனதேயர் இறங்கி அம்மஹரிஷிகளிடம்சென்று அவர்களால் நல்வரவுவிசாரித்துப் பூஜிக்கப்பெற்று அடக்கத்துடன்தலைவணங்கிப் பூமியில் உட்கார்ந்தார். உட்கார்ந்திருக்கும் பெரியதேஜஸுள்ள அம்மஹாத்மாவானவைனதேயரைச் சிறந்ததவமுள்ள மஹாத்மாக்களானரிஷிகள், 'வைனதேயரே! எங்கள்மனத்தில் தெரிந்துகொள்ளவேண்டியஆசை அதிகமாயிருக்கிறது. நாகங்களைப்புஜிப்பவரே! அதற்குச்சொல்லத்தக்கவர் உம்மைவிடவேறுயாருமில்லை. அந்தச்சிறந்தகேள்விக்கு இப்போது நீர் மறுமொழிசொல்வதை விரும்புகிறோம்' என்று இந்தக்கேள்வியைக் கேட்டனர்.' இவ்வாறுகேட்கப்பட்டகருடர் கைகூப்பிக்கொண்டு, 'ப்ரம்மரிஷிகளிற்சிறந்தவர்களே! நீங்கள் பொறுமையின்றி அன்புடன் என்னிடம்கேட்கவேண்டியதைக்கேட்கவிரும்புவதனால் நான் தன்யனாய் அனுக்ரஹிக்கப்பெற்றவனுமாகிறேன். பேசுகிறவரிற்சிறந்தவரே! நான் சொல்லவேண்டியதும் செய்யவேண்டியதும் என்ன? சொல்லுங்கள். நீங்கள் உங்கள் உசிதப்படி எல்லாவற்றையும் என்னைக்கேட்பதற்கு உரியவர்கள்' என்று மறுமொழிசொன்னார். பிறகு, அங்கே அந்தரிஷிச்ரேஷ்டர்கள் அநந்தரான விஷ்ணுவுக்கு நமஸ்காரஞ்செய்து மகாபலசாலியான வைனதேயரைக் கேட்கத்தொடங்கினர். 'தேவர்க்குந்தேவரும்

மஹாத்மாவும் குற்றமற்றவரும் வேண்டினவற்றைக்கொடுப்பவரு மான நாராயணனை நீர் ஸேவிக்கிறீர். அவர் எங்கிருப்பவர்? உண் மையில் எப்படிப்பட்டவர்? அவருக்குக் காரணமும் கார்யமும் எப் படிப்பட்டன? இருப்பிடம் யாது? அந்தப்பகவான் எங்கேதான் நிலையாயிருப்பவர்? இதைப்பற்றி உம்மிடம் கேட்கிறோம். அந்தப் பகவான் பக்தர்களுக்கு அன்பர். அவருக்குப் பக்தர்கள் அன்பர்கள். நீர் அவருக்கு அன்பரும் பக்தருமானவர். கஸ்யபகுமாரரே! வேறு யாரும் உம்மைப்போலில்லை. மனதையும் கண்களையும்பறிப்பவர் போலக் காணக்கூடாததிருமேனியுடையவரும் முதலிடைகடையற் றவருமாகிய அந்தப்பிரபு எங்கிருப்பவரென்று நாங்கள் அறியோம். தாமொருவரே உண்மைப்பொருளும் எங்கும்நிறைந்தவரும் காலவரை யறையும் விகாரமுமற்றவரும் எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியுமாக அந்தப்பகவான் வேதங்களிலும் சொல்லப்படுகிறார். ஆயினும், தெளி வாக நாங்கள் அறியவில்லை. ஐயா! நிலம் நீர் தேயு வாயு ஆகாயம் இவ்வைந்துபூதங்களும் அவற்றின்குணங்களைந்தும் உற்பத்தியும் நாச மும் ஸத்வரஜஸ்தமோகுணங்களும் அந்தக்குணங்களின் பரிணாமங் களாகியபொருள்களும் மனமும் புத்தியும் சக்தியும் புத்தியினாலறி யப்பட்டவைக்ஷ்மவிஷயங்களும் அவரிடத்திலிருந்தல்லவோ உண்டா கின்றன? அந்தப்பிரபு அவற்றினுள்ளிருக்கிறார். அறிவினால் பலவகை களாக ஆராய்ந்து பார்த்தும் அந்தப்பகவானுடையபரஸ்வரூபத்தைத் தெளிவாக நாங்கள் அறியவில்லை. அதை எங்களுக்கு உள்ளபடி சொல்லக்கடவீர். இந்தஒரு பெரியகேள்வியைமட்டுந்தான் நாங்கள் தெரிந்துகொள்ள விருப்பத்துடன் இவ்வாறு உம்மைக் கேட்கிறோம். அதை எமக்குச் சொல்லக்கடவீர்' என்றனர். அதற்குக் கருடர் சொல்லலானார்.

'பகவானனவர் நமக்குத்தெரியாமல் அவருக்குமட்டும் தெரிந்த ஏதோஒருகாரணத்தினால் மூவுலகங்களையுங்காப்பதற்காக ஸ்தூலரூ பத்தைஎடுத்துக்கொண்டு காட்சிக்குஅகப்படுகிறார். ஸ்ரீவத்ஸமென் னுமடையாளமுள்ளவரும் எக்காலமும்இருப்பவருமான அந்தப்பக வானிடத்தில் முன்னர்யான்கண்ட ஒருபெரியஆச்சர்யத்தை முற்றி லும் கேளுங்கள். அவரைஅறிவதற்கு எவ்வகையிலும் என்னாலும் முடியாது; உங்களாலும் முடியாது. அந்தப்பகவான்எனக்குச்சொன் னதை அப்படியேசொல்லுகிறேன்; நீங்கள் கேளுங்கள். ரிஷிகளுட் சிறந்தவர்களே! தேவர்கள்பாற்கடலில் அமிருதத்தைக்காத் திருந்தகாவலாளிகளைஓட்டி அந்தயந்திரத்தையுமுடைத்து யுத்தத்

தில் இந்திராதிதேவர்களையும் மருத்... செய்து மலைகளைப்பெயர்த்துக் கடலைக்கலக்கி விரைவில் அமிருதம்கொண்டு வந்தேன். அந்தவென்பராக்ரமத்தைப்பார்த்து அசரீரவாணி, 'ஓ! வைனதேயனே! நல்லவுறுதியுள்ளவனே! உனதுஇந்தச்செய்கையினால் ஸந்தோஷமடைந்தேன். என்சொல் உனக்குவீணாகலாகாது. நான் உனக்கு என்னசெய்யக்கடவேன்? சொல்' என்றுசொல்லிற்று. இவ்வாறுசொல்லும் அந்தவாக்குக்கு நான், 'நீயார் என்று தெரிந்துகொள்ளவிரும்புகிறேன். அதன்பிறகு எனக்கு நீ வரங்கொடுப்பாய். நீ காரணமா? காரியமா? தேவனா? அஸுரனா?' என்றுவினவினேன். அதன் பிறகு, பேசுகிறவரிற்சிறந்தவரும் வரங்கொடுப்பவருமான பகவான் என்மேலன்புகூர்ந்து நகைத்து, 'பக்ஷிகளிற்சிறந்தவனே! காலக்ரமத்தில் நீ என்னை அறிவாய். காயக்லைஸாதிப்பவனே! நீ எனக்கு வாகனமாயிருக்கக்கடவாய். உனக்குச் சிறந்தவரங்கொடுக்கிறேன். உலகத்தில் தேவன் தானவன் எவனும் பராக்ரமத்தில் உனக்குச்சரியாக இருக்கப்போவதில்லை. என்ஸ்நேகத்தையடைந்து யார்க்கும்வெல்லக்கூடாதவனாவாய்' என்று மேககர்ஜனைபோலக் கம்பீரமாகப்பேசினார். இவ்வாறுசொல்லும் தேவர்க்குந்தேவரும் எல்லாவற்றிற்கும்மேற்பட்டவருமான அந்தப்ரபுவை அடக்கத்துடன் கைகூப்பித் தலைவணங்கி வந்தனம்செய்து, 'சிறந்தகைகளையுடையவரே! ஸரி; நீர்சொன்னதெல்லாம் இப்படியேயாகும். எனக்குநீர் கட்டளையிட்டபடி நான் உமக்கு வாகனமாவேன். பேரறிவுள்ளவரே! என்னுடையஎண்ணத்தையும் நீர் கேட்கவேண்டும். நீர் தேரிலிருக்கும்போது உமக்கு நான் கொடியாயிருக்கவேண்டும். இதுவும் நிச்சயமாகவேண்டும்' என்றுகேட்டேன். பெரியமனமுள்ள அந்தப்பகவான் மறுபடியும் என்னைப்பார்த்து, 'அப்படியேயாகட்டும். அம்ருதங்கொண்டுவரும் போதுநேர்ந்ததைத்தவிர இனி நீசெல்லுங்காரியங்களுக்கு இவ்வகையான இடையூறுவராது' என்றுசொன்னார். தேவருக்குந்தேவரும் நித்யருமான்பகவான் என்னிடம் இவ்வாறு உடன்படிக்கைசெய்துகொண்டு, 'நீ செல்லலாம்' என்று எனக்குச்சொல்லித் தம்மிஷ்டப்படிசென்றார். சிறந்தவர்களே! நான் யாரோஒருவரோடு ஸம்பாஷணைசெய்தேனென்றுநினைத்து அவரைத்தெரிந்துகொள்ள ஆவலால்தூண்டப்பட்டவனாகி என்தந்தையான கச்யபரை அடைந்தேன். என்தந்தையிடம்சென்று நமஸ்காரமும் [1]அபிவாதனமும்செய்து நடந்தபடி

---

[1] நமஸ்காரஞ்செய்து எழுந்து தன்னுடையபெயர்முதலியவற்றைத் தெரிவித்துத் தன்னை ஆசீர்வதிக்கச்செய்தல்

முழுதும் அவரிடம் சொன்னேன். என்னிடம் இதைக்கேட்டபிறகு, மகி
மையுள்ள என் தந்தை தியானம் செய்தார். பேசுகிறவரிற் சிறந்த அவர்
சற்றுநேரம் தியானம் செய்தபிறகு எனக்குச் சொல்லலானார் 'குழந்
தாய்! யார்க்கும் தெரியாத பரமாத்மாவான அம்மஹாத்மாவுடன் நீ
ஸம்பாஷணம் செய்ததினால் நன்பனும் அனுக்ரஹிக்கப்பெற்றவனும்
ஆகிறாய். மூலப்ரக்ருதியின் உற்பத்தி ப்ரளயங்களுக்கு இடமானவ
ரும் புலன்களுக்கு எட்டாதவராயிருப்பவருமாகிய அந்தப் பகவான் சிற்
சில நிமித்தங்களைப்பற்றிக் காணத்தக்கவராயிருப்பதோடு காணப்படு
வார். பேரொளியுள்ளவரும் சிறந்த சக்தியுள்ளவரும் தவங்களுக்கு
இருப்பிடமுமாகிய அந்தப் பகவான் என்னால் அவருடைய இடத்திலே
யே மனத்தைச் செலுத்தி த்யானத்துடன் உக்ரமான தவஞ்செய்து ஆரா
திக்கப்பட்டார். புத்ரனே! அதன்பிறகு என்னை ஸந்தோஷப்படுத்து
வதற்காகவே வெளுப்பு, பொன்னிறம், சிவப்பு, ஊதா, [1]கபிலவர்ணம்,
செம்மட்டைநிறம், திரண்டசிவப்பு, நீலம், கருமை ஆகிய பலநிறங்
களாகவும் ஆயிரம் வயிறுகளும் கைகளும் இரண்டாயிரம் பெரியவாய்
களுமுள்ளவராகவும் ஒருகண்ணுள்ளவராகவும் நூறுகண்களுள்ள
வராகவும் தம்மை எனக்குக் காண்பித்தார். ஸூர்யனைப்போன்ற
ஒளியினால் விளங்குபவர்களும் ரஹஸ்யமானவரும் அழியாதவரும்
மாறுதலற்றவருமான அவரை ஆகாரமில்லாமலும் ஓய்வில்லாமலும் தியா
னிக்கின்றனர். உலகமெல்லாம் உருவமாகவும் சரணாகதரக்ஷகராகவுமிருக்
குமவரை அணுகித் தலையினால் வணங்கி ரிக்யஜுஸ்ஸாமவேதங்களி
னால் துதித்துச் சரணாகதிசெய்தேன். ஜயிப்பவரியாயிருந்தவரான அந்
தப்பகவான் பெரியமேகக்கூட்டத்தின் முழக்கம்போலக் கம்பீரமான
தொனியுடன், 'புத்ரா! புத்ரா!' என்று என்னை அழைத்து, 'ஓ!
மஹரிஷியே! நீ ஐச்வர்யத்தை விரும்பித் தவம்செய்தாய். நீ பற்றுக்
களைவிடாததினால் மோக்ஷம்பெறாமல் இப்போது என்னைப் பார்க்கி
றாய். ப்ராம்மணனே! எப்போது பற்றைவிட்டு அஜ்ஞானமும் ஆசை
யும் நீங்கினவனாவையோ அப்போது பரப்ரம்மமாகிய என்னை இடை
விடாமல் தியானிப்பாய். ப்ராம்மணனே! வேறுபொருள்களையும் பயன்
களையும் கருதாது நிச்சயபுத்தியுடன் என்னிடம் பக்தி வைத்து என்னை
யே பரமாகக் கருதினபிறகு அஜ்ஞானம் நீங்கி என்னை உண்மையாய் அறி
வாய்' என்று சொன்னார். ஸ்வபாவமாகவே எல்லாருக்கும் நன்மையை
யே விரும்புகிறவரும் மஹாத்மாவும் உலகத்தைத் தம் சரீரமாகவுடைய
வருமான அந்தப் பரமபுருஷரோடு நீ ஸம்பாஷணம் செய்திருக்கிறாய்.

---

[1] மட்டிச்சிவப்பு.

அவரையே சீக்கிரம் ஆராதனம்செய். அவரை ஆராதனம்செய்தபிறகு நீ தாழமாட்டாய்' என்றார். ப்ரம்மரிஷிகளிற்சிறந்தவர்களே! எல்லாம்தெரிந்தஎன்பிதாவினால் இவ்வாறு நியாயங்களைச்சொல்லி மனத்தில்நிச்சயமுண்டாக்கப்பட்டபிறகு நான் என்னிடத்திற்குச் சென்றேன்.

## நாற்பத்தோராவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(பகவான் தம்மைப்பின்தொடர்ந்தவனுக்கு அபயங்கொடுத்தது.)

நான் என்தந்தையினிடம்விடைபெற்றுக்கொண்டபிறகு அந்தப் பகவானுடையரூபத்திலேயே மனம்சென்றவனாகி என்னிருப்பிடம் சேர்ந்ததும் அந்தவிஷயத்தையே நினைத்துக்கொண்டிருந்தேன். அவருடையரூபத்தில் புத்தியும்மனமும்சென்று மனமேதன்மயமாகி எக்காலமுமிருப்பவரும் விகாரமற்றவரும் எல்லாவற்றிற்கும்மேலானவருமாகிய கோவிந்தனையே தியானித்துக்கொண்டிருந்தேன். நாராயணனைக்காணவிருப்பங்கொண்டு மனம் அதிலேயே உறுதியாயிருந்தது. மனத்திற்குங்காற்றிற்கும் ஒப்பானவேகமுள்ளநான் என்வேகத்தையெடுத்துக்கொண்டு அழகியதும் விசாலமுமான பதரிகாஸ்ரமமென்னும் நாராயணரது ஆஸ்ரமத்திற்குச் சென்றேன். பிறகு, அங்கே பாவங்களையொழிப்பவரும் உலகங்களுக்கு மூலகாரணமும் ஈஸ்வரரும் தாமரைக்கண்ணருமாகிய கோவிந்தரைக்கண்டு அவரைத் தலையால் வணங்கினேன். *மிக்கமகிழ்ச்சியுடன் ரிக்யஜுஸ்ஸாமவேதங்களினால் அவரைத் துதித்தேன். பிறகு, பகவானிருக்குமிடமாகிய மிகப்பெரிய அரசமரமொன்றைக் கண்டேன். நாலுலகங்களுக்கும்தக்கபடி இரட்டிப்புப்பருமனுள்ள தாள்களையுடையவரும் சங்கம்சக்கரம்கதைகளை ஏந்தியவரும் மத்யான்னஸூரியனைப்போலப்பிரகாசிப்பவரும் தம்மொளியினால் திசைகளைப்பிரகாசிக்கச்செய்கிறவரும் ஆதிபுருஷரும் பூதாம்பரந்தரித்தவரும் நன்மைசெய்யவேகருதினவரும் புருஷோத்தமருமான பகவான் என்னால்துதிக்கப்பட்டவராகி என்னை வாவென்றுசொல்லித் தம்மொளியினால் திசைகளையும் மூலைகளையும் விளங்கச்செய்துகொண்டு வடகிழக்குத்திசையாகப் புறப்பட்டார். அளவற்றசக்தியுள்ளவரும் குற்றமற்றவருமான அந்தத்திவ்யபுருஷர் போகும்போது மெதுவாகச்செல்லுகின்றஅவரை நான் வேகமாகப் பின்தொடர்ந்

தேன். அறுபத்தெண்ணாயிரம் நூறாயிரம் லக்ஷம் நூறுலக்ஷம் இருநூறுலக்ஷம் யோஜனை தூரம்சென்றபிறகு அங்கே விறகில்லாமல் பெரும்ஜ்வாலைகளோடுஜ்வலிக்கும் நூறுயோஜனை அகலமும் இருநூறுயோஜனை நீளமுமுள்ள பெரியஅக்னியைக் கண்டேன். அக்னியைப்போன்றஒளியுள்ள அம்மஹாயோகியானவர் அவ்வக்னியில் ப்ரவேசித்தார். அவ்விடத்தில் சிறந்ததேவரும்தயாநிதியுமானசங்கரர் உமாதேவியுடன் தவம்செய்துகொண்டிருந்தார். அவர் அவருடன்ஸம்பாஷணைசெய்து அக்னியைத்தாண்டினார். நான் களைப்பினால்மிகுந்த கஷ்டப்பட்டுப் பின்தொடர்ந்தேன். அவர் ஸூர்யனால்ப்ரகாசிக்கச்செய்யப்படாத நீண்டவழியைத்தாண்டினபின் ஸூர்யனில்லாமலும் முடிவில்லாமலுமிருக்கும்பேரிருளில் ப்ரவேசித்தார். பிறகு, அவ்விடத்தில் என் பார்வை தடைப்பட்டுப்போயிற்று. எல்லாவற்றிற்கும்ஆத்மாவும் பேரொளியுள்ளவருமான அந்தப்பகவான் வழக்கம்போல அதற்குள் ப்ரவேசித்தார். அப்போது நான் பித்தனையும் குருடனையும் செவிடனையும்போல ஒன்றுந்தெரியாமலிருந்தேன். இருள்மூடியிருந்ததனால் திசைகளும் மூலைகளும் எனக்குத் தெரியவில்லை. அந்தமூட்டமான இருளில் ஒன்றையுமறியாதநான் மனம்பதைத்து மிகத்துயரமடைந்தேன். பிறகு, நான் கைகூப்பிக்கொண்டு தேவர்க்குத்தேவரும் நித்யருமான அந்தப்பகவானை மனத்தினால்சரணமடைந்து வாக்கினால் பின்வருமாறுதுதிக்கலானேன். பகவானே! நடந்தவற்றிற்கும் நடக்கின்றவற்றிற்கும்ஈஸ்வரரே! இருக்கிறதையும் இருந்ததையும்படைத்தவரே! விகாரமற்றவரே! பகைவரையடக்குகிறவரே! சரணமடைந்தஎன்னைக் காப்பாற்றக்கடவீர். நீர் யாவர், யாருடையவர், எங்கிருப்பவர்என்னும்உண்மையையறியக்கருதிய நான் உமது வழியில்வந்தேன். ஈஸ்வரரே! நீர் என்னைக் காப்பாற்றக்கடவீர்' என்றேன். பழமையானஉருவமுள்ளவரும் எக்காலமுமிருப்பவரும் உலகத்திறகெல்லாம்தஞ்சமும் ஆத்மாக்களுக்குஆதாரமும் ஈஸ்வரருமாகியபகவான் மேற்புறத்தில் கண்முன்னேதோன்றி "என்னிடம் வா"வென்றுசொல்லிப் பார்க்கமுடியாததிருமேனியுடையவராகி என்னைமயங்கவைத்தார். அபயம்கொடுக்கும்பிரபு தாமாகவே தம்வலக்கையை அங்கேகாண்பித்து எனக்குஸ்ரமத்தையும் பயத்தையும் உண்டுபண்ணினார். அழிவில்லாதவரும் அடுத்தவரைத்தவறவிடாதவருமான பகவான் நான் ஸ்ரமமடைந்திருப்பதையறிந்து தம்வாக்கினால் என்னைத்தேற்றிப் பேரிருளில்பிரவேசித்தார். நான் அவரையேதொடர்ந்துநடக்கும்போது களைப்பினால்காலோய்ந்த தேவஸ்ரேஷ்டர்களு

க்கும் ஈஸ்வரரான அவரையே மனத்தினால் தியானம்செய்யத்தொடங்கினேன். அளவற்றமஹிமையுள்ளபகவான் நான் அவ்வகையாயிருந்ததைக்கண்டு எனக்கு அநுக்ரஹம்செய்யக்கருதியே அவ்விருளைப் போக்கினார். அவ்விருள்போனவுடன் விளங்குகின்றமத்யான்னஸூர்யனைப்போல ஒளியெங்கும்பரவும்படி ப்ரகாசிக்கும்அவரைக் கண்டேன். அவ்விடத்தில் தம்மொளியினாலேயே ப்ரகாசிக்கும்புருஷர்களும் மிக்க ஆச்சர்யரூபமுள்ள ஸ்த்ரீகளும் ஆயிரக்கணக்காயிருப்பதை மனங்கலங்காமற்பார்த்தேன். அவ்விடத்தில் ஸூர்யனும் நக்ஷத்ரங்களும் சந்த்ரனும் ப்ரகாசிப்பதில்லை. தூசிகளோடுகூடிய காற்றும் அடிப்பதில்லை. அவ்விடத்தில் எல்லாத்திசைகளிலும் அநேகவாத்தியங்களும் ஒலிபாட்டுக்களும் கண்ணுக்குஉருவம் தெரியாமல் மனத்தைக்கவரும்படி கேட்கப்பட்டன. [1] வைடூர்யக்கல்தரைகளுள்ளவையும் தாமரைகளும் நெய்தல்களும் மீன்களும் நிரம்பினவையும் முத்துமயமானமணற்குன்றுகளையும் கரைகளையுமுடையவையும் தெளிந்தஜலமுள்ளவையுமான நதிகள் பெருகி ஓடுகின்றன. அது தேவரும் அஸுரரும் கந்தர்வரும் நாகரும் இயக்கரும் அரக்கரும் போகுமிடமன்று. அங்குள்ளபுருஷர்கள் தம்மொளியினால் ப்ரகாசித்து ஆச்சர்யரூபமுள்ளவர்களாகக் காணப்படுகின்றனர். பரமாத்மாவை அநுபவிக்கும் அவர்களின் ஒளிக்குத் தேவர்களும் ஈடாகார். தேவர்களாலும் பூஜிக்கப்பட்டபகவான் அவர்களையும்தாண்டி விறலில்லாமல் ஜ்வலிக்கின்ற ரூபமற்ற அக்னியில் ப்ரவேசித்தார். என்மேல் ஜ்வாலைகள்ப்ரவேசிக்கும்படி நாலுபக்கமும்ஜ்வலிப்பதும் தைத்யராலும் தானவராலும் அரக்கராலும் தேவராலும் தாங்கமுடியாததும் ஜ்வாலைகளை மாலைகளாகவுடையதும் அழிவில்லாததுமாகிய அந்தஅக்னி என்னால்பொறுக்கமுடியாதென்று அறிந்து மனத்தில், நான், 'அநேகயுகங்களில் பெரும்ஜ்வாலைகளோடுகூடிய அக்கினியில் ப்ரவேசித்துமிருக்கிறேன்; அதைத் தள்ளியுமிருக்கிறேன். எங்கும்அது என்னைச் சுட்டதில்லை. இந்தஅக்னி எப்போதும் பொறுக்கமுடியாததாயிருக்கிறது. இந்தஅக்னி தன்ஒளியினால் அக்னிஸூர்யன் இவர்களுடையஒளிகளையும் ஜ்வாலைகளையும் மிஞ்சிப் பெரிதாக ஜ்வலிக்கிறது' என்றுநினைத்தேன். அதிகஜ்வாலையோடுகூடிய அவ்வக்னியினால் நான் அவ்வாறுதகிக்கப்பட்டும் சங்கம்சக்ரம்கதை

[1] இங்கு 'வைடூர்யலதா:' என்றிருப்பது, 'வைடூர்யதலா:' என்றிருத்தல்வேண்டும். 'லதா:' என்னும்பாடத்தில், 'வைடூர்யமயமான தாமரைமுதலிய கொடிகளுள்ளவையும்' என்றுகொள்ளவேண்டும்.

களைவந்தின அந்தப்பகவானையே அடைக்கலம்பற்றினேன். 'ப்ரபுவே! பக்தன், அனுஸரித்தவன் என்று என்னைக் காப்பாற்றக்கடவீர். ஈஸ்வரரே! என்னை அக்னி எரிக்காமலிருக்கும்படி உடனேசெய்ய வேண்டும்' என்றேன். இவ்வாறு புலம்புகின்ற என்னுடையசொல்லைக்கேட்டு, பிரபுவானவர் மேகம்போலக் கம்பீரமானதொனியோடு, 'பயப்படாதே' என்று சொன்னார். பிரபுவானபகவான் என்னைத் தேற்றியபிறகு, 'யோக்யனே! எனக்கு உன்னைத் தெரியும். என்னுடையஉண்மையை ஸரியாகக்கண்டறிவதற்காக நீ உன்பிதாவினால் சட்டளையிடப்பட்டபெரியவிஷயமும் எனக்குத் தெரிந்திருக்கிறது. வைநதேயனே! எவ்வகையிலாவது நான் பக்தராலறியப்படவேண்டுமென்பதுதான் எனக்கு நம்மதம். ஆனால், என்னுடைய இந்தஸ்வரூபம் பெரிது; எவ்வகையிலும் நீ அறியக்கூடாதது. ஞானத்தில்நிலைபெற்றவரும் நானென்பதையும் பலன்களில் ஆசையையும் உலகப்பற்றையும் விட்டவர்களுமான வித்வான்கள் என்னை அடைகின்றனர். பக்ஷிகளிற் சிறந்தவனே! ஆதலால், எப்போதும் என்னிடத்தில் மனம்வைத்துப் பக்திசெய்யும்நீயும் உலகத்திற்குக்காரணமாயிருக்கும் எனது ஸ்தூலரூபத்தைமட்டுந்தான் அறியலாம்' என்று சொன்னார்.

## நாற்பத்திரண்டாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(அந்தர்த்தானமானவிஷ்ணு கருடன் துதித்ததன்மேல் திருப்பவும் ப்ரத்யக்ஷமானதும் கருடன் பசிபசியால் வருந்ததும்.)

ரிஷிகளுட் சிறந்தவர்களே! அவரால் இவ்வாறு அபயமளிக்கப் பெற்றநான் அதனால் ஒருநொடியில் துயரமும் களைப்பும் பயமுமற்றவனானேன்; பிறகு எளிதில்வெல்லும்சக்தியுள்ள அந்தப்பகவான் மெல்ல நடந்துசெல்லுகின்றார். நானோ மிகக்கடியவேகத்தைஎடுத்துக்கொண்டு அவர்பின்செல்லுகின்றேன். அடங்காதமகிமையுள்ளவரும் தம் உண்மையைத்தாமே அறிந்தவருமான அந்தப்பகவான் நீண்டவெளியான ஆகாசத்திற்சென்று மனத்தினாலும்செல்லக்கூடாத[1] இடத்திற்குச் சென்றார். பிறகு, அந்தப்பகவான் மனத்திற்கொப்பானவேகத்தையடைந்து என்னைப்ரமிக்கச்செய்து ஒருநொடியில் அங்கேயே மறைந்தார். பேசுவதில்ஸமர்த்தராகிய அந்தப்பகவான் மேகம்போலக்

[1] 'தேவம்' என்பது, 'தேசம்' என்றிருத்தல்வேண்டும்.

கம்பீரமும் நாதம்காப்பதுமாகியவொலியுடன், 'ஓ!' என்றுசொல்லா லழைத்து, 'ஓ! இதோ நானிருக்கிறேன்' என்றுவசனத்தைச்சொன் னார். அந்தக்குரலையனுஸரித்துக்கொண்டு நான் உடனே அந்தஇடத் திற்குச்சென்றேன். அங்கே அன்னப்பறவைகள்நிரம்பின அழகுள்ள ஒருதடாகத்தைக் கண்டேன். ஆத்மஜ்ஞானிகளிற்சிறந்தவரான அந் தப்பகவான் தமது க்ஷேத்ரமாகியஜலத்தில் ப்ரவேசித்தார். 'ஓ!' என்றழைத்து எதிரொலியோடுகூடியதொனியுடன் என்னைப்பார் த்து, 'தக்ஷகனே! ஜலத்தில்புகு; நாம் இங்கே ஸுகமாகவஸிப் போம்' என்றுசொன்னார். உடனே அந்தமஹாத்மாவுடன்கூட அந்த ஜலத்திலிறங்கினேன். அந்தஸரஸில் யாராலும்மூட்டப்படாமலும் விறகுகளில்லாமலும் பற்றிக்கொண்டு நெய்யாற்றுடனும் எப்போ தும் ஜ்வாலைகளோடும் பலஇடங்களில் ப்ரகாசிப்பவையும் சிறந்தவொளி யுள்ளவையுமான அக்னிகளைக்கண்டது பெரியஆச்சர்யம். அவ்வக்னி கள் நெய்விடாமலே நெய்விட்டவைபோலும் விறகுபோடப்படாமலே விறகுபோட்டவைபோலும் ஜ்வலித்துக்கொண்டிருந்தன. பிறகு, எனக்குவரங்கொடுத்தவரும் சேர்ந்துவந்தவருமான பகவானை அங்கே நான் காணவில்லை. அதன்பிறகு, பயக்கலவரமடைந்து மிகவுந்துயரமுற் றேன். அப்போது அநேகஇடங்களில் மந்த்ரங்களால்மூட்டப் பட்டு நெய்யாகுதிசெய்யப்பட்ட அக்னிஹோத்ரங்களை நூற்றுக்கணக் கும் ஆயிரக்கணக்குமாகக் கண்டேன். புஷ்பங்களாற்பரப்பப்பட்டும் தர்ப்பங்களோடும் தாமரைமலர்களோடும் கருநெய்தல்மலர்களோடும் சேர்ந்தும் தரைபெருக்கப்படாமலுமிருக்கும் வேதிகைகளையும் பொற் குடங்களையும் கண்டேன். நூற்றுக்கணக்கும் ஆயிரக்கணக்குமான புதியபுதியஅக்னிஹோத்ரங்களையும் அக்னிஹோத்ரத்திற்குரிய திர வியங்களெல்லாவற்றையும் அங்கே நிரம்பக்கண்டேன். அந்தஅக்னி யானது புண்யத்தைத்தெரிவிப்பதும் நல்லவாஸனையுள்ளதும் மனத் திற்கினியதும் நெய்மணத்தினால்மனத்தையிழுப்பதும் மூக்குக்கும் கண்ணுக்கும் ஸந்தோஷத்தைக்கொடுப்பதுமாயிருந்தது. மந்த்ரங் களினாலுதிக்கப்பெற்ற ஆயிரக்கணக்கான அக்னிஹோத்ரங்களின் ஸமீபத்தில் மற்றொரு மாறுதபெரியஆச்சர்யத்தைக் கண்டேன். அக்னிகளின்ஸமீபத்தில் சந்திரனைப்போலவும் நாணற்பூப்போல வும் மூடுபனிபோலவும்வெளுத்தநிறமுள்ளவரும் மாசற்றஸூர்ய னைப்போலவொளியுள்ளவருமான புருஷர்களுடைய ஒளியுள்ளபெரிய யாகபூமிகளை ஆயிரக்கணக்காகக்கண்டேன். அந்தஅக்னிகளின்ஸமீ பங்களில் தங்கள்ப்ரபாவத்தினால்மறைந்துகொண்டு ரிக்யஜுஸ்ஸாம

வேதங்களைத் தெளிவான அக்ஷரங்களோடு உச்சரிக்கும் புருஷர்களுடைய அழகான ஸ்வரங்களோடு கூடிய இனிமையான வாக்குகளைக் கேட்டேன். பரிசுத்தம் செய்யப்பட்ட தரைகளில் ஜ்வலிக்கின்ற தேஜஸோடு கூடிய அந்தப் பெரிய அக்னிகளினால் ஆத்மசுத்தம் செய்யப்பட்ட நான் சீக்ரமாகச் செல்லக்கூடியவனானேன். அங்கே யாகம் செய்பவரின் யாகசாலைகளில் அக்னிகள் ஜ்வலிக்கும்போது அவ்விடத்திற்கு நமஸ்காரம் செய்து அந்தப் பகவானைத் தேடத் தொடங்கினேன். மிக்க வேகத்துடன் அநேக ஆயிரம் அக்னிஹோத்ரசாலைகளில் திரிந்தும் அந்தப் பகவானைக் காணாத நான் அதனால் துக்கமடைந்தேன். அவ்விடங்களில் தெளிந்த ஜ்வாலைகளோடு நிரந்தரமாக ஜ்வலிக்கும் அக்னிஹோத்ரங்களில் தேவர்களுக்குத் தேவரான அந்த நித்யபுருஷரை நான் காணவில்லை. பிறகு, பொறிகள் கலங்கினவனாகி ஜ்வலித்த அந்த அக்னிகளைப் ப்ரதக்ஷிணம் செய்து அவற்றின் முடிவைக் காணாமல் களைத்தேன். பயமும் மயக்கமுமுள்ளவனாய் எங்கும் பார்வையை விட்டுப் பார்த்து அதிகப் ப்ரமத்தையடைந்து ஒன்றும் தெரியாமல், 'நான் பார்த்த அப்படிப்பட்ட பொருளிருக்கும் லோகத்தில் நான் இருக்கவில்லையோ? ரிக்யஜுஸ்ஸாமவேதங்களின் சப்தமட்டும் கேட்கப்படுகிறது. ஒன்றும் காணப்படவில்லையே. இங்கு வரும்படி யாரால் கட்டளையிடப்பட்டேனோ அந்த ஈச்வரனையும் காணவில்லையே' என்று சிந்தையடைந்து தியானம் செய்யத் தொடங்கினேன். மனத்தில் பிரமை கொண்டு நான் தியானித்திருக்கும்போது எனக்கு மிகவும் ஆயாசத்தைத் தரும் ஒரு பெரிய சப்தம் உண்டாயிற்று. உடனே அவ்விடத்தில் அந்தச்சப்தம் அதிகப்படுவதைக் கேட்டேன். பிறகு, ஆயிரங்களும் பதினாயிரங்களுமாகக் கருடர்களைக் கண்டேன். அதிகமான ஒளியும் வேகமுமுள்ள அந்தக் கருடர்கள் என்னிடத்தில் வந்தனர். அவர்களின் மஹிமையினால் நான் எவ்வகையிலும் தாழ்ந்தவனானேன். அதிக காந்தியுள்ள கருடர்களனைவராலும் நான் சுற்றிலும் சூழப்பட்டதைக்கண்டு எனக்கு அதிகப் பரபரப்புண்டாயிற்று. மனமடங்கித் தலைவணங்கி ஆதியும் அந்தமுமில்லாத மஹாத்மாவான பரமாத்மாவைப் பின்வரும் நாமங்களைச் சொல்லி நமஸ்காரம் செய்தேன்:— [1]நாராயணரும் சுத்தரும் சாஸ்வதரும் த்ருவரும் பூதபவ்யபவேசரும் சிவனும் சிவமூர்த்தியும் சிவயோனியும் சிவாதயரும் சிவபூஜ்யதமரும் கோரரூபரும் மஹானும் யுகாந்தகாரணரும் விஸ்வரும் விஸ்வதேவரும்

[1] இந்நாமங்களின் உரைவிசேஷங்களைப் பின்வரும் 'விஷ்ணுஸஹஸ்ரநாமத்திற்காண்க.

விஸ்வேசரும் மஹாத்மாவும் ஸஹஸ்ரோதரபாதரும் ஸஹஸ்ரநயன
ரும் ஸஹஸ்ரபாஹுவும் ஸஹஸ்ரவதனரும் சுசிஸ்ரவரும் மஹானும்
ருதுவும் ஸம்வத்ஸரரும் ரிக்யஜுஸ்ஸாமவக்த்ரரும் அதர்வசிரஸும்
ஹ்ருஷீகேசரும் க்ருஷ்ணனும் த்ருஹிணரும் உருக்ரமரும் ப்ருஹத்
வேகரும் தார்க்ஷ்யரும் ஏகச்ருங்கவராகரும் சிபிவிஷ்டரும் ஸத்யரும்
ஹரியும் சிகண்டியும் ஹுதாசரும் ஊர்த்தவவக்த்ரரும் ரௌத்ராநீக
ரும் ஸாதுவும் ஸிந்துவும் ஸிந்துவர்ஷஹாவும் தேவஸிந்துவும் கருத்
மானும் த்ரிநேத்ரரும் ஸுதாமரும் வ்ருஷாங்கரும் ஸம்ராட்டும்
உக்ரரும் ஸங்க்ருதியும் விராஜரும் ஸம்பவரும் பவரும் வ்ருஷரும்
வ்ருஷரூபரும் விபுவும் பூர்புவரும் தீப்தஸ்ருஷ்டரும் யஜ்ஞரும்
ஸ்திரரும் ஸ்தவிரரும் அச்யுதரும் துஷாரரும் வீரரும் ஸமரும் ஜிஷ்
ணுவும் புருஹூதரும் வஸிஷ்டரும் வரரும் ஸத்யேசரும் ஸுரேச
ரும் ஹரியும் சிகண்டியும் பர்ஹிஷரும் வரேண்யரும் வஸுவும்
விஸ்வவேதஸும் கிரீடியும் ஸுகேசரும் வாஸுதேவரும் சுஷ்மி
யும் ப்ருஹதுக்யஸுஷேணரும் யுக்யரும் துந்துபியும் பயஸக
ரும் விபுவும் பாகவாஜரும் அபயரும் பாஸ்கரரும் சந்த்ரரும் பத்ம
நாபரும் பூரியும் புனர்வஸுப்ருதத்வரும் ஜீவப்ரபவிஷ்ணரும் வஷட்கார
ரும் ஸ்வாஹாவும் ஸ்வதாவும் நிதனரும் ரிக்கும் யஜுஸும் ஸாம
மும் த்ரைலோக்யபதியும் ஸ்ரீபத்மரும் ஆத்மஸத்ருசரும் தாரணீதாரி
யும் பரரும் ஸௌம்யரும் ஸௌம்யஸ்வரூபரும் ஸௌம்யரும் ஸுமன
ஸும் விஸ்வரும் ஸுவிச்வரும் விசவரூபதரரும் கேசவரும் ஸுகே
சரும் ரச்மிகேசரும் பூரியும் ஹிரண்யகர்ப்பரும் ஸௌம்யரும் விருஷ
ரூபியும் நாராயணரும் அக்ரியவபுஸும், புருஹூதரும் வஜ்ரியும்
வர்மியும் விருஷஸேனரும் தர்மஸேனரும் ரோதஸும் முனியும் ஜ்வர
முக்தரும் ஜ்வராதிபதியும் அநேத்ரரும் த்ரிநேத்ரரும் பிங்கலரும்
விநிர்மியும் கபோரம்பிதானரும் யுகபர்யாயியும் சர்வரும் சரண்ய
ரும் பக்தேஷ்டசரணரும் ஸர்வபவேசரும் பூதபவ்யபவரும் ஆகிய
உம்மை நமஸ்கரிக்கிறேன். தேவபரமேஷ்டிகளுக்கும் ஈஸ்வரரே!
நீர் வாக்குக்கெட்டாதநித்யராயிருக்கிறீர்; என்னைக் காப்பாற்றக்கட
வீர்' என்றுசொல்லி, ரக்ஷிப்பதில்ஸமர்த்தரும் ப்ரம்மதேவருக்குக்
காரணமுமாகியஅவரைச் சரணமடைந்தேன். துதிக்கத்தக்கவரும்
துதிஸ்வரூபமுமாகியஅவரைத் துதிக்கும்போதே என்இருள் போய்
விட்டது; என்பயம் தொலைந்தது; பக்ஷிகள்மறைந்து போயின;
ஆகாயத்தில் உருவம்தெரியாமலே, 'கருதமானே! பயப்படாதே.
என்னால் அடக்கப்பட்டாய். திரும்பவும் இந்த்ராதிதேவர்களையடை

ந்து உன்வீட்டிற்குச்சென்று புத்ரர்களையும் சுற்றத்தாரையும் பார்ப்பாய்' என்னும்மங்களவாக்குண்டானதைக் கேட்டேன். பிறகு, ஒருநிமிஷத்துக்கெல்லாம் சிறந்தஒளியும் சிறந்தசக்தியுமுள்ள அவர் எனக்கெதிரில் ஸமீபமாகத் திடீரென்றுகாணப்பட்டார். மங்களரூபியான அந்தப்பரமாத்மாவை நான்வந்தித்தபிறகு அந்த ஆதிதேவர் எண்மடங்கு அதிகமாகக் காலெட்டிவைத்து நரநாராயணாச்ரமத்திற்குவருவதைக் கண்டேன். யாகஞ்செய்யும்ரிஷிகளையும் துதிக்கும்தேவர்களையும் கானஞ்செய்யும் முனிவர்களையும் ஸித்திபெற்று மனநிலைதவறாமலிருக்கும்யோகிகளையும் வீடுகளில் ஜபஞ்செய்துகொண்டும் ஆராதனஞ்செய்துகொண்டுமிருப்பவரையும் சுற்றிலும் பூமாரிகளால்அர்ச்சிக்கப்பட்டதும் தூபதீபங்கள் அளிக்கப்பட்டதும் ஹோமஞ்செய்யப்பட்டதும் நமஸ்கரிக்கப்பட்டதும் தண்ணீர்தெளித்துப் பெருக்கப்பட்டதுமாகிய நரநாராயணாச்ரமத்தையும் கண்டேன். அந்த ஆச்சர்யத்தைக்கண்டு நான் திகைத்திருந்தேன். குற்றமற்றவர்களே! அப்போது உறுதியானமனத்துடன் அந்தப்பரவானைத் தலையால்வணங்கினேன். எல்லாருக்கும்க்ஷேமகரமான அந்தப்பரமாத்மாவினது மிக்கஆச்சர்யமாகப்ரகாசிக்கும் அந்தச்சிறந்தபரஸ்வரூபத்தை, 'இது என்ன' என்றுசிந்தித்தும் நான் அறியாமற்போனேன். யாராலும்வெல்லமுடியாதவரும் சிரேஷ்டர்களுக்கெல்லாம் மிக்கசிரேஷ்டருமான அவரை அடிக்கடி கண்ணெடுத்துப்பார்த்து வியப்பினால் மலர்ந்தகண்களுடன் சிரமேற்கரங்குவித்து நமஸ்கரித்துத் தைரியத்துடன், 'பகவானே! தேவரே! நடந்தவற்றிற்கும் நடக்கின்றவற்றிற்கும் நடப்பவற்றிற்கும்ஸ்வாமியே! உமக்குநமஸ்காரம். முதலும் இடையும் கடையுமில்லாதவர் ஆச்சர்யம் உம்மைச்சேர்ந்ததாக நான்கண்டேனே. அது என்ன? சொல்லவேண்டும். என்னைப் பக்தனென்றுநீர்நினைத்து என்னிடத்தில் உமக்குஅனுக்ரஹமிருந்து, இது நான் கேட்கக்கூடியதாகவுமிருந்தால், எல்லாவற்றையும் முழுதும் சொல்லக்கடவீர். உமது இயற்கையும் ஜனனமில்லாதஉமது அவதாரமும் அறிதற்கரியன. நிகழ்கின்றவற்றிற்கும் சென்றவற்றிற்கும் வருபவற்றிற்கும். நாதரே! எவ்வகையிலும் நீர் அறியக்கூடாதவர். மஹரிஷியே! அந்த ஆச்சர்யமெல்லாவற்றையும் விடாமற்சொல்லக்கடவீர். நாலுபக்கமுமிருந்த அந்த அக்னிகளிலிருந்தபுதுமை யாது? அந்த அக்னிஹோத்ரங்கள் யாவை? எப்போதும் பரப்ரம்மத்தைப்பற்றியேகேட்டுக்கொண்டு கண்ணுக்குத்தெரியாமலிருந்தமஹாத்மாக்களின்வாக்கைக் கேட்டேனே. அவரெவர்? அக்னிகளின் அருகிலிருந்துகொண்டு மந்

த்ரங்களைச்சொல்லிக்கொண்டிருக்க அந்தப்ரம்மானந்தநிதிகள் யார்? பகவானே! க்ருஷ்ண! இவையெல்லாவற்றையும் விடாமல் எனக்கு உரைக்கக்கடவீர்' என்றுகேட்டேன்.

---

## நாற்பத்துமூன்றாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(விஷ்ணு தனது மகிமையைக் கூறுதல்.)

அதற்குப் பகவான் சொல்லலுற்றார். ஸத்வகுணமுள்ளவனும் யாருக்கும் புலப்படாத ஸூக்ஷ்மமானவனாயிருப்பவனும் அறியாதவனுமாகிய என்னைத் தேவர், கந்தர்வர், அஸுரர், ராக்ஷஸர் எவரும் உண்மையாக அறியார். இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலமாகிய முக்காலங்களுக்கு முதல்வனும் அநாதியும் உலகத்தை முதலிற்படைத்தவனுமாகிய நான் உலகங்களின் நன்மையைக் கருதி என் ¹ஸ்வரூபத்தை நான்கு பகுதிகளாகச் செய்துகொண்டிருக்கிறேன். பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசமென்னும் பஞ்சபூதங்கள் மனம், புத்தி, அகங்காரம், ஸத்வரஜஸ்தமோகுணங்கள், ப்ராக்ருதி, மஹத், வித்யை, அவித்யை ஆகிய இவை என்னிடத்திலிருந்து உண்டானவை. நான் இவற்றினின்றுண்டாவதில்லை. இவ்வுலகில் நன்மையுள்ளதும் நன்மைக்குச் சிறந்த காரணமும் தர்மமுள்ள காரியமும் அதனாலுண்டாகும் பலனும் நானே. அப்படிப்பட்ட நான் துக்கமற்றவன். ப்ராக்ருதியையும் ஆத்மஸ்வரூபத்தையும் அறிந்தவர்கள் பல நியமங்களைக்கொண்டு அறியப்படுகின்றவனும் முதலிடைகடையென்னும் பிரிவற்றவனும் நித்யனுமான அந்தர்யாமி நானே. புலன்களுக்குப் புலப்படாதவற்றைக் காண்பவரும் மனத்திற்கும் எட்டாத பொருள்களை உணர்கின்றவருமான ஞானிகளால் மட்டும் எனது பரமரஹஸ்யமான ஸ்வரூபம் அறியப்படும். ஆதலால், என்றுமுள்ளவனாகிய நான் அறிவிற்கெட்டாதவன். இவ்வுலகம் எதனால் வ்யாபிக்கப்பெற்றிருக்கிறதோ அதுதான் அறிவிற்கெட்டாதவனது பரஸ்வரூபம். அப்படிப்பட்ட நான் எல்லாப்ராணிகளும் எல்லாப்ராணிகளுக்குங்காரணமும் விகாரமற்றவனுமாகிறேன். கருடனே! உலகப்பொருள்கள் என்னிடமிருந்து உண்டாகின்றன. அவை இயங்குவதும் என்னுள்ளேயே தங்கியிருக்கின்றன. ப்ரளயகாலத்தில் என்னிடத்திலேயே முடிவையடைகின்றன. காச்யபபுத்ரனே! என்னை எவன் எவ்வகையாகத் தியானிக்கிறானோ அவனுக்கு அவ்வகையாக நான்

¹ 1. வாஸுதேவன் 2. ஸங்கர்ஷணன் 3. ப்ரத்யும்னன். 4. அநிருத்தன்.

இருக்கிறேன் பக்ஷியே! மனத்திலும் புத்தியிலுமிருந்து நன்மையைச் செய்கிறேன். பக்ஷிராஜனே! நீ என்னையறியவிருப்பங்கொண்டாய். 'நான் யார், எங்கிருந்து வந்தவன், எதற்காக யத்தனஞ்செய்கிறேன்' என்பதைக்கேள். மனத்தையடக்கி மூன்று அக்கினிகளையே முக்யமாய் ஆராதித்துக்கொண்டு எக்காலமும் அக்னிகார்யத்தையும் ஜபஹோமங்களையும் தலைமையாகக்கொண்டிருப்பவரும் தம் ஆத்மாவிலேயே அக்னிகளை ஆவாகனஞ்செய்து புலன்களையடக்கித் தவஞ்செய்பவருமாகிய அனைவரும் என்னிடம் மனம் வைக்காமல் என்னிடமே போகின்றனர். ஜபத்தையே யாகமாகச்செய்பவரும் மனத்தை விஷயங்களிற்செல்லாமற்றடுக்கின்ற தானமென்னும் மானஸயாகஞ்செய்பவரும் எப்பொழுதும் பரிசுத்தர்களாய் வேறுகாரியங்களைவிட்டு அக்னியே முக்யமான ஆதாரமென்னும் புத்தியுடன் அக்னியையே ஆசிரயித்து உபாஸிப்பவருமாகிய உறுதியானமனமுள்ளவர்கள் என்னையே அடைகின்றனர். உலகவிருப்பங்களினால் நினைவுகெடாமல் ஞானத்திலெப்பொழுதுமின்றி ஆகாசமென்னிடத்தில் அக்னியை ஆவாஹனம் செய்து ஆகாரத்தைவிட்டு எந்தப்பயனையும் கருதாமல் உலகஇன்பங்களில் முயற்சியற்றவர்களாகவும் பற்றற்றவர்களாகவும் ஒன்றிலும் மனம்செல்லாமல் அறிவைக்கண்ணாகவும் இயற்கையாகவே நியமமாறுமலுமிருக்கும் ஞானிகள் என்னையே அடைகின்றனர். பக்ஷியே! தாமரைகளும் கருநெய்தல்களும் நிரம்பின ஒருதடாகத்தை நீ ஆகாயத்திற்கண்டாயல்லையோ? அங்கிருந்து அக்னிகள் விறகில்லாமலே எரிந்துகொண்டிருக்கின்றனவே. அவ்விடத்தில் அறிவினால்தெளிந்தமனமுள்ளவர்களாகவும் சந்திரகிரணம்போன்ற வெண்ணிறமுள்ளவர்களாகவும் அக்னியைப்பூஜித்துக்கொண்டும் துதித்துக்கொண்டும் எழுத்துவிளங்காமல்பேசிக்கொண்டும் அந்த அக்னிகளையே பிரார்த்தித்துக்கொண்டும் பரிசுத்தர்களாயிருக்கிறார்களே! அவர்கள் என்னாலேயே ஆத்மசுத்திசெய்யப்பெற்று என்னிடத்திலேயே எப்போதும் அன்புவைத்துக் குற்றம்நீங்கி ஒளியுருவமாயிருக்கும் என்னையே தியானித்துக்கொண்டிருப்பவர். ஆசை முதலியன அற்றவரும் நியமந்தவறாதவர்களுமான அவர்கள் அவ்விடத்திலேயே வஸிக்கத்தக்கவர். ஆஹாரத்தைவிட்டுத் தொழிலற்றுச் சந்திரகிரணத்திற்கொப்பான ஒளியுள்ளவர்களும் அழுக்கற்றவர்களும் அஹங்காரமும்பற்றும்விருப்பமும் அற்றவர்களுமாகிய அவர்கள்தாம் என்னிடம் விடாதபற்றுள்ளவர்கள். எனக்கும் அவர்மேல் பற்றுண்டு. நான் உலகத்தின்நன்மைக்காக நான்குவிதமானஉருவங்களைப் பகுத்துக்கொண்டு ஸஞ்சரிக்கிறேன்.

சிவனுண்டானார். சிவனிடமிருந்து ஸுப்ரம்மண்யர் உண்டானார். இவ்வாறு ஸ்ருஷ்டிகள் பத்மமும்சேர்ந்து நாலுவகையென்றறி. இவ்வாறே எப்போதும் தைத்யர்கள்தானவர்களின் மதத்தையடக்குகிறவன் நானென்றறி. விரைவாகச்செல்லுகிறவனே! தைத்யர்களாலும் தானவர்களாலும் அரக்கர்களாலும் தர்மம்பீடிக்கப்படும்போது தர்மத்தை அபிவ்ருத்திசெய்வதற்காக நான் தேகமெடுத்து அவதரிப்பேன். வேதங்களையும் அவற்றிற்சொன்னக்கிரியைகளையும் முக்யமாகக்கொண்டு நம்பிக்கையுள்ள புத்தியுடனிருக்கும்ஞானிகளும் யோகாப்யாஸம் செய்யும்யோகிகளும் என்னைக் காண்பர். வேறுவகையாகக் காணமுடியாது. நான் [1]ஐந்தோடுமசேர்ந்திருப்பவன்; ஐந்தையும்விட்டுப் பிரிந்திருப்பவன்; அதிலுமிருப்பவன்; அவற்றிலில்லாமலுமிருப்பவன். உறுதியானநிச்சயத்துடன் ஏகாந்தத்யானிப்பவர்எவரோ அவர்தாம் என்னைக் காண்பார். ஆகாயம், வாயு, அப்பு, அக்னி, பூமி இவை ஐந்தாகவுமிருப்பவன் நானென்றறியவேண்டும். இவையல்லாமல் வேறாயிருப்பவனென்பதும் நிச்சயம். சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தமென்னும்குணங்களாகிய பஞ்சவர்க்கங்களிலும் நான் எப்போதும் இருப்பவனென்றும் இவற்றைக்கடந்தவனென்றும் மாறுமலிருப்பவனென்றும் அறியவேண்டும். எவர்களின்புத்தி ரஜோகுணத்தினாலும் தமோகுணத்தினாலும் ஆக்ரமிக்கப்பட்டு நிச்சயம்பெறாமலிருக்கிறதோ அவர்கள் பெருந்தவஞ்செய்யினும் என்உண்மையைக் காண்பதில்லை. உபவாஸங்களாலும் இந்த்ரியங்களையடக்குவதனாலும் பலவகைவிரதங்களாலும் என் உயர்ந்தஸ்வரூபத்தைக்காணவும் மனத்தினால்அறியவும் முடியாது. ஆகிலும், அஜ்ஞானமென்னும் ஆழமானசேற்றில்மூழ்கியிருப்பவர்களுக்குத் தஞ்சம் விஷ்ணுவே. ஓர் உறுதியுடன் த்யானத்திலிருப்பவர்கள் எல்லாவற்றையும் ஸந்யாஸம் செய்து என்னையடைகின்றனர். எவர்களின்புத்தி ஸத்வகுணம்பொருந்திப் பற்றுகளினின்றும்விலகி ஆத்மாவினிடத்தில்நிச்சயமுள்ளதாயிருக்கிறதோ அவர்கள் தங்களுக்குஅந்தர்யாமியும் அழிவில்லாதவனும் பரமாத்மாவுமான என்னைப் பார்க்கின்றனர். எல்லாப்ராணிகளுக்கும் தீங்குசெய்யாமையும் அவற்றிற்குவஞ்சகம்செய்யாமையும் முக்யம். அவைகளிடத்தும் நன்றாகமனம்வைத்தபிறகுதான் நித்யனான என்னை அடையலாம். மிக்கரகஸ்யமும் மிக்கஆச்சர்யமுமான ஒருவிஷயம் இப்போதுசொல்லப்படும். அதையெல்லாம் ஜாக்ரதையுடன் சரியாகக்கேட்பாயாக. அக்னிஹோத்ரங்களைத் தவறாமல்

[1] பஞ்சபூதம்.

செய்துகொண்டும் ஜபயாகங்களை முக்யமாகநடத்திக்கொண்டுமிரு
ந்தவர்களை நீ கண்டாயல்லவோ? அவர்கள் எப்போதும் என்னையே
உபாஸிப்பவர்கள்; சாஸ்த்ரங்களில் சொன்னவிதிகளெல்லாம் தெரிந்த
வர்கள்; என்னைத்தவிர வேறொன்றிலும் பற்றில்லாதவர்கள். அவர்
கள்தாம் என்னை அறியமுடியும். ஏனெனில், என் அழிவற்றரூபம்
எல்லாவற்றிற்கும்மேலானது. ஸாங்க்யத்தையும் யோகத்தையும் அறி
ந்து ஸமர்த்தர்களாயிருப்பவரும் மனோநிச்சயமுள்ளவராயின் எல்லா
வற்றிற்கும்மேலான பதத்தினை அடைவார். ஆகலால், [1]பரிசுத்த
மானஞானத்தினால் மனம்தெளிந்த ஆசாரஞானம்பெற்றவிரக்தன்
எதைச்சேர்ந்தபிறகு துயரமில்லையோ அந்தப்பரப்ரம்மத்தை அடை
வான். பரிசுத்தமான சிறந்தகுலத்திற்பிறந்த பிராம்மணஸ்ரேஷ்டர்
கள் மனத்தெளிவுடையவராய் என்னிடத்தில் யோகஞ்செய்து உயர்ந்தகதி
யைப் பெறுகின்றனர். புத்ர! என் சிறந்ததாகியவும் உருவம்
தேவருஷிகளுமாகிய ஸூக்ஷ்மமான ரூபம் சுத்தஞானிகளும் ஸந்யாஸி
களுமான பிராம்மணர்களால் அறியப்படுகின்றது. அதனிடம் காற்
றடிப்பதில்லை; ஸூர்யன் முதலியவை பிரகாசிப்பதில்லை; நீர் நிலம்
ஆகாயங்களுமில்லை; மனமுதலியவையுமில்லை. பக்ஷியே! காணப்படும்
பொருள்களனைத்தும் அதனிடமிருந்து உண்டாகின்றன. அந்தநிர்
மலனுமாகிய பிரபு அவ்வெல்லாவற்றிற்கும் ஈசுவரன். குற்றமற்றவனே!
நீ இப்போதுகண்டது என் ஸ்தூலமானஉருவம். இது ஸூக்ஷ்
மத்திற்குவழி. காரியங்களுக்குக் காரணம் நானே. அளவற்றசக்தி
யுள்ளவனே! ஆதலால், அந்தஸரஸில் உன்னால் காணப்பட்டேன்.
நான்சேர்ந்ததாக நீ கண்ட தடாகந்தான் பிரமாவினுடைய பகலி
ரவுகளென்று தெரிந்தவர்களால் கணக்கிடப்படும் காலம். யாகத்தை
யறிந்தவர்கள் யாகமென்றும் வேதமறிந்தவர்கள் வேதமென்றும்
தவம்செய்பவர்கள் ஜபயஜ்ஞமென்றும் சொல்லுவது என்னையே. [2]பேசு
கிறவனும் [3]நினைக்கிறவனும் [4]ருசிஅறிகிறவனும் [5]முகருகிறவனும்
[6]பார்க்கிறவனும் காண்பிக்கிறவனும் [7]அறிகிறவனும் அறிவிக்கிறவ
னும் [8]செல்லுகிறவனும் [9]கேட்கிறவனுமாகஇருப்பவன் ஞானஸ்வ
ரூபியானநானே. என்னைக்குறித்து யாகங்களைச்செய்துதான் ஸ்வர்க்

[1] ஸந்தேகமற்ற.

[2] வாக்கு [3] மனம் [4] நா [5] மூக்கு. [6] கண். [7] புத்தி [8] பாதம். [9] செவி
பாணி பாயு உபஸ்தம் என்னும் கர்மேந்திரியங்களையும் ஸ்பரிசமென்னும் ஞானே
ந்த்ரியத்தையும் உபலக்ஷணமாகக்கூட்டிக்கொள்க. காண்பிப்பவன் தெரிவிப்
பவன் என்பவை அந்தச்சக்திகளைக்கொடுப்பவன் என்னும்பொருளுள்ளவை.
மற்றச்சக்திகளுக்கும் இதுவே உபலக்ஷணம்.

கத்திற்குச் செல்லுகின்றனர். பற்றற்றமனத்தினால் என்னையே தியானித்துத்தான் முடிவில் உயர்ந்ததமாகியமுக்தியைப் பெறுகின்றனர். ப்ராம்மணர்களிடமுள்ள ப்ரம்மதேஜஸ் நானே. எனது [1]தேஜஸ்தான் ப்ராம்மணர்கள். என்னிடமுள்ள தேஜஸின்உருவமே அக்னியென்றறியவேண்டும். தேகங்களில் உயிரைக்காப்பவன் நானே. யோகிகளுக்கும் தத்வஜ்ஞானிகளுக்கும் நானேதான் ஈசுவரன். ஸ்ருஷ்டிக்குமுன் இவ்வுலகனைத்தும் என்னிடமிருந்தது. தர்மார்த்தகாமமோக்ஷங்களும் மனத்தூய்மையும் ஜபமும் ஸத்வரஜஸ்தமோகுணங்களும் அவரவர்காமங்களினாலுண்டாகும் ஜனனமரணங்களும்நானே. அழிவில்லாதநான் அவ்யக்தமானதேகத்தோடு முன்னே உன்னால் காணப்பட்டேனன்றோ? அதற்குமேல், ப்ரகடமானஉருவமுள்ளஎன்னைக் காலக்ரமத்தில் நீ அறியலாய். அறியாததும் அம்சமற்றதும் குற்றமற்றதுமாகிய என்னுடைய உருவம் அறிவுக்கு எவ்வளவும் எட்டாதது. ஆதலால், நாராயணனென்றுசொல்லப்பட்ட பகவானான ஹரி அறிவுக்கு மிகவும்அகப்படாதவர். பாபங்களுக்குச்சத்ருவே! ஐசுவரியம்பெற்றவர்களுக்கு அவ்வுருவம் அறியத்தகாதது. முயற்சிகளும் நமஸ்காரங்களும் பிரார்த்தனைகளுமாகிய ஸம்ஸாரபந்தங்களைவிட்டுவிட்ட மஹாத்மாக்கள் சாச்வதமானபரப்ரம்மமாகிய அந்தநாராயணரை அடைகின்றனர். குற்றமற்றபக்ஷியே! இவ்வாறு வெளித்தோற்றமுள்ள என்உருவத்தை நீ கண்டாய். பன்னகங்களைப்புசிப்பவனே! உன்னைத்தவிர வேறொருவன் இதையும் அறியான். உனது புத்தி இனிக் கெடாது. இது எல்லாவற்றிற்கும்மேலானஇடம். நீ எப்போதும் என்னிடத்தில் பக்தியுள்ளவனாயிரு. அதன்பிறகு என்ஸ்வரூபத்தை அறிவாய். தேவர்க்கும்மனிதர்க்கும் ரகஸ்யமாயுள்ள இந்தவிஷயமனைத்தும் உனக்கு உரைக்கப்பட்டது. இதுதான் எல்லாவற்றிலும் மேலானநன்மை. இது மோக்ஷம்செல்லுகிறவர்களின் வழியென்றறி' என்றார். அந்தப்பகவான் இவ்வாறுசொல்லி அங்கேயே அந்தர்த்தானமானார். தமக்குத்தாமேஆதாரமான அம்மஹாயோகி நான்பார்த்திருக்கையிலேயே தம்மிடம்சென்றார். மஹாத்மாவும் மாறுதல்ஸ்வபாவமுள்ளவரும் அறிவுக்கெட்டாதவருமாகிய அந்தப்பகவானுடைய இவ்விதமானமஹிமையை நான் முன்னே கண்டேன். ஆச்சர்யமானசெய்கையுள்ளவரும் சிறந்தஞானமுள்ளவருமான அந்தப்பகவானுடையதும் நான்நேரில்கண்டனுபவித்ததுமாகிய இந்தச்செய்கையையெல்லாம் உங்களுக்குச் சொன்னேன்' என்றார்.

[1] மகிமை.

## நாற்பத்துநான்காவது அத்யாயம்.

## தாநதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(மேற்கூறியகதையைப்படிப்பதுமுதலியவற்றின்பயன்.)

இவ்வாறு கருடர்சொல்லக்கேட்டபிறகு, அம்முனிவர்கள் அனைவரும், 'ஆ! ஆ! புண்யத்தையும் புகழையும் ஆயுளையும் ஸ்வர்க்கத்தையும் சிறந்தமோக்ஷத்தையுங்கொடுப்பதும் மிக்கஆச்சர்யமுள்ளதுமான இந்தஉயர்ந்தசரித்ரத்தை எங்களுக்கு நீர் சொன்னீர். பகைவரைத் துன்பப்படுத்துகிறவரே! இந்தசரித்ரம் பாவங்களைப்போக்குவது; தேவர்களுக்குங்கிட்டாதபொருள். ஞானிகள் அறியத்தக்கவிஷயமும் அடையத்தக்கஉயர்பதமும் இதுதான். கற்றுணர்ந்த எவன் பர்வகாலங்கள்தோறும் இக்கதையைப் பிறருக்குச் சொல்வனோ அவன் தேவர்களாலும் ரிஷிகளாலும் புகழ்ப்பெற்றபுண்யலோகங்களை அடைவான். ஒருவன் பரிசுத்தனாயிருந்து ச்ராத்தகாலத்தில் பிராம்மணர்களை இக்கதையைக் கேட்பிப்பானாயின் அந்த ச்ராத்தத்தில் ராக்ஷஸர்களுக்கும் அஸுரர்களுக்கும் பாகமிராது. பொறாமையையும் கோபத்தையும்விட்டு எல்லாப்ராணிகளின்நன்மையிலும்மேலூக்கத்துடன் எக்காலமும் இடைவிடாது இதைப்படிப்பவன் அந்தப்பகவானுடையலோகத்தை அடைவான். (இதைப்படிப்பதனால்) ப்ராம்மணன் வேதங்களில்கரைகண்டவனாவான்; க்ஷத்ரியன் ஜயம்பெறுவான்; வைசியன் தனதான்யங்கள்நிரம்பினவனாவான்; சூத்ரன் ஸுகம்பெறுவான்' என்றுசொல்லி வைனதேயரைப்பூஜித்துத் தங்கள்ஆசிரமங்களுக்குச்சென்று சாந்தியொன்றையே முதன்மையாகக் கொண்டிருந்தனர்' என்றார். தர்மத்தை அநுஷ்டிப்பதிற்சிறந்தமஹாராஜாவான யுதிஷ்டிரனே! தானத்தைப்பற்றிய இந்தஉபதேசத்தை மனத்தூய்மையின்றி வெளித்தோற்றத்தில் நிஷ்டைவைத்தவர்கள் வலிந்துஇழுத்து அறிவதற்கு முடியாது. வீரனே! ஆச்சர்யத்துடன் கேட்டதேவர்களுக்கு ப்ரம்மதேவரால் இந்தக்கதைசொல்லப்பட்டது. அப்பா! என்தாயாரிடத்தில் நானிருக்கும்போது ஸத்வகுணம்நிரம்பின அஷ்டவஸுக்கள் இக்கதையை [1]எனக்கு உரைத்தனர். நானும் இப்போது உனக்குச் சொன்னேன். ஆதலால், அக்னிஹோத்ரத்தை விடாமலும் ஜபம்என்னும் யாகத்தைத் தலைமையாகக்கொண்டும் ஆசையென்னும்பந்தத்தையொழித்துமிருக்கும் ஸாதுக்கள்தாம் பர

---

[1] 'மயா' என்றது, 'மம' என்றிருத்தல்வேண்டும்.

ப்ரம்மஸாயுஜ்யத்தை அடைவர். தேகவியாபாரங்களாகிய யாகங்களை விட்டு ஜபமென்னும்யாகத்தை முக்யமாகக்கொண்டு மனத்தினால் விஷ்ணுவைத்யானிப்பவர் உயர்கதிபெறுவர். பாரதனே! சிறந்தமோக்ஷமும் மோக்ஷத்தின்வாயிலும் இதுதான். ஆத்மஜ்ஞானமுள்ளவர்கள் இதனாலேதான் பரகதியடைவர்" என்றார்.

## நாற்பத்தைந்தாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி)



(கிருஷ்ணன், பீஷ்மரிடம் கேட்டுக்கொண்டபடி தம்புத்ரனுக்குப் பரமசிவனுடைய மகிமையைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! கங்காபுத்ரரே! எல்லாந்தெரிந்தவரும் உலகமெல்லாவற்றையும் தமது மாயையினால் நடத்துகிறவரும் பிரம்மதேவருக்கும் ஈச்வரரும் கபிலவர்ணமுள்ளவரும் உலகமெல்லாம் தமது சரீரமாகவுடையவரும் உலகங்களுக்கெல்லாம்பிரபுவும் தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் தந்தையும், மூலப்பிரக்ருதிக்குக்காரணமும் பகவானுமாகிய சங்கரனுடைய நாமங்களையும் மகிமையையும் பற்றி நீர்கேட்டிருப்பதை இப்போது எனக்கு உள்ளபடிசொல்லும்" என்று கேட்க, பீஷ்மர், 'சிறந்தஞானமுள்ளவரான மஹாதேவருடைய குணங்களைச்சொல்ல நான் சக்தனல்லேன். அந்தத்தேவர் எல்லாவிடங்களிலும் இருப்பவர்; ஓரிடத்திலும் காணப்படுவதுமில்லை, ப்ரம்மாவையும் விஷ்ணுவையும் இந்திரனையும் படைத்தவர்; இவர்களுக்கும்பிரபுவானவர்; ப்ரம்மா முதல் பிசாசங்கள் ஈறாகவுள்ள தேவர்கள் அவரை உபாஸனைசெய்கின்றனர். அவர் பிரக்ருதிக்கும் புருஷனென்று சொல்லப்பட்ட ஆத்மாவுக்கும் மேம்பட்டவர். யோகமார்க்கத்தையறிந்து உண்மைப்பொருளைக் கண்டிருக்கும் ரிஷிகளால் அவர் தியானிக்கப்படுகிறார். அழிவற்ற பரப்பிரம்மமும் அவரே. காரியமாகவும் இருப்பது இல்லாததாகவுமிருப்பவரும் தேவர்க்குந்தேவரும் பிரஜைகளுக்கு ஈச்வரருமாகிய அவர் தமது சக்தியினால் பிரகிருதிபுருஷர்களைக் [1]கலக்கி அதினின்று ப்ரம்மாவைப் படைத்தார். கர்ப்பவாஸம், பிறப்பு, மூப்பு, இறப்புகளுள்ள மானிடனெவன் தேவர்க்குந்தேவரான ஸர்வஜ்ஞருடைய குணங்களைச்சொல்லத் திறமையுள்ளவனாவன்? புத்ரனே! சங்கம் சக்கரம் கதைகளைத்தரித்திருக்கும் நாராயணரைத்தவிர என்னைப்போன்றவன் பரமேச்வரரான சங்கரரை அறி

[1] அசைவுண்டாக்கி.

யத்தக்கவன்? எல்லாந்தெரிந்தவரும் குணங்களிற்சிறந்தவரும் யாராலும் எவ்வகையிலும் வெல்லமுடியாதவரும் திவ்யஜ்ஞானமுடையவரும் சிறந்தமகிமையுள்ளவருமாகிய இந்தவிஷ்ணு யோகமென்னும் கண்ணினால்பார்க்கிறார். மகாத்மாவான கண்ணபிரான் ருத்ரரிடம்பக்தி செய்கிறமையாலேதான் ஜகத்தை வியாபித்திருக்கிறார். அரசர்க்கரசனே! பாரதனே! முற்காலத்தில் இவர் பதரிகாச்ரமத்தில் அந்தச்சங்கரனை ஆராதித்துப் பொன்போன்ற கண்களையுடைய மகேச்வரனிடத்திலிருந்து எல்லாவுலகங்களுக்குந் துர்லபமான விஷயங்களையுங்காட்டிலும் அதிகப்பிரியமாயிருக்கின்றவைகளை அடைந்தார். வரங்கொடுப்பவரும், சராசரங்களுக்குத்தந்தையுமாகிய சிவபெருமானை ஆயிரவருஷகாலம் நிரம்பும்வரை ஆராதித்து இந்தக்கண்ணபிரான் தவஞ்செய்தார். ஒவ்வொரு யுகத்திலும் கிருஷ்ணனால் மகாதேவர் ஆராதிக்கப்பெற்றார். அவர் அம்மஹாத்மாவின்சிறந்தபக்தியினால் அனுக்கிரகஞ்செய்தார். உலகத்திற்குக்காரணமும் மகாத்மாவுமாகிய சங்கரனுடைய மகிமை எப்படிப்பட்டதென்பதை அச்யுதனான இவர் புத்திரலாபம்பெற்றபோது நேரிற்கண்டார். பாரதனே! எவருக்குமேற்பட்டவர்யாரையும் நான்பார்க்கவில்லையே? அந்தத்தேவர்க்குந்தேவரானசங்கரருடைய நாமங்களை முழுதும்[1] சொல்ல யான் வல்லேனல்லேன். அரசனே! சிவபெருமானுடையகுணங்களையும் உண்மையான ஈச்வரத்தன்மையையும் முழுவதுஞ்சொல்வதற்கு மகாவீரரான இந்தக்கிருஷ்ணபகவான் சக்தியுள்ளவர்" என்றார். சிறந்த புகழுள்ள பிதாமகரான பீஷ்மர் யுதிஷ்டிரருக்கு இவ்வாறுசொல்லிக் கிருஷ்ணனைப்பார்த்துச் சிவபிரானது மகிமையைப்பற்றிப் பின்வருமாறு சொல்லலானார். "தேவர்க்கும் அசுரர்க்கும்பிதாவே! பகவானே! விஷ்ணுவே! மங்களமானரூபத்தையுடையவரும் ஈச்வரருமான சிவபிரானுடைய ஆயிரநாமங்களை முன்னர் பிரமலோகத்தில் பிரம்மஜ்ஞானியான தண்டிமஹரிஷியினால் பிரமதேவருக்குச்சொல்லப்பட்டனவல்லவா? அவற்றை யுதிஷ்டிரன் என்னைக்கேட்கிறான். அவனுக்கு நீர்சொல்லக்கடவீர். தவத்தைச்செல்வமாகவுடையவரும் அனுஷ்டானஞ்செய்தவரும் இந்திரியங்களைஜயித்தவருமாகிய இந்த வியாஸர்முதலான ரிஷிகளும் நீர்சொல்வதைக் கேட்கட்டும். அழிவில்லாதவரும் அனந்தரூபியும் [2] ஹோமஞ்செய்பவரும் காப்பவரும் உலகத்தைப்படைப்பவரும் [3] அக்நியும் [4] தலையில்கேசங்களில்லாதவ

---

[1] 'வ்யாகயாதும்' என்பது, 'வாக்யாதும்' என்றிருத்தல் வேண்டும்.

[2] ஸம்ஹாரஞ்செய்பவர்.

[3] எல்லாவற்றையும் மேலானபதத்திற்குக் கொண்டுபோகிறவர்.

[4] 'வ்யோமகேசா' என்று ஆகாயத்தைக் கேசமாகக் கூறியிருப்பதினால் அதற்கு உருவமில்லாமையினால் கேசமில்லாதவர் என்று சொல்லப்பட்டது.

ரும் ஜடைதரித்தவருமான ஈச்வரரது மிக்கமகிமையைச் சொல்லும்" என்றார்.

அதைக்கேட்ட கிருஷ்ணபகவான், "ஈச்வரர்செயல்களின்வழியைச் சரியாக அறிவது முடியாது. ஸூக்ஷ்மஜ்ஞானிகளாகிய ப்ரம்மா இந்த்ரன்முதலியதேவர்களும் மஹரிஷிகளும் ஸாதுக்களுக்காதாரமான அவரது முடிவையும் முதலையும் அறியவில்லையே. அவரைப் பெயர்களினால்மட்டுமறிவது எப்படிக்கூடும்? அஸுரர்களைக்கொன்றவரும் தவங்களினால் ஆராதிக்கப்படுகிறவருமாகிய அந்தப்பகவானுடைய குணங்களிற்சிலவற்றை உள்ளபடி நான் உங்களுக்கு உரைப்பேன்" என்றுசொல்லி, ஆசமனஞ்செய்து பரிசுத்தராயிருந்துகொண்டு மஹாத்மாவும் சிறந்தஞானமுள்ளவருமான சங்கரனுடைய குணங்களைச் சொல்லலானார்.

"பிராம்மணசிரேஷ்டர்களே! நீங்களும், ஐயா! யுதிஷ்டிரரே! நீரும், பீஷ்மரே! நீரும், ஜகத்பிரபுவானசங்கரனுடையநாமங்களைக் கேளுங்கள். முன்னே நான் ஸாம்பனுக்காகப் பெறுதற்கரியபேறு பெற்றதையும் கேளுங்கள். முன்னே நான் யோகசக்தியினால் சிவபெருமானை நிஜரூபத்துடன் கண்டேன். யுதிஷ்டிரரே! சிறந்தபுத்திமானான பிரத்யும்னனால் முன்னர், சம்பராஸுரன்கொல்லப்பட்டுப் பன்னிரண்டுவருஷங்கள்கடந்தபின் பிரத்யும்னன் சாருதேஷ்ணன் முதலான ருக்மிணியின்புத்ரர்களைக் கண்டு ஜாம்பவதியானவள் புத்ரனை விரும்பினவளாய் என்னிடம்வந்து, 'அச்யுதரே! சூரனும் பலசாலிகளிற்சிறந்தவனும் அழகியஉருவமுள்ளவனும் குற்றமற்றவனும் உம்மைப்போலிருப்பவனுமான ஒருபுத்ரனை எனக்கு விரைவிற்கொடுக்கக்கடவீர். இம்மூன்றுலகங்களிலும் உமக்குக் கிட்டாததொன்றுமில்லை. யதுவம்சத்தைக்காப்பவரே! நீர் நினைத்தால் வேறுலோகங்களையும் உண்டாக்குவீர்; நீர்பன்னிரண்டுவருஷங்கள்நோன்பெடுத்து உடம்பைஉலர்த்திப் பசுபதியைஆராதித்து ருக்மிணியினிடம் புத்ரர்களைப்பெற்றீர். மதுஸூதனரே! சாருதேஷ்ணன், ஸுசாரு, சாருவேஷன், யசோதரன், சாருச்ரவன், சாருயசஸ், பிரத்யும்னன், சம்பு என்னும் சிறந்தபராக்ரமசாலிகளானபுத்ரர்களை ருக்மிணியினிடம் உண்டாக்கினதுபோல எனக்கும் புத்ரனைக்கொடும்' என்றுகேட்டாள். இவ்வாறுகேட்ட நுண்ணிடையாளான ஜாம்பவதியைநோக்கி, நான், 'அரசியே! எனக்குவிடைகொடு. நீ சொன்னதைச் செய்யப் போகிறேன்' என்றுசொன்னேன். அவளும் என்னைப்பார்த்து, யாதவரே! க்ஷேமமுண்டாகவும் ஜயமுண்டாகவும் செல்லக்கடவீர்.

ப்ரம்மா, ஶிவன், காஸ்யபர், நதிகள், தேவர்கள், புண்யக்ஷேத்ரங்கள், ஓஷதிகள், த்ரேதாக்னிகள், வேதங்கள், ரிஷிக்கூட்டங்கள், யாகங்கள், கடல்கள், தக்ஷிணைகள், ஸாமங்கள், நக்ஷத்ரங்கள், பித்ருதேவதைகள், நவக்ரகங்கள், தேவபத்தினிகள், தேவகன்னிகைகள், தேவமாதர்கள், [1]மன்வந்தரங்கள், பசுக்கள், சந்திரன், ஸூர்யன், விஷ்ணு, காயத்ரி, ப்ரம்மவித்தை, ருதுக்கள், ஆண்டுகள், க்ஷணம், லவம், முகூர்த்தம், நிமிஷம், யுகம் இவையெல்லாம் உமதுமனத்திற்கு அநுகூலமாக நீர் செல்லுமிடமெல்லாம் ஸுகமாக உம்மைக்காப்பாற்றக்கடவன. குற்ற மற்றவரே! நீர் ஜாக்ரதையோடு க்ஷேமமாக வழியிற்செல்லும்' என்று சொன்னாள். ஜாம்பவதியினால் இவ்வாறு மங்களாசாஸனஞ்செய்யப் பெற்ற நான் அவளிடம்செலவுபெற்றுக்கொண்டு புருஷஶ்ரேஷ்டரான என் தந்தையினிடமும் தாயினிடமும் ராஜாவான ஆஹுகனிடமுஞ்சென்று 'வித்யாதரராஜன்பெண்ணான [2]ஜாம்பவதி மிக்க துயரத்துடன் என்னிடம்செலவைத்தெரிவிக்க, வெகுகஷ்டப்பட்டு அவளைவிட்டுப்பிரிந்தபிறகு கதனையும் மிக்கபலசாலியான பலராமனையும் அடைந்தேன்' அவர்களிருவரும், 'உனது தவம் இடையூறின்றிப்பயனைப்பெறக்கடவது' என்று அன்புடன்கூறினர். நான் பெரியோரிடம்செலவுபெற்றுக்கொண்டபிறகு கருடனைநினைத்தேன். கருடன் என்னைத் தூக்கிக்கொண்டுசென்றான். இமயமலையைச்சார்ந்து கருடனை அனுப்பிவிட்டேன். அந்தஇமயமலையில் ஆச்சர்யமானவிஷயங்களைக் கண்டேன். தவத்திற்குமிகச்சிறந்தஇடமும் மிக்கஆச்சரியமானதும் தேவர்களாலும் கந்தர்வர்களாலும்பூஜிக்கப்பெற்றதும் பிரம்மதேஜஸினால்வ்யாபிக்கப்பெற்றதும் [3]தவம், மருது, கடம்பு, தென்னை, மருதாணி, தாழை, நாவல், பாதிரி, ஆல், வருணம், வத்ஸநாபம், வில்வம், ஸரளம், விளா, பியாளம், ஆச்சா, பனை, இலந்தை, குருக்கத்தி, புன்னை, அசோகம், மா, பசிலை, இலுப்பை, கோவிதாரம், சண்பகம், பலாமுதலிய பழங்களையும் புஷ்பங்களையுங்கொடுக்கும் காட்டுமரங்கள் அநேகங்களாலும் பூத்திருக்கும் புதர்களினாலும் கொடிகளினாலும் வாழைத்தோட்டங்களினாலும்விளங்குவதும் பலவகைப்பக்ஷிகளால்உண்ணப்பட்ட கனிகளையுடையமரங்களினாலும் பலஇடங்களில்வைக்கப்பட்ட திருநீற்றுக்குவியல்களினாலும் அலங்கரிக்கப்பட்டதும் புள்ளிமான்கள், குரங்குகள், புலிகள்,

[1] எழுபத்தொருதேவயுகங்கள்

[2] இவளை வித்யாதரராஜனமகள்என்றுசொன்னது ஜாம்பவான் தேஜஸ்ஸம் சம்என்னும்அபிப்பிராயத்தினால்.

[3] ஒருமரம்.

ஸிம்மங்கள், வேங்கைகள், மான்கள், மயில்கள், பூனைகள், பாம்புகள், எருமை, காட்டுப்பன்றி முதலிய பலவகைமிருகஜாதிகள் நிரம்பியதும் எப்போதும் மதம்பொழிந்த யானைகளினால் சோபிப்பதும் களித்திருக்கும் பலவகைப்பறவைகளினால் அடையப்பட்டதும் மேகங்களைப்போலிருக்கும் பலநிறமான புஷ்பங்களுள்ள மரச்சோலைகளினால் அலங்கரிக்கப்பட்டதுமான வ்யாக்ரபாதபுத்ரரும் மஹாதபஸ்வியுமான உபமன்யுமஹரிஷியின் திவ்யாஸ்ரமத்தைக் கண்டேன். பலவகைமலர்களின் மகரந்தங்களுடன்சேர்ந்ததும் யானைகளின் மதஜலவாஸனையுள்ளதும் தெய்வப்பெண்களின் ஸங்கீதநாதத்தைப் பரப்புவதுமான காற்று என்மீது எதிரே வீசிற்று. வீரரே! அருவிகளின் ஓசைகளும், பறவைகளின் கூவுதல்களும், யானைகளின் அழகான கர்ஜனைகளும், கின்னரர்களின் சிறந்த ஸங்கீதங்களும், ஸாமவேதகானஞ்செய்யும் முனிவர்களின் அழகிய குரல்களும் கேட்கப்பட்டன. வேறொருவரால் மனத்தினால் நினைக்கமுடியாதது; அநேக அக்னிஹோத்ரங்களினால் விளங்குவது; புஷ்பங்கள் நிரம்பின விசாலமான அக்னிஹோத்ரசாலைகளினால் அலங்கரிக்கப்பட்டது; மன்னரே! உலகத்தைப் பரிசுத்தமாக்கும் ஜலத்தையுடைய கங்கையினால் எப்போதும் அடையப்பட்டும் அலங்கரிக்கப்பட்டுமிருப்பது; தர்மிஷ்டர்களிற் சிறந்தவரும் அக்னிக்குச் சமானமான பிரபாவமுள்ளவருமான மஹாத்மாக்களினால் சோபிக்கப்பெற்றிருப்பது; காற்றையும் ஜலத்தையும் புகையையும் ஆவியையும் பாலையும் ஆகாரமாகக்கொண்டவரும் எப்போதும் ஸ்நானம், ஜபம், தியானங்களை விடாதவருமான யோகிகளான ப்ராம்மணஸ்ரேஷ்டர்களால் எங்கும் அடையப்பட்டிருப்பது; பசுக்களைப்போலும் மான்களைப்போலும் புல்முதலியவற்றை மேய்பவரும், கற்களினால் தான்யங்களைத் தேய்த்து எடுத்துக்கொள்கிறவரும், பற்களையே உரல்களாகவைத்துக்கொண்டு உமிமுதலியவற்றை உமிழ்ந்து உண்பவரும், சந்திரகிரணங்களையும் நுரைகளையும் குடிப்பவரும், அரசம்பழங்களைத் தின்பவரும், நீரில்படுப்பவரும், மரவுரியையும் தோலையும் ஆடையாகத்தரிப்பவரும், இன்னும் மிகக்கடினமான பல நியமங்களை மேற்கொண்டு சிறந்த தவங்களைச்செய்பவருமான அநேகரிஷிகளைக் கண்டு அவ்வாஸ்ரமத்தில் பிரவேசிக்கத்தொடங்கினேன். பாரதரே! வேந்தரே! மஹாத்மாக்களும் பரிசுத்தமான செய்கைகளையுடையவருமாகிய சிவபிரான்முதலான தேவர்களாலும் எக்காலமும் மிகவும் பூஜிக்கப்பட்ட அந்த ஆஸ்ரமமண்டலம், ஆகாயத்தில் சந்திரமண்டலம்விளங்குவதுபோல விளங்கிற்று. சிறந்த தவமுள்ள மகாத்மாக்களின் மகிமையினால் அவர்களின்

ஸமீபத்தில், கிரிகள்பாம்புகளோடும் புலிகள்மான்களோடும் ஸ்நேஹிதர்கள்போல விளையாடின. வேதங்களிலும் வேதாங்கங்களிலும் கரைகண்டவர்களும் பலவிதநியமங்களில்பெயர்பெற்றவர்களும் மிகச் சிறந்தமனமுள்ளவர்களுமாகிய ரிஷிகளால்அடையப்பட்டதும், எல்லாப்பிராணிகளின்மனங்களையும் கவருவதுமாகிய அந்தச்சிறந்தஆஸ்ரமத்தில்பிரவேசிக்கும்போதே ஜடையும்மரவுரியும்தரித்தவரும் மகிமை பொருந்தியவரும் ஒளியினாலும் தவத்தினாலும் அக்நியைப்போல ஜ்வலிப்பவரும் சிஷ்யர்களால் அநுஸரிக்கப்பெற்றவரும் மனத்தையடக்கினவரும் இளமைப்பருவத்திலிருப்பவருமாகிய ஒருப்ராம்மணஸ்ரேஷ்டரைக் கண்டேன். அந்தஉபமன்யுவென்னும்முனிவர், தலைவணங்கி வந்தனம்செய்து என்னைப்பார்த்து, 'தாமரைக்கண்ணரே! உமது வரவு நல்வரவு. நான்பூஜிப்பதற்குரியநீர் என்னைப்பூஜிப்பதினாலும் நான்காணவேண்டியநீர் என்னைக்காணக் கருதுவதனாலும் எங்கள்தவங்கள் பயன்பெற்றன. ஸர்வவியாபியான நீர் மானிடத்தன்மையை அநுஸரித்திருப்பதை நாங்கள் அறிந்திருக்கிறோம்' என்று சொன்னார். நான் அவரிடம் கைகூப்பிக்கொண்டு விலங்குகள், பக்ஷிகள், அக்னிகள், தவம், சிஷ்யர்கள் எல்லாவற்றினுடையக்ஷேமங்களையும் விசாரித்தேன். பிறகு, முக்காலங்களையும்அறிந்த அந்தஉபமன்யு முனிவர் என்னைப்பார்த்து மிக்கஅழகான இன்சொல்லினால் பேசலானார். 'கிருஷ்ணா' உம்மைப்போன்ற புத்ரனை நீர் அடைவது திண்ணம். மிகப்பெருந்தவம்செய்து லோகநாதரானசிவபெருமானை ஆராதனம்செய்யும். விஷ்ணுவே! மஹாதேவர் உமாதேவியுடன் இங்கே விளையாடுகிறார். ஜனார்த்தனரே! முன்னர், தேவர்களும் ரிஷிக்கூட்டங்களும் இவ்விடத்தில் தவத்தினாலும் பிரம்மசரியவிரதத்தினாலும் ஸத்யவாக்யத்தினாலும் மனத்தையடக்குவதனாலும் தேவஸ்ரேஷ்டரான சங்கரரை ஆராதித்தது தாங்கள்விரும்பின மேலான பயன்களைப் பெற்றனர். பகைவர்களைக்கொல்லுகிறவரே! நீர்யாரைத் தேடுகிறீரோ சிந்தைக்கெட்டாதவரும் மஹிமைக்குந்தவத்துக்கும் இருப்பிடமுமாகிய அந்தச்சிவபெருமான் நன்மைகளைப்பெருக்கிக்கொண்டும் தீமைகளைச்சுருக்கிக்கொண்டும் தேவியுடன் இங்கே இருக்கிறார். மேருமலையையும்அசைப்பவனாகிய ஹிரண்யகசிபுவென்னும்ஓர்அஸுரன் இருந்தானல்லனோ? அவன் பத்துக்கோடிவருஷம் எல்லாத்தேவர்களையும் ஆளும்திறமையைச் சிவபிரானால் அடைந்தான். அவன்புத்ரர்களில் சிறந்தவனும் புகழ்பெற்றவனுமாகிய மமனனென்பவன் மகாதேவரிடம்வரம்பெற்று இந்திரனைஎதிர்த்துப் பத்

றுக்கோடிவருஷகாலம் போர்செய்தான். ஐயா! கேசவரே! விஷ்ணுவினது அந்தஉக்கிரமானசக்கரமும் இந்திரனுடையவஜ்ராயுதமும் மந்தரன்என்னும்பெயருள்ள க்ரஹன்என்னும் அஸுரனுடைய தேகத்திற்பட்டுச்சிதறிப்போயின. குற்றமற்றவரே! ரிஷபக்கொடியுடையசிவபெருமானால் முன்னர்உண்டாக்கப்பட்டதும் ஜ்வலிக்கின்ற அக்னியைப்போன்றதும் சக்தியினால் யாராலும்வெல்லமுடியாத ஆச்சரியமுள்ளதும் சங்கரனைத்தவிரமற்றவரால் பார்க்கவுமுடியாததுமான சக்ராயுதம், ஜலத்துக்குள்ஸஞ்சரிப்பவனும் பலத்தினால்கர்வங்கொண்டவனுமான அஸுரனைக்கொன்று அந்தப்பகவானால் உமக்களிக்கப்பட்டதன்றோ? அந்தசக்கரம் ஸுதர்சனமென்று பெயருள்ளதாயிருக்கட்டுமென்று ஆதியிலேயே சங்கரரால்சொல்லப்பட்டது. அது முதல் அதற்கு ஸுதர்சனமென்னும்பெயர் உலகத்தில்நிலைநின்றது. ஐயா! கிருஷ்ணா! அந்தசக்கரம் க்ரகனுடைய அங்கங்களில் தெறித்துப்போயிற்று. வரம்பெற்றவனும் மிக்கபலசாலியும் புத்திசாலியுமானகிரகனுடையஉடம்பில் நூற்றுக்கணக்கானசக்ரம் வஜ்ரமுதலிய ஆயுதங்களும் செல்லவில்லை. மிக்கபலசாலியானகிரகனால்பீடிக்கப்பட்டதேவர்கள் சிவபிரானிடம் [1]வரம்பெற்றுக்கொண்டபிறகு அஸுரத்தலைவர்களை அதிகமாகக்கொன்றனர். சிவபெருமான் வித்யுத்பிரபன் என்னும் அஸுரன்மேலுமருள்வைத்து மூன்றுலோகங்களுக்கும் ஈஸ்வரனாயிருக்குந்தன்மையை அளித்தனர். அவன் நூறாயிரம்வருஷகாலம் எல்லாஉலகங்களுக்கும் ஈஸ்வரனாயிருந்தான். 'எப்போதும் என்வேலைக்காரனாயிருப்பாய்' என்றும் அவனுக்குச்சொன்னர். அவனுக்குக் கோடிகுமாரர்களையும் பிரபுவானவர் கொடுத்தார். பிறப்பில்லாதஅந்தப்பகவான் குசத்வீபத்தை அவனுக்கு ராஜ்யமாகக்கொடுத்தார். அவ்வாறே சதமுகனென்னும்பெரியஅஸுரன் ப்ரம்மாவினால் படைக்கப்பட்டான். அவன் நூற்றிருருவருஷகாலம் தனதுமாம்ஸத்தை அக்னியில் ஹோமம்செய்தான். அவனிடத்தில் கிருபைகூர்ந்து பகவானசங்கரர், 'உனக்கு நான என்னசெய்யவேண்டும்?' என்றுகேட்டனர். அவரைப்பார்த்துச சதமுகன், 'தேவஸ்ரேஷ்டரே! எனக்கு ஆச்சரியமானயோகசக்தியும் எக்காலமும்அழியாத தேகவன்மையும் கொடுக்கவேண்டும்' என்றுகேட்டான். பிரபுவான பகவானும்அவன்கேட்டதற்கு, 'அப்படியேயாகட்டும்' என்றுசொன்னர். முன்பு ப்ரம்மதேவரும் தியானத்தினால் ஆத்மாவினிடம் மனம்செலுத்திப் புத்ரனுக்காக மூந்நூறுவருஷகாலம் ஒருயாகம்செய்தார்.

---

[1] 'வராஜக்ரு:' என்று பாடங்கொள்ளப்பட்டது.

அவருக்கும் அந்தயாகத்திற்குத்தக்கமகிமையுள்ள ஆயிரம்புத்ரர்களை மஹாதேவர் கொடுத்தார். கிருஷ்ண! தேவர்களாலும் புகழ்ப்பெற்ற யோகீஸ்வரரை உமக்கு நிச்சயமாகத்தெரியுமே. யாஜ்ஞவல்கியர் என்றுபெயர்பெற்ற அநேகச்சிறந்தாமிஷ்டரானரிஷி மஹாதேவரை ஆராதித்து ஒப்பற்றபுகழைப்பெற்றார். யோகத்திலமனம்செலுத்தினவரும் பராசரபுத்ரவருமான வேதவ்யாஸமுனிவரும் சங்கரரை ஆராதித்துத்தான் மிகவிலாதகீர்த்தியையடைந்தார். முன்னர் வாலகில்யர் என்னும் மஹரிஷிகள் இந்திரனால் அவமதிக்கப்பட்டுக் கோபமுற்றுத் தவத்தினால் சிவபெருமானை ஆராதித்தனர். தேவர்களுள்சிறந்தவரும் லோகநாதருமாகிய மஹாதேவர் அவர்கள்மேல்திருவுடைவைத்து, 'அமிருதத்தைத்தக்கொண்டுவருமகருடனை உங்கள் தவத்தினால் உண்டாக்குவீர்கள்' என்றுசொன்னார். முன்னம், மஹாதேவருடைய கோபத்தினால ஜலமே இல்லாமற்போயிற்று. தேவர்கள் சிவபிரானைப் பற்றி ஸப்தகபாலமென்னும் யாகம்செய்ததினால் வேறுஜலம் உண்டாக்கப்பட்டது. சிவபிரான் அருள்செய்தபிறகுதான் பூமியில் ஜலமுண்டாயிற்று. பிறகுவே அத்ரியின்பாரியையும் சங்கரரால்கொடுக்கப்பட்ட தத்தாத்ரேயர், சந்திரன், துர்வாஸரென்னும் மூன்றுகுமாரர்களை அடைந்தாள். பிரமஜ்ஞானமுள்ளவளும் அத்ரிபத்னியுமான அனஸூயை தனபாததாவைப்பார்த்து, 'ரிஷியே! நான் இனி உமக்கு உட்பட்டவளாக எவ்வகையிலும் இரேன்' என்றுசொல்லி, அவரைவிட்டு மஹாதேவரைச் சரணமடைந்தாள். அத்ரிமஹரிஷியினிடம் பயத்தினால் அவள் சங்கரரது அனுக்ரஹத்தைவேண்டி முந்நூறு வருஷகாலம் ஆகாரமில்லாமல் உலக்கைகளின்மேல் படுத்திருந்தாள். ஈஸ்வரர் அவளைப்பார்த்து நகைத்துக்கொண்டு, 'உனக்குபபிள்ளையுண்டாவன்; கணவனில்லாமலே ருத்ரர் அனுக்ரஹத்தினால் உண்டாகப்போகிறான். ஸந்தேகமில்லை. உன்வம்சத்தில் உன்பேராலேயே நீ விரும்பும்கீர்த்தியை அடைவான்' என்றுசொன்னார். மதுஸூதனரே! மஹிமைபொருந்திய விகர்ணமுனிவரும் பக்தர்களுக்கு நன்மையை அளிக்கும மஹாதேவரை ஆராதித்துச் தவஸித்தியை அடைந்தார். கேசவரே! கூர்மையானமனமுள்ளசாகல்யமுனிவர் தொள்ளாயிரவருஷகாலம் மனோயாகத்தினால சிவபிரானை ஆராதித்தார். அவரிடம் அன்புகூர்ந்தபகவான் அவரைப்பார்த்து, 'குழந்தாய்! நீ கிரந்தகர்த்தாவாவாய். மூன்றுலகங்களிலும் அழிவில்லாத கீர்த்தி உனக்கு உண்டாகும். உனதுகுலம் மஹரிஷிகளினால் அலங்கரிக்கப்பட்டதும் அழிவற்றதுமாயிருக்கக்கடவது. ஸூத்ரங்களைச்செய்பவ

னும் ப்ராம்மணஸ்ரேஷ்டனுமான குமாரன் உனக்கு உண்டாவன்' என்றுசொன்னார். கிருதயுகத்தில் ஸாவர்ணியென்று கியாதிபெற்ற ஒருரிஷியிருந்தார். அவர் இவ்விடத்தில் ஆறாயிரவருஷகாலம் தவம் செய்தார். பகவானானருத்ரர் அவரிடம் பிரத்யக்ஷமாக வந்து, 'குற்றமற்றவனே! உன்மேல் அநுக்ரகம் வைத்திருக்கிறேன். உலகத்தில் கியாதிபெற்று க்ரந்தகர்த்தாவாகவும் மூப்பிறப்புகளில்லாதவனாகவும் இருப்பாய்' என்றுசொன்னார். ஜனார்த்தனரே! முற்காலத்தில் இந்திரன் பக்தியுடன் திசைகளை ஆடையாகஉடையவரும் நீறணிந்தவருமாகிய மஹாதேவரைக் காசியில் ஆராதித்துத் தேவராஜ்யத்தையடைந்தான். முன்னே நாரதமகரிஷியினால் பக்தியோடு சங்கரர் ஆராதிக்கப்பெற்றார். தேவசிரேஷ்டரும் உலகத்திற்குத்தந்தையும் ஆசார்யருமான மஹாதேவர் அவர்மேல் அநுக்கிரகம்வைத்து, 'மஹிமையிலும் தவத்திலும் புகழிலும் உமக்கொப்பாக யாருமிரார். பாட்டினாலும் வாத்தியத்தினாலும் எப்போதும் என்னை ஸந்தோஷப்படுத்துவீர்' என்றுசொன்னார். பாணாஸுரன் ஸுப்ரம்மண்யருக்கொப்பாயிருத்தலையும், மன்மதன் கர்வபங்கத்தையும், லவணாஸுரன் மற்றவரால் கொல்லக்கூடாமையையும், ராவணன் மிகுந்த பராக்ரமத்தையும், யமன் நாசத்தையும் அடைந்தனர். அவருக்குமேலான பிரபு வேறு யார்? ஐயா! பிரபுவே! மாதவரே! நானும் முன்னே தேவர்க்குத் தேவரான பசுபதியை நேராகக்கண்டேன் அதையும் கேளும். பிரபுவே! நான் அவ்வாறு நியமத்துடன் சிறந்தசக்தியுள்ளஈஸ்வரனை எதற்காக ஆராதித்தேனென்பதையும் விரிவாகக்கேளும். குற்றமற்றவரே! தேவர்க்குந்தேவரான மகேஸ்வரரிடமிருந்து யான் அடைந்தவற்றையெல்லாம் முழுதும் உமக்குச் சொல்லுவேன். ஐயா! முன்னம் கிருதயுகத்தில் வேதங்களிலும் வேதாந்தங்களிலும் கரைகண்டவரும் பெரும்புகழ்பெற்றவருமான வியாக்ரபாதரென்னுமரிஷியொருவர் இருந்தார். நான் அவருடையகுமாரன். எனக்கு இளையவர் தௌமியரென்பவர். மாதவரே! பிறந்துசிலகாலத்துக்கெல்லாம் தௌமியருடன்கூடவிளையாடிக்கொண்டே ஆத்மஜ்ஞானமுள்ளமுனிவர்களின் ஆஸ்ரமத்திற்குச்சென்றேன்; அவ்விடத்தில்கறக்கப்படும்பசுமாட்டையும் ருசியில் அமிருதத்திற்கொப்பான அதன்பாலையும் கண்டேன். மதுஸூதனரே! அதுமுதல் என்மாதாவிடம், 'தாயே! எனக்குப் பால்கொடு, பால்கொடு' என்றழுதேன். மாதவரே! அவ்வாறு என்னால்கேட்கப்பட்ட என் அன்னை பாலில்லாமையால் துயரப்பட்டுக்கொண்டு மாவைத்தண்ணீரில்கரைத்து எங்கள் இருவருக்கும் பாலெ

ன்று குடிப்பதற்குக் கொடுத்தாள். ஐயா! அதன்பிறகு, ஒருகால் பசுவின்பாலையே நான் குடித்தேன். செல்வமுள்ள எங்களுறவினர் வீட்டிற்கு யாகம்நடக்கும்போது என்னை என்பிதா அழைத்துக் கொண்டுபோனார். அவ்விடத்தில் தேவர்களைப்போஷிப்பதாகிய தெய்வப்பசுவானகாமதேனு பால்கறந்தது. ஐயா! நதியில் அமிருதத்துக் கொப்பான அந்தப்பாலைக்குடித்து அதனுண்டாகும் விதங்களையும் பாலின்குணங்களையும் அறிந்துகொண்டபிறகு அந்த மாக்ஷாரத்ஜலம் எனக்கு வேண்டியிருக்கவில்லை. அப்போது குழந்தையாயிருந்ததனால் என் தாயைப்பார்த்து, 'தாயே! நீ எனக்குக்கொடுத்தது பால் சேர்ந்தஆகாரமன்றோ?' என்றுகேட்டேன். மாதவமே! அதன்பிறகு, என் தாய் துக்கத்தினால கண்ணீர்விட்டுப் பிள்ளையினிடமுள்ள அன்பினால தழுவி உச்சிமோந்து, 'குழந்தாய்! ஆச்மத்யானத்திலிருந்து கொண்டு கிழங்குகளையும் வேர்களையும் கனிகளையும் உண்டு எக்காலமும் வனத்திலேயேவஸிக்கும் முனிவர்களுக்குப் பாலன்னம் ஏது? வாலகில்யரால் அடையப்பட்ட தேவநதியாகிய கங்கையைச்சார்ந்து வனங்களிலும் மலைகளிலும்வஸிக்கும் முனிவர்க்குப் பாலேது? குமார! தேசங்களிலுள்ள ஆகாரங்களைவிட்டுக் காட்டுக்கனிகளைப்புசித்துக் காட்டிலுள்ள ஆஶ்ரமத்தில்வஸிக்கும் பரிசுத்தர்களும் நீரைக்குடிப்பவர்களுமான ரிஷிகளுக்குப் பசுமாடுகளின் வாசமேயில்லாதகாட்டில் பாலில்லையே? நதிகளிலும் குகைகளிலும் மலைகளிலும் பலவிதமான புண்ணியதீர்த்தங்களிலும் தவத்தையும் ஜபத்தையும் விடாமலிருக்கும்நமக்குச் சிவபெருமானே முக்கியமான ஆதரவு. குழந்தாய்! முக்கண்ணரும் வரங்களைக்கொடுப்பவரும் அழிவற்றவருமான சிவபிரானையாராதியாமல பாலன்னமும ஸுகங்களும் ஆடைகளும் எப்படிக்கிடைக்கும்? குழந்தாய்! முழுக்கருத்துடன் அந்தச்சங்கரரைச் சரணமடை. அன்புள்ளமைந்தனே! அவரநுக்கிரகத்தினால நீ விரும்பினதற்குமேலான பலன்களைப் பெறுவாய்' என்றுசொன்னாள்.

இவ்வாறு தாய்சொல்லியதைக்கேட்டு நான் கைகூப்பிநமஸ்காரம செய்து, 'அம்மா! மஹாதேவர் யார்? அவர் எப்படி அனுக்கிரகம் செய்வார்? அவர் எங்கேவஸிப்பவர்? அவரை எவ்வகையிற்காணலாம்? அவர் எவ்வகையினால் ஸந்தோஷமடைவார்? அவரது உருவம் எவ்வகையானது? அவரை எப்படி அறியலாம்? தாயே! அவர் அனுக்கிரகம்செய்து எனக்குத் தம்ரூபத்தைக் காண்பிப்பாரா?' என்றுகேட்டேன். கிருஷ்ணபகவானே! கோவிந்தரே! மதுஸூதனரே! தேவசிரேஷ்டரே! இவ்வாறு என்னால்கேட்கப்பட்ட என்தாய் பிள்ளையின்

மேலன்புடன் நீர்நிரம்பினகண்களுள்ளவளாய் உச்சிமோந்து என னுடம்பைத்தடவிக்கொடுத்து மனம்தளர்ந்து பின்வருமாறு சொல்ல லானாள். 'மஹாதேவரை அறிவதும் [1] ஆராதிப்பதும் கடினம். அவர் முடிவில்லாதவர்; தடுக்கவும் பிடிக்கவும்கூடாதவர்; மனத்தூய்மை யில்லாதவர்களால் காணக்கூடாதவர். அவருடையஉருவங்களும் இட ங்களும் அவரது மாளிகைகளும் அனேகமென்றும் புதிதுபுதிதா யிருப்பவையென்றும் புத்திமான்கள் கூறுகின்றனர். தேவர்க்குத்தலை ராணஈஸ்வரர் முன்னே என்ன என்னரூபங்கள் எடுத்தாரென்று அவ ருடையசிறந்தசரித்திரத்தை ஸரியாக அறிந்தவன் யாவன்? எல்லா ப்ராணிகளின் ஹ்ருதயங்களிலும் இருப்பவரும் உலகஸ்வரூபியுமான மஹேஸ்வரர் அனுக்ரஹம்செய்வதற்காகவே விளையாடுகிறார். குழந் தாய்! பக்தர்களை அனுக்ரஹிப்பதற்காக ஈஸ்வரர்காட்சிகொடுத்ததாகிய மங்களகாமான அவருடையதிவ்யசரித்ரத்தை ரிஷிகளசொன்னதை யும் பிராம்மணர்களை அனுக்ரஹிப்பதற்காக அவர் எடுத்தரூபங்களைப் பற்றித் தேவர்கள்சொன்னதையும் நீஎன்னைக்கேட்டதை நான்கேட்ட படி சுருக்கமாக உனக்குச் சொல்லுகிறேன். கேள். ப்ரம்மா விஷ்ணு இந்திரன் ருத்திரர்கள் ஆதித்யர்கள் அசுவினிதேவர்கள்முதலான எல் லாத்தேவர்களுடையரூபங்களையும் அவர் தரிப்பவர். மனிதர்கள் தே வர்கள் பெண்கள் பிரேதங்கள் பிசாசர்கள் [2]கிராதர்கள் [3]சபரர்கள் பல வகைஜலஜந்துக்கள் காட்டுஜனங்கள் எல்லாருடையரூபங்களையும் பக வான் எடுக்கிறார்; ஆமையும் மீனும் பவழக்கொடியின்முளைகளால் அலங்கரிக்கப்பட்ட சங்குமாயிருக்கிறார்; யக்ஷர்கள், ராக்ஷஸர்கள், ஸர்ப்பங்கள, தைத்யர், தானவர், எலி, பெருச்சாளிமுதலியவற்றின் தேகங்களையும் எடுக்கிறார்; புலி, சிங்கம, மான், சிறுத்தை, கரடி, நாய், நரிமுதலிய மிருகங்கள் கோட்டான் முதலிய மற்றப்பக்ஷிகளின்ரூபங் களையும் எடுக்கிறார். ஹம்ஸம்; காக்கை, மயில், ஓணான், ஸாரஸம், நாரை, கழுகு, சக்ரவாகமுதலியவற்றின் ரூபங்களையும் எடுக்கிறார்; மலையையும் தாங்குகிறார். மஹாதேவரானவர் மாடு, யானை, குதிரை, ஒட்டகம், கழுதை, ஆடு, புலிமுதலான அநேகமிருகங்களின்ரூபங் களைத் தரிப்பவர்; சிறந்தபக்ஷிகளின் ரூபங்களையும் தரிப்பவர்; தண்ட கமண்டலுக்களோடும் குடையோடும் பிராம்மணரை ஆதரிப்பவர்; ஆறுமுகங்களோடும் அனேகமுகங்களோடும் மூன்றுகண்களோடும் பலதலைகளோடுமிருப்பவர்; அநேகம் இடுப்புகளும் அனேகம் கால்

[1] 'தாராராதோ' என்றுபாடம்கொள்ளப்பட்டது.

[2], [3] மிலேச்சஜாதியாரின்பிரிவுகள்

களும் அனேகம்வயிறுகளும் அனேகம்வாய்களும் அனேகம்கைகளும் அனேகம்விலாப்புறங்களுமுடையவர்; அமரகணங்களினாற் சூழப்பட்டவர். அவர், ரிஷிகள் கந்தர்வர்கள் வித்தர்கள் சாரணர்களின் ரூபங்களையும் எடுக்கிறார். திருநீறணிந்துவெளுத்ததேகமுள்ளவரும் மதியின்பிறையைக் கலையிலணிந்தவரும் பலவகைவாத்தியமுழக்கங்களினால் சிறப்பிக்கப்பெற்றவரும் பலவகைத் தோத்திரங்களினால் துதிக்கப்பட்டவரும் எல்லாப்பிராணிகளுக்கும் முடிவைச்செய்கிறவரும் எல்லாமாயிருப்பவரும் எல்லாலோகங்களிலும் நிலைபெற்றவரும் எல்லாஜனங்களுக்கும் அந்தர்யாமியும் எங்கும்வியாபித்தவரும் எல்லாம்பேசுகிறவரும் எல்லாப்பிராணிகளின் உள்ளங்களிலுமிருப்பவருமான அந்தப்பகவானை எல்லாவிடங்களிலும் அறியலாம். எவன் என்னபயனை விரும்புகிறானோ, எதைக்கருதிப் பூஜைசெய்கிறானோ அவற்றையெல்லாம் அந்தத் தேவஸ்ரேஷ்டர் அறிகிறார். உனக்கு விருப்பமிருந்தால் அவரைச்சரணமடை. அவர் சந்தோஷிப்பார்; கோபிப்பார்; 'உம்' என்று பயமுறுத்தவும் செய்வார். அவர் சக்கரத்தையும் சூலத்தையும் கதையையும் உலக்கை கத்தி பட்டஸங்களையும் கையில் தரித்திருப்பவர்; பூமியைத் தாங்குகிறவர்; நாகங்களை மேகலையாகவும் காதிற்குண்டலமாகவும் யஜ்ஞோபவீதமாகவும் அணிந்துகொண்டிருப்பவர்; பாம்புரித்தோலையே மேல்வஸ்திரமாகவுடையவர்; கணங்களுடன்சேர்ந்து நகைப்பவர்; மனதைக் கவரும்படி பாடுவர்; ஆடுவர்; பலவகைவாத்யங்களையும் வாசிப்பர்; துள்ளுவர்; கொட்டாவிவிடுவர்; அழுவர்; அழவைப்பர்; பித்தன் போலவும் கள்மயக்கமுள்ளவன்போலவும் இனியகுரலோடு பேசுவர்; பயங்கர உருவத்தோடு கண்களினால் ஜனங்களைப் பயமுறுத்திக்கொண்டு மிகுதியாகச்சிரிப்பர். தம்மிஷ்டப்படி விழித்துக்கொண்டும் தூங்கிக்கொண்டும் கொட்டாவிவிட்டுக்கொண்டுமிருப்பர்; ஜபம்செய்வர்; பிறரால் ஜபம்செய்யப்பெறுவர்; தவம்செய்வர்; தவம்செய்யப்பெறுவர்; கொடுப்பர்; வாங்குவர்; தியானிப்பர்; தியானிக்கப்படுவர்; யாகவேதியின் நடுவிலும் யூபஸ்தம்பத்திலும் கொட்டில்நடுவிலும் அக்னியிலும் காணப்படுவர்; குழந்தையாகவும் கிழவராகவும் இளமைப்பருவமுள்ளவராகவும் காணப்படுவர்; ரிஷிப்பெண்களோடும் ரிஷிபத்னிகளோடும் விளையாடுவர்; நெறித்தமயிர்களும் பெருத்தலிங்கமும் பயங்கரமான கண்களுமுள்ளவரும் திகம்பரரும் மஞ்சள், பச்சை, கறுப்பு, வெளுப்பு, புகைநிறம், சிவப்பு ஆகியபல

[1] 'ஜும்ஸ்துதஃ' என்று பாடம் கொள்ளப்பட்டது.

சிரங்களுள்ளவருமாயிருப்பர்; பயங்கரமானகண்களோடும் விசாலமானகண்களோடும் இருப்பர்; திகம்பரராயுமிருப்பர்; எல்லா ஆடைகளையும் தரிப்பவராகவுமிருப்பர். அரூபரும் சிறந்தரூபமுள்ளவரும் எல்லாரூபங்களையும் தாண்டினவரும் எல்லாவற்றுக்கும் ஆதியான ரூபமுள்ளவரும் ஜனனமில்லாதவருமான பகவானுடைய ஆதியும் அந்தமுமில்லாத ஸ்வரூபநிச்சயத்தை எவன் ஸரியாக அறிவான்? ஹ்ருதயத்திலுள்ள பிராணனாகவும் மனமாகவும் ஜீவாத்மாவாகவும் இருப்பவரும் யோகத்தில் சித்தமுள்ளவரும் யோகமும்தியானமுமாயிருப்பவரும் பரமாத்மாவுமான மகேஸ்வரர் பக்தியினாலேதான் வசப்படுத்தக்கூடியவர்; வாத்தியம்வாசிப்பவர்; பாடுகிறவர்; ஆயிரம்கண்களும் நூறுகண்களுமுள்ளவர்; ஒருமுகம், இரண்டுமுகம், மூன்றுமுகங்கள், அநேகமுகங்களுள்ளவர். புத்ரனே! மஹாதேவரிடம் பக்திசெய்து அவரையேசரணமடைந்து அவரையே ஆதாரமாகவும் பரகதியாகவும்நம்பி உபாஸனைசெய். அதனால் நீ வேண்டினதைப் பெறுவாய்' என்றாள். பகைவர்களைக் கொல்பவரே! மாதாவினுடைய அந்தச்சொல்லைக்கேட்டு எனக்கு அப்போதுமுதல் மஹாதேவரிடம நிலையானபக்தியுண்டாயிற்று அதன்பிறகு, நான் தேவவருஷத்தினால் ஆயிரவருஷகாலம் இடக்கால்கட்டைவிரல்நுனியையூன்றி நின்றுகொண்டு தவம்செய்து சங்கரனைச் சந்தோஷிக்கச் செய்தேன். அப்போது முதல்நூறுவருஷகாலம் கனிகளை ஆகாரமாகக்கொண்டிருந்தேன். இரண்டாவது நூறுவருஷங்கள் உதிர்ந்தசருகுகளைப்புசித்துக்கொண்டும் மூன்றாவது நூறுவருஷங்கள் ஜலபானம் செய்துகொண்டுமிருந்து பிறகு எழுநூறுவருஷகாலங்கள் காற்றையே பக்ஷித்துக்கொண்டுமிருந்தேன். இவ்வாறு தேவவருஷங்களால் ஆயிரவருஷகாலம் நான் சிவபிரானை ஆராதித்தேன். அதன்பிறகு, எல்லாலோகங்களுக்கும் ஈஸ்வரரும் ஸர்வசக்தருமான மஹாதேவர் என்னை உறுதியானபக்தியுள்ளவனென்று அறிந்து என்மேலன்புடன் பரீக்ஷை செய்யத் தொடங்கினார். பெரும்புகழுள்ள அந்தச்சங்கரர் இந்திரன் வடிவமெடுத்துத் தேவக்கூட்டங்கள் எல்லாவற்றாலும் சூழப்பெற்று ஆயிரம்கண்களோடு கையில்வஜ்ராயுதம்பிடித்து அம்ருதம்போல வெளுத்ததும் சிவந்தகண்களும் நெறித்தகாதுகளுமுடையதும் மதமதிகரித்து நாலுதந்தங்களிலும் துதிக்கையைச் சுற்றிக்கொண்டிருப்பதும் உக்கிரமுமான ஐராவதத்தின்மேலேறித் தம்மொளியினால்பிரகாசித்துக்கொண்டு கிரீடம் முத்தாரம் தோள்வளைகளினால் அலங்கரிக்கப்பெற்றும் தலையிலவெண்குடைபிடிக்கப்பெற்றும் அப்ஸரஸ்களால்

தர்வர்களின் சிறந்தகானங்களினால் ஆராதிக்கப்பெற்றும்வந்தார். அந்தத்தேவேந்திரன் என்னைப்பார்த்து, 'பிராம்மணோத்தமனே! நான் உன்னிடம் அன்புகூர்ந்திருக்கிறேன். நீ மனத்திற்கருதுகிறவரத்தை என்னிடம்கேள்' என்றுசொன்னான். இந்திரன் சொல்லைக்கேட்டு என்மனத்தில் ஸந்தோஷமுண்டாகவில்லை. கிருஷ்ணா! நான் அப்போது தேவேந்திரனைப்பார்த்து, 'ஓ! ப்ரஸன்னனே! நான் உன்னிடத்திலும் மஹாதேவர்ஒருவரைத்தவிர வேறெந்தத்தேவதையிடத்திலும் வரம்கேட்கவில்லை. இதை உண்மையாக உனக்குச் சொல்லுகிறேன். இந்திரனே! இது உண்மை! உண்மை! நமது இந்தச்சொல் மிக்க உறுதியானது. மகேஸ்வரரைத்தவிர மற்றவர்களைப்பற்றிய பிரஸ்தாவமே எனக்கு ருசிக்கவில்லை. பசுபதியின் சொல்லினால் உடனே நான் புழுவும் பலகிளைகளோடுகூடியமரமுமாவேன். பசுபதியல்லாதவர்களுடைய அனுக்கிரகத்தினால்வரும் திரிலோகாதிபத்யம் என்னும் ஐஸ்வர்யமும் நான் விரும்பவில்லை. சிவனதுபாதங்களை வந்தனம்செய்வதில் ஆசையோடு சண்டாளன்நடுவில்பிறப்பதும் எனக்கு இருக்கலாம்; ஈஸ்வரரிடத்தில்பக்தியில்லாமல் இந்திரன் வீட்டில் பிறப்பதும் வேண்டாம். தேவர்க்கும்அஸுரர்க்கும்முதல்வரான லோகநாதரிடத்தில் பக்தியில்லாதமனிதன் காற்றையும் நீரையும்புசித்துக்கொண்டிருந்தாலும் அவனுக்குத் துக்கம் ஒழிவதேது? எவருக்கு ஒருநிமிஷமும் சிவனுடையபாதத்தியானம் விட்டுப்போவது வெறுப்பாயிருக்கிறதோ அவர்களுக்கு மற்றத்தர்மங்களுள்ளவேறுபேச்சுக்களால்ஆவதென்ன? தர்மமில்லாதகலியுகத்தில்பிறந்தவன் சிவனுடைய பாதங்களில் பற்றுள்ளமனத்தோடிருத்தல்வேண்டும். சிவபக்தியென்னும் [1]ரஸாயனத்தைக் குடித்தபிறகு ஸம்ஸாரபயமுண்டாவதில்லை. சிவனது அனுக்ரகம்பெறாதவனுக்கு ஒருநாள், அரைநாள், ஒருமுகூர்த்தம், ஒருநிமிஷம், ஒருநொடிகூடச் 'சிவனிடத்தில்' பக்தியுண்டாவதில்லை. இந்திரனே! சங்கரருடைய ஆஜ்ஞையினால் புழுவும் விட்டிற்பூச்சியுமாவேன். உன்னால்கொடுக்கபபடும் திரிலோகாதிபத்தியத்தையும் நான் விரும்பவில்லை. மகேஸ்வரர்கட்டளையினால் நாயாகவும்பிறப்பேன். அது நாம் மிகவிரும்பத்தக்கது. மகேஸ்வரர் கட்டளையின்றித் தேவலோகாதிபத்யமும் எனக்குவேண்டாம். ஸ்வர்க்கவாஸத்தையும் தேவேந்திரபதத்தையும் பிரம்மலோகத்தையும் மோக்ஷத்தையும் மற்றுமுள்ளஎந்தப்பலன்களையும் நான்கேட்கவில்லை; சிவனுக்குத்தாஸனாயிருப்பதைமட்டுமே கேட்கிறேன். வெண்மை

[1] தேகபுஷ்டியைத்தரும் ஓர் ஔஷதம்.

யும் தெளிவுமான சந்திரனைக் கிரீடமாகத்தரித்தவரும் பசுபதியும் பகவானுமான ஈஸ்வரர் எனக்கருள்செய்யும்வரையில் பிறப்பிறப்புமூப்புக்கள்பலபீடிப்பதனால் தேகத்திலுள்ள துக்கங்களை நான் வகிக்கிறேன். ஸூர்யனும் சந்திரனும் அக்னியும்போலவிளங்குபவரும் மூவுலகங்களுக்கும் ஒப்புயர்வற்ற சிறந்தபொருளும் முதலவரும் ஜரையும் மரணமுமற்றவருமாகிய ருத்ரரது அருளைப்பெறாமல் இவ்வுலகத்தில் எவனுக்குச் சாந்தியுண்டாகும்? கெட்டமார்க்கத்திற்போவதை விடுவிப்பவராகிய ருத்ரர் எவர்களின் உள்ளங்களில் இருக்கவில்லையோ சீ! சீ! அவர்கள் நிந்திக்கத்தக்கவர்கள்; நிந்திக்கத்தக்கவர்கள்; பின்னும்நிந்திக்கத்தக்கவர்கள். சீ! எனதுபாவங்களினால் மறுபடியும் ஜன்மமுண்டாகுமாயின் அநந்த அநந்தஜன்மங்களிலும் எனக்கு அழியாதசிவபக்தியுண்டாகவேண்டும்' என்றுசொன்னேன். இந்திரன், [1]'காரணத்திற்குக்காரணமானஈஸ்வரரிடத்தில் நீ அருள்பெறுவதற்குஉபாயம்என்ன இருக்கிறது? எதுபற்றிச சிவனைத்தவிரமற்றவரின் அனுக்ரகத்தை விரும்பாமலிருப்பது?'என்றுகேட்டான். 'பிரம்மநிஷ்டர்கள் எவரை [2] ஸத்என்றும் [3] அஸத்என்றும் [4] வியக்தமென்றும் [5] அவ்யக்தமென்றும் [6] ஏகமென்றும் [7] அநேகமென்றும் எப்போதும்சொல்லுகின்றனரோ அவரிடத்தில் நாம் வரங்கேட்கிறோம். எவருடையஞானமும்ஐஸ்வரியமும் ஆதிமத்யாந்தங்களற்றவையென்றும் சிந்தைக்கெட்டாதவையென்றும் சொல்லுகின்றனரோ அந்தப்பரமாத்மாவிடத்தில் வரங்கேட்கிறோம். எவருடைய [8]ஐஸ்வரியமனைத்தும் ஆக்கவும்அழிக்கவும படாததோ, வித்தாயிராதவரிடத்திலிருந்து வித்தானப்ரக்ருதியுண்டானதோ அவரிடத்தில் வரம்கேட்கிறோம் இருள் என்றுசொல்லப்பட்டபிரக்ருதிக்குமேற்பட்ட ஒளியாகவும் தவம்செய்பவருக்குச் சிறந்ததவமாகவுமிருக்கின்ற எவரையறிந்தபிறகு துயரப்படுவதில்லையோ அவரிடம் வரங்கேட்கிறோம். இந்திரனே! எல்லாப்பிராணிகளையும்படைப்பவரும் எல்லாப்பிராணிகளின்கருத்துகளையும் அறிந்தவரும் எல்லாப்பிராணிகளுக்கும் மேற்பட்டவரும் எங்குமிருப்பவரும் எல்லாவற்றையும்கொடுப்பவருமான ஈஸ்வரரைப் பூஜிக்கிறேன். தர்க்கநியாயங்களுக்கெட்டாதவரும் ஞானத்திற்கும்யோகத்திற்கும் பலன்களைக்கொடுப்பவரும் எல்லாவற்றிற்கும் மேற்பட்டவருமான எவரைத் தத்வஞானிகள் உபாஸனைசெய்கின்றனரோ அவரிடத்தில் வரங்கேட்

[1] 'காரணங்களுக்குக்காரணமான ஈசுவரர் இருப்பதற்கு பிரமாணமென்ன?' என்பது பழையஉரை. [2] ஆத்மா. [3] ஜடம். [4] காரியம். [5] காரணம். [6] ஸ்ருஷ்டிக்குமுன் ஒன்றாயிருப்பது. [7] ஸ்ருஷ்டிக்குப்பின் பலஉருவங்களாயிருப்பது. [8] மோக்ஷம்.

கிறோம். இந்திரனே! எவரை இந்திரனுக்குஆத்மாவாகவும் தேவர்க்கும் ஈஶ்வரராகவும் எல்லாப்பிராணிகளுக்கும் தந்தையாகவும் கூறுகின்றனரோ அவரிடத்தில் வரங்கேட்கிறோம். உலகங்களைப்படைத்தவரான பிரம்மதேவரையும் முதலில்படைத்தவரும் ஆகாசத்தைப்பிரப்பின அண்டமாயிருப்பவரும் எவரோ அவரிடம் வரங்கேட்கிறோம். அக்நி, அப்பு, வாயு, பூமி, ஆகாயம், புத்தி, மனம், மஹத் இவைகளைப்படைத்தவர் பரமேஶ்வரரைத்தவிர வேறுயாரிருப்பார்? சொல். இந்திரனே! மனம், புத்தி, அகங்காரம், சப்தஸ்பரிசரூபரஸகந்தங்களென்னும் ஐந்து தன்மாத்திரைகள், ஐம்புலன்கள் ஆகியஇவைகளைப் படைத்தவர் பரமசிவனைவிட வேறுயார்? இவ்வுலகம்படைத்தவர் ப்ரம்மதேவரென்று சொல்லுகின்றனர். அவரும்தேவஶ்ரேஷ்டரான பரமசிவனை ஆராதித்துத்தான் பெரியஐஶ்வரியத்தை அனுபவிக்கிறார். பிரம்மவிஷ்ணுக்கள் முதலானவர்களின் உயர்ந்தஐஶ்வரியமும் பகவானான பரமசிவனிடத்திலிருக்கிறது. மஹாதேவரான பரமேஶ்வரரைத்தவிர ஐஶ்வரியமுள்ளவர் வேறுயாரிருக்கிறார்? தைத்யர்தானவர்முதலானவர்களுக்கும் நாதரும் பகைவரையழிப்பவரும் தேவர்க்குமீஶ்வரருமாகிய சங்கரரைவிட வேறுயார் திதிக்குப் புத்ரர்களுண்டாக வரம்கொடுக்கவல்லவர்; திசை, காலம், ஸூரியன், ஒளி, நவக்ரகங்கள், காற்று, சந்திரன், நக்ஷத்ரங்கள் இவையனைத்தும் மஹாதேவரிடத்துண்டானவை என்றறி. யாகத்தையும் திரிபுரர்களையும் தைத்யர்கள்தானவர்களில முக்கியமானவர்களையும் உண்டாக்கியும் அழித்தும் காப்பாற்றியுமிருப்பவரும் பகைவர்களைக்கொல்பவரும் பரமேஶ்வரரைவிட வேறுயாரிருக்கிறார்? சொல். புரந்தர! தேவராஜனே! ஸித்தர்களாலும், கந்தர்வர்களாலும், தேவர்களாலும், ரிஷிகளாலும் பூஜிக்கப்பட்ட ஆயிரங்கண்ணனான உன்னையேகண்டபிறகு அநேக யுக்திவாதங்களைப் பொருந்தச்சொல்வது எதற்கு? தேவேந்திரனே! உன்னுடையஐஶ்வரியமெல்லாம் தேவர்க்குந்தேவரான ஈஶ்வரருடைய அனுக்ரகத்தினாலேதான். இந்திரனே! சேதனங்களையும் அசேதனங்களையும் தலைமையாகவுடைய உலகங்களிலுள்ளவையெல்லாம் யாருக்கும் புலப்படாதவரும் ப்ரகிருதியிலிருந்துவிடுபட்டவரும் ப்ரம்மதேவர்க்குமீஶ்வரருமாகிய சிவபிரானுக்காக ஏற்பட்டவையென்றும் ஸர்வவியாபியான அவரையே ஆத்மாவாகவுடையவையென்றும் அம்மகேஶ்வரரிடத்திலிருந்தே வந்தவையென்றும் அறி. பகவானான இந்திரனே! உண்மையையறிந்தஜனங்கள் [1]பூலோகமுதல் மகர்லோகமும்

[1] பூலோகம் புவர்லோகம் ஸுவர்லோகம் மகர்லோகம்.

ஈறாகவுள்ள உலகங்களிலும், [1] மற்றுமுள்ளலோகங்களிலும், பூமியிலுள்ளதீவுகளிலும், மேருவின்மேல்பிரதேசங்களிலும், ஸப்தமருத்துக்களின்ஸ்தானங்களிலும் ஈஸ்வரரிருப்பதாகச் சொல்லுகின்றனர். இந்திரனே! வேறுஈஸ்வரரூபத்தைத்தேவர்கள் காண்பாராயின் அவர்கள் அஸுரர்களால்நசுக்கப்படும்போதும் ஏன் அதைச் சரணமடையவில்லை? தேவர்களுக்கும் யக்ஷர்களுக்கும் நாகர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் யுத்தங்கள்நேர்ந்து ஒருவரால்ஒருவர் அழிக்கப்படும்போது அவரவரிடங்களையும் ஐஸ்வரியங்களையும் கொடுப்பவர் சிவபிரானே. அந்தகன், சுக்ரன், மகிஷவடிவமான துந்துபி இவ்வஸுரர்களுக்கும் யக்ஷராஜாவுக்கும் பலனென்னும் அஸுரனுக்கும் ராக்ஷஸர்களுக்கும் நிவாதகவசர்களுக்கும் வரங்கொடுத்ததும் கெடுத்ததும் மகேஸ்வரரைவிடவேறுயார்? சொல். தேவர்க்கும்அஸுரர்க்கும்பூஜ்யனான அக்னிபகவானுடையமுகத்தில் எவருடையரேதஸ் முன்னே விடப்பட்டது? சிவனைத்தவிர வேறுயாருடையரேதஸினால் பொன்மலை செய்யப்பட்டது? வேறுஎவன் திகம்பரனென்றும் ஊர்த்வரேதஸ்என்றும் உலகத்திற்சொல்லப்படுகிறான்? எவருக்கு மனைவி தேகத்திற்பாதியாயிருக்கிறாள்? எவரால் மன்மதன் வெல்லப்பட்டான்? எவருடைய உயர்ந்தஇடமானது தேவர்களாலும் துதிக்கப்படுகிறது? எவருக்கு ஸ்மசானத்தில் விளையாட்டுக்காகஇடமிருக்கிறது? கூத்தாடுவதில் எவர் சிலாகிக்கப்படுகிறார்? எவருடையஐஸ்வரியம் தம்மையடுத்த பூதங்களுக்குப்பொதுவாயிருக்கிறது? எவர் பூதங்களுடன் விளையாடுகிறார்? தேவக்கூட்டங்கள் யாருடையபலத்தையடைந்து ஐஸ்வரியத்தினால் கர்வித்திருக்கின்றன? இந்திரனே! சொல. மூன்றுஉலகங்களிலும் பூஜிக்கப்பெற்ற கைலைமலை யாருடைய நிலையானஸ்தானமென்று பறையறையப்படுகிறது? மழையைப்பெய்வதும் வெயிலை வீசுவதும் ஜ்வாலையோடுஜ்வலிப்பதும் வேறெவர்? யாரால் ஓஷதிகள் உண்டாகின்றன. தனத்தைக்காப்பாற்றுகிறவர் யார்? சராசரங்களடங்கியமூவுலகங்களிலும் இஷ்டப்படி விளையாடுகிறவர்யார்? யோகிகளாலும் ரிஷிகளாலும் கந்தர்வர்களாலும் ஸித்தர்களாலும் ஞானம், தவம், கருமங்கள், யோகம்இவற்றினால்ஆராதிக்கப்பட்ட முதற்காரணமென்றுசொல்லப்பட்டவர் யார்? தேவர்களாலும் அஸுரர்களாலும் தானதர்மங்களையும் யாகங்களையும் தவங்களையும் யோகங்களையும் செய்து எப்போதும் ஆராதிக்கப்படுகிறவரும் கர்மப்பயன்அற்றவருமான அவரையே காரணமென்று நான் சொல்லுகிறேன். மகேஸ்வர

[1] ஜனலோகம் தபோலோகம் ஸத்யலோகம்.

ரதுபரஸ்வரூபமானது, ஸ்தூலமும் ஸூக்ஷ்மமும் உவமையற்றதும் அறிவுக்கெட்டாததும் [1]குணங்களுக்கிடமானதும் [2]குணங்களற்றதும் [3]குணத்தைநடத்துவதும் எல்லாவற்றிற்குமீஸ்வரியும் காரணங்களுக்குங்காரணமும் உலகங்களின் இருப்புக்கும் முடிவுக்குங்காரணமும் நடந்ததும்நடக்கிறதும்நடப்பதுமாகிய எல்லாவற்றிற்கும்முதற்பொருளும் ஆத்மாவுக்குஆத்மாவும் ப்ரகிருதியும் வித்யையும் அவித்யையும் செய்கையும் செய்கையல்லாததும் தர்மமும் அதர்மமுமாக இருக்கிறது. இந்திரனே! அதனால், அவரையே காரணமென்றும் நான் சொல்லுகிறேன். ஓ! தேவேந்திரனே! தேவர்க்குந்தேவரும் ஸ்ருஷ்டிக்கும் ஸம்ஹாரத்திற்குங்கர்த்தாவுமாகிய ருத்ரரால் இவ்வுலகத்தில் பகத்தின் அடையாளத்தோடுகூடின லிங்கம் உண்டாக்கப்பட்டிருப்பதை நீ ப்ரத்யக்ஷமாகக்காணலாம். இதுதான் உலகத்திற்காணக்கூடியகாரணமென்று முன்னர் என்மாதாஎனக்குச்சொன்னது. இந்திரனே! ஈசுவரருக்குமேற்பட்டது ஒன்றுமில்லை. இந்திரனே! உனக்குவிருப்பமிருந்தால் அவரைச் சரணமடை. தேவேந்திரனே! காரியங்களும் காரணங்களுமடங்கிய மூன்றுலோகங்களும் [4]லிங்கங்களின்சேர்க்கையினால் உண்டாகின்றனவென்றும் ப்ரம்மா முதலியவர்களின் ரேதஸினின்றுஉண்டானவையென்றும் உனக்குத் தெரியுமே. அனேகவிருப்பங்களினால் வேறுபட்டபுத்திகளோடுகூடிய ப்ரம்மா, இந்திரன், அக்நி, விஷ்ணு முதலானதேவர்களும் அஸுரசிரேஷ்டர்களும் ஈசுவரரைவிட வேறொன்றையும் சிறந்ததாகச்சொல்லவில்லை. சராசரங்களடங்கிய உலகங்களுக்குஈசுவரரும் அறியத்தக்கவற்றுள்உத்தமரென்றுகூறப்பட்டவருமான அந்தச்சங்கரரையே மனத்தில்தியானித்துப் போகத்தையும் மோக்ஷத்தையும்பற்றிக் கேட்கிறேன். ஈசுவரர் காரணங்களுக்குங்காரணமென்பதற்கு வேறுநியாயங்களால் ஆவதென்ன? மற்றொருவனுடையலிங்கத்தைத் தேவர்கள் அர்ச்சித்ததாக நாம் கேட்கவில்லையன்றோ? மகேஸ்வரரைவிட வேறு யாருடையலிங்கமானது எல்லாத்தேவர்களாலும் இப்போதாவது முன்னேயாவது பூஜிக்கப்பட்டிருக்கிறது? உனக்குக்கேள்விஇருந்தால் சொல். ப்ரம்மாவும் விஷ்ணுவும் நீயும் தேவர்களும் யாருடைய லிங்கத்தை எப்போதும் பூஜிக்கிறீரோ அவர் அந்தக்காரணத்தினாலேயே மிகச்சிறந்தவரல்லரோ? [5]தாமரைமலரையாவது [6]சக்கரத்தையாவது [7]வச்சிராயுதத்தையாவது அடையாளமாகக்கொண்டு பிரஜை

---

[1] ஞானசக்திமுதலியகுணங்கள். [2] ஸத்வரஜஸ்தமோகுணங்கள்.
[3] ப்ரகிருதியை. [4] ஆண்பெண்குறிகள்.
[5] பிரம்மாவினது. [6] விஷ்ணுவினது. [7] இந்திரனது.

கள் பிறப்பதில்லை; லிங்கத்தையும் பகத்தையும் அடையாளமாக வுடையவைகளாகப் பிறக்கின்றன. ஆதலால், பிரஜைகள் ஈச்வரருடையவை. பெண்களெல்லாரும் உமாதேவியின்காரணரூபத்திலிருந்துஉண்டாக்கப்பட்டதனால் பகம்அடையாளமாகப் பிறந்திருக்கின்றனர். புருஷர்களனைவரும் சிவனுடையலிங்கத்தினால் அடையாளம் செய்யப்பட்டிருப்பது பிரத்தியக்ஷமாயிருக்கிறது. சராசரங்களடங்கிய இம்மூவுலகங்களிலும் ஈசுவரரைவிட வேறுகாரணம்உளதென்றும் தேவியின்அடையாளம் இல்லையென்றும் சொல்லும் கெடுமதியுள்ளமனிதன் நாஸ்திகனாவான். ஆண்குறியுள்ளவையனைத்தும் ஈசுவரரென்றும் பெண்குறியுள்ளவையனைத்தும் உமையென்றும்அறி. சராசரங்களாகிய இவ்வுலகமனைத்தும் இவ்விரண்டுரூபங்களினாலும் வியாபிக்கப்பட்டது. இந்திரனே! நான் வேண்டுகிறபலனையும் மரணத்தையும் அவரிடத்திலிருந்தே விரும்புகிறேன். இந்திரனே! பலாஸுரனைக்கொன்றவனே! உன்னிஷ்டப்படி சென்றாலும்செல்; நின்றாலும்நில். மகேச்வரரால் எனக்கு இப்போது வரங்கிடைத்தாலும் கிடைக்கட்டும்; சாபங்கிடைத்தாலுங்கிடைக்கட்டும். நான் விரும்பினபலன்களெல்லாவற்றையும் கொடுப்பதாயினும் மற்றொருதேவதையை நான் வேண்டுவதில்லை' என்று நான் சொன்னேன். தேவேந்திரனுக்கு இவ்வாறுசொல்லியபின், 'சிவன் அனுக்கிரகம்செய்யவில்லையே; இது என்ன?' என்றுசிந்தித்துத் துயரத்தினால் பொறிகள் கலங்கினின்றநான் ஒருநிமிஷத்துக்குள் அங்கஜூராவதமே ஹம்ஸம், குருக்கத்திப்பூ, சந்திரன், தாமரைக்கிழங்கு, வெள்ளி, திருப்பாற்கடல் இவற்றின்நிறமுள்ளதும் கறுத்தவால்மயிரும் பருத்ததேகமும் தேன்போல்பசுமைநிறமான கண்களுமுடையதும் வச்சிரம்போலவன்மையுள்ளவையும் புடம்போட்டபொன்னிறமுள்ளவையும் மழுமழுப்பும் சிவப்புமுள்ளவையுமான நுனிகளுள்ளவையும் மிகக்கூர்மையுமான கொம்புகளினால் பூமியைக்கீறிக்கொண்டிருப்பதும் பொன்மாலையினால் தேகமுழுதும்அலங்கரிக்கப்பட்டதும் அழகானமுகமும் குளம்புகளும் மூக்கும் காதுகளும் இடுப்பும் விலாப்புறங்களுமுள்ளதும் பருத்தகொண்டையுள்ளதும் அழகானஉருவமும் பார்வையுமுடையதுமான ரிஷபமாகஇருந்ததைக் கண்டேன். அதன்கொண்டை தோளை நிரப்பிக்கொண்டு இமயமலைச்சிகரம்போலவும் உண்டையான வெண்மேகம்போலவும் விளங்கிற்று. தேவர்க்குந்தேவரான மஹாதேவர் உமாதேவியுடன்கூட அதன்மேலேறிக்கொண்டு பூர்ணிமைச்சந்திரன்போல விளங்கினர். அவருடையகிரீடமும் ஜடாபாரமும்

ஸர்ப்பமுதலான ஆபரணங்களும் வஜ்ரம் சூலமுதலான ஆயுதங்களும், யானைபோன்றகம்பீரமானநடையும் புன்னகையும்விளங்கின. அவரதுதேஜஸினின்றுண்டான அக்னியானது கர்ஜிக்கின்றமேகங்களுடன் ஆயிரம்ஸூர்யர்கள்போல உலகத்தையெல்லாம் வியாபித்திருந்தது. மிகச்சிறந்த தேஜஸோடுகூடிய பிரளயகாலாக்நிபோல மிகச்சிறந்ததேஜஸுள்ளஈஸ்வரர், யுகங்களின்முடிவில் எல்லாப்பொருள்களையும் எரிக்கத்தொடங்கினவர்போல விளங்கினர். அவரது ஒளியினால் எங்கும்வியாபிக்கப்பட்டுப் பார்க்கக்கூடாமற்போனஉலகத்தைக்கண்டு மனத்தில்அச்சமுற்று, 'இது என்ன' என்று திரும்பவும்சிந்தித்தேன். அந்தஒளியானது பத்துத்திசைகளிலும் சற்றுநேரம்வியாபித்தது. அந்தஈஸ்வரருடையமாயையினால் உடனே அடங்கிற்று. அதன்பிறகு, விருஷபாரூடரும் புகையில்லாதஅக்னிபோலப்ரஸன்னரும் அருளோடுகூடியமனமுள்ளவரும் முக்கண்ணரும் யாராலும்வெல்லப்படாதவரும் அங்கமெல்லாம் அழகானபார்வதியோடுகூடியவரும் எல்லாருக்கும்மேலானஈஸ்வரரும் கறுத்தகண்டமுடையவரும் மஹாத்மாவும் எங்குமதடைப்படாதவரும் எல்லாச்சக்திகளுக்கும்இருப்பிடமும் பதினெட்டுப்புஜங்களுடையவரும் ஸ்திரமாயிருப்பவரும் எல்லாஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவரும் வெள்ளைவஸ்திரம்தரித்துவிளங்குபவரும் வெண்மாலைகள்சூடி வெண்பூச்சுப்பூசியிருப்பவரும் வெள்ளைக்கொடியுள்ளவரும் வெள்ளைப்பூணூல்தரித்தவரும் கலங்காதவரும் தமக்கொப்பானபராக்ரமமுள்ள பக்கத்திலிருக்கும்திவ்யபுருஷர்கள் பாடியும் ஆடியும் வாத்யம்வாசித்தும்சுற்றும்சூழப்பெற்றவரும் மதியின்பிறையைக் கிரீடமாகத்தரித்தவரும் சரத்காலத்தில் உதயமானசந்திரனைப்போல வெளுத்தநிறமும் ஒளியுமுள்ளவரும் மூன்றுஸூர்யர்கள் உதயமானதுபோலிருக்கும் மூன்றுநேத்ரங்களினால் ஒளியையுண்டுபண்ணுகிறவரும் எல்லாவித்தைகளுக்கும்அதிபதியும் பகவானுமான பரமேஸ்வரரைக் கண்கள்குளிர ஸந்தோஷமாக நான்கண்டேன். பொற்றாமரை மலர்களினால் தொடுக்கப்பட்டதும் ரத்னங்களினால் அலங்கரிக்கப்பட்டதுமான ஒருமாலை அந்தப்பகவானுடைய வெண்ணிறமானதேகத்தில் விளங்கிற்று. கோவிந்தரே! அளவற்றசக்தியுள்ள சிவனுடையஅஸ்த்ரங்கள் ஒளிகளெல்லாம்சேர்ந்து உருவங்கொண்டவைகளும் சரீரமுள்ளவைகளுமாக என்னாற்காணப்பட்டன. பிநாகமென்றுபுகழ்பெற்ற அம்மஹாத்மாவின் வில்லானது ஆயிரம்வானவிற்களுக்கொப்பாயிருந்தது. அது ஏழுதலைகளும் பெரியஉடலும் கூரானகோரப்பற்களும் கொடியவிஷமு

முள்ளதும் நாணினால்சுற்றப்பட்ட பெருங்கழுத்துள்ளதும் மகாநாகமுமாகிய வாஸுகியே மானிடதேகத்துடன்வந்ததாக இருந்தது. ஸூர்யனைப்போலப்பிரகாசிப்பதும் திரிபுரஸம்ஹாரம்செய்ததும் எல்லாத்தேவர்களின் ஸாரமுமாகியபாசுபதம்என்னும்பாணமும், ஆயிரம் கைகளும் நாக்களும் வாய்களுமுடையதும் பயங்கரமுமான ஸர்ப்பரூபமுடையதாகச் சங்குகள் சூலங்கள் சக்திகள் பட்டஸங்களுடன் நின்றது. மிகக்கொடியதாகிய அந்தப்பாசுபதம்என்னும் சிறந்த திவ்யாஸ்திரமானது நிகரற்றது; சொல்லுக்கெட்டாதது; எல்லாப்பிராணிகளுக்கும் பயத்தைத்தருவது. அது நெருப்புப்பொறிகளோடு கூடியதும் பெரியஉருவமுள்ளதும் அக்நியைவருஷிப்பதுபோன்றதும் ஒற்றைக்காலும் பெருங்கோரப்பற்களும் ஆயிரம்தலைகளும் வயிறுகளும் கைகளும் நாக்களும் கண்களுமுடையதும் நெருப்பைக்கக்குவதுபோன்றதுமாக இருக்கக்கண்டேன். சிறந்தகைகளையுடையவரே! அது பிரம்மாஸ்த்ரம், நாராயணாஸ்த்ரம, ஐந்த்ராஸ்த்ரம், ஆக்நேயாஸ்த்ரம், வாருணாஸ்திரம்என்னும் இவ்வஸ்தரங்களிலும் சிறந்தது; எல்லா அஸ்த்ரங்களையும்தடுப்பது. கோவிந்தரே! முன்பு அந்த ஒரே அஸ்த்ரத்தினால் மஹாதேவர் திரிபுராஸுரர்களை ஒருநொடியில் விளையாட்டாகஎரித்து நீறாக்கினார். மஹாதேவர்கைகளினால்பிரயோகிக்கப்படும் அவ்வஸ்திரமானது சராசரங்களடங்கியமூவுலகங்களனைத்தையும் அரைநிமிஷத்தில் எரித்துவிடுமென்பதில் ஸந்தேகமில்லை. இவ்வுலகத்தில் அவ்வஸ்திரத்தினால் வதம்செய்யத்தகாதவன் பிரம்மாவிஷ்ணுமுதலானதேவர்களிலுமில்லை. அப்படிப்பட்ட இந்தஉயர்ந்த ஆச்சரியத்தை நான் அவரிடத்திற்கண்டேன். அந்தச்சிறந்தஅஸ்திரம் யாருக்குந்தெரியாதது. அதற்கொப்பும்உயர்வும் வேறொன்றுமில்லை. சூலமென்று எல்லாஉலகங்களிலும் கியாதிபெற்ற அவருடைய ஆயுதமிருக்கிறதன்றோ? அது அவரால்பிரயோகிக்கப்பட்டால பூமியெல்லாவற்றையும் கிழித்துவிடும்; கருங்கடலையும் வற்றச்செய்யும்; உலகத்தையெல்லாம் அழித்துவிடும். கோவிந்தரே! முன்னர், யுவனாசுவன்புதல்வனும் சக்ராவர்த்தியும் சிறந்தசக்தியுள்ளவனும் மூன்றுஉலகங்களையும்ஜயித்தவனும மிக்கவன்மையுள்ளவனும் இந்திரனுக்கொப்பான பராகரமமுள்ளமஹாவீரனுமான மாந்தாதாவென்னுமரசன் ஸேனைகளுடன் லவணாஸுரன்கையிலிருந்த அந்தச்சூலாயுதத்தினால் கொல்லப்பட்டான். மிகக்கூர்மையானமுனையுள்ளதும் மயிர் ஒடிக்கச்செய்யும்மிக்கபயங்கரமுமான அந்தச்சூலமானது மூன்றுபகுதிகளாகப் புருவநெறிப்பைச்செய்து பயமுறுத்துவதுபோலிருக்

தது. கோவிந்தரே! புகையில்லாமல்ஜ்வலிக்கும் அக்நிபோலும் பிரளய காலத்திலுதய்மான ஸூர்யன்போலுமிருப்பதும் வர்ணிக்கமுடியாததுமான அவ்வஸ்த்ரம், ஸர்ப்பத்தையும் பாசாயுதத்தையும் கையில் வைத்திருக்கும்யமனைப்போல ருத்ரஸந்நிதானத்தில் இருக்கக்கண்டேன். கோவிந்தரே! ப்ருகுவம்சத்தில் பிறந்தவரானபரசுராமருக்கு மஹாதேவர் அன்புகூர்ந்து அளித்ததும் அந்தச் சிறந்த செய்கையுள்ளபரசுராமர் சக்ரவர்த்தியான கார்த்தவீரியார்ஜுனனை மகாயுத்தத்திற்கொன்றதற்கும் இருபத்தொருமுறை பூமியில் க்ஷத்திரியனில்லாமற்செய்ததற்கும் கருவியாயிருந்ததும் ஜ்வலிக்கின்ற முனையும் மிகக்கொடியவாயுமுள்ளதும் ஸர்ப்பத்தின்கழுத்தின்மேல் இருப்பதுமான அந்தக்கோடாலியானது அநேக அக்னிகள் ஏககாலத்தில் ஜ்வலிப்பதுபோலச் சிவபிரானதுஸமீபத்திலிருந்தது. குற்றமற்றவரே! ஸர்வஜ்ஞரான அவருடையதிவ்யாஸ்திரங்களை எண்ணமுடியாது. இந்தமுக்கியமான அஸ்த்ரங்களைமட்டும் நான் உமக்குச்சொன்னேன். உலகங்களுக்குப்பிதாமஹராகிய ப்ரம்மதேவர் அன்னப்பறவைகள்கட்டினதும் மனோவேகமுள்ளதுமான திவ்யவிமானத்திலேறிக்கொண்டு ஈஸ்வரருடைய வலப்பக்கத்திலிருந்தார். சங்கசக்கரகதாபாணியாகியநாராயணரும் கருடன்மேலேறிக்கொண்டு அவரது இடப்புறத்திலிருந்தார். ஸுப்ரம்மண்யர் மயில்மேலேறிக்கொண்டு சக்தியாயுதத்தையும்மணியையும்எடுத்துக்கொண்டு இரண்டாவது அக்நிபோல உமாதேவியின்ஸமீபத்திலிருந்தார். பகவானுடையமுன்னிலையில் சூலத்தையூன்றிக்கொண்டு இரண்டாவதுசங்கரரைப்போல அசையாமல் நின்றுகொண்டிருந்த நந்திகேஸ்வரரையும் கண்டேன். ஸ்வாயம்புவர்முதலானமனுக்களும் ப்ருகுமுதலானரிஷிகளும் இந்திரன் முதலானதேவர்களும் பூதங்களின்எல்லாக்கணங்களும் எல்லா [1]மாதாக்களும் வந்துநின்றனர். அந்தத்தேவர்கள் அம்மஹாத்மாவான மகாதேவருக்கு வந்தனம்செய்து அவரை நாற்புறமும்சூழ்ந்துகொண்டு பலவகைஸ்தோத்திரங்களைச்சொல்லித் துதித்தனர். பிரம்மதேவர் உலகத்தின்உருவமாகிய மகாலிங்கத்தையும் அதன்நடுவில் பெருவடிவமுள்ளசிவனையும்கண்டு ரதந்தரமென்னும்ஸாமத்தைச்சொல்லி ஸ்தோத்திரம்செய்தார். அப்போது, நாராயணர் ஜ்யேஷ்டஸாமம் என்னும் ஸாமத்தைச்சொல்லித் தேவர்க்குமீஸ்வரரான சிவபெருமானைப் பாடினர். தேவேந்திரன் சதருத்ரியம் என்னும் உத்தமமானவேதத்தைச்

---

[1] பிராம்மி, மாஹேஸ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வாராஹி, இந்திராணி, சாமுண்டாஎன எழுவர்.

சொல்லிப் பரப்பிரம்மத்தைத் துதித்தான். பிரம்மா நாராயணர் தேவர்களுக்கதிபதியான இந்திரன் இம்மூன்று மஹாத்மாக்களும் மூன்று அக்னிகள்போல விளங்கினர். அவர்களின் நடுவிலிருந்த பகவானை சிவபெருமான் சரத்காலத்தில்மேகங்கள் விலகிப் பரிவேஷம் என்னும் மண்டலத்திற்குள்ளிருக்கும் ஸூர்யன்போல விளங்கினார். கேசவரே! ஆகாயத்தில் பதினாயிரம்சந்திரர்களையும் ஸூர்யர்களையும் கண்டேன். சிறந்ததவமுள்ளவரே! அதன்பிறகு, நான் பின்வரும் ஸ்தோத்திரத்தைச்சொல்லிப் பகவானைத் துதிக்கலானேன்.

'தேவர்க்கும்மேலான தேவருக்கு நமஸ்காரம். மஹாதேவராகிய உமக்கு நமஸ்காரம். இந்திரன்வடிவமெடுத்து இந்திரன் ஆபரணம் முதலானவைகளைத்தரித்து வஜ்ராயுதத்தைக்கையிற்பிடித்து இந்திரனாகவேயிருக்கும் உமக்கு நமஸ்காரம். செம்மட்டைநிறமும் சிவப்பு நிறமுமுள்ளவரும் பிநாகமென்னும்வில்லை எப்போதும கையிற்பிடிப்பவரும் சங்கையும் சூலத்தையும் தரித்திருப்பவருமாகிய உமக்கு நமஸ்காரம். கறுத்துச்சுருண்டிருக்கும் தலைமயிரை உடையவரே! கறுப்புவஸ்திரம்தரித்தவரும் கிருஷ்ணாஜினத்தை உத்தரியமாகப் போர்த்தவரும் கிருஷ்ணபக்ஷஅஷ்டமியில் பிரீதியுள்ளவருமானஉமக்கு நமஸ்காரம். வெண்ணிறமுள்ளவரும பரிசுத்தரும் வெள்ளைவஸ்த்ரம்தரித்தவரும் வெண்ணீறணிந்தவரும் பரிசுத்தமானதாமங்களில் விருப்பமுள்ளவருமாகிய உமக்கு நமஸ்காரம். சிவப்புநிறமுள்ளவரும் சிவப்பு ஆடைஉடுத்தவரும் சிவப்புக்கொடிசசீலையுமுடையவரும் சிவந்தமாலைகளும் சந்தனப்பூச்சுக்களுமுடையவருமாகிய உமக்கு நமஸ்காரம். பொன்னிறமுள்ளவரும பொன்னிறமுள்ள ஆடையுடுத்தவருமாகிய உமக்கு நமஸ்காரம்; தூக்கிப்பிடிக்கப்பட்டகுடையுள்ளவரும் சிறந்தகிரீடமணிந்தவரும் [1]பாதிப்பாகத்தில் ஹாரம், தோளவளை, குண்டலம் அணிந்தவருமாகிய உமக்கு நமஸ்காரம். சாற்றுவேகமுள்ளவர்க்கு நமஸ்காரம். ஈஶ்வரருக்கு நமஸ்காரம். தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் இந்திரனும் இந்திரனுக்கு இந்திரனுமாயிருக்கும் உமக்கு நமஸ்காரம். தேகத்தின்பாதிப்பாகத்தில் கருநெய்தல்மலர்கள் இடையில்தொடுக்கப்பட்ட தாமரைமாலையையும் சந்தனத்தையும் அணிந்திருப்பவருக்கு நமஸ்காரம். ஸூர்யனைமுகமாகவும் கண்ணாகவுமுடையவர்க்கு நமஸ்காரம். ஸூர்யன் நிறமுள்ளவரும் ஸூர்யனைப்போன்றவருமான உமக்கு நமஸ்காரம். உமையோடுகூடினவரும் சந்திரன்போலிருப்பவரும் அனுக்கிரகத்தோடுகூடிய்முகமும் அழ

[1] உமையின்பாகத்தில்.

ரூபமுமுள்ளவரும் அழகான பற்களை அலங்காரமாகவுடையவரும் எல்லாருக்கும்முதன்மையாயிருப்பவருமானஉமக்கு நமஸ்காரம். கறுத்தவரும் வெளுத்தவரும் பாதித்தேகம்பொன்மையும் பாதித்தேகம் வெண்மையுமுடையவருமாயிருப்பவர்க்கு நமஸ்காரம். பெண் ஆண் சரீரங்கள்சேர்ந்து பெண்ணாகவும்ஆணாகவும்இருக்கும்உமக்கு நமஸ்காரம். ரிஷபவாகனமுடையவரும் மதயானைபோலநடப்பவருமான உமக்கு நமஸ்காரம். அறியவும்அடையவும்கூடாதவரும் தாமேவருகிறவருமானஉமக்கு நமஸ்காரம். ப்ரமதகணத்தினரால்துதிக்கப்பெற்றவரும் அவர்கள்மேல்அன்புள்ளவரும் அவர்கள்பின்செல்லும்வழியுள்ளவரும் அவர்களைவிடாமலிருப்பதே நோன்பாகக்கொண்டவருமானஉமக்கு நமஸ்காரம். வெண்மேகநிறமும் செவ்வானநிறமுமுள்ளவர்க்கு நமஸ்காரம். பேரளவுகுறிப்பிடக்கூடாதவரும் தாமேதமக்கிலக்கணமாயிருப்பவருமான உமக்கு நமஸ்காரம் தலைப்புச்சிவந்த மேலாடையையும் சிவந்தஉள்வஸ்திரத்தையும்தரித்தவரும் சிவப்புயஜ்ஞோபவீதமும் சிவப்புமாலைகளும அணிந்தவருமாகியஉமக்கு நமஸ்காரம். ரத்னகிரீடத்தையும் பிறையையும விசித்திரமானரத்னலங்காரங்களையும் தலையிலணிந்து [1]எட்டுவகைப்புஷ்பங்களைத்தரிக்கும் உமக்கு நமஸ்காரம். அக்னியைநெற்றிக்கண்ணாகவுடையவரும் ஸூர்யசந்திரர்களைஇருகண்களாகவுடையவரும அக்நிபோன்றரூபமுள்ளவரும் மனத்திற்கினியவரும் அறிவுக்கெட்டாதவருமான உமக்குநமஸ்காரம். ஆகாயத்திலஸஞ்சரிப்பவரும ஐமபுலன்களிலுமிருந்து விஷயங்களிற் பிரவ்ருத்திப்பவரும் பூமியிலிருப்பவரும் உலகமாயிருப்பவரும் முடிவற்றவரும் மங்களகாருமானஉமக்கு நமஸ்காரம. எப்போதும திசைகளை ஆடையாகத்தரித்தும் எப்போதும் நன்மணமுள்ளநல்லவஸ்திரம தரித்துமிருப்பவர்க்கு நமஸ்காரம. உலகங்களுக்கிருப்பிடமும் அடைவதற்கெளியவருமானஉமக்கு நமஸ்கார்ம். எக்காலமும் கிரீடத்தையும் சிறந்ததோளவளையையும்தரித்துக் கழுத்தில் ஸர்ப்பஹாரத்தையும் விசித்திரமான பலஆபரணங்களையும அணிந்திருப்பவரான உமக்கு நமஸ்காரம். உலகங்களைநடத்துவனவாகிய ஸூர்யன் சந்திரன் அக்கினியென்னுமமூன்றையும் கண்களாகவுடையவரும் ஆயிரம் நூறு கண்களையுடையவரும் பெண்ணாகவும் ஆணாகவும் அலியாகவும் ஸாங்கியராகவும் யோகியாகவுமிருப்பவருமானஉமக்கு நமஸ்காரம். ஸோகத்தைப்பெருக்குகிறவரும் அதர்வவேதஸ்வரூபருமான உமக்கு நமஸ்காரம்; நமஸ்காரம். எல்லாத்துன்பங்களையும் துயரங்களையும்

[1] பஞ்சபூதங்கள் மனம் புத்தி அஹங்காரங்கள்.

போக்குகிறவர்க்கு நமஸ்காரம் மேகம்போன்ற குரலுள்ளவரும் அநேகமாயைகளைத்தரிப்பவருமாகியஉமக்கு நமஸ்காரம். [1]வித்தையும் நிலத்தையும்காப்பவரும் படைப்பவருமானஉமக்கு நமஸ்காரம்; நமஸ்காரம். தேவருக்கும் அஸுரருக்கும் ஈஸ்வரரானஉமக்கு நமஸ்காரம். லோகநாதரானஉமக்கு நமஸ்காரம்; நமஸ்காரம். காற்றுவேகமுள்ளவர்க்கு நமஸ்காரம் காற்றுரூபமாயுள்ளவர்க்கு நமஸ்காரம். பொன்மாலையணிந்தவருக்கு நமஸ்காரம். மலைகளைமாலையாக அணிந்த விஸ்வரூபிக்கு நமஸ்காரம். அஸுரரை [2]மாலையாக அணிந்தவருக்கு நமஸ்காரம். கடியவேகமுள்ளவருக்கு நமஸ்காரம். பிரம்மதேவரின்சிரத்தைஅறுத்தவருக்கும் மகிஷாஸுரனைக்கொன்றவருக்கும் நமஸ்காரம். [3]பெண்ணுருவமுடையவருக்கும் [4]யாகத்தைஅழித்தவருக்கும் நமஸ்காரம். திரிபுரம் அழித்தவருக்கும் யாகத்தைக்கெடுத்தவருக்கும் நமஸ்காரம். காமனது அங்கத்தை அழித்தவருக்கும் காலனைத் தண்டித்தவருக்கும் நமஸ்காரம். தமதுசிதறினவீரியத்தைஸுப்ரம்மண்யராகஉண்டாக்கினவருக்கு நமஸ்காரம். பிரம்மாவைத்தண்டித்தவருக்கு நமஸ்காரம். [5]பவருக்கும் [6]சர்வருக்கும் நமஸ்காரம். விஸ்வரூபருக்கு நமஸ்காரம். ஸம்ஸாரத்தைக்கெடுப்பவரும் அந்தகாஸுரனைக்கொன்றவருமானஈஸ்வரருக்குநமஸ்காரம். எல்லாவற்றினுள்ளும் பிரவேசித்திருப்பவருக்கு நமஸ்காரம். சிந்தைக்கெட்டுகிறவரும் எட்டாதவருமாகிய மாயாவிக்கு நமஸ்காரம். நீர்தாம் எமக்குத்தஞ்சம். நீர்தாம் எல்லாரினும்சிறந்தவர். என்னுள்ளமேநீர்தாம். நீர் தேவர்கள்எல்லாரினும் பிரம்மதேவர்; ருத்தர்களுள் நீலலோகிதர்; எல்லாப் பிராணிகளுக்கும் ஆத்மாவானவர்; ஸாங்கியசாஸ்திரத்தில் புருஷர் என்றுசொல்லப்படுகிறவர்; பரிசுத்தவஸ்துக்களுள் [7]சிறந்தவர்; யோகிகளுக்கு அரூபியானசிவன்; நாலாஸ்ரமிகளுள்ளும் கிருஹஸ்தர்; ஈஸ்வரர்களுக்கும்பெரியஈஸ்வரர்; யக்ஷர்களெல்லாரினும் குபேரனாகி நீர்; யாகங்களுக்கு விஷ்ணுவென்றுசொல்லப்படுகிறீர். நீர் மலைகளுள் மேருமலை; நக்ஷத்திரங்களுள்சந்திரன்; ரிஷிகளுள் வஸிஷ்டர்; கிரகங்களுள் ஸூரியன்என்றுசொல்லப்படுகிறீர். பரமேஸ்வராகிய நீர் காட்டிலுள்ளமிருகங்களுள் ஸிம்மம்; நாட்டுப்பசுக்களுள் விருஷபம்; லோகங்களில் மிகப்பூஜிக்கப்பெற்றவர். நீர் ஆதித்யர்களில் விஷ்ணுவென்னும்ஸூர்யன்; வஸுக்களில்பாவகன்என்பவர்; பக்ஷி

[1] புருஷனையும் ப்ரகிருதியையும்.
[2] அஸுரரால் தீங்குசெய்யப்படாதவர். [3] பாதித்தேகத்தில்.
[4] தக்ஷயாகம். [5] ஆக்கினவர். [6] அழித்தவர். [7] மந்திரமாயிருப்பவர்.

களில் கருடன்; ஸர்ப்பங்களில் சேஷன்; வேதங்களில் ஸாமவேதம்; யஜுர்வேதத்தில் சதருத்ரியமென்னும்பாகம்; யோகிகளில் ஸநத்குமாரர்; ஸாங்கியர்களில் கபிலராயிருக்கிறீர். ஸ்வாமி! தேவர்களில் இந்திரனுயிருக்கிறீர். பித்ருதேவதைகளில் அக்னியாயிருக்கிறீர். உலகங்களில் பிரம்மலோகம். கதிகளில் மோக்ஷமாகச்சொல்லப்படுகிறீர். கடல்களுள் திருப்பாற்கடல். மலைகளில் இமயமலை. வர்ணங்களில் பிராம்மணவர்ணம். பிராம்மணர்களில் யாகதீக்ஷைசெய்துகொண்டபிராம்மணர். உலகங்களுக்குமுதலும் முடிவானகாலனும் நீரே. இவ்வுலகத்தில் எல்லாச்சக்திகளும் மிகுந்ததாகச்சொல்லப்படும் மற்றவையெல்லாங்கூட நீர்தாமென்பது என்உறுதியானஎண்ணம். பகவானே! தேவரே! உமக்குநமஸ்காரம். பக்தர்கள்மீது அன்புள்ளவரே! உமக்குநமஸ்காரம். யோகத்தைநடத்துகிறவரே! உமக்கு நமஸ்காரம். உலகங்களுக்குமுதல்வரே! உமக்கு நமஸ்காரம். பக்தியுள்ளவனும் வேறுகதியில்லாதவனும் ஏழையுமானஎன்மேல் அருள்செய்யும். என்றுமிருப்பவரே! சக்தியில்லாதஎனக்குத் தஞ்சமாகக்கடவீர். தேவர்க்குமீஸ்வரானபரமேஸ்வரரே! 'இவன் எனது பக்தன்' என்றுநினைத்து நான் அறியாமற்செய்தபிழைகளையெல்லாம் பொறுக்கக்கடவீர் தேவருக்குமீஸ்வரரே! நீர் உமதுரூபத்தை மாற்றி என்னை மயங்கவைத்தீர். மகேஸ்வரரே! அதனாலே, நான் உமக்கு அர்க்கியபாத்யங்களையும் ஸமர்ப்பிக்கவில்லை' என்றேன்.

நான் இவ்வாறு ஈஸ்வரரைத்துதித்துப் பத்தியோடுகொங்களைக் குவித்து அர்க்கியபாத்யங்கள்முதலானஉபசாரங்களையெல்லாம் அவருக்கு அர்ப்பணம்செய்தேன். ஐயா! அப்போது குளிர்ந்தஜலம் கலந்ததும் உயர்ந்தமணமுள்ளதுமாகிய சிறந்தபூமாரி என்தலையில் பொழிந்தது. அப்போது தேவலோகத்தில் தேவதூதர்களால் பேரிகை அடிக்கப்பட்டது. நல்லகந்தமுள்ளதும் ஸுகத்தைத்தருவதும் பரிசுத்தமுமானகாற்றும் அடித்தது. பிறகு, ரிஷபக்கொடியுடையவரான மஹாதேவர் உமாதேவியுடன் ஸந்தோஷமுள்ளவராய் என்னை ஸந்தோஷப்படுத்துவதற்காக அங்குள்ளதேவர்களைப்பார்த்து, 'ஓ! தேவர்களே! மஹாத்மாவானஉபமன்யுவுக்கு என்னிடத்தில் எப்போதும் ஒரேஉறுதியோடிருக்கும் சிறந்தபக்தியை நீங்களெல்லாரும் பாருங்கள்' என்றுசொன்னர். கிருஷ்ண! சூலபாணிஇவ்வாறுசொல்ல, அந்தத்தேவர்களனைவரும் அப்போது அவருக்குநமஸ்காரம்செய்துகைகூப்பிக்கொண்டு, 'பகவானே! தேவருக்குந்தேவரானஈஸ்வரரே! லோகநாதரே! உலகத்தைக்காப்பவரே! இந்தப்ராம்மணோத்தமர் எல்லா

விருப்பங்களுக்குமேலான பலனை உம்மிடத்தில் அடையட்டும்' என்று சொன்னார்கள். பகவானும் ஈஸ்வரருமாகியசங்கரர் ப்ரம்மாதிதேவர்களால் இவ்வாறுசொல்லப்பட்டபிறகு நகைத்துக்கொண்டு என்னைப் பார்த்து, 'குழந்தாய்! உபமன்யுவே! முனிஸ்ரேஷ்டனே! நான் ஸந்தோஷமடைந்தேன். என்னைப்பார். ப்ரம்மரிஷியே! உறுதியான பக்தியுள்ளவனாயிருக்கிறாய். நான் உன்னைப் பரீக்ஷையன்றோசெய்தேன். இந்தஉன்பக்தியினால் நான் மிகஸந்தோஷமுள்ளவனாயிருக்கிறேன். ஆதலால், நீ விரும்பினபலன்களெல்லாவற்றையும் உனக்கு இப்போது கொடுக்கிறேன்' என்றுசொன்னார் எல்லாந்தெரிந்த மஹாதேவரால் இவ்வாறுசொல்லப்பட்டஎனக்கு அப்போதே ஆனந்தக்கண்ணீர்சொரிந்தது; மயிர்பொடித்தலுமுண்டாயிற்று. பகவானே! அப்போது நான் முழங்கால்களைப்பூமியில்பதித்துப் பலமுறைநமஸ்காரம்செய்து ஸந்தோஷத்தினால் தழுதழுத்தகுரலோடு, 'ஸ்வாமி! இப்போதுதான் யான்பிறந்தேன். மஹாதேவரே அநுக்ரகம்வைத்து என்முன்னேநேரில்நிற்பதனால் என்ஜன்மம் இப்போது பயன்பெற்றது. அளவற்றசக்தியுள்ளஎவரைத் தேவர்களும் பிரத்யக்ஷமாகக் காணாரோ அந்தஈஸ்வரரை நான் கண்டேன். என்னைக்காட்டிலும் மிக்கபாக்கியசாலி யாரிருக்கிறான்? உற்பத்தியும் நாசமும் இல்லாத நித்யமும் ஞானரூபமுமான பரதத்வத்தை மிகப்பிரஸித்தமான இவ்வுருவமுள்ளதாகத்தான் வித்வான்கள் தியானம்செய்கின்றனர். எல்லாப்பிராணிகளுக்கும் முதல்வரும் மாறாதவரும் எல்லாப்பொருள்களின் க்ரமங்களையும் அறிந்தவரும் பிரக்ருதியும் புருஷனும் அவற்றிற்குமேற்பட்டவருமாக இருக்கும்பகவான் இந்தஈஸ்வரர்தாம். உலகங்களைப்படைக்கும் ப்ரமமதேவரை வலப்பக்கத்திலிருந்தும் உலகங்களைக்காப்பவராகியவிஷ்ணுவை இடப்பக்கத்திலிருந்தும் இந்தஈஸ்வரர்படைத்தார். பிரபுவானஈஸ்வரர் ப்ரளயகாலம்வந்தபோது ருத்திரரைப்படைத்தார். அந்தருத்திரர் பிரளயகாலாக்கினியும் காலரூபியுமாயிருந்து தாவரஜங்கமங்களானஉலகங்களனைத்தையும் ஸம்ஹாரம் செய்தபிறகு பரப்ரம்மத்தைச்சேருகிறார், பிரளயகாலத்தில் எல்லாப் பிராணிகளையும் விழுங்குகிறவர்போலிருக்கிறார். ஈஸ்வரரான இந்த மஹாதேவர் சராசரங்களாகியஉலகங்களைப்படைத்துப் பிரளயகாலம் வந்தபோது எல்லாருடைய அறிவையும்எடுத்துக்கொண்டேநிற்கிறார்; எங்குமிருப்பவரும் எல்லாப்பிராணிகளுக்கும் அந்தர்யாமியும் எல்லாப்பிராணிகளின் உற்பத்திக்கும் விருத்திக்கும்காரணமும் எல்லாத் தேவர்களுங்காணக்கூடாதவருமாக எங்கும் எப்போதுமிருக்கிறார்.

தேவர்களுக்குமீசுவரரானதேவரே! ப்ரபுவே! என்மேல் உமக்கு அனுக்கிரகமுண்டாயிருந்து எனக்கு வரங்கொடுக்கவுங்கூடுமானால் எனக்கு உம்மிடத்தில் எப்போதும் பக்தியிருக்கவேண்டும். தேவர்களுக்குமேலான பிரபுவே! உமது அனுக்ரகத்தினால் நடந்தது வருவது நிகழ்கிறதுஎல்லாவற்றையும் நான் அறியக்கூடவேனென்பது என் விருப்பம். என்பந்துக்களுடன் எப்போதும் குறையில்லாமல் பாலன்னம்புசிக்கக்கடவேன். நமது ஆஸ்ரமத்தில் உமதுசிறந்தஸாந்நித்யம் எப்போதும்இருக்கக்கடவது' என்றுசொன்னேன். உலகங்களினால் பூஜிக்கப்பெற்றவரும் எல்லாவற்றிற்குமீசுவரரும் சிறந்தமகிமையுள்ளவரும் சராசரங்களுக்குத்தந்தையுமான சிவபெருமான் என்னாலிவ்வாறுசொல்லப்பட்டபோது என்னைப்பார்த்துப் பின்வருமாறு பேசலானார். 'நீ ஜரையும்மரணமுமில்லாமல் புகழும் மகிமையும் திவ்யஜ்ஞானமுமுள்ளவனாயிருக்கக்கடவாய். என் அனுக்கிரகத்தினால் ரிஷிகள் வந்தடையத்தக்கவனும் நல்லொழுக்கமும் குணங்களும் நிரம்பினவனும் ஸர்வஜ்ஞனும் எல்லோருங்காண விரும்பத்தக்கவனுமாவாய். உனக்கு மாறாதயௌவனமும் அக்கினிக்கொப்பானதேஜஸும் உண்டாகக்கடவன. நீ விரும்பினஇடமெல்லாம் உனக்குத் திருப்பாற்கடல் வந்துசேரும். பந்துக்களோடுசேர்ந்து அமிருதத்தோடுகூடியபாலன்னத்தை ஒரு [1]கல்பகாலம் புசிப்பாய். பிறகு, என்னைச் சேருவாய். உன்னுடையபந்துக்களும் குலமும் கோத்திரமும் எப்போதும் அழியாமலிருக்கும். அந்தணரிற்சிறந்தவனே! என்னிடத்தில் உனக்கு நிலையானபக்தியும்இருக்கும். பிராம்மணோத்தமனே! உன் ஆஸ்ரமத்தில் எப்போதும் நான், ஸாந்நித்யமாயிருப்பேன். குழந்தாய்! உன்னிஷ்டப்படியிரு. என்னைப்பாராமையினால் வருத்தமடையாதே. பிராம்மணா! நீ நினைத்தபோது உனக்குக் காட்சிதருவேன்'என்றார். கோடிஸூர்யருக்குச்சமமான ஒளியுள்ள அந்தப்பகவானாணஈஸ்வரர்இவ்வாறுசொல்லி வரங்களையளித்து அந்தஇடத்திலேயே அந்தர்த்தானமானார். கிருஷ்ணா! அந்தத்தேவதேவரை நான் இவ்வாறு ஸமாதியினால்கண்டேன். எல்லாவற்றையும் அறிந்தவரான அவர் சொன்னவையெல்லாம்எனக்குக்கிடைத்துமிருக்கின்றன. கிருஷ்ணா! உமதுகண்ணெதிரிலே ஸித்தர்களும் ரிஷிகளும் வித்யாதரர்களும் யக்ஷர்களும் கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் இங்கிருப்பதைப்பாரும். செடிகளும் கொடிகளும் புதர்களும் எல்லாருதுக்களிலுமுள்ள எல்லாப்புஷ்பங்களையும் பழங்களையுங்கொடுத்துக்கொண்டு அழகான இலை

---

[1] நாலுயுகம்.

களுடன் நல்லமணமுள்ளவையாயிருப்பதைப்பாரும். சிறந்தகைகளை யுடையவரே! மஹாத்மாவும்தேவருக்குந்தேவருமானஈஸ்வரருடைய அனுக்கிரகத்தினால் இவையெல்லாம் தேவலோகத்தின் ஸ்வபாவமுள் ளவையாயிருக்கின்றன' என்றார். இவ்வாறு அந்தஉபமன்யுமுனி வர்சொன்னதைக்கேட்டு, நான் பிரத்யக்ஷமாகக் கண்டதைப்போல மிக்கஆச்சரியப்பட்டு அம்மஹாமுனிவரைப்பார்த்து, 'ப்ராம்மணஸ்ரே ஷ்டரே! நீர் பாக்கியசாலியாயிருக்கிறீர். புண்ணியம்செய்தவர் உம் மைவிட வேறுயாரிருக்கிறார்? தேவருக்குந்தேவரானஈஸ்வரர் உம்மு டைய ஆஸ்ரமத்தில் ஸாந்நித்யமாயிருக்கிறாரே! ரிஷிகளிற்சிறந்த வரே! அந்தப்பகவானைசங்கரர் உமக்குத்தரிசனங்கொடுத்ததுபோல எனக்குங்கொடுப்பாரா? சங்கரர் உமக்குஅனுக்கிரகம்செய்ததுபோல எனக்கும்செய்வாரா?' என்று கேட்டேன். உபமன்யுமுனிவர், 'தாம ரைக்கண்ணரே! குற்றமற்றவரே! சீக்கிரம் மஹாதேவரை நான்கண் டதுபோல நீருங்காணுவீர்; ஸந்தேகமில்லை. அளவற்றசக்தியுள்ள ஈஸ்வரரை ஞானக்கண்ணினால் நான் பார்க்கிறேன். புருஷோத்தமரே! நீர் ஆறுவதுமாஸத்தில் மஹாதேவரைப் பார்ப்பீர். யாதவரிற்சிறந்த வரே! உமாதேவியோடுகூடியமகேஸ்வரரிடத்திலிருந்து இருபத்து நான்குவரங்களை நீர் பெறப்போகிறீர். இதை உமக்கு உண்மையாகச் சொல்லுகிறேன். சிறந்தகைகளையுடையவரே! அந்தஸர்வஜ்ஞருடைய அனுக்கிரகத்தினால் நடந்ததும் நடக்கிறதும் இனிநடப்பதும் எனக்கு எப்போதும் தெரிந்திருக்கின்றன. ஈஸ்வரரானவர் இவற்றையும் மற் றும் ஆயிரம்வரங்களையும் அனுக்கிரகித்தார். மாதவரே! அந்தப்பக வான் உமக்கு ஏன் அனுக்கிரகம்செய்யமாட்டார்? பிராம்மணப்பிரிய ரும் யாருக்குந்தீங்குசெய்யாதவரும் சிரத்தையுள்ளவருமான உம் மைப்போன்றவருடையசேர்க்கை தேவர்களுக்கும் சிறந்ததன்றோ? ஜபிக்கத்தக்கஒருமந்திரத்தை உமக்கு உபதேசிப்பேன். அதனால், நீர் சங்கரரைப்பார்ப்பீர்' என்றுசொன்னார். நான் அவரைப்பார்த்து, 'ஓ! பிராம்மணரே! மஹாமுனிவரே! அஸுரக்கூட்டங்களை அழிப்ப வரும் தேவர்களுக்குமீஸ்வரருமான அவரை உமது அனுக்கிரகத்தி னால் நான் பார்க்கக்கடவேன்' என்றுகேட்டேன். பாரதரே! இப் படி மஹாதேவரைப்பற்றியகதையை அவர்எனக்குச்சொல்லிக்கொண் டிருக்கும்போதே எட்டுத்தினங்கள் ஒருமுகூர்த்தம்போலச் சென் றன. எட்டாவதுநாள் அந்தப்பிராம்மணரால் சாஸ்திரப்படி நான் தீக்ஷைசெய்விக்கப்பட்டேன்; [1]தலைமொட்டையாகவும் உடம்பில்நெய்

[1] 'முண்ட' என்பது மூலம். 'க்ஷௌரம்செய்துகொண்டு' என்னவுமாம்.

தடவிக்கொண்டும் தண்டத்தையும் தர்ப்பத்தையும் எடுத்துக்கொண்டும் மரவுரியுடுத்தும் [1]மேகலைகட்டிக்கொண்டேன்; முதல்மாதம் கனிகளைப்புசித்தேன்; இரண்டாவதுமாதம் ஜலபானம்செய்தேன்; மூன்று நாலு ஐந்தாவதுமாதங்களில் வாயுபக்ஷணம்செய்துகொண்டு கைகளை மேலேதூக்கி ஒற்றைக்காலால் தளராமல்நின்றேன். பாரதரே! ஆகாயத்தில் ஆயிரம்ஸூர்யர்களின் ஒளியைக்கண்டேன். பாண்டுபுத்ரரே! அந்தஒளியின்நடுவில் வானவில்லைத்தரித்ததும் மின்னல்வரிசையைச் சாளரமாகவுடையதும் கறுத்தமலைச்கூட்டம்போலிருப்பதும் வெள்ளை நாரைகளையே ஆடையாகத்தரித்திருப்பதுமாகிய ஓர்ஒளியைக் கண்டேன். அதில் சிறந்தஒளியுள்ள பகவானானவர் தவத்தினாலும் ஒளியினாலும் அழகினாலும்பிரகாசிக்கின்ற தம்பாரியையாகிய உமாதேவியுடன் இருந்தார். அந்தஒளியில் உமாதேவியுடனிருந்தபகவானான மகேஸ்வரர், ஸூர்யன் சந்திரனுடன்சேர்ந்து மேகத்திலிருப்பது போல விளங்கினார். குந்திபுத்ரரே! நான் மயிர்பொடித்து ஆச்சர்யத்தினால்மலர்ந்தகண்களுடையவனாய்த் தேவக்கூட்டங்களுக்குஆதாரவும் துன்பத்தைப்போக்குகிறவரும் கிரீடத்தைத்தரித்தவரும் கதையையும்சூலத்தையும் கையில் வைத்துக்கொண்டவரும் புலித்தோலுடுத்தினவரும் ஜடாதாரியும் தண்டாயுதத்தையும் பிநாகம்என்னும்வில்லையும் வஜ்ராயுதத்தையும்கையிலேந்தியவரும் கூர்மையானகோரப்பற்களும் அழகியதோள்வளைகளுமுடையவரும் ஸர்ப்பத்தைப்பூணூலாக அணிந்தவரும் குதிகால்வரையில்தொங்கும் அநேகநிறங்களையுடைய தேவலோகத்துப்பூமாலையைமார்பிலணிந்து செவ்வானத்தோடும் [2]பரிவேஷத்தோடுங்கூடிய சரச்சந்திரனைப்போலிருப்பவருமாகிய அந்தப் பரமசிவனைக் கண்டேன். பிரமதகணங்களினால் சுற்றிலும்சூழப்பட்டுச் சரத்காலத்தில் பரிவேஷத்துடன் பார்க்கக்கூடாதஸூர்யனைப் போலிருப்பவரும் மனத்தைஜயித்தவரும் சிறந்தசெய்கையுள்ளவருமான அந்தவிருஷபவாகனரை ஆயிரத்துநூறுருத்ரர்கள் அவர்செய்கைகளைச்சொல்லித் [3]துதித்தனர். ஆதித்யர்களும் வஸுக்களும் ஸாத்யர்களும் விஸ்வேதேவர்களும் அஸ்வினிதேவர்களும், எல்லாருக்குந் தேவதையானஈஸ்வரரை எல்லாஸ்தோத்திரங்களையும்சொல்லித் துதித்தனர். அதிதியின்புத்ரர்களாகியஇந்திரனும் பகவானானவிஷ்ணுவுமாகிய இருவரும் ப்ரம்மதேவரும் சிவனதுஸமீபத்தில் ரதந்தரமென்னும்ஸாமத்தைச் சொல்லுகின்றனர். யோகீஸ்வரர்கள் அநேகரும், பிர

---

[1] இடுப்புக்கயிறு. [2] ஸூரியசந்திரர்களைச்சுற்றிய மண்டலம்.
[3] 'அஸ்துவக்' என்றபாடம் கொள்ளப்பட்டது.

ம்மரிஷிகளும் அவர்களின்புத்திரர்களும் தேவரிஷிகளும், யோகத்தைக் கொடுத்த ஆசாரியரும் தந்தையுமான சிவபிரானைத் துதித்தனர். அரசரே! பூமி, ஆகாயம், நக்ஷத்திரங்கள், கிரஹங்கள், மாஸங்கள், பக்ஷங்கள், ருதுக்கள், ராத்திரிகள், வருஷங்கள், க்ஷணங்கள், முகூர்த்தங்கள், நிமிஷங்கள், யுகங்கள், வித்யைகள் இவைகளெல்லாம் திவ்ய சரீரத்துடன் அவரை நமஸ்கரிக்கின்றன. யுதிஷ்டிரரே! ஸத்வகுணமுள்ளவர்களாகிய ஸநத்குமாரர், தேவர்கள், இதிஹாஸங்கள், மரீசி, அங்கிரஸ், அத்திரி, புலஸ்தியர், புலஹர், க்ரது, ஸப்தமனுக்கள், சந்திரன், அதர்வாவென்பவர், ப்ருஹஸ்பதி, ப்ருகு, தக்ஷர், கச்யபர், வஸிஷ்டர், காச்யபர் இந்தரிஷிகளும் வேதங்களும் தீக்ஷைகளும் யாகங்களும் தக்ஷிணைகளும் அக்கினியும் ஹவிஸும் யாகத்திற்குரியதிரவியங்களும் சரீரமெடுத்து அவரை நமஸ்கரிக்கின்றனர். பிரஜைகளைக் காப்பாற்றுகிறவர்களனைவரும் நதிகளும் நாகர்களும் மரங்களும் தேவமாதாக்களும் தேவபத்நிகளும் தேவகன்னிகைகளும் ஆயிரமாயிரமாயிரம்பத்துக்கோடிரிஷிகளும் மலைகளும் ஸாகரங்களும் திசைகளும் சாந்தரானபிரபுவை நமஸ்கரிக்கின்றனர். பாட்டிலும்வாத்யங்களிலும் தேர்ச்சியுள்ளகந்தர்வர்களும் அப்ஸரஸ்களும் தேவதாளங்களோடு பாடிக்கொண்டு ஆச்சர்யரூபியானசிவபிரானைத் துதிக்கின்றனர். மகாராஜரே! வித்யாதரர்கள் அஸுரர்கள் யக்ஷர்கள் ராக்ஷஸர்கள் இவர்களும் சராசரங்களாகியஎல்லாப்பிராணிகளும் வாக்காலும் மனத்தாலும் காயத்தாலும் பிரபுவை நமஸ்காரம்செய்கின்றனர். தேவருக்குமீச்வரரானசிவபிரான் என்முன் நின்றார். பாரதரே! ஈச்வரர்என்முன்னே நின்றதைக்கண்டு ப்ரம்மா இந்திரன்முதலானஉலகம் என்னையேபார்த்தது. அப்போது மகாதேவரைக்கண்ணெடுத்துப்பார்க்க எனக்கு முடியாமற்போயிற்று. பிறகு, ஈச்வரர் என்னைப்பார்த்து, 'கிருஷ்ண! பாரும்; பேசும். உம்மால் நான் நூறுதடவைகளும் ஆயிரந்தடவைகளும் ஆராதிக்கப்பெற்றிருக்கிறேன். உம்மைப்போல எனக்கன்பர் மூவுலகங்களிலுமில்லை' என்றுசொன்னார். ஈச்வரரை நின்று தலைவணங்கிவந்தனம்செய்தபிறகு உமாதேவியும் அன்புகூர்ந்தாள். பிறகு, ப்ரம்மாதிதேவர்களால்துதிக்கப்பட்ட பரமசிவனைப்பார்த்து நான் சொல்லலானேன்.

'என்றுமிருப்பவரே! எல்லாவற்றிற்கும்காரணரே! உமக்கு நமஸ்காரம். ரிஷிகள் உம்மை ப்ரம்மாவுக்குமீச்வரரென்றுசொல்லுகின்றனர். தவமும் ஸத்வரஜஸ்தமோகுணங்களும் ஸத்யமும் நீரே யென்று பெரியோர்கள் சொல்லுகின்றனர். பிரம்மாவும் ருத்ரரும்

வருணனும் அக்னியும் மனுவும் [1]பவரும் [2]தாதாவும் [3]த்வஷ்டாவும் [4]விதாதாவும் நீரே. நீரே பிரபு; எங்கும்முகங்களையுடையவர். சராசரங்களானபொருள்கள் உம்மிடத்திலிருந்துண்டானவை. சராசரங்களடங்கினஇம்மூவுலகங்களும் முற்றும்உம்மால்படைக்கப்பட்டவை. ஐம்புலன்கள் மனம் ஸப்தமருத்துக்கள் மூன்றக்னிகள் தேவலோகங்கள் தேவர்கள்இவையெல்லாவற்றிற்கும் மேற்பட்டவரென்று உம்மை ரிஷிகள் சொல்லுகின்றனர். வேதங்கள் யாகங்கள் ஸோமம் என்னுங்கொடி தக்ஷிணை அக்னி ஹவிஸ் மற்றுமுள்ளயாகத்திற்குரியதிரவியங்களெல்லாம் பகவானாகியநீரேயென்பது திண்ணம். பகவானே! யாகம், கொடை, ஓதல், நோன்புகள், நியமங்கள், [5]வெட்கம், புகழ், செல்வம், ஒளி, ஸந்தோஷம், இவற்றின்பயனாகியஜயம், காமம், குரோதம், பயம், லோபம், மார்கம், கர்வம், பகை, துன்பங்கள், நோய்கள்இவை உமது தேகங்கள். உம்முடையமுயற்சி, அதினாலுண்டானபிரபஞ்சம், அவற்றில்உமக்குண்டானஅன்பு, நித்யமும்காரணமுமாயுள்ளபிரக்ருதி, மனத்திற்கும்மேற்பட்ட இடமாகியஉமதுமகிமைஇவையென்றுமுள்ளவை. நீர் புலப்படாதவர்; நினைவுக்குமெட்டாதவர்; பரிசுத்தர்; ஆயிரங்கிரணங்களையுடையவர்; பொன்மயமாயிருப்பவர்; பிரமகணங்களெல்லாருக்குந் தலைவர்; உயிருக்காதாரமானவர். நீரே பரமாத்மா. புத்தியும்நீரே. பிரமமா [6]விஸ்வர் [7]சம்பு [8]ஸ்வயம்பு இவர்களும் நீரே புத்தி, பிரஜ்ஞை, உபலப்தி, ஸம்வித்து, கியாதி, த்ருதி, ஸ்மிருதியென்று அறிவைச்சொல்லும பலசப்தங்களினாலும் பரமாத்மாவானநீர் சொல்லப்படுகிறீர். பிராமணன் வேதத்தினால் உம்மையறிந்து மயக்கந்தெளிகிறான். எல்லாப்பிராணிகளுக்கும் ஹ்ருதயமாகியநீர் க்ஷேத்ரஜ்ஞரென்று ரிஷிகளால் துதிக்கப்படுகிறீர்; எல்லாப்புறங்களிலும் கைகளும் கால்களும் கண்களும் தலைகளும் வாய்களும் காதுகளுமுள்ளவராக உலகமனைத்தையும் வியாபித்திருக்கிறீர். ஸூர்யன்செய்கைகளாகிய விநாடிமுதலான காலப்பிரிவுகளுக்கு நீர்தாம் பலனுயிருக்கிறீர். ஸூர்யனுக்குஒளியும் அக்னிக்குஜ்வாலையும் எல்லாருடைய ஹ்ருதயத்திலுமிருக்கும ஆத்மாவும் நீர்தாம். அணிமா, மகிமா, பிராப்தி, ஈசித்வமுதலானஸித்திகளும் நீரே. மாருத ஒளியும் நீரே. அறிவும் நினைவும் லோகங்களும் உம்மிடத்திலேயே அடைந்திருக்கின்றன. மனவுறுதியுள்ளவர்களும் இந்திரியங்களை

[1] ஸம்ஸாரத்திற்கதிஷ்டானதேவதை. [2] போஷிக்கிறதேவதை. [3] விஸ்வகர்மா. [4] அதிருஷ்டதேவதை. [5] அகாரியத்தில்கூச்சம. [6] அந்தர்யாமி. [7] ஸுகத்தைத்தருகிறவர். [8] பிறரால்உண்டாக்கப்படாதவர்.

ஜபித்தவர்களும் இடைவிடாதுயோகம்செய்பவருமான ரிஷிகள் உம்மையே தியானிக்கின்றனர். நித்யரும் மனத்திற்குள்ளிருப்பவரும் ஈஶ்வரரும் புராணபுருஷரும் உலகவடிவமாயிருப்பவரும் பொன்னுருவமானவரும் ஞானிகளுக்குச்சிறந்தகதியுமாகியஉம்மை எவன் அறிகிறானோ அந்தப்புத்திசாலியானவன் மற்றப்புத்திகளைக் கடந்திருக்கிறான். [1] ஏழுஸூக்ஷ்மங்களையும் [2] ஆறுஅங்கங்களையுமுடைய உம்முடையவடிவத்தைக்கண்டு ப்ரக்ருதிக்குவேறாக ஆத்மாவைப்பிரித்து அறிவதாகிய யோகத்திலிருக்கும்வித்வான் உம்மையே அடைகிறான்' என்றேன். குந்திபுத்ரரே! துக்கத்தைப்போக்கும்சிவபிரான் இவ்வாறு என்னால்துதிக்கப்பட்டபோது சராசரங்களாகியஉலகங்களைத் தும் ஸிம்மநாதம்செய்தன. அப்போது, ப்ராம்மணர்கள் தேவர்கள் அஸுரர்கள் நாகர்கள் பிசாசர்கள் பிதருக்கள் பக்ஷிகள் ராக்ஷஸர்கள் பூதங்கள் மஹரிஷிகள்ஆகியஎல்லாரும் அந்தஈஶ்வரரை நமஸ்கரித்தனர். சிறந்தமணமுள்ள தேவலோகத்துமலர்களின்குவியல்கள் என் தலையில் விழுந்தன. காற்று மிகஇனிமையாக வீசிற்று. உலகங்களுக்குநன்மைசெய்கிறவராகிய பகவானுனசங்கரர் உமாதேவியையும் என்னையும் இந்திரனையும்பார்த்து, தாமாகவே எனக்குச் சொல்லலானார். 'கிருஷ்ண! பகைவர்களைக்கொல்லுகிறவரே! யம்மிடத்தில் உமக்குச் சிறந்தபக்தியிருப்பதை யாமறிவோம். உமது நன்மையைச் செய்துகொள்ளலாம். உம்மிடத்தில் எனக்கு மிக்கஅன்புஇருக்கிறது. கிருஷ்ண! எட்டுவரங்களை நீர் கேட்கலாம். மிகச்சிறந்தவரே! உமக்கு அவற்றைக் கொடுத்தேன். யாதவசிரேஷ்டரே! நீர்விரும்புகின்றவை அடைவதற்குமிகஅரியவையாயினும் அவற்றைச் சொல்வீராக' என்றார்.

---

## நாற்பத்தாறுவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(கிருஷ்ணன், பார்வதிபரமேஶ்வரர்கள் தமக்குவரங்கொடுத்ததைத் தர்மபுத்ரருக்குச் சொல்லியது.)

அந்தத்திரண்டஒளியின்நடுவிலிருக்கும்பகவானை மிருந்தலைத் தோஷத்தோடும் அடக்கத்தோடும் தலைவணங்கி நமஸ்காரம்செய்து

---

[1] மஹத், அகங்காரம், பஞ்சபூதங்களுக்குக்காரணமாகிய ஐந்துதன்மாத்திரைகள்.

[2] ஸர்வஜ்ஞராயிருத்தல், திருப்தி, என்றுமிருக்கும்ஞானம், ஸ்வதந்திரராயிருத்தல், சக்திகுன்றாமை, சக்திக்குஅளவில்லாமை.

பிறகு, 'தர்மத்தில்உறுதியையும் யுத்தத்தில்பகைவர்களைக் கொல்லும் சக்தியையும் சிறந்தபுகழையும் மேலானதேகவன்மையையும் யோகத்தையும் எல்லாருக்கும்பிரியமாயிருக்கையையும் உமக்குச் சமீபத்திலிருக்கையையும் பதினாயிரம்புத்ரர்களையும் வேண்டுகிறேன்' என்று சொன்னேன். என்னால் இவ்வாறுகேட்டுக்கொள்ளப்பட்ட சங்கரர், 'அவ்வாறேஆகட்டும்' என்றுசொன்னார். அதன்பிறகு, லோகமாதாவும் எல்லாவற்றையும்தாங்குகிறவளும் பரிசுத்தம்செய்கிறவளும் தவங்களுக்குஇருப்பிடமும் சிவபிரான் மனைவியுமான உமாதேவி அருள்கூர்ந்து என்னைப்பார்த்து, 'குற்றமற்றவரே! உமக்கு ஸாம்பனென்னும்புத்ரன் பகவானால்கொடுக்கப்பட்டான். என்னிடத்திலும் வேண்டின எட்டுவரங்களை வாங்கிக்கொள்ளும்; கொடுக்கிறேன்' என்று சொன்னாள். பாண்டுபுத்ரரே! அவளையும் நான் தலைவணங்கிப் பிராம்மணர்களிடத்தில் கோபமில்லாமையையும் தந்தையின் அனுக்கிரகத்தையும் நூறுகுமாரர்களையும் சிறந்தஇன்பத்தையும் குலத்தின்மேல் அன்பையும் தாயின்அனுக்கிரகத்தையும் புலன்களின் அடக்கத்தையும் காரியங்களின்ஸாமர்த்தியத்தையும் கேட்டுக்கொண்டேன். உமாதேவி என்னைப்பார்த்து, 'தேவசக்தியுள்ளவரே! அப்படியேயாகும். நான் சொல்வது ஒருபோதும் பொய்யாவதில்லை. பதினாயிரம்மனைவிகளையும் அவர்களிடத்தில்அழியாத அன்பையும் பந்துக்களின் மிக்க விருப்பத்தையும் [1]தேகத்தின் அழகையும் உமக்குக்கொடுக்கிறேன். [2]உமதுகிருகத்தில் எழாயிரம்அதிதிகள் எப்பொழுதும் புஜிப்பார்கள்' என்றுசொன்னாள். பாரதரே! பீமனுக்குமூத்தவரே! ஈஸ்வரரும் ஈஸ்வரியும் எனக்கு இவ்வாறு வரங்களையளித்தபிறகு கணங்களுடன் அந்தரிக்ஷத்திலேயே மறைந்தனர். ராஜஸ்ரேஷ்டரே! இந்தமிக்க ஆச்சர்யமானவிஷயத்தையெல்லாம் அதிகமஹிமையுள்ளவரான உபமன்யுவென்னும்பிராம்மணருக்குமுன்னர் நான் சொன்னேன். நல்ல நியமமுள்ளவரே! அந்தப்பிராம்மணர் தேவருக்குந்தேவரான சங்கரருக்கு நமஸ்காரம்செய்து, 'சிவனுக்குஒப்பான தேவதையில்லை. சிவனுக்குச்சமமான தஞ்சமில்லை. கொடுப்பதில் சிவனைப்போன்றவரில்லை. யுத்தத்தில் சிவனுக்கொப்பானவரில்லை' என்றுசொன்னார்.

[1] [2] இவை கேளாதவை.

## நாற்பத்தேழாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உபமன்யு, தண்டிமுனிவர்செய்த பரமசிவஸ்தோத்திரத்தைக் கிருஷ்ணனுக்குச் சொல்லியது.)

உபமன்யு பின்னும்சொல்லலானார். 'ஐயா! க்ருதயுகத்தில் தண்டி என்றுபெயர்பெற்ற ஒருரிஷியிருந்தார். அவர் பதினாயிரம்வருஷகாலம் பக்தியோடு தியானம்செய்து சிவனை ஆராதித்தார். அதன் பலனைக் கேளும். அவர் பிரபுவானமஹாதேவரைப்பார்த்து ஸ்தோத்திரங்களைச் சொன்னார் தண்டியானவர் அழிவில்லாதவரும் மஹாத்மாவுமானபரமாத்மாவைத் தவவன்மையினால் தியானஞ்செய்து மிக்க ஆச்சரியத்துடன், 'ஸாங்கியசாஸ்திரிகள் எவரை மூலப்பிரகிருதியென்றுசொல்லுகின்றனரோ, யோகிகள் எவரைப் பிரகிருதியைநடத்தும்புருஷராகியஈஸ்வரர்என்று தியானிக்கின்றனரோ, படைத்தற்கும் அழித்தற்கும் எவர் காரணமென்று வித்வான்கள் அறிகின்றனரோ, தேவர்களிலும் அஸுரர்களிலும் முனிவர்களிலும் எவருக்குமேற்பட்டவரில்லையோ ஜனனமில்லாதவரும எல்லாவற்றையும் நடத்துகிறவரும் முதலும்கடையுமற்றவரும் சக்தியுள்ளவரும் எல்லாவற்றிற்குமமேற்பட்டஆனந்தமுள்ளவரும் குற்றமற்றவருமான அந்தப்பகவானைச் சரணமடைகிறேன்' என்றுசொன்னார். இவ்வாறுசொல்லிக்கொண்டிருக்கும்போதே தபோநிதியும் குற்றமற்றவரும் உவமையில்லாதவரும் சிந்தைக்கெட்டாதவரும் என்றுமிருப்பவரும் மாறாதவரும் பகுதியற்றவரும் பூர்ணரும நிர்க்குணரும முக்குணங்களாகிய பிரகிருதியிலிருப்பவரும யோகிகளுக்கு மோக்ஷமென்று சொல்லப்பட்ட அழியாதபேரானந்தமும் மனு இந்திரன் அக்னி வாயு உலகம் ப்ரம்மதேவர் இவர்களுக்குங்கதியும் யாருக்கும் வசப்படாதவரும் தொழிலற்றவரும் தூயவரும் புத்தியினாலெட்டத்தக்கவரும் மனோமயமாயிருப்பவரும் பகுத்தறியக்கூடாதவரும் குணங்களைஎண்ணவும் கூடாதவரும் மனத்தூய்மையற்றவர்கள் அடைவதற்குமுடியாதவரும் எல்லாஉலகங்களும்உண்டாகும்இடமும் பிரகிருதிக்குமேலானஆத்மாவுக்கும்மேற்பட்டவரும் பிராணனைநடத்துகிறவரும் அந்தர்யாமியும் ஜீவனதுஒளியும் மனமும் அந்தப்பரப்ரம்மமுமான ஈஸ்வரரைப்பார்த்துவிரும்பித் தண்டிமுனிவர் அநேகவருஷங்கள் உக்கிரமானதவத்திலிருந்து ஈஸ்வரரைக்கண்டபிறகு துதிக்கலானார். 'சிறந்தவரே!

நீர் சுத்தங்களையும் சுத்தம்செய்பவர்; நல்லகதியைத்தருகிறவர்களுக்கும் கதியாயிருப்பவர்; ஒளிகளுக்கும் மேலான ஒளி; தவங்களுக்கும் சிறந்ததவமாயிருப்பவர். விஸ்வாவஸுவென்னுங்கந்தர்வன் இரண்யாக்ஷனென்னும்அஸுரன் தேவேந்த்ரன் இவர்களால் நமஸ்கரிக்கப்பெற்றவரே! அதிகமங்களங்களைக்கொடுப்பவரே! ப்ரபுவே! நீர்தாம் மேலானஸத்யம். உமக்கு நமஸ்காரம். ப்ரபுவே! ஜனனமரணங்களுக்குப்பயந்து த்யானத்தில் முயலுகின்றயதிகளுக்கு மோக்ஷத்தைக் கொடுப்பவரே! ஆயிரங்கிரணங்களையுடையவரே! லோகத்துக்காதாரமாயிருப்பவரே! உமக்கு நமஸ்காரம். ப்ரம்மா இந்த்ரன் விஷ்ணு விஸ்வேதேவர்கள் மஹரிஷிகள் (யாரும்) உம்மைச் சரியாக அறியவில்லை; நாங்கள் அறிவதெப்படி? எல்லாம் உம்மிடத்திலிருந்துண்டாகின்றன. எல்லாம் உம்மிடத்திலநிற்கின்றன. காலமென்றும் புருஷரென்றும் ப்ரம்மாவென்றும் சொல்லப்படுபவர் நீரே. பூர்வவிருத்தாந்தங்கள் தெரிந்ததேவரிஷிகள் உமக்கு [1]மூன்றுமூர்த்திகள் இருப்பதாகச் சொல்லுகின்றனர். [2]அதிபுருஷம், [3]அத்யாத்மம், [4]அதிபூதம், [5]அதிதெய்வம், [6]அதிலோகம், [7]அதிவிஜ்ஞானம், [8]அதியஜ்ஞம் எல்லாம் நீரே. ஞானிகள் ஆத்மாக்களிடத்திலும் தேவர்களிடத்திலுமிருப்பவரும் தேவர்களாலும் அறியப்படாதவருமான உம்மை அறிந்தபிறகு ப்ரக்ருதியைவிட்டுத் துயரமற்றஉயர்ந்தஸ்வரூபத்தை அடைகின்றனர். ப்ரபுவே! நீர் நினையாதவரையில் ஜனனமரணங்கள் அனேகமுண்டு. ஸ்வர்கத்துக்கும் மோக்ஷத்திற்கும் மார்க்கங்களை எடுப்பவரும் கொடுப்பவரும் நீர். ஸ்வர்க்கமோக்ஷங்களும் காமக்குரோதங்களும் ஸத்வராஜஸ்தமோகுணங்களும் நீரே. மேலும் நீர்தாம். கீழும் நீர்தாம். ப்ரம்மா, விஷ்ணு, சிவன், ஸ்கந்தன், இந்த்ரன், ஸூர்யன், யமன், வருணன், சந்த்ரன், மனு, தாதா, விதாதா, குபேரன் இவர்களும் நீரே. பூமி, வாயு, ஜலம், அக்னி, ஆகாயம், வாக்கு, புத்தி, இருப்பு, நினைப்பு, செய்கை, பொய், மெய், உண்மை, இன்மை இவையும் நீரே. இந்திரியங்களும் சப்தாதிவிஷயங்களும் ப்ரக்ருதிக்கு மேற்பட்டநித்யவஸ்துவும் உலகமும் உலகத்துக்குமேற்பட்ட பொருளும் அதற்கும்மேற்பட்ட பொருளும் சிந்தைக்குட்படுபவரும் எட்டாதவரும் நீர்தாமே. பரப்ரம்மமும் ஸாங்கியர்களும் யோகர்களும் அடையும் பரகதியும் நீர்தாமென்பதில் ஸந்தேகமில்லை. இப்போது

[1] பிரம்மா, விஷ்ணு, சிவன். [2] ஆத்மாவிலுள்ளது. [3] தேகத்திலுள்ளது. பஞ்சபூதங்களிலுள்ளது. [5] தேவர்களில் உள்ளது. [6] உலகங்களில் உள்ள. ஞானத்திலிருப்பது. [8] யாகத்திலிருப்பது.

நாங்கள் கிருதார்த்தர்களானோமென்பது நிச்சயம். ஞானத்தினால் தெளிந்த புத்தியுள்ளவர்கள் எந்தக்கதிக்கு ஆசைப்படுகின்றனரோ அந்தஸாதுக்களுடையும்கதியை நாமும் நிச்சயமாக அடைந்தோம். ஆ! ஆ! இவ்வளவுநீண்டகாலம் அறிவில்லாமல் மயங்கியிருந்தோம். நித்யரானஎந்தச்சிறந்ததேவரை வித்வான்களறிகின்றனரோ அவரை நாம் அறியாமலிருந்தோம். நான் இவ்வளவுஜன்மங்களுக்குப்பின் நேரே உம்மிடத்தில் பக்தியைப்பெற்றேன். எவரையறிந்தபின் மோக்ஷம் பெறலாமோ அந்தப்பகவான் பக்தியுள்ளவர்களுக்குத்தான் அனுக்கிரகம்செய்கிறார். தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் முனிவர்களுக்கும்தெரியாமல் குகையில்வைக்கப்பட்டதும் வேதத்தால் அறியக்கூடாததுமானபரப்ரம்மம் எதுவோ அது இந்தப்பகவானனஈசுவரர்தாம். இவர் எல்லாவற்றையும்படைத்தவர்; எங்கும் முகங்களுள்ளவர்; எல்லாவற்றிற்கும் ஆத்மா; எல்லாவற்றையும் பார்ப்பவர்; எல்லாவற்றிலுமிருப்பவர்; எல்லாவற்றையுமறிந்தவர்; தேகத்தையுண்டுபண்ணினவர்; தேகத்தைப்போஷிப்பவர்; எல்லாவற்றையும் தமக்குத்தேகமாகவுடையவர்; தேகத்தை அனுபவிக்கும் ஆத்மாவாகவும் ஆத்மாக்களுடையும்கதியாகவுமிருப்பவர்; உயிரையுண்டாக்கினவர்; உயிரைக்காப்பவர்; உயிர்களைவசிப்பவர்; உயிரைக்கொடுப்பவர்; உயிர்களுக்குஆதாரமானவர்; ஆத்மஜ்ஞானத்துடன் அன்புவைத்துத்தியானம்செய்கிறவர்களின் ஆத்மாக்களுக்காதாரமான கதியாயிருப்பவர். திரும்பவும் ஜனியாமலிருக்கவிரும்புகிறவர்களுக்குத் தஞ்சமாயிருப்பவர் ஈஸ்வரரே. எல்லாப்பிராணிகளுக்கும் நல்லகதியையும் கெட்டகதியையும்கொடுப்பவர் இவர். எல்லாப்பிராணிகளுக்கும் ஜனனமரணங்களைச்செய்பவர் இவர். தவஸித்தியை விரும்புகிறவருக்கு அதை நிறைவேற்றும் உபாயமும் இவர். பலனைக்கொடுப்பவரும் இவர். பூமிமுதலானஉலகங்களையும் தேவர்களையும்படைத்து அவர்களை [1]எட்டுச்சரீரங்களினால்தாங்கிக் காப்பாற்றுகிறார். இவரிடமிருந்தே எல்லாமுண்டாகின்றன. இவரிடத்திலேயே எல்லாம் நிலைபெற்றிருக்கின்றன. இவரிடத்திலேயே எல்லாம் பிரளயமாகின்றன. இவர் ஒருவரே என்றுமிருப்பவர். ஸத்யலோகத்தை விரும்புகிறவருக்கு ஸத்யலோகம்இவரே. ஸாதுக்களுக்கும் பரம்பொருளிவரே. முக்திபெற்றவர்களுக்கு மோக்ஷமிவரே. ஆத்மாவையறிந்தவர்களுக்குக் [2]கைவல்யம்இவரே. இந்தப்பிரபுவானவர் தேவருக்கும் அஸுரருக்கும்

---

[1] ஐந்துபூதங்கள் ஸூர்யன் சந்திரன் யாகம்செய்யும் யஜமானன்.
[2] பிரகிருதியைவிட்டிருத்தல்.

மனிதருக்கும் தெரியாமலிருக்கவேண்டுமென்றே ப்ரம்மாமுதலான ஞானிகளால் ரகஸ்யமாக மறைத்துவைக்கப்பட்டிருக்கிறார். ஆதலால், தேவர்களும் அஸுரர்களும் மனிதர்களும் மனத்திற்குள்மறைந்திருக்கும் இந்தப்ரபுவினாலேயே மயங்கச்செய்யப்பட்டவர்களாய் இவருடைய உண்மையை அறியாமலிருக்கின்றனர். எவர்கள் பக்தியோகத்தினால் மனத்தூய்மையை அடைந்து இவரைச் சரணமடைகின்றனரோ அவர்களுக்குமட்டுமே உள்ளத்திலிருப்பவராகிய இவர் தம்மைக் காண்பிக்கிறார். எவரையறிந்தபின் ஜனனமரணங்கள் இராவோ, அறியத்தக்கவற்றுள் முதன்மையான எவரையறிந்தபின் அறியவேண்டியதொன்றுமில்லையோ, ஞானியானவன் எந்தச்சிறந்தலாபத்தையடைந்தபின் அதற்குமேலாக எதையும நினைப்பதில்லையோ, எவரை மாறுதலும்கெடுதலும்இல்லாததும் அறிவுக்கெட்டாததுமான பாகதியென்று அடைகின்றனரோ, ஸத்வரஜஸ்தமோகுணங்களின் ஸ்வரூபங்களையறிந்தவரும் ஆத்மஜ்ஞானத்தில் நிபுணரும் மிக்கஸூக்ஷ்மஞானமுள்ளவர்களுமாகிய ஸாங்கியர்கள் எந்தஸூக்ஷ்மத்தையறிந்து ஸம்ஸாரத்தினின்றுவிடுபடுகின்றனரோ, வேதமறிந்தவர்கள் பிராணயாமம்செய்துகொண்டு வேதாந்தத்தில் சொல்லியிருக்கும் அறியவேண்டியபொருளாகிய எவரை எக்காலமும் தியானித்துக்கொண்டும் ஜபித்துக்கொண்டுமிருக்கின்றனரோ அந்தமஹேஸ்வரரை ஓங்காரமென்னும் ரதத்திலேறிக்கொண்டு ஞானிகள் சேருகின்றனர். தேவயானமென்றுசொல்லப்படும் அர்ச்சிராதிமார்க்கத்தின் வாயிலாகிய ஆதித்தியன்என்று சொல்லப்படுகிறவர் இவர். பிதருயானமென்றுசொல்லப்படுகிற தூமாதிமார்க்கத்திற்குவாயிலாகிய சந்த்ரன் என்றுசொல்லப்படுகிறவரும் இவரே. திசைகளும் பூமிகளும் வருஷங்கள் யுகங்கள்முதலியவையும் தேவலோகத்திலும மற்றலோகங்களிலுமுள்ள சிறந்தஸுகங்களும் தக்ஷிணாயனமும் உத்தராயணமும் இவரே. ப்ரம்மதேவர் முற்காலத்தில் நீலலோகிதா என்றுபெயருள்ள இவரைப் பலவகைஸ்தோத்திரங்களினால் ஆராதித்துப் புத்ரவரம்கேட்டார். ரிக்வேதிகள் கர்மங்களில்சொல்லப்படும் மந்திரங்களினால் எவரைப் பரதத்வமாகக்கூறுகின்றனரோ, யஜுர்வேதிகள் யாகங்களில் மூன்று அக்னிகளாக அறியப்படும் எவரிடத்தில் யஜுர்வேதவிதிப்படி ஹோமம்செய்கின்றனரோ, பரிசுத்தமானஞானமுள்ள ஸாமவேதிகள் ஸாமங்களினால் எவரைப் பாடுகின்றனரோ, அதர்வணவேதிகளான பிராம்மணர்கள் கர்மத்திற்கும் ஞானத்திற்கும்பயனாகிய பரப்ரம்மென்று எவரைத்துதிக்கின்றனரோ, அந்த இவர்தாம் யாகத்திற்கு

முதற்காரணமென்றும் முதன்மையானதேவதையென்றும் நினைக்கப்படுகிறார். இவர் இரவுபகல்களைக் காதுகளும் கண்களுமாகவுடையவர்; பக்ஷங்களையும் மாஸங்களையும் கைகளும்தலைகளுமாகவுடையவர்; ருதுக்களை வீரியமாகவும் தவத்தைத் தைரியமாகவும் வருஷங்களைக் குறி, துடை, பாதங்களாகவும் உடையவர். [1] மிருத்யுவும் [2] யமனும் அக்நியும் ஸம்ஹாரம்செய்வதில் வேகமுள்ளகாலனும் காலத்திற்கு முதற்காரணமும்நித்யமுமான மகாகாலமும் இவரே சந்த்ரன் ஸூர்யன் நக்ஷத்திரங்கள் கிரகங்கள் வாயு துருவன் ஸப்தரிஷிகள் ஏழுஉலகங்கள் ஸூக்ஷ்மமானமூலப்பிரகிருதி மாத்துமுதல்கடைசிக்காரியம் வரையிலுமான விகாரங்கள் ப்ராம்மா முதல் துரும்புவரையிலுமுள்ள உலகம் சேதனசேதனங்கள்சேர்ந்தப்ராணிகள் (பஞ்சபூதங்கள் மனம் புத்தி அகங்காரம் ஆகிய) எட்டுப்பிரகிருதிகள் பிரகிருதிகளுக்குமேற்பட்ட சுபர்வர்ன் இவையெல்லாம் பரமசிவனுடைய பாகமாகவே நடந்துகொண்டிருக்கின்றன. நித்யமும் எல்லாவற்றிற்கும் மேற்பட்டதுமாகிய ஆனந்தமும் இவர் தாம். பற்றற்றவர்கள் அடையும் கதியும் ஸாதுக்கள் தியானிக்கும் மேலானபொருளும் இவர்தாம். இவர்தாம் அச்சமற்றஇடம். இவர்தாம் அழிவில்லாதபரப்ரம்மம். சாஸ்திரங்களையும் வேதங்களையும் வேதாங்கங்களையும் அறிந்தவருக்கு இவரைத் தியானிப்பதுதான் சிறந்தஉபாயம். முடிவானஇடம் இவர்தாம். முடிவானஞானம் இவர்தாம். முடிவானதவப்பயன் இவர்தாம். முடிவான நல்வழி இவர்தாம். மேலானஇந்திரியஜயமும் இவர்தாம். மேலான ஆனந்தம் இவர்தாம். யோகிகள் இவரையடைந்தபிறகு ஆகவேண்டிய தொன்றுமில்லையென்று நினைக்கின்றனர். இவரே ஸந்தோஷம்; இவரே ஜயம்; இவரே வேதம்; இவரே தர்மசாஸ்திரம்; அன்புள்ளவர்களின் ஆத்மாசேருமிடமும் வித்வான்களுக்கு அழியாதபயனும் இவர்தாம் மிகுதியாகத்தக்ஷிணைகளைக்கொடுத்துப் பலன்களைக்கருதி யாகம்செய்யும் யஜமானர்களுக்கும் நீர்தாம்கதியென்பதில் ஸந்தேகமில்லை. ஸ்வாமீ! செம்மையாகயோகாப்யாஸமும் ஜபமும்செய்து ஐம்புலன்களையும் அடக்கித தேகத்தைப்பீடிக்கும் விரதங்களைச்செய்து தவம் புரிவோரின் முக்கியமானகதியும் நீரே. ஏறுமாழியாதவரே! எல்லா விஷயங்களிலும்பற்றைவிட்டுக் கர்மஸந்யாஸம்செய்தவர்கள் ப்ரம்மலோகத்திலடையும்கதியும் நீரே. மோக்ஷத்தைவிரும்பி ஆசைகளையறுத்துப் பிரகிருதியின்ஸ்வபாவத்தை விட்டிருப்பவருக்கு மோக்ஷகதியும் நீரே. ஸ்வாமி! உலகஞானமும் ஆத்மஞானமுமுள்ளவர்க

[1] மாரணம்செய்கிறவன். [2] பாவத்திற்குத்தண்டிப்பவன்.

ளுக்கு நாமரூபங்களில்லாததும் குற்றமில்லாததுமாகிய கைவல்யம் என்னும் சிறந்தகதியும் நீரே. பிரபுவே! வேதங்களிலும் சாஸ்திரங்களிலும் புராணங்களிலும் சொல்லப்பட்ட [1]'அவ்வைந்து கதிகளும் உமது அனுக்கிரகத்தினாலல்லது வேறு உபாயத்தினால் கிடைப்பதில்லை' என்று தவங்களுக்கெல்லாம் இருப்பிடமாகிய தண்டிமஹாமுனிவர் முன்னர் உலகம்படைத்தப்ரம்மதேவர் எந்தப்பரப்ரம்மத்தைத் துதித்தாரோ அந்தப்பரப்ரம்மமாகிய ஈச்வரனை மனமாரத் துதித்தார். ப்ரம்மஞானியான தண்டியினால் இவ்வாறு துதிக்கப்பெற்றவரும் உமையோடுகூடியவரும் பிரபுவும் மங்களகாருமான மகாதேவர், 'ப்ரம்மாவும் இந்திரனும் விஷ்ணுவும் விச்வேதேவர்களும் மஹரிஷிகளும் உம்மையறியார்கள்' என்றுசொன்னதனால் ஸந்தோஷமடைந்து தண்டிமுனிவரைப்பார்த்து, 'நீ குறையும் குற்றமுமில்லாதவனும் துக்கமில்லாதவனும் புகழும் பிரம்மதேஜஸும் திவ்யஜ்ஞானமுமுள்ளவனுமாவாய். அந்தணரிற்சிறந்தவனே! ரிஷிகளால் ஆபபரயிக்கத்தக்கவனும் ஸூத்ரம் செய்யத்தக்கவனுமான புத்ரன் என்னுடைய அநுக்ரகத்தினால் உனக்கு உண்டாவன். ஸந்தேகமில்லை. இன்னும் என்னவரத்தை உனக்கு இப்போது நான்கொடுப்பேன்? குழந்தாய்! நீ விரும்புவதைச்சொல்' என்றுசொன்னார் அந்தத்தண்டிமுனிவர் கைகூப்பிக்கொண்டு, 'உம்மிடத்தில உறுதியானபக்திதான் எனக்குவேண்டும்' என்றுகேட்டார். ஈச்வரர் அந்தத்தண்டிமுனிவருக்கு மேற்சொன்னவரங்களையெல்லாம் அளித்துத் தேவரிஷிகளால் நமஸ்கரிக்கப்பட்டவராகவும் தேவர்களால துதிக்கப்பட்டவராகவும் அவ்விடத்திலேயே அந்தர்த்தானமானார். யாதவச்ரேஷ்டரே! பகவானனவர் தம்பரிஜனங்களுடன் அந்தர்த்தானமானபிறகு, தண்டிமுனிவர் இங்கே என் ஆச்ரமத்திற்குவந்து எனக்கு இதைச்சொன்னார். மனிதர்களுள் சிறந்தவரே! முதலில் தண்டிமுனிவர் எனக்குச்சொன்ன பிரஸித்தமான நாமங்களைச் சொல்லுகிறேன். உமது காரியஸித்திக்காக நீர் கேளும். பிரம்மதேவர் தேவலோகத்தில் பதினாயிரம் நாமங்களைச் சொன்னார். எல்லாஜனங்களுக்குமாக ஆயிரம் நாமங்கள் சாஸ்திரங்களில் இருக்கின்றன. அச்சுதரே! தேவச்ரேஷ்டரும் மஹாத்மாவுமாகிய பகவானுடைய இந்த ரகஸ்யமான நாமங்களை அவருடைய அனுக்கிரகத்தினால் தண்டிமுனிவர் முன்னே எனக்குச்சொன்னார்' என்றனர்.

[1] யாகம்செய்பவரின்கதி, தவம்செய்பவரின்கதி, கர்மஸந்யாஸம்செய்பவரின்கதி, மோக்ஷத்தைவிரும்புகிறவரின்கதி, கைவல்யம்.

## நாற்பத்தேட்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(கிருஷ்ணன், உபமன்யு தமக்குச் சொன்ன சிவஸஹஸ்ரநாமத்தைத் தர்மபுத்திரருக்குச் சொல்லியது.)

ஐயா! யுதிஷ்டிரரே! உடனே அந்தஉபமன்யுவென்னும் ப்ரம்மரிஷி, பக்தியுடன் கைகூப்பிக்கொண்டு நாமங்களின் தொகுதியை முதலிலிருந்து சொல்லத்தொடங்கினார் 'பிரம்மாவினாலும் ரிஷிகளாலும் சொல்லப்பட்டவையும், வேதங்களிலிருந்தும் வேதாங்கங்களிலிருந்துமுண்டானவையும், மகான்களினால் ஏற்படுத்தப்பட்டவையும், உண்மையானவையும், எல்லாப்பயன்களையும் ஈடேற்றுகின்றவையென்று ப்ரஸித்தமானவையும், வேதங்களில்தேர்ந்த புத்தியுள்ள தண்டிமகரிஷியினால் பக்தியுடன் சொல்லப்பட்டவையுமான நாமங்களினால் எல்லாஉலகங்களிலும்கியாதிபெற்றவரும் துதிக்கத்தக்கவருமான ஈஸ்வரரைத் துதிக்கப்போகிறேன். யோக்கியர்களும் புகழ்பெற்றவர்களும் தத்வஞானிகளுமான ரிஷிகளாற்சொல்லப்பட்டவையும் பிரம்மலோகத்திலிருந்து மற்ற எல்லாஉலகங்களுக்குமாகக் கொண்டுவரப்பட்டவையுமான வேதத்திலுள்ள ஸத்யமான நாமங்களினால் எல்லாரிலும் சிறந்தவரும் முதல்வரும் ஸ்வர்க்கத்தைக்கொடுப்பவரும் எல்லாப்பிராணிகளுக்கும் அனுகூலரும் சுபத்தைத்தருகிறவரும் சாஸ்வதமான பரப்ரம்மமென்று பிரம்மதேவரால் சொல்லப்பட்டவருமான ஈஸ்வரரைச்சொல்லப்போகிறேன். யாதவரிற்சிறந்தவரே! நீர் ஸாவதானமாய் என்னிடம்கேளும். பக்தராகிய நீர் எல்லாவற்றிற்கும்காரணமும் ஈஸ்வரருக்கும் ஈஸ்வரருமாகிய பரமசிவனைப் பிரார்த்தித்துக்கொள்ளும். அதனால், அந்த நித்யமான பரப்ரம்மத்தை உமக்கு நான் சொல்வேன். ஒருவன் யோகியாயிருந்து அனேகநூறுவருஷங்கள் சொன்னாலும் ஈஸ்வரருடையமகிமையை முற்றும் விரித்துச்சொல்லமுடியாது. மாதவரே! எவருடைய ஆதியும் நடுவும் முடிவும் தேவர்களாலும் அறியப்படாதவையோ அவருடைய குணங்களை முற்றிலும்சொல்ல யாரால் முடியும்? ஆகிலும் ஸர்வஜ்ஞரான அந்தமஹாதேவருடைய அனுக்கிரகத்தினாலேயே அவருடையசரித்திரத்தைக் கூடியவரையில் பொருளும் சொல்லும் எழுத்தும் சுருக்கமாகச்சொல்லுகிறேன். அவருடைய அனுமதிபெற்றுக்கொள்ளாமல் ஈஸ்வரரைத்துதிக்கமுடியாது. எனக்குஅவர் அனுமதிகொடுத்தபோதுதான் நான் அவரைத் துதித்திருக்கிறேன். ஆதியும்முடிவுமில்லாதவரும் உலகத்திற்குக்காரணமும்

மூலப்பிரகிருதியைத் தமக்குக்ஷேத்திரமாகவுடையவருமான அந்த மகாத்மாவின் நாமங்களினுடைய ஒருகுறிப்பைச் சொல்லப்போகிறேன். கிருஷ்ண! வரங்கொடுப்பவரும் பிரார்த்திக்கத்தக்கவரும் உலகவடிவமாயிருப்பவரும் எல்லாமறிந்தவருமான ஈஸ்வரருடைய நாமங்களின்தொகுதியைப் ப்ரம்மதேவர்சொன்னபடி சொல்லுகிறேன்; கேளும். ப்ரம்மதேவர்சொன்னவை பதினாயிரம் நாமங்கள். அவற்றை மனத்தினாற்கடைந்து தயிரிலிருந்துவெண்ணெய்போலவும் மலையிலிருந்து பொன்போலவும் பூவிலிருந்துதேன்போலவும் வெண்ணெயிலிருந்துநெய்போலவும் இந்தஸாரம் எடுக்கப்பட்டது. எல்லாப் பாவங்களையும்போக்குவதும் நாலுவேதங்களுமடங்கியதுமாகிய இது மனவடக்கத்தோடும் முயற்சியோடும் அறியவும் மறவாமல்கொள்ளவும் தக்கது; மங்களங்களையும் தேகபுஷ்டியையும் தருவது; ராக்ஷஸர்களைப் போக்குவது; மிகப்பரிசுத்தமானது; பக்தியும் சிரத்தையும் நம்பிக்கையுமுள்ளவனுக்கே கொடுக்கத்தக்கது; சிரத்தையில்லாதவனுக்கும் நாஸ்திகனுக்கும் மனத்தையடக்காதவனுக்கும் காரணரூபியான ஈஸ்வரனைப்பகைக்கிறவனுக்கும் கொடுக்கத்தகாதது. கிருஷ்ண! அப்படிக்கொடுப்பவன் தன்முன்னோர்களோடும் பின்ஸந்ததிகளோடும் நரகத்திற்குப்போவான். இதுதான் தியானம். இதுவே யோகம். இதுவே தியானிக்கத்தக்கஉயர்ந்தபொருள். ஜபிக்கத்தக்கதும் இது. ஞானமும் இது. உயர்ந்தரஹஸ்யமும் இது. மரணகாலத்தில் இதையறிந்தாலும் உயர்கதியையடையலாம். இது பாவங்களைப்போக்குவது; மங்களங்களைத்தருவது; யாகம்போல் பரிசுத்தம்; சிறந்த நன்மை. எல்லாஉலகங்களையும் படைத்தவராகியபிரம்மதேவர் முன்னேஇதைச் செய்து தேவலோகத்தியஸ்தோத்திரங்கள் எல்லாவற்றிற்கும் ராஜாவாகஏற்படுத்தினார். மஹாத்மாவானஈஸ்வரருடையஇந்தஸ்தோத்திரம் அதுமுதலாகத்தான் ஸ்தோத்திரராஜமென்று உலகத்தில்கியாதிபெற்றுத் தேவர்களால் பூஜிக்கப்படுகிறது. இந்தஸ்தோத்திரராஜமானது ப்ரம்மலோகத்தினின்று ஸ்வர்க்கலோகத்திற்குக் கொண்டுவரப்பட்டது. முன்னே தண்டிமஹரிஷி ஸ்வர்க்கலோகத்தில் இதை அடைந்தார். இது ஸ்வர்க்கலோகத்தினின்று பூலோகத்திற்குத் தண்டியினால்கொண்டுவரப்பட்டதினால் தண்டிசெய்ததாயிற்று. சிறந்தகைகளையுடையவரே! எல்லாமங்களங்களுக்கும்மங்களமும் எல்லாப் பாவங்களையும் அழிப்பதும் ஸ்தோத்திரங்களுள் உத்தமமுமாகிய இந்தஸ்தோத்திரத்தை உமக்குச் சொல்வேன். எவர் ப்ரம்மாக்களுக்கும்பிரம்மாவும் சிறந்தவர்களுள்ளுஞ்சிறந்தவரும் தேஜஸுகளுக்குக்

[1] தேஜஸும் தவங்களுக்குந்தவமும் சாந்திகளுக்கும் சாந்தியும் ஒளிகளுக்கும் ஒளியும் ஜிதேந்திரியர்க்கும் ஜிதேந்திரியரும் ஞானிகளுக்கும் ஞானியும் தேவர்களுக்குந்தேவரும் ரிஷிகளுக்கும் ரிஷியும் யாகங்களுக்கும்யாகமும் சிவர்களுக்கும்சிவனும் ருத்ரர்களுக்கும் ருத்ரரும் சக்தர்களுக்கும் [2]சக்தரும் யோகிகளுக்கும்யோகியும் காரணங்களுக்கும்காரணமுமாக இருப்பவரோ, எவரிடத்திலிருந்து [3]உலகங்களுண்டாகின்றனவோ, மறுபடியும் எவரிடத்தில் லயிக்கின்றனவோ எல்லாப்பிராணிகளுக்கும் ஆத்மாவாகவும் அளவற்றமஹிமையுள்ளவராகவுமிருக்கின்ற அந்தப்பரமசிவனுடைய ஆயிரத்தெட்டு நாமங்களையும் என்னிடத்தில் கேளும். புருஷஸ்ரேஷ்டரே! அவற்றைக்கேட்ட பிறகு எல்லா அபீஷ்டங்களையும் பெறுவீர்.

## சிவஸஹஸ்ரநாமம்.

ஸ்திரர், ஸ்தாணு, ப்ரபு, [3]பாநு, பரவரர், வரதர், வரர், ஸர்வாத்மா, ஸர்வவிக்யாதர், ஸர்வர், ஸர்வகரர், பவர், ஜடி, சர்மி, [4]சிகண்டி, ஸர்வாங்கர், ஸர்வபாவநர், ஹரர், ஹரிணாக்ஷர், ஸர்வபூதஹரர், ப்ரபு, ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி, நியதர், சாஸ்வதர், த்ருவர், ஸ்மசாநவாஸி, பகவாந், கசரர், கோசரர், அர்தநர், அபிவாத்யர், மஹாகர்மா, தபஸ்வி, பூதபாவநர், உந்மத்தவேஷப்ரச்சந்நர், ஸர்வலோகப்ரஜாபதி, மஹாரூபர், மஹாகாயர், வ்ருஷரூபர், மஹாயசஸ், மஹாத்மா, ஸர்வபூதாத்மா, விஸ்வரூபர், மஹாஹநு, லோகபாலர், அந்தர்ஹிதாத்மா, ப்ரஸாதர், ஹயகர்த்தபி, பவித்ரர், மஹாந், நியமர், நியமாச்ரிதர், ஸர்வகர்மா, ஸ்வயம்பூதர், ஆதி, ஆதிகரர், நிதி, ஸஹஸ்ராக்ஷர், விசாலாக்ஷர், ஸோமர், நக்ஷத்ரஸாதகர், சந்த்ரர், ஸூர்யர், சநி, கேது, க்ரஹர், க்ரஹபதி, வரர், அத்ரி, அத்ர்யா நமஸ்கர்த்தா, ம்ருகபாணார்ப்பணர், அநகர், மஹாதபஸ், கோரதபஸ், அதீநர், தீநஸாதகர், ஸம்வத்ஸரகரர், மந்த்ரர், ப்ரமாணர், பரமந்தபர், யோகி, யோஜ்யர், மஹாபீஜர், மஹாரேதஸ், மஹாபலர், ஸ்வர்ணரேதஸ், ஸர்வ்ஜ்ஞர், ஸுபீஜர், பீஜவாஹனர், தசபாஹு, அநிமிஷர், நீலகண்டர், உமாபதி, விஸ்வரூபர், ஸ்வயம்ஸ்ரேஷ்டர், பலவீரர், [5]பலர், கணர், கணகர்த்தா, கணபதி, திக்வாஸஸ், காமர், மந்த்ரவித், பரமோமந்த்ரர், ஸர்வபாவ

---

[1] மகிமை. [2] 'பரபு:' என்றபாடம் கொள்ளப்பட்டது.

[3] 'பீமர்' என்பது வேறுபாடம்; 'ஸம்ஹாரம் செய்பவர்' என்பது பழையவுரை.

[4] வேறுபாடம்; 'சிகீ, கட்கீ' என்பது மூலத்தின்பாடம்.

[5] அபலர் என்றுபிரித்தால், ஸஹாயத்தை அபேக்ஷியாதவர் என்பது பொருள்.

கரர், ஹரர், [1]கமண்டலுதரர், [2]தந்வி, [3]பாணஹஸ்தர், [4]கபாலவாந், [5]அசநி, [6]சதக்நி, [7]கட்கி, [8]பட்டிசி, [9]ஆயுதி, மஹாந், [10]ஸ்ருவஹஸ்தர், ஸுரூபர், தேஜஸ், [11]தேஜஸ்கரர், நிதி, உஷ்ணீஷி, ஸுவக்த்ரர், உதக்ரர், விநதர், தீர்க்கர், ஹரிகேசர், ஸுதீர்த்தர், க்ருஷ்ணர், ஸ்ருகாலரூபர், ஸித்தார்த்தர், முண்டர், ஸர்வசுபங்கரர், அஜர், பஹுரூபர், கந்ததாரி, கபர்த்தி, ஊர்த்வரேதஸ், ஊர்த்வலிங்கர், ஊர்த்வசாயி, நபஸ்தலர், த்ரிஜடி, சீரவாஸஸ், ருத்ரர், ஸேநாபதி, விபு, அஹஸ்சரர், நக்தஞ்சரர், திக்மமந்யு, ஸுவர்ச்சஸர், கஜஹா, தைத்யஹா, காலர், லோகதாதா, குணாகரர், ஸிம்மசார்த்தூலரூபர், ஆர்த்ரசர்மாம்பராவ்ருதர், காலயோகி, மஹாநாதர், ஸர்வகாமர், சதுஷ்பதர், நிசாசரர், ப்ரேதசாரி, பூதசாரி, மஹேஸ்வரர், பஹுபூதர், பஹுதரர், ஸ்வர்ப்பாநு, அமிதர், கதி, ந்ருத்யப்ரியர், நித்யநர்த்தர், நர்த்தகர், ஸர்வலாலஸர், கோரர், மஹாதபஸ், பாசர், நித்யர், கிரிருஹர், நபர், ஸஹஸ்ரஹஸ்தர், விஜயர், வ்யவஸாயர், அதந்த்ரிதர், அதர்ஷணர், தர்ஷணாத்மா, யஜ்ஞஹா, காமநாசகர், தக்ஷயாகாபஹாரி, ஸுஸஹர், மத்யமர், தேஜோபஹாரி, பலஹா, முதிதர், அர்த்தர், அஜிதர், அவரர், கம்பீரகோஷர், கம்பீரர், கம்பீரபலவாஹநர், ந்யக்ரோதரூபர், ந்யக்ரோதர், வ்ருக்ஷகர்ணஸ்திதி, விபு, ஸுதீக்ஷ்ணதசநர், மஹாகாயர், மஹாநநர், விஷ்வக்ஸேநர், ஹரி, யஜ்ஞர், ஸமயுகாபீடவாஹநர், தீக்ஷ்ணதாபர், ஹர்யச்வர், ஸஹாயர், கர்மகாலவித், விஷ்ணுப்ரஸாதிதர், யஜ்ஞர், ஸமுத்ரர், படபாமுகர், ஹுதாசநஸஹாயர், ப்ரசாந்தாத்மா, ஹுதாசநர், உக்ரதேஜஸ், மஹாதேஜஸ், ஜந்யர், விஜயகாலவித், ஜ்யோதிஷாம் அயநர், ஸித்தி, ஸர்வவிக்ரஹர், [12]சிகி, [13]முண்டி, [14]ஜடி, ஜ்வாலி, மூர்த்திஜர், மூர்த்தகர், பலி, வேணவி, பணவி, தாளி, கலி, காலகடங்கடர், நக்ஷத்ரவிக்ரஹமதி, குணபுத்தி, லயர், [15]அகமர், ப்ரஜாபதி, விச்வபாஹு, விபாகர், ஸர்வகர், அமுகர், விமோசநர், ஸுஸரணர், ஹிரண்யகவசோத்பவர், மேட்ரஜர், பலசாரி, மஹீசாரி, ஸ்ருதர், ஸர்வதூர்யநிநாதி, ஸர்வாதோத்யபரிக்ரஹர், வ்யாலரூபர், குஹாவாஸி, குஹர், மாலி, தரங்கவித், த்ரிதசர், த்ரிகாலத்ருக், கர்மஸர்வபந்தவிமோசநர், அஸுரேந்த்ராணாம்பந்தநர்,

[1 - 10] 'முன்னா, 'தசபாஹு' எனக்கூறியதற்கு இங்கு பத்து ஆயுதங்கள் கூறப்பட்டன' என்பது பழையவுரை.

[11] 'தேஜஸ்கரோநிதி' என ஒருநாமமாகக்கொண்டு, 'பக்தர்களுக்கு ஒளியைக்கொடுக்கும் நிதிபோன்றவர்' என்பது பழையவுரை.

[12, 13, 14]. நான்கு ஆச்ரமங்களும் கூறப்பட்டது காண்க.

[15] 'கமர்' என்று பிரித்தால் எல்லாராலும் அடையப்படுகிறவர் என்பது.

யுதிசத்ருவிநாசகர், ஸாங்க்யப்ரஸாதர், தூர்வாஸர், ஸர்வஸாதுநிஷே விதர், ப்ரஸ்கந்தநர், விபாகஜ்ஞர், அதுல்யர், யஜ்ஞபாகவித், ஸர்வ வாஸர், ஸர்வசாரி, தூர்வாஸர், வாஸவர், அமரர், ஹைமர், ஹேமகாரர், அயஜ்ஞர், ஸர்வதாரி, தரோத்தமர், லோஹிதாக்ஷர், மஹாக்ஷர், விஜ யாக்ஷர், விசாரதர், ஸங்க்ரஹர், நிக்ரஹர், கர்த்தா, ஸர்ப்பசீரநிவாஸ நர், முக்யர், அமுக்யர், தேஹர், காஹலி, ஸர்வகாமதர், ஸர்வகாலப்ர ஸாதர், ஸுபலர், பலரூபத்ருத, ஸர்வகாமவரர், ஸர்வதர், ஸர்வதோ முகர், ஆகாசநிர்விரூபர், நிபாதி, அவசர், ககர், ரௌத்ரரூபர், அம்சு, ஆதித்யர், பஹுரச்மி, ஸுவர்ச்சஸி, வஸுவேகர், மஹாவேகர், மனோவேகர், நிசாசரர், ஸர்வவாஸி, ஸ்ரீயாவாஸி, உபதேசகரர், அக ரர், முனி, ஆத்மநிராலோசர், ஸம்பக்நர், ஸஹஸ்ரதர், பக்ஷி, பக்ஷ ரூபர், அதிதீப்தர், விசாம்பதி, உந்மாதர், மதநர், காமர், அச்வத்தர், அர்த்தகரர், யசஸ், வாமதேவர், வாமர், ப்ராக், தக்ஷிணர், வாமநர், ஸித்தயோகி, மஹரிஷி, ஸித்தார்த்தர், ஸித்தஸாதகர், பிக்ஷு, பிக்ஷு ரூபர், விபணர், ம்ருது, அவ்யயர், மஹாஸேநர், விசாகர், ஷஷ்டி பாகர், கவாம்பதி, வஜ்ரஹஸ்தர், விஷ்கம்பி, சமூஹஸ்தம்பநர், வ்ருத்தா வ்ருத்தகரர், தாலர், மது, மதுகலோசநர், வாசஸ்பத்யர், வாஜஸநர் நித்யம் ஆச்ரமபூஜிதர், ப்ரம்மசாரி, லோகசாரி, ஸர்வசாரி, விசாரவித், ஈசாநர், ஈச்வரர், காலர், நிசாசாரி, பிநாகவாந், நிமித்தஸ்தர், நிமித் தர், நந்தி, நந்திகரர், ஹரி, நந்தீச்வரர், நந்தி, நந்தநர், நந்திவர்த் தநர், பகஹாரி, நிஹந்தா, காலர், ப்ரம்மா, பிதாமஹர், சதுர்முகர், மஹாலிங்கர், சாருலிங்கர், லிங்காத்யக்ஷர், ஸுராத்யக்ஷர், யோகாத் யக்ஷர், யுகாவஹர், பீஜாத்யக்ஷர், பீஜகர்த்தா, அத்யாத்மாநுகதர், பலர், இதிஹாஸர், [1]கல்பர், கௌதமர், நிசாகரர், தம்பர், அதம்பர், வைதம்பர், வச்யர், வசகரர், கலி, லோககர்த்தா, பசுபதி, மஹாகர் த்தா, அநௌஷதர், [2]அக்ஷரர், பரமம்ப்ரம்ம, பலவத், சக்ரர், நீதி, அநீதி, சுத்தாத்மா, சுத்தர், மாந்யர், கதாகதர், பஹுப்ரஸாதர், ஸுஸ்வப்நர், தர்ப்பணர், அமித்ரஜித், வேதகாரர், மந்த்ரகாரர், வித் வாந், ஸமரமர்த்தநர், மஹாமேகநிவாஸி, மஹாகோரர், [3]வசீகரர், அக் நிஜ்வாலர், மஹாஜ்வாலர், அதிதூம்ரர், ஹுதர், ஹவி, வ்ருஷணர்,

---

[1] 'ஸகல்பர்' என ஒன்றுகொண்டு, 'யஜ்ஞவிதிகளைக் கல்பிக்கும் மீமாம்ஸாந் நியாயங்களோடு கூடியவர்' என்பது பழையவுரை.

[2] 'அக்ஷரம்பரமம்ப்ரம்ம' என ஒன்றாகவும் கொள்ளலாம்.

[3] 'வசீ, கரர்' என இரண்டாகக்கொண்டு, வசீ - எல்லாவற்றையும் தம் வசத்தில் வைத்திருப்பவர்; கரர் - ஸம்ஹாரஞ்செய்பவர்' என்பது பழைய உரை.

சங்கரர்; நித்யம்வர்ச்சஸ்வீ; தூமகேதநர்; நீலர்; அங்கலுப்தர்; சோப நர்; நிரவக்ரஹர்; ஸ்வஸ்திதர்; ஸ்வஸ்திபாவர்; பாகி; பாககாரர்; லகு; உத்ஸங்கர்; மஹாங்கர்; மஹாகர்ப்பபராயணர்; க்ருஷ்ணவர்ணர்; ஸுவர்ணர்; ஸர்வதேஹிநாம்இந்த்ரியர்; மஹாபாதர்; மஹாஹஸ்தர்; மஹாகாயர்; மஹாயசஸ்; மஹாமூர்த்தா; மஹாமாத்ரர்; மஹாநேத்ரர்; நிசாலயர்; மஹாந்தகர்; மஹாகர்ணர்; மஹோஷ்டர்; மஹாஹநு; மஹாநாஸர்; மஹாகம்பு; மஹாக்ரீவர்; ச்மசாநபாக்; மஹாவக்ஷஸ்; மஹோரஸ்கர்; அந்தராத்மா; ம்ருகாலயர்; லம்பநர்; லம்பிதோஷ்டர்; மஹாமாயர்; பயோநிதி; மஹாதந்தர்; மஹாதம்ஷ்ட்ரர்; மஹாஜிஹ்வர்; மஹாமுகர்; மஹாநகர்; மஹாரோமர்; [1]மஹாகேசர்; மஹாஜடர்; ப்ரஸந்நர்; ப்ரஸாதர்; ப்ரத்யயர்; கிரிஸாதநர்; ஸ்நேஹநர்; அஸ்நேஹநர்; அஜிதர்; மஹாமுநி; வ்ருக்ஷாகாரர்; வ்ருக்ஷகேது; அநலர்; வாயுவாஹநர்; கண்டலி; மேருதாமர்; தேவாதிபதி; அதர்வசீர்ஷர்; ஸாமாஸ்யர்; ரிக்ஸஹஸ்ராமிதேக்ஷணர்; யஜுப்பாதபுஜர்; குஹ்யர்; ப்ரகாசர்; ஜங்கமர்; அமோகார்த்தர்; ப்ரஸாதர்; அபிகம்யர்; ஸுதர்சநர்; உபகாரர்; ப்ரியர்; ஸர்வர்; கநகர்; காஞ்சநச்சவி; நாபி; நந்திகரர்;பாவர்; புஷ்கரஸ்தபதி; ஸ்திரர்; த்வாதசர்; த்ராஸநர்; ஆத்யர்; யஜ்ஞர்; யஜ்ஞஸமாஹிதர்; நக்தர்; கலி; காலர்; மகரர்; காலபூஜிதர்; ஸகணர்; கணகாரர்; பூதவாஹநஸாரதி; பஸ்மசயர்; பஸ்மகோப்தா; பஸ்மபூதர்; தரு; கணர்; லோகபாலர்; அலோகர்; மஹாத்மா; ஸர்வபூஜிதர்; சுக்லர்; த்ரிசுக்லர்; ஸம்பந்நர்; சுசி; பூதநிஷேவிதர்; ஆச்ரமஸ்தர்; க்ரியாவஸ்தர்; விச்வகர்மமதி; வரர்; விசாலசாகர்; தாம்ரோஷ்டர்; அம்புஜாலர்; ஸுநிச்சலர்; கபிலர்; கபிசர்; சுக்லர்; ஆயுஸ்; பரர்; அபரர்; கந்தர்வர்; அதிதி; தார்க்ஷ்யர்; ஸுவிஜ்ஞேயர்; ஸுசாரதர்; பரச்வதாயுதர்; தேவர்; அநுகாரி; ஸுபாந்தவர்; தும்பவீணர்; மஹாக்ரோதர்; ஊர்த்வரேதஸ்; ஜலேசயர்; உக்ரர்; வம்சகரர்; வம்சர்; வம்சநாதர் அநிந்திதர்; ஸர்வாங்கரூபர்; மாயாவீ; ஸுஹ்ருதர்; அநிலர்; அநலர்; பந்தநர்; பந்தகர்த்தா; ஸுபந்தநவிமோசநர்; [2] ஸயஜ்ஞாரி; [2] ஸகாமாரி; மஹாதம்ஷ்ட்ரர்; மஹாயுதர்; பஹுதாநிந்திதர்; சர்வர்; சங்கரர்; சங்கரர்; அதநர்; அமரேசர்; மஹாதேவர்; விச்வதேவர்; ஸுராரிஹா; அஹிர்புத்ந்யர்; அநிலாபர்;சேகிதாநர்; ஹவிஸ்; அஜைகபாத்;காபாலி; த்ரிசங்கு; அஜிதர்; சிவர்; தந்வந்தரி; தூமகேது; ஸ்கந்தர்; வைச்ர

[1] 'மஹாகோசா' என்பது வேறுபாடம். 'பெரிய வயிறுள்ளவர்' என்பது பழையவுரை.

[2] இங்கே 'யஜ்ஞாரி, காமாரி' எனப்பிரித்தால் முறையே, 'தக்ஷயாகத்தை யழித்தவர்' என்றும், 'காமனையெரித்தவர்' என்றும் பொருளாம்.

ரர்; தாதா; சக்ரர்; விஷ்ணு; மித்ரர்; த்வஷ்டா; த்ருவர்; தரர்; ப்ரபாவர்; ஸர்வகோவாயு; அர்யமா; ஸவிதா; ரவி; உஷங்கு; விதாதா; மாந்தாதா; பூதபாவநர்; விபு; வர்ணவிபாவி; ஸர்வகாமகுணவஹர்; பத்மநாபர்; மஹாகர்ப்பர்; சந்த்ரவக்த்ரர்; அநிலர்; அநலர்; பலவாந்; உபசாந்தர்; புராணர்; புண்யசஞ்சு; ஈ; குருகர்த்தா; குருவாஸி; குருபூதர்; குணௌஷதர்; ஸர்வாசயர்; தர்ப்பசாரி; ஸர்வேஷாம்ப்ராணிநாம்பதி; தேவதேவர்; ஸுகாஸக்தர்; ஸத்; அஸத்; ஸர்வரத்நவித்; கைலாஸகிரிவாஸி; ஹிமவத்கிரிஸம்ச்ரயர்; கூலஹாரி; கூலகர்த்தா; பஹுவித்யர்; பஹுப்ரதர்; வணிஜர்; வர்த்தகி; வ்ருக்ஷர்; வகுளம்; சந்தநம்; சதம்; ஸாரக்ரீவர்; மஹாஜத்ரு; அலோலர்; மஹௌஷதர்; ஸித்தார்த்தகாரி; [1] ஸித்தார்த்தர்; [1] சந்தோவ்யாகரணோத்தரர்; ஸிம்மநாதர்; ஸிம்மதம்ஷ்ட்ரர்; ஸிம்மகர்; ஸிம்மவாஹநர்; ப்ரபாவாத்மா; ஜகத்காலஸ்தாலர்; லோகஹிதர்; தரு; ஸாரங்கர்; நவசக்ராங்கர்; கேதுமாலி; ஸபாவநர்; பூதாலயர்; பூதபதி; அஹோராத்ரர்; அநிந்திதர்; ஸர்வபூதாநாம்வாஹிதா; நிலயர்; விபு; பவர்; அமோகர்; ஸம்யதர்; அச்வர்; போஜநர்; ப்ராணதாரணர்; த்ருதிமாந்; மதிமாந்; தக்ஷர்; ஸத்க்ருதர்; யுகாதிபர்; கோபாலி; கோபதி; க்ராமர்; கோசர்மவஸநர்; ஹரி; ஹிரண்யபாஹு; ப்ரவேசிநாம்குஹாபாலர்; ப்ரக்ருஷ்டாரி; மஹாஹர்ஷர்; ஜிதகாமர்; ஜிதேந்த்ரியர்; காந்தாரர்; ஸுவாஸர்; தபஸ்ஸக்தர்; ரதி; நரர்; மஹாகீதர்; மஹாந்ருத்யர்; அப்ஸரோகணஸேவிதர்; மஹாகேது; மஹாதாது; நைகஸாநுசரர்; சலர்; ஆவேதநீயர்; ஆதேசர்; [2] ஸர்வகந்தஸ்ஸுகாவஹர்; தோரணர்; தாரணர்; வாதர்; [3]பரிதீபதி; [4]கேசரர்; [5]ஸம்யோகர்; [6]வர்த்தநர்; வ்ருத்தர்; அதிவ்ருத்தர்; குணாதிகர்; நித்யாத்மஸஹாயர்; தேவாஸுரபதி; பதி; யுக்தர்; யுக்தபாஹு; திவிஸுபர்வணோதேவர்; ஆஷாடர்; ஸுஷாடர்; த்ருவர்; ஹரிணர்; ஹரர்; ஆவர்த்தமாநேப்யோவபு; வஸுச்ரேஷ்டர்; மஹாபதர்; சிரோஹாரி; விமர்சர்; ஸர்வலக்ஷணலக்ஷிதர்; ரதயோகிஅக்ஷர்; ஸர்வயோகி; மஹாபலர்; ஸமாம்நாயர்; அஸமாம்நாயர்;

---

[1] இவற்றை ஒருநாமமாகக்கொண்டு, 'சந்தஸுகளாலும் வ்யாகரணங்களாலும் விளக்கப்பட்டுப் பூர்வபக்ஷங்களைத்தள்ளி நிச்சயிக்கப்பட்டபொருளாயிருப்பவர்' என்பது பழையவுரை.

[2] 'ஸர்வகந்தர், ஸுகாவஹர்' எனப்பிரித்தால், 'எல்லாக்கந்தங்களும் பொருந்தினவர்; அடுத்தவர்களுக்கு ஸுகத்தைச்செய்பவர்' என்பதுபொருள்.

[3], [4]. இங்கு, 'பரிதி - அழகாயிருப்பவர்; பதிகேசரர் - ராஜாவானபக்ஷி, கருடர்' எனப்பிரித்துக்கூறுவது பழையவுரை.

[5], [6]. 'வர்த்தநஸ்ஸம்யோகம்' என ஒன்றாகக்கொண்டு, "'வ்ருத்திசெய்கிற ஸம்யோகம்; அதாவது, ஆண்பெண்சேர்க்கை' என்பது பழையவுரை.

தீர்த்ததேவர்; மஹாரதர்; நிர்ஜீவர்; ஜீவநர்; மந்த்ரர்; சுபாக்ஷர்; பஹுகர்க்கசர்; ரத்னப்ரபூதர்; ரத்நாங்கர்; மஹார்ணவநிபாநவித்; மூலர்; விசாலர்; அம்ருதர்; வ்யக்தாவ்யக்தர்; தபோநிதி; ஆரோஹணர்; அதிரோஹர்; சீலதாரி; மஹாயசஸ்; ஸேநாகல்பர்; மஹாகல்பர்; யோகர்; யுகசரர்; ஹரி; யுகரூபர்; மஹாரூபர்; மஹாநாகஹநர்; [1]வதர்; ந்யாயநிர்வபணர்; பாதர்; பண்டிதர்; அசலோபமர்; பஹுமாலர்; மஹாமாலர்; [2]சசிஹரஸுலோசநர்; [3]விஸ்தாரர்; [4]லவணர்; [5]கூபர்; த்ரியுகர்; ஸபலோதயர்; த்ரிலோசநர்; விஷண்ணாங்கர்; மணிவித்தர்; ஜடாதரர்; பிந்து; விஸர்க்கர்; ஸுமுகர்; சரர்; ஸர்வாயுதர்; ஸஹர்; நிவேதநர்; ஸுகஜாதர்; ஸுகந்தாரர்; மஹாதநு; கந்தபாலீபகவாந்; ஸர்வகர்மணாமுத்தாநர்; மந்தாநோபஹுலோவாயு; ஸகலர்; ஸர்வலோசநர்; [6]தலஸ்தாலர்; கரஸ்தாலி; ஊர்த்வஸம்ஹநநர்; மஹாந்; சத்ரர்; ஸுச்சத்ரர்; விக்யாதோலோகர்; ஸர்வாச்ரயக்ரமர்; முண்டர்; விரூபர்; விக்ருதர்; [7]தண்டி; [8]குண்டி; விகுர்வணர்; ஹர்யக்ஷர்; ககுபர்; வஜ்ரி; சதஜிஹ்வர்; ஸஹஸ்ரபாத்; ஸஹஸ்ரமூர்த்தா; தேவேந்த்ரர்; ஸர்வதேவமயர்; குரு; ஸஹஸ்ரபாஹு; ஸர்வாங்கர்; சரண்யர்; ஸர்வலோகக்ருத்; பவித்ரர்; த்ரிககுந்மந்த்ரர்; கநிஷ்டர்; க்ருஷ்ணபிங்களர்; ப்ரம்மதண்டவிநிர்மாதா; சதக்நீபாசசக்திமாந்; பத்மகர்ப்பர்; மஹாகர்ப்பர்; ப்ரம்மகர்ப்பர்; ஜலோத்பவர்; கபஸ்தி: ப்ரம்மக்ருத்; ப்ரம்மி; ப்ரம்மவித்; ப்ராம்மணர்; கதி; அநந்தரூபர்; நைகாத்மா; திக்மதேஜாஸ்வயம்புவர்; ஊர்த்வகாத்மா; பசுபதி; வாதரம்ஹஸ்; மநோஜவர்; சந்தநி; பத்மநாளாக்ரர்; ஸுரப்யுத்தரணர்; நரர்; கர்நிகாரமஹாஸ்ரக்வி; நீலமௌலி; பிநாகத்ருத்; உமாபதி; உமாகாந்தர்; ஜாஹ்நவீத்ருக்; உமாதவர்; வரோவராஹர்; வரதர்; வரேண்யர்; ஸுமஹாஸ்வநர்; மஹாப்ரஸாதர்; தமநர்; சத்ருஹா; ச்வேதபிங்களர்; பீதாத்மா; பரமாத்மா; ப்ரயதாத்மா; ப்ரதாநத்ருத்; ஸர்வபார்ச்வமுகர்; த்ர்யக்ஷர்; தர்மஸாதாரணவரர்; சராசராத்மா; ஸூக்ஷ்மாத்மா; அம்ருதோகோவ்ருஷேச்வரர்;

---

[1] 'அவதர்' என்றுபிரித்தால், 'தமக்குவதமில்லாதவர்' என்பது பொருள்.

[2] இரண்டாகப்பிரித்தால், 'சசி - சந்த்ரனுயிருப்பவர். ஹரஸுலோசநர் - பாவங்களைப்போக்கும் அழகியகண்களையுடையவர்' என்பதுபொருள்.

[3], [4], [5] இவற்றையொன்றாகக்கொண்டு, 'பெரியஉப்புக்கிணறு; அதாவது, கடலாயிருப்பவர்' என்பது பழையஉரை.

[6] தலர் - எல்லாவற்றிற்கும் ஆதாரமாயிருப்பவர்; தாலர் - எல்லாவற்றிலும் தாமிருப்பவர் என்று பிரிக்கவுமாம்.

[7], [8] பிரம்மசாரியாயிருப்பவர்என்பது.

ஸாத்யரிஷி; ஆதித்யவஸு; [1]விவஸ்வாந்; [2]ஸவிதா; [3]அம்ருதர்; வ்யாஸர்; ஸம்க்ஷேபோவிஸ்தாரஸ்ஸர்க்கர்; பர்யயோநரர்; ருது; ஸம்வத்ஸரம்; மாஸம்; பக்ஷம்; ஸங்க்யாஸமாபநர்; கலை; காஷ்டை; லவம்; மாத்ரை; [4]முஹூர்த்தம்; [5]அஹஸ்; [6]க்ஷபா; க்ஷணம்; விச்வக்ஷேத்ரம்; ப்ரஜாபீஜம்; லிங்கம்; ஆத்யநிர்க்கமம்; ஸத்; அஸத்; வ்யக்தம்; அவ்யக்தம்; பிதா; மாதா; பிதாமஹர்; ஸ்வர்க்கத்வாரம்; ப்ரஜாத்வாரம், மோக்ஷத்வாரம்; த்ரிவிஷ்டபம்; நிர்வாணம்; ஹ்லாதநர்; ப்ரம்மலோகர்; பரகதி; தேவாஸுரவிநிர்மாதா; தேவாஸுரபராயணர்; தேவாஸுரகுரு, தேவர்; தேவாஸுரநமஸ்க்ருதர், தேவாஸுரமஹாமாத்ரர்; தேவாஸுரகணாச்ரயர்; தேவாஸுரகணாத்யக்ஷர்; தேவாஸுரகணாக்ரணி; தேவாதிதேவர்; தேவரிஷி; தேவாஸுரவரப்ரதர்; தேவாஸுரேச்வரர்; விச்வர்; தேவாஸுரமஹேச்வரர்; ஸர்வதேவமயர்; அசிந்த்யர்; தேவதாத்மா; ஆத்மஸம்பவர்; உத்பித்; த்ரிவிக்ரமர்; வைத்யர்; விரஜர்; நீரஜர்; அமரர்; ஈட்யர்; ஹஸ்தீச்வரர்; வ்யாக்ரர்; தேவஸிம்மர்; நரர்ஷபர்; விபுதர்; அக்ரவரர்; ஸூக்ஷ்மர்; ஸர்வதேவர்; தபோமயர்; ஸுயுக்தர்; சோபநர்; வஜ்ரி; ப்ராஸாநாம்ப்ரபவர்; அவ்யயர்; குஹர்; காந்தர்; நிஜஸர்க்கர்; பவித்ரர்; ஸர்வபாவநர்; ப்ருங்கி; ப்ருங்கப்ரியர்; பப்ரு; ராஜராஜர்; நிராமயர்; அபிராமர்; ஸுரகணர்; விராமர்; ஸர்வஸாதநர்; லலாடாக்ஷர்; விச்வதேவர்; ஹரிணர்; ப்ரம்மவர்ச்சஸர்; ஸ்தாவராணாம்பதி; நியமேந்த்ரியவர்த்தநர்; ஸித்தார்த்தர்; ஸித்தபூதார்த்தர்; அசிந்த்யர்; ஸத்யவ்ரதர்; சுசி; வ்ரதாதிபர்; [7]பரம்ப்ரம்ம; பக்தாநாம்பரமாகதி; விமுக்தர்; முக்ததேஜஸ்; ஸ்ரீமாந்; ஸ்ரீவர்த்தநர்; [8]ஜகத்.

## சிவஸஹஸ்ரநாம அகராதியும் பொருளும்.

அக்நிஜ்வாலர் - அக்நியைப்போல் ஜ்வாலையுள்ளவர்.

அக்ரவரர் - யாகத்தில் முதல்பாகம்வாங்குகிறவர்.

அகமர் - சலியாதவர்; 167 - ம் பக்கம்பார்க்க.

அகரர் - ஒன்றும்செய்யாதவர்.

---

[1], [2], [3] இவற்றையொன்றாகக்கொண்டு, 'பூமியைமூடும் கிரணங்களுள்ளவரும் உலகங்களைப்படைப்பவரும் அழிவற்றவருமாயிருப்பவர்' என்பது பழையவுரை.

[4], [5], [6] இவற்றையொன்றாகக்கொள்வது பழையவுரை.

[7] 'பரம்=விச்வ தைஜஸ ப்ராஜ்ஞர்களுக்குமேல் நான்காவது சிவனாயிருப்பவர்; ப்ரம்ம=தேசகாலவஸ்துக்களால் அளவிடக்கூடாத அகண்டரூபமான வஸ்து' என இரண்டாகப்பிரித்துக்கூறுவது பழையவுரை.

[8] 'ஸ்திரர்' என்றுதொடங்கி 'ஜகத்' என்றுமுடித்ததால், 'வ்யாபகரான பரமாத்மாவிடத்தில் உலகம்பொய்த்தோற்றம் என்றுசொல்லப்பட்டதாகிறது' என்பது பழையவுரை.

அங்கலுப்தர் - தம்அவயவமாகியலிங்கத்தில் ஸாந்நித்யமாயிருப்பவர்.

அச்வத்தர் - அச்வத்தவ்ருக்ஷரூபியாயிருப்பவர்; 'ஸம்ஸாரவ்ருக்ஷமாயிருப்பவர்' என்பது பழையவுரை.

அச்வர் - வியாபிப்பவர்; 'உச்சைசிரவமுதலிய குதிரைகளாயிருப்பவர்' என்பது பழையஉரை.

அசநி - வஜ்ராயுதத்தைத்தரிப்பவர்.

அசலோபமர் - மலைபோன்றவர்; தம்ஞானத்தை வெளிப்படுத்தாதவர் என்பது. 'தத்வஜ்ஞானி' என்பது பழையவுரை.

அசிந்த்யர் - தாம் சிந்திக்கவேண்டியதொன்றுமில்லாதவர். குறைவில்லாதவர் என்பது.

அசிந்த்யர் - உபாஸனைக்குமெட்டாதவர்.

அத்யாத்மாநுகதர் - ஆத்மாவை அநுஸரித்திருப்பவர்.

அத்ரி - சந்திரனுக்குப் பிதாவானரிஷி; முக்குணங்களுமற்றவர். 'புதன்' என்பது பழையஉரை.

அத்ரியாநமஸ்கர்த்தா - அத்ரிபத்நியாகிய அநஸூயையைக் குத் தூர்வாஸஸ்என்னும்புத்ரனாகப்பிறந்து அவளைநமஸ்கரித்தவர்.

அதந்த்ரிதர் - சோம்பலில்லாதவர். (அதாவது ஓய்வில்லாதவர்.)

அதநர் - தனமில்லாதவர்.

அதம்பர் - தம்மையடக்குகிறவரில்லாதவர்.

அதர்வசீர்ஷர் - அதர்வவேதத்தைத் தலையாகஉடையவர்.

அதர்ஷணர் - அசைக்கமுடியாதவர்.

அதிதி - தேவமாதா ; பூமியென்னவுமாம்.

அதிதீப்தர் - மிகப்ரகாசமாயிருப்பவர்.

அதிதூம்ரர் - மிக்கபுகையுடையவர்.

அதிரோஹர் - மேல்பதத்திலிருப்பவர்.

அதிவ்ருத்தர் - பெரியவற்றிற்கும்பெரியவர்.

அதீநர் - உதாரமனமுள்ளவர்.

அதுல்யர் - ஒப்பற்றவர்.

அந்தர்ஹிதாத்மா - வெளிப்படாதஸ்வபாவமுள்ளவர்.

அந்தராத்மா - அந்தர்யாமியாயிருப்பவர்.

அநகர் - தக்ஷயாகத்தைஅழித்தும் பாபமண்டாதவர்.

அநந்தரூபர் - அளவில்லாதஸ்வரூபமுடையவர்.

அநலர் - திருப்தியில்லாதவர்.

அநலர் - அக்நியாயிருப்பவர்.

அநலர் - அக்நிபோலப் பாபங்களையெரிப்பவர்,

அநிந்திதர் - இகழப்படாதவர்.
அநிந்திதர் - குற்றமற்றவர்.
அநிமிஷர் - இமைகொட்டாதவர்.
அநிலர் - காற்றுயிருப்பவர்.
அநிலர் - உயிரைத்தருகிறவர்.
அநிலாபர் - காற்றைப்போலிருப்பவர்; கண்ணுக்குப் புலப்படாதவரென்பது.
அநீதி - பிறரால்நடத்தப்படாதவர்.
அநுகாரி - பக்தர்மனத்தை அநுசரித்துச்செய்கிறவர். 'பீஷ்மரைக் கொல்ல ஆயுதப்ரயோகத்தைஅபிநயித்த க்ருஷ்ணனுயிருப்பவர்' என்பது பழையவுரை.
அநௌஷதர்-தடுக்கமுடியாதவர்; 'அன்னத்தைப்புஜியாதவர்' என்பது பழையவுரை.
அப்ஸரோகணஸேவிதர் - அப்ஸரஸுகளின் கூட்டங்களினலடிக்கப் பட்டவர்.
அபரர் - பிந்தினவர்.
அபிகம்யர் - அடையத்தக்கவர்.
அபிராமர் - மனத்துக்கினியவர்.
அபிவாத்யர் - யாவராலும் நமஸ்கரிக்கவும் துதிக்கவும்பெற்றவர்.
அம்சு - கிரணமாயிருப்பவர்; 'அம்சுவென்னும்தேவதையாயிருப்பவர்' என்பது பழையவுரை
அம்புஜாலர் - ஜலச்சேர்க்கையானகடலாயிருப்பவர்.
அம்ருதகோவ்ருஷேச்வரர் - பூமியிலுள்ளதர்மத்திற்கு அழிவில்லாத ஈச்வரர். 'பயனைவிரும்பாமற்செய்யும் அழிவில்லாததர்மத்திற்கு ஈச்வரர்' என்பது பழையவுரை.
அம்ருதர் - அமுதுபோன்றவர்.
அம்ருதர் - நித்யர்; சந்த்ரரூபிஎன்னவுமாம்; 172-ம் பக்கம்பார்க்க.
அமரர் - மரணமில்லாதவர்.
அமரர் - அழிவில்லாதவர்.
அமரேசர் - தேவர்களுக்குமீச்வரர்.
அமித்ரஜித் - சத்ருக்களைஜயிப்பவர்.
அமிதர் - அளவில்லாதவர்.
அமுக்யர் - கடைசியாயிருப்பவர்; தமக்குமுதன்மையானவரில்லாதவரென்னவுமாம்.
அமுகர் - முகமில்லாதவர்; பர்ந்தஅறிவாயிருப்பவரென்பது.

அமோகர்-வீணுகாதவர்; அவரை ஆஸ்ரயிப்பதுவீண்போகாதென்பது.
அமோகார்த்தர் - பிரார்த்தனைவீண்போகாதவர்.
அயஜ்ஞர் - யஜ்ஞமுதலியகர்மங்களற்றவர்.
அர்த்தகரர் - வேண்டினதைக்கொடுப்பவர்.
அர்த்தநர் - துஷ்டர்களைப்பீடிப்பவர்.
அர்த்தர் - பிரார்த்திக்கப்படுகிறவர்.
அர்யமா - சூரியனுடையபெயர்.
அலோகர் - உலகத்தைக்கடந்தவர்.
அலோலர் - ஆசையற்றவர்.
அவ்யக்தம் - புலப்படாதவர். 'நான் அறியேன்என்னும் அநுபவமொன்றினல் தோற்றும் அஜ்ஞானம்' என்பது பழையஉரை.
அவ்யயர் - மாருதவர்.
அவ்யயர்-பலவகைகளால் அடையக்கூடாதவர்; ஏகபக்தியினல் அடையப்படுகிறவர் என்பது.
அவசர் - யாருக்கும்உட்படாதவர்.
அவரர் - தமக்குமேற்பட்டவரில்லாதவர்.
அஜர் - ஜனனமில்லாதவர்.
அஜிதர் - யாவராலும்ஜயிக்கப்படாதவர்.
அஜிதர் - ஜயிக்கப்படாதவர்.
அஜிதர் - முக்குணங்களினலும் வெல்லமுடியாதவர்.
அஜைகபாத் - ஏகாதசருத்ரரில்ஒருவர்.
அஸ்நேஹநர் - பற்றற்றவர்.
அஸத் - கார்யமாயிருப்பவர். 'காரணமாயிருப்பவர்' என்பது பழையவுரை.
அஸத் - கார்யம். 'காரணம்' என்பது பழையஉரை.
அஸமாம்நாயர் - சாஸ்திரமுதலியவையாயிருப்பவர்; வேதத்திற்கு மெட்டாதவரென்னவுமாம்.
அஸுரேந்த்ராணாம்பந்தநர் - அஸுரஸ்ரேஷ்டர்களைக் கட்டினவர்; 'வாமனரூபமாகிப் பலிசக்ரவர்த்தியைக்கட்டினவர்' என்பது பழையவுரை.
அஹஸ் - பகலாயிருப்பவர்; 172 - ம பக்கம்பார்க்க.
அஹஸ்சரர் - பகலில்சஞ்சரிக்கும்தேவதையாயிருப்பவர்.
அஹிர்புத்ந்யர் - ஒருதேவதை; 'பிரம்மாண்டத்தின் அடியிலிருக்கும் சேஷனுயிருப்பவர்' என்பது பழையவுரை.
அஹோராத்ரர் - இரவுபகல்களாயிருப்பவர்.

அக்ஷரர் - அழிவில்லாதவர்; 168 - ம் பக்கம்பார்க்க.

ஆகாசநிர்விரூபர் - ஆகாசம்போன்ற தம்மிடத்தினின்றும் அநேக ரூபங்களைஉண்டாக்குகிறவர்; அல்லது, ஆகாசம்போல விசேஷ ரூபமில்லாதவர்.

ஆச்ரமஸ்தர் - நான்குஆச்ரமங்களிலுமிருப்பவர்.

ஆத்மநிராலோகர் - தம்ஸ்வரூபத்தில்பிறர்பார்வைவாராதவர்; 'ஜீவனிடத்தில் நிச்சயமாகத்தம்மைப்பார்ப்பவர்' என்பது பழையவுரை.

ஆத்மஸம்பவர் - தாமேஉண்டானவர்.

ஆத்யநிர்க்கமர் - உலகத்தின் முதல்முளையாயிருப்பவர். 'அஹம்என்னும் முதல்நினைவு' என்பது பழையவுரை.

ஆத்யர் - முதல்வர்.

ஆதி - முதல்வர்.

ஆதிகரர் - முதல்வரானபிரம்மதேவரையும் படைத்தவர்.

ஆதித்யர் - பகன்என்னும்தேவதை; ஸூர்யன்என்னவும் ஆதியில் இருப்பவர் என்னவுமாம்.

ஆதித்யவஸு - அதிதிபுத்ரராகிய வஸுஎன்பவராயிருப்பவர்; ப்ரகாசிக்குமசூரியனாயிருப்பவர் என்னவுமாம்.

ஆதேசர் - உபதேசமாயிருப்பவர்.

ஆயுதி - எல்லாஆயுதங்களையும்தரிப்பவர்; நன்றாகயுத்தம்செய்பவர். 'தமக்கேயுரிய சூலாயுதத்தைததரித்தவர்' என்பது பழையவுரை.

ஆயுஸ் - ஆயுளாயிருப்பவர்.

ஆர்த்ரசர்மாம்பராவ்ருதர் - ரக்தத்தினால்நனைந்த யானைத்தோலைஆடையாகவுடையவர்.

ஆரோஹணர் - பக்தர்களை ஏறச்செய்பவர்.

ஆவர்த்தமானேப்யோவபு - ஸம்ஸாரத்தில் பலமுறைதிரும்புவோர்க்குச் சரீரத்தையளிப்பவர்.

ஆவேதநீயர் - குருவினால்உபதேசிக்கப்படத்தக்கவர்.

ஆஷாடர் - எல்லாவற்றையும் பொறுக்கும்சக்தியுள்ளவர்.

இதிஹாஸர் - பாரதமுதலியஇதிஹாஸமாயிருப்பவர்.

ஈ - லக்ஷ்மியாயிருப்பவர்.

ஈச்வரர் - வ்யாபிப்பவர்.

ஈசானர் - எல்லாவற்றையும் நடத்துகிறவர்.

ஈட்யர் - துதிக்கத்தக்கவர்.

உக்ரதேஜஸ் - உக்ரமான தேஜஸையுடையவர்.

உக்ரர் - எல்லாவற்றையும் விழுங்குகிறவர்.

உத்பித் – அவித்தையைப்பிளந்துகொண்டு ஆவிர்ப்பவிப்பவர்.

உத்ஸங்கர் - பற்றற்றவர்.

உதக்ரர் - உறுதியான ரூபமுள்ளவர்.

உந்மத்தவேஷப்ரச்சந்நர் - பித்தன்வேஷத்தினுல் தம்மைமறைத்திருப்பவர்.

உந்மாதர் மோஹிக்கச்செய்கிறவர்

உபகாரர் - உபகாரம் செய்பவர்.

உபசாந்தா - தம் ஸாமாத்தியத்தை வெளிக்குக்காட்டாதவர்.

உபதேசகரர் - உபதேசம் செய்பவர்.

உமாகாந்தர் - உமாதேவியினுல் விரும்பப்பட்டவர்.

உமாதவர் - உமையின் கணவர்.

உமாபதி - பார்வதிக்குக் கணவர்.

உமாபதி-பார்வதிக்குநாதர் பிரம்மவித்தைக்கு அதிபதி என்னவுமாம்.

உஷ்ணீஷி - கிரீடமுள்ளவர்.

உஷங்கு - தஹிக்கும் கிரணங்களையுடையவர்.

ஊர்த்வகாத்மா - ப்ரகிருதிமண்டலத்துக்கு மேற்போனஸ்வரூபத்தையுடையவர்.

ஊர்த்வசாயி - அண்ணாந்து படுத்திருப்பவர்.

ஊர்த்வரேதஸ் - மேல்நோக்கிய ரேதஸையுடையவர்; ஜிதேந்த்ரியர்.

ஊர்த்வரேதஸ் - எல்லாருக்கும் மேற்பட்ட பிரம்மாதிகளைச் சிருஷ்டி செய்கிறவர்.

ஊர்த்வலிங்கர் - மேல்நோக்கிய குறியையுடையவர்.

ஊர்த்வஸம்ஹநநர்-மிக்க வலிமையுள்ளவர்; உயரமானதேகமுள்ளவர்.

க்ரஹபதி - எல்லாக்ரஹங்களுக்குந் தலைவர்; 'அங்காரகன்' என்பது பழையவுரை.

க்ரஹர்-எல்லாவற்றையும் கிரஹிப்பவர்; 'ராகு' என்பது பழையவுரை.

க்ராமர் - ஜனச்சேர்க்கையாயிருப்பவர்.

க்ரியாவஸ்தர் - யாகமுதலிய க்ரியைகளில் இருப்பவர்.

க்ருஷ்ணபிங்களர் - கரியநிறமும் சிவப்பு நிறமுமுள்ளவர்; 'ஹரிஹரரூபி' என்பது பழையவுரை.

க்ருஷ்ணர் - ஸதானந்தமாயிருப்பவர்; 'க்ருஷ்ணனாக அவதரித்தவர்' என்பது பழையவுரை.

க்ருஷ்ணவர்ணர் - கறுத்த வர்ணமுடையவர். விஷ்ணுரூபி என்பது.

கசர் - ஹ்ருதயாகாசத்திலிருப்பவர்.

கருபர் - திசைகளாயிருப்பவர்.

கசரர் - ஹ்ருதயத்துள்ளிருக்கும் வெளியாகிய தகராகாசத்தில் வஸிப்பவர்.

கட்கி - கத்தியைத்தரிப்பவர்.

கண்டலி - மேடுகளிலிருப்பவர்.

கணகர்த்தா - ப்ரமதகணங்களையுண்டுபண்ணுகிறவர்.

கணகாரர் - பாணன்முதலியபக்தர்களைத் தம் கணங்களாகச்செய்பவர்

கணபதி - ப்ரமதகணங்களுக்கு ஈசுவரர்.

கணர் - யாவராலும் எண்ணப்படுகிறவர் ; தத்வத்தொகுதியானவர்.

கணர் - ப்ரமதகணமாயிருப்பவர்.

கதாகதர் - போய்வந்துகொண்டிருப்பவர் ; அந்தர்த்தானமும் ப்ரத்யக்ஷமுமாவரென்பது ; 'ஸம்ஸாரரூபி' என்பது பழையவுரை.

கதி - யாவராலும் அடையப்படுகிறவர் ; 'முக்தர்களால் அடையப்படுபவர்' என்பது பழையவுரை.

கதி - யாவருக்கும் சாதகமாயிருப்பவர்.

கந்ததாரி - வாஸனையைத் தரிப்பவர்.

கந்தபாலீபகவாந் - ப்ரளயகாலத்தில் கர்மவாஸனைகளைக் காப்பாற்றும் ஈசுவரர்.

கந்தர்வர் - சித்ரரதன்முதலிய கந்தர்வராயிருப்பவர்.

கநகர் - பொன்னுயிருப்பவர்.

கநிஷ்டர் - மிகச்சிறியவர் ; ஸூக்ஷ்மரூபியென்பது ; 'அதிதியின் புத்ரர்களில் கநிஷ்டரான வாமனர்' என்பது பழையவுரை.

கபர்த்தி - சடைமுடியையுடையவர்

கபஸ்தி - ஸூரியனுக்குக் கிரணமாயிருப்பவர்.

கபாலவாந் - பிரம்மகபாலத்தையேந்துபவர்.

கபிசர் - பொன்னிறமாயிருப்பவர்.

கபிலர் - கபிலவர்ணமாயிருப்பவர் ; செம்மட்டைவர்ணமாயிருப்பவர்.

கம்பீரகோஷர் - பெரியவாத்யமுழக்கங்களுள்ளவர்.

கம்பீரபலவாஹநர் - அயலாரால் அசைக்கக்கூடாதவன்மையுள்ள வ்ருஷபவாகனமுள்ளவர்.

கம்பீரர் - அறிவுக்கெட்டாதவர்.

கமண்டலுதரர் - கமண்டலு என்னும் பாத்ரத்தைத்தரிப்பவர்.

கர்ணிகாரமஹாஸ்ரக்வீ - சிறந்தகொன்றைப்பூமாலையையணிந்தவர்.

கர்த்தா - எல்லாவற்றையுமுண்டாக்கினவர்.

கர்மகாலவித் - கர்மங்களின்காலங்களையறிந்திருப்பவர்.

கர்மஸர்வபந்தவிமோசநர் - கர்மங்களாலுண்டான பந்தங்களெல்லாவற்றையும் விடுவிப்பவர்.

கரஸ்தாலீ - கையையேபாத்ரமாகவுடையவர்.

கல்பர் - கல்பஸூத்ரமாயிருப்பவர்; 168 - ஆம் பக்கம் பார்க்க.

கலி - நெற்களத்துக்குப் பதி; க்ஷேத்ராதிபதி.

கலி - யுத்தரூபியாயிருப்பவர்.

கலி - கலியாயிருப்பவர்; 'மஹாமோஹத்தின்கார்யமான காமக்ரோத முதலியவையாயிருப்பவர்' என்பது பழையவுரை.

கலை - கலையென்னும் காலத்தின் சிறியபிரிவாயிருப்பவர்.

கவாம்பதி - இந்த்ரியங்களை நடத்துகிறவர்.

கஜஹா - யானையாகவந்த அஸுரனைக்கொன்றவர்.

காஞ்சநச்சவி - பொன்னிறமுள்ளவர்.

காந்தர் - ஆனந்தத்தின் எல்லையாயிருப்பவர்.

காந்தாரர் - பூமியைத்தரிப்பவர்; 'காந்தாரமென்னும் ஸ்வரமாயிருப்பவர்' என்பது பழையவுரை.

காபாலீ - கபாலமுள்ளவர்; 'பிரம்மாண்டத்திற்கு அதிபதி' என்பது பழையவுரை.

காமநாசகர் - மன்மதனையழித்தவர்.

காமர் - எல்லாராலும் விரும்பப்படுகிறவர்; மன்மதனைப்போல அழகுள்ளவர்.

காமர் - விரும்பப்படும் சப்தாதிவிஷயமாயிருப்பவர்.

காலகடங்கடர் - யமனுடையஆவரணமாகிய மாயையைமூடுகிறவர்.

காலபூஜிதர் - யமனால் பூஜிக்கப்பெற்றவர்.

காலயோகி - காலத்தைச்சேர்ப்பிப்பவர்.

காலர் - காலமாயிருப்பவர்; யமன், அல்லது எல்லாவற்றையும் நடத்துகிறவர்.

காலர் - புண்யபாபங்களின் பலனைச்செய்பவர்; 'பலனைக் கொடுப்பதற்காக எல்லாப்ராணிகளின் புண்யபாவங்களையும் அறியும் சித்ரகுப்தனாயிருப்பவர்' என்பது பழையவுரை.

காலர் - கலைஜ்ஞானங்களுக்கு இருப்பிடமானவர்.

காலர் - காலமாயிருப்பவர்; 'பிறப்புஇறப்புக்களின் பெருக்காயிருப்பவர்' என்பது பழையவுரை.

காஷ்டை-காஷ்டையென்னும்காலத்தின் ஒருசிறியபிரிவாயிருப்பவர்.

காஹலீ - காஹலவாத்யமுள்ளவர்.

கிரிருஹர் - கைலாசத்தின்மேலிருப்பவர்.

கிரிஸாதநர் - மேருமலையை வில்லென்னும்கருவியாகவுடையவர்.

குண்டி - கமண்டலுவுள்ளவர் ; 171 - ஆம் பக்கம் பார்க்க.

குணபுத்தி - குணங்களையறிகிறவர்.

குணாகரர் - குணங்களுக்கெல்லாம்இருப்பிடமானவர்.

குணாதிகர் - குணங்கள் மிகுதியாக உள்ளவர்.

குணௌஷதர் - குணங்களை விருத்திசெய்கிறவர்.

குரு - ஆசாரியர்.

குருகர்த்தா - குருக்ஷேத்ரமென்று சொல்லப்பட்ட கர்மஸ்தானத்தையும் உபாஸநஸ்தானத்தையும் செய்தவர்.

குருபூதர் - கர்மஸ்தானம் உபாஸநஸ்தானம் இரண்டுமாயிருப்பவர்.

குருவாஸி - கர்மஸ்தானம் உபாஸநஸ்தானம் இரண்டிலும் வஸிப்பவர்.

குஹ்யர் - மறைந்திருப்பவர் ; 'உபநிஷத்தாயிருப்பவர்' என்பது பழையவுரை.

குஹர் - ஸுப்ரம்மண்யர்.

குஹர் - மறைந்திருப்பவர் ; 'குமாரர்' என்பது பழையவுரை.

குஹாவாஸி - யோகியாயிருப்பவர் ; அல்லது ஹ்ருதயகுகையிலிருப்பவர்.

கூபர் - பூமியைக்காப்பவர். 171 - ஆம் பக்கம் பார்க்க.

கூலகர்த்தா - தர்மவ்யவஸ்தையாகிய கரையையுண்டுபண்ணுகிறவர். 'புஷ்கர முதலிய மஹாதடாகங்களைச்செய்தவர்' என்பது பழையவுரை.

கூலஹாரி - நீர்ப்பெருக்கு வடிவமாயிருந்து கரையையிடிப்பவர்.

கேசரர் - ஆகாயத்திலிருப்பவர் ; தமக்கு ஓர் ஆதாரமும் வேண்டாதவர் என்பது. 170 - ஆம் பக்கம் பார்க்க.

கேது - கொடிபோல் எங்கும் விளங்குகிறவர்.

கேதுமாலி - கொடியினால் சோபிப்பவர்.

கைலாஸகிரிவாஸி - கைலாஸமலையிலிருப்பவர்.

கோசர்மவஸநர் - மாட்டுத்தோலை ஆடையாக உடுத்தவர்.

கோசரர் - இந்த்ரியங்களிலிருப்பவர்.

கோபதி - கிரணங்களுக்கு அதிபதி.

கோபாலி - இந்த்ரியங்களைக் காப்பவர்.

கோரதபஸ் - ஸம்ஹாரகாலத்தில் உக்ரமான ஆலோசனையுள்ளவர்.

கோரர் - உக்ரமாயிருப்பவர்.

கௌதமர் - ந்யாயசாஸ்திரஞ்செய்தவர்.

ச்மசாநபாக் - ச்மசாநத்தையடைந்திருப்பவர்.

ச்மசாநவாஸீ - ச்மசானத்தில்வஸிப்பவர்; 'காசியில்' என்பது பழையவுரை.

ச்ருங்கப்ரியர் - கைலைமலைச்சிகரத்தில் பிரியமுள்ளவர்.

ச்ருங்கி - உயர்வுள்ளவர்; 'கொம்புள்ள வ்ருஷபமுதலியவையாயிருப்பவர்' என்பது பழையவுரை.

ச்வேதபிங்களர் - வெளுப்பும் சிவப்புமானநிறங்களுடையவர்; 'அர்த்தநாரீசுவரரூபி' என்பது பழையவுரை.

சக்ரர் - சக்தியுள்ளவர்.

சக்ரர் - இந்திரன்.

சங்கரர் - சுகத்தைக்கொடுப்பவர்.

சங்கரர் - தாருகாவனவாஸிகளுக்குச் சுகத்தைச் செய்தவர்.

சங்கரர் - சுகத்தைக் கையில்வைத்திருப்பவர்; 'சந்தேஹங்களையறுப்பவர்' என்பது பழையவுரை.

சசிஹராஸுலோசநர் - கெட்டவழிபோகிறவர்களையழிக்கும் அழகான கண்களையுடையவர்; சந்திரஸூரியர்களை அழகியகண்களாகவுடையவர்; 'சிவனுடைய அழகானகண்ணாகிய சந்த்ரனாயிருப்பவர்' என்பது பழையவுரை; 171 - ஆம் பக்கம் பார்க்க.

சத்ரர் - குடையாயிருப்பவர். தாபத்தைநிவிருத்திசெய்பவரென்பது.

சத்ருஹா - சத்ருக்களைக் கொல்லுகிறவர்.

சதக்நி - சக்தியாயுதமுள்ளவர்.

சதக்நீபாசசக்திமாந் - பீரங்கி, கயிறு, வேல் முதலிய ஆயுதங்களையுடையவர்.

சதம் - ஏழிலைம்பாலைமரமாயிருப்பவர்.

சதஜிஹ்வர் - நூறுநாக்களையுடையவர்.

சதுர்முகர் — நான்குமுகங்களையுடையவர்.

சதுஷ்பதர் - நான்குவழிகளையுடையவர். விச்வர், தைஜஸர், பிராஜ்ஞர், சிவன்என்னும் நான்குவழிகளால் உபாஸிக்கப்படுகிறவர்; அல்லது ஞானம், யோகம், சரியை, கிரியை என்னும் நான்குவழிகளையுடையவர்.

சந்த்ரர் - சந்தோஷப்படுத்துகிறவர்.

சந்த்ரவக்த்ரர் - மதிபோன்ற முகமுடையவர்.

சந்தநம் - சந்தனமரமாயிருப்பவர்.

சந்தநீ - சந்தனம் பூசிக்கொண்டவர்.

சந்தோவ்யாகரணோத்தரர் - வேதங்களுக்கும் வேதாங்கங்களுக்கும் மேற்பட்டவர். 170 - ஆம் பக்கம் பார்க்க.

சநி - மெதுவாகவிருப்பவர்

சமூஸ்தம்பநர் - அஸுரஸேனைகளை நிறுத்துகிறவர்.

சர்மி - புலித்தோலையும் யானைத்தோலையும் உடுத்தவர்.

சர்வர் - ஹிம்ஸிப்பவர் ; தாருகாவனமுனிவரை மயங்கச்செய்தவர்.

சரண்யர் - காப்பவர்.

சரர் - சிதறஅடிப்பவர்; 'பாணமாயிருப்பவர்' என்பது பழையஉரை.

சராசராத்மா - ஜங்கமமும் ஸ்தாவரமுமாயிருப்பவர் ; இங்கு, 'ரகரத்துக்கும் ளகரத்துக்கும் பேதமில்லை' என்றுகொண்டு, திரும்பி வருவதும், திரும்பிவாராததுமாகிய அர்ச்சிராதி மார்க்கமும் தூமாதிமார்க்கமுமாயிருப்பவர்' என்பது பழையஉரை.

சலர் - ஓரிடத்திலும் நில்லாதவர் ; நிலையாக க்ரஹிக்கக்கூடாதவரென்பது.

சாச்வதர் - நித்யர்.

சாருலிங்கர் - அழகான ரூபத்தையுடையவர்.

சிகண்டி - ஜடைமுடியையுடையவர்.

சிகி - சிகையுள்ளவர்; 'குடுமியுள்ளக்ருஹஸ்தர்' என்பது பழையவுரை.

சிரோஹாரி - பிரம்மாவின் தலையையறுத்தவர்.

சிவர் - பரிசுத்தர்.

சீரவாஸஸ் - மரவுரியைத்தரித்திருப்பவர்.

சீலதாரி - நல்லொழுக்கத்தைக்காப்பவர்.

சுக்லர் - சுத்தர்.

சுக்லர் - வெண்ணிறமாயிருப்பவர்.

சுசி - பரிசுத்தர்.

சுசி - சுத்தர் ; ப்ரக்ருதியிலிருந்து விலகியிருப்பவரென்பது.

சுத்தர் - குற்றமற்றவர்.

சுத்தாத்மா - பரிசுத்தசித்தமுள்ளவர்.

சுபாக்ஷர் - அநுக்ரஹத்தினால் சிறந்தகண்ணுள்ளவர்.

சேகிதாநர் - செவ்வையாக அறிகிறவர்.

சோபகர் - மங்களகரர்.

சோபநர் - கல்யாணமாயிருப்பவர்

த்ராஸநர் - பயப்படுத்துகிறவர்.

த்ரிககுந்மந்த்ரர் - பீஜம், சக்தி, கீலகம் என்னும் மூன்று முக்ய அம்சங்களையுடைய மந்த்ரமாயிருப்பவர்.

த்ரிகாலத்ருக் - இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் ஆகிய முக்காலங்களையும் தரிப்பவர்.

த்ரிசங்கு - ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களையும் ஆணிகள்போல ஆதாரமாகவுடையவர்.

த்ரிசுக்லர் - மனம் வாக்கு காயம் மூன்றும் சுத்தமாயிருப்பவர்.

த்ரிதசர்-ஜநநம் மரணம் வாழ்க்கை ஆகிய மூன்றுதசைகளையும் பிராணிகளுக்குக் கொடுப்பவர்.

த்ரியக்ஷர் - முக்கண்ணர்.

த்ரியுகர் - (மூவிரண்டு,) ஞானம், சக்தி, பலம், ஐசுவரியம், வீர்யம், தேஜஸ் என்னும் ஆறுகுணங்களுள்ளவர்; 'கலிதவிரமற்றமூன்றுயுகங்களாயிருப்பவர்' என்பது பழையவுரை.

த்ரிலோசநர் - முக்கண்ணர்.

த்ரிவிக்ரமர் - மூவுலகங்களையும் வ்யாபித்திருப்பவர்; 'த்ரிவிக்ரமராயிருப்பவர்' என்பது பழையவுரை.

த்ரிவிஷ்டபம் - ஸ்வர்க்கரூபி. 'ஸ்வர்க்கஸாதநமானதர்மம்' என்பது பழையஉரை.

த்ரிஜடி - மூன்றுஜடைகளையுடையவர்'

த்ருதிமாந் - தைரியமுள்ளவர்.

த்ருவர் - அசைவற்றவர்.

த்ருவர் - ஒரு நக்ஷத்திரம்.

த்ருவர் - சலியாதவர்.

த்வஷ்டா - விசுவகர்மா; எல்லாவற்றையும் குறைப்பவர்; அழிப்பவரென்னவுமாம்.

த்வாதசர் - பன்னிரண்டு ஸூர்யர்களாயிருப்பவர்; 'மனிதர்களுக்குக் கர்ப்பவாஸமுதலுள்ள தசைகளில் பன்னிரண்டாவது தசையாகிய மோக்ஷரூபி' என்பது பழையவுரை.

தசபாஹு - பத்துக்கைகளையுடையவர்'

தண்டி - தடியுள்ளவர். 171 - ஆம் பக்கம் பார்க்க.

தந்வந்தரி - வைத்யசிரேஷ்டர்; பிறவிப்பிணிக்குச் சிகித்ஸைசெய்பவரென்பது.

தந்வி - வில்லையுடையவர்.

தபஸ்வி - தவமுள்ளவர்.

தபஸ்ஸக்தர் - தவத்திலிருப்பவர்.

தபோநிதி - ரிஷி.

தபோமயர் - தவமேயுருக்கொண்டவர்.

தம்பர் - சத்துருக்களை யடக்குகிறவர்.

தமநர் - துஷ்டர்களை யடக்குகிறவர்.

தர்ப்பசாரி - தர்ப்பங்களில் வைக்கப்பட்ட ஹவிஸ்ஸுகளைப்பக்ஷிப்பவர், அல்லது, தர்ப்பங்களில் ஸஞ்சரிப்பவர்; அவற்றைப் பரிசுத்தஞ் செய்பவர் என்பது.

தர்ப்பணர் - கண்ணாடிபோலிருப்பவர்.

தர்மஸாதாரணவரர் - புண்ணியத்திற்குத்தக்கபயனுயிருப்பவர்.

தர்ஷணாத்மா - பிறரைப்பயப்படுத்துகிறவர்.

தரங்கவித் - அலைகளையுடையவர்; இங்கு, ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்கள் அலைகள் என்பன; 'விஷயசுகங்களையடையவர்' என்பது பழையவுரை.

தரர் - ஒருவஸு.

தரு - ஆபத்தைத்தாண்டுவிப்பவர்.

தரு - கல்பகமுதலிய மரமாயிருப்பவர்.

தரோத்தமர் - எல்லாவற்றையுந்தாங்குகிற ஆதிசேஷன்முதலானவர்களுக்கும் மேலானவர்.

தலஸ்தாலர் - கைத்தாளமாயிருப்பவர். 171 - ஆம் பக்கம் பார்க்க.

தக்ஷயாகாபஹாரி - தக்ஷருடையயாகத்தையழித்தவர்.

தக்ஷர் - காரியங்களில்திறமையுள்ளவர்.

தக்ஷிணர் - ஸமர்த்தர்.

தாதா - ப்ரம்மா.

தாம்ரோஷ்டர் - சிவந்தஉதடுள்ளவர்.

தார்க்ஷ்யர் - கருடர்.

தாரணர் - ஸம்ஸாரத்தைத்தாண்டுவிப்பவர்.

தாலர் - ஸம்ஸாரக்கடலின் தலமென்றுசொல்லப்பட்ட ஆழத்தையறிந்தவர்; 'சுத்தப்ரம்மத்தையறிந்தவர்' என்பது பழையஉரை.

தாளி - தாளமுள்ளவர்.

திக்மதேஜாஸ்வயம்புவர் - பிரம்மாவுக்குந் தாங்கமுடியாத பராக்ரமமுடையவர்.

திக்மமந்யு - உக்ரமான கோபமுள்ளவராயிருப்பவர்.

திக்வாஸஸ் - திசைகளை யாடையாயுடுத்துகிறவர்.

திவிஸுபர்வணோதேவர் - தேவலோகத்திலிருக்கும் இந்த்ரனுக்கும் பூஜ்யர்.

தீநஸாதகர் - ஏழைகளுக்கு உபகாரம்செய்பவர்.

தீர்க்கர் - நெடியவர்.

தீர்த்ததேவர் - பரிசுத்ததேவதை.

தீக்ஷ்ணதாபர் - உக்ரமானதாபத்தைச்செய்யும் அக்நியாயிருப்பவர்.
தும்பவீணர் - சுரைக்காய்கட்டின வீணையுடையவர் ; இதனாலேதான் அதனை ருத்ரவீணையென்பது.
துர்வாஸர் - ஆடையில்லாதவர்.
துர்வாஸர் - துர்வாஸமுனிவராக அவதரித்தவர்.
தூமகேதநர் - புகைக்கொடியுள்ள அக்நியாயிருப்பவர்.
தூமகேது - வால்நக்ஷத்ரமாயிருப்பவர்.
தேவதாத்மா - தேவர்களுக்கு அந்தர்யாமி.
தேவதேவர் - தேவர்க்குந்தேவர்.
தேவர் - ஜயிப்பவர் ; விளங்குகிறவர்என்னவுமாம்.
தேவர் - ஜயிக்கஎண்ணமுள்ளவர் ; காந்தியுள்ளவரென்றுமாம்.
தேவரிஷி - தேவதையாகவும் ரிஷியாகவுமிருப்பவர் ; 'நாரதர்முதலியோராயிருப்பவர்' என்பது பழையஉரை.
தேவஸிம்மர் - தேவஸிரேஷ்டர்.
தேவாதிதேவர் - இந்த்ரியங்களுக்குஎட்டாமல் விளங்குபவர்.
தேவாதிபதி - தேவர்களுக்குஅதிபதி.
தேவாஸுரகணாக்ரணி - தேவாஸுரக்கூட்டங்களை முன்னுக்குக் கொண்டுபோகிறவர்; 'கார்த்திகேயர், கேசிமுதலியவராயிருப்பவர் என்பது பழையஉரை.
தேவாஸுரகணாச்ரயர் - தேவாஸுரக்கூட்டங்களினால் அடையப்படுகிறவர்.
தேவாஸுரகணாத்யக்ஷர் - இந்த்ரன் விரோசனன்முதலிய தேவாஸுரக்கூட்டங்களுக்குத் தலைவர்.
தேவாஸுரகுரு - தேவாஸுரரால் பூஜிக்கப்பெற்றவர் ; 'குரு சுக்ரர்களாயிருப்பவர்' என்பது பழையஉரை.
தேவாஸுரநமஸ்க்ருதர் - தேவாஸுரர்களால் நமஸ்கரிக்கப்பட்டவர்.
தேவாஸுரபதி - தேவருக்கும் அஸுரருக்கும் தலைவர்.
தேவாஸுரபராயணர்-தேவாஸுரர்க்குமுக்யமானஆதாரவாயிருப்பவர்.
தேவாஸுரமஹாமாத்ரர் - தேவாஸுரர்களுக்கு முக்யமந்த்ரியாயிருப்பவர்.
தேவாஸுரமஹேச்வரர் - தேவாஸுரர்களை நியமிப்பவர்களையும் நியமிப்பவர்.
தேவாஸுரவரப்ரதர் - பிரம்மா ருத்ரர்முதலியோராயிருந்து தேவாஸுரருக்கு வரமளிப்பவர்.
தேவாஸுரநிர்மாதா - தேவாசுரரைப்படைப்பவர்.

தேவாஸுரேச்வரர் - தேவாஸுரர்களை நியமிப்பவர்.

தேவேந்த்ரர் - தேவர்களுக்குமீசுவரர்.

தேஜஸ் - ஒளியாயிருப்பவர்.

தேஜஸ்கரர் - ஸூர்யன்முதலியவற்றிற்கும் ஒளியையுண்டுபண்ணுபவர். 167 - ஆம் பக்கம்பார்க்க.

தேஜோபஹாரி - பிறர்சக்திகளையபஹரிப்பவர்.

தேஹர் - விருத்தியாகிறவர்.

தைத்யஹா - அஸுரர்களைக்கொன்றவர்.

தோரணர் - முக்திக்கு வாயிலாயிருப்பவர்.

ந்யக்ரோதர் - ஆலமரத்தின்கீழ் தக்ஷிணாமூர்த்தியாயிருப்பவர்.

ந்யக்ரோதரூபர் - கீழேவளர்வதாகிய ஸம்ஸாரவ்ருக்ஷமாயிருப்பவர்.

ந்யாயநிர்வபணர் - நியாயசாஸ்த்ரத்தை உலகத்திற்குக்கொடுத்தவர்; 'தர்மப்ரகாரம் தானம்செய்பவர்' என்பது பழையவுரை.

ந்ருத்யப்ரியர் - நர்த்தனத்தில் விருப்பமுள்ளவர்.

நக்தஞ்சரர் - இரவில் ஸஞ்சரிக்கும்ராக்ஷஸர்முதலியவராயிருப்பவர்.

நக்தர் - இரவாயிருப்பவர்; 'மஹாமோஹமாயிருப்பவர்' என்பது பழையவுரை.

நந்தநர் - சந்தோஷப்படுத்துகிறவர்.

நந்தி - தாமே நந்தியாகவுமிருப்பவர்.

நந்தி - ஸம்பத்தாயிருப்பவர்.

நந்திகரர் - பூர்த்திசெய்கிறவர்.

நந்திகரர் - ஸம்பத்தைச்செய்பவர்.

நந்திவர்த்தநர் - பகைவன்ஸந்தோஷத்தையழிப்பவர்.

நந்தீச்வரர் - நந்தியென்னும்வாஹநத்துக்கு ஈசுவரர்.

நபர் - ஆகாயம்போலப் பற்றற்றிருப்பவர்; அல்லது, புலன்களுக்கு விளங்காதவர்.

நபஸ்தலர் - ஆகாயத்தையே இடமாகவுடையவர்.

நர்த்தகர் - எல்லாவற்றையும் ஆட்டிவைப்பவர்.

நரர் - எல்லாவற்றையும் நடத்துகிறவர்; ஜீவரூபியென்னவுமாம்; 'பிரம்மாண்டத்தைநடத்தும் விராட்புருஷர்' என்பது பழையவுரை.

நரர் - ஒன்றையுமடையாதவர்; பற்றற்றவர்என்பது.

நரர்ஷபர் - மனிதசிரேஷ்டர்.

நவசக்ராங்கர் - புதியசக்ரங்களாகிய சூரியசந்த்ரர்களைத் திரிபுரஸம்ஹாரத்தில் தேருக்கு அங்கங்களாகவுடையவர்; சக்கரவடிவங்களான ஒன்பதுக்ரஹங்களையும் அங்கத்தில்உடையவர் என்னவுமாம்; 'புதுஹம்ஸமாயிருப்பவர்' என்பது பழையவுரை.

நக்ஷத்ரவிக்ரஹமதி - நக்ஷத்ரம்போலப்ரகாசிக்கும் தேகமும் புத்தியுமுடையவர்.
நக்ஷத்ரஸாதகர் - நக்ஷத்ரங்களைப்படைத்தவர்.
நாபி - உலகத்திற்கு ஆதாரமாயிருப்பவர்.
நிக்ரஹர் - தண்டிப்பவர்.
நிசாகரர் - சாந்த்ரவ்யாகரணம்செய்த சந்திராசாரியராயிருப்பவர்.
நிசாசரர் - இரவாகிய அவித்தையைக்கொண்டு ப்ரவ்ருத்திப்பவர்.
நிசாசரர் - இரவில் ஸஞ்சரிப்பவர்.
நிசாசாரி - ப்ரளயமென்னும்ராத்ரியில் ஸஞ்சரிப்பவர்.
நிசாலயர் - ராத்ரிஎன்றுசொல்லப்பட்ட அவித்யையை லயிக்கச்செய்கிறவர்.
நித்யநர்த்தர் - எப்போதும் நர்த்தனம்செய்பவர்.
நித்யம் ஆச்ரமபூஜிதர் - எப்போதும் எல்லாஆச்ரமங்களாலும் பூஜிக்கப்பெற்றவர்.
நித்யம்வர்ச்சஸ்வீ - எப்போதும் ஒளியுள்ளவர்.
நித்யர் - அழிவில்லாதவர்.
நித்யாத்மஸஹாயர் - ஆத்மாக்களுக்கு என்றும்துணையானவர்.
நிதி - அடைந்தவர்களுக்குப் புதையல்போன்றவர்.
நிதி - எல்லாஒளிக்கும் இருப்பிடமானவர்; 167 - ஆம் பக்கம்பார்க்க.
நிபாதி - தேகத்திற்குள் ப்ரவேசிப்பவர்.
நிமித்தர் - காரணமாயிருப்பவர்.
நிமித்தஸ்தர் - காரணங்களிலிருப்பவர்.
நியதர் - இந்த்ரியங்களைஜயித்தவர்.
நியமர் - எல்லாவற்றையும் நியமிப்பவர்; 'நியமத்தால் அடையக்கூடியவர்' என்பது பழையவுரை.
நியமாச்ரிதர் - எல்லாத்தவங்களினாலும் அடையப்பட்டவர்.
நியமேந்த்ரியவர்த்தநர் - தவத்தினால் ஐம்புலன்களையும் அறுப்பவர்.
நிர்வாணம் - மோக்ஷரூபி.
நிர்ஜீவர் - ஜடப்பொருளாயிருப்பவர்.
நிரவக்ரஹர் - தடையில்லாதவர்.
நிராமயர் - குற்றமற்றவர்.
நிலயர் - எல்லாப்ராணிகளுக்கும் இருப்பிடமானவர்.
நிவ்ருத்தி - ஒழிவாயிருப்பவர்.
நிவேதநர் - எல்லாவற்றையுமறிவிப்பவர்.
நிஜஸர்க்கர் - தமதுஸ்ருஷ்டியாயிருப்பவர்; ஸ்வயம்புஎன்பது.

நிருக்தா - சொல்லுகிறவர்.
நீதி - ராஜநீதியாயிருப்பவர்.
நீரஜர் - ரஜோகுணத்தை நிவ்ருத்திக்கச்செய்கிறவர்; ப்ரளயஜலத்திலிருந்துஉண்டானவரென்னவுமாம்.
நீலகண்டர் - கறுத்தகண்டமுடையவர்.
நீலமௌளி - தலையில் இந்த்ரநீலக்கல் கிரீடம்தரித்தவர்.
நீலர் - கறுத்தநிறமுள்ளவர்; 'மரகதவர்ணமாயிருப்பவர்' என்பது பழையவுரை.
நைகஸாநுசரர் - அநேகமலைச்சிகரங்களில சஞ்சரிப்பவர்.
நைகாத்மா - அநேகதேஹங்களையெடுப்பவர்.
ப்ரக்ருஷ்டாரி - காமக்ரோதமுதலியசத்ருக்களை மிகவடுக்குபவர்.
ப்ரகாசர் - வெளிப்படையாயிருப்பவா; 'கர்மகாண்டமாயிருப்பவர்' என்பது பழையவுரை.
ப்ரசாந்தாத்மா - அலைஓய்ந்தகடல்போல அடங்கியிருப்பவர்.
ப்ரத்யயர் - ஞானமாயிருப்பவர்.
ப்ரதாநக்ருத் - ப்ரக்ருதியைத்தரிப்பவர்.
ப்ரபாவர் - ஒருவஸு.
ப்ரபாவாத்மா - சக்தியை உருவாகக்கொண்டவர்.
ப்ரபு - அந்தர்யாமி.
ப்ரபு - எல்லாவற்றையுமனுபவிப்பவா.
ப்ரம்மக்ருத் - வேதங்களையுண்டுபண்ணினவர்.
ப்ரம்மகர்ப்பர் - பிரம்மாவைத் தம்கர்ப்பத்தில்உடையவர்; 'வேதத்தைக் கர்பபத்தில்உடையவர்' என்பது பழையஉரை.
ப்ரம்மசாரி - பிரம்மத்தினிடத்திலிருப்பவா.
ப்ரம்மதண்டவிநிர்மாதா - பிரம்மதண்டமென்னும் ஆயுதத்தைச்செய்பவர்; பிரம்மாவுக்குத் தண்டனைசெய்பவர் என்னவுமாம்.
ப்ரம்மலோகர் - பரப்ரம்மமாகப்பார்க்கப்படுகிறவர்; 'ஸத்தியலோகம்' என்பது பழையஉரை.
ப்ரம்மவர்ச்சஸர் - பிராம்மணருக்குப் பிரம்மதேஜஸாயிருப்பவர்.
ப்ரம்மவித் - வேதமறிந்தவர்.
ப்ரம்மா - மிகப்பெரியவர்.
ப்ரம்மி - வேதமோதினவர்.
ப்ரமாணர் - மெய்யறிவிற்குக்காரணமாயிருப்பவர்.
ப்ரயதாத்மா - பரிசுத்தமனமுள்ளவர்.
ப்ரவ்ருத்தி - உலகநடையாயிருப்பவர்.

ப்ரவரர் - சிரேஷ்டர்.

ப்ரவேசிநாம்குஹாபாலர் - தம்மைத்தியானிப்பவர்களின் மனத்தைக் காப்பவர்; 'சரீரத்தைக்காப்பவர்' என்பது பழையவுரை.

ப்ரஜாத்வாரம் - ஸந்ததிக்குக்காரணமான ஆசை.

ப்ரஜாபதி - ஜனங்களுக்குஈசுவரர்.

ப்ரஜாபீஜம் - பிரஜைகளுக்குவித்தாயிருப்பவர்; மாயையுடன்சேர்ந்த சித்தாயிருப்பவர் என்பது.

ப்ரஸ்கந்தகர் - எல்லாரையும் நழுவச்செய்கிறவர்.

ப்ரஸந்நர் - அநுக்ரஹமுள்ளவர்.

ப்ரஸாதர் - அனுக்ரஹமாயிருப்பவர்.

ப்ரஸாதர் - அனுக்ரஹிப்பவர்.

ப்ரஸாதர் - ஆனந்தமயமானவர்.

ப்ராக் - முந்தினவர்.

ப்ராணதாரணர் - உயிரைநிறுத்துகிறவர்.

ப்ராம்மணர் - ப்ராம்மணப்ரியர்.

ப்ராஸாநாம்ப்ரபவர் - பிராஸங்கள்என்னும் ஆயுதங்கள் உண்டாகும் இடம்.

ப்ரியர் - இனியவர்.

ப்ரேதசாரி - ப்ரேதங்களுடன் ஸஞ்சரிப்பவர்.

பக்தாநாம்பரமாகதி - பக்தியுள்ளவர்களுக்குச் சிறந்தஆதரவு.

பகவான் - ஞானம் சக்தி பலம் ஐசுவரியம் வீர்யம் தேஜஸ்என்னும் ஆறுகுணங்களையும் உடையவர்.

பகஹாரி - ஐசுவரியத்தையழிப்பவர்; கொடுப்பவரென்றுமாம்.

பசுபதி - ஆத்மாக்களுக்குப்பதி.

பசுபதி - ஜீவன்களுக்குஸ்வாமி.

பட்டிசி - பட்டிசம்என்னும் ஆயுதம்உள்ளவர்.

படபாமுகர் - வடவாமுகமென்னும் அக்நிஸ்வரூபி.

பண்டிதர் - எல்லாந்தெரிந்தவர்.

பணவி - பணவவாத்யமுள்ளவர்.

பத்மகர்ப்பர் - பிரம்மதேவராயிருப்பவர்.

பத்மநாபர் - உலகத்திற்குக்காரணமான பத்மத்தை நாபியிலுடையவர்.

பத்மநாளாக்ரர் - தாமரையின்காம்பைத் தமக்குமுன்னதாகவுடையவர்; பிரம்மதேவர், தாமிருக்குந்தாமரைமலரின் காம்புமுடிவைக் காணுவதற்கு அதிலிழிந்தும் அதைக்காணுமற்போனூர்; அந்தக் காம்புக்கு முன்னிருப்பவராதலால் ப்ரம்மதேவராலுங்காணக்

கூடாதவர்என்பது; தாமரைக்காம்பின்முனையிலிருந்து பூக்கச் செய்பவர் என்னவுமாம்.

பதி - எல்லாவற்றிற்கும் ஸ்வாமி.

பந்தகர்த்தா - ஸம்ஸாரபந்தத்தையுண்டுபண்ணுகிறவர்.

பந்தநர் - ஸம்ஸாரபந்தமாயிருப்பவர்.

பப்ரு - கபிலநிறமுள்ளவர்; 'சனியாயிருப்பவர்' என்பது பழைய உரை.

பயோநிதி - கடலாயிருப்பவர்.

பர்யயோநரர் - நாற்புறமும் வியாபித்திருக்கும் ஸமஷ்டிஜீவனாயிருப்பவர்.

பரகதி - அடையப்படுவனவற்றுள் மேன்மையானவர்.

பரச்வதாயுதர் - கோடாலியை ஆயுதமாகவுடையவர்.

பரம்ப்ரம்ம - பரப்ரம்மமாயிருப்பவர் ; 172 - ஆம் பக்கம்பார்க்க.

பரமம்தபர் - சிறந்ததவமாயிருப்பவர்.

பரம்ம்ப்ரம்ம - பரப்ரம்மம்; 168 - ஆம் பக்கம்பார்க்க.

பரமாத்மா - அன்னமயம், ப்ராணமயம், மநோமயம், விஜ்ஞாநமயம், ஆனந்தமயம்என்னும் ஐந்துக்குமேல் ஆறுவதான சுத்தானந்தமாயிருப்பவர்.

பரமோமந்த்ரர் - சிறந்தஆலோசனையாயிருப்பவர்.

பரர் - முந்தினவர்.

பரிதீபதி - ஸேனைகளின்ஓரத்தைக்காப்பவர் ; 170-ஆம் பக்கம்பார்க்க.

பலசாரி - ப்ரமதகணமாகிய ஸேனையுடன்சஞ்சரிப்பவர்; 'காட்டில் சஞ்சரிக்கும் வேடரூபமாயிருப்பவர்' என்பது பழையவுரை.

பலர் - சமர்த்தர் ; 166 - ஆம் பக்கம்பார்க்க.

பலர் - பலத்தையுடையவர்.

பலரூபத்ருத் - பலராமரூபத்தைத்தரித்தவர்; பலத்தையும்அழகையும் தரித்தவர் என்னவுமாம்.

பலவத் - பலமுள்ளபொருள்.

பலவாந் - சாமர்த்தியமுள்ளவர்.

பலவீரர் - தம்சக்தியினால் சத்ருக்களைஜயிக்கும்சூரர்.

பலஹா - இந்த்ரரூபியாகிப் பலாஸுரனைக்கொன்றவர் ; அஸுரஸேனையைக்கொன்றவர் என்னவுமாம்.

பலி - பலமுள்ளவர்.

பவர் - உற்பத்திலயங்களுக்குக் காரணமாயிருப்பவர்.

பவர் - எல்லாப்ராணிகளுக்கும் உற்பத்திகாரணமானவர்.

பவித்ரர் - பரிசுத்தஞ்செய்கிறவர்; 'ஸம்ஸாரமென்னும் இடியிலிருந்து காப்பவர்', என்பது பழையஉரை.

பவித்ரர் - ஆத்மாக்களைச் சுத்தப்படுத்துகிறவர்.

பவித்ரர் - இடிபோன்றதுக்கங்களிலிருந்து காப்பவர்.

பஸ்மகோப்தா - திருநீற்றினல் உலகத்தைக்காப்பவர்.

பஸ்மசயர் - திருநீற்றில்படுத்திருப்பவர்.

பஸ்மபூதர் - தாமேநீறாகவுமிருப்பவர்.

பஹுகர்க்கசர் - ஸம்ஹாரத்தில் மிகக்கடினமாயிருப்பவர்.

பஹுதாரர் - அநேகங்களைத்தரிப்பவர்.

பஹுதாநிந்திதர் - தாருகாவனவாஸரிஷிகளால் மிகவும் நிந்திக்கப்பட்டவர்.

பஹுப்ரதர் - மிகுதியாகக்கொடுப்பவர்.

பஹுப்ரஸாதர் - மிக்கஅநுக்ரஹமுள்ளவர்.

பஹுபூதர் - தாமே அநேகஉருவங்களானவர்.

பஹுமாலர் - அநேகலீலைகளையுடையவர்.

பஹுரச்மி - அநேககிரணங்களையுடையவர்.

பஹுரூபர் - அநேகரூபங்களைத்தரிப்பவர்.

பஹுவித்யர் - அநேகவித்தைகளையுடையவர்.

பக்ஷம் - பக்ஷமென்னும்காலத்தின் பிரிவாயிருப்பவர்.

பக்ஷரூபர் - ஸகாயமாயிருப்பவர்.

பக்ஷி - க[illegible]

பாககரர் - மற்றத்தேவர்களுக்கு யஜ்ஞபாகத்தைப் பிரித்துக்கொடுப்பவர்.

பாகி - யஜ்ஞபாகமுள்ளவர்.

பாசர் - எல்லாவற்றையும் மாயையினல்கட்டுகிறவர்.

பாணஹஸ்தர் - கையில் அம்புவைத்திருப்பவர்.

பாதர் - எல்லாருமடையுமிடமானவர்.

பானு - ப்ரகாசிப்பவர்; 166 - ஆம் பக்கம்பார்க்க.

பாவர் - செய்கையாயிருப்பவர்.

பிதா - தந்தை.

பிதாமஹர் - கூடஸ்தர்; 'விஷ்ணுவுக்கும்பிதா' என்பது பழையஉரை.

பிதாமஹர் - தந்தைக்குத்தந்தை.

பிந்து - அநுஸ்வாரமானவர்; அழிப்பவர்என்றமாம்.

பிநாகத்ருத் - பிநாகமென்னும்வில்லைத்தரிப்பவர்.

பிநாகவாந் - பிநாகமென்னுந்தனுஸையுடையவர்.

பிக்ஷு - பிரம்மசாரியாயிருப்பவர்; 'தண்டமுதலிய அடையாளங்களுள்ள ஹம்ஸஸந்யாஸியாயிருப்பவர்' என்பது பழையவுரை.

பிக்ஷுருபர் - பிக்ஷையெடுப்பவனைப்போலிருப்பவர்; 'பரமஹம்ஸராயிருப்பவர்' என்பது பழையவுரை.

பீதாத்மா - பொன்னிறமுள்ளவர்.

பீஜகர்த்தா - காரணமாகியப்ரக்ருதியை ப்ரவ்ருத்திக்கச்செய்கிறவர்.

பீஜவாஹநர் - காரணங்களைவஹிப்பவர்.

பீஜாத்யக்ஷர் - தர்மாதர்மங்களுக்கும் ஈசுவரர்; காரணமாகியப்ரக்ருதிக்குமீசுவரர்.

புண்யசஞ்சு - புண்யத்தினால் அறியப்படுகிறவர்

புராணர் - முதன்மையானவர்.

புஷ்கரஸ்தபதி - பிரம்மாண்டத்தைசசெய்தசிற்பி.

பூதசாரி - பூதங்களுடன் ஸஞ்சரிப்பவர்.

பூதநிஷேவிதர் - ஸத்துக்களாலே ஸேவிக்கப்பட்டவர்.

பூதபதி - பூதங்களுக்குஈசுவரர்.

பூதபாவநர் - பஞ்சபூதங்களையும் உற்பத்திசெய்பவர்.

பூதபாவநர் - ப்ராணிகளையெல்லாம்காப்பவர்; 'எல்லாப்ராணிகளுமாக மயங்குவதற்குஇடமானவர்' என்பது பழையஉரை.

பூதவாஹநஸாரதி - பூதங்களென்னும்வாஹநங்களுக்குச் சாரதியாயிருப்பவர்; 'ப்ராணிகளைநடத்துகிறவராகிய பிரமமதேவரைச் சாரதியாகவுடையவர்' என்பது பழையவுரை.

பூதாலயர் - பஞ்சபூதங்களிலிருப்பவர்.

போஜநர் - எல்லாருக்கும்உணவையளிப்பவர்

ம்ருகபாணார்ப்பணர் - மான்வடிவமானயாகத்தின்மேல்பாணப்ரயோகம்செய்தவர்.

ம்ருகாலயர் - மானைவைத்திருப்பவர்.

ம்ருது - கருணையுள்ளவர்.

மகரர்-முதலைரூபமானசிம்சுமாரசக்ரம் என்னும்காலசக்ரமாயிருப்பவர்.

மணிவித்தர் - காதில்ரத்நாபரணமணிந்தவர்.

மத்யமர் - நடுநிலைமையுடையவர்; பக்ஷபாதமில்லாதவரென்பது.

மதநர் - ஸந்தோஷிக்கச்செய்கிறவர்; 'மன்மதரூபி' என்பது பழைய உரை.

மதிமாந் - புத்தியுள்ளவர்.

மது - வஸந்தரூபியானவர்.

மதுகலோசநர் - தேன்போன்றசிவப்புவர்ணமானகண்களையுடையவர்.

மந்த்ரகாரா - மந்திரங்களையுண்டுபண்ணினவா.

மந்த்ரர் - தம்மைத்தியானிப்பவரைக்காப்பவர்.

மந்த்ரர் - ப்ரணவமுதலியமந்திரமாயிருப்பவர்; 'இறந்தவரைப்பிழைப்பிக்கும் மந்த்ரமாயிருப்பவர்' என்பது பழையஉரை.

மந்த்ரவித் - மந்திரங்களையறிந்தவர்.

மந்தாநோபஹுலவாயு - ப்ரளயகாலத்தில உலகங்களைக்களைந்தெடுக்கும் பெருங்காற்று; தேகத்தில் வ்யாபித்து நரம்புகளைச்சீர்ப்படுத்தும் பிராணவாயு என்னவுமாம்.

மநோவேகர் - மநோவேகமுள்ளவர்.

மநோஜவர் - மநோவேகமுள்ளவர்.

மஹரிஷி - பெரியஞானமுள்ளவர்; 'வஸிஷ்டர்முதலியவராயிருப்பவர்' என்பது பழையஉரை.

மஹாக்ரீவர் — பெருங்கழுத்தையுடையவர்.

மஹாக்ரோதர் - ஸம்ஹாரகாலத்தில் உக்ரமானகோபமுள்ளவர்.

மஹாகம்பு - சங்கவாத்தியத்தையுடையவர்; 'சங்குபோன்றகழுத்தையுடையவர்' என்பது பழையவுரை,

மஹாகர்ணர் - பெரியகாதுகளையுடையவர்.

மஹாகர்த்தா - கர்த்தாவையும்படைத்தவர்.

மஹாகர்ப்பபராயணர் - சிறந்தகர்ப்பத்திற்குக் காரணமானவர்; பிரம்மாண்டத்திற்குள் எல்லாவற்றையும் உண்டாக்கினவரென்பது.

மஹாகர்ப்பர் - ப்ரளயகாலத்தில் உலகம்அடங்கியிருப்பதனுல் பெருங்கர்ப்பமுடையவர்; 'பிரம்மாமுதலானவர்களை வயிற்றில்வைத்திருப்பவர்' என்பது பழையவுரை.

மஹாகர்ப்பர் - விசாலமானஉள்பாகத்தையுடையவர்; எல்லாவற்றிற்கும்மேல் வ்யாபித்திருப்பவரென்பது.

மஹாகர்மா - ஸ்ருஷ்டிமுதலியபெருங்கார்யங்களைச்செய்கிறவர்.

மஹாகல்பர் - சிறந்தரூபாணங்களையுடையவர்.

மஹாகாயர் - விராட்என்னும்பெரியசரீரமுள்ளவர்.

மஹாகாயர் - பெரியசரீரமுடையவா.

மஹாகாயர் - பெரியதேகமுடையவா.

மஹாகீதர் - சிறந்தபாட்டையுடையவா.

மஹாகேசர்-பெரியதலைமயிரினையுடையவர்; 169-ஆம் பக்கம்பார்க்க

மஹாகேது - சிறந்தவ்ருஷபக்கொடியையுடையவர்.

மஹாகோரர் - மிகஉக்ரமானவர்.

மஹாங்கர் - பெரியலிங்கத்தையுடையவர்.

மஹாத்மா - பெரியமனமுள்ளவர்.
மஹாத்மா - நிரம்பினரூபமுள்ளவர்.
மஹாதந்தர் - பெரியபற்களையுடையவர்.
மஹாதநு - சிறந்தவில்லையுடையவர்.
மஹாதபஸ் - உலகைப்படைக்கத்தக்கசிறந்தஆலோசனையுள்ளவர்.
மஹாதபஸ் - சிறந்ததவமுள்ளவர்.
மஹாதம்ஷ்ட்ரர் - நீண்டகோரப்பற்களையுடையவர்.
மஹாதம்ஷ்ட்ரர் - பெருங்கோரப்பற்களையுடையவர்.
மஹாதாது - சிறந்ததாதுக்களோடுகூடிய மேருமலையையுடையவர்.
மஹாதேவர் - தேவர்களுக்கும்தேவர்.
மஹாதேஜஸ் - பேரொளியுள்ளவர்
மஹாந் - பூஜ்யர்.
மஹாந் - சிறந்தவர்.
மஹாந் - மகத்என்னும் தத்வமாயிருப்பவர்.
மஹாந்தகர் - யமனுக்கும்யமன்.
மஹாந்ருத்யர் - சிறந்தநர்த்தனத்தையுடையவர்.
மஹாநகர் - பெரியநகங்களையுடையவர் ; 'நரஸிம்மமாயிருப்பவர்' என்பது பழையவுரை.
மஹாநநர் - பெரியவாயுள்ளவர்.
மஹாநாகஹநர் - பெரியயானையைக்கொன்றவர்.
மஹாநாதர் - பெரியசப்தமாயிருப்பவர் ; 'ஆகாசவ்யாபியான அநாஹதநாதமாயிருப்பவர்' என்பது பழையவுரை.
மஹாநாஸர் - பெரியமூக்குடையவர்.
மஹாநேத்ரர் - பெருங்கண்களுடையவர்.
மஹாப்ரஸாதர் - பெரியஅநுக்ரஹமுள்ளவர்.
மஹாபதர்-பெரியமார்க்கமாயிருப்பவர் ; எளிதில்முக்தியடையும்வழி.
மஹாபலர் - சிறந்தபராக்ரமமுள்ளவர்.
மஹாபலர் - சிறந்தபலமுள்ளவர்.
மஹாபாதர் - பெரியகால்களையுடையவர்.
மஹாபீஜர் - காரணத்திற்குங் காரணமானவர்.
மஹாமாத்ரர் - பெரியஅளவுடையவர்.
மஹாமாயர் - பெரியமாயையையுடையவர்.
மஹாமாலர் - சிறந்தபூமாலையையணிந்தவர்.
மஹாமுகர் - பெரியவாயையுடையவர்.
மஹாமுநி - பெரியரிஷி.

மஹாமூர்த்தா - பெருந்தலையையுடையவர்.

மஹாமேகநிவாஸீ - ப்ரளயகாலமேகங்களில்வஸிப்பவர்.

மஹாயசஸ் - பெருங்கீர்த்தியுள்ளவர்.

மஹாயசஸ் - பெரும்புகழுள்ளவர்.

மஹாயுதர் - சிறந்தஆயுதமுடையவர்.

மஹார்ணவநிபாநவித் - ஸம்ஹாரகாலத்தில் பெருங்கடலையும் குடிப்பவர் ; அதாவது வற்றச்செய்பவர்.

மஹாரதர் - பெருந்தேருடையவர். த்ரிபுரஸம்ஹாரத்தில் பூமியே தேராக இருந்ததுகாண்க.

மஹாரூபர் - அளவற்றரூபமுள்ளவர்.

மஹாரூபர் - பெரியரூபமுள்ளவர்.

மஹாரேதஸ் - பொன்மலை வெள்ளிமலைகளையுண்டாக்கும் சிறந்தரேதஸையுடையவர் ; தமதுப்ரதிபிம்பமாகிய ஆத்மாவை ப்ரக்ருதியில் ப்ரவேசிக்கச்செய்பவர் என்னவுமாம்.

மஹாரோமர் - பெரியரோமங்களையுடையவர் ; 'வராஹமாயிருப்பவர்' என்பது பழையஉரை.

மஹாலிங்கர் - பூஜிக்கத்தக்க லிங்கத்தையுடையவர்.

மஹாவக்ஷஸ் - பெரியமார்பையுடையவர்.

மஹாவேகர் - மிக்கவேகமுள்ளவர்.

மஹாஜ்வாலர் - பெரியஜ்வாலையுள்ளவர்.

மஹாஜடர் - பெரியஜடையுள்ளவர்.

மஹாஜத்ரு - பெரியகழுத்தெலும்புமுண்டிகளையுடையவர்.

மஹாஜிஹ்வர் - பெரியநாவையுடையவர்.

மஹாஸேநர் - பெரும்படையையுடையவர் ; 'தேவஸேநாபதியான கார்த்திகேயராயிருப்பவர்' என்பது பழையஉரை.

மஹாஹநு - உலகத்தைப்பக்ஷிக்கப்போதுமான பெரியகபோலங்களையுடையவர்.

மஹாஹநு - பெரியகன்னங்களையுடையவர்.

மஹாஹர்ஷர் - பேரானந்தமுடையவர்.

மஹாஹஸ்தர் - பெரியகைகளையுடையவர்.

மஹாக்ஷர் - எங்கும்வ்யாபித்த பெரும்புலன்களையுடையவர்.

மஹீசாரி - பூமியெல்லாம்சஞ்சரிப்பவர்.

மஹேச்வரர் - எல்லாருக்கும் மேலானஈசுவரர்.

மஹோரஸ்கர் - பெரியமார்பையுடையவர்.

மஹோஷ்டர் - பெரியஉதடுகளுள்ளவர்.

மஹௌஷதர் - சிறந்ததான்யங்களாயிருப்பவர்.
மாத்ரை - மாத்ரையென்னும் காலத்தின் சிறியபிரிவாயிருப்பவர்.
மாதா - தாய்.
மாந்தாதா - ஓர் அரசன்; 'நானென்றுசொல்லப்பட்ட ஜீவனைப்போஷிப்பவர்' என்பது பழையவுரை.
மாந்யா - பூஜிக்கத்தக்கவா.
மாயாவீ - மாயையுள்ளவர்.
மாலீ - மாலையைத்தரித்திருப்பவர்.
மாஸம் - மாஸமென்னும் காலத்தின் பிரிவாயிருப்பவர்.
மித்ரர் - பன்னிரண்டுசூரியரைச் சேர்ந்தவர்; அல்லது, எல்லாவற்றையுமளப்பவர்; எல்லாம் அவர்க்கு அடங்கின்வையென்பது.
முக்ததேஜஸ் - ஆச்ரிதரக்ஷணத்திற்காகத் தமதுசக்தியைவிடுகிறவர்; 'லிங்கசரீரத்தைவிட்டவர்' என்பது பழையஉரை.
முக்யர் - முதன்மையானவர்.
முண்டர் - ஸந்யாஸி.
முண்டர் - தலையிற்கேசங்களில்லாதவர்.
முண்டி - தலைமொட்டையாயிருப்பவர்; சிரோமுண்டனம் இருவகையெனக்கொண்டு, 'ஸந்யாஸியும் நைஷ்டிகப்ரம்மசாரியுமாயிருப்பவர்' என்பது பழையவுரை.
முதிதர் - எப்போதும் ஆனந்தமாயிருப்பவர்.
முநி - மௌனமாயிருப்பவர். [172 - ஆம் பக்கம்பார்க்க.
முஹூர்த்தம் - முஹூர்த்தமென்னும்காலத்தின்பிரிவாயிருப்பவர்.
மூர்த்தகர் - தலையில் இருப்பவர்; ஸுஷும்நாநாடியில் ப்ரகாசிப்பவரென்பதுகருத்து. [கிறவர்.
மூர்த்திஜர் - சரீரத்திலுண்டாகிறவர்; மனிதசரீரத்தில் ப்ரத்யக்ஷமா
மூலர் - உலகத்திற்குவேராயிருப்பவர்.
மேட்ராஜர் - லிங்கத்தில் ஆவிர்ப்பவிப்பவர்.
மேருதாமர் - மேருவிலிருப்பவர்.
மோக்ஷத்வாரம்-மோக்ஷத்திற்குக்காரணமானவைராக்யமாயிருப்பவர்.
யசஸ் - கீர்த்தியாயிருப்பவர்.
யஜ்ஞபாகவித் - யாகத்திலுள்ள ஹவிர்ப்பாகங்களையடைகிறவர்.
யஜ்ஞர் - யாகரூபி.
யஜ்ஞர் - பூஜிக்கப்படுகிறவர்.
யஜ்ஞர் - யாகமாயிருப்பவர்; 'ஜீவனையும் ஈச்வரனையும்சேர்க்கும் யோகமாயிருப்பவர்' என்பது பழையவுரை.

யஜ்ஞஸமாஹிதர் - யாகத்திலிருப்பவர்; 'யோகமொன்றினுலேயே அடையக்கூடியவர்' என்பது பழையவுரை.

யஜ்ஞஹா - தக்ஷயாகத்தைக்கெடுத்தவர்; 'பசியஜ்ஞத்தைக்கெடுத்தவர்' என்பது பழையவுரை.

யஜுஃப்பாதபுஜர் - யஜுர்வேதமே கால்களும்கைகளுமாகவுடையவர்.

யுக்தபாஹு - முயற்சியுள்ளகைகளையுடையவர்.

யுக்தர் - எல்லாவற்றிலும்சேர்ந்திருப்பவர்; 'யுக்தனந்தராயிருப்பவர்' என்பது பழையவுரை.

யுககரர் - யுகங்களையுண்டுபண்ணுகிறவர்.

யுகரூபர் - யுகமென்னுங்காலமாயிருப்பவர்.

யுகாதிபர் - ஸுகதுக்கம், லாபாலாபம், ஜயாபஜயம், சீதோஷ்ணமுதலான இரண்டுகளுக்கு அதிபதி; நான்குயுகங்களையும்காப்பவர் என்னவுமாம்.

யுகாவஹர் - யுகங்களையுண்டுபண்ணுகிறவர்.

யுதிசத்ருவிநாசநர் - யுத்தத்தில் சத்ருக்களையழிப்பவர்.

யோகர் - யோகமாயிருப்பவர்.

யோகாத்யக்ஷர் - யோகத்தினுல் ஸாக்ஷாத்கரிக்கப்படுபவர்.

யோகி - யோகத்திலிருப்பவர்.

யோஜ்யர் - யோகத்தினுல் அடையத்தக்கவர்.

ரத்நப்ரபூதர் - மிகுந்தயானரத்நங்களையுடையவர்.

ரத்நாங்கர் - ரத்நம்போலச்சிறந்த அங்கமுடையவர்.

ரதயோகிஅக்ஷர் - தேரிற்சேர்ந்தஅச்சாயிருப்பவர்; உலகத்திற்காதாரமானவர் என்பது.

ரதி - ஸுகரூபி.

ரவி - சூரியனுடையபெயர்.

ராஜராஜர் - அரசர்க்குமரசர்; சந்த்ரனுகவிளங்குபவர் என்னவுமாம்; 'குபேரனுகஇருப்பவர்' என்பது பழையவுரை.

ரிக்ஸஹஸ்ராமிதேக்ஷணர்- அநேகரிக்குகளை அநேகம்கண்களாகவுடையவர்.

ருத்ரர் - ஸம்ஹாரகாலத்தில் எல்லாப்ராணிகளையும் அழச்செய்பவர்; 'எல்லாருக்கும்ப்ராணரூபர்; ஸூத்ராத்மா' என்பது பழைய உரை.

ருது - ருதுவென்னும்காலத்தின் பிரிவாயிருப்பவர்.

ரௌத்ரரூபர் - மஹாபைரவரூபமுள்ளவர்.

லகு - சீக்கிரமாகஅநுக்ரஹிப்பவர்.

லம்பனர் - அநேகம்பிரம்மாண்டங்கள் தம்மிடத்தில் தொங்கும்படியிருப்பவர்.

லம்பிதோஷ்டர் - ப்ரளயகாலத்தில் உலகங்களைப்பக்ஷிக்கிறதற்குத் தொங்குகிறஉதட்டையுடையவர்

லயர் - எல்லாவற்றையும்லயிக்கச்செய்கிறவர்.

லலாடாக்ஷர் - நெற்றிக்கண்ணுள்ளவர்.

லவணர் - ஸம்ஹரிப்பவர். 171 - ஆம் பக்கம்பார்க்க.

லவம் - லவமென்னும்காலத்தின் சிறுபிரிவாயிருப்பவர்.

லிங்கம் - மஹத்என்னும் தத்வமாயிருப்பவர்.

லிங்காத்யக்ஷர் - ப்ரமாணங்களினால் அறியப்படுகிறவர்.

லோககர்த்தா - லோகங்களைப்படைத்தவர்.

லோகசாரி - லோகங்களிற்சஞ்சரிப்பவர்.

லோகதாதா - லோகங்களுக்கெல்லாம் ஈசுவரர்.

லோகபாலர் - திக்பாலர்களாயிருப்பவர்.

லோகபாலர் - உலகத்தைக்காப்பவர்.

லோகஹிதர் - உலகங்களுக்கு அநுகூலர்

லோஹிதாக்ஷர் - சிவந்தகண்களையுடையவர்.

வ்யக்தம் - புலப்படுபவர்.

வ்யக்தாவ்யக்தர் - பக்திக்குப்புலப்பட்டும் இந்த்ரியங்களுக்குப் புலப்படாமலும்இருப்பவர்; 'காரியகாரணரூபர்' என்பதுபழையவுரை.

வ்யவஸாயர் - உற்சாகமாயிருப்பவர்.

வ்யாக்ரர் - வ்யாக்ரேச்வரரென்னும் லிங்கமாயிருப்பவர்.

வ்யாலரூபர் - ஸர்ப்பரூபமாயிருப்பவர்: 'ஆதிசேஷரூபி' என்பது பழையவுரை.

வ்யாலர் - வ்யாலரூபி.

வ்ரதாதிபர் - நோன்புகளைக்காப்பவர்.

வ்ருத்தர் - விருத்தியடைந்தவர்; த்ரிவிக்ரமராயிருந்தவர் என்பது.

வ்ருத்தாவ்ருத்தகரர் - யுத்தத்தில் மண்டலமாகச்சுற்றுவதையும் ஜயித்துத்திரும்புவதையும்செய்பவர்.

வ்ருஷணர் கர்மபலன்களைவர்ஷிப்பவர்.

வ்ருஷரூபர் தர்மமேஉருவமாகக்கொண்டவர்,

வ்ருக்ஷகர்ணஸ்திதி - விருக்ஷத்தினுடையகாதுபோன்ற இலையின்மேலிருப்பவர்; ஆலிலைமேல்படுத்திருக்கும் விஷ்ணுரூபியென்பது கருத்து.

வ்ருஷகேது - ஸம்ஸாரவ்ருக்ஷத்திற்குக்கொடிபோலிருப்பவர்.

வ்ருக்ஷர் - மரமாயிருப்பவர்.

வ்ருக்ஷாகாரர் - ஸம்ஸாரவ்ருக்ஷத்தின் வடிவமாயிருப்பவர்.

வகுளம் - மகிழமரமாயிருப்பவர்.

வச்யர் - பக்தருக்கு வசப்படுகிறவர்.

வசகரர் - எல்லாரையும்வசப்படுத்துகிறவர்.

வசீகரர் - எல்லாவற்றையும் தம்அதீனதலைவைத்திருப்பவர்.
 168 - ஆம் பக்கம்பார்க்க.

வணிஜர் - வர்த்தகராயிருப்பவர்.

வதர் - மிருத்யுவாயிருப்பவர்; 171 - ஆம் பக்கம்பார்க்க.

வம்சகரர் - ஸந்ததிவிருத்திசெய்கிறவர்.

வம்சநாதர் - புல்லாங்குழலின் ஸ்வரமாயிருப்பவர்.

வம்சர் - புல்லாங்குழலாயிருப்பவர்.

வர்ணவிபாவி - நிறங்களைப் பலவகைகளாகக்காட்டுகிறவர்; நான்குவர்ணங்களையுண்டுபண்ணினவர் என்னவுமாம்.

வர்த்தகி - தச்சனாயிருப்பவர்.

வர்த்தநர் - ஆத்மாவையுமதேகத்தையும் வ்ருத்திசெய்பவர். 170-ஆம் பக்கம்பார்க்க.

வரதர் - வரங்களைக்கொடுப்பவர்.

வாதர் - வரங்கொடுப்பவர்; 'சிறந்தஉருவங்களெடுத்துத் தயைசெய்பவர்' என்பது பழையவுரை.

வரர் - எல்லாவற்றையும்மறைத்து வ்யாபித்திருப்பவர்.

வரர் - க்ரஹங்களினால்ப்ரார்த்திக்கப்பட்டவர்; 'பிருகஸ்பதி, சுக்கிரன்' என்பது பழையவுரை.

வரர் - விரும்பப்படுகிறவர்.

வரேண்யர் - வரங்கேட்கத்தக்கவர்.

வரோவாராஹர் - ஆதிவாராஹரூபி.

வஜ்ரஹஸ்தர் - வஜ்ராயுதத்தைக்கையிற்பிடித்தவர்; "பர்வதங்களைப் பிளக்கும் இந்த்ரனாயிருப்பவர்' என்பது பழையவுரை.

வஜ்ரி - இந்த்ரனாயிருப்பவர்.

வஜ்ரி - வஜ்ராயுதம்தரித்தவர்.

வஸுவேகர் - வாயுவேகமுள்ளவர்.

வஸுச்ரேஷ்டர் - த்ரவ்யத்திலும்சிறந்தவர்.

வாசஸ்பத்யர் - பிருஹஸ்பதியைஅநுசரித்தவர்; புரோஹிதராயிருப்பவரென்பது.

வாதர் - யாவராலுமடையப்பட்டவர்.

வாதரம்ஹஸ் - காற்றுவேகமுள்ளவர்.

வாமதேவர் - பிரார்த்திக்கப்படும்தேவர்; 'கர்மபலன்களுக்குச்சுவரர்' என்பது பழையவுரை.

வாமநர் - குறளாயிருப்பவர்; 'வாமநாவதாரம்செய்த விஷ்ணுரூபி' என்பது பழையவுரை.

வாமர் - அழகானவர்; 'ஆனந்தஸ்வரூபர்' என்பது பழையவுரை.

வாயுவாஹநர் - காற்றை வாஹநமாகவுடையவர்.

வாஜஸநர் - வாஜஸனேயம்என்னும் சாகையை ப்ரவ்ருத்திக்கச்செய்தவர்.

வாஸவர் - இந்திரனாயிருப்பவர்.

விக்யாதோலோகர் - வெளிப்படையான ப்ரகாசமானவர்.

விக்ருதர் - ஸ்வபாவம் மாறுகிறவர்.

விகுர்வணர் - கெட்டவரைக்கோபிப்பவர்; 'கர்மத்தினால் அடையப்படாதவர்' என்பது பழையவுரை.

விச்வகர்மமதி - விச்வகர்மாஎன்னும் தேவசிற்பியின்புத்தியாயிருப்பவர்; உலகத்திலுள்ளசெய்கைகளையறிபவர் என்னவுமாம்.

விச்வதேவர் - எல்லாருக்கும்தேவர்; 'விச்வமென்னப்பட்டவிஷ்ணுவுக்கும் தேவர்' என்பது பழையவுரை.

விச்வதேவர் - உலகத்தால் விளையாடுகிறவர்.

விச்வபாஹு - உலகங்களில்வ்யாபிக்கும் கைகளையுடையவர்.

விச்வர் - எல்லாவற்றையும தம்முளவைத்திருப்பவர்.

விச்வரூபர் - எங்கும்காணப்படுகிறவர்.

விச்வரூபர் - எல்லாஉருவங்களையும்படைத்தவர்.

விச்வக்ஷேத்ரம் - உலகங்களுக்கு ஆதாரமானவர்.

விசாகர் - குமாரக்கடவுளாயிருப்பவர்; 'இந்த்ரன் வஜ்ராயுதத்தினால் அடித்தபோது கார்த்திகேயரிடமிருந்துஉண்டாகி அவருக்குச் சகாயமாயிருந்தவர்' என்பது பழையவுரை.

விசாம்பதி - மனிதர்களுக்குநாதர்.

விசாரதர் - எல்லாம்தெரிந்தவர்.

விசாரவித் - ஆத்மவிசாரம்அறிந்தவர்.

விசாலசாகர் - பெரியகைகளையுடையவர்.

விசாலர் - வ்யாபித்திருப்பவர்.

விசாலாக்ஷர் - அகன்றகண்களையுடையவர்.

வித்வாந் - எல்லாம்தெரிந்தவர்.

விதாதா - கட்டளையிடுகிறவர்; 'பலவகைகளால் போஷிப்பவர்' என்பது பழையவுரை.

**விநதர்** - வணக்கமுள்ளவர்.

**விபணர்** - விலையில்லாதவர்; 'வ்யவஹாரம் இல்லாதவர்; தண்டமுதலியன இல்லாதவர்' என்பது பழையவுரை.

**விபாகர்** - உலகத்திலிருந்து தனித்திருப்பவர்; அவயவமில்லாதவரென்னவுமாம்.

**விபாகஜ்ஞர்** - அவரவர்கர்மங்களுக்குத்தக்கபடி பலன்களைப் பகுக்கத் தெரிந்தவர்.

**விபு** - அநேகம்ரூபங்களாயிருப்பவர்.

**விபு** - எல்லாப்ராணிகளுக்கும் ஈசுவரர்.

**விபு** - பலரூபங்களாக ஆகிறவர்.

**விபு** - வ்யாபித்திருப்பவர்.

**விபுதர்** - விசேஷமாக அறிந்தவர்.

**விமர்சர்** - ஞாநரூபி.

**விமுக்தர்** - முழுதும்விடுபட்டவர்.

**விமோசநர்** - ஸம்ஸாரத்தைவிடுவிப்பவர்.

**விரஜர்** - ரஜோகுணமற்றவர்.

**விராமர்** - பகைவரையொழிப்பவர்; விஷயங்களிலிருந்து ஒழிந்திருப்பவரென்னவுமாம்.

**விரூபர்** - உருவமாறியிருப்பவர்; பல உருவங்களாகத் தோற்றுகிறவர் என்பது.

**விவஸ்வாந்** - கிரணங்களையுடையவர்; 172-ஆம் பக்கம்பார்க்க.

**விஜயகாலவித்** - ஜயிக்கும்தருணம் அறிந்தவர்.

**விஜயர்** - ஜயமாயிருப்பவர்.

**விஜயாக்ஷர்** - எல்லாவற்றையும் ஜயிக்கும்தேரையுடையவர்.

**விஷ்கம்பி** - விஸ்தாரமுள்ளவர்.

**விஷ்ணு** - பன்னிரண்டுசூரியரைச்சேர்ந்தவர்; அல்லது, வ்யாபிப்பவர்.

**விஷ்ணுப்ரஸாதிதர்** - விஷ்ணுவினால் ஆராதிக்கப்பட்டவர்; 'சக்ரத்தைப் பெறுவதற்காக விஷ்ணுவினால் ஆராதிக்கப்பட்டவர்' என்பது பழையவுரை.

**விஷ்வக்ஸேநர்** - எங்கும் பரவும்ஸேனையுடையவர்.

**விஷண்ணாங்கர்** - விசனத்தினால் ஓய்ந்த அங்கமுடையவர்; 'பூமிமுதலிய அங்கங்கள் அவரிடம முழுதும்லயிக்கின்றன; அதனால் அடங்கிய அங்கங்களுள்ளசுத்தர்; வ்யாபகர்' என்பது பழையவுரை.

**விஸ்தாரர்** - எல்லாவற்றையும்மறைப்பவர்; 171-ஆம் பக்கம்பார்க்க.

விஸர்க்கர் - விஸர்க்கமானவர்; படைப்பவரென்றுமாம்.

வேணவி - வேணுவாத்யமுள்ளவர்.

வேதகாரர் - வேதங்களையுண்டுபண்ணினவர்.

வைச்ரவணர் - குபேரர்.

வைத்யர் - வித்தைகள்நிரம்பினவர்.

வைதம்பர் - கபடமில்லாதவருக்கு வேண்டினவர்.

ஜ்யோதிஷாம்அயநர் - நக்ஷத்திரமுதலியவற்றிற்கு மார்க்கமாயிருப்பவர்.

ஜ்வாலி - ஜ்வாலைகளையுடையவர்.

ஜகத் - உலகத்திலுள்ள பொருள்கள்யாவுமாயிருப்பவர்; 'எப்பொழுதும் மாறிக்கொண்டேயிருப்பதனால் அவ்யாக்ருதமுதல் கடம் வரையிலுள்ள அழியும் ஸ்வபாவமுள்ள வஸ்துவாயிருப்பவர்' என்பது பழையவுரை.

ஜகத்காலஸ்தாலர் - உலகத்தைவிழுங்கும்யமனையே போஜன பாத்ரமாக உடையவர்; யமன்வழியாக எல்லாவற்றையும் தாமேயழிப்பவர் என்பது.

ஜங்கமர் - சஞ்சரிப்பவர்.

ஜடாதரர் - ஜடையைத்தரிப்பவர்.

ஜடி - ஜடைதரிப்பவர்

ஜடி - ஜடையுள்ளவர்; 'வானப்ரஸ்தர்' என்பது பழையவுரை.

ஜய்யர் - யுத்தத்தில் ஸமர்த்தர்.

ஜலேசயர் - ஜலத்தில்படுத்திருப்பவர்: 'ஜலத்தில் சேஷன்மீதுபடுத்திருக்கும் விஷ்ணுவாயிருப்பவர்' என்பது பழையவுரை.

ஜலோத்பவர் - ப்ரளயஜலத்திலுண்டானவர்.

ஜாஹ்நவீத்ருக் - கங்காதரர்.

ஜிதகாமர் - காமனையடக்கினவர்.

ஜிதேந்த்ரியர் - ஐம்புலன்களையுமடக்கினவர்.

ஜீவகர் - ஜடப்பொருளுக்குச் சீவனையுண்டுபண்ணுகிறவர்.

ஷஷ்டிபாகர் - அறுபதுபாகங்களையுடையவர்; அவையாவன; ஜாக்ரதவஸ்தை 1, வெளியில் பிரவ்ருத்திக்கும்ஞானம் 1, சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்தங்கள் 5, நினைக்கத்தக்கது அறியத்தக்கது 2, ஞானேந்த்ரியங்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, பிராண அபான வியான உதான ஸமானங்களென்னும் வாயுக்கள் 5, மனம், புத்தி, அகங்காரம், சித்தம் 4, உலகத்திலுள்ள ஸ்தூலமானபொருள் 1, இவை இருபத்தொன்பது; பிறகு, ஸ்வப்நாவஸ்தை 1, உள்ளே

ப்ரவ்ருத்திக்கும்ஞானம் 1, அதில்தோற்றும் ஸூக்ஷ்மமாயுள்ள மேற்சொன்னசப்தமுதலியவை 27, இவை இருபத்தொன்பது; ஸுஷுப்தி 1, அதிலுள்ள கேவலஸுகம் 1, ஆகஅறுபது.

ஸ்கந்தர் - ஸுப்ரம்மண்யரூபி.

ஸ்தாணு - ஸ்தம்பம்போல உலகங்களுக்கு ஆதாரமானவர்.

ஸ்தாவராணாம்பதி - மலைகளுக்கு அரசான இமயமலையாயிருப்பவர்.

ஸ்திரர் - அழியாதவர்.

ஸ்திரர் - ஸ்தாவரமாயிருப்பவர்.

ஸ்நேஹநர் - ஆச்ரிதரிடத்தில் அன்புள்ளவர்.

ஸ்ருகாலரூபர் - நரிஉருவமெடுத்த இந்திரனாயிருப்பவர். இக்கதையைச் சாந்திபர்வம் 612 - ஆம் பக்கமுதல் விரிவாகக்காண்க.

ஸ்ருதர் - எங்கும்வ்யாபிப்பவர்.

ஸ்ருவஹஸ்தர் - ஸ்ருவமென்னும் யாகபாத்ரத்தைக் கையில்வைத்திருப்பவர்.

ஸ்வயம்ச்ரேஷ்டர் - தம்மாலேயே மேன்மையையடைந்தவர்.

ஸ்வயம்பூதர் - தாமேயுண்டானவர்.

ஸ்வர்க்கத்வாரம் - ஸ்வர்க்கத்திற்குக் காரணமானதவம்.

ஸ்வர்ணரேதஸ்-பொன்மயமான அண்டமாகப்பரிணமிக்கும் ரேதஸையுடையவர்.

ஸ்வர்ப்பாநு - ராகுவாயிருப்பவர்; அல்லது, ஸ்வர்என்று சொல்லப்பட்ட நித்யானந்தத்தினல் ப்ரகாசிப்பவர்.

ஸ்வஸ்திதர் - மங்களத்தைக்கொடுப்பவர்.

ஸ்வஸ்திபாவர் - சிறந்தஇருப்பையுடையவர்.

ஸகணர் - ப்ரமதக்கணங்களுடன்கூடினவர்.

ஸகலர் - நிறைந்திருப்பவர்.

ஸகாமாரி - காமசத்ருக்களானயோகிகளோடிருப்பவர்; 169-ஆம் பக்கம்பார்க்க.

ஸங்க்யாஸமாபநர் - ருது, ஸம்வத்ஸரம், மாஸம், பக்ஷம் இவற்றின் ஸங்க்யைகளைமுடிக்கும் கடைசித்தினமாயிருப்பவர்.

ஸங்க்ராஹர் - எல்லாரையும் அங்கீகரிப்பவர்; "பாணன்முதலிய அடியார்களைச் சேர்த்துக்கொள்பவர்" என்பது பழையஉரை.

ஸத் - காரணமாயிருப்பவர்; 'காரியமாயிருப்பவர்' என்பது பழையவுரை.

ஸத் - காரணம்; 'கார்யம்' என்பது பழையவுரை.

ஸத்க்ருதர் - யாவராலும் பூஜிக்கப்பெற்றவர்.

ஸத்யவ்ரதர் - ஸத்யத்தையேவிரதமாகவுடையவர்.
ஸபலோதயர் - தாம் ப்ரத்யக்ஷமாவது பயன்படும்படியேயிருப்பவர்.
ஸபாவநர் - ஸபைகளைக்காப்பவர்.
ஸம்பக்நர் - எல்லாராலும் செம்மையாக ஆச்ரயிக்கப்பட்டவர்.
ஸம்பந்நர் - எல்லாம்நிரம்பினவர்.
ஸம்யதர் - ஆச்ரிதர்களுக்குக் கட்டுப்பட்டவர்.
ஸம்யுகாபீடவாஹனர் - யுத்தத்தில் த்வஜமாயிருக்கும் வ்ருஷப வாஹநமுடையவர்.
ஸம்யோகர் - ஆத்மாவையும் தேகத்தையும்சேர்ப்பவர்; 170 - ஆம் பக்கம்பார்க்க.
ஸம்வத்ஸராகரர் - வருஷமுதலான காலசக்ரத்தைநடத்துகிறவர்.
ஸம்வத்ஸரம் - ஸம்வத்ஸரமென்னும் காலத்தின் பிரிவாயிருப்பவர்.
ஸம்க்ஷேபவிஸ்தாரஸ்ஸர்க்கர் - முறையே சுருக்கமும் விரிவுமாகிய ஸூத்திரம் பாஷ்யமுதலிய கிரந்தங்களாயிருப்பவர்.
ஸமராமர்த்தநர் - யுத்தத்தில் பகைவரைமாய்ப்பவர்.
ஸமாம்நாயர் - வேதமாயிருப்பவர்.
ஸமுத்ரர் - ஸமுத்ரரூபி.
ஸயஜ்ஞாரி-யஜ்ஞசத்ருக்களான அஸுரர்களோடும்இருப்பவர்; 169-ஆம் பக்கம்பார்க்க.
ஸர்ப்பசீரநிவாஸநர் - பாம்புச்சட்டையை ஆடையாகவுடையவர்; 'பாம்பையே வஸ்திரத்தின் நடுக்கட்டாகவுடையவர்' என்பது பழையஉரை.
ஸர்வகந்தஸ்ஸுகாவஹர், - எல்லா வாஸனைகளின் ஸுகங்களையும் உண்டுபண்ணுகிறவர்; 170 - ஆம் பக்கம்பார்க்க.
ஸர்வகர் - எங்குமிருப்பவர்.
ஸர்வகர்மணாமுத்தாநர் - நல்வினை தீவினையெல்லாவற்றையும் ஸ்ருஷ்டிகாலத்தில் தலையெடுக்கச்செய்பவர்.
ஸர்வகர்மா - எல்லாச்செய்கைகளையுமுடையவர்.
ஸர்வகரர் - எல்லாவற்றிற்கும் கர்த்தா.
ஸர்வகாமகுணாவஹர் - யாவரும் விரும்பத்தக்க குணங்களையுண்டு பண்ணுகிறவர்.
ஸர்வகாமதர் - எல்லாஇஷ்டங்களையும் கொடுப்பவர்.
ஸர்வகாமர் - எல்லாஇஷ்டங்களையும் அடைந்தவர்.
ஸர்வகாமவரர் - விரும்பப்படுபவற்றுளெல்லாம் சிறந்தவர்.
ஸர்வகாலப்ரஸாதர் - எல்லாக்காலங்களிலும் அநுக்ரஹஞ்செய்பவர்.

ஸர்வகோவாயு - எங்குமிருக்கும்வாயு; காற்று.
ஸர்வசாரி - எங்குஞ்சஞ்சரிப்பவர்.
ஸர்வசாரி - எங்குமிருப்பவர்.
ஸர்வசுபங்கரர் - எல்லாமங்களங்களையுஞ்செய்பவர்.
ஸர்வதர் - எல்லாவற்றையுங்கொடுப்பவர்.
ஸர்வதாரி - எல்லாவற்றையுந்தாங்குகிறவர்.
ஸர்வதூர்யநிநாதி - எல்லாவாத்யசப்தங்களுமுள்ளவர்.
ஸர்வதேவமயர் - எல்லாத்தேவர்களாகவுமிருப்பவர்.
ஸர்வதேவமயர் - எல்லாத்தேவர்களையும் தம் அங்கங்களாகவுடையவர்.
ஸர்வதேவர் - எல்லாத்தேவர்களின்சக்திகளும் ஒன்றுசேர்ந்தவர்.
ஸர்வதேஹிநாம்இந்த்ரியர் - எல்லாப்பிராணிகளின் புலன்களாகவுமிருப்பவர்.
ஸர்வதோமுகர் - எங்கும் முகங்களுள்ளவர்.
ஸர்வபார்ச்வமுகர் - எல்லாப்பக்கங்களிலுமுகங்களுடையவர்.
ஸர்வபாவகரர் - எல்லாப்பதார்த்தங்களையும் உற்பத்திபண்ணுகிறவர்.
ஸர்வபாவநர் - எல்லாவற்றையும் உண்டுபண்ணினவர்.
ஸர்வபாவநர் - எல்லாரையும் பரிசுத்தமாக்குகிறவர்.
ஸர்வபூதஹரர் - எல்லாப்ராணிகளையும் ஸம்ஹரிப்பவர்.
ஸர்வபூதாத்மா - எல்லாப்ராணிகளையும் தமக்குத் தேகங்களாகவுடையவர்.
ஸர்வபூதாநாம்வாஹிதா - எல்லாப்ராணிகளையும் நடத்துகிறவர்.
ஸர்வபூஜிதர் - யாவராலும் பூஜிக்கப்பெற்றவர்.
ஸர்வயோகி - எல்லாவற்றிலும்சேர்ந்திருப்பவர்.
ஸர்வர் - அபிமுகமாகவருகிறவர்.
ஸர்வர் - தாம்வியாபிகதிருப்பதனால் எல்லாமாயிருப்பவர்.
ஸர்வரத்நவித் - எல்லாச்சிறந்தபொருள்களையும் அடைந்திருப்பவர்.
ஸர்வலக்ஷணலக்ஷிதர் - எல்லாநல்லலக்ஷணங்களும்பொருந்தினவர்.
ஸர்வலாலஸர் - எல்லாரிடத்தும் அன்புள்ளவர்.
ஸர்வலோகக்ருத் - எல்லாஉலகங்களையும்படைப்பவர்.
ஸர்வலோகப்ரஜாபதி - எல்லாலோகங்களிலுமுள்ள ப்ரஜைகளுக்கும் தலைவர்.
ஸர்வலோசநர் - எல்லாவற்றையுமறிகிறவர்.
ஸர்வவாஸர் - எங்குமிருப்பவர்.
ஸர்வவாஸீ - எல்லாஇடங்களிலுமிருப்பவர்.
ஸர்வவிக்யாதர் - எல்லாவிடங்களிலும் எல்லாக்காலங்களிலும் எல்லாப்ராணிகளுக்கும் ப்ரஸித்தமாகத்தெரிந்திருப்பவர்.

**ஸர்வவிக்ரஹர்** - எல்லாவற்றையும் தமக்குச்சரீரமாயுடையவர்.

**ஸர்வஜ்ஞர்** - எல்லாவற்றையும்அறிந்தவர்.

**ஸர்வஸாதகர்** - எல்லாப்பயன்களையும்கொடுப்பவர்.

**ஸர்வஸாதுநிஷேவிதர்** - எல்லாஸாதுக்களாலும் அடையப்பெற்றவர்.

**ஸர்வாங்கர்** - உலகங்களையெல்லாம் தமக்கு அங்கங்களாகவுடைய விராட்புருஷர்.

**ஸர்வாங்கர்** - எல்லாவற்றையுமடைந்திருப்பவர்; உலகமெல்லாம் தமக்கு அங்கமாகஉடையவர் என்னவுமாம்.

**ஸர்வாங்கரூபர்** - எல்லா அங்கங்களிலும் அழகுள்ளவர்.

**ஸர்வாச்ரயக்ரமர்** - எல்லாவற்றிலுமுள்ள ஒழுங்காயிருப்பவர்.

**ஸர்வாசயர்** - எல்லாவற்றிற்குமிருப்பிடமானவர்.

**ஸர்வாத்மா** - எல்லாவற்றிற்கும் ஆத்மாவாயிருப்பவர்.

**ஸர்வாதோத்யபரிக்ரஹர்** - எல்லாவாத்தியங்களையும் க்ரஹிப்பவர்; 'எல்லாஜீவன்களையும் குடும்பமாகவுடையவர்' என்பது பழையவுரை.

**ஸர்வாயுதர்** - எல்லாஆயுதங்களையும்தரிப்பவர்.

**ஸர்வேஷாம்ப்ராணிநாம்பதி** - எல்லாப்ராணிகளுக்கும்ஸ்வாமி.

**ஸவிதா** - சூரியனுடையபிதா.

**ஸவிதா** - படைப்பவர்; 172 - ஆம் பக்கம்பார்க்க.

**ஸஹர்** - சக்தர்.

**ஸஹஸ்ரதர்** - மிகுதியாகக்கொடுப்பவர்.

**ஸஹஸ்ரபாத்** - ஆயிரம்கால்களையுடையவர்.

**ஸஹஸ்ரபாஹு** - ஆயிரம்கைகளையுடையவர்.

**ஸஹஸ்ரமூர்த்தா** - ஆயிரம்தலைகளையுடையவர்.

**ஸகஸ்ரஹஸ்தர்** - ஆயிரம்கைகளையுடையவர்.

**ஸஹஸ்ராக்ஷர்** - ஆயிரம்கண்களையுடையவர்; எங்கும்பார்ப்பவர் என்பது கருத்து.

**ஸஹாயர்** - யாருக்குந்துணையாயிருப்பவர்.

**ஸாங்க்யப்ரஸாதர்** - ஆத்மஸ்வரூபத்தைத் தெளிவித்தவர்; 'கபிலரூபி' என்பதும், 'தத்தாத்ரேயரூபி' என்பதும் பழையவுரை.

**ஸாத்யரிஷி** - ஸாத்யர்கள்என்னும்தேவர்களுக்கு ஞானத்தையளிப்பவர்.

**ஸாமாஸ்யர்** - ஸாமவேதத்தை வாயாகஉடையவர்.

**ஸாரக்ரீவர்** - உறுதியானகழுத்தையுடையவர்; விஷந்தாங்கினதினால் என்றகருத்து.

ஸாரங்கர் - சிறந்த அங்கமுள்ளவர்; அல்லது, சிறந்தபொருள்களையுடையவர்; 'சாதகபக்ஷி' என்பது பழையவுரை.

ஸித்தபூதார்த்தர் - தவஸித்திபெற்றவர்கள் அடைந்தபயனாயிருப்பவர்.

ஸித்தயோகி - ஸித்திபெற்றயோகி ; 'ஸநத்குமாரர்முதலியோராயிருப்பவர்' என்பது பழையவுரை.

ஸித்தஸாதகர் - தவஸித்திபெற்றவர்களுக்கு அபீஷ்டத்தை ஸாதிப்பவர் ; 'ஞானம்வந்தபின் ஸந்யாஸத்தைவிரும்பிய யாஜ்ஞவல்க்யர் முதலிய வித்வான்களான ஸந்யாஸிகளாயிருப்பவர்' என்பது பழையவுரை

ஸித்தார்த்தகாரி - ஸித்தர்களுக்கு ப்ரயோஜனத்தைச்செய்பவர்.

ஸித்தார்த்தர் - விரும்பினவையெல்லாம் அமைந்திருப்பவர்.

ஸித்தார்த்தர் - பிரயோஜனங்களெல்லாம் சித்தித்திருப்பவர் ; 'ரிஷபர் தத்தாத்ரேயர்முதலியோராயிருப்பவர்' என்பது பழையவுரை.

ஸித்தார்த்தர் - கையிலுள்ளபொருளாயிருப்பவர் ; 170 - ஆம் பக்கம் பார்க்க.

ஸித்தார்த்தர் - எல்லாப்பயன்களும் கைகூடினபரிபூரணர்.

ஸித்தி - கார்யஸித்தியாயிருப்பவர்.

ஸிம்மகர் - ஸிம்மம்போலநடப்பவர்.

ஸிம்மசார்த்தூலரூபர் - சிங்கம் புலி உருவமாயிருப்பவர்.

ஸிம்மதம்ஷ்ட்ரர் - ஸிம்மம்போலக் கோரப்பற்களுள்ளவர்.

ஸிம்மநாதர் - ஸிம்மம்போலக் கர்ஜிப்பவர்.

ஸிம்மவாஹநர் - ஸிம்மத்தை வாகனமாகவுடையவர்.

ஸுகந்தாரர் - நல்லமணத்தையுடையவர் ; 'நல்லகாந்தாரதேசத்திற் பிறந்தவர்' என்பது பழையவுரை.

ஸுகாஜாதர் - ஸுகத்திற்காகப்பிறந்தவர் ; அல்லது, ஸுகரூபியாகப் பிறந்தவர்.

ஸுகாஸக்தர் - இன்பங்களிற்பற்றில்லாதவர்.

ஸுச்சத்ரர் - அழகானகுடையுள்ளவர் ; தமக்குத்தாபமில்லாதவர் என்பது.

ஸுசாரதர் - இனியவாக்குள்ளவர்.

ஸுதர்சநர் - மங்களகரமானபார்வையுடையவர்.

ஸுதீர்த்தர் - நல்லஆசார்யர்.

ஸுதீக்ஷ்ணதசநர் - மிகக்கூர்மையான பற்களையுடையவர்.

ஸுநிச்சலர் - மிகவும் அசையாதவர் ; 'மலைமுதலியவையாயிருப்பவர்' என்பது பழையவுரை.

ஸுபந்தவிமோசகர் - ஸம்ஸாரபந்தத்தைவிடுவிப்பவர்.
ஸுபலர் - லோகோபகாரமான ஸாமர்த்தியமுள்ளவர்.
ஸுபாந்தவர் - நல்லஉறவினர்.
ஸுபீஜர் - விதையாயிருக்கும்மூலப்ராக்ருதியைத் தம் ஸம்பந்தத்தினால் பயன்படச்செய்தவர்.
ஸுமஹாஸ்வநர் - மிகச்சிறந்தத்வனியுள்ளவர்; 'ஹயக்ரீவரூபமுள்ளவர்' என்பது பழையவுரை.
ஸுமுகர் - நல்லமுகமுள்ளவர்.
ஸுயுக்தர் - மிக்கஜாக்ரதையுள்ளவர்.
ஸுரகர்ணர் - தேவர்களால் நினைக்கப்படுகிறவர்.
ஸுராயுத்தாமா - குணமுள்ளவர்களைக் கரையேற்றுகிறவர்; 'சிவனுடைய சிரஸைப்பார்த்ததாகப் ப்ரம்மதேவர் பொய்சொன்னதற்குக் காமதேனுவைச் சாக்ஷியாகக் கூறியதனால் அதைச்சபித்துக் கீழ்ப்படுத்தினவர்' என்பது பழையவுரை.
ஸுராத்யக்ஷர் - தேவர்களுக்குஅதிபதி.
ஸுராரிஹா - அசுரரைக்கொன்றவர்.
ஸுரூபர் - அழகான நிறமுள்ளவர்.
ஸுவக்த்ரர் - அழகானமுகமுள்ளவர்.
ஸுவர்ச்சஸர் - அழகானபகிஸ்யையுள்ளவர்.
ஸுவர்ச்சஸி - அழகானஒளியுள்ளவர்.
ஸுவர்ணர் - அழகானநிறமுள்ளவர்.
ஸுவாஸர் - சிறந்தவாஸஸ்தலமுள்ளவர்; சிறந்தவாஸனையுள்ளவர் என்னவுமாம்.
ஸுவிஜ்ஞேயர் - எளிதாக அறியக்கூடியவர்.
ஸுஷேடர் - எல்லாவற்றையுமெளிதாகத்தாங்குகிறவர்.
ஸுஸ்வப்நர் - சிறந்தயோகநித்ரையுள்ளவர்; 'ஸ்வப்நாவஸ்தைக்கு அபிமானதேவதையான தைஜஸர்' என்பது பழையஉரை.
ஸுஸரணர் - எளிதாக அடையக்கூடியவர்.
ஸுஸஹர் - மிகப்பொறுப்பவர்.
ஸுஹ்ருதர் - நல்லஹ்ருதயமுள்ளவர்.
ஸூரியர் - எல்லாவற்றையும் நடத்துகிறவர்.
ஸூக்ஷ்மர் - ஸூக்ஷ்மஞானமுள்ளவர்.
ஸூக்ஷ்மாத்மா - அறிவுக்கெட்டாத ஸ்வரூபமுடையவர்.
ஸேநாகல்பர் - ஸேனைகளையுண்டுபண்ணுகிறவர்; 'ஸேனைகளுக்கு அலங்காரமான பராக்ரமமாயிருப்பவர்' என்பது பழையஉரை.

ஸேநாபதி - ஸேனைகளுக்குத்தலைவர்.
ஸோமர் - ஸோமலதாரூபி.
ஹ்லாதநர் - ஆனந்தமுண்டுபண்ணுகிறவர்.
ஹயகர்த்தபி - குதிரைகளும் கோவேறுகழுதைகளும் கட்டினதேரேறு கிறவர்.
ஹர்யச்வர் - பச்சைநிறமான குதிரைகளையுடையவர். ஸூர்யரூபி என்பது கருத்து.
ஹர்யக்ஷர் - ஸிம்மஸ்வரூபி
ஹரர் - எல்லாப்பதார்த்தங்களையும் அழிப்பவர்.
ஹரர் - தம்குணங்களினாலே மனத்தையிழுப்பவர்; பக்தியினால் வசப் படுத்துகிறவர் என்னவுமாம்; 'எல்லாரையும்கொல்வதான சூலா யுதத்தை க்ரஹிப்பவர்' என்பது பழையவுரை.
ஹரர் - துயரங்களைஹரிப்பவர்.
ஹரி - ஆஞ்சநேயராயிருப்பவர்; 'இராமாவதாரஞ்செய்த விஷ்ணுவுக்கு ஸஹாயர்' என்பது பழையவுரை.
ஹரி - துக்கத்தைஹரிப்பவர்.
ஹரி - விஷ்ணுரூபி.
ஹரி - விஷ்ணுரூபியானவர்.
ஹரிகேசர் - செம்மட்டைமயிர்களையுடையவர்; 'இந்த்ரியங்களையே கிரணங்களாகவுடையவர்' என்பதும், 'பிரம்மா விஷ்ணு மகேசு வரரென்னும் மும்மூர்த்திகளுமானவர்' என்பதும் பழைய வுரை.
ஹரிணர் - பொன்னிறமானவர்; தக்ஷயாகத்தில் மானுகவடிவமெடுத் தவர்; வெளுப்பாயிருப்பவர்; 'சுத்தர்' என்பது பழையவுரை.
ஹரிணர் - பொன்னிறமானவர்; 'மான்வடிவமானவர்' என்பது பழையவுரை.
ஹரிணாக்ஷர் - சிவந்தகண்களையுடையவர்; 'ம்ருகேந்த்ரர்' என்பது பழையவுரை
ஹவி - ஹோமத்ரவ்யமாயிருப்பவர்.
ஹவிஸ் - அன்னரூபியாயிருப்பவர்.
ஹஸ்தீச்வரர் - காலஹஸ்தீசுவரரென்னும் வாயுலிங்கரூபி.
ஹிமவத்கிரிஸம்ச்ரயர் - இமயமலையிலிருப்பவர்.
ஹிரண்யகவசோத்பவர் - பொன்மயமான கவசத்தினால்பிரகாசிப்பவர்; மாயையே கவசமென்பது கருத்து.
ஹிரண்யபாஹு - அழகானகைகளையுடையவர்.

ஹூதர் - எல்லாராலும் ஓமத்தினல் திருப்திசெய்விக்கப்படுகிறவர்.
ஹூதாசநர் - அக்நியாயிருப்பவர்.
ஹூதாசநஸஹாயர் - வாயுஸ்வரூபி.
ஹேமகரர் - பொன்னையுண்டாக்குகிறவர்.
ஹைமர் - பொன்னிறமாயிருப்பவர்; 'இமயமலைரூபமாயிருப்பவர்' என்பது பழையஉரை.

க்ஷணம் - க்ஷணமென்னும்காலத்தின் சிறியபிரிவாயிருப்பவர்.
க்ஷபா - இரவாயிருப்பவர்; 172 - ஆம் பக்கம்பார்க்க.
ஸ்ரீயாவாஸி - ஸ்ரீயென்றுசொல்லப்பட்டவித்தையுடன் வஸிப்பவர்.
ஸ்ரீமாந் - ஐசுவரியமுள்ளவர்.
ஸ்ரீவர்த்தநர் - அடுத்தவருக்கு ஐசுவரியத்தை வ்ருத்தி பண்ணுகிறவர்.

இவ்வாறு முக்கியமான நாமங்களினல் பகவானை நான் துதித்தேன். துதிக்கத்தக்கவரும் பூஜிக்கத்தக்கவரும் நமஸ்கரிக்கத்தக்கவருமான எந்தஜகதீசுவரரை ப்ரம்மாதிதேவர்களும் ரிஷிகளும் உண்மையாக அறியார்களோ அவரை எவன் துதிக்கவல்லவன்? ஆனல், நான் பக்தியைமுன்னிட்டு அவரிடத்தில் உத்தரவுபெற்றுக்கொண்டு யாகங்களுக்குஸ்வாமியும் ஞானவான்களிற்சிறந்தவருமான அந்தப் பிரபுவை இவ்வாறு துதித்தேன். தினந்தோறும் மனவடக்கமும் சுத்தமும் பக்தியுமுள்ளவனகிச் செல்வத்தைவிருத்திசெய்யும் இந்தநாமங்களினல் பகவானனசிவனைத் துதிப்பவன் தனனத்மாவைப் பரமாத்மாவினிடம்சேர்ப்பான். இந்தச்சங்கராநாம பரப்ரம்மம். ஆதலால், துதிப்பவன் பரப்ரம்மத்தை அடைவான். ரிஷிகளும் தேவர்களும் இந்தஸ்தோத்திரத்தினலேதான் அந்தப்பரம்பொருளைத் துதிக்கின்றனர். பக்தர்களிடம் அன்புள்ளவரும் ஆத்மாக்களுக்கு நல்லநிலைமையைச்செய்கிறவரும் பிரபுவுமாகிய பகவான்மஹாதேவர் மனத்தில் பக்தியோடுதுதிப்பதனல் அநுக்ரஹமுள்ளவராகிறார். அப்படியே மனிதர்களிலும், ஆஸ்திகர்களும் சிரத்தையுள்ளவர்களும் பக்தியுள்ளவர்களும் அளவற்றமஹிமையுள்ளவர்களுமானசிறந்தவர்கள் தமக்கு மேலில்லாதஈசுவரரும் அநாதியும் பரதேவதையுமான அந்தச்சிவபெருமானை அநேக ஜன்மங்களில் பக்தியுடன் ஸ்தோத்திரங்களினல் துதித்துத் தூங்கும்போதும் விழித்துக்கொண்டிருக்கும்போதும் நடக்கும்போதும் உட்காரும்போதும் இமையைத்திறக்கும்போதும் மூடும்போதும் உள்ளன்புடன் மனம்வாக்குக்காயங்களினல் அடிக்கடி தியானிப்பவர்களும் கேட்பவர்களும் கேட்பிப்பவர்களும் ஒருவருக்கொருவர் அவரைப்பற்றியே சொல்லிக்கொண்டிருப்பவர்களுமாகிப் பிறரால்

புகழப்பட்டு ஸந்தோஷமடைந்து ஸ...ன்றனர். ப்ரபஞ்சத்தில் பலபிறப்புக்களிலும் அநேகமாயிரங்கோடி முறைபிறந்து பாவந்தொலைந்தமனிதனுக்குச் சிவபிரானிடத்தில் பக்தியுண்டாகிறது. முழு அன்போடும் முழுமுயற்சியோடும் காரணமானசங்கரரையே எல்லாவகையாலும் நினைக்கின்றவனுக்கு அவரிடத்தில் ஏகபக்தியுண்டாகிறது. இடையூறில்லாமலும் மற்றத்தேவதைகளிடம்போகாமலும் ருத்திரரிடத்திலிருக்கும் உறுதியானபக்தியானது தேவர்களுக்கே கிடைப்பதரிது; மனிதர்களுக்குக் கிடைப்பதேயில்லை. அவருடைய குணங்களிலேயே மனம்சென்று மேலானசித்திபெறத்தக்கபக்தியானது அவருடைய அனுக்கிரகத்தினால்மட்டும் மனிதருக்குஉண்டாகிறது. முழுஅன்பையும்வைத்து மஹேசுவரரைச் சரணமாக அடைகிறவர் எவரோ அவரைச் சரணாகதரிடம் அநுக்கிரகமுள்ள அந்த ஈசுவரர் ஸம்ஸாரத்தினின்று கரையேற்றுவார். சிவபெருமானைத்தவிர மற்றத்தேவர்கள் மனிதர்களுக்கு ஸம்ஸாரத்திலிருந்துமோக்ஷத்தைச் செய்யமாட்டார்கள். ஏனெனில், அவர்களுக்குச் சக்தியும் தவவன்மையுமில்லை. கிருஷ்ண! பரிசுத்தபுத்தியுள்ளவரும் இந்திரனுக்கொப்பானவருமான அந்தத்தண்டிமுனிவரால் சேதனாசேதனங்களுக்குஈசுவரரும் தோலாடைஉடுத்தவருமானசிவபெருமான் இவ்வாறுதுதிக்கப்பட்டார். சிவபெருமானுடைய இந்தஸ்தோத்திரத்தை ப்ரம்மதேவர் தமக்குள்ளே வைத்துக்கொண்டிருந்தார். பிரம்மதேவர் சங்கரஸந்நிதானத்தில் இதைப்பாடித்தான் சங்கரரை அறிந்தார். இது புண்ணியத்தைச்சேர்ப்பது; மனச்சுத்தம்செய்வது; பாவங்களை எப்போதும் அழிப்பது; யோகத்தையும் மோக்ஷத்தையும் ஸ்வர்க்கத்தையும் ஸந்தோஷத்தையும் கொடுப்பது. இவ்வாறு சங்கரரிடத்தில் ஏகபக்தியுடன் இந்தஸ்தோத்ரத்தைப்படிப்பவர்கள் ஸாங்கியர்களும் யோகிகளும்அடையும்கதியை உடனே அடைவார். எப்போதும் முயற்சியோடும் பக்தியோடும் ருத்ரஸந்நிதானத்தில் இந்தஸ்தோத்திரத்தை ஒருவருஷகாலம்சொல்லுகிறவன் நினைத்தபலனை அடைவான். இது ப்ரம்மாவின்மனத்திற்குள்ளிருந்த முக்கியமானரஹஸ்யம். இதை ப்ரம்மா இந்திரனுக்குச் சொன்னார்; இந்திரன் மிருத்யுவுக்குச்சொன்னான்; மிருத்யு ருத்ரர்களுக்குச்சொன்னான்; ருத்திரர்களிடமிருந்து தண்டிக்குவந்தது; தண்டியானவர் மிகுந்ததவத்தினால் ப்ரம்மலோகத்தில் இதையடைந்தார். தண்டி சுக்ரருக்குச்சொன்னார். சுக்ரர் கௌதமருக்குச்சொன்னார். மாதவரே! கௌதமர் வைவஸ்வதமனுவுக்குச்சொன்னார். வைவஸ்வதமனு ஸித்திபெறுவதற்காக ஸமாதி

நிஷ்டையிலிருந்த சிறந்தஞானியான நாராயணமஹாரிஷிக்குச் சொன்னார். மஹிமைபொருந்தியவரும் தவத்தைஸாதிப்பவரும் நியமம்தவறாதவருமானநாராயணர் தருமதேவதைக்குச்சொன்னார். ஸூர்ய புத்திரனும் மகிமைபொருந்தினவனுமான யமன் நசிகேதஸ்என்னும் ரிஷிக்குச் சொன்னான். விருஷ்ணிகுலத்தவரே! நசிகேதஸ் மார்க்கண்டேயருக்குச்சொன்னார். ஜனார்த்தனரே!, நான் மார்க்கண்டேயரிடமிருந்து தவத்தினால் இதைப் பெற்றுக்கொண்டேன் பகைவர்களையழிப்பவரே! ஸ்வர்க்கத்தையும் ஆரோக்கியத்தையும் ஆயுளையும் தனத்தையும்கொடுப்பதும் வேதத்திற்கொப்பானதும் யாருக்குந் தெரியாதரஹஸ்யமுமான இந்தஸ்தோத்திரத்தை உமக்கும் நான் கொடுப்பேன். அஸுரர்கள் யக்ஷர்கள் பிரம்மராக்ஷஸர்கள் பிசாசர்கள் ராக்ஷஸர்கள் கிந்நரர்கள் நாகர்கள் யாரும் இதற்கு இடையூறு செய்யமாட்டார்கள்' என்று உபமன்யுமுனிவர் சொன்னார். தர்மபுத்ரரே! பரிசுத்தனாகி ப்ரம்மசாரிவிரதமிருந்துகொண்டு ஐம்புலன்களையுமடக்கித் தியானம்கெடாமல் ஒருவருஷகாலம் இந்தஸஹஸ்ரநாமஸ்தோத்திரத்தைப்படிப்பவன் அசுவமேதயாகத்தின்பலனையடைவான்" என்று கிருஷ்ணன் சொன்னார்.

## நாற்பத்தோன்பதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(வியாஸர் முதலிய மஹரிஷிகள் யுதிஷ்டிரரிடம் சிவபிரான் மகிமையைச் சொன்னது.)

மஹாயோகியான வ்யாஸமுனிவர், தர்மராஜரைப்பார்த்து, "புத்ரனே! நீ இந்தஸ்தோத்ரத்தைச் சொல். மகேசுவரர்கிருபையினால் உனக்குக்ஷேமமுண்டாகட்டும் புத்திரனே! மகாராஜனே! முன்னே நான் புத்ரோத்பத்திக்காக மேருமலையில் பெருந்தவம்செய்தபோது இந்தஸ்தோத்ரத்தை முழுதும்சொன்னேன். பாண்டுபுத்ரனே! நான் கருதினபலனையும் அடைந்தேன். அப்படியே நீயும் மஹேசுவரரால் எல்லாவிருப்பங்களையும் பெறுவாய்" என்றார். பிறகு, தேவரால்பூஜிக்கப்பெற்றவரும் ஸாங்கியசாஸ்திரஞானியுமான கபிலமகரிஷி, "என்னாலும் அநேகஜன்மங்கள் பக்தியோகத்தினால் ஆராதிக்கப்பெற்றசிவபெருமான் அன்புவைத்து ஸம்ஸாரத்தையொழிக்கும்த்தஞானத்தை எனக்குஅளித்தார்" என்றுசொன்னார். பிறகு,

இந்திரனுக்கன்புள்ளவனும் ஆலம்பாயனரென்று புகழ்பெற்றவரும் தலையேஉருக்கொண்டவருமான சாருசீர்ஷரென்பவர், "ஓ! பாண்டுவின்மைந்தனே! முற்காலத்தில் நான் கோகர்ணக்ஷேத்திரத்தை யடைந்து நூறுவருஷகாலம் தவம்செய்து சிவானுக்ரஹத்தினால் தாயின்வயிற்றிற்பிறவாதவர்களும் ஜிதேந்திரியர்களும் தர்மந்தெரிந்தவர்களும் சிறந்தபிரம்மதேஜஸுள்ளவர்களும் மூப்பும்துயரமுமில்லாமல் நூறாயிரவருஷகாலம்ஜீவித்திருப்பவர்களுமான நூறுபுத்ரர்களை யடைந்தேன்" என்றுசொன்னார். வால்மீகிபகவானும் யுதிஷ்டிரரைப் பார்த்து, "பாரதனே! நான் வேதவிரோதமானவாதம்சொன்னபோது திரேதாக்னிகளாலும் முனிவர்களாலும் 'நீ பிரம்மஹத்தி செய்தவனாவாய்' என்றுசொல்லப்பட்டு ஒருநிமிஷத்திற்கெல்லாம் அந்தப்பாவத்தினால் பற்றப்பட்டேன். அப்போது நான் குற்றமற்றவரும் அடுத்தவரைக் கைவிடாதவருமான ஈசுவரரைச் சரணமடைந்தேன்; அதனால், அந்தப்பாவத்தினின்று விடுபட்டேன். என்துயரத்தை அழித்தவராகிய அந்தத்திரிபுராரி என்னைப்பார்த்து, 'உனக்குச்சிறந்தகீர்த்திஉண்டாகும்' என்றார்" என்றுசொன்னார். தர்மிஷ்டரிற்சிறந்தபரசுராமர் ஜ்வலிக்கின்றஸூர்யன்போல ரிஷிகளநடுவிலிருந்துகொண்டு தர்மராஜனைப்பார்த்து, "பாண்டவர்களின் முதல்வனே! வேந்தனே! பிதாவுக்குச்சமமான தமையன்மார்களை வதம்செய்ததனால் துயரமுற்றநான் பரிசுத்தனாகி மகாதேவரைச் சரணமடைந்தேன்; ஸஹஸ்ரநாமங்களைச்சொல்லி அவரை ஸ்தோத்திரம்செய்தேன் அதன்பிறகு அவர் ஸந்தோஷமடைந்தார். பிறகு, கோடாலியையும் சிறந்தபடைகளையும் எனக்கு அளித்தார். 'உனக்குப் பாபம்இராது. யாராலும்ஜயிக்கப்படாதவனாவாய் உனக்குமரணமும்வராது. மூப்பில்லாமலுமிருப்பாய்' என்று சடைமுடியுள்ள அந்தச்சிவமூர்த்தியான பகவான் எனக்குச்சொன்னார். அந்தஸர்வஜ்ஞருடைய அனுக்கிரகத்தினால் அவையெல்லாம் எனக்குக்கிடைத்தன" என்றுசொன்னார். அப்போது, விசுவாமித்ரர், "நான் முன்னே க்ஷத்ரியனாயிருந்தேன்; பிராம்மணனாகவேண்டுமென்று சிவனை ஆராதித்தேன். அவருடைய அனுக்கிரகத்தினால் யாருக்குங்கிடைக்காத சிறந்தபிராம்மண்யம் எனக்குக்கிடைத்தது" என்றுசொன்னார். அஸிதரென்னப்பட்டதேவலர் தர்மராஜரைப்பார்த்து, "குந்திபுத்ரனே! பிரபுவே! எனக்கு முன்னே இந்திரன்சாபத்தினால் தர்மம் அழிந்துபோயிற்று. அப்போது அந்ததர்மத்தையும், சிறந்தபுகழையும், தீர்க்காயுளையும், பிரபு கொடுத்தார்" என்றுசொன்னார். இந்திரனுக்குப்பிரியமுள்ள

ஸிநேகிதரும் ப்ருஹஸ்பதிக்குச்சமமான மகிமையுள்ளவரும் முக்காலமுமறிந்தவருமான க்ருத்ஸமதரென்னும்ரிஷி தர்மராஜரைப்பார்த்துச் சொல்லலானார் "ஸிநேகக்கெட்டாதவனான தேவேந்திரனுடைய ஆயிரம்வருஷம்நடத்தப்படும் ஸத்ரயாகத்தில ரதந்தரமென்னும் ஸாமத்தை நான்உச்சரிக்கும்போது சாக்ஷுஷமனுவின்புத்ராகிய வரிஷ்டரென்னும்மஹரிஷி 'ஓ! பிராமமணசிரேஷ்டரே! இது சரியாயில்லை. பிராம்மணோத்தமரே! பாபத்தைவிட்டு மறுபடியும் புத்தியினால் ஆராய்ந்துபாரும் ஸிநேகம் கெட்டபுத்தியுள்ளவரே! யாகமநிறைவேறாமலிருக்கும் (சொற்பிழையாலான) பாபத்தை நீர் செய்திருக்கிறீர்' என்றுசொல்லித் திரும்பவும் மிக்ககோபத்துடன், 'ஞானமில்லாதநீர் பதினோராயிரத்து எண்ணூறுவருஷம் ஜலமும்காற்றும் இல்லாமலும் மற்றமிருகங்கள ஸஞ்சரியாமலும்புள்ளிமான்களும் ஸிம்மங்களும் இருப்பதும் யாகத்திற்குஉதவாதமரங்களுள்ளதுமாகியவனத்தில் எப்போதும் பயந்துகொண்டும மிகத்துயரப்பட்டுக்கொண்டுமிருக்கும் ஒரு கொடியமிருகமாகப் பிறப்பீர்' என்று[1] சொன்னார். 'தர்மராஜனே! அவர்வார்த்தைமுடியும்போதே நான் விலங்காய்விட்டேன். அதன் பிறகு, சரணாகதனாகவந்தடைந்தஎன்னைப்பார்த்து யோகியானமகேசுவரர், நீ ஜரையும் மரணமும் துயரமும இல்லாமலிருப்பாய்; எனக்கொப்பாக இருக்கக்கடவாய். உனக்கு ஸௌக்கியமுண்டாகக்கடவது. நீயும் இந்திரனும்சேர்ந்துசெய்யும்யாகம் விருத்தியாகக்கடவது' என்றுசொன்னார் அந்தப்பகவானானபிரபு இவ்வாறே அனுக்கிரஹங்கள் செய்வார் அவர்தாம் படைப்பவர் அவர்தாம் எப்போதும் சுகதுக்கங்களைப்பகுப்பவர். அந்தப்பகவானைச் செய்கையினாலும் மனத்தினாலும் வாக்கினாலும் எட்டமுடியாது அப்பா! யுத்தத்திற்சிறந்தவனே! அதனால், வித்தையில் எனக்குச்சரியான பண்டிதனில்லை" என்றார்.

அப்போதும் ஞானவான்களிற்சிறந்த கிருஷ்ணமூர்த்தி திரும்பவும்பேசலானார். "பொன்னிறமான கண்களையுடையமஹாதேவனை நான் தவத்தினால் ஸந்தோஷிக்கச்செய்தேன். யுதிஷ்டிரரே! அதன் பிறகு, அந்தபபகவான் அன்புகூர்ந்து என்னைப்பார்த்து, 'கிருஷ்ணா! என்அனுக்கிரகத்தினால் எல்லாருக்கும் தனத்தைவிட மிகவிரும்பத்தக்கவரும் யுத்தங்களில்தோல்வியடையாதவருமாவீர். உமதுபராக்ரமம் அக்நிக்குநிகராயிருக்கும்' என்றுசொன்னார்; இவ்வாறு ஆயிரக்கணக்கான இன்னும்வேறுவரங்களையும் எனக்குஅளித்தார். பிறகு,

[1] ஒருசொல்விடப்பட்டது

மணிமந்தம்என்னும்மலையில் முன்னே ஒருகோடியேஆயிரத்துநூறு வருஷங்கள் என்னால் ஆராதிக்கப்பட்டார். அதன்பிறகு, அந்தப்பக வான் அனுக்கிரகம்செய்து என்னைப்பார்த்து, 'உமக்குக்ஷேமமுண்டா கிறது. உமதுமனத்திலிருக்கும்வரத்தைக்கேளும்' என்றுசொன்னார். பிறகு, நான் தலையால்வணங்கி, 'ஈசுவரரே! மஹாதேவரும்பிரபுவுமான நீர் எனது சிறந்தபக்தியினால் ஸந்தோஷமடைந்திருந்தால் எனக்கு எக்காலமும் உம்மிடத்தில் பக்தி ஸ்திரமாயிருக்கவேண்டும்' என்று கேட்டேன். பகவானனவர், 'அப்படியேஆகட்டும்'என்றுசொல்லி அங் கேயே அந்தர்த்தானமானார்'' என்றார். ஜைகீஷவ்யர், ''யுதிஷ்டிரா! முன்னே காசியில் என்னுடைய பெரிய மற்றொரு தவமுயற்சியினால் அணிமாமுதலிய எண்குணங்களோடும்கூடிய வித்தியை எனக்குப் பக வான் அளித்தார்'' என்றார். கர்கர், ''பாண்டவா! ஸரஸ்வதிநதிக் கரையில் எனதுமனோயாகமான (தியானயோகத்தினால்) ஈசுவரர் சந் தோஷமடைந்து அறுபத்துநாலுகலைகளிலும் ஆச்சரியமான ஞான த்தை எனக்குத் தந்தார். ஓரேவிதமாக ப்ரம்மநிஷ்டர்களாயிருக் கும் ஆயிரம்புதல்வர்களையும் அவர்களுக்கும் எனக்கும் பத்துலக்ஷம் வருஷம்ஆயுளையும் கொடுத்தார்'' என்றுசொன்னார். பராசரர், ''வேந் தனே! முன்னே சிவன் அனுக்கிரகம்பெறுவதற்காக அவரை மனத் தில் தியானம்செய்தேன். சிறந்ததவமும் சிறந்தமகிமையுமுள்ளவனும் மிக்கபுகழ்பெற்ற மகாயோகியும் எல்லாச்சிறப்புகளுக்கும் இருப்பிட மும் பிரம்மநிஷ்டனும் தயையுள்ளவனுமாகிய இந்த வேதவியாஸ னென்னும்புத்ரனை நான் மஹேசுவரரிடத்தில் வேண்டியிருக்கிறேன்' என்ற என்மனோபாவத்தையறிந்து, தேவசிரேஷ்டரானசங்கரர், 'பரா சர! என்னிடத்தில்வைத்தபக்தியின்பலனாக உனக்குக் கிருஷ்ணத் வைபாயனன்பிறக்கப்போகிறான். அவன்ஸாவர்ணியென்னும்மனுவின் மன்வந்தரத்தில் ஸப்தரிஷியாகவும்ஆவான். அந்தஉனதுபுத்ரன் வேத ங்களைச் சொல்வன்; கௌரவர்களின் ஸந்ததியை விருத்திசெய்வன்; (பாரதமாகிய) இதிஹாஸஞ்செய்து உலகத்திற்கு நன்மைசெய்வன். உனதுபுத்ரனை அந்தமகரிஷி தேவேந்திரனுக்கு அன்பனாயிருப்பன்; மூப்பும் இறப்பும் இல்லாமலிருப்பன்' என்றுசொன்னார். யுதிஷ்டிரா! மகாயோகியும் சிறந்தசக்தியுள்ளவரும் அழிவும்மாறுதலுமில்லாதவரு மாகிய அந்தப்பகவான் இவ்வாறுசொல்லி அங்கேயே மறைந்தார்'' என்றுசொன்னார். மாண்டவ்யர், ''அரசனே! முன்னே நான் திரு டாமலிருந்தும் திருட்னென்றுநினைத்துச் சூலத்தின்மேல் ஏற்றப்பட் டேன்; அங்கிருந்துகொண்டு மஹாதேவரைத் துதித்தேன். அவர்

என்னைப்பார்த்து, 'ஓ! பிராம்மண! நீ சூலத்தினின்று விடுபட்டு நூறுகோடிவருஷகாலம் ஜீவித்திருப்பாய். சூலத்தினாலுண்டாகும் நோய் இனி உனக்கு இராது. நீ மனக்குறைகளும் நோய்களும் அற்றிருப்பாய். ரிஷியே! உனது தேகம் தர்மத்தின் [1] நான்காவது பாத (மான ஸத்ய) த்தினின்றுண்டானதால் நீ ஒப்பற்றவனாயிருப்பாய்; உனது ஜன்மத்தைப் பயன்படும்படி செய்துகொள்வாய்; இடையூறின்றி எல்லாப்புண்ணிய தீர்த்தஸ்நானங்களையும் பெறுவாய். ப்ராம்மண! பிறகு, அழிவில்லாத ஸ்வர்க்கத்தையும் நிச்சயமாக ஏற்படுத்துகிறேன்' என்றுசொன்னார். [2] மஹாராஜனே! சிரேஷ்டரும் விருஷபவாகனரும் தோலாடையுடுத்தவரும் பேரொளியுள்ளவரும் தேவசிரேஷ்டரும் பகவானுமாகிய மகேசுவரர் இவ்வாறு சொல்லிப் பிரமதகணங்களுடன் கூட அங்கேயே அந்தர்த்தானமானார்" என்றார். காலவர், "நான் (குருகுலவாஸஞ்செய்தபிறகு) விசுவாமித்திரரால் விடைகொடுக்கப் பெற்றுத் தாய்தந்தையரைப்பார்க்கவந்தேன். அப்போது என்தாய் என்னைப்பார்த்து, மிகுந்த துயரத்துடன் அழுதுகொண்டு, 'குழந்தாய்! குற்றமற்றவனே! விசுவாமித்திரரால் விடைகொடுக்கப்பெற்றவனும் தேவர்களால் கௌரவிக்கப்பெற்றவனும் கல்வியுள்ளவனும் யௌவனப்பிராயத்திலிருப்பவனும் புத்திமானுமான உன்னை உன் தந்தை பார்க்கவில்லையே' என்று சொன்னாள். தாய்சொன்னதைக்கேட்டபிறகு தந்தையைப்பார்ப்பதில் ஆசையற்றவனாய்த் தவஞ்செய்து மகாதேவரைப் பார்த்தேன். அவர் என்னைப்பார்த்து, 'புத்திரனே! உன் தந்தையும் தாயும் நீயும் மரணமில்லாமலிருப்பீர்கள். உடனே வீட்டிற்குப்போ. உன் தந்தையை வீட்டில்பார்ப்பாய்' என்று சொன்னார். அப்பனே! யுதிஷ்டிரா! பகவானால் அனுமதிகொடுக்கப்பெற்று வீட்டிற்குச்சென்றபோது யாகஞ்செய்து ஆசமனம்பண்ணி ஸமித்துக்களையும் தர்ப்பங்களையும் எடுத்துக்கொண்டு வீட்டிலிருந்து புறப்படும் [3] பூஜ்யரான பிதாவைக் கண்டேன். பாண்டவனே! எனது பிதா நமஸ்கரிக்கும் என்னைக்கண்டு அவற்றைவைத்துவிட்டுக் கண்ணீர் ததும்பும் கண்களுடன் தழுவி உச்சிமோந்து, 'புத்திரனே! வித்தைகளில் தேறி இங்கேவந்த உன்னை நான்கண்டது என்பாக்கியம்' என்றுசொன்னார்" என்றார். இவ்வாறு மகாத்மாவான ஈசுவரருடைய மிக்க ஆச்சரியமான

[1] தவம், சௌசம், தயை, ஸத்யம் என தர்மத்தின் நான்கு பாதங்கள்.

[2] 'மஹாராஜ' என்று பாடம் கொள்ளப்பட்டது.

[3] 'சாணுகுரூந்' என்பது 'சாணுதகுரூந்' என்றிருத்தல்வேண்டும்; 'சாணுகுரூந்' என்றபாடமேகொண்டு, 'உதிர்ந்த தானியங்களையும் எடுத்துக் கொண்டுவந்த பிதாவைக்கண்டேன்' என்பது பழையவுரை.

செய்கைகளை ரிஷிகள் சொல்லக்கேட்டுத் தர்மராஜர் வியப்புற்றார். அதன்பிறகு, ஞானவான்களிற்சிறந்தவரான கிருஷ்ணபகவான் தர்மத்திற்கிருப்பிடமான யுதிஷ்டிரருக்கு, இந்திரனுக்கு ஈசுவரர் சொல்வது போல ஒருசொல்லைச் சொல்லலானார்:—

"ஸூர்யனைப்போலவிளங்கும் உபமன்யுரிஷி என்னிடத்தில், 'பாபகாரியம்செய்கிற எந்தமனிதர்கள் தங்கள்பாவங்களினால் மதி கலங்கி ராஜஸமும் தாமஸமும் மேற்கொண்டிருக்கின்றனரோ அவர்கள் ஈசுவரரையடைவதில்லை. பரிசுத்தஞானமுள்ள பிராம்மணர்கள் ஈசுவரரையடைகின்றனர். பரமேசுவரரிடத்தில் பக்தியுள்ளவன் எவ்வகையாக நடந்தபோதிலும் காட்டில்வஸிக்கும்பரிசுத்தாத்மாக்களான முனிவருக்குச் சமமாவன். ருத்திரர் ஸந்தோஷமடைந்தால், பிரம்மாவாதலையும் விஷ்ணுவாதலையும் தேவருடன்சேர்ந்த இந்திரனாதலையும் மூன்றுலோகங்களுக்கும் ஈசுவரனாதலையும் கொடுப்பர். அன்புள்ளவரே! மனத்தினாலாவது சிவனைச் சரணமடையும் மனிதர்கள் எல்லாப் பாவங்களையும் நீக்கித் தேவர்களுடன்வஸிப்பர். குளம் ஆறுமுதலியவற்றின்கரைகளைப் பலமுறையிடித்தும் இவ்வுலகமனைத்தையும் தீயிற்போட்டுமிருப்பவனும் ஈசுவரரைப் [1] பூஜிப்பானாயின் அவனை அப்பாவம் பற்றாது. எல்லாநற்குணங்களும்குன்றி எல்லாப்பாவங்களோடும்சேர்ந்திருந்தாலும் சிவனை மனத்தினால்தியானிப்பவன் அந்தப் பாவங்களனைத்தையும் ஓட்டிவிடுகிறான். கிருஷ்ணா! மகாதேவரைச் சரணமாகஅடைந்த புழு பக்ஷி விட்டில் மிருகங்கள் இவற்றிற்குங்கூட எங்கும் பயம்இராது. அப்படியே பூமியில் சிவபக்தியுள்ளமனிதர்கள், ஸம்ஸாரத்திற்குட்படமாட்டார்களென்பது எனது உறுதியான எண்ணம்' என்றுசொன்னார்" என்றுகூறினர். கிருஷ்ணன் இந்த உபமன்யுசொன்னதைச்சொன்னபிறகு, மறுபடியும் தர்மபுத்திரரான யுதிஷ்டிரரைப்பார்த்துச் சொல்லலானார்: "தர்மராஜரே! ஸூர்யன், சந்திரன், காற்று, அக்நி, ஆகாயம், பூமி, ஜலம், வஸுக்கள், விச்வதேவர்கள், [2] தாதா, [2] அர்யமா, சுக்கிரர், ப்ருகஸ்பதி, ருத்ரர்கள், ஸாத்யர்கள், ஜலத்திற்கு ஸ்வாமியான வருணன், பிரம்மா, இந்திரன், வாயு, பிரம்மாண்டம், ஸத்யலோகம், வேதங்கள், யஜ்ஞங்கள், தக்ஷிணைகள், வேதங்களைப் பிரவ்ருத்திக்கச்செய்தவர்கள், ஸோமலதை, யாகம் செய்பவன், ஹோமம்செய்யப்படும் நெய்முதலியவை, யஜ்ஞத்தின் ரக்ஷணம், யாகதீக்ஷைகள், நியமங்கள், [3] ஸ்வாஹாகாரம், [3] வௌஷட்

---

1 'யஜேத்' என்றும் பாடம்கொள்ளப்பட்டது.

2 த்வாதச ஆதித்யர்களைச்சேர்ந்தவர்கள்.

3 யாகத்தில் ஹவிஸைக்கொடுக்கும் மந்திரங்கள்.

காரம், பிராம்மணர்கள், பசு, முக்கியமானதர்மம், காலசக்ரம், பலம், புகழ், இந்திரியஜயம், புத்தியுள்ளவர்களாயிருத்தல், நன்மை, தீமை, ஸப்தரிஷிகள், மனத்தினால் எல்லாவற்றையுமறியக்கூடிய உயர்ந்த புத்தி, உயர்ந்தஸ்பரிசசுகங்களாகிய சந்தனம் புஷ்பமுதலியவை, செய்கருமங்கள்கூடிவருதல், [1]லக்ஷ்மபர் [2]ஸோமபர் லேகர் [3]ஸாயாமர் [4]துஷிதர் [5]பிரம்மகாயர் [6]ஆபாஸுரர் [7]கந்தபர் [8]தூமபர் [9]வாசாவிருத்தர் [10]மனோவிருத்தர் [11]சுத்தர் [12]நிர்மாணரதர் [13]ஸ்பர்சாசனர் [14]தர்சபர் [15]ஆஜ்யபர் [16]சிந்த்யத்யோதர் என்னும்தேவக்கூட்டங்கள், மற்றுமுள்ள முக்கியமானதேவதைகள், கருடர்கள், கந்தர்வர்கள், பிசாசர்கள், அஸுரர்கள், யக்ஷர்கள், சாரணர்கள்; நாகர்கள், ஸ்தூலம், ஸூக்ஷ்மம், கடுத்தரமானது, மிருது, கடினம், ஸுகதுக்கங்கள், ஸாங்கியம், யோகம், அவற்றைச்செய்பவர் அடையும்பரகதி ஆகியநாம் சொல்லிய இவையனைத்தும் சிவனிடத்திலிருந்து உண்டானவையென்றறியும். பிராணிகளைப்படைப்பவரும் யாவராலும் பிரார்த்திக்கப்படுகிறவரும் அந்தஈசுவரருடைய ஆதிஸ்ருஷ்டியாகிய இந்தப்பூமியில் பிரவேசித்துக் காப்பாற்றுகிறவருமாகியதேவர்கள் அனைவரும் அவரிடத்திலிருந்து உண்டானவர்கள். எல்லாவற்றிலும்பெரிதான அந்த ஒரு பொருளைத் தவத்தினால்த்யானம்செய்து ஆத்மாவுக்காக நான் நமஸ்கரிக்கிறேன். ஸமர்த்தரும் என்றுமழியாதவருமாகிய அந்த ஈசுவரர் என்னால் துதிக்கப்பட்டு வேண்டியவரங்களைக் கொடுக்கக்கடவர். எந்தப்புருஷன் பரிசுத்தனாயிருந்து ஐம்புலன்களையுமடக்கிக்கொண்டு தியானம்தவறாமல் ஒருமாதம் நியமமாக இந்தஸ்தோத்திரத்தைச் சொல்லுவனோ அவன் அசுவமேதபலனையடைவான். தர்மராஜரே! (இவ்வாறுதுதிக்கும்) பிராம்மணன் எல்லாவேதங்களையுமடைவான்; க்ஷத்ரியன் பூமியனைத்தையும்ஜயிப்பான்; வைசியன் வர்த்தகத்தில் திறமையையும் திரவியலாபத்தையும் பெறுவான்; சூத்திரன் மறுமையில் நல்லகதியையும் சௌக்கியத்தையுமடைவான். எல்லாக்குற்றங்களையும்போக்குவதும் புண்ணியத்தையும் மனச்சுத்தத்தையும் தருவதுமாகிய இந்தச்சிறந்தஸ்தோத்திரத்தை ருத்ரரிடத்தில் மனம்வைத்

---

[1] ஆவியைக்குடிப்பவர். [2] சந்திரன் அம்ருதத்தைக்குடிப்பவர். [3] இந்திரியஜயம்பண்ணினவர். [4] எப்போதும் திருப்தியாயிருப்பவர். [5] பிரம்மத்தையே பாடுகிறவர். [6] மிக்கஒளியுள்ளவர். [7] மணத்தை உண்பவர். [8] புகையையுண்பவர். [9] வாக்கைக்கட்டினவர். [10] மனத்தைக்கட்டினவர். [11] பற்றற்றவர். [12] ஸ்ருஷ்டியில் ஊக்கமுள்ளவர். [13] பரிசத்தினால்உண்பவர். [14] பார்வையினால் உண்பவர். [15] நெய்குடிப்பவர். [16] நினைத்தபொருள் உடனே நிர்வர்த்திக்கும் சக்தியுள்ளவர்.

துச்சொன்னவர்கள் புகழ்பெறுவர். பாரதரே! இவ்வாறு துதிக்கும் மனிதன் தன்தேகத்தில் எத்தனைமயிர்க்கால்கள் இருக்கின்றனவோ அத்தனையாயிரம்வருஷங்கள் ஸ்வர்க்கத்தில் வஸிப்பான்" என்று சொன்னார்.

---

ஐம்பதாவது அத்யாயம்.

தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(வதான்யரின் குமாரியை மணம்புரியக்கருதின அஷ்டாவக்ரர் அவர் கட்டளையினால் வடகோடிபோய அந்தத்திசைத் தேவதையைக்கண்டு ஸம்பாஷித்தது.)

யுதிஷ்டிரர் பீஷ்மரைப்பார்த்து, "பரதசிரேஷ்டரே! விவாஹ காலத்தில் பெண்களை [1] ஸஹதர்மிணிஎன்று சொல்லுகிறார்களே! அது எப்படியென்று நினைக்கிறீர்கள்? இந்தவிவாஹம் வேதோக்தமான யாகாதிகாரியங்களுக்குக் காரணமானதர்மமா? ஸந்ததியுண்டாக்குந் தர்மமா? அல்லது, காமஸுகத்தைத்தரும்தர்மமா? முன்னிருந்தமஹ ரிஷிகள் இதை ஸஹதர்மமென்றுசொன்னது எதனால்? இது எனக் குப் பெரியஸந்தேகம். இது விரோதமாயிருக்கிறதென்று என் அபிப் பிராயம் இவ்வுலகத்தில் எது ஸ்திரீபுருஷர்கள்சேர்ந்து செய்யும் தர் மமோ அதற்குப்பலன் எங்கேவிதிக்கப்படுகிறது? பிதாமஹரே! இற ந்துபோனவர்களுக்கு ஸஹதர்மத்தின் முடிவு ஸ்வர்க்கந்தானே? ஸ்த்ரீபுருஷர்களில் ஒருவர் முதலில் இறந்துபோனால் அந்தஒருவர் எங் கேதனித்து இருக்கிறார்? சொல்லும். பலமனிதர்கள் வெவ்வேறு கர்மபலன்களுடன்பிறந்து வெவ்வேறு கர்மங்களைச்செய்துகொண்டிரு ந்து அவ்வவற்றிற்குத்தகுந்தபடி நரகமோ ஸ்வர்க்கமோ மோக்ஷமோ பெறுகின்றனரல்லரோ? தர்மஸூத்திரம்செய்தவர் பெண்கள்பொய் யரென்று நிச்சயித்திருக்கிறார் பிதாமஹரே! பெண்கள் பொய்யரா யிருந்தால் ஸ்திரீ புருஷர்களுக்கு ஒருதர்மம்சொல்வது எப்படி? பெண் கள் பொய்யரென்றுதானே வேதங்களும் சொல்லுகின்றன. பூர்வ காலந்தொடங்கிவந்த தர்மங்களும் ஒருவர்க்கொருவர் உதவிசெய்து காரியத்தை நடத்துவதாகக் காணப்படுகின்றன. இதை நான் சிந்திக் கும்போதெல்லாம் எனக்கு இது கடினமாகத்தோன்றுகிறது. இற

---

[1] புருஷனுடைய தர்மத்தையே தனக்குந்தர்மமாக உடையவள். ஆதலால், இருவருக்கொருதர்மம் கூடாதென்பது.

க்தஞானியானபிதாமஹரே! இது என்ன? எவ்வகையானது? எப்படி உண்டாக்கப்பட்டது? இவற்றையெல்லாம் யம்சிங்கச் சாஸ்திரப் பிரகாரம் தெளிவாகச்சொல்லக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்:—

"பாரதனே! இந்தவிஷயத்திலும் அஷ்டாவக்ரமுனிவருக்கு வடதிசைத்தேவதையோடு நடந்த ஸம்பாஷணையாகிய ஒரு புராதன சரித்திரத்தைக் கூறுகின்றனர். முன்னர், சிறந்ததவமுள்ள அஷ்டாவக்ரர் விவாஹம்செய்துகொள்ளக்கருதி மஹாத்மாவான வதான்யரென்னும்ரிஷியின் பெண்ணும் அழகில் பூமியிலநிகரற்றவளும் குணத்தினாலும் மகிமையினாலும் அடக்கத்தினாலும் ஒழுக்கத்தினாலும் சிறந்தவளுமான ஸுப்ரபையென்பவளைக் கேட்டார். அழகானகண்களையுடைய அந்தஸுப்ரபை வஸந்தகாலத்தில் பூக்கள்நிரம்பி அழகாயிருக்கும்வனம்போலப் பார்த்தஅளவில் அந்தரிஷியின் மனத்தைக் கவர்ந்தாள். அந்தவதான்யரென்னும்ரிஷி அஷ்டாவக்ரரைப்பார்த்து, 'உமக்கு என்பெண்ணைக் கொடுக்கவேண்டுமானால் நான்சொல்வதைக் கேளும். வேறுஸ்திரீயில்லாதவனும் தெரிந்தவனும் ஊரைவிட்டுப் போகாதவனும் இனிமையாய்ப்பேசுகிறவனும் அழகுள்ளவனும் வீரனும் விநயமுள்ளவனும் ஸுகத்தையனுபவிக்கத் திறமையுள்ளவனும் பரிசுத்தனுமானபுருஷன் தான்பெண்ணுக்கு விருப்பமானவன். மனைவியுடன்ஒத்து யாகம்செய்கிறவன் நல்லநக்ஷத்திரத்தில் பிறந்தபெண்ணை விவாகம்செய்துகொள்ளவேண்டும். அவன் இவ்வுலகத்தில் வேலைக்காரரோடும் பந்துக்களோடும் சந்தோஷமடைகிறான்; மறுமையிலும் ஸுகமாயிருக்கிறான். நீர் முதலில் புண்ணியமான வடதிசைக்குச் செல்லும்; அங்கே பார்ப்பீர்' என்றுசொன்னார். அதற்கு அஷ்டாவக்ரர், 'அங்கே நான் பார்க்கவேண்டியது இன்னதென்பதை நீர் எனக்குச் சொல்லவேண்டும். நீர் எதைச்சொன்னாலும் அதை நான் இப்போது செய்யவேண்டும்' என்றுகேட்க, வதான்யமுனிவர் சொல்லலானார்.

'குபேரனைத்தாண்டி ஸித்தர்களாலும் சாரணர்களாலும் அடையப்பட்டதும், ஸந்தோஷத்தினால் நர்த்தனம்செய்பவரும் பலவகை முகங்களுள்ளவரும் உயர்ந்தசாந்தணிந்தவருமான பிசாசர்முதலியபலவகைச்சிவகணங்களினால் அடையப்பட்டதும், சிவனது இருப்பிடமுமாகிய இமயமலையைக்கண்டு போகவேண்டும். அங்கே அழகான கைத்தாளங்களும் வெண்கலத்தாளங்களும்போட்டு ஸமதாளங்களாகக் கூத்தாடி ஸந்தோஷமாக அந்தக்கணங்கள் சிவனை ஆராதிக்கின்

றன. அந்தமலையிலிருப்பது சிவனுக்குப்பிரியமென்றும், அதுதேவலோகமென்றும் நாம் கேட்டிருக்கிறோம். ஈசுவரரும் அவருடைய பிரமதகணங்களும் அவ்விடத்தில் எப்போதும் இருப்பதாகச் சொல்லப்படுகின்றனர். உமாதேவி சங்கரரையடைவதற்காக அங்கே மிகக் கடும்தவம்செய்தாள். அதனால், அது ஈசுவரருக்கும் உமைக்கும்பிரியமானஇடமென்றுகேள்வி. அவ்விடத்தில் ருதுக்களும் காளராத்திரியும் தேவலோகத்திலும் மானிடலோகத்திலுமுள்ள எல்லாப்பொருள்களும் தேகமெடுத்து ஈசுவரருடைய கிழக்குப்பாகத்திலும் வடக்குப்பாகத்திலுமிருந்து அவரை ஸேவிக்கின்றன. அந்த ஸ்தானத்தைத் தாண்டியும் நீர் செல்லவேண்டியதுதான். அதன்பிறகு, மேகம்போற் கறுத்ததும் மனத்தைக்கவருவதுமாகிய ஓர் அழகியகாட்டைப் பார்ப்பீர். அதில் சிறந்த மகிமையுள்ளவளும் கிழவியும் விரததீக்ஷைசெய்பவளுமாகிய ஒருதவப்பெண்ணைக் காண்பீர். அவளை நீர் அவசியம் காணவும் ஜாக்ரதையாகப்பூஜிக்கவும் வேண்டும். அவளைப் பார்த்துத் திரும்பிவந்தபிறகு பாணிக்கிரகணம்செய்யலாம். இதெல்லாம் உமக்கு உடன்பாடாயிருந்தால் நீர்சென்று அவ்விடம் சேரலாம்' என்றார்.

அஷ்டாவக்ரர், 'அப்படியேஆகட்டும்; செல்வேன். நீர் எந்த இடம்சொல்லுகிறீரோ அந்த இடத்தில் நிச்சயமாகச் சேருவேன். ஸத்புருஷரே! நீர் சொல்தவறாமலிருக்கக்கடவீர்' என்று சொன்னார். மகிமைபொருந்திய அந்த அஷ்டாவக்ரர் உடனே மேன்மேலும் வடதிசையைநோக்கிச் சென்றார். பிராம்மணசிரேஷ்டரான அந்தஅஷ்டாவக்ரர் ஸித்தர்களாலும் சாரணர்களாலும் அடையப்பட்டதும் மலைகளிற் சிறந்ததுமாகிய இமயமலையைச்சார்ந்து பரிசுத்தமும் புண்ணியத்தைத்தருவதுமாகிய பாஹுதையென்னும் நதிக்குப்போனார். துயரத்தைப்போக்குவதும் தெளிவுமான அதன் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து தேவதைகளுக்குத் தர்ப்பணம்செய்து அங்கே தங்குவதற்காகத் தர்ப்பசயனத்தில் ஸுகமாக இருந்தார். அந்தப்பிராம்மணர் அவ்விரவுகடந்து விடியற்காலத்திலெழுந்து ஸ்நானம்செய்து அக்கினியையுண்டாக்கிச் சாஸ்திரப்படி அதில்ஹோமம்செய்து ருத்திராணிகூபமென்னும்மடுவுக்குச்சென்று அம்மடுவில் (ஸ்நானம்செய்து) சிரமத்தைத்தீர்த்துக்கொண்டார்; களைப்புத்தீர்ந்தபின்பு எழுந்து கைலாஸத்தைநோக்கிச்சென்றார்; ஒளியினால் ஜ்வலிப்பதுபோன்ற மஹாத்மாவானகுபேரனது பொன்னாலாகியவாயிலையும் மந்தாகினியென்னும் தாமரையோடையையும் பார்த்தார். அப்போது அந்தத் தாமரைக்குளக் காவலாளியாகிய மாணிபத்ரன்முதலான ராக்ஷஸர்களனைவரும்

அஷ்டாவக்ரபகவானை எதிர்கொண்டுவந்தனர். அஷ்டாவக்ரர் பயங்கரமான பராக்ரமமுள்ள அந்தராக்ஷஸர்களுக்கு எதிர்மரியாதைசெய்து 'நான்வந்ததைக் குபேரனுக்குச்சீக்கிரம் தெரிவியுங்கள்' என்று சொன்னார். தர்மராஜனே! அப்போது அவ்வரக்கர்கள் அஷ்டாவக்ரபகவானைப்பார்த்து, 'இதோ ராஜாவானகுபேரர் தாமாகவே உங்களிடம் வருகிறார். அவருக்கு உங்களைத்தெரியும். நீங்கள்வந்த காரியமும் தெரியும். ஒளியினால் ஜ்வலிப்பவர்போலிருக்கும் இந்த மஹானுபாவரை நீங்கள் பாருங்கள்' என்று சொன்னார்கள். உடனே குபேரன் குற்றமற்றபிராம்மரிஷியான அஷ்டாவக்ரரிடம்வந்து முறைப்படி க்ஷேமம்விசாரித்தபிறகு, 'பிராம்மணரே! நீர் ஸுகமாகவந்து சேர்ந்தீரா? என்னிடத்தில் என்னகாரியத்தை விரும்புகிறீர்? சொல்லும். நீர் எதைச்சொன்னாலும் செய்வேன். பிராம்மணோத்தமரே! நீர் என் வீட்டிற்குள் ஸ்வதந்திரமாகப் பிரவேசிக்கலாம். என்னால் மரியாதை செய்யப்பெற்றுக் கார்யமான பிறகு இடையூறின்றிச் செல்லலாம்' என்றுசொல்லி, பிறகு, அந்தப்பிராம்மணோத்தமரை அழைத்துக்கொண்டு தன்வீட்டிற்குள்சென்றான்; அர்க்யபாத்யங்களையும் கொடுத்துத் தன்னுடைய ஆஸனத்தையுங்கொடுத்தான். அவர்களிருவரும் உட்கார்ந்தபிறகு குபேரனைச்சேர்ந்தவர்களாகிய மாணிபத்ரன்முதலிய யக்ஷர்களும் கந்தர்வர்களும கின்னரர்களும் உட்கார்ந்தனர். அவர்கள் உட்கார்ந்தபிறகு குபேரன் அஷ்டாவக்ரரைப்பார்த்து, 'உங்கள் அபிப்பிராயம் தெரிந்தபிறகு அப்ஸரஸுகள் நர்த்தனம்செய்யவேண்டும். உங்களுக்குச் சிறந்த அதிதிபூஜையையும பணிவிடையையும் நான் செய்யவேண்டும்' என்று சொன்னான். அஷ்டாவக்ரர், 'நடக்கட்டும்' என்று இன்சொல்லாற்சொன்னார். பிறகு உர்வரை, மிச்ரகேசி, ரம்பை, ஊர்வசி, அலம்புஸை, க்ருதாசி, சித்ரை, சித்ராங்கதை, ருசி, மனோஹரை, ஸுகேசி, ஸுமுகி, ஹாஸினி, ப்ரபை, வித்யுதை, ப்ரசமி, தாந்தை, வித்யோதை, ரதிமுதலான அநேகசிறந்த அப்ஸரஸுகள் நர்த்தனம்செய்தனர். கந்தர்வர்கள் பலவகை வாத்யங்களை வாசித்தனர். அப்படி தேவலோகத்திய ஸங்கீதம் நடந்தபோது அந்தச்சிறந்ததவமுள்ளரிஷி ஒருவருஷம் உட்கார்ந்தார்; அதில் விருப்புற்றிருந்தார். பிறகு, ராஜாவானகுபேரன் அஷ்டாவக்ரபகவானைப்பார்த்து, 'ப்ராமமணரே! நீர் இங்கே பார்த்துக்கொண்டிருக்கும்போதே ஒருவருஷத்திற்குமேலாயிற்று. பிராம்மணரே! இந்த விஷயமானது மனத்தை இழுப்பது. இதற்குக் காந்தர்வமென்று பெயர். பிராம்மணரே! நீர் உம்மிஷ்டப்படியிருக்கலாம். அல்லது, நீரெப்படிச்சொல்

னுகிறீரோ அப்படியாகலாம். அதிதியானஉம்மை நான் பூஜிக்க வேண்டும். இஃது உம்முடையவீடே. எல்லாவற்றிற்கும் உடனே கட்டளையிடவேண்டும்.' நாங்கள் உமது சொல்லுக்குக் கட்டுப்பட்டவர்கள்' என்றுசொன்னான். பிறகு, அஷ்டாவக்ரபகவானும்ஸந்தோஷமடைந்து குபேரனைப்பார்த்து, 'தனேசுவரனே! விதிப்படி பூஜிக்கப்பெற்றேன். இனிச்செல்வேன். ஸந்தோஷமடைந்தேன். தனதிபதியே! எல்லாம் உனக்கேதகும். பகவானே! உன்னுடைய அனுக்கிரகத்தினாலும் மகாத்மாவான வதான்யமகரிஷியின் கட்டளையினாலும் இப்போது செல்வேன். நீ மேன்மேலும் சிறப்பையும் செல்வத்தையுமடைந்திருப்பாயாக' என்றுசொன்னார்.

அஷ்டாவக்ரபகவான் உடனே அங்கிருந்து புறப்பட்டு வடதிசையைநோக்கிச் சென்றார்; கைலாஸத்தில் சங்கரரிருக்குமிடத்தைக்கண்டு கௌரீபதியும் ஜிதேந்திரியரும சரணாகதர்களிடம் கிருபையுள்ளவரும் கங்கையைத்தரிப்பவரும் பூமிக்கதிபதியும் கணங்களினால் சூழப்பெற்றவரும் குற்றமற்றவருமான சங்கரரைக்கண்டு நமஸ்கரித்துக் கைலாஸம், மந்தரம், ஹேமம்ஆகிய எல்லாமலைகளிலும் ஸஞ்சரித்தார்; அந்த மஹாபர்வதங்களைக்கதாண்டிப் பூமியிலிறங்கி வேடவேஷம்பூண்ட சிவனிருக்கும் உத்தமஸ்தானத்தைப் பக்தியோடு தலைவணங்கிப் பிரதக்ஷிணம்செய்தார்; உடனே ஆத்மசுத்தியடைந்தார். அவர் அந்த இடத்தைப் பிரதக்ஷிணம்செய்தபிறகு வடக்கேநோக்கிச் சென்றார்; ஸந்தோஷத்துடன் (ஸமபூமியில்)சென்றார்; அதற்கப்பால் வேறோர் அழகியவனத்தைக் கண்டார். எல்லாருதுக்களிலுமுள்ள கிழங்குகளும் கனிகளும் பறவைகளும் நிரம்பின அழகான வனங்கள் ஆங்காங்கு அலங்காரமாயிருந்த ஒரு சிறந்த ஆசிரமத்தை அந்தப்பகவான் கண்டார். ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டவையும் பலவகையுருவங்களுள்ளவையுமான அநேகம்பொன்மலைகளையும் ரத்னபூமியிலிருக்கும் தாமரைக்குளங்களையும் மற்றுமுள்ள மிகஅழகிய அனேக இடங்களையும் கண்டார். பரிசுத்தமனமுள்ள அம்மகரிஷியின் மனம் மிக்க ஆனந்தமடைந்தது. அவ்விடத்தில் எல்லாரத்னங்களும்நிரம்பினதும் குபேரன்வீட்டைக்காட்டிலும் சிறந்து ஆச்சரியமாக விளங்குகிறதுமான ஒருசிறந்த பொன்மாளிகையைக் கண்டார். அங்கே ரத்னமயமும் பொன்மயமுமான பலவகைப்பெருங்குன்றுகளும் அழகான மாளிகைகளும் பலவகைச்சிறந்த பொருள்களும் கற்பகமலர்கள் உதிர்ந்திருக்கும் கங்கைநதியும் தம்மொளியினால் பிரகாசிக்கும் ரத்தினங்களும் வஜ்ரங்களினால் அலங்கரிக்கப்பட்டபூமியும் இருந்தன. முன்வாயில்க

வில் அனேகவிதரத்தினங்கள் இழைக்கப்பட்டும்முத்துஸரங்கள்தொங்கவிடப்பட்டும் எல்லாவிடங்களிலும் சிறந்தரத்னங்களாலலங்கரிக்கப்பட்டுப் பிரகாசித்துக்கொண்டு, மனத்தையும் கண்ணையும் கவருகின்ற பற்பல அழகியவீடுகளினால் எங்கும்நிறைந்ததும் ரிஷிகள்நிறைந்திருப்பதுமாகிய அந்தஅழகானஆசிரமத்தை அங்கேகண்டார். பிறகு, அவருக்கு, 'திசைத்தேவதையிருக்குமிடம் எங்கிருக்கலாம்?' என்னும் சிந்தையுண்டாயிற்று. உடனே வாயிலுக்குநேரிற்போய்நின்று, 'இங்குள்ளவர்கள் அதிதி வந்திருப்பதை அறியவேண்டும்' என்றுசொன்னார். அரசனே! உடனேஅந்தவீட்டிலிருந்து அனேகவிதமான ரூபங்களுள்ளவர்களும் எல்லாரும் மனத்தைக்கவருகின்றவர்களுமாகிய ஏழுகன்னிகைகள் சிறந்த ஆடைகளையுடுத்து வெளிப்பட்டனர். அவர் கண்டகன்னிகை ஒவ்வொருத்தியும் அவர்மனத்தைக் கவர்ந்தாள். அவர் மனத்தைத் தடுக்கமுடியாமற்போனார். அதனால் அவர் மனம் தளர்ந்தது. சிறந்தஞானமுள்ள அந்தப்பிராம்மணருக்கு அதன்பிறகு தைரியமுண்டாயிற்று. பிறகு, அந்தப்பெண்கள், 'பகவானே நீங்கள் உள்ளேவரலாம்' என்றனர். அந்தப்பிராம்மணர் அந்தப்பெண்களின் சிறந்த அழகினாலும் அந்த வீட்டினழகினாலும் மனமகிழ்ந்து வீட்டிற்குள்சென்றார்; அங்கே தூயஆடையுடுத்து எல்லாமணிகளையும் அணிந்துகொண்டு கட்டிலில் உட்கார்ந்துகொண்டிருக்கும் ஒருதளர்ந்தகிழவியைக்கண்டார். அவர் அவளை, 'உனக்கு மங்களமுண்டாகக்கடவது' என்றுசொல்ல, அவளும் அவருக்கு அவ்வாறே மறுமொழிசொன்னாள். அவள் அந்தப்பிராம்மணரை எதிர்கொண்டழைத்து உட்காரவேண்டுமென்றுசொன்னாள். அப்போது அஷ்டாவக்ரர், 'இந்தப்பெண்கள் எல்லாரும் தாமிருக்கும் இடங்களுக்குச் செல்லலாம். சிறந்தஞானமுள்ளவளும் மனத்தையடக்கினவளுமாகிய ஒருத்திமட்டும் என்னருகிலிருக்கட்டும். மற்றவர்கள் தம்மிஷ்டப்படி செல்லட்டும்' என்றுசொன்னார். உடனே அந்தப்பெண்கள் அந்த ரிஷியைப்பிரதக்ஷிணம்செய்து அந்தவீட்டிலிருந்து வெளியிற்சென்றனர். பிறகு, அந்தக்கிழவிமட்டும் நின்றாள். அவர் அவளால் பரிசுத்தமான தனதுபடுக்கையில் மரியாதைசெய்யப்பெற்றார். அப்போது நிர்மலமாகப் பிரகாசிக்கின்ற அந்தப்படுக்கையில் தாம் சயனிக்கும்போது அவளைப்பார்த்து, 'அம்மா! இரவு தாண்டிப்போகிறது. நீயும் தூங்கலாம்' என்றுசொன்னார். அந்தப்பிராம்மணருடன் ஸல்லாபஞ்செய்தபிறகு அவரால்அவ்வாறுசொல்லப்பட்ட அந்தக்கிழவி மிக்கவொளியுள்ள மற்றொருபடுக்கையில் படுத்தாள். பிறகு, அவள் குளிரைக்

காரணமாகக்காண்பித்து நடுங்குந்தேகத்துடன் தன்சயனத்திலிருந்து இறங்கி அஷ்டாவக்ரமகரிஷியின்சயனத்தில் ஏறினாள். வந்த அவளுக்கு அஷ்டாவக்ரபகவான் நல்வரவு சொன்னார். மன்னவ! அவள் அன்புடன் இரண்டுகைகளாலும் அந்தரிஷியைத் தழுவினாள். அப்போது யாதொருமனவேறுபாடுமின்றி, கட்டைபோலவும் சுவர்போலவும் இருந்தரிஷியைக்கண்டு மனதில் துன்பத்துடன் அம்முனிவரிடம் பேசலானாள்:

'பிராம்மணரே! பெண்களுக்கு ஸ்வேச்சையென்பதில்லை. அவர்களுக்குப் புருஷனாலேதான் ஸந்தோஷம். நான் காதலால் மயலுற்றிருக்கிறேன் உம்மிடத்தில் அன்புவைத்த என்மேல் நீர் அன்புவைக்கக்கடவீர். ப்ரம்மரிஷியே! என்னுடன் கலந்து ஸந்தோஷமாயிரும். என்னைத்தழுவிக்கொள்ளும். பிராம்மணரே! நான் உம்மிடத்தில் விருப்பத்தினால் மிக்க வருத்தமுள்ளவளாயிருக்கிறேன். தர்மத்தில் மனமுள்ளவரே! உமது தவத்திற்குச் சிறந்தபலன் இதுதான். உம்மைப்பார்த்த அளவில் எனக்கு விருப்பமுண்டாயிற்று வந்தடையும் என்னை ஆதரியும். இந்த வீட்டிற்கும் இந்தத்தனத்திற்கும் இங்கே நீர் பார்க்கிற மற்றுமுள்ள எல்லாவற்றிற்கும் எனக்கும் நீர்தாம் தலைவர்; ஸந்தேகமில்லை. பிராம்மணரே! நீர் விரும்பினவற்றை எல்லாம் செய்வேன். நினைத்தபலன்களையெல்லாம் கொடுக்கும் இந்த அழகான வனத்தில் என்னுடன்கூடி ஸுகிபும். நான் உமக்கு உட்பட்டவளாயிருப்பேன். நீரும் என்னுடன்சேர்ந்து ஸுகம்பெறுவீர். தேவலோகத்திலும் மானிடலோகத்திலுமுள்ள எல்லாஸுகங்களையும் நாம் அனுபவிக்கலாம். பெண்களுக்குப் புருஷனோடு சேருவதற்கு மேலானது ஒன்றுமில்லை. எங்களுக்கு இதுதான் பெரும்பயன். மன்மதனால் ஏவப்பட்டபெண்கள் தங்களிஷ்டப்படியிருப்பார்கள். அவர்கள் நடக்கும்போது மிகக்கொதிப்புள்ளபுழுதியும் அவர்களுக்குச் சுடாது' என்றாள். அதற்கு அஷ்டாவக்ரர், 'சிறந்தவளே! பிறர்பெண்டிரை நான் எவ்வகையிலும் சேரேன். பிறர்பெண்டிரைத்தொடுவது தர்மசாஸ்திரங்களால் மறுக்கப்பட்டது. பதிவிரதையான மாதினிடத்திற் சேருவதற்குப் பிரம்மஹத்திக்குச் சொன்ன பிராயச்சித்தமே சொல்லப்பட்டிருக்கிறது. பிராம்மணஸ்திரீவிஷயத்தில இன்னுமதிகமாகப் பாவம் சொல்லப்பட்டதைக் காண்கிறோம். சிறந்தவளே! நான்விவாகஞ்செய்துகொள்ள விருப்பமுள்ளவன். அந்தவிஷயத்தில் எனக்குப் பிரம்மசரியம் கெடும். ஆதலால், விவாகஞ்செய்வதற்குமுன் பிராயச்சித்தம் பெரிதாகும். அப்படிப் பிராயச்சித்தம் செய்துகொள்ளாமல்

விவாகம் செய்துகொள்பவனுக்கு வித்து சுத்தமாகாது. உண்மை யில் தாயினாலும் தந்தையினாலுந்தான் புத்ரனைச் சுத்தனென்றறிய வேண்டும். நான் காமஸுகங்களையறியாதவன். தர்மத்திற்காக ஸந் ததியுண்டாகவேண்டியது மட்டுந்தான். ஆகையால், என்னுடைய புத்ரஸந்தானத்தினால் நான் நல்லலோகம் போகவேண்டுமென்பது தான் என்னுடைய நிச்சயம். உத்தமியே! தர்மத்தையறி. அறிந்த பின் நிவ்ருத்தித்துவிடு' என்று சொன்னார். அந்தஸ்திரீ, 'பிராம் மணரே! வாயு அக்கினி வருணன் முதலான எந்தத்தேவர்களும் மன் மதன்போலப் பெண்களுக்குப் பிரியமாயிருக்கிறதில்லை. பெண்க ளுக்கு ஸுகப்படுவதே இயற்கை. பெண்களுள் ஆயிரத்தில் ஒருத்தி யோ லக்ஷத்தில் ஒருத்தியோ ஒருபதிவிரதை எப்போதாவது கிடைக் கலாம். பெண்கள், தந்தைதாய்களையும் குலத்தையும் உடன்பிறந்த வர்களையும் கணவனையும் மைத்துனர்களையும் புத்ரர்களையும் பாரார்; மஹாநதிகள் கரைகளை இடிப்பதுபோல லீலைகளைச்செய்து குலங் களைக்கெடுப்பார். எல்லாத்தோஷங்களையும் நினைத்துத்தான் பிரம்ம தேவரே மேற்சொன்னதைக் கூறியிருக்கிறார்' என்று சொன்னாள். மனம் வேறுபடாத அந்தரிஷி அந்தமாதைப்பார்த்து, 'உன் விருப்பப் படி உன்னெண்ணம் இருக்கட்டும் நான் என்ன செய்யவேண்டுமெ ன்று நீ சொல்லுகிறாய்?' என்று கேட்டார் அதற்கு, அந்தஸ்திரீ, 'பகவானே! இடமும் காலமும் வந்தபோது தெரிந்துகொள்வீர். மஹானுபாவரே! அதுவரையில் இங்கிரும். நீர் வந்தகாரியம் நிறை வேறும்' என்றுசொன்னாள் யுதிஷ்டிர! பிறகு, அந்தப் பிராம்மரிஷி அவளைப்பார்த்து. 'அப்படியே ஆகட்டும். உனக்கு எதுவரையில் இஷ்டமிருக்கிறதோ அதுவரையில் நான் நிச்சயமாய் இங்கு வஸிப் பேன்' என்றுசொன்னார். அஷ்டாவக்ரமகரிஷி அப்போது அந்த ஸ்திரீ மூப்பினால் மிகக்கஷ்டப்பட்டுக்கொண்டிருப்பதைக்கண்டு மிகக் கவலையுற்றார்; கொதிப்புற்றவர்போலானார். அந்தப் பிராம்மணசிரேஷ் டர், அப்போது அவளுடைய அங்கத்தின் எந்த இடத்தைப்பார்த்தா லும் அங்கங்குள்ளவிகாரத்தினால் வெறுப்புற்றதனால் [1]அவர் பார்வை அவளிடத்தில் இனிமையாயில்லை. 'இவள் இந்தக்கிருஹதேவதையா யிருந்து சாபத்தினால் உருமாறச் செய்யப்பட்டாளோ? இவளுடைய காரணங்களை நாம் அவஸரப்பட்டு விசாரிப்பது ஸரியாகாது' என்னும் இடைவிடாத சிந்தையோடு அந்தவிஷயத்தைத் தெரிந்துகொள்ளவே ண்டுமென்ற ஆவலால் மனங்கலங்கிக்கொண்டே அவருக்கு அந்த இர

[1] பார்க்கவிரும்பவில்லை என்றபடி.

வின் மிச்சப்பாகம் சென்றது. அப்போது அந்தஸ்த்ரீ அவரைப்பார்த்து, 'பகவானே! ஸூர்யனுடையமண்டலம் செவ்வானத்தினால் சிவந்திருப்பதைப்பாரும். உமக்கு என்னவஸ்து கொண்டுவரப்பட வேண்டும்?' என்றுகேட்டாள். அவர் அவளைப்பார்த்து, 'ஸ்நாநத்திற்குவேண்டியஜலத்தை இப்போது கொண்டுவா. பிறகு, நான் வாக்கையும் இந்த்ரியங்களையும் அடக்கிக்கொண்டு ஸந்தியாவந்தனம் செய்வேன்' என்று சொன்னார்.

## ஐம்பத்தோராவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(வடதிசைத்தேவதை அஷ்டாவக்ரரை உபசரித்து அவர் மனத்தைப் பரிசோதித்தது.)

பிறகு, அந்தஸ்திரீ அந்தப்பிராம்மணரைப்பார்த்து, 'அப்படியேயாகட்டும்' என்றுசொல்லிச் சிறந்த தைலத்தையும் ஸ்நாநவஸ்திரத்தையும் கொண்டுவந்தாள். மகாதமாவான அந்தஅஷ்டாவக்ரமகரிஷியினால் அனுமதிகொடுக்கப்பெற்றபிறகு அந்தமாது அவர் அங்கங்கள் எல்லாவற்றிலும் தைலமிட்டாள். அந்தரிஷி ஸ்நானவஸ்திரத்தைத் தரித்துக்கொண்டு மஞ்சனமாடுமிடத்திற்கு மெதுவாகச்சென்று புதிதும் பலநிறங்களுள்ளதுமாகிய சிறந்த ஆஸனத்திலிருந்தார். அம்முனிவர் அந்தஆஸனத்தில் உட்கார்ந்தபிறகு இனிமையாகக்கைபடும்படி அந்தஸ்திரீ மெதுவாக அவருக்கு ஸ்நானம்செய்வித்தாள்; அம்முனிவருக்குத் தேவலோகத்திய உபசாரங்களை முறைப்படிசெய்தாள். மிக்கஸுகலக்ஷணமானவெந்நீராலும் அவள்கைபட்டஸுகத்தினாலும் உண்டான நித்திரையினால் அவ்விரவுமுழுதும் கடந்துபோனதையும் அம்மகாமுனிவர் அறியாமற்போனார். பிறகு, அவர் எழுந்து மிக்க ஆச்சர்யத்துடன் கீழ்த்திசையில் ஆகாயத்தில் ஸூர்யன்உதயமாயிருந்ததைக் கண்டார். பிறகு, அவருக்கு, 'என்ன இப்படி எல்லாப்பாவங்களையும் போக்குவதான ஸந்தியாவந்தனமும் எனக்கில்லாமற்போய்விட்டது? இதென்ன பிரமையா? அல்லது, உண்மையாகவேயிருக்குமா?' என்கிற எண்ணமுண்டாயிற்று. பிறகு, அவர் ஸூர்யனையுபஸ்தானம்செய்து, அவளைப்பார்த்து, 'நான் என்னசெய்வது?' என்று கேட்டார். அவள் அந்தரிஷிக்கு அமிருதம்போன்ற சுவையுள்ள அன்னத்தைக் கொண்டுவந்தாள். அவர் அந்த உணவின்சுவையினால்

அதை மிகுதியாக நினைக்கவில்லை. பிறகு, மிச்சமுள்ள பகல்சென்று திரும்பவும் மாலைப்பொழுதுவந்தது. பிறகு, அந்தஸ்திரீ அஷ்டாவக்ரபகவானைப்பார்த்து 'நீங்கள் சயனிக்கலாம்' என்றுசொன்னாள். அங்கே இருவருக்கும் தனித்தனியேபோடப்பட்ட இரண்டுசிறந்த படுக்கைகளிலும் அந்தஸ்திரீயும் அந்தரிஷியும் நித்திரை செய்தனர். முன்போலவே அந்தஸ்திரீ பாதிராத்திரியில் அவர் சயனத்திற்குவந்தாள். அஷ்டாவக்ரர் அவளைப்பார்த்து, 'உத்தமியே! என்மனம் அயலார் மனைவிகளிடம் பதிவதில்லை. சிறந்தவளே! எழுந்திரு. உனக்கு நன்மையுண்டாகட்டும். இங்கேசயனிப்பதை விட்டுவிடு' என்றுசொன்னார். அந்தப்பிராம்மணரால் மனஉறுதியுடன் தடுக்கப்பட்டஅந்தஸ்த்ரீ உடனே அம்முனிவரைப்பார்த்து, 'நான், ஸ்வதந்திரமாயிருப்பவள்; (ஒருவன்மனைவியல்லேன்.) உமது தர்மத்திற் குத்தவறுதலில்லை' என்று சொன்னாள். அஷ்டாவக்ரர், 'பெண்கள் ஸ்வதந்திரமாயிருப்பதில்லை. பெண்கள் பிறருக்கு அடங்கியிருக்கவேண்டுமேயன்றித் தம்மிச்சையாயிருக்கத்தகாதென்பது பிரம்மதேவருடைய கட்டளை' என்றுசொன்னார். அந்தஸ்த்ரீ, 'பிராம்மணரே! புணர்ச்சியில் விருப்பம் என்னை வருத்துகின்றது. என்னுடைய பக்தியையும்பாரும். பிராம்மணரே! என்னைநீர் அங்கீகரியாவிடின் பாவத்தையடைவீர்' என்று சொன்னாள். அஷ்டாவக்ரர், 'ஐம்புலன்களுக்கும் அடிமையாகும் மனிதனை அநேக பாவங்களிழுக்கும். நான் மனஉறுதியினால் புலன்களை வெல்லுகிறவன். சிறந்தவளே! உன் சயனத்திற்குச் செல்லலாம்' என்றார். அந்தஸ்த்ரீ, 'பிராம்மணரே! உமக்குத் தலைவணங்கி நமஸ்காரம் செய்கிறேன். அநுக்கிரகம்செய்யக்கடவீர். குற்றமற்றவரே! தரையில் விழுந்துநமஸ்காரம்செய்யும் எனக்குத் தஞ்சமாகக்கடவீர். அயலார் மனைவிகள் விஷயத்தில் குற்றங்காணிகமாயிருப்பதாக நீர் நினைத்தால் இப்போதே என்னை உமக்குக்கொடுக்கிறேன். பிராம்மணரே! என்னைப் பாணிக்கிரகணம் செய்துகொள்ளும். பாவமுண்டாகாது. இதை உண்மையாக உமக்குச் சொல்லுகிறேன். எனக்குக் கணவனில்லாமல் நானே ஸ்வதந்திரமாயிருப்பவளென்றறியும். அப்படிப்பட்டவளுக்கு எதுதர்மமோ அது எனக்கிருக்கட்டும். நான் உம்மிடத்தில் மனம் வைத்தவளாகவும் யாருக்கும் உட்படாதவளாகவும் இருக்கிறேன். என்னை நீர் அடையலாம்' என்று சொன்னாள். அஷ்டாவக்ரர், 'உத்தமியே! நீ ஸ்வதந்திரையாவதெப்படி? அதன்காரணத்தை எனக்குச்சொல். மூவுலகங்களிலும் தன்னிச்சைப்படி இருக்கக்கூடியபெண் யாருமில்லை. சிறுவயதில் தந்தையும் தருணம்வந்தபோது கணவனும்

முதிர்ந்தவயதில் புத்திரனும் காப்பதனால் பெண் தன்னிச்சைப்படி யிருப்பதில்லை. 'கிழவியாயிருப்பவளைக் கன்னிகையென்று நான் நம்ப வில்லை. குற்றமற்றவளே! எனக்கு உன்மேலாசையுமில்லை' என்று சொன்னார். அந்தஸ்த்ரீ, 'பிராம்மணரே! நான் சிறுபிராயமுதலா கவே கலியாணம்பண்ணிக்கொள்ளாமல் பிரம்மசாரி விரதத்திலிருக் கிறேன். நான் கன்னிகைதானென்பதில் ஸந்தேகமில்லை. என்னை உமக்கு மனைவியாகச் செய்துகொள்ளும் என் ஆசையைக் கெடா தீர்' என்றாள். அஷ்டாவக்ரர், 'அந்த வதான்யமுனிவர் என்னைப் போலவே உன்னையும், உன்னைப்போலவே என்னையும் பரீக்ஷிப்பது இது. இது என்காரியத்திற்குத் தடையாக ஏற்பட்டதோ? அல்லது, உண்மையாகத்தானிருக்குமோ? இது மிகவும் அற்புதம். நான் எதைச் செய்வது நன்மையாக இருக்குமோ?' என்று அவளிடத்தில்சொல்லிப் பிறகு, 'இவள் சிறந்த ஆபரணங்களும் உடைகளுமுள்ள கன்னிகை யாகவே என்னிடம்வந்திருக்கிறாள். ஆனால், இவளுடைய இந்தச்சிற ந்தரூபம் மூப்பையடைந்திருந்ததெப்படி? இப்போது திரும்பவும் இப்படிப்பட்ட கன்னிகைவடிவம் வந்திருக்கிறது. இதற்குமேலென் னகுமோ? எவ்வகையிலும் நியமந்தவறுவதில் எனக்கு இஷ்டமில்லை. நான் ஸத்யமாகவே இவளை க்ரஹிக்கவேண்டும்' என்று தமக்குள் சொல்லிக்கொண்டார்" என்றார்.

---

## ஐம்பத்திரண்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

---

(அஷ்டாவக்ரர் வடதிசைத்தேவதையிடம் விடைபெற்றுவந்து வதான்யரின் புதல்வியை மணந்தது).

யுதிஷ்டிரர், "அந்தஸ்திரீயானவள் சிறந்தமகிமையுள்ள அந்த ரிஷியின் சாபத்திற்குப் பயப்படாமலிருந்ததெப்படி? அந்த அஷ்டா வக்ரர் எப்படித் திரும்பிப்போனார்? அதை எனக்கு நீர்சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்:

"அஷ்டாவக்ரர், அவளைப்பார்த்து, 'உனதுரூபத்தை என்மாற் றுகிறாய்? பொய்சொல்லலாகாது. பிராம்மணன்மேலாணைப்படிசொல்' என்றுகேட்டார். அதற்கு அந்தஸ்த்ரீ, 'பிராம்மணோத்தமரே! உண் மையான சக்தியுள்ளவரே! இந்தபூமியை ஆகாயம்பூமிகளில் எங்கே வைத்தாலும் வையும். நான் சொல்வதையெல்லாம் ஊக்கத்துடன்

கேளும். உம்முடைய மனஉறுதியைப் பார்ப்பதற்காக நான் இந்தப் பரீக்ஷைசெய்தேன். 'உண்மையான இந்திரியஜயமுள்ளவரே! விரதந் தவறாமையினால் நீர் புண்ணியலோகங்களை ஜயித்தவராகிறீர். என்னை வடதிசைத்தேவதையென்றறியும். பெண்கள் மனம் நிலையற்றிருப்பதை நீர் கண்டிருக்கிறீர். கிழவிகளான ஸ்த்ரீகளையும் மன்மததாபம் துன்பஞ்செய்யும். பெண்களை நம்பாதவனும் கள் காமம் சூதுமுதலியகுற்றங்கள் இல்லாதவனும் பெண்களிடம் அதிகப்பற்றில்லாதவனும் வரைவிட்டுப்போகாதவனும் தெரிந்தவனும் நல்லொழுக்கமுள்ளவனுமான புருஷன் தான் மனையாளுடன்கூடஸுகம்பெறுவான். இப்போது பிரம்மதேவரும இந்திரன்முதலானதேவர்களும் உம்மிடத்தில் திருப்தியடைந்திருக்கின்றனர். பிராம்மணசிரேஷ்டரே! (மகிமையுள்ளநீர்) என்னகாரியம்பற்றி அந்தப்பெண்ணின் தகப்பனால் அனுப்பப்பட்டு இங்குவந்தீரோ அந்தவிஷயத்தை உபதேசம்கேட்க அனுப்பப்பட்டீர். அதையெல்லாம் நீர்கேட்டீர். பெண்ணானவள் ஸுகத்தில் மிகப்பற்றுள்ளவள்; இன்சொல்லினாலும் விட்டுப்பிரியாமலிருப்பதனாலும் சிறந்த ஆடைமுதலியவற்றினாலும் அதிகமாகநெருங்கி காமவிருப்பதனாலும் ஒற்றுமையினாலும் காப்பாற்றப்படுகிறாள். புண்ணியதிதிகள் இல்லாதபோதும் சாஸ்திரத்தினால் விலக்கப்படாதஇரவுகளிலும் ருதுகாலமில்லாவிடினும் சேரலாம் இராத்திரிகாலத்தில் அதிகநியமம்வேண்டாம் நியமத்தை முழுதும்விடவும்கூடாது. நீர் க்ஷேமமாக உமது இல்லம்செல்லலாம். உமக்குச் சிரமமுண்டாகாது. பிராம்மணரே! அந்தக்கன்னிகையை நீர் அடையப்போகிறீர். அவள் புத்ரஸந்ததியுள்ளவளாவள். நீர் என்னைச் சபதத்தோடு கேட்டீர். அதனால், உமக்குப்பெண்களின்இயற்கையைப்பற்றிய இந்தமறுமொழி நான் சொன்னேன். பிராம்மணன்மேலாணையானது இம்மூவுலகங்களிலுமுள்ள எவரும் எக்காலமும் தாண்டக்கூடாதது. நீர் செல்லலாம். உமதுகாரியமாயிற்று. இன்னுமென்னகேட்க விரும்புகிறீர்? பிரம்மரிஷியே! அஷ்டாவக்ரரே! எல்லாவற்றையும் உள்ளபடிசொல்வேன். பிராம்மணோத்தமரே! உமக்காக வதான்யரிஷியினாலும் வேண்டிக்கொள்ளப்பட்டேன் அவரைக் கௌரவப்படுத்துவதற்காக உம்மிடத்தில் இந்தச்சொல்லைச் சொன்னேன்' என்றுசொன்னாள். அவள் சொல்லைக்கேட்டு அந்தப்பிராம்மணர் கைகூப்பிநின்று அவளால்விடைகொடுக்கப்பெற்றபிறகு தம்வீட்டிற்குத் திரும்பிவந்தார். தர்மராஜனே! வீடுவந்துசேர்ந்து இளைப்பாறித் தம்சுற்றத்தாரை விசாரித்தபிறகு அந்தவதான்யரிஷியிடம் மரியாதையோடுசென்றார். அப்போது

அந்தப்பிராம்மணரால் கேட்கப்பட்ட அஷ்டாவக்ரர் மனம் மிகக்களித்துத் தாம்நேரில்கண்டகாட்சியை அந்தப் பிராம்மணருக்குச் சொல்லலானார்: 'பிரபுவே! நான் உங்களால் அநுமதிகொடுக்கப்பெற்றுக் கந்தமாதனமலைக்குப்போனேன். அதற்கும் வடக்குப்பிரதேசத்தில் ஒருசிறந்ததேவதையைக் கண்டேன் அவள் உம்மைப்பற்றியும் சொல்லி நீர் சொன்னசொல்லையும் எனக்குத்தெரிவித்து விடைகொடுத்த பிறகு வீட்டிற்கு வந்தேன்' என்றார். உடனே அந்தப்பிராம்மணர் அவரைப்பார்த்து, 'நல்லநக்ஷத்திரமும் திதியும் சேர்ந்திருக்கும் காலத்தில் என்பெண்ணை விவாகம்பண்ணிக்கொள்ளும். நீர் சிறந்த பாத்திரமாயிருப்பவர்' என்று சொன்னார். தர்மராஜனே! தர்மத்தில் மனம்வைத்தவரில்சிறந்தவரான அஷ்டாவக்ரர் ஆகட்டுமென்றுசொல்லி அந்தக்கன்னிகையை விவாகம்செய்துகொண்டு பிறகு மகிழ்வுற்றிருந்தார். மிகச்சிறந்த அந்தக்கன்னிகையை விவாகம்செய்துகொண்டதனாலேயே மனத்துயரம்நீங்கி ஸந்தோஷமாகத் தம்முடையஆச்ரமத்தில் வஸித்தார்"[1] என்று கூறினர்.

---

## ஐம்பத்துமூன்றுவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(நாம்ந்தஜாதிப் பெண்களிடம் பிறந்தவர்கள் பிராம்மரிஷிகளானதைப்பற்றியது.)

யுதிஷ்டிரர், "மகாராஜாவான பிதாமஹரே! வைசியஜாதிசூத்திரஜாதிப்பெண்களிடத்தில் பிறந்த பூர்விகர்களான பிராம்மணோத்தமர்கள் பிரம்மரிஷிகளென்றுசொல்லப்படுகின்றனரே. இதுஎப்படி? வேறுயோனியிற்பிறந்து பிராம்மணனாவது முரண்படுகிறதென்று நினைக்கிறேன். இதன் உண்மையைச் சொல்லக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்:

---

[1] ஒருபுருஷன் ஸ்திரீயை நல்லொழுக்கமுள்ளவளாக தவறாமலிருக்கும்படி காப்பதற்குச் சொன்னவழியை அநுசரித்தால் அந்தஸ்திரீ சரியாக நடப்பள். அப்படிப்பட்டவன் தான் நல்லகதி பெறுவதுடன் தனது மனையாட்டியையும் நல்லகதியிற சேர்ப்பான். புருஷனோடு ஒத்திருப்பதைத்தவிரத் தனித்துவேறு தர்மம் பெண்ணுக்கில்லையென்பதினாலேதான் அவளை ஸஹதர்மிணியென்பது. கற்புள்ளபெண் ஒருவன் ஸுகத்திற்கும் தர்மத்திற்கும் இன்றியமையாததுணை. ஆசாரியன் சிஷ்யனைச் சீர்திருத்துவதுபோலத் தன் துணையான மனைவியைச் சீர்திருத்தி நல்வழியில் நடத்துவது கணவன் கடமை என்னும் ஸமாதானத்தை இந்தக்கதையில் கண்டுகொள்க.

"யுதிஷ்டிரா! இந்தவிஷயத்தில் உனக்குச் சங்கைவேண்டாம். தெரிந்துகொள். இது பிசகா, ஸரியாஎனவும் நீ சிந்திக்கவேண்டாம். அந்தரிஷிகள மனத்தை அடக்கினவர்கள். அவர்களின் அறிவுதடைப் படுவதில்லை. அவர்களுக்குப் பிரம்மதேஜஸ் அதிகம். அதனாலேதான் ரிஷிகளென்று வேதங்களால சொல்லப்படுகின்றனர். அரசர்க்கரசே! அவர்களை இகழத்தகாது. சாஸ்திரத்தை நம்புகிறவர்களுக்குச் சாஸ்திரந்தானே முக்கியம் அவர்களைப் பிராம்மணர்களென்று உலகம் ஒப்புக்கொள்ளுகிறது அதற்குக்காரணம் தவந்தான். அப்பா! சிறந்தசத்புருஷனே! தவமும் ஞானமும் நிரம்பினமகாத்மாக்களால் உண்டாக்கப்பட்ட அநுஷ்டானங்களே நமக்குப் பிரமாணங்கள். அரசர்க்கரசனே! பரதசிரேஷ்டனே! பிராம்மக்ஷத்திரிய வைசியசூத்திரரென்னும் நான்குஜாதிப்பெண்களும் தர்மமாகப் பிராம்மணனுக்குப் பாரியைகளாகலாம். பரதசிரேஷ்டனே! க்ஷத்திரிய வைசிய சூத்திரஜாதிப் பெண்கள் க்ஷத்திரியனுக்கு மனைவிகளாகலாம். பாரதரிற்சிறந்தவனே! வைசியனுக்கு வைசியஜாதிப் பெண்ணும் சூத்ரஜாதிப் பெண்ணும் மனைவிகளாகலாமென்று சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டிருக்கின்றனர். சூத்திரனுக்குச் சூத்திரஜாதிப்பெண்மட்டுந்தான் பாரியையாகச் சொல்லப்பட்டிருக்கிறாள். மேற்குலத்துப் பெண்ணும் கீழ்க்குலத்து ஆண்பிள்ளையும் சேருவதனாலேதான் ஜாதி ஸங்கரமுண்டாகிறது. அரசனே! சூத்திரப்பெண்ணுக்கு நாலுஜாதிப் புருஷர்களும் கணவர்களாகச் சொல்லப்படுகின்றனர். மேற்குலத்துப்பெண்ணுக்குமட்டும் அந்த வருணத்தில்பிறந்த ஒருவன்தான் கணவன். க்ஷத்திரியஜாதிப்பெண்ணுக்குப் பிராம்மணக்ஷத்திரியர்கள் இருவரும் கணவர்களாகச் சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டனர். ராஜனே! மனிதரிற்சிறந்தவனே! வைசியஜாதிப்பெண்ணுக்கு வைசியன் க்ஷத்திரியன் பிராம்மணன் இம்மூவரும் கணவராகலாமென்று விதிக்கப்பட்டனர். இவ்விதியைநினைத்துத்தான் முன்னிருந்த ரிஷிகள் மகாத்மாக்களும் பிரம்மரிஷிகளுமான புத்ரர்களை உண்டுபண்ணினர் பூர்விகரிஷிகளாகிய [1]மித்ரா வருணர் இருவராலும் வஸிஷ்டர் அகஸ்தியர் பார்ஹிஷவ்யர் இவர்கள் உண்டாக்கப்பட்டனர். கக்ஷீவான், ஆர்ஷ்டிஷேணா, புருஷா, கஷா, கௌதமர் இவர்கள் [2]மமதையென்பவளின் பிள்ளையின் பிள்ளைகளென்று சொல்லப்படுகின்றனர் பகவானுவதஸப்ரியர், ஸ்தூலரச்மி, அக்ஷணி இவர்கள் கௌதமருக்குத் தாஸியினிடம்பிறந்த புதல்வர்கள். கபிஞ்ச

[1] பெண்ணில்லாமலே ஒரு பாத்திரத்தில் வீரியம்சேர்ந்து உண்டாகப்பட்டனர்.

[2] சூத்திரஜாதிப்பெண்.

லாதரென்னும் பிரம்மரிஷி சண்டாளியினிடத்தில் பிறந்தவர். [1]வைன தேயரென்பவர் வஸிஷ்டருக்குச் சூத்ரஜாதிப்பெண்ணினிடத்திற் பிறந்தவர். கௌரவனே! முன்னர் அத்ருச்யந்தியென்பவளின் தந்தை யாகிய சித்ரமுகனென்னும்பெயருள்ளவைசியன் வஸிஷ்டருடையவீரி யத்துக்கு ஜனித்ததனாலும் அவருடைய அனுக்கிரகம்பெற்றதனாலும் பிராம்மணனாதலையும பிரம்மரிஷியாதலையும் பெற்றான். அந்தச்சித்ர முகனென்னும் வைசியன் தனது அழகானபெண்ணை (அத்ருச்யந்தி யை) வஸிஷ்டபுத்திரருக்கு (சக்தியென்பவருக்கு)க் கொடுத்தான். அவளுக்குப்பிறந்தவர் பாராசரரென்னும்பிரம்மரிஷி. அப்படியே பரா சாருக்கும் ஸத்தியவதியென்னும் செம்படவப்பெண்ணிடம் யோகமே உருக்கொண்டமகரிஷியாகிய வ்யாஸமுனிவர் பிறந்தார். தவமும் [2]யோகமுமே உருக்கொண்டவரும் ஐம்புலன்களையுமடக்கினவரும் சிறந்த புகழ்பெற்றவருமாகிய ரிசியசிருங்கமுனிவர் விபாண்டகருக் குப் பெண்மானிடமபிறந்தவர். மந்தபாலருக்குச் சார்ங்கியென்னும் பக்ஷியினிடம் ப்ரம்மத்தை உபதேசிப்பவரும் பரிசுத்தருமான நான்கு பிரம்மரிஷிகள் பிறந்தனர். அவர்களால் அக்கினிபகவான் (காண்டவ வனதகனத்தில்) துதிக்கப்பெற்றார். த்ரோணன், ஸ்தம்பமித்ரன், சிறந்தபுத்தியுள்ள ஸாரிஸ்ருக்வன், ஜரிதாரிஎனப்பெயர்பெற்ற நால்வ ரும் சூரியனுக்கொப்பானவர்கள். காலவிருக்ஷர்என்னும் மகரிஷிக் குப் பறவையினிடத்திலேயே பொன்னிறமுள்ளவரும் சிறந்தமகிமை யுள்ளவருமாகிய ஹிரண்யஹஸ்தரென்னும்மகரிஷிபிறந்தார். அப்பா! அரசர்க்கரசே! புலஸ்தியர் புலஹர்முதலானமகரிஷிகள் பிரம்மதேவ ருடைய மனத்தினால் அக்கினியிலிருந்துண்டானவர்கள். பரதசிரேஷ் டனே! ஸாவர்ணியனென்னும்ராஜரிஷி மண்ணினாற்செய்யப்பட்ட ஸவர்ணையென்னும் பெண்ணினிடம் அதிதியின்புத்ரனானசூரியனுக் குப் பிறந்தவன். மூத்தகுமாரரும் மகிமையுள்ளவருமான சாண்டில் யர் கசியபருக்கு அக்கினியிற்பிறந்தவர். சாத்வானென்பவருக்கு நாணல்தண்டிலிருந்து கிருபாசாரியரும் கிருபியும் பிறந்தனர். அரசிற் சிறந்தவனே! ரேணுஎன்பவரும் பரசுராமர்தாயாகிய புகழ்பெற்ற ரேணுகையும் ஸோமபரென்னும்மகாத்மாவுக்குத் தாமரைமலரிலிருந் துண்டாயினர். புவனியில்பெயர்பெற்ற அர்க்கதந்தரென்னும்மகரிஷி ஸோமகரென்னும்மகாத்மாவுக்கு யமுனையிற்பிறந்தவர். பாரதனே! இந்திரனைப்போன்றசக்தியுள்ள த்ருபதனுக்கு ஆகவநீயமென்னும் அக்

[1] இது வேறுகல்பத்தில் நடந்ததாகக் கொள்ளவேண்டும்.

[2] தியானம்.

இனியிலிருந்து த்ருஷ்டத்யும்னனும் யாகவேதிகையிலிருந்து த்ரௌபதியும் பிறந்தனர். அப்படியே மகாத்மாவானவஸிஷ்டருக்குப் புலியின்கர்ப்பத்தில் வியாக்ரபாதர்முதலிய க்யாதிபெற்ற பத்தொன்பது புத்ரர்கள் பிறந்தனர். மந்தர், பாதலோமர், ஜாபாலிமகரிஷி, மன்யு, உபமன்யு, ஸேதுகர்ணர்இவர்களும் இன்னுமநேகம்புகழ்பெற்றவர்களும் பூமியில் கோத்திரரிஷிகளாயினர். இக்ஷ்வாகு வம்சத்திற்பிறந்த மகாத்மாவாகிய விச்வகாசனென்னும்ராஜரிஷியின் தலையைப்பிளந்துகொண்டு பாலாச்வனென்னும்புத்ரன் வெளிக்கிளம்பினன். அஸ்த்ரங்களின்வன்மைகளைப்பெற்ற மாந்தாதாஎன்னும்ராஜரிஷி சிறந்தபுத்தியுள்ள யுவனாச்வனால் தன்கர்ப்பத்தில் வைக்கப்பட்டான். சக்கரவர்த்தியும் மிக்கபுகழ்பெற்றவனுமாகிய கௌசிகனென்னும்ராஜரிஷி ஸுபாஹுஎன்னும் அரசனுக்குப் பாஹுதையென்னும் நதியினிடம் பிறந்தவன். நரகன், ஸம்வர்த்தன், புஷ்கலன்இவர்கள் பூமியின்புத்ரர்கள். பெரியமஹிமையுள்ள கார்க்கியமஹரிஷி ஜலத்தினின்றுஉண்டானவர். இவர்களும் இன்னுமநேகர்களுமாகிய அரசர்களும் பிராம்மணர்களும் மஹாத்மாக்களானமகரிஷிகளின் பிரபாவத்தினால் உண்டானவர்கள். அவர்களின்தவத்தினாலும் வித்தையினாலும் மற்றுமுள்ள குணங்களினாலும் ஸாதிக்கக்கூடாதது ஒன்றுமில்லை மனிதருக் கதிபதியே! வேந்தே! யுதிஷ்டிரா! தர்மசாஸ்திரம்செய்தமனுவினால் இந்தவிஷயத்திற்சொல்லப்பட்ட ஒருசுலோகமிருக்கிறது; அதைக் கேள்: (அதன்பொருள்) 'ரிஷிகள், நதிகள், மகாத்மாக்களானஸத்புருஷர்கள், பெண்களின்கெட்டநடை இவற்றின்காரணங்களை அறியக்கூடாது' என்பது. ஆதலால், மகரிஷிகளின்பிறப்பைப்பற்றிச் சங்கிக்கத்தகாது. அக்கினியானது எங்கும்வியாபிப்பதுபோல, மகாத்மாக்களின்மகிமையும் எங்கும்வியாபிப்பது" என்றார்.

## ஐம்பத்துநான்காவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(நாரதர் மார்க்கண்டேயருக்கு யுகதர்மமுதலியவற்றைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர் "மகாராஜரே! புருஷன் புத்ரஸந்தானத்தினால் கரையேற்றப்படுவானென்பது எப்படி? புத்திரனையடையாமலிருக்கும்வரையில் புருஷன் பலன்இல்லாதவனா?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்:—

"இவ்விஷயமாக முற்காலத்தில் மார்க்கண்டேயர்கேட்டதற்கு நாரதர்சொன்னதாகிய ஒருபழையஇதிஹாஸம் கூறுகின்றனர். அதை இப்போதுசொல்லுகிறேன். முன்னே கங்கை யமுனைகளின்நடுவில் போகவதியென்னும்நகரத்தின்ஸமீபத்தில் பர்வதர் நாரதர் அஸிதர் தேவலர் ஆருணேயர் ரைப்யர் ஆகியஇவர்கள் வந்துசேர்ந்து உட்கார்ந்திருக்கக்கண்டு, மார்க்கண்டேயர் அவரிடம்போனார். அந்தரிஷிகள் மார்க்கண்டேயரைக்கண்டு எழுந்து அவர்முகம்நோக்கிநின்று பூஜைக்குரியஅந்தப்பிராம்மணரைப்பூஜித்து, 'நாங்கள் என்னசெய்யவேண்டும்?' என்றுகேட்டனர். அதற்கு மார்க்கண்டேயர், 'இந்தப்பெரியவர்களின்சேர்க்கை பிரயாஸத்தினால் எனக்குக்கிடைத்திருக்கிறது. தர்மங்களையும் ஆசாரங்களையும்பற்றியநிச்சயத்தை இந்தச்சபையில் நான் பெறலாம். கிருதயுகத்தில் தர்மம் ஒழுங்காயிருந்தது; அந்த யுகம்போனபிறகு தடுமாறுகிறது. யுகந்தோறுமுள்ளமகரிஷிகளிடம் தெரிந்துகொள்ளவிரும்புகிறேன்' என்றுகேட்டார். அந்தரிஷிகள் நாரதரைப்பார்த்து, 'ஓ! தத்வஜ்ஞானியே! இவருக்கு எங்கெங்கே ஸம்சயமிருக்கிறதோ அதையெல்லாம் நீர் சொல்லக்கடவீர். தர்மாதர்மங்களிலுள்ள ஸந்தேஹங்களைத்தீர்ப்பவர் நீர்தாமே?' என்று சொன்னார்கள். அவ்வாறு ரிஷிகளின்கட்டளையினால் நாரதர் எல்லாத்தர்மங்களின் பலன்களையுமறிந்த மார்க்கண்டேயருக்கு அந்தரிஷிகள்யாவரும்ஒப்புக்கொள்ளத்தக்க மறுமொழிகூறலானார்: 'தீர்க்காயுளுள்ளவரே! தவத்தினால்பிரகாசிப்பவரே! வேதவேதாங்கங்களின் உண்மைப்பொருளையறிந்தவரே! பிராம்மணரே! உமக்கு எதில் ஸந்தேகமுண்டாயிருக்கிறதோ அதை நீர் சொல்லவேண்டும். தர்மத்தையும் உலகத்திற்குஉபகாரமானகாரியத்தையும் நீர் கேட்கவிரும்பும் மற்றனைத்தையும் சொல்வேன். மிகச்சிறந்ததவமுள்ளநீர் கேளும்' என்று சொன்னார். மார்க்கண்டேயர், 'இவ்வுலகத்தில் ஒவ்வொருயுகமுங் கடந்தபோதும் தர்மத்தின்அணை உடைந்துகொண்டேவருகிறது. போலிக்கர்மங்களினால் தர்மத்தை நான் எப்படியடையலாமென்பது என்கருத்து' என்றுகேட்டார். நாரதர், 'பிராம்மணரே! முதலில் கிருதயுகத்தில் தர்மம் [1] நான்குபாதங்களோடிருந்தது. அதன்பிறகு, காளடைவில் அதில்கொஞ்சம்கொஞ்சம்குறைந்ததனால் அதர்மம்தலைப்பட்டது. அதன்பிறகு, தர்மம்கெட்டதாகிய [2] திரேதாயுகமென்பது ஆரம்பித்தது. அந்தயுகம்கடந்தபின் [3] துவாபரமென்னும் மூன்றும்

[1] முழுதும்.
[2] திரேதாயுகமென்றபெயரினாலேயே மூன்றுபாதம்தர்மமென்பது கருத்து.
[3] இரண்டுபாதங்களிருப்பதுபற்றி துவாபரமென்று பெயர்வந்தது.

யுகம் வந்தது. அப்போது தர்மத்தின் இரண்டுபாதங்களை அதர்மம் அழித்துவிட்டது. த்வாபரம்கடந்து கலியுகம்வந்தபிறகு, உலகநடையும் தர்மமும்இருப்பதைச் சொல்லுகிறேன் கேளும்: 'நந்திகமென்பது நாலாவதுயுகம். அதில் தர்மத்தின்ஒருபாதந்தான் நிற்பது. அந்தயுகம் ஆரம்பித்ததுமுதல் உலகத்தில் ஜனங்கள் தர்மங்களையும் ஆசாரங்களையும்விட்டுப் புத்தியும் ஆயுளும் பலமும் தனமும் குன்றிப்போகின்றனர்' என்றுசொன்னார். மார்க்கண்டேயர், 'இப்படித் தர்மம்நிலைகலங்கி உலகநிலை அதர்மம்தலையெடுத்தபோது நாலு வர்ணங்களின் ஹவ்யகவ்யங்களும் அவசியம்கெடுமே?' என்றுகேட்டார். நாரதர், 'மந்திரத்தினால்பரிசுத்தமான ஹவ்யகவ்யங்கள் எப்போதும் கெடுவதில்லை. கொடுப்பவன் சாஸ்திரப்படிகொடுத்தால் அதைத் தேவர்கள் பெற்றுக்கொள்ளுகின்றனர். மனச்சுத்தியோடு ஹவ்யகவ்யங்களைக்கொடுப்பவனும் வேண்டியபலன்களையெல்லாம் பெறுவான். பலன்களைநிரம்பப்பெற்றுத் தனக்குஇஷ்டமிருக்கும்வரையில் ஸ்வர்க்கலோகத்திலும் தன்இஷ்டப்படி பூஜிக்கப்பெறுவான்' என்றுசொன்னார். மார்க்கண்டேயர், நாலுவர்ணங்களிலும் மந்திரமில்லாமலும் சாஸ்திரவிதியைவிட்டும் ஹவ்யகவ்யங்களைக் கொடுப்பவர்களின்கொடை எங்கேபோகிறது?' என்றுகேட்டார். நாரதர் 'பிராம்மணர்கள் கொடுத்தது அஸுரர்களையும், க்ஷத்ரியர்கள்கொடுத்தது ராக்ஷஸர்களையும், வைசியர்கள்கொடுத்தது [1]பிரேதங்களையும், சூத்ரர்கள்கொடுத்தது பூதங்களையும் சேருகின்றன' என்றுசொன்னார் மார்க்கண்டேயர், 'ஆனால், நான்குவர்ணங்களுக்கும் கீழ்ஜாதியிற்பிறந்தவர்கள் நான்கு வர்ணத்தாரால் உபதேசிக்கப்பெற்று ஹவ்யகவ்யங்களைக்கொடுப்பாராயின் அவர்கள்கொடுத்தது எங்கேசேருகிறது?' என்றுகேட்க, நாரதர் 'நாலுவர்ணங்களுக்கும் தாழ்ந்தமனிதர் ஹவ்யகவ்யங்களைக்கொடுப்பாராயின் அவற்றைத் தேவர்களும் வாங்குவதில்லை. பித்ருக்களும் வாங்குவதில்லை. அவை பித்ருக்களையும் தேவர்களையும்விட்டு ராக்ஷஸர்களுக்கும் பிசாசுகளுக்கும் அவற்றைச்சேர்ந்தபிராணிகளுக்கும் ஜீவனமாகச் சொல்லப்படுகின்றன. கொடுப்பவர்கள்எல்லாரும் சாஸ்திரப்படி சிரத்தையோடுகொடுக்கும் ஹவ்யகவ்யங்களைமட்டுமே தேவர்கள் புசிக்கின்றனர்' என்றுசொன்னார்.

[1] ஒருவகைப்பிசாசு.

## ஐம்பத்தைந்தாவது அத்யாயம்.

### தர்ன தர்மபர்வம்—(தொடர்ச்சி.)



(நாரதர் மார்க்கண்டேயருக்குக் கன்யாவிவாஹம் ஸந்ததி முதலியவைகளைப்பற்றிச் சொல்லியது.)

மார்க்கண்டேயர், 'நாரதரே! நான்குவர்ணங்களுக்குங்கீழ்ப்பட்டவர்கள்கொடுக்கும் ஹவ்யகவ்யங்களைப்பற்றிக்கேட்டேன். கன்னிகைகளுக்கு விவாகத்தையும் புத்ரோத்பத்தியையும்பற்றி எனக்குச்சொல்லும்' என்றுகேட்டனர். நாரதர், 'பிள்ளைகளுக்குக் கன்னிகைகளைக் கொடுப்பதையும் ஸ்த்ரீபுருஷர்களசேருவதையும்பற்றி நான் கிரமமாகவும் தெளிவாகவுஞ்சொல்லுகிறேன்; கேளும். பெண்பிறந்த உடனேயே அவளை ஸரியானவனுக்குக் கொடுக்கவேண்டும். கன்னிகை, காலத்தில்கொடுக்கப்பட்டால் பிதாவானவன் தர்மஞ்செய்தவனாகிறான். ருதுவானகன்னிகையை அவளுக்கு அதிகாரியாயிருப்பவன் கொடாமலிருப்பானாயின் ஒவ்வொருமாதமுங்கடந்தபோதும் அவளுடைய ஒவ்வொருகர்ப்பத்தையழித்தபாபத்தை அடைகிறான். உலகவ்யவஹாரங்களில்லாமல் கன்னிகையைவீட்டில் அடைத்துவைக்கும் பந்துவானவன் அவளால்சபிக்கப்பட்டுக் கர்ப்பச்சேதமபண்ணின தோஷத்தை அடைகிறான். பாணிக்ரஹணத்தினால் மாத்திரம் கொடுக்கப்பட்ட கன்னிகை அந்தக்கணவன் இறந்துபோனால் இரண்டாவது கணவனுடன் விவாஹஸம்ஸ்காரம்பெறதக்கவளாகிறாள். அந்தக்கன்னிகை, 'புனர்ப்பூ' என்னப்படுகிறாள். அவளும் அவள்ஸந்ததிகளும் ஹவ்யகவ்யங்களைக்கொடுக்கத்தக்கவர்கள். அவள் விவாகஞ்செய்வதற்கும் ஸந்ததிகளைப்பெறுவதற்கும் மறுக்கப்படாதவள்' என்று சொன்னார். மார்க்கண்டேயர், 'ரிஷிசிரேஷ்டரே! எந்தக்கன்னிகை பிரஸவித்தவளாகவோ கர்ப்பிணியாகவோ இருக்கிறாளோ அவளுக்கு மறுபடிவிவாகஞ்செய்வது எப்படி?' என்றுகேட்டார். நாரதர், 'அந்தக்கன்னிகை அக்னியினிடத்தில் உண்மையாகநடந்தவிஷயத்தை நிச்சயமாக வாக்கினால் தெரிவிக்கவேண்டும். அதன்பிறகு, அவள்மேல் விருப்பம்வைக்கலாம். அப்படிப்பட்டவர்கள் [1]குமாரிகளேயன்றிக் [2]கன்னிகைகளாகார். கர்ப்பத்தோடிருப்பவளைப் பிரஸவித்தபிறகு பிரம்மஹத்திக்குரிய பிராயச்சித்தத்தில் மூன்றிலொருபாகமாவது நாலிலொருபாகமாவதுசெய்து பரிசுத்தையாக்கி

[1] பன்னிரண்டுபிராயம்சென்றவள். [2] பத்துப்பிராயஞ்சென்றவள்.

எடுத்துக்கொள்ளவேண்டும்' என்றுசொன்னார். மார்க்கண்டேயர், 'மகாமுனியே! கன்னிகைகளுக்குப்பிறந்து சுற்றத்தாரால் எப்போதும் சேர்க்கப்படாதவர் ஹவ்யகவ்யங்களை யாருக்குக்கொடுப்பார்கள்?'' என்றுகேட்டார். நாரதர், 'கன்னிகையாயிருக்கும்போதே பிறந்தபுத்ரர்கள் அக்கன்னிகையின்தகப்பனுக்கு ஹவ்யகவ்யங்களைக்கொடுக்கவேண்டியவர் கர்ப்பமுள்ளவளாகப் பாணிக்கிரகணம் செய்யப்பட்ட கன்னிகைக்குப்பிறந்தபுத்திரன் அந்தப்பாணிக்கிரகணம் செய்தவனுக்கே ஹவ்யகவ்யங்களைக்கொடுப்பவன். அவன் அவனுக்கு [1] ஸஹோடஜனென்னும்புத்ரனாகிறான்' என்றுசொன்னார். மார்க்கண்டேயர், 'நாரதரே! அந்தக்கன்னிகைக்குக் கர்ப்பம்உண்டுபண்ணினவன்எவனோ அவனுக்குப் புத்திரனால்உண்டாகும்பலன் எப்படி வரும்? எனக்குச்சொல்லும்' என்றுகேட்க, நாரதர், 'அப்படிப்பட்டவர்கள் தர்மங்களையும் ஆசாரங்களையும் எப்பொழுதும்கெடுப்பவர்களாக நிச்சயிக்கப்பட்டிருக்கின்றனர். அவர்களுடையவீரியமும் கெட்டுப்போகிறது. [2] அவர்களின் செய்கையும் வீணாகிவிடுகிறது' என்றுசொன்னார். மார்க்கண்டேயர், 'ரிஷிசிரேஷ்டரே! ஒருகன்னிகை விலைக்குவாங்கப்பட்டாலும் ஒருவனால் (விவாகமில்லாமல்) கொடுக்கப்பட்டாலும் கவர்ந்துகொண்டுவரப்பட்டாலும் அவளுடைய புத்திரனாலுண்டாகும்பயன் என்ன?' என்றுகேட்டார். நாரதர், 'பாணிக்ரகணம்செய்யாமல் விலைக்குவாங்கப்பட்டும் தானம்கொடுக்கப்பட்டும் பறித்துக்கொண்டுவரப்பட்டுமுள்ள கன்னிகை கௌமாரி என்றுசொல்லப்படும் மனைவியாகிறாள். அவளுக்குப் பிறக்கும்பிள்ளைகள் கணவனுக்கு ஔரஸபுத்திரர்களாகிறார்கள். புண்யகர்மங்களில் பத்நியாகவிருக்க அவள் தகுதியுள்ளவளாகச் சொல்லப்படவில்லை' என்றுசொன்னார். மார்க்கண்டேயர், 'ஓ! மகாமுனியே! கன்னிகைகளை மங்களகாரியங்களில்நியமிப்பதேனென்பதை உம்மிடத்தில் ஸரியாகத்தெரிந்துகொள்ளவிரும்புகிறேன்' என்றுகேட்டார். நாரதர், 'கன்னிகைகளிடத்தில மங்களங்களைத்தருகிறவளும் மங்களங்களுக்குரியவளும் மங்களகாரியங்களில் பூஜிக்கத்தக்கவளுமான லக்ஷ்மியானவள் எக்காலமும் நிலைபெற்றிருக்கிறாள். நினைத்தபலனைக்கொடுக்கும் [3] கனியிலிருக்கும் ரத்நம்போல மகாலக்ஷ்மியாகியகன்னிகை எல்லாஉலகங்களுக்கும் மங்களமாயிருக்கிறாள். இவ்வகையாக மனிதர்களுக்

[1] கர்ப்பத்தோடுவிவாகஞ்செய்துபிறந்தவன்.

[2] அவர்களுக்குப்புத்ரபலன் இல்லையென்பது.

[3] உற்பத்திஸ்தானம்.

குச் சிறந்தலக்ஷ்மியும் ஸுகமும் ஸந்தோஷமும் கன்னிகைதான். அவள் தன்கற்பினாலும் ஒழுக்கத்தினாலும் மேற்குலங்களுக்கு உரைகல்லாயிருக்கிறாள். தன்னுவருணத்தைச்சேர்ந்த கன்னிகையைவருவித்து விவாகம்செய்துகொள்ளும்மனிதனுக்கு ஹவ்யகவ்யங்களைக் கொடுக்கும் புத்ரனை அவள் பெறுகிறாள். கற்புள்ளவள் குலத்தை மேன்மைப்படுத்துகிறாள். கற்புள்ளவள் வீட்டிற்குப் பெரியசிறப்பு. கற்புள்ளவள் நேரில்வந்தலக்ஷ்மியும் ரதிதேவியும் புகழும் ஸந்ததியுமாயிருப்பவள்' என்றுசொன்னார்.

## ஐம்பத்தாறுவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(நாரதர் மார்க்கண்டேயருக்கு எட்டுவகைவிவாஹமுதலியவற்றைப்பற்றிச் சொல்லியது.)

மார்க்கண்டேயர், 'சிறந்தபுத்தியுள்ளவரே! பலவகையான கன்யாவிவாகங்களைப்பற்றிக் கேட்டேன். பெண்களின் விவாகங்களிலுள்ள தர்மாதர்மங்களைப்பற்றிக் கேட்கவிரும்புகிறேன்' என்று சொன்னார்.

நாரதர், 'மனிதர்கள் விவாகஞ்செய்து மனைவிகளையடையும்தர்மமானவழிகள் எட்டு. அப்படிவிவாகஞ்செய்யப்பட்ட பெண்களும் அவர்களின்புத்திரர்களும் இம்மைக்கும மறுமைக்கும் அனுகூலமாயிருப்பவர்; ஹவ்யகவ்யங்களைக்கொடுக்கத்தகுதியுள்ளவர். அவர்களில் பாணிக்ரகணம்செய்யப்பட்ட [1]ஸாத்வியும் பாணிக்ரகணம்இல்லாத கௌமாரியும் [2]ஸஹோடரனுடையபாரியையாயிருந்து தன்பாரியையாயிருப்பவளுமாகிய இவர்களுக்குப்பிறக்கும்புத்திரர்கள் ஔரஸர்கள்' என்று சொன்னார். மார்க்கண்டேயர், 'பார்யையையடைவதற்கு இம்மூன்றுவழிகள் தர்மங்கெடாதவையாக அறியத்தக்கவை. [3]ஐந்துவகையானபார்யைகளையும் அவர்களின்புத்ரர்களையும் சொல்லும்' என்றுக்கேட்டார். நாரதர், '[4]ஸகோத்ரபார்யை, [5]க்ரீதை [6]கதாகதை

[1] பதிவ்ரதை. [2] 'வாக்தானஞ்செய்தவுடன் அந்தவரன் இறந்துபோனால், அவன்ஸஹோதரன் அந்தப்பெண்ணை விவாகம்செய்துகொள்ளலாம்' என்ற சாஸ்திரப்படி ஏற்பட்டவன்என்பது. [3] கேட்டஎட்டில்மூன்றுபோகஐந்து. [4] தன்கோத்ரத்திலேயேபிறந்து பார்யையாகஎடுத்துக் கொள்ளப்பட்டவள். [5] முதலில் அயலானுக்குப்பார்யையாயிருந்து விலைகொடுத்துவாங்கித் தன்பார்யையாகச் செய்யப்பட்டவள். [6] தன்பார்யையாயிருந்தவள் பிறனிடம்போயிருந்து திரும்பவும் தன்னிடம்வந்தவள்.

[1] ஆச்ரமஹ்ரதை, புனர்ப்பூ இவ்வைந்துவகைப்பாரியைகள் இருக்கின்றனர். இவர்களிடத்திலும் புருஷர்கள்சேரலாம். இவர்களுடையபுத்ரர்களும் ஹவ்யகவ்யங்களைக் கொடுக்கலாம்' என்றார்.

---

ஐம்பத்தேழாவது அத்யாயம்.

தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)



(நாரதர் மார்க்கண்டேயருக்கு எல்லாமழிந்த பெண்களவர்களின் ஸந்ததிகளின்முதலியவற்றைப்பற்றிச் சொல்லியது)

மார்க்கண்டேயர், "ஓ! மஹரிஷியே! பாரியைகளையும் புத்ரர்களையும்பற்றி விரிவாகக்கேட்டேன் ஆசிரமத்திலிருக்கும் பெண்களுக்குக் குற்றமில்லாமலிருப்பது எப்படி என்பதைச் சொல்லும்' என்றுகேட்டார். நாரதர், ஆசிரமத்திலிருக்கும் மாதர்களுக்குப் பந்துக்களின்ஸம்பந்தம ஒழிந்துவிடுகிறது. தங்கள்சுற்றத்தாருடைய வம்சங்களும் கணவர்களைச்சேர்ந்தவம்சங்களும அவர்களுக்கில்லாமற்போகின்றன. அதனால், ஆசிரமங்களிலிருக்கும்பெண்கள் பரஸ்த்ரீகளாயினும அவர்களுக்கு வியபிசாரதோஷமில்லை. தங்கள்தேகங்களுக்குத் தாங்களே அதிகாரிகள். அவர்கள் யாரிடத்தில் மனம் வைக்கிறார்களோ அவர்களை அவர்கள நேசிக்கலாம. இவ்வகையாக இந்தப்பெண்கள் புருஷர்களுக்கும அவர்களின்ஸந்ததிகளுக்கும், தோஷத்தைச்செய்வதில்லை. அவர்கள் தர்மபத்நிகளாகவேயிருக்கின்றனர். அவர்களும் அவர்களின்புத்ரர்களும் ஹவ்யகவ்யங்களைக்கொடுக்கலாம்' என்றுசொன்னார்.

மார்க்கண்டேயர், 'முதலில், வேறுஒருவனுடையமனைவியாயிருந்து அவனிறந்துபோனபின் மற்றொருபர்த்தாவையடைகிறவள் பிள்ளையுள்ளவளாயிருந்தால எப்படியாவாள்?' என்றுகேட்டார். நாரதர், 'பரஸ்திரீகள் பிள்ளையைப்பெறாமலிருந்தாலும் பெற்றிருந்தாலும் பிறரால்தொடப்பட்டவர்களென்னுங் காரணத்தினாலேயே கிருஹஸ்தர்கள் அவர்களை விட்டுவிடவேண்டும். தர்மானுஷ்டானங்களில் அவர்கள் விலக்கப்பட்டவர்கள். அவர்களுடைய ஹவ்யகவ்யங்களைத் தேவதைகள் வாங்குவதில்லை. அவர்களிடத்தில புத்ரர்களையுண்டாக்குகிறவன் அந்தப் புத்ரர்களால் புத்ரபலனையடையான்' 'என்று சொன்

[1] ஆசிரமத்திலிருந்த நாதனில்லாமையால் எடுத்துக்கொண்டுவரப்பட்டவள்.

ஞர். மார்க்கண்டேயர், 'ரிஷிசிரேஷ்டரே! மனத்தையடக்கமாட்டா மல் பிறர்மனைவிகளிடம் வீரியத்தைவிடும்மனிதனுக்குப் புத்ரனுடைய பலன் எப்படியுண்டாகும்?' என்றுகேட்டார். நாரதர், 'ஆசிரமத்தி லிருக்கும் கணவனில்லாப்பிறன்மனைவியினால் வலியக்கேட்டுக்கொள் ளப்பட்டு அவளிடத்தில் வீரியத்தை ஒருமனிதன் விடுவானாகில் அந்த வீரியம் [1] அழியாது. பிறர்மனைவிகளிடம் தேகக்கொழுப்பினால் ஒரு மனிதன் வீரியத்தைவிடுவானாயின் அந்தவீரியம் அந்தப்பெண்ணின் கணவனைச் சேருவதுதான். வீரியத்தைவிட்டவனுக்குப் புத்ரபல னில்லை. சிசுமுதலியவர்களுக்கும் மேன்மேலும் அதர்மத்தையும் அபகீர்த்தியையும்தாத்தக்கது இதைவிடவேறொன்றுமில்லை. அப் பெண்கள் தம்வர்ணத்துப்புருஷர்களிடத்தில் சேர்ந்தவர்களாயிருந்தா லும் அவர்களை யாவரும் விடவேண்டும்' என்றுசொன்னார். மார்க் கண்டேயர், 'நாரதரே! சிறந்தமகிமையுள்ளவரே! பிறர்மனைவிகளிடம் பிறக்கும்புத்ரர்கள் யாருக்குஉரியபுத்ரர்களாவார்?' என்றுகேட்டார். நாரதர், 'பிறர்மனைவிகளிடம்பிறக்கும்புத்ரர்கள், குண்டன் கோள கன்என இரண்டுவகையாவார். கணவன் ஜீவித்திருக்கும்போதே பிற னுக்குப்பிறந்தவன் குண்டன்; கணவனிறந்தபின்பிறந்தவன் கோள கன். பிறர்மனைவிகளிடம்பிறந்த அந்தப்பிள்ளைகள்,மனிதர்கள்செய்யும் யாகம் சிராத்தமுதலியஎல்லாவற்றையும் இம்மையிலும் மறுமையி லும் கெடுத்துவிடுகின்றனர். இவர்கள் தங்கள்பிதாவுக்கு நரகத் திற்காக ஏற்பட்டவர்கள். அவர்களில் கோளகன் அதிகம். பரபுருஷ னுக்குப்பிறந்தஅவ்விருவரும் சண்டாளருக்கொப்பானவர்கள். இகத் திலும் பரத்திலும் கெடுவர்' என்றுசொன்னார். மார்க்கண்டேயர், 'அந்தஇகழப்பட்டபுத்ரர்கள் பித்ருக்களுக்கு ஹவ்யகவ்யங்களைக் கொடுக்கும்போது யாருடையமனைவிக்குப்பிறக்கிறார்களோ அவனுக் குக்கொடுக்கவேண்டுமா? அல்லது, எவன் அந்தப்புத்ரர்களை உண் டாக்கினவனோ அவனுக்குக் கொடுக்கவேண்டுமா?' என்றுகேட்க, நாரதர், 'அந்தஸ்த்ரீயின்கணவனும் அவளிடத்தில்கர்ப்பமுண்டுபண் ணினவனுமாகியஇவ்விருவரும் நரகம்போனவர்கள். ஏனெனில், ஒரு வன் தன்மனையாளைக் காப்பாற்றாதவன்; மற்றொருவன் பிறன்மனைவி யைப் புணர்ந்தவன் [2] குண்டனும் அவன்செய்யும்சிராத்தத்தில்புசிப் பவனும் அவனையுண்டுபண்ணினவனும் பித்ருக்களாலும் தேவர்க ளாலும் இகழப்படுகிறவர்; தர்மகார்யங்களில் சேர்க்கப்படாதவர்.

[1] அவனதாக இராமற்போகாது
[2] இங்கே கோளகனையும்சேர்த்துக்கொள்க.

சாஸ்த்ரங்களில் அவர்கள் மறுக்கப்பட்டிருக்கின்றனர்' என்றுசொன்னார். மார்க்கண்டேயர், 'நாரதரே! அவ்வாறுநிந்திக்கப்பட்டஅந்தப் புத்ரர்கள் ஹவ்யகவ்யங்களை யாருக்குக்கொடுக்கின்றனர்? அவர்களுக்குத் தர்மமுண்டா? அதன்பலன் என்ன?' என்றுகேட்க, நாரதர், 'அவர்கள்செய்யும் ஹோமங்களையும் அவர்கள்கொடுக்கும் ஹவ்யகவ்யங்களையும் இரவில் ஸஞ்சரிக்கும் ராக்ஷஸர்களும் பேய்பிசாசுகளும் எடுத்துக்கொள்ளுகின்றனர்' என்றுசொன்னார். மார்க்கண்டேயர், 'ரிஷிசிரேஷ்டரே! ஆனால், அதனால் ஸந்தோஷமடைந்தராக்ஷஸர்முதலானவர்கள் ஹவ்யகவ்யங்கொடுப்பவருக்கு என்னபலனைக் கொடுக்கின்றனர்? அவர்கள்செய்ததர்மத்திற்குப் பலன்யாது?' என்றுகேட்க, நாரதர், 'கொடுப்பவர்கள் எந்தப்ராணிகளுக்கு எதைக்கொடுத்தாலும் அது வீண்போவதில்லை. கொடுப்பவர்கள் அதன்பலனை இம்மையிலும் மறுமையிலும் அனுபவிக்கின்றனர்' என்று சொன்னார். மார்க்கண்டேயர், 'கோளகனுக்கும் குண்டனுக்கும் பின்னிட்டுண்டான ஸந்ததிகளும் ஞாதிகளும் அவர்களுக்குக்கொடுக்கும் ஹவ்யகவ்யங்கள் எப்படிஆகும்?' என்றுகேட்க, நாரதர், 'அவர்கள் தங்கள் ஆசாரத்தை அனுஷ்டித்துவந்து அவர்களுக்குக் கற்புள்ள மனைவிகளிடம்பிறந்தபிள்ளைகள் சிரத்தையோடு ஹவ்யகவ்யங்கொடுப்பதனால் பித்ருக்களையும் தேவர்களையும் திருப்திசெய்விக்கின்றனர். இவ்வாறு கோளகனும் குண்டனும் நாலுவர்ணங்களைச்சேர்ந்தவர்களும் பரிசுத்தர்களாகிக் கொடுக்கும் ஹவ்யகவ்யங்களைத் தேவர்களும் பித்ருக்களும் வாங்கிக்கொள்ளுகின்றனர்' என்றுசொன்னார்.

---

## ஐம்பத்தெட்டாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(நாரதர் மார்க்கண்டேயருக்கு மாதாகளின் வியபிசாரப் பிராயச்சித்தம்முதலியவற்றைச் சொல்லியது.)

மார்க்கண்டேயர், 'பரஸ்த்ரீகளிடத்தில் பிரஜைகளை உற்பத்திசெய்யும் புருஷர்களுடையநிலைதவறுதலின்பலனைக்கேட்டேன். பெண்கள் நிலைதவறினால் உண்டாகும் தோஷத்தைத தெரிந்துகொள்ளவிரும்புகிறேன்' என்றுகேட்க, நாரதர், 'தன்வர்ணத்தானிடம் சேருவது முன்காலத்தில் தோஷமில்லாமலிருந்தது. பிரம்மதேவரும் விஷ்ணுவினால் அனுமதிகொடுக்கப்பட்டு அப்படிச்செய்திருக்கிறார். பேரதி

வுள்ளவரே! பிரம்மதேவர் முதலிலேயே பெண்குறி, ஆண்குறி இரண்டையும் படைத்தார்; விஷ்ணுவின் அநுமதியினால் அவ்விரண்டிற்கும் சேர்க்கையை உண்டுபண்ணினார். பிறகு, விஷ்ணுவின் அநுக்கிரகத்தினால், பெண்குறி வரம்பெற்றது. அந்த அநுக்கிரகத்தினாலேதான் எல்லா உலகங்களையும் அது ஆளுகிறது. ஆதலால், புருஷனுக்குத்தான் குற்றமதிகம். அதில் ஸந்தேகமில்லை. பெண்கள் தங்கள்வர்ணத்தாரிடம்புணர்ந்து கர்ப்பமில்லாமலிருந்தால் அவர்களைவிடத்தகாது. தெரிந்தவன் அவர்களுக்குச் சாஸ்திரப்படி பிராயச்சித்தத்தையும் நாய்களைவிட்டுக்கடிப்பித்தும், இரவில் மூன்றுமுறை ஸ்நானம்செய்வித்தும், பூமியில சாம்பலில் படுக்கச்செய்தும், ஸம்போகமில்லாமல் அன்னவஸ்திரங்களைக்கொடுத்தும் செய்கிறதண்டனையையும் செய்ய வேண்டும். அவர்களின் குற்றங்களுக்குத்தக்கபடி பிராயச்சித்தகாலமும் செலவுசெய்யவேண்டிய திரவியமும் அதிகப்படும். வேறுபுருஷனைச் சேருவதைப்பற்றி இந்தவியவஸ்தை முற்காலத்தில் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. தீர்க்காயுவே! ஸ்திரீகளுக்கு வியபிசாரத்தில் தோஷமில்லை. இவ்வாறு விஷ்ணுவின் கட்டளையினால் பரிசுத்தமான பெண்குறிக்குத் தோஷமில்லை. தெரிந்தவர்கள் வேறுபுருஷர்களிடம் பேசாமலும் பிறர்மனைக்குப்போகாமலும் பெண்களைக் காப்பாற்றவேண்டும். அவர்கள் பரிசுத்தர்களாயிருந்தால்தான் செய்யுங் கர்மங்களின் பலன்களை விசேஷமாகப்பெறலாம். நன்மையை விரும்புகிறவன் அவர்களைத் திட்டவும் அடிக்கவும் கஷ்டப்படுத்தவும்கூடாது. விஷ்ணுவின் அநுக்கிரகத்தினாலேயே பெண்குறிக்குச் சுத்தமுண்டாயிருக்கிறது. மாதந்தோறும் ருதுஸ்நானமும் அவர்களுடையபாவங்களைப் போக்குகிறது. சிறந்தமகிமையுள்ளவரே! உலகத்தில் பெண்கள்தாம் புருஷர்களுக்கு எப்போதும் மனஉற்சாகத்தையும் தேகபுஷ்டியையும் கொடுப்பவர். மாதர்கள், பிள்ளைகளென்னும் அணைகளினால் குலங்களை நிலைக்கச்செய்கின்றனர்' என்றுசொன்னார்.

## ஐம்பத்தோன்பதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(நாரதர் விடத்தக்கபெண்களையும் விடத்தகாதபெண்களையும் மற்றும் பலவற்றையும்பற்றி மார்க்கண்டேயருக்குச் சொல்லியது.)

மார்க்கண்டேயர், 'ரிஷிசிரேஷ்டரே! பெண்களுக்கிருக்கும் சிறப்பும் மகிமையும் கேட்கப்பட்டன. அனேகம் மனைவிகளுள்ள ஒருவனுடைய தர்மத்தைத் தெரிந்துகொள்ளவிரும்புகிறேன்' என்றுகேட்

டார். நாரதர், 'அநேகபார்யைகளின் ஸம்போகத்தில் ப்ரவிருத்திக்கும் கிருஹஸ்தர்கள் ருதுகாலத்தில் அருகிலிருந்தும் எவளையாவது விடுவாராயின் அவர்கள் கர்ப்பஹத்திசெய்தவராகச் சொல்லப்படுகிறார்கள். பிராயமுதிர்ந்தவள், மலடி, தவமுள்ளவள், குழந்தையிறந்துபோகிறவள், ருதுவாகாதகன்னிகை, அதிக புத்ரர்களைப்பெற்றவள் இவர்களைவிடுகிறவன் பாவபயத்திலிருந்து விடுபடுவான். வியாதியோடிருக்கும்போதும், சிறையிலிருக்கும்போதும், வேறுதேசம்போயிருக்கும்போதும், புண்ணியகாலங்களிலும், ருதுகாலமாயிருந்தபோதிலும் மங்கையரைச் சேராதவனுக்குக் கர்ப்பஹத்திதோஷமில்லை' என்றுசொன்னார். மார்க்கண்டேயர், 'மகரிஷியே! வேசிகளிடத்திலும் ஏவல்தொழில்செய்யும் பெண்களிடத்திலும் பிறக்கும் புத்ரர்கள் யாருடையதாயபாகத்திற்குரிய பந்துக்களாகிறார்கள்?' என்று கேட்டார். நாரதர், '[1]விலைமாதர்களுக்குப்பிறந்தவர், அம்மாது எவனைச்சேர்ந்தவளோ அவனுடையபுத்ரர்களாகிறார். விலைக்குவாங்கப்படுகிறவர் க்ரீத்ரிமபுத்ரர்களாகிறார். தத்துவாங்கப்படுகிறவர் தத்தபுத்ரராகிறார்' என்றுசொன்னார். மார்க்கண்டேயர், 'விலைமாதர்களிடத்தில் புருஷனுடைய ப்ரவ்ருத்தி வியவஸ்தையில்லாமலிருக்கிறதென்பது திண்ணம். அவள் கர்ப்பமுண்டாகிப்பெறும்புத்ரனை எவன்புத்ரனென்று சொல்லுவர்?' என்றுகேட்க, நாரதர், 'ருதுகாலத்தில் சுத்தர்களாயிருக்கும் மடந்தையரிடத்தில் சேரும்புருஷன் அறியப்படுவான். அந்தக்கர்ப்பம் அவனுடையதாகும்; அல்லது அந்தமாது எவனை நிச்சயமாகச்சொல்லுகிறாளோ அவனுடையதுமாகும்' என்றுசொன்னார். மார்க்கண்டேயர், 'புருஷர்கள் [2]காமத்தினாலாவது கோபத்தினாலாவது பிள்ளை பெறுமலோ பெற்றோ இருக்கும் குணமுள்ளமனைவியைவிட்டுவிடுவாராயின் அவர்களுக்குப் பிராயச்சித்தத்தைத் தெரிந்துகொள்ளவிரும்புகிறேன்' என்றுகேட்டார். நாரதர், 'தவமுதலியவற்றால் கற்புள்ளவளென்று தெரிந்திருந்தும் குற்றமற்றமனைவியைவிடுகிறவன் தன் [3]வம்சத்தையும் தர்மத்தையும்விடுவதனால் அவனுக்குப்பிராயச்சித்தமேயில்லை. எந்தமனிதன் தகுதியுள்ளவனாயிருந்தும் புஷ்பவதியாகி ஸந்ததியுண்டாகாதபார்யையை விட்டுவிடுகிறானோ அவன் குலமழிந்து பித்ருக்களுடன்கூடத் தேவர்களாலும் விடப்படுவான். ப்ரஸவித்து ஸந்ததியுண்டாகிப் பிள்ளைபேரர்மார்களோடுகூடிய பார்யையை விடுகிற

[1] முன்சொன்ன இருவகையாரும்.

[2] வேறு ஒருத்தியினிடத்தில் விருப்பம்.

[3] வம்சத்திற்கும் கிருஹஸ்ததர்மத்திற்கும் மனைவி காரணமென்பது.

பிள்ளைபெண்டுகளைவிட்டவனாதலால் அவனுக்குப் பிராயச்சித்தமில்லை. இப்படி பாரியையைவிடுகிற புருஷர்களுக்குப் பிராயச்சித்தமில்லாமையால் பிள்ளைபேரர்மார்களால் நிலைபெற்றிருக்கும் மாதரை விடுவது யார்க்குந்தகாது' என்றுசொன்னார். மார்க்கண்டேயர், 'ரிஷிசிரேஷ்டரே! எப்படிப்பட்டமனைவியைவிட்டால் அந்தப்புருஷனைப் பாவங்கள் பற்றாமலிருக்குமென்பதைச் சரியாகத்தெரிந்துகொள்ள விரும்புகிறேன்' என்றுகேட்டார். நாரதர், 'மோக்ஷதர்மமாகிய நிவிருத்திமார்க்கத்திலிருந்து ஒருவருக்கொருவர் விடைகொடுக்க மனைவியும் கணவனும் விட்டுப்போவதனால் அதர்மம்சொல்லப்படவில்லை. வேறு புருஷனிடம் பற்றுள்ளவளையும் ஸந்ததியில்லாதவளையும் சூத்திரனைச் சேர்ந்தவளையும் பரபுருஷனைச்சேர்ந்தவளையும் பரிசோதித்துவிடுகிற புருஷர்களுக்குப் பாவமில்லை. பாதகம் செய்தவராயிருப்பினும் தாய் தந்தையிருவர்மட்டும் காப்பாற்றப்படவேண்டியவர்' என்று சொன்னார். மார்க்கண்டேயர், 'சிறந்த புத்தியுள்ளவரே! மனைவி வியபிசாரம் செய்ததினால் அவளைக்கோபித்து விட்டுவிடுகிறபுருஷனுக்கு அது தர்மமா? அதர்மமா? எப்படியாகிறது?' என்றுகேட்டார். நாரதர், 'பொய்யாகவோ உண்மையாகவோ தோஷம்சொல்லப்பட்டபெண்ணை ஒருபுருஷன் விடுவானாயின் அவன் தனதுபாரியையைக்காப்பாற்றாமையினால் பாபஞ்செய்தவனாகிறான். ஒருபெண் ஸந்ததிக்காகத் தன் கணவனைவிட்டுத் [illegible]நாடுவாளாயின் அவளை மனநிலையற்றவளென்று நினைத்து அவளைப் பாதுகாக்கவேண்டும்; எவ்வகையிலும் விட்டுவிடலாகாது. நதிகளும் பெண்களும் ஒரே இயற்கையுள்ளவர்கள். வேறு புருஷர்கள் பிரவேசித்ததனால் இவர்களை விடலாகாது. நதிகள் பிரவாகங்களை வேகமாகக்கொண்டுபோகின்றன. பெண்ணானவள் ராஜஸ்வலையாவதனால் மறுபடியும் சுத்தமாகிறாள். ஆதலால், பெண்கள் தங்கள் கணவரைவிட்டு வியபிசரித்தம்பாகிலும் கெட்டுப்போவதில்லை. மாதந்தோறும் ருதுவாவதினால் அவர்கள் சுத்தர்களே ஆகின்றனர்' என்று சொன்னார். மார்க்கண்டேயர், 'பகவானே! மனிதர்களின் உடம்பிலுள்ள தீர்த்தங்கள் எவை? பகவானே! அவற்றைக் கேட்கிற எனக்குச் செவ்வையாகச் சொல்லக்கடவீர். எல்லாந்தெரிந்தவரே! மனிதர்களுக்கு எல்லாத் தீர்த்தங்களிலும் சிறந்த தீர்த்தம் யாது? எதில் ஆசமனம்செய்த எந்தமனிதன் எப்போதும் பரிசுத்தனாகிறான்?' என்றுகேட்டார் நாரதர், '[1] தேவதீர்த்தம் [2] ரிஷிதீர்த்தம்

[1] கைவிரல்களின் நுனி தேவதீர்த்தம்.

[2] சுண்டுவிரலடியில் உள்ளங்கைக்கு வெளிப்புறம் பிராஜாபத்ய தீர்த்தமெனவும் ரிஷிதீர்த்தமெனவும் சொல்லப்படுகின்றது.

[1] பித்ருதீர்த்தம் [2] பிரம்மதீர்த்தம் உள்ளங்கைநடுவில் விஷ்ணுதீர்த்தம் என்று ஐந்துதீர்த்தங்கள் மனிதர்களின் கையிலிருப்பவையென்று சொல்லுகின்றனர். விஷ்ணுதீர்த்தம் தீர்த்தங்களில் முதன்மையான தீர்த்தமென்று சொல்லப்படுகிறது. அதில் ஆசமனஞ்செய்வதனால் நான்கு வர்ணங்களுக்கும் குலவிருத்தியுண்டாகிறது; பித்ருகாரியங்களும் தேவகாரியங்களும் இம்மையிலும் மறுமையிலும் பயன்படுகின்றன' என்றுசொன்னார். மார்க்கண்டேயர், 'நாரதரே! காமத்திற்குட்பட்ட புருஷர்களுக்குத் தடையில்லாமல் சேரத்தக்க பெண்கள் யார்? எந்தப்பெண்களுக்கு நிர்ப்பந்தமில்லை? அவர்களை எனக்குச் சொல்லும்' என்றுகேட்க, நாரதர், '[3] பாம்ஸுலை, வேசி, நாடகப்பெண் இடைச்சி, நெய்கிறவள், கையற்காரி, கிராதர் சபரரென்னும் மிலேச்ச ஜாதிப்பெண்கள், கூத்தாடுகிறவள இவர்கள் தடையற்றவர்கள்' என்று சொன்னார். மார்க்கண்டேயர், 'ஓ! ரிஷிசிரேஷ்டரே! எல்லாவருணத்தாருக்கும் இந்தப்பெண்களிடம் பிறக்கும்புதரர்கள் யாரைச்சேர்ந்தவர்கள்? யாருடையதாயபாகத்திற்கு உரியவர்களாகிறார்?' என்றனர். நாரதர், 'அவர்களுக்குப்பிறந்தவர்கள் அவர்களை யார்வைத்துக்கொள்ளுகிறார்களோ அவர்களுடைய புதரர்கள். எல்லாரிடத்திலும் போகும் பெண்களிடத்தில்சேர்ந்த மனிதர்களின் வீரியமானது புலப்படுவதில்லை' என்றுசொன்னார். மார்க்கண்டேயர், 'எல்லாமங்கையரிடத்திலும் போய்க்கொண்டு யோக்கியர்களென்று கீர்த்தியில்லாமல் வேதமந்திரங்களைவிட்டமனிதர்களையும் ஆயுதம்பிடித்து ஜீவிப்பவரையும் ஹவ்யகவ்யங்களில்வைத்தால் அவர்களுக்குக் கொடுக்கும் தானம் எப்படியாகும்?' என்றுகேட்டனர். நாரதர், 'காயத்ரீ ஜபத்தைவிட்டபிராம்மணர்கள் ஹவ்யகவ்யங்களுக்குரியவரல்லர். பிரஷ்டர்களுக்கு அன்னம்போடுவது சூத்திரர்களுக்குப்போடுவதுபோலேதான்' என்றுசொன்னார். மார்க்கண்டேயர். 'தர்மஞ்செய்யப்பிரவிருத்தித்த மனிதர்களுக்கும் மனம் மயங்கிப்போகிறது. தர்மத்திற் கிடையூறு வாராமலிருப்பது எவ்வகை? இதைத்தெரிந்துகொள்ளவிரும்புகிறேன்' என்றுகேட்க, நாரதர், 'பொருள் பெண இவ்விரண்டுமொன்று. இவை மனிதர்களுக்கு நன்மைகளில் மயக்கத்தை யுண்டுபண்ணுகின்றன. பெண்கள் ஸம்போகஸுகத்தில் விருப்பமுண்டாக்கித் தர்மங்களைக்

[1] ஆள்காட்டிவிரலுக்கும் கட்டைவிரலுக்கும் இடை பித்ருதீர்த்தம்.

[2] கைக்கட்டைவிரலின் அடியில் உள்ளங்கையின் பக்கம் பிரம்மதீர்த்தம்.

[3] இவளைப் பாம்ஸுலையென்பது; ஸ்வதந்திரமாயிருப்பவள்; 'பாம்ஸுலை' என்றபாடம் கொள்ளப்பட்டது.

கெடுக்கின்றனர். பொருள் சுகங்களையுண்டாக்கித் தருமங்களைக்கெடுக்கிறது. ஆதலால், தர்மத்திலேயே எண்ணமுள்ள வைதிகன்மட்டுமே ஹவ்யகவ்யங்களெல்லாவற்றிற்கும பாத்ரமானவன். யோக்கியனான வைதிகனுக்குச்செய்யும் தானம் ஜ்வலிக்கின்ற அக்கினியில்செய்த ஆஹுதிபோன்றது' என்றுசொன்னார். மார்க்கண்டேயர், 'வேதங்களையும் வேதப்பொருள்களையும் மனத்தில அறிந்த பிராம்மணர்களின் குலத்தில பிறந்தவர்கள் வேதவித்தையைவிட்டு வர்த்தகமுதலிய லௌகிகவிருத்தியைப் பற்றுவதேன்?' என்றுகேட்க, நாரதர், 'முதலில் [1] நான்குவர்ணங்களும மிகத்தெரிந்தவர்களான பிராம்மணர்களிடத்தில் ஒப்பிக்கப்பட்டன. எல்லாவர்ணத்தாரும் தங்கள்வ்ருத்திகளை ஒன்றொன்றாகவொமல அந்தப்பிராமமணர்களைக்கொண்டு பிரித்துப்பிரித்து எடுத்துக்கொள்ளவேண்டியிருந்தது. [2] புத்ரஸந்தானத்தை விரும்பின பிராம்மணர்களால் கர்ப்பாதானமுதலான மந்திர ஸம்ஸ்காரங்கள்செய்யப்பட்டுப்பிறந்தவைதிகர்களமுன் ஸமஸ்காரத்தினால் உண்டானதம தொழிலை எடுத்துக்கொண்டனர்' என்றுசொன்னார். மார்க்கண்டேயர், 'வேதமறிந்தவர்களுக்குப்பிறந்து வேதாத்யயனஸம்ஸ்காரமில்லாதவர்களும் வேதமறியாதவர்களுக்குப் பிறந்து ஸம்ஸ்காரம் செய்யப்பெற்றவர்களும்ஆவமெப்படி?' என்றுகேட்டார். நாரதர், 'வேதாத்யயனமுள்ளவனுக்குப் பிறந்தவன் உபநயனஸம்ஸ்காரங்கள் பெறாதபோதிலும வைதிகனென்கிற பதத்துரியவன். பரிசுத்தமான வம்சத்திற்பிறந்தவன் நல்ல வித்வான்களுக்குசசமமான வைதிகன் தான். அப்படியில்லாமல் வேதமோதாதவர்களின்புத்ரர்கள் வேதத்தினால் கர்ப்பாதானமுதலான ஸம்ஸ்காரங்களசெய்யப்படாதவர்கள். ஆதலால், அவர்கள் வேதமறிந்த பிராமமணர்களாயிருப்பினும் வேதத்தை விட்டவர்கள்தாம. முதலில் [3]வேதக்குவியலிலேயே ஸ்ருஷ்டிக்கப்பட்டு வேதமந்திரங்களாலேயே ஸம்ஸ்காரங்கள செய்யப்பட்டவர்களாயிருப்பதனால், வைதிகர்களுக்குப பிறந்தவர்கள் தம்குலத்தைத்தாங்கும்யோ

[1] நான்குதொழில் :—(1) ஓதுவிப்பது, வைதிககாமங்கள் செய்விப்பது, தக்ஷிணைமுதலியவற்றைப்பெறுவது (2) அரசாள்வது (3) பயிர், பசுக்காத்தல் வாத்தகம். (4) சிற்பமுதலியவை.

[2] முதலில் நான்குதொழில்களும பிராம்மணர்களிடத்திலிருந்தன. முதலில் அந்தானதையும் பிராம்மணர்களே செய்துகொண்டுவந்தனர். பிராம்மணஸந்ததியில் பிறந்தவர்களே அந்தந்தவ்ருத்திகளுக்குத் தகுந்த ஸமஸ்காரங்களைப்பெற்று அந்தந்தவ்ருத்திகளை எடுத்துக்கொண்டனர். மற்றவர்கள் அவரிடத்தில் கற்றுக்கொண்டனரென்பது

[3] வேதங்களையறிந்த தந்தையினிடத்திலேயே.

க்கியர்களாகிறார்' என்றுசொன்னார். மார்க்கண்டேயர், 'ரிஷிகளிற் சிறந்தவரே! தாம்விலைக்குவாங்கின ஸ்திரீகளிடத்திலும் வேலைக்காரிகளிடத்திலும் மனிதர்கள் ஸந்ததிகளையுண்டுபண்ணுகின்றனரே. அந்த ஸ்திரீகளும் அந்தப்பிள்ளைகளும் யாரைச்சேர்ந்தவர்கள்?' என்றுகேட்டார். நாரதர், 'அறிவில்லாமல் தன்வேலைக்காரியிடம் புத்திரோத்பத்திசெய்யும் மனிதன் பாவஞ்செய்தவனாகிறான். அவன் இங்கும் நிந்திக்கப்பட்டு இறந்தபின்னும் தன் ஸந்ததியை ஏவல் தொழிலாளியாகச் செய்கிறான். அவள் அவனுடைய பார்யைதான். அவளுக்குப் பிறந்த புத்ரர்களும் அவனுக்கு ஹவ்யகவ்யங்களைக் கொடுப்பவர்தாம். அவளுடைய உறவினரெல்லாரும் அவளுறவினாலேயே வேலைக்காரராகின்றனர். ஏனெனில், அவளைச்சேர்ந்தவர்களெல்லாரும் அவள்செய்யும் வேலைகளில் ஏவப்படுகின்றனர். நீர்கேட்டதற்கெல்லாம் இவ்வாறு மறுமொழி சொன்னேன். இன்னும் ஏதாவது ஸந்தேகமிருந்தாலும் நீர் கேட்கலாம்' என்றுசொன்னார். மார்க்கண்டேயர், 'இவ்வுலகத்தில் நாரதர் எல்லாவற்றிலும் நிபுணர்; உண்மையை அறிந்திருப்பவர்; பிரமதேவரைப்போல எல்லா உலகங்களையும் நேரில் பார்த்தவர்; மிகச்சிறந்தவர்' என்றுசொன்னார். சிறந்த தவமுள்ள மார்க்கண்டேய முனிவர் இவ்வாறு ரிஷிகளுடன் ஸம்பாஷணைசெய்து நாரதரையும்பூஜித்து அவராலும் பூஜிக்கப்பெற்று ரிஷிகளிடம் விடைபெற்றுக்கொண்டு தம் ஆசிரமத்திற்குப்போனார். அந்த ரிஷிகளும் தீர்த்தங்களுக்கு யாத்திரைசெய்யத்தொடங்கினர். ஆதலால், சுத்தமான கர்ப்பத்தில் சுத்தமான வீரியத்தினின்று பிறந்து ஸம்ஸ்காரங்களினாலும் சுத்தம்பெற்று ஐம்புலன்களையுமடக்கி நித்யகர்மங்களையும் நைமித்திககர்மங்களையும் செய்து ஸ்நானம்பண்ணி மனமும் சுத்தமாயிருப்பதனால் ஒருவன் முழுதும் சுத்தமாகிறான்" என்று பீஷ்மர் சொன்னார்.

---

## அறுபதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொ. ௬௪)

(தானத்திற்கு யோக்யபாத்திரமானவர் முதலியன)

யுதிஷ்டிரர், "பரதசிரேஷ்டரே! தானத்திற்குப்பாத்திரரென்று பிராம்மணர்களால் கௌரவமாகச்சொல்லப்படும் பிராம்மணன் ஸந்யாஸியா? கிருஹஸ்தனா? யார்?" என்றுகேட்க, பீஷ்மர், "மகாராஜனே! ஸந்யாஸியானாலும் கிருஹஸ்தனானாலும் தன் தர்மத்தை யனுஷ்

டிப்பவனுக்குத் தானம்செய்யவேண்டுமென்று சொல்லுகின்றனர். அவ்விருவரும் தவமுள்ளவர்கள்' என்றுகூறினர். யுதிஷ்டிரர், "பிதாமஹரே! (மற்றச்சுத்தம் இல்லாமல்) அதிக சிரத்தையினால்மாத்திரம் பரிசுத்தனாயிருக்கும் ஒருவன் ஹவ்யகவ்யங்களையும் தானத்தையும் பிராம்மணனுக்குக்கொடுத்தால் என்னகுற்றம்?" என்று கேட்டார். பீஷ்மர், "அப்பா! சிரத்தையினால் தூய்மைபெற்றமனிதன் கெட்டவனாயிருந்தாலும் எல்லாவிஷயங்களிலும் பரிசுத்தனாகிறான்; ஸந்தேஹமில்லை. சிறந்தமகிமையுள்ளவனே! உன்னைப்பற்றிச் சொல்லவேண்டுமோ?' என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "தேவகார்யங்களில் பிராம்மணனை ஒருபோதும் பரீக்ஷிக்கலாகாதென்றும், பித்ருகாரியங்களில் பிராம்மணனைப் பரீக்ஷிக்கவேண்டுமென்றும் வித்வான்கள் நினைக்கின்றனரே; அதென்ன?" என்றுகேட்க, பீஷ்மர், "பரதசிரேஷ்டனே! தேவர்களின் ஹவிஸ்ஸைப் பிராம்மணன் உண்டாக்குவதில்லை. அது தேவர்களின் சக்தியினாலேயே உண்டாகிறது. யாகம்செய்பவர்கள் தேவர்களின் அனுக்கிரகத்தினாலேதான் அவர்களை ஆராதிக்கின்றனர்; ஸந்தேகமில்லை. உலகங்களில் சிறந்த அறிவுள்ள மார்க்கண்டேயர், 'பிராம்மணர்கள் எப்போதும் பிரம்மநிஷ்டர்கள்' என்று முன்னே சொல்லியிருக்கிறார். ஆதலால் பிராம்மணர்கள் [1] தேவகார்யங்களில் தகுதியுள்ளவர்களும் பரிசுத்தர்களுமானவர்; பித்ருகார்யங்களில் அப்படியாவதில்லை" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "பழகாதவன், வித்வான், சுற்றத்தான், தவம்செய்பவன், யாகம்செய்பவன் இவர்களில் எவன் தானத்திற்குப்பாத்ரனாவான்?" என்று கேட்க, பீஷ்மர், "யாகமுதலிய கருமங்களைச்செய்பவனும் வித்வானும் மற்ற மூவர்களாகிய புதிதாகவந்தவன் சுற்றத்தவன் தவமுள்ளவன் இவர்களும், நல்லகுலத்திற்பிறந்தவரும் பூததயையும் தீயசெயல்களில் கூச்சமும் மனத்தூய்மையும் ஸத்தியவாக்குமுள்ளவர்களுமாயிருந்தால் பாத்ரர்களாவார். குந்திபுத்ரனே! இந்தவிஷயத்தில் பூமி, காசியபர், அக்நி, மார்க்கண்டேயர் இந்நான்கு மகான்களின் அபிப்பிராயங்களைச் சொல்லுகிறேன்; கேள். 'பெருங்கடலில் போடப்பட்ட மண்கட்டி எப்படி உடனே கரைந்துபோகிறதோ அப்படி எல்லாப்பாவங்களும் வேதத்தைவிடாமலிருப்பவனிடத்தில் மறைந்துபோகின்றன' என்று பூமிதேவி சொன்னாள். மன்னவ! 'ஒழுக்கமில்லாத பிராம்மணனுக்கு ஆறு அங்கங்க

[1] தேவகார்யங்களில் எஜமானனுடைய சிரத்தையே போதுமானது. பித்ருகார்யங்களில் கர்த்தாவும்பிராம்மணர்களும் சுத்தர்களாயிருத்தல்வேண்டும் என்பது.

ளோடுகூடிய வேதங்களனைத்தும் தத்வஞானம் புராணப்பழக்கம் நல்ல குலத்திற்பிறத்தல் இவையனைத்தும் சாதகங்களாவதில்லை' என்று காஸ்யபர் சொன்னார். பிரம்மத்தையறிந்தவனே! 'கற்றறிந்தவனென்று தன்னை நினைத்துக்கொண்டு தன் கல்வித்திறமையினால் பிறர்புகழை அழிப்பவன் அப்படிச்செய்வதனால் பிரம்மஹத்தியை அடைகிறான். அவனுக்குப் புண்ணியலோகங்கள் முடிந்துபோகின்றன' என்று அக்நி சொன்னான். 'ஆயிரம் அசுவமேதயாகங்களும் ஒருஸத்யமும் தராசினால் தூக்கப்படுமாயின் ஸத்யத்தின்பாதிக்குக்கூட அந்த யாகங்கள் ஈடாகுமென்று நான் நினைக்கவில்லை' என்று மார்க்கண்டேயர் சொன்னார். அளவற்றமகிமையுள்ளவர்களான பூமி, காசியபர், அக்நி, சிரஞ்சீவியான மார்க்கண்டேயர் இந்நால்வரும் இவ்வாறுசொல்லி உடனே சென்றனர்" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "இவ்வுலகத்தில் [1] போஜனநியமம்வைத்துகொண்ட பிராம்மணர்கள் பிராம்மண்ன் வேண்டுகோளுக்காக அவன் தங்களுக்குப்போட்ட அன்னத்தைப் புஜிப்பாராயின் அவர்களுக்குப் புண்ணியம் எப்படி உண்டாகும்?" என்றுகேட்டார். பீஷ்மர், "அரசர்க்கரசே! விரதம் வைத்துக்கொண்டவரும் வேதங்களில் கரைகண்டவருமான பிராம்மணர்கள் ஒரு பிராம்மணன் வேண்டுகோளுக்காகப் புஜிப்பாராயின் அவர்கள் விரதங்கெட்டவராகிறார்" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "பிதாமஹரே! தர்மத்திற்கு அநேக வழிகளும் அநேக பலன்களும் இருப்பதாக அறிஞர் கூறுகின்றனர். அதை நிச்சயிக்கும் வகை யாது? அதை எனக்குச்சொல்லும்" என்று கேட்டார். பீஷ்மர், "அரசர்க்கரசே! கொல்லாமையும் ஸத்யமும் கோபமில்லாமையும் பூததயையும் ஐம்புலன்களையடக்குவதும் மனமொழிமெய்களின் ஒற்றுமையும் தர்மத்திற்கு நிச்சயமான அடையாளங்கள். பிரபுவே! தாங்கள் தர்மத்தை யனுஷ்டியாமலே பிறருக்குத்தர்மத்தைச் சொல்லிக்கொண்டு பூமியெல்லாம் திரிகிறவர்கள் [2] தர்மத்தைக்கெடுப்பதில் ஊக்கமுள்ளவர்கள். அப்படிப்பட்டவர்களுக்குப் பொன்னையும் ரத்னத்தையும் பசுவையும் குதிரையையும் தானஞ்செய்பவன் நரகம் போய்ப் பத்துவருஷகாலம் மலத்தைத்தின்றுகொண்டிருப்பான். சண்டாளர்கள் சக்கிலியர்கள் ஆசையினாலுண்டான அறிவின்மையினால்பிதற்றுகிறவர்கள் இவர்களின்தனத்தினால் செய்ததும் செய்யப்படாததுமானகர்மம் ஒன்றுதான். அரசர்க்கரசனே! இவ்வுலகத்தில் எந்த

[1] 'பிரம்மசாரிகள்' என்பது பழையவுரை.

[2] உபதேசிப்பவரைப்பார்த்துக் கேட்பவரும் தர்மத்தைக் கெடுப்பரென்று கருத்து.

மூடர்கள் வைசுவதேவம்செய்த அன்னத்தைப் பிரம்மசாரியான பிராம்மணனுக்குக் கொடாமலிருக்கின்றனரோ அவர்கள் பாவலோகங்களை யடைகின்றனர்" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "பிதாமஹரே! சிறந்த பிரம்மசாரிவ்ரதம் யாது? தர்மத்தின் முக்கியமாயுள்ள இலக்கணம் என்ன? எல்லாவற்றிலும் சிறந்தசுத்தம் யாது? இவற்றை எனக்குச் சொல்லக்கடவீர்" என்று கேட்டார்.

பீஷ்மர், "அப்பா! மதுவையும் மாம்ஸத்தையும்விடுவதே சிறந்த பிரம்மசாரிவிரதம். தர்மமானது வியவஸ்தையில் நிற்கிறது. மன அடக்கந்தான் சுத்தத்திற்கு இலக்கணம்" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "பிதாமஹரே! எந்தக்காலத்தில் தர்மத்தைச்செய்யவேண்டும்? எந்தக்காலத்தில் பொருளைத்தேடவேண்டும்? எந்தக்காலத்தில் ஸுகத்தையனுபவிக்கவேண்டுமென்பதை எனக்குச்சொல்வீர்" என்றுகேட்டார். பீஷ்மர், "காலையில் பொருளைப்பார்க்கவேண்டும். அதன்பிறகு தர்மத்தைச்செய்யவேண்டும். கடைசியில் இன்பத்தை அனுபவிக்க வேண்டும். இன்பத்தில் முழுகிவிடலாகாது. பிராம்மணர்களை வெகுமானிக்கவேண்டும். பெரியோர்களைப் பூஜிக்கவேண்டும். எல்லாப் பிராணிகளுக்கும் அநுகூலமும் எளியநடையும் இன்சொல்லுமாயிருக்கவேண்டும். தான் எடுத்தகாரியத்திற்பொய்சொல்லுவதும் அரசர்களிடத்திற்கோட்சொல்லுவதும் ஆசார்யன்மனம்வருந்த நிர்ப்பந்தப்படுத்துவதும் பிரம்மஹத்திக்கு ஒப்பானவை. அரசர்களையும் பசுக்களையும் அடிக்கலாகாது. இவ்விரண்டையும் செய்பவனுக்குப் பிரம்மஹத்திக்கு ஒப்பான பாவமுண்டு. அக்நியையும் வேதங்களையும் ஒருபோதும் விடலாகாது. பிராம்மணனைத் திட்டலாகாது. அது பிரம்மஹத்திக்குச்சமம்" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "பிதாமஹரே! எப்படிப்பட்ட பிராம்மணர்கள் ஸாதுக்களாவார்? எவர்களுக்குத் தானம் செய்வதில் பலனதிகம்? எவர்களுக்குப் போஜனம் போடவேண்டும்? அதை எனக்குச்சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர், "கோபியாதவரும் தர்மத்தையும் ஸத்யத்தையும் விடாதவரும் அடங்கியிருப்பதில் ஊக்கமுள்ளவருமான பிராம்மணர்கள் தாம் ஸாதுக்கள். அவர்களுக்குத் தானம்செய்வதில் பலனதிகம். கர்வமில்லாதவரும் எல்லாவற்றையும் பொறுப்பவரும் எடுத்தகாரியத்தை விடாதவரும் புலன்களையடக்கினவரும் எல்லாப்பிராணிகளுக்கும் சிநேகிதரைப்போல நன்மைசெய்பவருமாயிருப்பவர் எவரோ அவர்களுக்குத் தானம்செய்வதில் பலனதிகம். பொருளாசையற்றவருக்கும் ஆசாரந்தவறாதவருக்கும் கல்விகற்றவருக்

கும் அகாரியங்களில் வெட்கப்படுகிறவருக்கும் பொய்பேசாதவருக்கும் தமது அனுஷ்டானங்களில் சிரத்தை யுள்ளவருக்கும் தானம்செய்வதில் பலனதிகம். நாலுவேதங்களையும் அங்கங்களுடன்ஓதி * ஆறு கருமங்களையும்நடத்திவரும் பிராம்மணோத்தமரைத் தானத்திற்குப் பாத்திரரென்று ரிஷிகள்நினைக்கின்றனர். இப்படிப்பட்ட குணங்களுள்ளவர்கள் எவர்களோ அவர்களுக்குத்தானம்செய்வதில் பலனதிகம். குணங்களால் தகுதியுள்ளவனுக்குக்கொடுப்பவன் ஆயிரமடங்கு அதிகமாகத் தானபலனையடைகிறான். கல்வி கேள்வி ஒழுக்கம் அடக்கம் இவையுள்ள பிராம்மணசிரேஷ்டன் ஒருவனே இவ்வுலகத்தில் குலமுழுமையும் கரையேற்றுவான். அவன் ஒருவன் திருப்தியடைந்தால் தேவர்கள் பித்ருக்கள்ரிஷிகளாகிய அனைவரும் திருப்தியடைவார். பசு, குதிரை, பொருள், அன்னம் இவற்றையும் மற்றுமுள்ளஎந்தப்பொருள்களையும் அப்படிப்பட்டவனுக்குக் கொடுப்பவன் மறுமையில் துயரப்படான். உத்தமனான பிராம்மணன் ஒருவன்மட்டுமே குலமெல்லாவற்றையும் கரையேற்றுவனே. அன்பனே! இந்தஅனேகபிராம்மணர்களைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? ஆதலால், பாத்திரங்களைப்பார்த்துத் தானம் செய்யவேண்டும். ஸாதுக்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட குணமுள்ளபிராம்மணனை ஆராய்ந்து தூரத்திலிருந்து மரியாதையாகவருவித்து எல்லாவகைகளாலும் பூஜித்தல்வேண்டும்" என்றுசொன்னார்.

## அறுபத்தோராவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(தேவபித்ருகாரியங்களின் காலங்களும், அவற்றில்வரிக்கத் தக்கவரும் தகாதவருமான பிராம்மணர்களும்.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! தேவகார்யங்களையும் பித்ருகார்யங்களையும் சிரத்தையுடன்செய்வதற்குத் தேவர்களாலும் ரிஷிகளாலும் ஏற்படுத்தப்பட்ட காலத்தின்விசேஷத்தை நீர் சொல்லவேண்டுகிறேன்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"நீராடி மங்களாசாரங்களோடு ஜாக்கிரதையாகத் தேவகாரியத்தை முற்பகலிலும் பித்ருகார்யத்தைப் பிற்பகலிலும் ஒருவன் செய்ய வேண்டும். மத்தியான்னத்தில் மனிதர்களுக்கு உபசாரங்களோடு

* சாந்திபர்வம் 674 - ம் பக்கம் குறிப்பிற்காண்க.

அன்னமளிக்கவேண்டும். காலந்தப்பிச்செய்யும் தானத்தை ராக்ஷஸர்களின் பாகமென்று நினைக்கின்றனர். தாண்டப்பட்டதும் வாயெச்சிற்பட்டதும் முதல்நாளே செய்யப்பட்டதும் ஸ்திரீகளால் பார்க்கப்பட்டதும் ராக்ஷஸர்பாகங்களென்று நினைக்கின்றனர். பாரதனே! இரைந்துகொண்டும் நியமமில்லாமலும் புசிக்கப்பட்டதும் நாயினால் தீண்டப்பட்டதும் ராக்ஷஸர்பாகமென்று நினைக்கின்றனர். மயிரும் புழுவும் விழுந்ததும் தும்மல்பட்டதும் நாயினால் பார்க்கப்பட்டதும் கண்ணீரினால் கெடுக்கப்பட்டதும் கவனியாமல் போட்டுவிடப்பட்டதும் ராக்ஷஸர்பாகங்களென்று நினைக்கின்றனர். பாரதனே! வேதமோதாதவன் ஆயுதம்பிடித்தவன் கெட்டமனமுள்ளவன் இவர்கள் புசித்ததும் ராக்ஷஸர்கள் பாகங்களென்று நினைக்கின்றனர். தேவகாரியங்களிலும் பித்ருகாரியங்களிலும் பிறர்புசித்து மிகுந்ததைப்புசிப்பதும் எல்லாருக்குமுன் புசிப்பதும் எப்போதும் ராக்ஷஸர்பாகங்களே என்று நினைக்கின்றனர். அரசனே! பிரம்மக்ஷத்ரியவைசியரென்னும் மூன்று வர்ணத்தாரும் மந்திரமில்லாமலும் ஆசாரமில்லாமலும் சிராத்தத்தில் பரிமாறும் அன்னத்தை ராக்ஷஸர்பாகமென்று நினைக்கின்றனர். அக்கினியில் நெய்யை ஹோமஞ்செய்யாமல் பரிமாறப்படும் அன்னமும் ஆசாரந்தவறினவர்கள் புசித்த அன்னமும் ராக்ஷஸர்பாகங்களென்று நினைக்கின்றனர். பரதஸ்ரேஷ்டனே! ராக்ஷஸர்களுக்குப் பாகங்களாகச் சேரக்கூடியவற்றைச் சொன்னேன். இனி தானத்திற்குரிய பிராம்மணனைப் பரிசோதிப்பதைப்பற்றிச் சொல்லுகிறேன்; கேள். வேந்தே! பிரஷ்டப்பிராமணர்கள் பேதையர்கள் பித்தர்களனைவரும் தேவகாரியங்களிலும் பித்ருகாரியங்களிலும் வரிக்கத்தகாதவர். வெண்குஷ்டமுள்ளவன் ஆண்மையில்லாதவன் பெருவியாதியுள்ளவன் [1] க்ஷயரோகமுள்ளவன் காக்கைவலியுள்ளவன் கண்ணில்லாதவன் இவர்கள் சிராத்தத்தில் வரிக்கத்தகாதவர்கள். வைத்தியம் செய்பவர்கள் கோயில் பூஜகர் மேலுக்காசாரங்களை வகிப்பவர் ஸோமலதையை விற்பவர் இவர்கள் சிராத்தத்தில் வரிக்கத்தகாதவர். ராஜனே! பாடுகிறவர்கள் கூத்தாடுகிறவர்கள் வாயினால் [2] ஜாத்யம் செய்கிறவர்கள் வாத்யம்வாசிக்கிறவர்கள் கதைசொல்லுகிறவர்கள் யுத்தவீரர்கள் இவர்கள் வரிக்கத்தக்கவரல்லர். மன்னவ! சூத்திரர்களுக்குப் புரோகிதராயிருப்பவர்கள் அந்தச் சூத்ரர்களை ஓதுவிப்பவர்கள் [3] அவர்களைச் சிஷ்யர்களாகப்பெற்

---

[1] இருந்தபடியே ரத்தம் சோஷித்துப்போவது

[2] 'விளையாடுகிறவர்' என்பது பழையவுரை.

[3] 'வ்ருஷலஶிஷ்யா:' என்பதுமூலம். சூத்ரர்களுக்குச்சிஷ்யராயிருப்பவரென்றுங்கொள்ளலாம்.

றவர்கள் இவர்களும் வரிக்கத்தக்கவரல்லர். பாரதனே! வேதனத்திற்கு வேதம் ஓதுவிப்பவன் வேதனங்கொடுத்து ஓதுவோன் இவ்விரு வகைப் பிராம்மணர்களும் வேதத்தை வியாபாரஞ் செய்பவராதலின் சிராத்தத்திற்குத் தகாதவர்கள். ராஜனே! ஒருகாரியத்தில் தலைமையாக நியமிக்கப்பட்டவரும் கீழ்ஜாதிப்பெண்ணை விவாகம் செய்துகொண்ட வருமான பிராம்மணர் எல்லா வித்தைகளும் தெரிந்தவராயிருப்பினும் சிராத்தத்தில் வரிக்கத்தகாதவர். அரசனே! (பார்வையில்லாமையால்) அக்கினியில்லாதவரும் பிணமெடுப்பவரும் திருடரும் பிரஷ்டருமான பிராம்மணர்களும் சிராத்தத்தில் வரிக்கத்தகாதவர்கள். பாரதனே! முன்பு தெரியாதவர்களும் கூட்டங்களுக்குத் தலைவராயிருப்பவர்களும் [1] புத்ரிகைகளுக்கு முதலில் பிறந்த புத்ரர்களும் சிராத்தத்தில் வரிப்பதற்குரியவரல்லர். அரசனே! கடன்காரனும் வட்டியினால் ஜீவிப்பவனும் ஜந்துக்களைவிற்று ஜீவிப்பவனும் வரிக்கத்தகாதவர்கள். பரதஶ்ரேஷ்டனே! [2] பெண்ணைத்தலைமையாக உடையவரும் வேசியைவைத்திருப்பவரும் ஜபமில்லாதவருமான பிராம்மணரனைவரும் சிராத்தத்தில் வரிக்கத்தகாதவர். பரதஶ்ரேஷ்டனே! பித்ருகாரியத்திலும் தேவகாரியத்திலும் விலக்கவேண்டிய பிராம்மணனைச் சொன்னேம். திரும்பவும் கொடுப்பவனுக்கும் வாங்குபவனுக்கும் வேண்டிய சிறப்பைக்கேள். அரசனே! உழுதுபயிரிடுகிறவர்களும் நியமங்களைச்செய்பவர்களும் குணங்களுள்ளவர்களும் காயத்ரியையறிந்தவர்களும் கர்மாநுஷ்டானங்கள் செய்பவர்களுமாயிருப்பவர் வரிப்பதற்குரியவர். அப்பா! யுத்தத்தில் க்ஷத்திரியத்தொழில் செய்பவனாயிருந்தாலும் நல்ல குலத்திற்பிறந்த பிராம்மணனை ஶ்ராத்தத்தில் வரிக்கலாம்; வர்த்தகனைமட்டும் வரிக்கவேகூடாது. வேந்தனே! திருடாமல் அதிதிகளைக் கவனித்துக்கொண்டும் அக்கினிஹோத்திரம் செய்துகொண்டும் கிராமத்தில் வஸிக்கும் பிராம்மணன் சிராத்தத்தில் வரிக்கத்தகுதியுள்ளவன். பரதஶ்ரேஷ்டனே! அரசனே! பிக்ஷையெடுத்து ஜீவித்துக்கொண்டு மூன்றுகாலங்களிலும் காயத்ரியை ஜபித்துக் கர்மாநுஷ்டானங்கள் செய்துகொண்டிருப்பவன் வரிப்பதற்குரியவன். ராஜனே! வாழ்ந்து கெட்டிருப்பவனும் கெட்டுவாழ்கிறவனும் பிறரைப்பீடியாதவனும் குற்றங்கள் குறைந்திருப்பவனும் வரிப்பதற்குரியவர். பரதஶ்ரேஷ்டனே! வேந்தே! பாவமும் யுக்திவாதமுமில்லாதவனும் யோக்யமான இடத்தில் பிக்ஷையெடுத்து ஜீவிப்பவனும் வரிப்பதற்குரியவர்.

---

[1] ஆதிபர்வம். 240, 837 - பக்கக்குறிப்புக்களிற் காண்க.

[2] பெண்ணினால் ஜீவிப்பவர் என்னவுமாம்.

நியமந்தவறினவனும் சூதாடுகிறவனும் திருடுகிறவனும் ஜந்துக்களை விற்பவனும் வர்த்தகனும் பிராயசித்தம் செய்துகொண்டு ஸோமரஸத்தைக்குடித்தாரானால் அதன் பிறகு, வரிப்பதற்கு யோக்யராவார். ராஜனே! முதலில் கொடிய செய்கைகளினால் பொருளையீட்டியிருந்தாலும் பிறகு, எல்லா அதிதிகளையும் பூஜிப்பவனாயிருப்பானாயின் அவன் வரிப்பதற்குத் தகுதியுள்ளவனாவான். வேதத்தை விக்கிரயம்செய்து ஸம்பாதிக்கப்பட்டதும் பெண்ணினால் ஸம்பாதிக்கப்பட்டதும் இழிவானவழியில் ஸம்பாதிக்கப்பட்டதுமாயுள்ள பொருள்கள் பித்ருக்களுக்கும் பிராம்மணர்களுக்கும் கொடுக்கத்தகாதவை. பரதஸ்ரேஷ்டனே! தானம் செய்யப்படும்போது உசிதத்தைச் சொல்லாமலிருக்கும் பிராம்மணனுக்குப் பசுவுக்காகப்பொய்சொல்லும் பாவமுண்டாகும். யுதிஷ்டிர! பிராம்மணன், அபரான்னகாலம், தயிர், நெய், காட்டுமாம்ஸம், அமாவாசை இவை சிராத்தத்திற்கு யோக்கியமானவை. ஒருபகலில் முதல் மூன்று முகூர்த்தங்கள் பிராதக்காலமென்று சொல்லப்படுகின்றன. அந்தக்காலத்தில் பிராம்மணர்கள் ஜபம்தியானமுதலியவற்றினால் நல்ல அநுஷ்டானங்களைச் செய்தல்வேண்டும். அதன்பிறகு, மூன்று முகூர்த்தம் ஸங்கவமென்று பெயருள்ளது. அதன் பிறகு, [1] மூன்றுமுகூர்த்தங்கள் மத்யான்னம் என்று சொல்லப்படும். பணத்தைச் சேர்ந்த லௌகிக காரியங்களை ஸங்கவகாலத்திலும் ஸ்நாநமுதலிய மாத்யான்னிககாரியங்களை மத்தியான்னத்திலும் பித்ருகாரியங்களை நான்காவது அபரான்னமாகிய மூன்று முகூர்த்தங்களிலும் செய்யவேண்டும். பிறகு, மூன்று முகூர்த்தங்கள் ஸாயான்னம் என்னப்படும். தெரிந்தவர்கள் அதை இரண்டாந்தரமாகச் சொல்லுகின்றனர். ராஜனே! அபரான்னமென்று பெயருள்ள நாலாவதுகாலத்தில் எப்போதும் சிராத்தம் செய்யவேண்டும். பிராம்மணர்கள் கிழக்குமுகமாகவும் வடக்குமுகமாகவும் போஜனத்திற்கு இருக்கவேண்டும். விசுவேதேவர்கள் மட்டும் தெற்குமுகமாயிருக்க வேண்டும். பிராம்மணர்கள் நன்றாகத் திருப்தியானதைக் கேட்டுத்தெரிந்துகொண்ட பிறகு, தக்ஷிணை கொடுத்துப் பிண்டதானம் செய்யவேண்டும். பாரதனே! சிராத்தம் முடியும்போது பிராம்மணனுக்கு, '(தாதாரோவ:) உங்களுக்குக் கொடுப்பவர்கள் உண்டாகவேண்டும்' என்றும், க்ஷத்திரியனுக்கு, '(ப்ரியந்தாம் பிதர:) பித்ருக்கள் திருப்தியடையக்கடவர்' என்றும், வைசியனுக்கு, '(அக்ஷயம்) குறையாத செல்வமிருக்கக்கடவது' என்றும், சூத்திரனுக்கு, '(ஸ்வஸ்தி) க்ஷேமமுண்டாகக்கடவது' என்றும், புகித்தவர்கள் சொல்லவேண்

[1] இரண்டுநாழிகை ஒருமுகூர்த்தமென்னும் கணக்கை அனுஸரித்தது.

டும். தேவகாரியங்களில் பிராம்மணனுக்கு வேதமந்திரங்களைச்சொல்லிப் புண்யாஹவாசனம் விதிக்கப்படுகின்றது. க்ஷத்திரியனுக்கு இதுவே, 'ஓம்' என்னும் பிரணவமில்லாமல் விதிக்கப்படுகிறது. வைசியனுடைய தேவகாரியத்தில், "(ப்ரியந்தாம் தேவதா:) தேவர்கள் திருப்தியடைக் கடவர்' என்பதைச் சொல்லவேண்டும். சிராத்தத்திற்கு முதலில்வரித்த பிராம்மணனைத்தவிர மற்றொரு பிராம்மணனிடத்தில் சிராத்தபோஜனம் செய்பவனுக்குக் கோஹத்தியில் நாலிலொருபாகமுண்டு. அவனே கீழ்ப்பட்ட ஒவ்வொரு வர்ணத்திலும் புஜிப்பதனால் ஒவ்வொருபாகம் [1] அதிகமாகிச் சூத்திரசிராத்தத்தில் புஜித்தால் கோஹத்திபாவமுழுவதும் வருகிறது. பிராம்மணனால் முதலில் வரிக்கப்பட்ட பிராம்மணன் மற்றோரிடத்தில் ஒப்புக்கொள்ளக்கூடாது. அவன் புசிக்காவிடில் பாவமுண்டாகும். சூத்திரன்வரிப்பதை மறுத்தல்வேண்டும். சூத்திரனுடைய அன்னத்தின்சுவையினால் அங்கம்புஷ்டியடைந்தபிராம்மணன் மேற்கதியையடையான். ராஜனே! ஆசாரமில்லாதவனும் நாஸ்திகனும் யாராலும் பூஜிக்கப்படாதவனும் சிராத்தத்தில் புஜிக்கலாகாது. ஒரு வர்ணத்திலுங்கூட முதலில் வரித்தவனைப் பொருளாசையினால் விட்டுப் போகலாகாது. தங்களுக்கு [2] உபகாரம்செய்கிறவர்களைத்தவிர மற்றப் பிராம்மணர்கள் பூமியிலுள்ள தேவர்களென்று சொல்லப்படுகின்றனர். பாரதனே! ஸம்ஸ்காரங்களாகிய கர்மங்களைச்செய்யும் விதியை வரிசையாகச்சொல்லுகிறேன்; கேள். யுதிஷ்டிர! ஜாதகர்மமுதலான எல்லாக் கிரியைகளும் பிரம்மக்ஷத்திரியவைசியர்களென்னும் மூன்று வர்ணங்களுக்கும் மந்திரபூர்வமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. யுதிஷ்டிர! (உபநயனத்தில்) இடையிற்கட்டும்கயிறு பிராம்மணனுக்கு முஞ்சமென்னும் புல்லினாலும் க்ஷத்ரியனுக்கு மௌர்வியென்னும் வில்நாணினாலும் வைசியனுக்குப் பல்பஜமென்னும் சணல்நாரினாலும் செய்யப்படுவது தர்மமாகும். யுதிஷ்டிர! பிராம்மணனுக்குப் பலாசதண்டமும் க்ஷத்ரியனுக்கு அரசந்தண்டமும் வைசியனுக்கு அத்தித்தண்டமும் தர்மங்கள். தானங்கொடுப்பதிலும் வாங்குவதிலுமுள்ள தர்மத்தையும் அதர்மத்தையும் சொல்லுகிறேன்; கேள். பிராம்மணனுக்குப் பொய்சொல்லும் பாவம் பாதகமென்று சொல்லப்பட்டிருக்கிறது. க்ஷத்திரியனுக்கு அதற்கு நான்மடங்கும் வைசியனுக்கு எண்மடங்

[1] க்ஷத்ரியனிடத்தில் அரைப்பங்கும் வைசியனிடத்தில் முக்கால்பங்கும்.

[2] உபகாரஞ்செய்தவர்களைத் தாக்ஷிண்யத்திற்கு நிமந்திரணத்திற்குச் சொல்லக்கூடாதென்பது.

கும் சொல்லப்பட்டிருக்கின்றன.[1] முதலில் பிராம்மணனால் வரிக்கப்பட்ட பிராம்மணன் வேறிடத்தில் புஜிக்கலாகாது. கீழ்வர்ணத்தான் பிராம்மணனால் வரிக்கப்பட்டுப் புஜிப்பானாயின் பசுஹத்திக்குச் சமமான பாவத்தையடைவான். அவன் அரசனாலும் வைசியனாலும் வரிக்கப்பட்டுப் புஜிப்பானாயின் பசுஹத்தியின் பாவத்தில் பாதிப்பாகம் அடைவான். ராஜனே! பிராம்மணர்முதலானவர்கள் செய்யும் தேவகாரியங்களிலும் பித்ருகாரியங்களிலும் பிராம்மணன் ஸ்நானம் செய்யாமற் புஜிப்பானாயின் அவனுக்குப் பொய்சொல்லும் பாவமுண்டாகிறது. ராஜனே! எந்தப்பிராம்மணன் சுத்தனாயிராமல் பொருளாசையினால் புத்திபூர்வமாகப் பிராம்மணன்முதலான வருணத்தாரின் சிராத்தங்களில் புஜிப்பனோ அவனுக்குப் பசுவுக்காகப் பொய்சொன்ன பாவம் சொல்லப்படுகிறது. பாரதனே! அரசர்க்கரசே! வேறுலாபத்தையடையக்கருதிப் புஜிப்பவனுக்கும் தன்காரியத்திற்காக அழைப்பவனுக்கும் பொய் சொன்னபாவம் சொல்லப்படுகிறது. யுதிஷ்டிரா! வேதாத்யயனமும் நியமமும் நல்லொழுக்கமுமில்லாதவர் மூன்றுவர்ணத்தாராலும் மந்திரங்களோடு புசிப்பிக்கப்படுவாராயின் அவர்களுக்குப் பசுவின் பொய்யின் பாவமுண்டாகிறது" என்று சொன்னார்.

## அறுபத்திரண்டாவது அத்யாயம்.

## தானதர்ம பர்வம் (தொடர்ச்சி.)

(தேவபித்ருகாரியங்களும், தானதர்மங்களும், ஸ்வர்க்கத்துக்கும் நரகத்துக்கும் போகிறவர்களும்.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! பித்ருகாரியத்திலும் தேவகாரியத்திலும் செய்யப்படும்தானம் யாருக்குச்செய்தால் அதிகபலனுள்ளதாகுமென்பதைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"யுதிஷ்டிரா! எவர்களின் மனைவிகள் அவர்கள் உண்டமிச்சத்தையும் அவர்களுக்கிட்ட மிச்சத்தையும் உழவர்கள் நல்லமழையையெதிர் பார்ப்பதுபோல எதிர்பார்க்கின்றனரோ அவர்களைப் புசிப்பிக்கக்கடவாய். ராஜனே! ஒழுக்கத்தைவிடாமல் தேகமிளைத்து ஜீவனமில்லாமல் சாப்பாட்டை வேண்டிவருகின்றவரெவரோ அவர்களுக்குச்செய்யும் தானம் அதிகபலனுள்ளது. ராஜனே! ஒருவனிடத்தில் அன்பு

[1] அது கொடுப்பவனுக்குள்ளபாவம். இனி வாங்குபவனுக்குள்ளபாவம்.

வைத்து அவன் வீட்டையே தம்வீடாகவும் அவனையே சகாயமாகவும் ஆதாரமாகவும் நினைத்தவர்கள் விருப்பமுள்ளவராயின் அவர்களுக்குத் தானம் கொடுப்பதில் பலனதிகம். திருடர்களாலும் பகைவர்களாலும் ஸொத்துக்கள் அபகரிக்கப்பட்டுப் பயத்தினாலும் துயரத்தினாலும் யாசிப்பவர்கள் புசிக்கவிரும்பினால் அவர்களுக்கு அன்னதானஞ்செய்வது பெரும்பயனுள்ளது. பாவமில்லாத எந்தப்பிராம்மணன் ஏழைமைத் தனத்தினால் [1] கையில் ஜீவனத்தை வைத்திருப்பவனோ அவனிடத்தில் பிக்ஷைக்குவரும் பிரம்மசாரிகளுக்குக்கொடுப்பதில் பலனதிகம். தேசம் பிறரால் பிடிபடும்போது தனங்களும் மனைவிகளும் கொண்டுபோகப் பட்ட எந்தப்பிராம்மணர்கள் பொருளுக்காக வருகின்றனரோ அவர்களுக்குத் தானங்கொடுப்பதில் பலனதிகம். சாஸ்திரங்களில் தேர்ச்சியுள்ள எந்தப்பிராம்மணர் விரதத்தையோ தவத்தையோ மேற்கொண்டு அதைமுடிப்பதற்காகப் பொருளை விரும்புகின்றனரோ அவர்களுக்குத் தானம் செய்வதில் பலனதிகம். [2] பாஷண்டர்களின் மதங்களையும் அவர்களின் தர்மங்களையும் முழுதும் வெறுத்தும் தேகபலமும் பொருளும் குறைந்துமிருப்பவர்களுக்குக் கொடுப்பதில் பலனதிகம். குற்றமில்லாமலிருந்தும் அரசர்களினால் எல்லாச்சொத்தும் பறித்தல் செய்யப்பட்டு அன்னத்தைப்புஜிக்க விரும்புவோர்க்குக் கொடுப்பதில் பலனதிகம். எப்போதும் தவத்திலேயேயிருக்கும் ரிஷிகளும் அவர்களிடத்தில் பிக்ஷையெடுக்கும் பிரம்மசாரிகளும் கார்யத்திற்காக எதையாவது விரும்பினாராயின் அவர்களுக்கு அதைக்கொடுப்பதில் பலனதிகம். பரதரேறே! பெரும்பயனுள்ள தானத்தின்முறையைப்பற்றி நீகேட்டாயிற்று; இனி நரகத்திற்குப்போவதும் ஸ்வர்க்கத்திற்குப்போவதும் எதனால் என்பதைக்கேள். உபவாஸங்களின் பாரணைக்காகவும் குருதக்ஷிணைக்காகவும் யாகதக்ஷிணைக்காகவும் விவாகத்திற்காகவும் வித்வான்கள் கேட்டால் அவர்களுக்குக்கொடுப்பதில் பலனதிகமே. தாய்தந்தையர்களையும் பிள்ளைபெண்டுகளையும் காப்பாற்றுவதற்கும் கொடியவியாதியை நிவிருத்திசெய்வதற்கும் கேட்பவர்களுக்குக் கொடுப்பதில் பலனதிகம். ஆதாரவற்ற சிறுவர்களும் பெண்களும் நல்லசாப்பாட்டை விரும்பினால் அவர்களுக்கொடுப்பவர்கள் ஸ்வர்க்கம் சேருவார்; நரகம்சேரார். யுதிஷ்டிரா! குருவின் கார்யத்தையும் அபயங்கொடுப்பதையுந்தவிர வேறுகார்யங்

---

[1] அன்றன்று ஸம்பாதித்து ஜீவிப்பவனென்பது கருத்து; 'கையில் அன்னத்தை வைத்திருப்பவன்' என்பது பழையஉரை.

[2] பௌத்தர்முதலிய வேதத்திற்குவிலக்கானவர்.

களில் பொய்சொல்லுகிறவர் நரகம்போகிறவராவர். பிறர்மனைவிகளைப் பறிப்பவரும், பிறர்மனைவிகளைத்தொடுகிறவரும், பிறர்மனைவிகளை மற்றவருக்குக்கூட்டிக்கொடுப்பவரும் நரகம்போகிறவர். பிறர்பொருள்களைத் திருடுகிறவர்களும் பிறர்பொருளையழிப்பவரும் பிறர்மேல்கோட்சொல்லுகிறவரும் நரகம்போகிறவர். பாரதனே! தண்ணீர்ப்பந்தல்களையும் ஜனங்கள்தங்கும் [1] மண்டபங்களையும் சுமைதாங்கிகளையும் வீடுகளையும் இடிக்கும் மனிதர்கள் நரகம்போகிறவர்கள். நாதனற்றசிறுபெண் கிழவி பயந்தவள் தவத்திலிருப்பவள் இந்தப்பெண்களை மோசம்செய்யும் மனிதர்கள் நரகம் அடைவார்கள். பாரதனே! ஒருவன் ஜீவனத்தைக்கெடுப்பவரும் வீட்டையிடிப்பவரும் மனையையபகரிப்பவரும் மித்ரபேதஞ்செய்பவரும் எதிர்பார்த்திருந்ததைக்கெடுப்பவரும் நரகம்போகிறவர். கோட்சொல்லுகிறவர்களும் வரம்பைக்கெடுப்பவர்களும் அயலானுடைய ஜீவனத்தைப்பிடித்துக்கொள்ளுகிறவர்களும் வேண்டினவர்கள் செய்யும் நன்றியை நினையாதவர்களும் நரகத்திற்குப்போகிறவர்கள். பாஷண்டரும் ஆசாரங்களைக்கெடுப்பவரும் சாப்பிட்டுத்தூஷிப்பவரும் நரகம்போகிறவர். மோசமாக வியாபாரம் செய்பவரும் வட்டியிலும் லாபத்திலும் மோசம்செய்பவரும் நரகம்போகிறவர். அரசர்களுக்குத் தூதர்களாயிருப்பதைத் தொழிலாகவுடையவரும் பகுத்தறிவில்லாதவரும் பிராணிஹிம்ஸை செய்பவருமான மனிதர்கள் நரகம்போகிறவர். வேதனமும் காலமும் குறிப்பிடப்பட்டும் விருப்பமுண்டாக்கப்பட்டும் வேலைசெய்துகொண்டுவரும் வேலைக்காரனைக்கலைத்து இழுத்துக்கொள்ளுகிறவர் நரகம்போகிறவர். தம்மனைவிகளையும் வேலைக்காரர்களையும் விருந்தினர்களையும் புசிப்பியாமல் புசிப்பவரும் அக்னிஹோத்ரம் செய்யாமலும் பித்ருக்களுக்கும் தேவதைகளுக்கும் பூஜைசெய்யாமலுமிருப்பவரும் நரகம்போகிறவர். வேதத்தைவிற்பவரும் வேதத்தைத் தூஷிப்பவரும் வேதத்தையெழுதிவைப்பவரும் நரகம்போகிறவர்கள். நாலு ஆஸ்ரமங்களிலுஞ்சேராமலும் வேதத்திற்குப் புறம்பாகவும் இருந்துகொண்டு விலக்கப்பட்ட தொழில்களைச்செய்து ஜீவிப்பவர் நரகம்போகின்றவர். ராஜனே! சவரிமுதலான கேசங்களையும் விஷங்களையும் பாலையும் விக்கிரயம்செய்பவர் நரகம்போகிறவர். யுதிஷ்டிர! காரியகாலங்களில் பிராம்மணர்களுக்கும் பசுக்களுக்கும் கன்னிகைகளுக்கும் இடையிற்போகிறவர்கள் நரகம்போகிறவர். யுதிஷ்டிரா! ஆயுதங்களை விற்பவரும் அம்புகளையும் விற்களையும் செய்பவரும் நரகம்போகிறவர். பாரதசிரேஷ்டனே! கற்களாலும் முளைகளாலும் பள்ளங்களினாலும் வழி

[1] மதருகளையும் என்றும்கொள்ளலாம்.

களைத்தடுப்பவர் நரகம்போகிறவர். பரதஸ்ரேஷ்டனே! உபாத்தியாயர்கள் வேலைக்காரர்கள் அன்புள்ளவர்கள் இம்மூவரையும் குற்றமில்லாமலேவிடுகிறவர் நரகம்போகிறவர். புதுப்பசுக்களைப்பழக்குகிறவரும் மூக்குக்குத்துகிறவரும் அவற்றைக்கட்டிப்பிடிப்பவரும் நரகம்போகிறவர். ஆறிலொருபாகமாகியதீர்வையை அபகரித்துக்கொண்டு ரக்ஷியாத அரசர்களும் கொடுக்கத்திறமையிருந்தும் கொடாதவர்களும் நரகம்போகிறவர். பொறுமையும் அடக்கமுமுள்ளவர்களும் வெகுகாலம் கூடவேயிருந்தவர்களுமான புத்திமான்களைக் காரியமானபின் விட்டுவிடுகிறவர் நரகம்போகிறவர். சிறுவர்களுக்கும் கிழவர்களுக்கும் வேலைக்காரர்களுக்கும் கொடாமல் முன்னே சாப்பிடும்மனிதர்கள் நரகம்போகிறவர்கள்.

பரதஸ்ரேஷ்டனே! இவ்வாறு நரகம்போகிறவரைப்பற்றி முதலில் சொன்னேன். இனி ஸ்வர்க்கம் போகிறவரைப்பற்றிச் சொல்வேன். பாரதனே! தேவகாரியமுதலான எல்லாக்காரியங்களிலும் பிராம்மணனை அவமதிசெய்வது புத்ரர்கள் பசுக்கள் எல்லாவற்றையும் கெடுத்துவிடும். யுதிஷ்டிரா! தானத்தினாலும் தவத்தினாலும் ஸத்தியத்தினாலும் தர்மத்தையே யனுஸரிப்பவர் எவரோ அந்த மனிதர் ஸ்வர்க்கம்போகிறவர். பாரதனே! குருபணிவிடையினாலும் தவத்தினாலும் வித்தையைச் சம்பாதித்தபிறகு, பிறரிடத்தில் வாங்குவதில் ஆசையற்ற மனிதர்கள் ஸ்வர்க்கம் போகிறவர். பயம் நீங்குவதற்காகவாவது பாவநிவிருத்திக்காகவாவது உபத்திரவநிவிருத்திக்காகவாவது வறுமையினாலாவது வியாதியினாலாவது அதற்குவேண்டிய அளவு தனத்தைப் பெறவிரும்புகிறவர் ஸ்வர்க்கம்போகிறவர். பொறுமையும் மன உறுதியும் தர்மகார்யங்களில், உற்சாகமுமுள்ளவராகவும் மங்களாசாரங்களை விடாதவராகவுமிருக்கும் மனிதர் ஸ்வர்க்கம்போகிறவர். மதுமாம்ஸங்களையும் பிறர்மனைவிகளையும் மயக்கங்கொடுக்கும் மற்றச்சரக்குகளையும் விட்டிருக்கும் மனிதர்கள் ஸ்வர்க்கம்போகிறவர். பாரதனே! ஆஸ்ரமங்களையும் வீடுகளையும் தேசங்களையும் பட்டணங்களையும் உண்டுபண்ணுகிறமனிதர்கள் ஸ்வர்க்கம்போகிறவர். வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் பக்ஷணம் பானம் அன்னங்களையும் கொடுப்பவர்களும் குடும்பங்களைப் போஷிப்பவர்களுமான புருஷர்கள் ஸ்வர்க்கம்போகிறவர்கள். ஒருஹிம்ஸையும் செய்யாதவரும் எல்லாவற்றையும் பொறுப்பவரும் எல்லாருக்கும் ஆதாரவாயிருப்பவருமான மனிதர்கள் ஸ்வர்க்கம்போகிறவர்கள். ஜிதேந்திரியர்களாகி மாதாபிதாக்களுக்குப் பணிவுசெய்துகொண்டும் ஸஹோதரர்களிடத்தில் அன்புவைத்துமிருக்கும் மனிதர்

கள் ஸ்வர்க்கம்போகிறார்கள். பாரதனே! பொருளும் தேக வன்மையும் இளமையுமிருந்தும் ஜிதேந்திரியர்களாயிருக்கும் ஸ்திர புத்தியுள்ள மனிதர்கள் ஸ்வர்க்கம்போகிறவர்கள். குற்றவாளிகளிடத் தும் அன்புள்ளவரும் கடுமையில்லாதவரும் நன்மையிலேயேஆசை யுள்ளவரும் எளிதில் ஸந்தோஷப்படுத்தக்கூடியவருமான புருஷர்கள் ஸ்வர்க்கம்போகிறவர்கள். ஆயிரம் பேருக்கன்னம்போடுகிறவரும் ஆயி ரக்கணக்கா கொடுப்பவரும் ஆயிரம்பேரைக்காப்பாற்றுகிறவருமான மனிதர்கள் ஸ்வர்க்கம்போகிறவர்கள். பரதஸ்ரேஷ்டனே! பொன்னையும் பசுக்களையும் தேர்களையும் குதிரைகளையும் கொடுக்கும் மனிதர்கள் ஸ்வர்க்கம்போகிறவர்கள். யுதிஷ்டிரா! கலியாணத்திற்குரிய பொருள் களையும் வேலைக்காரரையும் வஸ்திரங்களையும் கொடுக்கும் மனிதர்கள் ஸ்வர்க்கம்போகிறவர்கள். விளையாடுகிறஇடங்கள் வீடுகள் தோட்டங்கள் கிணறுகள் தோப்புகள் மண்டபங்கள் தண்ணீர்ப்பந்தல்கள் மதில்கள் இவைகளைச்செய்விக்கும் மனிதர்கள் ஸ்வர்க்கம்போகிறவர்கள். பாரத னே! மனைகளையும் நிலங்களையும் வீடுகளையும் அவரவர்வேண்டினவற் றையும் கொடுக்கும் மனிதர்கள் ஸ்வர்க்கம்போகிறவர்கள். யுதிஷ்டிர! பழமுதலிய சுவையுள்ள பதார்த்தங்களையும் வித்துக்களையும் தானியங் களையும் தாங்களே யுண்டுபண்ணித் தானம்செய்யும் புருஷர்கள் ஸ்வர்க் கம்போகிறவர்கள். அதிகபுத்ரர்களுடன் நூறுபிராயமிருப்பவரும் தயை யுள்ளவரும் கோபத்தை ஜயித்தவருமான புருஷர்கள் எந்தக்குலத்தில் பிறந்தவர்களாயினும் ஸ்வர்க்கம் போகிறவர்கள். பாரதனே! தேவ பித்ருகார்யங்களும் தானதர்மங்களும் தானத்திற்குக் காரணமான ஸுக்ருதங்களும் முன்னே பரலோகத்தில் உபயோகத்திற்காக ரிஷி களால் சொல்லப்பட்டபடி இப்போது சொன்னேன்" என்றார்.

## அறுபத்துமூன்றுவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(கொல்லாமலேவரும் ப்ரம்மஹத்திதோஷம்.)

யுதிஷ்டிரர், "பாரதரே! அரசரே! கொல்லாமலே பிரம்மஹத்தி தோஷம் சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டது எப்படி? இதனை எனக்குத் தெளிவாகச்சொல்லவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானர்.

"அரசர்க்கரசனே! நான் முன்னே வியாஸரைக்கேட்டுத் தெரி ந்துகொண்டதை உனக்கு இப்போது சொல்வேன். அதை நீ மன

ஊக்கத்துடன் கேள். 'ஓ! முனிவரே! நீர் வஸிஷ்டருக்கு [1] நாலாம வர். இவ்வுலகத்தில் கொல்லாமலிருந்தாலும் என்னசெய்கையைச் செய்தால் பிரம்மஹத்திதோஷம் விதிக்கப்பட்டிருக்கிறது? அதன் உண்மையை எனக்குச்சொல்லும்' என்று வ்யாஸரைக்கேட்டேன். அரசனே! தர்மத்தில்மிகத்தெரிந்தவரான அந்தவ்யாஸர் இவ்வாறு என்னால்கேட்கப்பட்டவராகி ஸந்தேகத்தைநீக்கும் உயர்ந்தசொல்லைச் சொல்லலானார். 'ஜீவனத்திற்குக் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் பிராம்மணனைப் பிக்ஷைபோடுவதாக வலிய அழைத்துப் பிறகு இல்லை என்றுசொன்னவனைப் பிரம்மஹத்திசெய்தவனாக அறியவேண்டும். பாரதனே! வேதாத்யயனம்செய்து விருப்பு வெறுப்புக்களைவிட்டிருக்கும்பிராம்மணனுடைய ஜீவனத்தைஎடுத்துவிட்ட மதிகேடனைப் பிரம்மஹத்திசெய்தவனாக அறியவேண்டும். பசுமாட்டுக்கூட்டம் தாகமெடுத்துத் தண்ணீர்குடிக்கஓடும்போது அதற்குத் தடைசெய்பவனைப் பிரம்மஹத்திசெய்தவனாக அறியவேண்டும். பாம்பரையாகவந்த வேதத்தையும் ரிஷிகளால்நன்றாகச்செய்யப்பட்டுவரும்தர்மசாஸ்திரங்களையும் தெரியாதவனிடத்தில் தூஷிக்கின்றவனைப் பிரம்மஹத்திசெய்தவனாக அறியவேண்டும். மிக்கஅழகுள்ளபெண் பெரியவளாகியும் அவளைத் தகுந்தவரனுக்குக்கொடாமலிருப்பவனைப் பிரம்மஹத்திசெய்தவனென்று அறியவேண்டும். எந்தமூடன் பாவச்செய்கையே செய்துகொண்டு உயிர்போகத்தகுந்த துயரத்தைப் பிராம்மணர்களுக்கு வீணாகஉண்டாக்குவனோ அவனைப் பிரம்மஹத்திசெய்தவனென்று அறியவேண்டும். கண்ணில்லாதவன் நொண்டி மூடன் இவர்களுடைய சொத்துக்களையெல்லாம் எடுத்துக்கொள்ளுகிறவனையும் பிரம்மஹத்திசெய்தவனென்று அறியவேண்டும். அறிவுகெட்டு ஆஸ்ரமத்திலும் வனத்திலும் கிராமத்திலும் நகரத்திலும்தீயிடுகிறவனையும் பிரம்மஹத்திசெய்தவனென்று அறியவேண்டும்' என்றுகூறினர்" என்றார்.

## அறுபத்துநான்காவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(புண்யதீர்த்தங்களின் மகிமை.)

யுதிஷ்டிரர், "சிறந்தஞானமுள்ளபாரதசிரேஷ்டரே! தீர்த்தங்களைப்பார்ப்பதும் கேட்பதும் அவற்றிலாடுவதும் மிக்கபுண்ணியம்.

[1] வஸிஷ்டபுத்திரர் சக்தி, சக்திபுத்ரர் பராசர், பராசரபுத்ரர் வ்யாஸர்,

அவற்றைத் தெளிவாகக்கேட்க விரும்புகிறேன். பரதசிரேஷ்டரே! பிரபுவே! பூமியிலுள்ளபுண்யதீர்த்தங்களை எனக்குச் சொல்லக்கடவீர். நான் அவசியம் கேட்கவேண்டியவனுயிருக்கிறேன்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"சிறந்தகீர்த்தியுள்ளவனே! அங்கிரஸென்னும்முனிவரால்சொல்லப்பட்ட தீர்த்தங்களின்தொகுதியைச் சொல்லுகிறேன்; கேள். உனக்கு நன்மையுண்டு. சிறந்தபுண்ணியத்தைப் பெறுவாய். மகரிஷியும் மனஉறுதியுள்ளவருமான அங்கிரஸென்னும்பிராம்மணர் தபோவனத்திலிருக்கையில் கடுமையானதவமுள்ள கௌதமர் அவரிடம்சென்று, 'பகவானே! தீர்த்தங்களால்உண்டாகும் தர்மத்தைப் பற்றி எனக்குத் தெளிவாகத்தெரியவில்லை. அதையெல்லாம் கேட்க விரும்புகிறேன். ஓ! மகரிஷியே! எனக்கு அதைச் சொல்லக்கடவீர். பேரறிவாளரான்முனிவரே! அந்தத்தீர்த்தங்களில்ஸ்நாநம்செய்வதனுல் மறுமையில் என்னபலன்உண்டாகும்? அதை உள்ளபடி சொல்லக்கடவீர்' என்றுகேட்க, அங்கிரஸ் சொல்லலானார். 'அணைகளோடுகூடியசந்திரபாகையிலும் விதஸ்தையிலும் ஏழுநாள் ஆகாரமில்லாமல் ஸ்நாநம்செய்பவன் பாவங்கள்கழிந்து ரிஷிபோலாவான். காஷ்மீரதேசத்தில் எந்தநதிகள் பேரிரைச்சலோடு சிந்துநதியைச்சார்ந்து பெருகுகின்றனவோ அவற்றில் நல்லொழுக்கத்தோடு ஸ்நானஞ்செய்பவன் ஸ்வர்க்கமடைவான். புஷ்கரக்ஷேத்திரத்திலுள்ள தீர்த்தம், பிரபாஸதீர்த்தம், நைமிசாரண்யத்திலுள்ளதீர்த்தம், ஸமுத்திரதீர்த்தம் தேவிகாநதி இந்திரமார்க்கம் ஸ்வர்ணபிந்துஎன்னும் தீர்த்தங்கள் இவற்றில் ஸ்நானம்செய்பவன் தேவகிருஹங்களிலிருந்துகொண்டு அப்ஸரஸ்களால்துதிக்கப்பட்டு எழுப்பப்படுவான். குசேசயமென்னும்க்ஷேத்திரத்தில் ஹிரண்யபிந்துஎன்னும் தீர்த்தத்தைக்கண்டு பக்தியோடு நமஸ்காரம்செய்பவனுக்குப் பாவம்விலகித் தேவத்வம்உண்டாகும். கந்தமாதனமலையிலுள்ள இந்திரதோயைஎன்னும் நதியையும் குரங்கமென்னும்மலையிலுள்ள கரதோயைஎன்னும் நதியையும் அடைந்து மூன்றுஇரவுகள்உபவாஸமிருந்து பக்தியோடுஸ்நானம் செய்து பரிசுத்தனுனமனிதன் அசுவமேதபலனை அடைவான். [1]கங்காத்வாரத்திலும் குசாவர்த்தத்திலும் வில்வகத்திலும் நீலபர்வதத்திலும் கனகலத்திலும் ஸ்நானம்செய்தவன் பாவங்களைநீக்கி ஸ்வர்க்கத்திற்குப்போவான். கோபமற்றவனும் பொய்யாதவனும் கொல்லாதவனும் பிரம்மசாரிவிரதமுள்ளவனுமாக அபாம்ஹ்ரதமென்னும்

[1] 'இவை கோதாவரிநதியைச்சேர்ந்தவை' என்பது பழையவுரை.

தீர்த்தத்தில் ஸ்நானம்செய்வதனால் அச்வமேதபலனையடைவான். எந்தவிடத்தில் கங்கை வடதிசையைநோக்கி ஓடுகிறதோ அது ஸ்வர்க்கமத்யபாதாளமென்னும் மூன்றிடங்களும் சேருமிடமாகிய ஈஸ்வரருடையஸ்தானம். அதில் ஒருமாதம்ஆகாரமில்லாமல் ஸ்நானம் செய்யும்மனிதன் தேவர்களைக்காண்பான். [1]ஸப்தகங்கம் [2]திரிகங்கம் [3]இந்திரமார்க்கம் இவற்றில் பித்ருதர்ப்பணம்செய்தமனிதன் திரும்ப வும்ஜனிக்கையில் பாக்கியங்களையனுபவிக்கப்பெறுவான். ஒருமாதம் ஆகாரமில்லாமல் மகாஸ்ரமத்தில் ஸ்நாநஞ்செய்து பரிசுத்தனாகி அக் கினிஹோத்ரம்செய்துகொண்டிருப்பவன் அம்மாதத்திலேயே தவ ஸித்திபெறுவான். ஸ்திரீபுத்திரியோடு மூன்றுதினங்கள் உபவாஸமிரு ந்து ப்ருகுதுங்கமென்னும் மலைச்சிகரத்திலுள்ள மஹாஹ்ரதமென் னும் தீர்த்தத்தில் ஸ்நாநம்செய்வதனால் பிரம்மஹத்தி விலகிப்போகும். பலாகைஎன்னும்நதியில் கன்னியாகூபமென்னும் துறையில் ஸ்நானம் செய்து தர்ப்பணம் செய்பவன் தேவலோகத்தில் புகழ்பெற்றுவிளங்கு வான். அஸ்வினீநக்ஷத்திரத்தில் தேவிகையென்னும்நதியிலும் ஸுந் தரிகையென்னும் நதியின்மடுவிலும் ஸ்நானம்செய்யும்மனிதன் மறுஜன் மத்தில் அழகையும் ஒளியையுமடைவான். அங்காரகன்கிருத்திகையி லிருக்கும்போது ஒருபக்ஷம் ஆகாரமில்லாமல் மகாகங்கையில் ஸ்நா னம்செய்பவன் பாவங்களற்று ஸ்வர்க்கம்சேருவான். கிங்கிணீகாஸ்ர மமென்னுமிடத்திலுள்ள வைமாணிகதீர்த்தத்தில் ஸ்நாநம்செய்பவன் அப்ஸரஸுகளிருக்கும் தேவலோகத்தில் நினைத்தபடி ஸஞ்சரித்துக் கொண்டு கொண்டாடப்படுவான். காளிகாஸ்ரமமென்னுமிடத்தை யடைந்து கோபத்தைஜயித்துப் பிரம்மசாரிவிரதத்தோடு மூன்று தினம் விபாசைநதியில் ஸ்நானதர்ப்பணம் செய்பவன் ஸம்ஸாரத்தி லிருந்துவிடுபடுவான். கிருத்திகாஸ்ரமத்தில் ஸ்நானமும் பித்ருதர்ப் பணமும்செய்து பரமசிவனையாராதிப்பவன் பாவம் நீங்கி ஸ்வர்க்கம் சேருவான். மஹாகூபமென்னும்தீர்த்தத்தில் மூன்றுநாள் உபவாஸ மிருந்து ஸ்நானம்செய்து பரிசுத்தனாயிருப்பவன் சராசரங்களாலும் மனிதர்களாலுமுண்டாகும் பயத்தை விட்டுவிடுவான். தேவதாரு வனத்தில் ஏழுநாளிருந்து ஸ்நானம்செய்து பரிசுத்தனாகித் தர்ப்ப ணம்செய்தவன் பாவங்களைப்போக்கித் தேவதையென்று பெயர்பெறு வான். சரஸ்தம்பம், குசஸ்தம்பம், துரோணசர்மபதம் என்னுமிடங் களிலுள்ள அருவிகளில் ஸ்நானம்செய்பவன் அப்ஸரஸுகளினால் உப

---

[1] கங்கை ஏழாகப்பிரியுமிடம்; [2] மூன்றாகப்பிரியுமிடம்; [3] ஸ்வர்க்கத் திற்குப்போகுமிடம்.

சரிக்கப்படுவான். சித்ரகூடத்திலும் ஜனஸ்தானத்திலும் மந்தாகினீ நதியின்ஜலத்திலும் ஸ்நானம்செய்து உபவாஸமிருப்பவன் ராஜ்யலக்ஷ்மியினால் அடையப்படுவான். ஸ்யாமையென்பவளுடைய ஆஸ்ரமத்திற்குப்போய் ஒருபக்ஷம் ஆகாரமில்லாமல் வாஸம்செய்து ஸ்நானம் செய்பவன் அந்தர்த்தானமாகும் சக்தியையடைவான். கௌசிகிநதியையடைந்து இருபத்தொருநாள் வாயுபக்ஷணம்செய்து விருப்பமற்றிருக்கும் மனிதன் ஸ்வர்க்கமேறுவான். மதங்கவாபியென்னும் தீர்த்தத்தில் ஸ்நானம்செய்பவன் ஒருராத்திரியில் பலனடைந்து ஓர் ஆதாரத்தையும் பற்றாதவரும் நித்யருமான [1] ஈஸ்வரரையடைவான். நைமிசாரண்யத்திலுள்ள ஸ்வர்க்கதீர்த்தத்தில் ஒருமாஸம் புலன்களையடக்கி ஸ்நானம் செய்து தர்ப்பணம்செய்பவன் புருஷமேதமென்னும் யாகத்தின்பலனையடைவான். கங்காஹ்ரதம் உத்பலாவனம் என்னும் தீர்த்தங்களில் ஒருமாஸம் ஸ்நானம்செய்து தர்ப்பணம்செய்பவன் அச்வமேதத்தின் பலனையடைவான். காலஞ்சரமலையிலும் கங்கையமுனைகளின் தீர்த்தத்திலும் ஒருமாஸம் ஸ்நானதர்ப்பணம் செய்பவன் பத்து அசுவமேத யாகங்களின் பலனையடைவான். ஷஷ்டிஹ்ரதமென்னும் தீர்த்தத்தில் ஸ்நானம்செய்வது அன்னதானத்திற்குமேற்பட்டது. பரதசிரேஷ்டனே! மாசிமாஸத்துப்பூர்ணிமையில் ப்ரயாகையில் மூன்று கோடியே பதினாயிரம் புண்யதீர்த்தங்கள் சேருகின்றன. பரதசிரேஷ்டனே! மாகமாஸமுழுதும் உறுதியானநியமத்தோடு ப்ரயாகையில் நித்யஸ்நானம்செய்பவன் பாவம்தொலைந்து ஸ்வர்க்கமடைவான். மருத்கணம் பித்ருக்களின் ஆஸ்ரமம் யமதீர்த்தம் இவற்றில் ஸ்நானம்செய்து பரிசுத்தனான மனிதன் தீர்த்தங்களுக்குச்சமானமாவன். கங்கையில் ப்ரம்மஸரஸ் என்னும் இடத்திற்குச்சென்று ஒருமாதம்ஆகாரமில்லாமல் ஸ்நானதர்ப்பணம்செய்பவன் சந்திரலோகத்தையடைவான். பன்னிரண்டுநாள் ஆகாரமின்றி உத்பாதகம் அஷ்டாவக்ரம்என்னும் தீர்த்தங்களில் ஸ்நானதர்ப்பணங்கள்செய்தமனிதன் நரமேதத்தின்பலனையடைவான். கயையிலுள்ள அஸ்மப்ருஷ்டத்திலும் நிரவிந்தமலையிலும் க்ரௌஞ்சபதியிலும் ஸ்நானதர்ப்பணங்கள்செய்வதனால் [2] மூன்றுவது பிரம்மஹத்தியும் போய்விடும். கலவிங்கமென்னும் தீர்த்தத்தில் ஸ்நானம்செய்பவன், எங்கும் ஜலத்தட்டின்றி அளவற்றஜலத்தையடைவான். அக்நிபுர

[1] 'அந்தகம்' என்றபதம் 'அந்தகசத்ரு' என்னும்நாமத்தின் ஏகதேசமாகக் கொள்ளப்படவேண்டும். 'ஸம்ஹாரரூபி' என்னவுமாம்.

[2] 'முதலிடத்திற்செய்வதால் ஒருபிரம்மஹத்தியும் இரண்டாவதில் செய்வதால் இரண்டும் மூன்றுவதில்செய்வதால் மூன்றும் போம்' என்பது பழைய உரையின் கருத்து.

மென்னும் தீர்த்தத்தில் ஸ்நானம்செய்த மனிதன் அக்னிபகவானுடைய கன்னிகைகளின் அந்தப்புரத்தில்வஸிப்பான். காவீரபுரத்தில் விசாலா நதியில் தேவஹ்ரதம் என்னுமதீர்த்தத்தில் ஸ்நானஆசமனீயதர்ப்பணம் செய்பவன் பிரம்மாவைப்போல விளங்குவான். இந்திரியங்களையடக்கி ஹிம்ஸைசெய்யாமல் புனராவர்த்தநந்தை மகாநந்தைஎன்னும் நதிகளில் ஸ்நானம்செய்பவன் நந்தனமென்னும் இந்திரன்தோட்டத்தில் அப்ஸரஸுகளினால் உபசரிக்கப்படுவான். கிருத்திகாநக்ஷத்திரத்தில் லௌஹித்யமென்னும்நதியில் உர்வசிதீர்த்தத்தில் சிரத்தையோடு சாஸ்திரப்படி ஸ்நானம்செய்பவன் பௌண்டரீகயாகபலனையடைவான். பன்னிரண்டுநாள் உண்ணுமல் விபாசைநதியில் ராமஹ்ரதமென்னும் தீர்த்தத்தில் ஸ்நானதர்ப்பணங்கள்செய்தவன் பாவத்திலிருந்து விடுபடுவான். பரிசுத்தமானமனத்தோடு ஒருமாஸம் உபவாஸமிருந்து மஹாஹ்ரதத்தில் ஸ்நானம்செய்தமனிதன் ஜமதக்னி முனிவருடைய கதியையடைவான். வாக்கில்ஸத்தியத்தோடும் வணக்கத்தோடும் பிராணிஹிம்ஸை செய்யாமல் தன்னுடம்பைவருத்தி விந்தியமலையில்தவம்செய்பவன் ஒரு மாஸத்தில் பலனையடைவான். முண்டம், பிரம்மகயை, நிரிசி, தேவ பர்வதம், தேவஹ்ரதம் இவற்றில் ஸ்நானம்செய்வதனால் பிரம்மாவைப் போலவிளங்குவான். குமாரபதமென்னும் க்ஷேத்திரத்தில் ஒருமாஸம் வஸிப்பதனால் பாவங்கள்நீங்குகின்றன. நர்மதைநதியிலும் சூர்ப்பாரகோதகமென்னும்தீர்த்தத்திலும் ஸ்நானம்செய்துகொண்டு ஒருபக்ஷம் உபவாஸமிருப்பவன் ராஜகுமாரனைப் பிறப்பான். ஜம்புமார்க்கமென்னும் தீர்த்தத்தில் மூன்றுமாஸங்களும் ஒருநாளும் இந்திரியங்களையடக்கித் தவம்செய்பவன் தவஸித்தியடைவான். கோகாமுகமென்னும் தீர்த்தத்திற்கும் அஞ்ஜலிகாஶ்ரமத்திற்கும்போய் ஸ்னானம்செய்து இலைகளைப்பக்ஷித்துக்கொண்டு மாவுரியுடுப்பவன் பத்துத்தேவகன்னிகைகளையடைவான். அவன் ஒருகாலும் யமலோகம்புகான். கன்னியாஹ்ரதத்தில் வாஸம்செய்பவன் தேவலோகத்தையடைவான். ஓ! மஹாவீரனே! அமாவாசையில் நியமத்தோடு பிரபாஸதீர்த்தத்தில் ஸ்நானம் செய்யும்மனிதன் ஒருநாளில், தவப்பயனையடைந்து தேவனாவான். உஜ்ஜானகத்திலும் ஆர்ஷ்டிஷேணருடைய ஆச்ரமத்திலும் பிங்கையின் ஆஶ்ரமத்திலும் ஸ்நானம்செய்வதனால் எல்லாப்பாவங்களும் விலகிப் போம். ரிஷிகுல்யை என்னும்தீர்த்தத்தில் அகமர்ஷணமென்னும் மந்திரத்தை ஜபித்து ஸ்நானம்செய்துகொண்டு மூன்றுநாள் உபவாஸமாயிருக்கும்மனிதன் அஶ்வமேதபலனையடைவான், பிண்டாரகமென்

னும் தீர்த்தத்தில் ஸ்நானம்செய்து ஓர்இரவு அங்கேதங்கினமனிதன் விடிந்தவுடன் பரிசுத்தனாய் அக்நிஷ்டோமயாகபலனையடைவான். ரிஷியாஸ்ரமங்களினால் விளங்குகின்ற பிரம்மஸரஸுக்குச்சென்று ஸ்நானம் செய்து பரிசுத்தனானமனிதன் பௌண்டரீக யாகத்தின்பலனையடைவான். காமத்தையடக்கி மைநாகபர்வதத்தில் ஒரு மாஸம் ஸ்நானமும் ஸந்தியாவந்தனமும் செய்துகொண்டிருப்பவன் எல்லா யாகபலன்களையுமடைவான். கர்ப்பஹத்திசெய்தவன், காலோதகம் நந்திகுண்டம் உத்தரமானஸம் இவற்றிற்கு நூறுயோஜனை தூரத்தில் வரும்போதே பாவமற்றவனாவான். நந்திகேசுவரருடைய விக்ரஹத்தைத் தரிசித்தபிறகு எல்லாப்பாவங்களும் விட்டுப்போம். ஸ்வர்க்கமார்க்கமென்னும் தீர்த்தத்தில் ஸ்நானம்செய்தமனிதன் பிரம்மலோகம்போவான். சங்கரருக்கு மாமனும் எல்லாரத்னங்களுக்குமிருப்பிடமும் ஸித்தர்களாலும் சாரணர்களாலுமடையப்பட்ட புண்ணியக்ஷேத்திரமுமான இமயமலை பிரஸித்தமானது. அதைப்பார்ப்பதனாலும் அதன்மேல் போவதினாலும் அங்கே உபவாஸமிருப்பதனாலும் மனிதன் பரிசுத்தனாவான். வேதாந்தங்களையறிந்தபிராம்மணன், 'உயிர்வாழ்க்கைநிலையற்றது' என்றறிந்து அந்த இமயமலைக்குச்சென்று அங்கு தேவர்களையும் முனிவர்களையும் பூஜித்து நமஸ்கரித்து நியமத்தோடு உபவாஸமிருந்து தேகத்தைவிட்டு அதனாலேயே தவப்பயன்பெற்றுநித்யமும் சுத்தமுமான பிரம்மலோகத்திற்குப் போவான். காமக்குரோதலோபங்களைஜயித்துத் தீர்த்தங்களுக்குப்போகிறவன் அந்தத் தீர்த்தயாத்திரையினால் அடையாதபலன் எதுவுமில்லை. போகக்கூடாத மேடுபள்ளமான மார்க்கமுள்ள தீர்த்தங்களையும் எல்லாத்தீர்த்தங்களிலுமுள்ளபக்தியோடுமனத்தினால் அடையவேண்டும். இந்தத்தீர்த்தஸ்நானம் யாகத்திற்குச்சமமான புண்ணியம்; ஸ்வர்க்கத்திற்கு ஒப்பற்றஸாதனம். இது வேதங்களின்ரஹஸ்யம்; பாவங்களைப்போக்குவது. பிராம்மணர்களுக்கும் தனக்கு உபகாரம் செய்தயோக்கியனுக்கும் இதைச் சொல்லலாம்; வேண்டினவர்களுக்கும் வழிபடும்சிஷ்யனுக்கும் காதில் உபதேசிக்கவேண்டும்' என்றார். சிறந்த தவமுள்ள அங்கிரஸென்னும்முனிவர் இதைக் கௌதமருக்கு உபதேசித்தார். சிறந்தஞானமுள்ளகாச்யபரால் அங்கிரஸுக்கு உபதேசிக்கப்பட்டது. இந்தத்தீர்த்தமகிமை மஹரிஷிகளும் ஜபிக்கத்தக்கது; தூயவற்றுள் சிறந்தது. எப்போதும் எழுந்தவுடன் ஜபிப்பவன் பாவங்கள்நீங்கி ஸ்வர்க்கமடைவான். அங்கிரஸினால் சொல்லப்பட்ட இந்த ரஹஸ்யத்தைக்கேட்பவனும் உயர்குலத்தில்ஜனித்துப் பூர்வஜன்மங்களின் ஞாபகத்தோடிருப்பான்" என்றார்.

## அம்பத்தைந்தாவது அத்தியாயம்.

## தான தர்ம பர்வம் (தொடர்ச்சி.)

(ஒருஸித்தர் ஓர் உஞ்சவ்ருத்திப்ராம்மணருக்குக் கங்கையின் மஹிமையைக் கூறியது.)

புத்தியில் பிருகஸ்பதிக்கும் பொறுமையில் பிரம்மதேவருக்கும் பராக்ரமத்தில் இந்திரனுக்கும் உலகத்தில்பிரகாசிப்பதில்சூரியனுக்கும் சமமானவரும் மிக்க மகிமையுள்ளவரும் யுத்தத்தில் அர்ஜுனனால் அடிக்கப்பட்டவருமான பீஷ்மரை யுதிஷ்டிரர் தம் ஸஹோதரரோடும் மற்றும் அநேகரோடும்சேர்ந்து கேள்விகள்கேட்டார். சரதல்பத்தில் படுத்து உத்தராயணத்தை யெதிர்பார்த்திருப்பவரும் நிச்சயந்தவறாதவருமான பீஷ்மாசாரியரைப்பார்ப்பதற்காக மகரிஷிகள் வந்தனர். அத்ரி, வஸிஷ்டர், ப்ருகு, புலஸ்தியர், புலஹர், க்ரது, அங்கிரஸ், கௌதமர், அகஸ்தியர், மனத்தைமிகவும் அடக்கினவராகிய ஸுமதி, விசுவாமித்ரர், ஸ்தூலசிரஸ், ஸம்வர்த்தர், பிரமதி, தமர், பிருஹஸ்பதி, சுக்ராசாரியர், வ்யாஸர், ச்யவனர், காச்யபர், த்ருவர், துர்வாஸர், ஜமதக்நி, மார்க்கண்டேயர், காலவர், பரத்வாஜர், ரைப்யர், யவக்ரீதர், த்ரிதர், ஸ்தூலாக்ஷர், சபலாக்ஷர், கண்வர், மேதாதிதி, க்ருசர், நாரதர், பர்வதர், ஸுதன்வா, ஏகதர், த்விதர், நிதம்பூ, புவனர், தௌம்யர், சதானந்தர், அக்ருதவ்ரணர், பரசுராமர், கசர்முதலான மஹாத்மாக்களான மகரிஷிகள் பீஷ்மரைக் காணவந்தனர். வந்த அம்மகாத்மாக்களுக்கு யுதிஷ்டிரர் ஸகோதரர்களோடுகூட வரிசைப் பிரகாரம் அதிதிபூஜையை ஸரியாகச்செய்தார். அவரால்பூஜிக்கப்பட்ட அம்மஹரிஷிகள் ஸுகமாகஉட்கார்ந்து பீஷ்மரைப்பற்றி எல்லாருடைய காதுகளுக்கும் மனத்திற்கும் இனிமையாக அழகானகதைகளைச் சொல்லினர். பரிசுத்தாத்மாக்களாகிய அந்த ரிஷிகள்சொன்ன கதைகளைக்கேட்டுப் பீஷ்மர் மிகமகிழ்ந்தவராய்த் தம்மை ஸ்வர்க்கத்திலிருப்பவராகவே நினைத்தார். பிறகு, அம்மஹரிஷிகளனைவரும் பீஷ்மரிடத்திலும் பாண்டவர்களிடத்திலும் விடைபெற்றுக்கொண்டு எல்லாரும்பார்த்திருக்கையிலேயே அந்தர்த்தானமாயினர். மிகச்சிறந்தபிரபாவமுள்ள அந்தரிஷிகள் அந்தர்த்தானமானபின்பும் பாண்டவர்களனைவரும் அவர்களைத் துதித்துப் பலமுறை நமஸ்கரித்தனர். எல்லாரும் மனமகிழ்ந்து, மந்திரந்தெரிந்தவர்கள் உதயமாகும்சூரியனை உபஸ்தானஞ்செய்வதுபோலக் கௌரவத்தலைவரானபீஷ்மரைப் பூஜித்தன

திக்குக்களையெல்லாம் பிரகாசிக்கச்செய்யும்அம்மஹரிஷிகளின் தவவன்மையைக்கண்டு பாண்டவர்கள் மிக்க ஆச்சரியமடைந்தனர். அந்த ரிஷிகளின் சிறந்த மகிமையைநினைத்து அந்தப்பாண்டவர்கள் பீஷ்மருடன் கூட அவர்களைப்பற்றிப் பாராட்டிப்பேசினர். அந்தப்பிரஸ்தாவத்தின் முடிவில் பாண்டுபுத்ரரும் தர்மபுத்ரருமான யுதிஷ்டிரர் பீஷ்மருடைய பாதங்களைத் தலையால்வணங்கி, "பிதாமஹரே! எந்தத்தேசங்கள், எந்தக் கிராமங்கள், எந்த ஆஸ்ரமங்கள, எந்தமலைகள், எந்தநதிகள் புண்யமானவைகளிற் சிறந்தவையென்று அறியலாம்?" என்று தர்மத்தைப்பற்றிய கேள்வியைக்கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"யுதிஷ்டிரா! இந்த விஷயத்தில் உஞ்சவிருத்திசெய்கிற ஒருவருக்கும் ஒருஸித்தருக்கும் நடந்தஸம்வாதமாகிய ஒருபழைய இதிஹாஸம் கூறுகின்றனர். அதைச்சொல்லுகிறேன். மனிதர்களிற்சிறந்த ஒருஸித்தர் மலைகளால் அலங்கரிக்கப்பட்ட இந்தப்புவனியெல்லாம் பலமுறை திரிந்து உஞ்சவிருத்திசெய்யும் ஒருசிறந்த கிருஹஸ்தருடைய வீட்டையடைந்தார். அந்தரிஷி அவரால்முறைப்படி பூஜிக்கப்பட்டுப் பிரஸன்னராகி அந்தஇரவு அந்தக்கிருகத்தில் ஸுகமாகவஸித்தார். அந்த உஞ்சவிருத்திப்பிராம்மணர் காலைக்கடமைகளைச்செய்து பரிசுத்தராய்த் தம் கருமங்களை யெல்லாம் முடித்துக்கொண்டிருக்கும் அந்த அதிதியான ஸித்தரிடம் போனார். அம்மஹாத்மாக்களிருவரும சேர்ந்து சுகமாக உட்கார்ந்து வேதங்களைச்சேர்ந்த தர்மசாஸ்திரம் சிஷ்டாசாரமுதலியவற்றிலறியப்பட்ட சிறந்தவிஷயங்களைப்பேசிக்கொண்டிருந்தனர். சிறந்தபுத்தியுள்ள அந்த உஞ்சவிருத்திக்காரர் பேச்சின்முடிவில் அந்த ஸித்தரைநோக்கி என்னை நீஇப்போது கேட்கும்கேள்வியையே சிரத்தையுடன்கேட்டார். அவர், 'எந்தததேசங்கள் எந்தக்கிராமங்கள் எந்தஆஸ்ரமங்கள் எந்தமலைகள் எந்தநதிகள் புண்ணியமுள்ளவைகளிற் சிறந்தவையாக அறியத்தக்கவை என்பதைச் சொல்லக்கடவீர்' என்றுகேட்க, ஸித்தர் சொல்லலானார்.

நதிகளிற்சிறந்ததும் பகீரதனால்கொண்டுவரப்பட்டதுமான கங்கை நதி எவற்றின்வழியாகப் பிரவகிக்கிறதோ அந்தத்தேசங்களும் அந்தக் கிராமங்களும் அந்தஆஸ்ரமங்களும் அந்தமலைகளும் புண்ணியமானவைகளிற்சிறந்தவை. ஒருமனிதன் கங்கையையடைந்து ஸம்பாதிக்கும் நற்கதியைத் தவத்தினாலும் பிரம்மசாரிவிரதத்தினாலும் யாகங்களினாலும் தியாகங்களினாலும் அடையமுடியாது. எந்தமனிதர்களின் தேகங்கள் கங்காஜலம்மேலேபட்டபிறகு, விடப்படுகின்றனவோ அவர்களுக்கு முக்திவருவதனால் மறுபடியும் தேகம்விடுவது சொல்லப்படவில்லை,

பிராம்மணரே! எவர்கள் எல்லாக்கர்மங்களும் கங்கையின் ஜலத்தினால் நடத்துகின்றனரோ அம்மனிதர்கள் பூமியைவிட்டபின் மேலுலகத்திலிருப்பர். முற்பிராயத்தில் பாவகாரியத்தைச்செய்த மனிதர்களும் பின்பிராயத்தில் கங்கையைச்சேர்ந்திருப்பாராயின் உத்தமகதியையடைவார். பாவமுள்ளவர்களும் கங்கைமுனைகளின் ஸங்கமத்தில் தேகங்களை விட்டாராயின் அதனாலேயேபரிசுத்தர்களாகி முக்திபெறுவார். பரிசுத்தமான கங்காஜலத்தில் சிரத்தையுடன் ஸ்நானம்செய்யும் மனிதர்களுக்கு உண்டாகும் பலன் அநேகயாகங்களாலுமுண்டாவதில்லை. மனிதனது எலும்பு எத்தனைவருஷம் கங்கையின்ஜலத்திலிருக்குமோ அத்தனையாயிரவருஷம் அவன் தேவலோகத்திற்பூஜிக்கப்படுவான். ஸூர்யன். உதயமாகும்போதே மிக்கஇருளை ஒழித்துக்கொண்டே பிரகாசிப்பதுபோலவே மனிதன் கங்காஜலத்தில் ஸ்நானம்செய்யும்போதே பாவத்தையொழித்துக்கொண்டு பிரகாசிக்கிறான். பரிசுத்தமானகங்காஜலம் இல்லாததேசங்களும் திசைகளும், சந்திரனில்லாத இரவுகள்போலவும் பூவாதமரங்கள் போலவுமிருக்கின்றன. கங்கையில்லாமற்போனால் உலகம் தர்மமும் ஞானமுமில்லாத வர்ணாச்ரமங்கள்போலவும் ஸோமலதையில்லாதயாகம் போலவும் ஆய்விடும். சூரியனில்லாதஆகாயமும் மலைகளில்லாத பூமியும் காற்றில்லாத இடைவெளியும் எப்படியோ அப்படியே கங்கையில்லாத தேசங்களும் திசைகளும் ஆகும். ஸந்தேகமில்லை. மூன்றுஉலகங்களிலுமுள்ள எல்லாப்பிராணிகளும் புண்ணியமானகங்காஜலத்தினால் தர்ப்பணம்செய்வதனால் மிகுந்ததிருப்தியையடைகின்றன. மூன்றுஉலகங்களிலுமுள்ள தேவர்கள் ரிஷிகள்[1] ப்ரேதர் பித்ருக்கள்ஆகிய அனைவரும் கங்காஜலத்தில் தர்ப்பணம்செய்வதனால் திருப்தியடைகின்றனர். சூரியபுடமாகக்காய்ந்த கங்காஜலத்தை ஒருவன்குடித்தால் யவங்களை ஆகாரமாகப்போட்டபசுவின் கோமயத்திலிருக்கும் யவங்களைச்சாப்பிடுவதைப் பார்க்கிலும் அது சிறந்தது. ஆயிரம்சாந்திராயணம்செய்து தேகசுத்தி செய்கிறவனும் கங்கைஜலத்தைக்குடிப்பவனும் ஒப்பாயிருப்பரோ; இராரோ. ஆயிரம்யுகங்கள் ஒற்றைக்காலால்நின்று தவம்செய்யும்மனிதனும் ஒருமாஸம் கங்கையில்ஸ்நானம் செய்பவனும் ஸரியாயிருப்பரோ; இரார்ரோ. பதினாயிரம்யுகம் தலைகீழாகத்தொங்கித் தவஞ்செய்யும் மனிதனைப் பார்க்கிலும் கங்கையில் தன்னிஷ்டப்படியிருப்பவனும் மேலாவான்.

[1] ஸபிண்டீகரணம்வரையில் ப்ரேதர்களென்றும், பிறகு, பித்ருக்களென்றும் சொல்லப்படுவோர்.

பிராம்மணோத்தமரே! கங்கையில்ஸ்நானம் செய்பவனுடைய பாவங்கள் எல்லாம் அக்னியில்போடப்பட்ட பஞ்சுபோல எரிந்துபோய்விடும். துக்கத்தினால் மனம்கெடுக்கப்பட்டு அதற்குப்பரிகாரம்தேடுகிற மனிதர்களுக்குக் கங்கைக்குச்சமமான ஆதரவு ஒன்றுமில்லை. கருடனைப்பார்ப்பதனால் ஸர்ப்பங்கள் விஷமற்றுப்போவதுபோலக் கங்கையைப்பார்ப்பதனால் மனிதர்கள் எல்லாப்பாவங்களிலிருந்தும் விடுபடுகின்றனர். இவ்வுலகத்தில் நிலையும் [1] கவசமும் ஆதரவுமற்றவர்கள் எவரோ அவர்களுக்குக் கங்கை நிலையாகவும் [2] கவசமாகவும் ஆதாவாகவும் ஸுகமாகவுமிருக்கின்றது. அநேககொடியபாவங்களினால் விழுங்கப்பட்டு நரகத்தில்விழும் அதமானமனிதரும் கங்கையைச் சேர்ந்தால் மறுமையில்அவர்களை அது கரையேற்றும். புத்திசாலிகளிற்சிறந்தவரே! இடைவிடாமற்கங்கைக்குப் போகிறவர்கள் ரிஷிகளோடும் இந்திராதிதேவர்களோடும், புண்ணியத்தில் ஸமபாகமுள்ளவர்களாகிறார்கள். பிராம்மணரே! கல்வியும் ஆசாரங்களுமில்லாமல் அயோக்யர்களான ஈனமனிதர்களும் கங்கையையடைந்த பின் யோக்கியர்களாகிறார்கள். தேவர்களுக்கு ஹவ்யமும் பித்ருக்களுக்குக்கவ்யமும் நாகர்களுக்கு அமிர்தமும் எப்படியோ அப்படியே மனிதர்களுக்குக்கங்காஜலம். இவ்வுலகத்தில்மேன்மையைவிரும்புகின்ற பிராணிகள் பசியினால்வருத்தப்பட்டகுழந்தைகள் தாயையடுப்பதுபோலக் கங்கையையடுக்கின்றன. பிரம்மலோகம் எல்லாலோகங்களுக்கும் மேற்பட்டதாகச் சொல்லப்படுவதுபோலக் கங்கை இவ்வுலகத்திலுள்ள எல்லா நதிகளிலும் சிறந்ததாகச்சொல்லப்படுகிறது. உலகங்களுக்குப்பசுவும் பிராம்மணனும் எப்படியோ, ஹோமம்செய்யப்படுவனவற்றுள் ஸோமரஸம் எப்படியோ அப்படியே பாவந்தீரச்செய்பவற்றுள் கங்கை. காமதேனுவானது தன்னையடுத்த தேவர் முதலியவருக்கும் முக்கியமாக நினைக்கப்படுவதுபோலவே கங்கை இவ்வுலகத்தில் தன்னையடுத்த எல்லாப்பிராணிகளுக்கும் முக்கியமாகநினைக்கப்படுகிறது. தேவர்கள், ஸத்ரங்கள்முதலிய யாகங்கள்வழியாகச் சந்திரனிடத்திலும் சூரியனிடத்திலுமுள்ள அமிருதங்களை [3] உட்கொள்வதுபோல மனிதர்கள் கங்கை நீரை உட்கொள்ளுகின்றனர். கங்கைக்கரையிலுள்ள மணலினால் பூசப்பட்டாலும் தாம் ஸ்வர்க்கத்திலிருப்பதுபோலச் சிறப்புற்றிருப்பதாக

[1] 'வர்ம' என்றபாடம் கொள்ளப்பட்டது. [2] கவசம்போலப் பலம்தருவது.

[3] அக்கினியில் செய்யும் ஆஹுதி சூரியனைச்சேருவதனாலும் சந்திரகலைகள் கிருஷ்ணபக்ஷத்தில் சூரியனிடத்தில்சேருவதனாலும் அந்த அமிருதங்களைத் தேவர் புசிக்கிறாரென்றது.

ஜனங்கள் நினைக்கிறார்கள். கங்கைக்கரையிலுண்டான மண்ணைச்சிரசில் வகிப்பவன் இருளைப்போக்கும் ஒளியுள்ளசூரியனுடைய சோபையை அடைகிறான். கங்கையின் அலைகள் ஸம்பந்தப்பட்டகாற்று மனிதன் மேல்படும்போதே அவன்பாவத்தை இழுத்துவிடுகிறது. விசனங்களினால் வருத்தப்பட்டு இறந்துபோகுந்தருணத்திலிருக்கும் மனிதனுக்குக் கங்கையைப்பார்ப்பதனாலுண்டான இன்பம் விசனங்களைப்போக்கிவிடுகிறது. கங்கையானது அன்னம் சக்ரவாகம் என்னும் பக்ஷிகளின் கூவுதல்களினால் கந்தர்வர்களையும் மணல்மேடுகளினால் மலைகளையும் வென்றது. அன்னமுதலான பலவகைப்பறவைகளால் நிரம்பச்சூழப்பெற்றதும் பசுக்கூட்டம் நெருங்கியிருப்பதுமான கங்கையைக்கண்ட பிறகு, ஸ்வர்க்கலோகமும் மறக்கப்படும். கங்கையின் மணல்மேட்டில் மனிதர்களுக்குண்டாகும் சிறந்தஇன்பமானது தேவலோகத்திலிருந்து எல்லாப்போகங்களையுமனுபவிப்பவனுக்கும் உண்டாகாது. இவ்வுலகத்தில் வாக்கினாலும் மனத்தினாலும் காயத்தினாலும் செய்யப்பட்டபாவங்கள் மூடியிருக்கும் மனிதனும் கங்கையைக்கண்டவுடன் பரிசுத்தனாவானென்பதில் எனக்குச்சந்தேகமில்லை. கங்கையைக்கண்டாலும் ஆசமனம் செய்தாலும் ஸ்நானம்செய்தாலும் ஒருமனிதன் தன்குலத்தின் பின்னேழுதலைமுறையாரையும் முன்னேழுதலைமுறையாரையும் அவருக்கும் முந்தினவரையும் கரையேற்றுவான். கங்கையானதுகேட்கப்பட்டாலும் விரும்பப்பட்டாலும் குடிக்கப்பட்டாலும் தொடப்பட்டாலும் பார்க்கப்பட்டாலும் ஸ்நானம்செய்யப்பட்டாலும் மனிதர்களின் தாய்வம்சம் தந்தைவம்சமிரண்டையும் நிச்சயம்கரையேற்றிவிடும். கங்கைக்கரையிலிருந்துகொண்டு தவத்தையும் சிராத்தத்தையும் வேதமுதலியவற்றையோதலையும் மற்றுமுள்ள ஸத்கருமங்களையுஞ்செய்யும் மனிதர்களுக்குக் கங்காத்வாரமுதலான தீர்த்தங்களுக்குமேலானதொன்றுமில்லை. மாலையிலும் காலையிலும்மனிதன்கங்கையைநினைக்கவேண்டும்; ஸ்நானம்செய்யும்போதெல்லாம் வாயினாற்சொல்லவேண்டும்; பித்ருக்களுக்குத்தர்ப்பணம் செய்யும்போதும் மரணகாலத்திலும் நினைக்கவேண்டும். கங்கையானது பார்ப்பதனாலும் தொடுவதனாலும் குடிப்பதனாலும் கங்கையென்றுசொல்வதனாலும் பாவம் செய்தமனிதர்களை நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் சுத்தப்படுத்துகிறது. பிறப்பையும் உயிர்வாழ்க்கையையும் ஓதலையும் பயன்படச்செய்யக்கருதுகிறவன் கங்கைக்குச்சென்று பித்ருக்களுக்கும்தேவர்களுக்கும் தர்ப்பணஞ்செய்யவேண்டும். ஒருமனிதன் கங்கைக்குப்போய் அடையும்பலனை ஓதலினாலும் பொருளினாலும்

யாகமுதலிய கர்மங்களினாலும் அடைவது முழுதும்முடியாது. புண்ணியமான ஜலமுள்ளதும் சுகத்தைத்தருவதுமான கங்கையைச் சக்தியிருந்தும் பாராதவர்கள் பிறவிக்குருடருக்கும் பிணங்களுக்கும் முடவருக்கும் சமமானவர். நடந்தது நடக்கிறது நடப்பதாகிய முக்காலங்களையும் அறிந்த மகரிஷிகளாலும் இந்த்ராதிதேவர்களாலும் கொண்டாடப்படும் கங்கையை எந்தமனிதன் அடையாமலிருப்பான்? கல்வியிற் சிறந்த வானப்பிரஸ்தர், கிருஹஸ்தர், ஸந்யாஸிகள், பிரம்மசாரிகளென்னும் நான்கு ஆச்ரமத்தாராலும் அடையப்படும் கங்கைக்கு எந்த மனிதன் போகாமலிருப்பான்? கூட்டைவிட்டு உயிர்போகும்போதும் யோக்யனென்று பெயர்பெற்ற எவன் பக்தியோடு கங்கையை மனத்தில் நினைப்பானோ அவன் மேற்கதிபெறுவான். இவ்வுலகத்தில் எந்தமனிதன் கங்கையையடைகிறானோ அவனுக்குத் தேகம்விழுமளவும் பயத்தைத்தருவனவாகிய (பேய்பிசாசு பாம்பு முதலியவற்றின்) பயமும் பாவபயமும் ராஜபயமும்இல்லை. மிகப்புண்ணியமான கங்காநதி ஆகாயத்திலிருந்து பூமியில் விழும்போது மகேசுவரர் தம்தலையால் தாங்கினார்; மேலுலகத்திலும் அதையே தலையில்வைத்துக்கொண்டிருக்கிறார். பரிசுத்தமான மூன்றுமார்க்கங்களினால் மூன்றுலகங்களும் கங்கையினால்அலங்கரிக்கப் பட்டிருக்கின்றன. அதன் ஜலத்தை உபயோகிக்கும் மனிதன் க்ருதார்த்தனாவான். ஆகாயத்திலுள்ள (நக்ஷத்திரமுதலிய) தேஜஸ்ஸுகளில் ஸூர்யன் எப்படியோ புருஷர்களில் தேவேந்திரன் எப்படியோ அப்படி நதிகளில் கங்கை. [1] பித்ருதேவர்களில் சந்திரன் எப்படியோ அப்படியே நதிகளில் கங்கை. தாய், தந்தை, புத்ரர், மனைவி, பொருள் இவர்களைப்பிரிகிறவனுக்கும் கங்கையைப்பிரிவதனாலுண்டாகும் துயரம் உண்டாகாது. கங்கையைப்பார்ப்பதனாலுண்டாகும் இன்பம் காமிகளினாலும் வேண்டினபோகங்களினாலும் புத்ரஸந்தானத்தினாலும் திரவியலாபங்களினாலும் உண்டாவதில்லை. பூர்ணசந்திரனைப்பார்த்து மனிதர்களின்கண் எப்படிக்குளிர்கிறதோ அப்படியே கங்கையைப்பார்த்துக் குளிர்கிறது. பக்தியோடு அன்புவைத்து மனம்செலுத்தி, 'இதுவே ஆதாரம். இதுவே பரகதி' என்றெண்ணிக் கங்கையை அநுஸரித்திருப்பவன் எவனோ அவன் அந்தக்கங்கையின் அநுக்கிரகத்திற்குப் பாத்திரனாவான். பூமியிலும் ஆகாயத்திலும் மேலுலகத்திலுமுள்ள பலவகைப்பிராணிகளுக்கும் கங்கை ஸ்நானம் செய்வதற்குரியது. ஸாதுக்களுக்கு எப்போதும் செய்யத்

[1] ஸோமன், பித்ருமான், யமன், அங்கிரஸ்வான், அக்நி, கவ்யவாகனன் முதலான பித்ருக்களில் சந்திரன் முதலாக எண்ணப்பட்டனன்,

தக்க சிறந்தகாரியம் கங்காஸ்நானந்தான். கங்கை எல்லாஉலகங்களிலும் புண்ணியமாயிருப்பதனாலேதான் அதன்புகழ் விளங்குகிறது. துர்மரண மாக இறந்தவரையும் ஸந்ததியில்லாமலிறந்தவரையும் அது ஸ்வர்க்கம் சேர்த்திருக்கிறது; இவ்வுலகில் சாம்பலாகப்போன ஸகரபுத்ரர்களை ஸ்வர்க்கலோகம்சேர்த்தது. காற்றினால் எழுப்பப்பட்டவையும் மனத்தை மிகக்கவருகின்றவையும் வேகமுள்ளவையும் மிகக்கொந்தளிக்கின்றவை யும் அழகிய நிறமுள்ளவையுமான கங்கையின் அலைகளினால் பரிசுத்தம் செய்யப்பட்டவர்கள் [1] சூரியனுக்குச் சமானமாகிறார்கள். பசுக்களின் வளப்பத்தினால் பாலும் நெய்யும் பயிர்முதலிய தொழில் வளப்பத்தினால் செல்வமும் நிரம்பினதும் நினைத்ததையெல்லாம் அளிப்பதனால் மிகச் சிறந்த கொடையுள்ளதும் வேகமுள்ளதும் இறங்கக்கூடாத ஆழமுள் ளதுமாகிய கங்கைக்குச்சென்று தேகத்தைவிட்ட தைர்யசாலிகள் தேவ ரோடு சேருகிறார். புகழ்பெற்றதும் பெரிதும் எல்லாஉலகங்களிலும் பிர வேசித்திருப்பதும் இந்திராதிதேவர்களாலும் ரிஷிகளாலும் மனிதர் களாலும் அநுஸரிக்கப்பட்டதுமான கங்கை கண்ணில்லாதவருக்கும் மதியில்லாதவருக்கும் பொருளில்லாதவருக்கும் விரும்பினவற்றையெல் லாம் அளிக்கும். செல்வமும் சௌக்கியமும் நிரம்பியதும் பெரும்புண் ணியத்தைத்தருவதும் மூன்று வழிகளிற்செல்வதும் மூன்றுலகங்களை யுங்காப்பதுமாகிய கங்கையைச்சேர்ந்தவர் தெய்வலோகத்தைச் சேர்ந்த வரே. கங்கையினிடம் வஸிப்பவனுக்கும் அதைப்பார்ப்பவனுக்கும் தேவர்கள் ஸுகங்களைக்கொடுக்கின்றனர். அதைத்தொடுவதனாலும் காண்பதனாலும் அநுக்கிரகமுண்டாக்கப்பட்ட தேவர்கள் அவன் விரும்பின நற்கதியையும் கொடுக்கின்றனர். இஷ்டங்களைக்கொடுக்கச் சக்தியுள்ளதும் அடுத்தவர்களை [2] விசாரிப்பதும் [3] பெரிதும் வெகுதூரம் செல்வதும் க்ஷேமத்தையும் ஸம்பத்தையும் தருவதும் பாக்கியமுள்ள தும் மிக்க அநுக்கிரகமுள்ளதும் தேஜஸைக்கொடுப்பதும் எல்லாப் பிராணிகளுக்கும் ஆதாரமுமான கங்கையையடைந்தவர்கள் ஸ்வர்க்க மடைந்தவராம். எதனுடையகீர்த்தி தேவலோகத்தையும் ஆகாயத்தை யும் பூமியையும் திசைகளையும் மூலைகளையும் வியாபித்து எல்லாவற்றிற் கும் மேலாயிருக்கிறதோ அந்தமஹாநதியின் ஜலத்தையடைந்த மனித ரனைவரும் க்ருதார்த்தராவார். கங்கையென்றுபெயருள்ள இந்தநதி யாவ .

[1] தேவராகிறார்.

[2] 'ப்ருச்நி' என்பதுமூலம்; 'விஷ்ணுவின் தாய்' என்பது பழையஉரை.

[3] குணம்மிகுந்தது.

ருக்கும் ஸ்திரமானஆதாரம்; ஸுப்ரம்மண்யரையும் ஸ்வர்ணத்தையும் கர்ப்பத்தில் வைத்துக்கொண்டிருந்தபெண்; தர்மார்த்தகாமங்களென்னும்மூன்றுபுருஷார்த்தங்களையும் கொடுப்பது; தேவர்களுக்குஹவிஸாகிய நெய்யையுண்டாக்குவது; பாவத்தைப்போக்குவது. கங்கையானது ஆகாசத்திலிருந்து காலையில்இழிந்து ஜலத்தினால் உலகங்களைவியாபித்தது. நித்யரானநாராயணரிடத்திலிருந்து முதலில் உண்டாயிற்று; அந்த நாராயணருடைய பாதத்திலிருந்து சிம்சுமாரசக்கரம் என்னும் காலசக்ரத்திலிழிந்து அங்கிருந்து துருவனிடத்திலும் அங்கிருந்து சந்திரனிடத்திலும் சந்திரனிடத்திலிருந்து சூரியனிடத்திலும் சூரியனிடமிருந்து மேருமலையினிடத்திலும் மேருமலைபுருவமெடுத்த விஷ்ணுவினிடமிருந்து சிவன்தலையிலும் அங்கிருந்து இமயமலையிலும் வந்து சேர்ந்தது; ஸத்யத்தைக்காப்பதும் பொருள்வேண்டுகிறவன் பிரார்த்திக்கத்தக்கதும் ஸ்வர்க்கத்துக்கும் பூமிக்கும் தகுந்ததாகப்பார்க்கத்தக்கதுமாயிருப்பது. அரசனே! இமயமலையின் பெண்ணும் சிவன்மனைவியும் ஸ்வர்க்கத்திற்கும் பூமிக்குமொப்பானதும் பூமியில் சிறந்தபாக்கியமுள்ளதும் மூன்று உலகங்களுக்கும் புண்ணியங்களைக் கொடுப்பதுமாகக் கங்கை படைக்கப்பட்டது; ஸ்வர்க்கலோகத்திற்குத்தாயும் தேனையும் நெய்யையும் பொழிவதும் நெய்போலத் தேகத்தின் ஒளியைக்கொடுப்பதும் பெரிய அலைகளினாலும் பிராம்மணர்களினாலும் விளங்குவதும் ஸ்வர்க்கத்திலிருந்து இமயமலையில் விழுந்து சிவன்தலையினால் ஏந்தப்பெற்றதுமாயிருக்கிறது. கங்கையானது சிறந்த உற்பத்திகாரணம்; ரஜோகுணத்தையொழிப்பது; இளைப்பைப்போக்குவது; படுக்கைபோல ஸுகமானது; சீக்கிரமாக ஜலம்பெருகுவது; புகழைக்கொடுப்பது; உலகத்தைக் காப்பது; ஸ்நானம் செய்பவருக்கு நினைத்த உருவத்தைத்தருவதும் மேலுலகத்திற்கு வழியுமாயிருப்பது. பொறுமையிலும் காப்பதிலும் தாங்குவதிலும் பூமிக்கும், பிரகாசிப்பதில் அக்நிக்கும் சூரியனுக்கும், பிராம்மணர்களுக்கு உதவிசெய்வதில் ஸுப்ரம்மண்யருக்கும் சமானமென்று கங்கை எப்போதும் பிராம்மணர்களால் நினைக்கப்படுகிறது. ரிஷிகளால் துதிக்கப்பட்டதும் விஷ்ணுபாதத்திலுண்டானதும் பழமையானதும் மிகப்பரிசுத்தமான ஜலமுள்ளதுமாகிய கங்கையை இவ்வுலகத்தில் முழுபக்தியோடு மனத்தினாலடைகிறவரும் பிரம்மலோகத்தையடைகிறவரே. எல்லாக்குணங்களும் நிரம்பினகங்கை பூர்ணமான அனுக்கிரகத்தினால் தாயார் பிள்ளைகளை முன்னுக்குக் கொண்டுவருவதுபோல இவ்வுலகங்களை முன்னுக்குக் கொண்டுவருகிறது. ஆதலால், பிரம்மலோகத்தையடைய விரும்புகிறவர்கள் எப்போதும் மனத்தையடக்கிக் கங்

கையையே பஜிக்கவேண்டும். தவஸித்தியைவிரும்பின பரிசுத்தமன முள்ளவன் நமஸ்கரித்துப் பக்திசெய்யப்படுவதும் மேலேபட்டவுடன் எல்லாரையும் பரிசுத்தம்செய்வதும் பூமியைரக்ஷிப்பதாக அறியப்படுவதும் பர்வதங்களில் ரேவதிநக்ஷத்திரம்போலப் பிரகாசிப்பதும் ஜலம் நிரம்பினதும் மீன்களினுல் கண்விழித்திருப்பதுபோன்றதும் எல்லாப் பிராணிகளும் குடிக்கத்தகுந்த சிறந்த ஜலமுள்ளதும் அரசர்களையும் காப்பதும் ஸாதுக்களுக்கு ஆதாரமும் அம்ருதம்போன்றதும் பிரம்ம தேவராலும் விரும்பப்படுவதுமான கங்கையை அடையவேண்டும். பகீரதன் உக்ரமான தவத்தினுல் எல்லாத்தேவர்களையும் ஈசுவரரையும் ஆராதித்துக் கங்கையைப் பூமிக்குக் கொண்டுவந்தான். அந்தக்கங்கையை அடிக்கடி அடைவதனுல் மனிதர்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் பயமில்லையென்று அறியவேண்டும். நான் புத்தியினுல் நன்கு ஆராய்ந்துபார்த்துக் கங்கையின்குணங்களிற் சிறிதுதான் உமக்குச் சொன்னேன். அதன் குணங்களெல்லாவற்றையும் அறிவதற்கும் சொல்வதற்கும் எனக்குச் சிறிதும் ஸாமர்த்தியமில்லை. எவ்விதப்பிரயத்தனங்களாலும் மேருவின்கற்களையும் கடல்நீரையும் எண்ணினுலும் கங்கா ஜலத்தின் குணங்களைமட்டும் அறியவும் சொல்லவுமுடியாது. ஆகலால், நான் மிகுந்த சிரத்தையோடு சொன்ன இந்தக்கங்கையின் குணங்கள் எல்லாவற்றையும் சிரத்தையோடும் பக்தியோடும் வாக்கினுலும் மனத்தினுலும் செய்கையினுலும் எப்போதும் கொண்டாடவேண்டும். நீர் இம்மூன்று உலகங்களிலும் புகழ்பரவி யாருக்கும் கிடைக்கத்தகாத பெருந்தவஸித்தியையும் பெற்றுக் கங்கையினுலேயே அளிக்கப்பெற்ற புண்ணியலோகங்களில் சீக்கிரத்தில் இஷ்டப்படி ஸஞ்சரிப்பீர். சிறந்த மகிமையுள்ள கங்கை உமதுமனத்தையும் எனதுமனத்தையும் எக்காலமும் விடாமலிருக்கவேண்டும். அடுத்தவர்களிடம் அன்புள்ள கங்கை, இவ்வுலகத்தில் பக்தியுள்ளவனைத் தன் தர்மத்தைச் செய்வதனுலுண்டாகும் சிறப்புக்களையும் ஸுகங்களையும் கூட்டிவைக்கிறது' என்றார். இவ்வாறு சிறந்தபுத்தியும் ஒளியுமுள்ள அந்தஸித்தர் அந்த உஞ்சவிருத்திப்பிராம்மணருக்கு அவர்கேள்விக்குத்தக்கபடி கங்கையின் உண்மையான குணங்களெல்லாவற்றையும் பலவகைகளால் உபதேசித்து ஆகாயத்திலேறினார். ஸித்தருடைய உபதேசங்களினுல் தெளிவுற்ற உஞ்சவ்ருத்திப்பிராம்மணர் உடனே கங்கையை முறைப்படி உபாஸித்துப் பெறுதற்கு மிகவும் அரிதானதவப்பேறுபெற்றார். குந்திபுத்ரனே! அவரைப்போலவே நீயும் எப்போதும் மிகுந்தபக்தியுடன் கங்கைக்குச்செல்.

உயர்ந்த பலனையடைவாய்" என்றார். இவ்வாறு கங்கையைப்புகழ்ந்து பேசினதாகப் பீஷ்மர்சொன்ன சரித்திரத்தைக்கேட்டு, யுதிஷ்டிரரும் தம்பிமார்களுடன் மிகுந்த ஸந்தோஷமடைந்தார்.

## அறுபத்தாறுவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(நாரதர் பூஜிக்கத்தக்கவரை க்ருஷ்ணனுக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "இம்மூன்று லோகங்களுக்கும் பூஜிக்கத்தக்க மனிதன் யார்? அதை விரிவாகச்சொல்லும். நீங்கள்சொல்வதைக்கேட்பதில் எனக்கு ஆசைதீரவில்லை" என்றுகூற, பீஷ்மர் சொல்லலானார்.

"இந்த விஷயத்திலும் நாரதருக்கும் க்ருஷ்ணனுக்கும் நடந்த ஸம்பாஷணையாகிய ஒருபூர்வசரித்திரம் கூறுகின்றனர். நாரதர் கைகூப்பிக்கொண்டு பிராம்மணஸ்ரேஷ்டர்களைப் பூஜிக்கக்கண்ட கிருஷ்ணன், 'பகவானே! யாரை நமஸ்கரிக்கிறீர்? பகவானே! நீர் யாரை நமஸ்கரிக்கிறீரோ அவர்களிடத்தில் நீர்கௌரவம்வைத்திருப்பீர். தர்மந்தெரிந்தவரிற் சிறந்தவரே! நாம்கேட்கக்கூடுமாயின் இதைச்சொல்லக்கடவீர்' என்று கேட்க, நாரதர் சொல்லலானார், 'பகைவர்களைக் கொல்பவரான கோவிந்தரே! நான் யாரைப்பூஜிக்கிறேனென்பதைக் கேளும். இவ்வுலகத்தில் இதைக்கேட்கத்தக்க புருஷர் உம்மைவிட வேறுயார் இருக்கிறார்? பிரபுவே! வருணனையும் வாயுவையும் ஆதித்யனையும் இந்திரனையும் அக்நியையும் சிவனையும் ஸுப்ரம்மண்யரையும் மஹாலக்ஷ்மியையும் விஷ்ணுவையும் பிரம்மாவையும் ப்ருஹஸ்பதியையும் சந்திரனையும் ஜலத்தையும் பூமியையும் ஸரஸ்வதியையும் எவர்கள் எப்போதும் நமஸ்கரிக்கிறார்களோ அவர்களை நான் நமஸ்கரிக்கிறேன். யாதவஸ்ரேஷ்டரே! தவத்தையேதனமாக உடையவரும் வேதமறிந்தவரும் எப்போதும் வேதத்தை விடாதிருப்பவருமாகிய மகானுபாவர்களை நான் எப்போதும் பூஜிக்கிறேன். பிரபுவே! உண்ணுமலேதேவபூஜைசெய்து தற்புகழ்ச்சியும் ஆசையுமில்லாமல் பொறுமையுள்ளவராயிருப்பவரை நான்நமஸ்கரிக்கிறேன். யாதவரே! பொறுமையும் அடக்கமுமுடையவர்களாயும் ஜிதேந்திரியர்களாயும் யாகங்களைநன்றாகச்செய்து, ஸத்யத்தையும்தர்மத்தையும் பூமியையும் பசுக்களையும் பூஜிக்கின்றவர்களையும் நான்நமஸ்கரிக்கிறேன். யாதவரே! கிழங்குகளையும் கனிகளையும் புசித்துக்கொண்டும் ஒன்றையும்

சேர்த்துவைத்துக்கொள்ளாமல் தம்கருமங்களைச் செய்துகொண்டும் காட்டில்தவம்செய்கிறவர்களை நமஸ்கரிக்கிறேன். யாதவரே! வேலைக்காரரைக் காப்பாற்றத்திறமையுள்ளவர்களும் எப்போதும் விருந்தோம்பலைவிரதமாகக்கொண்டவர்களும் தேவதைக்கு நிவேதனம்செய்த சேஷத்தைப்புசிப்பவர்களுமாயிருப்பவரை நமஸ்கரிக்கிறேன். வேதத்தைஓதி யாராலும்வெல்லமுடியாதவர்களும் சிறந்தவாக்குள்ளவர்களும் ஜிதேந்திரியர்களும் யாகங்கள் செய்விப்பதிலும் ஓதுவிப்பதிலுமே எப்போதும்முயற்சியுள்ளவர்களுமாயிருப்பவர்களை நான் பூஜிக்கிறேன். எப்போதும் எல்லாப்பிராணிகளிடத்தும் அன்புள்ளமனத்துடன் முதுகுசுடும்வரையில் வேதாத்யயனம்செய்துகொண்டிருப்பவரை நான் பூஜிக்கிறேன். யாதவரே! வெறுப்பில்லாமல் குருபணிவிடைசெய்து அவர்களனுக்கிரகம்பெறுவதிலும் ஓதுவதிலும் முயற்சியோடிருக்கும் விரதந்தவறாதவர்களை நமஸ்கரிக்கிறேன். யாதவரே! சிறந்ததவமுள்ளரிஷிகளும் சொன்னசொல்தவறாதவரும் ஹவ்யகவ்யங்களைஎப்போதும்நடத்துகிறவருமானபிராம்மணர்களை நமஸ்கரிக்கிறேன். யாதவரே! பிக்ஷையெடுத்துக்கொண்டு ஸம்ஸாரத்தையும்தனத்தையும்விட்டுக் குருவின்வீட்டிலேயேஇருந்துகொண்டு இளைத்திருப்பவரை நமஸ்கரிக்கிறேன். கேசவரே! எனதென்ற அபிமானத்தையும் பகையையும்விட்டு மனவுறுதியுடன் பிரயோஜனத்தைக்கருதாமல் வேதங்களைஓதி யாராலும்வெல்லக்கூடாதசிறந்தவாக்குள்ளவர்களாகி யாருக்கும்தீங்குசெய்யாமையையே தலைமையாகக்கொண்டு பிரம்மநிஷ்டர்களாயிருப்பவரும் ஸத்யத்தைவிரதமாகக்கொண்டவரும் ஐம்புலன்களையும் மனத்தையும் ஜயித்தவருமானமனிதரை நமஸ்கரிக்கிறேன். யாதவரே! தேவதைகளையும் அதிதிகளையும்பூஜிப்பதில்ஊக்கமுள்ளவர்களும் புறாக்களைப்போல் அப்போதைக்கப்போது ஜீவனம் தேடுகிறவர்களுமான கிருஹஸ்தர்களை எப்போதும் நமஸ்கரிக்கிறேன். எவர்கள்செய்யும்காரியங்களில் தர்மார்த்தகாமங்கள் மூன்றும் கெடாமல்இருக்கின்றனவோ, எவர்கள் சிஷ்டர்களுடையஆசாரங்களை விடாதவர்களோ அவர்களை எப்போதும் நான் நமஸ்கரிக்கிறேன். கேசவரே! கல்விநிரம்பினஎந்தப்பிராம்மணர்கள் ஆசையில்லாமல் தர்மார்த்தகாமங்கள் மூன்றையும்நடத்திக்கொண்டு புண்ணியத்தையேசெய்பவரோ அவர்களை நமஸ்கரிக்கிறேன். நாராயணா! காலத்தைவீண்போக்காமல் தர்மார்த்தகாமங்களிலும் அவற்றின் ஸாதகங்களிலுமாசையுள்ளவரும் சிறந்த ஆசாரங்களைவிடாதவருமாயிருப்பவர்களை நமஸ்கரிக்கிறேன். மாதவரே! நீரையும் காற்றையும் அமிருதமென்

னப்படும்பாகசேஷத்தையும் புசித்துக்கொண்டு பலவிதவிரதங்களை செய்பவரை எப்போதும் நமஸ்கரிக்கிறேன். யோனியிற்பிறவாதவரும் உலகத்தில்ஒன்றையும்பற்றாமல் அக்நியிலிருந்தும்பிரம்மதேவரிடத்திலிருந்தும்பிறந்தவர்களும் எல்லாப்பிராணிகளுக்கும் அந்தர்யாமியானபரமாத்மாவினிடம் பிறந்தவர்களுமான ரிஷிகளை நான் எப்போதும் நமஸ்கரிக்கிறேன். கிருஷ்ணா! உலகத்தையுண்டுபண்ணுகிறவர்களும் உலகத்திலும்ஜாதிகளிலும்பெரியோர்களும் உலகத்தின் இருளைப்போக்கும் சூரியர்களாயிருப்பவருமான இந்தரிஷிகளை எப்போதும் நமஸ்கரிக்கிறேன். வ்ருஷ்ணிகுலத்தவரே! ஆதலால், நீரும் பிராம்மணர்களை எப்போதும் பூஜிக்கக்கடவீர். குற்றமற்றவரே! பூஜைக்குரியரானபிராம்மணர்கள் பூஜிக்கப்பெற்றால் உமக்கு ஸுகத்தைக்கொடுப்பாரல்லரோ? இவர்கள் இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும் எப்போதும் ஸுகத்தைத்தருகிறவர்களாக ஸஞ்சரிப்பவர்கள்; நீர் கொண்டாடினால் உமக்கும் ஸுகத்தைத்தருவார். எவர்கள் எல்லா அதிதிகளையும் பூஜித்துக்கொண்டு பசுக்களிடத்திலும் பிராம்மணர்களிடத்திலும் ஸத்யத்திலும் எப்போதும் ஊக்கம்வைத்திருக்கின்றனரோ அவர்கள் கஷ்டங்களைத்தாண்டுகின்றனர். எப்போதும் சாந்தியுள்ளவர்களாகவும் பொறாமையில்லாதவர்களாகவும் வேதமோதுவலை எப்போதும் விடாதவர்களாகவுமிருப்பவர் எவரோ அவர்கள் கஷ்டங்களைத்தாண்டுகின்றனர். வேதம் ஒன்றையே ஆதாரமாகக்கொண்டு சிரத்தையோடும் அடக்கத்தோடும் எல்லாத்தேவர்களையும்நமஸ்கரிப்பவர்கள் கஷ்டங்களைத்தாண்டுகின்றனர் அப்படியே பிராம்மணசிரேஷ்டர்களைநமஸ்காரம்செய்து விரதங்களைச்செய்துகொண்டு அவர்களுக்குத்தானம்செய்பவர்கள் கஷ்டங்களைத்தாண்டுகின்றனர். சிறுபிராயத்திலிருந்து எப்போதும் பிரம்மசாரிகளாகவே தவம்செய்து தவத்தினால் பரிசுத்தம்செய்யப்பட்டமனமுள்ளவர்கள் கஷ்டங்களைத்தாண்டுகின்றனர். தேவர்களையும் அதிதிகளையும் பித்ருக்களையும் ஆராதித்தும் வேலைக்காரர்களைப்புசிப்பித்தும் மிகுந்த அன்னத்தைப்புசிப்பவர்கள் கஷ்டங்களைத்தாண்டுகின்றனர். விதிப்படி அக்நியையுண்டாக்கி நமஸ்காரம்செய்து அதைஸ்திரமாகவைத்துக்கொண்டு ஸோமபானம்செய்கிறவர்கள் கஷ்டங்களைத்தாண்டுகின்றனர். யாதவசிரேஷ்டரே! தாய் தந்தையரிடத்திலும் ஆசார்யரிடத்திலும் நீர்நடப்பதுபோல எப்போதும்ஸரியாகநடப்பவர்கள் கஷ்டங்களைத்தாண்டுகின்றனர்' என்று சொல்லிமுடித்தார். குந்திபுத்ரனே! ஆதலால், நீயும் எப்போதும் பித்ருக்களையும் தேவர்களையும் பிராம்மணர்களையும் அதிதிகளையும் நன்றாகப்பூஜிப்பாயாயின், நீவிரும்பின நற்கதியையடைவாய்" என்றார்.

## அறுபத்தேழாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

**(அடைக்கலம் புகுந்தவனைக் காப்பதைப்பற்றிய சிபிசக்ரவர்த்திகதை.)**

யுதிஷ்டிரர், "எல்லாச்சாஸ்திரங்களிலும் நிபுணரும் பேரறிவாளரும் பரதசிரேஷ்டருமானபிதாமஹரே! உம்மிடத்தில் நான் ஒரு தர்மத்தைக்கேட்கவிரும்புகிறேன். [1]நான்குவிதமானபிராணிகளுள்ளும் யாதாயினும் சரணமடைந்ததைக்காப்பாற்றுகிறவர்களுக்கு உண்மையில் என்னபலன் உண்டாகிறது?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"பேரறிவும் பெரும்புகழும்பெற்றதர்மபுத்ரனே! சரணாகதியின் பெரும்பயனைப்பற்றி முன்நடந்தஇதிஹாஸத்தைச் சொல்வேன்; கேள். பார்ப்பதற்கழகியஒருபுறா பருந்தினாலடிக்கப்படுந்தருணத்தில் சிறந்தமகிமையுள்ள [2]வ்ருஷதர்ப்பனென்னுமரசனைச் சரணமடைந்தது. பரிசுத்தமானமனமுள்ள அவ்வரசன், பயந்துதன்மடியில்வந்துவிழுந்த அந்தப்புறாவைக்கண்டு தேற்றி, 'பக்ஷியே! உனக்குப் பயமில்லை. ஸுகமாயிரு. உனக்கு மிகவும் அதிகமானபயம் யாரிடத்தில்? நீ யாருக்கு என்னசெய்தாய்? என் புத்திமயங்கி மூர்ச்சித்து இவ்விடம் வந்துசேர்ந்தாய்? புதியகருநெய்தல்மலருக்கு ஒப்பானநிறத்தைத் தலைக்கு அலங்காரமாகஉடையவனே! அழகானநிறமுள்ளவனே! பார்ப்பதற்கினியவனே! மாதுளம்பூப்போலவும் அசோகம்பூப்போலவும் சிவந்தகண்களையுடையவனே! பயப்படாதே. உனக்கு அபயம்தந்தேன். உலகத்தை ரக்ஷிப்பதற்காக ஏற்பட்டஎன்னிடம்வந்து என்னால்கொண்டாடப்பட்டஉன்னைப் பிடிக்கலாமென்று மனத்தில் நினைப்பதற்கும் எவனும் வல்லவனல்லன். உனக்காக இந்தக்காசிதேசாதிபத்யத்தையும் என்உயிரையும் இப்போதே விட்டுவிடுவேன். புறாவே! உனக்குப் பயமில்லை. நீ கவலையின்றியிருக்கலாம்' என்று சொன்னான். பருந்து, 'அரசனே! இந்தப்புறா எனக்குஇரையாகக் கடவுளால் ஏற்படுத்தப்பட்டது. இது ஓடிப்போய் என்முயற்சியினால் பிடிக்கப்பட்டு எனக்குக்கிடைத்திருப்பதை நீகாப்பாற்றுவது தகாது. இதனுடையஇறைச்சி ரக்தம் மச்சை கொழுப்பு இவையனைத்தும் எனக்குவேண்டினவை, என்மனத்துக்குத் திருப்தியைச்செய்யும்

---

[1] தேவர், மக்கள், விலங்குபறவைகள், தாவரங்கள்.

[2] சிபிசக்ரவர்த்தி.

ஆகாரம் இது. நீ இதற்குமுன் நில்லாதே. மிகக்கொடிதான தண்ணீர்த் தாகம் என்னைப் பீடிக்கிறது. பசியானது என்னை எரிப்பது போலிருக்கிறது. அரசனே! பசிமையாற்றிக்கொள்ள என்னால் முடியாது. இதை விட்டுவிடு. மன்னவ! இந்தப் புறுவானது என்னால் தொடரப்பட்டு என்னுடைய சிறகுகளாலும் நகங்களாலும் காயப்படுத்தப்பட்டிருக்கிறது. கொஞ்சம்மூச்சுவிட்டுக்கொண்டிருக்கும் இதை நீ காப்பாற்றுவது தகாது. தேராளிகளிற்சிறந்த அரசனே! உன்தேசத்திலுள்ள மனிதர்களைக் காப்பாற்றுவதற்கு நீ அதிகாரியாயிருக்கலாம். தாகத்தினால் வருந்தப்படுகின்ற ஆகாயத்தில்பறக்கும் பறவைக்கு நீ அதிகாரியல்லை. உன் பகைவர்களுக்கும் வேலைக்காரர்களுக்கும் சுற்றத்தாருக்கும் உன்தேசத்திலுள்ள வியவகாரங்களுக்கும் உனது இந்திரியஸங்கங்களுக்கும் நீ பிரபுவாயிருக்கலாம். ஆகாயத்தில் உன் பராக்ரமத்தைச் செலுத்தாதே. உன்னுடையசொத்தை அபகரிக்கிறவர்கள்விஷயத்தில் பராக்கிரமத்தை நன்றாகக் காண்பிப்பதுதான் உனக்குப் பெருமை. இந்தப்புறுவின்விஷயத்தில் தர்மத்தைச் செய்யவிரும்புகிறாயாயின், என்னையும் நீ கவனிக்கவேண்டும்' என்று சொல்லிற்று. பருந்தினுடைய அந்தச்சொல்லைக்கேட்டு ஆச்சரியமடைந்த அந்த ராஜரிஷி அந்தப் பருந்தையும் அதன்சொல்லையும் ஆதரித்து அதைநயந்து மறுமொழி சொல்லலானான். 'பக்ஷியே! உன் பசியடங்குவதற்காகக் காளைமாடோ பன்றியோ மானோ எருமைக்கடாவோ இப்போது நீ அங்கீகரிக்கலாம். சரணமடைந்தவனைக் கைவிடேன். இது என்னுடைய உறுதியான விரதம். இந்தப் பக்ஷியானது என்னுடம்பை விடாமலிருக்கிறது; பார்' என்றான். அதற்குப் பருந்து, 'மகாராஜனே! பன்றியையும் காளையையும் வேறுபலஜாதிப் பறவையையும் நான் தின்பதில்லை. அப்படிப்பட்டஉணவுகளைத்தின்பதனால் எனக்கு என்னபயன்? எனக்குத் தேவர்கள் நெடுங்காலமாக ஏற்படுத்தியிருக்கும் உணவு இதுதான். பருந்துகள் புறுக்களைத்தின்பது எப்போதுமுள்ள நிலைமை. குற்றமற்ற சிபிசக்ரவர்த்தியே! உனக்குப் புறுவிடத்தில் அன்பிருக்குமாயின், நீ உன்மாம்ஸத்தை அந்தப்புறுவுக்குச்சரியாகத் தராசில்நிறுத்து எனக்கு இப்போதேகொடு' என்றுகேட்டது அதற்கு, அந்தராஜசிரேஷ்டன், 'நீ இப்போது என்னைப்பார்த்து இவ்வாறுகேட்டதே எனக்குப் பெரிய அனுக்கிரகம் செய்ததாகும். நிச்சயமாக அப்படியே செய்வேன்' என்று சொல்லித் தனது மாம்ஸங்களை அரிந்து அரிந்து தராசில் வைத்து நிறுத்தான். அப்போது ரத்னாபரணங்களை அணிந்திருக்கும் அவனுடைய அந்தப்புரஸ்த்ரீகள் இதைக் கேள்விப்பட்டு மிகத்துன்ப

முற்று, 'ஆ! ஆ! ஆ!' என்று கூவிக்கொண்டு வெளிப்பட்டனர். அந்தஸ்த்ரீகளும் மந்திரிகளும் வேலைக்காரர்களும் கதறுகிறசப்தத்தினால் மேகமுழக்கம்போலக் கம்பீரமான பெரியமுழக்கம் உண்டாயிற்று. அவ்வரசனுடைய ஸத்தியத்தினால் மேகமில்லாமலிருந்த ஆகாயமுழுதும் மேகங்களால் எங்கும்மறைக்கப்பட்டது; பூமியும் நடுங்கிற்று. அவ்வரசன் விலாப்புறங்களிலிருந்தும் கைகளிலிருந்தும் துடைகளிலிருந்தும் மாமிசங்களையறுத்துக் கொஞ்சம்கொஞ்சமாகத் தராசை நிரப்பினான். ஆகிலும், அந்தப்புறாவின் நிறைக்குச் சரியாகவில்லை. அவ்வரசன் மாம்ஸம்போய் ரக்தம்பெருகி எலும்பாகநின்றபோது, தன்தேகத்தையே விடுவதற்குத் தானே அந்தத்தராசில் ஏறினான். அப்போது மூவுலகத்தாரும் இந்திரனைமுன்னிட்டுக்கொண்டு அவ்வரசனிடம் வந்தனர். அப்போது தேவர்கள் தேவதுந்துபிஎன்னும் பேரிகைகளை அடித்தனர்; வ்ருஷதர்ப்பனென்னும் அரசன்மேல் அமுதத்தைப் பொழிந்தனர்; தேவலோகத்தின்மலர்களை மிகவும் இனிமையாகப் பலமுறைபெய்தனர். அந்தப் பிரபுவினிடத்தில் தேவர்களும் கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் பிரம்மாவினிடத்தில் ஆடுவதுபோலவே நாற்புறங்களிலும் ஆடினர்; பாடினர். அந்தராஜரிஷி அந்தப் புண்ணியகர்மத்தினால் பொன்மாளிகைகள் நிரம்பினதும், பொன்னும்மணியும் இழைத்த தோரணங்களுடையதும், வைடூரியக்கல்தூண்களையுடையதுமான விமானத்திலேறி அழிவில்லாத ஸ்வர்க்கத்திற்குச் சென்றான். யுதிஷ்டிரா! நீயும் அவனைப்போலவே சரணாகதர்களுக்கு வேண்டியவற்றையெல்லாம் செய்யக்கடவாய். பக்தியுள்ளவரையும் அன்புள்ளவரையும் அடுத்தவரையும் காப்பாற்றி எல்லாப்பிராணிகளிடத்தும் தயைவைத்திருப்பவன், பரலோகத்தில் ஸுகமாகவிளங்குவான். பெரியோர்களின் ஒழுக்கத்தை அனுஷ்டிப்பதாகிய நல்லொழுக்கத்தையுடையவன் வஞ்சமில்லாத தன்செய்கையினால் எதைத்தான் அடையமாட்டான்? பரிசுத்தமானமனமும் துணிவுமுள்ளவனும் பராக்ரமம் தவறாதவனும் காசிதேசாதிபதியுமாகிய அந்தச்சிபியென்னும் ராஜரிஷி தன்செய்கையினால் மூவுலகங்களிலும் புகழ்பெற்றான். பரதசிரேஷ்டனே! மற்றெவனும் அவனைப்போலச் சரணாகதரக்ஷணம் செய்வானாகில் அந்தக்கதிக்கே செல்வன். ஓ! ராஜரிஷியே! உலகத்தில் வ்ருஷதர்ப்பனுடைய இந்தச்சரித்திரத்தை நித்தியமாகச் சொல்லுகிறவரும் கேட்கிறவரும் ஆத்மசுத்தியை யடைவார்" என்றார்.

## அறுபத்தெட்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(அரசரின் முக்கியகடமை பிராம்மணரைப் பூஜிப்பதென்பது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! அரசனுக்கு எல்லாக்காரியங்களி லும் மிகப்பெருங்காரியம் யாது? எந்தக்காரியத்தைச்செய்யும் அரசன் இம்மை மறுமையாகிய இரண்டு உலகங்களையும் நன்றாக அநுபவிப் பான்?" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"பாரதனே! ஸாம்ராஜ்யத்தைவிரும்புகிறஅரசன் பட்டாபிஷேகம் செய் யப்பட்டபிறகு செய்யவேண்டியவற்றுள் முக்கியமானவை பிராம்மணர் களைக் காப்பதும் பூஜிப்பதுமாம். பரதசிரேஷ்டனே! அரசர்க்கரசனு யிருப்பவன் அவ்வாறேதான் செய்யவேண்டும். வேதமோதினவர்களும் முதிர்ந்தவர்களுமான பிராம்மணர்களை எக்காலமும் பூஜிக்கவேண்டும். நகரத்திலும் தேசத்திலுமுள்ள கல்விமிகுந்த பிராம்மணர்களை இன் சொல்லினாலும் இனியவற்றையளிப்பதனாலும் நமஸ்காரம் செய்வதனா லும் எப்போதும் கொண்டாடவேண்டும். இதுதான் அரசன்செய்ய வேண்டிய முக்கியமானகாரியம். எப்போதும் இதைக்கவனிக்கவேண் டும். தன்னையும் தன்புத்ரர்களையும் காப்பாற்றுவதுபோலவே இந்தப் பிராம்மணர்களைக் காப்பாற்றவேண்டும். அவர்களால் மிகப் பூஜிக்கப்படத்தக்கவரையும் நன்றாகப் பூஜிக்கவேண்டும். பிராம் மணர்கள் ஸந்தோஷமாயிருந்தால் அந்தராஜ்யமெல்லாம் விளங்கும். அவர்களைத் தந்தைகளைப்போலப் பூஜிக்கவும் நமஸ்கரிக்கவும் வெகு மானிக்கவும் வேண்டும். எல்லாப்பிராணிகளின் ஜீவனமும் [1] இந் திரனைப் பொறுத்திருப்பதுபோல உலகங்களின் அபிவிருத்தி பிராம்மணர்களைப் பொறுத்திருக்கிறது. தவமுதலமகிமையுள்ள பிராம்ம ணர்கள் கோபிக்கப்படாராயின் கொடியவர்களாகி மந்திரங்களாலும் தந்தி ரங்களாலும் நினைத்தமாத்திரத்திலும் முழுதும் எரித்துவிடுவார் கள். அவர்கள் சக்திக்கு முடிவை நான் காணவில்லை. அவர்களால் வியாபிக்கப்படாத திசைகளையும் யான் பார்க்கவில்லை. அவர்கள் கோபித்துப் பார்க்கும்போது காட்டுத்தீயிலிருக்கும் ஜ்வாலைகள்போ லிருப்பர். [2] அவர்கள் ஸாதுக்களைப் பூஜிப்பர்; துஷ்டர்களை இகழார். ஸாஹஸம்செய்பவர்களும் அவர்களுக்குப் பயப்படுவார். அவர்களின்

[1] மழை. [2] 'அவர்களுள் ஸாதுக்களைப்பூஜிக்கவேண்டும்; துஷ்டர்களையும் இகழலாகாது' என்றும் கொள்ளலாம்.

குணங்கள் மிகவும் அதிகமானவை. சிலர் புதர்மூடினகிணறுகள் போன்றவர். மற்றும்சிலர் மாசற்ற ஆகாயம்போன்றவர். சிலர் வன்மை செய்பவர். மற்றும்சிலர் பஞ்சுபோல மெல்லியவர். அவர்களில் மிக்க வஞ்சகரும் இருக்கின்றனர். சிலர் சிறந்ததவம் செய்பவராயுமிருக்கின்றனர். சிலர் பயிரிட்டுக்கொண்டும் பசுக்காத்துக்கொண்டும் இருக்கின்றனர். சிலர்பிக்ஷையெடுக்கின்றனர். சிலர் திருடராகவும் சிலர் பொய்யராகவும் இருக்கின்றனர். சிலர் கூத்தாடிகளும் நட்டுவருமாயிருக்கின்றனர். சிலர் வேந்தர்களிடத்திலும் மற்றவர்களிடத்திலும் எல்லாக்காரியங்களையும் செய்யும் திறமையுள்ளவர்களுமாயிருக்கின்னர். பரதஸ்ரேஷ்டனே! பிராம்மணர்கள் பலவித நடக்கைகளிலும் பிரவிருத்திப்பவர்தாம். பல தொழில்களிலும் பற்றுள்ளவர்களும் பல தொழில்களாலும் ஜீவிப்பவர்களுமாகிய அநதப்பிராம்மணர்கள் தர்மந்தெரிந்தவராயிருப்பதனால் அவர்களைப்பற்றி எப்போதும் சிலாகிக்க வேண்டும். அரசனே! மகானுபாவர்களான இந்தப்பிராம்மணர்கள் முற்காலங்களிலும் பித்ருக்களுக்கும் தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் நாகர்களுக்கும் அரக்கர்களுக்கும் பூஜிப்பதற்குரியவராயிருந்தனர். பிராம்மணர்களைஜயிப்பதற்குத் தேவர்களாலும் பித்ருக்களாலும் கந்தர்வர்களாலும் ராக்ஷஸர்களாலும் அஸுரர்களாலும் பிசாசர்களாலும் இயலாது. தேவனல்லாதவனைத் தேவனாகவும் தேவனைத் தேவனல்லாதவனாகவும் செய்துவிடுவார். அவர்கள் எவனை அரசனாக்கவிரும்புகின்றனரோ அவன் அரசனாகிவிடுவான். அவர்கள் எவனைப்பகைப்பரோ அவன் எல்லாவற்றையும் தோற்றுவிடுவான். அரசனே! புத்தியில்லாமல் பிராம்மணர்களை நிந்திப்பவர்கள் அழிந்துவிடுவது நிச்சயம். உனக்கு உண்மையாகச் சொல்லுகிறேன். ராஜனே! கீர்த்தியும் அபகீர்த்தியுமே தலைமையாக எடுத்துக்கொண்டு முறையே புகழவும்இகழவும் ஸாமர்த்தியமுள்ள பிராம்மணர்கள் தங்களைப்பகைப்பவர்மேல் எப்போதும் கோபிப்பார். ப்ராம்மணர்கள் எந்தமனிதனைப்புகழ்கின்றனரோ அவன் மிகச்சிறந்தவனாவான். பிராம்மணர்களால் நிந்திக்கப்பட்டவன் எவனோ அவன் ஒருநொடியில் கெட்டுப்போவான். சகர், யவனர், காம்போஜர் முதலான பல தேசத்து க்ஷத்திரியஜாதியார் பிராம்மணர்களைக்காணாமையினால் சூத்ரர்களாயினர். த்ரவிடர், களிங்கர், புலிந்தர், உசீநரர், கோலிஸர்ப்பர், மாஹிஷகர் என்னும் பல க்ஷத்ரியஜாதியார் பிராம்மணர்களைக் காணாமலே சூத்ரராயினர். ஜயிப்பவரிற்சிறந்தவனே! பிராம்மணர்களிடத்தில் தோற்பதே நன்மை. அவர்களை வெல்லுவது நன்மையன்று. இவ்வுலகமனைத்தையும் அழிப்பதும் ஒருபிரம்மஹத்தி செய்வதும் ஸரி

யாவதில்லை. பிரம்மஹத்தி பெரும்பாவமென்று மகரிஷிகள் சொல்லு கின்றனர். பிராம்மணர்களைப்பற்றின தூஷணையை எவ்வகையிலும் கேட்கவுமாகாது; தலைகுனிந்து பேசாமல்உட்கார்ந்திருக்கவாவது வேண்டும்; எழுந்து செல்லவாவது வேண்டும். பிராம்மணர்களைப் பகைத்து ஸுகமாக ஜீவிக்கத் திறமையுள்ளவன் இவ்வுலகத்தில் பிறந்தவரிலும் பிறக்கப்போகிறவரிலும் யாருமில்லை. காற்றைக் கைப்பிடியால் பிடிக்கவும் சந்திரனைக் கையினால் எட்டவும் பூமியைத் தலையினால் தாங்கவும் பிராம்மணர்களை வெல்லவும் இப்புவியில் யார்க்கும் முடியாது.

## அறுபத்தொன்பதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(பூமிதேவி பிராம்மணர்மகிமையைக் கிருஷ்ணனுக்குச் சொல்லியது.)

எப்போதும் பிராம்மணர்களையே நன்றாகப் பூஜித்தல் வேண்டும். அவர்கள் சந்திரனைத் தங்களுக்கு அரசனாகப் பெற்றவர்கள்; இன்பத்தையும் துன்பத்தையும் கொடுக்கவல்லவர்கள். அரசர்கள் அன்னபானங்களையும் அலங்காரங்களையும் மற்றும் அவர்கள் விரும்புகிற எல்லாவற்றையும் அளித்துத் தந்தைகளைப்போலவே அவர்களை எப்போதும் நமஸ்கரிக்கவும் பூஜிக்கவும் காப்பாற்றவும் வேண்டும். அதனால், இந்திரனால் பிராணிகளுக்கு நன்மையுண்டாவதுபோலத் தேசத்திற்கு நன்மையுண்டாகும். நுண்ணறிவும் ஓதலினாலும் வேள்வியினாலுமுண்டாகும் மகிமையும்பொருந்தின பரிசுத்தனான பிராம்மணனும் பகைவர்களைத் துன்புறச்செய்யும் மகாரதனான அரசனும் தேசத்திலிருக்க விரும்பவேண்டும். ராஜனே! குலத்திற்சிறந்தவனும் தர்மந்தெரிந்தவனும் விரதம் தவறாதவனுமான பிராம்மணனை வீட்டில் புசிப்பிக்கவேண்டும். அதற்குமேலானது ஒன்றுமில்லை. பிராம்மணர்களுக்குக் கொடுக்கப்படும் அன்னத்தைத் தேவர்கள் பெற்றுக்கொள்ளுகிறார்கள். பிராம்மணர்கள் எல்லாப்பிராணிகளுக்கும் தந்தைகள். அவர்களுக்கு மேற்பட்டது ஒன்றுமில்லை. சூரியன், சந்திரன், விஷ்ணு, சிவன், அக்கி, பிரம்மதேவர் ஆகிய யாவரும் பிராம்மணருக்குள் பிரவேசித்து எப்போதும் அன்னத்தைப் புசிக்கின்றனர். பிராம்மணத்வேஷியான எந்தப்பாவியின் அன்னத்தைப் பிராம்மணர்கள் புசிப்பதில்லையோ அவனுடைய அன்னத்தைப் பித்ருக்களும் தேவர்களும் புஜிப்பதில்லை. அரசனே! பிராம்

மணர்கள் மனமகிழ்ந்தால் பித்ருக்களும் தேவர்களும் திருப்தியடை கின்றனரென்பதில் ஸந்தேகப்படவேண்டாம். அந்த அன்னம் யாருடையதோ அவர்களும் இம்மையிலும் மகிழ்ந்திருக்கின்றனர்; இறந்தபின்னும் கெடுவதில்லை; சிறந்தகதியைப் பெறுகின்றனர். ஒருமனிதன் எந்த எந்த அன்னங்களினால் பிராம்மணர்களுக்குத் திருப்தியைச்செய்விக்கிறானே அவ்வவற்றினாலும் பித்ருக்களும் தேவர்களும் திருப்தியடைகின்றனர். எதனிடமிருந்து பிரஜைகள் உற்பத்தியாகின்றனவோ, எதனால் இவ்வுலகம் நிற்கிறதோ, முடிவில் எதைச்சேருகிறதோ அந்தக் காரணப்பொருளும் பிராம்மணனாலேதான் அறியப்படுகிறது. மனிதர்களிற்சிறந்த பிராம்மணன் ஸ்வர்க்கத்திற்கும் நரகத்திற்குமுள்ள வழிகளையும் நடந்தது நடப்பது இவ்விரண்டையும் அறிகிறவன். மனிதர்களிற் சிறந்தவனான எந்தப்பிராம்மணன் தனது தர்மத்தையறிந்திருப்பவனோ அவனை அனுஸரிப்பவர் தோல்வியடையார். அவர்கள் மறுமையிலும்கெடார்; இம்மையிலும் தோல்வியடையார். மனத்தூய்மையுள்ள எந்தமகாத்மாக்கள் பிராம்மணன் வாக்கிலிருந்துவந்த சொல்லை ஏற்றுக்கொள்ளுகின்றனரோ அவர்கள் தோல்வியடைவதில்லை. பராக்ரமத்தினாலும் வன்மையினாலும் பகைவரையெரிக்கும் க்ஷத்திரியர்களுடைய பராக்ரமங்களும் தேகவலிமைகளும் பிராம்மணர்களிடத்தில் அடங்குகின்றன. பரதஸ்ரேஷ்டனே! ப்ருகுவம்சத்தவர்கள் தாலஜங்கரென்னும் அரசர்களையும், ஆங்கிரஸரிஷி பிரிவினனுமாரர்களையும், பரத்வாஜர் வைதஹவ்யர் ஐலர் என்னுமரசர்களையும் ஜயித்தனர். விசித்திரமான ஆயுதங்கள்பிடித்த அரசர்களையும் மான்தோல்கொடிபோட்ட இந்தப் பிராம்மணர்கள் வென்றனர். எவனும்[1] கலசங்களை ஸ்தாபித்துக் கரைசேர்க்கும் கருமத்தைச் செய்யத்தொடங்கவேண்டும். இவ்வுலகத்தில் கதையாகச்சொல்லப்படுவதும் வேதத்தினாலும் புராணத்தினாலும் அறியப்படுவதுமாகிய சக்தியெல்லாம் கட்டைகளுள் தீயிருப்பதுபோலப் பிராம்மணர்களிடம் மறைந்திருக்கிறது. பரதஸ்ரேஷ்டனே! இவ்விஷயத்தில் கிருஷ்ணனுக்கும் பூமிதேவிக்கும் நடந்த ஸம்பாஷணையாகிய புராதனமான ஓர் இதிஹாஸஞ்சொல்லுகின்றனர். அதைச் சொல்லுகிறேன்; கேள்.

க்ருஷ்ணன் பூமிதேவியைப்பார்த்து, 'ஓ! சிறந்தவளே! எல்லாப்பிராணிகளுக்கும் தாயாகிய உன்னிடத்தில் ஒருஸந்தேகம் கேட்கி

[1] 'கும்பாக்' என்பதை, 'கும், பாக்' என்று இரண்டுபதங்களாகப் பகுத்து, 'பூமியைப் பிராம்மணனுக்குத்தானஞ்செய்து பிரகாசித்துப் பரலோகத்திற்கு இதமான தர்மத்தை ஆரம்பிக்கவேண்டும்' என்பது பழையவுரை.

றேன். இல்வாழ்க்கையிலிருக்கும் மனிதன் எந்தச்செய்கையினால் தன் பாபத்தைப் போக்கிக்கொள்ளலாம்?' என்றுகேட்க, பூமிதேவி சொல்லலானாள். பிராம்மணர்களைத்தான் பணியவேண்டும். அது தான் சிறந்தபுண்ணியம். பிராம்மணர்களைத்தொழுகிறவனுக்கு ராஜஸ குணமனைத்தும் ஒழிந்துபோகிறது. ஐசுவரியமும் புகழும் புத்தியும் அதனாலேதான் உண்டாகின்றன. மகாரதனும் பகைவரைத்துன் புறச்செய்கிறவனுமான அரசனையும் விரும்பவேண்டும். 'ஜாதியிற் சிறந்தவனும் கர்மத்தையறிந்தவனும் நியமமுள்ளவனும் பரிசுத்தனுமான பிராம்மணன்தான் பிந்தினவருக்கும் முந்தினவருக்கும் அவருக்கும் முந்தினவருக்கும் எப்போதும் எல்லாச்செல்வங்களுக்கும் காரணமாயிருப்பவன்' என்று நாரதர் எனக்குச்சொல்லியிருக்கிறார் பிராம்மணர்கள் எவனைப் புகழ்கின்றனரோ அம்மனிதன் மேலாகிறான். பிராம்மணர்களால் நிந்திக்கப்பட்டமனிதன் உடனே தாழ்ந்துபோகிறான். பிராம்மணனிடம் செய்யப்பட்ட அபராதம் பெருங்கடலில் போடப்பட்ட ஈரமண்கட்டி எப்படிக்கரைகிறதோ அப்படி அபராதியை உருவில்லாமற் செய்துவிடும். சந்திரனிடத்தில் களங்கமும் கடலில் உப்புநீரும் உண்டாக்கப்பட்டிருப்பதைப்பாரும். தேவேந்திரனும் ஆயிரம்பெண்குறிகளினால் அடையாளம் செய்யப்பட்டான். அந்தஇந்திரன் பிராம்மணர்களுடைய பிரபாவத்தினாலேதான் ஆயிரங்கண்ணனானான். க்ருஷ்ணா! இது எப்படியிருக்கிறது? பாரும். மதுஸூதனரே! புகழையும் செல்வத்தையும் புண்ணியலோகங்களையும் விரும்புகிறமனிதன் பரிசுத்தமும் அடக்கமுமுள்ளவனாய்ப் பிராம்மணர்களின்சொல்லில் நிற்கவேண்டும்' என்றாள். கௌரவனே! கிருஷ்ணன் இவ்வாறு பூமிதேவி சொன்ன சொல்லைக்கேட்டபின், 'நல்லது; நல்லது' என்று பூமிதேவியைக் கொண்டாடினார். தர்மராஜனே! இந்த உதாரணத்தைக் கேட்டபிறகு, நீயும் ஊக்கத்துடன் பிராம்மணசிரேஷ்டர்களை எப்போதும் பூஜிக்கக்கடவாய்; அதனால் நன்மையையடைவாய்.

## எழுபதாவது அத்யாயம்.

## தானதர்ம பர்வம் (தொடர்ச்சி.)

(பிராம்மணரின் மகிமை முதலியன.)

பிராம்மணனென்பவன் ஜன்மத்திலேயே பெரியமகிமையுள்ளவனாகவும் எல்லாப்பிராணிகளும் நமஸ்கரிக்கத்தக்கவனாகவும் சிறந்த

அன்னத்தை முதலில்புஜிக்கத்தக்க அதிதியாகவும் பிறக்கிறான். அப்பா! பிராம்மணர்கள் எல்லாருக்கும் அன்பர்கள்; நல்லமனமும் வாக்குமுள்ளவர்கள். பிராம்மணர்கள் கோபித்தால் எல்லாரையும் கொன்றுவிடுவார். அவர்கள் பூஜிக்கப்பெற்றால் மங்களமானசொற் களினால் ஆசீர்வதிப்பார். அப்பா! பிராம்மணர்கள் பூஜிக்கப்படாமற் போனால் கோபங்கொண்டு கொடுஞ்சொற்களினால் அவர்களைப்பகைக் கும் நம்மனைவரையும் கொன்றுவிடுவார். பிரம்மதேவர் முதலில் பிராம்மணர்களைப்படைத்து அவர்களுக்கு இட்டகட்டளையாகிய சுலோகங்கள் பூர்வகாலந்தொடங்கிச் சொல்லப்பட்டு வருபவற்றைப் புராணந்தெரிந்தவர்கள் சொல்லுகின்றனர். அவற்றைச் சொல்லு கிறேன்.

(அவற்றின்பொருள்,) 'நீங்கள் மேற்கதிக்குப்போவதற்காக இவ்வுல கத்திற் செய்யவேண்டியகாரியம் வேறு ஒன்றுமில்லை. உங்களால் காப் பாற்றப்பட்ட ப்ராம்மண்யமே உங்களைக் காப்பாற்றும். அதனாலேயே உங்களுக்குச் சிறந்தநன்மையுண்டாகும். உங்கள் கருமங்களை நீங்கள் செய்வதனாலேயே உங்களுக்குப் பிராம்மணர்களுக்குரிய மகிமையுண்டா கும். எல்லாப்பிராணிகளுக்கும் உதாரணமாகவும் கட்டளையிடுகிறவர்க ளாகவும் இருப்பீர்கள். கற்றுணர்ந்தபிராம்மணன் சூத்திரனுடைய கர்மத்தைச்செய்யலாகாது. சூத்திரகர்மத்தைச் செய்பவனுக்குப் பிராம் மணமகிமை கெடும். வேதாத்யயனத்தினாலேயே ஒளியையும் புத்தியை யும் சக்தியையும் எல்லாரையும்பயப்படுத்தும் மேன்மையையும் அளவற் றமகிமையையும் அடைவீர்கள். ஆகவனீயமென்னும் அக்னியில் ஹோ மஞ்செய்து பெரியமகிமையையடைந்து எல்லாருக்கும்முதலில் போஜ னத்திற்குரியவர்களாகவும் ஒருவரையும இம்சிக்காமையினால் கிடைத்த பிரம்மதேஜஸென்னும் லக்ஷ்மியினால் அனுக்கிரகம்பெற்றவர்களாகவும் மிகுந்த ஊக்கத்துடன் இந்திரியங்களையடக்கி வேதாத்யயனத்தை விடாதவர்களாகவுமிருந்தால் எல்லா அபீஷ்டங்களையும் அடைவீர்கள். மானிடலோகத்திலும் தெய்வலோகத்திலுமுள்ளவை யனைத்தும் உங் கள் தவத்தினாலும் ஞானத்தினாலும் அனுஷ்டானத்தினாலும் அடையக் கூடியவைதாம். க்ஷத்திரியர்களும் வைசியர்களும் சூத்திரர்களும் மற்றவர்களும் உங்களைவெகுமானிப்பதனால் பாபம்போய் இவ்வுலகத்தி லும்அவ்வுலகத்திலும் ஸந்தோஷத்தையடைகின்றனர். உங்களைப்பகைப் பவர்கள் உங்களால் காப்பாற்றப்படாமல் தீங்கு அடைவர். உங்கள் சக்தியினாலேதான் உலகங்கள் தாங்கப்படுகின்றன. ஆதலால், மூன்று உலகங்களையும் காப்பாற்றக் கடவீர்கள்' என்பது.

குற்றமற்றவனே! இவ்வாறு பிரம்மாசொன்ன சுலோகங்களை நான் உனக்குச்சொன்னேன். சிறந்தஞானமுள்ள பிரம்மாவினால் பிராம்மணர்களின்மேல் அன்புகூர்ந்து இவை சொல்லப்பட்டவையல்லவா? தவமுள்ள பிராம்மணன்வன்மை அரசனைவிட அதிகமென்று நினைக்கிறேன். பிராம்மணர் அண்டக்கூடாதகொடியவர்; தவத்தினால் உடனே எதையும்செய்பவர். இவர்களில் ஸிம்மங்களைப் போலவும், புலிகளைப் போலவும், காட்டுப்பன்றிகளைப் போலவும், மான்களைப்போலவும், யானைகளைப்போலவும் வன்மையுள்ளவர்களாயிருக்கின்றனர் சிலர். சிலர் பாம்புகள்போலவும் முதலைகள்போலவும் பிடிப்பர். சிலர் சொல்லினால் கொல்வர். சிலர் கண்ணினால் கொல்வர். ஸர்ப்பம்போன்றவருமிருக்கின்றனர். மந்தமானவருமிருக்கின்றனர். யுதிஷ்டிர! இவ்வுலகத்தில் பிராம்மணர்களின் நடக்கைகள் பலவகை. மேகலர், த்ராவிடர், லாடர், பௌண்ட்ரர், கான்வசிரர், சௌண்டிகர், தரதர், தார்வர், சோரர், சபரர், பர்ப்பரர், கிராதர், யவனர் முதலான க்ஷத்ரிய ஜாதியர்களெல்லாரும் பிராம்மணர்களைக்காணாமல் சூத்ரராயினர். பிராம்மணர்களின் நிக்ரகத்தினால்தான் அஸுரர்கள் கடல்நீரில் கிடக்கின்றனர். பிராம்மணர்களின் அநுக்கிரகத்தினால் தேவர்கள் ஸ்வர்க்கத்தில் வஸிக்கின்றனர். ஆகாயத்தைத் தொடமுடியாது. இமயமலையை அசைக்கமுடியாது. கங்கையை அணையினால் தடுக்கமுடியாது. இவ்வுலகத்தில் பிராம்மணர்களை வெல்லமுடியாது. பிராம்மணர்களைப் பகைத்துக்கொண்டு பூமியை ஆளமுடியாது. பிராம்மணர்கள் மகாத்மாக்கள்; தேவர்க்குந்தேவர்கள்; கடல்சூழ்ந்த இப்பூமியை நீ ஆளவிரும்பினால் தானத்தினாலும் பணிவிடையினாலும் பிராம்மணர்களை எப்போதும் ஆராதிக்கக்கடவாய். குற்றமற்றவனே! தானம் வாங்குவதனால் பிராம்மணர்களின் உக்கிரம் தணிகிறது. ராஜனே! தானம் வாங்கக்கருதாதவர்களையும் நீ காப்பாற்ற வேண்டும்.

## எழுபத்தோராவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(சம்பராஸுரன் பிராம்மணர்மகிமையை இந்திரனுக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரா! இந்தவிஷயத்தில் இந்திரனுக்கும் சம்பராஸுரனுக்கும் முற்காலத்தில்நடந்த ஸம்பாஷணையாகிய ஓர் இதிஹாஸத்தைச் சொல்லுகின்றனம். அதைக்கேள். இந்திரன் மாறுஉருவமாக ஜடைகளைத்தரித்து மிக்கஉக்கிரமான பிராம்மண வடிவத்தையெடுத்துக்

கொண்டு சம்பராஸுரனைநோக்கி, 'ஓ! சம்பரனே! நீ எவ்விதநடக்கையினால் உன் ஜாதியாருக்கெல்லாம் மேலாயிருக்கின்றாய்? உன்னை மிகச்சிறந்தவனென்று அவர்கள் நினைப்பது எதனால்? அதனை எனக்கு உண்மையாகச் சொல்' என்று கேட்க, சம்பரன் சொல்லலானான்.

'பிராம்மணர்களின்மேல் நான் ஒருபோதும் பொறாமைப்படுவதில்லை. பிராம்மணஜாதியைத்தான் நான் மதிப்பது. சாஸ்திரப்பிரஸங்கம்செய்யும் பிராமமணர்களுக்கு மனம்மகிழும்படி வெகுமதி செய்துவருகிறேன். அவர்கள் சொல்லைக்கேட்டு அதை அலக்ஷ்யம செய்வதில்லை. ஒருபோதும் அவர்களுக்குப் பிழைசெய்யேன். அவர்களைப் பூஜித்துக்கேட்பேன். ஞானமுள்ளவர்களுடைய பாதங்களைப் பிடித்துக்கொள்வேன். அவர்கள் என்னிடத்தில் நம்பிக்கையாக எல்லாவற்றையும் சொல்லுவர்; எப்போதும் என்னை அடக்குவர். அவர்கள் தங்களைப்பற்றி ஜாக்ரதைப்படாதபோதும நான் அவர்கள்மேல் ஜாக்ரதையாயிருப்பேன். அவர்கள் தூங்கும்போதெல்லாம் நான் விழித்திருப்பேன். அவர்கள் சாஸ்திரமார்க்கத்தில் ஊக்கமுள்ளவனும் பிராமமணர்களிடத்தில் அன்புள்ளவனும பொறாமைப்படாதவனுமாகிய என்னிடத்தில் தேனீக்கள் தேனடையில் தேனைப்பொழிவதுபோல உபதேசத்தைப் பொழிவர். அவர்கள் ஸந்தோஷமடைந்து எதைச்சொன்னாலும் அதை நான் வஞ்சகமின்றி எடுத்துக்கொள்வேன். அவர்கள் எனக்குச்சொல்லும உபதேசத்தை எப்போதும் அநுகூலமென்றே நினைக்கிறேன். அவர்கள வாக்குநுனியினால் விடப்பட்ட சிறந்த ரஸங்களையுண்டு நான் நக்ஷத்திரங்களுக்குச் சந்திரனிருப்பதுபோல என் ஜாதியாருக்கு மேலாக இருக்கிறேன். பிராமமணன் முகத்தினின்று சாஸ்திரத்தைக்கேட்டு நடப்பதுதான் பூலோகத்திலுள்ள அமிருதம். இதுதான் எல்லாவற்றிலும் சிறந்தகண். என்பிதா முன்னர் தேவாஸுரயுத்தத்தைக்கண்டபோது பிராம்மணனுக்கிரகம் தான் காரணமென்று தெரிந்துகொண்டு மனத்தில் ஆச்சரியத்தையும் ஸந்தோஷத்தையும் அடைந்தார். மகாத்மாக்களான பிராம்மணர்களின் மகிமையைக்கண்டு, 'இவர்கள் எப்படி ஸித்திபெற்றனர்?' என்று என்பிதா சந்திரனைக்கேட்டார். அதற்குச் சந்திரன், 'பிராம்மணர்களனைவரும் தவத்தினால் சிறப்புற்றிருக்கின்றனர். அவர்கள் எப்போதும் சொல்வன்மையுள்ளவர்கள். அரசர்களுக்குக் கையில்பராக்கிரமம்; பிராம்மணர்களுக்குச் சொல்லே அஸ்த்ரம. பிராமமணன் ஊரை விட்டுப்போய்க் கஷ்டப்பட்டு வஸித்துக்கொண்டு கோபத்தைவிட்டு

ஒழிவோடு இந்திரியங்களையடக்கி எல்லாவற்றையும் ஸமமாகப் பார்த்துக்கொண்டு ஓதவேண்டும். (ஒருவன்) தன் தந்தையின் வீட்டில் மேன்மையாயிருந்து எல்லாவேதங்களையும்ஓதி நிரம்பினஞானமுள்ளவனாயிருந்தாலும் அவனை ஸாமான்யனென்றே நினைக்கின்றனர். யுத்தம்செய்யாத அரசன், வீட்டைவிட்டுப்போகாதபிராம்மணன் இவ்விருவரையும் எலிகளைப் பாம்புதின்பதுபோலப் பூமி [1] தின்கிறது. அல்பபுத்தியுள்ளமனிதனுக்குத் அபிமானம் சிறப்பைக் கெடுத்து விடுகிறது. (விவாகமாகாத) கன்னிகை கர்ப்பமாவதனால் கெட்டுப்போகிறாள். பிராம்மணன் வீட்டிலேயேயிருப்பதனால் கெடுகிறான். கல்விகளைக் கற்று உலகத்தையறிந்து தவமும் அடக்கமுமுள்ள பிராம்மணர்களை இரண்டுலோகங்களிலும் ஸுகத்தைவிரும்புகிறவர்கள் எக்காலமும் பூஜிக்கவும் நமஸ்கரிக்கவும் வேண்டும்' என்றுசொன்னான். அழகான ரூபமுள்ள சந்திரனிடம் இதைக்கேட்டபிறகு, என்பிதாவானவர் சிறந்த தவமுள்ள பிராம்மணர்களை நான் பூஜிப்பதுபோலவே பூஜித்தார்' என்றான். அஸுரராஜாவான சம்பரனுடைய முகத்தினின்றுவந்த இந்தச் சொல்லைக்கேட்டபிறகு இந்திரன் பிராம்மணர்களைப் பூஜித்து மகேந்திரனென்னும் பதம்பெற்றான்" என்று சொல்லினர்.

## எழுபத்திரண்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(தானம் பெறுவதற்குரியவர் யாரென்பதுமுதலியன.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! புதியனாகவருகிறவன் தானத்திற்குரியவனா? நெடுநாளாகக் கூடஇருப்பவனா? அல்லது, தூரத்திலிருந்து வந்தவனா? இவர்களில் பாத்ரன் யார்?" என்றுகேட்டார்.

பீஷ்மர், "சிலரிடத்தில், 'நம்மை எவன் எதைக்கேட்டாலும் அதையெல்லாம் நமதுவேலைக்காரரைப் பீடியாமல் கொடுப்போம்' என்னும் சிறந்தவிரதம் ரகஸ்யமாகவும் முக்கியமாகவும் இருக்கிறதென்று நாம் கேட்டிருக்கிறோம். வேலைக்காரர்களைப் பீடிப்பதனால் தம்மனத்தைக் கெடுத்துக்கொள்ளுகிறார்களல்லரோ? அந்தத் தெரிந்தவர்கள் புதியவனாயிருந்தாலும் கூடவேவஸித்தவனாயிருந்தாலும் தூரத்திலிருந்து வந்தவனாயிருந்தாலும் யாசிப்பவனைப் பாத்ரனென்றே நினைக்கின்றனர்" என்று சொன்னார். யுதிஷ்டிரர், "எவனுக்குக்கொடுப்பது பின்

---

[1] புகழில்லாமல் போகிறது.

னிட்டுத் துன்பப்படுத்தாதோ அவனைப் பிராணிகளுக்குத் தீங்குசெய்யாமையாலும் தர்மத்தைக் கெடாமையினாலும் பாத்திரனென்று நாம் ஸரியாக அறியவேண்டும். (அப்படிப்பட்டவன்யார்?)" என்று வினவினர். பீஷ்மர், "யாகம்செய்விக்கும் ரித்விக்குகள் புரோஹிதர்கள் ஆசாரியர்கள் சிஷ்யர்கள் சினேகிதர்கள் பந்துக்களனைவரும், கல்வியுள்ளவர்களும் பொறுமையில்லாதவர்களுமாயிருந்தால் பூஜிக்கவும் பெருமைப்படுத்தவும் உரியவர்கள். இதற்கு மாறாகநடந்தால் இவர்கள் யாரும் மரியாதைக்குரியவரல்லர். ஆதலால், ஜாக்ரதையோடு மனிதர்களின் குணங்களைப் பரீக்ஷைசெய்யவேண்டும். பாரதனே! கோபியாமை, பொய்யாமை, கொல்லாமை, அடங்கியிருத்தல், நேர்மை, கேடுநினையாமை, அபிமானமில்லாமை, அகாரியங்களில் நாணம், கஷ்டத்தைப்பொறுப்பது, ஐம்புலன்களின் அடக்கம், மன அடக்கம்ஆகிய இவை யாரிடத்தில் இயற்கையில் அமைந்தவைகளாகக் காணப்பட்டும் கெட்டசெய்கைகள் காணப்படாமலு மிருக்கின்றனவோ அவன்தான் வெகுமானத்திற்குரிய பாத்திரனாகிறான். இந்தக்குணங்களுடையவன் நெடுநாள் கூடவஸித்தவனாயிருந்தாலும் தூரத்திலிருந்துவந்தவனாயிருந்தாலும் பழகினவனாயிருந்தாலும் பழகாதவனாயிருந்தாலும் வெகுமானிப்பதற்குரிய பாத்ரனாகிறான். வேதங்களில் நம்பிக்கையில்லாமையும் தர்மசாஸ்திரங்களை மீறிநடப்பதும் ஒன்றிலும் கட்டுப்படாமையும் ஆகியஇவை ஆத்மாவைக்கெடுப்பவை. எந்தப்பிராம்மணன் யுக்திகளைக்கொண்டாராய்வதும் பயனற்றதுமான தர்க்கவித்தையில் அபிமானம்வைத்துத் தன்னையே பண்டிதனாக நினைத்துக்கொண்டு யுக்திவாதங்களைச்சொல்லி வேதங்களைநிந்தித்தும் பெரியோர்களிடத்தில் யுக்திவாதங்களைப்பேசி அவர்களை யுக்திவாதங்களினால் ஜயித்தும் பிராம்மணர்களைத்தூஷித்தும் எப்போதும் அதிகமாக வாதம்பேசிக்கொண்டும் எல்லாவற்றிலும் ஸம்சயப்பட்டுக்கொண்டும் கடுஞ்சொற்சொல்லிக்கொண்டும் இருப்பவனோ அப்படிப்பட்டவனை ஒன்றுந்தெரியாத சிறுவனென்று நினைக்கவேண்டும். அப்பா! அவனை நாயாகவன்றோ பெரியோர்கள் எண்ணுகின்றனர். நாயானது குலைப்பதற்காகவும் கடிப்பதற்காகவும் இருப்பதுபோல அற்பக்கல்வியும் குதர்க்கமுமுள்ள இழிவான பண்டிதர்கள் பேசுவதற்காகவும் எல்லாச் சாஸ்திரங்களையுமழிப்பதற்காகவும் படைக்கப்பட்டவர்களாகக் காணப்படுகின்றனர். வேதம் தர்மசாஸ்திரம் இதிஹாஸம் புராணம் [1]ஆரண்யகம் இவற்றையறிந்த மிகத்தெரிந்தவர்களை அனுஸரிக்கவேண்டும். ஸாரந்தெரிந்தவர்களே

---

[1] ஆதிபர்வம் 28-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

பண்டிதர்கள். உலகநடையையும் தர்மத்தையும் தன் ஆத்மாவுக்கு நன்மையையும் அறியவேண்டும். இப்படி நடக்கின்றமனிதன் அநேக வருஷகாலங்கள் ஓங்குவான். தேவர்கள் ரிஷிகள் பித்ருக்கள் பிராம்மணர்கள் அதிதிகள் இவர்களின் [1] கடன்கள் ஐந்தையும் மிகப்பரிசுத்தமான கர்மத்தினால் முறையே தீர்த்துக் கர்மங்களைச்செய்யும் இல்லறத்தோன் புண்ணியங்கெடாமலிருப்பான்'' என்றார்.

## எழுபத்துமூன்றாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(பஞ்சசூடை பெண்களின் இயற்கையை நாரதருக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பரதசிரேஷ்டரே! பெண்களின் இயற்கையைக் கேட்க விரும்புகிறேன். பெண்கள்தாமே பாவங்களுக்குவேர்? அவர்களின்மனமும் இலேசென்று சொல்லப்படுகிறதன்றோ?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"இந்தவிஷயத்தில் நாரதருக்குப் பஞ்சசூடை என்னும் வேசியுடன்நடந்த ஸம்பாஷணையாகிய ஒருபழைய இதிஹாஸம் கூறுகின்றனர். முற்காலத்தில் நாரதரென்னுந்தேவரிஷி லோகங்களெல்லாவற்றிலும் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கும்போது பிரம்மலோகத்திலிருக்கும் பஞ்சசூடையென்னும் சிறந்த அப்ஸரஸைக் கண்டார். எல்லா அங்கங்களும் அழகாயுள்ள அந்த அப்ஸரஸைக்கண்ட அம்முனிவர், 'அழகிய இடையுள்ளவளே! என்மனத்தில் ஒருஸந்தேகமிருக்கிறது. அதைப் பற்றி நீ எனக்குச் சொல்லக்கடவாய்' என்றுகேட்டார். இவ்வாறு கேட்கப்பட்ட அந்தப்பஞ்சசூடை நாரதரென்னும் பிராம்மணரைப் பார்த்து, 'நீர் என்னைத் தெரிந்தவளாக நினைக்கிறீர். எனக்குத் தெரிந்தவிஷயமாயிருந்தால் நான் சொல்வேன்' என்று மறுமொழி கூறினாள். அதற்கு, நாரதர், 'சிறந்தவளே! தெரியாதவிஷயத்தைப் பற்றி உன்னை எவ்வகையிலும் கேட்கமாட்டேன், அழகான முகமுள்ளவளே! பெண்களின் இயற்கையைப்பற்றி உன்னிடம் கேட்க விரும்புகிறேன்' என்றுசொன்னார். அந்தத் தேவரிஷியின் இந்தச் சொல்லைக்கேட்டபிறகு, அந்தச்சிறந்த அப்ஸரஸானவள், 'ஓ! தேவ

[1] யாகத்தினால் தேவர்க்கும், ஓதலினால் ரிஷிகளென்னப்படும் வேதங்களுக்கும், ஸந்ததியினால் பித்ருக்களுக்கும், தானதர்மங்களினால் பிராம்மணர்களுக்கும், போஜனத்தினால் அதிதிகளுக்கும் கடன்தீர்க்கவேண்டுமென்பது.

ரிஷியே! நான் பெண்ணாயிருத்தலால் பெண்களைத் தூஷிக்கமாட்டேன். பெண்கள் எவர்களென்பதும் எப்படிப்பட்ட இயற்கையுள்ளவர்களென்பதும் உமக்குத் தெரிந்தவைதாம். இவ்வகையான காரியத்தில் என்னை நீர் ஏவத்தகாது' என்று மறுமொழி சொன்னாள். அந்தத் தேவரிஷியானவர் அவளைப்பார்த்து, 'அழகியஇடையுள்ளவளே! உண்மையைச் சொல். பொய்சொல்வதில் பாவமுண்டாகும். உண்மைசொல்லுவதில் தோஷமில்லையே?' என்றுகூறினர். அழகானநகையுள்ள அந்த அப்ஸரஸ் இவ்வாறு நாரதர் கேட்டமையால் சொல்வதாக நிச்சயம்செய்து கொண்டாள். பெண்களிடம் எக்காலமுமுள்ள உண்மையான குற்றங்களைச் சொல்லத்தொடங்கினாள்.

'நாரதரே! நல்லகுலத்திற்பிறந்தவர்களும் [1] அழகுள்ளவர்களும் சிறந்தகணவனுள்ளவர்களுமாயிருந்தும் ஸ்திரீகள் கட்டுப்பாடுகளில் நிற்பதில்லை. அது ஸ்திரீகளிடத்திலுள்ள குற்றம். ஸ்திரீகளைப்பார்க்கிலும் மிகப்பாவமானபொருள் மற்றொன்றுமில்லை. ஸ்திரீகள்தாமே பாவங்களுக்கு வேர். அது உமக்குந்தெரியுமே. பெண்கள் விருப்பம்வந்தபோது, ஐசுவரியமும் அழகுமுள்ளவர்களும் தங்களுக்குட்பட்டிருப்பவர்களுமாகக் கணவர்களைத் தெரிந்துகொள்ளும்படி பொறுத்துப் பரிசோதிக்குந் திறமையற்றவர். பிரபுவே! மிக்கபாவிகளான புருஷர்களையும் நாங்கள் வெட்கத்தைவிட்டு அடைகிறோம். பெண்களாகிய எங்களிடத்திலுள்ள பெரிய அதர்மம் இது. எவன் தம்மை வேண்டி, கிட்டப்பழகி, சிறிதுஉபசாரமும் செய்கிறானோ அவனையே பெண்கள் விரும்புகின்றனர். புருஷர்கள் வேண்டாமையினாலும் சுற்றியிருக்கும் ஜனங்களிடம்பயத்தினாலும் பெண்கள், கணவர்களுக்குக் கட்டுப்பட்டிருக்கிறார்கள். உண்மையில் அவர்கள் கட்டிலகப்படாதவர்கள். இவர்கள் சேரக்கூடாதவன் எவனுமில்லை. இவர்களுக்குப் புருஷன் பிராயத்தைப்பற்றியும் கவனமில்லை. அழகில்லாதவனையும் அழகுள்ளவனையும் ஆண்பிள்ளையென்றே அனுபவிப்பார். பரலோக பயத்தினாலாவது அன்பினாலாவது பொருளுக்காகவாவது சுற்றத்தாருக்காகவாவது குலத்திற்காகவாவது பெண்கள் கணவர்களிடம் கட்டுப்பட்டுநிற்பதில்லை. குலப்பெண்களும் இளமைப் பருவத்திலிருந்துகொண்டு அழகான ஆபரணங்களோடும் ஆடைகளோடுமிருக்கும் ஸ்வதந்திரமாயுள்ள வேசிப்பெண்களைப்போலிருக்க ஆசைப்படுகின்றனர். கணவர்களால் நேசிக்கப்பட்டும் அடிக்கடி கௌரவிக்கப்பெற்றும் காப்

[1] அழகுள்ளவர்கள் குணமுள்ளவர்களாயிருப்பார்களென்பது கொள்கை.

பாற்றப்பட்டுமிருக்கிற பெண்களும் [1] கூனர், குருடர், அசடர், குள்ளர் இவர்களோடும் சேர்ந்துவிடுகின்றனர். தேவரிஷியே! மஹரிஷியே! இவ்வுலகத்தில் ஸ்திரீகள் சேரத்தகாதவன் முடவர்களிலும் மற்ற எந்த இழிவான மனிதர்களிலும் எவனுமில்லை. பிராம்மணரே! புருஷர்களை அடைவது எவ்வகையிலும் சரிப்படாமற்போகும்போது பெண்களே ஒருவரிடம் ஒருவர் பிரவிருத்திக்கிறார்கள்; கணவர்களிடத்தில் கட்டுப்பட்டு நிற்பதில்லை. 'பெரும்பாலும் பெண்கள் கெட்டநடையுடையவர்கள்; பாவத்தில் மனமுள்ளவர்கள்; உண்மையில்லாதவர்கள்; வஞ்சகமுள்ளவர்கள்; சிறந்த நோன்பிகளைப் பாராதவர்கள்' என்றறியலாம். புருஷர்கள் கிடையாமையாலும் சேர்ந்த ஜனங்களிடத்தில் அச்சத்தினாலும் அடிக்கும் சிறைக்கும் பயந்தும் பெண்கள் தங்களைக் காப்பாற்றிக்கொண்டிருக்கின்றனர். அவர்கள் நிலையற்ற ஸ்வபாவமுள்ளவர்கள். அவர்களை ஸந்தோஷப்படுத்துவது கடினம். இவ்வுலகத்தில் மிகத்தெரிந்தபுருஷனும் அவர்கள் எந்த எண்ணத்தோடிருக்கிறார்களோ அந்த எண்ணத்தைத் தெரிந்துகொள்வது கடினம். அக்நி விறகுகளினால் திருப்தியடைவதில்லை; கடல் நதிகளினால் நிரம்புவதில்லை; யமன் ஸர்வப்ராணிகளாலும் நிரம்புவதில்லை; பெண்களும் புருஷர்களால் நிரம்புவதில்லை. தேவரிஷியே! இதுநிற்க, மற்றொரு ரகஸ்யமும் எல்லா ஸ்திரீகளுக்குமுள்ளது. வேறுபுருஷனைக் கண்டவுடன் பெண்களின் [2] மனம் வேறுபடுகிறது. வேண்டினவற்றையெல்லாம் கொடுப்பவனும் கௌரவமாகவும் நயமாகவும் நடத்துகிறவனும் காப்பாற்றுகிறவனுமான கணவனையும் கெட்டபெண்கள் நினைப்பதில்லை. புணர்ச்சியினாலுண்டான ஸுகத்தை விரும்புவதுபோல மிக்க விருப்பமான பொருள் நிரம்பியிருப்பதையும் அலங்காரங்களையும் பொருட்குவியலையும் மதிப்பதில்லை. எல்லாரையுமழிப்பவனும் எல்லாவற்றையும் முடிப்பவனுமாகிய யமன் பாதாளத்திலிருக்கும் வடவாமுகாக்நி கத்திமுனை ஸர்ப்ப விஷம் அக்நி இவையெல்லாம் ஒருதட்டு; பெண்கள் ஒருதட்டு. நாரதரே! பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் என்னும் ஐந்து மகாபூதங்களும் உலகங்களும் ஆண்பெண்களும் எதிலிருந்து பிரம்மாவினால் படைக்கப்பட்டனரோ அந்த மூலகாரணத்திலிருந்தே பெண்களின் குற்றங்களும் படைக்கப்பட்டிருக்கின்றன' என்று சொன்னாள்" என்றார்.

---

[1] இவர்கள் அந்தப்புரங்களில் போதுபோக்காயிருப்பவர்கள்.

[2] மூலத்தில் வேறுவிதமாயிருக்கிறது.

## எழுபத்துநான்காவது அத்யாயம்.
## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(பெண்களின் கெட்டஇயற்கை முதலியன.)

யுதிஷ்டிரர், "உலகத்திலுள்ள இந்தமனிதர்கள் முன்வினையினால் உண்டான மயக்கம் மேற்கொண்டவர்களாய்ப் பெண்களிடத்தில் எப்போதும் பற்றுள்ளவர்களாயிருக்கின்றனர்; பெண்களும் புருஷர்களிடத்திலேயே பற்றுள்ளவர்களாயிருக்கிறார்களென்பது உலகத்திற்கெல்லாம் பிரத்தியக்ஷமாகத் தெரிந்தவிஷயம். இவ்விஷயத்தில் பெரிய ஸந்தேகம் என்மனத்தில் சுற்றிக்கொண்டிருக்கிறது. கௌரவரே! புருஷர்கள் இந்த ஸ்திரீகளிடத்தில் பற்றுவைப்பது எப்படி? பெண்கள் புருஷர்களிடத்தில் அன்புள்ளவர்களாயுமிருக்கின்றனர்; இல்லாதவர்களாயுமிருக்கின்றனர். புருஷசிரேஷ்டரே! இவ்வகையான அந்தப் பெண்களைப் புருஷன் ரக்ஷிப்பது எப்படிமுடியுமென்பதை எனக்கு உரைப்பீராக" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"இந்த ஸ்த்ரீகள் தங்கள் மாயைகளினால் புருஷர்களை ஏமாற்றுகின்றனர். அவர்கள்கைக்குள் அகப்பட்ட ஆண்பிள்ளை ஒருவனும் விடுபடுவதில்லை. பசுக்கள் புதியபுல்லைமேய்வதுபோல அவர்கள் புதிய புதியமனிதர்களைப் பிடிக்கின்றனர். சம்பரன், நமுசி, பலி, லவணன் இவர்களுக்குத் தெரிந்த மாயைகளனைத்தையும் பெண்கள் அறிந்திருக்கின்றனர். அவர்கள் நகைப்பவனோடு நகைப்பார்; அழுபவனோடு அழுவர்; வேண்டாதவனையும் காலம்நேரும்போது சொற்களினால் வசப்படுத்துவர். ஒருவன் ஆயிரம் நாவுள்ளவனாகவும் ஒருநூற்றாண்டு ஜீவிப்பவனாகவும் வேறுகாரியமில்லாதவனாகவுமிருந்தாலும் ஸ்த்ரீகளின்குற்றங்களை முற்றும்சொல்லமுடியாமலே மரணமடைவான். சுக்ரருக்குத் தெரிந்தநீதிசாஸ்திரமும் பிருஹஸ்பதிக்குத்தெரிந்த நீதிசாஸ்திரமும் பெண்கள் புத்திக்குமேற்படா. அவர்களைப் புருஷர்கள் ரக்ஷிப்பதெப்படி? வீரனே! அவர்கள் பொய்யை மெய்யென்பர்; மெய்யைப் பொய்யென்பர். இப்படி சாதிப்பவர்களை இந்தப்புருஷர்கள் அடக்குவது எப்படி? அநேகம் குற்றங்களுக்கிடமும் சுத்தமற்றதுமாகிய பெண்களின் தேகத்தில் புருஷர்கள் பற்றுவைத்திருப்பது ஆச்சரியம். பகைவர்களைக்கொல்லுகிறவனே! பெண்களின் புத்தியிலிருக்கும் விஷயங்களைத்தேடியெடுத்துத்தான் பிருஹஸ்பதிமுதலான பெரியோர்கள் ராஜநீதிசாஸ்திரங்களைச் செய்திருக்கவேண்டுமென்று

நினைக்கிறேன். ராஜனே! பெண்கள் புருஷர்களினால் கௌரவிக்கப் பட்டபோதிலும் அந்தப்புருஷர்களிடம் மனத்தை வேறுபடுத்துகின்றனர்; நிராகரிக்கப்பட்டபோதிலும் அப்படியேதான் மனத்தை வேறு படுத்துகின்றனர்" என்றார். யுதிஷ்டிரர், "சிறந்த கைகளையுடையவரே! இந்த (ஸ்த்ரீ) ஜனங்கள் தார்மிஷ்டர்களென்று நாம் கேட்டிருக்கிறோம். வெகுமதிக்கப்பட்டாலும் அவமதிக்கப்பட்டாலும் மனம் வேறுபட்டே இருப்பவர்களை எவன் காப்பாற்றமுடியுமென்பதில் எனக்குப் பெரியஸந்தேகம். பெரும்பாக்யமுள்ளவரே! கௌரவர்களின் வம்சத்தை விருத்திசெய்பவரே! கௌரவசிரேஷ்டரே! பெண்களைக் காப்பது எப்போதாவது செய்யமுடியுமானாலும் இதற்குமுன் யாராகிலுமசெய்திருந்தாலும் அதை எனக்கு உரைக்கக்கடவீர்" என்று கேட்டனர்.

## எழுபத்தைந்தாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(பெண்களைக்காப்பதுகடினமென்பதற்கு உதாரணமான குருபத்நியைக்காத்த விபுலர்கதை.)

பீஷ்மர் சொல்லத்தொடங்கினார். "சிறந்தகைகளையுடையவனே! கௌரவராஜனே! பெண்களைப்பற்றி நீ சொல்வது ஸரிதான். இதில் பிழையொன்றுமில்லை. இந்தவிஷயத்தில் முன்னர் விபுலர் என்னும் மகாத்மா ஸ்த்ரீரக்ஷணம்செய்ததாகிய ஒருபழைய இதிஹாஸத்தை உனக்குச்சொல்வேன். அப்பா! பரதசிரேஷ்டனான ராஜனே! பிரம்மதேவர் பெண்களை எப்படிப்படைத்தாரென்பதையும், எதற்காகப்படைத்தாரென்பதையும் உனக்குச் சொல்வேன். புத்ரனே! பெண்களைவிடக் கொடியபாவமானது வேறுஒன்றுமில்லை. ராஜனே! பெண்களே எரியுந் தீ. அவர்கள் மயனுடையமாயைகள்; கத்திமுனை, விஷம், ஸர்ப்பம், நமன் இவையெல்லாம் ஒருதட்டிலும் பெண்கள் ஒருதட்டிலுமிருப்பவர். சிறந்தகைகளையுடையவனே! இந்தஜனங்களெல்லாரும் தார்மிஷ்டர்களென்று நாமும் கேட்டிருக்கிறோம். அவர்கள் தாங்களே தேவத் தன்மையையடைந்தனர். அதனால் தேவர்களுக்குப் பயமுண்டாயிற்று. பகைவரையடக்குகிறவனே! அந்தத்தேவர்கள் உடனே பிரம்மதேவரிடம்சென்று தங்கள் கருத்தைத்தெரிவித்துப் பேசாமல் தலைகுனிந்து நின்றனர். பிரபுவான அந்தப்பிரம்மதேவர் அந்தத்தேவர்களின்

கருத்தையறிந்து மனிதர்களை மயக்குவதற்காகப் பேய்கள்போன்ற பெண்களைப் படைத்தார். குந்திபுத்ரனே! ஸிருஷ்டியின் ஆரம்பத்தில் இவ்வுலகத்திலுள்ள பெண்கள் கற்புள்ளவர்களாயிருந்தனர். பிரம்ம தேவர்படைத்தபின்தான் கற்பில்லாத ப்ரஜைகள் உண்டாயின. அந்தப் பிரம்மதேவர் அந்தஸ்த்ரீகளுக்கு வேண்டின அளவு காமஸுகங்களைக் கொடுத்தார். சிற்றின்பத்தில் ஆசைப்பட்ட அந்தப் பெண்கள் புருஷர்களை எக்காலமும் பீடித்தனர். தேவஸ்ரேஷ்டரான பிரம்மதேவர் காமத்துக்குத்துணையாகக் கோபத்தைப் படைத்தார். எல்லாஜனங் களும் காமக்குரோதங்களுக்குட்பட்டவர்களாகி ஸ்வர்க்கம் செல்லத்தடைப்பட்டனர். பிராம்மணர்களுக்கும் குருக்களுக்கும் மஹா குருக்களுக்கும் அரசர்முதலானோர்களுக்கும் க்ஷணிகமான ஸ்த்ரீ ஸங்கமத்தை விரும்புவதனாலுண்டாகும் துபரம் இடைவிடாமலிருக்கிறது. ஆ! ஆ! மனத்தில் பெண்ணாசையைவிட்டு எப்போதும் பிரம்மசாரிவிரதத்தினால் பரிசுத்தமான மனமுள்ளவர்களுக்கும், தவத்திலும் புலன்களையடக்குவதிலும் தேவபூஜைசெய்வதிலும் தியானம் செய்வதிலும் ஊக்கமுள்ளவர்களுக்குந்தான் சிறந்த சுத்தமுண்டாகிறது. ஸ்த்ரீகளுக்கு எந்தக்[1] க்ரியைகளும் இல்லையென்பது தர்மசாஸ்திரத்தின் நிச்சயம். ஸ்த்ரீகள் வீரியமில்லாதவர்கள்; சாஸ்திரமில்லாதவர்கள். ஸ்த்ரீகள் [2]பொய்யென்று சுருதி சொல்லுகிறது. படுக்கை, உட்காருதல், அலங்காரங்கள், உண்பது, குடிப்பது, அயோக்கியத்தனம், கெட்டவாக்கு, கெட்டஎண்ணம், புணர்ச்சியின்பம் இவற்றைப் பிரம்மதேவர் ஸ்த்ரீகளுக்களித்தார். புருஷர்கள் அவர்களை ரக்ஷிப்பது எவ்வகையிலும் முடியாது. அப்பா! உலகத்தைப் படைத்தவராலேயே முடியாதே. மற்றவர்களால் எது? சொல்லினாலும் அடிப்பதனாலும் கட்டுப்படுத்துவதனாலும் பலவகைகளாகப் பீடிப்பதனாலும் பெண்களை அடக்கமுடியாது. அவர்கள் எப்போதும் கட்டுப்படாதவர்கள். புருஷ ஸிரேஷ்டனே! முற்காலத்தில் விபுலரென்பவர் தம்குருபத்னியைரக்ஷித்த விஷயத்தைப்பற்றி நான் முன்னமேகேட்டிருப்பதைச் சொல்லுகிறேன். தேவசர்மா என்று பெயர்பெற்ற பெருமைவாய்ந்தரிஷிஒருவர் இருந்தார். அவருடையபார்யை ருசியென்பவள். அவள் உலகில் அழகில்நிகரற்றவள். அரசர்க்கரசரே! அவளுடைய அழகினால் தேவர்களும் கந்தர்வர்களும் தானவர்களும் மயங்கினர். விருத்ரனையும் பாகனையும்கொன்றவனாகிய தேவேந்திரன் அவள்மேல் அதிகமோகங்கொண்டான். பெண்களின்நடையை அறிந்த மகாபுத்திசாலியான தேவசர்மாவானவர் கூடின

[1] ஸம்ஸ்காரமுதலியகர்மங்கள். [2] பொய் சொல்லுகிறவர்கள்.

வரையில் ஸந்தோஷத்துடன் தம்முடைய பார்யையைக் காப்பாற்றினர். தேவேந்திரன் அயலார்பெண்டிரிடம் காதல்வைத்துத்திரிபவனென்று அறிந்த அவர் அவனுக்காகத் தமமனைவியைப் பிரயத்னப்பட்டுக் காவல்காத்தார். அப்பா! பிறகு, ஒருகால் யாகம்செய்யமனங்கொண்டபோது அம்முனிவர் பார்யையையாகூி யது எப்படிமுடியுமென்று சிந்தையுற்ருர். சிறந்ததவமுள்ள அந்தந்தேவசர்மா அவளைக்காப்பதற்கு வழியை மனத்தில்நினைந்து புத்ருவாசத்தில்பிறந்தவருமாகக்கு அன்புள்ள சிஷ்யருமான விபுலனையழைத்து, 'புத்ருகுகளிற்பிறந்தவனே! நான் யஜ்ஞம்செய்வதற்காகப் போகிறேன். தேவேந்திரன் இந்தருசியின் மேல் ஆசைவைத்திருப்பதனால் நீ எக்காலமும் உன்வல்லமையளவு இவளைக் காப்பாற்றக்கடவாய். இந்திரனைவிஷயத்தில் நீ எப்போதும ஜாக்கிரதையாயிருக்கவேண்டும். அவன் பலவகையுருவங்களை எடுப்பான்' என்றுசொன்னர். ராஜனே! இந்திரியங்களையடக்கி எப்போதும உக்கிரமானதவத்திலிருப்பவரும் அக்நிக்கும் ஸூர்யனுக்கும் ஒப்பானஒளியுள்ளவரும் தர்மம்தெரிந்தவருமும் உண்மையைப்பேசுகிற வருமான அந்தவிபுலர் குரு இவ்வாறு கட்டளையிட்டவுடன், 'அப்படியேயாகட்டும்' என்று மறுமொழி சொன்னர். மகாராஜனே! புறப்படுங்குருவைநோக்கி, 'ஓ! முனிவரே! இந்திரன் வரும்போது அவனுக்கு என்னஎன்ன உருவங்களிருக்கும்? அவனுடம்பும் நிறமும் எப்படிப்பட்டவை? அவற்றை எனக்கு உரைக்கக்கடவீர்' என்று திரும்பவும்கேட்டார். பாரதனே! பிறகு, எல்லாந்தெரிந்தவரான அந்தந்தேவசர்மா, அந்தமகாத்மாவானவிபுலருக்கு இந்திரனுடையமாயையைப்பற்றி உள்ளபடி சொல்லலானர். 'பிரமமரிஷியே! புத்ரனே! பலனையும் பாகனையுமகொன்றவனாகிய இந்திரன் அநேகமாயைகளைச் செய்பவன்; பலவகைப்பட்ட அநேக உருவங்களை அடிக்கடி காண்பிப்பான்; கிரீடத்தையும் வஜ்ராயுதத்தையும் விலலையும் தலைப்பாகையையும் காதுக்குண்டலங்களையும தரித்திருப்பான்; உடனே நிமிஷத்திற்கெல்லாம் சண்டாளன்போலக் காணப்படுவான்; மறுபடியும குடுமியும் சடையும் மரவுரியாடையுமுள்ளவனுயிருப்பான். மறுபடியும் பருத்தசரீரத்தோடிருப்பான்; திரும்பவும மரவுரியுடுத்து இளைத்திருப்பான்; வெளுப்பு பசுமை கறுப்புநிறங்களை அடிக்கடி மாற்றுவான்; குரூபியாகவும் ஸுரூபியாகவும இளமையாகவும் முதுமையாகவும் புத்திமானகவும் மூடனகவும் ஊமையாகவும் குட்டையாகவும் நெட்டையாகவும் பிராம்மணனகவும க்ஷத்ரியனகவும் வைசிய

ஞகவும் சூத்திரஞகவும் [1]பிரதிலோமஜாதியாகவும் [2]அநுலோமஜாதியாகவும் இருப்பான்; கிளி, காக்கை, அன்னம், குயில் உருவங்களையும் சிங்கம், புலி, யானை உருவங்களையும் அடிக்கடியெடுப்பான்; தேவர், அஸுரர், அரசர்களின் உருவங்களையும் எடுப்பான்; புஷ்டியாகவும் வாயுவினுல் அங்கங்கள் முடங்கியும் விகாரமானபறவையாகவும் பசுவாகவும் குழந்தையாகவும் அனேக ரூபங்களோடிருப்பான்; ஈ, கொசு முதலியவற்றின் ரூபங்களையும் எடுப்பான். விபுலனே! அவனைக்கண்டு பிடிக்க யாராலும் முடியாது குழந்தாய்! இவ்வுலகத்தைப்படைத்த பிரம்மதேவராலும் ஆகாது. அவன் மறுபடியும் அந்தர்த்தானமாகி விடுவான். இந்திரனை ஞானக்கண்ணிஞல்தான் காணலாம். அவன் காற்ருகவும் மாறிவிடுவான். எப்போதும் இவ்வகையானரூபங்களை இந்திரன் காண்பிப்பான். விபுலனே! இந்த நுண்ணிடையாளை அவனிடத்திலிருந்து ஜாக்ரதையோடு காப்பாற்றுவாயாக. ப்ருகுசிரேஷ்டனே! யாகம்நடக்குப்போதும் ஹோமத்திற்கு வைத்திருக்கும் ஹவிஸை நாய்தொடுவதுபோல இந்தருசியைக் கெட்டபுத்தியுள்ள தேவேந்திரன் தொடாமலிருக்கவேண்டும்' என்ருர். பரதசிரேஷ்டனே! அந்த மகாநுபாவரான தேவசர்மமுனிவர் இவ்வாறு கட்டளையிட்டு உடனே யாகம் செய்வதற்காகப்போஞர். விபுலர் குருவின் சொல்லைக் கேட்டுக் கவலையுற்ருர்; மிக்கபலசாலியான தேவேந்திரனிடத்திலிருந்து பெருங்காவல்காத்தார்.

விபுலர், 'குருபத்னியைக் காக்கும்விஷயத்தில் என்ஞற்செய்யக் கூடியது யாது? தேவேந்திரன் மாயாவி; வெல்லமுடியாதவன்; பெருஞ்சக்தியுள்ளவன்; ஆஸ்ரமத்தையும் குடிசையையும் கதவை மூடித் தேவேந்திரன்வராமலிருக்கச் செய்யமுடியாது. ஏனெனில், அவன் பலஉருவங்களையெடுப்பவன். அவன் காற்று ரூபமாகவாவது வந்து குருபத்னியை ஆக்ரமிப்பான். ஆதலால், இப்போது நான் இந்தருசியின் தேகத்திற்குள் பிரவேசித்திருப்பேன். அவ்வாறன்றிப் பராக்கிரமங்களிஞல் இவளை நான்காப்பது முடியாது மகிமைபொருந்தியதேவேந்திரன் பலஉருவங்கள் எடுப்பவனென்று கேட்டிருக்கிறேன். ஆதலால், என்யோகசக்தியிஞல் இவளிடம் இந்திரன் வராமல் காக்கக்கடவேன். இவளைக்காப்பாற்ற என்னுடைய அங்கங்கள் இவளுடைய அங்கங்களில் சேர்ந்திருக்கும்படி உட்புகுவேன். சிறந்த தவமுள்ளவரும் திவ்யஞானமுள்ளவருமான என்குரு தம்முடைய இந்தப்பத்நி அசுத்தப்பட்டதாகஅறிந்தால் கோபித்துச் சபிப்பார்;

---

[1] தாழ்ந்தவர்ணத்து ஆணுக்கும் உயர்ந்தவர்ணத்துப் பெண்ணுக்கும் பிறப்பது.
[2] உயர்ந்தவர்ணத்து ஆணுக்கும் தாழ்ந்தவர்ணத்துப் பெண்ணுக்கும் பிறப்பது.

ஸந்தேகமில்லை. மற்றப்பெண்களைப் புருஷர்கள்காப்பதுபோல இவளைக்காப்பது முடியாது. ஏனெனில், தேவேந்திரன் மாயாவி. ஐயோ! என்பாடு ஸந்தேகமாய்விட்டதே. குருவின்கட்டளையைத் தவறாமல் நடத்தவேண்டும். இந்தக்காரியத்தை நான் முடித்தால் ஓர் ஆச்சரியத்தைச்செய்ததாகும். என்யோகசக்தியினால் குருபத்னியின் இந்தச்சரீரத்தில்புகுந்து தாமரையிலையில் தண்ணீர்த்துளி எப்படிப் பற்றாமல் அசைவற்றிருக்கிறதோ அப்படியே இவள்சரீரத்தில் ஸமாதியோடு பற்றாமலிருப்பேன். அவளுடைய ருதுகாலத்தியசோணிதரூபமாக வெளிப்படுவேனாயின் எனக்கு அபாரதமிராது. வழிப்போக்கன் வழியில் யாருமில்லாதமண்டபத்தில் தங்குவதுபோல நான் குருபத்னியின்சரீரத்தில் தங்குவேன். இவ்வாறு யோகத்தினால் இவள் தேகத்தில் இப்போது நான் வசிக்கத்தான்வேண்டும்' என்று தர்மத்தையும் எல்லாவேதவிதிகளையும் தம்குருவுக்கும் தமக்குமுள்ள தவத்தையும் ஆராய்ந்து குருபத்நியைக்காப்பதற்கு மனத்தில் இந்த நிச்சயம்செய்தார். ராஜனே! அந்தவிபுலர் எவ்விதமாகச் சிறந்த முயற்சியைச் செய்தாரென்பதைக் கேள். சிறந்ததவமுள்ள அந்த விபுலர் சிலாக்கியமான அங்கமுள்ள தம்குருபத்னிஉட்கார்ந்திருக்கும்போது கூடஉட்கார்ந்து விநோதக்கதைகளினால் அவளை ஸந்தோஷப்படுத்தினார். விபுலரும் தம்கண்களின் ஒளிகளை அவள் கண்களின் ஒளிகளுடன்சேர்த்து ஆகாயத்தில் காற்றுப்புகுவதுபோல அவள் தேகத்திற்புகுந்தார். உள்ளேபிரவேசித்த அம்முனிவர் அங்கத்தோடு அங்கத்தையும் முகத்தோடு முகத்தையும் சேர்த்துப் பிரதிபிம்பம்போல அசைவற்று இருந்தார். அவ்வாறு விபுலர் குருபத்நியின் தேகத்தைநிறுத்திக்கொண்டு காப்பாற்றுவதில் முயற்சியோடிருந்தார். அவள் அவரிருந்ததையறியவில்லை. வேந்தனே! மகாத்மாவான அந்தவிபுலருடைய குரு யாகத்தைமுடித்துக்கொண்டு வீட்டிற்குவருமளவும் விபுலர் அவளைக் காப்பாற்றினார்.

---

## எழுபத்தாறுவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(விபுலர்கதைத் தொடர்ச்சி.)

பிறகு, ஒருகால் தேவேந்திரன் இது தருணமென்று நினைத்துச் சிறந்தஉருவமெடுத்துக்கொண்டு அந்த ஆசிரமத்திற்குவந்தான். ராஜனே! விரும்பத்தக்கதுப்பற்றஉருவத்தையெடுத்துக் காட்சிக்கு மிக்க

இனியவனுகித் தேவேந்திரன் அவ்வாசிரமத்திற்குட்புகுந்தான். அவன் அசைவற்றும கண்இமையாமலும் சித்திரத்தில் எழுதினது போலஉட்கார்ந்திருக்கும்விபுலருடைய தேகத்தைக்கண்டான்; பிறகு அழகானகடைக்கண்ணும பருத்தநிதம்பங்களும ஸ்தனங்களும் தாமரையிதழ்போல அகன்றகண்களும் நிறைமதிக்கொப்பான முகமுமுள்ளருசிதேவியையும கண்டான. அவள் தேவேந்திரனைப்பார்த்து அவனுடையஉருவத்தினுல் ஆச்சரியமும் விருப்பமுங்கொண்டு விரைவாகஎதிர்கொண்டழைக்கவும், 'நீயார்?' என்று கேட்கவும தொடங்கினுள். ராஜனே! அவள் எழுந்திருக்கப்போகும்போது விபுலரால் அடக்கிநிறுத்தப்பட்டு அசையமுடியாமல்போனுள். தேவேந்திரன் அவளைப்பார்த்து மிக்க அழகான இன்சொல்லினுல பேசத்தொடங்கினுன். 'அழகியநகையுள்ளவளே! உன்னை நினைப்பதினுலுண்டான மதனயாதனையினுல் பீடிக்கப்பட்டு உனக்காகவந்த தேவேந்திரன் என்று என்னையறி. அழகானபுருவங்களையுடையவளே! ஆதலால், என்னிடம்சேர். காலம் கடந்துபோகிறது' என்றுன். விபுலமுனிவர் குருபத்னியின சரீரத்திலிருந்துகொண்டே தேவேந்திரனை கண்டார்; அவன் இவ்வாறு சொன்னதையும கேட்டார். ராஜனே! சிறந்தவளான அந்தருசிதேவி விபுலரால அடக்கப்பட்டு எழுந்திருக்கவும் பேசவும முடியாமற்போனுள். பிரபுவே! சிறந்தமகிமையுள்ள அந்தப்பூருகுவம்சத்தலைவர் தமகுருபத்னியின்எண்ணத்தையறிந்து தம்யோகசக்தியினுல் அவளைப்பலவந்தமாக அடக்கினுர். அவர் அவளுடைய எல்லாஇந்திரியங்களையும யோகசக்தியென்னும கயிற்றினுல் கட்டினுர். ராஜனே! அவருடையயோகவன்மையினுல் அறிவுமயங்கி மன்மதவிகாரமுண்டாகாமலிருக்கும் அந்தருசியைக்கண்டு வெட்கமுற்ற தேவேந்திரன் அவளை, 'வா; வா' என்று திரும்பவும அழைத்தான். பிறகு, அவள் அவனுக்கு மறுமொழி சொல்லக்கருதினுள். விபுலர் குருபத்னியின்வாக்கை மாற்றினுர். பிறகு, மதிபோன்ற அவள்முகத்தினின்று, 'ஓ! ஐயா! இங்குவந்தகாரியம யாது?' என்னும்திருத்தமானசொல் கிளம்பிற்று. அவள் தன்வசமில்லாமல அந்தச் சொல்லைச்சொன்னபிறகு நாணமுற்றுள். இந்திரன் மிகப்பயந்து துயரமுற்றிருந்தான். ராஜனே! அந்தஆயிரங்கண்ணையுடைய தேவேந்திரன் அவளிடத்தில அந்தவேறுபாட்டைக்கண்டு தன்னுடையதிவ்யஞானத்தினுல் பார்த்தான். வேறுனதம் சரீரத்திலிருந்தும கண்ணுடியில் பிரதிபிம்பம்இருப்பதுபோலக் குருபத்னியின்சரீரத்தினுள் வஸிக்கும் அம்முனிவரைக்கண்டான். பிரபுவே! உக்ரமானதவமுள்ள அம்முனி

வரைக்கண்டு இந்திரன் அஞ்சி வெட்கி நடுங்கினான். சிறந்ததவமுள்ள விபுலர் உடனே குருபத்தினியைவிட்டுத் தம் சரீரத்திற்புகுந்து நடுங்கின இந்திரனைப்பார்த்துப் பேசலானார். 'இந்திரியங்களையடக்காதவனே! புத்திகெட்டவனே! பாபஎண்ணமுள்ளவனே! புரந்தரனே! தேவர்களும் மனிதர்களும் உன்னை நெடுங்காலம் பூஜிக்கமாட்டார்கள். இந்திரா! கௌதமரால் பெண்குறிமுத்திரைகளினால் அடையாளஞ்செய்யப்பட்டு விடப்பட்டாயே. அது உனக்கு மறந்ததா? அல்லது, உன் மனத்திற்கு வரவேயில்லையா? நீ குழந்தைப்புத்தியுள்ளவனென்றும் மனத்தேர்ச்சியில்லாதவனென்றும் நிலையற்றவனென்றும் நானறிவேன். மூடனே! பாவியே! இவள் என்னால் காப்பாற்றப்படுகிறாள். வந்தபடியேசெல். மூடபுத்தியுள்ளவனே! என்தேஜஸினால் உன்னை இப்போது நான் எரித்துவிடமாட்டேனா? வாஸவனே! நான் உன்னிடம் தயையுள்ளவனாயிருப்பதனால் உன்னையெரிக்க விரும்பவில்லை மிக்கஉக்ரரும் சிறந்த அறிவுள்ளவருமான எனதுகுருவானவர் பாவஎண்ணமுள்ளஉன்னைக்கண்டால் கோபத்தினால்ஜ்வலிக்கும் கண்ணினால் இப்போதே எரித்துவிடுவார். சக்ரனே! இனி நீ இப்படிச்செய்யாதே. பிராம்மணர்களை நீ பூஜிக்கவேண்டும். பிரம்மதேஜஸின் சக்தியினால் பீடிக்கப்பட்டுப் பிள்ளைகள் மந்திரிகளுடன் அழிந்துபோகாதே. 'நான் [1]அமரன்' என்ற எண்ணங்கொண்டு பிரவிருத்திக்கிறாயன்றோ? அப்படி அவமதியாதே. தவத்தினால் ஸாதிக்கக்கூடாதது ஒன்றுமில்லை' என்றார். இந்திரன் மகாத்மாவானவிபுலர்சொன்ன அந்தச்சொல்லைக்கேட்டு வெட்கப்பட்டு யாதொருமறுமொழியும் சொல்லாமல் அங்கேயே அந்தர்த்தானமாயினான். அவன்போய்ச் சற்றுநேரத்திற்கெல்லாம், சிறந்ததவமுள்ள தேவசர்மாவானவர் தாம்நினைத்தபடி யாகத்தை முடித்துக்கொண்டு தம்ஆசிரமத்திற்கு வந்தார். ராஜனே! குருவானவர் வந்தஉடனே அவருக்கு இஷ்டமானகாரியத்தைச்செய்தவிபுலர் குற்றமில்லாமல் தம்மால்காக்கப்பட்ட குருபத்நியைக் குருவுக்குஒப்புவித்தார். சாந்தமானமனமுள்ளவரும் குருபக்தியுள்ளவருமானவிபுலர் பயமில்லாமல் குருவைநமஸ்கரித்து முன்போலவே பணிவிடைசெய்தார். களைப்புத்தீர்ந்து பார்யையோடுகூட உட்கார்ந்தகுருவுக்கு விபுலர் இந்திரன்செய்த அந்தக் காரியத்தைத் தெரிவித்தார். சிறந்தமகிமையுள்ள அந்தத்தேவசர்மா அதைக்கேட்டு விபுலருடைய நற்குணத்தினாலும் நடக்கையினாலும் தவத்தினாலும் இந்திரியஜயத்தினாலும் அவர்மேல் ஸந்தோஷமடைந்தார். ஸமர்த்த

[1] மரணமில்லாதவன்.

ரானதேவசர்மா விபுலருடைய குருபணிவிடையையும் குருபக்தியையும் தர்மத்தில் தவறாமையையும்கண்டு, 'நல்லது; நல்லது' என்று புகழ்ந்தார். தர்மாத்மாவும் பேரறிவாளருமான தேவ்சர்மாவானவர் தர்மத்தையே தலைமையாகக்கொண்ட சிஷ்யரைப்புகழ்ந்து வரங்கேட்கச் சொன்னார். குருபக்தியுள்ளவிபுலர் தர்மந்தவறாமலிருப்பதையே வரமாகக் குருவினிடம் பெற்றுக்கொண்டார்; குருவினால் விடைகொடுக்கப் பெற்றுச் சிறந்ததவத்தைச்செய்தார். சிறந்த தவமுள்ளதேவசர்மாவும் இந்திரனிடத்தில் பயமற்றவராகிப் பார்யையுடன்கூட ஜனமில்லாத ...ல் ஸஞ்சரித்தார்.

## எழுபத்தேழாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(விபுலர் கதைத் தொடர்ச்சி)

விபுலர் குருசொன்னதைச்செய்தபிறகு கடுந்தவம் செய்தார். சிறந்தசக்தியுள்ள விபுலர் பிறகு, தமக்குத் தவம் நிறைவேறினதாக நினைத்தார். ராஜனே! அந்தவிபுலர் அந்தக்காரியத்தினால் புகழையும் வரத்தையும்பெற்று ஸந்தோஷமடைந்து அரசமற்றவராகி ஸ்வர்க்கத்திலும் பூமியிலும் ஸஞ்சரித்தார். கௌரவனே! மகிமையுள்ளவிபுலர் தாம் குருவுக்குச்செய்த அந்தக் காரியத்தினாலும் பெருந்தவத்தினாலும் இரண்டு லோகங்களும ஜயிக்கப்பட்டதாக நினைத்தார். கௌரவனே! பிறகு, சிலகாலம் கடந்தபின் [1] ருசிதேவியை அவள்ஸகோதரி மிகுதியானதனங்களையும் தான்யங்களையும கொடுத்து அழைத்தாள். அக்காலத்திலேயே ஒருசிறந்ததெய்வப்பெண் மிக்க அழகான உருவமெடுத்துக்கொண்டு ஆகாயத்திற்சென்றாள். பாரதனே! அவள்தேகத்திலிருந்து உயர்ந்தமணமுள்ளபுஷ்பங்கள் அந்தத் தேவசர்மாவின் ஆச்ரமத்தின் அருகில் பூமியில் விழுந்தன. அரசனே! அழகானகண்களையுடையருசிதேவி உடனே அந்தப்புஷ்பங்களை எடுத்துக்கொண்டாள். அக்காலத்தில் அவளைச் சீக்கிரமாக அழைத்துப் போகும்படி அங்கதேசத்திலிருந்து தூதன் வந்தான். குழந்தாய்! அவளுடைய மூத்தஸகோதரியான பிரபாவதியென்பவள் அங்கதேசத்தரசனான சித்ரரதனுடையமனைவி. அவளால் அழைக்கப்பட்ட பெண்ணரசியான

[1] 'ருசிதேவியின்ஸஹோதரியின் கிருகத்தில் தனதான்யங்கள் மிகுதியுள்ள விவாகம் வந்தது' என்பது பழையவுரை.

ருசிதேவி அந்தப்புஷ்பங்களை முடியிற்சூட்டிக்கொண்டு அங்கராஜன் வீட்டிற்குச் சென்றாள். அழகியகண்களையுடைய பெண்ணரசியான அங்கராஜன்மனைவி அந்தமலர்களைக்கண்டபோது தனக்கு அந்தப் புஷ்பம்வேண்டுமென்று தன்னுடன்பிறந்தாளைக் கேட்டாள். மிக்க அழகானமுகமுள்ள அந்தருசிதேவி தன்ஸகோதரி சொன்னதையெல்லாம் தன்கொழுநருக்குச் சொன்னாள். தேவசர்மமுனிவர் அதையெல்லாம் ஏற்றுக்கொண்டார். பாரதனே! சிறந்ததவமுள்ளதேவசர்மா உடனே விபுலனைவருவித்து, 'புஷ்பத்திற்காகச்செல்; செல்' என்று கட்டளையிட்டார். ராஜனே! பெருந்தவமுள்ளவிபுலர் குருசொன்னதைச்சங்கியாமல், 'அப்படியேஆகட்டும்' என்றுசொல்லி ஆகாயத்திலிருந்து மலர்கள் எந்தஇடத்தில் முன்னேவிழுந்தனவோ அந்த இடத்திற்குச்சென்றார். அங்கே மற்றப்புஷ்பங்களும் வாடாமலேயிருந்தன. பாரதனே! அந்தவிபுலர் தம்தவத்தினால் கிடைத்தவையும் அருமையான மணமுள்ளவையும் அழகியவையுமான அந்தத் திவ்யபுஷ்பங்களை யெடுத்தார். அவர் அந்தப்புஷ்பங்களை யெடுத்துக்கொண்டு குருவின் சொல்லை நிறைவேற்றினார்; மனங்களித்து சண்பகமாவரிசைகள்நிரம்பின சம்பைநகருக்கு விரைவாகச்சென்றார். அப்பா! அவர் ஜனமில்லாதவனத்தில் இரண்டுமனிதர்கள் கையினால் கையைப்பிடித்துக்கொண்டு சக்கரம்போலச்சுற்றுவதைக் கண்டார். ராஜனே! அவர்களில் ஒருவன் மற்றொருவனுடைய அடிகள் தடுமாறச்செய்து விரைவாகச்சுற்றினான்; மற்றொருவன் அப்படிச்சுற்றவில்லை. அப்போது அவ்விருவருக்கும் சண்டையுண்டாயிற்று. ராஜனே! ஒருவன், 'நீ விரைவாகச்செல்லுகிறாய்' என்றான். மற்றொருவன், 'இல்லை' என்றான். 'நீ விழுந்தாய்; நீ விழுந்தாய்' என்று அவர்கள் ஒருவரையொருவர் சொல்லினர். இவ்வாறு அவர்கள்பகைத்து மாறுபட்டபோது அவர்களுள் சபதமும்நடந்தது. அவர்கள் உடனே விபுலரைக் குறிப்பிட்டு, 'அடே! நம்மிருவரில் எவன் பொய்சொல்லுகிறானோ அவனுக்குப் பரலோகத்தில் விபுலனென்னும் பிராம்மணன்கதிதான் வரும்' என்று சொல்லிக்கொண்டனர். இதைக் கேட்டு விபுலர் முகம்வாடினர். ராஜசிரேஷ்டனே! அப்போது விபுலர், 'நான் உக்கிரமானதவம்செய்திருக்கிறேன்; இந்தக்கடினமானசிரமத்தையும் அடைந்திருக்கிறேன். இவ்விரண்டு மனிதருக்கும் நான் என்ன தீங்குசெய்தேன்? எல்லாப் பிராணிகளும் வெறுக்கத்தக்ககதியை இவர்கள் இப்போது எனக்குச் சொன்னது ஏன்?' என்று நினைந்துகொண்டே தலைகுனிந்து மனம் குன்றித் தம்முடையபாவத்தைப்பற்றிநினைத்தார்.

அப்போதே வேறு ஆறுபுருஷர்கள் பொருளாசையும் கோபமுமுள்ளவர்களாகிப் பொற்காய்களாலும் வெள்ளிக்காய்களாலும் சூதாடக்கண்டார். முன்னிருவர்செய்தசபதத்தையே அவர்களும் செய்தனர். அவர்களும் விபுலரைக்குறிப்பிட்டே, 'அடே! நம்மில் எவன் பொருளாசைகொண்டு அக்கிரமம்செய்யநினைப்பானோ அவன் பரலோகத்தில் விபுலனுடைய கதியைத்தான் அடைவான்' என்றனர். கௌரவனே! அதைக்கேட்டும் விபுலர் தாம்பிறந்ததுமுதல் முன்செய்த கர்மத்தவறுதலைத் தம்மிடத்தில்காணவில்லை. ராஜனே! அவர் அவ்விதமான சாபத்தைக்கேட்டுத் தீயின்மேல் தீமூட்டப்பட்டதுபோல மனம்கொதித்துத் தியானம் செய்தார். குழந்தாய்! பலசொற்களைக்கேட்டு ஆராயும்போது, 'ருசிதேவியைக்காப்பாற்றினதனால் இது நேர்ந்தது' என்று அவர்மனத்தில் தோன்றிற்று. 'அங்கத்தை அங்கத்தோடும் முகத்தை முகத்தோடும் நான்சேர்த்திருந்து அந்த உண்மையைக் குருவுக்குச் சொல்லாமற்போனேன்' என்று நினைத்தார். சிறந்த பாக்கியமுள்ளவனே! கௌரவனே! இந்தஒருபிழை தம்மிடத்திலிருப்பதாக விபுலர் நினைத்தார். அது ஸரிதான்; ஸந்தேகமில்லை. குருபக்தியுள்ள அந்தவிபுலர் சம்பைநகருக்குவந்து குருவினிடம் புஷ்பங்களைஅளித்து முறைப்படி குருவைப்பூஜித்தார்.

## எழுபத்தெட்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(விபுலர்கதைத் தொடர்ச்சி.)

அரசனே! சிறந்த மகிமையுள்ள தேவசர்மாவானவர் அந்தச்சிஷ்யர்வரக்கண்டு சொன்னசொல்லைக் கேள். 'சிஷ்யனே! அந்தப்பெருவனத்தில் இருவரைக்கண்டாயா? ஸமர்த்தர்களான அவர்களுக்கும் உன்மனத்திற்கும் ருசிதேவிக்குந்தானே உன்னைப்பற்றித்தெரியும்?' என்றுகேட்டார். விபுலர், 'பிரபுவே! பிரம்மரிஷியே! நீர் என்னைக் கேட்பது ஸரி. என்னை ஸரியாக அறிந்த அவ்விரண்டுபுருஷர்களும் மற்ற ஆறுபுருஷர்களும் யாவர்?' என்றுகேட்க, தேவசர்மா சொல்லலானார். 'பிராம்மண! சக்கரம்போலச் சுற்றிக்கொண்டிருந்த இருவரைக் கண்டாயே; அவர்கள் பகலும்இரவும்என்றறி. அவர் உன்பாவத்தையறிபவர். பிராம்மண! காய்களினால் உற்சாகத்துடன் சூதாடினபுருஷர்கள் ருதுக்களென்றறி. அவர்களும் உன்பாவத்தையறிந்திருப்பவர். பிராம்மண! ஒருமனிதன் பாவத்தில் எண்ணம்வைத்துப் பாவமான

காரியத்தை மறைவாகச்செய்து, 'நம்மை யாருந்தெரிந்துகொள்ளவில்லை' என்று நினைத்துக் கவலையற்றிருக்கலாகாது. மறைவாகப் பாவகாரியத்தைச்செய்யும்மனிதனை ருதுக்களும் இரவுபகல்களும் எப்போதும் பார்க்கின்றனவல்லவா? செய்தகாரியத்தைச் செய்தபடி எனக்குச்சொல்லாமலிருக்கும் உனக்குப் பாவஞ்செய்தவனுக்குவரும் லோகங்களே வரும். நீ செய்தகருமத்தைக் குறித்து நான் அறியாமலே களிப்பினால் நகைத்துக்கொண்டிருப்பதைக்கண்டு எனக்கு நினைப்பூட்டுவதற்காகவே நீ செவியுற்றசொல்லை அவர்கள் மொழிந்தார்கள். புருஷனிடத்திலுள்ள பாவச்செய்கையையும் நல்லொழுக்கமுடைய நல்லசெய்கையையும் ருதுக்களும் இரவுபகல்களும் எப்போதும் அறிகின்றன. பிராம்மணா! நீ வியபிசாரத்திற்கொப்பான செய்தகாரியத்தை எனக்குச் சொல்லாமலிருந்தாய் என்றறிந்து அவர்கள் உனக்கு இவ்வாறுதெரிவித்தனர். அதனால்தான் நீ செய்தகாரியத்தை எனக்குச் சொல்லாமலிருந்ததற்காகப் பாவஞ்செய்தவனுக்குவரும் லோகங்களே உனக்கும்வரும். பிராம்மணா! கெட்டநடையுள்ளபெண்ணானவள் கோபமுற்றவளாகி நான் காப்பாற்ற முடியும் நீ பிழையொன்றுஞ் செய்யவில்லை. அதனால் உன்னிடத்தில் அன்புள்ளவனாயிருக்கிறேன். மனத்திற்குற்றமற்றவர்களுக்குப் பாவம் வாராது. உனக்கும் அப்படியேதான். மனைவி வேறுவிதமான சிநேகத்தினால் தழுவிக்கொள்ளப்படுகிறாள். மகள் மற்றொருவித சிநேகத்தினால் தழுவிக்கொள்ளப்படுகிறாள். ஒருபெண்ணின்உருவத்தில் ஸஞ்சாரிக்கும காமுகனுக்கும் எண்ணங்கள் வெவ்வேறு. மனத்தையடக்காமையினால்தான் பெரும்பாலும ஜனங்கள் மோசம்போகின்றனர். உலகத்தில் வாயுமிழ்நீரை எச்சலென்று அருவருப்பதும் பெண்வாயினுள்ள கள்ளுக்கு ஆசைப்படுவதும இருக்கின்றன. கட்டுப்படாத கெட்டமனமுள்ளவர்களுக்கு மந்திரமுமில்லை; ஆத்மாவுமில்லை; தெய்வமுமில்லை. பெண்ணாசை எனதுமென்றுபற்றுபொருளாசை இவைகளினால் கண்மூடப்பட்டுக் கருமஞ்செய்பவர்களுக்கு அந்தப்பெரும்பலன் கிடைக்காது. உள்ளே களங்கமில்லாமல பரிசுத்தனான நீ ருசியினுள்பிரவேசித்ததனால் கெடுக்கப்படவில்லை. பிராம்மணோத்தமனே! நீ கெட்டநடையுள்ளவன் என்று கண்டிருப்பேனாயின் உன்னைக் கோபத்தினால் சபித்திருப்பேன். எனக்கு அந்தவிஷயத்தில் ஸந்தேகமில்லை. பெண்களுக்கும் புருஷனிடத்தில் பற்றிருக்கிறது. புருஷர்களுக்கு அதுவே பூர்ணமானலாபம். நீ வேறுவிதமாக ரக்ஷித்திருப்பாயாயின் என்சாபம் உனக்கு வந்திருக்கும்; எனக்குத் தெரிந்துமிருக்கும்.

அப்பா! புத்ரனே! ருசியானவள் உன்னால்காப்பாற்றப்பட்டு என்னிடத்திலும் ஒப்பிக்கப்பட்டாள். எனக்கு உன்மேல் அன்பு இருக்கிறது. நீ ஸுகமாக ஸ்வர்க்கம்செல்வாய்' என்றார்.

தேவசர்மமகரிஷி விபுலனைப்பார்த்து அன்புடன் இவ்வாறுசொல்லி மனைவியோடும் சிஷ்யனோடும் ஸ்வர்க்கத்தையடைந்து மகிழ்ந்திருந்தார். ராஜனே! இந்தச்சரித்திரத்தை முற்காலத்தில் கங்கைக் கரையில் ஒரு பேச்சு நடந்தபோது மார்க்கண்டேயமகாமுனிவர் எனக்குச்சொன்னார். குந்திபுத்ரனே! ஆதலால், உனக்குச் சொல்லுகிறேன். பெண்களை எப்போதும் பாதுகாக்கவேண்டும். நல்லதுகெட்டதுஇரண்டும் அவர்களிடத்தில் எப்போதும் காணப்படுகின்றன. அரசனே! மிக்கபுகழ்க்குரிய கற்புள்ளவர்களென்று எல்லாராலும ஒப்புக்கொள்ளப்பட்டு உலகத்திற்குத் தாய்கள்போலிருக்கும் மாதர்கள் காடுகளும செடிகளும் நிரமபின இப்புவனியைத் தாங்குகின்றனர். அரசனே! கற்பில்லாதவர்களும் ஒழுக்கங்கெட்டவர்களும் குலத்தைக்கெடுப்பவர்களும் பாவஞ்செய்யத்துணிந்தவர்களுமானபெண்களை உடம்பினின்றுபிறந்த துர்லக்ஷணங்களினாலேயே அறியலாம். ராஜசிரேஷ்டனே! அவர்களை இவ்வகையாகக்காப்பது மகாத்மாக்களுக்குத்தான்கூடும். மற்றவகையில் பெண்களைக்காப்பது முடியாது. புருஷஶ்ரேஷ்டனே! இவர்கள் கொடியவர்கள்; அதிகசாமர்த்தியமுள்ளவர்கள். இவர்களுக்கு அன்புக்குரியவன் யாருமில்லை. புணர்ச்சியில்சேருகிறவரெல்லாம் அன்பர்களே. பரதஶ்ரேஷ்டனே! இவர்கள் பிசாசங்கள்; வசப்படுத்தமுடியாதவர்கள்; நன்றிகெட்டவர்கள். பாண்டுபுத்ரனே! இவர்களுக்கு ஒருபுருஷனிடத்திலும் அன்புண்டாவதில்லை. அரசனே! புருஷர்கள் இவர்களிடத்தில் நேசத்தையும் கோபத்தையும் செய்யத்தக்காது. ராஜனே! இந்திரியஜயம்செய்யச்சக்தியில்லாதவர்கள் இல்லறதர்மத்தைவிடாமல் [1]ருதுகாலத்திலும் பர்வமுதலானகுற்றங்களை நீக்கி அனுபவிக்கவேண்டும். கௌரவபுத்திரனே! இதற்கு மாறாகச்செய்யும்மனிதன் கெடுவான். ராஜசிரேஷ்டனே! எல்லாவகையாலும் ஜாக்ரதையுள்ளவன் எல்லாக்காரியங்களிலும் ஸரியாயிருப்பான். ஆனால் அந்தவிபுலர் ஒருவர்தாம் பெண்ணைப்பாதுகாத்தவர். அரசனே! பெண்களைக்காப்பாற்றும்திறமையுள்ளவன் இம்மூவுலகங்களிலும் வேறெவனுமில்லை" என்றார்.

---

[1] 'அந்ருதௌ' என்பது மூலம்; 'ருதுவில்லாதகாலத்திலும் பர்வமுதலிய கெட்டகாலங்களை நீக்கிச் சம்பளமின்றிவேலைபார்ப்பவன்போலப் பிரியமில்லாமலே சிரமத்தைவகித்துத் தர்மத்தைஅனுஸரித்து அனுபவிக்கவேண்டும்' என்பது பழையஉரை.

## எழுபத்தொன்பதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி)

(விவாஹமுறை முதலியன.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! எல்லாத்தர்மங்களுக்கும் ஸந்ததிக்கும் இல்வாழ்க்கைக்கும் பித்ருக்கள் தேவர்கள் அதிதிகள் இவர்களின் பூஜைக்கும் முதற்காரணமாயுள்ள அதைத் தனக்கு உரைப்பீராக. அரசரே! கன்னிகையை எப்படிப்பட்டவனுக்குக்கொடுப்பது தகுமென்பதுதான் எல்லாத்தர்மங்களிலும் முக்கியமாகக் கவனிக்கவேண்டியதர்மமென்று நினைக்கப்படுகிறது" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"யுதிஷ்டிரா! குணத்தையும் ஒழுக்கத்தையும் கல்வியையும் குலத்தையும் ஆசாரத்தையும் நன்றாக அறிந்து இந்தக்குணங்களுள்ளவனுக்குத் தானமாகக் கன்னிகையைக் கொடுக்கவேண்டுமென்பது ஸாதுக்களான பிராமணர்களுக்கு எப்போதுமுள்ள [1] தர்மம். அப்படியே விவாஹஞ்செய்துகொள்ளத் தகுதியுள்ளவனை யழைத்து அவனுக்குப் பொருளுதவிசெய்து கன்னிகையைக்கொடுப்பது யோக்கியர்களான க்ஷத்ரியர்களுக்குப் பரம்பரையான [2] தர்மம். யுதிஷ்டிரா! தந்தை தன்னுடைய அபிப்பிராயத்தைவிட்டுக் கன்னிகை விரும்பினவனுக்கு அந்தவாளல்விரும்பப்பட்ட கன்னிகையைக் கொடுக்கலாம். இதைத் தர்மமான காந்தர்வவிவாகமென்று வேதமறிந்தவர் சொல்லுகின்றனர். ராஜனே! மிகுதியானபொருளைக்கொடுத்துக் கன்னிகையின் தாய்தந்தைமுதலானவர்களைத் திருப்திசெய்வித்துக் கன்னிகையை விலைக்குவாங்கிக்கொள்வது ஆஸுரவிவாகதர்மமென்று அறிஞர் சொல்லுகின்றனர். அப்பா! கொன்றும் சிரங்களைக் கொய்தும் பந்துக்கள் அழத்தானும் அழுதுகொண்டிருக்கும் கன்னிகையை வீட்டிலிருந்து வலிந்து கொண்டுபோவது ராக்ஷஸவிவாகமென்று சொல்லப்படுகிறது. இரவில் தூங்கியும் குடியால்மயங்கியும் ஜாக்ரதையில்லாமலுமிருக்கும்கன்னிகையை ரகஸ்யமாகச்சேருவது விவாகங்களுள் மிக்கபாவமும் இழிவுமானபைசாசவிவாகமென்று சொல்லப்படுகின்றது. யுதிஷ்டிர! இவ்வைந்துவிவாகங்களுள்ளும் முன்மூன்றும் தர்மமானவை. பைசாசம் ஆஸுரம் இரண்டும் அதர்மமானவை. அவற்றை எவ்வகையிலும் செய்யலாகாது. புருஷசிரேஷ்

[1] பிராம்மவிவாகம். [2] பிராஜாபத்யவிவாகம்.

டனே! பிராம்மம் க்ஷத்ரியர்க்குரிய பிராஜாபத்யம் காந்தர்வம் இம் மூன்றும் தர்மமானவை. இவற்றைத் தனித்தனியாகவும் சேர்த்தும் செய்யலாம். இதில் ஸந்தேகமில்லை. பிராம்மணனுக்கு மூன்றுவர்ணத் துப் பெண்களும் மனைவிகளாகலாம்; க்ஷத்திரியனுக்கு இரண்டு வர் ணத்தவர்களுமாகலாம். வைசியன் தன் ஜாதியிலேயே மனைவியை அடையவேண்டும். இவர்களிடத்தில் உண்டாகும் ஸந்ததி ஸமமைக் காகும். பிராம்மணனுக்குப் பிராம்மணஜாதிப்பெண்ணும் க்ஷத்ரிய னுக்கு க்ஷத்ரிய ஜாதிப்பெண்ணும் மிகச் சிறந்தவள். போகத்திற் காகச் சூத்திரஜாதிப்பெண்ணும் ஆகலாமென்று சிலரும் கூடா தென்று மற்றுஞ் சிலரும் கூறுகின்றனர். சூத்திரப்பெண்ணினிடத்தில் ஸந்ததியுண்டாவதைப் பெரியோர் அங்கீகரிப்பதில்லை. சூத்திரப் பெண்ணிடம் ஸந்ததியையுண்டாக்கும் பிராம்மணன் பிராயச்சித்தத் திற்குரியவனாகச் சாஸ்திரத்தில் விதிக்கப்படுகிறான். ஸந்ததியை விரும்புகிறவர்கள் தோஷமில்லையாயினும் மிகச் சிறிய பெண்ணை விவாகம் செய்துகொள்ளுவதில்லை. ஆசாரகர்மத்தை யனுஷ்டிப்பவர் கள் அவளுக்கு உள்ளம் சுத்தமாயிருக்குமென்று நினைந்து வேறு கோத்திரத்தில் பிறந்தவளும் அதிக ஸந்நிதி முதலிய குற்றங்களில் லாதவளுமான மிகச் சிறிய பெண்ணையும் விவாகஞ்செய்துகொள்ளு கின்றனர். காமபோகத்திற்குச் சாஸ்திரத்தினால் விலக்கப்பட்டவளையும் வேறுபெண் கிடைக்காதபோது சிலர் அங்கீகரிக்கின்றனர். முப்பது பிராயமுள்ள புருஷன் [1]பெண்ணின் லக்ஷணங்கள் வெளிப்படாத பத் துப்பிராயமுள்ள பெண்ணை விவாகஞ்செய்துகொள்ளவேண்டும். இரு பத்தொருவயதுள்ளவன் ஏழுவயதுப் பெண்ணையும் விவாகஞ்செய்ய லாம். பரதசிரேஷ்டனே! எவளுக்கு உடன்பிறந்தானும் தந்தையும் இல்லையோ அவளை ஒருகாலும் மணம்புரியலாகாது. ஏனெனில், அவளுக்குப் [2]புத்திரிகா தர்மமிருக்கும். ஒருகன்னிகை ருதுவான பிறகு மூன்றுவருஷம் பார்க்கவேண்டும். நாலாவதுவருஷமவந்தால் தானே கணவனைத் தேடிக்கொள்ளலாம். பரதசிரேஷ்டனே! அவ ளுடைய ஸந்ததியும் போகமும் இழிவாவதில்லை. இதற்கு மாறாக நடப் பவள் [3]குடும்பத்தார் இகழத்தக்கவளாவாள். தன் தாயாருக்கு [4]ஸபி ண்டையாகவும் தகப்பனுருக்கு [5]ஸகோத்ரையாகவும் இல்லாத

---

[1] 'நக்னிகாம்' என்பது மூலம். 'மேலாடையில்லாதவள்; பெண்ணிலக் கணங்களுண்டாகாதவள்; அல்லது, உடைதரிக்க வேண்டுமென்று தெரியாத வள்' என்பது பழைய உரை. [2] ஆதிபர்வம் 837 - ம் பக்கம் குறிப்பிற் காண்க. [3] 'ப்ராஜாபதே:' என்பது மூலம்; 'பிரம்மதேவரால் இகழத்தக்கவள்' என்றும் கொள்ளலாம். [4] இரத்தஸம்பந்தமுள்ளவள். [5] ஒருகோத்ரமுள்ளவள்.

பெண்ணை விவாகம்செய்துகொள்ளவேண்டும். அதுதான் தர்மமென்று மனு சொல்லுகிறார்" என்றார். யுதிஷ்டிரர், "பிதாமஹரே! ஒருவன் கன்னிகாசுல்கம கொடுத்திருக்கிறான்; மற்றொருவன் கொடுப்பதாகச் சொல்லுகிறான். வேறொருவன் தன்வன்மைபற்றிக் கன்னிகையைத் தனக்குப் பேசுகிறான். மற்றொருவன் தனத்தைக் காண்பிக்கிறான். இன்னும்ஒருவன் பாணிக்ரஹணம் செய்கிறான். அந்தப்பெண் இவர்களில் எவனுக்குப் மனைவியாவள்? இந்தவிஷயத்தில் உண்மையைத்தெரிந்துகொள்ள விரும்புகிறவர்களுக்கு நீர் கண்ணாயிருக்கக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"மானிடலோகத்தில் மந்திரங்களுடன் ஸங்கல்பித்துச்செய்த எந்தஒருகருமம நல்லதிற்குரியதாகக் காணப்படுகிறதோ அதில் பொய்சொல்வது பாதகமாகும். மனைவி கணவன் ரித்விக்கு ஆசாரியன் சிஷ்யன் உபாத்தியாயன் இவர்களைவரும பொய்சொன்னால் தண்டிப்பதற்குரியவர். சிலர் [1] அப்படியில்லையென்கிறார்கள் தனக்குஇஷ்டமில்லாமல் எதையும் [2] ஒத்துக்கொள்ளுவதை மனு ஸரியென்றுசொல்லவில்லை. பொய்யாகத் தர்மத்தைமைப்பது அபகீர்த்தியையும் பாவத்தையும்தரும். [3] ஒருவனிடத்தில் நிலையாயில்லாமையே குற்றம். அப்படியிருந்தால் அந்தக்கன்னிகை எவனுடையதாகப்படலாம்? பாரதனே! எந்தக்கன்னிகையைத் நாமத்தையனுஸரித்துத் தானமாகவாவது கிரயமாகவாவது வாங்குகின்றனரோ அவள்விஷயத்தில் அவளுடைய பந்துக்கள் ஒப்புக்கொண்டபிறகு மந்திரத்தையும் ஹோமத்தையும் பிரயோகிக்கவேண்டும். அப்படியானால்தான் அந்தமந்திரங்கள் பயன்படும். கொடுக்கப்படாதபெண்விஷயத்தில மந்திரங்கள் எவ்வகையிலும் பயன்படுவதில்லை. மந்திரங்களால் அங்கீகரிக்கப்பட்டபிறகு, மனைவியும் கணவனும் மந்திரபூர்வமாக ஒருவருக்கொருவர் செய்துகொள்ளும்ஏற்பாடுதான் மிகப்பெரிதென்று சொல்லுகின்றனர். பர்த்தாவானவன் தனதுபாரியை [4] தேவர்களால் கொடுக்கப்பட்டவள் என்று தர்மசாஸ்திரத்தினால் அறிகிறான். அதைத்தவறுகிறவன் தேவவாக்கையும் மனுஷ்யவாக்கையும பொய்யாக்கித் தள்ளிவிடுகிறான்" என்றார்.

---

[1] அதாவது, பெரியோர்களைத் தண்டிக்கத்தகாது என்கிறார்கள்.

[2] தாக்ஷிண்யத்துக்காக ஒத்துக்கொள்வது.

[3] ஒருவனிடத்தில் அப்போது நிச்சயமாகத் தோஷம் எதனால்வராமலிருக்கும்?' என வும்கொள்ளலாம்.

[4] சந்திரன் கந்தர்வனிடத்திலும் கந்தர்வன அக்நியினிடத்திலும் கொடுத்தபிறகு அக்நி மனுஷ்யனுக்குக் கொடுப்பதாக மந்திரத்திற்சொல்லியிருப்பதையறிக.

யுதிஷ்டிரர், "கன்னிகைக்குச் சுல்கம்வாங்கினபிறகு அறம்பொருளின்பம் நிரம்பின சிறந்தவரன்வருவனாயின் பொய்சொல்லலாமா? கூடாதா? இருவகையிலும் குற்றம்வருவதாகிய இந்தக்காரியத்தில் எதைச்செய்தால் நல்லது செய்தவனாவான்? இதுதான் எல்லாத் தர்மங்களிலும் முக்கியமாக அறியவேண்டியதர்மமென்று நாங்கள் நினைக்கிறோம். உண்மையை அறியவிரும்பும் எங்களுக்கு நீர் கண்ணாகக் கடவீர். நீர் சொல்லுவதை மேன்மேலும்கேட்க ஆசையுண்டாகிறது. ஆதலால், இவைகளையெல்லாம் சொல்லக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"கன்யாசுல்கத்தையே நிச்சயத்திற்குக்காரணமென்று நினைத்திருக்கலாகாது. அதனால், அதில் பொய்யில்லை. யோக்யர்கள் சுல்கத்தையேவிரும்பிக் கன்னிகாதானம்செய்வது ஒருபோதுமில்லை. கன்னிகையின்பந்துக்கள் (முதுமைமுதலிய) வேறுதன்மையுள்ளவரனைச் சுல்கம்கேட்கிறார்கள். [1]'பெண்ணுக்கலங்காரங்களைச்செய்து கல்யாணம் செய்துகொள்'என்றுசொல்லி அதற்குடன்பட்டவனுக்கு அவளைக்கொடுப்பது சுல்கமுமாகாது; விக்ரயமுமாகாது. கன்னிகையை வாங்கிக்கொள்ளுகிறவன் பொருள்கொடுக்கவேண்டுமென்பது நெடுநாளாயுள்ளதர்மம். 'உனக்குக் கன்னிகையைக்கொடுப்பேன்' என்று முதலில்சொன்னாலும் முதலிற்சொல்லாமலிருந்தாலும் அவசியமான போதுசொன்னாலும் அது நிச்சயமானசொல்லாகாது. ஆதலால், பாணிக்கிரகணம் ஆகும்வரையில் ஒருவருக்கொருவர் கேட்டுக்கொண்டிருக்கின்றனர். இது தேவர்களால் கன்னிகைக்கு முன்னமே கொடுக்கப்பட்டவரமென்று நாம் கேட்டிருக்கிறோம். கன்னிகையினால் விரும்பப்படாதவனுக்குக் கன்னிகையைக் கொடுக்கலாகாதென்பது ரிஷிகளால் விதிக்கப்பட்டிருக்கிறது. ஏனெனில், காமஸம்போகத்தைக் காரணமாகவுடைய ஸந்ததிக்குக் கன்னிகைதானே ஆதாரமென்று நான் நினைக்கிறேன். விவாகஞ்செய்துகொண்ட ஸ்த்ரீபுருஷர்கள் உடப்பழகினபிறகும் பலகுற்றங்களிருப்பதைக் காண்பதனால் சுல்கம் நிச்சயத்திற்குக் காரணமாக ஒருகாலுமிருந்ததில்லை. அதைப்பற்றிச் சொல்லுகிறேன்: கேள். நான் அங்கர், மகதர், காசியர், கோசலர் ஆகிய ராஜர்கள் எல்லாரையும்வென்று இரண்டுகன்னிகைகளை விசித்ரவீரியனுக்குக் கொண்டுவந்தேன். அவர்களில் ஒருத்திக்குப் [2]பாணிக்கிரகணமாயிற்று; மற்றொருத்திக்குச் [3]சுல்கமாத்திரம்

[1] விவாஹம்செய்துகொண்டு அனுகூலையாக ஆபரணங்களை அவளுக்குக் கொடுக்கவேண்டுமென்று கன்னிகையைக்கொடுப்பது எனறும்கொள்ளலாம்.

[2] அம்பாலிகை அம்பிகையிருவரும் ஒருவகைக்குணம்பற்றி ஒன்றாகச் சொல்லப்பட்டனர். [3] பீஷ்மர் ஜயித்துக்கொணர்ந்தமையால் அம்பைக்குச் சுல்கமாத்திரம் கொடுக்கப்பட்டிருந்தது.

கொடுக்கப்பட்டிருந்தது. கௌரவரும் என்பிதாவுமாகிய பாஹ்லீக ராஜர் அந்தக் கன்னிகைகளில் பாணிக்கிரகணம்செய்யப்படாதவளை அங்கேயேவிட்டுவிடலாமென்றும் மற்றவளை விவாகம்செய்யலாமென்றும் சொன்னார். என்பிதாவின்சொல்லில் நான் ஸந்தேகப்பட்டு மற்றவர்களையும் கேட்டேன். அந்த என்பிதாவுக்குத் தர்மமிருக்கவேண்டுமென்பதுபற்றி எனக்குவிருப்பம் மிக அதிகமாயிருந்தது. ராஜனே! அதனால், ஆசாரத்தைநடத்தவிரும்பினநான் ஆசாரத்தை ஸரியாகத் தெரிந்துகொள்ளவிரும்புகிறேனென்று பலமுறைசொன்னேன். மஹாராஜனே! நான் இந்தச்சொல்லைச்சொன்னபிறகு தர்மத்தைநடத்துகிறவரிற்சிறந்தவரான எனதுபிதாவானபாஹ்லீகர், 'உங்களுக்குக் கன்னியாசுல்கத்தினாலேயா நிச்சயம்? பாணிக்கிரகணத்தினால் இல்லையென்றால் சுல்கம்வாங்கிக்கொண்டவன் அக்கியில்பொரிஹோமம்செய்பவனை வேறுவரனைத் தேடலாமென்று தர்மசாஸ்திரம் சொல்லுகிறது. தர்மசாஸ்திரம்தெரிந்தவர்கள் வாய்ச்சொல்லை நிச்சயமாகச் சொல்லவில்லை. நிச்சயம் சுல்கத்தினாலன்றிப் பாணிக்கிரகணத்தினாலன்றென்பவர்களுக்கும் பகிரங்கமாகப் பேசுவதற்குமட்டுமாகும்; கன்னிகாதானத்தைத் தீர்மானப்படுத்துவதாகிறதில்லை. சுல்கத்தையே க்ரயமாகநினைப்பவர் தர்மந்தெரிந்தவராகார். அவர்களுக்குக் கன்னிகையைக் கொடுக்கவுமாகாது. அப்படிப்பட்ட கன்னிகையை வாங்கவுமாகாது. பார்யையை விற்பதும் வாங்குவதும் எவ்வகையிலும்தகா. தாஸிகளைப்போலக் கன்னிகைகளை விற்றுக்கொண்டும் வாங்கிக்கொண்டுமிருக்கும் பாப எண்ணமுள்ள பொருளாசைக்காரர்களுக்குத்தான் சுல்கமே நிச்சயமாகும். இந்தவிஷயத்தில் ஸத்யவான் என்னுமரசனைப்பார்த்து, ஜனங்கள், 'மிகத்தெரிந்தவனே! சுல்கம் வாங்கப்பட்ட கன்னிகைக்குச் சுல்கம்கொடுத்தவனிறந்துபோனால் வேறொருவன் பாணிக்கிரகணம்செய்யலாமா? இவ்விஷயத்தில் எங்களுக்குத் தர்மஸந்தேகமிருக்கிறது. அதை நீ போக்கக்கடவாய். நீ அறிந்தவர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டவனல்லையோ? உண்மையைத்தெரிந்துகொள்ளவிரும்பும் எங்களுக்கு நீ கண்ணாயிருக்கக்கடவாய்' என்றுகேட்டனர். இவ்வாறு கேட்கின்ற ஜனங்கள் எல்லாரையும்பார்த்து, ஸத்யவான், 'யாருக்குஇஷ்டமோ அவனுக்குக் கன்னிகையைக் கொடுக்கலாம். அதில் ஸந்தேகப்படவேண்டியதில்லை. சுல்கம்கொடுத்தவன் ஜீவித்திருக்கையிலேயே இப்படிச்செய்கிறார்கள். இறந்தவன்விஷயத்தில் ஸந்தேகமேயில்லை. (பாணிக்கிரகணம்) செய்யப்பட்ட கன்னிகையானவள் மைத்துனனையடையவாவதுவேண்டும்; அல்லது, பாணிக்கிரகணம்செய்தவனையே யனுஸரித்

துத் தவம்செய்யவாவதுவேண்டும். ஏனெனில், அவள் பாணிக்கிர கணம்செய்தவனுக்கு உரியவளாயினுள். சிலர் (வரனிறந்தஸந்தர்ப்பத்தில்) மைத்துனனைச்சேரவேண்டுமென்றே விதிக்கின்றனர்; மற்றும் சிலர் இஷ்டமிருந்தால் சேரலாமென்றுகூறுகின்றனர். இப்படிச்சொல்லுகிற இருவகைத்தர்மசாஸ்திரத்தாரும் பாணிக்கிரகணம்செய்வதற்கு முன்னர் ஸந்தர்ப்பம்நேரிடுமாயின் மேற்சொன்னநிச்சயத்தை ஒத்துக்கூறுகின்றனர். எல்லாமங்களங்களுக்கும் மந்திரங்கள் காரணம். பொய்சொல்வது பாவம். பாணிக்கிரகணமந்திரங்கள் [1] ஏழாவதடியில்தான் முடிவுபெறும். ஜலத்தோடுதானம்செய்யப்பட்டுப் பாணிக்கிரகணம் செய்யப்பெற்றபிறகுதான் அவனுக்கு அவள் மனைவியாவாள். கன்னிகாதானத்தைவிதிக்கும் தர்மசாஸ்திரஜ்ஞர்களே இதை இவ்விதமாகத்தான் நிச்சயிக்கின்றனர். பிராம்மணோத்தமன் தனக்கு அனுகூலமானவளும் வசப்பட்டவளும் சகோதரனால் அக்நிசாக்ஷியாகக் கொடுக்கப்பட்டவளுமாகியபார்யையைச் சாஸ்திரப்படி அக்நிப்பிரதக்ஷிணஞ்செய்து விவாகம்செய்துகொள்ளவேண்டும்' என்றான்" என்றார்.

## எண்பதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(சுல்கம்வாங்கினகன்னிகை கணவனில்லாவிடில் செய்யவேண்டிய விதியும், பெண்களுக்குத் தாயபாகமுதலியவையும்.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! [2]கன்னிகைக்குச் சுல்கம்வாங்கின பிறகு வரன் இல்லாவிடின் அவளுக்குச் செய்யவேண்டியதென்ன? அதனை எனக்குச் சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"பிள்ளையில்லாததகப்பன் மிக்கபொருள்வாங்கிக்கொண்டு [3] அந்தப்பெண்ணையே எதிர்பார்த்திருந்தாலும் அல்லது அந்தப்பெண்ணை [4] சுல்கம்வாங்கினவளாயிருந்தாலும் சுல்கம்கொடுத்தவனால் அவள்

---

[1] விவாஹத்தில், ஸப்தபதிஎன்பது ஒருக்ரியை.

[2] சுல்கம் கொடுத்தவன் தேசாந்தரம் சென்றிருந்து அவனுக்குப் பயந்து வேறுயாரும் கன்னிகையை வரியாமலிருந்தால் தகப்பன் செய்யவேண்டியதென்னவென்பது கேள்வியின் கருத்து.

[3] அந்தப்பெண்வயிற்று ஸந்ததியையே.

[4] 'சுல்கம் வாங்காமலிருந்தாலும்' என்பது வேறுபாடம்.

விலக்குவாங்கப்பட்டவளாகிருள். அவள் கூடியவரையில் [1] நியாயமான வழியினுல் அந்தத்தகப்பனுக்காக ஸந்ததியையடைய விரும்பவேண்டும். ஆதலால், அவள்விஷயத்தில் மந்திரபூர்வகமான விவாகஸம்ஸ்காரத்தை (வேறு) யாரும் செய்யலாகாது. [2] தகப்பனிடத்திலேயே அந்தக்கன்னிகையைக்கேட்க அவன்கட்டளேயினுல் அவள் அதை ஒத்துக்கொண்டவள். தர்மந்தெரிந்தசிலர் அந்தப்பிதாசெய்த காரியத்தை ஒப்புக்கொள்ளுகின்றனர்; மற்றும்சிலர் ஒப்புவதில்லை. சிலயோக்கியர்கள் இப்படிச்செய்யவில்லை; மற்றும்சிலர் ஒருகாலத்தில் செய்துமிருக்கின்றனர். ஸாதுக்களுடைய ஆசாரந்தான் தர்மத்தையறியும் வகைகளில் மிகச்சிறந்தது. இந்தவிஷயத்தில் விதேகதேசத்தரசரும் மகாத்மாவுமானஜனகராதுபேரனுகிய ஸுக்ரதுஎன்பவன் ஒருவாக்யம் சொல்லியிருக்கிருன். 'அயோக்கியர்களால் அனுஷ்டிக்கப்பட்டவழியைப்பற்றிச் சொல்வதும் கேட்பதும் ஸந்தேகப்படுவதும் எப்படிக்கூடும்? யோக்கியர்களுடையமார்க்கத்தையே இப்படிப்பட்டதென்று கண்டறியவேண்டும். ஆஸுரவிவாகத்தினுல் கன்னிகையைக் கொடுப்பதென்னும் தர்மமானது தர்மத்திற்குவிரோதந்தான். முந்தினவர்கள்செய்தகாரியத்திலும் இந்தவிஷயத்தை நாம் கேட்டிலம். மனைவி கணவன் என்னும் ஸம்பந்தமானது பெண் ஆண் இருவருக்கும் ஒன்றுதான். சேர்க்கையின்பமும் தர்மமும் இருவருக்கும் ஒன்றுதான்' என்று அவ்வரசன் சொன்னுன்" என்ருர். யுதிஷ்டிரர், "ஒருதந்தைக்குப் பெண்ணும் புத்ரனைப்போலாகத்தகுந்தவளா ? ஆனுல், அவள் தன்முன்னேருடைய ஆஸ்தியை என்னமுறையால் அடைகிருள் ?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானுர்.

"தான் எப்படியோ அப்படியேதான் புத்ரன். பெண்ணும் பிள்ளைக்கு ஒப்பானவள்தான். ஆகையால், தானுகவே பெண்ணிருக்கும்போது வேறுஒருவன் சொத்தை எப்படியெடுத்துக்கொள்ளலாம் ? தாயினுடையஸ்த்ரீதனமெல்லாம் பெண்ணின்பாகந்தான். பிள்ளையில்லாததகப்பனுடைய ஆஸ்தியைப் பெண்ணின்பிள்ளையே

---

[1] தேசாந்தரஞ்சென்ற கணவன்விஷயம்; 'மேலானவர்களை அடைவதென்னும்வழியால் அந்தக்கணவனுக்காக ஸந்ததியை அடையவிரும்பவேண்டும். அப்படிப்பிறப்பவன் பிள்ளையில்லாதபாட்டனுக்கும் சுல்கம்கொடுத்தவனுக்கும் பயன்படுவான்' என்பது பழையஉரை.

[2] 'ஒருவன் சுல்கம்கொடாமல் தகப்பனிடத்திலேயே கன்னிகையைக் கேட்க, அவன்கட்டளையினுல் அவள் அதைஒத்துக்கொண்டுமிருந்தால் அவளும் சுல்கம்கொடுத்தவன்விஷயத்திற் சொன்னதர்மத்தையே அனுஷ்டிக்கவேண்டும்' என்பது பழையஉரை.

எடுத்துக்கொள்ளவேண்டும். ஏனெனில், அவன் தன்தந்தைக்கும் தன் தாயின்தந்தைக்கும் பிண்டங்களைக் கொடுக்கிறான். மகனுக்கும் பெண்ணின்மகனுக்கும் தர்மவிஷயத்தில் பேதமேயில்லை. [1] சில இடங்களில் பெண்ணுக்குச்சமமாகப் பிள்ளையையும் ஜனங்கள் விரும்புகின்றனர். மற்றும் சில இடங்களில் ஆண்பிள்ளைபிறந்திருந்தும் பெண்ணைச்சிறப்பிக்கின்றனர். தௌகித்திரனால் நேரிடும்பிண்டமுதலான தர்மந்தான் அதற்குக் [2] காரணமென்றுநினைக்கிறேன். விக்கிரயம்செய்யப்பட்ட பெண்ணின்பிள்ளைகள் அவள் தந்தையைச்சேர்ந்தவர்களாகவே ஆகின்றனர். [3] ஆஸுரவிவாகத்தினால் பிறந்தபிள்ளைகள் பொறாமையுள்ளவர்களும் பாபத்தையதிகமாகச்செய்பவர்களும் பிறர்சொத்தைக்கவர்கிறவர்களும் வஞ்சகம்செய்பவர்களும் தர்மத்திற்குமாறான நடக்கையுள்ளவர்களுமாகிறார்கள். இந்தவிஷயத்தில் தர்மமும் பூர்வசரித்ரமுந்தெரிந்தவர்கள் தர்மத்திற்கு ஆதாரமான தர்மசாஸ்திரங்களிற்சேர்க்கப்பட்டவையும் யமனால்சொல்லப்பட்டவையுமான சுலோகங்களை உரைக்கின்றனர். அவை, 'தன்பிழைப்புக்காகத் தன்புத்திரனைவிக்கிரயஞ்செய்து பணத்தைவிரும்புகிறவனும் சுல்கம்வாங்கிக்கொண்டு கன்னிகையைக் கொடுப்பவனும் ஆகிய மூடமனிதன் ஏழுலோகங்களுக்குங்கீழ்ப்பட்ட [4] காலஸூத்ரமென்னும் பெயருடைய மிகக்கொடியநரகத்தில் வேர்வையையும் மூத்திரத்தையும் மலத்தையும் தின்றுகொண்டிருப்பான். ஆர்ஷவிவாகத்தில் இரண்டுபசுமாடுகள் சுல்கமென்று சிலர் சொல்லுகின்றனர். அதுவும் பிசகுதான். ராஜனே! அல்பமாயிருந்தாலும் பெரிதாயிருந்தாலும் அது அந்த அளவுள்ளவிலைதானே. சிலரால் இது நடத்தப்பட்டிருந்தபோதிலும் எக்காலத்திற்குமுரிய தர்மமாகாது. அநேகர் லோபத்தினால் பிரவிருத்திப்பதைக் காண்கிறோம். தம்வசத்திலுள்ள சிறுமியைப் பலவந்தமாக [5] அநுபவிப்பவரும் பாவஞ்செய்பவர்கள். அவர்கள் குருட்டிருள் என்னும் நரகத்தில் விழுந்துகிடக்கின்றனர். வேறுமனிதனையுங்கூட விக்கிரயம் செய்யலாகாது. தன்ஸந்ததிகளைப்பற்றிச் சொல்லவேண்டுமா? பாவமடியாகவந்த அந்தப்பொருள்களினால் ஒரு புண்ணியமும் உண்டாவதில்லை' என்பவை.

---

[1] 'வேறுகோத்திரத்திலிருக்கும் புத்திரிகையானபெண் இரண்டுபங்கையும் ஔரஸனானபுத்திரன் மூன்றுபங்கையும் வேறிடத்தில் பிறந்த தத்தன்முதலிய புத்ரர் இரண்டுபங்கையும் புத்ரிகை மூன்றுபங்கையும் அடையவேண்டும்' என்பது பழையஉரை. [2] இங்குவேறுபாடங்கொண்டு, 'காரணமன்றென்று நினைக்கிறேன். விக்கிரயம்செய்யப்பட்டபெண்ணின் பிள்ளைகள் தம் பிதாவைச் சேர்ந்தவர்களே ஆகின்றனர்' என்பது பழையஉரை. [3] பணம்வாங்கிப்பெண் கொடுப்பது. [4] 'காலஸம்' என்பதுமூலம். [5] பைசாசவிவாகம்.

## எண்பத்தோராவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(பெண்களுக்குப் பொருள்கொடுத்தல் அன்போடுநடத்தல் முதலியன.)

பூர்வசரித்திரமறிந்தவர்கள் [1] வால்மீகியின்வசனத்தை உதாகரிக்கின்றனர். எந்தக்கன்னிகையின்தனத்தில் ஒன்றையும் அவள் தாய் தந்தைமுதலியசுற்றத்தார் எடுத்துக்கொள்ளவில்லையோ அவளுடைய விவாகம் விக்கிரயமாவதில்லை. அந்தத்தனமானது கன்னிகைகளுக்கு மரியாதை. அன்பின்குறிப்பாக அதைக்கொடுக்கவேண்டுவது அவசியம். வாங்கினதனங்களையெல்லாம் மிச்சமின்றிக் கன்னிகைக்குக் கொடுத்துவிடவேண்டும். விசேஷமானமங்களங்களைவிரும்புகிற தாய்தந்தையரும் சகோதரர்களும் மாமிமாமன்களும் மைத்துனர்களும் கன்னிகைகளைக் கௌரவிக்கவும் அன்புபாராட்டவும்வேண்டும். பெண் ஸந்தோஷமடையாவிட்டால் அவள் அந்தப்புருஷனை ஸந்தோஷப்படுத்தமாட்டாள். புருஷனுக்கு ஸந்தோஷமில்லாவிடின் ஸந்ததி விருத்தியாவதில்லை. அரசனே! மாதர்களைக் கௌரவிக்கவும் அன்புபாராட்டவும்வேண்டும். எந்தவீட்டில் மங்கையர் கௌரவிக்கப்படுகின்றனரோ அந்தவீட்டில் தேவர்கள் ஸந்தோஷிக்கின்றனர். எந்தவீட்டில் மங்கையர் கௌரவிக்கப்படவில்லையோ அந்தவீட்டில் எல்லாக்கிரியைகளும்வீண். எப்போது பெண்கள் கண்ணீர்விடுகின்றனரோ அப்போதே அந்தவீடு இல்லை. அரசனே! பெண்களினால் சபிக்கப்பட்ட வீடுகள் பேயினால்பீடிக்கப்பட்டவைபோல அழகில்லாமலும் விளங்காமலும் விருத்தியாகாமலும் போகின்றன. மனுவானவர் தாம் ஸ்வர்க்கஞ்செல்லுவதற்குமுன், 'மனிதர்களே! பெண்கள் பலமில்லாதவர்கள்; எளிதில்வசப்படுத்தக்கூடியவர்கள்; நல்லமனமுள்ளவர்கள்; ஸத்யத்தை [2] ஜயிப்பவர்கள்; பொறாமையுள்ளவர்கள்; கௌரவத்தையே விரும்புகிறவர்கள்; கோபமும் அன்புமுள்ளவர்கள்; ஆதலால், கௌரவிப்பதற்குரியவர்கள். மனிதர்களே! அவர்களைக் கௌரவப்படுத்துங்கள். மடந்தையரைப்பற்றியதே தர்மம். காமபோகங்களனைத்தும் பூஜைகளும் நமஸ்காரங்களும் அவர்களைப்பற்றியே உங்களுக்கு உண்டாகவேண்டும். ஸந்ததியை உண்டாக்குவதும் உண்டானதைக்காப்பதும் உலகவாழ்க்கையிலானந்தமும் பெண்களால்

---

[1] 'ப்ராசேதஸ்ய' என்பதுமூலம்; 'தக்ஷருடைய' என்பது பழையவுரை.

[2] பொய்சொல்லுகிறவர்.

உண்டாயிருப்பதைப் பாருங்கள். அவர்களை வெகுமானித்தால் எல்லாப்பயன்களையும் பெறுவீர்கள்' என்றுசொல்லிப் பெண்களைப் புருஷர்களிடம் ஒப்பித்தார். விதேகராஜரின்பெண்ணாகியஸீதையும் இந்த விஷயத்தில் ஒருசுலோகம் சொல்லியிருக்கிறாள். அதன்பொருள், 'பெண்களுக்கு யாகமும் சிராத்தமும் உபவாஸமும் ஒன்றுமில்லை. தம் கணவனுக்குப் பணிவிடைசெய்வதுதான் தர்மம். அதனாலேதான் அவர்கள் ஸ்வர்க்கத்தை ஜயிப்பார்கள். இளமையில்தந்தையும் பருவத்திற்கணவனும் முதுமையில்புத்திரர்களும் காப்பாற்றுகின்றனர். ஆதலால், பெண்கள் ஸ்வதந்திரமாயிருக்கத்தகாது' என்பது. இவர்கள் பெண்களென்றுபெயருள்ளலக்ஷ்மிகளே. நன்மையைவிரும்புகிறவன் இவர்களை வெகுமானிக்கவேண்டும். பாரதனே! அன்புபாராட்டப்பட்டும் வேண்டினதை யளிக்கப்பட்டுமிருக்கிற பெண்ணானவள் லக்ஷ்மியேயாகிறாள்" என்றார்.

## எண்பத்திரண்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(பலவர்ணப்பெண்களிடம் பிறந்தபுத்ரர்களுக்குப் பொருளைப்பாகித்தல் முதலியன.)

யுதிஷ்டிரர், "சாஸ்திரங்களில்விதிக்கப்பட்டனவெல்லாந்தெரிந்தவரே! ராஜதர்மங்தெரிந்தவர்களிற்சிறந்தவரே! பிதாமஹரே! எல்லா ஸந்தேகங்களையும் முழுதும்ஒழிக்கத்தக்கவர் நீரொருவரே பூமியிற் பெயர்பெற்றவர். எனக்கு ஒருஸந்தேகமிருக்கிறது. அதை எனக்குச்சொல்லும். (சொல்லத்தக்கவர்யாருமற்றுப்போன) இந்தக்கஷ்டமான ஆபத்காலத்தில் வேறுயாரை நாங்கள் கேட்போம். வேந்தரே! இந்தஸந்தேகமுண்டாயிருப்பதைப்பற்றி வேறுயாரையும் நாங்கள்கேட்கமாட்டோம். சிறந்தகைகளையுடையவரே! தர்மமார்க்கத்தை அனுஸரிக்கும்மனிதன் நான் கேட்கப்போகும் விஷயத்திற் செய்யவேண்டியது என்னவென்பதை முழுதும் நீர்உரைக்கக்கூடியவீர். பிதாமஹரே! பெண்ஸங்கத்தைவிரும்புகிற பிராம்மணனுக்குப் பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரரென்னும் நாலுஜாதிப்பெண்களும் மனைவிகளாக விதிக்கப்பட்டிருக்கின்றனர். கௌரவசிரேஷ்டரே! அவர்களெல்லாருக்கும் பிறந்தபிள்ளைகளுள் வரிசைப்படி பிதாவினுடைய தாயபாகமுதலிவற்றிற்குரியவன் யாவன்? பிதாமஹரே! பிதாவினுடைய

தனத்தில் எவன் எவ்வளவு எடுத்துக்கொள்ளவேண்டும்? அவர்களுள் விபாகம் எப்படி விதிக்கப்பட்டிருக்கிறது? இதை நீர்சொல்ல விரும்புகிறேன்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"யுதிஷ்டிர! பிராம்மணன் க்ஷத்திரியன் வைசியன்இம்மூன்று வர்ணத்தாரும் துவிஜர். பிராம்மணனுக்கு விவாகதர்மமானது இம்மூன்று வர்ணங்களில்தான் விதிக்கப்பட்டது. வீரனே! தர்மத்தவறுதலாலும் பொருளாசையினாலும் காமத்தினாலுந்தான் பிராம்மணனுக்குச் சூத்திரப்பெண் மனைவியாவாள். ஆனால், அதை ஆசாரத்திற்கண்டதுமில்லை; தர்மசாஸ்திரத்திற் கேட்டதுமில்லை. சூத்திரப்பெண்ணைப் படுக்கையிலேறவிடுவதனால் பிராம்மணன் கீழ்க்கதிக்குப் போவான்; சாஸ்திரத்திற்சொல்லப்பட்டகிரியையினால் பிராயச்சித்தம் செய்வதற்குரியவனாகிறான். யுதிஷ்டிர! சூத்திரப்பெண்ணினிடம் ஸந்ததிகளுண்டானால் பிராயச்சித்தம் இரட்டிக்கும். பாரதனே! இனி சொத்துவிஷயமானநியமத்தை உனக்குச்சொல்லுவேன். யுதிஷ்டிர! பிராம்மணப்பெண்ணின்புத்ரன் முதலில் பிதாவின்தனத்தில் ஒருபாதியையும் லக்ஷணமுள்ள விருஷபம் ரதமுதலானமுக்யமானபொருள்களையும் எடுத்துக்கொள்ளலாம். பிராம்மணனுடைய மிச்சச்சொத்தைப் பத்துப்பங்குகளாகப்பகுத்து அந்தப்பித்ருதனத்திலும் நாலுபங்குகளை அவனே எடுத்துக்கொள்ளவேண்டும். க்ஷத்திரியப்பெண்ணுக்குப்பிறந்தபுத்ரனும் பிராம்மணன்தான்; ஸந்தேகமில்லை. அவன் தாய்க்குள்ளசிறப்பினால் மூன்றுபாகங்களையெடுத்துக்கொள்ளத்தக்கவன். யுதிஷ்டிர! மூன்றுவதுவர்ணமான வைசியப்பெண்ணினிடம் பிராம்மணனுக்குப்பிறந்தவன் மேற்சொன்னபிராம்மணஸொத்தில் இரண்டுபாகங்களை எடுத்துக்கொள்ளவேண்டும். சூத்திரப்பெண்ணினிடம் பிராம்மணனுக்குப் பிறந்தவன் ஒருகாலும் சொத்தில் தாயபாகம்கொடுக்கத்தகாதவனென்றே சொல்லப்படுகிறான். பாரதனே! ஆயினும், பத்துப்பங்காகப் பகுக்கப்பட்டபொருளில் சிறிதானஒருபாகத்தையாவது சூத்திரப்பெண்ணின்மகனுக்குக் கொடுக்கவேண்டும். இதுதான் முறை. ஆனால், ஒருவர்ணத்துப்பெண்களிடத்தில் பிறந்தபிள்ளைகளுக்குப் பாகங்களைச் சமமாகச்செய்யவேண்டும். சூத்திரப்பெண்ணுக்குப் பிறந்தபிள்ளைகள் கல்வித்தேர்ச்சியில்லாமையால், பிராம்மணனல்லாதவரென்று நினைக்கப்படுகின்றனர். மற்றமூன்று வர்ணப்பெண்களிடத்திலும் பிராம்மணனுக்குப்பிறந்தவன் பிராம்மணனாவான். நான்குவர்ணங்கள்தாம் சாஸ்திரங்களிற்சொல்லப்பட்டிருக்கின்றன. ஐந்தாவதுவர்ணம் சாஸ்திரத்தாலறியப்

படவில்லை. சூத்ரப்பெண்ணின்புத்ரன் (பிரிக்கப்பட்டபித்ருதனத்தில்) பத்தில்ஒருபங்கை எடுத்துக்கொள்ளலாம். அதுவும் தன்பிதாவினால் கொடுக்கப்பட்டதை எடுத்துக்கொள்ளலாமேயன்றிக் கொடுக்கப்படாததை எடுத்துக்கொள்ளத்தகாது. பாரதனே! பிதாவானவன் சூத்திரப் பெண்ணின்பிள்ளைக்கும் தனத்தை அவசியம் கொடுக்கவேவேண்டும். அருளேமுக்யமானதர்மமென்பதனால் அவனுக்குக்கொடுப்பது. எவளிடத்தில்உண்டாகும்ஸந்ததியும் நன்மைக்கேஆகும். பாரதனே! ஒருவன் புத்திரனுள்ளவனாயிருந்தாலும் இல்லாவிட்டாலும் சூத்திரப்பெண்ணின்பிள்ளைக்குப் பத்தில்ஒருபாகத்திற்குமேல் கொடுக்கத்தகாது. பெண்ணுக்கு நாலில்ஒருபாகம் தர்மசாஸ்திரத்தில் விதிக்கப்பட்டிருக்கிறது. ஸகோதரனில்லாதபெண் முழுச்சொத்துக்கும் உரியவளென்று சிலரும் பாதிச்சொத்துக்குரியவளென்று மற்றுஞ்சிலரும் நினைக்கின்றனர். பிராம்மணனுக்கு மூன்றுவருஷத்திற்குச் சாப்பாட்டுக்குவேண்டியதற்குமேல் அதிகதிரவியமிருக்குமானால் அந்தத்திரவியத்தைக்கொண்டு யாகம்செய்துவிடவேண்டும். வீணாகப் பொருளைச் சேர்க்கலாகாது. ஒருவன் மனைவிக்குத் தன்பொருளில் மூவாயிரத்துக்குமேற்பட்ட தாயபாகத்தைக் கொடுக்கவேண்டும். அவள் தன்பர்த்தாவினால் கொடுக்கப்பட்ட அந்தத்தனத்தை ஸ்வதந்திரமாக அனுபவிக்கலாம். பெண்களுக்குப் புருஷன்கொடுத்த தாயபாகமுதலிய தனத்திற்கு அவர்கள் அனுபவிப்பதே பலனென்றுசொல்லப்படுகிறது. பெண்கள் பிதாவின்சொத்தைஅபகரிப்பது எவ்வகையிலும் கூடாது. யுதிஷ்டிர! பிராம்மணப்பெண்ணுக்குத் தந்தையினால்கொடுக்கப்பட்ட திரவியத்தை அவள்பெண் எடுத்துக்கொள்ளவேண்டும். அவள் தன்தந்தைக்குப் புத்ரன்போன்றவளே. கௌரவனே! அரசனே! அவளைப் புத்ரனுக்குச்சமமென்றே தர்மசாஸ்திரம் விதிக்கிறது. பரதஸ்ரேஷ்டனே! இந்தத்தர்மம் இவ்வாறுதான் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வாறு தர்மத்தைநினைத்துப் பணத்தை ஒருவன் வீணாகச் சேர்க்கலாகாது' என்றார்.

யுதிஷ்டிரர், "பிராம்மணனுக்குச் சூத்திரப்பெண்ணிடம்பிறந்த பிள்ளைக்குச் சொத்துக்கொடுப்பது அவசியமில்லையென்று சொல்லப்பட்டிருந்தால் எந்தவிசேஷஅன்பினால் பத்தில் ஒருபங்காவது அவனுக்குக் கொடுக்கப்படும்? பிராம்மணனுக்குப் பிராம்மணப்பெண்ணினிடத்தில்பிறந்தவன் பிராம்மணனென்பதில் ஸந்தேகமில்லை. க்ஷத்திரியப்பெண்ணினிடத்திலும் வைசியப்பெண்ணினிடத்திலும் பிறந்தவரும் பிராம்மணர்தாமே? ராஜசிரேஷ்டரே! மூன்றுவர்ணத்திற்

பிறந்தவரும் பிராம்மணரென்று நீரே சொன்னீரன்றோ? இவர்கள் ஏற்றக்குறைவாகப் பாகம்எடுத்துக்கொள்வது ஏன்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"வீரனே! உலகத்தில் மனைவியைத் தாரம்என்ற ஒருபெயரினால் வழங்குகின்றனர். ஒரேபெயரால் சொன்னாலும் அவர்களுள் வேறுபாடு மிகஅதிகமாயிருக்கிறது. முதலில் மற்றமூன்று ஜாதிப்பெண்களை விவாகம்செய்துகொண்டு கடைசியில் பிராம்மணஜாதிப்பெண்ணை ஒருவன் விவாகம்செய்வனாயினும் அந்தப்பிராம்மணஜாதிப்பெண்ணே அவர்களில் மூத்தவளும் மற்றவர்களால் பூஜிக்கப்படத்தக்கவளும் மற்றவரிலும் மிகச்சிறந்தவளுமாவாள். அந்தப் பிராம்மணப்பெண்ணிருக்கும்போது புருஷனுக்கு ஸ்நானத்தையும் அலங்காரத்தையும் பல்துலக்கும் ஸாதனத்தையும் அப்யங்கத்தையும் ஹவ்யகவ்யங்களையும் கிருகஸ்தாஸ்ரமதர்மத்திற்குரிய மற்றஎவற்றையும் வேறு ஒருத்தியும் செய்யத்தகாது. யுதிஷ்டிர! பிராம்மணனுக்குப் பிராம்மணப்பெண்தான் எல்லாம் செய்யவேண்டும். அன்னம் பானம புஷ்பம ஆடைஆபரணம் இவற்றைக் கணவனுக்குப் பிராம்மணப்பெண்ணே கொடுக்கவேண்டும். அவள்தான் மிகச்சிறந்தவள். கௌரவனே! மகாராஜனே! மனுவினால் சொல்லப்பட்ட தர்மசாஸ்திரத்திலும் இதுதான் எப்போதுமுள்ள தர்மமென்று சொல்லப்படுகிறது. யுதிஷ்டிர! ஒருவன் காமத்தினால் இதற்குமாறாக நடத்துவனாயின் அவன் பிராம்மணஜாதியிற்பிறந்த சண்டாளன்போலவே முன்னோரால் நினைக்கப்படுகிறான். அரசனே! பிராம்மணப்பெண்ணுக்கும் க்ஷத்ரியப்பெண்ணுக்கும் பிறந்தபுத்ரர்கள் ஸமமாயிருந்தபோதிலும் இரண்டுவர்ணங்களுக்குமுள்ள வேறுபாடு இவர்களுக்கும் இருக்கிறது. உலகத்தில் க்ஷத்திரியப்பெண் ஜாதியில்பிராம்மணப்பெண்ணுக்குசசமமாகமாட்டாளன்றோ? ராஜஸ்ரேஷ்டனே! ஆதலால், பிராமமணப்பெண்ணின் புத்ரன்தான் முதன்மையும் சிறந்தவனும் ஆவான். யுதிஷ்டிர! அவன்தான் பிதாவின்தனத்தில் மிகஅதிகமாகப்பாகமெடுத்துக்கொள்ளத்தக்கவன். எப்படி க்ஷத்திரியப்பெண் ஒருகாலும் பிராம்மணப்பெண்ணுக்குச்சமமாகாளோ அபபடியே வைசியப்பெண்ணும் க்ஷத்திரியப்பெண்ணுக்குச் சமமாவது எப்பொழுதுமில்லை. யுதிஷ்டிர! ராஜனே! லக்ஷ்மி ராஜ்யம் பொக்கசம் கடல்சூழ்ந்தபுவனி இவையெல்லாம் க்ஷத்திரியர்களுக்கு ஏற்படுத்தப்பட்டவையாகக் காணப்படுகின்றன. க்ஷத்திரியன் தன்தர்மத்தினால் மிகப்பெரிய ஐசுவரியத்தை அடைகிறான். ராஜனே! தண்டத்தைவகிப்பவன் அரசன்தான். க்ஷத்திரிய

னின்றி ரக்ஷணமில்லை. மகானுபாவர்களான பிராம்மணர்களோ தேவருக்குந்தேவர். அவர்களிடத்தில் அரசன் முறைப்படிபூஜித்து நடந்துகொள்ளவேண்டும். அரசனானவன் ரிஷிகளால்விதிக்கப்பட்டதும் நெடுங்காலமாயுள்ளதுமான தர்மத்தையறிந்து அதுகெடும்போது கெடாமலிருக்கும்படி க்ஷத்திரியதர்மத்தினால் பிரஜாபரிபாலனம் செய்யவேண்டும். எல்லாவர்ணத்தாருடையதனம் தாரமுதலியவையனைத்தும் பறிப்பவர்களால் பறிக்கப்படுவனவற்றை அரசன் காப்பாற்றுகிறான், ஆகலால், க்ஷத்திரியப்பெண்ணின் புத்திரன் வைசியப்பெண்ணின் புத்திரனைவிடச் சிறந்தவனென்பதில் ஸந்தேகமில்லை. யுதிஷ்டிர! அவனும் பிதாவின்சொத்தில் வைசியப்பெண்ணின் புத்ரனைவிட அதிகபாகம் எடுத்துக்கொள்ளத்தக்கவன்" என்றார்.

யுதிஷ்டிரர், "ராஜாவானபிதாமஹரே! பிராம்மணனைப்பற்றிச் சாஸ்திரப்பிரகாரம் நீர்சொன்னீர். மற்றவர்ணங்களுக்குப் பாகவியவஸ்தை எப்படியாம்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"கௌரவனே! க்ஷத்திரியனுக்கு [1] இரண்டு ஜாதிப்பெண்கள் பாரியைகளாக விதிக்கப்பட்டிருக்கின்றனர். மூன்றாவது மனைவி சூத்திரப்பெண்ணும் இருக்கலாம். ஆனால், அதை ஆசாரத்தில்கண்டதும் தர்மசாஸ்திரத்தில் கேட்டதுமில்லை. யுதிஷ்டிர! க்ஷத்திரியர்களுக்கும் பிராம்மணர்களுக்குச் சொன்னமுறைதான். ராஜனே! க்ஷத்திரியன் சொத்தை எண்பகுதிகளாகப் பகுக்கவேண்டும். க்ஷத்திரியப்பெண்ணின்பிள்ளை அந்தப்பிதாவின் சொத்தின்பாகங்களில் நாலுபங்கு எடுத்துக்கொள்ளவேண்டும். பிதா யுத்தத்தில் ஸம்பாதித்தஸொத்து எதுவாயிருந்தாலும் அதை அவனே எடுத்துக்கொள்ளவேண்டும். வைசியப்பெண்ணின்மகன் மூன்றுபாகங்களையும் சூத்திரப்பெண்ணின்மகன் மிச்சமுள்ள ஒருபாகத்தையும் எடுத்துக்கொள்ளவேண்டும். அந்தச் சூத்திரப்பெண்ணின் மகனும் பிதாகொடுத்ததைத்தான் பெற்றுக்கொள்ளலாம்; கொடாமல் எடுத்துக்கொள்ளத்தகாது. கௌரவனே! வைசியனுக்கு வைசியஜாதிப்பெண் ஒருத்தியே பார்யையாயிருக்கவேண்டும். சூத்திரப்பெண் இரண்டாவது மனைவியாயிருக்கலாம். ஆனால் அதை ஆசாரத்திற்கண்டதும் தர்மசாஸ்திரத்திற் கேட்டதுமில்லை. பரதஶ்ரேஷ்டனே! குந்திபுத்ரனே! வைசியப்பெண்ணினிடத்திலும் சூத்திரப்பெண்ணினிடத்திலும் சேருகிறவைசியனுக்கு அவ்விரண்டு புத்ரர்கள் விஷயத்திலும் பாகவியவஸ்தை சொல்லப்பட்டிருக்கிறது. பரதஶ்ரேஷ்

[1] க்ஷத்திரியவைசியஜாதிப்பெண்கள்.

டனே! வைசியனுடைய சொத்தை ஐந்து பாகங்களாகச்செய்யவேண்டும். ராஜனே! அவ்விரண்டுபெண்களின் பிள்ளைகளுக்கும் தாயபாகத்தைப்பற்றிச்சொல்வேன். வைசியப்பெண்ணின் மகன் பிதாவின்தனத்தில் ஐந்தில்நாலுபாகங்களை எடுத்துக் கொள்ளவேண்டும். பாரதனே! சூத்திரப்பெண்ணின் புதல்வனுக்கு ஐந்திலொருபாகந்தான் விதிக்கப்பட்டது. அவனும் தந்தைகொடுத்துத்தான் எடுத்துக்கொள்ளவேண்டும்; கொடாமல் எடுத்துக்கொள்ளத்தகாது. மூன்றுவர்ணத்தாருக்கும் பிறந்தசூத்திரனும் எப்போதும் பிதா தனங்கொடுப்பதற்குத்தான் உரியவன். (தானாகஎடுத்துக்கொள்ளத்தகாது.) சூத்திரனுக்குத் தன்வர்ணத்தில் பிறந்தவள்தான் மனைவியாகலாம். மற்றவர்ணத்தில்பிறந்தவள் எவ்வகையிலும் மனைவியாகத்தகாள். அவனுக்கு நூறுபுத்ரர்கள் இருந்தாலும் அவர்களுக்கு ஸொத்து ஸமபாகமாக வேண்டும். எல்லாவர்ணங்களிலுமே தனக்குச்சரியான வர்ணத்துப் பெண்ணுக்குப் பிறந்த புத்ரர்களுக்குச்சொத்தில் ஏற்றத்தாழ்வில்லாமல் ஸமபாகம் விதிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், மூத்தபுத்ரனுக்குப் பொதுச்சொத்திலிருந்து ஒருபாகம் ஜ்யேஷ்டாம்சமென்று சொல்லப்படுகிறது. குந்திபுத்ரனே! தாயபாகத்தைப்பற்றிய இந்தவிதி முன்னர் பிரம்மதேவரால் சொல்லப்பட்டது. ராஜனே! ஒரேவர்ணத்தாரான பெண்களிடத்தில் பிறந்தபிள்ளைகளுக்கும் வேறுஒருவிசேஷமுண்டு. அதாவது, 'முன்னேசொன்ன விவாகங்களில் முன்முன்விவாகங்களின் சிறப்பினால் அந்த அந்தப்புத்ரர்களுக்கும் விசேஷமிருக்கிறது. ஒரு மனைவிக்குப்பிறந்த புத்ரர்களிலும் ஜ்யேஷ்டன் அதிகபாகத்தையும் நடுவானவன் அதற்குக்குறைந்த பாகத்தையும் கடைசியவன் அதற்கும் குறைவானபாகத்தையும் எடுத்துக்கொள்ளவேண்டும்' என்பது. இவ்வாறு எல்லாஜாதிகளிலும் அதேவர்ணத்துப்பெண்ணுக்குப்பிறந்த புத்ரன் சிறந்தவன். மரீசியின் புத்ரரானகாசியபமகரிஷியும் இதைப் பற்றி இப்படியே சொல்லியிருக்கிறார்" என்றார்.

## எண்பத்துமூன்றாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)



(ஸங்கரஜாதிகளின் வரலாறு முதலியன.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! மனிதர்கள் பொருளையும் காமத்தையும் பற்றியிருப்பதனாலும் இன்னார் இன்னவர்ணமென்று நிச்சயிக்கக்கூடாமையினாலும், வர்ணத்தார்களின் தெரியாமையினாலும்

வர்ணங்கள் கலந்துபோகின்றனவே. மேற்சொன்னகாரணங்களினால் வர்ணங்கள் கலந்தவர்ணங்களிற்பிறந்தவர்களுக்குத் தர்மமென்ன? கர்மங்கள் எவை? அவற்றை எனக்குச்சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"பிரஜைகளைப்படைத்த பிரமமதேவர் முதலில் யாகத்திற்காக நாலுவர்ணங்களையும் நாலுவர்ணங்களுக்குமுரியகர்மங்களையும் படைத்தார். பிராம்மணனுக்கு நாலுவர்ணத்தவரும் பாரியைகள். [1] இரண்டு வர்ணத்தவரிடத்திலதான் பிராம்மணனாகவே பிறக்கிறான். மற்ற இரண்டு வர்ணத்தவரிடத்திலும் க்ரமமாகக்குறைந்த தாயின்ஜாதியாகவே புத்ரர்கள் பிறக்கிறார்கள். பிராம்மணனுக்குச் சூத்திரப்பெண்ணினிடத்தில் பிறந்த புத்திரன் சவனென்னப்பட்ட சூத்திரனைத் [2] தாண்டினவனாக இருப்பதனால் அவனைப் பாரசவனென்று சொல்லுகின்றனர். அவன் தன் குலத்திற்கேற்றபடி மற்றமூன்றுவர்ணங்களுக்கும் பணிசெய்துகொண்டிருக்கவேண்டும்; தன் ஒழுக்கத்தை எப்போதும் விடாமலிருக்கவேண்டும்; எல்லாவிதத்தொழில்களையும் தெரிந்துகொண்டு தன் குலத்தொழிலையே கைப்பற்றவேண்டும். மூத்தவனாயிருந்தாலும் இளையவனாயிருந்தாலும் அவன் பிராம்மணர்பணிவிடையும் தானமும் செய்துகொண்டிருக்கவேண்டும். க்ஷத்திரியன் சேரக்கூடியவர்கள் [3] மூன்று வர்ணத்துப்பெண்கள். அவர்களில் முதலிருவரிடத்தில் இவன் க்ஷத்திரியனாகவேபிறக்கிறான். மூன்றாவது வர்ணமாகிய சூத்திரப்பெண்ணினிடம் தாழ்ந்தஜாதியான உக்ரர்களென்னப்படும் சூத்திரர்கள் பிறக்கின்றனரென்பது தர்மசாஸ்திரம். வைசியனுக்கு [4] இரண்டுபாரியைகள். அவ்விருவரிடத்திலும் வைசியனாகவே பிறக்கிறான். சூத்திரனுக்குச் சூத்திரப்பெண்ணாகிய ஒருபாரியைதான். அவள் சூத்திரனையேபெறுகிறாள். இதற்கு [5] மாறாயிருப்பவன் மேல்வர்ணத்து ஸ்த்ரீகளைக்கெடுப்பவனாதலின் இழிவானவன். அவன் நாலுவர்ணங்களுக்கும் விலக்கானதும் நாலுவர்ணங்களாலும் இகழப்பட்டதுமாகிய ஜாதியை உண்டுபண்ணுகிறான். பிராம்மணஸ்த்ரீயினிடம் க்ஷத்திரியன் யாகத்திற்கும் உபநயனத்திற்கும் தகாததும் அரசர்களிடத்தில் ஸ்தோத்திரம்செய்வதே தொழிலாகவுடையதுமான ஸூதஜாதியையும், வைசியன் எல்லாராலும் ஒதுக்கப்பட்ட மௌத்கல்யமென்று

[1] பிரம்மக்ஷத்ரிய. [2] சூத்திரனுக்கு மேற்பட்டிருப்பதனால்.
[3] க்ஷத்திரி வைசிய சூத்திரப்பெண்கள்.
[4] வைசியப்பெண்ணும் சூத்திரப்பெண்ணும்.
[5] மேல்வர்ணத்துப்பெண்ணைப்புணரும் கீழ்வர்ணத்தோன்.

சொல்லப்பட்ட வைதேஹகஜாதியையும் சூத்திரன் மிகக்கொடியதும் கொலைத்தொழிலிலிருப்பதும் ஊருக்குவெளியில்வஸிப்பதுமாகியசண்டாளஜாதியையும் உத்பத்திசெய்கின்றனர். இதனால் இவர்கள் குலத்தைக்கெடுப்பவர்கள். புத்திமான்களிற்சிறந்தவனே! பிரபுவே! இப்போதுசொல்லப்பட்டவர்கள் வர்ணம்கெட்டுப்பிறந்தவர்கள். க்ஷத்திரியப்பெண்ணினிடம், வைசியனுக்கு வந்தியாக அரசர்களைத்துதிசெய்து ஜீவிக்கும்மாகதரும் சூத்திரனுக்கு மச்சங்களைக்கொல்லும் நிஷாதரென்னும்செம்படவரும் முறைதவறுதலினால் உண்டாகின்றனர். வைசியப்பெண்ணினிடம் ஸம்பந்தப்பட்டசூத்திரனுக்குத் தான் ஸம்பாதிக்கும்தனத்தினால்ஜீவிப்பவனும் பிராம்மணர்கள்தக்ஷிணைமுதலியவை வாங்கத்தகாதவனுமாகிய ஆயோகவனென்றுசொல்லப்பட்ட தச்சஜாதியான் பிறக்கிறான். இவர்களும் தங்கள்ஜாதிப்பெண்களிடத்தில் தங்கள்ஜாதிப்பிள்ளைகளையே உண்டாக்குகின்றனர். கீழ்ஜாதிப்பெண்களிடத்தில் தாய்ஜாதியைக்கொண்டு கீழ்ஜாதிப்பிள்ளைகளே பிறக்கின்றனர். நான்குவர்ணங்களுள்ளும் [1] இரண்டுவர்ணத்துப்பெண்களிடத்தில் தம்வர்ணத்துப்புத்திரனே பிறப்பதுபோலவே நான்குவர்ணத்திலும்சேராதவர்களுக்கும் தம்ஜாதிப்பெண்ணினிடத்திலும் அடுத்தகீழ்ஜாதிப்பெண்ணினிடத்திலும் பிறக்கும்புத்ரர்கள் தம்ஜாதிகளேயாகிறார்கள். யாவரும் தம்மினமானபெண்களிடத்தில் தம் ஜாதிப்புத்ரர்களையே உண்டாக்குகின்றனர். ஒருவன்மனைவியிடத்தில் மற்றொருவன் சேருவதனால் இகழப்படும்புத்ரர்களை உண்டுபண்ணுகிறான். சூத்திரன் பிராம்மணப்பெண்ணினிடத்தில் நான்குஜாதிகளிலும்சேராதசண்டாளஜாதியை உண்டாக்குவதெப்படியோ அப்படியேதான் நான்குஜாதிகளுக்கும் விலக்கானவன் இன்னும்விலக்கான புத்ரனையுண்டுபண்ணுகிறான். இப்படி விலக்கானவர்களாலும் விலக்கானவர்க்கும்விலக்கானவர்களாலும் பிரதிலோமஜாதிகள் அதிகப்படுகின்றன. ஈனர்களிலும்ஈனர்கள் பிறக்கின்றனர். அதனால், வர்ணங்கள் [2] பதினைந்து. சேரத்தகாதபெண்ணை ஒருவன்சேருவதனால் ஜாதி

[1] தன்வர்ணம், அதற்கடுத்தகீழ்வர்ணம்.

[2] க்ஷத்திரியனுக்கும் வைசியனுக்கும் சூத்திரனுக்கும் மேற்குலத்துப் பெண்களிடம்பிறந்தவைகள் மூன்று. ஆயோகவனுக்கும் வைதேஹகனுக்கும் நிஷாதனுக்கும் சண்டாளனுக்கும் க்ஷத்திரியஜாதிப்பெண்களிடம்பிறந்தவை நான்கு. வைதேஹகனுக்கும் நிஷாதனுக்கும் சண்டாளனுக்கும் மாகதஜாதிப்பெண்களிடம் பிறந்தவை மூன்று. வைதேஹகனுக்கு ஆயோகவப் பெண்ணினிடமும் நிஷாதஜாதிப்பெண்ணினிடமும் பிறந்தவை இரண்டு. சண்டாளனுக்கு நிஷாதஜாதிப்பெண்ணினிடம் பிறந்தது ஒன்று. நிஷாத

கள் கலந்துபோகின்றன. நான்குஜாதியிலும்சேராதவர்களில் மாகதர்களுக்கு ஸைரந்திரிகளிடம் அரசர்களுக்கு அலங்காரங்களும் கைகால்பிடிப்பதுமுதலான உபசாரங்களும் செய்யத்தெரிந்தவனும் அடிமையில்லாமலிருந்தும் அடிமைத்தன்மையினால் ஜீவிப்பவனுமானவன் பிறக்கிறான். ஆயோகவனுக்கு [1]க்ஷத்திரியஜாதிப்பெண்ணிடம் வலைபோட்டுஜீவிப்பவன் பிறக்கிறான். வைதேஹகனுக்கு மைரேயகனென்றுசொல்லப்பட்ட கள்விற்றுப்பிழைப்பவன் பிறக்கிறான். நிஷாதனுக்கு ஓடத்தினால் ஜீவிப்பவனும் அடிமையுமாகிய மத்காரன் உண்டாகிறான். சண்டாளனுக்குப் பிணங்காப்பவனாகிய [2]ஶ்வபாகன் பிறக்கிறான். பாபியானமாகதஜாதிப்பெண் வைதேஹகனிடம் கொடியவர்களும் கபடத்தினால் ஜீவிப்பவர்களுமாகிய [3]மாம்ஸன், [4]ஸ்வாதுகரன், [5]க்ஷௌத்ரன், [6]ஸௌகந்தன் என்று பெயர்பெற்றநால்வரைப் பெறுகிறாள். நிஷாதனுக்குக் கொடியவனும் கபடத்தினால் ஜீவிப்பவனும் கழுதைகட்டினவாகனங்களில் செல்லுகிறவனுமாகியமத்ரநாபன் பிறக்கிறான். சண்டாளனுக்குக் கழுதை குதிரை யானைகளைப்புசிப்பவனும் பிணங்களின் ஆடையுடுப்பவனும் உடைந்தஓடுகளில்புசிப்பவனுமாகியபுல்கஸன் பிறக்கிறான். வைதேஹகனுக்கு ஆயோகவஜாதிப்பெண்களிடத்தில் க்ஷௌத்ரன் அந்திரன் ஊருக்குவெளியில் வஸிப்பவனாகிய [7]காராவரன் இம்மூன்றுஈனஜாதிகள் பிறக்கின்றன. நிஷாதஜாதிப்பெண்ணிடத்தில் வைதேஹகனுக்குக் [8]தோல்வேலைக்காரன் பிறக்கிறான். சண்டாளனுக்கு மூங்கில்வேலைசெய்பவனாகிய பாண்டுஸௌபாகனென்னும்ஜாதி உண்டாகிறது. நிஷாதனுக்கு

னுக்கும் சண்டாளனுக்கும் வைதேஹகஜாதிப்பெண்ணினிடம்பிறந்தவை இரண்டு. 'ஸைரந்த்ரியினிடம, ஆயோகவனுக்கு வலைபோட்டுஜீவிப்பவனும் வைதேஹகனுக்கு மாதுகனும் நிஷாதனுக்கு மத்குரனும் சண்டாளனுக்கு ஶ்வபாகனும், ஆயோகவியினிடம், வைதேஹகனுக்கு க்ரூரனும் நிஷாதனுக்கு மத்ரநாபனும் சண்டாளனுக்குப் புல்கஸனும், நிஷாதியினிடம், சண்டாளனுக்குப் பாண்டுஸௌபாகனும் அந்தேவஸாயியும் வைதேஹகனுக்குக்ஷௌத்ரனும், வைதேஹகஜாதிப்பெண்ணினிடம், சண்டாளனுக்கு ஸௌபாகனும் நிஷாதனுக்கு ஆஹிண்டகனும், நிஷாதியினிடம் சூத்திரனுக்குக் குக்குடகனும், அம்பஷ்டையினிடம் வைதேஹகனுக்கு வேனனும் வ்ராத்யனும் பிறக்கின்றனர்' எனப்பதினைந்தாகக்கூறுவது பழையஉரை.

[1] வேறுபாடங்கொண்டு, 'ஸைரந்த்ரியினிடம்' என்பது பழையஉரை.
[2] நாயைச்சமைப்பவன். [3] மாம்ஸம்விற்பவன். [4] ருசிபதார்த்தம்செய்பவன்.
[5] தேனெடுப்பவன். [6] வாசனைப்பொருள்செய்பவன். [7] சிறைகாப்பவன்.
[8] சக்கிலியன்.

வைதேஹகஜாதிப்பெண்ணிடத்தில் [1] ஆஹிண்டகனென்பவன் உண்டாகிறான். சண்டாளனுக்குச் சண்டாளத்தொழிலையே செய்பவனாகிய ஸௌபாகன் உண்டாகிறான். நிஷாதஜாதிப்பெண்ணுக்குச் சண்டாளனிடம் ஸ்மசானத்திலிருப்பவனும் ஜாதியில் சேராதவர்களாலும் சேர்க்கப்படாதவனுமாகிய [2] அந்தேவஸாயி என்பவன் பிறக்கிறான். இவ்வாறு தாய்தந்தையர்கள் வரைகடந்து நடப்பதனால் ஜாதிகள்கலந்து உண்டாகிறவர்கள் மறைவாயிருந்தாலும் வெளிப்படையாயிருந்தாலும் அவரவர்தொழில்களினால் அறியக்கூடியவர்கள். இவற்றுள் நான்குவர்ணங்களுக்குத்தாம் வர்ணதர்மங்கள் உள்ளன; மற்றவர்ணங்களுக்கில்லை. வர்ணதர்மங்கள் விட்டஜாதிகள் எண்ணில்லாதவை. யாகங்களில்லாமலும் ஸாதுக்களால் சேர்க்கப்படாமலுமிருப்பவர்கள் வர்ணங்களுக்கு வெளிப்பட்டவர்களாகி இஷ்டப்படி ஆண்பெண்கள் சேருவதனால் அவரவர்தொழிலுக்குத்தக்கபடியும் இருக்குமிடங்களுக்குத்தக்கபடியும் அநேகஇழிஞனர் உண்டாகின்றனர்; நாற்சந்திகளிலும் ஸ்மசானங்களிலும் மலைகளிலும் மரங்களினடிகளிலும் இருப்பு அணிகளைப் பூண்டுகொண்டும் தங்கள்தொழில்களைச் செய்துகொண்டும் வெளிப்படையாகவாசம்செய்வார்கள்; அலங்காரங்களையும் மற்றுமுள்ள கருவிகளையும்செய்து பசுக்களுக்கும் பிராம்மணர்களுக்கும் உதவிசெய்வார்கள்; ஸந்தேகமில்லை. ஆண்மையிற்சிறந்தவனே! கொல்லாமை தயை பொய்யாமை பொறுமை தங்கள் சரீரத்தைவிட்டும் பிறரைக்காப்பது இவைதாம் ஜாதியிற்சேராதவர்களுக்கு நற்கதிக்குக்காரணமாகின்றன; அதில் எனக்கு ஸந்தேகமில்லை. புத்திசாலியானமனிதன் சாஸ்திரத்திலுபதேசித்தபடி ஆராய்ந்து தனக்குவிதிக்கப்பட்ட பெண்களிடத்தில் ஸந்ததிகளை உண்டாக்கவேண்டும். ஈனஜாதிகளிற்பிறந்தபுத்ரன் ஜலத்தில் நீந்தப்போகிறவனைக் கல்லமிழ்த்துவதுபோல அமிழ்த்திவிடுவான். உலகத்தில் தெரியாதவனையும் தெரிந்தவனையும் பெண்கள் காமத்துக்கும் குரோதத்திற்கும் உட்படுத்திக் கெட்டவழியில்கொண்டு போகத் திறமையுள்ளவர்கள். புருஷர்களைக்கெடுப்பதென்பது பெண்களின் இயற்கை. தெரிந்தவர்கள் பெண்களிடத்தில் மிகப்பற்றுவைப்பதில்லை" என்றார்.

யுதிஷ்டிரர், "கலந்தஜாதியிற்பிறந்து வர்ணங்களிற் சேராதமனிதன் ஆரியனாயில்லாமலிருந்தும் ஆரியனைப்போலிருந்தால் நாம் எப்படி அவனை அறியலாம்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார். "கலந்த ஜாதியில்பிறந்தவன் பலஇயற்கைகளுள்ளவனாயிருப்பான். பெரியோர்

---

[1] சமாசாரம்கொண்டுபோகிறவன்.

[2] எல்லைக்கோடியில் வஸிப்பவன்; இவனே பாண்டுஸௌபாகன்.

களால் அநுஷ்டிக்கப்பட்ட கர்மங்களைக்கொண்டு சுத்தஜாதியிற்பிறந்தவர்களை அறியலாம். தகுதியில்லாமையும் ஆசாரத்தவறுதலும் கொடிய செய்கையும் சாஸ்திரோக்தகர்மங்களில் மனமில்லாமையும் இவ்வுலகத்தில் கலந்தஜாதியிற்பிறந்தமனிதனைத் தெரிவிக்கின்றன. கலந்தஜாதியிற்பிறந்தவன் தகப்பன்குணங்கள் தாயின்குணங்கள் இரண்டையும் அடைந்திருப்பான். அவன் தன்னியற்கையை எவ்வகையிலும் அடக்க முடியாது ஒருவன் வடிவத்தில் எப்படியோ அப்படியேதான் குணங்களிலுமிருப்பான்; தாய்தந்தைகள் இருவரையும்போலவே பிறக்கிறான். புலியின் வீரியத்திற்குப்பிறந்தது புலியாவதுபோல மனிதன் தனது காரணத்தின் குணத்தைத்தான் அடைவான். குலமென்னும்பிரவாகமானது மறைந்துதான் ஜாதிஸங்கரமுண்டாகிறது. அந்தஜாதிஸங்கரத்தின்குணம் சிறிதோ பெரிதோ மனிதனுக்கு வந்தேசேருகிறது. ஆரியனைப்போலவே உருவமும் நடக்கையுமுள்ளவனாகக் கபடவழியிலிருப்பவனை ஸரியானவர்ணமென்றும் வேறுவர்ணமென்றும் அவனுடையகுணமே நிச்சயமாகத்தெரிவிக்கும். பலநடக்கைகளும் பலவிதத்தொழிலில் ஊக்கங்களுமுள்ள மனிதர்களுக்கு அவர்களின் ஒழுக்கத்திற்குத்தகுதியான ஜாதியானது உலகத்தில் மிகப்பொருந்துகிறது. அது மாறுவதில்லை. இவ்வுலகத்தில் அவன்தேகமானது இயற்கைக்குவிலக்காவதில்லை. உயர்ந்ததும் நடுத்தரமும் தாழ்ந்ததுமான இயற்கைகள் உண்டாகின்றன. ஸமமானகுணங்களுள்ள தேகந்தான் விருத்தியாகிறது. ஒழுக்கமில்லாதவன மேல்வர்ணமாயிருந்தாலும் அவனைப் பூஜிக்கலாகாது. தர்மந்தெரிந்து நல்லொழுக்கத்தோடிருக்கும் சூத்திரனையும் பூஜித்தல்வேண்டும். ஒருமனிதன் நல்லவையும் கெட்டவையுமான கர்மங்களினால் தன்னுடைய குணத்தையும் நடக்கையையும் குலத்தையும் தெரிவிக்கிறான். அப்படியே மறைந்துபோன தன்குலத்தையும் ஒருமனிதன் தன்செய்கைகளினால் பிரகாசப்படுத்துகிறான். கலநதவையும் கலவாதவையுமான இந்தஎல்லாச்சாதிகளிலும் மனிதன் தான் புத்ரோத்பத்தி செய்யத்தகாதஜாதியை விலக்கவேண்டும்" என்றார்.

## எண்பத்துநான்காவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

**(பன்னிருவகைப் பிள்ளைகளைப்பற்றியவை முதலியன.)**

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! கௌரவர்தலைவரே! வர்ணங்களைப்பற்றித் தனித்தனியாக நீர் சொல்லவேண்டும். எந்தப்பெண்ணிடத்தில் யாருக்கு என்னவிதமாகப் புத்ரர்கள் பிறக்கிறார்கள்? அவர்கள் யார்? புத்திரோத்பத்தி செய்கிறவர்களைப்பற்றிச சொல்வேறுபாடுகள்

பலவகைகளாகக் கேட்கப்படுகின்றன. அரசரே! இந்தவிஷயத்தில் தெளிவில்லாத எங்களுக்கிருக்கும் ஸந்தேகத்தை நீர் போக்கக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"முக்கியமானபுத்ரன் தானாகவேயிருப்பவனென்று தெரிந்து கொள்ளவேண்டும். மற்றப்புத்ரர்கள் பலவகையாகிறார்கள். மந்திரத்தினால் நிஷேகஸம்ஸ்காரம்பெற்ற தனதுமனைவியினிடத்தில் தனக்குண்டாகும்புத்ரன் முதன்மையாகவிதிக்கப்பட்ட ஔரஸபுத்ரனென்று அறியவேண்டும். அக்நியையும பிரம்மதேவரையும்பூஜித்து இவள் புத்திரிகையாயிருக்கவேண்டுமென்று சொல்லியாவது நினைத்தாவது ஒருவரனுக்குக் கொடுக்கப்பட்ட பெண்ணின்வயிற்றிற் பிறந்தபுத்ரன் அந்தப்பெண்ணின்பிதாவுக்குப் புத்ரிகாபுத்ரனாகிறான். இறந்துபோனவன் ஆண்மையில்லாதவன் ஜாதிதவறினவன் இவர்களின்மனைவிகளிடத்தில் அந்தப்புருஷன் அனுமதியினால் தர்மத்தை யனுஸரித்து உண்டாக்கப்பட்டபுத்ரன் க்ஷேத்ரஜனென்னப்படுகிறான். ஒருவனுக்குப் புத்திரனில்லாமற்போனகாலத்தில் ஒரேஜாதியிற்பிறந்தஎந்தப்புத்ரனைத் தாய்தந்தையர்கள் அன்புடன் தாரைவார்த்துக் கொடுக்கின்றனரோ அவன் வாங்கினவர்களுக்குத் தத்தபுத்திரனென்று அறியவேண்டும். [1]குணமும் குற்றமுந்தெரிந்தவனும் புத்ரனுக்குரியகுணங்களுடையவனும் ஒரேஜாதியிற்பிறந்தவனுமாகிய ஒருவனைத் தனக்குபபுத்ரனென்று ஒருவன் அபிமானித்து எடுத்துக் கொள்வானாயின் அவன் அவனுக்கு க்ருத்ரிமபுத்ரனென்றறியத்தக்கவன். ஒருத்திக்கு ரகஸ்யமாக ஒருபுத்ரன்பிறந்து இன்னவனுக்குப் பிறந்தானென்று தெரியாமலிருந்தால் அவன் எவனுடையமனைவிக்குப் பிறந்தானோ அவனுக்கே கூடஜனென்னும் புத்ரனாவான். தாய்தந்தையிருவரினாலுமாவது இருவரில் ஒருவரால்மட்டிலுமாவது விட்டுவிடப்பட்டவனை மற்றொருவன் புத்ரனாக எடுத்துக்கொள்வானாயின் அவனுக்கு அந்தப்புத்ரன் அபவித்தபுத்ரனென்றுசொல்லப்படுகிறான். விவாகமாகாதபெண் தன்தந்தையின்வீட்டிலிருக்கும்போதே ரகஸ்யமாகப்புத்ரனைப்பெறுவாளாயின் அந்தக் கன்னிகைக்குப் பிறந்தபுத்ரனை அவளைமணம்செய்பவனுக்குக் கானீனபுத்ரனென்று சொல்லுவார். கர்ப்பமாயிருக்கும் ஒருத்தி தெரிந்தோ தெரியாமலோ விவாகம்செய்யப்பட்டால் அந்தப்புத்ரன் அவளைவிவாகம்செய்தவனுக்கு ஸஹோடபுத்ரனென்று சொல்லப்படுகிறான். ஒருவன் தனக்குப்புத்ரன்வேண்டுமென்று ஒருபிள்ளையைத்

[1] புண்ணியபாபங்கள்.

தாய்தகப்பன்களிடமிருந்து விலைக்குவாங்குவானாயின் அந்தப்புத்ரன் அவனுக்கு இனமாயிருந்தாலும் இராவிட்டாலும் க்ரீதபுத்ரனென்று சொல்லப்படுகிறான். கணவனால்விடப்பட்டோ விதவையாயோ இருக்கும் ஒருத்தி தன்னிச்சையாய்த் திரும்பவும் மற்றொருவனுக்கு மனைவியாகிப் புத்ரனைப்பெறுவாளாயின் அந்தப்புத்ரன் பௌனர்ப்பவனென்று சொல்லப்படுகிறான். அவள் [1] அக்ஷதயோனியாயிருந்து மற்றொருவனையடைந்தால் [2] அப்புதிய கணவனோடு அவளுக்கு விவாகஸம்ஸ்காரங்கூடும். அவள் வேறுஒருவனைச்சேர்ந்தபிறகு திரும்பவும் முன் கணவனிடமேவந்தால் அவளுக்கு அவனுடன் திரும்பவும் விவாக ஸம்ஸ்காரம்கூடும். தாய்தந்தையர் இல்லாமலாவது தாய்தந்தையர்களால் குற்றமின்றிவிடப்பட்டாவது தன்னையே ஒருவனுக்குப்புத்ரனாகக்கொடுப்பவன் ஸ்வயந்தத்தனென்றுசொல்லப்படுகிறான். பிராம்மணன் காமத்தினால் சூத்திரப் பெண்ணினிடம் உண்டாக்கினபுத்ரன் உயிருடனிருக்கும்பிணம்போன்றவனாதலின் பாரசவனென்றுசொல்லப்படுகிறான். தாஸியினிடத்திலும் தாஸனுடையதாஸியினிடத்திலும் சூத்ரனுக்குப்பிறக்கும்புத்ரன் பிதாவின்அனுமதிபெற்றானாயின் ஸொந்தப்புத்திரர்களுடன் ஸமபாகம் எடுத்துக்கொள்ளலாமென்று தர்மம் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. க்ஷேத்ரஜன் முதலாகச் சொல்லப்பட்ட இப்பதினொருபுத்ரர்களையும் ச்ராத்தமுதலானகிரியைகள் லோபியாமலிருக்கிறதற்காகப் புத்ரனுக்குப்பிரதிநிதிகளென்று தெரிந்தவர்கள் கூறுகின்றனர். ஒரு பிதாவுக்குப்பிறந்த ஸகோதரர்களில் ஒருவனுக்குப்புத்ரனிருப்பானாயின் அவனாலேயே அந்தச்சகோதரர்களனைவரும் புத்ரனுள்ளவராவாரென்று மனு சொல்லியிருக்கிறார். ஒருவனைக்கணவனாக அடைந்த அநேகம்பெண்களில் ஒருத்திக்குப்புத்ரனிருந்தால் அவர்களனைவருக்கும் அவனே புத்ரனாகிறானென்றும் மனு சொல்லியிருக்கிறார். ஔரஸன், தன்பாரியையினிடத்தில் தன்அனுமதியினால் பிறந்தவனாகிய நிருக்தஜன், அனுமதியில்லாமலே அன்னியனுக்குப் பிறந்த ப்ரஸ்ருதஜன், பதிதனுக்குத் தன்னோடுகூடவேசேர்ந்திருக்கும் மனைவியினிடத்திற்பிறந்தபுத்ரன், தத்தபுத்ரன், க்ருத்ரிமபுத்ரன், ஸஹோடன், ஆறு அபத்வம்ஸஜர்கள், கானீனர்கள், அபஸதர்கள் ஆகிய இவர்கள் புத்ரர்களாகச் சொல்லப்பட்டிருக்கின்றனர். பாரதனே! அவர்களைத் தெரிந்துகொள்" என்றார்.

[1] புருஷஸம்பந்தமில்லாதவள். [2] 'பௌனர்ப்பவேந' என்பது மூலம்.

யுதிஷ்டிரர், "அபத்வம்ஸஜர் அறுவர் யார்? அபஸதர் யார்? இவற்றையெல்லாம் எனக்குத் தெளிவாக நீர் உரைக்கக்கடவீர்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார். "பாரதனே! யுதிஷ்டிரனே! பிராம்மணனுக்குக் கீழ்மூன்றுவர்ணத்துப் பெண்களிடம் பிறந்தபிள்ளைகளும் க்ஷத்திரியனுக்குக் கீழ் இரண்டு வர்ணத்துப்பெண்களிடத்தில் பிறந்த பிள்ளைகளும் வைசியனுக்குக் கீழ்ஒருவர்ணத்துப் பெண்ணினிடம் பிறந்தபிள்ளையும் இரண்டுவர்ணங்கள்கலந்துஉண்டானவர்கள். இவ்வறுவர் அபத்வம்ஸஜர். அபஸதர் அறுவரையும் கேள். சூத்ரனுக்குப் பிராம்மணக்ஷத்திரியவைசியப்பெண்களிடம்பிறந்த ஸம்ஸ்காரமற்ற சண்டாளர்களாகிய அபஸதர்கள்மூவர். வைசியனுக்குப் பிராம்மணப்பெண்ணினிடத்திலும் க்ஷத்திரியப்பெண்ணினிடத்திலும்பிறந்தவர் முறையே மாகதன் வாமகனென்னும் அபஸதர்இருவர். க்ஷத்திரியனுக்குப் பிராம்மணப்பெண்ணினிடம்பிறந்த ஸூதனென்ற அபஸதன் ஒருவன். இவ்வறுவரும் அபஸதரென்னப்படுகிறார். அரசனே! இப்புத்ரர்களைப் பொய்யாகச்செய்யமுடியாது" என்றார். யுதிஷ்டிரர், "பிதாமஹரே! சிலர்மட்டும் க்ஷேத்ரஜனைப் புத்ரனென்றுசொல்லுகின்றனர். வேறுசிலர் தம்வீரியத்திற்குப்பிறந்தவனையே புத்ரனென்கிறார்கள். இவ்விருவரும் ஒருவனுக்கு ஸரியானபுத்ரர்களா? அதை எனக்குச் சொல்லக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர், "தன்வீரியத்திற்குப்பிறந்தவனும் புத்ரனாவான். தன்க்ஷேத்ரத்திற்பிறந்தவனும் புத்ரனாவான். ஸஹோடன் சாஸ்திரவிதியைக்கடந்தே புத்ரனாகிறானென்பதை நீ என்னிடம் தெரிந்துகொள்வாயாக" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "தன்வீரியத்திற்குப்பிறந்தவன் தன்புத்ரனென்பதை அறிந்திருக்கிறோம். க்ஷேத்திரத்திற்பிறந்தவன் புத்ரனாவது எப்படி? சாஸ்திரவிதியைக்கடந்ததனால் உண்டான ஸஹோடனைப் புத்ரனென்றுநினைப்பதெப்படி?" என்றுகேட்டார். பீஷ்மர், "அரசனே! யுதிஷ்டிர! ஒருவன் தன்வீரியத்தினால் புத்ரனையுண்டாக்கி ஏதோ ஒருகாரணம்பற்றி அப்புத்ரனை விட்டுவிடுவானாயின் அப்புத்ரன் விஷயத்தில் வீரியம்காரணமாவதில்லை. அந்தப்புத்ரன் அந்தப்பெண்ணின்கணவனுக்கே உரியவன். அரசனே! புத்ரனைவிரும்புகிறஒருவன் புத்ரனுக்காகவே ஒருகர்ப்பிணியை விவாகம்பண்ணிக்கொள்வானாயின் அந்தவிஷயத்தில் தனக்குப்பிறந்தவன் தான் புத்ரனென்பதில்லை. பரதசிரேஷ்டனே! ஒருவனுடையமனைவியினிடத்தில் மற்றொருவனுக்குப்பிறந்தபுத்ரன் அடையாளங்களாலேயே அறியப்படுகிறான். ஒருவனுடைய உருவத்தை மறைக்கமுடியாது. அது பிரத்யக்ஷமாகக்காணப்படுகிறது. சில இடங்களில் தான் எடுத்

துக்கொள்வதனாலேயே கிருத்ரிமபுத்ரனென்றுகாண்கிறோம். யுதிஷ்டிர! அவன் விஷயத்தில் பீஜமும் காரணமன்று; க்ஷேத்திரமும் காரணமன்று" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "பாரதரே! அபிமானித்து எடுத்துக்கொண்டதினாலேயே அறியப்படுகிறவனும் வீரியமும் க்ஷேத்திரமும் காரணமாகக்காணப்படாமலிருப்பவனுமாகிய க்ருத்ரிமபுத்ரன் எப்படிப்பட்டவன்?" என்றுகேட்டார். பீஷ்மர், "தாய்தந்தையர்களால் வழியில்போட்டுவிடப்பட்ட பிள்ளையை ஒருவன்வளர்க்க அவன்தாய் தந்தைகள் இன்னாரென்று தெரியாமலுமிருக்குமாயின் அவன் வளர்ப்பவனுக்குக் கிருத்ரிமபுத்ரனாகிறான். யஜமானனில்லாதசொத்துக்கு அது யாருடைய அனுபவத்தில் இருப்பதாகக் காணப்படுகிறதோ அவன்தானே அதிகாரி? எந்தவர்ணத்தான் அந்தப்புத்ரனை வளர்க்கிறானோ அந்தவர்ணத்தானாகவே அந்தப்புத்ரனாகிறான்" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "பிதாமஹரே! அவனுக்கு உபநயனமுதலிய ஸம்ஸ்காரங்களை எப்படிச்செய்யவேண்டும்? அவனுக்குக் கன்னிகாதானம்செய்வதெப்படி? அதனை எனக்குச்சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார். "வளர்ப்பவன் தன்னைப்போலவே அவனுக்கு ஸம்ஸ்காரம்செய்யவேண்டும். தாய்தந்தைகளால் விடப்பட்டவன் தன் யஜமானனுடையவர்ணத்தைச் சேர்ந்தவனேயாகிறான் தர்மந்தவறாதவனே! யுதிஷ்டிரனே! ஆதலால், போஷிப்பவனுடைய கோத்திரத்தில் பிறந்தவனுக்குச்செய்யும் ஸம்ஸ்காரத்தையே அவனுக்குச்செய்யவேண்டும். அந்தவர்ணத்துக் கன்னிகையையே அவனுக்குக்கொடுக்கவேண்டும். மாதாவின்வர்ணம் நிச்சயிக்கப்பட்டிருந்தால் உபநயனஸம்ஸ்காரம்செய்வதற்கு அவள் வர்ணமும் கோத்திரமுமேயாகும். கானீனனும் ஸஹோடனும் பாவத்தினால்வந்த புத்ரர்களென்றே அறியவேண்டும். அவர்களுக்கும் ஸரியானபுத்ரர்களுக்குப்போலவே உபநயநமுதலான ஸம்ஸ்காரங்களைச் செய்யவேண்டுமென்பது நிச்சயம். பிராம்மணர்முதலானவர் க்ஷேத்திரஜனாயினும் அபஸதனாயினும் ஸஹோடனாயினும் அந்தப்புத்ரர்களுக்கும் தங்களுக்குரிய ஸம்ஸ்காரங்களையே செய்யவேண்டும். [1]தர்மசாஸ்திரங்களில் வர்ணங்களைப் பற்றி இந்தநிச்சயந்தான் காணப்படுகிறது. இவற்றையெல்லாம் உனக்குச்சொன்னேன். இன்னும் என்னகேட்கவிரும்புகிறாய்?" என்றுசொன்னார்.

[1] அதிகபாடமான அரை சுலோகம் விடப்பட்டது.

## எண்பத்தைந்தாவது அத்யாயம்.
## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(ஸஹவாஸஸ்நேஹத்தைப் பற்றிய ச்யவனர் கதை.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! பார்ப்பதனுலும் கூடவஸிப்பதனுலும் உண்டாகும் ஸ்நேகம் எவ்வகையென்பதையும் கோக்களின் பெரிய மகிமையையும்பற்றி எனக்கு உரைக்கக்கடவீர்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானர்.

"சிறந்தபராக்கிரமமுள்ளவனே! ஆ! ஆ! நகுஷனுக்கும் ச்யவனமகரிஷிக்கும்நடந்த ஸம்பாஷணத்தைப்பற்றிய ஒருபூர்வகதையை உனக்குச்சொல்வேன். பரதசிரேஷ்டனே! முற்காலத்தில் ப்ருகுவம்சத்தவரான ச்யவனமகரிஷி நீருக்குள்வஸித்துக்கொண்டு பெருந்தவம் செய்பத்தொடங்கினர். அம்முனிவர் கர்வத்தையும் கோபத்தையும் மகிழ்ச்சியையும் துயரத்தையும்ஒழித்துப் பன்னிரண்டுவருஷகாலம் ஜலத்தில்வஸித்துக்கொண்டு தவம்செய்தார். ஜலசரங்களான பிராணிகளெல்லாவற்றிற்கும் சந்திரன்போல இனிய அம்மகரிஷி எல்லாப் பிராணிகளிடத்தும் உண்மையானபெரியநம்பிக்கையை வைத்தார்; ஸ்நானம்செய்தும் தேவதைகளைநமஸ்கரித்தும் கங்கையமுனையிரண்டும் சேருமிடத்தில் கட்டைபோல ஜலத்தில் முழுகியிருந்தார்; காற்றின் வேகம்போல மிக்கபயங்கரமும் அச்சத்தைத்தரும்ஒலியுள்ளவையுமான கங்கையமுனை நதிகளின்வேகத்தைத் தலையினல்தாங்கினர். கங்கையும் யமுனையும மற்றுமுள்ளநதிகளும் தடாகங்களும் அம்முனிவரைப் பிரதக்ஷிணம்செய்தன. அவரைத் துன்பப்படுத்தவில்லை. பரதசிரேஷ்டனே! சிறந்தஞானமுள்ள அம்மகாமுனிவர் மரம்போல நீருக்குள் படுத்தார்; பிறகு, நோக நின்றார். அவர் ஜலத்தில் வஸிக்கும்பிராணிகளுக்கெல்லாம் காட்சிக்கினியவராயிருந்தார். அப்பொழுது மீன்கள் மனங்களித்து அவரை முகர்ந்தன. அவருக்கு அந்தஜலவாஸத்திலேயே பெருங்காலம் கடந்துபோயிற்று. சிறந்த பராக்கிரமமுள்ளவனே! பிறகு, ஒருநாள் ஒருவேளையில் மீன்பிடித்து ஜீவிப்பவர்கள் வலைகளைக்கையினலெடுத்துக்கொண்டு அவ்விடத்திற்கு வந்தனர். தேகப்பயிற்சியுள்ளவர்களும் பலமும் பராக்கிரமமுமுள்ளவர்களும் தண்ணீரில்நடப்பவர்களும் வலைவேலையில் தவருதவர்களுமாகிய செம்படவர் அநேகர் அவ்விடத்தில் மீன்பிடிக்க எண்ணங்கொண்டு அங்கேவந்தனர். பரதசிரேஷ்டனே! அவர்கள் புதுக்கயிறுகளினல் பின்னப்பட்ட உறுதியானவலையைப் போட்டனர். பிறகு

மச்சங்களைத் தூக்கியிழுத்தனர். அப்போது, மச்சங்களைவிரும்பின அந்தச்செம்படவர்கள் அநேகஉபாயங்களினால் கங்கையமுனைகளின் ஜலத்தை வலையினால் மூடிவிட்டனர். புதுக்கயிறுகளினாற்பின்னப்பட்டதும் அந்தஜலத்திற்குப் போதுமான அகலமும் நீளமுமுள்ளதுமான அவர்களின்வலை முழுதும்பரவிற்று. பிறகு, அவர்களனைவரும் ஜலத்திலிருந்து மிகப்பெரியதும வலியதுமான அந்தவலையை நன்றாக முறுக்கிஇழுத்தனர். அவர்கள் சிறிதும்பயப்படாதவர்களாகவும் உற்சாகமுள்ளவர்களாகவும் ஒருவரால்ஒருவர்தாங்கப்பட்டவர்களாகவும் அங்குள்ள மச்சங்களையும் மற்றுமுள்ள ஜலஜந்துக்களையும் கட்டியிழுத்தனர். மஹாராஜனே! அப்படியே மச்சங்களால் சூழப்பட்ட ப்ருகுவம்சபுத்ரரான சயவனரையும் தற்செயலாக வலையினால் இழுத்தனர். ஆற்றின்பாசிகள் உடம்பெல்லாம் ஒட்டிக்கொண்டவரும் [1]செம்மட்டைநிறமான மீசையையும் ஜடையையுமுடையவரும் தேகத்தில் கிளிஞ்சில்கள் நகங்கள்போல ஒட்டிக்கொண்டிருப்பதனால் விசித்ரமான பன்றிமுடகள் பதிந்திருப்பவர்போன்றவரும் வலையினால் வெளியில் எடுக்கப்பட்டவரும் வேதங்களில் கரைகண்டவருமான அந்த முனிவரைக் கண்டபோதே அந்தச்செம்படவர்களனைவரும் கைகூப்பித் தலைவணங்கித் தரையில்விழுந்தனர். விசனத்தினாலும் பயத்தினாலும் வலையையிழுத்ததனாலும் தரையில்வந்ததனாலும் மீன்கள் இறந்துபோயின. மீன்கள் வதம்செய்யப்பட்டதைக்கண்ட அம்முனிவர் தயைமேற்கொண்டு அடிக்கடி பெருமூச்செறிந்துகொண்டிருந்தனர். செம்படவர்கள், 'மகாமுனிவரே! நாங்கள் தெரியாமற்செய்த பாவத்திற்கு எங்கள்மேல் அநுக்கிரகம்செய்யக்கடவீர். நாங்கள் உமக்கு என்னவிருப்பத்தைச் செய்யக்கடவோம்? அதை எங்களுக்குக் கட்டளையிடும்' என்று வேண்டினர். இவ்வாறு அவர்களால் சொல்லப்பட்ட மீன்களின் நடுவிலிருந்த சவயனர், 'இப்போது என்னுடைய முக்கியமான விருப்பத்தை நீங்கள் ஊக்கத்துடன் கேளுங்கள். உயிர் விடுவதையோ வலையிலிருந்து விடுபடுவதையோ இம்மச்சங்களோடு கூடத்தான் நான் அனுபவிப்பேன். கூடஇருந்தசினேகத்தினால் ஜலத்தில்வசித்த மச்சங்களை விட நான் துணியவில்லை' என்றுசொன்னார். அவரால் இவ்வாறுசொல்லப்பட்ட அந்தச்செம்படவரனைவரும் பயத்தினால் மிகவும் நடுக்கமடைந்து முகங்கருகி நகுஷனுக்கு அதைத் தெரிவித்தனர்.

[1] 'ஹரி' என்பது மூலம்; பச்சை யென்றுங்கொள்ளலாம்.

## எண்பத்தாறுவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(ச்யவனர் கதைத்தொடர்ச்சி.)

அந்த ச்யவனர் அவ்வாறு இருப்பதைக்கேட்டநகுஷன், அமைச்சர்களோடும் புரோகிதர்களோடும் அவரிருக்குமிடத்திற்கு விரைவாகச் சென்றான். அவ்வரசன் சாஸ்திரப்படி சுத்தியைச்செய்துகொண்டு மகாத்மாவானச்யவனருக்குக் கைகூப்பிவணங்கித் தன்னைத் தெரிவித்துக்கொண்டான். அரசனே! அந்தஅரசனுடையபுரோஹிதர் விரதந் தவறாதவரும் தேவதைபோன்றவரும் மகாத்மாவுமானச்யவனரைப் பூஜித்தார். நகுஷன், 'பகிமைபொருந்திய பிராம்மணோத்தமரே! உமக்கு எந்தவிருப்பத்தை நான் செய்யக்கடவேன்? அதை எனக்குக் கட்டளையிடும். அது செயற்கரியதாவாயிருந்தாலும் செய்வேன்' என்றுகேட்டான். அதற்கு, ச்யவனர், 'மச்சங்களால் ஜீவிக்கும்செம்படவர்கள் மிக்கவருத்தப்பட்டிருக்கின்றனர். அவர்களுக்கு மச்சங்கள்விற்குமவிலைகளுடன் எனக்குமவிலைகொடு' என்று சொன்னார். நகுஷன், 'புரோகிதரே! இந்தப்பகவானுக்குவிலையாக ஆயிரம்பொன் செம்படவர்களுக்குக் கொடுக்கவேண்டும்; அல்லது, இந்தச்யவனமகரிஷி என்னசொல்லுகிறார்?' என்றுசொன்னான். ச்யவனர், 'அரசனே! தன்விலையைத் தான்சொல்லலாகாது. அதை உலகம் சிலாகிக்காது. எனக்கு ஆத்மஸ்துதியைச்செய்யவும் இஷ்டமில்லை. ஆதலால், ஆயிரம்பொன்னுக்குத் தகுதியுள்ளவனல்லேனென்பதைமட்டும் நான் சொல்வேன்; அல்லது, நீ என்ன நினைக்கிறாய்? எனக்குச் சரியானவிலையைக்கொடு; உன்புத்தியினால் நிச்சயம் செய்' என்றுசொன்னார். நகுஷன் புரோகிதரைப்பார்த்து, 'பிராம்மணரே! செம்படவர்களுக்கு நூறாயிரம்பொன்கொடும்; அது இந்தப்பகவானுக்கு விலையாகுமா? அல்லது, நீர் வேறுஎன்ன நினைக்கிறீர்?' என்றுகேட்டான். ச்யவனர், 'ராஜசிரேஷ்டனே! நூறாயிரம் பொன்களுக்கு நான் ஈடாகமாட்டேன். ஸரிவிலை கொடுக்கவேண்டும். மந்திரிகளுடன்கலந்து ஆலோசிக்கக்கடவாய்' என்றுசொன்னார். நகுஷன், 'புரோகிதரே! கோடிப்பொன் விலையாகச் செம்படவர்களுக்குக்கொடும். அதுவும் விலையாகாவிடின் இன்னும் அதிகமாகவுங் கொடுக்கலாம்' என்றுசொன்னான். ச்யவனர், 'சிறந்தபராக்

கிரமமுள்ள அரசனே! கோடிக்கும் அதற்குமேற்பட்டதற்கும் நான் தகுந்தவனல்லேன். எனக்குத்தகுதியானவிலையைக் கொடுக்கவேண்டும். பிராம்மணர்களுடன் ஆலோசிப்பாயாக' என்றுசொன்னார். நகுஷன் புரோகிதரைப்பார்த்து, 'பிராம்மணரே! பாதிராஜ்யத்தையாவது முழுராஜ்யத்தையுமாவது செம்படவர்களுக்குக் கொடுக்கலாம். இதுஸரியென்று நான் நினைக்கிறேன். நீர் வேறுஏதாவதுநினைக்கிறீரா?' என்றுகேட்டான். ச்யவனர், 'வேந்தனே! பாதிராஜ்யத்தையும் முழுராஜ்யத்தையும் (எனக்கேற்ற) விலையாக்க நான் தகுந்தவனல்லேன். ஸரியானவிலை கொடுக்கப்படவேண்டும். ரிஷிகளுடன் கூட ஆலோசிக்கக்கடவாய்' என்றுசொன்னார். மகரிஷியின் சொல்லைக்கேட்டுத் துயரத்தினால்மனங்குன்றினநகுஷன் மந்திரிகளோடும் புரோகிதரோடுங்கூடச் சிந்தித்தான். அப்போது, காட்டில்ஸஞ்சரிப்பவரும் கிழங்குகளையும் கனிகளையும்உண்பவரும் பசுவினவயிற்றிற்பிறந்தவருமாகிய வேறுஒருமுனிவர் நகுஷன்சமீபத்திலிருந்துகொண்டிருந்தார். அந்தப்பிராம்மணோத்தமர் அந்தவேந்தனைவிளித்து, 'அந்தச்யவனர் உடனே திருப்தியடையும்படி நான் செய்வேன். நான் வேடிக்கையிலுங்கூடப் பொய்பேசேன். மற்றப்போது ஏது? உனக்கு நான் எதைச்சொல்வேனோ அதை நீ ஆக்ஷேபியாமற்செய்யவேண்டும்' என்றுசொன்னார். நகுஷன், 'மகரிஷியே! எல்லாந்தெரிந்தநீர் இந்தப்ருகுவம்சத்துமகரிஷிக்குத் தகுந்தவிலையைச் சொல்லக்கடவீர்; என்னையும் என்தேசத்தையும் என்குலத்தையும் காப்பாற்றுவீராக. இந்தப்பகவான் கோபித்தாராயின் மூவுலகங்களையும் அழித்துவிடுவார். தவமில்லாமல் கைவன்மையையேஆதாரமாகவுடைய என்னொருவனை அழிப்பது எவ்வளவு? அமைச்சரோடும் ரித்விக்குகளோடும் ஆழமானநீரில் மூழ்கிப்போனஎனக்கு நீர் தெப்பமாகக்கடவீர்; விலையை நிச்சயப்படுத்தும்' என்றுகேட்டான். கோவினிடத்திற்பிறந்தவரும் சிறந்ததவவன்மையுள்ளவருமாகிய அம்முனிவர் நகுஷன்சொல்லைக்கேட்டு, நகுஷனும் அவன்மந்திரிகளனைவரும் மகிழும்படி அவ்வரசனுக்குச் சொல்லலானார். 'பிராம்மணர்குலமும் கோக்குலமும் ஒன்றே இரண்டாகப் பகுக்கப்பட்டிருக்கின்றன. ஒருகுலத்தில் மந்திரங்களும் மற்றொருகுலத்தில் நெய்முதலிய ஹோமத்திரவியங்களுமிருக்கின்றன. புருஷஸ்ரேஷ்டனான மகாராஜனே! வர்ணங்களிற்சிறந்தவரான பிராம்மணர்களுக்கும் கோக்களுக்கும் விலையில்லை. ஆதலால், கோவை விலையாகஏற்படுத்தலாம்' என்றார்.

தர்மராஜனே! நகுஷன் அம்மகரிஷியின் சொல்லைக்கேட்டபிறகு மந்திரிகளோடும் புரோகிதர்களோடும் மிக மகிழ்வுற்று ப்ருகுபுத்ரரும் உக்கிரமானதவமுள்ளவருமான ச்யவனரிடத்திற்சென்று சொல்லினாலேயே அவர் ஸந்தோஷப்படும்படி, 'ஓ! பார்க்கவரே! பிரம்மரிஷியே! நீர் கோவினால் கிரயத்துக்குவாங்கப்பட்டீர்; எழுந்திரும்; எழுந்திரும். தர்மிஷ்டரிற்சிறந்தவரே! உமக்கு இதுவிலையென்று நான்நினைக்கிறேன்' என்றுசொன்னான். ச்யவனர், 'அரசர்க்கரசே! இதோ எழுந்திருக்கிறேன். குற்றமற்றவனே! நான் உன்னால் ஸரியானவிலைக்குவாங்கப்பெற்றேன். தர்மந்தவறாதவனே! இவ்வுலகத்தில் கோக்களுக்கொப்பானதனம் ஒன்றையும் நான் பார்க்கவில்லை. வீரனான அரசனே! கோக்களை வாயினாற்சொல்வதும் காதினால்கேட்பதும் கண்ணால்பார்ப்பதும் தானஞ்செய்வதும் எல்லாப்பாவங்களையும்போக்கி க்ஷேமங்களைத்தருவனவாகச் சொல்லப்படுகின்றன. கோக்கள் தாம் எப்போதும் லக்ஷ்மிக்குஆதாரமானவை. கோக்களினிடம் பாவமில்லை. மனிதர்களுக்கு எப்போதும் அன்னமும் தேவர்களுக்குச் சிறந்தஹவிஸ்ஸும் கோக்களே. ஹோமமும் யாகமும் எப்போதும் கோக்களைப்பொறுத்திருக்கின்றன. யாகத்தைநடத்துகின்றவைகளும் கோக்களே. யாகத்தின்பயனும் கோக்களே. தேவலோகத்தின் அழிவில்லாத ஸ்வர்க்கஸுகமாகிய அமிருதத்தைப்பெருக்குகின்றவையும் வகிக்கின்றவையும் கோக்களே. இவை அம்ருதத்திற்கு ஆதாரமாயிருப்பதனால்தான் எல்லாலோகங்களாலும் நமஸ்கரிக்கப்படுகின்றன. இப்பூமியில் கோக்கள் ஒளியிலும் உருவத்திலும் பாவத்தையெரிக்கின்ற அக்கினியைப்போன்றவை. மனிதர்களுக்குக் கோக்களே மிகப்பெரியமகிமை. சுகத்தைக்கொடுப்பவையும் அவையே. பசுக்கூட்டம், எந்தஇடத்தில் அச்சமின்றிப் படுத்து மூச்சுவிடுகிறதோ அந்தத்தேசத்தையே விளங்கச்செய்கிறது; அந்தத் தேசத்தின்பாவத்தைப் போக்குகிறது. பசுக்கள் ஸ்வர்க்கத்திற்குப் படிகள். அவை ஸ்வர்க்கத்திலும் பூஜிக்கப்படுகின்றன. கோக்கள் நினைத்தவற்றையெல்லாம் கறக்கும்தேவதைகள். அவற்றிற்குமேல் சிறந்தது மற்றொன்றுமில்லை. பரதசிரேஷ்டனான நகுஷனே! கோக்களிடத்திலுள்ள இந்தமகிமையை நான் உனக்குச்சொன்னேன். இஃது அவற்றின்சிறப்பில் சிறுபான்மைசொன்னது; முழுவதும்சொல்லமுடியாது' என்றுசொன்னார். செம்படவர்கள், 'முனிவரே! எங்களைப் பார்த்தும் எங்களுடன் பேசியுமிருக்கிறீர். ஸாதுக்களுக்கு ஏழு சொற்களில் ஸ்நேகம் உண்டாகிறது. பிரபுவே! எங்களுக்கு அனுக்கிரகம்செய்வீராக. தர்மாத்மாவே! ஹவிஸ்ஸுகளெல்லாவற்றையும்

அக்கினி புசிப்பது எப்படியோ அப்படியே நீரும் (எல்லாவற்றையும் எரிக்கும்) சக்தியுள்ள புருஷவடிவமான அக்நியாயிருக்கிறீர். வித்வானே! உங்களை நாங்கள் நமஸ்கரித்துப் பிரார்த்திக்கிறோம். எங்களை அனுக்கிரகிப்பதற்காக இந்தக்கோவை எங்களிடம் நீங்கள் வாங்கிக்கொள்ளவேண்டும். காப்பாற்றத் திறமையோடு கரைகடந்தஆபத்தில் காப்பாற்றுகிறவர்களுக்கு என்னபலனே அது உமக்கேதெரியும். இப்போது எங்களுக்கு நரகத்திற்கு நீர்தாம் சரணம் என்றுவேண்டினர். அதற்கு ச்யவனர், 'ஏழை ரிஷி பார்வையில்விஷமுள்ளஸர்ப்பம் இவர்களின்கண்கள், ஜ்வலிக்கும்அக்நி உலர்ந்தவிறகையெரிப்பதுபோல மனிதனை அடியோடு எரித்துவிடும். செம்படவர்களே! உங்களிடத்தில் பசுவைப் பெற்றுக்கொள்ளுகிறேன். உடனே நீங்கள் பாவத்தைவிட்டு வலையினால் எடுக்கப்பட்ட மீன்களுடன்கூட ஸ்வர்க்கத்திற்குச் செல்லுங்கள்' என்றுசொன்னார். பரிசுத்த ஆத்மாவான அம்மகரிஷியின்மகிமையினால் அவர் சொன்னவுடனே அந்தச்செம்படவர்கள் மச்சங்களுடன் ஸ்வர்க்கத்திற்குச்சென்றனர். பரதசிரேஷ்டனே! அப்போது செம்படவர்களும் ஸ்வர்க்கமேறுவதைக்கண்டு நகுஷராஜன் வியந்துநின்றான். பிறகு, கோவுக்குப்பிறந்தமுனிவரும் ப்ருகுசிரேஷ்டரான ச்யவனரும் நகுஷராஜனுக்குத் தக்க இரண்டுவரங்கள் அளிப்பதாகக் கேட்டனர். பரதசிரேஷ்டனே! அப்போது பூமியைஆளுகிறஇந்திரனையொத்தவனும் மஹாவீரனுமான நகுஷமகாராஜன் ஸந்தோஷமடைந்து அனுக்கிரகமே பெரிதென்றுசொல்லித் தர்மத்தில் நிலைகுலையாமலிருப்பதையே வரமாக அவரிடம் பெற்றுக்கொண்டான். அவர்களால், 'அப்படியேஆகட்டும்' என்றுசொல்லப்பெற்று அவ்விரண்டுரிஷிகளையும் அன்புடன் பூசித்தான். பிறகு, ச்யவனர் தவதீக்ஷையைமுடித்துக்கொண்டு தம்ஆசிரமத்திற்குச் சென்றார். சிறந்தமகிமையுள்ள [1]கவிஜரென்னுமமுனிவரும் தம் ஆசிரமத்திற்குச்சென்றார். அரசனே! செம்படவர்களும் அந்த மச்சங்களும் ஸ்வர்க்கத்திற்குச்சென்றனர். நகுஷனும் வரம்பெற்றுக்கொண்டு தன்நகரத்தில் பிரவேசித்தான். அப்பா! யுதிஷ்டிரா! பார்ப்பதனாலும் கூடவஸிப்பதனாலும் ஸ்நேகமுண்டாவதைப்பற்றியும் பசுக்களின் மகிமையைப்பற்றியும் நீ என்னைக்கேட்டதற்குத் தர்மத்தினுடைய நிச்சயத்துக்காக இந்தசரித்திரத்தை உனக்குச்சொன்னேன். வீரனே! இன்னும் என்னசொல்லவேண்டும்? உன்மனத்தில் என்ன இருக்கிறது?" என்றார்.

---

[1] கோவினிடம் பிறந்தவர்

## எண்பத்தேழாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி)



(பரசுராம விசுவாமித்ர ஜனனவிஷயமான ச்யவனரிஷி குசிகனிடம்வஸித்த கதை.)

யுதிஷ்டிரர், "பேரறிவுள்ளவரே! கடலுக்கொப்பானவரே! மகாவீரரே! எனக்கு இன்னுமொரு மிகப்பெரியஸந்தேகமிருக்கிறது. அதைக் கேளும். கேட்டபின் எனக்கு விரித்துரைக்கக்கடவீர். பிரபுவே! தார்மிஷ்டரிற்சிறந்தவராகிய பரசுராமரைக்குறித்து எனக்கு மிக்கஆச்சரியமிருக்கிறது. அதை எனக்கு உரைக்கக்கடவீர். பிரம்ம தேஜஸின்பலன் மிகசிரப்பின இந்த ச்யவனர்முதலானவரிடத்தில் உறுதியானபராக்ரமமுள்ள இந்தப் பரசுராமர் எப்படி உண்டானார்? பிரம்மரிஷிகள் வம்சத்திற்பிறந்தபரசுராமர் க்ஷத்திரியச்செய்கையுள்ளவரானது எப்படி? அரசரே! ஆதலால், இவருடையவரலாற்றை முழுதும் சொல்லக்கடவீர். விசுவாமித்திரரும் க்ஷத்திரியவம்சத்திற்பிறந்து பிராம்மணரானது எப்படி? புருஷசிரேஷ்டரே! பரசுராமர் விசுவாமித்திரர் இவ்விரண்டுமகாத்மாக்களின் மகிமையும் மிகப்பெரிதாகவன்றோ இருந்தது? ஆ! ஆ! மிகத்தெரிந்தவரே! இந்தக்குற்றம் ச்யவனர்குசிகர் இவர்களின் புத்ரர்களைத்தாண்டிப் பேரர்களுக்குவந்ததேன்? இதை எனக்குத் தெளிவாக உரைக்கக்கடவீர்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"பாரதனே! இந்தவிஷயத்தில் ச்யவனருக்கும் குசிகனுக்கும் நடந்த ஸம்பாஷணையாகிய ஒருபுராதனசரித்திரத்தைக் கூறுகின்றனர். முன்னர், தவத்தையே தனமாகவுடையவரும் ரிஷிசிரேஷ்டரும் ப்ருகுபுத்ரரும் சிறந்தஞானமுள்ளவருமான ச்யவனர் தம்வம்சத்தில் இந்தக்குற்றம் நேரிடப்போவதை முன்னமே அறிந்து குணதோஷங்களின் பலாபலன்களையெல்லாம் மனத்தில் நிச்சயம்செய்துகொண்டு குசிகவம்சத்தை முழுதும் எரிக்கக்கருதி அந்தக்குசிகனிடம்சென்று, 'குற்றமற்றவனே! எனக்கு உன்னுடன்கூட வஸிப்பதற்கு விருப்பமுண்டாயிருக்கிறது' என்றுசொன்னார். அதற்குக்குசிகன், 'பகவானே! இவ்வுலகத்தில் தெரிந்தவர்கள் சேர்ந்து ஒருதர்மத்தை அநுஷ்டிக்கின்றனர் அதைத்தான் கன்னிகாதானம்செய்யும்போதெல்லாம் தெரிந்தவர்கள்சொல்லுவது. தபோதனரே! தர்மமார்க்கமான அந்தக்காரியம் வெகுநாளாக விட்டுப்போயிற்று. அதை

நான் செய்வேன். அதற்கு நீங்கள் அனுமதிகொடுக்கவேண்டும்' என்றுசொன்னான்; உடனே ச்யவனமஹாமுனிவருக்கு ஆசனத்தையெடுத்துக்கொண்டு மனைவியுடன் அவரிருக்குமிடத்திற்கு வந்தான். அரசன் பாத்திரத்தையெடுத்துக்கொண்டு அவருக்குப் பாத்யத்தைக் கொடுத்தான்; அம்மகாத்மாவுக்கு எல்லா உபசாரங்களையும் செய்தான். பிறகு, மகாத்மாவும் நியமத்தவறாதவனுமான அந்த அரசன் சாஸ்திரப்படி மதுபர்க்கத்தை ச்யவனருக்கு ஆதரத்துடன் கொடுத்தான். அந்தப்பிராம்மணருக்கு அவ்வாறு பூஜைசெய்தபிறகு மறுபடியும் அவரைப்பார்த்து, 'ஓ! பகவானே! நாங்களிருவரும் உமக்குட்பட்டவர்கள். நாங்கள் என்னசெய்யக்கடவோம்? சொல்லும். கடுந்தவமுள்ளவரே! ராஜ்யம் தனம் பசுக்கள் யாகங்கள் தானங்கள் இன்னும் என்னவேண்டுமானாலும் சொல்லும். உமக்கு எல்லாவற்றையும் கொடுக்கிறேன். இந்த அரண்மனையும் இந்தராஜ்யமும் இந்தஸிம்மாஸனமும் உம்முடையவை. நீர் தாம் அரசர்; பூமியை ஆளும். நான் என்மனைவியுடன்கூட உமக்குட்பட்ட ஊழியன்' என்று சொன்னான். அவன் இந்தச்சொல்லைச்சொன்னபோது ப்ருகுபுத்ரரான ச்யவனர் மிகுந்த ஸந்தோஷமடைந்து குசிகனைப்பார்த்து, 'வேந்தே! ராஜ்யத்தையும் தனத்தையும் பெண்களையும் கோக்களையும் தேசங்களையும் யாகத்தையும் நான் விரும்பவில்லை. நான் சொல்வதைக் கேட்கவேண்டும். நான் ஒருதவம்செய்ய ஆரம்பிக்கப்போகிறேன். உங்களிருவருக்கும் இஷ்டமாயிருந்தால் நீங்களிருவரும் மனவேறுபாடின்றி ஜாக்ரதையோடு எனக்குப் பணிவிடைசெய்யவேண்டும்' என்றுகேட்டார். பாரதனே! அவர் இவ்வாறுசொன்னவுடன் அந்த அரசனும் அரசியும் களிப்படைந்து, 'அப்படியே ஆகட்டும்' என்று அந்தரிஷிக்கு மறுமொழிகூறினர். உடனே, குசிகன் மனக்களிப்புடன் அவரைத் தன் வீட்டில் சிறந்த இடத்திற்கு அழைத்துக் கொண்டுபோனான்; அழகான இடத்தை அவருக்குக் காண்பித்தான். 'தபோதனரே! பகவானான உங்களுக்கு இது சயனம். இதில் இஷ்டப்படியிருக்கலாம். உமக்கு ஸந்தோஷத்தையுண்டுபண்ணுவதற்கு நாங்களிருவரும் முயல்வோம்' என்றுசொன்னான். இப்படி அவர்கள் மூவரும் ஸம்பாஷணைசெய்துகொண்டிருக்கையில், சூரியாஸ்தமனமாயிற்று. உடனே, ரிஷி அன்னபானங்களைக்கொண்டுவரும்படி கட்டளையிட்டார். பிறகு, குசிகராஜன் வணங்கி, 'எவ்வகையான அன்னம் உமக்குவிருப்பம்? எதை நான் கொண்டுவரலாம்?' என்று கேட்டான். பாரதனே! அப்போது, அம்முனிவர் மிக்கமகிழ்ச்சி

யுடன் அரசனைப்பார்த்து, 'உன்னுடைய செல்வத்திற்குத்தகுந்த ஆகாரத்தைக் கொடு' என்றுசொன்னார். அவ்வரசன் அவர்சொல்லைக் கொண்டாடி, 'அப்படியே ஆகட்டும்' என்றுசொன்னான்; மன்னவ! தன்னியல்புக்குத்தக்க ஆகாரத்தை அவருக்குக் கொடுத்தான். பிரபுவே! தர்மந்தெரிந்தவரான அந்தச்யவனபகவான் புசித்தபிறகு, அரசன் அரசியிருவரையும்பார்த்து, 'எனக்கு நித்திரை வருத்துகிறது. நான் படுக்கவிரும்புகிறேன்' என்றுசொன்னார். பகவானுகிய அந்தரிஷிசிரேஷ்டர் உடனே படுக்கையறைக்குச் சென்று படுத்தார். அரசன் தன்மனைவியுடன் நின்றுகொண்டிருந்தான். அந்தச்யவனர், 'நான்தூங்கும்பொழுது எழுப்பக்கூடாது; நீங்களிருவரும் இரவில் கண்விழித்துக்கொண்டு என்கால்களைப் பிடிக்கவேண்டும்' என்றுசொன்னார். தர்மந்தெரிந்த குசிகன் ஆக்ஷேபியாமல், 'அப்படியே ஆகட்டும்' என்றுசொன்னான். அவர்களிருவரும் இரவுகழிந்தபோதும் அவரை எழுப்பாமலிருந்தனர். மகாராஜனே! அப்போது, அந்தஸ்த்ரீபுருஷர்களிருவரும் அம்மகரிஷிகட்டளையிட்டபடி ஜாக்கிரதையாக அவருக்குப் பணிவிடைசெய்துகொண்டிருந்தனர். அந்தமகிமைபொருந்திய பிராம்மணர் அவ்வாறு அரசனுக்குக்கட்டளையிட்டுப் பிறகு, ஒருபக்கமாக இருபத்தொருநாள் தூங்கினர். கௌரவனே! ச்யவனரை ஸந்தோஷப்படுத்துவதில் ஊக்கமுள்ள அவ்வரசன் மனைவியுடன் ஆகாரமில்லாமல் ஸந்தோஷமாக அவருக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தான். அந்தச்யவனமுனிவர் தாமேஎழுந்தார். அந்தச்சிறந்ததவமுள்ளவர் ஒன்றுஞ்சொல்லாமலே கிருகத்தினின்று வெளியிற்சென்றார். அவ்வரசன் அரசியிருவரும் பசியினாலும் களைப்பினாலும் வருந்தினவர்களாகவே அம்முனிவரைப் பின்சென்றனர். அம்முனிசிரேஷ்டர் அவ்விருவரையும் பார்க்கவேயில்லை. அரசர்க்கரசே! அந்தப்ருகுகுலசிரேஷ்டர் அரசன் அரசியிருவரும் பார்த்திருக்கும்போதே அந்தர்த்தானமாயினர். பிறகு, அரசன் தரையில் விழுந்தான். பிறகு, சற்றுநேரத்திற்கெல்லாம் மூர்ச்சைதெளிந்து அரசன் மறுபடியும் தன் தேவியுடன் அம்மகரிஷியைத் தேட ஆரம்பித்தான்'' என்றார்.

## எண்பத்தெட்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)



(ச்யவனர் குசிகனிடம்வஸித்ததைத் தொடர்ச்சி.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! அந்தப்பிராம்மணர் அந்தர்த்தானமானபோது அவ்வரசனும் சிறந்தபாக்கியவதியான அவன்மனைவியும் என்னசெய்தனர்? அதனை எனக்குச் சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"அவ்வரசன் அந்தரிஷியைக்காணாமல் மனைவியுடன்கூடக் களைத்து வெட்கி மதிமயங்கித் திரும்பினான். அவ்வரசன் நகரத்தினுள் பிரவேசித்தபின் துக்கத்துடன் அந்தச்யவனருடைய செய்கையையே நினைத்து ஒன்றும்பேசாமலிருந்தான்; ஓய்ந்தமனத்தோடு அரண்மனைக்குள் பிரவேசித்தான்; அந்தச்யவனர் அதேபடுக்கையில் படுத்திருக்கக்கண்டான். அந்தரிஷியைக்கண்டு அந்தப்புதுமையைநினைத்து அரசன் அரசிஇருவரும் திகைத்துநின்றனர். அவரைக்கண்டவுடன் அவ்விருவரும் களைப்புத்தீர்ந்தவராயினர். உடனே, இருவரும் அவரிருக்குமிடம்சென்று தத்தமிடத்திலிருந்து அவர் கால்களைப்பிடித்தனர். சிறந்ததக்தியுள்ள அம்மகாமுனிவர் மறுபடியும் அவ்வளவுகாலம் மற்றொருபக்கமாகப்படுத்துத் தூங்கி விழித்துக் கொண்டார். அவரிடத்தில் பயமுள்ள அவ்விருவரும் சிறிதும் மனவேறுபாட்டையடையவில்லை. பாரதனே! அரசனே! கண்விழித்துக் கொண்ட அம்முனிவர் அரசன் அரசியிருவரையும்பார்த்து, 'நான் ஸ்நானம்செய்யப்போகிறேன். எனக்கு எண்ணெயிட வேண்டும்' என்றுசொன்னார். பசியினாலும் களைப்பினாலும் ஓய்ந்துபோன அவ்விருவரும், 'ஆகட்டும்' என்றுசொல்லி, சதபாகமென்னும் விலைபெற்றதைலத்தோடு அவரிடம் வந்தனர். ஸுகமாகஉட்கார்ந்திருக்கும்ரிஷிக்கு அவர்கள் மௌனமாக அந்தத்தைலத்தைத் தேய்த்தனர். மிகச்சிறந்ததவமுள்ளபார்க்கவர் போதுமென்றுசொல்லவில்லை; அவர்கள்மனம்வெறுக்காமலிருப்பதைக் கண்டபோது அங்கிருந்து எழுந்து ஸ்நானசாலையுள் விரைவாகப் பிரவேசித்தார். அங்கே அரசனுக்குரிய ஸ்நானக்கருவிகள் வைக்கப்பட்டேயிருந்தன. அவற்றையெல்லாம் அங்கீகரியாமல் அரசன் பார்த்திருக்கும்போதே அம்முனிவர் திரும்பவும் அங்கேயே அந்தர்த்தானமாயினர், பரதசிரேஷ்டனே! அப்போதும் அந்த அரசன் அரசியிருவரும் வெறுப்பையடைய

வேயில்லை. கௌரவனே! பிறகு, அந்தஸமர்த்தரான ச்யவனபகவான் ஸ்நானம்செய்தவராக ஸிம்மாஸனத்திலிருந்து குசிகனுக்கும் அவன்மனைவிக்கும காணப்பட்டார். குசிகராஜன் தன்பாரியையுடன் முகமலர்ச்சியுறறு மனக்கலக்கமின்றி வணங்கி அன்னமஸித்தமாயிருக்கிறதென்று அம்முனிவருக்குத் தெரிவித்தான். முனிவர், 'கொண்டுவரலாம்' என்று அவ்வரசனுக்குச் சொன்னார். அவ்வரசன் மனைவியுடன் கூட அவ்வன்னத்தைக் கொண்டுவந்தான். பலவகைமாம்ஸபாகங்களையும் பற்பலகறிகாய்களையும பாகுகளையும் மாப்பண்டங்களையும இனியபாகங்களையும் [1]ரஸாலையையும அப்பங்களையும் அறுசுவைகளோடுகூடிய பலவகைமோதகங்களையும் பலவகைச்சுவைகளையும் ரிஷிகள்புசிக்கும் காட்டு ஆகாரங்களையும் அரசர்கள் புசிக்கும் மற்றும்பலஉணவுகளையும பலவகைக்கனிகளையும் இலந்தைப்பழத்தையும் புன்கம்பழத்தையும் [2]காஸ்மரியமும், [3]பல்லாதகமும், கனிகளும், கிருகஸ்தர்கள் உண்ணத்தக்கவையும் வானப்ரஸ்தர்கள் உண்ணத்தக்கவையுமான எல்லாவகைஆகாரங்களையும் ரிஷியின் சாபத்திற்குப்பயந்து வேந்தன் வருவித்தான். அவையெல்லாம் ச்யவனமகரிஷியின்முன்னிலையில் வைக்கப்பட்டன. பிறகு, அந்தச்யவனமுனிவர் அவையனைத்தையும் படுக்கையையும் ஆஸனத்தையும் போஜனபாத்திரங்களையும்சேர்த்து சிறந்தவஸ்திரங்களினால், மூடி எல்லாவற்றையும் எரித்துவிட்டார். மிகச்சிறந்தஅறிவுள்ள அவ்வரசன் அரசியிருவரும் அதற்குங்கோபிக்கவில்லை. அவர்கள் பார்த்திருக்கையிலேயே மறுபடியும் அவர் அந்தர்த்தானமடைந்தனர். அந்த ராஜரிஷி மனைவியுடன் முன்போலவே அவ்விரவெல்லாம் முகமலர்ச்சியோடு மௌனமாகஇருந்தான்; கோபத்திற்குட்படவில்லை. அந்த அரசனுடையஅரண்மனையில் பலவகையான அன்னங்கள எக்காலமும் சமைக்கப்பட்டிருந்தன; சிறந்தபடுக்கைகளும் ஜலம்நிரம்பினஸ்நானகடங்களும பலவகைஉடைகளும எக்காலமும ஸித்தப்படுத்தப்பட்டிருந்தன. அதனால், ச்யவனருக்குக் குற்றம்பார்க்கமுடியாமற்போயிற்று. அந்தப்பிரம்மரிஷியானவர் மறுபடியும் குசிகராஜனைப்பார்த்து, 'என்னைத்தேரிலேற்றி உன்பாரியையும் நீயும் நான் சொல்லுமிடத்திற்கு விரைவாக இழுத்துக்கொண்டுபோங்கள்' என்று சொன்னார்; அரசன் ஒன்றுஞ்சிந்தியாமல் தபோதனரைப்பார்த்து,

---

[1] புளிப்புத்தயிர், கற்கண்டு, நெய், தேன், மிளகு, சுக்கு, பச்சைக்கர்ப்பூரம் இவற்றைச்சேர்த்துச்செய்யும் ஒருபாகு; பீமசேனன்செய்து கிருஷ்ணன் அமுதுசெய்ததாகப் பாகசாஸ்திரத்தில சொல்லப்பட்டிருக்கிறது.

[2] பெருங்குமிழம்பழம். [3] சேங்கொட்டை.

'அப்படியே ஆகட்டும்' என்றுசொல்லி, 'பகவானே! வேடிக்கைத் தேரிருக்கலாமா? சண்டைத்தேரிருக்கலாமா?' என்றுகேட்டான். வேந்தனால் ஸந்தோஷத்துடன் இவ்வாறுகேட்கப்பட்ட அந்தச்யவன முனிவர் ஸந்தோஷமடைந்து பகைவர்களைவெல்லுபவனாகிய மன்னனைப்பார்த்து, 'வில், கொடி, சக்திகள், பொன்தடிகள், கதைகள், கத்திகள், அனேகம்சிறந்தஅம்புகள் இவற்றோடுகூடச் சலங்கைகள் ஒலிப்பதும் தோரணங்கள்கட்டப்பட்டதுமாகிய யுத்தத்திற்குரியதென்று நீநினைத்ததேரை உடனேகொண்டுவா' என்றுசொன்னார். உடனே, அவ்வரசன், 'அப்படியே' என்றுசொல்லிச் சிறந்ததேரைஅலங்கரித்து நுகத்தடியின்இடப்பக்கத்தில் மனைவியைநியமித்து வலப்பக்கத்தில் தானிருந்துகொண்டு மூன்றுகழிகள்சேர்ந்ததும் முனையில் வஜ்ரஊசிவைக்கப்பட்டதுமாகிய சாட்டையை அந்தத்தேரில் வைத்தான். அரசன் இவற்றையெல்லாம் அவ்வாறுகொடுத்து, 'பகவானே! ப்ருகுபுத்ரரே! ரதம் எங்கேபோகவேண்டும்? சொல்லக்கடவீர். பிரம்மரிஷியே! நீர்சொல்லுமிடத்திற்கு உமதுதேர்போகும்' என்றுசொன்னான். அரசனால்இவ்வாறுசொல்லப்பட்ட ச்யவனபகவான் அவனைப்பார்த்து, 'இங்கிருந்து அடியடியாக மெல்லச்செல்லவேண்டும். எனக்குச்சிரமமுண்டாகாமலிருக்கும்படி என்னிஷ்டம்போல நீங்களிருவரும் போகவேண்டும்; மிகவும் ஸுகமாக ரதத்தை இழுக்கவேண்டும். ஜனங்கள்எல்லாரும் பார்க்கக்கடவர். வழிப்போக்கர்யாவரையும் விலக்கலாகாது. அவர்களுக்குத் தனத்தை நான் கொடுப்பேன். வழியில் எந்தப்பிராம்மணர்கள் வேண்டினவற்றை என்னிடம்கேட்டாலும் அவர்களுக்குத் தனங்கள் ரத்தினங்கள் எல்லாவற்றையும் மிச்சமின்றி நான் கொடுக்கவேண்டும். அரசே! இவற்றையெல்லாம் ஆலோசியாமல்செய்' என்றுசொன்னார். அவரது அந்தச்சொல்லைக்கேட்டு, மன்னவன் வேலைக்காரர்களைப்பார்த்து, 'ரிஷி எதைச்சொன்னாலும் அதையெல்லாம் தடையில்லாமல் கொடுக்கவேண்டும்' என்றுகட்டளையிட்டான். பிறகு, அநேகரத்னங்களும் ஸ்த்ரீகளும் தேர்க்குதிரைகளும் சால்வைகளும் பொன்நாணயமும் கட்டிப்பொன்னும் மலைகள்போன்ற சிறந்தயானைகளும் வேந்தனுடையமந்திரிகளனைவரும் அந்தரிஷியைப் பின்சென்றனர். அந்தநகரமனைத்தும் துக்கத்துடன், 'ஆ! ஆ!' என்று கூக்குரலிட்டது. அரசன் அரசியிருவரும் சாட்டையின் கூரானமுனையினால் முதுகிலும் கன்னத்திலும் வேகமாகக்குத்தப்பட்டும் மனவேறுபாடின்றி அவரை இழுத்தனர். ஐம்பதுதினங்கள் ஆகாரமில்லாமல் பீடிக்கப்பட்டு உடம்பு

நடுக்கமுற்ற அவ்விருவரும் மனஉறுதியினால் அந்தப்பெரியதேரைக் கஷ்டப்பட்டு இழுத்தனர். மஹாராஜனே! அநேகந்தரம் அதிகமாகக் குத்தப்பட்டு ரத்தம்பெருகிக்கொண்டிருக்கும்அரசன் அரசியிருவரும் பூத்தபலாசமரங்கள்போலக் காணப்பட்டனர். அவ்விருவரையும்கண்டு துயரத்தினால் மிகக்கலங்கின பட்டணத்துஜனங்கள் அவர்சாபத்திற் குப்பயந்து அவரை ஒன்றுஞ்சொல்லாமலிருந்தனர். ஜனங்களெல் லாரும் இரண்டு இரண்டுபேராகச்சேர்ந்து, 'தவத்தின்வன்மையைப் பாருங்கள், நாம் கோபித்திருந்தும் இம்முனிசிரேஷ்டரைக் கண் ணெடுத்துப்பார்க்கவுமுடியாமல் இருக்கிறோம். பரிசுத்த ஆத்மாவும் பகவானுமான இந்தமகரிஷியின்மகிமை ஆச்சரியமானது. அரசர் அவர் மனைவி இவ்விருவருடைய உறுதியும் எப்படிப்பட்டது! பாருங் கள்! சிரமப்பட்டிருந்தும் கஷ்டப்பட்டு இந்தரதத்தை இழுக்கின்ற னரே! இவர்களிடத்தில் யாதொருவேறுபாட்டையும் ச்யவனமுனி வரே காணவில்லையே!' என்று பேசிக்கொண்டனர். அந்த ப்ருகு சிரேஷ்டராகிய ச்யவனர் அவர்கள் அவ்வாறு மனவேறுபாடில்லாமலிருப் பதைக்கண்டு குபேரன்போலத் திரவியத்தைபளித்தார். வேந்தன் அதி லும் மனமகிழ்ந்து அவர்கட்டளைப்படி செய்தான். பிறகு, அந்தப்பக வானான முனிசிரேஷ்டர் அவ்வரசனிடத்தில் அன்புகூர்ந்து அந்தச் சிறந்த தேரிலிருந்து இறங்கி அவ்வரசன் அரசி இருவரையும் விடுவித் தார். பாரதனே! ச்யவனர் அவர்களிருவரையும்விடுவித்தபிறகு அழ கும் கம்பீரமும் அநுக்கிரகமுமுள்ளவாக்கினால், 'உங்களிருவருக்கும் சிறந்த வரந்தருவேன். அதைக்கேளுங்கள்' என்று முறையாகப்பேசி னார். பரதசிரேஷ்டனே! முனிசிரேஷ்டர் சாட்டைக்கோலினால்குத்தப் பட்ட மிருதுசரீரமுள்ள அரசன் அரசிஇருவரையும் அமிருதத்திற் கொப்பான தம்கரங்களினால் அன்புடன் தடவிக்கொடுத்தார். அப் போது, அவ்வரசன், 'பார்க்கவரே! எங்களிருவருக்கும் இப்போது சிரமமில்லை. நீர் நினைத்தஅளவில் உமதுமகிமையினால் களைப்புத்தீர்ந் தவர்களானோம்' என்றுசொன்னான். பிறகு, ச்யவனபகவான் மகிழ் ந்து அவர் இருவரையும்பார்த்து, 'ராஜனே! நான் வரங்கொடுப்பதாக முதலிற்சொன்னது பொய்யாகாது. இந்தப் புண்ணியமானகங்கைக் கரை அழகானபிரதேசம். சிலகாலம் இங்கே தவஞ்செய்துகொண்டு வஸிப்பேன். புத்ரனே! நீ உன்நகரத்திற்குச் செல்லலாம்; சிரமத்தைத் தீர்த்துக்கொண்டு மறுபடியும் வரலாம். ராஜனே! நீ உன்பாரி யையுடன் நாளைத்தினம் என்னை இவ்விடத்திற்பார்ப்பாய். நீ

கோபிக்கத்தகாது. உனக்கு நன்மைவந்திருக்கிறது. உன்மனத்தி லிருக்கும் விருப்பமெல்லாம் உனக்குநிறைவேறும்' என்றுசொன்னார். அவரால் இவ்வாறுசொல்லப்பட்டகுசிகன் மன்மகிழ்ந்து அம்முனி ஸ்ரேஷ்டரைப்பார்த்து, 'மகானுபாவரே! பகவானே! எனக்குக் கோப மில்லை. நாங்களிருவரும் உம்மால் பரிசுத்தர்களாக்கப்பட்டோம்; யௌவனப்பிராயமும் அழகியதேகமும்பலமுமுள்ளவர்களாய்விட்டோம்; எனக்கும் என்மனைவிக்கும் நீர்சாட்டையினால் உண்டாக்கினபுண்கள் உடம்பிற்காணப்படவில்லை. நானும் மனைவியும் ஸுகமாயிருக்கிறோம். எனது இந்தமனைவி அப்ஸரஸ்போன்றஅழகும் சிறந்த ஒளியுமுள்ள வளாயிருப்பதைப் பார்க்கிறேன். இதற்குமுன் இவள் இப்படிக்காணப் படவில்லை. மகரிஷியே! இவையெல்லாம் உமது அனுக்கிரகத்தினால் உண்டானவை. உண்மையானமகிமையுள்ளபகவானே! உம்மிடத்தில் இது புதுமையன்று' என்னும் உண்மையானசொல்லைச் சொன்னான். குசிகனால் இவ்வாறு சொல்லப்பட்ட ச்யவனர் அவனைப்பார்த்து, 'ராஜனே! நாளைத்தினம் நீ உன்பாரியையுடன் இங்குவா' என்றுசொன் னார். அவர் இவ்வாறுசொல்லி விடைகொடுக்க, ராஜரிஷி அவரைநமஸ் கரித்து அழகானதேகத்துடன் தேவேந்திரன்போல நகரத்திற்குச்சென் றான். பிறகு, மந்திரிகளும் புரோகிதர்களும் சேனைத்தலைவர்களும் எல்லாக்குடிகளும் விலைமாதர்களுடன் அரசனுக்கு எதிர்கொண்டுவந் தனர். அவர்களால்சூழப்பட்டகுசிகராஜன் சிறந்தஒளியினால்பிரகாசித் துக்கொண்டு வந்திகளினால் துதிக்கப்பட்டு மகிழ்ந்து நகரத்தில் பிரவே சித்தான். சிறந்த மகிமையுள்ள அவ்வரசன் நகரப்பிரவேசம் செய்தபிறகு காலைக்கடன்களை நிறைவேற்றிப் புசித்து மனைவியுடன்கூட இரவைப் போக்கினான். பிராம்மணச்ரேஷ்டரால் கொடுக்கப்பட்ட ஒளியோடு கூடிய அழகிய தேகங்களை அடைந்த அவர்களிருவரும் சயனத்தை யடைந்து புதிதாகயௌவனம்வந்து தேவர்களைப்போல மூப்பில்லாம லிருப்பவர்களாக ஒருவரைஒருவர் கண்டு உல்லாஸமாயிருந்தனர். ப்ருகுவம்சத்தின் கீர்த்தியைப்பெருகச்செய்பவராகிய ச்யவனமுனிவர் தம்ஸங்கல்பத்தினால் அவ்வனத்தை இந்திரனுடையநகரத்தில் இல்லாத தும் அநேகரத்தினங்களினால் அலங்கரிக்கப்பட்டதும் செல்வம்நிரம் பினதும் அழகியதுமாகச்செய்தார்.

## எண்பத்தோன்பதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி)

(ச்யவனர் குசிகனிடம்வஸித்தகதைத் தொடர்ச்சி.)

சிறந்த மனமுள்ள அந்த அரசன் பிறகு இரவுமுடியும்போது எழுந்து காலைக்கடமைகளை முடித்துக்கொண்டு மனைவியுடன் அவ்வனத்தைநோக்கிச் சென்றான். குசிகராஜன் அவ்விடத்தில் முழுமையும் பொன்னாயிருப்பதும் ஆயிரம்ரத்தினத்தூண்கள் நிரம்பினதும் மாயாநிர்மாணம்போன்றதுமாகிய ஓர் அரண்மனையையும் அதில் தேவலோகத்திலுள்ள பொருள்களையும் கண்டான். பாரதனே! அவ்வரசன் வெள்ளிச்சிகரங்களுள்ள மலைகளையும் புஷ்பங்கள் நிரம்பினதாமரைக்குளங்களையும் பலவகைச்சித்ரசாலைகளையும் தோரணங்களையும் பசும்புல்நிரம்பின பூமியையும் பொன்மேடைகளையும் பூத்திருக்கும் ஒட்டுமாமரங்களையும் சிறந்ததாழைகளையும் [1] உத்தாலகங்களையும் அசோகங்களையும் குருக்கத்திமரங்களையும் முல்லைக்கொடிகளையும் சண்பகமரங்களையும் திலகமரங்களையும உயர்ந்தபலாமரங்களையும் மகிழமரங்களையும் புஷ்பித்த கொன்றைமரங்களையும் கறுத்தநாககேஸரமரங்களையும் ஆங்காங்குவைக்கப்பட்டிருக்கும் பொற்கொடிகளையும் கண்டான். பாரதனே! அவன் எந்தக்காலத்திலும் புஷ்பித்திருக்கும் அழகானதாமரைக்குளங்களையும் கருநெய்தல்குளங்களையும தேவவிமானங்களுக்கும் மலைகளுக்கும் ஒப்பானமாளிகைகளையும் சிலவிடங்களில் தண்ணீரையும் சிலவிடங்களில் வெந்நீரையும் பலவகை ஆஸனங்களையும் சிறந்தபடுக்கைகளையும் சிறந்தமெத்தைகள் பரப்பப்பட்ட ரத்தினமயமும் பொன்மயமுமான கட்டில்களையும் ஆங்காங்குசெய்துவைக்கப்பட்டிருந்த அளவற்ற பக்ஷணங்களையும் போஜனங்களையும் பாஷைகளைப்பேசும் கிளிகளையும் நாகணவாய்ப்புட்களையும் எங்கும் ஒலித்துக்கொண்டிருக்கும் அழகான சிறந்த வண்டுகளையும் குயில்களையும் மரங்குத்திக்குருவிகளையும் நாரைகளையும் காட்டுக்கோழிகளையும் மயில்களையும் கோழிகளையும் குருட்டுக்காக்கைகளையும் [2] ஜீவஜீவகங்களையும் சகோரங்களையும் வானரங்களையும் அன்னப்பறவைகளையும் ஸாரஸங்களையும் சக்கரவாகங்களையும் கண்டான்; ராஜனே! சிலவிடங்களில் அப்ஸரஸ் கந்தர்வர்களின் கூட்டங்களையும் தங்கள்காதலிகளினால் தழுவிக்கொள்ளப்பட்ட மற்றும்சிலபுருஷர்

[1] குறும்பலா. [2] மயில்போன்ற சிறகுள்ள பறவைகள்.

யும் அங்கு கண்டான். அந்த அரசன் அடிக்கடி அவர்களைக்காணுமலும் திரும்பவும் கண்டுகொண்டுமிருந்தான். அப்படியே அங்கே அழகான ஸங்கீதநாதத்தையும் வேதாத்யயனகோஷத்தையும் அன்னங்கள் இனிமையாகக் கூவுவதையும் அவன்செவியுற்ருன். அந்தமிக்க ஆச்சரியத்தைக்கண்ட அரசன், 'இது கனவா! மனத்தின்மயக்கமா? அல்லது, உண்மைதானு? சிறந்தஸ்வர்க்கலோகத்திற்குத் தேகத்தோடே வந்திருக்கிறேன். ஆ! ஆ! இது புண்ணியமான உத்தரகுருக்ஷேத்திரமா? அல்லது, அமராவதிநகரமா? என்ன இந்தப்பெரிய ஆச்சர்யத்தைக் காண்கிறேன்!' என்று மனத்தில் நினைத்தான். இவ்வாறு நினைத்துக் கொண்டிருக்கையிலேயே ரத்தினத்தூண்கள் நிரம்பின அந்தப்பொன்மயமானமாளிகையில் விலைபெற்ற உயர்ந்தபடுக்கையில் படுத்திருக்கும் ப்ருகுசிரேஷ்டரான ச்யவனமுனிவரைக் கண்டான். அரசன் பாரியையுடன் மகிழ்ந்து அவரிடம் சென்ருன். அப்போது ச்யவனரும் அந்தப் படுக்கையும் திரும்பவும் காணப்படவில்லை. பிறகு, அவன் அவ்வனத்தின்மற்ருேரிடத்தில் திரும்பவும் அப்பெருந்தவமுனிவர் தர்ப்பாஸனத்தில் உட்கார்ந்து ஜபம்செய்துகொண்டிருக்கக்கண்டான். அந்தப்பிராம்மணர் இவ்வாறு தம்யோகசக்தியினுல் மன்னவனைப் பிரமிக்கச்செய்தார். ஒருநொடியில் அவ்வனம் அந்த அப்ஸரஸுகளின் கூட்டங்கள் கந்தர்வர்கள் மரங்கள்இவையனைத்தும் மறைந்துபோயின. ராஜனே! கங்கையின்கரை மறுபடியும் முன்போலவே நிச்சப்தமாகவும் தர்ப்பைகளும் புற்றுக்களும் மிகுந்ததாகவும் ஆயிற்று. பிறகு, அந்தக்குசிகராஜனும் அவன்மனைவியும் அந்தப்பெரிய புதுமையைக்கண்டு அந்தச் செய்கையினுல் மிக்கவியப்பை அடைந்தனர். பிறகு, குசிகன் ஸந்தோஷமடைந்து மனைவியைப்பார்த்து, 'சிறந்தவளே! எங்கும் கிடைக்காத அருமையான விஷயங்களை ச்யவனமுனிவருடைய அனுக்கிரகத்தினுல் கண்டோமே. தவவன்மையைவிட வேறுவன்மை என்ன இருக்கிறது? பார். எண்ணங்களுக்கு எட்டாதவற்றையும் தவத்தினுல் பெறலாம். மூவுலகங்களையும் ஆளும்பதவியைப்பார்க்கிலும் தவந்தான் சிறந்தது. இந்தத்தபோதனர் நன்ருகத் தவம்செய்திருப்பதனுல் விளையாடுகிருர். மகாத்மாவான ச்யவனரென்னும் பிரம்மரிஷியின் மகிமை ஆச்சர்யமானது. இவர் நினைத்தமாத்திரத்தில் தவவன்மையால் வேறுலோகங்களையும் படைப்பார். பிராம்மணர்கள்தாம் புண்ணியமானவாக்கும் ஞானமும் கிரியையுமுள்ளவர்களாகப் பிறப்பார்,

ச்யவனரைத்தவிர வேறெவன் இங்கே இவ்வாறுசெய்யமாட்டுவன்? இவ்வுலகத்தில் மனிதர்களுக்கு ராஜ்யங்கிடைப்பது எளிது; பிராம்மணத்தன்மைகிடைப்பது அரிது. பிராம்மண்யத்தின் மகிமையினாலன்றோ நம்முடைய தேர்க்குதிரைகள்போல நாமிருவரும் தேரில்பூட்டப்பட்டோம்?' என்றுசொன்னான். அவன் இவ்வாறு நினைத்துக்கொண்டிருப்பது ச்யவனருக்குத்தெரிந்தது. அவர் அரசனைநோக்கி, 'சீக்கிரம்வா' என்றுசொன்னார். இவ்வாறுசொல்லப்பட்ட அந்த அரசன் பாரியையுடன்கூட மகரிஷியினிடம்சென்று வந்தனத்திற்குரிய அம்மகரிஷியைத் தலைவணங்கி வந்தனஞ்செய்தான். சிறந்தஞானமுள்ளவரும் புருஷஸ்ரேஷ்டருமான அம்முனிவர் அரசனுக்கு ஆசீர்வாதம்செய்து இன்சொற்சொல்லி அவனை, 'உட்கார்' என்றுசொன்னார். பாரதனே! அரசனே! அப்போது, ச்யவனமுனிவர் உண்மையான மனத்தோடு நயமான சொல்லினால் வேந்தன் சந்தோஷப்படும்படி பேசலானார். 'வேந்தனே! நீ ஐந்துகர்மேந்திரியங்களையும் ஐந்துஞானேந்திரியங்களையும் ஆறாவதானமனத்தையும் இயல்பாகவே நன்றாக அடக்கியிருக்கிறாய். அதனாலேதான் இப்போது ஆபத்திலிருந்து விடுபட்டாய். புத்ரனே! பேசுகிறவரிற்சிறந்தவனே! நான் உன்னால் செவ்வையாக ஆராதிக்கப்பெற்றேன். உன்னிடத்தில் மிகச்சிறிய ஒருகுற்றங்கூடக் காணப்படவில்லை. அரசனே! எனக்குவிடைகொடு. நான் வந்தபடியேபோவேன். அரசர்க்கரசே! உன்னிடத்தில் அன்புள்ளவனாயிருக்கிறேன். வரத்தையும் பெற்றுக்கொள்' என்றுசொன்னார். குசிகன், 'ப்ருகுவம்சஸ்ரேஷ்டரே! நான் அக்நியினிடத்திலிருப்பதுபோலப் பகவானான உங்களிடத்திலிருந்தேன். நான்எரிக்கப்படாமலிருப்பதே எனக்கு அதிகம். குற்றமற்றவரே! ப்ருகுபுத்ரரே! என்னுடைய நடக்கைகளினால் நீர்திருப்தியடைந்து என்குலத்தைக்காப்பாற்றினீரே. இதுதான் நான்பெற்ற முக்கியமானவரம். பிராம்மணரே! இதுதான் எனக்கு உம்முடைய அனுக்கிரகம். நான் ஜீவித்திருந்ததற்கும் ராஜ்யத்திற்கும் என்தவத்திற்கும் இதுதான்பலன். ப்ருகுசிரேஷ்டரான பிராம்மணரே! என்னிடத்தில் நீர் அன்புவைத்திருந்தால் எனக்கு இருக்கும் ஒருஸந்தேகத்தைத் தெளிவிக்கக்கடவீர்' என்றுகேட்டான்.

## தொண்ணூறுவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(ச்யவனர் குசிகனிடம்வஸித்த கதைத் தொடர்ச்சி.)

ச்யவனர், 'மனிதரிற்சிறந்தவனே! என்னிடத்தில் வரத்தையும் பெற்றுக்கொள். உன்மனத்திலிருக்கும் ஸந்தேகத்தையும் சொல். உனக்கு எல்லாவற்றையும் நிறைவேற்றுவேன்' என்றுசொன்னார்.

குசிகன், 'பகவானே! பார்க்கவரே! என்னிடத்தில் உமக்கு அன்பிருந்தால் இப்போது நான்கேட்பதைச் சொல்லும். என்கிருகத்தில் நீர் வஸித்ததற்குக்காரணத்தைக் கேட்கவிரும்புகிறேன். முனிஸ்ரேஷ்டரே! பிராம்மணரே! இருபத்தொருநாள் ஒருபக்கமாகப்படுத்ததும் ஒன்றும்பேசாமல் வெளியிற்போனதும் காரணமின்றி அந்தர்த்தானமானதும் மறுபடியும் காணப்பட்டதும் திரும்பவும் இருபத்தொருநாள் படுத்ததும் தைலங்தேய்த்துக்கொண்டு போய்விட்டதும் என்வீட்டிலுள்ள பலவிதபோஜனங்களையும் வருவித்துத் தீயினாலெரித்ததும் உடனே தேரேறிச்சென்றதும் தனங்களைததானம்செய்ததும் காட்டையும் அநேகம் பொன்மாளிகைகளையும ரத்னங்களும் பவழங்களுமிழைத்த கால்களோடுகூடிய கட்டில்களையும் காண்பித்ததும மறுபடியும் அந்தர்த்தானமானதும் எதற்காகவென்றுகேட்க விரும்புகிறேன். மகரிஷியே! ப்ருகுஸ்ரேஷ்டரே! இவற்றைநினைத்து மிகவும் மயங்குகிறேன். இவையெல்லாவற்றையும்பற்றி ஒரு நிச்சயமும் எனக்குஉண்டாகவில்லை. தபோதனரே! இவற்றையெல்லாம உண்மையாகக்கேட்க விரும்புகிறேன்' என்று கேட்க, ச்யவனர் சொல்லலானார்.

'நான்செய்தவை எப்படிப்பட்டவை; என்னகாரணத்தினால் வந்தவை என்பவற்றையெல்லாம் கேள். அரசனே! நீ இவ்வாறுகேட்டபின் நான்சொல்லாமலிருக்கமுடியாது. ராஜனே! முன்னம் தேவர்களின்கூட்டத்தில் பிரம்மாபேசினதை நான் கேட்டிருந்தேன். அதைநான் சொல்லுகிறேன்; கேள். பிராம்மணர்களுக்கும் க்ஷத்திரியர்களுக்கும் பகைநேர்ந்து இவ்விருகுலங்களுக்கும் கலப்புநேரிடப்போகிறதாம். ராஜனே! உன்னுடையபோன் பிரம்மதேஜஸும் பராக்கிரமமுமுள்ளவனாக உண்டாகப்போகிறானாம். இதைக்கேட்டபின் என்குலத்தைக்காப்பதற்காகக் குசிகவம்சத்தையழிக்கக்கருதி உன்குலத்தையெரிக்க எண்ணங்கொண்டு

உன்னிடம் நான்வந்தேன்; ராஜனே! அப்போதுதான், 'உன்பட்டணத்தில்வந்து ஒருவிரதம் ஆரம்பிக்கப்போகிறேன். எனக்கு ஏவல்செய்ய வேண்டும்' என்று உனக்குக்கட்டளையிட்டேன். உன்கிருகத்தில் ஒருதவறும் நான் கண்டுபிடிக்கவில்லை. ராஜரிஷியே! அதனால் நீ ஜீவிக்கிறாய். இல்லாவிடில் நீ இராய். ராஜனே! இந்த நிச்சயத்தைச்செய்துகொண்டுதான் யாராவதுஒருவன் என்னை எழுப்புவானோவென்று இருபத்தொருநாள் தூங்கினேன். ராஜஸ்ரேஷ்டனே! நன்றாகத்தூங்கின என்னை நீயாவது உன்மனைவியாவது எழுப்பாமலிருந்தபோதே மனத்தில் நான் உன்மேலன்புவைத்தேன். ராஜனே! பிரபுவே! என்னை, 'நீர் எங்கேபோகிறீர்?' என்று கேட்பாயாயின் உன்னைச்சபிக்கலாமென்றுதான் எழுந்து வெளியிற்போனேன். அதற்காகவே மறுபடியும்மறைந்தேன். அரசனே! பசியினாலாவது சிரமத்தினாலாவது நீங்களிருவரும் என்னைவெறுப்பீர்களென்று என்யோகசக்தியைக்கொண்டு உன்வீட்டில் திரும்பவும் இருபத்தொருநாள் தூங்கினேன். இந்தநிச்சயத்தைச்செய்துதான் உங்களைப் பசியினால் வருத்தினேன். ராஜனே! உன்மனத்தில் மிகச்சிறியகோபங் கூட உண்டாகவில்லை. மனிதரிற்சிறந்தவனே! அதனாலேதான் உன் பாரியையினிடத்திலும் உன்னிடத்திலும் அனுக்கிரகம்வைத்தேன். போஜனத்தைக் கொண்டுவரச்சொல்லி நான்கொளுத்தினதும் நீ பசைத்துக்கோபிப்பாயென்றுதான். அதையும் நீ பொறுத்தாய். ராஜனே! அதன்பிறகு, நான் தேரிலேறிக்கொண்டு 'உன் பாரியையுடன் இழு' என்று கட்டளையிட்டேன். ராஜனே! அதையும் நீ அப்படியே தடையில்லாமற்செய்தாய். அதனாலேயும் உன்னிடத்தில் அன்புள்ளவனானேன். நான்தனத்தைச்செலவழித்தபோதும் கோபம் உன்னைமாற்றவில்லை. வேந்தனே! மனிதருக்கதிபதியே! அதனால் உன்னிடத்தில் அன்புவைத்துத்தான் உனக்கும் உன்பாரியைக்குமாக மறுபடியும் இந்தவனத்தைச் செய்தேனென்றறி. ராஜனே! அந்தவனத்தில் தேவலோகத்திலுள்ள நல்லகாட்சிகளை நீகண்டாயே. அந்த ஸ்வர்க்கக்காட்சியை உன் ஸந்தோஷத்திற்காகத்தான் நான் உண்டாக்கினேனென்றறிந்துகொள். பூமிக்கு ஈசுவரனான அரசனே! நீயும் உன்பாரியையும் இந்தத் தேகத்தோடேயே சற்றுநேரம் ஸ்வர்க்கவாஸத்தை அனுபவித்தீர்கள். ராஜனே! என்தவத்தையும் தர்மத்தையும் திருஷ்டாந்தப்படுத்துவதற்காகச்செய்தேன். ராஜனே! உனக்கு அதில் ஆசையுண்டாகவில்லை. அதையும் நான் தெரிந்துகொண்டேன். பூமிக்குநாதனே! நீராஜாவாயிருப்பதை

யும் தேவேந்திரனுவதையும் அனுதாவுசெய்து பிராம்மணனுவதையும் தவத்தையும் விரும்புகிறாயன்றோ? அப்பா! இப்படியே நீவிரும்புகிற பிராம்மண்யம் உண்மையில் கிடைக்கத்தகாதது. பிராம்மண்யமிருந்தாலும் ரிஷியாவதும் ரிஷியாயிருந்தாலும் தவச்சிறப்புடைமையும் பெறக்கூடாதவை. குசிகவம்சத்தில் கௌசிகன் என்னும் பிராம்மணன் பிறக்கப்போகிறான். அப்போது இந்த உன்விருப்பம் நிறைவேறும். ராஜஸ்ரேஷ்டனே! உன்னுடைய மூன்றாவது தலைமுறைவரும்போது உன் வம்சம் ப்ருகுவம்சத்தாருடைய தவமகிமையினாலேயே பிராம்மணத்வத்தை அடையப்போகிறது. உன்னுடையபோன் சிறந்ததவமுள்ளவனும் அக்நிபோன்ற தேஜஸுள்ளவனுமாகிய பிராம்மணனாகப் பிறக்கப்போகிறான்.[1] அவன் தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் மூவுலகங்களுக்கும் பயத்தையுண்டாக்கப்போகிறான். இதுஉண்மை. உனக்குச் சொல்லுகிறேன். ராஜரிஷியே! உன்மனத்திற்குவேண்டின வரத்தைப் பெற்றுக்கொள். நான் தீர்த்தயாத்திரைக்குச் செல்லப்போகிறேன். இனிக் காலங்கடந்துபோம்' என்றார்.

குசிகன், 'மகரிஷியே! நீர் அன்புவைத்திருப்பதுதான் இப்போது எனக்குவரம். குற்றமற்றவரே! அப்படி ஆகட்டும். என்போன் நீர் சொல்லுகிறபடியாகவேண்டும். பகவானே! என்குலத்திற்குப் பிராம்மண்யம் உண்டாகவேண்டும். இதுதான் எனக்குவரம். பகவானே! ப்ருகுபுத்ரரே! என்குலத்திற்குப்பிராம்மணத்வம் எப்படிவரும்? எவன் என்னுடைய குலத்தில் பிறக்கப்போகிறான்? உம்மால் பிராம்மணனென்று நினைக்கப்படுகிறவன் எவனென்பதை மறுபடியும் நீர்விரிவாகச் சொல்லவிரும்புகிறேன்' என்றுகேட்டான்.

## தொண்ணூற்றோராவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

### (ச்யவனர் குசிகனிடம்வஸித்தகதைத் தொடர்ச்சி.)

ச்யவனர், 'புருஷஸ்ரேஷ்டனே! ராஜனே! நான் எதுபற்றி உன்னையழித்துவிடுவதற்கு வந்தேனோ அதை நான் உனக்கு அவசியம் சொல்லவேண்டும். அரசனே! ப்ருகுவம்சத்துப்பிராம்மணர்களால்

[1] பொருத்தமின்மையால் அதிகபாடமான ஒருவரி விடப்பட்டது.

க்ஷத்திரியர்கள் யாகம்செய்விக்கப்படவேண்டியவர்களென்பது நிச்சயம். ராஜனே! தெய்வத்தினலுண்டானகாரணத்தினல் அவர்கள் ஒருவரோடொருவர் விரோதப்படப்போகின்றனர். அப்போது க்ஷத்திரியர்கள் தெய்வக்கொடுமையினல் தூண்டப்பட்டு ப்ருகுக்களெல்லாரையும் கர்ப்பத்திலிருக்கும் சிசுமுதலாகச் சேதித்துக் கொல்லப்போகின்றனர். அதன்பிறகு, வம்சத்தைப்பெருகச்செய்பவனும் பிரகாசிக்கும் சூரியனுக்குஒப்பான ஒளியுள்ளவனும் பெரியமகிமையுள்ளவனுமான ஔர்வனென்பவன் எங்கள்குலத்தில் பிறக்கப்போகிறன். அவன் மூன்றுலோகங்களுமழியும்படி தன்கோபத்தினல் ஓர் அக்நியைஉண்டாக்கப்போகிறன். அந்த அக்நி மலைகளும்காடுகளுமுள்ள பூமியை முழுதும் நீருகச்செய்யப்போகிறது. சிலகாலங்கடந்தபின் அம்முனிசிரேஷ்டனே அவ்வக்நியைக் கடலில் வடவையின்வாயில் போட்டு ஆற்றிவிடப்போகிறன். குற்றமற்றமகாராஜனே! அந்த ஔர்வனுடையபுத்திரனும் ப்ருகுவம்சத்தவனுமான ரிசீகனிடத்தில் தெய்விகமானகாரணத்தினல் க்ஷத்திரியர்கள் ஒழிந்துபோவதற்காகத் தனுர்வேதமுழுதும் தானகவே நேரில்வந்து சேரப்போகிறது. அந்த ரிசீகன் அந்தத்தனுர்வேதத்தைப் பெற்றுக்கொண்டவுடன் தவத்தினல் தூய்மையடைந்தமனமுள்ள மகானுபாவனுகிய ஜமதக்நியென்னும் தன்புத்ரனிடம் சேர்ப்பிக்கப்போகிறன். ப்ருகுசிரேஷ்டனுகிய அந்தஜமதக்னி அந்தத்தனுர்வேதத்தை வைத்துக்கொள்வான். தர்மாத்மாவே! பரதகண்டத்துக்குத்தலைவனே! அந்தஜமதக்னி உன்வம்சத்தைவிருத்திசெய்வதற்காக உன்குலத்திற்பிறந்தகன்னிகையை விவாகம் செய்துகொள்ளுவான். க்ஷத்திரியர்களைக் கொல்லுகிற கொடியபுத்ரனுண்டாகவேண்டுமென்று முதல்தேவதையானநாராயணனை உபாஸனைசெய்து அவர் வரத்தினல் அவ்விதபுத்ரனை அடைவான். சிறந்ததவமுள்ள அந்தஜமதக்னி காதியின்பெண்ணுனவளது பேர்த்தியை மனைவியாகஅடைந்து க்ஷத்திரியத்தொழிலசெய்யும் பிராம்மணனுகியபுத்ரனை உண்டாக்கப்போகிறன். சிறந்தபராக்கிரமமுள்ளவனே! அவன் உன்னுடையகுலத்தில் பெருந்தவமுள்ளவனும் மிக்கதர்மிஷ்டனும் புத்தியில்பிருகஸ்பதியைப்போன்றவனும பிராம்மணச்செய்கையுள்ளக்ஷத்திரியனுமான [1]விசுவாமித்திரனைக் கொடுக்கப்போகிறன். அப்படிமாறுவதற்கு இரண்டுமாதர்கள் காரணமா

[1] இது ரிசீகர்செய்ததாக முன் 24-ம் பக்கமுதலும் சாந்திபர்வம் 156-ம் பக்கமுதலுமுள்ளகதைகளிற்சொல்லப்பட்டிருக்கிறது.

வார். இது பிரம்மாவின் கட்டளையாதலின் தவறாது. உன்னிடத்திலிருந்து மூன்றாவதுபுருஷனுக்குப் பிராம்மணத்வம் வரப்போகிறது. பரிசுத்தாத்மாக்களானப்ருகுக்களுக்கு நீ சம்பந்தியாகப்போகிறாய்' என்றுசொன்னார். பரதசிரேஷ்டனே! தர்மாத்மாவான குசிகராஜன் மகாத்மாவான ச்யவனமுனிவர்சொன்னதைக்கேட்டு, ஸந்தோஷமடைந்து, 'அப்படியேயாகக்கடவது' என்றுசொன்னான். சிறந்தமஹிமையுள்ளச்யவனர் வரங்கேட்கும்படி அந்தமன்னனை மறுபடியும்ஏவினார். அந்தஅரசன் அவரைப்பார்த்து, 'மகரிஷியே! அப்படியேயாகட்டும். என்னுடைய அபீஷ்டங்களை உம்மிடத்தில் பெற்றுக்கொள்வேன். என் குலம் பிரம்மகுலமாகக்கடவது. அந்தக்குலத்திற்குத் தர்மத்திலேயே மனமிருக்கக்கடவது' என்றுகேட்டான். இவ்வாறுகேட்கப்பட்ட ச்யவனமுனிவர், 'அப்படியேயாம்' என்றுமறுமொழிசொல்லி வேந்தனுக்குவிடைகொடுத்து அப்போதே தீர்த்தயாத்திரைக்குச் சென்றார். ராஜனே! ப்ருகுக்களுக்கும் குசிகர்களுக்கும் ஸம்பந்தம்நேர்ந்ததற்குக் காரணமெல்லாவற்றையும் உனக்கு இப்போது சொன்னேன். அரசனே! ச்யவனமகரிஷி முதலிற்சொன்னபடியே பரசுராமர்ஜனனமும் விஸ்வாமித்திரர்ஜனனமும் நடந்தன" என்றுகூறினார்.

## தொண்ணூற்றிரண்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(தவம் தானமுதலியவற்றின் சிறப்பு.)

யுதிஷ்டிரர், "இப்போது இதைக்கேட்டபிறகு அந்தச்சிறப்புற்றராஜசிரேஷ்டர்கள் இல்லாமற்போன இந்தப்பூமியைப்பற்றி அடிக்கடிநினைத்து மதிமயங்குகிறேன்: பாரதரே! பிதாமஹரே! அநேகராஜ்யங்களையடைந்தும் பூமியைஜயித்தும் கோடிக்கணக்கானபுருஷர்களைக்கொன்றதனால் மனக்கொதிப்புக்கொண்டிருக்கிறேன். கணவர்களையும் பிள்ளைகளையும் அம்மான்களையும் உடன்பிறந்தார்களையும் இழந்த அந்தச்சிறந்தபெண்களுக்கு இப்போது என்னநிலைமையிருக்குமோ? நாங்கள் அந்தக்கௌரவர்களையும் உறவினரையும் நண்பர்களையும்கொன்றதனால் நரகத்தில் தலைகீழாக விழப்போகிறோமென்பதில் ஸந்தேகமில்லை. பாரதரே! என்சரீரத்தை உக்கிரமானதவத்திற் சேர்ப்பிக்கக்கருதுகிறேன். மனிதர்க்கதிபதியே! எனக்கு அதை

நீர் தெளிவாக உபதேசிக்கவிரும்புகிறேன்" என்றுகேட்டார். சிறந்த மனமுள்ள பீஷ்மர் யுதிஷ்டிரருடைய அந்தச்சொல்லைக் கேட்டபின் தம்புத்தியில் நன்றாக ஆராய்ந்து அவரைநோக்கிச் சொல்லலானார்.

"பாரதனே! ராஜனே! இறந்தபின் எவனுக்கு எந்தக்கதி கிடைக்கிறதென்பதைப்பற்றி ஓர் ஆச்சர்யமான ரகஸ்யத்தைச் சொல்லப்போகிறேன்; கேள். பிரபுவே! ஸ்வர்க்கங்கிடைப்பதும் தவத்தினாலே. புகழ் பெறுவதும் தவத்தினாலே. ஆயுள் அதிகப்படுவதும் ஸுகங்களை அநுபவிப்பதும் தவத்தினாலே. பாரதசிரேஷ்டனே! உலகத்திலுள்ள ஞானங்களும் ஆத்மஞானமும் நோயில்லாமையும் அழகும் செல்வமும் எல்லாரும் விரும்பும்படியிருத்தலும் தவத்தினாற் கிடைப்பவைதாம். தவத்தினால் தனத்தையடையலாம். மௌனமானது ஞானத்தைக் கொடுக்கிறது. தானத்தினால் எல்லாப்போகங்களும் [1] பிரம்மசர்ய வ்ரதத்தினால் நீண்டகாலம் ஜீவித்திருப்பதும் உண்டாகின்றன. கொல்லாமைக்குப பலன் அழகு. யாகதீக்ஷைக்குப் பலன் நல்லகுலத்திற் பிறப்பது. கனிகளையும் கிழங்குகளையும் புசிப்பதனால் ராஜ்யம் வருகிறது. இலைகளை உண்பதனால் ஸ்வர்க்கம் வரும். ஜலத்தைமட்டும் உட்கொண்டிருப்பவன் மேலுலகத்தையடைவான். தானம் செய்பவனுக்குப் பொருட்செல்வம் அதிகப்படுகிறது. குருவுக்குப் பணிவிடை செய்வதனால் கல்வியுண்டாகிறது. நித்யசிராத்தம் செய்வதினால் ஸந்ததிவிருத்தியாகிறது. [2] சாகவ்ரதத்தினால் கோக்கள் விருத்தியாகின்றன. புற்களைப் புசிப்பதனால் ஸ்வர்க்கமுண்டாகிறதென்று சொல்லுகின்றனர். மூன்றுகாலங்களிலும் ஸ்நானம்செய்வதனால் மங்கையரையும் வாயுபக்ஷணம் செய்வதனால் யாகபலனையும் அடையலாம். நித்யஸ்நானம் செய்து இரண்டு ஸந்திகளிலும் ஜபஞ்செய்யும் பிராம்மணன் நெடுங்காலம் ஜீவித்திருப்பான். ராஜனே! உபவாஸமிருந்து மந்திரஜபம் செய்பவனுக்கு ஸ்வர்க்கத்தின்மேல் வாஸமுண்டாகும். தரையில் படுப்பதென்னும் விரதம்செய்பவர்களுக்கு வீடுகளும் கட்டில்களுமுண்டாகும். மரவுரிகளையுடுப்பதனால் ஆடைகளும் ஆபரணங்களும் கிடைக்கும். (யோகத்தில்) ஊக்கம்வைத்த தபோதனருக்குப் படுக்கைகளும் ஆஸனங்களும் வாஹனங்களும் வரும். அக்நிப்ரவேசம் செய்பவன் பிரம்மலோகத்தில் பூஜிக்கப்படுவது திண்ணம். ருசிபதார்த்தங்களைக் குறைப்பதனால் இவ்வுலகத்தில் யாவரும் விரும்பத்தக்கவனாவான். மாம்ஸத்தை விடுவதனால் ஸந்ததி தீர்க்காயுளுள்ள

---

[1] இந்திரிய ஜயத்தினால். [2] கறிகாய்களின் நியமம்.

தாகும். [1]உதவாஸமென்னும் தவம்செய்பவன் அரசனுவான். ராஜனே! பொய்சொல்லாதவன் தேவர்களுடன் மகிழ்ந்திருப்பான். தானத்தினால் புகழும் கொல்லாமையினால் ஆரோக்கியமும் பிராம்மணர்களுக்குப் பணிவிடைசெய்வதனால் ஏராளமான ராஜ்யமும் உயர்ந்த பிராம்மண ஜன்மமும் உண்டாகின்றன. தண்ணீர்கொடுப்பதனால் அழியாத புகழுண்டாகிறது. அன்னங்கொடுப்பதனால் வேண்டினபோகங்கள் திருப்தியாக உண்டாகின்றன. எல்லாப்பிராணிகளிடத்தும் இன்சொற்சொல்லுகிறவனுக்கு எல்லாத்துபரங்களும் விட்டுநீங்குகின்றன. தேவதாராதனம் செய்வதனால் ராஜ்யமும் தேவதாரூபமும் உண்டாகின்றன. விளக்குவெளிச்சங் கொடுப்பதனால் கண்கூர்மையும் புத்திக்கூர்மையும் உள்ளவனுவான். கண்ணுக்கினியவற்றையளிப்பதனால் ஞாபகசக்தியையும் புத்திக்கூர்மையையும் அடையலாம் சந்தனத்தையும் புஷ்பங்களையும் கொடுப்பதனால் எங்கும் வியாபிக்குங் கீர்த்தியுண்டாகிறது. தலைமயிரையும் மீசை தாடியையும் வளர்ப்பவருக்குச் சிறந்த ஸந்ததியுண்டாகிறது. ராஜனே! பன்னிரண்டுவருஷம் உபவாஸமும் தீக்ஷையும் ஸ்நானமும்செய்துகொண்டிருப்பதனால் வீரர்களுடைய ஸ்தானத்தைப் பார்க்கிலும் மேன்மையையடையலாம். புருஷசிரேஷ்டனே! பிராம்மணனுக்குத் தகுந்தபெண்ணைக் கன்னிகாதானம் செய்வதனால் வேலைக்காரிகளையும் வேலைக்காரர்களையும் ஆபரணங்களையும் நிலங்களையும் வீடுகளையும் அடையலாம். பாரதனே! யாகங்களாலும் உபவாஸங்களாலும் ஸ்வர்க்கஞ் செல்லலாம். கனிகளையும் மலர்களையும் தானம்செய்யுமனிதன் சிறந்தஞானத்தையடைவான். பொன்கட்டின கொம்புகளினால் பிரகாசிக்கும் ஆயிரம் கோக்களைக் கொடுப்பதனால் மனிதன் இறந்தபின் சிறந்த தேவலோகத்தையடைவானென்பதாக ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் தேவர்கள் சொல்லுகின்றனர். கொம்பு நுனியில் பொன்கட்டிகைகட்டின [2]கபிலைப் பசுவைக் கன்றோடும் கறக்கும் வெண்கலப் பாத்திரத்தோடும் ஒருவன் தானம்செய்வானுயின் அதுவே அநேகம் சிறப்புகள் நிரம்பின காமதேனுவாக அந்தத் தானம் செய்த மனிதனை அடையும். ஒருவன் கோதானம்செய்வதனால் அந்தக் கோவின்தேகத்தில் எவ்வளவு ரோமங்கள் இருக்கின்றனவோ அவ்வளவு பலன்களையும் அடைந்து தன் புத்ரர்களையும் பௌத்ரர்களையும் குலமனைத்தையுமே ஏழாவது தலைமுறைவரையில் மறுமையிலும் கரையேற்றிவிடுகிறான். பொன்னினால் அலங்கரிக்கப்பட்ட கொம்புள்ள பசு

[1] ஜலத்தில் வஸிப்பது.
[2] பின் 127-ம் அத்யாயம் பார்க்க.

வைத் தக்ஷிணையோடும் கறக்கிற வெண்கலப்பாத்ரத்தோடும் விலைபெற்ற மேற்போர்வையோடும் பிராம்மணனுக்குக் கொடுப்பவனுக்கும் [1]திலதேனுவைக் கொடுப்பவனுக்கும் வஸுக்களின் லோகங்கள் எளிதில் கிடைக்கின்றன. தன் வினைகளினால் கட்டப்பட்டுக் கொடிய இருளானநரகத்தில் விழும்மனிதனைக் கோதானமானது நடுக்கடலில் அநுகூலமான காற்றுச்சேர்ந்த கப்பல்போல மறுமையில் கரையேற்றுகிறது. சாஸ்திரப்பிரகாரமாகப் பிராம்மணனுக்குத் தகுதியுள்ள கன்னிகையைக் கொடுப்பவனும் பூமிதானமும் அன்னதானமும் செய்பவனும் இந்திரலோகத்தையடைவார். வேண்டியனவையெல்லாம் நிரம்பின கிருகத்தை வேதம் ஓதலும் ஒழுக்கமும் குணங்களும் நிரம்பின பிராம்மணனுக்குக் கொடுப்பவனுக்கு உத்தரகுருதேசத்திலுள்ள லோகங்கள் கிடைக்கின்றன. வண்டிமாடுகளையும் பசுக்களையும் தானம்செய்வதனால் மனிதன் வஸுக்களின் லோகங்களையடைவான். பொன் நாணயங் கொடுப்பது ஸ்வர்க்கத்திற்குக் காரணமென்றும் கட்டிப்பொன்கொடுப்பது அதற்குமேற்பட்டதென்றும் சொல்லுகின்றனர். குடைகொடுப்பதனால் மிகச் சிறந்த வீடும் பாதரக்ஷைகொடுப்பதனால் வாகனமும் வஸ்திரதானத்தினால் நல்லஅழகும பலனாகஉண்டாகின்றன. வாஸனைகளைக் கொடுப்பதனால் மனிதன் வாஸனையாகவேயிருப்பான். பூத்தும் காய்த்துமிருக்கும் மரத்தைப் பிராம்மணனுக்குத் தானம்செய்பவன் தனதான்யங்களும் பலரத்தினங்களும் நிரம்பின அழகானவீடு தேடாமலே கிடைக்கப்பெறுவான். ருசியுள்ள பக்ஷணங்களையும அன்னங்களையும் பானங்களையும் கொடுப்பவன் ருசியுள்ள பதார்த்தங்களெல்லாவற்றையும் நிரம்பப்பெறுவான். வீட்டையும வஸ்திரத்தையும் கொடுப்பவன் அவற்றையே மறுஜன்மத்தில் அடைவானென்பதில் ஸந்தேகமில்லை. அரசே! எந்தமனிதன் வாஸனையுள்ள புஷ்பங்களையும் தூபங்களையும சந்தனங்களையும் ஸ்நானங்களையும மாலைகளையும் பிராம்மணர்களுக்குக் கொடுக்கிறானோ அவன் இவ்வுலகத்தில் ரோகமில்லாமல் அழகுள்ளவனாயிருப்பான். ராஜனே! தான்யங்கள் நிரம்பினதும் சிறந்த படுக்கைகளுள்ளதுமாகிய கிருகத்தைப் பிராம்மணனுக்குத் தானம் செய்யும் புருஷன் புண்ணிய க்ஷேத்திரத்திலிருப்பதும் அழகானதும் ரத்தினங்கள் மிகுதியாக நிரம்பினதுமாகிய சிறந்த மாளிகையையடைவான். சிறந்த வாஸனையும் அழகானவிரிப்பும் தலையணையுமுள்ள படுக்கையைப் பிராம்மணனுக்குக்

[1] பசுவடிவமாகப் பகுக்கப்பட்ட எள்ளின் குவியல்.

கொடுக்கும்மனிதன் அழகும் ஜனக்கட்டுமுள்ளவளும் மனத்திற்கினியவளுமான மனைவியைத் தேடாமல் பெறுகிறான்.[1] வீரசயனம் செய்யும் மனிதன் பிரம்மாவுக்குக்குறையாதவனுமிருப்பான். வீரசயனத்திற்கு மேற்பட்டதில்லையென்று மகரிஷிகள் கூறுகின்றனர்” என்றார். அவருடைய அந்தச்சொல்லைக்கேட்டு மனமகிழ்ந்த யுதிஷ்டிரர் வீரமார்க்கத்திலேயே விருப்பமுற்றவராகிக் காட்டில் ஆஸ்ரமத்தில் வஸிப்பதைக் கருதவில்லை. புருஷஸ்ரேஷ்டரான ஜனமேஜயரே! பிரபுவான தர்மராஜர் உடனே பாண்டவர்களைப்பார்த்து, “நமது பிதாமஹர் சொன்னசொல்லை நீங்கள் அன்போடு எடுத்துக்கொள்ளவேண்டும்” என்றுசொன்னார். உடனே பாண்டவர்களனைவரும் புகழ்பெற்ற திரௌபதியும் யுதிஷ்டிரர் சொன்னதை, ‘சரி’ என்று கொண்டாடினர்.

## தொண்ணூற்றுமூன்றாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(தோட்டம்வைத்தல் குளம்வெட்டல் முதலியவற்றின்பயன்.)

யுதிஷ்டிரர், “கௌரவஸ்ரேஷ்டரே! பரதஸ்ரேஷ்டரே! தோட்டங்களையும் தடாகங்களையும் செய்விப்பதில் உண்டாகும்பலனை இப்போது உம்மிடத்தில் கேட்கவிரும்புகிறேன்” என்றுசொல்ல, பீஷ்மர் சொல்லலானார்.

“இவ்வுலகத்தில் காண்பதற்கு அழகாகவும் கெட்டியாகவும் பலவகைக் காவிக்கற்களினால் விளங்கிக்கொண்டு அநேகநிறங்களுள்ளதாகவும் எல்லாவகைப்பிராணிகளுமுள்ளதாகவுமிருக்கும் பூமி சிறந்ததென்று சொல்லப்படுகிறது. அந்தப் பூமியிலுள்ள பலவகை நிலங்களையும் குளங்கள் உண்டாக்குவதையும் ஜலத்திலுள்ள பிராணிகளெல்லாவற்றையும்பற்றி உனக்கு முறையேசொல்வேன். தடாகங்கள் உண்டாக்கப்படுவதிலுள்ள குணங்களையும் சொல்வேன். தடாகங்கள் உண்டுபண்ணுகிறவன் மூவுலகங்களிலும் யாவரும் பூஜிக்கத்தக்கவனாகிறான். தடாகங்களிருக்குமிடம் சிநேகிதன் வீடுபோன்றது; சூரியனுக்குப் பிரியமானது; தேவர்களுக்கு விருத்தியைச்செய்வது; புகழுக்குச் சிறந்தகாரணம். தடாகம்செய்வதினாலுண்டாகும் புண்ணியம் தர்மார்

[1] 38-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

த்தகாமங்களென்னும் மூன்றுபுருஷார்த்தங்களின் பலனையுந்தருவ தென்று அறிஞர் கூறுகின்றனர். ஒரு தேசத்தில் தடாகமுள்ள ஓர் இடந்தான் [1]நால்வகைப்பிராணிகளுக்கும் சிறந்த ஆகாரமென்று காண லாம். தடாகங்களெல்லாம் தேசத்திற்குச் சிறந்த அழகைக் கொடுக் கின்றன. தேவர் மனிதர் கந்தர்வர் பித்ருக்கள் நாகர் அரக்கர் தாவ ரப்பொருள்கள் ஆகியஎல்லாரும் தடாகத்தையே அடுத்திருக்கின்ற னர். ஆகலால், தடாகத்திற்குச் சொல்லப்பட்டுள்ள மேன்மைகளை யும் ரிஷிகளால் அதற்குச்சொல்லப்பட்டபலன்களையும் உனக்குஉரைப் பேன். எவனுடையதடாகத்தில் மழைக்காலத்தில்மட்டும் ஜலமிருக் கிறதோ அவனுக்கு அக்நிஹோத்ரத்தின் பலனுண்டென்று அறி ஞர் கூறுகின்றனர். எவனுடையதடாகத்தில் சரத்காலத்திலும்ஜலம் நிற்கிறதோ அவன் ஆயிரமகோதானத்தின் சிறந்தபலனை மறுமையில் அடைவான். எவன்தடாகத்தில் ஹேமந்தகாலத்தில் தண்ணீர் நிற் கிறதோ அவன் மிகுதியாகப்பொன்தக்ஷிணைகளையுடைய யாகத்தின் பலனை அடைவான். எவன்தடாகத்தில் சிசிரருதுகாலத்தில் ஜல மிருக்கிறதோ அவனுக்கு அக்நிஷ்டோமயாகத்தின்பலனுண்டென்று அறிஞர் கூறுகின்றனர். எவனுடையதடாகம் நன்றாகச்செய்யப்பட்டு வஸந்தகாலத்திலும் ஜலம்மிகுதியாயிருக்கிறதோ அவன் அதிராத்ர யாகத்தின்பலனை அனுபவிப்பான். எவன்தடாகத்தில் க்ரீஷ்மகாலத் திலும் தண்ணீர்நிற்கிறதோ அவனுக்கு அசுவமேதயாகத்தின் பல னுண்டென்று அறிஞர் நினைக்கின்றனர். எவன் வெட்டுவித்தகடா கத்தில் பசுக்களும் யோக்கியர்களான மனிதர்களும் எப்போதும் தண்ணீர்குடிக்கின்றனரோ அவன் தன்குலத்தையெல்லாம் கரை யேற்றுவான். எவன் தடாகத்தில் தாகமெடுத்தபசுக்களும் மான்க ளும் பறவைகளும் மனிதர்களும் ஜலத்தைக்குடிக்கின்றனரோ அவன் அசுவமேதயாகத்தின்பலனை அடைவான். ஒருவன் தடாகத்தில் ஜனங்கள் தண்ணீர்குடிப்பதும் ஸ்நானஞ்செய்வதும் களைப்பாறுவது மான இவையெல்லாம் அவனுக்கு மறுமையில் அழிவில்லாதஸுகத் திற்குக் காரணங்களாகின்றன. அப்பா! பரலோகத்தில் தண்ணீர் கிடைப்பது மிகஅரிது. குடிதண்ணீர் கொடுப்பதினால் அழியாத திருப்தியுண்டாகிறது. எள்ளைக் கொடுங்கள். தண்ணீர் கொடுங் கள். தீபங்கொடுங்கள். தவறாதீர்கள். உங்கள் உறவினரோடுகூட மறுமையில் ஸந்தோஷமடைவீர்கள். இந்தஸந்தோஷம் கிடைப்பது

[1] ஸபாபர்வம் 198-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

மிக்ககடினம், புருஷஸிரேஷ்டனே! தண்ணீர்கொடுப்பது எல்லாத் தானங்களிலும்பெரிது; எல்லாத்தானங்களிலும் சிறந்தது; ஆதலால், தண்ணீர்கொடுக்கவேண்டும். இவ்வாறு தடாகத்தின் சிறந்த பலனைச் சொன்னேன். இனி மரங்கள்வைப்பதைப்பற்றிச் சொல்வேன். தாவரப்பொருள்களில் மரங்கள் புதர்கள் [1]கொடிகள் [2]செடிகள் மேற்பட்டையே வன்மையாகவுடைய மூங்கில்முதலியவைகள் புற்பூண்டுவகைகள் என ஆறுவகைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. இவை விருக்ஷஜாதிகள். இவற்றைநடுவதினாலுண்டான குணங்களைச் சொல்வேன் மனிடலோகத்திற்புகழும் இறந்தபின் புண்ணியபலனும் அகத்திப்பண்டாகின்றன. அவன் பிதருலோகத்தில் பித்ருக்களாலும் கொண்டாடப்படுவான். தேவலோகத்திற்குப்போன பிறகும் அவன்பேர் அழிவதில்லை, பாரதனே! மாம்வைக்கிறவன் இறந்தகாலத்திலும் எதிர்காலத்திலும் தன்பித்ருவம்சத்தைக் கரையேற்றுவான். ஆதலால் மரங்களை நாட்டவேண்டும். அம்மரங்கள் அவனுக்குப் புத்திரர்களாகின்றன. இதில் ஸந்தேகமில்லை. அவன் பரலோகம் போகும்போது ஸ்வர்க்கத்தையும் மற்ற அழிவில்லாத லோகங்களையும் அடைவான். அப்பா! பூமியில்முளைத்த மரங்கள் மலர்களினால தேவர்களையும் கனிகளினால் பித்ருக்களையும் நிழலினால் அதிதிகளையும் பூஜிக்கின்றன. கின்னரர் நாகர் ராக்ஷஸர் தேவர் கந்தர்வர் மனிதர் முனிவர் இவர்களனைவரும் மரங்களையடைகின்றனர். இங்கு, மரங்கள் பூத்தும் காய்த்தும் மனிதர்களைத் திருப்திசெய்விக்கின்றன. மரங்களைக்கொடுப்பவனை அம்மரங்கள் புத்ரர்கள்போல மறுமையில் நரகத்தைத் தாண்டச்செய்கின்றன. ஆதலால் நன்மையை விரும்புகிறவன் குளக்கரையில் நல்லவிருக்ஷங்களை எப்போதும் வளர்க்கவேண்டும். பிள்ளைகளைப்போல அவற்றைக் காப்பாற்றவும்வேண்டும். செய்கையில் அவை புத்ரர்களாகவே நினைக்கப்படுகின்றன. குளம்வெட்டுகிறவனும் மரம்வைக்கிறவனும் யாகம்செய்பவனுமாகிய பிராம்மணனும் ஸத்தியவ்ரதமுற்றவர்களும் ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்படுகின்றனர். ஆதலால், தடாகத்தை வெட்டுவிக்கவேண்டும்; தோட்டங்களை வளர்க்கவேண்டும்; பலயாகங்களைச்செய்யவேண்டும்; எப்போதும் ஸத்தியமேபேசவேண்டும்" என்றார்.

[1] மரத்தின்மேற்படர்வது. [2] கீழே படர்வதென்றுங்கொள்ளலாம்.

## தொண்ணூற்றுநான்காவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொ. ௯௪.)

(பிராம்மணர்களைப் பூஜித்தல் முதலியவற்றின் சிறப்பு.)

யுதிஷ்டிரர், "ஓ! கௌரவசிரேஷ்டரே! யாகவேதிகைக்கு[1] வெளிப்பட்ட தானங்களைப் பற்றிச் சொல்லுகின்றனரே. அவற்றுள் எந்தத் தானம் சிறந்ததென்று நீங்கள் நினைக்கிறீர்கள்? பிரபுவே! எனக்கு அதைத் தெரிந்துகொள்ள மிக்கவிருப்பமிருக்கிறது. எந்தத்தானம் கொடுத்தால் கொடுப்பவனைத்தொடருமோ அதை எனக்குச்சொல்லும்' என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"எல்லாப்பிராணிகளுக்கும் அபயங்கொடுப்பதும் ஆபத்திற்காப்பாற்றுவதும் ஆவலுடன் பிள்ளைபெண்சாதிகளைக் காப்பதற்காக யாசிப்பவனுக்கு வேண்டினதையளிப்பதும் சிறந்த தானங்களென்று சொல்லப்பட்டிருக்கின்றன. பரதசிரேஷ்டனே! அப்படிப்பட்ட கொடைகொடுத்தல் கொடுப்பவனை விடாமல்தொடரும். பொன் பசுக்கள் பூமிஇவற்றின்தானங்கள் எல்லாப்பாவத்தினின்றும் கரையேற்றுகின்ற பரிசுத்தமானதானங்கள். புருஷசிரேஷ்டனே! இவற்றை யோக்கியர்களுக்கு எக்காலமும் கொடு. தானங்கள் மனிதனைப் பாவத்தினின்றுவிடுவிக்குமென்பதில் ஸந்தேகமில்லை. உலகத்திலும் தன்வீட்டிலுமுள்ள என்ன என்னபொருள்கள் தனக்கு மிக விருப்பத்தக்கவையோ அவை அழியாமலிருக்கவேண்டுமென்ற விருப்பமுள்ளவன் அவற்றைக் குணமுள்ளவனுக்குக் கொடுக்கவேண்டும். பிரியமானபொருளைக் கொடுப்பவனும் பிரியமான காரியத்தைச்செய்பவனும் எப்பொழுதும் பிரியமானவற்றையேயடைவர். அவர் இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும் எல்லாருக்கும் பிரியமாயிருப்பார். யுதிஷ்டிர! ஆதரவற்றவனைகயும் பொருளில்லாதவனைகயும்வந்து யாசிப்பவனுக்கு அகங்காரத்தினால் தன்னாற்கூடியவரையில் உபகாரஞ்செய்யாதவன்தான் கொடியவன். பகைவனாயினும் மெலிந்து சரணாகதியாகவந்தடைந்தவனைத் துயரத்தில் ஆதரிக்கிறவன் எவனோ அவன்தான் புருஷசிரேஷ்டன். கல்விகள்கற்று ஜீவனமில்லாமல் மனங்குன்றி இளைத்துப்போயிருப்பவனுக்குப் பசிதீர்ப்பவன் எவனோ அவனுக்கொப்பானபுருஷன் எவனுமில்லை. குந்திபுத்ரனே! அனுஷ்டானநியமங்களிற் கட்டுப்பட்டவர்களும் பெண்டுபிள்ளைகளினாற் பீடிக்கப்பட்டவர்களும் யாசி

[1] யாகதக்ஷிணையைச்சேராததானங்கள்.

யாதவர்களுமான ஸாதுக்களை எவ்வகையிலாவது உபசரித்து அழைக்க வேண்டும். பாரதனே! தகுதியுள்ளவர்களும் எப்போதும் ஸத்வ குணத்தையேயுடையவர்களும் கிடைத்ததைக்கொண்டு ஜீவித்துத் தேவர்களிடத்திலும் மனிதர்களிடத்திலும் ஒன்றையும் வேண்டாமலிருப்பவர்களும் ஸர்ப்பங்களுக்கொப்பானவர்களுமான பிராம்மணர்களிடத்தினின்றும் உன்னைக் காத்துக்கொள். அவர்களைத் தக்கவர்களால் கண்டறிந்து அவர்களுக்கு ஸாதகங்களையளித்து அவர்களைக் காப்பாற்று. கௌரவனே! எல்லாப்பிராணிகளுக்கும் சௌக்கியத்தைத் தரத்தக்க வீடுகளைக்கட்டி அவற்றை வேலைக்காரர்களோடும் வேண்டினபண்டங்களோடும் எப்போதும் பிரார்த்தித்துக் கொடு. தர்மிஷ்டர்களும் புண்ணியவான்களும் [1]வித்யாஸ்நானத்தையும் [2]வ்ரதஸ்நானத்தையும்செய்து தர்மத்தைப்பற்றியே ஜீவிப்பவர்களும் தவேதம் ஓதலையும் தவத்தையும் வெளிப்படுத்தாதவர்களும் நியமந்தவறாதவர்களுமான அந்தப் பிராம்மணர்கள் தானத்தைப்பெற்றுக்கொள்வாராயின் சிரத்தையினால் பரிசுத்தமானதைப்பெறுவது கடமையென்றுநினைத்துத்தான் பெற்றுக்கொள்வர். பரிசுத்தர்களும் அடக்கமுள்ளவர்களும் தம்மனைவிகளை விடாதவர்களுமான அவர்கள் விஷயத்தில் நீசெய்வது உனக்கே பரலோகத்தில் மங்களமாகிறது. மனத்தூய்மையோடு வித்வான்களுக்குக்கொடுக்கும் தானமானது பிராம்மணன் காலைமாலையிரண்டுவேளையும் முறைப்படிசெய்த அக்னிஹோத்திரம்போலாகிறது. அப்பா! சிரத்தையினால் பரிசுத்தமும் தக்ஷிணையுள்ளதுமாகிய நீசெய்யும் இந்தத்தானமென்னும் யாகம் எல்லாயாகங்களிலும்சிறந்தது. இது எப்போதும் நடக்கட்டும். யுதிஷ்டிர! தகுந்தவர்களுக்குக்கொடுப்பது மஹாதானங்களுக்குச் சமமானது. அவர்களைப் பூஜித்துக்கொடுப்பவன் கடன்தீர்ந்தவனாகிறான். கோபியாமலும் அரும்புக்குமாசைப்படாமலும் இன்சொல்லையேபேசிக்கொண்டுமிருக்கிறவர்தாம் நமக்கு மிகப்பூஜிக்கத்தக்கவர். எவர்கள் நம்மைக் கொண்டாடாமலும் யாசிக்கப்புகாமலுமிருக்கின்றனரோ அவர்களைப் புத்திரர்களைப்போலக் காப்பாற்றவேண்டும். அவர்களை வணங்க வேண்டும். அப்படிச்செய்வதால் பயமில்லை. ரித்விக்குகள் புரோகிதர்கள் ஆசாரியர்கள் ஸாதுக்கள் தர்மந்தவறாதவர்கள் இவர்களிடத்தில் க்ஷத்திரியதர்மத்தினாலுண்டான பராக்கிரமம் அடங்கிப்போம். யுதிஷ்டிர! 'நான் ஈச்வரன்; பலவான்; ராஜன்' என்று அகங்காரப்பட்டு உடைகளிலும் உணவிலும் அந்தணர்களை விலக்காதே. குற்றமற்றவனே!

---

[1] அவற்றைப்பூர்த்திசெய்வது. [2] குருப

க்ஷத்திரியதர்மத்தை யனுஷ்டிக்கும் நீ உன்சிறப்புக்காகவும் ஸேனைக்காகவுமிருக்கும் திரவியமெதுவோ அதனால் வேதியர்களைப் பூஜிக்கவேண்டும். பிராம்மணர்கள் ஏறக்குறைய நடந்தாலும் அவர்களை நீ வணங்கவேண்டும். அவர்கள் உன்னிடத்தில் உன்புத்ரர்கள்போல ஸுகமாகவும் உற்சாகமாகவும் விளையாடட்டும். கௌரவஸ்ரேஷ்டனே! அழியாத அனுக்கிரஹமுள்ளவர்களும் எல்லாருக்கும் அன்பர்களும் கொஞ்சத்தில் திருப்தியடைகிறவர்களுமான பிராமமணர்களுக்கு ஜீவனத்தைக்கொடுப்பதற்கு உன்னைவிட வேறுதகுதியுள்ளவன் யாவன்? 'இவ்வுலகத்தில் மாதர்களுக்கு நிலையானதர்மமும் கதியும் கணவன்தான்; வேறில்லை' என்பதுபோல நமக்குப் பிராம்மணர்கள். அப்பா! நம்மால்பூஜிக்கப்படாத பிராம்மணர்கள் க்ஷத்திரியனிடத்தில் எப்போதுமிருக்கும் கொடுஞ்செய்கையைக்கண்டு நம்மை விட்டுவிடுவாராயின் வேதமும் புகழும் பரலோகமும் யாகமும் அற்றுப்போன நமக்கு உயிர்வாழ்க்கையினாலாகும்பலன் யாது? இவையெல்லாம் நமக்குப் பிராம்மணர்களால் வருவனவல்லவா? இந்தவிஷயத்தில் பழமையான தர்மத்தை உனக்கு உரைப்பேன், ராஜனே! முற்காலத்தில் அரசன் பிராம்மணர்களுக்கும் வைசியன் அரசர்களுக்கும் சூத்திரன் வைசியர்களுக்கும் பணிவிடைசெய்தனரென்று கேள்வி. சூத்திரன் பிராம்மணனிடத்தில் ஜ்வலிக்கும் அக்கினியிடத்திற்போலத் தூரத்திலிருந்து உபசாரங்கள் செய்யவேண்டும். வைசியனும் க்ஷத்திரியனுந்தாம் தொட்டுப்பணிவிடை செய்யலாம். இளகியமனமுள்ளவர்களும் ஒழுக்கந்தவறாதவர்களும் ஸத்யத்தையும் தர்மத்தையும் காப்பவர்களும் கோபித்தால் ஸர்ப்பங்கள் போன்றவர்களுமான அந்தப்பிராம்மணர்களுக்கு நீங்கள் உபசாரம் செய்யுங்கள். பராக்கிரமத்தினாலும் ஸேனையினாலும் பிறரைவருத்தும் க்ஷத்திரியர்களில் பிந்தினவர்கள் முந்தினவர்கள் அவர்களுக்கும் முந்தினவர்கள் எல்லாருடைய பராக்கிரமங்களும் தவங்களும் பிராம்மணர்களிடத்திலேயே மழுங்கிப்போயின. அப்பா! ராஜனே! எனக்கு என் தந்தையினிடத்திலும் பாட்டனரிடத்திலும் உன்னிடத்திலும் என் தேகத்திலும் உயிரிலும் அவ்வளவு அதிகஅன்பில்லை. எனக்கு உன்னைவிட அதிகஅன்பன் இப்புவனியில் எவனுமில்லை. பரதசிரேஷ்டனே! பிராம்மணர்கள்மட்டும் எனக்குஉன்னைவிட மிக்கஅன்பர்கள். பாண்டுபுத்ரனே! நான்சொல்வது உண்மையாயிருந்தால் இந்தஸத்யத்தினாலேயே சந்தனுஇருக்கும் லோகங்களுக்கு நான்போகக்கடவேன்; பிராம்மணர்களால் பூஜிக்கப்பட்டவையும் பரிசுத்தமுமான ஸாதுக்களின் உலகங்

களையும் பார்ப்பேன். அப்பா! உடனேயாவது காலம்பொறுத்தாவ தும் அவ்வுலகங்களுக்குத்தான் யான் போகவேண்டும். பரதஸ்ரேஷ் டனே! வேந்தே! இப்படிப்பட்டலோகங்கள் இருப்பதையறிந்துதான் பிராம்மணர்கள்விஷயத்தில் நான் செய்ததைப்பற்றி வருத்தப்படாம லிருக்கிறேன்" என்றார்.

## தொண்ணூற்றைந்தாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி)



(யார் தானம்பெறுவதற்குரியவரென்பது முதலியன.)

யுதிஷ்டிரர், "ஆசாரமும் கல்வியும் குலமும் ஸமமாகச்சிறந் திருக்குமிருவரில் ஒருவன் யாசியாதவனும் மற்றொருவன் யாசிக்கிற வனுமாயிருந்தால் எவனுக்குக்கொடுப்பது சிறந்தது?" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"குந்திபுத்ரனே! யாசிப்பவனுக்குக்கொடுப்பதைவிட யாசியாத வனுக்குக்கொடுக்கும் தானம் சிறந்ததென்று சொல்லுகின்றனர். மன வுறுதியில்லாமல் யாசிப்பவனைப்பார்க்கிலும் மனவுறுதியுள்ளவன் மிகத் தகுதியுள்ளவன் தானே? க்ஷத்ரியனுக்கு ரக்ஷிப்பதுதான் துணிவு. பிராம்மணனுக்கு யாசியாமலிருப்பதுதான் துணிவு. துணிவும் திருப்தி யுமுள்ள வித்வானானபிராம்மணன் தேவர்களையும் ஸந்தோஷப்படுத்து வான். பாரதனே! யாசிப்பதும் மிருதியாகவாங்குவதும் அசக்தனுக் குரியவையென்று சொல்லுகின்றனர். மனிதர்கள் யாசிக்கும்போதெல் லாம் கொள்ளைக்காரர்கள்போல நடுங்கச்செய்கின்றனர். யாசிப்பவன் இற ப்பவனே. கொடாதவன் அவன்பின் இறப்பவன். யுதிஷ்டிரா! கொடுப் பவன் பெற்றுக்கொள்பவனையும் தன்னையும் பிழைப்பிக்கிறான். கேட் பவனுக்குக்கொடுப்பதனால் தயையென்னும் பெரியதர்மம் வருகிறது. யாசியாமல் வருத்தப்படுகிறவர்களுக்கு எல்லாமுயற்சிகளாலும் வருந் திக்கொடுக்கவேண்டும். உன்னுடையதேசத்தில் அப்படிப்பட்ட பிராம் மணோத்தமரிருப்பாராயின் நீறுபூத்ததணல்போன்ற அவர்களை நீ ஜாக்ர தையாகத் தெரிந்துகொள்ளவேண்டும். கௌரவனே! தவத்தினால் பிர காசிப்பவரும் பூஜைக்குரியவர்களுமான அப்படிப்பட்டவர்கள் பூஜிக்கப் படாவிடின் புவனிமுழுமையுங்கூட எரித்துவிடுவர். சாஸ்திரஞானமும் ஆத்மஞானமும் தவமும் யோகமுமுள்ளவர்கள் பூஜைக்குரியவர்களன்

ரோ? வீரனே! அப்படிப்பட்ட பிராம்மணர்களுக்குப் பூஜையைச் செலுத்துவாயாக. அவர்களுக்குப் பலவகைப்பொருள்களைக்கொடுத்து அவர்களைச் சந்தோஷப்படுத்தவேண்டும். காலைமாலைகளில் நன்றாகச் செய்யப்பட்ட அக்நிஹோத்ரத்திற்கு என்னபலனுண்டாகுமோ அந்தப் பலன் வித்தையும் வேதமும் தவமும்நிரம்பின பிராம்மணனுக்குக் கொடுப்பதனால் உண்டாகுமென்று சொல்லுகின்றனர். கௌரவனே! வித்யாஸ்நானமும் பிரம்மசாரிவிரதஸ்நானமும் செய்தவரும் பிறரையடுத்து ஜீவியாதவரும் ஓதலையும் தவத்தையும் வெளிப்படுத்தாதவரும் நியமங்கள்தவறாதவர்களுமான பிராம்மணர்களுக்கு அழகானவீடுகளைக் கட்டுவித்துப் பண்டங்களோடும் வேலைக்காரர்களோடும் இன்னமும் அவர்கள் விரும்பினவைகளோடும் அவர்களைப் பிரார்த்தித்துக்கொடுப்பாயாக. யுதிஷ்டிர! தர்மந்தெரிந்தவர்களும் நுட்பமான அறிவுள்ளவர்களுமான அந்தப்பிராம்மணர்கள், நீ சிரத்தையோடு கொடுப்பதைக் கடமையென்று நினைத்துத்தான் பெற்றுக்கொள்வார்கள். உழவர்கள் மேகத்தையெதிர்பார்ப்பதுபோல எவர்களை மனைவிகள் எதிர்பார்க்கின்றனரோ அப்படிப்பட்ட பிராம்மணர்கள் உன்னிடத்தில் புசித்துமிருந்ததைக் கையிலெடுத்துக்கொண்டு தக்ஷிணைகளோடு கிருகங்களுக்குச் சென்றார்களா? அப்பா! நியமமுள்ளவர்களும் ஜிதேந்திரியர்களுமான பிராம்மணர்கள் உன்னுடைய அன்னங்களைப்புசிப்பதனால் மூன்றக்கினிகளையும் திருப்திசெய்விப்பார். அது [1] ப்ராதஸ்ஸவனம். அப்பா! பசுக்களையும் பொன்களையும் ஆடைகளையும் கொடுப்பதனாலேயே உனக்கு மாத்யாந்நஸவனமும் நடக்கவேண்டும். அதனால், உன்னிடத்தில் இந்திரன் திருப்தியடைவான். யுதிஷ்டிர! தேவர்களுக்கும் பிதுருக்களுக்கும் பிராம்மணர்களுக்கும் நீகொடுப்பதுதான் விஸ்வர்களென்னும் தேவர்களைத் திருப்திசெய்விக்கும் மூன்றுவதுஸவனம். கொல்லாமையும் எல்லாவற்றையும் எல்லாப்பிராணிகளுக்கும் பகுத்துக்கொடுப்பதும் இந்திரியங்களையடக்குவதும் பற்றில்லாமையும் மனஉறுதியும் ஸத்தியமும் உனக்கு [2] அவபிருதங்களாகின்றன. அப்பா! சிரத்தையினால் சுத்தமுள்ளதும் தக்ஷிணைகளுள்ளதும் எல்லாயாகங்களிலும் சிறந்ததுமான இந்தத்தானமென்னும் யாகம் உன்னால் செய்யப்பட்டு இடைவிடாமல் நடந்துவரக்கடவது" என்றார்.

[1] காலைஹோமம்.

[2] ஆதிபர்வம் 809 - ம்பக்கம் குறிப்பிற்காண்க.

## தொண்ணூற்றாறுவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(அரசன் செய்யத்தக்க தானம் யாகமுதலியன.)

யுதிஷ்டிரர், "பாரதரே! தானம் யாகஞ்செய்கை இவைகளுள் மறுமையிற்பெரும்பயனைத்தருவது யாது? எதன்பயன் சிறந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது? எந்தக்காலத்தில் எப்படிப்பட்டவர்களுக்கு எவ்வகையாகக் கொடுக்கவேண்டும்? இதைச் சரியாகத்தெரிந்துகொள்ள விரும்புகிறேன். வித்வானே! தெரிந்துகொள்ள விருப்பமுள்ள எனக்குத் தானதர்மங்களை உரைக்கக்கடவீர். ஐயா! பிதாமஹரே! யாகவேதிகையில் சிரத்தையுடன் தக்ஷிணைகொடுப்பதிலும் தயையினால் தானம் செய்வதிலும் எது அதிகபலனுள்ளது? அதை எனக்குச் சொல்லக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"அப்பா! க்ஷத்திரியனுக்குக் கொடியசெய்கை எப்போதுமிருக்கிறது. தானமின்றி யாகத்தின்சுத்தமானபலன் இவனுக்கிராது. யாகம் செய்விக்கும் ஸாதுக்களான பிராம்மணோத்தமர்கள் பாபிகளான அரசர்களிடத்தில் ஒன்றும்வாங்கார்; ஸத்தியத்தோடு கொடுப்பவர்களிடத்தில்தான் வாங்குவார். தக்ஷிணைகள் வாங்குவதற்குரியயோக்கியர்கள் கோபத்தினால் தனத்தைப்[1] பெற்றுக்கொள்ளாமல் போவாராயின், அந்தக்காரணம்பற்றியே அரசன் நிரம்பின தக்ஷிணைகளுள்ள யாகங்களைச் செய்யவேண்டும். அவர்கள் வாங்குவாராயின், அரசன் மிகுந்தசிரத்தையோடு தினந்தோறும் தானஞ்செய்யவேண்டும். தானந்தான் பாவத்தைப் போக்குபவற்றுள் மிகச்சிறந்தது. அன்புள்ளவர்களும் ஸாதுக்களும் வேதமறிந்தவர்களும் அடக்கம் ஒழுக்கம் தவம் இவைதவறாதவர்களுமான பிராம்மணர்களைத் தனங்களினால் திருப்திசெய்விப்பதுதான் ஹிம்ஸையில்லாதயாகம். உன்னுடைய எந்தக்காரியத்தை அவர்கள் செய்விக்கவில்லையோ அந்தக்காரியம் நீ செய்ததாகாது. ஸாதுக்களுக்குச் சுவையுள்ள அன்னங்களும் நிரம்பின தக்ஷிணைகளும் கொடுத்து யாகங்களைச்செய் தானம் செய்வதினால் யாகம் தானம் இரண்டும் செய்தவனாக உன்னை நினைத்துக்கொள். இடைவிடாமல் யாகம்செய்பவரைப் பூஜிக்கக்கடவாய். அதனால் உனக்கும் அந்தப்பலனில் பாகமுண்டாகும். வித்வான்களுக்குக் கொடுப்பதனாலும் அவர்களைப்பூஜிப்பதனாலும் உனக்கு அவர்கள் புண்யத்தில் பாக

---

[1] யாகத்தினால் பாபம்தீர்ந்தால் வாங்குவார்களென்பது.

முண்டு. யாகம்செய்பவர்களுக்கும் வித்வான்களுக்கும் கொடுக்குந் தானமானது கொடுப்பவனுக்கு மேலுலகத்தைக் கொடுப்பிக்கும். ஞானத்தைக்கொடுக்கும் ஆசார்யர்களுக்குத் தானம்செய்யவேண்டும். அதனால் ஞானதானத்தின்பலனில் ஒருபாகமுள்ளவனாவான். ஸந்ததிகளுள்ளவரும் பெருங்குடும்பத்தைக்காப்பவருமான பிராம்மணர்களைக் காப்பாற்றக்கடவாய். அதனால் அந்தக்குடும்பியைப்போலப் பூஜிப்பவனுக்கும் ஸந்ததிகள் உண்டாகும். ஸாதுக்கள் பெரியோர்களின் தாமங்களெல்லாவற்றையும் விருததிசெய்கிறவர். அதிக அனுஷ்டானமுள்ள அம்மனிதர்கள் எல்லாஜெந்துக்களாலும் காப்பாற்றுவதற்குரியவர். யுதிஷ்டிர! செல்வம்நிரம்பப்பெற்றுப் பிராம்மணர்களுக்குப் பசுக்கள் எருதுகள் அன்னம் குடை வஸ்திரங்கள் பாதரக்ஷைகள் இவையிவற்றைக் கொடு. பாரதனே! செல்வமுள்ளவர்கள் யாகம்செய்பவர்களுக்கு நெய் அன்னம் குதிரைவண்டிகள் வீடுகள் படுக்கைகள் இவைகளையெல்லாம் கொடுக்கவேண்டும். பாரதனே! இவை புண்ணியத்தையடைவதற்கு எளியஉபாயங்கள். ஜீவனமில்லாமல்கஷ்டப்படுகிறவரும் பிறரைவெறுக்காதவருமான பிராம்மணரைக்கண்டறிந்து ரகஸ்யமாகவோ வெளிப்படையாகவோ ஜீவனத்தைக்கொடுத்து அவர்களைக் காப்பாற்று. அது ராஜஸூயஅஸ்வமேதயாகங்களைப்பார்க்கிலும் க்ஷத்திரியர்களுக்கு மிகச்சிறந்தது. இப்படிச்செய்வதனால் நீ பாவங்களால் விடுபட்டுப் பரிசுத்தனாகி ஸ்வர்க்கத்தையடைவாய். பொக்கசத்தைச்சேர்த்துத் தேசத்தைக்காப்பாற்றுவாயாயின் பிராம்மணத்வத்தையும் தனங்களையும் மறுஜன்மத்தில் அடைவாய். பாரதனே! உன்ஜீவனத்தையும் பிறர்ஜீவனத்தையும் காப்பாற்று. உன் வேலைக்காரர்களையும் குடிகளையும் பிள்ளைகளைப்போல ரக்ஷிக்கக்கடவாய். பாரதனே! பிராம்மணர்களின்யோகக்ஷேமங்களிரண்டும் எப்போதும் உன்னைப்பொறுத்தவையாயிருக்கவேண்டும். உன் உயிர் வாழ்க்கையே அவர்களுக்காக இருக்கக்கடவது. அவர்களை நீ காப்பாற்றுமலிருக்கலாகாது. பிராம்மணனுக்குத் திரவியம் அதிகமாகச் சேர்வதுதான் பெருந்தீங்கு எப்போதும ஐசுவரியத்தோடுபழகுவது கர்வத்தையுண்டாக்கி அறிவைக்கெடுத்துவிடும. பிராம்மணர்களுக்கு அறிவுகெட்டால் தர்மம்அழிந்துபோவதுதிண்ணம் தர்மம்அழிந்தால் பிராணிகளேயில்லாமற்போம். ஸந்தேகமில்லை. அரசன், 'யாகத்திற்காக அந்தத்தேசத்திலிருந்து தனத்தைக்கொண்டு வாருங்கள்' என்றுசொல்லி, அதிகாரிகளிடத்தில் ஒருதேசத்தை ஒப்புக்கொடுக்கிறான். அவனுடையஅந்தக்கொடியகட்டளையைப்பெற்

றுக்கொண்டஜனங்கள் பயந்து கொடுத்தபொருளைக்கொண்டு அரசன் யாகஞ்செய்வனாயின், அந்தயாகத்தை ஸாதுக்கள் புகழமாட்டார்கள். நன்றாகச்செல்வம்தழைத்திருப்பவர்கள் பீடிக்கப்படாமல் அன்போடு கொடுக்குந்திரவியம் ஸ்வல்பமாயிருந்தாலும் அதைக்கொண்டு யாகம் செய்யலாம்; அதிகாரத்தினால் வாங்கப்பட்டதைக்கொண்டு செய்ய லாகாது. சாஸ்திரப்படி சேர்த்துவைக்கப்பட்டதிரவியம் எப்போது மிகஅதிகப்படுமோ அப்போது அரசன் தக்ஷிணைகள்மிகுதியாக வுடைய மகாயாகங்களைச் செய்யவேண்டும். முதியோர்கள், சிறுவர் கள், கண்ணில்லாதவர்கள், அசக்தர்கள் ஆகியஇவர்களின்தனத்தை அரசன் ரக்ஷிக்கவேண்டும். வேந்தன் [1]பூமியிலிருக்கும்தனங்களை வெட்டியெடுக்கலாகாது. பிரஜைகள் அழும்படி அவர்கள்தனத்தை வாங்கலாகாது. ஏழைகளின்தனம்அபகரிக்கப்பட்டால் அது ராஜ் யத்தையும் ராஜ்யலக்ஷ்மியையும் கெடுத்துவிடும். ஸாதுக்களுக்குச் சிற ந்தபோகங்களைக் கொடுக்கவேண்டும்; பசியின்பயத்தைப் போக்க வேண்டும்; அவர்களின்குழந்தைகள் ருசியுள்ளஉணவை எதிர்பார் த்து அதைக் கிரமமாகஉண்ணப்பெறாவிடின் மன்னனுக்கு அதை விடப் பெரும்பாவம் என்னவிருக்கிறது? அப்படிப்பட்டவித்வானான பிராம்மணன் உன்தேசத்தில் முன்சொன்னபடி பசியினால்வருந்து வானாயின், சிசுஹத்தியென்னும் பெரும்பாவத்தைச் செய்தவன்போல அதன்பயனை அடைவாய். எவனுடையதேசத்தில் பிராம்மணனாகட் டும் மற்றமனிதனாகட்டும் கஷ்டப்படுகிறானோ அந்தஅரசனுடைய பிழைப்பு இழிவானபிழைப்பென்பது சிபிசக்கரவர்த்திசொன்னவாக் கியம். எந்த மன்னனின்தேசத்தில் ஸ்நாதகன் பசியினால்வருந்துகிறா னோ அவனுடையராஜ்யமும் அவன் ராஜவம்சமும் விருத்தியடை வதில்லை. எந்தஅரசனுடைய தேசத்திலிருந்து கணவர்களும் பிள்ளை களும் கதறும்போது தாமும்கதறிக்கொண்டிருக்கும் மாதர்கள் பல வந்தமாகக்கொண்டுபோகப்படுகின்றனரோ அவ்வரசன் இறந்தவன் தான்; ஜீவிப்பவனல்லன். ரக்ஷியாதவனும் பணத்தை வாங்கிக்கொள் ளுகிறவனும் தேசத்தையழிப்பவனும் ஒழுங்காகநடத்தாதவனும் தயையற்றவனுமாகிய அரசனென்றுபெயருள்ளகலிபுருஷனை ஜனங் களே முயன்றுகொல்வார்கள். 'நான் உங்களைக் காப்பாற்றுகிறேன்' என்றுசொல்லிக் காப்பாற்றாமலிருக்கும்அரசனை நோய்பிடித்தவெறி நாயைப்போல ஜனங்கள் சேர்ந்து கொல்லவேண்டும். பாரதனே!

---

[1] 'பொருளைச் சொந்தஉபயோகத்திற்காகத் தனவசப்படுத்திக்கொள்ள லாகாது' என்பது பழையவுரை.

வேந்தனுற் காப்பாற்றப்படாத ஜனங்கள் என்னபாவம்செய்தாலும் அந் தப்பாவத்தில் நாலில்ஒருபாகத்தை அரசன் அடைகிறுன்; சிலர் அந் தப்பாவமெல்லாவற்றையும் அடைகிறுனென்றும், சிலர் அதிற்பாதியை அடைகிறுனென்றும சொல்லுகின்றனர்; மனுவின் சாஸ்திரத்தைக் கேட்ட நமக்குமட்டும் நாலில்ஒருபாகம் என்னும மதந்தான் நிச்சயம். பாரதனே! அரசனுல் நன்றுகக்காப்பாற்றப்பட்ட ஜனங்கள் செய்யும் புண்ணியகர்மத்திலும் நாலில்ஒருபாகத்தையே அவன் அடைகிறுன். யுதிஷ்டிர! மேகத்தையனுசரித்து எல்லாப்பிராணிகளும ஜீவிப்பது போலவும் பெரியவிருக்ஷத்தை அடுத்துப்பக்ஷிகள் ஜீவிப்பதுபோலவும் நீ ஜீவிப்பதையனுஸரித்துக் குடிகளெல்லாம ஜீவிக்கக்கடவன. வீரனே! ராக்ஷஸர்கள் குபேரனையும் தேவர்கள் இந்திரனையும் அடுத்து ஜீவிப்பது போல உறவினரும் சினேகிதர்களும் உன்னையடுத்து ஜீவிக்கக்கடவர்" என்றுர்.

## தொண்ணூற்றேழாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)



(பூமிதானத்தின் சிறப்பும், ப்ருஹஸ்பதி இந்திரனுக்குத் தானங்களைப் பற்றிச் சொல்லியதும்.)

யுதிஷ்டிரர், "வேதவிதிகள், 'இதைக் கொடுக்கவேண்டும்; இதைக் கொடுக்கவேண்டும்' என்றிருப்பதனுல் அரசர்கள் கொடுக்கவேண்டியவை அநேகமிருக்கின்றன. அவை எல்லாவற்றிலுஞ் சிறந்ததான கொடுக்கத்தக்கபொருள் யாது?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானுர்.

"பூமிதானமானது எல்லாத்தானங்களிலும் மேற்பட்டதாகச் சொல்லப்படுகிறது. பூமியானது அசைவற்றது; அழிவற்றது; உயர்ந்த போகங்களைக் கொடுப்பது. வஸ்திரங்களையும் ரத்தினங்களையும் பசுக்களையும் நெல்யவைமுதலிய தானியங்களையும் பூமி கறக்கிறது. எல்லாப் பிராணிகளிலும் பூமிதானம்செய்பவன்தான் நெடுங்காலம் மேன்மையடைவான். இவ்வுலகத்தில் பூமிதானம்செய்பவன் பூமியின்ஆயுள் எவ்வளவுகாலமோ அவ்வளவுகாலம் விளங்கிக்கொண்டிருப்பான். யுதிஷ்டிர! இவ்வுலகத்தில் பூமிதானத்திற்கு மேற்பட்டதொன்றுமில்லை. எல்லாரும் பூமியில் கொஞ்சபாகமாவது தானம் செய்திருக்கின்றனரென்று நாம் கேட்டிருக்கிறேம். பூமியைக்கொடுத்த ஜனங்கள்தாம் பூமியை

அநுபவிக்கின்றனர். மனிதர்கள் இம்மையிலும் மறுமையிலும் தம் வினையையே பற்றியிருக்கின்றனர். பூமியென்னும்மகாதேவி தன்னைக் கொடுப்பவனைத் தனக்கன்பனான கணவனாகச்செய்துகொள்ளுகிறாள். ராஜஶ்ரேஷ்டனே! அழிவில்லாத இந்தப்பூமியைத் தக்ஷிணையாகக் கொடுப்பவன் மறுபடியும் மானிடஜன்மமெடுத்துப் பூமிக்கரசனாவான். இவன்கொடுக்கிறபடிதான் இவனுக்குப் பின்னால் அநுபவமுண்டாகிற தென்பது தர்மசாஸ்திரங்களின் துணிபு. 'யுத்தத்தில் தேகத்தையாவது விடவேண்டும்; பூமியையாவது தானம்செய்யவேண்டும்'என்பதைத்தான் க்ஷத்திரியஜாதியிற் பிறந்தோர்களுக்குச் சிறந்த ஆசீர்வாதமாகக்கூறு கின்றனர். தானம்செய்யப்பட்ட பூமியானது பாவச்செய்கையுள்ளவ னாகவும் பிரம்மஹத்திசெய்தவனாகவும் பொய்யனாகவுமிருந்தாலும் தானம்செய்பவனைப் பரிசுத்தனாகச்செய்யுமென்று நாம் கேட்டிருக் கிறோம். அதுதான் பாவத்தைப்போக்குவது. அதுதான் பாவத்தி லிருந்து மனிதனைவிடுவிப்பது. பாவஞ்செய்த ராஜர்களிடத்திலும் பூமி யைமட்டும் ஸாதுக்கள் வாங்கிக்கொள்ளுவார்; வேறொன்றையும் விரும் பார். ஏனெனில், பூமியானது பரிசுத்தமானது. இந்தப்பூமிதேவிக்குப் [1] பிரியதத்தையென்னும் பெயர் ரகஸ்யமும் அழியாததுமாயிருக்கி றது. ஏனெனில், அதைக் [2] கொடுப்பதும் வாங்குவதும் மிகவும் பிரியமானவை. இந்தப்பூமியை வித்வானுக்குத் தானம்செய்யும் அர சன் பூமியில் இப்போதுஇருப்பதைவிட அதிகஸுகமான ராஜ்யாதி பத்தியத்தை அடைவான். அவன் மறுஜன்மத்திலும் அரசனாகவே யிருப்பானென்பதில் ஸந்தேகமில்லை. ஆதலால், அரசன் பூமியை யடைந்தவுடனே அதைப் பிராம்மணனுக்குத் தானம்செய்யவேண் டும். அரசனல்லாதவன் பூமியை [3] ஆளுவது எவ்வகையிலுமுடி யாது. பூமியை வஸ்திரத்தினாலும் மூடமுடியாது; வேறுவிதமாக மறைத்துக்கொண்டு [4] போகவுமாகாது. பூமியைவிரும்புகிறமற்றவர் களும் இப்படி (தானம்) செய்யவேண்டுமென்பதில் ஸந்தேகமில்லை. யோக்கியனுடைய பூமியை எவன் எடுத்துக்கொள்ளுகிறானோ அவன் பூமியை அடைவதேயில்லை. யோக்கியர்களுக்குப் பூமியைக்கொடுப்

[1] பிரியமாகக்கொடுக்கப்படுவது.

[2] கொடுப்பதனால் பாவம் விலகுகிறது; வாங்குவதனாற்பாவமில்லை.

[3] தானம்செய்வதனால் அரசனுக்குப் பூமியில்லாமற்போகாது என்பது.

[4] வாங்கினவனுக்குப் பலனும் அரசனுக்கு ஆளுகையும் வியவஸ்தையா யிருக்கும் என்பது.

பவன் சிறந்த பூமியைப் பெறுகிறான் தர்மசிந்தையுள்ளவன் இருக்கும் போதும் இறந்தபின்னும் பெரும்புகழையடைகிறான். ஒருவனுக்கு ஆகாரத்தைக்கொடுக்கும் பூமியைக்கொடுப்பதனால் அறுபதினாயிர வருஷகாலம் மேலுலகத்திலிருப்பான். அவ்வளவு பூமியை யபகரிப்பவனுக்கு அதற்கிரண்டுமடங்கு அதிககாலம் நரகமுண்டு. அரசனே! உபகாரம்செய்த எந்த அரசனுடைய பூமியைப் பிராம்மணர்கள் எப்போதும் சிலாகிக்கின்றனரோ அவ்வரசனது பூமியைப் பகைவர் [1]சிலாகிப்பதில்லை ஜீவனமில்லாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் மனிதனும் ஏதாவது பாவம் செய்வனாயின், பசுவின்தோலளவு பூமியைத் தானம்செய்த மாத்திரத்தினால் சுத்தனாகிவிடுவான். வர்ணதர்மங்கள் கெட்டும் கொடியசெய்கை செய்துகொண்டுமிருக்கும் அரசர்களுக்கும் பூமிதானம் எல்லாவற்றிலும் சிறந்தபுண்ணியமென்று சொல்லத்தக்கது. அசுவமேதயாகம்செய்வதற்கும் யோக்கியனுக்குப் பூமிதானம் செய்வதற்குமுள்ள வித்யாஸம் சிறிதென்று பூர்விகர்கள் எப்போதும் நினைத்திருக்கின்றனர். வித்வான்கள் எந்தப்புண்ணியத்தைச்செய்தும் பயந்துகொண்டிருப்பதுண்டு. எல்லாவற்றிலும்சிறந்த இந்தப்பூமிதானம் ஒன்றுமட்டும் (பாவ) பயமற்றது. பூமிதானஞ்செய்யும் சிறந்த புத்திமான் பொன்வெள்ளி வஸ்திரம் ரத்தினம் முத்துக்கள் தனங்கள் இவற்றையெல்லாம் கொடுத்தவனாகிறான். தவம் யாகம் வேதாத்யயனம் நல்லொழுக்கம் ஆசையின்மை சொல்தவறாமை பெரியோர்களையும் தேவர்களையும் பூஜிப்பது இவையெல்லாம் பூமிதானம்செய்பவனிடத்திலிருக்கும். தலைவனுடையநன்மையில் ஊக்கத்துடன் யுத்தத்திலடிபட்டுத் தேகத்தைவிட்டவரும் பிரம்மலோகம்போன ஸித்தர்களும் பூமிதானம் செய்தவனுக்கு மேலாகார். தாயானவள் தன்குழந்தையைப் பால்கொடுத்து வளர்ப்பதுபோலப் பூமியானது தானம்செய்தவனைத் தனது எல்லாஸாரங்களாலும் எப்போதும் அனுக்கிரகிக்கிறது. பூமிதானம் செய்பவனுக்கு யமன் அடிமையாகிறான். மிகக்கொடிய யமதண்டனையும் நெருப்பின் மிகக்கொடியதாபமும் பயங்கரமான வருணபாசங்களும் பூமிதானம்செய்பவனை அணுகா. மனத்தில் அடக்கத்துடன் பூமியைத்தானம் செய்கிறவன் பிதுருலோகத்திலுள்ள பித்ருக்களையும் தேவலோகத்திலுள்ள தேவதைகளையும் திருப்திசெய்விக்கிறான். ஆகாரமில்லாமல் துயரப்பட்டு இளைத்து இறக்குந்தருணத்திலிருப்பவனுக்கு ஜீவனத்திற்கு ஆதாரமான பூமியைத்தானம் செய்யும் மனிதன் ஸத்திரயாகஞ்செய்தவனாகிறான். சிறந்த பாக்யமுள்ளவனே!

---

[1] பகைவருக்குக் கிடைப்பதில்லை.

பசு அன்புடன் பால்சுரந்துகொண்டு கன்றைத்தேடி ஓடுவதுபோலப் பூமிதானம்செய்தவனைப் பூமி தேடிக்காப்பாற்றுகிறது. கலப்பையினு லுழப்பட்டதும் விதைவிதைக்கப்பட்டதும் தான்யம் விளைந்ததுமா யுள்ள பூமியையும் ஜலாதாரமுள்ள வீட்டையும் கொடுப்பவன் வேண் டினவற்றைக் கொடுத்தவனுகிறுன். நல்லொழுக்கமுள்ளவனும் அக்நி ஹோத்திரஞ்செய்பவனும் பரிசுத்தமான தவமுள்ளவனுமான பிராம் மணனுக்குப் பூமிதானம்செய்தமனிதன் யமன்இல்லம் போவதில்லை. சந்திரனுக்கு நாள்தோறும் வளர்ச்சியுண்டாவதுபோலப் பூமிதானத் தினுலுண்டானபலன் ஒவ்வொரு பயிருக்கும் அதிகப்படுகிறது. இந்த விஷயத்தில் பூர்வவிருத்தாந்தந் தெரிந்தவர்கள் பூமிதேவியினுற் சொல் லப்பட்ட சுலோகங்களைச் சொல்லுகின்றனர். இவற்றைக் கேட்டுத் தான் பரசுராமர் காஸ்யபருக்குப் பூமிதானம்செய்தார். அவற்றின் பொருள், 'என்னையே வாங்குங்கள்; என்னையே கொடுங்கள்; என் னைக்கொடுத்தபின் என்னையே அடைவீர்கள். இந்தத்தானமானது இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும் மேன்மேலும் விருத்தியா கும். வேதத்திற்குச்சமமான இந்தச்சொல்லை எந்தப்பிராம்மணன் சிரா த்தத்தில் ஹோமஞ்செய்யும்போது நினைக்கிருனே அவன் பிரம்ம பதத்தையடைவான். பூமிதானமானது பேய்பிசாசுகளாலும் சாபத் தினுலுமுண்டானகேடுகளுக்குப் பரிகாரமான பெரும்பிராயச்சித்தம். இப்படிப்பட்ட பூதானத்தைச்செய்தவனும் வேதவாக்கியமாகிய இந் தச்சொல்லையறிகிறவனும் தம்குலத்தில் முன்பதின்மரையும் பின் பதின்மரையும் பரிசுத்தமாகச்செய்வர். பூமியானது எல்லாப்பிராணி களுக்கும் காரணமாகவும் அழிவில்லாததாகவும் நினைக்கப்படுகிறது' என்பது. அரசனுக்குப் பட்டாபிஷேகம் செய்தவுடன் இந்தவேதத் தைக் கேட்பிக்கவேண்டும். அவன் இதைக்கேட்டு ஸாதுக்களுக்குப் பூமிதானம் செய்யவேண்டும். ஸாதுக்களின் பூமியை எடுத்துக் கொள்ளலாகாது. இந்த உபதேசமெல்லாம் பிராம்மணர்களுக்கும் அர சர்களுக்குமே உரியது; ஸந்தேகமில்லை. தர்மங்களில் தேர்ச்சியுள்ள அரசன் செல்வத்திற்கு முதற்காரணம். எவர்களுக்கு அரசன் தர்மந் தெரியாதவனுகவும் நாஸ்திகனுகவுமிருக்கிருனே அவர்கள் ஸுகமா கத்தூங்குவதும் ஸுகமாகக்கண்விழிப்பதுமில்லை. அவ்வரசனுடைய கெட்டசெய்கைகளினுல் மனிதர்கள் எப்போதும் நடுக்கமுற்றவ ராவார். மேன்மேலும்லாபமும் உள்ளவற்றைக்காப்பதுமாகிய யோக க்ஷேமங்களிரண்டும் அவனுடைய தேசத்தில் மிகுதியாகஇரா. எவர் களுக்கு அரசன் தெரிந்தவனுகவும் தர்மத்தை நடத்துகிறவனுகவுமிரு

க்கிறுனே அவர்கள் மிக்க சுகமாகப்படுத்துச் சுகமாகஎழுந்திருப்பார். அவ்வரசனுடைய நற்செய்கைகளினுல் ராஜ்யத்திலுள்ள ஜனங்கள் ஸுகமடைந்து நல்லமன்முயினுலும் தம்தம் தொழில்களினுலும் யோக க்ஷேமங்களின் அபிவிருத்தியைப் பெறுவார். பூமிதானம் செய்பவன் எவனே அவனே மேற்குலத்தோன்; அவனே ஆண்பிள்ளை; அவனே பந்து; அவனே புண்ணியஞ்செய்தவன்; அவனே வள்ளல்; அவனே பராக்ரமமுள்ளவன். வேதங்கள்தெரிந்த பிராமமணனுக்குச் செழித்த பூமியைத் தானஞ்செய்பவர் பூமிக்குச் சூரியர்போல ஒளியினுல் பிர காசிப்பார். பூமியில் விதைக்கப்பட்ட பயிர்கள் முளைக்கிறதுபோலப் பூமிதானம்செய்வதனுல் மனிதனுடைய விருப்பங்கள் பயன்படுகின் றன. ஆதித்யன், வருணன், விஷ்ணு, பிரம்மா, சந்திரன், அக்நி, சூலத்தைக்கையிலேந்திய சிவபெருமான் இவர்களும் பூமிதானம் செய் தவனை அநுக்கிரஹிக்கின்றனர். மனிதர்கள் பூமியிற்பிறக்கின்றனர்; பூமியில் முடிவையும் பெறுகின்றனர். இந்[1]நான்குவித உலகமும் பூமியின் குணங்களைக்கொண்டே உண்டாகின்றன. பூமிக்கதிபதியே! உலகத்திற்குத் தாயும் தந்தையும் பூமியே. அரசனே! இதற்கு நிகரானபொருள் ஒன்றுமில்லை. யுதிஷ்டிர! இந்தவிஷயத்திலும் ப்ரு ஹஸ்பதிக்கும் இந்திரனுக்கும் நடந்த ஸம்பாஷணையாகிய ஒருபழைய இதிஹாஸத்தைக் கூறுகின்றனர். இந்திரன் தக்ஷிணைகள் மிகுதியாக வுடைய நூறுமஹாயாகங்களைச் செய்தபிறகு சாஸ்திரந்தெரிந்தவரில் சிறந்தவரான பிருகஸ்பதியைநோக்கிக் கேட்கலானுன்.

'பகவானே! எந்தத் தானத்தினுல் மனிதன் ஸ்வர்க்கத்தையடை ந்து ஸுகமாக விளங்குவான்? அழிவில்லாததும் அபகரிக்கக் கூடா ததுமான தானம் எது? சொல்லுகிறவரிற் சிறந்தவரே! அதைச் சொல்லும்' என்று கேட்டான். தேவருக்குப் புரோஹிதரும் மிக்க மகி மையுள்ளவருமான பிருகஸ்பதி தேவேந்திரனுல் இவ்வாறு கேட்கப் பட்டவுடன், அவனுக்கு மறுமொழி கூறலானுர். 'விருத்ரனைக் கொன்ற வனே! பொன்னைக்கொடுப்பதும் பசுவைக்கொடுப்பதும் பூமியைக் கொடுப்பதும் வித்தையைக் கொடுப்பதும் கன்னிகையைக் கொடுப் பதும் பாவத்திற்குச்சிறந்த பரிகாரங்கள். சிறந்த அறிவுள்ளவன் இவற் றைக்கொடுப்பதனுல் எல்லாப்பாவங்களாலும் விடப்படுகிறுன். தே வேந்திரனே! பிரபுவே! பூமிதானத்தைவிடச் சிறந்தது மற்றென்றில் லையென்று தெரிந்தவர்கள் சொல்லுகிறுர்கள். நானும் அப்படியே நினைக் கிறேன். பிராம்மணனுக்காகவும் பசுவுக்காகவும் தேசபீடைக்காகவும்

[1] ஆதிபர்வம் 57-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

அரசனுக்கும் குலமகளிர்களுக்கும் அவமானம்வாராமற்செய்வதற்காக வும உயிர்விட்டவர் பூமிதானம் செய்தவருக்குச் சமமாவர். தேவ சிரேஷ்டனே! யுத்தத்தில் உற்சாகமுள்ளவர்களாக யுத்தத்திலடிபட்டு ஸ்வர்க்கம்போன சூரர்களனைவரும் பூமிதானம செய்தவனுக்கு மே லாகமாட்டார். வேந்தனுடைய நன்மையில் ஊக்கட்வைத்து யுத்தத்தி லடிபட்டுத் தேகத்தைவிட்டவர்களும பிரம்மலோகத்திலிருக்கும் யோகி களும் பூமிதானம்செய்தவனுக்கு மேலாவதில்லை. பூமிதானமசெய்யும் மனிதன் பூமியில் மடிந்திருக்கும் தன்முன் கூடஸ்தர்கள் ஐவரும் அவ ருக்குமுன் அறுவருமாகப் பதினொருவரைக் காப்பாற்றுகிறவனாகிறான். இந்திரனே! ரத்தினங்கள் நிரம்பின பூமியை எவன்கொடுக்கிறானோ அவன் எல்லாப்பாவங்களாலும் விடுபட்டு ஸ்வர்க்கலோகத்தில் கொண் டாடப்படுவான். அரசனே! வேண்டியபடிம் சிறப்புகளெல்லாம் நிரம் பின செழித்த பூமியைக்கொடுப்பவன் அரசர்க்குமரசனாவான். அது தான் எல்லாவற்றிலும சிறந்ததானம். வாஸவனே! வேண்டினவை யெல்லாம் நிரம்பின பூமியைக் கொடுக்கிறவனை அதிலுள்ள எல்லாப் பிராணிகளும் தம் தம்மைக்கொடுப்பதாக நினைக்கின்றன. ஸஹஸ் ராக்ஷனே! நினைத்தவற்றையெல்லாம் கறப்பதும் விரும்பத்தக்ககுணங் களெல்லாமுள்ளதுமான பசுவைத் தானஞ்செய்யும் மனிதன் ஸ்வர்க் கத்தைச்சேருவான். தேவருக்கதிபதியே! தேனாறுகளும் நெய்யாறு களும் பாலாறுகளும் தயிராறுகளும் பூமிதானமசெய்பவனைத் தேவ லோகத்தில் திருப்திசெய்விக்கின்றன. அரசன் பூமிதானம் செய்வதி னால் எல்லாப்பாவங்களிலிருந்தும் விடுபடுவான். மற்றத்தானங்கள் பூமிதானமபோற் சிறப்புள்ளவையல்ல. கடல்சூழ்ந்த புவனியைத் தன் ஆயுதத்தினால் ஜயித்துக்கொடுப்பவனை ஜனங்கள் 'பூமியுள்ளவரையி லும் புகழுவர். புரந்தரனே! செல்வமும் சுவையும் நிரம்பின புண்ணிய மான பூமியைக்கொடுப்பவனுக்குப் பூமிதானத்தின் சிறப்பினாற் கிடை த்த புண்ணியலோகங்கள் அழிவதில்லை. சக்கரனே! இவ்வுலகில் எப் போதும் அழியாத ஐசுவரியத்தையும் சௌக்கியத்தையும் விரும்பும் அரசன் யோக்கியனுக்குச் சாஸ்திரப்படி பூமிதானத்தைச் செய்ய வேண்டும். பாவஞ்செய்த மனிதனும் பிராம்மணனுக்குப் பூமிதானம் செய்தபிறகு அந்தப்பாவத்தை, பாம்பு பழையசட்டை ப விடுவது போல விட்டுவிடுகிறான். சக்கரனே!. பூமியைக்கொடுக்கும்மனிதன், கடல்கள் நதிகள் மலைகள் காடுகள் இவற்றையெல்லாம் கொடுத்தவ னாகிறான். பூமியைக்கொடுப்பவன் தடாகங்களையும் கிணறுகளையும் நதிகளையும் ஏரிகளையும் அன்பையும் எல்லாச்சுவைகளையும் கொடுத்

தவனாகிறான். பூமியைக்கொடுப்பவன் சக்தியுள்ள ஓஷதிகளையும் பூக்களும் பழங்களுமுள்ளமரங்களையும் காடுகளையும் கற்களையும் மலைகளையும் கொடுத்தவனாகிறான். நிரம்பினதக்ஷிணைகளோடு அக்நிஷ்டோம முதலிய யாகங்களைச்செய்பவனும் பூமிதானத்தினாலடையும் பலனை அடைவதில்லை. பூமிதானம்செய்பவன் தன்குலத்தில் பதின்மரைக் காப்பாற்றுகிறான்; பூமியையபகரிப்பவன் பதின்மரைக் கொல்லுகிறான். தன்முன்னோரால்கொடுக்கப்பட்ட பூமியை அபகரிப்பவன் நரகத்திற்குப்போவான். வாக்குத்தத்தம்செய்துகொடாதவனும் கொடுத்துத்திரும்ப எடுத்துக்கொள்ளுகிறவனும் யமன்கட்டளையினால் வருணபாசங்களால்கட்டப்பட்டுத் தவிப்பர். எப்போதும் அக்நிஹோத்ரத்தையும் மஹாயாகங்களையும்செய்பவனும் அதிதிகளிடத்தில் அன்புள்ளவனும் கையில்பொருளில்லாதவனுமாகிய பிராம்மணசிரேஷ்டனைக்காப்பாற்றுகிறவர்கள் யமனையணுகார். புரந்தரனே! அரசன் பிராம்மணர்களிடத்தில் கடன்தீர்ந்தவனாக இருக்கவேண்டும். மற்ற வர்ணங்களிலும் எளியவர்களையும் பலங்குறைந்தவர்களையும் காப்பாற்ற வேண்டும். தேவருக்கதிபதியே! தேவர்களிற்சிறந்தவனே! கஷ்டஜீவியானபிராம்மணனுக்குப் பிறரால்கொடுக்கப்பட்டபூமியை ஒருகாலும் அபகரிக்கலாகாது. ஏழைகளான பிராம்மணர்களின்பூமியை அபகரித்ததால் அவர்கள் துயரப்படுவதால்விழும்கண்ணீர் குலத்தின்மூன்றுதலைமுறைகளை அழித்துவிடும். ஸஹஸ்ராக்ஷனே! ராஜ்யந்தவறின அரசனைத் திரும்பவும் நிலைநிறுத்துகிறவனுக்கு ஸ்வர்க்கத்தில் கொண்டாடப்படும்ஸ்தானம் உண்டாகிறது. கிரமமாகவிற்கப்பட்டு வாங்கினவனால் நன்றாகச்செவ்வைப்படுத்தி அனுபவிக்கப்பட்டபூமியை [1] அரசன் அவனுக்கு நிலைக்கச்செய்யவேண்டும். கரும்பு, யவம்,கோதுமை இவைவிருத்தியாயிருப்பதும் பசுக்களும் குதிரைகளும்நிரம்பினதுமான பூமியைக்கொடுப்பவன் எல்லாப்பாவங்களிலிருந்தும் விடுபட்டு ஸ்வர்க்கலோகத்தில் கொண்டாடப்படுவான். உள்ளேபுதையலுள்ளதும் உயர்ந்தபொருள்களெல்லாமுள்ளதுமான பூமியைக்கொடுப்பவன் அழிவில்லாத லோகங்களையடைவான். அவனுக்கு அது பூமிஸத்திரமென்னப்படுகிறது. பூமியைக்கொடுப்பவன் எல்லாப்பாவங்களையும் உதறி ராஜஸகுணமற்றவனாகி ஸாதுக்களால் அங்கீகரிக்கப்பட்டு உலகத்தில் சான்றோர்களால் கொண்டாடப்படுகிறான். சக்ரனே! ஜலத்தில்விழுந்த எண்ணெய்த்துளி எப்படிப் பரவுகிறதோ அப்படியே பூமிதானத்தின்பலன் பயிருக்குப்பயிர் அபிவிருத்தியாகிறது.

---

[1] 'ந்ருப:' என்று பாடம் கொள்ளப்பட்டது.

இந்திரனே! யுத்தத்தில் பிரகாசிக்கும்சூரர்களாகிய எந்த அரசர்கள் போர்த்தலையில் முன்னேக்கிச்சென்று வதம்செய்யப்படுகின்றனரோ அவர்கள் பிரம்மலோகமடைவார்கள். தேவேந்திரனே! அப்படியே பூமிதானம்செய்பவனையும் தேவலோகத்தில் தேவலோகத்துப்பூமாலையணிந்தபெண்கள் ஆடியும் பாடியும் உபசரிக்கின்றனர். இவ்வுலகத்தில் பிராம்மணனுக்குச் சாஸ்திரப்பிரகாரம் செம்மையாகப் பூமிதானம் செய்பவன் தேவலோகத்தில் தேவர்களாலும் கந்தர்வர்களாலும் பூஜிக்கப்பெற்று ஸுகமடைந்து மகிழ்ந்திருப்பான். தேவேந்திரனே! பூமிதானம்செய்பவனைப் பிரம்மலோகத்திலும் சிறந்தபுஷ்பமாலைகளையணிந்த நூறு அப்ஸரஸுகள் உபசரிப்பர். பூமிதானம்செய்யும் மனிதனிடத்தில் எப்போதும் புண்ணியங்கள் சேரும். ஜயசங்கம், ஸிம்மாஸனம், ஒற்றைக்குடை, சிறந்தகுதிரைகள், சிறந்ததேர்கள், புஷ்பங்கள், பொன்குவியல்கள் இவைபூமிதானத்தினுலுண்டாகின்றன. புரந்தரனே! தடைப்படாதகட்டளையும், 'ஜய' என்னும்சப்தங்களும், பொருள்களும், ஸ்வர்க்கமும், பொன்மலர்பூக்கும்கொடிகளும் பொன்மயமான தர்ப்பைகளும் புற்களும்நிரம்பின இடங்களும், பூமிதான புண்ணியத்தின்பயன்கள். பூமியைக்கொடுக்குமனிதன் [1] அம்ருதத்தை யுண்டாக்கும் பூமியை அடைவான். பூமிதானத்திற்கொப்பானதானமில்லை. தாய்க்கு ஒப்பானகுருவில்லை. ஸத்தியத்தைப்போன்றதர்மமில்லை. தானத்திற்கு நிகரானபுதையலில்லை' என்றார். பிருகஸ்பதியினிடம் இதைக்கேட்டவுடன் இந்திரன் தனங்களும் ரத்தினங்களும்நிரம்பின இந்தப்பூமியை அவருக்கு அளித்தான். இந்தப் பூமிதானத்தின்சிறப்பைச் சிராத்த காலத்தில் பிராம்மணர்களைக்கேட்பித்தால் அந்தச் சிராத்தத்தில் ராக்ஷஸர்களுக்கும் அஸுரர்களுக்கும் பங்கில்லை; பித்ருக்களுக்குக்கொடுத்த சிராத்தம் அழியாமலிருக்கும்; ஸந்தேகமில்லை. ஆதலால், வித்வானவன் சிராத்தங்களில் புசிக்கும் பிராம்மணர்களுக்கு இதைக் கேட்பித்தல்வேண்டும். குற்றமற்றவனே! பரதசிரேஷ்டனே! இப்படி எல்லாத்தானங்களிலும் சிறந்ததானத்தை உனக்கு நான் உரைத்தேன். இன்னும் என்னகேட்கவிரும்புகிறாய்?" என்றார்.

[1] சுகத்தைத்தரும்.

## தொண்ணூற்றெட்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி)

(நாரதர் அன்னதானத்தின்சிறப்பைப் பீஷ்மருக்கு உரைத்தது.)

யுதிஷ்டிரர், "பரதசிரேஷ்டரே! இவ்வுலகத்தில் தானம்செய்யக் கருதின அரசன் குணங்களிற்சிறந்த பிராம்மணர்களுக்குக் கொடுக்கத் தக்க தானங்கள் எவை? அந்தப் பிராம்மணர்கள் எதனால் உடனே திருப்தியடைவார்கள்? அவர்கள் திருப்தியடைந்தால் எதைக்கொடுப்பார்கள்? சிறந்தகைகளையுடையவரே! புண்ணியத்தினாலுண்டான பெரும்பயனைப்பற்றி எனக்குச் சொல்லக்கடவீர், வேந்தரே! இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும் பயன்படுவது எந்தத்தானம்? இதை உம்மிடத்தில் கேட்கவிரும்புகிறேன். எனக்கு விரிவாகச் சொல்லவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"திவ்யஞானமுள்ளநாரதரிடம் இதேவிஷயத்தைப்பற்றி முன்னே நான்கேட்டபோது அவர் எனக்குச்சொன்ன மறுமொழியை நான் உனக்குச் சொல்லுகிறேன்; கேள். நாரதர், 'தேவர்களும் ரிஷிகளும் அன்னதானத்தையே சிலாகிக்கின்றனர். உலகவாழ்க்கையும் யாகங்களுமாகிய எல்லாம் அன்னத்தைப்பொறுத்தவை. அன்னதானத்திற்கு ஒப்பானதானம் முன்னுமில்லை; பின்னுமில்லை. அதனாலேதான் மனிதர்கள் அன்னதானமசெய்வதை முக்கியமாகக்கருதுகிறார்கள். உலகத்தில பலத்தைகொடுப்பது அன்னம். அன்னத்திலேதான் உயிர் இருக்கிறது. பிரபுவே! இவ்வுலகமனைத்தும் அன்னத்தினால் தாங்கப்படுகிறது. இவ்வுலகத்தில் கிருகஸ்தர்களும பிரமசாரிகளும ஸந்யாஸிகளும வானப்பிரஸ்தர்களும அன்னத்தினால்தான் இருக்கின்றனர். அன்னத்தினால் உயிர்உண்டாகிறதென்பது பிரத்யக்ஷம்; அதில் ஸந்தேகமில்லை. தன்னுடைய அபிவிருத்தியைக்கருதுகிறவன பெருங்குடும்பத்தோடு கஷ்டப்படும் மகாத்மாவான பிராம்மணனுக்கும் பிரமசாரிக்கும் ஸந்யாஸிக்கும் அன்னம் கொடுக்கவேண்டும். அன்னத்தை வேண்டும்வித்வானான பிராமமணனுக்கு அன்னம்போடுகிறவன் தனது மறுமைக்கு உபயோகமான சிறந்த புதையலைப் புதைத்துவைக்கிறான். செல்வப்பெருக்கைவிரும்பும் கிருகஸ்தன், வழிநடையினால்களைத்துத் தன்வீட்டிற்குவந்த பிராயமுதிர்ந்தயோக்கியனைப் பூஜிக்கவேண்டும். அரசனே! மேல்நோக்கியிருக்கும் கோபத்தையும் துவேஷத்தையும் விட்டு யாவருக்கும் ஸாலபனாயிருந்து அன்னம்போடுகிறவன் தேவ

லோகத்திலும் இவ்வுலகத்திலுமுள்ள இன்பங்களைப் பெறுவான். வந்தவனை ஒருபோதும் அவமதிக்கவும் நிராகரிக்கவும்கூடாது. அன்ன தானமானது சண்டாளனுக்கும் நாய்க்கும் கொடுக்கப்பட்டாலும் கெடாது. வழி நடந்துவருந்தியிருக்கும் முன்காணாதமனிதனுக்கு கோவாமல் அன்னம்போடுகிறவன் பெரியதர்மப்பயனை அடைவான். அரசனே! எந்தமனிதன் பித்ருக்களையும் தேவர்களையும் ரிஷிகளையும் பிராம்மணர்களையும் விருந்துகளையும் அன்னத்தினால் திருப்திசெய்விக்கிறானோ அவனுடைய புண்ணியத்தின் பயன் பெரிது. மிக்கபாவமான கருமத்தைச்செய்தும் பசித்தவனுக்கும், அதிலும், முக்யமாகப்பிராம்மணனுக்கும் அன்னங்கொடுப்பவன் பாவத்தினால் அறிவுகெட்டிரான். பிராம்மணர்களுக்குச் செய்யும் அன்னதானம் அழியாது; சூத்திரர்களுக்குச்செய்தது பெரும்பயனைத்தரும். அன்னதானம் சூத்திரனுக்குச்செய்யப்பட்டாலும் பிராம்மணர்களுக்குச் செய்யப்பட்டாலும் விசேஷந்தான். பிராம்மணன் அன்னங்கேட்கும்போது அவனுடையகோத்ரத்தையும் ஆசாரத்தையும் ஓதலையும் ஊரையும் கேட்கலாகாது. விசாரியாமல் அன்னத்தைக் கொடுக்கவேவேண்டும். ராஜனே! அன்னம்போடுகிறவனுக்கு விருக்ஷங்கள் இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும் அன்னத்தையும் வேண்டினபலன்களெல்லாவற்றையும் கொடுக்குமென்பதில் ஸந்தேகமில்லை. பித்ருக்கள், 'நமதுபிள்ளையாவது போனவது அன்னதானம் செய்வானோ?' என்று உழவர்கள் நல்லமழையை எதிர்பார்ப்பது போல எதிர்பார்க்கின்றனர். பிராம்மணனென்பவன் பெரியபொருள். அவன், 'தேஹி' என்று தானேகேட்கும்போது விருப்பத்தோடாயினும் வெறுப்போடாயினுயகொடுப்பவன் புண்ணியத்தையடைவான். எல்லாப்பிராணிகளுக்கும் பிராம்மணன் முதலில் திருப்தியாகப்புசிக்கத்தக்க அதிதியாகிறான். யாசிக்கின்ற பிராமணர்கள் எப்போதும் எந்த வீட்டிற்குச்சென்று மரியாதைபெற்றுத் திரும்பிப்போகின்றனரோ அந்தவீடு மிகப்பெருகுகின்றது. பாரதனே! இவ்வுலகத்தில் மனிதன் அன்னம்போடுவதனால் இறந்தபின் சிறந்தபாக்கியம்பெற்ற குலத்திலிபிறப்பதையும் மேலானஸ்திதியையும் அடைவான். நன்றாகத் தேவதாராதனம்செய்து சிறந்த அன்னத்தைப்போடுகிறவன் ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்பட்டு வஸிப்பான். அன்னந்தான் மனிதர்களுக்கு உயிர். எல்லாம் அன்னத்தைப்பற்றியிருக்கின்றன. ராஜனே! அன்னங்கொடுப்பவன் பசுக்களும் புத்ரர்களும் தனங்களும் போகங்களும் பலமும் அழகுமுள்ளவனாகிறான். அன்னங்கொடுப்பவன் உயிர்

கொடுப்பவனென்றும் எல்லாங்கொடுப்பவனென்றும் உலகத்தில் சொல்லப்படுகிறான். விருந்தாகவந்தபிராம்மணனுக்குக் கிரமப்படி அன்னம் போடுவதனால் அன்னதானம் செய்பவனுக்கு ஸுகமுண்டாகிறது. அவன் தேவர்களாலும் பூஜிக்கப்படுகிறான். பிராம்மணன் பெரியதெய்வம். அவன் நல்லநிலம்போன்றவன். அவனிடத்தில்விதைக்கப்படும் எந்தப்புண்ணியவித்துக்கும் பலன்பெரிது. புஜிப்பவனுக்கும் கொடுப்பவனுக்கும் திருப்தியுண்டாவது பிரத்யக்ஷமாயிருக்கிறது. மற்ற எல்லாத்தானங்களின்பலன்களும் கண்ணுக்குத்தெரியாதவை. பாரதனே! ஸந்ததியுண்டாவதும் அன்னத்தினாலேதான். இன்பமும் அன்னத்தினாலேதான். அறம்பொருளிரண்டும் அன்னத்தினாலேயே. பிணிதீர்வதும் அன்னத்தினாலேயென்றறி. முன்கல்பத்தில் பிரம்மதேவர் அன்னத்தை அமிர்தமென்று சொன்னார். பூலோகமும் தேவலோகமும் ஆகாயமும் அன்னந்தான். எல்லாம் அன்னத்திலிருக்கின்றன. அன்னம் ஒழிந்தால் தேகத்திலுள்ள ஐந்துபூதங்களும் பிரிந்துபோகின்றன. மிக்கபலசாலியின்பலமும் அன்னமில்லாமையால் கெடுகிறது. ராஜனே! அப்படியே அன்னமில்லாமையால் உறவினர்கள் ஒருவரையொருவர் கொண்டாடுவதும் விவாகமும் யாகமும் இல்லாமற்போகின்றன. வேதமும் அப்போது நஷ்டமாகிவிடுகிறது. மூன்றுலோகங்களிலுமுள்ள ஜங்கமமும் ஸ்தாவரமுமாகிய அனைத்தும் அன்னத்தினாலிருக்கின்றன. ஆதலால், அறிஞர்கள் தர்மத்திற்காக அன்னதானம்செய்யவேண்டும். ராஜனே! அன்னதானம்செய்யும் மனிதனுக்குப் பலமும் உற்சாகமும் ஜயமும் மூன்றுஉலகங்களிலும்புகழும் எப்போதும் அபிவிருத்தியாகின்றன. பாரதனே! உயிருக்கெல்லாம் அதிகாரியானகாற்று மேலே மேகங்களிற்சேர்க்கிறது. அந்த மேகங்களிலுள்ள ஜலத்தை இந்திரன் வர்ஷிக்கிறான். சூரியன் தன்கிரணங்களினால் பூமியிலுள்ள ஜலத்தை இழுக்கிறான். அந்தஜலத்தை நீர் சூரியனிடத்திலிருந்து வாயுபகவான் மழையாகப்பொழிகிறான். பாரதனே! அந்த நீர் மேகத்தினிடமிருந்து எப்போது பூமியில்விழுகிறதோ அப்போது பூமிதேவி கொழுமையுள்ளவளாகிறாள். அதன்பிறகு பயிர்கள் வளர்கின்றன. அதனால் உலகம் ஜீவிக்கிறது. அதன்பிறகு, மாம்ஸம் கொழுப்பு எலும்பு பிந்து இவைகள் உண்டாகின்றன. ராஜனே! அந்தப்பிந்துவிலிருந்து பிராணிகளுண்டாகின்றன. அக்நியும் சந்திரனுந்தாம் அந்தப்பிந்துவை உண்டாக்குவதும் போஷிப்பதும். இப்படிச் சூரியனும் வாயுவும் பிந்துவும் அன்னத்தைச்சேர்ந்த ஒரு கூட்டமாக நினைக்கப்படுகின்றனர். இவர்கள்

னாலேயே பிராணிகள் உண்டாகின்றன. பரதசிரேஷ்டனே! தன்வீட்டிற்குவந்துயாசிப்பவனுக்கு அன்னதானம்செய்பவன் பிராணிகளுக்கு உயிரையும் சக்தியையும் கொடுப்பவனாகிறான்" என்றார்.

ராஜனே! அன்னதானத்தைப்பற்றி நாரதர் இவ்வாறு சொல்ல நான்கேட்டேன். ஆதலால், நீயும் கோபத்தையும் மனஸ்தாபத்தையும் விட்டு அன்னத்தை எப்போதும் கொடு. ராஜனே! பிரபுவே! நீயும் தக்கபிராம்மணர்களுக்குச் சாஸ்திரப்பிரகாரம் ஸரியான அன்னத்தைப் போட்டால் ஸ்வர்க்கத்தையடைவாய். ராஜனே! அன்னம் போடுகிறவர்களுக்குள்ள உலகங்களைச் சொல்லுகிறேன்; கேள். அம்மஹாத்மாக்களுக்கு ஸ்வர்க்கத்தில் பலவகைவடிவங்களாகக் கட்டப்பட்டவையும், அநேகந்தூண்களுள்ளவையும், சந்திரமண்டலம்போல வெண்மையானவையும் இளஞ்சூரியன்போன்றநிறமுள்ளவையும், சலங்கைகளின் மாலைகள்கட்டப்பட்டவையும், அநேகநூறுமாடிகளுள்ளவையும், மீன்முதலிய ஜலஜந்துக்களுள்ளதடாகங்களை நடுவிலுடையவையும், சூரியன்போன்ற வைடூரியக்கற்களினாலும் வெள்ளியினாலும் பொன்னினாலும் செய்யப்பட்டவையும், நிற்பனவையும், நடப்பனவையுமான வீடுகள் பிரகாசிக்கின்றன. வேண்டினபலன்களெல்லாவற்றையுங்கொடுக்கும் விருக்ஷங்களும், வாவிகளும், வீதிகளும், ஸபைகளும், கிணறுகளும், குளங்களும், அழகானசப்தமுள்ளவையும் குதிரைகள் பூட்டப்பட்டவையுமான ஆயிரக்கணக்கானதேர்களும், குன்றுகளாகக்குவிந்திருக்கும் பக்ஷணங்களும், போஜனங்களும், ஆடைகளும், ஆபரணங்களும் அநதக்கிருகங்களிலிருக்கின்றன. பால்ஆறுகள் ஓடுகின்றன. அன்னபர்வதங்கள் இருக்கின்றன. மாளிகைகள் வெண்மேகங்கள்போலிருக்கின்றன. படுக்கைகள் பொன்னினாற் பிரகாசிக்கின்றன. அவையெல்லாம் அன்னதானம் செய்பவருக்குக்கிடைக்கின்றன. ஆதலால், நீயும் அன்னதானம் செய்துகொண்டிரு. அன்னதானமாகிய புண்ணியத்தைச்செய்தமஹாத்மாக்களுக்கு இப்படிப்பட்ட உலகங்களிருக்கின்றன. ஆதலால், பூமியில் மானிடர்கள் முயற்சியோடு அன்னதானம் செய்யவேண்டும்" என்றார்.

## தொண்ணூற்றிரண்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(நக்ஷத்ரங்களில் தானஞ்செய்யுமுறையும்பலனும்.)

யுதிஷ்டிரர், "அன்னதானம் செய்யவேண்டுமென்பதைப்பற்றி நீர்சொன்னதைக் கேட்டேன். இப்போது நக்ஷத்திரங்கள் சேருங் காலங்களில் (செய்யும்) தானங்களின் விதியைப்பற்றி எனக்குச்சொல்லக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"இந்தவிஷயத்திலும் தேவகிக்கும் நாரதமகரிஷிக்கும்நடந்த ஸம்பாஷணமாகிய இந்தப்புராதனமான இதிஹாஸத்தைக் கூறுகின்றனர். தர்மமறிந்தவளாகியதேவகி திவ்யஞானமுள்ள நாரதர் துவாரகைக்குவந்தபோது, நீ கேட்டகேள்வியையே கேட்டாள். ராஜனே! அவள்கேட்டதற்குத் தேவரிஷியான நாரதர் எல்லாவற்றையும் சாஸ்திரப்பிரகாரம்சொன்னதைச் சொல்லுகிறேன்; கேள். நாரதர், 'சிறந்த பாக்கியமுள்ளவளே! [1] கிருத்திகாநக்ஷத்திரத்தில் நெய்யுடன்சேர்ந்த பாயஸான்னத்தினால் ஸாதுக்களான பிராம்மணர்களுக்கு ஸந்தர்ப்பணஞ்செய்பவன் எல்லாவற்றிலும் மேலான உலகங்களை அடைவான். ரோஹிணீ நக்ஷத்திரத்தில் மிகுதியானமான்மாம்ஸங்களோடும் நெய்யன்னத்தோடும் பாலன்னத்தையும் குடிக்கப்பாலையும் தன்கடன்தீர்த்துக்கொள்வதற்காகப் பிராம்மணனுக்குக் கொடுக்கவேண்டும். மிருகசீரிஷநக்ஷத்திரத்தில் கன்றுடன் கூடக் கறக்கிறபசுவைக்கொடுக்கிறவர்கள் மனித உலகத்திலிருந்து எல்லாவற்றிலும் சிறந்தஸ்வர்க்கலோகத்தை அடைவர். திருவாதிரை நக்ஷத்திரத்தில் உபவாஸமிருந்து எள்ளுடன்சேர்ந்த க்ருஸரமென்னும் அன்னத்தைக்கொடுக்கும்மனிதன் நரகங்களையும் கத்திமுனையுள்ளமலைகளையும் தாண்டுவான். சிறந்ததாகிய புநர்வஸுநக்ஷத்திரத்தில் பக்ஷயங்களையும் அன்னங்களையும் கொடுப்பவன் புகழ்பெற்றவனும் அழகுள்ளவனும் மிகுதியான அன்னமுள்ளவனுமாகி நல்லகுலத்திற்பிறப்பான். புஷ்யநக்ஷத்திரத்தில் நாணயமாகவாவது கட்டியாகவாவதிருக்கும் பொன்னைக் கொடுப்பவன் ஒளியில்லாத உலகங்களில் சந்திரன்போலப் பிரகாசிப்பான். ஆயில்ய நக்ஷத்ரத்தில் வெள்ளியையாவது விருஷபத்தையாவதுகொடுப்பவன் ஸர்ப்பபயத்தைவிட்டுத் தன்ஸந்ததிகளுக்குத் தலை

[1] பாரதகாலத்தில், கிருத்திகை முதல்நக்ஷத்திரமாக இருந்ததென்பது விளங்குகின்றது.

வனுயிருப்பான். மகநக்ஷத்திரத்தில் எள்ளுநிம்பினமடக்குகளைக் கொடுக்கும்மனிதன் இவ்வுலகத்தில் புத்ரர்களையும் பசுக்களையும் நிரம்பப்பெற்று மறுமையிலும் ஸுகப்படுவான். பூரநக்ஷத்திரம்சேர்ந்தகாலத்தில் உபவாஸமிருந்து கற்கண்டுசேர்ந்த பக்ஷணங்களைப் பிராம்மணர்களுக்குக்கொடுப்பவன் அழகையடைவான். உத்தரநக்ஷத்திரத்தில் நெய்பாலுடன்கூடின குறுவையன்னத்தைச் சாஸ்திரப்படி தானம்செய்பவன் ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்படுவான். உத்தரநக்ஷத்திரத்தில் மனிதர்கள் என்ன என்ன தானங்கள்செய்தாலும் அவையெல்லாம் பெரும்பயனுள்ளவையும் அழியாதவையுமாகுமென்பது திண்ணம். ஹஸ்தநக்ஷத்திரத்தில் உபவாஸமிருந்து நாலுயானைகள் பூட்டினரதத்தைத் தானம்செய்பவன் புண்ணியபலன்கள் நிரம்பின உயர்ந்தலோகங்களை அடைவான். சித்திரைநக்ஷத்திரத்தில் விருஷபத்தையும் நல்லவாஸனைத்திரவியங்களையும் [1]அன்புடன் தானம்செய்கிறவர் அப்ஸரஸுகளின் லோகத்தில் ஸஞ்சரித்துக்கொண்டு நந்தனவனத்தில் விளையாடுவார். ஸ்வாதீநக்ஷத்திரத்தில் தனக்கு மிக்கபிரியமானதனத்தைக் கொடுப்பவன் சிறந்த உலகங்களையும் இவ்வுலகத்தில் பெரும்புகழையும் அடைவான். விசாகநக்ஷத்திரத்தில் விருஷபத்தையும் பால்கொடுக்கும்பசுவையும் தான்யமும்வஸ்திரமும் நிரம்பின நுகத்தடியோடுகூடின வண்டியையும் கொடுப்பவன் பித்ருக்களையும் தேவர்களையும் ஸந்தோஷிக்கச்செய்வதுடன் மறுமையில் அளவற்ற ஸுகத்தை அநுபவிப்பான்; நரகங்களையடையான்; ஸ்வர்க்கலோகத்தையடைவான். சொன்னபடி பிராம்மணர்களுக்குத் தானம்செய்பவன் தான்விரும்பும்ஜீவனத்தை அடைவான்; நரகமுதலான கஷ்டங்களை அடையானென்பதும் திண்ணம். அநுஷநக்ஷத்திரத்தில் உபவாஸமிருந்து உத்தரியத்தையும் சிறந்த அன்னத்தையும் கொடுக்கும் மனிதன் அநேகயுகங்கள்வரையிலும் ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்பெறுவான். கேட்டைநக்ஷத்திரத்தில் [2]காலசாகத்தையும் [3]மூலகமென்னும்கிழங்கையும் பிராம்மணர்களுக்குக்கொடுப்பதனால் மனிதன் வேண்டினசெல்வத்தையும் விரும்பின புண்ணிய லோகத்தையும் அடைவான். மூலநக்ஷத்திரத்தில் நியமத்துடன் பிராம்மணர்களுக்கு [4]மூலபலமென்னும் கனியைக்கொடுப்பவன் பித்ருக்களைச்சந்தோஷப்படுத்தி விரும்பினலோகத்தையும் அடைவான். பூராடநக்ஷத்திரத்

---

[1] 'பாரத' என்பது, 'பாவத:' என்திருத்தல்வேண்டும். தேவகிக்குச் சொல்லுமிடத்தில், 'பாரத' என்பது பொருந்தாது.

[2] கருவேப்பிலை. [3] முள்ளங்கி. [4] பலாப்பழம்.

தில் உபவாஸமிருந்து குலமும் ஒழுக்கமுமுள்ளவனும் வேதத்திற் கரைகண்டவனுமாகிய பிராம்மணனுக்குத் தயிர்ப் பாத்திரங்களைக் கொடுப்பவன் மறுஜன்மத்தில் கோக்களும் தனங்களும் மிகுதியாக நிரம்பினகுலத்தில் பிறப்பான். உத்தராடநக்ஷத்திரத்தில் நெய்யும் தேனும் கற்கண்டும் மிகுதியாகச்சேர்ந்து ஜலத்திற்பாகம்பண்ணின மாவைக்கொடுப்பவன் விரும்பினவற்றையெல்லாம் அடைவான். உத்தராடத்தில் அபிஜித்தென்னும்நக்ஷத்திரமென்னவேளையில் அநுஷ்டானத்தோடிருந்து ஞானவான்களுக்குத் தேன்நெய்யுடன் சேர்ந்தபாலைக் கொடுப்பவன் ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்படுவான். சிரவணநக்ஷத்திரத்தில் கம்பளத்தையும் போர்வைவஸ்திரத்தையும் கொடுப்பவன் வெள்ளைவிமானமேறித் தடையில்லாமல் ஸ்வர்க்கலோகத்திற்குச் செல்வான். அவிட்டநக்ஷத்திரத்தில் நியமத்துடன் மாடுகள்கட்டின வண்டியைக்கொடுப்பவன் உடனே சிறந்தவஸ்திரங்களையும் தனத்தையும் மறுஜன்மத்தில் ராஜ்யத்தையும் அடைவான். சதயநக்ஷத்திரத்தில் அகில்சந்தனமுதலிய வாஸனைத்திரவியங்களைக்கொடுப்பவன் பரலோகத்தில் அப்ஸரஸுகளின் கூட்டங்களையும் என்றுமழியாத வாஸனைகளையும் அடைவான். பூரட்டாதிநக்ஷத்திரம் சேர்ந்தகாலத்தில் மொச்சைக்கொட்டையைத்தானம்செய்பவன் எல்லாப்பக்ஷணங்களையும் பழங்களையுமடைந்து மறுமையிலும் ஸுகமுள்ளவனாவான். உத்தரட்டாதிநக்ஷத்திரம்சேர்ந்ததினத்தில் செம்மறியாட்டுமாமிசத்தைக்கொடுப்பவன் பித்ருக்களுக்குத்திருப்திசெய்வித்து மறுமையிலும் அளவற்றஸுகம்பெறுவான். ரேவதிநக்ஷத்திரத்தில் கறக்கிறதற்கு வெண்கலப்பாத்திரத்துடன் பசுமாட்டை எவன்தானம்செய்கிறானோ அவனுக்கு அந்தப்பசுமாடு மறுமையில் வேண்டினவற்றையெல்லாம் எடுத்துக்கொண்டு வருகிறது. அசுவினிநக்ஷத்திரத்தில் குதிரைகள்கட்டினரதத்தைக் கொடுக்கும் புருஷசிரேஷ்டன் பராக்கிரமசாலியாகி யானைகளும் குதிரைகளும் தேர்களும் நிரம்பப்பெற்ற குலத்தில் பிறக்கிறான். பரணியில் பிராம்மணர்களுக்கு எள்பசுவைத் தானஞ்செய்யும்மனிதன் மறுஜன்மத்தில் மிகஅதிகமானபசுக்களையும் புகழையும் அடைகிறான்' என்பது. இவ்வாறு நக்ஷத்திரங்கள் சேர்ந்தகாலத்தில் தானத்தின்முறை ஒருவாறு நாரதரால் தேவகிக்கு உரைக்கப்பட்டது. அந்தத்தேவகி இதைத் தன்மருமக்களுக்குச் சொன்னாள்.

## நூறுவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(ஜலம், பொன், நெய்முதலியவற்றின் தானத்தைப்பற்றியது.)

'பொன்னைக்கொடுப்பவர்கள் வேண்டினவற்றையெல்லாம்கொடுப்பவர்கள்' என்று பிரம்மாவின்புத்ரரான அத்ரிபகவான் சொன்னார். 'பொன்னானது பாவத்தைப் போக்குகிறது; சுத்தமானது; ஆயுளைக் கொடுப்பது; பித்ருக்களுக்கு அழியாததிருப்தியைக்கொடுப்பது' என்று ஹரிச்சந்திரமஹாராஜனால் சொல்லப்பட்டது. 'தண்ணீர் கொடுப்பது தானங்களிற்சிறந்ததானம்' என்று மனு சொன்னார். ஆதலால், கிணறுகளையும் வாவிகளையும் குளங்களையும் வெட்டுவிக்க வேண்டும். இவ்வுலகத்தில் குடிக்கத்தக்கஜலமுள்ளதும் எப்போதும்வற்றாததுமாகியகிணறு மனிதனுடையசெய்கையினாலுண்டான பாவங்களெல்லாவற்றையும் அழித்துவிடும். எவனால்வெட்டப்பட்ட குளத்தில் பசுக்களும் பிராம்மணர்களும் ஸத்புருஷர்களும் எப்போதும் தண்ணீர்குடிக்கின்றனரோ அவன் தன்குலத்தையெல்லாம் கரையேற்றுகிறான். எவனுடையஜலம் கோடைக்காலத்திலும் வற்றாமலிருக்கிறதோ அவன் கொடியதுன்பமொன்றையும் ஒருகாலத்தும் அடைவதில்லை. நெய்யினால் பிருஹஸ்பதிபகவானுக்கும் பூஷா பகன் என்னும் சூரியமூர்த்திகளுக்கும் அசுவினிதேவர்களுக்கும் அக்நிக்கும் ஸந்தோஷமுண்டாகிறது. நெய்யானது சிறந்தஔஷதம்; யாகங்களுக்கு மிகமுக்யமானது; சுவைகளிற்சிறந்தது. கனிகளினும் இது சிறந்தது. ஆதலால், பலனையும் புகழையும் ஆரோக்யத்தையும் விரும்பும்மனிதன் பரிசுத்தனாகவும் உண்மையாகவும் பிராம்மணர்களுக்கு எப்போதும் நெய்யைத் தானம்செய்யவேண்டும். எவன் ஐப்பசிமாதத்தில் பிராம்மணர்களுக்கு நெய்கொடுக்கிறானோ அவனுக்கு அசுவினிதேவர்கள் அன்புகூர்ந்து அழகைக்கொடுக்கின்றனர். நெய்யுடன்சேர்ந்தபாயஸாந்நத்தைப் பிராம்மணர்களுக்கு எவன்கொடுக்கிறானோ அவனுடையவீட்டை ராக்ஷஸர்கள் ஒருகாலும் பிடிக்கமாட்டார்கள். கரகங்களென்னும் ஜலபாத்ரங்களைக்கொடுப்பவன் தாகத்தினாலிறவான்; விரும்பினவைநிரம்பினவனுவான; விசனப்படான். பிராம்மணர்கள் முன்னிலையில் எப்போதும் மிகுந்தசிரத்தையுடன் வணக்கமாயிருக்கும் புருஷன் தானபலனில் ஆறிலொருபாகத்தை அடைவான். அரசர்க்கரசே! எந்தமனிதன் ஒழுக்கமுள்ளபிராம்ம

ணர்களுக்குச் சமைப்பதற்காகவும் குளிர்காய்வதற்காகவும் விறகுகளை எப்போதும் கொடுக்கிறானே அவனது எண்ணங்களும் எல்லாக்காரியங்களும் கூடிவரும். அவன் பகைவர்களைத்தாழ்த்தித் தான் மேம்பாடடைவான்; தேகத்தில் நல்ல ஒளியுள்ளவனைவான். அக்நிபகவானும் அவனிடத்தில் எப்போதும் அன்புள்ளவனைவான் பசுக்கள் அவனை விட்டுப்போகா. அவன் போரிலும் வெற்றிபெறுவான். குடையைக் கொடுப்பவன் புத்ரர்களையும் செல்வத்தையும் அடைவான். கண்ணோய் அவனுக்குவராது. அவன் யாகபலனையும் அடைவான். வெய்யிற்காலத்திலும் மழைக்காலத்திலும் குடைகொடுப்பவனுக்கு மனத்தில் ஒரு வருத்தமும் ஒருகாலத்திலும் உண்டாகாது. அவன் கடினமான ஆபத்திலிருந்து உடனே விடுபடுவான் ராஜனே! 'வண்டிகொடுப்பது எல்லாத் தானங்களிலும் சிறந்தது' என்று மஹானுபாவரும் முக்காலங்களையும் அறிந்தவருமான சாண்டில்யரிஷி சொன்னார்" என்றார்.

## நூற்றுமூவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்சி.)

(பாதரக்ஷை, எள், பூமி, பசு, அன்னம் இவற்றின் தானபலன் முதலியன.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! வெப்பத்தினால் கொதிப்புற்ற பிராமணனுக்குப் பாதரக்ஷைகளைக் கொடுப்பவனுக்கு என்னபலன் உண்டாகிறது? அதனை எனக்குச் சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர், 'யுதிஷ்டிர! பிராம்மணர்களுக்குப் பக்தியுடன் பாதரக்ஷைகளைக் கொடுப்பவன் பகைவர்களை எல்லாம் நசுக்கி எல்லாக்கஷ்டங்களையும் தாண்டிவிடுவான். அவன் சத்ருக்களுக்கு மேலேயிருப்பான். ராஜனே! குந்திபுத்ரனே! கோவேறுகழுதைகள் கட்டினதும் வெள்ளியினாலும் பொன்னினாலும் அலங்கரிக்கப்பட்டதுமாகிய வெள்ளாரதம் அவனுக்கு வருகிறது. பாதரக்ஷைகொடுப்பது குதிரைக்குட்டிகள் கட்டின வண்டியைக் கொடுத்ததுபோலாகிறது" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "கௌரவரே! திலதானம், பூமிதானம், கோதானம், அன்னதானம் இவற்றிற்குப் பலனைச் சொன்னீர். அதை மறுபடியும்சொல்லக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"குந்தியின்புத்ரனே! கௌரவசிரேஷ்டனே! திலதானத்தின் பலனை நான் சொல்லுகிறேன்; கேள். கேட்டபிறகு, சாஸ்திரப்

படி. தானம்செய். எள்ளு, பித்ருக்களுக்கு முதல் ஆகாரமாகப் பிரம்மதேவரால் படைக்கப்பட்டது. ஆதலால், எள்ளைத்தானம்செய்வதனால் பித்ருதேவர்களின்வர்க்கம் ஸந்தோஷமடைகிறது. மாசிமாதத்தில் பிராம்மணர்களுக்கு எள்ளைத்தானம்செய்பவன் ஜந்துக்களெல்லாம் நிரம்பியுள்ள நரகத்தைக் காணான். எள்ளைக்கொண்டு பித்ருயாகம் செய்பவன் ஸத்ரயாகங்களெல்லாஞ் செய்தவனாகிறான். சிரத்தையில்லாமல் எள்ளைக்கொண்டு சிராத்தஞ்செய்வது ஒருகாலும்நகாது. கச்யபமகரிஷியின் அங்கத்திலிருந்து எள்ளுண்டானது. பிரபுவே! அதனால், தானவிஷயத்தில், எள்ளு தேவத்தன்மையை அடைந்திருக்கிறது. எள்ளானது தேகபுஷ்டியையும் அழகையுங்கொடுப்பது; பாவத்தைப் போக்குவது. ஆதலால், எள்ளுந்தானம் எல்லாத்தானங்களிலும் சிறந்தது. சிறந்தஞானியான ஆபஸ்தம்பரும் சங்கரும் லிகிதரும் கௌதமமகரிஷியும் திலதானத்தினால் மேலுலகமடைந்தனர். பிராம்மணர்களெல்லாரும் இந்திரியங்களை ஜயித்தவர்களாகி எள்ளை ஹோமஞ்செய்துகொண்டிருக்கின்றனர். எள்ளு பசுவின்நெய்க்குச் சமமானது; ஸந்ததிவிருத்திக்கும் காரணமானது. ஆதலால், எல்லாத்தானங்களிலும் திலதானம்சிறந்தது. இவ்வுலகத்தில் எல்லாத்தானங்களுள்ளும் திலதானம் அழிவில்லாததென்று சொல்லப்படுகிறது. முற்காலத்தில் நெய் இல்லாமற்போனபோது வீரனான குசிகனென்னும் ராஜரிஷி மூன்றக்கினிகளிலும் எள்ளைஹோமம்செய்து உத்தமகதியை அடைந்தானென்று சொல்லப்பட்டிருக்கிறது. குருசிரேஷ்டனே! அதனால், திலதானமானது மிகச்சிறந்ததாகச் சொல்லப்படுகிறது. எந்தமுறைப்படி திலதானஞ்செய்வது சிலாக்கியமென்பதைப்பற்றித் தேவர்கள் யாகஞ்செய்யத்தொடங்கின விஷயத்தை இனிச்சொல்வேன்; கேள். பூமிக்கதிபதியே! மகாராஜனே! தேவர்கள் பூமியில் ஒருபாகத்தில் யாகஞ்செய்யக்கருதி ஸ்வயம்புவான பிரம்மதேவருடைய ஸபையில் அவரைச்சந்தித்து, 'நாங்கள் யாகம் செய்யவேண்டும்' என்று புண்ணியக்ஷேத்திரத்தைக் கேட்டனர். 'பகவானே! பூமிக்கும் ஸ்வர்க்கத்திற்கும் எல்லாவற்றிற்கும் நீரே பிரபு. மஹானுபாவரே! உமது அனுமதியின்மேல் நாங்கள் யாகம்செய்யக்கடவோம். உம்மால் அனுமதிகொடுக்கப்படாதபூமியில் யாகம் பயன்பெறாது. தாவரமும் ஜங்கமுமாகிய உலகமனைத்துக்கும் நீரே பிரபு. ஆதலால், நீர் அனுமதிகொடுக்கவேண்டும்' என்றனர். பிரம்மதேவர், 'தேவசிரேஷ்டர்களே! கச்யபர்புத்திரர்களே! பூமியில் நீங்கள்யாகம்செய்வதற்குரியஇடத்தை உங்

களுக்குக் கொடுப்பேன்' என்றுசொன்னார். தேவர்கள், 'பகவானே! எங்கள்இஷ்டம் நிறைவேறிற்று. இந்தத்தேசத்தை எப்போதும் ரிஷிகள் அடுத்திருக்கின்றனர். இங்கே நிரம்பினதக்ஷிணைகளோடு யாகஞ்செய்வோம்' என்றுசொன்னார்கள். அப்போது அகஸ்தியர், கண்வர், ப்ருகு, அத்ரி, வ்ருஷாகபி, அஸிதர், தேவலர்ஆகிய இந்த ரிஷிகள் தேவர்களின் யாகத்திற்கு வந்தனர். மஹாத்மாக்களான தேவர்கள் பிறகு தவறுதலில்லாமல் யாகஞ்செய்தனர். அப்படியே தேவசிரேஷ்டர்கள் சரியானகாலத்தில் யாகத்தை முடித்தனர். அந்தத்தேவர்கள் மலைகளிற்சிறந்த இமயமலையில் யாகஞ்செய்து அம்மலையில் ஆறிலொருபாகத்தை அந்தயாகத்தில் பூமிதானமாகச்செய்தனர். பிறரால் அனுபவிக்கப்படாத பூமியில் சாணளவாவது கொடுப்பவன் ஆபத்தில் அகப்படமாட்டான்; நரகங்களையடையான். குளிர் காற்று வெய்யில் இவைகளைத்தாங்குவதும் நன்றாகச்செவ்வைப்படுத்தப்பட்டதுமாகிய யாகபூமியைத்தானஞ்செய்பவன் புண்ணியமுடிந்து ஸ்வர்க்கலோகத்திலிருந்து அசைக்கப்படுவதில்லை. அரசனே! அந்தஅறிவுள்ளவன் இந்திரனுடன் மகிழ்ந்து வஸிப்பான். கிருகதானம் செய்கிறவனும் ஸ்வர்க்கத்தில் பூஜிக்கப்படுவான். வேதமோதுவிப்பவர்களின் குலத்திற்பிறந்தவனும் வேதமோதினவனும் புலன்களையடக்கினவனுமாயிருப்பவன் ஸந்தோஷமாகவஸிக்கும்படி வீட்டைக் கொடுத்தவன் சிறந்தலோகத்தையடைவான். பரதசிரேஷ்டனே! அப்படியே பசுக்களுக்காகக் குளிரையும் மழையையும் தாங்கத்தக்க உறுதியான கொட்டில் செய்யப்படுவது ஒருகுலத்தில் ஏழுதலைமுறை வரையில் கரையேற்றிவிடும். பயிர்செய்யத்தக்க பூமியைத்தானம் செய்பவன் உலகத்தில் மேலானஐசுவரியத்தை அடைவான். ரத்னங்களுள்ள பூமியைக்கொடுப்பவன் தன்குலத்தின் ஸந்ததியைப் பெருகச்செய்வான். களர்நிலத்தையும் எரிந்துபோனபூமியையும் சுடலையினுல்சூழப்பட்ட பூமியையும் பாவிகளிருக்கும்பூமியையும் எவ்வகையிலும் தானஞ்செய்யலாகாது. அயலானுடைய பூமியில் பித்ருக்களுக்குச் சிராத்தஞ்செய்தாலும் அந்தப்பூமியைச் சிராத்தத்தில் தானஞ்செய்தாலும் அந்தச்சிராத்தகருமம் கெடும். ஆதலால், தெரிந்தவன் கொஞ்சம்பூமியையாவது விலைக்குவாங்கி அதைத் தானஞ்செய்யவேண்டும். பித்ருக்களுக்கும் (தான்வாங்கின) அதில் பிண்டதானஞ்செய்வதுதான் அக்ஷயமாகும். காடுகள் மலைகள் நதிகள் புண்ணியதீர்த்தங்கள் இவைகளெல்லாம் யாருக்கும் சொந்தமல்லாதவையென்று சொல்லுகின்றனர். அவற்றில் எவனுக்கும் உரி

மையில்லை. அரசனே! இவ்வாறு பூமிதானத்தின் பலனைப்பற்றிச் சொன்னேன். குற்றமற்றவனே! இதற்குமேல் கோதானத்தைப் பற்றி உனக்குச் சொல்வேன். பசுக்கள் எல்லாரிஷிகளையும் பார்க்கிலும் மேற்பட்டவையாதலின், பகவானான சிவபெருமான் அவற்றுடன்கூடத் தவஞ்செய்தார். பாரதனே! தவஸித்திபெற்ற பிரம்மரிஷிகள் வேண்டும் சிறந்தகதியாகிய பிரம்மலோகத்தில் சந்திரனுடன்கூட இந்தப்பசுக்கள் வசிக்கின்றன. பாரதனே! அவை பாலினாலும் நெய்யினாலும் தயிரினாலும் கோமயத்தினாலும் தோலினாலும் எலும்புகளினாலும் கொம்புகளினாலும் மயிர்களினாலும் உபகாரஞ்செய்கின்றன. அவற்றிற்குக் குளிரும் வெய்யிலுமில்லை. அவை எப்போதும் வேலைசெய்கின்றன. அவற்றிற்கு மழையினால் கஷ்டமுண்டாவதில்லை. ஆதலால், பிராம்மணர்களுடன் கூடவே உயர்ந்தபதத்தை அடைகின்றன. ஆதலால், ஞானிகள் பசுக்களையும் பிராம்மணர்களையும் ஒன்றாகப் பேசுகின்றனர். ராஜனே! ரந்திதேவனென்னும் அரசனுடைய யாகத்தில் ஆக்கள்தாம் யாகபசுக்களாகக் கொல்லப்பட்டன. அந்தப்பசுத் தோல்களினின்றும் சர்மண்வதியென்னும் நதி பிரவகித்தது. அவை யாகபசுத்தன்மையினின்று விடுவிக்கப்பட்டுத் தானத்திற்குரியவையாக விதிக்கப்பட்டன. ராஜனே! அப்படிப்பட்ட கோக்களைப் பிராம்மணசிரேஷ்டர்களுக்குத் தானஞ்செய்பவன் கஷ்டமான நிலைமையிலிருந்தாலும் கடினமான ஆபத்தைக் கடந்துவிடுவான். ராஜனே! ஆயிரம்பசுக்களைத் தானஞ்செய்பவன் இறந்தபின் நரகம்புகான்; எல்லாவிடங்களிலும் ஜயத்தையும் பெறுவான். ஆக்களின்பால் அமுதமென்று தேவேந்திரன் சொன்னான். ஆதலால், பசுவைத்தானஞ்செய்தவன் அமுதங்கொடுத்தவனாகிறான். அக்கினிகளில் ஹோமஞ்செய்வதற்கு ஆவின்நெய்தான் குற்றமற்றதென்று வேதமறிந்தவர் நினைக்கின்றனர். ஆதலால், ஆவைக்கொடுத்தவன் ஹோமஸாதனத்தைக் கொடுத்தவனாகிறான். விருஷபமானது உருக்கொண்டுவந்தஸ்வர்க்கம். ஆதலால், பசுக்களுக்குத்தலைவனாகிய விருஷபத்தைக் குணமுள்ள பிராம்மணனுக்குக்கொடுப்பவன் ஸ்வர்க்கத்தில் பூஜிக்கப்படுகிறான். பாரதசிரேஷ்டனே! பசுக்கள் பிராணிகளின் உயிரென்று சொல்லப்படுகின்றன. ஆதலால், பசுவைக்கொடுப்பவன் உயிரைக்கொடுப்பவனாகிறான். பசுக்கள் பிராணிகளைக்காப்பவையென்று வேதமறிந்தவர் நினைக்கின்றனர். ஆதலால், பசுவைக்கொடுப்பவன் ரக்ஷணத்தைக் கொடுப்பவனாகிறான். பாரதசிரேஷ்டனே! கொல்வதற்குப் பசுவைக் கொடுக்கலாகாது. அப்படியே உழவனுக்கும் நாஸ்திகனுக்கும் பசு

வினால்ஜீவிப்பவனுக்கும் யாகத்திற்குமுக்கியமான ஆவின்பால்நெய் முதலியவற்றைவிற்பவனுக்கும் கோதானம் செய்யலாகாது. அது யாகத்திற்கு முக்கியமானது. மேற்சொன்னபாவச்செய்கையுள்ளவர்களுக்குக் கோவைக்கொடுப்பவன் முடிவில்லாத நரகத்திற்காளாவானென்று மகரிஷிகள் கூறுகின்றனர். இளைத்ததும் கன்றுபோனதும் மலடும் நோயுள்ளதும் அங்கஹீனமுள்ளதும் சக்தியற்றதுமான கோவைப் பிராம்மணனுக்குத் தானஞ்செய்யலாகாது. பதினாயிரங்கோக்களைச் சரியாகத் தானஞ்செய்யுமனிதன் இந்திரனுடன் மகிழ்ந்திருப்பான் ; நூற்றுக்கணக்கும் ஆயிரக்கணக்குமான அழிவில்லாத உலகங்களை அடைவான். பாரதனே ! கோதானத்தையும் திலதானத்தையும் பூதானத்தையும்பற்றி இவ்வாறு உனக்கு உரைத்தேன். அன்னதானத்தைப்பற்றியும் கேள் குந்திபுத்ரனே ! அன்னதானம் முதன்மையென்று நிரூபிக்கின்றனர். அன்னதானத்தினால்தான் ரந்திதேவனென்னும் அரசன் ஸ்வர்க்கம்போனான். பூமியைக் காப்பவனே ! மனிதர்க்கதிபதியே ! பசியினால் வருந்தினவனுக்கு அன்னம்போடுகிறவன் எவனோ அவன் மேலானபிரம்மலோகத்திற்குச் செல்வான். பாரதனே ! விபுவே! மனிதர்கள் அன்னதானம் செய்வதனால் மேன்மையை அடைவதுபோல, பொன் வஸ்திரங்கள் முதலிய மற்றவற்றைத் தானஞ்செய்வதனாலும் அடைவதில்லை. அன்னந்தான் முதன்மையானபொருள். அன்னமே சிறந்தலக்ஷ்மியென்று நினைக்கப்படுகிறது. உயிரும் ஒளியும் பராக்கிரமும் தேகவன்மையும் அன்னத்தினாலுண்டாகின்றன. எந்தமனிதன் எப்போதும் மனஊக்கத்துடன் கேட்டவுடன் அன்னம்போடுகிறானோ அவன் நரகங்களையடைவதில்லையென்று பராசரர் சொல்லியிருக்கிறார். தேவர்களுக்கும் சாஸ்திரப்பிரகாரம் பூஜைசெய்தபிறகு அன்னத்தை நிவேதனஞ்செய்யவேண்டும். ராஜனே! எந்தஆகாரத்தை மனிதர்கள் புசிக்கின்றனரோ அதுதான் அவர்களின்தேவதைகளின் ஆகாரம். வளர்பிறையில் நிலவில்அன்னம்போடுகிறவன்எவனோ அவன் மறுமையில் நரகங்களைத்தாண்டி முடிவில்லாதஸுகம் பெறுகிறான். பரதசிரேஷ்டனே ! எவன் தான் புசியாமல் விருந்துக்குச் சிரத்தையுடன் அன்னம் போடுவானோ அவன் பிரம்மஞானிகள் அடையும்உலகங்களை அடைவான். அன்னதானஞ்செய்யும்புருஷன் மிகக்கடினமான ஆபத்தையடைந்தாலும் அதைத் தாண்டிவிடுவான் ; பாவத்தையும் தாண்டுவான் ; முந்தியதீவினையையும் குறைத்துக்கொள்வான். இவ்வாறு அன்னதானம் திலதானம் பூதானம் கோதானம் இவற்றின்பயன்கள் உரைக்கப்பட்டன" என்றார்.

## நூற்றிரண்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(தண்ணீர்கொடுப்பதன்பலன் முதலியன.)

யுதிஷ்டிரர், "ஐயா! பாரதரே! தானங்களின்பலன்களை நீர் சொல்லக் கேட்டேன். இப்போது, அன்னதானம் விசேஷமாகச் சிலாகிக்கப்பட்டது. பிதாமஹரே! தண்ணீர்கொடுப்பதற்குப் பெரும் பலன் இருப்பதேனென்பதை விரிவாகக்கேட்க விரும்புகிறேன்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"பரதசிரேஷ்டனே! ஸந்தோஷம். உனக்குச சரியாகச்சொல்லுவேன். தவறாதபராக்ரமமுள்ளவனே! இப்போது நான்சொல்வதைக் கேள். குற்றமற்றவனே! பலன்பெறத்தகுந்த அன்னபானங்களின்தானமுதலான எல்லாத்தானங்களைப்பற்றியும் சொல்வேன். இவ்விரண்டுதானங்களுக்கு மேற்பட்டதானம் ஒன்றுமில்லையென்பது என்நிச்சயம். அப்பா! பிராணிகளெல்லாம் அன்னத்தினாலே உண்டாகின்றன. ஆதலால், உலகத்தில் அன்னதானமொன்றுதான் எல்லாத்தானங்களிலும்சிறந்ததென்று சொல்லப்படுகிறது. எப்போதும் பிராணிகளுக்கு வன்மையும் உற்சாகமும் ஆகாரத்தினால் விருத்தியாகின்றன. அதனால், அன்னதானம் மிகச்சிறந்ததென்று பிரம்மதேவர் சொல்லியிருக்கிறார். குந்திபுத்ரனே! இது இப்படித்தான்; மாறாது. 'அன்னங்கொடுத்தமனிதன் பிராணதானம்செய்தவனாகிறான். இவ்வுலகத்தில் பிராணதானத்திற்குமேற்பட்டது ஒன்றுமில்லை' என்று தேவர்கள்செய்த ஸத்ரயாகமென்னும்மஹாயாகத்தில் ஸாவித்ரிதேவியின்சிறந்தவாக்கியம் கேட்கப்படுகிறது. சிறந்தகைகளையுடையவனே! முன்னர், சிபிசக்ரவர்த்தி புறாவுக்குஉயிரைக்கொடுத்து என்னபலனையடைந்தானென்பதைப்பற்றி லோமசமுனிவர்சொன்னவாக்கியத்தையும் நீ கேட்டிருக்கிறாயன்றோ? அரசனே! பிராம்மணனுக்கு அன்னதானம்செய்பவன் எந்தக்கதியையடைவனோ அதற்குமேற்பட்டகதியைப் பிராணதானம்செய்பவன் அடைவனென்று நாம் கேட்டிருக்கிறோம். கௌரவசிரேஷ்டனே! அன்னமும் ஜலத்தினாலுண்டாகிறது. ஜலமின்றியுண்டாவது ஒன்றுமில்லை. நவக்கிரகங்களுக்கும்அதிபதியும் மகிமைபொருந்தினவனுமானசந்திரன் ஜலத்திலுண்டானவன். ஜலமே அமிர்தம். அமிர்தமே ஜலம். மனிதர்க்கதிபதியே! மஹாராஜனே! எவற்றினால் பிராணிகளுக்கு உயிர்

உண்டாகிறதோ அந்தச்செடிகளும் கொடிகளும் ஜலத்தினுலுண்டா கின்றன. தேவர்களுக்குஅமிர்தமும் நாகர்களுக்குஸுதையும் பித் ருக்களுக்குஸ்வதையும் பசுக்களுக்குப்புற்பூண்டுகளும் ஆகாரங்களெ ன்று சொல்லப்பட்டிருக்கின்றன. மனிதர்களுக்கு அன்னந்தான் பிராணனென்று அறிஞர்கள் கூறுகின்றனர். புருஷசிரேஷ்டனே! இவையெல்லாம் ஜலத்தினுலுண்டாகின்றன. ஆகலால், தண்ணீர் கொடுப்பதற்கு மேற்பட்டதானம் எதுவுமில்லை. தன்னுடையநன் மையைவிரும்புகிற மனிதன் எப்போதும் தண்ணீர்கொடுக்கவேண்டும். ஜலதானமானது இவ்வுலகத்தில் பொருளையும் புகழையும் ஆயுளையும் கொடுப்பதென்று சொல்லப்படுகிறது. குந்திபுத்ரனே! தண்ணீர் கொடுப்பவன் எப்போதும் பகைவருக்கு மேற்பட்டிருப்பான். தண் ணீர்கொடுப்பவன் இவ்வுலகத்தில் தான்வேண்டினவையெல்லாவற் றையும் அழியாதபுகழையும் அடைந்து இறந்தபின்னும் பாவங்களி னின்றும் விடுபட்டு அளவற்றஆனந்தத்தை அடைவான். புருஷசிரேஷ் டனே! சிறந்தபராக்கிரமமுள்ளவனே! தண்ணீர்கொடுப்பவன் ஸ்வ ர்க்கத்திற்குப்போய் அழிவில்லாத லோகங்களையும் அடைவான்' என்று மனுகூறினர்" என்றார்.

## நூற்றுமூன்றாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(எள்முதலியவற்றின்தானத்தைப்பற்றி யமனுக்கும் ஒருபிராம் மணனுக்கும்நடந்த ஸம்பாஷணை.)

யுதிஷ்டிரர், "திலம், தீபம், அன்னம், வஸ்திரம்இவற்றின் தானங்கள் எப்படிப்பட்டவையென்பதைப்பற்றி மறுபடியும் எனக் குச் சொல்லக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"யுதிஷ்டிர! இந்தவிஷயத்திலும் ஒருபிராம்மணனுக்கும் யம னுக்கும்நடந்த ஸம்பாஷணையாகிய ஒருபழைய இதிஹாஸம் கூறுகின் றனர். ராஜனே! கங்கையமுனைஇவற்றின்நடுவில் யமுனைஉற்பத்தி யாகும் களிந்தமலையின்கீழேயுள்ள மத்தியதேசமென்னுந்தேசத்தில் பர்ணசாலையென்றுபெயர்பெற்ற அழகானபெரிய பிராம்மணகிராமம் ஒன்றிருந்தது. அந்தக்கிராமத்தில் வித்வான்களானபிராம்மணர்கள் அதிகமாகவஸித்தனர். அப்போது யமன் கறுத்தவஸ்திரமுடுத்தவ னும் சிவந்தகண்களும் நெறித்தஉரோமங்களும் காக்கைபோன்ற

களுக்கால்களும் கண்மூக்குகளுமுள்ளவனுமான ஒருகிங்கரனைப்பார்த்து, 'நீ பிராம்மணகிராமத்திற்குப் போ; போய் அவ்விடத்திலிருந்து சாந்தியுள்ளவனும் வித்வானும் வெளிப்படையாகஓதுவிப்பவனும் அகஸ்தியகோத்ரத்தானுமாகிய சர்மியென்றுபெயருள்ள அந்தப்பிராம்மணனை அழைத்துவா; அவன்பக்கத்தில அவன்கோத்திரமாகவேயிருக்கும் மற்றொருபிராம்மணனை அழைத்துவராதே; அவனும் இவனைப்போன்ற குணமுள்ளவன்தான்; கல்வியிலும் குலத்திலும் இவனுக்கொப்பானவன்தான்; புத்ரஸந்தானத்திலும் ஒழுக்கத்திலும் இந்தப்புத்திசாலிக்கே ஸமானமானவன் அவனுமா, நான் குறிப்பிட்டவனையே அழைத்துவா அவனுக்கு நான் பூஜைசெய்யவேண்டும்' என்றுசொன்னான். அந்தவேலைக்காரன் சென்று யமனுடையகட்டளையை மாறுகச்செய்தான்; அவனை வேண்டாமென்று யமன்சொன்னதை அவனைப்பிடித்துக்கொண்டுவந்தான் சிறந்த சக்தியுள்ளயமன் எழுந்திருந்து அவனுக்குப் பூஜையைச்செய்து 'இவனைக்கொண்டுபோ; அந்த மற்றொருவனைக் கொண்டுவா' என்று தூதனை ஏவினான். யமன் இவ்வாறுசொன்னபோது ஒதினதினால் வைராக்கியமுள்ள அந்தப்பிராம்மணன் தர்மராஜனைப்பார்த்து, 'தர்மந்தவறாதவனே! என்னுடைய அபுனராவ்ருத்திகாலம் முழுதும் இங்கேயே வஸிப்பேன்' என்றுசொன்னான். யமன், 'காலவிதியை நான் இங்கே எவ்வளவிலும் அறியமாட்டேன். எவன் தர்மத்தைச் செய்கிறானே அவனைமட்டும் நான் அறிவேன். சிறந்தமகிமையுள்ள பிராம்மணனே! நீ இப்போதே உன் இருப்பிடத்திற்குச்செல் ஆசாரந்தவறாதவனே! உனக்கு நான் என்னசெய்யவேண்டுமென்பதெல்லாம இஷ்டப்படி செவ்வையாகச்சொல்' என்றுகேட்டான் பிராம்மணன், 'பரிசுத்தமான தானந்தான் மிகச்சிறந்தபுண்ணியமாகும். அதை எனக்குச்சொல். மிகச்சிறந்தவனே! மூவுலகங்களிலுமுள்ள யாவருக்கும நீதானே உபதேசிப்பவன?' என்றுகேட்டான். யமன், 'பிரம்மரிஷியே! தானத்தைப்பற்றியபயர்ந்தவிதியைச் சரியாகச்சொல்லுகிறேன்; கேள். இவ்வுலகத்தில திலதானம மிகச்சிறந்தது; அழிவில்லாதபுண்ணியம். பிராம்மணோத்தமனே! ஒருவன் தன்னாற்கூடிய மட்டும திலதானம்செய்யவேண்டும் நித்தியதானம்செய்வதனால் எள்ளானது வேண்டியவற்றையெல்லாம் நிறைவேற்றுகிறது சிராத்தத்திற்கு எள்ளைத்தான் சிலாக்கியமாகச்சொல்லுகின்றனர். அதுதான் தனக்குயர்வில்லாததானம. பிராம்மணர்களுக்குச் சாஸ்திரத்திற்சொன்னமுறையோடு திலதானம்செய், வைகாசிமாதம் பௌர்ண

மாஸியில் பிராம்மணர்களுக்குத் திலதானம் செய்யவேண்டும். இருகத்தில் எல்லாவிதமான நன்மையையும் வேண்டுகிறவர்கள் எப்போதும் எள்ளை உண்பிக்கவேண்டும்; (எண்ணெயை) உடம்பில் தடவிக்கொள்ள வேண்டும்; அப்படியே ஜலத்தையும் எப்போதும் கொடுக்கவேண்டும்; ஆசமனமும் செய்யவேண்டுமென்பது நிச்சயம்; ஓடைகளையும் குளங்களையும் கிணறுகளையும் வெட்டுவிக்கவேண்டும். பிராம்மணோத்தமனே! இவ்வுலகத்தில் ஜலம் மிகஅரிது. நீ ஜலத்தை எப்போதும் கொடுக்க வேண்டும். இது எல்லாவற்றிலும் சிறந்தபுண்ணியம். பிராம்மணோத்தமனே! நித்தியமாகத் தண்ணீர்கொடுப்பதற்காகத் தண்ணீர்ப்பந்தல்களைச் செய்விக்கவேண்டும். உண்டவர்களுக்குத் தண்ணீர்கொடுப்பது முக்கியமானகாரியம். தண்ணீர்வேண்டுகிறவனைக்கண்டவுடன் அன்போடு விரைந்துகொடுப்பது முக்கியம். வஸ்திரதானம் செய்பவன் அதன் நூலளவுவருஷகாலமும் தீபதானம் செய்பவன் அது எரியும் நிமிஷங்களளவு வருஷகாலமும் கோதானம் செய்பவன் அவற்றின் ரோமங்களினளவு வருஷகாலமும் தண்ணீர்கொடுப்பவன் அந்தத்தண்ணீர்த்துளிகளளவு வருஷகாலமும் ஸ்வர்க்கலோகத்தை அனுபவிப்பார். ஆதலால், இந்தத்தானங்களை நீ நடத்தக்கடவாய்' என்று சொன்னான். யமன் இவ்வாறுசொன்னபிறகு அந்தயமதூதனால் அந்தப்பிராம்மணன் தன்வீட்டிற்குக்கொணர்ந்துவிடப்பட்டு யமன் சொன்னவற்றையெல்லாம் செய்தான். யமதூதனும் அவனைக்கொணர்ந்துவிட்டவுடன் அந்தச்சர்மியென்பவனை எடுத்துக்கொண்டுசென்று தர்மராஜனிடம் ஒப்பித்தான். சிறந்தமகிமையுள்ள தர்மராஜன் தர்மமறிந்த அந்தப்பிராம்மணனைப்பூஜித்து அவனோடும்சம்பாஷணைசெய்து வந்தபடியே அவனை அனுப்பினான். அவனுக்கும் முன்சொன்னஉபதேசத்தையெல்லாம்யமன் சொன்னான். அந்தப்பிராம்மணனும் யமலோகம்போய்த் திரும்பிவந்த பிறகு யமன் சொன்னதையெல்லாம் செய்தான். பித்ருக்களுக்குப்பிரியமுண்டாக்குவதற்குத் தீபதானத்தை முக்கியமாக யமன் சிலாகித்தான். ஆதலால், நித்யம் தீபங்கொடுப்பவன் பித்ருக்களைக் கரையேற்றுவான். பரதஸ்ரேஷ்டனே! பிரபுவே! ஆதலால், தேவர்களுக்கும் பித்ருக்களுக்கும் தனக்கும் கண்ணுக்கினியவையான தீபங்களை எப்போதும் அளிக்கவேண்டும். ராஜனே! ரத்நதானமும் மிகச்சிறந்த புண்ணியமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அவற்றை விலைக்குவாங்கித் தானம்செய்யும் பிராம்மணனுக்கு அவை பயத்தைப்போக்குகின்றவை. பிராம்மணன் அயலானிடம் ரத்நத்தைத் தக்ஷிணையாகப்பெற்றுக்கொண்டு

அதைப் பிராம்மணர்களுக்குக் கொடுப்பனாயின், கொடுத்தவன் வாங்கினவன் இருவருக்கும் அதுவே அழியாதபுண்ணியமாகும். 'நல்ல நிலைமையிலிருப்பவன் அப்படித் தானம்செய்பவனுக்கு ரத்தினத்தைத் தக்ஷிணையாகக்கொடுப்பானானால், அது அவ்விருவருக்கும் அழியாத புண்ணியமென்று தர்மமறிந்த மனு சொல்லுகிறார். வஸ்திரங்களைக் கொடுப்பதனால் ஒருமனிதன் தன்மனைவியை நீங்காதவனும் சிறந்த ஆடையாபரணங்களையுடையவனுமாவானென்று கேட்டிருக்கிறோம். புருஷஶ்ரேஷ்டனே! வேதத்தைப்பிரமாணமாகக்கொண்டு கோதானம் ஸுவர்ணதானம் திலதானம் இவற்றைப்பற்றிப் பலவகையாகச்சொன்னேன். விவாகங்களைச்செய்துகொண்டு புத்ரர்களை உற்பத்திபண்ணவேண்டும். கௌரவனே! புத்ரலாபமானது எல்லாலாபங்களிலும் சிறந்தது" என்றார்.

## நூற்றுநான்காவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(கோதானம், பூதானம், பசுக்களையும் பிராம்மணர்களையும் காத்தல் முதலியன.)

யுதிஷ்டிரர், "கௌரவஶ்ரேஷ்டரே! மிகத்தெரிந்தவரே! தானங்களின் சிறந்த விதியைப்பற்றியும் முக்கியமாகப் பூமிதானத்தைப்பற்றியும் திரும்பவும் சொல்லக்கடவீர். க்ஷத்திரியன் யாகம்செய்விக்கும் பிராம்மணனுக்குச் சாஸ்திரப்படி பூமியைக்கொடுப்பான்; அந்தப்பிராம்மணன் பெற்றுக்கொள்வான். மற்றொருவன் கொடுக்கத்தகாதே? தானபலனை விரும்புகிற எல்லாவருணத்தாரும் கொடுக்கக்கூடியதும் வேதத்தில் விதிக்கப்பட்டதுமாயுள்ள தானத்தை எனக்கு உரைக்கக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார். "இவ்வுலகத்தில் பசு பூமி கல்வி இம்மூன்றும், 'கோ' என்ற ஒரே பெயருள்ளவையும ஒரேபயனுள்ளவையும் வேண்டினபலன்களையெல்லாம் கொடுக்கத்தக்கவையும் தானத்திற்குரியவையுமான பொருள்கள். தர்மத்தையும் பிரம்மத்தையும் தெரிவிப்பதான ஸரஸ்வதியைச் சிஷ்யனுக்கு உபதேசிப்பவன் பூதானம் கோதானங்களுக்குச் சமமானபலனை அடைவான். கோக்களையும் அப்படியே சிலாக்கியமாகச் சொல்லுகின்றனர். தானத்திற்குரியது அதற்கு மேற்பட்டது ஒன்றுமில்லை. யுதிஷ்டிர! கோக்களிடத்தில் உடனே

பலன். அவற்றிற்குவிலை ஸ்வல்பம்.[1] பசுக்கள் எல்லாருக்கும் தாய்கள்; எல்லாஸௌக்கியங்களையும் கொடுப்பவை. அபிவிருத்தியாகக்கருதுகிறவன் எப்போதும் கோக்களைப் பிரதக்ஷிணம் செய்யவேண்டும்; அவற்றைக் காலாலுதைக்கலாகாது; அவைகளினிடையில் செல்லலாகாது. அவை மங்களங்களுக்கெல்லாம் இருப்பிடமான தேவதைகள். ஆதலால், கோக்களை எப்போதும் பூஜித்தல்வேண்டும். வேலைகளைச்செய்யும் விருஷபங்களைச் சாட்டையினலோட்டுவது முதலிலேயே கடவுளால் விதிக்கப்பட்டது அது குற்றமன்று. மற்றவிஷயங்கள் அதற்குப்பின்னிட்டவை. நடக்கும்போதும் படுத்திருக்கும்போதும் தெரிந்தவன் பசுக்களைப்பயமுறுத்தலாகாது. தாக்கித்துநோக்கும் ஆக்கள் மனிதனைச் சுற்றத்துடன் கொன்றுவிடும். பித்ருக்களின் ஸ்தானங்களும் தேவாலயங்களும் எவற்றின் கோமயத்தினல் எப்போதும் சுத்திசெய்யப்படுகின்றனவோ அவற்றிற்கு மேலானபரிசுத்தம் என்னஇருக்கிறது? ஒருவன்[2] தான் ஆகாரம் செய்வதற்குமுன் அயலார்பசுவுக்கு ஒருபிடி புல்லை ஒரு வருஷங்கொடுத்தால் அவனுக்கு அது எல்லாவிருப்பங்களையும்தரும் விரதமாகும். அவன் புத்ரர்களையும் புகழையும் பொருளையும் ராஜ்யத்தையும் அடைவான். அசுபத்தையும் கெட்ட கனவையும் அது ஒழித்துவிடும்" என்றார்.

யுதிஷ்டிரர், "என்னலக்ஷணங்களுள்ள பசுக்களைத் தானம்செய்யவேண்டும்? எவற்றைச் செய்யாமல்விடவேண்டும்? எப்படிப்பட்டவனுக்குக்கொடுக்கவேண்டும்? எப்படிப்பட்டவனுக்குக்கொடுக்கத்தகாது?" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானர். "கெட்ட ஒழுக்கமுள்ளவனுக்கும் பாவம்செய்பவனுக்கும் பொருளாசைக்காரனுக்கும் பொய்சொல்லுகிறவனுக்கும் தேவகாரியங்கள் பித்ருகாரியங்களைவிட்டவனுக்கும் எவ்வகையிலும் கோதானஞ்செய்யலாகாது. யாசிப்பவனும் அதிகப்பிள்ளைகளையுடையவனும் அக்நிஹோத்திரம் செய்பவனுமாகிய வேதமோதின பிராம்மணனுக்குப் பத்துப்பசுக்களைத் தானம்செய்வதனல், தானம் செய்பவன் மிகச்சிறந்தலோகங்களை அடைவான். பசுக்களின் பால்நெய் முதலியவற்றை ஹோமம்செய்பவனும் அவற்றேடு போஜனம் செய்விப்பவனும் அவற்றைத் தானம்செய்பவனும் இந்தக்காரியங்களில்

---

[1] 'யஜனும்கிருஷிமுதலிய வேலைகளிலிருக்கும் விருஷபங்களை ஓட்டுவது தேவர்களால் விதிக்கப்பட்டது. அவைகளிரண்டிலும் யாகத்திற்காகத் தூண்டுவது சிரேயஸைச்செய்யும். வைதிகமான எதற்கும்பின்னை லௌகிகவ்யவஸாயம் நிந்திக்கத்தக்கதாகும்' என்பது பழையவுரை.

[2] 'அதன் மோர் முதலியவற்றை அடையாமல்' என்பது பழையவுரை.

ஏவப்பட்டவனும் எல்லாப்புண்ணிய பலன்களையும் அடைவார். தவம் செய்பவனுக்குக்கொடுப்பவனும் அவனுக்கு உதவியாயிருப்பவனும் அவன் தவப்பயனனைத்திலும் பாகத்தையடைவார். மனிதனுக்குத் தன்னை உற்பத்திபண்ணினவன் பயத்தில் காப்பாற்றினவன் [1] ஜீவனத்தையுண்டுபண்ணினவன் இம்மூவரும் தந்தைகள். குருவுக்குப்பணிவிடைசெய்வது பாவத்தைப்போக்குகின்றது. கோபமானது பெரும் புகழைஅழிக்கிறது. புத்ரனில்லாமையை [2] மூன்று புத்ரர்கள் நிவிருத்தி செய்கின்றனர். பத்துப்பசுக்கள் வறுமையைப்போக்குகின்றன. வேதாந்தத்தில் நிச்சயமுள்ளவனும் கல்விகேள்விகள்மிகுந்தவனும் சிறந்த அறிவினால் திருப்தியடைந்தவனும் புலன்களையடக்கினவனும் ஒழுக்கந் தவறாதவனும் மனத்தை ஜயித்தவனும் சாஸ்திரத்திற்கட்டுப்பட்டவனும் எல்லாருக்கும் எப்போதும் இன்சொற்சொல்லுகிறவனும் பசிக்குப்பயந்து தகாதகாரியம் செய்யாதவனும் தயையுள்ளவனும் ஒழிவுள்ளவனும் விருந்துகளைவிரும்புகிறவனும் பிள்ளைகள்பெண்டிருள்ளவனும் ஒரேகுணமுள்ளவனுமான பிராம்மணனுக்கு ஜீவனத்தைக் கொடுக்கவேண்டும். நல்லதகுதியுள்ளவனுக்குக் கோதானம்செய்வதனால் எவ்வளவு குணங்களிருக்கின்றனவோ அவ்வளவுகுற்றங்கள் பிராம்மணன் பொருளையபகரிப்பதனால் உண்டாகின்றன. பிராம்மணன் பொருளையபகரித்தால் எல்லாவகையிலும் குற்றமுண்டு. பிராம்மணர்களின் மனைவிகளையும் தூரத்தில்விடவேண்டும். பிராம்மணன் மனைவியும் பொருளும் அபகரிக்கப்பட்டபோது, சக்தியினால் காப்பாற்றினவர்களுக்கும் அதற்காக உயிர்விட்டவர்களுக்கும் நமஸ்காரஞ்செய்கிறேன். அவர்கள் துன்பஞ்செய்யப்படும்போது, காப்பாற்றாதவனைச் சூரியன் புத்ரனான யமன் எக்காலமும் தண்டித்துக்கொண்டும் பயமுறுத்திக்கொண்டும் நரகத்திலிருந்துவிடுவதில்லை. அப்படியே கோக்களைக்காப்பதிலும் பீடிப்பதிலும் நன்மையும் தீமையும் முறையே வருகின்றன. பிராம்மணர்களின் கோக்களையும் மனைவிகளையும் ரக்ஷிப்பதில் விசேஷ புண்ணியம் உண்டாகிறது.

[1] தானஞ்செய்தவன்.

[2] மூன்றுபுத்ரர்களுக்குக்குறைந்தால் இல்லாமைக்குச் சமானம்.

## நூற்றைந்தாவது அத்யாயம்.
## தானதர்மபர்வம் (தொடர்ச்சி)



(பிராம்மணர் பொருளைக் கவராமலிருக்க வேண்டுமென்பதற்கு உதாரணமான நிருகன்கதை.)

கௌரவசிரேஷ்டனே! பிராம்மணன்சொத்தை அபகரிப்பதென்னும் இந்தவிஷயம்பற்றியே ந்ருகனென்னும்அரசன் மிகப்பெருங்கஷ்டத்தை அடைந்தானென்று பெரியோர்கள் கூறுகின்றனர். குந்திபுத்ரனே! முன்னர், துவாரகைநகர் ஏற்படும்போது புற்களாலும் பூண்டுகளாலும்மூடப்பட்ட ஒருபெருங்கிணறு காணப்பட்டதென்று கேள்வி. அந்தக்கிணற்றிலிருந்து ஜலமெடுப்பதற்காக முயற்சிசெய்தவர்கள் அந்தஜலம் முழுதும் மூடப்பட்டிருந்ததனால் மிகவருத்தமுற்றனர். அவர்கள் பருத்தஉடலுள்ள ஓர்ஓணான் அந்தக்கிணற்றிலிருந்ததைக் கண்டனர். அவர்கள் மலைக்கொப்பான அந்தஓணானை ஆயிரக்கணக்கான கயிறுகளாலும் தோல்வார்களாலும் கட்டித்தூக்க முயற்சிசெய்தும் எடுக்கமுடியாமல் வாஸுதேவரிடம்சென்று அவரிடம், 'ஒருபெரியஓணான் கிணற்றின்துவாரத்தை மூடிக்கொண்டிருக்கிறது. அதையெடுக்கத்தக்கவன் யாருமில்லை' என்றுதெரிவித்தனர். அந்த ந்ருகராஜன் கிருஷ்ணனால் தூக்கப்பட்டு என்னவேண்டுமென்று விசாரிக்கப்பட்டபோது, 'நான் ஆயிரம்யாகங்கள்செய்த பழமையானவன்' என்று தன்னை அவருக்குத் தெரிவித்தான். அவ்வாறுசொல்லும் அவ்வரசனைப்பார்த்துக் கண்ணபிரான், 'ராஜனே! நீ புண்ணியகருமம் செய்திருக்கிறாயேயன்றிப் பாவஞ்செய்யவில்லையே? நீ இப்படிப்பட்ட கெட்டகதியையடைந்தது ஏன? இப்படிப்பட்டநிலைமைக்கு என்னகாரணம்? அதைச்சொல். ராஜனே! நூறும் ஆயிரமும் மறுபடியும்நூறும் எண்ணூறும் பத்துலக்ஷமுமான கோக்களை முன்னே பிராம்மணர்களுக்கு நீதானம்பண்ணினாயென்று கேட்டிருக்கிறோம். அந்த உன்புண்ணியம் எங்கேபோயிற்று?' என்று கேட்டார். அப்போது ந்ருகன் கிருஷ்ணனைப்பார்த்துச்சொன்னதாவது, 'அக்நிஹோத்திரம்செய்யும் பிராம்மணனுடைய ஒருபசு அவன் ஊரைவிட்டுப்போயிருந்தபோது என்பசுக்களின்கூட்டத்தில் தவறிவந்தது. என்னுடையபசுமேய்ப்பவர்கள் ஆயிரம்பசுக்களில் அதையும் சேர்த்து எண்ணினார்கள். மறுமைப்பயனைவிரும்பி அதைநான் பிராம்மணனுக்குத் தானம்செய்தேன். அந்தப்பசு எவனுக்குச்சொந்

தமோ அந்தப்பிராம்மணன் அதைத்தேடிக்கொண்டுபோகையில் அய லான்வீட்டில் அந்தப்பசுவிருக்கக்கண்டு, 'இதுஎனது' என்றுசொன் ஞன். அவ்விரண்டுபிராம்மணர்களும் மிக்ககோபத்தோடு விவாதப் பட்டுக்கொண்டு என்னிடம்வந்தனர். அவர்கள் என்னைப்பார்த்து, 'நீ கொடுத்தவன்' என்றும்,'நீகவர்ந்தவன்' என்றும்கூறினர். என்னிடத்தில் தானம்வாங்கின பிராம்மணனைப் பதினாயிரம்பசுக்களைப் பிரதியாக வாங்கிக்கொண்டு அந்தப்பசுவை மாற்றிவிடும்படிவேண்டினேன். அவன் என்னைப்பார்த்து, 'இந்தப்பசு ஸரியானகாலத்திலும் இடத்திலும் கிடைத்தது; மிருதுவாகக் கறக்கிறது; அடங்கினதும் மிக்கஅன் புள்ளதுமாயிருக்கிறது; இனியபாலைக் கொடுக்கிறது; பாக்கியத்தைத் தருகிறது; என்வீட்டில் முலைப்பாலில்லாமல் இளைத்துப் போன என்பிள்ளையை நித்யமும் காப்பாற்றுகிறது. அதை நான் கொடுக்க முடியாது' என்றுசொல்லிச்சென்றான். பிறகு, அந்த மற்றொருபிராம் மணனை அந்தப்பசுவுக்குப்பிரதியாக லக்ஷம்பசுக்களைப் பெற்றுக் கொள்ளும்படி வேண்டினேன். மதுஸூதனரே! அந்தப் பிராம்மணன், 'அரசர்களிடத்தில் நான் வாங்குவதில்லை. எனக்குப் பொருளீட்டத் திறமையிருக்கிறது. உடனே அந்தஎன்பசுவையே கொடுக்கவேண்டும்' என்றுசொன்னான். பொன்னையும் குதிரைகளையும் வெள்ளித்தேர்களை யும் நான்கொடுத்தும் அந்தப்பிராம்மணசிரேஷ்டன் பெற்றுக்கொள்ளா மலே சென்றான். அந்தக்காலத்திலேயே நான் காலம்சென்று பித்ரு லோகம்போய்த் தர்மராஜனையமனைச் சந்தித்தேன். அப்போது, யமன் என்னைப்பூஜித்து, 'அரசனே! உன்னுடைய புண்ணியகர்மத்திற்கு வரை தெரியவில்லை. நீ செய்தபாவம் ஒன்றிருக்கிறது. அது தெரியாமற்செய் தது. அந்தப்பாவத்தைப் பின்னனுபவிக்கிறாயா? முன்னனு பவிக்கிறாயா? உன்னிஷ்டமென்ன? நீ, 'ரக்ஷிக்கிறேன்' என்று சொன்னாய். அந்த உன்பிரதிஜ்ஞை பொய்யாயிற்று. பிராம்மணன் சொத்தை எடுத்துக்கொண்டாய். இந்த இருவகைத்தவறுதல்கள் உனக்கிருக்கின்றன' என்றுசொன்னான். பிரபுவே! நான் தர்மராஜனைப் பார்த்து, 'முதலில்பாவத்தையும் பிறகு புண்ணியத்தையும் அனுபவிப்பேன்' என்றுசொல்லிக்கொண்டே இவ்வுருவத்தோடு பூமியில் விழுந்தேன். நான் பூமியில் விழும்போதே, 'வஸு தேவபுத்ரரானஜநார்த்தனர் உன்னைத் தூக்கிவிடப்போகிறார். ஆயி ரம் வருஷமுடிந்து பாவம் ஒழிந்தபின் புண்ணியகர்மத்தினால் சம் பாதிக்கப்பட்ட அழிவில்லாதலோகங்களை அடைவாய்' என்று யமன் இரைந்துசொன்னதை நான் கேட்டேன்; நான் தலைகீழாகக் கிணற்

றில் விழுந்திருப்பதையும் கண்டேன். திர்யக்ஜாதியிற்போயும் பழைய ஞாபகம் என்னை விடவில்லை. இப்போது உம்மால் கரையேற்றப்பட்டேன். தவவன்மையைத்தவிர வேறுவன்மை என்னவிருக்கிறது? கிருஷ்ண! நான் இப்போதே ஸ்வர்க்கத்திற்குச்செல்லும்படி எனக்கு விடைகொடுக்கக்கடவீர்' என்பது. பகைவரைஜயித்தவனே அவன், கிருஷ்ணனால் அனுமதிகொடுக்கப்பெற்று அந்தஜநார்த்தனரை நமஸ்கரித்துத் தேவவிமானத்திலேறி ஸ்வர்க்கத்திற்குச்சென்றான். பரத சிரேஷ்டனே! கௌரவனே! அந்த ந்ருகன் அவ்வாறு ஸ்வர்க்கம் சென்றபிறகு வாஸுதேவர் பின்வரும் சுலோகத்தைச் சொன்னார்.

(அதன்பொருள்,) 'அறிவுள்ளமனிதன் பிராம்மணன் சொத்தை எடுக்கலாகாது. எடுக்கப்பட்ட பிராம்மணசொத்து, பிராம்மணன்பசு ந்ருகனைக் கெடுத்ததுபோலக் கெடுத்துவிடும்' என்பது. குந்திபுத்ரனே! ஸாதுக்களுடன் ஸாதுக்களுக்குண்டாகும்சேர்க்கை வீணாவதில்லை. ந்ருகன் ஸாதுவைச்சேர்ந்ததனால் துக்கத்திலிருந்து விடுபட்டதைப் பார். யுதிஷ்டிர! கோதானமும் பலனுள்ளது. அப்படியே கோவையபகரிப்பதும் தீங்குசெய்வது. ஆதலால், கோவை அபகரியாமலிருக்கவேண்டும்'' என்றார்.

## நூற்றுருவது அத்யாயம்.

### தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(யமன் நாசிகேதருக்குக் கோதானமுதலியவற்றின் சிறப்பைச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "குற்றமற்றவரே! மகாவீரரே! கோதானம் செய்வதனால் உண்டாகும பலப்பிராபதியைப்பற்றி எனக்கு விரிவாக உரைக்கக்கடவீர். எனக்கு அதில் திருப்தியுண்டாகவில்லை. சொல்லவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"இந்த விஷயத்திலும் ஔத்தாலகி என்னும் ரிஷி நாசிகேதரிஷி இவ்விருவருக்கும நடந்த ஸம்பாஷணமாகிய ஒருபழைய இதிகாஸத்தைக் கூறுகின்றனர். ஔத்தாலகி என்னும் ரிஷி விரததீக்ஷைசெய்து கொண்டு உடனே தமபுத்திரராகிய நாசிகேதரைப்பார்த்து, 'நீ எனக்குப் பணிவிடைசெய்' என்று சொன்னார். அந்தத்தீக்ஷைமுடிந்தபின் அம்மகரிஷியானவர் தம்புதல்வரைப்பார்த்து, 'நான் ஸ்நானத்திலும் வேதாத்தியயனத்திலும் கவனமுள்ளவனாயிருந்ததினால் ஸமித்துக்களையும் தர்ப்பங்களையும் புஷ்பங்களையும் ஜலம்நிரம்பின பாத்திரத்தை

யும் மறந்தேன். நீ ஆற்றங்கரையிலிருந்து அவற்றைஎடுத்துக்கொண்டு இங்கேவா' என்றுசொன்னார். அந்த நாசிகேதமுனிவரும் அவ்விடம் சென்று அவையெல்லாம் ஆற்றின்வேகத்தினால் அடித்துக்கொண்டு போகப்பட்டுக் காணமற்போனதினால் தம்தந்தையினிடம்வந்து, 'அவற்றைக் காணேன்' என்றுசொன்னார். அப்போது, பசியும் தாகமும் களைப்பும் மேற்கொண்ட ஔத்தாலகிமுனிவர் கோபமிகுந்து, 'யமனைப் பார்' என்று தம்புத்திரரைச் சபித்தார். தந்தையினால் சொல்லென்னும்இடியினால் அவ்வாறு அடிக்கப்பட்ட நாசிகேதர் கைகூப்பி, 'அருள்புரியவேண்டும்' என்று சொல்லும்போதே உயிரிழந்து தரையில் விழுந்தார். தந்தையானவர் நாசிகேதர் விழுந்ததைக்கண்டு துயரமே விட்டு, 'நான் என்னசெய்துவிட்டேன்?' என்றுசொல்லித் தரையில் விழுந்தார். அவர் துக்கமதிகமாகித் தம்புத்திரரைப்பற்றி அழுது கொண்டேயிருக்க அப்பகலின் மிச்சமும் அக்கொடிய இரவும் கடந்து போயின. கௌரவசிரேஷ்டனே! தந்தையின் கண்ணீர்விழுந்ததினால் தர்ப்பப்படுக்கையில்படுத்திருந்த நாசிகேதர் மழையினால்நனைந்த பயிர் போலச் செழித்தார். தேவலோகத்துச் சந்தனங்களையணிந்து தூக்கம்தெளிந்தெழுந்தவர்போல மறுபடியும் உயிர்வந்த தமதுசிறந்தபுதல்வரைக்கண்டு அம்முனிவர், 'மைந்தனே! உனது நற்கருமத்தினால் நல்ல லோகங்கள் ஜயிக்கப்பட்டனவா? நல்லகாலமாகத் திரும்பிவந்தாய். உன் தேகம் மானிடதேகமாயில்லை' என்று கேட்டார். எல்லாவற்றையும் கண்ணால்கண்ட நாசிகேதர் மகாத்மாவான பிதாவினால் கேட்கப்பட்டபோது எழுந்து அநேக மகரிஷிகளின் நடுவில் தந்தைக்குத் தெரிவிக்கத்தொடங்கினார். 'உமதுகட்டளையைச்செய்வதற்காக உடனே சென்றேன். விசாலமானதும் அழகானதும் ஒளியுள்ளதும் ஒருயோசனை நீளமுள்ள பொன்மாடிகள் ஆயிரக்கணக்காக நிரம்பினதுமான யமஸபையைக்கண்டேன். நான்வருவதைக்கண்டவுடன் யமன் என்னைஎதிர்கொண்டழைத்து வீட்டைஒப்பித்து ஆஸனம்தந்தான். உமக்காக அர்க்கியம்முதலிய பூஜைகளாலும் என்னை அவன் பூஜித்தான். யமஸபையிலுள்ளவர்களால்சூழப்பட்டும் பூஜிக்கப்பட்டுமிருந்தநான் அந்தயமனை நோக்கி, 'தர்மராஜனே! நான் உன்தேசத்திற்கு வந்திருக்கிறேன். நான் எந்தலோகங்களுக்குத் தகுந்தவனோ அவற்றை எனக்கு விதாயகஞ்செய்' என்று மெதுவாகக்கேட்டேன். யமன் எனக்கு 'ஓ! சாந்தனே! நீ இறந்துபோகவில்லை. சிறந்ததவமுள்ளவரும் விளங்குகின்ற அக்கினிக்கொப்பான ஒளியுள்ளவருமான உன் தந்தை, 'யமனைப் பார்' என்று உனக்குச் சொன்னார். பிராம்மண! அதைப் பொய்

பாக்குவது முடியாது. அன்பனே! நீ என்னைப் பார்த்தாய். திரும்பிச்செல். உனதுதேகத்தைஉண்டுபண்ணினதந்தையார் அழுகிறார். அன்புள்ள விருந்தினனாகியஉனக்கு மனத்திற்குவேண்டிய எதைக் கொடுப்பேன்? இஷ்டமானவற்றைக் கேள்' என்றுசொன்னான். அவனால் இவ்வாறுகேட்கப்பட்டநான், 'திரும்பிப்போகக்கூடாததாகிய உன்தேசத்திற்கு வந்திருக்கிறேன். நான் உன்னிடம் வரம்பெறத் தகுந்தவனாயிருந்தால் வேண்டினவையெல்லாம்நிரம்பின புண்ணிய லோகங்களைக் காணவிரும்புகிறேன்' என்று அவனுக்கு மறுமொழி சொன்னேன். பிராம்மணோத்தமரே! அந்தயமன் நல்லநிறமுள்ளதும் சிறந்தஒளியுள்ளதும் குதிரைகள்பூட்டினதுமான ரதத்தில் என்னையேற்றித் தன்னுடையலோகங்களையும் எல்லாப்புண்ணியலோகங்களையும் காண்பித்தான். அவ்வுலகங்களில் பலஉருவங்களும் நிறங்களுமுள்ளவையும் எல்லாரத்தினங்களுடன்பொருந்தினவையும் சந்திரமண்டலம்போலப் பிரகாசிப்பவையும் சலங்கைகளின் மாலைகள்கட்டப்பட்டவையும் அநேக நூற்றுக்கணக்கான மேல்கட்டிடங்களுள்ளவையும் உள்ளே வாவிகளும் தோட்டங்களும் அடங்கினவையும் வைடூரியக்கற்களினால் சூரியன்போலவிளங்குபவையும் வெள்ளிபொன்மயமானவையும் இளஞ்சூரியனநிறமுள்ளவையும் நிற்பவையும் நடப்பவையுமாகத் தேஜோமயமான மஹாரதங்களின்வரிசைகளைக் கண்டேன். அந்தவீடுகளில் மலைகளாகக்குவிந்து பக்ஷணங்களும் போஜனங்களும் வஸ்திரங்களும் படுக்கைகளும் வேண்டினகனிகளெல்லாம்தரும் மரங்களும் இருக்கக்கண்டேன். நதிகளும் வீதிகளும் ஸபைகளும் வாவிகளும் குளங்களும் குதிரைகள்பூட்டப்பட்டு ஒலிக்கும் ரதங்களும் ஆயிரக்கணக்காக எங்கும் இருக்கக்கண்டேன். பால்பெருகும்நதிகளையும் அவையுண்டாகும்மலைகளையும் நெய்யையும் தெளிந்ததண்ணீரையும் யமனுக்குவிருப்பமான அநேகஇடங்களையும் முன்பாராத மற்றும்பலவற்றையும் கண்டேன். எல்லாவற்றையும் கண்டபிறகு, நான், எல்லாருக்கும்தேவனையும் ஸமர்த்தனுமான தர்மராஜனைப்பார்த்து, 'என்றும்வற்றுமல்ஓடுகின்ற இந்தப்பாலாறுகளும் நெய்யாறுகளும் யார் புசிப்பதற்காக இருக்கின்றன?' என்றுகேட்டேன்.

அதற்கு, யமன், 'எந்தஸாதுக்கள் பசுவின்பால்நெய்முதலிய ஸாரங்களைப் பிறருக்குத் தானஞ்செய்பவரோ அவர்கள்புசிப்பதற்குரியவை இவையென்று நீயறி. கோதானமேசெய்பவருக்குத் துயரமற்றவர்கள் நிரம்பினவையும் அழியாதவையுமான வேறு லோகங்களுள்ளன. பசுக்களைக்கொடுப்பதுமாத்திரமே சிலாக்கியமானது.

பெற்றுக்கொள்பவனும் காலமும் ஆவின்சிறப்பும் கொடுக்கும்முறையும்வேண்டும். இவற்றை அறிந்து தானம்செய்யவேண்டும். அக்கினியைப்போலும் ஆதித்தனைப்போலுமிருக்கின்ற பிராம்மணர்களிலும் பசுக்களிலுமுள்ளவேற்றுமை அறிதற்கரிது. வேதமோதினவனும் மிகச்சிறந்ததவமுள்ளவனும் விடாமல்யாகஞ்செய்பவனுமான பிராம்மணன் கோதானத்திற்குப் பாத்திரனாவான். பசுக்களிடம் பொறுமையுள்ளவனும் பசுக்களைக்காப்பவனும் நன்றிமறவாதவனும் ஜீவனத்திற்குக் கஷ்டப்படுகிறவனுமாகஇருக்கும் அப்படிப்பட்டபிராம்மணனைப் பாத்ரனென்று கூறுகின்றனர். பஞ்சத்தில் விடப்பட்டுக் காப்பாற்றப்பெறுவதற்காக வந்துசேர்ந்தவையும் வீட்டில்பிறந்தவையும் சரியானவிலைக்குவாங்கப்பட்டவையும் கல்வியினால்அடையப்பட்டவையும் [1]உயிரைக்கொடுத்துவாங்கப்பட்டவையுமாக இவ்வகைகளால்கிடைத்த சிறந்தபசுக்களைத் தக்ஷிணைகளுடன் தாரைவார்த்துக் கொடுப்பது சிறந்தது. மூன்றிரவுகள் தண்ணீரைமாத்திரமுட்கொண்டு உபவாஸமாகத்தரையில்படுத்திருந்து நிரம்பத்தீனிபோடப்பட்டபசுக்களை, திருப்தியாகப்புசிப்பிக்கப்பட்ட பிராமமணர்களுக்குத் தானம்செய்யவேண்டும் கன்றுகள்மேல்அன்புள்ளவையும் ஸந்ததிவிருத்தியுள்ளவையுமானபசுக்களை உபசரித்துத் தானமசெய்த பிறகு மூன்றுதினங்கள் ஆவின்பால்முதலியவற்றையே ஆகாரமாகக் கொண்டிருக்கவேண்டும். நல்லஅடக்கமுள்ளதும் அதிகமாகக்கறப்பதும் புஷ்டியானகன்றுள்ளதும் ஓடாததுமானபசுவைத்தானம்செய்வதனால் அதன்ரோமங்கள் எவ்வளவிருக்கின்றனவோ அவ்வளவுவருஷங்கள் சுவர்க்கலோகத்தை அனுபவிப்பான். அப்படியே பழகினதும் நுகத்தடியைத்தாங்கும்வலிமையுள்ளதும் இளமையானதும் வீட்டிற்குஆதரவாயிருப்பதும் மனஉறுதியுள்ளதுமான பெரியஎருதைப் பிராம்மணர்களுக்குக் கொடுப்பவன் ஆவைக்கொடுப்பவனுக்குரிய உலகங்களை அனுபவிப்பான். (வண்டியிழுப்பதற்குக்) கிழவனுக்காகவும் நோயாளிக்காகவும் பஞ்சத்திற்காகவும் பெரியகாரியத்திற்காகவும் உழுவதற்காகவும் ஹோமத்திற்குரியபசுவின்ஸந்ததியைவிருத்திசெய்வதற்காகவும் குருவுக்காகவும் யாகம்நிறைவேறுவதற்காகவும் ரிஷபதானம்செய்தால், அது சிறந்தஇடத்திலும் காலத்திலும் செய்ததாகும்' என்றுசொன்னான்.

யமனுடைய அந்தச்சொல்லைக்கேட்டு, நான் திரும்பவும் அவனைப்பார்த்து, 'கோவில்லாதவன் கோதானம்செய்பவருடையலோகங்

[1] போரில்வென்றுகொண்டுவரப்பட்டவையும்.

க்ளை அடைவது எப்படி?' என்றுகேட்டேன். அதன்பிறகு, சிறந்த அறிவுள்ளயமன் கோதானத்தையும் அதனாலுண்டாகும் நற்கதியை யும் அதைப்போன்றவேறுதானத்தையும் சொன்னான். 'கோவில்லா விடின் கோதானத்திற்குப் பிரதிநிதியான வேறுதானத்தினால் கோதா னம்செய்தவர்போலாகலாம். கோக்கள்கிடைக்காதபோது உறுதியான நியமத்தோடு கோவுக்குப்பிரதியாக நெய்யைத்தானம்செய்பவனுக்குத் தான் இந்தநெய்யாறுகள் அன்புள்ளதாய்கள்போலப் பெருகுகின்றன. நெய்யுங்கிடையாதபோது விரதம்வழுவாது பசுவுக்குப்பிரதியாக எள் ளைத்தானம்செய்பவன் பசுவினாலேயேநரகத்திலிருந்து கரையேற்றப்பட் டுப் பாலாற்றில் மகிழ்வான். எள்ளும்கிடையாதபோது விரதத்தி லுறுதியோடு பசுவுக்குப்பிரதியாக ஜலத்தைத்தானம்செய்பவன் விரும் பினவற்றையெல்லாம் பெருக்கும் இந்தக்குளிர்ந்தநதியை அனுபவிப் பான்' என்றுசொல்லி, தர்மராஜன் இவற்றையெல்லாம் எனக்கு அங்கே காண்பித்தான். நியமந்தவறாதவரே! நான் அவற்றைக்கண்டு மிகமகிழ் வுற்றேன். உமக்கு மற்றொரு சந்தோஷசமாசாரத்தையும் நான் தெரி விக்கிறேன். பொருள்செலவு குறைவாயுள்ள இந்தப்பெரியயாகம் எனக் குக் கிடைத்தது. பிதாவே! அந்தயாகம் என்னாலுண்டாக்கப்பட்டு வேதவிதிகளோடு நடந்தேறப்போகிறது. உம்முடைய இந்தச்சாபமும் எனக்கு நன்மைக்கேகிடைத்தது. அதினாலன்றோ நான் யமனைக் கண் டேன்? மகாத்மாவே! தானத்தின்பலனை அங்கேகண்டபிறகு ஐயமில் லாமல் தானதர்மத்தையேசெய்வேன். எப்போதும் தர்மத்தையே நியம மாகக்கொண்ட தர்மராஜன் என்னிடம் அனுக்கிரகம்வைத்து நான்மேல் சொல்லப்போவதையும் பலமுறை எனக்குச் சொன்னான். அதாவது, நான் கோதானத்தையே விசேஷமாகச்செய்வது. அது பரிசுத்தமான பொருள். ஆனதால், தர்மங்களை அவமதியாதே. ஸரியான இடத் திலும் காலத்திலும் வந்தயோக்கியனுக்குக் கொடுக்கவேண்டும். நித் தியமாகவே கோதானம்செய்யவேண்டும். இதுவிஷயத்தில் உனக் குச் சந்தேகம் ஒன்றும்வேண்டாம். முற்காலத்திலும் மனத்தில் ஒழி வுள்ளவர்கள் தானமார்க்கத்திலிருந்துகொண்டு எப்போதும் கோதா னமேசெய்தனர். அவர்கள் உக்கிரமானதவங்களை நம்பியிருந்தும் இய ன்ற அளவு தானத்தைச்செய்துகொண்டேயிருந்தனர். புண்ணியத் தையே இயற்கையாகவுடையவர்கள் மனத்தூய்மையோடும் சிரத்தை யோடும் கோபத்தைவிட்டு இயன்றவரையில் காலத்தில் கோதானம் செய்து வேறுலோகஞ்சென்று சுவர்க்கத்தில் தங்கள் புண்ணியங்களி

ஞல் பிரகாசிக்கின்றனர். நியாயமாகக்கிடைத்ததைப் பிராம்மணர்களுக்குக்கொடுப்பதுதான் தானம். ஆராய்ந்துபார்த்து யோக்கியனிடத்தில் தானத்தைச்சேர்ப்பிக்கவேண்டும். ஓர் அஷ்டமியைக் குறித்து அதுமுதல் பத்துநாள் பசுவின் நெய்தயிர்களையாவது கோமயத்தையாவது பாலையாவது உண்ணவேண்டும். ரிஷபதானம்செய்வதனால் தேவபக்தியுள்ளவனுவான். இரண்டுரிஷபங்களைக்கொடுத்தால் வேதங்களெல்லாம்தெரியும். ரிஷபங்கள் கட்டின வண்டியைக்கொடுத்தால் புண்ணிய தீர்த்தபலன் உண்டாகும். கபிலைப்பசுவைத் தானம்செய்தால் பாவம் நீங்கிப்போம். நியாயமாகக்கிடைத்த கபிலைப்பசுவொன்றைக் கொடுத்தாலும் பாவத்திலிருந்துவிடுபடுவான். பசுக்களின்பால்முதலிய ஸாரங்களைக்காட்டிலும்மேம்பட்டது ஒன்றுமில்லை. கோதானம் மிகச்சிறந்ததென்றுசொல்லுகின்றனர். பாலைப்பெருக்கும் பசுக்கள் ஜனங்களைக் கரையேற்றுகின்றன. உலகத்தில் அன்னத்தையுண்டுபண்ணுகின்றவையும் பசுக்களே. இதையறிந்தும் பசுக்களின்மேல் அன்புவைக்காத பாவஎண்ணமுள்ளவன் நரகம்போகிறவனே. ஆயிரம், நூறு, பத்து, ஐந்துபசுக்களையாவது ஒருபசுவையாவது நல்ல கன்றுடன் யோக்கியனை பிராம்மணனுக்குத் தானம்செய்தவர்களுக்கு அந்தப்பசுவே பரலோகத்தில் புண்ணிய தீர்த்தமுள்ள நதியாகிறது. பூமியில் பசுக்கள் தேடிவந்து உலகங்களை வளர்ப்பதனாலும் காப்பாற்றுவதனாலும் சூரியகிரணங்களுக்கொப்பானவை. இவ்விரண்டிற்கும் கோவென்னும்பெயர் ஒன்று. அனுகூலமாயிருப்பதும் சுகத்தைத்தருவதும் ஒன்று. ஆதலால், பசுவைக்கொடுப்பவன் சூரியன்போல விளங்குவான். எந்தச் சிஷ்யன குருவைக் கோதானத்தை ஏற்றுக்கொள்ளும்படி பிரார்த்திக்கிருனே அவனும ஸ்வர்க்கமபோவது திண்ணம். சாஸ்திரமறிந்தவர்களுக்கு இதுதான் மிகப்பெரிய தர்மம். இந்தத்தலைமையான சாஸ்திரத்தில் மற்றசாஸ்திரங்கள் அடங்கியிருக்கின்றன. நியாயமாகக்கிடைத்ததைப் பிராம்மணர்களுக்குக்கொடுப்பதுதான் இந்தத்தானம். பரிசோதித்து யோக்கியனுக்குத்தானம்செய்து அதை அவனிடத்தில் சேர்ப்பிக்கக்கடவாய். தேவர்களும அசுரர்களும் நாமும் புண்ணியத்தைச் செய்து கீர்த்திபெறும் உன்னையே எதிர்பார்க்கிறோம்' என்பது. ப்ரம்மரிஷியே! இவ்வாறு சொல்லக்கேட்டநான் தர்மாத்மாவான தர்மராஜனைத் தலைவணங்கி வந்தனஞ்செய்து அவனால் விடைகொடுக்கப்பெற்றுத் திரும்பவும் உமது பாதங்களின்கீழ் வந்துசேர்ந்தேன்' என்றான்" என்றுகூறினர்.

## நூற்றேழாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(இந்திரன் கோதானத்தைப்பற்றிப் பிரம்மதேவரைக்கேட்டது.)

யுதிஷ்டிரர், "பிரபுவே! கோதானத்தைப்பற்றியும் கோக்களின் மகிமையைப்பற்றியும் நாசிகேதரிஷிக்கு யமன்சொன்னதை எடுத்துரைத்தீர். சிறந்தபுத்தியுள்ள பிதாமஹரே! மகாத்மாவான நிருகன் அறியாமற்செய்த ஒருபிழைக்காகப் பெருந்துயரத்தை அனுபவித்ததை யும் துவாரகைநகரியை நிர்மாணஞ்செய்யும்போது அவன் எடுக்கப்பட்டதையும் அவன்சாபவிமோசனத்திற்குக் கிருஷ்ணன் காரணமாயிருந்ததையும்பற்றி நீர்சொன்னதைத் தெரிந்துகொண்டேன். பிரபுவே! ஆனால், கோதானம்செய்கிறவர்கள் வசிக்கின்ற கோலோகத்தைப்பற்றி எனக்குச் சந்தேகமிருக்கிறது. அதைச் சரியாகக் கேட்கவிரும்புகிறேன்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"இந்திரன் பிரம்மாவினிடம் இதேவிஷயத்தைப்பற்றிக் கேட்டதாகிய ஒருபழைய இதிகாசத்தைக் கூறுகின்றனர். இந்திரன், 'குற்றமற்றவரே! பகவானே! பிரபுவே! ஈசுவரரே! கோலோகத்திலிருப்பவர்கள் தங்கள் ஒளியினால் ஸ்வர்க்கலோகத்திலிருப்பவர்களின் ஒளியையும் மறைத்திருப்பதாகக் காண்கிறேன். இதில் எனக்குச் சந்தேகமிருக்கிறது. இதைச் சொல்லக்கடவீர். கோதானம்செய்பவர்கள் வசிக்குமகோலோகங்கள் எப்படிப்பட்டவை? என்னபலனுள்ளவை? அங்குள்ள உயர்ந்தகுணம்யாது? மனிதர்கள் துயரம்விட்டு அங்கேசெல்லும்வகை யாது? கொடுப்பவன் கொடையின்பலனை எவ்வளவுகாலம் அனுபவிப்பான்? தானம் பெரிதும் சிறிதும் ஆவதெப்படி? பலகோக்களைக் கொடுப்பதும் சிலகோக்களைக்கொடுப்பதும் எப்படியாம்? கோதானம் செய்யாமலும் கோதானம் செய்தவனாவது எதனால்? மிகுதியாகக்கொடுப்பவன் கொஞ்சங் கொடுப்பவனுக்குச் சமமாகவும் கொஞ்சங்கொடுப்பவன் மிகுதியாகக் கொடுப்பவனுக்குச் சமமாகவும் ஆவதெப்படி? கோதானத்திற்கு எப்படிப்பட்டதக்ஷிணை சிறந்ததாகும்? பகவானே! இவற்றையெல்லாம் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். எனக்கு இதன் உண்மையைச் சொல்லக்கடவீர்' என்று கேட்டனன்.

## நூற்றெட்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி)

(பிரம்மதேவர் கோதானத்தின் சிறப்பை இந்திரனுக்குச் சொல்லியது.)

பிரம்மதேவர் சொல்லுகிறார். 'இந்திரனே! கோதானமுதலிய வற்றைச்செய்பவரைப்பற்றி நீகேட்டகேள்வியைக்கேட்பவன் உன்னைத்தவிர வேறுயாருமில்லை இவ்வுலகத்திலில்லை. இந்திரனே! நீபாராத உலகங்கள் பலஉள்ளன. அவற்றை நான் பார்க்கிறேன். கற்புள்ள பெண்களும் சிறந்த அனுஷ்டானங்களோடு நல்லதவமுள்ளரிஷிகளும் சிறந்தஞானமுள்ள பிராமணர்களும் தேகத்தோடு அவ்வுலகங்களுக்குப் போகின்றனர். நல்லதவமுள்ளவர்கள் இவ்வுலகத்திலும் சரீரப் பற்றைவிட்ட பரிசுத்தமானமனத்தினால் அவ்வுலகங்களைக் கனவு போலக் காணுகின்றனர். ஆயிரங்கண்ணனே! அவ்வுலகங்கள் எப்படிப்பட்ட குணமுள்ளவையென்பதைக் கேள். அங்கே காலமும் மூப்பும் உஷ்ணமும் விபாதிப்பதில்லை. எந்தக்கெடுதலும் அங்கில்லை; பிணியும் களைப்பும் இல்லை. வாஸவனே! அங்குள்ளவர்கள் மனத்தில் என்ன என்ன விரும்பினாலும் அவற்றையெல்லாம் அவர்களுக்குக் கோக்கள் அளிக்கின்றனவென்பதை நான் கண்ணால் காண்கிறேன். அங்குள்ளவர் நினைத்தவற்றைப்பெற்றும் நினைத்தபடி ஸஞ்சரித்தும் நினைத்தவற்றையெல்லாம் நினைத்தபடி அனுபவித்துக்கொண்டிருக்கின்றனர். அவ்வுலகங்களில் வாவிகளும் தடாகங்களும் நதிகளும் பற்பலதோட்டங்களும் வீடுகளும் மலைகளும் எல்லாப்பிராணிகளுக்கும் இனியபொருள்களைத்தருமுள்ளகாடுகளும் காணப்படுகின்றன. அந்த உலகங்கள் இவ்வகையானவையென்றறி. அவற்றைப்போன்ற உலகமில்லை. சக்கரனே! எல்லாவற்றையும்பொறுத்துக் கோபத்தையும் அகங்காரத்தையும்விட்டு அன்புள்ளவர்களாகிக் குருகுலவாஸம் செய்யும் புருஷசிரேஷ்டர்கள் அவ்வுலகம்போகின்றனர். ஒன்றையும் பக்ஷியாதவனும் மனத்தூய்மையோடும் தர்மத்தில் எப்போதும் ஊக்கத்தோடுமிருப்பவனும் தாய்தந்தையருக்கும் பிராம்மணர்களுக்கும் ஆசாரியர்களுக்கும் பணிவிடைசெய்பவனும் சத்தியந்தவறாதவனும் குற்றங்களில்லாதவனும் பசுக்களிடத்தும் பிராம்மணர்களிடத்தும் கோபமில்லாதவனும் தன்கடமையைவிடாமலிருப்பவனும் வாழ்நாளுள்ளவரையில் நல்லொழுக்கத்தையும் தானத்தையும் விடாமலிருப்பவனும் பிழைபொறுப்பவனும் சொல்லடக்கமும் ஐம்புலன்களினடக்

கமுமுள்ளவனும் தேவதாபக்தியுள்ளவனும் அதிதிகளெல்லாரையும் ஆதரிப்பவனும் தயையுள்ளவனுமாகிய குணமுள்ளமனிதன் ஆதியும் அந்தமுமில்லாத அந்தக் கோலோகத்திற்குச் செல்வான். பிறர்மனைவியைவிரும்புகிறவனும் குருஹத்திசெய்பவனும் பொய்பேசுகிறவனும் எப்போதும் பிறரைத்தூஷிப்பவனும் பிராம்மணரைப்பகைப்பவனும் மற்றுமிவ்வகைக்குற்றங்களுள்ள துராத்மாவும் அந்தக்கோவுலகத்தைக் காண்பதேயில்லை. ஸ்நேகிதனுக்குத்துரோகம்செய்பவன், வஞ்சகன், நன்றிகெட்டவன், [1] கள்வன், பொய்யன், தர்மத்தைப் பகைப்பவன், பிரம்மஹத்திசெய்பவன் இவர்கள் புண்ணியம்செய்தவர்களிருக்குமிடமாகிய கோவுலகத்தை மனத்தினால் சிந்திக்கவுமுடியாது. தேவேந்திரனே! இவற்றையெல்லாம் உனக்குத் தெளிவாகச் சொன்னேன். இந்திரனே! கோதானம்செய்துகொண்டிருப்பவர்கள் அடையும்பலனைக் கேள். தாயபாகமுதலியவழிகளாற்கிடைத்த தனங்களைக் கிரயமாகக்கொடுத்துப் பசுக்களைவாங்கித் தானம்செய்பவன் தன்புண்ணியத்தினால் சம்பாதிக்கப்பட்ட அழியாத உலகங்களைப் பொருள்கொடுத்து விலைக்குவாங்கினவற்றைப்போல அநுபவிப்பான். இந்திரனே! சூதாட்டத்தில்வென்று அடைந்தபொருளை விலையாகக் கொடுத்துப் பசுக்களைவாங்கித் தானம்செய்பவன் பதினாயிரம்தேவ வருஷங்கள் அந்தத்தானத்தின்பலனை அநுபவிப்பான். பங்குபிரித்துக்கொள்வதுமுதலிய நியாயவழிகளால் கிடைத்தபசுக்களைத் தானம் செய்தால் அவை தானம்செய்தவருக்கு என்றும் அழியாமல் விருத்தியாகும். சசியின்கணவனே! நியாயமனத்துடன் கோக்களைத்தானம் வாங்கி அவன் அவற்றைத் தானம்செய்வானாயின், அவனுக்கும் அழிவில்லாத உலகங்கள் நிச்சயமென்றறி. பிறந்ததுமுதல் சத்தியமே பேசியும் ஐம்புலன்களையும் அடக்கியும் பெரியோர்களையும்பிராம்மணர்களையும் ஆதரித்தும் பொறுத்துமிருப்பவனுக்கும் கோக்களுக்கும் கதியொன்றே. சசியின்கணவனே! பிராம்மணனைப்பார்த்துச் சொல்லத்தகாதசொல்லை ஒருகாலும் சொல்லலாகாது. மனத்தினாலும் கோக்களுக்குத் தீங்குநினைக்கலாகாது. இந்திரனே! இப்படிச் சத்தியத்தையும் தர்மத்தையும்விடாமல் [2] கோக்களுக்கு உபசாரம்செய்துகொண்டு அவற்றின்மேல்தயையோடிருப்பவனுக்கு உள்ளபலனைக்

[1] 'சக்தியுள்ளவனாயிருந்தும் வறுமையைச்சொல்லுகிறவன்' என்பது பழையவுரை.

[2] 'பசுக்கள்போலச் சேர்த்துவைத்துக் கொள்ளாமலிருந்துகொண்டு' என்பது பழையவுரை.

கேள். அவனுக்கு ஒருபசுவானது ஆயிரம்பசுக்களுக்குச்சமமாகிறது. இந்தக்குணங்களோடுகூடின க்ஷத்திரியனுக்குரிய பலனைக்கேள். அவனுக்கு ஒருபசு எழுநூற்றைம்பது பசுக்களுக்கு ஒப்பாகுமென்பது நிச்சயம். இந்தக்குணங்கள் வைசியனுக்கிருக்குமாயின், அவனுக்கு ஒருபசு ஐந்நூறுபசுக்களுக்கு ஒப்பாகும். இக்குணங்கள் பொருந்தின சூத்திரனுக்கு ஒருபசு ஆயிரத்தில் நாலில் ஒருபங்காகிய இருநூற்றைம்பது பசுக்களுக்குச்சமமாகச் சொல்லப்படுகிறது. சத்தியத்தைவிடாமலும், குருபணிவிடைசெய்துகொண்டும், மனவூக்கமும் பொறுமையும் தெய்வபக்தியும் அடக்கமும் தூய்மையும் அறிவும் தர்மமுமுள்ளவனாகி, நானென்றுபேசாமல் மேற்சொன்னதை ஊக்கத்துடன் அனுஷ்டிப்பவன் மேற்சொன்னமுறைப்படி நல்லபிராம்மணனுக்குக் கறக்கிறபசுவைத்தானம்செய்வதனால் பெரும்பயனைப் பெறுவான். நித்தியம் ஒருகாலம்போஜனம்செய்துகொண்டும் சத்தியத்தைவிடாமலும் குருசுசுரூஷைசெய்துகொண்டும் தானம்செய்யவேண்டும். இந்திரனே! வேதாத்தியயனம்செய்துகொண்டும் கோக்களிடம் பக்தியோடும் நித்தியம் கோதானம் செய்பவனும் தானம் செய்தபின் சந்தோஷமாயிருப்பவனும் பிறந்ததுமுதல் கோக்களுக்கு நமஸ்காரம்செய்பவனும் அடையும்பலனைச் சொல்லுகிறேன்; கேள். இதன்பலன் ராஜஸூயயாகம்செய்வதினால் உண்டாகும்பலனுக்கும் பொன்னைமிகுதியாகக்கொடுப்பதினால் உண்டாகும்பலனுக்கும் நிகரென்றும் மேற்பட்டதென்றும் ஸாதுக்கள் ஸித்தர்கள் ரிஷிகளனைவரும் சொல்லுகின்றனர். ஒன்றும்சாப்பிடாமல் தன் ஆகாரத்தில் முதல்பாகத்தை எடுத்துத் தினந்தோறும் பசுக்களுக்குக்கொடுப்பதாகிய கோவிரதம் ஒருவருஷம் எடுத்துக்கொண்டு சத்தியம்தவறாமல் கோபத்தையும் ஆசையையும்விட்டு நல்லொழுக்கத்தோடிருப்பவன் ஆயிரம் கோதானங்களின்புண்ணியத்தை அடைவான். பசுக்களின்மேலன்புவைத்துக் கோவிரதம் எடுத்திருப்பவன் ஒருவேளையாகாரம் சாப்பிட்டுக்கொண்டு அதன்முதல்பாகத்தைக் கோக்களுக்குப் பத்துவருஷம்கொடுத்தால் அது அளவற்றபுண்ணியமாகும். இந்திரனே! விலைக்குவாங்கினபசுவை ஏகபோஜனத்தோடிருந்து தானம்செய்பவன் அதின்ரோமங்களெவ்வளவிருக்கின்றனவோ அவ்வளவு நூறு பசுக்களின்தானபலனை நீண்டகாலம் அனுபவிப்பான். இது பிராம்மணனுக்குரியபலன். க்ஷத்திரியனுக்குரியபலனைக் கேள். க்ஷத்திரியனுக்கு ஐந்துவருஷகாலமும் வைசியனுக்கு அதிற்பாதிவருஷகாலமும் சூத்திரனுக்கு வைசியனிலும்பாதிக்காலமும் ஒருவேளை

போஜனத்தோடு மேற்சொன்ன கோவ்ரதம்செய்வதனால் அந்தப்பலன் உண்டாவதாகச் சொல்லப்படுகிறது. தன்னைவிற்றுப் பசுக்களைவாங்கித்தானம்செய்பவன் உலகத்தில் பசுக்கள் காணப்படும்வரையில் தானபலனை அனுபவிப்பான். சிறந்தபாக்கியமுள்ளவனே! பசுவினுடைய ஒவ்வொருரோமத்திலும் அழிவில்லாத உலகங்களிருப்பதாகச் சொல்லப்படுகின்றன. கௌசிகனே! யுத்தங்களில்வென்றுசம்பாதித்தபசுக்களைத் தானம்செய்தால் அவை தன்னைவிற்றுவாங்கினவற்றிற்கு ஒப்பானவை; அழியாதவையென்றறி. பசுக்களில்லாதபோது விரதம்தவறாமல் எள்ளையே பசுவுக்குப் பிரதியாகத் தானம்செய்பவன் பசுவினாலேயே நரகத்திலிருந்து கரையேற்றப்பட்டவனாகிப் பாலாற்றில் மகிழ்ந்திருப்பான். இந்தக்கோக்களைத் தானம்செய்வதுமாத்திரமே சிலாக்கியமன்று. வாங்கிக்கொள்பவனும் காலமும் பசுவின் சிறப்பும் நியமமும் வேண்டும். காலத்தையறிவதும் அக்னிக்கும் ஆதித்தனுக்கும் உள்ளவித்தியாஸம்போன்ற பிராமணர்களுக்குள்ள வித்யாஸத்தையறிவதும் கடினம். வேதாத்தியயனம் செய்தவனும் சுத்தமான பிறப்பும் மனவொழிவுமுள்ளவனும் யாகஞ்செய்பவனும் பாவத்திற்கு அஞ்சுகிறவனும் விரிவான அறிவுள்ளவனும் பசுக்களிடம் பொறுமையுள்ளவனும் அதிகக்கோபமில்லாதவனும் அதிதிகளைக்காப்பவனும் பொருளில்லாதவனுமாயிருப்பவன் தானத்திற்கு யோக்கியனென்று கூறுகின்றனர். ஆகாரமில்லாமல்மிகவருந்துகிறவன் திருப்தியடைவதற்காகவும் ஹோமத்திற்காகவும் பிரஸித்தஸ்திரீக்காகவும் குருதக்ஷிணைக்காகவும் குழந்தைவளர்ப்பதற்காகவும் சிறந்த இடத்திலும் காலத்திலும் கோதானம்செய்யவேண்டும். வீட்டில் உண்டானவையும் சரியான கிரயத்திற்குவாங்கப்பட்டவையும் கல்வியினால்கிடைத்தவையும் பராக்கிரமத்தினால் உயிரைக்கொடுத்து (சிரயப்பட்டு) வாங்கப்பட்டவையும் ஸ்திரீதனமாகக்கிடைத்தவையும் காப்பாற்றமுடியாமல் பிறரால்விடப்பட்டுக் காப்பாற்றப்படுவதற்கு வந்தவையுமாக இந்நல்வழியில்வந்த சிறந்தபசுக்கள் தானத்திற்குச் சிறந்தவைகள். பலமும் நல்லொழுக்கமும் இளம்பிராயமும் நல்லவாசனையுமுள்ள பசுக்களெல்லாம் சிறந்தவை. கங்கை எப்படி நதிகளிற்சிறந்ததோ அப்படி பசுக்களில் கபிலை சிறந்தது. மூன்றிராத்திரிகள் ஜலபானம்செய்து உபவாஸமாகத்தரையில் படுத்திருந்து திரயபத்தினிபோடப்பட்ட பசுக்களை, திருப்தியாகப் போஜனம்செய்விக்கப்பட்ட பிராமணர்களுக்குத் தானம்செய்யவேண்டும். பால்குடித்துப் பருத்தகன்றுகளுடனே நன்றாகஓடும்பசுக்களைத் தானம்செய்த பிறகு மூன்றுதினங்கள் பால்நெய்முதலிய கோவின்சாரங்

களையே ஆகாரமாகக் கொள்ளவேண்டும். நல்லொழுக்கமுள்ளதும் நன்றாகக்கறப்பதும் நல்லகன்றுள்ளதும் ஓடாததுமான பசுவைத் தானம்செய்வதினால் அந்தப்பசுவின்ரோமங்களெவ்வளவோ அவ்வளவு வருஷங்கள் மேலுலகத்தில் வஸிக்கலாம். அப்படியே நுகத்தடியை வகிப்பதும் கலப்பையையிழுப்பதும் இளம்பிராயமும் தேகவன்மையுமுள்ளதும் பழகினதும் பெரியஉற்சாகமுள்ளதுமாகிய எருதைப் பிராம்மணனுக்குத் தானமசெய்பவன் பத்துக்கோதானம்செய்வதினால் அடையும் உலகங்களை அடைகிறான். கௌசிகனே! பிராம்மணர்களையும் பசுக்களையும் கஷ்டத்தில்காப்பாற்றுகிறவன் க்ஷேமமாக எல்லாக் கஷ்டங்களிலிருந்தும் விடுபடுவான். அவன்புண்ணியபலனைக் கேள். அசுவமேதயாகத்திற்குச்சமமாக அழியாதபலன் உண்டாகும். இந்திரனே! அவன் இறக்குங்காலத்தில் எந்தநிலைமையை விரும்புவனோ அந்தநிலைமையையும் அனேகவிதமான சிறந்த உலகங்களையும் மற்றும் அவன் கருதினவையனைத்தையும் இந்த ஒருபுண்ணியகருமத்தினாலே அடைவான்; கோக்களினால்விடைகொடுக்கப்பெற்று எல்லா உலகங்களிலும் பூஜிக்கப்பெறுவான். இந்திரனே! முன்சொன்ன முறைப்படி புல்லையும் கோமயத்தையும் இலையையும் புசித்துக்கொண்டு ஆசையைவிட்டு நியமத்துடன் பரிசுத்தனாகிக் காடுகளில்பசுவைப்பின் தொடர்கிறவன் ஒன்றையும்விரும்பாமல் சந்தோஷமாக என்னுலகத்திலும் தனக்கிஷ்டமான எவ்வுலகங்களிலும் வஸிக்கலாம்' என்றார்.

## நூற்றேண்பதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

### (பிரம்மதேவர் சொல் தொடர்ச்சி.)

இந்திரன், 'புத்திபூர்வகமாகக் கோவைத்திருடிப் பொருளுக்காகவிற்பவனுக்கு என்னகதியென்பதை அறியவிரும்புகிறேன்' என்று கேட்க, பிரம்மா சொல்லலானார். 'தாம்சாப்பிடுதற்காகவும் விற்பதற்காகவும் பிராம்மணனுக்குத்தானம்செய்வதற்காகவும் கோவைத்திருடுகிறவர்கள் அடையும்பலனைக் கேள். மாமிசத்தைவிற்பதற்காகக் கோவைக்கொன்றாலும் அஞ்சாமல் அதைத்தின்றாலும் தின்னக்கருதிக்கொல்லுகிறவனை அனுசரித்திருந்தாலும் கொல்லுகிறவன் சாப்பிடுகிறவன் அதைஒப்புக்கொண்டிருப்பவன் இம்மூவரும் அந்தப் பசுவி

னுடம்பில் எத்தனைரோமங்களிருக்கின்றனவோ அத்தனைவருஷங்கள் நரகத்தில் மூழ்குவார்கள். பிராம்மணர்களின் யாகத்தைக்கெடுப்பதில் எப்படிப்பட்டபாவங்கள் உள்ளனவோ அப்படிப்பட்டபாவங்கள் கோவைவிற்பதிலும் திருடுவதிலும் இருப்பதாகச் சொல்லப்படுகின்றன. பசுவைத்திருடிப் பிராம்மணனுக்குத் தானம்செய்தால் தானத்தின்பலன் எவ்வளவோ அவ்வளவுநரகமும்உண்டாகும். சிறந்த சக்தியுள்ளவனே! கோதானத்திற்குப் பொன்னைத் தக்ஷிணையாகச் சொல்லுகின்றனர். தக்ஷிணைக்குப் பொன்னேசிறந்ததென்று நிச்சயமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. கோதானம்செய்பவன் முன்னேழு பின்னேழுதலைமுறைகளைக் கரையேற்றுகிறான். ஸுவர்ணம் தக்ஷிணைகொடுத்தால் அதற்கிரண்டுமடங்குபலன் கூறப்படுகிறது. இந்திரனே! பொன்னே சிறந்ததானம். பொன்னே சிறந்ததக்ஷிணை. பொன்னே பரிசுத்தங்களிலும் சிறந்தபரிசுத்தமென்று சொல்லப்படுகிறது. இந்திரனே! உயர்ந்ததங்கமானது குலத்தையேபரிசுத்தமாக்குகிறதென்று சொல்லுகின்றனர். சிறந்த மகிமையுள்ளவனே! தக்ஷிணையைப்பற்றித் தொகுத்துக்கூறினேன்' என்றுசொன்னார். பரதசிரேஷ்டனே! இது பிரம்மாவினால் இந்திரனுக்குக் கூறப்பட்டது; இந்திரன் தசரதருக்குச் சொன்னான்; தசரதர் தமது புத்திரரான ராமபிரானுக்குச் சொன்னார்; இராமபிரானும், சிறந்தபுகழ்பெற்றவரும் தம் அன்புள்ளசகோதரருமான லக்ஷ்மணருக்குச் சொன்னார்; ராஜனே! இளையபெருமாள் காட்டில்வஸிக்கும்போது ரிஷிகளுக்குச் சொன்னார். இப்படித் தொன்றுதொட்டுவந்த இந்த அருமையான விஷயத்தை உறுதியானதவமுள்ளரிஷிகளும தார்மிஷ்டரான அரசர்களும் உள்ளத்தில் வைத்தனர். யுதிஷ்டிர! இது என் உபாத்தியாயரால் எனக்கு உரைக்கப்பட்டது. இதைப் பிராம்மணர்களுடையகூட்டத்திலும் யாககாலத்திலும கோதானம்செய்யும்போதும் இரண்டுபேர் சேரும்போதும் சொல்லுகிறபிராம்மணருக்கு எப்போதும் தேவர்களோடுகூட இருப்பதற்குரிய அழிவில்லாத உலகங்கள் உண்டாகும். தேவர்க்கும்தேவரும் மகிமைபொருந்தியவருமான பிரம்மதேவர் இதைச்சொன்னார்" என்றார்.

## நூற்றுப்பத்தாவது அத்யாயம்.

## தானதர்ம பர்வம் (தொடர்ச்சி.)

(தவம், நியமம், ஓதல், அடக்கம், வேதத்தைமறவாமை, ஓதுவித்தல், வாங்காமலிருப்பது, தம்தம்கருமங்களில் சூராயிருப்பது முதலியவற்றின் பயன்.)

யுதிஷ்டிரர், "பிரபுவே! பிதாமஹரே! நீர் தர்மங்களைப்பற்றிச் சொன்னதினால் எனக்கு நம்பிக்கையுண்டாயிற்று. ஆனால், ஒரு சந்தேகம் கேட்கிறேன். அதை எனக்குச்சொல்லக்கடவீர். சிறந்தமகிமையுள்ளவரே! விரதங்களுக்கு என்னபலன் சொல்லப்பட்டிருக்கிறது? அது எப்படிப்பட்டது? தவங்களின்பலன் யாது? நல்லஓதலின் பயன் யாது? அடக்கத்தின்பலன் யாது? வேதங்களைமறவாமலிருப்பதின் பயன் என்ன? ஓதுவித்தலின்பயன் யாது? பிதாமஹரே! இவ்வுலகத்தில் தானம்வாங்குவதினால் என்னபலன்? தானம்கொடுப்பவனுக்குக் காணக்கூடியதும் சாஸ்திரத்தினால் தெரிந்துகொள்ளக்கூடியதுமானபயன் என்ன? தம் கர்மங்களைவிடாமலிருக்கும் சூரர்களுக்கு என்ன பலன்? சத்தியம்சொல்வதில்பலன் யாது? பிரமசாரிவிரதத்திற்குச்சொல்லப்பட்டபலன் என்ன? தந்தைக்கும் தாய்க்கும் ஆசாரியனுக்கும் பெரியோர்க்கும் பணிவிடைசெய்வதில் என்னபலன்? ஏழைகள்விஷயத்தில் தயைசெய்வதினால் என்னபயன்? தர்மந்தெரிந்த பிதாமஹரே! இவற்றையெல்லாம் முழுதும் உள்ளபடி அறியவிரும்புகிறேன். எனக்கு மிக்க ஆவலிருக்கிறது" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"ஒரு விரதத்தைச சாஸ்திரத்திற்சொன்னபடி செவ்வையாக ஆரம்பித்து அதைவிட்டுவிடாமல் குறித்தபடிமுடிப்பவனுக்கு அழியாத லோகங்களுள்ளன. ராஜனே! தவங்களின்பயன் இங்கே பிரத்தியக்ஷமாகக்காணப்படுகிறது. தவங்களுக்கும் யாகங்களுக்கும்பலன்தான் இப்போது உனக்குக்கிடைத்திருப்பது. நல்ல ஓதலின் பயனும் இம்மையிலும் மறுமையிலும் காணப்படுகிறது. அவன் இவ்வுலகத்தில் எப்போதும் பொருளுள்ளவனாகிறான்; பிரம்மலோகத்திலும் மகிழ்ந்திருக்கிறான். ராஜனே! அடக்கத்தின்பலனையும் என்னிடம்விரிவாகக்கேள். அடங்கினவர் எங்கும் இன்பமடைவர். புலன்களையடக்கினவர் என்றும் கவலையற்றிருப்பர். புலன்களையடக்கினவர் நினைத்த இடஞ்செல்வர். புலன்களையடக்கினவர் எல்லாப்பகைவரையும் அடக்

கினவராவர். அடங்கினவர் விரும்பினவற்றையடைவரென்பதில் ஸந்தேகமில்லை. பாண்டவனே! அடங்கினவருக்கு எல்லாவிடங்களிலும் நினைத்தவையெல்லாம் கைகூடும். தவத்தினாலும் பராக்கிரமத்தினாலும் தானங்களாலும் பலவகையாகங்களாலும் ஸ்வர்க்கத்தில் மகிழ்ந்திருப்பது எப்படியோ அப்படியே அடக்கமும்பொறுமையுமுள்ளவர்கள் மகிழ்ந்திருப்பர். தானத்திலுஞ்சிறந்தது அடக்கம். தாதாவானவன் பிராம்மணனுக்கு ஏதாவது ஒன்றைக்கொடுக்கும்போது கோபிப்பான்; அடக்கமுள்ளவன் கோபியான். ஆகையால், அடக்கம் தானத்திலும்சிறந்தது. கோபியாமல்கொடுப்பவனுக்கு அழியாத உலகங்களுள்ளன. கோபம் தானத்தைக் கெடுக்கிறதன்றோ? ஆதலால், கொடுப்பதிலும்சிறந்தது அடக்கம். மஹாராஜனே! ஆகாயத்தில் ரிஷிகளிருக்குமிடங்கள் கண்ணுக்குப்புலப்படாமல் பதினாயிரக்கணக்காக இருக்கின்றன. எல்லா உலகங்களிலுமுள்ளதேவர்கள் அவற்றிற்குப்போகின்றனர். ராஜனே! அந்தப்பெரியஸ்தானத்தைவிரும்புகிற மஹரிஷிகள் அடக்கத்தினாலேதான் அவ்வுலகங்களுக்குப் போகின்றனர். ஆதலால், தானத்திலும்பெரிது அடக்கம். வித்யாதானத்திற்கு மேலானதானமில்லை. வேதவித்தைகளின்பலன்பெரிது. கஷ்டப்பட்டுஓதுவிப்பவன் அழிவில்லாதபலனை அடைவான். ராஜனே! சாஸ்திரப்பிரகாரம் அக்நியில்ஹோமம்செய்தவனும வேதங்களைஓதித் தர்மந்தெரிந்தவர்களுக்கு அவற்றைக்கொடுப்பவனும் பிரம்மலோகத்தில்கொண்டாடப்படுவார். குருபணிவிடையைச் சிரத்தையோடுசெய்யும் சிஷ்யனும் ஸ்வர்க்கத்தில் பூஜிக்கப்படுவான். அத்தியயனத்திலும் யாகத்திலும் தானத்திலும் ஊக்கமுள்ளவனும் யுத்தத்தில்காப்பவனுமாகியக்ஷத்திரியனும் ஸ்வர்க்கத்தில் பூஜிக்கப்பெறுவான். வைசியன் தன்தர்மத்தைவிடாமல் தானம்செய்வதனால் பெரும்பயன்பெறுவான். தன்தர்மத்தைவிடாதசூத்திரன் மற்றவர்ணங்களுக்குப் பணிவிடை செய்வதனால் ஸ்வர்க்கத்தையடைவன். சூரர்கள் பலவகையாகச்சொல்லப்பட்டிருக்கின்றனர். அவர்களின்காரியங்களை என்னிடம்கேள். (விடாமல்சாதிப்பவரான) சூரர்களைச்சேர்ந்தவர்களுக்கும் சூரனுக்குள்ளபலனே கூறப்பட்டுள்ளது. மனிதர்கள்சிலர் யாகத்தில்சூரர்; சிலர் அடக்கத்தில்சூரர்; சிலர் ஸத்தியத்தில்சூரர்; அப்படியே சிலர் யுத்தத்தில்சூரராகச் சொல்லப்பட்டிருக்கின்றனர்; சிலர் தானத்தில் சூரர்; மற்றுஞ்சிலர் புத்தியிற்சூரர்; இன்னும்சிலர் பொறுமையிற்சூரர்; ஸாங்கியசாஸ்திரத்தில்சூரர் சிலர்; யோகத்தில்சூரர் இன்னமும்சிலர்; சிலர் வானப்பிரஸ்தாசிரமத்திலும் சிலர் கிருஹஸ்தாசிரமத்

மும் சிலர் ஸங்க்ராமத்திலும் சூரர்; சிலர் சாந்தகுணத்தோடு உள்ளும்புறமும் ஒத்து நடப்பதில் சூரர்; இன்னும் அநேகர் தந்தம்விரதங்களில் சூரர்களாயிருக்கின்றனர்; சிலர் வேதமோதுவதில் சூரர்; சிலர் ஓதுவிப்பதில் சூரர்; சிலர் குருபணிவிடையிலும் சிலர் பித்ருசுச்ரூஷையிலும் சிலர் மாத்ருசுச்ரூஷையிலும் சூரர்; மற்றுஞ்சிலர் பிக்ஷையெடுப்பதாகிய பிரம்மசரியஆசிரமத்தில் சூரர்; வீட்டிலும் காட்டிலும் அதிதிபூஜைசெய்வதில் சூரர் சிலர். இவரனைவரும் தம்கருமங்களின்வன்மையினால்ஜயிக்கப்பட்ட சிறந்தஉலகங்களை அடைகின்றனர். எல்லா வேதங்களையும்மறவாமலிருப்பதும் எல்லாத்தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்வதும் எப்போதும் ஸத்தியமேபேசுவதும் ஸரியாயிருக்கும்; அல்லது, [1]இல்லாமலுமிருக்கும். ஆயிரம்அசுவமேதங்களையும் ஸத்யத்தையும் தராசில்தூக்கினால் ஆயிரம் அசுவமேதங்களைப்பார்க்கிலும் ஸத்தியமே அதிகப்படும். ஸத்யத்தினால் ஸூர்யன் பிரகாசிக்கிறான். ஸத்தியத்தினால் அக்னி எரிகிறது. ஸத்தியத்தினால் காற்று வீசுகிறது. எல்லாம் ஸத்தியத்தில் நிற்கின்றன. ஸத்தியத்தினால் தேவர்களும் பித்ருக்களும் பிராம்மணர்களும் திருப்தியடைகின்றனர். ஸத்தியமே சிறந்ததர்மமென்று சொல்லுகின்றனர். ஆதலால், ஸத்தியத்தை விடலாகாது. ரிஷிகள் ஸத்தியத்திலேயே ஊக்கமுள்ளவர்கள். ரிஷிகள் ஸத்தியத்தையே சக்தியாகவுடையவர்கள். ரிஷிகள் ஸத்தியமே சபதமாகக்கொண்டவர்கள். ஆதலால், ஸத்தியம் சிறந்தது. பரதசிரேஷ்டனே! ஸத்தியமுள்ளவர்கள் ஸத்தியலோகத்தில் மகிழ்ந்திருக்கின்றனர். அடக்கத்தையும் ஸத்தியத்தின்பலனையும்பற்றி உனக்கு நான் முழுதும்சொன்னேன். மனஅடக்கமுள்ளவன் ஸ்வர்க்கத்தில் பூஜிக்கப்படுவது நிச்சயம். ராஜனே! பிரம்மசரியத்தின் குணத்தையும் நீ கேள். அரசனே! பிறந்ததுமுதல் இறக்கும்வரையில் பிரம்மசாரியாக இவ்வுலகத்திலிருப்பவனெவனோ அவனுக்குக் கிடைக்கத்தகாதது ஒன்றுமில்லையென்றறி. எப்போதும் ஸத்தியத்திலூக்கமும்அடக்கமுமுள்ளவரும் ஜிதேந்திரியருமான அநேகங்கோடிரிஷிகள் பிரம்மலோகத்திலிருக்கின்றனர். ராஜனே! நன்கு அநுஷ்டிக்கப்பட்டபிரம்மசாரிவிரதம் எல்லாப்பாவங்களையும் எரித்துவிடும். பிராம்மணனுக்கு இன்னம்விசேஷம். பிராம்மணன் அக்னியென்றுசொல்லப்படுகிறான். தவமுள்ளபிராம்மணர்களிடத்தில் இது பிரத்யக்ஷமாயிருக்கிறது. (வாலகில்யர்களான) பிரம்மசாரிகளின் கோபத்திற்கு இந்திரனும் பயப்படுகிறானன்றோ. அந்தப்பிரம்மசரியவிர

[1] ஸத்யம் அதிகமாயிருக்குமென்பது.

த்தின்பலன் இவ்வுலகத்தில் ரிஷிகளிடம் காணப்படுகிறது. தாய் தந்தையரைப்பூஜிப்பவனுடைய புண்ணியத்தையும் என்னிடம்கேள். அரசனே! தந்தை தாய் மூத்தோன் ஆசாரியன் இவர்களை ஒருகாலும் வெறுக்காமல் பணிவிடைசெய்பவனுக்கு ஸ்வர்க்கலோகத்தில் சிறந்தஸ்தானம் பயனென்றறி. குருத்ரோஹத்தைச்செய்யும் அடக்கமுள்ளவன் நரகத்தைக்காணான்" என்றார்.

## நூற்றுப்பதினோராவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (கோ. ...)

(ப்ருஹஸ்பதி மாந்தாதாவுக்கு கோதானத்தின்முறை சிறப்பு முதலியவற்றை உபதேசித்தது.)

யுதிஷ்டிரர், "அரசரே! கோதானத்தின் சிறந்தவிதியைப்பற்றித் தெளிவாகக்கேட்கவிரும்புகிறேன். எதனால் தான்விரும்பின சிறந்தலோகங்களை ஒருவன் அடைவான்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"பூமிக்கதிபதியே! கோதானத்திற்கு மேற்பட்டதொன்றுமில்லை. நியாயமாகக்கிடைத்தகோவானது தானஞ்செய்யப்பட்டால் உடனே குலத்தைக் கரையேற்றும். ராஜனே! ஸாதுக்களுக்காக முதலில் உண்டாக்கப்பட்டவிதிதான் உலகத்திலுள்ளஜனங்களெல்லாருக்கும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஆகலால், ஆதிகாலம்தொடங்கி நடந்துவந்திருக்கும்கோதானத்தின்முறையை முதலில் என்னிடம் கேள். முன்னம், பசுக்களைக்கொட்டிலுக்குள்ளிருக்கும்போது கோதானத்தில்ஸந்தேகபுத்தியுடன் மாந்தாதா என்னும் அரசன் கேட்டகேள்விக்குப் பிருஹஸ்பதி மறுமொழிகூறினார். அதாவது, 'பிராம்மணர்களைவரித்துப் பூஜித்துச் சாஸ்திரம்விதித்தகாலத்தில்உபவாஸமிருந்து நியமந்தவறாமல் தானம்செய்வதற்குச் சிவப்புப்பசுவை ஓட்டவேண்டும். 'அங்கங்கள் நிரம்பினவளே! அபிவிருத்தியடைகிறவளே!' என்று அந்தப்பசுவை விளிக்கவேண்டும். பசுக்களின்நடுவிற்சென்று, 'ஆவே என்தாய்; ரிஷபம் என்தந்தை; ஆகாயம் நானிருக்கும் கர்ப்பம்; பூமி எனக்குஆதாரம்' என்னும்மந்திரத்தைச்சொல்லி இவ்வகையானபக்தியுடன் இரவெல்லாம்பசுக்களிடத்திலேயேவஸித்துப் பிறகு கோதானம்செய்வதைப்பற்றியவாக்கைச் சொல்லவேண்டும். அவன் ஓரிரவு பசுக்களுடன்வேற்றுமையில்லாதஸிநேகத்தையும் அவற்றைப்

போலப் பூமியில்படுப்பதுமுதலிய விரதத்தையும்செய்து மன ஒற்றுமையை அடைவதனால் உடனே பாவத்திலிருந்துவிடுபடுவான். ஸூர்யோதயகாலத்தில் விருஷபத்தையும் கன்றையும் அவிழ்த்துவிட்டபிறகு அதைத் தானம்செய்யவேண்டும். அதனால், ஸ்வர்க்கத்தையடையலாம். உனக்கு அர்த்தவாதங்களென்னும் ஸ்தோத்திரங்களையும் ஆசீர்வாதமென்னும் பிரார்த்தனைகளையும் சொல்வேன். பலமுள்ளவையும் யாகத்தில் உறுதியானபுத்தியைத்தருகின்றவையும் அமிருதத்தைஉள்ளேவைத்திருப்பவையும் உலகத்திற்காதாரமானவையும் ஐசுவரியத்தின்முளைபோன்றவையும் எப்போதும் பலைப்பெருக்குகின்றவையுமாகப் பிரம்மாவினால்படைக்கப்பட்ட பசுக்களைச்சேர்ந்த எல்லாம அர்த்தவாதங்கள். 'சூரியனுக்கும் சந்திரனுக்கும் சொந்தமான ஆக்கள் என் பாவத்தைப்போக்கி என்னை ஸ்வர்க்கம்போகச்செய்யக்கடவன. என் தேகத்தைத் தாய்போலக் காப்பாற்றக்கடவன. மற்றும் நான்சொல்லாத எல்லா நன்மைகளும் எனக்கு உண்டாகக்கடவன' என்பவை ஆசீர்வாதங்கள். 'பசுக்களே! நீங்கள் ஸாரஸ்வதிகள்; நன்மைக்காகவே ஏற்பட்டவர்கள். நீங்கள் அனுக்கிரகம்வைத்து, நான் பிணிகளையும் வினைகளையும் தேகத்தையும் விடும்போது, எனக்கு எல்லாப்புண்ணிய பலன்களும் நிம்மினஸுகமான கதியை நீண்டகாலம் அளிக்கக்கடவீர்கள். நீங்களே நான் என்னுமெண்ணம் இப்போதுதான் உண்டாயிற்று உங்களைக்கொடுப்பதினால் நான் என்னையேகொடுத்தவனாகிறேன். மனத்திலிருந்துபுறப்பட்டு [1]மனத்திலேயே வந்துசேர்ந்தீர்கள். அழகானஉருவமும் சிறந்த [2]கறவையுமுள்ளவர்களாகி நீங்கள் என்னை விருத்திசெய்யக்கடவீர்கள்' என்னும் முன்னோரால்பார்க்கப்பட்ட இந்தவாக்கியத்தின் முன்பாகத்தைச் சாஸ்திரப்பிரகாரம் கோதானம்செய்பவன் தானம்செய்யுமுன் சொல்லவேண்டும். மிச்சமுள்ள பாகத்தைக்கோதானத்தின் முறையைஅறிந்துவாங்குகிற பிராம்மணன் பிறகு சொல்லவேண்டும். சரியானநியமத்துடன் அர்க்கியங்கொடுத்தபின் 'கோதானம்செய்யப்போகிறேன்' என்றுசொல்லவேண்டும். 'இந்தப்பசு விஷ்ணுவினுடையது. நீ இதை ஓட்டிக் காப்பாற்றவேண்டும்' என்று கட்டளையிடவேண்டும். அந்தப்பசுவின்பெயரைச் சொல்லவேண்டும். அந்தக் கொடுக்கப்பட்டபசு வாங்குகிறவன் வீட்டுக்குப்போகும்போது ஒவ்வோர் அடிக்கும் ஆறு எட்டு இரு

[1] 'மனப்பூர்வகமாய்க் கொடுக்கப்பட்டு மனபபூர்வகமாக வாங்கப்பட்டீர்கள்'

[2] 'தோஹா:' என்றபாடம் சொள்ளப்பட்

யும் முப்பதுஆயிரமாகத் தானபலன் முறையே அதிகப்படுவதை அறியவேண்டும். கொடுப்பவன் எல்லாப்பலன்களையும் எட்டாவது அடியில் அடைவான். கோதானம்செய்பவன் நல்லொழுக்கமுள்ளவன் யுத்தத்தில் பயமற்றவன் பூஜ்யர்களைப்பூஜிப்பவன் கேட்பவர் வேண்டின திரவியங்களைக் கொடுப்பவன் காலையில் எழுந்திருப்பவன் பாரதமறிந்தவன் இவர்கள் துயரப்படார். அவர்களுக்குப் பெயர்பெற்ற விஷ்ணு லோகமும் சந்திரலோகமும் வரும். கோதானஞ்செய்தபின் மூன்றிரவுகள் ஆவின்பால்முதலியவற்றையே புசிப்பதாகிய கோவ்ரதமிருக்க வேண்டும். மற்றொருராத்திரி பசுக்களுடன் வஸிக்கவேண்டும். விரதத்திற்காக நினைத்த அஷ்டமிமுதல் மூன்றிரவுகள் ஆவின்தயிர் நெய் முதலியவற்றையாகிலும் கோமயத்தையாகிலும் கோமூத்திரத்தையாகிலும் உண்டிருக்கவேண்டும். விருஷபதானம் செய்தால் தேவவிரதமுள்ளவனாவான். இரட்டை எருதுகளைத் தானம்செய்பவனுக்கு வேதங்களெல்லாம்வரும். கோதானத்தின் முறையையறிந்து கோதானத்தையே யாகமாக நினைத்துச் செய்பவன் சிறந்தலோகங்களை அடைவான் வேண்டினபடி கறக்கும்கோவைத் தானஞ்செய்பவன் பூமியிலுள்ள எல்லாப்போகங்களையும் ஒன்றுசேர்ந்துக்கொடுப்பவனாகிறான். அந்தப்பசுக்கள் தேவர்களுக்கும் பிதிருக்களுக்கும் உரியஹவிஸை மிகுதியாகப் பெருக்குகின்றவையாகும் விருஷபதானஞ்செய்வது கோதானத்திலும் சிறந்தது. மாணாக்கனல்லாதவனுக்கும் பிரம்மசர்யவிரதம் பூணாதவனுக்கும் சிரத்தையில்லாதவனுக்கும் கோணல்புத்தியுள்ளவனுக்கும் இதைச்சொல்லலாகாது. இந்தத் தர்மம் எல்லாஉலகங்களுக்கும் ரஹஸ்யம். இந்தத் தர்மத்தைக் கண்டபேரிடத்தில் சொல்லலாகாது. லோகத்தில், சிரத்தையுள்ள மனிதர்களுமிருக்கின்றனர்; ஈனர்களான *மனிதர்களென்னும் ராக்ஷஸர்களுமிருக்கின்றனர். நாஸ்திகத்தன்மையை அடைந்திருக்கும் புண்ணியமற்றவர்களுக்கு இதைக்கொடுப்பது சாஸ்திரஸம்மதமன்று' என்பது. ராஜனே! பிருஹஸ்பதிசொன்ன இந்தச்சொல்லைக்கேட்டுப் புண்ணியஞ்செய்யத் தொடங்கிக் கோதானங்களைச் செய்து நல்லலோகங்களையடைந்த அரசர்களைச் சொல்லுகிறேன்; கேள். உசீனரன், [1] விஷ்வகசுவன், ந்ருகன், பகீரதன், யுவனாசுவன்புத்திரனான பெயர்பெற்ற மாந்தாதா, முசுகுந்தன், பூரித்யும்னன், நைஷதன், ஸோமகன், புரூரவன், பாரதர்களெல்லாருக்கும் வம்சமுதல்வனான பரதசக்ரவர்த்தி, தசரதபுத்திரரும் வீரருமானராமர் இவர்களும் புகழ்பெற்ற மற்றுமுள்ள அநேக அரசர்களும்

[1] வேறுபாடம்.

கேட்கப்படுகின்றனர். பெருஞ்செய்கையுள்ளவனும் சாஸ்திரமறிந்தவனுமான திலீபராஜன் கோதானங்கள்செய்ததினாலேயே ஸ்வர்க்கத்தை அடைந்தான். மாந்தாதா, யாகதானங்கள் தவம் ராஜதர்மங்கள் கோதானங்கள் இவற்றைவிடாமலேயிருந்தான். குந்திபுத்திரனே! ஆதலால், நீயும் என்னால் உபதேசிக்கப்பட்ட இந்தப்ருஹஸ்பதிவாக்கியத்தை மறவாதே. கௌரவர்களுடைய ராஜ்யத்தையடைந்திருக்கும் நீ சிறந்த பசுக்களைப் பிராம்மணசிரேஷ்டருக்கு அன்புடன்கொடு" என்றார். இவ்வாறு கோதானத்தைப்பற்றிப் பீஷ்மரால் உபதேசிக்கப்பெற்ற தர்மபுத்ரரும் அவர்சொன்னதையெல்லாம் அப்படியே சாஸ்திரப்படிசெய்தார். அந்த அரசர் பிருகஸ்பதியினால் மாந்தாதாவுக்கு உபதேசிக்கப்பட்ட தர்மத்தை நன்குஅறிந்து நினைவில்வைத்தார். ஜனமேஜயராஜரே! ராஜசிரேஷ்டரான அந்தத்தர்மராஜர் கோதானம்செய்யும்போதெல்லாம் யவையரிசிநொய்களைக் கோமயத்துடன்சேர்த்து உட்கொண்டு மனத்தையடக்கி ஜடையைத்தரித்து விருஷபம்போலத் தரையில்படுத்திருந்தார். அந்த மன்னர் பசுக்களிடத்தில் எப்போதும் மனத்தில்பக்தியுள்ளவராகவும் பசுக்களையே எப்போதும் துதித்துக்கொண்டுமிருந்தார். அவர் சிறந்தகுதிரைகளிலேறிப் போகும்போதெல்லாம் தமது ஸ்தானத்தில் கோவையே வைத்தார்.

## நூற்றுப்பன்னிரண்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(கோதானத்தின்சிறப்பும், கபிலைப்பசுக்களின் வரலாறுமுதலியனவும்.)

பிறகு, சிறந்தபுத்தியுள்ள யுதிஷ்டிரராஜ அரசரான பீஷ்மரைப் பார்த்து வணக்கத்துடன், "பாரதரே! வீரரே! கோதானத்தின் குணங்களை மறுபடியும் எனக்குத் தெளிவாகச்சொல்லும். இப்படிப்பட்ட அமிருதத்தைக்கேட்பதில் எனக்குச் சலிப்பில்லை" என்று திரும்பவும் விரிவாகச்சொல்லும்படிகேட்டார். தர்மராஜரால் இவ்வாறு கேட்கப்பட்டபீஷ்மர், அப்போது கோதானத்திற்குச் சிறப்பாயுள்ள குணங்களை அவருக்குத் தெளிவாகச்சொல்லலானார். "கன்றுள்ளதும் குணமுள்ளதும் இளம்பிராயமாயிருப்பதுமான பசுவை வஸ்திரத்துடன் பிராம்மணனுக்குக்கொடுப்பதனால் எல்லாப்பாவங்களும் விலகிவிடும். [1] அஸுர்யங்களென்னும் லோகங்கள் பெயர்பெற்றிருக்கின்

---

[1] அஸுரருக்குரியவை; அல்லது, இருள்சூழ்ந்த நரகங்கள்.

றன. கோதானம்செய்பவன் அவ்வுலகங்களுக்குப்போகான். தண்ணீர் குடிப்பதும் புல்தின்பதும் [1] கடந்துபோய்ப் பால்வற்றிக் கர்ப்பமுண்டாகுந்திறமையற்று மூப்பும் நோயும்கொண்டு தளர்ந்து தண்ணீரில்லாதகிணறுபோன்ற பசுவைத் தானஞ்செய்து வாங்குகிறபிராம்மணனைக் கஷ்டப்படுத்துகிறவன் இருளான உலகத்தில் பிரவேசிப்பான். கோபமும் துஷ்டத்தனமும் நோயுமுள்ள பசுக்களையும் பலம்குறைந்த பசுக்களையும் விலைகொடாதபசுக்களையும் தானம்செய்யலாகாது. பிராம்மணனுக்கு வீண்கஷ்டங்களைக்கொடுப்பவன் எவனோ அவனுக்குச் சக்தியும்பயனுமில்லாத உலகங்கள்வரும். வலிமையும்அடக்கமும் கர்ப்பமுண்டாகும்சக்தியும் தேகத்தில் நல்லமணமுமுள்ள பசுக்களை யாவரும் சிலாகிக்கின்றனர். நதிகளில் கங்கை எப்படிச்சிறந்ததோ அப்படி பசுக்களில் கபிலைபசு சிறந்தது" என்றார்.

யுதிஷ்டிரர், "பொதுவாகப் பசுக்களைக்கொடுப்பது ஸமமாயிருக்க, கபிலையைக்கொடுப்பதைமட்டும் பெரியோர்சிலாகிப்பது எதனால்? [2] சிறந்தபிரபாவமுள்ளவரே! கபிலையின்சிறப்பைக் கேட்கவிரும்புகிறேன். நான் கேட்கத்தகுதியுள்ளவன். நீர் சொல்லத்திறமையுள்ளவர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார். "கபிலைகள் உண்டானதையும் அவை கபிலைநிறமாகச் செய்யப்பட்டதையும்பற்றிப் பெரியோர்கள்சொல்லக் கேட்டிருக்கிறேன். அதை முழுதும் உனக்குச்சொல்வேன். ஆதிகாலத்தில், தக்ஷரானவர் பிரம்மதேவரால் பிரஜைகளைப் படைக்கும்படி கட்டளையிடப்பட்டார். அவர் ஜனங்களின் இதத்தைக் கருதி அவர்களுக்கு ஜீவனத்தை முதலிற்செய்யத்தவறிப்போனார். பிரபுவே! தேவர்கள் அமிருதத்தைப்பற்றி ஜீவிப்பதுபோல, ஜனங்கள் அன்னத்தைப்பற்றி ஜீவிக்கின்றனர். தாவரப்பொருள்களினும் ஜங்கமங்கள் சிறந்தவை. ஜங்கமங்களில் மனிதர்கள் சிறந்தவர்கள். மனிதர்களில் ப்ராம்மணர்சிறந்தவர். ஏனெனில், யாகங்கள் அவர்களிடந்தாம் நிலைபெற்றிருக்கின்றன. யாகங்களினால் சந்திரன் போஷிக்கப்படுகிறான். அந்தச்சந்திரன் பசுக்களிடத்திலிருக்கிறான். பசுக்களால் தேவர்களும் சந்தோஷமடைகின்றனர். ஜனங்களின் ஜீவனமும் பசுக்களிடத்திலேயிருக்கிறது. அதனால், தக்ஷர்முதலியவர்களினால் பிரஜைகள் சிருஷ்டிசெய்யப்பட்டபோது அந்தப்பிரஜைகள் பசியினால் வருந்தி மனத்தில் நிச்சயம்செய்துகொண்டு பிரஜைகளுக்கெல்லாம் ஈசுவரரான பிரம்மதேவரிடம் ஓடின. பிராணிகள் பிறந்தவுடன் ஆகாரத்தை

[1] குடிக்கவும் தின்னவும் சக்தியில்லாமலென்பது.
[2] 'மஹாப்ரபாவ' என்றபாடம் கொள்ளப்பட்

விரும்பிக் கதறின; பசித்தவைகளாகி ஆகாரம் கொடுப்பவனைத் தந்தை தாய்களைப்போலத் தேடிப்போயின. பிரம்மதேவர் தாம் பிரஜை களைப்படைத்ததின் பயன் இவ்வகை செய்யவேண்டுமென மனத்தில் நினைத்துப் புஷ்டியைத்தருவதாகிய அமிர்தத்தை உடனே குடித்தார் பிரம்மதேவர் திருப்தியானமைதக்குறிப்பிக்கும்போது அந்தமணத்தி லிருந்து [1] ஸுரபியென்பது உண்டாயிற்று. பிரம்மாவின்வாயிலிருந்து பிறந்த அந்தநன்மணம் உலகங்களுக்குத்தாயும் இன்சுவையுள்ள ஆகா ரத்தைத்தருவதுமாகிய சுரபியென்னும்பெயருள்ள பெண்ணாகிய காம தேனுவைப் படைத்தது. அந்தக்காமதேனு முகத்திலிருந்து உண் டானதாகச் சொல்லப்படுகிறது. அந்தக்காமதேனுவானது பொன் போலப்பசுமைநிறமுள்ளவையும ஜனங்களுக்கு ஜீவனத்தைக்கொடுப் பவையும் உலகத்திற்குத்தாய்போன்றவையுமான பசுக்களைப் படைத் தது. அமிருதத்திற்பிறந்தவையும நான்குபக்கங்களிலும் அமிர்தத் தைப் பெருக்குகின்றவையுமான அந்தப்பசுக்களின் அமிருதத்திலிரு ந்து நதிகளின் அலைகளிலிருந்து உண்டாவதுபோல நுரையுண்டா யிற்று. கன்றுகளின்வாய்வழியேசோர்ந்த அந்தநுரை பூமியிலிருக் கும்சிவபெருமானதுசிரத்தில் விழுந்தது. அப்போது, அந்தப்பிரபு வானவர் கோபித்து நெற்றிக்கண்ணினால் கபிலைப்பசுக்களை எரிப்ப வர்போலப் பார்த்தார். ராஜனே! ருத்திரருடைய அக்கண்ணொளி யானது அக்கபிலைப்பசுக்களைச் சூரியன்மேகங்களைச் செய்வதுபோலப் பலநிறங்களாகச் செய்தது. அந்த இடத்திலிருந்துபோய்ச் சந்திர னைச்சேர்ந்திருந்தபசுக்கள்மட்டும் நிறம்மாறுபடாமல் பிறந்தபடி தம்நிறமா யிருந்தன. உடனே கோபிக்கசிவனைப்பார்த்துப் பிரமதேவர், 'நீர் அமிர்தத்தினால் அபிஷேகஞ்செய்யப்பட்டிருக்கிறீர். பசுக்களுக்கு எச்சிலில்லை. எப்படி சந்திரன் அமிர்தத்தையெடுத்துப் பொழிகின் றானோ அப்படியே அமிர்தத்திற்பிறந்த இந்தப்பசுக்கள் பாலைப்பெருக் குகின்றன. காற்றுக்கும் நெருப்புக்கும பொன்னுக்கும் கடலுக் கும் குற்றமில்லை. [2] அமிருதத்தினால்குடிக்கப்பட்ட அமிருதத்துக்கும் எச்சிலில்லை. கன்றுகளினால் பாலுக்கு எச்சிலில்லை. இந்தப்பசுக்கள் நெய்யினாலும் பாலினாலும் இவ்வுலகங்களைக் காப்பாற்றப்போகின்றன. இவற்றின் அமுதமாகிய சிறந்தசெல்வத்தை யாவரும் விரும்புவார்' என்றுசொன்னார். பாரதனே! உலகங்களைப்படைத்த பிரம்மதேவர் அந்தருத்திரருக்கு விருஷபத்தைக்கொடுத்து அதனால் அவர்மனத்தை

[1] நன்மணம்.

[2] அமிருதத்திலுண்டானகன்று பாலைக்குடித்ததென்பது

மகிழ்வித்தார். அப்போது மஹாதேவரும் மகிழ்ந்து அந்தவிருஷபத்தைக் கொடியாகவும் வாகனமாகவும் செய்துகொண்டார். அதனால், அவர் இடபக்கொடியரானார். அதன்பிறகு, மகாதேவர் தேவர்களால் பசுபதியாகச் செய்யப்பட்டார். அந்தவிருஷபக்கொடியர் கோக்களின்நடுவில் ஈசுவரராகச் சொல்லப்பட்டார். இப்படி நிறம் மாறுதசிறந்தசக்தியுள்ள கபிலைகளெல்லாம் தானத்திற்குமுதன்மையானவையென்று சொல்லப்படுகின்றன. உலகத்திற்குமுத்தவையும் உலகம் ஜீவிப்பதற்காக உண்டானவையும் ருத்திரரால்விருத்திபடைந்தவையும் சந்திரனுடைய அமிருதத்திலிருந்து உண்டானவையும் அன்புள்ளவையும் புண்ணியத்தையும் சுகத்தையும் உயிரையும் தருகின்றவையுமான கோக்களைத் தானஞ்செய்பவன் விரும்பினவற்றை யெல்லாம் கொடுத்தவனாவான். மங்களங்களை விரும்பிப் பரிசுத்தனாகவிருந்து கோக்களின் சிருஷ்டியைப்பற்றிய இந்தஉயர்ந்தசரித்திரத்தை நித்தியமாகப்படிக்குமனிதன் கலிகாலத்துப் பாவங்களினால் விடப்படுவான்; அன்புள்ள புத்திரர்களையும் பொருள்களையும் பசுக்களையும் எப்போதும் அடைவான். ராஜனே! ஹவ்யகவ்யங்கள், பசிதீர்த்தல், பாபநிவ்ருத்தி செய்யுங்கர்மங்கள், வாகனங்கள், வாஸனை, கிழவர்கள் குழந்தைகளின் திருப்தி இவை கோதானத்தினால் உண்டாகுமகுணங்கள். இவற்றையெல்லாம் கோதானஞ்செய்பவன் எப்போதுமடைந்திருப்பான்" என்றார். குந்திபுத்திரரான தர்மராஜர் பீஷ்மர் சொன்னசொல்லைக் கேட்டபிறகு, சகோதரர்களுடன் பிராம்மணோத்தமர்களுக்குப் பொன்னிறமானரிஷபங்களையும் பசுக்களையும் தானஞ்செய்யத்தொடங்கினார். புண்ணியலோகங்களை வசப்படுத்தவும் சிறந்தகீர்த்தியைப்பெறவும் யாகங்களைச்செய்து தக்ஷிணைகளுக்காகவும் பீஷ்மர் சொன்னபடியே அங்குள்ள பிராம்மணர்களுக்கு அநேகமாயிரங்களும் அநேகநூறுகளுமாகக் கோக்களைத் தானஞ்செய்தார்.

## நூறமப்பதின்மூன்றாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(வஸிஷ்டர் ஸௌதாஸனுக்குப் பசுக்களின் சிறப்பைக் கூறியது.)

ஜனமேஜயராஜனே! பீஷ்மர் அரசரான தர்மபுத்திரருக்கு இவ்வாறுசொல்லித் திரும்பவும் நிதர்சனத்துடன் பின்வருமாறு சொல்லலானார்.

"(நான்பெரியோரிடமிருந்துகேட்ட) இதேகாலத்தில் இக்ஷ்வாகு வம்சத்திற்பிறந்தவனும் பேசுவதிற்சிறந்தவனுமான ஸௌதாஸனென்னுமரசன் எல்லாலோகங்களிலும்ஸஞ்சரிப்பவரும் தவசித்திபெற்றவரும் வேதங்களுக்குப்பொக்கசமும் ஆதிகாலத்துரிஷிசிரேஷ்டரும் புரோகிதருமானவஸிஷ்டரை நமஸ்காரஞ்செய்து, 'குற்றமற்ற பகவானே! மூன்றுலோகங்களிலும் பரிசுத்தமென்று எதுசொல்லப்படுகிறது? மனிதன் எதை எப்போதும்உரைப்பதனால் சிறந்தபுண்ணியத்தையடைவான்?' என்றுகேட்டான். வணங்கின அவ்வரசனுக்கு வஸிஷ்டர் பரிசுத்தராகிக் கோக்களுக்கு அப்போது நமஸ்காரம்செய்து கோக்களின் ரகஸ்யஞானத்தைப்பற்றிய இனியசொல்லைச் சொல்லலானார். 'பசுக்கள் இனியமணமுள்ளவை; குங்கிலியம்போல மணப்பவை. பசுக்கள்தாம் பிராணிகளுக்கு ஆதாரம். பசுக்கள் மங்களங்களுக்குப் பெரியகாரணம். சென்றதும் வருவதும் பசுக்களே. பசுக்கள்தாம் அழியாத காப்பு. பசுக்கள் லக்ஷ்மிக்குவேர். பசுக்களுக்குக்கொடுத்தது அழிவதில்லை பசுக்கள் சிறந்தஅன்னம்; தேவர்களுக்குச் சிறந்தஹவிஸ் ஹோமமும் யாகமும் கோக்களிடத்திலேயே எப்பொழுதுமிருக்கின்றன. யாகத்தின்பயனும் பசுக்கள். யாகம்நிறைவேறுவதும் பசுக்களால். [1]வருவதும் நடந்ததும் பசுக்களே. [2]யாகங்கள் கோக்களிடத்தில் முடிவுபெறுகின்றன. சிறந்த பராக்கிரமமுள்ளவனே! புருஷசிரேஷ்டனே! ஒவ்வொருநாளும் ஹோமகாலங்களாகிய காலையிலும்மாலையிலும் ரிஷிகளுக்கு ஹோமத்திரவியத்தைப் பசுக்களே கொடுக்கின்றன. பிரபுவே! கோதானம் செய்பவர் எல்லாத்துயரங்களையும் தாம்செய்ததீவினைகளையும் பாவங்களையும் தாண்டுகின்றனர். பத்துப்பசுக்களுள்ளவன் ஒருபசுவையும் நூறுபசுக்களுள்ளவன் பத்துப்பசுக்களையும் ஆயிரம்பசுக்களுள்ளவன் நூறுபசுக்களையும் தானம்செய்யவேண்டும். அவர்களெல்லாருக்கும் பலன்ஒன்றுதான். நூறுபசுக்களிருந்து அக்நிஹோத்திரம் செய்யாதவன் ஆயிரம்பசுக்களிருந்துயாகம்செய்யாதவன் செல்வமிருந்துலோபியாயிருப்பவன் இம்மூவரும் பூஜைக்குரியரல்லர். நல்லொழுக்கமுள்ளகபிலையை வஸ்திரம்போர்த்துக் கன்றோடும் கறக்கும் வெண்கலப்பாத்திரத்தோடும் தானஞ்செய்பவர் இம்மைமறுமைஇரண்டுலகங்களையும் வசப்படுத்துகின்றனர். வீரனே! இளம்பிராயமுள்ளதும் இந்திரியசக்தியுள்ளதும் பசுக்கூட்டங்களுக்கதிபதியும் பெருங்

[1] முறையே காரியமும் காரணமும்.

[2] கோதானத்தினால யாகஞ்செய்தபலம உண்டாகுமென்பது.

கொம்புகளுடையதும் அலங்கரிக்கப்பட்டதுமான சிறந்த ரிஷபத்தை நூறுபசுக்களுடன் வேதமோதினபிராம்மணோத்தமனுக்குத் தானம் செய்பவர் ஒவ்வொருபிறப்பிலும் ஐசுவரியத்தையடைவார். பசுக்களின்பேர்சொல்லாமல் தூங்கலாகாது. பசுக்களை நினைத்துக்கொண்டே எழுந்திருக்கவேண்டும். மாலையிலும் காலையிலும் பசுக்களை நமஸ்கரிக்கவேண்டும். அதனால் செல்வம்பெறுவான். பசுக்களின்மூத்திரத்தையும் கோமயத்தையுங்கண்டு எவ்வகையிலும் அருவருக்கலாகாது. அவற்றின்மாமிசத்தை உண்ணலாகாது. அப்படியிருப்பதனால், பசுக்களின்மிகுதியை அடைவான். தினந்தோறும் பசுக்களின் பெயர்சொல்ல வேண்டும். பசுக்களை அவமதிக்கலாகாது. கெட்டகனவுகண்டபிறகு, கோவின்பெயரை மனிதன் சொல்லவேண்டும். எப்போதும் கோமயத்தைக்கொண்டு ஸ்நானம்செய்யவேண்டும். கோவின்எருமுட்டையின்மேல் படுக்கவேண்டும். அவற்றில்உமிழ்வதையும் ஜலமலங்களைவிடுவதையும் அவற்றைஒதுக்குவதையும் விட்டுவிடவேண்டும். நனைக்கப்பட்டபசுத்தோலில் மேற்குமுகமாக உட்கார்ந்துகொண்டு மௌனமாக நெய்யுடன் தரையிலுண்பவன் பசுக்கள் நிறைந்திருத்தலை எப்போதும் அடைவான். நெய்யினால் அக்கியில் ஹோமஞ்செய்யவேண்டும். நெய்யினால் [1]ஸ்வஸ்திவாசனங்களைச் செய்விக்கவேண்டும். நெய்யைத்தானம் செய்யவும் நெய்யைச்சாப்பிடவும்வேண்டும். அதனால், எப்போதும்பசுக்களின் பெருக்கத்தைஅடைவான். எல்லாரத்தினங்களுடனும் கலந்த எள்ளைப் பசுவுக்கு ப்ரதியாகக் கோமதியென்னும் மந்திரத்தினால் மந்திரித்துத் தானம்செய்பவன் செய்ததைப்பற்றியும் செய்யாததைப்பற்றியும் விசனப்படமாட்டான். [2]"பொன்கொம்புகளுள்ளவையும் பால்பொழிகின்றவையும் நன்மணமுள்ளவையும் காமதேனுவின்சந்ததிகளுமாகிய பசுக்கள்,நதிகள் கடலினிடம் சேருவதுபோல, என்னிடம் சேரக்கடவன. நான் எப்போதும் பசுக்களைப் பார்க்கக்கடவேன். என்னை எப்போதும் பசுக்கள் பார்க்கக்கடவன. பசுக்கள் நம்மைச்சார்ந்தவை. நாம் பசுக்களைச்சார்ந்தவர். பசுக்கள் எங்கேயிருக்கின்றனவோ அங்கே நாம் இருக்கிறோம்' என்னும் இதை ஸங்கடங்களிலும் மஹாபயங்களிலும் இரவும்பகலும் சொல்லுமமனிதன் பயங்களினின்றும் விடுபடுவான்.

---

[1] ஆதிபர்வம் 727 - ம் பக்கம் குறிப்பிற்காண்க
[2] கோமதிமந்திரம்.

## நூற்றுப்பதினான்காவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி)

(வஸிஷ்டர்சொல் தொடர்ச்சி.)

**வீரனே!** வெகுமானத்தைக்கொடுப்பவனே! முதலில் பசுக்கள் படைக்கப்பட்டபோது, 'இவ்வுலகத்தில் நாம் சிறந்திருக்கக்கடவோம். தக்ஷிணைகளெல்லாவற்றிலும் நாம் உத்தமதக்ஷிணைகளாகக்கடவோம். பாவங்களில் பற்றில்லாமலிருக்கக்கடவோம். நம்முடைய சாணத்தைக்கொண்டு ஸ்நாநம்செய்வதனால் ஜனங்கள் எப்போதும் பரிசுத்தராகக்கடவர். தேவர்களும் மனிதர்களும் ஜங்கமங்களும் தாவரங்களுமாகிய பிராணிகளெல்லாம் நமது சாணத்தினாலேயே சுத்தியைச்செய்துகொள்ளக்கடவன. நம்மைத்தானம்செய்பவர் நமது உலகங்களை அடையக்கடவர்' என்று நூறாயிரவருஷகாலம் செய்வதற்கு மிக அரியதவம்செய்தன. ஸ்வதந்திரரும் வரங்கொடுக்கச்சக்தியுள்ளவருமான பிரம்மதேவர் தவமுடிந்தபோது அந்தப்பசுக்களுக்கு, 'அப்படியேயாகட்டும். நீங்கள் உலகங்களைக் [1]காப்பாற்றுங்கள்' என்று வரமளித்தார். மஹாராஜனே! சென்றனவும் வருவனவுமாகிய சிறந்த உலகங்களுக்குத் தாய்களும் ஆதாரமுமாகிய பசுக்கள் தவமுடிவில் கருதினதுகைகூடி எழுந்தன. அதனால், பசுக்கள் சிறந்தமகிமையுள்ளவைகளென்றும் மிகசக்தமுள்ளவைகளென்றும் சொல்லப்படுகின்றன. அதனாலேயே அவை எல்லாப்பிராணிகட்கும் மேலேயிருந்தன. ஒத்த கன்றுள்ளதும் மிக்க பாலுள்ளதும் நல்லொழுக்கமுள்ளதுமான வெள்ளைப்பசுவை வஸ்திரம்போர்த்துத் தானம்செய்பவன் இந்திரலோகத்தில் பூஜிக்கப்பெறுவான். ஒத்தகன்றுள்ளதும் நிரம்பப்பாலுள்ளதும் நல்லொழுக்கமுள்ளதுமான கறுப்புப்பசுவை வஸ்திரம்போர்த்துத் தானம்செய்பவன் அக்கினிலோகத்தில் பூஜிக்கப்பெறுவான். ஒத்த கன்றுள்ளதும் நிரம்பப்பாலுள்ளதும் நல்லொழுக்கமுள்ளதுமான புகைநிறப்பசுவை வஸ்திரம்போர்த்துத் தானம்செய்பவன் யமனுலகில் பூஜிக்கப்பெறுவன். கன்றுள்ளதும் தண்ணீர் நுரைநிறமுள்ளதுமான பசுவை வஸ்திரம்போர்த்துக் கறக்க வெண்கலப்பாத்திரத்துடன் தானம்செய்பவன் வருணலோகத்தையடைவான். கன்றுள்ளதும காற்றிற்பறக்கும் தூசிநிறமுள்ளதுமான பசுவை வஸ்திரம்போர்த்துக் கறக்க வெண்கலப்பாத்திரத்தோடு தானம்

[1] கரையேற்றுங்கள்.

செய்பவன் வாயுலோகத்தில் பூஜிக்கப்படுவான். கன்றுள்ளதும் பொன்னிறமானதும் சிவந்த கண்களையுடையதுமான பசுவை வஸ்திரம்போர்த்துக் கறக்க வெண்கலப்பாத்திரத்துடன் தானம்செய்பவன் குபேரலோகத்தையடைவான். வைக்கோல்போன்ற மங்கின நிறமுள்ளதும் கன்றுள்ளதுமான பசுவை வஸ்திரம்போர்த்துக் கறக்கவெண்கலப்பாத்திரத்தோடு தானம்செய்பவன் பிதிருலோகத்தில் பூஜிக்கப்பெறுவான். கன்றுள்ளதும் அலைதாடியுள்ள கழுத்துள்ளதுமான பருத்தபசுவை அலங்காரம்செய்து தானம்செய்பவன் விசுவேதேவர்களுடைய துயரமில்லாத சிறந்தலோகத்தை அடைவான். ஒத்தகன்றுள்ளதும் மிக்கபாலுள்ளதும் நல்லொழுக்கமுள்ளதுமான பசுமைநிறப்பசுவை வஸ்திரம்போர்த்துத் தானம்செய்பவன் வஸுக்களோகத்தை அடைவான். கன்றுள்ளதும் வெள்ளைக்கம்பளி நிறமுள்ளதுமான பசுவை வஸ்திரம்போர்த்துக் கறக்கவெண்கலப்பாத்திரத்தோடு தானம்செய்பவன் ஸாத்யர்களின் லோகத்தைஅடைவான். ராஜனே! [1] பருத்தகொண்டையுள்ள விருஷபத்தை எல்லாரத்தினங்களாலும் அலங்கரித்துத் தானம்செய்பவன் ஸப்தமருத்துக்களின் லோகங்களை அடைவான். சிறந்தகன்றுள்ள கறுப்புப்பசுவை எல்லாரத்தினங்களோடும் தானம்செய்யும்மனிதன் கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் இருக்கும் உலகங்களை அடைவான். அலைதாடியுள்ள கழுத்துள்ள ரிஷபத்தை எல்லாரத்தினங்களாலும் அலங்கரித்துத் தானம்செய்பவன் துயரத்தைவிட்டுப் பிரம்மலோகத்தை அடைவான். அரசனே! கோதானத்தைச் செய்துகொண்டிருப்பவன் சூரியன் ஒளியாகப்பிரகாசிக்கின்ற விமானத்திலேறி ஆகாயத்தில் மேகங்களைப் பிளந்துகொண்டு செல்வான். கோதானம்செய்துகொண்டிருக்கும் புருஷசிரேஷ்டனை, அழகான அலங்காரங்களுள்ளவர்களும் அழகியநிதம்பங்களுள்ளவர்களுமான ஆயிரம் அப்ஸரஸுகள் ஸந்தோஷப்படுத்துவார்கள். வல்லகி என்னும் வீணைகளின் நாதங்களாலும் சிறந்தபெண்களின் காற்சிலம்பின் ஒலிகளாலும் நகைப்புக்களாலும் அவன் தூங்கி எழுந்திருப்பான். பசுவின்ரோமங்கள் எவ்வளவு இருக்கின்றனவோ அவ்வளவு வருஷங்கள் அவன் தேவலோகத்தில் பூஜிக்கப்படுவான்; ஸ்வர்க்கத்திலிருந்து விழுந்தபிறகும் மானிடவுலகத்தில் பெரியகுலத்தில்பிறந்து துன்பமில்லாமலிருப்பான்.

[1] 'வைராடப்ருஷ்டம்' என்பது மூலம்.

## எழுபத்தொன்றாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)



(வஸிஷ்டர்சொல் தொடர்ச்சி.)

நெய்யையும் பாலையும் கொடுப்பவையும் நெய்புண்டாக இடமானவையும் நெய்யென்றுசொல்லப்பட்ட அமிருதத்திலிருந்து உண்டானவையும் சுழல்களையுடைய நெய்யாறுகளுமான அந்தப்பசுக்கள் எப்போதும் என்வீட்டில் இருக்கக்கடவன. என்மார்பிலும் நாபியிலும் மற்ற எல்லாஅங்கங்களிலும் நெய்யே எப்போதும் இருக்கிறது. எப்போதும் எனக்கு முன்னும் பசுக்களே; பின்னும் பசுக்களே; என்னைச்சுற்றிலும் பசுக்களே. பசுக்களின்நடுவில் நான் வஸிக்கிறேன்' என்னும் மந்திரத்தை மனிதன் தினந்தோறும் காலைமாலைகளில் ஆசமனம்செய்து ஜபிக்கவேண்டும். ஒருதினத்தில் செய்யும்பாவத்திலிருந்து அவன் விடுபடுவான். ஆயிரம்கோதானம்செய்பவர், பொன்மாளிகைகளும் வற்றாதசெல்வங்களும் கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் எங்கிருக்கின்றனரோ அந்த உலகங்களுக்குப் போவர். ஆயிரம்கோதானம்செய்பவர் வெண்ணெயே சேறாகவும் பாலேநீராகவும் தயிரே பாசியாகவும்நிரம்பின நதிகள் எவ்வுலகங்களில் ஓடுகின்றனவோ அவ்வுலகங்களுக்குப்போவர். நூறாயிரம்கோதானம் சாஸ்திரப்படிசெய்பவன் மிகுந்தஸம்பத்தையடைந்து தேகம்விட்டபின் ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்பெறுவான். தாய்தந்தையர் இரண்டு குலங்களிலும் பத்துத்தலைமுறை பித்ருக்களைப் புண்ணியலோகத்தில் சேர்ப்பான். அந்த மனிதன் குலத்தையே பரிசுத்தம்செய்வான். பசு அளவாக எள்ளினாற்செய்த பசுவைக்கொடுப்பவன் யமலோகத்திலும் தண்ணீர்நிரம்பின தடாகங்களை அடைவான்; அவ்விடத்து யமயாதனையொன்றையும் அடையான். பரிசுத்தங்களிற் சிறந்தவையும் உலகத்துக்கு ஆதாரமும் தேவர்களுக்குத் தாய்களும் அறிவுக்கெட்டாத மகிமையுள்ளவையுமான பசுக்களுக்குச் சந்தனம்பூசிப் பிரதக்ஷிணஞ்செய்து காலத்தைப்பார்த்து யோக்கியனுக்குத் தானம்செய்யவேண்டும். கன்றுள்ளதும் பெருங்கொம்புகளுள்ளதும் கறக்க வெண்கலப் பாத்திரமுள்ளதுமான கபிலைப்பசுவை மேலேவஸ்திரம்போர்த்துத் தானம்செய்யும்மனிதன் புகுதற்கரிதான யமஸபையில் அச்சமில்லாமற்புகுவான். 'அழகானஉருவமுள்ளவையும் பல உருவங்களுள்ளவையும் உலகமெல்லாம் தாமாயிருப்பவையும் தாய்களுமான பசுக்கள் என்னிடம் வந்து

சோக்கடவன்' என்பதை நித்யகாலமும் சொல்லவேண்டும். இதைக் காட்டிலும் சிறந்த புண்ணியமான தானமும் இதன்பலனுக்கு மேற்பட்ட சிறந்த பலனும் பசுவிலும் சிறந்த பிராணியும் எவ்வுலகங்களிலுமிருப்பதில்லை. சர்மத்தினாலும் ரோமத்தினாலும் கொம்பினாலும் வாலினாலும் பாலினாலும் நெய்யினாலும் பசுக்கள் சேர்ந்து யாகத்தை நடத்துகின்றன. அவற்றினும் மேலானது என்ன இருக்கிறது? தாவரங்களும் ஜங்கமங்களுமாகிய இவ்வுலகமனைத்தும் எவற்றினால் சூழப்பட்டிருக்கிறதோ நடந்தவற்றிற்கும் வருபவற்றிற்கும் தாய்களான அந்தப் பசுக்களைத் தலையினால் வந்தனஞ்செய்கிறேன். அரசனே! பசுக்களின் குணங்களின்தொகுதியை ஏகதேசம் உனக்கு நான் சொன்னேன். இவ்வுலகத்தில் கோதானத்திற்குமேலானதானமில்லை. கோக்களைவிட வேறுசிறந்த தஞ்சமுமில்லை' என்றார். மகாத்மாவான ஸௌதாஸனென்னும் அரசன் வஸிஷ்டமகரிஷியின் சிறந்தசொல்லைக் கேட்டு அதுசிறந்ததென்று நினைத்துப் பிறகு, மனவுறுதியுடன் பிராம்மணர்களுக்குக் கோதானங்களை மிகுதியாகக்கொடுத்துச் சிறந்த லோகங்களையும் அடைந்தான்'' என்றார்.

## நூற்றுப்பதினாறாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(வ்யாஸர் கோக்களின் சிறப்பைச் சுருக்கிச்சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! பரிசுத்தங்களிலும் பரிசுத்தமும் உலகத்தில் மிகச்சிறந்ததும் சிறந்தபுண்யமுமாயிருப்பது எது? அதை எனக்குச் சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"பசுக்கள்தாம் சிறந்த பலனைத்தருகின்றவை; புண்ணியமானவை. அவை மனிதர்களைக் கரையேற்றுகின்றன. நெய்யினாலும் பாலினாலும் இந்தப்பிரஜைகளைக் காப்பாற்றுகின்றன. பரதசிரேஷ்டனே! பசுக்களினும்சிறந்த புண்ணியமானபொருள் ஒன்றுமில்லை. இவை புண்ணியத்தைத் தருகின்றவை; பரிசுத்தப்படுத்துகின்றவை. மூவுலகங்களிலும் எல்லாவற்றிலும் சிறந்தவை. தேவர்களுக்குமேலும் பசுக்கள்தாம் இருக்கின்றன. ஞானமுள்ளவர்கள் கோதானஞ்செய்துதான் குலத்தைக்கரையேற்றித் தாமும் ஸ்வர்க்கத்திற்குப் போகின்றனர். யுவனாசுவன்புத்ரனாகிய மாந்தாதாவும் யயாதியும் நஹுஷனும் ஆயி

ரக்கணக்கும் நூற்றுக்கணக்குமான கோதானம்செய்துதான் தேவர்களுக்கும்கிடைக்காத மேலானஉலகத்தை அடைந்தனர். குற்றமற்றவனே! இவ்விஷயத்தில் முன்னம்நடந்த சரித்திரத்தையும் உனக்குச் சொல்வேன். சிறந்தஞானமுள்ளசுகமகரிஷி பரிசுத்தராகி நித்தியாநுஷ்டானங்களைமுடித்துக்கொண்டு மன அடக்கத்துடன் ரிஷிகளிற் சிறந்தவரும் உலகத்திலுள்ள பெருமைசிறுமைகளைக் கண்டறிந்தவரும் தம்தந்தையுமான வ்யாஸரை நமஸ்கரித்துக் கேட்கத்தொடங்கினர். 'மகரிஷியே! ப்ரபுவே! எது எல்லாயாகங்களிலும் சிறந்தயாகமாக அறியப்படுகிறது? அறிஞர்கள் எதைச்செய்து சிறந்தநிலைமையைப் பெறுகின்றனர். தேவர்களும் எந்தப்புண்ணியகர்மத்தினல் ஸ்வர்க்க ஸுகத்தை அநுபவிக்கின்றனர்? யாகம்பூர்த்தியாவது எதனல்? யாகத்துக்கு ஆதாரம் யாது? தானங்களிற்சிறந்தது எது? ஸத்ரயாகங்களுள்சிறந்தது எது? சுத்தங்களிலும் சுத்தம் எது? இவற்றைச் சொல்லக்கடவீர்' என்றார். பரதசிரேஷ்டனே! தர்மந்தெரிந்தவர்களிற்சிறந்தவரான வ்யாஸர், இந்தச்சொல்லைக்கேட்டுத் தம்புத்திரருக்கு எல்லாவற்றையும் தெளிவாகச்சொல்லலானர். 'கோக்கள் பிராணிகளுக்கு ஆதாரம். கோக்களே சிறந்ததஞ்சம். கோக்கள் புண்ணியமானவை; சுத்தமானவை. கோதானமே பாவங்களைப்போக்குவது. ஆதிகாலத்தில் பசுக்கள் கொம்பில்லாமலிருந்தனவென்றுகேட்டிருக்கிறோம். அவைகள் கொம்பைவேண்டி, அழிவில்லாத பிரபுவான பிரம்மதேவரை உபாஸனைசெய்தனவாம். அங்ஙனம், ஸத்ரயாகம்செய்துகொண்டிருந்த அந்தப்பசுக்களைக்கண்டு பிரபுவானபிரம்மதேவர் அவைகளில் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே வரத்தைக் கொடுத்தார். அவற்றுள் எவற்றிற்கு எப்படிவிருப்பமோ அப்படி கொம்புகளுண்டாயின. புத்ரனே! பிரம்மாவினிடம் வரம்பெற்ற அந்தப்பலநிறமுள்ள பசுக்கள் சிறந்தகொம்புகளோடும் ஹவ்யகவ்யங்களையும் மங்களங்களையும் பரிசுத்தத்தையும் சிறந்தபுண்ணியத்தையும் பாக்கியத்தையும் கொடுப்பவையாகவும் சிறந்தஉருவமும் லக்ஷணங்களும்பொருந்தியவையாகவும் விளங்கின. பசுக்கள் சிறந்ததேவசக்தியுள்ளவை. கோதானம் ஸ்லாக்கியம். எந்தஸாதுக்கள் கோபமில்லாமல் கோதானம்செய்கின்றனரோ அவர்கள்தாம் புண்ணியம்செய்தவர்களாகவும் எல்லாத்தானமும் செய்தவர்களாகவும் சொல்லப்பட்டிருக்கின்றனர்; குற்றமற்றவனே! பிராம்மணோத்தமனே! (அவர்கள்) எங்கே மரங்கள் உயர்ந்த மலர்களையும் கனிகளையும் அடைந்திருக்கின்றனவோ, கனிகள் தேன்மயமானவையும் மலர்கள் சிறந்தநன்மணமுள்ளவையும் தேவர்க

ளுக்கு உரியவையுமாயிருக்கின்றனவோ அந்தப்புண்ணியமான கோலோகத்தையும் அடைவர். அங்கே பூமியெல்லாம் ரத்னமயமானது; முழுதும்பொன்மணல்களுள்ளவையும் எல்லாருதுக்களிலும் தொடுவதற்கு இனிமையானவையும் சேறில்லாதவையும் அழுக்கில்லாதவையும் இளம்சூரியனைப்போலப் பிரகாசிக்கும்பொன்மயமும் ரத்னமயமுமான செந்தாமரைமலர்வனங்களால் அழகியவையுமான தடாகங்கள் விளங்குகின்றன. அங்குள்ளநதிகள் மிக்கவிலைபெற்ற ரத்னஇதழ்களும் பொன்மயமாகப் பிரகாசிக்கும் கேஸரங்களுமுள்ள கருநெய்தல்களும் தாமரைமலர்களும்நிரம்பின மடுக்களினாலும் பூத்தஅலரிக்காடுகளினாலும் ஸகஸ்ராவர்த்தமென்னும் மரங்களினாலும் புஷ்பித்தகற்பகவிருக்ஷங்களினாலும் உயர்ந்தஒளியுள்ளவையும் குற்றமற்றவையுமான முத்துக்களாலும் ரத்னங்களாலும் கரைகளில் அலங்கரிக்கப்பட்டவையும் பொன்மயமும் உன்னதமுமான மணற்குன்றுகளுள்ளவையுமாக விளங்குகின்றன. எல்லாரத்னங்களும்சேர்ந்து பலநிறங்களாயிருப்பவைசிலவும் பொன்மயமாக அக்னியைப்போலப்பிரகாசிப்பவைமற்றும்சிலவுமாயிருக்கும் உயர்ந்தமரங்களுள்ளவையும் ரத்னமயமும் உன்னதமுமாகிய அழகியகொடுமுடிகளோடுகூடியவையுமான பொன்மலைகளும் முத்துமலைகளும் ரத்னமலைகளும் அங்கேயிருக்கின்றன.[1] அங்குள்ளமரங்கள் எக்காலமும் பூக்களும்கனிகளுமுள்ளவையாகவும் பக்ஷிகள்நிரம்பினவையாகவும் இருக்கின்றன. அவற்றின்புஷ்பங்களின்மணமும் கனிகளின்சுவையும் மிகச்சிறந்தவை புண்ணியகருமம்செய்தவர்கள் அங்கே எக்காலமும் விளையாடிக்கொண்டிருக்கின்றனர். புண்ணியம்செய்து புகழ்பெற்றவர்கள் விரும்பினவற்றையெல்லாம் நிரம்பப்பெற்று விசனமும்கோபமுமற்றவர்களாகி விசித்திரமும் அழகுள்ளவையுமான விமானங்களில் ஏறித் திரிந்துகொண்டு மகிழ்கின்றனர். சிறந்தஅப்ஸரஸுகள் கூட்டங்களாக அவர்களுடன் விளையாடுகின்றனர். கோதானம்செய்பவன் இப்படிப்பட்ட உலகங்களை அடைவான். ஓ! பிராம்மணனே! 'எவற்றிற்கு ஸூர்யன் ராஜாவோ, பலத்திற்குப் பலசாலியானவாயுவும் ஐசுவரியத்திற்குவருணனும் அதிபதிகளோ காலத்தைத்தாங்குகின்றவையும் அழகானஉருவமுள்ளவையும் பல நிறங்களுள்ளவையும் உலகத்திற்குக் காரணமாயிருக்கும் தாய்களும் பிரம்மதேவருடைய அநுக்கிரகம்பெற்றவைகளுமான அந்தக் கோக்கள் என்னைக்காக்கக்கடவன' என்பதைத் தினந்தோறும் நிய

[1] இங்கு, பீஷ்மர் யுதிஷ்டிரரை விளித்தனவாயுள்ள விளிகள் விடப்பட்டன.

மத்துடன் ஜபம்செய்யவேண்டும். பசுக்களை உபசரித்துக் கூடவே பின்செல்லுகிறவனுக்கு அவை ஸந்தோஷமடைந்து பெறுதற்குமிக்க அரியனவாகிய வரங்களையும அளிக்கும். மனத்தாலும் பசுக்களுக்குத் தீங்கைநினைக்கலாகாது. அவைகள் தாமே ஸுகத்தைத் தருகின்றவை. அவற்றை எப்பொழுதும் பூஜிக்கவும் நமஸ்கரிக்கவும்வேண்டும். அடக்கத்துடன் எப்போதும் பசுக்களிடம் அன்புவைத்திருப்பவன் பலனை அடைவான். உஷ்ணமான மூத்திரத்தை மூன்றுதினங்களும் கறந்தவுடன் உஷ்ணமானபாலை மூன்றுதினங்களும் குடிக்கவேண்டும். உஷ்ணமானபாலைக் குடித்தபிறகு மூன்றுதினங்கள் உஷ்ணமானநெய்யைக் குடிக்கவேண்டும். மூன்றுதினங்கள் உஷ்ணமான நெய்யைக் குடித்துப் பிறகு மூன்றுதினங்கள் வாயுபக்ஷணம் செய்துகொண்டிருக்கவேண்டும். இந்தப் பரிசுத்தத்தினாலேதான் தேவர்கள் உத்தமமான உலகங்களை அநுபவிக்கின்றனர். பரிசுத்தங்களிலும் பரிசுத்தமான அந்தநெய்யைச் சிரசில்வகிக்கவேண்டும். நெய்யை அக்னியில் ஹோமம்செய்யவேண்டும். பசுவின்நெய்யினால் [1] ஸ்வஸ்திவாசனம் செய்யவேண்டும். பசுவின்நெய்யை உட்கொள்ளவேண்டும். பசுவின்நெய்யைக் கொடுக்கவேண்டும். அதனால் செல்வத்தையடைவான். [2] கோமயங்களிலிருந்து யவங்களென்னும் அரிசியைஅரித்து எடுத்து அவற்றைப்பாகம்செய்து ஒருமாதம் ஆஹாரம்செய்வதனால் பிரம்மஹத்திக்குச்சமமான பாவங்களனைத்தும் விலகும். அஸுரர்களை ஜயிப்பதற்காகத் தேவர்கள் செய்துகொண்ட சுத்தம் இதுதான். அந்தத்தேவர்கள் தேவராஜ்யத்தையும் மிகுந்தபலத்தையும் அடைந்தனர். கோக்கள் சுத்தமானவை. கோக்கள் புண்ணியமானவை; பாவங்களைப்போக்குபவற்றுளெல்லாம் சிறந்தவை. அவற்றைப் பிராம்மணர்களுக்குத் தானமசெய்வதனால் மனிதன் ஸ்வர்க்கம்அடைவான். பரிசுத்தனாகப் பசுக்களின் நடுவிலிருந்து கோமதியென்னும் மந்திரத்தை மனத்தில்ஜபித்துப் பரிசுத்தமான ஜலத்தினால் ஆசமனம்செய்வதனால் பாவங்கள்போய்ப் பரிசுத்தனாவான். வித்யைகளையும் பிரம்மசாரிவிரதத்தையும் முடித்து ஸ்நாநம்செய்து (யாகமுதலிய) ஸத்கருமங்களைச்செய்யும் பிராம்மணர்கள் யாகத்துக்கொப்பான கோமதியென்னும் மந்திரத்தை அக்னிகளின்நடுவிலும் கோக்களின் நடுவிலும் பிராம்மணர்நடுவிலும் தம்சிஷ்யர்களுக்கு உபதேசிக்க வேண்

---

[1] நெய்யைத் தக்ஷிணையாகக்கொடுக்கவேண்டுமென்பது.

[2] பசுக்களுக்கு யவங்களை ஆகாரமாகக்கொடுத்து அவற்றின் சாணத்திலிருந்து அவற்றை எடுக்கவேண்டுமென்பது

டும். மூன்றுநாள் உபவாஸமிருந்து கோமதியென்னும்மந்திரத்தை அடைபவர் புத்திரனைவிரும்பினால் புத்திரனையும் தனத்தைவிரும்பினால் தனத்தையும் நல்லகணவனைவிரும்பியபெண் நல்லகணவனையும் மற்றுமுள்ளஎல்லாவிருப்பங்களையும் அடைவர். பூஜிக்கப்படுவதனால் ஸந்தோஷம் அடைந்தகோக்கள் விரும்பியவற்றையெல்லாம் கொடுக்குமென்பதில் ஸந்தேகமில்லை. இந்தக்கோக்கள் இவ்வாறு சிறந்தமகிமையுள்ளவை; யாகத்துக்குரியவை; விரும்பினவற்றைஎல்லாம் கொடுக்கின்றவை; விருத்தியாகின்றவை; இவற்றிற்குமேல் ஒன்றுமில்லையென்று அறி'என்றார். மஹாத்மாவானபிதாவினால் இவ்வாறு சொல்லப்பெற்ற சிறந்தமஹிமையுள்ள சுகர் நித்தியமாகக் கோக்களைப் பூஜித்தார். ஆதலால், நீயும் பூஜிக்கக்கடவாய்" என்றார்.

## நூற்றுப்பதினேழாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(கோலோகம் எல்லாவற்றிற்கும்மேலிருப்பதன் காரணமுதலியன.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! பகவானனபிரமமதேவர் தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் மற்றப்பிராணிகளுக்கும் ஈசுவரர்; எல்லாவற்றையும் படைத்தவர்; பூமியிலும் முனிவர்களால் துதிக்கப்படுகிறார். அவருக்குமேல் இந்தக்கோலோகம் நிலைபெற்றிருப்பது எப்படி? எனக்கு இது பெரியஸந்தேகமாயிருக்கிறது. இதனை எனக்கு உரைக்கக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"கௌரவச்ரேஷ்டனே! உன்னுடையமனமும் வாக்கும் பக்தியும் முழுதும் ஒன்றிலேயே இருக்கின்றன. ஆதலால், எல்லாவற்றிலும்சிறந்தகோவின்சிறப்பை முழுதும் என்னிடம் கேள். அது புண்ணியத்தையும் புகழையும் ஆயுளையும் மங்களத்தையும் தருமவற்றுள் சிறந்தது. கோக்களிடம்பற்றுள்ளவருடையகீர்த்தி கோலோகத்தில் பரவும். பாரதனே! மகாத்துமாக்களான மகரிஷிகளிருக்கும் இடங்களிலும் எல்லாலோகங்களுக்கும் தேவர்களுக்கும் உத்பத்திஸ்தானங்களிலும் தேவபூஜைக்காகவும் அமிருதத்துக்காகவும் யாகங்களுக்குக்காகவும் ஸுரபியென்னும்பசு இருப்பதாகப் புராணங்களில் கேட்கிறோம். பிரம்மதேவர், ஆதிகாலத்தில் மனஉறுதியோடு உக்கிரமான தவஞ்செய்து அமிருதத்தின்உருவமாகி நினைத்தஉருவமெடுக்கும் அந்தச்சுரபியென்னும்கோவை உண்டுபண்ணினார்; திரும்பவும் மூட்டப்

பட்ட அக்னிபோல ஜ்வலிக்கின்ற தேகமுள்ள புருஷனையும் தம் சக்தியி ஞலும் தவத்திஞலும் படைத்தார். அப்போது அந்தப் புருஷன், விரும்பத்தக்க உருவமுள்ள அந்த ஸுரபியென்னும் கோவைப் பார்த் தான்; பார்த்தவுடன், காமத்திஞல் மயங்கித் துயரமடைந்தான். உலகங் களைப் படைத்தவராகிய பிரம்மதேவர் அவன் காமத்திஞல் வருந்து கிறதையறிந்து, 'நீ துயரப்படாதே' என்றுசொன்ஞர். அதஞல், அந்த மகிமைபெற்ற புருஷன் [1] மார்த்தாண்டனென்று பெயர்பெற்ருன். அவன் அதிகமாகத் துயரப்பட்டதை அறிந்து, பிரம்மதேவர் அவ னுக்கு அந்தப் பெயரிட்டார். அந்த ப்ரம்மதேவர் மஹாத்மாவான அந்த மார்த்தாண்டனென்னும ஸூர்யனுக்குத் தவமும் மகிமையும் உருக்கொண்டவளும் மிக்க அழகும் மங்களமுமுள்ளவளுமான ஸுரபி யென்னும் கன்னிகையைக் கொடுத்தார். 'நீயும் என்ஞல் உண்டாஞய் இந்தச் சுரபியும் என்ஞலுண்டானது. நீங்களிருவரும் மணம் செய்து கொண்டீர்கள். ஆதலால், ஸந்ததியுண்டாகும். உங்கள் ஸந்ததி புண் ணியமுள்ளதும் மிகப் பரிசுத்தமுள்ளதுமாயிருக்கும். சேரத்தகாதவ ளைச் சேருவதஞல் உனக்கு ஒருகாலும் குற்றமுண்டாகாது. உன் ஸந்ததியிடமுண்டாகும்பால் சிறந்த ஹோமத்திரவியமாகும். உன் ஸந்ததி காரணமாகத்தான் யாகங்களிலும் நெய் தேவர்களுக்குப் பாக மாக விதிக்கப்படும். ஓ! ரோகிணியே! உன் ஸந்ததிகளுக்குப் பணி விடைசெய்துகொண்டிருப்பவர்கள் அந்தப் புண்ணியத்திஞலேயே கோலோகம் சேருவர். இது ரிஷபமென்னும் பெயருள்ள மிகப் பரிசுத்த மான மந்திரம். உலகத்திலுள்ள பிராம்மணர்கள், இதை எப்போதறிந் தாலும் ஜாதிஸங்கரதோஷத்திலிருந்து விடுபடுவர். மந்திரங்கள் பிராம் மணங்களென்னும் வேதபாகங்களிஞல் பரிசுத்தமானவையும் ஹவ்ய கவ்யங்களை முன்னிட்டவையுமான தேவகார்யங்களும் பித்ருகார்யங் களும் இந்த உன் ஸந்ததியிஞலேயே நடக்கும். ரோகிணியே! இந்தப் புண்ணியத்திஞல் உன்னுடைய ஸந்ததிகள் என்னுலகத்துக்குமேலும் யாதொரு தீங்குமின்றியிருக்கும். உனக்கும் உன் ஸந்ததிகளுக்கும் க்ஷேமமுண்டாகட்டும். உன் வம்சத்தில்பிறந்த பிள்ளைகள் நுகத் தடிகளைப் பொறுத்து உலகத்தைக் காப்பாற்றக்கடவன. நீ எந்த எந்த லோகங்களை நினைத்தாலும் அவற்றிற்கெல்லாம் செல்லலாம். தேவக் கூட்டங்களெல்லாம் உன்னுடைய ஸ்தனங்களில் உண்டாகும் உத்தம மான அம்ருதத்தைக்குடித்து உன் புத்திரர்களாகும்' என்ருர்.

[1] அண்டமென்னும் கோளத்துக்கதிபதியே! ஆர்த்தஞக (துயரப்படுகிற வஞக) மா (ஆகாதே, என்பது பொருள்.

இவ்வாறு எல்லாஉலகங்களுக்கும் ஈசுவரரான பிரம்மதேவர் சொன்ன வரங்களெல்லாவற்றையும்பெற்று மிகுந்த ஸந்தோஷமடைந்து பிரம்மாவினால் விடைகொடுக்கப்பட்ட ஸுரபி உலகத்தைக்காப்பதற்காகத் தன்ஸந்ததிகளை மிகுதியாகஉண்டுபண்ணித் தன்உலகத்தில் பிரவேசித்தது. பாரதனே! பிரம்மாவே இவ்வாறு வரமளித்ததனால் எல்லாவற்றிற்கும்மேல் கோலோகம் இருக்கிறது. முதலிலிருந்து உனக்கு எல்லாவற்றையும் சொன்னேன்" என்றார்.

## நூற்றுப்பதினெட்டாவது அத்யாயம்

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(ஸுரபியின் ஸந்ததிகள்முதலியன)

யுதிஷ்டிரர், "முற்காலத்தில் ஸூர்யனுக்கும் ஸுரபிக்கும் முதலில்பிறந்த ஸந்ததிகள் எவை? இதை எனக்கு விரிவாகச்சொல்லும். என்மனம் பசுக்கள்மேல் விருப்பமுற்றிருக்கிறது" என்று கேட்க, பீஷ்மர் சொல்லத்தொடங்கினார்.

"ராஜனே! உலகத்திற்குத் தாய்களாயிருக்கும் கோக்களின் சிறந்தபேர்களை விரிவாகக்கேள். மங்களத்தைத்தருகின்ற கோக்களினால் மூவுலகங்களும் வியாபிக்கப்பட்டிருக்கின்றன. ஆதிகாலத்தில் ஸுரபியிடமிருந்துஉண்டான ஸந்ததிகளை நான் சொல்லுகிறேன். நீ அவற்றைக்கேள்; அதனால், பெரும்புகழை அடைவாய். உக்கிரமான தவம் செய்யத்தொடங்கின ஸுரபி தவம்செய்து விளங்குகின்ற ஒளியுள்ள பதினொருபுத்திரர்களைப் பெற்றது. அவர்கள் ருத்திரர்களென்று வேதத்தில் துதிக்கப்படுகின்றனர். அஜைகபாத், அஹிர்புத்னியன், மிக்கபுகழ்பெற்ற திரியம்பகன், வ்ருஷாகபி, சம்பு, கபாலி, ரைவதன், ஹரன், பகுரூபன், சக்தியுள்ளவனும உக்கிரனுமாகிய உக்கிரன் அந்தஉக்கிரனுடைய புத்திரனும் மிக்க புகழும்ஒளியுமுள்ளவனுமான விசுவரூபன்என்னும் இப்பதினொருருத்திரர்களை உனக்குப் பெயர்களோடு சொன்னேன். இவர்கள் மகாத்மாக்கள்; பெரியயோகிகள்; மகிமையுள்ளவர்கள்; மிக்கபலசாலிகள்; தேவர்களிலும் பிரம்மஜ்ஞானிகளிலும் மிகச்சிறந்த ஜன்மமுள்ளவர்கள். இவர்களே உலகத்தில் பிராம்மணர்களுக்கு முதற்காரணமாகச் சொல்லப்படுகின்றனர். இந்தப்பதினொருருத்திரர்களும் மூன்றுலோகங்களுக்கும் ஈசுவரர்களென்று சொல்லப்படுகின்றனர். இம்மஹாத்மாக்கள் நூற்றுவர் சத

ருத்திரர்களென்றும் சொல்லப்பட்டிருக்கின்றனர். ஸுரபியானவள் பிறகு பூமிதேவியென்னும் முதற்கன்னிகையைப் பெற்றாள். அந்தப் பூமிதேவி வேண்டினவற்றையெல்லாங் கறக்கும்பசுவாயிருந்து பிராணிகளைக் காப்பாற்றுகிறாள். ராஜனே! கோப்ராம்மணனென்னும் ஒரு பிள்ளையையும் ஸுரபிபெற்றதாகச் சொல்லப்படுகிறது. அதனால், ஸுரபியே கோக்களுக்கும் பிராம்மணர்களுக்கும் தாயாகச்சொல்லப்படுகிறாள். வரங்கொடுப்பவரும் நூறுருத்ரர்களின் உத்பத்திக்கும் காரணமாயிருப்பவருமான பதினொருருத்திரர்களை முதலில் உண்டு பண்ணி, பிறகு எல்லாவற்றிற்கும் ஈசுவரனும் நவக்ரஹங்களிற் சிறந்தவனும் உலகங்களாற் கொண்டாடப்பெற்றவனும் அம்ருதமும் யாகங்களுக்கும் ஓஷதிகளுக்கும் சுவைகளுக்கும் தேவர்களுக்கும் உயிருக்கும் முக்கியமான ஆதாரமாயுள்ளவனுமான சந்திரனென்னும் ராஜனைப் பெற்றாள். பிறகு, யோகமார்க்கத்தில் நிலைபெற்றிருக்கும் ஸ்ரீதேவி (செல்வம்) மேதை (புத்தி) கீர்த்தி ஸரஸ்வதிதேவியென்னும் நாலு பெண்களைப் பெற்றாள். நினைத்தஉருவங்களெடுக்கும் அந்தச்சுரபி இந்த ஸந்ததிகளைப்பெற்றபின் சிறந்தமங்களகரமான கோக்களென்னும் தாய்களைப்பெற்றாள் புண்யை, மாயை, மதுச்யோதை, சிவை, சித்ரை, [1] ஸரித்வரை, ஹிரண்யவர்ணை, ஸுபகை, கவ்யை, ப்ருச்நி, குதாவதி, அங்காவதி, க்ருதவதி, ததிக்ஷீரபயோவதி, அமோகை, ஸுரஸை, ஸத்யை, ரேவதி, மாருதி, ரஸை, அஜை, ஸிகதை, சுத்ததூமை, அதாரிணி, ஜீவை, ப்ராணவதி, தன்யை, சுத்தை, தேனு, தனுவஹை, இந்திரை, ருத்தி, சாந்தி, சாந்தபாபை, ஸரித்வரை இந்த [2] நாற்பத்தொருபெண்களும் தேவலோகத்திற் பூஜிக்கப்பெற்ற பாக்யசாலிகள். மறுபடியும் ஸுரபிக்குச் சந்திரகிரணத்துக்கும் தாமரைக்கிழங்குக்கும் ஒப்பானநிறமுள்ளதும் கழுத்தில் ரத்னம்போல ஒளியுள்ளதும் மாலைபோன்ற கழுத்துச்சதையுள்ளதும் உயர்ந்த கொண்டையுள்ளதும் சிறந்தஒளியுள்ளதுமான தக்ஷமென்றுபெயர் பெற்ற அழகானரிஷபம் பிறந்தது. ஸுரபியின் ஸம்மதத்தின்மேல் அது மகேசுவரருக்குக் கொடியாகக் கொடுக்கப்பட்டது. நினைத்த ரூபமெடுப்பவையும் உயர்ந்தவையுமான பசுக்கள் ஆதித்யர்களுக்கும் வஸுக்களுக்கும் விசுவேதேவர்களுக்கும் சிறந்த புண்ணியமுண்டா

[1] இரட்டித்து வந்திருக்கிறது.

[2] முப்பத்துநான்குபெயர்கள்தாம் மூலத்திலுள்ளன; முன்வரும் ஸ்ரீதேவி முதலியநான்கையும்சேர்த்தும், 'ததிக்ஷீரபயோவதி' என்பதை, 'ததிவதி, க்ஷீரவதி, பயோவதி என மூன்றாகப்பிரித்தும், 'ஸரித் வரை' இரண்டையும் தனித்தனிகொண்டும் நாற்பத்தொன்றாகவும் கொள்ளலாம்.

கும்படி வரங்களை அளித்தன. அதன்பிறகு, ஸுரபி திரும்பவும் தவஞ் செய்து பசுக்களைப்பெற்றது. யுதிஷ்டிர! அந்தப்பசுக்கள் இந்திரன் முதலான திக்பாலகர்களுக்குக் கொடுக்கப்பட்டன. ஸுஷ்டுதை, கபிலை, புகழ்பெற்ற ரோஹிணி, தேவர்கள் விரும்பத்தக்கரூபமுள்ள காமதேனு ஆகிய மேலேசொல்லப்பட்ட இந்நான்குபசுக்களும் நிரம்பக் கறந்து உலகங்களால் துதிக்கப்படுகின்றன. முற்காலத்தில் தேவர்களும் அவற்றிற்குக் கன்றுகளாகப்பிறந்து உத்தமமான அம்ருதத்தைக் குடித்தனர். ஸுரபியானது தேவர்க்கரசனும் மஹாத்மாவுமான இந்திரனுக்கு ஸுஷ்டுதையையும் யமனுக்குக் கபிலையையும் வருணனுக்கு ரோஹிணியையும் அரசனான குபேரனுக்கு ஸர்வகாமதுகையென்னும் காமதேனுவையும் கொடுத்தது. சிறந்த ரிஷிபோன்றவனே! இவ்வாறு பெயர்பெற்ற இந்தஸுரபியின் ஸந்ததிகள் உலகங்களால் பூஜிக்கப்பெற்றவை. இவற்றின் ஸந்ததிகளால் பூமிநிரப்பப்பட்டிருக்கிறது. இவ்வுலகத்திலுள்ள சிறந்தவையெல்லாம பசுக்களினால் உண்டானவை. ஸுரபியின இந்தஸந்ததியை வரிசையாகப் பேரிட்டுச் சொன்னேன். அரசர்க்கரசே! இன்னும் நான் உனக்கு என்னசொல்லவேண்டும்? சொல்'' என்றார்.

## நூற்றுஎண்பத்தோன்பதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)



(தேவர்கள் கோக்களிடத்தில் வஸிப்பதுமுதலியன.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! அப்போது, ஸுரபிதேவிக்கு, கீர்த்தி லக்ஷ்மி ஸரஸ்வதி மேதைஎன்னும் சிறந்ததேவப்பெண்கள் நால்வர் பிறந்ததாகக்கேட்டேன். இவர்கள் கோக்களைவிட்டுப் பிரிந்திருப்பவர்களா? அல்லது, அவைகளிற் சேர்ந்திருப்பவர்களா? எந்தத் தேவர்கள் கோக்களை அடுத்திருப்பவர்களென்பதை எனக்குச்சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"எந்தத்தேவதையைப் பசுக்கள் ஆசிரயிக்கின்றனவோ அந்தத் தேவதைக்குத்தான் தேவதையென்றுபெயரென்றும், தேவதையைப் பற்றியதுதான் தெய்வம அதாவது அதிருஷ்டமென்றும் பிராம்மணர்கள் அறிகின்றனர். முற்காலத்தில் தேவர்களெல்லாரும பிறந்தபோது தேவேந்திரன் அம்ருதத்துக்காக ஸுரபியினிடஞ்சென்று, 'தேவியே! சுவைமிக்கதும் நன்மையைத் தருவதுமான அமிருதத்தை நீ அனுக்ர

கத்தினால் எனக்கு அளிக்கவேண்டும். அதனால், எனக்கு அமரத்வம் (இறவாமை) வரவேண்டுமென்றும் பிரார்த்திக்கிறேன்' என்று கேட்டான். அதற்கு ஸுரபி, 'தேவராஜனே! நன்றாகி என்னுடைய பாலைக் குடி. அதனால், அமரத்வத்தையும் இந்திரபதத்தையும் பெறுவாய். விருத்திரனுக்குப் பகைவனே! போரில் உனக்குப் பகைவரால் துன்பமுண்டாகாது. சக்ரனே! பிரபுவே! உனக்குப் பலமுண்டாவதற்காக என்பாலைக் குடிக்கக்கடவாய்' என்று சொல்லிற்று. பிறகு, தேவேந்திரன் அந்தச்சுரபியின் முலையைக்குடித்து அமரத்வத்தையும் நல்லஉருவத்தையும் சிறந்தபலத்தையும் அடைந்தான். அமிருதத்தைக்குடித்து உத்ஸாகமடைந்த புரந்தரன் ஸுரபியினிடம்வந்து, 'உனக்கு ஸுகமுண்டாகக்கடவது. நான் உனது புத்ரன். உனக்கு என்னசெய்யக்கடவேன்? சொல்' என்று கேட்டான். ஸுரபி, 'புத்ரனே! எல்லாம் நீ செய்தானது. ஸ்வர்க்கத்திற்குச் செல். தேவர்களனைவரையும் காப்பாற்று. தேவர்களின் பகைவர்களைக் கொல். நீ ஸுகத்தைவிரும்பினால் கோக்களையும் பிராம்மணர்களையும் அவமதிக்கலாகாது. கோக்களும் பிராம்மணர்களும் விடும் பெருமூச்சு தேவர்களையும் வற்றச்செய்யும். கோக்களிடத்திலும் பிராம்மணர்களிடத்திலும் அன்புடன் அவர்களுக்கு, 'ஸ்வஸ்தி (க்ஷேமம்)' என்கிற சப்தத்தை நித்யமாகச் சொல்லுகிறவன் பூமியிலும் ஆகாயத்திலும் ஸ்வர்க்கத்திலும் வெற்றிபெற்றிருப்பான். உனக்கு இன்னும் என்னகாரியமிருந்தாலும் அதைச் சுருக்கமாக என்னிடம் சொல். நான் அதையெல்லாம் உனக்குச் செய்வேன். இதை உண்மையாக உனக்குச்சொல்லுகிறேன்' என்று சொல்லிற்று. இந்திரன், 'ஓ தேவியே! நான் இந்தத்தேவக்கூட்டங்களோடு பசுக்கூட்டங்களிடத்தில் நித்யமாக வஸிக்கவிரும்புகிறேனென்பதை உன்னிடம் சொல்லுகிறேன். எனக்கு அனுக்ரகம் செய்யக்கடவாய்' என்று சொன்னான். ஸுரபி, 'கௌசிகனே! கோக்களின்சரீரங்கள் இதோ பிரத்யக்ஷமாகவே காணப்படுகின்றன. எந்தத்தேவதை எந்தவிடத்தில் வஸிக்கவிரும்புகிறதோ அவன் அந்தவிடத்தில் வஸிக்கலாம். பசுக்களின் தேகமெல்லாம் மிகப்பரிசுத்தமும் பூஜைக்குரியதுமானது. சக்ரனே! உனக்கு எப்படி இஷ்டமோ அப்படிச்செய்யலாம். உனக்கு ஸுகமுண்டாகும்' என்று சொல்லிற்று. அந்தஸுரபியின் அந்தச் சொல்லைக்கேட்டுத் தேவேந்திரன் எல்லாத் தேவக்கூட்டங்களோடும் ஸுரபியின் ஸந்ததிகளை அடைந்தான். அவற்றின் கொம்பிலும் முகத்திலும் நாவிலும் தேவேந்திரன் இருந்தான்; எல்லாத்துவாரங்களி

னும் வாயு இருந்தான்; கால்களில் ஸப்தமருத்துக்கள் இருந்தனர். கொண்டையில் ஸர்வவியாபியானருத்ரரும் வயிற்றில் அக்நியும் மூலை களில் சிறந்தஸரஸ்வதியும் கோமயத்தில் உலகத்தினால் விரும்பப்படும் லக்ஷ்மியும் மூத்திரத்தில் கீர்த்தியும் கங்கையும் பாலில் அழியாத மேதையும் இருந்தனர்; வாயில் சந்திரபகவானும் ஹ்ருதயத்தில் பக வானான யமனும் வாலில் தர்மதேவதையும் உடம்புமயிர்களில் யாக முதலியகிரியைகளும் கண்களில் ஸூர்யனும பூட்டுக்களில் ஸித்தர் களும் அசைவில் காரியஸித்தியும் தவமும் சக்தியும் இருந்தனர். இவ்வாறு தேவக்கூட்டத்தாரெல்லோரும் பசுக்களின் தேகபாகங் களில் நியமமாக இருந்தனர். ஆதலால், கோக்கள் பெரியதேவதை களாகப் பிராம்மணர்களால் மந்த்ரிக்கப்படுகின்றன. உலகத்திற்கு ஈசு வரர்களான தேவர்கள் சேர்ந்து கோக்களிடத்தில் வஸிக்கின்றனர். கோக்கள் விரும்பியவற்றையெல்லாம பிரமமதேவர் முழுதும்செய்வர். தர்மராஜனே! நீயும் சிறந்தபக்தியுடன் கோக்களைப் பூஜிக்கக்கட வாய். உலகத்தில் சிறந்தபுண்யமும் சுத்தப்படுத்தும் ஹோமத்ரவ்ய மும் பசுக்களே. ஸ்வர்க்கத்திலிருந்து கீழேதள்ளிப் பக்ஷிக்கப்பட்ட ப்ருகுவம்சத்துரிஷி பசுக்களின் நுரையை உட்கொண்டு திரும்பவும் உயிரை அடைந்து பிறகு கோலோகத்தை அடைந்தார்" என்றார்.

---

## நூற்றிருபதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி)

(ஸுமித்ரர் பேனபரென்னும்பெயர் பெற்றது.)

யுதிஷ்டிரர், "பேனபர்என்கிற பேருள்ளவர் யார்? அவர் முன்னே எப்படி பக்ஷிக்கப்பட்டார்? இறந்தவர் எவ்வாறு பிழைப்பிக் கப்பட்டார்? அவர் கோலோகத்தைச் சார்ந்ததெப்படி? மானிடலோக த்திலுள்ள வ்யவஸ்தைகளுக்கு அது விரோதம். தெய்வபலமின்றி மனிதர்களுக்கு இதுகிடைப்பது மிகஅரிது. இந்தவிஷயத்தில் எனக் குப் பெரியஸம்சயம் இருக்கிறது. அதை எனக்கு உரைக்கக்கட வீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"பாரதனே! ப்ருகுவம்சத்தில் ஸுமித்ரரென்பவரைக் கேள் விப்படுகிறோம். அவர் எல்லாவேதங்களையும் கிரம்பஓதி வானப்ரஸ்தா சிரமத்திலிருந்து பெருந்தவஞ்செய்துகொண்டு எப்போதும் தம் அனுஷ்டானந்தவறாமலிருந்தார். அவர் வித்தையிலும் அனுஷ்டா

ஙங்களிலும் உண்மையை அறிந்தவர்; தர்மசாஸ்திரங்கள் அர்த்தசாஸ்திரங்களெல்லாவற்றிலும் தேர்ந்தவர்; மூன்றுகாலங்களிலும் தவறாமல் ஸ்நாநம்செய்பவர்; மூன்றுஸந்திகளையும் தவறாமல்உபாஸனைசெய்பவர்; பொறுமையுடன் நித்யமாக அக்நிஹோத்ரத்தையும் ஜபஹோமங்களையும்செய்து பித்ருக்களையும் தேவர்களையும் விருந்தினர்களையும் நியமத்துடன் பூஜித்துக்கொண்டும் உயிர் நிற்பதற்குமட்டும் ஏதேனும் கொஞ்சம் ஆகாரம் செய்துகொண்டும் இருந்தார். திரிசிகரமென்னும்மலை ஒன்றிருக்கிறது. ருத்ரரால் உண்டாக்கப்பட்டதும் குலஜையென்று புராணங்களில் சொல்லப்பட்டதுமான ஒருநதி அந்தமலையிலிருந்து பெருகுகிறது. மேடுபள்ளமில்லாதபிரதேசமும் பலவகைப் புஷ்பங்கள் நிரம்பினதும் காட்டிலுள்ள ஒஷதிகளும் மரங்களுமுள்ளதும் பலவகைப்பறவைகளாலும் மிருகங்களாலும் சூழப்பட்டதும் ஈக்களும் கொசுகுகளும் காக்கைகளும் கழுகுகளும் அண்டாததும் கறுத்த தர்ப்பங்களும் புற்களும் மிகுதியாகவுடையதும் மிக்க அழகியதும் பிரகாசமான ஒளியுள்ளதும் எல்லாவற்றிலும் உயர்ந்தும ஏற்றத்தாழ்வில்லாமலும் கறுத்துமிருக்கும் யாகத்திற்கு உரியமரங்களினால் மூடப்பட்டதுமான அவ்வாற்றின்கரையில் பிருகுவம்சத்துரிஷிகளின் பரிசுத்தமான ஆசிரமம் முன்னம் இருந்தது. சிறந்த தவமுள்ள ஸௌமித்ரரென்னும் பிருகுவம்சத்துரிஷி முன்னோர்களாகிய பிருகுக்கள் அனுஷ்டித்து வந்த நல்லநடையோடு அந்த ஆசிரமத்தில் வஸித்தார். பரிசுத்தமான தவமுள்ள ஆங்கிரஸரென்னும் ஒருரிஷி கார்காலத்தின் இரண்டாவது மாதமாகிய புரட்டாசிமாதத்தின் பர்வத்தில் பரிசுத்தமான நியமத்துடன் சர்க்கரியென்னும் சிறந்தபசுவை அவருக்குத் தானஞ்செய்தார். தர்மத்தையே இயற்கையாகவுடைய அந்தஸௌமித்திரர் அந்தப் பசுவைப்பெற்றுக்கொண்டு ஊக்கத்தோடும் சிறந்தபக்தியோடும் தம் பெற்றதாயைப்போல அதைக் கவனித்தார். நினைத்த ரூபமெடுப்பதாகிய அந்தச்சிவப்புப்பசு அவரால்வளர்க்கப்பட்டு மிக்கவலிமையுள்ளதாகவும் காட்சிக்கினியதாகவும் வளர்ந்தது; பக்கநரம்புகள் வெளிப்படாததும் மிக்கஅழகுள்ளதுமாயிருந்தது. முதுகின் இருபுறங்களும் நடுவும் கறுத்ததும், தேன்போலச் சிவப்புநிறமுள்ளதும், நுண்ணிய ரோமங்களினால் அழகாகவும் பருத்தும் உயர்ந்துமிருக்கும் உருவமும் மெல்லியதோலும் கறுத்தவாலும் வெளுத்தமுகமும் முலைகள் ஏற்றக்குறைவில்லாமல் வட்டமாயிருக்கும் மடியுமுள்ளதும், பின்உயர்ந்து முன் தாழ்ந்ததும், முளைகள்போல நெறித்தகாதுகளும் அழகானகண்களும நீண்டனவும் குட்டைக்கொம்புகளும் சந்தில்லாத பற்களும்

கழுத்தில் சதைபருத்துத்தொங்கும் அலைதாடியுமுள்ளதும், அன்புள்ளதும், மங்களகரமும், எப்போதும் அடக்கமுள்ளதும், மழமழப்புள்ளதும், நிரம்பின பெருங்குரலுள்ளதும், பிரம்மாவினாலுண்டாக்கப்பட்ட சிறந்த கோலக்ஷணங்களெல்லாம் பொருந்தினதுமாயிருக்கின்ற அந்தப் பசு அழகினாலும் ஒளியினாலும் இளமைப்பருவத்திலிருக்கின்ற பெண்போல விளங்கிற்று. வலிமையுள்ளதும் காட்சிக்கினியதுமான அப்பசு ஒருவிருஷபத்தோடுபுணர்ந்து உருவத்தில் தமக்குச்சமமாயிருக்கும் ஆண்பெண் இரண்டுகன்றுகளை ஈன்றது. அந்தப்பிருகுவம்சத்து முனிவர் இரண்டுகன்றுகளுடனும் அந்தப்பசுவை வளர்த்தார். அவ்விரண்டு கன்றுகளும் புணர்ந்ததனால் ஆயிரம்மாடுகள் உண்டாயின. அரசர்க்கரசனே! அந்தப்பசுக்களும் விருஷபங்களும் ஒன்றோடொன்றுசேர்ந்ததனால் அநேகமாயிரம்மாடுகள் உண்டாயின. அவற்றிற்குக் கணக்கில்லை. அவருடைய ஆசிரமமும் அந்தக்காடுமுழுமையும் அந்தக்கோக்களினால், ஆகாயம் மேகங்களினால் நிரப்பப்படுவதுபோல நிரப்பப்பட்டன. [1]குலத்திற்குத் தலைவனே! அந்தமாட்டுமந்தைகளில் சில தாமரைமலர் நிறமானவை; சில பலாசப்பூ நிறமானவை; சில பொன்னிறமானவை; சில சந்திரகிரணம்போன்றவை; சில வெள்ளிநிறமானவை; சில சிவந்தவை; சில நீலநிறமும் சிவப்பு நிறமும் பழுப்புநிறமும கலந்தவை; சில கறுத்தவை; சில கபிலவர்ணமுள்ளவை. அவை இப்படிப் பலநிறங்களால் விசித்ரமாயிருந்தன. அந்தஸுமித்ரர் பசுக்களுக்குப் பலமுண்டாக்குவதிலேயே ஊக்கமுள்ளவராகிக் கன்றுகளிடமுள்ள புத்ரவாஞ்சையினால் பாலை உபயோகிப்பதில்லை. அவ்வாறு பசுக்களின் நன்மையையேபார்த்து அவற்றிற்குப் பணிவிடைசெய்துகொண்டு கன்றுகள் ஊட்டிஉமிழ்ந்ததை ஆகாரமாகக்கொண்டே அவருக்கு நீண்டகாலம்சென்றது. அவர் பசிதாகங்களால் களைத்திருந்தாலும், பசுக்களுக்குப் பால் அதிகமாயிருந்ததனால் கன்றுகள் எப்போதும் குடித்து உமிழ்ந்த மிகுதியான நுரையையே குடித்துக்கொண்டிருந்தார். யுதிஷ்டிர! அதனால், அந்தஸுமித்ருக்குப் பேனப (நுரையைக்குடிப்பவர்) என்று பெயர்உண்டாயிற்று.

[1] 'குலயூதப' என்பது மூலம்.

## நூற்றிருபத்தோராவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(உலகத்துக்கு உதவாமல் வளருவது தீங்கென்றறிந்த ஸௌமித்திரர்பசுக்கள் அவரைக் கொல்லநிச்சயித்தது.)

நினைத்த உருவமெடுக்கும் (கோலோகத்துப்) பசுக்கள் அழகான லக்ஷணங்கள்பொருந்திய பெண்ணுருவமெடுத்து மகிழ்ந்து பாடிக்கொண்டு ஒருமடுவில் விளையாடின. அந்தஸௌமித்ராருடைய பசுக்கள் ஆச்சரியத்தினால் கண்கள்மலர்ந்து மானிடச்சொல்லாக, 'நீங்கள் யார்?' என்று அந்தஸ்த்ரீகளைக் கேட்டன. அதற்கு, அந்தப்பெண்கள், 'நாங்கள் எல்லாநல்வினைகளின் சிறந்தபயன்களையும் பெற்றபசுக்கள். நாங்களெல்லாரும் பெண்ணுருவமெடுத்து நினைத்தபடி ஸஞ்சரிக்கிறோம்' என்றுசொல்லினர். ஸௌமித்ரர் பசுக்கள், 'கோக்களுக்குக் கோக்களே சிறந்ததெய்வம். கோக்களுக்குக் கோக்களே முக்கியமானதஞ்சம். உங்களுக்கு இந்தப் புண்ணியப்பயன்வந்தது எவ்வகை? அதை எங்களுக்குச் சொல்லுங்கள்' என்றுகேட்டன. அதற்கு, அந்தப்பெண்கள், 'எங்களுடைய ஹவ்யகவ்யங்களாகிய பால் நெய் முதலான ஹவிஸுகளினால் தேவர்களும் பிதிருக்களும் அக்நியும் பிராம்மணர்களும் திருப்திசெய்விக்கப்பட்டனர். அப்படியே எங்கள் ஸந்ததிகளினால் (உழவுத்தொழில்) எப்போதும் விருத்திசெய்யப்பட்டுவருகிறது. ஆயிரக்கணக்கான ரிஷபங்கள் வண்டிகளிலும் பூட்டப்படுகின்றன. இந்தநிரம்பின புண்யங்களினால் நாங்களும் எங்கள் ஸந்ததிகளும் மிகவும் விருப்பத்தக்கதாகிய கோலோகத்தை அடைந்தோம். பசுக்களே! நீங்களெல்லாரும் உங்கள் கன்றுகளோடும் ரிஷபங்களோடும் (இம்முனிவரிடத்திலேயிருந்து உலகத்திற்கு யாதொரு உதவியும் செய்யாமையால்) கீழேபோகிறவர்களென்றே நாங்கள் ஞானக்கண்களினால் பார்க்கிறோம்' என்றுகூறினர். ரிஷியின் பசுக்கள், 'அப்படியாயின், கோக்களுக்குக் கோக்களே மேலானதெய்வமும் மேலானதஞ்சமும், உங்களை நீங்கள்தாமே கரையேற்றவேண்டும்? நாங்கள் உங்களை அடைக்கலம்புகுகிறோம். நாங்கள் என்ன செய்யவேண்டும்? எப்படி நடக்கவேண்டும்? எப்படிக் கோலோகத்தை அடைவோம்? எவ்வகையாக இகழப்படாமலிருப்போம்?' என்று கேட்டன. அதற்கு, அந்தப்பெண்கள், 'ரந்திதேவனுடைய ஆயிரம்வருஷகாலத்து ஸத்ரயாகம் நடந்துவருகிறது. அந்தயாகத்தில்

அவ்வரசனுக்குப் பசுக்களாகி உடனே செல்லுங்கள். அவனுக்குப் பசுக்களாக உபயோகப்பட்டு யாகத்தினால் பரிசுத்தஞ் செய்யப்பட்டுப் புண்ணியம் துணையாகக்கொண்டு சிறந்தகோலோகத்தை அடைவீர்கள்' என்று சொன்னார்கள். அந்தப்பெண்களின் அந்தச்சொல்லைக் கேட்ட அந்தப்பசுக்கள் மனத்தில் உற்சாகங்கொண்டு அந்தயாகத்திற்குப்போக நிச்சயித்து மிக்க ஆவலுற்றன. 'அந்த அரசனுடைய யாகம் அப்படி தர்மமாக நடக்கிறது. இந்தஸௌமித்ரர் யாகப்பசுக்களாக உபயோகப்படும்படி நம்மைக்கொடார். ஸௌமித்திரரால் அனுப்பப்படாமல் நம்மால் எவ்வகையிலும் போகமுடியாது' என்று அந்தப் பசுக்கள் பேசிக்கொண்டன. அப்போது, அவற்றில் ஒன்று, 'இந்த ஸௌமித்ரர் கொல்லப்படவேண்டும். இதை எல்லாரும் ஒப்புக்கொள்ளுங்கள். வேறுவிதமாக நாம் கோலோகத்தை அடையமுடியாது. நாமெல்லாரும் ஒற்றுமையாக இந்தநிச்சயத்தைச் செய்யவேண்டும்' என்றுகூறிற்று. அந்தப்பசுக்கூட்டங்களில் அந்த ஸௌமித்ரர்செய்த உபசாரத்தை நினைத்திருந்த ஒருபசுவாவது அவரைக் கொடும்பார்வையினால் பார்க்கமாட்டாமற்போயிற்று அப்போது, தாமரைமலர்நிறமுள்ளவையும் சூரிய கிரணத்திற்கொப்பான ஒளியுள்ளவையும் செம்பருத்திப் பூப்போலச் சிவந்தகண்களுள்ளவையும் தசையில்லாமல் உறுதியான முகங்களுள்ளவையும் மேககர்ஜனைபோன்றசப்தமுள்ளவையும் ஒளியினாற் சிவந்தவையுமான கபிலைப்பசுக்கள் எல்லாப்பசுக்களின் முன்னிலையிலும், 'நாங்கள் நன்றியைத்தூரத்தள்ளி அந்தஸௌமித்ரரைக் கொன்றுவிடுவோம்; ஸந்தேகமில்லை. எங்களுக்கு நீங்கள் என்ன மேன்மையைச்செய்வீர்கள்?' என்றுகேட்டன. அதற்கு, மற்றப் பசுக்கள், 'கபிலைப்பசுக்களே! நீங்கள் எல்லாநிறப்பசுக்களிலும் முதன்மையாவீர்கள். ஒருகபிலையைக் கொடுப்பவன் நூறுகோதானத்தின் பலனைப்பெறுவான்' என்றுசொல்லின. பசுக்களின் இந்தச்சொல்லைக் கேட்டுக் கபிலைகளெல்லாம் மனமகிழ்ந்து ப்ருகுவம்சத்தவரான ஸௌமித்ரரைக்கொல்வதற்கு நிச்சயம் செய்தன.

## நூற்றிருபத்திரண்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி)

(கோமாதாக்கள் ஸௌமித்ரரைக் கோலோகத்துக்குக் கொண்டுபோனதும் ஸௌமித்ரர்பசுக்கள் அவருடலை நசுக்கியதும்.)

பார்ப்பதற்கழகுள்ளவர்களும் நினைத்தபடி சஞ்சரிப்பவர்களுமாகிய பசுத்தாய்களென்னும் கோலோகதேவதைகள் அந்த ஸௌமித்ரர்

செய்தநன்றியைநினைத்து அவரிடம்வந்து அந்த ரிஷியைப்புகழ்ந்து, 'ஓ! மகரிஷியே! நாங்கள் கோலோகத்திலிருந்து வந்திருக்கிறோம்; ரிஷபங்களுக்கும் பசுக்களுக்கும் தாய்மார். உமக்குத் தெரியுமா? மிகவும் ஸந்தோஷமடைந்திருக்கிறோம். நீர் வேண்டுகிற வரத்தைக் கேளும். நீர் பசுக்கள்விஷயத்தில் உயர்ந்த நல்லஎண்ணத்தை எக்காலமும் செய்திருக்கிறீர்' என்றுகேட்டனர். ஸுமித்ரர், 'சிறந்தவர்களான கோமாதாக்கள் மனத்தில் மிக்கஅன்புடன் எனக்கு வரமளிக்கவந்து நிற்பதனால் நான் அநுக்கிரகிக்கப்பெற்றேன்; ஆனந்த மடைந்தேன். எனக்கு இப்போதிருப்பதுபோலவே எப்போதும் கோக்களிடத்திலேயே பக்தி இருக்கவேண்டும். கோஹத்திசெய்பவரும் ப்ரம்மத்வேஷிகளுமானமனிதர்கள் கெடக்கடவர்' என்றுகேட்டார். அதற்குக் கோமாதாக்கள், 'ஓ! ரிஷிசிரேஷ்டரே! நீர்கேட்டது அப்படியே ஆகும். உமக்கு நன்மையையும் எங்களுக்குப் பிரியத்தையும் சொல்லுகிறீர். ரிஷிசிரேஷ்டரே! எங்களுடன் கோலோகத்திற்குப்போகலாம்; வாரும்' என்று சொன்னார்கள். ஸுமித்ரர், 'நீங்கள் விரும்பின இடத்திற்குச் செல்லுங்கள். என் அன்புள்ளவையும் ஆதரவற்றவையுமான இந்தப்பசுக்களை விட்டுப்போக நான் கருதேன்' என்றுசொன்னார். அவருடைய சொல்லையும் கபிலைகளின் மிகக்கொடிய சொல்லையும்கேட்ட அந்தக் கோமாதாக்கள் அந்தப் பார்க்கவரிஷியைத்தூக்கி ஆகாசத்தில் கொண்டு போயினர். அவர்கள் தங்கள் யோகசக்தியினால் ஸுமித்ரரின் தேகத்தை அங்கேயேவைத்து ஆத்மாவைப்பிரித்து எடுத்துக்கொண்டுபோயினர். பிறகு, அவர்கள் கபிலைகளின் எண்ணத்தையும் அதற்காகத் தாங்கள் கோலோகத்திற்கு அவரைக்கொண்டுபோனதையும் அவருக்கு உரைத்தனர். அதன்பிறகு, கபிலைகள் அவ்விடத்தில் அவருடைய தேகத்தைக்கண்டு பிரதிஜ்ஞைதவறாமல் கொம்புகளாலும் குளம்புகளாலும் அதைநசுக்கின; ராஜசிரேஷ்டனே! அந்தப் பார்க்கவதேகத்தைப் பலதுண்டுகளாகச்செய்து மற்றப்பசுக்களிடம்சென்று நடந்ததையெல்லாம் தெரிவித்தன. அதன்பிறகு, பூமியில்சஞ்சரிக்கும்பசுக்கள் கோமாதாக்களினால், 'பிரம்மஹத்திசெய்த உங்களுக்கு உடனே முகம் அசுத்தமாகக்கடவது' என்றுசபிக்கப்பட்டன. ராஜனே! கோமாதாக்களும் இவ்வாறு நன்றிமறவாதவர். அவர்களால் ரிஷியும் கோலோகத்தை அடைந்தார். பசுக்களும் விடுவிக்கப்பட்டன.

## ஐம்பத்துமூன்றுவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(ரந்திதேவன் ஸத்ரயாகத்துக்குக் கோக்கள்சென்று உபயோகப்படடது முதலியன.)

அந்தப்பசுக்கள் சிறந்தஞானமுள்ள ரந்திதேவன் யாகத்திற்குச் சென்று மகரிஷிகளின் முன்னிலையில் தங்களைத் தெரிவித்துக்கொண்டன. அப்போது ரந்திதேவனென்னுமரசன் பரிசுத்தனுகிப் பக்தியோடு கைகூப்பி அந்தப்பசுக்களுக்கு நமஸ்காரஞ்செய்து, 'வந்த காரியம் என்ன?' என்றுகேட்டான். அந்தப்பசுக்கள், 'அரசர்க்கரசனே! உன்னுடைய இந்த ஸத்ரயாகத்தில் எங்களை உபயோகிக்கும்படி வேண்டுகிறோம். நாங்கள் யாகபசுக்களாகும்படி அனுக்கிரகிக்கக்கடவாய்' என்றுகூறின. ரந்திதேவன், 'பசுக்களைக்கொல்வதற்கு நான் சக்தனல்லேன். நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் உங்களைக்கொன்று நான் என்னைக்கரையேற்றுவதெப்படி? கோக்களே! உங்களைப் பசுக்களாக உபயோகப்படுத்தி உங்களையும் ஸ்வர்க்கத்திற்சேர்த்துத் தவத்தினுல் தன்னையும் கரையேற்றத்தக்கவன் எவனோ அவனிடம் செல்லுங்கள்' என்றுசொன்னான். கோக்கள், 'அரசனே! தர்மாத்மாவும் தவமுள்ளவனுமாகிய நீதான் எங்களைக் கரையேற்றத்திறமையுள்ளவனென்று கேள்விப்பட்டோம். அதனுலேதான் வலிய வந்தோம்' என்றுகூறின. ரந்திதேவன், 'இவ்வாறு என் ஸத்ரயாகத்தில்பசுவாவது உங்களுக்குவிருப்பமாயிருந்தால் நான் ஓர் உடன்பாடு செய்துகொண்டு உங்களை அக்கியில் ஹோமஞ்செய்வேன். உங்களில் ஏதாவது ஒருபசு ஒருகால் யாகத்தில் உபயோகப்பட இஷ்டமில்லாமலிருந்தால் அப்போதே கோஸத்ரயாகம் பிறகு நடவாமல் முடிந்துவிட வேண்டும்' என்றுசொன்னான். கோக்கள், 'மகாராஜனே! நீ எங்களுக்குச்சொல்லுகிறபடியே நடக்கட்டும். எப்பொழுது பசுக்கள் இஷ்டப்படவில்லையோ அப்பொழுதே ஸத்ரயாகம் முடிந்துபோகலாம்' என்று சொல்லின. அதன்பிறகு, புத்திசாலியான ரந்திதேவனுடைய கோஸத்ரயாகம் நடந்துவருகையில் பலிகொடுப்பவர்களால் நாள்தோறும் அநேகமாயிரம்பசுக்கள் உபயோகிக்கப்பட்டன. வேந்தனே! இப்படி அநேக வருஷங்கள் கடந்தன. கொல்லப்பட்ட பசுக்களுக்குக் கணக்கில்லை. கௌரவசிரேஷ்டனே! ஆயிரக்கணக்கான பசுத்தோல்களின் குவியல்கள் மலைகள்போலவும் மேகங்கள்போலவும் வெகுவாகக் குவிந்தன.

அந்தக்கொழுப்பின் ஜலம்பெருகி ஒரு மஹாநதி உண்டாயிற்று. இப்பொழுதும் அது பூமியில் சர்மண்வதியென்று பெயர்பெற்ற சிறந்தநதியாயிருக்கிறது. பிறகு, ஒருகால், ஒருபசு துயரத்துடன் தன்கன்றையழைத்து, 'குழந்தாய்! வா; முலை குடி; பின்பு பசியினால் கஷ்டப்படாதே. நான்கொல்லப்பட்டால் நிச்சயமாக நீ மனங்குன்றி வருத்தப்படுவாய். இந்தச்சண்டாளர்கள் ஆயுதங்களோடு என்னைக் கொல்ல வருகிறார்கள்' என்றது. மஹாராஜனே! மானிடச்சொல்லாக அந்தப் பசுவினால் சொல்லப்பட்டவாக்கைக்கேட்டு ரந்திதேவன் உடனே அதை நிறுத்தினான். ராஜச்ரேஷ்டனே! உடனே அவன் அந்தக்கோஸத்ரத்தை முடித்தான். அந்தயாகத்தில் விடுபட்டு ஓட்டப்பட்ட மற்றப் பசுக்கள் தம்தம் இடம்சேர்ந்தன. அந்தமகாத்மாவான ரந்திதேவனுடையயாகத்தில் பிராம்மணர்களால் ப்ரோக்ஷிக்கப்பட்டுக்கொல்லப்பட்ட பசுக்கள் கோலோகத்தைச் சேர்ந்தன. ராஜரிஷியாகிய ரந்திதேவனும் சாஸ்திரப்படி யாகத்தைச்செய்து அதனால் தேவேந்திரனுடையசிநேகத்தையும் நிலையான ஸ்வர்க்கலோகத்தையும் அடைந்தான். பேனபரென்னும் ஸௌமித்ரரிஷி மேலுலகமாகிய கோலோகத்தில் அநேகவருஷகாலம் மகிழ்ந்திருந்தார். மிச்சமான பசுக்கள் காட்டில் திரிந்தன. பேனபருடைய இந்தச் சரித்திரத்தையும் க்ருஷ்ணத்வைபாயனரால் சொல்லப்பட்டதும் புண்யமும் பரிசுத்தமுமான பசுக்களின் மஹிமையையும உனக்குச்சொன்னேன். பரதசிரேஷ்டனே! பகவானான நாராயணரும் பெரும்புகழ் பசுக்களிடத்தி விருப்பதைக்கண்டுதான் அவற்றிற்குப் பணிவிடையையும் சிறந்தபக்தியையும் செய்தார். அரசர்க்கரசே! பாரதனே! ஆதலால், நீயும் பசுக்களைப் பூஜிக்கக்கடவாய். கௌரவசிரேஷ்டனே! பிராம்மணர்களுக்கு எப்போதும் கோதானம் செய்வாயாக" என்றார்.

## நூற்றிருபத்துநான்காவது அத்யாயம்.

## தானதர்மபர்வம் (தொடர்ச்சி)



(பசுக்களின் சிறப்பைப்பற்றி வ்யாஸருக்கும் சுகருக்கும் ஸம்பாஷணை.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! மகானுபாவரே! உலகத்திலுள்ள பரிசுத்தங்களுக்கும் பரிசுத்தமும் பூஜிக்கப்பெற்றவற்றுள் மிகச்சிறந்தமுமான பெரியவிரதம் எதுவோ அதை எனக்குச்சொல்லும" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"இந்தவிஷயத்திலும் பிதாவும் புத்ரருமாகிய வ்யாஸருக்கும் சுகருக்கும் நடந்தஸம்பாஷணமாகிய ஒருபழைய இதிஹாஸம் கூறுகின்றனர். தானதர்மங்களில் ஆசையுள்ளவரும் மோக்ஷதர்மத்தை அடைந்திருப்பவருமான சுகரானவர், ஸ்நானஞ்செய்து ஜபமுதலான கடமைகளைமுடித்துக்கொண்டு சிறந்தநியமத்துடன் ரிஷிகளிற்சிறந்தவரும் பரிசுத்தாத்மாவும் வழுவில்லாதவரும் பரம்பரையாகவந்த ஆசாரங்களின் விசேஷங்களையறிந்தவரும் எல்லாச்சாஸ்திரங்களின் விஷயங்களிலும் தேர்ந்தவரும் யாருக்குந்தெரியாத உண்மையைக்கண்டவரும் தம் தந்தையுமான வ்யாஸரைத் தலைவணங்கிப் பின்வரும் கேள்வியைக் கேட்கலானார். 'ரிஷியே! அநேகவிதமான வெவ்வேறுதானங்களைப் பற்றிப் பலமுறை சொல்லுகிறீர். பெருமையையும் கீர்த்தியையும் புண்ணியத்தையும்தருவதாகிய பரிசுத்தமான தானம் எது? மனிதன் துயரங்களைக்கடப்பதும் நல்லலோகங்களையடைவதும் எதனால்? இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும் பெருமையையடைவது எதனால்? யாகத்தைநடத்துகிறவர் யார்? யாகம் எவர்களிடத்தில் பயன்படுகிறது? யாகமென்பது யாது? யாகத்தைச்சிறப்பிப்பது எது? யாகங்களிற்சிறந்தயாகம் எது? இதை நீர் எனக்கு உரைக்கக்கடவீர்' என்றார். தெரிந்துகொள்ளவிருப்பத்துடன் வணங்கிநிற்கும் சுகருக்கு, தவத்துக்கிருப்பிடமாகிய வ்யாஸமுனிவர் கோக்களின் சிறப்பைச் சொல்லலானார். 'இவ்வுலகத்திலுள்ள தனத்தையும் புகழையும் ஆயுளையும்கொடுப்பதும் கேட்பதற்கினியதும் சுத்தங்களிலும்சுத்தமும் மங்களங்களிலும் மங்களமும் பாவங்களெல்லாவற்றையும் போக்குவதும் யாதோ அதை நான் தொகுத்துச்சொல்லுகிறேன்; கேள். புண்ணியமான காட்சியுள்ள கோக்கள் இவ்வுலகத்திலுள்ள அசையும்பொருள் அசையாப்பொருள்களையெல்லாம் ஆக்ரமித்துக்கொண்டு கோலோகத்திலிருக்கின்றன. அவை எல்லாப்பிராணிகளுக்கும் எல்லாவுலகத்துக்கும் தாய்கள். ருத்ரர்களுக்கும் ஸாத்யர்களுக்கும் அவைகளே தாய்கள். பிரம்மதேவருடைய ஸந்ததியில் முதலிற்பிறந்தவையான கோக்கள் ருத்ரர்களுக்குத் தாய்களாகவும் ஆதித்தியர்களுக்கு ஸகோதரிகளாகவும் வஸுக்களுக்குப் பெண்களாகவும் சொல்லப்படுகின்றன. பசுக்களுக்குத்தலைவன் சூரியன்; எழுமருத்துக்கள் வாலைச் சேர்ந்தவர்; அரசனாகியவருணன் ஐசுவரியம். விசுவர்களென்னுந் தேவர்கள் பசுக்களை நடத்துகிறவர்கள். இவ்வாறு தேவர்களால் பூஜிக்கப்பட்ட தாய்களாகிய பசுக்களை அறியும்பிராம்மணன் பிரம்மலோகத்தையும் கோலோகத்தையும் திண்ணமாக அடைவான். உலகங்களுள்

சிறந்ததும் உயர்ந்தகதியுமான கோலோகத்தைவிரும்புகிறவன் செய்கையினாலும் எண்ணத்தினாலும் சொல்லினாலும் கோக்களை அவமதிக்கலாகாது. பிரம்மாவினால் உண்டாக்கப்பட்ட இந்தப்பரிசுத்தமான அறிவை அடைந்திருப்பவன் கோக்களைக் காலினால்உதைக்கவும் தடியினால் அடிக்கவும் கையினால்குத்தவுமாகாது. கோமாதாக்களின் வம்சத்தைச்சேர்ந்தவையாகிய பசுக்களின்நடுவிலும் கொட்டிலிலும் மனிதன் தெரிந்து மலமூத்ரங்களை விடலாகாது. கோக்கள் பரிசுத்தமானவை; சந்தனம்போலக் குளிர்ந்ததேகமுள்ளவை; சந்திரகிரணம்போன்ற நிறமுள்ளவை; சாந்தமும் அழகுமானவை; குங்கிலியவாஸனையுள்ளவை. நதிகள் கடலில் பிரவேசிப்பதுபோல எல்லாத்தேவர்களும் பசுக்களிடத்தில் பிரவேசித்திருக்கின்றனர். தேவலோகமும் ஆகாயமும் கோக்களின் அனுக்ரகத்தையே அனுபவிக்கின்றன. அக்கியில் தயிரை ஹோமம்செய்தும் தயிர்கொடுத்து ஸ்வஸ்திவாசனம்செய்வித்தும் தயிரைத்தானஞ்செய்தும் தயிரைச்சாப்பிட்டுக்கொண்டுமிருப்பவன் கோக்களின் அனுக்ரகத்தைப்பெறுவான். அக்கியில்நெய்யை ஹோமஞ்செய்தும் நெய்யினால் ஸ்வஸ்திவாசனம்செய்வித்தும் நெய்யைத்தடவிக்கொண்டும் நெய்யைக் குடித்துக்கொண்டுமிருப்பவன் கோக்களின் அனுக்ரகம்பெறுவான். கோக்கள் ஜீவனுக்காதாரமானவை. கோக்கள் தானத்திற்குச்சிறந்தவை. புண்ணியங்களைக்காப்பவையும் நல்லபலனைக்கொடுப்பவையுமான அந்தக்கோக்கள் பற்றுள்ள என்மேல் அனுக்ரகம்செய்யக்கடவன. எந்தப்பரிசுத்தத்தினால் தேவர்கள் இவ்வுலகத்தைவிட்டு ஸ்வர்க்கலோகம்சேர்ந்தனரோ பரிசுத்தங்களிலும் பரிசுத்தமான அந்தக்கோக்கள் என்தலைமேலிருக்கின்றன. [1]விளையாட்டுக்கும் மனமகிழ்ச்சிக்கும் ஸ்திரீபோகத்துக்கும் உரியனவாக மூவுலகங்களிலுமிருக்கும் வீணைகளும் மிருதங்கங்களும் பணவங்களும் பசுக்களின் அங்கங்களில் இருக்கின்றன. பசுக்கள்காணப்படாத இடத்தில் தேவர்களும் இரார்; அக்னிஹோத்ரங்களும் யாகங்களும்நடவா. பசுக்களின்பாலும் தயிரும் நெய்யும் சுவைகளுள் உயர்ந்தசுவைகள். கோக்கள் அம்ருதத்திலிருந்து உண்டானவை. அம்ருதத்தினால்தான் மூவுலகங்களும் ஜீவித்திருக்கின்றன. 'ஒருமாதம் நிரம்பினகன்றுள்ளதும் விரும்பத்தக்க குணங்களுள்ளதுமாகிய பசு மிகவும் பரிசுத்தமானது; கர்மங்களுக்குத் தலைமையானது. அதுவே ஸரஸ்வதி. இந்தப்பிராணிகளனைத்தும் அதனிடம் [2]கோக்

---

[1] பசுக்களினால் செல்வம்பெற்றவர்களுக்கே இவையெல்லாம் அமையுமென்பது. [2] அதனால் ஜீவிக்கின்றன என்பது.

கப்பட்டிருக்கின்றன. அந்தப்பசுவே புண்யங்களுக்குமுதல்; எல்லாப்பிராணிகளின் நன்மைக்குமாயிருப்பது. தாங்குகின்றவையும் பாவத்தைப்போக்குகின்றவையும் புண்ணியத்தைத் தருகின்றவையும் பிராணிகளை உற்பத்திசெய்கின்றவையும் விருத்திசெய்கின்றவையுமான கோக்கள் இம்மையிலும் மறுமையிலும் என்னைக் காக்கக்கடவன' என்னும் கோமந்திரத்தைச்சொல்லிப் பிராம்மணர்கள் யாகத்திற்குத் தாயானபசுவைக் கன்றுடன் யாகத்தின் ஹவிஸைக் கொடுப்பதற்கு அழைக்கின்றனர். இதுதான் அங்கங்களோடும் உபாங்கங்களோடும் கூடிய அழியாத யாகம். வேதங்களும் உபநிஷத்துக்களும் பசுக்களின் வடிவங்களாயிருக்கின்றன. குழந்தாய்! கோக்களைப்பற்றிய இந்தச் சிறந்தவிஷயத்தை நான் சொன்னேன். இதைப் பிராம்மணர் ஸபையிலெல்லாம் எப்போதும் நியமத்துடன் சொல்லவேண்டும். இதைக் கேட்பவனும் நான்சொன்ன சிறந்தலோகங்களை அடைவான். மனமகிழ்ந்து கேட்பிப்பவனும் அவ்வுலகங்களை அடைவான். பிராம்மணன் இந்தப்பரிசுத்தமான கோமதியென்னும் மந்திரத்தைச்சொல்லித் தினந்தோறும் பரிசுத்தமான ஒவ்வொருபசுவைத் தானஞ்செய்தால் அதன்பலனை முழுதும் அடைவான். பசுவில்லாவிடின் எல்லாவற்றையும் பரிசுத்தஞ்செய்யும் சிறந்தவள்ளைப் பசுவுக்குப்பிரதியாகக் கோமதிமந்திரபூர்வகமாகத் தானஞ்செய்யவேண்டும். ஒவ்வொருநாளும் சிரத்தையோடு கோமதிவித்தையை விடாமல்படித்து ஆசாரந்தவறாமலிருப்பவன் எல்லாப்பாவங்களிலுமிருந்தும் விடுபடுவான். கோமதியைஜபித்து நெய்யை உடம்பில் தடவிக்கொண்டும் உட்கொண்டும் பசுவின்சாணியைத்தேய்த்து ஸ்நானம்செய்துமிருப்பவன் எல்லாப்பாவங்களிலுமிருந்தும் விடுபடுவான். கோமதியை மனத்தினால் ஜபிக்கவாவதுவேண்டும். தினம் அதை ஜபிப்பது கடமை. கோமதியைப்படியாமல் நாளை வீணுகாத்திரம் செய்யலாகாது. கோமதியை ஜபித்துத்தான் தேவர்கள் தேவத்தன்மையை அடைந்தனர். கோமதியினாலேதான் ரிஷிகள் ரிஷித்தன்மையையும் மற்றுமுள்ள எல்லாமேன்மைகளையும் அடைந்தனர். கோமதியைப் படித்தால் சிறையிலிருப்பவன் சிறையிலிருந்து விடுபடுவான்; கஷ்டத்திலகப்பட்டவன் கஷ்டத்திலிருந்துவிடுபடுவான். அவன் சுற்றத்தாருடன் சேர்ந்திருப்பான். [1]இது முழுதும்பரிசுத்தமானது. இது சிறந்ததவம். கேட்பவர்களுக்கும் இதுவே எப்போதும் சுத்தஞ்செய்வது. புத்ரனைவிரும்புகிறவர்களும் தனத்தைவிரும்புகிறவர்களுமான மனிதர்கள்

[1] ஒருசொல் விடப்பட்டது.

விரும்பினதை அடைவார். வழிநடையில் கோமதியைப்படிப்பவன் திருடர்களிடத்தினின்றும் பகைவர்களிடத்தினின்றும் விடுபடுவான். கோமதியைப் படிப்பவன் பகைகளைத் தொடர்ந்துவரும் யுத்தங்களில் கொல்லவந்தவர்களையும் உடனே ஜயித்துவிடுவான்' என்றார்.

## நூற்றிருபத்தைந்தாவது அத்யாயம்.

## தானதர்ம பர்வம் (தொடர்ச்சி.)

(வ்யாஸருக்கும் சுகருக்கும் ஸம்பாஷணைத் தொடர்ச்சி.)

சுகர், 'பிதாவே! க்ஷத்திரியர்களும் சூத்திரர்களும் மந்திரம் தவறினபிராம்மணர்களும் கபிலைப்பசுவை அடிக்கின்றனரே. அது எப்படி?' என்றுகேட்க, வ்யாஸர் சொல்லலானார்.

'க்ஷத்ரியர்களும் சூத்ரர்களும் மந்திரமில்லாத பிராம்மணர்களும் கபிலையை அடுத்திருப்பதன் நிச்சயத்தைச் சொல்வேன். உலகத்தில் பசுக்களுள் கபிலைகள் உத்தமமானவையென்று நினைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றைத் தானஞ்செய்பவனும் முறைப்படி உபசரிப்பவனும் ஸ்வர்க்கத்தை அடைவார். தடியினாலாவது காலினாலாவது கபிலைப்பசுவைத் தொடுகிறவன் தொட்டமாத்திரத்திலேயே நரகத்திற்கு ஆளாவான். கபிலையை மந்திரத்தோடேயே பிடிக்கவேண்டும்; மந்திரத்தோடேயே விடவேண்டும்; மந்திரமில்லாமல் பிடிப்பவன் புழுவாகப்பிறப்பான். தேகத்தின் மர்மஸ்தானங்களில்அடிபட்ட பசு நோயினால் ஓடமாட்டாமல் எத்தனை அடிகள் நடக்குமோ அத்தனை உலகங்களில், (அதை அடித்தவன்) கிருமியாகப்பிறப்பான். பசுவின்ரத்தம் எத்தனை துளிகள் பூமியில்விழுந்தனவோ அத்தனை ஆயிரம்வருஷங்கள் (அதைவிழச்செய்தவன்) நரகத்திலிருக்கவேண்டும். கபிலையை மந்திரத்தினாலேயே பிடிக்கவும் விடவும்வேண்டும். ஸமர்த்தனே! மந்திரமில்லாமல்பிடிக்கப்பட்டால் அது இருளில் அமிழ்த்திவிடும். [1]புத்திமயங்கிக் கபிலையைக்கொண்டு ஜீவிக்கிறமனிதர்கள் அநேகமாயிரம் வருஷங்கள் நரகத்தில்விழுந்திருப்பர். எந்தப்பிராம்மணர்கள் மந்திரத்துடன் கபிலையைப்பிடிக்கின்றனரோ அவர்கள் இவ்வுலகத்திலும் சந்தோஷமடைவர்; பின்னும் குற்றமற்றஉலகங்களை அடைவர். கபிலைப்பசுவை விதிப்படி உபயோகிக்காதவர்களைச் சூத்ரர்களென்றறி' என்றார்.

---

[1]ஒருசொல் விடப்பட்டது.

## நாற்றிருபத்தாருவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(வ்யாஸருக்கும் சுகருக்கும் ஸம்பாஷணைத்தொடர்ச்சி.)

சுகர், 'ரிஷிஸ்ரேஷ்டரே! அநேகநிறங்களுள்ளபசுக்களில் கபிலைகள்மட்டும் எல்லாவற்றிலும் சிறப்பைஅடைந்ததேன்?' என்று கேட்க, வ்யாஸர் சொல்லலானார்.

'புத்ரனே! கபிலைகள் பசுக்களில்சிறந்தவையானதையும் கபிலவர்ணமானதையும் மனிதர்கள்பூஜிக்கத்தக்கவையானதையும் கேள். முன்னர் அக்நிபகவான் தேவர்களைவிட்டுவிலகிப்போனானென்று நாம் கேட்டிருக்கிறோம். அவன் கோக்களிடம்சென்று, 'சரணாகதர்களைக் காப்பவர்களே! உங்களைச்சரணமடைந்தஎன்னைத் தேவர்களுக்குத் தெரியாமல் மறையுங்கள்' என்றுகேட்டுக்கொண்டான். அதற்கு, அந்தப்பசுக்கள் சேர்ந்து, 'ஓ! அக்நியே! உன்வரவு நல்வரவு. இங்கே எங்களால்மறைக்கப்பட்டநீ தேவர்களால் காணப்படாய்' என்று சொல்லின. பிறகு, தேவர்கள் அக்நியைக் கண்டுபிடிப்பதற்காகத் திரிந்தனர்; கோக்களிடத்தில் அக்நி மறைந்திருப்பதையறிந்து உடனே அவற்றினிடம்சென்று, 'பசுக்களே! உங்களிடத்தில் அக்நி இருக்கிறானே; ஹோமங்களைவகிப்பவனாகியஅக்நியை வெளிப்படுத்துங்கள். உலகங்களை நீங்கள் கெடுக்கலாகாது' என்றுகேட்டுக்கொண்டனர். பசுக்கள், 'அப்படியே ஆகட்டும்' என்றுஒப்புக்கொண்டு அக்நியைக்காண்பித்தன. அந்தத்தேவர்கள் அக்நியைப்பெற்றுச் சந்தோஷமடைந்து உடனே அக்நியைப்பார்த்து, 'நீ கோக்களுக்கு அனுக்கிரகம்செய்யக்கடவாய்' என்று ஏவினர். எந்தப்பசுக்களின் தேகங்களில் அக்நிஇருந்ததோ அந்தப்பசுக்கள் கபிலநிறத்தையும் எல்லாப்பசுக்களிலும் மேன்மையையும் அடைந்தன. அவற்றினால்உலகத்திற்குச்சிறந்தபலனையும் அக்நிபகவான் அளித்தான். ஆதலால், எல்லாநிறங்களிலும்சிறந்த கபிலநிறமுள்ளகோவை, ஆசையில்லாதவனும் நியமமுள்ளவனும் அக்நிஹோத்ரம்தவருதவனும் வேதமோதினவனுமானபிராம்மணனுக்குக் கொடு. கோவானது சிஷ்டனுக்குக் கொடுக்கப்பட்டால் அதன்தேகத்தில் எத்தனைரோமங்கள் இருக்கின்றனவோ அத்தனையுகங்கள் கொடுப்பவர்களையும் வாங்குகிறவர்களையும் பரிசுத்தமாகச்செய்கிறது' என்றார்.

---

## நானூற்றிருபத்தேழாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(வ்யாஸருக்கும் சுகருக்கும் ஸம்பாஷணைத்தொடர்ச்சி.)

சுகர், 'எந்தஎந்தஇடங்களில் கபிலநிறமிருப்பதனால் கபிலை யென்றறியலாம்? முன்னர் அதற்கு ரிஷிகளால் காணப்பட்ட லக்ஷணங்கள் எவை?' என்றுகேட்க, வ்யாஸர் சொல்லலானார்.

'குழந்தாய்! [1]கோக்களுள் கபிலையைஅறியும்வகையைக் கேள். கண்கள், கொம்புகள், குளம்புகள், விருஷணம், காதுகள், மூக்கு இவ்வாறிடங்களிலும் கபிலநிறமுள்ளவை அறுவகைக்கபிலைகளென்று சொல்லப்படுகின்றன. மேற்சொன்னலக்ஷணங்களில் ஒன்றுகாணப் பட்டாலும் அதைக் கபிலையென்றறியவேண்டுமென்று அறிஞர் சொல்லுகின்றனர். கண்ணில்கபிலநிறமுள்ளது அக்நியைச்சேர்ந்த தென்றும் குளம்பில்கபிலநிறமுள்ளது ருத்ரரைச்சேர்ந்ததென்றும் கழுத்தில்கபிலநிறமுள்ளது விஷ்ணுவைச்சேர்ந்ததென்றும் மூக்கில் கபிலநிறமுள்ளது சூரியனைச்சேர்ந்ததென்றும் காதில்கபிலநிறமுள் ளது வஸந்தனைச்சேர்ந்ததென்றும் விருஷணங்களில்கபிலநிறமுள் ளது காயத்ரியைச் சேர்ந்ததென்றும் அவற்றின்காரணங்களுக்குத் தக்கபடி அறுவகைஉத்பத்திகள் சொல்லப்படுகின்றன. கோக்களும் பிராம்மணர்களும் காயத்ரியும் ஸத்யமும் வஸந்தகாலமும்பொன்னும் ஒருகாரணத்திலிருந்து உண்டானவை. கண் கபிலநிறமுள்ளகோவை [2]வண்டியிற்கட்டினாலும் கறந்தாலும் ஒருவன் பாவஞ்செய்தவனா வான். அவன் நரகத்தில் நீண்டகாலமிருப்பான்; நரகத்திலிருந்து விடுபட்டபின் விலங்காகப்பிறப்பான்; மானிடப்பிறப்பை அடையும் போதும் பிறவிக்குருடனாகப்பிறப்பான்; கொம்புகள் கபிலநிறமா யுள்ளகோவை வண்டியிற்கட்டினாலும் கறந்தாலும் பலமுறை பிற க்கையிலும் விலங்குஜாதியிலேயே பிறப்பான்; குளம்புகளிற்கபில நிறமுள்ளகோவை வண்டியிற்கட்டினாலும் கறந்தாலும் அந்தஇழி வானமனிதன் ஏழையாய் முடிவில்லாதஇருளில்முழுகுவான். வாலில் கபிலநிறமுள்ளகோவை வண்டியிற்கட்டினாலும் கறந்தாலும் எப்போ தும் தங்கஇடமற்றவனாயிருந்து புழுவாய்ப்பிறப்பான். காதிற்கபில

---

1 பசு காளை இரண்டுக்கும் பொதுப்பெயர்.

2 கூலிக்காக வண்டியிற் கட்டுவதும் விற்பதற்காகக்கறப்பதும் பாவமென்று முழுதும் அறிக.

நிறமுள்ளகோவை அறிந்தும் அதைக்கொண்டுபிழைக்கும் இழிவான மனிதன், ஆயிரக்கணக்கானபிறப்புக்களால் சுத்தமடைந்தபின் மானிடப்பிறப்பையடைந்தாலும், சண்டாளன்முதலான பாவஜாதிகளிற் பிறப்பான். மதிகெட்டு மூக்கிற்கபிலநிறமுள்ளகோவைக்கொண்டு பிழைப்பவன் அநேகமாயிரம்வருஷங்கள் விலங்காகப்பிறப்பான்; மானிடஜன்மமெடுத்தபின்னும் நோய்பிடித்தும் பித்துப்பிடித்தும் சக்தியற்றுமிருப்பான். கபிலைகள் தேன்போலவும் நெய்போலவும் நன்மணமுள்ளவையென்று சாஸ்திரங்களில் சொல்லப்படுகின்றன. அவற்றைக்கொண்டுஜீவிப்பவன் திர்யக்ஜாதியிற்பிறப்பான்; தாவரமாகவும்பிறந்தபின் மானிடஜன்மமடைவனாயின் இழிந்தவர்ணத்திலும் இழிந்தகுலத்திலும் பிறந்தும் அற்பஆயுளுள்ளவனாயிருப்பான். எந்தப்பாபிகள் கபிலமாட்டைக் கோபித்து வண்டியிழுக்கச்செய்கின்றனரோ அவர்கள் மகாப்பிரளயம்வரையில் நரகங்களில் கிடப்பார்' என்று சொன்னார்" என்றார்.

---

## நூற்றிருபத்தேட்டாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(ஸ்ரீதேவிக்கும் பசுக்களுக்கும் ஸம்வாதமும், ஸ்ரீதேவி கோமூத்ர கோமயங்களில் வஸித்ததும்.)

யுதிஷ்டிரர், "பசுக்களின்சாணத்தில் லக்ஷ்மிஇருக்கிறாளென்று கேள்விப்பட்டிருக்கிறேன். இதில் எனக்குப் பெரியஸந்தேகம். இதைப்பற்றித் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"பரதஸ்ரேஷ்டனே! அரசனே! இந்தவிஷயத்திலும் கோக்களுடன் திருமகளுக்குநடந்தஸம்வாதமாகிய இந்தப் பழையஇதிஹாஸத்தைக் கூறுகின்றனர். ஸ்ரீ தேவியானவள் அழகானவடிவமெடுத்துக்கொண்டு இவ்வுலகத்தில் பசுக்களினிடையில் புகுந்தாள். அவளுடைய அழகின்சிறப்பைக்கண்டு அந்தப்பசுக்கள் வியப்படைந்து, 'ஓ! தேவியே! உன் அழகுக்குநிகர் பூமியிலில்லை. நீ யார்? எங்கிருந்து வருகிறாய்? சிறந்தபாக்யமுள்ளவளே! உன்னுடையஅழகின்சிறப்பினால் நாங்கள் ஆச்சரியமடைந்தோம். நீ யார்? எங்கே செல்லப்போகிறாயென்று நாங்கள் உன்னைத்தெரிந்துகொள்ளவிரும்புகிறோம்

பொன்னிறமானவனே! இவற்றையெல்லாம் எங்களுக்கு உண்மை யாகச் சொல்லக்கடவாய்' என்றுகேட்டன. அதற்கு, ஸ்ரீதேவி, 'உங்களுக்கு ஸுகமுண்டாகட்டும். நான் உலகத்திறல் விரும்பப் படும் ஸ்ரீ யென்றுபேர்பெற்றவள். அஸுரர்கள் என்னால் விடப்பட் டுத்தான் அநேகவருஷகாலம் கெட்டுப்போயினர். என்னால்அடையப் பட்டுத்தான் தேவர்கள் நெடுங்காலமாகச் சந்தோஷப்படுகின்றனர். இந்திரன், சூரியன், சந்திரன், விஷ்ணு, ஜலம், அக்நி, ரிஷிகள், தேவர்கள்எல்லாரும் என்னால் அனுக்கிரகிக்கப்பட்டுத்தான் விளங்கு கின்றனர். கோக்களே! எவர்களிடம் நான்பிரவேசிப்பதில்லையோ அவர்கள் முழுதும் கெடுகின்றனர். தர்மார்த்தகாமங்களென்னும் மூன்றுபுருஷார்த்தங்களும் என்னால் அனுக்கிரகிக்கப்பட்டுத்தான் ஸுகத்தைத்தருகின்றன. கோக்களே! இப்படிப்பட்ட சிறப்புள்ளவ ளென்றும் ஸுகத்தைத்தருகிறவளென்றும் என்னை அறியுங்கள். உங் களெல்லாரிடத்திலும் எக்காலமும் வஸிக்கவிரும்புகிறேன். குற்ற மற்றவர்களே! உங்களை நானே வந்துவேண்டுகிறேன். திருவுள்ள வர்களாகக்கடவீர்கள்' என்று சொன்னாள். பசுக்கள், 'நீ நிலையற்ற வள்; சஞ்சலமுள்ளவள்; அநேகருக்குப்பொதுவாயிருப்பவள்.உன்னை நாங்கள் விரும்பவில்லை. உனக்கு எங்கேஇஷ்டமோ அங்கே ஸுகமா கப் போகலாம். நாங்களெல்லாரும் நல்லதேகமுள்ளவர்களாயிருக்கி றோம். இப்போது எங்களுக்கு உன்னால் ஆகவேண்டியதென்ன? உன்னால் ஆகவேண்டியபிரயோஜனம் எங்களுக்கு ஒன்றுமில்லை. உன் இஷ்டப்படி செல்லலாம்' என்றுகூறின. ஸ்ரீதேவி, 'பசு க்களே! நீங்கள் இப்போது என்னை அங்கீகரியாமலிருப்பது உங் களுக்குத் தகுதியா? கிடைக்கஅரியவளானஎன்னை ஏன் அங்கீகரி யாமலிருக்கிறீர்கள்? நல்லதவமுள்ளவர்களே! தாமாகவந்தவர்க ளுக்கு அவமதிப்புண்டாவதுநிச்சயமென்று உலகத்திற்பரவும் இப் பழமொழி உண்மையானது. தேவரும் அஸுரரும் கந்தர்வரும் பிசாசரும் நாகரும் மனிதரும் அரக்கரும் பெரியகடுந்தவஞ்செய்து என்னை ஆராதிக்கின்றனர். கோக்களே! இப்போது என்னை அங்கீ கரிப்பதுதான் உங்களுக்குத்தகுதி. ஓ! சாந்தமானவர்களே! சரா சரங்களடங்கிய மூவுலகங்களிலும் நான் அவமதிப்பதற்குரியவளல் லேன்' என்றுசொன்னாள். கோக்கள், 'தேவியே! நாங்கள் உன்னை அவமதிப்பதுமில்லை; தூஷிப்பதுமில்லை. நீ நிலையற்றவள்; மனவுறுதி யில்லாதவள். அதனால், உன்னை விட்டுவிடுகிறோம். பலசொல்லி என்ன? நீ விரும்பினஇடத்திற்குச் செல்லலாம். குற்றமற்றவனே!

நாங்களெல்லாரும் சிறந்ததேகமுள்ளவர்களாயிருக்கிறோம். எங்களுக்கு உன்னாலென்ன?' என்றுகூறின. ஸ்ரீதேவி, 'நான் உங்களால் அவமதிக்கப்பட்டேனென்பது காரணமாக உலகத்திலுள்ள எல்லாமனிதர்களாலும் அவமதிக்கப்படுவேன். என்மீது தயைசெய்ய வேண்டும். நீங்கள் மகானுபாவைகள்; காப்பாற்றவல்லவர்கள். உங்களிடம் சரணாகதியாகவந்தடைந்த குற்றமற்றஎன்னைஎன்றும்காப்பாற்றுங்கள். நீங்கள் கௌரவிப்பதை விரும்புகிறேன். நீங்கள் எப்போதும் சுபமானவர்கள். உங்கள் அங்கங்களுள் மிக்கஇழிவான ஓரிடத்திலாவது நான் வஸிக்கவிரும்புகிறேன். குற்றமற்றவர்களே! உங்களுடைய அங்கங்களில் ஒன்றும் இகழப்பட்டதாகக் காணப்படவில்லை. நீங்கள் புண்ணியமானவர்கள்; அழகானவர்கள்; பரிசுத்தமானவர்கள். உங்கள்பின்பாகத்தை எனக்குக் கொடுங்கள். உங்கள் தேகத்தில் எந்தஇடத்தில் நான் இருக்கலாமோ அதை நீங்களே எனக்கு உரைக்கக்கடவீர்' என்றுசொன்னாள். வேந்தே! மேன்மை பெற்றவையும்ஏழைகளுக்கிரங்குகின்றவையுமானகோக்கள் ஸ்ரீதேவியினால் இவ்வாறு சொல்லப்பட்டபோது எல்லாம்சேர்ந்து மரியாதையுடன் அவளைப்பார்த்து, 'புகழுடையவளே! உன்னுடையவேண்டுகோளை நாங்கள் அவசியம் நிறைவேற்றவேண்டியவர்கள். சிறந்தவளே! எங்கள் கோமயத்திலும் மூத்திரத்திலும் நீ இருக்கலாம். அவை பரிசுத்தமானவை' என்றுசொல்லின. ஸ்ரீதேவி, 'நல்லவேளையாய் நீங்கள் என்னிடம்அன்புவைத்து அனுக்ரகம்செய்தீர்கள். ஸுகத்தைக் கொடுப்பவர்களே! அப்படியே ஆகட்டும். உங்களுக்கு ஸுகமுண்டாகக்கடவது. உங்களால் பூஜிக்கப்பெற்றேன்' என்று சொன்னாள். பாரதனே! திருமகள் கோக்களுடன் இவ்வகையாக உடன்பாடுசெய்துகொண்டு அவை பார்த்துக்கொண்டிருக்கும்போதே அவ்விடத்திலேயே மறைந்தாள். புத்ரனே! கோமயத்தின்மகிமையைப்பற்றி இவ்விதமாக உனக்கு உரைத்தேன். கோக்களின் மகிமையைப்பற்றித் திரும்பவும் சொல்லுகிறேன்; கேள்.

## நாற்றிருபத்தோன்பதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(பிரம்மதேவர், கோலோகம் தேவலோகத்துக்கு மேலிருப்பதன் காரணத்தை இந்திரனுக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிர ! கோதானஞ்செய்துகொண்டும் ஹோமஞ்செய்து மிகுந்ததைப்புசித்துக்கொண்டுமிருப்பவர் எவரோ அவர் ஸத்ரயாக முதலிய யாகங்களைத் தினந்தோறும் செய்தவராகிறார். இவ்வுலகத்தில் தயிரும் நெய்யுமின்றி யாகம் நடப்பதில்லை. ஆதலால், கோக்களாலேதான் யாகம் நிறைவேறுவது காணப்படுகிறது. கோதானம் எல்லாத்தானங்களிலும் சிறந்ததாகச் சொல்லப்படுகிறது. கோக்கள் மிகச்சிறந்தவை; பரிசுத்தமானவை ; பிறரைப் பரிசுத்தஞ்செய்பவற்றுள் சிறந்தவை. நன்மைக்காகவும் பாபநிவிருத்திக்காகவும் அவற்றையே பூஜிக்கவேண்டும். அவற்றின்பால் தயிர் நெய்களும் எல்லாப்பாவங்களையும் போக்குகின்றவை. கோக்கள் இம்மையிலும் மறுமையிலும் சிறந்தசக்தியாகச் சொல்லப்படுகின்றன. பரதஸ்ரேஷ்டனே ! கோக்களுக்குமேலானபரிசுத்தம் ஒன்றுமில்லை. யுதிஷ்டிர! இந்தவிஷயத்தில் பிரம்மதேவருக்கும் இந்திரனுக்கும் நடந்த ஸம்பாஷணையாகிய ஒருபழையசரித்திரம் கூறுகின்றனர். அஸுரர்கள் வெல்லப்பட்டபிறகு,இந்திரன் மூன்றுஉலகங்களுக்கும்அரசனானான். எல்லாப்பிரஜைகளும் ஸத்யத்தையும் தர்மத்தையும்கைப்பற்றி மகிழ்ந்திருந்தன. குந்திபுத்ரனே ! அப்போது ஒருகால், ரிஷிகள், கந்தர்வர், கின்னரர், நாகர், அரக்கர், தேவர், அஸுரர், கருடர், (கஶ்யபர் முதலிய) ஸ்ருஷ்டிகர்த்தர்கள் ஆகியஇவர்கள் பிரம்மதேவரை அடுத்திருந்தனர். நாரதரும், பர்வதரும், விசுவாஸு ஹாஹா ஹூஹூ என்னும் கந்தர்வர்களும் தேவலோகத்துக்குரியதானங்களைப்பாடி அந்தப்பிரபுவை ஆராதித்தனர். அவ்விடத்தில் அப்போது காற்று தெய்வலோகத்து மலர்களை அடித்துவந்தது. ஆறுருதுக்களும் நல்ல வாஸனையுள்ளபுஷ்பங்களைத் தனித்தனியே கொண்டுவந்தன. எல்லாப்பிராணிகளும்சேர்ந்திருப்பதும் தேவவாத்தியங்கள் முழங்குவதும் தெய்வப்பெண்களின் நாட்டியங்கள் நிரம்பியிருப்பதுமாகியஅந்தத்தேவஸபையில் இந்திரன் தேவர்க்கதிபதியாகிய பிரம்மதேவரை வணங்கி அபிவாதனஞ்செய்து, 'பகவானே! பிதாமஹரே! கோலே

கமானது லோகங்களுக்கெல்லாம் தலைவர்களாகிய தேவர்களுக்கு மேலிருப்பதேன்? இதனைத் தெரிந்துகொள்ளவிரும்புகிறேன். ஈசுவரரே! கோக்கள் தேவர்களுக்குமேல் ரஜோகுணமில்லாமல் ஸுகமாகவஸிக்கும்படி என்ன தவம் செய்தன? என்னபிரம்மசர்யவிரதம் செய்தன?' என்றுவினவினன்.

பிறகு, பிரம்மதேவர் பலாஸுரனைவதஞ்செய்தவனாகிய அந்த இந்திரனைப்பார்த்து, 'பலனைக்கொன்றவனே! பிரபுவே! நீ கோக்களை எப்பொழுதும் மதியாமலேஇருக்கிறாய். அதனால், அவற்றின் மகிமையை நீ அறியவில்லை. தேவஸ்ரேஷ்டனே! கோக்களின்சிறந்த சக்தியையும் மகிமையையும்கேள். வாஸவனே! கோக்கள் யாகத்தின்உறுப்புக்களென்றும் யாகமேயென்றும் சொல்லப்படுகின்றன. அவையின்றி யாகம் எவ்வகையிலும் நடவாது. அவை பாலினாலும் நெய்யினாலும் ஜனங்களைக் காப்பாற்றுகின்றன. அவற்றின்பிள்ளைகளும் பயிர்செய்வதற்கு உதவிசெய்கின்றன.பலவகைத்தானியங்களையும் விதைகளையும் உண்டுபண்ணுகின்றன.அவற்றினால் எல்லாயாகங்களும் ஹவ்யகவ்யங்களும் நடந்துவருகின்றன. தேவேந்திரனே! அந்தப்பசுக்களும் அவற்றின்பால்தயிர்நெய்யும் புண்ணியமானவை. பசுக்கள் எல்லாப்போகங்களையும் கொடுக்கின்றன. பசியினாலும் தாகத்தினாலும் பீடிக்கப்பட்டஜனங்களையும் தவத்தினால்வருந்தின ரிஷிகளையும் அவை காப்பாற்றுகின்றன. வாஸவனே! பசுக்கள் ஜனங்களைத் தொழில்களிலும் நற்நருமங்களிலும் ஒழுங்சாகப் பிரவிருத்திக்கச்செய்கின்றன. அதனால், அவை எப்போதும் நமக்குமேலிருக்கின்றன. இந்திரனே! நூறுயாகங்களைச்செய்தவனே! தேவர்களுக்குமேல் கோக்கள்வஸிப்பதற்கு இந்தக்காரணம் உனக்குச்சொன்னேன். வாஸவனே! பசுக்கள் வரம்பெற்றவை; வரமளிப்பவை. அவை புண்யகருமங்களுக்குரியவை; பாவத்தைப் போக்குகின்றவை; மங்களகரமானலக்ஷணங்கள்பொருந்தியவை.பலாஸுரனைஸம்ஹரித்ததேவேந்திரனே! பசுக்கள் எதற்காகப் பூமிக்குப்போயினவென்பதைப்பற்றியும் சொல்லுகிறேன்; முழுதும்கேள். அப்பா! தேவஸ்ரேஷ்டனே! முந்தியதேவயுகத்தில் மிக்கபலசாலிகளான அஸுரராஜர்கள் மூவுலகங்களையும் ஆண்டுகொண்டிருக்கையில், புத்ரனைக்குறித்து ஒற்றைக்காலால் இடைவிடாமல்நின்று செயற்கரியகடுந்தவஞ்செய்துகொண்டிருந்த அதிதிதேவியின்கர்ப்பத்தில்விஷ்ணுபிரவேசித்திருக்கையில், அந்தமகாதேவி பெருந்தவஞ்செய்வதைக்கண்டு தக்ஷர்மகளும் தர்மத்

தையே தலைமையாகக்கொண்டவளுமான ஸுரபிதேவி உற்சாகத்துடன் கடுந்தவஞ்செய்தாள். அவள் பெருந்தவஞ்செய்துகொண்டு தேவர்களாலும் கந்தர்வர்களாலும் அடையப்பட்ட அழகிய கைலைமலைச்சிகரத்தில்பதிஞேராயிரம்வருஷம்ஒற்றைக்காலால்நின்ருள்.புரந்தரனே! அவளுடையதவத்தினல்பீடிக்கப்பட்டதேவர்களும் ரிஷிகளும் நாகர்களும் என்னுடன் அங்கேசென்று அந்தச்சிறந்தவளைப் பணிந்தனர். அப்போது அங்கே தவஞ்செய்துகொண்டிருந்த ஸுரபிதேவியைப் பார்த்து, நான், 'ஓ! குற்றமற்றதேவியே! நீ எதற்தாகக் கடுந்தவஞ்செய்கிருய்? மஹானுபாவையே! சிறந்தவளே! இந்தஉன்தவத்தினல் உன்மேல் சந்தோஷமடைந்து உனக்குவரங்கொடுக்கவந்திருக்கிறேன். வரம்கேள்' என்றுசொன்னேன். அதற்கு, ஸுரபி, 'உலகங்களைப்படைத்தவரே! பகவானே! எனக்கு இப்போது வரம்வேண்டாம். குற்றமற்றவரே! நீர் என்மேல் இப்போது அன்புகூர்ந்திருப்பதே எனக்கு வரம்' என்றுசொன்னள். தேவர்க்கதிபதியே! சசியின்கணவனே! இவ்வாறுசொல்லும் அந்தச்சுரபிதேவிக்கு நான் சொன்னமறுமொழியைக் கேள். 'தேவியே! ஒன்றையும்விரும்பாமல் நீசெய்தபரிசுத்தமானதவத்தினல் நான் உன்மேல் அனுக்கிரகம் வைத்திருக்கிறேன். ஆதலால், இறவாமையென்னும்வரத்தை உனக்குக் கொடுக்கிறேன். மூன்றுலோகங்களுக்கும்மேலே நீ இருப்பாய். அந்தக்கோலோகமானது என்அனுக்கிரகத்தினல் பிரக்கியாதியாயிருக்கும். மஹானுபாவையே! மனிதர்களில்உனக்குப்பணிவிடைசெய்தசிறந்தஜனங்களும் உன்ஸந்ததிகளும் அந்தக்கோலோகத்தில் வஸிப்பர். சிறந்ததேவியே! தேவர்க்கும் மனிதர்க்கும்உரியஸுகங்களும் சொர்க்கஸுகமும் நீ மனத்தில்நினைத்தமாத்திரத்தில் உனக்கு அமைந்துவிடும்' என்றுசொன்னேன். ஆயிரங்கண்ணனே! அந்த ஸுரபியின்உலகங்கள் போகங்களெல்லாம்உள்ளவை. வாஸவனே! இறப்பும் மூப்பும் அங்கே வருவதில்லை; வெப்பமில்லை; சோர்வில்லை; எவ்விதமானகெடுதலும் அங்கில்லை. வாஸவனே! சிறந்தகாடுகளும் சிறந்தவீடுகளும் நினைத்தபடிசெல்லும் அழகியவிமானங்களும் அங்குள்ளன.தாமரைமலர்போன்றகண்ணுள்ளவனே! பிரம்மசாரிவிரதத்தினலும்உபவாஸத்தினலும்பொய்யாமையினலும் புலன்களையடக்குவதினலும் பலவிததானங்களாலும் புண்ணியங்களாலும் தீர்த்தயாத்திரைகளாலும் சிறந்ததவத்தினலும் நித்தியகர்மங்களைநன்ருகச்செய்வதினலும் அந்தக்கோலோகத்தை அடையலாம். இந்திரனே! நீ

கேட்டதற்கு முழுதும்சொன்னேன். அஸுரர்களையழிப்பவனே! நீ கோக்களை அவமதிக்கலாகாது' என்று சொன்னார். யுதிஷ்டிர! இதைக்கேட்டபிறகு,தேவேந்திரன் எக்காலமும் கோக்களைப்பூஜித்து அவற்றின்மேல் கௌரவத்தையும்வைத்தான். பெருங்கீர்த்தியுள்ளவனே! பாவத்தைப்போக்குவதும் சிறந்தபரிசுத்தமும் உத்தமமுமான கோமாஹாத்மியத்தை உனக்குச்சொன்னேன். புருஷஶ்ரேஷ்டனே! எல்லாப்பாவங்களையும் விடுவிக்கும்உபாயம் உரைக்கப்பட்டது. ஹவ்யகவ்யங்களிலும் யாகங்களிலும் சிராத்தங்களிலும் எப்போதும் பக்தியுடன் இதைப் பிராமணர்களுக்குச்சொல்லுகிறவனுக்கு எல்லா இஷ்டஸித்தியும் அழியாதபித்ருதிருப்தியும் உண்டாகின்றன. கோக்களின்மேல்பக்தியுள்ள மனிதன் விரும்பினவற்றையெல்லாம் அடைவான். கோக்களின்மேல் பக்தியுள்ளபெண்களும் ஸுகங்களை அடைவர். புத்திரனைவிரும்புகிறவன் புத்திரனையும் பெண்ணைவிரும்புகிறவன் பெண்ணையும் தனத்தைவிரும்புகிறவன் தனத்தையும் தர்மத்தைவிரும்புகிறவன் தர்மத்தையும் வித்தையைவிரும்புகிறவன் வித்தையையும் ஸுகத்தைவிரும்புகிறவன் ஸுகத்தையும்அடைவர். பாரதனே! கோக்களிடம்பக்தியுள்ளவனுக்குக் கிடைக்காதது ஒன்றுமில்லை" என்றார்.

---

## நூற்றுமுப்பதாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(பொன்னின் வரலாறு முதலியன.)

யுதிஷ்டரர், "கோதானமானது இவ்வுலகில் மிகச்சிறந்ததென்றும் தர்மத்தைக்கருதும் அரசர்களுக்கு முக்கியமானதென்றும் பிதாமஹரானநீங்கள் சொன்னீர்கள். ராஜ்யபாரம்செய்வது எப்போதும் கஷ்டம். நான்கு ஆஶ்ரமங்களையும் அறிவது கடினம்; சாரர்களைக்கொண்டறிவதும் முடியாது. மனத்தேர்ச்சியில்லாதவர்கள் அதை வகிக்கமுடியாது. பெரும்பாலும் அரசர்களுக்கு நல்லகதியில்லை. பூமியைத்தானம்செய்பவர்கள் நிச்சயமாகச் சுத்தராவார்கள். கௌரவஶ்ரேஷ்டரே! எல்லாத்தர்மங்களையும் நீர் எனக்கு உரைத்தீர். அப்படியே ந்ருகன்செய்தகோதானத்தைப்பற்றியும் நாசிகேதரென்னும் ரிஷி முன்னமே கோதானத்தைப்பற்றிச்சொல்லியதையும் நீர் சொன்னீர். எல்லாக்கர்மங்களுக்கும் எல்லாயாகங்களுக்கும் பூமி, பசு,

பொன்இவை தக்ஷிணைகளென்று வேதங்களிலும் உபநிஷத்துக்களிலும் விதிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் பொன் தக்ஷிணையென்னும்சுருதியே முக்கியமாயிருக்கிறது. பிதாமஹரே! இதைப்பற்றிச் சரியாகக் கேட்க விரும்புகிறேன். பொன்என்பது எது? அது எக்காலத்தில் எப்படிஉண்டானது? எவ்வுருவமானது? அதன்தேவதையென்ன? பலனென்ன? எதனல் சிறந்ததாகச் சொல்லப்படுகிறது? அறிஞர் ஸுவர்ணதானத்தைச் சிலாகிப்பது ஏன்? யாகங்களில் தக்ஷிணைக்குப் பொன்சிறந்ததாயிருப்பது எதனல்? பூமியையும் பசுக்களையும்காட்டிலும் பொன்னானது சிறந்தபரிசுத்தமாகவும் தக்ஷிணைக்குமுக்கியமாகவுமிருப்பது ஏன்? பிதாமஹரே! அதைச்சொல்லும்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானர். "அரசனே!, பொன்னுண்டான வகையை, நான்அறிந்துகொண்டபடி அனேககாரணங்களுடன் விரிவாகச்சொல்லுகிறேன். கவனித்துக்கேள். சிறந்தபராக்ரமமுள்ளவரும் என்தந்தையுமாகிய சந்தனுமரணமடைந்தபோது அவருக்குச் சிராத்தம்கொடுப்பதற்காக நான் கங்கையின்உற்பத்தியிடத்திற்குப் போனேன். புத்திரனே! அங்கேபோய் என்பிதாவின்சிராத்தகாரியத்தைச் செய்யத்தொடங்கினேன். அப்போது, என்தாயாகியகங்கையும் அதற்கு உதவிசெய்தாள். அங்கேவந்த அநேகதவஸித்திபெற்றரிஷிகளை உட்காரவைத்துத் தர்ப்பணமுதலியகர்மங்களை நான் தொடங்கினேன். முதலிற்செய்யும் அந்தக்கருமத்தைச் சாஸ்திரப்பிரகாரம் ஊக்கத்துடன்முடித்து விதிப்படி ஸரியாகப் பிண்டதானம் செய்யத்தொடங்கினேன். ராஜனே! அப்போது அழகானதோள்வளையையும் தொங்குகின்றஅணிகளையுமுடையஒருகை அந்தப்பரப்பினதர்ப்பங்களைஒதுக்கிக்கொண்டு கிளம்பிற்று. பரதஸ்ரேஷ்டனே! அந்தக்கையைப்பார்த்து என்பிதாவே நேரேவாங்கிக்கொள்ளுகிருரென்று சற்றுநேரம்மிக்கஆச்சரியமுற்றேன். பிரபுவே! அதன்பிறகு, நான் சாஸ்திரத்தைஆராயும்போது, எனக்குத் திரும்பவும் வேறு எண்ணமுண்டாயிற்று. 'பிதாவின்கையில் பிண்டதானம் செய்யவேண்டுமென்னும்விதி வேதங்களிலில்லை. மனிதன் கொடுக்கும்பிண்டத்தைப் பிதிருக்கள்நேரேவாங்குவது எங்குமில்லை. தர்ப்பங்களில் பிண்டம்கொடுக்கவேண்டுமென்பதுதான் விதிக்கப்பட்டுள்ளது' என்கிறபுத்தி எனக்கு உண்டாயிற்று. பரதஸ்ரேஷ்டனே! அதன்பிறகு, நான் பிதாவினது அந்தக்கையைக்கண்டதைக்கவனியாமல் சாஸ்திரத்தையேநம்பிப் பிண்டவிதியின்ரகஸ்யத்தைநினைத்து அந்தப்பிண்டங்களையெல்லாம் தர்ப்பங்களில்வைத்தேன். ராஜனே! சாஸ்திரத்தை

அநுஸரித்துத்தான் அப்படிச்செய்தேனென்றறி. வேந்தனே! அதன் பிறகு, என்தந்தையின்அந்தக்கை மறைந்தது. பிறகு, கனவில் பித்ருக்கள் எனக்குத்தோன்றினர். அவர்கள் அன்புடன் என்னைப்பார்த்துச் சொன்னார்கள். 'பரதஸ்ரேஷ்டனே! நீ தர்மகாரியத்தில் மயங்காமலிருக்கிறாயே. இந்தஉன்நல்லறிவினால் நாங்கள் திருப்தியடைந்தோம். ராஜனே! நீ இப்போது சாஸ்திரத்தையே பிரமாணமாகச் செய்ததனால் உன்னுடையஆத்மாவும் தர்மமும் சாஸ்திரமும் வேதங்களும் பித்ருக்களும் ரிஷிகளும் பிரம்மதேவரும் ஆசாரியர்களும் தக்ஷர்முதலான பிரஜாபதிகளும் [1] நம்பும்படி செய்யப்பட்டனர்; அசைக்கப்படாமல் நிலைபெற்றனர். பரதஸ்ரேஷ்டனே! நீ இப்போது நல்லகாரியம்செய்தாய். ஆனால், பூமிக்கும்பசுக்களுக்கும்பிரதியாகப் பொன்னைக் கொடுக்கவேண்டும். இப்படிச்செய்தால் நாமும் நம்முடையமுன்னோர்களனைவரும் தர்மமும் பரிசுத்தர்களாகச் செய்யப்பட்டவராவோம். அந்தப்பொன் தானே சிறந்தபரிசுத்தம். பொன்னைக்கொடுப்பவர்கள் தம்குலத்தில் முன்பதின்மர் பின்பதின்மர்களைக் கரையேற்றுகின்றனர்' என்பதுஎனக்கு என்பித்ருக்கள்சொல்லியது. ராஜனே! மனிதர்க்கதிபதியே! பரதஸ்ரேஷ்டனே! அதன்பிறகு, நான் கண்விழித்துக்கொண்டு ஆச்சரியமடைந்து பொன்னைக்கொடுப்பதில் எண்ணம்வைத்தேன். வேந்தனே! பிரபுவே! தனத்தையும் ஆயுளையும்கொடுப்பதாகிய பரசுராமரின்பூர்வசரித்திரத்தையும் கேள். முன்னே, பரசுராமர் கடுமையானகோபங்கொண்டு இருபத்தொரு முறை பூமியில் க்ஷத்திரியர்களில்லாமற்செய்தார். மகாராஜனே! மலர்போன்றகண்களையுடையவீரரானபரசுராமர பூமியைமுழுதும்வென்ற பிறகு,பிராம்மணர்களாலும் க்ஷத்திரியர்களாலும் பூஜிக்கப்பெற்றதும் எல்லாவிருப்பங்களையும்கொடுப்பதும் எல்லாப்பிராணிகளையும் பரிசுத்தம்செய்வதும் பராக்கிரமத்தையும் புகழையும் விருத்திசெய்வதுமாகிய அசுவமேதயாகத்தைச் செய்தார். செய்தஅந்தயாகத்தினால் பாவம் விலகின அந்தவீரரானபரசுராமர் தம்ஆத்மா பாவம்போய் லேசாயிருப்பதை உணரவில்லை. பாரதனே! அந்தமகாத்மாவானவர் அந்தச்சிறந்தயாகத்தை நிரம்பினதக்ஷிணைகளோடுசெய்தபிறகும் வெறுப்புள்ளவராகி, சாஸ்திரங்களில்தேர்ந்த ரிஷிகளையும் தேவர்களையும்பார்த்து, 'மகானுபாவர்களே! கொடியகாரியம்செய்யும்மனிதர்களுக்குப் பாவத்தைப்போக்குபவற்றுள் சிறந்ததெதுவோ அதைச் சொல்லுங்

---

1 இல்லாவிடின், பிதாவின்கையின்றிப் பிண்டத்தைக்கொடாமல் ஜனங்கள் நம்பிக்கையற்றுப் போவர் என்பது.

கள்' என்றுகேட்டார். இவ்வாறுசொல்லப்பட்டபின், வேதங்களும் சாஸ்திரங்களும்தெரிந்தஅம்மஹரிஷிகள்,'ஓ!ராமரே!வேதம்பிரமாண மென்றறிந்து பிராம்மணர்களைப் பூஜிக்கவேண்டும். பாவம்விலகுவ தைப்பற்றிப் பிரம்மரிஷிகளின் கூட்டங்களிடம் திரும்பவும் கேட்க வேண்டும். மிக்கஅறிஞரானஅவர்கள் எதைச்சொல்லுவார்களோ அதைச் செய்யக்கடவீர்' என்று சொன்னார்கள். பிறகு, சிறந்த மகிமையுள்ளபரசுராமர் தேவரிஷிகளாகிய வஸிஷ்டரையும் அகஸ்தி யரையும் காசியபரையும்நோக்கி, 'சாதுக்களிற்சிறந்தபோதனர்க ளாகிய பிராம்மணோத்தமர்களே! நான் எப்படிப் பரிசுத்தனாவேன்? என்னகருமம்செய்வதனால், அல்லது என்னதானம்செய்வதனால் என் பாவம்போமென்கிறஎண்ணம் எனக்குஉண்டாயிருக்கிறது. எனக்கு அனுக்கிரகம்செய்யும்விருப்பம் உங்களுக்குஇருக்குமாயின், என்னைச் சுத்தப்படுத்துவது எதுஎன்பதைச் சொல்லுங்கள்' என்றுகேட்டார். அதற்கு ரிஷிகள், 'ப்ருகுவம்சபுத்திரரே! இவ்வுலகத்தில் பாவம் செய்தமனிதன் கோக்களையும் பூமியையும் தனத்தையும்கொடுப்பத னால் பரிசுத்தனாகிறானென்று கேள்விப்பட்டிருக்கிறோம். பிரம்ம ரிஷியே! எல்லாவற்றிலும்சிறந்தபாவனமாகிய மற்றொருதானத்தை யும் கேளும். தேவர்க்குரியதும் மிக்கஆச்சரியமான உருவமுள்ள தும் அக்னியில்பிறந்ததுமாகிய ஸுவர்ணமென்றுபெயர்பெற்ற பொ ருள் முற்காலத்தில் தன்சக்தியினால் உலகங்களையெரித்துக்கிளம்பின தென்றுகேட்டிருக்கிறோம். அதைக்கொடுப்பவன் பயன்பெறுவன்' என்றுகூறினர். பிறகு, மகிமைபொருந்தினவரும் தவஉறுதியுள்ள வருமானவஸிஷ்டர் அவரைப்பார்த்து, 'ராமா! அனலுக்கொப்பான ஒளியுள்ளபொன்னானது எப்படியுண்டானதென்பதைக் கேளும். அது நீர்களைத்தபலனைக் கொடுக்கும். அது இவ்வுலகத்தில் தானத் திற்கு முக்கியமாகச்சொல்லப்படுகிறது. சிறந்தகைகளையுடையவரே! ஸுவர்ணமென்பது யாது, அது எங்கிருந்துவந்தது, குணங்களில் மிகச்சிறந்ததானது எவ்வகையென்பவற்றையெல்லாம் சொல்லுகி றேன்; கேளும். உண்மையையாராயுங்கால், அக்னியும் சந்திரனும் சேர்ந்ததுதான் பொன்என்றறியும். செம்மறியாடு அக்னி; வெள் ளாடு வருணன்; குதிரை சூரியன்; யானைகள் மான்கள் ஸர்ப்பங்கள் எருமைகள் ஆகியஇவை அஸுரர்கள்; ப்ருகுபுத்திரரே! கோழிக ளும் பன்றிகளும் ராக்ஷஸர்கள்; யஜ்ஞமும் கோக்களும் பாலும் சந்திரனும் பூமியென்று தர்மசாஸ்திரம் கூறுகின்றது. உலகத்தை யெல்லாம்கடைந்து ஓர் ஒளிக்கட்டியானபொன்உண்டாயிற்று. பிரம்ம

ரிஷியே! அந்தப்பொன்னானது இவையெல்லாவற்றிலும் மிகச்சிறந்த இரத்தினம். இந்தக்காரணம்பற்றித்தான் தேவர்களும் கந்தர்வர்களும் நாகர்களும் அரக்கர்களும் மனிதர்களும் பிசாசர்களும் கிரீடங்கள் தோள்வளைகள்முதலியபலஅணிகலங்களாக அந்தப்பொன்னையேஅவ்சியமாக அணிந்துகொள்ளுகின்றனர். ப்ருகுஸ்ரேஷ்டரே! பொன்னாற்செய்யப்பட்ட அவ்வாபரணங்களாலேதான் அவர்கள் விளங்குகின்றனர். அரசரே! ஆதலால், பொன்னானது பூமி கோக்கள் இரத்தினங்கள் ஆகியஎல்லாப்பாவனங்களிலும் சிறந்தபாவனமாகச்சொல்லப்படுகிறதென்றறியும். பிரபுவே! பூமியையும் கோக்களையும் மற்றவற்றையும் கொடுப்பதிலும் பொன்னைக்கொடுப்பது மிகச்சிறந்தது. தேவதைக்கொப்பான ஒளியுள்ளவரே! அழியாதபுண்யகரமான அதைப் பிராம்மணோத்தமர்களுக்குக்கொடும். இந்தச்சொர்ணதானம் எல்லாவற்றிலும் சிறந்தபாவனம். பொன்தான் எல்லாத்தக்ஷிணைகளிலும்விதிக்கப்படுகிறது. பொன்னைக்கொடுத்தவர் எல்லாம்கொடுத்தவராகிறார். பொன்னைக்கொடுத்தவர் தேவர்களைக்கொடுத்தவருமாகிறார். அக்னிதான் எல்லாத்தேவர்களுமாக இருப்பது. பொன் அக்னியின் உருவம். ஆதலால், பொன்னைக்கொடுப்பவன் எல்லாத்தேவர்களையுங்கொடுப்பவனாகிறான். புருஷஸ்ரேஷ்டனே! அதற்கு மேற்பட்டதொன்றையும் (பெரியோர்கள்) அறியவில்லை. பிரம்மரிஷியே! ஆயுதம்பிடித்தவரிற்சிறந்தவரே! பொன்னின்மகிமையைப் பற்றி நான் திரும்பவும் சொல்லுகிறேன்; கேளும். பிருகுபுத்திரரே! முன்னே பிரஜைகளைப்படைத்தவராகிய ஸ்வாயம்புவமனு, புராணகதைசொல்லும்போது நான்கேட்டது இது. பிருகுகுலஸ்ரேஷ்டரே! சூலாயுதம்பிடித்தவரும் மஹாத்மாவுமான சிவபகவான்சிறந்ததாகிய இமயமலையில் உமாதேவியைமணம்புரிந்து அம்மஹாத்மாவான பகவானும் தேவியும்சேர்ந்தபோது தேவர்களனைவரும்பயந்து ருத்ரரிடம்வந்தனர். ப்ருகுஸ்ரேஷ்டரே! அவர்களனைவரும், மகாதேவரும்வரமளிப்பவளாகியஉமாதேவியும்வீற்றிருக்கையில் சிவனைத் தலைவணங்கி நமஸ்கரித்து, 'ஓ! குற்றமற்றதேவரே! உமக்கு உமாதேவியுடன் சேர்க்கையுண்டாயிற்று. தவத்திலும் மகிமையிலும் இவளும் மிகச்சிறந்தவள்; நீரும் மிகச்சிறந்தவர். தேவரே! உம்முடையவீரியம் வீணாகாது. இந்தஉமாதேவியின் வீரியமும் அப்படியே. தேவரே! பிரபுவே! உங்களிருவருக்கும் பிறக்கும்சந்ததி மிக்கவலிமையுள்ளதாயிருக்கும். அது மூவுலகங்களிலும் ஒன்றையும் மீறச்செய்யாதென்பது திண்ணம். பெரியகண்களையுடையவரே!

உலகங்களுக்கு ஈசுவரரே! நீர் மூன்றுலகங்களுக்கும் நன்மையைக் கருதி வணங்கினஇந்தத்தேவர்களுக்கு வரம்தாரும். பிரபுவே! சந்ததிக்குரிய உமதுசிறந்தவீரியத்தை அடக்கும். மூவுலகங்களிலும் முக்கியமாகவுள்ளநீங்களிருவரும் உலகத்தை வருத்துவீர்கள். உங்களிருவருக்கும் பிறக்கும்சந்ததி தேவர்களைநிச்சயமாக மறைத்துவிடும். பிரபுவே! பூமிதேவியும் ஸ்வர்க்கமும் ஆகாயமும் ஒன்றுசேர்ந்தாலும் உமதுவீரியத்தைத் தாங்கமுடியாதென்று நினைக்கிறோம்; இந்தஉலகமெல்லாம் உமதுவீரியத்தின்மகிமையினால் எரிக்கப்படும். பிரபுவே! பகவானே! ஆதலால், எங்கள்மேல் அனுக்கிரகம்வைக்கக்கடவீர். தேவர்களிற்சிறந்தவரே! உமக்கு இந்தஉமாதேவியினிடம் புத்திரன்பிறவாமலிருக்கவேண்டும். ஜ்வலிக்கின்ற சிறந்தவீரியத்தை மனவன்மையினால் அடக்கக்கடவீர்' என்றுவேண்டினர். பிரம்மரிஷியே! அவர்கள் இவ்வாறுசொல்லும்போது இடபக்கொடியுள்ளபகவான், 'அப்படியேயாகட்டும்' என்று தேவர்களுக்கு மறுமொழிகூறித் தம்முடையவீரியத்தை மேனோக்கச்செய்தார். அந்தவிருஷபவாகனராகிய சிவபெருமான் அதுமுதலாகஊர்த்வரேதஸ் ஆனார். சந்ததிக்குக்கெடுதியைச் செய்ததனால் உமாதேவி கோபித்துத் தேவர்களைநோக்கி, 'தேவர்களே! சந்ததியைவிரும்பின என்கணவரைமறுத்ததனால் நீங்களனைவரும் சந்ததியில்லாமற்போகக்கடவீர். தேவர்களே! என்சந்ததிக்கு நீங்கள் இப்போது இடையூறு செய்ததனால் உங்களெல்லாருக்கும் சந்ததியில்லாமற்போகக்கடவது' என்று பெண்தன்மையினால் கடுஞ்சொல்லைச் சொன்னாள். ப்ருகுஸ்ரேஷ்டரே! அவள் சபித்தகாலத்தில் அந்தத்தேவர்களில் அக்னிமட்டும் இருக்கவில்லை. உமாதேவியின் அந்தச்சாபத்தினால் தேவர்கள் சந்ததியில்லாமற்போயினர். ருத்திரரானவர் ஒப்பற்றவீரியத்தை அடக்கினார். அப்போது, அந்தவீரியத்தில் சிறிதுசிந்திப் பூமியில் விழுந்தது. அப்போது ஆச்சரியமான அந்தவீரியம் கிளம்பி அக்னியில் சேர்ந்தது. ஒளியில்ஒளிசேர்ந்து ஒன்றாகிவிட்டது. அதே காலத்தில் தாரகன்என்னும் ஓர் அஸுரன் இருந்தான். அவனால் இந்திராதிதேவர்கள் மிகத்துன்பமடைந்தனர். தாரகாஸுரனுடைய பராக்ரமத்தினால் ஆதித்தியர்கள் ருத்ரர்கள் வஸுக்கள் மருத்துக்கள் அஸ்வினிதேவர்கள் ஸாத்தியர்களனைவரும் பயந்தனர். தேவர்களின்வீடுகளும் வாகனங்களும் நகரங்களும் ரிஷிகளின் ஆஸ்ரமங்களும் அஸுரர்களால் ஆக்கிரமிக்கப்பட்டன. அந்தத்தேவர்களும் முனிவர்களும் மனஞ்சோர்ந்து அழியாதவரும் ஈசுவரருமாகிய பிரம்ம தேவரைச் சரணமடைந்தனர்.

## நூற்றுமுப்பத்தோராவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(பொன்னின் வரலாறும், ஸுப்ரம்மண்யரின் ஜனனமும்.)

தேவர்கள், 'பிரபுவே! தாரகனென்னும்அஸுரன் உம்மால்வரமளிக்கப்பெற்றுத் தேவர்களையும் ரிஷிகளையும் துன்பப்படுத்துகிறான். அவனுக்கு வதத்தை விதிக்கவேண்டும், பிதாமஹரே! எங்களுக்கு அவனிடத்தில் பயமுண்டாயிருக்கிறது. தேவரே! எங்களைக் காப்பாற்றும். எங்களுக்கு வேறுகதியில்லை' என்றுசொல்லினர்.

பிரம்மதேவர், 'நான் எல்லாப்பிராணிகளுக்கும் சமமாயிருப்பவன். இவன்விஷயத்தில் கொல்வதான பாவம்செய்ய நான் விரும்பவில்லை. தேவக்கூட்டங்களையும் ரிஷிக்கூட்டங்களையும்பீடிப்பவனாகிய தாரகனை உடனே கொல்லுங்கள். தேவஸ்ரேஷ்டர்களே! வேதங்களும் தர்மங்களும் அழியாமலிருக்கவேண்டும். இந்த விஷயத்தில் முன்னமே பரிகாரம் ஏற்படுத்தியிருக்கிறேன். உங்களுக்கு மனத்துயரம் நீங்கட்டும்' என்றுகூறினார். தேவர்கள், 'பகவானாகியஉங்களால் வரங்கொடுக்கப்பெற்று வன்மையினால்கர்வமடைந்த அவ்வஸுரன் தேவர்களால் கொல்லமுடியாதவனாயிருக்கிறான். அவன் எப்படி ஒழிவன்? பிதாமஹரே! அவன், 'தேவராலும் அஸுரராலும் அரக்கராலும் கொல்லப்படாமலிருக்கக்கடவேன்' என்கிறவரத்தை உம்மிடத்திற்பெற்றுக்கொண்டான். உலகத்திற்கதிபதியே! முன்னம் பார்வதிக்குச்சந்ததிவிச்சேதம்செய்யப்பட்டபோது, அவளால் தேவர்களனைவரும், 'உங்களுக்குச் சந்ததியுண்டாகாமற்போகக் கடவது' என்று சபிக்கப்பட்டனர்' என்றுசொல்ல, பிரம்மதேவர் 'தேவஸ்ரேஷ்டர்களே! பார்வதி சாபம்கொடுத்தகாலத்தில் அங்கே அக்கினியிருக்கவில்லை. ஆதலால், அவன் அஸுரர்களைவதம்செய்யத் தகுந்தபுத்திரனை உண்டாக்குவான். அந்தப்புத்திரன் தேவர் தானவர் அரக்கர் மனிதர் கந்தருவர் நாகர் பறவைகள்எல்லாரையுமிஞ்சி, பிரயோகிப்பதுவீண்போகாத சக்தியாயுதத்தினால் உங்களுக்குப்பயமுண்டாவதற்குக்காரணமான அந்தத்தாரகாஸுரனையும்மற்றுமுள்ள அஸுரர்களையும் கொல்லப்போகிறான். நெடுநாளாயிருந்தவிருப்பமல்லவோ காமமென்று சொல்லப்படுகிறது? அதனால்சிதறிஅக்னியில் விழுந்திருக்கிறருத்ரருடையவீரியமானது இரண்டாவதுஅக்னியைப் போலப் பெரும்பொருளாயிற்று. அஸுரர்களைவதஞ்செய்வதற்காக

அக்னியானவன் அந்தப்பிராணியைக் கங்கையினிடம் உண்டாக்கப் போகிருன். அந்தஅக்னியானவன் சாபகாலத்தில் இல்லாமையினுல் அந்தச்சாபத்தை அடையவில்லே. தேவர்களே! ஆதலால், உங்கள் பயத்தைப்போக்குவதற்காக அக்கினியின் புத்திரன் பிறக்கப்போகிருன். அக்கினியைத்தேடி அப்படிச்செய்யும்படி இப்போதே கட்டளேயிடுங்கள். குற்றமற்றவர்களே! தாரகனேக்கொல்வதற்கு உபாயத்தை நான்சொன்னேன். மகிமையுள்ளவர்களின்சாபங்கள்மகிமையுள்ளவரிடத்தில்செல்லமாட்டா. சக்திகளும் அதிகசக்தியைஎதிர்த்தால் குறைவடைகின்றன. நினேப்பதனுலுண்டாகும்விருப்பமாகிய [1] காமமானது எல்லாவற்றிலும் முதன்மையானது. அது வரமளிக்கத்திறமையுள்ளவர்களும் யாவராலும் கொல்லப்படக்கூடாதவர்களுமானரிஷிகளேயும் கொல்லும். உலகங்களேயெல்லாமாளுகிறவனும் சொல்லுக்கெட்டாதவனும்எங்குமிருப்பவனும் எல்லாவற்றையுமுண்டெண்ணுகிறவனும் எல்லாப்பிராணிகளின் ஹ்ருதயங்களிலுமிருப்பவனும் பிரபுவுமானமன்மதன் ருத்திரருக்குமுந்தினவன். ஒளிகளின் சேர்க்கையான அவ்வக்னிபகவானேச் சீக்கிரம்தேடுங்கள். அந்தத் தேவன் உங்கள் மனத்திலுள்ளஎண்ணத்தை நிறைவேற்றுவன்' என்றுசொன்னுர். மஹாத்மாவான பிரம்மாவின் அந்தச்சொல்லேக் கேட்டதேவர்கள் தங்கள்எண்ணம்கூடிவந்ததென்றுநினேத்து அக்னியைத்தேடிக்கொண்டு சென்றனர். பிறகு, ரிஷிகளனேவரும் தேவர்களுடன்கூட அக்னியைக்காணக்கருதி அக்னியினிடத்திலேயே மனத்தைச்செலுத்தி மூவுலகங்களிலும் தேடினர். ப்ருகுஸ்ரேஷ்டரே! சிறந்ததவமுள்ளவரும் பெருமைபொருந்தினவரும் உலகங்களிற்பெயர்பெற்றவருமான ஸித்தர்களனேவரும் உலகங்களெல்லாந்திரிந்தனர். காணுமல்போனஅக்னி தன்தேகமாகியஜலத்தில்மறைந்திருப்பதை அறியவில்லே. பிரபுவானபரசுராமரே? பிறகு, மனத்தில் அச்சத்துடன் அக்னியைக்காண்பதில்ஆவலுள்ள தேவர்களேநோக்கி அக்னியின்வெப்பத்தினுல் தாபமுண்டாக்கப்பட்ட ஜலத்திலிருக்கும் ஒருதவளே மனஞ்சோர்ந்து பாதாளத்தினடியிலிருந்துகிளம்பித் தேவர்களேப்பார்த்துச் சொல்லத்தொடங்கிற்று. 'தேவர்களே! பாதாளத்தினடியில் அக்னி வஸிக்கிருன். அக்கினியினுலுண்டானகொதிப்பினுலேதான் நான் இங்கேவந்தேன். தேவர்களே! அக்னிபகவான் தன் ஒளிகளே ஜலத்திற்சேர்த்து அந்தஜலத்தில் தூங்குகிருன். அவனுல்

1 'ஸங்கல்பாபிருசி: காம:' என்பதுமூலம், 'நினேத்தபடி பிரவிசிக்கும்' என்பது பழையஉரை.

நாங்கள் தாபமுண்டாக்கப்பட்டோம். தேவர்களே! உங்களுக்கு அக்னியாற்பிரயோஜனமும் அந்தஅக்னியைக்காணவிருப்பமுமிருக்குமாயின் நீங்கள் அவ்விடத்தில் அக்னியையடையுங்கள்; போகலாம். தேவர்களே! நாங்கள் அக்னியின்பயத்தினால் ஓடப்போகிறோம்' என்றுசொல்லி மண்டூகம் விரைவாக ஜலத்தில்அமிழ்ந்தது. மண்டூகம் கோள்சொன்னதை அக்னிபகவானறிந்து அதைப்பார்த்து, 'நீ சுவைகளையறியாமற்போவாய்' என்றுசபித்தான். பிரபுவான அக்னி அம்மண்டூகத்திற்குச்சாபமளித்தபிறகு, தான்வஸிப்பதற்காக விரைவாக வேறிடம்சென்றான்; தன்னைக் காண்பிக்கவில்லை. ப்ருகுஸ்ரேஷ்டரே! மஹாவீரரே! தேவர்கள் தவளைகளுக்கு அனுக்கிரகம் செய்ததை முழுதும்சொல்லுகிறேன்; கேளும். 'அக்னியின்சாபத்தினால் சுவையறியாமல் நாவற்றுப்போனபோதிலும் நீங்கள் அநேகவிதமானவாக்குக்களை உச்சரிப்பீர்கள். நீங்கள் வளைகளுக்குள்ளிருந்துகொண்டு ஆகாரமில்லாமலும் பிரஜ்ஞையில்லாமலும்உயிரில்லாமலும் உலர்ந்துபோயுமிருந்தாலும் பூமியே உங்களைக் காப்பாற்றும். இருள் மூடினஇரவிலும் நீங்கள் ஸஞ்சரிப்பீர்கள்' என்று தேவர்கள் அந்தத் தவளைகளுக்கு வரமளித்து மறுபடியும் அக்னிக்காக இப்புவனியெல்லாம்திரிந்தனர்; அக்னியை அடையவில்லை. ப்ருகுவம்சஸ்ரேஷ்டரே! பிறகு, ஐராவதத்திற்கொப்பானஒருயானை அந்தத்தேவர்களைக்கண்டு, 'அரசமரத்தில் அக்னியிருக்கிறது' என்றுசொல்லிற்று.ப்ருகுஸ்ரேஷ்டரே! கோபமேற்கொண்டஅக்னி யானைகளெல்லாவற்றையும், 'உங்களுக்கு நாவானது தலைகீழாகமாறிப்போகும்' என்றுசபித்தான். யானையினால்காண்பிக்கப்பட்டஅக்னி இவ்வாறுசபித்து அரசமரத்திலிருந்துபுறப்பட்டு வன்னிமரத்தினுள் தூங்குவதற்காகப் பிரவேசித்தான். ஸமர்த்தரே! யானைகளுக்குத் தேவர்கள்செய்தஅனுக்கிரகத்தைக் கேளும். ப்ருகுவம்சஸ்ரேஷ்டரே! தவறாதசக்தியுள்ளதேவர்கள் அன்புகூர்ந்து, 'யானைகளே! மாறிப்போனநாவினாலும் எல்லா ஆகாரங்களையும் உண்பீர்கள். எழுத்துக்களில் தெளிவில்லாமலே உரத்தகுரலால் வாக்கைச் சொல்லுவீர்கள்' என்றுசொன்னார்கள். பிறகு, திரும்பவும் தேவர்கள் அக்னியைத் தொடர்ந்தனர். பிராம்மணரே! அரசைவிட்டுக்கிளம்பி வன்னிமரத்திற்புகுந்தஅக்னி கிளியினால் வெளிப்படுத்தப்பட்டான். தேவர்கள் அங்கும்போயினர். அக்னியானவன் கிளியை, 'வாக்கில்லாமற்போவாய்' என்றுசபித்தான்." அப்போது கிளியின்நாவையும் அக்னியானவன் புரட்டிவிட்டான்: "தேவர்கள் அக்னியைக்கண்டபிறகு கிளியைப்பார்த்துக்

கருணையுடன், 'நீ கிளியாயிருந்தும் அடியோடே வாக்கில்லாமற் போகமாட்டாய். நாப்புரண்டிருந்தபோதிலும் உன்பேச்சு வளர்ந்த குழந்தையின்பேச்சைப்போலத் தெளிவில்லாமலே அழகாகவும் ஆச் சரியமாகவும் இருக்கும்' என்றுகூறினர். அவர்கள், கிளிக்கு இவ் வாறுசொல்லி வன்னிமரத்துள் அக்னியைக்கண்டபிறகுஅந்தவன்னி மரத்தையே எல்லாக்கிரியைகளுக்கும் யோக்கியமானஅக்னிஸ்தான மாகச் செய்தனர். அப்போதுமுதல் அக்னியானது வன்னிமரத்திற் குள் காணப்படுகிறது. மனிதர்களும் அக்னியையுண்டாக்குவதற்கு அம்மரத்தையே கருவியாகஅறிந்தனர். பார்க்கவரே! பாதாளத்தி லுள்ள எந்தஜலங்கள் அக்னியினால் தொடப்பட்டனவோ உள்ளிருந்த அக்னியினால் கொதிப்பிக்கப்பட்டஅவை மலையருவிகளால் உஷ் ணத்தைவிட்டுவிடுகின்றன. பிறகு, அக்னியானவன் தேவர்களைக் கண்டு துயரமடைந்து, 'நீங்கள்வந்தகாரியம் என்ன ?' என்று கேட் டான். அந்தத்தேவர்கள்ரிஷிகளனைவரும் அந்தஅக்னியைப்பார்த்து, 'நாங்கள் ஒருகாரியத்தில் உன்னை ஏவப்போகிறோம். அதை நீ செய்யக் கடவாய். அதைச்செய்வதனால் உனக்கும் மிகப்பெரியநன்மை யுண்டாம்' என்றுகூறினர். அதைக்கேட்டஅக்னி, 'தேவர்களே! உங்களுக்கு ஆகவேண்டியகாரியத்தைச் சொல்லுங்கள். அதை நான் செய்வேன். உங்கள்கட்டளைக்கு நான் உட்பட்டவன்தான். இந்த விஷயத்தில் உங்களுக்கு ஐயம்வேண்டாம்' என்றுசொன்னான். தேவர்கள், 'அன்பனே! தாரகனென்னும்அஸுரன் பிரம்மாகொடுத்த வரத்தினால் கர்வங்கொண்டு பராக்கிரமத்தினால் எங்களைப் பீடிக்கி றான். அவனைக்கொல்லுமுபாயம் செய்யப்படவேண்டும். சிறந்த பாக்கியம்பெற்றஅக்னியே! இந்தத்தேவகணங்களையும் கசியபர்முத லான ஸ்ருஷ்டிகர்த்தர்களையும் ரிஷிகளையும் காப்பாற்றக்கடவாய். அக்னிபகவானே! சக்திபொருந்தினவனும் எங்களுக்குஅந்த்அஸுர பயத்தைப்போக்கத்தக்க வீரனுமானபுத்திரனை உண்டாக்கக்கடவாய். வீரனே! பிரபுவே! உமாதேவியினால்சபிக்கப்பட்டஎங்களுக்குஉன்னை விட வேறுகதியில்லை. ஆதலால், எங்களை ரக்ஷிப்பாயாக' என்றுகேட் டுக்கொண்டனர். அவர்கள் இவ்வாறுசொன்னபின், யாவராலும் வெல்லமுடியாத அக்னிபகவான் 'அவ்வாறேஆகட்டும்' என்று சொல்லி உடனே பாகீரதியென்னும்கங்கையினிடம்சென்றான். அவ ளுடன்சேர்ந்து அவளுக்குக் கர்ப்பத்தை உண்டுபண்ணினான். அந் தக்கர்ப்பமானது காட்டில்தீப்போல வளர்ந்தது. கங்காதேவி அந்த அக்னிபகவானுடைய வீர்யத்தினாலே மயக்கமுற்றுக் கொடிய தா

பத்தையடைந்தாள். அவள் அதைத் தாங்கமாட்டாமற்போனாள். மஹிமைபொருந்தியகர்ப்பத்தைக் கங்கையினிடம் அக்னிபகவான் வைத்திருந்தபோது ஓரஸுரன் பயங்கரமாக இரைச்சல்போட்டான். திடீரென்று காதில்விழுந்த அந்தப்பேரிரைச்சலினால் அந்தக்கங்கை வெருண்டு கண்கள்புரண்டு கண்ணீர்ததும்பி மூர்ச்சித்தவளாய்க் கர்ப்பத்தையும் தன்தேகத்தையும் தாங்கமுடியாமல்போனாள். பிராம்மணரே ! கர்ப்பத்தின் வன்மையினால் அசைக்கப்பட்ட கங்காதேவி உடம்பெல்லாம் தாபமுற்று நடுங்கி அக்னியைப்பார்த்து, 'பகவானே ! உன்னுடைய இந்தத்தேஜஸைத்தாங்க என்னால்முடியவில்லை. இதனால் நான் மயக்கமுண்டாக்கப்பட்டேன். எனக்கு முன்போலத் தேகம் சுகமாயில்லை. பகவானே ! தழுதழுத்திருக்கிறேன். குற்றமற்றவனே ! என்மனமே போய்விட்டது. விளங்குபவர்களிற்சிறந்தவனே ! இந்தக் கர்ப்பத்தைத்தாங்க எனக்கு முடியவில்லை. கஷ்டத்தினால் நான் இந்தக்கர்ப்பத்தை விடப்போகிறேன் ; ஸ்வதந்த்ரத்தினால் எவ்வகையிலும் விடுவதில்லை. அக்னிபகவானே ! எனக்கு வெப்பத்தின் சம்பந்தம் இருந்ததில்லை. பேரொளியுள்ளவனே! மிகச்சிறியஸம்பந்தமும் எனக்கு ஆபத்தையுண்டுபண்ணும். ஹுதாசனனே ! இவ்வுலகத்தில் குணமுள்ளவையும் குணமில்லாதவையும் முக்கியமாயுள்ள புண்ணியபாபங்களுமாகிய எல்லாம் உன்னையேசார்ந்தவையென்று நான் நினைக்கிறேன்' என்றுசொன்னாள். பிறகு, அவளைப்பார்த்து, அக்னி, 'என்தேஜஸோடுகூடியதும் மிகச்சிறந்ததும் பெரும்பலனைத்தருவதுமாகிய கர்ப்பத்தை வைத்துக்கொள் ; வைத்துக்கொள். பூமியையெல்லாம்வகிப்பதற்கும் காப்பதற்கும் நீ திறமையுள்ளவள். உனக்கு அசாத்யம் ஒன்றுமில்லை. மற்றொருவர் இதை வகிக்கமுடியாது' என்றுசொன்னான். பார்க்கவரே ! [1]அக்னியினால் இவ்வாறுசொல்லப்பட்ட கங்காதேவி அங்கேயே அந்தர்த்தானமானாள். சிறந்தகாந்தியுள்ள அக்னியும் தேவர்களின்காரியத்தைச்செய்த பிறகு தனக்குஇஷ்டமான இடத்திற்குச்சென்றான். நதிகளிற்சிறந்த அந்தக்கங்காதேவி அக்னியினாலும் தேவர்களாலும் தடுக்கப்பட்டிருந்தும் அந்தக்கர்ப்பத்தை மலைகளிற்சிறந்த மேருமலையில் விட்டுவிட்டாள். அவள் தாங்கத்திறமையுள்ளவளாயிருந்தும் ருத்திரரது வீர்யத்தினால் கலக்கப்பட்டவளாய்த் தன்சக்தியினால் அந்தக்கர்ப்பத்தை வகிக்கமுடியாமற்போனாள். விளங்குகின்ற அக்னிக்குச்சமமான அந்

1 இங்கே அதிகபாடம் ஒன்றரைஶ்லோகம் பின்னர் இந்தஅத்தியாயத்தில் வருவதனால் விடப்பட்டது.

தக்கர்ப்பத்தைக் கஷ்டத்தினால் விட்டுவிட்டாள். ப்ருகுஶ்ரேஷ்டரே! பிறகு, அக்னியானவன் நதிகளிற்சிறந்த கங்காதேவியைக்கண்டு, 'தேவியே! உன்னுடைய கர்ப்பம் ஸுகமாகவளருகிறதா? அது என்னகுணமுள்ளது? எவ்வகைநிறமுள்ளதாகக் காணப்படுகிறது? என்ன சக்தியுள்ளது? இவற்றையெல்லாம் எனக்குச்சொல்' என்று கேட்டான். அதற்குக் கங்கை, 'குற்றமற்றவனே! அந்தக்கர்ப்பமானது உன்னைப்போல ஒளியும் ரூபமுமுள்ளதாயிருக்கிறது. நல்லநிறமுள்ளதாய் மாசற்றுவிளங்கிப் பர்வதத்தையே பிரகாசமாகச்செய்கிறது. பிரகாசிப்பவரிற் சிறந்தவனே! அதன்மணம் தாமரைகளும் நெய்தல்களுமுள்ள மடுக்களின் மணம்போலும் கடப்பமலர்களின் மணம்போலும் குளிர்ச்சியாயிருக்கிறது. அந்தக்கர்ப்பத்தின் ஒளியுடன்சேர்ந்து பூமியிலும் பர்வதங்களிலுமுள்ள எந்தப்பொருளும் சூரியனொளிசேர்ந்ததுபோலப் பொன்மயமாக எங்கும் காணப்பட்டது. அந்தவீரியமானது மலைகளிலும் நதிகளிலும் அருவிகளிலும் பாய்ந்தது; சராசரங்களடங்கிய மூவுலகங்களையும் ஒளியினால் விளங்கச்செய்தது. அக்னியே! இப்படிப்பட்ட அந்தப்பகவானான உன் புத்திரனும் ரூபத்தில் சூரியன்போலவும் அக்னிபோலவும் அழகில் இரண்டாவதுசந்திரன்போலவும் இருப்பான்' என்றுசொன்னாள். பார்க்கவரே! அந்தக்கங்காதேவியானவள் இவ்வாறுசொல்லி அங்கே அந்தர்த்தானமானாள். சிறந்தமகிமையுள்ள அக்னியும் தேவர்களின் காரியத்தைச்செய்து உடனே தன்னிஷ்டமானதேசத்திற்குச் சென்றான். இந்தச்செய்கையினாலேற்பட்ட சிறப்பைப்பற்றித்தான் உலகத்தில் ரிஷிகளும் தேவர்களும் அக்னிக்கு ஹிரண்யரேதஸ்என்னும் பெயரைக் கூறுகின்றனர். அப்போதுதான் பூமிதேவியும் வஸுமதி (= தனமுள்ளவள்) என்று பெயர்பெற்றனள். கங்கைக்கும் அக்னிக்குமுண்டான சிறந்தமகிமையுள்ள அந்தக்கர்ப்பமானது தேவலோகத்திய நாணற்காட்டையடைந்து ஆச்சரியமான காட்சியாக வளர்ந்தது. இளஞ்சூரியனுக்குழப்பான ஒளியுள்ள அந்தக்குழந்தையைக் கிருத்திகாதேவதைகள்கண்டு அன்புகூர்ந்து முலைப்பாற்சுரப்புக்களினால் வளர்த்தனர். சிறந்தஒளியுள்ள அந்தக்குழந்தை அதனால் கார்த்திகேயன்எனப் பெயர்பெற்றது; ரேதஸ்சிந்தினதனால் ஸ்கந்தன்என்றும் குகையிலிருந்ததனால் குகன்என்றும் பெயர்பெற்றது. பொன்னானது இவ்வாறு அக்னியின்பிள்ளையாகப் பிறந்தது. பொன்னிலும் ஜாம்பூநதமென்னும்தங்கம் மிகச்சிறந்தது. அது தேவர்களுக்கும் ஆபரணம். அதுமுதலாகத்தான் பொன்னானது ஜாதரூபம்என்று

சொல்லப்படுகிறது. அது இரத்தினங்களிலும் சிறந்தஇரத்தினம்; ஆபரணங்களிலும் சிறந்தஆபரணம்; பரிசுத்தங்களுக்கும் பரிசுத்தம்; மங்களங்களுக்கும் மங்களம். ஆதலால், பொன்என்பது அக்னிபகவானும் பிரஜைகளுக்குநாதனுகிய சிவபெருமானுமாகஇருப்பது. பிராம்மணோத்தமரே! பரிசுத்தங்களிலெல்லாம் பரிசுத்தம் கனகமே. தங்கமானது அக்னியும் [1]ஸோமனுமாகஇருப்பதென்றுசொல்லப்படுகிறது.

---

## நூற்றுமுப்பத்திரண்டாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(ருத்ரர்செய்தயாகத்தில் ப்ருகுமுதலியோர் உண்டானதும், ஸ்வர்ணதானத்தின் சிறப்புமுதலியவையும்.)

பரசுராமரே! மேலும், பரமாத்மாவும் படைப்பவருமானபிரம்மதேவருடைய பிரம்மஜ்ஞானரூபமான நடக்கையைப்பற்றி முன் நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அன்பரே! பிரபுவே! மகாதேவராகிய சிவனுர்,வருணன்தேகத்தை யெடுத்துக்கொண்டு வருணனுடையஐசுவரியத்தை அனுபவித்துக்கொண்டிருக்கையில் முனிவர்களனைவரும் அக்னிமுதலான தேவர்களும் உருக்கொண்ட யாகாங்கங்களனைத்தும் வஷட்காரமும் ஆயிரக்கணக்கானஸாமவேதங்களும் யஜுர்வேதங்களும் பதங்களாலும்கிரமங்களாலுமலங்கரிக்கப்பட்ட ரிக்வேதங்களும் லக்ஷணங்களும் ஸ்வரங்களும் ஸ்தோபங்களும் நிருக்தங்களும் ஸ்வரங்களின்வகைகளும் வேதங்களுக்குத்தலைமையான ஓங்காரமும் நிக்கிரகமும் பிரக்கிரகமும் உபநிஷத்துக்களும் ஸாவித்திரியென்னும்வித்தையும் வந்தனர். பூதபவிஷ்யத்வர்த்தமானங்களையும் பகவானுன சிவனுர் • தரித்துக்கொண்டிருந்தார். அப்போது அந்தப்பிரபுவானவர் தம்மைத்தாமே ஹோமம்செய்துகொண்டார். சிவனுர் அநேகவிதமாக யாகத்தைச் சோபிக்கச்செய்தார். ஸ்வர்க்கலோகமும் அதற்குமேலுலகமும் பூமியும் இடைவெளியும் பூமிக்கதிபதியும் அந்தச்சிவனுரே. எல்லாவித்தைகளுக்கும் ஈசுவரரானசிவனுரே சூரியன். பெருமைபொருந்தியவரும் எல்லாப்பூதங்களுக்குமதிபதியும் தேவருமாகிய அந்தச்சிவபெருமானே பிரம்மா. சிவனுர்,ருத்திரன் வருணன் அக்னி பிரஜாபதிஎன்று சொல்லப்படுகிறுர். ப்ருகுவம்சஸ்ரேஷ்டரே! மஹா

---

1 இனிமையினுல் சந்திரன்என்றுர்; உமையுடன்கூடிய சிவபெருமான் என்னவுமாம்.

த்மாவும் வருணரூபியுமான அந்தப்பசுபதியினுடைய யாகத்தில் தவம் யாகதேவதைகள் விரதத்தினால்பிரகாசிக்கும்தீக்ஷாதேவி திக்தேவதைகள் திக்பாலகர்கள் தேவபத்னிகள் தேவகன்னிகைகள் தேவமாதாக்கள் எல்லாரும் சேர்ந்து அன்புடன் வந்தனர். அந்தப் பெண்களைக்கண்டபோது பிரம்மதேவரின்ரேதஸ் பூமியில் விழுந்தது. அந்தரேதஸ் பெருகி நனைந்தமண்ணைச் சூரியன் பூமியிலிருந்து இரு கரங்களினாலெடுத்து அந்தஅக்னியிலேயே போட்டான். அவ்வாறு நடந்துகொண்டிருக்கும் ஸத்ரயாகத்தில் ஜ்வலிக்கின்றஅக்னியில் பிரம்மா ஹோமம்செய்யும்போது அவருடையரேதஸ் வெளிப்பட்டது. ப்ருகுபுத்திரரே! அவர் அந்தரேதஸைத் தெரிந்தவுடன் ஹோமக்காண்டியாலேந்தி நெய்யைப்போல மந்திரத்துடன் ஹோமஞ்செய்தார். சிறந்தமஹிமையுள்ள அந்தப்பிரம்மதேவர் அந்தஹோமம் செய்தரேதஸினால் பலவகைப்பிராணிகளைப் படைத்தார். அவருடைய அந்தரேதஸிலுள்ள (ரஜோகுணமாகிய) ஒளியிலிருந்து ஒளியோடு கூடிய அறிவுள்ள ஜங்கமமும் தமோகுணத்திலிருந்து தமோகுணம் நிரம்பின அறிவில்லாதஸ்தாவரமும் உண்டாயின. ஸத்வகுணமானது இவ்விருவகைப்பொருள்களிலும் சேர்ந்திருந்தது. தேஜஸ்என்னப்பட்ட ரஜோகுணத்தின்தன்மையாகிய தொழிலும் தமோகுணத்தின் காரியமாகிய அசைவற்றிருத்தலும் ஸத்வகுணத்தின்காரியமான உயர்ந்தஒளியும் எல்லாப்பொருள்களிலுமிருந்தன. பரசுராமரே! அந்த அக்னியில் ரேதஸ் ஹோமம்செய்யப்பட்டபோது அந்தஅக்னியிலிருந்து தம்தம்காரணங்களினால்வந்த குணங்களுள்ளவர்களும் சிறந்த தேகங்களுள்ளவர்களுமான மூன்றுபுருஷர்கள் உண்டாயினர். பர்ஜனமென்னப்பட்ட எரிச்சலிலிருந்து ப்ருகுஎன்பவரும் அங்காரம் என்னப்பட்ட தணலிலிருந்து அங்கிரஸ்என்பவரும் தணலின்ஒளியிலிருந்து கவியென்னும் மற்றொருவரும் உண்டாயினர். ப்ருகு ஜ்வாலைகளோடுகூடவே பிறந்தார். அதனால், ப்ருகுஎன்றுசொல்லப்பட்டார். மரீசிஎன்னப்பட்ட அக்னியின் கிரணங்களிலிருந்து மரீசியென்பவர் உண்டானார். மரீசிக்குக் கசியபர் உண்டானார். அன்பரே! தணலிலிருந்து அங்கிரஸும் தர்ப்பைக்கூட்டத்திலிருந்து வாலகில்யர்களும் உண்டாயினர். பிரபுவே! அந்தத் தர்ப்பைக்குவியலிலிருந்த ஒருவரை 'அத்ர, அத்ர' (இங்கே, இங்கே, உண்டானார்.) என்று எல்லாரும்சொன்னதினால் அவருக்கு அத்ரியென்று பெயர் வந்தது. பிறகு, சாம்பல்தள்ளினபோது பிரம்மரிஷிகளின்கூட்டங்களினால் வெகுமதிக்கப்பெற்றவரும் தவம் கல்வி இவற்றின் சிறப்புக்

களையடையக்கருதினவருமானவைகானஸர்களென்னும்ரிஷிகள் உண்டாயினர். அழகிற்பெயர்பெற்ற அசுவினிதேவர்கள் பிரம்மதேவருடையகண்ணீரிலிருந்து உண்டாயினர். பிரஜைகளைப்படைப்பவர்களாகிய மற்றவர்கள் அவருடையதுவாரங்களிலிருந்தும் பிறந்தனர். அவர் மயிர்க்காலிலிருந்து ரிஷிகளும் வேர்வையிலிருந்து வேதமும் பலத்திலிருந்து மனமும் உண்டாயினர். இந்தக்காரணத்தினாலே தான்கல்வியிருந்தரிஷிகள் வேதத்தின்உண்மையையறிந்து அக்னியே எல்லாத்தேவர்களுமென்று கூறுகின்றனர். அங்குள்ளகட்டைகளும் அவற்றின்தைலங்களும் முறையே மாதங்களும் பக்ஷங்களுமாகப் பெயர்பெற்றிருக்கின்றன. வருணனுடையதான ஆறினதீயே (கரி) இரவுபகல்களும் முகூர்த்தங்களுமாயிற்று. அக்னியின்சிவந்தநிறத்தை ருத்திரருடையதென்று சொல்லுகின்றனர். அதிலிருந்து கனகமுண்டாயிற்று. அந்தக்கனகமானது மைத்திரம் (சிநேகத்தைத்தருவது) என்றறியத்தக்கது. புகையிலிருந்து வஸுக்களுண்டாயினர். அந்த அக்கினியின்ஜ்வாலைகள்தாம் ருத்திரர்களும் பேரொளியுள்ள ஆதித்தர்களும். ஆகாயத்தில் தந்தமிடத்தில்பிரகாசிக்கும் நக்ஷத்திரங்கள் தாம் தணல்கள். உலகத்திற்குநாதனும் அக்னிதான். அக்னிதான் பரப்பிரம்மம். அதுவே நித்யம். அதையே எல்லாஅபீஷ்டங்களையும்தருவதென்று சொல்லுகின்றனர். அதனிடத்திலேதான் ஹோமம்செய்கின்றனர். பிறகு, வருணரூபியும் வாயுரூபியுமானபரமசிவன், 'தேவர்களே! இந்தச்சிறந்தயாகம் என்னுடையது. இந்தயாகத்திற்கு நானே யஜமானன். முதற்பிறந்தமூவரும் என்பிள்ளைகள்; சந்தேகமில்லையென்றறியுங்கள். ஏனெனில், அது யான்செய்தயாகத்தின்பலன்தானே' என்றுசொன்னார். அக்கினி, 'அவர்கள் என்னுடைய அங்கத்திலிருந்து பிறந்தவர்களும் என்னுடையசேர்க்கையினால் உண்டாக்கப்பட்டவர்களுமாகிறார்கள். அந்தரேதஸானதுஎன்னிடத்திலே ஹோமம்செய்யப்பட்டது. ஆதலால், அவர்கள் என்புத்திரர்கள் தாம்' என்றுசொன்னான். பிறகு, உலகங்களுக்குமூத்தவரும் உலகங்களைப்படைத்தவருமாகிய பிரம்மதேவர், 'அவர்கள் என்பிள்ளைகள்தாம். ஹோமம்செய்யப்பட்டரேதஸ் என்னுடையதுதானே. மந்திரத்தைச்சொன்னவனும் நான். ரேதஸை ஹோமம்செய்தவனும் நான். ரேதஸை உற்பத்திக்குக் காரணமாகநினைத்தால் வித்துஎவனதோ அவனுடையதுதான் பலன்' என்றுசொன்னார். பிறகு, தேவக்கூட்டத்தாரெல்லாரும் பிரம்மதேவரிடம்சென்று கைகூப்பித் தலைவணங்கி வந்தனம்செய்து 'பகவானே! நாங்களனைவரும் உலகத்

திலுள்ள சராசரங்களனைத்தும் உம்முடையசந்ததிகள்தாமே. ஆத லால், ஒளியினால்பிரகாசிக்கும்அக்னியும் யாகத்தைநடத்தும்வருண ரூபியானசிவபெருமானும் வேண்டினபலனைப் பெறட்டும்' என்று சொன்னார்கள். ஜலஜந்துக்களுக்கதிபதியான வருணன் சூரியனைப் போன்றவொளியுள்ள முதற்பிள்ளையானப்ருகுவைப் பிரம்மாகொடுக்கப் பெற்றுக்கொண்டான். எல்லாவற்றிற்கும்அதிபதியும் தத்வஞானியு மான பிரம்மதேவர் அங்கிரஸை அக்னிக்குப் புத்திரராகச்செய்தார். கவியைத் தம்புத்திரராக எடுத்துக்கொண்டார். அப்போது சந்ததி களையுற்பத்திசெய்கிறவராகிய ப்ருகுவானவர் [1]வாருணிஎன்றும்பெரு மைபொருந்திய அங்கிரஸ் [2]ஆக்னேயர்என்றும் சிறந்தபுகழுள்ளகவி [3] பிராம்மாஎன்றும் புகழ்பெற்றனர். ப்ருகுவம்சம் அங்கிரஸ்வம்சம் இரண்டும்தாம் பிரஜாவிருத்திக்கு இவ்வுலகத்தில் காரணமாயிருந் தன. இம்மூன்றுபிராம்மணோத்தமர்களும் பிரஜைகளைப்படைப்பவ ராகிறார். இவ்வுலகமனைத்தும் இவர்கள் சந்ததியென்றறியும். ப்ருகு வுக்கு ஏழுபுத்திரர் உண்டாயினர். எல்லாரும் குணங்களில் அவருக் கொப்பானவர். அவர்கள் ச்யவனர், வஜ்ரசீர்ஷர், சுசி, ஔர்வர், சுக்ரர், வரேண்யர், பிரபுவானஸவனர் எனஎழுவர். நீர் பிறந்தவம் சத்தைச்சேர்ந்த பார்க்கவரனைவரும் வருணபுத்திரர்கள். அங்கிர ஸின்புத்திரர்கள் எண்மர். அவர்கள் வருணன்புத்திரர்களாயிருந் தும் [4] வருணன்புத்திரரல்லாதவர். பிருஹஸ்பதி, உசத்தியர், வயஸ யர், சாந்தி, கோரர், விரூபர், ஸம்வர்த்தர், ஸுதன்வாஎன எண்மர். இவ்வெண்மரும் அக்னியின்புத்திரர்கள். எல்லாரும் ஞானத்தில் நிலைபெற்றவர்கள் ; குற்றமற்றவர்கள் ; கவியின்குமாரர்கள் எண்மர், பிரம்மாவின்வம்சத்தவர்களாகவும் வருணபுத்திரர்களாகவும் சொல் லப்படுகின்றனர். அவர்கள் காரணத்தின் சிறப்புக்கள்பொருந்தின வர்கள்; பிரம்மஞானிகள்; புண்ணியமுள்ளவர்கள். கவி, காவ்யர், விஷ்ணு, புத்தியிற்சிறந்த உசநஸ், ப்ருகு, வருணன், காசியபர், தர் மந்தெரிந்தஅக்னி என்னும் இவ்வெண்மர் கவிபுத்திரர்கள். இவர் களால் உலகமெல்லாம் வியாபிக்கப்பட்டது. இவர்கள் இந்தப்பிரஜை களையுண்டுபண்ணினதினால் பிரஜாபதிகளாகிறார்கள். பிருகு வம்ச ஸ்ரேஷ்டரே! இவ்வாறு ப்ருகு, அங்கிரஸ், கவிஇவர்களின்வம்சங்க ளிற்பிறந்த புத்திரர்களால் உலகம் வியாபிக்கப்பட்டிருக்கிறது. ஐயா!

---

[1] வருணபுத்திரர். [2] அக்னியின்புத்திரர். [3] பிரம்மாவின்புத்திரர்.

[4] வருணன் யாகத்தில் யஜமானனாதலின் வருணபுத்ரரென்பது. அக் னியால்எடுத்துக்கொள்ளப்பட்டவர்.

பிராம்மணரே! வருணரூபியும் பிரபுவுமானஈசுவரர், கவியையும் ப்ருகுவையும் முதலில் எடுத்துக்கொண்டார். ஆதலால், அவ்விருவரும் வாருணர்களென்று சொல்லப்பெற்றனர். ஜ்வாலையோடுகூடின அக்னி பகவான் அவரிடமிருந்து அங்கிரஸை வாங்கிக்கொண்டதினால் ஆங்கிரஸர்களனைவரும் அக்னியின்வம்சத்தைச் சேர்ந்தவரென்றறிய வேண்டும். அந்தக்காலத்தில் தேவர்கள் பிரம்மதேவரைப்பார்த்து, 'இவர்கள் உலகங்களுக்கு ஈசுவரர்களாயிருந்து தங்கள்சந்ததிகளினால் எங்களைக்கரையேற்றுவர். இவர்களெல்லாரும் பிரஜைகளைப் படைப்பவர்; மிகச்சிறந்ததவமுள்ளவர்; உமது அனுக்கிரகத்தினால் இவ்வுலகத்தை நீண்டகாலம் நிலைநிறுத்துபவர்; வம்சங்களை விருத்தி செய்து உம்முடைய தேஜஸைப்பரவச்செய்கிறவர். இந்தப்பிரஜாபதியின்வம்சத்திலுள்ள மகரிஷிகள்எல்லாரும் வேதங்களையறிந்து கிரியைகளைச்செய்து சாந்தகுணமுள்ளவர்களாகித் தேவர்களின்பக்கத்திலிருக்கக்கடவர். பிரபுவே! பூமியில் முடிவில்லாதபிரம்மமும்சத்தியமும் சிறந்ததவமும் நீர்தாம். இவர்களும் நாங்களெல்லாரும் உம்முடையபுத்திரர்களே. பிதாமஹரே! தேவர்களுக்கும் பிராம்மணர்களுக்கும் நீரன்றோ தந்தை? மரீசியின்புத்திரரான காசியபர்முதலாக ப்ருகுவைச்சேர்ந்தவர்களனைவரும் உமதுபுத்திரர்கள்தாமென்று கண்டறிந்து உம்மைப் பொறுத்துக்கொள்ளும்படி வேண்டுகிறோம். பிதாமஹரே! இவர்கள் தங்களைப்போன்ற சந்ததிகளையுண்டுபண்ணி யுகத்தின்ஆரம்பத்திலும் முடிவிலும் தம்மை நிலைநிறுத்தப்போகின்றனர்[1]' என்று பிரார்த்தித்தனர். உலகத்திற்குமுதலான பிரம்மதேவர் தேவர்களால் இவ்வாறுவேண்டப்பட்டுச் சந்தோஷமடைந்தவராய், 'அப்படியேயாகட்டும்' என்றுசொன்னார். அந்தத்தேவர்களும் வந்தவாறே சென்றனர். உலகம்படைக்கும்காலத்தில் தேவஸ்ரேஷ்டரும் மஹாத்மாவுமானசங்கரர் வருணரூபமெடுத்துச் செய்தயாகத்தில்இவ்வாறுநடந்தது. அக்நிதான் பரமன், பசுபதி, சர்வன், ருத்திரன், பிரஜாபதியென்னப்படுகிறவன். இந்தப்பொன்னானது அக்கியின்பிள்ளை என்பது நிச்சயம். ஜமதக்நியின்புத்திரரே! பிரமாணத்தையறிந்தவன் வேதத்திலுள்ளவழியைக்கண்டு அக்நியில்லாதகாலத்தில் அதற்குப்பிரதியாகத் தங்கத்தை வைக்கிறான்; தர்ப்பைப்புல்லின்மேல் வைத்த அக்கினியிலும் பொன்னிலும் ஹோமம்செய்கிறான். புற்றின் வாயிலும் ஆட்டின்வலக்காதிலும் வண்டிச்சக்கரம் ஓடினவழியிலும் புண்ணிய தீர்த்தத்திலும் பிராம்மணன் கையிலும் ஹோமம்செய்

1 எல்லோரையும் அவர் தம்புத்திரர்களாக நினைக்கவேண்டுமென்று கருத்து.

தால் அக்னிபகவான் அதைத் தனக்குச் சந்தோஷத்தையுண்டாக்கும் சிறப்பாக நினைக்கிறான். அதனாலேதான் தேவர்களெல்லாருக்கும் அக்னியே தலைவனென்றுகேள்விப்பட்டிருக்கிறோம். பிரம்மாவினிடமிருந்து அக்னிஉண்டாயிற்று. அக்னியினிடமிருந்து தங்கமுண்டாயிற்று. ஆதலால், எவர்கள் தர்மந்தெரிந்து பொன்னைக்கொடுக்கின்றனரோ அவர்கள் எல்லாத்தேவரையும் கொடுக்கின்றனரென்று யாம் கேட்டிருக்கிறோம். பார்க்கவரே! ஸ்வர்ணதானஞ்செய்பவன் பெருந்தவத்தினால் அடையும்கதியை அடைவான்; மேலுலகத்தில் குபேரனைப் பட்டாபிஷேகம் செய்யப்பெறுவான். சூரியோதயம் வந்தபோது சாஸ்திரவிதியையனுசரித்து மந்திரபூர்வகமாக ஸ்வர்ண தானம்செய்பவன் கெட்டகனவின்பலனைப் போக்கிவிடுகிறான். சூரியோதயமானவுடன் ஸ்வர்ணதானஞ்செய்பவனுக்குப் பாவம் ஓடிப்போம். மத்தியான்னத்தில் ஸ்வர்ணதானம்செய்பவனிடம் பாவம் அணுகாது. சாயங்காலத்தில் நியமத்துடன் ஸ்வர்ணதானம்செய்பவன் பிரம்மலோகத்தையும் வாயுலோகத்தையும் அக்னிலோகத்தையும் சந்திரலோகத்தையும் பெறுவான்; இந்திரலோகமுதலியலோகங்களிலும் சிறந்தஐசுவரியத்தையடைவான்; இவ்வுலகத்திலும் பாபங்களொழிந்து புகழ்பெற்று மகிழ்ந்திருப்பான்; பிறகு, மேலுலகங்களிலும் எப்போதும் ஒப்பற்றுச் சிறந்திருப்பான்; தடையின்றிவிரும்பினபடி சஞ்சரித்துக்கொண்டிருப்பான்; அவ்வுலகங்களிலிருந்து நழுவமாட்டான்; பெரும்புகழையடைவான்; அழிவில்லாதபொன்னைக் கொடுப்பதினால் சிறந்தலோகங்களையடைவான். சூரியோதயகாலத்தில் ஒருவிரதத்தைக்குறித்து அக்நியைமூட்டி ஸ்வர்ணதானஞ்செய்பவன் விரும்பினவற்றையெல்லாம் அடைவான். ஸுவர்ணத்தை அக்நியென்றே சொல்லுகின்றனர். அதைத்தானம்செய்வது ஸுகத்தைத்தருவது. அது விரும்பினநற்குணங்களை உண்டுபண்ணுவது; மேன்மேலும் நற்குணங்களிற் பிரவ்ருத்திக்கச்செய்கிறதென்றுசொல்லப்படுகிறது. குற்றமற்றவரே! ஸமர்த்தரே! ப்ருகுபுத்திரரே! பொன்னும் சுப்பிரமணியரும்உண்டான இந்தவரலாறு உமக்குச் சொன்னேன். அதைத் தெரிந்துகொள்ளும். ப்ருகுஶ்ரேஷ்டரே! பிராம்மணரே! பிறகு, ஸுப்ரம்மண்யர் வெகுகாலம்வளர்ந்தபின் இந்திராதிதேவர்களால் சேனபதியாயிருக்கும்படி வேண்டப்பட்டார். பிராம்மணரே! உலகங்களின் நன்மையைச்செய்வதற்காகத் தேவேந்திரனுடையஆஜ்ஞையினால் தாரகாஸுரனையும் மற்றுமுள்ள அஸுரர்களையும் கொன்றார். ஸமர்த்தரே! ஸுவர்ணதானத்தின் சிறப்புக்களை

நான் உமக்குச் சொன்னேன். கொடுப்பவரிற்சிறந்தவரே! ஆதலால், பிராம்மணருக்குப்பொன்னைக்கொடும்' என்றார். பராக்கிரமசாலியான பரசுராமர், இவ்வாறுவஸிஷ்டர்சொல்லக்கேட்டு, பிராம்மணர்களுக்கு ஸுவர்ணதானம்செய்து பாவத்திலிருந்து விடுபட்டார். யுதிஷ்டிர ராஜனே ! ஸ்வர்ணத்தின் உற்பத்தியையும் அதன்தானத்தின் பலனையும் உனக்கு முழுதும்சொன்னேன். ஆதலால், நீயும் பிராம்மணர்களுக்கு மிகுதியாகக் கனகங்கொடு. ராஜனே ! கனகங்கொடுப்பதினால் பாபத்திலிருந்து விடுபடுவாய்'' என்றார்.

---

## நூற்றுமுப்பத்துமூன்றுவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(தாரகன்வதம்.)

யுதிஷ்டிரர், "முறைப்படி ஸ்வர்ணதானஞ்செய்வதில் என்ன குணங்கள் வேதத்திற்சொல்லப்பட்டனவோ அவை பிதாமஹரான உங்களால் விரிவாகஉரைக்கப்பட்டன; பொன்னுண்டானகாரணமும் உரைக்கப்பட்டது. அந்தத்தாரகன் எப்படிமரணமடைந்தான்? அதை எனக்குச் சொல்லும். ராஜரே ! அவன் தேவர்களால் கொல்லப்படக் கூடாதவனென்று சொன்னீர். அவனுக்கு மரணம் எப்படிநேர்ந்தது ? அதை விரிவாகச்சொல்லும். குருவம்சஸ்ரேஷ்டரே ! தாரகனுடையவதத்தைப்பற்றி முழுதும்கேட்க விரும்புகிறேன். அதில் எனக்கு அதிகவிருப்பம் இருக்கிறது'' என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"அரசர்க்கரசே ! அவ்வாறு கங்கை கர்ப்பத்தை விட்டுவிட்டதனால் கார்யம்கெட்டதேவர்களும் ரிஷிகளும் கிருத்திகாநக்ஷத்திர தேவதைகளை அந்தக்கர்ப்பத்தைத் தரிக்கும்படி கேட்டுக்கொண்டனர். அக்நியினுடையவீர்யமாகிய அந்தக்கர்ப்பத்தைத் தங்கள் சக்தியினால் தாங்குவதற்குத் தேவஸ்திரீகளில் யாரும் திறமையுள்ளவர்களல்லர் ; கிருத்திகைகள்மட்டும்தாம் திறமையுள்ளவர்கள். அக்நியானவன் தன்சிறந்தவீரியத்தைத் தமதுமுழுச்சக்தியுடன் கர்ப்பமாகத்தரித்ததனால் கிருத்திகைகள் அறுவரிடத்திலும் அன்புள்ளவனானான். அந்தஆறுகிருத்திகைகளும் அக்நியின்கர்ப்பத்தைத் தாங்கினர். மன்னவ ! அக்நியின்வீரியம்முழுதும் ஆறுவழிகளில் விடப்பட்டது. பிறகு, அந்தக்கிருத்திகைகள் உள்ளேவளருகின்ற மகாத்

மாவான குழந்தையின்ஒளியினால் அங்கமெல்லாம் வியாபிக்கப்பட்டு எங்கும்ஸுகமடையாமற்போயினர். வேந்தே! பிறகு,அங்கமெல்லாம் ஒளிசூழ்ந்த அந்தக்கிருத்திகைகளனைவரும் ப்ரஸவகாலம்வந்தபோது ஒரேகாலத்தில் அந்தக்கர்ப்பத்தைப் பிரஸவித்தனர். ஆறிடங்களி லுமிருந்தஅந்தக்கர்ப்பமானது பிரஸவித்தவுடன் ஒன்றாகச்சேர்ந்தது. அதைக் கிருத்திகாதேவிகளிடமிருந்து பூமிதேவி வாங்கிக்கொண் டாள். தேவதேகமுள்ளதும் அக்னிக்குஒப்பானஒளியுடன் பிரகாசிப் பதும் காட்சிக்கினியதுமானஅந்தக்கர்ப்பம் தெய்வலோகத்திய நாணற் காட்டைச்சார்ந்து வளர்ந்தது. சூரியனுக்கொப்பான ஒளியுள்ள அந் தக்குழந்தையைக் கிருத்திகாதேவிகள்பார்த்து அன்புள்ளவர்களாய் அன்பினாலுண்டான முலைப்பாற்பெருக்குக்களினால் வளர்த்தனர். அத னால், அந்தக்குழந்தை சராசரங்களடங்கிய மூவுலகங்களிலும் கார்த்தி கேயன்என்று பெயர்பெற்றது; ரேதஸ்ஸிதறினதனால் ஸ்கந்தனென் றும் குகையிலிருந்ததனால் குகனென்றும் பெயர்பெற்றது. பிறகு, முப்பத்துமூன்று தேவர்கள் திசைகள் திக்பாலகர்கள் [1] ருத்திரன் தாதா விஷ்ணு யமன் பூஷன் அரியமன் பகன் அம்சன் மித்திரன் ஸாத்தியர்கள் இந்திரன் வஸுக்கள் அசுவினிதேவர்கள் ஜலம் காற்று ஆகாயம் சந்திரன் நக்ஷத்திரங்கள் கிரகங்கள் சூரியன் வேறுள்ளமற் றத்தேவக்கூட்டங்கள் ஆகியஎல்லாரும் அக்னிகுமாரனை ஆச்சர்ய முள்ளகுழந்தையைக் காணவந்தனர். ரிஷிகள் துதித்தனர். கந்தர்வர் கள் பாடினர். ஆறுமுகங்களும் பன்னிரண்டுகண்களும் பன்னிரண்டு கைகளும் பருத்ததோள்களுமுள்ளவனும் பிராமணர்களிடம் அன் புள்ளவனும் அக்னியையும் சூரியனையும்போன்றஒளியுள்ளவனுமாக நாணற்புதரில்படுத்திருக்கும் குழந்தையைக்கண்டு தேவர்களும் முனி வர்களும் மிகுந்தசந்தோஷமடைந்து தாரகாஸுரன் அழிந்தா னென்றே நினைத்தனர். பிறகு, தேவர்களனைவரும் அந்தக்குழந் தைக்கு வேண்டினவற்றைக் கொண்டுவந்துகொடுத்தனர்; அவன் விளையாடும்போது விளையாட்டுக்கருவிகளையும் பற்பலபறவைகளையும் கொடுத்தனர். கருடன் தனதுபிள்ளையும் பலநிறமானசிறகுள்ளது மாகியமயிலை அவனுக்களித்தான். ராக்ஷஸர்கள், பன்றி எருமைக் கடாஇரண்டையும் அவனுக்குக் கொடுத்தனர். அருணன் தானே அக்னியைப்போலப்பிரகாசிக்கும் கோழியைக் கொடுத்தான். சந்தி ரன் ஆட்டைக் கொடுத்தான். சூரியன் அழகானஒளியைத் தந்தான். கோக்களுக்குத்தாயாகியகாமதேனு அநேகமாயிரம்கோக்களை அளித்

[1] சூரியனுடைய உட்பிரிவுகள்.

தது. அக்னியானவன் குணமுள்ளசெம்மறியாட்டையும் பூமிதேவியானவள் மிகுதியாகியமலர்களையும் கனிகளையும் கொடுத்தார்கள். ஸுதன்வாளென்னும்அஸுரன் வண்டியையும் அழகான [1]அச்சுள்ள தேரையும் அளித்தான். வருணன் வாருணங்களென்னும் சிறந்ததேவயானைகளைக் கொடுத்தான். தேவேந்திரன் சிறந்தயானைகளையும் கோரப்பற்களையுடையசிங்கங்கள் புலிகள்முதலான அனேகங்கொடிய மிருகங்களையும் பலவகை ஆயுதங்களையும் கொடுத்தான். ராக்ஷஸக் கூட்டத்தாரும் அஸுரக்கூட்டத்தாரும் ஸமர்த்தனை அந்தக்குமாரனை அனுஸரித்தனர். தாரகாஸுரன் வளர்கின்ற அந்தக்குழந்தையைக்கொல்வதற்கு உபாயத்தைத்தேடினான். அனேகஉபாயங்களைச் செய்தும் அவன் அந்தப்பிரபுவைக் கொல்லமாட்டாமற்போனான். தேவர்கள் குகையிலிருக்கும் அக்குமாரரைச் சேனைத்தலைவராகச் செய்து பூஜித்துத் தாரகாஸுரனால்செய்யப்பட்ட அந்தஉபத்திரவத்தை அவருக்குத் தெரிவித்தனர். சிறந்தபராக்கிரமமுள்ளவராக வளர்ந்து தேவர்க்குச்சேனாதிபதியும் பிரபுவுமான அந்தக்குகர் வீண் போகாத சக்திஆயுதத்தினால் தாரகாஸுரனைக் கொன்றார். அந்தக் குமாரரால் விளையாட்டாகவே அந்தத்தாரகாஸுரன் கொல்லப்பட்ட பிறகு, திரும்பவும் தேவேந்திரன் தேவர்க்கதிபதியாக ராஜ்யபட்டாபிஷேகம்செய்யப்பட்டான். சிறந்தபராக்கிரமமுள்ளவரும் ஈசுவரரும் தேவர்களைக்காப்பவரும் சங்கரருக்குப்பிரியத்தைச்செய்பவருமான அந்தஸ்கந்தர் பின்னிட்டும் சேனாபதியாகவே விளங்கினார். பொன்மயமாகியதேகமுள்ளவரும் அக்னியின்புத்திரரும் பகவானுமானஅக்குமாரர் எக்காலமும் தேவர்க்குச்சேனாதிபதியாகவேயிருந்தார். ஆதலால், பொன்னானது சுப்பிரமணியருக்கு உடன்பிறந்தது; அக்னியினுடையமுதல்தேஜஸென்று நினைக்கப்பட்டது; மங்களத்தைத்தருவதும் அழியாததுமான உயர்ந்தரத்தினம். கௌரவனே! இவ்விதமாக ராமருக்கு வஸிஷ்டர் முன்னே சொன்னார். அரசனே! ஆதலால், பொன்னைக்கொடுக்க முயற்சிசெய். ராமர் ஸ்வர்ணதானம் செய்துதான் எல்லாப்பாவங்களாலும்விடுபட்டவராகி மேலுலகத்தில் மனிதர் பெறுவதற்கரிய சிறந்தபதம்பெற்றார்" என்றார்.

1 'கூபரம்' என்பது மூலம்; மூக்கணையென்றும் கொள்ளலாம்.

## நாற்றுமுப்பத்துநான்காவது அத்யாயம்.

## தா ன த் ர் ம ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(ஓவ்வோருதிதியிலும் சிராத்தஞ்செய்வதன் பலன்முதலியன.)

யுதிஷ்டிரர், "தர்மாத்மாவே! வேந்தரே! நாலுவருணங்களின் தர்மங்களையும் சொன்னதுபோலவே சிராத்தத்தின்விதிமுழுமையை யும்பற்றி எனக்கு நீர் உரைக்கக்கடவீர்" என்றுகேட்டார். யுதிஷ்டிரர் இவ்வாறுகேட்டபிறகு, சந்தனுபுத்திரரானபீஷ்மர், சிராத்த விதியை முழுதும் வருமாறு சொல்லத்தொடங்கினர்.

"ராஜனே! சிராத்தகர்மத்தைப்பற்றியசிறந்தவிதியை ஊக்கத் துடன்கேள். வீரனே! பிதிருயாகமானது தன்த்தையும் புகழை யும் புத்திரர்களையும் கொடுப்பது. தேவர் அஸுரர் மனிதர் கந்தர் வர் நாகர் அரக்கர் பிசாசர் கின்னரர்ஆகியஇவர்களும் பிதிருக்களை எப்போதும் பூஜிக்கவேண்டியவர்கள்; முதலில் பிதிருக்களைப் பூஜித்து அதன்பின்னேதான் தேவர்களைப் பூஜிக்கின்றனர். ஆத லால், மனிதன் முழுமுயற்சியோடு எப்போதும் பிதிருக்களைப் பூஜிக்கவேண்டும். மஹாராஜனே! பிதிருக்களுக்குச்சிராத்தம் (அன் வாஹார்யம்) தொடர்ச்சியாகச்செய்யத்தக்கதென்று சொல்லப்படு கிறது. ஆதலால், சிராத்தமானது விசேஷமாகவிதிக்கப்பட்டிருப் பதனால் முதலாவதாக ஏற்படுத்தப்பட்டது. எல்லாத்திதிகளிலும் சிராத்தம்செய்வதனால் பிதிருக்கள்திருப்தியடைகின்றனர். பிண்டங் கள்கொடுத்துச்செய்யப்படும் சிராத்தத்தை [1]மாதந்தோறும் செய்ய வேண்டும். கிருகஸ்தனானபிராம்மணன் அமாவாஸ்யையில் பிதிரு யாகத்தைச் செய்யவேண்டும். மாதந்தோறும் பிண்டதானத்தோடு செய்யும்தர்சஶ்ராத்தத்தைத்தான் அன்வாஹார்யமென்று வித்வான் கள் நினைக்கின்றனர். பரிசுத்தனாய்க் கைகூப்பிக்கொண்டு சிரத்தை யுடன் மாமிசத்தினால் அந்தச்சிராத்தத்தைச் செய்யவேண்டும். ஓவ் வொருதிதியிலும் பகலில்சிராத்தம்செய்வதின் குணங்களெல்லாவற் றையும் உனக்குச்சொல்வேன். குற்றமற்றவனே! எந்தத்தினங்களில் சிராத்தங்களைச்செய்வதினால்என்னபலன்கள்கிடைக்குமோஅவற்றை யெல்லாம் உள்ளபடிசொல்வேன். அதைஎன்னிடம் தெரிந்துகொள். பிரதமையில் பிதிருக்களைப்பூஜிப்பதனால் அழகானபிள்ளைகளைப்பெறு

1 அமாவாஸ்யைதோறும்.

மானஸ்திரீகளைத் தன்கிருஹத்தில் அடைவான். துவிதியையில் பிதிருசிராத்தம்செய்வதனால் வீட்டில் பெண்கள் பிறப்பார்கள் : திருதியையிற்செய்வதனால் குதிரைகளும் சதுர்த்தியிற்செய்வதனால் எருமை ஆடுமுதலிய நான்குகால்களுள்ளவைகளும் மிகுதியாகஉண்டாகும். ராஜனே! பஞ்சமியிற்சிராத்தம்செய்பவர்களுக்கு அநேக புத்திரர்களுண்டாவர்; ஷஷ்டியிற்செய்யும்மனிதர் ஒளிபெறுவர். ராஜனே! ஸப்தமியிற்சிராத்தம்செய்பவனுக்குப் பயிரின்பலன்விருத்தியாகும்; அஷ்டமியிற்செய்பவன் வர்த்தகத்தில் லாபத்தையடைவான். நவமியிற்சிராத்தம்செய்பவனுக்குக் குதிரைகோவேறுகழுதை முதலிய ஒற்றைக்குளம்புள்ளபிராணிகள் மிகுதியாகஉண்டாகும். தசமியில்சிராத்தம்செய்பவனுக்கு ஆக்கள் மிகுதியாகும். ராஜனே! ஏகாதசியில்சிராத்தம்செய்பவன் வஸ்திரங்கள் பாத்திரங்கள்முதலியவற்றை அடைவான். அவன்வீட்டில் ஓதலும் யாகமும் நிரம்பப்பெற்றபுத்திரர்கள் பிறப்பர். துவாதசியில்சிராத்தம்செய்பவனுக்கு அதிகதனங்களும் வெள்ளியும் அழகானபொன்னும் எப்போதும் காணப்படும். திரயோதசியில் சிராத்தம்செய்பவன் இனத்தாரிற் சிறந்தவனாவான். சதுர்த்தசியில்சிராத்தம்செய்யும்மனிதனுக்கு யுத்தங்கள் நேரிடும். அவன்வீட்டில் புருஷர்கள் இளமைப்பருவத்தில் நிச்சயமாக இறப்பார். அமாவாசையில்சிராத்தம்செய்பவன் விரும்பினவற்றையெல்லாம்அடைவான். கிருஷ்ணபக்ஷத்தில் சதுர்த்தசியைத்தவிர மற்றதசமிமுதலானதிதிகள்சிராத்தத்திற்குச்சிறந்தவை; மற்றவை அவ்வளவுசிறந்தவையல்ல. சிராத்தத்திற்குக் கிருஷ்ண பக்ஷமானது சுக்லபக்ஷத்தைவிட எப்படிவிசேஷமோ அப்படியே முற்பகலைவிடப் பிற்பகல் விசேஷம்" என்றார்.

---

## நூற்றுமுப்பத்தைந்தாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



**(சிராத்தத்தில்கொடுக்கத்தக்கபொருள்களும் அவ்வவற்றின்பலன்களும்.)**

யுதிஷ்டிரர், "அரசரே! பிதிருக்களுக்கு எதைக்கொடுத்தால் அக்ஷயமாகும்? எதற்குப் பலன்கள்அதிகம்? ஒன்று அனந்தமாவது எது?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"யுதிஷ்டிர! சிராத்தத்தை யறிந்தவர்கள் சிராத்தத்தின்முறையில் எந்தஹவிஸுகள் விரும்பினபலனைத் தருகின்றவையென்று நினைக்கின்றனரோ அவற்றையும் அவற்றின்பலன்களையும் என்னிடம்

கேள். ராஜனே! எள், நெல், யவம், உளுந்து, ஜலம், கிழங்கு, கனிகள் இவற்றைக்கொடுத்துச்செய்யப்படும் சிராத்தத்தினால் பிதிருக்கள் ஒருமாதம்திருப்தியடைகின்றனர். எள்ளுமிகுதியாயுள்ளசிராத்தத்தை அக்ஷயமென்று மநு சொல்லியிருக்கிறார். போஜனபதார்த்தங்கள்எல்லாவற்றினும் எள்ளே முதன்மையாக நினைக்கப்படுகிறது. பிதிருகணங்களுக்கு மத்ஸ்யத்தினால் இரண்டுமாதம்வரையில் திருப்தி உண்டாகும். ராஜனே! செம்மறிஆட்டின்மாமிசத்தினால் மூன்று மாதங்களும் முயல்மாமிசத்தினால் நான்குமாதங்களும் வெள்ளாட்டு மாமிசத்தினால் ஐந்துமாதங்களும் பிதிருக்கள் திருப்தியடைவர். பிரபுவே! பன்றிமாமிசத்தினால் ஆறுமாதங்களும், [1]சகுலமாம்ஸத்தினால் ஏழுமாஸங்களும் புள்ளிமான்மாம்ஸத்தினால் எட்டுமாதங்களும் கறுப்புமான்மாம்ஸத்தினால் ஒன்பதுமாதங்களும் [2]கவயமிருகத்தின்மாம்ஸத்தினால் பத்துமாஸங்களும் எருமைமாம்ஸத்தினால் பதினொரு மாதங்களும் பிதிருக்களுக்குத் திருப்தியுண்டாகும். கோமாம்ஸத்தோடு சிராத்தம்செய்தால் 'ஒருவருஷம் திருப்தியுண்டாகுமென்று சொல்லப்படுகிறது. நெய்யுடன் சேர்ந்தபாயஸமானது கோமாமிசத்தைப்போன்றது. விருஷபத்தின் மாம்ஸத்தினால் பன்னிரண்டு வருஷம் பிதிருதிருப்தியுண்டாகும். இறந்துபோன திதியில் காண்டாமிருகத்தின் மாம்சத்தைக்கொடுப்பது ஒன்று அனந்தமாகிறது. அறைக்கீரையும் [3] பொன்வெள்ளிமுதலியவையும் ஆடும் அனந்தமானவென்று சொல்லப்படுகின்றன. யுதிஷ்டிர! இந்தவிஷயத்தில் பிதிருக்களால்சொல்லப்பட்ட ஸ்லோகங்களைக் கூறுகின்றனர். அவற்றை ஸனத்குமாரபகவான் முன்னே எனக்குச் சொன்னார். அவற்றின் பொருள், 'தக்ஷிணாயனத்தில் மகநக்ஷத்திரம்கூடினதிரயோதசியில் நெய்யுடன்சேர்ந்தபாயஸத்தைச் சால்வைமுதலிய கம்பளத்தோடும் பொன்வெள்ளிமுதலிய தக்ஷிணையோடும் நியமம்தவறாமல் [4]கஜச்சாயையில் அதன்காதுக்காற்றாலே விசிறப்பட்டவையாகக்கொடுத்துச் சிராத்தம்செய்பவன் நமதுகுலத்திற்பிறப்பனா? ஒருவன் அநேகபுத்திரர்களை விரும்பவேண்டும். ஏனெனில், உலகங்களில் பெயர்பெற்றதும் சிராத்தத்தை அக்ஷயமாகச்செய்வதுமாகிய அக்ஷயவடமென்

1 ஒருவகைமத்யஸ்யம் 2 பசுவைப்போன்றஒருவகைமான்.

3 'காஞ்சனமென்னும் மரத்தின்பூமுதலியன' என்பது பழையவுரை,

4 'மஹாளயபக்ஷம் த்ரயோதசியில், ஸ்வர்க்கவீதியில், ஐராவதம்திரும்புகிறது; அது சிறந்தபுண்யகாலம். அதனால் அது கஜச்சாயைஎனப்படும்' என்பது ஐதிஹ்யம்.

னும் ஆலமாமிருக்கும்கயைக்கு ஒருவனுவதுபோவனே' என்பது பிதிருதினத்தில் ஜலம் கிழங்கு கனி மாம்ஸம் அன்னம்இவற்றில் எதையாவது தேனுடன்சேர்த்துக் கொடுத்தால் அதுஅனந்தமாகும்.

## நூற்றுமுப்பத்தாறுவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(யமன், நக்ஷத்திரங்களில்செய்யும் சிராத்தங்களின் பலன்களைச் சசபிந்துவுக்குச் சொல்லியது.)

பலனைக்கருதி ஒவ்வொருநக்ஷத்திரத்திலும் செய்யக்கூடியவையாகச் சசபிந்துவுக்கு யமன்சொன்னசிராத்தங்களை நான் உனக்குச் சொல்லுகிறேன்; கேள். எந்தமனிதன் கிருத்திகாநக்ஷத்திரம்கூடிய தினத்தில் விடாமல்சிராத்தம்செய்வனே அவன் துயரம்நீங்கித் தன் ஸந்ததிகளுடன் அக்னிகளைவைத்துக்கொண்டு யாகம்செய்வான். சந்ததியைவிரும்புகிறவன் ரோகிணீநக்ஷத்திரத்திலும்பராக்கிரமத்தைக் கருதுகிறவன் மிருகசீரிஷத்திலும் (பித்ரு) யாகம்செய்யக்கடவன். திருவாதிரையில்சிராத்தம்செய்யும்மனிதன் கொடும்செய்கையுள்ளவனுவன். புனர்பூசத்தில்சிராத்தம்செய்யும்மனிதன் பயிர்ப்பலனையடைவான். தேகபுஷ்டியைக்கருதுகிறமனிதன் பூசத்தில் சிராத்தம்செய்யக் கடவன். ஆயில்யத்தில்சிராத்தம்செய்யும்மனிதன் தைரியசாலிகளான புத்திரர்களைப் பெறுவன்; மகாநக்ஷத்திரத்தில்சிராத்தம்கொடுப்பவன் இனத்தாரிற்சிறந்தவனுவன். பூராநக்ஷத்திரத்தில் சிராத்தம்கொடுப்பவன் யார்க்கும்இனியவனுவன்; உத்தரத்தில்கொடுப்பவன் சந்ததியையடைவன்; ஹஸ்தநக்ஷத்திரத்தில் நினைத்தபலனையடைவன். சித்திராநக்ஷத்திரத்தில் சிராத்தம்கொடுப்பவன் அழகுள்ளபுத்திரர்களைப் பெறுவன். சுவாதிநக்ஷத்திரத்தில் பிதிருக்களைஆராதிப்பவன் வர்த்தகத்தொழிலையடைவான். புத்திரனைக்கருதும்மனிதன் விசாகநக்ஷத்திரத்தில்சிராத்தம்செய்வதனுல் புத்திரர்களை வெகுவாகப்பெறுவான். அனுஷத்தில்சிராத்தம்செய்பவன் ராஜ்யமென்னும்சக்கரத்தை நடத்துவான். குருவம்சஸ்ரேஷ்டனே! புலன்களையடக்கிக் கேட்டையில் சிராத்தம்செய்யும்மனிதன் செல்வம்பெற்றுத் தலைமையையடைவன்; மூலத்தில் ஆரோக்கியத்தையும் பூராடத்தில் சிறந்தபுகழையும்அடைவன்; உத்தராடத்தில் துயரமற்றுப் பூமியில்சஞ்சரிப்பன். அபிஜித் என்னும்நக்ஷத்ரகாலத்தில் சிராத்தம்செய்பவன் சிறந்தகல்வியை

அடைவன். திருவோணத்தில்சிராத்தம்செய்பவன் இறந்தபின் நட பெறுவன். அவிட்டத்தில் நியமத்துடன் சிராத்தம்செய்யும்மனிதன் ராஜ்யம்பெறுவன். சதயநக்ஷத்திரத்தில்சிராத்தம்செய்பவன் வைத்தியத்தில் தேர்ச்சிபெறுவன். பூரட்டாதியில்சிராத்தம்செய்பவன் வெள்ளாடுகளையும் செம்மறியாடுகளையும் மிகுதியாயடைவன். உத்திரட்டாதியில்சிராத்தம்செய்பவன் ஆயிரக்கணக்காகப்பசுக்களையடைவன். ரேவதியில்சிராத்தம்செய்பவன் வஸ்திரங்கள்முதலான பொருள்களை மிகுதியாக அடைவன். அசுவினிநக்ஷத்திரத்தில் குதிரைகளையும் பரணியில் தீர்க்காயுளையும் அடைவன். சசபிந்துவென்னும்அரசன் இந்தச்சிராத்தவிதியைக்கேட்டு அப்படியேசெய்தான். அவன் பூமியை எளிதில்வென்று ஆண்டான்" என்றூர.

---

## நூற்றுமுப்பத்தேழாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(சிராத்தத்தில் நிமந்திரணத்துக்குத் தகாதவர்களும் தக்கவர்களும்.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! கௌரவஸ்ரேஷ்டரே! எப்படிப்பட்டபிராம்மணர்களுக்குச் சிராத்தம் கொடுக்கவேண்டுமென்பதை எனக்கு உரைக்கக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானூர்.

"தானத்தின்முறையையறிந்தக்ஷத்திரியன் தேவகாரியங்களில் பிராம்மணர்களைப் பரீக்ஷிக்கலாகாது. பிதிருகாரியங்களில்மட்டும் பரீக்ஷிப்பதுநியாயமென்று சொல்லுகின்றனர். தேவகாரியங்களில் தேவர்கள் இங்குவந்து தங்கள்தெய்விகசக்தியினால் அவற்றைப் பரிசுத்தமாக்குகின்றனர். ஆதலால், மனிதன் தேவர்களையுத்தேசித்து எல்லாருக்கும் தானம்செய்யலாம். மஹாராஜனே! தெரிந்தவன் சிராத்தத்தில்மாத்திரம் பிராம்மணர்களைக் குலம் ஒழுக்கம் பிராயம் உருவம் கல்வி முன்னோர்களின்இருப்பிடம் இவற்றைப்பற்றிப் பரிசோதிக்கவேண்டும். அவர்களில் சிலர் தாமிருக்கும் பந்தியையே கெடுப்பவர்; மற்றும்சிலர் பந்தியைப் பரிசுத்தப்படுத்துகிறவர். அரசனே! பந்தியிற்சேரத்தகாதவரைச் சொல்வேன்; அவர்களைக் கேள். சூதாடுகிறவனும் கர்ப்பத்தைக்கொன்றவனும் க்ஷயரோகியும் பசுக்களைமேய்ப்பவனும் [1]லக்ஷணங்களில்லாதவனும் ஊர்ப்பொதுவுக்குஏவல்தொழில்செய்பவனும் வட்டிக்குப்பணம்கொடுப்பவனும் பாடகனும் எல்லா

1 'வேதாத்யயனமுதலியன இல்லாதவன்' என்பது பழையவுரை.

வற்றையும்விற்பவனும் வீட்டில்தீவைத்தவனும் விஷமிட்டவனும் [1] சமைத்தபாத்திரத்தில்புசிப்பவனும்ஸோமமென்னும்கொடியைவிற்பவனும் ஸாமுத்ரிகாலக்ஷணம்சொல்லுகிறவனும் அரசனுடைய வேலைக்காரனும் எண்ணெய்விற்பவனும் ஜாலவித்தைசெய்பவனும் தகப்பனுடன் [2]பங்குபிரித்துக்கொள்பவனும் வேறுபுருஷனைவைத்திருக்கும்மனைவியுள்ளவனும் தீட்டுள்ளவனும் திருடனும் கைத்தொழில்செய்துபிழைப்பவனும் வேறுவேஷம்போடுகிறவனும் கோள் சொல்லுகிறவனும் சிநேகிதனுக்குத்தீங்குசெய்கிறவனும் பிறர்மனைவியோடுசேருகிறவனும் ஸம்ஸ்காரமில்லாதகீழ்ஜாதிகளுக்குக்கற்பிப்பவனும் ஆயுதம்பிடித்துஜீவிப்பவனும் நாய்களோடுசஞ்சரிப்பவனும் நாய்க்கடிபட்டவனும் [3]பரிவித்தியும் தோல்ரோகமுள்ளவனும் குருவின்மனைவியைச்சேர்ந்தவனும் [4]நாடகமாடுகிறவனும் கோவில்பூஜகனும் சோதிடத்தால்பிழைப்பவனும் பந்தியில்சேரத்தகாதவர். யுதிஷ்டிர! பந்தியில்சேரத்தகாத இப்படிப்பட்ட பிராம்மணர்களால் புசிக்கப்பட்டஅன்னமானது ராக்ஷஸர்களைச்சேருமென்றுவேதமறிந்தவர்கள் சொல்லுகின்றனர். சிராத்தத்தில்புசித்தபின் வேதமோதினாலும் சூத்ரப்பெண்ணினிடம்சேர்ந்தாலும் அவனுடையபிதிருக்கள் அவன்விஷ்டையில் ஒருமாதம்வஸிப்பர். ஸோமத்தைவிற்றவனுக்குத்தானஞ்செய்தால் விஷ்டையிலும் வைத்தியனுக்குத்தானஞ்செய்தால் சீயிலும் இரத்தத்திலும் பிதிருக்கள் இருப்பார். கோவில்பூஜகனுக்குச்செய்யும்தானம பயனற்றது. வட்டிவாங்குகிறவனுக்குக் கொடுத்தால் ஸந்ததியுண்டாகாது. வர்த்தகனுக்குக்கொடுக்குந் தானம் இம்மையிலும் மறுமையிலும் பயன்படாது. இரண்டாவது விவாகம்செய்துகொண்டவளுக்குப்பிறந்தபிராம்மணனிடம்கொடுத்த ஹவ்யம் சாம்பலில்செய்யப்பட்டஹோமம்போலேதான். தர்மத்தை விட்டவர்களுக்கும் ஒழுக்கம்கெட்டவர்களுக்கும்கொடுக்கும் ஹவ்யகவ்யங்கள் மறுமையில் பயன்படா. தெரிந்திருந்தும் அப்படிப்பட்டவர்களுக்குத்தானஞ்செய்யும் புத்திகெட்டவனுடைய பித்ருக்கள் பரலோகத்தில் விஷ்டையைப்புசிப்பரென்பது திண்ணம். இந்தஅதமப் பிராம்மணர்களையும் சூத்திரர்களுக்குஉபதேசஞ்செய்யும்மதிகெட்ட

1 'குண்டாசீ' என்பது மூலம்.

2 இங்கு 'விவதமாந:' என்னும்பாடம் பொருத்தமானது; அதற்கு, 'தகப்பனுடன்கலகப்படுகிறவன்' என்பது பொருள்.

3 சாந்திபர்வம் 111 - ம் பக்கம்குறிப்பிற்காண்க.

4 'விறகுவெட்டிப்பிழைப்பவன்' என்பது பழையஉரை.

வரையும் பங்திக்குத்தகாதவரென்றறியவேண்டும். வேந்தனே! (போஜனத்திற்காக) உட்கார்ந்திருக்கும் பங்தியில்சேர்ந்த ஒற்றைக்கண் பொட்டையன் (தன்பக்கங்களிலுள்ள) அறுபதுபேர்களையும், ஆண்மையில்லாதவன் நூற்றுவரையும், வெண்குஷ்டமுள்ளவன் தன்பார்வைசெல்லுகிறவரையிலுமுள்ளவர்களையும் கெடுத்துவிடுவர். தலைப்பாகையோடுபுசிப்பதும் பாதரக்ஷையோடுபுசிப்பதும் தெற்குமுகமாகப்புசிப்பதும் எல்லாம் அஸுரரைச்சேருமென்றறி. கோபத்தோடும் சிரத்தையில்லாமலும் கொடுக்கப்பட்டதெல்லாவற்றையும் அஸுரராஜாவான பலியின்பாகமாகப் பிரம்மதேவர் விதித்திருக்கிறார். நாய்களும் பங்தியைக்கெடுப்பவரும் எவ்வகையிலும் பார்க்கலாகாது. ஆதலால், மறைவுள்ளவிடத்தில் எள்ளை முழுதும்இறைத்துச் சிராத்தம்செய்தல்வேண்டும். எள்ளில்லாதசிராத்தத்திலும் கோபக்காரன்செய்தசிராத்தத்திலுமுள்ள ஹவிஸை ராக்ஷஸர்களும் பிசாசர்களும் அபகரிக்கின்றனர். பங்திக்குத்தகாதவன், பங்தியில் புசிப்பவர் எவ்வளவுபேரைப் பார்க்கிறானோ அவ்வளவுபேர் புசிப்பதனாலுண்டாகும்பலனையும் அந்தஅன்னம்போடும்மூடனுக்கு இல்லாமற்செய்துவிடுவான். பரதஸ்ரேஷ்டனே! (தாங்களிருக்கும்) பங்தியையே சுத்தமாக்கத்தக்கவர்களை அறிந்துகொள்ளவேண்டும். அவர்களை லக்ஷணங்களுடன்சொல்லுகிறேன். அந்தப்பிராம்மணரைப்பரிசோதிப்பாயாக. வித்தைகளிலும் வேதங்களிலும் பிரம்மசாரிவிரதத்திலும் முடிவுபெற்று ஸ்நானஞ்செய்தவரும் பெரியோரொழுக்கங்களை அநுஸரிப்பவருமானபிராம்மணர்களனைவரும்எல்லாரையும்பரிசுத்தமாகச் செய்பவரென்றறியவேண்டும். பங்திக்குஉரியவர்களைச் சொல்வேன். அவர்கள் பங்தியையேபரிசுத்தப்படுத்துகிறவர்களென்றறியவேண்டும். 1 திரிநாசிகேதன் 2பஞ்சாக்நியுடையவன் 3திரிஸுபர்ணன் ஆறு வேதாங்கங்களையுமறிந்தவன் பிரம்மஜ்ஞானஉபதேசம்செய்யும்பரம்பரையில்பிறந்தவன் ஸாமகன் ஜ்யேஷ்டஸாமமென்னும்ஸாமத்தைகானம் பண்ணுகிறவன் தாய்தந்தையருக்கடங்கினவன் பத்துத்தலைமுறையாக வேதமோதிவந்தவன் தன்தர்மபத்னியினிடம் ருதுகாலத்தில் சேருகிறவன் வேதத்தையும் சாஸ்திரத்தையும் பிரம்மசாரிவிரதத்தையும்

1 நாசிகேதமென்ற அக்னியில மூன்றுகாலம் அக்னிஹோத்திரம் செய்பவன் என்பர் சிலர்; வேதத்தில் நாசிகேதமென்றபெயருள்ள மூன்று அத்யாயங்களை அத்தியயனம்செய்தவன் என்பர் வேறுசிலர்.

2 கார்ஹபத்தியம் ஆஹவனீயம் தக்ஷிணம் ஸப்யம் ஆவஸத்யம் என்னும் ஐந்து அக்னிகளையுடைய அக்னிஹோத்ரி.

3 ரிக்வேதத்தில் ஸுபர்ணமென்னும்மூன்று மந்திரம் தெரிந்தவன்.

முடித்துஸ்நானஞ்செய்தபிராம்மணன் அதர்வசிரஸென்னும் அதர்வணவேதத்தின் உபநிஷத்தைப்பிரம்மசாரிவிரதத்தோடுஅத்தியயனஞ்செய்தவன் ஐம்புலன்களையுமடக்கினவன் ஸத்தியமேசொல்லுகிறவன் தர்மம்செய்பவன் தன்கர்மங்களில் சிரத்தையுள்ளவன் ஆகியஇவர்கள் பந்தியைப் பரிசுத்தப்படுத்துகிறவர்கள். புண்ணிய தீர்த்தங்களுக்குச் சிரமப்பட்டுச்சென்று ஸ்நானஞ்செய்பவரையும் யாகங்களை மந்திரங்களுடன்முடித்து அவபிருதஸ்நானம்செய்பவரையும் கோபியாமலும் ஆசைப்படாமலும் பொறுத்தும் மனத்தையும் புலன்களையும்அடக்கியும் எல்லாப்பிராணிகளிடத்தும்அன்புவைத்துமிருப்பவரையும் சிராத்தங்களில் வரிக்கவேண்டும். அவர்களுக்குக்கொடுத்ததானம் அழியாதது. அவர்கள்தாம் பந்தியைப் பரிசுத்தப்படுத்துகிறவர்கள் .மோக்ஷதர்மந்தெரிந்தஸந்யாஸிகள் தவஞ்செய்யும்யோகிகள் பாஞ்சராத்ரம் தெரிந்த ஸ்ரேஷ்டர்களானபாகவதர்கள் சிறந்தகுலமுள்ளவரும் வேதத்திற்சொன்ன ஆசாரங்களை அனுஷ்டிப்பவருமான வைகாநஸர்கள் பிராம்மணோத்தமர்களுக்கு இதிஹாஸங்களை நியமத்தோடு சொல்லுகிறவர்கள் பாஷ்யம்தெரிந்தவர்கள் வியாகரணத்தில்நல்லபரிசயமுள்ளவர்கள் புராணங்களையும் தர்மசாஸ்திரங்களையும்ஓதி அவற்றின்படி ஸரியாக அனுஷ்டானம்செய்பவர்கள் குருகுலவாஸஞ்செய்தவர்கள் ஸத்தியம்பேசுகிறவர்கள் எல்லாவேதங்களிலும் எல்லா உபதேசங்களிலும் ஆயிரவர்களில முதன்மையாயிருப்பவர்கள் ஆகிய இந்தமகானுபாவர்களும் பந்திபாவனரென்றறியவேண்டும். இவர்கள் பந்தியில் எவ்வளவுதூரம் நோக்குகின்றனரோ அவ்வளவுவரையிலும் பரிசுத்தமாகச் செய்கின்றனர்; இப்படிப் பந்தியைப்பரிசுத்தப்படுத்துவதனால் பந்திபாவனரென்று சொல்லப்படுகின்றனர். குருபரம்பரையாகவந்த பிரம்மஜ்ஞானத்தை ஆஸ்தியாகப்பெற்றவன்ஒருவனும் இரண்டரைக் குரோசங்கள் வரையிலும் சுத்தமாக்குவனென்று பிரம்மஜ்ஞானிகள் நினைக்கின்றனர். ரித்விக்காகவும் உபாத்தியாயனாகவுமிராதஅவன் ரித்விக்குக்களின் அனுமதியினால் முதலாஸனத்தையடைவானாயின் அந்தப்பந்தியின்பாவத்தையே போக்கிவிடுவான். ராஜனே ! வேதந்தெரிந்து பந்தியைக்கெடுக்கும் குற்றங்களொன்றுமில்லாதவனாகவும் வழுவில்லாதவனாகவுமிருந்தால் அவனும் பந்திபாவனன்தான். ஆதலால், முழுமுயற்சியோடு பிராம்மணர்களைப்பரிசோதித்துத் தர்மங்களைவிடாதவரும் மனத்தையடக்கினவரும் மேற்குலத்தோரும் கல்விகேள்விமிகுந்தவருமான பிராம்மணர்களைச்சிராத்தத்தில்வரிக்கவேண்டும். .சினேகிதர்களைமுக்கியமாகக்கொண்டு செய்யப்படும்சிராத்தங்க

ளும் ஹோமங்களும் பிதிருக்களையும் தேவர்களையும் திருப்திசெய்விக்கமாட்டா. அப்படிச்செய்பவன் ஸ்வர்க்கம்போகான். எவன் சிராத்தங்களைக்கொண்டு சினேகங்களைச்செய்கிருனே அவன் தேவயானமென்னப்பட்ட அர்ச்சிராதிமார்க்கத்திலைல்போவதில்லை. சிராத்தத்திலைல் சினேகம்சம்பாதிப்பவன் பிடிப்பற்றஅரசம்பழம்போல ஸ்வர்க்கலோகத்திலிருந்து கீழேவிழுவான். ஆதலால், சிராத்தம்செய்பவன் சினேகிதனைத் தேடலாகாது. மித்திரர்களைச்சேர்ப்பதற்காகப் பொருள்களைக் கொடுக்கலாம். எவனை மித்திரனுகவும் சத்துருவாகவும் நினைக்கவில்லையோ அந்தமத்தியஸ்தனைத் தேவகாரியத்திலும் பிதிருகாரியத்திலும் புசிப்பிக்கவேண்டும். களர்மண்ணில்விதைத்த விதை முளையாமலும் விதைத்தவன் அதன்பலனையடையாமலும் போவதுபோலவே தகுதியற்றவர்கள் புசிக்கும்சிராத்தம் இம்மையிலும் மறுமையிலும் பயன்படாது. ஓதுதலில்லாதபிராம்மணன் செத்தைகளிலிருக்கும்நெருப்புப்போல அவிந்துபோகிருன். சிராத்தத்தை அவனுக்குக் கொடுக்கலாகாது. சாம்பலில் ஹோமஞ்செய்வதில்லையே. பதிலுக்குப்பதிலாகச் சிராத்தத்தில் புசிப்பிப்பது பிசாசர்களைச்சேரும் தக்ஷிணையாகிறது. அது தேவர்களையுஞ்சேராது; பித்ருக்களையுஞ்சேராது. அது புண்ணியம்குன்றிக் கன்றிறந்தபசு கொட்டிலில்தடுமாறுவதுபோல இங்கேயே தடுமாறுகிறது. அவிந்த நெருப்பில் நெய்யைஹோமம்செய்தால் அது எப்படி தேவர்களையும் பிதிருக்களையும் சேருவதில்லையோ அப்படியே பாடகனுக்கும் நட்டுவனுக்கும் பொய்சொல்லுகிறவனுக்கும் கொடுக்கும் தக்ஷிணை. பொய்யனுக்குக் கொடுக்கப்படும்தக்ஷிணை கொடுப்பவனைக் காப்பாற்ருது; அவனுக்கு இரண்டுலோகங்களையும்கெடுக்கும். கெடுப்பதும் இகழப்படுவதுமாகிய அந்தத்தக்ஷிணை தான்விழும்போதே கொடுப்பவரின்பித்ருக்களையும் தேவலோகத்திலிருந்து தள்ளிவிடும். யுதிஷ்டிர! எல்லாத்தர்மங்களையும் நிச்சயமாகத்தெரிந்து ரிஷிகளின் ஆசாரப்படி எப்போதும் அநுஷ்டிப்பவர்களையே தேவர்கள் பிராம்மணர்களென்றுநினைக்கின்றனர். பாரதனே! வேதமோதுவதையும் ஞானத்தையும் தவத்தையும் கர்மத்தையும் நியமமாகஉடையவர்களே ரிஷிகளென்றறியத்தக்கவர். பாரதனே! சிராத்தங்களை ஞானநிஷ்டையுள்ளவர்களுக்குக் கொடுக்கவேண்டும். அவர்களில் எந்தமனிதர்கள் பிராம்மணர்களுக்கு உசிதத்தைச்செய்யாமல் வீண்பேச்சுக்களில் அவர்களை இகழ்ந்தும்பேசுகின்றனரோ அவர்களைச் சிராத்தத்தில் புசிப்பித்தல் கூடாது. ராஜனே! இகழப்பட்டபிராம்மணர்கள் அந்த

இகழ்ந்தவன்குலத்தில் மூன்றுதலைமுறைகளைக் கெடுத்துவிடுவார்க ளென்று வைகானஸர்களென்னும் ரிஷிகளின்சொல் கேட்கப்படு கிறது. ராஜனே! வேதங்களில்கரைகண்டபிராம்மணர்களைத் தூர த்திலேயேகண்டறியவேண்டும். அவர்கள் நண்பராயினும் பகைவ ராயினும் சிராத்தத்தை அவர்களுக்கே கொடுக்கவேண்டும். பார தனே! மந்திரங்கள்தெரியாத லட்சம்பிராம்மணர்களை ஒருமனிதன் புசிப்பித்தால் பயனென்ன? மந்திரம்தெரிந்தஒருவன் திருப்தியடை தால் அவன் அவரெல்லாரிலும் மிக்கதகுதியுள்ளவனாவான்" என்றார்.

## நூற்றுமுப்பத்தேட்டாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(சிராத்தமுண்டானவரலாறும் சிராத்தத்தில் விடவேண்டியவையும்.)

யுதிஷ்டிரர், "சிராத்தமானது எந்தக்காலத்தில் யாரால் உண் டாக்கப்பட்டது? அது எவ்வகையானது? பிருகுவும், அங்கிரஸனும் இருந்தகாலத்தில் எந்தரிஷியினாலுண்டாக்கப்பட்டது? [1] சிராத்தங் களில் விடத்தக்கவை யாவை? எந்தக்கிழங்குகளையும் காய்களையும் விடவேண்டும்? தானியஜாதிகளில் விடத்தக்கவை எவை? பிதா மஹரே! அவற்றை எனக்குச்சொல்லும்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"ராஜனே! சிராத்தம் எந்தக்காலத்திலுண்டானது, எவ்வித மானது, யாராலுண்டாக்கப்பட்டதென்பதை என்னிடம்கேள்.கௌர வனே! பிரம்மாவின் புத்ரரும் சிறந்தமகிமையுள்ளவருமான அத்திரி மகரிஷியிருந்தார். மகாராஜனே! அவர்குலத்தில் தத்தாத்ரேய ரென்பவர் இருந்தார். தத்தாத்ரேயருக்குத் தவத்தையேதனமாக வுடைய நிமியென்னும்புத்திரர் உண்டானார். நிமிக்கு ஸ்ரீமானென்று பெயர்பெற்றசிறப்புள்ளபுத்திரர் பிறந்தார். அவர் செயற்கரியதவஞ் செய்து ஆயிரம்வருஷம் நிரம்பினபின் காலகதிக்குட்பட்டு மரண மடைந்தார். நிமியென்பவர் சாஸ்திரங்களிற்சொல்லப்பட்டகர்மங் களினால் சுத்தம்செய்துகொண்டபிறகு, புத்திரசோகத்தையே நினை ந்து தாங்கக்கூடாத மனக்கொதிப்பை அடைந்தார். சிறந்தஅறி வுள்ள அந்தநிமி சதுர்த்தசிதிதியில் தம்வீட்டுக்கார்யங்களை முடித்துக்

1 கூறியதைக்கூறுதலால், இங்கே அதிகபாடமான அரைஸ்லோகம் விடப்பட்டது.

கொண்டபிறகு அதேதுயரத்தைநினைந்து இரவின்பின்பாகத்தில் கண்விழித்துக்கொண்டார். விசனத்தினால் கலங்கின மனத்துடன் விழித்துக்கொண்ட அவருடைய புத்தியானது இதரவிஷயங்களில் மனம் செல்லாமையினால் விசாலமாகச்சென்றது. பிறகு, ஊக்கத்துடன் சிராத்தம்செய்யும்வகையைப்பற்றிச் சிந்தித்தார். மிகச்சிறந்தஞானமுள்ள தபோதனராகியநிமி அந்தக்குமாரரால் புசிக்கப்பட்டவையும் அவரால் வேண்டுமென்று சொல்லப்பட்டவையும் மனத்தில் விரும்பப்பட்டவையுமான கிழங்குகள் கனிகள் மற்றெல்லாவற்றையும் தம்மனத்தில் நிச்சயம்செய்துகொண்டு அமாவாஸ்யைதினத்தில் சிறந்தபிராம்மணர்களைவருவித்து அவர்களுக்குத் தெற்குமுகமான ஆஸனங்கள் எல்லாவற்றையும் தாமேபோட்டார்; பிறகு, ஏழுபிராம்மணர்களை ஒரேகாலத்தில் போஜனத்திற்கு உட்காரவைத்தார். ஸமர்த்தரானநிமி உப்பில்லாமல் சாமையரிசி அன்னத்தை உணவாகக்கொடுத்தார். அப்போது அன்னத்தைப்புஜிக்கும் பிராம்மணர்களுடைய ஆஸனங்களிலும் பாதங்களிலும் தர்ப்பங்கள் தெற்குநுனியாக வைக்கப்பட்டன. அவர் பரிசுத்தராகிச் சிரத்தையோடு தெற்குநுனியாகப் போடப்பட்டதர்ப்பங்களில் பெயரையும்கோத்திரத்தையும் சொல்லி ஸ்ரீமானுக்குப் பிண்டப்பிரதானம் செய்தார். ரிஷிஸ்ரேஷ்டரான அந்தநிமியானவர் தாம் தர்மக்கேட்டைச் செய்ததனால் பின்னர் பெருவருத்தத்தினால்பீடிக்கப்பட்டு, 'இதற்கு முன் ரிஷிகள்செய்யாத இந்தக்காரியத்தை நான் ஏன்செய்தேன்? பிராம்மணர்கள் சாபத்தினால் என்னை எரித்துவிடாமலிருப்பாரா?' என்றுவிசாரமடைந்தார்; பிறகு, பகவானானஅத்திரிமுனிவர் தம்வம்சத்திற்குத்தலைவரென்றுநினைத்து அவரை ஊக்கத்துடன் தியானம் செய்தார். அவ்வாறு அவர் தியானம்செய்தமாத்திரத்தில் அத்திரிமகாமுனிவர் வந்தார். குற்றமில்லாதஅத்திரிமுனிவர், புத்திரசோகத்தினால்பீடிக்கப்பட்டநிமியைக்கண்டு இன்சொற்களினால் அவரை மிகவும்தேற்றினார். 'தபோதனனானநிமியே! உன்னால்செய்யப்பட்டஇந்தப்பித்ருயாகமானது எனக்குஸம்மதம். இந்தத்தர்மம் முற்காலத்தில் பிரம்மதேவராலேயே கண்டறியப்பட்டது. அப்படி பிரம்மாவினால் ஏற்படுத்தப்பட்டஅந்தத்தர்மந்தான் உன்னால் இப்போது செய்யப்பட்டது. பிரம்மாவைத்தவிர வேறுயார் சிராத்தத்தில்விதியை ஏற்படுத்தலாம்? புத்திரனே! இப்போது சிராத்தத்திற்குரியஉத்தமமானவிதியை உனக்கு உரைப்பேன். புத்திரனே! பிரம்மதேவரால் ஏற்படுத்தப்பட்ட அந்தவகையை என்னிடம்தெரிந்துகொண்டுசெய்.

ரிஷியே! ஆதிகாலத்தில் பிரம்மதேவர் தாமாகவே மந்திரத்தோடு அக்நிகளுக்கு ஓரிடம்உண்டாக்கி அங்கே பித்ருக்களுடன்கூடவேயிருக்கும் அக்நி, ஸோமன், வருணன், விஸ்வேதேவர்கள்இவர்களுக்கு ஹவிர்ப்பாகங்களை நியமமாக ஏற்படுத்தினர். சிராத்தத்தில் பூமிதேவியைஉலகத்தைத்தாங்குகிறவளென்றும் [1]வைஷ்ணவியென்றும் [2]காசியபியென்றும் [3]அக்ஷயையென்றும் துதிக்கவேண்டும்; ஜலங்கொண்டுவருகையில் வருணபகவானைத் துதிக்கவேண்டும். குற்றமற்றவனே! பிறகு, அக்நியையும் ஸோமனையும் ஆராதிக்கவேண்டும். ஸூர்யகிரணத்தையுண்பவராகப் பிரம்மாவினால் படைக்கப்பட்ட மகானுபாவர்களான பித்ருதேவதைகளுக்கும் ஹவிர்ப்பாகத்தைக் கொடுக்கவேண்டும். அவர்கள் சிராத்தத்தில் பூஜிக்கப்பெற்றுத்தான் பாவத்திலிருந்துவிடுபடுகின்றனர். பித்ருதேவர்களின் வம்சங்கள் ஏழாகப் பிரம்மதேவரால் முன்னமே காணப்பட்டன. அக்நிமுதலானவிஸ்வேதேவர்கள் முன்னமே கூறப்பட்டனர். ஹவிர்ப்பாகத்திற்குரிய அம்மஹாத்மாக்களின் நாமங்களைச் சொல்வேன். ஸஹன், [4]க்ருதி, விபாப்மன், புண்ணியக்ருத், பாவனன், க்ராம்யன், க்ஷேம்யன், ஸமூஹன், திவ்யஸானு, விவஸ்வான், வீர்யவான், ஸ்ரீமான், கீர்த்திமான், க்ருதன், ஜிதாத்மன், முனிவீர்யன், தீப்தரோமன், பயங்கரன், அனுகர்மன், ப்ரதீதன், ப்ரதாதா, அம்சுமான், சைலாபன், பரமக்ரோதி, தீரோஷ்ணி, பூபதி, ஸ்ரஜன், வஜ்ரீ, வரி, வித்யுத்வர்ச்சஸ், [5] ஸோமவர்ச்சஸ், ஸூர்யஸ்ரீ, ஸோமபன், ஸூர்யஸாவித்ரன், தத்தாத்மன், புண்டரீயகன், உஷ்ணீநாபன், நபோதன், விஸ்வாயு, தீப்தி, சமூஹாரன், ஸுரேசன், வ்யோமாரி, சங்கரன், பவன், ஈசன், கர்த்தா, க்ருதி, தக்ஷன், புவனன், திவ்யகர்மக்ருத், கணிதன், பஞ்சவீர்யன், ஆதித்யன், ரஸ்மிவான், ஸப்தக்ருத், ஸோமவர்ச்சஸ், விஸ்வக்ருத், கவி, அனுகோப்தா, ஸுகோப்தா, நப்தா, ஈஸ்வரன்என்பவர்கள் காலத்தின்நடையை நடத்துகிறவர்களும் எக்காலமுமுள்ளவர்களும் மஹானுபாவர்களுமாகிய விஸ்வேதேவர்களென்று சொல்லப்படுகின்றனர். கேழ்வரகு [6]புலகம்இவை சிராத்தத்துக்குத் தகாததான்யங்கள். பெருங்காயப்பால்சேர்ந்தகறிகள், கிழங்கில் வெங்காயம் உள்ளி, முருங்கைகஞ்சாமுதலியவை, பூசணிவகைகள், சுரைக்காய், கரியுப்பு, ஊர்ப்பன்றிமாம்ஸம், (மந்திரத்தினால்)

1 விஷ்ணுவின்மனைவி.

2 கசியபருக்குப்பரசுராமரால‌ளிக்கப்பட்டவள்.

3 அழியாதவள்.

4,5 இவை இரண்டுமுறைவருகின்றன.

6 ஒருவகைத்தானியம்.

புரோக்ஷிக்கப்படாதமாம்ஸம், கறுப்பாட்டுமாம்ஸம், ஜீரகம், சீதபாகி யென்னும்கறி, முளை முதலானவை, [1]ச்ருங்காடகம் இவைசிராத்தத்தில் விடப்படவேண்டியவை. உப்புவகைஎல்லாவற்றையும் நாவற்பழத்தையும் சிராத்தத்தில் விடவேண்டும். சிராத்தத்தில் தும்மலையும் அழுகையையும்விடவேண்டும். ஸுதர்சனமென்னும்கறி தேவகார்யங்களிலும் பிதிருகார்யங்களிலும் இகழப்பட்டது. பிதிருக்களும் தேவர்களும் அந்தஅன்னத்தைக் கிரகிப்பதில்லை. சிராத்ததானம் நேர்ந்தபோது சண்டாளனையும் சக்கிலியனையும் ஒதுக்கவேண்டும். காஷாயமுடுத்தனவன் குஷ்டரோகமுள்ளவன் பதிதன் பிரம்மஹத்தி செய்தவன் கலப்புஜாதியிற்பிறந்த பிராம்மணன் பதிதனோடுசேர்ந்தவன் இவர்களைச் சிராத்தம்கொடுக்குங்காலத்தில் தெரிந்தவர்கள் விடவேண்டும்' என்றார். பகவானான அத்ரிமகரிஷி தம்வம்சத்திற் பிறந்த அந்தரிஷிக்கு முற்காலத்தில் இவ்வாறுசொல்லி மேலுலகமாகிய பிரம்மஸபைக்குச் சென்றார்.

## நூற்றுமுப்பத்தோன்பதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



**(ரிஷிகள்முதலியோர் சிராத்தம்செய்ததும், தேவர்களும் பித்ருக்களும் அஜீர்ணமடைய அக்நி துணைசெய்ததும், ஹோமமந்த்ரோடு சிராத்தஞ்செய்யவேண்டுமென்பதும்.)**

அவ்வாறு சிராத்தக்கிரியை துவக்கப்பட்டபிறகு, எல்லாமஹரிஷிகளும் சாஸ்திரங்களிற்சொல்லியமுறைப்படி பிதிருயாகங்களைச் செய்தனர். தர்மங்களைநியமமாகச்செய்யும்ரிஷிகள் சிராத்தஞ்செய்தபிறகு நியமந்தவறாமல் புண்யதீர்த்தங்களினால் தர்ப்பணமும்செய்தனர். பாரதனே! நாலுவர்ணங்களாலும்கொடுக்கப்படும் சிராத்தங்களினால் திருப்திசெய்விக்கப்பட்டபிதிருக்களும் தேவர்களும் [2] அந்த அன்னத்தை ஜரிப்பித்துக்கொள்ளமாட்டாமற்போயினர். அந்தத் தேவர்களும் பிதிருக்களும் அஜீர்ணத்தினால் வருத்தப்பட்டனர். அன்னம் அதிகமாகி அஜீர்ணத்தினால்துயரமுற்றபிதிருக்கள் ஸோமனிடம்சென்று, 'சிராத்தபோஜனத்தினால் கஷ்டப்படுகிறோம். எங்களுக்கு நன்மையைச்செய்யவேண்டும்' என்றுகேட்டனர். அவர்

---

1 ஒருகறி. 2 'தக்ராந்நம்'என்று பாடம்கொள்ளப்பட்டது.

களுக்கு ஸோமன், 'தேவர்களே! உங்களுக்குப் பரிகாரம்வேண்டு மாயின் பிரம்மதேவரிடம் செல்லுங்கள். அவர் உங்களுக்குப் பரி காரம்செய்வர்' என்று மறுமொழிகூறினன். பாரதனே! சந்திரன் சொல்லினால் அந்தத்தேவர்கள் பிதிருக்களுடன்சேர்ந்து மேருமலைச் சிகரத்திலுட்கார்ந்திருக்கும்பிரம்மதேவரை அடைந்து, 'பகவானே! நாங்கள் சிராத்தபோஜனத்தினால் மிகவருத்தப்படுகிறோம். தேவரே! எங்கள்மேல் அனுக்கிரகஞ்செய்து எங்களுக்குப் பரிகாரஞ்செய்யக் கடவீர்' என்றுகேட்டனர். இவ்வாறு அவர்கள் சொல்லக்கேட்ட பிரம்மதேவர், 'என்பக்கத்திலிருக்கும் இந்தஅக்கி உங்களுக்குப் பரி காரமுண்டுபண்ணுவன்' என்றுசொன்னர். அப்போது அக்கி, 'சிரா த்தம்நேரிடும்போது அதை நாம் சேர்ந்தே புஜிப்போம். என்னுடன் சேர்வதனால் நீங்கள் அன்னத்தை ஜரிப்பித்துக்கொள்வீர்கள். ஸந் தேகமில்லை' என்றுசொன்னன். அதைக்கேட்டபிறகு அந்தப்பிதி ருக்கள் துயரமற்றவராயினர். ராஜனே! இந்தக்காரணம்பற்றித்தான் அக்கிக்கு முதல்பாகம் கொடுக்கப்படுகிறது. புருஷஸ்ரேஷ்டனே! அக்கியைமுன்னிட்டுச் சிராத்தம்நடக்குமாயின் பிரம்மராக்ஷஸுகள் அந்தச்சிராத்தத்தைக் கெடுக்கமாட்டா. அக்கிபகவானிருக்கும்போது ராக்ஷஸர்கள் ஒங்குவதில்லை. முதலில் பிதாவுக்கும் பிறகு பிதாமஹ னுக்கும் அதன்பிறகு பிரபிதாமஹனுக்கும் பிண்டப்பிரதானம் செய் யவேண்டும். இதுதான் சிராத்தத்தின்முறையென்றுசொல்லப்படு கிறது. சிராத்தத்தில் ஒவ்வொருபிண்டத்திற்கும் காயத்ரியை நிய மத்துடன் சொல்லவேண்டும். (ஸோமாயபித்ருமதே) 'பிதிர்க்களு க்கு அதிகாரியான ஸோமனுக்கு' என்றும் சொல்லவேண்டும். ரஜ ஸ்வலையும் காதறுந்தவளும் வேறுவம்சத்தில் பிறந்தவளுமான ஸ்திரீ களைச் சிராத்தத்தில் சேர்க்கத்தகாது. ஜலத்தைத்தாண்டும்போதும் பிதிரர்களின்பேர்சொல்லவேண்டும். நதிக்குச்செல்லும்போது பித்ரு தர்ப்பணங்கள் செய்யவேண்டும். தன்வம்சத்தைச்சேர்ந்தபிதிருக்களு க்கு ஜலதர்ப்பணம்செய்து, பிறகு [1] தன்னினத்தாருக்கும் சுற்றத்தா ருக்கும் தர்ப்பணஜலம் விடவேண்டும். சித்ரவர்ணமான இரண்டு எருதுகள் கட்டினவண்டியினால் ஜலத்தைத்தாண்டும்போதும் ஓட மேறித்தாண்டும்போதும் ஜலதர்ப்பணத்தைப் பிதிருக்கள் விரும்பு கின்றனர். அதுதெரிந்தவர்கள் ஓடத்திலிருக்கும்போதெல்லாம் சிரத்தையுடன் ஜலதர்ப்பணம்செய்கின்றனர். கிருஷ்ணபக்ஷமென் னும்பாதிமாஸத்தின்முடிவாகிய (அமாவாஸையில்) சிராத்தங்களைச்

---

1 மாத்ருவம்சத்தாருக்கும் காருண்யபித்ருக்களுக்கும்.

செய்யவேண்டும். பித்ருபக்தியினால் தேகபுஷ்டியும் ஆயுளும் சூரத்தனமும் செல்வமும் உண்டாகின்றன. குருவம்சஸ்ரேஷ்டனே! பிரம்மதேவர், புலஸ்தியர், வஸிஷ்டர், புலஹர், அங்கிரஸ், க்ரது, கசியப மகரிஷி இவர்கள் மகாயோகேசுவரர்களென்று சொல்லப்பட்டவர்கள். ராஜனே! இவர்கள்தாம் பிதிருக்கள். சிராத்தத்தைப்பற்றின சிறந்த விதி இதுதான். சிராத்தம்செய்து [2]பிண்டங்களைச்சேர்ப்பதனால் இறந்தவர்கள் பிரேதத்தன்மையிலிருந்து விடப்படுகின்றனர். புருஷஸ்ரேஷ்டனே! முன்னோர்களால்சொல்லப்பட்டசிராத்தமுண்டான வரலாறு சாஸ்திரப்பிரகாரம் இவ்வாறு உரைக்கப்பட்டது. இதற்கு மேல் உனக்கு நான் என்னசொல்லவேண்டும்?" என்றார்.

---

## நூற்றுநாற்பதாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உபவாஸமுதலியவற்றின்லக்ஷணங்கள் முதலியன.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! நியமமுள்ளப்ராம்மணர்கள் ஒரு ப்ராம்மணன் வேண்டுகோளுக்காகச் சிராத்தபோஜனத்தைப் புஜித்தால் அது எப்படியாம்?" என்றுவினவ, பீஷ்மர் சொல்லலானார்.

"ப்ராம்மணர்விருப்பத்திற்காகப் புஜிப்பவர்கள் வேதோக்தநியமம் தவறினவர்களாகி வேதோக்தமான சிராத்தாதிகர்மங்களில் புஜித்தால் விரதங்களைக் கெடுத்தவராகிறார்கள்" என்றார். யுதிஷ்டிரர், "சிலர் உபவாஸத்தையே தவமென்றுகூறுகின்றனரே? இதுவே தவமாகுமா? அல்லது, தவம்வேறுண்டா?" என்றுகேட்டார். பீஷ்மர், "ஒருமாஸம் உபவாஸமிருப்பதையும் ஒருபக்ஷமுபவாஸமிருப்பதையும் மாதத்திற்கொருமுறையும் பக்ஷத்திற்கொருமுறையும் போஜனமில்லாமலிருப்பதையும் தவமென்று ஜனங்கள் நினைக்கின்றனர். [3] தேகத்தின் செய்கையைக்கெடுப்பவன் தவமுள்ளவனுமாகான்; தர்மந்தெரிந்தவனுமாகான். தானம்மிகுதியாகச்செய்வதும் உத்தமமான தவமென்றுவிதிக்கப்படுகிறது. தர்மத்தில் விருப்பமுள்ளகுடும்பியாகியப்ராம்மணன் எப்போதும்உபவாஸியும் பிரம்மசாரியும் ரிஷியுமாக இருக்கவேண்டும்; எப்போதும் தேவர்களைப் பூஜிக்கவேண்டும்; மனிதன் எப்போதும் தூங்காமலிருக்கவேண்டும்; எப்போதும் அம்ருதத்

---

1 இவர்கள்தாம் பிதிருவம்சத்தின் எழுவர்.

2 ஸபிண்டீகரணம் செய்வதனால்.

3 'ஆத்மதந்த்ரே' என்பது மூலம்; 'சரீரத்தின்உருவத்தை அல்லது குடும்பரூபத்தைக் கெடுப்பவன்' என்பது பழையஉரை.

தையுண்டுகொண்டும் பரிசுத்தமானகாயத்ரியைஜபித்துக்கொண்டுமிருக்கவேண்டும். எப்போதும் ஸத்தியமேபேசவேண்டும் ; நியமமுள்ளவனுயிருத்தல்வேண்டும் ; எப்போதும் மிச்சத்தையுண்ணவேண்டும்; விருந்தினர்களிடத்தில் அன்போடிருக்கவேண்டும் ; எப்போதும்அம்ருதத்தையேபுசித்துப் பரிசுத்தனுகஇருக்கவேண்டும்'' என்றுசொன்னுர். யுதிஷ்டிரர், "ராஜரே ! எப்போதும் உபவாஸியும் பிரம்மசாரியும் மிச்சத்தையுண்ணுகிறவனும் விருந்தினர்களைவிரும்புகிறவனுமாவது எப்படி?" என்றுகேட்டார். பீஷ்மர், "காலைப்போஜனத்திற்கும் இராத்திரிபோஜனத்திற்கும்இடையில் மூன்றும்புஜிக்காதவனெவனே அவன் நித்யோபவாஸியாகிறுன்.ருதுகாலத்தில் தன்பார்யையினிடம் சேருகிறவன் பிரம்மசாரியாகிறுன். கொடுப்பதேஇயற்கையாகவுள்ள மனிதன் எப்போதும்உண்மைபேசுகிறவனுகிறுன். (யாகமுதலிய அவசியமின்றி) வீணுகமாமிசத்தைத்தின்னுதவன் மாமிசம்விட்டவனுகிறுன். தானம்கொடுப்பவன் பரிசுத்தமுள்ளவனுகிறுன். பகலில்தூங்காதவன் தூக்கத்தைவிட்டவனுகிறுன். யுதிஷ்டிர ! வேலைக்காரர்களும் விருந்தினர்களும்புசித்தபிறகே தான்புசிக்கும்மனிதன் அம்ருதத்தையேபுசிப்பவனென்றறி. ப்ராம்மணர்கள்புசியாமலிருக்கத் தானுண்ணுதமனிதன் அந்தஉண்ணுமையினுலேயே ஸ்வர்க்கத்தை ஜயித்தவனுகிறுன். தேவர்களும் பித்ருக்களும் அடுத்தவரும் புசித்தமிச்சத்தைப்புசிப்பவனே மிச்சத்தையுண்பவனென்று சொல்லுகின்றனர். அப்படிப்பட்டவர்களுக்குப் பிரம்மலோகத்தில் முடிவில்லாதஇடங்கள் இருப்பதாகச் சொல்லப்படுகின்றன. அரசனே ! அப்ஸரஸுகளும் கந்தர்வர்களும் அவனிடம் வருகின்றனர். தேவர்களுடனும் விருந்தினர்களுடனும் பிதிருக்களுடனும்புசிப்பவர் பிள்ளைகளோடும் பேரன்மாரோடும் மகிழ்ந்திருப்பர். அவர்களுக்கு உத்தமமானகதியுண்டாகிறது'' என்றுசொன்னுர்.

---

## நூற்றுநாற்பத்தோராவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(தானம்யாரிடத்தில்வாங்கலாம் யாரிடத்தில்வாங்கத்தகாதென்பதை அறிவிப்பதானவ்ருஷாதர்ப்பிக்கும் ஸப்தரிஷிகளுக்கும் ஸம்வாதம்.)

யுதிஷ்டிரர், 'பிதாமஹரே ! ப்ராம்மணர்களுக்குப் பலவகைத் தானங்களைக் கொடுக்கின்றனரே; கொடுக்கிறவனுக்கும் வாங்குகிறவனுக்கும் இருக்கவேண்டியகுணங்கள் என்ன?'' என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானுர்.

"ப்ராம்மணன் யோக்யனிடத்திலும்வாங்குகிறான்; அயோக்ய னிடத்திலும்வாங்குகிறான். குணமுள்ளவனிடத்தில்வாங்கினால்சிறிது பாவமுண்டாகும். குணமில்லாதவனிடத்தில்வாங்குகிறவன் முழு கிப்போவான். பாரதனே! இந்தவிஷயத்தில் விருஷாதர்ப்பியென்னும் அரசனுக்கும் ஸப்தரிஷிகளுக்கும்நடந்த ஸம்பாஷணையாகிய பழைய இதிஹாஸத்தைக் கூறுகின்றனர். கஶ்யபர், அத்ரி, வஸிஷ்டர், பரத் வாஜர், கௌதமர், விஶ்வாமித்திரர், ஜமதக்னி இவ்வேழுரிஷிகளும் பதிவ்ரதையான அருந்ததியும் இருந்தனர். அவர்களெல்லாருக்கும் கண்டையென்பவள் வேலைக்காரியாயிருந்தாள். பசுஸகனென்னும்சூத் திரன் அந்தவேலைக்காரிக்குக் கணவனாயிருந்தான். முற்காலத்தில் அவர்களனைவரும் யோகாப்யாஸத்தினால் அழியாதபிரம்மலோகத்தை அடையக்கருதித் தவம்செய்துகொண்டு இப்பூமியெல்லாம் திரிந்தனர். கௌரவனே! அப்போது மழையின்மை பெரிதாயிருந்தது. அந்தக் காலத்தில் இவ்வுலகம் பசித்து, பிழைப்பதுஅரிதாயிற்று. முற்காலத் தில்நடந்த ஒரு யாகத்தில் யஜமானனும் சிபியின்புத்திரனுமாகிய விரு ஷாதர்ப்பியென்னும்அரசனால் தனக்குயாகம்செய்வித்த ரித்விக்குக் களுக்குத் தன்புத்திரனான அனிலனென்பவன் தக்ஷிணைக்குப்பிரதி யாகக் கொடுக்கப்பட்டான். மழைபெய்யாதகாலம்வந்தபோது ஆயுள் குறைவாயுள்ள அந்தராஜகுமாரன் மரணமடைந்தான். பசியினால் வருந்தின அந்தரிஷிஶ்ரேஷ்டர்கள் தாங்கள்யாகம்செய்வித்த அரச னுடைய அந்தக்குமாரன் உயிரிழந்ததைக்கண்டு அவனைச்சுற்றிக் கொண்டுநின்றனர். பாரதனே! உணவற்றுப்போன இம்மானிட லோகத்தில் பசியினால்வருத்தப்பட்டஅவர்கள் தேகத்தைக்காப்பாற் றக்கருதி அந்தராஜகுமாரனை ஒருபாத்திரத்தில் சமைத்தனர். ரிஷி கள் உணவுக்காகக் கஷ்டமானநிலைமையையடைந்தனர். சிபியின் புத்திரனான வ்ருஷாதர்ப்பியென்னுமரசன் திரிந்துகொண்டிருக்கை யில் வழியில் சமைத்துக்கொண்டுகஷ்டப்படும் அம்முனிவர்களைக் கண்டான். வ்ருஷாதர்ப்பி, 'தபோதனர்களே! தானம்வாங்குவது கஷ்டத்தைத் தாண்டுவிக்கும். வாங்குகிறவர்களுக்குக் குறைவில்லை யே! என்னிடத்திலிருக்கும்தனத்தைக் கேளுங்கள். ப்ராம்மணர் களுக்கு யாசித்துவாங்குவதே சிறந்தவிருத்தியாக உண்டாக்கப்பட் டிருக்கிறது. தபோதனர்களே! ஆதலால், நீங்கள் கேளுங்கள். உங்களுக்குத் திரவியம்கொடுக்கிறேன். யாசிக்கும் ப்ராமணனிடத் தில் எனக்கு அன்புஉண்டே. நான் உங்களுக்கு ஆயிரம்கோவேறு கழுதைகளையும் ஒவ்வொன்றும்ஒவ்வொரு ரிஷபமுள்ளவையும் கன்

தீன்றவையுமான பதினாயிரம்பசுக்களையும் கொடுப்பேன்; மனோவேகமாக விரைந்துசெல்லும்வெள்ளைக்குதிரைகள் பத்துக்கோடி கொடுப்பேன்; குடும்பத்தைத்தாங்குகிறவையும் வண்டியிழுப்பவையும் முழுதும்வெண்ணிறமுள்ளவையுமானஎருதுகள் பதினாயிரம்கொடுப்பேன்; நல்லவிருஷபங்களைச்சேர்ந்தவையும் பருத்தவையும் அடக்கமுள்ளவையுமான தலையீற்றுப்பசுக்களையும் சிறந்தகிராமங்களையும் நெல்யவமுதலிய அறுசுவைப்பண்டங்களையும் இரத்தினங்களையும் கொடுப்பேன். இன்னும்கிடைத்தற்கரியவை என்னகொடுக்கலாம்? புசிக்கத்தகாத இந்தவிஷயத்தில் இப்படிஆசைப்படாதீர்கள். உங்களுக்குப் பசிதீருவதற்காக நான் என்னகொடுக்கக்கடவேன்?' என்றுகேட்டான். ரிஷிகள், 'ராஜனே! அரசர்களிடத்தில்வாங்குவது தேன்போல இனிப்பாயிருக்கும்; (முடிவில்) விஷத்திற்கொப்பாகும். அதை அறிந்திருந்தும் நீ ஏன் எங்களுக்கு ஆசைகாட்டுகிறாய்? ஒருசெக்கான் பத்துக்கசாப்புக்காரர்களுக்குச் சமானமானவன். ஒரு கள்ளுக்கடைக்காரன் பத்துச்செக்காரர்களுக்குச்சமானன். ஒருவேசி பத்துக் கள்ளுக்கடைக்காரருக்குச்சமானம். ஓர்அரசன் பத்துவேசிகளுக்குச்சமானம். பதினாயிரம்கசாப்புக்கடைகளை நடத்தும்கசாப்புக்காரனும் அரசனும்சரி. அரசனிடத்தில்வாங்குவது கொடிது. [1] க்ஷத்திரியர்கள் ப்ராம்மணர்களைத்தேவதையைப்போல ஆசிரயித்திருக்கின்றனர். தவத்தினால்பாவமற்றப்ராம்மணன் தான்சந்தோஷமடைவதனால் தேவர்களைஸந்தோஷப்படுத்துகிறான். ஒருகால் இவ்வுலகத்தில் ப்ராம்மணனுக்குத் தவம் சீக்கிரத்தில் உண்டாகிறது. அரசனுடையபொருள் கிடைத்தால் அது காட்டில்தீப்போல அந்தத்தவத்தைஎரித்துவிடும். அரசனே! உனக்கும் உன்தானத்திற்கும் எப்போதும் க்ஷேமம்உண்டாகட்டும். உன்னிடம்யாசிப்பவருக்கு நீ எல்லாவற்றையும் கொடுக்கலாம்' என்றுசொல்லி அவர்கள் வேறிடந்திற்குச் சென்றனர். அம்மஹாத்மாக்களுக்கு அந்தமாமிசமானது அப்போது சமையாமலேயிருந்தது. அவரனைவரும் அதைவிட்டு ஆகாரத்தைக்கருதி வனம்போயினர். அதன்பிறகு, அரசனால்கட்டளையிடப்பட்ட அவன்மந்திரிமார் காட்டிற்குப்போய் அத்திப்பழங்களைப்பறித்து அவர்களுக்குக் கொடுக்கப்போயினர். அம்முனிவர்கள் பழங்களைக்கண்டு வாங்கப்போயினர். அப்போது, அம்மந்திரிகளின்வேலைக்காரர்கள் உள்ளே பொன்வைத்த சிலஅத்திப்பழங்களைச்சொணர்ந்து அவற்றை அவர்களுக்குக் கொடுக்கப்போயினர். அத்ரியானவர் அவை பளுவாயிருப்பவைஎன்றறிந்து, 'அவை வாங்கத்தகாதவை' என்றுகூறலானார்.

---

1 'க்ஷத்ரம்' என்று பாடம்கொள்ளப்பட்டது.

'நாங்கள் அறிவில்லாதவரல்லோம்; மானிடபுத்தியுள்ளவருமல்லோம்; இவை பொன்னுள்ளவையென்றறிவோம். நாங்கள் விழித்துக்கொண்டோம்; ஏமாறவில்லை. இவ்வுலகத்தில் இது லாபமாயிருந்து மறுமையில் கொடும்பயனைத்தரும். இம்மையிலும்மறுமையிலும் ஸுகத்தைவிரும்புகிறவன் இதை வாங்கவேகூடாது' என்று சொன்னார். வஸிஷ்டர், 'நூறுபொன்னும் ஆயிரம்பொன்னும்என்னும்கணக்குள்ள அதிகச்செல்வத்தைவாங்குகிறவன் மிகத்தாழ்வான கதியை அடைவான்' என்றுசொன்னார். கஸ்யபர், 'பூமியிலுள்ள நெற்களும் யவங்களும் பொன்னும் பசுக்களும் பெண்களும்ஆகிய இவையெல்லாம் சேர்ந்தும் ஒருவனுக்குப்போதா. ஆதலால், தெரிந்தவன் ஒழிவையடையவேண்டும்' என்றுசொன்னார். பரத்வாஜர், 'மான்குட்டி வளரும்போதே கொம்பும் வளருகிறது. புருஷனுடைய ஆசையும் அப்படியேதான். அதற்கு அளவில்லை' என்றுசொன்னார். கௌதமர்,'ஆசையைநிரம்பச்செய்யும்பொருள் உலகத்திலில்லை. மனிதன் ஸமுத்திரம்போன்றவன்; ஒருகாலும் நிரம்பப்படான்' என்று கூறினர். விஸ்வாமித்திரர், 'ஓர் இஷ்டத்தை விரும்புகிறவனுக்கு அந்தஇஷ்டம் நிறைவேறும்போதே மற்றொருபொருள்விருப்பம் அவனிடத்தில் அம்புபோலத் தைக்கிறது' என்றுகூறினர். அத்ரி, 'விரும்பினவற்றை அனுபவிப்பதனால் விருப்பம்தணிவது ஒருகாலுமில்லை. நெய்யினால் அக்கினிபோல விருப்பம் மேன்மேலும் அதிகப்படுகிறது' என்றுசொன்னார். ஜமதக்னி, 'வாங்குவதில் மனத்தைக்கட்டுவது தான் தவத்தை நிலையாகத் தாங்குகிறது. ஆசைப்படுகிற ப்ராம்மணனுக்கு அந்தத்தவமென்னுந்தனம் ஒழுகிப்போம்' என்று உரைத்தார். அருந்ததி, 'தர்மத்திற்காகத் திரவியங்களைச்சம்பாதிப்பதைச் சிலர் ஒப்புக்கொள்ளுகிறார்கள். இவ்வுலகத்தில் பொருளீட்டுவதைப் பார்க்கிலும் தவமீட்டுவதே சிறந்தது' என்றுகூறினள். கண்டையென்பவள்,'இந்தஎன்தலைவர்களாகியரிஷிகள் மிக்கபலமுள்ளகொடிய பயங்கரத்தைக்கண்டு பலங்குறைந்தவர் பயப்படுவதுபோல இந்தத் தனத்திற்கு அஞ்சுகின்றனர். இதன்பிறகு, நானும் பயப்படுகிறேன்' என்றுசொன்னாள். பசுஸகன், 'தர்மத்திற்குமேற்பட்டதும் தர்மம் போன்றதும் இல்லையென்று ப்ராம்மணர்கள் அறிந்திருக்கின்றனர். ஆதலால், நானும் வணக்கத்துடன் உண்மையாகவும் செம்மையாகவும் கற்றறிந்தவரைப் பணியக்கடவேன்' என்றுசொன்னான். நியமந்தவறாதவர்களாகிய அந்தரிஷிகளனைவரும், 'இந்தமனிதர்கள் யாரைச் சேர்ந்தவர்களோ, இந்தமோசமானகனிகளை எவன் நமக்குக்கொடுக்

கிறுரே அந்தஅரசனுக்கும் அவன்தானத்திற்கும் ஸுகமுண்டாகட்டும்' என்றுசொல்லி, உள்ளே பொன்னுள்ள அந்தக்கனிகளை எறிந்துவிட்டு வேறிடம்சென்றூர்கள். பிறகு, அம்மந்திரிகளனைவரும் அரசனிடம்சென்று, 'வேந்தே! இதில் மோசமிருப்பதாகநினைத்து அந்தக்கனிகளையெறிந்து அம்முனிவர்கள் வேறிடத்திற்கே செல்கின்றனர். அது உமக்குத் தெரிந்திருக்கட்டும்' என்றுசொன்னூர்கள். தன்வேலைக்காரர்களால் இவ்வாறு தெரிவிக்கப்பட்ட அந்த வ்ருஷாதர்ப்பி கோபித்து அந்தரிஷிகளனைவருக்கும் விரோதம்செய்வதற்குத் தன்வீடுசென்றூன். அவன் வீடுசென்று கடுமையான விரதத்தையெடுத்துக்கொண்டு நன்ருகச்சொல்லப்பட்டமந்திரங்களோடு ஆகவனீயமென்னும் அக்கினியில் ஒவ்வொன்ருக ஆகுதியைச்செய்தான். அந்த அக்கியிலிருந்து உலகங்களுக்குப் பயத்தைச்செய்யும் ஒருபேய் எழுந்தது. வ்ருஷாதர்ப்பியானவன் அதற்கு யாதுதானி யென்று பெயரிட்டான். காளராத்திரிபோன்ற அப்பேயானது காங்குவித்து வ்ருஷாதர்ப்பிராஜனிடம்வந்து, 'நான் என்னசெய்யக்கடவேன்' என்றுகேட்டது. வ்ருஷாதர்ப்பி, 'ஏழுரிஷிகள் அருந்ததி அவர்கள்வேலைக்காரி வேலைக்காரியின்கணவன் ஆகியஇவர்களிடம் செல். அவர்கள்பேர்களை மனத்தில்வைத்துக்கொள். அவர்களின் பேர்களைத் தெரிந்துகொண்டு அவர்களெல்லாரையும் அழித்துவிடு. அவர்கள் அழிந்துபோனபின் உன்னிஷ்டப்பிரகாரம் நீ நினைத்தவிடம் செல்' என்றுசொன்னூன். அந்தப்பேய், 'அப்படியேயாகட்டும்' என்று அவனுக்கு வாக்குத்தத்தம்செய்து அரக்கிஉருவத்தோடு அம்மஹரிஷிகள்ஸஞ்சரிக்கும் வனத்திற்குச் சென்றது.

---

## நூற்றுநாற்பத்திரண்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(ஸப்தரிஷிகள்முதலியோருக்கும் யாதுதானிக்கும் ஸம்வாதமுதலியவையும், அந்தரிஷிகள் ஆசையை ஒழித்து ஸ்வர்க்கஞ் சென்றதும்.)

ராஜனே! அப்போது, அத்ரிமுதலியமஹரிஷிகள் கிழங்குகளையும் கனிகளையும் பக்ஷித்துக்கொண்டு அவ்வனத்தில் திரிந்தனர்; அதன்பிறகு, தோள்களும் கைகளும் கால்களும் முகமும் வயிறும் மிகப்பருத்துத் தடித்ததேகமுள்ளவனும் பற்றுக்களைவிட்டுச் செல்லு

றிவனும் சுனஸ்ஸகனென்னும் பெயருள்ளவனுமான ஸங்யாஸியைக் கண்டனர். அருந்ததியானவள் எல்லாஅங்கங்களும்தடித்து அழகாயிருக்கும் அந்தத்துறவியைக்கண்டு, 'நீங்கள் இப்படியாவதில்லையே?' என்று ரிஷிகளைக்கேட்டாள். வசிஷ்டர், 'நமக்கிருப்பதுபோல இவனுக்கு அக்கிஹோத்ரம் ஹோமம்செய்யப்படாமலிருக்கவில்லையே? காலையிலும் மாலையிலும் ஹோமம்செய்யவேண்டாமே? ஆதலால், சுனஸ்ஸகன் பருத்திருக்கிறான்' என்றுசொன்னார். அத்ரி, 'நம்மைப்போலப் பசியினால் இவனுக்குச் சக்திகுறைந்துபோகவுமில்லை; கஷ்டப்பட்டு ஒதினது நஷ்டப்பட்டுப் போகவுமில்லை. அதனால், சுனஸ்ஸகன் பருத்திருக்கிறான்' என்றுகூறினார். விஶ்வாமித்ரர், 'நம்மைப்போல இவனுக்கு எப்போதும் சாஸ்திரப்பயிற்சியினாலுண்டான கொதிப்பில்லை. இவன் சோம்பேறி; மூர்க்கன்; பசிதீர்ப்பதே முக்கியமாயிருப்பவன். அதனால், சுனஸ்ஸகன் பருத்திருக்கிறான்' என்றுகூறினர். ஜமதக்னி, 'இவன் நம்மைப்போல வருஷத்திற்கு வேண்டியபோஜனத்தையும் விறகையும்பற்றி மனத்திற்சிந்திக்கவேண்டியதில்லை. அதனால், இவன் பருத்திருக்கிறான்' என்று சொன்னார். கஶ்யபர், 'நம்மைப்போல இவனை நாலுஸகோதரர்கள், 'கொடுகொடு' என்றுகேட்கவில்லை. அதனால், சுனஸ்ஸகன் பருத்திருக்கிறான்' என்றுசொன்னார். பரத்வாஜர், 'அறிவில்லாதஇந்த ஈனப்பிராம்மணனுக்கு நமக்கிருப்பதுபோலப் பார்யையை உலகம் தூஷிப்பதனால் உண்டான துயரமில்லை. அதனால், சுனஸ்ஸகன் பருத்திருக்கிறான்' என்றுசொன்னார். கௌதமர், 'நமக்குப்போலஇவனுக்கு ஒவ்வொன்றும் மூன்றுவருஷத்திற்கு வைத்துக்கொள்ளவேண்டிய மூன்றிடத்தில்தைத்திருக்கும் மூன்றேமான்தோலுடைகள் இல்லை. அதனால், சுனஸ்ஸகன் பருத்திருக்கிறான்' என்றுசொன்னார். பிறகு, அந்தச்சுனஸ்ஸகனென்னும்ஸங்யாஸி அம்மஹரிஷிகளைக்கண்டுமுறைப்படி அபிவாதனம்செய்து கைகளினால் (அவர்களுடைய, பாதங்களைத்) தொட்டான். பசியைத்தீர்க்கக்கருதின அந்தரிஷிகள் அவன் செய்தபணிவிடையை ஒருவருக்கொருவர் தெரிவித்துக்கொண்டு அவனுடன்கூடவே வனத்திற்சென்றனர். ஒருகாரியத்தில் நிச்சயமுள்ள அவர்கள் கிழங்குகளைப்பிடுங்கிக்கொண்டும் கனிகளைப்பறித்துக்கொண்டும் காடுகளில்திரிந்தனர். அவ்வாறுதிரிந்துகொண்டிருந்த அவர்கள் ஒருகால் நெருங்கினமரங்களால் மறைக்கப்பட்டதும் நிரம்பியும் தெளிந்துமிருக்கும் பரிசுத்தமானஜலமுள்ளதும் உதயகாலத்து ஸூர்யமண்டலம்போலப் பிரகாசிக்கும் தாமரைமலர்களால் விளங்கு

வதும் வைடூரியக்கற்போன்றநிறமுள்ள தாமரைஇலேகளால் மூடப் பட்டதும் சிறந்ததண்ணீரை அடுத்திருக்கும் பலவகைப்பறவைக ளோடுகூடியதும் ஒருதுறையுள்ளதும் அதைச்சேர்ந்த அழகான சிறுதுறைகளுள்ளதும் சேறில்லாததும் யாராலும்உபயோகிக்கப் படக்கூடாததுமான ஓர் அழகிய தாமரைக்குளத்தைக் கண்டனர். வ்ருஷாதர்ப்பி அனுப்பின யாதுதானியென்னும்பெயருள்ள கோர ரூபியானபேய் அந்தக்குளத்தைக் காவல்காத்தது. சுனஸ்ஸகனேடு கூடிய அம்மஹரிஷிகளனைவரும் பேயினற்காக்கப்பட்ட அக்குளத்தி னிடம் தாமரைக்கிழங்குக்காகச் சென்றனர். அப்போது, அந்த மஹரிஷிகள் அந்தக்குளக்கரையில் பார்ப்பதற்குவிகாரரூபமான அந்த யாதுதானியென்னும்பேய் இருப்பதைக்கண்டு, 'நீ இந்தக்குளக் கரையைச்சார்ந்து தனித்துநிற்கிருய். நீ யார் ? யாருக்காக நிற்கிருய்? உனக்கு என்னபிரயோஜனம்? நீ என்னசெய்யக்கருதுகிருய் ? சொல்' என்று அதைக்கேட்டனர். அதற்கு, யாதுதானி, 'தபோதனர் களே! நான் யாராயிருந்தாலென்ன? என்னை எவ்விதமாகவும் கேள்வி கேட்கவேண்டாம். நீங்களெல்லாரும் என்னை இந்தக்குளத்திற்குக் காவற்காரியென்று அறியுங்கள்' என்றுசொன்னுள். ரிஷிகள், 'நாங்களெல்லோரும் பசியினல் வருத்தப்படுகிறேம். எங்களுக்கு வேறு ஒன்றுமில்லே. உன்னுடைய ஸம்மதத்தின்மேல் நாங்களெல் லோரும் தாமரைக்கிழங்குகளே எடுத்துக்கொள்ளலாமா ?' என்று கேட்டனர். யாதுதானியானவள், 'ஓர்உடன்படிக்கையோடு நீங்கள் இங்கிருந்து தாமரைக்கிழங்குகளே இஷ்டப்படி எடுத்துக்கொள்ள லாம் ; ஒவ்வொருவராகப் பேரை எனக்குச்சொல்லிவிட்டுப் பிறகு தாமதமின்றி எடுத்துக்கொள்ளலாம்' என்று மறுமொழிசொன்னுள்.

பசியினல் தேகம்வாடின அத்ரியானவர் அந்தயாதுதானியை ரிஷிகளேக்கொல்லக்கருதினபேய் என்றறிந்து அவளேநோக்கி, 'சிறந் தவளே ! நான் அத்ரி. நான் மூன்றுவிசை அத்யயனம்செய்யாத ராத்ரியில்லேயென்பதனல் [1](அராத்ரிஎன்னும்) பெயர் எனக்கு அத்ரி என்ருயிற்று. இப்போது என்பேரை அறி' என்றுசொன்னர். அதைக் கேட்டயாதுதானி, 'சிறந்தமகிமையுள்ளவரே! உம்மால் உமதுஇந்தப் பெயர் ஸரியாக உரைக்கப்பட்டது. ஆனல், எனக்கு இதை நினைவில் வைத்துக்கொள்ள முடியவில்லே. போம். குளத்திலிறங்கும்' என்று சொன்னுள். வஸிஷ்டர், 'நான் வரிஷ்டன் (எல்லாரிலும் சிறந்த

---

1 த்ரி=மூன்றுமுறை (அத்யயனமில்லாத) ரா=ராத்ரி, அ=இல்லே. என்றுபகுக்கவேண்டும்.

வன்); சிறந்த [1]கிருகத்தில் வஸிப்பவன். மிகச்சிறந்தவனாயிருப்பதனாலும் ஸப்தரிஷிமண்டலத்தில்வஸிப்பதனாலும் எனக்கு [2]வஸிஷ்டன் என்கிறபெயரென்றறி' என்றுசொன்னார். யாதுதானி, 'உம்முடைய பெயரை நீர் பகுத்துச் சொன்னீர். இந்தஎழுத்துக்கள் கஷ்டப்பட்டு உச்சரிக்கப்படுகின்றன. இதை நினைவில்வைக்கமுடியாது. போம். குளத்திலிறங்கும்' என்றுசொன்னாள். கஶ்யபர், 'நான் [3]குலந்தோறுமிருப்பவன்; பூமியில் மழைபொழிவதனால் [4]குவமன்; காசம் என்னும் நாணற்பூவைப்போல வெளுத்திருப்பதனால் காஶ்யன். இதனால், கஶ்யபனென்று பெயர்பெற்றவன். இந்தஎன்பெயரை நினைவில் வைத்துக்கொள்' என்றுசொன்னார். யாதுதானி, 'சிறந்தமகிமையுள்ளவரே! நீர் இந்தஉம்முடையநாமத்தை என்னிடத்தில் ஸரியாக உரைத்தீர். ஆனால், இதை நினைவில்வைத்துக்கொள்ளமுடியாது. போம். குளத்திலிறங்கும்' என்றுசொன்னாள். பாரத்வாஜர், 'சிறந்தவளே! நான் பிள்ளைகளைப் [5]பரிக்கிறேன்; வேலைக்காரர்களைப் பரிக்கிறேன்; தேவர்களையும் பிராம்மணர்களையும் பரிக்கிறேன்; பார்யையைப் பரிக்கிறேன். ஒருவியாஜம்பற்றிஇவர்களையெல்லாம் பரித்ததால் பரத்வாஜனானேன்' என்றுசொன்னார். யாதுதானியானவள், 'உமதுபேரைப் பகுத்துரைத்தீர். இந்தஎழுத்துக்கள் கஷ்டப்பட்டு உச்சரிக்கப்படுகின்றன. இதை நினைவில்வைத்துக்கொள்ளமுடியாது. போம். குளத்திலிறங்கும்' என்றுசொன்னாள். கௌதமர், 'யாதுதானியென்னும் பிசாசியே! நான் கோவென்றுசொல்லப்பட்ட வாக்கையடக்கினதனாலும் எல்லாவற்றையும் ஸமமாகப்பார்க்கும்படி கோவென்றுசொல்லப்பட்ட நேத்திரத்தையடக்கினதனாலும் தமம் (இருள்) என்னும்புகைஇல்லாமையாலும் என்னை அடக்குகிறவர்கள் யாரும் இல்லாததனாலும் என்னைக் கோதமனென்றுஅறி' என்று சொன்னார். யாதுதானி, 'மஹரிஷியே! என்னிடத்தில் உமது இந்தப்பெயர் உள்ளபடிஉரைக்கப்பட்டது. இதை நினைவில்வைக்கமுடியாது. போம். குளத்திலிறங்கும்' என்றுசொன்னாள். விஶ்வாமித்ரர், 'யாதுதானியே! எல்லாத்தேவர்களும் எனக்குமித்திரர்கள். [6]கோக்களெல்லாவற்றிற்கும் நான் மித்ரன். இதனால்,விஶ்வாமித்ரன்

1 சப்தரிஷிமண்டலத்தில்.

2 வரிஷ்டர்என்பதில 'ர', 'ஸ' ஆகமாகியது; வஸ்என்னும் பகுதியினாலும் இடைத்தது. [3]அக்கிருபி.

4 ஆதித்யரூபி; கு=பூமியில, வமன்=மழையைப்பொழிகிறவன்.

5 போஷிக்கிறேன்.

6 பசுஸம்ரக்ஷணம்செய்பவன் என்பது.

என்று எனக்குக் கியாதிவந்திருக்கிறதென்றறி' என்றுசொன்னார். யாதுதானி, 'இந்தஉமதுபேரைப் பகுத்துரைத்தீர். அக்ஷரங்கள் கஷ்டமாக உச்சரிக்கப்பட்டன. இதை நினைவில்வைக்கமுடியாது. போம். குளத்திலிறங்கும்' என்றுசொன்னாள். [1]ஜமதக்னி, 'பிறந்தவளே! எல்லாரிடத்திலும் அன்பாகியும் ஹவிஸுகளைப்பக்ஷித்துக் கொண்டுமிருக்கும் அக்நியைப்பூஜிப்பதனாலும் ஞானத்தினால் அக்கினிபோலப்பிரகாசிப்பதனாலும் இந்திரியங்களைஜயிப்பதனாலும் சிஷ்யர்களுக்கு ஞானத்தைஉண்டுபண்ணுவதனாலும் ஜமதக்னிஎன்று பெயர்பெற்றவனாக என்னையறி' என்றுசொன்னார். யாதுதானி, 'மஹரிஷியே! உம்முடையஇந்தப்பெயர் ஸரியாக என்னிடத்தில் உரைக்கப்பட்டது. இதை நினைவில்வைக்கமுடியாது. போம். குளத்திலிறங்கும்' என்றுசொன்னாள். [2] அருந்ததி, 'நான் எனதுபர்த்தாவின் மனத்தைஅனுஸரித்தவளாகி, எல்லாவற்றையும்தாங்குவதும் போஷிப்பதும் திரவியமுள்ளதுமாகிய பூமியில் என்பர்த்தாவைஅடுத்தவளாயிருக்கிறேன். அதனால், என்னை அருந்ததிஎன்றறி' என்றுசொன்னாள். யாதுதானி, 'உன்னுடைய இந்தப்பெயரைப் பகுத்துரைத்தாய். எழுத்துக்கள் கஷ்டமாக உச்சரிக்கப்பட்டன. இதை நினைவில் வைத்துக்கொள்ளமுடியாது. செல். குளத்திலிறங்கு' என்று சொன்னாள். கண்டை, 'அக்நியில்பிறந்தவளே! 'கண்ட' என்னும் பகுதி முகத்தின்ஒருபாகமாகிய கன்னத்தைச்சொல்வதென்று கூறுகின்றனர். அந்தக்கன்னம் உயர்ந்திருப்பதனால் நான் கண்டையென்னப்படுகிறேனென்றறி' என்றுகூறினாள். யாதுதானி, 'உன்னுடைய இந்தப்பெயரைப் பகுத்துரைத்தாய். எழுத்துக்கள் கஷ்டமாக உச்சரிக்கப்பட்டன. இதை நினைவில்வைக்கமுடியாது. போ. குளத்திலிறங்கு' என்றுசொன்னாள். [3]பசுஸகன், 'அக்நியிற்பிறந்தவளே!

1 'ஜ=ஜனிப்பது; ஜமத்=பக்ஷிப்பது; இவ்விரண்டும் அக்நியைச்சேருவன. யஜ=யாகஞ்செய்வது; ஜாநே=அறிவது; ஜிஜாஹி=இந்திரியங்களை ஜயிப்பது; ஜிஜாயிஷி=சிஷ்யர்களின் ஞானத்தையுண்டாக்குவது. அக்நிபோலஎன்பது உவமையினால் ஏற்பட்டபொருள். '(ஜாஜமத்=) தேவர்களும், (யஜ=) அக்நியும் ஆவிர்ப்பவிக்கும்இவ்வுலகத்தில்உண்டாயிருக்கிறேன்; அதனால், ஜமதக்நிஎன்று ப்ரஸித்திபெற்றிருக்கிறேன் என்றுஎன்னை அறி' என்பது பழையவுரை.

2 'அநுருந்ததி (அநுஸரிப்பவள்) என்பது நுகரங்கெட்டு அருந்ததியென்றாயிற்று' என்பது பழையவுரை. அருந்ததி=பர்த்தாவின் விருப்பத்தைத் தடாதவள்என்பதனால் அநுஸரிப்பவள் என்றுமாம்.

3 'பசுவுக்குத்துணையானவன்; அதாவது, வாய்க்குக்கிடைத்ததைமட்டும் புசிப்பவன்.

நான் பசுக்களைக்கண்டால் ஸந்தோஷமடைவேன்; எப்போதும் அவற்றிற்குச் சினேகிதனாகவுமிருப்பேன். அந்தக்குணம்பற்றிப் பசுஸகனென்றறி' என்று கூறினன். யாதுதானி,'இந்தஉன்பேரைப் பகுத்துரைத்தாய். எழுத்துக்கள் கடினமாக உச்சரிக்கப்பட்டன. இதை நினைவில்வைக்கமுடியாது. போ. குளத்திலிறங்கு' என்று சொன்னாள். சுனஸ்ஸகன், 'யாதுதானியே! இவர்கள்சொன்னது போல நான் என்பேரைப் பகுத்துச்சொல்லமுடியாது. நான் எப்போதும் [1]நாய்களுக்குத்துணையானவர்களுக்குத் துணையாயிருப்பவனென்றறி' என்றுசொன்னான். யாதுதானி, 'ப்ராம்மணா! உன்னுடைய உச்சரிப்புத்தெளிவாயில்லாமையினால் உன்பேச்சில் நீசொன்ன பெயர் நன்றாகத்தெரியவில்லை. ஆதலால், இப்போது உன்பேரை ஒருதரம்சொல்' என்றுகேட்டாள். சுனஸ்ஸகன், 'நான்ஒருதரம் சொன்னபேரை நீதெரிந்துகொள்ளாமையினால் என்திரிதண்டத்தினால் அடிக்கப்பட்டவளாய் உடனே சாம்பலாகக்கடவாய்' என்று சொல்லி, பிரம்மதண்டம்போன்ற தன்திரிதண்டத்தினால் அவள் தலையிலடித்தவுடனே அந்தப்பிசாசி தரையில்விழுந்து நீறாயினாள். அந்தச்சுனஸ்ஸகன் மிகுந்தபலமுள்ள அந்தயாதுதானியைக்கொன்று திரிதண்டத்தைத் தரையிலூன்றிப் புல்தரையில் உட்கார்ந்தான். பிறகு, அந்தரிஷிகளனைவரும் வேண்டிய அளவுதாமரைமலர்களையும் தாமரைக்கிழங்குகளையும் எடுத்துக்கொண்டு ஸந்தோஷத்துடன்கரையேறினர். அதிகசிரமமுள்ளஅம்முனிவர்கள் தாமரைக்கிழங்குகளைக் குவியல்குவியலாகக் குளக்கரையில் வைத்துவிட்டு ஜலதர்ப்பணம் செய்தனர். பிறகு, அந்தப்புருஷஸ்ரேஷ்டர்களனைவரும் ஜலத்திலிருந்து கரையேறினபோது அந்தத்தாமரைக்கிழங்குகளைக் காணவில்லை. அவர்கள் பசியினால்வருந்தி, 'ஆகாரத்தைவிரும்புகிற நம்முடைய தாமரைக்கிழங்குகள் எந்தக்கொடிய [2]பாவியினால்கொண்டு போகப்பட்டனவோ' என்றுசொன்னார்கள். சத்துருக்களையழிப்பவனே! அந்தப்பிராம்மணோத்தமர்கள் ஒருவரையொருவர் ஸந்தேகப்பட்டுக்கேட்டனர். அவர்களெல்லாரும், 'சபதம்செய்வோம்' என்று கூறினர். பசியினால்பீடிக்கப்பட்டும் மிகக்களைத்துமிருந்த அவர்களனைவரும், 'அப்படியேயாகட்டும்' என்றுசொல்லி, ஒன்றாகச் சேர்ந்து சபதம்செய்யத்தொடங்கினர்.

1 'சுனஸ்ஸகஸகாயம்' என்பதுமூலம்; 'தர்மத்துக்குத்துணைவர்களான ரிஷிகளுக்குத்தோழன்' என்பது பழையவுரை.

2 'பாபகர்மணா' என்று பாடம்கொள்ளப்பட்டது.

அத்ரி, 'தாமரைக்கிழங்கைத்திருடினவன் பசுவைக்காலாலுதைத்தவனும் ஸூரியனைப்பார்த்து மூத்திரம்விட்டவனும் ஓதலுக்குவிலக்கான தினங்களில் வேதம் ஓதினவனுமாகக்கடவன்' என்றுசொன்னார். வஸிஷ்டர், 'கிழங்கைத்திருடினவன் இவ்வுலகத்தில் வேதம் ஓதத்தகாதநாளில் ஓதினவனும் நாய்களை இழுத்துக்கொண்டுபோகிறவனும் ஸந்யாஸியாயிருந்தும் காமத்திலிருப்பவனும் சரணாகதிசெய்த மித்திரனைக்கொன்றவனும் தன்பெண்ணையடுத்துஜீவிப்பவனும் லோபியினிடத்தில் பணத்தைவிரும்புகிறவனும் ஆவான்' என்றுசொன்னார். கஸ்யபர், 'தாமரைக்கிழங்கைத்திருடினவன்எவனோ அவன் பிராம்மணர்களிடம் அன்புள்ளதேவதையும் ஈஸ்வரரும் தேவருக்குந்தேவரும் உலகத்திற்குஆசார்யரும் பிரகிருதியினிடத்தில் தம்சக்தியைக் கர்ப்பமாகவைத்தவரும் சாஸ்திரங்களினால்நன்மைதீமைகளை விதிப்பவரும் அவற்றின்பலன்களைச்சேர்ப்பவரும் உலகத்திற்குத்தந்தையுமான விஷ்ணுவைவிட்டு மற்றொருவரை அடைகிறவனும் எல்லாரிடத்திலும் எல்லாவற்றையும்பேசுகிறவனும் அடைக்கலம்வைத்த பொருளை எடுத்துக்கொள்கிறவனும் பொய்ச்சாக்ஷிசொல்லுகிறவனும் வீணாகமாமிசத்தைத்தின்னுகிறவனும் பயனற்றதானம்செய்பவனும் பகலில் ஸ்த்ரீயைப்புணர்கிறவனும் ஆவான்' என்றுசொன்னார். பரத்வாஜர், 'தாமரைக்கிழங்கைஎடுத்தவன் கொடியவனும் தர்மத்தைவிட்டவனும் பெண்களுக்கும் தன்குலத்தோருக்கும் பசுக்களுக்கும் தீங்குசெய்கிறவனும் பிராம்மணனைவாதத்தால்ஜயித்தவனும் உபாத்தியாயரைக் கீழேஉட்காரவைத்து ரிக்வேதம் யஜுர்வேதமுதலியவற்றை ஓதினவனும் செத்தைநெருப்பில் ஹோமம்செய்தவனும் ஆவான்' என்றுகூறினர். ஜமதக்னி, 'தாமரைக்கிழங்கையெடுத்தவன் ஜலத்தில் மலவிஸர்ஜனம்செய்தவனும் பசுவையடித்துக்கொன்றவனும் துரோகம்செய்தவனும் ருதுகாலமில்லாதபோது ஸ்த்ரீயைப் புணர்ந்தவனும் எல்லாரும்பகைக்கத்தக்கவனும் மனைவியைக்கொண்டு ஜீவிப்பவனும் தன்உறவினன் தூரதேசத்தில்இருக்கப்பெற்றவனும் பகையுள்ளவனும் தனக்குவிருந்துகொடுத்தவனைப் பதிலாக விருந்துக்கழைப்பவனும் ஆவான்' என்றுசொன்னார். கௌதமர், 'தாமரைக்கிழங்கையெடுத்தவன் ஓதினவேதங்களையும் மூன்றக்னிகளையும் விட்டுவிட்டவனும் ஸோமத்தைவிற்றவனும் ஆகக்கடவன். அவன், ஒருகிணற்றுஜலத்தையேநம்பின கிராமத்திலிருந்து சூத்திரப்பெண்ணைவைத்திருக்கும் பிராம்மணனுக்கு எந்தலோகமோ அந்தலோகத்தையடைவான்' என்றுசொன்னார். விஸ்வாமித்ரர், 'தாமரைக்

கிழங்கையெடுத்தவன் தான்உயிரோடிருந்தும் தன்தாய்தந்தையரையும் வேலைக்காரரையும் மற்றவர்காப்பாற்றும்படி விட்டவனாகக்கடவன்; அதிகப்புத்திரர்களோடு ஏழையும் அசுத்தனும் வேதத்தை வஞ்சகமாகக்கிரகித்தவனும் வீணகங்காரமுள்ளவனும் உழுகிறவனும் எல்லாரையும்பகைப்பவனும் அரசனிடம்சம்பளம்வாங்கின புரோகிதனாயிருக்கவிருப்பமுள்ளவனும் யாகம்செய்யத்தகாதவனுக்கு யாகம் செய்விப்பவனும் ஆகக்கடவன்' என்றுகூறினர். அருந்ததி, 'தாமரைக்கிழங்கையெடுத்தவள் மாமியாரைஎக்காலமும்அவமதிப்பவளும் கணவனைவெறுப்பவளும் இனியவற்றைத் தனித்து உண்பவளுமாகக் கடவள். தாமரைக்கிழங்கையெடுத்தவள் [1]சுற்றத்தாரின் வீடுகளின் நடுவிலிருந்துகொண்டும் பொழுதுபோனபிறகு மாவைக்கரைத்துக் [2]குடிப்பவளாகக்கடவள்; புருஷன் அனுபவிக்கத்தகாதவளும் சக்தியற்றபிள்ளையைப்பெற்றவளும் ஆவள்' என்றுசொன்னாள். கண்டை, 'எவள் தாமரைக்கிழங்கையெடுத்தவளோஅவள் எப்போதும் பொய் பேசுகிறவளும் பந்துக்களைவிரோதிப்பவளும் பணம்வாங்கிக்கொண்டு கன்னிகாதானம்செய்தவளும் தானே சமைத்துச்சாப்பிடுகிறவளும் அடிமைத்தனத்திலேயே வாழ்நாளைக்கழிப்பவளும் தகாதசெய்கையினால் இறப்பவளும்ஆவாள்' என்றுகூறினள். பசுஸகன், 'தாமரைக்கிழங்கை எவன்எடுத்தவனோ அவன் ஸந்ததியில்லாதவனும் பொருளில்லாதவனும் தேவதாநமஸ்காரமில்லாதவனும் அடிமையுமாகவே பிறப்பான்' என்றுசொன்னான். சுனஸ்ஸகன், 'எவன் தாமரைக்கிழங்கைத்திருடினவனோ அவன் யாகத்தில் ரித்விக்குக்களில் ஒருவனாகிய [3]அத்வர்யுஎன்பவனுக்கும் பிரம்மசாரிவிரத்தைநன்றாகநிறைவேற்றி ஸாமவேதம்ஓதினவனுக்கும் அதர்வணவேதத்தைஓதி விரதஸ்நானம்செய்தவனுக்கும் பெண்ணைக்கொடுத்தவனாவான்' என்று சொன்னான். ரிஷிகள், அவனைப்பார்த்து, 'சுனஸ்ஸகனே! நீ செய்த சபதம் ப்ராம்மணர்களுக்கு இஷ்டமானது. ஆதலால், எங்களெல்லாருடைய தாமரைக்கிழங்குகளையும் திருடினது நீதான்' என்று சொன்னார்கள். சுனஸ்ஸகன், 'குற்றமற்றவர்களே! வைக்கப்பட்ட ஆகாரத்தைப்பாராமல் அனுஷ்டானம்செய்தநீங்கள்சொன்னது உண்மை. இது பொய்யன்று. தாமரைக்கிழங்குகளையெடுத்தவன் நானே. என்னால்ஒளித்துவைக்கப்பட்ட இந்தத்தாமரைக்கிழங்குகளைப் பாருங்

1 சுற்றத்தார் அழைக்கக்கூடாத நிலைமையில் இருப்பவள்என்பது.

2 ஒருவருடைய ஆதரவுமில்லாமல்உணவுக்குக்கஷ்டப்படக்கடவள்என்பது

3 இவன் யஜுர்வேதி.

கள். மகிமைபொருந்தியஉங்களைப் பரீக்ஷிப்பதற்காக நான் இப்படி செய்தது. உங்களெல்லாரையும்காப்பாற்ற நான் வந்தேன். தபோதனர்களே! வ்ருஷாதர்ப்பியினால் அனுப்பப்பட்டு உங்களைக் கொல்லக்கருதின இந்த யாதுதானியென்னும் மிகக்கொடியபிசாசு என்னால் கொல்லப்பட்டது. ப்ராம்மணர்களே! அக்னியில்பிறந்த இந்தக் கொடியபாவியானவள் உங்களைக்கொல்லுவளென்றுதான் நான் வந்தேன். என்னை இந்திரனென்று அறியுங்கள். ஆசையைவிட்டதனால் விரும்பினவையெல்லாம்நிரம்பின அழியாதலோகங்கள் உங்களுக்குக் கிடைத்தன. ப்ராம்மணர்களே! இங்கிருந்து உடனே கிளம்புங்கள். அந்தலோகங்களையடையுங்கள்' என்றுசொன்னான். பிறகு, மகரிஷிகளெல்லாரும் ஸந்தோஷமடைந்து, 'அப்படியேயாகட்டும்' என்று இந்திரனுக்குச்சொல்லி இந்திரனோடுகூடவே சுவர்க்கத்திற்குச்சென்றனர். இவ்வாறு இம்மகாத்மாக்கள் மிகப்பசியுள்ளவராயிருந்தும் சிறந்தமனமுள்ள அரசன்முதலியோரால் பலவழிகளால்விரும்பினவற்றையெல்லாம்அளிக்கப்பட்டும் அவற்றில்ஆசைவைக்கவில்லை. அதனால், சுவர்க்கத்தையடைந்தனர். ஆதலால்,மனிதன் எந்தநிலைமைகளிலும் ஆசையைவிடவேண்டும். ராஜனே! இதுவே முக்கியமான தர்மமாதலால், ஆசையை எவனும் விடவேண்டும். இந்தநல்லசரித்திரத்தைச் சபைகளில்சொல்லும்மனிதன் பொருளையடைவான்; துயர் அடையான். பிதிருக்களும் ரிஷிகளும் தேவர்களும் அவனிடம் திருப்தியடைவர். அந்தமனிதன் மறுஜன்மத்திலும் புகழையும் அறம் பொருளையும் பெற்றவனாவான்.

---

நூற்றுநாற்பத்துமூன்றுவது அத்யாயம்.

தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(ரிஷிகள் இந்திரனுடன் தீர்த்தயாத்திரைக்குச்சென்றதும், தாமரைமலர் களவுபோனதற்காக யாவரும் சபதஞ்செய்ததுமுதலியனவையும்.)

பரதஸ்ரேஷ்டனே! மகாராஜனே! முற்காலத்தில் ரிஷிகள் தீர்த்தயாத்திரைசெய்யும்போது தாமரைப்புஷ்பம் களவுசெய்யப்பட்டதற்காக ராஜரிஷிகளும் பிரம்மரிஷிகளும் சபதம்செய்ததைப் பற்றிய ஒருபழையஇதிஹாஸம் கூறுகின்றனர். அதனை இப்போது கேள். முற்காலத்தில் பிரபாஸதீர்த்தத்தில் ரிஷிகளெல்லாரும் சேர்ந்து, 'நாம் புண்ணியதீர்த்தங்களோடுகூடியபூமிமுழுமையிலும்

ஸஞ்சரிப்போம். அதுதான் நமக்குவேண்டுவது. எல்லாரும்போவோம்' என்று ஆலோசனைசெய்தனர். ராஜனே! சுக்ரர், அங்கிரஸ், வித்வானான கவி, அகஸ்தியர், நாரதர், பர்வதர், ப்ருகு, வஸிஷ்டர், கஶ்யபர், கௌதமர், விஶ்வாமித்ரர், ஜமதக்நி, காலவர், அஷ்டகர், பரத்வாஜர், அருந்ததி, வாலகில்யர்கள்இந்தரிஷிகளும் சிபி, திலீபன், நஹுஷன், அம்பரீஷன், யயாதி, துந்துமாரன், பூரு இந்த அரசர்களும்,சிறந்தமகிமையுள்ளவனும் வ்ருத்ராஸுரனைக்கொன்றவனுமாகிய இந்திரனைமுன்னிட்டுக்கொண்டு எல்லாத்தீர்த்தங்களிலும் திரிந்து மாசிமாஸம் பூர்ணிமையில் பரிசுத்தமான தீர்த்தமுள்ள கௌசிகிநதிக்குச் சென்றனர். எல்லாத்தீர்த்தங்களிலும் பாவங்களைப்போக்கியஅவர்கள் மிகப்புண்ணியமானபிரம்மஸரஸென்னும்தீர்த்தத்திற்குச் சென்றனர். ராஜனே! அக்னிக்கொப்பான அந்தப்பிராம்மணர்கள் அந்தபிரம்மதீர்த்தத்தில் ஸ்நானம்செய்து தாமரைமலரைப் புசித்தபிறகு, அங்கே சிலர் தாமரைக்கிழங்குகளையும் மற்றும்சிலர் தாமரைத்தண்டுகளையும் தோண்டியெடுத்தனர். பிறகு, அவர்கள் தாமரைப்புஷ்பம் அபகரிக்கப்பட்டதைக் கண்டனர். அது குளத்திலிருந்து அகஸ்தியரால் பறிக்கப்பட்டது. அந்தரிஷிஶ்ரேஷ்டர்களெல்லாரையும்பார்த்து அகஸ்தியர் சொல்லானார். 'என்னுடைய அழகானதாமரைமலரையெடுத்தது யார்? உங்களைச் சந்தேகிக்கிறேன். என்தாமரைப்புஷ்பத்தைக் கொடுங்கள். நீங்கள் பத்மத்தை எடுக்கத்தகாது. காலமானது தர்மத்தின்சக்தியைக் கெடுத்துவிடுகிறதென்று கேள்விப்படுகிறேன். தர்மத்திற்கு அந்தக்கெடுதி இதோ நேர்ந்திருக்கிறது. இவ்வுலகத்தில் தர்மம்இல்லாமற்போவதற்குமுன்னமே நாம் நீடூழிகாலமிருப்பதற்குத் தேவலோகம் செல்வோம். இனி, பிராம்மணர்கள் கிராமத்துநடுவில் உரத்தஸ்வரங்களோடு சூத்திரர்களுக்கு வேதங்களைச்சொல்லிவைப்பர். அரசன் தர்மமில்லாதவியவகாரங்களைப்பார்ப்பான். நான் பரலோகத்திற்குப் போகிறேன். இனி, அரசன் பெரியவர்களைச் சிறியவர்களாகநினைப்பான். அவனை எல்லாரும் அனுஸரிப்பார். இவ்வுலகத்தில் தர்மம் தலையெடுத்திராமற்போவதற்குமுன்னமே நான் சாசுவதமானபரலோகத்திற்குப் போகிறேன். இனி, பலவீனர்களானமனிதர்கள் அதிகவன்மையுள்ள அயலாருல்பக்ஷிக்கப்படுவதைப் பார்ப்பேன். ஆதலால், அழியாதபரலோகத்திற்குப் போவேன். மானிடலோகத்தில் இப்படிப்பட்டதைப்பார்க்க எனக்கு விருப்பமில்லை' என்றார். துயரமுற்ற ரிஷிகள் அம்மகரிஷியைப்பார்த்து, 'ஓ! மகரிஷியே! உம்முடைய

தாமரைமலரை நாங்கள் திருடவில்லை. நீர் பொய்யாகப்பழியேற்ற லாகாது. நாங்கள் கொடியசபதங்கள்கூறுவோம்' என்றுசொன்னார் கள். அரசனே! இந்தத்தர்மத்தைப்பார்த்து, சபதம்செய்ய நிச்சய முள்ள அந்தஅரசர்களும் ரிஷிகளும் பிள்ளைகளோடும் பேரர்களோ டும்கூட வரிசையாகச் சபதம்செய்தனர்.

ப்ருகு, 'தாமரைமலரையெடுத்தவன் வைதவனைப்பதிலுக்கு வைதவனும் அடித்தவனைப்பதிலுக்கடித்தவனும் [1] முதுகுமாமிசத் தைத்தின்பவனுமாவான்' என்றுசொன்னார். வஸிஷ்டர், 'உமது தாமரைமலரையெடுத்தவன் உலகத்தில் வேதமோதாதவனும் நாயை இழுப்பவனும் நகரத்திற்பிச்சையெடுப்பவனுமாவான்' என்றுசொன் னார். கஶ்யபர், 'உமது தாமரைமலரையெடுத்தவன் எங்கும் எல்லா வற்றையும் விற்பவனும் அடைக்கலம் வைத்தபொருளில் ஆசைப் படுகிறவனும் பொய்ச்சாக்ஷிசொல்லுகிறவனும் ஆவான்' என்று கூறினர். கௌதமர், 'உமதுதாமரைமலரையெடுத்தவன் தனக்கு நிகரில்லாத கோணல்புத்தியுள்ளவனோடு அகங்காரத்தினால்விரோதப் பட்டுத் தன்னைக்கஷ்டப்படுத்திக்கொண்டு ஜீவிப்பான்' என்றுகூறி னார். அங்கிரஸ், 'உமதுதாமரைமலரையெடுத்தவன் அசுத்தனாகவும் வஞ்சகத்தினால்வேதமோதினவனாகவும் நாயை இழுப்பவனாகவும் பிரம் மஹத்திசெய்தவனாகவும் பிறரைமோசம்செய்தவனாகவும் இருப்பான்' என்றுசொன்னார். துந்துமாரராஜன், 'உமதுதாமரைமலரைத் திரு டினவன் சிநேகிதர்செய்தநன்றியைமறந்தவனும் சூத்திரப்பெண்ணி னிடத்தில் ஸந்ததியை உண்டுபண்ணினவனும் சிறந்தபோஜனத் தைத் தனியாகஉண்பவனும் ஆவான்' என்றுசொன்னான். புரூர வன், 'உமதுதாமரைமலரையெடுத்தவன் வைத்தியம்செய்துகொண் டும் மனைவியினாலும் மாமனாராலும் ஜீவனம்செய்துகொண்டுமிருப் பான்' என்றுகூறினன். திலீபன், 'உமதுபதுமத்தையெடுத்தவன் கிராமத்தில் கிணற்றில்ஸ்நானம்செய்துகொண்டு சூத்திரப்பெண்ணுக் குக்கணவனான பிராம்மணனுக்குரியலோகங்களை அடைவான்' என்று சொன்னான். சுக்ரர், 'உமதுகமலத்தையெடுத்தவன் வீணாக மாம் ஸத்தையுண்பவனும் பகலில்புணர்கிறவனும் அரசனுக்குஏவல்தொ ழில்செய்கிறவனும் ஆவான்' என்றுசொன்னார். ஜமதக்னி, 'உமது கமலத்தையெடுத்தவன், ஓதாதநாட்களில் ஓதினவனும் சிராத்தத்தில் சிநேகிதனைப் புசிப்பித்தவனும் சூத்திரன்செய்யும்சிராத்தத்தில் புசித்

---

1 'குதிரை, விருஷபம், ஒட்டகமுதலிய முதுகில்சுமக்கும் மிருகங்களின் இறைச்சி' என்பது பழையவுரை.

தவனுமாவான்' என்றுசொன்னர். சிபி, 'உமதுகமலத்தைஅபகரித்தவன் அக்நிஹோத்திரமில்லாமல்இறப்பவனும் யாகத்துக்குஇடையூறுசெய்தவனும் ரிஷிகளைப்பகைத்தவனுமாவான்' என்றுசொன்னன். யயாதி, 'உமதுநளினத்தையெடுத்தவன் நியமமுள்ளபார்யையினிடத்தில் ருதுவில்லாதகாலத்தில்சேர்ந்தவனும் வேதங்களைவிட்டவனுமாவான்' என்றுசொன்னன். நகுஷன், 'உமதுபங்கஜத்தை எடுத்தவன் ஒருவீட்டிலேயேயிருக்கும்[1] விருந்தினனும் தீக்ஷை செய்துகொண்டு புலன்களையடக்காதவனும் சம்பளத்திற்குவித்தையைக்கொடுப்பவனும் ஆவான்' என்றுசொன்னன். அம்பரீஷன், 'உமதுதாமரைமலரையெடுத்தவன் பெண்களிடத்திலும் சுற்றத்தாரிடத்திலும் பசுக்களிடத்திலும் தயையற்றவனும் தர்மத்தைவிட்டவனும் பிரம்மஹத்திசெய்தவனுமாவான்' என்றுசொன்னன். நாரதர், 'உமதுபத்மத்தையெடுத்தவன் வீட்டில்வித்வானும் வெளியில்வேதத்தையும் அதன்பதங்களையும் ஸ்வரந்தவருகச்சொல்லுகிறவனும் பெரியோரை அவமதிப்பவனுமாவான்' என்றுசொன்னர். நாபாகனென்னுமரசன், 'உமதுகமலத்தையெடுத்தவன் எப்போதும் பொய்சொல்லுகிறவனும் ஸாதுக்களைப்பகைப்பவனும் பணம்வாங்கிக்கொண்டு கன்னிகையைக் கொடுப்பவனுமாவான்' என்றுசொன்னன். கவி, 'உமதுகமலத்தையெடுத்தவன் காலால்பசுவை உதைத்தவனும் சூரியனுக்கெதிரில் மூத்திரம்விட்டவனும் சரணுகதனைக்கைவிட்டவனுமாவான்' என்றுசொன்னர். விஸ்வாமித்திரர், 'உமதுதாமரைமலரை எடுத்தவன் மழைக்காலமெல்லாம் அடிமையாகவேலைசெய்துகொண்டு அரசனுக்குப்புரோகிதனும் யாகம்செய்யத் தகுதியில்லாதவனுக்கு யாகம்செய்விப்பவனுமாவான்' என்றுசொன்னர். பர்வதர், 'உமது பத்மத்தையெடுத்தவன் கிராமத்தில்மணியகாரனும் கழுதைவாகனமேறிப்போகிறவனும் பிழைப்புக்காக நாய்களைக்கட்டியிழுப்பவனுமாவான்' என்றுசொன்னர். பரத்வாஜர், 'உமதுபத்மத்தையெடுத்தவனுக்குக் கொலைசெய்கிறவனிடத்திலும் பொய்யனிடத்திலுமுள்ள எல்லாப்பாவங்களும் சேர்ந்திருக்கட்டும்' என்றுசொன்னர். அஷ்டகன், 'உமது கமலத்தையெடுத்தவன் புத்தித்தேர்ச்சியில்லாமல் மனம்போனபடிநடந்தும் பாவத்தைச்செய்தும் அநியாயமாகப் பூமியையாளும் அரசனவான்' என்றுசொன்னன். காலவர், 'உமதுபத்

1 'ஸந்யாஸி'என்பது பழையவுரை.

2 'உழவர்களுக்கு விரோதமாகவும் வியாபாரிகளுக்கு அனுகூலமாகவும் மழைபெய்யாமலிருக்கச்செய்வன்' என்பது பழையவுரையின் கருத்து.

மத்தையெடுத்தவன் பாபிஷ்டர்களைவிட அதிகமாக அவமதிக்கத்தக்கவனும் தன்னைச்சேர்ந்தவர்களுக்குத் தீங்குசெய்பவனும் தானங்கொடுத்ததைச் சொல்லுகிறவனுமாவான்' என்றுசொன்னார். அருந்ததி, 'உமதுகமலத்தையெடுத்தவள் மாமியாரைத்தூஷித்தவளும் கணவனைவெறுத்தவளும் சுவையுள்ளதைத் தான்மட்டும் புசிப்பவளுமாவாள்' என்றுசொன்னாள். வாலகில்யர்கள், 'உமது தாமரைப்புஷ்பத்தைஎடுத்தவன் கிராமத்தின்வழியில் ஆகாரத்திற்காக ஒற்றைக்காலால்நிற்பான்; தர்மந்தெரிந்தும் தர்மத்தைவிட்டவனாவான்' என்று சொன்னார்கள். [1]பசுஸகன், 'உமது தாமரைமலரையெடுத்தவன்அக்கினிஹோத்திரத்தைக்கவனியாமல் ஸுகமாகத்தூங்கும் பிராம்மணனும் இந்திரியங்களையடக்காத ஸந்யாஸியுமாவான்' என்றுசொன்னான். [2] ஸுரபி (காமதேனு), 'உமதுபதுமத்தையெடுத்தவள் மயிர்க்கயிற்றினால்அணையப்பட்டும் வேறுகன்றைக்கொண்டும் வெண்கலப்பாத்திரத்தில் கறக்கப்படும்பசுவாகட்டும்' என்றுசொல்லிற்று. அரசனே! கௌரவஸ்ரேஷ்டனே! அவர்கள் இப்படிப் பலவகைகளான அனேக சபதங்கள்கூறினதனால், ஆயிரங்கண்ணனானதேவேந்திரன் சந்தோஷமடைந்து,கோபிக்கும்இயற்கையுள்ளவரும் கோபமூண்டவரும்பிராம்மணஸ்ரேஷ்டருமான அந்தஅகஸ்தியமஹரிஷியைக்கண்டு, தானே அவரிடம்வந்து பிரம்மரிஷிகள், தேவரிஷிகள், ராஜரிஷிகள் இவர்களின் நடுவில் தன்னிச்சயத்தைப்பற்றிச் சொன்னதைச் சொல்லுகிறேன்; கேள். இந்திரன், 'உமதுதாமரைப்புஷ்பத்தையெடுத்தவன் யஜுர்வேதத்தையும் ஸாமவேதத்தையும் அதர்வணவேதத்தையும் ஓதிப் பிரம்மசாரிவிரதத்தைமுடித்துஸ்நானம்செய்தபிராம்மணனுக்குக்கன்னிகாதானம் செய்தவனாவான். உமதுபதுமத்தையெடுத்தவன் எல்லா வேதங்களையும்ஓதி நல்லொழுக்கத்தோடு தர்மத்தையனுஷ்டித்துப் பிரம்மலோகம் செல்லக்கடவன்' என்றுசொன்னான். அகஸ்தியர், 'பலாஸுரனைக்கொன்றவனே! நீ ஆசீர்வாதத்தைச் சபதமாகச்சொன்னாய்; எனக்குத் தாமரைமலரைக்கொடு; இதுதான் சாசுவதமான தர்மம்' என்றுசொன்னார். இந்திரன், 'பகவானே ! இப்போது நான் ஆசையினால் தாமரைமலரையெடுக்கவில்லை; தர்மங்களைக்கேட்கும் விருப்பத்தினால் எடுத்தேன். நீர் கோபிக்கலாகாது. தர்மசாஸ்திரத்தின்ஸாரமும் தர்மத்திற்குஅணையும் குற்றமற்றதும் என்றும்அழியாததும்நீண்டஸுகத்தைத்தருவதுமாகிய இந்தரிஷிவாக்கியத்தைக் கேட்டேன். வித்வானே! பிராம்மணோத்தமரே! அந்தப்பத்மம்

1, 2. பசுஸகனும் ஸுரபியும் வந்ததாகச் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

இது. வாங்கிக்கொள்ளும். பகவானே! குற்றமற்றவரே! என்னுடையஅபராதத்தைப் பொறுக்கக்கடவீர்' என்றுசொன்னான். மிக்க கோபக்காரரும் சிறந்ததவமும் ஞானமுமுள்ளவருமான அகஸ்திய முனிவர் தேவேந்திரனால் இவ்வாறுசொல்லப்பட்ட பிறகு, கோபம் தணிந்து தாமரைமலரை வாங்கிக்கொண்டார். மறுபடியும் அம்மக ரிஷிகள் தீர்த்தயாத்திரைசெய்து புண்ணியதீர்த்தங்களில் ஸ்நானம் செய்தனர். புண்ணியகாலந்தோறும் நியமத்துடன் இந்தச்சரித்திரத்தைப்படிப்பவன் மூர்க்கனைபிள்ளையைப்பெறான்; புகழுற்றிரான். ஓர்ஆபத்தும் அவனை அணுகாது. அவன் துயரமும் மூப்பும் ஆசையும் அற்று நற்குணங்கள் பொருந்தியிருந்து இறந்தபின் ஸ்வர்க்கமடைவான். ராஜனே! ரிஷிகளாற்காப்பாற்றப்பட்ட இவ்வுபதேசத்தை ஓதுகிறவன் அழிவில்லாதபிரம்மலோகத்தையுமடைவான்'' என்றார்.

---

## நூற்றுநாற்பத்துநான்காவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(குடைபாதரக்ஷைகளின் தானத்திற்குக்காரணமான ஸூர்யனுக்கும் ஜமதக்நிக்கும் ஸம்வாதம்.)

யுதிஷ்டிரர், "பரதஶ்ரேஷ்டரே! சிராத்தகாரியங்களில் குடையும் பாதரக்ஷைகளும்கொடுக்கப்படுகின்றனவே. இது யாரால் ஆரம்பிக்கப்பட்டது? எப்படியுண்டானது? எதற்காகக்கொடுப்பது? சிராத்தகாரியத்தில் மாத்திரமன்று, விரதங்களிலும் இன்னும் அனேகங் காரியங்களிலும் புண்ணியத்தைஉத்தேசித்துக் கொடுக்கப்படுகின்றன. [1]அரசரே! இதை விரிவாகவும் தெளிவாகவும் கேட்க விரும்புகிறேன்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"ராஜனே! குடைபாதுகைகளைப்பற்றிய விவரத்தை ஊக்கத்துடன் கேள். ராஜனே! உலகத்தில் இது எவ்வகையாகப்பரவியதென்றும் எப்படிஉண்டானதென்றும் எப்படி அழியாதபுண்ணியமானதென்றும் இவற்றையெல்லாம்பற்றிமுழுதும்சொல்வேன். மனிதர்க்கதிபதியே! பூர்வகாலத்தில் ஜமதக்னிக்கும் மகாத்மாவான சூரியனுக்கும்நடந்த ஸம்வாதமாகிய இந்தஇதிகாசத்தைக் கேள். பிரபுவே! ப்ருகுவம்சத்தவரான அந்தஜமதக்னிபகவான் தாமே வில்

---

1 'ராஜந்' என்னும் பாடம் கொள்ளப்பட்டது.

வைத்துக்கொண்டு விளையாடினர்; அம்புகளை வில்லில் தொடுத்துத் தொடுத்து விடுத்தார். தர்மந்தவறுதவனே! அவரால்விடுக்கப்பட்ட ஜ்வலிக்கின்றகாந்தியுள்ள அம்புகளையெல்லாம் அவர்பார்யையான ரேணுகாதேவி அடிக்கடி எடுத்துக்கொணர்ந்து அவருக்குக் கொடுத்தாள். அவர் அப்போது அந்தநாண் அம்புகளின்சப்தத்தினுல் மகிழ்ந்து அம்புகளை எறிந்துகொண்டேயிருந்தார். அவளும் அவற்றை எடுத்துக்கொண்டுவந்துகொடுத்தாள். ராஜனே! [1]ஆனிமாஸத்தில் சூரியனுச்சியிலிருக்கும் நடுப்பகலில் அந்தப்பிராம்மணர் அம்புகளையெறிந்து ரேணுகையைநோக்கி, 'விசாலமான கண்களையுடையவளே! போ; வில்லிலிருந்துபோன இந்தஅம்புகளைக் கொண்டுவா. அழகானபுருவங்களையுடையவளே! இவற்றை மறுபடியும் பிரயோகிப்பேன்' என்றுசொன்னுர். அந்தப்பெண்ணரசி போகும்போது அவளுக்குத் தலையும்காலும்சுட்டதனுல் நடுவழியில் நிழலுக்காக மரத்தடியில் நின்றுள். கறுத்தகண்களையுடைய அந்தப்பெண்ணரசி சற்றுநேரம்நின்று பர்த்தாவின்சாபத்திற்குப்பயந்து மறுபடியும் அம்புகளையெடுத்துவரப்போனுள். புகழ்பெற்றவளாகிய அந்தரேணுகை அம்புகளையெடுத்துத் திரும்பிவரும்போது உடம்பெல்லாம்வேர்த்துக் காலால்நடக்கமுடியாதவளாய்க் கணவருக்குப்பயந்து நடுங்கிக்கொண்டு அவரிடம்வந்தாள். அப்போது, அந்தரிஷி கோபமுற்றவராய் அழகானமுகமுள்ள அவளைநோக்கி, 'ரேணுகையே! நீ ஏன் வெகுநேரம்கழித்துவந்தாய்?' என்று பலமுறை கேட்டார். ரேணுகை, 'தபோதனரே! என்தலையும் கால்களும் கொதித்துப்போயின. ஸூர்யனுடையவெப்பத்தினுல் தடுக்கப்பட்டநான் மரத்துநிழலை அடைந்தேன். பிராம்மணரே! இந்தக்காரணத்தினுல் நான் இதைத் தாமதமாகச்செய்தேன். தபோதனரே! பிரபுவே! இதைக்கேட்டு நீர் என்மேல் கோபியாமல்இருக்கக்கடவீர்' என்று மறுமொழிகூறினுள். ஜமதக்னி, 'ரேணுகையே! ஜ்வலிக்கின்றகிரணங்களால் உனக்குக்கஷ்டத்தைக்கொடுக்கும் இந்தச்சூரியனை அஸ்திரமென்னும் அக்நிசக்தியோடுகூடிய என்பாணங்களினுல் இப்போதே தள்ளிவிடுவேன்' என்று சொல்லிச் சிறந்தவில்லைவளைத்து அநேகஅம்புகளை எடுத்துச் சூரியனைநோக்கி அவன்போகும்திக்கில் நின்றுர். குந்திபுத்திரனே! அடிப்பதற்குஆயத்தமாய்நிற்கும் அவரைநோக்கிச் சூரி

1 கேட்டைநக்ஷத்திரமும் மூலநக்ஷத்திரமும் பௌர்ணிமையில்கூடுவதனுல் ஆனிமாதம் ஜ்யேஷ்டாமூலமென்பது; 'ஜ்யேஷ்டாமூலே' என்பது மூலம்; 'வைகாசி' என்பது பழையஉரை.

யன் அந்தணவடிவாக அவரெதிரேவந்து, 'ஐயா! உமக்குச் சூரியன் என்னதீங்குசெய்கிறான்? ஆகாயத்திலிருந்து தன்கிரணங்களினால் ஆங்காங்குள்ளஸாரத்தையிழுத்து அதை மழைக்காலத்தில் ஜலமாகப்பொழிகிறவன் சூரியன். பிராம்மணரே! மனிதர்களுக்குச் சுகத்தைச்செய்யும்அன்னமானது அதனாலுண்டாகிறது. அன்னமே உயிரென்று வேதங்களிலும் சொல்லப்படுகிறதன்றோ? அந்தணரே! (சூரியன்) தன்கிரணங்களுடன்கூட மேகங்களில்மறைந்து இவ்வேழு தீவுகளையும் மழையினால் நனைக்கிறான். ஸமர்த்தரே! ஓஷதிகள் கொடிகள் இவற்றின்புஷ்பங்களிலிருந்தும் இலைகளிலிருந்தும்உண்டாகும் உணவுகளனைத்தும் மழையினாலுண்டாக்கப்பட்டிருக்கின்றன. பார்க்கவரே! ஜாதகர்மம், சௌளம், உபநயனம், [1]கோதானவிரதம், விவாகம், யாகச்சிறப்புக்கள், தர்மங்கள், தானங்கள், திரவியத்தினால்உண்டாகும்ஜனச்சேர்க்கைகள் இவையெல்லாம் அன்னத்தைப்பற்றி நடக்கின்றனவென்பது உமக்குத் தெரியுமன்றோ? மனத்திற்கினியவை எவையோ அவை எவ்வளவுகருவிகளினால் முடிக்கத்தக்கவையோ அவையெல்லாம் அன்னத்தினாலுண்டாகின்றவையென்று உமக்குத்தெரிந்ததையே சொல்லுகிறேன். பிராம்மணரே! நான்சொன்னதெல்லாம் உமக்குத்தெரியுமே. ப்ரம்மரிஷியே! உம்மைவேண்டுகிறேன். சூரியனை என் அடிக்கிறீர்?' என்று கேட்டான்" என்றார்.

---

## நூற்றுநாற்பத்தைந்தாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(ஸூர்யனுக்கும் ஜமதக்னிக்கும் ஸம்வாதத் தொடர்ச்சி.)

யுதிஷ்டிரர், "சூரியன் இவ்வாறுவேண்டும்போது சிறந்தமகிமையுள்ள ஜமதக்னிமுனிவர் என்னசெய்யநிச்சயித்தார்?" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"கௌரவனே! சூரியன் அவ்வாறுகேட்டும் அக்னிக்கொப்பான மகிமையுள்ள ஜமதக்னிமுனிவர் கோபந்தீராமலேயிருந்தார். அரசனே! பிராம்மணரூபியானசூரியன், அதன்பிறகு கைகூப்பி அவரை நமஸ்கரித்து, 'ஓ! பிரம்மரிஷியே! எப்போதும் ஓடிக்கொண்டிருக்கும்ஸூர்யன் அசையும்இலக்கன்றோ? எப்போதும் அசைந்தூடிக்

1 விவாகத்துக்குமுன் செய்துகொள்ளும் ஒருக்ஷௌரவிசேஷம்.

கொண்டிருக்கும்சூரியனை நீர் அடிப்பது எப்படி?' என்று இன்சொல் லினுற்கேட்டான். ஜமதக்னி, 'நீ நிற்பதையும் ஓடுவதையும் ஞானக் கண்ணினுல் நான்அறிவேன். இப்போது நான் அவசியம் உனக்கு வினயத்தை உண்டுபண்ணவேண்டும். திவாகரனே! நடுப்பகலில் அரைநிமிஷம் நீ நிற்கிருய். சூரியனே! அப்போது உன்னைப் பிளப் பேன். எனக்கு இதில் சந்தேகமில்லை' என்றுசொன்னுர். சூரி யன், 'வில்லாளிகளிற்சிறந்தவரே! பிரம்மரிஷியே! நீர் என்னைப் பிள ப்பதில் ஸந்தேகமில்லை. பகவானே! அபகாரம்செய்தநான் இப் போது சரணுகதிசெய்திருக்கிறேனென்றறியும்' என்றுசொன்னுன். அதன்பிறகு, ஜமதக்னிபகவான் நகைத்துக்கொண்டு அவனைப்பார் த்து, 'ஸூர்யனே! நீ சரணுகதிசெய்ததனுல் பயப்படவேண்டிய தில்லை. பிராம்மணர்களிடத்திலுள்ள மனநேர்மையையும் பூமியின் கண்ணுள்ள அசையாமையையும் சந்திரனதுகுளிர்ச்சியையும் கடலி னதுஆழத்தையும் அக்கியின்ஜ்வாலையையும் மேருமலையின்ஒளியை யும் குபேரனதுசெல்வத்தையும்தாண்டுபவன் எவனே அவன்தான் சரணுகதனை அடிப்பான். சரணுகதனைஅடிப்பவன் குருவின்படுக்கை யைச்சேருகிறவனும் பிரம்மஹத்திசெய்தவனும்கள்ளைக்குடித்தவனு மாவான். அன்பனே! இந்தப்பிழைக்கு ஸமாதானத்தை நீயே சிந் திக்கக்கடவாய். உன்கிரணங்களினுல் சுடப்பட்டவழியானது எப் படி ஸுகமாகச்செல்லக்கூடியதாகும்?' என்றுசொன்னுர். அந்தஜம தக்னி இவ்வாறுசொல்லிப் பேசாமலிருந்தவுடன், சூரியன் அவருக் குக் குடையையும் பாதரக்ஷைகளையும் கொடுத்து, 'மஹரிஷியே! என் கிரணங்களைத்தடுத்துத் தலையைக்காப்பாற்றுவதாகிய குடையையும் கால்களைக்காப்பாற்றுபவையாகிய தோல்பாதரக்ஷைகளையும் வாங்கிக் கொள்ளும். இதுமுதலாக இவ்வுலகத்தில் எல்லாவிரதங்களிலும் இவை சிறந்தவையாகவும் அழியாதசிறந்தபயனுள்ளவையாகவும் நடக்கும்' என்றுசொன்னுன். பாரதனே! இப்படி குடையும் பாத ரக்ஷையும் சூரியனுல்உண்டாக்கப்பட்டவை. இந்தத்தானம் புண்ணிய மென்று மூவுலகங்களிலும்பிரஸித்திபெற்றது. ஆதலால், நீயும் பிராம் மணர்களுக்குக் குடையையும் பாதரக்ஷைகளையும் கொடுப்பது உத்த மம். உனக்கு மிகப்பெரியபுண்ணியமுண்டாகுமென்பதில் எனக்கு ஸந்தேகமில்லை. பரதஸ்ரேஷ்டனே! நூறுகம்பிகளுள்ள வெள்ளைக் குடையைப் பிராம்மணனுக்கு அளிப்பவன் மறுஜன்மத்தில் ஸுக மாகவிளங்குவான். பரதஸ்ரேஷ்டனே! அவன் பிராம்மணர்களாலும் அப்ஸரஸுகளாலும் தேவர்களாலும் எப்போதும் கொண்டாடப்

பட்டு இந்திரலோகத்தில் வஸிப்பான். சிறந்தகைகளையுடையவனே! பிரம்மசரியவிரதத்தை உறுதியுடன்முடித்த ஸ்நாதகனான பிராம்மண னுக்கு எண்ணெய்போட்டு நயமானபாதரக்ஷைகளைக்கொடுப்பவன் தேவர்களாலும் கொண்டாடப்பட்டலோகங்களை அடைவான். பார தனே! அவன் இறந்தபிறகு, கோலோகத்தில் ஆனந்தமுற்றிருப்பான். பரதஸ்ரேஷ்டனே! குடைபாதரக்ஷைகளைக் கொடுப்பதின்பலனைப் பற்றி இப்போது உனக்கு முழுதும் நான் சொன்னேன்" என்றார்.

## நூற்றுநாற்பத்தாறுவது அத்யாயம்.

## தா ன த ர் ம ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(பராசரின்உபதேசம்; சூத்ரதர்மம் - சௌசமுதலியவை.)

யுதிஷ்டிரர், "பரதஸ்ரேஷ்டரே! இவ்வுலகத்தில் சூத்திரர் களுக்கு எப்போதும் சுசுரூஷையே விதிக்கப்பட்டுள்ளது. எத்தனை விதமானசுசுரூஷைகள்கூறப்பட்டுள்ளன? அவை என்னகாரணங்கள் பற்றியவை? சுசுரூஷையினால் அடையும் உலகங்கள் எவை? பரதஸ் ரேஷ்டரே! சூத்திரர்களின் தர்மத்தின்இலக்கணம் கூறுவீராக" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"இந்தவிஷயத்தில் பிரம்மஜ்ஞானியான பராசரர் சூத்திரர்களை அனுக்கிரகிப்பதற்காகச்சொன்னதாகியஒருபழையஇதிஹாஸத்தைக் கூறுகின்றனர். பிராயமுதிர்ந்தவரான பராசரர் நான்குவர்ணங்களை யும் அனுக்கிரகிப்பதற்காகச் சௌசமும் ஆசாரமும்அடங்கினதும் குற்றமற்றதும் பரிசுத்தமுமான தர்மத்தைச் சொல்லியிருக்கிறார். சாஸ்திரார்த்தம்தெரிந்தவராகிய அவர் தர்மத்தைஉபதேசிப்பதும் பயன்பெறுவதுமாகிய சாஸ்திரமுழுமையையும் கிரமமாகவும் சரியாக வும் சிஷ்யர்களுக்குக் கற்பித்தார். 'சூத்திரன் அகாரியங்களில் லஜ்ஜை யோடு இந்திரியங்களையடக்கிப் பரிசுத்தனும் சஞ்சலமில்லாதவனும் தேகத்தளர்ச்சியும் புத்தித்தளர்ச்சியுமில்லாதவனும் அடங்கி மறு மொழிசொல்லுகிறவனும் ஆசையும்கொடுமையுமில்லாதவனும் உள் ளும்புறமும்ஒத்திருப்பவனும் பிரம்மஜ்ஞானியும் நல்லொழுக்கத்தி லேயே ஊக்கமுள்ளவனும் எல்லாப்பிராணிகளின் நன்மையையுமே கருதுகிறவனுமாயிருக்கவேண்டும்; காமம் குரோதம் லோபம் மானம் மயக்கம் மதம்ஆகிய தன்தேகத்தில் எப்போதுமுள்ளபகைவர்களை ஜயிக்கவேண்டும். சாஸ்திரத்தினால் மனவுறுதியைச்செய்துகொண்டு

அகங்காரத்தைவிட்டுத் தன்திறமைக்கும் தேகவலிமைக்குந்தக்கபடி மூன்றுவருணத்தாருக்கும் அவரவர் அனுமதியின்மேல் தொண்டு செய்துகொண்டிருக்கவேண்டும்; அறிவுள்ளவனும் மனத்தையும் மற்றஇந்திரியங்களையும் அடக்கினவனும் பணிவுள்ளவனுமாகிச் செய்கை, மனம், வாக்கு, பார்வை இந்நான்கையும் அடக்கியிருக்க வேண்டும்; மூன்றுவர்ணத்தாரின் சேஷத்தினால் ஆகாரஞ்செய்து கொண்டு ராக்ஷஸர்களையும் யக்ஷர்களையும் பகைக்கவேண்டும்; வண்டு மதுவைச்சேர்ப்பதுபோல மூன்றுவர்ணத்தாரிடமிருந்தும் தர்மத்தைச் சேர்க்கவேண்டும். சூத்திரன் வேதத்திற்காணப்பட்டகருமத்தோடு தவம்செய்வனாயின் அவனுக்கு இம்மையில்துயரமும்மறுமையில் கெட்டகதியும் உண்டாகும். சூத்திரனிடத்திலிருக்குந்தவம் பாவத்திறகும் அபகீர்த்திக்கும் காரணமாம். நியாயந்தப்பித் தவம் செய்ததின்பலனை மிலேச்சர்களில்பிறந்து அநுபவிப்பான். மாறாக நடக்கும் சூத்திரன் புண்ணியத்துக்குரியவனல்லன். வழிதப்பி ப்ரவ்ருத்திப்பவர்கள் நாலுவர்ணங்களுக்கும் விலக்கானஜாதிகளில் தேகத்தையுமெடுப்பது கண்ணுக்கு நேராகக்காணப்படுகிறது. அதனாலேதான், சகர், சீனர், காம்போஜர், [1]பாரதர், சபரர், பப்லவர், துஷாரர், யவனர், தார்வர், தரதர், உஜ்ஜிஹானர், வேணர், கங்கணர், சிங்களர், மத்ரகர், கிஷ்கிந்தகர், புளிந்தர், கஹ்வர், ஆந்திரர், நீரகர், கந்திகர், த்ரமிடர், பர்ப்பரர், சூசுகர், கிராதர், பார்வதேயர், கோலர், சோளர், காஷகர், ஆருநர், தோஹர்முதலானமிலேச்ச ஜாதியர்கள் வேஷமும் ஆசாரமும் மாறுபட்டுக் குரூரபுத்தியுள்ளவராகக் காணப்படுகின்றனர். அவர்கள் வழிதப்பித் தர்மஞ்செய்துதான் வேறுஜாதியைச்சார்ந்தனர். வழிதப்பிச்செய்த தவத்திற்கு இது தெரிந்தபயன். நற்கருமமாயினும் தீக்கருமமாயினும் செய்யப்பட்டது அழிவதில்லை. இவர்கள் தர்மத்திற்குஆசைப்பட்டு வீண் கஷ்டமடைந்து இவ்வுலகத்திலும் தமக்கேலாதகாரியமாகிய தவத்தினால் ஈட்டப்பட்டபொருளைப்பெற்றுப் பாஷண்டர்களைப் பூஜிப்பார். வேந்தனே! இவ்வாறு, நான்குவர்ணங்களுக்கும் நான்குஆஸ்ரமங்களுக்கும் மாறாநடக்கும்மதியீனர் மிலேச்சர்களாகிறார். அந்தணருக்கு ஓதுவதே தனம். அரசர்களுக்குச்சக்தியே தனம். வைசியருக்கு வர்த்தகமும் பயிர்த்தொழிலும் தனம். சூத்திரர்க்குப் பணிவிடைதான் தனம். அந்தத்தர்மங்கெடுவதனால் நரகத்திற்காளாகின்றனர். அதன்பிறகு, இவர்கள் தயையும் தர்மமுமில்லாதமிலேச்சர்

1 இவர் ஒருவகைச்சாதியார்.

களாகப் பிறக்கின்றனர். அதன்பிறகு, நரகமும் பின்னிட்டு விலங்குப்பிறவியும் அவர்களுக்கு நிச்சயமானவையே. வர்ணங்களுக்கும் ஆஸ்ரமங்களுக்கும் முன்னமே ஏற்படுத்தப்பட்ட நல்வழியைப்பிடித்துத் தப்புவழிகளெல்லாவற்றையும்விட்டுத் தமக்கு விதிக்கப்பட்ட தர்மத்தைக்கைப்பற்றி எல்லாப்பிராணிகளின்மேலும் தயைவைத்துக் கோபத்தைவென்று சிரத்தையுடன் சாஸ்திரத்திறைல் அறியப்பட்டமுறைப்படி தேவர்களையும் பிராம்மணர்களையும் பூஜிப்பவர் எவரோ அவருக்குள்ளசாஸ்திரவிதியை இருக்கிறபடி வரிசையாகச் சொல்வேன். (சிஷ்யனை) கிரகிக்கும் முறையையும் அவன் பணிவிடைசெய்யும்வகையனைத்தையும் அவனுக்கு உபநயனம்செய்வதையும் பலவகைமந்திரங்களையும் சிஷ்யனுக்குச்செய்யும்பரீக்ஷையையும் முக்கியமாய்ச் சௌசத்தையும் சௌசத்திற்குரிய எல்லாப்பொருள்களையும் சாஸ்திரப்படி முதலிலிருந்து தெளிவாகவும் நிச்சயமாகவும் சொல்வேன். மறைசௌசமுதலிய அனேகசௌசங்கள் உண்மைப்பொருளையறிந்த ரிஷிகளால் காணப்பட்டிருக்கின்றன. அவர்களுள் சூத்திரன் ஸந்யாஸிகளுக்கு நான்சொல்வதும் மற்றுமாயுள்ள பணிவிடைகளைச் செய்யக்கடவன். நல்லபுத்திநேர்ச்சியுள்ளவரும் தர்மமொன்றையேபற்றினவரும் செம்மையானசாஸ்திரஞானம்நிரம்பினவரும் எல்லாருக்கும் நன்மையையே கருதுகிறவருமான ஸந்யாஸிகள்செலலும்வழியில் பரிசுத்தமாகச்செய்யப்பட்டதும் மனத்திற்கினிய பூண்டுகள் முளைத்ததும் ஜனங்களில்லாததும் மறைவுள்ளதுமான இடத்தைக்கண்டறிந்து மனத்தையும்இந்திரியங்களையும்அடக்கிக்கொண்டு ஜலமுள்ளபாத்திரத்தையும் பரிசோதித்தெடுக்கப்பட்டமண்ணையும் அதில்வைத்துவிட்டுப் பூமியைஉற்றுப்பார்த்துப் பேசாமல் அவ்விடத்தில்மூத்திரம்விடுதற்குஉட்காரவேண்டும்;(வைக்கோல் முதலியவற்றால்) மூடப்பட்டபூமியின்மேல் தலையைமூடிக்கொண்டு பகலில் வடக்குமுகமாகவும் இரவில் தெற்குமுகமாகவும் இருக்கவேண்டும்; சௌசம்முடிவதற்குமுன் கொஞ்சமும் பேசக்கூடாது. சௌசத்தைமுடித்து ஆசமனம்செய்து போகும்போது பேசலாம்; சௌசத்திற்காகஉட்கார்ந்தபோது மண்ணுடன் பாத்திரத்தை முன்வைத்துக்கொண்டு குடத்தையெடுத்து விலாவிற்கும் தொடைக்கும்இடையில் வைத்துக்கொள்ளவேண்டும்; கலங்குபோகாமல் மெதுவாகக் கவனிப்புடனும் மனஉறுதியோடும் சௌசத்தைச் செய்யவேண்டும். சாஸ்திரவிதியைமுன்னிட்டுப் பரிசுத்தமானஜலத்தைக் கையினாலெடுத்துக்கொண்டு ஜலத்துளிகள் தெறியாமலும்

தொடையிற்படாமலும் அபானத்தில் கிரமமாக மூன்றுமண்போட வேண்டும். அப்படியே இரண்டுகைகளுக்கும் மூன்றுமண்போட்ட பிறகுதான் ப்ராம்மணன் கையினால் நையைத்தொடலாம். அபானத்தில் ஒன்பதுமண்போடவேண்டுமென்பது சிலபெரியோரின்கட்டளை. மண் போடப்படுமானால் அந்தஇடத்தை உடனே சுத்தமாகச் செய்யும். ஆதலால், உள்ளங்கைகளில் அடிக்கடி மண்போடவேண்டும். பின்னிட்டுப் பிருஷ்டங்களைக் கையினால் தொடாமலிருக்கும்படியும் உடையில் ஈரம்பட்டுக்கசங்காமலிருக்கும்படியும் அபானத்தைச் சுத்தமாக்குவதற்கு ஊக்கத்துடன் பலமுறை கவனித்துத் துடைக்கவேண்டும். பிறகு, இடத்தைவிட்டெழுந்து ஒவ்வொரு காலுக்கும் சௌசம் செய்யவேண்டும். இடமுழங்கையிலும் இடமுன்கையிலும் இட்உள்ளங்கையிலும் புறங்கையிலும் மும்மூன்று மண்களாக மொத்தம் பன்னிரண்டுமண்கள் போடவேண்டும். அப்படியே [1]இரண்டுகைகளின் உட்புறங்களிலும் நாலுமண்போடவேண்டும். பிறகு, இரண்டுகைகளுக்கும் தனித்தனியே எவ்வேழுமண்கள்போடவேண்டும். அதன்பிறகு, வேறுமிருத்தையெடுத்து இரண்டுகைகளுக்கும் மற்றொருசுத்தம்செய்யவேண்டும். இரண்டுகைகளுக்கும் இவ்வாறு இம்மகாசௌசம் விதிக்கப்படுகிறது. இதற்கு மாறுகச் செய்யலாகாது. இந்தச்சாஸ்திரவிதி சாசுவதமாயுள்ளது. அதன்பிறகு, மூத்திரசௌசம் சொல்லப்படுகிறது. இதற்குமாறுகச்செய்பவன் பிராயச்சித்தத்திற்குரியவனாகிறான். வஸ்திரத்தில் மலம்பட்டவனுக்கு இந்தச்சௌசம் இரட்டிப்பாகச் சொல்லப்படுகிறது. கால்களையும் தொடைகளையும் கைகளையும் ஸந்தேகம்வராமல் சுத்தம்செய்யவேண்டும். ஜாக்ரதையாகச்செய்யாதவனுக்குச் சந்தேகமுண்டாகும். அவன் எந்தஎந்தவகைகளினால் சந்தேகம் நிவிருத்தியாகுமோ அந்தஅந்தவகைகளைச் செய்யவேண்டும். மழைக்காலத்தில் சேறுள்ளதும் நெருக்கமுள்ளதுமானவீட்டிலிருக்கிறவன் கைகளுக்குமூன்று கால்களுக்குஆறு அபானத்திற்குமூன்றுமண்கள் போடலாம். மூத்திரசௌசத்திலும் கால்களுக்கும் கைகளுக்கும் சௌசம் முன்போலச் செய்யவேண்டும். மூத்திரசௌசத்தில் முதலிற்கைகளையும் பிறகுகால்களையும் சோதிக்கவேண்டும். நைஷ்டிக பிரம்மசாரிக்கு மூத்திரசௌசத்தில் மகாசௌசம் விதிக்கப்படுகிறது. மிருத்தோடு உப்பும் உழமண்ணும்போட்டு எப்போதும் ஆடையைச் சுத்தம்செய்யவேண்டும். மலம்படுவதையும் அதன்

1. இரண்டுகைகளையும் சேர்த்து நாலுமுறை தேய்க்கவேண்டும்.

நாற்றத்தையும் நிவ்ருத்திசெய்யும்படி சாஸ்திரம் சொல்லுகிறது. இருகைகளாலும் மிருத்தை மூன்றுதரம் எடுத்துப்போட்டு ஸ்நான வஸ்திரத்தைச்சுத்தம்செய்து ஜாக்ரதையுடன் அதை அலசியெடுக்க வேண்டும். ஆபத்தில் நாலு, மூன்று, இரண்டு, அல்லது ஒருமண் போடலாம். காலத்தையும் இடத்தையும் அனுசரித்துத்தான் சௌசம் பெருகுவதும் குறுகுவதும். எக்காலத்திலும் சோம்பாம லும் பக்கம்பாராமலும் அவஸரப்படாமலும் மேற்சொன்னவிதிப்படி கைகால்களைக்கழுவி ஊக்கத்துடன் சௌசம் செய்யவேண்டும். கால் அலம்புவதற்குமுன்னமே கையை மணிக்கட்டிலிருந்தும் கீழும் மேலும் அலம்பினபிறகுதான் கைபடலாம். மனத்திற்கினியவை யாகவும் ஓசையில்லாமலுமிருக்கிறஜலங்களை மூன்றுமுறை ஓசை யில்லாமல் ஆசமனம்செய்யவேண்டும். தெரிந்தவன் இரண்டுவிசை வாயைத்துடைத்துக் கண்மூக்குமுதலானதுவாரங்களைத் தொட வேண்டும். முதல்ஆசமனத்தினால் ரிக்வேதத்தையும் இரண்டாவது ஆசமனத்தினால் யஜுர்வேதத்தையும் மூன்றாவது ஆசமனத்தினால் ஸாமவேதத்தையும் மனிதன் திருப்திசெய்விக்கிறான். முதல்தரம் வாயைத்துடைப்பதனால் அதர்வணவேதமும் இரண்டாவதுதரம் துடைப்பதனால் இதிஹாஸபுராணதர்மசாஸ்திரங்களும் தேவதைக ளும் திருப்தியடைகின்றனர். கையைக் கண்ணில்வைப்பதனால் சூரிய னையும் மூக்கில்வைப்பதனால் வாயுவையும் காதில்வைப்பதனால் திசை களையும் சிரசில்முடிப்பதனால் பிரம்மதேவரையும் திருப்தியடைவிக் கிறான். ஜலத்தைத் தலைமேல் புரோக்ஷிப்பதனால் ஆகாயமும் காலில் புரோக்ஷிப்பதினால் விஷ்ணுவும் திருப்தியடைகின்றனர். முழங்கால் களுக்குள்கைவைத்துக்கொண்டு கிழக்குமுகமாயாவது வடக்குமுக மாயாவது ஆசமனம்செய்யவேண்டும். போஜனமுதலியயெல்லாவற் றிலும் நித்யமாயுள்ளவிதி இதுதான். சோற்றுப்பருக்கை பல்லிடுக் கில்ஒட்டியிருந்தால் அதனைத்துப்பித் திரும்பவும் ஆசமனம்செய்ய வேண்டும்; சுத்தத்திற்காகப் புரோக்ஷணமும் சொல்லப்பட்டுள்ளது. இந்தச்சௌசவிதியைச் சொன்னேன். சூத்திரன் வீட்டைவிட்டு வெளியில்போகும்போதும் இந்தவிதிதான் சாஸ்திரத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. தனக்கு நன்மையைவிரும்புகிறவனும் புகழை விரும்புகிறவனுமான சூத்திரன் எப்போதும்சௌசத்தைவிடாமலும் மனஊக்கத்தோடும் ஸந்யாஸிகளிடம் இருக்கவேண்டும்.

## நூற்றிருபத்தோன்பதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(பாராசரரின் உபதேசத் தொடர்ச்சி; சூத்ரன் ஸந்யாஸிகளுக்குப் பணிசெய்யுமுறைமுதலியவை.)

அரசர்களுக்கு விடாமுயற்சியே யாகமென்றும் வைசியர்களுக்குப் பொருளீட்டுவதில் உற்சாகமே யாகமென்றும் சூத்ரர்களுக்குப் பணிவிடையே யாகமென்றும் அந்தணர்களுக்கு ஜபமே யாகமென்றும் கூறப்பட்டுள்ளன. சூத்திரர் பணிவிடையினால் ஜீவிப்பவர். வைசியர் கடையினால் ஜீவிப்பவர். அரசர்கள் பகைவரையடக்குவதனால் ஜீவிப்பவர்கள். பிராம்மணர் வேதம்ஓதவினால் ஜீவிப்பவர். பிராம்மணன் தவத்தினாலும் அரசன் காப்பதுமுதலியவற்றினாலும் வைசியன் விருந்தோம்புவதனாலும் சூத்ரன் பணிவிடையினாலும் புகழ்பெறுகின்றனர். சூத்ரன் மனத்தைக்கட்டி மூன்றுவருணத்தாருக்கும் நித்தியமாகப் பணிவிடைசெய்யவேண்டும்; ஸந்யாஸிகளுக்கு மிகுதியாகச் செய்யவேண்டும். தர்மார்த்தகாமங்களை அனுஷ்டிக்கத் திறமையில்லாதவர்கள் தம்சக்திக்கும் புத்திக்கும் தர்மத்திற்கும் கேள்விக்கும்ஏற்றபடி ஸந்யாஸிகளைப் பணியவேண்டும். ஸந்யாஸிகளின்ஆஸ்ரமத்தில் பணிவிடையை நன்றாகச் செய்யவேண்டும். நான்குஆஸ்ரமங்களிலும் ஸந்யாஸாஸ்ரமம் முதன்மையானதென்று சான்றோர் சாஸ்திரங்களினால் நிச்சயித்துக்கூறுகின்றனர். பெரியயோர் வேதங்களிலும் தர்மசாஸ்திரங்களிலும்சொன்னவிதிப்படி எதை உபதேசிக்கின்றனரோ அதையே ஓதும்சக்தியில்லாதவன் அங்கீகரிக்கவேண்டும். அதுவே தர்மமென்பதுநிச்சயம். இதற்கு மாறாகச்செய்யும்மனிதன் நன்மையையடையான். ஆதலால், சூத்திரன் தன்நன்மைக்காக எப்போதும் துறவிகளுக்குப் பணிவிடை செய்யவேண்டும். எந்தநன்மையை இந்தஜன்மத்தில் செய்கிறானோ அதன்பலனை இறந்தபின் அனுபவிக்கிறான். எதைச் செய்யவேண்டுமென்றுநினைக்கிறானோ அந்தக்கார்யத்தை வெறுப்பின்றிச் செய்யவேண்டும்;வெறுத்துச்செய்யும்கார்யத்தின்பலனை அடைவதுகடினம். இன்சொற்சொல்லுகிறவனாகவும் கோபத்தைஜயித்தவனாகவும் சோம்பலையும்பகையையும் விட்டவனாகவும் பொறுமையும்நல்லொழுக்கமும்நிரம்பினவனாகவும் சத்தியத்தையும்தர்மத்தையும் விடாதவனாகவும் ஆபத்திலிருப்பவன்போலக் கவலையுடன் ஸந்யாஸிகளின்ஆஸ்ர

மத்தில் பணிவிடைசெய்யவேண்டும். 'இதுதான் என்னுடைய முக்கியமானதர்மம். இதனால், கடக்கக்கூடாதபயங்கரமான இந்த ஸம்ஸாரக்கடலைத் தாண்டுவேன். ஸந்தேகமில்லை. தேகத்தைவிட்ட பிறகு, பயமின்றிச் சிறந்தகதியையடைவேன். எனக்கு இதற்கு மேலானதர்மம் ஒன்றுமில்லை. இதுவே என்றும் அழியாததர்மம்' என்றுமனத்தில்நினைத்து உறுதியானஎண்ணத்துடன் மனச்சோர்வில்லாமல் பணிவிடையென்னும்சிறந்ததர்மத்தை எக்காலத்திலும் சூத்திரன் செய்யவேண்டும். இவ்வுலகத்தில் ஐம்புலன்களையும் மனத்தையும்அடக்கிக் காரியாகாரியங்களையறிந்து சுசுரூஷையை விடாமற்செய்துகொண்டும் மிச்சத்தைப்புசித்துக்கொண்டும் இருக்க வேண்டும். எல்லாக்காரியங்களிலும் செய்யவேண்டினவற்றை முடிந்தனவாகவே காண்பிக்கவேண்டும். ஸந்யாஸிக்குஅன்பனாகும்படி காரியத்தை முடிக்கவேண்டும். ஸந்யாஸிக்குத்தகாதகாரியத்தைச் செய்யலாகாது. ஸந்யாஸாஶ்ரமத்திற்கு விரோதமாயிராததும் தர்மம்ஒன்றுமட்டுமேயுள்ளதுமான காரியத்தைத் தன்நன்மையைக்கருதுகிறவன் சங்கிக்காமல் எப்போதும் செய்யவேண்டும். மனத்தினாலும் செய்கையினாலும் சொல்லினாலும் எப்போதும் ஸந்யாஸிகளை ஸந்தோஷப்படுத்தவேண்டும். நித்யமாக அவர்களையனுஸரித்து அவர்கள்நிற்கும்போதுநிற்கவும் செல்லும்போதுபின்செல்லவும் உட்காரும்போதுஉட்காரவும்வேண்டும். தனதுநற்செய்கையினால் அன்புபெற்றபிறகு, ஏவப்படாமலே அவர்கள்பாதங்களை எப்போதும் பிடிக்கவும் உடம்புதேய்ப்பதுமுதலியவற்றைச்செய்யவும்வேண்டும். ஒவ்வொருநாளும் ஸூர்யோதயமாவதற்குமுன் தன்கடமைகளைச் செய்து அதன்பிறகு விதிப்படிஸ்நானம்செய்து ஜலபாத்திரத்தை வைத்துவிட்டு ஸந்யாஸிகளின்இருப்பிடம்சென்று முறைப்படி வந்தனம்செய்து ஐம்புலன்களையுமடக்கிக்கொண்டு அங்குள்ளபிராம்மணர்முதலானபெரியோரை நமஸ்காரம்செய்தபிறகு ஆசார்யர்முதலானகிருகஸ்தர்களுக்கு வந்தனம்செய்யவேண்டும். பணிவிடையாகியதமது தர்மத்தைச்செய்பவர்களை வணங்கி ஸுகப்பிரஶ்னம்செய்யவேண்டும். தன்செய்கையைச்செய்து தனக்குமுன் தேர்ந்திருப்பவனுக்கு நமஸ்காரம்செய்யவேண்டும்; மற்றவர்களுக்கு ஒருபோதும்செய்யலாகாது.ஒவ்வொருநாளும் அவர்களுக்குச் சொல்லாமலேயெழுந்து ஆசாரந்தவறாமல்சென்று ஆஶ்ரமம்விளக்குவதையும் மெழுகுவதையும்செய்து முறைப்படி புஷ்பங்களையெடுத்துப் பூஜைக்குக் கொடுக்க வேண்டும். உடனே, ஆஶ்ரமத்திலிருந்துவெளியிற்போய் ஆஶ்ரமத்தி

விருப்பவர்களுடைய வேதாத்யயனத்திற்குத் தடையில்லாமலிருக்கும்படி மற்றக்கர்மங்களைச் செய்யவேண்டும். அத்தியயனத்திற்கிடையூறுசெய்பவன் பாவத்தையடைவான். அவர்கள் ஸந்தோஷமடையும்படி தன்மனத்தை ஊக்கத்துடன் செலுத்தவேண்டும். 'நான் மூன்றுவர்ணங்களுக்கும் பரிசாரகனாகத் தர்மசாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறேன். தற்செயலாகக்கிடைத்ததைக்கொண்டு ஜீவிப்பவரும் பற்றற்றவரும் ஞானமொன்றையேபார்ப்பவரும் ஆஶ்ரமங்களில் பெரியோர்களுமான ஸந்யாஸிகள்விஷயத்தில் கேட்கவேண்டுமா? நான் மனத்தையடக்கி அவர்களுக்கு விசேஷமாகப் பணிவிடைசெய்யவேண்டும். அவர்களின் அனுக்கிரகத்தினாலும்தவத்தினாலும் நான் வேண்டும் சிறந்தகதியையடைவேன்' என்றுமனத்தில்நிச்சயம்செய்துகொண்டு தனக்குஏற்பட்டவிதிப்படி ஸந்யாஸிக்குப் பணிவிடை செய்வனாயின் அவன் உயர்ந்தகதியையடைவான்.

---

## நூற்றுநாற்பத்தேட்டாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(பராசரரின்உபதேசத்தொடர்ச்சி ; சூத்ரன் ஸந்யாஸிகளுக்குப் பணிவிடை செய்யுமுறைமுதலியவை - தொடர்ச்சி.)

சூத்ரன் தான்வேண்டினகதியைப் பணிவிடையினால் அடைவதுபோலத் தானம் உபவாஸமுதலியவற்றினால் அடைவதில்லை. மனிதன் எவ்விதமானஜலத்தினால் சுத்திசெய்கிறானோ அந்தஜலத்தின்மகிமையினால் அதைப்போன்றசுத்தமும் உண்டாகிறது. அம்மாதிரியாகவே சூத்திரன் எப்படிப்பட்டமனிதனைப் பணிகிறானோ அவன்சேர்க்கையினால் அப்படிப்பட்டவனாகச் சீக்கிரத்திலாகிறான். சந்தேகமில்லை. ஆதலால், மனத்தையடக்கிக்கொண்டு ஜலம்கொண்டுவருவது ஸ்நானம்செய்விப்பது உடம்புதேய்ப்பதுமுதலியசுஶ்ரூஷைகளை ஸந்யாஸிகளுக்கு ஜாக்ரதையாகச்செய்யவேண்டும். வழிநடந்து கஷ்டப்பட்டபோதும் நோயுண்டானபோதும் ஸகாயம்யாருமில்லாதபோதும் ஜாக்ரதையோடு அவர்களுக்கு நித்தியமாகச்சுஶ்ரூஷை செய்யவேண்டும். தர்ப்பங்களையும் கிருஷ்ணாஜினங்களையும் பிக்ஷைப் பாத்திரத்தையும் பரிசோதிக்கவேண்டும். அவர்கள்விருப்பத்தை அனுஸரித்து எல்லாக்காரியங்களையும் முடிக்கவேண்டும். பிராயச்சித்தம்வேண்டாமலிருக்கும்படி எல்லாவற்றையும் நடத்தவேண்டும். நோய்கொண்ட ஸந்யாஸிகளுக்கு வஸ்திரத்தையலம்புவது

ஔஷதம்கொண்டுவருவதுமுதலான எல்லாஅவசியகாரியங்களையும் செய்யவேண்டும். தன்வேலைக்குச் சுகத்திற்காக மற்றொருவன் செய்துவைத்த அரைத்த அரைப்பையும் ஸ்நானப்பொடியையும் காஷாயத்தையும்மற்றக்கருவிகளையும் கொண்டுவரலாகாது. பிக்ஷைக் குப்போகவேண்டும். சிறந்தஞானமுள்ள வைத்தியர்களிடம் போக வேண்டும். பிறகு, மருந்துவாங்குவதற்குப் பொருள்சம்பாதிக்க வேண்டும். எவன் மனத்திலன்புவைத்துக்கொடுப்பானோ அவனிடத் தில் மருந்துவாங்கவேண்டும்; சிரத்தையின்றிக் கொடுக்கப்பட்ட ஔஷதங்களை ஸந்யாஸிகள் உட்கொள்ளலாகாது. சிரத்தையுடன் கொடுக்கப்பட்டதும் சிரத்தையுடன் வாங்கப்பட்டதுமானமருந்தை உட்கொள்வதினால் புண்ணியமுமுண்டாகும்; வியாதியும் விலகும். யதிகளுக்கு அவனுடையசரீரம்விழுமளவும் இவ்வாறாகவே சாஸ் திரப்படிபணிவிடைசெய்யவேண்டும். இவ்விதமான தர்மத்தைவிட்டு அவர்களுக்குப் பணிவிடைசெய்யலாகாது. சீதோஷ்ணம் ஸுக துக்கமுதலியஇரட்டைகள் இயற்கையினால் வந்துகொண்டும் போய்க் கொண்டுமிருக்கின்றன. எல்லாப்பொருள்களும் இயற்கையாகவே யிருக்கின்றன; இல்லாமலும் போகின்றன. முக்குணங்களாலாகிய பொருள்கள் கடலின் அலைகளைப்போன்றவையென்றறியத்தக்கவை. உண்மையைஆராய்ந்துஅறியவல்லபுத்திக்கூர்மையுள்ளவன் இவ்வாறு நடப்பானானால் அவனிடத்தில் தாமரையிலையில் தண்ணீரொட்டா தது போலப் பாவம் ஒட்டாமலிருக்கும்.

---

### நூற்றுநாற்பத்தோன்பதாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(பராசரரின்உபதேசத்தொடர்ச்சி; மற்றுமுள்ளசூத்ர தர்மமுதலியவை.)

இவ்வாறு சோம்பாமல் ஸந்யாஸிகள்ஸந்தோஷமடையும்படி எல்லாப்பணிவிடைகளாலும் உபசரிக்கமுயலவேண்டும். ஸந்யாஸியி னிடத்தில் அபசாரப்படலாகாது. அவனை அவமதிக்கலாகாது; மறுத்துச்சொல்லலாகாது. கோபித்தால் நல்லவார்த்தை சொல்ல வேண்டும். நல்லதையே பேசவேண்டும். கோபித்தஸந்யாஸியிடம் ஒன்றும்பேசாமல் மௌனமாக ஸந்தோஷத்துடன் காரியத்தைச் செய்யவேண்டும். ஸந்யாஸிக்காகப் பிறர்சொத்துக்களை வாங்கலா காது. கேளாமல் ஒன்றையும் எடுத்துக்கொள்ளலாகாது. கிடைத் தாலும் கிடைக்காமலிருந்தாலும் ஜீவித்துக்கொண்டு ஸந்தோஷமாக

இருக்கவேண்டும். கோபிக்கிறவனிடத்திலும் கல்வியைப்பற்றிப் பகைசெய்கிறவனிடத்திலும் யாசிக்கலாகாது. தாவரங்களும் ஜங்கமங்களுமாகிய எல்லாப்பிராணிகளிடத்தும் தயைசெய்யவேண்டும். தன்னிடத்திற்போல அயலாரிடத்திலும் ஸமத்ருஷ்டியை வைக்க வேண்டும். எல்லாப்பிராணிகளும் தானாகவும் தான் மற்றெல்லாப் பிராணிகளுமாகவும் பார்த்துத்திரிபவன் பிரம்மப்பிராப்திக்கு உரியவனாவான். ஹிம்ஸையுள்ளதானாலும் ஹிம்ஸையில்லாததானாலும் தனக்காக ஒன்றையும் செய்துகொள்ளலாகாது. எந்தக்கார்யத்தில் மற்றொருவன் நியதமாயிருப்பானோ அந்தக்கார்யத்தில் இடையூறு செய்யலாகாது. இவ்வாறு பிறரையடுத்திருப்பவன் குற்றங்களினின்று விடுபடுவான். புத்திக்குறைவானவன் தன்னிடத்திலுள்ள குற்றத்தில் தானே ஸம்பந்தப்படுகிறான். கர்ப்பப்பையிற்பிறந்தவை, முட்டைகளிற்பிறந்தவை, பூமியிலிருந்துமுளைத்தவை, வெப்பத்தினாலுண்டானவைஆகிய இந்நான்குபிராணிகளும் கொல்லப்படக்கூடாதவையென்றே அறிஞரால் கூறப்பட்டுள்ளன. தெரிந்தவர்களுக்கு மனத்தெளிவிற்காகத்தான் பிராயச்சித்தம் விதிக்கப்படுகிறது. ஹிம்ஸையும் மற்றக்குற்றமும் எப்படிச்செய்யப்பட்டனவோ அததற்குத் தக்கபடியே பாவத்தையுண்டாக்கும். குருவின்உபதேசப்படி அவர் கட்டளையைநடத்தும் சிஷ்யனுக்கு மற்ற என்னதீங்குசெய்தாலும் அது அப்படியே பாவத்தையுண்டாக்கும். லோபமும் அதனாலுண்டாகும்ஹிம்ஸையும் நன்மைஉண்டாக்குவதில்லை. இந்தச்சாஸ்திரஞானம் உலகத்திற்குக்காரணமானபிரம்மதேவரால உண்டாக்கப்பட்டது. புத்திசாலியானசூத்திரன் இதை இவ்வாறறிந்தாலும் காரியம் செய்தவர்களின்பலனையடைவான். பணிவிடைசெய்பவன்அடைவது சொல்லவும்வேண்டுமா? சூத்திரன்எவனும் பதிதனாவதும்இல்லை. அவன் பிராயச்சித்தமுதலியஸம்ஸ்காரங்களுக்கு உரியவனுமல்லன். அவனுக்கு ஒருதர்மத்தில் விதியும் மற்றொருதர்மத்தில் நிஷேதமுமில்லை. எல்லாவருணங்களுக்கும்நன்மைசெய்வதற்காக மனுவினால் தர்மம் கூறப்பட்டது. வேலைசெய்யும்சூத்திரனுக்குப் பெண்சம்பந்தமான அபவாதம் வந்திருக்குமாயின் அவனுக்கு ஒருவருஷம் மேற்கூரைமறைவில்லாதஇடத்திற்படுப்பது பிராயச்சித்தமாக விதிக்கப்பட்டிருக்கிறது. அதனால், அவனுக்குப் பாவம் தீர்ந்துவிடும். அதன்பிறகு, திரும்பவும் வேலைக்குவரலாம். தன்வர்ணத்துப்பெண் விஷயத்தில் இது பிராயச்சித்தம். தாழ்ந்தஜாதிப்பெண்விஷயத்தில் பாதிபோதும். வைசியப்பெண்விஷயத்தில் மூன்றுவருஷங்களும்

க்ஷத்ரியப்பெண்விஷயத்தில் ஆறுவருஷங்களும் பிராம்மணப்பெண்ணுடன்சேர்ந்தால் பன்னிரண்டுவருஷங்களும் இந்தப்பிராயச்சித்தம் விதிக்கப்பட்டது. செத்தைநெருப்பில் அவனைஎரித்தால் அந்த நிமிஷத்திலேயே சுத்தனாகிவிடுவான்; குறியைச்சேதிப்பதனாலும் உடனே சுத்தியடைவான். எலும்பில்லாத பிராணியைஉயிர்போக்கினால் ஒருநாளுபவாஸமிருந்து பன்னிரண்டு பிராணாயாமங்கள்செய்து மூன்றுதரம்ஜலத்தில் ஸ்நானம்செய்தபிறகு அந்தப்பாவத்திலிருந்து விடுபடுவான். எலும்புள்ளபிராணிவிஷயத்தில் இந்தப்பிராயச்சித்தம் இரட்டிக்கப்படுகிறது. இந்தப்பிராயச்சித்தத்தினாலேயே மரமுதலிய தாவரங்களுக்குத் தேகத்தினாலும் கால்களாலும் கைகளாலும் செய்யப்படும்தீங்கிலிருந்தும் விடப்படுவான். குற்றம்செய்தவனை அழிப்பவனுக்கும் எல்லாவர்ணங்களிலும்சேர்ந்திருப்பவனுக்கும் இந்தப்பிராயச்சித்தத்தையே எண்மடங்காக அறியவேண்டும். தேகத்தினாற்செய்தபாவத்திற்கு நாலுபாகமும் வாக்கினாற்செய்ததற்கு இரண்டுபாகமும் மனத்தினாற்செய்ததற்கு ஒருபாகமும் பிராயச்சித்தம் கூறப்பட்டது. ஆதலால், இவற்றையெல்லாமறிந்து பாவத்தைச் செய்யலாகாது. எல்லாப்பிராணிகளின்நன்மைக்காகவும் நற்காரியங்களையே செய்யவேண்டும். இவ்வாறு, மனவுறுதியோடு சிறந்தஸாதுக்களிடம் அவர்களையே கதியாகநினைத்து அவர்களின் அனுஷ்டானங்களையனுஸரித்து அவர்களிடம்அன்புவைத்து அவர்களைவிடாமல்பணிவிடைசெய்யவேண்டும். மரணத்திறகும்உயிர்வாழ்க்கைக்கும்ஆசைப்படாமல் வேலைக்காரன் வேதனத்தை எதிர்பார்ப்பதுபோலக் காலத்தையே எதிர்பார்த்திருக்கவேண்டும். அடக்கமும் மனஒடுக்கமுமுள்ளவனாக இப்படிநடப்பவன் புண்ணியபாவங்களின்நிவ்ருத்தியை விரைவில் அடைவான்.

---

## நூற்றைம்பதாவது அத்யாயம்.

### தா ன த ர் ம ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(பராசரரின்உபதேசத்தொடர்ச்சி ; மரணத்தைமுன்னரே அறியும் குறிகளும், சூத்ரன்வரவரமேற்பிறப்படைவது முதலியவையும்.)

பணிவிடையில் ஊக்கமுடையவன் துர்நிமித்தங்களையும் மூன்றுவருஷங்களிலும் இரண்டுவருஷங்களிலும் ஒருவருஷத்திலும் ஆறுமாதத்திலும் ஒருமாதத்திலும் ஏழுதினங்களிலும்உண்டாகும் அவற்றின்பிரயோஜனங்களெல்லாவற்றையும்அவற்றின் அடையாளங்

களையும் கண்டறியவேண்டும். பொன்மயமானபுருஷன் தெற்குநோக்கித் தனக்குவடபுறத்தில் நிற்கக்கண்டால் மூன்றுவருஷங்களில் மரணம்வரும். பரிசுத்தமானமண்டலத்தோடுகூடிய ஆதித்யன் கிரணங்களில்லாமலிருக்கக் காண்பவனுக்கு இரண்டுவருஷங்களில் மரணத்தைச் சொல்லவேண்டும். துவாரங்களுள்ளதாகத் தன்னிழலை நிலவில்காணும் தெரிந்தவன் ஒருவருஷத்தில் மரணத்தையறிந்துகொள்ளவேண்டும். புத்திசாலியானவன் தன்னிழலைத் தலையற்றதாகக்காணும்போது ஆறுமாதங்களில் தன்மரணத்தையறியவேண்டும். காதுகளைத் தன்கைகளினால்பொத்திக்கொண்டு சத்தத்தைக்கேளாமலிருந்தால் தெரிந்தவன் ஒருமாதத்தில் தன்மரணத்தையறியவேண்டும். மனிதன் தேவாலயத்திலிருக்கும்பொழுது பிணநாற்றத்தையாவது மற்றஎந்தத்துர்க்கந்தத்தையாவது உணர்ந்தால் ஏழுதினங்களில் இறப்பான். காதும்மூக்கும்தளர்வதும் பற்களிலும்பார்வையிலும் ஒளிமழுங்கிப்போவதும் மனத்தில் முன்பின்தெரியாமல்போவதும் உடனே மரணத்தையறிவிக்கும். இப்படிப்பட்ட இந்தத்துர்நிமித்தங்களில்ஏதேனும் ஒன்றைக்காண்பானாயின் அந்தத்துர்நிமித்தத்திற்குக் குறிப்பிட்டகாலம்வரையில் எதிர்பார்க்கவேண்டாம். குறித்தகாலம் ஸமீபமாயிருக்கும்போது பரிசுத்தமான மணற்குன்றுக்குச்சென்று லோகநாதரான பகவானைநினைத்து அவ்விடத்தில் உயிரைவிடவேண்டும். அவன், உடனே, வேறுதேகமெடுத்துக் கந்தர்வலோகத்தை அடைவான். அவ்விடத்தில் மிகப்பெரியமகிமையுடன் இருநூறுகோடிவருஷங்கள் வஸிப்பான். சித்திரஸேனன்முதலான கந்தர்வர்களால் பூஜிக்கப்பெற்று அவர்களுடன்கூட நீலக்கல்நிறமும் வைடூரியக்கல்நிறமுமுள்ள விமானத்தினால் ஆகாயத்தைப்பிரகாசிக்கச்செய்துகொண்டு மனத்தில் ஊக்கமுள்ளவனாய் அப்ஸரஸுகளின்கூட்டங்களுடன் விரும்பினஸுகங்களையனுபவித்து ஸஞ்சரித்துக்கொண்டு ஆங்காங்கு பூஜிக்கப்படுவான்; தேவதைக்கொப்பானதேகத்தையடைந்து தேவக்கூட்டங்களோடுகூடவே எப்போதும் மகிழ்ந்திருப்பான். களங்கமற்றஒளியோடுகூடியஅவன் புண்ணியம்குறைந்தபோது ஒருநொடியில் விழுந்தவுடன் கோதனங்களும் திரவியமும் மிகுதியான வைசியனுடையகுலத்தில்ஜனித்து அங்கும் தேவபூஜையினால்பரிசுத்தனாகி [1]ஜாகதமென்னும்சந்தஸுள்ளமந்திரத்தினால் உபநயனம்செய்யப்பெற்றுப் பட்டுடுத்து இருபிறப்பாளனாகி வேதங்களையும் அவற்றின்அர்த்தங்களையும்ஓதிக் குருசுஶ்ரூஷைசெய்து கோபத்

---

1 ஜாகதமென்பது பன்னிரண்டு அக்ஷரங்களுள்ளமந்திரம்.

தை வென்றவனும் சிறந்ததவமுள்ளவனுமான பிரம்மசாரியாகிறான். வேதம் ஓதினபின் சாஸ்திரப்படி குருதக்ஷிணைகொடுத்து மனைவியை மணந்து உத்தமமானகிருகஸ்தாஶ்ரமதர்மத்தை அனுஷ்டிக்கிறான். தானங்களையும் மிகுதியானதக்ஷிணைகளோடுகூடின யாகங்களையும் செய்வான். சாஸ்திரப்பிரகாரம் அக்நிஹோத்ரத்தையும் ஹோமங்களையும்செய்துகொண்டும் மெல்ல நடந்துகொண்டும் புலன்களை யடக்கியும் தினந்தோறும் தர்மத்தைச்சேர்ப்பான். காலம்முடிந்தபோது அவன் மரணமடைந்து யாகபாத்திரங்களைத்தலையணையாக வைத்து அக்நிஹோத்ராக்னியினால் தகனஸம்ஸ்காரம் செய்யப்பெற்றுத் தேகத்தைவிட்டு ஸப்தமருத்துக்களோடு சேர்வான். மருத்துக்களுடன்சேர்ந்து அவர்களுக்குச் சமமானமகிமையுள்ளவனாகிச் சிறந்தஒளிபெற்றுத் தூயஆடையுடுத்துச் செம்பொன்களையணிந்து கந்தர்வர்கள் அப்ஸரஸுகளின்கூட்டங்களுடன் இளஞ்சூரியனுக் கொப்பானநிறமுள்ளதாகவிளங்கும்விமானத்தினால் அவ்வுலகங்களில் ஸுகமாக ஸஞ்சரிப்பான். விரும்பினஸுகங்களையடைந்துகொண்டு கந்தர்வலோகத்திலிருந்ததற்கு இரண்டத்தனைகாலம் அவ்வுலகத்தில் வஸிப்பான். அந்தக்காலமானபின், அவ்விடத்திலிருந்துவிழுந்து பூலோகத்திற்குத் திரும்பிவருவான். திவ்யஸுகங்களைவிட்டுவந்த அவன் தனக்கின்பமானவிஷயங்களில் திருப்தியடையாமையினால் யானைகளும் குதிரைகளும் தேர்களும்நிரம்பின ராஜவம்சத்திற்பிறப்பான். ராஜலக்ஷ்மியையடைந்து [1]குபேரனைப்போல ஐசுவரியமுற்றிருப்பான். அந்தராஜகுலத்திற்குரிய ஜாதகர்மமுதலாகச் சௌள உபநயனஸம்ஸ்காரங்களையும் விதிப்படிசெய்யப்பெற்று [2]த்ரைஷ்டுபமென்னும்சந்தஸுள்ளமந்திரத்தால இருபிறப்பாளனாகச் செய்யப்படுவான். எல்லாவேதங்களையும் முக்கியமாகத் தனுர்வேதத்தையும் ஓதிக் குருவினிடம்அனுமதிபெற்றுத் திரும்பிவந்தபிறகு தன்தந்தையினால் இளவரசுபட்டாபிஷேகம் செய்யப்பெறுவான். பிறகு, விவாகம்செய்துகொண்டு தர்மத்துடன் ராஜ்யத்தையடைந்து ஐசுவரியமுள்ளவனாகி ஆறிலொருபாகம்வரிவாங்கிக்கொண்டு குடிகளைச் செம்மையாகப் பரிபாலனம்செய்வான். விலைபெற்றதக்ஷிணைகளுள்ள அநேக யாகங்களை நன்றாகச்செய்து இந்திரனுக்கொப்பான கீர்த்தியையும் ஐசுவரியத்தையும் அடைந்துபூமியையெல்லாம் ராஜ்யமாகஆளுவான்.

---

1 'தர்மபதி' என்பது, 'தநபதி' என்று பாடம்கொள்ளப்பட்டது. உள்ளபாடத்தின்படி, 'தர்மதேவதைபோல' என்றுகொள்ளவேண்டும்.

2 ஓர் அடி பதினோர் அக்ஷரங்களுள்ளமந்திரம்.

எக்காலமும் தன்தர்மத்தைவிடாமல் புத்திரர்களையும் பௌத்திரர்களையும் நிரம்பப்பெற்றபின் காலத்தின்வசத்திலகப்பட்டு யுத்தத்தில் உயிரைவிடுவான். அப்போது, தேவராஜனுடையஇருப்பிடமாகிய இந்திரலோகத்தையடைந்து தேவலோகத்தாராலும் புண்ணியங்களைச் செய்து தேவத்தன்மைபெற்றராஜரிஷிகளாலும் பூஜிக்கப்பெற்றுத் தேவேந்திரன்போலவே ஸுகமாக ஸஞ்சரிப்பான். தேவலோகத்திலுள்ளவந்திகளினால் துதிக்கப்பெற்றுப் பலவகைவாத்தியங்களோடு காலமறிவிக்கப்படுவான். சிறந்தபொன்னினால்பிரகாசிப்பதும் சிறந்த அப்ஸரஸுகள்நிரம்பினதும் தேவர்களாலும்கந்தர்வர்களாலும் அநுஸரிக்கப்பட்டதுமான விமானத்திலேறி இந்திராணியுடன்இந்திரன் ஸஞ்சரிப்பதுபோலவே ஸுகமாக ஸஞ்சரிப்பான். அவன் அவ்வுலகத்தில் அறுபதுகோடிவருஷகாலம் பெரும்செல்வத்துடன் எல்லா லோகங்களுக்கும் போய்வந்துகொண்டும் எல்லாரையும் ஸந்தோஷிக்கச்செய்துகொண்டும் மகிழ்ந்திருப்பான். [1] அதன்பிறகு, புண்ணியம் குறைந்ததனால் அங்கிருந்து பூமியில்விடப்பட்டு வேதங்களிலும் வேதாங்கங்களிலும் கரைகண்டபிராம்மணகுலத்தில் ஜனிப்பான்.

## நூற்றைம்பத்தோராவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(பராசரின்உபதேசத்தொடர்ச்சி; பிராம்மணப்பிறப்பையடைந்தவன் ஸ்வர்க்க மோக்ஷங்களுக்குப்போவது முதலியன.)

பிறகு, சாஸ்திரப்படி ஸம்ஸ்காரங்கள்செய்யப்பெற்று வேதத்திற்குரியவனாகிறான். அவனுக்கு ப்ராம்மணர்களால் தங்களுக்குரியபடி சௌளமும் உபநயனமும் செய்யப்படுகின்றன. அவன் எட்டாவதுபிராயத்தில் நியமத்தோடு உபநயனத்தாலும் பிரம்மசாரி விரதத்தினாலும் சாஸ்திரோக்தமான கிரியைகளாலும் ப்ராம்மணனாகச் செய்யப்படுகிறான். அவன் [2]காயத்ரமென்னும் சந்தஸுள்ளமந்திரத்தினால் உபநயன ஸம்ஸ்காரம்செய்யப்பெற்று வ்ரதமனுஷ்டித்துப் பரிசுத்தாத்மாவாகி நியமம்தவறாமல் வேதாத்யயனம்செய்து புத்திக்கூர்மையினால் வேதங்களையும் வேதாங்கங்களையும் சீக்கிரத்தில் கிரகிக்கிறான். அந்தத்தர்மாத்மாவானவன் ஸமாவர்த்தனமென்னும்பிரம்ம

1 ஒருசொல்விடப்பட்டது. 2 ஓரடி ஆறு அக்ஷரங்களுள்ளமந்திரம்.

சாரிவிரதத்தைமுடித்து விவாகம்செய்துகொண்டு யாகம்செய்வித்தலை யும் ஓதுவித்தலையும் செய்து நல்லகர்மங்களிலிருந்து அக்னிஹோத்தி ரத்தையும் தேவதைகள் அதிதிகளின்பூஜையையும் நித்யமும்செய்து கொண்டு பலவகையாகங்களையும் ஜபயஜ்ஞங்களையும் செய்வான். நியாயமாகக்கிடைக்கும் தனத்தைக்கருதி நல்லொழுக்கமுள்ளவனு கத் தவமேதனமாகக்கொண்டு எல்லாப்பிராணிகளுக்கும் அனுகூல னுகவும் எல்லாச்சாஸ்திரங்களிலும் ஸமர்த்தனுகவும் தன்மனைவியி னிடம்மனத்திருப்தியடைந்து ருதுகாலத்தில்மட்டும் சேருகிறவனுகை வும் ஜிதேந்திரியனுகவும் பிறரைத்தூஷிக்காதவனுகவும் எப்போதும் ஸத்யத்தையே நோன்பாகக்கொண்டவனுகவும் இருப்பான். அவன் பிராயமுதிர்ந்தபின் மரணமடைந்து சாஸ்திரப்படி அக்னிஹோத்ராக்னி யினுல் ஸரியாக ஸம்ஸ்காரம்செய்யப்பெற்றவனுய்த் தேகத்தைவிட்ட பின் சந்திரலோகத்தையடைவான். சந்தேகமில்லை. அங்கே ஸோம ப்ரபர், அக்னிஷ்வாத்தர், பாஸ்வரர், பர்ஹிஷதர், ஆங்கிரஸர், விஸ்வே தேவர் என்னும் தேவர்களாலும் பிரம்மரிஷிகளாலும் ஒப்பற்ற தேவரிஷிகளாலும் அப்ஸரஸுகளின் கூட்டங்களாலும் ஸாத்யர்களா லும் ஸித்தர்களாலும் எப்போதும் பூஜிக்கப்பெற்று ஸந்தோஷமா யிருக்கிறுன். ஸூர்யனைப்போன்றதும் மனோவேகமுள்ளதும் தேவர் களும் கந்தர்வர்களும்நிரம்பியிருப்பதும் பொன்மயமுமான தேவவிமா னத்திலேறுகிறுன். விமானத்திலிருக்குமவனை அழகியஉருவமுள்ள வர்களும் மனத்திற்குஇனியவர்களும் பசும்பொன்னணிந்தவர்களு மான சந்திரகன்னிகைகள் மகிழ்ச்சியுடன் மகிழ்விக்கின்றனர்.அவன் அவ்வுலகத்தில் தேவர்களோடும் ரிஷிகளோடும் சந்தோஷமடைந்து ஒளிவிளங்குகின்றவனுகி, எல்லாலோகங்களிலும் மனோவேகமாகத் திரிந்துகொண்டு மகிழ்ந்திருக்கிறுன். உயர்ந்தஸ்தானத்திலிருப்ப வரும் அளவற்றபெருமையுள்ளவரும் உலகங்களை ஆக்குகிறவரும் அழிக்கிறவருமான பிரம்மதேவர்இருக்கும் காமஜவிஎன்னும்ஸபைக் கும் நித்யமாகப்போய் எல்லாலோகங்களுக்கும் ஈஸ்வரரும் ரிஷியு மாகியபிரம்மதேவரை நமஸ்கரித்துவருகிறுன். உலகத்தில் சிருஷ்டி பிரளயமுதலியமாறுதல்களெல்லாம் உண்டாகின்றஇடமாகிய அந்தப் பிரம்மலோகத்தில் அந்தப்பிராம்மணுேத்தமன் இரண்டாயிரம்கோடி வருஷகாலம் வஸிக்கிறுன். அந்தக்காலமானபிறகு, அவ்விடத்திலிரு ந்து திரும்புகிறுன். பிறகு, ஜாதிகர்மங்களெல்லாவற்றையும் சிருஷ் டியில்ஜனனமரணங்களையும்கண்டு இவையெல்லாம்அநித்யமென்றறி ந்து எங்கேபோனுல் திரும்புவதில்லையோ, எங்கேபோனுல் இறப்பும்

பிறப்புமில்லையோ நித்யமும் மாருததும் துயரமற்றதும் எப்போதும் புனர்ஜன்மமும் பயமுமற்றதுமான அந்த மேற்பதத்தை அடைய விரும்புகிருன். 'பலமுறைபிறந்து கர்ப்பவாஸகஷ்டங்களும் ரோகங்களும் பலவகைத் தேககஷ்டங்களும் சீதோஷ்ணம் ஸுகதுக்கமுதலிய இரட்டைகள்பலவும் பொருமையினாலும் பகையினாலும்செய்யப்பட்ட துன்பங்கள்பலவும் அந்தஅந்த ஜன்மங்களிலும் அநுபவிக்கப்பட்டன. ஓரிடத்திலும் மாருதநிலையில்லை' என்று நிச்சயம்செய்து வீடென்னும்சிறையிலிருந்துவிடுபட்டுப் பார்யையென்னும்வலையையும் ஸந்ததியின்உற்பத்தியையும்அறுத்து யதிதர்மத்தையடைந்து குருபணிவிடையைவிடாமலிருந்து சீக்கிரத்தில் மோக்ஷத்தையடைவான். அந்தப்ராம்மணன், யோகசாஸ்திரம் ஸாங்கியசாஸ்திரம் இவற்றின் உண்மைப்பொருளையறிந்து விதிப்படிநடந்து குருவினால்விடைகொடுக்கப்பெற்றுப் புண்ணியதீர்த்தங்களுக்குச்சென்று நதிகளின் மணல்களிலும் குடியில்லாதவீடுகளிலும் காட்டுமரங்களிலும் குகைகளிலும் தேவாலயத்தோட்டங்களிலும் தங்கிக் காடுகளில் நித்யமாகத் திரிந்து ஓரிரவு இரண்டுஇரவுகளுக்குமேல் எங்கும்தங்கமாட்டான். ஸந்யாஸிப்ராம்மணன் உதிர்ந்தசருகுகளைப்புசித்துக்கொண்டாவது காட்டிலேயே திரிவான்; தன்ஸுகத்திற்காக ஒன்றும்செய்யான்; யாத்திரைமட்டும் தொடர்ச்சியாகச்செய்வான்; நியாயப்படி கிடைத்ததைஉண்பான்; தன்விருப்பத்தின்படி ஒன்றையும்புசியான்; நுகத்தடியளவுதூரம் கண்பார்வையுள்ளவனுயிருப்பான்; ஒருகுரோசத்திற்குமேல் வழிநடவான்; அவனுக்கு மானமும் அவமானமும் ஒன்றே; ஓட்டாஞ்சில்லிக்கும் கல்லுக்கும் பொன்னுக்கும் வேற்றுமையில்லை. எல்லாப்பிராணிகளுக்கும் அபயத்தைச்செய்வான்; அபயத்தைத் (தன்கடமைக்காகக் கொடுப்பவன்போல) தக்ஷிணையாகக் கொடுப்பான்; ஸுகதுக்கங்களற்றவன்; நமஸ்காரத்தைவேண்டாதவன்; ஸுகத்திற்குஸாதனங்களைச் சேர்க்காதவன்; 'நான், எனது' என்னும் எண்ணமில்லாதவன்; எந்தப்பிராணிகளையும் அடுத்திராதவன்; ஸாராஸாரவிவேகமுள்ளவன்; ஸத்யத்தை எப்போதும் கைவிடாதவன்; மேலுலகத்திலும் கீழுலகத்திலும் இவ்வுலகத்திலும் ஒன்றையும் விரும்பாதவன். இவ்வாறு சாஸ்திரப்படி யதிதர்மத்தில் ஸந்தோஷமாயிருந்து காலம்சென்றபிறகு, பழுத்தபழத்தைப்போலத் தன்தேகத்தைவிட்டுவிட்டு நித்தியமும் குற்றமற்றதும் ஆதியந்தமில்லாததும் குணங்களாலழகியதும் உயிரில்லாததும் சொல்லுக்கெட்டாததும் வித்தில்லாததும் இந்திரியங்களில்லாததும் வியாபித்திருப்

பதும் வெல்லவும்அழிக்கவும்உடைக்கவும் கூடாததும் அறிவுக்கெட்டாததும் நிர்க்குணமானதும் பிரகிருதிக்காதாரமானதும் விகாரங்கள் ஒன்றுமில்லாததும் இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலமுமாகிய முக்காலங்களுக்கும்அதிபதியும் எவற்றாலும்அறியப்படாததும் புருஷனுமாகியபரப்பிரம்மத்தைத்தன்னிலமாகஅடைந்துமுடிவற்றவனாவான்.

---

## நூற்றைம்பத்திரண்டாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(பாராசாரின் உபதேசத்தொடர்ச்சி ; மோக்ஷத்திற்கு உரியதர்மங்கள் முதலியன.)

இவ்வாறு, பாவங்களையெரித்து உலகத்திலிருக்கும் அந்தஸங்யாஸியானவன் பக்ஷி கூட்டைவிடுவதுபோலத் தேகத்தைவிட்டு மோக்ஷத்தையடைவான். சூத்திரன் இந்தஸன்மார்க்கத்தைப் படிப்பதனாலேயே தான் நல்லகதியையடைவான். இடத்திலிருந்துஇடம் போய்(மேலும்மேலும்நிலைமையுயர்ந்து) முடிவில்பரப்பிரம்மத்தினது அழிவில்லாதஸ்தானத்தையடைவான். சோர்வில்லாமல்மண்வெட்டியினால்வெட்டுகிறவன் கட்டாந்தரையிலும் ஜலத்தையடைவதுபோல அவன் தன்தர்மத்தினால் விரும்பின ஸ்தானத்தையடைகிறான். அந்தக்கதியானது ஆதியும்அந்தமுமில்லாததென்று யாவராலும் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால், சூத்திரர்கள் தெரிந்தவர்களான ரிஷிகள் சொன்னபடி வெறுப்பின்றிச் சிரத்தையுடன்கூடியவரையில் தினந்தோறும் நடக்கவேண்டும். ஒருவன் நல்லதோ கெட்டதோ எதைச் செய்கிறானோ அதைத்தான் அனுபவிக்கிறான். தான்செய்யாதகருமம் அனுபவிக்கப்படுவதுமில்லை ; செய்தது பலனில்லாமல் கெடுவதுமில்லை. ஆதலால், நல்லநடக்கையுள்ளவன் அதன்நல்லபலனையேஅடைகிறான். கெட்டசெய்கையுள்ளவன் அதன்படி கெட்டபலனையடைகிறான். தன்னுடையநன்மையைவிரும்புகிறவன் நற்செய்கைகளையே எடுத்துக்கொள்ளவேண்டும். யதிகளுக்குப் பணிவிடைசெய்வதைத் தவிர வேறெவற்றினாலும் சூத்திரர்கள் மேன்மையை அடையமுடியாதென்னும்நிச்சயம் பெரியோர்களால் அறிவிக்கப்படுகின்றது. ஆதலால், சாஸ்திரங்களையறிந்து மிக்க ஜிதேந்திரியனாயிருத்தல்வேண்டும். சாஸ்திரஞானத்தினாலேதான் துயரமற்றபதத்தைப் பெறலாம். அந்தப் பதம்தான் சிறந்ததென்றறியப்பட்டது. அதைத்தான் ஸாதுக்கள் தேடுகின்றனர். இடைவிடாத்துயரத்தைவிட்டு நித்தியத்வம்

பெறுவது அங்கேதான். ஸ்திரீகளும் வைசியர்களும் சூத்திரர்களும் இன்னும் கீழ்ப்பிறப்புள்ளவர்களும் இந்தத்தர்மத்தைக் கைப்பற்றித் தான் மேற்கதியை அடையவேண்டும். வித்வானனபிராம்மணனும் மிருதியானகேள்வியுள்ள க்ஷத்திரியனும் அடைவது சொல்லவேண் டுமோ? பாவம்தீராதவனுக்கு ஞானமுண்டாவதில்லை. செய்யவேண் டியகடமைகளை முடித்தானபிறகுதான் ஞானமென்னும்லாபம் கிடைக்கும். சாஸ்திரஞானத்தையும் ஆத்மவிவேகத்தையும் அடைந்த பிறகும் வெறுக்காமல் முன்போலவும் அதற்கதிகமாகவும் பக்தியுடன் குருக்களிடத்தில் வஸிக்கவேண்டும். அவ்வாறின்றி, குருக்களை அலக்ஷியமாகநினைத்தாலும் அவர்களிடத்தில் அவ்வாறுநடந்தாலும் அவன்கற்றது பயனற்றதாகும்; ஞானமும் அஜ்ஞானமாகிவிடும். அவன்நரகத்திற்குக்காரணமான கெட்டவழியை அடைவான். ஸந்தேகமில்லை. அவனது புண்ணியம் அழியும்; அறிவு மாறுபடும். முதலில் பாக்கியத்தைக்காணுதமனிதன் பாக்கியத்தைக்கண்டவுடன் கர்வத்தினுல் அவிவேகத்தையடைவதுபோல அவன் தத்வஜ்ஞானத்தையறிந்தும் கர்வத்தினுல் விவேகக்குறைவை அடைகிறுன். ஆதலால், ஞானத்தைப்பற்றிக் கர்வப்படலாகாது. அடக்கமன்றோ அறிவின்பயன்? அடங்குவதற்காக எப்போதும் முயலவேண்டும். எப்போதும் அடக்கமும் இந்திரியஜயமும் பொறுமையுமுடையவனுகி வெறுப்பில்லாமல் குருஶுச்ருஷையை விடாமல்நடத்தவேண்டும். மனவுறுதியினுல் [1] குறியையும் வயிற்றையும் காப்பாற்றவேண்டும். [2]கண்ணினுல் கைகளையும் கால்களையும் காப்பாற்றவேண்டும். விஷயங்களை மனத்தினுல் ஒழிக்கவேண்டும். மனத்தை விவேகத்தில் வைக்கவேண்டும். பிறகு, மறைவும் பரிசுத்தமுமானவிடத்திற்குச்சென்று தன்கண்ணுல் ஆசனத்தைப்பார்த்து அதைக்கிரகித்துக்கொண்டு விதிப்படி அனுஷ்டானங்களைச்செய்து அதில்ஒருநிலையாக உட்காரவேண்டும். அப்போது, ஞானயோகத்திலிருந்து தன்மனத்திலிருக்கும்பகவானைக்காணவேண்டும். புகையில்லாத அனலைப்போலும் ஆகாயத்தில் கிரணங்கள் நிரம்பினசூரியனைப்போலும் மின்னலைப்போலும் ஜ்வலிக்கும்உருவத்தோடு உள்ளத்திலிருக்கும் நித்தியரும் குற்றமற்றவருமான ஈஶ்வரரைப் பார்க்கவேண்டும். யோகமில்லாதவன் தன்தேகத்தினுள்ளிருக்கும் மஹேஶ்வரரைக்காணமுடியாது. யோகமுள்ளவன் தன்அறிவினுல் ஹ்ருதயகமலத்தில் மனத்தைவைத்து ஈஶ்வரரைப் பார்க்கிறுன். இவ்

1 காமத்திலும் போஜனத்திலும் நியமம்வேண்டும்.

2 சுத்தமாகத் தெரிந்தபிறகே கைகால் வைக்கவேண்டும்.

வாறு மனத்தைநிறுத்தமுடியாமற்போனால் சாஸ்திரவிசாரணையினு லும் கர்மயோகத்தினுலும் ஈஸ்வரரை ஆராதிக்கவேண்டும். ஞானேந் திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, பூதங்கள் ஐந்து, மனம் சேர்ந்து பதினறு. தன்மாத்திரைகள் ஐந்து, மகத்து அகங்காரம் இரண்டு, எட்டாவது அவ்யக்தமென்னும் மூலப்ரக்ருதி இவ்வெட்டும் ப்ரக்ருதியென்று பெயருள்ளவை. இவ்வுலகத்திலிருப்பவன் இப்படி தத்வங்களில்புத்தியைச்செலுத்தி எட்டுப்பிரக்ருதிகளையும் பதினறு விகாரங்களையும் அறியவேண்டும். இதனுல், தேகம்விட்டபின் ஸம் ஸாரத்தைத் தாண்டினவனுவான். இல்லாவிடில்இல்லை. தத்வஞானத் தில் எண்ணமுள்ளவன் மனஒழிவுடன்தன்னைச்சுத்தம்செய்துகொள் வதற்கும் நன்மையையடைவதற்கும் இந்தத்தத்வங்களின் நிச்சய த்தை ஒவ்வொருநாளும் மனத்தில் அடிக்கடி நினைக்கவேண்டும். தத்வஜ்ஞானியானவன் இப்படி நினைப்பதனுலேயே முக்திபெறுவான். மேற்சொன்னதத்வவிஷயங்களைத் தெளிவாயறிந்தவன் தேகஸம்பந்த மில்லாத பரிசுத்தாத்மாவாவான். தெரிந்தசூத்திரன் ஸந்யாஸிகளின் ஆஸ்ரமத்தைச்சார்ந்து பணிவிடையில் ஊக்கமுள்ளவனுயிருந்தால் அந்தஸாதுக்களின் சேர்க்கையினுலேயே மோக்ஷத்தையடைவான்; மற்றப்படியில்லை. ஸாதுக்களினருகிலேயே இருக்கவேண்டும். அறிவு மிகுந்தவர்களை அடுக்கவேண்டும். கருநிறமுள்ளபறவையும் மேரு வைச்சார்ந்ததனுல் பொன்னிறமாவதுபோலச் சேர்க்கையினுல் பெரி யோர்களின் குணத்தையடைவான்' என்றூர். உண்மையறிந்தவரும் தியானநிஷ்டருமான பராசரமகாமுனிவர் தம்யோகமகிமையினுல் நாலுவர்ணங்களுக்குமுள்ள விதியையும் பணிவிடையென்னும் ஒழுக் கத்தின்பயனையும் இவ்வாறுசொல்லித் தம் ஆஸ்ரமத்திற்குச் சென் றூர்" என்றூர்.

---

## நூற்றைம்பத்துமூன்றுவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(தேவர்களும் நமஸ்கரிக்கத்தக்கவர்களைப்பற்றி மாதலிக்கும் இந்திரனுக்கும் நடந்த சம்பாஷணை.)

யுதிஷ்டிரர், "மிகச்சிறந்தவரே! மகானுபாவர்களான தேவர் களும் இவ்வுலகத்திலுள்ள எந்தமகாத்மாக்களுக்கு நமஸ்காரம்செய் கின்றனர்? அந்த ரிஷிகளெல்லாரையும்பற்றிக்கேட்க விரும்புகி றேன்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானுர்.

"யுதிஷ்டிர! பூர்வகதைகள் தெரிந்தவர்களும் சிறந்த ஞானமுள்ளவர்களுமானபிராம்மணர்கள் இந்தவிஷயத்தில் ஓர்இதிஹாஸம் சொல்லுகின்றனர். அதைச் சொல்லுகிறேன்; கேள். வ்ருத்ராஸுரனைக்கொன்று திரும்பும்போது தேவர்களால் பூஜிக்கப்பட்டும் மஹரிஷிகளால் துதிக்கப்பட்டும் சிறந்தஜயலக்ஷ்மியோடுகூடி ஹரிகளென்னும் பசுமைநிறமுள்ள குதிரைகள்கட்டினரதத்திலேறிவந்த தேவேந்திரனைநோக்கி அவன்ஸாரதியானமாதலி கைகூப்பிக்கொண்டு, 'பகவானே! நமஸ்காரத்திற்குரியவரனைவராலும் பூஜிக்கப்பட்டநீர் உலகத்தில் எவர்களைநமஸ்கரிக்கிறீர்? அவர்களை எனக்குச்சொல்லும்' என்றுகேட்டான். தேவருக்கரசனும் இந்திராணியின்கணவனுமான இந்திரன் மாதலியின்அந்தச்சொல்லைக்கேட்டுத் தன்னைவிரும்பும்ஸாரதிக்கு மறுமொழிகூறலானான். 'மாதலியே! தர்மார்த்தகாமங்கள் மூன்றையும்ஆராய்ந்து எவர்களுடையபுத்தி அதர்மத்தில் ஒருபோதும் இறங்காமலிருக்கிறதோ அவர்களை நமஸ்கரிக்கிறேன். மாதலியே! எவர்கள் அழகும்குணங்களும்நிரம்பிப் பெண்களின் மனத்தைக் கவர்கின்றவராயிருந்தும் காமஸுகங்களை விரும்பாமலிருக்கின்றனரோ அவர்களை நமஸ்கரிக்கிறேன். மாதலியே! தங்களுக்குரிய ஸுகங்களில் திருப்தியடைந்தவர்களும் சொல்லுந்திறமையும் இன்சொல்லுமுடையவர்களும் பூஜைக்குரிமையிருந்தும் பூஜையைவிரும்பாதவருமாயிருப்பவரை நமஸ்கரிக்கிறேன். பொருளும் கல்வியும் ஐஶ்வரியமும் எவர்களின்புத்தியை மாற்றுவதில்லையோ, மாறினபுத்தியையும் எவர்கள் அடக்குகின்றனரோ அவர்களை நான் எப்போதும் பூஜிக்கிறேன். மாதலியே! அன்புள்ளமனைவியுடன்சேர்ந்து அக்நிஹோத்திரம்செய்பவர்களும்பசுக்கள்நிரம்பின குடும்பமுள்ளவர்களும் பரிசுத்தர்களுமானவர்களை நான் நமஸ்கரிக்கிறேன். ஆத்மாவையறியாதவன் பெருந்தவத்தினால் மிகுதியானசெல்வம் கிடைத்தபோது அதைவிடமுடியாதவனாகிறான். மாதலியே! எவர்களுடைய பொருளும் இன்பமும் தர்மங்காரணமாகவே விருத்தியடைந்திருக்கின்றனவோ அறம்பொருளிரண்டையும்விடாதஅவர்களை நமஸ்கரிக்கிறேன். தர்மவழியாகப் பொருளையும் இன்பத்தையும் அடையும் பிராம்மணர்களுக்கும் பசுக்களுக்கும் பதிவ்ரதைகளானஸ்திரீகளுக்கும் நான் நமஸ்காரம்செய்கிறேன். மாதலியே! முற்பிராயத்தில் மானிடலோகத்திய ஸுகங்களையனுபவித்துப் பின்னர் தவத்தினால் ஸ்வர்க்கத்திற்கு வருகிறவர் எவரோ அவரை நான் எப்போதும் பூஜிக்கிறேன். ஸுகத்தையடையாமலும் ஸுகத்திற்பற்றில்லாமலும் தர்மத்தைவிடாம

லும் இந்திரியங்களையடக்கியும் எல்லாவற்றையும்விட்டு மலைகள்போ லசையாமலிருப்பவரை மனத்தினால் பூஜிக்கிறேன். மாதலியே! மெய் யறிவினால்தெளிந்த கல்வியறிவுள்ளவரும் தொன்றுதொட்டுவந்த தர் மத்தைக்கருதுகிறவரும்பிறரால்சிலாகிக்கப்பட்டஆசாரமுள்ளவருமா யிருப்பவர் எவரோ அவரை நான் நமஸ்கரிக்கிறேன்' என்றான்" என்றார்.

---

## நூற்றைம்பத்துநான்காவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(கிருஹஸ்தர்மத்தைப்பற்றிக் கிருஷ்ணருக்கும் பூமிதேவிக்கும் நடந்த ஸம்பாஷணை.)

யுதிஷ்டிரர், "ராஜரே! பரதஸ்ரேஷ்டரே! கிருகஸ்தாஸ்ரமதர்ம மனைத்தையும் சொல்லும். இவ்வுலகத்தில் மனிதன் எதைச்செய்து அபிவ்ருத்தியையடைவான்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"ராஜனே! பாரதனே! வாஸுதேவருக்கும் பூமிதேவிக்கும் முன்நடந்தஒருஸம்பாஷணையை இந்தவிஷயத்தில் உனக்கு உதாகரிப் பேன். பரதஸ்ரேஷ்டனே! மகிமைபொருந்திய வாஸுதேவர் பூமி தேவியைத்துதித்து இப்போது நீஎன்னைக்கேட்கும்விஷயத்தைப்பற் றியே கேட்டார். வாஸுதேவர், 'ஓ! பூமிதேவியே! கிருகஸ்த தர்மத்திலிருக்கும் நானும் என்போன்றவனும் அவசியம் செய்யத் தக்கது என்ன? எதைச்செய்தால் ஸுகமுண்டாகும்?' என்றார். அதற்குப் பூமிதேவி சொல்லலானாள். 'மாதவரே! ரிஷிகளையும் பித்ருக்களையும் தேவர்களையும் மனிதர்களையும் பூஜிக்கவும் கொண் டாடவும்வேண்டும். அதன்வகையைச் சொல்லுகிறேன்; கேளும். விருப்பத்துடன் நித்யயாகம்செய்வதினால் தேவர்களையும் நித்யமாக விருந்தளிப்பதினால் மனிதர்களையும் நித்தியமாகத் தர்ப்பணம்செய் வதனால் பித்ருக்களையும் மனிதர்கள் ஆராதிக்கவேண்டும். குற்ற மற்றவரே! அப்படியே பிரம்மசரியவிரதத்தினால் ரிஷிகள் ஸந்தோஷ மடைகின்றனர். தினந்தோறும்அக்நியைப்பூஜிக்கவேண்டும். சாப் பிடுவதற்குமுன்னமே பூதபலியையும் தேவதாபூஜையையும் செய்ய வேண்டும். மதுஸூதனரே! இதுதான் எனக்குவிருப்பம். ஒவ் வொருநாளும் அன்னமுதலியவற்றினாலும் தர்ப்பணஜலத்தினாலும் பால்கிழங்குகனிகளாலும் சிராத்தம்செய்து பித்ருக்களைத் திருப்தி

செய்யவேண்டும். பாகம்செய்த அன்னத்திலிருந்து அக்நியில் வைசு வதேவமென்னும்ஹோமத்தை முறைப்படி செய்யவேண்டும். [1]ஆக்நீ ஷோமம் [2]வைசுவதேவம் [3]தான்வந்தர்யம் அதன்பிறகு பிரம்மதேவ ருக்கு ஹோமம்என்று தனித்தனியே விதிக்கப்பட்டிருக்கின்றன. அந்தமுறைப்படியே அன்னபலியையும்போடவேண்டும். மாதவரே! தெற்கில்யமனுக்கும் மேற்கில்வருணனுக்கும்வடக்கில்சந்திரனுக்கும் நடுவீட்டில் பிரம்மதேவருக்கும் வடகிழக்கில் தன்வந்தரிக்கும் கிழக் கில்இந்திரனுக்கும் வீட்டின்வாயிலில்மனிதர்களுக்கும் என்றுசொல் லிப் பலிபோடச்சொல்லுகின்றனர். மருத்துக்களுக்கும் தேவர்க ளுக்கும் பலியை வீட்டின்உட்புறத்தில் போடவேண்டும். விஸ்வே தேவர்களுக்குப் பலியை ஆகாயத்தில் போடவேண்டும். இரவில் ஸஞ்சரிக்கும் பேய்பிசாசமுதலியவற்றிற்குப் பலியை இரவில் போட வேண்டும். இவ்வாறு பலியை நன்ருகப்போட்டபிறகு, ப்ராம்மண னுக்குப் பிக்ஷையிடவேண்டும். ப்ராம்மணன் கிடைக்காதபோது முதல் அன்னத்தையெடுத்து அக்நியில் போடவேண்டும். பித்ருக்க ளுக்குச் சிராத்தம்செய்ய ஆரம்பிக்குமனிதன் சிராத்தமுடிந்தபிறகு, பித்ருக்களுக்குத் தர்ப்பணம்செய்து அதன்பிறகு பலிகாரியத்தை முறைப்படி செய்யவேண்டும். அதன்பிறகு, வைஸ்வதேவத்தைச் செய்து பிறகு ப்ராம்மணபோஜனம் செய்விக்கவேண்டும். பிறகு, மிச்சமுள்ள அன்னத்தினல் அதிதிகளையும் புசிப்பிக்கவேண்டும். மகா ராஜனே! அர்க்கியத்தைமுன்னிட்டு மனிதர்களைத் திருப்தியடைவிக்க வேண்டும். நிச்சயமில்லாமல்வருவதனல் [4]அதிதியென்றுசொல்லப் படுகிருன். ஆசாரியனுக்கும் தந்தைக்கும் அன்புள்ள சிநேகிதனுக் கும் விருந்தினனுக்கும், 'என்வீட்டில் (புசிக்கத்தக்கது) இன்னது இருக்கிறது' என்று எப்போதும் தெரிவிக்கவேண்டும். அவர்கள் என்னசொல்வார்களோ அதைச் செய்விக்கவேண்டுமென்பதுதான் தர்மமாகச்சொல்லப்படுகிறது. கிருஷ்ணு! கிருகஸ்தனனமனிதன் எப்போதும் சேஷத்தைப்புசிப்பவனுகவேயிருக்கவேண்டும். ராஜ புரோகிதன், ஸ்நாதகன், ஆசார்யன், மாமன், இவர்கள் ஒருவருஷத் திற்குமேலிருந்தாலும் அவர்களுக்கு மதுபர்க்கம்கொடுத்துஉபசரிக்க வேண்டும். நாய்களுக்கும் சண்டாளர்களுக்கும் பக்ஷிகளுக்கும்

---

[1] அக்நிக்கும் சந்திரனுக்குமாகச் செய்யப்பட்டஹோமம்.

[2] விசுவேதேவர்களுக்குச் செய்யப்பட்டஹோமம்.

[3] தன்வந்தரிக்குச்செய்யும்ஹோமம்.

[4] அ=அநித்யம், திதி=ஸ்திதி.

தரையில்அன்னம்போடவேண்டும். இதுவும் வைஸ்வதேவம் என்பது. இது காலையும் மாலையும் விதிக்கப்படுகிறது. இந்தக்கிருகஸ்த தர்மங்களை வெறுக்காமல்செய்பவன் இவ்வுலகிலும் மேலானசெல்வம் பெற்று, இறந்தபின் மறுஉலகத்திலும் கொண்டாடப்படுவான்' என்றாள். இவ்வாறு பூமிதேவிசொன்னதைக்கேட்டுச் சிறந்தமகிமையுள்ள வாஸுதேவர் எப்போதும் அப்படியே செய்தார். நீயும் அப்படியே எப்போதும் செய். ராஜனே! இந்தக்கிருஹஸ்ததர்மத்தை நீ நடத்தினால் இவ்வுலகத்தில் புகழ்பெற்றுத் தேகம்விட்டபின் ஸ்வர்க்கம்பெறுவாய்" என்றார்.

---

## நூற்றைம்பத்தைந்தாவது அத்யாயம்.

### தா ன த ர் ம ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(புஷ்பம் தூபம் தீபமுதலியவற்றின் தானத்தைப்பற்றிச் சுக்ரர் பலிசக்ரவர்த்திக்குச்சொல்லியதை ஸ்வாயம்புவமனு ஸுவர்ணருக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "பரதஸ்ரேஷ்டரே! தீபதானமென்னப்படுவது எவ்வகைத்து? அது எப்படியுண்டானது? அதன்பலன் என்ன? அதை எனக்குச்சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"பாரதனே! இந்தவிஷயத்திலும்பிரஜைகளைப்படைத்தவராகிய ஸ்வாயம்புவமனுவுக்கும் ஸுவர்ணருக்கும்நடந்த ஸம்பாஷணையாகிய ஒருபுராதனசரித்திரத்தைக் கூறுகின்றனர். பாரதனே! ஸுவர்ணரென்றுபெயர்பெற்ற ஒருரிஷி இருந்தார். அவர்தேகநிறம் பொன்னிறமாயிருந்ததனால் அவருக்கு ஸுவர்ணரென்றுபெயர்வந்தது. குலமும்ஒழுக்கமும்குணங்களுமுள்ளவரும் கல்விநிறைந்தவருமான அந்த ரிஷி தம்குணங்களினால்நல்லகுலத்தில் பிறந்தவரநேகரை மிஞ்சியிருந்தார். ஒருகால் அந்தப்ராம்மணர் ஸ்வாயம்புவமனுவைக்கண்டு அருகிற்சென்றார். அவரிருவரும் அங்கே ஒருவரைஒருவர் குசலப்பிரஸ்னம்செய்துகொண்டனர். உறுதியானஎண்ணமுள்ள அவ்விருவரும் தேவரிஷிகளால் எப்போதும்அடையப்பட்ட பொன்மலையான மேருவில்சேர்ந்து உட்கார்ந்தனர். அவர்கள் அங்கே முன்னோர்களும் மகாத்மாக்களுமானபிரம்மரிஷிகள், தேவர்கள், அஸுரர்களின் பலவகையான கதைகளைச் சொல்லிக்கொண்டிருந்தனர். அப்போது, ஸுவர்ணர் ஸ்வாயம்புவமனுவை நோக்கி, எல்லாப்பிராணிகளின் நன்

மைக்குமாக என்கேள்விக்கு நீர் மறுமொழிகூறவேண்டும். புஷ்பம் சந்தனம் தூபமுதலியவற்றினால் தேவர்கள் பூஜிக்கப்படுகின்றனர். இது என்ன? இது எப்படியுண்டானது? இதன்பலனென்ன? எனக்குச் சொல்லும்' என்றுகேட்க, ஸ்வாயம்புவமநு சொல்லலானார். 'இந்தவிஷயத்திலும் சுக்ராசாரியர் பலி இவ்விரண்டு மகாத்மாக்களின் சம்பாஷணையாகிய ஒரு பூர்வசரித்திரத்தைக் கூறுகின்றனர். விரோசனன்மகனானபலி மூன்றுலோகங்களையும் ஆண்டுகொண்டிருக்கையில் ப்ருகுகுலத்தலைவரானசுக்ரர் அவனிடம் விரைவாகவந்தார். மிகுதியான தக்ஷிணைகொடுப்பவனான அந்தஅஸுரராஜன் அந்தச்சுக்ராசாரியரை அர்க்கியமுதலியவற்றினால் சாஸ்திரப்படிபூஜித்து, அவர் உட்கார்ந்தபிறகு ஆஸனத்தில் உட்கார்ந்தான். புஷ்பம் தூபம் தீபம் இவைகளைக் கொடுப்பதின்பலனைப்பற்றி நீர்கேட்ட பிரஸ்தாவம் அங்கே நடந்தது. அப்போது, அஸுரஶ்ரேஷ்டனானபலி கவிராஜரானசுக்ரரைப்பார்த்து, 'பிரம்மஜ்ஞானிகளிற்சிறந்த பிராம்மணஶ்ரேஷ்டரே! புஷ்பதூபதீபங்களைக்கொடுப்பதின்பலன் என்ன? அதை நீர் சொல்லக்கடவீர்' என்னும் சிறந்தகேள்வியைக்கேட்க, சுக்ரர் சொல்லலானார். 'எல்லாவற்றிற்கும்ஆத்மாவும் ஈஶ்வரருமானவிஷ்ணு அக்நியையும் சந்திரனையும் முதலில்படைத்தபோது முதலில் தவமுண்டாயிற்று. அதன்பிறகு தர்மமுண்டாயிற்று. அந்தக்காலத்தில் சந்திரனுடையதேகமானது பூமியில் அமிருதமும் விஷமுமாயுள்ள கொடிகளும் செடிகளும் மற்றுமுள்ள புல்பூண்டுகளுமாகப் பலவகையாக உண்டாயிற்று. அமிருதமானது தன்மணத்தினாலேயே மனத்திற்கின்பத்தையும் திருப்தியையும்உடனேகொடுக்கிறது. கொடியவிஷம் தன்மணத்தினாலேயே மனத்தை முழுதும் வாட்டுகிறது. அம்ருதம் பெரியமங்களமென்றும் விஷம்பெரிய அமங்களமென்றும் அறியும். ஓஷதிகளனைத்தும் அமிருதம். [1]அக்நியின்ஒளியே விஷம். அமிருதம் மனத்தையும் களிக்கச்செய்கிறது; அழகையும் கொடுக்கிறது. ஆதலால், புண்ணியம்செய்யும்மனிதர்கள் புஷ்பங்களை [2]ஸுமனஸுகள்என்றுசொல்லுகின்றனர். எந்தமனிதன் பரிசுத்தனாகி ஸுமனஸுகளென்னும்புஷ்பங்களைத் தேவர்களுக்குக்கொடுக்கிறானோ அவன்விஷயத்தில் தேவர்களும் நல்லமனமுள்ளவராகிறார். அதனால், தேவர்களும் [3]ஸுமனஸுகளென்றுசொல்லப்படுகின்றனர்.

1 விஷமூலிகைகள் அக்நியைச் சார்ந்தவை என்பது.

2 மனத்தைநன்றாகச் செய்கின்றவை.

3 தேவர்களின் நல்லமனத்திற்குக் காரணமானவை.

1 பிரபுவே! அஸுரராஜனே! மங்களத்திற்காக எந்தஎந்தத்தேவதையையுத்தேசித்துப் புஷ்பங்கள் போடப்படுகின்றனவோ அந்தஅந்தத் தேவதை அதனாலேயே இவனுக்குப் பிரஸன்னமாகிறது. அந்தஒஷதிகள் உக்கிரமுள்ளவை, சாந்தமானவை, ஒளியுள்ளவையென்று வெவ்வேறாக அறியத்தக்கவை. அவை பலவகைச்சக்தியும் பலவகை உருவமுமுள்ளவை. யாகத்திற்கானவையும் யாகத்திற்காகாதவையுமானவிருக்ஷங்களையும், அஸுரர்களுக்குவேண்டினபுஷ்பங்களையும், தேவர்களுக்குவேண்டினபுஷ்பங்களையும், ராக்ஷஸர்களுக்கும் நாகர்களுக்கும் யக்ஷர்களுக்கும் மனிதர்களுக்கும் பித்ருக்களுக்கும்பிரியமானவற்றையும் வரிசையாகச் சொல்லுகிறேன்; கேள். காடுகளிலுள்ளவை, கிராமங்களிலுள்ளவை, உழுதுவிதைக்கப்பட்டவை, மலைகளிலுண்டானவை, முள்ளில்லாதவை, முள்ளுள்ளவை, மணமும்நிறமும்சுவையுமுள்ளவைஆகிய அநேகம் ஒஷதிகளிருக்கின்றன. புஷ்பங்களில் இனியதும் இன்னாததும்ஆகிய இருவகைமணங்கள் அறியப்படுகின்றன. இனியமணமுள்ளபுஷ்பங்கள் தேவர்களுக்குப்பிரியமானவைஎன்றறி. பிரபுவே! முள்ளில்லாதமரங்களின் வெண்ணிறமானபுஷ்பங்கள் தேவர்களுக்கு எப்போதும் பிரியமானவை. தாமரைமலர், துளஸி, ஜாதிபுஷ்பம், ஜலம்இவை எல்லாருக்கும் சிலாக்கியமானவை. தெரிந்தவன் தாமரைமுதலானஜலத்திலுண்டாகும்மலர்களைக் கந்தர்வர்களுக்கும் நாகர்களுக்கும் யக்ஷர்களுக்கும் கொடுக்கவேண்டும். சிவந்தபுஷ்பங்களுள்ளவையும் காரமாயிருப்பவையும் முள்ளுள்ளவையுமானஒஷதிகள் பகைவர்களைக்கொல்லும்யாகத்திற்குஉரியவையாக அதர்வணவேதத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. கொடிய சக்தியுள்ளவையும் தொடக்கூடாதவையும் முள்ளுள்ளவையும் சிவப்புநிறமும் கறுப்புநிறமுமுள்ளவையுமான ஒஷதிகளைப் பூதங்களுக்குக் கொடுக்கவேண்டும். பிரபுவே! புத்திக்கும்மனத்திற்கும்ஸுகத்தை உண்டுபண்ணுகின்றவையும் கசங்கினாலும் நன்மணம்வீசுகின்றவையும் அழகியநிறமுள்ளவையுமானமலர்கள் மனிதர்க்குரியவையென்று சொல்லப்படுகின்றன. சுடலையிலும் தேவாலயத்திலுமுண்டான புஷ்பங்களை விவாகமுதலானமங்களகாரியங்களிலும் ஸ்திரீபுருஷர்களுடைய ரஹஸ்யங்களிலும் சேர்ப்பிக்கக்கூடாது. மலைச்சரிவுகளிலுண்டான இனியபுஷ்பங்களை ஜலத்தினால்புரோக்ஷணம்செய்து தியானம் செய்து சாந்தர்களாயிருந்து சாஸ்திரப்பிரகாரம் தேவர்களுக்குச் சாத்தவேண்டும். தேவர்கள் வாஸனையினால் திருப்தியடைகின்றனர்.

1 'ப்ரபோ' என்றுபாடம்கொள்ளப்பட்டது.

யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் பார்ப்பதினால் திருப்தியடைகின்றனர். நாகர்கள் சூட்டிக்கொள்வதினால் திருப்தியடைகின்றனர். மனிதர்கள் இம்மூன்றினாலும் திருப்தியடைகின்றனர். புஷ்பமாலது தேவர்களை உடனே திருப்திசெய்விக்கிறது. திருப்தியடைந்ததேவர்கள் மனிதர்களை விருத்திசெய்கின்றனர். (அப்போது) மனிதர்கள்வேண்டும்விருப்பங்கள் நினைத்தவுடன் கிடைக்கின்றன. எப்போதும் பூஜிக்கப்பட்டதேவர்கள் மனிதர்களுக்கு போகத்தையும் கௌரவத்தையும் உண்டுபண்ணுகின்றனர். அவர்கள் பூஜிக்கப்பட்டால் இவனையும் பூஜிக்கின்றனர். அவர்கள் அவமதிக்கவும் விடவும்பட்டால் அந்த இழிவானமனிதர்களை எரித்துவிடுவார். இதற்குமேல் தூபங்கொடுத்தலென்னும் செய்கையின்பலனைச் சொல்வேன். நல்லதூபங்களும் கெட்டதூபங்களும் பலவகையாயிருப்பதை என்னிடம் தெரிந்துகொள். பிசின்களும் கட்டைகளும் செய்யப்பட்டவைகளுமாக மூன்றுவகைத் தூபங்களுண்டு. இனியமணமும் இன்னாதமணமும் இருக்கின்றன. அவற்றை விரிவாகச்சொல்லுகிறேன்; கேள். [1]ஸல்லகிமரந்தவிர மற்றமரப்பிசின்கள் தேவர்களுக்கு இனியவை. அவையெல்லாவற்றிலும் குங்கிலியம் சிறந்ததென்பது நிச்சயம். வைரமுள்ளகட்டைகளில் அகில் சிறந்தது. யக்ஷர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் நாகர்களுக்கும் அஸுரர்களுக்கும் ஸல்லகிமரத்தின் பிசின்முதலியவைகளும் அவற்றைப்போன்றவையும் விருப்பந்தான். ஸர்ஜமரத்தின்சாறு முதலியவற்றின் வாஸனையினாலும் பூமியிலுள்ள கட்டைகளின் வாஸனைகளினாலும் கற்கண்டினாலும் சாராயத்தினாலும் மனிதர்களுக்குத் திருப்தியுண்டாகிறது. அவை தேவர்களுக்கும் தானவர்களுக்கும் பூதங்களுக்கும் உடனே திருப்தியுண்டாக்குவனவாகச் சொல்லப்படுகின்றன. மற்றுமுள்ளவினோதமானபொருள்கள் மனிதர்களுக்கு வேண்டினவையென்று சொல்லப்படுகின்றன. புஷ்பதானம் செய்வதின்பலன்களும் காரணங்களும் என்னசொன்னேனோ அவற்றையே தூபங்களிலும் அறிந்துகொள்ளவேண்டும். தூபங்கள் அதிகஸந்தோஷத்தைச் செய்கின்றவை. இனி, தீபதானத்தின்சிறந்த பலனையும் எந்தக்காலத்தில் எவன் எப்படிப்பட்டதீபங்களை எவ்வகையாகக் கொடுக்கவேண்டுமென்பதையும் சொல்வேன். ஜ்வாலையானது சக்தியும் வெளிச்சமுமுள்ளதாக மேல்நோக்கி வியாபிக்கிறது. ஆதலால், தீபதானமானது மனிதர்களுக்கும் சக்தியையும் உற்சாகத்தையும் ஓங்கச்செய்கிறது. தக்ஷிணாயனம் மிக இருண்டிருப்பது; நரகம்

[1] ஒருவகைமரம்; அது யானைக்கு விருப்பமானது.

போன்றது. ஆதலால், அப்பொழுது, [1] உத்தராயணமான தீபதானம் சிலாகிக்கப்படுகிறது. ஏனெனில், தீபம் மேல்நோக்கிவியாபிப்பது; இருளுக்குப் பரிகாரம். ஆதலால், அதில்தீபங்கொடுப்பவன் மேல் கதியைக் கொடுப்பவனுகிறுனென்பது நிச்சயம். தேவர்கள் சக்தியும் ஒளியுமுள்ளவர்களாகி எல்லாவற்றையும் பிரகாசிக்கச்செய்கிறவர். ராக்ஷஸர் இருள்மூடினவர். ஆதலால், தீபங்கொடுக்கப்படவேண்டும். வெளிச்சங்கொடுப்பதினுல மனிதன் நல்ல கண்பார்வையுள்ளவனும் தேகத்தில ஒளியுள்ளவனுமாவான். வெளிச்சத்தைக்கொடுத்தபின் (ஒருஜந்துவையும்) பிடிக்கலாகாது. வெளிச்சத்தைத் திருடவும் அவிக்கவுமாகாது. தீபத்தைகொடுப்பவன் குருடனும் இருளானநரகலோகத்தையடைகிறவனும் தேகத்தில் நல்லநிறமில்லாதவனுமாவான். தீபங்கொடுப்பவன் ஸ்வர்க்கலோகத்தில் தீபமாலைகளின்நடுவில் விளங்குவான். நெய்யினுல்விளக்கேற்றுவது முதல் பக்ஷம்;ஓஷதிகளின்ஸாரமாகியஎண்ணெய்முதலியவற்ருல்ஏற்றுவது இரண்டாவதுபக்ஷம். நன்மையைவிரும்புகிறவன் தேகத்தின்கொழுப்பு நரம்பு எலும்புகளின்எண்ணெய்களால் தீபத்தைதவைக்கலாகாது. தனக்கு மேன்மையைவிரும்புகிறவன் கோயிலிலும் ஸபாமண்டபத்திலும் மலையிலும் உயர்ந்தமரத்திலும் நாற்சந்தியிலும் தீபங்களை நித்தியமாக வைக்கவேண்டும். தீபம்வைக்கும்மனிதன் குலத்திற்கே பிரகாசமாகவும் பரிசுத்தாத்மாவாகவும் பெயர்பெற்றவனுகவுமிருந்து தேஜோலோகத்தையடைவான். இனி, தேவர்களுக்கும் யக்ஷர்களுக்கும் நாகர்களுக்கும் மனிதர்களுக்கும் பூதங்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் பலிபோடுவதென்னும்கர்மத்தின்குணங்களையும் பலனையும் சொல்வேன். எவர்கள் உண்பதற்குமுன், பிராம்மணர்களும் தேவர்களும் விருந்தினர்களும் குழந்தைகளும் உண்ணவில்லையோ அவர்களை யாகங்களும் மங்களங்களுமில்லாத ராக்ஷஸர்களேயென்றறி. ஆதலால், முதற்பாகத்தைத் தேவர்களுக்குப் பூஜையோடு கொடுக்க வேண்டும். பிறகு, தலைவணங்கிநமஸ்கரித்துச் சோம்பாமல் பலி போடவேண்டும். நித்தியமாகப் பலியைவாங்கிக்கொள்ளும்தேவர்கள் வீடுகளை அனுக்கிரகிக்கின்றனர். வெளியிலிருந்துவருகிறவர்களும் இவ்விடத்தில் கொடுப்பதினுல் ஜீவிப்பவர்களுமாகிய யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் நாகர்களும் தேவர்களும் பித்ருக்களும் திருப்தி

[1] உத்தராயணத்தின் இயற்கையான மேனோக்கிச்செல்வதும் தமஸை (தமோகுணத்தை, இருளை) ப்போக்குவதும் விளக்குக்குமிருப்பதால் விளக்கை உத்தராயணமென்பது.

யடைந்து அவனுக்கு ஆயுளையும் புகழையும் தனங்களையும்கொடுத்து ஸந்தோஷப்படுத்துகின்றனர். தயிரும்பாலும் நிரம்பினவையும்பரிசுத்தமானவையும் நல்லமணமுள்ளவையும் பார்ப்பதற்கழகியவையுமான அன்னபலிகளைப் புஷ்பங்களுடன் தேவர்களுக்கு அர்ப்பணம்செய்ய வேண்டும். மாம்ஸமும் ரக்தமும் நிரம்பினவையும் கள்சாராயங்களோடு கூடினவையும் நெற்பொரிகளாலும் அவல்களாலும் அலங்கரிக்கப்பட்டவையுமானபலிகளை யக்ஷர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் கொடுக்க வேண்டும். தாமரைகளுநெய்தல்களோடுசேர்ந்தபலிகள் நாகர்களுக்கு எப்போதும் இஷ்டமானவை. வெல்லம்நிரம்பினஎள்பலிகளைப் பூதங்களுக்குக் கொடுக்கவேண்டும். முதற்பாகத்தைப்பலிகொடுப்பவன் முதன்மையான ஸுகமுள்ளவனும் பலபராக்கிரமங்களுள்ளவனுமாவான். ஆதலால், தேவர்களுக்கு முதல்பாகத்தைப் பூஜையோடு கொடுக்கவேண்டும். ஐஸ்வரியத்தைவிரும்புகிறவன் ஒவ்வொருநாளும் வீட்டைவிளங்கச்செய்யும் கிருஹதேவதைகளுக்கு முதற்பாகத்தைக் கொடுத்துப் பூஜிக்கவேண்டும்' என்றார். இவ்வாறு பிருகுவம்சத்தவரான சுக்ராசாரியர் அஸுரராஜாவான பலிக்குச்சொன்னார். அதை ஸ்வாயம்புவமநு ஸுவர்ணருக்குச் சொன்னார்; ஸுவர்ணர் நாரதருக்குச் சொன்னார். சிறந்தகீர்த்தியுள்ளவனே ! நாரதர் இந்தக்குணங்களை எனக்குச் சொன்னார். புத்ரனே ! நீயும் இதையறிந்து உலகத்தில் இதைஎல்லாம் அநுஷ்டிக்கக்கடவாய்" என்றார்.

## நூற்றெழுபத்தாறாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(புஷ்பதூபதீபமுதலியவற்றின் தானபலனைப்பற்றிய நகுஷன்கதை.)

யுதிஷ்டிரர், " பரதஸ்ரேஷ்டரே ! புஷ்பங்களையும் தூபங்களையும்கொடுப்பதற்கும் பலிபோடுவதற்குமுள்ளபலனைக் கேட்டேன். இன்னும் அதைப்பற்றிச் சொல்லக்கடவீர். தூபத்தைக்கொடுப்பதிலும் தீபத்தைக்கொடுப்பதிலும் பலன்யாது? கிருகஸ்தர்கள் பலிகளைப் போடுவது எதற்காக ?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

" இவ்விஷயத்தில் நகுஷனுக்கும் அகஸ்தியருக்கும் ப்ருகுவுக்கும்நடந்த ஸம்பாஷணமாகிய ஒருபழையசரித்திரத்தைக் கூறுகின்றனர். மகாராஜனே ! மிக்கபெருந்தவமுள்ள நகுஷனென்னும்ராஜ

ரிஷி இவ்வுலகத்திற்செய்தபுண்ணியகர்மத்தினால் இந்திரபதத்தை அடைந்தான். ராஜனே! அந்தஸ்வர்க்கத்தில் வஸிக்கும்போதும் நகுஷன் மானிடலோகத்திற்கும் தேவலோகத்திற்குமுரிய பல விதகிரியைகளை நியமத்துடன் அனுஷ்டித்துக்கொண்டேயிருந்தான். ராஜனே! அம்மகாத்மாவுக்குத் தேவலோகத்திலும் மானிடலோகத்திலுமுள்ள புராதனமானகர்மங்களெல்லாம் சாஸ்திரப்படி நடந்துகொண்டிருந்தன. அக்நிஹோத்திரங்களும் ஸமித்துக்களும் தர்ப்பைகளும் புஷ்பங்களும் அன்னபலிகளும் [1]லாஜபலிகளும் தூபதீபங்களும் இவையனைத்தும் அம்மகாத்மாவானவேந்தனுடையகிருகத்தில் நடந்துவந்தன. அவன் ஸ்வர்க்கத்திலும் ஜபயாகங்களையும் தியானயாகங்களையும் செய்துகொண்டிருந்தான். வீரனே! அவன் தேவேந்திரனாயிருந்தும் முன்போலவே தேவர்களெல்லாரையும் வரிசைப்படி சாஸ்திரோக்தமாய்ப் பூஜித்தான்; அதன்பிறகு, 'நான் இந்திரன்' என்றுநினைத்து அகங்காரத்தையடைந்தான். அவ்வரசனுடைய கிரியைகளனைத்தும் குறைந்துபோயின. அவன் வரம்பெற்றதினால் கர்வங்கொண்டு ஸப்தரிஷிகளைத் தனக்கு வாகனங்களாகச் செய்துகொண்டான்; கிரியைகளைவிட்டதினால் பலவீனமடைந்தான். அகங்காரம்மேற்கொண்டு, தவத்தையேதனமாகவுடையரிஷிஶ்ரேஷ்டர்களை வாகனமாகச்செய்தே அவனுக்கு மிகப்பெரியகாலங்கடந்தது. அதன்பிறகு, (அவன்)ரிஷிகளெல்லாரையும் முறையாகத் தேரிழுக்கச்செய்யத்தொடங்கினான். பாரதனே! அகஸ்தியருடையமுறையும்வந்தது. அப்போது, பிரம்மஜ்ஞானிகளிற்சிறந்தவரும் பெரியமகிமையுள்ளவருமான ப்ருகு ஆஶ்ரமத்திலிருக்கும் அகஸ்தியரிடம்வந்து, 'மகாமுனிவரே! தேவேந்திரனாயிருக்கும் கெடுநினைவுள்ள இந்தநகுஷன் செய்யும்அவமரியாதையை நாம் எதற்காகப்பொறுக்கவேண்டும்?' என்று கேட்டார். அகஸ்தியர், 'மகாமுனிவரே! அவனை நான் எப்படிச் சபிக்கமுடியும்? வரன்கொடுப்பவராகியபிரம்மதேவரால் அவனுக்கு வரன்கொடுக்கப்பட்டிருக்கிறது. அது உமக்குந்தெரியுமே. அவன் ஸ்வர்க்கத்திற்குப்போகும்போதே பிரம்மதேவரைப்பார்த்து, 'என் பார்வையில்அகப்படுகிறவன் எவனோ அவன் எனக்கு அடங்கிப்போகக்கடவன்' என்னும்வரத்தைக் கேட்டான். அதனாலேதான், என்னாலும்உம்மாலும் மற்றஎந்தரிஷிஶ்ரேஷ்டராலும் அவன் எரிக்கப்படவுமில்லை; கீழேதள்ளப்படவுமில்லை. ஸமர்த்தரே! முன்னர், மஹாத்மாவான பிரம்மதேவரால் அவனுக்குக் குடிப்பதற்கு அமிருதமும்

1 பொரி.

கொடுக்கப்பட்டது. அதனாலேயும் நம்மால் அவன் அழிக்கப்படுவதில்லை. பிரம்மதேவர் ஜனங்கள் துயரப்படுவதற்குக்காரணமான வரத்தை அளித்தார். அதனால், அந்தஇழிவானமனிதன் பிராம்மணர்விஷயத்தில் பாபகாரியங்களைச் செய்கிறான். பேசுகிறவரிற்சிறந்தவரே! அவன்விஷயத்தில் காலத்திற்குத்தகுந்தது எதுவோ அதைச்சொல்லும். நீர் எப்படிச்சொல்வீரோ அப்படிநான்செய்வேனென்பது திண்ணம்' என்றுசொன்னார். ப்ருகு, "கர்வத்தினால் மதிகெட்டவனும் வலிமையுள்ளவனுமாகிய நகுஷன்விஷயத்தில் பரிகாரம்செய்வதற்காகப் பிரம்மதேவருடையகட்டளையினால் நான் உம்மிடம் வந்திருக்கிறேன். மிக்ககெட்டபுத்தியுள்ள அந்தத்தேவராஜனானகுஷன் இன்றைத்தினம் உம்மைத் தேரிற்பூட்டுவானே. ஒழுக்கந்தப்பின அவனை இன்றைத்தினமே என்சக்தியினால் இந்திரனாகாமற்செய்வேன். இன்றைத்தினம் நீர்பார்த்திருக்கையிலேயே பாபச்செய்கையும் மிக்ககெட்டபுத்தியுமுள்ள இந்தநகுஷனை இந்திரனுடைய இடத்தினின்றுவிலக்கிப் பழையஇந்திரனை இந்திரனாகிலை பெறச்செய்வேன். புத்திகுறைந்த இந்தஇழிவானதேவேந்திரன்இன்றைத்தினம் விதியினால் மதிகெட்டுத் தான்அழிவதற்காக உம்மைக் காலால் உதைப்பான். உதைப்பதனால் நான் மிகக்கோபமுற்றுப் பிராம்மணருக்குத் துரோகம்செய்யும்பாவியும் தர்மவரைகடந்தவனுமாகிய அவனைக் கோபத்துடன், 'பாம்பாகக்கடவாய்' என்றுசபிப்பேன். மஹரிஷியே! அதன்பிறகு, ஐசுவரியத்தினாலும் பலத்தினாலும் ஒன்றும்தெரியாமல் மிகமதிகெட்டு இந்தப்பாவம்செய்த நகுஷனை நீர்பார்க்கையிலேயே, 'சீ' என்னும்சொல்லால் உற்சாகத்தைக் கெடுத்துப் பூமியில் தள்ளிவிடுவேன். ரிஷியே! உமக்கு எப்படி இஷ்டமோ அப்படிச் செய்வேன்' என்றுசொன்னார். மித்ராவருணர்களின்புத்ரரும் குற்றமற்றவருமான அகஸ்தியர்,ப்ருகுஇவ்வாறுசொல்லக்கேட்டுத் துயரம்நீங்கி மிக்கஸந்தோஷமுடையவரானார்" என்றார்.

---

## நூற்றைம்பத்தேழாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(நகுஷன்கதைத் தொடர்ச்சி.)

யுதிஷ்டிரர், "அந்தநகுஷன் எப்படி தேவேந்திரபதத்தை அடைந்தான்? எப்படி பூமியில் தள்ளப்பட்டான்? எப்படிஅழிந்தான்? அவற்றைநீர் சொல்லக்கடவீர்" என்றுகேட்க,பீஷ்மர் சொல்லலானார்.

"ப்ருகுவும் அகஸ்தியரும் இவ்வாறுபேசிக்கொண்டிருக்கும் போது, அம்மஹாத்மாவானநகுஷனுக்குத் தேவலோகத்திலும் மானிடலோகத்திலுமுள்ள எல்லாநற்கருமங்களும் நடந்துவந்தன. அவனுக்குத் தேவலோகத்திலும் மானிடலோகத்திலும் பெரியோர்களின்ஆசாரங்களினாலுண்டாக்கப்பட்ட தீபமுதலிய வீட்டுக்கருவிகளின் தானங்களும் பலிமுதலியகர்மங்களும் உற்சவங்களனைத்தும் தனித்தனியே நடந்தன. அரசர்க்கரசே! அவை கிருகஸ்தனுடைய அபிவிருத்திக்குக் காரணமானவை. தூபங்கொடுப்பதினாலும் தீபங்கொடுப்பதினாலும் நமஸ்காரம்செய்வதினாலும் சமைத்தஅன்னத்தின் முதற்பாகத்தையெடுத்துக்கொடுப்பதினாலும் வீட்டிலுள்ள இடங்களில் பலிகள்போடுவதினாலும் தேவர்கள் ஸந்தோஷமடைகின்றனர். பலிபோடும்போது கிருகஸ்தனுக்கு எவ்வளவு சந்தோஷமுண்டாகிறதோ அதற்குநூறுமடங்கு அதிகமானஸந்தோஷம் தேவர்களுக்கும் உண்டாகிறது. அதனாலேதான், பெரியோர்கள் தங்கள்மேன்மைக்காக நமஸ்காரங்களுடன் தூபதீபங்களைக் கொடுக்கின்றனர். பகுத்தறிவுள்ளவன் நமஸ்காரங்களோடுசெய்யும்ஸ்நானம் ஜலதர்ப்பணமுதலியகர்மங்களினால் தேவர்கள் திருப்தியடைகின்றனர். சாஸ்திரப்படிபூஜிப்பதனால் மகானுபாவர்களானபித்ருக்களும் தபோதனர்களானரிஷிகளும் வீட்டிலுள்ளதேவர்களனைவரும் ஸந்தோஷமடைகின்றனரென்னும் எண்ணத்தைஉறுதியாகவைத்துக்கொண்டு அந்த நகுஷராஜன் பெரியதேவேந்திரபதத்தையடைந்தும் இதைச் செய்தான். அது ஆச்சரியம். சிலகாலத்திற்குப்பிறகு, பாக்கியக்கேடு நெருங்கினபோது இவற்றையெல்லாம்மறியாமல் சாஸ்திரப்படி அனுஷ்டியாமல் போனான். தேவேந்திரனாயிருந்தநகுஷன் பராக்கிரமத்தினுடையகர்வத்தினால் அனுஷ்டானத்தினின்றும் தவறிப்போனான். தூபதீபங்கள்முதலியகர்மங்களைச் சரிவரச்செய்யவில்லை. அப்போது, இவனுடைய யாகபூமி ராக்ஷஸர்களால் பீடிக்கப்பட்டது. அதன்பிறகு, மகாபலசாலியானநகுஷன் நகைத்துக்கொண்டே ரிஷிஸ்ரேஷ்டரான அகஸ்தியரைத் தன்தேரிழுப்பதற்காக ஸரஸ்வதிநதிக்கரையிலிருந்து விரைவாக அழைத்தான். அப்போது, பெருமைவாய்ந்த ப்ருகு, அகஸ்தியரைப்பார்த்து, 'கண்களைமூடும். தேவேந்திரனைத் தள்ளுவதற்காக உம்முடையஜடையில் பிரவேசிக்கப்போகிறேன்' என்றுசொன்னார். அகஸ்தியரும் கண்களை மூடினார். மிகப்பெரிய மகிமையுள்ளவரும் நினைத்ததுதவறாதவருமாகிய அந்தப்ருகு நகுஷனைத்தள்ளுவதற்காக அகஸ்தியருடையஜடையைக்கண்டு அதிற்புகுக்

தார். பிறகு, தேவராஜாவானநகுஷன் தனக்குவாகனமாக அகஸ்தியரிஷி வரப்பெற்றான். ராஜனே! அகஸ்தியர் அந்தத்தேவேந்திரனைப்பார்த்து, 'தேவேந்திரனே! என்னைச் சீக்கிரம் தேரிற்பூட்டு. உன்னை எந்தத்தேசத்திற்கு இழுத்துக்கொண்டுபோகவேண்டும்? நீ எங்குகொண்டுபோகச்சொல்லுகிறாயோ அங்கு உன்னைக் கொண்டுபோவேன்' என்றார். அவரால் இவ்வாறுசொல்லப்பட்டநகுஷன் அம்முனிவரைத் தேரில்பூட்டினான். அவருடைய ஜடைக்குள்ளிருந்த ப்ருகு மிக்கசந்தோஷமடைந்தார். வரதானத்தின்மகிமையைஅறிந்த அந்தப்ருகு பெருமையுள்ள நகுஷன்பார்வைக்கு அகப்படவில்லை. அகஸ்தியர் நகுஷனால் அப்போது தேரில்பூட்டப்பட்டிருந்தும் கோபிக்கவில்லை. பாரதனே! தேவராஜனானநகுஷன், 'வேதமும் தர்மசாஸ்திரமும் பிரமாணமா? அல்லவா?' என்று சொல்லிக்கொண்டே ஒற்றைக்காலால் அகஸ்தியரைக் குத்தினான். அந்தத்தர்மாத்மாவானஅகஸ்தியர் அதற்கும் கோபிக்கவில்லை. அதன்பிறகு, அந்தத் தேவராஜன் கோபித்து இடக்காலினால் அகஸ்தியருடையதலையில் உதைத்தான். அவரைத்தலையில்உதைத்தபோது ஜடைக்குள்ளிருந்த அந்தப்ருகு மிக்ககோபமுற்றுப் பாபபுத்தியுள்ளநகுஷனைநோக்கி, 'மிகக்கெட்டபுத்தியுள்ளவனே! நீ இந்தமஹரிஷியைக் கோபத்துடன் காலால் தலையில் உதைத்ததினால் உடனே ஸர்ப்பமாகிப் பூமியில் போகக்கடவாய்' என்று சபித்தார். பரதஸ்ரேஷ்டனே! அந்தப்ருகு மஹரிஷி அவன்கண்ணுக்குப்படாமலிருந்து சபித்ததனால் அந்தநகுஷன் உடனே ஸர்ப்பமாகித் தரையில்விழுந்தான். தர்மராஜனே! அந்தநகுஷன் ப்ருகுவைப் பார்த்திருப்பானாயின் அவனுடையசக்தியினால் ப்ருகுவுக்கு அவனைத் தள்ளமுடியாமற்போயிருக்கும். மஹாராஜனே! ஆனால், அவன் பூமியில்விழுந்திருந்தும், பலவகைத்தானங்களும் தவங்களும் விரதங்களும் செய்திருந்ததனால் முன்நினைவு தவறாமலிருந்தான்; 'எனக்கு இந்தச்சாபத்திற்கு முடிவு இருக்கவேண்டும்' என்று ப்ருகுவை வேண்டினான். மஹாராஜனே! பிறகு, அகஸ்தியர் கிருபைகூர்ந்து சாபத்தின்முடிவைப்பற்றி அந்தப்ருகுவினிடம் வேண்டினார். ப்ருகுவும் தயையுடன் சாபத்திற்கு முடிவைக்கொடுத்தார்; 'குருவம்சத்தின்தலைவனாகிய யுதிஷ்டிரனென்னும் அரசன் உண்டாகப்போகிறான். அவன் உன்னைச் சாபத்தினின்று விடுவிப்பான்' என்றுசொல்லி அந்தர்த்தானமானார். சிறந்தமகிமையுள்ளஅகஸ்தியரும் இந்திரனுடைய கார்யத்தைச்செய்தபிறகு பிராம்மணர்களால் பூஜிக்கப்பெற்றுத் தமதுஆஸ்ரமத்திற்குச் சென்றார். ராஜனே! நகு

ஷன்தான் உன்னாலே அந்தச் சாபத்திலிருந்து கரையேற்றப்பட்டானே. ராஜனே! நீ பார்த்திருக்கையில் அவன் பிரம்மலோகத்திற்குச்சென்றானன்றோ? அந்தப்ருகு நகுஷனைப் பூமியில்தள்ளினவுடன், பிரம்மலோகத்திற்குச்சென்றுபிரம்மாவினிடம் தெரிவித்தார். பிறகு, பிரம்மதேவர் இந்திரனைவருவித்துத் தேவர்களைநோக்கி, 'தேவர்களே! நான் வரங்கொடுத்ததனால் நகுஷன் உங்களுக்கு அரசனாயிருந்தான். அகஸ்தியர் கோபித்ததனால் அவன் தள்ளப்பட்டுப் பூமியில் விழுந்தான். அரசனில்லாமல் ஸ்வர்க்கமாயிருப்பது எங்ஙனம் முடியாது. ஆதலால், இந்த இந்திரனையே திரும்பவும் தேவராஜனாக அபிஷேகம் செய்யுங்கள்' என்றுசொன்னார். ராஜனே! குந்திபுத்திரனே! இவ்வாறுசொல்லும்பிரம்மதேவருக்கு, 'அப்படியேயாகட்டும்' என்று ஸந்தோஷமாகத் தேவர்கள் மறுமொழிகூறினர். ராஜஸ்ரேஷ்டனே! அந்தஇந்திரன் பகவானானபிரம்மதேவரால்தேவராஜனாக அபிஷேகம் செய்யப்பெற்று முன்போல விளங்கினான். நகுஷனுடைய அக்கிரமத்தினால் இது இவ்வாறு முன்னே நடந்தது. அந்தநகுஷன் பழைய நற்கருமங்களினாலேதான் மறுபடியும் மேன்மைபெற்றான். ஆதலால், கிருஹஸ்தர்கள் மாலைக்காலங்களில் தீபங்கொடுக்கவேண்டும். தீபங்கொடுப்பவன் இறந்தபின் திவ்யஜ்ஞானத்தையடைவான். தீபங்கொடுப்பவர்கள் பூர்ணசந்திரன்போல விளங்கிக்கொண்டிருப்பார்கள். தீபங்கள் எவ்வளவு கண்ணிமைக்கொட்டுக்கள் ஜ்வலிக்கின்றனவோ அவ்வளவுவருஷகாலம் தீபங்கொடுத்தமனிதன் அழகும் பலமுமுள்ளவனாயிருப்பான். இதைக்கேட்பவனும் படிப்பவனுமானபிராம்மணோத்தமன் பிரம்மலோகத்தையடைவானென்பதில்ஸந்தேகமில்லை" என்றார்.

---

## நூற்றைம்பத்தேட்டாவது அத்யாயம்.

### தா ன த ர் ம ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(பிராம்மணன்பொருளைக் கவர்வதன் தோஷத்தைப்பற்றி க்ஷத்ரபந்துவுக்கும் ஒருசண்டாளனுக்கும் ஸம்பாஷணை.)

யுதிஷ்டிரர், "பரதஸ்ரேஷ்டரே! பிராம்மணசொத்துக்களை அபகரிக்கிறவரும் கொடியவைசெய்கிறவருமான புத்திகெட்டமனிதர் என்னஜன்மத்தை அடைவார்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்ல

"பாரதனே! பிராம்மணர்களின் பொருளைப் பலவந்தமாக எடுத்துக்கொள்வது பாவங்களுள் பெரும்பாவம். அந்தச்சண்டாளர்கள் வம்சத்துடன் இம்மையிலும் மறுமையிலும் அழிந்துபோவார். இந்த விஷயமாக க்ஷத்ரபந்துவென்னும் அரசனுக்கும் ஒருசண்டாளனுக்கும்நடந்தஸம்பாஷணையாகிய புராதனசரித்திரத்தைக்கூறுகின்றனர். அவ்வரசன், 'ஓ! சண்டாளனே! மிகப்பெரியவனுயிருக்கிறாய். சிறுவனைப்போல நடக்கிறாய். நாய்கழுதைகளின் தூளிகளைப்பூசிக்கொள்ளுகிற நீ ஏன் பசுக்களுக்குப் பயப்படுகிறாய்? சண்டாளனுக்கு இகழப்பட்டசெய்கை ஸாதுக்களால்விதிக்கப்படுகிறது. கோதூளியினால் கெடுக்கப்பட்டஅங்கத்தை ஜலத்தினால் கழுவுகிறாய். ஏன்?' என்றுகேட்க, சண்டாளன் சொல்லலானான். 'ராஜனே! முற்காலத்தில் ஒருபிராம்மணனுடையபசுக்கள் போகையில் அவற்றின் [1]தூளிபடுவதனால் ஸோமமென்னும் கொடியைக் கெடுத்துவிட்டது. அந்த ஸோமத்தின்ரஸத்தைப் பிராம்மணர்கள் குடித்தனர். அரசனுடைய் வேலைக்காரர்களின் தூளியினாலும் அந்தஸோமம் கெடுக்கப்பட்டது. யாகத்தில் அந்தஸோமத்தைக்குடித்ததனால்பிராம்மணர்களனைவரும் உடனே நரகம்புகுந்தனர். அந்தப்பிராம்மணஸொத்தைப் புசித்ததனால் யாகதீக்ஷைசெய்துகொண்டஅவ்வரசனும் ரித்விக்குக்களெல்லாரோடும் விரைவில் நரகம்சேர்ந்தான். அவ்விடத்தில் பால்நெய் தயிர்களைக்குடித்த பிராம்மணர்களும் அரசர்களும் மற்றுமுள்ள மனிதரனைவரும் நரகம்சேர்ந்தனர். அந்தப்பசுக்கள் பாலினால் புத்திரர்களையும் பேரர்களையும் போக்கி அவர்களையும் கெடுத்தன. ராஜனே! நான் ஜிதேந்திரியனாக பிரம்மசாரியாகி நல்லொழுக்கத்தோடு அந்தப்பசுக்களையும் அந்தத்தம்பதிகளையும் பார்த்துக்கொண்டு அங்கேயிருந்தேன். ராஜனே! என்னுடையபிக்ஷையானது அந்தப்பசுக்களின் தூளியினால் கெடுக்கப்பட்டிருந்தது. ராஜனே! அந்தப்பிக்ஷையைச்சாப்பிட்டு அதனால் நான் சண்டாளனானேன். பிராம்மணஸொத்தையெடுத்துக்கொண்டஅவ்வரசன் தாழ்ந்தகதியை அடைந்தான். ஆதலால், ஒருகாலமும் பிராம்மணன்ஸொத்தொன்றையும் எடுக்கலாகாது; பார்க்கலாகாது; பிறர்எடுப்பதை ஒப்புக்கொள்ளலாகாது. அதைஎடுப்பதற்காக ஓர்உபாயமும் செய்யலாகாது. பிராம்மணன்பொருளாகிய பசுக்களின் தூளியினால்கெடுக்கப்பட்ட பிக்ஷையைப்புசித்து நான் எப்படியானேன்! பார்! ஆதலால், நன்றாகத்தெரிந்தமனிதன் ஸோமலதையை விற்கக்கூடாது. ஏனெ

1 'ரஜ:' என்பது மூலம்; 'பாலின்துளி' என்பது பழையஉரை.

னில், அது பிராம்மணர்களுக்குப் பொதுவாயுள்ள சிறந்ததனம். இவ் வுலகத்தில் புத்திமான்கள் ஸோமம்விற்பதை நிந்திக்கின்றனர். ஐயா ! ஸோமத்தைவிலைக்குவாங்குகிறவர் விற்கிறவரனைவரும் யமனை யடைந்து ரௌரவநரகத்திற்குப் போகின்றனர். கோதூளியினால் கெடுக்கப்பட்டஸோமத்தை யாககாரியத்தை முன்னிட்டு விற்பவன் வட்டியினால்ஜீவிக்கும்பிராம்மணனாகப்பிறந்து விரைவில் கெடுவான். மூந்நூறுவருஷகாலம் விஷ்டையைத்தின்றுகொண்டு நரகத்திலிருப் பான். பிரம்மஸொத்தையெடுத்தவன் நரகங்களையும் துயரங்களையும் அனுபவித்து மலத்திலுள்ள கிருமியாகப்பிறந்து நாய்விஷ்டையைத் தின்பான். நாயுடன்திரிவதையும் அதிககர்வத்தையும் ஸ்நேகிதன் மனைவியிடம்தவறுதலையும் தர்மதேவதை தராசில்நிறுத்தான். அதிக கர்வம் நிறை அதிகமாயிருந்தது. அதிககர்வத்தினால் நான் சக்தி யற்று ஓய்ந்து நிறம்மாறி வெளுத்து இளைத்துப்போனதையும் பாவ ஜன்மத்தையடைந்திருப்பதையும் பார். ஐயா! பிரபுவே! நான் முன்ஜன்மத்தில் சாஸ்திரஜ்ஞானத்திலும் ஆத்மஜ்ஞானத்திலும் கரைகண்டவனாகச் செல்வம்நிரம்பினபெருங்குலத்தில் பிறந்தேன். அப்போது, இந்தக்குற்றங்களையறிந்திருந்தும் கர்வத்தினால் எப் போதும் ஆவேசங்கொண்டு பிராணிகளின் முதுகுமாம்சத்தைத் தின் றேன். நான் வனத்தில் தூரத்திற்செல்லும்போதே வனத்திலுள்ள வர்களெல்லாருக்கும் என்னைத் தெரியும். தனத்தினால்கர்வமடைந்து, யோக்கியர்களானபிராம்மணர்களை அவமதிக்கக்கருதி இந்நிலைமையை அடைந்தேன். காலத்தின்மாறுதலைப் பார். பசுக்களின்தூளிபட்ட வுடன், ஆடையின்தலைப்புத்தீப்பற்றியெரிந்தவன்போலும் குளவி களால் கொட்டப்பட்டவன்போலும் மிக்கவேகமாக நான்ஓடுவதைப் பார். பிராம்மணஜாதியில் புத்திமான்களானகிருஹஸ்தர்கள்வேதாத்ய யனங்களாலும் பலவகைத்தானங்களாலும் பெரும்பாவத்தைப் போக் கிக்கொள்ளுகின்றனர். ராஜனே ! பாவம்செய்தபிராம்மணனும் எல் லாப்பற்றுக்களையும்விட்டு ஸந்யாஸாஶ்ரமத்திலிருந்தால்அவனை வேத ங்களே கரையேற்றுகின்றன. க்ஷத்திரியஶ்ரேஷ்டனே! நானோ பாப ஜாதியிற்பிறந்தேன்; எப்படிவிடுபடுவேனென்னும் நிச்சயத்தை அடையவில்லை. ராஜனே! ஏதோ முன்செய்தநல்வினையால் எனக்குப் பூர்வஜன்மத்தின்நினைவு இருக்கிறது. அதனாலேதான் பாபத்தி னின்றுவிடுபடக் கருதுகிறேன். சிறந்தஸாதுவே! . இந்தச்சண்டாள ஜன்மத்தினின்றும் எப்படி விடுபடுவேனென்று உன்னையடைந்து கேட்கிறேன். எனக்கு இந்தச்சந்தேகத்தை நீ தெரிவிப்பாயாக'

என்றான். அதற்கு அரசன், 'சண்டாளனே! நீ எதனால் இந்தஜன்மம் விடலாமென்பதைத் தெரிந்துகொள். பிராம்மணப்பிரயோஜனத்திற்காக உயிரைவிட்டால் நீ நற்கதிபெறலாம். யுத்தமென்னும் அக்நியில் பிராம்மணனுக்காகஉயிரைவிட்டுக் கழுகுநரிமுதலிய மாம்ஸந்தின்னும்ஜந்துக்களுக்குத் தேகத்தைக்கொடுத்தபின் உனக்கு விடுதலுண்டாகும். வேறுவகையில் நீ விடுபடத்தகாதவன்' என்று சொன்னான். வீரனே! அப்போது, அந்தக்ஷத்ரபந்துவினால் இவ்வாறுசொல்லப்பட்ட அந்தச்சண்டாளன் பிராம்மணன்பொருளைக் காப்பதற்காகப் போர்த்தலையில் உயிரைவிட்டு நற்கதியை அடைந்தான். புத்திரனே! பரதஸ்ரேஷ்டனே! சிறந்தகைகளையுடையவனே! ஆதலால், நீயும் உனக்கு நிலையானகதியை விரும்பினால் பிராம்மணர் பொருளைக் காப்பாற்றவேண்டும்" என்றார்.

---

## நூற்றைம்பத்தோன்பதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(புண்யலோகங்கள் பலவேன்பதைப்பற்றிக் கௌதமருக்கும் இந்திரனுக்கும் ஸம்பாஷணை.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! புண்ணியம்செய்தவர்களுக்கு ஸ்வர்க்கலோகமென்னும்மேலுலகம் ஒன்றா! அல்லது, பலவா? எல்லாவற்றையும் சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"குந்திபுத்திரனே! மனிதர்கள் தம்தம்கர்மங்களின்படி வெவ்வேறு உலகங்களை அடைகின்றனர். புண்ணியம்செய்தவர்கள் புண்ணியலோகங்களையும் பாவம்செய்தவர்கள் பாபலோகங்களையும் அடைகிறார்கள். அப்பா! இந்தவிஷயமாகக் கௌதமரென்னும்முனிவருக்கும் இந்திரனுக்கும் நடந்தஸம்பாஷணையாகிய ஒருபுராதனசரித்ரத்தைக் கூறுகின்றனர். இனியவரும் மனத்தையும் ஐம்புலன்களையும் அடக்கித் தவம்செய்துகொண்டிருந்தவரும் சாந்தருமான கௌதமரென்னும்ஒருபிராம்மணர், பெரியவனத்தில் தாயில்லாமல்கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த ஒருயானைக்கன்றைக்கண்டு அருள்கூர்ந்து அதை வளர்த்தார். அது நெடுநாளானபின் மிக்கவலிமையுள்ளதும் பெரியதுமாயிற்று. மிக்கஉயரமும்பருமனுமுள்ளதும் எல்லாத்துவாரங்களிலும் மதஜலம் பெருகுவதும் கௌதமரையடைந்ததுமான அந்தயானை

யைத் தேவேந்திரன் திருதராஷ்டிரனென்னும் அரசன்வடிவமாக வந்து கொண்டுபோனான். பெருந்தவமுள்ளவரும் எடுத்தவிரதத்தை விடாதவருமானகௌதமர் அந்தயானையைக் கொண்டுபோவதைக் கண்டு திருதராஷ்டிரனென்னும்அரசனைநோக்கி, 'ஓ! திருதராஷ்டிரனே! நன்றிகெட்டவனே! நான்கஷ்டப்பட்டுவளர்த்த என்புத்திரனை இந்தயானையைக் கொண்டுபோகாதே. யோக்கியர்களின் ஸ்நேகம் [1]ஸப்தபதம்என்றுசொல்லுகின்றனர். அரசனே! இந்தயானைக்காக மித்திரத்துரோகம் உன்னையண்டவேண்டாம். ராஜனே! விறகுகளையும் ஜலத்தையும்கொடுப்பதும் யாருமில்லாதபோது என் ஆஸ்ரமத்திற்குக்காவலாயிருப்பதும் ஆசாரியனை என்னிடத்தில்சிக்ஷை பெற்றதும் குருபணிவிடையைச்சரியாகநடத்துவதும் சிறந்ததும் அடங்கினதும் நன்றியறிந்ததும் எப்போதும் என்னால்விரும்பப்படுவதுமான யானையை நான்கதறும்படி நீகொண்டுபோகலாகாது' என்று சொன்னார்.

அதற்குத் திருதராஷ்டிரன், 'ஓ! மகரிஷியே! உமக்கு ஆயிரம் பசுக்களையும் ஐந்நூறுபொன்னணயங்களையும் இன்னும்அநேகவிதப் பொருள்களையும் கொடுப்பேன். பிராம்மணருக்கு யானையாலாக வேண்டியதென்ன?' என்றுகேட்டான். கௌதமர், 'ராஜனே! மனிதர்க்கதிபதியே! பசுக்களும் காசுமாலைகளணிந்ததாஸிகளும் பலவகைரத்தினங்களும் மற்றும்பலவகைப் பொருள்களும் உனக்கேயிருக்கட்டும். பிராம்மணனுக்குத் தனத்தினாலாவதென்ன?' என்று சொன்னார். திருதராஷ்டிரன், 'பிராம்மணரே! பிராம்மணர்களுக்கு யானைகளால் ஆகவேண்டியதொன்றுமில்லை. யானைக்கூட்டங்கள் அரசர்களுக்கேஉரியவை. எனது வாகனமாகிய சிறந்தயானையைக் கொண்டுபோவதனால் எனக்குப் பாவமில்லை. கௌதமரே! இதில் ஆசைவைக்காதீர்' என்றுசொன்னான். கௌதமர், 'புண்ணியம் செய்தவன்இறந்தபின் ஸந்தோஷப்படுகிறஇடமும் பாவம்செய்தவன் இறந்தபின் துயரப்படுகிற இடமுமாகிய மஹாத்மாவானயமனுடைய வீட்டில் நான் உன்னிடமிருந்து யானையைத் திரும்பப்பெறுவேன்' என்றுசொன்னார். திருதராஷ்டிரன், 'சிரத்தையில்லாமல் கிரியைகளைவிட்டு நாஸ்திகர்களாய்ப் பாவத்தில் மனம்செலுத்தி விஷயங்களில் பிரவிருத்திப்பவர்தாம் யமபாதைகளை அநுபவிப்பார். திருதராஷ்டிரனோ அங்கேசெல்லான்' என்றுசொன்னான். கௌதமர்,

---

[1] ஒருசேர்ந்துபேசுதலால் உண்டாவது ; ஏழடிசேர்ந்துநடத்தலால் என்றும் கொள்ளலாம்.

'எங்கே ஜனங்கள் ஸத்தியமேசொல்வதன்றிப் பொய்சொல்வதில் லேயோ, பலமில்லாதவர்களைப் பலசாலிகளானயமதூதர் கொல்லுகிற இடமாகிய ஸம்யமினிஎன்னும் அந்த யமபட்டணமிருக்கிறது. அதில் நான் யானையை உன்னிடம் திரும்பப்பெறுவேன்' என்றுசொன்னர். திருதராஷ்டிரன், 'மகரிஷியே! மூத்தஸகோதரியையும் தந்தையை யும் தாயையும் ஆசாரியர்களையும் அவமதித்துநடப்பவர் எவரோ அவர்களுக்குத்தான் அந்தலோகம். திருதராஷ்டிரனே அங்கே போகிறவனல்லன்' என்றுசொன்னன். கௌதமர், 'மிகுந்தபாக் கியமுள்ளதும் கந்தர்வர்களாலும் யக்ஷர்களாலும் அப்ஸரஸுகளா லும் அடையப்பட்டதும் ஸுகத்திற்குரியவர்மட்டும் பிரவேசிக்கத் தக்கதுமான மந்தாகினிஎன்னும் குபேரநகரமிருக்கிறது. அங்கே உன்னிடம் யானையைத் திரும்பப்பெறுவேன்' என்றுசொன்னர். திருதராஷ்டிரன், 'அதிதிபூஜையை விரதமாகக்கொண்டவரும் சிறந்த தவமுள்ளவரும் பிராம்மணர்களுக்குக் கிருகதானம்செய்தவரும் தம்மைச்சார்ந்தவர்களுக்கு அன்னம்போட்டு மிச்சத்தைஉண்பவரு மாகியஜனங்கள் எவர்களோ அவர்கள் மந்தாகினிநகரத்திற்குஅலங் காரமாயன்றே இருக்கின்றனர்?' என்றுசொன்னன். கௌதமர், 'மேருமலையின்மேல் நன்றாகப்புஷ்பித்ததும் கின்னரப்பெண்களின் ஸங்கீதம்எப்போதுமிருப்பதும் ஸுதர்சனேயென்னும் பெரியநாவல் மரமிருப்பதுமாகிய ஓர் அழகானவனம் விளங்குகிறதே, அவ்விடத் தில் உன்னிடம் நான் யானையைத் திரும்பப்பெறுவேன்' என்று சொன்னர். திருதராஷ்டிரன், 'மகரிஷியே! சாந்தரும் ஸத்யத்தை இயற்கையாக வுடையவரும் கல்விகேள்விமிகுந்தவரும் எல்லாப் பிராணிகளுக்கும்இனியவரும் இதிஹாஸபுராணங்களைப்படிப்பவரும் சுவையுள்ளவற்றைப் பிராம்மணர்களிடத்தில் [1]ஹோமம்செய்பவரு மாகியபிராம்மணர்களுக்கு அந்தலோகம். திருதராஷ்டிரனேஅங்கே செல்லான். இன்னும் உமக்குத்தெரிந்தஇடம் எதுஇருக்கிறதோ அதைச்சொல்லும். நான்இதோ விரைவாகவன்றே செல்லுகிறேன்?' என்றுசொன்னன். கௌதமர், 'நிரம்பப்புஷ்பங்களுடையதும் கின் னரஅரசர்களால்அடையப்பட்டதும்நாரதரால் விரும்பப்படுவதும்கந் தர்வர்களும் அப்ஸரஸுகளும்இருக்குமிடமுமாகிய நந்தனவனமிருக் கிறதே, அங்கே நான் உன்னிடம் யானையைத் திரும்பப்பெறுவேன்' என்றுசொன்னர். திருதராஷ்டிரன், 'ஓ! மகரிஷியே! ஆட்டத்திலும் பாட்டிலும்தேர்ச்சியுள்ளஎந்தஜனங்கள் தேவர்களைப்போல எப்போ

---

1 போஜனமளிப்பவர்.

தும் ஸுகத்தைக்கருதித் திரிகின்றனரோ அவர்களுக்கு அந்தலோகம். திருதராஷ்டிரனோஅங்கேபோகிறவனல்லன்'என்றுசொன்னான். கௌதமர், 'ராஜனே! எங்கே அக்னியிலும் ஜலத்திலும் மலையிலும் பிறந்தபிராம்மணர்கள் தேவர்களுடன் மகிழ்ந்துவஸிக்கின்றனரோ, எங்கேஇந்திரன்வேண்டினவற்றையெல்லாம் பொழிகிறானோ, எங்கே பெண்கள்விருப்பப்படி ஸஞ்சரித்துக்கொண்டிருக்கின்றனரோ, எங்கே பெண்களுக்கும் ஆண்களுக்கும் பொறாமையில்லையோ அந்தஉத்தரகுருதேசங்கள் அழகாகவிளங்குகின்றன. அங்கே நான்உன்னிடம் யானையைத்திரும்பப்பெறுவேன்' என்றுசொன்னார். திருதராஷ்டிரன், 'மகரிஷியே! எல்லாப்பிராணிகளிடத்திலும்பற்றில்லாதவரும் மாமிசம் தின்னாதவரும் தண்டிப்பதைவிட்டவரும் ஸ்தாவரங்களையும் ஜங்கமங்களையும் துன்பம்செய்யாமல்ஸஞ்சரிப்பவரும் எல்லாப்பிராணிகளையும்தாமாகநினைப்பவரும் எதையும்விரும்பாதவரும் மமகாரமில்லாதவரும் பெண்ணாசையற்றவரும் லாபநஷ்டங்களையும் இகழ்ச்சிபுகழ்ச்சிகளையும் ஸமமாகநினைப்பவரும் எவரோஅவர்களுக்கு அந்தலோகம். திருதராஷ்டிரனோவெனில், அங்கேபோகிறவனல்லன்' என்றுசொன்னான். கௌதமர், 'மகாத்மாவும் அரசனுமாகிய சந்திரனுடைய லோகத்தில் மிக்கஇனியமணமுள்ளவையும் ஆசையும்துயரமுமற்றவையுமான அநேகஅழியாதலோகங்கள் விளங்குகின்றன. அங்கே நான் உன்னிடம் யானையைத் திரும்பப்பெறுவேன்' என்றுசொன்னார். திருதராஷ்டிரன், 'மகரிஷியே! எவர்கள் தானமே இயற்கையாயுள்ளவரும் ஒருகாலமும்வாங்காதவரும் பிறர்பொருளையெடுக்காதவருமானவர்களோ, எவர்களுக்குத் தகுந்தபாத்திரத்தில்கொடுக்கத்தகாதது ஒன்றுமில்லையோ, எவர்கள் எல்லா அதிதிகளையும்பூஜித்து நல்லஸந்ததியுடையவர்களோ, எவர்கள் சக்தியுள்ளவர்களாயிருந்தும் பிறருக்கு எதிர்பேசாமல்பொறுத்திருப்பவர்களோ, எவர்கள் எப்போதும்நல்லொழுக்கத்தோடிருப்பவர்களோ அவர்களுக்கு அந்தலோகம். திருதராஷ்டிரனோவெனில் அங்கேசெல்லான்' என்றுசொன்னான். கௌதமர்,'அதற்கும்மேல் ராஜஸகுணமும் தாமஸகுணமும் துயரமுமற்றவையும் மகாத்மாவான சூரியபகவானுடைய ஸ்தானங்களுமாகிய அழியாதலோகங்கள் விளங்குகின்றன. அங்கே நான் உன்னிடமிருந்து யானையைத்திரும்பப்பெறுவேன்' என்றுசொன்னார். திருதராஷ்டிரன், 'மகரிஷியே! விடாமல்வேதாத்யயனமும் குருபணிவிடையும் செய்பவர்களும் சிறந்ததவமும் நியமமுமுள்ளவர்களும் ஸத்தியந்தவறாதவர்களும் ஆசாரியர்களுக்குமாறாகப் பேசாதவர்களும் ஆசாரி

யர்களின்காரியங்களில் ஏவப்படாமலே நித்தியம்முயற்சியுள்ளவர்களும் பரிசுத்தர்களும் ஸத்தியத்திலிருப்பவர்களும் வாக்கைக்கட்டினவர்களும் வேதந்தெரிந்தவர்களும் பிரம்மஞானிகளுமான மகாத்துமாக்களுக்கு அந்தலோகம் நினைக்கப்படுகிறது. திருதராஷ்டிரனோவெனின் அங்கேசெல்லான்' என்றுசொன்னான். கௌதமர், 'அதற்குமேல் மகாத்மாவானவருணராஜனுடையஸ்தானத்தில் நல்லவாஸனையுள்ளவையும் ஆசையும்விசனமுமற்றவையுமானநிலைபெற்றலோகங்கள் விளங்குகின்றன. நான் உன்னிடமிருந்து அங்கே யானையைத் திரும்பப்பெறுவேன்' என்றுசொன்னார். திருதராஷ்டிரன், 'மூன்று வருஷம் சிரத்தையுடன் சாஸ்திரப்படி சாதுர்மாஸ்யயாகங்களையும் ஆயிரம்இஷ்டிகளையும் நித்தியாக்நிஹோத்திரங்களையும்செய்துகொண்டும் தம்மனைவிகளோடு சாஸ்திரங்களில்சொல்லப்பட்ட மார்க்கத்திலிருந்து தர்மங்களைச்செய்துகொண்டும் தர்மத்திலேயே மனத்துடன் தர்மமார்க்கத்தை நிலைநிறுத்திக்கொண்டுமிருக்கும் மகாத்மாக்களான பிராம்மணர்களுக்கு அந்தலோகம். திருதராஷ்டிரனோவெனின் அங்கேசெல்லான்' என்றுசொன்னான். கௌதமர், 'ராஜனே! இந்திரனுடைய லோகங்கள் ஆசையும் துயரமுமற்றவையும் மனிதர்களால்விரும்பப்பட்டும் கிடைக்காதவையுமாயிருக்கின்றன. பெருஞ்சக்தியுள்ள அந்தஇந்திரனுடையகிருகத்தில் நான் இந்தயானையைத் திரும்பப்பெறுவேன்' என்றுசொன்னார். திருதராஷ்டிரன், 'நூறுவருஷம்ஜீவித்திருப்பவனும் சூரனும் வேதாத்யயனம்செய்துகொண்டிருப்பவனும் தவறுமல்யாகஞ்செய்பவனுமாகிய இவரனைவரும் இந்திரலோகத்திற்குச் செல்வர். திருதராஷ்டிரனோவெனின் அங்கேசெல்லான்' என்றுசொன்னான். கௌதமர், 'ஸ்வர்க்கத்திற்கும்மேலேஎல்லாம்நிரம்பினவையும் துயரமற்றவையும்எல்லாஉலகங்களிலும் பயமற்றவர்களானஞானிகள் சேரத்தக்கவையுமான பிராஜாபத்தியங்களென்னும் பெரியலோகங்கள் இருக்கின்றன. அங்கே நான் உன்னிடம் யானையைத் திரும்பப்பெறுவேன்' என்றுசொன்னார். திருதராஷ்டிரன், 'ராஜஸூயயாகத்தில் பட்டாபிஷேகஞ்செய்துகொண்டவரும் தர்மத்தில் மனம்வைத்து ஜனங்களைக்காப்பவரும் அஶ்வமேதயாகம்செய்து அவப்ருதஸ்நானம்செய்தவருமானஅரசர்களுக்கு அவ்வுலகங்கள் உரியவை. திருதராஷ்டிரன் அங்கேபோகான்' என்றுசொன்னான். கௌதமர், 'அவற்றிற்குமேல், மிக்கநல்லமணமுள்ளவையும் ஆசையும்விசனமும்அற்றவையும்அழியாதவையுமானஉலகங்கள் எதில் விளங்குகின்றனவோ அடைதற்கரியதும்

வெல்லமுடியாததுமான அந்தக்கோலோகத்தில் நான் யானையை மீட்டுக்கொள்வேன்' என்றுசொன்னார். திருதராஷ்டிரன், 'ஆயிரமுள்ளவன் நூறுபசுக்களையும் நூறுள்ளவன் பத்துப்பசுக்களையும் பத்துள்ளவனும் ஐந்துள்ளவனும் ஒவ்வொருபசுவையும் தன்சக்திக்குத்தக்கபடி தானம்செய்யும்மஹாத்மாவும் பிரம்மசாரிவ்ரதத்தோடேயே ஆயுளைக்கழித்து வேதவாக்கைக்காப்பாற்றும் பிராம்மணர்களும் சிரத்தையுடன்தீர்த்தயாத்திரைசெய்கிறவனும் விமானங்களேறி அவ்வுலகங்களில் மகிழ்ந்திருக்கின்றனர். பிரபாஸதீர்த்தம், மானஸஸரோவரம், புஷ்கரதீர்த்தம், மகாஸரஸ், புண்யமானநைமிசதீர்த்தம், பாஹுதை, கரதோயை, கயை, ஹயசிரஸ், விபாசை, ஸ்தூலபாலுகை, தூஷ்ணீங்கங்கை, சனேர்க்கங்கை, மஹாஹ்ரதம், கோமதி, கௌசிகி, பம்பை, ஸரஸ்வதி, திரஷத்வதி, யமுனைஎன்னும்தீர்த்தங்களுக்கு உறுதியானநியமத்துடன் யாத்திரைசெய்யும்மஹாத்மாக்கள் எவரோ அவர்கள் தேவதேகங்களையெடுத்துத் தேவலோகத்தியமாலைகளையணிந்து உயர்ந்தசந்தனம்பூசிக்கொண்டு ஸுகமாக அந்தலோகத்திற்குப் போகின்றனர். திருதராஷ்டிரன் அங்கேசெல்லான்' என்றுசொன்னான். கௌதமர், 'குளிர்பயமும் உஷ்ணபயமும் பசிதாகங்களும் களைப்பும் ஸுகதுக்கங்களும் நண்பனும் பகைவனும் சுற்றத்தாரும் மற்றவரும் மூப்பும் மரணமும் புண்ணியபாபங்களும் ரஜோகுணமும் சிறிதுமில்லாமல் அறிவும் ஸத்வகுணமும்நிரம்பிச்செழித்த பரிசுத்தமான பிரம்மலோகத்தில் யானையை மீட்டுக்கொள்வேன்' என்றுசொன்னார். திருதராஷ்டிரன், 'மகரிஷியே! பற்றுக்களெல்லாம்விட்டவரும் சுத்தமனமுள்ளவரும் நியமந்தவறாதவரும் பரமாத்மாவினிடம்பக்திநிலைபெற்றவரும் ஸாத்விகருமானயோகிகள் ஸ்வர்க்கத்தையடைந்து அங்கிருந்து புண்ணியமான பிரம்மலோகத்தை அடைகின்றனர். திருதராஷ்டிரனை நீர் அங்கேகாணமுடியாது' என்றுசொன்னான், கௌதமர், 'ரதந்தரம் ப்ருஹத் என்னும்ஸாமங்கள் எங்கே பாடப்படுகின்றனவோ, எங்கே யாகவேதிகை பரிசுத்தர்களானஜனங்களினால் சூழப்பெற்றிருக்கிறதோ, எங்கே ஸோமபானம்செய்தவன் இந்திரன், சூரியன், சந்திரன்முதலானதேவர்களோடுஸஞ்சரிக்கிறானோ அங்கே நான் உன்னிடம் யானையை மீட்டுக்கொள்வேன். எல்லாஉலகங்களையும்தாண்டிப்போகும்உன்னைவிருத்திராஸுரனைக்கொன்றதேவேந்திரனென்று நான் அறிகிறேன். நான் மனத்தினுடையஆவலினால்உன்னிடத்தில் ஏதாவதுசொற்குற்றம் செய்யாமலிருக்கிறேனா?' என்றுசொன்னார். இந்திரன், 'நான் இந்திரன்; யானையைப்பற்றினபேச்

சில் பிரஜைகள் உலகங்களுக்குப்போகும்மார்க்கத்தையெல்லாம் கடந்து வந்தேன். ஆதலால், வணங்கினஎனக்கு நீர் கட்டளையிடும். நீர் சொன்னவற்றையெல்லாம் செய்வேன்' என்றுசொன்னான். கௌதமர், 'தேவேந்திரனே! எனக்குப்பிள்ளையும் குட்டியாயிருந்து அறுபதுவருஷமானதும் எனக்குஅன்புள்ளதும் நான்காட்டில்வஸிக்கையில் எனக்குத்துணையாயிருந்ததுமாகிய இந்தவெள்ளையானையையே எனக்குக்கொடு' என்றுகேட்டார். இந்திரன், 'பிராம்மணோத்தமரே! இந்தயானை உமதுபுத்திரன்தான்; உம்மைப்பார்த்து மோக்கின்றது; துதிக்கையினால் உமதுபாதங்களை மோக்கின்றது. என்னுடைய நன்மையை நினையும்.உமக்கு நமஸ்காரம்' என்றுசொன்னான்.கௌதமர், 'தேவேந்திரனே! எக்காலமும் உனக்கு க்ஷேமத்தையேநினைக்கிறேன். எப்போதும் உனக்குப் பூஜையைச்செய்கிறேன். சக்ரனே! எனக்கும் நீ க்ஷேமத்தைக்கொடு. உன்னால்கொடுக்கப்பட்டயானையை வாங்கிக்கொள்ளுகிறேன்' என்றுசொன்னார். இந்திரன், 'சிறந்த ஞானமுள்ளவர்களும் ஸத்தியமுள்ளவர்களுமான எந்தமகாத்மாக்களின் உள்ளங்களில் வேதங்கள் புதையல்களாக வைக்கப்பட்டிருக்கின்றனவோ அவர்களில் ஒருமகாத்மாவான உம்மால் நான் அறியப்பட்டேன். ஆதலால், இப்போது நான் உம்மிடத்தில் அன்புள்ளவனாகிறேன். ஆ! ஆ! ப்ராம்மணரே! உமதுபுத்திரனையானையுடன் சீக்கிரம்வாரும். சீக்கிரமாகவும் விளம்பமாகவும் சிறந்தலோகங்களை அடையத்தக்கவர் நீர்தாம்' என்றுசொன்னான். இந்திரன், புத்திரனாகியயானையுடன் கௌதமரை முன்னிட்டுக்கொண்டு, யாரும்போக முடியாத ஸ்வர்க்கத்தில் ஸாதுக்களுடன் ஏறினான். ஜிதேந்திரியனாகி இந்தச்சரித்திரத்தை நித்தியமாகக்கேட்பவனும் படிப்பவனும் கௌதமரென்னும் ப்ராம்மணர்போலவே பிரம்மலோகத்தையடைவார்'' என்றார்.

---

## நூற்றுமூபதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உபவாஸத்தின்சிறப்பையும் பிராம்மணவாக்கின் சிறப்பையும்பற்றி, ப்ரம்மதேவருக்கும் பகீரதனுக்கும் ஸம்பாஷணை.)

யுதிஷ்டிரர், "பலவகைத்தானங்களையும் சாந்தியையும் ஸத்தியத்தையும் அஹிம்ஸையையும் தன்மனைவியோடு திருப்தியாயிருப்பதையும் தானங்களின்பலன்களையும்பற்றி நீர் சொன்னீர். தவத்தின்

வன்மையைவிடவேறுஎந்தவன்மை பிதாமஹருக்குத்தெரிந்தது? தவத்திற்குமேலாக எதை நீர் நினைக்கிறீர்? அதை எங்களுக்கு உரைக்கக் கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"யுதிஷ்டிரனே! தவமுள்ளவரையில்தான் உலகமிருக்கும். குந்திபுத்திரனே! உபவாஸத்திற்குமேற்பட்டதவம் இல்லையென்பது என் கருத்து. இந்தவிஷயத்தில் பகீரதனுக்கும் மகாத்மாவானபிரம்மதேவருக்கும்நடந்த ஸம்பாஷணையாகிய ஒருபழைய சரித்திரத்தைக் கூறுகின்றனர். அதைச் சொல்லுகிறேன். பாரதனே! அந்தப்பகீரதன் தேவலோகத்தையும் கோலோகத்தையும் ரிஷிலோகத்தையும் கடந்து சென்றானென்று கேள்வி. ராஜனே! பிரம்மதேவர் அந்தப்பகீரதனைக்கண்டு, 'பகீரதா! அடையமுடியாதஇந்தஉலகத்திற்கு நீவந்தது எப்படி? பகீரதனே! தவம்செய்யாமல் தேவர்களும் மனிதர்களும் கந்தர்வர்களும் இங்கே வருவதில்லையே? நீ எப்படிவந்தாய்?' என்று கேட்டார். பகீரதன், 'ஓ! வித்வானே! ப்ராம்மணபூஜையை எப்போதும் விரதமாகக்கொண்டு நூறாயிரம்ப்ராம்மணர்களுக்கும் தேவர்களுக்கும் கலங்காமல் அன்னமளித்தேன். அதற்காக நான் இங்கே வரவில்லை. ஏகராத்ரமென்னும் யாகங்கள்பத்தையும் பஞ்சராத்ரமென்னும்யாகங்கள்பத்தையும் ஏகாதசராத்ரயாகங்கள்பதினொன்றையும் ஜோதிஷ்டோமம்நூற்றையும் நான் செய்தேன். அவற்றிற்காகவும் நான் இங்கேவரவில்லை. நூறுவருஷகாலம் தவம்செய்துகொண்டு கங்கைக்கரையில் நித்தியமாக வாஸம்செய்தேன். அங்கே, ஆயிரம் கோவேறுகழுதைகளையும் கன்னிகைகளையும் தானம்செய்தேன். அதனாலும் இங்கேவரவில்லை. புஷ்கரக்ஷேத்திரத்தில் நூறாயிரம்குதிரைகளையும் இரண்டுலக்ஷம்கோக்களையும் நூற்றுக்கணக்கும்ஆயிரக்கணக்குமான ப்ராம்மணர்களுக்குக் கொடுத்தேன். பொன்மயமானசந்திரனென்னும்ஆபரணத்தைச்சிரஸில்தரித்த ஆயிரம்சிறந்தகன்னிகைகளையும் சிறந்தபொன்னாபரணங்கள்பூண்டஅறுபதினாயிரம்கன்னிகைகளையும் கொடுத்தேன். அதனாலும் வரவில்லை. லோகநாதரே! கோஸவமென்னும்யாகங்களில் ஒவ்வொருவருக்கும்பத்துப்பத்துப்பசுக்களாக ஒத்தகன்றுள்ளவையும் நிரம்பப்பாலுள்ளவையுமான நூறுகோடிபசுக்களைக் கறக்கிறபொன்பாத்திரங்கள் வெண்கலப்பாத்திரங்களுடன் தானம்செய்தேன். அதனாலும் வரவில்லை. பிரம்மாவே! அப்தோர்யாமயாகங்களில் நியமத்துடன் ஒவ்வொருவருக்குப் பத்துப்பத்துப் பசுக்கள்விகிதமாக மிகுதியாகப்பால்கறப்பவையும் செந்நிறமுள்ளவையுமான தலையீற்றுப்பசுக்கள் அநேகம்நூறுகளையும் நூறாயிரங்களையும்

அதற்குப்பத்துமடங்கு (அதாவது பத்துலக்ஷங்களையும்) கொடுத்தேன். அதனாலும் நான் இங்கேவரவில்லை. பாஹ்லியென்னும்தேசத்திற்பிறந்தவையும் பொன்மாலைகளணிந்தவையுமான பதினாயிரம் வெள்ளைக்குதிரைகளைக் கொடுத்தேன். அதனாலும் வரவில்லை. பிரம்மாவே! ஒவ்வொருயாகத்திலும் தினந்தோறும் பத்துக்கோடிகளும் எட்டுக்கோடிகளுமாகப் பொன்களைக் கொடுத்தேன். அதற்காகவும் நான் வரவில்லை. பிரம்மாவே! பொன்மாலைகளணிந்தவையும் காது கறுத்தவையும் பச்சைநிறமுள்ளவையுமான குதிரைகள் பதினேழு கோடிகளைக் கொடுத்தேன். கலப்பைக்கால்போன்றதந்தங்களுள்ளவையும் பெரியதேகங்களுள்ளவையும் பத்மகங்களென்னும்வெள்ளைப் பொட்டுக்களுள்ளவையுமான பதினேழாயிரம்யானைகளைப் பொன்மாலைகள்பூட்டிக் கொடுத்தேன். தேவஸ்ரேஷ்டரே! உயர்ந்தபொன்னாபரணங்களினால் அலங்கரிக்கப்பட்டவையும் முழுதும்பொன்னாற் செய்யப்பட்டவையும் அலங்கரிக்கப்பட்ட குதிரைகள்பூட்டப்பட்டவையுமான பதினேழாயிரந்தேர்களைக் கொடுத்தேன். தக்ஷிணைகளைச் சேர்ந்தவைகளாக வேதங்களிற்சொல்லப்பட்டவை இன்னும்என்னவுண்டோ அவற்றையெல்லாம் பத்துவாஜபேயயாகங்களிற்கொடுத்தேன். பிரம்மதேவரே! யாகத்தினாலும் பராக்கிரமத்தினாலும் இந்திரனுக்குச்சமமானமகிமையுள்ளவர்களும் கழுத்துக்களிற்பொன்மாலைஅணிந்தவர்களுமாகிய ராஜகுமாரர்கள்ஆயிரவரை யுத்தத்தில்ஜயித்து நிரம்பினதிரவியங்களோடு எட்டுராஜஸூயயாகங்களைச்செய்து அவற்றில் அவ்வரசர்களைத் [1]தக்ஷிணைகளாகக்கொடுத்தேன். அதனாலும் நான்வரவில்லை. லோகநாதரே! கங்கையின்பிரவாகம் எதுவரையில்இருக்கிறதோ அதுவரையிலுள்ளதேசம் நான்கொடுத்ததக்ஷிணைகளினால் மறைந்திருந்தது. அதற்காகவும் நான்வரவில்லை. ஒவ்வொன்றும்நூறுபொன்களால்அலங்கரிக்கப்பட்டகுதிரைகள்இரண்டாயிரத்தையும் சிறந்தகிராமங்கள் நூற்றையும் ஒவ்வொருதிதியிலும் நான் கொடுத்தேன். பிதாமஹரே! நான் தேகத்தையொடுக்கி ஆகாரத்தைவிட்டு மனத்தையும்வாக்கையுமடக்கி நீண்டகாலம் இமயமலையில் கங்கைக்காகத் தவம்செய்தேன். அரசனாகியநான் மகாதேவரான சங்கரரைத் தலையினால்வணங்கிப் பூஜித்தேன். அதற்காகவும் வரவில்லை. தேவரே! சமியென்றுசொல்லப்படும்வன்னிமரங்களைக்கொண்டுவந்து அவற்றினின்றுண்டான அக்கினியினால் தேவர்களைக்குறித்து நூற்றுக்

1 ப்ராம்மணர்களுக்குத் தங்கள்தங்கள் கிரயத்தைக்கொடுத்து அவரவர் தேசங்களுக்குத் திரும்பிச்செல்லும்படி செய்வது.

கணக்கும் பதினாயிரக்கணக்குமான திரயோதசாஹம் துவாதசாஹம் பௌண்டரீகம்என்னும்யாகங்களைச் செய்தேன். அவற்றின்பலனுக்காகவும் வரவில்லை. ப்ராம்மணர்களுக்குப் பெருங்கொண்டைகளுள்ளவையும் ஒவ்வொருகொம்பும் பொன்னாலணியப்பட்டவையுமான எண்ணாயிரம்வெள்ளைரிஷபங்களையும்அவைகளுக்குப்பத்நிகளும் கழுத்திற்பொன்மாலையணிந்தவைகளுமானபசுக்களையும் கொடுத்தேன். பொற்குவியல்களையும் ரத்தினக்குவியல்களையும் ரத்தினக்குன்றுகளையும் தனங்களும்தானியங்களும்நிரம்பின நூற்றுக்கணக்கும் ஆயிரக்கணக்குமானகிராமங்களையும் தலையீற்றுப்பசுக்கள்பதினாயிரத்தையும் அநேகயாகங்களில் ஓயாமல் ப்ராம்மணர்களுக்குக் கொடுத்தேன். அதனாலும் வரவில்லை.தேவரே! பிரம்மாவே! [1]ஏகாதசாஹம் [2]த்விர்த்வாதசாஹம் அஸ்வமேதயாகங்களையும் ஒவ்வொருவருக்குப்பதினாறுகோதானங்களோடும் நிரம்பின தக்ஷிணைகளோடும் செய்தேன்.அவற்றின்பலனுக்காகவும் வரவில்லை. இரத்தினங்களினால்அலங்கரிக்கப்பட்டு ஒவ்வொன்றும் ஒவ்வொருபொன்மாலைகழுத்தில்அணிந்த பொன்மாமரங்களுள்ளதும் ஒருயோஜனைநீளமும் அவ்வளவுஅகலமுமுள்ளதுமானவனத்தை ப்ராம்மணர்களுக்குத் தானம்செய்தேன். அதன் பலனுக்காகவும் நான்வரவில்லை. முப்பதுவருஷகாலம் கோபத்தை விட்டு யாவராலும்செயற்கரியதான துராயணமென்னும்யாகத்தை விடாமல் அனுஷ்டித்தேன். ஒவ்வொருநாளும் நூறும்எண்ணூறுமாகப் பால்நிரம்பினசிவப்புப்பசுக்களையும் அவ்வளவுவிருஷபங்களையும் ப்ராம்மணர்களுக்குக் கொடுத்தேன். லோகநாதரே ! தேவஸ்ரேஷ்டரே ! அதன்பலனுக்காகவும் நான்இங்கேவரவில்லை. யாகம்செய்வதற்கு வன்னிமரம் தேடிக்கொண்டு பூமியெல்லாம் மூன்றுதரம்திரிந்தேன் பிரம்மாவே ! தினந்தோறும் முப்பதுஅக்கினிகளில் ஹோமம் செய்தேன். எட்டுஸர்வமேதயாகங்களும் ஏழுநரமேதயாகங்களும் ஆயிரத்துப்பதினெட்டு விஸ்வஜித்யாகங்களும் செய்தேன்.தேவஸ்ரேஷ்டரே ! அவற்றின்பலனுக்காகவும் நான் இங்கேவரவில்லை. ஸரயுநதியிலும் பாஹுதாநதியிலும் கங்கையிலும் நைமிசாரண்யத்திலும் பத்துலக்ஷம்பசுக்களைத் தானம்செய்தேன். அதனாலும் வரவில்லை. சிறந்தவரே ! ஒருரஹஸ்யம் இந்திரனால் குகைக்குள் மறைத்துவைக்கப்பட்டிருக்கிறது. அதை இவ்வுலகத்தில் பரசுராமர் தவத்தினால் அறிந்தார். சுக்கிரருடையபலத்தினால் பிரகாசிக்கின்ற அந்த [3]ரஹஸ்யத்

---

1 பதினொருதினத்திற் செய்வது. 2 இருபத்துநான்குதினத்திற்செய்வது.
3 உபவாஸத்தை.

தை நான் அநுஷ்டித்தேன். நான்யுத்தம்செய்ததும் மற்றக்கர்மங்கள்செய்ததும் ப்ராம்மணர்களுக்காகவே. அந்தக்காரியத்தை நான் ஸாதித்தபிறகு அதனால் ப்ராம்மணர்கள் என்மேல் ஸந்தோஷமடைந்தனர். அவ்வாறு ப்ராம்மணர்களை நித்தியமாகப்பூஜித்ததனாலும்நான் வரவில்லை. இன்னும் ஆயிரம்ரிஷிகள் அங்கேவந்துசேர்ந்தனர். பிரபுவே! அவர்களால், 'நீ பிரம்மலோகம்செல்' என்றுசொல்லப்பட்டேன். பிரபுவே! ஆயிரம்ப்ராம்மணர்கள் அநுக்கிரஹத்துடன்சொன்னதனால் இவ்வுலகத்திற்கு வந்தேன். இவ்விஷயத்தில் உமக்குச் சந்தேகமும்வேண்டாம். எல்லாம் பிரம்மதேவரால்விதிக்கப்பட்டபடி தான் நடக்கிறது. ஆகிலும், கேட்டபோது நான் நடந்ததைச் சொல்ல வேண்டும். உபவாஸத்தைவிட வேறுதவம் இருப்பதாக நான் நினைக்கவில்லை. தேவஸ்ரேஷ்டரே! உமக்குநமஸ்காரம், தயைசெய்யும்' என்றுசொன்னான். இவ்வாறுசொன்ன பூஜைக்குரிய பகீரதராஜனைப் பிரம்மதேவர் சாஸ்திரோக்தமானபூஜையினால் பூஜித்தார். ஆதலால், உபவாஸமிருந்து ப்ராம்மணர்களை எப்போதும் பூஜிப்பாயாக. ப்ராம்மணர்களின்சொல்லினால் இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும் எல்லாம் கூடிவரும். வஸ்திரங்களினாலும் அன்னங்களினாலும் கோக்களினாலும் சிறந்தகிருகங்களினாலும் நன்றாகக்காப்பாற்றுதலாலும் ப்ராம்மணர்களை ஸந்தோஷப்படுத்தவேவேண்டும். இதுதான் பெரிய ரஹஸ்யம். லோபத்தைவிட்டு இதைச்செய்" என்றார்.

---

## நூற்றுப்பத்தோராவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(ஆயுள்விருத்திமுதலிய நன்மைகளுக்குக் காரணமான ஆசாரங்கள்.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! ஒருமனிதன் நூறுவருஷகாலம் ஆயுளுள்ளவனென்றும் நூறுவருஷகாலம் சக்தியுள்ளவனென்றும் வேதம் கூறுகிறது. மனிதர்கள் சிறுவராயிருக்கையிலும் இறந்துபோவது ஏன்? மனிதன் தீர்க்காயுளுள்ளவனாயிருப்பதும் அற்பஆயுளுள்ளவனாயிருப்பதும் எதனால்? எதனால் கீர்த்தியையடைகிறான்? எதனால் ஐசுவரியத்தையடைகிறான்? தவத்தினாலா? பிரம்மசாரிவிரதத்தினாலா? ஜபத்தினாலா? ஹோமத்தினாலா? ஜன்மத்தினாலா? ஆசாரத்தினாலா? மற்றெவற்றினாலாவதா? பிதாமஹரே! அதனை எனக்குச் சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"நீ 'மனிதன் எதனால் குறைந்தஆயுளுள்ளவனாகிறான்? எதனால் நீண்டஆயுளுள்ளவனாகிறான்? எதனால் கீர்த்தியையடைகிறான்? எதனால் ஐசுவரியத்தையடைகிறான்? எவ்விதமாகநடக்கும்மனிதன் நன்மையையடைவான்?' என்றுகேட்கும்விஷயத்தில் மறுமொழிகூறுவேன். மனிதன் நல்லொழுக்கத்தாலேதான் ஆயுளையடைகிறான். ஆசாரத்தினாலேதான் ஐசுவரியத்தையடைகிறான். ஆசாரத்தினாலேதான் இருந்தும் இறந்தும் கீர்த்தியையடைகிறான். ஆசாரங்கெட்ட மனிதன் இவ்வுலகத்தில் நீண்டஆயுளை அடைவதில்லை. மனிதர்கள் அவனிடத்தில் பயப்படுகிறார்கள்; அவனை அவமதிக்கிறார்கள். ஆதலால், இவ்வுலகத்தில் தனக்குமேன்மையைவிரும்புகிறவன் ஆசாரத்தைச்செய்யவேண்டும். பாவஜன்மமெடுத்தவனுக்கும் ஆசாரம் அபகீர்த்தியைப் போக்கும். ஆசாரத்தினாலறியப்படுவது தர்மம். நல்லொழுக்கத்தையடையாளமாகவுடையவர்கள் ஸாதுக்கள். ஸாதுக்களின் நடக்கைதான் ஆசாரத்திற்கு அடையாளம். தர்மத்தைவிடாமல்தனக்குரியகர்மங்களைச்செய்யும் மனிதன் பார்க்கப்படாதவனாயிருந்தாலும் கேட்டவுடன் அவன்மேல் ஜனங்கள் அன்புவைக்கின்றனர். நாஸ்திகர்களும் கர்மங்களைச்செய்யாதவர்களும் குருக்களையும் சாஸ்திரங்களையும்மிஞ்சிநடப்பவர்களும் தர்மந்தெரியாதவர்களும் கெட்டஒழுக்கமுள்ளவர்களும் ஆயுள்குறைந்துபோகின்றனர். ஒழுக்கமில்லாதவர்களும் வரைகடந்தவர்களும் ஜாதிதப்பிப்புணர்ச்சிசெய்கிறவர்களுமானமனிதர்கள் இவ்வுலகத்தில் ஆயுள்குறைந்துநரகம்போகிறவராகிறார்கள். ஆசாரத்தைவெறுமல் சிரத்தையோடுசெய்துகொண்டிருக்கும்மனிதன் மற்றெல்லாநற்குணங்களுமில்லாதவனாயினும் நூறுவருஷம் ஜீவித்திருப்பான். கோபத்தையும் பிராணிஹிம்ஸையையும் பொறாமையையும் கபடத்தையும்விட்டு ஸத்தியவாதியாயிருப்பவன் நூறு வருஷங்கள் ஜீவிப்பான். ஓடுகளையுடைப்பவனும் துரும்பைக்கிள்ளுகிறவனும் நகத்தைக்கடிப்பவனும் எப்போதும்அசுத்தனாயிருப்பவனும் சஞ்சலமுள்ளவனும் இவ்வுலகத்தில் தீர்க்காயுளையடையார். 1 பிராம்மமுகூர்த்தத்தில்விழித்துக்கொண்டு அறத்தையும்பொருளையும்பற்றி ஆராய்ந்துபார்க்கவேண்டும். எழுந்துகைகூப்பிக்கொண்டு காலைஸந்தியைப் பூஜிக்கவேண்டும். இவ்வாறு, மௌனத்துடன் மாலைஸந்தியையும் பூஜிக்கவேண்டும். உதயகாலத்திலும் அஸ்தமனகாலத்திலும் ஆகாசத்தின் உச்சியிலிருக்கும்போதும் கிரகணம்பிடித்தபோதும் ஜலத்தின்பிரதிபிம்பத்திலும் ஒருகாலும் சூரியனைப் பார்க்க

1 விடியமுன்நேமுக்கால் நாழிகையளவில்.

லாகாது. ஸந்தியாகாலம்தவறுதிருந்ததனால் ரிஷிகள் தீர்க்காயுளை அடைந்தனர். கையில் தர்ப்பத்தைப்போட்டுக்கொண்டு மௌனத்துடன் பரிசுத்தனாகி மனத்தில்அதையேதியானித்து ஸந்தியாவந்தனம் செய்யவேண்டும். ஆதலால், தினந்தோறும் காலைச்சந்தியிலும் மாலைச்சந்தியிலும் மௌனத்தோடிருக்கவேண்டும். தர்மத்தைச் செய்யுமரசன் காலைச்சந்தியையும் மாலைச்சந்தியையும் பூஜிக்காமலிருக்கும்பிராம்மணரனைவரையும் சூத்திரனுக்குரியவேலைகளைச் செய்விக்கவேண்டும். எந்தவர்ணத்தாரும் ஒருகாலும் பிறன்மனைவியைச் சேரலாகாது. அதைப்போல ஆயுளைக்கெடுப்பது உலகத்தில் ஒன்றுமில்லை. இவ்வுலகத்தில் பிறர்மனைவியைச்சேருவதுபோல ஆயுளைக்குறைப்பது மற்றெதுவுமில்லை, ஸ்திரீகளின்உடம்புகளில் எத்தனை மயிர்க்கால்கள்படைக்கப்பட்டிருக்கின்றனவோ அத்தனை ஆயிரவருஷகாலம் அவன் நரகத்தில்கிடப்பான். சூரியபூஜையையும் அலங்காரத்தையும் ஸ்நானத்தையும் மையிடுவதையும் பல்துலக்குவதையும்தேவதாபூஜையையும் முற்பகலிலேயே செய்யவேண்டும். விஷ்டையையும் மூத்திரத்தையும் பார்க்கவும் மிதிக்கவுமாகாது. அதிகாலையிலேயும் நன்றாக அஸ்தமித்தபின்னும் நடுப்பகலிலும் அறியாதவர்களோடும் சூத்திரர்களோடும் சேர்ந்தும் தனித்தும் செல்லலாகாது. பிராம்மணனுக்கும் பசுவுக்கும் அரசனுக்கும் கிழவனுக்கும் சுமையினால் வருந்துகிறவனுக்கும் கர்ப்பிணிக்கும் சக்திகுறைந்தவனுக்கும் வழிவிடவேண்டும். பிரஸித்திபெற்றமரங்களையும் நாற்சந்திகளையும் மங்களத்திரவியங்களையும் பூஜிக்கத்தக்கவரையும் முதிர்ந்தவரையும் பிராம்மணரையும் பிரதக்ஷிணம்செய்யவேண்டும். நடுப்பகலிலும் இரவில்நடுநிசியிலும் இரண்டுசந்திகளிலும் நாற்சந்தியிலுமிருக்கலாகாது. பிறர்உபயோகித்த பாதரக்ஷைகளையும் ஆடையையும் உபயோகிக்கலாகாது. எக்காலமும் ஜிதேந்திரியனாயிருக்கவேண்டும். ஒருகாலை மற்றொருகாலால் மிதிக்கலாகாது. அமையிலும் பூர்ணிமையிலும் சதுர்த்தசியிலும் ஜன்மதினத்திலும் அஷ்டமியிலும் துவாதசியிலும் எப்போதும் பிரம்மசாரியாயிருக்கவேண்டும். (யாகமுதலியவைசெய்யாமல்) வீணாக மாம்ஸத்தை உண்ணலாகாது. முதுகு மாம்ஸத்தைப் புசிக்கலாகாது. திட்டுவதையும் தூஷிப்பதையும் கோட்சொல்லுவதையும் விடவேண்டும். புண்ணிற் கோலிடுவதுபோல ஒருவர்நோகும்படி பேசலாகாது. கடுஞ்சொற்சொல்லலாகாது. தாழ்ந்தவனிடத்தில் [1]உயர்ந்ததைப் பெறலாகாது. எந்தச்

[1] ஞானத்தை.

சொல்லினால் அயலான் வருத்தப்படுவானே பாபலோகத்தைத்தருவ தான அந்தக்கொடியசொல்லைச் சொல்லலாகாது. வாயினின்றும் அதிவாதங்கள் அம்புகளாகவெளிப்படுகின்றன. அவற்றினாலடிக்கப் பட்டவன் அல்லும்பகலும் அழுகிறான். அவை அயலானுடைய உயிர்ஸ்தானங்களிலேயே விழுகின்றன. தெரிந்தவன் அவற்றை அய லார்மேல் பிரயோகிக்கலாகாது. தீயினாற்சுட்டபுண் ஆறும். கோடா லியினால்வெட்டப்பட்டவனம் தளிர்க்கும். வாக்கினால் அருவருப் பானகெட்டசொல்லைச் சொன்னதனாலுண்டான சொற்புண்ணானது ஆறுகிறதேயில்லை.கர்ணிகளென்னும்பாணங்களையும் நாளீகங்களையும் நாராசபாணங்களையும் தேகத்தினின்று எடுத்துவிடுகின்றனர். சொல் லம்பானது எடுப்பதற்குமுடியாதது. ஏனெனில், அது மனத்திற் குள்ளேதைத்திருப்பது. அங்கங்கள்ஏற்றக்குறைவுகளாயிருப்பவரையும் கல்வியில்லாதவரையும்பிராயமுதிர்ந்தவரையும் அழகும்தனமுமில்லா தவரையும் ஸத்தியம்தவறினவரையும் தூஷிக்கலாகாது. நாஸ்திகத் தனத்தையும் வேதத்தைநிந்திப்பதையும் அயலாரைத்திட்டுவதையும் இழிவாகப்பேசுவதையும் பகையையும் இறுமாப்பையும் அகங்காரத் தையும் கொடுமையையும் விடவேண்டும். புத்திரன் சிஷ்யன்இவர் களைத்தவிர மற்றவரைப்பார்த்துத் தடியையோங்கலாகாது. கோபத் தினால் அவர்களை அடிக்கவுமாகாது. அடிப்பதானது திருத்துவதற் காகவிதிக்கப்பட்டது. பிராம்மணர்களைத் தூஷிக்கலாகாது. நக்ஷத் திரங்களைக் காட்டலாகாது. பக்ஷத்தின்திதியைச் சொல்லலாகாது. இப்படியிருந்தால் ஆயுள்குறையாது. அமாவாஸைதவிரமற்றவெவ் வொருநாளும் பல்துலக்கவேண்டும். தினந்தோறும் வேதத்தையும் இதிஹாஸபுராணங்களையும் படிக்கவேண்டும்; தானம்செய்யவேண் டும். ஒவ்வொருநாளும் ஸந்தியாகாலத்தில் நியமத்துடன் காயத்ரி ஜபம்செய்யவேண்டும். ஜலமலவிஸர்ஜனம்செய்தபிறகும், வீதியை மிதித்தபிறகும் வேதாத்யயனத்திற்கும் போஜனத்திற்கும்முன்னும் கால்அலம்பவேண்டும். பிறரால்பார்க்கப்படாததும்ஜலத்தினால்அலம் பப்பட்டதும் வாக்கினால்புகழப்பட்டதுமாகிய இம்மூன்றுபரிசுத்தங் களையும் பிராம்மணர்களுக்குத் தேவர்கள் ஏற்படுத்தியிருக்கின்றனர். யவை அரிசிச்சோறு க்ருஸரம் மாம்ஸம் முறுக்கு பாயஸம் இவற்றைத் தேவதைக்காகவே செய்யவேண்டும்; தனக்காகச் செய்யலாகாது. நித்தியமும் அக்நிஹோத்திரம் செய்யவேண்டும்; பிக்ஷைபோட வேண்டும். பல்துலக்கும்போதும் ஸந்தியாவந்தனத்திலும் மலவிஸர் ஜனகாலத்திலும் மௌனமாயிருக்கவேண்டும். சூரியோதயமான

பின் படுத்திருக்கலாகாது. அப்படியிருந்தால் பிராயச்சித்தத்திற்கு உரியவனுவான். தூங்கிஎழுந்தவுடன் தாய்தந்தையரை முதலிலும் பிறகு ஆசாரியனையும் வேறுபெரியோரையும் வந்தனம்செய்யவேண்டும். அதனால், தீர்க்காயுளை அடைவான். சாஸ்திரத்திற்குவிலக்கான பற்கொம்புகளை எப்போதும் விட்டுவிடவேண்டும். சாஸ்திரத்தில்விதிக்கப்பட்டவற்றை உபயோகிக்கவேண்டும். அவற்றையும் அமாவாஸை முதலியகாலங்களில் விடவேண்டும். எப்போதும் ஜாக்ரதையுடன் வடக்குமுகமாகவே சௌசம்செய்யவேண்டும். விருக்ஷதேவதையைப்பூஜைசெய்யாமல் தந்ததாவனம் செய்யலாகாது. ஆசார்யர் முதிர்ந்தவர் தர்மிஷ்டர் கற்றறிந்தவர் இவர்களைத்தவிர மற்றவர்களிடம் தேவபூஜையைச்செய்யாமல் ஒருகாலும் போகலாகாது. புத்திமான்களிற்சிறந்தவர்கள் அழுக்கடைந்தகண்ணுடியைப் பார்க்கலாகாது. தனக்குத்தெரியாதஸ்திரீயையும் கர்ப்பிணியையும் ஒருகாலும் சேரலாகாது. தெரிந்தவன் மனைவியாக விவாகம்செய்துகொள்வதற்குமுன் புணர்ச்சிசெய்யலாகாது. இதற்குமாறுயின் [1]அவகீர்ணியாவான். அப்போது, அவன் பிராயச்சித்தம்செய்துகொள்ளவேண்டும். பிறர்மனைவிகளை நோக்கலாகாது. ஏகாந்தத்தில் அவர்களுடன் ஓர் ஆஸனத்திலிருக்கலாகாது. ஐம்புலன்களையும் எப்போதும் அடக்கவேண்டும். கனவிலும் மனம் சுத்தமாயிருக்கவேண்டும். தெரிந்தவன் வடக்கும் மேற்கும் தலைவைத்துட்படுக்கலாகாது; கிழக்கும் தெற்கும் தலைவைத்துப் படுக்கலாம். உடைந்ததும் தள்ர்ந்ததுமான படுக்கையில் படுக்கலாகாது. மறைவானவிடத்திலும் ஜனங்களுள்ளவிடத்திலும் குறுக்காகவும் ஒருகாலும் படுக்கலாகாது. காரியத்திற்காகவாவது உடன்படிக்கையினலாவது நாஸ்திகர்களுடன் சேர்ந்து போகலாகாது. மனிதன் ஆஸனத்தைக் காலால்இழுத்துக்கொண்டு உட்காரலாகாது. வஸ்திரமில்லாமல் ஒருகாலமும் ஸ்நானம்செய்யலாகாது. ராத்திரியில் ஸ்நானம்செய்யலாகாது. மிகத்தெரிந்தவன் ஸ்நானம்செய்தபிறகு உடம்பைத் தேய்க்கலாகாது. ஆபத்தில்ராத்ரியில் ஸ்நானம்செய்யநேர்ந்தால் அக்னியையாவது பிராம்மணனையாவது அருகில்வைத்துக்கொண்டு ஸ்நானம்செய்யவேணடும். ஸ்நானம்செய்யாமல் சந்தனம்பூசிக்கொள்ளவும் சுத்தவஸ்திரத்தை உடுக்கவுங் கூடாது. மனிதன் எப்போதும் ஸ்நானம்செய்துதான் வஸ்திரங்களை உடுக்கவேண்டும். பூமாலைகளைத் தொங்கவிடவும் வெளிப்படச்சூட்டிக்கொள்ளவுங்கூடாது. தாரஸ்திரீயுடன் ஒருகாலும் ஸம்பாஷணை

[1] ப்ரம்மசாரிவிரதம் தவறினவன்.

செய்யலாகாது. வயலிலும் வழியினருகிலும் மலவிஸர்ஜனம் செய்ய லாகாது. ஜலத்திலும் தேவாலயத்திலும் பசுக்கூட்டத்திலும் நாற் சந்தியிலும் பயிர்களிலும் ஜனங்கள் தங்குமிடத்திலும் ஒருபோதும் மலமூத்திரவிஸர்ஜனங்களைச் செய்யலாகாது. போஜனத்திற்கும் தும்மலுக்கும் வழிநடைக்கும் மலமூத்திரவிஸர்ஜனத்திற்கும் பிறகு சாஸ்திரப்பிரகாரம் இரண்டுமுறை ஆசமனம்செய்யவேண்டும். மார்பி னுள்படும்படி ஜலத்தை ஆசமனம்செய்யவேண்டும். அன்னம்புசிப்ப தற்குமுன்னும் பின்னும் மும்மூன்றுமுறை ஜலத்தை ஆசமனம் செய்யவேண்டும். இரண்டுதரம் வாயைத்துடைக்கவேண்டும். எப் போதும் மௌனத்தோடு கிழக்குமுகமாக அன்னத்தைத்தூஷிக்கா மல் சாப்பிடவேண்டும். மனப்பூர்வமாய்ச் சிறிது எறியவேண்டும். புசித்தபிறகு [1]அக்நியைத் தொடவேண்டும். கிழக்குமுகமாகப்புசிப் பது ஆயுளையும் தெற்குமுகமாகப்புசிப்பது புகழையும்மேற்குமுக மாகப்புசிப்பது தனத்தையும் வடக்குமுகமாகப்புசிப்பது நல்வினைப் பயனையும் கொடுக்கும். அக்நிஹோத்ரம்செய்தபின் கோபத்தைவிட் டுச் சிறுவர்களை முதலில்புஜிப்பித்து அலங்காரம்செய்துகொண்டு உய ர்ந்த ஆஸனத்தில்உட்கார்ந்து நெய்விட்டதினால்பரிசுத்தமான அன்னத் தைப்போட்டு விழுங்கவேண்டும். பிறகு, அக்நியைத்தொட்டு, ஜல த்தினால் எல்லாஇந்திரியங்களையும் எல்லாஅவயவங்களையும் நாபியை யும் உள்ளங்கைகளையும் துடைக்கவேண்டும். உமி, மயிர், சாம்பல், மண்டையோடுகள்இவற்றை ஒருகாலும் மிதிக்கலாகாது. அயலான் ஸ்நானம்பண்ணினஜலத்தைத் தூரத்தில்விடவேண்டும். பாவம்போவ தற்குரியஹோமங்களைச் செய்யவேண்டும். சூரியனைப்பற்றியமந்தி ரங்களைச் சொல்லவேண்டும். உட்கார்ந்தே சாப்பிடவேண்டும்; ஒரு போதும் நடந்துகொண்டு சாப்பிடலாகாது. நின்றுகொண்டு மூத்தி ரத்தைவிடக்கூடாது; சாம்பலிலும்பசுக்கூட்டத்திலும்விடக்கூடாது. ஈரக்காலுடன் புசிக்கவேண்டும்; ஈரக்காலுடன்படுக்கலாகாது. ஈரக் காலுடன்புசிப்பவன் நூறுவருஷம் ஜீவித்திருப்பான். அக்னி பசு பிராம்மணன்இம்மூன்றுதேஜஸுகளையும் அசுத்தனாயிருந்து ஒரு போதும் தொடக்கூடாது. அப்படியிருந்தால் ஆயுள்குறையாது. சூரி யன் சந்திரன் நக்ஷத்திரங்கள்ஆகியமூன்றுவகைஒளிகளைச் சுத்தனா யிராமல் பார்க்கவேகூடாது. கிழவன்வரும்போது சிறுவனுடைய உயிர் மேல்நோக்கிச் செல்லுகிறது. எதிர்கொண்டெழுந்திருப்பத னாலும் அபிவாதனம்செய்வதனாலும் அவன் அந்தஉயிரைத் திரும்ப

[1] தணர்க்குட்டில் கையைக் காய்ச்சிக்கொள்ளவேண்டும் என்பது.

வும் பெறுகிறான். விருத்தர்களை அபிவாதனம் செய்யவேண்டும். தானே அவர்களுக்கு ஆஸனம்போடவேண்டும். கைகூப்பிக் காத்திருக்கவேண்டும். போகும்போது பின்செல்லவேண்டும். உடைந்தஆசனத்தில் உட்காரலாகாது. உடைந்த வெண்கலப்பாத்திரத்தைத் தள்ளிவிடவேண்டும். ஒற்றைவஸ்திரத்துடன் புசிக்கலாகாது. வஸ்திரமில்லாமல் ஸ்நானம்செய்யத்தகாது. வஸ்திரமில்லாமலும் சுத்தமில்லாமலும் படுக்கவும் தூங்கவும்கூடாது. அசுத்தனாகத் தலையைத்தொடலாகாது. இந்திரியங்களெல்லாம் அதிலிருப்பவை. மயிரைப்பிடிப்பது தலையிலடிப்பது இவற்றை விட்டுவிடவேண்டும். இரண்டு கைகளையும் சேர்த்துக்கொண்டு தன்தலையைச் சொறியலாகாது. அடிக்கடி தலைக்குஸ்நானம்செய்யலாகாது. அப்படியிருந்தால் ஆயுள் குறையாது. தலைக்குஸ்நானம்செய்தபிறகு அங்கத்தில் எவ்விடத்திலும் எண்ணெய்படக்கூடாது. ஸாரமெல்லாம்போனஎள்பிண்ணாக்கைப்புசிக்கலாகாது. அசுத்தனாயிருப்பவன் ஒருபோதும் ஓதுவிக்கவும் ஓதவும்ஆகாது. காற்றடிக்கும்போதும் துர்நாற்றமிருக்கும் போதும் மனத்திலும் வேதத்தைநினைக்கலாகாது. பூர்வவிருத்தாந்தம்தெரிந்தவர்கள்இந்தவிஷயத்தில் யமனாற்சொல்லப்பட்டஸ்லோகங்களைச் சொல்லுகின்றனர் ;(அவற்றின்பொருள்,) 'எவன் அசுத்தனாக ஓடுகிறானோ, எவன் அசுத்தனாக வேதாத்யயனம்செய்கிறானோ, அவர்களுடையஆயுளை (முறையே) அறுக்கிறேன்; புத்தியைஎடுத்துவிடுகிறேன். எந்தப்பிராம்மணன் அறிவின்மையினால்ஓதாதநாளில் அத்யயனம்செய்கிறானோ அவனுக்கு வேதமும் போய்விடும் ; ஆயுளும் குறைந்துபோகும்' என்பது. ஆதலால், ஜாக்கிரதையோடு ஓதாத நாளில் ஒருநாளும் ஓதவேண்டாம். சூரியனுக்கும் அக்நிக்கும் கோவுக்கும் பிராம்மணனுக்கும் எதிராகவும்வழியிலும் மூத்திரம்விடுகிறவர்கள் ஆயுள்குறைந்தவராகிறார். மலமூத்திர விஸர்ஜனங்களைப் பகலில்வடக்குமுகமாகவும் இரவில்தெற்குமுகமாகவும் செய்யவேண்டும். அப்படிச்செய்வதால் ஆயுள்கெடாது. தீர்க்காயுளோடுஜீவிக்க விரும்புகிறவன் இளைத்திருக்கும்பிராம்மணன் க்ஷத்திரியன் ஸர்ப்பம் இம்மூவரையும் அவமானம்செய்யலாகாது. இம்மூவரும் ஸர்ப்பங்களே. ஸர்ப்பமானது கோபித்துக் கண்ணினால் எவ்வளவுவரையில் பார்க்கிறதோ அவ்வளவுவரையில் எரித்துவிடும். க்ஷத்திரியன் கோபித்தால் தன்பராக்கிரமம் எதுவரையில்செல்லுமோ அதுவரையில் எரித்துவிடுவான். பிராம்மணன் நினைப்பதனாலும் பார்ப்பதனாலும் குலத்தையே அழித்துவிடுவான். ஆதலால், தெரிந்தவன் இம்

மூவரிடத்திலும் ஜாக்ரதையோடு பழகவேண்டும். யுதிஷ்டிர! ஆசாரியரிடத்தில் விரோதம்பாராட்டுவது எப்போதும்தகாது. கோபித்த குருவை நல்லவார்த்தைசொல்லித் தெளிவிக்கவேண்டும். குரு பிசகாகநடந்தாலும் அவரிடத்தில் ஸரியாகநடக்கவேண்டும். குருவை நிந்திப்பது மனிதர்களின்ஆயுளை எரித்துவிடுமென்பது நிச்சயம். நன்மையைவிரும்புகிறவன் மலமூத்திரங்களையும் எச்சில்களையும்விடுவதையும் காலலம்புவதையும் தன்னிருப்பிடத்திற்குத்தூரத்தில் செய்யவேண்டும். ராஜனே! தெரிந்தவர்கள் சிவப்புமாலைகளை அணியலாகாது. தாமரைகருநெய்தல்களைத்தவிர மற்றவற்றில் வெள்ளைமாலைகளையே தரிக்கவேண்டும். தலையில் சிவப்புப் புஷ்பத்தையும் காட்டுப் புஷ்பங்களையும் சூட்டிக்கொள்ளலாம். சண்பகப்பூமாலைக்கு ஒருகாலும் தோஷமில்லை. ராஜனே! ஒவ்வொருநாளும் ஸ்நானம்செய்த பிறகு புதியசந்தனத்தைப் பூசிக்கொள்ளவேண்டும். புத்தியுள்ள மனிதன் மேல்கீழ்வஸ்திரங்களை மாற்றலாகாது. வேறுஒருவன் உடுத்ததையும் மிகக்கெட்டுப்போனதையும் உடுக்கக்கூடாது. ராஜனே! படுக்கையில்வேறுவஸ்திரமும் வீதியில்போகும்போது வேறுவஸ்திரமும் தேவதாபூஜையில் வேறுவஸ்திரமும் இருக்கவேண்டும். புத்தியுள்ளவன் தினை, சந்தனம், வில்வக்காய், [1]தகரம், சேஸரம், இவற்றைத் தனித்தனியே [2]பூசிக்கொள்ளவேண்டும். ஸ்நானம்செய்து பரிசுத்தனாய் அலங்காரங்களைச்செய்துகொண்டு உபவாஸமிருக்கவேண்டும். வீணாக உபவாஸமிருக்கலாகாது. பிறர்தனத்தைஅபகரிக்கக்கூடாது. அமாவாஸைமுதலிய புண்ணிய காலங்களெல்லாவற்றிலும் பிரம்மசாரிவிரதத்தோடேயே இருக்கவேண்டும். ராஜனே! மற்றொருவனோடு ஒரேகாலத்தில் ஒருபாத்திரத்தில் அன்னத்தைப் புசிக்கலாகாது. உண்டுமிகுந்ததையும் அலக்ஷியமாகப்போட்டதையும் முகரப்பட்டதையும் உண்ணக்கூடாது. ஸாரமெடுத்தவற்றை உண்ணலாகாது. பார்த்துக்கொண்டிருப்பவர்களுக்குக்கொடாமல் உண்ணலாகாது. புத்திசாலியானவன் உட்காராமலும் சுத்தமில்லாமலும் பெரியோர்முன்னிலையிலும் கூடப்புஜிக்கத்தகாதவர்களிடத்திலும் பின்னேவைத்துக்கொண்டும் பக்ஷணங்களைத் தின்னக்கூடாது. க்ஷேமத்தைவிரும்புகிறமனிதன் அரசு, ஆல், சணல், அத்திஇவற்றைத்தின்னலாகாது. ஆடு பசு மயில்இவற்றின்மாம்ஸங்களையும் உலர்ந்தமாம்ஸத்தையும்பழையமாம்ஸத்தையும்விட்டுவிடவேண்டும். தெரிந்தவன் கையில்வைத்து உப்பைச்சாப்பிடலாகாது; இரவிலும் ஆகாது. தயிர்,

---

1 ஒருவாஸனைப்பொருள். 2 ஸ்நானத்திற்குமுன்

கரைத்தமா, தேன் இவற்றை இரவில் ஒருநாளும் குடிக்கலாகாது. நியமமுள்ளவன் காலைமாலைகளில் புசிக்கவேண்டும். இடையில் புசிக்கக்கூடாது. சிறுவனோடு புசிக்கக்கூடாது. பிறருடையசிராத்தசேஷத்தைப் புசிக்கக்கூடாது. மௌனத்தோடிருக்கவேண்டும். ஒற்றைவஸ்திரத்தோடும் படுத்துக்கொண்டும் ஒருபோதும் புசிக்கக்கூடாது. தரையில் ஒருபோதும் புசிக்கலாகாது. சுத்தமில்லாமலும் ஓசையுண்டாகும்படியும் உண்ணலாகாது. ராஜனே! புத்திசாலியானமனிதன் அதிதிகளுக்குத் தீர்த்தத்தைமுன்னிட்டு அன்னங்கொடுத்துப் பிறகு வேறுநினைவில்லாமல் புசிக்கவேண்டும். ராஜனே! ஒருபந்தியில் மற்றவரைப்போலவே தானும் அன்னத்தைப் புசிக்கவேண்டும். வேண்டினவர்களுக்கு அன்னம்போடாமல்புசிப்பவன் ஆலகாலவிஷத்தைப் புசித்தவனாவான். தீர்த்தம், பாயஸம், மா, தயிர், நெய், தேன் இவற்றைத்தவிர மற்றவற்றில் சேஷத்தை யாருக்கும் கொடுக்கலாகாது. புருஷஸ்ரேஷ்டனே! சாப்பிடும்போது ஸந்தேகப்படக்கூடாது. நன்மையைவிரும்புகிறவன் போஜனத்திற்குப்பின் தயிரைக் குடிக்கக்கூடாது. ஆசமனம்செய்து கையினால்ஜலத்தைப்பெருகவிட்டு வலக்காற்கட்டைவிரலை நனைக்கவேண்டும். ஆசாரத்தில்தேர்ந்தமனிதன் நியமத்துடன் கையைத்தலையில்வைத்து அக்நியைத்தொடுவதனால் இனத்தாரிற்சிறந்தவனாகிறான். (கண்மூக்குமுதலிய) இந்திரியஸ்தானங்களையும் நாபியையும் உள்ளங்கைகளையும் ஜலத்தினால்தொட்டு வெளியிற்புறப்படவேண்டும். ஈரக்கையுடன் போகலாகாது. உள்ளங்கையில் கட்டைவிரலின் அடியைப்பிராம்மதீர்த்தமென்றுசொல்லுகின்றனர். சுண்டுவிரலின்வெளிப்புறத்தைத் தேவதீர்த்தமென்றுசொல்வது. பாரதனே! கட்டைவிரலுக்கும் ஆள்காட்டிவிரலுக்கும்நடுவிலுள்ளசந்தினால் ஜலத்தைவிட்டுச் சாஸ்திரப்பிரகாரம் பித்ருகாரியங்களைச் செய்யவேண்டும். அயலார்மேல் பழிசொல்லலாகாது. இன்னாததை ஒருகாலும் சொல்லலாகாது. நன்மையைவிரும்புகிறபுருஷன் சிறிதும் கோபத்தை உண்டாக்கலாகாது. பதிதர்களுடன்பேசுவதை விரும்பலாகாது. அவர்களைப்பார்ப்பதையும் விட்டுவிடவேண்டும். அவர்களுடன் சேரலாகாது. அப்படியிருந்தால் தீர்க்காயுளை அடைவான். பகலில் பெண்கலவிசெய்யலாகாது. கன்னிகையையும் வேசியையும் ருதுஸ்நானம்செய்யாதமனைவியையும்சேரலாகாது. அதனால் நீண்டஆயுளை அடைவான். அந்தஅந்தக்காரியங்களைச்செய்யும்போது [1]அவ்வவற்றிற்குரியதீர்த்தங்களினால் அந்தஅந்தக்காரியங்

1 உள்ளங்கையிலுள்ள இடங்கள்.

களைநடத்தி மூன்றுதரம் ஜலத்தை ஆசமனம்செய்து இருமுறை வாயைத்துடைத்தபிறகு மனிதன் சுத்தனாவான். மனிதன் இந்திரியங்களை ஒருமுறைஜலத்தினால்தொட்டு மூன்றுமுறை ப்ரோக்ஷித்துக்கொண்டு பித்ருகாரியங்களையும் தேவகாரியங்களையும் வேதத்திற் சொன்னவிதிப்படி செய்யவேண்டும். கௌரவனே! ப்ராம்மணனுக்காகஏற்பட்டசௌசத்தையும் நான் சொல்லுகிறேன்; கேள். அதிகமாகவும் பிறருக்குப்பிரதிகூலமாகவும்பேசினாலும் அதிகபோஜனம் செய்தாலும் எல்லாவற்றிற்கும்சுத்தத்திற்காகப் பிராம்மதீர்த்தத்தினால் ஆசமனம்செய்யவேண்டும். காறிஉமிழ்ந்தாலும் தும்மினாலும் ஆசமனம்செய்வதனால் சுத்தனாவான். காறிஉமிழ்தல், புணர்ச்சி, தும்மல், கண்துடைத்தல், தூரஸ்திரீயையும் வஸ்திரமில்லாதவனையும் பார்த்தல்இவற்றிற்கு ஆசமனம் விதிக்கப்பட்டிருக்கிறது. ஆசமனம்செய்யும்போதெல்லாம் பிரணவத்தினால்காதைத்தொட்டு உடனே சூரியனைப் பார்க்கவேண்டும். வயதுமுதிர்ந்தவன், சுற்றத்தவன், சிநேகிதன், கணவனில்லாதஸகோதரி, ஆசாரியர், உயர்குலத்தோன், பண்டிதன் இவர்கள் ஏழையாயிருந்தால் தன்னால்கூடியவரையில் இவர்களைக் காப்பாற்றவேண்டும். இவர்களை வீட்டில் வைத்துக்கொள்ளவேண்டும். அது தனத்தையும் ஆயுளையும்கொடுக்கும். வீட்டில் [1]புறாக்களையும் கிளிகளையும் நாணத்தான்குருவிகளையும் வைத்துக்கொள்ளவேண்டும். தேவதாவிக்கிரகங்கள், கண்ணாடி, சந்தனம், பூக்கொடிகள், நல்லஜலம், பொன், வெள்ளிஇவை வீட்டிற்குமங்களமானவை. வீட்டில் இவைஇருப்பது [2]வௌவால்களிருப்பதுபோலக் கெடுதலில்லாதது. கருடன்கள் கழுகுகள் [3]புறாக்கள் தேன்வண்டுகள் இவை வீடுகளில்உட்கார்ந்தால் அப்போது வீடுகளுக்குச் சாந்திசெய்யவேண்டும். பெரியோர்களின்சாபமும் மஹாத்மாக்களைநிந்திப்பதும் அமங்களத்திற்கிடமானவை. மஹாத்மாக்களிடமுள்ள அதிக ரஹஸ்யங்களை ஒருபோதும் சொல்லலாகாது. அரசர்க்கரசே! யுதிஷ்டிரனே! தாழ்ந்தஜாதிஸ்திரீகளையும் ராஜபத்நியையும் தனக்குச்சிநேகமான ஸ்திரீகளையும் வித்வான்கள், சிறுவர்கள், கிழவர்கள், வேலைக்காரர்கள், பந்துக்கள், ப்ராம்மணர்கள், அடைக்கலமாகவந்தவன், [4]சிநேகிதர்கள், இவர்களின்ஸ்திரீகளையும் சேராமலிருக்கவேண்டும். அதனால், நீண்டஆயுளை அடைவான். நன்மையைக்கருதுகிற புத்திசாலியானவன் ப்ராம்மணனாலும் சிற்பியினாலும்கட்டப்பட்டவீட்டில்

1 'பாராவதம்' என்பதுமூலம். 3 'கபோதம்' என்பதுமூலம்.
2 'கரப்புளனினுமாம்' 4 உறவினர்கள்என் றும்கொள்ளலாம்.

எப்போதும்வஸிக்கவேண்டும். ராஜனே! புத்திசாலியானவன் ஸந்தியையில் தூங்கவும் கல்விகற்கவும் புசிக்கவுமாகாது. அதனால் நீண்டஆயுளையடைவான். க்ஷேமத்தைக்கருதுகிறவன் இரவில் பித்ருகாரியங்களையும் தேகாலங்காரங்களையும் ஸ்நானத்தையும் செய்யலாகாது. பாரதனே! ராத்ரிபோஜனத்தில் மாவையும் மற்றவெண்மையானவற்றையும் ஜலபானத்தையும் விட்டுவிடவேண்டும். இரவில் நிரம்பச் சாப்பிடலாகாது; ஸஞ்சரிக்கலாகாது. போஜனம்செய்தவுடன் புணர்ச்சிசெய்யலாகாது; ஓடலாகாது; அதிககளைப்புஉண்டாக்கத்தக்க காரியத்தைச் செய்யலாகாது. போஜனம்செய்தபிறகு பல்குத்தலாகாது; வேலைசெய்யலாகாது. சிறந்தகுலத்திற்பிறந்தவளும் நல்லலக்ஷணங்கள் பொருந்தினவளும் நல்லநக்ஷத்திரத்திற்பிறந்தவளும் பிராயத்திற்சிறியவளுமான கன்னிகையை விவாகம் செய்துகொள்ளவேண்டும். பாரதனே! ஸந்ததியையுண்டாக்கிக் குலத்தைநிலைநிறுத்திக் குலதர்மங்கள்விருத்தியானபின் புத்திரர்களைப் பிரித்துவைக்கவேண்டும். கன்னிகையைப்பெற்றால் உயர்குலத்திற்பிறந்தபுத்திசாலிக்குக் கொடுக்கவேண்டும். பாரதனே! புத்திரர்களுக்கு நல்லகுலத்துப்பெண்ணை விவாகம்செய்யவேண்டும். வேலைக்காரர்களைச் சம்பாதிக்கவேண்டும். தலைமுழுகித்தான் தேவகாரியத்தையும் பித்ருகாரியத்தையும் செய்யவேண்டும். பாரதனே! தன்னுடையஜன்மதிதியிலும் அஷ்டமியிலும் சதுர்த்தசியிலும் அமாவாஸை முதலிய புண்ணியகாலங்களிலும் ஜன்மநக்ஷத்திரத்திலும் பூரட்டாதிஉத்திரட்டாதிகளிலும் கிருத்திகாநக்ஷத்திரத்திலும் தன்ஜன்மநக்ஷத்திரத்திற்குஐந்தாவதுநக்ஷத்திரத்திலும் மற்றக்கொடியநக்ஷத்திரங்களிலும் எண்ணெய்தேய்த்துக்கொள்ளலாகாது. சோதிடசாஸ்திரத்தில்மறுக்கப்பட்ட நாட்களெல்லாவற்றையும் விடவேண்டும். அரசர்க்கரசே! க்ஷௌரத்தை ஜாக்கிரதையுடன் கிழக்குமுகமாவாவது வடக்குமுகமாவாவதுஇருந்து செய்வித்துக்கொள்ளவேண்டும். அதனால் தீர்க்காயுளையடைவான். தன்மனைவி கர்ப்பமாகவிருக்கும்போது ஸமுத்திரஸ்நானத்தையும் க்ஷௌரத்தையும் சிராத்தபோஜனத்தையும்செய்பவன் புத்திரனுடையபலனை அடையான். ஸாதுக்கள்,ஆசாரியர்கள், பிராயத்திற்பெரியோர், முக்கியமாகக் குலப்பெண்கள்இவர்கள் தன்னைச்சேர்ந்தவராயிருந்தாலும் பிறரைச்சேர்ந்தவராயிருந்தாலும் அவர்களின்குற்றத்தை எடுத்துப்பேசலாகாது. பரதஸ்ரேஷ்டனே! பிறர்குற்றம்பேசுவது பாவத்திற்குக்காரணமென்று சொல்லப்படுகிறது. ராஜனே! அங்கஹீனமுள்ளஸ்திரீயையும் ஓரேகோத்திரத்திற்பிறந்த

பெண்ணையும் தாயின்குலத்திற்பிறந்தபெண்ணையும் ஏற்றத்தாழ்வான அவயவமுள்ளபெண்ணையும் விவாகம்செய்யலாகாது. வயதிற்பெரிய வளையும் துறவியையும் கற்புள்ளவளையும் தாழ்ந்தஜாதி உயர்ந்த ஜாதிப்பெண்களையும் விடவேண்டும். குலந்தெரியாதவளையும் தாழ் குலத்தாளையும்தெரிந்தவன் சேரலாகாது.செம்மட்டைநிறமும்குஷ்ட ரோகமுமுள்ளபெண்ணை நீ விவாகம்செய்யாதே. ராஜனே ! காக்கை வலிப்பும் வெண்குஷ்டமும் க்ஷயரோகமுமுள்ள குலத்திற்பிறந்தவளை யும் இழிவானவளையும் விட்டுவிடவேண்டும். தேகத்தில்அதிகரோம ங்களுள்ளவளும் அதிகப்பருமனுள்ளவளும் தாய்தந்தையர்களிடத்தி லேயேயிருப்பவளும் நாணமற்றவளும் [1]ஸகோதரர்களிடத்திலேயே திருப்தியாயிருப்பவளும் சிவந்தகூந்தலுள்ளவளுமான கன்னிகைகளை விட்டுவிடவேண்டும். அழகுள்ளவளும் அதிர்ஷ்டத்துக்குரியலக்ஷ ணங்கள்பொருந்தியவளும் மனத்திற்குங்கண்ணுக்கும் இனியவளு மானபெண்ணை நீ விவாகம்செய்யக்கடவாய். யுதிஷ்டிர! நன்மை யைக்கருதுகிறவன் தனக்குஉயர்ந்தகுலத்திலும் தனக்குச்சரியான குலத்திலும் விவாகம்செய்துகொள்ளவேண்டும். இழிகுலத்தாளை யும் ஆசாரம்கெட்டவளையும் வாங்கலாகாது. விவாகம்செய்தபிறகு அக்நிகளையுண்டாக்கிக்கொண்டு வேதங்களில்சொல்லப்பட்டவையும் பிராம்மணர்களால் சொல்லப்பட்டவையுமான கிரியைகளெல்லாவற் றையும் ஊக்கத்துடன் செய்யவேண்டும்.ஸ்திரீகளின்மேல் பொறாமை யிருக்கலாகாது. மனைவியை நன்றாகக் காப்பாற்றவேண்டும். பொறா மையானது ஆயுளைக் கெடுத்துவிடும். ஆதலால், அதை விடவேண் டும். பகலில்தூங்குவதும் சூரியோதயத்திற்குப் பின்தூங்குவதும் காலையிலும் ராத்திரியிலும்சுத்தமில்லாமலிருப்பதும் ஆயுளைக்கெடுக் கும். பாரதனே! பிறர்மனைசேருவதும் நாவிதன்தீட்டும் அதிகபோ ஜனமும் ஆயுளைக்கெடுக்கும். இவற்றைச் செய்யாமலிருக்க முயல வேண்டும். ஸந்திகளில் போஜனத்தையும் ஸ்நானத்தையும் மலவிஸர் ஜனத்தையும் செய்யலாகாது. அப்போது ஒருவேலையும் செய்யா மல் அடங்கியிருக்கவேண்டும். ராஜனே ! ஸ்நானம்செய்தபிறகு ப்ரா ம்மணர்களைப் பூஜிக்கவேண்டும். ஸ்நானம்செய்து தேவதாநமஸ்கா ரத்தையும் குருக்களுக்கு அபிவாதனத்தையும் செய்யவேண்டும். அழைக்கப்படாமல் யாகத்திற்குப் போகலாகாது ; பார்ப்பதற்குமாத் திரம் போகலாம். பாரதனே ! பூஜைசெய்யாதவிடத்திற்குப்போவது

1 'ப்ராத்ருஜாம்துஷ்டாம்' என்பது மூலம் ; 'ப்ராதாவின் மகளையும் அதிகஸந்தோஷமுள்ளவளையும்' என்றும் கொள்ளலாம்.

ஆயுளைக்குறைக்கும். தனித்துப் பிரயாணம்போகலாகாது. இரவி லும் தனித்துப் போசலாகாது. பிராணாபாயமில்லாதபோது அழை க்காமல் அயலாருடையஅன்னத்தைப் புசிக்கலாகாது. ஏகோத்திஷ்ட சிராத்தத்திலும் முக்கியமாக முதல்தினம்செய்யும் நக்நசிராத்தத்தி லும் புசிக்கலாகாது. ஸபிண்டீகரணத்திலும் மாஸிகங்களிலும்புசிப் பதை விடவேண்டும், மாலைச்சந்திவேளைவருவதற்குமுன்னமே வீட் டிலிருக்கவேண்டும். தாய்தந்தைஆசாரியர்களின்கட்டளையைச் செய்ய வேண்டும். புருஷஶ்ரேஷ்டனே! அது நல்லதா தீயதாவென்று விசாரிக்கக்கூடாது. க்ஷத்திரியன் முக்கியமாய் வில்வித்தையைப் பயிலவேண்டும். ராஜனே! தனுர்வேதத்திலும் வேதத்திலும் யானை யேறுவதிலும் குதிரையேறுவதிலும் தேரோட்டுவதிலும் பயிற்சி செய்யவேண்டும். அரசர்க்கரசே! முயற்சியோடிரு. முயற்சியுள்ளவன் ஸுகமாக விருத்தியாவான். பகைவராலும் வேலைக்காரராலும் சுற் றத்தாராலும் வசப்படுத்தப்படாமல் பிரஜைகளைக்காப்பதில்ஊக்கத் தோடிருப்பவன் எப்போதும் கஷ்டத்தையடையான். பாரதனே! ராஜனே! தர்க்கம் வியாகரணம் ஸங்கீதம் மற்றுமுள்ளகலைகள் இவற் றை நீ தெரிந்துகொள்ளவேண்டும். புராணங்கள் இதிஹாஸங்கள் கதைகள் மஹாத்மாக்களின்சரித்திரங்கள்இவற்றை நீ நித்தியமும் கேட்கவேண்டும். பூஜிக்கத்தக்கவரைப் பூஜிக்கவேண்டும். இகழத் தக்கவரை இகழவேண்டும். கோக்களுக்காகவும் பிராம்மணர்களுக் காகவும் உயிரைவிட்டும்யுத்தம்செய்யவேண்டும். பெண்களிடத்தில் வசப்படலாகாது. கவனிக்கவேண்டும். தன்சக்திக்குத்தக்கபடி தானம்செய்யவிரும்பவேண்டும்.ப்ராம்மணர்களை அவமதிக்கலாகாது. ஏழைத்தனம் பிராம்மணர்களால் வேண்டப்படுவது. பதிதர்களுடன் பேசலாகாது. தூரஸ்திரீயை அழைக்கலாகாது. தூரமாயிருக்கும் மனைவியையும் கிட்டநெருங்கவும் அழைக்கவும்கூடாது. தெரிந்த வன் நாலாம்நாள்ஸ்நானம்செய்தபிறகு இரவில்சேரலாம். ஐந்தாவது நாள்சேர்ந்தால் பெண்பிறக்கும். ஆருவதுநாள்சேர்ந்தால் ஆண்பிறக் கும். பதினாருவதுநாள்வரையில் புத்ரோத்பத்திக்கு முக்கியமான ருதுகாலமென்று சொல்லப்படுகிறது. தெரிந்தவன் இந்தமுறைப் படி மனைவியைச் சேரவேண்டும். தன் குலத்தோர் சுற்றத்தார் ஸ்நே கிதர் எல்லாரையும் கௌரவிக்கவேண்டும். தன்சக்தியளவு பலவித தக்ஷிணைகளோடு யாகங்களைச் செய்யவேண்டும். ராஜனே! அதற்கு மேல் வனத்திலிருக்கவேண்டும். ஆயுளுக்குக் காரணமானவற்றை உனக்குக் குறிப்பாகச் சுருங்கச்சொன்னேன். யுதிஷ்டிர! மற்ற

வற்றை மூன்றுவேதங்களும்தெரிந்தபெரியோர்களிடம் தெரிந்து கொள்ளவேண்டும். ஐசுவரியத்தையுண்டாக்குவதும் ஆசாரம். கீர்த்தியைப்பெருகச்செய்வதும் ஆசாரம். ஆசாரத்தினால் ஆயுள் அதிகப்படுகிறது. ஆசாரம் குற்றங்களைப் போக்குகிறது. உபதேசங்களெல்லாவற்றுள்ளும் ஆசாரமே சிறந்ததாகச் சொல்லப்படுகிறது. ஆசாரத்தினாலுண்டாவது தர்மம். தர்மத்தினால் ஆயுள்வளருகிறது. புகழையும் ஆயுளையும் ஸ்வர்க்கத்தையும் மங்களத்தையும்கொடுப்பதாகிய இந்தப்பெரியவிஷயம் எல்லாவர்ணத்தாரையும்பற்றிப் பிரம்மாவினால் தயையுடன்சொல்லப்பட்டது. ராஜனே! இதை நித்யமாகக் கேட்டுக்கொண்டும் சொல்லிக்கொண்டுமிருப்பவன் நல்லஆசாரத்தைச்செய்து சிறந்தலோகத்தையடைவான்" என்றார்.

## நூற்றுப்பத்திரண்டாவது அத்யாயம்.

## தா ன த ர் ம ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(ஸகோதரர்கள் ஒருவரிடம்ஒருவர் நடந்துகொள்ளுமுறைமுதலியன.)

யுதிஷ்டிரர், "பரதஶ்ரேஷ்டரே! மூத்தஸகோதரன் இளையவர்களிடத்தில் நடந்துகொள்ளவேண்டுவதும் இளையவர்கள் மூத்தவனிடத்தில் நடந்துகொள்ளவேண்டுவதும் எப்படி என்பதை எனக்குச்சொல்லும்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"அப்பா! பாரதனே! நீ பெரியவனன்றோ? ஆதலால், பெரியவன்போல நடந்துகொள். குருவினுடையமிகச்சிறந்தஒழுக்கந்தான் சிஷ்யனுக்குஒழுக்கம். பாரதனே! புத்தித்தேர்ச்சியில்லாத குருவினிடத்தில் சிஷ்யன்இருக்கமுடியாது. குருவுக்குத்தகுந்தபடிதான் சிஷ்யனுடையஒழுக்கமிருப்பது. தெரிந்தவன் குருடனாயிருக்கவேண்டுங்காலத்தில் குருடனாகவும் மூடனாயிருக்கவேண்டுங்காலத்தில் மூடனாகவும் இருக்கவேண்டும். [1]தவறுதல்நேரிடுமானால் அதுநீங்கும்படி அவர்களுக்கு எடுத்துரைக்கவேண்டும். ஏனெனில், சிறப்பினாற்பொருமையுற்றமனவேறுபாடுள்ளவர்கள் பகைவர்கள்போலவே கண்முன்னே அவர்களைக்கலைத்துவிடுவர். அவர்கள் கலைப்பதினால் கலையாமல் உறுதியாயிருக்கவேண்டும். குந்திபுத்திரனே! ஐசுவரியத்தினால்

1 ஆசார்யர்களிடத்தில் தவறுநேருமானால் பிரஸ்தாவம்நேரும்போது அக்குற்றமர்காதபடி பரிகாரத்துடன் சொல்லவேண்டுமென்றும் கொள்ளலாம்

பொறாமையுள்ளபகைவர்கள் கலைப்பதற்கே எண்ணமுள்ளவர்கள். குலத்தைச்சிறப்பிப்பவனும் கெடுப்பவனும் ஜ்யேஷ்டன்தான். இவ்வுலகத்தில் பெரும்பாலும் மூத்தவன் கெட்டஒழுக்கத்தினால் எல்லாவற்றையும் கெடுக்கிறான். இளையவர்களுக்குத்தீங்குசெய்யும் மூத்த ஸகோதரன் ஜ்யேஷ்டனாகான். அவனுக்குப் பாகமில்லை. அரசர்கள் அவனைஅடக்கவேண்டும். மோசம்செய்யும்மனிதன் பாபலோகங்களுக்குப்போவது திண்ணம். அவன் தகப்பனுக்குப்புத்திரனாகப் பிறந்தது பயனில்லாமையால் வீணென்றுசொல்லப்படுகிறது. பாவியானமனிதன்குலத்திற்பிறப்பது தாய்தந்தைகளுக்கு அனர்த்தத்திற்காகத்தான். அவன் கீர்த்தியைமறைத்து அபகீர்த்தியையே உண்டுபண்ணுகிறான். ஒழுக்கங்கெட்ட ஸகோதரரனைவருமே தாயபாகத்திற்குரியவராகார். நல்லொழுக்கமில்லாத ஜ்யேஷ்டனுமே பாகத்திற்குத்தகாதவன். கனிஷ்டனுக்குச் சொல்லவேண்டுமா? ஜ்யேஷ்டன் கனிஷ்டர்களுக்குக்கொடாமல் தான் தனக்குவரும்படியைச் செய்துகொள்ளலாகாது. தகப்பனுடையசொத்துத் தம்பிக்குமுண்டு. வழிநடப்பவனுக்குக் கால் [1]ஓய்ந்துபோவதுதான் பலன். தனக்குக்கிடைத்ததைத் தானடையவேண்டும். இஷ்டப்படாவிட்டால் அதைக் கொடுக்கவேண்டாம். அவிபக்தஸகோதரர்கள் சேர்ந்துமுயற்சிசெய்தால் பாகம்கொடுக்கவேண்டும். பிதாவானவன் புத்திரர்களுக்குவுற்றக்குறைவாகப் பாகம் ஒருகாலும் கொடுக்கலாகாது. ஜ்யேஷ்டனும் கெட்டவர்களாயிருந்தாலும் நல்லவர்களாயிருந்தாலும் இளையவர்களை அவமதிக்கலாகாது. பெரியோர்கள் பிழை பொறுக்கவேண்டும். அவர்களால் பொறுக்கவுமுடியும். பெண்ணாயிருந்தாலும் பிராயத்திற்சிறியவனாயிருந்தாலும் அவர்களிடத்தில் நல்லொழுக்கத்தைக் கண்டால் அதை எடுத்துக்கொள்ளவேண்டும். தர்மமாகக்கிடைத்த பொருள்தான் சிலாக்கியமென்றுசொல்லுகின்றனர். அதைவிதிப்பவர் [2]மூவர்என்று அறியப்பட்டிருக்கின்றனர். கௌரவத்தில் ஓர் [3] உபாத்தியாயர் பத்து [4]ஆசாரியர்களுக்கு மேற்பட்டவர். பத்து உபாத்தியாயர்களுக்குமேற்பட்டவன் தந்தை. பத்துத்தந்தைகளுக்கும் அல்லது பூமிமுழுதக்குமே மேற்பட்டவள் தாய். தாய்க்குச் சமமான குருவில்லை. தாய் எல்லாரிலும் சிறந்தவளாயிருப்பதனாலே

1 ஜ்யேஷ்டன் வரும்படி ஸம்பாதிப்பது பொதுவுக்காகவேயன்றி அவனுக்குமட்டுமன்று என்பது.

2 மாதா, பிதா, உபாத்தியாயர்.

3 தத்பிப்பவர். 4 மந்திரோபதேசம்செய்பவர்

தான் அவனைக் குருவென்றுநினைக்கின்றனர். பாரதனே! தந்தை யிறந்தபின் ஜ்யேஷ்டஸகோதரன் தந்தைக்குச்சமமானவன். இளைய வர்களுக்கு ஜீவனத்தைக்கற்பிப்பவனும் அவர்களைக்காப்பாற்றவேண் டியவனும்அவன்தானே? கனிஷ்டர்களனைவரும் அவனைநமஸ்கரித்து அவன்மனத்திற்கு ஒத்துஇருக்கவேண்டும். பிதாவைப்போல் அவனை அடுக்கவேண்டும். பாரதனே! தந்தைதாய்இருவரும் தேகத்தை உண்டுபண்ணுகின்றனர். [1]ஆசாரியனால்உண்டாக்கப்பட்ட ஜன்மமா னது உண்மையானது. அதற்கு மூப்புஇறப்புக்கள் இல்லை. பரத ஸ்ரேஷ்டனே! ஜ்யேஷ்டசகோதரி மாதாவுக்குச் சமமானவள். ஜ்யே ஷ்டசகோதரன்மனைவியும் அவன்குழந்தையாயிருக்கையில் அவளி டம் ஸ்தன்யபானம்செய்திருப்பானாயின் தாயைப்போலவேயாவாள்" என்றார்.

---

## நூற்றுபத்துமூன்றாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உபவாஸத்தின் பலன்.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! எல்லாவருணத்தாருக்கும் மிலேச் சர்களுக்கும் உபவாஸத்தில் எண்ணமிருக்கிறது. அதற்குக்காரணம் எங்களுக்குத் தெரியவில்லை. பிராம்மணர்களாலும் க்ஷத்திரியர்களா லும் நியமங்கள் செய்யப்படவேண்டியவையென்று நமக்குக்கேள்வி. பிதாமஹரே! அவர்களுக்கு உபவாஸத்தில் என்னபுண்ணியமிருக்கி றது? ராஜரே! எல்லாருக்குமுள்ளநியமங்களையும் உபவாஸங்களையும் பற்றிச் சொல்லக்கடவீர். ஐயா! உபவாஸம்செய்பவன்என்னகதியை அடைவான்? உபவாஸம் சிறந்தபுண்ணியமும் சிறந்தபரிசுத்தமுமாயி ருக்கிறதே. புருஷஸ்ரேஷ்டரே! இங்கே உபவாஸமிருப்பதனால் மனிதன் என்னபயனையடைகிறான்? எப்படி பாபத்தினின்றுவிடுபடு கிறான்? பரதஸ்ரேஷ்டரே! தர்மத்தையும் ஸ்வர்க்கத்தையும் மற்று முள்ளபுண்ணியலோகங்களையும் எப்படியடைகிறான்? ராஜரே! உப வாஸமிருந்தபின் என்னசெய்யவேண்டும்? எந்தத்தர்மத்தினால் நல மானவிஷயஸுகங்களை அடையலாம்? எனக்குச்சொல்லும்" என்று கேட்டார். இவ்வாறுகேட்கும் தர்மந்தெரிந்தவரும் குந்திபுத்திரரு

---

1 இங்கு 'ஆசார்யன்' என்பது உபாத்தியாயருக்கும் மந்த்ரோபதேசம் செய்தவருக்கும் பொது.

மான யுதிஷ்டிரரைப்பார்த்து, தர்மத்தின்நுட்பம்அறிந்தவரும் சந்தனுவின்புத்திரருமானபீஷ்மர் பின்வருமாறு சொல்லலானார்.

"மஹாராஜனே! இந்தவிஷயம் முற்காலத்திலேயே நான்கேள்விப்பட்டதுதான். பரதஸ்ரேஷ்டனே! பிரம்மாவின்புத்திரரும் தவத்தையே தனமாகவுடையவருமாகிய அங்கிரஸென்னுமுனிவரிடத்தில் உபவாஸம்செய்வதிலுள்ள சிறந்தகுணங்களைப்பற்றி நீ என்னைக் கேட்டபடியே நான்கேட்டேன். பரதஸ்ரேஷ்டனே! அக்னியில் பிறந்தவரும் சிறந்தமகிமையுள்ளவருமானஅந்தரிஷி என்னால் இந்தக் கேள்விகேட்கப்பட்டபோது உபவாஸம்செய்வது புண்ணியமென்பதைப்பற்றிச் சொன்னார். அதைச் சொல்லுகிறேன். கௌரவரை விருத்திபண்ணுகிறவனே! புருஷஸ்ரேஷ்டனே! பிராம்மணர்களுக்கும் க்ஷத்திரியர்களுக்கும் மூன்றுதினங்கள் உபவாஸம் விதிக்கப்பட்டிருக்கிறது. ஒன்று இரண்டு மூன்றுதினங்களும் உபவாஸம் சொல்லப்பட்டிருக்கிறது. வைசியர்களும் சூத்திரர்களும் அறியாமையினால் மூன்றுதினம் அல்லதுஇரண்டுதினம்உபவாஸம்செய்வராயின் அவ்வுபவாஸங்களுக்குப் பலனில்லை. [1]நாலாவதுகாலத்தில் புசிப்பதை விடுவதுதான் வைசியனுக்கும்சூத்திரனுக்கும் விதிக்கப்பட்டிருப்பது. அவர்களுக்கு மூன்றுதினஉபவாஸம் தர்மந்தெரிந்த வைதிகர்களால் விதிக்கப்படவில்லை. பாரதனே! பஞ்சமியிலும் ஷஷ்டியிலும் பௌர்ணமியிலும் மனத்தையும்இந்திரியங்களையுமடக்கி ஒருவேளைபோஜனத்தோடு உபவாஸமிருப்பவன் பொறுமையும் அழகும் தேகத்தில் நல்லமணமுமுள்ளவனாகப் பிறப்பான். பஞ்சமி ஷஷ்டி இரண்டுதினங்களும் உபவாஸமிருந்து வீட்டில் பிராம்மணர்களைப்புசிப்பித்துத் தேவர்களைப்பூஜிக்கும் புத்திசாலியானவன் ஸந்ததியில்லாதவனாகவும் ஏழையாகவும் ஒருகாலுமிரான். கௌரவனே! கிருஷ்ணபக்ஷத்தில் அஷ்டமியிலும் சதுர்த்தசியிலும் [2]உபவாஸமிருப்பதனால்வியாதியற்றவனாகவும் சூரனாகவும் பிறப்பான். மார்கழிமாதத்தை ஒருவேளை போஜனத்தோடுபோக்கித் தன்சக்தியளவு பிராம்மணர்களைப்புசிப்பிப்பவன் வியாதிகளாலும் பாவங்களாலும் விடப்பட்டு எல்லாநன்மைகளும் நிரம்பினவனாகிக் கிருஷிசெய்து எல்லாப்பயிர்களும்செழித்துத் தனதானியங்கள் மிகுதியாகப்பெற்றவனாவான். குந்திபுத்திரனே!

---

1 பிராத, ஸங்கவ, மத்தியான்ன, அபரான்ன என்னும் நாலுகாலங்களையும் தள்ளி ஸாயங்காலத்தில் அதாவது, இருபத்தைந்துநாழிகைக்குமேல், புஜிப்பது.

2 ஒருவேளை போஜனத்தை உபவாஸமென்றுகொள்க.

தைமாஸத்தை ஒருவேளைபோஜனத்துடன் போக்குகிறவன் சிறந்த பாக்கியமும் அழகும் புகழுமுள்ளவனாகப் பிறப்பான். பித்ருபக்தியுடன் மாசிமாதத்தை ஒருவேளைபோஜனத்துடன் கடத்துகிறவன் செல்வம்நிரம்பினவீட்டிற் பிறந்து சுற்றத்தார்களெல்லாரும் விரும்பும்தகுதியை அடைவான். பங்குனிமாஸத்தை ஒருவேளை உணவோடு கடத்துகிறவன் பாக்கியமும் அழகும் புகழுமுள்ளவனாகப் பிறப்பான்; ஸ்திரீகள்விரும்பத்தக்கவனாவான். அவர்கள் அவனுக்குவசப்படுவார்கள். சித்திரைமாஸத்தை நியமத்துடன் ஒருவேளைபோஜனத்தினால் கடத்துகிறவன் பொன்னும்மணியும் முத்தும்நிரம்பின பெரியகுலத்திற் பிறக்கிறான். இந்திரியங்களைஜயித்து ஒருவேளைபோஜனத்தினால் வைகாசிமாதத்தைக்கடத்தும் ஆணாகட்டும் பெண்ணாகட்டும் தம்குலத்தோரில்சிறந்தவராவார். ஆனிமாதத்தை ஒருவேளைபோஜனத்தோடுகடத்தும்புருஷனும் ஸ்திரீயும் ஒப்பற்ற சிறந்தஐசுவரியத்தையடைவார். சோம்பலில்லாமல் ஆடிமாதத்தில் ஒருவேளைபோஜனத்தோடிருப்பவன் தானியங்களையும் தனங்களையும் புத்திரர்களையும் மிகுதியாக அடைந்தவனாவான். ஆவணிமாதத்தை நியமத்துடன் ஒருவேளைபோஜனத்தினாற் போக்குகிறவன் அழகும்செல்வமுமுள்ளவனாய் எக்காலமும் ஸுகமாயிருப்பான்; அநேகமனைவிகளும் புத்திரர்களும் மிகுதியானதனங்களுமுள்ளவனாவான். புரட்டாசிமாதம்ஒருவேளைஆகாரத்துடனிருக்கும்மனிதன் பசுக்கள்நிரம்பின அழியாதபெருஞ்செல்வத்தை அடைவான். ஐப்பசிமாதத்தை ஒருவேளைபோஜனத்தினாற் கழிப்பவன் சிறந்தபுத்தியுள்ளவனும் வாகனங்கள்நிரம்பினவனும் அனேக புத்திரர்களுள்ளவனுமாவான். கார்த்திகைமாஸமெல்லாம் ஏகபோஜனம்செய்யும்மனிதன் சூரனும் அநேகமனைவியுள்ளவனும் புகழுள்ளவனுமாவான். புருஷஸ்ரேஷ்டனே! இவ்வாறு உபவாஸமிருக்கும் மாஸங்களைப்பற்றிச் சொன்னேன். ராஜனே! தினங்களின்நியமங்களைப்பற்றியும் சொல்லுகிறேன்; கேள். பாரதனே! ஒவ்வொருபக்ஷமும் ஆனபிறகு அன்னத்தைப்புசிப்பவன் பசுக்களும் புத்திரர்களும்நிரம்பித் தீர்க்காயுளுள்ளவனாவான். ஒவ்வொருமாஸத்திலும் மும்மூன்றுதினங்களாகப் பன்னிரண்டுவருஷம் உபவாஸமிருப்பவன் எதிரியில்லாமலும் மனத்துயரமில்லாமலும் ஒருகூட்டத்தலைவனாயிருப்பான். பரதஸ்ரேஷ்டனே! முன்சொன்னநியமங்களெல்லாம் பன்னிரண்டுவருஷகாலம் செய்யவேண்டியவை. இந்தநியமங்களின் முறையைச்சொன்னேன். அரசனே! காலையிலும்மாலையிலும் போஜனம்செய்து இடையில் ஜலபானமும்செய்யாமலும் எப்போதும்அஹி

ம்ஸையை நியமமாகவைத்துக்கொண்டும் அக்நிஹோத்திரம்செய்து கொண்டுமிருப்பவன் ஆறுவருஷங்களிற் பயன்பெறுவானென்பதில் ஸந்தேகமில்லை. அவன் அக்நிஷ்டோமயாகத்தின் பலனை அடைவான். அந்தப்புண்ணியசாலியான மனிதன் பாவமற்றவனுகி ஆயிரக்கணக் கானஸ்திரீகள் நிரம்பினதும் ஆடல்பாடல்கள்முழங்குவதுமான அப் ஸரஸ்ஸுகளின்லோகத்தில் உல்லாஸமாயிருப்பான்; சிறந்தபொன்னின் ஒளியினுல்விளங்கும் விமானத்தில்ஏறி ஆயிரம்வருஷத்திற்குக்குறை யாமல் பிரம்மலோகத்தில் பூஜிக்கப்படுவான். அதுஆனபின், இவ் வுலகத்திற்குவந்து சிறந்தமகிமையையும் அடைவான். ஒருவருஷம் முழுதும் தினத்திற்கு ஒருவேளைபோஜனத்துடனிருக்கும் மனிதன் அதிராத்ரமென்னும்யாகத்தின் பலனை அடைவான். அவன்முப்பதினு யிரம்வருஷகாலம் ஸ்வர்க்கலோகத்திற் கொண்டாடப்படுவான். அது ஆனபின், இவ்வுலகத்திற்குவந்து சிறந்தமகிமையை அடைவான். ஒருவருஷகாலம்முழுதும் நாலாவதுநாள்போஜனம்செய்துகொண்டு அஹிம்ஸையையும் ஸத்தியத்தையும்விடாமற் புலன்களையடக்கியிருப் பவன் வாஜபேயயாகத்தின்பலனை அடைவான்; முப்பதினுயிரம்வருஷ காலம் ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்படுவான். குந்திபுத்திரனே! ஆறுவதுநாள்புசித்துக்கொண்டு ஒருவருஷம்போக்கினமனிதன் அஸ்வமேதயாகத்தின்பலனை அடைவான். அவன் சக்கரவாகங்கள் கட் டினவிமானத்தில் ஏறிச்செல்வான்; நாற்பதினுயிரம்வருஷங்கள் ஸ்வ ர்க்கத்தில் மகிழ்ந்திருப்பான். ராஜனே! ஒருவருஷம் எட்டாவது நாள் போஜனத்தோடு ஜீவித்திருக்கும்மனிதன் கவாமயனயாகத் தின் பலனைஅடைவான். ஹம்ஸபக்ஷிகளும் ஸாரஸபக்ஷிகளும் கட் டினவிமானத்தில் ஏறிச்செல்வான். அவன் ஐம்பதினுயிரம் வருஷ காலம் ஸ்வர்க்கத்தில் மகிழ்ந்திருப்பான். வேந்தனே! ஒவ்வொரு பக்ஷமானபின் புசித்துக்கொண்டு ஒருவருஷமிருப்பவனுக்கு ஆறு மாஸத்திய உபவாஸத்தின் பலனுண்டென்று பகவானுன அங்கிரஸ் சொன்னர். அவன் அறுபதினுயிரவருஷகாலம் ஸ்வர்க்கலோகத் தில் வஸிப்பான். ராஜனே! அவன் தூங்கிப் பலவகைஇனியவை யும் தூரக்கேட்பவையுமான வீணை [1]வல்லகி வேணுஎன்னும் வாத் தியங்களின்முழக்கங்களினுல் எழுப்பப்படுவான். அப்பா! அரசனே! மாஸத்திற்கொருதரம் ஜலபானம்செய்துகொண்டு ஒருவருஷமிருப் பவன் விஸ்வஜித்தென்னும் யாகத்தின் பலனைஅடைவான். அவன் சிங்கங்களும் புலிகளும்கட்டின விமானத்திலேறிச்செல்வான்; எழு

1 வீணையின் ஒருவகை.

பதினாயிரம்வருஷங்கள் ஸ்வர்க்கத்தில் மகிழ்ந்திருப்பான். புருஷ ஸ்ரேஷ்டனே!ஒருமாஸத்திற்குமேல் உபவாஸம் விதிக்கப்படவில்லை. குந்திபுத்திரனே! தர்மந்தெரிந்தவர்கள் உபவாஸத்தின்விதியை இவ்வாறு சொல்லுகின்றனர். வியாதியும்களைப்பும்இல்லாமல் உப வாஸம்செய்பவன் ஒவ்வோர்உபவாஸத்திலும் யாகபலனையடைவது திண்ணம். அவன் ஹம்ஸங்கள் கட்டினவிமானத்திலேறி ஸ்வர்க்கத் திற்குச்செல்வான். பிரபுவே! நூறாயிரம்வருஷகாலம் அவன் ஸ்வர்க் கத்தில் மகிழ்ந்திருப்பான். நூறுஅப்ஸரஸுகளும் தேவகன்னிகை களும் அந்தமனிதனை மகிழ்விப்பர். பிரபுவே! களைத்திருந்தும் வியாதியோடிருந்தும் உபவாஸம்செய்பவன் நூறாயிரம்வருஷங்கள் ஸ்வர்க்கத்தில் மகிழ்ந்திருப்பான்; தூங்கினபோது மேகலைகள்சிலம்பு களின்ஒலிகளினால் எழுப்பப்படுவான்; ஆயிரம்ஹம்ஸங்கள்கட்டின விமானத்திலேறிச் செல்வான். பரதஸ்ரேஷ்டனே! சென்றபின் நூற் றுக்கணக்கானஸ்திரீகளின்கூட்டத்தில்விளையாடிக்கொண்டிருப்பான். உபவாஸமானது சக்தியில்லாதவனுக்குச் சக்திகொடுப்பதாகவும் புண் பட்டவனுக்குப் புண்ணாற்றுவதாகவும் நோயுள்ளவனுக்கு மருந்து களின்வகைகளாகவும் கோபித்தவனுக்குக் கோபத்தைத்தெளிவிப்ப தாகவும் வறுமையினால்கஷ்டப்படுகிறவனுக்குத் திரவியங்களைக்கொடு ப்பதாகவும் காணப்பட்டிருக்கிறது. ஆனால், செல்வங்களினால் ஸுக மாக வளர்ந்தவர்களுக்கு இது பிடிக்காது. ஆதலால், அந்தஉபவாஸ மிருக்கும்புருஷன் நோயற்றவனாகவும் நினைத்தது கைகூடிவந்தவனாக வும் பாபம்நீங்கினவனாகவும், தேகம்விட்டபின் பரிசுத்தனாகி அலங்கா ரங்கள்செய்துகொண்டு நினைத்தபடிசெல்வதும் அனேகஸ்திரீகள்நிரம் பினதும் பொன்னிறமாகவிளங்குவதுமான விமானத்திலேறி இனி மையாகச்சஞ்சரித்துக்கொண்டுஉபவாஸத்தின்பலனை அநுபவிப்பான். அப்படிப்பட்டமனிதன் இளம்சூரியன்போலவும் சந்திரன்போலவும் பிரகாசிப்பதும், வைடூரியங்களும் முத்துக்களும் இழைக்கப்பட்ட தும், வீணைகளும் முரசுகளும் உயர்ந்தமணிகளும்ஒலிப்பதும், கொடி களும் விளக்குக்களும்பிரகாசிப்பதும்,ஆயிரம்ஸ்திரீகள்உடனிருப்பது மானவிமானத்தில் ஸுகமாகவிளங்குகிறான். பாண்டவனே! அவன் தேகத்திலுள்ளமயிர்க்கால்கள் எத்தனையோ அத்தனையாயிரம்வருஷங் கள் அவன் ஸ்வர்க்கத்தில் மகிழ்ந்திருப்பான். வேதத்திற்குமேலான சாஸ்திரமில்லை. தாய்க்குச்சமமானகுருவில்லை. தர்மத்திற்குமேலான லாபமில்லை. உபவாஸத்திற்குமேலானதவமில்லை.பிராம்மணர்களைவிட வேறுசுத்தம் இங்கும்இல்லை; ஸ்வர்க்கத்திலும்இல்லை. ஆதலால், உப

வாஸத்திற்குஒப்பானதவமும் கர்மமுமில்லை. சாஸ்திரப்படி உபவாஸ மிருந்துதான், தேவர்கள் ஸ்வர்க்கத்தையடைந்தனர். ரிஷிகளும் உபவாஸங்களாலேதான் சிறந்த தவஸித்தியை அடைந்தனர். சிறந்த ஞானியானவிஸ்வாமித்திரர் அநேகமாயிரம்தேவவருஷங்கள் ஒருவேளைபோஜனத்தோடு பொறுத்திருந்தார். அதனால், அவருக்குப் பிராம்மணத்துவம்வந்தது. ச்யவனர், ஜமதக்னி, வஸிஷ்டர், கௌதமர், ப்ருகு இந்தமஹரிஷிகளனைவரும் உபவாஸத்தைப்பொறுத்ததினாலே தான் தேவலோகத்தையடைந்தனர். இந்தவிஷயம் முதலில் அங்கிரஸினால் மஹரிஷிகளுக்கு உபதேசிக்கப்பட்டது. இதை நித்யமாகஉபதேசிப்பவன் துன்பத்தையடையான். குந்திபுத்திரனே! அங்கிரஸென்னும்மஹரிஷியினால் ஒழுங்காகமுதலில்தெரிவிக்கப்பட்டதாகிய இந்தஉபவாஸவிதியை எப்போதும் படித்துக்கொண்டும் கேட்டுக்கொண்டுமிருக்கும்மனிதனுக்குப் பாவமிராது. அவன் எல்லாத்துயரங்களாலும் விடப்படுவான். அவனுடையமனம் குற்றங்களால் ஆக்கிரமிக்கப்படாது. அவன் விலங்குஜாதியில்பிறந்தவற்றின் பாஷையையும் அறிவான். அந்த உத்தமமானமனிதன் அழிவில்லாதபுகழை அடைவான்" என்றார்.

---

## நூற்றுபத்துநான்காவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(யாகஞ்செய்யஅசக்தர் உபவாஸங்களாலேயே யாகபலனை அடைவரென்பது.)

யுதிஷ்டிரர், "மஹாத்மாவும் பிதாமஹருமானஉம்மால் சாஸ்திரப்பிரகாரம் செய்யவேண்டியயாகங்களும் அவற்றின்சிறப்புக்களும் இம்மையிலும்மறுமையிலும்அவற்றிற்குள்ளபயன்களும் முழுதும்சொல்லப்பட்டன. பிதாமஹரே! அந்தயாகங்கள் ஏழைகள்செய்யமுடியாதவை. யாகங்களுக்குஅனேககருவிகளும் அநேகதிரவியஉதவிகளும் மிகுதியாகவேண்டும். பிதாமஹரே! அரசர்களாவது ராஜகுமாரர்களாவது அவற்றைச் செய்யக்கூடும். பொருளில்லாதவரும் குணமில்லாதவரும் மனிதருதவியில்லாமல் தனித்திருப்பவரும் அவற்றைச் செய்யமுடியாது. பிதாமஹரே! ஏழைகளும் பொருள்குறைந்தவரும் சிறப்பில்லாதவரும் ஜனச்சேர்க்கையின்றித் தனித்திருப்பவரும் எட்

போதும்செய்யக்கூடியதும் இந்தயாகங்களுக்குச் சரியானபயனுள்ள தும் எதுவோ அதை எனக்குச் சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"யுதிஷ்டிரனே! இந்தஉபவாஸத்தினுடையபலன்தான் யாகபல னுக்குச்சமமானதென்று அங்கிரஸென்னும்முனிவர் சொல்லியிருக் கிறார். அந்தஉபவாஸமுறையைச் சொல்லுகிறேன்; கேள். காலையி லும்மாலையிலும் புசித்து இடையில்ஜலபானமும்செய்யாமலும் பிரா ணிகளை ஹிம்ஸிக்காமலும் நித்தியமும் அக்நிஹோத்திரம்செய்து கொண்டுமிருப்பவன் ஆறுவருஷங்களில்பலனை அடைவானென்பதில் ஸந்தேகமில்லை. அந்தமனிதன் உயர்ந்தபொன்னிறமானவிமானத்தை அடைவான். ஆடல்பாடல்கள்முழங்குவதும் அக்நிக்கொப்பானதும் தேவஸ்திரீகளிருக்குமிடமுமாகிய பிராம்மலோகத்தில் பத்துக்கோடி வருஷங்கள் வஸிப்பான். மூன்றுவருஷகாலங்கள் நித்யமும் ஏக போஜனம்செய்துகொண்டு தன்தர்மபத்தினியிடத்திலேயே நிய மத்தோடிருப்பவன் அக்நிஷ்டோமயாகத்தின் பலனை அடைவான். மிகுந்தபொருள்தக்ஷிணைகளோடுகூடியயாகத்தை இந்திரனுக்குப்பிரி யமாகச்செய்கிறவன்போலவே ஸத்தியமும்தானமுமுள்ளவனும் பிரா ம்மணர்களிடத்தில்அன்புள்ளவனும் பொறாமைப்படாதவனும் சிர மத்தைப்பொறுப்பவனும் ஐம்புலன்களையுமடக்கினவனும் கோபத் தைஜயித்தவனுமாயிருப்பவன் உயர்ந்தகதியை அடைவான். அவன் வெண்மேகம்போன்றதும் ஹம்ஸங்கள்கட்டப்பட்டதுமானவிமானத் தில் அப்ஸரஸுகளுடன்கூட இருநூறுகோடிவருஷங்கள் இருப் பான். இரண்டாவதுஇரண்டாவதுநாள் ஒருவேளைபோஜனம்செய்து கொண்டும் நித்தியம்அக்நிஹோத்திரம் செய்துகொண்டும் விடியற் காலத்தில் கண்விழித்துக்கொண்டும் பன்னிரண்டுவருஷகாலமிருப்ப வன் அக்நிஷ்டோமயாகத்தின் பலனைஅடைவான். அந்தமனிதன் ஹம்ஸங்களும் ஸாரஸபக்ஷிகளும் கட்டினவிமானத்தை அடைவான்; சிறந்தஸ்திரீகளால்சூழப்பெற்று இந்திரலோகத்தில்வஸிப்பான். மூன் றுவதுமூன்றுவதுநாள் ஏகபோஜனம்செய்துகொண்டும் நித்தியமாக அக்நிஹோத்திரம் செய்துகொண்டும் காலையில்எழுந்துகொண்டும் பன்னிரண்டுமாதங்களிருப்பவன் அதிராத்திரமென்னும் யாகத்தின் பலனை அடைவான். அந்தமனிதன் மயில்களும்ஹம்ஸங்களும்கட் டினவிமானத்தை அடைவான். ஸப்தரிஷிகளின்லோகத்தில் அப்ஸர ஸுகளுடன்கூட எப்போதும் வஸிப்பான். மூப்பதுகோடிவருஷங் களுக்குப்பின்புதான் அவன் அதைவிட்டுத் திரும்புவானென்று அறி

இன்றனர். நாலாவதுநாள் ஏகபோஜனம்செய்து எப்போதும் அக்நி ஹோத்திரம்செய்துகொண்டு பன்னிரண்டுமாதங்களிருப்பவன் வாஜ பேயயாகத்தின் சிறந்தபலனை அடைவான்; இந்திரகன்னிகைகள் கொண்டுவரும்விமானத்தை அடைவான். ஸாகரத்துக்குஅக்கரையி லுள்ள இந்திரலோகத்தில்வஸித்துக்கொண்டு தேவராஜனுனஇந்திர னுடையவிளையாட்டுக்களை எந்தக்காலங்களிலும் பார்த்துக்கொண் டிருப்பான். ஐந்தாவதுதினத்தில் ஏகபோஜனம்செய்துகொண்டும் எப்போதும் அக்கிஹோத்திரம்செய்துகொண்டும் ஆசையற்றவனும் ஸத்தியம்தவறுதவனும் பிராம்மணர்களிடத்தில் அன்புள்ளவனும் ஹிம்ஸைசெய்யாதவனும் பொருமையில்லாதவனும் பாவம்செய்யாத வனுமாகப் பன்னிரண்டுமாதங்களிருப்பவன் த்வாதசாஹமென்னும் யாகத்தின் பலனை அடைவான். பொன்மயமானதும் ஹம்ஸங்கள்கட் டினதுமாகிய திவ்யவிமானத்தையும் அனேகம் ஸூர்யர்கள்போலப் பிரகாசிக்கும் வெண்மையானகிருகத்தையும் அடைவான். ஐயா யிரத்து நூறுகோடிவருஷங்கள் அவ்வுலகத்தில் அவன் ஸுகமாக வஸிப்பான். ஆருவதுநாள் ஏகபோஜனம்செய்துகொண்டும் நித்தி யம்அக்னிஹோத்திரம்செய்துகொண்டும் மூன்றுகாலமும் ஸ்நானம் செய்துகொண்டும் பிரம்மசாரிவிரதமாகவும் பொருமையில்லாமலும் பன்னிரண்டுமாதங்களிருப்பவன் கவாமயனமென்னும்யாகத்தின் சிற ந்தபலனை அடைவான். ஹம்ஸங்களும்மயில்களும்கட்டினதும்பொன் னிறைற்செய்யப்பட்டு அக்கியின்ஜ்வாலைபோலப்பிரகாசிப்பதுமான சிற ந்தவாகனத்தை அடைவான்; அப்ஸரஸுகளின்மடிகளிற்படுத்துச் சிலம்புகள்மேகலைகளின்ஒலிகளினுல் எழுப்பப்படுவான். ஆயிரத்தறு நூற்றெண்பதுகோடியே ஐந்துலக்ஷம்வருஷங்களும் நூறுகரடியின் தேகத்திலுள்ளரோமங்கள் எவ்வளவோ அவ்வளவுவருஷகாலமும் பிரம்மலோகத்தில் பூஜிக்கப்படுவான். ஏழாவதுநாள் ஏகபோஜனம் செய்துகொண்டும் நித்யம்அக்கிஹோத்ரம்செய்துகொண்டும் மௌன விரதத்தையும் பிரம்மசாரிவிரதத்தையும் அனுஷ்டித்துக்கொண்டும் புஷ்பசந்தனங்களையும் மதுமாம்ஸங்களையும்விட்டும் பன்னிரண்டுவரு ஷகாலமிருக்கும்மனிதன் ஸப்தமருத்துக்களின் லோகத்திற்கும் இந் திரலோகத்திற்கும் போவான். ஆங்காங்கு நினைத்தவையெல்லாம் பெற்றுத் தேவகன்னிகைகளால் அழைத்துக்கொண்டுபோகப்படு கிருன். மிகுதியானபொன்தக்ஷிணைகளோடுகூடிய யாகத்தின்பலனை அம்மனிதன்அடைகிருன்;எண்ணிறந்தவருஷகாலம்அவ்வுலகங்களில் மகிழ்ந்திருக்கிருன். எட்டாவதுநாள் புசித்துக்கொண்டும் நித்தியம்

தேவதாபூஜையும் அக்நிஹோத்திரமும்செய்துகொண்டும் ஒருவரு ஷம் பொறுமையோடிருக்கிறமனிதன் பௌண்டரீகயாகத்தின் சிற ந்தபலனை அடைவான்; தாமரைமலர்நிறமுள்ளவிமானத்திலேறுவான். தேகத்திற்பளபளப்புள்ளவர்களும்இளமையினாலும் அழகினாலும்விள ங்குகிறவர்களும் சிலர் பொன்போலப்பசுமைநிறமும் வேறுசிலர் கறு த்தநிறமுமுள்ளவர்களுமான அநேகம்பெண்களையடைவது நிச்சயம். ஒன்பதாவதுநாள் புசித்துக்கொண்டும் அக்நிஹோத்திரம்செய்து கொண்டும் ஒருவருஷத்தில் பன்னிரண்டுமாதங்களுமிருப்பவன் ஆயி ரம்அஸ்வமேதயாகங்களின் சிறந்தபலனை அடைவான். அந்தமனிதன் வெண்டாமரைமலர்போலப் பிரகாசிக்கும் விமானத்தை அடைவான். மத்தியான்னசூரியனைப்போலவும் ஜ்வலிக்கின்ற அக்நியைப்போலவும் பிரகாசிக்கின்றவரும் தெய்வலோகப்பூமாலைகளையணிந்தவருமாகிய ருத்திரகன்னிகைகளினால் நித்தியமானமேலுலகத்திற்கு அழைத்துக் கொண்டுபோகப்படுவான்; நூறாயிரங்கோடியே பதினெண்ணாயிரம் வருஷங்களும் ஒருகல்பமும் அவ்வுலகங்களில் மகிழ்ந்திருப்பான். வருஷம்பன்னிரண்டுமாதங்களும் ஒவ்வொருபத்தாவதுநாளும் புசித் துக்கொண்டும் அக்நிஹோத்திரத்தை நித்தியமாக விடாமற்செய்து கொண்டுமிருப்பவன் எல்லாப்பிராணிகளின் மனங்களையும் கவருவ தாகிய பிரம்மகன்னிகைகளிருக்கும் உலகத்தில் ஆயிரம் அஸ்வமே தங்களின்சிறந்தபலனை அனுபவிப்பான். கருநெய்தல்நிறமும் செந் தாமரைநிறமுமுள்ள அழகுள்ள கன்னிகைகள் அம்மனிதனை எப் போதும் உல்லாஸப்படுத்துவார்கள். (அவன்) ஆகாயத்தில் சுழல்போ லச்சுற்றுவதும் கடலலைகள்போலவிளங்குவதுமான மண்டலாவர்த்த மென்னும் உத்தமமான விமானத்தை வாகனமாகஅடைவான்; பல வகை ரத்தினங்களின் மாலைகள் ஒளிப்பதும் சங்கநாதங்கள் முழங்கு வதும் ஸ்படிகமயமும்சிறந்தவைரமயமுமாகிய தூண்களும் மேடை களுமுள்ளதும் ஹம்ஸங்களும் ஸாரஸங்களும் வாகனங்களாகக் கட் டப்பட்டதுமான பெரியவிமானத்திலேறுவான். பதினோராவது நாள்வந்தபோது அன்னத்தைப்புசித்தும் எப்போதும் அக்நிஹோத் திரம்செய்தும் வாக்கினாலும் மனத்தினாலும் பிறர்மனைவியைவிரும்பா மலும் தாய்தந்தையர்களுக்காகக்கூடப் பொய்சொல்லாமலும் பன் னிரண்டுமாதங்களிருப்பவன் விமானத்திலிருக்கும் சிறந்தசக்தியுள்ள மஹாதேவரை அடைவான்; ஆயிரம்அஸ்வமேதங்களின்சிறந்தபலனை அனுபவிப்பான்; பிரம்மாவினுடைய விமானமும் வந்திருப்பதைக் காண்பான். பொன்னிறமுள்ளவர்களும் அழகுள்ளவர்களுமான

கன்னிகைகள், தேவலோகத்தில் மனத்தைக்கவர்வதாகிய ருத்திரர் களின்லோகத்திற்கு அவனை அழைத்துக்கொண்டுபோவார்கள். (அவன்) ஆயிரம்லக்ஷங்கோடிவருஷங்களும் எண்ணிறந்தவருஷங்க ளும்பிரளயகாலத்திலும் அங்கேவஸிப்பான்; தேவர்களாலும் அஸு ரர்களாலும்பூஜிக்கப்பட்ட சங்கரரைத் தினந்தோறும் நமஸ்கரிப்பான். ஒவ்வொருநாளும் அவர் அவனுக்குத் தரிசனங்கொடுப்பார். பன்னி ரண்டாவதுநாள் வந்தபிறகு அன்னத்தைப்புசித்து நியமத்துடன் அக்நிஹோத்திரம்செய்து பன்னிரண்டுமாதகாலங்களிருப்பவன் ஸர் வமேதமென்னும் யாகத்தின் பலனைஅடைவான். பன்னிரண்டு சூரி யர்களினாலும் அவனுக்கு விமானம் செய்யப்படுகிறது. ராஜனே! மிக்கவிலையுள்ளமணிகளாலும் முத்துக்களாலும் பவழங்களாலும் விளங்குவதும், சூரியனுடையவொளியினால் நாலுபக்கமும் சூழப்பெற்ற தும், யானைகள்போகும் வீதிகள்நிரம்பினதும், மயில்களும் சக்கர வாகங்களும் கூவுவதினால்விளங்குவதும், உயர்ந்தமேல்மாடிகளுள்ள தும், ஆண்பெண்களாற் சூழப்பெற்றதுமான ஸ்தானம்பிரம்மலோக தில் எப்போதும் அவனுக்கு நிலையாகவிருக்கும். தர்மந்தெரிந்த மகானுபாவரான அங்கிரஸ்மஹரிஷி இவ்வாறு சொன்னார். பதின் மூன்றாவதுநாள் வந்தபிறகு போஜனம்செய்துகொண்டு பன்னிரண்டு மாஸங்களிருப்பவன் தேவஸத்ரமென்னும் யாகத்தின்பலனைஅடை வான். அந்தமனிதன் பொன் ரத்தினக்குவியல்களும் தேவலோகத் திய ஆபரணங்களும் அலங்காரமாகவிளங்குவதும், தேவகன்னிகை கள் நிரம்பினதும், தேவவாத்தியங்கள்முழங்குவதும்,பரிசுத்தமணம் வீசுவதுமான ரக்தபத்மோதயமென்னும் விமானத்தை அடைவான்; அவ்விடத்தில் இரண்டு [1]சங்குகள், இரண்டுபதாகைகள், நூறாயிரம் [2]பத்மம், அவ்வளவு [3]ஸமுத்திரம்என்னும் எண்களுள்ள பிரளயங் களும் கல்பங்களும் வஸிப்பான்; கந்தர்வர்களின் கீதமுழக்கம் பேரி வாத்தியங்கள் பணவவாத்தியங்கள் இவற்றின்முழக்கங்களுடன் அங் குள்ள தேவகன்னிகைகளினால் துதிக்கப்பட்டு உல்லாஸம்செய்விக்கப் படுகிறான். பதினாலாவதுநாள் நிரம்பும்போது அன்னத்தைப்புசித் துக்கொண்டு பன்னிரண்டுமாஸங்களிருப்பவன் மஹாமேதயாகத்தின் பலனைஅடைவான். உவமையற்றஅழகும் இளமையுமுள்ள தேவகன் னிகைகள் பளபளவென்று பிரகாசிக்கும் பொன்னாலாகியதோள்வளை களைத்தரித்து அலங்காரங்கள்செய்துகொண்டுவிமானங்களில்ஏறிஅவ னிடம் வருவார்கள். அவன் அந்தஅந்த இடங்களிலும் ஹம்ஸங்களின்

---

1 பத்துலக்ஷம்கோடி. 2 நூறுகோடி. 3 நூறுலக்ஷம்கோடி.

இனியகூவுதல்களாலும் சிலம்புகள்மேகலைகளின் ஒலிகளாலும் எழுப்பப்படுவான்.கங்கையின்மணல்நிரம்பினதும்தேவகன்னிகைகள்இருக்கும்இடமுமாகிய அவ்வுலகத்தில் அதிகவருஷங்கள் வஸிப்பான். ஒருபக்ஷம்நிரம்பும்போது ஒருவேளைபுசித்து இந்திரியங்களைஜயித்து நித்தியம்அக்நிஹோத்திரம்செய்துகொண்டு பன்னிரண்டுமாஸங்களிருப்பவன் ஆயிரம்ராஜஸூயயாகங்களின் சிறந்தபலனை அடைவான்; ஹம்ஸங்களும்மயில்களும்கட்டினதிவ்யவிமானங்களில் ஏறுவான். அநேக ரத்தினங்களாற்செய்யப்பட்ட வட்டங்களினால் விசித்திரமானதும் பொன்னால்மூடப்பட்டதும் சிறந்தஆபரணங்களினால்விளங்கும் உயர்ந்தபெண்களினால்அலங்கரிக்கப்பட்டதும் ஒற்றைத்தூணும்நாலுவாயில்களும் ஏழுமாடிகளுமுள்ளதும் மிக்கமங்களகரமும் அநேகமாயிரம் கொடிகள்கட்டினதும் பாட்டுமுழக்கமுள்ளதும்தேவலோகத்திய சிறப்புக்களெல்லாம்சேர்ந்ததுமாகிய தேவவிமானத்தில் ஏறுவான். ரத்தினங்களினாலும் முத்துக்களினாலும் பவழங்களினாலும் அலங்கரிக்கப்பட்டதும் மின்னல்போல ஒளியுள்ளதுமான அவ்வுலகத்தில், யானைகளையும் காண்டாமிருகங்களையும் வாகனங்களாகஏறி ஆயிரம்யுகங்கள் வஸிப்பான். பதினாறாவதுநாள் வந்தபோது போஜனம்செய்துகொண்டு பன்னிரண்டுமாஸங்களிருப்பவன் ஸோமயாகத்தின்பலனை அடைவான்; சந்திரகன்னிகைகள்இருக்கும்இடங்களில் நித்தியமும் வஸிப்பான்; இனியசந்தனமுதலியவற்றைப்பூசிக்கொண்டு நினைத்தபடி ஸஞ்சரிப்பான்; விமானத்திலிருந்து காட்சிக்கினியவர்களும் இனியசொல்லுள்ளவர்களுமான பெண்களினால் பூஜிக்கப்பெற்றுக் காமஸுகங்களினால் உபசரிக்கப்பெறுகிறான். ஆயிரத்துப்பதினான்கு கோடி மஹாகல்பங்கள் அங்கேயே பலனை அனுபவிப்பான். பதினேழாவதுநாள்வந்தபோது அன்னத்தைப்புசித்து நித்தியம் அக்நிஹோத்திரங்களைச்செய்துகொண்டு பன்னிரண்டுமாஸங்களுமிருப்பவன் வருணன், இந்திரன், ருத்திரர்கள்இவர்களின்லோகங்களையும் அடைந்து காற்றுப்படுக்கையிற்படுத்துப் பிரம்மலோகத்திற்கும்செல்வான். அங்கே தேவகன்னிகைகளினால் ஆஸனங்கொடுத்து உபசரிக்கப்படுவான். அவன் தேவரிஷியாயிருந்து பூலோகம் புவர்லோகம் ஸுவர்லோகம் இம்மூன்றுலோகங்களிலுமுள்ள எல்லாப்பொருள்களையும் பிரத்யக்ஷமாகப் பார்ப்பான். அங்கே அழகும்இன்சொல்லுமுள்ளவர்களாகிய தேவர்க்கும் மேலானதேவரான பிரம்மதேவரின் கன்னிகைகள் முப்பத்திருவர் நன்றாக அலங்காரம்செய்துகொண்டு அவனை மகிழ்விப்பார்கள். ராஜனே! ஆகாயத்தில் சந்திரனும் சூரிய

றும் எந்தக்காலம்வரை ஸஞ்சரிக்கின்றனரோ அந்தக்காலம்வரையில் அந்தச்சிறந்தமனவுறுதியுள்ளவன் அமிருதத்திற்கொப்பானசுவைக ளையுண்டு ஸஞ்சரிப்பான். பதினெட்டாவதுநாள்ஏகபோஜனம்செய்து கொண்டு பன்னிரண்டுமாஸங்களுமிருப்பவன் ஏழுலோகங்களையும் பார்ப்பான். அவன் தேவகன்னிகைகளால்ஏறப்பட்டவையும் நன்றாக அலங்கரிக்கப்பட்டுப்பிரகாசிப்பவையும்மங்களகோஷங்களுள்ளவையு மான ரதங்களால் பின்செல்லப்படுவான்; புலிகளும்ஸிம்மங்களும்கட் டப்பட்டதும் மேகமுழக்கம்போன்றசப்தமுள்ளதும் சிறந்ததுமான திவ்யவிமானத்திலேறி ஸுகமாயிருப்பான்; அங்கே அநேகமாயி ரம்கல்பகாலம்கன்னிகைகளுடன்மகிழ்ந்திருப்பான்; அமிருதத்தையும் அமிருதத்தைப்போலஉயர்ந்தசுவையுள்ள ஆகாரத்தையும் உண்பான். பத்தொன்பதாவதுநாள் ஏகபோஜனம்செய்துகொண்டு பன்னிரண்டு மாஸங்களிருப்பவன் ஏழுஉலகங்களையும் பார்ப்பான்; அப்ஸரஸுக ளின்கூட்டங்கள்காத்திருப்பதும் கந்தர்வர்கள்பாடுவதும் சூரியனைப் போலஜ்வலிப்பதுமான உயர்ந்தஸ்தானத்தையும் விமானத்தையும் அடைவான்; அவ்விடத்தில் ஒளியுள்ளவனாகித் தேவலோகத்திய ஆடைகளைஉடுத்துச் சிறந்ததேவப்பெண்களுடன் அநேகவருஷகா லங்கள் துயரம்விட்டு மகிழ்ந்திருப்பான். இருபதாவதுநாள்ஏகபோஜ னம்செய்துகொண்டுஸத்யத்தையும்விரதத்தையும்விடாமல்ஐம்புலன் களையுமடக்கி மாம்ஸமுண்ணாமல் எல்லாப்பிராணிகளுக்கும்நன்மை யைக்கருதிப் பன்னிரண்டுமாஸங்களிருப்பவன் பெரியவையும் அழ கியவையுமான சூரியலோகங்களை அடைவான். கந்தர்வர்களும் அப் ஸரஸுகளும் தேவலோகத்தியபுஷ்பங்களையும் சந்தனங்களையும் எடுத்துக்கொண்டு அழகியபொன்விமானங்களுடன் அவனைப் பின் தொடர்வார்கள். இருபத்தோராவதுநாளில்ஏகபோஜனம்செய்து நித் தியம்அக்கினிஹோத்ரத்துடன் பன்னிரண்டுமாதங்களிருப்பவன் உயர் ந்தசுக்ரலோகத்திற்கும் இந்திரலோகத்திற்கும், அசுவினிதேவர்கள் மருத்துக்களின்லோகங்களுக்கும் போவான்; எப்போதும் இன்பங் களையேயனுபவித்துக்கொண்டு துன்பங்களையறியாமல் சிறந்தவிமா னத்திலேறிச் சிறந்தஸ்திரீகளால் அனுஸரிக்கப்பெற்றுத் தேவ னைப்போலப் பிரபுவாக விளையாடுவான். இருபத்திரண்டாவதுநாள் வந்தபோது ஏகபோஜனம்செய்து நித்தியம் அக்கிஹோத்திரம்செய்து கொண்டு ஹிம்ஸை பொய் பொறாமைகளைவிட்டுப் பன்னிரண்டு மாஸகாலமிருக்கும் புத்திசாலியானவன் சூரியனுக்கொப்பானஒளி யுடன் அஷ்டவஸுக்களின்லோகங்களை அடைவான். சிறந்தவிமா

னத்தையடைந்து அமுதமுண்டு சிறந்தஆபரணங்களையணிந்து நினைத்தபடிஸஞ்சரித்துத் தேவகன்னிகைகளுடன் விளையாடுவான். இருபத்துமூன்ருவதுநாள் மிதமாகஏகபோஜனம்செய்து இந்திரியங்களைஜயித்துப் பன்னிரண்டுமாதங்களிருப்பவன் வாயுலோகத்திற்கும் சுக்ரலோகத்திற்கும் ருத்ரலோகத்திற்கும் செல்வான்; நினைத்தபடி செல்லவும்: நினைத்தபடிசெய்யவும்திறமையுற்றும் அப்ஸரஸுகளின் கூட்டங்களினுல்பூஜிக்கப்பெற்றும் சிறந்தவிமானத்தில்ஏறித் தேவர்களின்ஆபரணங்களையணிந்துகொண்டுதேவகன்னிகைகளுடன் அநேகயுககாலம்வரையில் மகிழ்ந்திருப்பான். இருபத்துநான்காவதுநாளில் போஜனம்செய்து [1]நித்யாக்நிஹோத்திரத்துடன் பன்னிரண்டுமாதங்களிருப்பவன் ஆதித்யர்களின்லோகத்தில் நீண்டகாலம் மகிழ்ந்திருப்பான்; தேவலோகத்தியஆடைகளையுடுத்துச் சிறந்தமாலைகளையும்சந்தனப்பூச்சுக்களையும்அணிந்து ஹம்ஸங்கள்கட்டினதும் மனத்தைக்கவருவதுமான சிறந்த பொன்விமானத்தில்ஏறி ஆயிரவரும் பதினுயிரவருமானதேவகன்னிகைகளுடன் மகிழ்ந்திருப்பான். இருபத்தைந்தாவதுநாளில்ஏகபோஜனம்செய்து பன்னிரண்டுமாஸங்களிருப்பவன் எல்லாவாகனங்களிலும்ஏறுவான்; சிங்கங்களும்புலிகளும்கட்டப்பட்டவையும் மேகங்கள்போலஒலிப்பவையும் தேவகன்னிகைகளினுல் ஏறப்பட்டவையும் ஜயகோஷங்களுள்ளவையும் தூயஒளியுள்ளவையுமான பொன்ரதங்களினுல் பின்செல்லப்படுவான்; மனத்தைமிகக்கவருவதாகிய சிறந்ததேவகிருகத்தையடைந்து அதில் அநேகமாயிரம்கல்பங்கள் நூற்றுக்கணக்கானஸ்திரீகளுடன் அமிருதம்போன்றஉயர்ந்தசுவையுள்ளஆகாரத்தைப் புசித்துக்கொண்டிருப்பான். இருபத்தாருவதுநாள் விலக்கவேண்டியவற்றைவிலக்கி நியமத்துடன் ஏகபோஜனம்செய்து புலன்களையடக்கிப் பற்றற்றவனுகி அக்நிஹோத்ரம்செய்துகொண்டுபன்னிரண்டுமாதங்களிருக்கும் மகானுபாவன்அப்ஸரஸுகளின்கூட்டங்களினுல்கொண்டாடப்பெற்று ஸப்தமருத்துக்கள் அஷ்டவஸுக்களின்லோகங்களை அடைவான்; படிகத்திறுற்செய்யப்பட்டவையும்எல்லாரத்தினங்களினுலும் அலங்கரிக்கப்பட்டவையுமான திவ்யவிமானங்களில்ஏறிக் கந்தர்வர்களாலும் அப்ஸரஸுகளாலும்பூஜிக்கப்பெற்று இரண்டாயிரம் [1]அர்ப்புதம்தேவவருஷங்கள் தேவனைப்போன்றஒளியுடன் மகிழ்ந்திருப்பான். இருபத்தேழாவது நாளில்ஏகபோஜனத்துடன் நித்தியாக்நிஹோத்ரமும்செய்து பன்னிரண்டுமாஸங்களிருப்பவன் மிகுதியானபலனைப்பெற்றுத் தேவலோ

1 பத்துக்கோடி.

கத்தில் பூஜிக்கப்படுவான்; அவ்வுலகத்தில்வஸிக்கும்போது அமிரு தத்தையுண்டு பசியில்லாமல் மகிழ்ந்திருப்பான். தேவசரீரத்தைய டைந்து விமானத்திலேறித் தேவரிஷிகளும்ராஜரிஷிகளும் இருக் கும்லோகங்களை அடைவான்; மனத்திற்கினியவர்களானபெண்களு டன் செருக்குடன்விளையாடிக்கொண்டு வஸிப்பான்; மூவாயிரம்யுக ங்களும் மூவாயிரம்கல்பங்களும் ஸுகமாகவஸிப்பான். மனத்தை யும்இந்திரியங்களையும்அடக்கி இருபத்தெட்டாவதுநாள் ஏகபோஜ னத்தோடு பன்னிரண்டுமாதங்களிருப்பவன் தேவரிஷிகளடையும் பெரும்பயனை அடைவான்; ஸுகங்களையடைந்து ஒளியினால்சூரியன் போலப் பிரகாசமாகவிளங்குவான். மென்மையுள்ளவர்களும்அழகிய ஒளியுள்ளவர்களும் பருத்தஸ்தனங்களும் தொடைகளும்நிதம்பங்களு முள்ளவர்களும்சிறந்தஆபரணங்களினால் அலங்கரிக்கப்பட்டவர்களும் மனத்திற்கினியவர்களுமானஸ்திரீகள் சூரியனைப்போலப் பிரகாசிப் பதும் வேண்டினவையெல்லாம் நிரம்பினதுமானதேவவிமானத்தில் நூற்றுக்கணக்கும் பதினாயிரக்கணக்குமான கல்பங்கள்வரையிலும் அவனை மகிழ்விப்பார். இருபத்தொன்பதாவதுநாள் ஏகபோஜனம் செய்துஸத்தியத்தையும்விரதத்தையும்விடாமல்பன்னிரண்டுமாஸங்க ளிருப்பவனுக்குத் தேவர்களாலும் ராஜரிஷிகளாலும் பூஜிக்கப்பெற்று விளங்கும் உயர்ந்தலோகங்கள் கிடைக்கின்றன. சூரியனைப்போலவும் சந்திரனைப்போலவும்விளங்குவதும் பொன்மயமானதும் எல்லா ரத்தி னங்களும் நிரம்பினதும் அப்ஸரஸுகள் கூட்டங்களாகச் சேர்ந்திருப் பதும் கந்தர்வர்கள்பாடுவதுமான திவ்யவிமானத்தை அடைவான். அங்கே அவனைச் சிறந்தஆபரணங்களினால் அலங்கரிக்கப்பட்டவரும் மனத்திற்கினியவரும் சொற்சுவையுள்ளவருமான சிறந்தமங்கையர் மிக்ககர்வத்துடன் மகிழ்விப்பர். (அவன்)எல்லாஸுகங்களும் பொருந்தி அக்னியைப்போன்ற ஒளியுள்ள சிறந்ததேகத்தினால் தேவ னைபோலவிளங்கிக்கொண்டு வஸுக்கள் மருத்துக்கள் ஸாத்யர்கள் அசுவினிதேவர்கள் ருத்திரர்கள்இவர்களின்லோகங்களுக்கும் பிரம்ம லோகத்திற்கும் போவான். மாஸம்முடியும்போது நியமத்துடன் ஏகபோஜனம்செய்துகொண்டு பன்னிரண்டுமாஸங்கள் இருப்பவன் பிரம்மலோகத்தை அடைவான். அமிருதத்தையுண்டு அழகுள்ள வனாகவும் எல்லாருடைய மனத்திற்கும்இனியவனாகவும் ஒளியும் அழகுமுள்ளதேகத்தோடு சூரியன்போல விளங்குவான்; தேவ லோகத்துள்ளமாலைகளையும்ஆடைகளையும்சந்தனங்களையும் அணிந்து விரும்பினஸுகங்களையனுபவித்துத் துக்கங்களையறியாமல் விமானத்

திலிருந்துகொண்டு இயற்கையொளியுள்ளபெண்களினால் கொண்டா டப்படுவான் ; அழகியபலஉருவங்களும் பலநிறங்களும் பலஇனிய சொற்களுமுள்ளவர்களும் பலவகைக்காமஸுகம் தருகிறவர்களுமான ருத்திரகன்னிகைகளாலும் தேவகன்னிகைகளாலும் ரிஷிகன்னிகைக ளாலும் எக்காலமும் கொண்டாடப்படுவான். பின்னே சந்திரனைப் போலவும் வடபுறத்தில்மேகம்போலவும்பிரகாசிப்பதும் தென்புறத் தில் சிவந்தநிறமுள்ளதும் அடிவாரத்தில் கறுத்தஉருவமுள்ளதும் மேலே பலநிறங்களுள்ளதும் ஆகாயத்திற்கும்சூரியனுக்கும் வைடூரி யக்கல்லுக்கும் ஒப்புள்ளதுமான தேவவிமானத்திற்கொண்டாடப்பட் டுத் தனியாயில்லாமல் வஸிப்பான்.ஜம்புத்தீவில் எத்தனை ஆயிரம்வரு ஷங்கள் மேகம்பொழிகிறதோ அத்தனையாயிரம்வருஷம் அந்தப்புத்தி சாலிக்குப்பிரம்மலோகத்தில்வாஸம்சொல்லப்பட்டிருக்கிறது.(அவன்) மழைக்காலத்தில் மேகம்பொழியும்போது ஆகாயத்தினின்றுவிழும் துளிகள் எவ்வளவோ அவ்வளவுஆயிரம்வருஷகாலம் தேவதையைப் போலப் பிரகாசித்துக்கொண்டிருப்பான். ஒருமாஸஉபவாஸத்தைப் பத்துவருஷங்கள் அனுஷ்டிப்பவன் மகரிஷியாகித் தேகத்தோடேயே ஸவர்க்கத்தையடைவான். இந்திரியங்களையும் கோபத்தையும்காமத் தையும் வயிற்றையும்கட்டி அக்நிஹோத்திரத்தையும் ஸந்தியாவந் தனத்தையும் நியமத்துடன்செய்து த்யானம்செய்து மேற்சொன்ன அநேகநியமங்களோடு போஜனம்செய்துகொண்டு [1]ஆகாயத்தில்வஸி ப்பவனுக்குச் சூரியனுக்கிருப்பதுபோலக் கிரணங்களுண்டாகின் றன. ராஜனே! அப்படிப்பட்டமனிதன் தேகத்தோடேயே ஸ்வர்க்கத் திற்குச்சென்று, தேவதைபோலவே தன்புண்ணியப்பயனாகிய ஸ்வர்க்க ஸுகத்தை இஷ்டப்படியனுபவிப்பான். பரதஸ்ரேஷ்டனே! உபவா ஸங்களுடையபலனாகக்கிடைக்கும் உத்தமமானயாகவிதியை உனக்கு வரிசையாகச்சொன்னேன். குந்திபுத்திரனே! ஏழைகளானமனிதர் களும் யாகபலனையடையும்வகை இது. பரதஸ்ரேஷ்டனே! தேவர் களையும் பிராம்மணர்களையும் சிரத்தையுடன் பூஜித்துஇந்தஉபவாஸங் களைச்செய்தால் முக்தியையும் அடையலாம், பாரதனே! நியமமுள்ள வரும் தவமுதவரும் ஆசாரமுள்ளவரும் மோசமும் துரோகமுமில்லா தவரும் கலங்காதவரும் பிறராற்கலக்கக்கூடாதவருமான புத்தித் தேர்ச்சியுள்ள மகாத்துமாக்கள்செய்யும் உபவாஸத்தைப்பற்றிய இந்த ஒழுங்கை உனக்கு விரிவாகச்சொன்னேன். இதில் உனக்குச் சந் தேகம்வேண்டாம்" என்றார்.

---

1 மேற்கூரையில்லாத திறந்தவிடத்தில்.

## நூற்றுபத்தைந்தாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(மஹாதேவருக்கும் ஸநத்குமாரருக்கும் தத்வங்களைப்பற்றி நடந்தஸம்பாஷணை.)

யுதிஷ்டிரர், "தானதர்மங்களைப்பற்றினகதைகள் ரிஷிகள் கிருஷ்ணன்இவர்கள்முன்னிலையில் பிதாமஹரானஉம்மால் சொல்லப் பட்டன. அவற்றை நான் கேட்டேன். திரும்பவும் அந்தஆத்ம வித்தையைப்பற்றியே ஆசையுண்டாயிருக்கிறது. அரசர்க்கரசரே! அந்தவிஷயங்களைச் சொல்லும். உம்மைவிட வேறுயார் சொல்லக் கூடும்? இந்தயாதவபுத்திரரானவாஸுதேவர் அதற்கு அனுமதி கொடுக்கவேண்டும். பாரதரே! இவரையறிந்தால் அறியத்தக்கதெல் லாம் அறியப்பட்டதாகுமே. பிதாமஹரே! அவசியம்கேட்கவேண் டிய ராஜதர்மங்களைப் பின்னால் கேட்போம். ரிஷிகளுக்குள்ளஆவலை இப்போது தீர்க்கக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"மகாராஜனே! இதற்குமேல் சாங்கியசாஸ்திரம் யோகசாஸ்தி ரம்இவ்விரண்டினாலும்அறியப்பட்ட ஆத்மாவின்ஸ்வரூபத்தைச் சரி யாகக்கண்டறிந்தவர்களான இரண்டுஆசாரியர்களின்சம்பாஷணையை உதாகரிப்போம். அதெப்படியென்றால், ஆயிரம்யோஜனை தூரமுள்ள வட்டமான ஒருபெரியசிறந்தவிமானத்தின் இளஞ்சூரியனைப்போலப் பிரகாசிக்கும்பெரியதட்டில் ஆஸனம்போட்டுக்கொண்டு ஆனந்தரூபி யும் ஸம்ஸாரத்தில் திரும்பிவராமற்செய்கிறவரும் ஜனனமரணங்கள் இல்லாதவரும் அரூபியும் உபதேசத்தால் அறியப்பட்டவருமான பக வானைத் தியானித்துக்கொண்டு உட்கார்ந்திருப்பவரான கட்டைவிர லின்கணுஅளவான ஸநத்குமாரபகவானென்னும்ஆசாரியரைப் பக வானும் ஆசாரியருமானருத்திரர் அணுகினார். ஸநத்குமாரர் அவ ரைப்பார்த்து, 'மகேஸ்வரரே! பிரம்மாவின்புத்திரரே! உமக்கு நல் வரவு. இதோ ஆஸனம். பகவானேநீங்கள் உட்காரலாம்' என்று சொன்னார். அவர்இவ்வாறுசொன்னபின்,அளவற்றஸ்வரூபமுள்ளபக வானாகியருத்திரர் உட்கார்ந்து அவரைப்பார்த்து, 'பகவானே நீர் தியானத்தைத் தொடர்ச்சியாகச் செய்துகொண்டிருக்கிறீரா?' என்றுகேட்க, ஸநத்குமாரபகவானும், 'ஆம்' என்றுசொன்னார். அவ்வாறுசொன்னபின், பகவானானசங்கரர் அப்போது மூவுலகங் களிலுமுள்ள மேல்கீழ்ப்பொருள்களெல்லாவற்றையும்அறிந்த அம்

மஹரிஷியைப்பார்த்துக் கேட்கலானார். 'தியானத்தினாற் காணத்தக்கது எது? நீர் எதைப் பார்க்கிறீர்? தத்வஜ்ஞானிகளானயதிகள் எதைத் தியானஞ்செய்து துயரப்படாமலிருக்கின்றனர்? யதிகளிற் சிறந்தவரே! யோகத்திலும் சாங்கியத்திலும் சுத்தமானபுருஷரென்றுசொல்லப்பட்டவரும் பிராணிகளுக்கெல்லாம் ஈஸ்வரருமான அந்தப்பரமாத்மாவைப்பற்றிச்சொல்லும். அத்யாத்மம் அதிபூதம் அதிதெய்வம்என்பவை யாவை? பகவானே! அந்தப்புருஷரைச் சேர்ந்தபிரக்ருதிக்கு நாம்அறியத்தக்க காலஎல்லை யாது? காலத்திற்குட்பட்டபிரபஞ்சத்திற்கன்றோ காலவரை மகரிஷிகளால் கூறப்பட்டுள்ளது? யதிகளிற்சிறந்தவரே! சாஸ்திரத்திற்சொன்னவழியைஅனுஸரித்து ஸரியாகச் சொல்லக்கடவீர். மூப்பும்அழிவுமில்லாத [1]ப்ரபுத்தனென்னும் சுத்த [2]புருஷனையும் [3]புத்யமானன் [4]அப்ரபுத்தனென்றபுருஷர்களையும் வித்தை அவித்தைகளையும் சொல்லக்கடவீர். மோக்ஷத்ஞதயறிந்தவரிற்சிறந்தவரே! யதிஸ்ரேஷ்டரே! மூன்றுவித மோக்ஷங்களையும் சாங்கியர்கள்சொல்லும்தத்வங்களின்எண்ணையும் யோகிகள்செய்யும்ஸரியானதியானத்தையும் ஒன்றாகப்பார்ப்பதையும் பலவாகப்பார்ப்பதையும் துர்நிமித்தங்களையும் மரணங்களையும் பிராணிகளின்தேகங்களைச்சார்ந்திருக்கும் எல்லாத்தேவதைகளையும் அடியிலிருந்துகடைசிவரையில் முழுதும் தெளிவாகச்சொல்லும். ரிஷிஸ்ரேஷ்டரே! நீர்தாமே பிரம்மஜ்ஞானிகள்எல்லாரிலும் சிறந்தவர்; குற்றமற்றவர்; மேலானகதியையடைந்த [5]மூவருக்குப்பின் நாலாமவர்; பிரக்ருதியையறிந்ததனால் ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபட்டவர். நாமோவெனின் அழிவில்லாதஆனந்தமாகிய மேன்மார்க்கத்தைவிட்டு எப்போதும் அழிவதாகியகாரியப்ரபஞ்சமார்க்கத்தை ஆஸ்ரயித்திருக்கிறோம். குறைந்தமார்க்கமான (அணிமாதி) எண்குணங்கள்பொருந்தின ஐசுவரியத்தில்மூழ்கி இந்தப்பெருமையை எடுத்துக்கொண்டு ஸுகமாகத்திரிகிறோம். இது முழுதும் ஸுகமாகாது. இது பின்னிட்டுக்குறையும். மிகச்சிறந்தவரே! இது ரூபமுள்ளது. இது வேறு. இது இப்படித்தான். ரூபமுள்ளதற்கு அடிக்கடிஅழிதல் சாஸ்திரத்தில்உபதேசிக்கப்படுகிறது. பற்றற்றவர்களுக்குத் தேகத்தைத்தவிர வேறு ஒருமிருத்யுவில்லை. மகரிஷியே! ஆத்மஜ்ஞானமில்லாதவர்களுக்கு மானிடலோகத்திலும் ஸ்வர்க்கத்தி

1 அறிந்தவன். 2 ஆத்மா.
3 அறிய ஆரம்பிக்கிறவன். 4 அறியாதவன்.
5 1. ஸநகர். 2. ஸநந்தனர். 3. ஸநத்ஸுஜாதர். 4. ஸநத்குமாரர்.

லும் நரகத்திலும் ஸம்ஸாரத்தின்குற்றங்கள் அளவற்றவைகளாக உண்டாகின்றன. அவ்வுலகங்களில் மனிதர்கள் இன்பதுன்பங்களி னூற்சுற்றப்பட்டு ஆழ்கின்றனர். இன்பதுன்பங்களற்றதுதான் அழியாதபதமென்று சொல்லுகின்றனர். அதை நீர் சாஸ்திரஜ்ஞானத்தினுல் ஸரியாகச்சொல்லக் கேட்க விரும்புகிறேன்' என்றூர்.

ஸநத்குமாரர் சொல்லலானூர். 'பிராணிகளுக்குள்ளஞானத்தைப் பற்றி நீர் கேட்டீரன்றோ? அதில் சிலஞானிகள் இருபத்துநான்கு தத்வங்களே என்று கூறுகின்றனர். மற்றும்சிலர் இருபத்துமூன்று தத்வங்கள்என்று சொல்லுகின்றனர். நாம் வேதத்தை ஆதாரமாகக் கொண்டு எல்லாச்சாஸ்திரங்களிலும் எல்லாவற்றிற்கும் ஆதாரமென்றுசொல்லப்பட்டது இருபத்தைந்தாவதுதத்வமென்று நிச்சயிக்கிறோம். பினகதாரியே! அழிவற்றஆத்மா தேகம்ஆகியஇரண்டும் ஒன்றோடொன்றுசேர்ந்தும் பிரிந்தும்இருப்பவை. ஐயா! தேகமுள்ளவரிற்சிறந்தவரே! ஆதிபுருஷனுனபகவான் பொன் [1]மயமான தேகத்திற்பிரவேசித்துக் காரியமானவிகாரத்தையும் ஆத்மாவையும்சேர்த்துப் படைத்தார். அவ்யக்தமென்னப்பட்டமூலப்ரகிருதியிலிருந்து மகத்தென்னும்ஒருதத்வம்தான் உண்டாகிறது. அது அகங்காரத்தினுல் வ்யாபித்து உலகங்களையுண்டாக்குகிறது. சூலபாணியே! மூலப்ரகிருதியைத் தவிர மற்றவையெல்லாம் அகங்காரமுள்ளவையென்றறியும். அகங்காரத்திலிருந்து காலக்கிரமத்தில் பஞ்சபூதஸ்ருஷ்டியென்னும் மூன்றுவதுஸ்ருஷ்டிஉண்டாவதை அறியும். அகங்காரத்திலுண்டானஐந்துபூதங்களின் விகாரங்களாகிய பிரபஞ்சங்களை நாலாவது ஸ்ருஷ்டியென்றறியும். தேவஸ்ரேஷ்டரே! ஐந்துபூதங்களும் அவற்றின்குணங்களாகிய சப்தஸ்பரிசரூபரஸகந்தங்களும் அகங்காரத்திலிருந்து ஒரேகாலத்தில் உண்டானவையென்று ஞானிகள் கூறுகின்றனர். இருபத்தைந்தாவது தத்வமாகிய ஈச்வரன் இருபத்துநான்கு தத்வங்களையும் மேலிருந்து நடத்துகிறுன். இவ்வாறு ப்ரகிருதியினுலுண்டாகும் [2]நால்வகைஸ்ருஷ்டிகளை இப்போது சொன்னேன். தேவஸ்ரேஷ்டரே! அகங்காரத்திலிருந்து அநேகங்கள் ஒரேகாலத்திற் பிறந்தன. ஐந்துபூதங்களிலுமுள்ளபலவகைக்குணங்களும் அகங்காரத்திலிருந்து உண்டானவை. அந்தரித்தியனை ஆத்மா எல்லாஇந்திரியங்களாலும் ஒரேகாலத்தில் விஷயங்களை அறிகிறுன். சிறந்தபுத்தியுள்ளவரே! பிராணனும்

1 பிரகிருதி.

2 1 மகத்து 2 அகங்காரம் 3 ஐந்துபூதங்கள் 4 அவற்றின்குணங்கள்.

பிராணிகளும் ஸந்தோஷமும் ஜயமும் விகாரத்தினாலுண்டாகும் ஸ்ருஷ்டிகளென்று சொல்வேன். அவற்றையும் கேளும். தேவருக்கும் ஈஸ்வரரே! நான் சாஸ்திரஞானத்தினால் இவ்விருபத்து நான்கு தத்வங்களையும் [1]இருபத்தைந்தாவது தத்வத்துடன் உமக்கு விரித்துரைத்தேன். அனுக்ரகம் (ஒன்றுக்கொன்று உதவிசெய்வது) ஐந்தாவதுஸ்ருஷ்டி. [2]இவ்வைந்தும் ப்ரகிருதியின் ஸ்ருஷ்டிகள் நான் குடன்சேர்ந்து ஒன்பதுவகையாகின்றன. இந்திரனிடத்திலும் நான் பிரகாசித்துக்கொண்டிருக்கிறேன். என் ஆத்மாவிலும் மற்றவை பிரகாசிக்கின்றன. திரிபுரஸம்ஹாரம் செய்தவரே! மூவுலகங்களிலுமுள்ளதேகங்களனைத்திலும் பிரகாசித்துக்கொண்டிருப்பது ஒன்றென்று அறியும். பிரம்மபுத்திரரே! இதற்குமாறாகப்பார்ப்பவர் பாராதவரே. இந்தப்ரகிருதியிற்சேர்ந்தவை இருபத்தைந்தாவது தத்வத்தை ஆஸ்ரயித்திருக்கின்றன. இந்தக்காரணம்பற்றித்தான் தெரிந்தவர்கள் இருபத்தைந்தாவதையே தத்வமென்றுசொல்லுகின்றனர். இவையெல்லாம் விகாரப்படுகின்றவை. இவற்றிற்கு மேற்பட்டது தான் தத்வம் (மாறாதது) என்றுசொல்லுகின்றனர். தேவஸ்ரேஷ்டரே! அறியவேண்டியஅதை அறியாததினால் எவனும் தத்வங்களிற் சேராமற்போவான். தேவஸ்ரேஷ்டரே! பிரபுவே! அறிகிறவன் எல்லாவற்றிற்கும் மேலானபுத்தனாகிய ஈசுவரனையறிந்து, 'இவன் வேறு; நான் [3]அல்லேன்' என்றுநினைப்பதனால் பிரபுத்தனாவான்.

---

## நூற்றுறுபத்தாறுவது அத்யாயம்.

### தான தர்ம பர்வம். (தொடர்ச்சி.)



(மஹாதேவனுக்கும் ஸநத்குமாரனுக்கும்நடந்த ஸம்பாஷணைத் தொடர்ச்சி; அத்யாத்மமுதலியவற்றைப்பற்றியது.)

'பிரம்மஞானிகளிற்சிறந்தவரே! தத்வங்களென்று எண்ணும் ஒன்பதுஸ்ருஷ்டிகளின்வகைகளும் என்னால் வரிசையாகச்சொல்லப் பட்டவற்றை நீர் கேட்டீரன்றோ? இனி உமக்கு அத்யாத்மம் அதிபூதம் அதிதெய்வங்களைப்பற்றிச் சொல்வேன். யோகிகளும் வேதப்

---

1 பூதங்கள்ஐந்து, குணங்கள்ஐந்து, கர்மேந்திரியங்கள்ஐந்து, ஞானேந்திரியங்கள்ஐந்து, மனஸ், மகத், அகங்காரம், ஆத்மா, ஈஸ்வரன் ஆகஇருபத்தைந்து.

2 பிராணன், பிராணி, ஸந்தோஷம், ஜயம், அனுக்கிரகம்.

3 ஜீவாத்மாவல்லேன்.

அறிந்தவர்களும் சிறந்ததவமுள்ளவர்களும் பூஜிக்கத்தக்கவர்களு மான இந்தக்கிருஹஸ்தர்கள் இந்தப்பரமாத்மாவின்உண்மையை மூய ன்றுஅறிவதில்லை. அது நான்சொன்னபடி தத்வஜ்ஞானத்தினால் அடையத்தக்கது. தேவஸ்ரேஷ்டர்களிலும் சிறந்தவரே! பற்றுக் களையும்விட்டு யதிஸ்ரேஷ்டர்களின் செய்கையோடுகூடிய நான், மேலானவருக்கும் மேலானதும் அமிருதமும் உண்மைப்பொரு ளும் எல்லாப்பிராணிகளிடத்தும் இயற்கையாயிருப்பதும் தனக்கு ஈஸ்வரனில்லாததும் எல்லாவற்றிற்கும்தான் ஈஸ்வரனுமான இந்தப் பரமாத்மாவை உமக்குச்சொல்லுகிறேன். எல்லாவற்றிற்கும்மேலான தும் வேறானதும் யாருக்கும்தெரியாததுமானஇந்தப்பரப்ரம்மத்தை அடைந்தவன் தான் உமதுஸம்ஸாரவலேயைவிட்டுப்பரிசுத்தனுகிறான். இரத்தினங்கள் நிரம்பின இப்பூமியைக்கொடுத்தாலும் கொடுக்கலாம். பரீக்ஷைசெய்யப்படாதசிஷ்யனுக்கு இந்தரஹஸ்யத்தைக் கொடுக்க லாகாது. சிரத்தையில்லாதவனுக்கும் மற்றொன்றில்ஊக்கமுள்ளவ னுக்கும் ஞானமில்லாதவனுக்கும் கர்வப்படுகிறவனுக்கும் இதைக் கொடுக்கலாகாது. வேதாத்தியயனம்செய்பவனும் குணங்களுள்ள வனும் ஜிதேந்திரியனுமாயிருப்பவனுக்கு இதைக் கொடுக்கலாம். வ்ருஷபத்வஜரே! வரிசையாகஉண்டாகியும் அதற்குமாறுகலயித்து மிருக்கும் இந்தப்பொருள்களின்தொகுதியையும் அத்யாத்மம் அதி பூதம் அதிதெய்வங்களையும் சொல்லுவேன். [1]சூரியனுடையகிரணங் களைப்போலவே இதைச்சொல்லுகின்றனர். பிராம்மாவினுடையஒரு நாள்முடிந்தபோது உலகம் கடலில்மூழ்கிவிடும். பூமிஜலத்திலும் ஜலம்அக்கினியிலும் அக்கினிவாயுவிலும் வாயுஆகாயத்திலும் ஆகாயம் மனத்திலும் மனம்அகங்காரத்திலும் அகங்காரம் மஹத்திலும் லயமா கின்றன. அந்தமஹான் அவ்யக்தமாகிறதென்று சொல்லுகின்றனர். அதுதான், ஒன்றுதலென்றும் சொல்லுகின்றனர். மஹாதேவரே! அவ்யக்தமென்னப்படும்பிரகிருதி பிரம்மத்தினிடத்தில் லயமாகிறதெ ன்றறியும். இப்படி அடிக்கடி இந்தப்பகவானுடையவிளையாட்டிருக் கிறதென்று தத்வஜ்ஞானிகளான ஜனங்கள் கூறுகின்றனர். யோக சாஸ்திரத்திலும் சாங்கியசாஸ்திரத்திலுமுள்ள தத்வங்களையறிந்து ஆத்மத்தியானம்செய்யும் மகாத்மாக்களினால் அத்யாத்மம் அதிபூதம் அதிதெய்வதம்இவை ஸரியாகச் சொல்லப்பட்டிருக்கின்றன, மஹா தேவரே! இவ்வளவுவிஷயங்களும் மகாத்மாக்களினால் விரித்துரைக் கப்பட்டிருக்கின்றன, ப்ரம்மம் ஆத்யாத்மம்; புருஷனென்னப்படும்

1 பரவுவதும் சுருங்குவதும்.

ஜீவன் அதிதெய்வதம்;எல்லாப்பிராணிகளையும்ஸ்ருஷ்டிப்பதும் ரக்ஷிப்பதும் (அதிபூதமென்னப்படும்) செய்கையென்றும்அறியவேண்டும். பிராணன் அத்யாத்மம்; யாகம் அதிதெய்வதம்; யாகஹவிஸை ரதம் போலக்கொண்டுபோகும் அக்கியும் தனக்குப்பலனைக்கருதுவதும் செய்கை (அதிபூதம்). மனம் அத்யாத்மம்; சந்திரன் அதிதெய்வதம்; இந்திரியவிருத்திகள் சொற்கள்இவை கர்மங்கள் (அதிபூதங்கள்). செவி அத்யாத்மம்; ஆகாசம் அதிதேவதம்; எல்லாவிஷயங்களையும்சொல்லுவதற்காகஉண்டானசப்தம் கர்மமென்னப்படுகிறது (அதிபூதம்). த்வகிந்திரியம் அத்யாத்மம்; வாயு அதிதெய்வதம்; மேலேபடுபவற்றையறிவதுஅனைத்தும் அதன்கர்மங்கள் (அதிபூதம்). சக்ஷுரிந்திரியம் அத்யாத்மம்; சூரியன் அதிதெய்வதம்; எல்லாநிறங்களையும்உருவங்களையும்அறிவது கர்மம்என்னப்படுகிறது (அதிபூதம்). நா அத்யாத்மம்; ஜலம் அதிதெய்வதம்; [1]. யதிஶ்ரேஷ்டரே! பாயுஎன்னும்கர்மேந்திரியம் அத்யாத்மம்; ஜலமலவிஸர்ஜனமென்னும்செய்கை அதிபூதம்; [2]மித்திரன் அதிதேவதம். தேவருக்குந்தேவரான பிநாகபாணியே! உபஸ்தமென்னும்கர்மேந்திரியத்தை அத்யாத்மம் என்றும் சொல்லுகின்றனர்; புணர்ச்சி அதிபூதம்; பிரம்மா அதிதேவதை. த்ரிசூலத்தையடையாளமாகவுடையவரே! பாதங்கள் அத்யாத்மமென்றும் நடப்பது அதிபூதமென்றும் விஷ்ணுஅதிதேவதம் என்றும் ஞானிகள் கூறுகின்றனர். பிநாகியே! வாக்கு அத்யாத்மம் என்றும் பேசுவது அதிபூதமென்றும் அக்கி அதிதேவதமென்றும் தத்வஜ்ஞானிகள் கூறுகின்றனர். தேவஶ்ரேஷ்டரே! பிராணிகளின் அத்யாத்மம் அதிபூதம் அதிதெய்வங்களென்னும்ஒப்பற்றவிஷயத்தைப்பற்றி இவ்வாறு உமக்குச் செம்மையாகக் கூறினேன். புழு, பூச்சி, சண்டாளன், நாய், யானை, கிளி, கொசுகு, ஈ, பிராம்மணன், பசு, அரசன் எல்லாரிடத்திலும் இவற்றைச் சமமாகப்பார்க்கவேண்டும்; வித்தியாஸம் நினைக்கலாகாது. இதற்குமாறாகப்பார்ப்பவர்களின்பார்வை ஸரியன்று. 'ஓம்' என்னும்ஓரெழுத்தின்பொருளும் சேதனத்திற்கும் அசேதனத்திற்கும்மேற்பட்டவரும் ஆதிமத்தியாந்தங்களற்றவரும் இருப்புக்குண்டுபோலச் சலியாமல் நிற்பவருமான எந்தப்டகவானைத் தேவர்களும் தானவர்களும் கந்தர்வர்களும் யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் கின்னரர்களும் யார் எங்கிருப்பவர் என்றறியவில்லையோ அந்தயோகத்திற்கு ஈஶ்வரரும் பத்மத்தைநாபியிலுடைய

1 சுவைஅறிவதுஅதிபூதம்என்பது கண்டுகொள்க.

2 பன்னிரண்டுசூரியர்களில்ஒருவன்.

வரும் ஸர்வவியாபியும் எல்லாவற்றையும் ஜயிப்பவரும் உலகத்தைக் காப்பவரும் முதலுமுடிவுமற்றவரும் அனந்தரூபியும் தேவருக்குந் தேவரும் என்றுமிருப்பவரும் அளவுக்கும்அறிவுக்கும்எட்டாதவரும் பாவங்களைப்போக்குகிறவரும் ஸர்வசக்தருமான நாராயணரைப் பரிசுத்தனுகிப் பக்தியுடன் கைகூப்பி நமஸ்காரம்செய்து பூஜிக்கவேண்டும். ஆதியும்அந்தமுமில்லாத பரப்ரம்மத்தைத் தேவர்களும் முனிவர்களும் அறியவில்லை. எல்லாவற்றையுங்காப்பவரும் பாவங்களைப் போக்குகிறவரும் ஆறுகுணங்கள்பொருந்தினவருமான நாராயணர் ஒருவர்தாம் அறிவர். ரிஷிகளும் ஸித்தர்களும் நாகர்களும் தேவர்களும் தேவரிஷிகளும் நாராயணரையே துயரத்திற்குமருந்தாக அவரிடத்தில் தெரிந்துகொண்டனர். அந்தநாராயணர் துயரங்களை ஜயித்தவர். இந்தப்பிரஜைகள் அவரிடத்திலிருப்பவை. வலையில் பறவைகள் அகப்பட்டிருப்பதுபோல இவ்வுலகங்கள் அவரிடத்திலகப்பட்டுப் பிரகாசிக்கின்றன. ஸாங்கியர்கள் தங்கள்ஞானத்ருஷ்டியினுல்ஐந்துஇந்திரியங்களும் மனமும் புத்தியும் ஸப்தரிஷிகள் என்று கூறுகின்றனர். காதுகளுக்குத்திசைகளும் மனத்திற்குச்சந்திரனும் தேவதைகளென்று சொல்லுகின்றனர். இந்திரியங்கள்ஐந்து, மனம் ஆறு, புத்திஏழு இவை ஆத்மாவினிடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன. ஆனுல், அவை சரீரத்தைச்சேர்ந்தவையேயன்றி ஆத்மாவைச் சேர்ந்தவையல்ல. அதற்குக்காரணங்களான அவையனைத்தும் செய்யப்படும்செய்கைகள்ஏழிலும் அறியப்படும்விஷயங்கள்ஏழிலும் சேர்ந்து ஆத்மாவுக்குத் தத்தம்காரியங்களைச் செய்யத்தொடங்குகின்றன. கர்மேந்திரியங்களைச் செய்கைகளிலும் ஞானேந்திரியங்களைவிஷயங்களிலும் மனத்தைநினைப்பதிலும் புத்தியைஆராய்வதிலும் பிரவ்ருத்திக்கச்செய்வது ஆத்மாவே. விஷயங்களில்வியாபிப்பவையாகிய அவைகளே ஸ்தூலரூபங்கெட்டு ஸூக்ஷ்மங்களாகிப் பிராணிகள்தூங்கும்போது தேவலோகத்திற்கொப்பான ஸுஷும்நாநாடியிற்சேர்ந்திருக்கும் ஆத்மாவையும் இறந்தபின்வேறுதேகத்திற்குப்போகும்ஆத்மாவையும் மோக்ஷத்திற்குப்போகும்ஆத்மாவையும் அனுஸரித்துப்போகின்றன. மோக்ஷமடையும்போது தனக்குஆதாரமான அந்தஈஸ்வரரைமட்டும் யாரும் அறிவதில்லை. இவ்வாறுஎல்லாத்தத்வங்களும் ஆத்மாவில்பிரவேசித்தபோது விழித்துக்கொண்டிருக்கிறவன் யாரென்பதைப்பற்றிச் சொல்லுகிறேன். நல்லநித்திரையாகத் தூங்கும்போதும் விழித்துக்கொண்டிருக்கும்போதும் கனவுகாணும்போதும் தேவர்களையும் பிரகாசிக்கச்செய்யும் பகவானுன ஈஸ்வரரும் ஜீவனும்

புத்தியும் தேகத்தில் விழித்துக்கொண்டிருக்கின்றனர். தூங்கும்போதும் கனவின்காட்சிகளைக்காண்பவர் அவரே. ஜனங்கள் அறிவில்லாதிருக்கும்போதும் ஈஸ்வரரொருவரே அறிவுள்ளவராகிறார். அவர்தாம் [1]ப்ராஜ்ஞர். தேகத்திலிருக்கும் அவருக்குஇரண்டாவது, தைஜஸனென்னப்பட்ட தேகத்திலுள்ளஅக்நி. அது தூங்குகிறவனுக்கு ஆத்மாவைப்போலிருக்கிறது. அவனறியாதவனாயிருந்தாலும் தூக்கம்விழித்துக்கொள்ளாதவனாயிருந்தாலும் அவனதுஅன்னத்தை அதுஜீரணம்செய்கிறது; தேகத்தின்முடிவுவரையில் நிற்கிறது. இது ஆத்மாவைப்பற்றி நான் தெரிந்துகொண்டது.

---

## நூற்றறுபத்தேழாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(மஹாதேவருக்கும் ஸநத்குமாரருக்கும்நடந்த ஸம்பாஷணைத் தொடர்ச்சி ; யோகத்தைப்பற்றியது.)

சங்கரரே ! ஐயா! ஸ்ருஷ்டிப்ரளயங்களையும் அத்யாத்மம், அதிபூதம், அதிதெய்வங்களையும்பற்றி உமக்கு முதலிலிருந்து சொன்னேன்.பிராணிகளின்தேகங்களிலிருக்கும்தேவதைகளெல்லாவற்றையும்பற்றி நீர்கேட்டதைச் சொல்வேன், சங்கரரே ! பகைவரையழிப்பவரே! வாக்கில்அக்நியும் நாவில்சந்திரனும் பிராணனில்வாயுவும் ரூபத்தில்நக்ஷத்திரமும் நாவில்ஜலமும் நாபியில்மஹாஸமுத்திரமும் நகங்களிலும் ரோமங்களிலும் வ்ருக்ஷங்களும் வனங்களும் ஓஷதிகளும் கைகால்முதலியஅங்கங்களில் ஸப்தமருத்துக்களும் பூட்டுக்களில் வருஷங்களும் பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும்இடமாகிய ஹ்ருதயத்தில்ஆகாசமும்கண்டத்திலிருக்கும்உதானமென்னும்வாயுவில்மின்னலும் தேகநாம்புகளில்வியாபித்திருக்கும்வ்யானவாயுவில்மேகமும்இரண்டுஸ்தனங்களில்ஆகாயமும் பலத்தில்இந்திரனும் மனத்தில்ஈசானரும் அபானத்தில்ருத்திரரும் வ்யானத்தில்கந்தர்வர்களும்அப்ஸரஸுகளும் ஸத்யத்தில்மித்ரனும் புத்தியில்வருணனும் நேத்திரத்தில்சூரியனும் உடலில்பூமியும் பாதங்களில்விஷ்ணுவும் ஆஸனத்தில் மித்ரனும் குறியில்பிரம்மதேவரும் தலையில்திசைகளும் புத்தியில்பிரம்மாவும் தேவர்களாகவிருக்கின்றனர். [2]புத்யமானனென்பவன்ஆத்மாவினிடம் மனம்செலுத்தியிருப்பவன். அவனுக்குச் சங்கரர் அதிஷ்டானதேவ

---

1 ஆத்மா. 2 மோக்ஷத்தைவிரும்பும் ஜீவாத்மா.

தை. அந்தப்புத்யமானனிடமிருந்து [1]அபுத்தன் உண்டாகுனென்பது நிச்சயம். சங்கரரே! வேதங்களில்சொல்லப்படும் [2]புத்தன் இவ்விருவரையும்விட வேறானவன். தேகத்தில் அங்கங்களிலிருக்கும்வேறு வேறுதேவர்கள் அவனையேஆஸ்ரயித்திருக்கின்றனர். எவன் நித்தியமாகத் தியானத்திலிருந்துகொண்டு ஆத்மாவென்னும் அக்நியில் மற்றெல்லாவற்றையும் ஹோமம்செய்துமேற்சொன்னபடிஎல்லாவற்றையும் தேவதைகளாகப்பார்க்கிருனோ அந்தஆத்மயாஜியானவன் இவ்வாறு பார்ப்பதனுல் யோகியாகிருன். கிரியைகளாகியயாகங்களைச்செய்பவரெல்லாரினும் அந்தஆத்மயாகம்செய்பவன் சிறந்தவனுகிருன். மஹாதேவரே ! [3]இவ்வுலகமனைத்தையும் நித்தியமாகத் தன் [4]வாயில் ஹோமம்செய்பவன்எவனோ அவன்தான் ஆத்மஜ்ஞானியென்று ஆத்மஜ்ஞானமுள்ளமஹாத்மாக்கள் சொல்லுகின்றனர். ஆத்மயாகஞ்செய்பவன் சிறந்தஎல்லாத்தேவதைகளுக்கும்மேலானதைக்கருதிஅதனையே தியானித்து அதனிடம்சேரவேண்டும். திரிபுரஸம்ஹாரம்செய்தசங்கரரே! தேகத்திலிருக்கும்ஆத்மா (தேவதையைச்) சேரும்படியாகத் தேகத்திலுள்ள தனித்தனி இடங்களைச்சொல்வேன். பாதங்களைவிஷ்ணுவுக்குஅர்ப்பணம்செய்வதனுல் விஷ்ணுஸ்தானத்தையும் ஆஸனத்தை மித்ரனுக்குஅர்ப்பணம்செய்வதனுல் மித்ரஸ்தானத்தையும் உபஸ்தத்தைப்ரம்மாவுக்குஅர்ப்பணம்செய்வதனுல் பிரம்மஸ்தானத்தையும் நாபியை வருணனுக்குஅர்ப்பணம்செய்வதனுல் வருணனுடையஸ்தானத்தையும் ஸ்தனங்களை ஆகாயத்திற்கு அர்ப்பணம்செய்வதனுல் ஆகாயத்தின்ஸ்தானத்தையும் கைகளை இந்திரனுக்குஅர்ப்பணம்செய்வதனுல் இந்திரனுடையஸ்தானத்தையும் காதுகளைத் திசைகளுக்குஅர்ப்பணம்செய்வதனுல் திக்குத்தேவதைஸ்தானத்தையும் கண்ணைச் சூரியனுக்குஅர்ப்பணம்செய்வதனுல் ஸூர்யஸ்தானத்தையும் புத்தியைப்பிரம்மாவுக்கு அர்ப்பணம்செய்வதனுல் பிரம்மாவின் ஸ்தானத்தையும் மனிதன் அடைவான். எவன்தியானம்செய்து சுவாஸத்தைச் சிரஸிற்குள்நிறுத்துவானோஅவன்எல்லாவகைப்பொருள்களின்ஞானத்தையும் தன்புத்தியினுலேயே [5]அடைவானென்பதில் ஸந்தேகமில்லை. அவ்யக்தமென்னப்பட்ட ப்ரக்ருதிக்குமேற்பட்டதும் பரி

---

1 ஸம்ஸாரி. 2 பரமாத்மா.

3 'எல்லாம் பிரம்மம்; தானேஎல்லாம்' என்றுநினைக்கிறுனே

4 தான்ஆகாரம் செய்வதை ஆத்மாவென்னும்அக்நியில் எல்லாப்பற்றுக்களையும் ஹோமம்செய்பவன் என்பதாக நினைப்பது.

5 எல்லாஇந்திரியங்களாலும் அறியவேண்டியவற்றையெல்லாம் புத்திக்குள்ளேயே தெரிந்துகொள்வான் என்பது.

சத்தமும் அறிவுக்குஎட்டாததும் விகாரங்களற்றதுமாக எதைச் சொல்லுகின்றனரோ அந்தநித்தியமானபரம்பொருளை அந்தஞானியானவன் அடைகிறான். அவன் புத்யமானனாலும் அப்ரபுத்தனாலும் புத்தனென்றுசொல்லப்படுகிறான். அபுத்தனும் புத்யமானனை எப்போதும் எதிர்பார்க்கிறான். [1]விகாரபுருஷன்தான் புத்யமானனென்று சொல்லப்படுகிறான். அந்தப்புத்தன்தான் இருபத்தைந்தாவது தத்வமென்று சொல்லப்படுகிறான்; அதில்ஸந்தேசமில்லை. அவனே ப்ரகிருதியிலிருப்பதனால் தஸ்துவென்றும் சொல்லப்படுகிறான். மஹாதேவரே! ஆத்மா பெரிது. பெரிதுதான் இந்தத்தேகத்தில் தலைமையாயிருப்பது. தலைமையாயிருப்பதனால் அதை அதிஷ்டாதாஎன்று சாஸ்திரமறிந்தவர்கள் கூறுகின்றனர். தேவரே! இவன் அபுத்தனாயிருக்கையில் அஜ்ஞானமென்னும்வலையில் அகப்படுகிறான். அப்போது, அவ்யக்தமென்னப்பட்டப்ரக்ருதியைப்போலவே ஆத்மாவுமிருப்பதாகத் தெரிந்தவர்கள் கூறுகின்றனர். அப்போது அந்த அநாதியானஅஜ்ஞானத்தால், 'தேகமே நான்' என்று மாறுபட்டமாகக் கிரகிக்கிறான். இவன், 'நான் ஆத்மத்யானம்செய்து பிரகாசிக்க வேண்டும்' என்று நினைத்தானாயின் புத்தனாகாமல் ஜலத்தில்மீன்செல்வதுபோல ப்ரக்ருதியில் [2]நடவான். மூவுலகங்களுக்கும் ஈஸ்வரரே! தேவதைகளெல்லாவற்றையும்பற்றி உமக்குச் சொன்னேன். யோகம் செய்யுமுறையையும் நீர் வரிசையாக என்னிடம் தெரிந்துகொள்ளும். குடியிருப்பில்லாதவீடுகளிலும் காடுகளிலும் கடற்கரையிலும் குகைகளிலும் சுவாஸத்தையடக்கி [3]மூன்றுதண்டங்களையும் பெற்று [4] இரண்டைவிட்டிருக்கவேண்டும். சாஸ்திரப்பிரகாரம் [5]ஸ்வஸ்திகாஸனத்தோடு கிழக்குமுகமாயாவது வடக்குமுகமாயாவது மேற்குமுகமாயாவது தெற்குமுகமாயாவது அசையாமல்உட்கார்ந்து வளையாமல் உடம்பை நிமிர்த்துக்கொண்டு குருஉபதேசித்தப்படி ஸ்வயம்பிரகாசமான அந்தப்பிரம்மத்தைமனத்தில்தரித்துக்கொள்ளவேண்டும். இலகுவானஆகாரம்செய்து காலைமத்தியான்னமாலைமூன்றுகாலங்களையும் மலமூத்திரங்கள்விடுகிறகாலத்தையும் ஆகாரம்செய்யும்காலத்தையும் தவிர மற்றக்காலமெல்லாம் புலன்களையும்மனத்தையும்அடக்கி மிக்க

---

1 வெளித்தோற்றம் அற்றுப்போகாதவன்.

2 'பிரபுத்தனாவதற்கே முயலுவான்' என்பது.

3 மனோஜயம், வாக்ஜயம், காயஜயம்.

4 சீதோஷ்ணம், லாபாலாபமுதலியவை.

5 இரண்டுகால்களையும் இரண்டு தொடைகளிலும் மாற்றிப் போட்டுக் [கொண்டுஉட்காருவது.

ஊக்கத்துடன் மனத்தில் தியானம்செய்யவேண்டும். புத்திமான்களிற்சிறந்தவரே! மனத்தினாலேயே ஐம்புலன்களையும் அவ்வவற்றின் விஷயங்களிலிருந்து திருப்பவேண்டும். பதைபதைத்துப் பலவழிகளால்ஓடும்மனத்தை உறுதியினால்பிடித்து ஸங்கல்பங்களெல்லாவற்றையும் நிறுத்தினபிறகு யோகத்தில் நிலைபெறுவான். பிறகு, ஒரே ஊக்கத்தோடு எல்லாவற்றிலும் மிக்கரஹஸ்யமானபரம்பொருளை அறிவான். காற்றில்லாதவிடத்திலிருக்கும்தீபமானது எப்படி குறுக்கே அசையாமல் நேராகவே நன்குபிரகாசிக்கின்றதோ அப்படியேஉமது மனமும் பிரமைநீங்கி நன்குபிரகாசிக்கும். தேவஸ்ரேஷ்டரே! ஹ்ருதயத்திற்குள்ளிருப்பவனையே நோக்கிச்செல்லும்போது மனமானது கல்லைப்போல அசைவற்றிருக்கும். ஜனமில்லாதவிடம் ஜனமுள்ளவிடம் இரைச்சலில்லாதவிடம் இரைச்சலுள்ளவிடம் எங்கேவஸித்தாலும் எவன்சலியாமலிருப்பானோ அவன்தான் யோகத்தில்தேர்ந்த யோகி. இந்தயோகத்தின்முறை நாம்கேட்டது. அதன்பிறகு, மேகத்தில்மின்னல்போலத் தன்னாத்மாவின்கண் பிரகாசிப்பதும் ஆதாரமில்லாததும் அகாதமான [1]இருளிலிருப்பதும் [2]இருளற்றிருப்பதும் [3]அறிவில்லாததும் எல்லாவற்றையுமறிவதும் வேறொன்றினாலன்றித்தன்னொளியினால்பிரகாசிப்பதும் கைக்கட்டைவிரல்ரேகையளவுள்ளதும் முக்திப்பயனும் குற்றமற்றதும் அநந்தமும் சுதந்திரமும் துயரமற்றதும் பெரும்பொருளான அந்தஒருபிரம்மத்தைப் பார்ப்பான். ஒளிகளுக்கொளியும் எல்லாவற்றிற்கும்மேலானவரும் வியாபியும் மிகச்சுத்தரும் அணுக்களிலும் சிறியஅணுவும் உலகத்திற்கும்பெரியவரும் ஈச்வரருக்கும் மேலான ஈவஸ்ரரும் நித்தியரும் அந்தர்யாமியும் ரக்ஷிக்க ஸமர்த்தரும் ஜலத்தில் வஸிப்பவருமான நாராயணரை அறியாமல் உலகங்கள் ஸம்ஸாரக்கடலில் அமிழ்கின்றன. ஐயா! யதிகள் அவரைக் கண்டு தாபத்ரயம்நீங்கினவர்களாகி ஜனனமரணபயமில்லாமல் ஸம்ஸாரக்கடலைக்கடந்து துயரமற்றிருக்கின்றனர். அணிமா, லகிமா, மகிமா, பிராப்தி, பிராகாம்யம், ஈசித்வம், வசித்வம், நினைத்தவிடத்திலிருந்து அசையாமலிருப்பதாகிய கரிமாஇவ்வெட்டுக்குணங்களுடன் கூடியயோகம் யோகிகளுக்குப் பெரிதாகநினைக்கப்படுகிறது. அந்த யோகிகள் தனக்குமேல்ஆத்மாவில்லாததும் அறிவிற்கெட்டாததும் நித்யமும் ஸ்வயம்பிரகாசமுமான பரமாத்மாவையறிந்து அந்தயோகத்

1 யோகஞ்செய்யாமலிருப்பவருக்குத் தெரியாமலிருப்பதும்.

2 யோகிகளுக்குப்பிரகாசிப்பதும்.

3 ஜடமாகவும் ஜீவனாகவுமிருப்பது.

திலுல் நினைத்தசரீரங்களில் பிரவேசிக்கின்றனர். அவர்கள், அஸு ரர் தேவர் மனிதர்களின்பலத்திலும் அதிகபலமுள்ளவராகிறார். நீர் கேட்பதாகிய ஆதியந்தமில்லாத தத்வமிது. எக்காலமுமுள்ள இந்த யோகமென்னும்தர்மத்தை நாம் நித்தியமாகஅனுஷ்டிக்கிறோம். தேவ ஸ்ரேஷ்டரே! யோகதர்மத்திற்குப்பெரியதர்மமில்லை. தர்மங்களுள், திரும்பிப்பிறவாமலிருக்கும்படி சுத்தப்படுத்துகிறதர்மம் இதுதான். சிலபுத்திசாலிகள் வேறு பரதத்வங்களிருப்பதாகச் சொல்லுகின்றனர். பிரத்யக்ஷத்தையே முதன்மையாகப்பற்றினசிலர் வேறு பரதத்வம் இல்லையென்று சொல்லுகின்றனர். [1]வெளித்தோற்றத்திலிருக்கும்புரு ஷன் விகாரப்படுகிறானென்று நானே சொன்னேன். மஹேஸ்வரரே! எந்தயோகிகள் ஞானத்திலுல் அந்தஜீவாத்மாவையே பார்க்கின்ற னரோ அவர்கள்அந்தஜீவாத்மாவையே ஈஸ்வரரென்று சொல்லுகின் றனர். மற்றும்சிலர் நித்தியமானஞானமே பரப்பிரம்மமாக நினைக்கப் படுகிறதென்று சொல்லுகின்றனர். சாங்கியர்கள் எல்லாவற்றையும் விட்டுச் சுத்தஞானத்தையே பற்றுகின்றனர். யோகிகள் ஆத்மா வையும்தியானித்து அதற்குவேறானபரமாத்மாவிலும்புத்திவைக்கின் றனர். இதுவரையில் உத்தமமானயோகசாஸ்திரநிச்சயத்தை உமக் குச் சொன்னேன். தத்வங்களின்எண்களை அறிவதாகிய சாங்கிய ஞானத்தைப்பற்றி இனிச்சொல்வேன்.

---

## நூற்றறுபத்தெட்டாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(மஹாதேவருக்கும் ஸநத்குமாரருக்கும் ஸம்பாஷணைத்தொடர்ச்சி; இருபத்தாறு தத்வங்களைப்பற்றியது.)

தேவஸ்ரேஷ்டரே! 'இந்திரியங்களுக்குமேற்பட்டது மனம். அதற்குமேற்பட்டது அகங்காரம். அகங்காரத்திற்கு மேற்பட்டது புத்தி. புத்திக்குமேற்பட்டது மகத்து. மகத்திற்குமேற்பட்டது மூலப்பிரக்ருதி. மூலப்பிரக்ருதிக்குமேற்பட்டவன் புருஷன்' என் னும்இவ்வளவுதான் சாங்கியர்களின் கொள்கை. தேவஸ்ரேஷ்டரே! மூலப்பிரக்ருதி, மகத்தென்றுசொல்லப்படும் புத்தி, அகங்காரம், ஐந்துமகாபூதங்கள், மனம், ஐந்துகுணங்கள், பத்துஇந்திரியங்கள் இந்தஇருபத்துநான்குதத்வங்களும் அறிகிறவனும் மஹாத்மாவுமான

---

1 ஜீவாத்மா.

சேதனனென்னப்படும் சிறந்தஆத்மாவுடன்சேர்த்து அறியப்படுகின்றன. பிரக்ருதி புருஷன் இரண்டிற்குமுள்ளசேர்க்கையை அநாதியென்று சொல்லுகின்றனர். இவை [1]ஒன்றுவதும் பலவாவதும் ஸ்ருஷ்டி பிரளயமென்னும் இரண்டுநிலைமைகளைப் பற்றித்தான். த்ரிசூலம்தரித்தவரே! இந்தப்பிரக்ருதியைத் தமஸென்றுபெயருள்ளதாகச் சொல்லுகின்றனர். ஜீவர்கள் அவ்யக்தமென்னும் பிரக்ருதியைப் பிளந்துகொண்டுதான் அடிக்கடி கிளம்புகின்றனர். பிரபுவே! இந்தமகானுன ஜீவாத்மா குணங்களென்னப்படும் ஜடங்களுக்கு முதன்மையாயிருப்பவன். அவனது ஸ்வரூபம் வெளிப்படாமல் குணங்களென்னும் பிரக்ருதியில் சேர்ந்திருப்பதனால் அவனைக் குணமென்றும் சொல்லுகின்றனர். முக்குணங்கள்சேர்ந்த ஸ்தூலமான தேகமானது இந்தஜீவாத்மாவினால்வஸிக்கப்பெற்றுத்தான் விஷயங்களை அறிகிறது. ப்ரக்ருதியைச்சேர்ந்தஅசேதனம் மற்றொன்றையும் அறிவதில்லை. விகாரமற்றவனும் பரிசுத்தனும் துயரமற்றவனுமான ஆத்மா வேறுபிரமாணங்களினால் அறியக்கூடாமையினால், 'நான்' என்றே அறியப்படுகிறான். [2]நிர்க்குணனென்பவன் குற்றமற்றஉயர்ந்த ஸ்வபாவமுள்ளவனும் புத்யமானன் அப்ரபுத்தன்இவ்விருவரையும் அறிகிறவனும் ஸுகதுக்கங்களையனுபவியாதவனும் ஸத்வகுணமே உருவமாகவுடையவனுமாவான். அந்தநிர்க்குணன் புத்யமானனையும் அப்ரபுத்தனையும்விட வேறுதான்; விருப்பும்வெறுப்புமில்லாதவன்; பரிசுத்தன்; அவ்விருவரோடுஞ்சேராதவன். இப்படி மாறுமலிருக்கும்புத்தனைப் புத்யமானன் அறியான். புத்தியினால்பகுத்தறியுந் தன்மையில்லாததனால் அவனே [3]அசேதனனாகிறான். அவன், 'நான் தான், என்னைவிடவேறுஇல்லை' என்றுநினைக்கிறான். 'அசேதனனாயிருந்தநான் யாரால்சேதனனாகிறேனோ அவன் என்னைவிடவேறு ஒருவனிருக்கிறான்' என்று அவன் நினைப்பதில்லை. [4]புத்யமானனும் ஆத்மாவையறியாமையினால், 'நான்தான். என்னைவிடவேறு இல்லை; நான் [5]ப்ரபுத்தனுக்குட்பட்டவனல்லேன்' என்றே நினைக்கிறான். இவன் பிரக்ருதியிலிருந்துகொண்டு அதன்குணங்களையே எப்போதும் தானாகநினைக்கிறான். அதன்பின் ப்ரக்ருதி ஆத்மாவினால் ஆளப்படுகிறதென்னும்உண்மையையறிந்த பெரியோர்களால் உபதேசிக்கப்

---

1 பிரளயத்தில்ஒன்று; ஸ்ருஷ்டியிற்பல.

2 பிரக்ருதிஸம்பந்தமற்றவன்.

3 அபுத்தன்.

4 புத்யமானன் = அகங்காரம்.

5 ப்ரபுத்தன் = ஈஶ்வரனைப்போன்றவன்.

பெறுகிறான். அதன்பின் அகங்காரமென்னும் புத்யமானனிடம்சேர்ந்து அந்தப்பெரியோர்சொல்லை அங்கீகரிக்கிறான். அந்தப்புத்யமானன் சரீரத்திற்பிரவேசித்து அறிவுகெட்டு ஆத்மாவைவிழுங்குஉலகத்திற்கு ஸாரதியாகமுன்னின்றுகொண்டு இரண்டாவதான அகங்காரத்தைஸ்ருஷ்டிபண்ணுகிறான். எல்லாச்செய்கைகளுமடங்கிய [1]மூன்றுஅகங்காரங்களாலேதான் மூன்றுவதுஸ்ருஷ்டி உண்டானது. [2]பஞ்சபூதங்களையுமுண்டாக்கினது அகங்காரமே. [3]மனத்தையும்படைத்தது அகங்காரமே. அந்தமனம் இந்திரியங்களைநோக்கிப் பிரவ்ருத்தித்தது. சூலத்தைஅடையாளமாகவுடையவரே! அதனால், புத்தியுள்ளஆத்மாவானவன் பஞ்சபூதங்களிலுமுள்ள சப்தாதிவிஷயங்கள் ஐந்தையும் பஞ்சேந்திரியங்களுடன்கூடி அடிக்கடி விரும்பத்தலைப்பட்டான். புத்திமான்களிற்சிறந்தவரே! மனம் ஆத்மாவைஅறியாது. ஆத்மாவும் அகங்காரத்தை அறியான். அகங்காரமும் புத்தியை அறியாது. மகானுபாவரே! இவ்வாறே நியாயம்பேசுகிறமற்றவர்களும் இவற்றுள்ஒன்றையும் அறியார். அகங்காரத்துடன்சேர்ந்து எப்போதும் இந்திரியங்களிடத்திலேயேநோக்காகவிருக்கும் இந்தவிகாரஆத்மாவானவன் மகாபுருஷனென்றுசொல்லப்படுகிறான். அவன் உலகமனைத்தையும் விரித்துத் திரும்பவும் ஒருமிக்கச் சுருக்குகிறான். அறிவுள்ளதாயிருப்பதால்உலகமனைத்தும்புலப்படாதஆத்மாவினுள்ளத்தில் [4]இரவுமுழுதும்படுத்திருந்து இரவுமுடிந்து [5]பகல்வரும்போது திரும்பவும் ஆத்மாவாகவிளங்குகிறது. அப்படியே குணங்களாற்ஆத்மாக்கள் பலவுள்ளன. அந்தஆத்மா அவ்யக்தமென்னப்படும் இருளாகிய அஜ்ஞானத்துடன் சேர்ந்திருக்கிறான். அவன் 'எனக்குமேல் ஒருசிறந்தவன் இருக்கிறான்' என்றுநினைப்பானாயின் அடிக்கடி தன்னை ஆக்கவும் அழிக்கவும்செய்யான். மஹாதேவரே! இவ்வாறு புத்தியுள்ளவன் ஸூக்ஷ்மமானப்ரக்ருதியைச் சேர்ந்தவிஷயத்தையும் இருபத்தைந்தாவதுமஹாபுருஷனென்னும்விகாரஆத்மாவையும் அறியவேண்டும். இவ்வுலகத்தைமட்டும்புத்தியிலறிந்து படைப்பவனையறியாமலிருப்பவன் எவனோ அவன் அஜ்ஞானமாகவும் இருளாகவுமிருக்கும் பிரகிருதிக்குவசப்பட்டு அதன்குணங்களைத் தானாகவே ஆத்மாவினிடம் ஏற்றிடுவான். புத்யமானன் அபுத்தனையும் புத்தன் அவ்விருவரையும் அறிகின்றனர். இருபத்தாறாவதுதத்வமாகியபகவான் பற்றற்றவரும் பரிசுத்தரும் தமக்குமுதலில்லாதவரும் உருவமில்லாதவ

---

1 ஸாத்விகராஜஸதாமஸங்கள். 2 தாமஸாஹங்காரம்.

3 ஸாத்விகாஹங்காரம். 4 பிரளயம். 5 ஸ்ருஷ்டி.

ரும் அழிவும்குற்றங்களுமற்றவரும் சுத்தபுத்தரும் துயரமற்றவருமா யிருக்கிறார். சிலஞானிகள் மூலப்ரகிருதிமுதல் காரியங்களீறாகவுள்ள இவ்வுலகமட்டுமே தத்வமென்று சொல்லுகின்றனர். மற்றும்சில ஞானிகள் இவ்வுலகங்களைநீக்கி ஆத்மாவொன்றைமட்டுமே தத்வ மென்றுசொல்லுகின்றனர். சிறந்தபுத்தியுள்ளவரே! மற்றும்சிலஅறி ஞர்கள் ஒன்றும்தத்வமில்லையென்று சொல்லுகின்றனர். சிலமகாத் மாக்கள் பரமாத்மாவைத் தத்வங்களென்றுபெயர்மட்டுமுள்ளவராகச் சொல்லுகின்றனர். மற்றும்சிலர் வேதத்தில்தத்வமென்று சொல்லி யிருப்பதனால் பரமாத்மா தத்வம்தானென்று கூறுகின்றனர். மகே ஸ்வரரே! ஸத்வகுணத்தைப்பற்றியிருப்பதனால் ஸத்வகுணமுள்ளவ னென்று சிலர் சொல்லுகின்றனர். சிறந்தகைகளையுடையவரே! இந்த விகாராத்மாவாகிய புத்யமானனென்பவன் இவ்வாறு அவ்யக்தனென் னப்பட்டபுத்தனாகிறான். தேகமெடுக்கும்போது இவனுக்குச் சேத னத்வம் அசேதனத்வம் ஆகிய இரண்டுகுணங்களும் வித்தையும் கிரகம் (பற்றுதல்) என்று பெயருள்ள அவித்தையும் உண்டாகின்றன. சங்கரரே! இவ்வாறு சாஸ்திரபுத்தியுடன் தத்வங்களையறிகின்றயோ கர்களும் ஸாங்க்யர்களும் உறுதியாயிருக்கும்பிரகிருதிசம்பந்தத்தை [1] விட்டுவிடுகின்றனர். சாஸ்திரத்தின்உண்மையை இவ்வாறு நுட்ப மாகக்கண்டறிந்து பேசுகிறவர்களின்புத்தியானது நீரில்மண்ணெய்த் துளிபோல வங்கும்பப்படுகிறது. எல்லாவித்தைகளையும் ஆராய்ந்தறி வதுதான் அறிவென்று சொல்லப்படுகின்றது. அதனாலேதான் யதி ஸ்ரேஷ்டர்கள் வித்தையையும் அவித்தையையும் அறிகின்றனர். அவ ற்றில் மூன்றுவேதங்களும் பரவித்தையென்றுசொல்லப்படுகின்றன. நான்காவது ஆன்வீக்ஷிகி (ஆத்மஜ்ஞானம்) என்றுசொல்லப்படுகிறது. அந்தஆன்வீக்ஷிகியை அறிந்தவன் தன்மனத்திற்பக்ஷபாதமில்லாமல் புத்தியினால் எல்லாவற்றையும் சரியாகஅறிவான். பகுத்தறிவில்லாத தும் வெறுந்துயரமுள்ளதுமான அவித்தையென்றுபெயருள்ள அவ் யக்தந்தான் அப்ரபுத்தமென்று சொல்லப்படுகிறது. இவற்றையெல் லாம்அறிவதனாலேதான் புத்தனாகிறான். புத்திக்குஇலக்கணம் வேறு என்னஇருக்கிறது? இதைஅறியாதவர்கள் எவரோ அவர்கள் அந்த ப்ரபுத்தருடைய வசத்தில் அகப்பட்டுக்கொண்டு அறிவில்லாதஅவ் யக்தத்திலிருந்து திரும்பித்திரும்பிப் பிறப்பார்; அஜ்ஞானத்தின் வசத்திலகப்பட்டுக்கொண்டு அந்தஅவ்யக்தத்தையும் தம்மையும் ஸம மாகநினைப்பார். அவர்களிடம்பற்றுள்ளமற்றவர்களும் இந்தப்பலனு

1 முக்திபெறுகின்றனர்.

க்குத்தான் பாகஸ்தர்கள். யோகாப்யாஸத்தினால் பரமார்த்தத்தைக் கண்டவர்கள் இவ்வாறு ஆத்மஸ்வரூபத்தையறிந்து துயரப்படாமலிருக்கின்றனர். பகைவரையடக்குகிறவரே! அஜ்ஞானத்தினாலுண்டான ஸம்ஸாரமென்னும் கட்டிலிருந்துவிடுபட்டு எல்லாப்பிராணிகளும் அடிக்கடி முழுகும்தமஸென்றுபெயருள்ள ஆழமும் பயங்கரமுமான அஜ்ஞானக்கடலைக்கடந்து ஸ்வதந்த்ரமும் சுத்தமும் பிரகாசமுமானஆத்மஸ்வரூபத்தை அடைவார். இவ்வாறு வித்தையையும்அவித்தையையும் பிறருக்குநாம் கொடுக்கவும் பிறரிடம்நாம்வாங்கவும்தக்கதாகிய [1]ஸாங்க்யமும் யோகமும் ஒன்றாவதும் பலவாவதும் அழிவதும் அழியாததும் உதாகரணங்களுடன் நான் உமக்கு உரைத்தேன். தேவஸ்ரேஷ்டரே! [2]மூன்றுவகைமோக்ஷங்களையும் உமக்குச் சொல்வேன். தேவருக்குச்சிறந்தவரே! புத்யமானனும் பிரபுத்தனும் அபுத்தமென்னும்பிரகிருதியினுடையஸ்ருஷ்டியைத் திரும்பவும் நீர் கேளும். இதற்குமுன் கேட்டும் பார்த்துமிராதவை எவையோ அவற்றையும் உமக்குச்சொல்வேன். மனஉறுதியோடு கவனித்துக்கேளும்.

## நூற்றறுபத்தோன்பதாவது அத்யாயம.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(மஹாதேவருக்கும் ஸநத்குமாரருக்கும் நடந்த ஸம்பாஷணைத் தொடர்ச்சி; அரிஷ்டம் புத்தம் மோக்ஷம் முதலியன.)

ஐயா! அரிஷ்டங்களென்னப்பட்ட துர்நிமித்தங்களை விரிவாகச் சொல்வேன். அவற்றை நீர் கேளும். தனக்குவடதிசையின்நடுவில் மின்னல்போன்றதேகமுள்ளபுருஷன் தெறதுமுகமாயிருப்பதை ஒரு மனிதன் காண்பானாயின் அவன் மூன்றுவருஷங்களில்தனக்குத் தேகவியோகம்நேரிடுவதை அறியலாம். சங்கரரே! இது துர்நிமித்தத்தின்பலனென்று புத்திமான்கள் சொல்லுகின்றனர். மூட்டமில்லாத சூரியமண்டலம் கிரணங்களில்லாமலிருக்கக்காண்பவனுக்கு ஆறு மாதங்களில் தேகவியோகம்நேரிடுமென்று அறியலாம். நிலவில் தன்னிழலைத் துவாரமுள்ளதாகவும் காலில்லாமலிருப்பதாகவும் பார்ப்பவனுக்கு ஒருவருஷத்தில் தேகவியோகம்நேரிடுமென்று அறியலாம்.

---

1 'ஸாங்க்யாஸாங்க்யம்' என்று பாடம்கொள்ளப்பட்டது.

2 விகாரபுருஷன் ஸத்து அஸத்து ஸதஸத்துமூன்றிலும் இராமலிருப்பது முதல்மோக்ஷம். விகாரங்களிலிருந்துவிலகுவது இரண்டாவது மோக்ஷம். புத்தனுடன்சேருவது மூன்றாவதுமோக்ஷம்.

தன்கண்கருவிழியில் தலையில்லாதபிரதிபிம்பத்தைக் காண்பானுயின் ஆறுமாதங்களில் தேகவியோகம் நேரிடுமென்றறியலாம். இருகாரங்களினாலும் காதுகளைப் பொத்திக்கொண்டபின் சப்தங்களைக்கேளாமலிருப்பானுயின் ஒருமாதத்தில் தேகவியோகம்நேரிடுமென்று அறியலாம். நல்லமணம்தெளிவாகவரும்போது ஊசல்நாற்றத்தைநுகர்வனுயின் அவன் [1]தேவதாகிருகத்திலிருந்தபோதிலும் ஏழுநாளில் இறந்துபோவான். மஹேஶ்வரரே! மகாமுனிவரே! மனிதன் நீண்டகாலம் ஜீவிக்கவிரும்புவானுயின் எல்லாயோகாங்கங்களோடும் மனத்தைத் தியானத்தில்நிறுத்தி ஸமாதியிலிருக்கவேண்டும். அதனால், இவ்வுலகத்தில் மரணத்தை ஜயிக்கலாம். வேறுவகையில்லை. வெகுகாலம் ஜீவிக்கவிரும்பாவிட்டால் பிரக்ருதியிலிருந்து நீங்கினவனும் நிரம்பினவனும் குற்றமற்றவனுமான ஆத்மாவைத் தியானித்துக்கொண்டு தானே தன்தேகத்தை விடலாம். அவன் அப்போது பரிசுத்தனுயிருந்து மாறுதலில்லாதவனும் ப்ரகிருதிக்குமேற்பட்டவனும் தேகத்துடன்சேர்ந்திருப்பவனுமாகிய ஆத்மாவைத்தியானம் செய்து தேகவியோகத்தை அடையவேண்டும். இப்படி விழித்துக்கொண்டிருக்கும்போதே உண்டாகும்துர்நிமித்தங்களை நான் உமக்குத் தெளிவாகச்சொன்னேன். தேவஶ்ரேஷ்டரே! எல்லாயோகாங்கங்களோடுங்கூடிய தியானத்தினுல் மரணத்தை ஜயிக்கலாம். திரும்பவும், ஒருமைபன்மைகள் நித்தியாநித்தியங்கள் இந்நான்கையும் பகுத்துச்சொல்லுகிறேன்; கேளும். சிறந்தமகிமையுள்ளவரே! மூலப்பிரக்ருதிமுதலிய இருபத்துநான்குதத்வங்கள் எல்லாவற்றையும் விகாரபுருஷனென்னும் அகங்காரத்தோடுசேர்ந்தவையென்றும் சொல்லுகின்றனர். இதுதான் ஏகத்வமென்னும்ஸித்தாந்தம். இருபத்தைந்துபிரிவுகள்தாம் பலவென்று சொல்லப்படுகின்றன. மூப்பு இறப்பில்லாததுதான் முக்தியென்றுசொல்லப்படுகிறது. விகாரங்களற்றபுருஷனுகியஆத்மா தான் தத்வமென்று உபதேசிக்கப்படுகிறுன். அவனே இருபத்தைந்தாவது தத்வமாகும்போது விகாரபுருஷனுகச் சொல்லப்படுகிறுன். சங்கரரே! இவன் விகாரமற்றவனுனல் தத்வங்களிற்சேரான். விகாரமிருக்கும்போதுதான் தத்வமென்றுசொல்லப்படுகிறுன். இவன் விகாரத்தைவிட்டுப்பிரிந்து புலப்படாமலிருக்கையையடைந்தானுயின் அப்போது தத்வங்களிற்சேராதவனும் ஸத்வகுணமுள்ளவனும் [2]அகுணனுமாவான். ஏனெனில், விகாரங்களை

1 'தேவதாபிரார்த்தனைசெய்தாலும்.

2 முக்குணங்களற்றவன்.

யும் குணங்களையும்விட்டதனாலும் பிரக்ருதிக்குவேறாயிருப்பதனாலும் சுத்தனாகிறான். அப்போது ஸ்ருஷ்டியைவிட்டு முக்திபெற்று நானாத்வமென்னும்வேறுபாட்டை அடைகிறான். அந்தஞானமுள்ளவன் எழுப்பப்பட்டால் எழுந்திருப்பான்; மாறுதலின்றியிருப்பான்; முன்போல ப்ருகிருதிவிஷயத்தில் தவறிவிழாமல் அழியாமலிருப்பான். சூலபாணியே! நிர்க்குணமான ஆத்மா குணங்கள்சேர்ந்த மூலப் பிரக்ருதியிலிருந்துவெளிப்படுவதையும் ஏகமானவதையும் அநேகமானவதையும் [1]அக்ஷரமானவதையும் [2]க்ஷரமானவதையும் துர்நிமித்தங்களையும் உமக்குச் சொன்னேன். பவரே! மஹாதேவரே! எதையறிந்து ஸங்யாஸிகள் குற்றமற்றகைவல்யத்தையடைந்தனரோ சாங்க்யர்களும் யோகர்களும் தம்வினைகள் எரிக்கப்பட்டுத் துயரமற்றுத் தேகத்தையும் முக்குணங்களையும்பயத்தையும்விட்டுப்பாபமற்றவராய்ஸம்ஸாரக் கடலிலிருந்து விடுபட்டனரோ அந்தமோக்ஷத்தின் இலக்கணம் மிச்சமாயிருக்கிறது. அதையும் உமக்குச் சொல்லுகிறேன். ப்ரக்ருதியானது தன்குணங்களைப் புருஷனிடத்தில் வியாபிக்கச்செய்வதிலும் அதனைவிரிஜாடப்படுத்திச்செய்வதிலும் முக்கியமாயிருப்பது; ஞானமில்லாதது. இவ்வாறுகாரியங்களுக்கும் அதுதான் காரணம். சேதனமென்றுசொல்லப்பட்டகர்த்தாவினாலும் அசேதனமானபிரக்ருதியினும் வேறான அந்தப்புருஷன் தனதுமாயையால்அறிவினால் ஜடங்களையும் பிராணிகளையும் அடிக்கடி உண்டுபண்ணுகிறான். பவன், 'நான்' என்னும்பேதபுத்தியோடு மனத்தினால்மனத்தையறிகிறானோ அவன் ஸத்தென்னப்படும் சுத்தாத்மாவுமாகான்; அஸத்தென்னப்படும் ஜடமுமாகான்; இருதன்மையோடு ஸதஸத்ரூபமாகான். அவன் ப்ரக்ருதியைவிட வேறானவன்; பரிசுத்தன்; வேறுதன்மையுள்ளவன்; பிரக்ருதியை நடத்தாமலும் தடாமலும் பார்த்திருப்பவன். அவன்தான் விகாரபுருஷனென்றுசொல்லப்படுகிறான். இந்தப்பிரக்ருதியானது விகாரபுருஷனுடன் சேர்ந்துதான் முக்குணங்களினாலான உலகத்தைப்படைத்துக்கொண்டும் அதற்குமாறாகத்தன்னிடத்திலிழுத்துக்கொண்டுமிருப்பது. மச்சமானது ஜலத்தில் தன்பார்வையினாலேயே அநேகமச்சங்களையுண்டாக்குவதுபோல அந்தவிகாரபுருஷன் ப்ரக்ருதியைத் தான்பார்ப்பதனாலேயே அநேகதேகங்களை உண்டாக்குகிறான். தேகத்தையும் அதின்நாசத்தையும்அறிவதனாலேதான் அவன் க்ஷேத்ரஜ்ஞனென்றுசொல்லப்படுகிறான். தத்வஜ்ஞானமுள்ளவர்கள் இந்தப்ப்ரக்ருதிபுருஷர்களின் சேர்க்கை அநாதியென்று

---

1 அழியாதது. 2 அழிவது.

சொல்லுகின்றனர். இப்படி ப்ரக்ருதியிற்சேருவதனால் இந்தவிகார புருஷன் அஸத்தென்றும் ஸத்தென்றும் நினைக்கப்படுகிறான். விகாரங்களிற்சேர்ந்தவனை விகாரமென்றே நமக்குச் சொல்லுகின்றனர். எப்போது இவன் விகாரங்களையெல்லாம் ப்ரக்ருதியைச்சேர்ந்தவை யென்று நினைக்கிறானோ அப்போது (விகாரமடைந்திருந்தவன்) விகாரங்களிலிருந்துவேறுபட்டவனாவான். அந்தப் புத்யமானன் ப்ரக்ருதியினின்றும் விகாரங்களினின்றும் எப்போது வேறுபட்டவனாவானோ அப்போது குற்றமற்றதும் மிக்கபரிசுத்தமும் எப்போதும் ஞானமுள்ளதும் ப்ரக்ருதியிற்சேராததும் நிரம்பினதும் எப்போதும் மாறுதலில்லாததும் பிறப்புஇறப்பில்லாமலிருப்பதுமான பரமாத்மாவைச்சேர்ந்து அந்தப் பரிசுத்தத்தினால் பிரகாசித்துக்கொண்டு அசேதனனும் ஸ்தூலரூபனுமான அப்ரபுத்தன்நிலைமையிலிருந்து மோக்ஷத்தை அடைகிறான். அத்திப்பழத்தையுடைத்தபின் அதிலிருந்து கொசுகு வெளிப்படுவதுபோல மூலப்பிரக்ருதியைவிடுவதனால் இருபத்தைந்தாவதுதத்வமாகிய விகாரபுருஷன், 'எனது' என்னும்பற்றை விடுகிறான். அப்போது அந்தஇருபத்தைந்தாவது புருஷன் தாமரையிலையில் தண்ணீர்த்துளி எப்படி ஒட்டாமலிருக்குமோ அப்படிப் பிரக்ருதியில் ஒட்டாமலிருப்பான். ஆகாசம் போல எல்லாவற்றிலும்சேர்ந்து ஒன்றிலும்பற்றில்லாத இருபத்தைந்தாவதுபுருஷன் புத்தனும் இருபத்தாறாவதுதத்வமாகிய [1]புத்தனுக்குச் சமமாகிறான். குற்றமற்றவரே! ப்ரக்ருதியைச்சேர்ந்த தத்வஜ்ஞானம் எனக்குமுன்பிறந்தபிரம்மபுத்திரர்களால் எனக்கு உண்டாயிற்று. சிறந்தகைகளையுடையவரே! ஸ்ருஷ்டியின்ஆதியில் மூப்புஇறப்பற்றதும் மாறுதலுமான பரப்பிரம்மத்தின் அங்கங்கள் தமோகுணத்தினால் மூடப்பட்டன. ஸநகர், ஸநந்தனர், ஸநாதனர் இம்மூவரும் அழியாததும் அழிவைப்போக்குவதுமானசிறந்தநர்மத்தை அறிந்தனர். அறிவிற்கு எட்டாததும் அழியாததும் நேரமென்னும் பெயருள்ளதுமான மூலப்ரக்ருதியிலிருந்துகொண்டு மகிமைபொருந்தியஆத்மாவானவன் நாராயணனையே பரகதியாகப் பற்றியிருக்கிறான். உடன்பிறந்தவர்களாகியஎங்களுக்கு உத்தமமானஞானம் பிறப்பிலேயேஉண்டாயிற்று. நாங்கள் தேகத்துடன் உலகங்களில் ஸஞ்சரிக்கிறோம். பிநாகபாணியே! இதற்குமுன் ஆங்காங்கு பலமுறை நாங்கள் பிறந்திருக்கிறோம். சீதோஷ்ணமுதலிய இரட்டைகளினால் வெறுப்புற்றஎனக்கு உயர்ந்தஞானமுண்டாயிற்று. முதல்ஆசாரியராகிய கபிலரென்னும் முனிஸ்ரேஷ்டரிடத்திலிருந்து தத்வங்களில்

நிச்சயஞானமுள்ள யோகஸாங்கியங்கள் முழுதும் எனக்குக் கிடைத்தன. அவராற்போதிக்கப்பட்டஅநேகசிஷ்யர்கள் தத்வஜ்ஞானிகளாயினர். நானும்அதைத் தெரிந்துகொண்டு அநேகசிஷ்யர்களுக்கு உபதேசித்தேன். ஜனனமரணங்களைப்போக்குவதும் உண்மையும் அநாதியுமான இந்தஜ்ஞானம் யாருக்குந்தெரியவேண்டும். இதையறிந்தபின் தத்வஜ்ஞானிகள் இந்திரியங்களுக்குட்படாமலும் துயரப்படாமலுமிருப்பர். பிரகாசிப்பவரே! மஹாநுபாவரே! அப்படிப்பட்டவர்கள் காரணக்குற்றங்களற்றவரும் பற்றற்றவரும் அக்ஷரமெனப்பட்ட அகங்காரமற்றவரும் யாருக்கும் வசப்படாதவரும் ஈஸ்வரனுக்குச்சமமாக எங்கும்நிறைந்தவரும் எக்காலமும் மாறுமலிருப்பவரும் தமஸூக்கெட்டாதவரும் யாருக்குந்தீங்குசெய்யாதவரும் யாராலும் தீங்குசெய்யப்படாமல் எப்போதும் ஸத்வகுணத்திலிருப்பவருமாக நினைக்கப்படுகின்றனர். அவர்கள் விடுபட்டவர்; ப்ரக்ருதியிலிருந்து தனித்திருப்பவர்; அஜ்ஞானமும் பயமுமற்றவர். அவர்களுக்குத் தேகமுமில்லை; துயரமுமில்லை. ஹிரண்யநாபர், த்ரிசிரஸ், பிரஹ்லாதர், பாஸ்கரர், வஸூ, விஸ்வாவஸூ, பஞ்சசிகர், கார்க்யர், அவந்திதேசத்தாராகியஆஸூரி, கௌதமர், வ்ருதர், காத்யாயனர், நமுசி, ஹரி, தமனர்இவர்களும் இன்னும்அநேகரும் இந்தத்தத்வத்தையே உபதேசிக்கப்பெற்றனர். சிலர் முக்திபெற்றனர். சிலர் இருக்கின்றனர். மற்றும்சிலர் தம்இஷ்டப்படி இறந்தனர். மூன்றுவிதமான பந்தங்களையும் மூன்றுவிதமான மோக்ஷங்களையும்அஜ்ஞானத்தையும் ஆசையையும் ப்ரக்ருதிபுருஷஸம்யோகத்தையும்அவர்கள் உபதேசிக்கப்பெற்றனர். அவர்களுக்குச்சொன்னபந்தனத்தையும் மோக்ஷத்தையும் என்னிடம் கேளும். சுற்றிலும் எவ்வளவுபொருள்களோடு ஸம்பந்தம் உண்டாகிறதோ அவ்வளவினாலும் பந்தனம் செய்யப்படுகிறது. எல்லாப்பற்றுக்களையும்விடுவதனாலேதான் மோக்ஷமுண்டாகிறதென்றுநமக்குக்கேள்வி. எல்லாப்பற்றுக்களிலிருந்தும் விடுபட்டவன் நிர்மலனானகேவலாத்மாவாகிறான்' என்றார். ஸநத்குமாரபகவான் மகாத்மாவானஈஸ்வரருக்கு இவ்வாறுசொல்லி ஆகாசமார்க்கமாகச் சென்றார்" என்றுசொல்லினர்.

## நூற்றேழுபதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



### (எது எது தீர்த்தமென்பதும் சுத்தமென்பதும்.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! எல்லாத்தீர்த்தங்களிலும் சிறந்த தீர்த்தம்எதுஎன்பதையும் எதனால் சிறந்தசுத்தமுண்டாகிறதென்பதையும் எனக்கு விரித்து உரைக்கக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார் :

"புத்திசாலிக்கு எல்லாத்தீர்த்தங்களும் சிறந்தவைதாம். ஆகிலும், எது ஸரியானதீர்த்தம், எது ஸரியானசுத்தமென்பதைப்பற்றி ஊக்கத்துடன் என்னிடம் கேள். ஸத்யமென்னும்துறையும் தைரியமென்னும்மடுவுமாகவுள்ள ஆழமும் பரிசுத்தமும் தெளிவுமான மனமென்னும்தீர்த்தத்தில் அழியாதஸத்வகுணத்தைப்பிடித்துக்கொண்டு ஸ்நானம்செய்யவேண்டும். தவம், ஞானம், விநயம், ஸத்யம், மனவாக்குக்காயங்களின்ஒற்றுமை, கொல்லாமை, எல்லாப்பிராணிகளிடத்திலும்அன்பு, ஐம்புலன்களையுமடக்குவது,மனவடக்கம்இவைமேற்சொன்னதீர்த்தங்களினால் ஏற்படும்சுத்தங்கள். 'நான், எனது' என்னும் எண்ணத்தையும்சீதோஷ்ணம்ஸுகதுக்கங்கள்முதலியஇரட்டைகளையும் விருப்புவெறுப்புக்களாகிய அபிமானங்களையும்விட்ட யோகிகள் தீர்த்தங்கள்போலிருப்பவர். அவர்கள் சிறந்ததீர்த்தமென்று சொல்லப்படுகின்றனர். நாராயணரிடத்திலாவது ருத்திரரிடத்திலாவது பக்தி செய்வது சிறந்ததீர்த்தமாக நினைக்கப்படுகிறது. நீ எல்லாவற்றையும் பகுத்தறிவதுதான் உன்சுத்தத்திற்கு இலக்கணம். எவர்கள் ரஜோகுணத்தையும் தமோகுணத்தையும் ஸத்வகுணத்தையும் மனத்தினாலேயே ஒதுக்கினரோ அவர்களுக்குச் சுத்தமானஒழுக்கமும் தமக்கு நல்வழியைத்தேடுவதுந்தாம் தீர்த்தம். எல்லாவற்றையும்விடக்கருதுகிறவரும் எல்லாந்தெரிந்தவரும்எல்லாவற்றையும்ஸமமாகப்பார்ப்பவரும் எவரோ அவர்தாம் முன்சொன்னசுத்தங்களில்ஊக்கமுள்ளவரும் அந்தத்தீர்த்தங்களினால் சுத்தருமாகிறார். ஜலத்தினால்உடம்புநனைந்தவன்ஸ்நானம்செய்தவனென்றுசொல்லப்படுவதில்லை.இந்திரியஜயத்தினால்சுத்தமானவன் எவனோ அவன்தான் ஸ்நானம்செய்தவன். அவன் உள்ளும் புறமும் பரிசுத்தமானவன். கிடைக்காதவிஷயங்களில்ஆசையும்கிடைத்தவிஷயங்களில்எனதென்னும்பற்றும் இல்லாமலும் பிறகு விருப்பமுண்டாகாமலும் இருப்பவர்எவரோ அவருடையசுத்தந்தான் சிறந்தசுத்தம். இவ்வுலகத்தில்சிறந்தஞானமும் ஒன்றையும்கருதாமை

யும் மனத்தூய்மையுந்தாம் சரீரத்திற்கே சிறந்தசுத்தம். ஒழுக்கத்தின்சுத்தமே பெருஞ்சுத்தம். தீர்த்தஸ்நானத்தினுலுண்டாகும்சுத்தம் அதற்குப்பிற்பட்டது. ஞானத்தினுலுண்டாகும்சுத்தம் எதுவோ அதுஎல்லாவற்றிற்கும்மேலானதாக நினைக்கப்பட்டிருக்கிறது. பிரம்மஜ்ஞானமென்னும்ஜலம்நிரம்பின மனத்தீர்த்தத்தில் ஸ்நானம்செய்தவர் எவரோ அவர்தாம் ஆத்மாவைக்கண்டஞானிகள். மேற்சொன்ன சுத்தங்களை நித்தியமாகவைத்துக்கொண்டு அவற்றில்ஊக்கத்துடன் குணங்களையே அடைந்திருக்கும்மனிதன் என்றும்சுத்தனே. பாரதனே! தேகத்திலுள்ளஇந்தத்தீர்த்தங்களை உனக்குச்சொன்னேன். பூமியிலுள்ளபுண்ணியதீர்த்தங்கள் எவையோ அவற்றையும்கேள். ஒருசரீரத்தின்மேல் மேற்சொன்னஅநேகபுண்ணியமான இடங்கள் படைக்கப்பட்டிருப்பதுபோலவே பூமியிலும் புண்ணியமாயுள்ள இடங்களும் ஜலங்களும் படைக்கப்பட்டிருக்கின்றன. தீர்த்தங்களின்பேர் சொல்வதனுலும் அவற்றில்ஸ்நானம்செய்வதனுலும் பித்ருதர்ப்பணம் செய்வதனுலும் பாவங்களைப் போக்கவேண்டும். தீர்த்தங்களினுல் சுத்திபெற்றவர் எளிதாக மேலுலகம்போவார். பெரியோர்கள் அங்கீகரித்திருப்பதனுலும் பூமியின்மகிமையினுலும் ஜலத்தின்பிரபாவத்தினுலும் அந்தத்தீர்த்தங்கள் புண்ணியங்களுக்குச் சிறந்தவிடங்களாகின்றன. மனத்தின்புண்ணியதீர்த்தங்கள் சில. பூமியின்புண்ணியதீர்த்தங்கள் மற்றவை. இவ்விருவகைத்தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்பவன் விரைவில் பலனையடைவான். செய்கையில்லாப்பலனும் பலனில்லாதசெய்கையும் இவ்வுலகத்தில் ஒருகார்யத்தையும் நிறைவேற்றுவதில்லை. இரண்டும்சேர்ந்துதான் ஸாதகமாகும். இப்படித் தேகசுத்தத்தோடும் தீர்த்தசுத்தத்தோடும்கூடியிருப்பவன் சுத்தனுகப் பலனையடைவான். இரண்டுவகையாலும் ஏற்படுஞ்சுத்தந்தான் உத்தமசுத்தமாம்" என்ருர்.

---

## நூற்றெழுபத்தோராவது அத்யாயம்.

### தா ன த ர் ம ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(பன்னிரண்டுமாதங்களிலும் பன்னிரண்டுநாமங்களினுல் விஷ்ணுவை ஆராதிப்பதன் பலன்.)

யுதிஷ்டிரர், "உலகத்தில் எல்லாஉபவாஸங்களிலும் எது சிறந்ததோ, எது மிகப்பெரியபலனைத் தருகிறதோ, எது ஸந்தேகமில்லாததோ அதை நீர் எனக்குச் சொல்லக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானுர்:

"அரசனே! மனிதன் எதைச்செய்வதனால் ஸந்தேகமில்லாமல் ஸுகம்பெறுவானோ அதைப்பற்றி மகாவிஷ்ணு தாமாகவே சொல்லியிருப்பதைச் சொல்லுகிறேன்; கேள். மார்கழிமாஸம் துவாதசியில் இரவிலும்பகலிலும் கேசவநாமத்தைச்சொல்லிஆராதிப்பவன் அச்வமேதபலனை அடைவான். அவனதுபாவம் கெடும். தைமாதத்தில் (துவாதசியில்) நாராயணஎன்றுசொல்லிப் பூஜிப்பவன் வாஜபேயயாகபலனை அடைவான்; சிறந்ததவஸித்தியும் பெறுவான். மாசிமாஸம் (துவாதசியில்) இரவிலும்பகலிலும் மாதவநாமத்தைச்சொல்லிப்பூஜிப்பவன் ராஜஸூயயாகபலனை அடைவான்; குலத்தையும் கரையேற்றுவான். பங்குனிமாஸத்தில் (துவாதசியில்) கோவிந்தாவென்றுசொல்லிப்பூஜிப்பவன் அதிராத்ரயாகபலனை அடைவான்; சந்திரலோகத்தையுமடைவான். சித்திரைமாதம் துவாதசியில்இரவிலும் பகலிலும் விஷ்ணுவென்றுதியானிப்பவன் பௌண்டரீகயாகபலனை அடைந்து தேவலோகத்திற்குப்போவான். வைகாசிமாதம்துவாதசியில் மதுஸூதனநாமத்தைச்சொல்லிப்பூஜிப்பவன் அக்னிஷ்டோமயாகபலனையடைந்து சந்திரலோகத்திற்குப்போவான். ஆனிமாஸம் துவாதசியில் இரவிலும்பகலிலும் திரிவிக்ரமநாமத்தைச்சொல்லிப் பூஜிப்பவன் கோமேதமென்னும்யாகத்தின்பலனையடைந்து அப்ஸரஸுகளுடன் மகிழ்ந்திருப்பான். ஆடிமாஸம்துவாதசியில் வாமனஎன்றுசொல்லிப்பூஜிப்பவன் நரமேதயாகபலனையும் பெரும்புண்ணியத்தையும் அடைவான். ஆவணிமாஸம்துவாதசியில் இரவிலும்பகலிலும் ஸ்ரீதரநாமத்தைச்சொல்லிப்பூஜிப்பவன் பஞ்சமகாயஜ்ஞங்களின்பலனையடைந்து தேவவிமானமேறி மகிழ்ந்திருப்பான். புரட்டாசிமாஸம் (துவாதசியில்)ஹ்ருஷீகேசாஎன்றுசொல்லிப்பூஜிப்பவன் ஸௌத்ராமணிஎன்னும்யாகபலனையடைந்து ஆத்மசுத்தியுள்ளவனாவான். ஐப்பசிமாஸம்துவாதசியில் பத்மநாபாவென்று பூஜிப்பவன் ஆயிரம் கோதானங்களினாலுண்டாகும் புண்ணியபலனை அடைவான். இதில் ஸந்தேகமில்லை. கார்த்திகைமாஸம்துவாதசியில் தாமோதரா என்றுசொல்லிப் பூஜிக்கவேண்டும். அவர் ஆணாயிருந்தாலும் பெண்ணாயிருந்தாலும் கோமேதயாகத்தின்பலனை அடைவாரென்பதில் ஸந்தேகமில்லை. இவ்வாறு வருஷம்முழுதும் தாமரைக்கண்ணரை ஆராதிப்பவன் பூர்வஜன்மஞானத்தையும் மிகுதியானபொன்னையும் அடைவான். ஒவ்வொருநாளும் ஓரேபக்தியோடு விஷ்ணுவை ஆராதித்து அந்தஆராதனையின்முடிவில் பிராம்மணர்களைப் புஜிப்பிக்கவேண்டும். அல்லது, நெய்யைத் தானம்செய்யவேண்டும். இதற்குமேற்பட்ட உபவாஸமில்லைஎன்பது நிச்சயம். ஆதியில் பகவானானமகாவிஷ்ணு இதைத் தாமாகவே சொன்னார்" என்றார்.

## நூற்றெழுபத்திரண்டாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(அழகு செல்வமுதலியவற்றைப் பெறுதற்காகச் செய்யத்தக்கவை.)

கௌரவர்களுக்குப்பிதாமஹரும் பிராயமுதிர்ந்தவருமானபீஷ்மர் சரதல்பத்திற்படுத்திருக்கும்போது, சிறந்தபுத்திசாலியான யுதிஷ்டிரர் அருகில்வந்து, "தேகத்தில்அழகும் செல்வங்களும் பிரியமும் உண்டாவதெப்படி? தர்மார்த்தகாமங்களென்னும்மூன்றுபுருஷார்த்தங்களையுமடைந்து ஸுகம்பெற்றிருப்பது எதனால்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்:—

"அரசர்க்கரசே! மார்கழிமாஸத்தில்சந்திரன்மூலநக்ஷத்திரத்துடன் கூடினதினத்தில் சந்திரனுக்கு மூலநக்ஷத்திரத்தைப்பாதங்களாகவும் ரோகிணியைக் கணைக்கால்களாகவும் அசுவினியைமுழங்காலாகவும் பூராடஉத்தராடங்களைத்தொடைகளாகவும் பூரம்உத்தரங்களை மறைவானஸ்தானமாகவும் கிருத்திகையைஇடுப்பாகவும் பூரட்டாதி உத்தரட்டாதிகளை நாபியாகவும் ரேவதியை [1]வயிறாகவும் அவிட்டத்தைமுதுகாகவும் அனுஷத்தைமார்பாகவும் விசாகநக்ஷத்திரத்தைக் கைகளாகவும் ஹஸ்தத்தைநுனிக்கைகளாகவும் புனர்வஸுவைவிரல்களாகவும் ஆயில்யத்தைநகங்களாகவும் கேட்டையைக்கழுத்தாகவும் சிரவணத்தைக்காதுகளாகவும் புஷ்யத்தைவாயாகவும் ஸ்வாதியைப்பல்லும்உதடுமாகவும் சதயத்தைச்சிரிப்பாகவும் மகத்தைமூக்காகவும் மிருகசீர்ஷத்தைக்கண்களாகவும் சித்ராநக்ஷத்திரத்தைநெற்றியாகவும் பரணியைத்தலையாகவும் திருவாதிரையைக்கேசங்களாகவும் தியானம்செய்யவேண்டும். தியானம்முடிந்தபின் வேதங்களில் கரைகண்டபிராம்மணனுக்குநெய்யைதானம்செய்யவேண்டும். அதனால்,செல்வமும்அழகுமுள்ளவனும் ஞானமுள்ளவனும் பூர்ணிமைச்சந்திரனைப்போல நிரம்பின அங்கமுள்ளவனுமாவான்" என்றார்.

---

## நூற்றெழுபத்துமூன்றாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



**(தர்மபுத்ரருக்கும்பிருகஸ்பதிக்கும்நடந்தஸம்பாஷணை; கர்மங்களுக்கேற்றபடி ஸ்வர்க்கநரகங்களும் பிறப்பும் வருமென்பதைப்பற்றியது.)**

யுதிஷ்டிரர், "மகாப்பிராஜ்ஞரும் எல்லாச்சாஸ்திரங்களிலும் ஸமர்த்தருமானபிதாமஹரே! மனிதர்களுக்குஸம்ஸாரத்திலுள்ளஉத்

---

[1] 'குக்ஷிமண்டலம்' என்று பாடங்கொள்ளப்பட்டது.

தமமானநடக்கையைக் கேட்கவிரும்புகிறேன். அரசர்க்கரசரே! பூமியில் மனிதர்கள் என்னஒழுக்கத்தோடுஇருந்தால் உத்தமமானஸ்வர்க்கத்தை அடைவார்கள்? ராஜரே! எப்படியிருந்தால் நரகத்தையடைவார்கள்? ஜனங்கள் உயிர்போனதேகத்தைக் கட்டைக்கும் ஓட்டுக்கும் ஸமமாக இவ்வுலகததிற்போட்டுவிட்டு வேறுஉலகம்போகின்றனரே; அவர்களின்பின் தொடர்ந்துசெல்லுகிறவன் எவன்?" என்றுகேட்க, பீஷ்மர், "உயர்ந்தபுத்தியுள்ள ப்ருஹஸ்பதிபகவான் தூரத்தில்வருகிறார். மிக்கமகானுபாவரானஇவரிடத்தில் இந்தப்பழமையானரகஸ்யத்தைக்கேள். இப்போது நீகேட்டவிஷயம் மற்றெவனும் சொல்லக்கூடியதன்று. ப்ருகஸ்பதிக்குச்சமமாகப்பேசுகிறவர் மற்றொருவர் எங்குமில்லையன்றோ" என்றுசொன்னார். அந்தத்தர்மராஜரும் பீஷ்மரும் இவ்வாறுபேசிக்கொண்டிருக்கையில், தெளிந்தஉருவமுள்ள ப்ருகஸ்பதிபகவான் வந்தார். பிறகு, தர்மராஜர் திருதராஷ்டிரனை முன்னிட்டு எதிர்கொண்டழைத்து அவருக்கு ஒப்பற்றபூஜையைச் செய்தார். அந்தச்சபையோர்அனைவரும் அவரைப் பூஜித்தனர். அதன்பிறகு, ராஜாவானதர்மபுத்திரர் ப்ருகஸ்பதிபகவானை முறைப்படியணுகி அந்தப்பிரஸ்னத்தைத் தெளிவாகக்கேட்கலானார்: "பகவானே! எல்லாத்தர்மங்களும் தெரிந்தவரே! எல்லாச்சாஸ்திரங்களிலும் தேர்ந்தவரே! மனிதனுக்குத்துணை யார்? தந்தையா? தாயா? பிள்ளையா? ஆசாரியனா? தாயாதிகளா? சுற்றத்தாரா? சிநேகிதரா? மனிதர்கள் உயிர்போனதேகத்தைக் கட்டையைப்போலவும் ஓட்டாஞ்சில்லியைப்போலவும் விட்டுவிட்டு வேறுலோகத்திற்குச் செல்லுகின்றனரே? அவரைப் பின்செல்லுகிறவன் எவன்?" என்று கேட்க, பிருகஸ்பதி சொல்லலானார்:

"ராஜனே! மனிதன் ஒருவனாகவே பிறக்கிறான்; ஒருவனாகவே இறக்கிறான்; ஒருவனாகவே நரகங்களைத் தாண்டுகிறான்; ஒருவனாகவே நரகத்திற்குப்போகிறான். தந்தை, தாய், ஸகோதரன், புத்திரன், ஆசாரியன், தாயாதிகள், சுற்றத்தார், சிநேகிதர்கள் யாரும் துணையாவதில்லை. மனிதர்கள் தேகத்தைச் சிலகாலம் உபயோகப்படுத்தி உயிர்போனபின் கட்டை ஓட்டாஞ்சில்லிகளைப்போல எறிந்துவிட்டு வேறுமுகமாகப்போகின்றனர். தர்மம்ஒன்றே பின்தொடருகிறது. ராஜனே! ஆதலால், எப்போதும் துணைக்காகத் தர்மத்தையே பற்றவேண்டும். மனிதன் தர்மத்துடன்கூடத்தான் சிறந்த ஸ்வர்க்கலோகத்துக்குப்போவான்; அதர்மத்தோடுகூடத்தான் நரகத்திற்குப் போகிறான். ஆதலால், தெரிந்தவன் நியாயமாகக்கிடைத்த

பொருள்களினால் தர்மத்தையே செய்யவேண்டும். மனிதர்களுக்குப் பரலோகத்திற்குரியதுணை தர்மமொன்றே. மிகுந்தகேள்வியில்லாதவனும் ஆசையினால்மதிகெட்டவனுமானமனிதன் ஆசையினாலும்அஜ்ஞானத்தினாலும் இரக்கத்தினாலும் பயத்தினாலும் பிறருக்காகப்பாவங்களைச் செய்கிறான். தர்மார்த்தகாமங்கள்மூன்றே உயிர்வாழ்க்கையின் பலன்கள். அதர்மத்தைவிட்டு இம்மூன்றையும் ஸம்பாதிக்கவேண்டும்'' என்றார்.

யுதிஷ்டிரர், ''பகவானானநீங்கள் தர்மமுள்ளதும் மிக்கஹிதமுமாகச் சொன்னசொல்லைக் கேட்டேன். ஆகிலும், சரீரத்தினுடைய உண்மையைப்பற்றித்தெரிந்துகொள்ள எனக்கு எண்ணமுண்டாகிறது. மனிதர்களின்சரீரம் உயிர்விட்டபோது அதின்ஸூக்ஷ்மமான ஆத்மாமறைந்து கண்பார்வைக்குஅகப்படாமற்போகின்றதே; தர்மம் அதைத்தொடருவது எப்படி?'' என்றுகேட்டார். ப்ருகஸ்பதி, ''[1]பிருதிவி, வாயு, ஆகாயம், அப்பு, தேயு, புத்தி, ஆத்மாஇவை சேர்ந்து எக்காலமும் தர்மத்தைப் பார்த்துக்கொண்டிருக்கின்றன. இவ்வுலகத்தில் எல்லாப்பிராணிகளுக்கும் இரவும்பகலும் சாக்ஷியாக இருக்கும் அந்தஜீவனே மேற்சொன்னபிருதிவிமுதலியவற்றுடன் கூடத் தர்மம் பின்தொடருகிறது. சிறந்தபுத்தியுள்ளவனே! தோல், எலும்பு, மாம்ஸம், சுக்லசோணிதங்கள்இவை உயிர்விட்டதேகத்தை விட்டுவிடுகின்றன. அதன்பிறகு, அந்தஜீவன் தர்மத்துடன்சேர்ந்து [2] இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் ஸுகமாகவிளங்குகிறது. இன்னும் உனக்கு என்னசொல்லக்கடவேன்?'' என்றுசொன்னார். யுதிஷ்டிரர், ''தர்மம் எப்படிப் பின்தொடருகிறதென்பதைப் பகவானானநீங்கள் தெரிவித்தீர்கள். சுக்லமானது எப்படி உற்பத்தியாகிறதென்பதை அறிந்துகொள்ளவிரும்புகிறேன்'' என்றுகேட்டார். பிருகஸ்பதி, ''வேந்தனே! பிருதிவி, வாயு, ஆகாசம், அப்பு, தேஜஸ், மனம் என்னும்தேகத்திலுள்ளதேவதைகள் ஆகாரத்தை உட்கொள்ளுகின்றனர். அரசர்க்கரசே! பரிசுத்தமனமுள்ளவனே! அவ்வைந்துபூதங்களும் மனமும் திருப்தியடைந்தபிறகு, அந்த அன்னமானது ரேதஸாக மாறுகிறது. ராஜனே! பிறகு, பெண்ணும்ஆணும்சேருவதனால் கர்ப்பமுண்டாகிறது. இதையெல்லாம் உனக்குச் சொன்னேன். இன்னும் என்னகேட்கவிரும்புகிறாய்?'' என்றுசொன்னார். யுதிஷ்டிரர், ''கர்ப்பம்எப்படிஉண்டாவதென்பதைப்பற்றிப் பகவானானநீங்கள்எனக்குச் சொன்னீர்கள். பிறப்பில்லாதஜீவன் கர்ப்பத்தைச்சேருவது

1 அந்தத்தேவதைகள். 2 மறுஜன்மத்தில்.

எப்படி? அதைச் சொல்லவேண்டும்'' என்றுகேட்டார். பிருகஸ்பதி, "ஜீவன் சேர்ந்தமாத்திரத்தில் அவ்வைந்துபூதங்களினால் ஆக்கிரமிக்கப்படுகிறான்; அவ்வைந்துபூதங்களினால்விடப்பட்டுத்தான் திரும்பவும் வேறுலோகத்திற்குச் செல்லுகிறான். அந்தஜீவனே ஐந்துபூதங்களுடன் சேர்ந்தவனாகிறான். அதனால், அவனுடையநல்வினையையும் தீவினையையும் ஐந்துபூதங்களின்தேவதைகள் பார்க்கின்றனர். இன்னும்என்னகேட்கக்கருதுகிறாய்?'' என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "பகவானே! தோல், எலும்பு, மாம்ஸம்இவற்றையும்விட்டு ஐந்து பூதங்களாலும்விடுபட்டஅந்தஜீவன் எங்கிருந்து முழுதும் ஸுகதுக்கங்களை அனுபவிப்பான்?'' என்றுகேட்க, பிருகஸ்பதி சொல்லலானார்: "[1]போகவஸ்யம், [2]கர்மவஸ்யம், [3]யாதனாவஸ்யம் ஆகிய இம்மூன்றுவகைத்தேகங்களையடைந்து ஜீவன் தன்வினைப்பயனை அனுபவிக்கிறான். ஜீவன் தன்கர்மங்களுடன்சேர்ந்து ரேதஸாகமாறி ஸ்திரீகளின் ருதுவில்சேர்ந்து பிரஸவகாலத்தில்தேகத்தையடைகிறான். ஜீவன் யமதூதர்கள்செய்யும்துன்பத்தையும் அவர்கள் அடிப்பதையும் கடினமானபிறப்பிறப்புக்களின்தொடர்ச்சியையும் துயரத்தையும் அடைகிறான். ராஜனே! தர்மத்தின்பலனையடைந்தஅந்தஜீவன் இவ்வுலகத்தில்பிறந்ததுமுதல் ஸுகத்தையே அனுபவிக்கிறான். அவன் ஜனித்ததுமுதல் கூடியமட்டில் தர்மத்தையேசெய்திருப்பானாயின் பிறகு அவன் மனிதனாகப்பிறந்து ஸுகத்தையேயடைவான்; தர்மத்திற்கு இடையில் அதர்மமும்செய்திருப்பானாயின் அந்தஜீவன் ஸுகத்திற்குப்பிறகு துக்கத்தையும் அனுபவிப்பான்; அதர்மத்துடன் சேர்ந்து யமலோகத்திற்குப்போய்ப் பெருந்துன்பத்தையடைந்து பிறகு திர்யக்ஜாதியில் பிறக்கிறான். ஜீவன் எந்தஎந்தக்கர்மத்தினால் இவ்வுலகில் எந்தஎந்தப்பிறப்பில் அஜ்ஞானத்தோடுபிறக்கிறானோ அவற்றை வேதத்திலும் இதிஹாஸத்திலும் தர்மசாஸ்திரத்திலும் சொல்லியிருக்கிறபடி சொல்லுகிறேன்; கேள். மானிடர்கள் கொடியதாகிய யமலோகத்தை அடைகின்றனர். ராஜனே! இவ்வுலகத்தில் திர்யக்ஜாதியைத்தவிர வேறுதேகங்கள் புண்ணியமுள்ளவையும் ஞானமுள்ளவையும் தேவர்களுக்குச் சமமானவையுமாயிருக்கின்றன. குணங்களில் பிரம்மலோகம்போலச்சிறந்தயமலோகத்தில் உறுதியானகர்மங்களினாற்கட்டப்பட்டஜீவன் துக்கங்களை அனுபவிக்கிறான். புருஷன் எந்தஎந்தக்கர்மங்களை மனத்தோடுசெய்வதினாற் கொடியதும் பயங்கரமுமான கதியையடைகிறானோஅவற்றை இனி உனக்குச் சொல்லு

---

1 ஸ்வர்க்கசரீரம். 2 பூமியிலுள்ளசரீரம். 3 நரகத்திலுள்ளசரீரம்.

வேன். ப்ராம்மணன் நாலுவேதங்களையும்ஓதியும் அறிவில்லாமல் பதிதனிடத்தில்திரவியம்வாங்குவதனால் கழுதைப்பிறப்பில் பிறக்கிறான பாரதனே! அவன் பதினைந்துவருஷம் கழுதையாகப் பிழைத்திருக்கிறான் கழுதையாயிருந்துமரித்தபின் காளைமாடாகி ஏழுவருஷம்இருக்கிறான். காளைப்பிறப்புஇறந்தபின் பிரம்மராக்ஷஸாகப் பிறக்கிறான். பிரம்மராக்ஷஸாகமூன்றுமாஸங்களிருந்து பிறகு ப்ராம்மணனாகப்பிறக்கிறான். பாரதனே! பதிதனுக்குயாகம்செய்விப்பதனால் புழுவாகப்பிறக்கிறான். அந்தஜன்மத்தில் பதினைந்துவருஷமிருக்கிறான்; புழுஜன்மம்நீங்கியவுடன் கழுதையாகப்பிறக்கிறான். ஐந்துவருஷம் கழுதை, ஐந்துவருஷம் பன்றி, ஐந்துவருஷம் கோழி, ஐந்துவருஷம் நரி, ஒருவருஷம் நாய் இப்படியிருந்து பிறகு மனிதனைகப் பிறக்கிறான். சிஷ்யன் விவேகமில்லாமல் உபாத்யாயர்மனைவியிடம் தவறுசெய்வானாயின் அந்தஜீவன் இவ்வுலகத்தில் மூன்றுஜன்மங்களை அடைவான். ஸந்தேகமில்லை. அரசர்க்கரசே! முதலில்நாயாகவும் பிறகு புலியாகவும் அதன்பிறகு கழுதையாகவும் பிறந்து இறந்தபின் கஷ்டப்படும்ப்ராம்மணனைகப் பிறப்பான். சிஷ்யன் குருவின்மனைவியிடத்தில் மனத்தினாற்பாபத்தைச்சிந்தித்தாலும் மனத்தினாற்செய்த அந்தப்பாபத்தினால் கொடியஜன்மங்களையடைவான்; நாயாகப்பிறந்து மூன்றுவருஷங்களிருப்பான்; அந்தப்பிறப்புநீங்கியபின் புழுவாகப் பிறப்பான்; ஒருவருஷம் புழுவாகவிருந்து அதுநீங்கியபின் ப்ராம்மணஜாதியிற்பிறப்பான். குருவானவன் புத்திரனைப்போலிருக்கும் சிஷ்யனைக் காரணமின்றித் தான்நினைத்தபடி அடிப்பானாயின் அவனும் குரூரமிருகமாகப் பிறப்பான். ராஜனே! தந்தைதாய்களை அனாதரவுசெய்யும்புத்திரனும் இறந்தால் அந்தஜீவன் முதலில் கழுதையாகப்பிறப்பான். கழுதையாகப் பத்துவருஷமிருந்து அதன்பின் ஒருவருஷம் முதலையாகவிருந்து அதன்பின் மனிதனைகப்பிறப்பான். எந்தப்பிள்ளையின்மேல் தாய்தந்தையரிருவரும் கோபிக்கிறார்களோ அவனும் பெரியோருடையவெறுப்பினால் இறந்தபின் கழுதையாகப்பிறக்கிறான். பத்துமாதம் கழுதையாகவும் பதினாலுமாதம் நாயாகவும் ஏழுமாதம் பூனையாகவுமிருந்து பிறகு மனிதனைகப்பிறப்பான். ராஜனே! தாய்தந்தையரைத்திட்டுவதனால் நாகணவாய்ப்புள்ளாகப்பிறக்கிறான்; அவர்களையடித்தால் ஆமையாகப்பிறக்கிறான்; ஆமையாகப்பத்துவருஷமும் முள்ளம்பன்றியாகமூன்றுவருஷமும் பாம்பாகஆறுமாதமுமிருந்து அதன்பின் மனிதனைகப்பிறக்கிறான். ராஜனுடையஅன்னத்தைப்புஜித்து அவனுக்கு ஆகாதகாரியங்களைச்செய்யும்மூடன்

இறந்து குரங்காகப்பிறக்கிருன். குரங்காகப்பத்துவருஷமும் பன்றியாகஐந்துவருஷமும் நாயாகஆறுமாதமுமிருந்து பிறகு மனிதனுகப் பிறக்கிருன். அடைக்கலம்வைத்தபொருளேயபகரித்தமனிதன் யமலோகத்திற்குப்போய் நூறுவகையான துன்பங்களேயனுபவித்துப் புழுவாகப்பிறக்கிருன். பாரதனே! அந்தப்புழுஜன்மத்தில் பதினைந்து வருஷமிருந்து பாவத்தையொழித்துப் பிறகு மானிடனுகப்பிறக்கிருன். அப்போது பொருமைக்காரனும் இகழத்தக்கவனுமான சண்டாளனுகப்பிறந்து துயரப்படுகிருன். நம்பிக்கைத்துரோகம் செய்த கெடுமதியுள்ளமனிதன் மீனுகப்பிறக்கிருன். பாரதனே! எட்டுமாதம் மீனுகவிருந்து பிறகு மானுகப்பிறக்கிருன். மானுகநாலுமாதமிருந்து அதன்பின் ஆடாகப்பிறக்கிருன். ஒருவருஷம்ஆடாயிருந்து கொல்லப்பட்டுப் பசுவாகப்பிறக்கிருன். அதன்பிறகு, அந்தஜீவன் மனிதனுகஜனிக்கிருன். மகாராஜனே! நெல், யவம், எள், உழுந்து, கொள்ளு, கடுகு, கடலே, கலாயம், பச்சைப்பயறு, கோதுமை, அதவி (காயா) இந்தத்தானியங்களே ஆசையினுலபகரிக்கும் அறிவும்வெட்கமுமில்லாதமனிதன் பெருச்சாளியாகப்பிறக்கிருன். வேந்தனே! அந்தஜன்மம் இறந்துபோனபின் அவன் பன்றியாகப்பிறக்கிருன். ராஜனே! பன்றியாகப்பிறந்தவுடன் பிணியினுல் இறந்துபோகிருன். ராஜனே! அந்தமூடன் அந்தப்பாவத்தினுல் மறுபடியும் நாயாகப்பிறக்கிருன். ஐந்துவருஷம்நாயாகவிருந்து அதன்பிறகு மனிதனுகப்பிறக்கிருன். பிறர்மனேவியைத்தீண்டுவதனுல் செந்நாய் நாய் நரி கழுகு பாம்பு பருந்து கொக்குக்களாகப்பிறக்கிருன். ராஜனே! எந்தப்பாவச்சிந்தையுள்ளவன், புத்திமயங்கி ஸஹோதரன்மனேவியைச்சேர்கிருனே அவன் ஒருவருஷம் குயில்ஜன்மத்திலிருக்கிருன். ஸ்நேகிதன் ஆசாரியன் அரசன் இவர்களின்மனேவிகளேக் காமத்தினுல்ஆக்ரமிப்பவன் இறந்து பன்றியாகப்பிறக்கிருன்; ஐந்துவருஷம் பன்றியும் பத்துவருஷம் முள்ளம்பன்றியும் ஐந்துவருஷம் பூனேயும் பத்துவருஷம் கோழியும் மூன்றுமாதம்எறும்பும் ஒருமாதம்குரங்குமாக ஜன்மங்களேயடைந்து பிறகு புழுவாகப்பிறக்கிருன். அந்தப்புழுஜன்மத்தில் பதினன்கு மாதங்களிருந்து பாவத்தை ஒழித்துக்கொண்டு திரும்பவும் மனிதனுகப்பிறக்கிருன். பிரபுவே! விவாகம், யாகம், தானம்இவைநடக்கும்போது அவற்றிற்குஇடையூறுசெய்யும்மூடன் இறந்து புழுவாகப்பிறக்கிருன். பாரதனே! பதினைந்துவருஷம் புழுவாயிருந்துபாவத்தையொழித்துப் பிறகு மனிதனுகப்பிறக்கிருன். ராஜனே! முதலில்ஒருவனுக்குக்கன்னிகாதானம்செய்து மறுபடியும் அந்தக்கன்னி

கையை மற்றொருவனுக்குக்கொடுக்க நினைக்கும்மனிதனும் இறந்தபின் புழுவாகப் பிறக்கிறான். யுதிஷ்டிரனே! அந்தஜன்மத்தில் பதின்மூன்றுவருஷங்களிருந்து பாவத்தையொழித்துக்கொண்டு பிறகு மனிதனாகப்பிறக்கிறான். தெய்வகாரியத்தையும் பித்ருகாரியத்தையும்செய்யாமலும் பிறருக்கு அன்னமிடாமலும் உண்பவன் இறந்து காக்கையாகப்பிறக்கிறான். நூறுவருஷம் காக்கையாகவிருந்து பிறகு கோழியாகப்பிறக்கிறான். அதன்பிறகு, ஒருமாதம் கொடியமிருகமாயிருந்து அதினின்றும் மனிதனாகப் பிறக்கிறான். தந்தைக்குச் சமானமாகிய மூத்தஸஹோதரனை அவமதிப்பவன்இறந்தபின் [1]க்ரௌஞ்சமென்னும் பிராணியாகப் பிறக்கிறான்; க்ரௌஞ்சமென்னும்பிராணியாக ஒருவருஷமிருந்து [2]சீரகமென்னும்பிராணியாகப் பிறக்கிறான்; அதிலிருந்து மரணமடைந்தபின் மானிடதேகமெடுக்கிறான். சூத்திரன் ப்ராம்மணப்பெண்ணைச்சேருவதனால் புழுவாகப்பிறக்கிறான். அதுஇறந்தபின் திரும்பவும் பன்றியாகப்பிறக்கிறான். ராஜனே! பன்றியாகப்பிறந்தவுடன் பிணியினால்இறக்கிறான். ராஜனே! அந்தமூடன் அந்தக்கருமத்தினால் திரும்பவும் நாயாகப்பிறக்கிறான். நாயாகப்பிறந்தபின் கர்மம்முடித்துத் திரும்பவும் அவன் மானிடஜன்மமெடுக்கிறான். அந்தப்பிராம்மணப்பெண்ணினிடம் கர்ப்பத்தையுண்டாக்கினால் இறந்து பெருச்சாளியாகப்பிறக்கிறான். பாரதனே! ராஜனே! நன்றிமறந்தவன் இறந்து யமலோகம்போய்க் கோபமுள்ள யமதூதர்களால் கடுமையாகஅடிக்கப்படுகிறான்; தடி, உலக்கை, சூலம், கொடியதீக்குடம், கத்திகளை இலைகளாகவுடையகாடு, கொதிக்கும்மணல், இருப்புமுள்ளிலவமர முதலான அநேககொடியதுன்பங்களை யமலோகத்திலடைந்து அங்கே கொல்லப்படுகிறான். பரதஸ்ரேஷ்டனே! நன்றிமறந்தவன் யமலோகத்தில் கொடியயமதூதர்களால் கொல்லப்பட்டுத் திரும்பவும் உலகத்திற்குவந்துபுழுப்பிறப்பிற்பிறக்கிறான்; பாரதனே! பதினைந்துவருஷம் புழுவாயிருக்கிறான். அதன்பிறகு, வேறுகர்ப்பத்திற்புகுந்து சிசுவாயிருக்கையிலேயே மரிக்கிறான். அதன்பிறகு, அநேகநூறுகர்ப்பங்களில் அந்தஜீவன் பிறக்கிறான். அநேகம் ஜனனமரணங்களையடைந்தபின் விலங்குஜாதியிற் பிறக்கிறான். பிறகு, எண்ணிறந்தவருஷங்கள் துயரப்பட்டு மறுஜன்மத்தில் ஆமையாகப்பிறக்கிறான். தயிர் திருடுகிறவன் கொக்காகவும் நீர்க்காக்கையாகவும் பிறக்கிறான். பச்சைமச்சங்களைத் திருடுகிறமதிகெட்டவன் தேனீயாகப் பிறக்கிறான். காயையும் கிழங்கையும் பக்ஷணத்தையும்திருடுகிறவன்

1 அன்றில். 2 சுவர்க்கோழி.

எறும்பாகப்பிறக்கிறான். மொச்சைக்கொட்டையைத் திருடுகிறவன் [1] ஹலகோலகமென்னும்ஜந்துவாகப் பிறக்கிறான். பாடஸம்திருடினவன் [2] தித்திரியாகப்பிறக்கிறான். மாப்பண்டத்தைத்திருடுகிறவன் கும்போலூகமென்னும்மலைக்கோட்டானாகப் பிறக்கிறான். இரும்பு திருடினமதிகெட்டமனிதன் காக்கையாகப்பிறக்கிறான். வெண்கலந் திருடினமதிகெட்டமனிதன் ஹாரீதமென்னும்பச்சைக்குருவியாகப் பிறக்கிறான். வெள்ளிப்பாத்திரம்திருடினவன் புறாவாகப்பிறக்கிறான். பொற்பாத்திரம்திருடினவன் புழுவாகப்பிறக்கிறான். மகமல்திருடினவன் க்ருகலமென்னும்ஜந்துவாகப் பிறக்கிறான். நார்மடியைத்திருடினவன் [3] வர்த்திகைஎன்னும்பக்ஷியாகப் பிறக்கிறான். நூல்வஸ்திரத்தைத்திருடுகிறவன் கிளியாகப்பிறக்கிறான். வெண்பட்டைத்திருடுகிறமனிதன் இறந்து ஹம்ஸமாகப்பிறக்கிறான். நூலைத்திருடுகிறமனிதன் இறந்து அன்றிலாகப்பிறக்கிறான். பாரதனே! சால்வை, பூச்சிப்பட்டு இவற்றைத்திருடுகிறவன் முயலாகப்பிறக்கிறான். வன்னங்களைத்திருடுகிறமனிதன் இறந்து மயிலாகப்பிறக்கிறான். சிவப்புவஸ்திரங்களைத்திருடினவன் சகோரபக்ஷியாகப்பிறக்கிறான். ராஜனே ! குங்குமம் சந்தனமுதலியவாஸனைத் திரவியங்களை ஆசைபற்றித் திருடுகிற மனிதன் மூஞ்சூறாகப்பிறக்கிறான். பதினைந்துவருஷம் அந்த ஜன்மத்திலிருந்து பாவத்தைக்கழித்துப் பிறகு மனிதனாகப்பிறக்கிறான். பாலைத்திருடுவதனால் நாரையாகப்பிறக்கிறான். ராஜனே ! மதிகெட்டு எண்ணெயைத்திருடும்மனிதன் இறந்து [4] தைலபாயிஎன்னும்ஜந்துவாகப் பிறக்கிறான். ஆயுதமில்லாதமனிதனைப் பணத்திற்காகவாவது விரோதத்தினாலாவது ஆயுதத்தினாற்கொல்லும் அதமனானமனிதன் இறந்து கழுதையாகப்பிறக்கிறான். இரண்டுவருஷம் கழுதையாயிருந்து பிறகு ஆயுதத்தினாற் கொல்லப்படுகிறான். இறந்தபின் எப்போதும்பயமுள்ள மானாகப் பிறக்கிறான். ஒருவருஷமானபின் அந்தமான் ஆயுதத்தினால் கொல்லப்படுகிறது. மானிறந்து மீனாகிறது. மீன் நாலாவதுமாதத்தில் வலையினாற்பிடிக்கப்படுகிறது. பிறகு, சிறுத்தையாகப்பிறக்கிறது. பத்துவருஷம் சிறுத்தையாயிருந்து ஐந்துவருஷம் புலியாயிருந்து காலக்கிரமத்தையனுஸரித்து மரணமடைந்து பாவத்தையொழித்தபின் மானிடஜன்மமெடுக்கிறான். மஹாராஜனே ! பெண்கொலைசெய்யும்மதிகெட்டவன் யமலோகம்சேர்ந்து இருபத்

1 'வால்நீண்டு கோளவடிவமானசரீரமுள்ளஒருபுழு' என்பது பழைய உரை. 2 ஊர்க்குருவி. 3 விச்சளி.
4 வௌவால், அல்லது கரப்பு.

தொருநரகங்களையும் பலதுன்பங்களையும்அனுபவித்து அதன்பிறகு புழுவாகப்பிறக்கிறான். இருபதுவருஷம் புழுவாகவிருந்து மானிடனாகப்பிறக்கிறான். அன்னத்தைத்திருடுகிறமனிதன் ஈயாகப்பிறக்கிறான். ஈக்கூட்டங்களிற்சேர்ந்து அனேகமாதங்களிருந்து அதில் பாபத்தைக்கழித்து மானிடஜன்மமெடுக்கிறான். பக்ஷயம்திருடுகிற மனிதன் வலைக்காரனாகப்பிறக்கிறான். கறிகாய்களைத்திருடுகிறவன் சிரபாசமென்னும்பிராணியாகப்பிறக்கிறான். தான்யம்திருடுகிறமனிதன் உடம்பெல்லாம்ரோமங்களுள்ளமனிதனாகப் பிறக்கிறான். ராஜனே! பிண்ணாக்குச்சேர்ந்தஆகாரத்தைத்திருடுகிறகூலிவேலைக்காரன் கொடியதும் எப்போதும்மனிதர்களைக்கடிக்கிறதும் பாபியுமானஎலியாகப் பிறக்கிறான். நெய்திருடுகிறபுத்திகெட்டவன் [1]காகமத்குவாகப் பிறக்கிறான். மச்சத்தையும்மாம்ஸத்தையும்திருடுகிறமதிகெட்டவன் காக்கையாகப் பிறக்கிறான். உப்பைத்திருடுகிறவன் சிரிகாகமென்னும் ஒருவகைக்காக்கையாகப் பிறக்கிறான். அப்பா! நம்பிக்கையினால் அடைக்கலமாகவைத்ததை எந்தமனிதன் மறைக்கிறானோ அந்தமனிதன் ஆயுள்குன்றி மீனாகப்பிறக்கிறான்.மீனாயிருந்து இறந்தபின் மானிடனாகப்பிறக்கிறான்; மானிடஜன்மத்தையடைந்து ஆயுள்குறைந்தவனாகிறான். பாரதனே! மனிதர்கள் பாவங்களைச்செய்து விலங்குஜாதியிற் பிறக்கின்றனர்; தம்வாழ்நாள்முடிவுவரையில் ஒருதர்மத்தையும் அறிவதில்லை. எந்தமனிதர்கள் எப்போதும் பாவங்களைச்செய்து விரதங்களினால் அவற்றைப்போக்குகின்றனரோ அவர்களும் ஸுகதுக்கங்கள் கலந்து வருந்துகிறவர்தாம். ஆசையோடும் அறிவின்மையோடும்கூடிப் பாபங்களைச்செய்யும்மனிதர்கள் ஆண்மையில்லாமலாவது மிலேச்சர்களாகவாவது ஜனிக்கிறார்களென்பதில்ஸந்தேகமில்லை. எந்த மனிதர்கள் பிறந்ததுமுதல் பாவங்களைவிட்டுவிடுகின்றனரோ அவர்கள்தாம் நோயற்று அழகும் தனமுமுள்ளவராகிறார். பெண்களும் பாபத்தைச்செய்தால் முன்சொன்னவரிசையாகவே பலனையடைவார்கள். அவர்கள் முன்சொன்னஜந்துக்களுக்கே மனைவிகளாயிருப்பார்கள். அயலார் சொத்தை அபகரிப்பதிலுள்ள தோஷங்களெல்லாவற்றையும் சொன்னேன். குற்றமற்றவனே! இது நான் உனக்குக்கொஞ்சமாகச்சொன்னது.பாரதனே! மற்றொருசமயம்வார்த்தைசொல்லும்போது நீ இன்னும் கேட்டுக்கொள்ளலாம். மஹாராஜனே! முன்னர் தேவரிஷிகளின்நடுவில் பிரம்மதேவர் என்னால்வினவப்பட்டுச் சொல்லும்போது நான் இதைக் கேட்டேன். நான் உனக்கு இதனை

[1] கொம்புள்ளஒருநீர்ப்பறவை.

யெல்லாம் உள்ளபடி சொன்னேன். மஹாராஜனே! இதைக்கேட்ட நீ எப்போதும் தர்மத்தில்மனம்செலுத்து" என்றார்.

## நூற்றெழுபத்துநான்காவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(தர்மபுத்ரருக்கும் ப்ருஹஸ்பதிக்கும் நடந்தஸம்பாஷணைத்தொடர்ச்சி; பாவத்தைப்போக்க உபாயமும் அன்னதானத்தின்சிறப்பும்.)

யுதிஷ்டிரர், "குற்றமற்றபிராம்மணரே! பாபத்தின்முடிவை நீர் எனக்குச்சொன்னீர். பேசுகிறவரிற்சிறந்தவரே! தர்மத்தின் கதியைக் கேட்கவிரும்புகிறேன். பாபகாரியங்களைச்செய்தவர்களும் நல்லகதியையடைவது எப்படி? இவ்வுலகத்தில் என்னகருமம்செய்வதனால் சிறந்தகதியையடையலாம்?" என்றுகேட்க, பிருகஸ்பதி சொல்லலானார்.

"முந்தியதீவினையின்வசத்தில் அகப்பட்டுக்கொண்டு மனம்கெட்டுப் பாபங்களைச்செய்பவன் நரகம்புகுவான். எவன் தெரியாமல்பாவத்தைச்செய்து ஸரியானமனத்துடன் அதைப்பற்றி வருத்தப்படுகிறானோஅவன் பாவப்பயனைஅடையமாட்டான். அவன்மனம்எவ்வளவுக்கெவ்வளவு பாபகாரியத்தைஇகழ்கிறதோஅவ்வளவுக்கவ்வளவு அவன் தேகம் அந்தப்பாபத்தினால் விடப்படுகிறது. ராஜனே! தர்மத்தை உபதேசிக்கும் ப்ராம்மணர்களிடம் தன்பாபத்தைச்சொல்வானானால் அந்தப்பாபத்தினாலுண்டானநிந்தனையிலிருந்து சீக்கிரத்தில்விடுபடுவான். மனிதன் பரிசுத்தமானமனத்துடன் நன்றாகஎத்தனைக்கெத்தனை தன் பாபத்தைச்சொல்லுகிறானோ அத்தனைக்கத்தனை தளர்ந்துபோன பழையசட்டையிலிருந்து பாம்புவிடுபடுவதுபோலப் பாவத்தினின்று விடுபடுவான். திருத்தமானமனமுள்ளவனாய்ப் பிராம்மணனுக்குப் பலதானங்களைச்சிரத்தையுடன்செய்வதனால்நல்லகதியையடைவான். யுதிஷ்டிர! மனிதன் கெட்டகாரியங்கள் செய்தாலும் எவற்றைக் கொடுப்பதனால் புண்ணியமடைவானோ அந்தத்தானங்களைச் சொல்வேன். எல்லாத்தானங்களிலும் அன்னதானம் மிகச்சிறந்ததாகச் சொல்லப்படுகிறது. புண்ணியத்தைவிரும்புகிறவன்ஸரியானஉள்ளத்துடன் முதலில் அன்னதானம்செய்யவேண்டும். அன்னம் மனிதர்க்கு உயிர். அதினின்றுந்தான் மனிதனுண்டாகிறான். உலகம் அன்னத்

தைப்பற்றியே இருக்கிறது. ஆதலால், அன்னம் சிலாகிக்கப்படுகிறது. தேவர்களும் ரிஷிகளும் பித்ருக்களும் மனிதர்களும் அன்னத்தையே புகழ்கின்றனர். அன்னதானம் செய்வதனாலேதான் மனிதன் ஸ்வர்க்கம் அடைகிறான். தனக்கு நியாயமாகக்கிடைத்த உயர்ந்தஆகாரத்தை வேதாத்தியயனம்செய்தபிராம்மணர்களுக்கு உள்ளமகிழ்ந்து அளிக்க வேண்டும். மனமகிழ்ச்சியோடு எவன்கொடுக்கும் அன்னத்தை ஆயிரம்பிராம்மணர்கள் புஜிக்கின்றனரோஅவனுக்கு விலங்குஜன்மம் வராது. அரசனே! பதினாயிரம்பிராம்மணர்களைப்புஜிப்பித்தும் எப்போதும் தியானத்தில்ஊக்கம்வைத்துமிருக்கும்மனிதன் பாபத்தினின்றுவிடுபடுவான். பிக்ஷையெடுத்து அன்னத்தைஸம்பாதித்தும் பிராம்மணர்களுக்குக் கொடுக்கவேண்டும். பொன்னைக்கொடுப்பதனால் மிகுதியானபாவங்களும்போம். ஜீவனத்திற்குஉபயோகமான பூமியைத்தானம்செய்பவன் பாபத்தினால்விடுபடுவான். பிராம்மணன் வேதங்களைமுழுவதும் ஓதுவதனாலும் பாவங்களினால்விடப்படுவான். காயத்ரியைலக்ஷம்தரம்ஜபிப்பதனாலும்,ஆயிரம்கோக்களுக்குஆகாரம் நிரம்பக்கொடுப்பதனாலும்,பரிசுத்தர்களானபிராம்மணர்களுக்கு வேதத்தின்உண்மையானபொருளைப் போதிப்பதனாலும், ஸந்யாஸமுதலியவற்றினாலும் பிராம்மணன் பாவங்களினால் விடப்படுவான்.இவற்றுள், எல்லாவிருந்துகளையும் ஆதரிப்பது சிறந்தது. ஆதலால், தானம் சிறந்ததாகச் சொல்லப்பட்டது. தர்மாத்மாவான பாண்டவனே! யாரையும் பீடிக்காமலும் பிராம்மணன் சொத்துக்களை நியாயமாகக் காப்பாற்றியும் தன்பராக்கிரமத்தினால்கிடைத்த அன்னத்தை வேதமறிந்தபெரியோர்களான பிராம்மணர்களுக்கு ஆசாரத்தோடும் பக்தியோடும் கொடுக்கும்க்ஷத்திரியன் அதனாலேயே பாவத்தை விலக்கிவிடுகிறான். தான் பயிர்செய்துசம்பாதித்ததில் ஆறில்ஒருபாகத்தை அரசனுக்குத் தீர்வைசெலுத்தி மிச்சமாயுள்ளதைப் பிராம்மணர்களுக்குக்கொடுக்கும் வைசியன் பாவங்களினின்றும் விடுபடுவான். உயிர்ச்சந்தேகத்தில் அகப்பட்டும் தேகம்கஷ்டப்பட்டும் சம்பாதித்த அன்னத்தைப் பிராம்மணர்களுக்குக்கொடுக்கும் சூத்திரன் பாவத்திலிருந்துவிடுபடுவான். பிறரைப்பீடியாமல் தன்மார்பின் பலத்தினால் அன்னத்தைத்தேடிப்பிராம்மணர்களுக்குக்கொடுப்பவன் நரகங்களைப் பாரான். நியாயமாகக்கிடைத்தஅன்னத்தை வேதமோதின பெரியோரான பிராம்மணர்களுக்கு மனமகிழ்ச்சியுடன் கொடுப்பதனாலேதான் மனிதன் பாவத்தினின்றும்விடுபடுவான். உலகத்தில் அன்னந்தான் பலத்தைத்தருவது. அதைக்கொடுப்பதனால் மனிதன் பல

மூள்ளவனுவான் ; பெரியோர்களின்வழியைத்தழுவுவதினால் எல்லாப் பாவங்களாலும் விடப்படுவான். தர்மத்தைத்தலைமையாகக்கொண்ட பிராம்மணர்கள் சூத்திரனுடைய அன்னத்தைப் புஜிக்கலாகாது. ஆபத்தில்மட்டும் தம்வேலைக்காரர்கள் சுயமாகக்கொண்டுவந்து கொடுத்ததைப் புஜிக்கலாம். தானம்செய்தவர்கள் உண்டாக்கினவழியிலேதான் புத்திசாலிகள் நடக்கின்றனர். அவர்கள் பிராணனைக் கொடுப்பவர்கள். அழியாததர்மம் அவர்களாலுண்டானது. மனிதன் நியாயமாகச்சம்பாதித்த எவ்விதமான அன்னத்தையும் எப்போதும் தகுதியுள்ளவர்களிடத்திற்சேர்ப்பிக்கவேண்டும். அன்னந்தான் முக்கியமானமார்க்கம். மனிதன் அன்னதானம் செய்வதனால் பிறருடையகொடுமையை அடையான். ஆதலால், அநியாயமில்லாமல் கிடைத்தஅன்னத்தைத் தானம்செய்யவேண்டும். கிருகஸ்தன் எப்போதும் ப்ராம்மணனைமுன்னிட்டே அன்னத்தைப் புஜிக்கமுயலவேண்டும். சோறும்தண்ணீரும்கொடாமல் ஒவ்வொருநாளையும் வீண்போக்கலாகாது. ராஜனே! நியாயம்தெரிந்தமனிதன் வேதம்தர்மசாஸ்திரம்இதிஹாஸம்தெரிந்தவர்கள் ஆயிரவரைப்புஜிப்பித்தால் கொடியநரகத்திற்கும் போகான்; ஸம்ஸாரதுக்கங்களையும் அடையான்; பரலோகத்திலும் வேண்டின போகங்களையெல்லாம்பெற்று ஸுகம் பெறுவான். இவ்வாறு துயரமற்று ஸுகமுள்ளவனாக விளங்குவான். பிறகு அழகும்புகழும்பொருளுமுள்ளவனாகப்பிறப்பான். பாரதனே! அன்னதானத்தின்இந்தப்பெரும்பயனை உனக்கு முழுதும்சொன்னேன். மற்றத்தர்மங்களுக்கும்தானங்களுக்கும்இது வேர்" என்றார்.

---

## நூற்றேழுபத்தைந்தாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(தர்மபுத்திரருக்கும் பிருகஸ்பதிக்கும் நடந்த ஸம்பாஷணைத் தொடர்ச்சி; அஹிம்ஸையைப்பற்றியது.)

யுதிஷ்டிரர், "கொல்லாமை, வேதத்திற்சொல்லியகருமங்கள், தியானம், இந்திரியங்களையடக்குவது, [1]தவம், குருபணிவிடைஇவற்றுள் ஏது புருஷனுக்குநல்லது?" என்றுகேட்க, பிருகஸ்பதிசொல்லலானார்: "பரதஸ்ரேஷ்டனே! நீ சொல்லுகிறஆறும் தனித்தனியே தர்மத்திற்குஎப்போதும்வழிகளே. ஆகிலும், எல்லாவற்றிலும்சிறந்த

---

1 விரதங்கள்.

தாகிய மனிதனுடையநல்வழியை நான்சொல்வேன்; கேள். வித்வான் அடக்கத்துடன் கொல்லாமையைப்பற்றிய தர்மத்தைச்செய்ய வேண்டும். மனிதன் எல்லாப்பிராணிகள்விஷயத்திலும் [1]த்ரிதண்டத்தைவைத்துக்கொண்டு காமக்குரோதங்களையடக்கிப் பரிசுத்தனாக இருப்பதனால் நன்மையையடைவான். தன்னை ஹிம்ஸியாமலிருக்கும் பிராணிகளைத் தடியினாலடித்துத் தன்ஸுகத்தைக்கருதுபவன் மறுமையில் ஸுகம்பெறான். எந்தமனிதன் மற்றப்பிராணிகளைத் தன்னைப்போலநினைத்துத் தண்டிப்பதையும் கோபத்தையும் விட்டிருக்கிறானோ அவன் மறுமையில் ஸுகத்தோடுவிளங்குவான். எல்லாப்பிராணிகளையும்தானாகப்பார்ப்பவன் போகும்வழியில் கால்வைக்கஇடமில்லாமல் இடத்தைவேண்டும்போது தேவர்களும் வழியில்நிற்கத் துணியார். தனக்கு எதுவிரோதமோ அதைப்பிறருக்குச் செய்யலாகாது. இதுதான் தர்மத்தின்சுருக்கம். இதற்குமாறானது ஆசையினாலுண்டாகிறது; பிறரைப்பற்றிப்பேசுவதிலும் தானத்திலும் இன்பத்திலும் துன்பத்திலும் விருப்பிலும் வெறுப்பிலும் மனிதன் தன்னைஉவமையாகக்கொண்டு பிறர்விஷயத்தில்நிச்சயம்தெரிந்துகொள்ள வேண்டும். ஒருவன் மற்றவர்களிடத்தில் எப்படிநடக்கிறானோ அப்படித்தான் மற்றவர்கள் அவன் விஷயத்தில் நடப்பார். இவ்வுலகம் தனக்கொத்ததைத்தான் செய்கிறது. தர்மத்தைச் செவ்வையாகச் சொன்னேன்" என்றார். சிறந்தபுத்தியுள்ளபிருகஸ்பதி அந்தத்தர்மராஜாவான யுதிஷ்டிரருக்கு இவ்வாறுசொல்லி நாங்கள்பார்த்திருக்கையிலேயே ஆகாயத்திலேறினார்.

---

## நூற்றெழுபத்தாறுவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(ஹிம்ஸை மாம்ஸபோஜனமுதலியன ஆகாவென்பது.)

ஜனமேஜயமகாராஜரே! பிறகு, பேசுகிறவரிற் சிறந்தவரான தர்மராஜர் சரதல்பத்திற்படுத்திருக்கும்பீஷ்மரைப்பார்த்து, "சிறந்த புத்தியுள்ளவரே! ரிஷிகளும் பிராம்மணர்களும் தேவர்களும் வேதத்தைப்பிரமாணமாகஅறிந்து கொல்லாமைஎன்னும்தர்மத்தைச் சிலாகிக்கின்றனர். ராஜஸ்ரேஷ்டரே! செய்கையாலும் வாக்கினாலும் மனத்தினாலும் பிறவுயிர்க்குத்துன்பம்செய்யும்மனிதன் துக்கத்தினின்று விடுபடானே" என்று மறுபடியும்கேட்க, பீஷ்மர் சொல்லலானார்:

---

1 மனோவாக்குக்காயங்களையடக்குவது.

"பகைவரைநாசஞ்செய்பவனே! அஹிம்ஸை [1]நாலுவகையென்று வேதந்தெரிந்தவர்களால் சொல்லப்பட்டிருக்கிறது. ஒன்றுதவறினாலும் அது அஹிம்ஸையாவதில்லை. ராஜனே! எப்படிநாலுகால்களுள்ளதுஒன்றும் மூன்றுகால்களால்நில்லாதோ அப்படியே அஹிம்ஸையும் மூன்றுவகைகளால்நில்லாதென்றுசொல்லப்படுகிறது. யானையடியில் காலால்நடக்கும் மற்றவற்றின் அடிகள் இருந்தால் அவையெல்லாம் எப்படி யானையடிக்குட்பட்டுப்போகின்றனவோ அப்படியே உலகத்திலுள்ளஎல்லாத்தர்மங்களும் அஹிம்ஸையில்அடங்கிப்போகின்றனவென்று முற்காலத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. செய்வதனாலும் சொல்வதனாலும் நினைப்பதனாலும் மனிதனைப் பாவம் பற்றுகிறது. முதலில்மனத்தினாலும் பிறகுவாக்கினாலும் அதன்பின்செய்கையினாலும்வரும் ஹிம்ஸையை விடவேண்டும்; ஹிம்ஸையைச் செய்யலாகாது. அந்தஹிம்ஸையும் நாலுவகை. தேகத்திலும் மனத்திலும் வாக்கிலும் [2]இது குற்றமாகச்சொல்லப்படுகிறது. மாம்ஸம் தின்னாதவனெவனோ அவன் இம்மூன்றுகுற்றங்களாலும் விடப்பட்டவனாகிறான். மனம் வாக்கு ருசிபார்க்கும் நா [3]இம்மூன்றிலும் மூன்று காரணங்களினால் இந்தக்குற்றங்கள் நிற்கின்றனவென்று வேதமோதினவர்கள் சொல்லுகின்றனர். அதனாலேதான், தவத்திலிருக்கும்ஞானிகள் மாம்ஸம்தின்பதில்லை. ராஜனே! மாம்ஸபக்ஷணத்திலுள்ள தோஷங்களைச்சொல்லுகிறேன்; கேள். தன்புத்திரனுடையமாம்ஸம் போன்றதாகவேதெரிந்தும் ஆசையினால் அறிவுகெட்டு மாம்ஸத்தைத் தின்னும்மனிதன் அதமனாகநினைக்கப்படுகின்றான். தாய்தந்தையர்கள் புணர்வதனால் புத்ரனானவன் தன்வசமில்லாமற்பிறப்பதுபோல ஹிம்ஸையைச்செய்பவன் தன்ஸ்வாதீனமில்லாமலே பாபஜன்மமெடுப்பது மிகவும்நிச்சயம். நாவில் எப்போது உணர்ச்சிதெரிகிறதோ அப்போது மனத்தில் ஆசையுண்டாகிறதென்பது சாஸ்திரங்களின்நிச்சயம். உருசிகாண்பதனாலன்றோ ஆசையுண்டாகிறது? பாகம்செய்யப்பட்டபொருள்கள் நன்றாகச்சமைந்தும் சமையாமலும் உப்பிருந்தும் இல்லாமலுமிருப்பதற்குத்தக்கபடி மனம் அவற்றில் பிரவிருத்திக்கிறது. மாம்ஸம்தின்னும்புத்திகெட்டமனிதர்கள் பேரிகைகள் மிருதங்கங்கள் இவற்றின்ஒலிகளையும் தந்திகளின்நிரம்பினஸ்வரங்களையும் எப்படியனுபவிப்பர்? அயலாருடையதனங்களையும் தானியங்களையும்

1 நினையாமை, சொல்லாமை, உண்ணாமை, கொல்லாமை.

2 நாவினால் ருசிபார்ப்பதையும் என்று சேர்த்துக்கொள்க.

3 இங்கு செய்கையாகிய கொல்வதையும் சேர்த்துக்கொள்க.

கெடுப்பவரும் (இல்லாததைத்)துதிப்பவரும் மாம்ஸத்தைச்சிலாகிப்ப வரும் எக்காலத்திலும் ஸ்வர்க்கத்தினின்று வெளிப்படுத்தப்படுகின்ற வர். மாமிசத்தின்சுவையில் ஆசைமேற்கொண்டவர்கள், அதன்உப யோகத்தைவேண்டித் தாங்கள்நினையாமலும் தங்களுக்குயாரும் சொல்லாமலும் தாங்கள் இதற்குமுன் அனுபவியாமலுமிருக்கும் மாமி சத்தைச் சிலாகிக்கின்றனர்.மாமிசத்தைச்சிலாகிப்பதுமட்டுமே ஹிம் ஸைக்குச்சமமான பாபமுள்ளது. நீருவதும் மலமாவதும் புழுவாவ தும் எதற்கு நிச்சயமானமுடிவுகளோ அந்தத்தேகத்தை மற்றவற்றை ஹிம்ஸித்துக் காப்பாற்றுவதை வித்வான் எப்படிச்செய்யலாம்? பல நல்லமனிதர்கள் தம்மாமிசங்களினால் பிறர்மாமிசங்களைக்காப்பாற்றி உயிர்விட்டு ஸ்வர்க்கம்சென்றனர். மஹாராஜனே! இவ்வாறு நாலு காரணங்களால் அஹிம்ஸை சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக் கிறது. எல்லாத்தர்மங்களாலும் அனுஸரிக்கப்பட்ட அந்தஅஹிம் ஸையை உனக்குச் சொன்னேன்" என்றார்.

---

## நூற்றெழுபத்தேழாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(கொல்லாமையை வற்புறுத்தியதும், மாம்ஸத்தைவிட்ட பூர்வ்கஅரசர்களும்.)

யுதிஷ்டிரர், "அஹிம்ஸை முதன்மையானதர்மமென்று பல முறை நீர் சொன்னீர். சிராத்தங்களில் பித்ருக்களுக்கு மாம்ஸம் இஷ்டமென்று நீரே சொல்லியிருக்கிறீர். பலவகை மாம்ஸங்களினால் சிராத்தம்செய்வதைப்பற்றி முன்னே நீர் சொன்னீர். கொல்லாமல் மாம்ஸம்வருது? இவ்வாறு இது முரண்படுகிறது. மாம்ஸத்தைவிடுவ தாகியதர்மத்தில் எங்களுக்கு ஸம்சயமுண்டாயிருக்கிறது. மாம்ஸம் தின்பவனுக்கு என்னகுற்றமுண்டாகும்? தின்னாதவனுக்கு என்ன குணமுண்டாகும்? கொன்றுதின்பவனுக்கும் அயலார்கொடுத்ததைத் தின்பவனுக்கும் பிறருக்காகக்கொல்லுகிறவனுக்கும் விலைக்குவாங்கித் தின்பவனுக்கும் குற்றங்கள்என்ன? குற்றமற்றவரே! இவற்றைத் தெளிவாக நீர்சொல்லவிரும்புகிறேன். தெரிந்துகொண்டு இந்தஅழி யாததர்மத்தை நிச்சயத்துடன் செய்யவிரும்புகிறேன். மனிதன் எத னால் தீர்க்காயுளை அடைவான்? எப்படி பலமுள்ளவனாவான்? அங்க ஹீனமில்லாதவனும் லக்ஷணங்கள்பொருந்தினவனுமாவதுஎப்படி?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்:

"கௌரவனே! ராஜனே! மாம்ஸம்தின்னுமையினுலுண்டாகும் தர்மத்தையும் அதைப்பற்றினசிறந்தமுறையையும்உள்ளபடிசொல்லு கிறேன்; கேள். லக்ஷணங்களையும் அங்கப்பிழையில்லாமையையும் ஆயுளையும் புத்தியையும் தைரியத்தையும் பலத்தையும் ஞாபகசக்தி யையும் அடையக்கருதும் புத்திசாலிகளானமனிதர்கள் ஹிம்ஸையை விட்டுவிடவேண்டும். கௌரவனே! இந்தவிஷயத்தில் ரிஷிகளுக்குள் அநேகந்தரம் சம்பாஷணம்நேர்ந்தது. யுதிஷ்டிர! அவர்களுடைய கொள்கையாதுவோ அதைக்கேள். ஒவ்வொருமாதத்திலும் விரதங்கள் தவறுமல் அசுவமேதயாகம்செய்வதும் மதுமாம்ஸங்களை விடுவதும் ஸரி. ராஜனே! சிறந்தஞானிகளாகிய ஸப்தரிஷிகளும் வாலகில்யர்க ளும் சூரியகிரணங்களைக்குடிப்பவராகிய மரீசிபரென்பவரும் மாம்ஸ பக்ஷணம்செய்யாமையைச் சிலாகிக்கின்றனர். 'மாம்ஸந்தின்னுமலும் ஒன்றையுங்கொல்லாமலும் பிறரால்கொல்விக்காமலுமிருப்பவன் எல் லாப்பிராணிகளுக்கும் அன்பன்'என்று ஸ்வாயம்புவமனு சொன்னர். மாம்ஸத்தைவிடுகிறவன் எல்லாப்பிராணிகளுக்கும்வெல்லமுடியாதவ னும் எல்லாப்பிராணிகளும்நம்பத்தக்கவனும் ஸாதுக்கள்எப்போதும் கௌரவிக்கத்தக்கவனுமாவான். 'எவன் தன்மாம்ஸத்தைப் பிறர் மாம்ஸத்தினுல் வளர்க்கநினைக்கிருனே அவன் நம்பத்தகாதவன்; அவன் கெடுவான்' என்று நாரதர் சொன்னர். 'மதுவையும்மாம்ஸத் தையும்விடுகிறநிலையே தானங்களும் யாகங்களும் தவங்களும் செ ய்தவனுகிருன்' என்று பிருஹஸ்பதி சொன்னர். நூறுவருஷகாலம் ஒருமாஸங்கூடவிடாமல் அசுவமேதயாகம்செய்வதும் மாம்ஸத்தைத் தின்னுமலிருப்பதும் ஸமமென்று என்அபிப்பிராயம். கள்ளையும் மாம் ஸத்தையும்விடுவதனுல் எப்போதும் யாகம்செய்பவனும் எப்போ தும்தானம்செய்பவனும்எப்போதும்தவம்செய்பவனுமாகிருன். பார தனே! மாம்ஸம்பக்ஷித்துக்கொண்டிருந்துபிறகாவதுவிடுவது என்ன பலனைச்செய்யுமோ அதை எல்லாவேதங்களும் எல்லாயாகங்களும் செய்யா. ஒருகாரணம்பற்றிப்பக்ஷித்தபோதிலும் பிறகு கடுந்தவம் செய்யவேண்டும். சுவையறிந்தவன் மாம்ஸத்தைவிடுவது கடினம். எல்லாப்பிராணிகளுக்கும் அபயங்கொடுப்பதாகிய இந்தவிரதத்தை ஆஸ்ரயிப்பது எல்லாவற்றிலும்சிறந்தது. எந்தவித்வான் எல்லாப் பிராணிகளுக்கும் அபயத்தைத் தக்ஷிணையாகக்கொடுக்கிருனே அவன் உலகத்திற்கே உயிர்கொடுத்தவனுகிருனென்பதில் ஸந்தேகமில்லை. தெரிந்தவர்கள் இதைத்தான் முதன்மையானதர்மமென்று சிலாகிக் கின்றனர். உயிர் தனக்குஎப்படிப்பிரியமோ அப்படித்தான் எல்லாப்

பிராணிகளுக்கும் பிரியம். புத்தியும்பரிசுத்தமனமுமுள்ளவர்கள் தம்மைப்போல எல்லாவற்றையும் அறியவேண்டும்; எறியப்பட்டகழியினால் புல்லசையும்போதும் அதற்குப் பயமிருக்கிறது. கொல்லப்படுகையில் விரைவாகப் பிழைக்கக்கருதும் பிராணிகளுக்குச் சொல்லவேண்டுமா? ஒருதீங்கும்செய்யாதபிராணிகளுக்கு வியாதியில்லாமலே மாம்ஸம் தின்னும் பாவிகளால் மரணபயமிருக்கிறதென்றெண்ணும்போது துக்கம் அதிகமாகிறது. ஆதலால், மாம்ஸம்விடுவது தர்மத்திற்குக் காரணம். கொல்லாமைதான் சிறந்ததர்மம். கொல்லாமையே சிறந்ததவம். கொல்லாமையே சிறந்தஸத்தியம். அதிலிருந்துதான் தர்மம் உண்டாகிறது. புல்லிலிருந்தாவது கட்டையிலிருந்தாவது கல்லிலிருந்தாவது மாம்ஸமுண்டாவதில்லையே? ஜந்துவைக்கொல்ல அதினின்று மாம்ஸம்வருகிறது. ஆதலால், அதைப்பக்ஷிப்பது பாவந்தான். ஹவ்யத்தையும் கவ்யத்தையும்அமிருதத்தையும்புசித்து உண்மையையும் மனத்தூய்மையையும்விரும்பிஎல்லாப்பிராணிகளுக்கும் ஆதாரவாகஇருப்பதனாலேதான் தேவர்கள்,ராக்ஷஸராஜர்களின்பயத்தினின்று விடுபட்டனர். ராஜனே! மாம்ஸபக்ஷணம்செய்யாதவனுக்குப் பயங்கரமானகாடுகளிலும் ஏறமுடியாதமலைகளிலும் இரவிலும் பகலிலும் ஸந்திகளிலும் நாற்சந்திகளிலும் ஸபைகளிலும் ஆயுதங்கள்ஓங்கினபோதும் துஷ்டமிருகங்களாலும் ஸர்ப்பங்களாலும்வரும் கெடுதிகளிலும் பயமில்லை. உலகத்தில் எல்லாப்பிராணிகளையும் காப்பவனும் எல்லாப்பிராணிகளாலும்நம்பத்தக்கவனும் யாருக்கும்பயத்தைச்செய்யாதவனுமாயிருப்பவன்ஒருகாலும் பயப்படுவதில்லை. பக்ஷிக்கிறவன்இல்லாவிடின் கொல்லுகிறவன்இரான். கொல்லும்மனிதன் சாப்பிடுகிறவனுக்காகத்தான் அதைக் கொல்லுகிறான். அதுபக்ஷிக்கத்தகாததென்றுநினைத்தால் ஹிம்ஸை ஒழிந்துபோம். சாப்பிடுகிறவனடியாகத்தான் மிருகமுதலியவற்றைக் கொல்லுதல் நடந்துவருகிறது. சிறந்தபராக்கிரமமுள்ளவனே! ஹிம்ஸிக்கிறவர்களுக்குஆயுள் குறைந்துபோவதனால் தனதுநன்மையைக்கருதுகிறவன் மாம்ஸத்தை விடவேண்டும். பிராணிகளைக்கொல்பவரும் அவற்றிற்குப்பயங்கரருமான கொடியவர்கள் துஷ்டமிருகங்கள்போலவே ஆபத்தில் தங்களைக் காப்பவரில்லாமற்போவர். ஆசையினாலேயோ அறிவில்லாமையினாலேயோ பலபராக்கிரமம் உண்டாவதற்காகவோ பாபிகளின்சேர்க்கையினாலேயோ மனிதருக்கு அதர்மத்தில் ஆசையுண்டாகிறது. தன்மாம்ஸத்தைப் பிறமாம்ஸத்தினால் வளர்க்கக்கருதுகிறவன் ஒவ்வொருபிறப்பிலும் பயந்தூங்குந்தேசத்திலிருப்பான். நிய

மருள்ளரிஷிஸ்ரேஷ்டர்கள், 'மாம்ஸபக்ஷணம் செய்யாமலிருப்பது தனத்தையும் புகழையும் ஆயுளையும் ஸ்வர்க்கத்தையும் கொடுக்கும்; மிக்கக்ஷேமகரம்' என்றுசொல்லுகின்றனர். குந்திபுத்திரனே! முன்னர் மார்க்கண்டேயர் மாம்ஸபக்ஷணத்திலுள்ளதோஷங்களைச் சொல்லும்போது நான்கேட்டிருந்ததைச் சொல்லுகிறேன். உயிருக்காசைப்படும்பிராணிகளின் மாம்ஸங்களைத் தின்னும்பாவியானவன் பிராணிகளைக் கொல்லுகிறவன்போலவேஆவான். விலைக்குவாங்குகிறவன் தனத்தினால் கொல்லுகிறான்;சாப்பிடுகிறவன்உண்பதனால்கொல்லுகிறான்; கொல்லுகிறவன் கட்டியடித்துக் கொல்லுகிறான். கொல்லுவது இப்படி மூன்றுவகையாயிருக்கிறது. சாப்பிடாதமனிதனும் அதைஒப்புக்கொள்வதனால் உள்ளங்கெட்டுப்போகிறான். கொல்லுகிறவனைஒத்திருப்பவனையும் பாபம்பற்றுகிறது. பிராணிகளிடத்தில் தயைவைத்து மாம்ஸத்தைத்தின்னாமலிருப்பவன் எல்லாப்பிராணிகளுக்கும்வெல்லக்கூடாதவனாகவும் தீர்க்காயுளுள்ளவனாகவும் ஒருகாலும்நோயில்லாதவனாகவும் இருப்பான். ஸ்வர்ணதானங்கள் கோதானங்கள் பூதானங்கள்எல்லாவற்றிலும்மாம்ஸபக்ஷணம்செய்யாமைசிறந்ததர்மமென்று நமக்குக்கேள்வி. யாகத்தில் ப்ரோக்ஷணம் செய்யப்படாத மாம்ஸத்தைச் சாஸ்திரவிதியைவிட்டு வீணாகத் தின்னலாகாது. பக்ஷிக்கும் மனிதன் நரகம்போவானென்பதில் ஸந்தேகமில்லை. யாகத்தில் ப்ரோக்ஷிக்கப்பட்டமாம்ஸமும் பிராம்மணன்விருப்பத்திற்காகச்செய்தமாம்ஸமும் குறைவானபாவமுள்ளவையென்று அறியவேண்டும். இதற்கு மாறாகஇருந்தால் பாவம்விடாது. சாப்பிடுகிறவனுக்காக ஜந்துக்களைக் கொல்லுகிறமனிதன்இழிவானவன். அவ்விருவரில்பெரும்பாபஞ்செய்தவன் கொன்றவனேயன்றித் தின்றவனல்லன். அறிவில்லாதகீழ்மனிதன் மாம்ஸத்தில்ஆசைப்பட்டுச் சிராத்தங்களுக்கும் யாகங்களுக்குமாக வேதங்களிற்சொன்னவிதிகளினால் ஜந்துக்களைக்கொல்வானாயின் அம்மனிதன் நரகம்சேருகிறவன்தான். மாம்ஸத்தைத்தின்றுகொண்டிருந்து பிறகு விட்டுவிட்டவனுக்கும் மிகச்சிறந்தபுண்ணியமுண்டு. அவன்அந்தப்பாவத்தினின்றுவிலகினனன்றோ? ஜந்துவைக்கொண்டு வருகிறவன் அதைஒப்புக்கொள்ளுகிறவன் கொல்லுகிறவன் வாங்குகிறவன் விற்கிறவன் சமைப்பவன் புசிப்பவன்இவரனைவரும்கொன்றவர்களே. சாஸ்திரங்களினால் ஏற்படுத்தப்பட்டதும் வேதங்களில் நிச்சயிக்கப்பட்டதும் ரிஷிகளால்அநுஷ்டிக்கப்பட்டதுமாகிய மற்றொருபழமையான நியாயத்தைச் சொல்லப்போகிறேன். ராஜஸ்ரேஷ்டனே!யலனைவிரும்புகிறவர்கள் அநுஸரிப்பதாகிய ப்ரவிருத்தியென்று

பெயருள்ளஉலகவாழ்க்கைக்குரியதர்மத்தில் சொல்லப்பட்டது மோக்ஷத்திற்குக்காரணமாகாது. 'பாகம்செய்யப்பட்டு மந்திரங்களோடு ப்ரோக்ஷித்துநனைக்கப்பட்டுப் பரிசுத்தமாயுள்ளஹவிஸை வேதத்திற்சொன்னவிதியைக்கொண்டு பித்ருசிராத்தங்களில்பக்ஷிப்பது ப்ரவ்ருத்திதர்மமுள்ளவனுக்குஉரியது; மற்றவனுக்கில்லை' என்று மநுசொன்னார். பரதஸ்ரேஷ்டனே!ராஜனே!மனிதன் ராக்ஷஸன்போல (யாகமுதலியவைசெய்யாமல்) முதலில்மாம்ஸம்தின்பது ஸ்வர்க்கத்தையும் கீர்த்தியையும் கெடுப்பது; சாஸ்திரவிதிக்கு விலக்கானது. அதைப் பக்ஷிக்கலாகாது. தான் முழுதும் துக்கமில்லாமலிருக்கவிரும்புகிற மனிதன் பிராணிகளின்மாம்ஸங்களெல்லாவற்றையும் விட்டுவிடவேண்டும். முந்தியகல்பத்தில் மனிதர்கள் அன்னத்தையே பசுவாகவைத்துக்கொண்டிருந்ததாகக் கேட்கிறோமன்றோ? புண்ணியலோகத்தை முக்கியமாகப்பற்றினவித்வான்கள் அந்தப்பசுவினால் யாகம்செய்தனர். பிரபுவே! முன்னர், சேதிதேசாதிபதியான உபரிசரவஸு என்னுமரசன்,ரிஷிகளால் ஸந்தேகங்கேட்கப்பட்டபோது மாம்ஸம் பக்ஷிக்கக்கூடாததாயிருந்தும் அதைப் பக்ஷிக்கலாமென்றுசொன்னான்; அதனால், ஆகாசத்தினின்று பூமியையடைந்தான். அவன் திரும்பவும் அதையேசொன்னதனால் பாதாளத்திற்புகுந்தான். மஹாத்மாவான அகஸ்தியர் ஜனங்களின்இதத்தைக்கருதிக் காட்டிலுள்ளமிருகங்களை ரிஷிகளைக்கொண்டு எல்லாத்தேவதைகளையும்உத்தேசித்து ப்ரோக்ஷணம்செய்து கொல்லாமல் விட்டுவிட்டார். இப்படிச்செய்தால் பித்ருக்களுக்கும் தேவர்களுக்கும் உரியகிரியைகள் கெடா. தர்மத்தோடேயே மாம்ஸத்தினால்திருப்திசெய்விக்கப்பட்டுப் பித்ருக்களும் ஸந்தோஷமடைகின்றனர். அரசர்க்கரசே! மாம்ஸத்தைத்தின்னாமலிருப்பதிலுள்ள குணங்களைப்பற்றிப் பின்னும் சொல்லுகிறேன்; கேள். மனிதருக்கதிபதியே! மாம்ஸந்தின்னாமலிருப்பதில் எல்லாருக்கும் ஸுகமுண்டு. நூறுவருஷங்கள்மிகக்கொடியதவம்செய்வதும் மாம்ஸத்தைவிடுவதும் ஸரியென்பது என்கருத்து. ராஜனே! முக்கியமாக நிலாவுடன்கூடிய வளர்பிறையில் எல்லாமாம்ஸங்களையும் விடவேண்டும்; அதில் புண்ணியமிருப்பதாகச் சொல்லப்படுகிறது. மழைக்காலத்திய நாலுமாதங்களிலும் மாம்ஸத்தைவிடுகிறவன் அழகு, ஆயுள், புகழ், வலிமைஎன்னும் நான்குநன்மைகளை அடைவான். ஒருமாஸமாவது மாம்ஸங்களையே முழுதும்பக்ஷியாமலிருப்பவன் எல்லாத்துயரங்களையும்தாண்டி நோயில்லாமல் ஸுகமாகவாழ்வான். ஒவ்வொரு பக்ஷமாகவாவது ஒவ்வொருமாஸமாகவாவது மாம்ஸங்களைவிட்டு

ஹிம்ஸையையொழித்தவர்களுக்குப் பிரம்மலோகம்சொல்லப்படுகிறது. பிரபுவே ! பார்த்தனே! எல்லாப்பிராணிகளையும்தாமாகநினைத்திருந்தவர்களும் புருஷார்த்தங்களின் உயர்வுதாழ்வுகளையறிந்தவர்களுமாகிய நாபாகன், அம்பரீஷன், மஹாத்மாவானகயன், ஆயு, அநரண்யன், திலீபன், ரகு, அஜன், கார்த்தவீரியார்ஜுனன், அநிருத்தன், நஹுஷன், யயாதி, ந்ருகன், விஷ்வகசுவன், சசபிந்து, யுவநாசுவன், உசீநரன்புத்திரனானசிபி, முசுகுந்தன், மாந்தாதா, ஹரிச்சந்திரன்இவ்வரசர்கள் சுக்லபக்ஷத்தில் மாம்ஸத்தை விட்டிருந்தனர். ஸத்தியம் சொல்லுங்கள். பொய்சொல்லவேண்டாம். ஸத்தியந்தான் அழியாததர்மம். ஸத்தியத்தினால்தான் ஹரிச்சந்திரன், சந்திரன்போல மேலுலகத்தில் ஸஞ்சரிக்கிறான். அரசர்க்கரசே ! ஸ்யேனசித்ரன், ஸோமகன், வ்ருகன், ரைவதன், ரந்திதேவன், வஸு, ஸ்ருஞ்சயன், க்ருபன், பரதசக்ரவர்த்தி, துஷ்யந்தன், கரூசன், ராமர், அலர்க்கன், நளன், விசகாஸ்வன், நிமி, ஞானமுள்ளஜனகர், புரூரவன், ப்ருது, வீரஸேனன், இக்ஷ்வாகு, சம்பு, ஸ்வேதன், ஸகரன், அஜன், துந்து, ஸுபாஹு, ஹரியசுவன், க்ஷுபன், பரதன் இவர்களாலும் இன்னும் அநேகஅரசர்களாலும் முற்காலத்தில் சரத்காலம் சுக்லபக்ஷத்தில் மாம்ஸம் பக்ஷிக்கப்படாமலிருந்தது. அதனால், அவர்கள் ஸ்வர்க்கம் அடைந்தனர். அவர்கள் சிறப்புள்ளவர்களாகப்பிரகாசித்துக்கொண்டு கந்தர்வர்களால்ஸேவிக்கப்பட்டு ஆயிரம்ஸ்திரீகளுடன்கூடப் பிரம்மலோகத்திலிருக்கின்றனர். கொல்லாமைதான் தர்மத்திற்குஇலக்கணம். ஆதலால், இந்தஉத்தமமானதர்மத்தை அநுஷ்டித்த அந்த மஹாத்மாக்கள் ஸ்வர்க்கத்தின்மேல்வஸிக்கின்றனர். பிறந்ததுமுதல் நித்தியமாகக் கள்ளையும் மாம்ஸத்தையும் சாராயத்தையும்விட்டிருக்கிற தர்மிஷ்டர்களனைவரும் ரிஷிகளாக நினைக்கப்படுகின்றனர். மாம்ஸந்தின்னாமையென்னும் இந்தத்தர்மத்தைச் செய்கிறவனும் பிறருக்குச்சொல்லுகிறவனும் மிக்கதுராசாரமுள்ளவராயிருந்தாலும் அவர் ஒருகாலும் நரகம்போகார். பரிசுத்தமும் ரிஷிகளால்கொண்டாடப்பட்டதுமாகிய மாம்ஸபக்ஷணம்செய்யாதவிதியை அடிக்கடிபடிப்பவனும் கேட்பவனும் எல்லாப்பாவங்களாலும்விடுபட்டு எல்லாவிருப்பங்களும்நிறைவேறிக் குலத்தோரிற் சிறந்தவராகிறார். ஸந்தேகமில்லை. ஹிம்ஸைசெய்யாமலும் தானம்செய்துகொண்டும் மதுமாம்ஸங்களை விட்டுமிருப்பவன், ஆபத்துவந்தால் ஆபத்திலிருந்து விடுபடுவான் ; கட்டுப்பட்டிருந்தால் கட்டிலிருந்து விடுபடுவான் ; ரோகியாயிருந்தால் ரோகத்தினின்று விடுபடுவான்; துக்கமுள்ளவனாயிருந்தால்

துக்கத்தினின்றும் விடுபடுவான்; விலங்குஜாதியிற்பிறவான், அவன் அழகுள்ளவனுவான். குருஸ்ரேஷ்டனே! செல்வத்தையும் பெரும் புகழையும் அடைவான், ராஜனே! மாம்ஸம்விடுவதைப்பற்றி உனக் குச் சொன்னேன். பிரவ்ருத்திதர்மத்திற்கும் நிவ்ருத்திதர்மத்திற் கும் இந்தவிதி ரிஷிகளால் விதிக்கப்பட்டிருக்கிறது" என்றார்.



## நூற்றெழுபத்தேட்டாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(மாம்ஸம்தின்பதும் கொல்வதும் தகாவேன்று வற்புறுத்தியது.)

யுதிஷ்டிரர்; "பிதாமஹரே! உலகத்திலுள்ளஇந்தமனிதர்கள் பலவகைஉணவுகளையும் பலவகைப்பணியாரங்களையும் பலவகைக்கறி காய்களையும்விட்டு மஹாராக்ஷஸர்கள்போல மாம்ஸங்களில் மிக்க ஆசையுள்ளவர்களாயிருக்கின்றனர்; மாம்ஸத்தைவிரும்புவதுபோலச் சுவையுள்ளகனிகளையும் விரும்புவதில்லை. அதனால், இந்தவிஷயத் தில் என்புத்தி மயங்குகிறது.சுவையில் மாம்ஸத்திற்குமேற்பட்டது ஒன்றுமில்லை என்றுநான்நினைக்கிறேன். பிரபுவே! புருஷஸ்ரேஷ் டரே! ஆதலால், மாம்ஸம்தின்னுமையிலுள்ளகுணங்களையும் மாம் ஸம்தின்பதிலுள்ளதோஷங்களையும் கேட்கவிரும்புகிறேன். தர்மந் தெரிந்தவரே! எல்லாஜந்துக்களும் தர்மமாகப்பக்ஷிக்கக்கூடியது எது? பக்ஷிக்கக்கூடாதது எது? இவற்றையெல்லாம் எனக்குத் தெளிவா கச்சொல்லும். மாம்ஸம் எப்படிப்பட்டது? அதைவிடுவதில்என்ன குணங்கள்? அதைத்தின்பதில் என்னதோஷங்கள்? இவற்றை எனக் குச் சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்:

"சிறந்தகைகளையுடையவனே! பாரதனே! நீசொல்வதெல்லாம் சரி. பூமியில் சுவைக்கு மாம்ஸத்திலும்மேலானது ஒன்றுமில்லை. புண்பட்டவர்களுக்கும் இளைத்தவர்களுக்கும் ஜ்வரத்தினுல்கொதிப் புற்றவர்களுக்கும் சிற்றின்பத்தில்மனம்வைத்தவர்களுக்கும் வழி நடையினுல் கஷ்டப்பட்டவர்களுக்கும் மாம்ஸத்திற்குமேற்பட்டது ஒன்றுமில்லை. அது உடனே உயிரைச் செழிப்பிக்கிறது. சிறந்த தேகபுஷ்டியையும் செய்கிறது. மாம்ஸபக்ஷணத்தில் கெடுப்பதே தோஷமாகும். தானமே எப்போதும்சரி. மனிதன் பொருளாசையை விட்டுப் பசித்தபிராம்மணர்களுக்கும் மற்றெல்லாருக்கும் சிரத்தை யோடு ஜீவனத்தைக்கொடுப்பதனுல் பரிசுத்தனுகிறான், ஏழைகள்யாசி

ப்பதில்லை. 'கொடாமையினுடையகேடு இது. நீ இப்படியாகாதே' என்று தங்கள்தேகங்களினுல்காண்பித்துக் கற்பிக்கின்றனர். தானத்தினல் எவன் சுத்தனுயிருப்பானே அவன் மறுபடி மாம்ஸத்தைப் பக்ஷிக்கலாகாது. வீரனே! மாம்ஸத்தினும் சிறந்தஉணவு ஒன்றுமில்லை. கௌரவரைச்சிறப்பிக்கிறவனே! அதைவிடுவதில் மனிதர்களுக்கு அநேகங் குணங்களுண்டு. நான் அவற்றைச் சொல்லுகிறேன்; கேள். தன்மாம்ஸத்தைப் பிறமாம்ஸத்தினுல்வளர்க்கவிரும்புகிறவனினும் இழிவானவனும் கொடியவனுமில்லை. உயிரைவிடஅதிகப்பிரியமானது உலகத்தில் ஒன்றுமில்லையன்றோ? ஆதலால், மனிதன் தன்னிடத்திற்போலவேபிறனிடத்திலும்தயைவைக்கவேண்டும். அப்பா! ரேதஸிலிருந்து மாம்ஸம்உண்டாவதென்பதில் ஸந்தேகமில்லை. அது மலத்துடன்சேர்ந்தது. அதைப்பக்ஷிப்பதில் தோஷம்அதிகந்தானே. கொல்லாமையே தர்மத்திற்கு இலக்கணமென்று வேதந்தெரிந்தவர்கள் நினைக்கின்றனர். ஆத்மஜ்ஞானமுள்ளமனிதன் ஹிம்ஸையில்லாத கர்மத்தையே செய்யவேண்டும். சிராத்தங்களிலும் யாகங்களிலும் புரோக்ஷிக்கப்பட்டமாம்ஸம் ஹவிஸென்றுசொல்லப்படுகிறது. வேதத்திற்சொன்னவிதிபற்றி அதைப்புசிப்பதனுல் குற்றமில்லை. பசுக்கள் யாகத்திற்காகப் படைக்கப்பட்டனவென்னும் வேதவாக்கியத்தைக் கேட்கிறோம். இதற்குமாருகநடப்பவர்களுக்கு ராக்ஷஸருக்குரியவிதி தான் சொல்லப்படுகிறது. க்ஷத்திரியருக்குரிய சாஸ்திரவிதியையும் சொல்லுகிறேன்; கேள். தன்பராக்கிரமத்தினுல் ஸம்பாதித்த மாம்ஸத்தைப்புஜிப்பவனுக்குக் குற்றமில்லை. ராஜனே! முன்னர் காட்டிலுள்ள மிருகங்களெல்லாவற்றையும் எல்லாத்தேவதைகளுக்கும் நைவேத்யமாக அகஸ்தியர் மந்திரித்து ப்ரோக்ஷித்துவிட்டார். அதனுல், வேட்டை சிலாகிக்கப்படுகிறது. மேலும், மற்றப்பிராணிகளைக் காப்பதற்காக ஹிம்ஸிக்கிறமிருகங்களைக் கொல்லலாம். தன்தேகத்தைவிடாமல் [1]வேட்டையென்பதுஇல்லை. அரசனே! மிருகத்திற்குச் சமமாகநின்றும் மிருகத்தைக்கொல்லுவனே கொல்லமாட்டானே. பாரதனே! அதனுலேதான், ராஜரிஷிகளெல்லாரும் வேட்டைக்குப் போகின்றனர். அவர்களுக்குப் பாவம்பற்ருது. பூமியில் இது பாவமும்ஆகாது. கௌரவரைச்சிறப்பிக்கிறவனே! எல்லாப்பிராணிகளிடத்திலும் தயைவைப்பதற்குச்சமமானதர்மம் இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும்ஒன்றுமில்லை. தயையுள்ளமனிதனுக்கு இவ்வுலகத்தில் ஒருகாலும் பயமில்லை. இவ்வுலகங்களும் மற்றவுலகங்களும் தயையுள்

1 வேட்டையும் யுத்தம்போன்றது என்பதால் ஹிம்ஸையாகாது என்பது.

ளவர்களானரிஷிகளுடையவையே. எவன் தயையைமுதன்மையாகக் கருதி எல்லாப்பிராணிகளுக்கும் அபயமளிக்கிறானோ அவனுக்கு அந்தப் பிராணிகள் அபயங்கொடுக்கின்றனவென்று கேட்டிருக்கிறோம். மேடுபள்ளங்களிலும் ஸமபூமியிலும் அவன் புண்பட்டாலும் தடைப்பட்டாலும் விழுந்தாலும் தண்ணீரில்நனைந்தாலும் அடிபட்டாலும் எல்லாப்பிராணிகளும் காப்பாற்றும். துஷ்டமிருகங்களும் பிசாசங்களும் ராக்ஷஸர்களும்அவனைக்கொல்வதில்லை.பிறரைப்பயத்தினின்று விடுவிப்பவன் பயம்வரும்போது விடுபடுவான். உயிர்கொடுப்பதற்கு மேலானதானம் இருந்ததுமில்லை; இருக்கப்போவதுமில்லை. இவ்வுலகத்தில் தன்னைவிடஅதிகப்பிரியமானது ஒன்றுமில்லைஎன்பது நிச்சயம். பாரதனே! மரணமென்பது எல்லாப்பிராணிகளுக்கும் கஷ்டமானது. பிராணிகளுக்குமரணம் வரும்போது உடனே நடுக்கமுண்டாகிறதன்றோ? பிராணிகள், பிணி பிறப்பு மூப்புத்துன்பங்களுடன் ஸம்ஸாரக்கடலில் நித்தியமாகஉழலுகின்றன. ஆகிலும், மரணத்திற்குப் பயப்படுகின்றன. கர்ப்பத்திலிருக்கும்போது மூத்திரம் வியர்வை மலம்இவற்றின் தாங்கக்கூடாதமிகக்கொடியவையான உப்பு, புளிப்பு, கைப்பு என்னும் ரஸங்களினால் வேகின்றன. பிறந்த பிறகும் நினைத்ததுதவறியும் விருப்பங்கள்கெடுக்கப்பட்டும் பலமுறை அடிக்கப்பட்டும் தேகத்தில்ஆசைவைத்து ஸ்வாதீனம்தப்பினவைகளாகக் காணப்படுகின்றன. கும்பீபாகமென்னும்நரகத்திலும் வேகவைக்கப்படுகின்றன. சில, பலஜன்மங்களையெடுத்தும் பலவந்தமாகக் கொல்லப்பட்டும் அடிக்கடி பயமுறுத்தப்பட்டுமிருக்கின்றன. பூமியெல்லாம்திரிந்தாலும் தன்னைவிட அதிகப்பிரியமானதுஒன்றுமில்லை. ஆதலால், எல்லாப்பிராணிகளிடத்திலும் தயையுள்ளவன்தான் நல்ல மனமுள்ளவனாவான். ராஜனே!வாழ்நாள்முழுவதும் மாம்ஸங்கள் எல்லாவற்றையும் பக்ஷியாமல்விட்டவன் எல்லாருடைய விசுவாசத்தையும் சிறந்தமேன்மையையும் அடைவானென்பதில் ஸந்தேகமில்லை. உயிருக்குஆரைப்படும்பிராணிகளின் மாம்ஸங்களைத்தின்பவர் அந்தப் பிராணிகளாலேயே தின்னப்படுவாரென்பதில் எனக்குச் சந்தேகமில்லை. பாரதனே! 'மாம் = என்னை' என்றும், 'ஸ: = அவன்' என்றும்பொருளுள்ள இரண்டுபதங்கள்சேர்ந்து, 'மாம்ஸ:' என்றாயிருப்பது, 'என்னை அவன் பக்ஷிப்பதனால்அவனை நான்பக்ஷிப்பேன்' என்று பிராணிகளின் கருத்தைக் குறிப்பிடுவதாகத் தெரிந்துகொள். ராஜனே! கொல்லுகிறவன் கொல்லப்படுவதுநிச்சயம், கட்டுகிறவன் அப்படியே கட்டப்படுவான். திட்டுகிறவன் [1] திட்டப்படுவான், பகைப்

[1] 'க்ருச்யதே' என்று பாடம் கொள்ளப்பட்டது.

பவன் பக்ஷிக்கப்படுவான். [1]எவன் எந்தஎந்தத்தேகத்துக்கு, எந்த எந்தக்காரியத்தைச்செய்கிறானோ அவன் அந்தஅந்தத் தேகத்தோடேயே அவ்வவற்றின்பலனை அனுபவிப்பான். கொல்லாமையேசிறந்த தர்மம். கொல்லாமையே சிறந்தஇந்திரியஜயம். கொல்லாமையே சிறந்த தானம். கொல்லாமையே சிறந்தயாகம். கொல்லாமையே சிறந்த பயன். கொல்லாமையே சிறந்தசினேகிதன். கொல்லாமையே சிறந்த ஸுகம். யாகங்களெல்லாவற்றிலும்தக்ஷிணைகொடுப்பதும் தீர்த்தங்களெல்லாவற்றிலும்ஸ்நானம்செய்வதும் எல்லாத்தானங்களும் கொல்லாமைக்கீடாகாதவை. ஹிம்ஸியாதவனுக்கு அழியாததவமுண்டாகிறது. ஹிம்ஸியாதவன் எப்போதும் ஜயிக்கிறான். ஹிம்ஸியாதவன் எல்லாப்பிராணிகளுக்கும் தாயும்தந்தையும்போலாகிறான். கௌரவஶ்ரேஷ்டனே! அஹிம்ஸைக்கு இந்தப்பலனும் இதற்குமேற்பட்ட பலனுமிருக்கின்றன. அநேகநூற்றாண்டுகளாலும் அதன்குணங்களைச் சொல்வது முடியாது" என்றார்.

## நூற்றெழுபத்தோன்பதாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(எந்தப்பிராணியும் உயிரைவிடத் துணியாதென்பதைப்பற்றி வ்யாஸருக்கும் ஒருபுழுவுக்கும்நடந்த ஸம்பாஷணை.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! பெரும்போரில் இறக்கமனமில்லாதவரும் மனமுள்ளவரும் கொல்லப்பட்டனரே; அவர்கள் என்ன கதியை அடைந்தனர்? அதை எனக்குச்சொல்லும். பெரியயுத்தத்தில்உயிரைவிடுவதும் மனிதர்களுக்குத் துயரந்தான். தர்மந்தெரிந்தவரே! உயிரைவிடுவது மிக்கஅஸாத்தியமென்று எனக்குத்தெரியும். செல்வமிருந்தாலும் இல்லாமலிருந்தாலும் ஸுகமிருந்தாலும் இல்லாமலிருந்தாலும் இந்தஸம்ஸாரத்திற்பிறந்து பிராணிகள் ஆசையோடிருப்பது எப்படி? அதன்காரணத்தை எனக்குச்சொல்லும். நீர் எல்லாந்தெரிந்தவரென்று நான் நினைக்கிறேன்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்:

"வேந்தனே! செல்வமிருந்தாலும் இல்லாவிட்டாலும் ஸுகமிருந்தாலும் இல்லாவிட்டாலும் இந்தஸம்ஸாரத்தில் ஜனித்தபிராணி

---

1 மிருகத்தைக்கொன்றவன் மிருகமாகப்பிறந்து கொல்லப்படுவான் என்பது.

களெல்லாம் எந்த எண்ணத்தினல் ஆசைவைத்திருக்கின்றனவென்ப தற்குக்காரணத்தை என்னிடம்கேள். யுதிஷ்டிர ! நீகேட்டஇந்தக் கேள்வி நன்ருயிருக்கிறது. ராஜனே ! யுதிஷ்டிரனே ! வ்யாஸருக் கும் ஒருபுழுவுக்கும்நடந்த ஸம்பாஷணமாகிய இந்தப்பூர்வசரித்தி ரத்தை உனக்கு உதாகரிப்பேன். பிரம்மநிஷ்டரான கிருஷ்ணத்வை பாயனரிஷி முன்னர் ஸஞ்சரிக்கும்போது வண்டிப்பாதையில் விரை வாகஓடும் ஒருபுழுவைக் கண்டார். எல்லாப்பிராணிகளின்நடையை யும் சப்தத்தையும்அறிந்த அந்தஸர்வஜ்ஞர் விரைவாகப்போகும்புழு வைக்கண்டு, 'புழுவே ! நீ பயந்தவன்போலிருக்கிருய் ; வேகமுள்ள வனுகவும் காணப்படுகிருய். உன்னிருப்பிடம் எங்கே ? உனக்குயாரி டத்தில் பயமுண்டாயிருக்கிறது ? சொல்' என்றுகேட்டார். அதற்கு அந்தப்புழு, 'சிறந்தபுத்தியுள்ளவரே ! பெரியவண்டிக்கூட்டத்தின் ஓசையைக்கேட்டு எனக்குப் பயமுண்டாயிற்று. இந்தஓசை கொடி தன்ருே? சப்தம் கேட்கிறது. அது என்னைக் கொன்றுவிடுமென்று அதற்கு விலகிப்போகிறேன்.பிரபுவே ! மிகவும்அதிகமானசுமையை இழுத்துக்கொண்டு சாட்டையினுல்ஓட்டப்பட்டுப் பெருமூச்சுவிடும் விருஷபங்களின்சப்தத்தையும் ஸமீபத்தில் கேட்கிறேன். அவைகளை ஓட்டும்மனிதர்களுடைய பலவகைக்குரல்களும் கேட்கப்படுகின் றன. புழுப்பிறப்பாகிய எம்மைப்போன்றவன் அதைத் தாங்கமுடி யாது. ஆதலால், இந்தமிகக்கொடியபயத்தினின்று விலகிப்போகி றேன். பிராணிகளுக்கு மரணம் கஷ்டமன்ருே. உயிர்வாழ்க்கை மிகஅரிது. ஆதலால், பயந்து இந்தஆபத்தில் அகப்படாமலிருக்கும் படி ஓடுகிறேன்' என்றுசொல்லிற்று. அதுஇவ்வாறுசொல்ல, அந்த ரிஷி அந்தப்புழுவைப்பார்த்து, 'புழுவே ! உனக்கு ஸுகமேது ? விலங்குஜாதியிலிருக்கும் உனக்கு மரணமே ஸுகமென்று நினைக்கி றேன். புழுவே ! சப்தம் ஸ்பரிசம் ரஸம் கந்தம்இவற்றையும் அள வற்ற அனேகஸுகங்களையும் நீ அறியாய். உனக்கு மரணமே நலம்' என்றுசொன்னர். புழு, 'ஜீவனனது எல்லாத்தேகங்களிலும் பற் றுள்ளதாயிருக்கிறது. மிக்கஅறிவுள்ளவரே ! இந்தத் தேகத்திலும் எனக்குஸுகமிருப்பதை நான் உணருகிறேன் ; ஆதலால், பிழைத் திருக்கவிரும்புகிறேன். இந்தஜன்மத்திலும் தேகத்திற்குத்தக்கபடி ஸுகத்திற்குவேண்டியவிஷயமெல்லாம்உண்டாக்கப்பட்டிருக்கிறது. மனிதர்களுக்கும் விலங்குஜாதிகளுக்கும் ஸுகத்திற்குரியவிஷயங் கள் வேறுவேருகப் பிரிந்திருக்கின்றன. பிரபுவே! நான் மானிட ஜாதியில் மிகுந்ததனமுள்ள சூத்திரனுகப்பிறந்து பிராம்மணரைப்

பகைத்தும் கொடியவனாகவும் லோபியாகவும் [1]வட்டியினால்ஜீவிப்பவனாகவும் இருந்தேன்; குளிர்ந்தசொல்லுடனும் புத்தித்தேர்ச்சியில்லாமலும் எல்லாக்காரியங்களையும்வெறுத்தும் தனத்தை ஏகாந்தமாக வைத்துக்காப்பாற்றியும் எப்போதும் அயலார்சொத்தை எடுத்துக்கொள்வதிலேயே ஊக்கம்வைத்தும் இருந்தேன். கொடியவனானநான் புசிக்கையில் சுவையுள்ளவற்றை எனக்கேவேண்டிப் பொறாமையினால் வேலைக்காரர்களையும் விருந்தினர்களையும்விட்டுப் புசித்தேன். தேவதைகளுக்காகவும் பித்ருக்களுக்காகவும் சிரத்தையோடொருகாரியமும் நான் செய்ததில்லை; அன்னங்கேட்டவருக்கு அன்னங்கொடுத்ததில்லை; கொடுத்தஅன்னத்தையும் பிடுங்கிக்கொண்டேன்; இராக்காலத்தில் பயந்து ரகஸ்யமாக என்வீட்டிற்குவந்து சரணாகதிசெய்தவர்களையும் நிஷ்காரணமாகஅபயங்கொடாமல் தள்ளிவிட்டேன். மனிதர்களுடையதனதானியங்கள் அன்புள்ளமனைவி வாகனம் அழகான வஸ்திரம் செல்வம்இவற்றைக்கண்டு வீணில் பொறாமைப்பட்டேன்; அயலானுடைய ஸுகத்தைக்கண்டால் ஸகிக்கமாட்டேன்; பிறர் நன்மைபெறக் கருதேன்; மற்றவர்களுக்குத் தர்மார்த்தகாமங்கள் மூன்றையும்கெடுத்து என்ஸுகத்தையே அனுஸரித்தேன்; தயையில்லாதவனுக்குள்ளகுணங்களையே வெளியிடும்காரியங்களை முன் ஜன்மத்தில் நான் செய்தேன்; அதைநினைத்து அன்புள்ளபுத்திரனை இழந்தவன்போல வருத்தப்படுகிறேன். நான்செய்தநல்வினைகளுக்குப்பயனை நான் காணவில்லை; கிழவியானதாயைப் பூஜித்தேன்; ஒரு பிராம்மணனையும்பூஜித்தேன். பிராம்மணரே! ஒருதரம், நல்லகுலமும் குணங்களுமுள்ள ஓர் அதிதி தற்செயலாய் வீட்டிற்குவந்து என்னால் பூஜிக்கப்பட்டான். அதனால், பூர்வஜன்மஞாபகம் என்னைவிடாமலிருக்கிறது. அந்தநற்கருமங்களால்தான் நான் ஸுகத்தில்விருப்பம்வைத்திருக்கிறேன். தபோதனரே! அந்த நல்லகர்மத்தின்பலனை உம்மிடத்தில் கேட்கவிரும்புகிறேன்' என்று சொல்லிற்று.

---

## நூற்றெண்பதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(வ்யாஸருக்கும் ஒருபுழுவுக்கும் நடந்த ஸம்பாஷணைத்தொடர்ச்சி.)

வ்யாஸர், 'புழுவே! நீ திர்யக்ஜாதியிலிருந்தும் நல்லகர்மத்தினால் பூர்வஜன்மஞானம்தவறாமலிருக்கிறாய். நீ தவறாமலிருப்பது என்

---

1 'வ்ருத்தி' என்று பாடம் கொள்ளப்பட்டது.

காரியம்தான். நான் என்தவவன்மையினால் பார்ப்பதனாலேயே உன்னைக் காப்பாற்றுகிறேன். தவவன்மைக்குமேலானவன்மை வேறு ஒன்றுமில்லை. புழுவே! நீசெய்தபாவங்களினால் நீபுழுவாகவிருப்பது எனக்குத் தெரியும். உனக்குஇஷ்டமிருந்தால் மனுஷ்யஜன்மத்தில் சிறந்ததர்மபலனை அடையலாம். கர்மபூமியில்செய்தகர்மத்தின்பலனைத்தான் தேவர்களாகவும் விலங்குகளாகவுமிருந்து அனுபவிப்பது. மனிதர்களிலும் வேண்டின பலன்களையும் குணங்களையும்பெற்று வாக்கு, புத்தி, கை, கால் செவ்வையாயிருப்பவரும் வித்வான்களுமான பாக்கியசாலிகள் இருக்கின்றனர். பொருளுக்காக ஜீவித்திருக்கும் புத்திகெட்ட மனிதனுக்கு என்னவரும்? புழுவே! தேவதை, பிராம்மணன், அக்னி, சந்திரன், சூரியன், இவர்களைப்பூஜிக்கிறவனும்புண்ணியகதைகளைச்சொல்லுகிறவனுமானமனிதனாக நீ வரலாம். அந்த ஜன்மத்தில் மற்றப்பிராணிகளை உனக்குஅடிமையாக நீ அனுபவிக்கலாம். உனக்குவிருப்பமிருந்தால் வரிசையாசப் பிராம்மணத்தன்மையையும் கொடுப்பேன்' என்றுசொன்னார். அந்தப்புழுவானது 'அப்படியேயாகட்டும்' என்றுசொல்லி நின்றது; முள்ளம்பன்றி உடும்பு காட்டுப்பன்றி மான் பறவை சண்டாளன் சூத்திரன் வைசியன் க்ஷத்திரியன்என்னும் பிறப்புக்களிற்பிறந்து அந்தஎல்லாப்பிறப்புக்களிலும் அந்தரிஷியைக் காணப்போயிற்று; ஸத்தியவாக்கையுடைய அந்தரிஷி இவ்வாறுசொன்னதை நினைத்துச் சிரமேல்கைகுவித்து அவர்பாதங்களைப் பிடித்துக்கொண்டது; அப்போது அந்தரிஷியைப் பார்த்து, 'நான் புழுவாகவிருந்து ராஜபுத்திரனானேனே, இது நான் விரும்பின ஒப்பற்றநிலைமை. இது பத்துத்தடவைகளால் எனக்குக் கிடைத்தது. மிக்கபலமுள்ளவையும் பொன்மாலைபூண்டவையுமான யானைகள் என்னைத் தூக்குகின்றன. தேர்களில் காம்போஜதேசத்துப் போர்க்குதிரைகள் பூட்டப்பட்டிருக்கின்றன. ஒட்டகங்களும் கோவேறுகழுதைகளும் கட்டினவாகனங்களும் எனக்குப் போகின்றன. பந்துக்களுடனும் மந்திரிகளுடனுங்கூட மாம்ஸபோஜனத்தைப் புஜிக்கிறேன். மஹானுபாவரே! ஸ்வர்க்கத்திற்கொப்பான வீடுகளில் விலைபெற்றஸுகமானபடுக்கைகளில் மிகக்கொண்டாடப்பட்டுத் தூங்குகிறேன். பின்ராத்திரிகளிலெல்லாம் ஸூதர்களும் மாகதர்களும் வந்திகளும் இன்சொற்களினால் தேவேந்திரனைத்தேவர்கள் துதிப்பது போல என்னைத் துதிக்கின்றனர். இழிவானபுழுஜன்மமெடுத்திருந்தஎனக்குப் பூர்வஜன்மஞாபகமிருந்தது, ஸத்தியவாக்கும் அளவற்ற மஹிமையுமுள்ளஉமது அனுக்கிரகத்தினாலேதான். ஐயா! நான்

முன்செய்தபாவத்திற்கு அழிவிருக்கிறதே. மஹாப்ராஜ்ஞரே! உமக்கு நமஸ்காரம். நான் என்னசெய்யக்கடவேன்? எனக்குக் கட்டளையிடும். உமது தவவன்மையினால்கொடுக்கப்பட்டன்றோ இது எனக்குக்கிடைத்தது?' என்றுசொல்லிற்று. வ்யாஸர், 'ராஜனே! இப்போது நீ உன்வாக்குக்களினால் இஷ்டப்படி என்னைப் பூஜித்தாய். அருவருக்கத்தக்க புழுஜன்மத்தையடைந்தனாபகம் இப்போது உனக்கிருக்கிறதே. பணத்தையேமுக்கியமாகக்கொண்டவனும் கொடியவனும் பிறர்சொத்தையபகரிப்பவனுமாகிய சூத்திரனாயிருந்தஉனக்கு அப்போது இந்த என்தரிசனம் கிடைத்தது. அதுதான் நீமுன்செய்த புண்ணியம். திர்யக்ஜாதியிற் பிறந்திருந்தபோதும் என்னை நீ பூஜித்ததனாலும் புண்ணியமுண்டாயிருக்கிறது. நீ கோவுக்காகவும் ப்ராம்மணர்களுக்காகவும் போர்க்களத்தில் உன்னுயிரைவிட்டு இந்தராஜபுத்ரஜன்மத்திலிருந்து ப்ராம்மணஜன்மமடைவாய்' என்றுசொன்னார். பிறகு, அந்தராஜபுத்திரன் ஸுகமடைந்து தக்ஷிணைகள்நிரம்பக் கொடுத்து யாகம்செய்தான்; பிறகு, ஸ்வர்க்கத்தில் அழிவில்லாத பேரின்பம்பெற்று விளங்கினான். திர்யக்ஜாதியிலிருந்து சூத்திரனாகிறான். சூத்திரன் வைசியனாகிறான். வைசியன் க்ஷத்திரியனாகிறான். சிறந்த ஒழுக்கமுள்ள க்ஷத்திரியன் ப்ராம்மணனாகிறான். நல்லொழுக்கமுள்ள ப்ராம்மணன் புண்ணியத்தினால் ஸ்வர்க்கத்தையடைகிறான்.

---

## நூற்றெண்பத்தோராவது அத்தியாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(வ்யாஸருக்கும் ஒருபுழுவுக்கும்நடந்த ஸம்பாஷணைத் தொடர்ச்சி.)

அரசனே! புழுஜன்மத்தைவிட்டு க்ஷத்திரியத்தன்மையை அடைந்தஅந்தவீரன் பூர்வஜன்மத்தை நினைத்துக்கொண்டே பெருந்தவம்செய்தான். தர்மத்தையும்அர்த்தத்தையும் அறிந்தவனாகிய அவ்வரசனுடைய அர்தப் பெருந்தவத்தைக்கண்டு உடனே ப்ராம்மணஸ்ரேஷ்டரானகிருஷ்ணத்வைபாயனர் அவனிடம்வந்து, 'புழுவே! க்ஷத்திரிய தர்மம் தேவர்களுடைய தர்மமென்று நினைத்து க்ஷத்திரியனுடைய தர்மத்தினாலேயே பிரஜைகளைக் காப்பாற்றக்கடவாய். அதனால், ப்ராம்மணத்தன்மையை அடைவாய். பரிசுத்த மனமுள்ளவனாய்க் குணகுற்றங்களையறிந்து குணமுள்ளவர்களுக்கு வேண்டினவற்றைக் கொடுத்துக் குற்றங்களை நிவ்ருத்திசெய்து எல்லாப்பிரஜைகளையும் நன்கு காப்பாற்று. அடக்கமுள்ளவனும் உன்தர்மத்தையனுஷ்டிப்

பதில் ஊக்கமும் மனத்திருப்தியுமுள்ளவனுமாயிரு. அதனால், க்ஷத்திரியதேகத்தைவிட்டபின் ப்ராம்மணஜன்மத்தையடைவாய்' என்று சொன்னார். யுதிஷ்டிர ! அந்தஅரசனும் அம்மஹரிஷியின்சொல்லைக் கேட்டுக் காட்டிலிருந்துவந்து திரும்பவும் தர்மமாகப் பிரஜாபரிபாலனம் செய்தான். அரசரிற்சிறந்தவனே! அந்தப்புழுவாயிருந்தஅரசன் பிரஜைகளைக்காப்பாற்றினபுண்ணியத்தினால் விரைவில்இறந்து ப்ராம்மணஜன்மத்தையடைந்தான். பிறகு, சிறந்தபுகழும் சிறந்தஞானமுமுள்ள வ்யாஸர் அப்போது அந்தப்ராம்மணனைப்பார்ப்பதற்கு மறுபடியும்வந்து, 'ஓ ! ஓ ! ப்ராம்மணஶ்ரேஷ்ட ! மகிமையுள்ளவனே ! நீ எவ்வகையிலும்துயரப்படவேண்டாம். தர்மந்தெரிந்தவனே ! அவனவன் தர்மத்திற்கும் ஆசாரத்திற்குந்தக்கபடி, புண்ணியஞ்செய்தவன் நல்லஜன்மங்களிலும் பாபம்செய்தவன் கெட்ட ஜன்மங்களிலும் பிறக்கிறார். புழுவே ! ஆதலால், மரணத்திற்குப்பயந்து எவ்வகையிலும் துயரப்படாதே. தர்மமென்னும்லாபத்திற்குமேற்பட்டது ஒன்றுமில்லை. தர்மந்தான் உத்தமம். அதனைச்செய்' என்றுசொன்னார். அந்தப்புழு, 'பகவானே ! உம்முடைய உதவியினால் ஸுகத்திலிருந்து மேலானஸுகத்தையடைந்தேன். எனக்குத்தர்மத்தினால் இப்போது புண்ணியங்கிடைத்துப் பாவம்ஒழிந்தது'என்றுசொல்லிற்று.ராஜனே! வ்யாஸபகவான் சொல்லினால் புழுவானது பெறுதற்கரிய ப்ராம்மண தேகத்தையடைந்தது; (க்ஷத்திரியனாயிருந்தபோது) பூமியில் நூற்றுக் கணக்கான யாகங்களின் யூபஸ்தம்பத்தினால் அடையாளம் செய்தது; பிறகு, பிரம்மஜ்ஞானிகளிற்சிறந்ததாகிப் பிரம்மலோகத்தை யடைந்தது.குந்திபுத்ரனே! வ்யாஸர் சொல்லினால்புழுவானது பாவத்தைப்போக்கிப்புண்ணியபலன்களையும் நித்தியமான பரப்பிரம்மத்தையும்அடைந்தது.புத்திரனே! புண்ணியக்ஷேத்திரமான குருக்ஷேத்திரத்தில்யுத்தத்தில்கொல்லப்பட்ட அந்தக்ஷத்திரியஶ்ரேஷ்டர்கள் புண்ணியகதியையே அடைந்திருக்கின்றனர். ஆதலால், நீ துயரப்படாதே'' என்றார்.

---

## நூற்றெண்பத்திரண்டாவது அத்யாயம்.

### தா ன த ர் ம ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(ஞானம் தவம் தானம்இவற்றின் சிறப்பைப்பற்றி மைத்ரேயருக்கும் வ்யாஸருக்கும்நடந்த ஸம்பாஷணை.)

யுதிஷ்டிரர், "ஸாதுக்களிற் சிறந்தபிதாமஹரே ! ஞானம் தவம் தானம்இவற்றுள் எது சிறந்தது ? உம்மைக் கேட்கிறேன் ; அதனை எனக்குச் சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"இந்தவிஷயத்திலும் மைத்ரேயருக்கும் வ்யாஸருக்கும்நடந்த ஸம்வாதமாகிய ஒருபழையஇதிகாசத்தைக்கூறுகின்றனர். ராஜனே! வ்யாஸர் யாருக்குந்தெரியாமல் ஸஞ்சரித்துக்கொண்டு காசியில் [1]ஒரு வீட்டில் ஸ்வதந்திராதிகாரியான மைத்ரேயரிடம்சென்றார். ரிஷிஸ்ரேஷ்டரான மைத்ரேயர், வ்யாஸர் மாறுவேஷத்துடன் வந்திருப்பதை அறிந்து பூஜித்து உயர்ந்தபோஜனத்தைப் புஜிப்பித்தார்; சிறந்தமனமுள்ள வ்யாஸர் சுவைமுதலியகுணங்களுள்ளதும் வேண்டினவையெல்லாம்நிரம்பினதுமான அந்தஉயர்ந்தஅன்னத்தைப்புஜித்துத்திருப்தியடைந்து எழுந்திருக்கையில் நகைத்தார். வ்யாஸர்நகைப்பதை மைத்ரேயர்கண்டு அவரை நோக்கி, 'தர்மாத்மாவே! நீர் நகைத்ததற்குக் காரணம் சொல்லும். சிறந்ததவமும் தைரியமுமுள்ளஉமக்கு மகிழ்ச்சி எதனால் வந்தது? வித்வானே! உம்மைநமஸ்கரித்து அபிவாதனம் செய்து இதை உம்மிடத்தில் தெரிந்துகொள்ளவிரும்புகிறேன். இப்போது, உமக்குத் தவபாக்கியமும் எனக்குச் சுகபாக்யமுமிருக்கின்றன. ஐயா! மஹானுபாவரே! தவச்செல்வத்திற்கும் ஸுகத்தைத் தரும்பொருட்செல்வத்திற்கும் தனித்தனிச்செய்கைகளிருக்கின்றன. தனித்தனிநடக்கைகளாகிய இவ்விரண்டிற்குமுள்ளவித்தியாஸம் சிறிதென்று நான் நினைக்கிறேன். தவச்செல்வம் எல்லாநன்மைகளையும் சேர்ப்பதனால் சிறந்ததென்றும்நினைக்கிறேன்' என்றுகேட்டார். வ்யாஸர், 'பொருளை மிகுதியாகச்செலவழித்ததனாலும் மிகுதியாக இன்சொற்சொன்னதனாலும் எனக்கு நகையுண்டாயிற்று. வேதவாக்கியம் பொய்யாமா? வேதம் ஏன்பொய்சொல்லும்? பிறருக்குத்துரோகம் செய்யக்கூடாதென்றும் கொடுக்கவேண்டுமென்றும் ஸத்தியம் சொல்லவேண்டுமென்றும் மூன்றுசொற்களையே மனிதன்மேன்மையைப்பற்றிச் சொல்லுகின்றனர். இப்படி வேதத்திற்சொன்னதையே ரிஷிகள் முன்னமே அனுஷ்டித்திருக்கின்றனர். இப்போது நான் செய்வதும் முன்னமேகேட்டதும்இதுதான். தாகித்தவனுக்கு வெறுப்பில்லாதமனத்துடன் தண்ணீர்கொடுப்பது சிறியகொடையாயினும் பெரும்பலனைத் தருவதாகிறது. தேவர்கள் உம்மால் ஆராதிக்கப்பட்டனர். அதனாலேதான்,என்னுடையதரிசனத்தை உமக்குக்கொடுத்து அனுக்கிரகித்தனர். பிரபுவே! மஹாயாகங்களைச் செய்தவர்போலச் சிறந்தலோகங்களை ஜயித்தீர். இந்தப் பரிசுத்தமான தானத்தினாலும்

1 'ஸ்வைரிணம்குலே' என்னும் பாடம் கொள்ளப்பட்டது. 'ஸ்வைரிணீகுலே' என்னும் பாடத்துக்கு, 'ஸ்வதந்திரமான ரிஷிக்கூட்டமிருக்கும் வீட்டில்' என்பது உரை.

தவத்தினாலும் மகிழ்ந்தேன். புண்ணியம்செய்பவனுடையமணம் தூர த்திலேயே வீசுகிறது. புண்ணியத்தைப்பார்த்ததனாலும் எனக்கு ஸந்தோஷமுண்டானது. உம்முடையநல்லவாஸனை வீசுகிறது. அது உம்முடையகர்மானுஷ்டானத்தினாலுண்டானதென்று நினைக்கிறேன். ஐயா ! சந்தனப்பூச்சினாலுண்டாகும் வாஸனைபோன்றதுதான் ஸத் கர்மத்தினால் ஸம்பாதிக்கப்பட்டவாஸனையும். ப்ராம்மணரே ! தானந் தான் எல்லாப்புண்ணியங்களிலும் மேலான புண்ணியம். மற்றப்புண் ணியங்கள்இல்லாவிடினும் தானமே சிறந்ததாகும். வேதத்திற்சொ ன்னஎந்தஉயர்ந்தகர்மங்களை ரிஷிகள் சிலாகிக்கின்றனரோ அவற்று ளெல்லாம் தானம் மிகச்சிறந்ததென்பதில் எனக்குஐயமில்லை.தானம் செய்தவர்களால்உண்டாக்கப்பட்டவழியில்தான் புத்திமான்கள் நடக் கின்றனர். அவர்கள் உயிரைக்கொடுப்பவர்களன்றோ ? அவர்களிடத் திலேதானே தர்மம் வேரூன்றியிருக்கிறது. நன்றாக வேதாத்யயனம் செய்வதும் இந்திரியங்களையடக்கித்தவம்செய்வதும் எல்லாவற்றை யும்விட்டு ஸந்யாஸம்செய்துகொள்வதும்போலவே தானமும் சிறந் தது. ஐயா ! நீர் ஸுகத்திலிருந்தே மேலானநன்மையை அடையப் போகிறீரன்றோ ? புத்திசாலியானமனிதன் ஸௌக்கியத்திலிருந்தே அதிகஸௌக்கியலாபத்தை அடையலாம். இது நாம் கண்காட்சியா கப் பார்க்கக்கூடியவிஷயம் ; ஸந்தேகமில்லை. பாக்கியமுள்ளவர்கள் பொருளையடைகின்றனர். அதனால், தானத்தையும் யாகத்தையும் அதன்பின் ஸுகத்தையும் அடைகின்றனர். சிறந்தபுத்தியுள்ளவரே! ஸுகத்திற்குப்பின்துக்கமும் துக்கத்திற்குப்பின்ஸுகமும் இயற்கை யாகவே நிச்சயமாகக் காணப்படுகின்றன. இவ்வுலகில் மனிதனுக் குப் புண்ணியம்ஒன்று பாவம்ஒன்று புண்ணியமும்பாவமுமல்லாதது வேறொன்று என [1]மூன்றுவகையான ஒழுக்கங்களைப் புத்திமான்கள் சொல்லுகின்றனர். [2]பிறருடையநல்லொழுக்கத்தை யாரும் நினைப்ப தில்லை. அவருடையபாவத்தைமட்டும் நினைக்கிறார்கள். அவனவனுக் குரிய கர்மத்தினால்நடப்பது புண்ணியமுமன்று ; பாவமுமன்று. யாக த்தையும் தானத்தையும் தவத்தையும்செய்யும்மனிதர்கள் புண்ணிய கர்மம் செய்பவர். பிராணிகளுக்குத் தீங்குசெய்யும்ஜனங்கள் பாவம் செய்பவர்.பிறர்திரவியத்தைஅபகரிப்பவரும் துயரப்பட்டுக் கெடுகின் றனர். இவ்விருவகையில் சேராதகர்மங்கள் புண்ணியமும் பாவமும்

1 'த்ரிவிதானி' என்ற பாடம் கொள்ளப்பட்டது.

2 மேல்சொல்லும் இலக்கணங்களாலேயே புண்ணியபாவங்கள்தெரிந்து கொள்ளவேண்டும்.

அல்ல. லோபியாயிராதவன் எப்போதும் இனத்தாருடன் புஜிக்கிறான். யாசிப்பவருக்குக் கொடும். அதிர்ஷ்டங்கெடுவதனால் திரவியங்கள் அழிகின்றனவேயன்றி அநுபவிப்பதனால் அழிவதில்லை. விளையாடும்; விருத்தியடையும்; உற்சாகமாயிரும்; கொடும்; கொடுப்பதில் ஆசையோடிரும்; ஞானிகளும் யோகிகளும் உமக்குமேலாகார்' என்று சொன்னார்.

---

## நாற்றெண்பத்துமூன்றாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(மைத்ரேயருக்கும் வ்யாஸருக்கும் நடந்த ஸம்பாஷணைத்தொடர்ச்சி.)

பூர்வபுண்ணியத்தினால் மிக்கஐசுவரியமுள்ளகுலத்தில் பிறந்தவரும் சிறந்தபுத்தியும் நிரம்பினகேள்வியுமுள்ளவருமான மைத்ரேயர், வ்யாஸர்இவ்வாறுசொல்லக்கேட்டு, 'மிகத்தெரிந்தவரே! நீர் என்ன சொல்லுகிறீரோ அதுஅப்படியேதான். ஸந்தேகமில்லை. பிரபுவே! நான் உமதுஅநுமதியின்மேல் ஒன்றுபேசவேண்டும்' என்றுசொன்னார்.

வ்யாஸர், 'சிறந்தபுத்தியுள்ள மைத்ரேயரே! நீர் எதைஎதைஎவ்வளவுஎவ்வளவு எப்படிஎப்படிச் சொல்லநினைக்கிறீரோ அதையதையெல்லாம் அப்படிஅப்படியே சொல்லும். நீர் சொல்வதைக் கேட்க விரும்புகிறேன்' என்றுசொன்னார்.

மைத்ரேயர், 'உமதுசொல் சொற்குற்றம்பொருட்குற்றமில்லாததும் உண்மையுள்ளதுமாயிருக்கிறது. நீர் கல்வியினாலும் தவத்தினாலும் பரிசுத்தபுத்தியுள்ளவரென்பதில் ஸந்தேகமில்லையே. நீர் பரிசுத்தாத்மாவாயிருப்பதனால் நீர்வந்தது எனக்கு மிகப்பெரியலாபம். மறுபடியும் என்புத்தியினால் நான் மிகநிரம்பினதவமுள்ளவனாக என்னை நினைக்கிறேன். மேலும்,உம்மைக்கண்டமாத்திரத்தினாலேயே எனக்குப் பெருநன்மையுண்டாயிற்று. என்னறிவினாலும் பூர்வபுண்ணியத்தின் இயற்கையினாலும் உம்முடையஇந்தஅநுக்கிரகம் கிடைத்ததென்றுநினைக்கிறேன். தவம் கல்வி ஜன்மம்இவை பிராம்மணத்தன்மைக்குக் காரணங்கள். இம்மூன்றுகுணங்களுஞ்சேர்ந்து பிரம்மசாரி விரதஸ்நானஞ்செய்தவன் பிராம்மணனாகிறான். அந்தப் பிராம்மணன் திருப்தியடைந்தால் பித்ருக்களும் தேவர்களும் திருப்தியடைகின்றனர். கல்வியுள்ளவர்களுக்குப் பிராம்மணனைத்தவிரச் சிறந்த

வர் யாருமில்லை. க்ஷத்திரியனும் வைசியனும் பிராம்மணனில்லாவிட்டால் உபநயனமுதலிய ஸம்ஸ்காரங்களில்லாமல் கெட்டுப்போகின்றனர். சூத்திரனும் நான்குஆஸ்ரமத்தாருக்கும் தகுந்தபடி பணிவிடை செய்யாமல் கெட்டுப்போகிறான். நான்கு வர்ணங்களும் புண்ணிய பாவங்களும் உண்மையும் பொய்யும் இல்லாமற்போனால் உலகமே குருட்டிருளாய்விடும். ஒன்றும் புலப்படாது. நன்றாகச்செவ்வைப் படுத்தப்பட்டநிலத்தில் எப்படிமனிதன் பலனையடைகிறானோ அப்படியே கல்வியுள்ளவனுக்குத்தானம்செய்பவன் தானபலனையடைகிறான். கல்வியும் ஒழுக்கமுமுள்ளபிராம்மணன் தானத்தைப்பெற்றுக் கொள்ளக்கிடைக்காமற்போனால் பணக்காரருடையபணம் வீணாகி விடும். இப்படியே ஞானமில்லாதவன் அன்னத்தைக் கெடுக்கிறான். அந்தஅன்னமும் ஞானமில்லாதவனைக் கெடுக்கிறது. தெரியாதவன் எந்தஅன்னத்தைப்புஜித்துக் கெடுகிறானோ அந்தஅன்னம் மற்றொருவனாகிய அன்னம்போடுகிறவனையும் கெடுக்கிறது. வித்வான் அன்னத்தைப்புஜித்தால் அவன் மறுபடியும் அதைவிருத்திசெய்யுந்திறமையுள்ளவனென்றுசொல்லுகின்றனர். அவனும் அந்தஅன்னத்தினால் விருத்தியாகிறான். ஆதலால், இந்தவேறுபாடு நுட்பமானது. அன்னத்தைத் தான்உபயோகிக்காமல் பிராம்மணனுக்குக் கொடுக்க வேண்டும்; நிச்சயம். வித்வானானவன் இறந்துபோனபித்ருக்களையும் தேவர்களையும் எப்போதும் கரையேற்றுவான். கொடுக்கிறவனுக்கு என்னபுண்ணியமிருக்கிறதோ அந்தப்புண்ணியமே வாங்குகிறவனுக்குமிருக்கிறது. [1] ஒருசக்கரத்துடன் வண்டியோடாதென்று ரிஷிகள் நினைக்கின்றனர். கல்வியும் ஒழுக்கமுமுள்ளபிராம்மணர் எங்கேயிருக்கின்றனரோ அங்கே தானத்தின்நல்லபயனை இம்மையிலும்மறுமையிலும் அடையலாம். பரிசுத்தமானபிறப்புள்ளவர்களும் எப்போதும்தவத்தில் மிக்கஊக்கமுள்ளவர்களும் தானமும் அத்யயனமுமுள்ளவர்களும்தாம் எப்போதும் பூஜிப்பதற்குமிகஉரியவர்கள். தேவயானமென்னும் ஸ்வர்க்கமார்க்கம் அந்த ஸாதுக்களால் செய்யப்பட்டது; அதுமாறுவதில்லை. அவர்கள்தாம் எக்காலமும் யாகங்களை நடத்தி ஸ்வர்க்கத்திற்கு அழைத்துக்கொண்டுபோகிறவர்' என்றுசொன்னார்.

---

1 வாங்குகிறவன் கொடுக்கிறவன்.

## நாற்றெண்பத்துநான்காவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(மைத்ரேயருக்கும் வ்யாஸருக்கும்நடந்த ஸம்பாஷணைத்தொடர்ச்சி.)

மைத்ரேயர் இவ்வாறுசொல்லக் கேட்ட வ்யாஸபகவான், அவரைப்பார்த்துத் திரும்பவும் சொல்லலானர். 'நீர் இதனையறிந்திருப்பதும் உமதுஎண்ணம்இவ்வகையாயிருப்பதும் பாக்கியமே. இவ்வுலகம் குணங்களையே அதிகமாகப்புகழ்கிறது. அழகினாலும் இளமையினாலும் செல்வத்தினாலும் கல்வியினாலும்உண்டாகும்கர்வங்கள் நல்லகாலமாக உம்மை மூடிக்கொள்ளவில்லை. இது உமக்குத் தேவர்களின் அனுக்கிரகம். ஆதலால், தானம்அதிககுணங்களுள்ளதென்பதைப்பற்றி உமக்குச்சொல்வேன். அதனைக்கேளும். இவ்வுலகத்திலுள்ளதர்ம சாஸ்திரங்கள் அனுஷ்டானங்கள்அனைத்தும் வேதத்தைமுன்னிட்டு நாளடைவில் வந்திருக்கின்றன. நான் தானத்தைச் சிலாகிக்கிறேன். நீர் தவத்தையும் ஞானத்தையும் சிலாகிக்கிறீர். தவமானது வேதத்தைச் சுத்தப்படுத்துகிறது. தவம் ஸ்வர்க்கத்திற்குச் சாதனமாயிருக்கிறது. தவத்தினாலும் வித்தையினாலும் பெரும்பயனையடைகிறானென்றும் நாம் கேட்டிருக்கிறோம். எவ்வகையான வேறுபாவம் இருந்தாலும் அதையெல்லாம் தவத்தினாலேயே போக்கிவிடலாம். வேதங்களில்கரைகண்டபிராம்மணன் என்னஎன்னபலனைக்கருதித் தவம்செய்கிறானோ அவற்றையெல்லாம்அடைகிறான்.(பிறரால்)எட்டமுடியாததும் வெல்லமுடியாததும் (தவத்தாலன்றிப்) பெறமுடியாததும்தாண்டமுடியாததுமாகியஎல்லாவற்றையும் தவத்தினால் அடையலாம். தவம் எல்லாவற்றிலும் வலிது. கட்குடியனும் பொன்னைத் திருடுகிறவனும் சிசுஹத்திசெய்கிறவனும் ஆசார்யன்மனைவியைச் சேருகிறவனும் தவத்தினால் எல்லாப்பாவங்களையும் தாண்டிப் பாவத்திலிருந்து விடுபடுகின்றனர். [1]எல்லாவற்றையும் அறிந்தவன் கண்ணுள்ளவன். தவமுள்ளவனை எப்படியிருந்தாலும் கண்ணுள்ளவனென்றே சொல்லுகின்றனர். அவர்களை எப்போதும் நமஸ்கரிக்கவேண்டும். கல்விச்செல்வமுள்ளவர் தவமுள்ளவர்அனைவரும் பூஜிக்கத் தக்கவர். தானங்கொடுப்பவர் இறந்தபின்ஸுகத்தையும் இவ்வுலகவாழ்க்கையில் செல்வத்தையும் அடைகின்றனர். பாக்கியசாலிகள் அன்னதானம்செய்வதனால் இந்தலோகத்தையும் பிரம்மலோகத்தை

1 வேறுபாடம்.

யும் அதற்கும்மேலானலோகத்தையும் அந்தலோகங்களிலுள்ள ஸுகங்களையும் அடைகின்றனர். இவர்களால் பூஜிக்கப்பெற்றவர்கள் இவர்களைப் பூஜிக்கின்றனர். இவர்களால் கௌரவிக்கப்பட்டவர்கள் இவர்களைக் கௌரவிக்கின்றனர். கொடுப்பவன் எங்கெங்கேபோனாலும் அங்கங்கே புகழப்படுகிறான். இவன் ஒருகர்மத்தைச்செய்தாலும் செய்யாவிட்டாலும் [1]அவ்வவற்றின்பலன்களை அடைகிறான்; மேலே போனாலும் கீழேயிருந்தாலும் தனக்குரியலோகங்களிலேயே ஸஞ்சரிப்பான். மைத்ரேயரே! நீர் ஒருகால் எந்தஅன்னங்களையும் பானங்களையும் கொடுப்பீரோ அவற்றைத் திரும்பவும் அடைவீர். நீர் புத்திசாலி; நல்லகுலத்திற்பிறந்தவர்; கல்வியும்தயையுமுள்ளவர்; இளம்பிராயமான மனைவியையுடையவர்; தவமுள்ளவர்; தானத்திலேயே ஊக்கத்தோடிரும்; கணவன் தன்மனைவியினிடம்மகிழ்ந்திருப்பதும் அம்மனைவியும்தன்கணவனிடம்மகிழ்ந்திருப்பதுந்தாம் கிருகஸ்தர்களுக்கு முதன்மையானசிலாக்கியமென்று அறியும். இவ்வாறு நடக்கும்வீட்டில் எல்லாக்கல்யாணங்களும் நடக்கும். மஹானுபாவரே! தண்ணீரால் தேகத்திலிருக்கும் அழுக்கைச்சுத்தப்படுத்துவதுபோலவும் தீபத்தால் இருளைப்போக்குவதுபோலவும் தானத்தினாலும் தவத்தினாலும் விஷ்ணுவின்ஆராதனத்தினாலும் ப்ராம்மணன் பவக்கடலைக் கடந்துவிடுவான். தம்கருமங்களினால் ஸத்வகுணம் துலக்கமுற்றவரும் தவங்களினால் தூயமனமுள்ளவரும் வித்தையினால்அஜ்ஞானந்தீர்ந்தவருமானமனிதர்களைக்கரையேற்றுவதற்கு விஷ்ணுஇருப்பதாக நினைக்கப்படுகிறார். எக்காலமும் அவரிடத்தில் பக்திவைத்து அவருக்குஆராதனம்செய்து அவரை நமஸ்காரம்செய்யும், அஷ்டாக்ஷரமந்த்ரத்தைக்கைப்பற்றிஅவரிடம்பக்திவைத்தவர் கெடுவதில்லை. பிரணவத்தைத்தியானித்து உண்மைப்பொருளில் பக்திவைத்தவர் இவ்வுலகத்திலிருக்கின்றனர். அவர்களால்எல்லாப்பாவத்தையும்போக்கி ஆத்மாவைப் பரிசுத்தமாகச்செய்துகொள்ளக்கடவீர். மைத்ரேயரே! நன்மையையடையக்கடவீர். நல்லது. நான் வீட்டிற்குப் போகிறேன். நான் சொன்னதை மனத்தில் வைக்கவேண்டும். அதனால், நன்மையுண்டாகும்' என்றார்.' பிறகு, மைத்ரேயர் அவருக்குப் பிரதக்ஷிணநமஸ்காரங்களைச்செய்து கரங்குவித்துப் 'பகவானே! நீங்கள் க்ஷேமமாக இடம்சேரக்கடவீர்கள்' என்றுசொன்னார்" என்றார்.

1 தானம்வாங்குபவரின் புண்ணியபலன்களை அடைகிறான்.

## நாற்றெண்பத்தைந்தாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(ஸ்த்ரீதர்மத்தைப்பற்றிய ஸுமனை சாண்டிலிகளின் ஸம்பாஷணை.)

யுதிஷ்டிரர், "தர்மந்தெரிந்தவரெல்லாரிலும் சிறந்தவரே! பிதாமஹரே! பெண்களின்நல்லொழுக்கத்தைப்பற்றி உம்மிடம் கேட்க விரும்புகிறேன். அதனை எனக்குச் சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"தேவலோகத்தில், கேகயராஜன் மகளாகிய ஸுமனையென்பவள் எல்லாப் பொருள்களும் அவற்றின் இயற்கைக் குணங்களும் தெரிந்தவளும் சிறந்த மனமுள்ளவளுமாகிய சாண்டிலி என்பவளைப் பார்த்து, 'சிறந்தவளே! என்னஒழுக்கத்தினாலும் என்னசெய்கையினாலும் நீ எல்லாப்பாவங்களையும் போக்கித் தேவலோகத்திற்குவந்தாய். நீ உன்தேகஒளியினால் அக்நிஜ்வாலைபோல ஜ்வலித்துக்கொண்டும் இனிமையினால் சந்திரனது புதல்விபோலப் பிரகாசித்துக்கொண்டும் ஸ்வர்க்கத்திற்கு வந்திருக்கிறாய். தூயஆடைகளையுடுத்துக் களைப்பின்றி விமானத்திலேறிக்கொண்டு ஆயிரமடங்கு அதிகமான பிரபாவத்தோடு சிறந்தவளாக விளங்குகிறாய். அல்பமான தவம் தானம் விரதம்இவைகளினால் நீ இவ்வுலகம்வந்தவளல்லை. நீ எனக்கு உண்மையைச் சொல்லக்கடவாய்' என்றுகேட்டாள். ஸுமனைஇவ்வாறுகேட்க, சாண்டிலி அழகிய நகைமுகமுள்ளவளாகி, ஸுமனையைப்பார்த்து மதுரமாயும் சாந்தமாயும் பின்வரும்சொல்லைச் சொல்லலானாள். 'நான், காஷாயவஸ்திரங்களையுடுத்தும் மரவுரிகளைப் போர்த்தும் மொட்டையடித்துக்கொண்டும் சடைவளர்த்துக்கொண்டும் தேவத்தன்மையடையவில்லை. நான் என்கணவருக்குவேண்டாத சொற்கள், கடுஞ்சொற்கள் இவற்றையெல்லாம் ஒருகாலும்பேசாமல் ஜாக்ரதையாயிருந்தேன்; தேவர்களையும் பித்ருக்களையும் பிராம்மணர்களையும் பூஜிப்பதில் தவறுதலின்றியும் எப்போதும் ஊக்கத்தோடு மாமியார் மாமனார்களுக்கடங்கியும் இருப்பவள்; கோட்சொல்லப் போகேன். அந்தஎண்ணம் என்மனத்திலுமிராது. நிற்கத்தகாத இடங்களில் நிற்கிறதில்லை. வெகுநேரம் பேசுவதில்லை. பிசகானசிரிப்பையும் கணவருக்குஇன்னாதசெய்கையையும் தெரிந்தும் தெரியாமலும் எவ்வகையாகவும் செய்யேன். காரியத்திற்காக வெளியிற்போன கணவர் வீட்டிற்குவந்தபோது பக்தியோடு ஆஸனம்கொடுத்துப் பூஜிப்பேன். எந்தஅன்னம் அவர்சாப்பிட்டுப்பார்க்கவில்லையோ, எந்த

ஆகாரத்தையும் பக்ஷணத்தையும்லேகியத்தையும்அவர்விரும்புவதில்லையோ, அவற்றையெல்லாம் நான்விட்டுவிடுவேன். குடும்பத்திற்காகக் கணவராற் கொண்டுவரப்பட்டனவெல்லாம் செய்யத்தக்கவைகளே. நான் உடனே அவற்றையெல்லாம் செய்விப்பதும் செய்வதும் வழக்கம். தினந்தோறும் த்ரேதாக்கினிகளை ஊக்கத்துடன்காப்பாற்றி வீட்டைச் சுத்தமாகச்செய்வித்துப் பிள்ளைகளை வளர்த்துப் பெண்களைநன்னடையில் பழக்கிவருவேன், என்விருப்பங்களைவிட்டும் கர்ப்பத்தைக் காப்பதில் ஜாக்ரதையோடிருப்பேன். குழந்தைகளைத்திட்டுவதையும் துன்பப்படுத்துவதையும் அவர்மேல் கோபிப்பதையும் எப்போதும் விட்டிருப்பேன். என்வீட்டில் தான்யங்களிறைந்திரா. சோற்றுப்பருக்கைஇறைந்திராது. வீட்டில் பசுக்களைப் புல்லாலும் தண்ணீராலும் என்தேகத்தின்இரத்தத்தைப்போலஅபிமானம்வைத்துப்பார்ப்பேன். எழுந்து சுத்தம்செய்துகொண்டு பிராம்மணர்களுக்குப் பிட்சைபோடுவேன். என்கணவர் ஏதோஒருகாரியத்தைப்பற்றி ஊரைவிட்டுப்போவாராயின் அப்போது அநேகமங்களாசாரங்களையும் தவத்தையும் செய்துகொண்டிருப்பேன். கணவர் தேசாந்தரம்போனபோது மையிடுவதையும் கோரோசனையையும் ஸ்நானம் செய்வதையும் புஷ்பசந்தனங்களையும் அலங்காரத்தையும் விரும்புவதில்லை. ஸுகமாகத்தூங்கினகணவரை அவஸரமானகாரியங்களுக்காகவும் ஒருகாலும் எழுப்பினதில்லை. அதனாலேதான், என்மனத்துக்குத்திருப்தியுண்டாகிறது. ஸுகமாகத்தூங்கும்கணவரை எழுப்பேன்.நோயுற்றகணவரைக் காப்பாற்றுவேன். குடும்பகார்யத்தைப்பற்றியும் ஒருகாலும் கணவரைக் கஷ்டப்படுத்தமாட்டேன். ரகஸ்யத்தை ஒருகாலும், வெளியிடேன். வீட்டைச் செத்தைகுப்பையின்றிச் சுத்தமாகவைத்திருப்பேன். இந்தத் தர்மமார்க்கத்தைச் சிரத்தையுடன் காப்பாற்றும் பெண்ணானவள் ஸ்திரீகளுள் அருந்ததிபோலவே ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்படுவாள்' என்றாள். சிறந்ததவமும் சிறந்தபாக்கியமுமுள்ள அந்தச் சாண்டிலிதேவி இந்தப் பதிவ்ரதாதர்மத்தை ஸுமனைக்குச் சொல்லி அப்போதே அந்தர்த்தானமானாள். பாண்டவனே! இந்தச்சரித்திரத்தைப் புண்ணியகாலந்தோறும்படிப்பவன் தேவலோகத்தையடைந்து நந்தனவனத்தில் ஸுகமாகவஸிப்பான்" என்றார்.

## நாற்றெண்பத்தாறுவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(நாரதர் விஷ்ணுஆராதனம் முக்கியமென்பதைப் புண்டரீகருக்கு உபதேசித்தது.)

யுதிஷ்டிரர், "மகாத்மாக்களால் அறியப்படுவதும் அனுஷ்டிக்கப்படுவதுமாகிய சிறந்தகர்மமென்ன? எல்லாச்சாஸ்திரங்களின்ஸாரத்தையும்எடுத்து அனுக்கிரகத்தினால் எனக்குச் சொல்லவேண்டும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"ராஜனே! ஸம்ஸாரத்தைவிடுவிப்பதாகிய இந்தப்பரமரகஸ்யத்தைக் கேள். நீ இதைக்கேட்டு நன்றாகஅறியவேண்டும். முற்காலத்தில் புண்டரீகரென்னும்பிராம்மணர் புண்ணியதீர்த்தக்கரையில்ஜபம் செய்துகொண்டிருக்கும்போது யோகத்திலிருப்பவராகிய நாரதமுனிவரைக்கண்டு, 'எது சிறந்தது?' என்றுகேட்டார். அவருக்கு நாரதர், மகாத்மாவானபிரம்மதேவர் சொன்னதைச் சொல்லலானார். 'ஐயா! மிகச்சிறந்ததான ஞானயோகத்தைப்பற்றிச் சொற்சுருக்கமும்பொருள்விரிவுமுள்ளதும் வேதங்கள் தர்மசாஸ்திரங்கள் இவற்றின் அர்த்தங்களுக்குஒத்ததுமாகச் சொல்லுகிறேன். ஊக்கத்துடன் கேளும். ப்ரக்ருதிக்குமேற்பட்டபுருஷனென்பவன் இருபத்தைந்தாவதுதத்வமென்று சொல்லப்பட்டிருக்கிறானன்றோ? அவனைத்தான் எல்லாப்பிராணிகளுக்கும் ஆத்மாவாகிய நரனென்றுசொல்வது. நரனிடத்தில் உண்டானமற்ற (இருபத்துநான்கு) தத்வங்களையும் நாரங்களென்று நினைக்கின்றனர். அவற்றை அயனமென்னும் இருக்குமிடமாகக் கொண்டிருப்பதனால் அவருக்கு நாராயணரென்று பெயர்வந்தது. ஸ்ருஷ்டிகாலத்தில் உலகமனைத்தும் நாராயணரிடத்திலிருந்தே உண்டாகிறது; பிரளயகாலத்தில் திரும்பவும்அவரிடத்திலேயே லயிக்கிறது. நாராயணர்தாம் பரப்பிரம்மம். அவரே பரதத்வம். பரத்துக்கும்பரம் அவரே. அவருக்குமேல்ஒன்றுமில்லை. வாஸுதேவரென்றும் விஷ்ணுவென்றும் ஆத்மாவென்றும் அவரையே நினைக்கின்றனர். அவர் ஒருவரே பலபெயர்களினால்எல்லாச்சாஸ்திரங்களிலும்சொல்லப்படுகிறார். எல்லாச்சாஸ்திரங்களையும்கடைந்தும்பலமுறைஆராய்ந்தும்நாராயணரை எப்போதும் தியானம்செய்யவேண்டுமென்பதுஒன்றுதான் நன்கு நிச்சயிக்கப்பட்டது. ஆதலால், நீர் சாஸ்திரங்களில் விரிவாகச்சொல்லப்பட்ட காடுகள்போன்றவைஎல்லாவற்றையும்விட்டு வேறுசிந்தை

யின்றி, ஜனனமில்லாதவரும் எங்குமிருப்பவருமான நாராயணரைத் தியானம்செய்யும். சோம்பாமல்ஒருமுகூர்த்தமாயினும் நாராயணரைத் தியானம்செய்பவன் அவருடைய பதத்தை அடைகிறான். அவரையே எப்போதும்நினைத்திருப்பவன் அடையக்கேட்கவேண்டுமோ? 'நமோ நாராயணாய' என்னும் அனாதியானமந்திரத்தை எவன் அறிகிறானோ அவன் மரணகாலத்தில் அதைஜபிப்பதினால் அந்தவிஷ்ணுவின்பரம பதத்தை அடைகிறான். தன்நன்மையைக்கருதுகிறமனிதன் கேட்பது சிந்திப்பது பாடுவது துதிப்பது பூஜிப்பதுமுதலியகர்மங்களினால் அந்தப்பரப்பிரம்மத்தை எப்போதும் ஆராதிக்கவேண்டும். நாராயணரைநம்பினவனிடத்தில் பாவம் பற்றாது. அவர் உதயமான சூரியன்போல எல்லாஉலகத்தையும் பரிசுத்தமாகச்செய்கிறார். பிரம்மசாரி கிருகஸ்தன் வானப்பிரஸ்தன் ஸந்யாஸிஇந்நான்குஆஸ்ரமிகளும் விஷ்ணுவுக்குஆராதனம்செய்யாமல் பரகதியை அடைவதில்லை. அவரிடத்தில் பக்தியானது அனேகமாயிரம்ஜன்மங்களெடுத்தும் பெறுதற்கரிது. நல்லதவமுள்ளவரே! ஆதலால், பக்தர்களிடத்தில்கிருபையுள்ள அந்தப்பகவானை ஆராதிக்கக்கடவீர்' என்றார். நாரதர், இவ்வாறுசொல்ல, அந்தப்பிராம்மணர் ஹரியை ஆராதித்தார். தாமரைக்கண்ணரும் சங்கசக்ரகதைகளையேந்தினவரும் கிரீடத்தையும்குண்டலங்களையும் தரிப்பவரும் ஸ்ரீவத்ஸமும் கௌஸ்துபமும் மார்பில்விளங்குபவரும் தேவஸ்ரேஷ்டர்களுக்கும் ஈஸ்வரருமான அந்தப்பகவானைக்கனவிலும் பரபரப்புடன் நமஸ்கரித்தார். பிறகு, வெகுகாலமான பின் வேதபுருஷர்களாலும் தேவகந்தர்வகின்னரர்களாலும்துதிக்கப்பெற்ற அந்தவிஷ்ணு பிரத்யக்ஷமானார். ஐம்புலன்களுக்கும் எட்டாதவரும் யோகிகளுக்குஆதாரமுமாகிய அந்தப்பகவானைவிஷ்ணுஎல்லாராலும் பூஜிக்கப்பெற்றவராய் அந்தப்புண்டரீகருடன்கூடவேதமது லோகத்திற்குச் சென்றார். அரசர்க்கரசே! ஆதலால், நீயும் அவரிடத்திலேயே பக்திசெய்து அவரையே தஞ்சமாகக்கொண்டு ஆராதித்துத் தியானித்தபடி அந்தப்புருஷோத்தமரை அடையலாம். ஜரையும் மரணமுமில்லாதவரும் ஒப்பற்றவரும் தியானிக்கத்தக்கவரும் ஆதியும்அந்தமுமில்லாதவரும்ஸகுணரும் அகுணருமாயிருப்பவரும் முதல்வரும் மிகப்பெரியவரும் மிக்கநுண்ணியவரும் உவமையற்றவரும் தாம்எல்லாவற்றிற்கும்உவமையாயிருப்பவரும் யோகிகளின் ஞானமட்டும்எட்டத்தக்கவரும் மூவுலகங்களுக்கும் ஆசாரியரும் ஈஸ்வரருமாயிருக்கும் விஷ்ணுவைச் சரணம் அடை" என்றார்.

## நாற்றெண்பத்தேழாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(இன்சொல்லின்சிறப்பைப்பற்றி ஒரராக்ஷஸனுக்கும் ஒருபிராம்மணனுக்கும்நடந்த ஸம்பாஷணை.)

யுதிஷ்டிரர், "பரதஸ்ரேஷ்டரே! ஸாமதானங்கள்இரண்டனுள் எது மிகச்சிறந்ததென்று நீர்நினைப்பது? இவ்விரண்டனுள் மேலானதை எனக்குச் சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"புருஷஸ்ரேஷ்டனே! ராஜனே! ஒருவன் இன்சொல்லினால் மகிழ்விக்கப்படுகிறான். மற்றொருவன் கொடையினால் திருப்திசெய்விக்கப்படுகிறான். மனிதர்களின் இயற்கையைஅறிந்து ஸாமதானங்களிரண்டில் ஒன்றைத் தழுவவேண்டும். இன்சொல்லின் குணங்களை முதலில் கேள். கொடியபிராணிகளையும் இன்சொல்லினால் வசப்படுத்தலாம். இந்தவிஷயத்தில் காட்டில் ஒருபிராம்மணன் ஒரு ராக்ஷஸனால் பீடிக்கப்பட்டு விடப்பட்டானென்னும் பழையஇதிஹாஸம் கூறுகின்றனர். அதைச் சொல்லுகிறேன். சிறந்தபுத்தியுள்ளஒருபிராம்மணன் மனிதரில்லாதஒருகானகத்தில் பக்ஷிக்கத் தொடங்கினஅரக்கனால் பீடிக்கப்பட்டுக் கஷ்டத்தையடைந்தான். சிறந்தபுத்தியும் நிரம்பினகல்வியுமுள்ள அந்தப்பிராம்மணன் மிக்க பயங்கரமான அந்தராக்ஷஸனைக்கண்டு அச்சப்படாமலும் விசனப்படாமலும் அவனுக்கு இனியசொல்லையே சொன்னான். ராக்ஷஸன் அவன்சொல்லுக்காக அவனைக்கொண்டாடி அவனைநோக்கி, 'நான் எதனால் வெளுத்தும் இளைத்துமிருக்கிறேன்? இந்தக்கேள்விக்கு மறுமொழிசொல். விடுபடுவாய்' என்றுகேட்டான். அந்தப்பிராம்மணன், அவனைப்பார்த்துச் சற்றுநேரம் ஆலோசித்துப் பயப்படாமலும் அவஸரப்படாமலும் கேள்விக்கு மறுமொழிகூறலானான்: 'நீ வேறுதேசத்திலும் வேறுஜனங்களிடத்திலும் இருந்துகொண்டு உன் அன்பரைவிட்டு ஒப்பற்றபோகங்களை அனுபவிக்கிறாய்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். ராக்ஷஸனே! உன்னால் செம்மையாக ஆதரிக்கப்பட்ட ஸ்நேகிதர்களும்உன்பிழையினால்உன்னை விட்டிருக்கவேண்டும்; அதனால், வெளுத்தும் இளைத்துமிருக்கிறாய். ஜீவனமில்லாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தும் ஜீவனத்திற்குரிய உபாயங்களையெல்லாம்வெறுத்துப் பெரியலாபங்களை நீ எண்ணமிட்டுக்கொண்டிருக்கவேண்டும்; அதனால், வெளுத்தும் இளைத்துமிருக்கிறாய். [1]தன

[1] வேறுபாடம்.

மும் அதிகாரமும் மிகுதியாகவுள்ளவர்களும் குணங்களில் உனக்கு மிகத்தாழ்ந்தவர்களுமான மனிதர்கள் கர்வத்தினால்உன்னை அவமதிக்க வேண்டும்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். நீ சிறந்த ஞானிகளால்கற்பிக்கப்பட்ட புத்தியும் நல்லகுணங்களுமுள்ளவனாக இருந்தும் குணமில்லாதமற்றவர்கள்வெகுமானிக்கப்படுவதைப்பார்த்திருக்கவேண்டும்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். யோக்யனே! நீ உன்னுடையநற்குணத்தினால் உன்னைக்கஷ்டப்படுத்திக் கொண்டு செய்தநன்றியைப்பெற்றவொருவன் உன்னை ஏமாற்றினதாக நினைக்கிறான்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். காமக்குரோதங்களினால் புத்திமறைக்கப்பட்டுத் தப்புவழிகளில்கஷ்டப்படும்ஜனங்களைப்பற்றி நீ சிந்திக்கிறாயென்று நினைக்கிறேன்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். கெட்டநடக்கையுள்ளநீ தெரிந்தவர்களால் [1]கௌரவிக்கப்படாமலும் அவர்களால்இகழப்பட்டும் வெட்கமும் கோபமுமுற்றிருக்கவேண்டும்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். நண்பனைப்போலத்தோற்றும்ஒருபகைவன் யோக்கியன்போல நடந்து உன்னை ஏமாற்றிப்போயிருக்கவேண்டும்; அதனால்,வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். நீ ஒருகாலத்தில்சொன்னஉயர்ந்தசொல் தெரிந்தவர்கள்ஸபையில் சோபிக்காமலிருக்கவேண்டும்; அதனால்,வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். இதற்குமுன் பார்க்கப்பட்டும் கேட்கப்பட்டும் இருக்கும் உன்மனத்திற்கினிய மனிதர்கள் கோபித்திருக்க அவர்களைச் சமாதானம்செய்யமுடியாமலிருக்கவேண்டும்; அதனால், வெளுத்தும்இளைத்துமிருக்கிறாய். ஒருவன் தனக்குவேண்டினவொருகாரியத்திற்காக உன்னைஸம்பந்தப்படுத்தி எக்காலமும் உன்னை யாசித்துக்கொண்டிருக்கவேண்டும்; அதனால், நீ வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். யாரோ காணாதவிடத்தில் உன்மேல்பொய்ப்பழியைச்சொல்லி அதைக் கேட்டவர்களால் நிச்சயமாக நீ மதிக்கப்படாமலிருக்கவேண்டும்; அதனால், நீ வெளுத்துமிளைத்துமிருக்கிறாய்.நல்லகுணங்களைவிரும்பி அன்புடன் ஜனங்களைப்பூஜிக்கும்உன்னை வஞ்சகனென்று நிச்சயமாக அவர்கள் நினைக்கவேண்டும்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். உனக்குள்ளிருக்கும்எண்ணத்தை ஸமயம்வந்தபோது வெட்கத்தினால் தளர்ந்து வெளியிடமாட்டாமலிருக்கவேண்டும்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். உலகத்தில் பலஎண்ணங்களும் பல

[1] வேறுபாடத்துக்கு, 'புத்தியினால்கொண்டாடப்பட்டநீ புத்தியில்லாத அயோக்கியர்களினால் வஞ்சிக்கப்பட்டு வெட்கப்பட்டிருக்கவேண்டும்' என்பதுபொருள்.

விருப்பங்களுமுள்ளமனிதர்களெல்லாரையும் உன்குணங்களினால் நீ வசப்படுத்தவிரும்பவேண்டும்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். எதிர்த்துப் பிடிவாதமாகநிற்கும்கெட்டவர்களிடத்தில் நற்குணங்களைப்பேசுகிற உன்னுடையகுணங்கள் பிரகாசியாமலிருக்க வேண்டும்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். தர்மமும் ஒழுக்கமும் கல்வியுமில்லாத நீ ஆசைபற்றி மேலானநிலைமையைக் கருதவேண்டும்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். தவத்தில்ஊக்கம்வைத்துக் காட்டிற்குப்போகவிரும்புகிறஉன்னை உறவினர் தடுக்கின்றனரென்று நினைக்கிறேன்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். மனைவியின்மேல் மிக்கஅன்புள்ள உன்னுடைய அண்டை வீட்டுக்காரன் மிகுந்தபொருளும் இளமைப்பருவமும் மிக்கஅழகும் காமமுமுள்ளவனாயிருக்கவேண்டும்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். பிள்ளை அடங்காமல் கெட்டவனாகவும் மாப்பிள்ளைவீட்டைத் துடைப்பவனாகவும் மனைவி முரண்படுகிறவளுமாகவும் இருக்க வேண்டும்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். ஸகோதரர்கள் முழுதும் ஒற்றுமையில்லாதவர்களாகவாவது தந்தை தாய் தமயன் ஆசாரியன் இவர்கள் பசியினால்வருந்தி இறந்தாவதிருக்கவேண்டும்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். முன்னர், பிராம்மணனையோ பசுவையோகொன்றாவது பிரம்மஸொத்தையும் தேவஸொத்தையும் உபயோககாலத்தில் எடுத்துக்கொண்டாவது இருக்கவேண்டும்; அதனால், வெளுத்தும் இளைத்துமிருக்கிறாய். பிராயமுதிர்ந்த போது பிறரால் மனைவியபகரிக்கப்பட்டவனாகவாவது உலகத்தில் மனிதரால் பகைக்கப்பட்டவனாகவாவது ஞானமில்லாமலேபிராயமுதிர்ந்தவனாகவாவது நீ இருக்கவேண்டும்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். முதுமைக்காகப் பொருளைத்தேடிவைக்க அந்தப் பொருள் பிறரால் எடுத்துக்கொள்ளப்பட்டதாகவாவது ஜீவனத்திற்காகத்துஷ்டர்களை எதிர்பார்த்ததாகவாவது இருக்கவேண்டும்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். ஐயா! செல்வமிருந்தகாலத்தில் கெட்டஸ்நேகிதர்களால் உனதுதர்மம் கெடுக்கப்பட்டு அவர்களை விடவும் எண்ணமில்லாமலிருக்கவேண்டும்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். வித்தையில்லாதவனும் பயமுள்ளவனும் [1]பொருள்குறைந்தவனுமானநீ கல்வியினாலும் பராக்ரமத்தினாலும் கொடையினாலுமுண்டாகும்புகழை எக்காலமும் பிரார்த்திக்கிறாய்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். வெகுநாளாக எதிர்பார்த்திருந்த ஒரு

1 'அல்பார்த்த:' என்றுபாடம் கொள்ளப்பட்டது.

பிரயோஜனம் பிறரால் அபகரிக்கப்பட்டு உனக்குக் கிடைக்காமலிருக்க வேண்டும்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். மனமார உன்னிடத்தில் ஒருதோஷத்தையும் நீ அறியாமலிருக்கும்போது நிஷ்காரணமாகப் பழிசுமத்தப்பட்டிருக்கவேண்டும்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். கஷ்டப்படும் ஸ்நேகிதர்களுக்கு நஷ்டத்தினால் உண்டான துயரத்தை, உன்னிடம் போதுமானபொருளும் குணமுமில்லாமையினால் நீ போக்கமாட்டாமலிருக்கவேண்டும்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். கிருகஸ்தர்களும் வானப்பிரஸ்தர்களும் வீட்டில்பற்றில்லாத ஸந்யாஸிகளும் [1]ஸாதுக்களாயிருப்பதைப் பார்க்கிறாய்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். நீசொல்வது தர்மார்த்தகாமங்கள் மூன்றும்பொருந்தியிருந்தும் தேசத்தில் பயன்படாமல் விடப்படுகிறது; அதனால்,வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். புத்திசாலியானநீ ஜீவித்திருக்கவேண்டியதற்காக மூடர்களால் கொடுக்கப்பட்ட பொருள்களைவாங்கி ஜீவிக்கவேண்டும்; அதனால்,வெளுத்துமிளைத்தும் இருக்கிறாய். தனக்குவேண்டியவர்களைத்தடுத்து ஒருவரோடு ஒருவர் சண்டைபோடுகிறவர்களுக்கு நீ நன்மைசெய்யக் கருதவேண்டும்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய். பாவிகள் ஓங்குவதையும் நல்லவர்கள் கஷ்டப்படுவதையும்பார்த்து [2]அதிர்ஷ்டத்தை நீ நிந்திக்கவேண்டும்; அதனால், வெளுத்துமிளைத்துமிருக்கிறாய்' என்றான். அந்தப்பிராம்மணனால் இவ்வாறுகௌரவிக்கப்பெற்றராக்ஷஸன் அவனுக்குளதிர்மரியாதைசெய்து அவனைத் தனக்குத் துணையாகச்செய்துகொண்டு பிறகு மரியாதையோடு அனுப்பினான்'' என்றார்.

---

## நூற்றெண்பத்தெட்டாவது அத்யாயம்.

### தா ன த ர் ம ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(தேவதூதனுக்கும் இந்திரனுக்கும் ரிஷிகளுக்கும் பித்ருக்களுக்கும் பிருஹஸ்பதிக்கும் சிராத்தத்தைப்பற்றிநடந்த ஸம்பாஷணை.)

யுதிஷ்டிரர், ''பிதாமஹரே! நன்மையைக்கருதுகிறவனுடைய கர்மங்கள்பலிக்கும் பூமியும் கிடைக்கமிக்கஅரிதுமான மானிடஜன்மத்தையடைந்து செய்யத்தக்கதென்ன? தானங்களில் உத்தமமான

---

1 ஸாதுவாயில்லாதவனுக்கு ஸாதுக்களைப் பார்த்தால்வருத்தம் என்பது கருத்து.

2 'தைவம்' என்று பாடம்கொள்ளப்பட்டது.

தானம் எது ? எவ்வெவற்றை எப்படியெப்படி கொடுக்கவேண்டும் ? கங்காபுத்ரரே! வெகுமானிக்கத்தக்கவரும் பூஜிக்கத்தக்கவரும் யார் ? இந்த ரகஸ்யத்தைச் சொல்லக்கடவீர்" என்றுகேட்டார். புகழ்பெற்ற தர்மராஜரால் இவ்வாறு கேட்கப்பட்ட பீஷ்மர், தர்மங்களின் பரம ரகஸ்யத்தை அவ்வரசருக்குச் சொல்லலானார்.

"பாரதனே ! ராஜனே ! தர்மரகஸ்யங்களை முன்னர் வ்யாஸபகவான் எனக்குச்சொன்னபடி சொல்லுகிறேன், ஊக்கத்துடன் கேள். அரசனே! இது தேவரகஸ்யம். சிறந்தகாரியமுள்ள யமன் நியமத்தோடும் ஊக்கத்தோடும் பெருந்தவம்செய்து பலனையடைந்தான். இதனால், தேவர்களும் பித்ருக்களும் ரிஷிகளும் ப்ரமதகணங்களும் ஸ்ரீதேவியும் சித்ரகுப்தனும் திக்குயானைகளும் திருப்தியடைகின்றனர். இதுதான், ஸூக்ஷ்மமும் பெரும்பலனுள்ளதுமாகிய ரிஷி தர்மமென்றுசொல்லப்படுகிறது. மகாதானங்களின்பலன்களும் எல்லாயோகங்களின் பலன்களும் இதனாலுண்டாகின்றன. குற்றமற்றவனே ! இதை இவ்வாறுஅறிகிறவனும் அறிந்துசெய்கிறவனும் பாவமுள்ளவராயிருந்தாலும் இல்லாதவராயிருந்தாலும் அதனாலுண்டாகும் சிறப்புக்களையடைவார். ஒருசெக்கு பத்துக்கசாப்புக்கடைகளுக்குச்சரி; ஒருசாராயக்கடை பத்துச்செக்குகளுக்குச்சரி ; ஒருவேசித்தொழில் பத்துச்சாராயக்கடைகளுக்குச்சரி ; ஓர் அரசன் பத்து வேசிகளுக்குச்சரி. இவர்களனைவரும் ஒருபங்கு; அரசன் [1]இவர்களெல்லாரிலும் அதிகமென்றுசொல்லப்படுகிறான். தர்மார்த்தகாமங்கள் மூன்றையும்தெரிவிக்கும்சாஸ்திரங்கள் பரிசுத்தமானவை ; புண்ணியத்தைத்தெரிவிப்பவை. அவற்றிலும் தர்மசாஸ்திரம் மிகப்புண்ணியம். ஸூக்ஷ்மத்தைத்தெரிவிக்கும்சாஸ்திரம் மிகப்பெரிது. தர்மமுள்ள சாஸ்திரங்கள் தேவர்களாலேயே செய்யப்பட்டவை. அவை கேட்கவேண்டியவை. அவற்றில் சிராத்தத்திற்குரிய பித்ருக்களின்ரகஸ்யங்களும் எல்லாத்தேவர்களின்ரகஸ்யங்களும் முழுதும்சொல்லப்படுகின்றன ; ஸூக்ஷ்மவிஷயங்களுள்ளதும் பெரும்பயனைத்தருவதுமாகிய ரிஷிதர்மமும் மஹாயாகங்களின்பலன்களும் எல்லாத்தானங்களின் பலன்களும் சொல்லப்படுகின்றன. அவற்றை எப்போதும் படிக்கிறவரும் அவற்றைமறவாமலிருக்கிறவரும் கேட்டுப் பிறருக்குப் பலனைச்சொல்லுகிறவரும் ஸாக்ஷாத்நாராயணரே. அதிதிகளைப்பூஜிக்கும் மனிதன் கோதானபலனையும் தீர்த்தஸ்நானபலனையும் யாகபலனையும் அடைவான். சிரத்தையுடனும் மனச்சுத்தத்துடனும்கேட்கிற அந்தச்

1 இவர்களிடம் ஒன்றும் வாங்கக்கூடாதென்பது.

சிரத்தையுள்ள ஸாதுக்கள் உலகங்களையே ஜயித்தவராகிறார்; துன்பத்திலிருந்து விடுபடுகிறார். பாவம் அவர்களைப் பற்றுவதில்லை. இறந்த பின், அவர்கள் மேலுலகம்போய் அழியாதலோகத்தையடைவார். ஒரு கால், தேவதூதன் தற்செயலாய்வந்து அந்தர்த்தானமாயிருந்து இந்திரனைப்பார்த்துப் பேசினான். 'யாவரும் விரும்பத்தக்க குணங்கள் பொருந்தினவரும் வைத்தியர்களிற் சிறந்தவருமான அஶ்விநிதேவர்களின்கட்டளையினால் ரிஷிகளும் பித்ருக்களும் தேவர்களும் சேர்ந்த ஸபைக்கு நான் வந்திருக்கிறேன். சிராத்தத்தில் கொடுப்பவனுக்கும் புஜிப்பவனுக்கும் ஸ்திரீசம்பந்தத்தை நிஷேதித்திருப்பது எதனால்? மூன்றுபிண்டங்களைத் தனித்தனியே பகுத்துவைப்பது எதற்காக? முதற்பிண்டம் யாருக்குக்கொடுக்கவேற்பட்டது? நடுவிலிருப்பது யாரைச்சேருகிறது? கடைசியிலிருப்பது யாருடையது? இதை அறிந்துகொள்ளவிரும்புகிறேன்' என்றான். அந்தத்தூதன் சிரத்தையுடன்சொன்ன தர்மப்பிரஶ்னத்தைக்கேட்டு, இந்திரன்முன்னின்ற தேவர்கள் பித்ருக்களனைவரும் அந்தத்தூதனைக் கொண்டாடினர். பித்ருக்கள், 'ஆகாயத்திற் சஞ்சரிப்பவரிற்சிறந்தவனே! உனக்கு நல்வரவும் மங்களமும் உண்டாகக்கடவன. கேள். ரகஸ்யமானவிஷயங்களடங்கின சிறந்தபிரஶ்னம் உன்னால் கேட்கப்பட்டது. சிராத்தத்தைக்கொடுத்தும் புஜித்தும் எந்தமனிதன் ஸ்திரீயைச் சேருகிறானோ அவனுடைய பித்ருக்கள் அந்தமாஸமுழுதும் அந்தரேதஸில் படுத்திருக்கின்றனர். பிண்டங்களின்பிரிவைப்பற்றி வரிசையாகச் சொல்வோம். அடியிலிருக்கும்பிண்டமானது ஜலத்திலப்ரவேசித்துக் கர்த்தாவைப் பரிசுத்தமாகச்செய்யும். நடுப்பிண்டத்தைக் கர்த்தாவின்பத்நி ஒருத்திமட்டுமே புஜிக்கலாம். அவற்றின் மூன்றாவது பிண்டத்தை அக்நியில போடவேண்டும்[1] இந்தச்சிராத்தவிதியைத் தர்மங்கெடாமலிருக்கும்படி சொன்னோம். அவனுடையபித்ருக்கள் எப்போதும் மனமகிழ்ந்து திருப்தியாயிருப்பார். அவனுக்கு ஸந்ததி விருத்தியாகிறது. அவனுக்கு அழியாதபுண்ணியம் வருகிறது' என்றுசொன்னார்கள். தேவதூதன், 'பித்ருக்களுக்குக் கொடுக்கும் மூன்று பிண்டங்களும் தனித்தனியாகப் பிரிந்துபோவதைப்பற்றிஉங்களால் வரிசையாகவும் தெளிவாகவும் சொல்லப்பட்டது. எடுக்கப்படும்முதற்பிண்டம் ஜலத்தில்போடப்பட்டு யாரைச்சேருகிறது? எந்தத்தேவதைக்குத் திருப்தியையுண்டாக்குகிறது? எப்படிப் பித்ருக்களைக் கரையேற்றுகிறது? அப்போது நடுப்பிண்டத்தைப் பத்நி

1 ஜலத்தில் போடவேண்டுமென்பது.

யானவள் அநுமதிகொடுக்கப்பெற்றுப் புஜிப்பது எதற்காக? அவன் பித்ருக்கள்,ஹோமம்செய்யப்பட்டதைத்தானே புஜிக்கிறார்கள். இவற்றுள், அக்நியைச்சேரும்கடைசிப்பிண்டத்தின்கதி என்ன? அது யாரைச்சேருகிறது? இப்படி இம்மூன்றுபிண்டங்களின்முடிவையும் பலனையும்செய்கையையும்முறையையும் எது யாரைச்சேருமென்பதையும் நான் கேட்கவிரும்புகிறேன்' என்றுசொன்னான். பித்ருக்கள், 'ஆகாயத்தில்ஸஞ்சரிப்பவனே! உன்னால்கேட்கப்பட்டஇந்தக்கேள்வி மிகப்பெரிது. ஆச்சர்யமானரகஸ்யத்தை நீ கேட்டாய். தேவர்களும் ரிஷிகளும் இதைத்தான் சிலாகிக்கின்றனர். நீண்டகாலம் ஜீவிப்பவரும் சிறந்தமஹாத்மாவுமாகிய மார்க்கண்டேயரைத்தவிர மற்றத் தேவர்களும் ரிஷிகளும் பித்ருகாரியத்தின்நிச்சயத்தை அறியார். அந்தப்பிராம்மணர் பித்ருபக்தியுள்ளவராய் வரம்பெற்றுப் பெரும்புகழுள்ளவரானார்' என்றார்கள். சிராத்தவிதியின்நிச்சயத்தையும்மூன்று பிண்டங்களின்முடிவையும்பற்றிப் பகவானிடம் கேட்டறிந்த மார்க்கண்டேயர் தேவதூதனால்வினவப்பட்டுச் சொல்லலானார்.

'சிறந்தபுத்தியுள்ளவனே! மூன்றுபிண்டங்களின் முடிவையும் ஊக்கத்துடன் என்னிடம் கேள். ஜலத்தில் போகும்பிண்டம் சந்திரனை ஸந்தோஷப்படுத்துகிறது. சந்திரன் தேவர்களையும் பித்ருக்களையும் திருப்தியடைவிக்கிறான். ப்ராம்மணர்களால் அநுமதிகொடுக்கப்பெற்றபத்நி நடுப்பிண்டத்தைப் புஜிப்பதனால் பித்ருக்கள் புத்திரனை விரும்புகிற கர்த்தாவுக்குப் புத்திரனைக்கொடுக்கின்றனர். அக்நியில் போடப்படும் பிண்டத்தைப்பற்றியும் என்னிடம்தெரிந்துகொள். அதனால், பித்ருக்கள், திருப்தியடைகின்றனர்; திருப்தியடைந்து விரும்பினவற்றைக் கொடுக்கின்றனர். இப்படி மூன்றுபிண்டங்களின்முடிவையும்பற்றி உனக்குப்பூர்ணமாகச்சொன்னேன். சிராத்தஞ்செய்விப்பவனும் சிராத்தம்செய்பவன்போலச் சிராத்தவிரதத்தைஅநுஸரிக்க வேண்டும். அதாவது, அந்தத்தினத்தில் ஸ்திரீஸம்பந்தத்தைவிட வேண்டுமென்று நினைக்கின்றனர். தேவதூதரிற்சிறந்தவனே! சிராத்தத்தில் புஜிப்பவனும் எப்போதும் பரிசுத்தனாகவே புஜிக்கவேண்டும். நான் எவற்றைக் குற்றங்களாக உனக்குச்சொன்னேனோ அவை அப்படியேதாம்; மாறாகா. ஆதலால், ப்ராம்மணன் ஸ்நானம்செய்து பரிசுத்தனாகிப் பொறுமையோடு சிராத்தத்தில் புஜிக்கவேண்டும், கொடுப்பவனும் அப்படியே கொடுக்கவேண்டும். அதனால், ஸந்ததி விருத்தியாகும்' என்றுசொன்னார். அங்கே வித்யுத்ப்ரபனென்னும் சிறந்த தவமுள்ளரிஷி இருந்தார். அவருடையஒளி சூரியன்ஒளிக்குச் சமமாகப்

பிரகாசித்தது. அவரும் இந்தத்தர்மஸூக்ஷ்மங்களைக்கேட்டு இந்திரனைப்பார்த்து, 'மனிதர்கள் அறிவுகெட்டவர்களாகி விலங்குஜாதிகளில் பிறந்த புழுக்கள் எறும்புகள் ஸர்ப்பங்கள் ஆடுகள் மான்கள் பக்ஷிகள் முதலான ஜந்துக்களைக் கொல்லுகின்றனர்; மிகஅதிகமான பாவத்தை அடைந்திருக்கின்றனர். அவர்களுக்கு என்னபரிகாரம்?' என்றுகேட்டார். பிறகு, தேவக்கூட்டத்தாரனைவரும் தவமே தனமாகப்பெற்ற ரிஷிகளும் மஹானுபாவர்களானபித்ருக்களும் அம்முனிவரைச் சிலாகித்தனர். இந்திரன், 'குருக்ஷேத்திரம் கயை கங்கை பிரபாஸதீர்த்தம் புஷ்கரக்ஷேத்திரம்இவற்றை மனத்தினால்தியானித்துப் பிறகு ஜலத்தில் ஸ்நானம்செய்யவேண்டும். அப்படிச்செய்தால் மனிதன் ராகுவினால் சந்திரன்விடப்படுவதுபோலப் பாவத்தினால்விடப்படுவான். பசுக்களின்பின்புறத்தையும் வாலையும்தொட்டு நமஸ்கரிப்பவன் மூன்றுநாள் ஸ்நானமும் உபவாஸமும்செய்தவனாகிறான்'என்று சொன்னான். அதன்பிறகு,வித்யுத்பிரபர் இந்திரனைப்பார்த்து, 'ஓ! இந்திரனே! மிக்கஸூக்ஷ்மமான தர்மம் சொல்லப்போகிறேன். அதைக் கேள். (மனிதன்), ஆலம்விழுதின்கஷாயத்தால்உடம்பைத்தேய்த்துத் தினைமாவைப்பூசி ஸ்நானம்செய்தபிறகு அறுபதாங்குறுவையன்னத்தைப் பாலுடன்புஜித்தால், எல்லாப்பாவங்களாலும் விடப்படுவான். ரிஷிகளால் சிந்திக்கப்பட்டமற்றொருமுக்கியமான ரகஸ்யத்தையும் கேட்கவேண்டும். தேவேந்திரனே! இந்திராணியின்கணவனே! சிவலோகத்தில் சிவனுடன்பிருஹஸ்பதிபேசிக்கொண்டிருக்கையில்இதை நான் கேட்டேன். மலைமேலேறிச் சிறந்ததவத்துடன் ஆகாரத்தை விட்டு ஒற்றைக்காலால்நின்று கைகளை உயரவெடுத்துக் கரங்களைக் குவித்துக்கொண்டு சூரியனைப் பார்த்திருக்கவேண்டும். அதனால், உபவாஸங்களின் பலனையடையலாம். சூரியகிரணங்களால் தாபமுண்டாக்கப்பட்டவன் எல்லாப்பாவங்களையும் விட்டுவிடுவான். வெய்யிற்காலத்திலாவது பனிக்காலத்திலாவது இப்படிச்செய்தால் பாவம் போம். பாவம்விட்டபிறகு அழியாதவொளியுண்டாகும். ஒளியினால் சூரியனைப்போலவும் சந்திரனைப்போலவும் விளங்குவான்' என்று சொன்னார். தேவர்களுக்கு அரசனாகிய இந்திரன் தேவக்கூட்டத்தின்நடுவில் பிருகஸ்பதியைப்பார்த்து, 'பகவானே! மனிதர்களுக்குச் சுகத்தைச்செய்வதாகிய தர்மரகஸ்யத்தையும் தோஷங்களையும் அவற்றின் நஷ்டங்களையும் முழுதும் சொல்லக்கடவீர்' என்னும் சிறந்த இன்சொல்லைச் சொன்னான். பிருகஸ்பதி, 'இந்திரனே! சூரியனுக்கு எதிரே மூத்திரம்விடுகிறவர்களுக்கும் காற்றைப்பகைப்பவருக்கும்

ஜ்வலிக்கின்ற அக்கியில் ஸமித்துக்களைப்போடாதவருக்கும் இளங் கன்றுள்ளபசுவைப் பாலுக்காகக் கறப்பவருக்குமுள்ள தோஷங்களைச் சொல்வேன். அவற்றைக் கேள். வாஸவனே! சூரியன் காற்று அக்கி பசுக்கள் ஆகியஇவர்கள் உலகங்களுக்குத்தாய்களாகப் பிரம்மதேவ ரால் படைக்கப்பட்டவர். இந்தத்தேவதைகள் மனிதர்களை மேலுல கங்களுக்குக்கொண்டுபோகத் திறமையுள்ளவர்கள். ஒவ்வொன் றிலுமுள்ளதர்மத்தின் நிச்சயத்தை நீங்கள் எல்லாரும் கேட்கவேண் டும். சூரியனுக்கு எதிராக மூத்திரம்விடுகிறவர்கள் புருஷர்களா யினும் ஸ்திரீகளாயினும் எண்பத்தாறுவருஷம் கெட்டஒழுக்கமுள்ள வர்களாகவும் குலத்தைக்கெடுப்பவர்களாகவுமிருப்பர். இந்திரனே! காற்றைப்பகைப்பவனுக்கும் ஸந்ததி கர்ப்பத்திலேயே கரைந்துபோ கும். ஜ்வலிக்கின்ற அக்கியில் ஸமித்துக்களைப்போடாதவர் செய்யும் அக்கிகார்யங்களில் அவர்கள் ஹோமஞ்செய்யும்ஹவிஸை அக்கிபக வான் புஜிப்பதில்லை. [1]இளங்கன்றுள்ளபசுவின்பாலை எவர்கள் குடிக்கின்றனரோ அவர்களின் வம்சங்களை விருத்திசெய்வதற்குப் பால்குடிக்கும்குழந்தைகள் ஒன்றும் உண்டாவதில்லை. இருக்கிற ஸந்ததிகளும் அழிந்துபோகும். குலவிருத்தியும் குறைந்துபோகும். குலத்தில்பெரியோர்களானபிராம்மணர்களினால் இது இவ்வாறு முன் னமே கண்டறியப்பட்டது. ஆதலால், நன்மையைக் கருதுகிறமனி தன் விடவேண்டியவற்றை விடவேண்டும்; செய்யவேண்டியவற்றை எப்போதும் செய்யவேண்டும். இதை ஸத்தியமாக உனக்குச் சொல் லுகிறேன்' என்றுசொன்னார். அதன்பிறகு, மகானுபாவர்களான தேவர்கள் மருத்துக்கள் ரிஷிகள்அனைவரும் அங்குள்ளபித்ருக்களைப் பார்த்து, 'ஐயா! அற்பமானமனமுள்ளமனிதர்களிடத்தில் பித்ருக் கள் திருப்தியடைவது எதனால்? சிராத்தங்களில் செய்யும்தானம் எப் படி அக்ஷயமாகும்? எந்தக்கர்மம் செய்வதனால் மனிதர்கள் கடன்தீர்ந் தவராவார்? இதையெல்லாம் கேட்கவிரும்புகிறோம். எங்களுக்கு மிக்கஆவலிருக்கிறது' என்றுகேட்டனர். பித்ருக்கள், 'ஓ! மஹானு பாவர்களே! நீங்கள் ஸந்தேகங்கேட்டது நியாயந்தான். நல்லகர்மம் செய்யும் மனிதர்கள்விஷயத்தில் நாங்கள்எப்படித்திருப்தியடைகிறோ மென்பதைக் கேளுங்கள். கறுப்புக்காளையைவிடுவதனாலும் அமா வாஸையில் எள்ளும்ஜலமும் விட்டுத் தர்ப்பணம்செய்வதனாலும் மழைக்காலத்தில் தீபம்வைப்பதனாலும்பித்ருக்களின்கடன் தீர்ந்தவனா வான். உண்மையோடுசெய்யப்படும்இந்தத்தானமானது பெரும்பயன்

[1] ஒருமாதக்கன்று.

உள்ளது; அக்ஷயம். எங்களுடையஸந்தோஷந்தான் அக்ஷயமென்று சொல்லப்படுகிறது. எந்தமனிதர்கள் சிரத்தையுடன் ஸந்ததியுண்டு பண்ணுகின்றனரோ அவர்கள் பித்ருக்களைக் கஷ்டமானநரகத்தினின்று கரையேற்றுவார்' என்றுசொன்னார்கள். சிறந்த மஹிமையுள்ள வ்ருத்தகார்க்கியரென்னும்முனிவர், பித்ருக்களின் சொல்லைக்கேட்டு மயிர்பொடித்தவராய் அவர்களைநோக்கி, 'தவமே தனமாகவுடையவர்களே! கறுத்தகாளையை விடுவதனாலும் மழைக்காலத்தில் தீபமேற்றுவதனாலும் எள்ளும்ஜலமும்விட்டு அமாவாஸையில் தர்ப்பணம்செய்வதனாலும் என்னபயன்கள் உண்டாகும்?' என்றுகேட்டார். அதற்கு, பித்ருக்கள், 'கறுத்தகாளையின்வால் தண்ணீரையெடுத்திறைக்குமாயின் அந்தஜலத்தினால் பித்ருக்கள் அறுபதினாயிரம் வருஷங்கள் திருப்தியடைவிக்கப்பட்டவராவார். அந்தக்காளைமாடானது கரையை இடித்துஎடுத்தமண்ணைக் கொம்பில்வைத்திருக்குமாயின் அதனால் பித்ருக்கள் சந்திரலோகத்திற்குப் போவது நிச்சயம். மழைக்காலத்தில்விளக்குவைக்கும்மனிதன் சந்திரனைப்போல விளங்குவான். தீபங்கொடுப்பவனுக்கு இருண்டநிறமேயிராது. தபோதனரே! அத்திக்கட்டையினாற்செய்த பாத்திரத்தையெடுத்துக்கொண்டு தேனுடன் சேர்ந்தஎள்ளுஜலத்தை அமாவாஸையில்விடுகின்றமனிதர்கள் சிராத்தத்தை ஸாங்கமாகவும் ஸரியாகவும் செய்தவர்களாகிறார்கள். அவருடையஸந்ததியார்கள் எப்போதும் மனமகிழ்ச்சியும் செல்வமுமுள்ளவர்களாயிருப்பார்கள். பிண்டங்கொடுப்பவனுக்கு ஸந்ததி மேன்மேலும் வ்ருத்தியாவதுதான் பலன். இவற்றைச் சிரத்தையுடன் செய்பவன் பித்ருக்களின்கடன்தீர்ந்தவனாவான். இவ்வாறு சிராத்தத்தினுடைய காலமும் வகையும் அதன்விதியும் அதற்குரியவனும் அதன்பயனும் உள்ளபடிசொல்லப்பட்டன.

---

## நூற்றெண்பத்தோன்பதாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(விஷ்ணுமுதலானதேவர்களும் பலதேவர்முதலான ரிஷிகளும் கோக்களும் சொல்லியதர்மங்கள்.)

'உமக்கு எதனால் அன்புண்டாகும்? நீர் திருப்தியடைவது எப்படி?' என்றுதேவேந்திரனால்கேட்கப்பட்ட ஈச்வரரான மகாவிஷ்ணு சொல்லலானார். 'பிராம்மணர்களைநிந்திப்பது எனக்குப் பெரும்பகை

செய்வதாகும். எப்போதும் பிராம்மணர்கள் பூஜிக்கப்படுவதனால் நான் பூஜிக்கப்படுவேனென்பது நிச்சயம். தினந்தோறும் போஜனத்திற்குப்பிறகுபிராம்மணஶ்ரேஷ்டர்களையும் [1]என்னுடையபாதங்களையும் வந்தனம்செய்து என் சக்ராயுதத்திற்குப் பூஜைசெய்பவரான மனிதர்விஷயத்தில் நான் அநுக்கிரகம்வைக்கிறேன். [2]குள்ளனை பிராம்மணனையும் தண்ணீரினின்றுகரையேறினபன்றியையும் பார்த்துப் பூமியிலிருந்து எடுத்தமண்ணைச் சிரஸில்வைத்துக்கொள்ளுகிறவர்களுக்கு ஓர் அமங்களமும் பாவமும் உண்டாகா. அரசமரத்தையும் கோரோசனையையும் பசுவையும் எக்காலமும்பூஜிக்கிறமனிதனால் தேவர்களும் மனிதர்களும் அஸுரர்களுமடங்கியஉலகமே பூஜிக்கப்பட்டதாகிறது. உண்மையில் நானே அந்தஅந்த ரூபத்தோடு அவர்களின் பூஜையைப் பெற்றுக்கொள்ளுகிறேன். உலகங்களுள்ளவரையிலும்நிற்கத்தக்க என்பூஜை இதுதான்; வேறில்லை. மிக்கபுத்திக்குறைவுள்ளமனிதர்கள் எனக்கு வேறுபூஜைகளை வீணாகச்செய்கிறார்கள். அவற்றை நான் பெற்றுக்கொள்வதில்லை. அவை எனக்குச் சந்தோஷத்தை உண்டுபண்ணுவனவாகா' என்றார். இந்திரன், 'சக்கரத்தையும் உமதுபாதங்களையும் பன்றியையும்குள்ளப்பிராம்மணனையும் பூமியிலிருந்துஎடுக்கப்பட்டமண்ணையும் நீர் ஏன்சிலாகிக்கிறீர்? எல்லாவற்றையும் ஆக்குகிறவரும் அழிக்கிறவரும் நீரே. மனிதர்முதலியஎல்லாப்பிராணிகளுக்கும்சாஶ்வதமானகாரணம்நீரே'என்று கேட்டான். அதன்பிறகு, விஷ்ணுவானவர் நகைத்துக்கொண்டு பின்வருமாறு சொல்லலானார். 'என்னால் சக்கரத்தினால் அஸுரர்கள் கொல்லப்பட்டனர்; கால்களினால் பூமி ஆக்கிரமிக்கப்பட்டது; வராகரூபத்தையெடுத்து ஹிரண்யாக்ஷன் கொல்லப்பட்டான்; வாமனரூபமெடுத்து அஸுரராஜனானபலி வெல்லப்பட்டான். ஆதலால், இந்த வகைகளால் என்னைப்பூஜிக்கும்மஹாத்மாக்களான மனிதர்கள்விஷயத்தில் நான் அநுக்கிரகம்செய்கிறேன். அவர்களுக்குத்தாழ்வில்லை. மேலும், பிரம்மசாரியானபிராம்மணன்வரக்கண்டு அந்தப்பிராம்மணனென்னும் அக்கினியில் ஹோமம்செய்தபிறகு சாப்பிடும்போஜனம் அம்ருதமாகிறது. சூரியனுக்குஎதிராகநின்று காலைச்சந்தியாவந்தனம்

[1] 'ஆத்மந:' என்பது மூலம். 'தன்காலை' என்பது பழையவுரை. ஸந்தியாகாலத்தில், தன் காலையேவணங்குதல் சிஷ்டாசாரமாயிருந்தது என்றும் அதனால் விளங்குகிறது.

[2] வாமனாவதாரத்தில் பூமியையளந்ததினாலும் வராகாவதாரத்தில் பூமியைக்கடலினின்றெடுத்ததினாலும் அந்தக்குறிப்பைச் செய்யவேண்டுமென்பது.

செய்வதனால் எல்லாத்தீர்த்தங்களிலும் ஸ்நானம்செய்தவனாகிறான். எல்லாப்பாவங்களாலும் விடப்படுகிறான். தபோதனர்களே ! ஸந்தேகம்கேட்கிற உங்களுக்கு இந்த ரகஸ்யமெல்லாவற்றையும் சொன்னேன். இன்னும் நான் என்னசொல்லக்கடவேன்?' என்றுகேட்டார். பலதேவரென்னும் ரிஷி, 'மனிதர்களுக்கு ஸுகத்தைத்தரும் ஒருபரம ரகஸ்யம் கேளுங்கள். இதையறியாதமூடர்கள்தாம் பூதங்களினால் பீடிக்கப்பட்டுக் கஷ்டப்படுகிறார்கள். எந்தமனிதன் காலையில்எழுந்து பசு, நெய், தயிர், கடுகு, தினைஇவற்றைத்தொடுகிறானோ அவன் பாவத்தினின்றுவிடுபடுகிறான். தவத்தைத்தனமாகவுடையவர்கள் அசுத்தத்தையும் அவற்றின்வழியாகவரும் முன்னும்பின்னுமுள்ளஎல்லாப் பூதங்களையும் விலக்கிவிடுகின்றனர்' என்றுசொன்னார். தேவர்கள், 'ஜலம்நிரம்பின அத்திமரப்பாத்திரத்தையெடுத்துக்கொண்டு வடக்கு முகமாகவிருந்து ஸங்கல்பத்துடன் எந்தஉபவாஸம் ஆரம்பித்தாலும் அவனிடத்தில் தேவதைகள் திருப்தியடைவார் ; நினைத்தபலன் கைகூடும். அல்பபுத்தியுள்ளமனிதர்கள்தாம் வேறுகர்மங்களை வீணாகச் செய்கின்றனர். உபவாஸத்திற்கும் பலிகொடுப்பதற்கும் தாம்ர பாத்திரம் சிறந்தது. பலியையும் பிக்ஷையையும் அர்க்கியத்தையும் பித்ருக்களுக்குஎள்ளையுந்தண்ணீரையும் தாம்ரபாத்திரத்தினால்கொடுக்கவேண்டும். இல்லாவிட்டால் பலன் குறைந்துபோம். இதனால், தேவர்கள் திருப்தியடைவார். இந்த ரகஸ்யத்தைச் சொன்னோம்' என்று கூறினர். தர்மதேவதை, 'அரசனிடத்தில்உத்யோகம்செய்பவன், காலந்தெரிவிப்பவன், பரிசாரகன், ஆ மேய்ப்பவன், வர்த்தகன், சிற்பவேலைசெய்பவன், பாடகன், ஸ்நேகிதனைமோசம்செய்தவன், வேதம் ஓதாதவன், சூத்திரப்பெண்ணை மனைவியாக வைத்துக்கொண்டிருப்பவன் இந்தப்பிராம்மணர்களுக்குத் தேவகாரியத்திலும் பித்ருகாரியத்திலும் எவ்வகையிலும் ஒன்றும்கொடுக்கலாகாது. அவர்களுக்கு அன்னம்கொடுப்பவர்கள் கெட்டுப்போவார். அந்தஅன்னம் பித்ருக்களைத் திருப்திசெய்விக்காது. விருந்தினன் எவன்வீட்டிலிருந்து நிராசையாகத் திரும்பிப்போகிறானோ அவன்வீட்டில் அதிதியை அழையாமையினாலே பித்ருக்களும் தேவர்களும் த்ரேதாக்நிகளும் நிராசையாய்த் திரும்பிப்போகின்றனர். அதிதியைப்பூஜியாதவனுக்கும் ஸ்த்ரீஹத்தி கோஹத்தி பிரம்மஹத்திசெய்தவருக்கும் நன்றிகெட்டவருக்கும் ஆசான்மனைவியைச்சேர்ந்தவருக்கும் பாவம்ஸரி' என்றுசொன்னான். அக்நி, 'மிகக்கெட்டபுத்தியுள்ள எந்தமனிதன் பசுக்களையும் மஹானுபாவனானபிராம்மணனையும் ஜ்வலிக்கின்ற

அக்நியையும் காலைத்தூக்கித்தொடுவனோ அவனுக்குப் பாவங்களைச் சொல்லப்போகிறேன். அவற்றைஊக்கத்துடன் கேளுங்கள். அவனது கெட்டபெயர் ஸ்வர்க்கத்தைச்சேரும். பித்ருக்கள் அவனுக்குப் பயப்படுவார். தேவர்களுக்கும் அவனால் மிகுந்தமனத்துயரம் செய்யப்பட்டதாகும். சிறந்தமஹிமையுள்ள அக்நிபகவான் அவன் ஹவிஸை வாங்குவதில்லை. நூறுஜன்மங்கள்வரையிலும் அவன் நரகத்தில் வேகவைக்கப்படுவான். அவனுக்குப் பிராயச்சித்தத்தையும் ஒருகாலும் யாரும் ஒப்பமாட்டார்கள். ஆதலால், சிரத்தையுள்ளவனும் தனதுநன்மையைக்கருதுகிறவனுமானமனிதன் பசுக்களையும் சிறந்தமஹிமையுள்ளபிராம்மணனையும் ஜ்வலிக்கின்ற அக்நியையும் ஒருகாலும் காலால் தொடலாகாது. மூவரிடத்திலும் பாதம்படச் செய்கிறவனுக்கு இந்தப்பாவங்கள் என்னால் உரைக்கப்பட்டன' என்றுசொன்னான். விஸ்வாமித்ரர், 'தர்மத்தைப்பற்றின மிக்க நுட்பமான ரஹஸ்யத்தைக் கேளுங்கள். புரட்டாசிமாஸத்தில் கிருஷ்ணபக்ஷத்தில் மகநக்ஷத்திரத்தில் மத்யான்னகாலத்தில் கிழக்கிலிருக்கும் [1]கஜச்சாயையில் தெற்குமுகமாகவிருந்து பித்ருக்களுக்குப் பாயஸான்னத்தைப் பிண்டமாகக்கொடுத்தால் அந்தத்தானத்தின்பலன் எப்படிப்பட்டதென்பதைக் கேளுங்கள். அவன் பதின்மூன்று வருஷகாலம் சிறந்தசிராத்தம்செய்ததாகும்' என்றனர். பசுக்கள், 'எங்களைப் பார்த்து,'எல்லாம் நிரம்பினவளே! புஷ்டியான அங்கங்களுள்ளவளே! எங்கும்பயமில்லாதவளே! க்ஷேமமாயிருப்பவளே! [2] என்போல் விருத்தியாகிறவளே! நீமுன்பு பிரம்மலோகத்திலும் வஜ்ராயுதத்தைத் தரிக்கும் இந்திரனுடையயாகத்திலும் விஷ்ணுவினுடைய ஸ்தானத்திலும் சூரியனுடையமார்க்கத்திலும் கன்றுடன்நின்றாய். தேவர்களனைவரும் நாரதருடன்கூட உனக்கு'ஸர்வஸஹா (=எல்லாவற்றையும் பொறுப்பவள்)' என்று பெயரிட்டிருக்கின்றனர்'என்னும் இந்தமந்திரத்தைச் சொல்லி வந்தனம்செய்பவன் பாபகர்மத்தினால் விடப்படுவான். கோக்களினாலுண்டானபலன்களாக இந்திரலோகத்

---

1 மஹாளயபக்ஷத்தில் மகநக்ஷத்ரத்துடன்கூடிய த்ரயோதசியும், அதே பக்ஷத்தில் ஹஸ்தநக்ஷத்ரம்சேர்ந்த அமாவாஸையும், சந்திரசூர்யக்ரஹண புண்யகாலமும், அமாவாஸை அபரான்னகாலத்தில் நிழல் கிழக்கே திரும்பியிருக்கும் காலமும், அமாவாஸையில் தன்னிழல் இரண்டுமடங்கு கிழக்கே திரும்பியிருக்கும் காலமும் 'கஜச்சாயை' என்பர். இதன்விவரத்தை மனுமுதலியஸ்மிருதிகளிலும் வைத்யநாததீக்ஷிதீயமுதலிய நிபந்தனக்ரந்தங்களிலும் சப்தகல்பத்ருமத்திலும் பார்க்கக் காணலாம். இந்தப்பர்வம், 480-ம் பக்கக்குறிப்பிலும் [காண்க.

2 ஸந்ததியினால் ஒவ்வொன்றாக அதிகமாவது.

தையும் சந்திரனுடையவொளியையும் அடைவான். தேவர்களால்ஜபிக் கப்படுவதாகியஇம்மந்திரத்தைப் புண்ணியகாலங்களில் கொட்டிலின் நடுவில்சொல்லுகிறவனுக்குப் பாவமும் அச்சமும் துயரமும் இருப்ப தில்லை. அவன் இந்திரலோகத்தையடைவான்' என்றுகூறின. பிறகு, மகானுபாவர்களும் எல்லாஉலகங்களிலும் பெயர்பெற்றவர்களுமாகிய வஸிஷ்டர்முதலியஸப்தரிஷிகள் தாமரைமலரில்பிறந்தவராகியபிரம்ம தேவரைப் பிரதக்ஷிணம்செய்து எல்லாரும் கைகூப்பிநின்றனர். அவர் களுள்சிறந்த பிரம்மஜ்ஞானியானவஸிஷ்டர்(பிரம்மதேவரைநோக்கி), 'பொருளில்லாதவேழைகளும் நல்லொழுக்கமுள்ளவர்களுமானமனிதர் கள் என்னகர்மம்செய்வதனால் யாகத்தின்பலனையடைவார்கள் ?' என்று எல்லாப்பிராணிகளுக்கும் முக்கியமாகப்பிராம்மணக்ஷத்திரி யர்களுக்கும் அனுகூலமான கேள்வியை எல்லாரிஷிகளுக்குமாகக் கேட்டார். பிரம்மதேவர் அவர்களின் அந்தச்சொல்லைக்கேட்டு, 'மஹானுபாவர்களே! யாருக்கும்தெரியாததும் மனிதர்களுக்கு மிக்கநன்மையையும் மங்களத்தையும்தருவதும் நுட்பமுமானகேள்வி உங்களால்கேட்கப்பட்டது. தபோதனர்களே! மனிதன் எதனால் ஸந்தேகமில்லாமல் யாகபலனெல்லாவற்றையும் அடையலாமென்ப தைச் சொல்வேன்; கேளுங்கள். தைமாஸம்சுக்லபக்ஷத்தில் ரோஹி ணிநக்ஷத்திரம்சேர்ந்ததினத்தில் சிரத்தையோடுஸ்நானம்செய்து சுத் தனும் மனஉறுதியுள்ளவனுமாகி மேலேமூடாதவிடத்தில் ஒற்றை வஸ்திரத்துடன் சயனம்செய்யவேண்டும். சந்திரனுடையகிரணங்க ளைக் குடிப்பதனால் மகாயாகத்தின்பலனையடைவான். பிராம்மணோத் தமர்களே! யாருக்குந்தெரியாதஉண்மையானவிஷயங்களைத் தெரிந்த நீங்கள் என்னைக்கேட்டதாகிய இந்தப்பரமரகஸ்யத்தை நான் உங்க ளுக்குச் சொன்னேன்' என்றுசொன்னார்.

---

## நூற்றுத்தொண்ணூறுவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(சூரியன்முதலியோர் சொல்லியதர்மங்கள்.)

விபாவஸு (=சூரியன்), 'பூர்ணிமையில் சந்திரன் உதயமாகும் போது அவனுக்கெதிரில்நின்று இருகரங்கள்நிரம்பிய ஜலத்தையும் நெய்கலந்தஅக்ஷதைகளையும் பூஜையாகக்கொடுக்கவேண்டும். அத னால், திரேதாக்நிகளில்ஹோமம்செய்ததும் அக்நிசுஶ்ரூஷைசெய்தது மாகும். அமாவாஸையில் மரத்தைவெட்டுகிறவன் புத்தியில்லாதவன்;

ஓர்இலையை உதிர்த்தாலும் அவனைப் பிரம்மஹத்தியணுகும். அமாவாஸையில் பற்கொம்பைக்கடிக்கும்புத்திகெட்டவன் சந்திரனையே பிடித்தவனாகிறான். அவனுக்குப் பித்ருக்களும் நடுங்குவர். தேவர்களும் புண்ணியகாலங்களில் அவன்கொடுக்கும்ஹவிஸை வாங்கார். பித்ருக்களும் அவன்மேல் கோபிப்பதனால் அவன்ஸந்ததி கெடும்' என்றுசொன்னான். ஸ்ரீதேவி, 'அழுக்கடைந்துகெட்டுப்போன எந்த வீட்டில் பாத்திரங்கள் கண்டஇடங்களில்போடப்பட்டும் பாண்டங்களும் ஆஸனங்களும் உடைக்கப்பட்டும் பெண்கள் அடிக்கப்பட்டும் இருக்கின்றனவோ அழுக்கடைந்துகெட்டுப்போன அந்தவீட்டிலிருந்து சுபகாலங்களிலும் சிராத்தகாலங்களிலும் தேவர்களும் பித்ருக்களும் நிராசையாய்த் திரும்பிப்போவார்கள்' என்றுசொன்னாள். அங்கிரஸ், 'ஒருவருஷம் நிரம்பும்வரையில் ஸுவர்ச்சலையென்னும் கொடியின்வேரைக்கையில்வைத்துக்கொண்டுகரஞ்சகமரத்தின்மேல் தீபம்வைப்பவனுக்கு ஸந்ததி விருத்தியாகும்' என்றுசொன்னார். கார்க்யர், 'நாள்தோறும் அதிதிஸத்காரம்செய்யவேண்டும்; வீட்டில் தீபம் வைக்கவேண்டும்; பகல்நித்திரையை விடவேண்டும்; மாம்ஸங்களைத் தின்னலாகாது. கோவையும் ப்ராம்மணனையும் துன்பம்செய்யலாகாது. புண்ணியக்ஷேத்திரங்களின்நாமங்களைச் சொல்லவேண்டும். இது நுட்பமும் பெரும்பலனைத்தருவதுமான சிறந்ததர்மம். அநேக நூற்றுக்கணக்காக யாகங்களைச்செய்தாலும் அவற்றில்ஹோமம் செய்யப்படும்நெய் அழிந்துபோகிறது. ஶ்ரத்தையுடன்செய்யப்பட்ட தர்மங்கள்மட்டும் அழிவதில்லை. யாருக்குந்தெரியாததும் முக்கியமுமான மற்றொருஸூக்ஷ்மவிஷயத்தையும்கேளுங்கள். சிராத்தத்திலும் தேவகார்யத்திலும் பர்வங்களிலும் மற்றப்புண்யகாலத்திலும் ரஜஸ்வலையானஸ்திரீ, வெண்குஷ்டமுள்ளவள், புத்திரனில்லாதவள் இவர்கள்கண்ணால்பார்த்தஅன்னத்தைத் தேவர்கள்புஜிப்பதில்லை; பித்ருக்கள் பதின்மூன்றுவருஷகாலம் திருப்தியடையாமலிருக்கின்றனர். வெண்மைவஸ்திரமுடுத்துப் பரிசுத்தனாகவிருந்து பிராம்மணர்களைக்கொண்டு ஸ்வஸ்திவாசனம்செய்விப்பதனாலும் பாரதத்தைப்படிப்பிப்பதனாலும் அந்தஹவிஸானது அக்ஷயமாகும்' என்று சொன்னார். தௌமியர், 'உடைந்தபாத்திரம், உடைந்தகட்டில், கோழி, நாய், வீட்டிற்குள்முளைத்தமரம் இவையெல்லாம் தீயவை. உடைந்தபாத்திரத்தினால் கலகமும் உடைந்தகட்டிலினால் தனநாசமும் உண்டாகுமென்று சொல்லுகின்றனர். கோழியும்நாயுமிருந்தால் தேவர்கள் ஹவிஸைப் புஜிக்கமாட்டார்கள். மரத்தினடியில் பூச்சிகளிருப்பது

நிச்சயம். ஆதலால், வீட்டில்மரத்தைநடலாகாது' என்றுசொன்னார். ஜமதக்னி, 'எவனுக்கு உள்ளம் பரிசுத்தமாயில்லையோ அவன் அச்வமேதயாகம்செய்தாலும் நூறுவாஜபேயயாகம்செய்தாலும் பெரிய ஸத்ரயாகத்தைச்செய்தாலும் தலைகீழாய்த்தொங்கித் தவம்செய்தாலும் நரகம்போவது திண்ணம். யாகமும் ஸத்தியமும் மனத்தூய்மையும் ஸரியானவை. சுத்தமனத்துடன் ஒருபடிமாவை ப்ராம்மணனுக்குக்கொடுத்தவன் பிரம்மலோகத்தை அடைந்திருக்கிறான். அதுவே போதுமான உதாரணம்' என்று சொன்னார்.

---

## நூற்றுத்தொண்ணூற்றேராவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(வாயு சொல்லிய தர்மங்கள்.)

வாயு, 'மனிதர்களுக்கு ஸுகத்தைத்தரும் ஒரு விரதத்தைச் சொல்வேன். ஸூக்ஷ்மமானகுற்றங்களையும் சொல்வேன். ஊக்கத்துடன் கேளுங்கள். அக்நிஹோத்திரத்தையும் பரமான்னபோஜனத்தையும் செய்யவும் தீபம்வைக்கவும் பித்ருக்களுக்கு எள்ளும்ஜலமும்தர்ப்பணம்செய்யவும்வேண்டும். இந்தவிதிப்படி மனிதன் ஸ்ரத்தையோடும் பக்தியோடும் மழைக்காலத்தியநான்குமாஸங்கள் எள்ளும்ஜலமும்விட்டுத் தன்சக்திக்குத்தக்கபடி வேதத்திற்கரைகண்ட ப்ராம்மணனைப்பூஜிப்பித்தால் நூறுயாகங்களின்பூர்ணபலனை அடையலாம். மற்றும்ஒருரகஸ்யமான தோஷத்தையும் தெரிந்துகொள்ளுங்கள். சூத்திரனும் அறிவில்லாதஸ்த்ரீகளும் அக்நிக்கு ஹவிஸைக் கொண்டுவந்தால் யஜமானன் அதைத் தர்மமென்றே நினைக்கிறான்; அவனைப் பாவம் விடுவதில்லை. திரேதாக்நிகள் அவன்மேல் கோபிக்கின்றன. அவன் சூத்திரயோனியிற்பிறப்பான். முக்கியமாகப் பிதிருக்களும் தேவர்களும் திருப்தியாவதில்லை. அதற்குப் பிராயச்சித்தத்தையும் சொல்லுகிறேன்; கேளுங்கள். மனிதன் அதைச்செய்தபிறகு துயரமின்றி நல்லஸுகம்பெறலாம். மூன்றுதினங்கள் ஆகாரத்தைவிட்டு நியமத்துடன் பசுவின்மூத்திரம்சாணம்பால்நெய்களைக் கொண்டே அக்நிஹோத்திரம்செய்யவேண்டும். அதன்பிறகு, ஒருவருஷம்நிறைந்தபின் தேவர்கள் ஹவிஸை வாங்குவர். சிராத்தகாலம் வந்தபோது அவனுடையபித்ருக்களும் ஸந்தோஷமாக இருப்பார். இவ்வாறு ஸூக்ஷ்மமானதர்மத்தையும் அதர்மத்தையும் சொன்னேன். இது ஸ்வர்க்கத்தைவிரும்பும் மனிதர்களுக்கு இறந்தபின் ஸ்வர்க்க ஸுகத்தைத்தருவது' என்றுசொன்னான்.

## நாற்றுத்தொண்ணூற்றிரண்டாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(லோமசர் சொல்லிய தர்மங்கள்.)

லோமசர், 'மணம்செய்துகொள்ளாமல் பிறர்மனைவிகளிடம்பற்று வைத்திருப்பவர் ஸ்ராத்தம்செய்யும்போது அவர்களின்பித்ருக்கள் ஆசையற்றுப்போகின்றனர். பிறர்மனைவியைப்பற்றுகிறவனும் மலடியை அநுஸரிப்பவனும் ப்ராம்மணன்பொருளையெடுப்பவனும் ஸமமானபாவிகளாகிறார். அவர்கள் பித்ருக்களால் பேசவும் தகாதவர்களாகிறார்கள். இதில் ஸந்தேகமில்லை. அவர்கள்கொடுக்கும்ஹவிஸைத் தேவர்களும் பித்ருக்களும் எடுத்துக்கொள்வதில்லை. ஆதலால், பிறர்மனைவியையும் மலடியையும் விடவேண்டும். தன்நன்மையைக்கருதுகிறவன் ப்ராம்மணன்பொருளை எடுக்கலாகாது. யாருக்குந்தெரியாத மற்றொருமுக்கியமான தர்மரகஸ்யத்தைப்பற்றியுங்கேளுங்கள். எப்போதும் பெரியோர்சொல்லியதை ஊக்கத்துடன் செய்யவேண்டும். மாதந்தோறும் துவாதசியிலும் பூர்ணிமையிலும் நெய்யையும் அக்ஷதைகளையும் ப்ராம்மணர்களுக்குக் கொடுக்கவேண்டும். அதன்பலனைக் கேளுங்கள். அதனால் சந்திரன் விருத்தியாகிறான்; கடல் பொங்குகிறது. அவனுக்கு அச்வமேதயாகத்தின் நாலில்ஒருபங்குபலனை இந்திரன் கொடுக்கிறான். இந்தத்தானததினால் மனிதன் ஒளியும் சக்தியுமுள்ளவனாவான். பகவானானசந்திரன் அநுக்கிரகம்வைத்து அவன்விரும்பும்பலன்களைக் கொடுப்பான். இந்தக்கலியுகத்திலிருக்கும்மனிதர்களுக்கும் ஸுகத்தையும் பெரும்பலனையும்தருவதானமற்றொருமுக்கியமான தர்மஸூக்ஷமத்தையும் கேளுங்கள். காலையில் எழுந்து ஸ்நானம்செய்து வெள்ளைவஸ்திரம்தரித்துப் பக்தியுடன் ப்ராம்மணர்களுக்கு எள்பாத்திரத்தையும் தீபத்தையும் க்ருஸரத்தையும் பித்ருக்களுக்குத் தேனுடன் எள்ளையும்தண்ணீரையும் கொடுக்கிறமனிதனுக்குள்ளபலனைக் கேளுங்கள். திலபாத்திரத்தைக்கொடுப்பதின்பலனைப் பகவானை இந்திரன்சொல்லியிருக்கிறான். கோதானமும் சாஸ்வதமானபூதானமும்செய்வதும் நிரம்பினதக்ஷிணைகளோடு அக்நிஷ்டோமயாகம்செய்வதும் திலபாத்திரம்கொடுப்பதும் ஸமமென்று தேவர்கள் நினைக்கின்றனர். சிராத்தத்தில் எப்போதும் எள்ளும்ஜலமுமே அக்ஷயமென்று பிதிருக்கள் நினைக்கின்றனர். தீபத்தையும் க்ருஸரத்தையும்கொடுப்பதனால் அவனதுபித்ருக்கள் திருப்தி

அடைகின்றனர். இவ்வாறு ஸ்வர்க்கத்திலும் பித்ருலோகத்திலும் பித்ருக்களாலும் தேவர்களாலும்கொண்டாடப்பட்டதும் ஆதிகாலந் தொடங்கி ரிஷிகளால்கண்டறியப்பட்டதுமான இந்தத்தர்மம் என்றுசொல்லப்பட்டது' என்றுசொன்னார்.

## நூற்றுத்தொண்ணூற்றுமூன்றாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(அருந்ததியும் ஸூர்யனும் யமனும்சொல்லிய தர்மங்கள்.)

அதன்பிறகு, ரிஷிகள் தேவர்கள் பித்ருக்கள் அனைவரும் சேர்ந்து மனத்தையடக்கி மஹாத்மாவானவஸிஷ்டருக்குச்சமமானமஹிமையுள்ளவளும் தவத்தினால் பெரியவளுமான அருந்ததியைப்பார்த்து, 'அம்மா! நாங்கள் தர்மஸூக்ஷ்மங்களை உன்னிடத்தில் கேட்க விரும்புகிறோம். உனக்கு எது மிக்கஸூக்ஷ்மமாகத்தோன்றுகிறதோ அதனைச் சொல்லக்கடவாய்' என்றுகேட்டனர். அருந்ததி, 'உங்களை நினைப்பதனாலேதான் எனக்குத் தவத்தின்சிறப்புக் கிடைத்திருக்கிறது. உங்கள் அனுக்கிரகத்தினால் அழியாதநர்மங்களைஸூக்ஷ்மங்களோடும் முக்கியாம்சங்களோடும் சேர்த்துச்சொல்வேன். அவற்றை எல்லாம் கேளுங்கள். ச்ரத்தையுள்ளவனுக்கும் பரிசுத்தமானமனமுள்ளவனுக்குந்தான் தர்மங்களைச் சொல்லலாம். ச்ரத்தையில்லாதவன் அகங்காரமுள்ளவன் பிரம்மஹத்திசெய்தவன் ஆசாரியன்மனைவியைச்சேர்ந்தவன் இந்நால்வரும் சம்பாஷணைக்குத்தகாதவர். இவர்களிடத்தில் தர்மத்தை வெளியிடலாகாது. தினத்திற்கொரு கபிலையாகப் பன்னிரண்டுவருஷகாலம் தானம்செய்கிறவனும் மாதந்தோறும் ஸத்ரயாகம்விடாமற்செய்கிறவனும் ஆனிமாஸத்தில் புஷ்கர க்ஷேத்திரத்தில் லக்ஷம்கோதானம்செய்பவனும் அடையும்புண்ணிய பலன்கள் ஓர் அதிதியைத்திருப்திசெய்விப்பவனுடைய புண்ணியபலனுக்கு ஒப்பாகாதவை. மனிதர்களுக்கு ஸுகத்தைத்தருவதும் ச்ரத்தையோடு செய்யத்தக்கதும் பெரும்பலனைத்தருவதுமாகிய மற்றொரு ஸூக்ஷ்மமானதர்மத்தையும் கேளுங்கள். காலையில்எழுந்து ஆகாரம்செய்யாமல் தர்ப்பங்களையும்ஜலத்தையும் எடுத்துக்கொண்டு பசுக்களின்நடுவில்போய்த் தர்ப்பங்களினால் ஜலத்தை அவற்றின் கொம்புகளில்தெளித்து அந்தக்கொம்பின்ஜலத்தைத் தலையில் வாங்கிக்கொள்ளவேண்டும். அந்தப்புண்ணியத்தின்பலனைக் கேளுங்கள்.

மூன்றுலோகங்களிலும் ஸித்தர்களாலும் சாரணர்களாலும் மஹரிஷிகளாலும் அடையப்பட்டபுண்ணியதீர்த்தங்களென்று பெயர்பெற்றவை எவ்வளவோ அவ்வளவிலும்ஸ்நானம்செய்வதும் பசுக்களின் கொம்பின்ஜலம்தலையில்படுவதும் ஒப்பு' என்றுசொன்னாள். தேவர்களும் பித்ருக்களும் அதை, 'சரி, சரி' என்றுசொன்னார்கள். அந்த அருந்ததி எல்லாப்பிராணிகளாலும் மிக்கஸந்தோஷத்துடன் பூஜிக்கப்பட்டாள். பிரம்மதேவர், 'ஓ! மகாநுபாவையே! ஆ! ஆ! ஸூக்ஷ்மமானதர்மம் உன்னாலுரைக்கப்பட்டது. பாக்கியம்பெற்றவளே! உனக்குவரன்கொடுக்கிறேன். உன்தவம் எப்போதும்விருத்தியாய்க்கொண்டிருக்கக்கடவது' என்றுசொன்னார். யமன், 'உங்களிடத்தில் நான்கேட்ட இந்த உயர்ந்த பேச்சு அழகாயிருக்கிறது. எனக்குப்பிரியமுள்ளதும் சித்ரகுப்தனால்சொல்லப்பட்டதுமான ஒரு விஷயத்தைச் சொல்லுகிறேன்; கேளுங்கள். தர்மத்தைப்பற்றின ஸூக்ஷ்மம்மஹரிஷிகளும் தன்நன்மையைக்கருதுகிறஸ்ரத்தையுள்ள மனிதனும் கேட்கக்கூடியது. செய்யப்பட்ட புண்ணியபாவங்கள் ஒன்றும்அழிகிறதில்லை. அமாவாஸை பூர்ணிமைக்காலங்களில் அவை எல்லாம் சூரியனிடத்தில்சேருகின்றன. மனிதன் இறந்து வேறு லோகம்போனபிறகு புண்ணியமேஉருவமாயிருக்கும் சூரியன் அவற்றையெல்லாம் திருப்பிக்கொடுக்கிறான். அவை அவ்வுலகத்தில் அனுபவிக்கப்படுகின்றன. சித்ரகுப்தன்சொன்ன ஒரு சிறந்ததர்மத்தைச் சொல்லப்போகிறேன்: குடிக்கத்தண்ணீரையும் தீபத்தையும் எப்போதும் கொடுக்கவேண்டும். பாதுகைகளையும் குடையையும் கபிலையையும் அந்தஅந்தக் காலங்களில் கொடுக்கவேண்டும். புஷ்கர க்ஷேத்திரத்தில் வேதங்களில்கரைகண்ட ப்ராம்மணனுக்குக் கபிலை கொடுக்கத்தக்கது. அக்நிஹோத்திரத்தை முழுஜாக்ரதையுடன் காப்பாற்றிவரவேண்டும். சித்ரகுப்தனால் சொல்லப்பட்ட மற்றொரு தர்மத்தையும் சொல்லுகிறேன். சிறந்தஸாதுக்களே! இதின்பலனை நீங்கள் தனியாகக்கேட்கவேண்டும். எல்லாப்பிராணிகளும் காலக்கிரமத்தில் மரணமடைவது நிச்சயம்; அப்போது, பசிதாகங்களினால் பீடிக்கப்பட்டுக் கஷ்டத்தையடைந்து கொளுத்தப்பட்டும் வேகவைக்கப்பட்டுமிருக்கின்றன; அங்கிருந்து ஓடிப்போவதற்கில்லை; பயங்கரமானகுருட்டிருளிலகப்பட்டு அறிவில்லாமற்போகின்றன. அவ்விடத்தில் துக்கங்களைத் தாண்டுவதற்குரியதும் சிறியசெலவும் பெரியலாபமுமுள்ளதும் இறந்தபின் இன்பத்தையுண்டாக்கத்தக்கதுமான தர்மத்தைச் சொல்வேன். குடிதண்ணீர்கொடுப்பதின்சிறப்புக்கள் அரியவை.

அவை ப்ரேதலோகத்தில் மிகச்சிறந்தவை. ஜலம் கொடுப்பவர்களுக்கு அவ்வுலகத்தில் [1]புண்யோதகையென்னும்நதி உண்டாக்கப்படுகிறது. அதன்ஜலம் வற்றாமலும் குளிர்ச்சியாகவும் அமிருதத்திற்கொப்பாகவுமிருக்கிறது. குடிதண்ணீர்கொடுப்பவன் அந்நதியில் ஜலத்தைக்குடிப்பான். தீபங்கொடுப்பதனாலுண்டாகும் சிறப்பைப்பற்றியும்விரிவாகச்சொல்லுகிறேன்; கேளுங்கள். தீபங்கொடுப்பவன் அவ்வுலகத்தில் இருளைப்பார்ப்பதில்லையென்பது திண்ணம். சந்திரனும் சூரியனும் அக்நியும் அவனுக்கு ஒளியைக்கொடுக்கின்றனர். தேவதைகள் அவனுக்கு எல்லாத்திசைகளையும் துலங்கச்செய்கின்றனர். அம்மனிதன் ப்ரேதலோகத்திலிருந்துகொண்டு சூரியன்போலப்பிரகாசிப்பான். ஆதலால், தீபத்தையும் குடிதண்ணீரையும் முக்கியமாகக் கொடுக்கவேண்டும். வேதங்களில்கரைகண்டப்ராம்மணனுக்குப்புஷ்கரக்ஷேத்திரத்தில் கபிலையைக்கொடுப்பதின் விசேஷபலனைக்கேளுங்கள். ஒருகபிலையைக்கொடுத்தவன் விருஷபங்களுடன் நூறு பசுக்களைக்கொடுத்தபலனை நீண்டகாலம் அடைவான். அவனிடத்திலுள்ள பிரம்மஹத்திக்குச்சமமான பாவமெல்லாவற்றையும் ஒரு கபிலை நீக்கிவிடும். அது நூறுகோதானங்களுக்குச்சமம். ஆதலால், ஆனிமாஸம் சுக்லபக்ஷத்தில் புஷ்கரக்ஷேத்திரத்தில் கபிலையைத் தானஞ்செய்யவேண்டும். தகுதியுள்ள ப்ராம்மணோத்தமனுக்குப் பாதுகைகளைக்கொடுப்பவர் ஸங்கடத்தையும் துயரத்தையும் முள்ளைப்பதையும்அடையார். குடைகொடுப்பவன் பரலோகத்தில் சுகமான நிழலைஅடைவான். கொடுத்ததானத்திற்கு ஒருநாளும் அழிவில்லையே' என்றுசொன்னான். சிறந்தஒளியுள்ளசூரியன் சித்ரகுப்தனுடைய அபிப்ராயத்தைக்கேட்டதினால் மயிர்பொடித்து,தேவர்கள் பித்ருக்கள் அனைவரையும்பார்த்து, 'மஹாத்மாவான சித்ரகுப்தன் சொன்னதர்மரஹஸ்யத்தைக் கேட்டீர்களன்றோ? மஹாத்மாக்களான ப்ராம்மணர்களுக்கு இந்தத்தானங்களைச் சிரத்தையுடன் கொடுக்கும் மனிதர்களுக்குப்பயமில்லை. இனிச்சொல்லப்படும் ஐந்துபேர்தாம் தர்மத்தைக்கெடுப்பவர்கள். அவர்களுக்கு இந்தஜன்மத்தில் பரிகாரமில்லை. ஆசாரங்கெட்ட அந்தஇழிவானமனிதர்களைச் சம்பாஷணம்செய்யாமல் விட்டுவிடவேண்டும். பிரம்மஹத்திசெய்தவன் கோஹத்திசெய்தவன் பிறர்மனைவிகளிடம்சேருகிறவன் ஶ்ரத்தையில்லாதவன் ஸ்திரீயைக்கொண்டுபிழைப்பவன்இவ்வைந்துபாவிகளும் ப்ரேதலோகத்தையடைந்து நரகத்தில் சீழையும் ரத்தத்தையும் புசித்துக்

---

[1] பரிசுத்தமான ஜலமுள்ளது.

கொண்டு மீன்கள்போல வேகவைக்கப்படுவர். இவ்வைவரும் பித்ருக்களாலும் தேவர்களாலும் ஸ்நாதகப்ராம்மணர்களாலும் தபோதனர்களாலும் ஸம்பாஷணம் செய்யத்தகாதவர்' என்றுசொன்னான்.

---

## நூற்றுத்தொண்ணூற்றுநான்காவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(பிரமதர்கள், தம்மால் மனிதருக்குப் பீடைவருங்காரணத்தையும் அதைத்தடுக்கும் உபாயத்தையும் கூறியது.)

பிறகு, மஹாநுபாவர்களானதேவர்கள் பித்ருக்கள் ரிஷிகள் அனைவரும் பிரமதர்களைப்பார்த்து, 'நீங்கள் மஹாநுபாவர்கள்; ராத்ரியில் கண்ணுக்குப்புலப்படும்படி ஸஞ்சரிப்பவர்கள். எச்சிலும், தீட்டுமுள்ள அற்பமனிதர்களை நீங்கள் எப்படிப் பீடிக்கிறீர்கள்? நீங்கள் மனிதர்களைப்பீடியாமலிருப்பதற்குச் சொல்லப்பட்டபரிகாரங்கள் எவை? ராக்ஷஸர்களையொழிக்கும்கர்மங்கள் எவை? எவற்றினால் நீங்கள் வீடுகளில் காணப்படாமல்போவீர்கள்? பூதங்களே! இவற்றையெல்லாம் உங்களிடம் கேட்கவிரும்புகிறோம்' என்று வினவினார்கள்.

ப்ரமதர்கள், 'புணர்ச்சியினாலும், மேல்கீழ்அவயவங்களில் ஸம்பந்தப்படும்வஸ்திரங்கள்முதலியவற்றைக் கீழ்மேலாக மாற்றுவதனாலும் மனிதர் எச்சிலாகிறார். அறிவில்லாமல் மாம்ஸத்தைப்புஜிப்பவனும் மரத்தடியில்படுப்பவனும் சாப்பிட்டதக்கவைகளைத் தலையில்வைத்துக் கொள்பவனும் கால்வைக்குமிடத்தில் தலைவைத்துப்படுப்பவனும் ஜலத்தில்மலமூத்திரங்களைவிடுகிறவனும் கோழையை உமிழ்கிறவனும் ஆகியமனிதர்கள்அனைவரும் இந்தக்காரியங்களாலேயே எச்சிலானவர்களும் நாங்கள்நுழையத்தக்க அநேகசந்துகளுள்ளவர்களும் ஆகிறார்கள். இந்தமனிதர்கள் எங்களால் பக்ஷிக்கவும் கொல்லவும் படுவார்; இதில் ஸந்தேகமில்லை. இவ்வகையானகுணமும் நடக்கையுமுள்ளமனிதர்களை நாங்கள் ஹிம்ஸிப்போம். நாங்கள்ஹிம்ஸிக்க முடியாமலிருக்கும்பரிகாரங்களையும் கேளுங்கள். கோரோசனையை உடம்பில்பூசிக்கொண்டவரும் வசம்பைக் கையில்வைத்திருப்பவரும் நெய்யோடுசேர்ந்த அக்ஷதையை ஸ்ரத்தையுடன் தலையில்வைத்திருப்பவரும் மாம்ஸம்தின்னாதவருமானமனிதர்களைத் துன்பஞ்செய்ய எங்களால் முடியாது. எவன்வீட்டில் எந்நாளும் இரவும் பகலு

அக்நி ஜ்வலிக்கிறதோ, புலியின்தோலும் பற்களும் மலையாமையும் நெய்ப்புகையும் பூனையும் கறுப்புஅல்லதுசிவப்புஆடும்எவர்வீடுகளில் இருக்கின்றனவோ அந்தவீடுகளை எல்லாலோகங்களிலும்இஷ்டப்படி ஸஞ்சரிக்கும் எம்போன்ற மிகக்கொடியபூதங்களும் ஆக்கிரமிக்கமுடியாது. [1] ஆதலால், இவைகள் வீடுகளில் ராக்ஷஸர்களைப்போக்குகின்றவை. உங்களுக்குப் பெரியஸந்தேகமிருந்த இந்த விஷயத்தையெல்லாம் சொன்னோம்' என்றுகூறினர்.

## நூற்றுத்தொண்ணூற்றைந்தாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(திக்குயானைகள் நாகபலிஅவச்யமென்று ரேணுகனென்னும் யானைக்குச் சொல்லியது.)

பிறகு, தாமரைமலரிலிருந்து பிறந்தவரும் தாமரைமலர்நிறமுள்ளவருமான பிரம்மதேவர் தேவர்களையும் தேவேந்திரனையும் நோக்கி, 'இந்த ரேணுகனென்னும்யானை பாதாளத்தில் ஸஞ்சரிப்பது; சிறந்தபலமும் ஒளியும் தைரியமும் பராக்கிரமமுமுள்ளது. சிறந்தமகிமையும்சக்தியுமுள்ள கஜச்ரேஷ்டங்களாகிய திக்கஜங்கள் அனைத்தும் மலைகளும்செடிகளும்காடுகளும் அடங்கிய பூமியனைத்தையும் தாங்குகின்றன. இந்தரேணுகன் உங்களால் அனுமதிகொடுக்கப்பெற்று அந்தமஹாகஜங்களிடம்சென்றுஅவைகளிடத்தில் தர்மரகஸ்யங்களைக் கேட்கட்டும்' என்று சொன்னார். பிரம்மதேவர்சொன்னதைக்கேட்டு, அந்தத்தேவர்கள் ச்ரத்தையுடன் திக்கஜங்களிருக்குமிடத்திற்கு ரேணுகனை அனுப்பினார்கள். ரேணுகன் அந்தயானைகளிடம்சென்று, 'மிக்கபலசாலிகளே! தேவர்களாலும் பித்ருக்களாலும் நான் அனுப்பப்பட்டிருக்கிறேன். ஸூக்ஷ்மமான தர்மங்களை உங்களிடம் தெளிவாகக் கேட்கவிரும்புகிறேன். மஹானுபாவர்களான நீங்கள் நினைக்கும் உண்மையைச் சொல்லுங்கள்' என்றுகேட்டது. திக்கஜங்கள், 'கார்த்திகைமாஸம் ஆயில்யநக்ஷத்திரம்சேர்ந்த கிருஷ்ணபக்ஷ அஷ்டமி புண்ணியமானது. அந்த நக்ஷத்திரம்சேர்ந்த தினத்தில், 'மிகச்சிறந்தபலமுள்ளவர்களும் எக்காலும் அழியாதவர்களுமான பலதேவன்முதலானநாகர்களும் அவர்களின் குலங்களில் பிறந்தநாகச்ரேஷ்டர்களும்எனக்குப்பலமும்ஊக்கமும்வ்ருத்தியடை

[1] ஒருசொல் விடப்பட்டது.

யும்படி நான்கொடுக்கும்பலியைப் [1]பெற்றுக்கொள்ளக்கடவர்.லக்ஷ்மீ பதியானநாராயணர்பூமியையெடுக்கும்போது அவருக்குஇருந்தபலம் எனக்குஉண்டாகவேண்டும்' என்னும்இந்தமந்திரத்தை ஜபித்துப் புற்றில் பலியைப் போடவேண்டும். கஜராஜனே! அந்தப்பலியைப் புஷ்பங்களோடும் சந்தனங்களோடும் கறுப்புவஸ்திரத்தோடும் ஸூர்யன்அஸ்தமனமாகும்போது புற்றில் போடவேண்டும். கீழிருந்து பூமியைத்தரித்துப் பாரத்தினால்பீடிக்கப்பட்ட நாங்களனைவரும் இப்படிச்செய்வதனால் ஸந்தோஷமடைந்து அந்தச்சிரமத்தை அறியாமல் இருப்போம். பாரத்தினால்பீடிக்கப்பட்ட நாங்களனைவரும் வேறுஒன்றையும்விரும்பாமல் இதையே கருதுகிறோம். பிராம்மணனும் க்ஷத்திரியனும் வைஸ்யனும் சூத்திரனும் உபவாஸத்துடன் ஒருவருஷம் இவ்வாறு தானம்செய்வதனால் மிகுதியானபலன்களை அடைவார். புற்றில் பலிவைப்பதற்குப் பலன்கள் அதிகமென்பது எங்கள் அபிப்ராயம். மூவுலகங்களிலும் சிறந்தசக்தியுள்ள [2]நாகங்களெல்லாவற்றிற்கும் உண்மையில் நூறுவருஷங்கள் அதிதிபூஜை செய்ததுபோலாகும்' என்றுகூறின. திக்கஜங்கள்சொன்னதை ரேணுகனிடம்கேட்டுத் தேவர்களும் பித்ருக்களும் மஹானுபாவர்களான ரிஷிகளும் ரேணுகனைக் கொண்டாடினர்.

---

## நூற்றுமுப்பத்தோராவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(மஹேஸ்வரர் கோதானத்தின் சிறப்பைச் சொல்லியது.)

மஹேஸ்வரர், 'உங்களால் ஸாரம்சத்தையெடுத்து நன்றாகத் தர்மம் சொல்லப்பட்டது. நீங்களெல்லாரும் மற்றொருதர்மஸூக்ஷ்மத்தை என்னிடம் கேளுங்கள். யாருடையபுத்தி தர்மத்திலேயே பற்றியிருக்கிறதோ, எவர்களுக்குத் தர்மம்செய்வதில் ஸ்ரத்தையிருக்கிறதோ அவர்களுக்குத்தான் பெரும்பலனைத்தரும் இந்தத் தர்மஸூக்ஷ்மத்தை உபதேசிக்கலாம். எவன் தினத்திற்கொருபசுவாக ஒருமாதம் வெறுப்பில்லாமல் தானம்செய்து ஒருவேளைபுசித்துக் கொண்டிருக்கிறானோ அவனுக்குள்ளபலனைக் கேட்கவேண்டும். இந்

---

1 'ப்ரதீச்சந்து' என்று பாடங்கொள்ளப்பட்டது.

2 திக்கஜங்களும், ஆதிசேஷனும் பூமியைத்தாங்குவதனாலும் நாகம்என்னும்பெயர் ஸர்ப்பத்திற்கும் யானைக்கும் பொதுவாயிருத்தலாலும் இவ்வாறு சொல்லப்பட்டது.

தப்பசுக்கள் சிறந்த மகிமையுள்ளவைகள்; பரிசுத்தங்களிற்சிறந்தவை யென்று சொல்லப்படுகின்றன. தேவர் அஸுரர் மனிதர்களோடு கூடிய மூன்றுலோகங்களையும் இவை காப்பாற்றுகின்றன. அவற்றி னிடம் சிறந்தபுண்ணியமிருக்கிறது. அவற்றிற்கு உபசாரம்செய்வத னால் பெரும்பலனுண்டு. தினந்தோறும் கோதானம்செய்பவன் தினந்தோறும் தர்மத்தையடைகிறான். முன்னே க்ருதயுகத்தில் பதுமத்தில்பிறந்தவரான பிரம்மதேவர் என்னைவேண்டினதின்மேல் என்னால் அந்தப்பசுக்கள் அனுக்கிரகிக்கப்பட்டன. அதனால்தான், கொட்டிலிலிருக்கும்விருஷபம் (கொடியாக) எனக்குமேலிருக்கிறது. நான் பசுக்களோடுவசிப்பதனால் மகிழ்கிறேன். ஆதலால், அவற்றை எப்போதும் பூஜிக்கவேண்டும். அவை அளவற்றபெருமையுள்ளவை; வரன்கொடுக்கத்திறமையுள்ளவை. உபசரித்தால் வரமளிக்கும்அந்தப் பசுக்களே எல்லாக்கர்மங்களின்பலன்களையும் மனிதனுக்குக் கொடுக் கும். தினந்தோறும் கோதானம்செய்பவனுக்குப் பூர்ணபலனுண்டு' என்றுசொன்னார்.

---

## நூற்றுத்தொண்ணூற்றேழாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(ஸுப்ரம்மண்யர் தர்மஞ் சொல்லியதும் விஷ்ணு எல்லாத் தர்மங்களையும் புகழ்ந்ததும்.)

ஸ்கந்தர், 'நான்நினைக்குந்தர்மமும் ஒன்றிருக்கிறது. அதனை ஊக்கத்துடன் கேளுங்கள். கறுத்த காளையின்கொம்புகளிலிருந்து மண்ணையெடுத்து அதனால் மூன்றுதினம் ஸ்நானம்செய்தால் உண்டா கும்பலனைக் கேளுங்கள். பாவங்களையெல்லாம்போக்கிவிடும். மேலுல கத்தில் முதன்மையாகச்செய்யும். எதுவரையில் மனிதன் பிறவியில் பிறக்கிறானோ அதுவரையிலும் சூரனாகவேயிருப்பான். யாருக்குந் தெரியாத மற்றொரு முக்கியரகஸ்யத்தைச்சொல்லுகிறேன்; கேளுங் கள். அத்திமரப்பாத்திரத்தில் தேன்கலந்துசமைத்தசோற்றையெடுத் துக்கொண்டு பூர்ணிமையில் சந்திரன்உதயமாகும்போது பலியைப் போடவேண்டும். அந்தத்தர்மத்தின்பலன் அழியாதது. அதனை ஶ்ரத்தையுடன் தெரிந்துகொள்ளுங்கள். ஸாத்தியர்கள் ருத்திரர்கள் ஆதித்தியர்கள் விஶ்வேதேவர்கள் அஶ்வினிதேவர்கள் ஸப்தமருத் துக்கள் அஷ்டவஸுக்கள் இவர்கள் அந்தஅன்னபலியைப் பெற்றுக்

கொள்ளுகின்றனர். அதனால், சந்திரனும் வளர்ச்சியடைகிறான்; பெருங்கடலும் பெருக்கமடைகிறது. எல்லாருக்கும்ஸுகத்தைத்தருவதாகிய இந்தஸூக்ஷ்மமான தர்மத்தை நான் சொன்னேன்' என்று சொன்னார். விஷ்ணுவானவர், 'மஹாத்மாக்களான தேவர்களும் ரிஷிகளும்சொன்ன தர்மஸூக்ஷ்மங்கள்எல்லாவற்றையும் ஸ்ரத்தையோடும் பக்தியோடும் தினந்தோறும்படிப்பவனுக்கும் வெறுப்பின்றிக்கேட்பவனுக்கும் ஒருகாரியத்திலும் இடையூறு வருவதில்லை; பயமுண்டாவதில்லை. மங்களத்தையும் புண்ணியத்தையும் தருவனவாகச்சொல்லப்பட்ட ஸூக்ஷ்மமான இந்தத்தர்மங்களைச்செய்தவருக்குள்ளபலன் ஜிதேந்திரியனாயிருந்து படிப்பவனுக்குமுண்டு. அவன் பாவம் தலையெடாது. அவனிடத்தில் பாவம் அணுகாது. தான் படித்தாலும் பிறருக்குச்சொன்னாலும்கேட்டாலும் தர்மத்தின்பலனையடையலாம். தேவர்களும் பித்ருக்களும் அவனுடைய ஹவ்யகவ்யங்களை நீண்டகாலம் புஜிப்பர். புண்ணியகாலங்களில் நியமத்துடன் பிராம்மணஸ்ரேஷ்டர்களைக் கேட்பிக்கும்மனிதன் ரிஷிகளுக்கும் தேவர்களுக்கும் பித்ருக்களுக்கும் எப்போதும் அன்பனும் ஐஸ்வரியமுள்ளவனும் தர்மங்களில் அழியாதஸ்ரத்தையுள்ளவனுமாவான். மஹாபாதகம்தவிர மற்றப்பாவங்களைச்செய்தவனும் இந்தஸூக்ஷ்ம தர்மங்களைக்கேட்பதனால் எல்லாப்பாவங்களாலும் விடப்படுவான்' என்று சொன்னார். அரசனே! எல்லாத்தேவர்களாலும் நமஸ்கரிக்கப்பட்டதும் தேவர்களின்ரகஸ்யமுமான இந்தத்தர்மத்தை வ்யாஸர் எனக்குச் சொன்னார். நான் உனக்குச் சொன்னேன். ரத்னங்கள்நிரம்பின பூமியும் இந்தத்தர்மஜ்ஞானமும் தமக்குஉயர்வில்லாதவை. ஆதலால், தர்மந்தெரிந்தவன் இதனையே கேட்கநினைக்கவேண்டும். ஸ்ரத்தையில்லாதவனுக்கும் நாஸ்திகனுக்கும் தர்மம்செய்யாதவனுக்கும் தயையில்லாதவனுக்கும் யுக்திவாதத்தால் கெட்டவனுக்கும் குருவைப் பகைப்பவனுக்கும் (பொறுமை அடக்கமுதலிய) ஆத்மகுணமில்லாதவனுக்கும் இதனைச் சொல்லலாகாது'' என்றார்.

---

## நூற்றுத்தொண்ணூற்றெட்டாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



**(யாரிடத்தில்.புஜிக்கலாம், யாரிடத்தில் புஜிக்கலாகாதென்பது.)**

யுதிஷ்டிரர், ''பாரதரே! பிராம்மணன் யாரிடத்தில் போஜனம் செய்யலாம்? க்ஷத்திரியன் யாரிடத்தில் போஜனம் செய்யலாம்?

[1] வைஶ்யன் யாரிடத்தில்புஜிக்கலாம்? சூத்திரனுக்குஎப்படி?'' என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"ப்ராம்மணன், ப்ராம்மணர்களிடத்திலும் க்ஷத்திரியர்களிடத்திலும் வைஶ்யர்களிடத்திலும் போஜனம்செய்யலாம். சூத்திரர்கள் விலக்காகிறார்கள். க்ஷத்திரியனும், பிரம்மக்ஷத்திரியவைஶ்யர்களிடம் போஜனம்செய்யலாம். சூத்திரர்கள் எல்லாவற்றையும் பக்ஷிப்பவரும் வேதத்திற்சொல்லியகருமங்கள் இல்லாதவருமாயிருப்பதனால் விடவேண்டியவர்கள். வைஶ்யர்கள் நித்தியாக்நிஹோத்திரமும் சாதுர்மாஸ்யவிரதமும் செய்துகொண்டு பரிசுத்தர்களாயிருந்தால் அவர்களிடத்தில் பிராம்மணர்களும் க்ஷத்திரியர்களும் புஜிக்கலாம். சூத்திரர்களிடத்தில்புஜிப்பவன், பூமியின்மலத்தையேபுஜிப்பவனாகிறான். அநேக சூத்திரர்களிடத்தில்புஜிப்பவன் பூமியின்மலத்தையும்அதிலுள்ளமனிதர்கள் ஜந்துக்களின் ஜலமலங்களையும் புஜித்தவனாவான். சூத்திரனிடத்தில் போஜனம்செய்யும்பிராம்மணர்கள் பூமியின்மலத்தைப் புஜிப்பவர்களே. [2] சூத்திரனிடம்ஸேவிக்கும் பிராம்மணனும் க்ஷத்திரியனும் வைஶ்யனும் (ஸந்தியாவந்தனமுதலிய) கர்மங்களை நன்றாகச் செய்துவந்தாலும் நரகத்தில் வேகவைக்கப்படுகிறார்கள். வேதமோதலை விடாமலிருக்கும்பிராம்மணர்கள் மனிதர்களுக்கு மங்களகரமான கிரியைகளைச்செய்வதற்கும், க்ஷத்திரியர்கள் பாதுகாப்பதற்கும், வைஶ்யர்கள் செல்வத்தைப்பெருக்குவதற்குமிருப்பதாகச் சொல்லுகின்றனர். வைஶ்யன் எந்தக்காரியத்தைச் செய்கிறானோ அதைப்பெற்றுத்தான் உலகம் ஜீவிக்கிறது. பயிர்செய்தல் பசுக்காத்தல் வர்த்தகம் இவை வைசியதர்மத்தில் இகழப்படாதவை. தன்கர்மத்தைவிட்டுச் சூத்திரன்தொழிலைச்செய்கிறவனைச் சூத்திரனாகவே நினைக்கவேண்டும். அவனிடத்தில் ஒருகாலும் போஜனம்செய்யலாகாது. வைத்தியன் ஆயுதத்தினால்ஜீவிப்பவன் ஊருக்கதிகாரி புரோகிதன் ஜோதிஷன் வேதம் ஓதிப்பயன்படாதவன் இவரனைவரும் சூத்திரனுக்கொப்பானவர். சூத்திரகர்மத்திலிருப்பவராகிய இவர்களிடத்தில் வெட்கமில்லாமல் போஜனம்செய்பவன் புஜிக்கத்தகாதஅன்னத்தைப் புஜித்ததனால் பெரியபாவத்தையடைகிறான். கர்மங்களையனுஷ்டியாமலும் தர்மம்

---

1 'வைஶ்யன் போஜனம்செய்விக்கத் தக்கவர்கள் யார்?' என்பதும், 'சூத்ரன் போஜனம்செய்விக்கத்தக்கவர்கள் யார்?' என்பதும் பழையவுரை.

2 'பிராம்மணனும் க்ஷத்ரியனும் வைஶ்யனும் கர்மங்களைவிட்டாலும் அவற்றைவிடாமல் விசேஷமாகச்செய்தும் சூத்ரஸேவைசெய்தாலும் நரகத்தில் வேகவைக்கப்படுகிறார்கள்' என்றும் கொள்ளலாம்.

இல்லாமலுமிருப்பவன் குலத்தையும் ஸாமர்த்தியத்தையும் மகிமையையும்விட்டு நாய்போன்றவிலங்குஜாதியாகப் பிறக்கிறான். வைத்தியனது அன்னத்தைப்புஜித்தால் அது மலத்திற்குச்சமமானது. வியபிசாரியின் அன்னம் மூத்திரம்போன்றது. சிற்பிகளின்அன்னம் ரத்தம்போன்றது. ஸாதுவாகநினைக்கப்பட்டவன், வித்தையாடுகிறவனன்னத்தைப்புஜிப்பானாயின் அது சூத்திரனன்னம்போலாகும். அதை யோக்கியன் விடவேண்டும். பழிசொல்லப்பட்டவனுடைய அன்னத்தைப்புஜித்தால் அது ரத்தமடுவைப்போலிருப்பதென்று சொல்லுகின்றனர். கோட்சொல்லுகிறவன்அன்னம்புஜிப்பது பிரம்மஹத்திக்குச் சமமென்று நினைக்கின்றனர். ஆதரவில்லாமலும் அவமதிப்பாகவும் போடப்படும்அன்னத்தை ஒருகாலும்புஜிக்கலாகாது. அதைப்புஜிக்கும்பிராம்மணன் வியாதியையும் குலநாசத்தையும் விரைவில் அடைவான். ஊரதிகாரியின் அன்னத்தைச்சாப்பிடுகிறவன் சண்டாளனுக்குச் சேவகனாவான். கோஹத்திபிரம்மஹத்திசெய்தவன் கட்குடியன் குருபத்தினியைச்சேர்பவன் இவர்களின் அன்னத்தைப்புஜித்த பிராம்மணன் ராக்ஷஸகுலத்தில் பிறப்பான். அடைக்கலம்வைத்த பொருளையெடுத்துக்கொண்டவனிடத்திலும் நன்றிகொன்றவனிடத்திலும் பெண்ணைக்கொண்டுபிழைப்பவனிடத்திலும் போஜனம்செய்பவன் இமயத்துக்கும்விந்தியத்துக்கும்நடுவிலுள்ளதேசத்தார் சேர்த்துக்கொள்ளாத மிலேச்சர்களிருக்குமிடத்தில் பிறப்பான். குந்திபுத்ரனே! 'யாரிடத்தில்போஜனம்செய்யக்கூடாது, யாரிடத்தில் செய்யலாம்' என்பதைப்பற்றிச் சாஸ்திரப்படி உனக்குச்சொன்னேன். இப்போது என்னிடத்தில் இன்னும் என்னகேட்க விரும்புகிறாய்?" என்றார்.

## நூற்றுத்தொண்ணூற்றொன்பதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



**(தானம்வாங்குவதற்கும்போஜனம்செய்வதற்குமுள்ளபிராயச்சித்தங்கள்.)**

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! யாரிடத்தில் போஜனம்செய்யலாமென்பதையும் யாரிடத்தில் போஜனம்செய்யக்கூடாதென்பதையும் நீர் முழுதும்சொன்னீர். இந்தக்கேள்வியில் எனக்கு மற்றொரு ஸந்தேகமிருக்கிறது. நீர் அதனைச் சொல்லக்கடவீர். முக்கியமாய்ப் பிராம்

மணர்கள் யாகங்களிலும் ஸ்ராத்தங்களிலும் தானம்வாங்குவதற்கும் பலவகைப் போஜனங்கள்செய்வதற்கும்உரியபிராயச்சித்தங்களை என க்குச் சொல்லும்'' என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

''ராஜனே! ஆ! ஆ! மகாத்மாக்களானபிராம்மணர்கள் தானம் வாங்கினாலும் போஜனம்செய்தாலும் எதைச்செய்தால் பாவத்தி னின்று விடுபடுவரோ அதை உனக்குச் சொல்வேன். யுதிஷ்டிர! ஆஜ்யதானம்வாங்கினால் காயத்ரியைஜபித்து அக்நியில் ஸமித்தைப் போடவேண்டும். எள்தானம்வாங்கினாலும் இதுதான் பிராயச்சித்தம். மது மாம்ஸம் உப்புஇவற்றைவாங்கினால் சூரியோதயம்வரையில் நிற்ப தனால் பிராம்மணன் சுத்தனாவான். பொன்தானம்வாங்கின பிராம்ம ணன் எல்லோரும்அறியும்படி இருப்புப்பாத்திரத்தைக்கையில் வைத் துக்கொண்டு முழுவேதத்தையும்ஜபிப்பதினால் பாவத்திலிருந்துவிடு படுவான். மனிதரிற்சிறந்தவனே! தனம் வஸ்த்ரம் பெண்இவர்க ளைத்தானம்வாங்குவதும் பொன்னைவாங்குவதும் ஒன்றுதான். அன் னம் பாயஸம் வெல்லம் சர்க்கரை கரும்பு எண்ணெய் பரிசுத்தவஸ்து இவற்றைத்தானம்வாங்கினால் சுத்தமாவதற்கு மூன்றுவேளைகளும் ஜலத்தில் ஸ்நானம்செய்யவேண்டும். நெல், பூ, கனி, ஜலம், மாப் பண்டம், யவம், தயிர், பால்இவற்றைவாங்கினால் காயத்ரியை நூறு முறை ஜபிக்கவேண்டும். பிரேதகாரியத்தில் பாதரக்ஷைகுடைகளை வாங்கினால் நியமத்துடன் நூறுகாயத்ரி ஜபம்செய்வதனால் அந்தப் பாவத்தினால்விடப்படுவான். பூதானம்வாங்கினாலும் [1]நவக்கிரகதானம் வாங்கினாலும் பிரஸவத்தீட்டுள்ளஇடத்தில் தானம்வாங்கினாலும் மூன்றுதினங்கள் உபவாஸமிருப்பதனால் பாவத்திலிருந்துவிடுபடு வான். கிருஷ்ணபக்ஷத்தில் பித்ருஸ்ராத்தத்தில் அன்னத்தைப் புஜிக் கும்பிராம்மணன் ஓர்இரவும்பகலும் உபவாஸமிருப்பதனால் சுத்தனா வான். அன்றைத்தினம் ஸந்தியாவந்தனமும் செய்யலாகாது; [2]ஜபம் செய்யலாகாது. புஜித்தஅந்த [3]அன்னத்தை வேறு அன்னத்தோடு சேர்க்கலாகாது. அப்படியிருந்தால் பிராம்மணன் பரிசுத்தனாவான். இதற்காகத்தான், பித்ருக்களுக்கு அபரான்னகாலத்தில் ஸ்ராத்தம் விதிக்கப்படுகிறது. முன்னமே வரிக்கப்பட்டபிராம்மணர்கள் மேற் சொன்ன வர்ணத்தாரிடத்தில் புஜிக்கலாம். மூன்றுநாள் சாவுதீட்டில் மூன்றாவதுநாள் அன்னத்தைப்புஜிக்கும் பிராம்மணன் பன்னிரண்டு

---

1 'சிறைச்சாலையிலிருந்தவனிடத்திலும்' என்பது பழையவுரை.

2 மனத்தினால்தவிர வாக்கினால் ஜபம்கூடாது என்பது.

3 அது முழுதும்ஜீர்ணமாகும்வரையில் புஜிக்கலாகாது என்பது.

நாள் மூன்றுவேளையும் ஸ்நானம்செய்வதனல் சுத்தனவான். பன்னிரண்டாவதுநாள் கடந்தபிறகு விசேஷமான சுத்தம்செய்துகொண்டு ப்ராம்மணர்களுக்கு அன்னம்போடுவதனல் அந்தப்பாவம் விலகும். பத்துநாளைச்சாவுதீட்டில் பத்துநாள்சென்றபிறகு பிராயச்சித்தங்களுக்காகத் தானங்கள்செய்விக்கவேண்டும்.ஸாவித்ரம் ரைவதம்என்னும் இஷ்டிகளையும் கூஶ்மாண்டஹோமத்தையும் அகமர்ஷணஜபத்தையும் செய்யவேண்டும். மூன்றுநாள் சாவுதீட்டுக் கழிந்ததினத்தில் ஶ்ராத்தபோஜனம்செய்யும்பிராம்மணன்ஏழுநாள்மூன்றுவேளைகளும் ஸ்நானம்செய்வதனல் பரிசுத்தனவான்; சிறந்த தவஸித்தியையடைவான்; ஆபத்தையடையான். சூத்திரர்களுடன் ஒருபந்தியில்சேர்ந்து சாப்பிடும்பிராம்மணனுக்குச் சாஸ்திரப்படி பாவமுண்டாகிறது. அவனுக்கு முன்சொன்னபிராயச்சித்தந்தான் பரிகாரமாகிறது. பிராம்மணன் வைஶ்யர்களுடன் ஒருபந்தியில் புஜித்தால் மேற்சொன்ன பிராயச்சித்தம் மூன்றுநாள்செய்வதனல் அந்தப்பாவத்தினின்றும் விடுபடுவான். க்ஷத்திரியர்களுடன் ஒருபந்தியில் சாப்பிடும்பிராம்மணன் [1] வஸ்திரங்களுடன் ஸ்நானம்செய்வதனல் அந்தப்பாவத்தினின்று விடுபடுவான். தகாதவர்களுடன்புஜிப்பது சூத்திரனுக்குக் குலத்தையும் வைஶ்யனுக்குப்பசுக்களையும் பந்துக்களையும் க்ஷத்திரியனுக்கு ஐஶ்வரியத்தையும் பிராம்மணனுக்கு ப்ரம்மதேஜஸையும் அழிக்கும். அதற்குப்பிராயச்சித்தமாக ஸாவித்ரம் ரைவதம்என்னும்இஷ்டிகள் கூஶ்மாண்டஹோமம் அகமர்ஷணஜபம்ஆகிய சாந்திகளைச்செய்வதனல் அந்தப்பாவத்தினின்று விடுபடுவான். ஒருவர் ஒருவருடைய மிச்சிலைஉண்பதும் அப்படியே. கோரோசனை, அறுகம்புல், மஞ்சள், சந்தனமுதலிய மங்களகரமான பூச்சுத்திரவியங்கள் இவற்றில் ஒருவர் மிச்சத்தை மற்றொருவர் உபயோகிக்கலாம். இதில் சந்தேகமில்லை" என்றார்.

---

## இருநூறுவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(தவத்தினுலும் தானத்தினுலும் தர்மத்தினுலும் மேலுலகம்பெற்றவர்கள்.)

யுதிஷ்டிரர், "பாரதரே! பிதாமஹரே! தானம்செய்துகொண்டும் தவம்செய்துகொண்டுமிருக்கவேண்டுமென்றும்சொன்னீர். [2]பூமி

---

1 எல்லாவஸ்திரங்களையும்நனைத்து ஸ்நானம்செய்வது.

2 "தானம்தவம்இவைகளில்எதுசிறந்தது?" என்பதுபழையஉரை.

யில் இவை எப்படிப்பட்டவை என்பதைச்சொல்லி இந்த என்மனத் துயரத்தையொழிக்கவேண்டும்'' என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

''தவத்தினால்ஆத்மசுத்திபெற்ற எந்தத்தர்மிஷ்டர்களும் தானங்களையும்புண்ணியங்களையும் விடாமற்செய்தஎந்த அரசர்களும் புண்ணியலோகங்களை நிச்சயமாக அடைந்தனரோ அவர்களைச் சொல்லுகிறேன்; கேள். அரசனே ! எல்லாராலும் பூஜிக்கப்பெற்ற ஆத்ரேயரென்பவர் சிஷ்யர்களுக்கு நிர்க்குணப்ரம்மத்தை உபதேசித்து எல்லாவற்றிலும்சிறந்தஉலகங்களை அடைந்தார். உசீனரன்மைந்தனான சிபி சக்ரவர்த்தி தன்அன்புள்ளபுத்திரனுடையஉயிரை ப்ராம்மணனுக்கு உபகாரமாகக்கொடுத்து இவ்வுலகத்திலிருந்து ஸ்வர்க்கலோகத்திற்குச் சென்றான். ப்ரதர்த்தனனென்னும்காசிராஜன் ப்ராம்மணனுக்குத் தன்புத்திரனைக்கொடுத்து இவ்வுலகத்திலும் மேலுலகத்திலும் ஒப்பற்றபுகழை அடைந்திருக்கிறான். ஸங்கிருதியின்புத்திரனான ரந்திதேவன் மகாத்மாவானவஸிஷ்டருக்குச்சாஸ்திரப்பிரகாரம்அர்க்கியத்தைக்கொடுத்துச் சிறந்தலோகங்களை அடைந்தான். தேவாவ்ருதன் என்னுமரசன் நூறுகம்பிகளுள்ளதும் பொன்மயமும் அழகியதுமான சிறந்தகுடையை யாகத்தில் பிராம்மணனுக்குக்கொடுத்து ஸ்வர்க்கம் போனான். மகிமைபொருந்திய அம்பரீஷன் அளவற்றமகிமையுள்ள பிராம்மணனுக்கு ராஜ்யத்தையெல்லாம்கொடுத்துத் தேவலோகத்தை அடைந்தான். சூரியகுமாரனான கர்ணன் தன்னுடைய திவ்யகுண்டலத்தையும், ஜனமேஜயன் வாகனத்தையும்பசுக்களையும்,பிராம்மணர்களுக்குக்கொடுத்து உயர்ந்தலோகங்களை அடைந்தனர். வ்ருஷாதர்ப்பியென்னும்ராஜரிஷி பலவகைரத்தினங்களையும் அழகானவீடுகளையும் பிராம்மணர்களுக்குக் கொடுத்து ஸ்வர்க்கம்போனான். விதர்ப்ப தேசத்தரசனானநிமி ராஜ்யத்தையும் கன்னிகையையும் மஹாத்மாவான அகஸ்தியருக்குக்கொடுத்துப் புத்திரர்களோடும் பந்துக்களோடும் பசுக்களோடும் ஸ்வர்க்கம்போனான். பெரும்புகழ்பெற்ற பரசுராமர் பிராம்மணருக்குப் பூமிதானம்செய்து மனத்திற்குமெட்டாத அழிவில்லாதஉலகங்களை அடைந்தார். மேகத்திற்கதிபதியான இந்திரன் மழைபெய்யாமலிருந்தபோது, வஸிஷ்டர் எல்லாப்பிராணிகளையும் பிழைப்பித்தார்; அதனால், அழிவில்லாத ஸ்தானத்தை அடைந்தார். தசரதபுத்திரரானராமர் அநேகயாகங்களில் திரவியங்களையளித்து உலகத்தில் பெரும்புகழ்பெற்று அழிவில்லாதஉலகங்களை அடைந்தார். கக்ஷஸேனனென்னும்ராஜரிஷி மஹாத்மாவானவஸிஷ்டருக்கு

அவர்கொடுத்தபொருளைச் சரியாகலுப்பித்ததனால் மிகப்பெரியபுகழ் பெற்றான். கரந்தமனுடையபேரனும் அவிக்ஷித்தின்புதல்வனுமாகிய மருத்தன் அங்கிரஸ்முனிவருக்குக் கன்யாதானம்செய்து ஸ்வர்க்கம் சென்றான். பாஞ்சாலதேசத்தரசனும் தர்மிஷ்டரிற்சிறந்தவனுமாகிய பிரம்மதத்தனென்னுமரசன் சங்கநிதியைக்கொடுத்துச்சிறந்தகதியை அடைந்தான். மித்திரஸஹனென்னுமரசன்அன்புள்ளமனைவியானமத யந்தியை மஹாத்மாவான வஸிஷ்டருக்குக்கொடுத்து ஸ்வர்க்கமடைந்தான். மனுவின்புத்திரனான ஸுத்யும்னன் மஹாத்மாவான லிகிதருக்குத் தர்மமாகத் தண்டத்தைச்செய்ததனால் உயர்ந்தலோகங்களை அடைந்தான். பெரும்புகழ்பெற்ற ஸஹஸ்ரசித்யனென்னும் ராஜரிஷி பிரியமானஉயிரைப் பிராம்மணனுக்காகவிட்டுச் சிறந்தலோகங்களை அடைந்தான், சதத்யும்னனென்னுமரசன் வேண்டினவையெல்லாம் நிரம்பினபொன்மாளிகையை மௌத்கல்யருக்குக்கொடுத்து ஸ்வர்க்கம் போனான். முன்னே, ஸுமன்யுவென்பவன் மலைகள்போன்றஅன்னங்கள்பக்ஷணங்களின்குவியல்களைச்சாண்டில்யருக்குக்கொடுத்துமேலுலகமடைந்தான். த்யுதிமானென்றுபெயர்பெற்றவனும் சிறந்தபராக்கிரமமுள்ளவனுமான சால்வதேசத்தரசன் ரிசீகருக்கு ராஜ்யத்தைக் கொடுத்துச் சிறந்தலோகங்களை அடைந்தான். மதிராஸ்வனென்னும் ராஜரிஷி ஸுமத்யமையென்னும் கன்னிகையை ஹிரண்யஹஸ்தருக்குக்கொடுத்துத் தேவர்கள்வஸிக்கும் லோகங்களுக்குப் போனான். பிரபுவானரோமபாதனென்னும்ராஜரிஷி சாந்தையென்னும்பெண்ணை ரிசியசிருங்கருக்குக்கொடுத்து விரும்பினபலன்களையெல்லாம் மிகுதியாகப்பெற்றான். பகீரதனென்னும்ராஜரிஷி ஹம்ஸிஎன்னும் புகழ் பெற்றகன்னிகையைக் கௌத்ஸருக்குக்கொடுத்து அதனால் அழிவில்லாதலோகங்களை அடைந்தான். பகீரதனென்னுமரசன் லக்ஷம்பசுக்களைக் கன்றுகளோடு கோகலருக்குக்கொடுத்துச் சிறந்தலோகங்களை அடைந்தான். யுதிஷ்டிர! இவர்களும் மற்றுமநேகர்களும் தானத்தினாலும் தவத்தினாலும் ஸ்வர்க்கத்திற்குப்போயும் அடிக்கடி திரும்பி வந்துகொண்டிருக்கின்றனர். எந்தக்கிருகஸ்தர்கள் தானத்தினாலும் தவத்தினாலும் லோகத்தைஜயித்தனரோ அவர்களின்கீர்த்தி பூமியுள்ளவரையில் நிலைபெற்றிருக்கும். யுதிஷ்டிர! பெரியோர்களின் இந்தச்சரித்திரத்தை நான் சொன்னேன். தானத்தினாலும் யாகத்தினாலும் ஸந்ததியையுண்டுபண்ணினதினாலும் இவர்கள் ஸ்வர்க்கத்தை அடைந்தனர். கௌரவர்களுக்குத்தலைவனே! தானங்கொடுத்தபிறகும் எப்போதும் தானத்தையும் யாகத்தையும் செய்விப்பதற்கும்

தர்மத்தைவிருத்திசெய்வதற்கும் உனக்கு எண்ணமிருக்கவேண்டும். ராஜச்ரேஷ்டனே! உனக்கு இன்னும் எந்தவிஷயத்தில் ஸந்தேகமுண்டாகுமோ அதனை நாளைக்காலையில் சொல்லுவேன். ஸந்தியா காலம் வந்துவிட்டது"என்றார்.

---

## இருநூற்றோராவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



**(ஐந்துவகைத் தானங்கள்.)**

யுதிஷ்டிரர், "ஐயா! வ்ரதமும் பராக்கிரமமும் தவறாதவரே! சிறந்ததானத்தினாலும் தவத்தினாலும் ஸ்வர்க்கத்தையடைந்த அரசர்களைப்பற்றி உம்மிடம் கேட்டுக்கொண்டேன். தர்மிஷ்டர்களிற்சிறந்தவரே! இந்தத்தர்மங்களைமட்டும் கேட்கவிரும்புகிறேன். கொடுக்கவேண்டியதானங்கள் எத்தனைவகை? அவற்றினால்கிடைக்கும் பலன்கள் யாவை? தர்மத்தோடுசேர்ந்ததானம் யாருக்கு எப்படிக்கொடுக்கவேண்டுமென்று நினைக்கப்படுகிறது? எந்தக்காரணங்களினால் எத்தனைவகைத் தானமுண்டு? தெளிவாகக் கேட்க விரும்புகிறேன்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"பாரதனே! குந்திபுத்ரனே! குற்றமற்றவனே! எல்லாவர்ணங்களும் தானம்கொடுப்பது எப்படியென்பதைப்பற்றித் தெளிவாகச் சொல்லுகிறேன்; கேள். பாரதனே! தர்மம் அர்த்தம் பயம் காமம் தயைஇவ்வைந்து காரணங்கள்பற்றித் தானமும் ஐந்துவகையென்று அறியவேண்டும். 'இங்கும் [1]புகழையடையலாம்; மறுமையிலும் சிறந்தஸுகம்பெறலாம்' என்றுநினைத்துப் பொறாமையைவிட்டுப் பிராம்மணர்களுக்குத் தானம்கொடுக்கவேண்டும். யாசிப்பவர்கள், [2] 'இவன் நமக்குக் கொடுக்கிறான்; கொடுப்பான்; அல்லது, கொடுத்தான்' என்று சொல்வதைக்கேட்டுக்கொண்டே பின்னும் கேட்பவர்களுக்கு எல்லாவற்றையும் கொடுக்கவேண்டும். யாசிப்பவனுக்கு எல்லாவற்றையும் கொடுக்கலாம். [3]'நான் இவனைச்சேர்ந்தவனல்லேன். இவன் என்னைச்சேர்ந்தவனல்லன். ஆனால், இவன் அவமானிக்கப்பட்டால் தீங்குசெய்வான்' என்று பயத்தினாலேயே தெரிந்தவன் மூடனுக்கும் அவசியம் கொடுக்கவேண்டும். [4]"இவன் எனக்குவேண்

---

[1] இது தர்மதானம். [2] இது அர்த்ததானம்.
[3] இது பயதானம். [4] இது காமதானம்.

டினவன் ; நான் இவனுக்கு வேண்டினவன்' என்றுபார்த்துப் புத்தி சாலியானவன் ஸ்நேகிதனுக்கு ஸந்தோஷமாகவும் வெறுப்பில்லா மலும் கொடுக்கவேண்டும். [1]'இவன்ஏழை ; யாசிக்கிறான் ; சிறிது கொடுத்தாலும் திருப்தியடைவான்' என்று தயையினால் ஏழைக் குக் கொடுக்கவேண்டும். இப்படி ஐந்துவகைத்தானங்கள் புண்ணி யத்தையும் புகழையும்விருத்திசெய்பவை.இயன்றவரையில் கொடுக்க வேண்டுமென்று பிரம்மதேவர் சொல்லியிருக்கிறார்'' என்றார்.

---

## இருநூற்றிரண்டாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(தர்மபுத்ரர் திரும்பவும் பீஷ்மரிடம் தர்மங்கேட்டாரென்று வைசம்பாயனர் ஜனமேஜயருக்குச் சொல்லியது.)

சிறந்தசொற்களினால் உபதேசித்துநின்ற பீஷ்மரிடம் சிறந்த புத்தியுள்ளயுதிஷ்டிரர் இன்னும்உபதேசங்கேட்கவிரும்பி அன்புடன் பேசலானார்'' என்று வைசம்பாயனர்சொல்ல, ஜனமேஜயர், "பிரம்ம ரிஷியே! மரணகாலத்திற்குட்பட்டிருந்த பீஷ்மரிடத்தில் என்பிதா மஹரான தர்மராஜர் ஸபையிலுள்ள எல்லாருக்கும்வேண்டினதும் இம்மைமறுமை இரண்டுஉலகங்களுக்கும் உபயோகமும் சிறந்தபுரு ஷார்த்தத்தைத்தருவதுமான என்னவிஷயத்தை அப்போது கேட் டார்? சிறந்தஜ்ஞானமுள்ளவரே! அதனை எனக்குச்சொல்லும். எனக் குக் கேட்கவிருப்பமிருக்கிறது'' என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லலானார். "மஹாராஜரே! அந்தக்காலத்தில் குந்திபுத்திரரும் அரசருமான யுதிஷ்டிரர்கேட்ட தர்மஸங்கிரஹத்தைத் திரும்பவும் கேளும். அஜாதசத்துருவானவர், சரதல்பத்திலிருக்கும்பீஷ்மரைப் பார்த்து எல்லாஅரசர்களுமிருக்கையில் மனத்தில்அன்போடு திரும் பவும் பேசலானார். "சிறந்தஜ்ஞானமுள்ளவரே! பிதாமஹரே! எல் லாச்சாஸ்திரங்களும் தெரிந்தவரே! எனக்குத் தெரியவேண்டிய விஷ யம் இருப்பதால் நான் பேசுகிறேன். என்சொல்லைக் கேட்கவேண் டும். எல்லாப்பிராணிகளின் தாரதம்யங்களையும்அறிந்தவரும் எல் லாப்பிராணிகளிடத்திலும் தயையுள்ளவரும் மிகுதியானகேள்விகளி னால் ஸந்தோஷமடைந்தவருமான நீர்தாம் நமதுகுலத்திற்சிறந்தவர். உம்மைப்போன்றஜ்ஞானமுள்ளவர் இவ்வுலகத்தில் இப்போது கிடைப்

---

1 இது காருண்யதானம்.

பது அரிது. பிரபுவே! நீர் பெரியவராயிருப்பதனால் நாங்கள் பாக்கியம்பெற்றோம். நமக்குக் குலத்தோரும் சுற்றத்தவரும் கிடைக்காமலிருக்கும்காலம் இப்போதே வந்துவிட்டது. புருஷஶ்ரேஷ்டரே! உம்மைவிடவேறுயாரும் உபதேசிப்பவரில்லை. பாரதரே! ஆதலால் தர்மார்த்தங்களடங்கியதும் பின்னுக்குநன்மையைப்பதும் புதிதும் சிறந்ததுமானசொல்லைக் கேட்கவிரும்புகிறேன். ஸ்ரீமானான இந்த நாராயணர் எல்லாஅரசர்களினெதிரிலும் கௌரவத்தோடும் ஸ்நேகத்தோடும் உம்மிடம் காத்திருக்கிறார். குற்றமற்றவரே! கௌரவரே! என்னையும் என்ஸகோதரர்களையும் அனுக்கிரகிக்க விருப்பம் உமக்கிருக்குமானால் இந்தக்கிருஷ்ணனுக்கும் எங்களுக்கும் அரசர்களுக்கும், முன்னிலையில் கேட்பவருக்கு மிக்கஇதமான ஒருபழையஇதிஹாஸத்தை நான்விரும்புவதற்காக என்மேலுள்ள அன்பினால் சொல்லக்கடவீர்" என்றார். அவருடையசொல்லைக்கேட்டு அன்பினால் நெகிழ்ச்சியுற்ற பீஷ்மர் அவரைக் கண்ணினால்குடிப்பவர்போலப் பார்த்து, "ராஜனே! முன்நடந்ததும் ஆதிகாலந்தொடங்கிவந்ததுமாகிய ஓர் இதிஹாஸத்தைக்கேள்" என்றுசொன்னார். பீஷ்மர் இவ்வளவுவரையிலும் சொல்லி வாஸுதேவரைத் தலைவணங்கி நமஸ்கரித்தபின், திரும்பவும் தர்மராஜரைப்பார்த்துப் பின்வருமாறு சொல்லத்தொடங்கினார்.

## இருநூற்றுமூன்றாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(கிருஷ்ணன் முகத்திலுண்டான அக்நிமலையைஎரித்ததும், க்ருஷ்ணன் அம்மலையைச் செழிக்கச்செய்ததும், அதன்காரணத்தை ரிஷிகளுக்குச் சொல்லியதும்.)

"லக்ஷ்மிக்கிருப்பிடமானவரும் சிறந்தகைகளுள்ளவருமான இந்தநாராயணராகிய கிருஷ்ணபகவான் முன்னர்ப் புத்திரனுக்காக வ்ரதம்செய்யக்கருதிப் பன்னிரண்டுவருஷம் தீக்ஷைஎடுத்துக்கொண்டார். வ்ரததீக்ஷைபெற்றுக்கொண்டவரான கேசவரைப்பார்ப்பதற்காக மஹரிஷிகள் வந்தனர். அரசர்க்கரசே! நாரதர், பர்வதர், வ்யாஸர், தேவலர், காஶ்யபர், ஹஸ்திகாஶ்யபர், ஜமதக்நி, தௌம்யர், வால்மீகி இம்மஹாத்மாக்களும் ஸத்தியத்தையே முக்கியமான வ்ரதமாகக்கொண்ட இன்னும்அநேகதவஸித்திபெற்றவரனைவரும் பிரம்ம

ஜ்ஞானிகளான குற்றமற்றசிஷ்யர்களால் பின்செல்லப்பெற்றுத் தம் மேல்அன்புள்ள கிருஷ்ணனை ஸேவித்தனர். வாஸுதேவரும் தம்மி டம்வந்த அவர்களை அன்புடன் அழைத்து மனமகிழ்ந்து அவர்களைக் கௌரவிப்பதற்காக அவர்களுக்குத் தேவதாபூஜைக்குச்சமமான அதிதிஸத்காரத்தை க்ஷத்திரியகுலத்திற்குத் தகுதியாகச் செய்தார். குற்றமற்றவனே! அப்போது, அவர் செய்த பூஜையினால் ஸந் தோஷமும் அன்புமுள்ளரிஷிகள் ஆஸனங்களில் உட்கார்ந்த பிறகு, ஒருவருக்கொருவர் அழகியசிறந்தஸம்பாஷணைகள் நடந்தன. ஸர்வ வியாபியான நாராயணருடையஅனுக்கிரகத்தினாலேயே அந்தஸம்பா ஷணைகளைச் சொல்வேன். அப்போது, அவரே விரதம்எடுத்துக் கொண்டதில் ரிஷிகள் ஆச்சர்யமடைந்தனர். அதனைப்பற்றித்தான் மஹாத்மாவும் வ்ருஷபக்கொடியுடையவருமான பரமசிவனுடைய மகிமை வெளிப்பட்டது. அப்போது, உமாதேவியானவள் மஹா தேவரிடம் ஸந்தேகங்களைக் கேட்டாள். அவர் அவளுக்குச் சந்தோஷமுண்டாக்குவதற்காக அவற்றையெல்லாம் சொன்னார். அப்பா! உமைக்கும் பரமசிவனுக்கும்நடந்த அழகான ஸம்பா ஷணையைக் கேள். அப்பா! வர்ணாஸ்ரமதர்மங்களும் ரிஷிதர்மங்கள் அனைத்தும் பூர்ணமானராஜதர்மங்களும் சிறந்தவையான கிருஹஸ்த தர்மங்களும் புண்ணியபாபகர்மங்களின்முடிவுகளும் பலன்களும் பல வகைத்தேவரகஸ்யங்களும் தானதர்மங்களைப்பற்றினவிதிகளும்அந்த ஸம்பாஷணத்தில் சொல்லப்பட்டன. யமநியமங்களின்முறையும் யம லோகத்தின்வகையும் ஸ்வர்க்கலோகம் ப்ராணமோக்ஷம் இவற்றின் வழிகளும் தீர்த்தயாத்திரைமுழுதும் மோக்ஷதர்மத்தின்முறையும் ஸாங்கியயோகங்களும் அந்த ஸம்பாஷணத்தில் சொல்லப்பட்டன. தேவியானவள் தானாகவே ஸ்திரீதர்மத்தை ஈஸ்வரருக்குச் சொன் னாள். அப்பா! உமாதேவி ஸந்தேகங்கள்கேட்டஅந்தஸந்தர்ப்பத்தில் இதுமுதலானநல்லவிஷயங்களெல்லாம் ஏற்பட்டன. பொருளையும் புகழையும் ஆயுளையும் புண்ணியத்தையும் மனோதேகங்களின்வன்மை யையும்பயக்கும் மிக்கஅனுகூலமான இந்தச்சிறந்தகதையை நான் சொல்லுகிறேன்; கேள். விருத்தியாகவிரும்புகிறவன் மிக்கமங்கள மும் பரிசுத்தமுமானஇந்தஇதிஹாஸத்தைத் தினந்தோறும் காலை மாலைகளில் நன்றாகக் கேட்கவேண்டும். அப்போது வ்ரதம்செய்து வருந்தினகிருஷ்ணபகவானுடைய முகத்திலிருந்து காண்பதற்கு ஆச் சரியமான அக்கி புறப்பட்டது. ரிஷிகளனைவரும் பார்த்திருக்கும் போதே பிரபுவின்முகத்தினின்று வெளிப்பட்ட அந்தப்பெரியஅக்கி

யினல் மான்கள், பக்ஷிகளின்கூட்டங்கள் நிரம்பினதும் துஷ்டமிருகங் களால் பயங்கரமும் மரங்களும் புதர்களும் கொடிகளும் அடர்ந்தது மான சிறந்தமலே எரிக்கவும் அழிக்கவும்பட்டுப் பார்க்கப்பரிதாபகர மாயிற்று. திரும்பவும் குளிர்ந்தமனமுள்ளகிருஷ்ணனல் பார்க்கப் பட்டவுடன், அம்மலே விரைவில் மரங்களும் காடுகளும் பூத்தும் மனங்களித்திருக்கும்சித்தசாரணர்களின்கூட்டங்களினல்விளங்கியும் மதயானைகளும் பலவகைப்பக்ஷிகளும் பொருந்தியுமிருந்தது. அது எல்லாருக்கும் மிக்கஅற்புதமும் சிந்தைக்கெட்டாததுமாயிருந்தது. அதனேக்கண்டு ரிஷிக்கூட்டத்தாரனைவரும் ஆச்சரியத்திற்குமிகவும் வசப்பட்டு மயிர்பொடித்துப் பயத்தினல் கண்கள்கலங்கி நல்லதோ கெட்டதோ ஒன்றும்பேசாமலிருந்தனர். பிறகு, தாமரைக்கண்ண ரும் பகவானுமாகியநாராயணர், ரிஷிக்கூட்டம் ஆச்சரியப்பட்டபோது அவர்களைநோக்கி, 'இந்தரிஷிக்கூட்டத்தில் மிக்கஅதிகமானஆச்சர்யம் எதற்காகஉண்டாயிற்று ? என்னல் பூஜிக்கப்பட்டவர்களும் எல்லாந் தெரிந்தவர்களுமாகியரிஷிகள் என்னுடைய இந்தச்சந்தேகத்திற்குச் சரியானநிச்சயத்தைச்சொல்லவேண்டும்'என்றுமதுரமாகக்கேட்டார். கிருஷ்ணனுடைய சொல்லேக்கேட்டரிஷிகள் அவரைத்துதிக்கத்தொ டங்கினர். 'நீரே உலகங்களேப் படைப்பவர். நீரே அவற்றை அழிப்ப வர். குளிர்ச்சியும் நீரே. வெப்பமும் நீரே. ஸத்யமும் நீரே. யாகமும் நீரே. நீர்தாம் ஆதி. நீர்தாம் அந்தம். உம்மைவிடவேறு ஒன்றும் இல்லே. புருஷோத்தமரே ! ஜங்கமஸ்தாவரங்களனைத்தும் நீர்தாம். ஸ்வாமி!இவ்வுலகமென்னும்சக்கரம் முழுவதும் உம்மைஆதாரமாகப் பற்றிச்சுழல்கிறது. உமதுமுகத்தினின்று அக்நிஉண்டானதைப்பற்றி நீர்தாம் சொல்லத்தகும். மதுஸூதனரே ! இதுதான் எங்களுக்கு ஆச்சரியத்தை உண்டாக்கிற்று. புருஷோத்தமரே! இதைச்சொன் னல் நாங்கள் பயந்தீர்ந்தவர்களாவோம். உமக்குஇஷ்டமிருந்தால் சொல்லலாம். நாங்கள் கட்டளேயிடுவது ஏது?' என்றுசொல்லினர். ஸ்ரீபகவான், 'ரிஷிஸ்ரேஷ்டர்களே ! உலகத்தின்நன்மைக்காக நீங்கள் எக்காலமும்தவஞ்செய்துவருகிறீர்கள்.ஆதலால்,உலகங்களின்நன்மை யாகிய ரகஸ்யத்தை உங்களுக்குச் சொல்லுகிறேன்; கேட்கவேண்டும். உலகங்களுக்கு வேண்டாதவனும் உலகங்களேயழிப்பவனும் மாயை யிலும்அஸ்த்ரங்களிலும்ஸமர்த்தனும் பலத்தினல்கொழுத்தவனுமா கியசம்பரனென்னும் ஓர்அஸுரன்இப்போதிருந்தான். உலகங்களின் நன்மையைக்கருதி அவன் என்னல் கட்டப்பட்டான். என்னுடைய புத்திரனல் அவனுக்கு வதம்நேரிடுவதைக் கண்டேன். அதனல்,

வ்ரதங்கள்செய்து எனக்குச்சமமான புத்திரனையுண்டாக்கினைத்துப் புத்திரனைச்சிருஷ்டிப்பதற்காகவே வனம்வந்தேன். இவ்வாறு வ்ரதம்செய்யும்என்னுடைய தவத்தின்உக்கிரத்தினால் என்தேகத்திலிருக்கும்ஸாரமாகியஉஷ்ணமானதுஅக்னியாகிவெளிப்பட்டது. அது வெளிப்பட்டவுடன், ஒருநொடியில் பிரம்மதேவரைப் பார்க்கப்போயிற்று. அனங்கனென்னப்படும் மன்மதன் பிரம்மதேவரால் எனக்குப் புத்திரனாகச் செய்யப்பட்டான். அவன் அவரால் அனுப்பப்பட்டுத் திரும்பவும் என்னிடத்திற்கே வந்தான். இவ்வாறு, என்விஷ்ணுசக்தியானது என்முகத்திலிருந்து வெளிப்பட்டது. அந்தஅக்கினியினால் எதிரிலிருக்கும் இம்மலை அழிக்கப்பட்டது. அந்தமலை எரிந்துபோனதைக்கண்டு குளிர்ந்தஎண்ணத்துடன் நான்பார்த்தவுடன், அம்மலை திரும்பவும் முன்போலாயிற்று. இந்த ரஹஸ்யத்தைச் சரியாகவும் சுருக்கமாகவும் உங்களுக்குச்சொன்னேன். ரிஷிகளே! அதனாலேதான், உங்களுக்குத் துயரமும் வியப்புமுண்டாயின' என்றுசொன்னார். இவ்வாறு ரிஷிகளுக்குச்சொன்னபிறகு, மறுபடியும் அவர்களைப்பார்த்துக் கேட்கத்தொடங்கினார்.

---

## இருநூற்றுநான்காவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



**(நல்லவிஷயத்தைச் சொல்லும்படி கிருஷ்ணன் கேட்டதும், நாரதர் உமாமஹேஶ்வர ஸம்வாதத்தைச் சொல்லத் தொடங்கியதும்.)**

'உங்களைப்பார்த்ததனால் எனக்கு ஸந்தோஷம் அதிகமாயிற்று. நீங்களனைவரும் தவஸித்திபெற்றவர்கள்; திவ்யஜ்ஞானமுள்ளவர்கள்; எல்லாஉலகங்களுக்கும் போகத்தக்கவர்கள்; சாஸ்திரஜ்ஞானத்தாலும் ஆத்மஜ்ஞானத்தாலும் பரிசுத்தராயிருப்பவர்கள்; உலகங்களின்உற்பத்தியையும் முடிவையும் அறிந்தவர்கள்; பாவங்களை உதறினவர்கள். ஆதலால், உலகங்களில்ஆச்சரியமானது ஏதாவதொன்று உங்களால் காணவாவது கேட்கவாவதுபட்டிருந்தால் அதனைஎனக்கு நீங்கள்சொல்லவேண்டும். தவத்தினால்பரிசுத்தமான மனமுள்ளநீங்கள் எதைச்சொன்னாலும் அது அமிருதம்போலிருக்கும். சொல்லமுதத்தைக் கேட்பதில் எனக்கு ஆவலிருக்கிறது. விருப்பும் வெறுப்புமற்றவர்களும் எப்போதும் ஸத்தியமேபேசுகிறவர்களுமான

ஸாதுக்களின்சொல் நம்பத்தக்கதாயும் செவிக்கினியதாயுமிருக்கும். ஆதலால், உங்களுடையசேர்க்கை எனக்குப் பயன்படட்டும். அதனை நீங்கள் வீணாக்கலாகாது. ஆதலால், உங்களுடையதரிசனம் எனக்கு ஸபலமாகவேண்டும். பெரியோர்களின்முகத்தினின்றுவெளிப்பட்ட அந்தவிஷயத்தை நான் என்புத்தியையும்கலந்து மனிதர்களுடைய புத்தி விருத்தியடையும்படி ஸபைகளில் சொல்லுவேன். நான்சொன்னதையும் மற்றவர்கள் பெருகச்செய்வர்; சிலர் கொண்டாடுவர். மற்றும்சிலபெரியோர் என்னிடத்திலுள்ள வாத்ஸல்யத்தினால் என்னைச் சிலாகிப்பர்' என்றுசொன்னார். ஜனார்த்தனர் இவ்வாறு தாம்கேட்க வேண்டுமென்று சொல்லும்போது, மஹரிஷிகள் அவரைப்பார்த்து வரிசையாகக் கரங்களைக்குவித்து வாக்கினால் பின்வருமாறு சொல்லலானார்கள். 'வரங்கொடுப்பவரே! நீர் உமதுவாக்கினால் எங்களை இவ்வாறு சொல்வது தகாது. நாங்கள்எல்லாரும் உமதுகட்டளையை எதிர்பார்த்திருப்பவர்கள். எங்கள்தவமெல்லாம் உம்மால்நடப்பது. கேசவரே! எங்களை நீர் இப்படிப்பூஜிப்பதும் நியாயமன்று. உம்மைவிட வேறுஒருவனையும் நாங்கள் அறியவில்லை. ஆகாயத்திலும் பூமியிலும் எவ்வுலகத்திலும் உமதல்லாததுஒன்றையும் நாங்கள் காணவில்லை. எல்லாம் உம்மால்வியாபிக்கப்பட்டது. தேவரே! உம்மிடத்தில்சொல்வதற்கு ஒன்றும்எங்களுக்குத்தெரியாது' என்றனர். இவ்வாறுசொல்லப்பட்டகேசவர், புன்னகையுடன் அவர்களைப்பார்த்து, 'ரிஷிஸ்ரேஷ்டர்களே! நான் இப்போது மானிடஜன்மத்திலிருப்பவன். சிறந்ததவமுள்ளவர்களே! ஆதலால், மானிடரைப்போலவே எனக்குச் சக்தியிருப்பதாக அறியுங்கள். உங்களால்சொல்லப்படுவது எனக்குப் புதிதுபோலவேஇருக்கும்' என்றுசொன்னார். மஹாத்மாவான அவர் இவ்வாறுசொல்ல, ரிஷிகளனைவரும் அவருடைய ஆஜ்ஞைக்குள்பட்டனர். பிறகு, புத்திமான்களான ரிஷிக்கூட்டத்தாரனைவரும் திவ்யஜ்ஞானமுள்ள நாரதரைத்தாம் கேசவர்கேள்விக்கு மறுமொழிகூறத் திறமையுள்ளவரென்று புத்தியில் நிச்சயித்தனர். 'இந்தநாரதரிஷி உக்கிரமானதவமுள்ளவர்; வாஸுதேவருக்கு மிக்க அன்பர்; பழையசரித்திரங்கள் தெரிந்தவர்; சிறந்தவாக்குள்ளவர்' என்னும் இக்காரணங்கள்பற்றி நாரதரையே நிச்சயித்தனர். எல்லாரும் அவரையே அதற்குத்தக்கவராகஏற்படுத்தி அவரைப்பார்த்து, 'நீர் தீர்த்தயாத்திரைக்காக ஸஞ்சரிக்கும்போது ஹிமயமலையில் ஓர்ஆச்சரியம் கண்டீரன்றோ? அது கேட்பவர்களுக்கு மிகப்பிரியமாயிருக்கும். ஆதலால், எல்லாருடையவிருப்பத்திற்காகவும் அதனை ஆதிதொடங்கி

ஒன்றும்விடாமல் எல்லாவற்றையும் இந்தக்கிருஷ்ணனுடையஸந்தோஷத்திற்காகச் சொல்லக்கடவீர்' என்று சொன்னார்கள். எல்லாரிஷிகளாலும் அவ்வாறு தூண்டப்பட்டநாரதர், அப்போது எல்லாலோகங்களுக்கும் நன்மைசெய்யும் விஷ்ணுவானவாஸுதேவரைத் தலைவணங்கி அவரைப்பார்த்துப் பேசத்தொடங்கினார். அப்போது, நாராயணருக்குநண்பரும் பேசுகிறவரிற்சிறந்தவருமான நாரதர் பரமேசுவருக்குப் பார்வதியுடன் நடந்த ஸம்பாஷணத்தைச் சொல்லலானார்.

---

## இருநூற்றைந்தாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(பார்வதி பரமேச்வரருடைய கண்களைப்போத்தியதனால் அவருக்குமூன்றாவது கண்உண்டானதும், அதனால் இமயமலை எரிக்கப்பட்டுத் திரும்பவும் செழிப்பிக்கப்பட்டதும், உமாமஹேச்வர ஸம்வாதத்தில் ஈசுவரர் அம்மலையெரிக்கப்பட்ட காரணங் கூறியதும்.)

நாரதர், 'பகவானே! நான் தீர்த்தயாத்திரைக்காக எப்போதும்போல ஸஞ்சரித்துக்கொண்டிருக்கும்போது ஆச்சரியமாக விளங்குவதும், பலவகைவிருக்ஷங்களுள்ளதும், பலவகைப்பக்ஷிக்கூட்டங்களால் சூழப்பட்டதும், பலவகையானரத்தினக்குவியல்கள்நிரம்பினதும், பலவகைப்பொருள்களுள்ளதும், உயர்ந்தசந்தனமரங்களுள்ளதும்,உயர்ந்ததூபங்களின்வாஸனையுள்ளதும், உயர்ந்தமலர்கள்இறைக்கப்பட்டதும், உயர்ந்தமணங்கமழ்வதும், ஸித்தசாரணர்களின் கூட்டங்களினாலும் அனேகபூதங்களின் கூட்டங்களினாலும் சிறந்த அப்ஸரஸுகளாலும் நாகர்களாலும் கந்தர்வர்களாலும் நெருங்கினதும், மிருதங்கங்களும் முரசங்களும் சங்கங்களும் வீணைகளும்ஒலிப்பதும், ஸிம்மங்கள் புலிகள் பாம்புகள் மான்கள் பூனைகள் கழுதைகள் ஒட்டகங்கள் சிறுத்தைகள் யானைகள் கோட்டான்கள் பருந்துகள் காக்கைகள் கழுகுகள் இவற்றின்முகங்களோடும் பயங்கரமான பற்பல உருவங்களோடும் விகாரரூபங்களோடுமிருக்கும்சிவகணங்களைச்சேர்ந்த பூதங்கள் எங்கும் மிகவும் கூவிக்கொண்டும் கூத்தாடிக்கொண்டுமிருப்பதும், அனேகநூறுராக்ஷஸர்களால் அடையப்பட்டுப் பார்க்கமுடியாமல் பயங்கரமாயிருப்பதுமான இமயமலையிலுள்ள தேவவனத்தைக் கண்டேன். அந்தவனத்தில் அப்ஸரஸுகள் கூத்தாடுவதும், தேவ

மழைக்காலத்தின் ஆரம்பத்தில் மேகக்கூட்டங்களின் முழக்கமுள்ளதும், அனேகமயில்கள் சப்திப்பதும், யானைக்கூட்டங்கள்நிரம்பினதும், வஸந்தகாலத்தின் ஆரம்பத்தில்வண்டுகள்பாடுவதும், [1] கிரௌஞ்சம் குரரம் ஸாரஸம் சகோரம் குயில்கள் இவை மதத்துடன்சப்தித்துக்கொண்டு நிரம்பியிருப்பதும், உயர்ந்தஇடமாகவும் மிக்கபயங்கரமாகவும் பிரகாசிப்பதுமான சிவஸபையைக் கண்டேன். அது தர்மதேவதைக்கும் தர்மமுள்ள ஜனங்களுக்கும்மட்டும் பார்க்கக்கூடியது. ஜிதேந்திரியர்களான ஸித்தர்களும்சூரியகிரணங்களில்ஸஞ்சரிக்கும் விஶ்வேதேவர்களும் ஆங்காங்கு வந்திருந்தனர். தேவர்கள் நாகர்கள் திக்குப்பாலர்கள் அக்நிகள் தேவலோகத்தியபுஷ்பங்கள்நிரம்பினவாயுக்கள் இவர்எல்லாரும் பூமாரிகளை இறைத்துஇறைத்துக்கொண்டு ஆச்சரியரூபத்தோடு அங்கே வருகின்றனர். பத்துத்திசைகளையும் பிரகாசிக்கச்செய்யும் ஜோதிஸதைகள் அங்கே ஜ்வலிக்கின்றன. தேவர்களுக்குப்பிரியமான தேவலோகத்தியபக்ஷிகள் ஸந்தோஷத்துடன் நாலுபக்கத்திலும் ஆடிக்கொண்டு கூவுகின்றன. சிறந்தஒளியுள்ளவரும் ரத்நரம்புகளை அணிந்தவரும் சிவந்தநிறமுள்ளமீசைதாடிகளும்ஜடையுமுள்ளவரும் பயங்கரரும் தேவவிரோதிகளுக்கும் தம்மிடத்தில் பக்தியில்லாதவருக்கும் பயத்தைச்செய்பவரும் பக்தியுள்ளவருக்குப்பயத்தைப்போக்குபவருமானசங்கரர் புலித்தோலாடையுடுத்து யானைத்தோலை மேலே போர்த்துக்கொண்டு பாம்பை யஜ்ஞோபவீதமாகஅணிந்து கிந்நரர்களும் தேவர்களும் கந்தர்வர்களும் துதிக்கவும் ரிஷிகளும் அப்ஸரஸுகளும்நாலுபுறமும்சூழவும் பொன்தாதுக்களினால் அலங்கரிக்கப்பட்ட அம்மலைச்சிகரத்தில் கட்டிலில்உட்காருவதுபோலஉட்கார்ந்து விளங்கினார். அங்கே பிரபுவானசங்கரரிருக்குமிடம், தேவர்களும் தானவர்களும்நிரம்பினதும் எல்லாஒளிகளும்சேர்ந்ததும் திக்பாலகர்கள்எல்லாரும்காத்திருப்பதும் மஹாநாகங்கள்நிரம்பி எல்லாருக்கும் மயிர்பொடிக்கச்செய்யும்பயங்கரமானரூபமுள்ளதும் சொல்லுக்கெட்டாததும் வெல்லமுடியாததுமாயிருக்கிறது. அந்தச் சிறந்தசிகரத்தில் உட்கார்ந்திருக்கும் பூதபதியானசிவபெருமானை ரிஷிகளும் பூதக்கூட்டங்களும் தலைவணங்கி நமஸ்கரித்து மிகப்பரிசுத்தமானவாக்குக்களினால் மனத்தைக்கவரும்படி துதித்தனர்; உடனே, பாவங்களிலிருந்து விடுபட்டுத் துயரமற்றவராயினர். வாலகில்யரிஷிகளும்

---

1 'லோஹிதாங்கதபூஷண:' என்பது வேறுபாடம்; 'சிவந்ததோள்வளைகளை யணிந்தவர்' என்பது அதன் பொருள்.

பிரம்மரிஷிகளும் கர்ப்பத்திலிருந்துபிறந்தவரும் பிறவாதவருமான தவஸித்திபெற்றமஹரிஷிகளும் அவ்விடத்தில்தேவஸ்ரேஷ்டர்களுக்குமீஸ்வரரான அந்தப்பகவானைப் பணிகின்றனர். அந்தநிமிஷத்தில் சிறந்தஉமாதேவியானவள் சிவனுருக்குச்சமமாகஆடையுடுத்து அவர் செய்யும்விரதத்தையேசெய்துகொண்டும் பெண்பூதங்களினால்சூழப்பட்டும் எல்லாப்புண்ணியதீர்த்தங்களின் ஜலங்களும் நிரப்பப்பட்ட பொற்கலசத்தை எடுத்துக்கொண்டும் உயர்ந்தவாஸனையையணிந்துகொண்டும் பூமாரிபொழிந்துகொண்டும் எல்லாச்சிறந்தநதிகளாலும் பின்செல்லப்பட்டும் பகவான்பக்கத்தையடைவதற்காக அழகானபுன்னகையுடன் வந்தாள். அந்தப்பார்வதி தேவருக்குந்தேவரான சிவபெருமானருகில்வந்து அவர்மனத்திற்கு மகிழ்ச்சியையுண்டாக்கக் கருதி அவர்ஸமீபத்தில் பின்புறத்தில்நின்று தன்னுடன்வந்தகூட்டங்களைப்பார்த்து நகைத்துக்கொண்டு ஸந்தோஷத்துடன் அழகான கைகளினால் அவரதுகண்களைப் பொத்தினாள். உமாதேவியினால் ஈசுவரருடையகண் மறைக்கப்பட்டபோது உலகத்திற்கு மோகமுண்டாயிற்று. பூதங்களுக்குநாதராகிய பரமேஸ்வரர் கண்மூடினபோது, உலகத்தில் சந்திரசூரியர்களும் நக்ஷத்திரங்களும் மறைந்தும் வேதாத்யயனமும் யாகமுமில்லாமலும் இருள்மூடியும் விசனமும் பயமும் நடுக்கமும் உண்டாகிவிட்டன. அப்படி உலகத்தில் இருள்மூடிப் பரபரப்பும் உயிரழிவும்உண்டானபோது ரிஷிகளுக்கும் ஜனங்களுக்கும் ஹாஹாகாரமுண்டாயிற்று. அப்போது அவருடையநெற்றியில் நீண்டதும் பன்னிரண்டுசூரியர்களைப்போலப் பிரகாசிப்பதும் ஒளியினால்உலகங்களைப்பிரகாசிக்கச்செய்வதுமானமூன்றாவதுகண் உண்டாயிற்று. பிரளயகாலாக்நிக்குச்சமமான அந்தநேத்திராக்நியினால், மூன்னின்றஇமயமலை முழுதும் எரிக்கப்பட்டது. மிருகங்களும்பக்ஷிகளும் நிரம்பினதும் வித்தியாதரர்களும் கந்தர்வர்களும்வசிப்பதும் சிறந்த ஓஷதிகள்நிரம்பினதுமான அம்மலை எரிக்கப்படும்போது பார்வதி ஆச்சர்யத்தினால் கண்மலர்ந்தவளானாள். உலகமனைத்தும் ஆச்சரியத்தையடைந்தது. தேவர்கள் தானவர்கள் ராக்ஷஸர்கள் அனைவரும் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே நேத்திரத்திலுண்டான அந்தஅக்நியினால் சிறந்தமலை எரிக்கப்பட்டேபோயிற்று. அந்தமலை அழிந்துபோனதைக்கண்டு பார்வதி துயரமுற்றுத் தன்பிதாவைவெகுமானிக்கக்கருதிப் பிரபுவின்பாதங்களில் பூமியில்விழுந்தாள். தேவஸ்ரேஷ்டர்களுக்குமீஸ்வரரானசங்கரர் தேவிக்குண்டான மிக்கதுயரத்தைப் பார்த்து, அவளுக்குப் பிரியமுண்டாக்குவதற்காக அம்மலையைத்

திரும்பவும் நோக்கினர். குளிர்ந்தமனத்துடன் பகவான்பார்த்தநிமிஷத்தில் இமயமலை திரும்பவும் முன்போலாகிவிட்டது. பக்ஷிகள் ஸந்தோஷமாகவும் புஷ்டியாகவும், மரங்களும் காடுகளும் பூத்தும், ஸித்தர்களும் சாரணர்களும் ஸந்தோஷமடைந்துமிருந்தனர். தன்தந்தை முன்போலானதைக் கண்டபிறகு, பார்வதி மிக்கஸந்தோஷமடைந்தாள். ஸந்தோஷமும் ஆச்சரியமும் அடைந்த பார்வதிதேவி, எல்லா லோகங்களுக்கும் எல்லாஜனங்களுக்கும் இதத்திற்காக, பினாகியும் தேவதேவருமான மஹேஸ்வரரிடம் ஸந்தேகம்கேட்கக்கருதிப் பிரயோஜனமுள்ள பின்வரும்சொல்லைச் சொல்லலானாள்.

'பகவானே ! தேவஸ்ரேஷ்டர்களுக்கும் ஈசுவரரே ! சூலாயுதத்தைக்கையிற்பிடித்தவரே ! சிறந்தசக்தியுள்ளவரே ! அந்தநேத்திராக்கினிவெளிப்பட்டதனால் எனக்கு மிக்க ஆச்சர்யமுண்டாயிற்று. தேவஸ்ரேஷ்டர்களுக்கும்ஈசுவரரே ! இந்தநெற்றியில் சூரியனுக்கும் அக்நிக்கும்மேலாக விளங்கும் பெரிதான மூன்றாவதுநேத்திரம் எதற்காகப் பிரகாசிக்கிறது ? பெரிதானநேத்திராக்நியினால் எனதுபிதாவான இந்தஇமயமலை எரிக்கப்பட்டது; திரும்பவும் நீர் பார்த்தவுடன் ஸ்வபாவமாகிவிட்டது. பகவானே ! இந்தஸந்தேகம் என்மனத்தில் உண்டாயிருக்கிறது. தேவருக்குந்தேவரே ! உமக்கு நமஸ்காரம். அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றாள். அந்தத்தேவி இவ்வாறுசொல்ல, சங்கரர் அன்புகூர்ந்து அவளைப்பார்த்து, 'தேவியே ! தர்மந்தெரிந்தவளே! இன்சொற்சொல்லுகிறவளே! அன்புள்ளவளே! நீ ஸந்தேகப்பட்டது ஸரி. உன்னைத்தவிர வேறு [1]யாரால் என்னைக் கேட்கமுடியும் ? வெளிப்படையாயிருந்தாலும் ரகஸ்யமாயிருந்தாலும் உன்விருப்பத்திற்காக நான்சொல்லுகிறேன். பெண்ணரசியே! அதையெல்லாம் இந்தச்சபையில் தெளிவாகக்கேள். அன்புள்ளவளே ! நான் எல்லா உலகங்களுக்கும்முதல்வன் என்றறி. மூன்றுலோகங்களும் விஷ்ணுவுக்கு எப்படியோ அப்படியே எனக்கும் உள்பட்டவை. சிறந்த பெண்ணே ! விஷ்ணு படைப்பவர் ; நான் காப்பவன் என்றறி. நல்லதாகட்டும் கெட்டதாகட்டும் என்னை எப்போது தொடுகின்றனவோ அப்போது இவ்வுலகமனைத்தும் அப்படிஅப்படியே(நல்லதாகவும்கெட்டதாகவும்) ஆகிவிடும். குற்றமற்றதேவி! உறுதியானதவமுள்ளவளே ! நீ சிறுமியாதலால் இந்தரகஸ்யந்தெரியாமல் விளையாட்டுக்கு என்கண்களை மூடினாய். அதனால், சந்திரசூரியர்கள் இல்லாமல் உலகம் பயத்தினால்கலங்கிப்போயிற்று. அன்புள்ளபார்

---

1 'கோசித்' என்று பாடங்கொள்ளப்பட்டது.

வதியே! உலகத்தில், சூரியனில்லாமல் இருள்மூடினபோது உலகத்தைரக்ஷிப்பதற்கு மூன்றாவதுகண்ணை நான் உண்டுபண்ணினேன். அன்புள்ளவளே! நீ ஸந்தேகப்பட்ட விஷயத்தைச் சொன்னேன். ஸந்தேகமில்லாமலிரு' என்றுசொன்னார்.

---

## இருநூற்றுருவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஸ்வரஸம்வாதம் தொடர்ச்சி; ஈசுவாநுக்கு, நான்கு முகமும் கரியகண்டமும் பிநாகமென்னும்வில்லும் விருஷப வாகனமுமிருப்பதன் காரணங்களும், ரிஷிகள் ஈசுவரரைத்துதித்ததும்.)

தேவஸ்ரேஷ்டரானசங்கரருடைய ஸமயந்தெரிந்த உமாதேவியானவள், தனக்குப்பிரியமும்உலகத்திற்குநன்மையுமானவிஷயத்தை மறுபடியும்கேட்கக்கருதி மஹாதேவரைப்பார்த்து, 'பகவானே! தேவஸ்ரேஷ்டர்களுக்கும் ஈசுவரரே! எல்லாத்தேவர்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவரே! பகவானானநீர் எந்தக்காரணத்தினால் நான்முகரானீர்? பகவானே! உமது ஐந்திரமென்னும் கீழ்த்திசைமுகம் பார்ப்பதற்கு ஆச்சரியமாயிருப்பதேன்? பகவானே! வடக்கிலும் மேற்கிலுமுள்ளமுகங்கள் பார்ப்பதற்கு அழகாயிருப்பதேன்? தெற்கிலுள்ள முகம் மேலேஜடைகளால் வியாபிக்கப்பட்டுப் பயங்கரமாயிருப்பதேன்? மஹானுபாவரே! தோற்றுவதற்குக்காரணத்தைக் கேட்க விரும்புகிறேன். ஈசுவரரே! இந்தஸந்தேஹத்தை எனக்குச்சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். ஈசுவரர், 'பெண்ணரசியே! நீதெரிந்துகொள்ளவிரும்புகிறதை உனக்குச் சொல்வேன். முற்காலத்தில் மிகக்கொடியவரும் உலகத்தைமிகவும்நடுங்கச்செய்கிறவரும் பலத்தினால் கர்வமடைந்தவரும் ஆயுதங்களினால் கொல்லப்படாதவரும் ஆயுதவன்மையுள்ளவரும் ஒருவர்மேலொருவர் அன்புள்ளவருமான ஸுந்தோபஸுந்தர்களென்னும் இரண்டு அஸுரர்கள் இருந்தனர். அவர்களையழிப்பதற்காக விசுவகர்மாவினால் எல்லாவற்றிலிருந்தும் எள்ளளவுஎள்ளளவாக உயர்ந்தஅம்சங்களைஎடுத்துப் படைக்கப்பட்டவளும் உலகங்களினால்கொண்டாடப்பட்டவளுமாகிய திலோத்தமைஎன்றஅப்ஸரஸ்உண்டானாள். பூமியில்நிகரற்றஅழகுள்ளஅவள் தேவர்களின்காரியங்களைச் செய்வதற்குமுன் சிரிப்பும் விளையாட்டு

முள்ளவளாய் நான் தவம்செய்துகொண்டிருக்கும்போது வந்தாள். அன்புள்ளவளே! என்னை அவள்ப்ரதக்ஷிணம்செய்யும்போது, 'அவள் என்னால் வெகுமானிக்கப்பட்டுத் தேவகாரியத்தைச் செய்வள்' என்றுநினைத்து அவளைப்பார்க்கக்கருதி நாலுமுகங்களோடிருந் தேன். கிழக்கிலுள்ளஐந்திரமென்னும் என்முகமானது எப்போதும் தவம்செய்துகொண்டிருக்கும். பயங்கரமும் சிறந்ததுமாகிய எனது தென்திசைமுகம் பிரஜைகளைஸம்ஹாரஞ்செய்யும். அன்புள்ளவளே! எனதுமேற்றிசைமுகம் எப்போதும் உலகங்களின்காரியத்தைப் பார்க்கும்; வடதிசைமுகம் எப்போதும் ஆச்சரியகரமாக வேதங் களை ஓதிக்கொண்டிருக்கும். இந்தவிஷயங்கள் எல்லாவற்றையும் உனக்குச்சொன்னேன். இன்னும் என்னகேட்கவிரும்புகிறாய்?' என்றுசொன்னார். உமை, 'பகவானே! சூலத்தைக்கையில்தரிப்ப வரே! வரமளிப்பவரே! உமதுகழுத்தில் மயில்போன்றகருநிறம்விள ங்குவதேன்? இதனைக் கேட்கவிரும்புகிறேன்' என்றனள். மஹேஸ்வ ரர், 'தேவியே! இதனைஉனக்குச் சொல்வேன்; ஊக்கத்துடன் கேள். 1 முன்னொருயுகத்தில் பலசாலிகளான தேவாஸுரர்கள் அமுதத்திற் காக வெகுகாலம்வருந்திக் கடலைக்கடைந்தனர். வாஸுகியென்னும் நாகராஜனைக் கயிறாகப்போட்டுப் பெருங்கடலைக்கடையும்போது எல் லாஉலகங்களையும் அழிக்கும்விஷம் அந்தக்கடலில் உண்டாயிற்று. தேவர்களனைவரும் அதைக்கண்டவுடன் மனங்குன்றிப்போயினர். தேவியே! லோகங்களின் நன்மைக்காக அந்தவிஷம் என்னால் விழுங் கப்பட்டது. சிறந்தவளே! அதனாலேதான், மயில்போன்ற நீலநிறம் என்கழுத்தில் உண்டாக்கப்பட்டது. அப்போதுமுதல்தான், நான் நீலகண்டனென்று சொல்லப்படுகிறேன். இதனை முழுதும் உனக்குச் சொன்னேன். இன்னும் என்னகேட்கவிரும்புகிறாய்!' என்றுசொன் னார். உமை, 'நீலகண்டரே! எல்லாஉலகங்களுக்கும் ஸுகத்தைச் செய்கிறவரே! உமக்கு நமஸ்காரம். தேவருக்குந்தேவரே! ஈசு வரரே! அனேகம் ஆயுதங்களிருக்க நீர் பிநாகத்தை வைத்துக்கொள் ளக்கருதுவது ஏன்? அதனை எனக்குச்சொல்லக்கடவீர்' என்றுகேட் டாள். மஹேஸ்வரர், 'அழகானபுன்னகையுள்ளவளே! இந்தஆயு தத்தின்வரலாற்றை உனக்குச்சொல்லுவேன். அதில் தர்மம்இருக் கிறது. நீ கேள். மஹாதேவியே! முன்னொருயுகத்தில் கண்வனென்

---

1 'இந்திரன் சிவனதுபெருமையைவிரும்பி வஜ்ராயுதத்தைச் சிவன் மேல்பிரயோகிக்க அது கழுத்திலே உரைந்ததனால் நீலகண்டரானார்' என்பது வேறுபாடம்.

னும்ஒருமஹரிஷி இருந்தார். அவர் அற்புதமான தவம்செய்யத் தொடங்கினர். அன்புள்ளவளே! அவர் அவ்வாறு கடுந்தவம்செய் யும்போது அவர்தலையில் நாளடைவில் புற்று உண்டாயிற்று. புற்று இருந்ததனல் அவர்தலையில் மூங்கில் மூளைத்தது. அவற்றையெல் லாம் அவர்தாங்கிக்கொண்டு முன்போலவே தவம்செய்துகொண் டிருந்தார். தவத்தினல்பூஜிக்கப்பட்டப்ரம்மதேவர் அவருக்கு வரங் கொடுக்கப்போனர். பெண்ணரசியே! அவர் அவருக்கு வரமளித்த பிறகு, அந்தமூங்கிலைப்பார்த்து அதனல் உலகத்திற்கு உபயோகம் செய்வதைக்குறித்து ஆலோசித்தார். ஆலோசித்தபிறகு அந்தமூங் கிலையெடுத்து வில்லாகச்செய்வித்தார். உலகங்களைப்படைத்தவராகிய ப்ரம்மதேவர் அப்போது விஷ்ணுவிடத்திலும் என்னிடத்திலும்ஸாம ர்த்தியமிருப்பதையறிந்து விஷ்ணுவுக்கும் எனக்குமாகஇரண்டுவிற்க ளைத் தந்தார். பிநாகமென்பது என்வில். சார்ங்கமென்பது விஷ்ணு வின்வில். மிகுதியுள்ளமூங்கிலினல் காண்டீவமென்னும் மூன் ருவதுவில் உண்டாயிற்று. அதைச் சந்திரனுக்குக்கொடுத்து ப்ர ம்மா திரும்பத் தம்முலகம்சென்ருர். குற்றமற்றவளே! இந்த ஆயு தத்தின்வரலாற்றை முழுதும் உனக்குச்சொன்னேன்' என்றுசொன் ஞர். உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈசுவரரே! பிநாகத் தில் மிக்கவிருப்பமுள்ளவரே! பூதங்களுக்கதிபதியே! வேறு வாக னங்கள் அநேகமிருக்கையில் அந்தவிருஷபம் உமக்கு வாகனமானது ஏன்? தேவரே! இது எனக்குச் சந்தேகம். இதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மகாதேவர், 'எனக்கு விருஷ பம் வாகனமானவகையை உனக்குச் சொல்வேன். வெளுத்தபுன் னகையுள்ளவளே! முன்ஸ்ருஷ்டியின்ஆரம்பத்தில் பசுக்கள் வெள்ளை நிறமாகவிருந்தன. அந்தப்பசுக்கள் பலமும் தேகக்கட்டுமுள்ளவை களாய்க் கொழுத்துத் திரிந்தன. அழகியமுகமுள்ளவளே! நான் அந்தக்காலத்தில் இமயமலையில் உலகநன்மைக்காக ஒற்றைக்காலால் நின்று கையைத்தூக்கிக்கொண்டு தவம்செய்தேன். தேவியே! அப் போது, கொழுப்புமிகுந்தபசுக்கள் கூட்டமாக என்பக்கத்தில் சுற்றி லும்வந்து நானிருந்தவிடத்தை இடித்தன. அவைகள்செய்தபிழை யினல் எனக்கு மனகலக்கமுண்டாயிற்று. ஆதலால், அப்போது கோபமுள்ளமனத்தினல் பசுக்கள் எரிக்கப்பட்டன. பசுக்களுக்கு அந்தக்கொடியவிசனம்வந்தபோது, இந்தவிருஷபம் என்னிடத்தில் வேண்டிக்கொண்டு கோபத்தையடக்கிற்று. அப்போதுமுதல்தான், பசுக்கள் அடக்கமுள்ளவையும் பலநிறங்களுள்ளவையுமாயின.

தேவியே ! இந்த விருஷபமட்டும் முதலிலிருந்தபடி வெண்ணிறமா யிருக்கிறது ; அப்போதுமுதல்தான், எனக்குவாகனமாகவும் கொடி யாகவும் ஏற்படுத்தப்பட்டது. அதனாலேதான், தேவர்களும் கோக் களும் என்னைப்பசுபதியாகச் செய்தனர். தேவியே! அப்போது, நான் கோபம்தெளிந்து பசுபதியுமானேன்' என்றுகூறினர்.

---

## இருநூற்றேழாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேச்வர ஸம்வாதம் தொடர்ச்சி; ஈசுவரர் மயானத்தில் வஸிப்பது, உருவம் உக்ரமாயிருப்பது, சிரத்தில் பிறை தரிப்பது இவற்றின் காரணங்கள்.)

உமை, 'பகவானே ! ஸர்வப்பிராணிகளுக்குமீசுவரரே! சூலத் தைக்கையில்தரிப்பவரே! விருஷபக்கொடியுள்ளவரே! விசித்திரமும் மங்களகரமுமான அழகியவீடுகளில் மற்றப்பிராணிகளிருக்கையில் மயிர்களாலும் எலும்புகளாலும் அருவருக்கத்தக்கதும் [1]நூற்றுக் கணக்கான மண்டையோடுகள்நிரம்பினதும் நரிகளும் கழுகுகளும் சேர்ந்திருப்பதும் பிணப்புகையினால்மூடப்பட்டதும் சிதைகளின் அக்நிகளால்விகாரமானதும் கொடியதும் பயங்கரமானதும் போகத் தகாததுமான மயானத்தில் நீர் ஸந்தோஷமாயிருப்பது ஏன் ? பார்க்க வும்வழங்காத இப்படிப்பட்ட சவங்கள்போடுமிடத்தில் நீர் எப்படி விளையாடுகிறீர்? தேவரே! எனக்குஇந்தச்சந்தேகமிருக்கிறது. அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மகாதேவர், 'தேவி ! ஆ ! ஆ ! உனக்குச் சொல்வேன். ஊக்கத்துடன் கேள். சுத்தமான புன்னகையுடையதேவியே! சிறந்தவளே! முன்னர் நான் இருப்பதற் காகச் சுத்தமானவிடத்தைத்தேடி வெகுகாலம்கடந்தும் மிகப்பரிசுத் தமானஇடம் கிடைக்கவில்லை. எனக்கு இந்தஎண்ணமுண்டாயிருந்த காலத்தில், மிக்கபயங்கரமானகலக்கமுள்ள ப்ரம்மதேவர் என்எதிரில் வந்துநின்றார். அப்போது, கொடியதும் உலகங்களுக்குப்பயத்தைத் தருவதுமாகிய பூதசிருஷ்டி எங்கும் உண்டாயிற்று. பலநிறங்களும் பலவடிவங்களும் நொடியகோரப்பற்களும் பிசாசங்கள் ராக்ஷஸர்க ளின்முகங்களுமுள்ளவையும் அடிப்பவையும் பிராணிகளின்உயிரை எடுப்பவையுமானபூதங்கள் பிராணிகளை அதிகமாகக்கொன்று இங்கும்

---

1 பின்னும்வருவதால் ஒருசொல்விடப்பட்டது.

அங்கும் திரிந்தன. இவ்வாறு பிராணிகள்போனதனால் உலகம்அழி யும்போது,பிதாமஹர் அதற்குப்பரிகாரம் செய்வதற்காக என்னை அவ ற்றைஅடக்கச்சக்தியுள்ளவனென்று நினைத்து அந்தவேலையில் நிய மித்தார். அன்புள்ளவளே! நானும் பிராணிகளின் நன்மைக்காக அதை ஏற்றுக்கொண்டேன். தேவியே! பிறகு, அந்தப்பூதங்களி னிடமுண்டான பயத்திலிருந்து பிராணிகளைக் காப்பாற்றினேன். குற்றமற்றவளே! இந்தமயானத்தைவிடப் பரிசுத்தம் ஒன்றுமில்லை. மனிதர்களின்ஸஞ்சாரமில்லாமையால் மயானம்மிகப்பரிசுத்தமென்று நினைக்கப்பட்டது. சிருஷ்டிக்கப்பட்ட அந்தப்பூதங்களை நான் மயா னத்தில் நிறுத்தினேன். அன்புள்ளவளே! அங்கிருந்துகொண்டு எல்லாப்பிராணிகளின்பயத்தையும் போக்குகிறேன். எனக்குப் பூதங் களைவிட்டிருக்கப் பிரியமில்லை. ஆதலால், என்மனம் மயானத்திலிரு ப்பதில் விருப்பமுற்றிருக்கிறது. பரிசுத்தத்தைவிரும்பும்பிராம்மணர் கள் மயானத்தை எப்போதும் பரிசுத்தமென்று சொல்லுகின்றனர். தவம்செய்கிறவர்களாலும் மோக்ஷத்தைக்கருதுகிறவர்களாலும் மயா னம் எப்போதும் அடையப்படுகிறது. அன்புள்ளவளே! அது [1]வீரர் களுடையஸ்தானமாயிருப்பதாலும் அதனை எனக்கு இடமாகச் செய் துகொண்டேன். (அதற்கு) அனேககபாலங்கள்நிரம்பிப் பயங்கரமா யிருப்பதே அழகாயிருக்கிறது. உச்சிப்போதிலும் காலைமாலைகளிலும் ருத்திரரைத்தேவதையாகவுடைய (திருவாதிரை) நக்ஷத்திரத்திலும் தீர்க்காயுளைவிரும்புகிறவர் அசுத்தத்துடன் அங்கேபோகக்கூடா தென்பது நிச்சயம். பூதங்களினாலுண்டான பயத்தைப்போக்குவ தற்கு என்னைத்தவிர மற்றொருவனால் முடியாது. நான் அங்கிருந்து கொண்டு ஒவ்வொருநாளும் ஜனங்களையெல்லாம் காப்பாற்றுகிறேன். என்கட்டளையினால் இங்குள்ளபூதங்களின்கூட்டங்கள் யாரையும்கொ ல்லுவதில்லை. உலகங்களின்நன்மைக்காக அந்தப்பூதங்களை நான் மயா னத்தில் ஸந்தோஷப்படுத்திக்கொண்டிருக்கிறேன். இதனை முழுதும் உனக்குச் சொன்னேன். இன்னும் என்ன கேட்கவிரும்புகிறாய்?" என்றுசொன்னார்.

உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈசுவரரே! முக்கண் ணரே! வ்ருஷபத்வஜரே! உமதுஉருவம் செம்மட்டைநிறமும் விகார மும்பயங்கரமும்சாம்பற்பூசப்பட்டதும்விகாரமானகண்களும்கூரான கோரப்பற்களுமுள்ளதும் ஜடைவியாபித்ததும் புலியின்வயிற்றுத் தோலையுடுத்ததும் செம்மட்டைநிறமான மீசையடர்ந்ததும் கோப

1 தாந்த்ரிகமதங்களுள் ஒருவகையார்.

முள்ளதும் [1]சூலம் பட்டிசமென்னும் ஆயுதங்களோடுகூடி உக்கிரமு மாயிருக்கிறது. இப்படிப்பட்டஉருவம் எதற்கு? அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேசுவரர், 'அதனை உனக் குச் சொல்வேன். அதனை நீ ஊக்கத்துடன் கேள். அன்புள்ளவளே! உலகத்தில் குளிர்ச்சி வெப்பம்என இரண்டுதன்மைகளுள்ளன. அவற் றினல் பற்றப்பட்டஇவ்வுலகமனைத்தும் [2] ஸௌம்யமும் [3]ஆக்நேய முமாகிறது. ஸௌம்யரூபம் விஷ்ணுவினிடத்திலும் ஆக்நேயரூபம் என்னிடத்திலும் எப்போதும் நிலையாயிருக்கின்றன. இந்தத்தேக த்தினல் நான் எப்போதும் எல்லாஉலகங்களையும் தாங்குகிறேன். தேவியே! உக்கிரமானவடிவமும்விரூபமானகண்களும் சூலபட்டிசங் களென்னும் ஆயுதங்களுமுள்ள ஆக்நேயமென்னும் எனதுரூபம் உல கத்தின்நன்மைக்காக ஏற்பட்டது. அழகியமுகமுள்ளவளே! இந்த உருவத்தைவிட்டு நான் மாறுவேனுயின் எல்லாஉலகங்களுக்கும் தடு மாற்றம் உண்டாகிவிடும். ஆதலால், உலகத்தின் நன்மையைவிரும்பி நான் இந்தரூபத்தைத் தரித்திருக்கிறேன். தேவியே! இதனை உனக் குச் சொன்னேன். இன்னும் என்னகேட்கவிரும்புகிருய்?' என்று சொன்னர். உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈசுவரரே! சூலத்தைக்கையில்தரிப்பவரே! வ்ருஷபக்கொடியுடையவரே! உமது தலையில் சந்திரனதுபிறை விளங்குகிறதே, அது எதற்காக? தேவரே! அதனை நான் கேட்கவிரும்புகிறேன். சொல்லக்கடவீர்' என்றுகேட் டாள். மஹேஶ்வரர், 'சிறந்தவளே! அதன்காரணத்தை நான் உனக் குச் சொல்வேன்; கேள். தேவியே! வெளுத்தபுன்னகையுள்ள வளே! முன் ஒருகாரணத்தினல் தக்ஷயாகத்தைக்கெடுப்பதற்காக நான் பூதங்களால்சூழப்பட்டுக் கோபமுற்றிருந்தேன். அந்தச் சிறந்தயாகத்தில் ஹவிர்ப்பாகங்காரணமாகவந்தபோரில் யாகத்தில் பாகம்வாங்கிக்கொண்டதேவர்கள் என்னல் அடித்துத் துரத்தப் பட்டனர். தேவியே! குற்றமில்லாமலிருந்தும் கோபமுற்றஎன்னல் அங்கே மிகவும் பிடிக்கப்பட்டும் கால்கட்டைவிரலால்உதைக்கப்பட்டு மிருந்தசந்திரன் அவ்வளவு தீங்குசெய்யப்பட்டும் என்னைப்பார்த்து நல்வார்த்தையாகவே வேண்டிக்கொண்டான். அன்புள்ளவளே! பின்னிட்டு அதனை நான் நினைக்கும்போது வருத்தமுண்டாயிற்று. அப்போதுமுதல் நான் சந்திரனைத் தலையில் வைத்துக்கொண்டிருக் கிறேன். இப்படிச்செய்வதனுலேதான் என்பாவம்நீங்குமென்பதுஎன்

1 இரட்டித்தலால் ஒருசொல் விடப்பட்டது.
2 சந்திரன்போன்றது. 3 அக்னிபோன்றது.

எண்ணம். அதனால், அப்போது முதல் என்தலையில் சந்திரன் எப்பொழுதும் காணப்படுகிறான்' என்றுசொன்னார். தேவஸ்ரேஷ்டரான சங்கரர் இவ்வாறுசொல்லும்போது, மகரிஷிகள் ஆச்சரியமடைந்து அஞ்சலிவரிசைகளுடன் சிறந்தவாக்குக்களினால் ஈசுவரரைத் துதிக்கத்தொடங்கினர். 'சங்கரரே! நமஸ்காரம். எல்லாவற்றிற்கும் ஈசுவரரே! உலகமனைத்திற்கும் தந்தையே! நமஸ்காரம். தேவருக்கும் முதல்தேவராயிருப்பவருக்கு நமஸ்காரம். சந்திரகலையைத்தரிப்பவரே! நமஸ்காரம். மிகக்கொடியதற்கும் கொடியவரே! நமஸ்காரம். சங்கரரே! ருத்திரரூபியானஉமக்கு நமஸ்காரம். மிக்கசாந்தமுள்ளவருக்கும்சாந்தமானவரே! நமஸ்காரம். சந்திரனைக்காப்பவரே! நமஸ்காரம். உமாதேவியோடுகூடிய தேவருக்கு நமஸ்காரம். நான்முகரே! உமக்கு நமஸ்காரம். பூதபதியே! சம்புவே! கங்காதரரே! நமஸ்காரம். முத்தலைச்சூலத்தைக்கையில் தரிப்பவருக்கு நமஸ்காரம். நாகாபரணருக்கு நமஸ்காரம். விரூபாக்ஷருக்கு நமஸ்காரம். தக்ஷயாகத்தைஎரித்தவரே! நமஸ்காரம். அநேககண்களுடையவருக்கு நமஸ்காரம். உலகத்தைரக்ஷிப்பவரே! நமஸ்காரம். ஈசுவரருடையமகிமையும் ஆச்சர்யம். ஈசுவரருடைய கிருபையும் ஆச்சர்யம். இப்படி தர்மத்தைமுதன்மையாகக்கொண்டிருப்பதும் தேவருக்குந்தேவரான ஈசுவரருக்கே தகும்' என்றனர். இவ்வாறு ரிஷிகள் துதிக்கும்போது காலம்தெரிந்தஉமாதேவியானவள் ரிஷிகளின்சந்தோஷத்திற்காகச் சம்புவைப்பார்த்து உலகத்திற்கு மிக்க அநுகூலமான சொல்லைச் சொல்லலானாள். 'பகவானே! தேவஸ்ரேஷ்டர்களுக்குமீஸ்வரரே! எல்லாஉலகங்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவரே! இந்தரிஷிக்கூட்டங்களுக்கும் எனக்கும் விருப்பத்தைச் செய்வதற்காக வர்ணாஸ்ரமங்களுக்கு ஏற்படுத்தப்பட்டதர்மங்களை முழுதும் சொல்லக்கடவீர். தேவஸ்ரேஷ்டரே! திருப்தியுண்டாகவில்லை. உமதுசொல்லை இன்னும் கேட்கவிரும்புகிறேன். பிரபுவே! தேவருக்குமீசுவரரே! 'இவள் ஒற்றுமையாகத்தர்மத்தைச்செய்பவள்' என்றும், 'பக்தியுள்ளவள்' என்றும் நினைத்து உலகங்களின் இதத்திற்காகச் சொல்லக்கடவீர். சங்கரரே! எல்லாவற்றையும் தெளிவாகச் சொல்லவேண்டுகின்றேன்' என்றுகேட்டனள்.

## இருநூற்றெட்டாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஶ்வர ஸம்வாதம் தொடர்ச்சி; வர்ணாஶ்ரமதர்மங்கள்.)

மஹேஶ்வரர், 'தேவியே! ஆ! ஆ! உன்மனத்திற்குவிருப்பமானதைச் சொல்வேன். வர்ணாஶ்ரமங்களைச்சேர்ந்ததர்மங்கள் எல்லாவற்றையும் முழுதும் கேள். பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர்என்று வர்ணங்கள் நான்குவகை. உலகத்தைநடத்தக்கருதினபிரம்மதேவரால் முதலில் பிராம்மணர்கள் படைக்கப்பட்டனர். அவர்களுக்குரியகர்மங்களும் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டன. இவ்வுலகமெல்லாம் ஒரேவர்ணமாயிருக்குமாயின் அழிந்துபோம். தேவியே! அதனால், நாலுவர்ணங்களும் சேர்ந்துபடைக்கப்பட்டன. பிராம்மணர்கள் முகத்திலிருந்து உண்டாக்கப்பட்டனர். அதனால், அவர்கள் சொல்திறமையுள்ளவர்கள். க்ஷத்திரியர்கள் கைகளிலிருந்து படைக்கப்பட்டனர். அதனால், அவர்கள் கைவன்மையுள்ளவர்கள். வைசியர்கள் தொடையிலிருந்து உண்டாயினர். அதனால், அவர்கள் [1] வார்த்தையினால் ஜீவிப்பவர்கள். சூத்திரர்கள் பாதங்களிலிருந்து உண்டாக்கப்பட்டனர். அதனால், அவர்கள் ஊழியஞ்செய்பவர்கள். தேவியே! நான்குவர்ணங்களின் தர்மங்களையும் தொழில்களையும் ஊக்கத்துடன் கேள். ப்ராம்மணர்கள் உலகங்களைக்காப்பதற்காக படைக்கப்பட்டவர். அதனால், அவர்கள் பூமிதேவர்களென்று சொல்லப்பட்டனர். தம்நன்மையைக்கருதுகிறயாரும் ப்ராம்மணர்களை அவமதிக்கலாகாது. தேவியே! தானத்தையும் தவத்தையும் எப்போதும் நடத்துகிறவர்களாகிய பிராம்மணர்கள் இராமற்போவாராயின் [2] இரண்டு லோகங்களும் நிலையில்லாமற்போமென்பதுதான் சுருக்கம். உலகங்களுள்பிராம்மணஜன்மமட்டும்பெறுதற்கரிதென்றுநினைக்கப்படுகிறது. பிராம்மணன், கல்வியில்லாதவனாயிருந்தாலும் பொருளில்லாதவனாயிருந்தாலும்எப்போதும்பூஜிப்பதற்குரியவன். காமத்தினாலும் லோபத்தினாலும் மதிகெட்டுப்பிராம்மணர்களை அவமதித்தும் இகழ்ந்தும்கோபமூட்டியும் அடித்தும் பொருளைப்பறித்தும் இழிதொழில்களைச்செய்வித்துமிருக்கும்இழிந்தவனும் மூடனுமானமனிதன் என்னையே அவமதிப்பவனும் இகழ்கிறவனும் கோபமூட்டுகிறவனும் அடிப்பவனும்

1 பயிர், பசுக்காத்தல், வர்த்தகம். 2 இம்மையும்மறுமையும்.

என்பொருளைப்பறிப்பவனும் புத்தியில்லாமல் என்னையே [1]இழிதொழிலில் ஏவுகிறவனுமாகிறான். வேதமோதுவதும் யாகம்செய்வதும் கொடுப்பதும் பிராம்மணனுக்குத் தர்மங்களென்றும் ஓதுவிப்பதும் யாகம்செய்விப்பதும்தானம்வாங்குவதும் பிராம்மணனுக்கு [2]விருத்திகளென்றும் ஏற்பட்டிருக்கின்றன. பொய்யாமை அடக்கம் தவம் தூய்மைஎன்னும்இவை அவனுக்கு இயற்கையாயுள்ளதன்மைகள். அறுசுவைப்பதார்த்தங்களையும் தானியங்களையும்விற்பதும் கஷ்டமில்லாதபோதுசூத்திரனுடையஅன்னத்தைப்புசிப்பதும் சூத்திரப்பெண்ணை அடைவதும்பிராம்மணனுக்குமறுக்கப்பட்டன.எப்போதும்தவம் செய்வதே பிராம்மணனுடைய தர்மமென்பதில் ஸந்தேகமில்லை. பிரம்மதேவர் பிராம்மணனைத் தர்மத்திற்காகவே தமதுதவவன்மையினால் முதலில்உண்டாக்கினார். உபநயனமும்எப்போதும்ஜலத்தைவைத்துக்கொள்வதும் சாஸ்திரத்தைக்கேட்பதும் வேதமோதுவதற்காகப்ரம்மசாரிவ்ரதமிருப்பதும் அவனுடையதர்மங்கள்; அக்நிகார்யமும் நித்யமாக யஜ்ஞோபவீதம்தரிப்பதும் முக்கியமானதர்மங்கள். சூத்திரான்னத்தைவிடுவதும் நன்மார்க்கத்தைப்பிடிப்பதும் நித்யஉபவாஸமிருப்பதும் இந்திரியங்களைஜயிப்பதும் பிராம்மணனுடைய முக்கிய தர்மங்கள். [3]பகைவரைவாட்டுபவளே! வீட்டிலிருந்து இல்லறத்தை நடத்துகிறவனுக்கு வீட்டைவிளக்கிவைப்பதும் மெழுகிவைப்பதும் அதிதிகளிடம் அன்புவைப்பதும் மூன்றக்நிகளையும்வைத்திருப்பதும் சாஸ்திரவிதிப்படி [4]இஷ்டிகளையும் பசுபந்தங்களையும்செய்வதும் முக்கியமானதர்மங்கள். மனைவியும் கணவனும் ஒத்தொழுகுவதுதான் இல்லறத்தோரின்கடமை.இவ்வாறு கிருஹஸ்தாஶ்ரமத்திலிருந்து தர்மத்தைக்காப்பது பிராம்மணனுடையகடமை. தேவியே! க்ஷத்திரியனுக்குஉரியதர்மம் உன்னால்கேட்கப்பட்டதே, அதனையும் உனக்குச் சொல்வேன்; தேவியே! ஊக்கத்துடன் கேள். தேவியே! பிராம்மணனுக்குப்பிறகு பிராம்மணனைரக்ஷிப்பதற்காக க்ஷத்திரியர்கள்ஏற்படுத்தப்பட்டிருக்கின்றனர். உலகத்தில் க்ஷத்திரியரில்லாமற்போவாராயின் உலகமே கீழ்மேலாகிவிடும். க்ஷத்திரியர்கள்காப்பதனால்தான் உலகம் நிலைபெற்றிருக்கிறது. அந்தக்ஷத்திரியனுக்கும் அத்யயனம் தானம் யாகம்இவை தர்மங்களாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

1 'நிந்திதே' என்று பாடங்கொள்ளப்பட்டது.

2 'கர்மாணி' என்று பாடம்கொள்ளப்பட்டது.

3 'பரந்தபே' என்று பாடம்கொள்ளப்பட்டது.

4 இரண்டும் சிறியயாகங்கள்.

அசக்தர்களைக்காப்பதும் துஷ்டர்களைத்தண்டிப்பதும் சிஷ்டர்களைப் போஷிப்பதும் ஆறுகர்மங்களைச்செய்துஜீவிப்பதும் அவனுடையகர்மங்கள். உற்சாகமும்ஆயுதம்பிடித்துஜீவிப்பதும்வேலைக்காரரைக்காப்பாற்றுவதும் எடுத்தகாரியத்தில் வீண்போகாமையும் நல்லகுணமுள்ளவனாயிருப்பதும் பட்டணத்துஜனங்களுக்குநன்மைசெய்வதும்அவனுக்கு இயற்கையாயுள்ளதர்மங்கள். எப்போதும் வியவகாரங்களைத் தவறாமல்பார்ப்பவனும் [1]ஆறுகுணங்களில் ஊக்கமுள்ளவனும் ஏழைகளுக்குத்திரவியங்கொடுப்பவனுமாகிய அரசன்சிறந்தபுண்ணியத்தை அடைவான். இவ்வாறு முன்னோர்களால் செய்கையின்முறையை அனுஸரித்துத் தர்மம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. தேவியே! வைசியர்களும் அப்படியே உலகவாழ்க்கைக்கு உபயோகமாக ஏற்படுத்தப் பட்டிருக்கின்றனர். மற்றவருணத்தார்கள் அவர்களைப்பற்றியே ஜீவிக்கின்றனர். ஏனெனில், அவர்கள் பிரத்தியக்ஷமாகப் பலன்களைக்கொடுப்பவர். ஆதலால், வைசியர்கள் இராவிடின் மற்றவர்களுமிரார். அவர்களுக்கும் அத்யயனம் தானம் யாகம்இவைகள் தர்மங்களாக விதிக்கப்பட்டிருக்கின்றன. எப்போதும் பசுக்களைக்காப்பதும் பயிரிடுவதும் வைசியனுடையதொழில்கள். இருபிறப்பாளராகிய இம்மூன்று வர்ணத்தாரும் அக்கிஹோத்திரம்செய்யவேண்டியவர்கள். வர்த்தகம் ஸன்மார்க்கத்திலிருப்பது அதிதிகளையாதரிப்பது பிராம்மணர்களை நல்வரவுவிசாரிப்பது ஆகியஇவை வைசியர்களுக்கு இயற்கையாயுள்ளதர்மங்கள். வைசியதர்மத்திலிருந்து வர்த்தகத்தை நடத்தும் வைசியர்கள் எள்ளையும் வாசனைப்பொருள்களையும் சுவைகளையும் எவ்வகையிலும் விற்கலாகாது. எல்லாவிருந்துகளையும் ஆதரிப்பதும் இரவிலும் பகலிலும் இயன்றவரையில் தர்மார்த்தகாமங்கள் மூன்றையும்நடத்துவதும் அவர்களின்தர்மங்கள். தேவியே! அவர்கள் இவ்வாறு உலகவாழ்க்கைக்காகவேபிரம்மதேவரால் படைக்கப்பட்டனர். அப்படியே சூத்திரர்கள் எல்லாருடையதர்மங்களுக்கும் ஸகாயமாகப் படைக்கப்பட்டனர். சூத்திரர்களில்லாவிடில் வேலைசெய்கிறவனே யில்லை. முந்தியமூன்றுவர்ணத்தாரும் சூத்திரர்களைக்கொண்டே தம் கர்மங்களெல்லாவற்றையும் நடத்துகிறவர்களாகச் சொல்லப்படுகின்றனர். பிராம்மணன்முதலானவர்ணங்களுக்குப்பணிசெய்வது வர்த்தகம் கைத்தொழில் சிற்பம் நடனம் இவை சூத்திரதர்மங்களென்று சொல்லப்படுகின்றன. தீங்குசெய்யாதவனும் சிறந்தஒழுக்கமுள்ளவனும் தேவப்பிராம்மணர்களை வந்தனம்செய்பவனுமாகிய

[1] ஸபாபர்வம் 14-ம் பக்கம் 15-ம் குறிப்பிற்காண்க.

சூத்திரன் தன்தர்மத்தினாலேயே விரும்பினபுண்ணியபலன்களையடை வான். இதைப்போன்றவேறுதர்மங்களும் சூத்திர [1]தர்மங்களாகச் சொல்லப்படுகின்றன. அழகானமுகமுள்ளவளே ! உலகத்தில் சூத் திரர்களும் இவ்வகையாகக் கர்மங்களுக்குரியவர்களாகவே படைக் கப்பட்டனர். தர்மத்தையனுஷ்டிப்பவளே ! இந்நான்குவர்ணங்களுக் கும் மறுமையிலும் வர்ணதர்மத்திற்குரியநல்லலோகங்கள் படைக்கப் பட்டிருக்கின்றன; அப்படியே ஸரியாக அனுபவிக்கப்பட்டுவருகின் றன. இந்தவர்ணங்களின்தர்மங்களையும் அவர்களின்தொழில்களையும் கேட்கவிரும்பினஉனக்குச் சொன்னேன். இன்னும் எதனைக் கேட்க விரும்புகிறாய் ?' என்றுசொன்னார். உமை, 'பகவானே ! தேவருக் குந்தேவரே ! ஈசுவரரே ! வ்ருஷபத்வஜரே ! பிரபுவே ! உமக்குநமஸ் காரம். ஆஶ்ரமங்களின்தர்மங்களை நான்கேட்கவிரும்புகிறேன்' என்று சொன்னாள். மகேசுவரர், 'தேவியே ! வேதந்தெரிந்தவர்களால் ஆஶ் ரமங்களுக்குவிதிக்கப்பட்டதர்மங்களைச் சொல்லுகிறேன் ; ஊக்கத் துடன் கேள். நான்கு ஆஶ்ரமங்களுள் கிருகஸ்தாஶ்ரமத்தின் தர்மத் தைநடத்தும்கிருஹஸ்தன் மேலானவன். [2]ஐந்துயஜ்ஞங்களைச்செய் வது ஸ்நானசௌசம்செய்வது தன்மனைவியோடுதிருப்தியாயிருக்கை சோம்பாமை ருதுகாலத்தில்புணர்வது தானம் யாகம் தவம் தேசம் விட்டுப்போகாமை வேதாத்யயனம் அக்நிஹோத்திரம் அதிதிகளிடம் கண்ணோட்டம் கூடியவரையில்வேண்டினவர்களைப்புசிப்பித்தல்மனத் தினாலும் சொல்லினாலும் செய்கையினாலும்எல்லாரையும்ஆதரிப்பது இவை அவனுக்கு இருக்கவேண்டியவை. இவைபோன்றமற்றநற்கரு மங்களையும் ஜீவனத்திற்குக்கஷ்டமில்லாதகிருஹஸ்தன் செய்யக்கட வன். இவ்வாறுநடக்கும்கிருஹஸ்தனுக்குப் புண்ணியலோகங்கள் உண்டென்பதில் ஸந்தேகமில்லை. அவ்வாறே, வானப்பிரஸ்தனுக்கும் அழியாததர்மங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. மனவுறுதியோடு நிச்சயம்செய்துகொண்டு வீட்டிலிருப்பதைவிட்டுக் காட்டிலுள்ள சிறந்தநல்லபதார்த்தங்களைக்கொண்டே ஜீவிக்கவேண்டுமென்பது அவ னுடையநிலைமை. தரையில்படுப்பதும் சடைதரித்தலும் தோல்மரவுரி ஆடையுடுப்பதும் தேவதைகளுக்கும்அதிதிகளுக்கும் ஸத்காரம்செய் வதும் பெருந்துன்பங்களையும்வெறுமலிருப்பதும் அக்நிஹோத்திர மும் மூன்றுகாலஸ்நானமும் அவனுக்குக் கடமைகளாக விதிக்கப் பட்டிருக்கின்றன. புலன்களையடக்குவதும் பொறுமையும் சத்தமும்

[1] 'தாஸதர்ம:' என்று பாடம் கொள்ளப்பட்டது.

[2] ஆதிபர்வம் 559-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

அவனுக்கு இயற்கையாயுள்ளதர்மங்கள். இப்படியிருந்துஉயிர்நீங்கினால் அவன் தேவலோகத்தில் கொண்டாடப்படுவான். தேவியே! யதிகளின்தர்மங்களும் அப்படியே. யதியானவன் வீட்டைவிட்டு எங்கேயாவது இருக்கவேண்டும். பொருளில்லாமையும் முயலாமையும் எல்லாச்சுத்தங்களும் கள்ளமில்லாமையும் எங்கும்பிக்ஷையெடுப்பதும் எந்தத்தேசத்திற்கும்போவதும் எப்போதும் தியானத்தை விடாமலிருப்பதும் (யோகத்தினால்) தேகத்தைச் சுத்தமாகவைத்துக் கொள்வதும் பொறுமையும் தயையும் தத்வஜ்ஞானத்தில்புத்திசெல்வதும் ஸந்யாஸிக்குவிதிக்கப்பட்ட தர்மங்களாகும். தேவியே! [1]ப்ரம்மசாரியாயிருப்பவனும் அவனுடைய இரண்டாவதுஜன்மமாகியஉபநயனமுதல் பிக்ஷையெடுத்து ஐம்புலன்களையுமடக்கித் தன்குருவுக்குப் பணிவிடைசெய்யவேண்டும். எப்போதும் எல்லாவிடங்களிலும் குருபூஜையைச் செய்யவேண்டும். பிக்ஷையெடுப்பது அக்கிசுஸ்ருஷைசெய்வது எப்போதும்ஸ்நானம்செய்வது வேதமோதுவது இவை அவனுக்கு இயற்கையாயுள்ளதர்மங்கள். அவன்செய்கை பிராணனுள்ளவரையிலும் குருபணிவிடைதானென்பது நிச்சயம். குருவில்லாதபோது அவர்புத்திரனிடத்தில் குருவினிடத்தில்நடப்பதுபோல நடக்கவேண்டும். இப்படியிருந்தால் அந்தப்பிரம்மசாரியானபிராம்மணனும் பரிசுத்தமானஉலகங்களையடைவான். தேவியே! ஆஸ்ரமத்திலிருப்பவர்களின் தர்மத்தையும் உனக்குஇப்போதுசொன்னேன். உலகத்தில் நான்குஆஸ்ரமங்கள்தாம் நியாயமாக ஏற்பட்டிருக்கின்றன. அவற்றை உனக்குச் சுருக்கமாகச் சொன்னேன். இன்னும் என்னகேட்கவிரும்புகிறாய்?' என்றுசொன்னார்.

---

## இருநூற்றெண்பதாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஸ்வர ஸம்வாதம் தொடர்ச்சி; ரிஷிதர்மங்கள்.)

உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈஸ்வரரே! திரிபுரமழித்தபிரபுவே! சங்கரரே! இந்தரிஷிக்கூட்டம், 'தவம் தவம்' என்று தவமீட்டுவதையே தலைமையாகக்கொண்டு இடைவிடாமல் தவம்செய்வதினாலேயே வருத்தப்படுகின்றன. அந்தத்தர்மத்தின்

[1] இது நைஷ்டிகப்ரம்மசாரியைப்பற்றியது.

இலக்கணம்யாது ? அதன்வரலாறு எப்படிப்பட்டது ?' அதனை நான் கேட்கவிரும்புகிறேன். வரங்கொடுப்பவரே ! அதனை எனக்குஉரைக்கக்கடவீர்' என்றுசொன்னாள். பார்வதி இவ்வாறுசொல்லும்போது ரிஷிகளனைவரும் மனமகிழ்ந்து அதில் ஊக்கத்துடன், 'நல்லது ! நல்லது !' என்றுசொன்னார்கள். ரிஷிதர்மங்களைக்கேட்கும் பார்வதியை ரிஷிகள் கொண்டாடினர். 'தேவியே ! உன்னனுக்கிரகத்தினால் நாங்கள் எங்களுக்கு முக்கியமான இதத்தைக் கேட்கப்போகிறோம். உனதுபாதங்களின்கீழ் அடுத்த நாங்களனைவரும் பாக்கியம்பெற்றோம்' என்று எல்லாரும் தேவியை வாக்கினால் துதித்தனர். மகேசுவரர், 'சிறந்தமகிமையுள்ளவளே ! நல்லமனமுள்ளவளே! நீ கேட்கக்கருதுவது நியாயம். ஆ ! ஆ! சுத்தமானபுன்னகையுள்ளவளே ! ரிஷிதர்மத்தை உனக்குச்சொல்வேன். வானப்ரஸ்தாஶ்ரமத்தையடைந்த மனிதர்களால் பலவகைத்தர்மங்கள் செய்யப்படுகின்றன. ரிஷிதர்மம் பலவகைகளும் பலகிளைகளுமுள்ளது ; அழியாதது. எல்லா ஸுகங்களையும் அடைவதற்காகத்தான் ரிஷிகளால் பெரும்பாலும் தவம் செய்யப்படுகிறது. தேவியே ! அவ்வாறுஅனுஷ்டிக்கும்ரிஷிகளின் தர்மத்தின் முறையைக் கேள். முதலில் கிருகஸ்தாஶ்ரமத்திலிருந்து நன்மக்களைப்பெறுவதனால் பித்ருக்களின்கடனைத்தீர்த்து மனைவியின்உபயோகத்தைமுடித்தபிறகு ஒருகாரணம்பற்றி வீட்டைவிடவேண்டும். உறுதியுடன் மனத்தையடக்கி உத்ஸாஹத்தைமுதன்மையாகக்கொண்டு மனைவியுடன்கூடவோ தனித்தோ வனவாஸத்திற்குப் போகவேண்டும். நதிகளும்காடுகளுமுள்ளவையும் அஜ்ஞானத்தைத்தீர்ப்பவையும் பெரும்பாலும்புண்ணியதீர்த்தங்களும் தேவாலயங்களுமுள்ளவையுமான சிறந்தபுண்ணியப் பிரதேசங்களுக்குச் சென்றுசாஸ்திரமுறைதெரிந்துகொண்டு சாஸ்திரப்பிரகாரம் தீக்ஷை செய்துகொள்ளவேண்டும். தீக்ஷைசெய்துகொண்டபிறகு, மனம் சலியாமல் அனுஷ்டானம்செய்யவேண்டும். காலையில்எழுந்திருப்பதும் சரீரசுத்திசெய்துகொள்வதும் எல்லாத்தேவர்களையும் நமஸ்கரிப்பதும் தேகத்தில் (கோமயம்) பூசிக்கொள்வதும் தவறுதலில்லாமையும் பாவங்களைவிடுவதும் காலைமாலைகளில் சாஸ்திரப்படி ஸரியானகாலத்தில் ஸ்நானசௌசங்களும் அக்கிஹோத்திரமும் செய்யவேண்டும். சடையையும் மரவுரியையும் தரித்தல்வேண்டும். ஸமித்துக்களுக்கும் புஷ்பங்களுக்குமாக எப்போதும் வனத்தில் திரிவதும் சரத்காலத்தில் வால்நெற்களை ஸம்பாதிப்பதும் காய்களையும்கிழங்குகளையும்சேர்ப்பதும் ஆஶ்ரமத்தை எப்போதும் சுத்தமாகவைத்திருப்

பதும் அவனுக்குத்தர்மமென்றுசொல்லப்படுகின்றன. அதிதிகளிடத்தில்அன்பும் எப்போதும் அவர்களைத்தேடுவதும் பாத்தியத்தையும் ஆஸனத்தையும்கொடுத்துப் பூஜித்து அவர்களை ஆகாரத்திற்கழைப்பதும் காட்டிலுள்ளபதார்த்தங்களைச்சமைப்பதும் அந்தஅந்தக்காலங்களில் பித்ருக்களையும் தேவர்களையும்பூஜித்து, அதன்பிறகு, விருந்தோம்பலும் வானப்ரஸ்தனுக்குரிய பழமையானதர்மம். தர்மகோஷ்டியில் சிஷ்டர்களுடன் தர்மத்தையும் அர்த்தத்தையும்பற்றிப் பேசுவதும் வந்தவருக்கு இருப்பிடங்கள்கொடுப்பதும் தரையிலாவதுகல்லின்மேலாவது படுப்பதும் வ்ரதோபவாஸங்களைச்செய்வதும் புலன்களை அடக்குவதும் பொறுமையும் பகலிலுமிரவிலும்தக்கபடிசுத்தம்செய்துகொள்வதும் தர்மத்தைச்சிந்திப்பதும் வனத்திலுள்ளவர்களுக்குப் பொதுவாயுள்ளதர்மங்களாகப் பூர்வகாலத்தில் கண்டறியப்பட்டன. இனியபுன்னகையுள்ளவளே! இவ்வாறு முயன்றுகொண்டிருப்பவனுக்குப் பிராணவியோகம்நேர்ந்தால் ஸ்வர்க்கலோகத்தை வசப்படுத்துவான். குற்றமற்றவளே! அங்கே தேவஸ்திரீகளுடன் சேர்ந்து அவனுக்குள்ளஸுகானுபவங்கள் தெரிந்தவையே. அவன் ஸ்வர்க்கத்திலிருந்துவிழும்போது மனிதர்களிற்சிறந்தவனாகப் பிறப்பான். தேவியே! இவ்வாறு வானப்ரஸ்தர்கள்எல்லாருடைய தர்மங்களையும் முழுதும் உனக்குச் சொன்னேன். இன்னும் என்னகேட்க விரும்புகிறாய்?' என்றுகேட்டனர். உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈசுவரரே! ரிஷிகளுடைய சிறந்தநடக்கையையும் அவர்களின்விசேஷதர்மங்களையும் கேட்கவிரும்புகிறேன். எனக்கு அதில் உற்சாகமிருக்கிறது' என்றுகேட்டனள். மஹேசுவரர், 'தேவியே! நான் அதனை உனக்குச் சொல்வேன்; ஊக்கத்துடன் கேள். வனத்தில் எப்போதும் வஸிப்பவரும் வனத்தில்விருப்பமுள்ளவருமான வானப்பிரஸ்தர்களான மகரிஷிகள் வனத்தை ஆசாரியனைப்போல அடுத்துவஸிக்கவேண்டுமென்பதுநிச்சயம். [1]வீரசயனத்தையும் [2]வீரஸ்தானத்தையும் எடுத்துக்கொண்டும் விரதங்களையும்உபவாஸங்களையும் மிகுதியாகக்கொண்டும் க்ரீஷ்மகாலத்தில் பஞ்சாக்நிமத்தியில் தவம்செய்துகொண்டும் தினந்தோறும் பஞ்சமஹாயஜ்ஞங்களைச் செய்துகொண்டும் தர்சபூர்ணமாஸங்களென்னும்இஷ்டிகளைச்செய்துகொண்டும் பனிக்காலத்தில் தவளைகள்போல ஜலத்தில்படுத்தும் பாசிக்கொடிகளின் கொழுந்துகளைப்புசித்தும் மரவுரிஆடையுடுத்தும் மான்தோல்போர்த்தும் சாதுர்மாஸ்யம்செய்தும் தேவதாபூஜைகளை

1 அசைவின்றி உறுதியுடன்படுப்பது. 2 அசைவின்றி உறுதியுடன்நிற்பது.

யும்தர்மங்களையும்செய்தும் வனத்திலிருந்துகொண்டும் இவ்வாறு சிலர் மிகப்பெருந்தவம் செய்கின்றனர். இவ்வாறு நல்லகர்மம்செய் பவன் பிறகு ஸ்வர்க்கத்திற்குப் போகிறான். அங்கும் வெகுநீண்ட காலம் ஸுகமாகவிளையாடிக்கொண்டிருந்து பிறகு மானிடலோகத்தி லும் தானபோகங்களுள்ளவனுகப் பிறக்கிறான். வெளுத்தபுன்னகை யுள்ளவளே! சிறந்ததவமுள்ளஇவர்களைப்பற்றி உனக்குச் சொன் னேன்' என்றுசொன்னார். உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈசுவரரே! அவர்களுள் மனைவிகளோடிருப்பவர் எவரோ அவர்களின் அனுஷ்டானம்எப்படிப்பட்டது? அதனைஎனக்குச்சொல்லவேண்டும்' என்றுகேட்டனள். மஹேசுவரர்,'தேவியே! சிலர் விந்தியமலைச்சரிவு களிலும் சிலர் நைமிசாரண்யத்திலும் சிலர் புஷ்கரக்ஷேத்திரத்திலும் மற்றும்சிலர் நதிக்கரைகளிலும் வனங்களிலும்இருந்து ஏகபத்நீவ்ரத முள்ளவர்களாகிப் பெருந்தவம்செய்கின்றனர். அவர்களனைவரும் சாஸ் திரத்திற்சொன்னபடி சிறந்ததவம்செய்கின்றவர்தாம். கொல்லாமலும் தீங்குசெய்யாமலும் எல்லாப்பிராணிகள்மேலும் அன்போடும் மனத் தையும் ஐம்புலன்களையும் கோபத்தையும்அடக்கி எல்லாஅதிதிகளுக் கும்விருந்துசெய்துகொண்டு எல்லாப்பிராணிகளையும்தம்மைப்போல நினைத்து ருதுகாலங்களில்தம்மனைவிகளைச்சேர்ந்து அவர்களுடன் உயர்ந்ததவம்செய்கின்றனர். அவர்கள் பிள்ளைகளோடும் மனைவிக ளோடும் கவலையின்றி ஸுகமாகவஸிக்கின்றனர். அவர்களுக்கு, இர ண்டாவதுஆச்ரமிகளான கிருகஸ்தர்களுக்குப்போலவே தம்சக்திக் குத் தக்கபடி வேண்டியபொருள்களையும் வீட்டிற்குரியகருவிகளையும் தேடவேண்டும். தம்குடும்பத்தைக்காப்பதற்காகவும் அக்நிஹோத்திர த்திற்காகவும் பசுக்கள் உழவு இவையெல்லாம் விதிக்கப்படுகின்றன. தேவியே! பத்தினியோடிருக்கும்வானப்பிரஸ்தர்கள் இவ்வாறுசெய்ய வேண்டும். அப்படிஉறுதியாகத்தவம்செய்கிறவர்கள் தம்மனைவிகளு டன் புண்ணியலோகங்களையடைவார். எந்தப்பத்தினிகள் கலங்காமல் கணவர்களுடன் ஒற்றுமையாய்ச் சிறந்ததவம்செய்கின்றனரோ அவர் கள் ஸ்வர்க்கம்போவது திண்ணம். தேவியே! இதனை உனக்குச் சொன் னேன். இன்னும் என்ன கேட்கவிரும்புகிறாய்?' என்றுகேட்டனர்.

## இருநூற்றுப்பத்தாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஶ்வரஸம்வாதம் தொடர்ச்சி; வானப்ரஸ்ததர்மமுதலியன.)

உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈசுவரரே! பிரபுவே! ஆநந்தரூபியே! வரமளிப்பவரே! வானப்பிரஸ்தர்களின்தர்மத்தின்பயனை உமதுஅனுக்கிரகத்தினால் நான் கேட்கவிரும்புகிறேன்' என்றுகேட்டாள். மகேசுவரர், 'அன்புள்ளவளே! வானப்பிரஸ்தர்கள் அடையும்பலன்கள் எல்லாவற்றையும் கேள். கிரீஷ்மகாலத்தில் சாஸ்திரத்திற்சொன்னகருமங்களைச் செய்துகொண்டு பன்னிரண்டு வருஷகாலம் பஞ்சாக்கினிமத்தியில் தவம்செய்பவன் ருத்திரலோகத்திற்பிறப்பான். வருஷாகாலத்தில் பன்னிரண்டுவருஷகாலம் உபவாஸவிரதத்தைத் தவறாமற்செய்யும்மனிதன் சந்திரலோகத்தில் பிறப்பான். பன்னிரண்டுவருஷகாலம் கட்டைபோல மௌனமாயிருக்கும்மனிதன் மருத்துக்களின்லோகத்திற்குப்போய் அங்குள்ள போகங்களையடைவான். பன்னிரண்டுவருஷகாலம் தர்ப்பைகளும் சிறுகற்களுமுள்ள தரையில்படுத்துத் தவஞ்செய்யும்மனிதன் யக்ஷலோகத்தில்பிறந்து பதினாலாயிரம்வருஷம் போகங்களையனுபவிப்பான். ஆணிகள்தைத்த பலகையின்மேல் [1]வீராஸனம்போட்டுக்கொண்டு பன்னிரண்டுவருஷம்தவம்செய்யும்மனிதன் கந்தர்வலோகத்தில் பிறப்பான். பன்னிரண்டுவருஷகாலம் கைகளைத்தூக்கிக்கொண்டு வீரஸ்தானமாகநிற்கும்மனிதன் தேவலோகத்திற்பிறந்து தேவஸுகங்களையனுபவிப்பான். ஐம்புலன்களையுமடக்கிக் கைகளைத்தூக்கிக் கொண்டு ஒருகால்கட்டைவிரலால்நிற்பவன் பதினாலாயிரம்வருஷம் இந்திரலோகத்தில் மேன்மையாகவிருப்பான். பன்னிரண்டுவருஷகாலம் ஆகாரநியமம்செய்யும்முனி அநேகமாயிரம்வருஷகாலம் நாகலோகத்திலிருப்பான். தேவியே! இவவாறு உறுதியானதவமுள்ள வானப்பிரஸ்தர்கள் தமதுகர்மங்களுக்குத்தக்கபடி அந்தஅந்தஉலகங்களில் அந்தஅந்தப்போகங்களை அனுபவித்துக்கொண்டிருப்பார். தேவியே! அங்கிருந்துவிழுந்தபிறகு, மானிடலோகங்களில் மேற்குலங்களிலேயேபிறந்து தனதானியங்களையும் போகங்களையும் பெற்றிருப்பர். தேவி! இதனையும் உனக்குச் சொன்னேன். இன்னும் என்னகேட்கவிரும்புகிறாய்?' என்றுகேட்டனர். உமை, 'கௌர

---

[1] ஆதிபர்வம் 226உ பக்கம் குறிப்பிற்காண்க.

வத்தைக்கொடுப்பவரே! மகேஸ்வரரே! இவர்களில் மேலாயிருப்பவர்களின் தர்மத்தைக் கேட்கவிரும்புகிறேன். மிகக்கிருபைகூர்ந்து அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மகேசுவரர், 'பெண்ணரசியே! மேலானவர்களின் தர்மத்தை நீ ஊக்கத்துடன் கேள். சுத்தமானபுன்னகையுள்ளவளே! விரதங்களாலும் உபவாஸங்களாலும் தீர்த்தஸ்நானங்களாலும் சுத்தமானதேகமுள்ளவரும் மனஉறுதியும்பொறுமையுமுள்ளவரும் ஸத்தியத்தையும்நியமங்களையும் விடாதவரும் பக்ஷோபவாஸம், மாஸோபவாஸம், மழை, குளிர், வெய்யில் இவற்றினால்பீடிக்கப்பட்டவருமாகிச் சிறந்ததவம்செய்யும்தர்மந்தெரிந்தவர்கள் காலம்வந்தபோது இந்திரலோகத்தையடைவார். அங்கே அவர் தேவலோகத்தியபுஷ்பசந்தனங்களையணிந்துகொண்டும் திவ்யாபரணங்களையணிந்துகொண்டும் போகங்களையனுபவித்துக்கொண்டும் சிறந்தவிமானங்களிலேறித் தேவஸ்திரீகளோடு விரும்பினபடி ஸஞ்சரிப்பார். தேவியே! இதனையும் உனக்குச் சொன்னேன். இன்னும் என்னகேட்கக்கருதுகிறாய்?' என்றுசொன்னார். உமை, 'பிரபுவே! அவர்களில் வண்டிஇழுத்துத்திரிபவர்களின்தர்மத்தைக் கேட்கவிரும்புகிறேன்' என்றுகேட்டனள். மகேசுவரர், 'சிறந்தவளே! ஆ! ஆ! வண்டிஇழுத்துத்திரிபவர்களின் தர்மத்தைப்பற்றி உனக்குச் சொல்வேன்; கேள். பிறருக்குத்தானம்செய்வதற்காக எக்காலமும் வண்டிகளின் நுகத்தடிகளையிழுத்துக்கொண்டு அந்த அந்தக்காலங்களில் வண்டிகளில் பிக்ஷைகேட்பர். தவத்தைஸம்பாதிப்பதில் ஊக்கமுள்ளவர்களாகவும் தவத்தினால்பாவங்கள்தீர்ந்தவர்களாகவும் காமக்குரோதங்களைவிட்டு மனஉறுதியுடன் எல்லாத்திசைகளிலும் திரிவர். சிறந்தவளே! அவர்களும் மரணகாலத்திற்குப்பின் ஸ்வர்க்கம் போவார்; அவ்விடத்திலுள்ளபோகங்களால் மகிழ்ந்து ஸுகமாகத் திரிவர். தேவியே! இதனையும் உனக்குச் சொன்னேன். இன்னும் என்னகேட்கவிரும்புகிறாய்?' என்றுசொன்னார். உமை, 'பிரபுவே! வைகானஸர்களின்தர்மத்தைக் கேட்கவிரும்புகிறேன்' என்றுகேட்டனள். மகேசுவர், 'அழகியகண்களையுடையவளே! உக்கிரமான தவமுள்ளவர்களும் தம்மகிமையினாலபிரகாசிப்பவர்களும் ஸத்தியமும்நியமும்தவறாதவர்களும் சிறந்தஞானமுள்ளவர்களுமாகிய அந்த வானப்பிரஸ்தர்களே வைகானஸர்என்னப்படுகிறார். அவர்களின் தவம் குற்றமற்றது. அவர்களில் சிலர் [1] அச்மகுட்டர்; மற்றும்சிலர் [2] தந்

1 கல்லினால் தான்யத்தைத்தேய்த்து உமிபோக்கியெடுத்துப் புசிப்பவர்.

2 பல்லினால்கடித்து உமியைஉமிழ்ந்து தானியத்தைத்தின்பவர்.

தோலுடையாகவர்; சிலர் உதிர்ந்தஇலைகளைப் புசிப்பவர்; சிலர் சிற்சிலவாகக் கிடைத்ததை உண்பவர்; சிலர் (உதிர்ந்ததைப்பொறுக்கித்தின்னும்) கபோதங்களைப்போலஜீவிப்பவர்; சிலர்(புல்மேய்ந்துகொண்டு) பசுக்களைப்போலத் திரிபவர்; சிலர் தண்ணீர்நுரையைக் குடிப்பவர்; சிலர் மான்களோடுமான்களாகத் திரிபவர்; மற்றும்சிலர் ஜலத்தையும் காற்றையும்பக்ஷிப்பவரும் ஆகாரமில்லாதவருமாயிருப்பவர்;சிலர் உத்தமமாகியவிஷ்ணுபாதபூஜையைநன்ருகச்செய்பவர்; உக்கிரமான தவம்செய்து வியாதியும்மரணமுமில்லாதவர்களாய்த் தாம் நினைத்தபடி நமனையும் எக்காலமும் பயமுறுத்துகின்றனர். அப்படி இருக்குமவர்களுக்கு இந்திரலோகத்தில் அளவற்றபோகங்கள் படைக்கப்பட்டிருக்கின்றன. குற்றமற்றவளே! அவர்கள் சிறந்த அப்ஸரஸுகளுடன்சேர்ந்து தேவர்களுக்குரியபோகங்களையடைந்து நீண்டகாலம் தேவர்களுக்குச்சமமாகஇருக்கின்றனர். தேவியே! இதனையும் உனக்குச் சொன்னேன். இன்னும் என்னகேட்கவிரும்புகிருய்?'' என்று சொன்னுர். உமை, 'பகவானே! வாலகில்லியர்களென்னும் தபோதனரைப்பற்றிக் கேட்கவிரும்புகிறேன்' என்றுசொன்னுள். மகேசுவரர், 'தேவி! அப்படியேயாகட்டும். வாலகில்லியர்களின்தர்மானுஷ்டானத்தைக் கேள். அழகானநிதம்பமுடையவளே! அந்தத் தபோதனர்கள் மான்தோலாடையுடுத்துச் சீதோஷ்ணமுதலியஇரண்டினையொழித்துக் கட்டைவிரல்அளவான சரீரங்களோடு அந்தச்சரீரங்களிலேயே எல்லாஉறுப்புக்களும்பொருந்தியிருக்கின்றனர். தர்மந்தெரிந்தவர்களும் ஸத்தியவாதிகளுமான அவர்கள்,உதயமாகும்ஸூர்யனைப் பலவகைஸ்தோத்திரங்களினுல் எப்போதும் துதித்துக்கொண்டும் சூரியனுடையகிரணங்களோடுகூடவே எல்லாத்திசைகளையும் பிரகாசிக்கச்செய்துகொண்டும் எப்போதும் சஞ்சரிக்கிருர்கள். உலகத்தைக்காப்பதாகிய குற்றமற்றஸத்தியமானது அவர்களிடத்திலேயே நிலைபெற்றிருக்கிறது. தேவியே! அவர்களின்தவவன்மையினுலேதான் இவ்வுலகம் தாங்கப்படுகிறது. தெளிவானபுன்னகையுள்ளவளே! சிறந்தமகிமையுள்ளவளே! அம்மகாத்மாக்களின்தவத்தினுலும் ஸத்தியத்தினுலும் பொறுமையினுலும் பிராணிகள்நிலைபெற்றிருப்பதாக அறிகின்றனர். மகான்கள் ஜனங்களுக்காகவும் உலகங்களுக்காகவும் தவம்செய்கின்றனர். தவத்தினுல் எல்லாம் கிடைக்கின்றன. தவம் பயன்படுகிறது. இவ்வுலகத்தில் பெறத்தகாதவையனைத்தையும் தவத்தினுல் பெறத்தகும். ஐந்துபூதங்களாலாகும் உலகசிருஷ்டியை ஓங்கச்செய்வதும் தவமே. இவ்வுலகமனைத்தும்

தவமேன்மையினால் படைக்கப்பட்டது. அன்புள்ளவளே! அதனாலே தான் இந்தரிஷிக்கூட்டம் தர்மத்தையேதேடிக்கொண்டு தவம்தவமென்று தவம்செய்வதாகே எப்போதும் முயற்சிசெய்வது. தவத்தினாலே தேவத்தன்மையையும் சிவத்தன்மையையும் அடையலாம். அன்புள்ளவளே! நீ கேட்டதற்காகவும் ரிஷிகளின்விருப்பத்திற்காகவும் ஜனங்களின்நன்மைக்காகவும் இவற்றையெல்லாம் சொன்னேன். நீ கேட்டாயன்றோ?' என்றுசொன்னார். இவ்வாறுசொல்லும்ஈசுவரரை ரிஷிகளும் துதித்து அப்போதுமுதல் இன்னும் மேலான தவம்செய்யத்தொடங்கினர்.

---

## இருநூற்றுப்பதினோராவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஸ்வர ஸம்வாதம் தொடர்ச்சி ; கிருஹஸ்ததர்மம் மோக்ஷதர்மமுதலியன.)

உமை, 'பகவானே! தர்மார்த்தகாமங்களாகிய மூன்றுபுருஷார்த்தங்களுக்கும்காரணமும் நன்மையைத்தருவதுமான மிகச்சிறந்ததர்மம் உம்மால் சொல்லப்பட்டது. எல்லாப்புருஷார்த்தங்களுக்கும்உரியதர்மம் எதுவோ அதனை எனக்குச் சொல்லும்' என்றுகேட்டாள். மஹேசுவரர், 'உலகம்படைத்தபிரம்மதேவரால், உலகத்திலுள்ளவர்களுக்கு நன்மையைச்செய்வதற்காக உலகங்களைக்கரையேற்றத்திறமையுள்ளவர்களும் பூமிக்குத்தேவர்களுமாகிய அந்தணர்கள் மனிதர்களுள் படைக்கப்பட்டனர். நல்லபலனைக்கொடுக்கும்தர்மம் அவரிடத்திலிருப்பதை முதலில் சொல்லுவேன். எல்லாருடைய பயத்தையும்நிவிருத்திக்கச்செய்வதும் நன்மையைத்தருவதுமானசிறந்ததர்மம் பிராம்மணர்களிடத்திலுள்ளது. பிரம்மதேவர் உலகங்களுக்கு முதலில் தர்மங்களைத்தான் படைத்தார். பூமியிலுள்ளநல்ல பிராம்மணர்களால் எப்போதும்சொல்லப்படும் அந்தத்தர்மங்களை என்னிடம் தெரிந்துகொள். தன்மனைவியினிடம்திருப்தியடைந்திருப்பதும் நித்தியம்ஜபம்செய்வதும் எல்லா அதிதிகளையும்ஆதரிப்பதும் தர்மார்த்தகாமங்கள்மூன்றையும் கூடியவரையில் இரவிலும்பகலிலும் செய்வதும் தர்மங்கள். தர்மத்தில்ஊக்கமுள்ளசூத்திரன் எப்போதும் பணிசெய்வதை விடாமலிருக்கவேண்டும். மூன்றுவேதங்களையும் அறிந்தவனும் பிராயமுதிர்ந்தவனும் அத்தியயனத்தினால்ஜீவிக்காத

வனுமாகியபிராம்மணனுக்குத் தர்மார்த்தகாமங்களென்ற மூன்று புருஷார்த்தங்களையுங்கடந்ததும் அழியாததுமான மோக்ஷதர்மமிருக்கிறது. உத்தமியே! சிறந்தபுண்ணியத்தைத்தருகின்றவையும் எல்லாவற்றிலும்சிறந்தவையுமான ஆறுகர்மங்கள் பிரம்மதேவரால்முதலில் படைக்கப்பட்டனவாகச் சொல்லப்படுகின்றன. அவற்றையெல்லாம் கேள்; யாகம்செய்வது செய்விப்பது பாத்திரமறிந்துகொடுப்பது வாங்குவது ஓதுவது ஓதுவிப்பது இவ்வாறுகர்மங்களையும் மனப்பூர்வகமாகச்செய்பவன் புண்ணியத்தையடைவான். நித்தியம் வேதமோதுவதும் நித்தியம் யாகம்செய்வதும் நிலைபெற்றதர்மங்கள். பிராம்மணர்களுக்கு, யாகம் தானம் அத்யயனம் இம்மூன்றுகர்மங்களுள் தானம் இன்றியமையாததென்று சொல்லுகின்றனர். இந்தச் சிறந்ததர்மந்தான் ஸாதுக்களிடத்தில் ரகஸ்யமாயிருக்கிறது. கர்ப்பத்திலேயே பரிசுத்தமுள்ளவர்களுக்குத்தான் தர்மத்தின்நியமம் பெரிது. பஞ்சமஹாயஜ்ஞங்களினால் பரிசுத்தமானமனமுள்ளவனும் மனைவியினிடத்தில் ருதுகாலந்தவறுதவனும் பொறுமையில்லாதவனும் இந்திரியங்களைஜயித்தவனும் பிராம்மணர்களைப்பூஜிப்பவனும் வீட்டை நன்றாகமெழுகிப்பெருக்கிவைத்திருப்பவனும் [1]கர்வமில்லாதவனும் வஞ்சியாதவனும் இன்சொற்சொல்லுகிறவனும் விருந்தினர்களையும் தன்னிடம்வந்தவர்களையும் ஆதரிப்பவனும் மீதியன்னத்தால் போஜனம்செய்பவனுமாயிருந்து முறைப்படி பாத்யத்தையும் அர்க்கியத்தையும் ஆஸனத்தையும் சயனத்தையும் தீபத்தையும் கிருஹத்தையும்கொடுப்பவன்தான் தர்மம்செய்பவன். காலையிலெழுந்து பிறகு போஜனத்திற்காகவழைத்து விருந்துசெய்து பின்செல்லுகிறவனுக்கு அழியாததர்மம் உண்டு. உலகவாழ்க்கைக்குரிய பிரவ்ருத்தியென்னும்தர்மம் கிருஹஸ்தர்களுக்கு விதிக்கப்படுகிறது. அறம்பொருளின்பங்களுள் எது எவ்வகையென்பதை உனக்குச் சொல்வேன். நன்மையைக்கருதுகிறவன் தனத்தின்ஒருபாகத்தைத் தர்மத்திற்காகவும் மற்றொருபாகத்தை ஸுகத்திற்காகவும் வைத்து மூன்றுவதுபாகத்தை விருத்திசெய்யவேண்டும். ஒழிவாகியநிவிருத்தியென்னும்தர்மம் பரிசுத்தமானது; மோக்ஷத்திற்குரியதாக விதிக்கப்படுகிறது. அதன்நிலைமையைச் சொல்லுகிறேன். அதனை ஊக்கத்துடன் கேள். நிவிருத்திமார்க்கத்திற்கு எல்லாப்பிராணிகளிடத்திலும் எப்போதும் தயைசெய்வது முதன்மையானதர்மம். பெண்ணரசியே! பசியினாலும் தாகத்தினாலும் வருந்திக் களைத்துவந்த விருந்தினனைப் பூஜிப்

1 வேறுபாடம்.

பவருக்கும் அப்பெரும்பயன் உளது. தர்மத்தைக்கருதுகிறவர்கள் யோக்கியனென்னும்காரணம்பற்றியே யாருக்கும் தானம்செய்ய வேண்டும். தருதியுள்ளவன்வருவனாயின் அவன் கடைத்தேறச்செய்வான். புசிக்கஆசையோடுவந்து போஜனகாலத்தில்நேர்ந்தஅதிதியை எவன்பூஜிப்பனோ அவனுக்கு அங்கே வ்யாஸரே வந்தவராவார். மனத்திலன்புடன் தன்சக்தியளவு அவனைப் பூஜிக்கவேண்டும். தர்மம் மனமடியாகத்தான் உண்டாகும். தர்மமடியாகத்தான் புகழ் உண்டாகும். தேவியே! ஆதலால், உள்ளத்திலன்போடு எவ்வகையினாலாவது தானம்செய்யவேண்டும். மனம்கனிந்துசெய்யும்தானந்தான் எல்லாவற்றிலும்சிறந்தது; பூமியில் தண்ணீரின்சிறுதுளிகள் விழுவதனால் வயல்களும் குளங்களும் ஏரிகளும் ஆறுகளும் ஜலம்நிரம்பினவையாகக் காணப்படுகின்றன. மிகச்சிறந்தவளே! இது எண்ணத்திற்கும் எட்டாதது. அப்படியே சிற்சிலவாகச்செய்யப்படும் ஒவ்வொரு தானமும் பெருகும். வேலைக்காரர்களுக்குஉபத்திரவம்செய்தாவது தானம் செய்வது விசேஷந்தான். பிள்ளைபெண்டுகளும் தனதானியங்களும் இறந்தவரைப் பின்தொடருகிறதில்லை. புகழ்பெற்றவளே! தனம் கிடைத்தபிறகு அதைக்கொடுப்பதும் அநுபவிப்பதுந்தாம் நலம். கொடுப்பதினாலேதான் சிறந்தபாக்கியம்பெற்ற அரசர்களாகிறார்கள். பூமியில் தானத்திற்குச்சரி ஒன்றுமில்லை; தானத்தைப்போன்ற புதையலில்லை. ஸத்தியத்திற்குமிஞ்சின புண்ணியமில்லை. பொய்க்குமிஞ்சினபாவமில்லை. தேவியே! ஆஸ்ரமத்தில் கிழங்குகளையும் கனிகளையும் புசித்துக்கொண்டு ஜடையும் மாவுரியும்தரித்துக் கோடைக்காலத்தில் பஞ்சாக்கினிமத்தியிலிருந்து சூரியனைநோக்கியும் பனிக்காலத்தில்தவளைபோல ஜலத்திலபடுத்தும் சிரத்தையுடன் நன்றாகத் தவம்செய்துகொண்டு வானப்பிரஸ்தாசிரமத்திலிருப்பவர்களும் கிருகஸ்தாசிரமத்திலிருப்பவர்களின் பதினாறில் ஒருபாகத்திற்கும் ஈடாகார்' என்றுசொன்னார். உமை,'பிரபுவே! கிருகஸ்தாசிரமத்தின்அநுஷ்டானம் யாது? விரதங்களும் நியமங்களும் எவை? கிருகஸ்தனெப்போதும் தேவதாபூஜைசெய்யும்வகை யாது? அவன் எந்தத்திதிகளில் எந்தப்புண்ணியகாலங்களில் எவ்வெற்றை விடவேண்டும்? இவற்றையெல்லாம் நீர்சொல்லக் கேட்கவிரும்புகிறேன்' என்றுகேட்டாள். மஹேசுவரர், 'பெண்ணரசியே! கிருகஸ்தாசிரமத்தின் காரணத்தையும் பிரயோஜனத்தையும் அதில் எப்போதும் தர்மம் நாலு பாதங்களோடுநிலைபெற்றிருப்பதாகிய சிறப்பையும் தயிரில் வெண்ணெய்எடுப்பதுபோல் ஸாரத்தையெடுத்து உனக்குச் சொல்வேன்,

தர்மம்செய்கிறவளே ! கேள். தம்பதிகளுக்கு அலங்காரம்செய்து அவர்களுக்குக் கிருகதானம் செய்யும்மனிதன் பாரியாஸௌகத்தையடைவான். அதில் ஸந்தேகமில்லே. ஸ்திரீகளாயினும் புருஷர்களாயினும் தம்பதிபூஜைசெய்பவர்கள் மனத்தில் விரும்பினபலன்களையெல்லாம் அடைவாரென்பது திண்ணம். இல்லறத்திலிருந்து தந்தையையும் தாயையும்உபசரித்து அக்நிஹோத்திரம்செய்துகொண்டிருக்கும்பிராம்மணர்கள்விஷயத்திலும் கணவனுக்குப்பணிவிடைசெய்யும் பெண்ணிடத்திலும் இந்திரன்முதலியதேவர்களும் பித்ருலோகத்திலிருக்கும்பித்ருக்களும் ஸந்தோஷப்படுகின்றனர்; அப்படிச்செய்பவர்களும் தம்தர்மத்தினுல் ஸந்தோஷமடைகின்றனர்' என்றுசொன்னுர். உமை, 'தாய்தந்தையில்லாத கிருகஸ்தர்களுக்கும் கணவனில்லாத பெண்களுக்கும் உரியதர்மம் யாது ? அதனை நீரே எனக்குச் சொல்லும்' என்றுகேட்டாள். மஹேசுவரர், 'தேவதைகளைப்பூஜிப்பதும் விருந்துகளையாதரிப்பதும் ஆசாரியரையும்பெரியோரையும்நமஸ்கரிப்பதும்எல்லாப்பிராணிகளுக்கும்துன்பம்செய்யாமையும்பொருளாசையில்லாமையும்சொல்தவருமையும்பிரம்மசாரிவிரதமும் சரணமடைந்தவரை ரக்ஷிப்பதும் சுத்தமும் முதலில்பேசுவதும் நன்றிமறவாமையும் கோட்சொல்லாமையும் தர்மத்தை எப்போதும் விடாமையும் தினத்திற்குஇருமுறைஸ்நானமும்பித்ருக்களையும்தேவர்களையும்பூஜிப்பதும் தினந்தோறும்கோதானம்செய்வதும் அதிதிகளுக்குஸமபாகம் கொடுப்பதும் அவர்களின்தர்மங்கள். தீபத்தையும் கிருகத்தையும் பாத்யத்தையும் ஆஸனத்தையும் கொடுக்கவேண்டும். ஐந்து, ஆறு, எட்டு, பன்னிரண்டு, பதினுன்கு, அல்லது பதினைந்துதினங்களுக்கொருமுறை பிரம்மசாரிவிரதமிருக்கவேண்டும். அந்தத்தினங்களில் க்ஷெளரம் தலையில் எண்ணெய்தேய்த்துக்கொள்வது மையிட்டுக்கொள்வது பல்துலக்குவதுஇவற்றைச் செய்யலாகாது. அப்படியிருப்பவர்களிடத்தில் லக்ஷ்மி நிலைபெற்றிருக்கிருள். விரதங்களையும் உபவாஸங்களையும்விடாமலிருப்பதும் தவம்செய்வதும்இயன்றவரையில் தானம்செய்வதும் வேலைக்காரரைப்போஷிப்பதும் ஏழைகள்மேல் தயைசெய்வதும்பிறர்மனைவியைவிரும்பாமையும்தன்மனைவியினிடத்தில்பற்றோடிருப்பதும் தர்மங்கள். தம்பதிகள்இருவர்களின் சரீரங்களும் பிரம்மதேவரால் முதலில் ஒன்ருகப் படைக்கப்பட்டன. ஆதலால், தன்மனைவியினிடத்தில்அன்போடிருப்பவன் பிரம்மசாரியாகச் சொல்லப்படுகிருன். குணமும்ஒழுக்கமும்திருந்தியும் புலன்களையடக்கியும் உள்ளும்புறமும்ஒத்தும் எல்லாப்பிராணிகளின் நன்மையையும்

கருதியும் அதிதிகளின்மேல்அன்புவைத்தும் பொறுத்தும் தர்மமாகப் பொருளீட்டியும் இல்லறத்திலிருப்பவனுக்கு மற்றஆசிரமங்களினால் ஆவதென்ன? எல்லாப்பிராணிகளும் தாயையடுத்து ஜீவிப்பது போலவே எல்லாஆசிரமங்களும் கிருகஸ்தாஸ்ரமத்தையடுத்துஜீவிக்கின்றன. அரசர்கள், [1]பாஷண்டர்கள், கூத்தாடிகள், பாம்பாட்டிகள், டம்பர்கள், கள்ளர்கள், அரசனுடையஸேவகர்கள், வித்தையாடிகள், பிராணிகளைவளர்ப்பவர்கள், வைத்தியர்கள், நெடுவழிநடந்தவர்கள், நோயுற்றுப்பத்தியமுண்பவர்கள் ஆகியஇவர்களனைவரும் மற்றும்பலரும் கிருகஸ்தனைத் தேடுகின்றனர். தேவியே! பூனைகள், எலிகள், நாய்கள், பன்றிகள், கிளிகள், புறாக்கள், நத்தைபாம்புமுதலிய ஊர்வன, மற்றும்காட்டிலிருப்பவைகள், மிருகங்கள்,பக்ஷிகளின்கூட்டங்கள் ஆகியஉலகத்திலுள்ளபலவகைச்சராசரங்களும்நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் வீட்டிலும் நிலத்திலும் வளைகளிலுமிருந்துகொண்டு கிருகஸ்தனால் செய்யப்படும்காரியத்தின் பலனை அனுபவிக்கின்றன. அவற்றிற்கு உபயோகமானதைப்பற்றித் தர்மம் என்றேநினைத்துத் துயரப்படாமலிருக்கும்புத்திமானுக்குரியபலனைக் கேள். தேவியே! எல்லாயாகங்களையும்அறிந்தவனுக்கு அசுவமேத யாகத்தினால்உண்டாகும் பலனெதுவோ அந்தப்பலனை அவன் பன்னிரண்டாவதுவருஷத்தில் அடைவான். ஆசையென்னும் பாசத்தை விடுவதே எல்லாவற்றிலும் சிறந்ததர்மமென்றறி. எப்போதும் மரத்தடியிலும் குடியில்லாதவீட்டிலுமிருந்துகொண்டு ஆற்றுமணலில் படுத்தும் ஆற்றங்கரையோடுசென்றும் எல்லாப்பற்றுக்களையும் ஸ்நேகங்களையும்விட்டுத் தன்புத்தியை மனத்தினால் ஆத்மாவினிடத்தில் சேர்த்து மோக்ஷதர்மத்தினால் எல்லாவற்றையும் ஆத்துமாவாக நினைத்துஆகாரத்தைவிட்டு நித்தியம் பரிசுத்தனாகித் தியானம்செய்துகொண்டிருப்பவனுடையதர்மம் அழியாது. அவன் ஒன்றிலும் பற்றோடு மகிழ்ந்திரான்; ஒருகிராமத்திலும் நிலையாகநில்லான்; யோகம் செய்துகொண்டே திரிவான்; ஒருமணற்குன்றிலும் நின்று யோகம் செய்யான். இதுதான் வேதத்தில்சொல்லப்பட்டதும் பெரியோர்களின் அநுஷ்டானத்திலிருப்பதுமாகிய 'மோக்ஷதர்மம்' என்று சொன்னார்.

1 நாஸ்திகர்கள்.

## இருநூற்றுப்பன்னிரண்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஸ்வர ஸம்வாதம் தொடர்ச்சி; அரசன் ஏற்பட்டதும், தண்டனை முதலிய கொடியசெய்கைகளாலும் அவனுக்குப் பாவம் வாராமையும்.)

உமை, 'ஐயா! தேவருக்குந்தேவரே! முக்கண்ணரே! விருஷபக்கொடியையுடையவரே! பகவானே! மகேசுவரரே! உமது அனுக்கிரகத்தினால் நான் எல்லாவற்றையும் கேட்டேன். உமது அந்தச்சிறந்தசொல்லை நான் தெரிந்துகொண்டேன். இப்போது ஒரு ஸந்தேகமிருக்கிறது. மனிதர்களில் எல்லாரையும்போலஉயிருந்தலையும்உடலுமுள்ளஒருவன், 'இவன் அரசன்' என்றுநினைக்கப்படுகிறான். எந்தவினைப்பயனால் அவன் எல்லாருக்குந்தலைவனாயிருக்கத் தகுதியுள்ளவனாகிறான்? அவன் மனிதர்களைத் தண்டித்தும் பயமுறுத்தியும் கொன்றுமிருந்தாலும் புண்ணியகருமத்தினாலடையும்லோகங்களை மறுமையிலடைவது எப்படி? கௌரவத்தைக்கொடுப்பவரே! ஆதலால், வேந்தனுடையஒழுக்கத்தை நான் கேட்கவிரும்புகிறேன்' என்றுகேட்க, மஹேசுவரர் சொல்லலானார்.

'அழகியமுகமுள்ளவளே! அந்தராஜதர்மத்தை நான் உனக்குச் சொல்லுவேன். உலகத்திலுள்ளநல்லொழுக்கம்தீயொழுக்கமெல்லாம் வேந்தனுக்குஉட்பட்டவை. தேவியே! ராஜ்யமானது பெருந்தவப்பயனென்று நினைக்கப்படுகிறது. தவத்தினாலும்தானத்தினாலும் கிடைப்பதாகியராஜ்யமானது சிறந்தபதமென்று சொல்லப்படுகிறது. ஆதலால்,எங்கிருக்கும்மனிதர்களும் எப்போதும் அரசனுக்கு அடங்கியிருக்கின்றனர். சிறந்தபாக்கியமுள்ள பெண்ணரசியே! நீ கேட்க விரும்புவது நியாயம். அன்புள்ளவளே! ஆதலால், உலகத்திற்குஇதமான ராஜசரித்திரத்தைச் சொல்லுகிறேன்; கேள். முற்காலத்தில் அரசனில்லாமலிருந்தபோது ஜனங்களுக்குப் பெருங்கலக்கமுண்டாயிற்று. பிரம்மதேவர் அந்தக்கலக்கத்தைக்கண்டு மனுவை ராஜ்யத்தில்வைத்தார். மன்னர்களின்நல்லஒழுக்கங்களும் தீயஒழுக்கங்களும் அப்போதுமுதலாகத்தான் காணப்படுகின்றன. பெண்ணரசியே! அரசன் எவ்வகையினால் மறுமையில் ஸ்வர்க்கத்தையும் இம்மையில் வீரத்தன்மையையும் புகழையுமடைவனோ, எதுஅவனுக்கும்உலகத்திற்கும் நன்மையோ அந்தஒழுக்கத்தைக்கேள். தகப்பனாலாவதுவம்சபரம்பரையினாலாவதுவந்தும் தானேஉண்டாக்கிக்கொண்டுமிருக்கும்

ராஜ்யத்தை அடைந்தபிறகு, ராஜதர்மத்தைச் சரிவர நடத்தி ஆள வேண்டும். முதலில் தன்னிடத்தில் குணங்களைப் பொருத்திக் கொள்ளவேண்டும். அதன்பிறகு, தன் வேலைக்காரர்களுக்கும்கடைசியில்பிரஜைகளுக்கும் குணங்களைப்பொருந்தச்செய்யவேண்டும். இது தான் அடக்குமுறை. அழகான கண்களையுடையவளே! இவ்வுலகத்தில் ஜனங்கள் அரசனை உதாரணமாகக்கொண்டு அவனைப்போலிருக்கவேண்டுமென்று எண்ணித்தான் தாங்கள் குணமுள்ளவர்களாயிருப்பது. தானடங்குவதற்குமுன்னமேயே பிரஜைகளையடக்கும் அரசனானவன் தன்குற்றந்தெரியாமையினால் பரிஹஸிக்கப்படுதற்கு உரியவனாவான். நல்வினைகற்பதினாலும் பெரியோரைச்சேருவதனாலும் தன்னைப் பதப்படுத்திக்கொள்ளவேண்டும். அறம்பொருளிரண்டினையும்தருவதுதான் நல்வி. அதைக்கற்றவர்கள்தாம் பெரியோரென்னப்படுகின்றனர். தேவியே! இதற்குமேல் இந்திரியங்களை அடக்குவது முக்கியமாகச்சொல்லப்படுகிறது. அடக்காமல்போனால் மிகப்பெரியபிழையுண்டாகும். அது அரசனைக் கெடுத்துவிடும். அறிவினாலும் அடக்கத்தினாலும் கூடியவரையில் ஐம்புலன்களையும் வசப்படுத்திக்கொண்டு அவற்றின் [1]விஷயங்களைந்தினையும் வற்றச்செய்து [2]ஆறையுமொழித்துச் சாஸ்திரத்தைக்கண்ணாகக்கொண்டு உபாயங்களைக்கைப்பற்றி உத்தியோகஸ்தர்களைச் சேர்த்துக்கொள்ளவேண்டும். ஒழுக்கமும்கல்வியும்குலமுமுள்ளவர்களும் பரிதானத்தைப்பற்றிப்பரிசோதித்து அதிலகப்படாதவர்களும் எல்லாராலும் அனுசரிக்கப்பட்டவர்களும் ஜிதேந்த்ரியர்களுமானமந்திரிகளை அவர்கள் சக்திக்கும் தகுதிக்கும் ஒத்தவேலைகளில் நியமிக்கவேண்டும். சிறந்த புத்தியுள்ளமந்திரிகள், பலஜனங்களினால்விரும்பப்பட்டதேசம், பகைவரால்வெல்லமுடியாதசிறந்தநகரம், கஷ்டத்தில்தாங்கத்தக்க பொக்கசம், அன்புள்ளசேனை, இன்சொல்மாறாதமந்திராலோசனை, தன்னைச் சேர்ந்தவர்களை ஆளும்வகைதெரிந்தஅரசன் ஆகியஇவ்வேழும் [3]பிரக்ருதிகளென்னப்படுகின்றன. இவையெல்லாம் பிரஜைகளை ரக்ஷிப்பதற்காக உண்டாக்கப்பட்டவை. அரசன் மேற்சொன்னமற்றஉத்விகளோடு உலகநன்மையைச் செய்யவேண்டும். அரசன் தன்னைக்காப்பாற்றிக்கொள்வதும், பிரஜைகளைக் காப்பாற்றுவதற்காகவே என்று நினைக்கப்படுகிறது. ஆதலால், எப்போதும் வழுவின்றித் தன்

---

1 சப்தஸ்பர்சரூபரஸகந்தங்கள்.

2 காமக்குரோதலோபமோகமதமாத்ஸர்யங்கள்.

3 ராஜ்யாங்கங்கள்.

னைக் காப்பாற்றிக்கொள்ளவேண்டும். உணவு, உடை, ஸ்நானம், வெளியில்புறப்படுவது, ஸ்திரீகளின்புணர்ச்சி இவையெல்லாவற்றிலும் ஜாக்ரதையோடு எப்போதும் தன்னைக் காத்துக்கொள்ளவேண்டும். தமர், பிறர், ஆயுதம், விஷம், புத்திரர்கள், மனைவிகள், இவர்களெல்லாரிடத்தும் ஊக்கத்துடன் எப்போதும் தன்னைக் காத்துக்கொள்ளவேண்டும். பிரஜைகளைக்காப்பதற்காக அவர்களுக்கு நன்மையைச் செய்யவேண்டும். பிரஜைகளின்காரியந்தான் வேந்தனுடையகாரியம். பிரஜைகளின்ஸுகந்தான் அவன்ஸுகம். பிரஜைகளின்விருப்பந்தான் அவன்விருப்பம். பிரஜைகளின்நன்மைதான் அவன்நன்மை. அவனுடையசொத்தெல்லாம் பிரஜைகளுக்காகவுபயோகப்படுத்தப்படுகிறதேயன்றித் அவனுக்காகவன்று. ஜனங்களை ரக்ஷிக்கும் விஷயத்தில் விருப்புவெறுப்புக்களையொழித்துஇருதிறத்தாரின்வாதங்களையும் உள்ளபடிகேட்டு உண்மைகண்டுபிடிக்கும்வரையில் அந்த விஷயத்தைப்பற்றித் தன்புத்தியினாலும், சாஸ்திரம்தெரிந்தவர்களும் மனிதர்களில்சிறந்தவர்களுமான அநேகம்பெரியோர்களுடன் சேர்ந்தும் நன்றாகஆராய்ந்துபார்க்கவேண்டும். குற்றவாளியையும் குற்றத்தையும் இடத்தையும் காலத்தையும் நியாயத்தையும் அநியாயத்தையும் நன்றாகஅறிந்தபிறகு,சாஸ்திரப்பிரகாரம் மனிதருக்குத்தண்டனையைவிதிக்கவேண்டும்.இவ்வாறுபக்ஷபாதமில்லாமல்செய்கிறவன்புண்ணியத்தையடைவான். அரசன் தன்தேசத்திலுள்ளநல்லொழுக்கத்தையும் தீயொழுக்கத்தையும் பிரத்தியக்ஷத்தினாலும் நம்பக்கூடியவர்களின்சொல்லினாலும் அனுமானத்தினாலும் எப்போதும் அறிந்துகொண்டிருக்கவேண்டும்; சாரர்களைக்கொண்டும் செய்கைநடப்பதைக்கொண்டும் அதனையறிந்து விசாரிக்கவேண்டும்; தனக்குத்தீங்கானகாரியத்தை உடனே பரிகரிக்கவும் தனக்குஅனுகூலமானதை நடத்தவும்வேண்டும். தேவியே! இகழத்தக்கவர்களை இகழவேண்டும். பூஜிக்கத்தக்கவரைப் பூஜிக்கவேண்டும்; தண்டிக்கத்தக்கவரைத் தண்டிக்கவேண்டும்; அவ்விஷயத்தில் சங்கிக்கலாகாது; எப்போதும் [1] ஐந்தைக்கவனித்துப் புத்தியுள்ளமனிதர்களுடன் மந்திராலோசனை செய்யவேண்டும்; குலம் ஒழுக்கம் கல்வி இம்மூன்றுமுள்ளவர்களோடேயோ எப்போதும் ஆலோசிக்கவேண்டும். தலைவரானமந்திரிக

---

1 1. காரியங்களையாரம்பிக்கும்வழி. 2. மனிதர்களையும் பொருளையும் சேகரிப்பது. 3. அதற்குஇடத்தையும்காலத்தையும் ஏற்படுத்துவது. 4. இடையூறுகளை நிவிர்த்திசெய்வது. 5. முடிப்பது. இவை மந்திரத்திற்கு ஐந்து அங்கங்கள் என்று ராஜநீதிசாஸ்திரத்திற்சொல்லப்படுகின்றன.

ளுடன் மந்திராலோசனையில் தன்னிஷ்டப்படி மனம்செலுத்தலா காது. அரசனானவன் தேசத்தின்இதத்தைக்கருதி ஸத்தியத்தை யும் தர்மங்களையும் நடத்துவிக்கவேண்டும்; அகழ்முதலியவற்றைப் பற்றியும் மனிதர்களைப்பற்றியும் எப்போதும் எல்லாமுயற்சிகளையும் தானேசெய்யவேண்டும்; தேசத்திற்குஅபிவ்ருத்திசெய்பவர்களாகிய வேலைக்காரர்களை ஜாக்கிரதையாகச் சேர்க்கவேண்டும்; தேசத்திற் குக்கெடுதலைச்செய்கிறவர்கள் வேண்டாதவர்கள் அனைவரையும் விலக்கிவிடவேண்டும்; தன்னைச்சேர்ந்தவேலைக்காரர்களைப்பற்றி ஒவ் வொருநாளும் தானேகவனிக்கவேண்டும்; முகமலர்ச்சியோடும் அன் போடும் கொடைகொடுத்து நன்றாகக் காரியங்களைச் செய்யவேண் டும். தர்மமில்லாததும் கொடியதும் கடுமையுமானசொல்லைச்சொல்ல லாகாது; தகுதியுள்ளவர்களிடத்தில் நம்பிக்கைவைக்காமல் ஒருசொல் லையும் சொல்லலாகாது; ஒவ்வொருமனிதனிடத்திலுமுள்ளகுணங் களையும் குற்றங்களையும் நன்றாகஅறியவேண்டும்; மனஉறுதியினால் தன்குறிப்புக்களைமறைத்துவைக்கவேண்டும்; அற்பர்களோடுஸ்நேகம் செய்யலாகாது. அயலார்களுடையகுறிப்புக்களையறிந்து உலகத்திற் பழகவேண்டும். தம்மவராலும் பகைவராலும் ஒருவருக்கொருவரா லும் மனிதர்களல்லாதபாம்புமுதலியபிராணிகளாலும் பயமில்லாம லிருக்கும்படி ஜனங்களை அரசன் காப்பாற்றவேண்டும். பொருளா சைப்படுகிறவரும் கொடியவரும் கொள்ளையடிப்பவருமானமனிதர் கள் எங்கிருந்தாலும் அவர்களை அரசன் பிடித்துத்தண்டிக்கவேண் டும்; ராஜகுமாரர்களுக்குப் பிறந்ததுமுதல் நல்லொழுக்கங்களைக் கற் பிக்கவேண்டும். அவர்களுள் ஆத்மகுணங்கள்நிரம்பினவனை இள வரசாகச்செய்யவேண்டும். ஜனங்களுக்குப்பயமும் ராஜ்யத்தின்வழு வும் இல்லாமலிருக்கும்படி எப்போதும் ஆலோசித்து அந்தக்காரி யத்தைச் செய்யவேண்டும். சிறந்தவளே! ஒருநிமிஷமும் ராஜ்யத் தில் அரசனில்லாமலிருக்கலாகாதே; ஆதலால், தனக்குப்பின் தொட ர்ச்சிக்காக இளவரசு எப்போதும் விதிக்கப்படுகிறது. உயர்குலத் தோர் கற்றவர்கள் வேதமோதினவர்கள் தவமுள்ளவர்கள் மற்றத் தொழிலாளிகள்இவர்களுக்கு மேன்மையைச் செய்யவேண்டும். தன க்காகவும் ராஜ்யத்தைநடத்துவதற்காகவும் பொக்கசத்திற்காகவும் துர்க்கங்களிலிருந்தும் தேசத்திலிருந்தும் ஸமுத்திரத்திலிருந்தும் வர்த்தகர்களிடத்திலிருந்தும் நாதனில்லாத சொத்திலிருந்தும் திரவி யத்தைச் சேர்க்கவேண்டும். மாற்றரசர்களின்தனங்களினாலும் தனது தனங்களினாலும் உத்தியோகஸ்தர்களையும் வாகனங்களையும் படைச்

சேவகர்களையும் போஷிக்கவேண்டும். எப்போதும் ஆதரவுடனிரு ந்து நியமத்துடன் எல்லாவற்றையும் கவனிக்கவேண்டும். நீதிசாஸ் திரத்தையறிந்து தேசகாலங்களுக்குத்தக்கபடி தர்மத்திற்கும் உத்தி யோகஸ்தர்களுக்கும் தனக்கும் ஆபத்காலத்திற்குமாக நான்குவகை களாகப் பொக்கசத்தைப் பகுக்கவேண்டும். தன்தேசத்தில் திக்கற் றவர்களையும் நோயாளிகளையும் கிழவர்களையும் அரசன் போஷிக்க வேண்டும். ஸந்தியையும் விக்கிரகத்தையும் அவற்றைச்சேர்ந்த [1]மற்ற வற்றையும் நன்றாகஆராய்ந்துநிச்சயித்தபின் நடத்தவேண்டும். எப் போதும் எல்லாருக்கும் அன்புள்ளவனாயிருந்து தேசத்தை நடத்த வேண்டும். நல்லகாரியங்களையும் தான்ஒருவனாகநிச்சயித்துச் செய்ய லாகாது. தம்மவராலும் பிறராலும்நேரிடும் துன்பங்களை நன்றாகஆராய் ந்து பிறரோடுநியாயமாயிருப்பதைப் பகையினாலும் லோபத்தினாலும் விடலாகாது. காப்பாற்றப்படுவதே ஜனங்களின்தர்மம். காப்பாற்று வதே அரசன்தர்மம். ஆதலால், கெட்ட அரசர்களால்பீடிக்கப்பட்ட எல்லாத்தேசத்துப்பிரஜைகளையும் காப்பாற்றவேண்டும். யுத்தயாத் திரைக்குப்போகும்போது பின்தேசத்தைக் கவனிக்காமலிருந்தால் அதன்கலக்கம் பெரிதாகவிளையும். அதனால், ஆபத்துக்கள்உண் டாகுமென்பதைச் சாஸ்திரத்தினால் ஆராய்ந்து பார்க்கவேண்டும். உபாயத்தினாலாவது பொருள்செலவழிப்பதனாலாவது சேனைக்கு ஆபத்துவராமல் காப்பாற்றவேண்டும். உயிர்களைக்காப்பாற்றுவதற் காகச் சண்டையைப் பெரும்பாலும் விட்டுவிடவேண்டும். தகுந்த காரணம்பற்றியே யுத்தம்செய்யவேண்டும். தன்நன்மைக்காகவும் பிற ரைக்கெடுப்பதற்காகவும் யுத்தம்செய்யலாகாது. அப்படிப்பட்டவன் தர்மயுத்தத்தில்உயிரைவிடுவதும் தர்மமென்று நினைக்கப்படுகிறது. அதிகபலமுள்ளவனால்காதிர்க்கப்பட்டஅரசன் பிரஜைகளின்நன்மைக் காகவே மந்திரிமுதலியவர்களை ஒற்றுமைப்படுத்திக்கொண்டு ஆபத் திற்குப் பரிஹாரத்தைச் செய்யவேண்டும். வேறுராஜ்யத்தைச்சேர் ந்தவர்களும் தாமேஜீவனத்தைத்தேடுகிறவர்களும் ஆபத்தினால் மற்ற வரை அடைக்கலம்பற்றினவர்களுமான அரசர்களிடத்தில் தன்ஜனங் களைச் சேர்க்கலாகாது. தேவியே! நல்லொழுக்கம்தீயொழுக்கமிரண் டும் இருதிறத்தாருக்கும்ஸாதகமாயிருக்கையில் நல்லொழுக்கத்தைத் தானே எடுத்துக்கொண்டு தீயொழுக்கத்தைப் பிறரிடம் சேர்ப்பிக்க வேண்டும். தேவியே! இவ்வாறு பாவம்பற்றுமலிருக்கும்வகையைக் குறிப்பாகச்சொன்னேன். இந்தராஜதர்மம் உனக்குத் தொகுத்துச்

1 யானஸனத்வைதீபாவஸமாஸ்ரயம்.

சொல்லப்பட்டது. இவ்வாறு நடந்து ஜனங்களைத்தண்டித்தும் பய முறுத்தியும்வருமரசன் தாமரையிலையில் தண்ணீர்ஒட்டாமலிருப்பது போலப் பாவமண்டாமலிருப்பான். இவ்வாறுநடக்குமரசன் இறந்த பிறகு ஸ்வர்க்கலோகத்தில் தேவர்களுடன் மகிழ்ந்திருப்பான். அரச னுடையஒழுக்கம் நீதியுள்ளதென்றும் செல்வத்தைப்பற்றியதென் றும் இருவகை. அழகானகண்களையுடையவளே! நீதியுள்ளஒழுக் கத்தை உனக்கு இவ்வாறுசொன்னேன். நீதியையனுஸரித்தராஜ்ய 1மென்பது புத்தியையும் சாஸ்திரத்தையும் அனுஸரித்திருக்கும். அதனால், தர்மத்தையும் ஸன்மார்க்கத்தையும்சேர்ந்ததும் புகழையும் ஸ்வர்க்கத்தையும்தருவதுமாகும். செல்வத்தையனுஸரித்த ராஜ்ய மென்பது தாறுமாறுகக்காணப்படுகிறது. அதற்குச் சாஸ்திரமில்லை. அது ஸாதுக்களுக்குக் கோபத்தையுண்டுபண்ணும்; பாவத்தையும் அபகீர்த்தியையும் கெட்டமுடிவையும்தருமென்பது நிச்சயம். அரசர் கள் தம்மிஷ்டப்படி எல்லாவற்றையும்செய்வர். அதில் வேலைக்காரர் கள் அதிர்ஷ்டவசத்தினால்கிடைப்பதேயன்றி மேன்மையினால் கிடை ப்பதில்லை. எந்தராஜ்யத்தில்குற்றவாளிகள் தண்டிக்கப்படாமலும் தாழ் ந்தவர்கள் கௌரவிக்கப்பட்டும் யோக்கியர்கள் கெடுக்கப்பட்டுமிருக் கின்றனரோ அது செல்வத்தையனுஸரித்தராஜ்யமாகும். நன்மை தீமைகளை மாறுகப்பார்ப்பவனும் அஸுரன்போலத் தன்ஸுகத்தைப் பார்ப்பவனுமான அரசனிருக்கும் ராஜ்யம் பாக்கியத்தையனுஸரிப்ப தாகும். அழகானகண்களையுடையதேவியே! பாக்கியத்தையனுஸரி த்தராஜ்யத்தில் அரசர்கள் தாறுமாறுகநடந்து இவ்வுலகத்தில் அப கீர்த்தியையும் அனர்த்தத்தையும் அடைந்து பரலோகத்திலும் மிகக் கொடியதும் தாண்டக்கூடாததுமான இருளையடைந்து பிரளயகாலம் வரையில் நரகத்திலிருப்பரென்பது நிச்சயம். தேவியே! பாவிகளுக் கும் காலங்கடந்துபோவதனால் பாவத்தினின்று விடுதல்உண்டு. பாவம்செய்யுமரசர்களுக்குமட்டும் விடுதல் இல்லையேயில்லை. சிறந்த பாக்கியமுள்ளவளே! அரசர்களின்நல்லொழுக்கம் கெட்டஒழுக்கம் எல்லாவற்றையும்சேர்த்து உனக்குச் சொன்னேன். இன்னும் என்ன கேட்கவிரும்புகிறாய்?' என்றார்.

1 'நாம' என்று பாடம்கொள்ளப்பட்டது.

## இருநூற்றுப்பதின்மூன்றாவது அத்யாயம்.

## தா ன த ர் ம ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(உமாமஹேச்வர ஸம்வாதம் தொடர்ச்சி; கொல்லாமையின் சிறப்பு.)

**உ**மை, 'தேவர்க்குந்தேவரே! மஹாதேவரே! எல்லாத்தேவ ராலும் நமஸ்கரிக்கப்பட்டவரே! தர்மங்களின்ஸூக்ஷ்மங்கள் எவை யென்பதை நான் கேட்கவிரும்புகிறேன்' என்றுசொன்னாள். மகேசு வரர், 'தேவியே! மனிதர்களுக்குஸுகத்தைத்தருவதாகிய தர்ம ஸூக்ஷ்மத்தைக் கேள். புண்ணியத்தைவிரும்புகிறவர்கள், பெண் ணியற்கையில்லாதவர்களிடத்திலும் மலடிகளிடத்திலும் தாழ்ந்த ஜாதிஸ்திரீகளிடத்திலும் நிலத்திலும் ரேதஸை விடலாகாது. அன் புள்ளவளே! மேற்சொன்னவற்றில் போடப்பட்ட வித்தானது முளைப்பதில்லையன்றோ? தர்மத்தைவேண்டுகிறவன் கண்டவிடங் களில் விதையைப்போடலாகாது. வித்துஅழிவதனால் மனிதனைப் பிரம்மஹத்தி பற்றுகிறது. கொல்லாமைதான் முதன்மையான தர்மம். கொல்லாமையே முதன்மையான ஸுகம். தர்மசாஸ்திரங்கள் எல்லா வற்றிலுமுள்ளவிஷயம் கொல்லாமையே. பெண்ணரசியே! தேவதை களையும் அதிதிகளையும்பூஜிப்பதும் எப்போதும் தர்மத்தைவிடாமலி ருப்பதும் வேதமோதலும் யாகமும் தவமும் தானமும் இந்திரியங் களையடக்குவதும் ஆசாரியருக்கும்தாய்தந்தையருக்கும் பணிவிடை செய்வதும் புண்ணியதீர்த்தங்களுக்குப்போவதும் கொல்லாமை யினது பதினாறில்ஒருபாகத்திற்கும் ஈடாகாதவை. மிக்கஉயர்ந்த தான இந்தச்சிறந்தரகஸ்யத்தை உனக்குச்சொன்னேன்' என்று சொன்னார். உமை, 'தேவஸ்ரேஷ்டரே! ஹிம்ஸையில் பாவமிருக்கு மாயின் பிராம்மணர்கள் பெரியயாகங்களிலும் சிறியஇஷ்டிகளிலும் பசுக்களை ஏன்கொல்லுகின்றனர்? பகவானே! சத்துருக்களைக் கொல்லுகிறவரே! அதிகமாக இம்ஸைசெய்யும்அரசர்கள் யாருக்கும் கிடைக்காதஸ்வர்க்கத்திற்கு [1]உடனேபோவதெப்படி? எவனுடைய வீட்டில் பிராம்மணர்களுக்குமாம்ஸம்போடுவதற்காகத் தினந்தோ றும் இருபத்தோராயிரம்பசுக்கள் கொல்லப்பட்டனவோ அந்த ரந்தி தேவனென்னுமரசன் மாம்ஸத்தோடுஅன்னம்போட்டதனால்ஸ்வர்க்க மடைந்தானே. அதெப்படி? எனக்குக் கேட்கமிக்கவிருப்பமிருக் கிறது. அரசர்கள் வேட்டைக்காக வெளியில்போய் மிருகங்களைக்

[1] அந்த யுத்தத்தலேயே.

சொல்லுகின்றனரே. அவர்கள் தர்மத்தைக்கேட்கவில்லையா? அல்லது, கேட்டதை நம்பவில்லையா! எல்லாந்தெரிந்தவரே! விருஷபத்வஜரே! இவற்றையெல்லாம் தெளிவாகவும் விரிவாகவும்கேட்கவிரும்புகிறேன். அதனை இப்போது நீர் எனக்குச் சொல்லும்' என்று கேட்டாள். மகேசுவரர், 'தேவியே! நீகேட்டது சிலாகிக்கத்தக்கது. கொல்லாதவன் இவ்வுலகத்தில் ஒருவனுமில்லை. அந்தக் கொலைக்கு அநேகவிதகாரணங்களுண்டு. அவற்றைக் கேள். இவ்வுலகத்தில் கொல்லாதவன் ஒருவனும்காணப்படவில்லை, தேவியே! நடப்பவன் பூமியிலுள்ளவையும் மிகச்சிறியவையும் நடுத்தரமானவையுமாயுள்ள அநேகஉயிர்களைக் காலகளிலுல் மிதிக்கிறான்; உட்காரும்போதும் படுக்கும்போதும் படுக்கையிலும் ஆஸனத்திலுமுள்ள அநேகஜீவன்களைத் தெரிந்தும் தெரியாமலும் கொல்லுகிறான். மனிதர்களின் தலைகளிலும் வஸ்திரங்களிலும் வேர்வையினாலுண்டாகும் ஜீவன்களையும் ஈக்களையும் கொசுக்களையும் அவர்கள் எப்போதும் கொல்லுகின்றனர். ஜீவன்கள் எப்போதும் ஜலத்திலும் ஆகாயத்திலும் இருக்கின்றன. பூமியில் பிராணிகள் நிறைந்திருக்கின்றன. இப்படி பிராணிகள்நிரம்பினஉலகத்தில் கொல்லாதவனாயிருப்பவன் யாவன்? பெண்ணரசியே! வேர்வையிலும் ஜலத்திலும் நிலத்திலுமுண்டானபெரியவையும் நடுத்தரமானவையும் மிகச்சிறியவையும் காணக்கூடியவையும் காணக்கூடாதவையுமாயிருக்கும்பலவகைப்பிராணிகளினால்இவ்வாகாசம் பூமியனைத்தும்நிரப்பப்பட்டிருக்கின்றன. அந்தப்பிராணிகளிலும் ஒன்றை மற்றொன்று கொல்லுகிறது. பலம்மிகுந்தமச்சங்களும் பக்ஷிகளும் பலம்குறைந்தவையான தம்மினங்களைப் புசிக்கின்றன. புறாமுதலியபறவைகள் ஊர்வனவற்றைஉண்டு ஜீவிக்கின்றன. பூமியிலும் ஆகாயத்திலுமுள்ள இன்னுமனேகம் புலால்தின்னும்பிராணிகள் மாம்ஸத்தைவிரும்பிப் பிறமாம்சங்களினால் வளர்கின்றன. அவையும் வேறுபிராணிகளால் பக்ஷிக்கப்படுகின்றன. நூற்றுக்கணக்கும் ஆயிரக்கணக்குமானபிராணிகள் பிராணிகளாலேயே ஜீவிக்கின்றன. அழகுள்ளவளே! பிராணிகள் மற்றொன்றைப்பீடியாமல் பிழைப்பதில்லை. புலால்தின்னுகின்றவையும் அதனாலேயேஜீவிப்பவையுமான அநேகம்பிராணிகள் பெரிய உடலுள்ள. கழுதைஎருமைமுதலான பிராணிகளின்மாம்ஸத்தினாலும் பாலினாலும் ரத்தத்தினாலும் வயிறுநிரப்புகின்றன. ஒருமனிதன் அன்னமுதலியவற்றைப்புசிப்பதனால்' தானியங்களென்று பெயருள்ள அநேகமாயிரம்உயிர்களை எப்போதும் உண்ணுகிறான். அவன்

மாமிசம் தானியம் கிழங்குகள் உண்பதையும் விட்டுவிடவேண்டும். மூன்று தினங்களும் ஐந்துதினங்களும் ஏழுதினங்களும் தானியங்களைப்பக்ஷியாமல் உபவாஸமிருப்பவன் கொல்லாதவன்என்றுசொல்லப்படுகிறான். எவ்வளவுக்கெவ்வளவு பிராணிகளைப் புசியாமலிருக்கிறானோ அவ்வளவுக்கவ்வளவு புண்ணியத்தைஅடைகிறான். அழகிய இடையுள்ளவளே! ஆகாரத்தைவிடுவதனால் தேகம் வாடுகிறது.வாடுவதனால்தேகமும்இந்திரியங்களும், அரசர்களுக்குச் சேவகர்கள்போல வசப்பட்டிருக்கின்றன. பொறிகளைக்கட்டுகிறவன்தான் ஸுகமுள்ளவன். அவனே தெரிந்தவன். மனிதன் பொறிகளையடக்குவதனாலும் கொடுப்பதனாலும் மனஒழிவினாலும் மனத்தில்கருதினவற்றையெல்லாம் அடைகிறான். இவ்வாறு உபவாஸந்தான் கொல்லாமைக்குக்காரணமென்று சொல்லப்படுகிறது. தேவியே! புசிப்பவன் பூமியில்நடப்பவன் இவர்களனைவரும்ஹிம்ஸைசெய்கிறவர்களென்பது தர்மசாஸ்திரங்களில் காணப்படுகிறது. தேவியே! தர்மத்தைச்செய்பவளே! ஹிம்ஸைசெய்யாதமனிதனை உண்மையாகஅறியும்வகையை உனக்குச் சொல்லுகிறேன்; கேள். கனிகளையும் கிழங்குகளையும் இலைகளையும் சாம்பலையும் பக்ஷித்துக்கொண்டு சித்திரம்போல அசைவற்றிருப்பவன் தான் ஹிம்ஸைசெய்யாதவனென்று நான் நினைக்கிறேன். அவைகளும் புகையினால் தீ மூடப்படுவதுபோல ஹிம்ஸையினால் மூடப்பட்டிருக்கின்றன. ஆதலால், எவன் ஆஹாரமில்லாதவனோ அவனே கொல்லாதவனென்று நான் நினைக்கிறேன். எல்லாவற்றையும்விட்டுப் பரிசுத்தனாகவும் நியமமுள்ளவனாகவும் தீக்ஷைசெய்துகொண்டு தன்னைச் சுற்றிக் கோடுகிழித்து ஸங்கல்பம்செய்துகொண்டு உயிருள்ளவரையிலும் உண்ணாமல் எடுத்தவிரதந்தவறாமல் காலத்தையெதிர்பார்த்துத் தியானமும் தவமும் செய்துகொண்டிருக்கிறவனை ஹிம்ஸியாதவனென்று நான் நினைக்கிறேன். வேறுவிதத்தில் கொல்லாதமனிதன்இருப்பதை நான் பார்க்கவில்லை. தேவியே! இதைப்பற்றிச் சிந்திக்கவேண்டியவை மிகுதியாயிருக்கின்றன. கொல்லாதவன் எவனுமில்லை. சிறந்தமகிமையுள்ளவளே! எவ்வெவற்றில்கொலைபெரியதாயிருக்குமோ அவ்வவற்றையும் மதுமாம்ஸங்களையும் ஒழிப்பதனால் கொல்லுதல் மிகக்குறைவாகும். ஒழிவே பெரியதர்மம். ஒழிவே பேரின்பம். மனத்தில்ஒழிவுள்ளவர்களுக்குப் புண்ணியம் பெரியகுவியலாகும். தர்மங்களும் அதர்மங்களும் மனத்தைமுன்னிட்டே வருகின்றவை. ஸந்தேகமில்லை. மனிதன் ஸம்ஸாரத்திற்கட்டுப்படுவதும் முக்திபெறுவதும் மனத்தினாலேதான். மனத்தைக்கட்டினால்

ஸ்வர்க்கமும் விட்டால் நரகமும் நிச்சயம். கொலையாளி ஆயுதத்தை எடுத்தபின், 'அநேகம்பிராணிகளில் ஆயுள்முடிந்துஇறந்ததைத் தான் நான்கொல்லுகிறேன்' என்று மனத்தில்நினைத்துக்கொல்வாரு யின் அந்தக்கொலையாளியைப் பாவம் பற்றுவதில்லை. தேவியே! அந் தப்பிராணிகள் முன்னமே விதியினால் கொல்லப்பட்டவை. அந்தக் கொலையாளி காரணமாகிறான். விதிதான் வலியது. முன்வினையை விடவொண்ணாத பிராணிகள் முன்செய்த தம்வினையினால் மூடப்பட்டு விலங்குஜாதிகளாகவும் ஊர்வனவாகவும் பற்பலபிறப்புக்களில் பிறக் கின்றன. பிராணிகள் பலவகைகளாக வேறுபட்டஉடல்களோடு பல வகைகளான சக்தியும் ஸாமர்த்தியமுமுள்ளவையாகவும் பலஉணவு களுள்ளவையாகவும் பூமியில் பலவிடங்களில் பிறக்கின்றன. பிறக்கும் பிராணிக்கு முன்கர்மங்களுக்கேற்றபடி இறப்பும் ஸுகதுக்கங்களும் முதலிலேயே பிறக்கின்றன. மனிதர்கள் எந்தக்காலத்தில் எந்தவிடத் தில்எந்தக்காரணத்தினால்மரணமடைகிறார்களோ அவற்றைத்தாண்ட முடியாது. அது முந்தியகருமத்தின் கட்டளை. விதியானது ஜாக் ரதையில்லாதபிராணிகளை ஜாக்ரதையோடு கவனிக்கிறது. அதற்கு யாரும் நண்பனுமில்லை; பகைவனுமில்லை: அலக்ஷியமாகவிடத்தக்க வனுமில்லை. யமன் எல்லாப்பிராணிகளிடத்திலும் பக்ஷபாதமின்றிக் காலத்தை எதிர்பார்க்கிறான்; ஆயுளானவுடன், எல்லாப்பிராணிக ளின் உயிரையும் இழுத்துவிடுகிறான். எவன் எப்படியிறக்கவேண்டு மென்றுவிதியிருக்கிறதோ அதற்குமாறாகஅவன்இறப்பதில்லை. அறி வினாலாவது பராக்கிரமத்தினாலாவது மந்திரத்தினாலாவது ஔஷதத் தினாலாவது விதியின்நிச்சயமானவழியை ஏமாற்றக்கூடியவன் இவ் வுலகத்திலிருந்தவன் இருக்கப்போகிறவன் இருவகையாரிலும்இல்லை. தேவியே! பிராணிகளுக்கு ஹிம்ஸைசெய்வதைப்பற்றியநியாயத்தை உனக்குச் சொன்னேன்.

---

## இருநூற்றுப்பதினான்காவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேச்வர ஸம்வாதம் தொடர்ச்சி; விதியின்வன்மை போரிலிறந்தவரின் கதி முதலியன.)

ஓ! தேவியே! மரணகாலம் வந்தபோது எந்தப்பிராணிகளும் விதியைக் கடக்கமுடியாதென்பதற்குக் காரணத்தைக் கேள். அழகிய முகமுள்ளவளே! பெரியவையும் சிறியவையும் நடுத்தரமான

வையுமாகிய பலபுழுக்களும் விட்டிற்பூச்சிகளும் ஆயுளழியும்போது தாங்களேஓடிவந்து எரிகின்றவிளக்குக்களில் விழுகின்றன. வனங்களிலிருக்கும் மான்கூட்டங்கள் அநேகங்களுள் எதற்குக்காலம் வந்ததோ அதுதான் வலையிலகப்படுகிறது. தேவியே! கொல்லுமிடத்திற்குக்கொண்டுபோவதற்காகப் பிடிக்கப்பட்டவற்றுள் ஆயுள் குறைந்தது எதுவோ அதுதான் கொல்லப்படுகிறது. அது அந்தத் தினம் தவருமல் கொலையாளியின்கையில் அகப்படுகிறது. விரிவான ஆகாயத்தில் விரைவாகச் செல்லும் பக்ஷிக்கூட்டங்கள் ஓடத்திறமையுள்ளவையாயிருந்தும் ஆயுளில்லாமையினுல் பிடிக்கப்படுகின்றன. ஜலத்தில் ஸஞ்சரிக்கும்மீன்களும் மற்றும் பலவகைஜந்துக்களும் விதிக்ககப்பட்டுத் தாங்களே வலையிலேறுகின்றன. சிறந்தவளே! ஊர்வனவாகியபிராணிகள் ஆயுள்ஒழிவதனுலேதான் மதிகெட்டு ஈட்டிமுனையில் தாங்களேஏறி இறக்கின்றன. உழுகிறஉழவருக்குக் கொல்லுவதில் எண்ணமில்லை; ஆகிலும் அவர்களின்கலப்பைமுனை முதலியவற்றினுல் எண்ணிறந்தபிராணிகள் கொல்லப்படுகின்றன. மனிதன் தன்நுனிக்காலினுல் என்னஹிம்ஸையைச் செய்கிருனே அந்தஹிம்ஸையைத் துஷ்டயானையும் அநேகஜன்மங்களிலும் செய்யமாட்டாது. எவைஇறக்கவேண்டுமோ அவைதாம் இறக்கின்றன. உழவர் அவற்றைக் கொல்வதில்லை. அவர்களுக்கு, 'உழுவோம்' என்றஎண்ணமேயன்றிக் கொல்லஎண்ணமில்லை. ஆதலால், அனேகமாயிரம்பிராணிகளைக்கொன்ருலும் அந்தப்பாவம்அவர்களைப்பற்ருது. பிராணியானது முதலில்விதியினுல்கொல்லப்பட்டு அதன்பிறகுதான் மரணமடைகிறது. ஆதலால், விதியைக்கடப்பதற்கு எந்தப்பிராணிகளாலும் ஆகாது; ஆயுள்முடிந்தபின் ஒருநிமிஷமும் பிழைத்திருப்பதும்முடியாது. பிழைத்திருக்கவேண்டியகாலத்தில் இறப்பது நடந்ததுமில்லை; நடக்கப்போவதுமில்லை. வினைப்பயன் நன்ருே தீதோ அதைக்கடப்பது ஸாத்தியமன்று. இறக்கத்தக்கவைதாம் இறக்கும். விடுபடத்தக்கவைதாம் விடுபடும். அழகுள்ளவளே! விதியிலகப்பட்டபசுக்கள் ரந்திதேவனுடைய யாகத்திற்குத் தாங்களேவந்து கொல்லப்பட்டன. கொல்லப்பட்ட பசுக்களின் ரத்தத்திலுண்டான சர்மண்வதிஎன்னும்பெயர்பெற்றநதி குளம்புகொம்புஎலும்புகளினுல் இறங்கக்கூடாமலிருந்தது. சிறந்தவளே! ரத்தமானது அந்தநதியில்விழுந்தபிறகு தெளிவும் நல்லமணமும் நல்லநிறமும் நல்லசுவையுமுள்ளதும் நற்கருமங்களுக்குரியதுமாகிய புண்ணிய தீர்த்தமாகிவிட்டது. அழகுள்ளவளே! அந்தமன்னனுடைய ஸத்ர

யாகத்தில் பிராம்மணர்களும் தேவர்களும் திக்பாலகர்களும் மும்மூர்த்திகளும் நேரில்வந்து அந்நதியில்ஸ்நானம்செய்து ஜபமுதலிய நித்யகர்மங்களை அனுஷ்டித்தனர். முன்னோர்களால் கண்டறியப்பட்டவிதிப்படி மந்திரத்துடன் பகுத்துக்கொடுக்கப்பட்ட அந்த மாம்ஸத்தை அவர்கள் சாஸ்திரமுறைப்படி பெற்றுக்கொண்டனர். நூற்றுக்கணக்கும் ஆயிரக்கணக்குமாகப் பிராம்மணர்கள் தினந்தோறும் மாம்ஸத்துடன்கூடின அன்னத்தைப் புசித்துக்கொண்டிருக்கையிலேயே சூரியாஸ்தமயமாயிற்று. அந்தஅரசனது சிறந்த யாகத்தில் விதிப்படி கிரமமாகமந்திரங்களைச்சொல்லிக் கொல்லப்பட்டபசுக்களும் அந்த ரந்திதேவராஜனும் ஸ்வர்க்கம்சென்றனர். இடைவிடாமல்யாகம்செய்ததனாலேயே அவ்வரசன்நல்லபயனையடைந்தான். போகங்களையும் ஆடையாபரணலங்காரங்களையும் கொடுத்தும் தம்முடன்போஜனம்செய்வித்தும் பலஉபசாரணைகளைச் செய்துமிருக்கும் அரசர்களுக்கு யுத்தத்திலுதவிசெய்யும் தருணம்நேர்ந்தபோது துணையாக அழைக்கப்பட்டமனிதன் ஆயுதமெடுக்கவேண்டும். இரண்டு ஸேனைகளும் வ்யூகங்களாகவகுக்கப்பட்டு யானைகள் குதிரைகள் ரதங்கள் காலாட்படைகள் நிரம்பியும், சாமரங்களும் குடைகளும் கொடிகளும் தோற்கேடகங்களும் பலநிறங்களாகப் பிரகாசித்துக்கொண்டிருக்க, சத்திகள் தோமரங்கள் ஈட்டிகள் கத்திகள் சூலங்கள் உலக்கைகள் சம்மட்டிகள் வில்லுகள் முசுண்டிகள் பிண்டிபாலங்கள் கதைகள் சக்கரங்கள் ப்ராஸங்கள் கர்ப்படங்கள் முதலான பலஆயுதங்களைக் கைபிலெடுத்துக்கொண்டு விருஷபங்களோடுவிருஷபங்கள்எதிர்ப்பதுபோல இருபுறத்துப்போர்வீரர்களும் கர்ஜித்து யுத்தம்செய்யும்போது, சங்குபேரிகைமுதலான பலவாத்தியங்களின்முழக்கங்களாலும் குதிரைகளின்கனைப்பினாலும் யானைகளின்கர்ஜனையினாலும் மனிதர்களின் வீரவாதங்களாலும் தேர்ச்சதங்கைகளின் ஒலிகளாலும் மழைக்காலங்களில் ஆகாயத்தில் மேகங்கள்முழங்குவதுபோல நாலுதிசைகளும் மூலைகளும் வேறுசத்தங்கேட்கப்படாமல் நிரப்பப்படுகின்றன. தேர்ச்சக்கரங்களின்வட்டைகளாலும் குதிரைக்குளம்புகளினாலும் எழுப்பப்பட்டசெந்தூள்கள் கபிலைப்பசுக்கள்போல ஆகாயமெங்கும்மூட இருஸேனைகளிலுமுள்ளவீரர்களும் ஆயுதங்கள்போடத்தலைப்பட்டபொழுது, அந்த அடிகளினாலுண்டானரத்தம் அவர்களுக்குச் செஞ்சந்தனம்போலிருக்கும். போர்த்தலையில் அங்கங்களிலிருந்து ரத்தம்பெருகும்போது அவர்கள் பலாசமலர்களும் அசோகமலர்களும் குவியல்களாகக் குவிந்துநடப்பதுபோலிருப்பர். சூரர்

கள் யுத்தத்தில் உற்சாகத்தோடு கைகளால் ஆயுதங்களையோங்கி ஒருவரையொருவர் அழைத்துக்கொண்டு எதிர்த்துச்செல்வர். கடும்போரில் சூரர்கள் கொன்றும் கொல்லப்பட்டுமிருக்கையில், அரசனுடையஇஷ்டத்திற்குவிரோதமாகஎதிரிக்குப்புறங்காட்டி அடிபடாமல் திரும்பிச்செல்லும்இழிவானமனிதர்கள் தம்மரசனுடையபாவமெல்லாவற்றையும்அடைவர். அவர்களுக்குள்ளபுண்ணியம்எதுவோ அது அவ்வரசனைச்சேரும். கொல்லாமை முதன்மையானதர்மமென்றறிந்து யுத்தங்களில் தம்மால்கூடியவரையில் போர்செய்யாதபடைச்சேவகர்கள், அரசனுடையஅன்னத்தைக்கவர்ந்தவராதலின் கொடிய நரகத்தைஅடைவார். படைச்சேவகனுடையகடமையையறிந்து உயிராசையைவிட்டு ஆயுதத்தைஓங்கிக்கொண்டு விட்டிற்பூச்சிபோலப் பயமற்றவனாகித் தீக்குழப்பானபோரில்புகுகிறவன் இறந்தபின் ஸ்வர்க்கமடைவான். தேவியே! தயையுள்ளமனிதனும் பூதாவேசங்கொண்டவன்போலப் பிறரையடித்து மகிழ்வான். அவன் உத்ஸாகத்தைத் தலைமையாகக்கொண்டவனன்றோ? அவன் பிறருடையஅடிகளினால் துன்பப்படுத்தப்பட்டும் சோர்வையடையான். மிகக்கொடிதான போர்க்களத்தில் மான்கூட்டங்களைச் சிங்கம் துன்புறுத்துவதுபோலப் பகைவர்படைகளைத் துன்புறுத்தி நடுப்பகலில் சூரியன்போலக் காணமுடியாதவனாகத் தயையைவிட்டு ஆயுதமெடுத்துயுத்தம்செய்து தன்னரசனைப் போரில்காப்பாற்றுகிறவன் பரிசுத்தாத்மாவாகி யுத்தமென்னும்மகாயாகம்செய்பவனாகிறான். அவனுக்குத் தோற்கேடகம் மான்தோலென்றும் வில் [1]கையில்பிடிக்கும்தண்டமென்றும் ரதம் யாகவேதிகையென்றும் கொடி யூபஸ்தம்பமென்றும் குதிரைக்கடிவாளங்கள் தர்ப்பைகளென்றும் ஜயத்திலுத்ஸாஹம் கர்வம் கோபம் இம்மூன்றும் மூன்றக்கினிகளென்றும் நினைக்கப்படுகின்றன. அவனுக்குச் சந்தோஷமே ஸ்ருவமென்னும்ஹோமபாத்திரம். ஸாரதி புரோகிதன்; ஆயுதங்கள் ஸ்ருக்குஎன்னும்பாத்திரமுதலிய யாகக்கருவிகளனைத்துமாகின்றன; அம்புகள் ஸமித்துக்களாகநினைக்கப்படுகின்றன. புகழ்பெற்றஅந்தவீரனது தேகத்திலுண்டாகும்வேர்வையே தேன். மனிதர்களின்தலைகளே [2]புரோடாசம். ரக்தமே நெய்யாகுதி. தூணிகளே ஹவிஸ்வைக்கும்பாத்திரம். தேகத்தின் நிணங்களே நெய்த்தாரைகள். மாம்ஸம்தின்னும்பிராணிகளே அந்தயாகத்திற்குப் பிராம்மணர்கள். அப்படிப்பட்டமனிதர்களும் யானைகளும் குதிரை

1 'தண்டகாஷ்டம்' என்று பாடங்கொள்ளப்பட்டது.

2 சாந்திபர்வம் 39 - ம் பக்கம் குறிப்பிற்காண்க.

களுமே அவற்றிற்குப் பக்ஷணங்களும் அன்னபானங்களும். யாகத்தில் பிராம்மணர்கள்புசிப்பதுபோலவே அவைவிரும்பினவற்றையெல்லாம் நிரம்பப்புசிக்கின்றன. அடிபட்டவீரர்களின்அலங்காரங்களாகிய ஆடையாபரணங்களும் பொன்னும் தங்கமும் அந்தயாகத்திற்குத் தக்ஷிணைகள். தேவியே! அந்தயுத்தத்தில் எதிர்நோக்கிச்சென்று யானையின்மேலிருந்தபடி கொல்லப்பட்டமனிதன் பிரம்மலோகத்தை அடைவான். தேரின்நடுவிலாவது குதிரைமேலாவதுஇருந்து யுத்தத்தில்கொல்லப்படுகிறவன் இந்திரலோகத்தில் பூஜிக்கப்படுவான். கொல்லப்பட்டவர்கள் ஸ்வர்க்கத்தில் பூஜிக்கப்படுகின்றனர். கொன்றவன் இங்கேயே பூஜிக்கப்படுகிறான். கொல்லப்பட்டவன்கொன்றவனிருவரும் ஸுகப்படுகிறார்கள். ஆதலால், போர்க்களத்திற்குப் போனபின் அஞ்சாமல் போர்செய்யவேண்டும். பயத்தைவிட்டு ஆயுதமெடுத்து யுத்தத்தில்அடிப்பவன் எவனோ அவன் தர்மிஷ்டரிற்சிறந்தவன். அநேகமாயிரம்நதிகள் ஸமுத்திரத்தில்விழுவதுபோல ராஜதர்மத்தோடுகூட எல்லாத்தர்மங்களும் ஆசாரமும் ஒழுக்கமும் அவனிடத்தில் பிரவேசிக்கின்றன. தொன்றுதொட்டுநடந்துவரும் வேதங்களிற்சொல்லப்பட்டதர்மங்களையும், பாஷண்டமதங்களிற்சொல்லப்பட்டதர்மங்களையும், மானிடருக்குரியலௌகிகதர்மங்களையும், தேசங்களுக்கும் ஜாதிகளுக்கும் குலங்களுக்கும் மலை கிராமம் நகரமுதலியவற்றிற்குமுரிய பற்பலதர்மங்களையும் காப்பாற்றவேண்டும். தர்மத்தைக்கெடுத்தால் அது கெடுக்கும்; காப்பாற்றினால் காப்பாற்றும். ஆதலால், அரசன் முக்கியமாகத் தர்மத்தைக் கெடுக்கலாகாது. எந்தத் தேசத்தில் அரசன் குடிகளைத் தர்மமாகக் காப்பாற்றுகிறானோ, பிராம்மணர்கள் ஆறுகருமங்களையும் செய்கின்றனரோ, பித்ருக்களும் தேவர்களும் பூஜிக்கப்படுகின்றனரோ அந்தத்தேசத்தில் மழையின்மையும் பிணிகளும் பீடைகளுமிருப்பதில்லை. அரசன் தன்தர்மத்தை விடாமலிருந்தால் ஜனங்களெல்லோரும் தர்மத்தையேசெய்வர். தேவியே! ஆசாரத்தைவிடாதவனும் பகைவரின்சமயமறிபவனும் ஜாக்ரதையும்பராக்கிரமமுமுள்ளவனுமாகிய அரசனை எப்போதும் விரும்பவேண்டும். அழகியஇடையுள்ளவளே! பூமியில் சூத்திரர்கள்அநேகர் அரசர்களை மிகக்கெடுத்திருக்கின்றனர். ஆதலால், தெரிந்தஅரசன் அஜாக்ரதையாயிருக்கக்கூடாது. அவர்களிடத்திலும் விடப்பட்ட சிநேகிதர்களிடத்திலும் மனிதர்களிடத்திலும் யானைகளிடத்திலும் ஸ்நானபானங்களிலும் ஒருபோதும் நம்பிக்கைவைக்கலாகாது. தேசத்தின்நன்மைக்காகவும் பசுக்களுக்காகவும் பிராம்மணர்களுக்காகவும்

சிறைபிடிப்பதற்காகவும் ஸ்நேகிதர்களுக்காகவும் விடக்கூடாதஉயிரையும் விடுகிறவன்எவனோ அவன் அரசனுக்கு அன்பனாவான்; தன் குலத்தையும் சிறப்பிப்பான். சிறந்தநிதம்பங்களையுடையதேவியே! நினைத்தவற்றையெல்லாம் கறக்கும்காமதேனுவும் சராசரங்களைத்தாங்குவதுமாகிய கடல்சூழ்ந்தபுவனியை மலைகளும் காடுகளும்உள்பட மிகுந்ததனத்தோடு பிராம்மணர்களுக்குக்கொடுப்பவனும்,யுத்தத்தில் உயிரைவிடுகிறவனுக்குச் சரியாகான். உயிர்விடுகிறவன் சிறந்தவன். செல்வமுள்ளவன் நியமத்துடன் ஆயிரம்யாகங்கள்செய்தாலும்அதில் என்னஆச்சரியம்? உயிரைவிடுவது செய்தற்குமிகஅரியது. ஆதலால், பிராணயாகமானது எல்லாயாகங்களிலும்சிறந்தது. இவ்வாறு யுத்தமென்னும்யாகத்தைப்பற்றி உனக்கு உள்ளபடி சொன்னேன்.

---

## இருநூற்றுப்பதினைந்தாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)



(உமாமஹேஶ்வரஸம்வாதம் தொடர்ச்சி; ராஜதர்மமுதலியன.)

தர்மம்செய்பவளே! வேட்டையைப்பற்றிச் சொல்வேன்; கேள். மிருகங்களைக்கொல்வதனால் அரசனைப் பாவம்பற்றாது. எல்லாமிருகங்களும் இந்தப்பூமியில் மனிதர்களில்லாமலிருக்கக் கருதுகின்றன; பயிர்களைத் தின்றுவிடுகின்றன. அவற்றை அரசன் தண்டிக்கவேண்டும். துஷ்டர்களைச்சிக்ஷிப்பதும் சிஷ்டர்களைரக்ஷிப்பதும் காரியங்களை உண்மையோடுசெய்வதும் அரசனுடையதர்மங்கள். அவற்றை அவன் விடாமற்செய்யவேண்டும். அரசனால் அடிக்கப்பட்டமிருகங்கள் தாமும் ஸ்வர்க்கம்போகின்றன. அரசனில்லாத ராஜ்யம் மேய்ப்பவனில்லாதபசுக்களைப்போலேதான். ஆதலால், தேவர் கந்தர்வர் நாகர் அரக்கர் இவர்களின்அம்சங்கள், அயோக்கியர்களைச் சிக்ஷித்தும் யோக்கியர்களைரக்ஷித்தும் தேசங்களிலுள்ளபிரஜைகளைப்பாதுகாப்பதற்குத்தான் அரசனாகஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவ்வரசர்கள் எப்படிநடந்து புகழ்பெற்றிருந்தால் தேசமும் தர்மமும் பொருளும் புகழும் பேரும் விருத்தியடையுமோ அந்தநடக்கையை வரிசையாகச்சொல்வேன்; கேள். தர்மிஷ்டர்களிற் [1]சிறந்தவளே! உத்தமர்களானமன்னர்கள் ஸபையையும் தண்ணீர்ப்பந்தலையும் தடாகத்தையும் தேவாலயத்தையும் பிராம்மணஅக்கிரஹாரங்களையும் முத

---

1 'வரே' என்று பாடங்கொள்ளப்பட்டது.

வில்உண்டாக்கவேண்டும். இது அவர்களின்தர்மம். பிராம்மணர்களை அவமதிக்கலாகாது. பிராம்மணர்கள் நீறுபூத்தநணல்கள்போலிருந்து கோபம்வந்தபோது குலத்தைையே அழித்துவிடுவர். ஊதப்பட்டநெருப்பானது விறகுமுழுமையும் எரித்துவிடுவதுபோல பிராம்மணர்கள் கோபமென்னும்நெருப்பினால் இப்பூமியையெரித்துவிடுவார்கள். பிராம்மணர்கள் கோபித்தால் அரசர் ராஜ்யத்தையனுபவிப்பதில்லை. வாதாபி நகுஷன்முதலானோர் அறியாமையினால் பிராம்மணர்களையவமதித்து அவர்களின் கோபத்தினால் எரிக்கப்பட்டுச் சுற்றத்தாருடனும் சிநேகிதருடனும் அழிந்தனர். இந்திரனுடைய தேகமும் பெண்குறிகள்நிரம்பினதாகச் செய்யப்பட்டது. பிறகு, தேவக்கூட்டத்தாரெல்லாரும் இந்திரனுக்காகக் கௌதமமுனிவரை நமஸ்கரித்துத் துதித்துக் காலில்விழுந்து கோபத்தைத் தெளிவித்தனர். அழகியநிதம்பங்களையுடையவளே! அம்மகாத்மாவான கௌதமமகரிஷி அனுக்கிரகம்வைத்ததனால், ஆயிரம் பெண்குறிகளினால் அடையாளம்பண்ணப்பட்ட அவ்விந்திரன்தேகமானது ஒருநொடியில் ஆயிரம்நேத்திரங்கள்நிரம்பினதாகச் செய்யப்பட்டது. கௌதமர் ஆட்டின்விருஷணங்களையறுத்து மந்த்ரித்தவுடன் அவைஇந்திரனிடத்தில் ஒட்டிக்கொண்டு அவன் வ்ருஷணங்களாயின. இப்படி ப்ராம்மணர்கள்கோபித்தபோது தேவர்க்கதிபதியான இந்திரனும் அரசாளமுடியாமற்போனான். பூமியிலுள்ளமனிதரைப்பற்றிச்சொல்லவேண்டுமா? கோபித்தபிராம்மணன் உலர்ந்த விறகைத் தீ எரிப்பது போலஎரித்துவிடுவான்; உலகமெல்லாவற்றையும்நீறுக்கித்திரும்பவும் வேறுலகம்படைப்பான். அவன் தேவரல்லாதவரைத் தேவராகவும் தேவரைத்தேவரல்லாதவராகவும் செய்வான். பிராம்மணர்களுக்குக் கோபமே ஆயுதம். ஆதலால், அவர்களுக்குக் கோபத்தையுண்டாக்கலாகாது. பெருங்குற்றங்களிலும் பிராம்மணன் தண்டிக்கப்படத்தகாதவன். குற்றமற்றவளே! பிராம்மணர்கள்மேல் ஆயுதங்களைப் போடுவதும் அவர்களுயிரைப்போக்குவதும் மூவுலகங்களிலும் காணப்படுவதில்லை. அவர்களின்கோபங்களும் அதிகமாகவும் உக்கிரமாகவும் இருக்கும்; அனுக்கிரகங்களும் மிகச்சிறந்தவையாயிருக்கும். ஆதலால், கோபத்தையுண்டாக்கக்கூடாது. பிராம்மணரை எக்காலமும் பூஜிக்கவேண்டும். பிராம்மணர்கள்கோபித்தபிறகு ராஜ்யத்தையாளும் அரசன் இவ்வுலகத்தில் இப்போது காணப்படவுமில்லை; முன்னிருந்ததுமில்லை; இனி இருக்கப்போகிறதுமில்லை. பிராம்மணர்களைப் பரிஹஸிக்கவும் நிந்திக்கவும்கூடாது. (அரசன்) கோபகாலத்தில்

கோபிக்கவேண்டும்; அனுக்கிரஹகாலத்தில் அனுக்கிரஹிக்கவேண்டும். அரசர்கள் தம்வேலைக்காரர்களிடத்தில் பரிகாசம் செய்யலாகாது; அதனால் லேசாகிவிடுவர்; அவர்களின்கட்டளைகள் நடவா. வேலைக்காரரைப்பரிகாசம்செய்வதனால் அரசன்அவமதிக்கப்படுவான். அவர்கள் யாசிக்கத்தகாதவற்றையும் யாசிப்பார்; சொல்லத்தகாதவற்றையும் சொல்லுவர். வேண்டியவற்றைக் கேட்பதற்குமுன்னமேகொடுத்தாலும் அவர்கள் திருப்தியடையார். ஆதலால், அரசன் வேலைக்காரர்களிடத்தில் பரிகாசத்தை விட்டுவிடவேண்டும். தன்னைநம்பாதவனை நம்பலாகாது. நம்பினவனையும் அதிகமாகநம்பலாகாது. எந்த உபாயங்களினாலும் தன்குலத்தோரிடத்தில் நம்பிக்கைவைக்காமலிருப்பது முக்கியம். நம்புவதனாலுண்டானபயமானது மரத்தை இடி அழிப்பதுபோல அழிக்கும். அரசன் அஜாக்கிரதையினாலும் பொருளாசைமேற்கொண்டிருப்பதனாலும் கொல்லப்படுவான். ஆதலால், அஜாக்ரதையையும் ஆசையையும் விடவேண்டும். யாரையும்நம்பலாகாது. பயப்பட்டவர்களைப் பயமில்லாமல்காத்தும் ஏழைகளை அநுக்கிரஹித்தும் காரியாகாரியங்களின்வகைகளை அறிந்தும் தேசநன்மையில் எப்போதும் ஊக்கம்வைத்தும் சொன்னசொல்தவறாமலும் பிரஜைகளைக்காப்பதே காரியமாகவும் பேராசையில்லாமலும் நியாயத்தையேபேசி ராஜ்யத்தைஆண்டுகொண்டு ஆறிலொருபாகம் தீர்வை வாங்கவேண்டும். செய்யத்தக்கவைசெய்யத்தகாதவைகளின் வேறுபாடுகளையறிந்து எல்லாவற்றையும் சாஸ்திரத்தினால் பார்க்கவேண்டும். தன்தேசத்தில் தயைசெய்யவேண்டும். செய்யத்தகாதவற்றில் பிரவ்ருத்திக்கலாகாது. தன்னைப்புகழ்பவராயினும் தன்னை இகழ்பவராயினும் வேண்டாதவராயினும் குற்றமில்லாதவரை நண்பரைப்போலப் பார்க்கவேண்டும். துஷ்டர்களையும் குற்றத்திற்குத்தக்கபடி தண்டனைசெய்து திருத்தவேண்டும். அரசன் தண்டிப்பதில் ஜாக்ரதையாயுள்ளதேசத்தில்தான் தர்மம் நடக்கும். அரசன் பொறுமையாயுள்ளதேசத்தில் தர்மம் நடவாது. துஷ்டர்களைச் சிக்ஷிப்பதும் சிஷ்டர்களைரக்ஷிப்பதும் தர்மங்கள். கொல்லத்தக்கவர்களைக் கொல்லவும் கொல்லத்தகாதவர்களைரக்ஷிக்கவும் வேண்டும். பிராம்மணர்களையும் பசுக்களையும் தூதர்களையும் தன்தந்தையையும் கல்வி கற்பித்தவரையும் முன்னுதவிசெய்தவரையும் பெண்களையும் அதிதிகளைஎல்லாம்ஆதரிக்கும்மனிதனையும் கொல்லலாகாது. பிராம்மணர்களுக்குப் பூமி பசு பொன் சமைத்தசோறு எள் நெய்இவற்றை நித்தியமாகத்தானம்செய்வதனால் அரசன் பாவங்களினின்று விடுபடு

வான். எந்த அரசன் தேசநன்மையில்ஊக்கத்துடன் மேற்சொன்ன படி எப்போதும்நடக்கிருனே அவனுக்குத் தேசமும் பொருளும் புண்ணியமும் புகழும் பெயரும் சிறப்புற்றிருக்கும். அவ்வரசன் பாவத்தையும் நஷ்டத்தையுமடையான்.ஆறிலொருபாகம் தீர்வையை அனுபவிக்குமரசன், தன்படையிைலும் பிறர்படையிைலும் தர்மத்தி ைலும் பராக்கிரமத்திைலும் பிரஜைகளை ரக்ஷிக்காமலும் பகைவரின் தேசங்களைப் பீடிப்பதில்முயற்சியில்லாமலுமிருப்பானயின், அந்தத் திறமையற்ற அரசனுடையதேசம் பகைவரின்படையிைல் கெடுக்கப் படும். தன்தேசத்தைக்கெடுப்பதைல் எதிரிசேனைக்குஉண்டாகும் பாவங்களனைத்தையும் ராஜ்யம்அழிந்த அரசன் அடைவான்.தன்னைக் கொல்லவந்தவன் தந்தைஒருவனைத்தவிர மற்றஅம்மான், மருமகன், ப்ராதா, மாமனர், ஆசாரியன்முதல் யாராயிருந்தாலும் அவனைக் கொல்லலாம். பெண்ணரசியே! தன்தேசத்தைக்காப்பதற்காக யுத் தம்செய்து போர்க்களத்தில் எதிரிசேனையிைல் கொல்லப்பட்ட வனுக்கு என்னகதி யென்பதைக்கேள். யுத்தத்தில்கொல்லப்பட்ட அரசன் விமானமேறி அப்ஸரஸுகளின் கூட்டங்களிைல்சூழப்பட்டு இங்கிருந்து இந்திரலோகம்போவான். அழகுள்ளவளே! அவன் அங்கங்களில் எத்தனை மயிர்க்கால்களிருக்கின்றனவோ அத்தனையா யிரம்வருஷங்கள் அவன் இந்திரலோகத்தில் கொண்டாடப்படுவான். அவன் எப்போது மானிட லோகத்திற்குத் திரும்பிவருவானே அப் போது பராக்கிரமமுள்ளவனுகி அரசனுகவோ அரசனைப்போன்ற வனுகவோ பிறப்பான். ஆதலால், முயன்று தன்தேசத்தைக் காப் பாற்றவேண்டும். வியவகாரங்களைப்பார்ப்பதும் சாரர்களைவிடுவதும் சொல்தவருமலிருப்பதும் சோர்வின்மையும் உற்சாகமும் காரியங் களில்கடுமையில்லாமையும் வேலைக்காரர்களையும் வாகனங்களையும் காப்பாற்றுவதும் போர்ச்சேவகர்கள் அவர்களின்வேலையைச்செய்த போது அது வீண்போகாமலிருக்கும்படி அவர்களுக்குப்பரிசளிப் பதும் அரசர்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் நன்மையைப் பயக்கின்றவை.

---

## இருநூற்றுப்பதினெருவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஸ்வரஸம்வாதம்தொடர்ச்சி; அறம்பொருள்இன்பமுதலியன.)

புகழ்பெற்றவளே! சிறியஇஷ்டிகளிலும் யாகங்களிலும் மந்தி ரங்களைச்சொல்லி யூபஸ்தம்பங்களில்கட்டிச் சாஸ்திரப்படி தர்மசிந்

தையோடு கொல்லப்படுகின்றபசுக்கள் மந்திரத்திறைலும் ஹோமத்தி றைலும் பரிசுத்தமடைந்து ஸ்வர்க்கம்போகின்றன. சிறந்தமுகமுள்ள வளே! யாகங்களில் அவற்றின்மாமிசமாகியஹவிர்ப்பாகங்களினல் த்ரேதாக்நிகளும் தேவர்களும் திக்பாலகர்களும் மும்மூர்த்திகளும் திருப்திசெய்விக்கப்படுகின்றனர். தேவியே! அவர்கள்திருப்தியடை ந்தபோது அந்தயாகத்திற்கு எந்தப்பலனே அந்தப்பலன் யஜமான னைச்சேருகிறது. ஸந்தேகமில்லே. தேவியே! அந்தயஜமானன், பத்நி புத்திரர்கள் தந்தை ஸகோதரர்களுடன் ஸ்வர்க்கத்துக்குச்செல்வான். அந்தயாகத்தில் தீக்ஷைசெய்துகொண்டவரனைவரும் ஸ்வர்க்கம்போ வர். இதையெல்லாம் உனக்குச்சொன்னேன். இன்னும் என்ன கேட்கவிரும்புகிருய்?' என்றுசொன்னர். உமை, 'பகவானே! எல் லாப்பிராணிகளுக்கும் ஈசுவரரே! சூலத்தைக் கையில்பிடித்தவரே! பேரொளியுள்ளவரே! கிருகஸ்தர்களெல்லாருடைய ஒழுக்கத்தையும் நான் கேட்கவிரும்புகிறேன். பிரபுவே! தர்மார்த்தகாமங்களென் னும்மூன்றுபுருஷார்த்தங்களுக்குமுரிய அவர்களுடையஒழுக்கம் எப் படிப்பட்டது? அவர்கள்பிழைப்புக்கு எவ்வகையானபொருளீட்டம் கூறப்பட்டுள்ளது? அவர்களெல்லாரும் எப்படிநடப்பதனல் உத்தம கதியைப் பெறுவர். கௌரவத்தைக்கொடுப்பவரே! இவற்றையெல் லாம் சுருக்கமாகச் சொல்லக்கடவீர்' என்றுகேட்க, மகேசுவரர் சொல்லலானர். 'சிறந்தமஹிமையுள்ளபெண்ணரசியே! நீ கேட்கக் கருதினது நியாயந்தான். இவ்வுலகத்திலுள்ளநல்லொழுக்கம் பெரும் பாலும் கிருஹஸ்தர்களுக்குரியதாகச் சொல்லப்படுகிறது. அவர்க ளைக் காப்பதற்காகவே அரசர்கள் பூமியில் பட்டாபிஷேகம்செய்யப் படுகின்றனர். இப்போது மனிதர்கள்எல்லாருக்கும் பொதுவாயுள்ள தொழிலேச் சொல்லுகிறேன்; கேள். அன்புள்ளவளே! கல்வி, [1]வார் த்தை, பணிவிடை, சிற்பம், நாட்டியம்என்னுமிவை மனிதர்களுக்கு ஜீவனத்திற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. மனிதர்கள் ஜனித்த தின்பயனே முக்கியமாக அவர்களின்ஒழுக்கத்திறல் ஏற்படுத்தப்பட் டிருக்கிறது. அதனை என்னிடம் ஊக்கத்துடன்கேள். மானிடஜன் மமே தொழிலுக்குஇடம். மற்றப்பிராணிகள் இன்பதுன்பங்கள்மாத் திரமுள்ளவை. ஆதலால், எல்லாப்பிராணிகளுக்கும் மனிதரைப்பற் றியே ஜீவனம் விதிக்கப்படுகிறது. எல்லாமனிதர்களுக்கும் முதலில் கல்விப்பயிற்சிதான் விதிக்கப்படுகிறது. தேவியே! காரியாகாரியங் களையறிவது கல்வியினலன்றி மற்றென்றிறைலில்லே. கல்வியினல்

---

1 700 - ம் பக்கம் 1 - ஆம் குறிப்பிற்காண்க.

அறிவு விரிவாகிறது. அறிவினால் உண்மை புலப்படுகிறது. உண்மையறிந்தவன் பரிசுத்தமனமுள்ளவனாகி எல்லாப் புருஷார்த்தங்களையும் அடையத்தக்கவனாகிறான். கல்விகற்றவன் உலகத்தில் சிறந்தஜீவனம் செய்யமுடியும். ஆதலால், முதலில் தன்னைக் கல்வியினால் தகுதியுள்ளவனாகச் [1]செய்துகொண்டும் இந்திரியங்களையும் கோபத்தையுமடக்கியும் தன்ஆத்மாவைச் சுத்தப்படுத்திக்கொள்ளவேண்டும். ஆத்மாவைச்சுத்தப்படுத்திக்கொண்டபிறகு, அவன் பெரியோர்களாலும்பூஜிப்பதற்குரியவனாவான். மனம் குலத்தில்தொடர்ச்சியாகவரும் ஒழுக்கத்தையே முதலில் பற்றுமென்பதனால் நல்லகுலத்தில் பிறப்பதற்காகத் தானதர்மங்கள் ஆதிகாலத்தில் ஏற்படுத்தப்பட்டன. ஒருவன் வித்தையினாலேயே தன்ஜீவனத்தைக்கருதுவனாயின் குருவுக்குப்பணிவிடைசெய்தல்முதலியகுணங்கள்பொருந்தி நல்லகுருவினிடம் ராஜவித்தையையாயினும் உலகநடைக்குரியவித்தையையாயினும்கற்கவேண்டும். அந்தவித்தையைப்புஸ்தகம்படிப்பதனாலும் விஷயங்களைப்பயில்வதனாலும் முயற்சிசெய்து உறுதிப்படுத்திக்கொள்ளவேண்டும். தேவியே! இவ்வாறின்றி வேறுவகையால் மனிதன் கல்விப்பயனை அடையான். கல்வியினால் நியாயமாகப் பயன்பெறவிரும்பவேண்டும். அதில் அதர்மத்தை விடவேண்டும். வார்த்தையினால் ஜீவனத்தைக் கருதினால் முறைப்படி ஜலம்நிரம்பினநிலத்தில் அதற்குத்தக்கபயிரைச் செய்யவேண்டும்; அல்லது, தேசத்திற்கும்காலத்திற்கும்தக்கபடி விலையையும் உபயோகத்தையும் பிரயாஸத்தையும் லாபநஷ்டங்களையும் நன்றாக ஆராய்ந்து வர்த்தகம்செய்யவேண்டும்; அல்லது, பசுக்களால் ஜீவிக்கலாம். பசுக்களுக்குக்குறையாமல் காப்பாற்றவேண்டும். அனேகவகைகளானபலபசுக்கள் அவனுக்கு உபயோகமாயிருக்கும். ஊழியம்செய்து ஜீவிக்கக்கருதும் புத்திசாலியானமனிதன் தன்னையடக்கிக்கொண்டு ஏவுகிறவர்களுக்கு உபயோகமாகஇருக்கவேண்டும். புத்தியினாலேயோ செய்கையினாலேயோ கற்பிப்பதினாலேயோ ஒருவனையடுக்கவேண்டும். வழியோடுஅடுத்துப் பிறகு அந்தவேலையைச்செய்யவேண்டும். அந்தயஜமானன் ஏன்னஎன்னவகைகளினால் ஸந்தோஷப்படுவானோ அந்தஅந்தவகைகளினால் அவனைச்சந்தோஷப்படுத்தவேண்டும். ஊழியனுக்குரியகுணங்கள் பொருந்தினவனாகித் தானடுத்தமனிதனைத் தனக்கு அன்பனாகச் செய்துகொள்ளவேண்டும். அவனுக்குஇன்னாததைச் செய்யலாகாது. இதுதான் ஊழியத்தின்சுருக்கம். அவனைவிட்டுப்பிரிவதற்குமுன் வேறுஆதாரவைத்

1 'க்ருத்வா' என்று பாடங்கொள்ளப்பட்டது.

தேடலாகாது. சிற்பமும் நாட்டியமும் பெரும்பாலும் தாழ்ந்தஜாதி களுக்குரியவை. அவற்றிலும் திறமைக்குத்தக்கபடி நியாயமாகக் கூலிவாங்கவேண்டும். எல்லாத்தொழில்களிலும் தான் உண்மையாக நடந்து வேதனம்பெறவேண்டும். உண்மையின்றிவாங்கும் வேதன மானது பாவத்திற்குக் காரணமாகும். எந்தக்காரியங்களையும் ஆரம் பிப்பதற்குமுன் தன்சக்தியையும், உபாயங்களையும், இடம் காலம் கரு விகள் பிரயாஸம் செலவு லாபம்இவற்றையும், தர்மத்தையும் முன் னிட்டு யுக்தியைக்கொண்டு ஆராய்ந்துபார்க்கவேண்டும். மேற் சொன்னவிஷயங்களை ஆராய்ந்து தெய்வானுகூலத்தையும் கண்டறி ந்து அதன்பிறகு தனக்கு எதில் நன்மையுண்டாகுமோ அதனைச் செய்யத் தொடங்கவேண்டும். ஒருதொழிலை எடுத்துக்கொண்ட பிறகு தெய்வத்தாலும் மனிதர்களாலும்நேரிடும் இடையூறுகள் வரா மல் மறுபடி வேறுஎண்ணங்கொள்ளாமல் அந்தத்தொழிலை எப்போ தும் காப்பாற்றவேண்டும். கிடைத்தபொருளை அழிக்காமல் காப் பாற்றியும் விருத்திசெய்தும் அநுபவிக்கவேண்டும். ஆராய்ந்துபாரா மல் சாப்பிடுகிறவனுக்கு மலைபோன்றதும் அழிந்துபோகும். புத்தி சாலியானவன் தொழில்களினால் தனத்தையடைந்து அதைத்தர்மத் திற்குஒருபாகம் பொருளுக்குஒருபாகம் ஸுகத்திற்குஒருபாகம் கஷ் டங்களைப்பரிகரிப்பதற்குஒருபாகமாக நான்குபாகங்களாகப் பகுக்க வேண்டும். சிறந்தவளே! அந்நான்குபாகங்களுக்கும் உபயோகத் தைக் கேள். யாகம், அன்னதானம், ஏழைகளுக்குஉதவிசெய் வது, தேவர்களையும் பிராம்மணர்களையும் பித்ருக்களையும்பூஜிப்பது, மூலதனத்தைப்பெருக்குவது, அநுஷ்டானங்களை விடாமலிருக்கும் தர்மிஷ்டர்களுடன் சேர்ந்திருப்பதுமுதலான காரியங்களில் தர்மத் திற்காகஇருக்கும்தனத்தைச் செலவிடவேண்டும். லாபத்தைப்பாரா மலே தர்மகாரியங்களுக்குத் தனத்தைக் கொடுக்கவேண்டும். பொரு ளுக்காக ஏற்பட்டதனத்தை ஐசுவரியமும் உயர்ந்தநிலைமையும் அரச னுடையஸ்நேஹமும் கிடைப்பதற்காகவும் வார்த்தையைச்செய்வதற் காகவும் உதவியானவர்களையும் சிநேகிதர்களையும்ஸம்பாதிப்பதற்கா கவும் புத்திரர்களுடைய [1]உபநயனத்துக்காகவும் விவாகத்துக்காகவும் ஜீவனத்துக்காகவும் தனத்தைமிகுதியாகப்பெறுவதற்காகவும்நஷ்டத் தைநிவிருத்திசெய்வதற்காகவும் மற்றுமுள்ள இவ்வகைக்காரியங்

---

1 'ஆவாஹேசவிவாஹே' என்பது மூலம். வரன்வீட்டில் பெண்ணைக் கொண்டுவந்து கொடுப்பது ஆவாஹமென்றும், வரன் பெண்ணின்வீட்டுக் குப்போய்ப் பெண்ணைவாங்கிக்கொள்வது விவாஹமென்றும் கூறுவது காம ஸூத்ரவ்யாக்யானம் ஜயமங்களை.

களுக்காகவும் செலவிடவேண்டும். பலனைக் காரணங்களால்கண்டறிந்தபிறகு பொருளைச் செலவழிக்கவேண்டும். நஷ்டத்தைநிவிருத்திசெய்வதும் லாபத்தை [1]உண்டாக்குவதும் பொருளே. பொருளில்லாதமனிதர்கள் பலமுயற்சிகள்செய்தும் பொருளையடையார். ஆதலால், பொருளை ரக்ஷிக்கவேண்டும். சாஸ்திரப்படி தானம்செய்யவேண்டும். ஸுகத்திற்காகஏற்பட்டதனத்தைத் தேகபோஷணையின் பொருட்டு உணவைச் [2]சிறப்பித்துக்கொள்வதற்காகவும் ஆட்டம்பாட்டுக்களை அனுபவிப்பதற்காகவும் விநோதயாத்திரைக்காகவும் விளையாட்டுக்காகவும் மனத்திற்கினியவர்களோடு சேருவதற்காகவும் ஸந்தோஷத்தினால்பரிசளிப்பதற்காகவும் மற்றும்இப்படிப்பட்ட காரியங்களுக்காகவும் செலவிடவேண்டும். தர்மார்த்தகாமங்கள் மூன்றிலுமுள்ள குணகுற்றங்களை ஆராய்ந்து பொருளைச் செலவிடவேண்டும். சுத்தமான புன்னகையுள்ளவளே! நாலாவதுபாகத்தை ஆபத்காலத்திற்காகப் பத்திரப்படுத்திவைக்கவேண்டும். சிறந்தவளே! ராஜ்யம் தவறுவதனால் உண்டாகும் கெடுதலைப்போக்குவதற்காகவும் பஞ்சநிவ்ருத்திக்காகவும் தீராதவியாதியைத் தீர்ப்பதற்காகவும் கிழத்தனத்தில் உதவுவதற்காகவும் பகைவரைமறுப்பதற்காகவும் தண்டனைகளால் நேரிடும் கஷ்டங்களை நீக்குவதற்காகவும் அன்னியதேசம்போவதற்காகவும் மற்றுமுள்ளஆபத்துக்களினின்றும் தப்புவித்துக்கொள்வதற்காகவும் தனதுபொருளைக் கையில்வைத்துக்கொள்ளவேண்டும். கஷ்டங்களினின்றும் தப்புவித்துக்கொள்வது உலகத்தில் பொருளுள்ளவர்களுக்குத்தான் எளிது. எவனுக்குச் சிறிதும் பொருளில்லையோ அவனுக்கு இம்மைமறுமையிரண்டுமில்லை. ஆகாரத்தினால் இந்திரியங்கள்எப்படியோ அப்படியே எல்லாம் பொருளினால் நடக்கின்றன. ஆதலால், பொருளில் ஒருபாகத்தைக் காப்பாற்றிவைக்கவேண்டும். இல்லாவிடின் அழிந்துபோம். தேவியே! உலகங்களில் மனிதர்கள் ஜீவிக்கும்வகைஇது. இவ்வகையான ஒழுக்கமுள்ளஜனங்களுக்குத் தனமும் ஆயுளும் ஸ்வர்க்கமும் சிறந்தபுகழும் பெயரும் உண்டாகத்தக்க மற்றொருஒழுக்கத்தையும் கேள். எல்லாராலும் தர்மார்த்தகாமங்கள் மூன்றும் தம்ஸ்வாதீனத்தினால் பகுத்துநடத்தப்படவேண்டும். அவ்வாறு நடத்துபவர் இரண்டு லோகங்களிலும் நன்மைபெறுவர். காலையில்எழுந்திருப்பது, தேகத்தைச் சுத்தப்படுத்துவது, தெய்வப்பிராம்மணபக்தி, ஆசாரியர்களைப்பணிவது, பிராம்மணர்களை

1 'பலத்யுத' என்று பாடங்கொள்ளப்பட்டது.

2 'விசேஷணே' என்று பாடங்கொள்ளப்பட்டது.

வந்தனம்செய்வது, பெரியோர்களை எதிர்கொண்டழைப்பது, கோயிலைக்கும்பிடுவது, அதிதிகளைஎதிர்கொண்டழைத்து மரியாதையோடு விருந்துசெய்வது, பெரியோர்களின்உபதேசப்படி நடப்பது, இதத்தையும் ஸன்மார்க்கத்தையும்கேட்பது, வேலைக்காரரைக்காப்பாற்றுவது, இன்சொல் கொடை இவற்றால் வசப்படுத்துவது, நியாயமாக வேலையைச்செய்வது, அநியாயத்தையும் விரோதத்தையும்விடுவது, தன்மனைவியினிடம் ஸரியாகநடப்பது, அவளதுகுற்றங்களைத்தடுப்பது, பிள்ளைகளைக்கற்பிப்பது, அவரவர்களை அவரவர்களுக்குத்தக்க வேலைகளில் அமர்த்துவது, தகாதகாரியங்களைவிடுவித்து நல்லகாரியங்களைச்செய்விப்பது, குலத்திற்குரியதர்மங்களைச் சரியாகக் காப்பது, தன்முயற்சியினால் தன்குலத்தை எல்லாவகைகளாலும்சிறப்பிப்பதுமுதலிய இந்தக்குணங்கள்எல்லாம் மனிதர்களின்ஒழுக்கமென்பது திண்ணம். நன்மைக்காகவும் ஞானத்திற்காகவும் எப்போதும் பெரியோரை அடுத்திருக்கவேண்டும். பிறருக்காக ஏற்பட்டபொருளைக் கேளாமல்எடுப்பது எவ்வகையிலுங்கூடாது. பிறரை யாசிக்கலாகாது. மனவுறுதியுடன் தன்கைவன்மையையே ஆதரவாகப்பற்றவேண்டும். ஆகாரத்திலும் ஆசாரத்திலும் தன்தேகத்தை எப்போதும் காப்பாற்றவேண்டும். மனத்திற்கினியதும் தேகத்திற்கனுகூலமானதும் எளிதில்ஜரிப்பதுமாகிய நல்ல ஆகாரத்தை அளவோடு உண்ணவேண்டும். பரிசுத்தமாயிருந்து தேவதைகளுக்கும் அதிதிகளுக்கும் செய்யவேண்டிய பூஜைகளெல்லாவற்றையும் விதிப்படிசெய்து மிகுந்ததையுண்ணவேண்டும். கடுமையாகப் பேசலாகாது. இருகஸ்தாசிரமத்திலிருப்பவன், எல்லாருக்கும் வஸிப்பதற்குஇடத்தையும் குடிக்கத்தண்ணீரையும் பிக்ஷையையும் பூதபலியையும் எப்போதும் கொடுக்கவேண்டும். பசுக்களைக்காப்பாற்றவேண்டும். காரணம்பற்றியே வெளியில் புறப்படவேண்டும். நடுப்பகலிலும் நடு இரவிலும் போக நினைக்கக்கூடாது. சப்தாதிவிஷயங்களில் இறங்கலாகாது. தன்சக்திக்குத்தக்கபடி காரியங்களைச் செய்யவேண்டும். இருகஸ்தர்கள் வரவிற்குத்தக்கபடி செலவோடிருப்பதுதான் உலகத்தில் சிலாகிக்கப்படுகிறது. அபகீர்த்தியைக்கொடுப்பதும் லாபத்தைக் கெடுப்பதும் பிறரைத்துயரப்படுத்துவதுமாகிய செய்கையைப் பயத்தினாலாவது லோபத்தினாலாவது ஒருகாலும் செய்யலாகாது. முதலிலேயே குணகுற்றங்களை ஆராய்ந்து நல்லதுகெட்டது இன்னதுஇன்னதென்பதைத் தெரிந்துகொண்டபிறகு அந்தக்காரியத்தைச் செய்யவேண்டும். தனதுபுண்ணியபாபங்களில் தன்மனத்தையே எப்போதும் சாக்ஷியாகக்கொள்ளவேண்டும். நினைவிலும் சொல்லிலும் செய்கையிலும் பாவத்தைக் கருதலாகாது' என்றார்.

## இருநூற்றுப்பதினேழாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஸ்வர ஸம்வாதம்தொடர்ச்சி; வர்ணாஸ்ரமதர்மங்கள் இன்னவையென்பதும் முன்வினைப்பயன் மறுஜன்மத்தில் வருமென்பதும்.)

உமை, 'பகவானே! பகதேவதையின்நேத்திரத்தையழித்தவரே! காலனைச்சங்கரித்தவரே! சங்கரரே! மகேசுவரரே! இவ்வுலகத்தில் நான்குவர்ணங்களும் இயற்கையாகவே ஏற்பட்டனவா? அல்லது, செய்கையினால் வர்ணங்கள் உண்டாகின்றனவா? இந்தச்சந்தேகத்தைக் கேட்கிறேன். அதனை எனக்குத் தீர்க்கக்கடவீர்' என்று கேட்க, மகேசுவரர் சொல்லலானார்.

'பிராம்மணவர்ணம் முதலான நாலுவர்ணங்களும் இயற்கையாகவே இருக்கின்றன. ஒருஜன்மத்தில் மற்றொருஜாதியை அடையமுடியாது. கர்மங்களினால் மறுஜன்மத்தில்வேறுவர்ணமுண்டாகிறது. ஆதலால்,மனிதர்களுக்குவினைப்பயனாகஉண்டாகும்வர்ணங்கள்எல்லாவற்றையும்பற்றிச் சொல்லுவேன். மனிதன் பிராம்மணனாகப்பிறந்தபின் தன்ஜாதியைக் காப்பாற்றிக்கொண்டு பிராம்மணனுக்கு வேதங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களை உறுதியாகச் செய்யவேண்டும். உயர்குலத்திற் பிறந்தவன் ஸத்தியம்நேர்மைகளுடன் யாகம் தானமுதலியவற்றையும் ஜாதிக்குரியதர்மங்களையும் விடாமலிருக்கவேண்டும். பெண்ணரசியே! இப்படிநடந்துகொண்டிருப்பவன் காலம்சென்றால் பிறகு, ஸ்வர்க்கஸுகங்களையனுபவிப்பதற்காக ஸ்வர்க்கலோகம்போவான். ஸ்வர்க்கஸுகம்கழிந்தபின் மானிடலோகத்தில் முன்போலவே பிராம்மணனாகப்பிறப்பான். மனிதன் இவ்வாறு செய்கையினாலேயே திரும்பவும் தன்ஜாதியை அடைகிறான். மற்றொருவன் பிராம்மணஜாதியில் பிறந்து அஜ்ஞானமென்னும்இருள்மூடி அந்தஜாதியை அலக்ஷியம்செய்து ஜாதிக்குரியகர்மங்களைவிட்டு மாறாகநடந்துகொண்டு சூத்திரனுடையகர்மங்களில் ஆசைவைத்து ஸ்நானசௌசங்களையும் மங்களங்களையும்விட்டுச் சூத்திரர்களுடன்கூடிச் சூத்திரன்போலவே உலகத்தில் திரிகிறான். அவன் காலஞ்சென்றபின் யமலோகத்தில் மிகவும்தண்டிக்கப்பட்டு மனிதலோகத்தில்பிறக்கும்போது சூத்திரனாகவே பிறக்கிறான். தேவியே! பிராம்மணனும் தன் (கெட்ட) கர்மத்தினால் சூத்திரனாகவேஆவான். அப்படியே சூத்திரனாகிய மற்றொருவன் சூத்திரன்செய்கைகளைவிட்டுச் சொல்லுண்மை மன

உண்மைகளோடு தானதர்மங்களைச்செய்துகொண்டும் மந்திரங்களை யும்பிராம்மணர்களையும் பூஜித்தும் மனத்தில்பிராம்மணர்மேல்அன்பு வைத்தும் மற்றுமுள்ளநன்னடக்கைகளோடுமிருந்து மரணமடைவா னுயின் ஸ்வர்க்கலோகம்செல்வான். அதுகழிந்தபோது மானிட லோகத்தில் வேதாத்யயனம்பொருந்தின சிறந்தபிராம்மணகுலத்தில் பிறப்பான். உலகத்தில் எப்பொழுதும் சூத்திரன் பிராம்மணத்தன் மையை அடைவது இவ்வாறுதான். ஜாதிதர்மத்தைவிடாதக்ஷத்திரி யர்களுக்கும் வைசியர்களுக்கும் முறை இப்படியே. மனிதர்கள் உயர் குலத்திலும் இழிகுலத்திலும்பிறப்பது தம்வினைகளாலேயே. மேற் சொல்லியபடி இறந்தபிறகுதான் மனிதர்களுக்கு ஜாதிமாறுபாடுஉண் டாகும்.உலகத்திலுள்ளவ்யவஸ்தை தவருதாகையினுல் இதை மாற்ற முடியாது. ஆதலால், கஷ்டப்பட்டுஉயர்குலத்தையடைந்த புத்தி சாலியானமனிதன் அதிலிருந்துதவருமலிருக்கும்படி எல்லாவகைக ளாலும் அதனைக் காப்பாற்றவேண்டும். தேவியே! இந்தவிஷயம் உனக்குச் சொன்னேன். இன்னும் என்னகேட்கக் கருதுகிருய்?' என்ருர்.

உமை, 'எந்தமனிதன் தன் அதிகாரத்திற்குத்தக்கபடி சிறந்த தானுலும் தாழ்ந்ததானுலும் தன்கர்மத்தைப் பிறந்ததுமுதல் பரி சுத்தனுகச் செய்வதனுல் பிறந்ததின்பயனை அடைவான்?'என்றுகேட் டாள். மகேசுவரர், 'மனவுண்மையோடு தன்கருமத்தைச்செய்கிற வனைப் பாவம் பற்றுவதில்லை. அப்படியேசெய்பவனுக்குத் தன் மனமே அதனை நல்லதாகச்செய்யும்; மற்றவர்களுக்கு அதனையே கெட்டதாகச் செய்யும். மோசக்காரர்களிடத்தில் மோசக்காரன் போலவும் யோக்கியர்களிடத்தில் யோக்கியன்போலவும் நடக்க வேண்டும். கஷ்டங்களில் சோர்வில்லாமலிருக்கவேண்டும். எல்லாக் காரியங்களையும் முதலில் ஸமாதானமாகவே செய்யத்தொடங்கவேண் டும். கொடியவர்களான பகைவர்களுடன் போர்செய்யவேண்டும். நஷ்டத்தையும் பாவத்தையும் துயரத்தையும்தானடையாமலிருக்கும் படி தன்மனம்ஸந்தோஷப்படும்காரியத்தைச் செய்யவேண்டும். இது தான் கிருகஸ்தாசிரமத்திலிருக்கும்மனிதர்களின் ஒழுக்கத்தின்சுருக் கம். இந்தஒழுக்கத்தைக்கைப்பற்றிக்கொண்டு ஆகாரத்தைக்குறைத் திருந்தால் துயரமின்றிச் சிறந்தகதியையடையலாம். கிருகஸ்தாசிர மத்திலிருப்பவரெல்லாருக்கும் இதுதான் அழியாத ஜன்மபலன். இல் லறத்திலிருப்பவர்கள் எப்பொழுதும் இப்படியேநடக்கவேண்டுமென் பது துணிபு. இதையெல்லாம் நான் சொன்னேன். இன்னும் என்ன

கேட்கவிரும்புகிறாய் ?' என்றுசொன்னார். உமை, 'தேவருக்கும் அஸுரருக்கும்அதிபதியே ! தேவரே ! வரமளிப்பவரே ! ஸந்தோஷத்தை விருத்திபண்ணுகிறவரே ! மனிதர்களிலேயே சிலர் செல்வமுள்ளவர்களாகவும் துயரமும்பகையுமற்றவர்களாகவும்பலவகையான ஸுகங்களையனுபவிப்பவர்களாகவும் காணப்படுகின்றனர்; மற்றும் சிலர் ஏழைகளாகவும் துயரமுள்ளவர்களாகவும் ஸுகமற்றவர்களாகவும் காணப்படுகின்றனர். ஏன் மனிதர்களில் எல்லாரும் ஸமமாகச் செய்யப்படவில்லை? மகாதேவரே! இதைக்கேட்பதில் எனக்கு மிக்க ஆவலிருக்கிறது' என்றுகேட்க, மகேசுவரர் சொல்லலானார்: 'சிறந்த பாக்கியமுள்ள பெண்ணரசியே ! நீகேட்கக்கருதினது நியாயம். மனிதர்களின்நன்மைக்காக அந்தவிஷயம்எல்லாவற்றையும் நான்சொல்லுகிறேன்; விடாமல் கேள். முற்காலத்தில் பிரம்மதேவர் படைக்கஆரம்பித்தபோது பிரஜைகளை ஸமமாகவேபடைத்தார். ஏனெனில்,பிரம்மதேவருக்கு யாரிடத்திலும் விருப்புவெறுப்புக்கள் ஒருகாலும் இல்லையன்றோ ? அப்போது அவரிடத்திலிருந்து தேவர்கள்மனிதர்களனைவரும் வேற்றுமையில்லாமலே பிறந்தனர். இப்படி அந்தயுகம்நடக்கும்போது காலத்தின்வித்தியாஸத்தினால் அவர்களிற்சிலர் புத்தி மயங்கி வேறுபாடடைந்தனர். பெண்ணரசியே ! ஸமமாகவேயிருந்த அவர்கள் அப்போது குறைவதைக்கண்டு பிராம்மணர்கள் அதன் காரணங்களைத் தெரிந்துகொள்வதற்காகப் பிரம்மதேவரிடம்சென்று, 'தேவருக்கதிபதியே ! நீர் இப்படிப்பட்டபக்ஷபாதம் செய்தல் தகாது; தேவரே ! எல்லாரும் உமக்குஸமமான புத்திரர்களாயிருக்க எங்களுள் கலகம் ஏன்உண்டாகவேண்டும் ?' என்றுகேட்டனர். அவர்களால் இவ்வாறு குற்றம்கூறப்பட்டபிரம்மதேவர், 'ஓ ! பிரஜைகளே ! நீங்கள் என்மேல் குற்றம்சொல்லவேண்டாம். உங்கள் கர்மத்தை நினையுங்கள். உங்களுக்கு நல்லதும் தீயதும் உங்களாலேயே தொடுக்கப்பட்டு வருகின்றன. எவன் எவ்விதமான கருமத்தைச் செய்கிறானோ அவன் அவ்விதமானபலனை அனுபவிக்கிறான். தானே தன்வினைப்பயனை அனுபவிக்கவேண்டும். மற்றொருவன் அதைஅனுபவிக்கத்தகாது' என்றுசொன்னார். காலத்திற்குக் கர்த்தாவாகிய அந்தப்பிரம்மதேவரால் இவ்வாறு தெரிவிக்கப்பட்ட பிராம்மணர்கள் திரும்பி வந்து நல்லகர்மங்களையே செய்தனர். அவர்கள் இவ்வாறு உண்மையைத்தெரிந்துகொண்டு தானதர்மங்களையேமுதன்மையாகக் கொண்டு சாஸ்திரப்பிரகாரம் நற்கர்மங்களைச்செய்து காலம்சென்றபின் மறுஜன்மத்தில் தாங்கள்செய்த தானங்களின் பலன்களையனுப

வித்துக்கொண்டு ஸுகமாகவிருக்கிறார்கள். ஆதலால், மனிதன் தன் வினையைத் தானே அனுபவிக்கிறான். அழகானகண்களையுடையவளே! லோபிகளும் தயையற்றவரும் மிகுதியாகத்தம்நன்மையையே கருதுகிறவருமான மற்றும்சிலர் தர்மத்தில் விருப்பமில்லாமலிருக்கின்றனர், சிறந்தவளே! அப்படிப்பட்டவர்கள் இறந்தபின் மறுஜன்மத்தில் ஏழைகளும் துன்பம்அதிகப்பட்டவர்களுமே ஆகிறார்களென்பது திண்ணம்' என்றுசொன்னார்.

உமை, 'மனிதர்களிலேயே சிலர் தனதானியங்களுள்ளவர்களாகவும் ஸுகத்திற்குரியவை எல்லாம் நிறைந்தவர்களாகவுமிருந்தும் ஸுகப்படாதவர்களாகக் காணப்படுகின்றனர். அவர்களனுபவிக்காமலிருப்பதுஏன்?அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள்.

மகேசுவரர், 'சிலர் பிறரால்தூண்டப்பட்டவர்களாய்த் தர்மத்தைச்செய்வதேயன்றித் தம்விருப்பத்தினால் செய்வதில்லை ; தமக்குச் சிரத்தையில்லாமல்செய்து விசனப்படுகிறார்கள். சிறந்தவளே ! அப்படிப்பட்டவர்கள் மரணமடைந்தபின் மறுபிறப்பில் அந்தப்புண்ணிய பலன்களைப்பெற்றும் அனுபவிப்பது ஒருகாலுமில்லை. தனத்துக்குக் காவற்காரர்போல அதைக்காப்பாற்றிக்கொண்டும் விருத்திசெய்து கொண்டுமிருக்கின்றனர்' என்றுசொன்னார். உமை, 'மகேசுவரரே! சிலமனிதர்கள் தனமில்லாமலிருந்தும் ஸுகப்படுகிறவர்களாகக் காணப்படுகின்றனர். அதைப்பற்றியும் எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள்.

மகேசுவரர், 'எவர்கள் தர்மத்தில்விருப்பமும் தயையுமுள்ளவர்களாகிக் கஷ்டப்பட்டவர்களைக் காப்பாற்றுகிறதற்காகத் தமதுவறுமையிலும் பிறருக்கு உதவிசெய்கின்றனரோ அவர்கள் பிறருடைய தனத்தையும் கெட்டுப்போனதிரவியத்தையும் பிறரால் அபகரிக்கப்பட்டபொருளையும் மறுபடியும் பெறுவர். பொருளில்லாமலிருந்தும் எப்போதும் தானம்செய்ய விருப்பமுள்ளமனிதர்கள் மரணமடைந்தபின் மறுஜன்மத்தில் தனமில்லாமலிருந்தும் ஸுகமுள்ளவர்களாகிறார்கள். தர்மத்தையும் தானத்தையும்பற்றியஉபதேசத்தைச் செய்யவேண்டுமென்பது நிச்சயம். ஆதலால், இதனையும் உனக்குச் சொன்னேன். தேவியே ! இன்னும் என்னகேட்கவிரும்புகிறாய்?' என்று சொன்னார்.

## இருநூற்றுப்பதினேட்டாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஶ்வரஸம்வாதம் தொடர்ச்சி ; முன்வினைப்பயன் மறுஜன்மத்தில்வருமென்பது தொடர்ச்சி.)

உமை, 'ஓ! பகவானே! தேவருக்குந்தேவரே! ஈசுவரரே! முக்கண்ணரே! விருஷபத்வஜரே! பிரபுவே! ஸ்வாமீ! மூன்றுவிதமானமனிதர்கள் எப்போதும் காணப்படுகின்றனர். சிலர் உட்கார்ந்துகொண்டே உயர்ந்தஅதிகாரத்தையும் செல்வத்தையும் அடைந்து அனுபவிக்கின்றனர். சிலர் முயற்சிசெய்து பாக்கியங்களை அனுபவிக்கின்றனர். மற்றவர்கள் முயற்சிசெய்தும் ஒன்றும் அடையாமலிருக்கின்றனர். அஃது எந்தவினையின்பயன்? எனக்குச்சொல்லக்கடவீர்' என்றுகேட்க, மஹேஶ்வரர் சொல்லலானார்:—

'சிறந்தமகிமையுள்ளபெண்ணரசியே! தேவியே! நீகேட்கவிரும்புவதுநியாயம். தேவியே! உலகத்தில் எந்தமனிதர்கள் தானத்தையும் தர்மத்தையுமே முக்கியமாகநினைத்துத் தூரத்திலிருந்து ஊகத்தினாலேயே யோக்யர்களை அறிந்து முறைப்படி தாமேஎதிர்கொண்டுசென்று தமதுஇங்கிதங்களாலும் அவர்களுக்குத்தெரியாமலிருக்கும்படி அவர்களை ஸந்தோஷப்படுத்தித் தானமுதலியவற்றைவாங்கும்படி செய்கின்றனரோ அப்படிப்பட்டஅந்தமேன்மக்கள் முயற்சியில்லாமலே அதன்பலன்களைமறுஜன்மத்தில்அடைகின்றனர். தமது புண்ணியத்தையனுபவிப்பவர்களாகிய அவர்கள் உட்கார்ந்தபடியே ஸுகங்களையனுபவிக்கின்றனர். மற்றுஞ்சிலர் யாசிப்பவர்களுக்கே தானங்களைக்கொடுக்கின்றனர். தேவியே! யாசிப்பவர்கள் எந்த எந்தக்காலங்களில்யாசிக்கின்றனரோ அந்தஅந்தக்காலங்களில் தானங்கொடுப்பதனால் அந்தமனிதர்கள் அப்போதப்போது மறுபிறப்பில் சிரமப்பட்டுமுயற்சிசெய்து அந்தப்பலன்களைப் பெறுகின்றனர். மனிதர்கள் லோபத்தினால் எண்ணம்கெட்டவர்களாகி, யாசிப்பவர்களுக்கும் எவ்வகையிலும் ஒன்றும்கொடாமல் கோபிக்கின்றனரே, அம்மனிதர்கள் மறுஜன்மத்தில் பலவகைகளாக முயற்சிசெய்து தேடினாலும் ஒன்றையும் பெறுவதில்லை. சிறந்தவளே! விதைவிதையாமல் முளை முளைப்பதில்லை. அப்படித்தான் எல்லாம் தானத்தின்பலனென்றுநினைக்கின்றனர். மனிதன் எதை எதைக் கொடுக்கிறானோ அதை அதைமட்டுமே அடைகிறான். தேவியே! இதனை உனக்குச்

சொன்னேன். இன்னும் என்னகேட்கவிரும்புகிறாய்?' என்றார். உமை, 'பகவானே! பகதேவதையின் நேத்திரத்தையழித்தவரே! சிலர் முதிர்ந்தபிராயத்தில் தளர்ச்சியடைந்தபின் அனுபவிக்கத்தகாத காலத்தில் ஐசுவரியத்தையும் போகபாக்கியங்களையும் தனங்களையும் எவ்வகையினாலாவது அடைகின்றனர். அஃது எந்தவினைப்பயன்? எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேசுவரர், 'ஆ! ஆ! உனக்குச்சொல்வேன். அதனை நீ ஊக்கத்துடன்கேள். சிலர் செல்வம்பெற்றிருந்தும் தர்மகாரியத்தை வெகுநாள்வரையில் மறந்து உயிர்முடிவுக்காலம்வந்து பிணிகளால்பீடிக்கப்படும்போது தானங்களைக்கொடுக்கவும் தர்மங்களைச்செய்யவும் தொடங்குகின்றனர். சிறந்தவளே! சிறந்தலக்ஷணமுள்ளவளே! அவர்கள் மறுஜன்மத்தில் கஷ்டப்படுகிறவர்களாகப்பிறந்து இளமைப்பருவம்கடந்து கிழத்தனம்வந்தபிறகு முன்செய்த தானங்களின்பலன்களை அடைகின்றனர். தேவியே! இப்படி அவர்கர்மத்தின்பலன் காலம்கடந்துவருகின்றது' என்றுசொன்னார். உமை, 'மஹாதேவரே! சிலர் போகபாக்கியம் பெற்றிருந்தும் வியாதிகளால் பீடிக்கப்பட்டு அவற்றையனுபவிக்கத் திறமையற்றவர்களாயிருக்கின்றனரே, அதற்கு என்னகாரணம்?' என்றுகேட்டாள். மஹேசுவரர், 'சிறந்தலக்ஷணங்கள் பொருந்தினவளே! சிறந்தவளே! எவர்கள் வியாதியினால்பீடிக்கப்பட்டுப் பிழைப்பதில்எண்ணம்விட்டபிறகு தானங்களைச்செய்ய ஆரம்பிக்கின்றனரோ அவர்கள் மறுஜன்மத்தில் அந்தப்பலன்களையடைந்தும் நோய் பிடித்தவர்களாகி அவற்றை அனுபவிக்கமாட்டாமல் போகின்றனர்' என்றுசொன்னார். உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈசுவரரே! மனிதர்களிலேயே சிலர் அழகுள்ளவர்களும் லக்ஷணமான அவயவங்களுள்ளவர்களும் பார்ப்பதற்கினியவர்களுமாகக் காணப்படுகின்றனரே, அது எந்தக்கர்மத்தின்பலன்? எனக்குச்சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேசுவரர், 'தேவியே! ஆ! ஆ! உனக்குச்சொல்வேன். அதனை நீ ஊக்கத்துடன்கேள். எந்தமனிதர்கள் முன்ஜன்மத்தில் இயற்கையாகவே வெட்கமுள்ளவர்களாகவும் இனிமையாகப்பேசுகிறவர்களாகவும் சக்தியிருந்தும் இயற்கையில் எப்போதும் நயமுள்ளவர்களாகவும் இருந்து பிராணிகளிடத்தில் எப்போதும்தயையுடன் மாம்ஸபோஜனத்தைவிட்டுத் தர்மத்திற்காக அலங்காரங்களையும் வஸ்திரங்களையும் தானம்செய்துகொண்டும் பூமியைச் சுத்தமாகவைத்துக்கொண்டும் காலத்தில் அக்நிஹோத்திரம் செய்துகொண்டுமிருக்கின்றனரோ அப்படிப்பட்டநன்னடக்கையுள்ள

மனிதர்கள் மறுஜன்மத்தில் ஆசைப்படத்தக்க அழகுள்ளவர்களாகப் பிறக்கிறாரென்பதில் ஸந்தேகமில்லை' என்றுசொன்னார். உமை, 'மனிதர்களிலேயே சிலர் விகாரரூபமுள்ளவர்களாகக் காணப்படுவது எந்தவினையின்பயன்? அதனைஎனக்குச்சொல்லக்கடவீர்' என்று கேட்டாள். மஹேஸ்வரர், 'சிறந்தவளே! அந்தக்காரணத்தையும் உனக்குச் சொல்வேன்; கேள். மனிதர்கள் முன்ஜன்மத்தில் நல்ல ரூபமுள்ளவர்களாயிருந்ததனால் கர்வமும் தாம் மேல்என்கிற எண்ணமுமுள்ளவர்களாய் வஞ்சப்புகழ்ச்சி முதலியவற்றினால் அழகில்லாதவர்களை மிகநகைத்தும் பிறருக்குமனவருத்தத்தைத்தந்தும் மாமிசத்தைப்புசித்தும் பொறாமை அநாசாரமுதலிய நடக்கைகளோடிருந்தும் யமலோகத்தில் நன்றாகத்தண்டிக்கப்பட்டபிறகு வெகுகஷ்டத்தினால் மானிடஜன்மத்தையடையும்போது அந்தஜன்மத்தில் அவர்கள் அழகில்லாமல் விகாரரூபமுள்ளவர்களாகப் பிறக்கிறார்களென்பதில் சந்தேகமில்லை' என்றுசொன்னார். உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈஸ்வரரே! சிலர் அழகும் ஐசுவரியமுமில்லாமலிருந்தாலும் மனத்தைக்கவருந்தன்மையுள்ளவர்களாகவும் பெண்களால் நேசிக்கப்படுகிறவர்களாகவும் காணப்படுகின்றனர். அது என்ன கருமத்தின்பயன்? எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்க, மஹேஸ்வரர், தேவியே! சிறந்தவளே! எந்த மனிதர்கள் முந்தியஜன்மத்தில் இனியஸ்வபாவமுள்ளவர்களாகவும் இன்சொல்சொல்லுகிறவர்களாகவும் தம்மனைவிகளிடத்திலேயே திருப்தியுள்ளவர்களாகவும் அநேகமனைவிகளுள் பக்ஷபாதமின்றி இன்னாதபாரியைகளிடத்திலும் தாக்ஷிண்யத்தோடிருப்பவர்களாகவும் ஸ்திரீகளிடத்தில் குணங்களோடுசேர்ந்த குற்றங்களைவெறுக்காமலும் மனிதர்களுக்கு வேண்டினபோது அன்னபானங்களையும் சுவையுள்ளஉணவுகளையும்கொடுப்பவர்களாகவும் தம்மனைவியைவிட்டு வேறுமனைசெல்லாமல் மனவுறுதியுள்ளவர்களாகவும் சிறந்தநடக்கையோடிருக்கின்றனரோ அவர்கள் மறுஜன்மத்தில் மிக்கஅழகுள்ளமனிதர்களாகவே பிறப்பது திண்ணம். தேவியே! அவர்கள் பொருளில்லாதவராயினும் பெண்களால் நேசிக்கப்படுகிறவராகிறார்' என்றுசொன்னார். உமை, 'செல்வமும் போகபாக்கியங்களும் பொருந்தியிருந்தும் சிலர் இன்னாதவர்களாகக் காணப்படுகின்றனரே, அது எந்தக்கர்மத்தின் பயன்? எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'தேவியே! அதனை நான் உனக்குச் சொல்வேன். ஊக்கத்துடன் முழுதும்கேள். எந்தமனிதர்கள் முன்ஜன்மத்தில் தம்மனைவிகளிடம் விருப்பமில்லா

மல் வெட்கத்தையும் பயத்தையும்விட்டு நினைத்தபடிநடந்துகொண்டும் சொல்லினாலும் எண்ணத்தினாலும் செய்கையினாலும் பிறருக்கு இன்னாததைச்செய்துகொண்டும் யாரையும்காப்பாற்றாமலும் மகிழ்வியாமலும் பெண்களின்மனத்தில் கோபமுண்டாக்கிக்கொண்டும் மற்றும் இவ்வகையானநடக்கைகளுடன்கூடியிருக்கின்றனரோ அவர்கள் மறுபிறப்பில் அழகில்லாதவர்களும் பெண்களின்மனம்வெறுக்கத்தக்கவர்களுமான மனிதர்களாகவே பிறக்கின்றனர். அவர்களுக்குத் தமதுமனைவிகளிடங்கூடப் புணர்ச்சியின்ஸுகம் எவ்வளவுமில்லை' என்றுசொன்னார்.

---

## இருநூற்றுப்பத்தொன்பதாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேச்வரஸம்வாதம் தொடர்ச்சி; முன்வினைப்பயன் மறுஜன்மத்தில்வருமென்பது தொடர்ச்சி.)

உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈஸ்வரரே! மானிடர்களிலேயே கல்வியும் ஆத்மஜ்ஞானமும் புத்திக்கூர்மையும் பேசுந்திறமையுமுள்ளசிலர் ஒழுங்காகமுயற்சிசெய்தும் தரித்திரர்களாகக் காணப்படுகின்றனரே, அது எந்தக்கர்மத்தின்பயன்? அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'சிறந்தவளே! அந்தக்காரணத்தையும் உனக்குச் சொல்வேன்; கேள். தேவியே! மங்களங்கள்பொருந்தினவளே! எந்தமனிதர்கள் பூர்வஜன்மத்தில் கல்வியுள்ளவர்களாகவிருந்தும் யாருக்கும்ஆதரவாயிராமலும் அன்னமுதலியவற்றைக்கொடாமலும் தம்காரியத்தைமட்டுமே அதிகமாகப் பாராட்டிக்கொண்டிருந்தனரோ அவர்கள் மறுஜன்மத்தில் அறிவும்புத்திக்கூர்மையுமுள்ளவர்களாயிருந்தும் வறிஞராகவேயிருக்கின்றனர். விதையாதது முளையாதன்றோ?' என்றுசொன்னார். உமை, 'மிக்கசெல்வமுள்ளமனிதர்களும், உலகத்தில் கல்வியும் பகுத்தறிவும் புத்திக்கூர்மையும் மனஉறுதியுமில்லாத வீணர்களானமூர்க்கர்களாகக் காணப்படுகின்றனரே, அது எந்தவினைப்பயன்? எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேசுவரர், 'தேவியே! சிறந்தவளே! முன்ஜன்மத்தில் சிறிதும் கல்வியில்லாதவர்களாயிருந்தும், ஏழைகளுக்கு உதவிசெய்வதற்காகத் தானங்களைச்செய்கின்றவரும் பகுத்தறிவில்லாமலிருந்தும் யாருக்கும் தானங்களைக் கொடுப்

பவருமானமனிதர்கள். மறுஜன்மத்தில் அந்தப்பலனை அப்படியே அடைகின்றனர். மனிதன் கற்றிருந்தாலும் கற்காமலிருந்தாலும் தானத்தின்பலனை அடையவேயடைகிறான். தானமானது கல்வியறிவை எதிர்பார்ப்பதில்லை. எவ்வகையாலும் பலனைக் கொடுத்தேவிடும்' என்று சொன்னார். உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈசுவரரே! மனிதர்களிலேயே சிலர் புத்திக்கூர்மையுள்ளவர்களாகவும் கேட்டதுமறவாதவர்களாகவும் எழுத்துக்களைத் தெளிவாக உச்சரிப்பவராகவுமிருக்கின்றனரே, அது எந்தக்கர்மத்தின்பயன்? அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்று கேட்டாள். மஹேஸ்வரர், 'தேவியே! சிறந்தவளே! முன்ஜன்மத்தில் ஞானத்திற்காகக் குருவுக்கு நன்றாகப்பணிவிடைகள்செய்து அந்தக்குருவினிடமிருந்து முறைப்படி வித்தையைப்பெற்றுக்கொண்டு பிறருக்கும் அம்முறை தவறாமலே அதனைக்கற்பித்துக்கொண்டும் ஞானத்தினால் கர்வப்படாமலும் மனத்திலும் வாக்கிலும் அடக்கமுள்ளவர்களாகவும் முயற்சி செய்து உலகத்தில் கலைகளை நிலைபெறச்செய்கின்றவர்கள் மரணமடைந்து மறுஜன்மத்தில் புத்திக்கூர்மையும் கேட்டதுமறவாமையும் தெளிவானவாக்குமுள்ளவராகிறார்' என்றுசொன்னார்.

உமை, 'தேவரே! மற்றும் சிலமனிதர்கள் பலவகைகளால் முயற்சிசெய்தும் கேள்வியும் கல்வியும் புத்திக்கூர்மையுமில்லாதவர்களாகக் காணப்படுகின்றனரே, அது எந்தக் கர்மத்தின்பயன்? எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேசுவரர், 'தேவியே! சிறந்தவளே! எந்தமனிதர்கள் பூர்வஜன்மத்தில் கல்வியினால் கர்வமடைந்தும் தற்புகழ்ச்சிசெய்துகொண்டும் ஞானத்தையடைந்ததனால் தாமென்ற அகங்காரங்கொண்டும் மதிகெட்டவர்களாகி எப்போதும் பிறரைவிடத் தங்களுக்கு வித்தைஅதிகமென்றுசொல்லிக்கொண்டும் பிறரைத்தூஷித்துக்கொண்டும் பிறர்மேல் பொறாமைப்பட்டுக்கொண்டும் இருக்கின்றனரோஅப்படிப்பட்டவர்கள் அநேகஜன்மங்களுக்குப் பின் ஒருமானிடதேகத்தையெடுத்து இடைவிடாமல்முயற்சிசெய்தும் புத்தியில்லாமலும் கல்வியில்லாமலும் இருக்கின்றனர்' என்று சொன்னார். உமை, 'பகவானே! சிலமனிதர்கள் எல்லாநற்குணங்களும்பொருந்திக் குணமுள்ளபிள்ளைபெண்டிர்களோடும் வேலைக்காரிகள் வேலைக்காரர்களோடும் ஆடையாபரணங்கள்முதலியவற்றோடும் சிறந்தபுத்தியோடும் வீடு செல்வம்அதிகாரங்களோடும்விளங்கி அழகு ஆரோக்கியம் பலம் தனதானியங்கள் மாடமாளிகைகள் தேர்கள் குதிரைகள்முதலான மனத்திற்கினிய பலவகைப் போகங்களெல்லாம் நிர

ம்பி வியாதிமுதலியபாதைகளின்றிச் சுற்றத்தாருடன்கூட இடையூ றின்றித் தினந்தோறும் மகிழ்ந்திருக்கின்றனரே, அது எந்தக்கர்மத் தின்பயன்? சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'தேவி யே! சிறந்தவளே! அதையும் முழுதும்உனக்குச் சொல்வேன். ஊக் கத்துடன் கேள். எந்தமனிதர்கள், முன்ஜன்மத்தில் செல்வமிருந் தாலும் இல்லாவிட்டாலும் கல்வியும் நல்லொழுக்கமும் பொருந்தின வர்களாகவும் தானத்திலும் கல்வியிலும் விருப்பமுள்ளவர்களாக வும் எப்போதும் பிறருடையஇங்கிதத்தையறிந்தே கொடுக்கவேண்டு மென்ற நிச்சயமுள்ளவர்களாகவும் ஸத்தியத்தையும் பொறுமையை யும்விடாதவர்களாகவும் பொருளாசை பெண்ணாசையில்லாதவர்களாக வும் பாத்திரமறிந்து கொடுப்பவர்களாகவும் வ்ரதநியமங்களைச் செய்து கொண்டிருப்பவர்களாகவும் பிறர் துயரத்தைத் தம்துயரம்போல நினைத்து விலக்குகிறவர்களாகவும் இனியஒழுக்கமும் சிறந்த ஆசார முமுள்ளவர்களாகவும் தேவர்களையும் பிராம்மணர்களையும் பூஜிப் பவர்களாகவும் மற்றுமிவ்வகையான குணங்களுள்ளவர்ளாகவுமிரு க்கின்றனரோ அவர்கள் மறுஜன்மத்தில் தேவலோகத்திலும் பூலோ கத்திலும் தம்புண்ணியத்தையனுபவிப்பவர்களாகப் பிறக்கின்றனர். எப்படிப்பட்ட நன்மைகள்பொருந்தினவர்களாகச் சொல்லப்பட்டன ரோ அப்படிப்பட்டகல்யாணகுணங்களுள்ளவர்களாகவே எல்லாரும் மானிடலோகத்தில் பிறக்கின்றனர். அழகு, பொருள், தைரியம், ஆயுள், ஸுகம், அதிகாரம், தேகபலம், கல்வி ஆகியஎல்லாநலங்களும் தானத்தினாலன்றி வேறுவகையாலுண்டாவதில்லை. அழகியமுகமுள் ளவளே! எல்லாம் தவத்தினாலும் தானத்தினாலுமுண்டாகின்றவை யென்று அறி' என்றுசொன்னார். உமை, 'மனிதர்களுக்குள்ளேயே சிலர் வறிஞர்களாகவும் மிகத்துயரமுள்ளவர்களாகவும் கொடுப்பதும் அனுபவிப்பதும்அற்றவர்களாகவும் ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதெய்விகம்என்கிற மூன்று பயங்களுள்ளவர்களாகவும் பிணியி னாலும்பசியினாலும்வருந்துகிறவர்களாகவும் கெட்டமனைவிகளால்அவ மதிக்கப்படுகிறவர்களாகவும் எப்போதும் இடையூற்றையேபார்ப்பவர் களாகவும் காணப்படுகின்றனரே, அது எந்தக் கர்மத்தின்பயன்? அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேசுவரர், 'தேவியே! சிறந்தவளே! எந்தமனிதர்கள் முன்ஜன்மத்தில்அஸுர ஸ்வபாவமுள்ளவர்களாய்க் கோபமும்பொருளாசையுங்கொண்டு அன் னமிடாமலும் ஆசாரமில்லாமலும் நாஸ்திகர்களும் சூதர்களும் மூர்க் கர்களும் தம்நயத்தையே பாராட்டிப் பிறரைத்துன்புறுத்துகிறவரும்

பிராணிகளிடத்தில் பெரும்பாலும்தயையற்றவரும் மற்றும்இவ்வகை ஒழுக்கமுள்ளவர்களுமாக இருக்கின்றனரோ அவர்கள் கடைசியாகப் பின்னொருஜன்மத்தில் மானிடராகப்பிறந்தபோது தாம் முன்செய்த தவறுதலினால் எல்லாவகைத்துன்பங்களாலும் பீடிக்கப்பட்டவராகி றார். முன்னே எவ்வகையாகஇருந்தனரென்றுசொல்லப்பட்டனரோ அவ்வகையாகவே பின்னும் பிறக்கின்றனர். தாம்செய்த நல்வினையும் தீவினையும் முறையே ஸுகம்துக்கம்என்னும்பலன்களை உண்டாக்கு கின்றன. தேவியே! இதனையும் உனக்குச் சொன்னேன். இன்னும் என்ன கேட்கவிரும்புகிறாய்?' என்றுகேட்டார்.

## இருநூற்றிருபதாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஶ்வர ஸம்வாதம் தொடர்ச்சி; முன்வினைப்பயன் மறுஜன்மத்தில் வருமென்பது தொடர்ச்சி.)

உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈஶ்வரரே! என்னுடையஅன்பைவிருத்திசெய்கிறவரே!பிறவிக்குருடரும் பிறந்தபின் கண்போனவரும் (உலகத்தில்) காணப்படுகின்றனரே, அதுஎன்னகரு மப்பயன்? அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஶ்வரர், 'சிறந்தவளே! அன்புள்ளவளே! ஆ! ஆ! உனக்குஅந் தக் காரணத்தைச் சொல்வேன்; கேள். எந்தமனிதர்கள் முன்ஜன்மத் தில் காமத்தினால் பிறர்வீடுகளில்அலைந்துகொண்டும் பிறர்மனைவிகளைக் கெட்ட (எண்ணத்துடன்) கண்ணால்பார்த்துக்கொண்டும் கோபமும் ஆசையும் மேற்கொண்டவர்களாகி மனிதர்கள் கண்ணைக்கெடுத்தும் பொருள்களின்இலக்கணங்கள்தெரிந்தும் அவற்றைப் பிறருக்கு மாறா கத் தெரிவித்தும்மற்றும்இவ்வகைநடக்கைகளோடுமிருக்கின்றனரோ அவர்கள் இறந்தபின் யமதண்டனையினால்தண்டிக்கப்பட்டு வெகுகா லம் நரகத்திலிருந்து மானிடஜன்மத்தையடையும்போது பிறவிக்குரு டர்களும் பிறந்தபின் கண்கெட்டவர்களும் நேத்திரரோகமுள்ளவர்க ளுமாக ஆகின்றனர். அதில் சந்தேகமில்லை' என்றுசொன்னார்.உமை, 'சிலமனிதர்கள் பிறந்ததுமுதலாகவும் மற்றும்சிலர் பிறந்தபின்ஏதோ காரணம்பற்றியும், பல் கழுத்து கன்னம் இவற்றிலுள்ளநோய்களாகிய முகரோகங்களினால் எப்போதும் அதிகமாகப் பீடிக்கப்பட்டவராகக் காணப்படுகின்றனரே, அது எந்தக்கருமப்பயன்? எனக்குச் சொல்

லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'தேவியே! ஆ! ஆ! உனக்குச் சொல்வேன். ஊக்கத்துடன்கேள். தேவியே! நாவினால் மிக்ககடுஞ்சொல்லையும் பெரியோர்கள்மேலும் பிறர்மேலும்பொய்யையும் கொடும்பழியையும்சொல்லுகிற கெட்டபேச்சுக்காரரும் கோபத்தினால்பிறர்நாவைக்கெடுக்கிறவரும் தம்காரியத்திற்காகப் பொய்யை மிகுதியாகச்சொல்லுகிறவருமான மனிதர்களுக்கு நாவில் பிணிகள் உண்டாகின்றன. கெடுதலைக்கேட்பவரும் பிறர்செவிகளைக்கெடுப்பவரும் பின்பிறப்பில் பலவகைக்காதுநோய்களை அடைகின்றனர். பல்நோய் தலைநோய் காதுநோய் துயரப்படுத்தும்மற்றுமுள்ளநோய்கள் அனைத்தும் வினைப்பயன்' என்றுசொன்னார். உமை, 'தேவரே! மனிதர்களிலேயே சிலர் மார்புநோய் பக்கசூலை வயிற்றுநோய் மற்றுமுள்ளகொடிய சூலைநோய்கள்இவற்றினால் பீடிக்கப்பட்டுத் துன்பப்படுகின்றனரே, அது என்னவினைப்பயன்? எனக்கு உரைக்கக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'தேவியே! சிறந்தவளே! எந்தமனிதர்கள் முன்ஜன்மத்தில் காமக்குரோதங்கள்மேற்கொண்டவர்களாகவும் பிறரைஎதிர்பாராமல் தாமேஆகாரங்களைப்புசித்தும் நம்பினவர்களுக்குஉண்ணத்தகாதஉணவுகளையும்பக்ஷணங்களையும் விஷத்தையும்கொடுத்தும் ஆசாரங்களையும் மங்களங்களையும்விட்டும்மற்றுமிவ்வகைநடக்கைகளோடிருந்தனரோ அவர்கள் மறுஜன்மங்களில் எப்போதாவது மானிடஜன்மத்தையடைந்தபோது அந்தஅந்தப்பல பிணிகளினால் பாதிக்கப்பட்டுத் துன்பப்படுகின்றனர். தேவியே! அவர்கள் இப்போது இப்படியாவதற்குக் காரணத்தை முன்னமே செய்துகொண்டனர்' என்றுசொன்னார். உமை, 'தேவரே!, மனிதர்கள் கல்லடைப்பு மதுமேகமுதலான ஆண்குறியைச்சேர்ந்தவியாதிகளினால் எந்தக்காலமும் உபத்திரவிக்கப்பட்டவர்களாகக் காணப்படுகின்றனர். அது எந்தக்கருமப்பயன்? எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேசுவரர், 'தேவியே! சிறந்தவளே! அன்புள்ளவளே! எந்தமனிதர்கள் முன்ஜன்மத்தில் காமத்தினால் பிறர்மனைவிகளைக் கைப்பற்றியும் திர்யக்ஜாதிகளிலும்புணர்ச்சிசெய்யப் பிரவ்ருத்தித்தும் மணமில்லாதபெண்களையும் விதவைகளையும் பலவந்தமாகச்சேர்ந்தும் அழகினால்கர்வப்பட்டும் தூர்த்தர்களாகவிருந்தனரோ அவர்கள் மரணமடைந்து பின்னொருஜன்மத்தில் மானிடதேகத்தையடைவாராயின் அப்போது ஆண்குறியிலுள்ள கொடியவியாதியினால் பாதிக்கப்படுவார்' என்றுசொன்னார். உமை, 'பகவானே! சிலமனிதர்கள் உலர்ந்து இளைத்தவராகக் காணப்படுகின்றனர். அது

என்னகருமப்பயன்? எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'தேவியே! சிறந்தவளே! எந்தமனிதர்கள் பூர்வ ஜன்மத்தில் மாமிசத்தில் மிக்கஆவலுள்ளவர்களும் தமக்குமட்டும் சுவையுள்ளவற்றைவிரும்பி அயலார்புசிப்பதைக்கெடுப்பவரும் அயலார்ஸுகங்களில்பொறாமையும்துயரமும்மற்றும் இவ்வகையொழுக்கமுமுள்ளவருமாக இருந்தனரோ அந்தமனிதர்கள் பின்ஜன்மத்தில் தேகசோஷவ்யாதியுள்ளவர்களாய் நரம்புக்கோவையாகவிருந்து தீவினைப்பயனையனுபவிப்பவராகிறார். இது திண்ணம்' என்றுசொன்னார். உமை, 'பகவானே! சிலமனிதர்கள் தொண்டைநோயுள்ளவர்களாகக் கஷ்டப்படுகின்றனரே, அது எந்தக்கருமப்பயன்? சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேசுவரர், 'தேவியே! சிறந்தவளே! எந்தமனிதர்கள் முன்ஜன்மத்தில் மதிகெட்டு அடிப்பது கொல்வது கட்டுவதுஆகிய வீண்தண்டனைகளினால் பிறருடைய உருவையழித்தும்விருப்பத்தைக்கெடுத்தும் உபத்திரவமானஆகாரத்தைக்கொடுத்தும் பகையினாலும்பொருளாசையினாலும் மனம்கெட்டு வைத்தியம்செய்தும் பிராணிகளைக்கொல்வதில்தயையற்றும் மலங்களைப்போட்டு மனத்தைக்கெடுத்தும் மற்றுமிவ்வகைநடைகளோடும் இருந்தனரோ அவர்கள் பின்னொருஜன்மத்தில் மானிடதேகம் எடுப்பாராயின் அதில் பலவகைத்தொண்டைநோய்களினால் மூடப்பட்டுக் கஷ்டத்தையடைகின்றனர். சிலர், புண் குஷ்டம் வெண்குஷ்டம் தோலைச்சேர்ந்தபடைமுதலியவற்றினால் பலவகையாகக் கஷ்டமடைகின்றனர். தேவியே! எவன் எப்படிச்செய்திருக்கிறானோ அப்படியே அவன் பலன் அடைகிறான்' என்றுசொன்னார். உமை, 'பகவானே! சிலமனிதர்கள் அங்கஹீனர்களாகவும் மூடர்களாகவும்இருப்பது என்னகருமப்பயன்? எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'தேவியே! முன்ஜன்மத்தில் ஆசையினாலும் அஜ்ஞானத்தினாலும் மூடப்பட்டுப் பிராணிகளைத்துன்பஞ்செய்வதற்காக ஆயுதங்களினால் அவற்றின் அங்கங்களை அறுத்தும் அவற்றின்செய்கைகளைத்தடுத்தும் அவற்றின்விருப்பங்களைக்கெடுத்தும் மற்றும்இவ்வகைச்செய்கைகளைச் செய்துமிருக்கும் மனிதர்கள் இறந்து மறுஜன்மத்தில் இயற்கையாகவாவது பிறந்தபின் ஒருகாரணத்தினாலாவது அங்கஹீனர்களாகவும் மூடவர்களாகவும் ஆகிறார்; ஐயமில்லை' என்றுசொன்னார். உமை, 'பகவானே! சிலமனிதர்கள் புண்களாலும் [1]பிளவைகளாலும் உபத்திரவிக்கப்பட்டவர்களா

1 'பிடகை:' என்று பாடம்கொள்ளப்பட்டது.

கக்காணப்படுகின்றனரே, அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்று கேட்டனள். மஹேஸ்வரர், 'தேவியே! சிறந்தவளே! பூர்வஜன்மத்தில் கைக்குத்துக்களினால் கடுமையாகக்குத்தியும் சூலங்களினால் எறிந்தும்கிழித்தும்பிளந்தும்மனிதர்களின்தேகப்பூட்டுக்களை உடைத்தும் மற்றுமிவ்வகைச்செய்கைகளைச்செய்துமிருந்த கொடியபாவிகள் பிந்தியஜன்மத்தில் புண்களாலும் பிளவைகளாலும் பீடிக்கப்பட்டு மிகத்துன்பப்படுகின்றனர்' என்றுசொன்னார். உமை, 'பகவானே! தேவரே! சிலமனிதர்கள் காலில் எப்போதும் நோயுள்ளவர்களாகக்காணப்படுகின்றனரே, அதுஎந்தவினைப்பயன்? அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டனள். மஹேஸ்வரர், 'தேவியே! சிறந்தவளே! எந்தமனிதர்கள் பூர்வஜன்மத்தில் கோபமும் லோபமும் மேற்கொண்டு தேவதையிருக்கும்இடத்தைக் கால்களால் உதைத்துத் தள்ளியும் முழங்கால்களாலும் குதிகால்களாலும் பிராணிகளுக்கு ஹிம்ஸையைச்செய்தும் மற்றும்இவ்வகைநடையுள்ளவர்களாகவுமிருந்தனரோ அவர்கள் மறுஜன்மத்தில் கால்வெடிப்புமுதலியபலவகைப் பாதரோகங்களினால் பாதிக்கப்படுகின்றனர்' என்று சொன்னார். உமை, 'பகவானே! பூமியில் அனேகமனிதர்கள் தனவான்களாயிருந்தாலும் ஏழைகளாயிருந்தாலும் வாதரோகங்களும் பித்தரோகங்களும் வாதபித்தசிலேஷ்மங்கள்சேர்ந்த பலவகைஸந்நிபாதரோகங்களும் தனித்தனியாகவும் ஒன்றுசேர்ந்தும் பீடிப்பதனால்மிகத்துயரப்படுகின்றனரே,அதுஎந்தவினையின்பயன்? அதனைஎனக்குச்சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'சிறந்தவளே! அன்புள்ளவளே! அந்தக்காரணத்தை உனக்குச் சொல்வேன்; கேள். எந்தமனிதர்கள் பூர்வஜன்மத்தில் அஸுரத்தன்மையையடைந்து யாருக்கும் உட்படாமல் கோபித்துக்கொண்டும் குருவைப்பகைத்தும் எண்ணத்தினாலும் சொல்லினாலும் செய்கையினாலும் பிறருக்குத்துன்பத்தை உண்டுபண்ணியும் பிராணிகளிடத்தில் தயையில்லாமல் எப்போதும் வெட்டியும் அடித்தும் குத்தியும் மற்றும்இப்படிப்பட்டசெய்கைகள் செய்துமிருந்தனரோ அவர்கள் பின்னொருபிறப்பில் மானிடதேகத்தையடைவாராயின் அப்போது பலகொடியநோய்களினால் பீடிக்கப்படுவார். சிலர் வாயுவினாலும் சிலர்காசத்தினாலும் மற்றும்சிலர் ஜ்வரம் அதிசாரம் தாகம்இவற்றினாலும் பலவகைக்கால்புற்றுக்களாலும் கபத்தினாலும் காலிலுள்ளபலவகைரோகங்களினாலும் புண், குஷ்டம், பகந்தரம்என்னும்வியாதிகளினாலும் பீடிக்கப்படுகின்றனர். செல்வ

முள்ளவராயிருந்தாலும் ஏழைகளாயிருந்தாலும் வியாதிகளால் வருத்தப்பட்டவராகவே காணப்படுகின்றனர். இப்படி தாம்செய்தகர்மத்தைத்தான் அந்தஅந்தஜன்மங்களில் அநுபவிக்கின்றனர். செய்த கர்மத்தின்பலனைத்தடுப்பதற்கு யாராலும்இயலாது. தேவியே! இதனையும் உனக்குச்சொன்னேன். இன்னும் என்ன கேட்கக்கருதுகிறாய்?' என்றுவினவினர்.

---

## இருநூற்றிருபத்தோராவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஶ்வரஸம்வாதம் தொடர்ச்சி ; முன்வினைப்பயன் மறுஜன்மத்தில்வருமென்பது தொடர்ச்சி.)

உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈஶ்வரரே! பூதங்களைக்காப்பவரே! உமக்குநமஸ்காரம். தேவரே! மனிதர்களில் சிலர் சிறியஉறுப்புள்ளவர்களாகவும் கோணலுறுப்புள்ளவர்களாகவும் ஒற்றைக்கை நொண்டிகளாகவும் கூனர்களாகவும் குள்ளர்களாகவும் காணப்படுகின்றனரே, அது என்னகருமத்தின்பயன்? அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டனள். மஹேஶ்வரர், 'தேவியே! சிறந்தவளே! முன்ஜன்மத்தில் பொருளாசையினால் மதிகெட்டு விற்றல்வாங்கல்களுக்காகத் தானியங்களின் அளவுகளையும் நெய்யளவுகளையும் மாறுபாடுசெய்தும் விலையை வித்தியாஸப்படுத்தியுமிருந்த மனிதர்களும், கோபத்தினால் பிறருக்கு அங்கஹீனம்செய்தவர்களும்,மாம்ஸம்புசித்தமூர்க்கர்களும், விஷயங்களை ஸரியாகத் தெரியாதவர்களும்,மற்றும்இவ்வகையானநடையுள்ளமனிதர்களும்,பின்ஜன்மத்தில் உறுப்புக்கள்குறைந்தவர்களும் குறளர்கூனர்களுமாகின்றனர்' என்று சொன்னார். உமை, 'பகவானே! மனிதர்களிற்சிலர் பித்துப்பிடித்தவரும் பேய்பிடித்தவருமாக இங்குமங்கும் காணப்படுகின்றனர். அது என்னகர்மத்தின்பயன்? அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்று கேட்டாள். மஹேஶ்வரர், 'தேவியே! சிறந்தவளே! பூர்வஜன்மத்தில் கர்வமும் நான்என்கிறஅகங்காரமும் படைத்துப் பிறரைப் பலவிதமாகப்பேசியும் மிகநகைத்துமிருந்தமனிதர்களும் பொருளாசைபற்றி மயக்கத்தைத்தரும்இன்பப்பொருள்களினால் பிறரைமயக்கினவரும் கிழவர்களையும் மேலோர்களையும் வீணாகப்பரிகாசம்செய்தமூர்க்கர்களும் சாஸ்திரங்கள்கற்றுணர்ந்து சதுரர்களாகவிருந்தும் எப்

போதும்பொய்சொல்லிவந்தவரும் மற்றும்இவ்வகைநடையுள்ளவர்களும் பின்ஜன்மத்தில் பித்தரும் பேயருமாகிறரென்பதில் ஸந்தேகமில்லை' என்றுசொன்னர். உமை, 'பகவானே! சிலமனிதர்கள் பிள்ளையில்லாமல் மிகத்துயரப்படுகின்றனர்; பலவகைகளில்முயற்சிசெய்தும் ஸந்ததிகளையடைவதேயில்லை. அது எந்தக்கர்மத்தினலென்பதை எனக்குச்சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'தேவியே! சிறந்தவளே! பூர்வஜன்மத்தில் எந்தப்பிராணிகளிடத்திலும் தயையில்லாமலும் சிசுஹத்திசெய்துகொண்டும் மிருகங்களையும்பக்ஷிகளையும்புசித்துக்கொண்டும் பெரியோரைப் பகைத்தும் பிறர்பிள்ளைகள்மேல் பொறுமைகொண்டும் சாஸ்திரத்திற் சொல்லியபடி அஷ்டகைமுதலான சிராத்தங்களினல் பித்ருக்களைப்பூஜியாமலும் மற்றும் இவ்வகை நடைகளோடுமிருந்தமனிதர்கள் பின்ஜன்மங்களில் வெகுகாலங்கழித்து மானிடப்பிறப்பையடைந்தபோது ஸந்ததியில்லாமலும் புத்ரசோகத்தோடுமிருப்பாரென்பதில் ஸந்தேகமில்லை' என்றுசொன்னர். உமை, 'பகவானே! சிலமனிதர்கள் பயமுள்ளவிடங்களில்வஸித்துக்கொண்டும் எப்போதும்பயமும் துயரமுமுள்ளவர்களாகவும் ஏழைகளாகவும் தவஞ்செய்துகொண்டும் மிகக் கஷ்டப்படுகின்றனர். அது எந்தக்கர்மத்தினல்? அதனை எனக்குச்சொல்லக்கடவீர்' என்றுகேட்டனள். மஹேஸ்வரர், 'தேவியே! பூர்வஜன்மத்தில் எப்போதும் பிறரைவைதுகொண்டும் பயமுறுத்திக்கொண்டும் பலதீங்குகள்செய்துகொண்டுமிருந்தவரும் ஏழைகளுக்குத் தாம்நினைத்தபடி வட்டிக்குக்கடன்கொடுத்து வட்டியைக்கேட்பதற்காக எப்போதும் போய்க்கொண்டிருந்தவருமான மனிதர்களைக்கண்டு கடன் வாங்கினவர்கள் தங்கள்பொருளைப்பற்றி நடுங்கினர். ஏழைகளிடத்தில் தமக்குவேண்டியஅதிகவட்டி கேட்கலாகாது. சிலர் நாய்களைக்கொண்டுவேட்டையாடிக் காட்டிலுள்ளமிருகங்களை வெருட்டுகின்றனர். அப்படியே சிலர் பலவகைகளால் பிராணிஹிம்ஸைகளைச் செய்கின்றனர். சிலர்வீடுகளில் நாய்கள் மனிதர்களை வீணகப் பயப்படுத்துகின்றன. அன்புள்ளவளே! இப்படிப்பட்டநடையுள்ளவர்கள் மரணமடைந்தபின் யமதண்டனையினல் பீடிக்கப்பட்டு வெகுகாலம் நரகத்திற்கிடந்து பின் மானிடஜன்மத்தையடையும்போது அவர்கள் அநேககஷ்டங்களும் அநேகஹிம்ஸைகளும்நிரம்பின கெட்டதேசத்திற்பிறந்து எதற்கும்பயந்து துயரப்படுகின்றனர்' என்றுசொன்னர். உமை, 'பகவானே! சிலமனிதர்கள் செல்வமும் கல்வியுமுள்ளவர்களாகவிருந்தும் மிலேச்சராஜ்யங்களில் அவர்களின் அதிகாரத்திற்குட்

பட்டிருக்கின்றனர். அது என்னகர்மத்தினுல்? எனக்குச் சொல்லக் கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'தேவியே! மனிதர்கள் பூமியில் தனதானியங்கள்நிரம்பப்பெற்றுச் சிரத்தையில்லாமையினுல் முறைதப்பித் தானஞ்செய்கின்றனர். சிறந்தவளே! ஸ்நானசுத்தங் களையும் மங்களாசாரங்களையும்விட்டுத் தகுதியற்றவருக்குத் தானஞ் செய்பவரும் பெருமைக்காகவும் பிறரை அவமதிப்பதற்காகவும்தானம் செய்பவரும் மற்றுமிவ்வகை நடையுள்ளவர்களுமானமூர்க்கர்கள், காடுகளடர்ந்து போவதற்குமுடியாமல் மிலேச்சர்கள்நிரம்பின பற்பல கெட்டதேசங்களிற்பிறந்து மிலேச்சராஜ்யத்தில் சார்ந்திருக்கின்ற னர்' என்றுசொன்னுர். உமை, 'பகவானே! பகதேவதையின்நேத் திரத்தையழித்தவரே! பூமியிலுள்ளமனிதர்களில் சிலர் சக்தியற்ற வர்களாகவும் ஆண்மையில்லாதவர்களாகவும் பயன்படாதவர்களாக வும் இழிதொழிலில்ஆசையுள்ளவர்களாகவும் கீழ்மக்களோடுசினேக முள்ளவர்களாகவும் இழிந்தவராகவும் காணப்படுகின்றனர். அது என்னகர்மத்தினுல்? அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட் டாள். மஹேஸ்வரர், 'சிறந்தவளே! எனக்கன்புள்ளவளே! அந்தக் காரணத்தை உனக்குச்சொல்வேன்; கேள். முன்ஜன்மத்தில் கொடுந் தொழில்களைவிரும்பிப் பசுக்களின்விதையையடித்து ஜீவித்துக்கொ ண்டும் கோபத்தினுல் மனிதர்களுக்குஆண்மையைக்கெடுத்துச் சந் தோஷப்பட்டுக்கொண்டும் ஸ்திரீகளிடத்தில் முறைதப்பி இஷ்டப்படி தூர்த்தர்களாகத்திரிந்தும் பகைத்தும் கோட்சொல்லியும் பிறருடைய ஸ்திரீஸங்கங்களுக்கு இடையூறுசெய்தும் மற்றுமிவ்வகைநடையோ டிருந்தும்வந்த மனிதர்கள் மரணமடைந்தபின் யமனுல்தண்டிக்கப் பட்டு வெகுகாலம் நரகத்தில்கிடந்து பிறகு ஒருஜன்மத்தில் மானிட தேகத்தையடைவராயின் அவர்கள் திறமையற்றவர்களும் அலிகளும் உதவியற்றவர்களும் இழிதொழில்செய்பவர்களும் வெட்கங்கெட்ட வர்களும் சுறுசுறுப்பில்லாதவர்களும் ஆகின்றனர்; தம்செய்கை யினுல் பிறர்துயரத்தைவிலக்கி அவர்களை நன்ருகப்பார்ப்பாராயின் அந்தப்பாவத்திலிருந்து விடுபடுவார். அவர்கள் பின்ஜன்மத்திலும் தவறுவராயின் நரகத்திலேயே விழுவார். தேவியே! புருஷர்களுக்கு உண்டாவதுபோலவே பெண்களுக்கும் எல்லாம் தம்கருமங்களினுல் உண்டாகின்றன. தேவியே! இதனை உனக்குச் சொன்னேன். இன் னும் என்னகேட்கவிரும்புகிருய்?' என்றுவினவினுர்.

## இருநூற்றிருபத்திரண்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஶ்வரஸம்வாதம் தொடர்ச்சி ; முன்வினைப்பயன் மறுஜன்மத்தில்வருமென்பது தொடர்ச்சி.)

உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈஶ்வரரே! சூலத்தைக்கையில்பிடித்தவரே! விருஷபத்வஜரே! பெண்களில்சிலர் விலைமாதர்களாகி இழிதொழிலிலிருப்பவர்களாகக் காணப்படுகின்றனரே; அது என்னகருமத்தினலென்பதை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஶ்வரர், 'தேவியே! எந்தமானிடப்பெண்கள் காமவிருப்பத்தினல் மதிகெட்டுக் கணவர்களுக்குஅடங்காமலும் கணவர்களுக்குஇன்னாததுசெய்தும் ஆசாரத்தையும் வெட்கத்தையும் மறந்தும் நினைத்தபடிநடப்பவராகவும் இன்னும்இதுபோன்ற நடையுள்ளவராகவும் இருந்தனரோ அவர்கள் யமலோகத்தில் மிக்கதண்டனைகள்அடைந்து ஒருகால் மானிடப்பிறப்பைப்பெறுவராயின் பலபுருஷர்களுக்குப்பொதுவாயுள்ள விலைமாதர்களாவார். புருஷர்களைத்தேடிப்போதலென்னும் தொழில் பெண்களுக்கு மிக்க கஷ்டமென்று நினைக்கப்படுகிறது. தேவியே! அதுமுதல் அவர்கள் விழுந்தேபோகின்றனர். ஸந்தேகமில்லை. அவர்கள் அந்த நடைக்காக மனத்தில் துயரப்படுவாராயின் நன்மைபெறுவார்' என்றுசொன்னர். உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈஶ்வரரே! உலகத்தில் மானிடச்சிறுமிகள் எல்லாமங்களகாரியங்களுக்கும் முழுதும்விலக்கான விதவைகளாகக் காணப்படுகின்றனரே, அது என்ன கர்மத்தினல்? எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஶ்வரர், 'தேவியே! எந்தமானிடப்பெண்கள் பூர்வஜன்மத்தில் விவேகமில்லாமல் தம்கணவர்களின் குடும்பங்களைவீணேகெடுத்தும் சிறிதும்தயையில்லாமல் கணவர்களுக்கு விஷத்தாலும் தீயாலும் தீங்குசெய்தும் அவர்களைப்பகைத்து வேறுபுருஷர்களைச் சேர்ந்துமிருக்கின்றனரோ அப்படிப்பட்டநடையுள்ளவர்கள் யமலோகத்தில் மிக்கதண்டனைஅடைந்து வெகுகாலம்நரகத்தில் இடந்து தற்செயலாய் மானிடஜன்மத்தையடைந்தால் அதில் போகங்களில்லாதவிதவைகளாகின்றனர்' என்றுசொன்னர்.

உமை, 'பகவானே! உலகத்தில் பெண்கள் புருஷரும் சுற்றத்தாருமிருக்கப் [1]பாஷண்டமதத்தைச்சார்ந்து துறவிகளாகக் காணப்

1 நாஸ்திகமதமுதலியவை.

படுகின்றனரே, அது என்னதீவினையினால்? எனக்குச் சொல்லக்கட வீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'பூர்வஜன்மத்தில் பொரு ளாசையும் அவிவேகமும்கொண்டு மனங்கெட்டுப் பிறர்பொருளில் ஆசைவைத்து அவற்றைத்திருடுகிறவரும் பொறாமைப்பட்டு மாற் றானைக்கெடுப்பவரும் பிறர்மேன்மைபொறாதவரும் எப்போதும்கோ பிப்பவரும் சுற்றத்தாருக்குப்பயன்படாதவருமாகவிருந்த பெண்கள் மறுஜன்மத்தில் நல்லொழுக்கத்தைவிட்டுப் பாஷண்டமதத்தைச் சார்ந்து துறவிகளாகின்றனர். ஸந்தேகமில்லை' என்றுசொன்னார். உமை, 'பகவானே! சிலமனிதர்கள் கைத்தொழிலைஜீவனமாகக் கொண்டு இழிவானவேலைகளைச்செய்பவராகக் காணப்படுகின்றனரே, அது எந்தவினைக்கேட்டினாலென்பதை எனக்குச்சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'அன்புமிக்கதேவியே! எந்த மனி தர்கள் பூர்வஜன்மத்தில் வணக்கமில்லாமலும் தம்மையேபுகழ்ந்து கொண்டும் கர்வமும் கோபமுமுள்ளவர்களாகவும் தந்நலமே பெரி தாய்க்கொண்டவர்களாகவும் இருந்துவந்தனரோ அவர்கள் பின்ஜன் மத்தில் கைத்தொழிலாளிகளாகவும் ஆடுகிறவர் பாடுகிறவர்களாகவும் நாவிதர்களாகவும் வந்திகளாகவும் அரசர்களுக்குக் காலம்தெரிவிப்ப வர்களாகவும் இப்படி பலவிதமானகீழ்த்தொழில்செய்து ஜீவிக்கின் றனர். முந்தினஜன்மத்தில் பிறரை அவமதித்ததின்பலனாக அவர் கள் பிறரிடம் வேதனம்வாங்கிக்கொண்டு அவர்களுக்கு அலங்காரங் களைச்செய்து ஜீவிக்கின்றனர்' என்றுசொன்னார்.

உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈஸ்வரரே! மனி தர்களிலேயேசிலர் அடிமைகளாகி எப்போதும் எல்லாவேலைகளையும் செய்துகொண்டும் அடி பயமுறுத்தல்முதலான எல்லாஉபத்திரவங் களையும்ஸஹித்துக்கொண்டுமிருப்பவர்களாகக்காணப்படுகின்றனரே, அது எந்தத்தீவினையினால்? எனக்குச்சொல்லக்கடவீர்' என்று கேட்டாள். மஹேஸ்வரர், 'சிறந்தவளே! அதன்காரணத்தை உனக் குச்சொல்வேன்; கேள். தேவியே! எந்தமனிதர்கள் பூர்வஜன்மத் தில்பிறர்பொருளைப்பறித்தும், வட்டிக்குவாங்கினகடனும் பயிரிடுவத னால்கிடைத்ததும் நிக்ஷேபமாகவும்அடைக்கலமாகவும்கொடுக்கப்பட் டதும் தவறிமறந்துவிடப்பட்டதுமான பிறர்தனத்தை அபகரித்தும், பிறரையடித்தும், கட்டியும், துயரப்படுத்தியும், அடிமையாகச்செய் தும் வந்தனரோ அவர்கள் மரணமடைந்தபின் யமதண்டனைகளை யடைந்து தற்செயலாகமானிடப்பிறப்பையடைந்தபோது பிறந்தது முதல் எல்லாவகையாலும் அடிமைகளாவார். அவர்கள் யாருடைய

தனங்களை அபகரித்தனரோ அவர்களுக்கு வேலைகளைத் தம்பயம் தீரும்வரை செய்கிறார்களென்பது திண்ணம். தனங்களையபகரித்த மற்றும்சிலர் பசுக்களாகப் பிறக்கின்றனர். அவர்கள் முன்ஜன்மத்தில்செய்ததவறுதலினால்உண்டானபாவம் அப்படித்தான் கழியும். இதைத்தவிர வேறுவகையில் கருமத்தை [1] விடுவிக்கத் தேவர்களாலும் அஸுரர்களாலுங்கூட முடியாது. பொருளைப் பறிகொடுத்தவரை எல்லாவகைகளாலும் திருப்திசெய்விப்பதுதான் பாவத்தைவிடுவிக்கும்வகை; வேறுவகையால் விடுவிக்கக்கருதுகிறவன் பின்ஜன்மத்திலும்அப்படியேயாவான். வினையைவிடுவிக்கக்கருதுகிறவன் எல்லாக் கஷ்டங்களையும்பொறுத்து வேலைகளையெல்லாம் முறைப்படிசெய்து தன்யஜமானனுடைய மகிழ்ச்சியைக் கருதவேண்டும். யஜமானனால் அன்புடன் விடைகொடுக்கப்பெற்றவன் தன்பாவத்திலிருந்து விடுபட்டவனாகிறான். அப்படிப்பட்டகுணமுள்ளவேலைக்காரர்களை யஜமானனும் எப்போதும் ஸந்தோஷப்படுத்தவேண்டும். அவனவன் தகுதிப்படி வேலையைச்செய்விக்கவேண்டும். [2]காரணம்பற்றியே தண்டிக்கவேண்டும். கிழவர்களையும் சிறுவர்களையும் இளைத்தவர்களையும் காப்பாற்றுகிறவன் புண்ணியமடைவான். தேவியே! இதனை உனக்குச் சொன்னேன். இன்னும் என்னகேட்கவிரும்புகிறாய்?' என்று கேட்டார்.

---

## இருநூற்றிருபத்துமூன்றாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஸ்வர ஸம்வாதம் தொடர்ச்சி; முன்வினைப்பயன் மறுஜன்மத்தில்வருமென்பது தொடர்ச்சி.)

உமை, 'பகவானே! தேவரே! மனிதர்களைப்போலவே காணப்படும்சிலமனிதர்கள், தீண்டுவதற்கும் தகாதவர்களாகவும் இழிதொழில்களில்விருப்பத்துடன் எல்லாருடையமலங்களையும் எடுப்பவர்களாகவும் ஏழைகளாகவும் மிகுதியாகச்சிரமப்படுகிறவர்களாகவும் விகாரரூபமும்கெட்டஎண்ணமுள்ளவர்களாகவும் சண்டாளர்கள்போலக் காணப்படுகின்றனரே, அது என்னதீவினையினால்? எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'தேவியே!

---

1 'மோக்ஷம்' என்று பாடங்கொள்ளப்பட்டது.

2 'தண்டம்காரணதஃ' என்று பாடங்கொள்ளப்பட்டது.

அதனை உனக்குச் சொல்வேன்; ஊக்கத்துடன்கேள். பூர்வஜன்மத்தில் அதிகஅகங்காரமும் தற்புகழ்ச்சியும் தடித்தனமும் கொழுப்புமுள்ளவர்களாகிப் பெரியோர்களையும்வணங்காமலும் பாமரராகியும் அதிகஅகங்காரத்தினால் தம்தர்மத்துக்குரியகாரியத்தைச் செய்யாமலும் பிறரைப் பலவந்தமாகக்கட்டளையிட்டுத் தமக்குவணங்கும்படி செய்தும் செல்வத்தினால் பிறரை எப்போதும் அவமதித்தும் குடித்தும் எல்லாவற்றையும்பக்ஷித்தும்கொடியவராகவும்கடுஞ்சொல்சொல்லுகிறவராகவும் இன்னும் இவ்வகைஒழுக்கத்தோடும் இருந்தமூர்க்கர்கள் யமதண்டனையினால்தண்டிக்கப்பட்டபிறகு தற்செயலாக மானிடப்பிறப்புவரும்போது இழிதொழிலில்விருப்பமுள்ளவர்களும் எல்லாருடையமலங்களையுமெடுப்பவரும்பிறரைவணங்குகிறவரும் விகாரரூபமுள்ளவரும் தீண்டுவதற்கும்தகாதவருமான சண்டாளர்களென்னும் பாவப்பிறப்பில் பிறக்கின்றனர். அவர்கள் வண்ணான்முதலானவர்களாகப் பிறந்து இழிதொழிலினால் ஜீவிக்கின்றனர்; முன்ஜன்மத்தில் மிக்ககர்வமென்னும்குற்றத்தினால் தாம்செய்ததன்பலனை அனுபவிக்கின்றனர். அப்படித்தாழ்ந்தநிலைமையிலிருக்கும்அந்தச்சண்டாளர்களையும் விவேகமுள்ளவன் இகழவும் கோபிக்கவும் ஆகாது. அவர்கள் தம்வினைப்பயனை அனுபவிக்கின்றனர். சண்டாளர்களும், அந்தஜன்மத்தைப்பற்றித் துயரப்படுவதனால் பரிசுத்தமடைவார்கள்' என்றுசொன்னார். உமை, 'பகவானே! சிலமனிதர்கள் பலவகையான ஆசைகளென்னும் வலைகளினால் கட்டப்பட்டும் உள்ளேபோகாமல் தடுக்கப்பட்டும் பிறர்வாயிலில் நிற்கின்றனர். முயற்சிசெய்தும் பிரபுவைப்பார்ப்பதற்கும் தம்கருத்தைத்தெரிவிப்பதற்கும் சமயம்பெறுவதில்லை. அது எந்தக்கர்மதோஷத்தினால்? எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'தேவியே! சிறந்தவளே! முன்ஜன்மத்தில் ஐஸ்வர்யத்தையும் அதிகாரத்தையும்பெற்று அவற்றினால்மதிகெட்டுப் பிறரோடுசம்பாஷணைசெய்யாமலும் அவர்களைஉள்ளேவிடாமலும் பொருளாசைபெண்ணாசை முதலியவற்றினால் மூடப்பட்டும் தமதுநிலைமையினால் எதையும்மதிக்காமல் தம்காரியத்தையே தலைமையாகக்கொண்டும் எல்லாப்போகங்களுமிருந்தும் பிறருக்குச் சிறிதும் பயன்படாமலும் திறமையிருந்தும் பிறருக்கு அனுக்ரஹம்செய்யாமலும் தயையில்லாமலும் புண்ணியலோகம்போவதற்கு வழிதேடாமலுமிருந்தவர்கள் பின்னொருபிறப்பில்மானிடதேகம்பெறுவாராயின் ஏழைகளாகவும் கெட்டநிலைமையுள்ளவர்களாகவும் எந்தக்காரியங்களிலும் தடையுள்ளவர்களாகவும் தமதுபிரயோஜனத்தைத்

தெரிவிப்பதற்காக அரசர்களிடத்திலும் அவர்களைப்போன்றவர்களிடத்திலும் ஓடியும் தடுக்கப்பட்டு வாயிலில் நிற்கின்றனர். தமது காரியத்தைத் தெரிவிக்கவும் பிரபுவைப்பார்க்கவும் உள்ளேபுகவும் (சமயம்) கிடைக்காமல் ஆசையோடு வெளியில்நிற்கின்றனர்' என்று சொன்னார்.

உமை, 'பகவானே! அனேகமனிதர்களில் சிலர் அரசனாலும் கள்வனாலும் ஜலமுதலியவற்றினாலும் எல்லாப்பொருள்களும் அபகரிப்பட்டவர்களாகவும் மூலதனங்கள் தவறிப்போனவர்களாகவும் காணப்படுகின்றனரே, அது எந்தக்கர்ம தோஷத்தினால்? எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'தேவியே! எவர்கள் பூர்வஜன்மத்தில் அஸுரத்தன்மையை யடைந்து பகையினாலும் ஆசையினாலும்பிறருடையஜீவனத்தைக்கெடுத்தும் அப்படியே பிறரை [1]வைதும் கோட்சொல்லியும் களவினாலும் மற்றவகையினாலும் பிறர்பொருளை அபகரித்தும் தயையும் பச்சாத்தாபமுமில்லாமல் பிறர்ஜீவனத்தைக்கெடுத்துமிருக்கிறார்களோ கொடியவரும் நாஸ்திகரும் பொய்சொல்லுகிறவரும் பிறர்பொருளை அபலாபம்செய்பவருமான அப்படிப்பட்டநடையுள்ளவர்கள் நெடுநாள்நரகத்திலிருந்து யமனால்தண்டிக்கப்பட்டுத் துன்பப்பட்டபிறகு மானிடஜன்மத்தையடைவாராயின் அந்தஜன்மத்தில் திடீரென்று பொருள்நஷ்டத்தையடைவது திண்ணம். காரணம்பற்றியோ நிஷ்காரணமாகவோ கஷ்டத்தையும் தாழ்வையும் திரவியநஷ்டத்தையும் எல்லாராலும் உபத்திரவத்தையும் அடைவது நிச்சயம்' என்றுசொன்னார். உமை, 'பகவானே! சிலமனிதர்கள் திடீரென்று பந்துக்களைவிட்டுப் பிரிதலையும் காரணம்பற்றியோ நிஷ்காரணமாகவோ பந்துக்களின்மரணத்தையும் ஆயுதத்தினாலேயோ மற்றெவ்வகையினாலேயோ தம் உயிர்ச்சேதத்தையும் அடைவது எந்தவினைக்கேட்டினால்? எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஶ்வரர், 'தேவியே! அன்புள்ளவளே! எந்தமனிதர்கள் பூர்வஜன்மத்தில் பெரும்பாலும் அஸுரத்தன்மையோடு கொடுஞ்செய்கையில் விருப்பமும் பொய்யுமுள்ளவராகவும் மூர்க்கர்களாகவும் பிராணிகளை மிக்கவிருப்பத்துடன் தயையில்லாமல் கொல்லுகிறவர்களாகவும் நம்பினவரைக் கெடுக்கிறவராகவும் தூக்கத்தைக்கெடுப்பவராகவும் பெரும்பாலும் பொய்சொல்லுகிறவராகவும் நாஸ்திகராகவும் புலால்தின்பவராகவுமிருந்தனரோ அப்படிப்பட்டவர்கள் இறந்து யமதண்டனை

[1] 'உத்க்ரோசந்' என்று பாடங்கொள்ளப்பட்டது.

யையடைந்து வெகுகாலம் நரகத்திலிருந்தபிறகு விலங்காகப்பிறந்து அதில் துயரங்களையனுபவித்துத் தீர்ந்தபின் மானிடஜன்மம் பெறுவராயின் அதில் எவ்வகையினாலாவது கொலையையும்கட்டுப்படுதலையும்அடைவது நிச்சயம். செல்வமுள்ளவர்களும் ஏழைகளும் தம் வினைப்பயனை அனுபவிக்கின்றனர். தூங்கியும் மயங்கியும் நம்பியுமிருக்கும்போது தாம்செய்ததின்பலனை அப்படியே அடைகின்றனர். தம்முயிர்ச்சேதத்தையும் சுற்றத்தாரைவிட்டுத்திடீரென்றுபிரிவதையும் பிள்ளைபெண்டிர் அழிவதையும் ஆயுதத்தினாலோ மற்றெதினாலோ கொலையையும் அடைவார்' என்றுசொன்னார். உமை, 'பகவானே! மானிடலோகத்திலேயே சிலமனிதர்கள் ராஜநீதிசாஸ்திரத்தில்தேர்ந்தவர்களினால் தண்டிக்கப்படுகின்றனர். அவர்களுக்கு எங்கும் பயமிருக்கிறது. அது என்னகருமதோஷத்தினால்? எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'தேவியே! சிலமனிதர்கள் பூர்வஜன்மத்தில் பிராணிகளிடத்தில்தயையில்லாமல் மனிதர்களையோ மற்றஉயிர்களையோ கஷ்டப்படும்படி அடித்துக்கொல்லுகின்றனர். சிலஅரசர்கள் கொடியசெய்கையுள்ளவர்களும், கொடிய தண்டனையிலும்கொல்வதிலும்விருப்பமுள்ளவர்களும்,கோபத்தினால் மதிகெட்டு அஸுரத்தன்மையுள்ளவர்களாகிப் பிறரைப்பீடிப்பவர்களும், கர்வப்படுபவர்களும், மாம்ஸம்புசிப்பவர்களும், நாஸ்திகர்களும், யாருக்கும் வேண்டாதவர்களுமாயிருந்து தண்டிக்கத்தகாதவர்களையும் தண்டிக்கின்றனர். அன்புள்ளவளே! சிலர் பெண்களையும் புருஷர்களையும் ஆசாரியர்களையும் கொல்லுகின்றவராகவுமிருக்கின்றனர். அன்புள்ளவளே!' இப்படிப்பட்டநடையுள்ளவர்கள் மரணமடைந்தபிறகு வெகுகாலம்நரகத்தில்கிடந்து யமனால் தண்டிக்கப்படுகின்றனர். ஜனங்கள் முன்ஜன்மத்தில்செய்தகருமத்தை இந்தஜன்மத்தில் அனுபவிக்கின்றனர். இந்தஜன்மத்தில் செய்யப்படும்கருமம் மறுஜன்மத்தில் பலனைத்தரும். தேவியே! மனிதர்களில்தான் இந்தமுறை காணப்படுகிறது. தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் இந்த வரையறையில்லை. அவர்களோ மரணமில்லாமையாலும் தவத்தின் வலிமையாலும் ஒருசரீரத்திலேயே கர்மபலனை அனுபவிக்கின்றனர். ஸாதாரணமனிதர்களுக்கு அப்படிஆகாது. ஏனெனில், கர்மபலன் அவர்களுக்கு இறந்தபின் தெரியாமல் நேரிடும்' என்றுசொன்னார். உமை, 'இவ்வுலகத்தில் மனிதர்கள் அரசர்களால், 'இவன் கொலைசெய்தவன்; இவன் திருடினவன்' என்று அவரவர்செய்தகுற்றத்தைக்குறித்து அந்தஜன்மத்திலேயே தண்டிக்கப்படுவது எப்படி?

புத்திரனைவிரும்புகிறவன் புத்திரகாமேஷ்டிசெய்து அம்தஜன்மத்தில் புத்திரர்களை அடைகிறான். ஆதலால், மானிடலோகத்தில்செய்த கருமங்களின்பலனை அதேதேகத்தில் அனுபவிப்பதைக்காண்கிறோம். அதனை நீர் நினைக்கவில்லை. இது என்ஸந்தேகத்திற்கிடமாயிருக்கிறது. அதனை நீர் விளக்கக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'தேவியே! நீ ஸந்தேகப்பட்டது ஸரி. அதனை நீ ஊக்கத்துடன்கேள். இப்புவியில் வினையும் வினைப்பயனும் ஒருகாலத்திலிருப்பனவாக நினைக்கப்படவில்லை. தேவியே! 'இவன் கொன்றவன்; இவன் திருடினவன்' என்று அரசர்களால் மனிதர்கள் தண்டிக்கப்படுவதாக நீ சொன்னாயே, அதுவும் அவர்களின் முன்வினைப்பயன்தான். தேவியே! அவர்களால் (அப்போதுசெய்யப்பட்ட) செய்கையும் தண்டிப்பதற்குக் காரணமாகிறது. குற்றத்தை நிமித்தமாகக்கொண்டுதானே அரசன் பிரஜைகளைத்தண்டிக்கவேண்டும். மற்றவர்களைப்பயமுறுத்தி இவ்வுலகத்தை நிலைபெறச்செய்வதற்காக அந்தஅந்தக்குற்றத்தைக் குறிப்பித்து அரசர்கள்தண்டித்தல் விதிக்கப்பட்டிருக்கிறது. அந்தத்தண்டனையானது தண்டிக்கப்படுகிறவனுடைய முன்வினைப்பயனென்பது திண்ணம்என்று முதலிலேயே நான் சொன்னேன். அந்த விஷயத்தில் உனக்கு ஸந்தேகம்வேண்டாம்' என்றுசொன்னார். உமை, 'பகவானே! பூமியில் அரசர்களால்தண்டிக்கப்பட்டமனிதர்களுக்கு அந்தத்தண்டனையினால் பாவம்போகுமா? போகாதா? இது எனக்கு ஸந்தேகம். இதை நீர் தீர்க்கக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'தேவியே! நீ ஸந்தேகப்பட்டது ஸரி. அதனை நீ ஊக்கத்துடன்கேள். பூமியில் குற்றம்சாட்டப்பட்டு அரசர்களால்தண்டிக்கப்பட்டவர்கள் யமலோகத்தில் யமனால் தண்டிக்கப்படுவதில்லை. தவறுதலாகத் தண்டிக்கப்படாவிட்டாலும் ஸரியானதண்டனைசெய்யப்படாவிட்டாலும் அவர்களை யமன் தண்டித்தேவிடுவான். அவர்கள்செய்ததும் செய்யாததும் அவனுக்குத்தெரியும். இவ்வுலகத்தில் எந்தமனிதனும் கருமம்செய்தபிறகு யமனைத் தாண்டமுடியாது. சிறந்தவளே! அரசனும்யமனும்தண்டனையைமட்டும்செய்கின்றனர். யமன் அரசன்இருவராலும் தண்டிக்கப்பட்டாலும் தண்டிக்கப்படாவிட்டாலும் பிறகு மானிடஜன்மத்திலும் நரகத்திலும் முறையே வினைப்பயனையனுபவிப்பான். செய்தகருமத்தின்பலனை அறுத்தவன் மூவுலகங்களிலுமில்லை. அன்புள்ளவளே! எல்லாவற்றையும் உனக்குச் சொன்னேன். ஸந்தேகமற்றிரு' என்றுசொன்னார். உமை, 'பூமியில் மனிதர்கள் நித்தியமாகப் பாவத்தைச்செய்து அதைத்தொ

லைப்பதற்காகத் திரும்பவும் பிராயச்சித்தங்களைச் செய்கின்றனரே, அது ஏன்? அஸ்வமேதயாகம் எல்லாப்பாவங்களையும் போக்குவதென்றுசொல்லுகின்றனர்.பாவத்தைப்போக்குவதற்கு மற்றுமுள்ளபிராயச்சித்தங்களையும் செய்கின்றனர். ஆதலால், எனக்குஅதில் ஸந்தேகம்இருக்கிறது. அதனை நீர் தீர்க்கக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'தேவியே! நீ ஸந்தேகித்தது ஸரி; அதனை நீ ஊக்கத்துடன் கேள். முன்னோரானஞானிகளுக்கும் இது பெரியஸந்தேகம்தான். கெட்டவர்களும் நல்லவர்களும் செய்யவேண்டுமென்று நினைத்தும் அவ்வாறின்றித் தற்செயலாகவும் தவறுதலாகவும் இருவகைகளாகப் பாவத்தைச்செய்கின்றனர். பலனைக்கருதியும் பிடிவாதமாகவும்செய்யப்படும்கருமம் எவ்வகையிலும் அழிவதில்லை.தெரிந்துசெய்தகருமம் ஆயிரக்கணக்கானஅஸ்வமேதயாகங்களாலும்நூற்றுக்கணக்கானபிராயச்சித்தங்களாலும் தீருவதில்லை. அவ்வாறின்றித் தவறுதலால் தற்செயலாகச் செய்யப்பட்டபாவம் பிராயச்சித்தங்களாலும் அஸ்வமேதயாகத்தினாலும்உண்டாகும்புண்ணியத்தினால் அழியும். உலகநடைக்காகவும் பாபகாரியத்திற்குப் பிராயச்சித்தமுதலியவை விதிக்கப்படுகின்றனவென்றறி. அன்புள்ளவளே! ஸந்தேகமற்றிரு. தேவியே! இதனை உனக்குச் சொன்னேன். இன்னும் என்ன கேட்கவிரும்புகிறாய்?' என்றுவினவினார். உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈஸ்வரரே! மானிடலோகத்தில் மனிதர்களும் மற்றப்பிராணிகளும் காரணத்தோடும் காரணமின்றியும் இறந்துபோகின்றனர். அது எந்தக்கர்மத்தின்முடிவினாலென்பதை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'தேவியே! மனிதர்கள் பூர்வஜன்மத்தில் பிராணிகளிடத்தில் இரக்கமில்லாமல் காரணம்பற்றியும் நிஷ்காரணமாகவும் அவற்றைக்கொன்றிருக்கின்றனர்.அவர்கள் தாம் எப்படிச்செய்தாரோ அப்படியே அதன்பலனை அடைகின்றனர். விஷங்கொடுத்தவர் விஷத்தினாலும் ஆயுதத்தினாலடித்தவர் ஆயுதத்தினாலும் உலகத்தில் மற்றெந்தக்காரணத்தினால் மனிதர்கள் மனிதர்களைக்கொல்லுகின்றனரோ அந்தக்காரணத்தினாலும் மறுஜன்மத்தில் தம்முயிர்ச்சேதத்தை அடைகின்றனர். தேவியே! அதில் ஸந்தேகமில்லை.அன்புள்ளவளே! இந்தக்கர்மத்தினாலுண்டாகும் பயன் எல்லாவற்றையும் உனக்குச் சொன்னேன். திரும்பவும் ஒருகாலும் தவறாத ஸரியான பிரமாணத்தைக்கொண்டு அதனையே உனக்குச் சுருக்கமாகச் சொல்வேன். அதனைக் கேள். தேவியே! எந்தமனிதர்கள் முன்ஜன்மத்தில் எந்தக்காலத்தில் எந்தக்காரணத்தினால் எந்தநல்வினையையோ

தீவினையையோ எப்படிச்செய்தனரோ அந்தமனிதர்கள் பின்ஜன்மத்தில் அந்தக்காலத்தில் அந்தக்காரணத்தினால் அந்தஅந்த வினைப்பயன்களை அப்படியே ஸந்தேகமில்லாமல் அடைகின்றனர். உலகத்தில் இதுதான் அவரவர்விதியைப்பற்றிய ஸத்தியமென்றறி. கருமத்தைச் செய்து அதைஅனுபவியாதமனிதன் ஸ்வர்க்கத்திலுமில்லை; பூமியிலுமில்லை. தன்வினையையனுபவியாமலிருப்பதற்குத் தேவர், அஸுரர், மனிதர்எவராலும் முடியாது. உலகமானது ஆதிகாலந்தொடங்கிக் கருமத்தில் கோக்கப்பட்டிருக்கிறது. கர்மபலனைப்பற்றி இதனைக் குறிப்பாகச்சொன்னேன். பலவகைக்கர்மங்களின் தொகுதியில் உனக்கு என்னால் சொல்லப்படாதவை எவையோ அவற்றையெல்லாம் நீ புத்தியினால் ஊஹித்துத் தெரிந்துகொள்ளலாம். நீகேட்கவிரும்பினதற்காகச் சொன்னேன். இன்னும் என்னகேட்கவிரும்புகிறாய்?' என்றுகேட்டார்.

---

## இருநூற்றிருபத்துநான்காவது அத்யாயம்.

### தா ன த ர் ம ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(உமாமஹேச்வரஸம்வாதம் தொடர்ச்சி; முன்வினைப்பயன் மறுஜன்மத்தில்வருமென்பது தொடர்ச்சி.)

உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈச்வரரே! திக்பாலகர்களால் நமஸ்கரிக்கப்பெற்றவரே! மஹாதேவரே! உமது அனுக்கிரகத்தினால் கர்மங்களின்முடிவைக்கேட்டுத் தெரிந்துகொண்டேன். நீர்சொன்னவையெல்லாம் உண்மையாகவும் அமிருதத்திற்கொப்பாகவுமிருக்கின்றன.நன்மை தீமையனைத்தும் கர்மத்தால்தொடுக்கப்பட்டிருக்கின்றனவென்று தெரிந்துகொண்டேன். பசுவின்கன்று தாயையும் ஜலம் பள்ளத்தையும் சேர்வதுபோலச் செய்வினை செய்தவனை எப்போதும் தொடர்ந்துசெல்லும். இவ்வுலகத்தில்செய்த கர்மம் நல்லதோ தீயதோ அழியாதென்பது நிச்சயம். அதனையும் நான் ஒப்புக்கொண்டேன். மஹாதேவரே! வரமளிப்பவரே! அன்பைப்பெருகச்செய்பவரே! இன்னமும் கர்மங்களின் முடிவைப்பற்றியிருக்கும் ஸந்தேகங்களை விடுவிக்கக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேச்வரர், 'தேவியே! கரியகண்களையுடையவளே! சிறந்தலக்ஷணங்கள்பொருந்தினவளே! உனக்கு என்னகேட்கவேண்டுமோ அவை எல்லாம் மிக்கரகஸ்யமாயிருந்தாலும் நீ அச்சப்படாமல் என்

ளைக் கேட்கலாம்' என்று சொன்னார். உமை, 'விருஷபத்வஜரே! உலகத்தில் கர்மங்களுக்கு இவ்விதமானவியவஸ்தைஇருக்கும்போது புண்ணியபாவங்களைச் செய்தமனிதன் தான்செய்தபுண்ணியகர்மங்களின் பலனை அனுபவிப்பது எப்போது? இம்மையிலா? மறுமையிலா? தேவரே! அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'தேவியே! நீ ஸந்தேகப்பட்டது ஸரி. அது மனிதர்களுக்கு மிக்கரகஸ்யமானது. அழகியமுகமுள்ளதேவியே! அந்தரகஸ்யத்தை உன்விருப்பத்திற்காகச் சொல்வேன். ஜனங்கள் முன்ஜன்மத்தில்செய்தகர்மத்தை இந்தஜன்மத்தில் அனுபவிக்கின்றனர். இந்தஜன்மத்தில் செய்தது மறுஜன்மத்தில் பலிக்கும். தேவியே! இந்தநியமம் மனிதர்களிடத்தில்மட்டும் காணப்படும். தேவருக்கும் அஸுரருக்கும் மரணமில்லாமையினாலும் தவவன்மையினாலும் கர்மங்களின்பலன் ஒருசரீரத்திலேயே அனுபவிக்கப்படும். தேவியே! மனிதர்களுக்கு அப்படியில்லை. இதுதான் வித்தியாஸமாக நினைக்கப்படுகிறது' என்றார்.

## இருநூற்றிருபத்தைந்தாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஸ்வரஸம்வாதம் தொடர்ச்சி; முன்வினைப்பயன் மறுஜன்மத்தில்வருமென்பது தொடர்ச்சி.)

உமை, 'பகவானே! பகதேவதையின் நேத்திரத்தையழித்தவரே! மனிதர்களின் செய்கைகளனைத்தும் தம்வினைப்பயனென்னும் உங்கள் அபிப்பிராயத்தைக் கேட்டுக்கொண்டேன். உலகத்தில்நன்மை தீமைகளனைத்தும் நவக்கிரகங்களால்செய்யப்பட்டவையென்று நினைத்து அந்தக்கிரகங்களையும் நக்ஷத்திரங்களையுமே பெரும்பாலும் பூஜிக்கின்றனர். தேவரே! இது எனக்கு ஸந்தேகம். இதனை நீர் தீர்க்கக்கடவீர்' என்றுகேட்டாள்.

மஹேஸ்வரர், 'தேவியே! நீ ஸந்தேகப்பட்டது ஸரி. உண்மையின்நிச்சயத்தைக் கேள். சிறந்தமகிமையுள்ளவளே! நக்ஷத்திரங்களும் கிரஹங்களும் மனிதர்களின்நன்மைதீமைகளை அறிவிப்பவை. அவை தாமே காரியங்களைச்செய்பவையல்ல. மனிதர்களின்நன்மைக்காகஅவர்கள்நல்லவைகளாகவும் கெட்டவைகளாகவும் செய்தவற்றையும் இனிச்செய்வனவற்றையும் கிரகங்களின்ஸஞ்சாரம் தெரிவிக்கிறது. 'அவற்றுள் நல்லகர்மம் சுபக்ரகங்களாலேயே தெரிவிக்கப்

படுகிறது தீவினையின்பலன் பாபக்ரகங்களினால் தெரிவிக்கப்படு கிறது. ஆதலால்தான் கிரகங்கெடுதலாயிருக்கும்போது ஜனங்கள் கெடுதலைச்செய்கிறார்கள். கிரகங்கள்ஸரியாயிருக்கும்போது தாமே ஸரிசெய்வதாகநினைத்து நல்லகாரியங்களைச் செய்கின்றனர். வெறும் கிரஹநக்ஷத்திரங்கள் நன்மைதீமைகளைச் செய்வதில்லை. எல்லாவினை களும் தம்மாற்செய்யப்பட்டவை. கிரஹங்கள்என்பது உலகச்சொல். கிரஹங்கள் வேறு; செய்பவன் வேறு. செய்கிறவன் தன்செய்கை யின்பலனை அனுபவிக்கிறான். சிறந்தவளே! இவற்றைஎல்லாம் உனக் குச் சொன்னேன். ஸந்தேகமற்றிரு' என்றுசொன்னார். உமை, 'பக வானே! நல்லவையும் தீயவையுமான பலவகைக்கருமங்களைச்செய்த மனிதன் மறுபிறப்பில் அவ்விருவகைவினையுள்ள தன்பலனைமுன்னே அனுபவிக்கிறான்? தேவரே! எனக்கு இந்தஸந்தேகமிருக்கிறது. இதனை நீர் விலக்கக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'தேவியே! நீ ஸந்தேகப்பட்டது ஸரி. அதனைஉனக்குத் தெளிவா கச்சொல்வேன். முதலில்அனுபவிக்கப்படுவது தீவினைஎன்று சிலரும் நல்வினைஎன்றுவேறுசிலரும் கூறுகின்றனர். அவ்விருசொற்களும் பிழை. அதனை உனக்குத் தெளிவாகச்சொல்வேன். முன்வினைகள் மானிடஜன்மத்தில் ஒன்றிலேயே அனுபவிக்கப்படுகின்றன. இரு வினைகளும் எந்தமுறையாகச்செய்யப்பட்டனவோ அந்தமுறைப்படி அவ்வவற்றிற்குத் தக்கபலன்கள் அனுபவிக்கப்படுகின்றன. பூமியில் மனிதர்கள் செல்வம், வறுமை, இன்பம், துன்பம், [1]பயமின்மை, பயம் இவையெல்லாவற்றையும் வரிசையாயனுபவிக்கிறவர்களாகக் காணப் படுகின்றனர். செல்வமுள்ளவர்களும்துயரப்படுகின்றனர். வறிஞரும் ஸுகத்தை அனுபவிக்கின்றனர். ஆதலால், ஒருஜன்மத்திலேயே எல்லாவற்றையும் அனுபவிப்பதாகக்காணப்படுவது உலகமறிந்தவிஷ யம். அன்புள்ளவளே! நரகத்திலும் ஸ்வர்க்கத்திலும் அவ்வாறில்லை. நரகத்தில் எப்போதும் துன்பமே. ஸ்வர்க்கத்தில் எப்போதும் இன் பமே. புண்ணியபாபங்களின்மிகுதிகள் அவ்வுலகங்களில் அனுபவிக் கப்படுகின்றன. இடைவிடாதஸுகம் ஸ்வர்க்கத்திலும் அப்படிப் பட்டதுக்கம் நரகத்திலுமிருக்கும். சிறந்தவளே! மிகப்பெரியவினை களை முதலில் அவ்வுலகங்களில்அனுபவித்து அற்பமாயுள்ளமிச்சத் தைப் பின்ஜன்மத்தில் அனுபவிக்கின்றனர். இவற்றையெல்லாம் உனக்குச் சொன்னேன். இன்னும் என்ன கேட்கவிரும்புகிறாய்?' என்றுகேட்டார்.

---

[1] 'அபயம்' என்றுபாடங்கொள்ளப்பட்டது.

உமை, 'பகவானே! உலகத்தில் பிராணிகள் பிறந்துபிறந்து நில்லாமலிறந்துபோவது எந்தக்காரணத்தினால்? அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'அந்தஉண்மையை உனக்குச் சொல்வேன்; நீ ஊக்கத்துடன்கேள். கர்மம் தொலைவதனால் தேகத்தை ஆத்மாவிடுமென்பதைக் கேள். தேகமும் ஆத்மாவும்சேர்ந்திருப்பதுபிராணியென்றுசொல்லப்படுகிறது. அவற்றுள் ஆத்மா நித்யமென்றும் தேகம் அநித்யமென்றும் சொல்லப்படுகின்றன. இவ்வாறுஆத்மாவுடன்சேர்ந்த தேகமானது நாளடைவில் தளர்ந்து வேலைக்குஉதவாததாகி விழுந்துபோகிறது. அப்போது அதனை ஆத்மா விட்டுவிடுகிறது. நித்யமானஆத்மா அநித்தியமானதேகத்தைவிடுவதை உலகத்தோர் மரணமென்று அறிகின்றனர். தேவர், மனிதர், அஸுரர்யாரும் காலத்தைக்கடக்கமாட்டார். உயிரில்லாதபொருளொன்றும் ஆகாயத்தில் எப்படி சிறிதும் நிற்பதில்லையோ அப்படியே இந்தக்காலம் ஒருநிமிஷமும் நில்லாமல் ஓடுகிறது. அந்த ஆத்மா புதியஉடம்பில்புகுந்து திரும்பவும் பிறக்கிறது. இப்படி உலகநடை ஆதிதொடங்கி எப்போதும் நடந்துகொண்டிருக்கிறது' என்றுசொன்னார். உமை, 'பகவானே! பிராணிகள் இளமையிலேயே மரணமடைவதையும் வெகுகாலம்இருந்து மிகமுதிர்ச்சியடைந்து ஜீவித்திருப்பதையும் காண்கிறோம். மஹேஸ்வரரே! காலத்தினால் மரணமென்பதே நிச்சயமாயில்லை. ஆதலால், பிராணிகள்ஜீவிப்பதற்குக் காரணத்தைபற்றியஎன்ஸந்தேகத்தைத்தெளிவியும்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'தேவியே! அந்தக்காரணத்தைக் கேள். நான்சொன்னது ஓரேநிச்சயந்தான். காலமானது தேகத்தளர்ச்சியைமட்டும் செய்கிறதேயன்றி தேகம் விழுந்துபோகச்செய்வதில்லை. கர்மம்முடிந்தால் தேகம் தானாகவே விழுகிறது. முந்தியகர்மத்தின் அளவின்படிதான் இருப்பதும் இறப்பதும். முன்செய்தகருமம் எதுவரையிலிருக்கிறதோ அதுவரையில் மனிதன் ஜீவிக்கிறான். அந்தக்கருமம்போகுங்காலத்தில் சிறுவரும் இறந்துபோகின்றனர். அந்தக்கர்மத்தின்அளவின்படிதான் முதிர்ந்தவரும் வெகுகாலம்ஜீவித்திருப்பது. தேவியே! இதனை உனக்குச் சொன்னேன். அன்புள்ளவளே! ஐயமற்றிரு' என்றுசொன்னார். உமை, 'பகவானே! மனிதர்கள் தீர்க்காயுளாயிருப்பதும் அற்பாயுளாயிருப்பதும் எந்நடையினால்? அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'எந்நடையுள்ளமனிதர்கள் தீர்க்கஜீவர்களாயிருக்கிறார்கள் என்பது

மனிதர்க்கு மிக்கநன்மையும் ரகஸ்யமுமானது. அவற்றை எல்லாம் நன்முகக்கேள். கொல்லாமை பொய்யாமை வெகுளாமை பொறுமை உண்மை குருக்களைஎப்போதும்பணிவது பெரியோரைப்பூஜிப்பது சுத்தமாயிருப்பது செய்யத்தகாதவற்றைவிடுவது எப்போதும்பத்தியமானஆகாரத்தைஉட்கொள்வது இவைமுதலியநல்லொழுக்கங்கள் தாம் மனிதர்கள் வெகுகாலம்ஜீவிப்பதற்குரியவை. தவத்தினாலும் இந்திரியஜயத்தினாலும் ரஸாயனமென்னும் ஔஷதத்தைஉட்கொள்வதனாலும் மனிதர்கள் மிகுந்தகளிப்பும் சிறந்த பலமுமுள்ளவர்களாக வெகுகாலம்ஜீவித்திருக்கின்றனர். தர்மம் செய்தவர்கள் ஸ்வர்க்கத்திலும் மானிடலோகத்திலும் நீண்டகாலமிருக்கின்றனர். மற்றவர்கள் பெரும்பாலும் பாவம்செய்தும் பொய்சொல்லியும் ஹிம்ஸையில்விருப்பமும் பெரியோரிடத்தில்பகையுமுள்ளவர்களும் நற்கருமங்களையும் சுத்தத்தையும்விட்டவர்களும் நாஸ்திகர்களும் கொடியசெய்கைசெய்பவர்களும் மாம்ஸபக்ஷணத்தையும்மதுபானத்தையும்விடாதவர்களுமாயிருக்கின்றனர். பாவங்களைச்செய்தும் ஆசார்யர்களைப்பகைத்தும் கோபமும்கலகமுமே காரியமாகவிருக்கும் இப்படிப்பட்ட அயோக்கியர்கள் நரகத்தில் வெகுகாலம்இருப்பார். அதன்பிறகு, அந்தஅற்ப மனிதர்கள் திர்யக்ஜாதிகளிலேயேமுழுதும்இருந்து பிறகு ஆயுள் குறைந்தமனிதர்களாகப் பிறக்கின்றனர். போகத்தகாதவிடத்திற்குப் போவதனாலும் தேகத்துக்குவிரோதமான ஆகாரத்தைப்புசிப்பதனாலும் மனிதர்களுக்கு ஆயுள் குறைந்துபோகும். அவை ஆயுளைக் குறைப்பவையன்றோ? மேற்சொன்னபலகாரணங்களினால் ஆயுள் குறைந்துபோகிறது. இல்லாவிடின் வெகுகாலம் ஜீவித்திருப்பர். இதைஎல்லாம் உனக்குச் சொன்னேன். இன்னும் என்னகேட்க விரும்புகிறாய்?" என்றுவினவினார்.

---

## இருநூற்றிருபத்தாறுவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



**(உமாமஹேஶ்வரஸம்வாதம் தொடர்ச்சி; முன்வினைப்பயன் மறுஜன்மத்தில் வருமென்பது தொடர்ச்சி.)**

உமை, 'தேவதேவரே! மஹாதேவரே! பகவானே! இதனை நான் கேட்டேன். ஆத்மாவுக்கு ஸ்திரீயென்றும் புருஷனென்றும் ஜாதிகளின் வேறுபாடுவந்ததைப்பற்றிச் சொல்லும். பெண்உயிரும் ஆண்உயிரும் ஒன்றா? வெவ்வேறா? தேவரே! இந்தச்சந்தேகம்

எனக்கு இருக்கிறது. அதனை நீர் தீர்க்கக்கடவீர்' என்றுகேட்டனள். மஹேஸ்வரர், 'அதனை நான் உனக்குச்சொல்வேன்; ஊக்கத்துடன் முழுதும்கேள். அழகானகண்களையுடையவளே! உயிருக்குப் பெண் ஆண்என்னும்வேறுபாடு இல்லை. ஆத்மா எப்போதும் விகாரமற்றது. அது பெண்ணுமன்று; ஆணுமன்று. அந்தஅந்தக்கருமங்களுக்குத் தக்கபடி பலஜன்மங்களில் பிறக்கிறது. கர்மம்செய்வதனால் புருஷனும் ஸ்திரீயாகவும் ஸ்திரீயும் புருஷனாகவும் பிறக்கிறார். புருஷன் பெண்ணின் செய்கையைச்செய்து அந்தக்கர்மத்தினால் பெண்ணாவான்' என்றுசொன்னார். உமை, 'பகவானே! எல்லாஉலகங்களுக்குமீசுவரரே! ஆத்மா கர்மங்களைச்செய்யாவிட்டால் தேகத்தில் கர்மங்களைச்செய்வது வேறுயார்? அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்று கேட்டாள். மஹேஸ்வரர், 'பெண்ணரசியே! கர்மம் செய்பவனைக் கேள். ஆத்மா கர்மங்களைச்செய்வதில்லை. அது ப்ரக்ருதியின்குணங்களோடுசேர்ந்து எப்போதும் கர்மங்களைச்செய்கிறது. உலகத்திலுள்ளபிராணிகளின் தேகமானது கபவாதபித்தங்கள்என்னும் மூன்றுதாதுக்களினால் நிரம்பியிருப்பதுபோலவே முக்குணங்களாலும் நிரம்பியிருக்கிறது. ஸத்வம், ரஜஸ், தமஸ்என்னும் இக்குணங்கள்தாம் தேகமாயிருப்பவை. அவற்றுள், ஸத்வகுணமானது எப்போதும் பிரகாசரூபமென்று சொல்லப்படுகிறது. ரஜோகுணம் துக்கரூபமாகவிருப்பது. தமோகுணம் அறிவின்மையாகவிருப்பது. இம்முக்குணங்களினாலேதான் உலகத்தில் செய்கைகள் நடக்கின்றன. பொய்யாமை பூததயை பரிசுத்தம் நன்மையில்விருப்பம் பொறுமை அடக்கம் இவையும் மற்றும்இவ்வகையான செய்கைகளும் ஸத்வகுணத்தினாலுண்டானவையென்று சொல்லப்படுகின்றன. வேலைத்திறமை சோம்பாமை பொருளாசை விதியைநம்பாமை மனைவியின்மேல்பற்று இனிமை எப்போதும் ஐசுவர்யத்தில்ஆசை முதலியபலசெய்கைகள் ரஜோகுணத்தினாலுண்டாகின்றவை. பொய் கடுமை பிடிவாதம் அதிகப்பகை ஹிம்ஸை நிலையில்லாமை நாஸ்திகத்தனம் தூக்கம் சோம்பல் பயமுதலானபாவச்செய்கைகள் தமஸினால் உண்டாகின்றவை. ஆகையால், நல்லவையும் கெட்டவையுமாகிய கருமங்களெல்லாம் குணங்களாலானவை. ஆதலால், ஆத்மா ஆசையற்றவன், ஒன்றும்செய்யாதவன், விகாரமற்றவன்என்றறி. ஸத்வகுணமுள்ளமனிதர் புண்யலோகங்களிலும் ரஜோகுணமுள்ளவர் மானிடலோகத்திலும், தமோகுணமுள்ளவர் திர்யக்ஜாதிகளிலும் நரகத்திலும் இருப்பர்' என்றுசொன்னார். உமை, 'இந்தத்தேகம்

விழுந்தாலும் ஆயுதத்திஞல்கொல்லப்பட்டாலும் ஆத்மாவானது தானே இதைவிட்டுப்போவது எதனுல்? அதனை எனக்குச் சொல்லக் கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'சிறந்தவளே! அந்தக் காரணத்தை உனக்குச் சொல்லுவேன்; கேள். நுட்பமான புத்தியுள் ளவர்களும் இதனை நிச்சயிக்கப்போய் மயங்குகின்றனர். ஜன்மமெடு த்தபிராணிகளுக்குக் கர்மம்முடியும்போது எந்தக்காரணம்பற்றியா வது தேகத்துக்கு உபாதிநேரிடும். அதனுல், அந்தச்சரீரம்அழியும் போது ஆத்மாவானது கர்மத்தைஅநுஸரித்து அதைவிட்டுப்போ கிறது. தேகம்அழியும்போதுள்ளநோய்களிஞலும் ஆத்மா அசைவ தில்லை. கருமத்தின்பலனுள்ளவரையிலும் ஆத்மா இருக்கும். அது முடிந்தவுடன் ஆத்மா போய்விடும். ஆதிகாலந்தொடங்கி இவ்வுல கத்தில் ஆத்மாவின்கதி இவ்வாருகநிச்சயிக்கப்பட்டிருக்கிறது. தேவி யே! இதனை உனக்குச் சொன்னேன். இன்னும் என்ன கேட்கவிரு ம்புகிருய்?' என்றுகேட்டார்.

---

## இருநூற்றிருபத்தேழாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)



(உமாமஹேஸ்வரஸம்வாதம் தொடர்ச்சி; துன்புறுத்தியும் நல்லபலனை யடைவதும், நால்வகைப்பிராணிகளும், இயற்கையறிவும், கல்வி யறிவும், இறந்தபின்பிழைப்பதும், கனவுகாண்பதும்.)

உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே!, ஈஸ்வரரே! மனி தன் தான்செய்தகருமத்திற்குத்தக்கபடி நல்லபலனையும் கெட்டபல னையும் அடைகிருனென்பதுநிச்சயம். அயலாருக்குஇன்னுததுசெய் பவன் நன்மையையடையும்வகை யாது? அது ஒருஜன்மத்திலேயே உண்டாகுமா? அதனைஎனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'சிறந்த மஹிமையுள்ளவளே! மனிதர்களுடையஎண் ணத்தின்வலிமையால் அதுவுமிருக்கும். பிறர்நன்மைக்காக அவருக் குத் துன்பத்தையுண்டுபண்ணுகிறவன் ஸுகம்பெறுவான். அரசன் ஜனங்களைத்தண்டித்தும் பயமுறுத்தியும் புண்ணியத்தையடைவான். வழிதப்பிநடக்கும்சிஷ்யர்களை ஆசார்யனும் தன்வேலைக்காரரை யஜ மானனும் பயமுறுத்துவதனுலும் தண்டிப்பதனுலும் புண்ணியபல னையடைவர். சிகித்ஸைசெய்பவன் துன்பத்தையுண்டாக்குவதனுல் நன்மையையே அடைவான். யாகத்திற்காகப் பசுஹிம்ஸைசெய்பவ

னைப் பாவம்தொடராது. இவ்வாறு நல்லஎண்ணத்துடன் உபத்திரவத்தைச்செய்யும் மற்றவர்களும் ஸ்வர்க்கத்தையடைவர். அயோக்கியனைஒருவன்கொல்லப்பட்டதனால் அநேகர் ஸுகப்படுவாராயின் அவனைக்கொல்வதில் தர்மமிருக்கிறதேயன்றிப் பாவமேது? ஹிம்ஸை இல்லையென்றுநினைத்துப் பரிசுத்தமானயாககாரியத்தில் கௌரவத்தினால் பசுவைக்கொல்லுகிறவனுக்குத் தர்மம்பெரிதென்ற எண்ணம் உண்மையாகவும் பரிசுத்தமாகவுமிருப்பதனால் அந்தஹிம்ஸையைச் செய்ததனால் பாவபலம் வருவதில்லை' என்றுசொன்னார்.

உமை, 'இவ்வுலகத்திலுள்ள நான்குவகைஜந்துக்களின் அறிவு எவ்வகையாகநினைக்கப்படுகிறது? உண்டாக்கப்படுவதா? இயற்கையாலமைந்ததா? அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஶ்வரர், 'உலகமானது தாவரம், ஜங்கமமென்று இருவகைப் பொருள்களுள்ளதாகக் கூறப்படுகிறது. அவற்றிலுள்ள பிராணிகளுக்கு நாலுவகை உற்பத்திகள் உண்டு. அவற்றை வரிசையாகச் சொல்லுவேன்: அவற்றுள் கொடிகள் செடிகள் புற்பூண்டுகள் இவை [1] உத்பிஜ்ஜங்கள் என்றுசொல்லப்படுகின்றன. கொசு பேன்முதலான ஜாதிகள்எல்லாம் [2]ஸ்வேதஜங்கள். துவாரமே காதாகவுடைய பறவை முதலானபிராணிகள் [3]அண்டஜங்களாக நினைக்கப்படுகின்றன. பசுக்களையும் காட்டுமிருகங்களையும் மனிதர்களையும் [4]ஜராயுஜங்கள்என்றறி. ஆத்மாவானது இந்தநான்குஜாதிகளிலும் சேர்ந்திருக்கிறது. உத்பிஜ்ஜங்களில் ஸ்பரிசமென்னும் ஓர் அறிவுடன் ஆத்மா இருக்கிறது; ஸ்வேதஜங்களில் ஸ்பர்சம் பார்வைஎன்னுமிரண்டறிவுகளோடு [5]இருக்கிறது. அண்டஜங்களும் ஜராயுஜங்களும் ஐந்துஅறிவுகளோடு ஜீவிக்கின்றன. அன்புள்ளவளே! நிலமும்ஜலமும்சேர்வதனால் உத்பிஜ்ஜங்கள் உண்டாகின்றன. அன்புள்ளவளே! சீதமும்உஷ்ணமும் சேர்வதனால் ஸ்வேதஜங்கள் உண்டாகின்றன. வீர்யமாரத்தில்சேர்வதனால் அண்டஜங்கள் உண்டாகின்றன. சுக்லசோணிதங்கள் சேர்வதனால் ஜராயுஜங்கள் உண்டாகின்றன. ஜராயுஜங்கள் எல்லாவற்றிலும் மானிடதேகம் உத்தமம். தேவியே! இதன்பிறகு இருளுண்டாவதை ஊக்கத்துடன்கேள். இரவிலுண்டாவதுஎன்றும் தேகத்திலுண்டாவதுஎன்றும் இருவகைஇருள் உலகத்தில்உண்டு. இரவிலுண்டாகும் இருள் ஒளிகளால் அழிந்துபோகிறது. தேகத்திலுண்டான இருள் மட்டும் உலகத்திலுள்ளஒளிகள்எல்லாம்சேர்ந்தாலும் போகாது. உல

1, 2, 3, 4, ஆதிபர்வம் 57 - பக்கம் குறிப்பிற்காண்க.

5 'சரீரி' என்று பாடங்கொள்ளப்பட்டது.

கங்களைப்படைத்தவராகிய பிரம்மதேவர் அந்தத்தேகஇருளைப்போக்க வகைதெரியாமல் பெருந்தவஞ்செய்தார். அவர் தவஞ்செய்யும்போது வேதங்களும் வேதாங்கங்களும் உபநிஷத்துக்களும் உண்டாயின. உலகங்களின்நன்மையைக்கருதினபிரம்மதேவர் அவற்றைப்பெற்றபிறகு மகிழ்ந்தார். தேகத்திலுண்டாகும்கொடியஇருள் அவற்றினாலேயே ஒழிக்கப்பட்டது. 'இதுசெய்யத்தக்கது; இதுசெய்யத்தகாதது; இது சொல்லத்தக்கது ; இது சொல்லத்தகாதது' என்று நல்லொழுக்கத்தைத்தெரிவிக்கும் சாஸ்திரம் உலகத்திலிராமல்போமாயின், மனிதர்களும் பசுக்களுடன் வேற்றுமையில்லாமலே நடப்பார். யாகமுதலியவற்றைஆரம்பஞ்செய்வதும் சாஸ்திரத்தினால்தான் விதிக்கப்படுகின்றது. யாகம் பயன்படுவதனாலேதான் தேவலோகம் விருத்தியடைகிறது. பிறகு,தேவர்கள் மனிதர்கள்மேல் அன்புள்ளவராகிறார். இவ்வாறு,பூமியும் ஆகாயமும் ஒன்றுக்கொன்று நித்தியம் அபிவிருத்தியாகின்றன. ஆதலால், உலகங்களைத்தாங்குவது சாஸ்திரமென்று அறி. பிராணிகளுக்கு ஞானத்தைவிடச்சிறந்தது மூன்றுலகங்களிலுமில்லை. ஜன்மத்தில்பிறந்தஞானம் முதன்மையானது. கற்பிக்கப்படும்ஞானம் இரண்டாவதாக நினைக்கப்படுகிறது. இரண்டும் எங்கே நிரம்பியிருக்கின்றனவோ அங்கேதான் நன்மையுண்டாகும். சாஸ்திரமெல்லாம் கற்றபின்தான் ஒருவன் பயன்பெற்றவனாகிறான். அவன் தேவதைபோல மனிதர்களுள் மேன்மேலும் பிரகாசிக்கிறான். புத்தியிலுண்டாகும் அந்தச் சாஸ்திரஞானமானது காமம், குரோதம்,பயம், கர்வம்,விபரீதஞானம் இவற்றை மேகங்களைக் காற்று ஒதுக்குவதுபோல விரைவாக ஒதுக்கிவிடுகிறது. ஞானவான்கள்செய்யும்சிறியதர்மமும் பெரிதாம். ஞானமில்லாதவர்கள்செய்யும் பெரியதர்மமும் பயன்படாமற்போம். ஞானமுள்ளவன் பொருள்களின் உயர்வுதாழ்வுகளையும் உண்மையையும் அறிந்தவனாவான். அழகியகண்களையுடையவளே! இவ்வாறு சாஸ்திரஞானத்தின்பலன் எல்லாவற்றையும் உனக்குச் சொன்னேன்' என்றுசொன்னார். உமை, 'பகவானே! சிலமனிதர்களுக்குப் பூர்வஜன்மத்தின்நினைவு இருக்கிறது ; முன்ஜன்மத்தில்நடந்ததை அவர்கள் அறிகிறவர்களாகப் பிறப்பதுஎப்படி? ஐயா! தேவரே! மனிதர்களுக்குள்ள இந்தவிஷயத்தை எனக்குத் தெளிவாகச்சொல்லும்' என்றுகேட்டாள். மஹேஶ்வரர், 'அந்தஉண்மையை உனக்குச்சொல்வேன்; ஊக்கத்துடன்கேள். எந்தமனிதர்கள் திடீரென்று இறந்து உடனே திரும்பவும்ஜனிக்கின்றனரோ அவர்களுக்கு முந்தியஜன்மத்தின்நினைவு சிறிதுகாலமிருக்கும். ஆதலால், அந்தஞானத்துடன்

உலகத்தில்பிறந்து [1]ஜாதிஸ்மராராகிறார். அவர்கள் வளரவளர அவ்வறிவு கனவுபோல் மறைந்துபோகிறது. அறிவானது கல்வியில்லாதவர்களுக்குப் பரலோகம்உண்டென்கிறநம்பிக்கைக்குக் காரணமாகிறது' என்றுசொன்னார். உமை, 'பகவானே! சிலமனிதர்கள் இறந்தபிறகும் அதேதேகத்தில்திரும்பிவருகிறதைக்காண்கிறோமே; அதுஎன்ன?' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'சிறந்தவளே! அதன்காரணத்தை உனக்குச் சொல்வேன்; கேள். பிராணிகள்மிகுதியாயிருப்பதனால் அவர்கள் யமதூதர்களினால்கொல்லப்பட்டு உயிர்பிரியும்போது அவர்களுக்கும் அனேகருக்கும் பேர்கள்ஒன்றாயிருப்பதனால் பகுத்தறிவின்றி மாறாட்டமாக மற்றொருவனைக் கொண்டுபோகின்றனர். யமன்ஒருவன்மட்டும் அவரவர்புண்ணியபாவங்கள் எல்லாவற்றையும் மாறுபடாமல் அறிந்திருப்பவன். ஆதலால், அவர்கள் ஸம்யமனிஎன்னும் யமபட்டணத்திற்குப்போனபிறகு யமனால் விடப்பட்டுத் தமதுமிச்சமுள்ளகர்மத்தைஅனுபவிப்பதற்கு மறுபடியும் வருகின்றனர். தமதுகர்மம்முடியாவிடின் மனிதர் திரும்பிவரத்தானேவேண்டும்' என்றுசொன்னார். உமை, 'பகவானே! மனிதர்கள் தூங்கினவுடன் கனவுகாண்கின்றனர். அது இயற்கையா? வேறுகாரணமா? அதை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'தூங்கினவர்களின் மனத்தின்செய்கை கனவென்றுசொல்லப்படுகிறது. சஞ்சரிப்பதாகியமனம் நடந்ததையும் வருவதையும் அறிகிறது. ஆதலால், மனிதர்களுக்குக் கனவுகாண்பது வருவதற்குக்குறிப்பாகவுமிருக்கும். தேவியே! இதனை உனக்குச்சொன்னேன். இன்னும் என்னகேட்கவிரும்புகிறாய்?' என்று வினவினார்.

---

## இருநூற்றிருபத்தெட்டாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேச்வரஸம்வாதம்தொடர்ச்சி; தெய்வம், முயற்சி, ஆத்மாகர்ப்பத்தில்பிரவேசிப்பதுமுதலியன.)

உமை, 'பகவானே! எல்லாப்பிராணிகளுக்கும் ஈசுவரரே! உலகத்தில் தொழில்செய்யும் வழியில் எல்லாம் தெய்வத்தாலேயே நடக்கின்றனவென்று சிலர் நிச்சயிக்கின்றனர். மற்றவர்கள் முயற்சியைநோரா

---

[1] பூர்வஜன்ம ஞானமுள்ளவர்.

கக் காண்பதனால் முயற்சியினாலேதான் எல்லாம்நடப்பவையென்றுநிச்சயிக்கின்றனர். இவ்விரண்டுகொள்கைகளின் வேறுபாட்டினால் என் மனம் ஸந்தேகப்படுகிறது. மஹாதேவரே! உண்மையைச் சொல்லும். எனக்குக் கேட்கவிருப்பமிருக்கிறது' என்றுகேட்டாள்.

மஹேஶ்வரர், 'அந்தஉண்மையை உனக்குச் சொல்வேன். நீ ஊக்கத்துடன்கேள். தேவியே! உலகத்தில் நல்லசெய்கையையும் கெட்டசெய்கையையும் மனிதர் செய்கிறார். மனிதர்களிலேயே அந்தக்கருமங்கள் இருவகையாகக் காணப்படுகின்றன. அதனைக் கேள். அவ்விருவகைகளில் முன்செய்யப்பட்டதொன்று; இப்போது செய்யப்படுவது மற்றொன்று. நமது காட்சிக்குப்புலப்படாதகர்மம் எதுவோ அதுதான் தெய்வமென்று சொல்லப்படுகிறது. தன்கருவிகளினால் [1]பிரத்யக்ஷமாகச்செய்யப்படும்கர்மம் மானுஷமென்றுசொல்லப்படுகிறது. மானுஷமென்பது செய்கைமட்டுமே. தெய்வத்தினாலேதான் பலன் நிறைவேறுகிறது. இவ்வாறு மனிதர்களிடமிருக்கும் அவ்விருவகைக்கருமங்களும் முயற்சிஎன்றேஅறி. உலகத்திலுள்ளதெய்வச்செயல் மனுஷ்யச்செயல் என்பவற்றைப்பற்றிச்சொல்வேன். பயிர்த்தொழிலில் உழுவது விதைப்பது நாற்றுநடுவது அறுப்பதுமுதலியசெய்கைகள்முயற்சியென்றுசொல்லப்படுகின்றன. இவை தெய்வத்தினால் பலியாதிருத்தலுமுண்டு. முயற்சியின்பிழையுமுண்டு. நல்லமுயற்சியினால் புகழ்ச்சியும் கெட்டமுயற்சியினால் இகழ்ச்சியும் உண்டாகும். தேவியே! உலகநடை ஆதிதொடங்கி இவ்வாறுநடக்கிறது' என்றுசொன்னார்.

உமை, 'பகவானே! எல்லாஉலகங்களுக்கும் ஈசுவரரே! தேவர்களாலும் அஸுரர்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவரே! ஆத்மாவானது எப்போதும் கர்மத்தின்அடியாகக் கர்ப்பத்தில்பிரவேசிப்பது எப்படி? மஹாதேவரே! அதைஎனக்குச்சொல்லும். அதுதான் மிக்கரகஸ்யமாகநினைக்கப்படுகிறது' என்றுகேட்டாள். மஹேஶ்வரர், 'பெண்மணியே! அன்புள்ளவளே! அதனை முழுதும்கேள். அதுரகஸ்யங்கள் எல்லாவற்றிலும் மேலானது. தேவரகஸ்யத்தைக்காட்டிலும் ஆத்மரகஸ்யம் பெரிதென்று நினைக்கப்படுகிறது. தேவாஸுரர்கூடஆத்மா போவதையும் வருவதையும்அறியார். ஆத்மா நுட்பமாயிருப்பதனாலும் எங்கும்பொருந்தியிராமையினாலும் அதனை ஜனங்கள்காண முடியாதன்றோ? மாயைகளுள் ஆத்மமாயையே பெரியமாயையென்று எப்போதும் நினைக்கப்படுகிறது. ஆத்மமாயையினாலேதான்

1 'விஹிதம்' என்று பாடங்கொள்ளப்பட்டது.

அந்த [1]ஆத்மா நால்வகைஜாதிகளையும் சேருவது. புணர்ச்சி, சுக்லம், சோணிதம், தெய்வம்இந்நான்கும் அதற்குக்காரணங்கள்.சிறந்தவளே! சுக்லசோணிதங்களின்சேர்க்கை எப்போது நேரிடுகிறதோ அப்போது ஆத்மா கர்ப்பத்தில் பிரவேசிக்கிறது. இது அண்டஜங்களுக்கும் ஜராயுஜங்களுக்கும்தான். இப்படி சுக்லசோணிதம்சேரும்போது ஆத்மா கர்ப்பரூபமாகிறது. சுக்லசோணிதம்இரண்டும் தோய்ந்து கட்டியானஉருவமாகிறது; அதன்பிறகு மூட்டமுள்ள மாமிசக்கட்டியாகிறது. அங்கங்களின்பிரிவு உண்டானபோது அதன் கர்மம் காலக்கிரமத்தினால் அதைச் சேர்கிறது. இவ்வாறு கர்ப்பம் விருத்தியாக ஆக அதனுடன்கூடவே கர்மத்துடன்சேர்ந்த ஆத்மா விருத்தியாகிறது. அழகானஒளியுள்ளவளே! நீ என்னைக்கேட்கும் ஆத்மகதி இவ்வாறென்றறி. பயிரை நடுவது அறுப்பதுமுதலான காரியங்கள் முயற்சியென்றுநினைக்கப்படுகின்றன. காலத்தில் மழை பெய்வது வேர்பிடிப்பது முளைப்பது கதிர்பிடிப்பதுமுதலியவை யெல்லாம் தெய்வமென்று நினைக்கப்படுகின்றன. ஐந்துபூதங்களுடையநிலையும் க்ரஹங்கள்முதலியவை ஆகாயத்தில்ஸஞ்சரிப்பதும் மற்றும்இவ்வகையாக மனிதர்புத்திக்கெட்டாதவையும் கருவிகளினால் செய்யப்படாதவையுமான நல்லவைதீயவையனைத்திற்கும் தெய்வமே காரணம். மனிதன் செய்யக்கூடியதெல்லாம் முயற்சிஎன்று நினைக்கப்படுகிறது. இவற்றில் ஒன்றினால்மட்டும் காரியம் நிறைவேறுவதில்லை. அன்புள்ளவளே! முயற்சி தெய்வம்இரண்டும்சேர்ந்திருப்பவை. செய்கைகளில் அவ்விரண்டும் சீதோஷ்ணங்கள்போலச் சேர்ந்திருக்கின்றன. தெரிந்தவன் அவ்விரண்டனுள் முயற்சியை முதலில் தொடங்கவேண்டும். ஒருவன் தன்முயற்சியினால் (ஒருகாரியத்தைச்) செய்யாமல் கீர்த்தியடையான். நிலத்தைத்தோண்டுவதனால் தண்ணீரையும் அரணியைக்கடைவதனால் அக்நியையும் அடைவது போலத் தெய்வத்தின்பலன் முயற்சியைப் பொறுத்திருக்கிறது. முயற்சிசெய்யாதமனிதன் தெய்வத்தின்பலனை அடைவதில்லை. ஆதலால், எல்லாக்காரியங்களும் தெய்வத்தினாலும் முயற்சியினாலும் செய்யப்படுகின்றவை. அஸுரர்களும் ராக்ஷஸர்களும் உலகத்தை அழிக்கநினைக்கின்றனர். மாமிசத்தையே பக்ஷிக்கும் அந்தப்பாவிகள் தெய்வத்தைப் பார்க்கிறதில்லை. தெய்வகாரியங்களெல்லாம் மறைக்கப்பட்டிருக்கின்றன. தேவர்களின்மாயை யாருக்குந்தெரியாதன்றோ? தேவியே! அந்தமுக்கியமானரகஸ்யத்தை நான் உனக்குச் சொல்

[1] மற்றவர்அறியக்கூடாத ஆத்மாவின்செய்கை.

வேன். ஆதிகாலத்தில் மனிதர்களனைவரும் நல்வினைதீவினைகளைச் செய்து இவ்வுலகம்அவ்வுலகம் இரண்டின்நடைகளையும் அறிந்தே பலன்களை அனுபவித்தனர். வேறுதேசத்திற்குப்போனமனிதர்கள் தாம் முன்தேசத்தில் செய்தசெய்கையை எப்படியறிவார்களோ அப்படியே இறந்தபின்னும் முன்தேகத்தில்செய்தகருமத்தை அறிந்திருந்தனர். உலகம் இவ்வாறுஇருந்தபோது எல்லாரும் தர்மத்தையே விரும்பியிருந்தனர். அப்போது வெகுசீக்கிரத்தில் ஸ்வர்க்கம் நிரப்பப்பட்டுப்போயிற்று. தேவர்களுக்கு நெருக்கத்தைக்கண்ட பிரம்மதேவர், 'மனிதர்கள் ஸ்வர்க்கத்தில் பிரவேசித்துக்கொண்டேயிருக்கின்றனரே; இவர்கள் எப்படிஸஞ்சரிப்பர்?' என்றுநினைத்தார். இவ்வாறுநினைத்தவுடன், மனிதர்களை மயங்கச்செய்தார். அதுமுதல் அம்மனிதர்கள் முன்வினையையறிவதில்லை. அதேகாலத்தில் மனிதர்களிடத்தில் காமக்குரோதங்களையும் சேர்த்தார். அவற்றினால் கெடுக்கப்பட்டமனிதர்கள் ஸ்வர்க்கலோகத்திற்குப் போகவில்லை; முன்செய்தவினைதெரியாமையினால் காமக்குரோதங்களால் உபத்திரவிக்கப்பட்டு முன்வினை இல்லைஎன்றுநினைத்து மேன்மேலும் பாவங்களைச் செய்தனர்; தம்லாபத்திற்காகத் தர்மகாரியங்களையும் பரலோகத்தின்பயத்தையும் மறந்து செய்யத்தகாதபெரும்பாவங்களையும் செய்தனர். அன்புள்ளவளே! உலகம் இவ்வாறானபோது மனிதர்களுக்கும் தேவர்களுக்கும் அழிவுண்டாக்கத்தக்க அஜ்ஞானமுண்டாயிற்று. பாவங்களையேசெய்யும்பிராணிகளினால் நரகங்கள் நிரப்பப்பட்டுப்போயின. உலகத்தைப்படைத்த பிரம்மதேவர் அவர்களைப் பார்த்து உலகங்களின்நன்மைக்காக அந்தவிஷயத்தைப்பற்றித் திரும்பவும்நினைத்தார். 'உலகத்தில் பாவபுண்ணியங்கள் ஸமமாயிருப்பது எப்படி?' என்று அவர் தவத்தினாலும் ஞானத்தினாலும் பலமுறை ஆராய்ந்து பரலோகம் அறிவுக்கெட்டுவதாகவும் கண்ணுக்கெட்டாததாகவும் செய்தார்' என்று சொன்னார்.

உமை, 'பகவானே! ஒருவன் இறந்ததும் பிறந்ததாக நினைக்கப்படுகிறான். அப்படியே பிறப்பதைக் காண்கிறோம். அங்கே ஆத்மா எப்படியிருக்கும்? பகவானே! கர்ப்பம்ஆரம்பிக்கும்போதே ஆத்மா சேருகிறதா? தேவரே! இது எனக்குச் சந்தேகம். இதை நீர் தீர்க்கக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஶ்வரர், 'அந்தஉண்மையை உனக்குச்சொல்வேன்; ஊக்கத்துடன்கேள். வேறு ஓர்ஆத்மா கர்ப்பத்திற்சேர அங்கேயே இறந்துபோகிறான். உடனே [1] மற்றொரு ஆத்மா அந்தச்சரீரத்தில்பிரவேசிக்கப் பூமியில் பிறக்கிறான். எல்

1 'புநராய:' என்று பாடங்கொள்ளப்பட்டது.

லாருக்குமே உண்மைதெரியாது. தெய்வத்தினால் அது உண்டாகும். சிறந்தவளே! பெற்றவளின் ஆறுதலுக்காகவும் பிராணிகளுக்குத் தெரியாமலிருப்பதற்காகவும் அவ்விரண்டு ஆத்மாக்களும் ஸமமான கருமம்செய்திருப்பதனாலும் அவ்வாறு நடப்பதென்றுஅறி. சிலர் நரகத்தையனுபவித்தபிறகு ஜன்மத்தைவிரும்பிப் [1]போகிறார்களன்றோ? பிறப்புக்கும் இறப்புக்கும் இடையில் [2]ஸாம்யாமிகை என்னும்மாயை இருக்கிறது. தேவியே! இதையும் உனக்குச் சொன்னேன். இன்னும் என்னகேட்கவிரும்புகிறாய்?' என்றுசொன்னார். உமை, 'பகவானே! எல்லாலோகங்களுக்குமீசுவரரே! உலகங்களால் பிரார்த்திக்கப்படுகிறவரே! விருஷபக்கொடியுடையவரே! 'கருமங்களை அனுபவிக்கும்ஆத்மா என்பதில்லை. இறந்துபோனபிராணி பிறப்பதில்லை. செடிக்குக்காயுண்டாவதுபோல எல்லாம் இயற்கையினாலுண்டாகின்றன. கடலில் அலைகள் எப்படிஎழும்புகின்றனவோ அப்படித்தான் உலகத்தில் உருவங்கள் உண்டாகின்றன. ஆதலால், தவம் தானமுதலியகருமங்களும் பயனற்றவையாகக் காணப்படுகின்றன. ஆதலால், மறுபிறப்பு இல்லை' என்றுசிலர் நிச்சயிக்கின்றனர். மற்றும் சிலர் பாராதவைகளைச்சொல்வதைக்கேட்டும் தாம்கண்ணால்பார்க்கமுடியாமலிருப்பதையறிந்தும், 'இவையெல்லாம் இல்லை; இல்லை' என்று ஸந்தேகத்திலிருக்கின்றனர். இந்தக்கொள்கைவேறுபாடுகளில் எது உண்மையோ அதை எனக்குச் சொல்லக்கடவீர். நீங்கள்சொல்வதெல்லாம் உலகத்தில் உண்மையானவை' என்றுகேட்டாள். உமாதேவியானவள் இந்தக்கேள்வியைக்கேட்கும்போது அந்தச்சபை மறுமொழிகேட்க ஆவல்கொண்டு ஒரேமனமாயிருந்தது. மஹேஸ்வரர், 'சிறந்தமகிமையுள்ளவளே! நாஸ்திகர்கள் எதுசொல்லுகிறார்களோ அது உலகத்திலில்லை. இதுதான் சாபத்தினால்கெட்டுச் சாஸ்திரங்களைப்பகைப்பவரின் மதம். நான் உனக்கு முன்னமேசொன்னபடி சாஸ்திரங்களிற்சொன்னவிஷயங்கள்எல்லாம் கண்ணால் காணப்பட்டவையே. அந்தக்காலந்தொடங்கி, கற்றவர்கள் சாஸ்திரத்தைக்கொண்டு உறுதிஎன்னும்சிறந்தகத்தியினால் மனிதர்களின்விருப்பங்கள் என்னும்தாள்களை வெட்டிக் கர்மங்களின்பலனைக்காண்பதற்கு ஸ்வர்க்கத்திற்குப் போய்க்கொண்டுதானிருக்கின்றனர். ஆதலால், உலகத்தில் சிரத்தையின்பலன் பரலோகத்தில் மிகப்பெரிதாகும். தம்

---

1 அவர்களும் தற்செயலாய் அந்தக்கர்ப்பத்தில் சேர்வதுண்டு என்பது.

2 அந்தமாயைதான் இறந்தவன்சரீரத்தின்ஆத்மாவை மற்றொருசரீரத்தில் பிரவேசிக்கச்செய்வது.

நன்மையைக்கருதுகிறவர்களுக்குப் புத்தியும் சிரத்தையும் அடக்கமும் காரணங்கள். ஆதலால், ஸ்வர்க்கம்போகிறமனிதர்கள் சிலர்தாம். மற்றவர்களுக்கு இம்மூன்றுகாரணங்களும்சேராமையினால் அவர்கள் நாஸ்திகஎண்ணங்கொண்டனர். சாஸ்திரத்தைப்பகைப்பவர்களும் தாம்பிடித்ததைவிடாதவர்களுமாகிய மூர்க்கர்களானநாஸ்திகர்கள் அனுஷ்டானமில்லாமலும் அவர்களின்அன்னம் யாராலும் புஜிக்கப்படாமலும் தாழ்ந்தகதிக்குப் போகின்றனர். மறுஜன்மம் இருக்கிறது, இல்லைஎன்னும்விஷயத்தில் விரிவான அறிவுள்ளவரும் மயங்குகின்றனர்; எவ்வளவு யுக்திவாதங்கள் நாள்தோறும்செய்தாலும் அதனை யறிவதில்லை. இது பிரம்மாவினால்உண்டாக்கப்பட்டமாயை; அதனை அறியத் தேவராலும் அஸுரராலும் முடியாது. உலகத்தில் ஸ்வல்பபுத்தியுள்ளமனிதர்கள் அறியநினைத்தால்அறிவதுஎது? தேவியே! உள்ளத்தில்ஊன்றின சிரத்தையினால்மட்டுமே சாஸ்திரத்திற் சொல்லியிருப்பதெல்லாம் உள்ளதுஎன்றே நினைக்கவேண்டும். அதனால் நன்மைபெறலாம். தேவியே! மற்றத் தேவரகஸ்யங்களிலும் யுக்தி பயன்படாது. அந்தவிஷயங்களில் தன்ஹிதத்தைக்கருதுகிறவன் காதுகண்களில்லாதவன்போல நடந்துகொள்ளவேண்டும். தேவியே! ரிஷிகளுக்கும்தெரியாத இந்தஉலகநன்மையை உனக்குச் சொன்னேன்' என்றுசொன்னார்.

---

## இருநூற்றிருபத்தோன்பதாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேச்வரஸம்வாதம் தொடர்ச்சி; பிராணிகள் யமலோகம்போவதுமுதலியன.)

உமை, 'பகவானே! எல்லாஉலகங்களுக்கும்ஈசுவரரே! திரிபுரமழித்தவரே! சங்கரரே! யமதண்டனைகள் எப்படிப்பட்டவை? யமதூதர்கள் எப்படிப்பட்டவர்? இறந்தபிராணிகள் யமலோகத்திற்குப் போவதெப்படி? யமனுடையகிருகம் எப்படிப்பட்டது? அவன் பிரஜைகளைத்தண்டிக்கும்வகை யாது? மஹாதேவரே! பிரபுவே! இவற்றையெல்லாம் யான்கேட்கக் கருதுகிறேன்' என்றுகேட்டாள்.

மஹேச்வரர், 'சிறந்தவளே! தேவியே! உன்மனத்திற்குப் பிரியமானவற்றையெல்லாம் சொல்லுகிறேன்; கேள். 'சிறந்தவளே! தென்திசையில் யமனுடையகிருகம் பெரிதாயிருக்கிறது. அது விசித்திர

மாகவும் அழகாகவும் அனேகம்பொருள்கள் அமைந்ததாகவும் பித்ரு தேவதைகளாலும் [1]பிரேதர்களின்கூட்டங்களாலும் யமதூதர்களாலும் கர்மங்களில் அகப்பட்ட பலபிராணிக்கூட்டங்களாலும் நிரம்பியிருக்கிறது. உலகத்தின்நன்மையில்ஊக்கமுள்ளயமன் தண்டித்துக்கொண்டு எப்போதும் அங்கே இருக்கிறான். அவன் தன் உள்ளத்தினால் பிராணிகளின்நல்வினை தீவினைகளை எப்போதும் அறிகிறான். அங்கிருந்துகொண்டு எல்லாவிடங்களிலுமுள்ளபிராணிக்கூட்டங்களையும் நினைத்தவுடன் ஸம்ஹரித்துக்கொண்டிருக்கிறான். அவனுடைய மாயா ரூபங்களானபாசங்கள் தேவாஸுரர்களாலும் அறியப்படுவதில்லை. அவனுடையபெரியசரித்திரத்தை வேறுமனிதனெவன் [2]அறிவான்? இவ்வாறுவஸிக்கும் யமனிடத்திற்குக் கர்மமுடிந்தபிராணிகளைக் காரணம்பற்றிக்கிளம்புகிறவரான தூதர்கள் (வியாதிமுதலிய) ஏதோ ஒருகாரணத்தினால் பிடித்துக்கொண்டுபோகின்றனர். உலகத்தில் பிராணிகள் தாம்செய்யும்கர்மத்தினால் உத்தமமாகவும் அதமமாகவும் மத்தியமமாகவுமிருக்கின்றன. அவைகளைத் தகுதியின்படி எடுத்து யமனிடம் கொண்டுபோகின்றனர். தர்மிஷ்டர்களை உத்தமர்கள் என்றறி. அவர்கள் தேவர்கள்போல ஸ்வர்க்கத்திலிருப்பவர்கள். கர்மத்தினால் மூவுலகங்களிலும் ஜனிப்பவர்கள் மத்தியமர்கள்என்று நினைக்கப்படுகின்றனர். திர்யக்ஜாதியில்பிறப்பவரும் நரகம்போகிறவரும் மனிதர்களில் அதமர்கள். இறப்பவர்எல்லாருக்கும் மூன்று வகைமார்க்கங்கள் அறியப்பட்டிருக்கின்றன. அவை, ரமணீயம் நிராபாதம் துர்த்தர்சம்என்னும்பெயருள்ளவை. அவற்றுள் ரமணீயமென்னும்மார்க்கமானது கொடிகளும்கொடிமரங்களும்நிரம்பி விளக்கி ஜலம்தெளித்துப் பூமாலைகளால் அலங்கரிக்கப்பட்டும் தூபங்கள் போடப்பட்டும் போகிறவர்களின்மனத்தைக்கவர்கிறதாகவும் போகிறவர்களுக்கு இனிமையான காற்றுள்ளதாகவும் இருக்கும்; நிராபாதமென்னும்மார்க்கமானது ஒளியோடு நன்றாகச்செய்யப்பட்டிருக்கும். மூன்றாவதாகிய துர்த்தர்சம்என்னும் மார்க்கம் துர்க்கந்தமுள்ளதாகவும் இருள்மூடியதாகவும் கற்களும்நாய்ப்பற்களும்மிகநிரம்பிக் கரடுமுரடாகவும் பூச்சிபுழுக்கள் நிறைந்ததாகவும் போகிறவருக்கு நடக்கமிகக்கஷ்டமாகவுமிருக்கும். வெளுத்தபுன்னகையுள்ளவளே! உத்தம மத்தியமஅதமர்களை மரணகாலத்தில் எப்போதும் யமதூதர்கள் இம்மூன்றுவழிகளாலே அழைத்துக்கொண்டுபோவது. அதை

1 ஒருவகைப் பேய்.

2 'வேதாஸ்ய' என்ற பாடங்கொள்ளப்பட்டது.

என்னிடம் கேள். உத்தமர்கள் இறந்துபோகுங்காலத்தில் அவர்களை யமதூதர்கள் சிறந்தஉடுப்புஉடுத்துவந்து ஸுகமாக எடுத்துக்கொண்டு ரமணீயமென்னும்மார்க்கத்தினால் போவர்' என்றுசொன்னார்.

உமை, 'பகவானே! தேகம்விட்டதும் ஒன்றிலும்பற்றாததும் காட்சிக்கு அகப்படாததுமாகிய ஆத்மாவைஎடுத்து யமனருகில் கொண்டுபோவது எப்படி?' என்றுகேட்டாள். மஹேசுவரர், 'பெண்ணரசியே! அதையெல்லாம் கேள், அன்புள்ளவளே! கர்மவசியம் போகவசியம் துக்கவசியம்என்று மூன்றுவகைக்காரணதேகங்கள் உண்டு. கர்மவசியம்என்பது மானிடதேகம். இரண்டாவது போகவசியமென்பது தேவலோகத்திலுள்ளதேகம். மூன்றாவது மாயையினால் உண்டாக்கப்பட்ட [1]யாதனாவசியம்என்னும்தேகம். யாதனாவசியம் என்னும்தேகம் யமலோகத்தில்தவிர மற்றெங்கும்காணப்படுவதில்லை. பெண்ணரசியே! யமதூதர்கள், இறந்துபோனபிராணிகளின் ஆத்மாக்களுக்கு யாதனாவசியம்என்னும் தேகங்களைச்சேர்த்து மாயையினால் அவர்களை யமலோகத்திற்குக் கொண்டுபோகின்றனர்; மத்தியமர்களைப் போர்ச்சேவகன்வேஷத்துடன் இரண்டாவதாகியபிராபாதம்என்னும் மார்க்கத்தினால் கொண்டுபோகின்றனர். அதமர்களைச் சண்டாளவேஷத்துடன் பிடித்துப் பயமுறுத்திஅடித்துப்பாசங்களினால்கட்டி இழுத்துத் துர்த்தர்சம்என்னும்வழியினாலே கொண்டுபோகின்றனர். மூன்றுவகைமனிதர்களை இம்மூன்றுவகைகளாக எடுத்து யமலோகத்திற்குக் கொண்டுபோகின்றனர். சிறந்தமகிமையுள்ளவளே! அங்கே ஸபையில் மந்திரிகளோடு தர்மாஸனத்தில் உட்கார்ந்து தன் ஒளியினால் பிரகாசித்துக்கொண்டிருக்கும் யமதர்மராஜனுக்கு யமதூதர்கள் அவர்களைத்தெரிவித்துக் காண்பிக்கின்றனர். யமன் சிலரைப்பூஜித்தும் சிலரைத்தண்டித்தும் சிலருடையநல்வினை தீவினைகளைக்கேட்டும் அநேகமாயிரவரால்துதிக்கப்பட்டும் எப்போதும் அங்கேஇருக்கிறான். அங்கேபோனவர்களில் உத்தமர்களை யமன் முறைப்படிபூஜித்து அழைத்து நல்வரவையும்க்ஷேமத்தையும் விசாரித்து அவர்களின்கர்மத்தை எடுத்துரைத்து அதற்குத்தக்கலோகத்தைக் கட்டளையிடுகிறான். இவ்வாறு யமனால்விடைகொடுக்கப்பெற்றபின் அவர்கள் ஸ்வர்க்கத்திற்குப் போகின்றனர். நடுத்தரமானவர்களின் கர்மங்களை யமன் ஸரிவரக்கேட்டு, 'இவர்கள் மானிடர்களிலேயே பிறக்கட்டும்' என்று அவர்களுக்குக் கட்டளையிடுகிறான். பாசங்களினால்கட்டப்பட்டுப்போன அதமர்களை யமன் பார்ப்பதேயில்லை.

---

[1] இதுதான் துக்கவசியமென்பது.

சண்டாளரைப்போலக் கொடியவராகக்காணப்படும் யமதூதர்கள் யமதர்மராஜனுடைய கட்டளையினால் அவர்களைத் துன்பப்படுத்துகின்றனர். அவர்களை வெட்டியும் குத்தியும் இங்குமங்கும்இழுத்தும் வைதும் ஒருவரோடொருவரை மோதியும் குழிகளில் குப்புறத் தள்ளுகின்றனர். அன்புள்ளவளே! ஸம்யாமினிகள்என்னும்பாறைகள் அவர்களின்தலைகளில் விழுகின்றன. இரும்புமுகமுள்ளவையும் மிகக்கொடியவையுமான கழுகுக்கூட்டங்கள் அவர்களைப் பக்ஷிக்கின்றன. அவர்களில் சிலரைக் கொடியஅஸிபத்திரவனத்தில் நடத்துகின்றனர். அங்கே கூரானபற்களுடன் நாய்கள் சிலரைக் கடிக்கின்றன. அங்கே மூத்திரமும்ரத்தமும் ப்ரவாகமாகப்போவதும் அருவருக்கத்தக்கதும் முதலைகள்நிரம்பினதும் இறங்கமுடியாதஆழமுமாகிய வைதரணிஎன்னும்நதி இருக்கிறது. யமதூதர்கள் அவர்களை அதில்முழுக்காட்டித் தாகத்திற்குத் தண்ணீர்குடிப்பிக்கின்றனர். அவர்களில் சிலரை முள்ளிலவமரங்களில் ஏற்றுகின்றனர். அங்கே சிலர் செக்குயந்திரங்களில் எள்ளைப்போல அரைக்கப்படுகின்றனர். பாவம்செய்தவர்கள் தணல்களில்எரிக்கப்பட்டும் குடங்களுள்மூடிவேகவைக்கப்பட்டும் மணல்களில் வறுக்கப்பட்டுமிருக்கின்றனர். பாவம்செய்தவர்கள் வாள்முதலியஆயுதங்களினால் மரங்கள்போலறுக்கப்பட்டும் துண்டுதுண்டாகவெட்டப்பட்டும் சூலங்களாலும் சிறிய ஊசிகளாலும் குத்தப்பட்டுமிருக்கின்றனர். யமதூதர்கள் தண்டிக்கும்போது, 'நீ இன்னபாவம்செய்தாய். அதற்கு இது தண்டனை' என்றுசொல்லிக் கோஷிக்கின்றனர். அந்தப்பிராணிகள் இவ்வாறு 1 யாதனைவசியங்கள்என்னும் சரீரங்களினால் துன்பத்தையடைந்து அந்தத்துன்பத்தைத் தங்கள்பாவத்தினால் வந்ததுஎன்றுநினைத்து ஸகிக்கின்றனர். கதறியும் அழுதும் எவ்வகையிலும் அவர்கள் விடப்படுவதில்லை; தாங்கள்செய்தபாவத்தைநினைத்து அங்கே மிகப்பரிதபிக்கின்றனர். பாவம்செய்தவர்கள் இப்படிப்பட்டபலதண்டனைகளை அனுபவிக்கின்றனர். நரகங்களிற் பலமுறை துன்பங்களினால் பீடிக்கப்படுகின்றனர். சிலர் அங்கே துன்பங்களையனுபவித்துப் பாவத்தினின்று விடுபடுகின்றனர். அந்த யாதனைகள் மனிதர்களின்பாவத்தைப் போக்குகின்றவையாக நினைக்கப்படுகின்றன. மிகுதியாகக் காய்ச்சப்பட்ட உலோஹம்போல மனிதர்கள் அழுக்கற்றவராவார்' என்றுசொன்னார்.

1 'யாதநாவசை:' என்றுபாடங்கொள்ளப்பட்டது.

## இருநூற்றுமுப்பதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேச்வரஸம்வாதம் தொடர்ச்சி; ஐந்துவகை நாகங்கள்முதலியன.)

உமை, 'பகவானே! மஹேச்வரரே! அந்தநரகங்களில் அவர்கள் தண்டிக்கப்படுவது எப்படி? அந்தக்கொடியநரகங்கள் எத்தனை? அவை எப்படிப்பட்டவை?' என்றுகேட்க, மஹேச்வரர் சொல்லலானார்.

'பெண்ணரசியே! அவற்றையெல்லாம் கேள். அந்தநரகங்கள் ஐந்தாகச்சொல்லப்படுகின்றன. அவை பாவம்செய்தவர்களுக்காகப் பூமியின்கீழ்ப் படைக்கப்பட்டவை; கொடியவை. அவற்றுள் முதலாவது ரௌரவமென்னும்நரகம். அது நூறுயோஜனைநீளமும் அகலமுமுள்ளது; இருள்மூடியது; பாவிகளைப்பீடிப்பது; மிகத்துர்க்கந்தமுள்ளது; கொடியது; பயங்கரமானபுழுக்கள்நிரம்பினது; மிக்கபயங்கரமானது; சொல்லக்கூடாதது; எல்லாவிடங்களிலும் பிரதிகூலமாயிருப்பது. பாவிகள் புழுபூச்சிகளினால்கடிக்கப்பட்டு விஷ்டையின் துர்க்கந்தத்தைஅடைந்து வெகுகாலம் அங்கே நிற்கின்றனர். அங்கே படுப்பதுமில்லை; உட்காருவதுமில்லை; அந்தஉலகத்திலிருக்கும் காலமெல்லாம் இப்படி நடுங்கிக்கொண்டே இருக்கின்றனர். அந்நரகத்தில் யமதூதர்களின்பாதைகளினால்உண்டாகும்துன்பம் இதற்குப்பதின்மடங்குஅதிகமாக நினைக்கப்படுகிறது. அழகானகண்களையுடையவளே! அங்குள்ள துயரம் அளவற்றதாக நினைக்கப்படுகிறது. கதறிக்கொண்டும் அழுதுகொண்டும் அங்கே துன்பங்களை அனுபவிக்கின்றனர். துயரத்தைவிடுவித்துக்கொள்வதற்காக ஓடுகின்றனர். அதைக் கவனிப்பவன் யாருமில்லை. துக்கத்திற்குவிடுதலும் துக்கத்தைஅறிபவனும் அங்கே கிடைப்பதில்லை. அன்புள்ளவளே! மஹாரௌரவம் என்கிறபெயருள்ளது இரண்டாவதுநரகம். அது அளவிலும் துன்பத்திலும் முன்சொன்னரௌரவத்தைக்காட்டிலும் இரண்டுமடங்கு அதிகமென்றறி. அவற்றுள் மூன்றாவதுநரகம் கண்டகாவனம் என்னும்பெயருள்ளது. அது துக்கத்திலும் அளவிலும் முன்னிரண்டு நரகங்களுக்கும் இரண்டுமடங்கு அதிகம். மஹாபாதகங்கள்செய்த கொடியவர்கள் அந்தநரகத்திற்போவார். அன்புள்ளவளே! அக்கிகுண்டம்என்றுசொல்லப்படுவது நான்காவதுநரகம். இது அந்தக் கண்டகாவனத்திற்கும் இரட்டித்தது; அதைப்போலவே ஸ்வகமில்

லாதது. அமானுஷம்என்னும் (ஐந்தாவது) நரகம் அக்நிகுண்டத்தைப்பார்க்கிலும் மிகப்பெருந்துன்பமுள்ளது. பாவம்செய்தவர்கள் அந்த அந்தநரகங்களிலேயே துக்கங்களையநுபவிக்கின்றனர். அந்த அமானுஷநரகத்திலுள்ள துக்கம் சொல்லமுடியாதது; ஸகிக்கமுடியாததாக இடைவிடாமலிருக்கும். ஐந்துஇந்திரியங்களும் [1]பாதைப்படுவதனால் அது பஞ்சகஷ்டம்என்றும்சொல்லப்படுகிறது. பாவம் செய்தவர்கள் பலவிடங்களில் கஷ்டப்படுகின்றனர். மனிதர்கள் தாங்க முடியாத துன்பத்தைப் பஞ்சபூதங்களாலும் அநுபவிக்கின்றனர். மிகக்கொடியசெய்கையை வெகுகாலம்செய்ததனால் பஞ்சபூதங்களும் அந்தத்துயரத்தையடைகின்றன. பஞ்சகஷ்டத்திற்குச் சமமான துக்கம் வேறில்லை. அன்புள்ளவளே! பஞ்சகஷ்டம்தான் துக்கத்திற்கு இடமென்று சொல்லுகின்றனர். துக்கத்திற்குரியபிராணிகள் இவ்வாறு இந்நரகங்களில் நிற்கின்றன. அன்புள்ளவளே! அவிசிமுதலியவேறுநரகங்களும் உள்ளன. அங்கே சிலர் துக்கப்பட்டு துன்பம்தாங்கமாட்டாமல் கதறிஅழுகின்றனர். சிலர் வாந்திசெய்துகொண்டு புரளுகின்றனர். சிலர் தாங்காமல் ஓடுகின்றனர். நோய் தாங்காமல் தாகமெடுத்தோடும் பாவம்செய்தபிராணிகளை யமதூதர்கள் சூலத்தைக்கையிலேந்தி நாலுபக்கங்களிலும் தடுக்கின்றனர். முன்செய்தகர்மம் உள்ளவரையில்எவ்வகையிலும் விடப்படுவதில்லை. பிரியமுள்ளவளே! க்ருமிகளால்பக்ஷிக்கப்பட்டு நோய்தாங்காமலும் தாகமெடுத்தும் தாங்கள்தவறிச்செய்தபாவத்தைநினைத்துத் துயரப்பட்டுக்கொண்டு பாவம்ஒழியும்வரையிலும் அங்கேஇருக்கின்றனர். இவ்வாறு நரகத்தையனுபவித்துப் பாவம்கழிந்தபின் விடப்படுகின்றனர்' என்றார்.

உமை, 'பகவானே! அவர் நரகங்களில் எவ்வளவுகாலமிருக்கின்றனர்?' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், '[2]நூறாயிரம்வருஷமுதல பிரளயகாலம்வரையில் மனிதர்கள் (அவரவர்வினைகளுக்குத் தக்கபடி) நரகத்தில் இருப்பார்என்பது நிச்சயம்' என்றுசொன்னார். உமை, 'பகவானே! பிரபுவே! அந்தநரகங்களுள் எவர்கள் [3]எதிலிருக்கின்றனர் என்பதைச் சொல்லும்' என்றுகேட்டாள். மஹேசுவரர், 'மனிதர்களைக்கொன்றவரும் நன்றிகெட்டவரும் பொய் சொல்லுகிறவரும் ரௌரவநரகத்தில் நூறாயிரம்வருஷகாலம் இருப்

1 'பஞ்சேந்த்ரியைஸ்ஸம்பாதாத்' என்ற பாடங்கொள்ளப்பட்டது.

2 'சதம்' என்று பாடங்கொள்ளப்பட்டது.

3 'குத்ர' என்று பாடங்கொள்ளப்பட்டது.

பர். [1]அப்படிப்பட்டமனிதர்கள் இரண்டாவதுநரகத்தில் இரண்டத்தனைகாலம்வரையில் பீடிக்கப்படுவார். மஹாபாதகங்களைச் செய்தவர்கள் மூன்ருவதுநரகத்தில் துக்கப்படுவார். இதுவரையில்தான் மனிதர்கள் தாங்குவது. மற்றவை வேறுபிராணிகளுக்குக்காணப்படுகின்றன. யக்ஷர், வித்தியாதரர், நாகர், கின்னரர், கந்தர்வர், பூதங்கள்இவர்களில் அதிகபாவம்செய்தவர்கள் நாலாவதுநரகத்தில் பீடிக்கப்படுகின்றனர். அப்படிப்பட்டவர்கள்தாம் அந்தநரகத்திற்குரியவர்களாக நினைக்கப்படுகின்றனர்; பஞ்சகஷ்டத்திலுள்ளதுபோல மிகக்கொடிய துயரத்தைச்சகித்துக்கொண்டு பிரளயம்வரையிலும் நாலாவதுநரகத்தில் பீடிக்கப்படுகின்றனர். மனிதர்களின் துயரங்கள் இந்தநீண்டகாலத்துத்துயரத்திற்குக் குறைந்தவைஎன்றறி. அவர்கள் இவ்வாறு நரகங்களையனுபவித்து அங்கே பாவங்களைத்தொலைத்து நரகங்களிலிருந்துவிடுபட்டபிறகு சிலர் க்ருமிகளாகவும் சிலர் உத்பிஜ்ஜங்களாகவும் பிறக்கின்றனர். சிறந்தவளே! அவற்றிலிருந்து பாவங்கள்கழிந்தபின் திரும்பவும் மிருகஜாதிகளிலும் பக்ஷிஜாதிகளிலும் பிறக்கின்றனர். மிருகபக்ஷிஜன்மங்களில் பாவத்தையனுபவித்தபிறகு மானிடஜன்மத்தையடைகின்றனர்'என்ருர்.உமை, 'பாவம்செய்தவர்கள் பலஜாதிகளில்பிறப்பது எதனுல்?' என்று, கேட்க, மஹேசுவரர் சொல்லலானுர். 'சிறந்தவளே! நீகேட்கவிரும்புகிறதை நான் உனக்குச் சொல்வேன். ஆத்மாவானது எப்போதும் கர்மங்களில் அகப்பட்டதாகிப் பலஜாதிகளில் பிறக்கிறது.எவன் எப்போதும் மாமிசத்தைவிரும்புகிருனே அவன் காக்கைகளாகவும் கழுகுகளாகவும் பிறக்கிருன். எப்போதும் விடாமல் சுராபானம் செய்யும்மனிதன் பன்றிஜன்மத்தையடைவது நிச்சயம். பக்ஷிக்கத் தகாதவற்றைப் பக்ஷிக்கும்மனிதன் காக்கைஜாதியில் பிறக்கிருன். கோபத்தினுல் தற்கொலைசெய்யும்மனிதன் பிரேதஜாதியிற்சேருகிருன். கோட்சொல்லுவதனுலும் தூஷிப்பதனுலும் கோழிஜன்மத்தையடைவான். நாஸ்திகனுயிருக்கும்மூர்க்கன் மிருகஜன்மத்தையடைவான். கொல்வதனுல் ஸந்தோஷமடையும்மனிதன் பூச்சிபுழுவாகப் பிறக்கிருன்., எப்போதும் அதிககர்வமுள்ளமனிதன் இறந்து கழுதையாகப்பிறக்கிருன். புணரத்தகாதவளைப் புணருவதனுலும் பிறர்மனைசேர்வதனுலும் பெருச்சாளிஜன்மத்தையடைகிருன். அதில் ஸந்தேகமில்லை. நன்றிகெட்டவனும் ஸ்நேகிதனைக்கொன்றவனும் நரியாகவும் ஓநாயாகவும் ஜனிக்கின்றனர். நன்றிகெட்டவனும் புத்

[1] அந்தப்பாவத்தையே இன்னும் மிகுதியாகச்செய்தவர் என்று கருத்து.

திரனைக்கொன்றவனும், தாவரமாகப்பிறக்கின்றனர். இவைமுதலிய தீயகர்மங்களைச் செய்தமனிதர்கள் நரகம்போனபிறகு தாம்செய்த கர்மம்பற்றியே அந்தப்பலவகைஜன்மங்களை எடுக்கின்றனர். இவ்வகைஜன்மங்களினாலேயே பாவம்செய்தபிராணிகளை நிச்சயிக்கலாம். பலஜன்மங்களுக்குப்பின் அவர்கள் மானிடஜன்மத்தையடைவார். லோஹங்கள் பலமுறை தீயிற்சுடப்படுவதனால் சுத்தப்படுவதுபோல ஆத்மா பலபல துன்பங்களினால் பீடிக்கப்பட்டபின் அதன்வன்மையினால் சுத்தப்படுகிறது. ஆதலால், ஜன்மங்களில் மானிடஜன்மம் கிடைப்பது மிகஅரிதுஎன்றறி' என்றுசொன்னார்.

---

## இருநூற்றுமுப்பத்தோராவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



**(உமாமஹேஶ்வரஸம்வாதம் தொடர்ச்சி ; மனோவாக்காயங்களினாலுண்டாகும்பாவம் மதுபானமுதலியன.)**

உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈசுவரரே! சூலபாணியே! விருஷபத்வஜரே! வரமளிப்பவரே! உமது அனுக்கிரகத்தினால் பரமரகஸ்யத்தைக் கேட்டேன். பிரஜைகளின் நன்மைக்காகத் திரும்பவும் ஒன்று கேட்கவிரும்புகிறேன். அவரவர்களின் சுபாசுப கர்மங்களைப்பற்றிச் சுருக்கமாகச் சொன்னீர். அந்தச்சுபாசுபங்களின் முடிவைப்பற்றி எனக்கு விரிவாகச் சொல்லும். தேவரே! அசுபகர்மம் எப்படிப்பட்டது? அது பிராணிகளைக்கீழேதள்ளுவதும் சுபகர்மம் மேலுலகத்தைக்கொடுப்பதுமெப்படி? தேவஸ்ரேஷ்டரே! இதை எனக்குச்சொல்லும். நான் கேட்கவிரும்புகிறேன்' என்று கேட்டாள்.

மஹேசுவரர், 'சிறந்தவளே! அவற்றையெல்லாம் உனக்குச் சொல்வேன்; கேள். கர்மங்கள் புண்ணியமென்றும் பாவமென்றும் இருவகையாகும். அவற்றுள், பாபகர்மமென்பது மனோவாக்குக் காயங்களினால் உண்டாகி மூன்றுவகையாகிறது.' மனத்தினாலுண்டாகும் கர்மம் தெரியாமலும் தெரிந்தும் உண்டாகிறது. அதன் பிறகு, சொல்லென்னும்கர்மம் உண்டாகிறது. அன்புள்ளவளே! அதன் பிறகு, அவ்வவற்றைச்செய்வதற்குரிய தேகவியாபாரமுண்டாகிறது. கொல்லக்கருதுவது, பொறாமை, பிறர்பொருளில்ஆசை, நல்லமனிதர்களுக்கும் கெட்டமனிதர்களுக்கும் ஜீவனத்தைக்கெடுப்பது, தர்ம

காரியத்தில் சிரத்தையில்லாமை, பாவகாரியத்தில் உத்ஸாகம் இவை முதலியஅசுபகர்மங்கள் மானஸபாபங்களென்று சொல்லப்படுகின்றன. பொய், கடுஞ்சொல், யாருக்கும்அடங்காமல் உத்தண்டமாய்ப் பேசுவது, மனம்நோகப்பேசுவது, நிந்திப்பது, உண்மைபேசாமை ஆகிய இவை வாக்கினாலுண்டாகும்பாவங்கள். சேரத்தகாதவளிடம் சேருவது, பிறர்மனைபுகுவது, அடிப்பதனாலும் கட்டுவதனாலும் கஷ்டப்படுத்துவதனாலும் பிறஉயிர்களைப் பீடிப்பது, களவு, பிறர் பொருளை அபகரிப்பது, அதனையழிப்பது, புஜிக்கத்தகாதவற்றைப் புஜிப்பது, (வேட்டைமுதலிய) வ்யஸனங்களில்பற்றுதல், கர்வத்தினாலும் அலக்ஷியத்தினாலும் பிடிவாதத்தினாலும் பிறரை நோகச்செய்வது, செய்யத்தகாதவற்றைச்செய்வது, அசுத்தமாயிருப்பது, குடிப்பது, கெட்டஒழுக்கம், துஷ்டர்களின்சேர்க்கை, பிறர்செய்யும்பாவங்களுக்கு உதவியாயிருப்பது, புண்ணியத்துக்கும் புகழுக்குமாகாதகாரியங்களில் பிரவேசிப்பதுமுதலிய கெட்டசெய்கைகள் சாரீரபாவங்கள் என்று சொல்லப்படுகின்றன. மானஸ பாபத்தைப்பார்க்கிலும் வாக்குப்பாவம் அதிகமென்றும் வாக்குப் பாபத்தைப்பார்க்கிலும் சாரீர பாபம் அதிகமென்றும் நினைக்கப்படுகின்றன. இம்மூன்றுவகைப் பாவகர்மங்களும் மனிதனைத் தள்ளிவிடும். பிறருக்குத்தீங்குசெய்வது அதிகபாவமென்று நினைக்கப்படுகிறது. அப்படி மூவகைப் பாவங்களையும்செய்வது செய்பவனை மிகக்கொடியநரகத்திற்சேர்ப்பிக்கும். பாவம் கர்மவசத்தால் அறியாமலோ அவசியம்செய்யநினைத்து ஒருவியாஜத்தைச்சொல்லியோ எவ்விதமாகச்செய்யப்பட்டாலும் செய்தவனை அடையவேஅடையும். பாவத்தை அவசியம்வெளியிடுவதனால் அதற்குக்காரணமானசெய்கை பயனற்றுப்போம்'என்று சொல்லும்போது, உமை, 'பகவானே ! பாவகார்யத்தைஎவ்வகையிற் செய்தால் குற்றம்பற்றுவதில்லை?' என்று கேட்டதற்குத் திரும்பவும் மஹேஸ்வரர் சொல்லலானார்: 'குற்றம்செய்யாதஒருமனிதன் தன்னுயிரைக்காத்துக்கொள்வதற்காக முதலில் தன்னை அடித்தவனும் அடிக்க ஆயுதத்தைஓங்கினவனுமான பகைவனைத் திருப்பியடித்துக்கொன்றால் அவனைப் பாவம் பற்றாது. ஒருமனிதன், திருடனிடத்தில் அதிகமாகப்பயந்து அவனைத்தடுப்பதற்காக அவனையடித்துக்கொல்லுவனாயின் அவனுக்குப் பாவம்இல்லை. கிராமத்திற்காகவும் யஜமானனுடையஅன்னத்தைச்சாப்பிட்டதற்காகவும் துயரப்படுகிறவர்களைக் காப்பதற்காகவும் அடிப்பதையும் கட்டுவதையும்கஷ்டப்படுத்துவதையும்செய்கிறவன் பாவத்திலிருந்துவிடுபடுவான். பஞ்சத்தில் தான்

ஜீவிப்பதற்காக யாருக்குந்தெரியாமல் தனிமையாகவிருந்துகொண்டு அகாரியத்தைச்செய்தாலும் அபக்ஷயத்தைப்பக்ஷித்தாலும் அவனைப் பாவமணுகாது. இந்தச்செய்கை கிருகஸ்தர்களுக்கே பெரும்பாலும் உபதேசிக்கப்படுகிறது. இடத்தையும் காலத்தையும் அநுஸரித்துப் புத்தியினாலாராய்ந்து அந்தப்பிரயோஜனத்திற்குத் தக்கபடி பேசத்தகாததைப்பேசினாலும் செய்யத்தகாததைச்செய்தாலும் அவனைப் பாவம் சிறிதுபற்றும்; பற்றாமலும்போகும். தேவியே! இது இவ்வாறென்று தெரிந்துகொள். இதில் ஸந்தேகமில்லை' என்றுசொன்னார்.

உமை, 'பகவானே! மஹேஸ்வரரே! பானத்தின்குற்றங்களையும் குடிப்பதற்கும் குடியாமலிருப்பதற்கும் காரணத்தையும் கேட்க விரும்புகிறேன். அதையெனக்குச் சொல்லும்' என்றுகேட்க, மஹேசுவரர் சொல்லலானார்: 'தெளிந்தபுன்னகையுள்ளவளே! ஆ! ஆ! பானத்தின்உற்பத்தியை உனக்குச் சொல்வேன். அன்புள்ளவளே! ஆதிகாலத்தில் எல்லாமனிதர்களும் நல்லபுத்தியுள்ளவர்களாகவும் நியாயத்தைஅநுஸரிப்பவர்களாகவும் பரிசுத்தர்களாகவும் நல்லொழுக்கமுள்ளவர்களாகவும் உயர்ந்த மனமுள்ளவர்களாகவும் இருந்தனர். உலகம் இவ்வாறிருந்தபோது ஒருவனுக்கு ஏவல்தொழில்செய்பவன் மற்றொருவனில்லை. ஏவத்தக்கவனில்லாமையினால் மனிதர்கள் வேலைகளைத் தொடங்குவதே இல்லாமற்போயிற்று. தேவியே! வேலைகெட்டுப்போவதினால் இரண்டுலோகங்களும்கெடுவதைக்கண்ட பிரபுவான பிரம்மதேவர், 'உலகத்தில் யாககாரியம் எப்படிநடக்கும்?' என்று நினைத்துத் தேவர்களைப்பார்த்து, 'மனிதர்களுக்கு மயக்கத்தையுண்டு பண்ணுங்கள்' என்று கட்டளையிட்டார். அன்புள்ளவளே! தேவர்கள் தமோகுணத்தின்ஸாரத்தை எடுத்துப் புத்தியைக்கெடுப்பதும் பாவத்தையுண்டாக்குவதுமாகிய பானத்தை மனிதர்களிடம் சேர்ப்பித்தனர். அதுமுதல் அந்தப்பானத்தினால் பூமியிலுள்ள மனிதர்கள் செய்யத்தக்கது செய்யத்தகாதது சொல்லத்தக்கது சொல்லத்தகாதது குணம் குற்றம்இவை ஒன்றும்அறியாமல் மயங்கினர். சிறந்தவளே! பானத்தைச் சிலர் குடித்து நகைக்கின்றனர். மற்றும் சிலர் அதிகமாகப் பிதற்றுகின்றனர். சிலர் உற்சாகமாகக் கூத்தாடுகின்றனர். சிலர் நல்லபாட்டுக்களையும் கெட்டபாட்டுக்களையும் பாடுகின்றனர். சிலர் சண்டையை விரும்புகின்றனர். சிலர் கலகத்தைவிரும்பி ஒருவரையொருவர் அடிக்கின்றனர்; சிலவிடங்களில் வேகமாகஓடித் தடுக்கிவிழுகின்றனர். சிறந்தவளே! கண்டவிடங்களில் தகாதபேச்சுக்களை அதிகமாகப்பேசுகின்றனர். ஆடையில்லாமல் அங்கங்களை

விரித்துக்கொண்டு நினைவுதப்பிக் கிடக்கின்றனர். பெருமயக்கத்தைத் தரும் கள்ளைக்குடித்துப் பாவத்தையடைந்த மனிதர்கள் இப்படிப் புத்திமயங்கி அநேகவிதமானசெய்கைகளைச் செய்கின்றனர். கள் குடித்தலானது தைரியத்தையும் வெட்கத்தையும் புத்தியையும் அழித்துவிடும். அதனால் மனிதர்கள் நாணமும் கூச்சமும் அற்றவராகின்றனர். குடிப்பவர்கள், அறிவும் தைரியமும் உற்சாகமும்குன்றினவர்களாகவும் அழுக்குள்ளவர்களாகவும் குடிக்கக்குடிக்கக் குடிவிருப்பமுள்ளவராகவும்ஆகின்றனர். அந்தக்கீழ்மனிதர்கள் குடியையேவிரும்பியும் அதைப்பற்றியே பேசியும் குடிக்குங்காலத்தை எதிர்பார்த்தும் குடிப்பதற்காகவே வேலைகளுக்குஅடங்கியும்இருக்கின்றனர். குடிப்பவர்கள்குடியைவிரும்பி அந்தஆசையினால்விவேகமும்தைரியமும்குன்றியதனாலும் குடிக்கக்கொடுப்பவர்களுக்கு வேலைக்காரர்களாக உடனேஆயினர். அக்காலந்தொடங்கி உலகத்தில் பானத்திலாசைப்பட்ட ஏழைகளான [1] குடியரைக்கொண்டு புத்திமான்கள் தம்காரியங்களைச் செய்விக்கின்றனர். குடியர்கள், தொழிலாளிகளும் அடிமைகளும் கூலிவேலைக்காரர்களும் ஆகிக் கயிற்றில்கட்டப்பட்ட பசுக்கள்போல எல்லாவேலைகளையும் செய்பவராயினர். குடிப்பவன் கள்ளைக்குடித்தவுடன் விவேகம்கெடுவதனால் காரியாகாரியங்களையறியாமல் தான் நினைத்தபடி செய்வதனாலும் தெரிந்தவர்களுக்கடங்காமையினாலும் பாவத்தையேபற்றுகிறான். கள்குடிப்பவன் ஸ்நேகத்தைக்கெடுப்பவனும் உலகத்தில் அவமதிக்கப்பட்டவனுமாவான். அவன் எப்போதும் அசுத்தனாகவும் எல்லாவற்றையும்பக்ஷிப்பவனாகவும் இருப்பான்; குலத்தோராலும் வித்வான்களாலும் விடப்பட்டு எப்போதும் கலகத்திலேயே எண்ணங்கொண்டு துர்ப்பாஷையையும் கடுஞ்சொல்லையும் எல்லாரிடத்திலும் சொல்லுகிறான். குடிமயக்கமுள்ளவன் பெரியோரை வரைதப்பிப்பேசுவான்; பிறர்மனைவிகளை ஆக்கிரமிப்பான்; குடியரோடு ஸ்நேகம்செய்வான்; யாரிடத்திலும் இதம்கேளான். சிறந்தவளே! குடியர்களிடத்தில் இப்படி பலகுற்றங்களுள்ளன. அவர்கள் நரகத்திற்கே போவார். அதற்கு ஸந்தேகமில்லை. ஆதலால், தம்இதத்தைக் கருதினஸாதுக்களால் பானம் விடப்பட்டிருக்கிறது. ஸாதுக்கள் நல்லொழுக்கத்திற்காகப் பானத்தை நீக்காமற் போவராயின் இவ்வுலகமனைத்தும் வரம்புகடந்தும் தொழிலற்றும் போய்விடும். ஆதலால்,விவேகத்தைக்காப்பாற்றுவதற்காகவே ஸாதுக்கள் பானத்தை விலக்கினர். அன்புள்ளவளே! இவ்வாறு மூன்று வகைப்பாவங்களையும் உனக்கு முழுதும் சொன்னேன்.

1 'பாகபை?' என்று பாடங்கொள்ளப்பட்டது.

## இருநூற்றுமுப்பத்திரண்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேச்வரஸம்வாதம் தொடர்ச்சி; மூன்றுவகைப் புண்ணியங்கள் ஆசாரகுந்தங்கள் முதலியன.)

தெளிந்தபுன்னகையுள்ளவளே! இனி புண்ணியத்தின்முறையையும் கேள். தேவியே! புண்ணியமும் மூன்றுவகையென்று சுருக்கமாகச்சொல்லப்படுகிறது. ஔபராமிகம், நிருபத்ரவம், ஸோபகரணம் என்று மூன்றுவகை ஸுக்ருதம் இருப்பதாகஅறிகின்றனர். அன்புள்ளவளே! பாபகர்மங்களைச்செய்யாமலொழிவது ஔபராமிகம். மனோவாக்குக்காயங்களினாலுண்டானபாவங்களை நீ என்னிடம் கேட்டிருக்கிறாயே; அவற்றைவிடுவதனால் நன்மையுண்டாகிறது. இம்மூன்றுகுற்றங்களையும்பாவங்களென்றுநினைத்துஒழிப்பவன் எவனோ அவன் பாவங்களை முழுதும்விடுவதனாலேயே எல்லாநன்மைகளையும் அடைகிறான். பாவங்களையெல்லாம் ஒருமிக்கவாவது தனித்தனியாகவாவது முதலில் விடவேண்டும். அதனால் புண்ணியத்தையடையலாம். பாவங்களைவிடுவதுதானே அஸாத்தியம். பாவங்களைமுழுதும் விடுவதனால் மனிதன் ரிஷியாகிறான். செய்யவேண்டியகாரியத்தைச் செய்யாமலே புண்ணியம் எளிதாகக்கிடைப்பதைப் பார். பாவஒழிவைப்பெற்றஆத்மாவுக்குப் பெரியஸுக்ருதம் கிடைக்கிறது. ஆ! ஆ! புத்திக்குறைவானமனிதர்கள் தங்களுக்குவசமான இந்தவழியையறியாமல் கவலையற்றுக் கொடியவர்களாகவிருந்து நரகத்தில் வதைக்கப்படுகின்றனர். பாவத்தைவிட்டமாத்திரத்தினாலன்றோ உயர்பதம் பெறுவது? தேவியே! மனத்தில்கள்ளமின்றித் தர்மத்தைக்கருதிப் பாவத்திற்கஞ்சுவதனால்மாத்திரமே பாவங்கள் விலகிப் பரிசுத்தனாவான். தேவியே! இந்த ஔபராமிகமென்னும்ஸுக்ருதத்தை உனக்குச் சொன்னேன். சான்றோரிடம்சென்று சாஸ்திரங்களைக்கேட்பதனாலும் ஐம்புலன்களையுமடக்குவதனாலும் உள்ளத்தில்திருப்தியாயிருப்பதனாலும் மனஉறுதியினாலும் பாவங்களைவிலக்கமுடியும். அன்புள்ளவளே! இதுதான் தோஷஸம்யமனம் என்னப்படும்நிருபத்ரவ தர்மமென்று சொல்லுகின்றனர். அன்புள்ளவளே! இந்தத்தோஷஸம்யமனமென்னுந்தர்மத்திற்குமேற்பட்ட நல்லதர்மம்ஒன்றுமில்லை.

---

1 'லபதே' என்று பாடங்கொள்ளப்பட்டது.

அந்தயமதர்மத்தினாலேதான் யதிகள் உத்தமகதியையடைவது. ஐசுவர்யமுள்ளபிரபுக்களுக்கும் ஏழைகளுக்கும் தோஷங்களைவிடுவது தானதர்மங்களைக்காட்டிலும் பெரும்பலனுள்ளது. மஹாதேவியே! தவமும் தானமும் ஸ்வல்பதோஷங்களைத்தான் பரிஹரிக்கும். இப்படிப்பட்டநிருபத்ரவம்என்னும்புண்ணியத்தையும் சொன்னேன். இனி நிருபஸாதனம்என்னும்புண்ணியத்தையும் சொல்வேன். உலகமெல்லாம் ஸுகமாயிருக்கும்படிநினைப்பதும், ஸத்தியமும், சுத்தமும், மனத்தூய்மையும் விரதங்களிலும் உபவாஸங்களிலும்ஸந்தோஷமும் காமக்குரோதங்களைவிடுவதும், மனத்தையும் இந்திரியங்களையும் அடக்குவதும், மற்றுமுள்ளநற்கருமங்களும் [1]நியமத்தைச்சேர்ந்தவை. பெண்ணரசியே! அவற்றின்பிரிவுகளையும் சொல்வேன்; கேள். ஸத்யமானது ஸ்வர்க்கத்திற்குப்படிபோலவும் துன்பக்கடலுக்குக் கப்பல்போலவும் இருக்கிறது. ஸத்யத்திற்குமேலான தானமுமில்லை. ஸத்தியத்திற்குமேலான தவமுமில்லை. கேட்டதையும் கண்டதையும் செய்ததையும் உள்ளபடி மாற்றாமல்பேசுவதுதான் ஸத்யம். வஞ்சகத்தோடுசேர்ந்தஉண்மையும் பொய்தான். உயர்வுதாழ்வுகளையறிந்தவன் ஸத்யத்தையே பேசவேண்டும். ஸத்யத்தினால் தீர்க்காயுளுள்ளவனும் ஸந்ததியின்தொடர்ச்சியைக்காப்பவனும் உலகின்வரம்பை நிலைநிறுத்துகிறவனுமாவான்' என்றார். உமை, 'மனிதன் விரதத்தை எப்படிநடத்தினால் புண்ணியம்அடைவான்?' என்றுகேட்க, மஹேசுவரர், 'மனத்தினாலும் வாக்கினாலும் செய்கையினாலும் உண்டாகும் மூன்றுவகையானபாவங்களையும் முன்சொன்னேனே; அவற்றைஉறுதியுடன்விடுவது தபோவிரதம்என்னப்படும். நியமமில்லாமல் விடத்தக்கதையும் செய்யத்தக்கதையும் வீணாகச்செய்பவன் பலனையடையான். ஆதலால், [2]தர்மத்தை வீணாகச்செய்யலாகாது. மனிதன் சாஸ்திரப்பிரகாரம் தீர்த்தஸ்நானம்செய்து தேகத்தைப்பரிசுத்தமாகச்செய்துகொண்டு பஞ்சபூதங்களையும் சூரியசந்திரர்களையும்காலைமாலைஇரண்டுஸந்திகளையும் தர்மதேவதையையும் யமனையும் பித்ருக்

---

1 ஸோபகரணம்என்றும் நிருபஸாதனம்என்றும் நியமமுள்ளதர்மமென்றும்சொல்லப்படுகின்றன. ஸோபகரணம்=குற்றங்களையொழித்தபின் முயற்சியால்செய்யப்படுவது. நிருபஸாதனம்=தானதர்மங்கள்போலப் பொருள் முதலிய உதவிவேண்டாதது. நியமம்=ஒழுங்குபடுத்துவது ஔபரமிகம்=பாவங்களைவிடுவதற்கு முயல்வது. நிருபத்ரவம்=பாவங்களை விட்டநிலைமை. இதைத்தான் தோஷவர்ஜனம்என்றும் தோஷஸம்யமனம் என்றும் யமம் என்றும்சொன்னது. வர்ஜனம்=விடுவது. ஸம்யமனம், யமம்=அடக்குவது.

2 'தந்தர்மம்' என்றுபாடங்கொள்ளப்பட்டது.

களையும் (நமஸ்கரித்து) தானே தன்னை அவர்களிடம் ஒப்பித்து விரதம்செய்யவேண்டும். 'மரணம்வரையிலும் விரதம்செய்யலாம். அல்லது, ஒருகாலம்வரையிற் செய்துமுடிக்கலாம். காய்கறிமுதலியவற்றிலும் பூ கனிமுதலியவற்றிலும் விரதம்வைத்துக்கொள்ளலாம். பிரம்மசரியவிரதத்தையும் உபவாஸவிரதத்தையும் செய்யலாம். இதத்தை விரும்புகிறவன் இப்படி இன்னும் அனேககாரியங்களிலும் விரதம் வைத்துக்கொள்ளவேண்டும். தெரிந்தவர்கள் அந்தவிரதத்திற்குக் கெடுதல்வராமலிருக்கும்படி காப்பாற்றவேண்டும். அழகானகண்களையுடையவளே! விரதங்கெட்டால் பெரியபாவமென்றறி. மருந்துண்பதற்காகவும் அறியாமையினாலும் பெரியோர்கட்டளையினாலும் சுற்றத்தாருக்குஉதவிசெய்வதற்காகவும் விரதங்கெடுவது குற்றமாகாது. மனிதன் விரதம்முடிக்குங்காலத்தில் தேவர்களையும் பிராம்மணர்களையும் சாஸ்திரப்பிரகாரம் பூஜிக்கவேண்டும். அதனால் ஸித்தியடைவான்' என்றுசொன்னார்.

உமை, 'ஆசாரத்தின்முறை எது? அதை எனக்குச்சொல்லக்கடவீர்' என்றுகேட்க, மகேசுவரர் சொல்லலானார்: 'புறச்சுத்தமென்றும், அகச்சுத்தமென்றும் இருவகைச்சுத்தங்கள் சொல்லப்படுகின்றன. மனத்திலிருக்கும்தர்மசிந்தைதான் அகச்சுத்தமென்று சொல்லப்படுகிறது. எப்போதும் சுத்தமானஆகாரம்செய்வதும் தேகத்தையலம்புவதும் ஆசமனம்முதலியவற்றினாலுண்டாகும் சுத்தமும் புறச்சுத்தங்களாகும். பரிசுத்தமான பூமியிலிருக்கும் மண்ணினாலும் கோமயகோமூத்திரங்களினாலும் நல்லமணமுள்ளவையும்தேகபுஷ்டியைத்தருகின்றவையுமான மற்றப்பொருள்களினாலும் தேகத்தை அடிக்கடிதேய்த்து ஜலத்தினால் அலம்பவேண்டும். கலங்காமலும் பரவியும் விடாமற்பெருகுவதானஜலத்திலேயே பெரும்பாலும்ஸ்நானம்செய்யவேண்டும்; அல்லாதஜலத்தை விடவேண்டும். நுரையும் அழுக்குமில்லாதஜலத்தை மும்மூன்றுமுறை ஆசமனம்செய்வது சிறந்தது. ஜலமலவிஸர்ஜனங்களில் அதிக ம்ருத்தினாலும் ஜலத்தினாலும் சுத்தமுண்டாகும். ஜலத்தினாலேதான் சுத்தியுண்டாகிறது. சுத்தம் செய்யப்பட்டதைத்தான் தொடலாம். பூமிக்குக் கோமயத்தினாலும் லோஹங்களுக்குச் சாம்பலாலும் சுத்தி சொல்லப்பட்டிருக்கிறது. செதுக்குவதனாலும் இழைப்பதனாலும் மரப்பாத்திரங்களுக்குச் சுத்தி. மட்பாத்திரங்களுக்குச் சுடுவதுதான் சுத்தி. மனிதர்களுக்குக் கிருச்சிரம்என்னும்விரதம்செய்வதுதான் சுத்தம். தேவியே! மற்றெல்லாவற்றிற்கும் வெயிலினாலும் ஜலத்தினாலும் சுத்தமுண்டா

கும். பிராம்மணர்களுடையவாக்கினலும் எப்போதும் சுத்தியுண்டாகும். வாக்கினல்சிலாகிக்கப்பட்டதும் கண்ணுக்குத்தெரியாமல் ஜலத்தினலலம்பப்பட்டதுபோலாகிறது. வேறு சுத்தி அகப்படாதபோது இந்தச்சுத்தி விதிக்கப்படுகிறது' என்றுசொன்னர்.

உமை, 'தேவருக்குந்தேவரே! மஹேஸ்வரரே! ஆகாரசுத்தி எப்படி?' என்று கேட்க, மகேசுவரர் சொல்லானர்: 'மாம்ஸம் மது ஊசினது பழையது இவையல்லாததும், காரம் புளிப்பு உப்பு இவைகள் அதிகமாகஇல்லாததும், பூச்சி மயிர்அழுக்குஇல்லாததும், மூடப்பட்டதும்,பார்வைக்குப் பரிசுத்தமானதும், நல்லமணமுள்ளது மான ஆகாரத்தைத் தேவதைகளுக்கும் பிராம்மணர்களுக்கும்கொடுத்தபின்பே புஜிக்கவேண்டும். அதுதான் [1] சுத்தமென்றும் இல்லாவிட்டால் அசுத்தமென்றும் அறியவேண்டும். கிராமங்களிலுள்ளவற்றைவிடக் காடுகளிலுள்ளவற்றினல் செய்யப்படும் ஆகாரத்தைச்சமைப்பது சிறந்ததென்றறி. அதிகமாகஸம்பாதித்தபொருளில் சிறிது தானம்செய்வதனல் அது சுத்தமாகிவிடும். யாகசேஷமும் ஹோமசேஷமும் பித்ருசேஷமும் தோஷமில்லாதவை. தேவியே! இதை உனக்குச் சொன்னேன். இன்னும் என்னகேட்கவிரும்புகிருய்?' என்ருர்.

---

## இருநூற்றுமுப்பத்துமூன்ருவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஶ்வரஸம்வாதம் தொடர்ச்சி; புலாலுண்பதன்பாவமும் விடுவதன்புண்யமும், குருபூஜை தீர்த்தஸ்நானமுதலியவற்றின் பலனும்.)

உமை, 'பிரபுவே! மகாதேவரே! சிலர் புலால்உண்கின்றனர்; மற்றும்சிலர் விட்டுவிடுகின்றனர். அதை உண்ணக்கூடுமா? கூடாதா? என்னும்நிச்சயத்தை எனக்கு நீர் சொல்லக்கடவீர்' என்றுகேட்க, மகேசுவரர் சொல்லலானர்:

'மாம்ஸம்பக்ஷிப்பதிலுள்ள குற்றத்தையும் பக்ஷிக்காமலிருப்பதிலுள்ளகுணத்தையும் சொல்வேன். அவற்றை ஸரியாகத்தெரிந்துகொள். அக்நிஹோத்திரமும் தானமும் வேதாத்யயனமும் தக்ஷிணைகள்நிரம்பினயாகங்களும் மாம்ஸத்தைப்பக்ஷிக்காமலிருப்பதினுடைய பதினறில் ஒன்றுக்கும் ஈடாகாதவை. சுவையைவிரும்பித் தனக்காக

1 'சுபமித்யேவ' என்று பாடங்கொள்ளப்பட்டது.

வேறுஉயிரைக்கொல்லுகிறவன் பாம்புகழுகுநரிகளுக்கும் ராக்ஷஸர்களுக்கும் ஸமமானவன். தினமும் வீணுக மாம்ஸத்தைத்தின்பவன் நீசனுவான். தானேமாம்ஸத்தைக்கொண்டுவந்து பக்ஷிப்பதைவிட வேறுபெருங்கஷ்டமில்லை.பிறமாம்ஸத்தினுல் தன்மாமிசத்தைவளர்க்கக்கருதுகிறவன் பிறக்கும்பிறப்புக்களிலெல்லாம் பயந்துகொண்டிருக்கும் நிலைமையை அடைவான். தன்மாமிசத்தைஅறுப்பது தனக்கு எப்படி துன்பத்தைஉண்டாக்குமோ அப்படியே பிறமாம்ஸத்தைப் பற்றியும் புத்திசாலி உணரவேண்டும். வாழ்நாள்முழுதும் எந்தமாம்ஸங்களையும் பக்ஷிக்காமல்விட்டிருப்பவன் ஸ்வர்க்கத்தில் பெரிய நிலைமையைப் பெறுவானென்பதில் ஸந்தேகமில்லை. நூறுவருஷமளவும் சிறந்ததவம்செய்வதும் மாம்ஸத்தைவிடுவதும் ஸரியாயிருக்கும்; அல்லது [1]ஸரியாகவுமிராது. உலகத்தில் உயிரைக்காட்டிலும் மிக்கஇனியது ஒன்றுமில்லை. ஆதலால், தன்னிடத்திற்போலவே பிறஉயிர்களிடத்திலும் இரக்கம்வைக்கவேண்டும். பெண்ணரசியே! எவன் மாம்ஸத்தின்சுவையையறிந்தும் பின்பு அதை விட்டுவிடுகிருனே அவனுக்கு அதுசெய்யும்நன்மையை யாகங்களும் செய்யாவென்றும் தேவர்களும்செய்யாரென்றும் ரிஷிகள் மாம்ஸபக்ஷணம் விடுவதின்குணங்களைப்பற்றிக் கூறுகின்றனர். தேவியே! மாம்ஸத்தைவிடுவதனுல் மனிதர்களுக்கு நன்மைகள் மிகுதியாயுண்டு. மாம்ஸத்தைமுழுதும் விடுவதற்கு எவ்வகையிலும் முடியாமற்போமாயின் ஏதாவது ஒருமாதத்தில் மாம்ஸத்தைவிடுவது புண்ணியம். அதுவும் முடியாமற்போனுல் மறுமையில் ஸுகத்தை விரும்புகிறவன் கார்த்திகைமாதம் சுக்லபக்ஷத்திலும் ஜன்மநக்ஷத்திரத்திலும் புண்ணியதிதிகளிலும் அமாவாஸை பூர்ணிமைகளிலும் இரவுகளிலும்மட்டுமாவது மாமிசத்தை விடவேண்டும். சக்தியில்லாதமனிதன் அதுகாரணமாக மாம்ஸம்புசிக்கவிரும்பினுல் அதன்முறையைக் கேள். அம்முறைப்படி பக்ஷிப்பவன் பாவத்தையடையான். பெண்ணரசியே! நன்மையைக்கருதுகிறவன், கொல்லுகிறஇடத்தில் உயிர்போனவைகளைக் கிரமமாக விலைக்குவாங்கிப்பிராம்மணர்களானஅதிதிகளைப்பூஜித்தமிகுதியைப் புசிக்கவேண்டும். வியாதிவந்தபோது சிகித்ஸைக்காக மாம்ஸம் தின்பவனைப் பாவம்பற்ருது. பித்ருசேஷமான மாம்ஸத்தையுண்பவனும் பாவத்தையடையான்' என்ருர்.

உமை, 'தேவரே! தர்மம்அனுஷ்டிப்பவர்களால் குருபூஜை எவ்வகையாகச் செய்யப்படுகிறது?' என்றுகேட்க, மகேசுவரர் சொல்ல

1 மாம்ஸத்தைவிடுவது மேலானதென்பது.

லானார்: 'சிறந்தவளே! குருபூஜையை உனக்கு முறைப்படி சொல்வேன். நன்றியறிவுள்ளவர்களுக்குத்தான் சிறந்ததர்மம் உளதென்பது வேதவிதி. ஆதலால், தம்தம்குருக்களைப் பூஜிக்கவேண்டும். ஏனெனில், அவர்கள் முந்தி உபகாரம் செய்தவர்கள். உபாத்தியாயர் தந்தை தாய்இம்மூவரும் குருக்களிற்சிறந்தகுருக்களாக உலகங்களில் பூஜிக்கப்படுகிறவர்கள். அவர்களை விசேஷமாகப் பூஜிக்கவேண்டும். தந்தையின்மூத்தஸகோதரர்கள் இளையஸகோதரர்கள்தந்தையின்தந்தை இவரனைவரும் தந்தைபோலப் பூஜிக்கத்தக்கவர். தாயாருடைய மூத்தஸகோதரி தாயாருடைய இளையஸகோதரி தாயாருக்குத் தாயார் பால்கொடுத்தவள் இவர்கள் தாய்மார்களாக நினைக்கப்படுகின்றனர். உபாத்தியாயரின் புத்திரன் உபாத்தியாயருக்கு உபாத்தியாயர் ரித்விக் குரு பிதா இவர்களும் குருக்களென்று சொல்லப்படுகின்றனர். மூத்தஸகோதரன் அரசன் மாதுலன் மனைவியின்தந்தை பயத்தில்காப்பாற்றினவன் போஷித்தவன்இவர்களும் குருக்களாகச்சொல்லப்படுகின்றனர். கற்புள்ளவளே! இவ்வாறு குருக்கள் எல்லாரையும் சேர்த்துச் சொன்னேன். அவர்களையனுஸரிப்பதையும் பூஜிப்பதையும் என்னிடம்தெரிந்துகொள். நன்மையைக்கருதுகிறவன் தாய்தந்தைகளையும் உபாத்தியாயரையும் பூஜிக்கவேண்டும்; எவ்விதத்திலும் அவமதிக்கலாகாது. எவனால் தந்தை திருப்திசெய்விக்கப்படுகிறானோ அவனால் பிரம்மதேவரே திருப்திசெய்விக்கப்படுகிறார். எவனால் தாய் திருப்திசெய்விக்கப்படுகிறாளோ அவனால் தேவமாதாக்கள் திருப்திசெய்விக்கப்பட்டவராகிறார். எவனால் உபாத்தியாயர் ஆராதிக்கப்படுகிறாரோ அவனால் பிரம்மதேவரே பூஜிக்கப்பட்டவராகிறார். அவர்கள் அதிருப்தியாயிருந்தால் மனிதன் நரகம்அடைவான். குருக்களின்மேல் நீண்டபகையை எவ்வகையிலும் செய்யலாகாது. மனிதன் தன்குருக்களின்மேல்விரோதத்தை மனத்திலும் நினைக்கலாகாது. அவர்களுக்கின்னாதசொல்லைச் சொல்லலாகாது. அவர்கள் வேண்டாததைச் செய்யலாகாது. அவர்களிருக்கும்போது அவமானஞ்செய்யும்எண்ணத்துடன் யாரிடத்திலும் விவாதமாகப் பேசலாகாது. இவன் என்னஎன்ன செய்யவேண்டுமென்று அவர்கள் நினைக்கின்றனரோ அவற்றையெல்லாம் பணிந்துசெய்யவேண்டும். பெரியோர்கட்டளை வேதவிதிக்குச்சமமென்று நினைக்கப்படுகிறது. குருக்களுடன் விவாதத்தையும் கலகத்தையும் பரிஹாஸத்தையும் காமக்குரோதங்களோடுபேசுவதையும் செய்யலாகாது. எவன் அகங்காரப்படாமல் சோம்பலைவிட்டுக்குருக்களிட்ட கட்டளையைச் செய்கி

ருனே அவனைவிடச் சிறந்தபுண்ணியசாலி எந்தமனிதர்களிலுமில்லை. குருக்கள்மேல் பொருமைப்படவும் அவர்களைத்தூஷிக்கவும் ஆகாது. அவர்களின்விருப்பத்தையும் நன்மையையும்நாடி எப்போதும் அவர்களுக்குப் பணிவிடைசெய்யவேண்டும். குருபூஜையைவிடாமற்செய்வது எந்தநன்மையைச்செய்யுமோ அந்தநன்மையை யாகமும் தான் புரிந்தபெருந்தவமும் செய்யா. குருவைவழிபடாவிட்டால் எந்த ஆஶ்ரமதர்மமுமில்லை. ஆதலால், கோபத்தையடக்கிச் சிரமத்தைப்பொறுத்துக் குருபணிவிடைசெய்யவேண்டும். தெரிந்தவன் தன்பொருளையும் தன்தேகத்தையும் குருவிற்காக விடுவான். பொருளாசையினலாவது கர்வத்தினலாவது குருவுடன் விவாதம்செய்யலாகாது. குருக்களினல்விடப்பட்டவனுக்குப் பிரம்மசாரிவிரதமும் கொல்லாமையும் பலவகைத்தானங்களும் வீண். மனத்தினலும் செய்கையினலும் உபாத்தியாயருக்கும் தந்தைக்கும் தாய்க்கும் தீங்குசெய்பவர்களின்பாபம் சிசுஹத்தியிலும் கொடியது. அவர்களைவிட வேறு பாபம்செய்தவன் உலகத்திலில்லை' என்றார்.

உமை, 'உபவாஸத்தின்விதியைப்பற்றி எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்க, மஹேஶ்வரர், 'தேகத்திலுள்ள அழுக்குக்களைப் போக்குவதற்காகவும் இந்திரியங்களைஉலர்த்துவதற்காகவும் ஒருவேளைபுசிப்பதையும் உபவாஸமிருப்பதையும் விரதங்களாக மனிதர்கள் வைத்துக்கொண்டிருக்கின்றனர். அப்படி ஆகாரத்தைக்குறைப்பதனல் பெரியபுண்ணியத்தை அடைகின்றனர். தனக்காகப் பலருடையஜீவனத்துக்குத்தடைசெய்யாமலும்பிராணிஹிம்ஸைசெய்யாமலும் ஜீவித்திருப்பவன்தான் பாக்கியசாலியென்று நினைக்கப்படுகிறன். ஆதலால், தன்னகாரத்தைக்குறைப்பதனல் மனிதன் புண்ணியத்தையடைவான். அந்தஉபவாஸத்தைக் கிருகஸ்தர்கள் தம்மாலியன்றவுரையில் செய்யவேண்டுமென்பது நிச்சயம். உபவாஸத்தினல் தேகம்வருந்தினபோது அதற்குத்தீங்குவராமலிருப்பதற்காகப் பிராம்மணர்களிடம்கேட்டுக்கொண்டு பாலையும் தண்ணீரையும் உட்கொள்ளுகின்றவன்விரதம்கெட்டவனகான்' என்றுசொன்னர். உமை, 'தேவரே! தெரிந்தவன் பிரம்மசாரிவிரதத்தைக் காப்பாற்றுவதெப்படி?' என்றுகேட்டாள். மஹேஶ்வரர், 'தேவியே! அதனை நான் உனக்குச் சொல்வேன்; ஊக்கத்துடன் கேள். பிரம்மசாரிவிரதமே மிகுந்த சுத்தம். பிரம்மசாரிவிரதமே பெருந்தவம். பிரம்மசாரிவிரதத்தினலேதான் பரமபதம் கிடைக்கிறது. விஷயங்களை நினைப்பது, பார்ப்பது, பேசுவது, தொடுவது, அனுபவிப்பது இவ்வைந்துவகைகளி

லும் விரதத்தைக் காப்பாற்றவேண்டும். உறுதியாக எடுத்துக்கொள் ளப்பட்டும்குற்றமின்றிக்காப்பாற்றப்பட்டுமிருக்கிறபிரம்மசாரிவிரதம் பிரம்மசாரிகளுக்கு எப்போதுமிருப்பதாக விதிக்கப்படுகிறது. அது வே கிருகஸ்தர்களுக்குக் காலத்தைக்காரணமாகக்குறிப்பிட்டு விதிக் கப்படுகிறது. கிருகஸ்தன் ஜன்மநக்ஷத்திரங்கள்சேர்ந்ததினங்களிலும் பர்வங்களாகிய புண்ணியகாலங்களிலும் தேவபூஜைகளிலும் தர்ம காரியங்களிலும் ப்ரம்மசாரி விரதத்தைச் செய்யவேண்டும். தன்மனை வியைவிட்டு ஒருகாலும் வேறுமாதரிடம் செல்லாமலிருப்பவன்பிரம் மசாரிவிரதத்தின்பலனை அடைவான். பரிசுத்தமும் ஆயுளும் ஆரோக் கியமும் பிரம்மசாரிகளுக்குத்தான் கிடைக்கும்' என்றுசொன்னார்.

உமை, 'தேவரே! தர்மத்தைவிரும்புகிறவர்கள் தீர்த்தயாத் திரையை விரதமாகச் செய்கின்றனர். உலகத்திலுள்ளதீர்த்தங்கள் எவை? அவற்றை எனக்குச்சொல்லக்கடவீர்' என்றுகேட்க, மகே ஸ்வரர் சொல்லலானார். 'அன்புள்ளவளே! ஆ! ஆ! ஆத்மசுத்திக் காகவும் தேகசுத்திக்காகவும் பிரம்மதேவரால் முன்னம் ஏற்படுத்தப் பட்ட தீர்த்தஸ்நானத்தின்முறையையும் உனக்குச்சொல்வேன். உல கத்தில் மகாநதிகள் எத்தனையிருக்கின்றனவோ அத்தனையும் தீர்த் தங்களென்று சொல்லப்படுகின்றன. அவற்றுள் கீழ்த்திசைநோக்கி ஓடுகின்றவை மிகச்சிறந்தவை. அந்நதிகள் ஒன்றோடொன்றுஸங்கம மாகும்இடமும் ஸமுத்திரத்தோடு ஸங்கமமாகுமிடமும் மிகச்சிறந் தவை. தேவியே! அவற்றின்இருகரைகளிலுமுள்ள அனேகமரங்கள் ரிஷிகளாலும் தேவர்களாலும் அடையப்பட்டிருக்கின்றன. ஆதலால், அவை மிகச்சிறந்ததீர்த்தங்களாகநினைக்கப்படுகின்றன. ஸமுத்திரம் பாவத்தைப்போக்குவதும் மிக்கபரிசுத்தமும் மங்களகரமுமான மகா தீர்த்தம். அதன்கரையிலுள்ளதீர்த்தங்களும் மகான்களால் ஸ்நானம் செய்யப்பட்டவை. அன்புள்ளவளே! மகரிஷிகளால் அடையப்பட்ட மலையருவிகளும் கிணறுகுளங்களும் அம்மகரிஷிகளின் மகிமையி னாலேயே தீர்த்தங்களென்றறியப்பட்டவை. அதுமுதல் உலக நன்மைக்காக அவை தீர்த்தங்களாயின. தேவியே! தீர்த்தங்கள் இப்படிப்பட்டவை. அவற்றில் ஸ்நானம்செய்யும்முறையைக்கேள். பிறந்ததுமுதல்அதிகநியமமுள்ளவனாகிச் சிரத்தையுடன் தீர்த்தங்க ளுக்குச்சென்று நியமத்துடன் மூன்றுஉபவாஸங்களாவது ஓர்உப வாஸமாவதுஇருக்கவேண்டும். புண்ணியமாஸத்திலும் விரதகாலத்தி லும் பூர்ணிமையிலும் வெளியிலேயே ஸ்நானம்செய்து சுத்தனாகிப் பிறகு என்னிடம்பக்தியோடு விதிப்படி அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம்

செய்யவேண்டும். மூன்றுமுறை ஸ்நானம்செய்து ஜலக்கரையில் ப்ராம்மணர்களுக்குத் தக்ஷிணைகொடுத்துத் தேவாலயத்தில்பூஜைசெய்தபிறகு திரும்பிச்செல்லவேண்டும். அன்புள்ளவளே! இதுதான் எல்லாருக்கும் ஒவ்வொருதீர்த்தத்திலும் செய்யவேண்டியமுறையாகும். அருகிலுள்ளதீர்த்தத்தில்ஸ்நானம்செய்வதைப் பார்க்கிலும் தூரத்திலுள்ளதீர்த்தத்தில்ஸ்நானம்செய்வது சிறந்தது. ஜன்மசுத்தமுடையிருப்பவனுக்குத் தீர்த்தஸ்நானம் நன்மையைத்தரும். தீர்த்தத்தில்ஸ்நானம்செய்வது தவத்திற்கும் பாவம்போவதற்கும் மனச்சுத்தத்திற்குமுரியது. புண்ணியதீர்த்தங்களில் இவ்வாறுசெய்யப்படும் ஸ்நானம் சிறந்ததாகும். விரதங்களைப்பற்றியதீர்த்தப்புண்ணியங்களனைத்தையும் உனக்குச்சொன்னேன். அழகானகண்களையுடையவளே! இதன்பலனை மறுமையில் மனிதன் அடைவான்' என்றார்.

---

## இருநூற்றுமுப்பத்துநான்காவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஸ்வர ஸம்வாதம் (தொடர்ச்சி; தானமுறைமுதலியன.)

உமை, 'உலகத்திலுள்ளபொருள் எல்லாருக்கும்பொதுவாக இருப்பதுதானே? அப்படி எல்லாருக்கும்பொதுவாயுள்ள திரவியத்தைத் தானம்செய்து மனிதன் புண்ணியத்தையடைவது எப்படி? இப்படிப் பொதுவாயுள்ளதிரவியம் எப்படி ஒருவனைச்சேர்ந்ததாகும்?' என்றுகேட்க, மஹேச்வரர் சொல்லலானார்.

'உலகத்தில் பஞ்சபூதங்களாலாகியபொருள்கள் யாவருக்கும் பொதுத்தான். ஆகிலும், அவற்றைமனிதன் கொடுத்துப்புண்ணியமடையும் [1]வகையைக் கேள். கொடுப்பவன், வாங்குபவன், கொடுக்கப்படும்பொருள், கொடுக்கும்வகை, இடம், காலம் இவ்வாறுகுணங்கள்சேர்ந்தது தானமென்றுசொல்லப்படுகிறது. இவ்வாறுக்கும் தனித்தனியேயுள்ளசிறப்புக்களை நான்சொல்லுகிறேன்; தெரிந்துகொள். முதலிலிருந்து மனோவாக்குக்காயங்களின்செய்கைகள் பரிசுத்தமாகவும் ஸத்தியமேபேசிக்கொண்டும்இருப்பவனும் கோபமும்லோபமும் பொறாமையுமில்லாதவனும்சிரத்தையும்நம்பிக்கையுமுள்ளவனுமான தாதா சிலாக்கியனாகிறான். பரிசுத்தனும் புலன்களையும்கோபத்தையும்அடக்கினவனும் ஏழைக்குலத்திற்பிறந்தவனும் கல்வியும்ஒழுக்

---

[1] 'யதைவ' என்று பாடங்கொள்ளப்பட்டது.

கமுமுள்ளவனும் பெரியகுடும்பமுள்ளவனும் பஞ்சமஹாயஜ்ஞங்கள் தவறாதவனும் அங்கஹீனமில்லாதவனுமாயிருப்பது வாங்குகிறவனுக்குரியதர்மமென்றறி. அப்படிப்பட்டவன்தான் சிறந்தபாத்திரனாகிறான். பித்ருகாரியத்திலும் தேவகாரியத்திலும் அக்நிஹோத்திர காலத்திலும் அவனுக்குத்தானம்செய்வதில் பலனதிகம். உலகத்தில் எவன்எவன் எது எதற்குத் தகுதியுள்ளவனாயிருக்கிறானோ அவன் அவன் அது அதற்குப் பாத்திரனாகிறான். ஆபத்திலிருப்பவனுடைய ஆபத்தைவிடுவித்துக்காப்பாற்றுவதனால் அவனைப் [1] பாத்திரன் என்பர். பசித்தவன் அன்னத்திற்குப்பாத்திரன். தாகித்தவன் ஜலத்திற்குப்பாத்திரன். இவ்வாறு ஒவ்வொருமனிதனுக்கும் அநேகர் பாத்திரர்களாகச் சொல்லப்படுகின்றனர். அன்புள்ளவளே ! விடன், சோரன், நபும்ஸகன், கொல்பவன், ஆசாரத்தைக்கெடுப்பவன் இவர்களும் உலகத்திற்குக்கெடுதல்செய்யும்மற்றவர்களும்முற்றிலும்விடத்தக்கவர்கள். தேவியே! பிறரைப்பிடித்தும் திருடியும் தயையில்லாதவனிடத்தில்வாங்கியும் சூதாடியும் செய்யத்தகாதவற்றைச் செய்தும் பொருளாசையினால்அனேகருக்குத்தீங்குசெய்தும் மனிதர்கள்ஸம்பாதிக்கும்தனம் மிகவும்இழிவானது. பெண்ணரசியே! அப்படிப்பட்ட தனத்தினால்செய்யப்படும்தர்மம் வீணென்றறி. ஆதலால், புண்ணியத்தைவிரும்புகிறவன் நியாயமாகக்கிடைத்தபொருளையே தானம்செய்ய வேண்டும். எதுஎது எப்போதும் தனக்குஇனியதோ அதைஅதைத் தான் தானம்செய்யவேண்டுமென்பது துணிபு. இனி தானம்செய்யும்முறையைத் தெரிந்துகொள். அது கொடுப்பவருக்குப் பெரிய நன்மை. தகுதியுள்ளவன் தூரத்திலிருக்கையிலேயே அவனிடம் சென்று அவனைவேண்டி அவன்ஸந்தோஷமடையும்படி தானம் செய்யவேண்டும். இதுதான் தானம்செய்வதின்சிறந்தமுறை. கேட்டபின்கொடுப்பது இரண்டாந்தரம். அன்புள்ளவளே ! பாத்திரம் என்பதைமுதலில்அறிந்துஅவனையழைத்து அவனுக்குப்பொருளைக்காண்பித்து ஸ்நானசமனங்களைச்செய்து சிரத்தையுடன் கொடுக்கவேண்டும். யாசிப்பவர்களை அன்புடன் மரியாதைசெய்வது முக்கியம். ஸரியானஇடத்திலும் காலத்திலும் மரியாதையோடழைத்துத் தானம் செய்யவேண்டும். மேன்மையைவிரும்புகிறவன் மற்றத்தகுதியிலலாதவர்களுக்குக்கூடத் தானம்செய்யவேண்டும். தாதாவானவன் பாத்திரர்களைமட்டும் நன்றாகப்பரிசோதித்தே மனஉண்மையுடன் தானம் செய்யவேண்டும். தன்சக்திக்குமேற்பட்டதானம் முதன்மையானது.

---

1 'பா' என்னும் பகுதிக்குக் காப்பாற்றுவது என்பது பொருள்.

தன்சக்திக்குட்பட்டது இரண்டாவது. தன்சக்திக்குமிகக்குறைவாயுள்ளமூன்றாவதுதானம் மிகஇழிவானது. முதலில் வாக்கினால் எப்படிச்சொல்லப்பட்டதோ அப்படியே தானம்செய்யவேண்டும். புண்ணியக்ஷேத்திரங்களிலும் புண்ணியகாலங்களிலும் செய்யப்படும் தானம் க்ஷேத்திரத்தின்மகிமையாலும் காலத்தின்மகிமையாலும் மிகச்சிறந்ததாகிறதென்றறி' என்றார்.

உமை, 'மிகப்புண்ணியமான தேசமும் காலமும் எவை? எனக்குச் சொல்லும்' என்றுகேட்க, மஹேஸ்வரர் சொல்லலானார்: 'தேவர்களாலும் ரிஷிகளாலும் அடையப்பட்டதும் யாவராலும் பூஜிக்கப்பட்டதுமாகிய அந்தக்குருக்ஷேத்திரத்தின்பாகங்களிலுள்ள சிறந்தமலையும் புண்ணியதீர்த்தங்களும் சிலாக்கியமானஇடங்கள். வாங்குகிறவனுக்கு எங்கேவாங்குவது இஷ்டமோ அங்கேசெய்யும்தானத்திற்குப் பலனதிகம். சரத்காலம், வஸந்தகாலம், புண்ணியமான மாஸம், பக்ஷங்களில் சுக்லபக்ஷம், புண்ணியதிதிகளில் பூர்ணிமை, சிராத்தமும் தேவகாரியமும் செய்யத்தக்க புண்ணியதினம், சந்திரசூரிய கிரஹணம் ஆகியஇவை மிகச்சிறந்த புண்ணியகாலங்களென்றறி. சிறந்தவளே! வாங்குகிறவன்மனத்திற்கு இனிமையான காலம் மிகச்சிறந்தது. இவ்வாறு மேற்குறித்தகாலங்களில் செய்யப்படும் தானம் பெரிதாகும். கொடுப்பவன், கொடுக்கப்படும்பொருள், வாங்குகிறவன், கொடுக்கும்வகை, இடம், காலம் இவ்வாறும் தானத்தின் சிறப்புக்களென்றும் சுத்திகளென்றும் சொல்லப்படுகின்றன. இவையெல்லாம் சேர்ந்திருக்கும்தானம் பெரிதாகும். இந்த ஆறு குணங்களும் சேர்ந்ததானம் ஸ்வல்பமாயிருந்தாலும் அனந்தமாகிப் பாபங்களைப்போக்கிக் கொடுப்பவனை ஸ்வர்க்கத்தில்சேர்க்கும். இந்தக் குணங்களில்லாததானம் மிகப்பெரியதாயிருந்தாலும் பலன்கொடுக்குந்தருணத்தில் ஸ்வல்ப பலமாயாவது பலனில்லாமலாவது போய்விடும்' என்றார். உமை, 'இந்தஆறு குணங்களுடன் சேர்ந்து கொடுக்கப்படும் பெருந்தானமும் [1]பலன்படாமல்போவதாயிருக்குமானால்அந்தப் பெரியதானத்தை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டாள். மஹேஸ்வரர், 'மஹானுபாவையே! மனிதர்களின்எண்ணங் கெடுவதினால் அதுவுமுண்டு. சாஸ்திரப்பிரகாரம் தர்மத்தைச்செய்து பின் அதற்காகத் துன்பப்பட்டாலும் தான்செய்ததை வீணாகச் சபையில் புகழ்ந்துபேசினாலும் மறுஜன்மத்தில்அதன்பலன்வரவேண்டுமென்று மனத்தில்விருப்பங்கொண்டாலும் எப்போதும் பலனைவிரும்பியே

1 'சாபலதாம்' என்ற பாடங்கொள்ளப்பட்டது.

தர்மங்களைச்செய்தாலும் அந்தத்தர்மமும் தானமும் பரலோகத்தில் பலனற்றவையாம். புண்ணியத்தைக் கருதுகிற தாதாக்கள் இந்தக் குற்றங்களை விடவேண்டும். இதுதான் நெடுங்காலமாகப் பெரியோர்களால் எக்காலத்திலும் அநுஷ்டிக்கப்படும் ஒழுக்கமென்றும் மற்றவர்களை அநுக்கிரகிப்பதற்குக் கிருகஸ்தர்களின்கடமையென்றும்எப்போதும் மனத்தில்உறுதிகொண்டு தெரிந்தவர் தானம்செய்யவேண்டும். இப்படி இடைவிடாமல்செய்யப்படும்புண்யம்தான் பெரிதாகும். எல்லாருக்கும் பொதுவாயுள்ள திரவியத்தை இவ்வாறு கொடுப்பதனால் பலன் அதிகம்' என்றுசொன்னார்.

---

## இருநூற்றுமுப்பத்தைந்தாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஸ்வரஸம்வாதம் தொடர்ச்சி; பொன், பசு, பூமி, கன்னிகை, வித்தை இவற்றின்தான முதலியன.)

உமை, 'பகவானே! மனிதர்கள் தர்மத்திற்காகக்கொடுக்கத் தக்கவை எவை? அவற்றை நான் கேட்கவிரும்புகிறேன். அவற்றை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்க, மஹேஸ்வரர் சொல்லலானார்:

'அன்புள்ளவளே! தர்மகாரியங்கள் நித்தியமாகச் செய்யத்தக்கவையும் காரணம்பற்றிச் செய்யத்தக்கவையும் உண்டு. அன்னம், இடம், தீபம், தண்ணீர், பசுக்களுக்குப்புல், விறகு, எண்ணெய், சந்தனமுதலியவாஸனைகள், மருந்து, எள், உப்புமுதலியதிரவியங்களைக் கொடுப்பது நித்தியமானதர்மகாரியமென்று சொல்லப்படுகிறது. எந்தக்காலத்திலும் கொடுக்கப்படுவதினால் அது நித்தியமென்று சொல்லப்படுகிறது; எல்லாவர்ணங்களுக்கும்பொதுவானதானத்தைச் சொல்லுகிறேன்; ஊக்கத்துடன்கேள். மனிதர்களுக்கு அன்னமே பிராணன். அன்னங்கொடுப்பவன் பிராணனைக்கொடுப்பவனாவான். ஆதலால், மனிதர்கள் முக்கியமாக அன்னதானம்செய்யக் கருதுகின்றனர். வித்வானானபிராம்மணனுக்குச் சுவையுள்ளஅன்னத்தை எவன் கொடுக்கிறானோ அவன் பரலோகத்திற்குரிய அளவற்றசிறந்தபுதையலைப் புதைத்துவைக்கிறான். வழிநடந்து களைத்து வீடுவந்த விருந்தினனை முயற்சியோடு பூஜிக்கவேண்டும். அதுவே வரமளிக்கும்யாகமாம். பாவத்தைச்செய்தாலும் பசித்தவருக்கும் முக்கியமாகப் பிராம

மணருக்கும் அன்னமிடுகிறவன் தன்பாவத்தைப் போக்கினவனாகி றான். எவனதுபிள்ளை அல்லதுபேரன் வேதமோதினபிராம்மணனைப் புஜிப்பிக்கிறானோ அவனுடையபிதிருக்கள், நல்லமழையினால் உழவர் மகிழ்வதுபோல மகிழ்கின்றனர். சூத்திரர்களாயிருந்தாலும் சண்டாளர்களாயிருந்தாலும் அவர்களுக்கு அன்னதானம் மறுக்கப்படுவதில்லை. ஆதலால், கோபத்தைவிட்டு முழுமுயற்சியோடு அன்னதானம்செய்யவேண்டும். மனைவியைவருத்தியாவது அதிதிகளை எப்போதும் காப்பாற்றவேண்டும். மானிடஜன்மமே அதிதிகளுக்காக அன்றோ உண்டாக்கப்பட்டிருக்கிறது?

குற்றமற்றவனே! அன்னதானத்தினால்வரும் உலகங்களையும் சொல்வேன். அன்னதானம்செய்யும் மகாத்மாக்களுக்குத் தேவலோகத்தில் அநேக நூற்றுக்கணக்கான மேல்மாளிகைகளும் உள்ளேதடாகங்களும் வனங்களுமுள்ளவையும், ஒளியுள்ள வைடூரியக்கற்களும் பொன்வெள்ளியும் நிரம்பினவையும், பலவகை ரத்தினமயமானவையும், பலஉருவங்களாகக்கட்டப்பட்டவையும், பொற்சலங்கைகளின் மாலைகள் கட்டியவையும், சந்திரமண்டலம்போல வெளுத்தவையும், உதயகாலசூரியனைப்போலச் சிவந்தவையும், நினைத்தபக்ஷணங்களும் போஜனங்களும் ஆஸனங்களும் சயனங்களும்நிரம்பினவையும், நிற்பவையும், நடப்பவையுமானகிருகங்கள் பிரகாசிக்கின்றன. அங்கே நினைத்தபழங்களையெல்லாம்தரும் மரங்களும் அநேகநடைவாவிகளும் கிணறுகளும் ஆயிரக்கணக்கான குளங்களும் வீடுகளிலிருக்கின்றன. பிராணதானம்செய்பவருக்கு ஸ்வர்க்கத்தில் பிணிதுன்பங்களற்றவையும் அழியாதவையும் ஆச்சரியப்படத்தக்கவையுமான அநேக கிருகங்களிருக்கின்றன. இவ்வுலகத்தில் அன்னத்தையும் ஜலத்தையும் கொடுப்பவர்கள் சூரியன், சந்திரன், பிரஜைகளுக்கெல்லாம் அதிபதியான பிரம்மதேவர் இவர்களின்லோகங்களுக்கு எப்போதும் போகின்றனர். அவர்கள் அவ்வுலகங்களில் வெகுகாலம் அப்ஸரஸுகளின்கூட்டங்களுடன் விளையாடி அதன்பிறகு மானிடலோகத்தில் எல்லாச்சிறப்புக்களும் பொருந்தினவர்களாகப் பிறக்கின்றனர். அன்னதானம்செய்யும்மனிதர்கள் தேகபலமும் தேகக்கட்டுமுள்ளவர்களாகவும் நோயற்று நீண்டகாலம் ஜீவித்திருப்பவர்களாகவும் சிறந்த புத்தியுள்ளவர்களாகவும் மேற்குலத்தோராகவும் பிறக்கின்றனர். ஆதலால், நன்மையைவிரும்புகிறவன் எந்தக்காலத்திலும் எவ்விடத்திலும் யாவருக்கும் இடைவிடாமல் அன்னதானம்செய்வது முக்கியம். ஸ்வர்ணதானம் மிகச்சிறந்தது; ஸ்வர்க்கத்தையும் க்ஷேமத்

தையும் தருவது. ஆதலால், அதனைமுழுதும் ஸரியாக உனக்குச் சொல்வேன். பாவம்செய்தகொடியவனையும் ஸ்வர்ணதானம் துலக்கி விடும். 'வேதமோதினபிராம்மணருக்கு நல்லமனத்தோடு பொன்னைக்கொடுப்பவர் எவரோ அவர் எல்லாத்தேவதைகளையும் திருப்தி செய்வித்தவராகிறார்' என்று வேதம்சொல்லுகிறது. அக்நிதான் எல்லாத்தேவர்களுமாயிருப்பது. ஸுவர்ணமும் அக்நியென்றுசொல்லப் படுகிறது. ஆதலால், ஸ்வர்ணத்தைக்கொடுப்பதனால் எல்லாத்தேவர்களும் திருப்தியடைந்தவராவார். அக்நியில்லாதபோது அதற்குப் பிரதி தங்கத்தை வைக்கின்றனர். ஆதலால், ஸ்வர்ணம்கொடுப்பவர் விரும்பினவற்றையெல்லாம் அடைவர். ஸ்வர்ணதானம்செய்பவர் சூரியன்அக்நிஇவர்களின் அநேகம்சிறந்தலோகங்களை அடைவரென்பது திண்ணம். ஆபரணமாகச்செய்யப்பட்டபொன் வெறும்பொன்னைக்காட்டிலும் விசேஷம். புண்ணியகாலத்தில் பொன்னால்செய்யப்பட்டஅணிகளினால் பிராம்மணனைஅலங்காரம்செய்வித்துப் பூஜிப்பிக்கவேண்டும்.பொன்னாற்செய்யப்பட்ட சிறந்தஆபரணமாகியமுதன்மையான தானத்தைக்கொடுப்பவன் மறுஜன்மத்தில் தேகவொளியையும் தேகவலிமையையும் புத்தியையும் கீர்த்தியையும்அடைவது நிச்சயம். ஆதலால், பூமியில் மனிதர்கள் தங்களால்இயன்றவரையில் ஸ்வர்ணதானம்செய்யவேண்டும். இதற்குமேற்பட்டது உலகத்தில் ஒன்றுமில்லை. இதனால் பாவத்திலிருந்து விடுபடுவார். குற்றமற்றவளே! இதற்குமேல் கோதானத்தைச் சொல்வேன். அன்புள்ளவளே! கோதானத்திற்குமேற்பட்டதானம் உலகத்திலில்லை. பிரம்மதேவர் உலகங்களைப்படைக்கக் கருதினபோதே எல்லாப்பிராணிகளின் ஜீவனத்திற்காகவும் கோக்களை முதலில் படைத்தார். அதனால் அவை தாய்களென்றுசொல்லப்படுகின்றன. உலகங்களுக்கு மூத்தவையும் உலகங்களின்ஜீவனத்திற்காகஉண்டானவையும் சந்திரனுடையஅமுதப்பெருக்குக்களானவையும் சாந்தமானவையும் பரிசுத்தமானவையும் உயிரைக்கொடுப்பவையும் நினைத்தவற்றையளிப்பவையுமான அந்தப்பசுக்கள் என்அதீனமாயிருப்பவை. ஆதலால், புண்ணியத்தைக் காங்க்ஷிக்கிறமனிதர்கள் அவற்றைப் பூஜிக்கவேண்டும். வெருளாததும் நல்லஅடக்கமுள்ளதும் நல்லகன்றுள்ளதும் நிரம்பப்பாலுள்ளதுமான பசுவைத் தானம்செய்பவன் அதன்தேகத்தில் எத்தனைரோமங்களிருக்கின்றனவோ அத்தனைவருஷங்கள் ஸ்வர்க்கஸுகங்களை அனுபவிப்பான். பொன்னாலலங்கரிக்கப்பட்டகொம்புநுனிகளையுடைய கபிலைப்பசுவை வஸ்திரத்தோடும் கறக்கவெண்கலப்பாத்திரத்தோடும்

தானம்செய்பவன் தன்புத்திரபௌத்திரர்களையும் தன்குலத்தின்முன் ஏழு தலைமுறைகளையும் பரலோகத்தில் சுகப்படுத்துகிறான். வீட்டில்பிறந்தவையும் கிரயத்திற்குவாங்கப்பட்டவையும் பந்தயமாகக் கிடைத்தவையும் பராக்கிரமத்தினால்[1] பயிர்கொடுத்து வாங்கப்பட்டவையும் பஞ்சகாலங்களில்விடப்பட்டுக் காப்பாற்றுவதற்காகவந்துசேர்ந்தவையுமான பசுக்களையும் மற்றும் இவ்வகைமார்க்கங்களால் கிடைத்தபசுக்களையும் தாரைவார்த்துத் தானம்செய்யவேண்டும். இளைத்தவனும் வெகுபுத்திரர்களுள்ளவனும் அக்நிஹோத்ரம் செய்பவனுமாகிய வேதமோதினபிராம்மணனுக்கு நோயில்லாத பசுவைத் தானம் செய்பவன் சிறந்தலோகங்களையடைவான். நன்மையற்றவனுக்கும் நன்றிகெட்டவனுக்கும் பொருளாசையுள்ளவனுக்கும் பொய்சொல்லுகிறவனுக்கும் யாகத்தையும் ஹோமத்தையும் விட்டவனுக்கும் எவ்வகையிலும் கோதானம் செய்யலாகாது. நல்லகன்றுள்ளதும் அடங்கினதுமாகிய கறவைப்பசுவை வஸ்திரம்போர்த்துப் பிராம்மணனுக்குத் தானம்செய்பவன் இந்திரலோகத்தில் பூஜிக்கப்படுவான். நல்லகன்றுள்ளதும் அடங்கினதும் நிரம்பப்பாலுள்ளதுமான கறுத்தபசுவை வஸ்திரம்போர்த்துத் தானம்செய்பவன் வருணலோகத்தையடைவான். பொன்னிறமுள்ளதும் கண்கள்சிவந்ததும் கன்றுள்ளதுமானபசுவை வஸ்திரம்போர்த்துக் கறக்க வெண்கலப்பாத்திரத்துடன் தானம்செய்பவன் குபேரலோகத்திற்குப்போவான். காற்றிலெழும்பும் தூசிநிறமுள்ளதும் கன்றுள்ளதுமானபசுவை வஸ்திரம்போர்த்துக் கறக்க வெண்கலப்பாத்திரத்துடன் தானம்செய்பவன் வாயுலோகத்தில் பூஜிக்கப்படுவான். ஸரியானகன்றுள்ளதும் அடங்கினதும் நிரம்பப்பாலுள்ளதுமான வெள்ளைப்பசுவை வஸ்திரம் போர்த்துத் தானம்செய்வதனால் அக்நிலோகத்தில் பூஜிக்கப்படுவான். இளம்பிராயத்திலிருப்பதும் பலமுள்ளதும் நீண்டகொம்புகளுள்ளதும் மந்தைக்குத்தலைமையுமான கறுத்தவிருஷபத்தை நூறுபசுக்களுடன்அலங்காரம்செய்து மகாத்மாக்களும் வேதமோதினவர்களுமான பிராம்மணஸ்ரேஷ்டர்களுக்குக்கொடுப்பவர்கள் பலஜன்மங்களில் பிறக்கும்போதும் ஐசுவரியத்துடன் பிறப்பார். கோமயத்தையும் கோமூத்திரத்தையும் ஒருகாலும் அருவருக்கலாகாது. கோக்களின் மாமிசத்தை உண்ணலாகாது. கோக்களிடத்தில் எப்போதும் பக்தியோடிருக்கவேண்டும். ஆகாரம்செய்வதற்குமுன்னமே பரிசுத்தனாயிருந்து பிறர்பசுவுக்கு ஒருபிடி புல் கொடுக்கவேண்டும். இப்

---

1 யுத்தத்தில் ஜயிக்கப்பட்டவையும்.

படி ஒருவருஷம்செய்வது விரும்பினவற்றையெல்லாம் கொடுக்கும் விரதம். ஒவ்வொருநாளும் காலேமாலே இரண்டுவேளேகளிலும் பசுக்க ளுக்கு மங்களத்தைச் சொல்லவேண்டும். அவற்றிற்குத்தீங்கை எண் ணலாகாதென்று தர்மம்தெரிந்தவர்கள் நினைக்கின்றனர். பசுக்களே சிறந்தசுத்தம். உலகங்கள் பசுக்களிடம் இருக்கின்றன. பசுக்கள் உலகத்திற்குத் தாய்கள். அவற்றை எவ்வகையாலும் அவமதிக்காம லிருக்கவேண்டும். அதனுலேதான் கோதானம் சிறந்ததென்று சொல் லப்படுகிறது. கோக்களிடத்தில்பக்தியும் அவற்றைப்பூஜிப்பதும் மனிதனுக்குத் தீர்க்காயுளேக்கொடுக்கும். இனிப் பெரும்பலனேத் தருவதாகிய பூமிதானத்தைப்பற்றிச் சொல்லுவேன். பூமிதானத் திற்குச்சமமான தானம் உலகத்தில் இல்லேயென்பது நிச்சயம். வீடுக ளோடேயாவது நிலங்களோடேயாவது சேர்ந்தபாகமாகிய பூமியைக் கொடுக்கவேண்டும். எளிதில் பலனேக்கொடுக்கக்கூடியதும் விவாத மில்லாததுமானநிலத்தைக்குடியிருக்கஇடத்தையும்அமைத்துவாங்கு கிறவனுக்கு வஸ்திரத்தினுலும் புஷ்பத்தினுலும் சந்தனத்தினுலும் அலங்காரம்செய்து அவனுக்கும் அவன்வேலேக்காரருக்கும் அவன் சுற்றத்தாருக்கும் நல்லபோஜனமளித்து, 'வாங்கிக்கொள்' என்று மூன்றுமுறைசொல்லிப் புண்ணியகாலத்தில் தாரைவார்த்துத் தக்ஷி ணேயோடு கொடுக்கவேண்டும். வெறுப்பில்லாமல் சிரத்தையோடு இவ்வாறு பூமிதானம்செய்தால அந்தப்பூமிஉள்ளவரையிலும் அந்தத் தானத்தின்பயன்இருக்குமென்று நினைக்கின்றனர் பூமிதானம்செய்த வன் ஸ்வர்க்கத்திலேறி நீண்டவருஷகாலம் மகிழ்ந்திருப்பான். அசை வும்அழிவுமில்லாதபூமி விரும்பினவற்றையெல்லாம் கறக்கக்கருது கிறது. ஜீவனத்திற்காகக் கஷ்டப்படும்மனிதன் ஏதாவது பாவம்செய் தால் பசுவின்காதளவாகிலும் பூமியைத்தானம்செய்தால் அந்தப் பாவ த்தினின்று விடுபடுவான். மஹானுபாவையே! பொன், வெள்ளி, வஸ்திரம், ரத்தினங்கள், முத்துக்கள், தனங்கள் இவையனைத்தும் பூமிதானத்திலடங்கினவை. தம் எஜமானனது நன்மையில் ஊக்கத் துடன் யுத்தத்திலடிபட்டுத் தேகம்விட்டுப் பிரம்மலோகத்திற்குப் போகத்தக்கவர்களும் பூமிதானம்செய்தவனுக்கு மேலாகார். எல்லா வித்துக்களும்பலிப்பதும் கிணறுகளும் வீடுகளுமுள்ளதும் கலப்பை யினுலுழப்பட்டதுமான பூமியைத் தானம்செய்யவேண்டும். அது வேண்டினவற்றையெல்லாம்கொடுப்பதாகும். பயிர்கள்உண்டானபூமி யைப் பிராம்மணர்களுக்கு எவன்கொடுப்பனே அவன் எல்லாப் பாவங்களாலும் விடப்பட்டவனுகி இந்திரலோகத்திற்குப் போ

வான். தாய் தன்பாலினால் புத்திரனை எப்படிவளர்ப்பளோ அப்படியே பூமி எல்லாப்பலன்களினாலும் கொடுப்பவனை அபிவிருத்தி செய்யும். நல்லொழுக்கமும் பரிசுத்தமான ஆசாரமுமுள்ளவனும் அக்நிஹோத்திரம்செய்பவனுமான பிராம்மணனுக்குத் தம்பூமியைத் தானம்செய்பவர் யமலோகத்திற்குப் போகார். சந்திரன் ஒவ்வொரு நாளும் விருத்தியாவது எப்படி காணப்படுகிறதோ அப்படியே பூமி தானத்தின் புண்ணியம் ஒவ்வொருபிறப்பிலும் அபிவிருத்தியாகும். பூமியில்விதைக்கப்பட்ட விதைகள் எப்படி முளைக்கின்றனவோ அப்படியே பூமிதானத்தின் சிறப்பினால் கீர்த்தி பயன்கள் உண்டாகின்றன. பித்ருலோகத்திலிருக்கும்பிதருக்களும் தேவலோகத்திலிருக்கும்தேவர்களும் பூமிதானம்செய்பவனை எல்லாப் போகங்களாலும் திருப்திசெய்விக்கின்றனர். மனிதன் பூமிதானம் செய்வதனால் தீர்க்காயுளையும் அழகானதேகத்தையும் குறைவில்லாத சிறந்த ஐசுவரியத்தையும் மறுஜன்மத்தில் அடைவான். பூமிதானத்தின் நற்பலன்கள் எல்லாவற்றையும் நான் சொன்னேன். அழிவில்லாத இந்தத் தர்மத்தை மனிதர்கள் சிரத்தையோடு நித்தியம் கேட்கவேண்டும். இதற்குமேல் கன்னிகாதானத்தைப் பற்றிச் சொல்வேன். மஹாபதிவியே! பரிசுத்தமானவிரதமும் ஒழுக்கமுமுள்ளவனும் குலமும் அழகும்பொருந்தினவனுமாகிய தன்கன்னிகையை அல்லது பிறர்கன்னிகையை அவளிடத்தில் மிக்கவிருப்பமுள்ள தக்கவரனுக்குக்கொடுக்கும் விஷயத்தை முதலில் தானேநிச்சயித்துப் பிறகு பந்துக்களோடு நிச்சயம் செய்து அவனுக்குச் சாஸ்திரப்படி கொடுக்கவேண்டும்; வீடுகட்டி வைத்து எல்லாவணிகளும் பூட்டப்பட்ட அந்தக் கன்னிகையை வேலைக்காரிகள் வேலைக்காரர்கள் சிறப்புக்கள் வீடுபண்டங்கள் பசுக்கள் தானியங்கள் எல்லாவற்றுடனும் அவனுக்குத்தக்கவனும் அவளை விரும்புகிறவனுமான அந்தவரனுக்கு அக்நியின் முன்னிலையில் கொடுத்து விதிப்படி விவாகம் செய்விக்கவேண்டும். அவர்களுக்குரிய ஜீவனத்தையுண்டுபண்ணி அவர்களிருவரையும் நல்ல வீட்டில் வைக்கவேண்டும். இப்படிக் கன்னிகாதானம் செய்தால் அந்தத்தானத்தின் மகிமையினால் இறந்தபின் ஸ்வர்க்கலோகத்தில்கொண்டாடப்பட்டு ஸுகமாயிருப்பான். திரும்பி ஜனித்தபிறகும் செல்வத்தையும் சந்ததிவிருத்தியையுமடைவான். தேவியே! அதுபோலவே யோக்கியனுக்கு வித்யாதானம்செய்யும் மனிதன் மறுஜன்மத்தில் புத்திவிருத்தியையும் தைரியத்தையும் ஞாபகசக்தியையும் அடைவான். தகுதியுள்ளசிஷ்யனுக்கு வித்யாதானம்செய்பவன் அந்தத்

தானத்தின்பலனை அளவில்லாமலனுபவிப்பான். அழகான முகமுள்ளவளே! பொருளுதவிசெய்து தரித்திரர்களுக்கு வித்தையைக்கொடுப்பிப்பதும் தான்கொடுத்ததற்குச் சமமாகுமென்றறி. கௌரவமுள்ளவளே! தேவியே! இந்த மகாதானங்களை உன்விருப்பத்திற்காக உனக்குச் சொன்னேன். இன்னம் என்னகேட்க விரும்புகிருய் ?' என்ருர்.



## இருநூற்றுமுப்பத்தாருவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(உமாமஹேஶ்வரஸம்வாதம் தொடர்ச்சி ; திலதானமுதலிய பலதானங்களின்சிறப்பு.)

உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈஸ்வரரே! எள் முதலியவற்றைத் தானம்செய்வதெப்படி? அந்த அந்தத்தானங்களுக்கும் கர்மங்களுக்கும் பலன்களைச் சொல்லும்' என்றுகேட்க, மஹேஸ்வரர் சொல்லலானார். 'தேவியே! எள்தானம் செய்வதன்முறையை நான் சொல்லுகிறேன் ; ஊக்கத்துடன்கேள். செல்வமுள்ளவரும் இல்லாதவரும் முக்கியமாகத் திலதானம்செய்யவேண்டும். திலம் பரிசுத்தமானது ; பாவத்தைப்போக்குவது ; மிக்கபுண்ணியத்தைத் தருவதென்று சொல்லப்படுகிறது. சுத்தமானஎள்ளை நியாயமார்க்கத்தினல் இயன்றவரை சம்பாதித்து ரத்தினங்களுடன் மலைபோலக் குவிக்கவேண்டும். பெரியகுவியலாயினும் சிறிய குவியலாயினும் பொன், வெள்ளி, ரத்தினம், முத்து, பவழம் ஆகிய பலதிரவியங்களோடும் கொடிச்சீலைகளோடும் சீர்திருத்தப்பட்ட பூமியில்வைத்து அலங்காரம்செய்து இயன்றவரையில் ஆபரணம் வஸ்திரம் சயனம் ஆஸனங்களுடன்கூட முக்கியமாகக் கார்த்திகைமாதம் பூர்ணிமையில் தகுதியுள்ள அநேகம் பிராம்மணர்களைக் கிரமப்படி பூஜிப்பித்துத் தானும் உபவாஸமும் பிரம்மசாரிவிரதமும்செய்து அந்த எள்ளுக் குவியலைப் பிரதக்ஷிணம்செய்து தக்ஷிணையுடன் தானம்செய்யவேண்டும். அபிவிருத்தியைவிரும்புகிறவன் அதை ஒருவருக்காவது பலருக்காவது கொடுக்கலாம். தேவியே! அந்தத்தானத்திற்கு அக்நிஷ்டோமயாகத்திற்குச் சமமான பலனுண்டு. கோதானம்செய்ய விரும்புகிறமனிதனும் பூமியில் எள்ளைமட்டும் பசுவின் உருவமாகச் செய்து தகுதியுள்ளவனுக்கு வஸ்திரத்தோடும் ரத்தினங்களோடும் கொடுக்கவேண்டும். அதனல், கோதானத்தின் பலனுண்டு. எள்நிரம்

பினமடக்குக்களைப் பொன்னோடும் சண்பகப்பூவோடும் பிராம்மண னுக்குத் தானம்செய்யும்மனிதன் புண்ணியபலனையடைவான். ஹிதத் தைக்கருதுகிறமனிதன் இவ்வாறு திலதானம்செய்யவேண்டும். தேவி யே! இன்னும் பலவகைத்தானங்களின்பலன்களை ஊக்கத்துடன் கேள். மனிதன் அன்னதானம்செய்வதனால் தேகவன்மையையும் ஆயுளையும் ஆரோக்கியத்தையும் அடைவான். தண்ணீர்கொடுக்கும் மனிதன் எல்லாரும் விரும்பத்தக்கநிலைமையையும் ஸாரங்களையறியும் திறமையையும் அடைவான். வஸ்திரதானம்செய்வதனால் தேகத்தில் அழகையும் ஆபரணங்களையும் அடைவான். தீபதானம்செய்யும் மனிதன் புத்தியில்தெளிவையும் தேகத்தில் நல்லொளியையும் அடை வான். குடைதானம்செய்பவன் அபாயத்தினால்வரும் தீங்கினின்றும் நீங்கு தலைப் பலனை அடைவான். வேலைக்காரிகளையும் வேலைக்காரர்களையும் கொடுப்பதனால் மனிதன் செய்யும்கருமங்களில் பலன்களைப்பெற்று மறுஜன்மத்தில் குணமுள்ள அனேகவேலைக்காரிகளையும் வேலைக்காரர் களையும் அடைவான். தகுதியுள்ளவனுக்கு ரதங்களையும் குதிரைகளை யும் தானம்செய்யும்மனிதன் கால்நோயும்சோர்வுமில்லாமல் காற்றுப் போன்றவேகத்தையும் விசித்திரமும் அழகுமுள்ள ரதங்களையும் குதி ரைகளையுமடைவான். வீட்டைவிரும்பும்தகுதியுள்ளவனுக்கு மழைக் காலத்திலும் இரவிலும் வீட்டில்இடங்கொடுப்பவன் சிறந்ததுணை களையடைவான். அணைகட்டுதல், இணறுகுளம்வெட்டுதல் இவற்றைச் செய்யும்மனிதன் தீர்க்காயுளையும் அழகையும் மறுமையில் சிறந்தகதி யையும் பெறுவான். மரங்கள்வைத்து நிழல் பூ கனிகளைக்கொடுக்கும் மனிதன் அந்தப்புண்ணியத்தினால் மறுஜன்மத்தில் யாவராலும் எதிர் கொண்டு அழைக்கப்படுவான். நதிகளில் ஜலமெடுப்பவர்களுக்குப் படிகட்டுகிறவன் அந்தப்புண்ணியத்தினால் பின்ஜன்மத்தில் வியஸனங் களிலிருந்து விடுபடுவான். வழிகளையுண்டாக்கும்மனிதன் எப்போ தும் ஸந்ததியுள்ளவனாயிருப்பான். தீர்த்தத்தை உண்டாக்குகிறவன் எப்போதும் உடம்பில் நோய்முதலியகுற்றங்களில்லாமலிருப்பான். கிருபையோடு எக்காலமும் ஔஷதம்கொடுப்பதனால் முழுதும் நோயற்றவனும் தீர்க்காயுளுள்ளவனும் ஆவான். நாதனில்லாதவரை யும் அசக்தரையும் குருடரையும் முடவரையும்போஷிப்பவன் அந்தப் புண்ணியத்தினால் பின்ஜன்மத்தில் கஷ்டப்படாமலிருப்பான். சிறந்த வேதபாடசாலைகளையும் யதிகளுக்கு மடங்களையும் கட்டுகிறமனிதன் பின்ஜன்மத்தில் எக்காலமும் பலவிதஉயர்ந்தமாளிகைகளில் வஸிப் பதையும் யக்ஷனைப்போல அழகையும் சிறந்தபலவகைப் பக்ஷணங்

களையும் போஜனங்களையுமடைந்திருப்பான். அழகானமாட்டுக்கொட்டிலைக் கட்டுவிக்கும்மனிதன் பின்ஜன்மத்தில் உயர்ந்தஜாதியையும் நோயில்லாவாழ்வையும் அடைவான். இப்படித் தானம்செய்பவன் இன்னும் பலவகைப் பொருள்களையும் அதன்பலனாக 'அடைவான்' என்றார்.

உமை, '[1]தேவருக்கும் ஈஸ்வரரே! புண்ணியமும் தானமும் எப்படி எவ்வளவுசெய்வதனால் பயன்பெறலாம்? அதை எனக்குச் சொல்லும். எனக்கு அதில்விருப்பமிருக்கிறது' என்றுகேட்டாள். மகேஸ்வரர், 'தானத்திற்கும் கர்மத்திற்கும் பின்ஜன்மத்திலுள்ளபலனைக் கேள்'. தானத்திற்கு முன்சொன்ன [2]ஆறுகுணங்களிருக்கவேண்டும். மனிதர்கள் தகுந்தவனுக்குத் தம்செல்வத்திற்குத்தக்கபடி சாஸ்திரப்பிரகாரம் தானம்செய்யவேண்டும். புத்தி ஆயுள் ஆரோக்கியம் தேகபலம் செல்வம் கல்வி அழகு இவ்வேழுகுணங்களோடுகூடிய மானிடஜன்மம்வருவது நிச்சயம். பலனைவிரும்பி, 'இதற்காகக் கொடுத்தேன்; இதற்காகக் கொடுக்கவேண்டும்' என்றுசெய்யும்தானம் அந்தப்பலன்களைமட்டுமே கொடுக்கும். அதற்குமேல் ஒருபலனும் இடைக்காது. தேவியே! உத்தமனுக்குக்கொடுக்கும்தானம் அழியாது. [3]நடுத்தரமானவனுக்குக்கொடுப்பது நடுத்தரமான பலனைக் கொடுக்கும். அதமனுக்குக்கொடுப்பது பலனற்றதாகும்' என்று சொன்னார்.

---

## இருநூற்றுமுப்பத்தேழாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஸ்வரஸம்வாதம் தொடர்ச்சி; வைதிகம்லௌகிகமென்னும் இருவகையாகங்கள்முதலியன.)

உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈசுவரரே! லௌகிகம் வைதிகம்என இரண்டுயாகங்கள் சிறந்தவையாகச் சொல்லப்படுகின்றன. அவற்றை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்க, மஹேஸ்வரர் சொல்லலானார்.

'தேவதைகளுக்குச்செய்யும் பூஜைகள்எல்லாம் யாகங்களிலேயே சேர்க்கப்பட்டிருக்கின்றன. யாகங்கள் வேதங்களில் சொல்

1 'வததேவேச' என்று பாடங்கொள்ளப்பட்டது.

2 கொடுப்பவன், கொடுக்கப்படும்பொருள், வாங்குகிறவன், கொடுக்கும் வகை, இடம், காலம்.

3 'மத்யம்' என்று பாடங்கொள்ளப்பட்டது.

லப்பட்டிருக்கின்றன. வேதங்கள் பிராம்மணர்களிடம் இருக்கின்றன. தேவியே! ஆகாயத்திலும்பூமியிலுமுள்ள சிறந்தபொருள்களனைத்தும் உலகங்களின்நன்மையைக்கருதி யாகத்திற்காகப் படைக்கப்பட்டிருக்கின்றனவென்றறி. இதைஅறிந்து தன்மனைவியுடன் இடைவிடாமல் யாகம்செய்யும்பிராம்மணன் ஞானமும் கர்மமும் சேர்ந்திருப்பதனால் மறுமையில் நல்லலோகங்களையடைவான். தேவியே! அந்தவேதமானது பிராம்மணர்களிடத்திலேயே ஒப்பிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால், சாஸ்திரங்களில்விதிக்கப்பட்ட முறையினால் பிராம்மணர்கள்செய்யும்யாகங்களனைத்தும் தேவர்களைத் திருப்திசெய்விக்கும். பெரும்பாலும் பிராம்மணர்களும் க்ஷத்திரியர்களும் யாகத்திற்கேஉரியவரென்று நினைக்கப்படுகின்றனர். யஜமானர்களும் ரித்விக்குக்களும்மிகப்பரிசுத்தர்களாகவிருந்து பரிசுத்தமானதிரவியங்களாலும் கருவிகளாலும் வேதங்களில்விதிக்கப்பட்ட அக்நிஷ்டோமமுதலானயாகங்களைச் செய்யவேண்டுமென்பது நிச்சயம். அப்படி யாகங்களைச்செய்தால், தேவர்களுக்குத் திருப்தியுண்டாகும். எல்லாத்தேவர்களும் திருப்தியடைவதனால் யாகம்செய்தவன் யாகபலனை அடைவான். யாகங்களினால் திருப்திசெய்விக்கப்பட்டதேவர்கள் உலகங்களை அபிவிருத்திசெய்கின்றனர். தேவியே! இரண்டுலோகங்களின்சிறப்புக்களும் யாகத்தினால் காணப்படுகின்றன. ஆதலால், யாகம்செய்பவன் ஸ்வர்க்கத்திற்குச்சென்று தேவர்களுடன் மகிழ்ந்திருப்பான். தேவியே! யாகத்திற்குச்சமமான தானமில்லை, யாகத்திற்குச்சமமானபுதையலில்லை. எல்லாத்தர்மங்களின் சுருக்கமும் யாகத்தில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இதுதான் வைதிகயாகம் என்னும்பூஜை. மற்றொன்றாகிய லௌகிகயாகத்தையும் கேள். தேவபூஜையைஉத்தேசித்து உலகத்தின்உற்சவங்கள் செய்யப்படுகின்றன. தேவியே! தேவாலயத்தைஅலங்கரித்துப் பரிசுத்தனாயிருந்து யாகங்களையும் நிவேதனங்களையும் முறைப்படிசெய்து உற்சவம்செய்வதனால் தேவர்களைத் திருப்திசெய்விப்பவன் புண்ணியத்தையடைவான். தேவியே! பூமியில் எந்தமனிதர்கள், சந்தனம் பலவகைப்புஷ்பங்கள் பாயஸம் தூபதீபம் பக்தியுள்ளமனிதர்களால்செய்யப்படும் அனேக ஸ்தோத்திரங்கள் ந்ருத்தகீதவாத்தியங்கள்முதலிய கண்ணுக்கினிய செய்கைகளையும் தேவதாராதனத்திற்காகச் செய்கின்றனரோ அவர்கள் பக்தியுடன் செய்யும்பூஜையினால் தேவலோகத்திலுள்ளதேவர்கள் ஸந்தோஷமடைகின்றனர். பரிசுத்தர்களும் ஸாதுக்களிடத்தில் அன்புள்ளவர்களும் பிரம்மசரியத்தைவிடாதவர்களுமாக மனிதர்க்கு

உதவிசெய்வதனாலும் யாகபலன் கிடைக்கும். தேவியே ! பக்தியுள்ளவர்கள் ஜிதேந்திரியர்களாய்த் தேகத்தைச் சுத்தமாகவைத்துக்கொண்டு பரிசுத்தமானக்ஷேத்திரத்தில் சந்தனபுஷ்பங்களைச் சாத்துவதனாலும் ஸ்தோத்திரம்செய்வதனாலுமே பூஜிக்கப்பட்டதேவர்கள் ஸந்தோஷமடைகின்றனர். தேவியே ! தேவர்களைச் சந்தோஷிக்கச் செய்துதான் புண்ணியத்தையடையவேண்டும்' என்றார்.

உமை, 'ஸ்வர்க்கத்திலிருக்கும்தேவர்கள், பூமியில் மனிதர்கள் சாஸ்திரப்படி செய்யும்செய்கையை எப்படி அறிவார் ? அதனை எனக்குச்சொல்லும்' என்றுகேட்டாள். மஹேசுவரர், ' அன்புள்ளவளே ! தேவர்கள் எப்படிஅறிகிறாரென்பதை உனக்குச்சொல்வேன். பிராணிகளின்சரீரங்களுள் ஆத்மாவிருக்கிறது. அழகானகண்களையுடையவளே ! அந்தஆத்மாவே சிறந்ததேவதையென்றறி. மனம் அசைவற்றிருப்பதனால் ஆத்மா நன்மைதீமைகளனைத்தையும் அறிகிறது. ஆத்மாதான்தேவர்கள். ஆதலால், மனப்பற்றுடன்செய்யப்படுகிறதைத் தேவர்கள் அறியலாம். ஸாதுக்களானமனிதர்களுக்குமனம் சலியாமலிருப்பதனால் நன்மையுண்டாகிறது. அதனாலேதான் பிராம்மணர்கள் தேவர்களைப்பூஜிப்பது. சிறந்தவளே ! சுத்தமானதேகத்தோடும் விரதத்தோடும் மனஊக்கத்தோடும் உறுதியானபக்தியோடும் சலிக்காமல் யாகங்கள்முதலானதர்மகார்யங்களையும் குருபூஜையையும் செய்யவேண்டுமென்பது நிச்சயம். நன்மையைக்கருதுகிறவன் இப்படிச்செய்வதனால் இம்மையிலும்மறுமையிலும் ஸந்தோஷமடைவான். அன்புள்ளவளே ! மனவேறுபாட்டுடன் செய்யப்படும் கருமம் பயன்படாது. தேவியே ! கெட்டகாரியம்மட்டும் மனமில்லாமல்செய்தாலும் பலிப்பது திண்ணம்' என்றுசொன்னார்.

---

## இருநூற்றுமுப்பத்தெட்டாவது அத்யாயம்

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



**(உமாமஹேச்வரஸம்வாதம் தொடர்ச்சி; ச்ராத்தவிதியைப்பற்றியது.)**

உமை, ' தேவரே! பித்ருயாகம்செய்வதுஎப்படி? அதைஎனக்குச் சொல்லக்கடவீர். பித்ருக்கள் எல்லாஸம்பத்தையும் கொடுப்பவரும் யாவரும் பூஜிக்கத்தக்கவருமா யிருப்பவரன்றோ ?' என்று கேட்க, மஹேசுவரர் சொல்லலானார்.

'பித்ருயாகத்தையும் அதற்குரியதேசகாலங்களையும் அதைச் செய்யும்வகையையும் அந்தச்செய்கையின்பலாபலன்களையும் உள்ள படிசொல்வேன்; ஊக்கத்துடன்கேள். உலகங்களில் பித்ருக்கள் யாவரும் பூஜிப்பதற்குரியவர். அவர் தேவருக்குந்தேவர்; பரிசுத்த ராகப் பிரகாசிப்பவர்; புண்ணியவான்கள். அவர் தென்றிசையைச் சார்ந்திருக்கின்றனர். அழகானகண்களையுடையவளே! பூமியிலுள்ள எல்லாப்பிராணிகளும் மழையைஎதிர்பார்த்திருப்பதுஎப்படியோஅப் படியே பித்ருக்கள் உலகத்தில் நடக்கும் சிராத்தத்தை எதிர்பார்த் திருக்கின்றனர். குருக்ஷேத்திரமும் கயையும் கங்கையும் ஸரஸ்வதி யும் பிரபாஸமும் புஷ்கரமும் சிராத்தத்திற்குரிய இடங்கள். அவற் றில்செய்யும்சிராத்தம் பெரும்பயனுள்ளது. புண்ணியக்ஷேத்திரங் களும் புண்ணியநதிகளும் ஜனங்களில்லாத வனங்களும் ஆற்றுமணல் களும் சிராத்தத்திற்குச் சிறந்தஇடங்கள். மாசிபுரட்டாசிமாதங்கள் சிராத்தம்செய்யச்சிறந்தகாலம். இரண்டுபக்ஷங்களுள்சுக்லபக்ஷத்தை விடக் கிருஷ்ணபக்ஷம் சிறந்தது. அமாவாஸை, திரயோதசி, நவமி, பிரதமைஇந்தத்திதிகளில்சிராத்தம்செய்வதனால் பித்ருக்கள் திருப்தி யடைகின்றனர். தெரிந்தவன் முற்பகலிலும் வளர்பிறையிலும் இர விலும் ஜன்மநக்ஷத்திரங்களிலும் இரட்டித்ததிதிகளிலும் சிராத்தம் செய்யலாகாது. சிராத்தத்திற்கு இந்தச்சிறந்தகாலத்தை உனக்குச் சொன்னேன். எந்தக்காலத்தில் யோக்கியனானபிராம்மணன் நேர் படுவனோ அதுவும் காலமென்று நினைக்கப்படுகிறது. பந்திக்குத் தகாதபிராம்மணர்களை விடவேண்டும். பந்தியைப்பரிசுத்தப்படுத்தும் பிராம்மணர்களைத் தேடவேண்டும். சிராத்தங்களில் பாபிஷ்டர்களைப் புசிப்பித்தவன் நரகம்போவான். சிறந்தவளே! ஒழுக்கம்,கல்வி,குலம், குணமுதலியவையுள்ளவரும் மனைவியோடிருப்பவரும் வேதாத்யய னம்செய்திருப்பவருமான ஒற்றைப்படையானகணக்குள்ள பிராம்ம ணர்கள் சிராத்தத்திற்குரியவரென்றறி. தெரிந்தவன் அந்தப்பிராம் மணர்களை முதல்நாளேயாவது அன்றுகாலையிலாவது வரிக்கவேண் டும். அதன்பிறகு, சாஸ்திரப்படி சிராத்தஞ்செய்ய ஆரம்பிக்கவேண் டும். தௌகித்ரனும் குதபகாலமென்னும்நடுப்பகலும் எள்ளும் சிரா த்தத்தைப்புனிதம்செய்யும். சுத்தம் கோபமின்மை அவஸரப்படா மைஇம்மூன்றும் சிராத்தத்திற்கு வேண்டியவையென்று சொல்லு கின்றனர். குதபகாலம், [1]கட்கபாத்திரம், குசம், தர்ப்பம், எள், தேன், காலசாகம், [2] கஜச்சாயைஇவை சிராத்த காரியங்களுக்குப்

---

1 மரப்பாத்திரம். 2 663-ம்பக்கம் குறிப்பிற்காண்

பரிசுத்தமானவை. சிராத்தபூமியில் எல்லாப்புறங்களிலும் பலசிற முள்ளதிலங்களை இறைக்கவேண்டும். சிறந்தவனே! பித்ருயாகத் தின்குற்றங்கள் திலத்தினால் விலகும். கறுப்புசிவப்புவஸ்திரங்களுடு த்தவனையும் நிறம்குன்றினவனையும் புண்காயாதவனையும் அங்கங் குறைந்தவனையும் அசுத்தனையும் சிராத்தத்தில் விலக்கவேண்டும். கோழிகளையும் பன்றிகளையும் ஆடையில்லாதவனையும் நபும்ஸகனை யும் தூரஸ்திரீயையும் இரும்பு, தகரம், ஈயப்பாத்திரங்களையும் சிராத் தம்செய்யும்போதுவிட்டுவிடவேண்டும். மாம்ஸங்களினாலும் பச்சைப் பயறு, உளுந்து, யவைஆகியதானியங்களினாலும் பித்ருக்கள் திருப்தி யடைகின்றனர். முயல்புள்ளிமான்மாம்ஸங்களினால் ஆறுமாஸம் திரு ப்திசொல்லப்படுகிறது. பசுவின்நெய்யினாலும் பாயஸத்தினாலும் ஒரு வருஷம் திருப்திசொல்லப்படுகிறது. காளைமாட்டின்மாம்ஸத்தினால் பன்னிரண்டுவருஷம் திருப்தியுண்டாகிறது. சிராத்தத்தில் கொடுக் கப்படும் காண்டாமிருகத்தின்மாம்ஸம் அனந்தமானபலனைக் கொடுக் கும். எள்ளோடுசேர்ந்தபாயஸமும் தேனும் காண்டாமிருகத்தின் மாம்ஸத்திற்குச் சமமானவை. பெருமுள்ளுள்ளமச்சங்களும் முழுச் சிவப்பான ஆடும் காலசாகமும் சிராத்தத்தைஅனந்தமாக்குவனவாகச் சொல்லப்படுகின்றன. பக்ஷணத்தோடும் மாம்ஸத்தோடும் நெய்பால் வெண்ணெய்சேர்ந்த ஆகாரத்தை ஸித்தப்படுத்தவேண்டும். அவ்வித மானஆகாரத்தை ஸித்தப்படுத்தினபின் பிராம்மணர்களைப் பூஜிக்க வேண்டும். வபனம்செய்துகொண்டு ஸ்நானஞ்செய்த பிராம்மணர் களை வரிசையாக ஆஸனங்களில்உட்காரவைத்து நல்ல சந்தனங்களா லும் புஷ்பங்களாலும் ஆபரணங்களாலும் மாலைகளாலும் அவர் களை அலங்காரம்செய்யவேண்டும். அலங்காரம்செய்தபிறகு உட் கார்ந்திருக்கும் அவர்களிடத்தில் பிண்டதானம்செய்வதைத் தெரி விக்கவேண்டும். அதன்பிறகு, ஒருபிடிதர்ப்பங்களைத் தெற்குநுனி யாகப்பரப்பி அவற்றின்சமீபத்தில் அக்கினியைமூட்டி, 'ஸ்வதா' என்று சொல்லி, ஹோமம்செய்யவேண்டும். அக்நீஷோமர்களின் ஸமீபத் தில் பித்ருக்களுக்கு ஹோமம்செய்யவேண்டும். அதன்பிறகு, தெற்கு முகமாயிருந்து பித்ருக்களின்நாமதேயத்தைச்சொல்லி மூன்றுபிண் டங்களைப்ராசீனாவீதத்தோடு கட்டைவிரலினால் தர்ப்பங்களில்வைக்க வேண்டும். இம்முறையாகப்பிண்டதானம்செய்வது பித்ருக்களுக்கு அக்ஷயதிருப்தியைச்செய்யும். அதன்பிறகு, நியமத்தோடும் சுத்தத் தோடும் பிராம்மணர்களைத் தன்சக்திக்குத்தக்கபடியும் அவர்கள் திரு ப்தியடையும்படியும் தக்ஷிணைகளாலும் போஜன பதார்த்தங்களாலும்

திருப்திசெய்விக்கவேண்டும். அந்தச்சிராத்தம்செய்யப்படுமிடத்தில் வெளிப்படையாகவும் ரகஸ்யமாகவும் யாரோடும் பேசலாகாது. வாக்கையும் தேகத்தையும் அடக்கிக்கொண்டு சிராத்தம்செய்ய ஆரம்பிக்க வேண்டும். 'சிராத்தமுடிந்தபின் அந்தப்பிண்டங்களைப் பிராம்மணனாவது அக்னியாவது ஆடாவது பசுவாவது சாப்பிடவேண்டும்; ஜலத்திலாவது போடவேண்டும். புத்திரனைவிரும்புகிறவன் நடுப்பிண்டத்தை மனைவியைப்புசிக்கச்செய்யவேண்டும். 'பித்ருக்களே! தாமரைமாலையையணிந்தகுமாரனைக் கர்ப்பத்தில் வையுங்கள்' என்று ஜபித்து, திருப்தியடைந்தபிராம்மணர்களை எழுந்திருக்கச்செய்து, மிச்சமுள்ள அன்னத்தை அவர்களுக்குத்தெரிவித்து, அவர்களனுமதியின்மேல், பந்துக்களோடும் வேலைக்காரர்களோடும் புசிக்கவேண்டும். நெடுங்காலமாயுள்ள இந்தப் பித்ருயாகத்தை உனக்குச் சுருக்கமாகச்சொன்னேன். இப்படிச்செய்வதனால் பித்ருக்களும் திருப்தியடைவர்; கர்த்தாவும் பலனையடைவான். தினந்தோறுமாகிலும் மாஸந்தோறுமாகிலும் வருஷத்திற்குநாலுமுறையாகிலும் இரண்டுமுறையாகிலும் தன்சக்திக்குத்தக்கபடி சிராத்தம்செய்யவேண்டும். இந்தப்பித்ருயாகத்தினால் மனிதன் தீர்க்காயுளும் ஆரோக்கியமுமுள்ளவனும் பிள்ளைகளும் வேலைக்காரர்களும் தனதானியங்களும் நிரம்பினவனுமாவான். சிராத்தம்செய்பவன் அப்ஸரஸுகளின் கூட்டங்கள்பாடுவதும் ஆசையும்குற்றமுமில்லாததும் பலவிதஸுகங்களுள்ளதுமாகிய ஸ்வர்க்கத்தை மறுமையிலடைவான். செல்வத்தைவிரும்பிச் சிராத்தங்களைச்செவ்வையாகச்செய்யும்பண்டிதர்களுக்கு எப்போதும் ஸந்ததியையும் செல்வத்தையும் பித்ருக்கள் அளிப்பார்கள். 'சிராத்தம் பொருளையும் புகழையும் ஆயுளையும் ஸ்வர்க்கத்தையும் கொடுக்கும்; பகைவர்களைக் கெடுக்கும்; குலத்தைப் பெருக்கும்' என்று தெரிந்தவர்கள் சொல்லுகின்றனர்' என்றார்.

உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈசுவரரே! பூமியிலிறந்தமனிதர்கள் உடனே தந்தம்கருமங்களுக்குத்தக்கபடி பல ஜாதிகளில் பிறக்கின்றனரே; அந்தப்பித்ருக்கள் தேவர்கள்போல அந்தலோகத்தில் க்ஷேமமாயிருப்பதெப்படி? பித்ருக்களுக்கு இடமெது? பிண்டங்களை அவர்கள் எப்படிச்சாப்பிடுகிறார்கள்? அன்னம் போடுவதனால் இறந்தவருக்குத் திருப்தியுண்டாவதெப்படி? இது எனக்கு ஸந்தேகமாயிருக்கிறது. பகவானே! சொல்லக்கடவீர்' என்று கேட்டாள். உமாதேவி இந்தவிரோதத்தை வினவும்போது அந்தச் சபையனைத்தும் அந்தமுக்கியமான இதத்தைக்கேட்க மிக்க ஆவலோடிருந்தது. அப்போது மஹேசுவரர் சொல்லலானார்:

'தேவியே! நீ ஸந்தேகித்தது ஸரி. சிறந்தவளே! உண்மையைக் கேள். இது ரகஸ்யங்களிலெல்லாம் மிக்கரகஸ்யம்; ஹிதங்களிலெல்லாம் சிறந்தஹிதம். அன்புள்ளதேவியே! ஆகாயத்தில் தேவக்கூட்டத்தார்கள் எப்படியிருக்கின்றனரோ அப்படியே பித்ருக்கூட்டத்தார்களுமிருக்கின்றனர். சிறந்தவளே! பித்ருக்கூட்டத்தாரனைவர்களும் தென்திசையிலிருக்கின்றனர். இறந்துபோனவரைப்பற்றி மனிதர்கள் இவ்வுலகத்தில்செய்யும்பூஜையினால் அந்தப்பித்ருக்கள் திருப்தியடைகின்றனர். இறந்துபோனவரைப் பித்ருக்களென்றுசொல்வதில்லை. யாககாரியங்களினால் வடதிசையில் தேவர்கள் எப்படி திருப்தியடைகின்றனரோ அப்படியே பித்ருயாகங்களினால் தென்திசையிலும் பித்ருக்கள் திருப்தியடைகின்றனர். ஹவ்யம் கவ்யமென்று இரு வகைக்கருமங்கள் செய்யப்படுகின்றன. அவற்றுள், ஹவ்யகாரியங்கள் தேவர்களையும் கவ்யகாரியங்கள் பித்ருக்களையும் திருப்திசெய்கின்றன. ஹவ்யகாரியங்கள் மங்களத்திரவியங்களினால் உபவீதத்தோடு செய்யப்படுகின்றன. கவ்யகாரியங்கள் அமங்களத்திரவியங்களினால் பிராசீனவீதத்தோடு செய்யப்படுகின்றன. தேவாஸுரகந்தர்வர்களும் பித்ருக்களைப் பூஜிக்கின்றனர். சிராத்தங்களினால் திருப்திசெய்விக்கப்பட்ட பித்ருக்கள் சிராத்தம்செய்பவர்களைச் சிறப்பிக்கின்றனர். ஒருவன் முதலில் பித்ருபூஜைசெய்யாமல் ஒருகிரியையை நன்றாகச்செய்தாலும் அதன்பலனை ராக்ஷஸர்களும் பிசாசர்களும் புஜிப்பார்கள். ஆதலால், பூமியில் மனிதர்கள் ஹவ்யகவ்யங்கள் என்னும்கிரியைகளைச் செய்யவேண்டும். மானிடதேகம் கர்மங்களுக்கிடம். அது மற்றஉலகங்களில் இல்லை. கவ்யத்தினால் ஸந்ததியும் ஹவ்யத்தினால் பலவகைஸம்பத்துமுண்டாகின்றன. தேவியே! இந்தப்பழமையானதேவரகஸ்யத்தை உனக்குச் சொன்னேன்' என்றார்.

---

## இருநூற்றுமுப்பத்தோன்பதாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



**(உமாமஹேச்வரஸம்வாதம் தொடர்ச்சி; தானபலன் தர்மஸங்கடத்தில் தர்மம்செய்யும் வகைமுதலியன.)**

உமை, 'பிரபுவே! இவ்வாறுசெய்யப்பட்டதர்மத்தின் அளவையும் அதன்பலனின் அளவையும் நான் கேட்கவிரும்புகிறேன். அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்டனள்.

மஹேசுவரர், 'தேவியே! பெண்ணரசியே! தானத்தின் அளவின்நிச்சயத்தைச் சொல்லுகிறேன்; கேள். உலகத்தில் மனிதன் தனக்குமுக்கியமாயுள்ள திரவியத்தைக் கொடுப்பது உத்தமதானமென்று சொல்லப்படுகிறது. சிறந்தவளே! பூமியில் ஸர்வதானமென்றுசொல்லப்படுவது அதுதான். ஒருகோடி தனமுள்ளவனுக்கு அந்தக்கோடியே தனம். ஏழைக்கு ஒருபடிதானியம் முக்கியமானதனம். ஒருபடிதானியமே ஆஸ்தியாகவுடையவன் அதைக் கொடுப்பதனால் பெரும்பலனையடைவான். கோடிதனமுள்ளவன் அந்தக்கோடியைக் கொடுப்பதனால் பெரும்பலனையடைவான். அவ்விரண்டுதானங்களும் பெரியதானங்களே. பலன் இரண்டிற்கும் ஸமமாகத்தான் சொல்லப்படுகிறது. தர்மார்த்தகாமங்களுக்காகத் தன்னாலனுபவிக்கப்படும்பொருள்களில் தன்சக்திக்குக் குறைவாகக்கொடுப்பது மத்தியமதானமென்றுசொல்லப்படுகிறது. தனக்குள்ள திரவியத்தில் மிகக்குறைவாகச்செய்யப்படும்தானம் அதமமென்று சொல்லப்படுகிறது. தேவியே! தானபலன்கள் [1]ஆனந்த்யம், மகத்து, ஸமம், ஹீனம், பாதகம் என்று ஐந்துவகைகளாகப்பகுக்கப்பட்டிருப்பதைக் கேள். தேவியே! அவற்றின் விபரிவைச் சொல்வேன். ஊக்கத்துடன் கேள். கொடுக்கமனம்வராத பொருளையும் யோக்கியனுக்கு அளிக்கும்தானம் ஆனந்த்யமென்று சொல்லபடுகிறது. [2]ஆறுகுணங்கள்பொருந்தின தானம் மகத்தென்று சொல்லப்படுகிறது. வாங்குகிறவன் யோக்கியதைக்குத்தக்கபடி சிரத்தையுடன்செய்யப்படும் தானம் ஸமமென்று சொல்லப்படுகிறது. ஆறுகுணங்களில் சில குறைந்திருக்கும் தானம் ஹீனமென்று சொல்லப்படுகிறது. ஆறுகுணங்களுமில்லாவிடில் பாதகதானமென்று சொல்லப்படுகிறது. ஆனந்த்யமென்னும்தானத்திற்கு நீண்டகாலம்தேவலோகத்தில் பலன்சொல்லுகின்றனர். மகத்தென்னும்தானத்தினால் வெகுகாலம் ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்படுவான். ஸமமென்னும் தானம் மானிடலோகத்திய போகங்களைத் தரும். சிறந்தவளே! செய்கையில்குறைவான ஹீனமென்னும்தானம் பயனற்றதாம்; அல்லது, மிலேச்சதேசங்களில் ஜனிப்பது அதின்பலனாகுமென்றுசொல்லுகின்றனர். ஒருவன் கெட்டதானம்செய்தால் இறந்தபின் நரகத்தையும் அதன்பின் திர்யக்ஜன்மத்தையும் அடைவான்' என்றுசொன்னார். உமை, 'பாதகமான தானத்திற்கும் நல்லபலன்கிடைப்பது எப்படி?' என்றுகேட்டாள். மஹேசுவரர், 'மனஉண்மையோடும் தயையோடும் செய்யப்படும்

---

1 அளவற்ற பயனுள்ளது. 2 808-ம்பக்கம் குறிப்பைப்பார்க்க.

தானம் சுத்தமாகிறது. எந்தத்தானங்களேயும் அன்புடன்கொடுப்ப தனல் பலனேயடையலாம். அழகானகண்களேயுடையவளே ! இது தான் எல்லாத்தானங்களுக்கும் ஸாரமென்றறி. ஸாதுக்களால்செய் யப்படும் மற்றத்தர்மகாரியங்களேயும் கேள். தோட்டங்கள், தேவா லயங்கள், தீர்த்தங்களில்துறைகள், கிணறுகள், மாட்டுக்கொட்டில் கள், தடாகங்கள், ஸபைகள், வேலேக்கூடங்கள், பாஷண்டர்கள் தங்கும்மடங்கள், தண்ணீர்ப்பந்தல், பசுக்களுக்குப்புல், பிணியாளி களுக்குச்சிகித்ஸை, அநாதைகளேக்காப்பது, திக்கற்றபிணங்களே ஸம்ஸ்காரம்செய்வது, க்ஷேத்திரங்களேயும் வழிகளேயும் சீர்படுத்து வது, தன்னுல் இயன்ற அளவு எல்லாரையும் துன்பங்களிலிருந்துகாப் பது ஆகியஇவையெல்லாம் தர்மகாரியங்களென்று தொகுத்துச் சொல்லப்படுகின்றன. சிறந்தவளே ! மனிதன் இவற்றை இயன்ற வரை சிரத்தையோடுசெய்யவேண்டும் ; மறுமையில் புண்ணியத்தை அடைவானென்பதில் ஸந்தேகமில்லே. அப்படிப்பட்டமனிதன் அழ கையும் எல்லாரும்விரும்பும் தன்மையையும் ஆரோக்கியத்தையும் தேகபலத்தையும் சௌக்கியத்தையும் அடைவான். ஸ்வர்க்கத்திலும் மானிடலோகத்திலும் அந்தஅந்தப்போகங்களும் நிரம்பப்பெற்றிருப் பான்' என்று சொன்னுர்.

உமை, 'பகவானே ! உலகங்களேக்காப்பவரே ! ஈசுவரரே ! பெரி யோர்களால்ஆராய்ந்து அறியப்பட்டதர்மத்தின்வகைகளெத்தனேஎன் பதை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்க, மஹேசுவரர்சொல் லலானுர். 'தேவியே ! தர்மங்கள் ஒன்ருேடொன்றுமாறுபடுவதனுல் பலவாரும். முக்கியமானதை எடுத்துச்சொல்லுகிறேன் ; கேள். உல கத்தில் பலவகைத்தர்மங்கள் அநேகவேதவாக்கியங்களில் சொல்லப் பட்டிருக்கின்றன. தர்மசாஸ்திரத்தில்சொன்னதர்மங்களும் சிஷ்டா சாரங்களும் பலவாகக் காணப்படுகின்றன. சிறந்தவளே ! தேசதர்மங் கள் ஜாதிதர்மங்கள் குலதர்மங்கள் கூட்டங்களின்தர்மங்கள் இவை யும் காணப்படுகின்றன. தேகஸௌக்கியக்குறைவினுலும் காலக்கெடு தலினுலும் ஆபத்தர்மமும் காணப்படுகிறது. உலகத்திலிருப்பவர் இந் தக்காரணங்களினுல் தர்மத்தைப் பலவகைகளாகச் செய்கின்றனர். அந்தஅந்தக் காரணங்களிலும் தர்மபலனிருப்பதாகநினேக்கப்படுகின் றது. அந்தஅந்தக்காரணங்கள்நேரும்போது அந்தஅந்தத் தர்மங்க ளேச்செய்வதனுல் மனிதன் பலனேயடைவான். காரணங்கள்நேராமலே செய்பவன் அதற்குத்தகாதவன். உரியவனல்லாதவன் செய்ததனுல் புண்ணியத்தையடைவான். தர்மம்பலவகையாயிருப்பது இப்படி.

இவற்றைச் செய்யும்மனிதன் பலனையடைவான். தர்மங்களுள், வேதத்திலும் தர்மசாஸ்திரத்திலும் சொல்லப்பட்டதர்மம் எல்லாருக்கும் பொதுவென்று சொல்லப்படுகிறது. தேவியே! இதை உனக்குச்சொன்னேன். இன்னம் என்ன கேட்கவிரும்புகிறாய்?' என்றுவினவினார்.

---

## இருநூற்றுநாற்பதாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)



(உமாமஹேஸ்வரஸம்வாதம் தொடர்ச்சி; பல புண்ணிய உலகங்களைப்பற்றியது.)

உமை, 'பகவானே ! எல்லாப்பிராணிகளுக்கும்ஈசுவரரே! திரிபுரம்அழித்தவரே! வரமளிப்பவரே ! சங்கரரே ! பாவம்செய்தவர்கள் யமலோகத்தில்படும்துன்பத்தைக்கேட்டேன். தேவரே! புண்ணியம் செய்யும்மனிதர்களைப்பற்றிக் கேட்கவிரும்புகிறேன். மஹேசுவரரே ! புண்ணியம்செய்தமனிதர்களுக்கு எப்படிப்பட்டலோகங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன ; அவர்கள் அந்தஉலகங்களில் போகங்களை அநுபவிப்பதுஎப்படி ? தேவசிரேஷ்டரே ! இதை எனக்குச் சொல்லும். எனக்குக் கேட்கவிருப்பமிருக்கிறது' என்றுகேட்க, மஹேசுவரர் சொல்லலானார்.

'எல்லாமங்களங்களும்பொருந்தினவளே! சிறந்தவளே ! நீ விரும்புகிறவற்றையெல்லாம் சொல்லுகிறேன்; கேள். நற்கர்மங்களின் பயன்களாயுள்ளபுண்ணியஉலகங்கள் பலஉள்ளன. பொன்மயமான மேருமலையைச்சுற்றி எல்லாத்திசைகளிலும் பத்ராசுவம் கேதுமாலம் உத்தரகுருக்ஷேத்திரம் ஜம்புவனமுதலிய தேசங்கள் ஸ்வர்க்கங்களென்று சொல்லப்படுகின்றன. அவற்றில் கர்மங்கள்செய்வதில்லை. அந்தத்தேசங்களில்பிறந்தபின் ஸ்வதந்தரர்களாய் எல்லா உலகங்களிலும் காணப்படுவார்கள். ஒவ்வொன்றும் ஆயிரம்யோஜனை தூரம் அளவுள்ளது. அந்தஉலகங்களில் எக்காலமும் பூக்களும் பழங்களுமுள்ள மரங்கள் எல்லாவிடங்களிலும் இருக்கின்றன. அவையெல்லாம் வஸ்திரங்களும் ஆபரணங்களும் காய்த்துத்தொங்கிக்கொண்டும் பொன்னிறமாகவும் இருக்கின்றன. அவற்றில் பவளம்போலும் நிறமுள்ளவையும் ஆச்சர்யமானவையும் மனத்தைக்கவர்கின்றவையுமான வண்டுகளும் பறவைகளும் கூவிக்கொண்டு அவற்றைச் சிறப்பிக்கின்றன. தடாகங்கள் தாமரைவனங்களினால் மூடப்பட்டு அழகாயிருக்கின்றன. சிறந்தவாஸனையினால் ஸுகத்தைத்தரும்காற்று அவ்

விடத்தில் எப்போதும் வீசுகிறது. அங்குள்ளவர்களெல்லாரும் வாடாதமாலைகளைத்தரித்துத் தூயஆடைகளையுடுத்திருக்கின்றனர். தேவியே! இப்படிச்சுகத்தைத்தரும் தேவபோகங்கள் பலவகைகளா யிருக்கின்றன. புண்ணியம்செய்த ஸ்திரீகள் புருஷர்கள் அனைவரும் அங்கே ஒருவர்மேலொருவர் ஆசையும்அன்புமுள்ளவர்களாகி மகிழ்ந் திருக்கின்றனர். அங்குள்ளஸ்திரீபுருஷர்களெல்லாரும் அழகுள்ள வர்களும் சிறந்தமகிமையுள்ளவர்களும் அழகானகுண்டலங்களையணி ந்தவர்களும் காட்சிக்கினியவர்களுமாயிருக்கின்றனர். அங்குள்ள சிறுமிகள் அனேகவிதமானரஸபாவங்களுள்ளவர்களாகவும் எப்போ தும்இளமைப்பருவத்திலிருப்பவர்களாகவும் நினைத்தஉருவம்எடுப்ப வர்களாகவும் மென்மையுள்ளவர்களாகவும் சிருஷ்டிக்கப்பட்டிருக் கின்றனர். அந்தஸ்திரீகள் ஸ்வர்க்கலோகத்தில்எப்படியோ அப் படியே அனுபவிப்பவர்களின்மனத்திற்கொத்தவர்களாகவும் இனிய வர்களாகவும் அலங்காரம்செய்யப்பட்டவர்களாகவும் படைக்கப்பட் டிருக்கின்றனர். அந்தத்தேசங்களில் இப்படிப்பட்டஸ்திரீகளும் புரு ஷர்களும், ஐம்புலன்களும்ஸுகமாகவும் தேகங்கள்போகத்திற்குரிய அலங்காரங்களோடும் உத்ஸாகமாயிருக்கின்றனர். அன்புள்ளவளே! அன்பு மகிழ்ச்சிமுதலியகுணங்கள் அவர்களிடத்தில் மிகுதியாயிருக் கின்றன; கோபமுதலியகுற்றங்களில்லை. சிறந்தவளே! அங்கே பசி யும் தாகமும் உடம்பின்வாட்டமும் இல்லை. அந்தத்தேசம் எங்கும் அழகாகவும் எல்லாருதுக்களின்புஷ்பங்களுமுள்ளதாகவுமிருக்கிறது. (புண்ணியம்செய்தவர்கள்) புண்ணியபலன் எதுவரையிலிருக்கிறதோ அதுவரையில் அங்கே எல்லாரோடும்சேர்ந்தவர்களாகக் காணப்படு கின்றனர்; ஸ்வர்க்கவாஸிகள் எக்காலமும் போகங்களோடு மகிழ்ந் திருக்கின்றனர். அன்புள்ளவளே! அவ்விடங்களிற்பிறந்து புண்ணிய முள்ளவரையில் போகங்களையனுபவித்துப் புண்ணியம்கழிந்தவுடன் அந்தத்தேகம்நீங்கிவிடுகின்றனர். அந்த ஸ்வர்க்கலோகத்திலிருந்து விழுந்து திரும்பவும் மானிடஜன்மத்திற்பிறக்கின்றனர். அவர்கள் முந் தியபுண்ணியத்தின்மிச்சத்தினால் சிறந்தவர்களாக ஜனிக்கின்றனர். பெண்ணரசியே! நீ கேட்டதற்குஇந்தஸ்வர்க்ககதியைச்சொன்னேன்.

அன்புள்ளவளே! இதற்குமேல் எட்டுப்புண்ணியலோகங்களைச் சொல்லுகிறேன்; கேள். அவை ஒன்றுக்கொன்றுமேலானவையும் போகங்களும் ஸுகமுமுள்ளவையுமாயிருப்பவை. வித்தியாதரலோ கம், கிம்புருஷலோகம், யக்ஷலோகம், கந்தர்வலோகம், கின்னரலோ கம் அப்ஸரஸுகளின்லோகம், தானவலோகம், தேவலோகம் இவை

வரிசையாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. புண்ணியகருமம்செய்த மனிதர்கள் அவ்வுலகங்களில் உண்டாகின்றனர். அவ்வுலகங்களும் ஸ்வர்க்கலோகத்திற்கொப்பாகச் சொல்லப்படுகின்றன. புண்ணியம் செய்தவரெல்லாரும் அவ்வுலகங்களில் ஸ்வர்க்கத்திற்போலவே அழகும் விவேகமும் பலமும் தீர்க்காயுளுமுள்ளவர்களாகப் போகங்களை யனுபவித்து மகிழ்ந்திருக்கின்றனர். அவர்கள் மானிடர்போலவே எல்லாக்கிரியைகளையும் செய்வதைக் காண்கிறோம். மனிதருக்குமேற்பட்டஐசுவரியம் அவ்வுலகங்களில் நினைத்தவுடன்உண்டாகிறது. மூப்பும் பிறப்புஇறப்புக்களும் அவ்விடங்களில் காணப்படுகின்றன. அங்கே குணங்களுமுண்டு; குற்றங்களுமுண்டு. பெண்ணரசியே! தவச்சிறப்பினால் அவரவர்புண்ணியங்களுக்குத்தக்கபடி ஆகாசஸஞ்சாரமும் அந்தர்த்தானமும் தேகவன்மையும் மனவுறுதியும் நீண்டகாலம்ஜீவித்திருப்பதும் உண்டாகின்றன. அவர்களுக்குத் தேவலோகஸஞ்சாரமும் விதிக்கப்பட்டிருக்கிறது. தேவலோகம் அப்படிப்பட்டதன்று. தேவர்கள் அவர்களுக்குமேற்பட்டவர்களாக நினைக்கப்படுகின்றனர். தேவலோகத்தில் சொல்லுக்கெட்டாதஸுகமும் இறவாமையும் விமானங்களினால்ஸஞ்சரிப்பதும் எப்போதும் அப்ஸரஸுகள்பணிசெய்வதும்உள்ளன. இப்படிப்பட்டஇன்னமனேகம்செய்கைகள் தேவர்களுக்கு விசேஷமாயிருக்கின்றன. தேவியே! சிறந்தவளே! தேவலோகத்திலுள்ளநடையெல்லாம் உனக்கு நேரிலேயே தெரியுமே. ஆதலால், உனக்குத்தெரிந்ததை நான் அதிகமாக விவரித்துச்சொல்லவில்லை. அந்தஉத்தமமான இடங்களெல்லாம் புண்ணியங்களாலேயே அடையப்படுகின்றன' என்றார்.

---

## இருநூற்றுநாற்பத்தோராவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேச்வரஸம்வாதம் தொடர்ச்சி; நரகத்துக்குரியவர்களையும் ஸ்வர்க்கத்துக்குரியவர்களையும் அறியும்வகை.)

உமை, 'மனிதர்கள் ஜீவித்திருக்கும்போதே, 'இந்தஜீவன் நல்லகதிக்குரியவன்' என்றும், 'இவன் அப்படியல்லன்; துன்பத்திற்குரியவன்' என்றும் அவரவர்கதிகளையறியக்கூடுமோ, கூடாதாவென்பதை நான் கேட்கவிரும்புகிறேன். அதை எனக்குச் சொல்லக்கடவீர்' என்றுகேட்க, மகேசுவரர் சொல்லலானார்.

'உயிர்வாழ்க்கையிருக்கும்வகையைப்பற்றி உனக்குச் சொல்வேன். உலகத்தில்மனிதர்கள்தேவத்தன்மையர், அஸுரத்தன்மையர் என்று இரண்டுவகையினராயிருக்கின்றனர். மனத்தினாலும் வாக்கினாலும் செய்கையினாலும் தீங்குசெய்துகொண்டிருப்பவரெவரோ அவர்களை அஸுரத்தன்மையரென்றறி. அந்தமனிதர்கள் நரகத்திலிருப்பவர். துன்பம்செய்பவரும் கள்வரும் வஞ்சகரும் பிறர்மனைவியைத் தொடுகிறவரும் இழிதொழிலில்விருப்பமுள்ளவரும் சுத்தத்தையும் மங்களத்தையும்விட்டவரும் ஆசாரத்தைப் பகைப்பவரும் பாவங்களைச் செய்பவரும் உலகவொழுக்கத்தைக் கெடுப்பவரும் மற்றும் இவ்வகைநடக்கையுள்ளவர்களாக ஜீவிப்பவர்களும் நரகலோகத்திற்கு உரியவர். மற்றும் இப்படி உலகங்களுக்குப் பயத்தைத்தரும்மிருகங்களும் ஸர்ப்பங்களும் கொடியமுள்மரங்களும் அஸுரத்தன்மையுள்ளவையென்றறி. தேவியே! தேவத்தன்மையரானமற்றவர்களையும் ஊக்கத்துடன் கேள். மனத்தினாலும் வாக்கினாலும் செய்கையினாலும் எப்போதும் நன்மையையே செய்துகொண்டிருப்பவர் எவரோ அப்படிப்பட்டவர்களைத் தேவர்களென்றறி. அம்மனிதர்கள் ஸ்வர்க்கம்போவதற்குரியவர். சுத்தமும் ஸத்தியமுமுள்ளவர்களாகிப் பிறர்பொருளை எடாமலும் எல்லாப்பிராணிகளிடத்திலும் ஸமபுத்தியோடுமிருக்கும் விவேகிகளானமனிதர்கள் ஸ்வர்க்கம்போவதற்குரியவர். பயத்தினாலாவது ஜீவனத்திற்காகவாவது பொய்சொல்லாமல் எப்போதும் ஸத்தியமேபேசிக்கொண்டிருக்கும்மனிதர்கள் ஸ்வர்க்கம் போவதற்குரியவர். தர்மத்தையும் ஆசாரத்தையும்விடாமல் பரிசுத்தர்களாகவும் இன்சொல்லுள்ளவர்களாகவும் செய்யத்தகாதவற்றை மனத்தினாலும் கருதாதவர்களாகவுமிருக்கும் மனிதர்கள் ஸ்வர்க்கம் போவதற்குரியவர்கள். பிறர் துன்பப்படுவதைத் தம்துயரத்தைப்போல நினைப்பவரும் ஏழைகளாயிருந்தும் யாசிப்பவர்களுக்கு அன்புடன் எதையாவதுஒன்றைக் கொடுப்பவருமானமனிதர்கள் ஸ்வர்க்கம் போவதற்குரியவர்கள். ஆஸ்திகரும் மங்களங்களைவிடாதவரும் எப்போதும் பெரியோரைஅடுப்பவரும் புண்ணியகருமங்களை விடாமற் செய்பவருமானமனிதர்கள் ஸ்வர்க்கம்போவதற்குரியவர்கள். எப்போதும் விரதங்களையும் தானதர்மங்களையும்விடாதவரும் கள்ளமும் குரூரமுமில்லாதவருமான மனிதர்கள் ஸ்வர்க்கம்போவதற்குரியவர். குருபணிவிடைசெய்துகொண்டும் தேவர்களையும்பிராம்மணர்களையும் பூஜைசெய்துகொண்டும் நன்றிமறவாமலும் கல்விகற்றுக்கொண்டுமிருக்கும்மனிதர்கள் ஸ்வர்க்கம்போவதற்குஉரியவர்கள். ஐம்புலன்களை

யுமடக்கிக் கோபம், தற்புகழ்ச்சி, கர்வம், பொருளாசை, பகை இவற்றைவிட்டவர்களான மனிதர்கள் ஸ்வர்க்கம்போவதற்குரியவர்கள். 'நான், எனது' என்பதைவிட்டுத் தம் பந்துக்களிடத்தில் அன்பையும் ஏழைகளிடத்தில்தயையையும் விடாமலிருக்கும்மனிதர்கள் ஸ்வர்க்கம்போவதற்குரியவர். இம்மையிலுள்ள ஒழுக்கத்தாலேயே மறுமையின்பயன் ஊகிக்கப்படுகிறது. இப்படிப்பட்டவர்களாக இவ்வுலகத்தில்ஜீவிக்கும்மனிதர்கள் ஸ்வர்க்கம்போகத்தக்கவர். அழகான முகமுள்ளவளே! பிரஜைகளுக்கு நன்மையைச்செய்யும் பசுக்களும் விருக்ஷங்களும் மற்றும்உலகத்திலுள்ள நல்லவையனைத்தும் தேவபக்ஷத்தைச்சேர்ந்தவையென்றறி. உலகத்திலுள்ளசராசரங்களனைத்தும் நன்மைதீமையுள்ளவைகளாகவே இருக்கின்றன. அன்புள்ளவளே! நல்லவற்றைத் தேவபக்ஷமென்றும் தீயவற்றைஅஸுரபக்ஷமென்றும் சொல்லுகின்றனர்' என்றார்.

---

## இருநூற்றுநாற்பத்திரண்டாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)



(உமாமஹேஸ்வரஸம்வாதம் தொடர்ச்சி; பலவகை மரணங்களைப்பற்றியது.)

உமை, 'பகவானே! மரணகாலம்வந்தபோது எவ்வகையால் உயிர்விட்டமனிதர்கள் மறுமையில் இதம்பெறுவர்?' என்றுகேட்க மகேசுவரர் சொல்லலானார்.

'தேவியே! ஆ! ஆ! உனக்குச் சொல்வேன். ஊக்கத்துடன் கேள். உலகத்தில் இயற்கை முயற்சிஇருவகைகளாலும் மரணம் உண்டாகிறது. அவ்விரண்டனுள்ளும் ஸ்வபாவமரணம் அபாயமில்லாதது. முயற்சியினாலுண்டாகும்மரணம் உபாயங்களினால்செய்யவேண்டும். தேவியே! சிறந்தவளே! இவ்விரண்டும்உண்டாகும்வகையைக் கேள். முயற்சியினாலுண்டாகும்மரணம் தேகத்தில் சக்தியுள்ளவனுக்கும் இல்லாதவனுக்கும் இரண்டுவகைகளாகச் சொல்லப்படுகிறது. முயற்சியினாலுண்டாகும் மரணம்என்பது இறந்துபோகஎண்ணத்தினால் உயிரைவிடுவதுதான். தேகவலிமைதப்பினவனுக்கு மூப்பும் பிணியும் காரணங்கள். இறக்கஎண்ணமுள்ளவர்கள் உயிரைவிடுவதற்கு மகாப்பிரஸ்தானம்போவது ப்ராயோபவேசங்கிடப்பது நீரில்விழுவது அக்நிப்பிரவேசம்செய்வதுஆகிய இந்நான்குவகைகள் கூறப்பட்டுள்

ளன.சிறந்தவளே! இவற்றின்வகையைவரிசையாகச்சொல்லுகிறேன்; கேள். சாஸ்திரப்படி தன்தர்மங்களைச்செய்து கிருகஸ்தாசிரமத்தை வெகுகாலம்நடத்தி (தேவமனுஷ்யபித்ருரிஷி) கடன்களைத்தீர்த்துப் பிராயமுதிர்ந்தும் நோயடைந்துமிருக்கும்போது தன்அசக்தியைத் தெரிவித்துப் பந்துக்களெல்லாரையும்கேட்டுக்கொண்டு தன்குடும்ப போஷணங்கள் எல்லாவற்றையும்விட்டுத் தன்புண்ணியத்திற்காகத் தானங்களைச்செய்து ,எல்லாரிடத்தும்இன்சொல்லாகப்பேசிச் செலவு பெற்றுக்கொண்டு புதுவஸ்திரம்தரித்து அதைத் தர்ப்பக்கயிற்றினால் கட்டிக்கொண்டு ஆசமனம்செய்து ஸங்கல்பத்தோடு நிச்சயம்செய்து உலகநடையையெல்லாம்விட்டுத் தனக்கிஷ்டமான தர்மத்தைச்செய்ய வேண்டும். மகாப்ரஸ்தானத்தில்விருப்பமிருந்தால் உயிர்விடும்வரையிலும் ஆகாரமில்லாமலிருந்துகொண்டுவடதிசையைநோக்கிச்செல்ல வேண்டும். நடையற்றுப்போகும்போது மனவுறுதியுடன்படுத்தும் உயிர்விடவேண்டும். இப்படிச்செய்தால் பரிசுத்தமானபுண்ணிய லோகங்களை அடையலாம். மனிதன் பிராயோபவேசம்செய்யக்கருதினாலும் முன்சொன்னமுறைப்படியே ஆகாரமில்லாமல் சிறந்தபுண்ணியக்ஷேத்திரத்தில் படுக்கவேண்டும். [1]உயிருள்ளவரையிலும் பரிசுத்தனயிருந்து தன்சக்தியளவு தானத்தையும் புண்ணியத்தையும் செய்து உயிரைவிடவேண்டும். இது எக்காலமுமுள்ளதர்மம். இப்படித்தேகத்தைவிட்டபிறகு ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்படுவான். சிறந்தவளே! அக்நிப்பிரவேசத்தில்விருப்பமிருந்தாலும்முன்சொன்ன விதிப்படியே புண்ணியக்ஷேத்திரத்திலாவது நதிக்கரைகளிலாவது கட்டைகளினால்சிதையைச்செய்து பரிசுத்தனாகிச் சங்கல்பம்செய்து கொண்டு தேவதைகளுக்குநமஸ்காரம்செய்து அக்னியைப்பிரதக்ஷிணம்செய்து அதில் முழுகவேண்டும். அவ்வாறு விதிப்படிசெய்பவனும் புண்ணியலோகங்களையடைவான். சிறந்தவளே! நீரில்விழநினைத்தாலும் அதேமுறையாய்மிகப்புண்ணியமானதென்றுபிரஸித்திபெற்றதீர்த்தத்தில் தர்மத்தைநினைத்து அமிழவேண்டும். அப்படிச் செய்பவனும்பற்றில்லாமையினால்சிறந்தபுண்ணியலோகங்களை அடைவான். இனித் தேகவன்மையுள்ளவன் உயிர்விடும்வகையை ஸரியாகச் சொல்லுகிறேன் ; கேள். பிரஜாபரிபாலனம்செய்யும்க்ஷத்திரியசிரேஷ்டன் தன்ராஜ்யத்தைக்காப்பாற்றுகிறதற்காகவும் படைச்சேவகர்அரசனுடையஅன்னத்தின்கடமைக்காகவும் பிரம்மசாரிகள் குருவுக்காகவும் எல்லாரும் கோக்களுக்காகவும் பிராம்மணர்களுக்காகவும் உயிரை

1 'ஆப்ராணம்' என்று பாடம்கொள்ளப்பட்டது.

விடுவது சாஸ்திரத்தில் விதிக்கப்படுகிறது. தன்ராஜ்யத்தைக்காப்ப தற்காகவும் கெட்டஜனங்களினுல்உபத்திரவிக்கப்பட்டஜனங்களைவிடு விப்பதற்காகவும் விதிப்படி யுத்தஸங்நாகம்செய்துகொண்டு மனவுறுதி யுடன் யுத்தத்தில்சென்று பின்வாங்காமல் உயிரைவிடவேண்டும். இவ்வாறுஇறந்தஅரசன் அப்போதே ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப் படுவான். அப்படிப்பட்டநல்லகதி வேறில்லை. க்ஷத்திரியனுக்கு அது சிறந்தது. படைச்சேவகன் யஜமானனுடைய அன்னம்உண்ட தற்காக அவனுடையகாரியம்நேர்ந்தபோது தன்னுயிரைக்கவனியா மல் அவனுக்கு உதவிசெய்து அவனுக்காகஉயிரைவிடுவனுயின் அவ னும் புண்ணியலோகங்களைஅடைவான்; அந்தலோகத்தில்தேவக் கூட்டங்களினுல் விரும்பப்படுவான். அதற்குச் சந்தேகமில்லை. அப்படியே கோக்களுக்காகவும் பிராம்மணர்களுக்காகவும் அசக்தர் களுக்காகவும் உயிரைவிடுகிறவனும் அந்தத்தயாகுணம்பொருந்தியிரு ந்ததனுல் புண்ணியலோகத்தையடைவான். இவ்வாறு, உயிரைவிடு தற்குள்ளநல்வழிகளை உனக்குச் சொன்னேன். காமத்தினுலாவது கோபத்தினுலாவது பயத்தினுலாவது தேகத்தை ஒருவன் விடுவா னுயின் அவன் தற்கொலைசெய்துகொண்ட காரணத்தினுல் முடிவில் லாதநரகத்தை அடைவான். ஸ்வபாவமரணம்என்பது தன்இச்சை யினுலுண்டாகாததுதான். இறந்துபோனவர்களுக்குச் சாஸ்திரப்படி செய்யவேண்டியகாரியத்தையும் சொல்லுகிறேன்; கேள். அந்தமர ணத்திலும் தேகத்தைப் பாராமல் போட்டுவிடுவதைப்பார்க்கிலும் புத்திபூர்வமாகப்போடுவது விசேஷம். மனிதன் இறந்துபோகுந் தருணத்தில் தேகத்தைப் பூமியில் படுக்கவைக்கவேண்டும். உயிர் விட்டவுடன் அந்தத்தேகத்தை வஸ்திரத்தினுல் மூடவேண்டும். பெண்ணரசியே! பிரேததேகத்தைப் பூமாலைகளினுலும் சந்தனத்தி னுலும் பொன்னினுலும் அலங்கரித்து மயானத்தின்தென்புறத்தில் சிதையின்அக்கினியில் எரிக்கவேண்டும். உயிரில்லாததேகத்தைப் பூமி யில் புதைக்கவும்செய்யலாம். இறந்துபோகக்கருதுகிறவர்களுக்குப் பகலும் சுக்லபக்ஷமும் உத்தராயணமும் சிறந்தவை; மற்றவை இழி வானவை. ஜலதர்ப்பணமும் அஷ்டகையென்னும்சிராத்தமும் அநே கரால்செய்யப்படுமானுல் இறந்துபோனவர்களுக்குப் பரலோகத்தில் புஷ்டியையும் புண்ணியத்தையும் தருவனவாம். மனிதர்களுக்குஇத மானசொல்லாக இவற்றையெல்லாம்உனக்குச்சொன்னேன்'என்ருர்.

## இருநூற்றுநாற்பத்துமூன்றுவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஸ்வரஸம்வாதம்தொடர்ச்சி; மோக்ஷதர்மத்தைப்பற்றியது.)

உமை, 'தேவதேவரே ! காலஸம்ஹாரம்செய்தவரே! சங்கரரே! உமக்கு நமஸ்காரம். உலகத்திலுள்ள அநேகதர்மங்களை உமது அநுக்கிரகத்தினால் யான் கேட்டேன். எல்லாத்தர்மங்களிலும்சிறந்ததும் ஆதியும் அந்தமுமில்லாததும் அழியாதபலனுள்ளதுமாகிய தர்மத்தையெல்லாம் கேட்கவிரும்புகிறேன். இதில்என்மனம்மயங்குகிறது. சிலபிராம்மணர்கள் மோக்ஷத்தையும் சிலர் யாகத்தின்பலனையும் சிலர் வானப்பிரஸ்தாஸ்ரமத்தையும் சிலர் கிருகஸ்தாசிரமத்தையும் சிலர் ராஜதர்மத்தையும் சிலர் வேதாத்யயனத்தையும் சிலர்பிரம்மசர்யாசிரமத்தையும் சிலர் மௌனமாகியஸந்யாஸாசிரமத்தையும் புகழ்கின்றனர். சிலர் தாய்தந்தையருக்குப்பணிவிடைசெய்து ஸ்வர்க்கம்போயினர். மற்றும்சிலர் கொல்லாமையினாலும் ஸத்தியத்தினாலும் ஸ்வர்க்கத்தில் பூஜிக்கப்படுகின்றனர். சிலர் யுத்தத்தில்எதிர்த்துச்சென்று அடிக்கப்பட்டு ஸ்வர்க்கம்போயினர். சிலர் உஞ்சவ்ருத்தியுள்ளவர்களாயிருந்து தவசித்திபெற்று ஸ்வர்க்கமார்க்கத்தையடைந்தனர். மற்றும்சிலர் மனவுண்மையோடு பெரியோரைப்பூஜித்துக் கள்ளமில்லாதசுத்தாத்மாக்களாயிருந்து ஸ்வர்க்கத்தில் நிலைபெற்றனர். இவ்வாறு உலகத்தில் தர்மத்திற்கு அநேகம்வழிகள் மிக்கரகஸ்யமாயிருப்பதனால் என்மனம் காற்றினால் மேகங்கலங்குவதுபோலக் கலங்குகிறது. தேவசிரேஷ்டரே! இப்படிப்பட்டஸந்தேகத்திற்கு இடமான விஷயத்தில் ஸந்தேகத்தையறுப்பதும் நிச்சயஞானத்தை அளிப்பதுமானசொல்லைச் சொல்லக்கடவீர்' என்று கேட்டாள். பிநாகமென்னும்வில்லைத்தரிப்பவராகியமஹாதேவர், தமதுதேவியாகியஉமை இவ்வாறுகேட்க, ஆத்மஞானத்தைப்பற்றியதும் நுட்பமும் இனிமையுமானசொல்லைச் சொல்லலானார்.

'மஹானுபாவையே ! நீ நிச்சயத்தைக்கேட்கவிரும்புவது நியாயந்தான். அன்புள்ளவளே ! நீ என்னை இப்போதுகேட்பதுதான் சிறந்தவிஷயம். ஸ்வர்க்கலோகபலனுக்குக்காரணமாகியதர்மம் எல்லாச்சாஸ்திரங்களிலும் விதிக்கப்பட்டிருக்கிறது. அநேகவழிகளுள்ள தர்மத்தினுடையஎந்தச்செய்கையும் இவ்வுலகத்தில் வீண்போவதில்லை. தெளிந்தபுன்னகையுள்ளவளே ! யார்யாருக்கு எந்தஎந்த

விஷயத்தில் உறுதியிருக்கிறதோ அதைஅதைமட்டுந்தான் தர்மமென்று அவர்அவர்நினைப்பது. வேறுஒன்றையும் நினைப்பதில்லை. தேவியே! மிகச்சிறந்ததான மோக்ஷோபாயத்தைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன்; கேள். இதுதான் எல்லாத்தர்மங்களுக்கும் மேற்பட்டதும் அழியாதபலனுள்ளதுமான நல்லதர்மம். தேவியே! மோக்ஷத்திற்குமேலானது ஒன்றுமில்லை. மோக்ஷந்தான் சிறந்தகதி. அழியாதசிறந்தஸுகமென்றும் பிறவியில்லாததென்றும் அதை அறிகின்றனர். தேவியே! அதில் மூப்புஇறப்புக்களும் துயரமும் சோர்வும் இல்லை. தேவியே! அது சிந்தைக்கெட்டாதபேரின்பம். அதற்குமேல் ஒன்றுமில்லை. மோக்ஷஞானந்தான் எல்லா ஞானங்களிலும் உத்தமமானஞானமென்று வித்வான்கள் அறிகின்றனர். ரிஷிகளும் தேவர்களும் அதைப் பரமபதமென்று சொல்லுகின்றனர். அழியாததும் குறையாததும் அலைக்கவும்வெல்லவும்கூடாததும் என்றும்ஸுகமாகவேயிருப்பதும் தேவசிரேஷ்டர்களாலும் ஆசைப்படத்தக்கதுமான அந்தப் பரமபதத்தை ஞானிகள் அடைகின்றனர். இந்தஸம்ஸாரமானது துக்கத்தையே ஆதியாகவும் துக்கத்தையே அந்தமாகவும் உடையதென்று சொல்லப்படுகிறது; துயரம் பிணி மூப்பு இறப்புஎன்னும் குற்றங்கள் உள்ளது. ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரங்கள்முதலியவை எப்படி திரும்பித்திரும்பிச் சுற்றுகின்றனவோ அப்படியேதான் பிராணிகளும். சிறந்தலக்ஷணங்களுள்ளவளே! இந்தஸம்ஸாரத்தை விடுவதற்கு உபாயம் சொல்லுகிறேன்; கேள். பிரம்மாமுதல் தாவரம் ஈருகவுள்ள அனைத்தும் ஸம்ஸாரமென்றுசொல்லப்படுகின்றன. ஸம்ஸாரத்தில் எல்லாப்பிராணிகளும் திரும்பித்திரும்பிப்பிறந்து இறந்து கொண்டிருக்கின்றன. அந்த ஸம்ஸாரசக்ரத்திலிருந்து விடுபடுவது ஞானத்தினாலென்றறியப்படுகிறது. ஆத்மாவின்உண்மையையறிவதுதான் ஞானமென்றுசொல்லப்படுகிறது. ஞானியாயிருப்பவன் ஞானத்தைக்கிரகிக்கும்உபாயத்தையும் சாஸ்திரப்பிரகாரமான அவனுடைய ஆசாரத்தையும் சொல்வேன். அதை நீ ஊக்கத்துடன்கேள். பிராம்மணனும் க்ஷத்திரியனும் முதலில் கிருகஸ்தாசிரமத்திலிருந்து எல்லாக்கடன்களையும்நிவ்ருத்திசெய்துகொண்டு அதன்பிறகு அந்தஆசிரமத்தை விடவேண்டும். கிருகஸ்தாசிரமத்தைவிட்டபிறகு மனவுறுதியோடு வனத்திற்குப் போகவேண்டும். வனத்தில் ஒருகுருவைத் தேடிச்சாஸ்திரப்பிரகாரம்தீக்ஷையைச்செய்துகொண்டு அதன்பிறகு, வானப்பிரஸ்தாசிரமத்தின்ஒழுக்கத்தைக் கிரமப்படிகாப்பாற்றவேண்டும். குற்றமில்லாதவனுயிருந்து அந்தஉபாத்தியாயரிடத்தில்மோக்ஷத்

திற்குரிய ஞானத்தையும் பெறவேண்டும். அந்தமோக்ஷஞானம் ஸ்மிருதிகளில் ஸாங்கியமென்றும் யோகமென்றும் இரண்டுவிதமாகச் சொல்லப்படுகிறது. இருபத்தைந்துதத்வங்களை ஆராய்வது ஸாங்கிய மென்று சொல்லப்படுகிறது. ஸித்திகள்பெற்றுத்தேவஸ்தக்குச்சமமா யிருப்பது யோகசாஸ்திரத்தின்ஸித்தாந்தம். சிஷ்யனுயிருந்து அவ் விரண்டனுள் ஏதாவதுஒருஞானத்தைக் கேட்கவேண்டும். காலம் பாராமலும் காஷாயமுடிக்காமலும் ஒருவருஷம் குருகுலவாஸம் செய் யாமலும் சிரத்தையுடன் குருவின்அன்பைப் பெருமலும் ஸாங்கியத் தையும் யோகத்தையும் தெரிந்துகொள்ளலாகாது. விருப்புவெறுப் புக்களைவிட்டுச் சீதோஷ்ணம் ஸுகதுக்கமுதலியவற்றைத் தாங்க வேண்டும். அவன்தான் ரிஷி. பசிதாகங்களினுல்கலங்காமல் பழகின விஷயங்களிலிருந்து நிவ்ருத்திக்கவேண்டும். எண்ணத்திலுள்ள உறுதியானபற்றுக்களை விடவேண்டும். எப்போதும் தியானமே காரிய மாக இருக்கவேண்டும். குடம் பானபாத்திரம் உறி குடை தடி பாத ரக்ஷை வஸ்திரம்இவற்றில் தனது என்னும்பற்றை வைக்கலாகாது. குருவுக்குமுன்னெழுந்து பின் படுக்கவேண்டும். அவருக்குத்தெரிவி யாமல் அவசியமானகாரியத்திற்கும் செல்லலாகாது. பகலில் இரண்டு ஸந்திகளிலும் [1]ஸ்நானசாடியோடு இருமுறை ஸ்நானம்செய்யவேண் டும். அவனுக்கு ஒருவேளைபோஜனந்தான் யதிகளால் பூர்வகாலத் தில் விதிக்கப்பட்டிருக்கிறது. எல்லாரிடத்திலும்பிக்ஷையெடுக்கவேண் டும். இரவில் இடைவிடாமல் தியானம்செய்யவேண்டும். அந்த அந்த ஸமயங்கள்நேர்ந்தபோதும் ஒருகாலும் குருவுக்குத் தான் தெரிவிக் கப்படக்கூடாது. பிரம்மசாரிவிரதமும் காட்டில் வாஸமும் ஸ்நான சுத்தமும் இந்திரியநிக்ரஹமும் ஸர்வபூததயையும் அவனுக்கு நிலை யானதர்மங்கள். அல்பாகாரம்செய்து இந்திரியங்களையடக்கி எல்லாப் பாவகாரியங்களையும்விட்டவன் ஆத்மத்தியானம்செய்து பாவங்களைப் போக்கும்சிறந்தஞானத்தை அடைவான். செய்கையினுலும் மனத் தினுலும் வாக்கினுலும் எந்தப்பிராணிகளிடத்திலும் கெட்டஎண் ணத்தை எப்போது செய்யாமலிருக்கிருனோஅப்போதே பிரம்மத்தை அடைகிருன். கடுமையும் அகங்காரமும்பகையுமற்றவனுகி இரண்டை விட்டிருப்பவன் துயரமும் பயமும் உபத்திரவமுமில்லாத உயர்பத த்தை அடைவான். இகழ்ச்சியிலும் புகழ்ச்சியிலும் வேறுபாடில்லா மலும் ஓட்டாஞ்சில்லியையும் கல்லையும் பொன்னையும் ஒன்ருகநினைத் தும் பகைவனிடத்தும் மித்திரனிடத்தும் வேறுபாடில்லாதமௌனி

---

1 ஸ்நானத்திற்குரிய வஸ்திரம்.

யானவன் முக்திபெறுவான். இப்படிப்பட்டஆசாரங்களோடு ஆத்மாவையே தியானம்செய்துகொண்டிருப்பவன் அந்தஞானத்தைப் பழகுவதனாலேயே பரகதியையடைவான்.

---

## இருநூற்றுநாற்பத்துநான்காவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஶ்வரஸம்வாதம் தொடர்ச்சி; வைராக்கியத்தைப்பற்றியது.)

துன்பம் நோய் மூப்பு இளைப்பிறுதல் இந்தஸம்ஸாரசக்ரத்தில் மனம்வெறுக்காதவனுக்கு முக்தி வருவதில்லை. ஆதலால், ஸம்ஸாரத்தில்வெறுப்பையுண்டாக்குவதும்மனத்தைநிலைநிறுத்துவதுமாகிய ஞானத்தை உனக்குச் சொல்வேன். அந்தஞானம் வழியாகத்தானே அமிருதமென்னப்படும்முக்தி வருவது. மூடனிடத்தில்நாள்தோறும் துன்பத்திற்குஇடங்கள் ஆயிரங்களும் பயத்திற்குஇடங்கள் நூறுகளும் பிரவேசிக்கின்றன. பண்டிதனிடத்தில் அவை பிரவேசிப்பதில்லை. பொருள்நஷ்டம்வந்தபோதும் மனைவி மக்கள் தந்தைமுதலியவர்கள்இறந்தபோதும், 'ஐயோ! கஷ்டம்!' என்றுநினைத்துத் துயரமடைகிறான். கடந்துபோனவற்றின்சிறப்புக்களைப்பற்றி நினைக்கலாகாது. அவற்றைநினையாதவனுக்குத் துயரப்பற்று அழிந்துபோகிறது. அற்பபுத்தியுள்ளமனிதர்கள், வேண்டாதது வருவதனாலும் வேண்டினதுபோவதினாலும் மனத்துயரங்களை அடைகின்றனர். இறந்தவனையும் கெட்டுப்போனபொருளையும்பற்றிச் சிந்திப்பவன், கடந்துபோனதனால் துயரத்தையே அடைவான். ஆனால், அந்தநினைவு இவனைவிட்டுப் போவதில்லை. இந்தமானிடப்பிறப்பில் கர்ப்பத்திலிருக்கும்காலங்தொடங்கி மானிடஇயற்கையுண்டாயிருக்கிறது. துன்பங்களும் இன்பங்களும் பலவகைகளாக அடிக்கடி வருகின்றன. அவ்வின்பதுன்பங்களுள் ஒன்றும்இவனைஉட்படுத்தாமலிருக்கவேண்டும். இன்பத்தைஅடைந்து மகிழாமலும் துன்பத்தைஅடைந்து பரிதபியாமலுமிருக்கவேண்டும். எந்தப்பொருளில் அன்பு உண்டாகிறதோ அதில் குற்றங்களை ஆராய்ந்துகொண்டிருக்கவேண்டும். துன்பம்கலந்திருப்பதைப் பார்க்கவேண்டும். அதனால், சீக்கிரத்தில் வைராக்கியம்பெறலாம். பெருங்கடலில் ஒருகட்டையும் மற்றொருகட்டையும்சேர்வதும் 'சேர்ந்தபின் பிரிவதும் எப்படியோ அப்படித்தான் சுற்றங்கள்சேருவது.' காணாமலிருந்துவந்து திரும்பியும் காணாமற்

போனவர்களானமனிதர்கள்விஷயத்தில் ஸ்நேகம்செய்தல் தகாது. அவர்களைவிட்டுப்பிரிவது நிச்சயமன்றோ? பிள்ளை பெண்டிர் தேகம் ஆஸ்தி அதிகாரம் க்ஷேமம்என்னுமிவை குடும்பங்கள். தெரிந்தவன் அவற்றில் மயங்கலாகாது. தேவலோகத்தில்தேவேந்திரனுக்கும் இன்பமே முழுதும்இருப்பதில்லை. அங்கும் மிகப்பெருந்துயரமிருக்கிறது. அவனும் நித்தியஸுகத்தையடைவதில்லை. இன்பத்திற்கு அடுத்தது துன்பம். துன்பத்திற்குஅடுத்தது இன்பம். தனங்கள்எல்லாவற்றிற்கும் அழிவுதான் முடிவு. மேன்மைகளுக்குத் தாழ்வு முடிவு. சேர்க்கைக்குப் பிரிவு முடிவு. உயிர்வாழ்வுக்கு மரணம் முடிவு. உயர்வதையும் விழுவதையும் தானே கண்டறிந்து எல்லாம் அநித்தியமென்றும் அஸுகமென்றும் நிச்சயிக்கவேண்டும். பொருள்களைஈட்டுவதிலும் துன்பம்; ஈட்டினவற்றைக்காப்பதிலும் துன்பம்; அழிந்துபோவதிலும் துன்பம்; செலவாவதிலும் துன்பம். சீ! பொருள் துன்பத்திற்கு இடம். பொருளுள்ளமனிதனை ஐந்துபகைவர் எப்போதும் பீடிக்கின்றனர். அவராவார்:—அரசன் கள்வன் தாயாதி பூதம் செலவு. அர்த்தந்தான் அநர்த்தத்திற்குக் காரணமென்று தெரிந்துகொள். பொருளில்லாதவனை அநர்த்தங்கள் பீடிப்பதில்லை. பொருள்கிடைப்பது பெருந்துயரம். பொருளில்லாமை பெரியஸுகம். பொருள்களுக்குக்கெடுதல்கள்நேரிடும்போது துன்பமுண்டாவது நிச்சயம். பொருள்கிடைத்ததனால் ஆசைபூர்த்தியாவதைக் காணவில்லை. அந்த ஆசை ஆதாரங்கிடைத்ததனால் விறகிற்பற்றின தீப்போல அதிகப்படுகிறது. நான்குகடல்களையும்மேகலையாகஅணிந்திருக்கும்பூமிமுழுமையையும் ஜயித்தபிறகும் திரும்பவும் அக்கடல்களின்அக்கரையை ஜயிக்கக்கருதுவதும் நிச்சயம். இவ்வுலகப்பற்றுப் போதும். பற்றுத்தானே குற்றமுள்ளது. தேவியே! புற்றுச்சேர்க்கும்கறையான் பற்றுதலினாலேயே கொல்லப்படுகிறது. ஒருவன் புவனிமுழுமையையும் ஒற்றைக்குடையின்கீழ் ஆளுகிறான். அவ்வரசனும் ஒருதேசத்திலேதான் வஸிக்கவேண்டும்; அந்தத்தேசத்திலும் ஒருநகரத்திலே தான் இருக்கலாம்; நகரத்திலும் ஒருவீடுதான் அவனிருக்குமிடம்; அந்தவீட்டிலும் ஓர் அறையில்தான் அவன்வஸிப்பது. அந்தஅறையிலும் இரவில் ஒருபடுக்கையில்தான் படுக்கவேண்டும். அந்தப்படுக்கையும் இவனுக்குப்பாதியும் இவன்மனைவிக்குப்பாதியுமாகப் பகுக்கப்படுகின்றது. ஆதலால், இவ்வளவுபெரியபற்றுதலிலும் இவன் அனுபவிப்பது மிகக்கொஞ்சம். சிறுவன் அறிவில்லாமல், 'எல்லாம் எனதுபலத்தினால்தான்' என்றுநினைக்கிறான். மேற்சொன்னபடி எல்

லாவற்றையும்உபயோகிக்கும்போது இவனுக்குண்டாகும் பிரயோஜனம் மிகக்கொஞ்சம். எல்லாமனிதர்களின்தேகயாத்திரையும் ஒரு படியளவுஅரிசியினாலேமட்டும் நடக்கும். அதற்குமேல் அதிகமான லாபமெல்லாம் துன்பத்திற்கும் கஷ்டத்திற்கும்தான். ஆசைக்கீடான துன்பமுமில்லை; விடுவதைப்போலின்பமுமில்லை. விருப்பங்களையெல்லாம்விட்டபிறகுதான் பிரம்மப்ராப்திக்குரியவனாகிறான். நல்லறிவில்லாதவர்களால்விடமுடியாததும்,தேகந்தளர்ந்தாலும்தளராததும்,உயிருள்ளவரையிலும்இருக்கும் ரோகமுமாகிய ஆசையைவிடுகிறவனுக்கே ஸுகம். விருப்பம், விரும்பினவற்றைஅநுபவிப்பதினால் ஒருகாலும்தணிவதில்லை; நெய்யினால் அக்நி அதிகமாவதுபோல இன்னும் அதிகரிக்கும். தெரிந்தவன் விரும்பினவை கிடைக்காமையினாலேயே துயரத்தை விட்டுவிடுகிறான். பற்றுதலென்னும்அரணியில்உண்டாகி முயற்சியென்னும்விறகையடைந்து உக்கிரமாகஜ்வலிக்கும்காமமென்னும்அக்நியானது அறிவுத்தேர்ச்சியில்லாதமனிதனைச் சப்தாதிவிஷயங்களினால் மயக்கி எரித்துவிடுகிறது. பூமியிலுள்ளநெல் யவம் பொன் பசுக்கள் பெண்கள்எவ்வளவோ அவ்வளவும் ஒருவனுக்கும் நிரம்பப்போதாதென்றுகண்டறிகிறவன் மயங்குவதில்லை. உலகத்திலுள்ள காமஸுகங்களும் தேவலோகங்களிலுள்ளபெரியஸுகமும் ஆசையற்றிருக்கும்ஸுகத்தின் பதினாறில் ஒருபாகத்திற்கும் ஈடாகாதவை. அறிவுள்ளவன் ஐம்புலன்களையும் சப்தாதிவிஷயங்களில் விடலாகாது; ஐம்புலன்களையும் ஆறாவதாகியமனத்தையும்கட்டி எப்போதும்ஆத்மாவினிடம்வைக்கவேண்டும். புலன்களை விஷயங்களில்செலுத்துவதனால் கெடுதலையடைவது திண்ணம். அவற்றையேகட்டினால் அதனாலேயே பலனைப்பெறலாம். இவ்வாறு இந்திரியங்களையும் ஆத்மாவினிடம் சேர்த்துக் கட்டுப்படுத்தும்திறமையுள்ள புத்திசாலி பாவங்களையும் துன்பங்களையுமடையான். தெரிந்தவன் எப்போதும் ஜாக்ரதையோடு இந்திரியங்களைப் பாதுகாக்கவேண்டும். அவை காக்கப்படாவிடின் விரைவில் மனிதன் நரகமடைவானன்றோ? [1]மோகமென்னும்எருவினால் உண்டாவதும் அஜ்ஞானமென்னும்வேருன்றினதும் [2] முயற்சியென்னும்தண்ணீர்விடப்பட்டதும் க்ரோதம்லோபம் என்னும்பெருங்கிளைகளுள்ளதும் முன்ஜன்மத்துப்பாவத்தை வயிரமாக உடையதும் உழைப்புஎன்னும்சிறுகிளைகளுள்ளதும் கொடிய துயரமென்னும்புஷ்பங்களும் பயமென்னும்தளிர்களும் பலவகைஎண்ணங்

1 குற்றம்தெரியாமை.

2 'விவித்ஸா' என்பதுமூலம்; அடையவேண்டுமென்னும் விருப்பம்

களென்னும்இலைகளுமுள்ளதும் அஜாக்ரதையினால்வளர்க்கப்பட்ட தும் ஆசைகளென்னும்பெருங்கொடிகளினால்எங்கும்சுற்றப்பட்டது மாகிய காமமென்னும்விசித்திரமானமரம் அறிவின் திருத்தமில்லாதவ னுடைய மனமென்னும்நிலத்தில் வளருகிறது. தத்வஜ்ஞானியினிடத் தில் அம்மரம் முளைப்பதேயில்லை. முளைத்தாலும் உடனே வெட்டப் படுகிறது. கஷ்டமானஉபாயங்களினால்தேடப்பட்டவையும் நிலையற் றவையும் குணமற்றவையும் துன்பத்தையேஅடியாகவும்முடிவாகவு முடையவையுமான காமஸுகங்களென்னும்பிரயோஜனங்களில் என் ன இன்பமிருக்கிறது? இந்திரியங்கள்கெட்டு ஆயுள்முடிந்து நமனெதி ரில்நிற்கும்போது இந்தஅஸுகத்தில் என்னஸுகமிருக்கிறது? பாரு ங்கள்! தேகத்திலும்மனத்திலுமுள்ளவியாதிகளினால் எக்காலமும் பீடிக்கப்பட்டுத் தன்காரியங்கள் முடியாமலேஇருக்கும்மனிதனுக்கு மரணம்வரும்போது என்னஸுகமிருக்கிறது? அந்தப்பொருளையே சேர்த்துக்கொண்டும் காமஸுகங்களில் விருப்பம் தீராமலுமிருக்கும் மனிதனைக் காட்டில் புலி ஆட்டைத்தூக்குவதுபோல நமன் தூக்கிக் கொண்டுபோகிறான். பிறப்பு இறப்பு மூப்புத் துன்பங்களினால் எப் போதும் உபத்திரவிக்கப்பட்டு ஸம்ஸாரத்தில்வேகவைக்கப்பட்டிருந் தும் ஜனங்கள் பாவத்திற்கு அஞ்சுவதில்லை' என்றார்.

உமை, 'பகவானே! மனிதர்கள் எந்தஉபாயத்தினால் மூப்பை யும் மரணத்தையும் நிவிருத்திசெய்துகொள்ளலாம்? அது இருக்கு மாயின் சீக்கிரம் எனக்குச்சொல்லும். தவத்தினாலேயா? யாகமுத லியபெருங்கர்மங்களாலேயா? கல்வியினாலேயா? அல்லது, ரஸாயன மென்னும் ஔஷதத்தினாலேயா? எதனால் மூப்பு இறப்புக்களைத் தாண் டுவது?' என்றுகேட்க, மஹேசுவரர் சொல்லலானார். 'சிறந்தமஹிமை யுள்ளவளே! பெண்ணரசியே! ஜராமரணங்களைப்போக்கும்உபாயம் மோக்ஷத்தைத்தவிர வேறு ஒன்றும் எவ்வுலகங்களிலுமில்லை என்று அறி. மனிதர்கள் முக்தியடைந்தாலன்றித் தனத்தினாலும் ராஜ்யத் தினாலும் உக்கிரமானதவத்தினாலும் மரணத்தைத் தாண்டுவதில்லை. மோக்ஷமடைந்தாலன்றி அசுவமேதயாகங்கள்ஆயிரமும் வாஜபேய யாகங்கள்நூறும் மூப்புஇறப்புக்களைத் தாண்டுவிப்பதில்லை. ஆணைகை யினாலும் தனதானியங்களாலும் வித்தியாலாபத்தாலும் தவத்தினா லும் ரஸாயனமென்னும்ஔஷதத்தினாலும் ஜராமரணங்களை யாரும் தாண்டுவதில்லை. தானமும் யாகமும் தவமும் நல்லொழுக்கமுமுள் ளவரும் ரஸாயனம்தெரிந்தவரும் வேதாத்தியயனம்செய்துகொண் டிருப்பவரும் ஜராமரணங்களைக் கடந்துபோவதில்லை. தேவர், தான

வர், கந்தர்வர், கின்னரர், நாகர், அரக்கர்யாவரையும் காலம் தன்வசப்படுத்திக்கொள்ளுகிறது. காலத்துக்குவசப்படாதவனில்லை. சென்ற பகலிரவுகளும் மாதங்களும் திரும்பிவருவதில்லை; நதிகளின்பிரவாகங்கள்போலத் திரும்பாமலே ஓடுகின்றன. அந்தக்காலம் மாறாத உறுதியானதியானத்தை இடைவிடாமல் செய்துகொண்டிருக்கிறது. அழிவில்லாதஇந்தச்சூரியன் இடைவிடாதபகலிரவுகளில் மனிதர்களின்ஆயுளை எடுத்துக்கொண்டும் எல்லாப்பிராணிகளின் உயிரையும் போக்கிக்கொண்டும் அடிக்கடி அஸ்தமனமும் உதயமுமாகிறான். ஒருராத்ரிகடந்துபோனாலும் ஆயுள் மிகக்கொஞ்சமாகிவிடுகிறது. ஆழமில்லாதஜலத்தில் மச்சம்போலிருக்கும் அவனுக்கு என்னஇளமையிருக்கிறது? சரீரத்திற்கு மரணம் நிச்சயம்; மாற்றமுடியாதது. எவனும் ஒருக்ஷணம்இருந்தாலும் திரும்பவும் காலத்துக்குவசப்படுகிறான். எல்லாப்பிராணிகளும் இறவாமலும் தளராமலுமிருக்குமாயின் பிராணிகளுக்கு அநிஷ்டமும் துன்பமும் ஒருபோதும் உண்டாவதில்லை. ஜாக்ரதையில்லாதபிராணிகளிடத்தில் காலம் ஜாக்ரதையோடுஇருக்கிறது. மரணம்நேர்ந்தபோது ஜாக்ரதையுள்ளகாலத்திலிருந்து விடுபடுவதில்லை. நாளைச்செய்யத்தக்கதை இன்றைக்கேசெய்யவேண்டும். பிற்பகலில்செய்யத்தக்கதை முற்பகலிலேயே செய்யவேண்டும். எந்தக்காலத்தில் இவன்எமனால்பார்க்கப்படவில்லை என்று யாருக்குத் தெரியும்? 'மழைக்காலத்தில் இதைச் செய்வேன். கிரீஷ்மகாலத்தில் இதைச் செய்வேன். வஸந்தகாலத்தில் இதைச்செய்வேன்' என்றுநினைக்கிறவன் சிறுவன். அவன் இடையூற்றை அறிவதில்லை. கிடைக்காதபொருள்களைப்பற்றி, 'இது எனக்கு வேண்டும்; இது எனக்குவேண்டும்' என்னும் எண்ணங்கொண்டிருக்கையிலேயே மனிதர்கள் மரணத்தினிடம் கொண்டுபோகப்படுகின்றனர். நாள்தோறும் ஜரைவந்து காலபாசத்தினால்கட்டப்பட்டு நாள்தோறும் துக்கமார்க்கத்தில்மயங்கும்போது பிராணிகளுக்குத் தர்மத்தில்சிரத்தை எதற்கு? இளமையிலேயே தர்மத்தைச் செய்யவேண்டும். உயிர்வாழ்க்கை நிச்சயமில்லை. பழுத்தபழங்களுக்குப்போல விழுதலின்பயம் மனிதருக்கு எப்போதுமுள்ளது. தனமும் தாரமும் புத்திரனும் போகங்களும் மனிதருக்குப் பிரியமாயிருந்தாலும் அவற்றினால் என்னபயன்? ஒருநாள் எல்லாவற்றையும்விட்டு நமனுக்கு அகப்படவேண்டுமே. பிறப்பவரையும் இறப்பவரையும் பார்த்தும் மனிதனுக்குத் துன்பமுண்டாகாமற்போமாயின் அவன் கட்டைக்கும் ஓட்டுக்கும் ஸமமானவன்தானே. அழிவதும் நிச்சயமில்லாதது

மான உயிருக்குப் பந்துக்களாலும் சிநேகிதர்களாலும் உடைமைகளாலும் என்னபயன்? ஒருநொடியில் இவற்றையெல்லாம் விட்டுப்போகிறுனே. போனபின் திரும்பிவருவதில்லையே' என்றுஎல்லாப்பொருள்களும் அநித்தியமாயிருப்பதை எப்போதும் சிந்திப்பவனுக்கு முக்திக்குமுதலாகிய வைராக்கியம் விரைவில் உண்டாகும். அந்தவைராக்கியத்திஞல் அவனுக்குத் திரும்பவும் விவேகமுண்டாகிறது. சிறந்தவளே! அந்தவைராக்கியத்திஞல் மனிதர் முடிவானஒழிவைப்பெறுகின்றனர். வைராக்கியந்தான் முக்தியின்சிறந்தரகஸ்யமென்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. தேவியே! வைராக்கியமுண்டாவதைப்பற்றி இந்தச்சொல்லை உனக்குச் சொன்னேன். மோக்ஷத்தைக்கருதுகிறவர் இவ்வாறு ஆராய்ந்து ஆராய்ந்துதான் ஸம்ஸாரத்திலிருந்து விடப்படுகின்றனர்.

---

## இருநூற்றுநாற்பத்தைந்தாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஸ்வரஸம்வாதம் தொடர்ச்சி; ஸாங்கியத்தின் கொள்கை.)

தெளிந்தபுன்னகையுள்ளவளே! ஸாங்கியமென்னும் ஞானத்தைப்பற்றி உனக்குச் சரியாகச்சொல்வேன். அதை அறிந்தமனிதன் திரும்பவும் ஸம்ஸாரத்தில் புகமாட்டான். ஸந்யாஸத்தையறிந்தவர்களாகிய அந்தஸாங்கியர்கள் ஞானத்திஞலேயே முக்திபெறுகின்றனர். சரீரத்தைச்சேர்ந்ததாகிய கொடுந்தவம் வீணென்று ஸாங்கியர் கூறுகின்றனர். இருபத்தைந்து தத்வங்களையறிவதே ஞானமென்பது அவர்கொள்கை. அவ்யக்தமென்பது மூலப்பிரகிருதி. அவ்யக்தத்திலிருந்து மகத்து உண்டாகிறது. மகத்திலிருந்து அகங்காரமுண்டாகிறது. அந்தஅகங்காரத்திலிருந்துசப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம்என்னும் ஐந்து தன்மாத்திரைகளும் [1]பதினேர் இந்திரியங்களும் உண்டாகின்றன. அந்த ஐந்துதன்மாத்திரைகளிலிருந்து ஐந்து பூதங்கள் உண்டாகின்றன. அவற்றிஞல் சரீரமுண்டாகிறது. இவ்வாறு சரீரத்தைச்சேர்ந்தவை இருபத்துநான்கு தத்வங்களென்று சொல்லப்படுகின்றன. இந்தஎண்ணில் புருஷனென்னும் ஆத்மாவை இருபத்தைந்தாவது தத்வமென்று சொல்லுகின்றனர். ஸத்வம் ரஜஸ் தமஸ்என்னும் குணங்கள் பிரக்ருதியிலிருப்பவை. ப்ரக்ருதியானது

---

1 ஞானேந்திரியம் ஐந்து, கர்மேந்திரியம் ஐந்து, மனம் ஒன்று.

தன்னுடைய குணங்களினால் உலகமனைத்தையும் படைக்கிறது. விருப்புவெறுப்புக்கள்இன்பதுன்பங்கள் தேகம் புத்தி தைரியம்இவை ப்ரகிருதியின்காரியங்களென்றே ஞானிகள் அறியவேண்டும். எல்லாவற்றின் இலக்கணங்களையும் பிரிவுகளையும் முதலிலிருந்து தெளிவாக விரித்துச் சொல்வேன்; கேள். நித்தியமும் பிரிவில்லாததும் ஸூக்ஷ்மமும் பிறகு,பரவத்தக்கதும் தொழிலில்லாததும் காரணமில்லாததும் இந்திரியங்கள் ஒன்றுக்கும் புலப்படாததுமாயிருக்குமென்பதுதான் அவ்யக்தத்தின்இலக்கணம். அவ்யக்தம் ப்ரகிருதி மூலம் ப்ரதானம் யோனி [1]அவ்யயம்என்னும்பலசொற்கள் அவ்யக்தத்தையே சொல்பவை. அது ஸூக்ஷ்மமாயிருப்பதனால் சுட்டிக்காட்டமுடியாதது. அது ஸத்தென்றுசொல்லப்படுகிறது. உலகமெல்லாம் அதனாலுண்டானது. சிருஷ்டிக்கு அதுதான் மூலமென்று நினைக்கப்படுகிறது. ஸத்வமுதலியவை ப்ராகிருதியிலுண்டாகும்குணங்கள். நான் அவற்றைச் சொல்லுகிறேன். ஸுகம் ஸந்தோஷம் புத்தித்தெளிவு இம்மூன்றும் ஸத்வகுணத்தின்காரியங்கள். விருப்புவெறுப்புக்கள் இன்பதுன்பங்கள் கர்வம் இவை ரஜோகுணத்தின்காரியங்கள். தெளிவில்லாமை, பயம், மயக்கம், சோம்பல்இவை தமோகுணத்தின்காரியங்கள். ஸத்வகுணம் தலைஎடுத்திருக்கும்போது சிரத்தையும் உற்சாகமும் பகுத்தறிவும் மயக்கமின்மையும் தயையும் தைரியமும் உண்டாகின்றன. அது இல்லாதபோது இவையும் இல்லாமற்போகின்றன. ரஜோகுணம் தலைஎடுத்தபோது காமக்குரோதங்கள் மனத்துயரம் பொருளாசை மயக்கம் பொய் இவைஎல்லாம் அதிகப்படுகின்றன. தமோகுணம் தலைஎடுத்தபோது மனச்சோர்வு சந்தேகம் அறியாமை சோம்பல் தூக்கம் பயம்இவை காரணம்பற்றியும் காரணமில்லாமலும் உண்டாகின்றன. இவ்வாறு இம்முக்குணங்களில் ஒவ்வொன்று தலைஎடுக்கும்போது அவ்வவற்றின்காரியங்கள் மிகுதியாகஉண்டாகின்றன, மற்றொன்று தலைஎடுக்கும்போது இவை அதனால்மறைக்கப்பட்டுக் குறைந்துபோகின்றன. இப்படி நித்தியமாக நடக்கிறது. அவற்றுள் தேகத்திலும் மனத்திலும் ஸந்தோஷத்தோடுஉண்டாகும்செய்கைகளெல்லாம் ஸத்வகுணத்தின் செய்கைகளென்று அறியவேண்டும். ஏப்போது மனக்கலக்கத்தையும் கொதிப்பையும் உண்டாக்கும் செய்கையிருக்கிறதோ அப்போது ரஜோகுணமிருக்கிறதென்றே நினைக்கவேண்டும். எப்போது ஒன்றுந்தெரியாமலும் ஊகமும்விவேகமுமில்லாமலும் துயரமுண்டாய்க்கொண்டிருக்கிறதோ அப்போது

[1] அழிவில்லாதது.

தமோகுணம்தலைஎடுத்திருக்கிறதென்று நினைக்கவேண்டும். சுருங்கச் சொன்னால், தர்மம் ஸத்வகுணத்தையும் அர்த்தம் ரஜோகுணத்தை யும் காமம் தமோகுணத்தையும் சேர்ந்தவை. த்ரிவர்க்கமென்னப் படும் தர்மார்த்தகாமங்கள் முறையே இம்முக்குணங்களையும் சேர்ந் தவை. பிரம்மாமுதலான தேவர்களின்ஸ்ருஷ்டி ஸாத்விகஸ்ருஷ்டி என்று சொல்லப்படுகிறது. மனிதர்சிருஷ்டி ராஜஸசிருஷ்டிஎன்றும் திர்யக்ஜாதிசிருஷ்டி தாமஸசிருஷ்டிஎன்றும் சொல்லப்படுகின்றன. ஸத்வகுணமுள்ளவர் மேலேபோகின்றனர். ராஜஸர்கள் நடுவிலிருக் கின்றனர். தாழ்ந்தகுணமும் செய்கையுமுள்ளதாமஸர்கள் கீழே போகின்றனர். தேவர், மனிதர், விலங்குகள், மற்றச்சராசரங்கள் அனைவரும் ஆதிமுதல்இம்முக்குணங்களினால்.நிரம்பியிருக்கின்றனர். இனிமேல் மகத்துமுதலானதத்வங்களை லக்ஷணங்களுடன் சொல் லுவேன். அறிவும் விவேகமும் மகத்தின்இலக்கணங்கள். மக த்து புத்தி மதி பிரஜ்ஞைஎன்னும் இவை மகத்தின்பெயர்களென்று அறிகின்றனர். அகங்காரமென்பது நான்என்னும்எண்ணமென்று அதன்இலக்கணத்தினாலேயே சுருக்கமாக அறியத்தக்கது. அகங்கா ரத்தினாலேதான் பல பிராணிசிருஷ்டி உண்டாகிறது. அகங்காரம்விடு வதுதான் முக்திக்குக் காரணமாகிறது. ஆகாயம் வாயு அக்நி ஜலம் பூமிஇவ்வைந்தும் மகாபூதங்கள். அவற்றிற்கு உற்பத்தியும் லயமும் அகங்காரத்திலேயே. சப்தம் செவி துவாரங்கள் இம்மூன்றும் ஆகா சத்தினாலுண்டானவை. பிராணிகளுக்கு ஸ்பரிசமும் அசைவும் காற் றின்குணங்களாக நினைக்கப்படுகின்றன. நிறம் உஷ்ணம் கண்கள் ஒளிஇந்நான்கும் தேஜஸின்குணங்கள். சுவை சிநேகம் (நெய்ப்பு) நா குளிர்ச்சிஇவை ஜலத்தின்குணங்கள். மணம் மூக்கு தேகம்இம் மூன்றும் பூமியின்குணங்கள்.' தேவியே! இப்படி எல்லாக்குணங் களும் பஞ்சபூதங்களைச்சேர்ந்தவையாகச் சொல்லப்படுகின்றன. பின் பின்பூதங்கள் முன்முன்பூதங்களின்குணங்களை அடைகின்றன. அத னால், இவ்வுலகத்தில் பூதசிருஷ்டிகள் அநேககுணங்களுள்ளவைகளா கக் காணப்படுகின்றன. ஜலத்தில்மணத்தைக்கண்டு சில அறிவில்லா தவர் ஜலத்திற்கும் மணமென்னும்குணமிருப்பதாகச் சொல்லுவர். தாமரைமலர்போன்ற கண்களையுடையவளே! தெரிந்தவர் அப்படி நினைப்பதில்லை. ஜலத்திற்குக் கந்தமில்லை. அது பூமியின் குணம் தான். பூமியில்கந்தமும் ஜலத்தில் ஸ்நேகமும் கண்ணில் ஒளியும் இரு க்கின்றன. காற்று, பிராணவாயுவிலும் அபானவாயுவிலும் சேர்ந்திரு க்கிறது. பிராணிகளின்தேகத்திலுள்ள துவாரங்களில் ஆகாயமிருக்

கிறது. மயிர் எலும்பு நகம் பல் தோல் கை கால் தலை முதுகு வயிறு இடுப்பு கழுத்துஇவைஎல்லாம் பூமியாகச்சொல்லப்படுகின்றன. இந்தத்தேகத்தில் [1]தாதுக்களையும் [2]தோஷங்களையும் மலங்களையும்சேர்ந்தவையெல்லாம் பூதங்களைச்சேர்ந்தவையென்றறி. தேகங்களில் நிலைமையாயிருப்பது பூமிதான். செவி தொக்கு நேத்திரம் நா நாசிஇவை ஞானேந்திரியங்கள். வாக்கு கை கால் குறி ஆஸனம் இவை கர்மேந்திரியங்கள். பஞ்சபூதங்களிலிருந்துஉண்டாகும் சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்தங்கள்ஐந்தும் ஞானேந்திரியங்களுக்கு விஷயங்களென்றறிய வேண்டும். சொல் தொழில் நடை இன்பம் விடுதல்இவ்வைந்தும் கர்மேந்திரியங்களுக்கு விஷயங்களென்றறி. அவையும் பஞ்சபூதங்களால் உண்டாகின்றவை. மனம் எல்லா இந்திரியங்களுக்கும்தலைமையென்று சொல்லப்படுகிறது. நினைப்பதுதான் அதன் இலக்கணம். அந்தமனம் இந்திரியமென்றுசொல்லப்படுகிறது. ஆத்மா மனத்துடன்சேர்ந்து மேற்சொன்னபூதங்களை நடத்துகிறது. மனத்தைக் கட்டவும் விடவும் ஸ்வதந்திரமுள்ளவன் ஆத்மாதான். இந்திரியங்களும் அவற்றின் விஷயங்களும் இயற்கையும் அறிவும் தைரியமும் பஞ்சபூதங்களின் காரியங்களும் பூதங்களல்லாதஅகங்காரத்தின்காரியங்களும் எல்லாம் சேர்ந்தது சரீரமென்றுசொல்லப்படுகிறது. சரீரத்தைவிட வேறாக இருக்கும்ஆத்மா சரீரத்தைச்சார்ந்திருக்கிறான். ஆத்மாவுக்கும் சரீரத்திற்கும்உள்ள வேறுபாட்டை ரிஷிதான் அறிவான். ரஸம், ஸ்பரிசம், கந்தம், ரூபம், சப்தம்இவையற்றதும் சரீர இந்திரியங்களல்லாததுமாகியஆத்மாவைச் சரீரத்தில் காணமுயலவேண்டும். எல்லாத்தேகங்களிலுமிருந்தேபூலப்படாமலும் அவைஇறந்தும் இறவாமலுமிருக்கும் ஆத்மாவை வேறாகப்பார்ப்பவன் எவனோ அவன்தான் பற்றைவிட்டவனாவான். அந்தச்சிறந்தஆத்மாவைக் கண்ணினாலும் மற்றஇந்திரியங்களினாலும் அறியமுடியாது; தெளிவானமனத்தினால்மட்டுமே காணலாம். சிறந்தசக்தியுள்ளஅவ்வாத்மாஒருவன் சராசரங்களாகிய பலபூதங்களிலும் பலசெய்கையுள்ளவனாகஇருக்கிறான். அந்தஆத்மாவுக்கு உயரம் குட்டை பருமைஎன்பதொன்றுமில்லை. இந்திரியங்களினால்எப்படியோ அப்படித்தான் புத்தியினாலும், ஆத்மாவைக்காண்பது ஒருபோதும் முடியாது. அந்தஆத்மா எல்லாவற்றையும்வசப்படுத்திக்கொண்டு ஒன்பதுவாயில்களையுடைய தேகமென்னும்நகரத்தையடைந்து அதிலடங்கியிருக்கிறான். எல்லாஉலகங்களிலுமுள்ள ஸ்தாவரங்களுக்கும் ஜங்கமங்களுக்கும் ஆத்மாவே ஈசுவரன். ஆத்மா

1, 2 சாந்திபர்வம் 629-ம் பக்கத்துள்ள 2, 3-ம் குறிப்புக்களிற்காண்க.

அணுவினும்அணு, மகத்தினும் மகத்என்பர். ஆத்மா பலவகையான எல்லாப்பொருள்களிலும்வியாபித்து அழியாமலிருக்கிறான். ஞானி யானவன் இந்திரியங்களையடக்கி எப்போதும் மனத்தில்ஆத்மாவைத் தனியாகவும் தேகத்தைத் தனியாகவும் ஆராய்ந்துபார்க்கவேண்டும். செய்கையில்லாதவனும் பற்றில்லாதவனும் நித்தியனும் ஒருகாரியங் களிலும் சேராதவனுமாகிய புருஷனென்னப்படும்ஆத்மா பிரக்ருதி யிலிருந்துகொண்டிருப்பதனால் அதன்குணங்களை அனுபவிக்கிறான். கார்யம், காரணம், கர்த்தாஎன்னும்பிரிவுகள் பிரக்ருதியினாலுண்டான வையாகச் சொல்லப்படுகின்றன. புருஷனென்னப்படும் ஆத்மா சுக துக்கங்களை அனுபவிப்பவனாகச் சொல்லப்படுகிறான். அந்தஆத்மா வை வெல்லவும் நினைக்கவும்முடியாது. அவன் நித்யன்; புலப்படா தவன். ஆத்மா ஒளியுருவமாகத் தேகத்திலிருக்கிறானென்று சிலர் சொல்லுகின்றனர். சிலர், 'தேகத்திலுள்ளஉஷ்ணமும் வாயுவும் அறி வும் ஜீவனென்னப்படுவன' என்று புத்தியினால் ஊகித்துநிச்சயிக் கின்றனர். மற்றும்சிலர், ஆத்மாஎல்லாஉலகங்களையும்வியாபித்திருப் பதாகச் சொல்லுகின்றனர். சிலர் இந்தத்தேகத்திலேயே ஆத்மா எள்ளில்எண்ணெய்போலஇருப்பதென்று சொல்லுகின்றனர்.மற்றும் சிலமூடர்களானநாஸ்திகர்கள், கண்ணுக்குப்புலப்படும் இலக்கணங் களில்லாமையினால் ஆத்மாஇல்லையென்று நிச்சயிக்கின்றனர். அந்த அறிவீனர் நரகம்போகிறவர். இப்படி அநேகர் ஈசுவரனை விசாரி யாமலிருக்கின்றனர்' என்றார். உமை, 'பகவானே! பிரம்மதேவர் படைத்தஉலகத்தில் அழியாததும் குறையாததும் குற்றமில்லாதது மாகியஆத்மா எல்லாப்பொருள்களிலும் இருக்கிறதென்பதற்குக் கார ணத்தையறிவது மிகக்கடினம்' என்றுசொன்னாள். மஹேஸ்வரர், 'ரிஷிகளாலும் தேவர்களாலும்கூட ஆத்மா காணப்படுவதில்லையென் பது திண்ணம். ஆனால், அந்தச் சிறந்தஆத்மாவைக்கண்டபிறகு ஸம் ஸாரத்தில் திரும்புவதில்லை. ஆதலால், ஆத்மாவைக்காண்பதினாலே தான் பரகதியடையலாம். தேவியே! என்றும் அழியாததும் கபிலர் முதலானஆசார்யர்களாலும் மற்றுமுள்ள மஹரிஷிகளாலும் அனுஷ் டிக்கப்பட்டதுமான இந்தஸாங்கியதர்மத்தை உனக்குச்சொன்னேன்.

## இருநாற்றுநாற்பத்தாறுவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஸ்வரஸம்வாதம் தொடர்ச்சி; யோகத்தின்முறை.)

ஸாங்கியஞானத்தில் பிரவ்ருத்தித்தவர்களைப்பற்றிச் சரியாகச் சொன்னேன். இனி, யோகதர்மத்தை முழுதும் உனக்குச் சொல்வேன்; கேள். அந்தயோகம் பிரம்மரிஷிஸம்மதம் தேவரிஷிஸம்மதம்என இருவகைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. சாஸ்திரங்களினால் விதிக்கப்பட்டஆசாரம் இரண்டிற்கும் பொது. அந்தயோகம் எண்குணங்களோடுகூடியஐசுவரியம் ஸித்திப்பதற்காக விதிக்கப்படுகிறது. யோகதர்மத்தைப் பற்றினவர்கள் தேவர்களோடு மிக்கஆற்றுமையை அடைவார். எல்லாயோகங்களுக்கும் ஞானமே மூலமென்றறி. யோகங்களெல்லாவற்றையும் விரதங்களினாலும் உபவாஸங்களினாலும் இந்திரியஜயங்களினாலும் விருத்திசெய்யவேண்டும். சிறந்த ஞானமுள்ளவளே! புத்தி, மனம், இந்திரியங்கள்எல்லாம் ஒருங்கு சேர்ந்து ஆத்மாவையறிவதுதான் யோகிகளுடையஞானம். பிராம்மணர்களையும் அக்கினியையும் தேவாலயங்களையும் பூஜிக்கவேண்டும். எல்லாப்பிராணிகளையும் ஆதரித்து அவற்றிற்குத் தீங்குநினையாமலிருக்கவேண்டும். தானம் அத்யயனம் சிரத்தை வ்ரதங்கள் ஆசாரங்கள் ஸத்தியம் பரிசுத்தமானஆகாரம் தூய்மை இந்திரியங்களையடக்குவது இவற்றினால் மகிமை அதிகப்படுகிறது. பாவமும் விலக்கப்படுகிறது. பாவம்விலகினதால் மகிமையடைந்தவன் ஆகாரத்தையடக்கி இந்திரியங்களையடக்கி வீண்காலம்போக்காமல் பரிசுத்தனும் அடக்கமுள்ளவனுமானபிறகு யோகாப்பியாசம் செய்யவேண்டும். மீன்பிடிப்பவன் மாம்ஸத்தைவைத்துக்கொள்வதுபோலத் தெரிந்தவன் முதலில் மனத்தை வசப்படுத்திக்கொள்ளவேண்டும். ஜனங்களில்லாததும் நாற்புறமும்மூடப்பட்டதும் பரிசுத்தமுள்ளதுமானதனிஇடத்தில் மிருதுவான தர்ப்பங்களைப்பரப்பி ஆஸனம் போட்டுக்கொள்ளவேண்டும். அந்தஆஸனத்திலுட்கார்ந்து உடம்புங்கழுத்தும்ஒழுங்காகவும் மனம் எங்கும்செல்லாமலும் அங்கங்களையசையாமலும் ஆகாயத்தையும் திசைகளையும்பாராமலும் தன்மூக்கின்நுனியையேபார்த்துக்கொண்டு ஸுகமாகவிருக்கவேண்டும். தேவியே! மனத்தைநிறுத்துவதுதான் யோகத்தினுடைய ரகஸ்யம். ஆதலால், முழுமுயற்சிகளாலும் மனத்தை எப்போதும் அசைவில்லாமலிருக்கச்செய்யவேண்டும். அதன்

பிறகு, மெய், காது, நா, மூக்கு, கண் இவ்வைந்து இந்திரியங்களையும் விஷயங்களிலிருந்து இழுத்து மனத்தில்சேர்த்து நிறுத்தவேண்டும். எல்லா எண்ணங்களையும்போக்கி ஆத்மாவினிடம் மனத்தை வைக்க வேண்டும். ஐம்புலன்களும் மனமும் ஆத்மாவினிடத்தில் எப்போது நிற்கின்றனவோ அப்போது பிராணாபானங்களிரண்டும் ஒருமிக்க இவனுக்கு வசப்பட்டிருக்கின்றன. பிராணன்வசப்பட்டால் யோகத்தின் ஸித்தி நிலையாயுண்டாகும். சரீரத்திலுள்ளவற்றையெல்லாம் தெளிவாகப் பகுத்துப்பார்க்கவேண்டும். தேகத்தினுள் பிராணவாயுசெல்வதையும் ஆராய்ந்துபார்க்கவேண்டும். பிறகு, தலையையும் [1]அக்நியையும் தேகத்தையும் காப்பாற்றவேண்டும். உயிரும் சுவாஸமும் தலையிலிருந்துகொண்டுதான் நடக்கின்றன. எல்லாப்பிராணிகளுள்ளும்இருப்பவனும் நிலையானவனுமாகிய புருஷனென்னப்படும்ஜீவாத்மாமனம் புத்தி அகங்காரம் பஞ்சபூதங்கள் சப்தாதிவிஷயங்கள் இவற்றைக் கவனிக்கிறான். அபானவாயுவானது [2]வஸ்தி மூலம் குதம் ஜாடராக்நி இவற்றைச்சார்ந்து மலமூத்திரங்களைத் தள்ளிக்கொண்டு எப்போதும் ஸஞ்சரிக்கிறது. ஆதலால், தேகங்களிலுள்ளசெய்கைகள் அபானவாயுசேர்ந்து உண்டாகின்றவை. உதானமானது ரத்த முதலியதாதுக்களெல்லாவற்றையும் எழுப்பிக்கொண்டு மேல்நோக்கிச் செல்லுகிறது. அதனால்,தேகதத்வம்தெரிந்தஜனங்கள் அதைஉதானம் என்றறிகின்றனர். மனிதர்களின் தேகங்களிலுள்ள பூட்டுக்கள்தோறும் இருந்துஎல்லாச்செய்கைகளையும்நடத்தும்வாயு வியானமென்று சொல்லப்படுகிறது. ரத்தமுதலானஏழுதாதுக்களிலும் ஜாடராக்நியிலுமிருந்து உஷ்ணத்தைஎழுப்பித் தேகமெங்கும் பரவச்செய்வது ஸமானம். அதுவே, மரணகாலத்தில் எல்லாச்செய்கைகளையும் நிறுத்திவிடுகிறது. மேற்சொன்னபிராணன்முதலிய ஐந்துவாயுக்களும் ஒன்றுசேர்வதனால்உண்டாகும்உஷ்ணத்தை அக்நியென்றறியவேண்டும். அதுதான் பிராணிகளுக்கு ஆகாரத்தை ஜரிக்கச்செய்கிறது. வியானனும் உதானனும் பிராணாபானவாயுக்களினிடையில் இருக்கின்றன. ஜாடராக்நி ஸமானனோடுசேர்ந்துதான் நன்றாகஜீர்ணம் செய்கிறது. தேகத்தின்நடுவில் நாபியிருக்கிறது. நாபியில் அக்நி இருக்கிறது. பிராணன்முதலானவாயுக்கள் அக்நியில் சேர்ந்திருக்கின்றன. பிராணனிடத்தில் ஆத்மாஇருக்கிறது. நாபிக்குங்கீழே [3]பக்வாசயமிருக்கிறது. நாபிக்குமேல் [4]ஆமாசயமிருக்கிறது. தேக

---

1 ஜாடராக்நி. 2 மலாசயம்.

3 4 சாந்திபர்வம் 629-ம் பக்கம் 5, 6-ஆம் குறிப்புக்களிற்காண்க.

த்தின்பஞ்சப்பிராணன்களும் நாபியின் நடுவிலிருக்கின்றன. பிராணன்முதலானவாயுக்கள் எல்லாம் குறுக்கும் மேலும் கீழுமாக ஸஞ்சரிக்கின்றன. பிராணவாயுக்களாலும் அக்னியினாலும் தூண்டப்பட்ட பத்துநாம்புகள் உணவுகளின்ஸாரங்களைத் தேகத்தில் ஓடச்செய்கின்றன. யோகிகளின்இந்தமார்க்கம் இவ்வைந்துபிராணன்களில் நிற்கிறது. சிரமத்தைப்பொறுத்து நிலைத்த ஆஸனம்போட்டு ஆத்மாவைத் தலையில் வைக்கவேண்டும். [1]ஆத்மாவைத் தலையில்வைத்தபின் இருபுருவங்களின்இடையில் மனத்தைநிறுத்தி அதன்பிறகு பிராணனையும் ஆத்மாவையும் தியானிக்கவேண்டும். அபானனைப் பிராணனிலும் பிராணனை அபானனிலும்சேர்க்கவேண்டும். பிராணன் அபானன்இரண்டினுடையபோக்குக்களையும்நிறுத்திப் பிராணாயாமம் செய்யவேண்டும். யோகியானவன் ஆகாரத்தைக்குறைத்து ஏகாந்தமானஇடத்தில் மௌனமாக மூச்சுவிடாமல் தேகத்திலுள்ள பஞ்சப்பிராணன்களையும் இவ்வாறு ஒன்றிலொன்றைச் சேர்க்கவேண்டும். தியானம்கலைந்தாலும் சோர்வில்லாமல் திரும்பவும்திரும்பவும் தியானம்செய்யவேண்டும். இவ்வாறே சோம்பாமல் நிற்கும்போதும் நடக்கும்போதும் தூங்கும்போதும் யோகம்செய்யவேண்டும். இவ்வாறு மனத்தைச்செலுத்தி யோகம்செய்யும்யோகிக்குச் சீக்கிரத்தில் மனம் தெளியும். அது தெளிந்தால் ஆத்மாவைக் காணலாம். புகையில்லாமல் எரியும் அக்னிபோலவும் நிரம்பினகிரணங்களோடு பிரகாசிக்கும் ஆதித்தன்போலவும் ஆகாயத்தில் மின்னல்போலவும் பரிசுத்தமாகப் பிரகாசிக்கும்புருஷனென்னும்ஆத்மாவைக் காணலாம். அந்தஆத்மாவின் ஒளியைக்கண்டபின் எண்குணங்களோடுகூடிய ஐசுவரியத்தைப் பெற்றுத்தேவர்களும் ஆசைப்படத்தக்க சிறந்தஸ்தானத்தை அடைவான். யோகத்திற்கு இப்பத்துக்குற்றங்களையும் சொல்லுகின்றனர். பெண்ணரசியே! இந்ததோஷங்களினால் யோகிகளுக்கு யோகவிக்னம் உண்டாகுமென்று ஞானிகள் நினைக்கின்றனர். காமம், குரோதம், பயம், தூக்கம், சிநேகம், அதிகபோஜனம், ஊக்கமில்லாமை, பிணி, சோம்பல், பொருளாசைஇவைபத்தும் குற்றங்கள். தெய்வத்தினுலுண்டாக்கப்பட்ட இப்பத்துக்குற்றங்களினால் யோகிகளுக்குத்தடை உண்டாகும். ஆதலால், முதலில் இவற்றைப்போக்கிப் பிறகு மனத்தை யோகத்தில் செலுத்தவேண்டும். யோகத்திற்கு இவ்வெண்குணங்களையும் கணக்கிடுகின்றனர். இவ்வெண்குணங்களினால் [2]சிறந்த

1 பிராணாயாமத்தினால் பிராணவாயுவைத் தலையில்சேர்ப்பதுதான் ஆத்மாவைத் தலையில்வைப்பது.　2 'திவ்யம்' என்று பாடங்கொள்ளப்பட்டது.

ஐசுவர்யம் அடையப்படும். அணிமா, மஹிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசித்வம், வசித்வம், தான்நினைத்தபடி கனமாகவோ இலேசாகவோ ஆதலாகிய கரிமா லகிமா இவ்வெண்குணங்களையும் பிரயாஸத்திலடைந்து யோகிசிரேஷ்டர்கள் எல்லாஉலகங்களுக்கும்அதிகாரிகளாகித் தேவர்களுக்கும்மேற்படுகிறார்கள். மிகுதியாகப்புசிப்பவனுக்கும் சிறிதும்புசியாதவனுக்கும் அதிகமாகத்தூங்குகிறவனுக்கும் சிறிதும்தூங்காதவனுக்கும் யோகம் வருவதில்லை. உணவும் ஸஞ்சாரமும் வேலைசெய்வதும் தூங்குவதும் விழிப்பதும் அளவாகஉள்ளவனுக்குத் துக்கங்களைப்போக்குவதாகியயோகம் நிலைபெறும். இந்தச்செய்கையினாலேதான் ஸாயுஜ்யமென்னும்தேவத்தன்மை உண்டாகிறது. தேவஸாயுஜ்யத்தை அடைந்தபிறகும் பக்தியோடு ஆத்மத்யானம் செய்யவேண்டும். தேவியே! வேறொன்றிலும்மனம்செல்லாமல் எப்போதும் ஆத்மாவினிடம்மனம்வைத்தவன் பெருமுயற்சியினால்வெகுகாலத்திற்குப்பின் தேவஸாயுஜ்யத்தை அடையலாம். தன்சக்தியளவு அன்னங்களாலும் அர்ச்சனைகளாலும் ஹோமங்களாலும் நமஸ்காரங்களாலும் நித்தியமாகத் தியானம்செய்வதனாலும் அர்ச்சிக்கப்பட்ட தேவர்கள் தமதுலோகத்தைக் [1]கொடுக்கின்றனர். ஸாயுஜ்யங்களுள் என்சாயுஜ்யமும் விஷ்ணுசாயுஜ்யமும் சிறந்தவை. அழகானகண்களையுடையவளே! என்னையடைந்தவரும் விஷ்ணுவையடைந்தவரும் ஸம்ஸாரத்தில் திரும்புவதில்லை. தேவியே! இந்தஅநாதியானயோகதர்மத்தை உனக்குச் சொன்னேன். உன்னைத்தவிர வேறு ஒருவரால் இந்தயோகதர்மத்தைக் கேட்கமுடியாது' என்றார்.

---

## இருநூற்றுநாற்பத்தேழாவது அத்யாயம்.

## தா ன த ர் ம பா ர் வ ம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஶ்வரஸம்வாதம்தொடர்ச்சி; பாசுபதயோகமுறை.)

உமை, 'முக்கண்ணரே! தேவஶ்ரேஷ்டரே! த்ரியம்பகரே! தேவர்க்கதிபதியே! திரிபுரஸம்ஹாரியே! மன்மதன்அங்கத்தை அழித்தவரே! கங்காதரரே! தக்ஷயாகத்தைக்கெடுத்தவரே! சூலபாணியே! பகைவர்களையழிப்பவரே! உலகங்களைக்காப்பவரே! ஈசுவரரே! தேவர்களுக்கும்வரமளிப்பவரே! உமக்கு நமஸ்காரம். சாங்கியத்தையும்யோகத்தையும்சேர்ந்த சிறந்ததாகிய ஆத்மஜ்ஞானமானதுபலகிளைகளுள்ளது; எல்லையில்லாதது; ஊகிக்கவும் அறியவும் கூடாதது.

---

[1] 'திசந்தி' என்று பாடங்கொள்ளப்பட்டது.

நான்வினவினதற்காக நீர் எனக்குத்தெரியும்படி சொன்னீர்,பிரபுவே! இப்பொழுது உம்முடைய ஸாயுஜ்யத்தைக் கேட்கவிரும்புகிறேன். மேலானவிடத்திலிருப்பவராகிய உம்மை இந்தப்பக்தர்கள் பணிவது எவ்வகை? பக்தர்களின் ஆசாரம் எப்படிப்பட்டது? நீர் எதனால் திருப்தி அடைவீர்? உம்மால் நேரில்சொல்லப்படுவது எனக்கு மிக்கஸந்தோஷகரமாயிருக்கிறது' என்றுகேட்க, மஹேசுவரர் சொல்லலானார்:

'ஆ! ஆ! என்ஸாயுஜ்யம் ஆச்சர்யமானது.. அதனை உனக்குச் சொல்வேன்.என்னைத்தியானம்செய்யும் சிறந்தயோகிகள் என்ஸாயுஜ்யமடைவதனால் ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவருவதில்லை; நான் புலப்படாதவன். மோக்ஷத்தைக்கருதினமுன்னோர்களும் என்னைச் சிந்திக்கமுடியவில்லை. சாங்கியமும் யோகமும் சராசரமனைத்தும் என்னால் படைக்கப்பட்டன. நான் பூஜிக்கத்தக்கவன். நான் ஈசுவரன். நான் அழிவில்லாதவன். நான் ஆதியில்லாதவன். நான் அனுக்கிரகம் செய்து பக்தர்களுக்குத் தேவத்தன்மையையும் கொடுக்கிறேன். தேவக்கூட்டங்களும் • தவத்தையே தனமாகவுடைய முனிவர்களும் என்னை அறிவதில்லை. தேவியே! உன்விருப்பத்திற்காக என்ஐசுவர்யத்தை உனக்குச் சொல்லுகிறேன். சிறந்தவளே! தேவியே! நான் என்னிடத்தில் பக்தியுள்ளவர்களும் பாவமற்றவர்களும் பரிசுத்தர்களுமானநான்குஆசிரமத்தாராகியநான்குபிரம்மரிஷிகளை அழைத்துஅவர்களுக்குப் பாசுபதமென்னும்சிறந்தயோகத்தை உரைத்தேன். அவற்றையெல்லாம் அவர்கள் எனதுதென்முகத்திலிருந்து கிரகித்துக் கொண்டனர். அவர்கள் தாம்கேட்டபிறகு அதை மூவுலகங்களிலும் நிலைநிறுத்தினர். இப்போதும் நீகேட்பதனால் சொல்லுவேன். ஊக்கத்துடன் கேள். நான் பசுபதியென்றுபெயருள்ளவன். என்னிடம் பக்திவைத்து உடம்பெல்லாம்நீறணிந்திருக்கும்மனிதர்களனைவரும் பாசுபதர்கள்என்றறியத்தக்கவர். பெண்ணரசியே! என்னிடம்பக்தியுள்ளவருக்கு ரக்ஷைக்காகவும் மங்களத்திற்காகவும் சுத்தத்திற்காகவும் அடையாளத்திற்காகவும் ஆதிகாலத்தில் பஸ்மத்தைக் கொடுத்தேன். அந்தப்பஸ்மத்தை அங்கமெல்லாமணிந்து கொண்டு ஜடையுள்ளவர்களாகவும் முண்டிதர்களாகவும் பலவகைக் குடுமிகளுள்ளவர்களாகவும் விகாரரூபிகளாகவும் சிவந்தநிறமுள்ளவர்களாகவும் திகம்பரர்களாகவும் பலஉருவங்களுடன் பிக்ஷைஎடுத்துக்கொண்டு ஒன்றையும்விரும்பாமலும் பொருள்சேர்க்காமலும் மண்பாத்திரத்தைக் கையில் எடுத்துக்கொண்டு என்னிடத்தில்பக்தியுடன் புத்தியைச்செலுத்தி உலகமெல்லாம்திரிந்துகொண்டு எனக்குச் சந்

தோஷத்தை மிகவிருத்திசெய்கின்றனர். அவர்கள் சிறந்ததும் அரியதும் ஸூக்ஷ்மமுமாகிய பாசுபதமென்னும் என்யோகசாஸ்திரத்தை ஆராய்ந்துகொண்டு உலகங்களிலெல்லாம் ஸஞ்சரிக்கின்றனர். இவ்வாறு எப்போதும் என்னைத்தியானம்செய்துகொண்டும் தவம்செய்துகொண்டுமிருக்கும் என்பக்தர்கள் என்னைச்சீக்கிரமாகஅடையும்உபாயத்தை நானே தேடுகிறேன். மூன்றுஉலகங்களிலும் சிவலிங்கத்தை நான் ஸ்தாபித்திருக்கிறேன். அதை நமஸ்காரம்செய்வதனாலேயே எல்லாப்பாவங்களும் விட்டுப்போம். தேவதாபூஜையும் தானமும் அத்யயனமும் நிரம்பினதக்ஷிணைகளோடுகூடினயாகங்களும் சிவலிங்க நமஸ்காரத்தின்பதினாறில்ஒருபாகத்திற்கும் ஈடாகாதவை. அன்புள்ளவளே! சிவலிங்கத்தைப்பூஜிப்பதனால் நான் சந்தோஷமடைகிறேன். சிவலிங்கத்தைப்பூஜிக்கும்முறையையும் நான் சொல்லுகிறேன்; கேள். ஆவின்பாலினாலும் வெண்ணெயினாலும் என்லிங்கத்தை அர்ச்சிப்பவனுக்கு அசுவமேதயாகம்செய்தபலனுண்டாகும். நெய்யினால்என் லிங்கத்தைப்பூஜிக்கும்மனிதன் அக்நிஹோத்திரம்செய்த பிராம்மணன்அடையும்பலனை அடைவான். என்லிங்கத்திற்குச் சுத்தஜலத்தினால்அபிஷேகம்செய்யும்மனிதனும் புண்ணியத்தையும் என் அனுக்கிரகத்தையுமடைவான். என்ஸமீபத்தில் நெய்யினாலும் குங்கிலியத்தினாலும் நன்றாகத்தூபம்போடுகிறவனுக்குக் கோஸவமென்னும்யாகத்தின்பலனுண்டாகும். வெறுங்குங்கிலியக்கட்டியினால் தூபம்போடுகிறவனுக்கும் ஸ்வர்ணதானத்தின்பலனுண்டாகும். பலவகைப்புஷ்பங்களினால் என்லிங்கத்தைஅர்ச்சிப்பவன் ஆயிரம்கோதானங்களின் பலனை அடைவான். தேசாந்தரம்போய்ச்சிவலிங்கத்தைப்பூசிப்பவனை விட மேலாகஎன்பிரியத்தைச்செய்தவன் மனிதர்களிலில்லை. இப்படிப் பலவகைத்திரவியங்களினால் சிவலிங்கத்தைப் பூஜிக்கவேண்டும். அப்படிப்பூஜிப்பவன் எனக்குச்சமமாவான்; திரும்பவும் மனிதரில் பிறவான். பக்தியோடு பூஜைகளாலும் நமஸ்காரங்களாலும் நைவேத்தியங்களாலும் ஸ்தோத்திரங்களாலும் சோம்பாமல் சிவலிங்கங்களில் என்னை நித்தியமாகப் பூஜிக்கவேண்டும். பலாசஇலைகளும் வில்வதளங்களும் [1] கொன்றைப்பூமாலையும் எருக்கம்பூவும் பரிசுத்தமானவை; எனக்கு மிகப்பிரியமானவை. தேவியே! பக்தர்கள் என்னிடம் அன்புவைத்துக்கொடுக்கும் கனி, காய், மலர், ஜலம்அனைத்தும் எனக்கு ப்ரீதியையுண்டாக்கும். நான் ஸந்தோஷமடைந்தால், உலகங்களில் கிடைக்காதது ஒன்றுமில்லை. அதனாலேதான், அந்தப்

---

1 'ராஜவ்ருக்ஷம்' என்பது மூலம்

பக்தர்கள் எப்போதும் என்னையே பூஜிக்கின்றனர். என்பக்தர்கள் கெடார். என்பக்தர்கள் பாவமற்றவர். என்பக்தர்கள் எல்லாலோகங்களிலும் மிக்கபூஜைக்குரியவர். என்னைப்பகைப்பவரும் என்பக்தரைப் பகைப்பவருமானமனிதர்கள் நூற்றுக்கணக்கான யாகங்களைச் செய்தாலும் கொடியநரகத்திற்குப் போவார். இந்தப்பாசுபதமென்னும்சிறந்தயோகத்தை முழுதும்உனக்குச் சொன்னேன். தேவியே! என்னிடத்தில்பக்தியுள்ளமனிதர்கள் இதைத் தினந்தோறும் கேட்கவேண்டும். இந்தஎன்தர்மசித்தாந்தத்தைக்கேட்பவனும்படிப்பவனுமாகிய உத்தமமனிதன் ஸ்வர்க்கத்தையும் கீர்த்தியையும் தனதானியங்களையும் அடைவான்' என்றார்.

---

## இருநூற்றுநாற்பத்தேட்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேச்வரஸம்வாதம் தொடர்ச்சி: உமை ஸ்த்ரீ தர்மம் சொல்லத் தொடங்கியது.)

ஸ்வயம்பிரபுவானமகாதேவர் இவ்வாறு சொல்லித் தமக்கொத்தவளும் அன்புள்ளவளும் பக்கத்திலிருப்பவளும் மனைவியுமானஉமாதேவியினிடம் தாம் தர்மம்கேட்கும் விருப்பத்துடன் பேசலானார்.

'தபோவனத்தில் வஸிக்கும்ரிஷிகளுடைய தர்மங்களின் தாரதம்மியங்களையறிந்தவளே ! தீக்ஷையையும் அடக்கத்தையும் அடைந்து எப்போதும்தவஞ்செய்பவளே! பெண்ணரசியே! நான் உன்னை ஒன்று வினவுகிறேன். நான் விரும்பிவினவுவதற்குமறுமொழிகூறக்கடவாய். பிரம்மாவின்பத்தினியானஸாவித்திரி; இந்திரன்பத்தினியான இந்திராணி, விஷ்ணுவின் அன்புள்ளபத்தினியாகியலக்ஷ்மி, யமனுடையபார்யையாகிய த்ருதி, மார்க்கண்டேயருடைய பத்னியாகிய தூமோர்ணை, குபேரனுடைய பார்யையான ருத்தி, வருணனுடைய பிரியபார்யையான கௌரி, சூரியனுடையபார்யையானஸுவர்ச்சலை, சந்திரன்பார்யையானரோஹிணி, அக்னியின்பார்யையான குற்றமற்ற ஸ்வாஹாதேவி, கசியபர்பத்னியான அதிதி, வஸிஷ்டர் பத்னியான அருந்ததி இவர்களும் இன்னும் உலங்களில்பதிவ்ரதைகளென்று பெயர்பெற்றஸ்திரீகள் அனைவரும் உன்னுடன்கூடிவஸித்திருப்பதாகக் கேள்வி. (அவர்கள்) ஒத்துநடந்தும் ஒத்துப்பேசியும் உன்னைப் பூஜிக்கின்றனர். தர்மந்தெரிந்தவளே ! உலகத்தினால்பூஜிக்கப்பட்டவளே ! அதனால்தான்

உன்னைக் கேட்கிறேன். ஸ்திரீதர்மத்தை நீசொல்லிக்கேட்க விரும்புகிறேன். நீ என்னுடன்சேர்ந்துதர்மத்தைச் செய்கிறவள்; உலகத்தைத் தாங்குகிறவள். இந்தஸ்திரீக்கூட்டம் உன் அனுக்கிரகத்தினால் தனக்குஇதமான சிறந்தஸ்திரீதர்மத்தைக்கேட்பதற்கு உன்னை விடாமல் அனுஸரிக்கிறது.உன்னால்சொல்லப்படுவது மிகச்சிறந்ததாகவன்றோ இருக்கும்? அன்புள்ளவளே! ஸ்திரீகளுக்கு ஸ்திரீகள்தாமே கதி. எப்போதும் பசு பசுக்களிடத்திலேயே சேரும். மனிதன் மனிதரல்லாதவரிடத்தில் ஸந்தோஷமடையான். தேவியே! உலகத்தில் இந்தஇயல்பு ஆதிகாலமுதல் நடக்கிறது. பெண்ணினால்சொல்லப்படுவது எதுவாயினும் அது பெண்களுள் கொண்டாடப்படும். குற்றமற்றவளே! புருஷன்சொல்வது ஸ்திரீகளிடத்தில் அப்படி மதிப்பையடையாது. ஸ்திரீகளுக்கு அழியாததர்மம் உனக்குத்தெரிந்த விஷயந்தானே. ஆதலால், உன்னைக்கேட்கிறேன். நான் விரும்பிக் கேட்பதை நீ சொல்லக்கடவாய்' என்றார். சிறந்தவளானஉமாதேவி மஹாதேவரால் இவ்வாறுகேட்கப்பட்டபோது, அச்சமும்நாணமும் அடைந்து அந்தஸபையில் ஒன்றும்பேசாமலிருந்தாள். அப்போது, ஈசுவரர் பலமுறை என்னவென்று தேவியைக் கேட்டார். உமை, 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈசுவரரே! தேவராலும்அஸுரராலும் நமஸ்கரிக்கப்பட்டவரே! உம்மிடத்தில் நான் ஸ்திரீதர்மத்தைச்சொல்வது எப்படி?' என்றுசொன்னாள். மஹேசுவரர், 'எனக்கு அன்புள்ளவளே! என்கட்டளையினால் நீ அவசியம் சொல்லவேண்டும்' என்றுசொன்னார். உமை, 'மஹாதேவரே! இந்தநதிகள் உமது ஸ்நானத்திற்காக எல்லாப்புண்ணியதீர்த்தங்களோடும்சேர்ந்து உமது ஸமீபத்தைவிடாமல் இருக்கின்றன. இந்தநதீதேவதைகளோடுகூட ஆலோசித்து நீர் விரும்பினதைச்சொல்வேன். முக்கியமானவர்கள் இருக்கும்போது அவர்களைவிட்டுப்பேசுவது தகாது. இந்தச்சிறந்த நதிகள் என்னால்வெகுமானிக்கப்பட்டவரும் ஆகவேண்டும்' என்று சொன்னாள். அம்மஹாதேவி இவ்வாறுநிச்சயித்து நதீதேவதைகளை அழைத்தாள். விபாசை, விதஸ்த்யை, சந்திரபாகை, ஸரஸ்வதி, சதத்ரு, தேவிகை, ஸிந்து, கௌதமி, கௌசிகி, யமுனை, நர்மதை, காவேரி, தேவநதியும் ஸ்வர்க்கமத்தியபாதாளங்களென்னு மூன்று உலகங்களிலும்ஸஞ்சரித்து நன்மையைச்செய்பவளும் எல்லாப்புண்ய தீர்த்தங்களையும் வகிப்பவளும் எல்லாப்பாவங்களையும் போக்குபவளுமான கங்கையாகிய இந்நதீதேவதைகளை அழைத்து அவர்களை நோக்கிப் பின்வருமாறு சொல்லலானாள்.

'சிறந்தவர்களும் எல்லாப்பாவங்களையும்ஒழிப்பவர்களும் அறிவும்விவேகமுமுள்ளவர்களுமான புண்ணியநதிகளே! என்சொல்லைக் கேளுங்கள். பகவான் ஸ்திரீதர்மத்தைப்பற்றி என்னை ப்ரஸ்னம்செய்திருக்கிறார். அது என்னொருத்தியினால் சொல்லமுடியாதது. அதனால், உங்களையழைத்தேன். சிறந்தவர்களே! உங்களோடுசேர்ந்து ஆலோசித்துத்தான் சொல்லநினைக்கிறேன். தேவருக்குந் தேவரான ஈசுவரருக்குச் சிறந்ததான ஸ்திரீதர்மத்தை எப்படிச்சொல்லலாம்?' என்றாள். அந்தத்தேவியினால் இவ்வாறுகேட்கப்பட்ட மஹாநதிகள் நடுங்கினர். அவர்களில் மிகச்சிறந்தவளானகங்கை பின்வருமாறுசொல்லலானாள். 'குற்றமற்றவளே! உன்னுடையஇந்தச்சொல்லினால் நாங்கள் அனுக்கிரகிக்கப்பட்டுப் பாக்கியம்பெற்றோம். தேவர்களாலும் அஸுரர்களாலும் கொண்டாடப்படுகிற நீ நதிகளை ஆதரிக்கிறாயன்றோ? சிறந்தவளே! இப்படி இன்சொல்லினால்மகிழ்விப்பது உனக்கேதகும். எவர்கள் தெரியாதவர்களோ அவர்கள் தம்மைத்தாமே புகழ்ந்துகொண்டு ஸபைகளில் தாமாகவே தாங்கள்சொல்லமுடியாதவிஷயத்தையும் நினைத்தபடி சொல்லுவார். திறமையிருந்தும், 'நான்' என்று பேசாதவன்கிடைப்பது மிகஅரிதென்றுநினைக்கின்றனர். தேவியே! நீ இந்தப்ரஸ்னத்திற்கு முழுதும் மறுமொழிசொல்லத்திறமையுள்ளவளாயிருந்தும்பெண்ணாயிருப்பதனால் சொல்லக்கருதாமலிருக்கிறாய்; எங்களையும் கௌரவிக்கிறாய். தேவியே! நீ தானே மஹாதேவி; கூட்டியும் தள்ளியும் ஆலோசிக்கத்திறமையுள்ளவள். தேவியே! நீ திவ்யஜ்ஞானமுள்ளவள்; திவ்யஜ்ஞானமென்னும்விறகினால் ஜ்வலிப்பவள். பெண்களின் நல்லொழுக்கத்தையும் தீயஒழுக்கத்தையும் நீதான் சொல்லத்தக்கவள். உன்முகத்திலிருந்து வெளிப்படும் இவ்வமுதத்தைக்கேட்பதற்கு நாங்கள் வேண்டுகிறோம். தேவியே! உத்தமமானஸ்திரீதர்மத்தைச்சொல்லி ஈசுவரருடையவிருப்பத்தைநிறைவேற்று' என்றாள். உலகமெல்லாம் பூஜிப்பதற்குரியகங்கையினால் இவ்வாறு வேண்டப்பட்டபிறகு, தேவசுந்தரியானஉமாதேவி ஸ்திரீதர்மத்தை முழுதும் சொல்லலானாள்: 'பகவானே! தேவருக்குந்தேவரே! ஈசரே! தேவசிரேஷ்டரே! மஹேசுவரரே! உமதுவிருப்பத்திற்காக நீர்கேட்கக்கருதின ஸ்திரீதர்மத்தை உமது அனுக்கிரகத்தினால் சரிவரச்சொல்வேன்' என்றாள்.

## இருநூற்றுநாற்பத்தோன்பதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஶ்வரஸம்வாதம் தொடர்ச்சி ; ஸ்த்ரீதர்மம் ; விவாகத்தையும் பதிவ்ரதாதர்மத்தையும் பற்றியது.)

இவ்வாறு, ஈசுவரருடைய கட்டளையினால் உமாதேவி ஸ்திரீதர்மம்சொல்லத்தொடங்கும்போது, ரிஷிகள் கந்தர்வர்கள் யக்ஷர்களுடையஸ்திரீகளும் அப்ஸரஸ்ஸுகளும் நாககன்னிகைகளும் பூதகன்னிகைகளும் நதிதேவதைகளும் வந்துசேர்ந்தனர். எல்லாரும் சிறந்த வாக்கைக் கேட்கக்கருதி நாற்புறத்திலும்நின்றனர். பெண்கள்மேல் எப்போதும் அன்புள்ளவளும் அவர்களால் பூஜிக்கப்பட்டவளுமான உமாதேவியானவள் ஸந்தோஷம்அடைந்து பெண்களின் நன்மைக்காகவும் சிவனுடையவிருப்பத்தைச் செய்வதற்காகவும் ஸ்திரீகளின் தர்மத்தைப்பற்றிச் சொல்லத்தொடங்கினாள்:

'பகவானே! எல்லாப்பிராணிகளுக்கும்ஈசுவரரே! என்சொல்லைக்கேட்கவேண்டும். ருதுகாலம்வரையிலும் சிறந்ததேகசுத்தமுள்ளவள் கன்னியென்றுசொல்லப்படுகிறாள். தந்தை தாய் ஸகோதரன் அம்மான் தந்தையின்ஸகோதரன் இவ்வைவரும் அந்தக்கன்னிகையைத் தானம்செய்கிறதற்கு அதிகாரிகள். அந்தப்பெண்களுக்குத் தர்மகாரியத்தைநடத்துவதற்காகச் செய்யப்படும்விவாகங்கள் ஐந்துவகை. ஒருவரொருவரை ஆசைப்படுவதனால்[1] இஷ்டப்படி கன்னிகையே தன்னை ரகஸ்யத்தில்கொடுப்பதும் விவாகந்தான். மேற்சொன்னவிவாகங்களில் எதனாலாவது ஒருகன்னிகை யாருக்குக் கொடுக்கப்படுகிறாளோ அவனுக்கே மனைவியாவாள். ஆதலால், கொடுப்பவர்கள் நன்றாகஆராய்ந்துபார்த்தே கொடுக்கவேண்டும். வேறுவிதமாகக் கொடுக்கலாகாது. மேல்வர்ணத்தாருக்கு மந்திரங்களோடு பாணிக்கிரகணம் நடக்கவேண்டும். சூத்திரர்களில் ஸ்திரீபுருஷர்கள் சேருவதே விவாகமென்று சொல்லுகின்றனர். ஒருகன்னிகை தன்னைமனைவியாகவிரும்புகிறவனுக்குத் தன்சுற்றத்தாரால்எப்போது கொடுக்கப்பட்டவளாகிறாளோ அதுமுதல் அந்தப்பெண் பத்துத் தினங்கள்வரையில் வெட்கத்தோடிருப்பாள். பிறகு, அவள் மனத்தி

---

1 இது காந்தர்வம். இது ஆறாவது. ராக்ஷஸமும் பைசாசமும் தானமில்லாமையினால் சேர்க்கப்படவில்லை. பிராம்மம் ஆர்ஷம் பிராஜாபத்தியம் தெய்வம் ஆஸுரம் இவ்வைந்தும் கூறப்பட்டதாகக் கொள்க.

ஞலும் செய்கையினலும் வாக்கினலும் கணவனுக்கு அனுகூலமா கவே நடக்கவேண்டும். சிறந்தபெண் இவ்வாறு அந்தக்கணவனிடத் தில் பதிவ்ரதாதர்மத்தை நடத்தவேண்டும். விவாகமானதுமுதல் அந்தப்பெண் கணவனுக்கு இன்னதுசெய்யலாகாது. தர்மார்த்த காமங்களுள் எதனைக் கணவன்விரும்பினலும் அதுஅதிலும் அவ னுக்குப்பிரியமாயிருந்து அவனை உபசரிக்கவேண்டும். இதுதான் பெண்களுக்கு எக்காலமுமுள்ள பதிவ்ரதாதர்மம். கணவன் நன் னடையுள்ளவனகவோ கெட்டநடையுள்ளவனகவோ எப்படிஇரு க்கிருனே அப்படியே அவளும் எப்போதும் இருக்கவேண்டும். இதுதான் ஒழுக்கத்தின்சுருக்கம். எப்போதும் கணவனைக்கவனிக் கும்கற்புள்ளவள் தெய்வத்தன்மையுள்ளவள். அவளுக்குக் கணவன் தெய்வமாகவேஇருப்பதாக அறியப்படுவான். தேவரே ! இதற்கு உதாரணமாக ஒருபழைய சரித்திரத்தைக்கேட்டிருக்கிறேன். உமது அனுக்கிரகத்தினல் அதைச் சுருக்கமாகச்சொல்லுகிறேன். தேவரே ! கேளும். ஒருபிராம்மணனுக்கு இரண்டுமனைவிகள் இருந்தனர். அவர் களில் ஒருத்தி தேவர்களிடத்தில்பக்தியோடு தர்மத்தைச் செய்யக் கருதுகிறவள். அவள் கணவனை அவமதித்துத் தேவதைகளிடத்தில் பக்திவைத்து ஊக்கத்துடன் தேவதாவிக்கிரஹங்களைப்பூஜித்துப் பெரியதர்மத்தைச் செய்தாள். சிறந்தவளானமற்ருருத்தி கணவ னைப்பற்றியேதர்மம்செய்யநினைத்து அவனையேதெய்வமாகக்கொண்டு அவன்விருப்பத்தைச் செய்தாள். மஹாதேவரே ! இப்படிநடந்து கொண்டிருக்கையில் அவ்விருவருக்கும் ஒருகாலத்தில் மரணம் நேர் ந்தபோது அவ்விருவரும் பரலோகத்தின்வழியில் சென்றனர். அவர்க ளுள் ஒருத்தியானதெய்வப்பற்றுள்ளவள்நிற்க, பதிவ்ரதை புண்ணிய லோகம்சென்ருள். தெய்வபக்தியுள்ளவள் நின்றுகொண்டு மிக்கதுய ரத்தோடு அழுதாள். திக்பாலகனகியயமன் அவளைப்பார்த்து, 'குற்ற மற்றவளே ! நீ விசனப்படாதே. உனக்கு உலகங்களில்லை. நீ உன் தர்மத்தைச்செய்யாமலிருந்ததனல் உனக்கு அந்தப்புண்ணியஉலகங் கள் கிடையா. பெண்ணுக்குக் கணவனே தெய்வமாக எல்லாத்தேவ தைகளாலும் விதிக்கப்பட்டிருக்கிருன். சிறந்தவளே ! நீ அவனை அவமதித்தபின் புண்ணியலோகங்களுக்குப்போவது எப்படி ? பெண் ணரசியே ! நீ மதிகெட்டு உன்தெய்வத்தை அறியாமற்போனய். கணவனுள்ளபெண் கணவனுக்குள்ளதர்மத்தையே செய்யவேண்டும். ஆதலால், நீ திரும்பிச்செல். கணவனுக்கு அனுகூலத்தைச்செய். அதன்மேல், பதிவ்ரதைகள்போகும்லோகங்களுக்குப் போவாய். இல்

லாவிடில் உத்தமமான பதிஉலகத்திற்குப் போகமுடியாது' என்னும் பூரணமானசொல்லைச் சொன்னான். யமன் இவ்வாறுசொன்னபின், அவள் மறுபடியும்திரும்பிச்சென்று கணவனையடுத்து அவன்விருப் பத்தையே முக்கியமாகச்செய்துகொண்டிருந்தாள். மஹாதேவரே! இப்படிஇருப்பதனால் பெண்ணுக்குக் கணவனே தெய்வம். ஆதலால், அவள் கணவனையேமுக்கியமாகநினைத்து அவனுக்குப் பணிவிடை செய்யவேண்டும்.

---

## இருநூற்றைம்பதாவது அத்யாயம்.

### தான தர்மபர்வம். (தொடர்ச்சி.)



(உமாமஹேஸ்வரஸம்வாதம் தொடர்ச்சி ; ஸ்த்ரீதர்மம் ; பெண்களின் பலஇயற்கைகளைப்பற்றியது.)

கணவனுள்ளபெண் பகல்இரவுகளில்நடத்தும் சிறந்தஒழுக்கத் தைச்சொல்லுகிறேன் ; கேட்கவேண்டும். அவள் கணவனுக்குமுன் எழுந்து காலைக்காரியங்களைச் செய்யவேண்டும். அதன் பிறகு, கணவனுடையகருத்தையறிந்து அவனை எழுப்பவேண்டும். காலைக் காரியங்களைத் தானே முறைப்படிசெய்யவேண்டும். 'ஆகாரம் எப் படிச்செய்யலாம்?' என்று புருஷனைக்கேட்டு அவனுக்கு எப்படி பிரியமாயிருக்குமோ அப்படியே எல்லாவற்றையும் செய்யவேண்டும். தன்கணவன் எப்படியோ அப்படியே மனைவியும் குருபக்தி செய்ய வேண்டும். அவன்தேகபுஷ்டிக்குத்தக்கபடியும் அவன்மனவிருப்பம் நிறைவேறும்படியும் உபசரிக்கவேண்டும். கணவன்வெளியில்போன பிறகு, தன்காரியங்களை ஜாக்கிரதையோடு கவனிக்கவேண்டும். கண வன்வரக்கண்டு, உடனே அன்புடன் பாத்தியத்தையும் ஆஸனத்தை யும் சயனத்தையும்கொடுத்து மனத்திற்கினிமையாகப்பேசி உடம் பின்சிரமம்தீரும்படி சிறந்தஉபசாரத்தைச் செய்யவேண்டும். அதிதி கள்வரும்போதெல்லாம் ஸந்தோஷத்தோடு இருக்கவேண்டும்; எப் போதும் செய்கையினாலும் வாக்கினாலும் அதிதிகளைச் சந்தோஷிக் கச்செய்யவேண்டும். மங்களங்களையும் வீட்டின்சுத்தத்தையும் தான் செய்தும் செய்வித்தும் வீட்டிலுள்ளபண்டங்களெல்லாவற்றையும் எந்தக்காலமும் கவனிக்கவேண்டும். பெண்ணானவள் பர்த்தாவின் தர்மகாரியம்நேர்ந்தபோது தானும் அவனைப்போலவே தர்மத்தில் ஊக்கத்துடனிருக்கவேண்டும். தன்விஷயமானகாரியம்நேர்ந்தபோது

சோம்பலைவிட்டு அவனுக்கு உதவிக்காக முழுமுயற்சியையும் செய்யவேண்டும். கற்புள்ளபெண் கணவனுடைய தர்மார்த்தங்களிரண்டிலும் எப்பொழுதும் தானே பாரத்தைவகிப்பவளாயிருக்கவேண்டும். கலவிக்காலத்தில் கணவனுள்ளக்கருத்தையறிந்து அதற்குத்தக்கபடி அலங்காரங்களைச்செய்துகொண்டு புன்னகையோடு முகமலர்ச்சியுள்ளவளாய் இன்சொற்களினால் கணவனை மகிழ்விக்கவேண்டும். மாற்றான் விஷயமாகக் கணவனுக்கு துவிரோதமாகக் கடுஞ்சொற்களைச் சொல்லலாகாது. கணவன் எவள்மேல் காதலோடு இருக்கிறானோ அவளுக்கு இனியதுசெய்துகொண்டிருக்கவேண்டும். ஊக்கத்தோடு மனப்பூர்வமாய்க் கணவனைத் திருப்திசெய்விக்கவேண்டும். கணவனுக்குப்பிறகு மற்றவர்கள்போஜனத்தைக் கவனித்துப்பார்க்கவேண்டும். வேலைக்காரிகளுக்கும் வேலைக்காரர்களுக்கும் ரிஷபங்களுக்கும் சண்டாளர்களுக்கும் நாய்களுக்கும் திக்கற்றவர்களுக்கும் அசக்தர்களுக்கும் பிச்சைக்காரர்களுக்கும் அன்னத்தையும் பிக்ஷையையும் ஆதரவுடன் கொடுத்துத் தன்கணவனுடைய தர்மத்தை அபிவிருத்தி செய்யவேண்டும். கணவன் கோபித்தாலும் பொருளில்லாதவனாயிருந்தாலும் அசக்தனாயிருந்தாலும் அவனை உபசரிக்கவேண்டும். அவன் எப்படிச்செய்தால் ஸந்தோஷமடைந்து கவலையற்றிருப்பனோ அப்படிச் செய்யவேண்டும். குடும்பகாரியத்தின் ஆலோசனைக்காகவும் வியவகாரத்திற்காகவும் தனம் சேர்ப்பதற்காகவும் புருஷனால் அழைக்கப்படும்போது அவனுக்கு உதவிக்காக இனிமையும் அனுகூலமுமாகப் பேசவேண்டும். அவனுடைய தர்மார்த்தங்களைக்கருதி அவனுக்கு அப்ரியமாயிருந்தாலும் ஹிதத்தைச் சொல்லவேண்டும். பிறரிடத்தில் ரகஸ்யமான விஷயங்களைச் சொல்வதையும் கலகத்தையும் விடவேண்டும். வெளியிற்பார்ப்பது, கவனிப்பின்மை, (நியாயமானகாரியங்களில்) வெட்கப்படுவது, கோட்சொல்லுவது, மிகுதியாகப்புசிப்பது, பகலில்தூங்குவதுமுதலியவற்றைவிடவேண்டும். கற்புள்ளவள் பிள்ளைகளோடுங்கூட ஏகாந்தத்தில் உட்காரலாகாது. எது எதைக் கணவன் வைத்துவைக்கும்படி கொடுக்கிறானோ அது அதைஅடைக்கலம்வைத்ததைப்போலக் காப்பாற்றவேண்டும். மறந்துபோனபொருளையும் தன்சுத்தத்தினால் திருப்பிக்கொடுக்க வேண்டும்; கணவனால் கொடுக்கப்பட்டது எதுவாகிலும் அதைப்பெற்று மகிழவேண்டும். அதிகமாகக்கட்டளையிடுவதையும் அதிகப்பொறுமையையும் தூரத்தில் விடவேண்டும். பார்யையானவள் எப்போதும் கணவனைக் குழந்தையைப்போலவும் கிழவனைப்போலவும் அனுஸரித்திருக்கவேண்

டும். பிரபுவே ! எப்போதும் இந்தவ்ரதம்தான் மனைவி செய்யவேண்டும். தேவரே ! இந்தப் பதிவ்ரதா தர்மத்தைச் சுருக்கமாகச் சொன்னேன். எவளுக்குக் கணவனைக்காட்டிலும் தன்னுடையபோகத்திலும் ஐசுவரியத்திலும் சௌக்கியத்திலும் தனத்திலும் அதிக விருப்பமில்லையோ அவள்தான் பெண்களுள் பதிவ்ரதை. பெண்களுக்குக் கணவனே தெய்வம்; கணவனே சுற்றம்; கணவனே தஞ்சம். பெண்களுக்குக் கணவனைப் போன்றகதி மற்றொன்றை நானறியவில்லை. பிரபுவே! ஜன்மங்களுள் ஸ்திரீஜன்மம் சிறந்ததென்று யான்நினைப்பது. புருஷன் (தவமுதலிய) பெரிய காயக்லேசத்தினால் அடையும் பலன்கள்எல்லாவற்றையும் பெண் பதிசுசுருஷையினால் எளிதில் அடைகிறாள். கணவனுள்ள பெண்ணுக்குக் கணவனுக்கு அனுகூலம்செய்வதினாலேயே எல்லா ஸுகமுமுண்டாகிறது. பெண்ணுக்கு இவ்வகையாகத் தர்மம் பூர்ணமாகிவிடுகிறது. தேவரீர் பாருங்கள். பாவத்தினால் மதிகெட்ட கெட்டபெண்கள் இதைவிட்டு மாறிப்போகின்றனர். பெண்ணுக்குத் தவமும் தானமும் கணவனுக்கு உட்பட்டிருப்பதுதான். அழகு குலம் புகழ் ஒளிஇவையெல்லாம் கணவனைப்பற்றியவை. இப்படிப்பட்டநியமமும் ஆசாரமுமுள்ள பெண்கள் தம் ஒழுக்கத்தினாலேயே சிறந்தவர்களாகிறார்கள். நல்ல செய்கைசெய்தவள் தன்கணவனுடன் கூடவே புண்ணியலோகங்களுக்குச் செல்வாள். கணவன் கிழவனோ குரூபியோ அருவருக்கத்தக்கவனோ பொருளுள்ளவனோ இல்லாதவனோ எப்படியிருந்தாலும் அவனே பெண்களுக்குச்சிறந்தஆபரணம். செல்வமும்அழகுமுள்ளவனாயிருந்தாலும் இல்லாதவனாயிருந்தாலும் கணவனை உபசரிப்பவள்தான் கற்புள்ளவள். அவளே பத்நிகளிற்சிறந்தவள். தரித்திரனும் குரூபியும் அறிவில்லாதவனும் குஷ்டரோகியுமான கணவனையும்உபசரிக்கும் பெண் அழிவில்லாதபுண்ணியலோகங்களை அடைவாள். இப்படி நடந்துகொண்டிருப்பவள் கணவன்முதலில்இறப்பானாயின் அவனுடன் தானும் மரணமடையவாவது வேண்டும்; திரும்பவும்தவஞ்செய்யவாவது வேண்டும். இவ்வாறு நான்சொன்னேன். பெண்கள்பலவகையாகக் கூறப்படுகின்றனர். தேவர் தானவர் கந்தர்வர் மனிதர் என்று அனேகவகுப்புக்களாகப் பெண்களிருக்கின்றனர். அவர்கள்எல்லாரும் நல்லொழுக்கமும் சிறந்த ஆசாரமுமுள்ளவர்களுமாகலாம். மஹேச்வரரே ! ஸ்திரீகளுக்கு எதுநல்லதர்மமென்பதைச்சொல்வேன். அவர்கள் அஸுரர்களாகவும் பிசாசர்களாகவும் அரக்கர்களாகவும் இருக்கின்றனர். அவர்களின் ஒழுக்கம்எல்லாவற்றையும் உலகத்திற்காகச்

சொல்லுகிறேன்; கேட்கவேண்டும். எண்ணத்தில்கெடுதலுள்ளவர்க ளாகிவிருப்புவெறுப்புக்கள்மேற்கொண்டபெண்களும் நியாயமாகவோ அநியாயமாகவோ கணவர்களுக்கு உபசாரங்களைச் செய்யவே செய் கின்றனர். தம் தர்மத்தில் ஸ்ரத்தையில்லாமல் எவ்வகையினாலாவது கணவர்களைத் தூஷிக்கின்றனர். எப்போதும் விஷயங்களில் ஆசை அதிகப்பட்டுக் கணவனுக்குவிரோதமாகப் பேசுகின்றனர். அப்படியே பொருள்களையழிக்கின்றனர். ஹிதத்தை யார்சொன்னாலும் ஏற்றுக் கொள்வதில்லை. தங்கள்புத்தியைக்கொண்டு எவ்வகையாலாவது ஜீவிக்கின்றனர். சிலகாலம் குணமுள்ளவர்கள்போலவும் பதிவ்ரதா தர்மத்திலிருப்பவர்போலவுமிருந்து திரும்பவும் கெட்டஒழுக்கத்தை யடைந்து பாவிகளாகிறார்கள். வரம்பில்அடங்காமலும் நியமமில்லா மல் பல உடைகளைத்தரித்தும் திருப்தியில்லாமல் பொருளாசைகொ ண்டு அதிகப்பொறாமையும் கோபமுமுள்ளவர்களாகி வேண்டினவர்க ளைப்பகைத்தும் காமஸுகங்களையே முதன்மையாகவிரும்பியும் பெரு ம்பாலும் பொய்சொல்லிக்கொண்டும் பெரியோர்களை எதிர்த்தும் மற்றுமிவ்வகைநடைகளோடுமிருக்கும் பெண்கள் அஸுரத்தன்மை யுள்ளவர்கள். மற்றும்சிலர் எப்போதும் தீங்குகளையே செய்துகொண் டும் கலகத்தையே விரும்பிக்கொண்டும் கொடியவரும் கொடுஞ்சொற் சொல்லுகிறவரும் அருவருப்பும்வெட்கமும் அற்றவரும் அன்பில்லாத வரும் கணவர்கள்மேலும் புத்ரர்கள்மேலும் சுற்றத்தார்மேலும்கோ பிப்பவரும் பயங்கரரும் மாம்ஸத்தை விரும்புகிறவருமாயிருந்துகொ ண்டும் எக்காலமும் சிரித்துக்கொண்டாவது அழுதுகொண்டாவது இருக்கின்றனர். எப்படியாயினும் புருஷர்களைவிட்டுக் கெட்டவழி யாக வியபிசாரமேசெய்கின்றனர். தேவரே! சுற்றத்தாரால்பயமுறுத் தப்பட்டுத்தான் வீட்டுக்காரியங்களைச் செய்வது. அதனாலேயே தம் காரியங்களை விட்டுவிடுவதுமுண்டு. அப்படியே தற்கொலை என்னும் கொடுமையைச் செய்துகொள்வர். ஸந்தேகமில்லை. தயையும் அன்பு மில்லாதவர்களாகிக் குடும்பகாரியத்தைக் கெடுப்பர். தர்மத்திற்கும் தனத்திற்கும் விலக்கான கொடுஞ்செய்கைகளை எப்போதும் செய்வர். அனர்த்தகாரியங்களில் தேர்ச்சியுள்ளவரும் உயிர்களில் தயையற்ற வரும் பாவிகளும் மற்றுமிவ்வகையொழுக்கமுள்ளவருமானபெண்கள் பிசாசத்தன்மையுள்ளவர். மற்றும்சில அறிவில்லாதவர்கள்வெட்கங்கெ ட்டு அழுதுகொண்டும் ஆசாரமில்லாமலும் உடம்பில் அழுக்கைப்பூசிக் கொண்டும் மதுமாம்ஸங்களில் மிக்க ஆசைகொண்டும் பொய்சொல் லிக்கொண்டும் சிரித்துக்கொண்டும் புலம்பிக்கொண்டுமிருக்கின்றனர்

ஸமாதானப்படுத்தமுடியாத பெருங்கோபக்காரிகளும் இடைவிடாமல் தூங்குவதேகாரியமாகவிருப்பவரும் தாமஸகுணமிகுந்தவரும் அறிவு கெட்டவரும் சுருசுருப்பற்றவரும் பெருவயிறுள்ளவருமாகிப்பிறரால் செய்யப்பட்ட பலவகை உணவுகளை மிகுந்த அவசரத்துடனுண்பர். அவர்கள் மிக்கமன்மததாபங்கொண்டு, குணமும் அழகும் இளமைப் பருவமுமுள்ளவனும் அன்புள்ளவனுமான சிறந்த கணவனைவிட்டு மற்றொருவனோடேயே எவ்வகையாலாவது சேர்வர். அவர்கள்வெட்க மில்லாதவர்கள்; தர்மத்தில் நம்பிக்கை இல்லாதவர்கள்; யாரிடத்தி லும் பகையுள்ளவர்கள். இப்படிப்பட்டநடையுள்ளபெண்கள் ராக்ஷஸ த்தன்மையர்கள். இப்படிப்பட்டவர்எல்லாருக்கும் பரலோகத்தில் பேரின்பம்இல்லை. நரகத்திலிருந்துவிடுபட்டபின்னரும் அவர்களுக்கு மானிடப்பிறப்பு கிடைப்பதரிது. அப்படிப்பிறந்தாலும் தங்கள் பாவத்திற்குத்தகுந்த தாங்கக்கூடாத அதிகத்துயரத்தை அனுபவிப் பார்; ஏழைகளும் பலவகைக் கஷ்டப்படுகிறவர்களும் குரூபிகளும் பிறரால் இகழப்பட்டவர்களும் விதவைகளும் பாக்கியமற்றவர்களும் மற்றும்இவ்வகைத்துன்பமுள்ளவர்களுமாவார். வியபிசாரஞ்செய்ப வள் தன் கணவனுக்கும் தன் குலத்திற்கும் தன் பாவத்தைச்சேர்த் துத் தானும் நூறாயிரம்வருஷம் நரகத்திலிருப்பாள். இந்தக்கெடுதியை அறிந்து திரும்பவும் கணவனையே அடைந்து தனக்குநன்மையுண்டா கக்கருதுவளாயின் அதனால் புண்ணியத்தையடைந்து மிகச்சிறந்தவை யான பதிவ்ரதைக்குரிய சிறந்தலோகங்களை அடைவாள். முதலில் கெட்டநினைவுடன் கணவனைஅவமதித்தும் அவனுக்கு எப்போதும் விரோதமாகவே நடந்தும்வந்தவர்கள் அவன்மரணகாலத்தில் காமத்தி னாலாவது கோபத்தினாலாவது பயத்தினாலாவது லோபத்தினாலாவது அனுமரணம்செய்வார்களாயின் பரிஹாஸத்துக்குரியவராவார். முதலி லிருந்து கெட்டவர்களான ஸ்தரீகள் அனுமரணம்செய்வது வீண். முதலிலிருந்து கணவனிடத்தில் அன்புவைத்தகற்புள்ளவள் கணவ னுடன் அநுமரணம்செய்தால் பரிசுத்தியுடன் மேலுலகம்செல்வாள். இவ்வாறு இறந்துபோனவள்போகும் உலகங்களை நான் கண்ணினாற் காண்கிறேன். பதிவ்ரதைகள்செல்லும்அவ்வுலகங்கள் தேவக்கூட்டங் களும் ஆசைப்படத்தக்கவை. அல்லது, கணவனிறந்தபின் பதிவ்ரதை கள் விதவாதர்மத்தையடைந்து நாள்தோறும் பேசாமல் [1]பௌமஸ்நா னத்தையும் ஜலத்தில்உத்தமமான [2]அஞ்சலிஸ்நானத்தையும்செய்ய

1 உடம்புமுழுதும் மண்ணைப்பூசிக்கொள்வது.

2 இருகைகளாலும் ஜலத்தைத் தலையில் இறைத்துக்கொள்வது.

வேண்டும்; அதன்பிறகு, தன்கணவனைப்பற்றியவ்ரதத்தையும் நியமத்தையும் செய்யவேண்டும். இப்படிச்செய்வதனால் அந்தப் பெண் எல்லாவற்றிலுஞ்சிறந்ததான பதிலோகமென்னும் புண்ணியலோகத்தை அடைவாள். சொல்லிமுடியாத அழகுள்ளதும் தேவருக்கும் மனிதருக்குங்கிடைக்காததுமான அந்தஉலகத்தைப் பதிவ்ரதையாயிருப்பவள்மட்டுமே அடைவாள். தேவரே! இவ்வாறு எல்லாவற்றிலும்சிறந்தஸ்திரீதர்மத்தை உமக்குச் சொன்னேன். தேவஸ்ரேஷ்டரே! நான் உங்களுடையவிருப்பத்தைச் செய்யக்கருதி ஆசைகொண்டு உமது முன்னிலையில்சொன்னதற்காகத் தேவரீர் க்ஷமிக்க வேண்டும்' என்றாள்.

இவ்வாறுபேசி நாணிநின்ற உமாதேவிக்கு ஸந்தோஷமுண்டாகும்படி மஹாதேவர் வாக்கினால் சிலாகித்தார். ரிஷிகளும் தேவர்களும் கந்தர்வர்களும் ஆயிரக்கணக்கானமாதர்களும் உமாதேவியைத் தலைவணங்கித் துதித்தனர். மற்றும்சிலர் ஸந்தோஷத்துடன் தேவருக்குந்தேவரானஈசுவரனைக் கொண்டாடினர். சிரத்தையும்நல்லமனமுமுள்ளமற்றும்சிலர் இந்தஉமாமஹேசுவரஸம்வாதத்தை நினைத்துக்கொண்டிருந்தனர். பிறகு, தேவசிரேஷ்டருக்கும் ஈசுவரரான சங்கரர் உமாதேவியைநோக்கிப் பின்வருமாறு சொல்லலானார். 'சிறந்தவளே! என்சொல்லைக்கேள். நம்மிருவருடைய இந்தஸம்வாதம்புண்ணியத்தைத்தருவதாகவும் பாவத்தைப்போக்குவதாகவும் பிரஸித்தமாகவுமிருக்கும். அதற்குச் சந்தேகமில்லை. அன்புள்ளவளே! எந்த வித்வான் பரிசுத்தனாயிருந்து சிரத்தையுள்ளமனிதருக்கு நம்முடைய இந்தஸம்வாதத்தைச் சொல்லுவனோ அவன் அவர்களுடன்கூடவே எளிதில்ஸ்வர்க்கம்போவான். நம்முடைய இந்தச்சிறந்தஸம்வாதத்தை நித்தியமாகக்கேட்பவன் கீர்த்தியையும் ஆயுளையும் ஆரோக்கியத்தையும் பரகதியையும் அடைவான்' என்றார்.



## இருநூற்றைம்பத்தோராவது அத்தியாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(பரமேசுவரர் ரிஷிகளுக்கு விஷ்ணுவின் பெருமையைச் சொல்லியது.)

ரிஷிகள், 'பிநாகம்தரித்தவரே! பகதேவதையின்நேத்திரத்தை அழித்தவரே! எல்லாஉலகங்களாலும் நமஸ்கரிக்கப்பெற்றவரே! சங்கரரே! விஷ்ணுவின்மகிமையைக்கேட்கவிரும்புகிறோம்' என்றுகேட்க, ஈசுவரர் சொல்லலானார்:- 'ஹரியானவர் பிரம்மாவுக்கும்மேற்பட்டநித்

தியபுருஷர்; கிருஷ்ணர்; பொன்போலவும் மேகமில்லாத ஆகாயத்தில் உதித்தசூரியன்போலவும் பிரகாசிப்பவர் ; பத்துக்கைகளுள்ளவர் ; பெருஞ்சக்தியுள்ளவர் ; அஸுரர்களையழிப்பவர்; ஸ்ரீவத்ஸமென்னும் மச்சத்தை அடையாளமாகவுடையவர்; ஹ்ருஷீகேசர்; எல்லாத்தேவர்களாலும்பூஜிக்கப்பெற்றவர். பிரம்மதேவர்அவருடையநாபியில்உண்டானவர். நான் அவர்நெற்றியில்உண்டானவன். அவரதுதலைமயிர்களினின்றும் கிரகநக்ஷத்திரங்களும் தேகத்தின்ரோமங்களிலிருந்துதேவாஸுரர்களுமுண்டாயினர். ரிஷிகளும் அழியாதஉலகங்களும் அவர்தேகத்திலிருந்துஉண்டாயினர். பிரம்மதேவருக்கும் மற்றஎல்லாத்தேவர்களுக்கும் அவரே இருப்பிடம். அவரே இவ்வுலகமனைத்தையும்படைத்தவர்; மூவுலகங்களுக்கும் ஈசுவரர். ஜங்கமஸ்தாவரங்களாகிய எல்லாப்பொருள்களையும் ஸம்ஹரிப்பவர் அவரே. அவரே தேவர்களிற் சிறந்தவர் ; தேவர்களுக்குநாதர் ; பகைவரைவருத்துகிறவர்; ஸர்வஜ்ஞர்; எல்லாவற்றிலும் சேர்ந்திருப்பவர் ; எங்கும் வியாபித்திருப்பவர்; எங்கும் முகமுள்ளவர் ; பரமாத்மா ; பிரகாசிக்கும் கேசங்களையுடையவர். எல்லாவற்றிற்கும் மேற்பட்டவர்; மஹேசுவரர். மூவுலகங்களிலும், அவருக்குமேற்பட்டபொருள் ஒன்றுமில்லை. அவர் எக்காலமுமிருப்பவர்; மதுவென்னும் அஸுரனைக் கொன்றவர். கோவிந்தரென்றுபெயர்பெற்றவர். கௌரவத்தைக் கொடுப்பவராகிய அவர் தேவர்களின்காரியத்திற்காக மானிடதேகமெடுத்துப்பிறந்து யுத்தத்தில் அரசர்களெல்லாரையும்வதம்செய்விக்கப்போகிறார். தலைவராகிய த்ரிவிக்கிரமர்இல்லாமல் உலகத்திலுள்ள தேவக்கூட்டங்கள் காரியங்களைச்செய்யத்திறமையற்றவை. அவர் எல்லாப்பிராணிகளுக்கும்நாதர். எல்லாத்தேவர்களாலும் நமஸ்கரிக்கப்பெற்றவர். தேவர்களுக்கு நாதரும் தேவகார்யத்தைச்செய்பவரும் எப்போதும் பிரம்மரிஷிக்குச்சரணமாயிருப்பவரும் பரப்ரம்மமுமாகிய அவருடையதேகத்திலுள்பிரம்மதேவர் ஸுகமாகவஸிக்கிறார். சிவனும் அவர்தேகத்தில் ஸுகமாயிருந்து மகிழ்ந்திருக்கிறார். எல்லாத்தேவர்களும் அவருடையதேகத்தில் ஸுகமாயிருக்கின்றனர். தாமரைக்கண்ணராகிய அந்தப்பகவான் லக்ஷ்மியை மார்பில்வைத்துக்கொண்டு அவளைவிட்டுப் பிரியாமலேயிருக்கிறார். அவர் சார்ங்கமென்னும்வில்லையும் சக்ராயுதத்தையும் கத்தியையும் தரிப்பவர். கருடக்கொடியுள்ளவர். எல்லாவற்றிலும் சிறந்தசீலம், அடக்கம், மனஒழிவு,பராக்கிரமம், வன்மை, வடிவழகு, கடாக்ஷம், உயரம், பருமன், தைரியம், மனவுண்மை, தயை, ஒளி, சக்திஆகிய இவைஎல்லாம் பொருந்தினவர்; ஆச்சரியக்காட்சியுள்ள

திவ்யாஸ்திரங்கள் எல்லாவற்றிலும் பிரகாசிப்பவர்; யோகமாயை யுள்ளவர்; ஆயிரங்கண்களையுடையவர்; அபாயமில்லாதவர்; பெரிய மனமுள்ளவர்; வீரர்; அன்புள்ளஜனங்களைப் பாராட்டுகிறவர்; குலத்தோரையும் சுற்றத்தோரையும் விரும்புகிறவர்; பொறுமையுள்ள வர்; அகங்காரமில்லாதவர்; பிராம்மணப்பிரியர்; பிராம்மணர்களுக்கு ஈசுவரர்; பயந்தவருக்குப் பயத்தைப்போக்குகிறவர்; அன்புள்ளவரு க்கு ஆனந்தத்தை விருத்திசெய்கிறவர்; எல்லாப் பிராணிகளுக்கும் தஞ்சமாயிருப்பவர்; துயரப்பட்டவரைக் காப்பதில்ஊக்கமுள்ளவர்; கல்வியுள்ளவர்; வேண்டத்தக்கவையெல்லாம் நிரம்பினவர்; எல்லாப் பிராணிகளாலும் நமஸ்கரிக்கப்பட்டவர்; தம்மையடுத்தபகைவருக்கும் வரமளிப்பவர்; தர்மந்தெரிந்தவர்; நீதிதெரிந்தவர்; நீதிகுறையாமல் நடத்துகிறவர்; வேதத்தையுபதேசிப்பவர்; ஜிதேந்திரியர்; கோவிந் தர். அவர் அந்தச்சிறந்தஞானமுள்ளதேவர்களின் நன்மைக்காகப் பிரம்மாவினுடைய சிறந்தமார்க்கமாகிய மானிடலோகத்தில் மஹாத் மாவானமனுவின்தர்மத்தினால் பரிசுத்தமானவம்சத்தில் அவதரிக்கப் போகிறார். மனுவின்புத்திரன் அங்கன் என்பவன். அவனுக்குப்பின் அந்தர்த்தாமன். அந்தர்த்தாமனுக்குப்பின் பிரஜைகளைச்சிருஷ்டிப் பவனும் குற்றமற்றவனுமான ஹவிர்த்தாமன். ஹவிர்த்தாமனுக்கு ப்ராசீனபர்ஹி என்னும் சிறந்தபுத்ரன் உண்டாவான். அவனுக்கு ப்ர சேதஸ்முதலான பத்துப்புத்திரர்கள் உண்டாவர். ப்ரசேதஸுக்குத் தக்ஷப்ரஜாபதிஎன்னும் புத்திரனுண்டாவன். தக்ஷன்மகளாகிய அதி தியின்புத்திரன் ஆதித்தன். ஆதித்தன் புத்திரன் வைவஸ்வதமனு. மனுவின்வம்சத்தில்பிறந்த இளை ஸுத்யும்னனவாள். புதனுக்குப் புரூரவன்; அவனுக்கு ஆயு பிறக்கப்போகிறான். ஆயுவுக்கு நஹு ஷன்; நஹுஷன்புத்திரன் யயாதி. யயாதிக்குப்புத்திரன் சிறந்த பராக்கிரமசாலியான யது; அவன்புத்திரன் க்ரோஷ்டா; க்ரோஷ்டா வுக்கு வ்ருஜினீவானென்னும்சிறந்தபுத்திரன் உண்டாவான். வ்ருஜினீ வானின்புத்திரன் தோல்வியடையாதஉஷங்கு; உஷங்குவின்புத்திரர் கள் சூரனும் சித்ரரதனும்; சூரன்என்பவன் அவர்களில் இளையவன்; பராக்கிரமத்தில்பிரஸித்திபெற்றவர்களும் சரித்திரங்களாலும் குணங் களாலும் விளங்குகிறவர்களும் சாஸ்திரப்படி யாகம்செய்பவர்களும் மிகப்பரிசுத்தர்களுமான அவ்வாசர்களுடைய பிராம்மணர்களால் கொண்டாடப்பட்ட வம்சத்தில்க்ஷத்திரியஸ்ரேஷ்டனும் சிறந்தபராக் கிரமமும் பெரும்புகழுமுள்ளவனும் கௌரவத்தைக்கொடுப்பவனுமா கியஅந்தச்சூரன், தன்வம்சத்தைப் பெருகச்செய்பவனும் வஸுதேவ

னென்று கியாதிபெற்றவனுமாகிய ஆனகதுந்துபிஎன்னும் புத்திரனை உண்டாக்கப்போகிறான். அந்த வஸுதேவனுக்குச் சதுர்ப்புஜராகிய வாஸுதேவர் புத்திரராகப் பிறக்கப்போகிறார்.கொடையாளியும்பிராம் மணரைப்பூஜிப்பவரும் பிராம்மணர்களால் விரும்பப்படுகிறவரும் பரப்பிரம்மமுமாகிய அந்தக்கிருஷ்ணன் மலைகளினிடையிலிருக்கும். ஜராஸந்தனென்னும்அரசனை ஜயித்து அவனால்சிறையில்வைக்கப் பட்டஅரசர்களை விடுவிப்பார். அந்தவீரர் எல்லாஅரசர்களாலும் ரத்தி னங்களினால் நிரப்பப்படுவார்.தமதுபராக்கிரமத்தினால் யாராலும்வெல் லப்படாமல் பூமியில்இருப்பார். மிகுந்தசக்தியுள்ளவரும் எல்லா அரச ருக்கும் அரசரும் நீதிதெரிந்தவருமாகிய அந்தப்பிரபு சூரஸேனதேசத் தில்பிறந்து துவாரகையில் வஸித்துக்கொண்டு பூமிதேவியைஜயித்து நீண்டகாலம் பரிபாலனம்செய்வார். நீங்கள் நித்யரான அவரையடை ந்து சொல்மாலைகளாலும் சிறந்தபூசனைகளாலும் பிரம்மாவைப்போல அவரைச் சாஸ்திரப்பிரகாரம் பூஜியுங்கள். என்னையும் உலகத்திற்குத் தந்தையானபிரம்மதேவரையும் காணவிரும்புகிறவன் பராக்கிரமசா லியான கிருஷ்ணபகவானைப் பார்க்கவேண்டும். தபோதனர்களே! அவர்காணப்பட்டால் நானும் தேவஸ்ரேஷ்டரான பிரம்மதேவரும் காணப்பட்டவராவோமென்பதில் எனக்கு ஸந்தேகமில்லை. இதை அறியுங்கள். அந்தத்தாமரைக்கண்ணர் எவன்மேலன்புள்ளவராவரோ அவன்மேல் பிரம்மாமுதலிய தேவர்கள் அனைவரும் அன்புள்ளவரா வார். மானிடலோகத்தில் எவன் கிருஷ்ணனை அடைவனோ அவ னுக்குக் கீர்த்தியும் ஜயமும் ஸ்வர்க்கமுமுண்டாகும். அவர் நேரில் தர்மத்தை உபதேசிப்பவராகவும் அனுஷ்டிப்பவராகவும் இருப்பார். தர்மமுள்ளவர்கள் எப்போதும் முயற்சியோடு அந்தத்தேவசிரேஷ் டரை நமஸ்கரிக்கவேண்டும். அந்தப்பிரபு பூஜிக்கப்பட்டாலே சிறந்த தர்மம்உண்டாகுமன்றோ? சிறந்தசக்தியுள்ளவரும் புருஷஸ்ரேஷ்டரு மான அந்தப்பகவான் ஜனங்களுக்கு நன்மையைச் செய்யக்கருதித் தர்மத்தைவெளியிடுவதற்காகவே கோடிக்கணக்கான ரிஷிகளைப்படை த்தார். அந்தப் பிரபுவினால் படைக்கப்பட்ட ஸநத்குமாரர்முதலிய அந்தரிஷிகள் கந்தமாதனமலையில் தவம்செய்துகொண்டிருக்கின்ற னர். பிராமணோத்தமர்களே! ஆதலால், சிறந்த வாக்குள்ளவரும் தர்மந்தெரிந்தவருமான அவரை நமஸ்கரித்தல்வேண்டும். ஹரி என் றும் நாராயணர் என்றும் சொல்லப்பட்டபகவான் மேலுலகத்தில் சிற ந்தவரன்றோ? பிராம்மணோத்தமர்களே! அந்தப்பகவான் தம்மை நமஸ்கரித்தவரைத் தாம்நமஸ்கரிப்பார்; கௌரவித்தவரைக் கௌரவிப்

பர்; கொண்டாடினவரைக் கொண்டாடுவர்; பூஜித்தவரைப் பூஜிப்பர்; தம்மைக்காண்பவரைத் தினந்தோறும்காண்பர்; அடுத்தவரை அடுப்பர்; பணிவிடைசெய்பவருக்குப் பணிவிடைசெய்வர். குற்றமற்றவரும் முதல்தேவரும் சிறந்தவருமான அந்தவிஷ்ணுவுக்குப் பெரியோர்களால் எப்போதும் அநுஷ்டிக்கப்படுவதுதான் முக்கியமானவ்ரதம். நித்தியரான அவர் உலகத்தில் எப்போதும் தேவர்களாலும் பூஜிக்கப்படுகிறார். அவரை வழிபடுவோர் தக்கபடி அபயம்பெறுகிறார். பிராம்மணர்கள் எப்போதும் மனோவாக்குக்காயங்களினால் அவரையே நமஸ்கரித்தல்வேண்டும்; முயற்சியோடு அருகிற்சென்று தேவகீபுத்திரரைக் காணவேண்டும். ரிஷிஸ்ரேஷ்டர்களே! இந்த வழியை உங்களுக்கு நான் சொன்னேன். அந்தக்கிருஷ்ணபகவானைக்கண்டால் தேவஸ்ரேஷ்டர்களெல்லாரையும் கண்டதாகும். மஹாவராகரூபியும் எல்லாலோகங்களுக்குங்கர்த்தாவும் எல்லாவற்றிற்கும் நாதருமான அந்தப்பகவானை நானும் நாள்தோறும் நமஸ்கரிக்கிறேன். அவரைக்கண்டால் [1]மூவுலகங்களையும்கண்டதாகுமென்பதில் ஸந்தேகமில்லை. தேவர்களாகிய நாங்களனைவரும் அவர்தேகத்தில் வஸிக்கிறோம். பூமியைத்தாங்கும் ஆதிசேஷர் வெண்மலைச்சிகரம்போன்ற ஒளியுள்ளவரும் ஹலாயுதரென்றும் பலராமரென்றும் கியாதிபெற்றவருமாகிய அவரது மூத்தஸஹோதரராகப் பிறக்கப்போகிறார். அந்தப் பலராமருடையதேரில் மூன்று தலைகளோடுகூடிய சிறந்தபொற்பனைமரம் கொடிமரமாயிருக்கும். சிறந்த கைகளையுடையவரும் எல்லா உலகங்களுக்கும் ஈசுவரருமாகிய அந்தப்பலராமருடையசிரம் பெரிய உடல்களுள்ள மஹாத்மாக்களான நாகர்களால் சூழப்பட்டிருக்கும். ஆயுதங்களும் அஸ்த்ரங்களும் நினைத்தமாத்திரத்தில் அவரிடம்வந்து சேரும். அழிவில்லாதபகவானாகிய அந்தஹரியே அநந்தரென்றும் சொல்லப்படுகிறார். அவர் தேவர்களால், 'பிரபுவே! உமதுரூபத்தைக் காண்பியும்' என்றுவேண்டப்பட்டார். கசியபர்புத்திரரும் பலசாலியுமாகியகருடர் பரமாத்மாவான அந்தப்பகவானுடையமகிமையினால் அவருடையஎல்லையைக் காணமுடியாமற்போனார். அந்தஆதிசேஷர் மிகுந்தஸந்தோஷத்துடன் ஸஞ்சரிப்பார். அவர் தம்முடலினால் பூமியைத்தழுவிக்கொண்டு பூமிக்குள் வஸிக்கிறார். அவரே பகவானனவிஷ்ணு. அவரே அநந்தர். அவரே பூமியைத்தாங்குகிறவர். அந்தராமரே கிருஷ்ணன். கிருஷ்ணனே ராமர். ஆச்சரியபராக்கிரமமுள்ளவர்களும் திவ்யரூபிகளும் சக்கரத்தையும்கலப்பையையும்

1 மும்மூர்த்திகளையும் என்றும் கொள்ளலாம்.

ஏந்துகிறவர்களுமாகிய அவ்விரண்டு புருஷசிரேஷ்டர்களேயும் கண்டு கொண்டாடவேண்டும். தபோதனர்களே! நீங்கள் யாதவசிரேஷ்டரானகண்ணனே முயற்சியோடு பூஜிக்கவேண்டும். நான்சொன்ன இந்த விஷயம் உங்களுக்குச் சிறந்தஅனுக்கிரகம்' என்றார்.

---

## இருநூற்றைம்பத்திரண்டாவது அத்தியாயம்.

### தான தர்ம பர்வம். (தொடர்ச்சி.)



(கிருஷ்ணன்மகிமையும், அர்ஜுனனும் கிருஷ்ணனும் நரநாராயணரென்பதும்.)

பிறகு, ஆகாயத்தில் மின்னலோடுகூடியமேகங்களின் பெருமுழக்கமுண்டாயிற்று. ஆகாயம் அடர்ந்தமேகங்களினல் மறைக்கப்பட்டுக் கறுத்திருந்தது. மழைக்காலத்தில்போலவே மேகம் தெளிவானஜலத்தை வர்ஷித்தது. பயங்கரமான இருளும் உண்டாயிற்று. திசைகள் பிரகாசிக்கவில்லே. அப்போது அழகியதும் புண்ணியமும் நித்தியமுமான அந்த இமயமலேயில் ரிஷிகள் சிவனேயும் பூதகணங்களேயும் காணவில்லே. அடுத்தநிமிஷத்தில் ஆகாயத்தில் மேகங்கள் இல்லாமற்போயின. பிறகு, சிலபிராம்மணர்கள் வந்தபடியே திரும்பித் தீர்த்தயாத்திரைக்குச் சென்றனர். சிந்தைக்கெட்டாத அந்தஆச்சரியத்தைக்கண்டு அந்தரிஷிகள்ஆச்சரியமடைந்தனர். உமதுகதையைப் பற்றிச் சங்கரருக்கும் உமைக்கும்ஸம்வாதம்நடந்தது. புருஷஸ்ரேஷ்டரே! மலேயின்மேல் மஹாத்மாவானஈசுவரரால்எவரைப்பற்றி நாங்கள் உபதேசிக்கப்பெற்றோமோ அப்படிப்பட்டநீர் பரப்ரம்மமாயிருப்பவர்; நித்தியர்; கிருஷ்ணா! இப்போது உமதுமகிமையினல் உண்டாக்கப்பட்ட இந்த இரண்டாவது புதுமையையும்கண்டு ஆச்சர்யமடைந்தோம். முன்ஞாபகமும் எங்களுக்குவந்தது. பிரபுவே! சிறந்த கைகளேயுடையவரே! ஜனார்த்தனரே! ஜடாதாரியானஈசுவரரால்தேவருக்கும்தேவரானஉமதுமகிமைஇவ்வாறுசொல்லப்பட்டது' என்றார். ரிஷிகளால் இவ்வாறுசொல்லப்பட்ட தேவகிபுத்திரரான வாஸுதேவர் அந்தரிஷிகளெல்லாரையும் பூஜித்தார். பிறகு, அந்தரிஷிகள் மகிழ்ந்து திரும்பவும் அவரைப்பார்த்து, 'மதுஸூதனரே! அடிக்கடி எங்களுக்குக் காட்சிகொடும். பிரபுவே! உமதுதர்சனத்திலுள்ள ஸுகம் எங்களுக்கு ஸ்வர்க்கத்திலுமில்லே. சிறந்தகைகளேயுடையவரே! பகவானனஈசுவரர்சொன்னது உண்மைதான். பகைவர்

களை அழிப்பவரே! இந்தரகஸ்யமெல்லாவற்றையும் உமக்குச்சொன்னோம். எல்லாவிஷயங்களின்உண்மைகளையும் அறிந்திருப்பவர் நீரன்றோ? உம்மைநாங்கள்கேட்டதற்கு எங்களைநீர்கேட்பதனால்உமது விருப்பத்திற்காக நாங்கள் இந்தரகஸ்யத்தைச் சொன்னோம். பிரபுவே! ஜனனகாரணமும் அதற்கும்காரணமும் உமக்குத்தெரியாத தொன்றும் மூவுலகங்களிலுமில்லை. எங்களுக்கு அதிகசஞ்சலத்தினால் ரகஸ்யத்தைக் காப்பாற்றத்திறமைஇல்லை. பிரபுவே! அதனால், நீரிருக்கையில் அற்பத்தனமாகப் பிதற்றுகிறோம். இவ்வுலகத்தில் நீர்அறியாதஆச்சர்யம் ஒன்றுமில்லை. தேவரே! தேவலோகத்திலும் பூலோகத்திலுமுள்ளவையனைத்தும் உமக்குத்தெரிந்தவையே. கிருஷ்ண! யாம்செல்வோம். அபிவிருத்தியையும்க்ஷேமத்தையும்அடையக்கடவீர். ஐயா! உமக்குச்சரியாகவாவது மேற்பட்டாவது சிறந்த பிரபாவமுள்ளவனும் ஸந்தோஷத்தையும் புகழையும் உண்டுபண்ணுகிறவனும் பிரபுவுமானபுத்திரன் உண்டாவன்' என்றனர். அம்மகரிஷிகள் அப்போது தேவசிரேஷ்டரும் புருஷோத்தமருமான வாஸுதேவரை நமஸ்கரித்து ப்ரதக்ஷிணம்செய்து சென்றனர். லக்ஷ்மியும் சிறந்தஒளியுமுள்ளவரான அப்படிப்பட்டஇந்தநாராயணர் அந்தவ்ரதத்தைச் சரியாகச்செய்து திரும்பவும் துவாரகைக்குவந்தார். பிரபுவானதர்மராஜனே! பத்தாவதுமாஸம் நிரம்பினபின் அவருக்கு ருக்மிணியினிடம்மிக்கஆச்சரியமானசூரனும் வம்சத்தைவிருத்திபண்ணுகிறவனும் மனத்திற்கினியவனுமானபுத்திரன் பிறந்தான். ராஜனே! அவன் எல்லாப்பிராணிகளின்உள்ளங்களிலுமிருக்கும்மன்மதன். எப்போதும் தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் மனத்தில்ஸஞ்சரித்துக் கொண்டிருப்பவன். புருஷோத்தமரும் முகில்வண்ணரும் சதுர்ப்புஜருமான அந்தக்கிருஷ்ணபகவான் அன்பினால் பாண்டவர்களான உங்களைச்சார்ந்தார். நீங்களும் அவரையடுத்திருக்கிறீர்கள். திரிவிக்ரமரானவிஷ்ணுவாகிய இந்தக்கிருஷ்ணபகவான்எங்கிருக்கிறாரோ அங்கே கீர்த்தியும் லக்ஷ்மியும் மகிழ்ச்சியும் முக்திக்குஉபாயமுமிருக்கின்றன. இந்திரன்முகலான முப்பத்துமூன்றுதேவர்களும் இவர்தாம். அதில் ஸந்தேகமில்லை. இந்தமதுஸூதனர் ஆதிதேவர்; பெரியதேவதை; எல்லாப்பிராணிகளுக்கும் ஆதாரம்; ஆதியும் அந்தமுமில்லாதவர்; அறிவுக்கெட்டாதவர்; மஹாத்மா. இந்தப்பெரிய மஹிமையுள்ளவர் தேவர்களின்காரியத்தைஸாதிப்பதற்காக அவதரித்திருக்கிறார். இந்தமாதவர் சிறிதும்ஸாதிக்கமுடியாத ஸூக்ஷ்மகாரியங்களையும் சொல்லவும் செய்யவும்சக்தர். குந்திபுத்ரனே! உனக்கு இந்த

ஜயமனைத்தும் ஒப்பற்றபுகழும் இந்தப்புவனிமுழுமையும் நாராயணரையடுத்ததனுலேதான். நாராயணரை ஆதரவாகப்பெற்ற உனக்குச் சிந்தைக்கெட்டாதஇவரே காப்பவராயிருக்கிருர். அதனுல், நீ அத்வர்யுவாயிருந்து பிரளயகாலத்துஅக்கிக்கொப்பான கிருஷ்ணனென்னும் பெரியஹோமபாத்திரத்திருல் யுத்தமென்னும் அக்கியில் அரசர்களை ஹோமம்செய்தாய். கோபத்திருல் கிருஷ்ணனோடும் அர்ஜுனனோடும் விரோதம்செய்த அறிவில்லாத துர்யோதனனும் அவன்புத்திரர்களும் ஸகோதரர்களும் பந்துக்களும் இரக்கப்படத்தக்கவர்கள். பெருந்தேகங்களும் மிகுந்தவன்மையுமுள்ள திதியின்புத்திரர்களும் தனுவின்புத்திரர்களுமாகிய அஸுரஸ்ரேஷ்டர்கள் காட்டுத்தீயில் விட்டிற்பூச்சிகள் அழிவதுபோலச் சக்கராயுதமென்னும் அக்கியில் மாய்ந்துபோயினர். புருஷஸ்ரேஷ்டனே ! தைரியம் பராக்கிரமம்தேகவன்மைமுதலியவைகுறைந்தமனிதர்கள் போரில்இவரை எதிர்க்கமுடியாதன்ருே ? ராஜனே ! ஜயிப்பவனும் யோகியும் பிரளயகாலாக்கிபோன்றவனுமாகிய ஸவ்யஸாசியானவன் போர்த்தலையில் நின்று துர்யோதனன்சேனையனைத்தையும் பராக்கிரமத்திருல்ஒழித்தான். பூர்வகாலத்தில் இமயமலையின்மேல் விருஷபத்வஜர் ரிஷிகளுக்குச்சொன்னதை நான் சொல்லுகிறேன்; கேள். பிரபுவே! புஷ்டியும் ஒளியும் புகழும் பராக்கிரமமும் மகிமையும் வணக்கமும் அவதாரமும் அவருக்கிருப்பதைக்காட்டிலும் மூன்றுமடங்குஅதிகம்கிருஷ்ணனிடத்தில இருக்கின்றன. எது எப்படி நடக்கவேண்டுமோ அதை மாருகச்செய்வதற்கு யாரால்முடியும் ? இன்னமுங்கேள். பகவானுனவாஸுதேவர் எங்கிருக்கிருரோ அங்கே எல்லாவற்றிற்கும் மேலானசிறப்புஉண்டாகும். இந்தவிஷயத்தில் நாங்கள் சிறிய புத்தியுள்ளவர்கள் ; பிறருக்கு வசப்பட்டிருப்பவர்கள் ; மிகவும் அசக்தர்கள் ; நீங்காதமரணமார்க்கத்தைப் புத்திபூர்வமாக அடைந்திருக்கிருேம். நீ உண்மையையே முக்கியமாகக்கொண்டவன். முதலில் பிரதிஜ்ஞைசெய்து அந்தப் பிரதிஜ்ஞையைக்காப்பதிலேயே ஊக்கமுள்ளவனுயிருப்பதனுல் ராஜ்யத்தையும் விரும்பாமலிருக்கிருய். ராஜனே! பகைவரைஜயிப்பவனே ! இவ்வுலகத்தில் நீ உன்மரணத்தைச் சிறந்ததாக நினைக்கிருய். வாக்குத்தத்தம்செய்ததை விடமாட்டாய். இந்தஜனங்கள்அனைவரும் காலத்திருல் போர்த்தலையில் கொல்லப்பட்டனர். நாமும் காலத்திருல் கொல்லப்படுகிருேம். காலமே முதன்மையான ஈசுவரன். காலந்தெரிந்தவன் காலத்திருல்தீண்டப்பட்டதைப்பற்றித் துயரப்படத்தகாது. காலபுருஷன் ரத்தம்போலச்

சிவந்தகண்களும் கருநிறமும் தண்டாயுதமுமுள்ளவன்: அழியாத வன். குந்திபுத்திரனே! ஆதலால், தாயாதிகளைப்பற்றித் துயரப்பட வேண்டாம். குருவம்சத்தவரைமகிழ்விப்பவனே! நீ எப்போதும் துயரப்படாமலிரு. இந்தக்ருஷ்ணனுடையமகிமையை நான்சொல் லக்கேட்டாயன்றோ? யோக்கியர்களுக்கு அதுதான் முழுதும்போது மானஉதாரணம். மஹாராஜனே! வியாஸருடையசொல்லையும் சிறந்த ஞானியானநாரதருடையசொல்லையும்கேட்டு நீயே கிருஷ்ணனுடைய சிறந்தததியை அறிந்துகொள். பாரதனே! ரிஷிக்கூட்டங்களின் மிகச்சிறந்தமகிமையையும் உமாமஹேஸ்வர ஸம்வாதத்தையும் உனக் குச் சொன்னேன். இந்தமஹாபுருஷருடைய அவதாரத்தை நினைப்பவ னும் கேட்பவனும்சொல்லுபவனுமானவன் சிறந்தநன்மையைப்பெறு வான். அவன் நினைத்தவிருப்பங்களெல்லாம் அவனுக்குக்கூடிவரும். அம்மனிதன் இறந்தும் ஸ்வர்க்கமடைவான். அதில் ஸந்தேகமில்லை. நன்மையைக்கருதுகிறவன் ஜனார்த்தனரைச் சரணாகதிசெய்வதுதான் உசிதம். அரசனே! இந்தஜனார்த்தனர்தாம் அழிவில்லாதவரென்று பிராம்மணர்களால் துதிக்கப்படுகிறார். கௌரவராஜனே! மஹேசு வரர்முகத்திலிருந்துவந்தவையும் நம்மாலுரைக்கப்பட்டவையுமாகிய தர்மச்சிறப்புக்களை நீ இரவும்பகலும் மனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். அப்படியேநடந்துகொண்டு ஸரியாகத் தண்டத்தைச் செலுத்திப் பிரஜைகளை நன்றாகக்காப்பதனால் உனக்கு ஸ்வர்க்க லோகமுண்டாகும். ராஜனே! எப்போதும் தர்மத்தினாலேயே ப்ரஜை களைக் காப்பாற்றவேண்டும். தண்டம் ஸரியாக வியாபித்திருப்பது தான் ஸரியானதர்மமென்று சொல்லப்படுகிறது. வேந்தனே! ரிஷி களின்முன்னிலையில் சங்கரருக்கும் உமைக்கும்நடந்த தர்மஸம்பாஷ ணையை உனக்குச்சொன்னேன். தனதுமேன்மைமையைக்கருதுகிற வன் இதைக்கேட்டபின்னும் கேட்பதற்குமுன்னும் பரிசுத்தமான மனத்தோடு சங்கரரைப் பூஜிக்கவேண்டும். இதுதான் அந்தக்குற்ற மற்ற மஹாத்மாவானநாரதருடைய தேவபூஜையைப்பற்றிய உபதே சம். பாண்டுபுத்திரனே! நீ அதை அப்படியேசெய். பிரபுவே! குந்திபுத்திரனே! இமையமலையில் கிருஷ்ணன். சிவன் இவர்களின் இயற்கையாலமைந்த இந்தச்சரித்திரம் மிக்க ஆச்சரியமும் புண்ணிய முமாயிருப்பது. நித்தியராகிய இந்தவாஸுதேவர் அர்ஜுனனுடன் நரநாராயணராகப் பதினாயிரவருஷகாலம் பதரிகாசிரமத்தில் பெருந் தவம்செய்தார். ராஜனே! [1]ஆறுகுணங்கள்நிரம்பினவர்களும் தாம

[1] ஞானம், சக்தி, பலம், ஐசுவரியம், வீர்யம், தேஜஸ்.

ரைக்கண்ணர்களுமாகிய இந்தக்ருஷ்ணார்ஜுனர்களை நாரதராலும் வ்யாஸராலும் நான் தெரிந்துகொண்டேன். சிறந்தகைகளையுடைய க்ருஷ்ணன் சிறுபிராயத்திலேயே தம்குலத்தோரைக்காப்பாற்றுவ தென்னும்பிரயோஜனத்திற்காகப் பெரிதான கம்ஸவதத்தைச்செய் தார். குந்திபுத்திரனே! யுதிஷ்டிரனே! அழியாதவரும் புராண புருஷருமான இந்தக்கிருஷ்ணனுடையசெய்கைகளை நான் அளவிட முடியாது. அப்பா! புருஷசிரேஷ்டரானஇந்தஜனார்த்தனர் உனக்கு அன்பராயிருப்பதனால் எல்லாவற்றிற்கும்மேலானபெருநன்மைஉனக் குண்டாவது திண்ணம். மதிகெட்டதுர்யோதனன்இறந்தும் உலகத் தில் அவனைப்பற்றித் துயரப்படுகிறேன். யானைகுதிரைகளோடு பூமி யனைத்தும் அவனாலழிந்தது. துர்யோதனன் கர்ணன் சகுனி துச் சாஸனன்இந்தநான்குபேருடையகுற்றத்தினால் கௌரவர்கள் மடிந் தார்'' என்றார். புருஷசிரேஷ்டரானபீஷ்மர் அம்மஹாத்மாக்களின்நடு வில் இவ்வாறுசொல்லும்போது தர்மராஜர் பேசாமலிருந்தார். திருத ராஷ்டிரன்முதலியஅரசர்கள் அதைக்கேட்டு ஆச்சரியமடைந்தனர். எல்லாரும் கிருஷ்ணனை மனத்தினால் பூஜித்துக் கைகூப்பினர். அப் போது, நாரதர்முதலான ரிஷிகளனைவரும் பீஷ்மர்சொல்லைஅங்கீகரித் துக் கொண்டாடி மகிழ்ந்தனர். தர்மராஜர் தம்ஸகோதரர்கள் அனைவ ரோடும் மிக்கஆச்சரியமும் புண்ணியமுமானஇந்தப்பீஷ்மர்உபதேசம் எல்லாவற்றையும் கேட்டார். சிறந்த புத்தியுள்ள தர்மராஜர், அதிக ஸமர்த்தரான பீஷ்மர் களைப்பாறினபிறகு திரும்பவும் வினவத் தொடங்கினார்.

---

## இருநூற்றைம்பத்துமூன்றுவது அத்தியாயம்.

### தா ன த ர் ம ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(ஒருபிராம்மணப்பெண்ணுக்கும் யமனுக்கும் நடந்த ஸம்வாதம்.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! பாபகர்மங்கள் எல்லாவற்றையும் சிறந்தஞானத்தையும்பற்றி மிகுந்தகிருபையோடு சொன்னீர். அந்த ஞானத்தைத் திரும்பவும் எனக்குச் சொல்லும்'' என்றுகேட்க, பீஷ் மர் சொல்லலானார்.

"நாராயணரை இடைவிடாமல் தியானம்செய்வதும் அவருக்கு அர்ச்சனைசெய்வதும்ஆராதனம் செய்வதும் ஸ்தோத்திரம்செய்வதும் அவர் கதைகளைக்கேட்பதும் அவற்றையறிந்தவர்களைக் காப்பாற்றுவ

தும்அவர்களுக்குப்பணிசெய்வதில்விருப்பமும் அவர்களின் உபதேசத்தைநடந்துவதும் பரகதியைஅடைவதற்குச் சிறந்த உபாயங்களென்று சொல்லப்படுகின்றன. ஸாமானியமான மனிதனும் அவரைத்தியானம்செய்வதனாலும் ஜபம்செய்வதனாலும் விரைவில்முக்திபெறுவான். ஜபமானது [1]வைதிகம் [2]தாந்த்ரிகம் [3]பௌராணிகம் [4]ஸ்மார்த்தம் என நான்குவகைகளாக வித்வான்களால் சொல்லப்பட்டிருக்கிறது.வித்வான்களுக்குப் பணிவிடைசெய்வதனாலும் வித்வான்களைக் காப்பாற்றுவதனாலும் ஞானமுண்டாகிறது. ஞானிகளுக்குஅஸாத்யம் ஒன்றுமில்லை. ஆதலால், பிராம்மணர்களை நீ ரக்ஷிக்கவேண்டும். முற்காலத்தில் வனத்தில் பந்துக்களால்விடுபட்டுத் தனித்திருந்தஒருபதிவிரதை ஒரு வித்வானை ரக்ஷித்ததின்பலனைப்பற்றி யமனால் சிலாகிக்கப்பட்டாள். 'முன் வைசியஜாதிப்பெண்ணாயிருந்த நீ ஒரு பிராம்மணனுடைய மரணத்திற்குக்காரணமாயிருந்து அவன்மனைவிக்கும் தந்தைக்கும் விசனத்தைக்கொடுத்தாய். இப்போது பிராம்மணப்பெண்ணாகப்பிறந்தது உனக்குப்பெரியலாபம்' என்றுசொல்லி யமனால் புகழப்பட்டஅவள், 'இவ்வளவு பாவமுள்ள நான் பிராம்மணகுலத்தில் நல்ல பிறப்புப்பிறந்தது எதனால்? இனி நான் அடையும்புண்ணியம் என்ன? அதையும் எனக்குச்சொல்' என்றுகேட்டாள். யமன், 'வேறு ஒரு ஜன்மத்தில் அடிகளினால்பீடிக்கப்பட்ட ஒருவித்வானைத் திருடனென்னும்ஸந்தேகத்தைப்போக்கி விடுவித்ததனால் நல்லஜன்மமடைந்தாய்' என்று சொன்னான். அவள், இவ்வாறுசொல்லக்கேட்டு, அஷ்டாக்ஷரத்தின் தியானம் ஜபமுதலிய நன்மார்க்கங்களை உபதேசித்து யமனால்அனுக்கிரகிக்கப்பட்டவளாகிப் புண்ணியலோகங்களில் வாஸமடைந்தாள். ராஜனே! ஆதலால், எப்போதும் வித்வான்களைரக்ஷிப்பதிலேயே ஊக்கத்தோடிரு. அவர்களைரக்ஷிப்பதனால் உடனே எவ்லாப்பாவங்களினின்றும் விடுபடலாம்" என்றார்.

1 வேதத்திற் சொல்லப்பட்டது.

2 வைகாநஸபாஞ்சராத்ர ஆகமங்களில் சொல்லப்பட்டது.

3 புராணங்களில் சொல்லப்பட்டது.

4 தர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டது.

## இருநூற்றைம்பத்துநான்காவது அத்தியாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



### (ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம்.)

[ஸ்ரீ பராசரபட்டர் அருளிச்செய்த, 'பகவத்குண தர்ப்பணம்' என்னும் ஸஹஸ்ரநாமபாஷ்யத்தை அநுஸரித்து எழுதிய குறிப்புரை. கருத்து வேறுபடுமிடங்களில், ஸ்ரீமத், சங்கரபகவத்பாதர் பாஷ்யத்திலுள்ள கருத்தும் எழுதப்படும்.

ப. பா=பட்டர் பாஷ்யம்.

ச. பா=சங்கர பாஷ்யம்.

உலகத்தில் அறிவுள்ளவரனைவரும் பிரமாணங்களினால் விஷயங்களைக்கண்டறிந்தபிறகு, புஷ்பம் சந்தனம் பொன் மணிமுதலிய அனுகூலமானவிஷயங்களை எடுத்துக்கொள்வதும் கத்திமுள்முதலிய பிரதிகூலவிஷயங்களைத் தள்ளுவதும் அனுகூலம்பிரதிகூலமிரண்டுமில்லாத கட்டை கல் மண்முதலியவற்றை உதாஸீனமாகவிடுவதும் அனுபவத்தில் காணப்படுகின்றன. அப்படி அறியப்படும் விஷயங்களில் பொருள்இன்பமாகிய இரண்டு புருஷார்த்தங்களும் பிரத்யக்ஷமுதலிய பிரமாணங்களினால் அறியப்படுகின்றவையாயினும் மிக்க அல்பமும் பின்புதீங்கைவிளைவிப்பனவும் அருவருக்கத்தக்கனவும் விரைவில்அழிந்துபோவனவும் துன்பங்கலந்தனவும் கஷ்டஸாத்யங்களுமாயிருப்பதுமுதலிய எண்ணிறந்த குற்றமுள்ளனவாயிருப்பதனால் விடத்தக்கவை. சாஸ்த்ரத்தினால்மட்டும் அறியத்தக்கவை தர்மமும் பரமபுருஷார்த்தமான மோக்ஷமுமே. முற்கூறிய பொருளின்பமென்னும் இரண்டு புருஷார்த்தங்களுக்கும் மாறாகவும் அளவற்றமங்களங்கள்சேர்ந்தவையாகவுமிருத்தலின் சாஸ்த்ரமும் மேற்சொன்ன சாஸ்த்ரார்த்தங்களாகிய தர்மமும் பரதத்வமும் கிரகிக்கத்தக்கவற்றுள் மிகச்சிறந்தவை. இதைப்பற்றி இதிஹாஸமறிந்தவர்களும் புராணமறிந்தவர்களும், 'ஸத்யம்; ஸத்யம்; திரும்பவும் ஸத்யம். கைதூக்கி உத்கோஷிக்கிறேன். வேதசாஸ்த்ரத்துக்குமேலான சாஸ்த்ரமுமில்லை; கேசவருக்குமேலான தெய்வமுமில்லை' என்று ஒற்றுமையாகச் சொல்லுகின்றனர். பதினான்குவித்யாஸ்தானங்களாகப் பகுக்கப்பட்ட சாஸ்திரங்களில் தலைமையாயுள்ள வேதத்தைப்பற்றி, 'இதிஹாஸத்தினாலும் புராணத்தினாலும் வேதத்தைத் தெளிந்துகொள்ளவேண்டும்; வேதமானது குறைந்தகல்விகேள்வியுள்ளவனைக்கண்டு, 'இவன்

என்னை மோசஞ்செய்துவிடுவான்' என்று பயப்படுகிறது' என்று சொல்லியிருப்பதனால் இதிஹாஸபுராணங்களின் உதவியைக்கொண்டு வேதார்த்தத்தைத் தெளிந்துகொள்ளவேண்டும். அவ்விரண்டனுள் மேற்சொன்னவசனத்தில் இதிஹாஸத்தைமுன்னும் புராணத்தைப் பின்னும்சொல்லியிருத்தலால் புராணங்களைவிட இதிஹாஸங்கள் சிறந்தபிரமாணங்களென்பது சாஸ்திரங்களின் கருத்து.

மஹாபாரதமானது, ஸ்ரீமத்ராமாயணம்போலவே தத்வ ஜ்ஞானத்திற்கு இன்றியமையாதஆகாரம். இது, பெரியோர்களால் மிக்கவிசேஷப்பிரமாணமாக அங்கீகரிக்கப்பட்டிருப்பதனால் அர்த்தங் களில்மாறுபாடின்றி அழகானசொல்லாலமைந்திருப்பதென்று நிச் சயிக்கப்பட்டிருக்கிறது. இது இதிஹாஸமாயிருப்பதனாலும் பிரபல மான பிரமாணமாகிறது. 'வ்யாஸபகவான் தமது புத்தியென்னும் மத்தை வேதமென்னும் கடலில்செலுத்திக் கடைந்து உலகங்களின் நன்மைக்காக மஹாபாரதமென்னும் சந்திரனை எடுத்தார்' என்று வாயுபுராணத்திலும் சைவபுராணத்திலும் கூறப்பட்டிருப்பதனாலும், 'மனிதன் கடினமானசாஸ்திரத்தைக்கண்டு, உக்ரமானமருந்தைக்கண் டதுபோலப் பயப்படுகிறான். ஆதலால், எல்லாச்சாஸ்த்ரங்களின்ஸார முமாகிய இம்மஹாபாரதம் காவ்யரூபமாகச் செய்யப்பட்டது' என்று பவிஷ்யத்புராணத்திலும், 'மஹாபாரதமென்னும்சந்திரனால் உலகத் திற்கு வெளிச்சம்கொடுத்தவராகிய த்வைபாயனரென்னும் புத்ராக ஸாக்ஷாத்விஷ்ணுவே பராசரருக்குப் பிறந்தார்' என்று மத்ஸ்யபுரா ணத்திலும், 'மைத்ரேய! க்ருஷ்ணத்வைபாயனரென்னப்படும் வ்யா ஸரைப் பிரபுவான்நாராயணரென்றேஅறி. பூமியில்வேறுஎவன்மஹா பாரதம் செய்பவனாவான்?' என்று விஷ்ணுபுராணத்திலும், 'கெட்ட தர்மங்களாகிய மரங்களைக்களைவதும் வேதமென்னும்மலையினின்றும் இறங்கியதுமாகிய வ்யாஸர்வாக்கென்னும்ஜலப்ரவாஹத்தினால் பூமி யானது பாவமாகிய தூசியில்லாததாகச் செய்யப்பட்டது' என்று மார்க்கண்டேயபுராணத்திலும் சொல்லப்பட்டிருப்பதனாலும், 'நாலு வேதங்களையும் வேதாங்கங்களையும் உபநிஷத்துக்களையும் அறிந்தும் இம்மஹாபாரதத்தை அறியாதபிராமணன் அறிவுத்தேற்றமுள்ளவ னாகான்' என்று மஹாபாரதத்திலும் சொல்லப்படுதலாலும் மற்று முள்ள ஆயிரத்துக்குமேற்பட்டபிரமாணங்களினால்சிலாகிக்கப்படுவத னாலும் எல்லா அங்கங்களோடுங்கூடிய சுருதிஸ்மிருதிஇதிஹாஸபுரா ணங்கள்முதலிய எல்லாப்ரமாணங்களுக்கும் ஒத்திருப்பதனாலும், 'இதிலுள்ளதுதான் மற்றெல்லாவற்றிலுமுள்ளது. இதில் இல்லா

தது எதிலுமில்லை' என்றுசொல்லியிருப்பதனால் லௌகிகங்களும் வைதிகங்களுமான எல்லாவிஷயங்களையும் ஐயந்திரிபின்றித்தெரிவிக்கப்பிரவ்ருத்தித்திருப்பதனாலும் ஒருவிஷயத்திலும் பக்ஷபாதமில்லாமையாலும் புராணங்களைக்காட்டிலும் இது சிறந்த் பிரமாணமென்று அநேகஅறிஞர் தீர்மானித்திருக்கின்றனர்.

அதிலும், ஸஹஸ்ரநாமாத்யாயமானது, மஹாபாரதத்தில் ஸாரமாயிருப்பதனாலும் ரிஷிகளினால் ஓதப்பட்டிருப்பதனாலும் வேதாசார்யரால் ஒருங்கு தொகுத்துச் செய்யப்பட்டிருத்தலாலும் பீஷ்மர் தமது சிறந்தமதமாகச் சொல்லியிருப்பதனாலும் ஆன்றோர் எல்லாவற்றிலும் விசேஷமாக எடுத்துக்கொண்டிருப்பதனாலும் கீதைமுதலிய வேதாந்த சாஸ்த்ரங்களோடு பொருளொற்றுமை இருப்பதனாலும் மிக்கஅநுகூலமாக எடுத்துக்கொள்ளவேண்டிய விஷயமென்று நினைக்கப்படுகிறது. இம்மஹாபாரதத்திற்குஉள்ளம்போன்றதாகிய சாந்திபர்வத்தில் தானதர்மங்கள்முதலிய எல்லாச்சாஸ்திரங்களின்பொருளையும் ஸாரமாகஎடுத்து முடிக்குமிடத்தில் இந்தஸஹஸ்ரநாமாத்யாயம் எல்லாவற்றினுடையஸாராம்சங்களின்ஸங்க்ரஹமுமாகவன்றோ நிச்சயிக்கப்பட்டிருப்பது? இப்படி இதுபிரமாணமாயிருப்பதற்குச் சிறந்தகாரணமிருப்பதனாலும் தத்வார்த்தத்தில் இதன் தாத்பர்யத்தைஅறிவதற்கு லக்ஷணங்களாயுள்ளஉபக்ரமஉபஸம்ஹாரமுதலியஆறுவகைத்தாத்பர்யலிங்கங்களும் நிரம்பியிருப்பதனாலும், 'பிரமாணமாஅன்று' என்றும், 'இந்தவிஷயத்திற்காக இதுவந்ததா தோத்திரமுதலிய வேறுவிஷயத்துக்காகவந்ததா' என்றும் சங்கிப்பதற்குச் சிறிதும்இடமில்லை. எல்லாவற்றிலும் சிறந்த விஷயத்தைத்தெரிவிப்பதனால் இம்மையில் எல்லாவிதநன்மைகளுக்கும் மோக்ஷத்துக்கும் இதுவே சிறந்தஉபாயமாக எடுத்துக்கொள்ளத்தக்கது. வேதார்த்தங்களெல்லாவற்றையும் நேராகக்கண்டறிந்த ஸனகர் ஸனத்குமாரர் நாரதர்முதலான மஹரிஷிகளினால் இவ்வாயிரநாமங்களும் சொற்பொருள்களின் தத்வங்களையறிந்து கீர்த்தனம்செய்யப்பட்டவையே. இந்நாமங்கள் வேதவ்யாஸபகவானால் ஸ்தோத்ரரூபமாகத் தொடுத்துக்கூறப்பட்டு ஸம்ப்ரதாயவரிசையில் நமக்குக்கிடைத்திருக்கின்றன.

வேதவ்யாஸபகவான் வேதாசார்யராக அவதரித்தபகவானாதலின், அவரதுஞானம்சக்திமுதலியகல்யாணகுணங்கள், எல்லாவற்றிலும்சிறந்தவை. மயக்கம் பிறரைமயங்கச்செய்வது ஊக்கமின்மை சொற்சோர்வுஆகியகுற்றங்கள் ஒன்றும் அவரிடத்தில்இருக்கக்கூடு

மென்றுநினைப்பதற்கே இடமில்லாமையால், அவர்சொல்வதெல்லாம் பிரமாணமே. கலிகாலத்தில் சக்திகுறைந்தமனிதர்களின்மேல் அநுக்ரகம்வைத்து வேதங்களைவகுத்து வேதங்களின் முக்கியவிஷயங்களாகிய தத்வஜ்ஞானம் அனுஷ்டானம் இவ்விரண்டிலும் ஐயந்திரிபுஅறியாமைகளைப்பரிகரிப்பதற்காகப் பஞ்சமவேதமாகிய மஹாபாரதத்தை அவர் இயற்றினர். மேலும், அவர், க்ஷத்ரியஜாதியிற்பிறந்த விசுவாமித்ரரைத் தம்ஒருசொல்லினால்ப்ராம்மணராகச்செய்த வஸிஷ்டபகவானுடையப்ரபௌத்ரர்; வஸிஷ்டரும் புலஸ்த்யரும் வரமளித்ததனால்பரதேவதையின்நிஜஸ்வரூபத்தைஅறிந்துபுராணஸம்ஹிதைசெய்வதுமுதலிய மகிமைகளையடைந்தவரென்று லிங்கபுராணமுதலியவற்றில் சிறப்பித்துக்கூறப்பட்ட பராசரருடையபுதல்வர்; மற்றவர்களுக்கில்லாத தவம்த்யானங்களின்சிறப்புக்களினால் மற்றெல்லாப்பரமரிஷிஸபைகளாலும் பூஜிக்கப்பெற்றவர். மேற்கூறியஸனகர்முதலான மகரிஷிகளினால் ஓதப்பட்ட பகவந்நாமங்களையே ஸ்தோத்ரரூபமாக இவர் தொகுத்துக்கூறியிருப்பதனாலும் இந்தஸஹஸ்ரநாமாத்யாயம் அநுகூலமாக எடுத்துக்கொள்பவற்றுள் மிகச்சிறந்தது.

பீஷ்மாசார்யரும் மிகநம்பத்தக்கவர். வேதவ்யாஸபகவானே தர்மபுத்ரரைநோக்கி, 'சிறந்தபராக்ரமசாலியான அரசனே! தர்மங்களெல்லாவற்றையும் உனக்குக்கேட்கவிருப்பமிருந்தால் கௌரவர்களுக்குப்பிதாமஹரும் பெரியவருமான பீஷ்மரிடம்செல். ஸர்வஜ்ஞரும் எல்லாவற்றிலும்உண்மைதெரிந்தவருமாகிய அந்தக்கங்காபுத்ரர் ஸூக்ஷ்மவிஷயங்களெல்லாவற்றிலும் உன்மனத்திலுள்ள ஸந்தேகங்களை அறுத்துவிடுவார். அவர் இந்த்ராதிதேவர்களைநேராகக்கண்டவர்' என்றும், 'அவருடையஸபையில் பரிசுத்தர்களானபிரம்மரிஷிகள் எக்காலமும் ஸப்யர்களாயிருந்தனர். அறியவேண்டியவிஷயங்களில் அவருக்குத்தெரியாதது ஒன்றுமில்லை. தர்மந்தெரிந்தவரும் நுட்பமானதத்வார்த்தந்தை உணர்ந்தவருமாகியஅவர், உனக்குத் தர்மங்களைச்சொல்வர்' என்றும் சொல்லியிருக்கிறர். கிருஷ்ணபகவானும், 'பீஷ்மர் சரதல்பத்திலபடுத்து அக்நிஆறுவதுபோலிருக்கிறர். புருஷசிரேஷ்டரான அவர் இப்போது என்னை த்யானம்செய்கிறர். ஆதலால், என்மனம் அவரிடம்சென்றது. சிறந்தசக்தியுள்ளவரும் புத்தியுள்ளவருமான அவர் திவ்யாஸ்த்ரங்களையும் நான்குவேதங்களையும் வேதாந்தங்களையும் தம்மனத்தில்வைத்திருக்கிறர். நான் என் மனத்தினால் அவரைச்சேர்ந்திருக்கிறேன். பரதசிரேஷ்டரே! தர்மானுஷ்டானஞ்செய்பவரிற்சிறந்தவரான பீஷ்மர் முக்காலமும் அறிந்த

வர். அதனல்,என்மனம் அவரிடம்சென்றது. குருவம்சத்தவருக்குத் தலைவராகிய அந்தப்பீஷ்மர் அஸ்தமனமாகிவிட்டால் ஞானங்கள்குறை ந்துபோம். ஆதலால், நான் உம்மைத் தூண்டுகிறேன் ' என்றும், 'ஓ ! பீஷ்மரே ! அறியவேண்டுமென்றுகேட்கும்தர்மராஜருக்கு நீர் என்ன சொல்லப்போகிறீரோ அவையெல்லாம் வேதவாக்யங்கள்போலப் பூமியில்நிலைநிற்கப்போகின்றன' என்றும்,'ஓ! பரதசிரேஷ்டரே! (பீஷ்மரே !) பூதபவிஷ்யத்வர்த்தமானங்களெல்லாம் அறிவில்முதிர்ந்தவராகியஉமக்கு உள்ளங்கையில்வைக்கப்பட்டவைபோலிருக்கின்றன. புருஷர்களிற்சிறந்தவரே ! நானும் நேராகவும் உம்மை அறிந்திருக்கிறேன். நீர்தவத்தினல்சராசரங்களடங்கியிருக்கின்றஉலகங்களையும்படைக்கத் திறமையுள்ளவர் ' என்றும், ' உமக்குக் களைப்புமில்லை ; மூர்ச்சையுமில்லை ' என்றுதொடங்கி, ' பீஷ்மரே ! உமதுமனம் எப்போதும் ஸத்வகுணத்திலேயேநிலைபெற்று ரஜோகுணதமோகுணங்கள் அணுகாது மேகங்களால்விடுபட்டசந்திரன்போலிருக்கும் ' என்றும்சொல்லுகிறர். நாரதபகவானும், ' நான்குவர்ணங்களுக்குமுள்ளபலவகைத் தர்மங்களையும் இவர் முழுதும் அறிந்திருப்பவர். ஆதலால், உள்ளத்தின்கணுள்ளஸம்சயங்களை விரைவில் வினவுங்கள்' என்றுதொடங்கி விரிவாகச்சொல்லிப் பரதத்வத்தையும் பரதத்வஞானத்தையும் தர்மானுஷ்டானத்தையும் வெளியிடும்படிவரமளித்தார்.பீஷ்மர், மாதாபிதாக்களுக்குப் பணிவிடைசெய்து அவர்கள் மனமகிழ்ந்துஅளித்த வரத்தையும்பெற்றிருக்கிறர். அவர் தாமேயும், ' ஓ ! கோவிந்தரே! உமது அனுக்ரகத்தினல் எனக்குத் தாபம்,மயக்கம், மனச்சோர்வு, ஓய்வு, வாட்டம், நோய்கள்எல்லாம் உடனேபோய்விட்டன. அச்சுதரே! பூதபவிஷ்யத்வர்த்தமானங்களையும் அவற்றிற்குமேற்பட்டபரம்பொருளையும் உள்ளங்கையில்வைக்கப்பட்டகனிபோலப் பார்க்கிறேன். அச்சுதரே! வேதங்களில் சொல்லப்பட்டபிரவிருத்திதர்மங்களும் வேதாந்தங்களில்மட்டுமுள்ள விஷயங்களும் நீர்வரமளித்ததனல் முழுதும் என் கண்ணெதிரில் இருக்கின்றன ' என்றும், ' ஜனர்த்தனரே ! உம்மை இடைவிடாது தியானம்செய்ததனல் பூரித்து இளமைப்பருவத்திலிருப்பவன்போலானேன்.உமது அனுக்ரகத்தினல் தர்மங்களைச்சொல்வதற்குச் சக்தியுள்ளவனயிருக்கிறேன்' என்றும் கூறியிருக்கிறர்.

இப்படித் தத்துவஞானததை ஸரியாகப்பெற்றபீஷ்மர், ' இது தான் எல்லாததர்மங்களிலும் மிகச்சிறந்ததர்மமென்று நான் நினைப்பது ' என்றுதொடங்கி இந்தஸஹஸ்ரநாமஸங்கீர்த்தனம் தமதுமிகவும்சிறந்தமதமாகச் சொல்வதனல் இவ்வத்தியாயம் அனுகூலமாக

எடுத்துக்கொள்பவற்றுள் மிக்கஸாரமானது. ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ர நாமம் எல்லாராலும் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. அன்றியும், ஸபாபர்வத்தில், 'பகவான் ஆயிரம் நாமங்களுடையவர்' என்றும், விஷ்ணுதர்மத்தில் கஜேந்திரமோக்ஷப்ரகரணத்தில், 'ஆயிரம்மங்கள கரமான நாமங்களையுடையவரும் ஆதிமத்தவரும் ஜனனமில்லாதவரு மான பிரபுவை' என்றும் ஆயிரம்நாமங்களைப்பற்றிச் சிறப்புக்கூறப் பட்டிருக்கின்றது. இந்தஸஹஸ்ரநாமஸ்தோத்திரத்திலேயும், ஆரம் பத்திலும் முடிவில் பலன்சொல்வதிலும் இதன்குணங்கள் விரிவாக வெளியிடப்படுகின்றன. வைத்யசாஸ்த்ரமுதலியவற்றிலும் ஸஹஸ்ர நாமத்தின்விசேஷம் சொல்லப்படுகிறது. அவற்றுள் வைத்திய சாஸ்த்ரமாகிய சரகஸம்ஹிதையில், 'ஆயிரம்தலைகளையுடையவரும் சராசரங்களுக்குஸ்வாமியும்ஸர்வவ்யாபியுமான விஷ்ணுவை ஸஹஸ்ர நாமம்சொல்லித் துதிப்பதனால் எல்லாஜ்வரங்களையும் போக்கிக் கொள்ளலாம்' என்றுசொல்லப்படுகிறது. அவ்வாறே, நவீனமான ஒருவைத்யநூலும் மேகரோகத்துக்குப் பிராயச்சித்தம் சொல்லுகை யில், 'புருஷஸூக்தத்தை ஜபிக்கவேண்டும்' என்றுசொல்லி, 'அது போலவே பாரதத்திற்சொல்லப்பட்ட பகவானுடைய ஸஹஸ்ரநாமத் தையும் ஜபிக்கவேண்டும்' என்றுகூறுகிறது. க்ஷயரோகத்திற்குச் சிகித்ஸைசொல்வதிலும், 'பகவானுடையஸஹஸ்ரநாமத்தைக் கீர்த் தனம்செய்யவேண்டும்' என்றும் ஒருவகைஜ்வரத்திற்குச் சிகித்ஸை யில், 'ஹோமத்தை முன்போலவேசெய்து பகவானுடையஸஹஸ்ர நாமத்தைத் ஜபிக்கவேண்டும்' என்றும்சொல்லுகிறது. கிரஹசாந்தி சொல்லுமிடத்திலும், 'வாயுஸூக்தமும் விஷ்ணுஸஹஸ்ரநாமமும் சொல்லவேண்டும்' என்றுசொல்லப்பட்டிருக்கிறது. மற்றும்அநேக விடங்களில் இப்படிச்சொல்லியிருப்பதைக் காணலாம். லௌகிகர் களானகவிகளிலும், பட்டபாணகவி ப்ரஸவக்ருஹத்தைவர்ணிக்கும் போது, நாராயணரது ஸஹஸ்ரநாமத்தை இடைவிடாமல் படிக்கிறார் கள்' என்றுசொல்லுகிறார். இப்போதும் உலகத்தில் அவ்விதமாக அநேகம்வியாதிகளுக்கும் பாவங்களுக்கும் பரிகாரமாக ஸஹஸ்ரநாம பாராயணம்செய்வதைக் காண்கிறோம். விஷம், பிசாசம், வியாதி, கிரஹம், தீயகனவு, அபசகுனமுதலான அமங்களங்களுக்குச் சாந்தி செய்வதற்கும் மஹாபாதகமுதலான பாதகங்களுக்குப் பிராயச்சித் தத்திற்கும் இம்மையிலும் மறுமையிலும் மேன்மைகள் கிடைப் பதற்கும், ஸம்ஸாரமென்னும் விலங்கைவிடுவிப்பதற்கும் ஸம்ஸார விலங்கைவிட்டுப் பரமபதத்தை அடைவதற்கும் தற்காலத்தில்பகவத்

குணங்களென்னும் அமுதைஉண்டு ஸுகம்பெறுவதற்கும் குழந்தைகள், ஊமைகள், பித்தர், பெண்கள், நாஸ்திகர்கள் முதலியோர்களும் மிக்கசிரத்தை பக்தி விசுவாசங்களுடன் அனுஷ்டிப்பதைக் காண்கிறோம். இப்படிஅங்கீகரிப்பது வேதங்களுக்குமில்லை. மூர்க்கர்கள் வேதங்களை எடுத்துக்கொள்வதில்லை. அந்தஅந்தக் குலம் கோத்திரமுதலியவற்றிற்கு அந்தஅந்தச்சாகைகளென்று பிரிக்கப்பட்டிருப்பதால், ஒருசாகையையும் யாவரும் கிரஹிப்பதில்லை. பாரதத்துள் ஸித்தாந்தங்களாகஏற்பட்டிருக்கும் பகவத்கீதை நாராயணீயம் யானஸந்திபர்வம் அக்ரபூஜை உத்தமதர்மாநுசாஸனமுதலான அநேகஇடங்களிலுள்ளகருத்தை இது சுருக்கிச்சொல்வதனால் அவற்றோடு பொருளொற்றுமை இருக்கிறது. இவ்விதகாரணங்களினால் விவேகத்தோடு காரியங்களை அனுஷ்டிப்பவர்களுக்கு எல்லாவற்றிலும் சிறந்த விஷயமாக நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. எல்லா வித்தைகளுக்கும் ஆசார்யர்களும் பிரம்மஸாக்ஷாத்காரம் பெற்றவர்களுமான வ்யாஸர் தேவசிரவஸ் தேவஸ்தானர் நாரதர் வாத்ஸ்யர் அஸ்மர் ஸுமந்து முதலான தேவரிஷிகளாலும் பிரம்மரிஷிகளாலும் சொல்லப்பட்டது. ஸர்வேசுவரரும் கீதையென்னும்உபநிஷத்துக்குஆசார்யரும் முன்னோரான குருக்களுக்கும் குருவும் தாமரைக்கண்ணருமாகிய ஸாக்ஷாத்பகவானே கேட்பவரோடுகூடஉட்கார்ந்து பீஷ்மரிடம்கேட்டு அங்கீகரிக்கப்பெற்றதாகிய இந்த ஸஹஸ்ரநாமாத்யாயத்துக்குப் பகவத்குணங்களின் தத்வஜ்ஞானம்உண்டாவதற்காக வ்யாக்யானம்எழுதப்படுகிறது. முன்னமேபலமுறைபரதத்வத்தைச்சொல்லுகிறபலஇடங்களில்விசேஷார்த்தங்களின் நிச்சயத்தைக்கேட்டுத் திருப்தியானதாக நினைத்துக்கொண்டிருப்பதனால் வினவாமலிருக்கும் ஜனமேஜயருக்கு அவரிடமுள்ளபேரன்பினால் மற்றொருமிக்கரஹஸ்யத்தைத்தெரிவிப்பதற்காக வைசம்பாயனர் தாமாகவே இதைச்சொல்லத் தொடங்குகிறார்.]

தர்மபுத்ரர் தானதர்மம் மோக்ஷதர்மமுதலிய தர்மங்களையும் தவம் தீர்த்தயாத்ரைமுதலிய பரிசுத்தம்செய்வனவற்றையும் அவற்றின்பலன்கள், அங்கங்கள், செய்யும்வகை, செய்யத்தக்க அதிகாரிமுதலிய எல்லாவற்றோடும் கேட்டபிறகு, திரும்பவும் பீஷ்மரை நோக்கி, "சாஸ்த்ரங்களில்சொல்லப்பட்ட ஒப்புயர்வற்றகடவுள்யார்? குற்றமற்றுத் தன்னிலும்உயர்ந்ததில்லாத மங்களஸ்வபாவமாயிருப்பதனால் எல்லாவற்றிற்கும்மேலானபரமபுருஷார்த்தமென்றுநீர்நினைப்பது யாது? மனிதர்கள் யாரைத்துதித்தும், யாரை ஆராதித்தும், ஐசுவரியம் முக்திஎன்னும் இருவகை நன்மைகளைப்பெறுவர்? எல்லாத்

தர்மங்களிலும் சிறந்ததாக நீர் நினைத்திருக்கும்தர்மம் யாது? மனிதன் எதைஜபம்செய்வதனால் ஜன்மமென்னப்படும் ஜரைமரணம்கர்ப்பவாஸமுதலிய துன்பங்களிலிருந்தும், அவற்றின்காரணங்களாகிய அவித்தை பூர்வகர்மம் அதனாலுண்டானவாஸனை அதைப்பற்றிய விருப்பம் அதனடியாகவரும் ப்ரக்ருதிஸம்பந்தம் ஆகிய ஸம்ஸாரபந்தத்திலிருந்தும் விடுபடுவான்?'' என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"ஜகமென்னப்படும் ஜங்கமஸ்தாவரங்களனைத்துக்கும் ஸ்வாமியும் தேவர்க்கும்தேவதையும் எவ்வகையிலும்அளவிடக்கூடாதபெருமையுள்ளவரும் தம்மையும் அளிக்கும்பரமோதாரகுணமுள்ளஉத்தமபுருஷருமான நாராயணரை ஆயிரம்நாமங்களினால் எக்காலமும் முயன்றுதுதிசெய்தும், தாமரைக்கண்ணரும் இடைவிடாமல் அனுபவித்தாலும் குணங்களுக்கு முடிவில்லாதவருமாகிய அவரையே எக்காலமும் அடிமைபூண்டு தனக்கு ஸ்வாமியென்னும்ப்ரேமையோடு பக்தியோகத்தினால் உபாஸனைசெய்தும், மனத்தில் இடைவிடாமல் அம்ருததாரைபோல ஸுகமாயிருப்பதும் ஸம்ஸாரத்தினாலுண்டான ஆத்யாத்மிகமுதலிய மூன்றுவகைத்துன்பங்களையும் அடியோடழிப்பதுமான பகவத்குணத்யானத்தைச்செய்தும், துதித்தும், நமஸ்கரித்தும் பக்திமேற்கொண்டு, 'தேகம் இந்திரியங்கள் மனம் வாக்கு ஆத்மா ஆகியஎன்னுடையவை அனைத்தும் உம்முடையவைதாம். அங்கீகரிக்கக்கடவீர்' என்று அகங்காரமமகாரங்களையொழித்துப்பகவானுடைய பாதாரவிந்தங்களில் ஆத்மஸமர்ப்பணம்செய்தும், அவரையே புஷ்பமுதலியஉபசாரங்களினால் பூஜித்துமிருப்பவன் எல்லாத்துயரங்களையும்கடந்தவனாவான். ஆதியும் அந்தமும் இல்லாதவரும் எங்கும்வியாபித்திருப்பவரும் எல்லாலோகங்களுக்கும் முதற்கடவுளும் எல்லாலோகங்களையும் ப்ரத்யக்ஷமாகப்பார்ப்பவரும் வேதங்களினால்உரைக்கப்படுகிறவரும் எல்லாத்தர்மங்களையும் அறிந்தவரும் தம்மைத்துதிப்பவருக்குப்புகழைப்பெருகச்செய்பவரும் உலகங்களுக்கு ஸ்வாமியும் சிறந்தபொருளும் எல்லாப்பிராணிகளின்இருப்புக்கும் காரணமும் அனுக்ரஹிப்பவருமான பகவானை எப்பொழுதும் துதிப்பதனாலே மாத்ரமும் பக்தியோகம்முழுவதும் பூர்த்தியாகாவிடினும் ஸம்ஸாரதுக்கங்களெல்லாவற்றையும் கடந்தவனாவான். தாமரைக்கண்ணரை மனிதன் பக்தியுடன் ஸ்தோத்திரங்களினால் எக்காலமும்ஆராதிப்பது

எல்லாத்தர்மங்களிலும் மிகச்சிறந்ததர்மமென்று நான் நினைத்திருக்கிறேன். எவர் தாம் ப்ரகாசிப்பதனாலும் மற்றவற்றையெல்லாம்ப்ரகாசிக்கச்செய்வதனாலும் சிறந்தபேரொளியாயிருப்பவரோ, எவர் தேவர்களையும் ஆளுவதனால் எல்லாவற்றிலும் சிறந்தபெருந்தவமோ, எவர் அளவற்றகல்யாணகுணங்களாலும் எங்கும் வ்யாபித்திருப்பதனாலும் தமதுசக்தியினால் தம்மைச்சேர்ந்தவரைப் பெருகச்செய்வதனாலும் எல்லாவற்றிலும்சிறந்தபரப்ரம்மமாகிறாரோ, எவர்பரிசுத்தம்செய்வனவற்றுளெல்லாம் சிறந்தபரிசுத்தம்செய்பவரோ, எவர் மங்களத்திரவியங்களுளெல்லாம் சிறந்தமங்களத்திரவியமோ, எவர் எல்லாவற்றிற்கும் முடிவானபரமபுருஷார்த்தமோ, எவர்தேவர்க்கும்தேவதையோ, எவர் எல்லாப்பொருள்களுக்கும் எக்காலமும் அழியாததந்தையோ, எல்லாப்பொருள்களும்யுகங்களின் முதல்ஆரம்பமாகியஸ்ருஷ்டிகாலத்தில் எவரிடத்திலிருந்து உண்டாகின்றனவோ, திரும்பவும் ப்ரளயகாலத்தில் எவரிடத்தில் லயமாகின்றனவோ உலகங்களுக்கு ஸ்வாமியும் உலகங்களை நடத்துகிறவருமாகிய அப்படிப்பட்ட விஷ்ணுவின் ஆயிரநாமங்களும், பாவங்களையும் அவற்றினால் வரும்பயத்தையும் வேரோடுகளைகின்றவை. அரசனே! அவற்றை என்னிடம்கேள். மஹாத்மாவானபகவானுக்கு எந்தநாமங்கள் குணங்களாலும் செய்கைகளாலும் வந்தனவாகப் பிரஸித்திபெற்றவையோ, ரிஷிகளால்நன்றாகக் கீர்த்தனம்செய்யப்பட்டவையோ அவற்றை ஆத்மோஜ்ஜீவனத்திற்காக உனக்குச் சொல்வேன்.

வேதவ்யாஸர், ஸஹஸ்ரநாமத்தைக் கண்டறிந்த ரிஷி. அடியொன்றுக்கு எட்டு உயிரெழுத்துக்கள் அடங்கிய அனுஷ்டுப் என்னும் சந்தஸில் இந்த ஸஹஸ்ரநாமமிருக்கிறது. இதற்குப் பகவானை விஷ்ணு, தேவதை. 'அம்ருதாம்சூத்பவ:' என்பது இம்மந்திரத்துக்குப் பீஜம் (=ஆதாரம்.) 'தேவகீநந்தந:' என்பது சக்தி. 'த்ரிஸாமா' என்பது ஹ்ருதயம். ஸர்வதோஷ நிவாரணம் என்னும் ப்ரயோஜனத்தில் இம்மந்திரத்துக்கு உபயோகம். ஆயுதத்திற்கு எஃகுமுதலிய காரணம் பீஜமென்றும் முனைசக்தியென்றும் அதன் நடு ஹ்ருதயம் என்றும் சொல்வதும் அதைச் சத்ருவதம் முதலிய கார்யங்களில் உபயோகிப்பதும் எப்படியோ அப்படியே மந்த்ரங்கள் எல்லாவற்றிற்கும் சொல்வதுவழக்கம். பரம் வ்யூஹம் விபவம் என்னும் அவதாரங்களினால் ஏற்பட்ட நாமங்களில், பரஸ்வரூப நாமங்கள் முதலில் சொல்லப்படுகின்றன.

[1] விஶ்வம், (2) [2]விஷ்ணு, வஷட்காரர், பூதபவ்யபவத்ப்ரபு, பூதக்ருத், பூதப்ருத், பாவர், (8) பூதாத்மா, பூதபாவநர், (10) பூதாத்மா, பரமாத்மா, முக்தாநாம்பரமாகதி, அவ்யயர், (14) புருஷர், (15) ஸாக்ஷீ, க்ஷேத்ரஜ்ஞர், (17) [3]அக்ஷரர், யோகர், யோகவிதாம் நேதா, ப்ரதாநபுருஷேஶ்வரர், நாரஸிம்மவபு, (22) ஸ்ரீமாந்; (23) கேசவர், புருஷோத்தமர், ஸர்வர், சர்வர், (27) சிவர், ஸ்தாணு, பூதாதி, நிதிரவ்யயர், ஸம்பவர், (32) பாவநர், பர்த்தா, ப்ரபவர், (35) ப்ரபு, (36) ஈஶ்வரர், ஸ்வயம்பூ, சம்பு, (39) ஆதித்யர், (40) புஷ்கராக்ஷர், மஹாஸ்வநர், அநாதிநிதநர், (43) தாதா, (44) விதாதா, தாதுருத்தமர், அப்ரமேயர், ஹ்ருஷீகேசர், (48) பத்மநாபர், அமரப்ரபு, விஶ்வகர்மா, மநு, த்வஷ்டா, (53) ஸ்தவிஷ்டர், ஸ்தவிரர், (55) த்ருவர், அக்ராஹ்யர், சாஶ்வதர், (58) க்ருஷ்ணர், லோஹிதாக்ஷர், ப்ரதர்த்தநர், ப்ரபூதர், த்ரிககுத்தாமா (அல்லது த்ரிககுப்தாமா), பவித்ரம், மங்களம்பரம், ஈசாநர், (66) ப்ராணதர், (67) ப்ராணர், ஜ்யேஷ்டர், ஶ்ரேஷ்டர், (70) ப்ரஜாபதி, (71) ஹிரண்யகர்ப்பர், பூகர்ப்பர், (73) மாதவர், மதுஸூதநர், (75) ஈஶ்வரர், (76) விக்ரமீ, தந்வீ, மேதாவீ, விக்ரமர், க்ரமர், அநுத்தமர், துராதர்ஷர், (83) க்ருதஜ்ஞர், க்ருதி, ஆத்மவாந், ஸுரேசர், சரணர், சர்ம, விஶ்வரேதஸ், ப்ரஜாபவர், அஹஸ், (92) ஸவம்த்ஸரர், வ்யாளர், ப்ரத்யயர், ஸர்வதர்சநர், (96) அஜர், ஸர்வேஶ்வரர், (98) ஸித்தர், ஸித்தி, [4]ஸர்வாதி, (101) அச்யுதர், வ்ருஷாகபி, (103) அமேயாத்மா, ஸர்வயோகவிநிஸ்ருதர், (105) வஸு, (106) வஸுமநஸ், (107) ஸத்யர், ஸமாத்மா, ஸம்மிதர், ஸமர், (111) அமோகர், புண்டரீகாக்ஷர், வ்ருஷகர்மா, வ்ருஷாக்ருதி, ருத்ரர், பஹுசிரஸ், பப்ரு, (118) விஶ்வயோநி, சுசிஶ்ரவஸ், அம்ருதர், சாஶ்வதஸ்தாணு, வராரோஹர், [5]மஹாதபஸ், ஸர்வகர், ஸர்வவித், (126) பாநு, விஷ்வக்ஸேநர்,

---

1 இந்த நாமத்திநால் பூர்ணரென்று ஏற்படுகிறது; அளவற்ற பெருவிபூதிகளையுடையவராயிருப்பது முதலில் சொல்லவேண்டுமாதலின், இந்த நாமம் முதலிற்கூறப்பட்டது. (ப - பா)

2 முதலில் விபவாவதாரத்தில் அநுப்ரவேசித்திருப்பதைக் கூறுகிறது. (ப - பா)

3 இந்நாமத்தின் கடைசியில், 'ஏவச' என்பதில், 'ஏவ' என்பதனால் ஜீவனுக்கும் ப்ரம்மத்துக்கும் வாஸ்தவத்தில் பேதமில்லாமையும், 'ச' என்பதனால் வ்யவஹாரத்தில் பேதமிருப்பதும் குறிப்பிக்கப்பட்டன. (ச - பா)

4 முதல்சதகம் முற்றிற்று.

5 இதுவரையிலும் பரஸ்வரூபம் பெரும்பாலும் குறிப்பிக்கப்பட்டது. இனி வ்யூஹம் கூறப்படுகிறது. அந்தவ்யூஹம் வாஸுதேவன் ஸங்கர்ஷணன்

ஜநார்த்தநர், [1]வேதர், (130) வேதவித், அவ்யங்கர், வேதாங்கர், (133) வேதவித், கவி, [2]லோகாத்யக்ஷர், ஸுராத்யக்ஷர், தர்மாத்யக்ஷர், க்ருதாக்ருதர், (139) சதுராத்மா, (140) சதுர்வ்யூஹர், சதுர்த்தம்ஷ்ட்ரர், சதுர்ப்புஜர், ப்ராஜிஷ்ணு, போஜநம், (145) போக்தா, (146) ஸஹிஷ்ணு, [3]ஜகதாதிஜர், (148) அநகர், விஜயர், ஜேதா, (151) விஶ்வயோநி, புநர்வஸு, உபேந்த்ரர், வாமநர், ப்ராம்சு, (156) அமோகர், (157) சுசி, ஊர்ஜிதர், அதீந்த்ரர், ஸங்க்ரஹர், ஸர்க்கர், த்ருதாத்மா, (163) நியமர், (164) யமர், வேத்யர், வைத்யர், ஸதா யோகீ, (168) வீரஹா, (169) மாதவர், மது, [4]அதீந்த்ரியர், மஹா மாயர், மஹோத்ஸாஹர், மஹாபலர், மஹாபுத்தி, மஹாவீர்யர், மஹாசக்தி, மஹாத்யுதி, (179) அநிர்த்தேஶ்யவபு, (180) ஸ்ரீமாந், (181) அமேயாத்மா, [5]மஹாத்ரித்ருத், மஹேஷ்வாஸர், மஹீபர்த்தா, (185) ஸ்ரீநிவாஸர், (186) ஸதாம்கதி, (187) அநிருத்தர், [6]ஸுராநந்தர், (189) கோவிந்தர், கோவிதாம்பதி, மரீசி, தமநர், ஹம்ஸர், (194) ஸுபர்ணர், [7]புஜகோத்தமர், ஹிரண்யநாபர், ஸுதபஸ், (198) பத்மநாபர், (199) ப்ரஜாபதி, [8], [9]அம்ருத்யு, (201) ஸர்வத்ருக், (202) ஸிம்மர், ஸந்தாதா, ஸந்திமாந், ஸ்திரர், (206) அஜர், துர்மர்ஷணர்,

ப்ரத்யும்நன் அநிருத்தன் எனநான்குவகை. அவற்றுள், வாஸுதேவன் பரருபத்தில்சேர்ந்ததாதலின் தனித்துச் சொல்லவேண்டியதில்லை. ஆதலால், இதற்குமேல் ஸங்கர்ஷணவ்யூஹம் சொல்லப்படுகிறது. (ப - பா.)

1 இனி ஸங்கர்ஷணவ்யூஹம் உலகங்களுக்குச் சாஸ்த்ரங்களைக்கொடுப்பதென்பது சொல்லப்படுகிறது. (ப - பா)

2 இதுமுதல் மூன்றுநாமங்கள் ஸர்வஜ்ஞரென்பதை விவரிப்பவை. (ப - பா)

3 இதுவரை, வ்யூஹங்கள் கூறப்பட்டன. இனி விபவாவதாரங்களில் மும்மூர்த்திகளில் ஒன்றாகிய விஷ்ணுஅவதாரம் கூறப்படுகிறது. (ப - பா)

4 இனி பரம், வியூஹம், விபவம் என்னும் மூன்றுவகை அவதாரங்களுக்கும் முக்கியமான ஆறுகுணங்களைச் சொல்வதன்பொருட்டுப் பரமாத்மஸ்வரூபம் தெளிவிக்கப்படுகிறது. (ப - பா)

5 இனி குணங்களுக்குத்தக்க செய்கைகள் கூறப்படுகின்றன. (ப - பா)

6 இனி அநேகஅவதாரங்களுக்கு வேராயுள்ள இந்த அநிருத்தாவதாரத்திலிருந்துவரும் ஹம்ஸாவதாரம் கூறப்படுகிறது. (ப - பா)

7 முன், 'பத்மநாபர், அமரப்ரபு' என்னுமிடத்தில் வாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தர்களென்னும் வ்யூகாவதாரங்களில் கடைசியான அநிருத்தரென்னும் பத்மநாபாவதாரம் கூறியது. இனி, விபவாவதாரங்களில் முதன்மையான விஷ்ணுவென்னும் பத்மநாபாவதாரம் சொல்லப்படுகிறது. (ப - பா)

8 இனி நரஸிம்மாவதாரம் சொல்லப்படுகிறது. (ப - பா)

9 இரண்டாவதுசதகம் முற்றிற்று.

சாஸ்தா, விஸ்ருதாத்மா, ஸுராரிஹா, [1]குருர்க்குருதமர், தாம, (213) ஸத்யர், ஸத்யபராக்ரமர், நிமிஷர், அநிமிஷர், ஸ்ரக்வீ, (218) வாசஸ்பதி, உதாரதீ, அக்ரணீ, க்ராமணீ, (222) ஸ்ரீமாந், ந்யாயர், நேதா, ஸமீரணர், ஸஹஸ்ரமூர்த்தா, விஸ்வாத்மா, ஸஹஸ்ராக்ஷர், ஸஹஸ்ரபாத், ஆவர்த்தநர், (231) நிவ்ருத்தாத்மா, ஸம்வ்ருதர், ஸம்ப்ரமர்த்தநர், அஹஸ்ஸம்வர்த்தகர், வஹ்நி, (236) அநிலர், தரணீதரர், ஸுப்ரஸாதர், ப்ரஸந்நாத்மா, விஸ்வஸ்ருக், விஸ்வபுக்விபு, ஸத்கர்த்தா, ஸத்க்ருதர், ஸாது, ஜஹ்நு, நாராயணர், நரர், அஸங்க்யேயர், அப்ரமேயாத்மா, விசிஷ்டர், சிஷ்டக்ருத், (252) சுசி, ஸித்தார்த்தர், ஸித்தஸங்கல்பர், ஸித்திதர், ஸித்திஸாதநர், வ்ருஷாஹீ, வ்ருஷபர், (259) விஷ்ணு, வ்ருஷபர்வா, வ்ருஷோதரர், வர்த்தநர், வர்த்தமாநர், விவிக்தர், ஸ்ருதிஸாகரர், ஸுபுஜர், (267) துர்த்தரர், வாக்மீ, மஹேந்த்ரர், வஸுதர், (271) வஸு, [2]நைகரூபர், ப்ருஹத்ரூபர், சிபிவிஷ்டர், ப்ரகாசநர், ஓஜஸ்தேஜோத்யுதிதரர், ப்ரகாசாத்மா, ப்ரதாபநர், (279) ருத்தர், ஸ்பஷ்டாக்ஷரர், மந்த்ரர், சந்த்ராம்சு, பாஸ்கரத்யுதி, அம்ருதாம்சூத்பவர், (285) பாநு, சசபிந்து, ஸுரேஸ்வரர், ஔஷதம், ஜகதஸ்ஸேது, ஸத்யதர்மபராக்ரமர், பூதபவ்யபவந்நாதர், (292) பவநர், (293) பாவநர், (294) அநலர், காமஹா, காமக்ருத், (297) காந்தர், காமர், காமப்ரதர், (300) [3]ப்ரபு, [4]யுகாதிக்ருத், யுகாவர்த்தர், நைகமாயர், மஹாசநர், அத்ருஸ்யர், வ்யக்தரூபர், ஸஹஸ்ரஜித், அநந்தஜித், இஷ்டோவிசிஷ்டர், சிஷ்டேஷ்டர், சிகண்டீ, நஹுஷர், வ்ருஷர், [5]க்ரோதஹா, க்ரோதக்ருத், (316) கர்த்தா, விஸ்வபாஹு, (318) மஹீதரர், (319) அச்யுதர், ப்ரதிதர், (321) ப்ராணர் (322) [6]ப்ராணதர், வாஸவாநுஜர், அபாம்நிதி, அதிஷ்டாநர், அப்ரமத்தர், ப்ரதிஷ்டிதர், ஸ்கந்தர், ஸ்கந்ததரர், துர்யர், வரதர், (332) வாயுவாஹநர், (333) [7]வாஸுதேவர், ப்ருஹத்பாநு, (335) ஆதிதேவர், புரந்தரர், (337) அசோகர், தாரணர், (339) [8]தாரர், (340)

---

1 இனி மத்ஸ்யாவதாரம் கூறப்படுகிறது. (ப - பா)

2 இனி, மேற்சொன்ன மகிமைக்குத் தகுதியாக விசுவரூபம் கூறப்படுகிறது. (ப - பா)

3 மூன்றுவதுசதகம் முற்றிற்று.

4 இனி அளவில்லாத ஆச்சரியத்தைச் சொல்லுவதற்காக, ஆலிலைமேல் பள்ளிக்கொண்ட அவதாரம் சொல்லப்படுகிறது. (ப - பா)

5 இனி ப்ரசுராமாவதாரத்தைக் குறிப்பிடும் நாமங்கள். (ப - பா)

6 இனி கூர்மாவதாரத்தைக் குறிப்பிடும் நாமங்கள். (ப - பா)

7 இனி பன்னிரண்டுநாமங்கள் பரஸ்வரூபத்தைக்குறிக்கின்றவை. (ப - பா)

8 இவ்வேழுநாமங்களினால் விளையாடும்தன்மை கூறப்பட்டது. (ப - பா)

சூரர். (341) சௌரி, ஜநேஸ்வரர், அநுகூலர், சதாவர்த்தர், [1]பத்மீ, பத்மநிபேக்ஷணர், (347) பத்மநாபர், அரவிந்தாக்ஷர், பத்மகர்ப்பர், சரீரப்ருத், [2]மஹர்த்தி,(352) ருத்தர், வ்ருத்தாத்மா, மஹாக்ஷர், கருடத்வஜர், அதுலர், சரபர், (358) பீமர், ஸமயஜ்ஞர், (360) [3]ஹவிஸ், (361) ஹரி, [4]ஸர்வலக்ஷணலக்ஷண்யர், லக்ஷ்மீவாந், ஸமிதிஞ்சயர், விக்ஷரர், ரோஹிதர், (367) மார்க்கர், ஹேது, தாமோதரர், ஸஹர், (371) மஹீதரர், மஹாபாகர், வேகவாந், அமிதாசநர், (375) உத்பவர், க்ஷோபணர், தேவர், ஸ்ரீகர்ப்பர், பரமேஸ்வரர், கரணம், காரணர், (382) கர்த்தா, விகர்த்தா, (384) கஹநர், குஹர், [5]வ்யவஸாயர், வ்யவஸ்தாநர், ஸம்ஸ்தாநர், ஸ்தாநதர், (390) த்ருவர், [6]பரர்த்தி, பரமஸ்பஷ்டர், துஷ்டர், புஷ்டர், சுபேக்ஷணர், ராமர், விராமர், விரதர், (399) மார்க்கர், நேயர், [7]நயர், அநயர், (402) வீரர், சக்திமதாம்ஸ்ரேஷ்டர், தர்மம், தர்மவிதுத்தமர், வைகுண்டர், (407) புருஷர், (408) ப்ராணர், (409) ப்ராணதர், ப்ரணமர், ப்ருது, (412) ஹிரண்யகர்ப்பர், சத்ருக்நர், வ்யாப்தர், வாயு, அதோக்ஷஜர், ருது, ஸுதர்சநர், காலர், பரமேஷ்டீ, [8]பரிக்ரஹர், [9]உக்ரர், (423) ஸம்வத்ஸரர், (424) தக்ஷர், விஸ்ராமர், விஸ்வதக்ஷிணர், விஸ்தாரர், ஸ்தாவரஸ்தாணு, (429) ப்ரமாணர், பீஜமவ்யயம், அர்த்தர், அநர்த்தர், மஹாகோசர், மஹாபோகர், மஹாதநர், (436) அநிர்விண்ணர், (437) ஸ்தவிஷ்டர், பூ,தர்மயூபர், மஹாமகர், நக்ஷத்ரநேமி, நக்ஷத்ரீ, க்ஷமர்,

---

1 இதுவரை வாஸுதேவஸ்வரூபத்தின் குணங்கள் விவரிக்கப்பட்டன. இனி, அதன் திவ்யமங்களவிக்ரஹத்தின் குணங்கள் கூறப்படுகின்றன. (ப-பா)

2 இனி பகவானுடைய விபூதிகளின்சிறப்பு விவரிக்கப்படுகிறது. (ப-பா)

3 'ஹவிர்ஹரி' என ஒன்றாகக்கொண்டு, 'இஷ்டர்' எனவும், 'விசிஷ்டர்' எனவும் இரண்டாகக் கொள்வதுமுண்டு. (ப - பா)

4 இனி லக்ஷ்மீபதிமூர்த்தி சொல்லப்படுகிறது. (ப - பா)

5 இனி ககோளங்களுக்கு ஆதாரமான த்ருவமூர்த்தி சொல்லப்படுகிறது. (ப - பா)

6 இனி ம்ருதஸஞ்சீவனமான ராமசரிதம் கூறப்படுகிறது. (ப - பா)

7 நான்காவதுசதகம் முற்றிற்று ; இந்தச்சதகத்தில் ஒருநாமம் அதிகப்படுகிறது.

8 எல்லாவற்றிலும் சிறந்தபெருமையையுடையவர் மிக்க எளியவரோடும் வேறுபாடின்றிக் கலந்திருப்பதாகிய ஸௌசீல்யமென்னும் குணாதிசயம் இவ்வவதாரத்தில் தலையெடுத்திருப்பதென்று குறிப்பிக்கப்பட்டது. (ப - பா)

9 இனி, தமது நற்குணங்களுக்கு வசப்படாத துஷ்டர்களை வசப்படுத்துவதாகிய ஸம்ஹாரஅதிகாரத்தை வகித்துப் பாதாளத்தில் சயனித்திருக்கும் கல்கி அவதாரம் கூறப்படுகிறது. (ப - பா)

(444) க்ஷாமர், ஸமீஹநர், (446) யஜ்ஞர், இஜ்யர், மஹேஜ்யர், [1]க்ரது, ஸத்ரம், (451) [2]ஸதாம்கதி, ஸர்வதர்சீ, (453) நிவ்ருத்தாத்மா, (454) ஸர்வஜ்ஞர், ஜ்ஞாநமுத்தமம், (456) ஸுவ்ரதர், ஸுமுகர், ஸூக்ஷ்மர், ஸுகோஷர், (460) ஸுகதர், ஸுஹ்ருத், மநோஹரர், ஜிதக்ரோதர், வீரபாஹு, விதாரணர், ஸ்வாபநர், ஸ்வவசர், வ்யாபீ, நைகாத்மா, நைககர்மக்ருத், வத்ஸரர், வத்ஸலர், வத்ஸீ, ரத்நகர்ப்பர், தநேஸ்வரர், தர்மகுப், தர்மக்ருத், தர்மீ, ஸத், அஸத், க்ஷரம், (482) அக்ஷரர், அவிஜ்ஞாதா, ஸஹஸ்ராம்சு, (485) விதாதா, க்ருதலக்ஷணர், கபஸ்திநேமி, ஸத்வஸ்தர், (489) ஸிம்மர், பூதமஹேஸ்வரர், (491) ஆதிதேவர், மஹாதேவர், தேவேசர், தேவப்ருத், குரு, உத்தரர், (497) கோபதி, கோப்தா, ஜ்ஞாநகம்யர், [3]புராதநர், சரீரபூதப்ருத், (502) போக்தா, கபீந்த்ரர், பூரிதக்ஷிணர், ஸோமபர், அம்ருதபர், ஸோமர், புருஜித், புருஸத்தமர், விநயர், ஜயர், ஸத்யஸந்தர், தாசார்ஹர், ஸாத்வதாம்பதி, ஜீவர், விநயிதா, (517) ஸாக்ஷீ, முகுந்தர், (519) அமிதவிக்ரமர், அம்போநிதி, அநந்தாத்மா, மஹோததிசயர், அந்தகர், (524) அஜர், மஹார்ஹர், ஸ்வாபாவ்யர், ஜிதாமித்ரர், ப்ரமோதநர், [4]ஆநந்தர், நந்தநர், நந்தர், ஸத்யதர்மா, த்ரிவிக்ரமர், மஹர்ஷி, கபிலாசார்யர், (536) க்ருதஜ்ஞர், மேதிநீபதி, த்ரிபதர், த்ரிதசாத்யக்ஷர், மஹாஸ்ருங்கர், க்ருதாந்தக்ருத், மஹாவராஹர், (543) கோவிந்தர், ஸுஷேணர், கநகாங்கதீ, குஹ்யர், கபீரர், (548) கஹநர், குப்தர், சக்ரகதாதரர், வேதஸ், ஸ்வாங்கர், அஜிதர், (554) க்ருஷ்ணர், த்ருடர், ஸங்கர்ஷணர், (557) அச்யுதர், வருணர், வாருணர், வ்ருக்ஷர், (561) புஷ்கராக்ஷர், மஹாமநஸ், பகவாந், பகஹா, நந்தீ, வநமாலீ, ஹலாயுதர், (568) ஆதித்யர், [5]ஜ்யோதிராதித்யர், (570) ஸஹிஷ்ணு, கதிஸத்தமர், ஸுதந்வா, கண்டபரசு, தாருணர், [6] த்ரவிணப்ரதர், திவிஸ்ப்ருக், (577) ஸர்வத்ருக், வ்யாஸர், (579)

1 இதற்குமுன் தேவயஜ்ஞம் பித்ருயஜ்ஞம் பூதயஜ்ஞம் மநுஷ்ய யஜ்ஞம் ப்ரம்மயஜ்ஞம் என்னும் ஐந்துமஹாயஜ்ஞங்களும் ஔபாஸநமுதலிய பாகயஜ்ஞங்களும் அக்நிஹோத்ரமுதலிய ஹவிர்யஜ்ஞங்களும், 'யஜ்ஞ' என்கிறபெயரினால் கிரகிக்கப்பட்டன. (ப - பா)

2 ப்ரவ்ருத்திதர்மத்திலிருப்பவர்களாலும் ஆராதிக்கப்படுகிறவர் என்பது இதுவரை கூறப்பட்டது. இனி, நிவ்ருத்திதர்மத்திலிருப்பவர்களுக்கும் அவரே கதி என்பது கூறப்படுகிறது. (ப - பா)

3 ஐந்தாவதுசதகம் முற்றிற்று.

4 இனி கபிலமூர்த்தியைச் சொல்வது. (ப - பா)

5 இனி நரநாராயணவதாரம் சொல்லப்படுகிறது. (ப - பா)

6 இனி வ்யாஸாவதாரம் சொல்லப்படுகிறது. (ப - பா)

வாசஸ்பதி, அயோநிஜர், த்ரிஸாமா, ஸாமகர், ஸாம, நிர்வாணம், பேஷஜம், பிஷக், ஸந்யாஸக்ருத், சமர், சாந்தர், நிஷ்டா, சாந்தி, பராயணர், (593) சுபாங்கர், சாந்திதர், (595) ஸ்ரஷ்டா, (596) குமுதர், குவலேசயர், கோஹிதர், (599) கோபதி, (600) [1]கோப்தா, வ்ருஷபாக்ஷர், வ்ருஷப்ரியர், அநிவர்த்தீ, (604) நிவ்ருத்தாத்மா, ஸம்க்ஷேப்தா, க்ஷேமக்ருத், (607) சிவர், ஸ்ரீவத்ஸவக்ஷஸ், ஸ்ரீவாஸர், ஸ்ரீபதி, ஸ்ரீமதாம்வரர், ஸ்ரீதர், ஸ்ரீசர், (614) ஸ்ரீநிவாஸர், ஸ்ரீநிதி, ஸ்ரீவிபாவநர், ஸ்ரீதரர், ஸ்ரீகரர், ஸ்ரேயஸ்ஸ்ரீமாந், லோகத்ரயாஸ்ரயர், ஸ்வக்ஷர், ஸ்வங்கர், சதாநந்தர், நந்தி, ஜ்யோதிர்க்கணேஸ்வரர், விஜிதாத்மா, விதேயாத்மா, ஸத்கீர்த்தி, சிந்நஸம்சயர், உதீர்ணர், ஸர்வதஸ்சக்ஷு, அநீசர், சாஸ்வதஸ்திரர், பூசயர், பூஷணர், பூதி, (637) அசோகர் (அல்லது விசோகர்,) சோகநாசநர், அர்ச்சிஷ்மாந், அர்ச்சிதர், கும்பர், விசுத்தாத்மா, விசோதநர், (644) [2]அநிருத்தர், அப்ரதிரதர், ப்ரத்யும்நர், (647) அமிதவிக்ரமர், காலநேமிநிஹா, (649) சௌரி, (650) சூரர், சூரஜநேஸ்வரர், த்ரிலோகாத்மா, த்ரிலோகேசர், (654) கேசவர், கேசிஹா, (656) ஹரி, காமதேவர், காமபாலர், காமீ, (660) [3]காந்தர், (661) க்ருதாகமர், (662) அநிர்த்தேஸ்யவபு, (663) விஷ்ணு, (664) வீரர், அநந்தர், தநஞ்சயர், ப்ரம்மண்யர், ப்ரம்மக்ருத்ப்ரம்மா, ப்ரம்ம, ப்ரம்மவிவர்த்தநர், ப்ரம்மவித், ப்ராம்மணர், ப்ரம்மீ, ப்ரம்மஜ்ஞர், ப்ராம்மணப்ரியர், மஹாக்ரமர், (677) மஹாகர்மா, மஹாதேஜஸ், மஹோரகர், மஹாக்ரது, மஹாயஜ்வா, மஹாயஜ்ஞர், மஹாஹவிஸ், [4]ஸ்தவ்யர், ஸ்தவப்ரியர், ஸ்தோத்ரம், ஸ்துதர், ஸ்தோதா, ரணப்ரியர், பூர்ணர், பூரயிதா, (692) புண்யர், புண்யகீர்த்தி, அநாமயர், மநோஜவர், தீர்த்தகரர், [5]வஸுரேதஸ், (698) வஸுப்ரதர், (699) வஸுப்ரதர், (700) [6]வாஸுதேவர், (701) வஸு, (702) வஸுமநஸ், (703) ஹவிஸ், ஸத்கதி, ஸத்க்ருதி, ஸத்தா, ஸத்பூதி, ஸத்பராயணர், சூரஸேநர், யதுஸ்ரேஷ்

1 ஆறுவது சதகம் முற்றிற்று.

2 இனி சிலக்ஷேத்திரங்களில் முன்சொன்ன வ்யூஹாவதாரங்களிலும் விபவாவதாரங்களிலும் சில இருப்பதைக் கூறுவது. (ப - பா)

3 இப்படியே இனிமேலும் நாமங்களின் அர்த்தங்களைக்கொண்டு அந்த அந்த க்ஷேத்ரங்களை ஊகித்துக்கொள்க. இனி, சக்திசரென்னும் அவதாரம் கூறப்படுகிறது. (ப - பா)

4 மனத்தினாலும் காயத்தினாலும் ஆராதிக்கப்படுவது சொல்லியாயிற்று; இனி வாக்கினால் ஆராதிக்கப்படுவது கூறப்படுகிறது. (ப - பா)

5 இனி க்ருஷ்ணாவதாரம் சொல்லப்படுகிறது. (ப - பா)

6 ஏழாவதுசதகம் முற்றிற்று.

டர், ஸம்விவாஸர், ஸுயாமுகர், பூதாவாஸர், (714) வாஸுதேவர், ஸர்வாஸுநிலயர், (716) அநலர், தர்ப்பஹா, தர்ப்பதர், அத்ருப்தர், (720) துர்த்தரர், (721) அபராஜிதர், விச்வமூர்த்தி, மஹாமூர்த்தி, தீப்தமூர்த்தி, அமூர்த்திமாந், அநேகமூர்த்தி, அவ்யக்தர், சதமூர்த்தி, சதாநநர், ஏகர், நைகர், ஸ, வ, க, கிம், யத், தத், பதமநுத்தமம், லோகபந்து, லோகநாதர், (741) மாதவர், பக்தவத்ஸலர், ஸுவர்ணவர்ணர், ஹேமாங்கர், வராங்கர், சந்தநாங்கதீ, (747) வீரஹா, விஷமர், சூந்யர், க்ருதாசிஸ், அசலர், சலர், அமாநீ, மாநதர், மாந்யர், லோகஸ்வாமீ, த்ரிலோகத்ருக், ஸுமேதஸ், மேதஜர், தந்யர், ஸத்யமேதஸ், தராதரர், தேஜோவ்ருஷர், த்யுதிதரர், ஸர்வசஸ்த்ரப்ருதாம்வரர், ப்ரக்ரஹர், நிக்ரஹர், வ்யக்ரர், நைகச்ருங்கர், கதாக்ரஜர், சதுர்மூர்த்தி, சதுர்ப்பாஹு, (773) சதுர்வ்யூஹர், சதுர்க்கதி, (775) சதுராத்மா, சதுர்ப்பாவர், சதுர்வேதவித், ஏகபாத், ஸமாவர்த்தர், (780) நிவ்ருத்தாத்மா, துர்ஜயர், துரதிக்ரமர், துர்லபர், துர்க்கமர், துர்க்கர், துராவாஸர், [1]துராரிஹா, (788) சுபாங்கர், லோகஸாரங்கர், ஸுதந்து, தந்துவர்த்தநர், இந்த்ரகர்மா, (793) மஹாகர்மா, க்ருதகர்மா, (795) க்ருதாகமர், (796) உத்பவர், ஸுந்தரர், ஸுந்தர், ரத்நநாபர், [2]ஸுலோசநர், அர்க்கர், வாஜஸநி, ச்ருங்கீ, ஜயந்தர், ஸர்வவிஜ்ஜயீ, ஸுவர்ணபிந்து, (807) அக்ஷோப்யர், ஸர்வவாகீச்வரேச்வரர், மஹாஹ்ரதர், மஹாகர்த்தர், [3] மஹாபூதர், மஹாநிதி, (813) குமுதர், குந்தரர், குந்தர், பர்ஜந்யர், (817) பவநர், (818) அநிலர், அமிர்தாசர், அம்ருதவபு, (821) ஸர்வஜ்ஞர், ஸர்வதோமுகர், ஸுலபர், (824) ஸுவ்ரதர், (825) ஸித்தர், [4] சத்ருஜிச்சத்ருதாபநர், ந்யக்ரோதோதும்பரர், [5]அச்வத்தர், சாணூராந்த்ரநிஷூதநர், ஸஹஸ்ரார்ச்சிஸ், ஸப்தஜிஹ்வர், ஸப்தைதஸ்,

---

1 அணுகவொண்ணாமலிருக்குந்தன்மை அவர் திருவடி பற்றியிருக்கும் பாவிகள்விஷயமென்று விலக்குவதற்காக இனி புத்தாவதாரம் கூறப்படுகிறது. (ப - பா)

2 எட்டாவதுசதகம் முற்றிற்று.

3 இதுவரை தம்கட்டளையைக்கடந்த அஸுரர்களை நிக்ரஹிக்குந் தன்மை கூறப்பட்டது. இனி, தமதுவிதியை அநுஸரிக்கும் தேவத்தன்மைபெற்ற சான்றோர்களை அனுக்கிரஹிக்குந்தன்மை கூறப்படுகிறது. (ப - பா)

4 இதுவரை நேராகவுள்ள அவதாரங்கள் தெரிவிக்கப்பட்டன. இனி, தமது அனுப்ரவேசத்தினால் சிறப்புற்றவர்கள்முகமாக லோகரக்ஷணஞ்செய்ததுகூறப்படுகிறது. (ப - பா)

5 இனி தமது அங்கத்தினராகிய தேவர்களைக்கொண்டு உலகத்தை நடத்துவதைக்கூறுவது; இத்தான் ப்ராதுர்ப்பாவாந்தரமென்னப்படும் அவதாரம். (ப - பா)

ஸப்தவாஹநர், அமூர்த்தி, (835) அநகர், அசிந்த்யர், பயக்ருத், பய நாசநர், [1]அணு, ப்ருஹத், க்ருசர், ஸ்தூலர், குணப்ருத், நிர்க்குணர், மஹாந், அத்ருதர், ஸ்வத்ருதர், ஸ்வாஸ்யர், ப்ராக்வம்சர், வம்சவர்த் தநர், பாரப்ருத், கதிதர், யோகீ, யோகீசர், ஸர்வகாமதர், ஆஸ்ரமர், ஸ்ரமணர், (858) க்ஷாமர், (859) ஸுபர்ணர், (860) வாயுவாஹநர், தநுர்த்தரர், தநுர்வேதர், தண்டர், தமயிதா, அதமர், (866) அபரா ஜிதர், ஸர்வஸஹர், நியந்தா, (869) நியமர், (870) யமர், [2]ஸத்வவாந், ஸாத்விகர், (873) ஸத்யர், ஸத்யதர்மபராயணர், அபிப்ராயர், ப்ரியார் ஹர், அர்ஹர், ப்ரியக்ருத், ப்ரீதிவர்த்தநர், விஹாயஸகதி, ஜ்யோதி, ஸுருசி, ஹுதபுக்விபு, ரவி, விரோசநர், ஸூர்யர், (887) ஸவிதா, ரவிலோசநர், அநந்தஹுதபுக்போக்தா, (890) ஸுகதர், நைகதர், அக்ரஜர், (893) அநிர்விண்ணர், ஸதாமர்ஷீ, லோகாதிஷ்டாநர், அத் புதர், ஸநாத், ஸநாதநதமர், கபிலர், [3]கபிரவ்யயர், ஸ்வஸ்திதர், ஸ்வஸ்தி க்ருத், ஸ்வஸ்தி, ஸ்வஸ்திபுக், ஸ்வஸ்திதக்ஷிணர், அரௌத்ரர், குண்டலீ, (908) சக்ரீ, (909) விக்ரமீ, ஊர்ஜிதசாஸநர், சப்தாதி கர், சப்தஸஹர், சிசிரர், சர்வரீகரர், அக்ரூரர், பேசலர், (917) தக்ஷர், தக்ஷிணர், க்ஷமிணாம்வரர், வித்வத்தமர், வீதபயர், புண்யஸ்ர வணகீர்த்தநர், உத்தாரணர், துஷ்க்ருதிஹா, (925) புண்யர், துஸ் வப்நநாசநர், (927) வீரஹா, ரக்ஷணர், ஸந்தர், ஜீவநர், பர்யவஸ்திதர், அநந்தரூபர், அநந்தஸ்ரீ, ஜிதமந்யு, பயாபஹர், சதுரஸ்ரர், கபீராத்மா, விதிசர், வ்யாதிசர், திசர், அநாதி, பூர்ப்புவர், லக்ஷ்மீ, ஸுவீரர், ருசிராங்கதர், [4]ஜநநர், ஜநஜந்மாதி, (948) பீமர், பீமபராக்ரமர், ஆதார நிலயர், (951) தாதா, புஷ்பஹாஸர், ப்ரஜாகரர், ஊர்த்வகர், ஸத்பதா சாரர், (956) ப்ராணதர், ப்ரணவர், பணர், (959) ப்ரமாணர், ப்ராண நிலயர், ப்ராணத்ருத், ப்ராணஜீவநர், தத்வம், தத்வவித், ஏகாத்மா, ஜந்மம்ருத்யுஜராதிகர், பூர்ப்புவஸ்வஸ்தரு, (968) தாரர் (969) ஸவிதா, ப்ரபிதாமஹர், (971) யஜ்ஞர், யஜ்ஞபதி, யஜ்வா, யஜ்ஞாங் கர், யஜ்ஞவாஹநர், யஜ்ஞப்ருத், யஜ்ஞக்ருத், யஜ்ஞீ, யஜ்ஞபுக்,

---

1 இனி அணிமாமுதலிய அஷ்டைசுவரியங்கள் கூறப்படுகின்றன. (ப-பா)

2 இதுவரையில் ரஜோகுணத்தையும் தமோகுணத்தையும் நடத்துவது கூறப்பட்டது. இனி, ஒளியும் ஸுகமும் எளிமையும் உள்ளதாதலின் மோக்ஷத்துக்குக்காரணமான ஸத்வகுணத்துக்கு அவர் நேரே தலைமையாயிருப் பது கூறப்படுகிறது. (ப - பா)

3 ஒன்பதாவது சதகம் முற்றிற்று

4 இனி பகவானுடைய செய்கைகளெல்லாவற்றிற்கும் ப்ரயோஜனம் கூறப்படுகிறது. (ப - பா)

யஜ்ஞஸாதநர், யஜ்ஞாந்தக்ருத், யஜ்ஞகுஹ்யர், அந்நம், அந்நாதர் [1], ஆத்மயோநி, ஸ்வயஞ்சாதர், வைகாநர், ஸாமகாயநர், தேவகீநந்தநர், (990) ஸ்ரஷ்டா, க்ஷிதீசர், பாபநாசநர், [2]சங்கப்ருத், நந்தகீ, (995) சக்ரீ, சார்ங்கதந்வா, கதாதரர், ரதாங்கபாணி, (999) அக்ஷோப்யர், [3]ஸர்வப்ரஹரணாயுதர்.

இப்படி எல்லாக்குற்றங்களும் ஒழிந்ததும் காரணமும் எண்ணும்எல்லையும்கடந்து எல்லாவற்றிலும் உயர்ந்தமங்களமுமான திவ்யாத்மஸ்வரூபம், திவ்யமங்களவிக்ரஹம், திருக்கல்யாண குணங்கள், மகிமை,செய்கைகள்,எங்கும்தடைப்படாதஸர்வசத்தன்மை,யாவரும் கலந்துபழகக்கூடியஎளிமை, ஆபத்திற்குதவும்தன்மை,வேண்டினவர் வேண்டினவற்றையெல்லாம் அளிக்கும் கல்பகவிருக்ஷமாயிருக்கும் ஔதார்யம் இவையெல்லாம்பொருந்தினவரும் சரணாகதர்களுக்கு ஓரேஉயிர்த்தோழரும் ஸ்ரீபதியுமான பகவான் புருஷோத்தமரை ஆஸ்ரயித்தவர்களுக்கு எல்லாச்செல்வச்சேர்க்கைகளும்நீங்காமல்வளருமென்பது இவ்வாயிரநாமங்களினாலும் தெரிவிக்கப்பட்டது. (ப-பா)

---

1 'இங்கு 'ஏவ' என்பது ஜகத்தெல்லாம் போக்த்ருரூபமாகவும் போக்யரூபமாகவும் இருக்குமென்று தெரிவிப்பதற்காக; 'ச' என்பது, உலகத்திலுள்ள சொற்களனைத்தும்சேர்ந்து பரமாத்மாவைச்சொல்லுமென்பதற்காக' என்பது (ச - பா)

2 இனி, தமது பரமேசுவரத்தன்மைக்கு அறிகுறிகளான திவ்யாயுதங்கள் கூறப்படுகின்றன. (ப - பா)

3 பத்தாவது சதகம் முற்றிற்று.

ஸர்வப்ரஹரணாயுத: என்பதை இருமுறைசொல்லி, 'ஓம்நம:' என்று முடிக்கவேண்டும். இரண்டுமுறைசொல்வது கிரந்தமுடிவைத் தெரிவிக்கிறது. 'ஓம்' என்பது மங்களக்குறிப்பு. 'நம:' என்பது பணிவைக்காட்டுவது. 'ஓம்' என்பது, 'அத' என்பதுஇவ்விரண்டும் ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் பிரம்மதேவரின்கழுத்தைப்பிளந்துகொண்டு வெளிப்பட்டன. ஆதலால், இவ்விரண்டுசொற்களும் மங்களகரமானவை. எதில் முதலில் விஷ்ணு நமஸ்காரம் செய்யப்படுகிறதோ, அதுதான் நல்லலக்னம்; அதுதான் நல்ல நக்ஷத்ரம்; அதுதான் சுபதினம்; அதுதான் கிரியைக்குச்சுத்தம். இங்கு, முதலில்என்று சொன்னது முடிவில்நமஸ்காரம்செய்வதையும் சேர்த்துக் கொள்ளும் கருத்துள்ளது. நமஸ்காரம்செய்வதற்கு முன்னமே அதன்பலன் வந்துவிடுமென்று தெரிவிப்பதற்காக முடிவிலும்நமஸ்கரிப்பது சிஷ்டாசாரம். கிருஷ்ணனுக்குச்செய்த ஒருநமஸ்காரமும் பத்து அசுவமேதயாகங்கள்செய்து அவபிருத ஸ்நானம் செய்ததற்குச் சமானம். பத்து அசுவமேதயாகங்கள்செய்தவனும் திரும்பிஜனிப்பான். கிருஷ்ணனைநமஸ்கரிப்பது திரும்பி ஜனிக்கவொட்டாது. காயாம்பூநிறமுள்ளவரும் பீதாம்பரம்தரித்தவரும் ஸ்வரூப ஸ்வபாவங்கள் மாறாமலிருப்பவருமான கோவிந்தரை நமஸ்கரிப்பவர்களுக்குப் பயமில்லை. மூன்றுலோகங்களுக்கும் அதிபதியும் ஒப்பற்றமகிமையுள்ளவரும் ஸர்வசக்தரும் ஸர்வேசுவரருமானபகவானைச் சிறிது தலைவணங்கினாலும், மனிதனுக்குப் பலஜன்மங்களிலும் ப்ரளயங்களிலும் யுகங்களிலும் உண்டான பாவங்களனைத்தும் உடனே ஒழிந்துவிடும். (ச - பா)

பஞ்சபூதங்களின்சேர்க்கையாகிய வைஜயந்தியென்னப்படும் வனமாலையை அணிந்தவரும் கதை, சார்ங்கம், சங்கம், சக்ரம், நந்தகமென்னும்கத்தி இவ்வாயுதங்களைத்தரிப்பவரும் ஸர்வவியாபியும் எல்லாவற்றையும்தமக்குள்வைத்துக்கொண்டும், எல்லாவற்றுள்ளும்தாம்அந்தர்யாமியாகப்பிரவேசித்துமிருப்பவருமாகிய ஸ்ரீமந்நாராணர் காப்பாற்றக்கடவர். நாமகீர்த்தனம்செய்யத்தகுந்தவரும் மகிமைபொருந்தினவருமானகேசவரது திவ்யநாமங்கள் ஆயிரமும் ஒன்றும்விடாமல் கூறப்பட்டன.

இந்த ஸஹஸ்ரநாமத்தை நித்தியமாகக்கேட்பவனும், [1]கீர்த்தனம் செய்பவனுமாகிய மனிதன் இம்மையிலும் [2] மறுமையிலும்யாதொரு கெடுதலையும் அடையான்; ப்ராம்மணன் வேதாந்தஜ்ஞானம்பெற்றவனாவான்; க்ஷத்ரியன் வெற்றிபெறுவான்; வைசியன் செல்வம் நிரம்பினவனாவான்; சூத்ரன் ஸுகம்பெறுவான்; தர்மத்தைவிரும்புகிறவன் தர்மத்தையடைவான்; பொருளைவிரும்புகிறவன் பொருளை அடைவான்; போகங்களைவிரும்புகிறவன் போகங்களையடைவான்; ஸந்ததிகளைவிரும்புகிறவன் ஸந்ததிகளையடைவான். எவன் நித்யமும் தூங்கிஎழுந்தபிறகு ஸ்நானமுதலியனசெய்து பரிசுத்தனாகிப் பக்தியுடன் பகவானிடத்தில் மனத்தைச்செலுத்தி வாஸுதேவருடைய இவ்வாயிரம்நாமங்களையும் நன்றாகக்கீர்த்தனம்செய்வானோ அவன் பெரும்புகழையும் மனிதர்களில் முதன்மையாகவிருத்தலையும் அழியாத செல்வத்தையும் எல்லாவற்றிலும் உயர்ந்தசிரேயஸாகியமோக்ஷத்தையும் பெறுவான். ஓரிடத்திலும் அவனுக்குப் பயம் இல்லை. அவன் சக்தியையும் உத்ஸாஹத்தையும் அடைவான்; நோயற்றவனும் சிறந்தஒளியும் வன்மையும் அழகும் குணங்களும் பொருந்தினவனுமாவான். பிணியினால்வருந்துகிறவன் பிணிநீங்கினவனாவான். சிறையில்அடைபட்டவன் சிறையிலிருந்துவிடுபடுவான். பயந்தவன் பயத்திலிருந்துநீங்குவான். ஆபத்தையடைந்தவன் ஆபத்தினின்றும்விடுபடுவான். பக்தியுடன் இவ்வாயிரம்நாமங்களினாலும் புருஷோத்தமானபகவானைத் தினந்தோறும் துதிக்கும்மனிதன் கஷ்டங்

1 ஆரம்பத்தில், 'எதைஜபித்து மனிதன்முக்திபெறுவான்?' என்று தர்மராஜர்கேட்டதனாலும் இங்கு, 'கீர்த்தனம்செய்பவன்' என்பதினாலும், மூன்று வகை ஜபங்கள் குறிப்பிக்கப்படுகின்றன. அவையாவன:—எடுத்துச் சொல்வதும் பிறருக்குக்கேளாமல் ஏகாந்தமாகச்சொல்வதும் மனத்திற்குள்ளேயே சொல்லிக்கொள்வதுமாம். (ச - பா)

2 பரலோகம் சென்ற பிறகும் தீங்குவருவது, யயாதி நஹுஷன்முதலானவர்களால்பிரஸித்தமாதலின் அந்தத்தீங்கும்நேரிடாதென்பது குறிப்பு. (ச - பா)

களை உடனேதாண்டிவிடுகிறான். வாஸுதேவரையடுத்து அவரையே முடிவானபலனென்று உறுதியாகநம்புகிறமனிதன் எல்லாப்பாவங்களும்நீங்கிப் பரிசுத்தமான ஆத்மாவையுடையவனாகிச் சாஸ்வதமான ப்ரம்மத்தைச் சேருவான். வாஸுதேவரிடத்தில் பக்தியுள்ளவர்களுக்கு எவ்விடத்திலும் தீங்குவருவதில்லை; பிறப்பு இறப்பு மூப்புப் பிணிகளின்பயமும் உண்டாவதில்லை. சிரத்தையோடும் பக்தியோடும் கூட இந்தஸஹஸ்ரநாமஸ்தோத்திரத்தைஓதும்மனிதன் ஆத்மஸுகத்தையும் பொறுமையையும் செல்வத்தையும் தைர்யத்தையும் ஞாபகசக்தியையும் புகழையும் அடைவான். புண்யம்செய்து புருஷோத்தமரிடத்தில் பக்தியை அடைந்தவர்களுக்குக் கோபம் இல்லை; பகை இல்லை; பொருளாசையில்லை; கெட்டஎண்ணமில்லை; சந்திரன் ஸூர்யன் நக்ஷத்திரங்களோடுகூடிய மேலுலகமும் இடைவெளியாகிய ஆகாயமும் திசைகளும் பூமியும் கடலும் மஹாத்மாவானவாஸுதேவரது சக்தியினால் தாங்கப்பட்டிருக்கின்றன. தேவர்கள், அஸுரர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், நாகர்கள், ராக்ஷஸர்கள், மற்றுமுள்ள சராசரங்கள் ஆகியஇவ்வுலகமனைத்தும் கிருஷ்ணனுடைய வசத்தில் அடங்கியிருக்கிறது. இந்திரியங்கள், மனம், புத்தி, ஸத்வகுணம், சக்தி, வன்மை, தைரியம், தேகம், ஆத்மா இவையனைத்தும் வாஸுதேவருடைய சரீரங்களென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. சாஸ்திரங்களெல்லாவற்றிற்கும் ஆசாரமே முதலாகநிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. ஆசாரத்திலிருந்துஉண்டானது தர்மம். தர்மத்தினால் ஆராதிக்கப்படுகிறவரும் அதன்பலனைத்தருகிறவரும் துணையுமாயிருப்பவர் அச்சுதர். ரிஷிகளும் பித்ருக்களும் தேவர்களும் பஞ்சமஹாபூதங்களும் அவற்றின்கார்யங்களாகியபோகபோக்யங்களும் ஜங்கமஸ்தாவரங்களாகிய இந்தஜகமனைத்தும் நாராயணரிடமிருந்து உண்டானவை. கர்மயோகம் பக்தியோகம் இவற்றின் அறிவும் ஸாங்க்யமென்னப்படும் ஜ்ஞானயோகமும்தர்க்கமும்வ்யாகரணமுதலானவித்தைகளும் சில்பங்களும் அனுஷ்டிக்கத்தக்க வர்ணாசிரமதர்மங்களும் வேதங்களும் ஸ்மிருதி இதிஹாஸம் புராணமென்னும் சாஸ்திரங்களுமாகிய இந்தஞானமனைத்தும் ஜனார்த்தனரிடமிருந்து உண்டானவை. பெரும்பொருளாகிய ஒருவிஷ்ணு அநேகங்களாகப்பிரிந்திருக்கும் தனித்தனிபூதங்களையும் மூன்று உலகங்களென்னப்படும் பத்தரும் முக்தரும் நித்யருமான மூன்றுவகைச்சேதனர்களையும் வியாபித்து எல்லாப்பிராணிகளுக்கும் அந்தர்யாமியாகி அவற்றின் குற்றங்கள்பற்றாதவராகி எல்லாவற்றையும்காப்பாற்றி அநுபவிக்கிறார். ஸ்ரேய

ஸென்னப்படும்முக்தியையும் மற்றஸுகங்களையும் அடையவிரும்பும் மனிதன் வேதவ்யாஸபகவானால் உரைக்கப்பட்ட பகவானைவிஷ்ணுவின்இந்தஸ்தோத்திரத்தைப் படிக்கக்கடவன். உலகங்களுக்குரீஶ்வரரும் ஜனனமில்லாதவரும் எல்லாவற்றிற்கும்மேலாக ஆனந்தஸ்வரூபமாகப்பிரகாசிப்பவரும் உலகங்களின் உத்பத்திக்கும் லயத்துக்கும் காரணமுமாகியதாமரைக்கண்ணரை உபாஸிப்பவர் எவரோ அவர் தோல்வியடையார். 'நதேயாந்திபராபவம்' என்று இரண்டாம்தரம் சொல்வதனால், இதைஆணையிட்டு உறுதியாகச் சொன்னதாயிற்று. (ப - பா.)

## ஸ்ரீ விஷ்ணுஸஹஸ்ரநாம அகராதியும் பொருளும்.

அக்ரணீ=பக்தர்களை மேற்பதமாகியமுக்திக்குக் கொண்டுபோகிறவர்.

அக்ரஜர்=* [1]முக்தர்கள் அனுபவித்துமகிழும்படி பர்யங்கவித்தையில்சொன்னதுபோல் எல்லாஐஶ்வரியங்களும் நிரம்பி மிக்கஸுகமாக எதிரில் பிரகாசிப்பவர்.

அக்ராஹ்யர்=[2] உலகத்திலுள்ள மண்பொன்முதலிய காரணங்கள் வேலைசெய்பவரால் கையாளப்படுவதுபோல மற்றொருவரால் கையாளப்படாதவர்; தாமேஉபாதானகாரணமும்அதைக்கையாளும் கர்த்தாவுமாயிருப்பவரென்பது.

அக்ரூரர்= [3]யானையைக்காப்பதற்கு ஆயுதங்களைக் கையில்எடுத்தும் முதலையையும் உடனே கொல்லமனமில்லாமல் பொறுத்திருந்தவர்.

அச்யுதர் (101)=[4] தம்மை அடைந்தவர்களைவிட்டு நீங்காதவர்; 'அடைந்தவர்களுக்குத் தவறுதல்வராமலிருக்கும்படிசெய்பவர்' என்பது நிருக்தி.

அச்யுதர் (319)=[5] பிரம்மாதிதேவர்களைப்போல் அவதரிப்பவராயினும் அவர்களைப்போலன்றித் தம்நிலைதவறுமலிருப்பவர்.

அச்யுதர் (557)=[6] வ்யூஹாவதாரத்திலும் தமது ஸ்தானத்திலிருந்துவழுவாதவர்.

---

* இவ்வகராதியில்வரும் குறிப்புக்கள் சங்கரபாஷ்யம்.

1 எல்லாவற்றிற்கும் முன்னேயிருப்பவர்.

2 கர்மேந்திரியங்களினால் அறியக்கூடாதவர்.

3 கோபமில்லாமையினால் கொடுமையில்லாதவர்.

4 தம்ஸ்வரூபத்துக்குள்ளமகிமை முக்காலங்களிலும் நீங்காமலிருப்பவர்.

5 விகாரங்களற்றவர்.

6 'ஸங்கர்ஷணர்' பார்க்க.

அசலர்— [1]துர்யோதனன்முதலான துராத்மாக்களாலும் அசைக்க ஒண்ணாதவர்.

அசிந்த்யர்— [2]முக்தர்களை உவமையாகக்கொண்டும் நிரூபிக்கக் கூடாதவர்.

அசோகர் (337)— [3]துன்பத்தைப் போக்குகிறவர்; இதனால், மயக்கம் பசிமுதலிய ஆத்யாத்மிகபயங்களைப் போக்குவதும் உபலக்ஷணமாகக்கொள்ளப்படும்.

அசோகர் (அல்லது விசோகர்) (637)— [4]நர்தனற்றவன் எவனையும் காப்பாற்றாதுவிடாமையினால் அவன்விஷயமாகப்பின்னே துயரப்படாதவர்.

அணு—மிகநுண்ணியவர்.

அத்புதர்— [5]முக்தர்களெல்லாராலும் எக்காலமும் எல்லாவகைகளாலும் அனுபவிக்கப்பட்டிருந்தும் காணாதுகண்டதுபோல ஆச்சரியப்படத்தக்கவராயிருப்பவர்.

அத்ருதர்— [6]விஶ்வரூபமாயிருக்கும்மேன்மையினால் ஒன்றிலும் கட்டுப்படாதவர்; அவர்நினைத்தது எப்போதும் தடையின்றி நடப்பதனால் ஸமாதியின் தேர்ச்சியை அடையாதவைதிகபுத்ரர்கள்ஸம்ஸாரத்தில் மீண்டுவராமலிருக்கும்படி பரமபதத்தை அடைந்தது அவர் ஸங்கல்பத்தினாலன்றோ? பரமபதம்சேர்ந்தவரை அதைவிட்டு ஸம்ஸாரத்தில் இழியச்செய்யவும் சேதநாசேதனங்களின்ஸ்வரூபங்களை மாற்றவும்சக்தியிருந்தும் அவற்றை அப்படிச்செய்யாமலிருப்பதும் அவருடைய ஸ்வதந்த்ரஸங்கல்பத்தினாலேதான் என்பது.

அத்ருப்தர்— [7]எல்லாவற்றிலும்சிறந்த தமதுசக்தியினால் சிறி

---

1 ஸ்வரூபமும் சக்தியும் ஞானமுதலியகுணங்களும் எப்போதும்மாறாமலிருப்பவர்.

2 எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியாதலின் பிரமாணங்களெல்லாவற்றிற்கும்எட்டாதவர்; அல்லது, பிரபஞ்சத்துக்கு விலக்ஷணமாயிருப்பதினால் இத்தகையரென்று நினைக்கவொண்ணாதவர்.

3 பசி, தாகம், விசனம், மயக்கம், மூப்பு, மரணம் என்கிற ஆறுகுற்றங்களுமற்றவர்.

4 'விசோகர்' ஆனந்தரூபியாதலின் சோகமில்லாதவர்.

5 தம்மைக்கேட்பதும் அடைவதும் தெரிந்துகொள்வதும் அரியனவாகையால் அத்புதமாயிருப்பவர்; அல்லது, உருவத்தினாலும் சக்தியினாலும் செய்கையினாலும் அத்புதமாயிருப்பவர்.

6 எல்லாவற்றிற்கும் ஆதாரமான பூமிமுதலியவற்றையும் தாங்குவதனால் ஒன்றாலும் தாங்கப்படாமலிருப்பவர்.

7 'த்ருப்தர்' ஆத்மானந்தத்தை அனுபவிப்பதனால் எப்பொழுதும் மகிழ்ந்திருப்பவர்.

றும் கர்வமடையாதவர்; அல்லது, த்ருப்தர்' நந்தகோபராலும் யசோதையினாலும் கொண்டாடப்பட்டு மகிழ்ந்திருப்பவர்.

அத்ருஸ்யர்= [1]நினைக்கவும் எட்டாத செய்கையுள்ளவர்.

அதமர்= [2]தாம் யாராலும் அடக்கப்படாதவர்.

அதிஷ்டானர்= [3]கடல்கடையும்போது மந்தரமலை நிலைநிற்கும்படி தாங்கினவர்.

அதீந்த்ரர்=இந்திரனுக்குஇளையவராயினும் ஈசுவரத்தன்மையாலும் அதற்குரியசரித்ரங்களாலும் இந்திரனுக்குமேற்பட்டவர்.

அதீந்த்ரியர்=புலன்களுக்கெட்டாதவர்.

அதுலர்=ஒப்பற்றவர்.

அதோக்ஷஜர்= [4]யாவரும் அனுபவித்து உபயோகித்துக்கொண்டாலும் அமுதக்கடல்போல ஒருகாலும் வற்றிக் கீழேபோகாமலிருப்பவர்; அல்லது, கீழுலகிலும் தம்மகிமை சிறிதும்குன்றாமல் அவதரித்திருப்பவர்.

அந்தகர்= [5]பிரளயகாலத்தில் எல்லாவற்றையும் அழிப்பவர்.

அந்நம்= [6]பகவானை அனுபவிக்கும் சக்தியைப் பகவானால்அளிக்கப்பெற்றவர்களால் அனுபவிக்கப்படும் அமுதாயிருப்பவர்

அந்நாதர்= [7]தம்மையனுபவிப்பவர்களைத் தாமும்போக்கியமாக அனுபவிப்பவர்.

அநகர் (148)= [8]ப்ரபஞ்சத்தில் அவதரித்தும் குற்றங்கள் சிறிதும் அணுகாதவர்.

அநகர் (835)= [9]கர்மவசர்களான ஜீவாத்மாக்களைக்காட்டிலும் விலக்ஷணமானவர்.

---

1 புலப்படாதவர்.

2 'தமர்' தண்டத்தினாலுண்டாகும் அடக்கமாகவுமிருப்பவர்.

3 உலகங்களுக்கு ஆதிகாரணம்.

4 அந்தரிக்ஷமாகிய மேலுலகத்துக்கும் பூமியாகிய கீழுலகத்துக்கும்இடையில் விராட்ருபத்தையெடுத்து வியாபித்திருப்பவர்; அல்லது, வெளிநோக்கத்தைவிட்டு உள்நோக்குமுள்ள இந்திரியங்களுக்குமுன் பிரத்யக்ஷமாக ஆவிர்ப்பவிப்பவரென்னவுமாம்.

5 பிராணிகளுக்கு முடிவைச்செய்பவர்.

6எல்லாராலும் அனுபவிக்கப்படுகிறவர்; அல்லது, பிராணிகளை ஸம்ஹரிப்பவர்.

7 எல்லாஜகத்தையும் ஸம்ஹாரகாலத்தில் உண்பவர்.

8 குற்றமில்லாவர்.

9 துக்கமில்லாதவர்; அல்லது பாவமில்லாதவர்.

அநந்தர்— [1]தேசவரையும் காலவரையும் ஸ்வரூபஅளவும் குணங்களுக்குக்கணக்கும் முடிவுபெறாதவர்.

அநந்தரூபர்— [2]அந்த அந்தப்பக்தர்களைக் காப்பதற்கு அப்போதைக்கப்போது எண்ணிறந்தரூபங்களை எடுத்திருப்பவர்.

அநந்தஸ்ரீ— [3]அடுத்தவர்களுக்குத் தம்மையடையும் வரையிலுள்ள அளவற்றசெல்வங்களை வைத்திருப்பவர்.

அநந்தஜித்— [4]தமது மகிமையின்முடிவை யாருங்காணக்கூடாமலிருப்பவர்.

அநந்தஹுதபுக்போக்தா— [5]அளவற்றமகிமையுள்ள இந்திரனையும் ப்ரம்மாவையும் வைத்திருப்பவர்; அர்ச்சிராதிமார்க்கத்தில் பதினோராவதுபடி இந்திரனும் பன்னிரண்டாவதுபடி ப்ரம்மாவும் கூறப்படுகின்றனர்; யாகங்களில்ஹோமம்செய்வதைப் புசிப்பதனால் இந்திரனை ஹுதபுக் என்றும் ப்ரஜைகளைக்காப்பதனால் ப்ரம்மாவைப் போக்தாவென்றும் சொல்லியது.

அநந்தாத்மா— [6]கூர்மாவதார மூர்த்தியின்மேல் உலகங்களுக்கு ஆதாரமான ஸ்தம்பம்போலநிற்கும் ஆதிசேஷருக்கு ஆத்மாவாக நிற்பவர்.

அநயர்—தாம் யாராலும் நடத்தப்படாதவர்; விரோதிகளால் நடத்தமுடியாதவர்; யுத்தத்தில் வெல்லமுடியாதவரென்பது; அல்லது, உலகங்களுக்குத் தம்மைவிட நன்மையைத்தரும்வகை வேறில்லாமலிருக்கும்படி சிறந்தநன்மையைச் செய்பவர்.

அநர்த்தர்— [7]அற்பபலன்களைவிரும்புகிற பாக்கியக்குறையுள்ளவர்களால் வேண்டப்படாதவர்.

---

1 குணங்களால் அளவுபெறாதவர் என்னவுமாம்.

2 ஆதிசேஷரூபி; அல்லது, எல்லாப்ரபஞ்சரூபமாகவுமிருப்பவர்.

3 அளவற்ற மஹாசக்தியுடையவர்.

4 எல்லாப்பிராணிகளையும் ஜயிப்பவர்.

5 மூன்றுநாமம். அநந்தர்=தேசத்தினாலும் காலத்தினாலும் ஸ்வரூபத்தினாலும் அளவுபடாமையினால் அல்லது ஆதிசேஷரூபியாதலால் அநந்தராகிறார். ஹுதபுக்=ஹோமஞ்செய்ததைப் புசிப்பவர். போக்தா=ப்ரகிருதியை அனுபவிப்பவர்; அல்லது, உலகங்களைக்காப்பவர்.

6 தேசவரையும் காலவரையுமற்று எல்லாப்பொருள்களாகவுமிருக்கும் ஸ்வரூபமுடையவர்.

7 விரும்பினவையெல்லாம் நிரம்பியிருப்பவராதலின் தாம்விரும்பத்தக்க பயன் ஒன்றுமில்லாதவர்.

அநலர் (294)= [1]பலவகைகளால் அநுக்கிரஹித்தும் அடியவர்களுககு அதுபோதாதென்று நினைப்பவர்; இந்தச் சக்தியின் ஒரு சிறிது இருப்பதுபற்றித்தான் அக்னிக்கு அநலன் என்றுபெயர் வந்தது; அக்னியும் எரிவதற்கு எவ்வளவுபோட்டாலும் போதுமென்பதில்லாமல் மேன்மேலும் விறகுமுதலியவற்றை எதிர்பார்க்கிறது; அப்படியே பகவானும் எவ்வளவுகாப்பாற்றியும் இன்னும்காப்பாற்றுவதற்கு எதிர்பார்த்தேயிருப்பவரென்பது.

அநலர்(716)= [2]ஆஸ்ரிதர்களுக்குஎல்லாஎவல்களையும்செய்தும் போதுமென்று நினையாமல், 'நான் இவர்களுக்கு ஒன்றும்செய்யவில்லையே' என்று ஆராமையை மேற்கொண்டவர்; அல்லது, தம்பக்தர்கள்விஷயத்தில் பிறர்செய்யும் பிழையைப்பொறுக்கமுடியாதவர்.

அநாதி= [3]பிரம்மாதிதேவர்களாலும் ஸ்வாமியாக அறியப்படாதவர்; பக்திசெய்த திர்யக்ஜாதிகளுக்கும் வசப்படுகிறவர்; பிரம்மாதிதேவர்களுக்கு அல்பபலன்களைமட்டும் அளிப்பது அவர்கள் மஹாபலத்தை விரும்பாமையினால்தானென்பது.

அநாதிநிதநர்= [4]எக்காலமும் யௌவனப்பருவமாகவேயிருப்பதனால் பிறப்புமூப்புமுதலிய மாறுதலில்லாமல் நித்தியமான திவ்யமங்கள விக்ரஹமுடையவர்.

அநாமயர்= [5]ஸம்ஸாரமென்னும் பெரும்பிணிக்குப் பகையாயிருப்பவர்.

அநிமிஷர்= [6]ஸாதுக்களைக் கண்மூடாதுகவனித்துக்கடாக்ஷிப்பவர்; இமைகொட்டாதவரென்பதனால் மத்ஸ்யாவதாரம்குறிப்பிடப்படுகிறது.

அநிர்த்தேஸ்யவபு (179)= [7]ஐஸ்வர்யம் பலம் ஞானம் வீர்யம் சக்தி தேஜஸ்என்னும் ஆறுகுணங்களும் அளவற்றகடல்கள்போல

---

1 அனமென்னப்படும் பிராணனை அலங்கரிக்கும் ஜீவாத்மாவாயிருப்பவர்; அல்லது, உயிர்களைக்கிரகிப்பவர்; அல்லது, நலமென்னப்படும் மணமில்லாதவர்; அல்லது, போதுமென்பதில்லாதவர்; அனுபவிக்க அனுபவிக்கத் தெவிட்டாதவர்; அல்லது, உலகங்களைஜீவிக்கச்செய்பவர்.

2 சக்திக்கு முடிவில்லாதவர்.

3 தமக்குக்காரணமில்லாதவர்.

4 ஆதியும் அந்தமுமில்லாதவர்.

5 கர்மங்களினால் உண்டான மனநோய்களாலும் வெளிநோய்களாலும் பீடிக்கப்படாதவர்.

6 எப்போதும் விழித்துக்கொண்டிருப்பவர்; அல்லது, மத்ஸ்யாவதாரம் செய்தவர்.

7 பிறரால் அறியமுடியாமையால் இது இவ்விதமென்று சுட்டிக்காட்டமுடியாதஸ்வரூபமுடையவர்.

நிரம்பியிருப்பதனால் திவ்யமங்களவிக்ரஹத்துக்கு உவமை சொல் லக்கூடாதவர்.

அநிர்த்தேஶ்யவபு (662)= [1] அந்த அந்தயுகங்களின் குணங்களை அபிவிருத்தி செய்யத்தக்க உருவங்கள் பலவாகலின் இவ்விதமென்று நிரூபிக்கக்கூடாத திவ்யமங்கள விக்ரஹங்களையுடையவர்.

அநிர்விண்ணர் (436)= [2] சிருஷ்டிமுதலான செய்கைகளையும், அவரவர் வேண்டினபலன்களைக் கொடுப்பதையும், அடிக்கடி வேண்டினவற்றைக் கொடுத்து ஸம்ஸாரவிஷயங்களில் பிடித்துப்பிடித்துத்தம்மையணுகாமல் பயனற்றுப்போகிறவர்களைத் திரும்பவும் வசப்படுத்தப் பெருமுயற்சியையும் செய்வதில் சிறிதும் சோர்வில்லாதவர்.

அநிர்விண்ணர் (893)= [3] அடுத்தவனைப் பெரியஊக்கத்துடன் ஸம்ஸாரமென்னும் படுகுழியிலிருந்து கரையேற்றித் தம்மிடம் சேர்த்தபிறகு அவனைப்பற்றிய கவலையில்லாமலிருப்பவர்.

அநிருத்தர் (187)= [4] அளவிறந்தபிராணிவர்க்கங்களைக் காப்பாற்றுவதில் தடையொன்றுமில்லாத திவ்ய சேஷ்டிதங்களையுடையவர்.

அநிருத்தர் (644)= [5] 'ஜகத்ப்ரபுவான அநிருத்தபகவான் ஜநார்த்தநரென்னும் பெயரோடு பூமியில் வாஸுபாண்டமென்னும்க்ஷேத்திரத்தில் நித்தியாவிர்ப்பாவமாக இருக்கிறார்' என்று சொல்லப்பட்ட அநிருத்தவ்யூகத்தின் அவதாரமான ஜநார்த்தநராயிருப்பவர்.

அநிலர் (236)= [6] யாவரும் உஜ்ஜீவிக்கும்படி செய்பவர்; பகவானுடைய சக்திலேசத்தாலன்றோ காற்றும் அநிலம் என்னப்படுவது?

அநிலர் (818)= [7] பக்தர்களை அனுக்கிரகிப்பதில் தம்மைத் தூண்டுகிறவர் வேண்டாதவர்.

---

1 ப்ரகிருதிக்கு அதீதமாதலின் இன்னது இப்படிப்பட்டது என்று நிரூபிக்கப்படாத ரூபமுள்ளவர்.

2 விரும்பினவையெல்லாம்கைகூடியிருப்பதனால் வெறுப்பில்லாதவர்.

3 விரும்பினவையெல்லாம் நிரம்பியிருப்பதனாலும் ஒன்றும் கிடைக்காமலிருக்கக்காரணமில்லாமையாலும் கவலையற்றிருப்பவர்.

4 அவதாரங்களிலும் யாராலும் தடுக்கப்படாதவர்.

5 நான்குவ்யூகங்களில் ஒருவராகிய அநிருத்தர்; அல்லது, பகைவர்களால் ஒருகாலும் தடுக்கப்படாதவர்.

6 அனுதியாயிருப்பவர்; அல்லது, பிராணநதியாக அன்னங்களைப் புசிப்பவர்: அல்லது, ஒன்றையும் ஆதாரமாகப் பற்றாதவர்.

7 தம்மைஆஜ்ஞாபிக்கிறவர் யாருமில்லாதவர்; அல்லது, எப்போதும் தூங்காமல் ப்ரகாசிக்கும் ஞானஸ்வரூபி; அல்லது, பக்தர்கள் அடைவதற்கு அரியரா யில்லாமல் சுலபராயிருப்பவர்.

அநிவர்த்தீ— [1]ப்ரவிருத்திதர்மத்திலிருப்பவர்களைப்புகை, இரவு, க்ருஷ்ணபக்ஷம், தக்ஷிணாயனமாகிய தூமாதிமார்க்கத்தினால் பித்ருலோகம் சேர்த்துத் திரும்பவும் இவ்வுலகில் பிறப்பிப்பதனால் ஸம்ஸாரத்தைவிட்டு நிவிர்த்திக்கச் செய்யாதவர்.

அநீசர்— [2]ஸ்நானம், அலங்காரம், கோஷ்டிமுதலிய எல்லாக் காரியங்களிலும் பக்தர்களுக்குப் பராதீனமாயிருப்பதனால் ஸ்வதந்திரமில்லாதவர்.

அநுகூலர்— [3]இயற்கையான மகிமையிருப்பதனால் அதைப்பற்றிய வியப்பும் கர்வமும் அகங்காரமுமில்லாமையால் உலகத்துக்கெல்லாம் மேலோடும் ஐஶ்வர்யப்பெருவெள்ளம் வரம்புமீறாது கரையினுள் அடங்கியிருக்கும்படி செய்பவர்; தமது பரத்வத்தைப் பாராட்டாமல் ஆஶ்ரிதர்களனைவருக்கும் அடைய எளியவராயிருப்பவர் என்பது; அல்லது, பக்தர்களுக்கு நன்மைசெய்பவர்.

அநுத்தமர்—தமக்கு மேற்பட்டவர் யாருமில்லாதவர்.

அநேகமூர்த்தி— [4]க்ருஷ்ணாவதாரத்திலும், தாம் வாஸுதேவமூர்த்தியாகவும் ஸங்கர்ஷணமூர்த்தி பலராமராகவும் பிரத்யும்னனும் அநிருத்தனும் புத்திர பௌத்திரர்களாகவும் நான்குவ்யூகங்களாகப் பிரிந்திருந்தமையால் பலதேகங்களுடையவர்; அல்லது, பதினாறுயிரத்துநூறு ஸ்திரீகளின்நடுவில் பதினாறுயிரத்துநூறு திருமேனி கொண்டு விளங்கியதுமாம்.

அப்ரதிரதர்—ஜனார்த்தனரென்னும்பெயருக்குத்தக்கபடிவிரோதிகளைப் பீடிப்பதில் தடுப்பவர் யாருமில்லாதவர்.

அப்ரமத்தர்— [5]ஆஶ்ரிதர்களைக் காப்பதில் ஊக்கம் தவறாமல் இருப்பவர்.

அப்ரமேயர்— [6]பிரம்மாமுதலியவர்களுக்கும் தம் இந்திரியங்களால் அறியக்கூடாதவர்.

அப்ரமேயாத்மா— [7]எண்ணிறந்தவையாதலின் அளவிடப்படாத பொருள்கள் ஒவ்வொன்றிலும் உள்ளும்புறமும் வியாபித்திருப்பவர்;

---

1 தேவாஸுரயுத்தமுதலியவற்றில் புறங்காட்டித் திரும்பிப்போகாதவர்; அல்லது, தர்மத்திலிருந்து விலகாதவர்.

2 தமக்குமேல் ஈசுவரனில்லாதவர்.

3 ஆத்மாவாதலால் யாவருக்கும் அனுகூலமாயிருப்பவர்.

4 அவதாரங்களில் ஸ்வேச்சையாகப் பலதேகங்களையெடுத்திருப்பவர்.

5 கர்மங்களுக்குத்தக்கபலன்களை அளிப்பதில் தவறாதவர்.

6 பிரமாணங்களுக்கும் எட்டாதவர்.

7 அறிவிற்கெட்டாத ஸ்வரூபமுள்ளவர்.

அபராஜிதர் (721)— [1]பஞ்சபாண்டவர்கள் அதிகஸஹாயமில்லாதவர்களாயிருந்தும் துர்யோதனுதியர் நூற்றுவராலும் வெல்லப்படாமலிருக்கும்படி செய்தவர்.

அபராஜிதர்(866)— [2]எங்குமுள்ள எல்லாவற்றையும் நடத்தும் தமது கட்டளை எக்காலத்திலும் எவ்விடத்திலும் எதனுலும் தடைப்படாமலிருப்பவர்.

அபாம்நிதி— [3]கடல் கடையப்படும்போது அதற்காதாரமாகத் தாங்கினவர்.

அபிப்ராயர்— [4]ஸாத்விகதர்மத்தையனுஷ்டித்து நிர்மலராயிருக்கும் அடியார்களினுல் வேறுபலனைவிரும்பாதுதாமேபரமோத்தேஶ்யமாக நினைக்கப்படுகிறவர்.

அம்போநிதி— [5]எல்லாஉலகங்களையும் தாங்கும் பீடம்போன்ற கூர்மரூபியாகக் கடலில் தம்மாலேயே தாம்வைக்கப்படுகிறவர்.

அம்ருத்யு— [6]ம்ருத்யுவைத்தடுப்பவர்; நரஸிம்மமூர்த்தி; ம்ருத்யுவுக்கு ம்ருத்யுவாயிருப்பவர்.

அம்ருதபர்— [7]அம்ருதரூபமான ஹவிஸ்ஸைக்குடிப்பவர்; அல்லது, தம்முடைய அனுஷ்டானத்தை அனுஷ்டித்து நடப்பவர்களுக்குப் பரமபதத்தில் தம்மைஅனுபவிப்பதாகிய அம்ருதமென்கிற பரமானந்தத்தைக் காப்பாற்றுகிறவர்.

அம்ருதர்— [8]முக்தியை அளித்து மூப்பு இறப்புக்களை ஒழிப்பவர்; அல்லது, எக்காலமும் ஸேவித்தாலும் போதுமென்று தோன்

---

1 காமக்குரோதமுதலிய உட்பகைகளாலும் அஸுரர்முதலிய வெளிப்பகைகளாலும் வெல்லப்படாதவர்.

2 பகைவர்களால்வெல்லப்படாதவர்.

3 கடலாயிருப்பவர்.

4 புருஷார்த்தங்களை விரும்புகிறவர்களால் ப்ரார்த்திக்கப்படுகிறவர்; அல்லது, ஸம்ஹாரகாலத்தில் ஜகமனைத்தும் தம்பிடம்வந்தடையும்படி இருக்கத்தக்கவர்.

5 நான்கு ஜலங்களென்று வேதங்களில்சொல்லப்படும் தேவர் மனுஷ்யர் பித்ருக்கள் அஸுரர் இவர்களைத்தாங்குகிறவர்; அல்லது கடலாயிருப்பவர்.

6 அழிவும்அதற்குக்காரணமும் இல்லாதவர்.

7 ஆத்மானந்தமென்னும் அம்ருதரஸத்தைக்குடிப்பவர்; அல்லது, கடல் கடைந்துஉண்டாகிய அமுதம் அஸுரர்களால் அபகரிக்கப்பட்டதை வாங்கி தேவர்களையும் குடிப்பித்துத் தாமும் குடிப்பவர்.

8 அழிவில்லாதவர்.

ருமல் மேன்மேலும் விருப்பத்தைவிளைவித்து அமுதம்போலச் சுவை யுள்ளவராயிருப்பவர்.

அம்ருதவபு— [1]தமது திவ்யமங்களவிக்ரஹமும்அமுதம்போலப் போக்யமாயிருப்பவர்.

அம்ருதாசர்— [2]பக்தர்களுக்குத் தமது குணங்களென்னும் அமுதையூட்டுகிறவர்.

அம்ருதாம்சூத்பவர் — [3]எல்லாத்தாபங்களையும்போக்கிப் புஷ்டியை உண்டாக்குவதும்இறந்தவரைப் பிழைப்பிப்பதுமாகியஅமுதம் நிறைந்த கிரணங்களோடுகூடிய சந்திரனும் தமதுமனத்திலிருந்து உண்டானதுபற்றி இந்தக்குணச்சிறப்புக்களை அடைந்தானென்னும்படி யிருப்பவர்.

அமரப்ரபு—பிரம்மாதி தேவர்களுக்கும் ஸ்ருஷ்டிமுதலான அதிகாரங்களைக்கொடுத்து நடத்துகிறவர்.

அமாநீ— [4]பக்தர்கள்விஷயத்தில் தம்உயர்வை நினையாதவர்; ஆதலாலன்றோ பாண்டவதூதராகச்சென்றது ?

அமிதவிக்ரமர் (519)— [5]அளவிடப்படாத சக்தியையுடையவர்; பக்தர்கள் தியானத்திலும் ஆராதனத்திலும் நினைக்கத்தக்கபிரகிருதி முதலானதத்வங்களெல்லாவற்றையும் தாங்குவதான ஆதாரசக்தியை உடையவரென்பது.

அமிதவிக்ரமர் (647)— [6]திரிவிக்ரமாவதாரத்தில் மூவுலங்களிலும் தமது திருவடிப்பதிப்பு அடங்காமலிருந்தவர்; யமுனாதீரத்தில் த்ரிவிக்ரமாவதாரம் இருக்கிறது.

அமிதாசநர்— [7]இடையர்கள் இந்திரனுக்காகச்செய்த அளவற்ற அன்னராசியைத் தாம் உண்டவர்.

---

1 அழியாததேகமுள்ளவர்.

2 ஆத்மாநந்தமென்னும் அமுதைஉண்பவர்; அல்லது, தேவர்களுக்கு அமுதம்கொடுத்தபிறகு தாமும்அதைஉண்டவர்; அல்லது, பலனழியாதவிருப்பமுள்ளவர்.

3 திருப்பாற்கடல் கடைந்தபோது சந்திரன் உண்டாவதற்குக்காரணமானவர்.

4 ஆத்மாவல்லாதவற்றை ஆத்மாவாக நினையாதவர்.

5 திரிவிக்ரமாவதாரத்தில் அளவிடக்கூடாத மூன்று அடிவைப்புக்களையுடையவர்; அல்லது, அளவற்ற பராக்ரமமுடையவர்.

6 யாராலும் பீடிக்கப்படாத பராக்ரமமுள்ளவர்; அல்லது, அளவற்ற மகிமையுள்ளவர்.

7 ஸம்ஹாரகாலத்தில் அளவற்றஉலகங்களை உண்டவர்.

அமூர்த்தி— [1]பஞ்சபூதமயமான ரூபத்தைவிட வேறு சரீரமுடையவர்; அப்ராக்ருத திவ்யமங்கள விக்கிரகமுடையவரென்பது.

அமூர்த்திமாந்— [2]உருவமில்லாத மூலப்பிரகிருதி ஜீவாத்மா முதலியவற்றிற்கும் ஸ்வாமியாயிருப்பவர்.

அமேயாத்மா (103)— [3]ஆஸ்ரிதர்களுக்கு அநுக்ரஹம் செய்யுமுறை இவ்வளவென்று வரையறுக்கக்கூடாத ஸ்வபாவமுடையவர்.

அமேயாத்மா (181)— [4]பலவகைக்குணங்கள்நிரம்பிஅகாதமான கடல்போலிருப்பதனால் அளவிடக்கூடாத தன்மையுள்ளவர்.

அமோகர். (111)— [5]தமது ஸம்பந்தம் வீண்போகாதவர்.

அமோகர் (156)— [6]தம்மை அடுத்தவர்யாரும் வீண்போகாமலிருக்கச்செய்பவர்; பலிசக்கரவர்த்தி இந்திரன் இருவருக்கும் வித்தியாசமின்றி சிறந்தஅநுக்ரகத்தைசெய்தவரென்பது.

அயோநிஜர்— [7]கர்ப்பத்தில் பிறவாதவர்; ஸாரஸ்வதரென்னும் அவதாரத்தில் பகவானுடைய வாக்கினின்றும் பிறந்ததனால் கர்ப்பத்தில் பிறவாதவர்.

அர்க்கர்— [8]இவர் மகாத்மாவென்றும் மிக்கதர்மிஷ்டரென்றும் அஸுரர்களால் துதிக்கப்பெற்றவர்.

அர்ச்சிதர்— [9]எக்காலங்களிலும் எல்லாப் புண்யக்ஷேத்திரங்களிலுமுள்ளகோவில்களிலும் வீடுகளிலும் பக்தர்கள் கண்ணாற்கண்டு பூஜிப்பதற்கெளிய அர்ச்சாவதாரமெடுத்திருப்பவர்; இந்த அர்ச்சாவதாரம் பரஸ்வரூபம்போல எட்டாததுமன்று; உபேந்திராவதாரம் மனுஷ்யாவதாரமுதலியவற்றைப்போல ஓரிடத்திலும் ஒருகாலத்திலுமாத்திரமிருப்பதுமன்று; எப்போதும் எல்லா க்ஷேத்திரங்களிலும் யாவராலும் பிரத்தியக்ஷமாகக் காணக்கூடியது.

1 கஷ்டரூபம்இல்லாதவர்; அல்லது, தேஹமில்லாதவர்.

2 விஜை உடம்பிலில்லாதவர்.

3 அளவிடக்கூடாதஸ்வரூபமுள்ளவர்.

4 யாராலும் அறியக்கூடாத ஞானமுள்ளவர்.

5 பூஜிப்பவருக்கும் துதிப்பவருக்கும் த்யானிப்பவருக்கும் எல்லாப்பலன்களையும் அளிப்பவர்; அல்லது, தமது ஸங்கல்பம்மாறுதவர்.

6 தமதுஒருசெய்கையும் வீண்போகாமலிருப்பவர்.

7 ‘(579) வாசஸ்பதி’ பார்க்க.

8 பிரம்மாதிதேவர்களால் துதிக்கப்பெற்றவர்.

9 எல்லாலோகங்களாலும் பூஜிக்கப்பட்டு பிரம்மாதிதேவர்களாலும் பூஜிக்கப்பெற்றவர்.

அர்ச்சிஷ்மாந்— [1]பக்தர்களுக்கு மறைந்திருக்கும் தமது பிரபாவத்தை அறியும்படி அவர்களுடைய அகக்கண்களையும் புறக்கண்களையும் திறக்கும் திறமையுள்ள அப்ராகிருதமான பேரொளியுடையவர்.

அர்த்தர்— [2]நன்றாக அறிந்து உறுதியாகப் பக்திசெய்யும் உயர்ந்த அதிகாரிக்குத் தாமே பயனாயிருப்பவர்.

அர்ஹர்— [3]வேறொன்றிலும் விருப்பமில்லாத பக்தர்களுக்குத் தாம் ஒருவரே தகுதியாயிருப்பவர்.

அரவிந்தாக்ஷர்—தாமரைமலர்போன்ற அழகிய திருக்கண்களையுடையவர்.

அரௌத்ரர்— [4]எல்லாவற்றிற்கும்மேலான ஐஶ்வர்யம் இருக்கையிலும் கல்யாணகுணங்களின் குளிர்ச்சியினால் கடுமைதணிக்கப்பட்டு ஸௌம்யமாயிருப்பவர்.

அவ்யக்தர்— [5]மனுஷ்யாவதாரத்தில் மறைந்திருப்பதனால் தம் மகிமை யாருக்கும்வெளிப்படாமலிருப்பவர்.

அவ்யங்கர்— [6]சிக்ஷை வ்யாகரணம் சந்தஸ் நிருக்தம் ஜ்யௌதிஷம் கல்பம்என்னும் ஆறுவேதாங்கங்களும் தம்மிடத்தில் குறைவின்றி நிரம்பியிருப்பவர்.

அவ்யயர்— [7]யாரும்தம்மைவிட்டு விலகாமலிருப்பவர்; முக்தர்கள் அவரைப்பிரிவதில்லை என்பது.

அவிஜ்ஞாதா— [8]ஆஶ்ரிதர்களுடையகுற்றங்களை அறியாதவர்.

அஜர் (96)— [9] தம்மைப்பற்றினவர்கள் தம்மை அடைவதற்கு இடையூறானவற்றை எல்லாம் விலக்குகிறவர்.

அஜர் (206)— [10]மற்றவர்களைப்போல ஜனியாதவர்; தூணில் பிறந்தவர் என்பது குறிப்பு.

---

1 சூரியன்முதலானவர்களுக்கும் ஒளியைக்கொடுக்கும் சிறந்த ஒளியுள்ளவர்.

2 ஸுகஸ்வரூபியாதலின் யாவராலும் விரும்பப்படுகிறவர்.

3 பூஜிக்கப்படுகிறவர்.

4 வினை காமம் குரோதம் என்னும் மூன்று கொடுஞ்செய்கையும் இல்லாதவர்.

5 இவர் இப்படிப்பட்டவரென்று யாராலும் அறியக்கூடாதவர்.

6 ஞானமுதலியகுணங்கள் நிரம்பியிருப்பவர்; அல்லது, புலப்படாதவர்.

7 நாசமற்றவர்; அல்லது, விகாரமற்றவர்.

8 பரப்ரம்மமாகியபகவான் ஞானஸ்வரூபியாதலின் ஞானமுள்ளவரல்லர்.

9 ஜனனமில்லாதவர்.

10 எல்லாவற்றையும் வியாபித்திருப்பவர்; அல்லது, நடத்துகிறவர்.

அஜர் (524)— [1]ப்ரக்ருதி, மஹத், அகங்காரம், ஐந்துபூதங்கள், ஐந்து தன்மாத்ரைகள், ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்துகர்மேந்திரியங்கள், மனம், புருஷனென்னப்படும் ஜீவாத்மா ஆகிய இவ்விருபத்தைந்து தத்வங்களின்முடிவில் இருபத்தாறுவது தத்வமாகவெண்ணப்படுகிறவரும் ப்ரணவத்துக்கு முதலாகிய அகாரத்தின்பொருளுமான ஸ்ரீமந்நாராயணரூபியாயிருப்பவர்.

அஜிதர்— [2]ஜனனமரணமுதலானப்ரக்ருதிகர்மங்களினால் வெல்லப்படாதஅஜிதைஎன்னும் ஸ்ரீவைகுண்டநகருக்குஅதிபதி.

அஶ்வத்தர்— [3]இன்றைக்கிருப்பது நாளைக்கிராதென்னும்படி அநித்தியமானபதங்கள்பெற்ற இந்திரன் சூரியன்முதலானவர்களுள் அனுப்பிரவேசித்து எல்லாவற்றையும்நடத்துகிறவர்; (அஶ்வ:+ஸ்த: என்றுபகுக்க;) 'மேல் வேரும் கீழ் கிளைகளுமுள்ள அநாதியான அஶ்வத்தமென்று ச்ருதியில்சொல்லியபடி கீழுள்ள உலகங்களுக்கெல்லாம் காரணமாக மேலேவிளங்கும் அரசமரம்போலிருப்பவர்' என்பது நிருக்தி.

அஸங்க்யேயர்— [4]எண்ணிறந்த சேதநாசேதனங்களாகிய விபூதிகளையுடையவர்.

அஸத்— [5]துஷ்டர்களுக்கு நீடூழிகாலம் முடிவில்லாதஸம்ஸார துக்கத்தைக்கொடுப்பவர்.

அஹஸ்— [6]தம்மைப்பற்றினவன் கெட்டு இழிவான கதிக்குப் போகாமல் செய்பவர்; அல்லது, அநாதியான அவித்தைஎன்னும் நித்திரையிலிருந்து தம்ஸ்வரூபத்தை அறிவித்துக் கண்விழிக்கச் செய்வதனால் பகல்போன்றவர்.

அஹஸ்ஸம்வர்த்தகர்— [7]பகல்முதலிய பிரிவுகளோடுகூடியகால சக்ரத்தை உருட்டுகிறவர்.

அக்ஷரர் (17)— [8]அனுபவிக்க அனுபவிக்கக் கரைகடந்த கல்

---

1 அகாரப்பொருளாகிய விஷ்ணுவினிடத்திற்பிறந்த மன்மதனுயிருப்பவர்.

2 அவதாரங்களில் யாராலும் ஜயிக்கப்படாதவர்.

3 நாளைக்குமில்லாத அநித்யவஸ்துவாகவுமிருப்பவர்; அல்லது, அரசமரம்போலிருப்பவர்.

4 நாமரூபங்கள்முதலிய பேதங்களற்றிருப்பவர்.

5 பெயர்வடிவமுதலிய அவித்தையோடுகூடிய பிரம்மம்.

6 பகல்போலப் பிரகாசமாயிருப்பவர்.

7 பகலை உண்டாக்கும் ஸூர்யரூபி.

8 அழியாமலிருப்பவர்; அல்லது,கர்மபலனை அனுபவிப்பவர்; ஜீவனும் பிரம்மமும் ஒன்றுதலின் ஜீவனது கர்மபலன் பிரம்மமே அனுபவிப்பதென்பது.

யாணகுணங்கள் மேன்மேலும் புலப்படுவதனல் அனுபவஸுகம் முடிவுபெறுமல் விருத்தியாகும்படி இருப்பவர்.

அக்ஷரர் (482)—எந்தக்காலத்திலும் எந்தத்தேசத்திலும் குணங்களும் ஸ்வரூபமும் குறையாதவர்.

அக்ஷோப்யர் (807)— [1]ஆழ்ந்தகருத்துள்ளவராதலின்யாராலும் மாற்றமுடியாதவர்.

அக்ஷோப்யர் (999)— [2]சரணுகதர்களுக்கு அபயம் கொடுப்பதென்கிற உறுதியான விரதத்திலிருந்து எந்தக்காரணத்தினுலும் அசைக்கமுடியாதவர்; அல்லது, தமதுமகிமையினல் யாராலும்வெல்லக்கூடாதவர்.

ஆத்மயோநி— [3]பாலுடன் சர்க்கரையைச் சேர்ப்பதுபோலத் தம்மை அனுபவிப்பவனைத் தம்மிடம் சேர்ப்பிப்பவர்.

ஆத்மவாந்— [4]ஸுக்ருதத்தைச்செய்யும் ஆத்மாக்களின் ஸ்வரூபம் செய்கைமுதலியவை எல்லாம் தம்மதீனமாகஇருப்பதனல் ஆத்மாக்கள் தம்முடைய சொத்துக்களாக இருப்பவர்.

ஆதாரநிலயர்— [5]தர்மிஷ்டர்களாதலால் உலகங்களைத் தாங்குகிறவர்களாகிய ப்ரஹ்லாதர் விபீஷணர் பாண்டவர்முதலான ஸாதுக்களுகக ஆதாரமாயிருப்பவர்.

ஆதித்யர் (39)— [6]சூரியமண்டலத்திலிருப்பவர்.

ஆதித்யர் (568)— [7]தம்மைச் சொல்லுவதாகிய அகார எழுத்தினுல் அடையத்தக்கவர்; ஆத் இத்ய: என்று பிரிக்க; அகாரம் ஸங்கர்ஷணமந்திரத்துக்குப் பீஜம்; அல்லது, 'ஆதித்யஃ' ஒருபதம்; முன் ஜன்மத்தில் அதிதியாயிருந்ததேவகியின் புத்ரர்.

---

1 காமக்குரோதமுதலியவற்றினுலும் சப்தாதிவிஷயங்களினுலும் அஸுரர்களினுலும் கலக்கக்கூடாதவர்.

2 சக்ராயுதமிருப்பதனுலேயே எதிரிகள் யாராலும் கலக்கக்கூடாதவர்

3 தாமே ஜகத்துக்கெல்லாம் உபாதானகாரணமாயிருப்பவர்.

4 தமக்கு வேறு ஆதாரமின்றித் தம்மகிமையை ஆதாரமாகக்கொண்டிருப்பவர்.

5 எல்லாவற்றையும் தாங்குவனவாகிய பஞ்சபூதங்களுக்கும் ஆதாரமாயிருப்பவர்.

6 ஸூர்யமண்டலத்திலிருக்கும் பொன்மயமானபுருஷர்; அல்லது, பன்னிரண்டுஆதித்யர்களில் ஒருவரானவிஷ்ணு; அல்லது, அதிதிஎன்னப்படும் பூமிதேவிக்குஅதிபதி; அல்லது, சூரியன் ஒருவனே அநேக ஜலபாத்திரங்களில்பிரதிபலிப்பதுபோலப் பரமாத்மா ஒருவரே அநேக சரீரங்களில் தோற்றுவதனல் ஸூர்யன்போன்றவர்.

7 அதிதியிடத்தில் வாமனராக அவதரித்தவர்.

ஆதிதேவர் (335)=உலகத்துக்கு முதற்காரணமாயிருந்து உலகம்படைப்பதுமுதலிய விளையாட்டுக்களினால் மகிழ்ந்திருப்பவர்; இதனால், லீலாவிபூதியாகிய பிரகிருதியை நடத்துவது தெரிவிக்கப்படுகிறது.

ஆதிதேவர் (491)= [1]பிரம்மாதிதேவருக்கும் முந்தினவரும் பிரகாசிப்பவருமானவர்.

ஆநந்தர்= [2]வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாத பேரானந்தமுடையவர்.

ஆவர்த்தநர்=ஸம்ஸாரத்தை ஏற்றத்தைப்போலக் கீழும்மேலுமாகத் திருப்புகிறவர்.

ஆஸ்ரமர்= [3]ஸ்ரமத்தைப் போக்குகிறவர்; புண்யலோகங்களிலிருந்து மீண்டு ஸம்ஸாரத்தில்வந்தவரைப் பிரம்மஞானம் நிரம்பிய வைஷ்ணவகுலங்களில் பிறப்பித்து அவர்கள் அதுவரையில் அலைந்ததனால் உண்டான ஸ்ரமத்தைஆற்றுகிறவர் என்பது.

இந்த்ரகர்மா= [4]சரணாகதர்களான இந்திராதி தேவர்களுக்காக அஸுரர்களை வஞ்சிப்பதுமுதலிய காரியங்களைச் செய்தவர்.

இஜ்யர்= [5]காம்யபலனைக் கருதுகிறவர்களால் இந்திராதிதேவதாரூபியாக ஆராதிக்கப்படுகிறவர்; தேவர்களுக்கு அந்தர்யாமியாதலால் தேவபூஜைகளனைத்தும் அவரையே சேருகின்றன.

இஷ்டோவிசிஷ்டர்= [6]பிரளயகாலத்தில் தம்உதரத்தினால்வகிக்கப்பட்டயாவரும் வித்தியாஸமின்றித் தாய்போல விரும்பும்படி இருப்பவர்.

ஈசாநர்=சராசரங்கள் எல்லாவற்றையும் நடத்துகிறவர்; ஸம்ஸாரிகளுக்கும் முக்தர்களுக்கும் பரிசுத்தஸ்வரூபமிருந்தாலும் அது

---

1 எல்லாப்பிராணிகளையும் தாம்கிரகிப்பவரும் அவற்றிற்குத் தேவதையுமானவர்.

2 ஆனந்தஸ்வரூபமானவர்.

3 ஸம்ஸாரமென்னும் வனத்தில் திரிபவர்களுக்கு ஆசிரமம்போல இளைப்பாறுமிடமாயிருப்பவர்.

4 இந்திரனைப்போன்ற செய்கையுள்ளவர்: உலகங்களுக்கு ஈசுவரராயிருப்பவரென்பது.

5 யஜ்ஞபலன்களைக் கொடுப்பவராதலின் யஜ்ஞங்களினால் ஆராதிக்கப்படுகிறவர்.

6 இரண்டு நாமம்; இஷ்டர்=ஆனந்தரூபியாயிருப்பதனால் எல்லாராலும் விரும்பப்படுகிறவர்; அல்லது, யாகங்களினால் பூஜிக்கப்படுகிறவர். விசிஷ்டர்=அந்தர்யாமியாயிருப்பதினாலும் தம் உயர்வினாலும் எல்லாவற்றிலுஞ்சிறந்தவர்.

முறையே மறைந்தும் மறைவிலிருந்து வெளிப்பட்டும் இருப்பது போலன்றி எல்லாவற்றையும் நடத்தும் ஸர்வசக்தி எக்காலமும் குறையாமலிருப்பவர் என்பது.

ஈஶ்வரர் (36)= [1]சுத்தஸ்வரூபத்தில் பார்க்கிலும் அவதாரங்களில் ஈஶ்வரத்தன்மை மிக்கவிசேஷமாகப் பயன்படும்படி இருப்பவர்.

ஈஶ்வரர் (75) = [2]அளவில்லாத நித்யவிபூதியிலும் தாம் நினைத்தது தடைப்படாமலிருக்கும்படி ஸத்யஸங்கல்பரானவர்.

உக்ரர்= [3]தர்மவிரோதிகள்விஷயத்தில் கொடியவராயிருப்பவர்.

உத்தாரர்= [4]அஸுரர்களால் உண்டான ஆபத்தினின்றும் ப்ரமமாதிதேவர்களைக் கரையேற்றுபவர்; அல்லது, தேவகாரியத்துக்காக யோகநித்திரையை விட்டெழுந்து முயலுகின்றவர்.

உத்தாரணர்= [5]யானையையும் முதலையையும் குளத்திலிருந்து கரையேற்றினவர்.

உத்பவர் (375)= [6]கயிற்றினால் கட்டப்பட்ட அவருடைய உருவத்தைத் தியானிப்பவர்களுக்கு ஸம்ஸாரபந்தத்தை ஓடச்செய்பவர்.

உத்பவர் (796)= [7]மோக்ஷத்தை உபதேசிப்பதாக வெளியில் காண்பிப்பதினால் ஸம்ஸாரத்தைக் கடந்தவர்போலிருப்பவர்.

உதாரதீ= [8]யாவராலும் ஆஶ்ரயிக்கப்படத்தக்க சிறந்தஞானமுள்ளவர்; ஸர்வஜ்ஞர்.

உதீர்ணர்= [9]வெளிக்கண்ணாலும் காணப்படும்படி வெளிப்படையாக அவதரிப்பவர்; அவதாரங்களினால் தம் ஸ்வரூபத்தை ஸந்தேகமற வெளிப்படுத்துகிறவரென்பது.

---

1 இயற்கையான ஐசுவரியமுள்ளவர்.

2 ஸர்வசக்தியுள்ளவர்.

3 சூரியன்முதலானவர்களும் அச்சத்துடன் தம்தம்வேலைகளைநடத்தும்படி கண்டிப்பாக ஆஜ்ஞையைச்செய்பவர்.

4 ஸம்ஸாரக்கடலிலிருந்து கரையேற்றுபவர்: அல்லது, எல்லாவற்றிலும் சிறந்தவர்.

5 ஸம்ஸாரக்கடலிலிருந்து கரையேற்றுகிறவர்.

6 ப்ரபஞ்சமுண்டானதற்குக்காரணமானவர்; அல்லது, ஸம்ஸாரப்பற்று இல்லாதவர்.

7 உத்க்ருஷ்டமான அவதாரங்களைச் செய்தவர்; அல்லது, ஜனனமில்லாதவர்.

8 'வாசஸ்பதி' பார்க்க.

9 எல்லாப் பிராணிகளுக்கும் மேலானவர்.

உபேந்த்ரர்— [1]த்வாதசாதித்யர்களில் இந்த்ரனுக்கு இளையவராக அவதரித்த பன்னிரண்டாவது ஆதித்யராகிய உபேந்த்ரராயிருப்பவர்.

ஊர்த்வகர்— [2]எல்லாவற்றிலும் உயர்ந்தவர்.

ஊர்ஜிதசாஸனர்— [3]ப்ரம்மா இந்த்ரன்முதலிய தேவர்களாலும் தாண்டமுடியாத உறுதியானகட்டளையையுடையவர்.

ஊர்ஜிதர்—விரோதிகளைக் கொல்வது கட்டுவதுமுதலிய செய்கைகளில் சிறந்தவன்மையுள்ளவர்; நமுசிமுதலான பகைவர்களை அடக்கினவரென்பது குறிப்பு.

ஏகபாத்— [4]ஒருபாகத்தினால் அவதரித்திருப்பவர்; முழுரூபத்தின்பெருமை எண்ணவும் ஒண்ணாதென்பது.

ஏகர்— [5]மகிமையில் தமக்கொப்பாக எண்ணக்கூடியவர் மற்றொருவருமில்லாமையினால் ஒருமையாயிருப்பவர்; எவ்வகையிலும் ஒப்பில்லாதபகவானை யாருடனும்சேர்த்து எண்ணக்கூடாமையால் ஒருவரென்று சொல்வது.

ஏகாத்மா— [6]சேதநாசேதந வர்க்கங்களனைத்துக்கும் ஒருவரே சேஷியும் ஸ்வாமியும் ஆளுகிறவரும் ஆதரிப்பவருமாயிருப்பவர்.

ஓஜஸ்தேஜோத்யுதிதரர்— [7]பலத்தையும் பிறரைவெல்லும் திறமையாகிய பராக்ரமத்தையும் அல்லது கீர்த்தியையும் ஒளியையுமுடையவர்.

ஔஷதம்— [8]ஸம்ஸாரமென்னும் கொடிய விஷத்தைநிவ்ருத்தி செய்யும் மருந்தாயிருப்பவர்.

க்ரது— [9]அக்னிஷ்டோமமுதலிய ஸோமபானமுள்ள யாகங்கள் எழுவகைகளாலும் ஆராதிக்கப்படுகிறவர்.

---

1 'இந்திரனுக்கு மேற்பட்டவரென்னவுமாம்.

2 எல்லாவற்றிற்கும்மேலிருப்பவர்.

3 உறுதியான வேதம்ஸ்மிருதிஎன்னும் கட்டளையையுடையவர்.

4 உலகமனைத்தும் அவரது ஒருபாகத்தில் அடங்கியிருப்பது.

5 பேதமில்லாதவர்; ஒருவரே ஸத்யமாயிருப்பவரென்பது.

6 ஒரே ஆத்மா; வியாபித்திருப்பவர்.

7 'ஓஜஸ்=பலமுள்ளவர்களின் பலமாயிருப்பவர். தேஜஸ்=பராக்ரமமுள்ளவர்களின் பராக்ரமமாயிருப்பவர். த்யுதிதரர்=அறிவென்னும் ஒளியுள்ளவர்' என்று மூன்றாகவும் சொல்லலாம்.

8 ஸம்ஸாரரோகத்துக்கு மருந்தாயிருப்பவர்.

9 யூபஸ்தம்பம் நாட்டிச் செய்யப்படும் யாகங்களாயிருப்பவர்.

க்ரமர்— [1]அளவற்ற நித்யைஶ்வர்யத்தினால் எல்லாவற்றையும் வியாபித்து அபிவிருத்தி அடைந்திருப்பவர்.

க்ராமணீ— [2]பரமபதத்தில் நித்யஸூரிகளின் கூட்டத்திற்கு அதிபதியாயிருப்பவர்.

க்ருசர்— [3]பஞ்சினும் காற்றினும் மிக்கலேசாயிருப்பவர்; இதனால், எங்கும் தடையின்றிச் செல்லும்படியான லகிமாஎன்னும் ஐஶ்வர்யம் சொல்லப்பட்டது.

க்ருதகர்மா— [4]அஸுரர்கள் மோசம்போவதற்காகவே அவர்களின் நாஸ்திகாசாரங்களைத் தாமும் அனுஷ்டித்தவர்.

க்ருதலக்ஷணர்— [5]தாம்அனுக்ரஹிக்கத்தக்கவர்களுக்குத்தாமே அடையாளம் செய்திருப்பவர்.

க்ருதஜ்ஞர் (83)—[6] பூஜைமுதலிய சிறிய உபசாரத்தையும் தமக்கு உபகாரமாக நினைத்து அதை என்றும் மறவாதவர்; பகவானுக்கு அடிமைபூண்டிருப்பதே ஜீவாத்மாக்களின் இயற்கை என்பதை மறந்து அவித்தையினால் ஸ்வதந்த்ரதை ஏற்றிக்கொண்டு நடக்கும் ஸம்ஸாரிகள் புண்ணியவசத்தினால் தற்செயலாக ஏதாவது ஓர் உபசாரம் தமக்குச் செய்தாலும் அதைப்பேருதவியாக மறவாமல் நினைத்துக்கொண்டு அவர்களைக் காப்பாற்றுகிறவர்.

க்ருதஜ்ஞர் (536)—[7] ஸகரபுத்ரர்கள் அபராதம் செய்திருந்தும் அவர்களின் ஸந்ததியான அம்சுமான் தம்மைவணங்கின நல்வினையை மட்டுமே அறிந்தவர்.

க்ருதாக்ருதர்— [8]போகம் ஐஶ்வர்யமுதலிய அநித்யபலன்களைத் தரும் ப்ரவ்ருத்திதர்மமாகவும் நித்திய பலனான மோக்ஷத்தைத்தரும் நிவ்ருத்தி தர்மமாகவும் இருப்பவர்.

---

1 வியாபித்தவர்; அல்லது, ஸ்ருஷ்டியில் உலகம் வியாபிப்பதற்குக் காரணமானவர்.

2 பிராணிகளின் கூட்டத்தை நடத்துகிறவர்.

3 உருவமில்லாதவர்.

4 கார்யங்களெல்லாம் முடிந்தவர்; ஆகவேண்டுவது ஒன்றுமில்லாதவரென்பது; அல்லது, தர்மமென்னும் கர்மத்தைச் செய்தவர்.

5 நித்யஜ்ஞானரூபியாக இலக்கணம் கூறப்பட்டவர்; அல்லது, சாஸ்திரங்களைச் செய்தவர்; அல்லது, எல்லாப்பொருள்களுக்கும் தனித்தனியே இலக்கணங்களைச் செய்தவர்; அல்லது, தம்மார்பில் ஸ்ரீவத்ஸமென்னும் அடையாளத்தையுடையவர்.

6 பிராணிகளின் புண்யபாவங்களாகிய செய்கைகளை அறிகிறவர்; அல்லது, பத்ரம் புஷ்பமுதலிய அல்பங்களையளிப்பவருக்கும் மோக்ஷத்தையளிப்பதனால் நன்றியறிபவர்.

7 காரியமான பிரபஞ்சமாகவும் ஆத்மாவாகவுமிருப்பவர்.

8 கார்யமாகவும் காரணமாகவுமிருப்பவர்.

க்ருதாகமர் (661)— [1]சாஸ்திரங்களை உண்டுபண்ணினவர்.

க்ருதாகமர் (795)— [2]நாஸ்திக அநுஷ்டானத்தை ஸ்திரப்படுத்துவதற்காகப் புத்தாகமம் ஜைநாகமமுதலிய சமயநூல்களைச் செய்தவர்.

க்ருதாசிஸ்— [3]தம்திருக்கல்யாணகுணங்களினால் உலகங்களைச் செழிப்பிப்பதில் ஆசையுள்ளவர்; அல்லது, இடைச்சேரியிலுள்ள நெய் வெண்ணெய்முதலியவற்றை விரும்பினவர்.

க்ருதாந்தக்ருத்— [4]யமனைப்போன்ற ஹிரண்யாக்ஷனென்னும் மஹாஸுரனை அறுத்தவர்; அல்லது, வராஹஸ்ம்ருதியிலும் வராஹ புராணத்திலும் தமது ஸித்தாந்தத்தை வெளிப்படுத்தினவர்.

க்ருதி— [5]ஸம்ஸாரிகளுக்குத் தம்மைப்பூஜிக்க எண்ணமுண்டாவதற்குக் காரணமாகிய ஸுக்ருதத்தையும் அவர்மேல் அநுக்ரகம் வைத்துத் தாமேகொடுப்பவர்.

க்ருஷ்ணர் (58)— [6]ஸ்ருஷ்டிமுதலிய லீலைகளின் ரஸத்தினால் எப்போதும் மகிழ்ந்திருப்பவர்.

க்ருஷ்ணர் (554) — [7]கார்முகில்போலக் கறுத்தநிறமுள்ளவர்; வராஹாவதாரமுதலியவற்றில் இந்தநிறம் விசேஷமாகக் கூறப்பட்டிருக்கிறது.

க்ரோதக்ருத்— [8]காஸ்யபபிரார்த்தனைக்குமுன் க்ஷத்திரியர்கள் மேல் கோபஞ்செய்தவர்.

க்ரோதஹா— [9]கோபத்தையொழித்தவர்; க்ஷத்திரியர்களையேழு முறைவதஞ்செய்தபிறகு அந்தக்கோபத்தைக் காசியபர்வேண்டின மாத்திரத்தில் ஒழித்தவர் என்பது குறிப்பு.

---

1 சுருதிஸ்மிருதிமுதலான சாஸ்திரங்களை வெளியிட்டவர்.

2 வேதத்தை உண்டுபண்ணினவர்.

3 விருப்பங்களற்றவர்.

4 தம்மால் செய்யப்பட்ட உலகத்துக்கு ஸம்ஹாரத்தைச் செய்பவர்; அல்லது, யமனை ஜயிப்பவர்.

5 முயற்சியாயிருப்பவர்; அல்லது, செய்கையாயிருப்பவர்; அல்லது, ஸம்ஹாரம் செய்வதனால் ஹிம்ஸையாயிருப்பவர்; அல்லது, எல்லாம் தாமாயிருப்பதனால் எல்லாச் செய்கைகளுக்கும் ஆதாரமானவர்.

6 ஸச்சிதானந்த ரூபமாயிருப்பவர்; அல்லது, கருமைநிறமுள்ளவர்.

7 வ்யாஸ ரூபியானவர்.

8 துஷ்டர்கள்மேல் கோபஞ்செய்தவர்; அல்லது, 'க்ரோதக்ருத் கர்த்தா' என ஒன்றாகவும் கொள்ளலாம்; கோபிக்கும் அஸுரர்முதலியவர்களைச் சேதிப்பவர்.

9 ஸாதுக்களுக்குக் கோபத்தைப் போக்குகிறவர்.

க= [1]எல்லாரிடங்களிலும் பிரகாசிப்பவர் ; அழுக்கானவற்றில் வஸித்தாலும் பிரகாசிப்பவர்.

கண்டபரசு= [2]ருத்ரருடைய யுத்தத்தைக் கண்டித்த கோடாலி என்னும் ஆயுதத்தை உடையவர்.

கதாக்ரஜர்= [3]கதனென்னும்யாதவனுக்கு முன்பிறந்தவர் ; கதனென்பவன் வஸுதேவர்மனைவிகளில் ஒருத்தியாகிய ஸுநாமை என்பவளின் புத்ரன் ; கிருஷ்ணனுக்கு இளையவன்.

கதாதரர்= [4]ப்ரளயகாலாக்னிபோல நான்குபக்கமும் பொறிகளை விசிறிச் சத்ருஸம்ஹாரம்செய்து உலகத்தை ஸந்தோஷப்படுத்துவதனால் கௌமோதகிஎன்று பெயர்பெற்ற சிறந்தகதையைத்தரிப்பவர்.

கதிதர்= [5]சொல்லப்பட்டவையும் சொல்லப்படப் போகின்றவையுமான குணங்கள் நிரம்பிஇருப்பவராக எல்லாச் சாஸ்திரங்களிலும் சொல்லப்பட்டவர்.

கதிஸத்தமர்= [6]சிறந்ததர்மமார்க்கத்தை உபதேசித்தவராதலின் தர்மமார்க்கோபதேச விஷயத்தில் மிகவும் ஆப்தர்.

கநகாங்கதீ= அப்ராகிருதமாகத் தோள்வளைகள்முதலிய திவ்ய பூஷணங்களை எப்போதும் அணிந்திருப்பவர் ; இங்கு, 'கனக' என்பதற்கு அப்ராகிருததிவ்யம் என்பதுபொருள்.

கபஸ்திநேமி= [7]கிரணங்களால் பிரகாசிக்கும் ஆயிரம் முனைகளோடுகூடிய சக்கரத்தை உடையவர்.

கபிரவ்யயர்= [8]அவ்யய : கபி=மாறுதல் ஒன்றுமில்லாதவராக ஸுகத்தைக் காப்பாற்றுகிறவர் ; அல்லது, மாறுதல் ஒன்றுமில்லாத நித்யஸுகத்தை அனுபவிப்பவர்.

---

1 ஸுகமென்றபொருள்படுவதான, 'க' என்னும் சொல்லால் துதிக்கப்படுகிறவர்.

2 பரசுராமாவதாரத்தில் சத்துருக்களைக் கண்டிக்கும் கோடாலி என்னும் ஆயுதமுடையவர் ; அல்லது, சிவரூபி ; அல்லது, அகண்டபரசு=யாராலும் கண்டிக்கப்படாத பரசுவையுடையவர்.

3 மந்திரத்தினால் முன்னே ஆவிர்ப்பவிக்கிறவர் ; அல்லது, கதன்என்பவனுக்குத்தமையனார்.

4 புத்திதத்வரூபமாகிய கௌமோதகிஎன்னும் கதையைதரிப்பவர்.

5 வேதங்களால் ஒருவரே பரதத்வமென்று கூறப்பட்டவர்.

6 எல்லாருக்கும் கதியாகவும் மிகஉயர்ந்தவராகவுமிருப்பவர்.

7 வட்டமாயிருக்கும் கிரணங்களின் நடுவில் ஸூர்யரூபமாயிருப்பவர்.

8 இரண்டுநாமம். கபி=சூரியகிரணங்களினால் ஜலத்தை இழுப்பவர் ; அல்லது, வராகாவதாரமெடுத்தவர். அவ்யயர்=பிரளயகாலத்தில் உலகமெல்லாம் அடங்குமிடமாயிருப்பவர்.

கபிலர்— [1]சுற்றிலும் மின்னிக்கொண்டிருக்கும் மின்னலின் நடுவில் விளங்கும் நீருண்டமேகம்போலப் பரந்தஜ்ஜ்வலியாகிய நித்யவிபூதியின் நடுவில் விளங்குகிறவர்.

கபிலாசார்யர்— [2]கபிலரென்னும் ஆசார்யராயிருப்பவர்; புகையில்லாத தணல் நிறமுள்ளவராதலின் கபிலர் என்றும், ஸாங்கியசாஸ்திரத்தினால் தத்வஞானத்தைப் பரவச்செய்ததுபற்றி ஆசார்யரென்றும் சொல்லப்படுகிறார்.

கபீந்த்ரர்— [3]ராமாவதாரத்தில் தமது மஹிமைக்கு ஒவ்வாத மானிடவடிவத்தை விளையாட்டாக எடுத்துக்கொண்டு புகழ்க்கும் மிக வேற்றுமையான வானரஉருவத்தை எடுத்துக்கொண்ட தமதுதாஸர்களான தேவர்களுக்கு இந்த்ரராயிருந்தவர்.

கபீரர்— [4]அகாதமாயிருப்பவர்; யாருக்கும்புலப்படாத ஈச்வர மகிமை உபநிஷத்தினால்மட்டும் வெளிப்படும்படி இருப்பவர்; அநாதியாகிய அஜ்ஞானத்தினால் கலங்கியிருக்கும் ஸம்ஸாரியும் தேற்றாங்கொட்டையால் தேற்றப்பட்ட தண்ணீர்போலத் தெளிந்துபோகிறானென்றால் இயற்கையாகவே எப்போதும் பிரகாசிக்கும்பகவான் பிரகாசிப்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ என்பது கருத்து.

கபீராத்மா— [5]ப்ரம்மாதிதேவர்களும் ஆழங்கண்டறியக் கூடாத ஸ்வரூபமுள்ளவர்.

கர்த்தா (316)— [6]தம் கோபத்திற்குக் காரணமான கார்த்தவீர்யார்ஜுனனைத் துணித்தவர்.

கர்த்தா (382)— [7]ஜீவர்களுக்குச் செய்கைகளை உண்டுபண்ணுவதில் தாமே சுதந்திரமாகிறப்பவர்; பலத்தை அநுபவிப்பதற்குரிய அதிகாரியான ஜீவன் தன்னுடைய இன்பதுன்பங்களைத் தான் எப்படிகவனிப்பனோ அப்படியும் அதற்குமேலாகவும் ஜீவனது அந்த அந்த நிலைமைகளையும் பகவான் கவனிப்பவர் என்பது.

---

1 கபிலநிறமுள்ள வடவைத்தீயாகக் கடலிலிருப்பவர்.

2 'மஹர்ஷி' பார்க்க.

3 வராகரூபியும் எல்லாருக்கும் ஈசுவரருமாயிருப்பவர்; அல்லது, வானரர்களுக்கு ஈசுவரராகிய ராமர்.

4 ஞானம் ஐசுவரியம் பலமுதலிய அளவற்ற குணங்களினால் அகாதமாயிருப்பவர்.

5 தமது ஸ்வரூபமும் சித்தமும் யாராலும் காணக்கூடாதவர்.

6 உலகத்தைப் படைத்தவர்; 'க்ரோதக்ருத்', பார்க்க.

7 ஸ்வதந்த்ரர்.

கரணம்—[1]அடியார்கள் தம்மையடைவதற்குத் தாமே சிறந்த கருவியாயிருப்பவர் ; அறிவுக்குக் கருவிகளான ஞானேந்திரியங்களும் செய்கைக்குக் கருவிகளான கர்மேந்திரியங்களும் பகவானுடைய சக்தியின் ஒருதிவலே சேர்ந்தனல் கரணங்களென்னப்படுகின்றன.

கருடத்வஜர்—கருடனைக் கொடியாகவுடையவர் ; இது ஸர்வே ஶ்வரருக்கே சிறப்பாயுள்ள இலக்கணம்.

கவி—எல்லாவற்றையும் பார்ப்பவர் ; ஸர்வஜ்ஞர்என்பது.

கஹநர் (384)—[2]ஜீவர்களுடைய ஸுகதுக்கங்களைத் தம்முடையவையாக நினைப்பதாகிய மஹாகுணத்தில் கரைகடந்தவர்.

கஹநர் (548)—[3]இழிவதற்கரியவர் ; உட்பொருள்கள் வெளியே காணப்படும்படி தெளிவாயிருப்பினும் கருங்கடல் இழிவதற்கு அரிதாயிருப்பதுபோல உபநிஷத்தினல் குணங்கள் அறியப்பட்டாலும் அளவற்றிருப்பதனல் கிரஹிக்கக்கூடாமலிருப்பவர் என்பது.

காந்தர் (297)—தமது வடிவழகு மென்மைமுதலிய குணங்களினல் யாவராலும் விரும்பப்படுகிறவர்.

காந்தர் (660)—[4]யாவராலும் விரும்பத்தக்கவர் ; அதனலல்லவோ காமதேவரென்னும் இவர், அப்ஸரஸினல் பூஜிக்கப்படுவது ?

காமக்ருத்—[5]அவரவர்விருப்பப்படியே போகமோக்ஷமுதலிய பலன்களைக் கொடுப்பவர் ; ' தமது திருவடித்தாமரைகளில் ஞானிகளுக்கு விருப்பத்தைத் தாமேசெய்கிறவர் ' என்பது நிருக்தி.

காமதேவர்—[6]விரும்பினவற்றையெல்லாம் அளிப்பவர் ; 'எல்லாருக்கும் வேண்டினவற்றையெல்லாம் கொடுக்கும்பகவான் காமதேவர் என்னும் பேரோடு இமயமலையைச்சார்ந்து அப்ஸரஸினல் பூஜிக்கப்பட்டிருக்கிறர் ' என்று கூறப்பட்டுளது.

காமப்ரதர்—விரும்பினவற்றையெல்லாம் கொடுப்பவர் ; தம்மை விரும்பினவர்களுக்குத் தம்மையும் மற்றச்சிறியபலன்களைவிரும்பினவர்களுக்கு அவற்றையும் அவரவர்விருப்பப்படி அளிப்பவர்என்பது.

---

1 உலகத்தின் உற்பத்திக்குக் கருவியாயிருப்பவர்.

2 தம்முடைய ஸ்வரூபமும் சக்தியும் செய்கைகளும் அறியக்கூடாமலிருப்பவர்.

3 இழியமுடியாதவர்; அல்லது, எல்லாவற்றிற்கும் தாம் ஸாக்ஷியாக இருப்பதனல் அறியக்கூடாதவர்.

4 அழகான தேகமுள்ளவர் ; அல்லது, பிரம்மாவுக்கும் முடிவைச் செய்கிறவர்.

5 காமனெனப்படும் பிரத்யும்னனை உண்டுபண்ணினபிதா.

6 எல்லாராலும் விரும்பப்பட்ட ஈசுவரர்.

காமபாலர்— [1]தாம்கொடுத்தபலன்களைக் காப்பாற்றுகிறவரான காமதேவர்என்னும் அர்ச்சாவிக்ரகம்.

காமர்— [2]ஸௌலப்யம் ஔதார்யம் தயைமுதலிய ஆத்மகுணங்கள்பற்றியும் யாவராலும் விரும்பப்படுகிறவர்; இந்தக்குணங்களில் சிறிதுபெற்றதினாலேதான் மன்மதனுக்கு உலகத்தை மயங்கச்செய்யும் தன்மையிருப்பது.

காமஹா— [3]தம்குணங்களில் இழிந்தவர்களுக்கு மற்றெல்லா விஷயங்களிலும் விருப்பத்தைக்கெடுப்பவர்.

காமீ— [4]குறைவின்றிக்கொடுக்கச் சிறந்தபலன்களெல்லாம் தம்மிடத்தில் நிரம்பியிருப்பவர்.

காரணர்— [5]இந்திரியங்களாகியகருவிகளால் ஜீவன்களுக்கு அவ்வவற்றின்செய்கைகளை உண்டுபண்ணுகிறவர்; இந்திரியங்களுக்கும் அதிஷ்டானதேவதைஎன்பது.

காலநேமிநிஹா — [6]காலசக்ரத்தின் நேமியாகிய அம்சத்தை என்னப்படும் கலிகல்மஷத்தைத் தம்மிடம் சேர்ந்தமாத்திரத்தில் அழிப்பவர்; இதற்காகவே பலக்ஷேத்திரங்களில் அவதரித்திருப்பவரென்பது.

காலர்— [7]குணவிசேஷங்களினால் சராசரங்களனைத்தையும் தம்மிடத்தில் சேர்ப்பித்துக்கொள்ளுகிறவர்.

கிம்— [8]தந்தம் மனோரதங்களை அடைவதற்குவிரும்பி யாவரும் ஒருகாரணமுமின்றித் தெரிந்துகொள்ள விரும்பும்படியிருப்பவர்.

குண்டலீ— [9]தம்திருமேனிக்குத்தகுதியான குண்டலமுதலிய திவ்யபூஷணங்களை எக்காலமும் அணிந்திருப்பவர்.

---

1 விரும்பினவர்களின் விருப்பங்களைக் காப்பாற்றுகிறவர்.

2 மிக்கஅழகானவர்; புருஷார்த்தங்களை விரும்புகிறவர்களால விரும்பப்படுகிறவர்.

3 மோக்ஷத்தைக் கருதும் பக்தர்களுக்கு ஸம்ஸாரப்பற்றுக்களைப் போக்குகிறவர்; அல்லது, விரோதிகளின் எண்ணங்களைக்கெடுப்பவர்

4 விரும்பினவையெல்லாம் நிரம்பினவர்.

5 மூலகாரணமும் நிமித்தகாரணமுமாயிருப்பவா.

6 காலநேமிஎன்னும் அஸுரனைக்கொன்றவர்.

7 எல்லாவற்றையும் எண்ணுகிறவர்; ஸ்ருஷ்டியிலுள்ள எல்லாப்பொருள்களின் கணக்குக்களையும் அறிந்திருப்பவர் என்பது.

8 விசாரிக்கப்படும் பிரம்மமாயிருப்பவர்.

9 ஆதிசேஷரூபியானவர்; அல்லது, ஸூர்யன்போலப் பிரகாசிக்கும் குண்டலங்களையுடையவர்; அல்லது, ஸாங்க்யம் யோகம்ஆகிய இரண்டு மகர குண்டலங்களையுடையவர்.

குணப்ருத்— [1]தம்ஸங்கல்பத்தினால் எல்லாநிலைமைகளிலுமிருக்கும் எல்லாப்பொருள்களையும் தமதுகுணம்போலத் தம்மிடத்தில் வைத்துத் தாங்குகிறவர்; எல்லாம் உட்பட்டிருப்பதாகிய ஈசித்வமென்னும் ஐஶ்வர்யம் சொல்லப்பட்டது.

குந்தர்— [2]ஞானம்வைராக்யமுதலிய மூற்படிகளேறினவர்களுக்குப் பரபக்தி பரஜ்ஞானம் பரமபக்திகளாகிய மேற்படிகளைக் கொடுப்பவர்; அல்லது, அழிக்கப்பட்டபாவம் திரும்பிஅணுகாமலிருக்கும்படி விலக்குகிறவர்.

குந்தரர்— [3]குருக்கத்திமலர்போலச் சுத்தமாயிருப்பவர்; அல்லது, குந்தம்என்னப்படுவதாகிய பாதத்வஞானத்தைக் கொடுப்வர்; அல்லது, 'கும்' என்னப்படும்பாவத்தைப் போக்குபவர்.

குப்தர்—[4] பகவானுடையமகிமையைஅறிந்தபூர்வாசார்யர்களால் ரக்ஷிக்கப்பட்டவர்; அவர்களின் ஸம்ப்ரதாயமின்றி மற்றெவ்வகையிலும் அறியக்கூடாதவர் என்பது.

கும்பர்—[5] அவரவர்கண்ணால்கண்டு பழகினஉருவங்களுக்கொப்பான வடிவழகுமுதலியவற்றினால் பக்தர்களால் விரும்பப்படுகிறவர்; அல்லது, கு என்னப்படும்பூமியாகிய க்ஷேத்ரங்கள் ஆலயங்கள்முதலியவற்றில் தியானத்திற்கும் ஆராதனத்திற்கும் விஷயமாகும்படி பிரகாசிப்பவர்; அல்லது, ஜனனமரணமாத்திரங்களினால் ஸ்வல்பஸம்பந்தமுள்ள பூமியில் யமபடர்முதலிய பயங்களைப்போக்கும் மகாப்பிரபாவத்தோடு பிரகாசிப்பவர்.

குமுதர் (596)— [6]பிரம்மாமுதலிய எல்லாப்பிராணிகளுக்கும் உரிய சப்தஸ்பர்சமுதலான போகங்களுக்குஇடமாதாலால் கு (பூமி) என்னப்படும் ப்ரகிருதிமண்டலத்திலுள்ள சேதனர்களுக்குப் போகங்களையளித்து மகிழ்ந்திருப்பவர்.

---

1 ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாரங்களுக்குக் காரணமாகிய ஸத்வரஜஸ்தமோ குணங்களைவகிப்பவர்.

2 குந்தமலர்போல அழகான அங்கமுடையவர்; ஸ்படிகம்போலத் தெளிவாயிருப்பவர் என்பது; அல்லது, பரசுராமாவதாரத்தில் பூமியைக் கசியபருக்கு யாகதக்ஷிணையாகக் கொடுத்தவர்; அல்லது, பூமியில் க்ஷத்ரியர்களில்லாமல் கண்டித்தவர்.

3 குருக்கத்திமலர்போலச் சுத்தமானதர்மபலன்களை அளிப்பவர்; அல்லது, குந்தமலர்போன்ற தர்மபலன்களை அங்கீகரிப்பவர்; அல்லது, ஹிரண்யாக்ஷனைக் கொல்லுவதற்காக வராகரூபமெடுத்துப் பூமியைப்பெயர்த்தவர்.

4 வாக்குக்கும் மனத்திற்கும்எட்டாமல் மறைந்திருப்பவர்.

5 குடம்போல எல்லாவற்றிற்கும் ஆதாரமாயிருப்பவர்.

6 பூமியில் மகிழ்ந்திருப்பவர்.

குமுதர்(813)— [1]பூமியென்னப்படும்ப்ரக்ருதிமண்டலத்திலேயே மகாத்மாக்களுடன் சேர்ந்து மகிழ்ந்திருப்பவர்; அல்லது, முக்தியின் பூமியாகிய பரமபதத்தைக்கொடுப்பவர்; (கு=பூமி, மு=முக்தி.)

குரு— [2]வேதங்களினால் அவரவர் அதிகாரங்களை உபதேசித்ததனால் அவர்களுக்கு ஆசார்யர்.

குருர்க்குருதமர்— [3]எல்லாவித்தைகளையும் பிரம்மாமுதலானவருக்கும் உபதேசித்ததனால் ஆசார்யர்களுக்கும் பரமாசார்யர்.

குவலேசயர்— [4]ஸம்ஸாரமுள்ளநாள்வரையிலும், 'கு' என்னப்படும் ப்ரகிருதிமண்டலத்தில் பிறந்தும் இறந்தும் இழிவாகச்சுழன்றுகொண்டும் தம்தேகங்களுக்கும் இந்திரியங்களுக்கும் தாமே அதிகாரிகளென்று நினைத்துக்கொண்டுமிருக்கும் சேதனர்களை அப்படியே நடத்திக்கொண்டு அந்தர்யாமியாயிருப்பவர்.

குஹ்யர்— [5]பரமோபநிஷத்தினால்மட்டும் அறியத்தக்கதும் வெளிப்படையாகப் புலப்படாததுமான திவ்யமங்களவிக்ரஹத்தோடு கூடினவர்.

குஹர்—[6] ஜீவர்களின் இன்பதுன்பங்களைத் தாமடைந்து மாறுவதுமுதலியவகைகளால் உலகமனைத்தையும் ரக்ஷிப்பவர்.

கேசவர்— [7]கறுத்துச்சுருண்டு சேர்ந்து இணங்கியிருக்கும் அழகிய கூந்தலுடையவர்.

கேசவர் (654)— [8]'கிலேசங்களைப் போக்குபவராகியகேசவர்இந்தப் பூலோகத்தில் மதுரைஎன்னும் பெயருள்ள மகாக்ஷேத்திரத்தி

---

1 பூபாரத்தைஒழித்துப் பூமியை மகிழ்விப்பவர்.

2 'தேவப்ருத்' பார்க்க.

3 இரண்டுநாமம். குரு=எல்லாக்கல்விகளையும் கற்பிப்பவர்; அல்லது, எல்லாருக்கும் தந்தை. குருதமர்=ப்ரம்மாமுதலானவர்களுக்கும் ப்ரம்மஜ்ஞானத்தின் ஸம்ப்ரதாயத்தைப் பிரவ்ருத்திப்பித்தவர்.

4 பூமியைச்சுற்றி இருக்கும் கடலில் சயனித்திருப்பவர்; அல்லது, குவலமென்னப்படும் இலந்தைப்பழத்தின்நடுவில் இருக்கும் தக்ஷகனைஇருப்பவர்; தக்ஷகனும் அவருடையபரிவாரமென்பது; அல்லது, பூமியில்நகரும் ஸர்ப்பஜாதியாகிய ஆதிசேஷன்வயிற்றின்மேல் சயனித்திருப்பவர்.

5 ரகசியமான உபநிஷத்தினால்மட்டும் அறியக்கூடியவர்; அல்லது, குகையென்னப்படும் ஹிருதயாகாசத்தில் வைக்கப்பட்டவர்.

6 மாயையினால் எல்லாவற்றையும் மறைப்பவர்.

7 அழகியகூந்தலையுடையவர்; அல்லது, க, அ, ஈச என்னப்படும் ப்ரம்மவிஷ்ணுமகேசுவரர்களாகிய மும்மூர்த்திகளையுடையவர்; அல்லது, க, ஈச என்னும் ப்ரம்மருத்திரர்களைத் தம்வசத்தில் வைத்திருப்பவர்; அல்லது, கேசி என்னும் அஸுரனை வதஞ்செய்தவர்.

8 சூரியன்முதலானவர்களிடத்திலுள்ள கிரணங்களுக்குரியவர்; அல்லது, க, அ, ஈச'என்னப்படும் ப்ரம்ம விஷ்ணு சிவசக்திகள் மூன்றுக்கும் இருப்

லும் காசியிலும் இரண்டுரூபமாயிருக்கிறார்' என்று சொல்லப்பட்ட அர்ச்சாவதாரமாகிய கேசவர்.

கேசிஹா= கேசியென்னும் அஸுரனைக் கொன்றவர்.

கோப்தா (498)= [1]எல்லாவித்தைகளையும் காப்பாற்றுகிறவர்.

கோப்தா (600)= [2]இம்மையிலுள்ள கர்மபலன்களனைத்தையும் ரக்ஷித்தவர்.

கோபதி (497)= [3]வேதங்களும் தேசபாஷைகளுமாகிய வாக்குக்கள் எல்லாவற்றையும் நடத்துகிறவர்.

கோபதி (599)= [4]போகபூமியான ஸ்வர்க்கத்திற்கும் ஸ்வாமி.

கோவிதாம்பதி= [5]வேதங்களையறிந்தஞானிகளால் ஞானமென்னும் யஜ்ஞத்தினால் ஆராதிக்கப்பட்டு அவர்களைக்காப்பாற்றுகிறவர்.

கோவிந்தர் (189)= [6]தேவர்கள் செய்யும் துதிகளாகிய வாக்குக்களைப் பெறுகிறவர்.

கோவிந்தர் (543)= [7]பூமியைத் திரும்பவும் அடைந்தவர்.

கோஹிதர்= [8]ஸம்ஸாரமென்னும்வித்துவிளையும்இடமாதலால் கோ (பூமி) என்னப்படும் ப்ரகிருதிக்குப் பலவிதப் படைப்புக்களினால் வரையறையை உண்டுபண்ணுகிறவர்.

சக்திமதாம்ஸ்ரேஷ்டர்= [9]சிறந்த சக்தியையுடைய தேவர்கள் முதலானவர்களுக்கும் மிகச்சிறந்தவர்.

சக்ரகதாதரர்= [10]சக்ரம் கதைமுதலிய திவ்யாயுதங்களை உடையவர்; ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், நிக்ரஹம், அனுக்ரஹம்ஆகிய

---

பிடமானவர்; அல்லது, பிரம்மாவும் சிவனும் தமதுபாகத்திலிருந்து உண்டாகச்செய்தவர்.

1 உலகங்களைக்காப்பவர்.

2 உலகத்தைரக்ஷிப்பவர்; அல்லது, மாயையினால் தம்முடையஸ்வரூபத்தை மறைப்பவர்.

3 கிருஷ்ணவதாரத்தில் பசக்களை மேய்த்தவர்; அல்லது, பூமிதேவியின் கணவர்.

4 பூமிக்குப்பதி.

5 வேதவாக்கை அறிந்தவர்களுக்கு ஸ்வாமியாயிருப்பவர்.

6 நஷ்டமாக மறைந்துபோன பூமியை எடுத்தவர்.

7 கோக்களென்னப்படும் வேதாந்தவாக்குக்களினால் அறியப்படுகிறவர்.

8 கிருஷ்ணவதாரத்தில் கோவர்த்தனமேந்திக் கோக்களைக்காத்தவர். அல்லது, பாரத்தை ஒழித்துப் பூமிக்கு அனுகூலம்செய்தவர்.

9 சக்தியுள்ளப்ரம்மாதிதேவர்களுக்கும் மிகுந்தசக்தியுள்ளவர்.

10 மனஸ்தத்துவமாகிய சக்கரத்தையும் புத்திதத்துவமாகிய கதையையும் லோகரக்ஷணத்திற்காகத்தரிப்பவர்.

ஐந்துசக்திகளை உருக்கொண்டவையான சங்கம், சக்கரம், கதை, சார்ங்கம், நந்தகம்என்னும் ஐந்துதிவ்யாயுதங்களையும் திவ்யபூஷணங்களைப்போலவே எப்போதும் தரித்துக்கொண்டிருப்பவர் என்பது; அல்லது, பரமேஷ்டி, புருஷன், விஸ்வன், நிவ்ருத்தி, சர்வன் என்று ஐந்துவிதமாகப் பகுக்கப்பட்ட பரமாத்ம சக்திகளின் வடிவங்களாகிய பஞ்சாயுதங்களைத்தரிப்பவர்.

சக்ரீ (908) = [1]ஸுதர்சனமென்னும் சக்கரமுதலிய திவ்யாயுதங்களை எப்போதும் தரிப்பவர்.

சக்ரீ (995) [2]தம்மை ஆஸ்ரயித்ததேவர்களுக்கு விரோதிகளான ராக்ஷஸர்களையும்அஸுரர்களையும்கொன்று,அவர்களின் ரத்தத்தினல்சித்திரவர்ணமுள்ளதும் ஜ்வாலைகளோடுகூடினதுமான ஸுதர்சனமென்னும் சக்கரத்தை வகிப்பவர்.

சங்கப்ருத்= [3]பாஞ்சஜன்யமென்னும்சங்கைத் தம்திருப்பவளஇதழின் அம்ருதத்தினல் போஷிப்பவர்; அஸாதாரணமான சின்னமான திவ்யசங்கம் உடையவர்என்பது.

சசபிந்து = [4]கெட்டவழி போகிறவர்களை அழிப்பவர்.

சத்ருக்நர் = [5]விஷயங்களில் பிரவ்ருத்திப்பதனல் ராவணன் போலவே பகைகளாயுள்ள இந்திரியங்களை விவேகமென்னும் அம்பினல் அடக்குகிறவர்.

சத்ருஜிச்சத்ருதாபநர் = [6]தமது திவ்யசக்தியினல் பூரிக்கப்பட்டுச் சத்ருக்களைஜயித்தவர்களாகிய ககுத்ஸ்தர் புருகுதஸர்முதலியோர்களைக்கொண்டு பகைவரை வருத்துகிறவர்.

சதமூர்த்தி = [7]அர்ஜுனனுக்கு விஸ்வரூபதர்சனம் தந்தருளியபடி எண்ணிலாவுருவங்களையுடையவர்.

---

1 அகங்காரதத்வரூபமான ஸுதர்சனமென்னும் சக்கரத்தை எல்லா உலகங்களையும்காப்பதற்காகத் தரித்திருப்பவர்.

2 மனத்தத்துவமாகிய ஸுதர்சனமென்னப்படும் சக்கரத்தையுடையவர்; அல்லது, ஸம்ஸாரசக்ரமானது தமது ஆஜ்ஞையினலே சுழலும்படி செய்பவர்.

3 தாமஸாகங்காரமாகிய பாஞ்சஜன்யமென்னும்சங்கத்தை வகிப்பவர்.

4 முயல்போன்ற களங்கத்தையுடைய சந்திரன்; அதாவது, சந்திரன் போல எல்லாவற்றையும் போஷிப்பவர்; ஆனந்ததீர்த்தர்.

5 தேவர்களுக்குச் சத்ருக்களான அஸுரர்களைக் கொல்லுகிறவர்.

6 இரண்டுநாமம். சத்ருஜித்=தேவசத்ருக்களான அஸுரர்களை ஜயிப்பவர். சத்ருதாபநர்=அவர்களைத்துன்புறச்செய்கிறவர்.

7. ஞானரூபியாயிருந்தும் மாயையினல் பலவுருவங்களாகத் தோற்றுகிறவர்.

சதாநந்தர்— [1]தாமும் பிராட்டியும் ஒருவர்மேல் ஒருவர் வைத்திருக்கும் ப்ரேமரஸாதிசயத்தினால் பேரானந்தம் கரைகடந்து மேன்மேலும் பெருகிக்கொண்டிருப்பவர்.

சதாநநர்— [2]அர்ஜுனனுக்கு விஶ்வரூபம் காட்டினபோது அநேகமுகங்களுடையவர்.

சதாவர்த்தர்— [3]அநேகம் சுழல்களையுடையவர்; தமது அளவற்ற ஐஶ்வர்யப்பெருக்கு குறைவுபடாது மேன்மேலும் அதிகரிக்க அதை ஸௌலப்யமானது அடக்குவதுபற்றி உள்ளேயே பலசுழல்களிட்டுக்கொண்டிருப்பது என்பது; நதிவேகத்தை அடக்கினாற்போலத் தமதுஐஶ்வர்யம் அடக்க அடக்கச் சுழல்கள் சுழித்து மேன்மேலும் விருத்தியாகும்படி இருப்பவர்.

சதுர்க்கதி— [4]உபாஸிப்பவர்கள்செய்யும் பக்தியின் தாரதம்யத்தை அனுஸரித்து இந்திரபதம், பிரம்மபதம், கைவல்யம், மோக்ஷம் ஆகிய நான்குவகைக்கதிகளைக் கொடுப்பவர்.

சதுர்த்தம்ஷ்ட்ரர்— [5]வ்யூகங்களுக்கு ஆதாரமான பரவாஸுதேவரூபத்தில் நான்குகோரப்பற்களையுடையவர்; இது மகாபுருஷலக்ஷணம்.

சதுர்ப்பாவர்— [6]வாஸுதேவர் ஸங்கர்ஷணர் ப்ரத்யும்னர் அநிருத்தர் என்னும் நான்குவ்யூகங்களிலும் உலகத்துக்குப் பிரயோஜனமாயுள்ள நான்கு செய்கைகளை வெளிப்படுத்துகிறவர்; ஜாக்ரத்ஸ்வப்ன ஸுஷுப்தி துரியம்என ஒவ்வொன்றும் நந்நான்காகப்பகுக்கப்படுவதனால் பதினாறுகஏற்படும் வாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்ன அநிருத்தமூர்த்திகளில் உலகம்படைப்பது சாஸ்திரம்கொடுப்பதுமுதலிய நான்குபிரயோஜனங்களை வெளிப்படுத்துகிறவர்என்பது.

---

1 ஒரே ஆனந்தம் பலகாரணங்கள்பற்றிப் பலவகைகளாகப் பிரிந்திருப்பதனால் அனேக ஆனந்தங்களுடையவர்.

2 பலஉருவங்கள் இருப்பதனாலேயே பலமுகங்களையுடையவர்.

3 தர்மத்தைரக்ஷிப்பதற்காக அநேக அவதாரங்களையெடுப்பவர்; அல்லது, தேகத்திலுள்ள நாடிகளிலும் ப்ராணரூபியாகி ஸஞ்சரிப்பவர்.

4 நான்கு வர்ணங்களுக்கும் நான்கு ஆசிரமங்களுக்கும் தஞ்சமாயிருப்பவர்.

5 நான்கு கோரப்பற்களையுடையவர்; இது நரஸிம்மாவதாரம்; அல்லது ஞானம், யோகம், க்ரியை, சரியை ஆகிய நான்கு கொம்புகளையுடையவர்.

6 தர்மார்த்தகாமமோக்ஷங்களென்னும் நான்கு புருஷார்த்தங்களுக்கும் காரணமாயிருப்பவர்.

சதுர்ப்பாஹு = [1]வ்யூகங்களுக்குக் காரணமான பரஸ்வருபமாகிய வாஸுதேவராக நான்குகைகளோடு தேவகிகர்ப்பத்திலிருந்து அவதரித்தவர்.

சதுர்ப்புஜர் = நான்குகைகளையுடையவர்; இதுவும் பரமான வாஸுதேவமூர்த்தியின் லக்ஷணம்.

சதுர்மூர்த்தி = [2]கிருஷ்ணனாகிய விபவாவதாரத்திலும் அதற்குக்காரணமான வ்யூகங்களிலிருப்பதுபோலவே ஸங்கர்ஷண வாஸுதேவ பிரத்யும்ன அநிருத்த மூர்த்திகளாக யதுவம்சத்தில் அவதரித்திருப்பவர்.

சதுர்வ்யூஹர் (140) = [3]முன் 123-வதாகிய, 'மஹாதபஸ்' என்னும் நாமத்துக்குமுன் சொல்லப்பட்ட பிரயோஜனங்களுக்காக ஆறு குணம் ஸமமாகச்சேர்ந்தும் இரண்டு இரண்டு குணங்கள் அந்த அந்தக் கார்யத்துக்குத்தக்கபடி தலையெடுத்துமிருக்கும் நான்குவகையடையாளங்களினால் வேறுபாடுள்ள அங்கங்களும் நிறமும் ஆபரணங்களும் ஆயுதங்களும் வாகனங்களும் த்வஜமுதலியவைகளும் பொருந்தி ஜாக்ரத்ஸ்வப்நஸுஷுப்திதுரியம்என்னும் நான்குநிலைமைகளைப் பகுத்து அடைந்திருப்பவையான முன் சொல்லிய திவ்யமங்கள மூர்த்திகளினால் தாமே தம்மை நான்காகவகுத்துக்கொண்டிருப்பவர்; அநிருத்தர் ஜாக்ரதவஸ்தை, ப்ரத்யும்நர் ஸ்வப்நாவஸ்தை, ஸங்கர்ஷணர் ஸுஷுப்த்யவஸ்தை, வாஸுதேவர் துரியாவஸ்தை.

சதுர்வ்யூஹர்(773) = [4]வ்யூகங்களிலிருப்பதுபோலவே விபவாவதாரத்திலும் நான்குபிரிவுகளிலும் ஞானம் சக்தி பலம் ஐஶ்வர்யம் வீர்யம் தேஜஸ் இந்தஆறுகுணங்களும் வாஸுதேவரூபத்தில் ஸமமாக நிரம்பியும் மற்றமூன்றிலும் இரண்டிரண்டு தலையெடுத்துமிருப்பவர்.

சதுர்வேதவித் = [5]நான்குவேதங்களையும் அறிந்தவர்களுக்கும் வியூஹாவதாரங்களிலும் விபவாவதாரங்களிலும் வெளிப்படுத்தப்

---

1 நான் தகைகளையுடையவர்.

2 விராட்ஸ்வரூபம், ஸூத்ராத்மா, அவ்யாக்ருதம் (அவித்தை,) துரியம் என நான்கு உருவங்களோடு இருப்பவர்; அல்லது, வெண்மை, செம்மை, பசுமை, கருமை ஆகிய நான்குநிறமுள்ள மூர்த்திகளோடிருப்பவர்.

3 வாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தரென்னும் நான்குவ்யூகங்களையுடையவர்.

4 சரீரபுருஷன் சந்தபுருஷன் வேதபுருஷன் மஹாபுருஷனென்று ஐதரேயோபநிஷத்தில்சொல்லப்பட்ட நான்குபிரிவுகளையுடையவர்.

5 நான்குவேதங்களின் பொருளையும் அறிந்தவர்.

பட்ட தம்முடையமகிமையென்னும்பெருங்கடலில் ஒருதுளிஅளவே தெரியும்படி இருப்பவர்.

சதுரஸ்ரர்= [1]மூலமேயென்று கதறின யானைக்காக ஆடையும் ஆபரணங்களும் பூமாலைகளும் தளரும்படி சென்றும் முதலையின்மேல் கோபித்தும் கார்யங்களைப் பழுதில்லாமல் செய்தவர்; ஆஸ்ரிதருக்காகப் பரபரப்பது உசிதந்தான் என்பது.

சதுராத்மா (139)= [2]வாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்ன அனிருத்தர்களென்னும் நான்கு மூர்த்திகளையுடையவர்.

சதுராத்மா (775) = [3]அவ்வவ்வதிகாரிகளின் தாரதம்யத்துக்கு ஏற்றபடி ஜாக்ரத ஸ்வப்ன ஸுஷுப்தி துர்யமென்னும் நான்கு நிலைமைகளிலும் நான்கு உருவங்களாகி ஸ்தூலமாகவும் ஸூக்ஷ்மமாகவும் பிரகாசிப்பவர்.

சந்த்ராம்சு= [4]தியானிப்பவர்களுக்குக் களைப்பைத் தீர்த்துச் செழிப்பையுண்டாக்குவதனால் சந்திரன்போன்றவொளியுள்ளவர்.

சந்தநாங்கதீ=ஆநந்தத்தைக்கொடுக்கும் தோள்வளைகள் முதலிய திவ்யாபரணங்களையும் மிகுதியாக அணிந்திருப்பவர்.

சப்தஸஹர்= [5]தெளிவாக உச்சரிக்கமாட்டாத திர்யக்ஜாதிகளின் துக்கசப்தத்தையும் பெரியபாரம்போலப் பொறுப்பவர்; கஜேந்த்ராழ்வான் முதலையின்வாயிலகப்பட்டு மூலமேயென்று கதறினதை வருத்தத்தோடு கேட்டவரென்பது.

சப்தாதிகர்= [6]சொல்லுக்கு எட்டாதவர்; ஆதிசேஷனுடைய அநேகநாக்களாலும் வேதங்களின் அநேகசாகைகளாலும் ஸரஸ்வதியினாலும் அவர்மகிமையைச் சொல்லமுடியாதென்பது.

---

1 மனிதர்களுக்கு அவரவர் கர்மங்களுக்குத்தக்கபடி ஸரியானபலன்களைக் கொடுப்பவர்.

2 ப்ரம்மா, தக்ஷர்முதலான ஸ்ருஷ்டி கர்த்தர்கள், காலம், ப்ராணிகள் ஆகிய இந்நான்குவகை ஸ்ருஷ்டிக் கருவிகளையும் விஷ்ணு, மனுமுதலானவர்கள், காலம், பிராணிகள் ஆகிய நான்குவகை ரக்ஷணக்கருவிகளையும் ருத்ரன், காலம், யமன்முதலானவர்கள், ப்ராணிகள் ஆகிய நான்குவகைஸம்ஹாரக் கருவிகளையுமுடையவர்.

3 காமக்ரோதமுதலியவை இல்லாமையினால் தேர்ந்த மனமுள்ளவர்; அல்லது மனம், புத்தி, அகங்காரம், சித்தம் இந்நான்கு உருவங்களாக இருப்பவர்.

4 ஸம்ஸார தாபத்தினால்வருந்தினவருக்குச் சந்திரகிரணம்போலமகிழ்ச்சியைத்தருகிறவர்.

5 எல்லாவேதங்களாலும்கோஷிக்கப்படுவதனால் எல்லாச்சப்தங்களையும் தாங்குகிறவர்.

6 சப்தத்தினால்சொல்வதற்குரியஜாதிமுதலியவைஇல்லாமையால் சப்தத்தைக்கடந்தவர்.

சம்பு= [1]யாவரும் அச்சமின்றி ஒன்றாகக்கலந்து பழகக்கூடிய ஸௌலப்யம்வடிவழகுமுதலான குணங்களை வெளிப்படுத்திப்பேரின்பத்தைவிளைவிப்பவர்.

சமர்=[2]காமம், க்ரோதம், பயமுதலியவற்றை அடக்குவதற்கு உபாயத்தை உபதேசிப்பவர்.

சர்ம=ஸுகரூபமாயிருப்பவர்; தாமே பலனாகவுமிருப்பவரென்பது.

சர்வர்= [3]தம்சரீரங்களாயுள்ள ப்ராணிகளின்தீங்குகளைச் சிதற அடிப்பவர்.

சர்வரீகரர்= [4]பகைவர்களைப்பிளக்கும் சங்கம், சக்ரம், கதை, சார்ங்கம், நந்தகமென்னும்பஞ்சாயுதங்களையும் கஜேந்திரரக்ஷணத்திற்காகக் கையில்எடுத்துக்கொண்டவர்.

சரணர்=தம்மையடைவதற்குத் தாமே உபாயமாகவிருப்பவர்; துயரப்படுகிறவர்களின் துயரத்தைப் போக்குகிறவர் என்பது.

சரபர்= [5]வரம்புமீறினவர்களை அழிப்பவர்.

சரீப்ருத்= [6]உபாஸகனுடையஹ்ருதயகமலத்திலிருந்து தமக்குச்சரீரமான அந்தஉபாஸகனைப்போஷிப்பவர்; அவருடையகல்யாண குணங்களை த்யானிப்பதே பக்தர்களுக்குஅபிவ்ருத்தியென்பது.

சரீரபூதப்ருத்= [7]தமதுசரீரமாயிருக்கும் பிரகிருதிமகதகங்கார முதலிய தத்துவங்களெல்லாவற்றையும் வகிப்பவர்.

சலர்= [8]தம்மையடுத்த பாண்டவர்முதலியோரின் காரியத்திற்காகத் தமதுசொல்லையும் ஏற்பாட்டையும் விட்டுவிலகுகிறவர்; பீஷ்மருக்காக ஆயுதமெடுத்தது குறிப்பிடப்படுகிறது.

---

1 பக்தர்களுக்கு ஸுகத்தையுண்டாக்குகிறவர்.

2 ஸந்யாஸிகளுக்குச் சாந்தியை ஞானத்திற்குக்காரணமென்று சொல்லுகிறவர்; அல்லது, எல்லாப்பிராணிகளையும் அடக்குகிறவர்.

3 ஸம்ஹாரகாலத்தில் எல்லாப்ரஜைகளையும் ஸம்ஹரிப்பவர்.

4 ஸம்ஸாரத்திலிருப்பவருக்கு ராத்திரியாகிய ஆத்மஸ்வரூபத்தைத் தெரிவிப்பவர்; அல்லது, ஞானிகளுக்கு ராத்திரியாகிய ஸம்ஸாரத்தையுண்டுபண்ணுகிறவர்.

5 சரீரங்களில் ஆத்மாவாகவிளங்குகிறவர்.

6 அன்னரூபமாகவாவது ப்ராணரூபமாகவாவது ப்ராணிகளின்தேகங்களைக் காப்பாற்றுகிறவர்; அல்லது, தம்மாயையினால் அநேகசரீரங்களைஎடுப்பவர்.

7 சரீரத்துக்குக் காரணமான பஞ்சபூதங்களைப் பிராணரூபியாகித்தாங்குகிறவர்.

8 காற்றுமுதலிய உருவங்களினால் சலிப்பவர்.

சாணூராந்த்ரநிஷூதநர்—தேவர்களுக்கும் உலகங்களுக்கும் விரோதியான சாணூரன் என்னப்படும் ஆந்த்ரனாகிய மல்லனை ஸம்ஹாரம்செய்தவர்.

சாந்தர்—[1]பொங்குவதற்குக் காரணமானமகிமைக்கடல்பெருகியிருந்தும் அலையில்லாக்கடல்போல அடங்கியிருப்பவர்.

சாந்தி—[2]ஸமாதியின்கடைசிநிலைமையில்எல்லாத்தொழில்களையும் மறந்து தம்மையே அனுபவித்துக்கொண்டிருக்கச்செய்பவர்.

சாந்திதர்—[3]பக்தியோகம் தலைக்கட்டினவர்களுக்கு ஸம்ஸார துக்கத்தைத் தலையெடுக்கவிடாமல் வேர்களைந்து தமது ஸாயுஜ்யமாகிய சாந்தியைக் கொடுப்பவர்.

சார்ங்கதந்வா—[4]சார்ங்கமென்னும் வில்லையுடையவர்; நாண் ஓசையினாலும்சரமாரிபொழிவதனாலும் பகைவர்களென்னும்பெயரையே ஒழிப்பதாகிய தமக்கொத்த சார்ங்கம் என்னும் வில்லை ஏந்தியவர்.

சாஸ்வதர்—[5]உலகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரவியாபாரங்கள் ஒன்றன்பின் மற்றொன்றாக ப்ரவாகம்போல எக்காலமும் தொடர்ச்சியாகவிருப்பதனால் ஓய்வில்லாதவர்.

சாஸ்வதஸ்தாணு—[6]தேவலோகத்திய அம்ருதம்போலன்றி என்றும் அழிவில்லாமலும் பக்தர்களிடமிருந்து யாரும் அபகரித்துக் கொண்டுபோகாமலுமிருக்கும்படி நிலையாயிருப்பவர்.

சாஸ்வதஸ்திரர்—[7]பலவிதங்களான அர்ச்சாவதாரரூபங்களை எடுத்துப் பக்தர்கள் எக்காலமும் ஸேவிக்கும்படியிருப்பதனால் எக்காலமும் நீங்காமலிருப்பவர்.

சாஸ்தா—[8]எல்லாருக்கும் விரோதிகளான ஹிரண்யன்முதலானவர்களை நன்றாகச்சிக்ஷித்தவர்.

சிகண்டீ—[9]யாராலும் வெல்லக்கூடாத அளவற்ற ஐஸ்வரியமாகிய சிறந்தமகிமையே சிறந்தசிரோபூஷணமாகஇருப்பவர்.

---

1 விஷயஸுகங்களில் பற்றில்லாதவர்.

2 அவித்யாநிவ்ருத்தியாயிருப்பவர்.

3 ராகத்வேஷமுதலியவற்றின் விடுதலைக்கொடுப்பவர்.

4 இந்திரியங்களுக்குக் காரணமாகிய ஸாத்விகாகங்காரத்தின் வடிவமான சார்ங்கமென்னும் வில்லையுடையவர்.

5 எல்லாக்காலமுமிருப்பவர்.

6 எப்பொழுதும் நிலைபெற்றிருப்பவர்.

7 எல்லாக்காலமும் மாறாமலிருப்பவர்.

8 வேதமுதலியவற்றினால் யாவரையும்கட்டளையிட்டு நடத்துகிறவர்.

9 மயில்தோகையை ஆபரணமாக அணிந்தகோபாலர்.

சிரீர் — [1]கஜேந்திரனது அழுகுரல்கேட்டவுடன் மிக்கவிரை வாகச்சென்றவர்.

சிந்நஸம்சயர் — [2]அடியார்க்கெளியராதல்பற்றிய புகழினாலேயே, 'இவரை அறியக்கூடுமோ, கூடாதா, வசப்படுவாரா, படாரா, எளியரா, அரியரா' என்பவைமுதலிய ஸந்தேகங்களையறுப்பவர்.

சிபிவிஷ்டர் — [3]கிரணங்களுள்பிரவேசித்து வியாபித்திருப்பவர்; அல்லது, கிரணங்களால் வியாபிக்கப்பட்டிருப்பவர்; அல்லது, சூரிய கிரணங்கள்போன்ற நிறமுள்ளரோமங்களினால் வியாபிக்கப்பட்டிருப் பவர்.

சிவர் (27) — [4]ப்ராணிகளுக்கு நன்மைகளைச்செய்பவர்.

சிவர் (607) — [5]போகத்தைவிரும்புகிறவரும் மோக்ஷத்தை விரும்புகிறவருமான யாவருக்கும் அவரவர் அதிகாரத்துக்குரிய நன் மைகளைச் செய்பவர்.

சிஷ்டக்ருத் — [6]தமது ஸம்பந்தம்பெற்றபொருள்களைத் தம் மிடம் சேரத்தக்க கல்யாணகுணங்களுள்ளவைகளாகச் செய்பவர்.

சிஷ்டேஷ்டர் — [7]மார்க்கண்டேயர்முதலிய சான்றோர்களால் பரமபுருஷார்த்தமென்று விரும்பப்படுகிறவர்.

சுசி (157) — [8]பரிசுத்தர்; தாம்செய்யும் பேருதவிகளுக்கு எவ் விதக்கைம்மாறுகளையும் எதிர்பாராதவரென்பது.

சுசி (252) — [9]ஸ்வயம் சுத்தமானவர்; பிறரால் பிரகாசம்உண்டு பண்ணவேண்டாதவர்.

சுசிஸ்ரவஸ் — [10]பக்தர்களால் சொல்லப்படும் இன்சொற்களைக் கேட்பவர்.

---

1 தாபத்ரயத்தினால் வருந்தினவர்களுக்குக் குளிர்ந்தஇடமாயிருப்பவர்.

2 எல்லாவற்றையும் உள்ளங்கைநெல்லிக்கனிபோல எப்போதும் பிரத் யக்ஷமாகப் பார்ப்பவராதலின் ஸந்தேகமற்றவர்.

3 சிபிகளென்னப்படும் யாகபசுக்களிடத்தில் யாகரூபியாக வஸிப்பவர்.

4 முக்குணங்கள் இல்லாமையால் பரிசுத்தர்; அல்லது, 'அவரே பிரம்மா, அவரே சிவன்' என்று வேதத்தில்அபேதம்சொல்வதனால் சிவன்முதலிய நாமங்களினாலும், விஷ்ணுவையே துதிப்பது.

5 நினைத்தமாத்திரத்தில் பாவத்தைப்போக்குகிறவர்.

6 எல்லாவற்றையும் ஆஜ்ஞாபிப்பவர்; அல்லது, சிஷ்டர்களைரக்ஷிப்பவர்.

7 ஞானிகளுக்குப் பிரியமானவர்; அல்லது, அவர்களிடத்தில் அன்புள் ளவர்.

8 தம்மைத்யானிப்பவரையும் துதிப்பவரையும் ஆராதிப்பவரையும் சுத் தப்படுத்துகிறவர்.

9 குற்றமில்லாதவர்.

10 பாவங்களைப்போக்கும் பரிசுத்தமான திவ்யநாமங்களையுடையவர்.

சுபாங்கர் (593)= [1]யமம், நியமம், ஆஸனம், ப்ராணாயாமம், ப்ரத்யாஹாரம், தாரணை, த்யானம், ஸமாதியென்னும் சிறந்தயோகாங்கங்கள் எட்டினையும் நிறைவேற்றுகிறவர்.

சுபாங்கர் (784)= [2]'இவர் மிகநம்பத்தக்கவர்' என்று அஸுரர்கள் ஏமாறும்படி அவர்களில் ஒருவராகச் சேர்ந்து, மாயையினால் அவர்கள்மயங்கும்படி அழகியஉருவமெடுத்தவர்.

சுபேக்ஷணர்= [3]பரத்வஸௌலப்யங்களின் மேன்மைக்கு அறிகுறிகளாகக் குளிர்ந்தும் பரந்தும் நீண்டுமிருக்கும் திருக்கண்களையுடையவர்; அல்லது, தாம்கடாக்ஷிப்பதே யாவருக்கும் மங்களகரமாயிருப்பவர்; அல்லது, தம்மைத் தரிசிப்பது எல்லாருக்கும் மங்களகரமாயிருப்பவர்.

சூந்யர்= [4]மநுஷ்யாவதாரத்திலும் குற்றங்களெல்லாம் நீங்கினவர்.

சூரர் (340)= [5]ஜயிப்பதில் ஸாமர்த்தியமுள்ளவர்; இதனால் ஜயம் கூறப்பட்டது.

சூரர் (650)= [6]சித்திரகூடபர்வதத்தில் சூரரான ராமாவதாரமாயிருப்பவர்.

சூரஜநேஸ்வரர்= [7]ஸுக்ரீவன் ஆஞ்சநேயர்முதலியசூரர்களான ஜனங்களுக்கும் ஈஸ்வரராயிருப்பவர்.

சூரஸேநர்= [8]யாதவர்கள் பாண்டவர்கள்முதலான சூரர்களைப் பூபாரம் ஒழிப்பதாகிய தாம் அவதரித்த காரியத்துக்குத் துணையான ஸேனையாகக் கொண்டிருப்பவர்,

சோகநாசநர்= [9]நாதனற்றவர்களுக்குத் தமதுஸம்பந்தமில்லாமையினால் உண்டாகும் விசனத்தை ஒழிப்பவர்.

---

1 ஸுந்தரரூபமுள்ளவர்.

2 அழகான அங்கங்களையுடையவர்.

3 முக்தியைவேண்டுகிறவர்களுக்கு முக்தியையும் போகங்களை வேண்டுகிறவர்களுக்குப் போகங்களையும் அளிப்பதும், பாவிகளின் பாவங்களை ஒழிப்பதும், எல்லாஸந்தேகங்களையும் விலக்குவதும், மனத்தின் அஜ்ஞானக்காட்டை அறுப்பதும், எல்லாக்கருமங்களையும் அவித்தையையும் போக்குவதுமான மங்களகடாக்ஷமுள்ளவர்.

4 நிர்க்குணரூபமாதலால் இல்லாததுபோலிருப்பவர்.

5 பராக்ரமமுடையவர்.

6 சௌரி=சூரகுலத்திற்பிறந்த கிருஷ்ணன்; அல்லது, ப்ரஸித்தமான பராக்ரமமுள்ளவர்.

7 சூரர்களான இந்த்ரன்முதலியோருக்கும் ஈசுவரர்.

8 ஆஞ்சனேயர்முதலான சூரர்களைச் சேனையாக உடையவர்.

9 நினைத்தமாத்திரத்தில் பக்தர்களின் சோகத்தைப் போக்குகிறவர்.

சௌரி (341)— [1]சூரரென்னப்படும் வஸுதேவருடைய புத்ரர். பக்தர்களைத் தாமே தேடிச்செல்பவர்என்பது குறிப்பிக்கப்படுகிறது.

சௌரி (649)— [2]வஸுதேவபுத்ரர்; உத்பலாவதகமென்னும் திருக்கண்ணபுர க்ஷேத்திரத்தில் சௌரி என்னும் திருநாமத்துடன் கிருஷ்ணனாக எழுந்தருளியிருப்பவர்.

த்யுதிதரர்— [3]க்ருஷ்ணாவதாரத்தில இளமைப்பருவத்திலும் இந்த்ரனைததோற்கச்செய்யும் ஆமானுஷ திவ்யசக்தியையுடையவர்.

த்ரவிணப்ரதர்— [4]சாஸ்த்ரங்களும் சாஸ்த்ரார்த்தங்களுமாகிய தனங்களை நிரம்பக்கொடுப்பவர்.

த்ரிககுத்தாமா(அல்லது த்ரிககுப்தாமா) [5]இவ்வுலகமனைத்தும் அணுமாத்ரமாகத் தோன்றும்படி இதற்குமூன்றுபங்கு விரிவுள்ள த்ரிபாத்விபூதியென்னப்படும் பரமபதத்தை இடமாக உடையவர்; 'அந்தநித்யவிபூதியின் பதிணாயிரத்தின் ஒருபாகத்தின்பதினாயிரத்து ஓரம்சத்தினது பாகங்களில் ஒன்றுக்குள் இவ்வுலகசக்தி அடங்கியிருக்கிறது' என்றும், 'பரமபதத்துற்கும் இவ்வுலகத்திற்கும் மேருவுக்கும் அணுவுக்குமுள்ளவாசி' என்றும்சொலலியிருப்பதனால் மூன்று மடங்கு அதிகமென்று சுருதி சொல்லியிருப்பது எண்ணைக் குறிப்பதன்று; ஏற்றக்குறைவுகளைமட்டும் தெரிவிப்பதென்று கொள்ள வேண்டும்; அல்லது, மூன்று கூறுகளாகப் பிரிக்கப்பட்ட ஞானம், சக்தி, பலம், ஐஶ்வர்யம், வீர்யம், தேஜஸ் என்னும் ஆறுகுணங்களுக்கும் இடமாயிருப்பவர்; இவ்வாறுகுணங்களிலும் இரண்டிரண்டு ஒவ்வொருகூறாக வகுக்கப்பட்டுள்ளது; அதுபற்றியே, 'த்ரியுகர், மூன்று இரட்டையுள்ளவர்' என்று திருநாமம்; அல்லது, மூன்று கொண்டைகளோடுகூடிய வராகாவதாரத்தையெடுத்த ஒளியுருவமாயிருப்பவர்.

த்ரிதசாத்யக்ஷர்— [6]ப்ரளயகாலத்திய ஆபத்தில் வராகரூபியாகிப் பிரம்மாதிதேவர்களைக் காப்பாற்றின பிரபு.

த்ரிபதர்— [7]போக்யம் (அனுபவிக்கத்தக்கது) ஆகிய அசேதனம் போக்தா (அனுபவிப்பவன்) ஆகிய ஜீவாத்மா, நியந்தா (எல்லாவற்

1 சூரகுலத்தில் பிறந்தவர்.

2 வீரர்—எல்லாப்பகைவர்களையும் வென்றுவிளங்குகிறவர்.

3 தேகஒளியைத் தரிப்பவர்; அல்லது, கீர்த்தியை வகிப்பவர்.

4 பக்தர்களுக்கு விரும்பினவற்றைக் கொடுப்பவர்.

5 மேல் கீழ் நடுவாகிய மூவுலகங்களுக்கும் இருப்பிடம்.

6 ஜாக்ரத்ஸ்வப்னஸுஷுப்திகள் என்னும் மூன்று அவஸ்தைகளையும் நடத்துகிறவர்.

7 த்ரிவிக்ரமாவதாரத்தில் மூன்றடிகளால் உலகங்களை அளந்தவர்.

றையும் நியமிப்பவன்) ஆகிய ஈஸ்வரன் என்னும் இம்மூன்று தத்வங்களையும் அறிவிப்பவர்; அல்லது, பிரணவத்திலுள்ள அகார உகார மகாரங்களாகிய மூன்றுபதங்களாலும் சொல்லப்படுகிறவர்; அல்லது, மூன்றுகொண்டைகளுள்ள வராஹரூபமெடுத்தவர்.

த்ரிலோகத்ருத்—மூன்று உலகங்களையும் தாங்குகிறவர்; உலகங்களுக்கு 'ஆதாரமாயிருந்து அவற்றைவளர்த்துக் காப்பவராதலின் அவருக்கு இவ்வெளிமை உரித்தென்பது.

த்ரிலோகாத்மா—[1]பக்தர்களை அனுக்ரஹிப்பதற்காக மூவுலகங்களுக்கும் இடைவிடாமற்செல்லுகிறவர்; மகததேசத்தில் மகாபோதத்திலிருக்கும் லோகநாதன் என்னும் மூர்த்தி.

த்ரிலோகேசர்—[2]மூன்றுலோகங்களுக்கும் ஈஸ்வரர்; ப்ராக்ஜோதிஷ நகரத்திலிருக்கும் விஸ்வேஸ்வரரென்னும் அர்ச்சாவதாரம் கூறப்படுகிறது.

த்ரிவிக்ரமர்—[3]தம்சிறந்தமகிமையினால் மூன்றுவேதங்களையும் வ்யாபித்திருப்பவர்; மூன்றுவேதங்களாலும் கோஷிக்கப்பட்ட மகிமையுள்ளவரென்பது.

த்ரிஸாமா—[4]தம்மைச்சொல்லுகிறபிருஹத், ரதந்தரம், வாமதேவ்யம்என மூன்றாகவகுக்கப்பட்ட ஸாமவேதங்களினால் கானம் செய்யப்படுகிறவர்.

த்ருடர்—[5]நித்யமான திவ்யமங்களவிக்ரஹத்திலிருந்து உபாஸிப்பவர்களை அனுக்ரஹிப்பதற்காக வ்யூஹாவதாரத்தில் கொஞ்சம் ஸ்தூலரூபியாக வ்ருத்தியடைந்திருப்பவர்.

த்ருதாத்மா—[6]எளிதில்தம்மைத்தருவதனால் ஆத்மாக்களை உய்விப்பவர்.

த்ருவர் (55)—[7]பலவகைஉலகங்களாகமாறியும் தமதுஸ்வரூபம் கெடாமல் ஓரேநிலையாயிருப்பவர்.

த்ருவர் (390)—[8]த்ருவனை அழியாமலிருக்கச்செய்தவர்; ஸர்வவ்யாபகமானசக்தி த்ருவனதுசிறப்பு.

---

1 மூன்றுஉலகங்களுக்கும் அந்தர்யாமி; அல்லது, மூன்று உலகங்களும் தம்மைவிட வேறில்லாதவர்.

2 மூவுலகங்களையும் தம்தம்கருமங்களில் ப்ரவ்ருத்திக்கச் செய்பவர்.

3 மூன்றடிகளால் மூன்றுஉலகங்களையும் வியாபித்தவர்.

4 தேவவ்ரதங்கள்என்றுபெயருள்ள மூன்றுஸாமங்களினால் துதிக்கப்படுகிறவர்.

5 ஸ்வரூபத்தின்சக்தியினால் இயற்கைமாறாதவர்.

6 ஜனனமுதலானவிகாரமின்றி ஓரேவிதமானஸ்வரூபத்தையுடையவர்.

7 'ஸ்தவிரர்' பார்க்க.

8 அழியாதவர்.

த்வஷ்டா—[1]தேவர்மனிதர்முதலிய விசித்ரமானபலநாமரூபங்களுள்ளவையாக உலகங்களைவகுப்பவர்.

தண்டர்—[2]க்ஷேமங்களைச்செய்யும் நல்லஅரசர்களைக்கொண்டு தண்டஞ்செலுத்தித் துஷ்டர்களை அடக்குகிறவர்.

தத்—[3]அன்பர்களுக்கு ஞானபக்திகளை மிகுதிப்படுத்துகிறவர்.

தத்வம்—[4]தயிர்பால்களில் வெண்ணெய்போலச் சேதநாசேதனங்களாகியபிரபஞ்சத்தில் வியாபித்திருக்கும்ஸாராம்சமாயிருப்பவர்.

தத்வவித்—[5]தமதுஉண்மையைஅறிந்திருப்பவர்.

தந்துவர்த்தனர்—[6]பாவப்பற்றுக்களென்னும் சிறுநூல்களினால் ஸம்ஸாரமென்னும்கயிற்றைப் பெருகச்செய்கிறவர்.

தந்யர்—[7]பக்தப்பிரார்த்தனைக்காகத் தாம் அவதரிப்பதைத் தமக்கு ஒரு தனலாபமாக நினைப்பவர்.

தந்வீ—[8]தமக்கோர்உயர்வின்றி எல்லாவற்றிலும் சிறந்த சக்திக்குத்தக்கதான சார்ங்கமென்னப்படும் வில்லை எக்காலமும் வைத்திருப்பவர்; இங்கு வில்லைச்சொன்னதனால் மற்றதிவ்யாயுதங்களெல்லாவற்றையும் உபலக்ஷணமாகக்கொள்ளவேண்டும்.

தநஞ்சயர்—[9]தனத்தைஜயிப்பவர்; பொன்ரத்னமுதலியதனங்களையும்வெறுத்துச் சம்பாதிப்பதற்கும் காப்பாற்றுவதற்கும் அநுபவிப்பதற்கும் மிகவிரும்பத்தக்கவராயிருப்பவர்.

தநுர்த்தரர்—[10]தம்மைஉபாஸிப்பவர்களுக்குஉண்டாகும் இடையூறுகளைஒழிப்பதற்காக எப்போதும் தாமே வில்லெடுத்திருப்பவர்.

தநுர்வேதர்—[11]தேவேந்திரன் அரசர்முதலானவர்களும் வில்வித்தைமுதலியவித்தைகளைத் தம்மிடத்தில்உபதேசம்பெற்றுக்கொள்ளும்படி எல்லாச்சாஸ்திரங்களையும் ப்ரவ்ருத்திப்பித்தவர்.

---

1 ஸம்ஹாரகாலத்தில் எல்லாவற்றையும் அழிப்பவர்.

2 தாமே தண்டமாக இருப்பவர்.

3 எல்லாவற்றையும்படைக்கும்ப்ரம்மம்.

4 பரமார்த்தவஸ்துவாயிருப்பவர்; மாயையல்லாதவரென்பது.

5 தம்ஸ்வரூபத்தைஅறிந்திருப்பவர்.

6 பிரபஞ்சத்தை வ்ருத்திசெய்பவர்.

7 எல்லாப்பிரயோஜனங்களையும் பெற்றிருப்பவர்.

8 வில்லாளியாயிருப்பவர்.

9 அர்ஜுனனாயிருப்பவர்.

10 ராமாவதாரத்தில் வில்லெடுத்திருப்பவர்.

11 அந்த ராமபிரானே தனுர்வேதத்தை அறிந்திருப்பவர்.

தநேஶ்வரர்= [1]அவரவர்விரும்பினஐஶ்வரியங்களை உடனே அளிப்பவர்.

தமநர்= [2]கங்கைபோன்ற தேகஒளியினால் ஸம்ஸாரதாபத்தைச் சமனம்செய்பவர்.

தமயிதா= [3]தாமே நேராகவும் ராவணாதிகளான துஷ்டர்களை அடக்கிக்கொண்டிருப்பவர்.

தர்ப்பதர்= [4]பகைவர்களை அடக்கினது, வெல்லமுடியாத துவாரகாபட்டணத்தைச்செய்தது, சங்கநிதி பத்மநிதி பாரிஜாதம் தேவஸபைகளைக் கொண்டுவந்ததுமுதலியவற்றால் காப்பாற்றப்பட்டுக் கவலையில்லாமற்செய்யப்பட்ட யாதவர்களுக்கு மதுபானமுதலியவற்றினால் மதத்தைக்கொடுத்தவராகவுமிருப்பவர்.

தர்ப்பஹா= [5]கர்வத்தைப்போக்குகிறவர்; கோவர்த்தனத்தையெடுத்தது பாரிஜாதத்தைக்கவர்ந்தது வாணாசுரனுடைய ஆயிரம் தோள்களைத் துணித்ததுமுதலிய காலத்திலும் தேவர்களின்கர்வத்தை மட்டும் போக்கினவர்; ஆஶ்ரிதர்களைக் கொல்லாதவர் என்பது.

தர்மக்ருத்= [6]நிஷ்காரணமான அனுக்ரஹத்தினால் தர்மத்தை ப்ரவ்ருத்திப்பித்து எல்லாரையும் தர்மிஷ்டர்களாகச்செய்பவர்.

தர்மகுப்= [7]தம்மாலளிக்கப்பட்ட அர்த்தகாமங்கள் கெட்டவிஷயங்களில்செல்லாமலிருக்கும்படிசெய்து அவற்றினால் தர்மத்தையே ரக்ஷிப்பவர்.

தர்மயூபர்= [8]தர்மத்தைத்தலைமையாக வைத்திருப்பவர்,

தர்மர்= [9]ஐஶ்வரியத்தையும் மோக்ஷத்தையும் கொடுத்து ஜீவர்களெல்லாரையும் தாமே நேரில்தாங்குகிறவர்.

---

1 தனங்களுக்கு ஈசுவரர்.

2 தம்தம்கடமைகளில்தவறுகிற ஜனங்களை யமன்முதலிய ரூபங்களினால் தாமே தண்டிக்கும்தன்மையுள்ளவர்.

3 வைவஸ்வதமனுமுதலிய அரசர்களாயிருந்து பிரஜைகளை அடக்குகிறவர்.

4 தர்மமார்க்கத்திலிருக்கிறவர்களுக்குக் கர்வத்தைக் கொடுக்கிறவர்.

5 தர்மவிரோதிகளின் கர்வத்தைப் போக்குகிறவர்.

6 தமக்குத் தர்மாதர்மங்களில்லாமற்போயினும் தர்மத்தைநிலைபெறுத்துவதற்காகத் தாமே தர்மத்தைஅனுஷ்டிப்பவர்.

7 தர்மங்களைஸ்தாபிப்பவர்.

8 யூபஸ்தம்பத்தில்பசுக்கள்போலத் தர்மங்கள் அவரிடத்தில்கட்டப்படுகின்றன; அவருடையஆராதனங்களாயிருக்கின்றனஎன்பது.

9 எல்லாப்பொருள்களுக்கும் ஆதாரமாயிருப்பவர்; அல்லது, எல்லாத் தர்மங்களாலும் ஆராதிக்கப்படுகிறவர்.

தர்மவிதுத்தமர்—[1]தர்மந்தெறிந்தவர்களான வஸிஷ்டர் வாமதேவர் மார்க்கண்டேயர்முதலானவர்களுக்கும் மிகச்சிறந்தவர்.

தர்மாத்யக்ஷர்—தர்மத்துக்கு ஸாதனமாக. வேதங்களில் விதிக்கப்பட்ட கிரியைகளை ப்ரத்யக்ஷமாகஅறிபவர்.

தர்மீ—[2]தாம் எல்லாரையும்காப்பாற்றுவதற்குத் தர்மத்தையே பொதுவானகருவியாக வைத்திருப்பவர்.

தரணீதரர்—[3]உலகத்தைத்தாங்குவனவாகியஎல்லாவற்றையும் தாங்குகிறவர்.

தராதரர்—[4]கோவர்த்தனகிரியை எடுத்தவர்.

தக்ஷர் (424)—[5]தஸ்யுக்களென்னப்படும் கொள்ளைக்காரர்களாகிய மிலேச்சர்களை விரைவில் வதஞ்செய்தவர்.

தக்ஷர் (917)—[6]கஜேந்த்ரனைக்காப்பதற்காக விரைவாக வந்திருந்திவர்.

தக்ஷிணர்—[7]இன்சொற்களினால் கஜேந்த்ரனைத்தேற்றி அன்பு பாராட்டினவர்.

தாசார்ஹர்—தானத்திற்குரியவர்; பக்தர்கள் ஆத்மஸமர்ப்பணம் செய்வதற்குரியவர்; அல்லது, பக்தர்களுக்குத் தமது ரூபத்தையேதாத்தக்கவர்; அல்லது, தாசார்கர்களென்னும் யாதவர்களின் வம்சத்தில் கண்ணனாகஅவதரித்தவர்.

தாதா (43)—[8]எல்லாஅசேதனங்களின்தொகுதியும் எல்லாவற்றிற்கும் விளைநிலமுமாகிய மூலப்ரக்ருதியின்கண் சேதனர்களின் தொகுதியாகிய ப்ரம்மதேவரென்னப்படும் கர்ப்பத்தை வைப்பவர்.

---

1 வேதங்களும் தர்மசாஸ்திரங்களும் அவரதுகட்டளையாயிருப்பதனால் தர்மந்தெரிந்தவர்களில் சிறந்தவர்.

2 தர்மங்களைத்தாங்குகிறவர்.

3 ஆதிசேஷன் திக்கஜங்கள்முதலிய உருவங்களாலும் வராஹாவதாரம் செய்தும் பூமியைத்தாங்குகிறவர்.

4 ஆதிசேஷன்முதலிய தமதுஅம்சங்களினால் பூமியைத்தாங்குகிறவர்.

5 பலஉலகவடிவங்களாகவிருத்தியடைந்திருப்பவர்; அல்லது, எல்லாக் காரியங்களையும் விரைவில் செய்பவர்.

6 எல்லாவற்றிலும் அதிகமானசக்தியும் விரைவாகசெய்யும்திறமையும் எல்லாவற்றையும் நடத்தும் ஸாமர்த்தியமுமுள்ளவர்.

7 முன்நாமத்தில்சொல்லியதே பொருள்; நாமம் வேறுதலால் கூறியது கூறலாகாது; அல்லது, எங்கும்செல்லுகிறவரென்றும், பகைவரைஅழிப்பவரென்றும் கொள்ளலாம்.

8 ஆதிசேஷன்முதலிய ரூபங்களினால் உலகங்களைத் தாங்குகிறவர்.

தாதா (951)=[1]தாமேதர்மத்தை உபதேசித்தும் அனுஷ்டித்தும் உலகத்தைத் தாங்குகிறவர்.

தாதுருத்தமர்=[2]உலகம்படைத்தப்ரம்மதேவரினும்மிகச்சிறந்தவர்.

தாம=[3]சராசரங்களனைத்தையும் தாங்குகிறவர்; ப்ரளயகாலத்தில் அழிந்துபோன சராசரங்களின் வித்துக்களுக்கு ஆதாரமான கப்பலைத் தாங்கி நடத்தினவர்.

தாமோதரர்=[4]தாமங்களென்னப்படும் உலகங்களைத் தம்வயிற்றில் வைத்திருப்பவர்; அல்லது, தேவர்களுக்கு ஸுகத்தைக்கொடுப்பவர்; தமம் என்பது ஸுகம், அதுவேதாமம், அதைஉதரர்=வெளிப்படுத்துகிறவர் என்பது; அல்லது, யசோதையினால் வயிற்றில் கயிற்றினால் உரலோடு கட்டப்பட்டவர்; திருமகளும் தேடி விரும்பத்தக்க பெருமையிருக்கையிலும் பக்தர்களிடமுள்ள அன்பினால் யசோதையினால் கயிறுகொண்டு கட்டப்பட்டு அசைவற்றுநின்ற எளிமை மிகப்பெரிதென்பது.

தாரணர்=[5]பயங்களைத் தாண்டுவிப்பவர்; ஆதிபௌதிகங்களென்னப்படும் பகைவர், கள்வர், பிணிகள்முதலிய பயங்களை நிவ்ருத்திசெய்பவரென்பது குறிப்பு.

தாரர் (339)=கர்ப்பவாஸம் ஜனனமரணங்கள் மூப்புமுதலிய ஸம்ஸாரக்கடலிலுள்ள மகாபயங்களினின்றும் கரையேற்றுகிறவர்.

தாரர் (968)=[6]ஸம்ஸாரத்தைத் தாண்டுவிப்பவர்.

தாருணர்=[7]புறப்பகைகளையும் அகப்பகைகளையும் பிளப்பவர்.

திசர்=[8]ப்ரம்மாதிதேவர்களை அவரவர்கார்யங்களில் கட்டளையிடுகிறவர்.

---

1 அதாதா=தம்மைத்தவிர வேறு ஆதாரம் இல்லாதவர்; அல்லது, தாதா=ஸம்ஹாரகாலத்தில் எல்லாப்ரஜைகளையும் விழுங்கிவிடுகிறவர்.

2 பூமி முதலியவற்றைக்காட்டிலும் உத்தமமானதாது(=காரணம்;) அல்லது, பிரம்மதேவருக்கும் உயர்ந்தவர்;அல்லது, 'தாது=கார்யகாரணங்களாகிய பிரபஞ்சங்களைத்தரிப்பவர்; உத்தமர்= எல்லாரிலும் உயர்ந்தவர்' என்று இரண்டு நாமங்களுமாம்.

3 ஒளியாயிருப்பவர்: அல்லது, விரும்பினவற்றிற்கெல்லாம் இருப்பிடமாயிருப்பவர்.

4 இந்த்ரியஜயத்தினால் அடையப்படும்உயர்ந்த கதியாயிருப்பவர்; இங்கு, 'தம' என்பது, 'தாம' என்றும், 'உதார' என்பது, 'உதர' என்றும்

5 ஸம்ஸாரக்கடலைத் தாண்டுவிப்பவர்.

6 ப்ரணவரூபி.

7 நல்வழியைக்கெடுப்பவருக்குப் பயங்கரர்.

8 வேதரூபியாக எல்லாக்கர்மங்களுக்கும் பலன்களைக்காட்டுபவர்.

திவிஸ்ப்ருக்= [1]தமதுபரவித்தையினால்(ப்ரம்மஜ்ஞானத்தினால்) பரமபதத்திலிருக்கும் ரஹஸ்யமான ஸ்வரூபத்தைத் தொடுகிறவர்; எல்லாவற்றையும் அறிகிறவர்.

தீப்தமூர்த்தி= [2]ஒவ்வொரு குணத்தினால் மிகவிளங்கும் பொருள்களனைத்தும் அவருடைய அம்சம்பெற்றவையாதலின் குணங்களில் சிறந்த பொருள்களைச் சரீரமாகவுடையவர்.

தீர்த்தகரர்= [3]தம்மைப்போலவே நினைப்பது நாமத்தைஉச்சரிப்பதுமுதலியவை செய்தமாத்திரத்திலும் எல்லாப்பாவங்களையும் போக்குவனவாகிய கங்கை புஷ்கரமுதலான புண்ணியதீர்த்தங்களை உண்டுபண்ணினவர்; அல்லது, சுருதி ஸ்ம்ருதிமுதலிய ஸத்ஸம்ப்ரதாயங்களை ப்ரவ்ருத்திக்கச் செய்பவர்; அல்லது, கடல்போல இறங்க முடியாத ஆழமானதம்மிடத்தில் பக்தர்கள் இழியும்வண்ணம் படிகளை உண்டுபண்ணினவர்.

துர்க்கமர்= [4]மத்யான்னஸூர்யன்போலக் கண்ணாலும் காண முடியாதஒளியுள்ளவரைக் கிட்டச்சேர்ந்து அடைவது மிகஅரிதாதலின், அடைவதற்குஅரியவராயிருப்பவர்.

துர்க்கர்= [5]அவித்தைமுதலான மறைவுகள் கோட்டைபோல மூடிக்கொண்டிருப்பதனால் ப்ரவேசிக்கக்கூடாமலிருப்பவர்.

துர்த்தரர் (267)= [6]சிறந்தகைவன்மையினால் ப்ரளயகாலஸமுத்திரம்போல்வேகமுள்ளவராயிருப்பதனால், பிறருடையசக்திகள்மணற்கரைகள்போலத் தடுக்கமாட்டாமல் உடைந்துபோகும்படி இருப்பவர்.

---

1 திவஸ்ப்ருக்= ஆகாசத்தைத் தொடுகிறவர்.

2 ஞானமயமாகப் பிரகாசிக்கும் ரூபமுள்ளவர்; அல்லது, தம்மிச்சையால் ஒளியுருக்கொண்டிருப்பவர்.

3 பதினான்கு வித்தைகளையும் வேதத்துக்கு விலக்கான வித்தைகளையும் உண்டாக்கி வெளியிட்டவர்; மதுகைடபர்களைக் கொன்று ஹயக்ரீவமூர்த்தியாகி ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் பிரம்மதேவருக்கு வேதங்களையுபதேசித்து அஸுரரை வஞ்சிப்பதற்காக வேதத்திற்குப் புறம்பாயுள்ள மோகவித்தைகளையும் உபதேசித்தவரென்பது.

4 அறியக்கூடாதவர்.

5 பல இடையூறுகளிருப்பதனால் அடைவதற்குக் கடினமாயிருப்பவர்.

6 எல்லாவற்றையும் தாங்கித் தாம் வேறொருவரால் தாங்கப்படக் கூடாமலிருப்பவர்; அல்லது, மோக்ஷத்தை விரும்புகிறவர்கள் மனத்தில் த்யானம் செய்யும்போது நிறுத்துவதற்கரியவராயிருப்பவர்.

துர்த்தரர் (720)= [1]குழந்தைவிளையாட்டுக்களிலும் மதயானை போலத் தாய்தந்தையரால் பிடிக்கமுடியாதவர்; அல்லது, துஷ்டர்களால் பிடிக்கமுடியாதவர்.

துர்மர்ஷணர்=பகைவரால் தாங்கமுடியாதவர்.

துர்யர்= [2]உலகங்களை வகிப்பவர்.

துர்லபர்= [3]ஐம்புலன்களை வெல்லாதவருக்குக் கிடைக்க அரியவர்.

துர்ஜயர்= [4]தேவர்களும் மனிதர்களும் தம்ஸாமர்த்யத்தினால் வசப்படுத்தவும் கண்டுபிடிக்கவும் கூடாதவர்.

துரதிக்ரமர்= [5]அவர்பாதங்களையன்றி வேறு கதியில்லாமையினால் யாருக்கும் தாண்டிப்போகக்கூடாதவர்.

துராதர்ஷர்= [6]கடல்போல மிகஆழ்ந்திருப்பதனால் கலக்க முடியாதவர்.

துராரிஹா= [7]புத்தாவதாரத்தில், கெட்டவழியில் செல்லுகிறவர்களை வேதமார்க்கத்தை விடுவிப்பதுமுதலிய பல உபாயங்களினால் கெடுத்தவர்.

துராவாஸர்= [8]அவித்தைமுதலியவற்றின் மறைவினால் அவருடைய பரமபதத்தில் வஸிப்பது கிடைக்க அரிதாகஇருப்பவர்; அல்லது, துராவாஸர்=அவர்இருப்பிடம் யாவருக்கும் எட்டாததாக இருப்பவர்.

துஷ்க்ருதிஹா= [9]ப்ரம்மஜ்ஞானியான கஜேந்திரனுக்குத்தீங்கு செய்த பாவியானமுதலையைக் கரையேறினபின் கொன்றவர்.

---

1 நிர்க்குணராகையால் த்யானமுதலியவற்றினால் மனத்தில் நிறுத்த முடியாதவராயினும் எண்ணிறந்த ஜன்மங்களில் விடாமல் பாவனைசெய்து அவரருள்பெற்ற சிலரால்மட்டும் மிக்கசிரமத்தினால் மனத்தில் நிறுத்தக்கூடியவர்.

2 ஸர்வப்பிராணிகளின் உத்பத்திமுதலிய பாரங்களையும் வகிப்பவர்.

3 கிடைக்க அரிதான பக்தியைப் பெற்றவர்களுக்கல்லது மற்றவர்களுக்கு எட்டாதவர்.

4 வெல்லமுடியாதவர்.

5 ஸூர்யன்முதலானவர்களும் தம்கட்டளையைத் தாண்டமுடியாதபடி இருப்பவர்.

6 அஸுரர்முதலியவர்களாலும் வெல்லமுடியாதவர்.

7 கெட்டவழியிற்செல்லுகிற அஸுரர்முதலானவர்களை அழித்தவர்.

8 யோகிகளால் யோகத்தில் மிக்க சிரமத்தோடு மனத்தில்தரிக்கப்படுகிறவர்.

9 பாவங்களைப் போக்குகிறவர்: அல்லது, பாவிகளைக் கொல்லுகிறவர்.

துஷ்டர்— [1]முக்தர்கள்மட்டும் அறிவதற்குரியதானபரத்வத்தைக் காட்டிலும் மனிதர்முதலிய யாவருக்கும் தெரியக்கூடிய தசரதபுத்ரராக இருப்பதும் ராஜ்யபரிபாலனாதிகாரமும் கிடைத்ததில் அதிக ஸந்தோஷமடைந்திருப்பவர்.

துஸ்வப்நநாசநர் — [2]கஜேந்த்ரமோக்ஷத்தைக் கேட்பவர்களுக்குக் கெட்டகனவைப் போக்குகிறவர்.

தேவகீநந்தநர்—தேவகியின் புதல்வர். பரஸ்வரூபத்திலேமட்டுமன்றிக் கிருஷ்ணாவதாரத்திலேயே இவ்வளவு பெருமைகள்பொருந்தியிருப்பவரென்று சுட்டிக்காட்டுவது.

தேவப்ருத்— [3]தேவர்களைக்காப்பாற்றுகிறவர்; அல்லது, வகிப்பவர்.

தேவர்— [4]புலிமுதலிய ப்ராணிகளைக் கயிற்றினால்கட்டி விளையாடுவதுபோல ஜீவர்களை மாயையென்னும்கயிற்றினால் கட்டி விளையாடுகிறவர்.

தேவேசர்— [5]தேவர்களுக்கு நாதர்; பிரம்மாதிதேவர்களை அவரவருக்குத்தக்க அதிகாரங்களில் நியமிப்பவர் என்பது.

தேஜோவ்ருஷர்— [6]அன்பரைக்காப்பாற்றுவதில் தமதுசக்தியை வர்ஷிப்பவர்; மிகுதியாக உபயோகப்படுத்துகிறவர்.

ந்யக்ரோதோதும்பரர் [7]கீழேநின்றுவணங்கினரைக்கூப்புகிறவர்களால் தங்களைநோக்கி அனுக்ரஹிக்கும்படி தடுக்கப்படுத்தப்படுகிற

---

1 பேரானந்தவடிவமாயிருப்பவர்.

2 கெடுதலுக்கு அதிகுறியான கெட்டகனவுகளைத் தம்மைத்தியானிப்பதனாலும் துதிப்பதனாலும் பேர்சொல்லுவதினாலும் பூஜிப்பதனாலும் பயன்படாமற்செய்பவர்.

3 தேவப்ருத்குரு=தேவர்களைக் காப்பாற்றும் இந்த்ரனையும் நியமிப்பவர்; அல்லது, தேவப்ருத்=தேவர்களைப் பரிப்பவர்; குரு=எல்லாவித்தைகளையும் உபதேசிப்பவர்.

4 ஸ்ருஷ்டிமுதலிய வியாபாரங்களினால் விளையாடுகிறவர்; அல்லது, தேவர்முதலானவர்களையும் ஜயித்து மேலாயிருப்பவர்; அல்லது, எல்லாப்பிராணிகளுக்கும் ஆத்மாவாக நடப்பவர்; அல்லது, ஸ்வயம் ப்ரகாசமாயிருப்பவர்; அல்லது, துதிக்கப்படுகிறவர்; அல்லது, விரும்பப்படுகிறவர்; அல்லது, எங்கும் செல்லுகிறவர்.

5 தேவசிரேஷ்டர்.

6 ஸூர்யரூபியாகி ஒளியைப் பொழிகிறவர்; அல்லது, ஸூர்ய ரூபியாகி ஜலத்தை வர்ஷிப்பவர்.

7 இரண்டுநாமம். ந்யக்ரோதர்=மேலே வேரும் கீழேகிளையுமாக வளருகிறவர்; ப்ரபஞ்சத்திற்கெல்லாம் மேலிருப்பவரென்பது; அல்லது, தமது மாயையினால் எல்லாப்பிராணிகளையும்கீழ்ப்படுத்தி மறைப்பவர்; உதும்பரர்=ஆகாயத்திற்குமேற்பட்டவர்; காரணபொருள்என்பது; அல்லது, அன்னமுதலியவற்றினால் எல்லாவற்றையும் போஷிப்பவர்; இங்கு ஸந்தி ஆர்ஷம்.

வரும் எல்லாக்குணங்களினாலும் உயர்ந்ததானபரமபதத்தையும் திருமகள்முதலானவிபூதிகளையும் அடைந்தவருமாயிருப்பவர்; இங்கு, 'அம்பரர்' என்பதின், அ, உ என்று மாறியிருக்கிறது; மிகஉயர்ந்தவர்கள் ஸேவைசெய்யும்படி இருந்தும் மிகக்கீழ்ப்பட்டவர்களும் அணுகக்கூடியவரென்பது.

ந்யாயர்— [1]தம்பக்தர்களுக்குத் தவறுதல் வராமலிருக்கும்படி எதுயுக்தமோ அதைச்செய்பவர்.

நந்தகீ— [2]பகவானும், 'என்னை இதுமகிழ்விக்கவேண்டும்'என்று ப்ரார்த்திக்கும் தகுதியினால் நந்தகமென்று பெயர்பெற்ற கட்கத்தை ஆயுதமாக எக்காலமும் வகிப்பவர்.

நந்தநர்—தம்முடைய ப்ரம்மானந்தத்தை மோக்ஷத்தில் அளித்து நிரப்புகிறவர்.

நந்தர்— [3]அனுபவத்திற்குரிய பொருள்களும் அவற்றிற்குரிய கருவிகளும் அனுபவங்களும் அனுபவிப்பவர்களும் எப்போதும் தம்மிடத்தில் நிரம்பியிருப்பவர்.

நந்தி— [4]எல்லாவிடங்களிலும் எல்லாக்காலங்களிலும் எல்லாவகைகளாலும் லக்ஷ்மி நிறைந்திருப்பவர்.

நந்தீ— [5]வ்யூகாவதாரத்தில ஸங்கர்ஷணராயிருந்த தாமேவிபவாவதாரத்தில் பலராமராக அவதரித்து நந்தகோபனைத் தந்தையாக அடைந்திருப்பவர்.

நயர்— [6]தம்மிடம் அன்புவைத்த ரிஷிகளைக் கர்ப்பத்தில் வைத்துக் காப்பதுபோல எப்போதும் காப்பாற்றுகிறவர்.

நரர்— [7]சேதனங்களும் அசேதனங்களுமாகிய தம்மைச்சேர்ந்த விபூதிகள் அழியாமலிருக்கப்பெற்றவர்.

நஹுஷர்—தமதுமாயையினால் ஜீவர்களைக்கட்டுகிறவர்

நக்ஷத்ரநேமி— [8]நக்ஷத்ரங்களென்னப்படும் ககோளசக்ரத்தை நடத்துகிறவர்.

---

1 ப்ரமாணங்களுக்கெல்லாம் உதவியான தர்க்கமாயிருப்பவர்.

2 வித்யாரூபமாகிய நந்தகமென்னும் கட்கத்தைவகிப்பவர்.

3 வேண்டியவையெல்லாம் நிரம்பினவர்; அல்லது, அநந்தர்=விஷயஸுகங்களைக்கடந்தவர்.

4 பரமாநந்தவடிவமாயிருப்பவர்.

5 ஆநந்தீ=ஸுகரூபியாயிருப்பவர்: அல்லது, எல்லாச்செல்வங்களும் நிரம்பியிருப்பவர்.

6 எல்லாவற்றையும்நடத்துகிறவர்.

7 எல்லாவற்றையும்நடத்துகிறவர்.

8 சிம்சுமாரசக்ரமென்னப்படும்நக்ஷத்ரமண்டலத்தைச் சக்ரத்தின் நடுவில் குடம்போலிருந்து நடத்துகிறவர்.

நக்ஷத்ரீ— [1]நக்ஷத்ரங்களுக்குஆதாரமானவர்; அல்லது, நக்ஷத்ர மண்டலத்தைத் தாங்குகிறவர்.

நாரஸிம்மவபு— [2]நரஸிம்மாவதாரம் செய்தவர்; பக்தனுடைய பயத்தைப்போக்குவதற்காக அவன்வேண்டினகாலத்தில் திவ்யநாரஸிம்மரூபத்தைஎடுத்தவரென்பது.

நாராயணர்— [3]நரர்களென்னப்படும் அழியாநித்யவஸ்துக்களாகிய ஆத்மாக்களின்கூட்டத்துக்கு அயநம் நிவாஸமானவர்; அல்லது, அந்தர்யாமியாய் அவற்றுள் இருப்பவர்.

நிக்ரஹர்— [4]அர்ஜுனன்பராக்கிரமத்தை எதிர்பாராமலே தாம் ஸாரத்தியம்செய்யும் விநோதத்தினாலேயே எதிரிகளை அடக்குகிறவர்.

நிதிரவ்யயர்— [5]அவ்யயமாநிதி எக்காலமும் எவ்வகைகளாலும் அநுபவிக்கப்பட்டபோதிலும் சிறிதும் குறையாத பொற்புதையல்போன்றவர்; ஆபத்துக்குதவும்பொருளைப்போல வைத்துக் காக்கத்தக்கவரென்பது.

நிமிஷர்— [6]ஸாதுக்களுக்குவிரோதிகளிடத்தில் கடாக்ஷத்தைச் செலுத்தாதவர்.

நியந்தா— [7]பலதேவதைகளிடம் பக்திவைத்திருக்கும் பலரை அவரவர்விருப்பப்படி தாமே நடத்துகிறவர்.

நியமர்(163)— [8]அடுத்தவர்களைப்பகைக்கும் பலிமுதலிய அஸுரர்களை அடக்குகிறவர்.

---

1 நக்ஷத்திரங்களுக்கரசனாகிய சந்திரரூபியானவர்.

2 மனிதலக்ஷணங்களும் ஸிம்மலக்ஷணங்களும் ஒருதேகத்தில் பொருந்தி அவதரித்தவர்.

3 நரன்என்னப்படும் ஆத்மாவினிடத்து உண்டானதால் நாரங்களென்னப்படும் ஆகாயமுதலியகார்யவர்க்கங்களில் காரணரூபமாகவியாபித்திருப்பதனால் அவற்றைத் தமக்கு இருப்பிடமாகவுடையவர்; அல்லது, நரர்களென்னப்படும்ஜீவர்களுக்குப் பிரளயகாலத்தில் ஆதாரமாயிருப்பவர்; அல்லது, நாரமென்னப்படும்ஜலமாகிய ப்ரளயஸாகரத்தில் சயனித்திருப்பவர்.

4 எல்லாவற்றையும் தம்வசமாக அடக்கிவைத்திருப்பவர்.

5 அழியாதநிதி; பிரளயகாலத்தில் எல்லாம் அவரிடம் வைக்கப்படுவதனால் நிதியென்பது.

6 யோகநித்திரையினால் கண்களை மூடியிருப்பவர்.

7 எல்லாரையும் தந்தம்காரியங்களில் நிற்கச்செய்பவர்.

8 ப்ரம்மாதிதேவர்களையும் தந்தம் அதிகாரங்களில் நியமிப்பவர்.

நியமர்(869)= [1]அந்த அந்தப் பூஜைகளுக்குப்பலன்களாக உயர் குலம், ஆயுள், போகங்கள்முதலியவற்றை அந்த அந்தத் தேவதாரூபி யாகிக் கொடுப்பவர்.

நிர்க்குணர் = [2]ப்ராக்ருதகுணங்கள்ஒன்றும் தம்மிடம்பற்றாமலி ருப்பவர்; இங்கு ஒன்றுக்கும் உட்படாமலிருக்கும் வசித்வம் என் னும் ஐஶ்வர்யம் கூறப்பட்டது.

நிர்வாணம் = [3]பாவம்விலக்கப்பட்டவர்களுக்குப் பரமகதிக்குக் காரணமாதலால் முக்திஸ்வரூபமாயிருப்பவர்.

நிவ்ருத்தாத்மா (231)= [4]ப்ராக்ருதிக்கு மூன்றுமடங்கதிகமான நித்யவிபூதியில் இருப்பதாகிய தமதுஸ்வரூபம் கால்பாகமாகியப்ர க்ருதிமண்டலத்தைக் கடந்ததாயிருப்பவர்.

நிவ்ருத்தாத்மா (453)= [5]நிவ்ருத்திதர்மத்தை உபதேசிப்பதற்கா கவும்சிறந்தவைராக்கியத்தைத் தம்அனுஷ்டானத்தினால்வெளிப்படுத் துவதற்காகவும் நரநாராயணாவதாரங்களையெடுத்துச் சப்தாதி விஷ யங்களை மனத்தினால் துறந்திருந்தவர்.

நிவ்ருத்தாத்மா(604)= [6]நிவ்ருத்திதர்மத்திலிருக்கும் சேதனர் களுக்கும் ஈஶ்வரராயிருப்பவர்.

நிவ்ருத்தாத்மா (780)= [7]தயையினால் உலகத்தோடு சேர்ந்திருந் தாலும் இயற்கையில் ஒன்றிலும்சேராத தனித்த மனமுள்ளவர்.

நிஷ்டா= [8]ஸமாதிகலையாத மனமுள்ளவர்கள் மனத்திற்கினிய பிடிப்பாகிய தம்திவ்யமங்களவிக்ரஹத்தில் நிலைபெற்று நிற்கும்படி இருப்பவர்.

நேதா = [9]பக்தர்கள்இட்ட வேலையைச் செய்பவர் ; தாம் மத்ஸ் யமாகக் கடலில்மூழ்கி மகாத்மாக்களான பக்தர்களைக் கரையேற்றி னவரென்பது.

---

1 அநியமர் = தம்மை அடக்குகிறவர் யாருமில்லாதவர்; அல்லது, நியமர் = யோகத்திற்கு அங்கமாகிய நியமமாயிருப்பவர்: அதாவது, அதனால் அடை யப்படுகிறவர்.

2 குணங்களில்லாதவர்.

3 ஒருதுக்கமுமில்லாதபரமானந்தமாகிய ப்ரம்மமாயிருப்பவர்.

4 ஸம்ஸாரப்பற்றில்லாத ஸ்வரூபமுடையவர்.

5 விமுக்தாத்மா = இயற்கையாகவே எல்லாப்பற்றுக்களும்விட்ட ஆத்மா வாயிருப்பவர்.

6 விஷயங்களில் மனம் ப்ரவ்ருத்தியாமலிருப்பவர்.

7 அநிவ்ருத்தாத்மா = எங்கும் நிறைந்திருப்பவராதலின் அவரது ஸ்வரூ பம் ஓரிடத்திலும் இல்லாமற்போவதில்லை; அல்லது, நிவ்ருத்தாதமா = பற்றுக் களிலிருந்து நீங்கினமனமுள்ளவர்.

8 ப்ரளயத்தில் எல்லாப்பொருள்களும் முடிவுபெறும் இடமானவர்.

9 உலகங்களை நடத்துகிறவர்.

நேயர்—[1]தம்மிடம் அன்புவைத்தரிஷிகள்முதலானவர்கள் தம்மைக்கட்டளையிட்டு நடத்தும்படி அவர்களுக்கு அடங்கியிருப்பவர்.

நைககர்மக்ருத்—[2]கடைவது மலையைத்தாங்குவது பகைவரை அழிப்பது அமுதம்அளிப்பது முதலிய பலசெய்கைகளைச் செய்பவர்.

நைகதர்—[3]எண்ணிறந்த பூமாலைமை ஆடைமுதலியப்ரம்மாலங்காரங்களைக் கொடுக்கும் அப்ஸரஸுகள் முக்தனை எதிர்கொண்டழைக்கும்படிசெய்பவர்.

நைகமாயர்—[4]பலவகை ஆச்சரியங்களையுடையவர்; சிறுகுழந்தையாயிருந்து அளவற்ற உலகங்களை விழுங்கியும் ஒரேதண்ணீரில் பிடிப்பில்லாத ஆலிலையில் படுத்தும் ஊகிப்பதற்கெட்டாத மற்றும் பல ஆச்சர்யங்களைச் செய்துகொண்டிருப்பவர் என்பது.

நைகர்—[5]தமது விபூதிகளினால் அனந்தமாயிருப்பவர்.

நைகரூபர்—உபாயங்களைச் செய்யும் பலவகைஜனங்களின் அறிவுக்குப்புலப்படும்படி பலவகை ரூபங்களை எடுப்பவர்; 'விஸ்வரூபமாகப் பற்பலரூபங்களை எடுப்பவர்' என்பது நிருக்தி.

நைகஸ்ருங்கர்—[6]பகைவரை வெல்லுவதற்குப்பலவகைஉபாயங்களை எடுப்பவர்; புத்தியினால் உபாயம் சொல்வது, ஸாரதியாயிருப்பது, ஆயுதமெடுப்பதில்லையென்று உறுதிசெய்வது ஸமயம் நேர்ந்தபோது ஆயுதமெடுப்பதுமுதலிய உபாயங்கள் குறிப்பிடப்படுகின்றன.

நைகாத்மா—[7]கடல்கடையும் காலத்தில் தேவர்கள்பக்கத்தில் விஷ்ணுமூர்த்தியாகவும், மந்தரத்தைத்தாங்குவதற்குக் கூர்மாவதாரமாகவும், இன்னும் அக்காலத்துக்குத்தக்கபடி மோகினிமுதலியரூபங்களாகவும் பலஉருவங்களெடுத்தவர்.

ப்ரக்ரஹர்—[8]தாம் ஸாரதியாயிருந்து தேராளியான அர்ஜுன

---

1 பரமாத்மாவால் நடத்தப்படும் ஜீவாத்மாவாயிருப்பவர்.

2 ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாரமுதலிய பலசெய்கைகளைச் செய்கிறவர்.

3 நைகஜர்—தர்மத்தைரக்ஷிப்பதற்காக அநேக அவதாரங்கள் எடுப்பவர்.

4 பலமாயைகளைத்தரிப்பவர்.

5 மாயையினால் பலஉருவமாயிருப்பவர்.

6 அநேகம் கொம்புகளையுடையவர்; தர்மார்த்தகாமமோக்ஷமென்னும் நான்குபுருஷார்த்தங்களும் கொம்புகளைப்போன்றவையென்பது: அல்லது, நான்குவேதங்களையும் கொம்புகளாகவுடையவர்.

7 ஸ்ருஷ்டிமுதலியவற்றிற்குக் காரணமான பலசக்திகளுள்ளவராதலின் பலஉருவங்களாயிருப்பவர்.

8 பக்தர்கள்அர்ப்பணம்செய்யும் பத்ரபுஷ்பமுதலியவற்றையும் அங்கீகரிப்பவர்; அல்லது, விஷயங்கள்என்னும்காடுகளில்ஓடும் இந்திரியங்கள்என்னும்குதிரைகளைக் கடிவாளம்பிடித்துஇழுப்பதுபோல இழுப்பவர்.

னைக் கடிவாளம்பிடித்திழுப்பதுபோல இழுத்துப்பிடித்தவர்; தம் சொற்படிகேட்கும்படி நடத்தினவர்என்பது.

ப்ரகாசநர்= [1]தமது திவ்யரூபத்தைக் காணக்கருதும் அர்ஜுனன்முதலானபக்தர்களுக்குப் புலப்படுத்துகிறவர்.

ப்ரகாசாத்மா= [2]மூடர்களுக்கும் வெளிப்படையாகத்தெரியும் சிறந்தப்ரபாவமுடையவர்.

ப்ரணமர்= [3]தமதுகுணங்களினால் சராசரங்களனைத்தும் தம்மிடம் வணங்கும்படியிருப்பவர்; 'ப்ரணவர் என்னும்பாடத்தில், மிகவும் புகழப்படுகிறவர் என்றுபொருள்' என்பது, நிர்வசனம்.

ப்ரணவர்= [4]தமக்கும் ஆத்மாக்களுக்குமுள்ள நித்யஸம்பந்தத்தைப் பிரணவத்தினால்அறிவித்து அவர்களைத் தமதுசரணாரவிந்தங்களில் வணங்கச்செய்பவர்.

ப்ரத்யயர்= [5]தம்மைஅடைந்தவர்களுக்குத் தம்மிடத்தில் நம்பிக்கைவரும்படிசெய்கிறவர்.

ப்ரத்யும்நர்= [6]சிறந்தஆத்மப்ரகாசமுள்ளவர்.

ப்ரதர்த்தநர்=ப்ரளயகாலத்தில் எல்லாவற்றையும் ஸம்ஹரிப்பவர்.

ப்ரதாநபுருஷேஶ்வரர்=ஜீவர்களைப்பந்தப்படுத்தும் ப்ரக்ருதியையும் அதில் பத்தப்பட்ட ஜீவர்களையும் எல்லாவகைகளாலும் நடத்துகிறவர்.

ப்ரதாபநர்= [7]எல்லாவற்றையும் ப்ரமிக்கும்படிசெய்பவர்; அல்லது, பகைவருக்குத் துன்பம்உண்டுபண்ணுகிறவர்.

ப்ரதிதர்=புகழ்பெற்றவர்.

ப்ரதிஷ்டிதர்=தமக்குவேறுஆதாரம்வேண்டாதபடிதம்மகிமையையேஆதாரமாகக் கொண்டிருப்பவர்.

ப்ரபவர்= [8]அவதாரங்களிலும் தம்மை நினைத்தமாத்திரத்தில்

---

1 எல்லாவற்றையும்ப்ரகாசிக்கச்செய்பவர்.

2 ஞானரூபமானஸ்வரூபமுடையவர்.

3 ப்ரணவர்= 'ஓம்' என்று முழங்குகிறவர்; அல்லது, தேவர்களாலும் வணங்கப்படுகிறவர்.

4 ஓங்காரமாகியப்ரணவரூபியாகவிருப்பவர்.

5 அறிவுவடிவானப்ரம்மம்.

6 சிறந்ததனமுள்ளவர்; அல்லது, ப்ரத்யும்னரென்னும்வ்யூகமாயிருப்பவர்.

7 ஸூர்யன்முதலியபரிவாரங்களினால் உஷ்ணத்தை உண்டுபண்ணுகிறவர்.

8 எல்லாம் உண்டாவதற்குக் காரணமாயிருப்பவர்; அல்லது, உயர்ந்த ஜன்மமுள்ளவர்.

ஸம்ஸாரவிலங்குகளனைத்தையும் வேர்களைவதும் குற்றங்கள்சிறிதும் பற்றாததுமான சிறந்தஜ்னனமுடையவர்.

ப்ரபிதாமஹர்—பிதாமஹரென்னும்பிரம்மதேவருக்கும்தந்தை.

ப்ரபு (35) — [1]மானிடர்முதலியவர்களைப்போல அவதரித்தும் தேவர்களுக்கும் கிடைக்க அரியனவான போகமோக்ஷமுதலியபலன்களை அளிக்கவல்லவர்.

ப்ரபு (300)— [2]ஸௌலப்யம் ஔதார்யமுதலிய குணங்களின் சிறப்பினால் எல்லாருடைய மனங்களையும் கவரும் சக்தியுள்ளவர்.

ப்ரபூதர்— [3]எல்லாம் நிரம்பினவர்; அழியாதவையும் அளவற்றவையுமான போகஸாதனங்கள் நிரம்பின பரமபதத்திலிருப்பவரென்பது.

ப்ரம்ம—ஸ்ருஷ்டியிலுள்ளசேதனர்கள் எல்லாரையும் ஒப்புயர்வற்றதமது திருக்கல்யாணகுணங்களினால் மேன்மேலும் அபிவ்ருத்தி செய்து தமதுஸ்வரூபமும் குணங்களும் விபவங்களும் இன்னும் அபிவிர்த்தியாகிநிரம்பியிருப்பதும் ஸ்வதந்த்ரமும் வேதாந்தங்களில் அறியப்படுவதுமாகிய பரப்ரம்மமாயிருப்பவர்.

ப்ரம்மக்ருத்ப்ரம்மா— [4]ப்ரக்ருதியினால்உண்டாகும் மஹத் அகங்காரமுதலான அளவற்றவிஸ்தாரமுள்ள உலகங்களைப்படைப்பவராகிய ப்ரம்மதேவரும் எல்லாவிதங்களாலும் தம்மால்நியமிக்கப்பட்டு நடக்கும்படிசெய்பவர்.

ப்ரம்மண்யர் — [5]எல்லாவற்றையும்அநுபவிக்கும் போக்தாவாதலால் பெரிதென்றுசொல்லப்படும் சேதனங்களுக்கும் போகத்திற்குரிய அளவற்றஸாதனங்களைத்தருவதனால் போக்யத்திற்பெரிதான ப்ரக்ருதிக்கும் இருப்புஸ்தலமுதலானஎல்லாநிலைமைகளுக்கும்காரணமாதலின் அநுகூலராயிருப்பவர்.

ப்ரம்மவித்— [6]முடிவில்லாதவேதங்களின்முடிவை அறிந்திருப்பவர்.

ப்ரம்மவிவர்த்தநர்— தவமுதலியதர்மத்தை விருத்திசெய்கிறவர்.

---

1 எல்லாச்செய்கைகளிலும் மிககஸாமார்த்தியமுள்ளவர்.

2 உயர்ந்திருப்பவர்.

3 ஞானம் ஐசுவரியமுதலிய குணங்கள் நிரம்பினவர்.

4 இரண்டுநாமம்; ப்ரம்மக்ருத்—தவமுதலியவற்றை உண்டுபண்ணுகிறவர். பிரம்மா—ப்ரம்மதேவராகிஉலகத்தைப்படைப்பவர்.

5 தவம், வேதம், ஸத்யம், ஞானம்இவற்றிற்கு அநுகூலமானவர்; அல்லது, இவற்றைஅறிப்வர்.

6 வேதத்தையும் வேதார்த்தத்தையும் ஸரியாகஅறிந்திருப்பவர்; அல்லது, ஸரியாகஅடைந்திருப்பவர்.

ப்ரம்மஜ்ஞர்— [1]வேதங்களையும் வேதார்த்தங்களையும் ஸாக்ஷாத்காரமாக அறிபவர்.

ப்ரம்மீ— [2]ப்ரம்மம் என்னப்படும் ப்ரமாண ப்ரமேயங்களனைத்தையுமுடையவர்.

ப்ரமாணர் (429)— [3]ஹ்ருதயகத்திலுள்ளவர்களுக்கு நன்மை தீமைகளைப்பகுத்து அறிவிப்பவர்.

ப்ரமாணர் (959)— [4]வேதங்களின் ரஹஸ்யமாகிய தத்வார்த்தங்களை ஐயந்திரிபின்றி அறிவிப்பவர்.

ப்ரமோதநர்— [5]தம்மைச்சேர்ந்தவர்கள் தம்மைத்தியானிக்கத் தொடங்கும்போதே அவர்களை மகிழ்விப்பவர்; அல்லது, தம்மை த்யானிக்கும் பக்தர்கள்விஷயத்தில் தாம் மகிழ்கிறவர்.

ப்ரஜாகரர்— [6]பயிரிடுகிறவன் பயிர்காப்பதுபோலப் பக்தர்களை இரவும்பகலும் தூங்காமற்காப்பவர்.

ப்ரஜாபதி (70)— [7]பக்தர்களினும் முக்தர்களினும் சிறந்தவர்களாகவிளங்கும் நித்யஸூரிகளைக் காப்பாற்றுகிறவர்.

ப்ரஜாபதி (199)—தமது நாபீகமலத்தில் பிறந்த பிரம்மதேவர் முதலான ப்ரஜைகளுக்கு ஸ்வாமி.

ப்ரஜாபவர்— [8]எல்லாப்ரஜைகளும் அவர் கொடுத்தஸாதனங்களைக்கொண்டே அவரைச்சேரும்படி அவர்களுக்குஇடமாயிருப்பவர்.

ப்ரஸந்நாத்மா— [9]வேண்டினவையெல்லாம்தேடாமலேபொருந்தியிருப்பதனால் விருப்பு வெறுப்புமுதலிய கலக்கங்களின்றி எப்போதும் தெளிந்தமனமுள்ளவர்.

---

1 வேதங்களைத் தம்உருவமாகஅறிந்தவர்.

2 ப்ரம்மமென்றுசொல்லப்பட்டதெல்லாம் தமக்குட்பட்டதாகக்கொண்டிருப்பவர்.

3 ஞானரூபியாயிருப்பவர்; அல்லது, ப்ரத்யக்ஷமுதலான ப்ரமாணங்களாயிருப்பவர்.

4 ஞானரூபியாகவிருப்பவர்.

5 ஆத்மாவாகிய அம்ருதரஸத்தை அநுபவிப்பதனால் எப்போதும்மகிழ்ந்திருப்பவர்; அல்லது, தம்மைத்யானிப்பவருக்குத் தியானித்தமாத்திரத்திலேயே ஸந்தோஷத்தைஉண்டுபண்ணுகிறவர்.

6 எப்போதும் விழித்துக்கொண்டிருப்பவர்.

7 எல்லாஜனங்களுக்கும் அதிபதி.

8 ப்ரஜைகளின் உத்பத்திக்குக் காரணமானவர்.

9 ரஜோகுணம் தமோகுணங்களினால் கலங்காதமனமுள்ளவர்; அல்லது, அநுக்ரஹிக்கும் தன்மையுள்ளவர்.

ப்ராக்வம்சர் — [1]ஆதிகாலந்தொடங்கி முக்தர்களாயிருக்கும் நித்யஸூரிகளுக்கும் வம்சம்போல நித்யாதாரமாயிருப்பவர்; நித்ய மாயுள்ளவைகளும் பகவானுடைய நித்யஸங்கல்பத்தினாலேதான் அவ்வாறிருப்பதென்பது.

ப்ராணத்ருத் — [2]ஜீவாத்மாக்களைத் தாய்போலத் தாங்குகிறவர்; அல்லது, போஷிப்பவர்.

ப்ராணதர் (66)— [3]எக்காலமும் தரிசித்துஆனந்தஅநுபவத்து டன் நித்யகைங்கர்யம் செய்வதற்குரிய சக்தியை நித்யஸூரிகளுக்கு அளிப்பவர்.

ப்ராணதர் (322)- [4]தேவர்களுக்கு அமுதம் கடைவதற்குரிய தேகபலத்தைக் கொடுப்பவர்.

ப்ராணதர் (409)- [5]உயிரைக்கொடுப்பவர்.

ப்ராணதர் (956) [6]சப்தாதிவிஷயங்களென்னும் விஷயங்கள் தீண்டி மயக்கத்தினால் தம்மைமறந்து ஆத்மநாசம் அடைந்தவர்களு க்கு ஆத்மாஉய்வதாகிய உயிரைக்கொடுப்பவர்.

ப்ராணநிலயர் [7]கூட்டில் பறவைகள் அடைவதுபோல எல்லா ஆத்மாக்களும் தம்மிடம்அடங்கும்படியிருப்பவர்.

ப்ராணர் (67) [8]முக்திபெற்றவர்களுக்கு உயிராயிருப்பவர்.

ப்ராணர் (321)— [9]எல்லாஜீவர்களுக்கும் உயிராயிருப்பவர்.

ப்ராணர் (408) - [10]எல்லாவற்றையும் உயிர்ப்பவர்.

ப்ராணஜீவநர்— [11]உணவுபோலஆத்மாக்களைப்பிழைப்பிப்பவர்.

---

1 இதரவம்சங்களைப்போலப் பிறர்பட்டதாகாமல் தம்மம்சமான பிரபஞ்சம முற்பட்டதாகவுமுடையவர்; பிரபஞ்சமாகிய விருக்ஷத்துக்கு வம்சம் என்பது.

2 ப்ராணப்ருத்=ப்ராணிகளின் உயிரை அன்னமாகக்கொண்டவர்.

3 உயிர்களை நடத்துகிறவர்; அல்லது, உயிர்களைக்காப்பவர்; அல்லது, உயிரென்னப்படும் ஜீவாத்மாக்களைச் சதத்துக்கு ஏதுகிறவர்.

4 தேவர்களுக்குப் பலத்தைக்கொடுப்பவரும் அஸுரர்களுக்குப்பலத்தைக் கெடுப்பவரும்.

5 ப்ரளயகாலத்தில் உயிர்களை அழிப்பவர்; அல்லது, ஸ்ருஷ்டிகாலத்தில் எல்லாப்பிராணிகளுக்கும் அந்தர்யாமியாகி உயிரைக்கொடுப்பவர்.

6 கர்ப்பத்தில்இறந்ததுபோல பரிக்ஷித்துமுதலானவர்களைத் திரும்பவும் பிழைப்பித்தவர்.

7 இந்திரியங்களுக்கும் பிராணம் அபானமுதலானவாயுக்களுக்கு ஆதார மானஜீவாத்மாக்களுக்கும் இருப்பிடமானவர்.

8 ஜீவாத்மரூபி; அல்லது, பரமாத்மா; அல்லது, உயிராயிருப்பவர்.

9 வாயுரூபியானஸூத்ராத்மாவாக ஜனங்களைப் பிழைப்பிக்கிறவர்.

10 ஜீவரூபியாயிருப்பவர்; அல்லது, ப்ராணவாயுரூபமாயிருப்பவர்.

11 ப்ராணவாயுரூபியாக ப்ராணிகளைஜீவிக்கச்செய்பவர்.

ப்ராம்சு—த்ரிவிக்ரமாவதாரமெடுத்து உலகங்களையெல்லாம்வ்யா பித்தவர்.

ப்ராம்மணப்ரியர்— [1]வேதத்திற்கு அதிகாரிகளானப்ராம்மணர் களைத் தமக்கு அன்பர்களாக உடையவர்.

ப்ராம்மணர்— [2]வேதார்த்தத்தைஉலகத்தில் நிலைபெறுத்துவதற் காகத் தாமே அத்ரிமஹரிஷியின்கோத்திரத்தில் தத்தாத்ரேயரென் னும் ப்ராம்மணத்திருமேனியாகஅவதரித்தவர்; அல்லது, வேதத்தை உலகத்திற்குக்கொடுக்கிறவர்.

ப்ராஜிஷ்ணு— [3]பரரூபத்தையேபகிர்ந்துகொண்டு உபாஸிப்பவர் களுக்குப்புலப்படும் தன்மையுள்ளவர்.

ப்ரியக்ருத்—[4] ப்ரயோஜனாந்தரங்களைக்கருதிப் பக்திசெய்கிறவர் களையும் அவர்விருப்பங்களை நிறைவேற்றித் தம்மையேவிரும்பும்படி செய்கிறவர்.

ப்ரியார்ஹர்— [5]அனன்யபக்தியாக வந்தடையும் ஞானியாகிய அன்பனை அனுக்ரஹிப்பதற்குரியவர்.

ப்ரீதிவர்த்தனர்—பக்தர்களுக்குக் காலக்கிரமத்தில் தமதுகுணங் களை மேன்மேலும் வெளிப்படுத்துவதனால் அவர்களின்பக்தியைஅதி கப்படுத்துகிறவர்.

ப்ருது— [6]பெரும்புகழ்பெற்றவர்.

ப்ருஹத்—மிகப்பெரிதான பரமபதமென்னும்பெருவெளியை யும் உள்ளங்கையிலடக்குவதுபோலத் தமது ஏகதேசத்தில் அடக்கிக் கொண்டு வ்யாபித்திருக்கும் மகிமையென்னும் ஐஶ்வர்யமுள்ளவர்.

ப்ருஹத்பாநு—[7] விஸ்தாரமாக எப்போதும் ப்ரகாசிக்கும் கிர ணங்களையுடையவர்; இதனால் நித்யவிபூதியான பரமபதத்தில் எப் போதும் அதிகப்ரகாசமுள்ள ஸ்வரூபம் குறிப்பிக்கப்படுகிறது.

---

1 ப்ராம்மணர்களுக்குப் பிரியமானவர்.

2 ப்ரம்மரூபியாகி உலகமனைத்துக்கும் வேதங்களை ப்ரவசனம்செய்தவரா தலின் வேதத்துக்கு ஸம்பந்தப்பட்டவர்.

3 ஒளிவடிவமானவர்.

4 பக்தர்களுக்கு விருப்பத்தைச்செய்கிறவர்.

5 மனிதர் தம்தம் இஷ்டபதார்த்தங்களை ஸமர்ப்பணம் செய்வதற்குரிய வர்.

6 ப்ரபஞ்சரூபமாகத் தாமே விரிந்திருப்பவர்.

7 சந்திரன் ஸூர்யன்முதலியவர்களுக்கு மிகுதியான கிரணங்களைக்கொடு த்து அவற்றினால் உலகத்தைப் பிரகாசிக்கச்செய்கிறவர்.

ப்ருகத்ரூபர்— [1]தாமெடுக்கும் ரூப்ங்களில் ஒவ்வொன்றும் எல்லாத்திசைகளையும் மேலுலகத்தையும் இடைவெளியையும் வியாபிக்கும்படி பெரியவராயிருப்பவர்.

பக்தவத்ஸலர்—தம்மை ஸ்வாமியாகவும் பந்துவாகவும் உணர்ந்து பக்திபண்ணுகிறவர்கள் விஷயத்தில் விசேஷ அன்புள்ளவர்; பக்தர்கள் கிடைத்த பரபரப்பில் மற்றெல்லா விஷயங்களையும் மறந்திருப்பவரென்பது.

பகவான்— [2]குற்றங்களனைத்தையும் ஒழித்துக் கல்யாண குணங்களை நிரம்பினஸ்வரூபமாதலின் மிகவும் பூஜிக்கத்தக்கவர்.

பகஹா— [3]நிரம்பின ஐஸ்வர்யம், வீரியம், கீர்த்தி, லக்ஷ்மி, ஞானம், வைராக்யம் இவ்வாறு குணங்களையும் அழிக்கிறவர்.

பணர்— [4]தாம் ஸ்வாமியாகவும் ஜீவாத்மாக்கள் தமக்குத் தாஸர்களாகவுமிருக்கும் ஸம்பந்தத்தைச் சிலசமயங்களில் தாம் பக்தர்களுக்கு அடிமையாயிருந்து மாற்றுவதனால் க்ரயவிக்ரயம் செய்பவர்.

பத்மகர்ப்பர்—தமக்குத் தகுதியாகச் சிறந்த மணமுள்ளதும் கோமளமுமான பத்மாஸனத்தினுள் இருப்பவர்; அல்லது, உபாஸனை செய்பவர்களால் ஹ்ருதயகமலங்களில் இருத்தப்படுகிறவர்; ஆதாரசத்திமுதலியபீடகர்ப்பத்தில் அஷ்டதளபத்மத்தினுள் பாவிக்கப்படுபவராயிருப்பது சொல்லப்படுகிறது.

பத்மநாபர் (48)— [5]ப்ரம்மதேவருக்கும்பிறப்பிடமான காலரூபமான கமலத்தை நாபியிலுடையவர்.

பத்மநாபர் (198) [6]அஷ்டதளங்களோடுகூடிய கமலத்தைநாபியிலுடையவர்.

பத்மநாபர் (347)— [7]பதுமம்போன்றநாபியையுடையவர்.

---

1 பூமியைத்தாங்கும்படி தானே வராஹமாய் தாரமெடுத்தவர்.

2 பூர்ணமான ஐசுவரியம், தர்மம், கீர்த்தி, லக்ஷ்மி, வைராக்யம், மோக்ஷம் ஆகிய ஆறுகுணங்களும் பொருந்தினவர்; அல்லது, பிராணிகள் உண்டாவதையும் அழிவதையும் வருவதையும் போவதையும் ஞானத்தையும் அஞ்ஞானத்தையும் அறிபவர்.

3 ஸம்ஹாரகாலத்தில் ஐசுவரியமுதலான குணங்களை அழிப்பவர்.

4 புண்யகர்மங்களைப் பெற்றுக்கொண்டு அவற்றின் பலன்களைத்தருவதாகிய க்ரயவிக்ரய வியாபாரஞ்செய்பவர்; அல்லது, படைத்தவற்றிற்கெல்லாம் பேரிடுகிறவர்.

5 உலகத்துக்கெல்லாம்காரணமாகியகமலத்தை நாபியிலவைத்திருப்பவர்.

6 பத்மம்போன்றவட்டமானநாபியுள்ளவர்; அல்லது, ஹ்ருதயகமலத்தின் மத்தியில் பிரகாசிப்பவர்.

7 பதுமமலரின் நாபியாகிய உட்காயிலிருப்பவர்; அல்லது, பதினான்கு உலகங்களாகிய பதுமத்தைத் தமது நாபியிலுடையவர்.

பத்மநிபேக்ஷணர்=[1]பத்மமலர்போல மலர்ந்து அழகியதும் ஶ்ரமத்தைப்போக்குவதுமான கடாக்ஷமுடையவர்.

பத்மீ=கையில் லீலாபத்மத்தை எப்போதும் தரித்திருப்பவர்.

பதமநுத்தமம்=அதற்குமேல் ஒன்றுமில்லாதபரம்ப்ராப்யமானவர்.

பப்ரு=ஆதிசேஷரூபத்தினால் உலகங்களைத்தாங்குகிறவர்.

பயக்ருத்=தமது சாஸ்திரத்தைக் கடந்தவருக்குப் பயத்தை உண்டுபண்ணுகிறவர்.

பயநாசநர்=[3]தமது சாஸ்திரத்தை அநுஷ்டிப்பவருக்குப் பயத்தையொழிப்பவர்,

பயாபஹர்=[4]கஜேந்திரனுக்குப்பகையான முதலைக்கும் நற்கதி கொடுத்ததாகிய சரித்திரத்தினால் நம்போன்றவர்களுக்கும் இயற்கையாயுள்ள அன்பினால் நாதனில்லையென்கிறபயத்தைப் போக்கத்தக்கவர்.

பர்த்தா=[5]தம்மைத்தந்துகாப்பாற்றும் இயற்கையுள்ளவர்.

பர்யவஸ்திதர்=[6]அன்பினால் கஜேந்திரனைச்சுற்றிநின்றவர்.

பர்ஜந்யர்=[7]தம்முடையஸ்வரூபத்தைத்தெரிவித்து ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம்என்கிற மூன்று தாபங்களையும் போக்கும் மேகமாயிருப்பவர்.

பரமஸ்பஷ்டர்=[8]யாவரும் தமது மகிமையை வெளிப்படையாகக் கண்ணால்காணும்படி அவதரித்திருப்பவர்.

பரமாத்மா=[9]தமக்குஆத்மாஇல்லாத ஆத்மாவாயிருப்பவர்; ஸர்வேஶ்வரர்; தமக்குந்தாமே ஈஶ்வரரென்பது.

---

1 பதுமமலரக்கொப்பான திருக்கண்களையுடையவர்.

2 கெட்டவழியிலிருப்பவருக்குப் பயத்தைஉண்டுபண்ணுகிறவர்; அல்லது, பக்தர்களுக்குப் பயத்தை அறுப்பவர்.

3 வர்ணாசிரமதர்மங்களை அநுஷ்டிப்பவருக்குப் பயத்தையொழிப்பவர்.

4 ஸம்ஸாரபயத்தை நிவ்ருத்திசெய்பவர்.

5 ப்ரபஞ்சத்துக்குஆதாரமாகத் தாங்குகிறவர்.

6 எங்கும்வியாபித்திருப்பவர்.

7 மூன்றுதாபங்களையும் போக்குவதனாலும் விரும்பினவற்றைப் பொழிவதனாலும் மேகமாயிருப்பவர்.

8 பரமர்=சிறந்தஅழகுள்ளவர்; அல்லது, எல்லாவற்றிலும்சிறந்தவர்; ஸ்பஷ்டர்=ஞானரூபியாதலின் வேறுப்ரமாணங்களாலன்றித் தம்மாலேயே தாம் ப்ரகாசிப்பவர்.

9 காரணகார்யங்களைவிட,விலக்ஷணமும் நித்யமும் பரிசுத்தமும் ஞானமுள்ளதும் ஒன்றிலும்பற்றாததுமான ஸ்வபாவமுள்ளவர்.

பரமேஶ்வரர் = [1]பெரியபிராட்டியாரே ஸ்வயம்வரம்செய்யும் படி யிருப்பதனால் தமது பாமேஶ்வாசக்தி பயன்பட்டிருப்பவர்.

பரமேஷ்டீ— [2]ராக்ஷஸர்களை வேட்டையாடியும் உலகத்தைப்பரி பாலித்தும் இவ்வுலகத்தில்விளையாடினபின் திரும்பவும் தம் உயர்ந்த ஸ்தானமாகியபரமபதத்தில்இருப்பவர்.

பார்த்தி— [3]தமது ஸர்வேஶ்வரதன்மைக்கும் மேற்பட்டதான திருக்கல்யாணகுணங்களின் பரிபூர்த்தியையுடையவர்; தமது ஸௌ லப்யத்தினால் பரத்வமும்மறையும்படியிருப்பவர்; அதனாலன்றோ இந் திரன்சந்திரன்முதலானதாழ்ந்தவர்களையும் ராமாயணத்தில் ராமபிரா னுக்கு உபமானமாகக்கூறுவது?

பராயணர்— [4]ஸமாதியில் இழிந்திருப்பவருக்குமோக்ஷத்திற்கு நேர்ஸாதனமாகியபரமபக்தியையும் தாமே அளிப்பவர்.

பரிக்ரஹர்— [5]ராமாவதாரத்தில தம்மைச்சேர்ந்தநகரத்துஜனங் களையும் தேசத்துஜனங்களையும் அவர்களின் சுற்றத்தாரையும் அவர் களின்இஷ்டதேவதைகளையும் தோட்டங்களிலுள்ளமரம்புல்முதலிய வற்றையும் பரமபதம்சேரும்படி அங்கீகரித்தவர்.

பவநர் (202) — எல்லாக்காலங்களிலும் எல்லாஇடங்களிலும் இயற்கையாகச்செல்லுகிறவர்; இவருடைய சந்நிவேசம்பற்றித்தான் காற்றும் ஸதாகதிஎன்னப்படுவது.

பவநர் (817) — [6]தாமேபக்தர்களிடம்செல்லுகிறவர்.

பவித்ரம்— [7]ஞானமுதலிய ஆறுகுணங்களையும் மஹிமைகளை யும் படிகளாகக்கொண்டு பரமாத்மஸ்வரூபத்தில் இறங்கிக்குற்றங்கள் எல்லாவற்றினும் நீங்கிப் பரிசுத்தமாகியஸ்வரூபம்

பஹுஶிரஸ் — [8]அநேகம்தலைகளுடைய ஆதிசேஷராயிருப்பவர்.

---

1 எல்லாவற்றிற்கும் மேலானஈஶ்வரர்.

2 தமதுசிறந்தசக்தியையே ஆதாரமாகக்கொண்டிருப்பவர்; அல்லது, ஹ்ருதயாகாசத்தில் வஸிப்பவர்.

3 சிறந்த ஐசுவரியமுடையவர்.

4 மறுபடியும்ஸம்ஸாரத்தில்திரும்பாமலிருக்கும்உயர்ந்தஸ்தானமாயிருப்ப வர்; பராயணம்=அப்படிப்பட்ட உயர்ந்தஸ்தானத்தை உடையவர் என்பது.

5 சரணாகதர்களால் எல்லாவகைகளாலும் பற்றப்படுகிறவர்; அல்லது, ஸர்வவ்யாபியாதலால் எங்கும்அறியப்படுகிறவர்; அல்லது, பக்தர்களால் ஸமர்ப் பிக்கப்படும்பத்ரபுஷ்பங்கள் முதலியவற்றையும் அங்கீகரிக்கிறவர்.

6 பாவநர்=தம்மைநினைத்தவர்களைசுத்தப்படுத்துகிறவர்.

7 பரிசுத்தப்படுத்துவது; அல்லது, இடிபோன்ற மகாபயத்தினின்றும் காப்பாற்றுவது.

8 ஆயிரம்தலைகளையுடைய விராட்புருஷராயிருப்பவர்.

பாநு (126)— [1]எல்லாவற்றையும் படைத்தும் தாம் விகாரமில்லாமல் விளங்குகிறவர்; இது வீர்யம். வீர்யமாவது ஒரு விகாரமும் தன்னிடத்தில் சேராமலிருக்கும் ஸாமர்த்தியம்.

பாநு (235)—ஸூர்யனும் தமது ஒளியின் ஏகதேசம்பெற்றுப் பிரகாசிக்கிறான் என்னும்படி மிகுதியாகப் பிரகாசிப்பவர்.

பாபநாசநர்— [2]தயிர்வெண்ணெய்களைத் திருடினதுராஸக்ரீடை செய்ததுமுதலிய கதாம்ருதத்தினால் கேட்பவருடைய பாவங்களையும் போக்கிவிடுகிறவர்; அவதாரகாலத்திலும் தம் பக்தர்களுக்கு வெளிப்பகைவர்களையும் காமக்ரோதாதிகளான உட்பகைவர்களையும் அழிப்பவர் என்னவுமாம்.

பாரப்ருத்— [3]ஆத்மாக்களுக்கு ஸம்ஸார விலங்கை அறுத்து அவர்கள் ஸ்வரூபம்விளங்கித் தம்மைச் சேருவதிலுள்ளபொறுப்பை வகிப்பவர்.

பாவநர்(32)— [4]அவதாரங்களில் துன்பங்களைப்போக்கி இன்பங்களையளித்து உய்விப்பவர்.

பாவநர்(293)— [5]உலகத்தைப் பரிசுத்தம்செய்யும் கங்கை முதலியவற்றிற்கும் அந்தச் சக்தி தம்ஸம்பந்தத்தினால் உண்டாகும்படியிருப்பவர்.

பாவர்— [6]எல்லாப்பொருள்களையும் மயிலுக்குத்தோகைபோலத் தமக்கு அணியாகக் கொண்டிருப்பவர்.

பாஸ்கரத்யுதி— [7]ஸூர்யனைக்கண்ட இருள்போலப் பகைவர் பறந்தோடத்தக்க மஹிமையுள்ளவர்.

பிஷக்— [8]ரோகத்திற்குக் காரணத்தையும் பரிகாரத்தையும் நன்குணர்ந்த வைத்தியராயிருப்பவர்.

---

1 'ஸர்வவித்' பார்க்க.

2 பூஜிப்பதனாலும் த்யானம்செய்வதனாலும் நாமத்தைச் சொல்வதனாலும் பாவங்களையொழிப்பவர்.

3 ஆதிசேஷன்முதலிய உருவங்களினால் லோகபாரத்தைத் தாங்குகிறவர்.

4 எல்லாருக்கும் எல்லாப்பலன்களையும் அளிப்பவர்.

5 காற்றையும் வீசும்படி செய்பவர்.

6 ப்ரபஞ்சரூபமாயிருப்பவர்; அல்லது, தனித்திருப்பவர்; அல்லது, எல்லாவற்றிற்கும் இருப்பாயிருப்பவர்.

7 ஸூர்யன்ஒளியைப்போன்ற ஒளியையுடையவர்.

8 ஸம்ஸாரரோகத்தை விடுவிக்கும் பரவித்தையைப் பகவத்கீதையில் உபதேசித்தவர்.

பீமபராக்ரமர் — [1]உலகங்களுக்குத் தீங்குசெய்யும் ஹிரண்யாக்ஷன் ஹிரண்யகசிபுமுதலாகிய ஆஸுரப்ரக்ருதிகளுக்கு அச்சத்தைத் தரும் பயங்கரமான பராக்ரமத்தையுடையவர்; துஷ்டர்களை நிக்ரஹிப்பது அவர்களுக்கும் அநுக்ரஹமேதான்; பித்தனை விலங்குமுதலியவற்றால் கட்டுவது அவனுக்கும் அவனால் பீடிக்கப்படும் மற்றவருக்கும் நன்மையாகிறதன்றோ?

பீமர் (358) — [2]ஆஜ்ஞையைக் கடந்தவர்களுக்குப் பயத்தைக் கொடுப்பவர்; வாயுமுதலான தேவர்களும் அவரிடம் பயந்துதான் தம்தம் தொழில்களை வழுவில்லாமல் நடத்துகிறார்கள்.

பீமர் (948) — [3]தம்முடைய மஹாநுக்ரஹத்தை விரும்பாதவர்களுக்குக் கர்ப்பவாஸஸம்ஸாரமுதலிய துன்பங்களையும் கொடுத்துப் பயமுறுத்துகிறவர்.

பீஜமவ்யயம் — [4]அவ்யயம்பீஜம் மழையில்லாதபஞ்சம்போன்ற கலிகாலம்முடியும்போதெல்லாம் துரும்பத்துரும்பத் தர்மத்தைமுளைக்கச்செய்வதனால் அழியாதவித்தாயிருப்பவர்.

புண்டரீகாக்ஷர் — [5]புண்டரீகமென்னப்படும்பரமபதத்திலே நித்யவாஸிகளாயிருப்பவருக்குக் கண்போன்றவர்.

புண்யகீர்த்தி — [6]தமதுநாமஸங்கீர்த்தனமே பாவங்களையெல்லாம் முழுதும்விலக்கும்படியிருப்பவர்.

புண்யர் (692) — பாவிகளும் மங்களங்களுக்குரியராகும்படி அவர்களின் பாவங்களைப் போக்குகிறவர்.

புண்யர் (925) — [7]கஜேந்த்ரமோக்ஷணம் என்னும் புண்ணியசரித்திரத்தினால் நம்மைப்போன்றவர்களின்பாவங்களையும் போக்குகிறவர்.

---

1 அஸுரர்முதலியவர்களுக்குப் பயத்தைத்தரும் பராக்ரமமுள்ளவராக அவதரித்திருப்பவர்.

2 எல்லாம் தம்மிடத்தில பயப்படும்படியிருப்பவர்; அல்லது, அபீமர் = ஸாதுக்கள் பயப்படாமலிருக்கச் செய்பவர்.

3 உலகமெல்லாம் தம்மிடத்தில் பயந்து நடக்கும்படி செய்பவர்.

4 ஸ்ருஷ்டியில் வித்யாஸமின்றி முன்போலவே காரியங்களையுண்டாக்கும் காரணமாயிருப்பவர்.

5 ஹிருதயகமலத்தையடைந்திருப்பவர்; அல்லது, தாமரைபோன்ற கண்களையுடையவர்.

6 பாவத்தைப்போக்கும் புகழுள்ளவர்.

7 இதிஹாஸபுராணமுதலியவற்றைக் கேட்கிறவர்களுக்குப் புண்யத்தைச்செய்கிறவர்; அல்லது, சுருதிஸ்ம்ருதிகளால் எல்லாருக்கும் புண்ணியத்தையே சொல்லுகிறவர்.

புண்யஶ்ரவணகீர்த்தநர்— [1]கஜேந்த்ரமோக்ஷத்தைக் கேட்பதனுலும் உரைப்பதனுலும் எல்லாப்பாவங்களும் நீங்கும்படி செய்பவர்.

புநர்வஸு— [2] ப்ரம்மாதிதேவர்களிடத்திலும் அந்தர்யாமியாக வஸிப்பவர்.

புரந்தரர்—அஸுரர்களின்பட்டணங்களைப்பிளப்பவர்; அஸுரர் பிசாசுமுதலியவற்றை நிக்ரஹிப்பதனுல் ஆதிதைவிகபயத்தைப் போக்குகிருர் என்பது குறிப்பு.

புராதநர்— [3]முந்தியகல்பங்களிலும் இப்படியே வித்தைகளை வெளிப்படுத்தினவர்.

புருஜித்—அநேகரைஜயித்தவர்.

புருஷர் (14)— [4]மிகுதியாகக்கொடுப்பவர்; முக்தர்களுக்குத் தம் ஸ்வரூபகுணவிபவங்களில் ஈடுபாடென்னும் பேரானந்தத்தை அளிப்பவர்.

புருஷர் (407)— [5]உலகமெல்லாவற்றிற்கும் தலைவரும் பாவங்களையெல்லாம் எரிப்பவருமாயிருப்பவர்; அல்லது, காப்பாற்றுகிறவர்; 'விருப்பங்களை நிரப்புகிறவர்; அல்லது, எல்லாருக்கும் முன் செல்லுகிறவர்' என்பது நிர்வசனம்.

புருஷோத்தமர் — [6]புருஷர்களென்னப்படும்பத்தர், முக்தர், நித்யரென்ற மூவகைச்சேதனர்களையும் பார்க்கிலும் மிகச்சிறந்தவர்.

புருஸத்தமர்— [7]தமது குணங்களென்னும் அமுதக்கடலைக் குடிக்கவிரும்பும் கருடன்முதலான அநேகரிடத்தில் ஸ்திரமாகவும் தெளிவாகவுமிருப்பவர்.

புஜகோத்தமர்— [8]ஆதிசேஷனுக்கும் மேற்பட்ட சேஷியாகிய ஸ்வாமி; அரவணையில் பள்ளிகொண்டிருப்பவர் என்பது.

---

1 அவரைக்கேட்பதும் உரைப்பதும் புண்யத்துக்குக்காரணம்.

2 சரீரங்களில் ஜீவாத்மாவாக மாறிமாறி வஸிப்பவர்.

3 காலவரையில்லாமையால் முந்தியும் இருப்பவர்.

4 புரமென்னப்படும் சரீரத்திலிருப்பவர்; அல்லது, எல்லாவற்றிற்கும் முன்னமே இருந்தவர்; அல்லது, உயர்ந்தபொருள்களிலிருப்பவர்; அல்லது, அநேகபலன்களைக்கொடுப்பவர்; அல்லது, ப்ரளயகாலத்தில் அநேகலோகங்களை ஸம்ஹரிப்பவர்; அல்லது எல்லாவற்றிலும் நிரம்பியிருப்பவர்.

5 தேகங்களில் ஆத்மாவாகப் பிரவேசித்திருப்பவர்.

6 புருஷர்களுள்சிறந்தவர்; அல்லது, புருஷர்களைக்காட்டிலும் சிறந்தவர்.

7 விசுவரூபியும் மிக்க உத்க்ருஷ்டருமாயிருப்பவர்.

8 ஸர்ப்பங்களுள் உத்தமர் ஆதிசேஷரூபி என்பது.

புஷ்கராக்ஷர் (40) -- தாமரைக்கண்ணர்; 'அவருடைய கண்கள் மலர்ந்த தாமரைமலருக்கு ஒப்பானவை' என்று சுருதியில் சொல்லிய ஸர்வேஸ்வரர் சிறப்பிலக்கணம் இதனால் குறிப்பிக்கப்பட்டது.

புஷ்கராக்ஷர் (561) [1]கருணைபொழிந்து ஆஸ்ரிதர்களைப்போஷிக்கும் திருக்கண்களையுடையவர்.

புஷ்டர் = [2]சிறந்த திருக்கல்யாணகுணங்கள் நிரம்பியிருப்பவர்.

புஷ்பஹாஸர் [3]தம்முடைய ஸ்வரூபத்தை அநுபவிக்கும் திறமை உண்டானவர்களுக்கு ஸாயங்காலத்தில் புஷ்பம் மலர்வது போலத் தாமேமலர்ந்து மிகப்போக்யராகப் பிரகாசிப்பவர்.

பூ [4]த்ருவநக்ஷத்திரத்தில்சேர்ந்து பூலோக கோளங்களனைத்தையும் தாங்குகிறவர்.

பூகர்ப்பர் = [5]பூமிதேவியென்னும் பத்நியை கர்ப்பத்தில் வைப்பதுபோல வைத்துக்காப்பவர்.

பூசயர் = [6]பக்தர்கள் அர்ச்சாவிக்ரஹங்களில் எழுந்தருளும்படி பிரார்த்திப்பதை ஏற்றுக்கொண்டு அவர்களால் காண்பிக்கப்பட்ட ஸ்வயம்வ்யக்தம், ஸித்தம், மாநுஷமுதலான திவ்யாலயப்ரதேசங்களில் அவர்களை அநுக்ரஹிப்பதற்காக ஸயனமாயிருப்பவர்.

பூதக்ருத் —[7] எல்லாப்பொருள்களையும் தம்மிச்சையினால் படைப்பவர்.

பூதப்ருத்— [8]எல்லாஉலகங்களையும் தாங்குகிறவர்.

---

1 பூரணமாக வ்யாபித்திருப்பவர்; அல்லது, ஹ்ருதயகமலத்தில் ப்ரகாசித்திருப்பவர்.

2 எப்போதும் பூரணமானவர்.

3 புஷ்பம் மலர்வதுபோல ரஞ்சகமாக ஸந்த்யாகாலத்தில் தாம மலர்கிறவர்.

4 அபூ=ஜனனமில்லாதவர்; அல்லது, பூ=இருப்பாயிருப்பவர்; அல்லது, பூமிரூபி.

5 பூமியைத் தம்கர்ப்பத்தில் வைத்திருப்பவர்.

6 ராமாவதாரத்தில் ஸேதுபந்தனத்திற்காக கடற்கரையில் தர்ப்பசயனத்தில் [illegible]வர்.

7 விஷ்ணுவே, ரஜோகுணத்தை எடுத்துக்கொண்டு பிரம்மரூபியாக எல்லாவற்றையும் படைக்கிறார்; அல்லது, தமோகுணத்தைக்கொண்டு ருத்ரரூபியாக எல்லாவற்றையும் அழிக்கிறார்.

8 ஸத்வகுணத்தைக் கைக்கொண்டு விஷ்ணுரூபியாக எல்லாவற்றையும் காப்பாற்றுகிறவர்; அல்லது, போஷிப்பவர்.

பூதபவ்யபவத்ப்ரபு—சென்றவை நிகழ்கின்றவை வருபவை எல்லாவற்றிற்கும் ஸ்வாமி (—சேஷி)யாயிருப்பவர்.

பூதபவ்யபவந்நாதர்— [1]இறந்தது எதிர்வது நிகழ்கிறது ஆகிய முக்காலங்களிலுமுள்ளவற்றிற்கும் ஈஸ்வரர்.

பூதபாவநர்— [2]தாங்குவதனாலும் போஷிப்பதனாலும் போகங்களைக்கொடுப்பதனாலும் எல்லாப்பொருள்களையும் வ்ருத்திசெய்பவர்.

பூதமஹேஸ்வரர்— [3]எல்லாப் பிராணிகளையும் நடத்தும்ப்ரம்மா யமன் முதலானவர்களையும் நியமிப்பவர்.

பூதாத்மா (8)—எல்லாப்பொருள்களுக்கும் அந்தர்யாமி.

பூதாத்மா (10)—பரிசுத்தஸ்வபாவமுள்ளவர்; சரீரங்களாயுள்ள சேதநாசேதனங்களின் குற்றங்களொன்றும் பற்றாதவரென்பது.

பூதாதி— [4]எல்லாப்பிராணிகளாலும் இவரே பரமபுருஷார்த்தமென்று ஆவலோடு அடையப்படுகிறவர்.

பூதாவாஸர்—எல்லாப்பிராணிகளுக்கும் தங்குமிடமாயிருப்பவர். தம்முடைய பரத்துவத்தைமறைத்துக் கிருஷ்ணாவதாரத்தின் ஸௌலப்யத்தை மேற்கொண்டு எல்லாப்பிராணிகளும் எளிதில் ஆஸ்ரயிக்கும்படி இருந்தவர் என்பது.

பூதி— [5]வெளிஉபாயங்களாகிய செல்வங்களும் உள்உபாயமான தருடபக்திமுதலானவையும் இல்லாதவர்களுக்கும் அவற்றையெல்லாம் நிரப்பும் ஸம்பத்தாயிருப்பவர்.

பூர்ணர்— [6]விரும்பினவையெல்லாம் குறைபடாது நிரம்பியிருப்பவர்; அதனாலேதான் அதிகப்பொருட்செலவினாலும் தேகஸ்ரமத்தினாலும்செய்யப்படும் ஆராதனங்கள்இல்லாமலும் ஸ்தோத்திரத்தினால் மட்டுமே வசப்படுகிறவர்.

பூர்ப்புவர்— [7]பகவத்தாஸனென்கிற ஞானத்தினாலே ஆத்மா கடைத்தேறின பக்தனுக்குத் தாமே இடமாயிருப்பவர்.

---

1 முக்காலங்களிலுமுள்ளவர்களாலும் யாசிக்கப்படுகிறவர்; அவருக்குத் தாடத்தையுண்டுபண்ணுகிறவர்; அவர்களை ஆசீர்வதிப்பவர்.

2 பொருள்களை உண்டாக்குகிறவர்; அல்லது, வ்ருத்திசெய்கிறவர்.

3 ப்ராணிகளுக்குப் பெரியஈசுவரர்; அல்லது, ஸத்யமான முதல்ஈசுவரர்.

4 எல்லாப்பொருள்களுக்கும் முதலகாரணமாயிருப்பவர்.

5 இருப்பு; அல்லது, ஐசுவரியமாயிருப்பவர்; அல்லது, எல்லாஐசுவரியங்களுக்கும் காரணமானவர்.

6 எல்லாப்பலன்களும் எல்லாச்சக்திகளும் நிரம்பியிருப்பவர்.

7 எல்லாவற்றிற்கும் ஆதாரமான பூமிக்கும் ஆதாரமானவர்; 'லக்ஷ்மி' பார்க்க.

பூர்ப்புவஸ்வஸ்தரு— [1]பூலோகம் புவர்லோகம் ஸுவர்லோகம் ஆகிய மூவுலகங்களிலுமுள்ள ப்ராணிகள், பறவைகள் பழுக்கமரத்தை அடுப்பதுபோலத் தம்மை அடுத்து ஜீவிக்கும்படியிருப்பவர்.

பூரயிதா— [2]தம்மைத்துதிப்பவர்களின் விருப்பங்களையெல்லாம் நிரப்பும் தன்மையுள்ளவர்; விருப்பங்களை நிரப்புவதற்காகவே ஸ்தோத்ரமுதலியவற்றை அங்கீகரிப்பவர் என்பது.

பூரிதக்ஷிணர்— உலகத்தில் ஆசாரத்தை வெளிப்படுத்துவதற்காகச் செய்யப்பட்ட அஶ்வமேதமுதலிய யாகங்களில் நிரம்பத்தக்ஷிணைகளையளித்தவர்.

பூஷணர்— [3]யாவருக்கும் அனுகூலமான ஸௌலப்யகுணத்தினால் ஸ்ரீபதியான தம்மை அலங்கரிப்பவர்.

பேசலர் [4]கஜேந்திரனைக் காப்பாற்றுவதில் உண்டான வேகத்தில் மாலைகளும் ஆடைஆபரணங்களும் கலைந்திருப்பதே ஓர் அழகாகத்தோன்றினவர்.

பேஷஜம் சிகித்ஸைக்கு அஸாத்யமான ஸம்ஸாரரோகத்திற்குச் சிறந்த ஔஷதமாயிருப்பவர்.

போக்தா (145) [5]பக்தர்களால் நிவேதனம்செய்யப்படும் ப்ராபணமுதலிய சுவையுள்ள பதார்த்தங்களை அம்ருதத்தைப்போல அங்கீகரித்து உண்பவர்; நெய் பால் தேன் சர்க்கரைகளோடு கோதுமையைச் சேர்த்துப் பாகம்செய்யப்பட்ட பாயஸம் ப்ராபணமென்னப்படுவது.

போக்தா (502) - [6]ஹயசிரஸ்ரூபமாக ஹவ்யகவ்யங்களெல்லாவற்றையும் புசிப்பவர்.

போஜநம்— [7]பக்தர்களால் உணவுபோல ஸுகமாக அநுபவிக்கப்படுகிறவர்.

---

1 பூலோகம், புவர்லோகம், ஸுவர்லோகமாகிய மூவுலகங்களும், 'பூ: புவ: ஸுவ:' என்கிற வேதஸாரங்களாகிய மூன்றுவ்யாஹ்ருதிகளாக இருக்கின்றன; அவற்றினால் செய்யப்படும் ஹோமமுதலியவற்றினால் உலகம் நடக்கும்படி செய்பவர்; அல்லது, மேற்சொல்லிய மூவுலகங்களாகிய ஸம்ஸாரவ்ருக்ஷமாயிருப்பவர்; அல்லது, விருக்ஷம்போல மூவுலகங்களையும் வ்யாபித்திருப்பவர்.

2 பக்தர்களுக்கு எல்லாச்செல்வங்களையும் நிரப்புகிறவர்.

பல அவதாரங்களினால் பூமியை அலங்கரிப்பவர்.

4 செய்கையிலும் மனத்திலும் வாக்கிலும் வடிவத்திலும் அழகாயிருப்பவர்.

5 அந்தப்ரக்ருதியை அனுபவிக்கும் புருஷராகவுமிருப்பவர்.

6 காப்பாற்றுகிறவர்; அல்லது, தமது ஸ்வரூபமான ஆனந்தத்தை அனுபவிப்பவர்.

7 அனுபவிக்கப்படுவதாகிய மாயையென்னும் ப்ரக்ருதிவடிவமாயிருப்பவர்.

மங்களம்பரம் = [1]சிறந்தமங்களம்; தீக்குணங்கள் அணுகாது கல்யாண குணங்கள் சிறப்புற்ற ஸ்வரூபம்.

மது = ஞானிகளான பக்தர்களுக்கு இன்சுவையாயிருப்பவர்.

மதுஸூதநர் = மதுவென்னும் அஸுரனை ஸம்ஹரித்தவர்; அல்லது, நித்யஸூரிகளின் மதுக்கள் (=புலன்கள்) தம்மிடத்தில் இடையூறில்லாமல் சேர்ந்திருக்கும்படி ஆகர்ஷிப்பவர்.

மந்த்ரர் = [2]மனனம் செய்பவர்களைக் காப்பாற்றுகிறவர்.

மநு = [3]ஸங்கல்பிப்பவர்; தமது ஸங்கல்பலேசமாத்ரத்தினால் எல்லாவற்றையும் படைப்பவர் என்பது.

மநோஜவர் = [4]மனோவேகமாகக் காரியங்களைச்செய்பவர்.

மநோஹரர் = [5]இயற்கையான அன்பினால் பக்தர்களின் மனங்களைக் கவர்கிறவர்; 'மோகினி ரூபத்தினால் அஸுரர்களின் மனங்களை இழுத்தவர்' என்பது நிர்வசனம்.

மரீசி = [6]பிறவிக்குருடர்கள்போன்ற மூடர்களான பிராணிகளுக்கும் மாசற்ற தமது திவ்யரூபத்தை வெளிப்படுத்துகிறவர்.

மஹர்த்தி = பெரும் செல்வமுடையவர்; பக்தர்களின் யோக க்ஷேமங்களெல்லாவற்றையும் குறைவின்றி நடத்துவதற்குரிய அளவற்ற செல்வமுடையவர்.

மஹர்ஷி = [7]வேதங்களனைத்தையும் நேராகக் கண்டறிந்த கபில மூர்த்தி.

மஹாக்ரது = [8]ஆகம சாஸ்த்ரங்களினால் விதிக்கப்பட்டவெல்லாச் செய்கைகளும் பகவானுக்கு அர்ப்பணம் செய்யப்படுவதனாலேயே

---

1 த்யானித்தவர்களுக்கு எல்லாநன்மைகளையும் மிகப்பயப்பது; அல்லது, தானே மங்களரூபமாயுள்ளது; பரப்ரம்மம்.

2 வேதமந்த்ரரூபமாயிருப்பவர்; அல்லது, மந்திரங்களினால் தெரிவிக்கப்படுகிறவர்.

3 எல்லாவற்றையும் நினைப்பவர்; அல்லது, மந்திரரூபி; அல்லது, மநு என்னும் ஸ்ருஷ்டிகர்த்ருரூபி.

4 எங்கும்வியாபித்திருப்பதனால் மனத்தின் வேகத்துக்கொப்பான வேகமுள்ளவர்.

5 மேல்வரையற்ற ஆனந்த ரூபியாதலின் யாவருக்கும் இனியவர்.

6 ஒளியுள்ளவர்களுக்கும் ஒளியாயிருப்பவர்.

7 'மஹர்ஷி: கபிலாசார்ய:' ஒருநாமம். வேதத்தை முழுதும் பார்த்தவராதலின் கபிலர் மஹரிஷியாவர்; வேதத்தில் ஒரு பாகம் பார்த்தவரும் ரிஷியே யாவர்; ஸாங்க்யமென்னும் பரிசுத்தமானஞானத்தை உபதேசித்தவராதலின், கபிலர் ஆசாரியரென்று சொல்லப்படுகிறார்.

8 சிறந்த அசுவமேதயாகமாயிருப்பவர்.

இனியசுவையுள்ளவைகளாகச் செய்யப்படுவதனால் ஆராதனத்திற்கு எளியவர்.

மஹாக்ரமர் = [1]மிக்கஆழமான ஸம்ஸாரமென்னும் பாதாளத்தில் அமிழ்ந்துகிடக்கும் சேதனர்கள் சிற்சிலவாகச்செய்யும்நற்கர்மங்களினால் வரிசைக்ரமமாகத் தம்மிடம்ஏறும்படியாகநீண்டபடிவரிசைகளை வைத்திருப்பவர்.

மஹாகர்த்தர் = [2]புத்தாவதாரத்தில் தாம்செய்தநாஸ்திகவாதங்களினால் ஆத்மாகெட்டுப்போனவர்களை ரௌரவாதிநரகங்களென்னும்குழிகளில் விழும்படிசெய்பவர்.

மஹாகர்மா (677) = [3]பூச்சிபுழுக்களாகப் பிறந்து அறிவிலும் உருவத்திலும் மிகச்சிறியவையான பிராணிகளையும் அவற்றின்கர்மக்ரமத்தில் மனுஷ்யதேகமளித்துத் தமதுபெரியஐஸ்வர்யத்தை அனுபவிக்க ஆவலோடு முயலும்படிசெய்வதாகிய சிறந்த செய்கையையுடையவர்.

மஹாகர்மா (793) = [4]சிறந்தகாரியமுடையவர்.

மஹாகோசர் = [5]வேண்டுகிறவர்களுக்கெல்லாம் எக்காலமும் எல்லாவகைகளாலும் தானம்செய்தாலும் அழியாதவையான மஹாபத்மம், பத்மம், சங்கம், மகரம், கச்சபம், முகுந்தம், குந்தம், நீலம், வரம் என்கிறஒன்பதுநிதிகளும் ரத்நாகரமாகிய கடலும் ரத்நங்கள் விளையுமிடமாகிய ரோகணமலையும் மற்றும் இவ்வகையானபொருள்களனைத்தும் தமதுபொக்கசசாலைகளாக இருக்கப்பெற்றவர்.

மஹாசக்தி = தமதுசரீரத்தின் ஏகதேசமாகிய ப்ரக்ருதியின்பரிணாமத்தினால் உலகங்களையெல்லாம் படைக்கும் பெருந்திறமையுள்ளவர்; சிலந்தியானது தன்சரீரத்தின்எச்சிலினால் நூலையுண்டாக்கி அதற்குத் தானே கர்த்தாவாயிருப்பதுபோல ப்ரக்ருதியின்பரிணாமங்களாகியஉலகங்களை நினைத்தமாத்திரத்தில் படைப்பதனால் நிமித்தகாரணமென்னப்படும் கர்த்தாவாகவும் உபாதானகாரணமென்னப்படும் மூலகாரணமாகவுமிருப்பவரென்பது; இது சக்தியென்னும் குணம்.

---

1 பெரியகாலடிகளை உடையவர்.

2 அவித்தையென்னும் படுகுழி வைத்திருப்பவர்; அல்லது, சிறந்த தேராளி; மஹாபாரத முதலியவற்றில் சொல்லியபடி மஹாரதர் என்பது.

3 சிறந்த ஸ்ருஷ்டி முதலான கர்மங்களை உடையவர்.

4 ஆகாயமுதலான மஹாபூதங்களைப் படைத்தவர்.

5 அன்னமயம், ப்ராணமயம், மனோமயம், விஜ்ஞானமயம், ஆனந்தமயமென்னும் ஐந்து கோசங்களினுள்ளிருப்பவர்.

மஹாசநர் — பெருந்தீனியுள்ளவர்; ஸம்ஹாரகாலத்தில் உலக மனைத்தையும் விழுங்கினவர்.

மஹாத்யுதி— [1]பெரியவொளியுள்ளவர்; உள்ளும்புறமுமுள்ள இருளனைத்தையும் நினைத்தமாத்திரத்தினால் ஒதுக்கிவிடும் ப்ரகாசமுள்ளவரென்பது; ஸூர்யன்முதலியவற்றின்ஒளி இதன் ஒருதுளி; இது தேஜஸென்னும் குணம்.

மஹாத்ரித்ருத்— [2]திருப்பாற்கடல் கடைந்தபோது மந்தரமென்னும் பெரியமலையைத் தாங்கினவர்.

மஹாதநர் — [3]மிக்கஏழைகளுக்கும் எண்ணாமல் கொடுக்கத்தக்க அளவற்ற பொருள்களை வைத்திருப்பவர்.

மஹாதபஸ்— [4]சிறந்தஞானமுள்ளவர்; ஆறுகுணங்களில், ஞானம், பலம்என்னும் இரண்டுகுணங்கள் ஸங்கர்ஷணன் கூறுனவை. அவற்றில் ஞானமாவது :—ஜனனமரணங்களாகிய ஸம்ஸாரமார்க்கத்தில் அனாதிகாலமாக நடந்துகொண்டு வருந்தும் ஜீவராசிகளுக்கு ஸ்ரமபரிகாரம்செய்வதற்காக அந்தஅந்தக் கார்யகாரணங்களை அறிந்து கார்யவர்க்கங்களைத் தம்தம் காரணங்களில் அடக்குவதற்குரிய ஸர்வஜ்ஞத்வம்.

மஹாதேவர் — [5]ப்ரம்மாமுதலிய தேவர்களைப் பந்துமுதலிய விளையாட்டுக்கருவிகளைப்போல வைத்து விளையாடுகிறவர்.

மஹாதேஜஸ் — [6]தமோகுணத்தில் அகப்பட்டுப் பிறந்திறந்துகொண்டிருக்கும் சேதனங்களுக்கும் அனாதியாயுள்ள அஜ்ஞானம் என்னும் இருளைஒழிக்கும் பேரொளியுள்ளவர்.

மஹாந்— [7]எல்லாவற்றிலும் மிகச்சிறந்தவர்; இங்கு, நீரில்போல நிலத்திலும் முழுகுவது கிளம்புவதுமுதலிய நினைத்தவெல்லாம் தடைப்படாமலிருப்பதாகிய ப்ராகாம்யம்என்னும் ஐஸ்வர்யம் கூறப்

---

1 ஸ்வயம்பிரகாசம்.

2 கோவர்த்தனத்தை எடுத்தவர் என்னவுமாம்.

3 போகத்திற்கு ஸாதனமாகிய தனங்களை மிகுதியாகவுடையவர்.

4 ஸ்ருஷ்டியைப்பற்றிய சிறந்த ஞானமுள்ளவர்; அல்லது, சிறந்த ஐசுவரியமுள்ளவர்; அல்லது, சிறந்த பராக்ரமமுள்ளவர்.

5 தமது சிறந்த ஆத்மஜ்ஞானத்தினால் எல்லாவற்றையும்விட்டு யோகீசுவரராயிருத்தலால் கொண்டாடப்படுகிறவர்.

6 ஸூர்யன் முதலானவர்களுக்கும் ஒளியைக்கொடுக்கும் சிறந்த ஒளியுள்ளவர்.

7 சப்தாதிகுணங்களில்லாமையாலும் மிகவும் ஸூக்ஷ்மராயிருப்பதனாலும் நித்யத்வம் சுத்தத்வம், ஸர்வகதத்வம்என்னும், தமது மூன்றுதர்மங்களிலும் பிரதிபந்தகமில்லாதவர்.

பட்டது; நிழல்போல உட்புகுந்து பிறர்மனத்தைத் தம்வசப்படுத்திக் கொள்வதும், இடைவிடாது தம்மை த்யானிக்கும்படி அவர்மனத்தை நடத்துவதும், ஆத்மா தேகத்திலிருக்கும்போதும் கிளம்பிப் போனபோதும் அத்தேகத்துள் பிரவேசித்திருப்பதும், யாகங்கள் செய்வது குளம்வெட்டுவதுமுதலிய தர்மகாரியங்களை நடத்துவது மாகிய நான்குவகையான காமாவஸாயித்வம் என்னப்படுவதும் இது தான்.

மஹாநிதி= [1]மகாத்மாக்களை நிதிகண்டதுபோல அன்புடன் ஆதரிப்பவர்.

மஹாபலர்= [2]வேறுஉதவியை எதிர்பாராமல் எல்லாவற்றையும் நடத்தும் சிறந்த மகிமையுள்ளவர்; தமது மகிமையைத்தவிர வேறு ஆதாரமில்லாமல் எல்லாவற்றையும் தமதுதேகத்தைப்போலத் தாமே தரித்திருப்பவரென்பது; நீர் காற்று மலை பூமிமுதலியவற்றிலுள்ள தாங்கும் சக்தி, பகவானுடைய சக்தியென்னும்கடலில் ஒரு சிறு திவலையாகத் தோற்றும்படியிருப்பவர்; இது பலமென்னும் குணம்.

மஹாபாகர்= [3]ஆயர்பாடிப்பெண்களும் நீளாதேவியென்னப் படும் நப்பின்னைப்பிராட்டியும் திவ்யகன்னிகைகள் பதினாறுபிரவரும் ருக்மிணி ஸத்யபாமை ஜாம்பவதிமுதலிய பெண்ணரசிகளும் வலிய வரிக்கத்தக்க வடிவழகையுடையவர்.

மஹாபுத்தி= [4]எக்காலமும் எவ்விடங்களிலுமுள்ள எல்லாப் பொருள்களையும் ஐயந்திரிபற அறிவதாகிய பேரறிவுள்ளவர்; ஸர்வஜ்ஞரென்பது; இது ஞானமென்னும் குணம்.

மஹாபூதர்= [5]சான்றோர்களைத் தமராகக்கொண்டவர்.

மஹாபோகர்= [6]திரவியங்களினாலாகிய சிறந்தபோகங்களனைத்தையும் தருகிறவர்.

மஹாமகர் = [7]தர்மம் அவருக்குச்சரீரமாதலின் யாவராலும் பூஜிக்கத்தக்க யாகத்தைத் தமக்கு அவயவமாகவுடையவர்.

---

1 எல்லாப்பொருள்களும் தம்மிடத்தில்தங்கும்படியான பெரிய ஆதாரம்.

2 பலசாலிகளுக்கும் மிகுந்த பலசாலி.

3 சிறந்தபோஜனங்களாகிய பாகங்களையுண்பவர்; அல்லது, அவதாரங்களில் சிறந்தபோகங்களை அனுபவிப்பவர்.

4 ஞானிகளெல்லாரிலும் சிறந்த ஞானமுள்ளவர்.

5 காலவரையின்றி எக்காலமும் வ்யாபித்திருப்பவர்.

6 சிறந்த ஸுகரூபமாயிருப்பவர்.

7 தமக்கு அர்ப்பணம்செய்வதனால் யாகங்கள்முதலிய கர்மங்களைச் சிறப்பிப்பவர்.

மஹாமநாஸ் = [1]ஆஸ்ரிதர்கள்விஷயத்தில் பெரியமனமுள்ளவர்; அவர்களுக்கு எவ்வளவுகொடுத்தாலும் கொடுத்ததுபோதாது என்று தாம்நினைக்கும் உதாரகுணமுள்ளதும் அவர்கள்செய்யும் அபராதங்களினால் கலங்காமலிருக்கும்படி அகாதமுமான திருவுள்ளமுடையவர்.

மஹாமாயர் = [2]தம்மைச் சரணமடையாத ஜனங்களனைவருக்கும் ஸ்வரூபம்தெரியவொட்டாமல்திரைபோலமறைப்பதாகிய மாயையென்னப்படும் ஸங்கல்பத்தையுடையவர்.

மஹாமூர்த்தி = [3]விஸ்வரூபம்காண்பித்தபோது அநேகம் ப்ரம்மாண்டங்கள் அடங்கிய உலகமனைத்தும் ஒருமூலையில்அடங்கிக்கிடக்கும்படி பெரியஉருவமுள்ளவர்.

மஹாயஜ்ஞர்= [4]தம்மை ஆராதிப்பது எல்லா ஆராதனங்களிலும் மேற்பட்டதாகச் செய்பவர்.

மஹாயஜ்வா = [5]மற்றத்தேவர்களைப் பூஜிப்பவரைப்பார்க்கிலும் தம்மைஆராதிப்பவர்கள் சிறந்தவர்களாகும்படிசெய்பவர்.

மஹார்ஹர்= [6]ஒருவன், ப்ரணவத்தைஉச்சரித்துத் தன்ஆத்மாவைப் பரமாத்மாவிடம் ஒப்பிப்பதாகிய பூஜைக்கு உரியவர்.

மஹாவராஹர் = பூமியையெடுத்ததனால் ஒப்புயர்வற்ற வராஹரூபியாயிருப்பவர்.

மஹாவீர்யர்= [7]விகாரப்படுவதற்குக்காரணங்களிருப்பினும் தமதியற்கை விகாரப்படாமலிருப்பவர் ; இது வீர்யம் என்னும் குணம் ; யோகீஸ்வரர்களிடத்திலுள்ள கலங்காமை என்னும் இந்திரியஜயம் இந்தக்குணத்தின் ஓர் அணுவாக நினைக்கப்படுகிறது.

---

1 ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாரங்களை நினைத்தமாத்திரத்தில் செய்யத்தக்க பெரிய மனமுடையவர்.

2 மாயைசெய்பவர்களுக்கும் அம்மாயையைஉண்டாக்குவதனால் யாராலும் தாண்டமுடியாதபெரியமாயையையுடையவர்; (மாயை=மயக்கும்சக்தி.)

3 ஆதிசேஷன்மேல் பள்ளிகொண்டிருக்கும் பெரிய உருவமுடையவர்.

4 சிறந்த ஜபயஜ்ஞமாயிருப்பவர் ; அல்லது சிறந்த ஜபயஜ்ஞத்தையுடையவர்.

5 உலகங்களுக்கு யாகமுறையை அறிவிப்பதற்காகச் சாஸ்த்ரப்படி யஜ்ஞம் செய்வதனால் யாகம்செய்பவரில்சிறந்தவர்; அல்லது, சிறந்தயாகம் செய்பவரனைவரும் தம்மவராயிருப்பவர்.

6 பூஜைக்கு உரியவர்.

7 உலகத்தை உண்டாக்குவதாகிய அவித்தையென்னும் பெருங்காரணத்தையுடையவர்.

மஹாஶ்ருங்கர் = [1]பூமண்டலமெல்லாம் முனையில் ஓட்டிக்கொண்டிருக்கும்படி பெரியகோரப்பல்லையுடையவர்.

மஹாஸ்வநர் = [2]சிறந்தநாமமுள்ளவர்; அல்லது, வேதங்களுக்கும் அவற்றின்ஸாரமாகியகாயத்ரிக்கும் பொருளாயிருப்பவர்.

மஹாஹ்ரதர் = [3]பாவம்செய்தவர்கள் தலையெடாமல் அமிழ்ந்து போவதும் புண்ணியம் செய்தவர்கள் அடிக்கடி ஆழ்ந்தும் போதுமென்று தோன்றுமலிருப்பதுமான பெருமடுவாயிருப்பவர்.

மஹாஹவிஸ் = [4]ஸாத்விகர்களினால் உபநிஷத்தில் சொல்லப்பட்ட ஞானயஜ்ஞத்தினால் மனம் புத்தி இந்திரிய முதலியவற்றை ஹவிஸுகளாக ஸமர்ப்பணம் செய்யப்பெறுகிறவர்; அல்லது, ஆத்மா என்னும் சிறந்த ஹவிஸை அங்கீகரிப்பவர்.

மஹாக்ஷர் = [5]யாவராலும் பூஜிக்கப்படும் வேதமூர்த்தியான கருடனை வாஹனமாகவுடையவர்.

மஹீதரர் (318) = [6]பூபாரமாயுள்ள துஷ்டர்களை ஒழித்துப் பூமியைத்தாங்குகிறவர்.

மஹீதரர் (371) = [7]பூபாரத்தைப்போக்கிப் பூமியை நிலை நிறுத்துகிறவர்.

மஹீபர்த்தா = [8]ஆதிகூர்மரூபியாகப் பூமியை எப்போதும் எளிதாகத் தாங்கிக்கொண்டிருப்பவர்.

மஹேந்த்ரர் = [9]யாவராலும் கொண்டாடப்படும் பரமேஶ்வரத் தன்மையையுடையவர்.

---

1 ப்ரளயஸமுத்திரத்தில் ஓடமாகியபூமியைக்கட்டி விளையாடின சிறந்த கொம்புள்ளவர்.

2 தமது மூச்சாகச்சொல்லப்படும் வேதத்தையே சிறந்தசப்தமாகஉடையவர்.

3 யோகிகள்மூழ்கி இளைப்பாறி ஸுகமாகத்தங்கியிருக்கும்ஆனந்தவெள்ளம்நிரம்பின மடுவாயிருப்பவர்.

4 பெரியஹவிஸாயிருப்பவர்; உலகமெல்லாம் ப்ரம்மஸ்வரூபமாதலின் ப்ரளயகாலத்தில் அவரிடத்தில் ஹோமம் செய்யப்பட்ட உலகமென்னும் பெரியஹவிஸாக அவரேயிருப்பவரென்பது; அல்லது, உலகமென்னும் பெரிய ஹவிஸையுடையவர்.

5 பெரிய கண்களையுடையவர்; அல்லது, சிறந்த புலன்களையுடையவர்

6 பூமியைத் தாங்குகிறவர்; அல்லது, பூஜையைப் பெறுகிறவர்.

7 மலைகளாயிருந்து பூமியைத்தாங்குகிறவர்.

8 வராஹாவதாரமெடுத்துக் கடலில் முழுகின பூமியைத் தூக்கி எடுத்தவர்.

9 ஈசுவரருக்கும் ஈசுவரர்.

மஹேஜ்யர்= [1]பலன்களை விரும்பாதவர்கள் இந்திராதிதேவர்களையன்றித் தம்மை நேராக ஆராதிப்பதையே சிறந்த ஆராதனமாக அங்கீகரிப்பவர்.

மஹேஷ்வாஸர்=கடலில் அணைகட்டுவது ராவணவதமுதலான கார்யங்களில் பார்ப்பவர்மனத்தைக் கவரும்படி சிறந்த பாணப்ரயோகம் செய்பவர்.

மஹோத்ஸாஹர்= [2]எல்லாவற்றையும் படைப்பதாகிய ஈச்வரசக்தி மிகப்பெரிதாகவிருப்பவர்; ஸாங்க்யர்கள் சொல்லும் ஈச்வரன் போல ஒன்றும் செய்யாமல் தொழிலற்றிருப்பவரல்லர்; தாம் எல்லாம் செய்யவல்லவராயினும் அவரவர் தகுதிப்படி பலன்களைப் பகுத்துக் கொடுப்பவரென்பது; இது ஐச்வர்யமென்னும் குணம்.

மஹோததிசயர்= [3]ப்ரளயகாலத்தில் பெருங் கடலில் ஆதிசேஷனாகிய அரவணையின்மேல் படுத்திருப்பவர்.

மஹோரகர்= [4]தாம் மிகப் பெரியவராயிருந்தும் மிக்க அற்பர்களுக்கும் அந்தர்யாமியாக ஹ்ருதயத்துள் பிரவேசித்திருப்பவர்.

மாதவர் (73)= [5]ஸ்ரீதேவியின் கணவர்; திருமகள் தம்மைவிட்டு என்றும் அகலாமல் இருப்பவர்; ஞானம், சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ் என்னும் ஆறு குணங்களும் சேர்ந்து உருவெடுத்திருப்பவளும், பகவானுடைய எல்லாச் சக்திகளுக்கும் தலைமையாக உலகங்களை நடத்தும் பராசக்தியும், பகவானுடைய மற்றச் சக்திகளை நடத்திக்கொண்டு சராசரங்கள் அடங்கிய உலகமனைத்தையும் வ்யாபித்திருப்பதனால் அனந்தையென்று சொல்லப்படுகிறவளும், தயாமூர்த்தியுமான திருமகளுக்கும் ஸ்வாமியென்பது.

மாதவர் (169)='மா' என்னப்படும் பரமாத்மஜ்ஞானத்தைக் கொடுப்பவர்; அல்லது, மௌனம் தியானம் யோகம் இம்மூன்றும் பொருந்தினவர்.

---

1 தம்மைக்குறித்துச் செய்யும் யாகமே மோக்ஷபலனைத் தருவதாதலின் அது மற்றத் தேவர்களைக்குறித்துச் செய்யும் யாகங்களைக் காட்டிலும் சிறந்த தாம்படி இருப்பவர்.

2 உலகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார விஷயத்தில் எப்போதும் முயற்சியோடிருப்பவர்.

3 எல்லாவற்றையும் ஸம்ஹாரம் செய்தபிறகு ப்ரளயஸமுத்திரத்தில் படுத்திருப்பவர்.

4 மஹாஸர்ப்பமாயிருப்பவர்.

5 மதுவித்தையினால் உபாஸிக்கப்பட்டவர்; அல்லது, மௌனம் த்யானம் யோகம் இம்மூன்றும் பொருந்தினவர்.

மாதவர் (741) — லக்ஷ்மிக்குநாயகர்; உலகங்களுக்கு லக்ஷ்மி தாயும் தாம் தந்தையுமாயிருப்பவர்; அல்லது, மதுவென்னும் யாதவனுடையகுலத்தில் அவதரித்தவர்; அல்லது, மௌனம், த்யானம் யோகம் இம்மூன்றுமுள்ளவர்.

மாந்யர் — [1]தமதுபக்தர்களுக்குக்கீழ்ப்படிந்தநிலைமையையே பெருமையாகநினைத்துத் தம்மாலேயேதாம்வெகுமானிக்கப்படுகிறவர்.

மாநதர் — [2]தம்மைச் சேர்ந்தவர்களுக்குக் கௌரவத்தைக்கொடுப்பவர்; அர்ஜுனனைத்தேராளியாகச்செய்து தாம்ஸாரதியாகஇருந்ததும், கம்ஸவதம்செய்தபின் உக்ரஸேனனை ராஜாவாக அபிஷேகம் செய்து தாம்கீழ்ப்பட்டிருந்ததும், யுதிஷ்டிரரைமூத்தவராகமதித்துத் தாம்கீழ்ப்படிந்திருந்ததும், மற்றும் இவ்வித அநேகஸௌலப்யவியாபாரங்களும் இவ்விடத்தில் குறிப்பிக்கப்பட்டிருக்கின்றன.

மார்க்கர் (367) — [3]பக்தர்களினால் தேடப்படுகிறவர்.

மார்க்கர் (399) — [4]பரத்வாஜர்முதலான முனிவர்களால் தேடப்படுகிறவர்; 'விரதர்' பார்க்க.

முக்தாநாம்பரமாகதி — [5]ஸர்வசேஷியானதாமே முக்திபெற்றவர்கள் முடிவாகச்சேரும் இடமாயிருப்பவர்; அடைந்தவர் தம்மை விட்டுவிலகாமலிருக்கச்செய்பவர்.

முகுந்தர் — [6]பாஞ்சராத்திரர்களினால் ஒரேதெய்வம்கொழுது பிரார்த்திக்கப்பெற்றவராக அவர்களுக்கு முக்தியைக்கொடுப்பவர்.

மேதஜர் — [7]தேவகியானவள் பூர்வஜன்மத்தில்புத்ரனைவேண்டி நோற்ற நோன்பென்னும் யாகத்தின்பலனாக அவதரித்தவர்.

மேதாவீ — [8]காலவரையும்தேசவரையுமற்றதாகிய மஹிமைக்கு உதவியாக இயற்கையால் அமைந்த ஸர்வஜ்ஞத்வமுடையவர்.

---

1 ஸர்வேசுவரராதலின் எல்லாராலும் பூஜிக்கத்தக்கவர்.

2 தம்முடையமாயையினால் எல்லாருக்கும் ஆத்மாவல்லாதவற்றை ஆத்மாவாகநினைக்கும் அபிமானத்தைக்கொடுப்பவர்; அல்லது, பக்தியில்லாதவரின் கர்வத்தைக் கண்டிப்பவர்; அல்லது, தத்வஞானிகளுக்கு ஆத்மாஅல்லாதவற்றைஆத்மாவாக அபிமானிக்கும்மயக்கத்தைப் போக்குகிறவர்.

3 மோக்ஷத்தைவிரும்புகிறவர்களால் தேடப்படுகிறவர்; அல்லது, ப்ரம்மானந்தத்தை அடைவதற்குத் தாமே உபாயமாயிருப்பவர்.

4 முக்திக்குவழியாயிருப்பவர்.

5 முக்தர்களுக்கு உத்க்ருஷ்டமான கதி; அவரைவிட வேறுதேவதையை அடையவேண்டுவதுமில்லை; ஸம்ஸாரத்தில் திரும்புவதுமில்லை.

6 முக்தியைக்கொடுப்பவர்.

7 யாகத்தில் உண்டாகிறவர்.

8 அநேக கிரந்தங்களை அறியும் திறமையுள்ளவர்.

மேதிநீபதி = பூமிக்கு நாதர்.

யத் = [1]ஆஸ்ரிதர்களை ரக்ஷிப்பதற்கு எப்போதும் முயற்சிசெய்கிறவர்; அல்லது, அவர்களை ரக்ஷிப்பதற்காகத் தம்மை அவர்களிடம் சேர்ப்பிக்கிறவர்.

யதுஸ்ரேஷ்டர் = முழுகிப்போன யதுவம்சத்தை உயரத்தூக்கினதனால் யதுக்களில் சிறந்தவர்.

யமர் (164) = எல்லாவற்றையும் நடத்துகிறவர்.

யமர் (870) = [2]விரும்பினவரன்களையளிக்கும் தேவர்களையும் நடத்துகிறவர்.

யஜ்ஞக்ருத் = [3]உலகங்களின் நன்மைக்காக ஆதிகாலத்தில் யஜ்ஞத்தைச் சிருஷ்டித்தவர்.

யஜ்ஞகுஹ்யர் = [4]யாகத்தின் ரஹஸ்யமாயிருப்பவர்; விருப்பமற்றவராயிருந்தும் விருப்பமுள்ளவர்போல யாகங்களில் கொடுக்கும் புரோடாசமுதலிய ஹவிஸுகளையுண்டு தாம் திருப்தியடைந்து யாகம்செய்தவரைப் பலன்களினால் திருப்திசெய்விக்கிறாரென்பது சாஸ்திரஸூக்ஷ்மங்களை அறிந்தவர்க்கல்லது மற்றவர்களுக்குப் புலப்படாமையால் யாகத்தின் ரஹஸ்யமாயிருப்பவர் என்பது.

யஜ்ஞப்ருத் = [5]யஜ்ஞம்குறைவுபட்டாலும், தம்மைத்யானிப்பதனாலும் பூர்ணாஹுதியினாலும் அதை நிரம்பச்செய்பவர்.

யஜ்ஞபதி = [6]தம் ஆராதனத்திற்குப் பலனை அளிப்பவர்.

யஜ்ஞபுக் = யஜ்ஞங்களையனுபவிப்பவர்; அல்லது, காப்பவர்.

யஜ்ஞர் (446) = [7]யாகரூபியாயிருப்பவர்; யாகங்களால் ஆராதிக்கப்பட்டவரும் யாகங்களின் பலன்களை அளிப்பவருமாயிருப்பவர்.

---

1 பிரஸித்தமாயிருப்பதைச் சொல்லும் யத் என்னும் சொல்லால் சொல்லப்படுகிறவர்.

2 அயமர் = மரணமில்லாதவர்; அல்லது, யமர் = யோகத்திற்கு அங்கமாகிய யமமாக இருப்பவர்; அதாவது, அதனால் அடையப்படுகிறவர் எனினுமாம்.

3 ப்ரளயகாலத்தில் யஜ்ஞத்தை ஸம்ஹரிப்பவர்.

4 யஜ்ஞங்களுள் ரஹஸ்யமாகிய ஞானயஜ்ஞமாகவிருப்பவர்; அல்லது, பலனைக்கருதாது செய்யப்படும் யாகமாகவிருப்பவர்.

5 யஜ்ஞத்தைக் காப்பாற்றுகிறவர்.

6 யஜ்ஞங்களைக் காப்பவர்; அல்லது, யஜ்ஞங்களுக்கு ஈசுவரர்.

7 யஜ்ஞஸ்வரூபி; அல்லது, யஜ்ஞத்தினால் எல்லாத்தேவர்களையும் ஸ்ருஷ்டிப்பவர்.

யஜ்ஞர் (971) = தம்மை ஆராதிப்பதற்குப் போதுமான புண்ய ஸம்பத்தில்லாமல் தமதாராதனத்தை விரும்புகிறவர்களுக்குத் தாமே ஜபயஜ்ஞரூபமாயிருப்பவர்.

யஜ்ஞவாஹநர் = யஜ்ஞம்செய்பவர்களுக்குச் சக்தியையும் சிரத்தையையும் அதிகாரத்தையும் கொடுத்து யாகத்தை நடத்துகிறவர்.

யஜ்ஞஸாதநர்=யஜ்ஞங்களே ஞானத்தின் வழியாகத் தம்மை அடைவதற்கு உபாயங்களாகும்படி செய்பவர்.

யஜ்ஞாங்கர்= [1]சக்தியுள்ளவர்கள் செய்யும் மற்றயாகங்கள் தமது யாகத்திற்கு அங்கமாகக் கீழ்ப்பட்டிருக்கும்படி செய்பவர்.

யஜ்ஞாந்தக்ருத் = [2]யாகத்தின் பலனாகிய தத்வஜ்ஞானத்தை உண்டுபண்ணுகிறவர்.

யஜ்ஞீ = எல்லாயஜ்ஞங்களுக்கும் சேஷி; எல்லாயஜ்ஞங்களாலும் ஆராதிக்கப்படுகிறவர் என்பது.

யஜ்வா = அசக்தர்களுக்குத் தாமே யஜமானரூபியாக யாகம் செய்பவர்.

யுகாதிக்ருத் = [3]ப்ரளயமானபோது யுகங்களுக்கு ஆதியான ஸ்ருஷ்டியைச்செய்பவர்; அதாவது, பிரளயமானதினால் யாதொரு கெடுதலுமில்லாமலிருக்கும்படி திரும்பவும் உலகத்தை நடத்தினவர் என்பது.

யுகாவர்த்தர் = [4]நான்குயுகங்களையும் அவ்வவற்றின் தர்மவரைகளோடு அடிக்கடி திரும்பச்செய்கிறவர்.

யோகர் = [5]ஸாயுஜ்யமாகிய முக்திக்கு உபாயமாகவும் தாமே இருப்பவர்.

யோகவிதாம்நேதா = [6]பக்தியோகத்தை அவலம்பித்தவர்களைப் பலன் பெறும்படி நடத்துகிறவர்; வேறுஉபாயமாகிய பக்தியோகத்தை அவலம்பித்தவர்களுக்கும் பூர்த்தி செய்கிறவர்.

---

1 யாகங்களே அங்கங்களாகவுடைய வராஹமூர்த்தி.

2 யஜ்ஞபலனை உண்டுபண்ணுகிறவர்; அல்லது தம்மைப்பற்றிய மந்த்ரத்தைச் சொல்வதனாலும் பூர்ணாஹுதி செய்வதனாலும் யஜ்ஞத்தை நிறைவேற்றுகிறவர்.

3 யுகமுதலிய காலப்பிரிவுகளைச் செய்பவர்; அல்லது, யுகங்களின் ஆரம்பத்தைச்செய்பவர்.

4 காலரூபியாக யுகங்களைத் திருப்புகிறவர்.

5 யோகத்தினாலடையத்தக்கவர்.

6 யோகிகளான ஞானிகளின் யோகக்ஷேமங்களை வகித்து நடத்துகிறவர்.

யோகீ — [1]கூடாதனவற்றையும் கூட்டுவதாகிய சிறந்தப்ரபாவம் எப்போதும் பொருந்தியிருப்பவர்.

யோகீசர்— [2]ஸம்ஸாரிகளுக்கும்இயற்கையில் த்யானம்அமைந்த ஸநகர்முதலான யோகிகளுக்கும் யோகத்தை நிறைவேற்றுகிறவர்.

ரணப்ரியர் — [3]தம்அன்பர்களுக்குச்சந்தோஷமுண்டாவதற்காக யுத்தமுதலிய வியாபாரங்களைச்செய்கிறவர்.

ரத்நகர்ப்பர் — [4]சரணாகதர்களில் செல்வம் வேண்டுகிறவர்களுக்குக்கொடுக்கத்தக்க ரத்நங்களென்னப்படும் சிறந்த தனங்களை மிகுதியாகத் தம்மிடம்வைத்திருப்பவர்.

ரத்நநாபர்— [5]புத்தாவதாரத்தில்புலமையைநடிப்பதற்காக வயிற்றைத்தடவுவதனால் ரத்னம்போல அழகாகப்பிரகாசிக்கும் நாபியை உடையவர்.

ரதாங்கபாணி—சக்ராயுதத்தை எப்போதும் கையில் வைத்திருப்பவர்; சக்ரீயென்பதனால் சக்ராயுதமுடையவர்என்பது கூறப்பட்டது; ரதாங்கபாணி என்பதனால் துஷ்டர்களைப்போக்கவும் சிஷ்டர்களைக்காக்கவும் எப்போதும் மற்றஆயுதங்கள்இருந்தும் சக்ராயுதம் மட்டும் பிரயோகத்திற்குச் சித்தமாகக் கையிலெடுத்து ஓங்கப்பட்டிருக்கிறதென்றுகூறப்பட்டது.

ரவி — [6]ஸூர்யன் மேலேறிப் பிரகாசிப்பதனால் சிலாக்கியமாகச் சொல்லப்படும் உத்தராயணமாக இருப்பவர்; உத்தராயணம் அர்ச்சிராதிமார்க்கத்தில் நான்காம்படி.

ரவிலோசநர் — [7]ஸூர்யனால் சந்திரனையும் மின்னலையும் வருணனையும் பிரகாசிக்கச்செய்பவர்; ஸூர்யகிரணங்கள் பிரவேசிப்பதனாலேதான் சந்திரன்முதலானவர்கள் ப்ரகாசிப்பது; இதனால் அர்ச்சிராதிமார்க்கத்தில் எட்டாவது ஒன்பதாவது பத்தாவதுபடிகளாகிய சந்திரன், மின்னல், வருணன் இவைகள் கூறப்பட்டன.

---

1 யோகமென்னப்படும் தத்துவஞானத்தினாலேயே அடையப்படுகிறவர்; அல்லது, தம் ஆத்மஸ்வரூபத்தை எப்போதும் பார்த்துக்கொண்டிருப்பவர்.

2 மற்றயோகிகள்போல இடையூறுகளினால் தடைப்படாமையினால் யோகிகளுளெல்லாம் சிறந்தவர்.

3 லோகரக்ஷணத்திற்காகப் பஞ்சாயுதங்களைத்தரிப்பதனால் யுத்தத்தில் விருப்பமுள்ளவர்.

4 ரத்நங்களைஉள்ளேவைத்திருக்கும்கடலாயிருப்பவர்.

5 அழகியநாபியுள்ளவர்.

6 ஸூர்யனாக இருப்பவர்.

7 ஸூர்யனைக்கண்ணாகஉடையவர்.

ரக்ஷணர் = [1]தொட்டும் தழுவியும் நல்வார்த்தைசொல்லியும் கஜேந்த்ரனைக் காப்பாற்றினவர்.

ராமர் = [2]குணங்களாலும் வடிவழகினாலும்இழுக்கப்பட்டு யாவரும் தம்மிடம்மகிழும்படியிருப்பவர்.

ருசிராங்கதர் = [3]மிக்க அழகான தமது திவ்யமங்களவிக்ரஹத்தைப் பக்தர்கள் கண்டுகளித்தனுபவிக்கும்படி கொடுப்பவர்.

ருத்தர் (279) = [4]பர்வகாலங்களில்கரைபுரளும்கடல்போல எப்போதும் நிரம்பியேயிருப்பவர்.

ருத்தர் (352) = [5]பக்தர்களின் அபிவ்ருத்தியினாலேயே தாமும் அபிவ்ருத்தியடைந்திருப்பவர்.

ருத்ரர்= [6]திவ்யரூபத்தினாலும்பலவகைகளானதிவ்யசேஷ்டிதங்களாலும் பக்தர்கள் நெஞ்சுருகி ஆனந்தக்கண்ணீர்விடும்படிசெய்பவர்.

ருது = [7]எப்போதும் புதியவைபோலமேன்மேலும்மனமகிழ்ச்சியைத்தரும் திருக்கல்யாணகுணங்களின்வரிசைகள் ஒன்றுக்குமேலொன்று விசேஷமாக வ்ருத்தியாகும்படி பக்தர்களின்உள்ளங்களில் சென்றுகொண்டிருப்பவர்.

ரோஹிதர் = [8]தாமரைமலரின்உட்புறம்போலச் சிவந்தநிறமுள்ளவர்.

லக்ஷ்மீ = [9]தம்மைச்சேர்ந்தவர்களுக்கு எல்லாவித ஸம்பத்துக்களாகவும் தாமேயிருப்பவர்.

லக்ஷ்மீவாந்= [10]திருமகள் எப்போதும்தம்மைவிட்டுப்பிரியாமல் சேர்ந்திருக்கப்பெற்றவர்.

---

1 ஸத்வகுணத்தைக்கொண்டு மூவுலகங்களையும் காப்பவர்.

2 யோகிகள் நித்தியாநந்த ரூபியான தம்மிடத்தில மகிழும்படியிருப்பவர்; அல்லது, தம்மிச்சையினால் தசரதபுத்திரராகஅவதரித்து அழகானசரீரத்தை வஹித்தவர்.

3 அழகானதோள்வளைகளையுடையவர்.

4 தர்மம், ஞானம், வைராக்யமுதலியகுணங்கள் நிரம்பியிருப்பவர்.

5 ப்ரபஞ்சரூபமாக வ்ருத்தியடைகிறவர்.

6 ஸம்ஹாரகாலத்தில் ப்ரஜைகளை அழும்படிசெய்பவர்; அல்லது, துன்பத்தைக்கொடுப்பவர்; அல்லது, துன்பத்துக்குக்காரணத்தையோட்டுகிறவர்.

7 ருதுவென்னும்காலரூபியானவர்.

8 ரோஹிதமென்னும்சிவப்புமத்ஸ்யமாக அவதரித்தவர்.

9 உலகங்களுக்குச் சோபையாகவிருப்பவர்; அல்லது, 'பூ:, புவ:, லக்ஷ்மீ:' என்றுமூன்றுநாமங்கள்; பூலோகமாகவும் புவர்லோகமாகவும் லக்ஷ்மியென்னப்படும்ப்ரம்மவித்தையாகவும்இருப்பவர்; அல்லது, 'பூர்ப்புவோலக்ஷ்மீ:' ஒருநாமமாகக்கொண்டு பூமிக்கும் ஆகாசத்துக்கும் சோபையாயிருப்பவர் எனினுமாம்.

10. திருமார்பில் எப்போதும் லக்ஷ்மிவஸிக்கப்பெற்றவர்.

லோகத்ரயாஸ்ரயர் = பிராட்டியும் தாமுமாகத் த்ராய்தந்தைகள் போல எல்லாஉலகங்களுக்கும்ஆதரவாயிருப்பவர்.

லோகநாதர் = [1]உலகங்களுக்கு ஸ்வாமியாயிருப்பவர்; இந்த இயற்கையானஸம்பந்தத்தினால் தாமே விசேஷபந்துவாயிருப்பவர் என்பது.

லோகபந்து = [2]வேறுபாடின்றிஅனுக்ரஹிப்பதனால் உலகத்தார் எல்லோருக்கும் விடமுடியாத உறவாயிருப்பவர்.

லோகஸ்வாமீ = உலகங்களுக்கெல்லாம்அதிபதி.

லோகஸாரங்கர் = [3]உலகத்தோர்புகழத்தக்கதாக யுக்திகளுக்கு ஒற்றுமையான போகமோக்ஷங்கள் இரண்டுமார்க்கங்களேயும்அறிந்து உபதேசித்திருப்பவர்என்பது; இதுதான் புத்தாவதாரத்தில் அஸுரர்களைவஞ்சித்தஉபாயம்.

லோகாத்யக்ஷர் = [4]தர்மத்திற்குத்தகுதியுள்ளமனிதர்களை ப்ரத்யக்ஷமாகஅறிபவர்.

லோகாதிஷ்டானர் = [5]மேலுலகங்களுக்கு ஆதாரமாயிருப்பவர்.

லோஹிதாக்ஷர் = ஆனந்தத்திற்குஅறிகுறியாகத் தாமரைமலர் போலச்சிவந்தகண்களையுடையவர்.

வ்யக்தரூபர் = [6]தெளிவாகப்புலப்படும் திவ்யமங்களவிக்ரஹ முடையவர்; மார்க்கண்டேயர்முதலானவர்களுக்குத் தமதுதிவ்ய மங்களவிக்ரஹத்தைத் தாமே புலப்படுத்தினவரென்பது.

வ்யக்ரர் = [7]எதிரிகளை அடக்குவதற்காகஅர்ஜுனன்யுத்தம்செய்யும்வரையில் தாம்பொறுமல் பரபரப்படைந்தவர்; பீஷ்மரைத்தடுப்ப

---

1 உலகங்களால் யாசிக்கப்படுகிறவர்; அல்லது, உலகங்களைப்ரகாசப்படுத்துகிறவர்; அல்லது, உலகங்களை ஆசீர்வதிக்கிறவர்; அல்லது, உலகங்களுக்கு ஈசுவரர்.

2 உலகமெல்லாம் தம்மிடத்தில் கட்டப்பட்டிருக்கும்படி ஆதாரமாயிருப்பவர்; அல்லது, உலகங்களைஉற்பத்திபண்ணினதனால் பந்துவாயிருப்பவர்; அல்லது, சுருதிஸ்மிருதிகளால் உலகங்களுக்கு ஹிதாஹிதங்களை உபதேசிப்பதனால் உலகங்களுக்குச் சுற்றமாயிருப்பவர்.

3 உலகங்களிலுள்ளஸாராம்சங்களைக் கிரஹிப்பவர்; அல்லது, உலகத்தில் ஸாரமானப்ரணவோபாஸனையினால் அடையத்தக்கவர்.

4 உலகங்களைப் பிரத்யக்ஷமாகக்காண்பவர்; உலகங்களுக்குத்தலைமையானபிரபு.

5 மூன்றுலோகங்களுக்கும் ஆதாரமானவர்.

6 ஸ்தூலப்ரபஞ்சமாகப்புலப்படும்உருவமுள்ளவர்; அல்லது, ஸ்வயம்ப்ரகாசர்; அல்லது, யோகிகளுக்குப்புலப்படும் ரூபமுள்ளவர்.

7 அழிவில்லாதவர்; அல்லது, பக்தர்கள்வேண்டியவற்றைக்கொடுப்பதில் பரபரப்புள்ளவர்.

தற்குத் தாம் ரதத்தைவிட்டு எழுந்து சக்ரமெடுத்துப்போனது குறிப்பிடப்படுகிறது.

வ்யவஸ்தாநர் = [1]கலைமுகூர்த்தமுதலியகாலப்பிரிவுகள் வ்யவஸ்தையாக ஏற்படுவதற்குக் காரணமாயிருப்பவர்.

வ்யவஸாயர் = [2]ஸூர்யசந்திரநக்ஷத்திரங்களாகியகோளசக்ரம் தம்மிடத்தில்கட்டப்பட்டிருப்பவர்; நக்ஷத்திரங்களுக்குஆதாரமான ஆகாயத்தைச் சரீரமாகவுடையவர்என்பது.

வ்யாதிசர் = [3]அவரவர்விரும்பும்பலபலன்களையும் அளிப்பவர்.

வ்யாப்தர் = [4]தியானிப்பவர்களிடத்தில் இளையவன், முதிர்ந்தவன், யஜமானன், வேலைக்காரன், பகைவன், நண்பன்முதலியவேற்றுமைகளின்றி ஓரேவிதமான அன்பினால் வியாபித்திருப்பவர்.

வ்யாபீ = [5]தேவர்கள், அஸுரர்கள், மந்தரமலை, வாஸுகிமுதலியவர்களுக்குக் கடைவதில் சக்தியை வ்ருத்திசெய்வதற்காக அவர்களெல்லாரிடத்திலும் தாம்வியாபித்திருப்பவர்.

வ்யாளர் = [6]விசேஷமாக அபயப்ரதானம் செய்து அவர்களை அங்கீகரித்துத் தமக்குட்படுத்துகிறவர்.

வ்யாஸர் = [7]வேதங்களை வகுத்தவர்.

வ்ருத்தாத்மா = [8]மகிமைகளெல்லாம் உள்ளங்கையில் அடங்கினாற்போலத் தோற்றும்படி பெரிதான ஸ்வரூபமுடையவர்.

வ்ருஷகர்மா = நம்போன்றவர்களுக்கும் பெரும் பேற்றை அளிப்பதனால் தர்மரூபமாகவிருக்கும் செய்கையையுடையவர்; அல்லது, தாபத்ரயத்தையாற்றும் தன்மையான குளிர்ந்த செய்கையை உடையவர்.

---

1 எல்லாவரையறைகளுக்கும் ஆதாரமானவர்; அல்லது, திக்பாலகர்களின்அதிகாரங்களையும் ஜராயுஜம், அண்டஜம், ஸ்வேதஜம், உத்பிஜ்ஜமென்னும் நான்குபடைப்புக்களையும் வர்ணாசிரமங்களையும் அவற்றின்தர்மங்களையும் வகைவகையாக ஸ்தாபிப்பவர்.

2 ஞானஸ்வரூபி.

3 இந்திராதிதேவர்களையும் பலவித அதிகாரங்களில் ஆஜ்ஞாபிப்பவர்.

4 காரணமானதால் கார்யங்களெல்லாவற்றிலும் வ்யாபித்திருப்பவர்.

5 எல்லாக்காரியங்களிலும் வியாபித்திருப்பவர்; அல்லது, ஆகாயம்போல எங்கும் நிறைந்திருப்பவர்.

6 மஹாஸர்ப்பம்போல யாராலும்பிடிக்கமுடியாதவர்; அதாவது, யாருக்கும்வசப்படாத ஸ்வதந்த்ரர் என்பது.

7 'ஸ்வத்ருக்' பார்க்க.

8 அநாதியாயிருப்பதனால் முதிர்ந்தவர்.

வ்ருஷப்ரியர்—ப்ரவ்ருத்திதர்மம் நிவ்ருத்திதர்மம் இரண்டிலும் அன்புவைத்திருப்பவர்; அவர்விரும்புவதனாலே இவ்விருவகைக்கர்மங்களும் தர்மமாயின; அவரதுவிருப்பத்தைத் தெரிவிப்பதுதான் வேதவிதிகளின் கருத்து.

வ்ருஷபர்— [1]ஸம்ஸாரமென்னும்தீயினால் சுடப்பட்டு வந்தடைந்தவர்களை அமுதம் பொழிவதுபோலக் கடாக்ஷத்தை வர்ஷித்துச் செழிக்கச்செய்பவர்.

வ்ருஷபர்வா —தம்மிடம்ஏறிவருவதற்கு வர்ணாச்ரமதர்மங்களையே படிகளாக வைத்திருப்பவர்.

வ்ருஷபாக்ஷர் — [2]வேண்டின பலன்களை வர்ஷிப்பதாகிய தர்மத்தையே ஸம்ஸாரசக்ரத்திற்கு ஆதாரமான அச்சாக வைத்திருப்பவர்; தர்மத்தின் வழியாகக் கர்மபலன்களை ரக்ஷிப்பவர் என்பது.

வ்ருஷர்—[3]கடலினிடையே அலைந்துவருந்தியமார்க்கண்டேயரை அமுதம்போன்ற தேகஒளியினாலும் இன்சொல்லினாலும் நனைப்பவர்.

வ்ருஷாக்ருதி— [4]தர்மமே உருவமாக உடையவர்; அல்லது, ஜனங்களின் தாபங்களையெல்லாம் சமனம்செய்து அம்ருதம் பொழிவதுபோலக் குளிர்ந்திருக்கும் திவ்யரூபமுள்ளவர்.

வ்ருஷாகபி —தர்மமேஉருக்கொண்டதான சிறந்த வராகாவதாரமெடுத்தவர்.

வ்ருஷாஹ — [5]அவரை முதலில் அடையும்தினமே எல்லாமங்களங்களுக்கும்வித்துநடுவதுபோல ஆரம்பதினமாயிருப்பதனால் தர்மரூபமாயிருப்பது.

வ்ருஷோதரர்— [6]தர்மத்தையே வயிறாகஉடையவர்; ஆராதிப்பவர்கள் தமக்குக்கிடைத்த ஹவிஸ்முதலியவற்றினாலும் எளிதாக நிரப்பக்கூடியதாயிருப்பதனால், அல்லது, துன்பமுற்றவர்களனைவரையும் தம்வயிற்றில் வைத்துக் காப்பதனால் தர்மமயமான வயிற்றையுடையவர்.

---

1 பக்தர்களுக்கு விரும்பினவற்றையெல்லாம் வர்ஷிப்பவர்.

2 விரும்பினவற்றையெல்லாம் வர்ஷிக்கும் நேத்ரங்களையுடையவர்; அல்லது, தர்மத்தையே கண்ணாகவுடையவர்.

3 அபீஷ்டங்களை வர்ஷிக்கும் தர்மமாயிருப்பவர்.

4 தர்மத்தை நிலைநிறுத்துவதற்காகவே அவதாரஉருவம் எடுப்பவர்.

5 பகல்போல்பிரகாசிக்கும்புண்யமானயஜ்ஞங்களையுடையவர்.

6 அவருடையவயிறு ஜனங்களைவர்ஷிப்பது; அதாவது, ஸ்ருஷ்டிசெய்வது.

வ்ருக்ஷ:— [1]நிழலுள்ளமரம்போல ஆஶ்ரிதர்கள் வந்தடைந்து எல்லாப்பலன்களையும் அநுபவிக்கும்படியிருப்பவர்; மேலும், அவர்களால் செய்யப்படும் நிர்ப்பந்தங்களையும் ஸஹிப்பவர்.

வ:— [2]எல்லாம் தம்மிடத்தில் வஸிக்கும்படியிருப்பவர்; தாமும் எல்லாவற்றிலும்ஆத்மாவாகவஸிப்பவர், 'ஸவ' என்று ஒருநாமமாகவும்கொள்ளலாம்' என்பது நிர்வசனம்.

வத்ஸர:— [3]புருஷார்த்தங்களை அவரவர் அதிகாரங்களுக்குத் தக்கபடி பகுத்து ஏற்பாடுசெய்வதற்காகக் கர்மாக்மாஎன்னும் ரூபத்துடன் எல்லாரிடத்திலும் அந்தர்யாமியாக வஸிப்பவர்.

வத்ஸல:— [4]பசுக்கள் புதியனவாகஈன்ற கன்றுகளிடத்தில் அன்புவைத்துப் பால்சுரந்துகொண்டு அவற்றைத்தேடித்திரிவது போலச் சரணாகதர்களைப் பேரன்புடன் தேடுகிறவர்.

வத்ஸீ:— [5]எப்பொழுதும் தம்மால் போஷிக்கப்படத்தக்கஆத்மவர்க்கங்கள் தம்மிடம் மிகுதியாயிருப்பவர்.

வநமாலீ:—தம்மால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட பஞ்சபூதங்களிலும் அவற்றின் தன்மாத்ரைகளிலுமுள்ள சிறந்தபரிமளங்களின் அபிமானிதேவதையாகிய வைஜயந்தியென்னப்படும் வனமாலையை எக்காலமும் அணிந்திருப்பவர்.

வம்சவர்த்தந:— [6]வம்சம்என்னப்படும் நித்யஸூரிவர்க்கத்தை விருத்திசெய்பவர்; அதாவது, அவர்களுக்குக் கைங்கர்யரஸத்தை மேன்மேலும் பெருகச்செய்பவரென்பது.

வர்த்தந:— [7]ஆராதிப்பவர்களைத் தாய்போல வயிற்றில்வைத்து வளர்ப்பவர்.

வர்த்தமாந:— [8]ஆராதிப்பவர்களை விருத்திசெய்வதனாலேயே தாமும் வ்ருத்தியாகிறவர்; அல்லது, இப்படி எல்லாருக்கும் எல்லாவற்றையும்அளித்தும் தமதுநிறைவுகுறையாதவர்.

---

1 விருக்ஷம்போல அசையாமலிருப்பவர்.

2 'ஸ' பார்க்க.

3 எல்லாவற்றிற்கும் தாமே இருப்பிடமானவர்.

4 பக்தர்களிடத்தில் அன்புள்ளவர்.

5 இருஷ்ணாவதாரத்தில் கன்றுகளைமேய்ப்பவர்; அல்லது, உலகத்திற்குத் தந்தையாதலின் எல்லா ப்ரஜைகளையும் தம்குழந்தைகளாக நினைக்கும் தன்மையுள்ளவர்.

6 வம்சம்என்னப்படும் ப்ரபஞ்சத்தைப் பெருகச்செய்பவர்; அல்லது, ஸம்ஹரிப்பவர்.

7 எல்லாவற்றையும் வ்ருத்திசெய்பவர்.

8 ப்ரபஞ்சரூபமாகவ்ருத்தியடைகிறவர்.

வரதர்— [1]தேவர்களுக்கும் லோகபாரங்களை வகிக்கும்ஸாமர்த்ய மாகியவரங்களை அளிப்பவர்.

வராங்கர்— [2]சிறந்ததிவ்யமங்களவிக்ரகமுடையவர்; தேவகியின் பிரீதிக்காக உபநிஷத்தில்கூறப்பட்ட திவ்யமங்களவிக்ரஹலக்ஷணங் கள் மறையாமலே அவதரித்தவர்என்பது.

வராரோஹர்—[3]மீண்டுகீழுலகம்போவதில்லாமையால் மேலேறி அவரையடைவது எல்லாவற்றிலும்சிறந்ததாம்படியிருப்பவர்.

வருணர்— [4]எல்லாவற்றையும் மறைத்துக்கொண்டிருப்பவர்.

வஷட்காரர்— [5]ஆகாசமுதலியவற்றைப்போலன்றித் தாம்வியா பித்திருப்பவற்றையெல்லாம் தாம்நினைத்தபடிநடப்பனவாகத் தம் வசப்படுத்துகிறவர்.

வஸு(105)— [6]தம்மையடைந்தவர்களிடத்தில் மிக்கஅன்புடன் தாமே வஸிப்பவர்.

வஸு (271)— [7]பெரியோர்களுக்குத் தாமே தனமாயிருப்பவர்; அவர்கள் மற்றப்பொருளைப் பொருளாகநினைப்பதில்லையென்பது.

வஸு (701)— [8]திருப்பாற்கடலில்வஸிப்பவர்.

வஸுதர்—தடுக்கமுடியாத பெரிய ஐஸ்வர்யமிருக்கையிலும் பொருளைவிரும்பும் சிறியோருக்குப்பொருளையும் அளிப்பவர்.

வஸுப்ரதர் (698)— [9]சிறந்த நிதியாகியதம்மைத் தேவகிக்கும் வஸுதேவருக்கும் புத்ரராகக் கொடுத்தவர்.

1 வரங்களையளிப்பவர் ; அல்லது, யஜமானரூபியாகக் கோவென்னும் தக்ஷிணையையளிப்பவர்.

2 சிறந்த அவயவங்களைஉடையவர்.

3 எல்லாவற்றிலும் சிறந்த ஸ்ரீ வைகுண்டத்திற்குரியவர்.

4 ஸாயங்காலத்தில் அஸ்தமயமாகும்ஸூர்யன் தன்கிரணங்களை மறைப் பதனால் வருணனாகிறான் ; அந்தஸூர்யனாயிருப்பவர்.

5 யாகங்களில்செய்யப்படும் ஹோமங்களுக்கு உத்தேஸ்யமாயிருப்பவர்; அல்லது, யாகரூபி ; அல்லது, தேவர்களைஸந்தோஷப்படுத்தும் மந்திரரூபி; அல்லது, மந்திரதேவதாரூபி.

6 எல்லாப்பிராணிகளும் தம்மிடத்தும் தாம்அவற்றினிடத்தும் இருப்பவர்; அல்லது, அக்னிஸ்வரூபி.

7 தனமாயிருப்பவர் ; அல்லது, மாயையினால் தம்ஸ்வரூபத்தை மறைப்ப வர் ; அல்லது, ஸூர்யரூபியாக ஆகாசத்தில் வஸிப்பவர்.

8 எல்லாம் தம்மிடத்தில் வஸிக்கப்பெற்றவர் ; அல்லது, தாம் எல்லாவற் றிலும் வஸிப்பவர் ; அல்லது, மாயையினால் ஸ்வரூபத்தைமறைப்பவர்.

9 தனத்தை மிகுதியாகக் கொடுத்தவர்.

வஸுப்ரதர் (699) = [1]உலகத்திற்குத் தந்தையாகிய தமக்கும் தாய்தந்தைகளாகும்படி பெருமகிமையை அந்தத் தேவகிவஸுதேவர்களுக்கு அளித்தவர்.

வஸுமநாஸ் (106)= [2]ஆஸ்ரிதர்களை நிதியைப்போல மனத்தில் கருதுகிறவர்.

வஸுமநாஸ் (702) = [3]லக்ஷ்மி பிறந்தவிடமாகிய க்ஷீராப்தியில் வாஸம்செய்யும் வஸுதேவரிடத்தில் மனம்வைத்தவர்.

வஸுரேதஸ் = [4]தம்முடைய திவ்யதேஜஸ்ஸையே அவதாரத்திற்குக் காரணமாகவுடையவர்.

வஹ்நி = [5]பரமபதம் ஆகாசமுதலிய தேசரூபியாக நித்யஸூரிகள் முக்தர்கள் ஸம்ஸாரிகளாகிய எல்லாரையும் தாங்குகிறவர்.

வாக்மீ=வேதரூபமான சிறந்தவாக்கையுடையவர்; ராமகிருஷ்ணாதி அவதாரங்களில் கேட்கக்கேட்க அமுதம்போல இனியவாக்குக்களை உரைப்பவர் என்னவுமாம்.

வாசஸ்பதி (218) = [6]மத்ஸ்யபுராணத்தினால் வேதார்த்தத்தை வெளியிட்டதனால் வாக்கென்னப்படும் சொல்லுக்கு அதிபதி.

வாசஸ்பதி (579) = [7]ஐந்தாவது வேதமான மகாபாரதம் என்னும் ஸரஸ்வதிக்கு ஸ்வாமியானவர்; மஹாபாரதத்தை இயற்றினவர் என்பது.

வாமநர் = [8]இந்திரனை ரக்ஷிப்பதற்காகப் பலிசக்ரவர்த்தியின் யாகத்தில் வாமனாவதாரமெடுத்துச்சென்றவர்.

வாயு =[9] தம்மை த்யானிப்பவர்களிருக்குமிடந்தேடி ஆங்காங்கு செல்லுகிறவர்; சபரி, பரத்வாஜர், குகன் முதலானவர்களைத் தேடிச் சென்றார் என்பது குறிப்பு.

வாயுவாஹநர் (332) =[10]உலகத்துக்குப்பிராணனான காற்றையும் நடத்துகிறவர்.

---

1 பக்தர்களுக்கு மோக்ஷமென்னும் பலனைக்கொடுப்பவர்; அல்லது, அஸுரர்களின் தனத்தை மிகவும் கண்டிப்பவர்.

2 சிறந்தமனமுள்ளவர்.

3 எல்லாரிடத்திலும் வஸிக்கும்மனமுள்ளவர்.

4 ஸ்வர்ணமாகிய வீர்யத்தையுடையவர்.

5 ஹோமங்களைத் தேவர்களுக்குக்கொண்டுபோகும் அக்னியாயிருப்பவர்.

6 'வாசஸ்பதிருதாரதீ' ஒருநாமம்; வித்தைக்கதிபதியான ஸர்வஜ்ஞர்.

7 'வாசஸ்பதிரயோநிஜா' ஒருநாமம்; வித்தைக்கதிபதியும் கர்ப்பத்திற்பிறவாதவரும்.

8 வாமனாவதாரம்செய்தவர்; அல்லது, எல்லாராலும் பஜிக்கத்தக்கவர்.

9 கல்லமனத்தைபுண்டாக்குகிறவர்.

10 ஸப்தமருத்துக்களையும் நடத்துகிறவர்.

வாயுவாஹநர் (860) = [1]தம்மைத்தியானிப்பவர் எவ்வளவு பலமானகாரணங்களினால் கீழேவிழுந்தாலும் ஒப்பற்றவேகமுள்ள கருடனைக்கொண்டு அவர்களைத்தூக்கிவிடுகிறவர்; பரமபாகவதனாகியவஸுராஜன் மஹரிஷிசாபத்தினால் கீழேவிழுந்தபோது அவனைக் கருடனால் மறுபடியும்மேலேற்றி உபரிசரவஸுவாகச்செய்தது இதற்கு உதாஹரணம்.

வாருணர் = [2]தம்மை ஸ்வாமியாகவரிக்கும் பக்தர்களிடத்தில் இருப்பவர்.

வாஜஸநி = [3]நாஸ்திகவாதம்செய்து இம்மைக்குரியஅன்னமுதலியவற்றையே பௌத்தர்கள்அடையும்படிசெய்தவர்; காலைதோறும் தத்யோதனகபளங்களைச்சாப்பிடவேண்டுமென்பது க்ஷபணகர்களின் வ்ரதம்.

வாஸவாநுஜர் = [4]அமுதத்தில் விருப்பமுள்ள இந்திரனுக்கு அதைஅளிப்பதற்காகப் பின்பிறந்தவர்.

வாஸுதேவர் (333) =உலகங்களைத் தாயின்கர்ப்பத்தில்போலத் தமக்குள்வைத்தும், பறவைகள்சிறகுகளினால்குஞ்சுகளை அணைப்பதுபோலத் தீங்குகள்வராமல் மூடிக்காப்பாற்றியும், அவற்றினிடம் தாம் அந்தர்யாமியாகவஸித்துமிருப்பதனால் வாஸுஎன்றும், இந்தரக்ஷணத்தைவிளையாட்டாகவைத்திருப்பதனாலும் எல்லாவற்றையும் அடக்கி மேலாயிருப்பதனாலும் எப்போதும் விளங்குவதனாலும் யாவராலும் துதிக்கப்பெறுவதனாலும் பக்தர்களிடத்தில் விசேஷித்துச்செல்லுவதனாலும் தேவர்என்றும் சொல்லப்படுகிறார்; அதனால், பரஸ்வரூபியான பகவான் வாஸுதேவராகிறார்.

வாஸுதேவர் (700) =வஸுதேவர் புத்ரர்.

வாஸுதேவர்(714)= [5]துவாதசாக்ஷரமந்த்ரத்தை உபதேசித்த வாஸுதேவ வியூகமாயிருப்பவர்.

விக்ரமர் = [6]வேதமூர்த்தியானகருடனை வாகனமாகக்கொண்டு ஸஞ்சரிப்பவர்.

---

1 காற்றும் அவரிடம் அச்சத்தோடு நடக்கும்படி நியமிப்பவர்.

2 வருணபுத்திரரானவஸிஷ்டர்; அல்லது, அகஸ்தியராயிருப்பவர்.

3 வாஜஸநர் = அன்னம்வேண்டியவர்களுக்கு அன்னத்தைக்கொடுப்பவர்.

4 அதிதியினிடம் கசியபருக்கு இந்த்ரன்தம்பியாகப் பிறந்தவர்.

5 மாயையினால் உலகத்தைமறைக்கும்தேவர்.

6 உலகமளந்தவரென்னவுமாம்.

விக்ரமீ (76)= பராக்ரமமுள்ளவர்; தாம்நினைத்ததைத் தடையின்றிமுடிக்கும்இயற்கையுள்ளவர்.

விக்ரமீ (909) = [1]தமதுபெருமைக்குத்தகுந்ததிவ்யசேஷ்டிதங்களையுடையவர்.

விகர்த்தா= [2]தமக்காக இன்பதுன்பங்களில்லாமலிருந்தும் பிறர் இன்பதுன்பங்களை அநுபவிப்பதனால் தாம் இன்பதுன்பங்களையடைந்துமாறுகிறவர்; இந்தமாறுதல் பிறரிடத்திலுள்ள அன்புபற்றியதாதலின் ஈஶ்வரருக்குக் குற்றமாகாது.

விஶிஷ்டர்= [3]எல்லாவற்றையும்பார்க்கிலும் விலக்ஷணமாயிருப்பவர்.

விசுத்தாத்மா= [4]அவரவர் புண்ணியங்களுக்குத் தக்கபடி தம்மைத்தந்து தம்ஸ்வரூபத்தை மிச்சப்படுத்திக்கொள்ளாதவர்; தமது ஸ்வரூபத்தையெல்லாம் பக்தர்களுக்கே ஒப்புவித்திருப்பவர்.

விசோதநர்= [5]தமது திவ்யக்ஷேத்திரங்களில் தேகம்விட்டவர்கள் தம்மையடைவதற்கு உரியவராம்படி அவர்களைத் துலக்குகிறவர்.

வித்வத்தமர்= [6]மிகத்தெரிந்தவர்; கஜேந்திரன் துன்பத்தை விலக்கத் தெரிந்தவரென்பது.

விதாதா (44)= [7]பிரம்மதேவராகிய கர்ப்பத்தை முதிரவைத்து உத்பத்தி செய்பவர்.

விதாதா (485) = [8]பக்தனுடையகுற்றங்களைப்பகவான்பொறுக்கும்போது, பாவங்களுக்குப் பலன்களைத்தரத்தக்க யமனும் அவனால் செய்யப்படும் யாதனைகளும் அந்தப்பக்தனை யாதொன்றும் செய்யாமலிருக்கும்படி தாமேநடத்துகிறவர்.

விதாரணர்= [9]தமது திவ்யாயுதங்களினால் ராகுமுதலானவர்களைச் சேதித்தவர்.

1 சிறந்தநடையுள்ளவர்; அல்லது, சிறந்தபராக்ரமமுள்ளவர்.

2 விசித்ரமான உலகங்களைப்படைத்தவர்.

3 எல்லாவற்றிற்கும் மேலானவர்.

4 முக்குணங்களையும் கடந்த பரிசுத்த ஸ்வரூபமுள்ளவர்.

5 தம்மை நினைத்தமாத்திரத்தில் பாவங்களைப்போக்குகிறவர்.

6 ஸர்வஜ்ஞர்.

7 கர்மங்களையும் அவற்றின் பலன்களையும் செய்பவர்; அல்லது, ஆதிசேஷன்முதலானவர்களையும் விசேஷமாகத் தரிப்பவர்.

8 ஆதிசேஷன் திக்கஜங்கள்முதலியவர்களைப் பூமியைத்தாங்கும்படி செய்கிறவர்.

9 அதர்மிஷ்டர்களைப் பிளக்கிறவர்.

விதிசர்—[1]துதிக்கவருப்வர்கள் வணங்கித் தழுதழுத்து மெய்ம் மறந்துசெய்யும் ஸ்தோத்திரங்களுக்கும்எட்டாத ஸ்வரூபம், திவ்யமங் களவிக்ரகம், குணச்சிறப்புக்கள், மகிமைமுதலியவற்றையுடையவர்.

விதேயாத்மா—[2]தமது பக்தர்கள், 'இங்குவா, இங்குநில், இங்கு உட்கார், இதைஉண்' என்று கட்டளையிடுவதற்குரிய ஸ்வரூபமுள் ளவர்.

விநயர்—[3]மாரீசன்முதலானவர்களையும் தமதுபராக்ரமத்தினால் தண்டித்துஅடக்கினவர்.

விநயிதா—[4]பாகவதர்களை ராஜகுமாரர்களைப்போல் அரவணைத் துக்காப்பவர்.

விரதர்—[5]ராஜ்யமுதலியவற்றில் ஆசையில்லாமல் ஒழிந்திருப் பவர்; 'விரஜர்' என்னும் பாடத்தில், விரஜோமார்க்கர் ஒருநாமம்; அடுத்தவர்களுக்குக் குற்றமில்லாத வழியைக் காட்டுகிறவர்.

விராமர்—[6]வரங்களையளிக்கும் ப்ரம்மாதி தேவர்களும் அவர் களாலளிக்கப்படும் வரங்களும் வரங்கள்பெற்ற ராவணாதிகளும் தம் மிடத்தில் வியாபிக்காமல் போகும்படியிருப்பவர்.

விரோசநர்—[7]உத்தராயணம், தக்ஷிணாயனம் என்னும்இரண்டு மார்க்கங்களினால் ரதம்சென்று ஸூர்யன்பிரகாசிப்பதாகிய ஸம்வத் ஸரமாயிருப்பவர்; இது அர்ச்சிராதிமார்க்கத்தில் ஐந்தாம்படி.

விவிக்தர்—[8]எல்லாஉலகங்களுக்கும் விலக்ஷணமாகத் தமக்கே சிறப்பாயுள்ள சரித்திரங்களையுடையவர்.

விஜயர்—[9]ப்ரம்மருத்ரர்களாகிய மற்ற இரண்டுமூர்த்திகளும்

---

1 அவரவர் அதிகாரங்களுக்குத்தக்கபடி பலன்களை விசேஷமாகஅளிப்பவர்.

2 அவிதேயாத்மா—யாருக்கும் உட்படாத ஸ்வரூபமுள்ளவர்.

3 துஷ்டர்களைத் தண்டிப்பவர்.

4 விநயிதாஸாக்ஷீ—பிரஜைகள் அடக்கமுள்ளவராயிருப்பதை ப்ரத்யக்ஷ மாகக்காண்பவர்; அல்லது, விநயிதா—எல்லாவற்றையும் நடத்துகிறவர்; அஸா க்ஷீ—தம்மைவிட வேறுபொருளைப் பாராதவர்.

5 விரஜர்—தம்மையடுத்தவர்களுக்கு விஷயப்பற்றுகிய ரஜோகுணத்தை விலக்குகிறவர்.

6 எல்லாப்பிராணிகளுக்கும் முடிவைத்தருகிறவர்.

7 பலவிதமாகப்பிரகாசிப்பவர்; ஸூர்யன், அல்லது அக்கியாயிருப்பவர்.

8 பிரபஞ்சரூபமாயிருந்தும் ஒன்றிலும்சேராமல் தனித்துநிற்பவர்.

9 ஞானம், வைராக்கியம், ஐசுவரியமுதலியகுணங்களினால் எல்லாவற்றை யும் ஜயிப்பவர்.

ஸ்ருஷ்டி ஸம்ஹாரமுதலிய தம்தம்கார்யங்களில் ஜயம்பெறும்படி செய்பவர்.

விஜிதாத்மா— [1]மகாலக்ஷ்மியும்விரும்பத்தக்கசிறப்பினால்தடையில்லாமல்ஓங்கிவளரும்திருவுள்ளமும் திருவடிபணிந்தவர்கள் விஷயத்தில் தாழ்ந்து இணங்கும்படியிருப்பவர்.

விஸ்ராமர்— [2]பாவங்களும் அவற்றின்பயன்களும் மிதமிஞ்சி வருத்துவதனால் களைத்துப்போன ஜனங்களுக்கு இளைப்பாறுமிடம்; அவர்கள் பகவானை அடைந்தவுடன் அவர்களின்பாவங்களும்துன்பங்களும் விலகிப்போகின்றன என்பது.

விஸ்ருதாத்மா— [3]யாவராலும்வியந்துகேட்கத்தக்கஅஸிம்மாவதார திவ்யசரித்திரமுடையவர்.

விஸ்வகர்மா— [4]ப்ரம்மாவைப் படைப்பதற்கு முன்னும்பின்னுமுள்ள உலகவ்யாபாரங்கள்எல்லாம் தமதுசெய்கைகளாகவே இருப்பவர்.

விஸ்வதக்ஷிணர்— [5]நன்றுசெய்தவர்களுக்கும் தீதுசெய்தவர்களுக்கும்வேற்றுமையின்றி விரைவில்நன்மையையளிப்பவர்; அபராதப்பட்டவர்கள்விஷயத்திலேயும் மிக்க பொறுமையுள்ளவரென்பது; அல்லது, அசுவமேதயாகத்தில் பூமியனைத்தையும் ப்ராம்மணர்களுக்குத் தக்ஷிணையாகக்கொடுத்தவர்.

விஸ்வபாஹு—விரோதிகளைக் களைவதனால் உலகத்துக்கு க்ஷேமகரமான கரங்களையுடையவர்.

விஸ்வபுக்விபு— [6]உலகங்களைவ்யாபித்துக்காப்பவர்.

1 மனத்தை அடக்கினவர்.

2 பசி, தாகம், விசனம், மயக்கம், மூப்பு, இறப்பு ஆகிய ஷடூர்மிகளென்னப்படும் அறுவகைகளான ஸம்ஸாரக்கடலின் அலைகளினாலும் அவித்தைமுதலியமகாக்லேசங்களினாலும் மதமுதலியஉபக்லேசங்களினாலும் பீடிக்கப்பட்டு இளைப்பாறவிரும்புகிறவர்களுக்கு மோக்ஷமென்னும்இளைப்பாறுதலைக் கொடுப்பவர்.

3 வேதத்தில் விசேஷமாகஉரைக்கப்பட்ட ஸத்யம்ஞானமுதலிய இலக்கணங்கள்பொருந்தின ஸ்வரூபமுடையவர்.

4. விசித்ரஸ்ருஷ்டிசக்தியில் விசுவகர்மாஎன்னும் தேவசில்பியைப்போன்றவர்என்னவுமாம்.

5 எல்லாவற்றையும்காட்டிலும் மிகுந்தசக்தியுள்ளவர்; அல்லது, எல்லாக்காரியங்களிலும் மிகுந்தஸாமர்த்தியமுள்ளவர்.

6 விஸ்வபுக், விபு, இரண்டுநாமங்கள். விஸ்வபுக்—உலகத்தை ஸம்ஹாரகாலத்தில், புஜிப்பவர்; அலலது, காப்பவர்; விபு—ஹிரண்யகர்ப்பர்முதலிய பலஉருவங்களாயிருப்பவர்.

விஶ்வம்— [1]எல்லாவற்றிலும்ப்ரவேசித்து எங்கும்நிரம்பியிருப்பவர்; இயற்கையாகவே மங்களரூபமாயுள்ளவையும் தமதுசிறப்புக்கு மேல்வரைஅற்றவையுமான திவ்யாத்மஸ்வரூபம், திவ்யமங்களவிக்ரஹம், கல்யாணகுணங்கள், மஹிமைஇவை பரிபூர்ணமாகநிரம்பியிருப்பவர்.

விஶ்வமூர்த்தி—உலகமெல்லாம் தம்உடம்பாகவுடையவர்; எல்லாம் தமதுசரீரமாயிருத்தலின் தம்சரீரம் தமக்கு அனிஷ்டம்செய்யப்புகாமைபற்றிப் பலவான்களும் துர்ப்பலர்களை ஜயிக்கக்கூடாமல்போவரென்பது.

விஶ்வயோநி (118)— [2]அடைந்தவர்கள்எல்லாரையும் தம்முடன் ஒன்றாகக்கூட்டிக்கொள்ளுகிறவர்.

விஶ்வயோநி(151)— [3]பிரம்மருத்திராதிகளைக்கொண்டு நடத்தப்படும்உலகமனைத்துக்கும் காரணமாயிருப்பவர்.

விஶ்வரேதஸ்—உலகத்துக்கெல்லாம்முதல்காரணமாயிருப்பவர்; தம்மையறிவதற்குரியஞானேந்திரியங்களையும், தமதுகைங்கர்யத்துக்குரியகர்மேந்திரியங்கள்முதலானவற்றையும் ஜனங்களுக்கு உண்டாக்குகிறவர் என்பது.

விஶ்வஸ்ருக்— [4]குணத்தையும் குற்றத்தையும்பாராமல் உயிர்கள் உய்வதையேகருதி உலகத்தைப்படைப்பவர்.

விஶ்வாத்மா— [5]தம்முடையஞானசக்திகளினால் உலகமெல்லாவற்றையும் வியாபித்திருப்புவர்.

விஷ்ணு (2)—தமது விபூதிகளாயுள்ள சேதநாசேதனங்களில் அந்தர்யாமியாய்ப் பிரவேசித்திருப்பவர்; இதனால் அந்தர்யாமிஎன்பது கூறப்பட்டது.

விஷ்ணு (259)— [6]கடாக்ஷத்தைவர்ஷித்தும் மற்றும்பலஉதவிகள்செய்தும் தமதுஉயர்வையும் அடியார்களின்தாழ்வையும்பாராமல் என்றும் அவர்களைவிட்டுப்பிரியாமல்இருப்பவர்.

விஷ்ணு (663)—ஸ்வரூபத்தினாலும் நடத்துவதுமுதலியசக்தியினாலும் எல்லாவற்றையும் வியாபித்திருப்பவர்; அல்லது, மூவுலகங்களையும்அளந்தவர்.

---

1 உலகமனைத்தும் தாமாயிருப்பவர்.

2 எல்லாவற்றிற்கும் காரணம்.

3 உலகத்தைத் தமக்குஆதாரமாகவுடையவர்; அல்லது உலகரூபியும் காரணரூபியுமாயிருப்பவர்.

4 விஶ்வத்ருக்=உலகத்திற்குப்பிரபு.

5 எல்லாவற்றிற்கும் ஆத்மாவாயிருப்பவர்.

6 த்ரிவிக்ரமாவதாரத்தில் அடிகளால் உலகங்களைவ்யாபித்தவர்.

விஷ்வக்ஸேநர் — [1]எங்குமுள்ள ஜனங்கள் தம்மைரக்ஷகராகக் கொண்டு ஜீவிக்கும்படிசெய்பவர்; இது ரக்ஷிப்பதுதொழிலாகவுடைய அனிருத்தவ்யூகம்; சக்தி தேஜஸ்என்னும் இரண்டுகுணங்கள் அனிருத்தவ்யூகத்திற்குச் சிறப்பாக வகுக்கப்பட்டிருக்கின்றன; அவற்றுள், எதையும்காப்பாற்றும் ஸாமர்த்யம் சக்தியெனப்படுவது; அதை இந்த நாமம்குறிப்பிக்கிறது.

விஷமர் — [2]ஸாதுக்களுக்குக்ஷேமத்தையும் துஷ்டர்களுக்குப் பயத்தையும்தருவதனால் அவரவர்குணங்களைப்பற்றி வேற்றுமையுள்ளவர்.

விஸ்தாரர் — [3]கலியுகமென்னும்விரோதியையொழித்து க்ருதயுகத்தையுண்டாக்குவதனால் வேதத்தினால்விதிக்கப்படும்முறைகளை வெளிப்படுத்துகின்றவர்.

விஹாயஸகதி — [4]பக்தியினுடைய முடிவானநிலைமையில் ஏறப்பெற்றவர்கள் பரமபதம்செல்வதற்கும் தாமே உபாயமாயிருப்பவர்.

விக்ஷரர் — [5]ஆஸ்ரிதர்களிடத்தில் நீங்காத அன்புடையவர்.

வீதபயர் — [6]தாம்வந்தபரபரப்பைக்கண்டதனாலேயே கஜேந்திரனுக்குப் பயம்போகும்படி செய்தவர்.

வீரபாஹு — [7]கடகங்கள் தோள்வளைகள்முதலிய திருவாபரணங்களினால் அலங்கரிக்கப்பட்டுத் திருப்பாற்கடல்கடையும்காலத்தில், 'நான், நான்' என்று ஒன்றன்பின் ஒன்றாகப்ரவ்ருத்திக்கும் ஆயிரம்கைகளையுடையவர்.

வீரர் (402) — [8]ராக்ஷஸர்களைப் பயத்தினால் நடுங்கும்படிசெய்பவர்.

1 அஸுரஸேனை இவரைக்கண்டமாத்திரத்தில் பலதிசைகளிலும்சிதறியோடும்படி தம்யுத்தமுயற்சியினால் செய்பவர்.

2 தமக்கொப்பில்லாதவர்.

3 உலகங்களனைத்தும் தம்மைஆதாரமாகக்கொண்டு விரிவாகும்படியிருப்பவர்.

4 ஆகாயத்திலிருப்பவர்; அதனாலேதான் ஆகாயம் விஷ்ணுபதம்என்னப்படுவது; ஸூர்யன்என்னவுமாம்.

5 நாசமில்லாதவர்.

6 ஸம்ஸாரபயம்அற்றவர்.

7 தேவசத்ருக்களையழித்து வேதமர்யாதையைநிலைநிறுத்தும்பராக்கிரமமுள்ள கைகளையுடையவர்.

8 பராக்ரமமுள்ளவர்.

வீரர் (664)= [1]நல்லோரைத் துன்பப்படுத்தும் துஷ்டர்களை அழிப்பவர்.

வீரஹா (168)= [2]யுக்திவாதங்களினால் பரமாத்மஞானத்தைக் கெடுக்கும் தர்க்கசூரர்களை ஒழிப்பவர்.

வீரஹா (747)= [3]சிறுகுழந்தைப்பருவத்திலும் பூதனை, சகடாஸுரன், இருமருதங்கள்முதலிய வஞ்சகர்களான அஸுரவீரர்களை வேரோடுகளைந்தவர்

வீரஹா (927)= [4]கஜேந்திரனுக்கு விரோதியான மிருத்யுவைத் தடுத்தவர்.

வேகவாந்= [5]மானிடக்குழந்தையாக விளையாடும் பருவத்திலும் தமது பரமேஸ்வர சக்தியின் வேகம் குறையாதவர்.

வேத்யர்= [6]தம்அவதாரங்களினால் புலங்களுக்கெட்டாத மகிமையை வெளிப்படுத்தி யாவரும் அறிவதற்கெளியவராயிருப்பவர்.

வேதர்= [7]தம்மால் தேகங்களையும் இந்த்ரியங்களையும் அடைந்திருக்கும் மனிதர்முதலானவர்கள் சாஸ்திரங்களைத் தம்மிடமேஅடையும்படி கொடுப்பவர்; இந்தக்காரணம்பற்றித்தான் ஸங்கர்ஷணருக்கு அப்யுபாயம் (=பரகதியை யடைவதற்குக்கருவி,) ஆகமஃ (=சாஸ்த்ரம் வருமிடம்,) பந்தாஃ (=வழி,) நேதா (=நடத்துகிறவர்,) ப்ராம்மணர், ஆசார்யர் என்று நாமங்கள் கூறப்பட்டிருக்கின்றன.

வேதவித் (130)=ஐயந்திரிபின்றி வேதார்த்தங்களை அறிபவர்.

வேதவித் (133)= [8]வேதங்களினால் அறியப்படும் தர்மத்தை அனுஷ்டிக்கும்படி செய்து அதைத் தமக்கு ஆராதனமாகப் பெற்றுக்கொள்ளுகிறவர்; இவர் ப்ரத்யும்னர் என்னும் வ்யூகம்; இந்த வ்யூகத்துக்கு, தர்மம், ப்ரத்யோதயிதா (=விளங்கச் செய்பவர்,) ப்ரவர்த்தயிதா (=நடத்துகிறவர்) என்று நாமங்களுண்டு.

---

1. கதி, படைப்பு, காந்தி, இருப்பிடம், போஜனம் இவற்றையுடையவர்.

2 தர்மத்தைக்காப்பதற்காக அஸுரவீரர்களை ஒழிப்பவர்.

3 ஹிரண்யகசிபுமுதலானசத்ருவீரர்களையும் காமக்ரோதாதிகளையும் ஒழிப்பவர்.

4 பலவிதமான ஸம்ஸாரகதிகளைக் கெடுத்து முக்திகொடுப்பவர்.

5 'அசையாமலே மனத்திற்கும் கடியவேகமுள்ள ஒருபொருள்' என்கிற சொற்படி மிகுந்த வேகமுள்ளவர்.

6 மோக்ஷத்தை விரும்புகிறவர்களால் அறியத்தக்கவர்.

7 வேதரூபி; அல்லது, எல்லாவற்றையும் தெரிவிப்பவர்.

8 வேதங்களை விசாரிப்பவர்.

'வேதஸ்' = [1]அளவற்றமங்களமான பலவகைப் பெரியவிபவங்களைப் பக்தர்களுக்கு எக்காலமும் செய்பவர்.

வேதாங்கர் = வேதத்தைத் தமது சரீரமாகவுடையவர்; சரீரத்தினால் ஆத்மா அறியப்படுவதுபோல வேதத்தினால் அறியப்படுகிறவர்; அல்லது, வேதம் அவருடைய ஆஜ்ஞையாகவிருப்பதனால் அதைக் கருவியாக உடையவரென்பது.

வைகாநர் = [2]அவதரித்தபின் ஆஸ்ரிதர்களுக்கு ஸம்ஸாரதுக்கத்தைக் கல்லியெடுப்பவர்.

வைகுண்டர் = [3]பக்தர்கள் தம்மையடைவதற்கு இடையூறுகளெல்லாவற்றையும் விலக்கி அவர்களை எளிதில் தம்மிடம் சேர்த்துக்கொள்பவர்.

வைத்யர் = [4]தம்மை த்யானிப்பவர்களுக்கு ஸம்ஸாரத்தை நிவ்ருத்திசெய்யும்வகையை அறிந்தவர்.

ஜ்ஞானகம்யர் = [5]ஸமாதிநிஷ்டையென்னும் பரவித்தையாகிய ஞானத்தினால் அறியத்தக்கவர்.

ஜ்ஞானமுத்தமம் = ஒருநாமம்; (உத்தமம்ஜ்ஞானம் =) எல்லாவற்றிலும்சிறந்தவைஷ்ணவதர்மத்தை யாவரும் தெரிந்துகொள்ளக்காரணமாயிருப்பவர்; பாஞ்சராத்ரமுதலியபகவச்சாஸ்திரங்களைப் பிரவ்ருத்திப்பித்தவர் என்பது.

ஜ்யேஷ்டர் = [6]எப்போதும் எல்லாவகைகளாகவும்மோக்ஷத்தில் அனுபவிப்பவர்களுக்கும் கரைகாணக்கூடாத பெரியஐஸ்வர்யமுள்ளவராதலின் எல்லாவற்றினும் மிகப்ராக்கியமானவர்; அல்லது, எல்லாவற்றிற்கும்ஆதியாயிருப்பதனால் மிகவும்முதிர்ந்தவர்.

ஜ்யோதிர்க்கணேஸ்வரர் = [7]திவ்யதம்பதிகளாகிய தம்இருவருக்கும்அனுகூலர்களும் ஒளிஉருவமாகவிளங்குகிறவர்களுமான ஆதிசேஷன் விஷ்வக்ஸேநர்முதலான நித்யஸூரிகளின்கூட்டங்கள் எப்போதும்திருவடிபணிந்து கைங்கர்யம்செய்யப்பெற்றவர்; எப்போதும்

1 ஸ்ருஷ்டிப்பவர்.

2 ஹிரண்யாக்ஷனைக்கொல்ல வராஹமூர்த்தியாகிப் பாதாளத்தைத்தோண்டினவர்.

3 ஸ்ருஷ்டிகாலத்தில் பஞ்சபூதங்களும் தனிவழி செல்வதைத்தடுத்து அவற்றை ஒன்றுசேர்த்து ஸ்ருஷ்டியில் உபயோகப்படுத்துகிறவர்.

4 எல்லாவித்தைகளையும் அறிந்தவர்.

5 ஞானத்தினாலேயே அடையத்தக்கவர்.

6 நித்யமும் அளவுபடாததும் எல்லாப்பலன்களையும் ஸாதிப்பதுமாகிய சிறந்தஞானமாயிருப்பவர்.

7 ஸூர்யன்முதலியதேஜஸுகள் எல்லாவற்றிற்கும் தலைவராயிருப்பவர்.

பிரகாசிப்பதனால் வேதத்தில் 'மரீசி (=கிரணம்) என்றுகூறப்படும் நித்யஸூரிகளை இங்கே ஜ்யோதிஸ்என்றுசொல்லுகிறது.

ஜ்யோதிராதித்யர் = [1]அப்ராக்ருதமான ஆச்சரியதேஜோமயமாகியஸூர்யன்; ஆகாயத்திலிருக்கும் ஸூர்யன் இருள்அடைந்துபோகும்படியாகத்தோன்றும் பேரொளியுள்ளவர்என்பது.

ஜ்யோதிஸ்= [2]பக்தர்கள் பரமபதம்ஏறுவதற்குஅர்ச்சிராதிமார்க்கத்தில் முதற்படியான ஒளியாயிருப்பவர்.

ஜகதஸ்ஸேது = [3]உலகத்தில் நல்லவை தீயவைகளைப் பிரிக்கும் அணையாயிருப்பவர்; புண்யபாபபலன்களை மாறாமல் கொடுப்பவரென்பது.

ஜகதாதிஜர் = [4]உலகங்களுக்கு முதல்பொருள்களாகிய மும்மூர்த்திகளுள் ஒருவராக அவதரித்தவர்.

ஜந்மம்ருத்யுஜராதிகர் = பிறப்புஇறப்பு மூப்புக்களைக்கடந்தவர்; சேதநாசேதனங்கள் இரண்டினும் விலக்ஷணர்என்பது.

ஜநநர்= [5]பக்தராகாதவர்களும் பகவத்ஸ்வரூபத்தைஅனுபவிப்பதற்குரிய கரணகளேபரங்களோடு ஜனிக்கும்படிசெய்பவர்.

ஜநஜந்மாதி = [6]ஜனங்களின் ஜன்மத்துக்குத் தாமேபலனாயிருப்பவர்.

ஜநார்த்தநர் = [7]தமது ரக்ஷணத்திற்குவிரோதம்செய்யும்சத்ருஜனங்களை உதவிதேடாமல்அழிப்பவர்; இங்கு தேஜஸ் குறிப்பிக்கப்படுகிறது; தனக்கு ஓர்உதவியைத்தேடாது கார்யத்தைமுடிக்கும் திறமை தேஜஸ்என்னப்படுவது.

ஜநேஶ்வரர்= [8]ஜனித்தவர்கள் எல்லாரையும்வியாபிக்கும் ஐஶ்வர்யமென்னும்மஹாப்பிரவாஹத்தினால் விளங்குகிறவர்.

ஜயர்= [9]ஆஶ்ரிதர்களால்ஏவப்படும்படியிருப்பவர்.

---

1 ஸூர்யமண்டலத்தில் ப்ரகாசிப்பவர்; அல்லது, ஸூர்யனைப்ரகாசிப்பவர்.

2 ஸ்வயமாகவே பிரகாசிப்பவர்.

3 உலகத்தைக்கரையேற்றுபவர்; அல்லது, வர்ணாஶ்ரமதர்மங்கள் கலவாமலிருக்கும்படி தாங்குகிறவர்.

4 உலகம்உண்டாவதற்குமுன் ஹிரண்யகர்ப்பருபியாக ஜனித்தவர்.

5 ப்ராணிகளைப்படைப்பவர்.

6 ஜனங்களின் உத்பத்திக்குக்காரணமானவர்.

7 துர்ஜனர்களைப்பீடிப்பவர்; அல்லது, அவர்களைநரகங்களுக்குப்போகச்செய்பவர்; அல்லது, ஸாதுஜனங்களினால் ஐசுவர்யத்தையும் மோக்ஷத்தையும் வேண்டப்படுகிறவர்.

8 ஜனங்களுக்குஈசுவரர்.

9 எல்லாப்பிராணிகளையும்ஜயிப்பவர்.

ஜயந்தர்— [1]புத்தாவதாரத்தில்ஞானமேஆத்மாவென்றும்பிரபஞ்சம்பொய்என்றும் வீண்வாதம்செய்து ஆஸ்திகர்களைஜயித்தவர்.

ஜஹ்நு— [2]பக்தரல்லாதவருக்குத் தம்மகிமையை மறைப்பவர்.

ஜிதக்ரோதர்— [3]ஆஸ்ரிதர்களுக்குக் காமக்ரோதமுதலியவற்றைப்போக்குகிறவர்; 'மோகினிரூபத்தைக்கண்டு வியந்தஅஸுரர்கள் மனம்தளர்ந்து தேவர்களின்மேல் கோபியாமலிருக்கும்படி அவர்களின்கோபத்தையடக்கினவர்' என்பது நிர்வசனம்.

ஜிதமந்யு — கோபத்தைவென்றவர்; சரணாகதனானகஜேந்திரனுக்குவிரோதியானஜலஜந்துவின்மேல் கோபம்வைக்காமல் அதற்கும் நற்கதிகொடுத்தவரென்பது.

ஜிதாமித்ரர் — [4]தாம் எல்லோருக்கும்அமைந்தஸ்வாமியாயிருக்கும்ரஹஸ்யத்தைக்கண்டறிவதற்கு விரோதிகளான அகங்காரமமகாரங்கள் காமக்ரோதங்கள்முதலியபகைகளை ஜயித்தவர்.

ஜீவநர்— [5]தம்கையினால் நொலுண்டதனும் முதலையையும் கந்தர்வனுக்கிப் பிழைக்கச்செய்தவர்.

ஜீவர் — [6]பாகவதர்கள் தமக்கு ஆராதனம் செய்வதனால உஜ்ஜீவிக்கச் செய்கிறவர்.

ஜேதா— [7]பிரம்மருத்ராதிகளையும் தம் அபிப்பிராயத்தில் நிற்கும்படி செய்பவர்.

ப்ரமணர் — [8]கர்மபலன்களையனுபவித்தும் திரும்பவும்ஜனித்தும் முன்வாஸனைமிச்சமின்றி அழியாதவர்கள் மிச்சமுள்ளயோகாப்யாஸத்தை அந்தஜன்மத்தில் எளிதாகஅப்யஸிக்கும்படி செய்பவர்.

ஸ்ரீகர்ப்பர்— [9]போகங்களிலும் விளையாட்டுக்களிலும் அகலாமலிருக்கும்திருமகளைக் கர்ப்பத்தைப்போலக் காப்பாற்றுகிறவர்.

---

1 பகைவர்களைஜயிப்பவர்; அல்லது, ஜயத்துக்குசகாரணமானவர்.

2 ஸம்ஹாரகாலத்தில எல்லாரையும் மறைப்பவர்; அல்லது, பக்தி செய்யாதஅஜ்ஞானிகளைப பரமபதம்சேரவொட்டாதவர்.

3 கோபத்தையடக்கினவர்; ராவணாஸுரர்களைக்கொல்வது வேதமர்யாதையைக்காப்பதற்கன்றிக் கோபத்தினாலன்றென்பது கருத்து.

4 உட்பகைகளாகிய காமக்ரோதங்கள்முதலியவற்றையும் வெளிப்பகைவர்களாகிய ராவணன்முதலானவர்களையும் ஜயித்தவர்.

5 ப்ராணரூபியாகிப் பிரஜைகளை ஜீவிக்கச்செய்பவர்.

6 ஜீவாத்மரூபியாக எல்லாஉயிர்களையும் தாங்குகிறவர்.

7 ஜயிக்கும்தன்மையுள்ளவர்.

8 அவித்யைகளைவருத்துகிறவர்.

9 தமதுசெல்வமாகியஉலகமனைத்தையும் வயிற்றுக்குள்வைத்திருப்பவர்.

ஸ்ரீகரர் = [1]பரஸ்வரூபத்திற்போலவே வியூகவிபவாவதாரங்கள் முதலியவற்றிலும் தமக்குஉகந்தபடி லக்ஷ்மியை அவதரிக்கச்செய்கிற வர்.

ஸ்ரீசர் = பிராட்டிக்கும் பெருமைவந்ததற்குக் காரணமாயிருப் பவர்; திருவுக்கும்திருவென்பது; அல்லது, எல்லாநிலைமைகளிலும் பிராட்டியைத் தமக்குஈஸ்வரியாக வைத்திருப்பவர்.

ஸ்ரீதர் = [2]எப்போதும் புதிதாகத்தோன்றும் நிஷ்காரணமான ப்ரேமரஸமானசிறப்பைத் திருமகளுக்கு அளிப்பவர்; இவரைச்சார்ந் ததனால் அவளுக்கு, 'ஸ்ரீ' என்று பெயர்வந்திருப்பதனால் அந்தத் திருமகளுக்கும் பிராணதாரமாயிருப்பவர்என்பது.

ஸ்ரீதரர் = [3]மணிக்குஒளிபோலவும் மலருக்குமணம்போலவும் மதிக்குநிலவுபோலவும் அமுதத்துக்குச்சுவைபோலவும் இயற்கை யாகவுள்ளஸம்பந்தத்தினால் எப்போதும் லக்ஷ்மியைச்சேர்ந்திருப் பவர்.

ஸ்ரீநிதி = [4]ரத்தினத்துக்குப்பெட்டிபோலப் பிராட்டிதங்குமிட மாயிருப்பவர்.

ஸ்ரீநிவாஸர் (185)= திருப்பாற்கடல்கடைந்தபோதுஅவதரித்த பெரியபிராட்டியாரைத் தமது திருமார்பில்வைத்து இன்சொற்கூறிச் சிறப்பித்தவர்.

ஸ்ரீநிவாஸர் (614) = [5]நந்தனவனத்திலுள்ளகொடிக்குக் கற்பக விருக்ஷம்போலப் பிராட்டிக்கு என்றும் சேர்ந்திருக்கும்கொழுகொம் பாக இருப்பவர்.

ஸ்ரீபதி = [6]ஸ்ரீதேவி தனக்குத் தகுந்த கணவரென்று நித்ய மும் ஸ்வயம்வரம்செய்யும் புருஷராயிருப்பவர்.

ஸ்ரீமதாம்வரர்= [7]ஐஸ்வர்ய லக்ஷ்மிபொருந்தின பிரம்மாதி தே

---

1 தம்மை த்யானித்தும் துதித்தும் ஆராதித்தும்வரும் பக்தர்களுக்கு எல்லாஐசுவர்யங்களையும் உண்டுபண்ணுகிறவர்.

2 பக்தர்களுக்கு ஐசுவர்யத்தைக் கொடுப்பவர்.

3 உலகமாதாவான லக்ஷ்மியை மார்பில்வகிப்பவர்.

4 எல்லாச்சக்திகளும் வைக்கப்படும் இடமாயிருப்பவர்.

5 ஐசுவர்யமுள்ளவர்களிடத்தில் நித்யமாக வஸிப்பவர்.

6 அமுதம் கடைந்தகாலத்தில் தேவாஸுரர்கள் எல்லாரையும்விட்டு லக்ஷ்மியினால் ஸ்வயம்வரம்செய்யப்பட்டபதி; அல்லது, 'ஸ்ரீ' என்னப்படும் பராசக்திக்குப்பதி.

7 ரிக், யஜுஸ், ஸாமம் என்னப்படும் செல்வம்பொருந்தின பிரம்மாதி தேவர்க்கும் தலைமையானவர்.

வர்கள் எல்லாரினும் சிறந்தவர் ; மகாலக்ஷ்மியின் பூர்ணகடாக்ஷம் பெற்றவர் பகவான் ; அவர்கடாக்ஷலேசம்பெற்றவர்கள் மற்றத்தேவர்கள் என்பது.

ஸ்ரீமாந் (22)= [1]அழகும் ஒளியும் பொருந்தி மனத்தைக்கவரும் திவ்யமங்கள விக்ரஹத்தையுடையவர் ; மனிதனும் ஸிம்மமும் சேராச்சேர்க்கையாகவிருப்பினும் அவை ஒருசரீரத்தில் பொருந்தியிருக்கும் அழகினால் ஸேவிப்பவருக்கு மனமகிழ்ச்சியை உண்டாக்கி உலகத்தைக் காப்பவரென்பது.

ஸ்ரீமாந் (180)= [2]எப்பொழுதும் தம்திருமேனிக்குத் தகுந்த திவ்யாபரணங்களின் சிறப்புள்ளவர்.

ஸ்ரீமாந் (222)= [3]தாமரைக்கண்ணரென்றுசொல்லப்பட்டசிறப்பிலக்கணத்தினால் மத்ஸ்யாவதாரத்திலும் தமது பரமேஸ்வரமகிமை வெளிப்படையாகத் தோற்றும்படியிருப்பவர்.

ஸ்ரீவத்ஸவக்ஷஸ்= தம்மால் நியமிக்கப்படும் உலகம்அனைத்தையும்காட்டிலும் வைலக்ஷண்யத்தைத் தோற்றுவிப்பதாகிய திருமகள் கணவரென்னும் சிறப்புக்குக்குறியான ஸ்ரீவத்ஸமென்னும்அடையாளத்தைத் திருமார்பிலுடையவர்.

ஸ்ரீவாஸர்= [4]திருமகள் எக்காலமும் யதேச்சையாக விளையாடுவதற்குரிய கற்பகவனமாயிருப்பவர் ; நாலுபுஜங்களே கற்பகமரங்களென்று கருத்து.

ஸ்ரீவிபாவநர்= [5]பிராட்டியினாலேயே தமக்குப் புகழும் மகிமையும் உண்டாக்கப்பட்டிருப்பவர்.

ஶ்ருங்கீ= [6]அஹிம்ஸையென்னும்விரதத்தை அனுஷ்டிப்பதற்காகக் கொம்புபோல மயில்தோகையைக் கையிலவைத்திருப்பவர்.

ஶ்ருதிஸாகரர்= குணங்களைஉரைக்கும்ஶ்ருதிகளுக்கு நதிகளுக்குக்கடல்போல முடிவுபெறும்இடமாயிருப்பவர்.

ஶ்ரேயஸ்ஸ்ரீமாந்= [7]எல்லாப்புருஷார்த்தங்களுக்காகவும் எல்லா

---

1 திருமார்பில் திருமகள் நித்யமாகப்பொருந்தியிருக்கப்பெற்றவர்.

2 நிரம்பின ஐசுவர்யமுள்ளவர்.

3 சிறந்த ஒளியுள்ளவர்.

4 மார்பில் லக்ஷ்மி அகலாமல் வஸித்திருக்கப்பெற்றவர்.

5 எல்லாப்பிராணிகளுக்கும் பலவித ஐசுவர்யங்களையளிப்பவர்.

6 ப்ரளயக்கடலில் கொம்புள்ள மத்ஸ்யரூபம்எடுத்தவர்.

7 இரண்டுநாமம். ஶ்ரேயஸ்= நித்யஸுகமான பிரம்மாநந்தரூபமாயிருப்பவர். ஸ்ரீமாந்= எல்லாச்சிறப்புக்களும் தம்மிடத்திலேயே பொருந்தியிருக்கப் பெற்றவர்.

ராலும் ஆஸ்ரயிக்கப்படத்தக்கபிராட்டியானவள் தம்மிடத்தில் எப்போதும் சேர்ந்திருப்பவர்.

ஸ்ரேஷ்டர்=[1]நித்யஸூரிகள் இடைவிடாமல் அனுபவித்துக் களித்துச்செய்யும் ஸ்தோத்திரங்களினால் மிகவும் ஆராதிக்கப்பெறுகிறவர்.

ஸ்கந்ததரர்=[2]அஸுரர்களைச் சோஷிக்கச்செய்யும் தேவஸேநாபதியான குமாரக்கடவுளையும் தாங்குகிறவர்; அவரும் இவருக்குப்பரிவாரம்என்பது.

ஸ்கந்தா=[3]அஸுரர்முதலானவர்களை வற்றச்செய்பவர்.

ஸ்தவ்யர்=[4]ஸ்தோத்திரத்துக்குரியவர்; எந்தக்குணங்களையிட்டு எப்படிப்புகழ்ந்தாலும் அவை பொய்யாகாமல் பொருந்தியிருப்பவர்.

ஸ்தவப்ரியர்=யாராலும் எந்தப்பாஷையாலும் எவ்வகையாலும் சொற்பொருட்பிழைஇருந்தாலும்செய்யப்படும் ஸ்தோத்திரங்களைக் குணங்களைச்சொல்வதாகஎண்ணி அன்புடன்அங்கீகரிப்பவர்.

ஸ்தவிரர்=[5]எக்காலமும் நிலையாயிருப்பவர்; பால்முதலியன தயிர்முதலியனவாகப்பரிணமமாவதற்குக் காலவரையை எதிர்பார்ப்பதுபோலன்றி ஜகத்ஸ்ருஷ்டியை நினைத்தபோதெல்லாம்செய்யும் ஸ்வதந்த்ரமுள்ளவர்; ஆனால், காலத்தைப்ரதீக்ஷிப்பது அவருக்கொரு லீலைமட்டும்என்பது.

ஸ்தவிஷ்டர்(53)=மிகஸ்தூலமாயிருப்பவர்;ஸூக்ஷ்மமானமூலப்ரக்ருதிஅடங்கினரூபத்திலிருந்து தமது ஸங்கல்பத்தினால் தேவர், மனிதர், விலங்கு, ஸ்தாவரங்கள்ஆகியபலதேகங்களும் அவற்றிலுள்ள புலன்களும் அவற்றிற்குப்புலப்படும்சப்தாதிவிஷயங்களும் இவையடங்கினபதினான்குஉலகங்களும் இவையெல்லாம்உள்ளடங்கியப்ரம்மாண்டமும் அதையும் மூடிக்கொண்டிருக்கும்விரிவானப்ரக்ருதிமண்டலமுமாகப் பலவிரிவுகளை அடைந்திருப்பவர்.

---

1 எல்லாவற்றிலும் மேற்பட்டவர்.

2 தர்மமார்க்கத்தைத் தாங்குகிறவர்.

3 தாம் அமுழுமாகப்பெருகுகிறவர்; அல்லது, வாயுரூபியாக எல்லாவற்றையும்உலர்த்துபவர்.

4 எல்லாராலும் துதிக்கப்பெறுகிறவர்; தாம் யாரையும் துதியாதவர் என்பது.

5 'ஸ்தவிரோத்ருவர்' ஒருநாமம். பழமையாகஅல்லது கிழவராகநிலைபெற்றிருப்பவர்.

ஸ்தவிஷ்டர் (437)—[1]நக்ஷத்ரமண்டலமாகிய சிம்சுமாரசக்ர ரூபியாக மிக்க விரிவாயிருப்பர்.

ஸ்தாணு — ஸ்திரமானவர்; அழியாத பலன்களைத்தரும் அநுக்ரஹமுள்ளவர்; அல்லது, தாம்செய்த அநுக்ரஹத்தில் திருப்தியடையாமல் மேன்மேலும் அநுக்ரஹிப்பவர்.

ஸ்தாநதர் — [2]கீழ்ப்பட்டவனை த்ருவனென்னும் ராஜகுமாரனுக்கு அழியாததான த்ருவபதம் என்னும்உயர்பதத்தை அளித்தவர்.

ஸ்தாவரஸ்தாணு — [3]கல்கியவதாரத்தில் தர்மம் நிலைநிறுத்தப்பட்டபிறகு ஓழிவாயிருப்பவர்.

ஸ்திரர்— [4]தாம் பக்தர்களிடத்திலுவைத்த அன்பு அவர்கள் செய்யும் அபசாரங்களாலும் விலக்கவொண்ணாதபடி இருப்பவர்.

ஸ்துதர்— [5]ஆதிசேஷன், வேதபுருஷன், அனந்தகருட விஷ்வக்ஸேனர்முதலிய கணக்கில்லாதநித்யஸூரிகளாலும் பிரம்மாதிதேவர்களாலும் நம்போன்றமனிதர்களாலும் எப்போதும் அவரவர் இஷ்டம் நிறைவேறுவதற்காக ஓரேரீதியாகத் துதிக்கப்பெற்றவர்.

ஸ்தூலர் — [6]பருத்திருப்பவர் ; ஓரிடத்திலிருந்தே எல்லாப் பொருள்களையும்தொடத்தக்கவர் ; இங்கு பூமியிலிருந்தே சந்திரனைத் தொடும்சக்தியாகிய பிராப்திஎன்னும் ஐஸ்வர்யம் சொல்லப்பட்டது.

ஸ்தோத்ரம் — அவரைத்துதிக்கப்பெறுவதும் அவர் அநுக்ரஹத்தினாலேயேஉண்டாவதனால் அவரே ஸ்தோத்ரமாகவுமிருப்பவர்.

ஸ்தோதா— [7]தம்மைத்துதிப்பவரைத் தாம் துதிக்கும்தன்மையுள்ளவர்.

ஸ்பஷ்டாக்ஷரர்— [8]தமதுமகிமையைத் தெளிவாக வெளிப்படுத்தும்வேதாக்ஷரங்களை வெளிப்படுத்தினவர்.

---

1 விராட்ரூபியாக மிகவிரிவாயிருப்பவர்.

2 த்ருவன்முதலானவர்களுக்கும் அவரவர் கர்மங்களுக்கேற்ற அதிகாரங்களைக் கொடுப்பவர்.

3 தாம்நிலைபெற்றவராகவும் பூமிமுதலியவை தம்மிடத்தில நிற்கும்படியாகவுமிருப்பவர்.

4 விகாரமற்றவர்.

5 'ஸ்துதி' என்னும்பாடத்தில் துதிக்கும்செய்கையும் தாமேயாயிருப்பவர்.

6 எல்லாமாகவும் தாமிருப்பதனால் பெரியஉருவமுள்ளவர்.

7 துதிப்பவரும் அவரே.

8 உதாத்தஸ்வரமுள்ளஓங்காரமென்னும்அக்ஷரத்தினால் வெளியிடப்படும் மகிமையையுடையவர்.

ஸ்ரக்வீ— திர்யகவதாரங்களிலும் பஞ்சபூதஸூக்ஷ்மங்கள்சேர்ந்ததான வைஜயந்தியென்னும்வனமாலையை எக்காலமும் அணிந்திருப்பவர்.

ஸ்ரஷ்டா (595)— [1]முக்தியைவிரும்புகிறவர்களை ஸம்ஸாரத்திலிருந்துவிடுவித்து உலகவாழ்க்கையில்விருப்பமுள்ளவர்களை அவரவர்கள் வெகுகாலமாகச் சேர்த்திருக்கும் பலவகைப்புண்யபாபங்களாகியகர்மங்களுக்குத்தக்கபடி சரீரமுதலானஸாதனங்களுடன் கூட்டிப்படைப்பவர்.

ஸ்ரஷ்டா (990)—உலகங்களைப்படைப்பவர்; பரவாஸுதேவ ஸ்வரூபரும் இவரேஎன்பது.

ஸ்வங்கர்— [2]பிராட்டியும்அடிக்கடிஆசைப்படத்தகுந்த திவ்ய மங்களவிக்ரஹமுள்ளவர்.

ஸ்வத்ருதர்— [3]தம்மாலேயே தாம் தாங்கப்படுகிறவர்; இந்தமகிமை இயற்கையாகஅமைந்ததாயிருப்பவர்: யோகிகளுக்கு மந்த்ரம், ஓஷதி, தவம், த்யானம்இவற்றினால்ஏற்படும்ஐசுவர்யங்கள்போலன்றி இயற்கையினால் அமைந்திருப்பதென்பது.

ஸ்வயஞ்சாதர் — [4]ஒருவருடையப்ரார்த்தனையை எதிர்பாராமல் தாமே அவதரிப்பவர்.

ஸ்வயம்பூ — [5]கர்மங்களடியாகவரும் ஜன்மங்கள்போலன்றித் தமது மகிழ்ச்சியேகாரணமாகக்கொண்டு தமக்கேசிறப்பாயுள்ளசுத்த ஸத்வமயமானதேகத்தைத் தேவமனிதரூபங்களாயமைத்துக்கொண்டு தாமே தம்மிச்சையாக அவதரிப்பவர்.

ஸ்வவசர்— [6]தம்மால்மயக்கப்பட்ட அஸுரர்கள் தூங்கினபோது தம்அடியார்களாயுள்ளதேவர்களுடன் தம்மிஷ்டப்படிமகிழ்ந்திருப்பவர்.

ஸ்வஸ்தி — தாமே மஹாமங்களமூர்த்தி.

1 ஆதிகாலத்தில் எல்லாவற்றையும்படைத்தவர்.

2 அழகிய அங்கங்களையுடையவர்.

3 தம்மாலேயேதரிக்கப்படுகிறவர்; தம்மகிமையே தமக்குஆதாரமாயிருப்பவர்என்பது.

4 தமக்குத் தாமே கர்த்தாவாகஜனித்தவர்; நிமித்தகாரணமும் தாமேஎன்பது.

5 தாமேஉண்டானவர்; அல்லது, எல்லாவற்றிற்கும்மேலேஇருப்பவர்; அல்லது, ஸ்வதந்த்ரர்.

6 ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயங்களுக்குக்காரணமாயிருப்பதனால் ஸ்வதந்த்ரமாயிருப்பவர்.

ஸ்வஸ்திக்ருத் — [1]தம்மைக் குணங்களோடுகூட அநுபவிக்கும்படியாக முக்தர்களுக்கு ஆசீர்வாதம்செய்பவர்.

ஸ்வஸ்திதர் — [2]மஹாமங்களத்தைக் கொடுப்பவர்.

ஸ்வஸ்திதக்ஷிணர் — [3]தமக்குக் கைங்கர்யம் செய்யத்தகுதியான திவ்யசரீரம் சக்திமுதலிய அநேகம்நன்மைகளையும் தம்மைத்தருவதாகிய தீர்க்கஸத்ரயாகத்தில் தம் அடியார்களாகிய ரித்விக்குக்களுக்குத் தக்ஷிணையாக அளிப்பவர்.

ஸ்வஸ்திபுக் — [4]எல்லாமங்களங்களையும் அழியாமலிருக்கும்படி காப்பாற்றுகிறவர்.

ஸ்வக்ஷர் — [5]திருமகள்வடிவழகென்னும் அமுதக்கடலில் கரைகண்ட திருக்கண்கள்முதலான திவ்யேந்திரியங்களையுடையவர்.

ஸ்வாங்கர் — [6]தமது ஸார்வேச்வரத்தன்மைக்குச்சிறப்பிலக்கணங்களான சத்ரசாமரமுதலான ராஜ்யாங்கங்களையுடையவர்.

ஸ்வாபநர் — [7]மோகினி அவதாரத்தில் அழிக்கப்படாமல் மிகுந்தவர்களையும் அழகியபுன்சிரிப்பு இனியநோக்கு புருவங்களசைத்தல் முதலிய விளையாட்டுக்களினால் தூங்கவைப்பவர்; அவர்கள் தங்களை மறந்துபோகும்படி செய்பவர் என்பது.

ஸ்வாபாவ்யர் — [8]தமது பொருள்களாகிய ஆத்மாக்களினால் ப்ரணவத்தைச்சொல்லி ஸ்வாமியாகவந்தடைந்து தியானிப்பதற்குரியவர்; 'ஆத்மாக்களினால் ஸ்வபாவமாக அமைந்தஸ்வாமியாகநினைக்கப்படுகிறவர்' என்பது நிர்வசனம்.

ஸ்வாஸ்யர் — [9]சிறந்தஇருப்பையுடையவர்; முக்தியடைந்த

1 மங்களத்தைச்செய்பவர்.

2 பக்தர்களுக்கு மங்களத்தைக்கொடுப்பவர்.

3 மங்களரூபமாகவ்ருத்தி அடைபவர்; அல்லது, மங்களத்தைக்கொடுக்கத்திறமையுள்ளவர்; அல்லது, மங்களத்தை விரைந்துகொடுக்கும் தன்மையுள்ளவர்.

4 மங்களத்தைஅநுபவிப்பவர்; அல்லது, மங்களத்தைக்காப்பாற்றுகிறவர்.

5 தாமரைமலருக்கொப்பான அழகியகண்களையுடையவர்.

6 காரியங்களையும் காரணங்களையும் அவ்வவற்றின் அவயவங்களையும் படைப்பவர்.

7 ப்ராணிகளை மாயையினால் ஆத்மஜ்ஞானமின்றித் தூங்கச்செய்கிறவர்.

8 நித்யஸ்வரூபராதலின் எப்போதும் ஒரேஸ்வபாவத்தோடே இருப்பவர்.

9 தாமரைமலர்போல அழகியமுகமுள்ளவர்; அல்லது, வேதம்வெளிப்பட்ட சிறந்தமுகமுள்ளவர்.

ஆத்மாக்களின்நிலைமை அதற்குமுன் அவித்தையினால் மூடப்பட்டுக் கெட்டிருந்தது; அவ்வாறன்றிப் பரமாத்மாவின் ஐஸ்வர்யமாகிய நிலைமை எக்காலமும் பரிசுத்தமாகச்சிறந்திருப்பது.

ஸ= [1]கிருஷ்ணாவதாரத்தில்சிறுவர்முதல்யாவருக்கும் தம்மைப் பற்றிய நிச்சயஜ்ஞானத்தை உண்டுபண்ணுகிறவர்.

ஸங்க்ரஹர்= [2]பக்தர்களால் எளிதில்அடையப்படுகிறவர்.

ஸங்கர்ஷணர்= [3]சேதனாசேதனங்களைத் தம்மிடத்தில் ஒன்று சேரும்படி ஆகர்ஷிப்பவர்.

ஸத்= [4]ஒருகாலும் உற்பத்திநாசங்களின்றி நித்யமாயிருப்பதனாலும் திருக்கல்யாணகுணங்கள்பொருந்தியிருப்பதனாலும் ஸத் என்னும்தர்மத்திற்கு ஆதாரமாயிருப்பதனாலும் ஸத் என்றுசொல்லப்படுகிறவர்.

ஸத்க்ருதர்= [5]ஸாதுக்களால்பூஜிக்கப்படுகிறவர்; சபரிமுதலானவர்கள் ச்ரத்தையோடுகொடுத்தசிறியபொருள்களையும்தம்மகிமைக்குத்தகுதியானவற்றைப்போல அங்கீகரித்து ஸந்தோஷமடைகிறவர் என்பது.

ஸத்க்ருதி= [6]தயிர்வெண்ணெய்திருடினது, உரலில்கட்டுப்பட்டது, நடந்தது, ராஸக்ரீடைசெய்ததுமுதலிய குழந்தைவிளையாட்டுச் செய்கைகளும் ஸம்ஸாரவிலங்குகள் எல்லாவற்றையும்தறிப்பவைகளாகச் சிறந்திருப்பவர்.

ஸத்கதி= [7]அவதரிக்கும்போதே அஸுரர்களால்விளையும்ஆபத்துக்களையொழித்து ஸாதுக்களைக்காப்பாற்றுகிறவர்.

ஸத்கர்த்தா=ஸத்புருஷர்களைப்பூஜிப்பவர்.

ஸத்கீர்த்தி=ஸௌலப்யமிருப்பதனாலேயே யதார்த்தமானபுகழ் பெற்றவர்; எந்தக்குணம்சொன்னாலும் அவரிடத்தில் பொருந்தும்; அவரிடத்திலுள்ளகுணங்கள் எவ்வளவோ அவ்வளவும் அதற்குமே

1 ஸவர்=ஸோமயாகரூபியாயிருப்பவர்.

2 ப்ரளயகாலத்தில் எல்லாவற்றையும்ஸம்ஹரிப்பவர்.

3 ஸங்கர்ஷணாச்யுதர் ஒருநாமம்; ஸங்கர்ஷணர்=ஸம்ஹார காலத்தில் பிரஜைகளைச் சேர்த்துஇழுப்பவர்; அச்யுதர்=தம்ஸ்வரூபத்தைவிட்டுத் தவறாதவர்.

4 சுத்தப்ரம்மம்.

5 யாவராலும்பூஜிக்கப்படும் பிரம்மதேவர்முதலானவர்களாலும் பூஜிக்கப்பெறுகிறவர்.

6 சிறந்தஸ்ருஷ்டிமுதலானசெய்கைகளையுடையவர்.

7 பிரம்மஜ்ஞானிகளால்அறியப்படுகிறவர்; அல்லது, உயர்ந்தஞானமுள்ளவர்.

னும் யாராலும்சொல்லமுடியாததால் 'அவருடையகீர்த்தியெல்லாம் யதார்த்தமென்பது.

ஸத்தா = [1]தாமே ஸாதுக்களுக்குஇருப்பாயிருப்பவர்.

ஸத்பதாசாரர் = [2]தமக்கடிமைசெய்வதாகிய நன்மார்க்கத்தில் பிரஹ்லாதன்முதலானபக்தர்களை ப்ரவ்ருத்திக்கச்செய்பவர்.

ஸத்பராயணம் = [3]பாண்டவர்முதலியஸாதுக்கள் முடிவாகச் சேரும் இடமாயிருப்பவர்; 'ஸதபராயணர்' என்னும் பாடத்தில் ஸாதுக்களையே தமக்கு முக்கியஆதாரமாக வைத்திருப்பவர்.

ஸத்பூதி = [4]ஸாதுக்களுக்குப் புத்ரன், மித்ரன், பந்து, தூதன், ஸாரதிமுதலிய எல்லாவகைஉதவிகளாகவும் தாமேஇருப்பவர்.

ஸத்யதர்மபராக்ரமர் = தர்மங்களென்னப்படும் தமதுகல்யாண குணங்களும் பராக்கிரமங்களென்னப்படும் திவ்யசேஷ்டிதங்களும் வீண்போகாமல் உலகத்தை உய்விக்கும்படியிருப்பவர்.

ஸத்யதர்மபராயணர் = [5]ஒருகாரணமுமின்றி சாஸ்திரவிதி யென்றுமாத்திரம் ஸாத்விகர்களான அதிகாரிகளினால்செய்யப்படும் உத்தமமானநிவ்ருத்திதர்மத்தை மிகப்பிரியமாகஅங்கீகரிப்பவர்.

ஸத்யதர்மா = [6]ஆரம்பமுதல் தம்மைஅடையும்வரையிலும் தம் தர்மமாகிய சரணாகதரக்ஷணத்தைப் பொறுப்பாகநடத்துகிறவர்.

ஸத்யபராக்ரமர் = [7]மனுமுதலானஸாதுக்கள்விஷயத்தில் தம் முடையசக்தியை வஞ்சனையில்லாமல் உபயோகித்தவர்.

ஸத்யமேதஸ் = [8]ஆயர்கள் வஸுதேவர்முதலியோர்களும் தா மும் ஸஜாதீயர்களேஎன்னும்எண்ணம் வெளிக்குக்காட்டுதல்மாத் திரமின்றித் தம்முள்ளத்திலும் உண்மையாகஇருக்கும்தன்மையுள் ளவர்.

---

1 பேதமில்லாதஜ்ஞானஸ்வரூபமாயிருப்பவர்.

2 ஸாதுக்களின்மார்க்கங்களாகியஸதாசாரங்களைத் தாமும் அனுஷ்டிப் பவர்.

3 தத்வஜ்ஞானிகளுக்குச் சிறந்தகதியாயிருப்பவர்.

4 ஸத்தாயிருக்கும் பரமாத்மாவாயிருந்தே பலபொருள்களாகத்தோற்று கிறவர்.

5 ஸத்யவாக்யத்தையும் சாஸ்திரங்களால் விதிக்கப்பட்ட தர்மத்தையும் முக்கியமாகவுடையவர்.

6 யதார்த்தமானஞானமுதலியகுணங்களையுடையவர்; அல்லது, எல்லா வற்றையும் ஸரியாகஅறிபவர்.

7 உண்மையானசக்தியுள்ளவர்.

8 யதார்த்தஞானமுள்ளவர்.

ஸத்யர் (107) = [1]தம்மையடுத்தஸத்புருஷர்களின் அபீஷ்டங் களை ஸாதிப்பவர்.

ஸத்யர் (213) = [2]ஜலப்ரளயகாலத்தில் தம்மை ஆஶ்ரயித்த மனு முதலான ஸத்புருஷர்களுக்கு உபகாரம்செய்தவர்.

ஸத்யர் (873) = [3]ஸாத்விகசாஸ்திரங்களினல்சொல்லப்படுவத னல் உண்மையானமகிமையுள்ளவர்; அல்லது, ஸத்யத்துக்கு ஆதா ரமாயிருப்பவர்.

ஸத்யஸந்தர்= [4]சொன்னசொல்தவருதவர்.

ஸத்ரம்= [5]பலயஜமானர்களால் நீண்டகாலம்செய்யப்படும்ஸத்ர யாகத்தினல் எப்போதும்ஆராதிக்கப்பட்டிருப்பதனல் ஸத்ரரூபியா யிருப்பவர்.

ஸத்வவாந்= [6]மோக்ஷத்திற்குக்காரணமாகிய சுத்தஸத்வத்தை அடைந்திருப்பவர்.

ஸத்வஸ்தர்= [7]பக்தர்ஹ்ருதயத்திலிருப்பவர்; சரணுகதர்களின் உள்ளத்திலிருந்து யமதண்டனைவராமலிருக்கச்செய்பவர்என்பது.

ஸதாம்கதி (186)= [8]தமதுவிளையாட்டுவியாபாரங்களாலும் பக் தர்களுக்கு இனியதையேசெய்பவர்.

ஸதாம்கதி (451)= [9]வைராக்யமடைந்து ஜிதேந்திரியர்களான ஸாதுக்கள்சேருமிடமாயிருப்பவர்.

ஸதாமர்ஷீ= [10]எக்காலமும் தமக்கு முக்தன்பிரதிஉபகாரமாகச்

---

1 மாருதரூபமுள்ளவர்; அல்லது, சேதனசேதனரூபமாயிருப்பவர்; அல் லது, ஸத்தென்னப்படும் ப்ராணனுகவும் தனென்னப்படும்அன்னமாகவும் யம் என்னப்படும் ஆதித்தனுகவுமிருப்பவர்; அல்லது, ஸாதுக்களுக்கு உதவி செய்பவர்.

2 ஸத்தியவசனமென்னும்தர்மஸ்வரூபி.

3 ஸத்துக்களுக்குஉபகாரம்செய்பவர்.

4

5 ஸத்ரயாகமாயிருப்பவர்; அல்லது, ஸாதுக்களைக்காப்பாற்றுகிறவர்.

6 பராக்ரமமுள்ளவர்.

7 எல்லாவற்றையும்பிரகாசிக்கச்செய்யும் ஸத்வகுணத்தை முக்யமாகக் கொண்டிருப்பவர்; அல்லது, எல்லாப்பிராணிகளிடத்திலுமிருப்பவர்.

8 வைதிகர்களானஸாதுக்களுக்குப் புருஷார்த்தங்கிடைக்கக் காரணமா யிருப்பவர்.

9 மோக்ஷத்தைவிரும்புகிறவர்களுக்கு ஒரேஆதாரமானவர்.

10 நல்லகாரியம்செய்து தமக்குஅனுகூலமாகவருகிறவர்களின் குற்றங் களைப் பொறுப்பவர்.

செய்யும்கைங்கர்யங்களைப் பொறுத்துக்கொண்டும் நிறைவேற்றிக் கொண்டுமிருப்பவர்.

ஸதாயோகீ— [1]பக்தர்களுக்கு ஸம்ஸாரநிவ்ருத்தி செய்யும்விஷயத்தில் எப்போதும் ஊக்கமுள்ளவர்.

ஸந்தர்— [2]ஆஶ்ரிதர்களெல்லோரையும் விருத்திசெய்பவர்; அல்லது, தம்மையடுத்தவர்களுக்குத் தாம் உளராயிருப்பவர்; அல்லது, ஆஶ்ரிதர்களுக்கு இஷ்டங்களைக்கொடுப்பவர்.

ஸந்தாதா— [3]பிரஹ்லாதன்முதலான பக்தர்களைத் தம்மிடம் சேர்த்துக்கொள்பவர்.

ஸந்திமாந்— [4]பக்தர்களுக்குத் தம்முடைய சேர்க்கை எக்காலமும் நீங்காமலிருக்கச் செய்பவர்.

ஸந்நிவாஸர்— [5]மானிட நடக்கைகளிலிருந்தும் ஸநகர்முதலிய ஸாதுக்கள் வந்து இளைப்பாறுமிடமாயிருப்பவர்.

ஸந்யாஸக்ருத்— [6]ஸாத்விகஸந்யாஸமாகியபற்றுவிடுதலைமுன்னிட்டுச் செய்யப்படும் பகவதாராதனரூபமான நற்கருமங்களைச் செய்விப்பதனால் ரஜோகுணத்தையும் தமோகுணத்தையும் அறுப்பவர்; இதுதான்அவர் சிகித்ஸைசெய்யும் முறை; தன் விஷயமானபொருப்பை ஸ்வாமியிடம் ஒப்புவிப்பதுதான் ஸந்யாஸம்; அதுதான் ஸம்ஸாரத்துக்குச் சிகித்ஸை.

ஸநாத்— [7]முக்தரால் பங்கிட்டுக்கொண்டு அநுபவிக்கப்படுகிறவர்.

ஸநாதநதமர்— [8]எக்காலமும் இருப்பவராயினும் ஒவ்வொருகாலமும் அப்போது புதிதாகக் கிடைத்தவர்போல ஆவல்கொண்டு அநுப

ஸப்தவாஹநர்— [9]காயத்ரீ, உஷ்ணிக், அநுஷ்டுப், ப்

1 எப்போதும் ஸ்வரூபம்ப்ரகாசிக்குந்தன்மையுள்ளவர்.

2 நல்லொழுக்கமுள்ளஸாதுக்களின் உருவமாக வித்தையையும் விநயத்தையும் விருத்திசெய்துகொண்டிருப்பவர்.

3 பிராணிகளுக்கு வினைப்பயன்களைச் சேர்ப்பிப்பவர்.

4 வினைப்பயன்களையனுபவிப்பவரும் தாமாயிருப்பவர்.

5 வித்வான்களுக்கு ஆதாரமாயிருப்பவர்.

6 நான்காவதான ஸந்யாஸாஶ்ரமத்தை உண்டுபண்ணினவர்.

7 அநாதியானகாலரூபியாயிருப்பவர்.

8 பழமையாயிருக்கும் ப்ரம்மாதிதேவர்களுக்கும் பழமையாயிருப்பவர்.

9 ஏழுகுதிரைகளையுடையஸூர்யனாயிருப்பவர்; அல்லது, ஸப்தமென்னும் ஒருதேர்க்குதிரையையுடைய ஸூர்யனாயிருப்பவர்.

பங்க்தீ, த்ரிஷ்டுப், ஜகதீஎன்னும் ஏழுசந்தஸ்ஸுகளோடுகூடிய வேத மந்த்ரங்களுக்கு அதிஷ்டான தேவதைகளாகிய ஸூர்யனது தேர்க் குதிரைகள் ஏழையும் தமக்கு வாகனங்களாகவுடையவர்; ஸூர்ய மண்டலத்திலிருப்பவர் என்பது; அல்லது, ஸப்தவாயுஸ்கந்தங்களை யும் நடத்துகிறவர்; அல்லது, தாங்குகிறவர்.

ஸப்தஜிஹ்வர்—காளி, கராளி, மனோஜவை, ஸுலோஹிதை, ஸுதாம்ரவர்ணை, ஸ்புலிங்கினி, விஸ்வரூபிஎன்று ஏழுஜ்வாலைகளான ஏழுநாக்களையுடைய அக்னிபகவானாயிருப்பவர்; அல்லது, ஹிரண்யை, கனகை, ரக்தை, கிருஷ்ணை, ஸுப்ரபை, அதிரக்தை, பஹுரூபை என்னும் ஏழுஜ்வாலைகளாகிய ஏழுநாக்களையுடைய அக்னிரூபி; ஏழுநாவுள்ள அக்னியை முகமாகக்கொண்டு எல்லாத்தேவதைகளைக் குறித்தும் ஹோமம் செய்யப்படும் ஹவிஸ்ஸுகளைத் தாமே புசிப்பவர் என்பது.

ஸப்தைதஸ்—[1]ஔபாஸநம், வைஸ்வதேவம், ஸ்தாலீபாகம், அஷ்டகை, மாஸஸ்ராத்தம், ஈசானபலி, ஸர்ப்பபலியென்னும் ஏழு பாகயஜ்ஞங்களையும் அக்னிஹோத்ரம், தர்சபூர்ணமாசம், பிண்ட பித்ருயஜ்ஞம், பசுபந்தம், ஆக்ரயணம், சாதுர்மாஸ்யம், ஸௌத்ரா மணிஎன்னும் ஏழுஹவிர்யஜ்ஞங்களையும் அக்னிஷ்டோமம், அத்யக் னிஷ்டோமம், உக்த்யம், ஷோடசம், வாஜபேயம், அதிராத்ரம், அப்தோர்யாமம்என்னும்ஏழுஸோமஸம்ஸ்தைஎன்னும்யாகங்களையும் பிரகாசிக்கச்செய்வனவாகிய கிரியைகள் எல்லாவற்றையும் அடைகிற வர்; அல்லது, அரசு, அத்தி, பலாசு, வன்னி, விகங்கதம், அசனிஹ தம், புஷ்கரபர்ணம்என்னும் ஏழுவிதமானஸமித்துக்களால் செய்யப் படும்யாகங்களை அடைகிறவர்.

ஸம்ப்ரமர்த்தநர்—[2]தம்மைஉபாஸனைசெய்வதனால்அந்தப்ரகிரு திஎன்னும்இருளை முழுதும்அழிப்பவர்.

ஸம்பவர்—[3]பொற்புதையல்போலத்தம்மை மறைத்துவைத்துக் கொண்டிருந்தும் நேராகஅனுபவிக்க ஆவல்கொண்டு பிரார்த்திப்பவர் களுக்குத் தம்மைவெளிப்படுத்துவதற்காகக் காலதேசங்கள்தோறும் பலஅவதாரங்களைச்செய்பவர்.

1 ஏழுஜ்வாலைகளையுடைய அக்னிரூபியாயிருப்பவர்.

2 ருத்ரன் யமன்முதலிய தமதுபரிவாரங்களினால் உலகங்களைஅழிப்பவர்.

3 துஷ்டநிக்ரஹசிஷ்டபரிபாலனங்களுக்காக ஸ்வேச்சையாய் அவதாரம் செய்பவர்.

ஸம்மிதர்—[1]தம்மை ஆஸ்ரிதர்களுக்கு அடங்கியிருப்பவராகவும் நினைக்கும்படி உட்பட்டிருப்பவர்.

ஸம்வ்ருதர்—[2]தமஸ்என்னப்படும்ப்ரக்ருதியினால் அறிவுமழுங்கினவர்களுக்குப் பிரகாசியாமல்மறைந்திருப்பவர்.

ஸம்வத்ஸரர் (92)—[3]பகவத்ஸ்வரூபத்தின் அறிவுண்டானபோதே அடியார்களைக் கைதூக்கி மேன்மைப்படுத்துவதற்காக அவர்களிடத்தில் சேர்ந்துவஸிப்பவர்.

ஸம்வத்ஸரர் (423)—[4]ஸம்ஹாரத்துக்குரியக்ருவிகளுடன் காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு பாதாளலோகத்தில் ஆதிசேஷன் மேலிருப்பவர்.

ஸம்ஸ்தாநர்—[5]எல்லாம் தம்மிடத்தில் முடிவுபெறும்படியிருப்பவர்.

ஸம்க்ஷேப்தா—[6]பிரவ்ருத்திதர்மத்திலிருப்பவர்களை இயற்கையாயுள்ளஅறிவும் மகிமையும் குறுகும்படிசெய்யும் தன்மையுள்ளவர்.

ஸமயஜ்ஞர்—[7]அக்னிவாயுமுதலானதேவர்களுக்குத் தாம்கொடுத்தஅதிகாரங்களின்வ்யவஸ்தையை அறிந்திருப்பவர்; பிரளயத்திற்குப்பின் மறுஸ்ருஷ்டியிலும் முன்போலவே அவ்வவ்வதிகாரங்களை அந்தஅந்தத்தேவர்களுக்குத் தவறாமல் அறிந்துகொடுப்பவர்; அல்லது, பக்தர்களுக்குத் தம்மைத்தருவதற்குக் காலம் அறிபவர்; அல்லது, அவர்களுக்கு அபயங்கொடுப்பதாகியவிரதத்தை மறவாதவர்.

ஸமர்—[8]பழகினவன் பழகாதவன் ஆவலதிகமாயுள்ளவன் ஆவல் குறைந்தவனென்னும் வித்யாஸமுதலியவற்றைப்பாராமல் ஓரே விதமானகௌரவம் வைப்பவர்.

---

1 அளவிடப்படாதவராயிருந்தும் அளவிடப்பட்ட பொருள்களுடன் சேர்த்து அளவுள்ளவராகநினைக்கப்படுகிறவர்; அல்லது, அஸம்மிதர்—அளவிடப்படாதவர்.

2 அவித்தையினால்மறைக்கப்பட்டவர்.

3 ஸம்வத்ஸரமாகியகாலரூபி.

4 எல்லாப்பொருள்களும் தம்மிடத்தில்வஸிக்கும்படி செய்பவர்.

5 சிறந்தஸ்தானமுடையவர்.

6 விஸ்தாரமானஉலகத்தைப் பிரளயகாலத்தில் சிறிதாகக் குறுக்குகிறவர்.

7 ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரகாலங்களையறிபவர்; அல்லது, நித்யகர்மாநுஷ்டானத்துக்குரிய ஆறுகாலங்களை, அல்லது, ஆறுவித்தாந்தங்களை அறிந்தவர்; அல்லது, தம்முடையஆராதனமானயாகம் யாவருக்கும் ஸமமாயிருக்கும்படிசெய்பவர்.

8 எக்காலங்களிலும் விகாரமற்றிருப்பவர்; அல்லது, லக்ஷ்மியோடிருப்பவர்.

ஸமாத்மா — [1]ஆஸ்ரிதர்களின் ஏற்றத்தாழ்வுகளைப்பாராது எல்லாரையும் ஸமமாக மனத்தில் நினைப்பவர்.

ஸமாவர்த்தர் — [2]வ்யூகாவதாரங்களாகவும் விபவாவதாரங்களாகவும் இவ்வுலகத்தில் பலமுறை திரும்பிவந்துகொண்டிருப்பவர்.

ஸமிதிஞ்சயர் — [3]ஜீவர்கள் தமக்குத் தாஸர்களாயிருப்பதை விட்டு ஸ்வதந்தரர்களாகநினைத்து விவாதப்படுவதாகிய கலகத்தை ஜயிப்பவர்; ஜீவாத்மாக்களுக்குத் தமதுமகிமையைத்தெரிவித்து அவர்கள், 'நாம் பகவானுக்கு அடிமையேயன்றி ஸ்வதந்த்ரர்களல்லோம்' என்றறிந்து பக்திசெய்து உஜ்ஜீவிக்கச்செய்பரென்பது.

ஸமீரணர் — [4]பக்தர்கள்விரும்பத்தக்க திவ்யசேஷ்டிதங்களை உடையவர்.

ஸமீஹநர் — [5]ஸ்ருஷ்டிகாலத்தில் எல்லாரையும் தம்தம் அதிகாரங்களில் ஒய்வில்லாமல் பிரவிருத்திக்கச்செய்பவர்.

ஸர்க்கர் — [6]த்ரிவிக்ரமாவதாரஞ்செய்து யாவரும் தம்திருவடித் தாமரைகளை எளிதில்பற்றும்படி தம்மையளிப்பவர்.

ஸர்வகர் — [7]அழிக்கப்பட்டவற்றையெல்லாம் தாம் அடைந்து பொறுப்பவர்; இதனால், பலமென்னும் இரண்டாவதுகுணம் குறிப்பிக்கப்பட்டது; பலமாவது:—ஸம்ஹரிக்கப்பட்டவற்றையெல்லாம் தம்மிடத்தில்வைத்துத் தாங்குவதற்குரியவன்மை; இது ஞானத்துக்கு முக்கியமான அங்கம்.

ஸர்வகாமதர் — [8]யோகத்தில்தவறினவர்களுக்கும் அணிமா முதலானஐஶ்வர்யங்களை அவர்களின் யோகத்திற்கு இடையூறான பலன்களாகக் கொடுப்பவர்.

ஸர்வசஸ்த்ரப்ருதாம்வரர் — நரகாஸுரன், ஜராஸந்தன்முதலானவர்களுடன் செய்தபோர்களில் பலவகைஅஸ்திரங்களை விளையாட்டாக

---

1 விருப்புவெறுப்புமுதலியவற்றினால் மாறுதமனமுள்ளவர்; அல்லது, எல்லாப்பிராணிகளிடத்திலும் ஒரே ஆத்மாவாகவிருப்பவர்.

2 ஸம்ஸாரசக்ரத்தைச் சுழற்றுகிறவர்.

3 யுத்தங்களில் ஜயிப்பவர்.

4 வாயுரூபியாக எல்லாவற்றையும் அசையும்படி செய்பவர்.

5 ஸ்ருஷ்டிமுதலானகாரியங்களைச் செய்வதற்காக நன்றாகப் பிரவிர்த்திப்பவர்.

6 ஸ்ருஷ்டிக்கப்பட்டபிரபஞ்சரூபி; அல்லது, ஸ்ருஷ்டிகர்த்தா.

7 எங்கும்செல்லுகிறவர்: காரணமாதலால் கார்யங்களெல்லாவற்றையும் வியாபித்திருப்பவரென்பது.

8 எல்லாப்பலன்களையும்கொடுப்பவர்.

விடக்கண்டு அவர்கள்மயங்கும்படிசெய்ததனால் அஸ்த்ரம்பிடித்தவ ரெல்லாரினும் சிறந்தவர்.

ஸர்வத்ருக் (201)— [1]நண்பர்களையும் பகைவர்களையும் இரண்டு மல்லாதமத்யஸ்தர்களையும் அவரவருக்குத்தக்கபடி நடத்துவதன் பொருட்டு எல்லாவற்றையும் நன்குபார்த்தறிபவர்; அவர், எங்கும் முகமுள்ளவர்என்பது.

ஸர்வத்ருக் (577)— [2]மகிமைகளனைத்தையும் கண்டறிகிறவர்.

ஸர்வதர்சநர்— [3]அவர்கள்நம்பும்படி தமதுமகிமையனைத்தையும் காலக்ரமத்தில் புலப்படுத்துகிறவர்.

ஸர்வதர்சீ— [4]ப்ரவ்ருத்திதர்மங்களும் நிவ்ருத்தி தர்மங்களுமா கியஅனைத்தையும் பிரத்யக்ஷமாகப்பார்க்கும் தன்மையுள்ளவர்.

ஸர்வதஶ்சக்ஷு— [5]எல்லாவிடங்களிலுமுள்ள எல்லாருடைய கண்களுக்கும் புலப்படுகிறவர்; பிரத்யக்ஷமாகஅவதரித்தபின் ஸம்ச யத்திற்கு இடமில்லைஎன்பது.

ஸர்வதோமுகர்— [6]எங்கும்வழியுள்ளவர்; பக்தர்களுக்கு இன்ன வழியினாலேதான் அடையலாம், வேறுவழியால்கூடாதென்கிற நிர்ப் பந்தத்தைப்போக்கி, எந்தவழியையாகிலும் வியாஜமாகக்கொண்டு எளிதிலடையக்கூடியவர்; எதிர்ப்பக்கம்சேர்ந்தவிபீஷணர்முதலான வர்களையும் சரணமென்றுசொன்னஅளவில் அங்கீகரித்துக்காத்தது இதற்குஉதாரணம்.

---

1 பிராணிகளின்புண்யபாவங்களெல்லாவற்றையும் இயற்கையான அறிவி னால் எப்போதும் பார்ப்பவர்.

2 'ஸர்வத்ருக்வ்யாஸர்' ஒருநாமம்; எல்லாவற்றையுமறிந்தவரும் வேதங் கள் புராணங்கள் முதலானவைகளை விஸ்தரித்தவருமான ப்ரம்மாவாயிருப்பவர்; வேதங்களை ருக், யஜுஸ், ஸாமம், அதர்வணம்என நான்காகவும், அவற்றில் ருக்வேதத்தை இருபத்தொருசாகைகளாகவும், யஜுர்வேதத்தை நூற்றொரு சாகைகளாகவும், ஸாமவேதத்தை ஆயிரம்சாகைகளாகவும், அதர்வணவேத த்தை ஒன்பதுசாகைகளாகவும் பிரித்தும் மற்றுமுள்ளபுராணங்களையும் தனித் தனியே பிரித்தும் செய்தவரான ப்ரம்மாவாயிருப்பவர்.

3 எல்லாவற்றையும் கண்களாகவுடையவர்.

4 எல்லாப்பிராணிகளின் நல்வினைகள் தீவினைகளனைத்தையும் இயற்கை யாகஅறிகிறவர்.

5 தம்பேரறிவினால் எல்லாவற்றையும் பார்ப்பவர்.

6 எங்கும்கண்களும், தலைகளும் முகங்களுமுள்ளஸ்வரூபமென்றுசொல்லு கிறபடி எங்கும் முகங்களையுடையவர்.

ஸர்வப்ரஹரணாயுதர் — [1]தம்மையடுத்தவர்களுக்கு எல்லாஅநிஷ்டங்களையும் வேரோடுகளையத்தக்கவையும், அளவற்றசக்தியுள்ளவையும், தமக்குத்தக்கஅணிகலங்களென்று நினைக்கத் தக்கவையுமான எண்ணிறந்த பலதிவ்யாயுதங்களையும் தரித்திருப்பவர்.

ஸர்வயோகவிநிஸ்ருதர் — [2]சாஸ்திரங்களால்அறியப்பட்டவையும் அவரவர்புத்தியினால் ஏற்படுத்தப்பட்டவையுமான உபாயங்கள்எல்லாவற்றினாலும் வேதரஹஸ்யங்களை அறிந்துகிரஹிப்பதுபோலவே எளிதில் கிரஹிக்கவும்அடையவும் கூடியவர்.

ஸர்வர் — [3]தமதுசரீரங்களாயுள்ள சராசரங்களனைத்தையும் ஆத்மாவாக வ்யாபித்து அவற்றையெல்லாம் தாமாகவேநினைத்து நடத்துகிறவர்.

ஸர்வலக்ஷணலக்ஷண்யர் — [4]மஹாபுருஷலக்ஷணங்களெல்லாவற்றினாலும் ஸ்ரீபதிஎன்றுஅறியத்தக்கவர்; 'திருமார்பில் திருமகள் திருவடிப் பதிப்புக்களாகிய அடையாளங்களினால் பரதத்வமென்று அறியக்கூடியவர்' என்பது நிருக்தி.

ஸர்வவாகீஸ்வரேஸ்வரர் — [5]பேசும்திறமையுள்ளவர்கள் எல்லாருக்கும் மேலானவர்; வாதம்செய்வதிலும் பேசுவதிலும் கரைகண்டவர்என்பது.

ஸர்வவித் — [6]ஸம்ஹரிக்கப்பட்டவற்றையெல்லாம் திரும்பவும் படைத்துக் கார்யங்களானபிரபஞ்சங்களனைத்தையும் அடைகிறவர். இங்கு ப்ரத்யும்னன்என்னும்வியூகம் குறிப்பிக்கப்படுகிறது; ஐஸ்வர்

---

1 எல்லாவிதமான ஆயுதங்களையுமுடையவர்; ஆயுதங்களாகநினைக்கப் படாதநகமுதலியவையும் அவருக்கு நரஸிம்மாவதாரத்தில் ஆயுதங்களாயின என்பது ப்ரஸித்தம்; இது, ஸத்தியஸங்கல்பராதலின் ஸர்வேஸ்வரர்என்பதைக் குறிப்பித்தது.

2 எல்லாப் பற்றுக்களினின்றும் வெளிப்பட்டிருப்பவர்; அல்லது, பல சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட யோகத்தினின்றும் விலகினவர்.

3 எல்லாவற்றின் தோற்றவொடுக்கங்களுக்கும் காரணமாயிருப்பதனாலும் எல்லாவற்றையும்அறிவதனாலும் எல்லாமாயிருப்பவர்.

4 எல்லாப்பிரமாணங்களினாலும் அறியப்படுகிறவர்; அவரொருவரே உண்மைப்பொருள்என்பது.

5 பிரம்மாதிதேவர்களுக்கும் ஈஸ்வரர்.

6 ஸர்வவித்பாநு' ஒருநாமம்; ஸர்வவித் — எல்லாவிடங்களிலுமுள்ள எல்லாவற்றையும் அறிபவர்; அல்லது, எல்லாம் தம்மிடத்தில்பொருந்தியிருப்பவர்; பாநு — ப்ரகாசிப்பவர்; எல்லாவிடங்களிலுமுள்ள எல்லாவற்றையும் அறிந்து விளங்குபவர்; அல்லது, எல்லாம்தம்மிடத்தில்பொருந்தி ப்ரகாசிப்பவர் என்பது இரண்டுக்கும் சேர்ந்தபொருள்.

யம், வீர்யம்என்னும் இரண்டுகுணங்கள் ப்ரத்யும்னவ்யூகத்தின் கூறு களாக வகுக்கப்படுகின்றன; அவற்றில், ஐஶ்வர்யமென்பது விசித்ர மானஉலகங்களையுண்டுபண்ணும்திறமைவெளிப்படுவது; அதை இந்த நாமம் தெரிவிக்கிறது.

ஸர்வவிஜ்ஜயீ — [1]எல்லாம்தெரிந்தவர்களையும் ஜயிக்கும் திறமை உடையவர்.

ஸர்வஜ்ஞர் (451)— [2]தாமே எல்லாமாகவும் அறிந்திருப்பவர்; தம்மை ஸர்வாந்தர்யாமியாக அறிந்திருப்பவர்.

ஸர்வஜ்ஞர் (821) — [3]பக்தர்களின்சக்தியையும் அசக்தியையும் அவர்களால் ஸாதிக்கக்கூடியதையும் கூடாததையுமெல்லாம் உணர் கிறவர்.

ஸர்வஸஹர்— [4]தேவர்களெல்லாரையும் குறைந்த அதிகாரிகள் ஆராதிக்கஉரியராகும்படி அவர்களைத் தாமேதாங்குகிறவர்; அவர்க ளுக்குச் சக்தியைக் கொடுத்திருப்பவர் என்பது.

ஸர்வாதி — [5]உயர்வும் தாழ்வுமாயுள்ள எல்லாப் புருஷார்த்தங் களுக்கும் தாமேகாரணமாயிருப்பவர்.

ஸர்வாஸுநிலயர் — [6]எல்லாருடைய உயிர்களுக்கும் இருப்பிட மானவர்.

ஸர்வேஶ்வரர்— [7]சரணாகதி செய்தவரனைவருக்கும் காலதாம தத்தையும் அதனால் வரும் மனச்சோர்வையும் விலக்குவதற்காகத் தாமே அவர்களிடம் விரைவாகச் சென்றடைபவர்.

ஸவிதா (887)— [8]ஸூர்யனால் மழையையும் அதனால் பயிர்முத லானவற்றையும் உண்டாக்குகிறவர்; இந்த நாமத்தினால் அர்ச்சிராதி மார்க்கத்தில் ஏழாம்படியான ஸூர்யன் சொல்லப்படுகிறான்.

ஸவிதா (969) — எல்லாவற்றையும் தாமே உண்டாக்குகிறவர்.

---

1 எல்லாம்தெரிந்தவரும் காமம் குரோதமுதலிய உட்பகையையும் ஹிர ண்யாக்ஷன்முதலியவெளிப்பகையையும்ஜயிப்பவருமானவர்.

2 எல்லாமாகவும் ஞானமுள்ளவராகவுமிருப்பவர்.

3 எல்லாம்தெரிந்தவர்.

4 எல்லாக்காரியங்களிலும்ஸமர்த்தர்; அல்லது, எல்லாப்பகைவர்களையும் தாங்கத்திறமையுள்ளவர்; அல்லது, பூமிமுதலியஉருவங்களினால் எல்லாவற் றையும்தாங்குகிறவர்.

5 எல்லாப்பிராணிகளுக்கும் ஆதிகாரணம்.

6 ப்ராணன்களும் தம்மிடம் லயமடையும் ஜீவாத்மாவாயிருப்பவர்.

7 எல்லாருக்கும்ஈஶ்வரர்; ஈஶ்வரருக்கும்ஈஶ்வரர் என்பது.

8 உலகங்களையெல்லாம் உண்டாக்குகிறவர்.

ஸஹர்— [1]லக்ஷ்மீபதியாயிருந்தும் அவதாரத்தில்எளிமையைக் காட்டிக் கட்டுவது பயமுறுத்துவது முதலிய தண்டனைகளையும் ஸஹிப்பவர்.

ஸஹஸ்ரபாத் — [2]ஆயிரம் கால்களையுடையவர். இங்கும் பின்னும் ஆயிரமென்பது அளவற்றவை என்பதைத் தெரிவிப்பது; செய்கைக்குக் கருவிகளாயுள்ள கால்முதலிய உறுப்புக்கள் அளவற்றவையாகப்பொருந்தியிருப்பவர்; கால் என்பதனால் மற்றக் கர்மேந்திரியங்களும் உபலக்ஷணமாகக் கொள்ளப்படவேண்டும்.

ஸஹஸ்ரமூர்த்தா—ஆயிரம் தலைகளையுடையவர். இதற்கும்,பின், 'ஸஹஸ்ராக்ஷர்' என்பதற்கும் ஞானத்துக்குக்கருவிகளான தலை,கண்முதலிய உறுப்புக்கள் அளவற்றவையாகப் பொருந்தியிருப்பவர் என்பது கருத்து; தலையையும் கண்ணையும் கூறியதனால் மற்றஞானேந்திரியங்களும் உபலக்ஷணமாகக் கொள்ளப்படவேண்டும்.

ஸஹஸ்ரஜித்— [3]ஆயிரம்யுகங்களாக எண்ணப்படும் ப்ரளயகாலத்தை யோகநித்ரையிலிருந்தே ஜயிப்பவர்.

ஸஹஸ்ராம்சு— [4]அளவற்றஞானங்களாகியகிரணங்களையுடையவர்; 'அவிஜ்ஞாதா' என்பதில் ஆஸ்ரிதர்குற்றங்களையறியாதவரென்பதற்கு அவர்களின் குற்றங்களைக் குற்றமாக எடுத்துக்கொள்ளாதவரென்று கருத்தாதலின் விரோதமில்லை.

ஸஹஸ்ரார்ச்சிஸ் —[5] எண்ணிறந்த கிரணங்களையுடையவர்; உலகத்திலுள்ள பொருள்களைப் பரிணமம் செய்வதும் உலர்த்துவதும் உஷ்ணத்தையும் ஒளியையும்உண்டுபண்ணுவதும் இயற்கையாயுள்ள அவருடைய அநேக கிரணங்களே ஸூர்யன்முதலியவற்றில் அவரால் வைக்கப்பட்டவை என்பது.

ஸஹஸ்ராக்ஷர் — [6]ஆயிரம் கண்களையுடையவர்.

ஸஹிஷ்ணு (146)— [7]அறிந்தும் அறியாமலும்மனமொழிமெய்களினால் தம்மிடத்திலும் தம்மடியாரிடத்திலும் செய்யும் அபராதங்கள் எல்லாவற்றையும் பொறுக்கும் தன்மையுள்ளவர்.

---

1 எல்லாவற்றையும்வெல்லுகிறவர்; அல்லது, பொறுப்பவர்.

2 ஆயிரம்பாதங்களையுடையவர்; விராட்ஸ்வரூபிஎன்பது.

3 ஆயிரக்கணக்கான அஸுரர்களை ஜயிப்பவர்.

4 ஸூர்யன்முதலியவற்றிலுள்ள கிரணங்கள் தம்முடையவையாதலின் அளவற்றகிரணங்களையுடையவர்.

5 அளவற்றகிரணங்களையுடையவர்.

6 ஆயிரம் இந்திரியங்களையுடையவர்என்னவுமாம்.

7 ஹிரண்யாக்ஷன்முதலானவிரோதிகளையடக்குகிறவர்.

ஸஹிஷ்ணு (570) = [1]நரநாராயணுவதாரத்தில் நடந்த யுத்தத்தில் சிவன்செய்த அபராதத்தைப் பொறுத்தவர்.

ஸாத்வதாம்பதி=ஸத்வமென்னப்படும் பரப்ரம்மத்தை அறிந்தவர்களும் ஸாத்விகர்களுமாகிய பெரியோர்கள் அநுஷ்டிக்கத்தக்க கர்மங்களைச்சொல்லும் பாஞ்சராத்ர சாஸ்திரத்தை ப்ரவ்ருத்திப்பித்து ஸாத்வதர்களென்னும் பாகவதர்களைக் காப்பாற்றுகிறவர்.

ஸாத்விகர் = [2]தர்மம், ஞானம், வைராக்யம், ஐஶ்வர்யம் ஆகிய ஸத்வகுணத்தின் பலன்களை அளிக்கத்தக்கவர்.

ஸாது = [3]தூதுபோவது தேரோட்டுவதுமுதலாக அடியவர்கள் விரும்பினவற்றையெல்லாம் செய்து முடிப்பவர்.

ஸாம = [4]தம்மைப்பாடுகிறவர்களின் பாவத்தையொழிப்பவர்.

ஸாமகர்=ப்ரம்மானுபவானந்தத்தினால் அந்த ஸாமங்களைத் தாமும் பாடுகிறவர்.

ஸாமகாயநர் = [5]ஸம்ஸாரம் தொலைந்து முக்தியடைந்தவர்கள் தம்மையடைவதாகிய யதுபானததினால் களிப்புற்று, 'ஹாவ், ஹாவ், ஹாவு' என்று ஸாமகானம் செய்யும்படியிருப்பவர்.

ஸாக்ஷீ (13) = [6]தம்மால் மகிழ்விக்கப்பட்டமுக்தர்களைத் தாமும் பார்த்து மகிழ்ந்திருப்பவர்.

ஸாக்ஷீ (517) = [7]பாகவதர்களின் ஒழுக்கங்களைப் பிரத்யக்ஷமாகக் காண்பவர்.

ஸித்தர் (98) = [8]உபாயங்களைக்கொண்டுதேடவேண்டாது புதைத்துவைத்தபொருள்போல முன்னமேஏற்பட்டிருப்பவர்.

ஸித்தர்(825) = [9]தமது உண்மையை அறிந்தவர்களுக்குமுயன்று ஸம்பாதிக்கவேண்டாமல் தாமாகவே ஏற்பட்டிருக்கும்ரக்ஷகர்; அவர் ரக்ஷகராயிருப்பது இயற்கையாகஅமைந்ததேயன்றிக் காரணம்பற்றியதன்று என்பது.

ஸித்தஸங்கல்பர்=நினைத்தவையெல்லாம் நினைத்தமாத்திரத்தில் அமைந்திருக்கும் ஸத்யஸங்கல்பர்.

---

1 சீதோஷ்ணமுதலியவற்றைப் பொறுப்பவர்.

2 ஸத்வகுணத்தைப் பிரதானமாகவுடையவர்.

3 நியாயமாகநடப்பவர் ; அல்லது, எல்லாக்காரியங்களையும் ஸாதிப்பவர்.

4 ஸாமவேதமாயிருப்பவர்.

5 ஸாமங்களைக் கானம்பண்ணுகிறவர்.

6 எல்லாவற்றையும் பார்ப்பவர்.

7 'விநயிதா' பார்க்க.

8 ஸித்தர் ; நித்யர்.

9. தமக்குக்காரணமின்றித் தாமாகவே எப்போதும்இருப்பவர்.

ஸித்தார்த்தர்—வேண்டினவை யெல்லாம் தமக்குத் தாமே அமைந்திருக்கும் ஸத்யகாமர்.

ஸித்தி—[1]உபாயங்களினால் தேடப்படும்பலனாகவுமிருப்பவர்.

ஸித்திதர்—[2]அணிமாமுதலியஎட்டுஸித்திகளையும் யோகிகளுக்குக்கொடுப்பவர்.

ஸித்திஸாதநர்—[3]அவரைஉபாஸிப்பதும் பலன்போலச் சுகமாகத்தோற்றும்படியிருப்பவர்.

ஸிம்மர் (202)—[4]மஹாநரஸிம்மரூபி ; பகைவர்களை ஹிம்ஸிப்பவர்.

ஸிம்மர் (489)—[5]பக்தர்களின்உள்ளத்தில் பகவான்இருப்பதை அறியாமல் அந்தப்பக்தர்களையும் மற்றவர்களையும் யமன்முதலானவர்கள் துன்பப்படுத்துவாராயின் அவர்களை ஹிம்ஸிக்குந் தன்மையுள்ளவர்.

ஸுகதர் (460)—[6]ஸதாசாரங்களையும் த்யானநிஷ்டையையும் தாம் அனுஷ்டித்துக்காண்பித்து, அப்படி அனுஷ்டிப்பவர்களுக்குப் பரமஸுகமாகியபலனையளிப்பவர்; 'அம்ருதம்கொடுப்பதுமுதலியவற்றினால் தேவர்களுக்குஸுகத்தைக் கொடுப்பவர்' என்பது நிர்வசனம்.

ஸுகதர் (890)—[7]அமானவனென்னும் திவ்யபுருஷன்தொடுவதனால் ஸம்ஸாரமும் ஸம்ஸாரவாஸனைகளும் பற்றற ஒழிந்துபோன பிறகு தம்மைஅடைவதாகியஸுகத்தைக் கொடுப்பவர் ; இந்த அமானவன் அர்ச்சிராதிமார்க்கத்தில் அடுத்த பதின்மூன்றாவதுபடி.

ஸுகோஷர்—[8]அழகியஉபநிஷத்முதலிய வேதாத்யயனங்களினால் கோஷிக்கப்படுகிறவர்; 'கடல்கடைந்தஆச்சரியசரித்திரம் தேவர்

1 ஞானரூபி ; அல்லது, எல்லாவற்றினும்சிறந்த பலனாயிருப்பவர்.

2 அவரவர்தகுதிப்படி பலன்களைக் கொடுப்பவர்.

3 ஸித்திகளென்னப்படும்கிரியைகளையெல்லாம் ஸாதிப்பவர்.

4 நினைத்தவளவில் பாவங்களெல்லாவற்றையும் போக்குபவர்.

5 பராக்ரமத்தினால் ஸிம்மம்போலிருப்பவர் ; நரஸிம்மாவதாரம்செய்தவர்என்னவுமாம்.

6 ஸாதுக்களுக்கு ஸுகத்தைக்கொடுப்பவர் ; அல்லது, அஸாதுக்களின் ஸுகத்தைக் கெடுப்பவர்.

7 பக்தர்களுக்கு மோக்ஷஸுகத்தைக்கொடுப்பவர் ; அல்லது, ஸுகதர்=துக்கத்தைக்கண்டிப்பவர்.

8 வேதங்களை ப்ரம்மதேவருக்கு உபதேசித்ததினால் சிறந்தவேதாத்யன கோஷத்தைச்செய்பவர் : அல்லது, மேகமுழக்கம்போலக் கம்பீரமான குரலையுடையவர்.

அஸுரர்முதலியவரால் உத்கோஷிக்கப்பட்டிருப்பவர்' என்பது நிர்வசனம்.

ஸுதந்து= [1]சாந்தவேஷமுதலியவற்றை ஏறிட்டுக்காண்பிப்பதாகிய அஸுரர்களைக்கவரும்வலையை யாராலும் தாண்டமுடியாமல் உறுதியாயிருக்கும்படி வைத்திருப்பவர்.

ஸுதந்வா= [2]அமிருதத்தைப்பற்றி உண்டான தேவாஸுரயுத்தத்தை முடித்ததனால் சிறந்தகானவில்லுடையவர்.

ஸுதபஸ்= [3]திவ்யஞான வடிவமாயிருப்பவர்.

ஸுதர்சநர்= [4]குணங்களின்பெருமையையறியாதவரும் கண்டமாத்திரத்தில் நன்மைபெறும்படி அழகானதிவ்யமங்களவிக்ரகத்தை உடையவர்.

ஸுந்தர்= [5]வடிவழகினால் அஸுரர்களுடையமனங்களை நன்றாகமெதுப்படுத்துகிறவர்; அன்பு உண்டாக்குகிறவரென்பது.

ஸுந்தரர்=அஸுரர்களின்கண்களைக்கவரும் அழகிய உருவமுள்ளவர்.

ஸுப்ரஸாதர்= [6]தம்மைஅடுத்தவர்கள்விஷயத்தில் சிறந்தஅநுக்ரகம்செய்பவர்.'

ஸுபர்ணர் (194) = [7]அழகியஇறகுகளையுடையவர்; அல்லது, ஸம்ஸாரக்கடலினின்றும் கரைசேர்ப்பவர்.

ஸுபர்ணர் (859) = [8]யோகப்ரஷ்டர்களாகித் திரும்பவும் ஸமாதியை அநுஷ்டிப்பவர்களுக்கு அந்தச்சமாதியைப்பயன்படுத்தி அவர்களை ஸம்ஸாரக்கடலின்கரையில்சேர்ப்பவர்.

ஸுபுஜர்= [9]சரணாகதிசெய்பவர்களின் பாரத்தை வகிக்கும்திறமையுள்ள சிறந்தகைகளையுடையவர்.

---

1 விஸ்தாரமானப்ரபஞ்சத்தை வைத்திருப்பவர்.

2 இந்திரியரூபமான சார்ங்கமென்னும்சிறந்தவில்லையுடையவர்.

3 பதரிகாஸ்ரமத்தில் நரநாராயணரிஷிகளாகிச் சிறந்த தவம்செய்தவர்.

4 அவரையறிவது முக்தியைத்தருவதாயிருப்பது; அல்லது, அவரது திருக்கண்கள் தாமரையிதழ்கள்போல நீண்டு அழகாயிருப்பவை; அல்லது, ஸுந்தரரூபமுள்ளவர்; அல்லது, பக்தர்கள் எளிதாகக்காணக்கூடியவர்.

5 ஈரமுள்ளவர்; தயையுள்ளவரென்பது.

6 அபகாரம்செய்த சிசுபாலன் முதலியவர்களுக்கும் மோக்ஷமளிக்கும் சிறந்த அநுக்ரஹமுள்ளவர்.

7 பேரறிவும்பேரின்பமுமாகிய இரண்டு அழகியசிறகுகளையுடையவர் அல்லது, கருடரூபி.

8 வேதங்களென்னும் இலைகளோடுகூடியவர்; ஸம்ஸாரரூபியாயிருப்பவரென்பது.

9 உலகத்தைக் காப்பதில் சிறந்தபுஜங்களையுடையவர்.

ஸுமுகர்— [1]ஜபமுதலியவை செய்வதிலும் அந்தவருத்தஉணர்ச்சியினால் உண்டாகும்மாறுதல் சிறிதுமில்லாமல் மலர்ந்துமனத்தைக் கவருகின்ற திருமுகமண்டலத்தையுடையவர்; 'அமுதம்கொண்டு வந்தகாலத்தில் அந்தஉத்ஸாஹம்நிரம்பினதனால் அழகியமுகமுள்ளவர்' என்பது நிர்வசனம்.

ஸுமேதஸ்— [2]தம்மை ஆராதிப்பவர்கள்விஷயத்தில் க்ஷேமத்தைத்தரும் நல்லஎண்ணமுள்ளவர்.

ஸுயாமுநர்— [3]தாம் யமுனையிற்செய்த ஜலக்ரீடை, பூக்கொய்தல், ராஸக்ரீடைமுதலிய செய்கைகளெல்லாம் மனத்திற்கினியவையாகவும் பாவங்களைப்போக்கிப் பரகதியைத் தருகின்றவையாகவும் இருப்பவர்.

ஸுராத்யக்ஷர்— [4]தர்மத்தினால் ஆராதிக்கப்படும் தேவர்களையும் பிரத்யக்ஷமாக அறிபவர்.

ஸுராநந்தர்—ஆபத்தில் உதவிசெய்வதனால் தேவர்களைச்செழிக்கச்செய்பவர்.

ஸுராரிஹா— [5]தேவர்களுக்கு விரோதியான ஹிரண்யனுமார்பைப்பிளந்து அவனைக்கொன்றவர்.

ஸுருசி— [6]ஸூர்யோதயத்தினால் பிரகாசிப்பதாகியசிறந்தபகலை நடத்துகிறவர்; அர்ச்சிராதிமார்க்கத்தில் பகல் இரண்டாம்படி.

ஸுரேசர்— [7]ப்ரம்மாதிதேவர்களையும் அவரவர் அதிகாரங்களில் நியமிப்பவர்.

---

1 அழகியமுகமுள்ளவர்; ராமாவதாரத்தில் பட்டாபிஷேகத்தை விலக்கிக் காட்டுக்குப்போகச்சொல்லுகையிலும் முகமலர்ச்சிமாறாதவர்; அல்லது, எல்லா வித்தைகளையும் உபதேசிக்கும் திருமுகமண்டலமுள்ளவர்.

2 சிறந்தபுத்தியுள்ளவர்.

3 சுபமானவர்களும் யமுனையின்ஸமீபத்தில்வஸிப்பவர்களுமான தேவகி, வஸுதேவர், நந்தகோபர்; யசோதை, பலபத்ரர், ஸுபத்ரைமுதலானவர்களால் சூழப்பெற்றவர்; அல்லது, கிருஷ்ணவதாரத்தில் யமுனைக்கரையில் வந்திருந்த மங்களத்தைத்தருபவரான பிரம்மாமுதலியோரால் சூழப்பெற்றவர்.

4 லோகபாலகர்கள்முதலான தேவர்களுக்குப் பிரத்யக்ஷமாயிருப்பவர்; அவர்கள் தம்மிடத்திலிருந்து அதிகாரங்களைநடத்தும்போது அதற்குவிரோதிகளாயுள்ள அஸுரர்முதலாகிய சத்துருக்களைத் தடுக்க நினைக்கும்போது அவர்களுக்குப் பிரத்யக்ஷமாக ஆவிர்ப்பவிப்பவரென்பது.

5 அஸுரர்களைஸம்ஹரிப்பவர்.

6 சிறந்தஒளியுள்ளவர்; அல்லது, சிறந்தஸங்கல்பமுள்ளவர்.

7 தேவர்களுக்குஈச்வரர்; அல்லது, நன்மையைக் கொடுப்பவர்களுக்கெல்லாம் தலைவர்.

ஸுரேஸ்வரர் = [1]தேவர்களென்னப்படும் நன்மார்க்கத்திலிருப் பவர்களை மேற்கதிக்குப்போகும்படி நடத்துகிறவர்.

ஸுலபர் = [2]விலையில்லாத உயர்ந்தபொருளாயிருந்தும் செல வின்றி எளிதில் அடையக்கூடியவர்.

ஸுலோசநர் = [3] அழகியகண்களையுடையவர்.

ஸுவ்ரதர் (456) = [4]தமக்கு ஒருகருமமும் வேண்டாமாயினும் தம்மைப்பார்த்து மற்றவர்கள்கர்மஞ்செய்து பலன்பெறுவதற்காகத் தாம் கர்மத்தை விடாமல்அநுஷ்டிப்பவர் ; அவருடையதர்மாநுஷ் டானவிரதமானது எல்லாருடையநன்மைக்கும் காரணமாயிருப்பது.

ஸுவ்ரதர் (824) = [5]எவ்வகையாலும்அடைந்தவர்களைக் கை விடாமல் காப்பாற்றுவதென்கிற உறுதியானவிரதமுடையவர்.

ஸுவர்ணபிந்து = [6]புக்காவகாரத்தில், ஸர்வசக்தியுள்ளவராத லின் ஸர்வஜ்ஞர்களையும் ஜயிக்கும் திறமையினால் எழுத்துச்சொல் சுத்தமுள்ள உறுதியானபேச்சினால் ஆஸ்திகவாதத்தைக்கண்டிப்பவர்.

ஸுவர்ணவர்ணர் = மாற்றேறின தங்கம்போலக் குற்றமின்றி விளங்கும் திவ்யரூபமுள்ளவர்.

ஸுவீரர் = [7]பாண்டவர்முதலானபக்தர்களுக்கு அபாயத்தைப் பரிகரிக்கும் சிறந்த சக்தியுள்ளவர்.

ஸுஷேணர் = [8]ஸம்ஸாரிகளையும் முக்திபெற்றவர்களையும்நித்ய ஸூரிகளையும் வசப்படுத்துவதற்குச் சேனைபோலச்சிறந்தகருவியான பஞ்சோபநிஷந்மயமான திருமேனியையுடையவர்.

ஸுஹ்ருத் = [9]உபகாரம்செய்யாதவன் விஷயத்திலும், "இவ னுக்கு நான் என்னசெய்யக்கடவேன் ?" என்று நன்மையையேகரு தும் சிறந்தமனமுள்ளவர்.

---

1 தேவர்களுக்குஈஸ்வரர் ; அல்லது, நன்மையைக் கொடுப்பவர்களுக்குத் தலைவர்.

2 பத்ரம் புஷ்பமுதலியவற்றைப் பக்தியுடன் ஸமர்ப்பணம் செய்தமாத் திரத்தில் எளிதாகஅடையக்கூடியவர்.

3 சிறந்தஞானமுள்ளவர்.

4 சிறந்த ஆஸ்ரிதரக்ஷணவிரதத்தையுடையவர்.

5 சிறந்தபோஜனநியமமுள்ளவர் ; அல்லது, போஜனத்திலிருந்துநிவ்ருத் தித்தவர்.

6 பொன்னுக்கொப்பான அவயவங்களையுடையவர் ; அல்லது, நல்லஅக்ஷரமும் பிந்துவென்னும் அநுஸ்வாரமும்கூடிய மந்த்ரமாகிய பிரணவமாயிருப்பவர்.

7 பலவகைநல்லகதிகளைக் கொடுப்பவர் ; அல்லது, பலவகையாகச் சொல் லப்பட்டவர்.

8 தம்கணங்களாகிய சிறந்தஸேனையையுடையவர்.

9 கைம்மாறுவேண்டாமல் உதவிசெய்யும் சிறந்தமனமுள்ளவர்.

ஸூர்யர்— [1]வாயுஸஞ்சரிப்பதற்குஇடமாகிய 'வாயுலோகம்; இது அர்ச்சிராதிமார்க்கத்தில் ஆரம்பபடி.

ஸூக்ஷ்மர்— [2]பலன்களை விரும்பாமல் ஸ்வயம்ரஸமாகச் செய்யப்படும் தியானத்தினால்மட்டும் புலப்படக்கூடிய மிக்கநுண்ணிய தான ஸ்வரூபமுடையவர்; 'அமுதம்கொண்டுவந்தகாலத்தில் தமது உட்கருத்து அஸுரர்களுக்குவெளிப்படாதவர்' என்பது நிர்வசனம்.

ஸோமபர்— [3]தாம்செய்த யாகங்களில் ஸோமரஸத்தைப்பானம் செய்தவர்.

ஸோமர்— [4]தாமே அம்ருதமாயிருப்பவர்.

ஹ்ருஷீகேசர்— [5]ஐம்புலன்களையும் நடத்துகிறவர்; அல்லது, ஸந்தோஷமும் ஸௌக்யமும் ஐஶ்வர்யமும் பொருந்தினவர்.

ஹம்ஸர்—[6] ஹம்ஸாவதாரம்செய்தவர்; பற்றுக்களை அறுப்பவர்; அல்லது, அழகாகநடப்பவர்; அல்லது, அழகானபுன்சிரிப்புள்ளவர்.

ஹரி (316)— [7]பக்தர்களுக்குவரும் இடையூறுகளைப் போக்குகிறவர்.

ஹரி (656)— [8]ஸர்வேஶ்வரரும் பகவானுமான ஹரி; கோவர்த்தனமலையில் ஆலயத்தில் பூஜிக்கப்படுகிறவர்.

ஹலாயுதர்— [9]கலப்பையை ஆயுதமாகவுடையவர்; பஞ்சபூதங்களென்னும் பயிர்களை அபிவிர்த்திசெய்யும் உழவராகையால் கலப்பை என்னும் ஆயுதத்தைக் கருவியாக வைத்திருப்பவர்.

---

1 எல்லாவற்றையும்உண்டாக்குகிறவர்; அல்லது, ஐஶ்வர்யத்தைக்கொடுப்பவர்.

2 ஸ்தூலமாவதற்குக் காரணமான சப்தமுதலியவை யில்லாமையால் ஸூக்ஷ்மர்.

3 எல்லாயாகங்களிலும் அந்த அந்தத்தேவதாரூபியாக ஆராதிக்கப்பட்டு ஸோமரஸத்தைப் பானம்செய்பவர்; அல்லது, தாம்செய்தயாகங்களில் யஜமானரூபியாக ஸோமரஸத்தைப்பானம்செய்தவர்.

4 சந்திரரூபியாக ஓஷதிகளைவளரச்செய்பவர்; அல்லது, உமையோடு கூடியசிவரூபியாகவும் தாமேயிருப்பவர்.

5 ஆத்மாவாக இந்திரியங்களை வசப்படுத்துகிறவர்; அல்லது, ஸூர்யரூபமாகவும் சந்திரரூபமாகவும் உலகத்தைமகிழ்விக்கும்கிரணங்களையுடையவர்.

6 'அஹம்ஸ:', 'நானேஅவன்' என்று ஒன்றாகத்தியானிப்பவர்களுக்கு ஸம்ஸாரபந்தத்தை ஒழிப்பவர்; அல்லது, எல்லாத்தேசங்களிலும் ஆத்மாவாகச்செல்லுகிறவர்.

7 'ஹவிஸ்' பார்க்க.

8 ஸம்ஸாரத்தை மூலத்தோடு அழிப்பவர்.

9 பலராமரூபியாயிருப்பவர்.

ஹவிஸ்(360)—[1] பக்தர்களுக்குத் தம்மைத்தாமேகொடுப்பவர்; அல்லது, பக்தர்களால் எடுத்துக்கொள்ளப்படுகிறவர்; பக்திசெய்த மாத்திரத்தினால் அவர்கள் ஸ்வதந்த்ரமாக எடுத்துக்கொள்ளும்படி உட்படுகிறவர்; அல்லது, 'ஹவிர்ஹரி' ஒருநாமம், யாகங்களில்கொடுக்கப்பட்ட ஹவிர்ப்பாகத்தைப் பெறுகிறவர்.

ஹவிஸ்(703)—[2] தேவகீவஸுதேவர்களின்ஸமீபத்தில்வஸிக்க விருப்பமுள்ளவராயிருந்தும், அவர்கள் அதிப்ரேமையினால் பகவானுடைய மகிமையைமறந்து கம்ஸனால்தீங்குவருமென்று அஞ்சின தன்மேல் தம்மைஒளித்துக்கொள்வதற்காக யசோதைநந்தகோபர்களினால் வளர்ப்பதற்கு எடுத்துக்கொள்ளப்பட்டவர்.

ஹிரண்யகர்ப்பர்(71)—[3] குற்றமற்றசுத்தஸத்வமயமாகிய பொன்னுலகில்வஸிப்பவர்; அல்லது, நன்மையைத்தருவதனால் ஹிதமாகவும் ஆனந்தத்தைத்தருவதனால் ரமணீயமாகவும் இருப்பதுபற்றி ஹிரண்யம்என்னப்படும்பரமபதத்துள் நித்யமாகவஸிப்பவர்.

ஹிரண்யகர்ப்பர்(412)—[4] தமக்குஅநுகூலமாயும் இனியவையாயுமிருக்கும் தியானிப்பவர்மனங்களுக்கு நல்ல ஆதாரமாயிருப்பவர்; தியானத்திற்குஇனியதும் தியானபலனைத்தருவதுமாக இருப்பதனால் தியானிப்பவர்கள் ஹ்ருதயங்களினால் அமுதுண்பதுபோல அநுபவிக்கப்படுகிறவர்; அல்லது, பொற்புதையலபோன்றவர்.

ஹிரண்யநாபர்—அழகான நாபியுள்ளவர்; தமதுஸங்கல்பத்தினாலுண்டாக்கப்பட்ட அஷ்டதளங்களோடுகூடியநாபீகமலத்தில் பொன்மயமான மேரு தாமரைக்காயாகவிளங்கும்படியிருப்பவர்.

ஹுதபுக்விபு—[5] அமிர்தமாகப்பரிணமிக்கும் ஹோமத்திரவியங்களைப்புசிப்பவனாகியசந்திரன்வளர்வதாகியவளர்பிறை; சுக்லபக்ஷம் அர்ச்சிராதிமார்க்கத்தில் மூன்றும்படி.

---

1 'ஹவிர்ஹரி' ஒருநாமம்; ஹோமஞ்செய்யப்படுகிறவராதலால், 'ஹவிஸ்' என்றும் நினைத்தமாத்திரத்தில் பாவத்தையும் அஜ்ஞானத்தையும் ஸம்ஸாரத்தையும்போக்குவதனாலாவது பச்சைநிறமாயிருப்பதனாலாவது, 'ஹரி' என்றும் சொல்லப்படுகிறவர்.

2 ஹவிஸாயிருப்பவர்.

3 பொன்மயமான பிரம்மாண்டத்துள் ப்ரம்மரூபமாக வஸித்தவர்.

4 பிரம்மாவின் உத்பத்திக்குக்காரணமாகிய பொன் அண்டத்தைத் தம்முள் வைத்திருப்பவர்.

5 இரண்டுநாமம். ஹுதபுக்—எல்லாத் தேவதைகளைப்பற்றியும் செய்யப்படும் ஹோமங்களைப்புசிப்பவர்; அல்லது, காப்பாற்றுகிறவர். விபு—எங்கும் நிரம்பியிருப்பவர்; அல்லது, எல்லாஉலகங்களுக்கும் பிரபு.

ஹேது—[1] பக்தர்களுக்குப் பலம்ஸித்திக்கக் காரணமாயிருப்பவர்.

ஹேமாங்கர்—[2] பொன்மயமான அங்கமுள்ளவர்; பொன்னிறப் சுத்தஸத்வமயமான திவ்யமங்களவிக்ரஹத்தைச் சார்ந்திருப்பது என்பது.

க்ஷமர்—[3] எல்லா உலகங்களின் பாரங்களையும்எளிதில்வஹிப்பவர்; ப்ரவஹமென்னும்வாயுரூபிஎன்பது.

க்ஷமிணும்வரர்—[4] பொறுமையுள்ளவரிற் சிறந்தவர்; கஜேந்திரனைக்கண்டபிறகு தம்மனத்தைப் பதைக்காமல் நிறுத்திக்கொண்டவர் என்பது.

க்ஷரம்—[5] துஷ்டர்களுக்கு அநித்யமாகிய துக்கமாயிருப்பதனால் அவரிடத்தில் நில்லாமல் செல்பவர்.

க்ஷாமர்(444)—[6] அவாந்தரப்ரளயத்தில் மற்றநக்ஷத்திரங்கள் அழிந்தபோது நாலுநக்ஷத்திரங்களோடுமட்டும் த்ருவனுக்கு அருகிலிருப்பதினால் இளைத்திருப்பவர்.

க்ஷாமர்(858)—[7] யோகப்பிரஷ்டர்களும் தம்மை த்யானம்செய்யத்தொடங்கின அளவில் அவர் ஸம்ஸாரமென்னும் அகழைத்தாண்டத்திறமையுள்ளவராகும்படி செய்பவர்.

க்ஷிதீசர்—[8] பூமிக்கு ஈச்வரர்; எல்லாவற்றிற்கும் ஈச்வரராயினும் பூமியின் துயரத்தை நீக்குவதற்கு அவதரித்ததனால் பூமிக்கு ஈச்வரரென்று சிறப்பாகக் கூறினது.

க்ஷேத்ரஜ்ஞர்—[9] முக்தர்கள் தம்மை அனுபவிப்பதற்குரிய இடமாகிய நித்யவிபூதியை அறிந்திருப்பவர்; முக்தர்கள் அடையும் இடத்தை க்ஷேத்திரம் என்று சொல்வது.

---

1 எல்லாவற்றிற்கும் மூலகாரணமாயும் நிமித்தகாரணமாயுமிருப்பவர்.

2 சீதோஷ்ண முதலியவற்றைப்பொறுப்பவர்.

3 எல்லாக்காரியங்களிலும்திறமையுள்ளவர்; அல்லது,பொறுமையுள்ளவர்.

4 எல்லாவற்றையும் பொறுக்கும் யோகிகளையும் பூமிமுதலியவற்றையும் பொறுப்பதினால் பொறுப்பவரிற்சிறந்தவர்; அல்லது, சக்தியுள்ளவர்களுக்கெல்லாம் சிறந்தவர்.

5 அழிவதான விகாரரூபியாயிருப்பவர்.

6 பிரளயகாலத்தில் காரியங்களனைத்தும் அழிந்தபோது தாம்மட்டும் தனித்திருப்பவர்.

7 பிரஜைகளை ஸம்ஹாரகாலத்தில் அழிப்பவர்.

8 பூமிக்கு அரசர்; இது ராமாவதாரக் குறிப்பு.

9 க்ஷேத்ரங்களென்னப்படும் சரீரங்களை அறிந்திருப்பவர்.

க்ஷேமக்ருத்= [1]நிவ்ருத்திதர்மத்திலிருப்பவர்களுக்கு அறிவும் மகிமையும் சுருங்காமல் விரிவாகும்படி மோக்ஷமென்னும் க்ஷேமத்தைச் செய்பவர்.

க்ஷேபணர்=கட்டுப்படுவதற்குரிய ஜீவராசிகளையும் அவற்றைக் கட்டுவதாகிய பிரகிருதியையும் பிரளயத்திற்குப் பின் ஸ்ருஷ்டிகாலத்தில் கலக்குகிறவர்; உற்பத்தியாகும்படி செய்பவர்.

---

## இருநூற்றைம்பத்தைந்தாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(தேவர்கள் முதலானவர்களின் நாமங்கள்.)

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! சிறந்தபுத்தியுள்ளவரே! நிபுணரே! எந்தமந்திரத்தை நித்யமாகஜபிப்பவனுக்குச் சிறந்தபுண்ய பலனுண்டாகும்? புறப்படும்போதும் ஓரிடத்திற்பிரவேசிக்கும்போதும் காரியமாரம்பிக்கும்போதும் தேவதாபூஜையிலும் சிராத்த காலத்திலும் எதைஜபிப்பது அந்தக்காரியத்துக்கு ஸாதனமாயிருக்கும்? தோஷசாந்தியையும் ஸுகவ்ருத்தியையும் கொடுப்பதும் ரக்ஷையாயிருப்பதும் பகைவர்களையொழிப்பதும் பயத்தைப்போக்குவதுமான வேதத்திற்குச்சமமானமந்திரத்தை நீர் சொல்லக்கடவீர்" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"அரசனே! காயத்ரியினாலுண்டாக்கப்பட்டதும் உடனேபாவத்தைப்போக்குவதுமான ஒருதிவ்யமந்திரம் வ்யாஸரால் சொல்லப் பட்டிருக்கிறது. அதை மனவூக்கத்துடன் கேள். குற்றமற்றவனே! அந்தமந்திரத்தின் முறையெல்லாவற்றையும் நான் சொல்லுகிறேன்; கேள். பாண்டவஸ்ரேஷ்டனே! அதைக்கேட்டதனாலேயே மனிதன் எல்லாப்பாவங்களாலும் விடப்படுவான். தர்மந்தெரிந்தவனே! இரவிலும்பகலிலும் இதைஜபிப்பவனிடத்தில் பாவங்கள் பற்றுவதில்லை. ராஜனே! அதை உனக்குச் சொல்வேன்; மனவூக்கத்துடன் கேள். ராஜபுத்திரனே! அதைக்கேட்கும்மனிதன் தீர்க்காயுளுள்ளவனாவான்; நினைத்தது நன்றாகக்கைகூடி இம்மையிலும்மறுமையிலும் மகிழ்ந்திருப்பான். ராஜனே! முற்காலத்தில் எப்போதும் க்ஷத்திரியதர்மத்தைஅனுஷ்டிப்பவரும் ஸத்தியத்தையும்தவத்தையும்முதன்மையாகக்கொண்டவருமான சிறந்தராஜரிஷிகளினால் அது இடைவிடாமல்

---

[1] தம்மால் அங்கீகரிக்கப்பட்டவர்களுக்கு க்ஷேமத்தைஉண்டுபண்ணுகிறவர்.

அனுஷ்டிக்கப்பட்டது. பரதசிரேஷ்டனே! அரசர்கள் நியமத்தோடு தினந்தோறும் இதைஉறுதியாகஜபிப்பதனால் சிறந்தஐஸ்வர்யத்தை அடைவார். அந்தமந்திரமாவது, 'சிறந்ததவமுள்ளவஸிஷ்டருக்கு நமஸ்காரம். வேதங்களுக்குநிதியானபராசரரை நமஸ்கரிக்கிறேன். நாகராஜனான ஆதிசேஷனுக்கு நமஸ்காரம். இவ்வுலகத்தில் அழிவில்லாதவஸித்தபுருஷர்களுக்கு நமஸ்காரம். ரிஷிகளுக்கு நமஸ்காரம். சிறந்தவருக்குஞ் சிறந்தவரும் வரமளிப்பவருக்கும் வரமளிப்பவரும் தேவர்க்குந்தேவருமானபகவானை நமஸ்கரிக்கிறேன். ஆயிரம்தலைகளுள்ளவரும் ஆயிரநாமங்களுள்ளவரும் மங்களமூர்த்தியுமான ஜனார்த்தனருக்கு நமஸ்காரம். ' அஜைகபாத், அஹிர்ப்புத்நியர், தோல்வியடையாத பிநாகி, ருதர், பித்ருரூபர், திரியம்பகர், மஹேஸ்வரர், விருஷாகபி, சம்பு, ஹவனர், ஈஸ்வரர்ஆகியஇந்தஏகாதசருத்ரர்கள் மூன்று உலகங்களுக்கும் ஈஸ்வரரென்று பிரஸித்திபெற்றவர். சதருத்திரத்தில் இம்மகாத்மாக்கள் நூற்றுவரென்று சொல்லப்படுகின்றனர். அம்சன், பகன், மித்ரன், ஜலத்திற்கதிபதியானவருணன், தாதா, அர்யமா, ஜயந்தன், பாஸ்கரன், த்வஷ்டா, பூஷா; இந்திரன், விஷ்ணு ஆகியஇந்தப்பன்னிரண்டுஆதித்யர்கள் காஸ்யபரின்புத்திரர்களென்று சொல்லப்படுகிறார்கள். தரன், த்ருவன், ஸோமன், ஸாவித்ரன், அநிலன், அநலன், பிரத்யூஷன், ப்ரபாஸன்ஆகியஇவர்கள் அஷ்டவஸுக்களென்று சொல்லப்படுகின்றனர். நாஸத்யன், தஸ்ரன் இவ்விருவரும் அஸ்வினீதேவர்களென்று சொல்லப்படுகின்றனர். இவ்விருவரும் சூரியன்புத்ரர்கள் ; ஸம்ஜ்ஞாதேவியின்மூக்கிலிருந்து பிறந்தவர்கள். இதன்பிறகு, ஜனங்களின்கர்மங்களுக்குச் சாக்ஷிகளாயிருப்பவர்களைச் சொல்வேன். மிருத்யு, காலன், விஸ்வேதேவர்கள்ஆகிய தேவஸ்ரேஷ்டர்களும் பித்ருக்கூட்டங்களும் தவத்தையேதனமாகவுடைய முனிவர்களும் தவத்தினால்மோக்ஷத்தைக்கருதும்ஸித்தர்களும் தேகமெடுத்துக்கொண்டு கண்ணுக்குப்புலப்படாமலே எல்லாப்பிராணிகளிடத்திலுமுள்ள யாகம்தானமுதலியநற்கருமங்களையும் பாவங்களையும்அறிகின்றனர்; அவர்களின்பெயர்களைச்சொல்லும்மனிதர்களுக்கு அவர்கள் இனியமுகமலர்ச்சியோடு நன்மையைத் தருகின்றனர். அவர்கள் எல்லாஉலகங்களிலுமுள்ள எல்லாக்காரியங்களிலும் ஊக்கம் வைத்துத் தங்கள் திவ்யசக்தியோடு பிரம்மாவினால்படைக்கப்பட்ட இவ்வுலகங்களில் வஸிக்கின்றனர். உயிரைநடத்துகிறவர்களாகிய இவர்கள்பெயர்களைப் பரிசுத்தனாயிருந்து தினந்தோறும் கீர்த்தனம் செய்யும்மனிதன் தர்மார்த்தகாமங்களை மிகுதியாகப்பெற்று லோகே

ம்வரர்களால் அளிக்கப்பட்ட புண்ணியலோகங்களையும் அடைவான். மேற்சொன்ன [1]முப்பத்துமூன்றுதேவர்கள் எல்லாப்பிராணிகளுக்கும் ஈம்வரர்கள். நந்தீம்வரன், மஹாகாயன், க்ராமணி, [2]வ்ருஷபத்வஜன், [3]கணேம்வரன், விநாயகர் இவர்கள் எல்லாவுலகங்களுக்கும் ஈம்வரர். சாந்தர்களும் உக்ரர்களுமாகிய இந்தக்கணங்களையும் யோகிகளானபூதங்களுடையகணங்களையும் கிரகங்களையும் நதிகளையும் ஆகாயத்தையும் பக்ஷிராஜனைகருடனையும் பூமியில்தவஞ்செய்துஸித்திபெற்றஸ்தாவரங்களையும் (காமதேனுமுதலிய) ஜங்கமங்களையும் இமயமுதலானமலைகள்அனைத்தையும் நான்கு ஸமுத்திரங்களையும் சிவனுக்குச்சமமான மகிமையுள்ள சிவனைச்சேர்ந்தவர்களையும் விஷ்ணுவையும் இந்திரனையும்ஸுப்ரம்மண்யரையும்அம்பிகையையும் பக்தியுடன் சொல்லுகிறவன் எல்லாப்பாவங்களாலும் விடப்படுகிறான். இனி, மனிதர்களானரிஷிசிரேஷ்டர்களைச் சொல்வேன். யவக்ரீதர், ரைப்பர், அர்வாவஸு, பராவஸு, உசிக்கின் புத்திரரான கக்ஷீவான், அங்கிரஸின் புத்திரராகியபலர், மேதாதிதியின்புத்திரரானகண்வர் இவர்கள் எழுவரும் [4]பர்ஹிஷதரென்று சொல்லப்படுகின்றவர். இவரனைவரும் பிரம்மதேஜோமயமாயிருப்பவர்; நாமங்களைச் சொன்னமாத்திரத்தில் உலகங்களைப் பரிசுத்தப்படுத்துகிறவர். இவரனைவரும் தங்கள்புண்ணிய பலனையடைந்து ருத்ரர்களுக்கும் அக்னிக்கும் வஸுக்களுக்கும் ஸமமான ஒளியுள்ளவர்களாயிருக்கின்றனர்; பூமியில்புண்ணியகருமஞ்செய்து தேவலோகத்தில் தேவர்களுடன் மகிழ்ந்திருக்கின்றனர். இவர்களெழுவரும் இந்திரனுக்கு ஆசாரியர்கள்; கீழ்த்திசையைச்சார்ந்திருக்கின்றனர். பக்தியோடு இவர்களைச் சொல்லுகிறவன் இந்திரலோகத்தில் பூஜிக்கப்படுவான். உன்முசு, ப்ரமுசு, மகிமையுள்ள ஸ்வஸ்தியாத்ரேயர், த்ருடவ்யர், ஊர்த்வபாஹு, த்ருணஸோமாங்கிரஸ், மித்ராவருணர்களின்புத்ரரும் மகிமையுள்ளவருமான அகஸ்தியர் இவ்வெழுவரும் தர்மராஜனையமனுடையரித்விக்குக்கள்; தென்திசையைச் சார்ந்திருக்கின்றனர். த்ருடேயு, ருதேயு, புகழ்பெற்ற பரிவ்யாதர், ஏகதர், த்விதர், த்ரிதர், அத்ரியின்புத்ரரும் தர்மாத்மாவுமான ஸாரஸ்வதரிஷிஆகிய சூரியனுக்குச்சமமான இவ்வெழுவரும் வருணனுடையபுரோகிதர்கள்; மேற்றிசையைச் சார்ந்திருக்கின்றனர். அத்ரி, வஸிஷ்டபகவான், கம்யபமகரிஷி, கௌதமர், பரத்

---

1 ருத்ரர்கள் பதினொருவர். ஆதித்யர்கள் பன்னிருவர்; வஸுக்கள் எண்மர்; அம்வினீதேவர் இருவர்.

2 இரண்டுமூர்த்திகள். 3 கணங்களைச்சேர்ந்தவன்.

4 அக்னியைப்போன்றவர்.

வாஜர், குசிகவம்சத்தவரானவிஸ்வாமித்ரர், ரிசீகர்புத்ரரும் உக்ரரும் மகிமையுள்ளவருமானஜமதக்னி இவ்வெழுவரும் குபேரனுடைய ஆசாரியர்கள்; வடதிசையைச் சார்ந்திருக்கின்றனர். (பின்கூறப்படும் ஸம்வர்த்தர்முதலிய) மற்றஸப்தரிஷிகள் எல்லாத்திசைகளிலுமிருக்கின்றனர். உலகத்தைக்காப்பவர்களான அவர்கள் தங்கள்பெயர்சொல்லும்மனிதர்களுக்குப் புகழையும் க்ஷேமத்தையும் செய்கிறவர். தர்மன், காமன், காலன், வஸு, வாஸுகி, அனந்தன், கபிலன், இவ்வேழுநாகர்கள் பூமியைத்தாங்குகிறவர். பரசுராமர், வ்யாஸர், த்ரோணபுத்ரரான அஸ்வத்தாமா, லோமசர் இவர்கள் தேவமுனிகள்; ஒவ்வொருவரும் [1]எவ்வேழுருவங்களாயிருக்கின்றனர். திக்பாலகர்கள் பெயரைச்சொன்னால் அவர்கள் உலகத்தின் கஷ்டநிவிருத்தியையும் ஸௌக்யத்தையும் செய்கிறார்கள். அவர்கள் எந்தஎந்தத்திசையிலிருக்கின்றனரோ அந்த அந்தத்திசையைநோக்கி நமஸ்காரம்செய்யவேண்டும். அவர்கள் எல்லாஉலகங்களையும்படைப்பவர்; நாமங்களைச் சொல்லுகிறவர்களின்பாவத்தைப் போக்குகிறவர். சிறந்ததவமுள்ளவரும் ஜிதேந்திரியருமாயிருக்கும் ஸம்வர்த்தர், மேருஸாவர்ணர், தர்மிஷ்டரானமார்க்கண்டேயர், ஸாங்கியர், யோகர், நாரதர், துர்வாஸமகரிஷி இந்த ஸப்தரிஷிகள்தாம் மூன்றுலகங்களிலும் பெயர்பெற்றவர்கள். ருத்திரனைப்போலப்பிரகாசிக்கும் மற்றும் சிலரிஷிகள் பிரம்மலோகத்திலிருப்பவர்களாகச் சொல்லப்படுகின்றனர். அவர்கள்பெயர் சொல்வதனால் புத்திரனில்லாதவன்புத்திரனையும் தனமில்லாதவன் தனத்தையும் அடைவார். மனிதனுக்குத்தர்மார்த்தகாமங்களென்னும் புருஷார்த்தங்கள்மூன்றும் ஸித்திக்கும். ஸூர்யவம்சத்தில்பிறந்தவனும் இந்திரனுக்குச்சரியான பராக்ரமமுள்ளவனும் வேனனுடைய புத்திரனும் பிரஜைகளையும் பூமியையும்காப்பவனும் எல்லாப்பூமிக்கும்ஈஸ்வரனும் அரசரில்சிறந்தவனுமாகிய ப்ருதுசக்ரவர்த்தியைச் சொல்லவேண்டும். பூமியானது அவனுக்குப் பெண்ணாயிருந்ததனால் ப்ருதிவியென்றுசொல்லப்படுகிறது. இளையின்குமாரனும் புதனுக்கன்புள்ளபுத்திரனும் மூன்றுலகங்களிலும்பெயர்பெற்றவனுமான புரூரவனென்னும்அரசனை உரைக்கவேண்டும், மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்றவீரனாகிய பரதசக்ரவர்த்தியின்நாமத்தைச் சொல்லவேண்டும். கிருதயுகத்தில் கவாமயனமென்னும் யாகம்செய்தவனும் சிறந்த மகிமையுள்ளவனுமான ரந்திதேவனென்னும் மகாராஜனைச் சொல்லவேண்டும். உலகங்களைஜயித்தவனும் சிறந்த தவமுள்ளவனும்

---

[1] ஏழு உலகங்களுக்கும் ஏழுஉருவமென்பது.

ராஜலக்ஷணங்கள் பொருந்தினவனும் உலகங்களால் பூஜிக்கப்பெற்றவனும் சிறந்தமகிமையுள்ளவனுமான [1]பகீரதனென்னும் ராஜரிஷியை உரைக்கவேண்டும். அவன் ஸகரருடையபுத்ரர்களைக் கங்கையினால் நனைத்துக் கரையேற்றினவன். பெரியஉருவமும் சிறந்தசக்தியும் பயங்கரமானதோற்றமும் மிகுந்ததைரியமுமுள்ளவர்களும் பெரும்புகழ் பெற்றவர்களும் அக்நியைப்போன்றவர்களுமாகிய இந்தத்தேவர்களையும் ரிஷிகளையும் பூஜிக்கப்படுகிறவர்களான ஆசார்யர்களையும் உரைக்கவேண்டும். சிறந்தவையானஸாங்கியயோகங்களையும் ஹவ்யகவ்யங்களையும் எல்லாவேதங்களின்முகற்பொருளுமான பரப்பிரம்மத்தையும் எல்லாப்பிராணிகளுக்கும்மங்களத்தைக் கருகின்றவையும் வியாதிகளைப் போக்குகின்றவையும் மேன்மையைத்தருகின்றவையும் எல்லாக்கர்மங்களிலும் சிறந்தவையும் பாவனமுமான அநேகம்கர்மங்களையும் சொன்னேன். பாரதரே! மேற்சொன்னவர்களின்நாமங்களைக் காலைமாலைகளில் பரிசுத்தனாகிக் கீர்த்தனம்செய்யவேண்டும். இவர்கள்தாம் உலகமெல்லாம் செல்லுகின்றனர்; மழைபொழிகின்றனர்; ஒளிகொடுக்கின்றனர்; காற்றுவீசுகின்றனர்; உலகத்தைப்படைக்கின்றனர். இவர்கள் துயரங்களைப்போக்குகிறவர்; சிறந்தவர்; ஸமர்த்தர்; பொறுமையுள்ளவர்; ஜிதேந்திரியர். இவர்களெல்லாரும் தங்கள்பெயர்களைச் சொல்லும்மனிதர்களுக்குத் தீங்குகளைப் போக்குகின்றனர். இந்த மகாத்துமாக்கள் பாவபுண்ணியங்களுக்குச் சாக்ஷிகளாயிருப்பவர். காலையிலெழுந்து இவர்களைக்கீர்த்தனம்செய்பவன் நன்மையையடைவான். அவனுக்கு அக்னிபயமும்சோரபயமும்இல்லை. அவனுக்குவழிகளில் இடையூறு உண்டாவதில்லை. இவர்களைத்தினந்தோறும் கீர்த்தனம்செய்யும்மனிதர்களுக்குக் கெட்டகனவு உண்டாவதில்லை; எல்லாப்பாவங்களினின்றும் விடுபட்டு க்ஷேமமாக வீட்டைச்சேர்வர். பிராம்மணன் நியமும் ஆசாரமும் ஆத்மஞானமும் பொறுமையும் அடக்கமுமுள்ளவனாகவும்பொறாமையற்றவனாகவும் தீக்ஷாகாலங்களெல்லாவற்றிலும் இதைப்படிக்கவேண்டும். பிணியாளனும் மனோவியாதியுள்ளவனும் இதைப்படிப்பதனால் துயரத்திலிருந்து விடுபடுவார். வீட்டினுள்படிப்பவனுக்குக் குலத்திற்கே க்ஷேமமுண்டாகும். நிலத்தின் நடுவில்படித்தால் எல்லாப்பயிரும் விருத்தியாகும். வேறுஊருக்குப் பயணமாகப்போகும்போது படித்தால் க்ஷேமமாக வழிச்செலவான். இதைத் தனக்கும் பிள்ளைபெண்டுகளுக்கும் பொருளுக்கும் தான்யங்களுக்கும் பயிர்களுக்கும் ரக்ஷையாகஉபயோகிக்கவேண்டும். க்ஷத்தி

1 இவனே பகீரதன்.

ரியன் யுத்தகாலத்தில் இதைச்சொன்னால்பகைவர்களைஒழித்துக்ஷேமமாகத் திரும்புவான். தேவகாரியங்களிலும் பித்ருகாரியங்களிலும் இதைப்படிக்கும் மனிதனுடைய ஹவ்யகவ்யங்களைத் தேவர்களும் பித்ருக்களும் புசிப்பர்; வியாதிபயமும் துஷ்டஜந்துக்களின்பயமும் யானைபயமும் திருடர்பயமும் இரா; துக்கங்குறையும்; பாவம்விலகும்; ஓடத்திலும் வாகனத்திலும் தூரதேசப்பிரயாணத்திலும் அரண்மனையிலும் சிறந்தகாயத்திரியைச்சொல்லுகிறவன்சிறந்தலாபத்தை அடைவான். அவனுக்கு ராஜபயம் பிசாசபயம் ராக்ஷஸபயம் அக்நிபயம் ஜலபயம் காற்றுப்பயம் ஸர்ப்பபயம் ஒன்றுமுண்டாவதில்லை. இந்தஉத்தமமானகாயத்திரியை இடைவிடாமற்படிப்பவன் நான்குவர்ணங்களுக்கும் ஆஸ்ரமங்களுக்கும்சிறந்தஸுகத்தைச்செய்கிறவனாகிறான். இந்தக்காயத்திரியைப்படிக்குமிடத்தில் கட்டைகளில் தீப்பிடிப்பதில்லை; எவனும் இளமையில் இறப்பதில்லை; ஸர்ப்பங்களிருப்பதில்லை; காயத்திரியின்மகிமையுள்ள இந்தச் சிறந்தமந்திரத்தைச் சொல்லும்போது கேட்பவரும் துன்பமடையார்; சிறந்தகதியையடைவார். பசுக்களின் நடுவில் இதைச்சொன்னால் பசுக்கள் அவனிடத்தில் மிக்க அன்புள்ளவையாகும். புறப்படும்போதும் அன்னியதேசத்திலிருக்கும்போதும் எந்தநிலைமையிலிருக்கும்போதும் இதைப்படிக்கவேண்டும். ராஜனே! எக்காலமும் ஜபஹோமங்களைச்செய்துகொண்டு மனத்தையடக்கின ரிஷிகளுக்கும் இந்தஜபம் மிக்கமுக்கியமும் ரகஸ்யமுமானது. இதை ஸரியாகஅனுஷ்டித்து ஸித்திபெற்ற பராசரருடைய சிறந்தபுராதன சரித்திரம் முன்னர்இந்திரனுக்குச்சொல்லப்பட்டது. பழமையும் ஸத்யமுமாகிய இந்தமந்திரத்தை உனக்கு இப்போது சொன்னேன். இது எல்லாப்பிராணிகளுக்கும் உள்ளம்போன்றது. இது அழியாதவேதம். சூரியவம்சத்திலும் சந்திரவம்சத்திலும் ரகுவம்சத்திலும் குருவம்சத்திலும் பிறந்தவரனைவரும் தினந்தோறும் பரிசுத்தர்களாகி எல்லாப்பிராணிகளுக்கும்ஆதாரமான இந்தமந்திரத்தைப் படிப்பது வழக்கம். தேவர்களுக்கும் ஸப்தரிஷிகளுக்கும்த்ருவனுக்கும்ஸமீபத்தில் இதை நித்யமாகச்சொல்வது பயங்களையும் எல்லாக்கஷ்டங்களையும் விடுவிப்பது. காஸ்யபர், கௌதமர், ப்ருகு, அங்கிரஸ், அத்ரி, சுக்ரர், அகஸ்தியர், ப்ருகஸ்பதிமுதலிய வ்ருத்தர்களான ப்ரம்மரிஷிகளினால் அனுஷ்டிக்கப்பட்டதும் பரத்வாஜரால் தியானிக்கப்பட்டதும் ரிசீகர்புத்ரர்களால் வஸிஷ்டரிடமிருந்து அடையப்பட்டதுமாகிய இந்தமந்திரம் கிடைத்தபிறகுதான் இந்திரனும் வஸுக்களும், தானவரனைவரையும் ஜயித்தனர். பொன்மயமான கொம்புகளோடுகூடிய நூறுபசுக்களை

வேதங்களும் பலசாஸ்திரங்களும் கற்றுணர்ந்த பிராம்மணனுக்குத் தானம் செய்பவனுக்கும் இந்தச்சிறந்த பாரதகதையை நித்யமாகச் சொல்லுகிறவனுக்கும் பலன் ஒன்றுதான். ப்ருகுவைச்சொல்வதனால் தர்மம் விருத்தியாகிறது. வஸிஷ்டருக்கு நமஸ்காரம் செய்வதனால் மகிமை விருத்தியாகிறது. ரகுவை நமஸ்கரிப்பதனால் யுத்தத்தில் ஜயமுண்டாகிறது. அஸ்வினீதேவர்களின் நாமஸங்கீர்த்தனம்செய்வதனால் பிணிநீங்கிவிடுகிறது. அரசனே! வேதத்திலுள்ள அழிவற்றதாகிய இந்தக்காயத்திரியை உனக்குச் சொன்னேன்; பாரதனே! உனக்கு இன்னும் என்னகேட்க விருப்பமிருக்கிறதோ அதையும் சொல்வேன்" என்றார்.

---

## இருநூற்றைம்பத்தாறுவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(பிராம்மணமகிமை.)

" யுதிஷ்டிரர், "பிதாமஹரே! பூஜிக்கத்தக்கவர் எவர்? நமஸ்கரிக்கத்தக்கவர் எவர்? யாரிடத்தில் எப்படிநடக்கவேண்டும்? யாரிடத்தில் எவ்வகை ஒழுக்கத்தோடிருந்தால் மனிதன் கெடாமலிருப்பன்?" என்று கேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"யுதிஷ்டிர! பிராம்மணர்களை அவமதிப்பது தேவர்களையும் கெடுத்துவிடும். பிராம்மணர்களை நமஸ்கரிப்பவன் கெடான். பிராம்மணர்களே பூஜிக்கத்தக்கவர்கள். அவர்களே நமஸ்கரிக்கத்தக்கவர்கள். அவர்களிடத்தில் நீ புத்ரன்போல நடந்துகொள். அவர்கள் இவ்வுலகங்களனைத்தையும்தாங்குகிறவர்; ஞானிகள். பிராம்மணர்களேஎல்லா உலகங்களுக்கும் பெரியவர்கள்; தர்மத்திற்கு அணையாயிருப்பவர்கள். அவர்கள் தனத்தைவிட்டதனால் எல்லாருக்கும்இனியவராயிருப்பவர். மதுரமான சொற்களையுடையவர்; எல்லாப்பிராணிகளுக்கும் இனியவர்; தங்களனுஷ்டானங்களைத் தவறாமல் வகிப்பவர். உலகத்திற்கு நிதிகள்போன்ற சாஸ்திரங்களையுண்டாக்கிப் புகழ்பெற்றவர். அவர்களுக்கு எப்போதும் தவமேதனம்; சொல்லேபெரியவன்மை. அவர்கள் தர்மங்களுக்குத் தந்தைகள்; தர்மஸூக்ஷ்மங்களைக் கண்டறிந்தவர்; தர்மத்தில்விருப்பமுள்ளவர்; தர்மத்தில்நிலைபெற்றவர்; தங்கள் நற்செய்கைகளினால் தர்மத்தைத்தாங்கும் அணைகளாயிருப்பவர். நான்குவகையான பிராணிகளனைத்தும் அவர்களை ஆதாரமாகக்கொண்டு நிற்கின்றன. அவர்களே எல்லாரையும் நடத்தும் வழிகள்; யாகங்களை

நடத்துகிறவர்; எக்காலமும் இருப்பவர்; தங்கள் தாதை மூதாதை பரம்பரையாக வந்திருக்கும் பெரியபாரத்தை எப்போதும்வகித்துக் கொண்டிருக்கின்றனர். நல்லகுதிரைகள் கெட்டவழியிலும் சோராம லிருப்பதுபோலச் சங்கடத்திலும் தங்கள் பாரத்தை வகிக்கச்சோர்வ தில்லை. (அவர்கள்) பித்ருக்களுக்கும் தேவர்களுக்கும் அதிதிகளுக் கும் முதன்மையாயிருந்து ஹவ்யகவ்யங்களில் முதலில் பாகங்களைப் புஜிப்பவர்; தாங்கள் புஜிப்பதனலேயே மூவுலகங்களையும்பெரும்பயத் திலிருந்து காப்பாற்றுகின்றனர்; எல்லாஉலகங்களுக்கும் தீபமாகவும் கண்ணுள்ளவர்களுக்கும் கண்ணாகவுமிருக்கின்றனர்; சிற்பமுதலிய எல்லாவித்தைகளுக்கும் நிதிகள்; பண்டிதர்கள்; ஸூக்ஷ்மத்தைஅறி யும்திறமையுள்ளவர்கள்; எல்லாப்பிராணிகளின்வினைப்பயன்களையும் அறிந்திருப்பவர்; ஆத்மாவையே கதியாகத்தியானிப்பவர்; சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களையறிந்தவர்; ஸந்தேகமற்றவர்; மேல்கீழ் வஸ் துக்களின் வேற்றுமைகளையறிந்தவர்; உயர்ந்தகதிக்குச் செல்லுகிற வர்; பற்றற்றவர்; பாவங்களை உதறினவர்; சீதோஷ்ணம் ஸுகதுக்க முதலியவற்றையும் தமவென்னும் அபிமானத்தையும் விட்டவர்; பூஜிக்கத்தக்கவர்: ஞானிகளான மகாத்மாக்களினல் எப்போதும் பூஜிக்கப்பெற்றவர்; சந்தனம்பூசுவதிலும் அழுக்கான சேற்றைப் பூசுவதிலும் உண்பதிலும் உண்ணாமலிருப்பதிலும் வேற்றுமையில் லாதவர்; மெல்லிய ஆடையும் நார்மடியும் வெண்பட்டும் தோலும் அவர்களுக்குச்சரிதான். அவர்கள் அனேகநாள்கள் போஜனம் செய்யாமலுமிருப்பார்; இந்திரியங்களையடக்கி வேதாத்யயனங்களி னல் தேகங்களை வாடச்செய்வார்; தேவதையல்லாதவனை தேவதை யாகவும் தேவதையைத் தேவதையல்லாதவனாகவும் செய்வார்; அவர் கள் கோபமூட்டப்பட்டால் வேறுலோகங்களையும் வேறுலோகபாலர் களையும் படைப்பார். அந்தமகாத்மாக்களின் சாபத்தினலேதான் ஸமுத்திரம் குடிக்கத்தகாததாகிவிட்டது. அவர்களின் கோபமென் னும் அக்நி தண்டகாவனத்தில் இன்னும் ஆறவில்லை. அவர்கள் தேவருக்குந்தேவர்; காரணத்திற்கும்காரணம்; பிரமாணத்திற்கும் பிரமாணம். ஆதலால், தெரிந்தவன் அவர்களை அவமதிக்கலாகாது. அவர்களில் கிழவர் சிறுவர் அனைவரும் நல்லமார்க்கத்தைக் காண்பிப் பவர். அவர்கள் தவச்சிறப்பினலும் கல்விச்சிறப்பினலும் ஒருவரை யொருவர் கௌரவிக்கிறார்கள். கல்வியில்லாதப்ராம்மணனும் தேவ தை; தானத்திற்குப் பரிசுத்தனை சிறந்தபாத்ரன். வித்வானே வெனில் மிகச்சிறந்ததேவதை; பொங்கின்கடலுக்கொப்பானவன்.

பிராம்மணன் வித்வானுயிருந்தாலும் அவித்வானுயிருந்தாலும் பெரிய தேவதைதான். மந்திரத்தினுல் சுத்தம்செய்யப்பட்டாலும் படாவிட்டாலும் அக்கி பெரியதேவதையன்றோ? பெரியதேஜஸுள்ள அக்கி மயானத்திலிருந்தாலும் கெடுவதில்லே. சாஸ்திரப்படி யாகங்களில் ஹோமம்செய்யப்பட்டஅக்கி இன்னம் அதிகமாகப் பிரகாசிக்கிறது. அப்படியே வேண்டாதகாரியங்களெல்லாவற்றையும் செய்தபோதிலும் பிராம்மணனைப்பூஜிக்கவேண்டும். அவன் பரதேவதையென்றறி" என்றார்.

---

## இருநூற்றைம்பத்தேழாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(வாயுவுக்கும் கார்த்தவீர்யார்ஜுனனுக்கும் ஸம்பாஷணை; பிராம்மணர்மகிமையைப் பற்றியது.)

யுதிஷ்டிரர், "வேந்தரே! சிறந்தபுத்தியுள்ளவரே! பிராம்மண பூஜைசெய்வதில் என்னபலனையும் என்ன விசேஷபுண்ணியத்தையும் கண்டறிந்து அவர்களைப் பூஜிக்கிறீர்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"பாரதனே! இந்தவிஷயத்தில் வாயுபகவானுக்கும் கார்த்தவீரியார்ஜுனனுக்கும் நடந்த ஸம்பாஷணையாகிய இந்தப்பழமையான இதிஹாஸத்தைச் சொல்லுகின்றனர். ஆயிரங்கைகளுள்ளவனும் சிறந்தபலசாலியும் சிறப்புள்ளவனுமான கார்த்தவீரியார்ஜுனன் இவ்வுலகமனைத்திற்கும் ஈஸ்வரனுகி மாகிஷ்மதியென்னும் நகரத்திலிருந்தான். தவருதபராக்கிரமமுள்ள அந்த ஹைஹயதேசத்தரசன் ரத்தினங்களுண்டாகும் கனிகளுள்ளதும் ஏழுதீவுகளுள்ளதும் கடல் சூழ்ந்ததுமாகிய புவனியனைத்தையும்ஆண்டான். அவன் தன்னுடைய க்ஷத்திரிய தர்மத்தையும் அடக்கத்தையும் சாஸ்திரஞானத்தையும் முன்னிட்டுத் தன்தனத்தை ஒருஸந்தர்ப்பத்தில் தத்தாத்ரேயருக்குக் கொடுத்தான். அந்தக் கார்த்தவீரியார்ஜுனன் அம்முனிவருக்குப் பணிவிடையும்செய்தான். அந்தப்பிராம்மணர் ஸந்தோஷமடைந்து அவனைமூன்றுவரங்கேட்கச்சொன்னர். அவரால்வரங்கொடுப்பதாகச் சொல்லப்பட்ட அவ்வரசன், 'கடுந்தவமுள்ளவரே! எனக்கு [1]ஸேனை நடுவிலிருக்கும்போது ஆயிரம்கைகளும் வீட்டிலிருக்கும்போது [2] ஸ்வபாவமாக இரண்டுகைகளும் இருக்கவேண்டும். போரில்படைச்

---

1 வேறுபாடம். 2 வேறுபாடம்.

சேவகர் என்ஆயிரங்கைகளையும் பார்க்கக்கடவர். பராக்கிரமத்தினால் பூமியனைத்தையும் வெல்லக்கடவேன். அந்தப் பூமியையடைந்தபின் சோம்பாமல் தர்மமாகப் பரிபாலனஞ்செய்யக்கடவேன். பிராம்மணோத்தமரே! குற்றமற்றவரே! நான் உம்மிடத்தில் நான்காவது வரமும் கேட்கிறேன். என்னை அனுக்கிரகிப்பதற்காக அதையும் கொடுக்கக்கடவீர். உம்மைச்சேர்ந்தவனாகியநான் ஒழுக்கந்தவறினால் பெரியோர்கள் என்னைத்திருத்தக்கடவர்' என்றுசொன்னான். இவ்வாறு சொல்லக்கேட்டஅந்தப்பிராம்மணர், 'அப்படியேஆகட்டும்' என்று அவ்வரசனுக்குச்சொன்னார். ஜ்வலிக்கும் பராக்ரமமுள்ள அவ்வரசனுக்கு வரங்கள் அவ்வாறே பயன்பட்டன. அவன் அக்கினிக்கும் சூரியனுக்கும் சமமான ஒளியுள்ள ரதமேறிச்சென்று பராக்ரமகர்வத்தினால் 'தைரியத்திலும் ஸாமர்த்தியத்திலும் புகழிலும் சூரத்தனத்திலும் பிறரை வசப்படுத்துவதிலும் மகிமையிலும் எவன் எனக்குச்சரியானவன்?' என்றுசொன்னான். அவன்சொல் முடியும்போதே ஆகாயத்தில் ஓர் அசரீரவாக்கானது, 'மூடா! பிராம்மணன் க்ஷத்திரியனைவிடச்சிறந்தவனென்பதை நீ அறியவில்லை. இவ்வுலகத்தில் க்ஷத்திரியன் பிராம்மணனோடு சேர்ந்துதான் பிரஜைகளையாளுகிறான்' என்று சொல்லிற்று. அதற்கு அர்ஜுனன், 'நான் ஸந்தோஷமடைந்தால் பிராணிகளைஉண்டாக்குவேன்; கோபித்தால் அழிப்பேன். செய்கையிலும் எண்ணத்திலும்வாக்கிலும்பிராம்மணன் எனக்குமேலாவதில்லை. பிராம்மணன் சிறந்தவனென்பது முந்தியவாதம். க்ஷத்திரியன் சிறந்தவனென்பது பிந்தியவாதம். உன்னாற்சொல்லப்பட்ட இரண்டுவாதங்களும் காரணமுள்ளவைதாம். ஆனால், அவற்றில் ஒருவிசேஷமிருக்கிறது. பிராம்மணர்கள் க்ஷத்திரியனைச் சார்ந்திருப்பதேயன்றி க்ஷத்திரியன்பிராம்மணர்களைச்சார்ந்திருப்பதில்லை. பிராம்மணர்கள் பூமியில் வேதத்தைக் காரணமாகக்கொண்டு க்ஷத்திரியர்களையடுத்துப் பிழைக்கிறார்கள். பிரஜாபரிபாலனமென்னும் தர்மம் க்ஷத்திரியர்களிடத்தில் பொருந்தியிருக்கிறது. க்ஷத்திரியர்களால் பிராம்மணர்களுக்குஜீவனம். அந்த க்ஷத்திரியர்களைவிட ப்ராம்மணன் சிறந்தவனாவது எப்படி? தாங்களே தங்களைக் கௌரவித்துக்கொண்டு எல்லாப்பிராணிகளிலும் முதன்மையாகிப் பிச்சையெடுத்துப் பிழைக்கும் அந்தப்பிராம்மணர்களை நான் எனக்கு வசப்படுத்தி வைத்திருக்கிறேன். ஆகாயத்தில் பேசும் இந்தக்கன்னிகை சொன்னது பொய். எனக்குட்படாத தோலாடையுடுத்த பிராம்மணர்களனைவரையும் ஜயித்துவிடுவேன். மூவுலகங்களிலும் தேவனாகட்டும் மனிதனாகட்டும் எவனும் என்னை

ராஜ்யத்திலிருந்து நழுவச்செய்யமுடியாது. ஆதலால், நான் பிராம்மணர்களை ஜயிப்பேன்; பிராம்மணன் மேலாயிருந்த உலகத்தில் இப்போது க்ஷத்திரியன்மேலாயிருக்கச் செய்வேன். யுத்தத்தில் என் சக்தியைத்தாங்குவதற்கு யாராலும் முடியாதன்றோ?' என்று சொன்னான்.

கார்த்தவீரியார்ஜுனனுடைய சொல்லைக்கேட்டு அந்த அசரீர வாக்குச் சொன்ன ராக்ஷஸி பயந்தாள். பிறகு, ஆகாயத்திலிருக்கும் வாயு அவனைப்பார்த்து, 'ராஜனே! இந்தக் கெட்டஎண்ணத்தை விட்டுவிடு. பிராம்மணர்களுக்கு நமஸ்காரம் செய். அவர்களுக்குத் தீங்குசெய்கிறவனுக்குத் தேசத்தில்கலகமுண்டாகும். பிறகு, உன்னையும் பிராம்மணர்கள் அழித்துவிடுவார். சிறந்தவன்மையுள்ள பிராம்மணர்களின் உற்சாகத்தைக் கெடுத்ததனால் அவர்கள் உன்னைத் தேசத்திலிருந்து ஓட்டிவிடுவார்' என்றுசொன்னான். அவ்வரசன் அவனை, 'நீ யார்?' என்றுகேட்க, வாயுபகவான் அவனைப்பார்த்து, 'நான் வாயு; தேவதூதன்; உனக்கு இதைச்சொல்லுகிறேன்' என்றுசொன்னான். கார்த்தவீரியார்ஜுனன், 'ஆ! ஆ! பிராம்மணர்களிடத்தில் உனக்குள்ள பக்தியையும் அன்பையும் காண்பித்தாய். பிராம்மணோத்தமன் பூமி, வாயு, அப்பு, அக்கி, சூரியன், ஆகாயம் இவற்றில் எதற்குச் சமமானவனென்பதை எனக்குச் சொல்' என்றுகேட்டான்.

## இருநூற்றைம்பத்தேட்டாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(வாயுவுக்கும் கார்த்தவீரியார்ஜுனனுக்கும் ஸம்பாஷணை; கச்யபர் முதலியோரின்மகிமை.)

**வா**யு, 'ராஜனே! மூடனே! மகாத்மாக்களானபிராம்மணர்களின்குணங்களில் சிலவற்றைச் சொல்லுகிறேன்; கேள். உன்னால் குறிக்கப்பட்டவையெல்லாவற்றினும் பிராம்மணன் சிறந்தவன். பூமிதேவியானவள் கச்யபரோடு சண்டைசெய்து பூமியுருவத்தையே இழந்து அழிந்துபோனாள். அவளைப் பிராம்மணரான கச்யபர் நிலைநிறுத்தினார். ராஜனே! பிராம்மணர்கள் தேவலோகத்திலும் இவ்வுலகத்திலும் எக்காலமும் அழியாமலிருப்பவர். முற்காலத்தில் அங்கிரஸின்வம்சத்தில் பிறந்த உசத்யமுனிவர் தம்பிரபாவத்தினால் ஜலமெல்லாவற்றையும் குடித்தார். அம்மகாமுனிவர் அந்தஜலங்களைப் பாலைப்போலச் சலிக்காமல் குடித்தார். ராஜனே! அவரே பூமி

யனைத்தையும் பெரியநீர்ப்பெருக்கினால் நிரப்பினார். அவர்கோபித்த காலத்தில் நானும் அவரிடத்தில்பயந்து அந்தப்பயநிவிர்த்திக்காக அந்தஉசத்தியரின்அக்நிஹோத்திரத்திலேயே இருந்தேன். பகவானைதேவேந்திரன் அகல்யைமேலாசைப்பட்டதற்காகக் கௌதமரால் சபிக்கப்பட்டான். அவர், தர்மத்தினால் அவனை அழிக்காமல் விட்டார். ராஜனே! அப்படியே நல்லதண்ணீர்நிரம்பினதாகக்காணப்பட்ட ஸமுத்திரம் பிராம்மணர்கள்சாபத்தினால் உப்புநீராயிற்று. புகையில்லாமல் பொன்னிறமுள்ளதும் ஒன்றுசேர்ந்துஎழுந்த ஜ்வாலைகளோடுகூடியதும் மகிமைபொருந்தியதுமான அக்னி, அங்கிரஸ் கோபித்துச் சபித்ததனால் இந்தக்குணங்கள் இல்லாமற்போயிற்று. சிறந்த கீர்த்தியையுடையகபிலரென்னும் பிராம்மணராலசபிக்கப்பட்டு மிகச் சிறந்தவர்களான ஸகரபுத்திரர்கள் கடலருகில் நீறானதைப் பார். ராஜனே! பிராம்மணர்களின் நன்குமதிப்புச் சிறந்ததென்றறி. அரசனானவன் கர்ப்பத்திலிருக்கும் பிராம்மணர்களையும் எப்போதும் நமஸ்கரித்தல்வேண்டும். தண்டகனென்னுமரசனுடைய பெரிய ராஜ்யம் பிராம்மணனால் அழிக்கப்பட்டது. தாலஜங்கர்களென்னும் சிறந்த க்ஷத்திரியர்கள் ஔர்வரென்னும் ஒருபிராம்மணரால் அழிக்கப்பட்டனர். உனக்கும் கிடைக்கமிக்க அரியவையான பெரியராஜ்யமும் சக்தியும் தர்மமும் கல்வியும் தத்தாத்ரேயர் அனுக்கிரகத்தினால் கிடைத்தன. அர்ஜுனா! நீ அக்நியை நித்யமாகப்பூஜிக்கிறாய். பிராம்மணனைப் பூஜியாமலிருப்பதேது? அவன் எல்லாஉலகங்களுடையஹவிஸையும் தேவர்களுக்குச் சேர்ப்பிக்கும் பிராம்மணனன்றோ; அவனை நீ ஏன் அறியவில்லை? அல்லது, ஒவ்வொருபிராணியையும் காப்பாற்றுகிறவனும் ஜீவலோகத்தையே படைப்பவனுமாகிய பிராம்மணன் சிறந்தவனென்று அறிந்திருந்தும் ஏன்கர்வப்படுகிறாய்? பரமாத்மாவினிடத்திலுண்டானவரும் அழியாதவரும் சராசரங்களாகிய இந்தப் பேருலகத்தைப் படைத்தவருமாகிய பிரம்மதேவரே பிராம்மணர்; அண்டத்திலுண்டானவரென்று சில அறிவீனர் நினைக்கின்றனர். அண்டம்வெடித்தபின் மலைகளும் திசைகளும் ஜலமும் பூமியும் ஆகாயமும்உண்டாயின. பிரம்மதேவர் இவற்றை அவ்விதமாகக்கண்டவர். பிறப்பில்லாதஅவர் பிறப்பதேது? பிரம்மதேவர் எந்தஅண்டத்தினின்றுண்டானாரோ அந்தஅண்டமாகிய இடம் ஆகாயமன்றோ? அதில் அவர் எப்படி நிற்பரென்றுசொல்லலாம்? அந்தக்காலத்தில் ஒன்றும் இராதன்றோ? எல்லாச்சக்திகளையுமடைந்த பிரம்மதேவர் [1]அகங்கார

[1] மகத்திலிருந்துண்டான அகங்காரம்என்னும் தத்வம்.

மென்று சொல்லப்படுகிறார். அவருக்கு முடிவில்லை. அந்தப் பிரம்ம தேவர் உலகங்களைப்படைத்து அவற்றிற்கு ஈஸ்வரராயிருக்கிறார்' என்றுசொன்னான். வாயுவினால் இவ்வாறு சொல்லப்பட்ட அவ்வரசன் அப்போது பேசாமலிருந்தான். திரும்பவும் அவனைப்பார்த்து வாயு சொல்லலானான்.

---

## இருநூற்றைம்பத்தோன்பதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(வாயுவுக்கும் கார்த்தவீரியார்ஜுனனுக்கும் ஸம்பாஷணை; உசத்யர் வருணனைவென்றகதை.)

'ராஜனே! முற்காலத்தில் அங்கனென்னுமரசன் இந்தப்பூமியைப் பிராம்மணர்களுக்குத் தக்ஷிணையாகக்கொடுக்கக்கருதினான். அப்போது பூமிதேவி கவலையுற்றாள். அவள், 'இந்தச்சிறந்தஅரசன் எல்லாப்பிராணிகளுக்கும் ஆதாரமும் பிரம்மாவின்புதல்வியுமான என்னையடைந்து பிராம்மணர்களுக்குத் தானம்செய்யநினைக்கிறானே. இதென்ன? ஆதலால், நான் பூமிஉருவத்தைவிட்டுப் பிரம்மலோகம் போவேன். இவ்வரசனும் இவன்ராஜ்யமும் இராமற்போகட்டும்' என்று நினைத்துச் சென்றாள். பிறகு, பூமிதேவிசெல்வதைக்கண்ட கஸ்யபர் உடனே மனத்தை யோகத்தில் மிகஉறுதியாகச்செலுத்திப் பூமிக்குள் பிரவேசித்தார். ராஜனே! பிறகு, அந்தப்பூமியானது எங்கும் புல்லும்பயிர்களும்நிரம்பினதாகவும் தர்மமிகுந்ததாகவும் பயமற்றதாகவும் செழித்ததாகவும் இருந்தது. ராஜனே! பெருந்தவமுள்ள கஸ்யபர் இவ்வாறு முப்பதினாயிரம்தேவவருஷங்கள்சலியாமல்பூமியாயிருந்தார். மகாராஜனே! பிறகு, பூமிதேவி வந்து கஸ்யபரைநமஸ்கரித்து அம்மகாத்மாவின்பெண்ணாகிக் காஸ்யபியென்று பெயர்பெற்றாள். அரசனே! அந்தக்காஸ்யபரென்னும்பிராம்மணர்இப்படிப்பட்டவராயிருந்தார். கஸ்யபருக்குமேலான வேறு எந்தக்ஷத்திரியனையாவது நீ சொல்' என்றான். அரசன் ஒன்றும்பேசவில்லை. வாயுபகவான் திரும்பவும் பேசலானான். 'ராஜனே! அங்கிரஸின்குலத்தில்பிறந்தவரானஉசத்தியரின்சரித்திரத்தைக்கேள். சந்திரன்புதல்வியானபத்ரையென்பவள் அழகில்மிகச்சிறந்தவளாகப் பெயர்பெற்றிருந்தாள். சந்திரன் உசத்யரை அவளுக்குச் சரியானகணவராக நினைத்தான். புகழ்பெற்றமகானுபாவையான அந்தப்பத்ரையும் உக்ரமான தவம் செய்

தாள். சந்திரன் மகானுபாவரானஉசத்யரை அவளுக்காக வரித்தான். பிறகு, சந்திரன் உசத்யரையழைத்து, 'புகழ்பெற்றபத்ரையைக் கொடுக்கிறேன்' என்றுசொன்னான். அந்தஉசத்யரும் மிகுதியான தக்ஷிணைகளைக்கொடுத்துச் சாஸ்திரப்பிரகாரம் அவளை மனைவியாக மணம்செய்தார். ஆனால், சிறந்த ஐஸ்வர்யமுள்ளவருணன் முதலி லேயே அவளைக் காதலித்திருந்தான். அவன் யமுனைக்கரையிலுள்ள வனப்பிரதேசத்திற்குவந்து அவளைத் தூக்கிக்கொண்டுபோனான். ஜலேஸ்வரனானவருணன் அவளையெடுத்துக்கொண்டுமிகஆச்சர்யமாக விளங்குவதும் அறுநூறாயிரம் மடுக்களுள்ளதுமாகிய தனதுநகரத் திற்சேர்ந்தான். அதற்குமேலழகான சிறந்தபட்டணம் மற்றொன்று இல்லை. அது மாளிகைகளாலும் அப்ஸரஸுகளாலும் தேவபோகங் களாலும் விளங்குகிறது. ராஜனே! அந்தப்பட்டணத்தில் ஜலேஸ் வரனானவருணன் அவளுடன்கூடி மகிழ்ந்திருந்தான். இப்படித் தம் மனைவியைப் பறித்துக்கொண்டுபோனதை உசத்யர் நாரதர் சொல்லத் தெரிந்தார். எல்லாவற்றையும்நாரதரிடமிருந்துகேட்டஉசத்யர் அப் போது நாரதரைப்பார்த்து, 'நாரதரே! நீர் வருணனிடத்திற்சென்று, 'நீ என்னுடையமனைவியை விடு. நீ அவளை ஏன்கொண்டுபோனாய்? லோகபாலகனானநீஉலகத்தைக்காப்பவனேயன்றிக் கெடுப்பவனன்று. ஸோமனால்எனக்குக்கொடுக்கப்பட்டமனைவியை நீ இப்போது அப கரித்தாய்' என்று நான்சொன்னதாகக் கடிந்துசொல்லும்' என்று சொன்னார். அவர்சொன்னதன்மேல் நாரதர் வருணனைப்பார்த்து, 'உசத்யருடையபார்யையை நீ ஏன்எடுத்தாய்? அவளை விட்டுவிடு' என்றுசொல்லினர். இவ்வாறு அவர்சொல்லியதைக்கேட்டவருணன் நாரதரைப்பார்த்து, 'எனக்கு இவள்மிகப்பிரியமானபாரியை. இவளை விட எனக்கு மனமில்லை' என்றுசொன்னான். வருணன் இவ்வாறு சொல்ல, நாரதர் அந்தஉசத்யமுனிவரிடம் வந்து மனத்தில் அதிகஸந் தோஷமில்லாமலே, 'மஹாமுனிவரே! வருணனால் பிடர்பிடித்துந் தள்ளப்பட்டேன். அவன் உமதுபாரியையைக் கொடுக்கிறதாகஇல்லை. நீர் செய்யக்கூடியதைச்செய்யும்' என்றுசொன்னார். நாரதர்சொல் லைக்கேட்டஉசத்யர் கோபத்தினால் ஜ்வலித்தார். மிகச்சிறந்ததவ முள்ளஉசத்யர் தம்மகிமையினால் ஜலங்களையெல்லாம் நிற்கச்செய்து குடித்துவிட்டார். ஜலமெல்லாம் குடிக்கப்படும்போது வருணன் அன் பர்களால்வேண்டப்பட்டும் அந்தப்பத்ரையை விடவேயில்லை. பிறகு, பிராம்மணோத்தமரான உசத்தியர் கோபித்துப் பூமியைப்பார்த்து, 'அம்மா! அறுநூறாயிரம்மடுக்களையும் தரையாகக்காண்பி' என்று

சொன்னார். உடனே, ஸமுத்திரம்ஓடிப்போனதனால் பூமியானது [1]மரு காந்தாரமாயிற்று. அந்தப்பிராம்மணோத்தமர் ஸரஸ்வதிநதியைப்பார் த்தும், 'ஸரஸ்வதிநதியே! பயந்தவளே! நீயும் உன்தேசத்தைவிட்டுக் கண்ணுக்குப்புலப்படாமல் மருகாந்தாரத்திற்குச் சென்றுவிடு. சிறந் தவளே ! உன்னால்விடப்பட்டதேசம் புண்ணியமில்லாததாகட்டும் ' என்றுசொன்னார். அப்படி தேசமெல்லாம் புழுதியாகச்செய்யப்பட்ட போது, வருணன் உசத்யர்பார்யையான பத்ரையை அழைத்துவந்து அவரைச்சரணமடைந்து அவருக்குக் கொடுத்தான், பார்யையைப் பெற்றுக்கொண்டபிறகு அந்த உசத்யர் மனமகிழ்ந்து உலகத்தைக் கஷ்டத்திலிருந்து விடுவித்தார். தேவர்களும் துயரமற்றவராயினர். ராஜனே ! தர்மந்தெரிந்தவரும் மிகச் சிறந்த மகிமையுள்ளவருமான அந்தஉசத்யர் அந்தமனைவியையடைந்தபிறகு வருணனுக்குச்சொன் னதைக்கேள். 'ஜலாதிபதியே ! என்தவத்தினால் உன்னை அழைத்து இவளைப் பெற்றுக்கொண்டேன்' என்றுசொல்லி அவளை அழைத்துக் கொண்டு தம்ஆஸ்ரமத்திற்குச் சென்றார். ராஜனே ! இந்த உசத்ய ரென்னும் பிராம்மணஸ்ரேஷ்டர் இப்படிப்பட்டவரென்று சொல்லு கிறேன். உசத்தியரைவிடச் சிறந்தக்ஷத்திரியனை நீ சொல் ' என்றான்.



## இருநூற்றுமபதாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(வாயுவுக்கும் கார்த்தவீர்யார்ஜுனனுக்கும் ஸம்பாஷணை ; அகஸ்திய வஸிஷ்டர்களின் கதை.)

இவ்வாறுசொல்லப்பட்ட அவ்வரசன்பேசாமலிருந்தான். பிறகு, வாயுபகவான் சொல்லலானான். 'அரசனே ! அகஸ்தியரென்னும் பிராம்மணருடையமகிமையைக் கேள். தேவர்கள் அஸுரர்களால் ஜயிக்கப்பட்டு உற்சாகமற்றவர்களாகச் செய்யப்பட்டனர். ஹேஹய தேசாதிபதிகளிற் சிறந்தவனே ! மனிதர்களால்செய்யப்படும் கர்மங்க ளும், தேவர்களுக்குரியயாகங்களும் பித்ருக்களுக்குரியஸ்ராத்தங்க ளும் அஸுரர்களால் அபகரிக்கப்பட்டன. பிறகு, தேவர்கள் ஐஸ்வர் யம்நீங்கிப் பூமியில் திரிந்தனரென்பது பிரஸித்தம். அரசனே! பிறகு, ஒருகால் அந்தத்தேவர்கள் சூரியனைப்போல ஒளியினால் பிரகாசிப்பவ ரும் மகிமையுள்ளவரும் சிறந்ததவமுள்ளவருமான அகஸ்தியரைக்

---

1 நீரில்லாத இடம்.

கண்டனர். ராஜனே! தேவர்கள் அம்மகாத்மாவைநமஸ்கரித்துக் குசலப்ரஸ்னம்செய்து அவருடையஸமயம்பார்த்து,'ஓ! முனிஸ்ரேஷ்டரே! நாங்கள் அஸுரர்களால் யுத்தத்தில் வெல்லப்பட்டு ஐஸ்வர்யமில்லாமற்செய்யப்பட்டோம். ஆதலால், அந்தக் கொடியபயத்திலிருந்து எங்களைக்காப்பாற்றக்கடவீர்' என்று சொன்னார்கள். தேவர்களால் இவ்வாறு சொல்லப்பட்டபோது அந்தமகிமையுள்ளஅகஸ்தியர் கோபித்துப் பிரளயகாலாக்கிபோல ஜ்வலித்தார். மஹாராஜனே! அவருடையஜ்வலிக்கின்றகிரணங்களினால் எரிக்கப்பட்டஅவ்வஸுரர்கள் ஆயிரக்கணக்காக ஆகாயத்திலிருந்து விழுந்தனர். அந்தஅகஸ்தியருடையஒளியினால் சுடப்பட்ட அவ்வஸுரர்கள் தேவலோகம் பூலோகம் இரண்டையும்விட்டுத் தென்றிசையைச் சேர்ந்தனர். பலிசக்கரவர்த்தியானவன் பூமிக்குள்போய் அஸ்வமேதயாகஞ்செய்தான். ராஜனே! பூமியிலும் பாதாளத்திலுமுள்ள மற்றஅஸுரஸ்ரேஷ்டர்கள் அவரால்எரிக்கப்படவில்லை. ராஜனே! உலகங்களைவிட்டுப்போன அஸுரர்கள் பயந்தீர்ந்த தேவர்களால் மறுபடியும் கண்டுபிடிக்கப்பட்டார்கள். பிறகு, தேவர்கள் அகஸ்தியரைநோக்கி, 'பூமியிலிருக்கும்அஸுரர்களைக் கொல்லும்' என்றனர். ராஜனே! இவ்வாறு சொல்லப்பட்ட அகஸ்தியர் தேவர்களைப்பார்த்து, 'பூமியிலுள்ளவர்களைஎரிக்க என்னால்முடியாது. என்தவம் கெடும். நான் எரிக்கமாட்டேன்' என்றுசொன்னார். அரசனே! தவத்தினால் ஆத்மசுத்தமடைந்த அகஸ்தியரால் அஸுரர்கள் அப்போது இவ்வாறு எரிக்கப்படவில்லை. குற்றமற்றவனே! இப்படிப்பட்ட அகஸ்தியரையும் உனக்குச்சொன்னேன். மற்றொருவரையும் சொல்வேன். அகஸ்தியருக்குமேலான க்ஷத்திரியன்இருந்தால் நீ சொல்லலாம்' என்றான். இவ்வாறுசொல்லக்கேட்ட அரசன் அப்போது பேசாமலிருந்தான். பிறகு, வாயுபகவான் சொல்லலானான்.

'ராஜனே! புகழ்பெற்ற வஸிஷ்டருடைய சிறந்த செய்கையைக் கேள். தேவர்கள் [1]வஸிஷ்டருடையமகிமையையறிந்து அவரைமனத்தில் நினைத்துக்கொண்டு கங்கைக்கரைக்குச்சென்று அங்கே வைகானஸமென்னும் தடாகத்தின் அருகில் வானப்ரஸ்தர்செய்யும் முறையாக ஸத்ரயாகஞ் செய்தனர். அவர்கள் எல்லாரும் யாகம்செய்து தீக்ஷையினால் இளைத்திருப்பதைக்கண்டு மலைகளுக்கொப்பான பலிகளென்னும் அஸுரர்கள் அவர்களை அடிக்கக்கருதினர். பிரம்மதேவரால் வரமளிக்கப்பட்ட வைகானஸமென்னுந்தடாகம் அவ்வஸுரர்

---

1 'தத்தஸ்யகௌரவம்' என்று பாடம்கொள்ளப்பட்டது.

களுக்கருகிலிருந்தது. அஸுரர்கள் கொல்லப்படக் கொல்லப்பட அத்தடாகத்தில் முழுகிப்பிழைத்தார். அந்தப்பதினுயிரக்கணக்கான அஸுரர்கள் மிக்கபயங்கரமான மலைகளையும் பரிகாயுதங்களையும்மரங்களையும் எடுத்துக்கொண்டு அந்தஜலத்தை நூறுயோஜனைதூரம் மேலேகிளம்பும்படி கலக்கிக்கொண்டு தேவர்களை எதிர்த்தனர். அப்போது அவர்களால் பீடிக்கப்பட்ட தேவர்கள் இந்திரனைச் சரணமடைந்தனர். இந்திரனும் துயரப்பட்டுக்கொண்டு அவர்களுடன் வஸிஷ்டரைச் சரணமடைந்தான். பிறகு, பகவானுன வஸிஷ்டமகரிஷி அவர்களுக்கு அபயமளித்தார். தயையைமுக்கியமாகக்கொண்ட அம்முனிவர் அப்போது அவர்கள் துக்கப்படுவதையறிந்து பிரகாசிக்கின்றதமதுபிரம்மதேஜஸினல் அஸுரர்களெல்லாரையும் அலக்ஷியமாக எரித்தார். சிறந்த தவமுள்ள அந்தவஸிஷ்டர் கைலாயத்திற்குப் போகும் கங்காநதியை அந்த வைகாநஸமென்னும் சிறந்த தடாகத்தில் கொணர்ந்துவிட்டார். அந்த நதியினல் அந்தத்தடாகம் உடைக்கப்பட்டது. அந்தநதியினல் உடைக்கப்பட்ட தடாகத்திலிருந்து பெருகினதுதான் [1]ஸரயூநதியானது. அந்தப் பலிகளென்னும் அஸுரர்கள் எங்கே கொல்லப்பட்டனரோ அந்தத்தேசமும் பலினமென்று பெயர்பெற்றது. மஹாத்மாவான வஸிஷ்டரால் இவ்வாறு இந்திராதி தேவர்களும் காப்பாற்றப்பட்டனர். பிரம்மாவினல் வரமளிக்கப்பட்ட அஸுரர்களும் அழிக்கப்பட்டனர். குற்றமற்றவனே! வஸிஷ்டரது இந்தச் செய்கையையும் சொன்னேன். மற்றொருவரையும் சொல்வேன். வஸிஷ்டருக்குமேலான க்ஷத்திரியன் யாரையாவது சொல்' என்றான்.

---

## இருநூற்றுபத்தோராவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(வாயுவுக்கும் கார்த்தவீர்யார்ஜுனனுக்கும் ஸம்பாஷணை அத்ரி ச்யவனர்களின் கதை.)

இவ்வாறு சொல்லியதைக்கேட்ட கார்த்தவீரியார்ஜுனன் பேசாமலிருந்தான். அவனைப்பார்த்து வாயு சொல்லலானான். 'ஹேஹயராஜர்களிற் சிறந்தவனே! மிக்கமஹாத்மாவான அத்ரியினுடைய செய்கையைச் சொல்லுகிறேன்; கேள். தேவர்களும் அஸுரர்களும் சேர்ந்து கொடியஇருளில் யுத்தம்செய்தனர். அந்த

---

1 ஸரஸ்=தடாகத்தில், யு=சேர்ந்தது.

யுத்தத்தில் ஸ்வர்ப்பானுஎன்பவன் சந்திரசூரியர்களைப் பாணங்களால் அடித்தான். ராஜஸ்ரேஷ்டனே! அப்போது இருளினால் மூடப்பட்ட அந்தத் தேவர்கள் பலசாலிகளான தானவர்களினால் ஒன்றுசேர்ந்து அடிக்கப்பட்டனர். அஸுரர்களாலடிக்கப்பட்டு வலிமைகுன்றின தேவர்கள் தவம்செய்துகொண்டிருக்கும்பிராம்மணரான அத்ரிமுனிவ வரைக்கண்டனர். கோபமற்றவரும் ஜிதேந்திரியருமான அம்முனிவ ரிடத்தில் தேவர்கள், 'பிரபுவே! இந்தச் சந்திர சூரியர்களிருவரும் அஸுரர்களால் அம்புகளால் அடிக்கப்பட்டனர். இருள் மூடியிருப் பதனால் நாங்களும் பகைவர்களால் அடிக்கப்படுகிறோம். எங்களுக்கு ஸுகமில்லை. இந்தப்பயத்திலிருந்து எங்களைக்காப்பாற்றும்' என்று சொன்னார்கள். அதற்கு அத்ரி, 'உங்களை நான் ரக்ஷிப்பது எப்படி?' என்றுகேட்க, அவர்கள், 'நீர் சந்திரனாகவும் சூரியனாகவும் இருந்து இருளைப்போக்கி எங்கள்சத்துருக்களைக் கொல்லக்கடவீர்' என்று சொன்னார்கள். இவ்வாறு சொல்லக்கேட்ட அத்ரி அப்போதே இரு ளைப்போக்கும் சந்திரனானார். சந்திரன்போலக் காட்சிக்கினியவரான அந்தரிஷி அன்புடன் பார்த்தார். அரசனே! அந்தமஹரிஷி, சந்திர னும் சூரியனும் ஒளியிழந்திருப்பதைப்பார்த்து உடனே தம்தவத்தி னால் அவர்களுக்கு யுத்தகளத்தில் ஒளிகொடுத்தார்; அப்போது உலகத்தையே இருளில்லாமல் பிரகாசிக்கச்செய்தார்; தேவர்களின் சத்துருக்கூட்டங்களையும் தம்ஒளியினால் ஜயித்தார். அம்மஹாஸுரர் கள் அத்திரியினால் எரிக்கப்படுவதைக்கண்டு அவரால் நன்றாகக்காப் பாற்றப்பட்ட தேவர்களும் தங்கள்பராக்கிரமங்களினால் அஸுரர்களை அடித்தனர். உத்தமமான தேஜஸுள்ள அத்திரியினால் சூரியன் ஒளியுண்டாக்கப்பட்டான்; தேவர்கள் காப்பாற்றப்பட்டனர்; அஸு ரர்கள் கொல்லப்பட்டனர். அவர் தாமே சந்திரனாயிருந்தார். ராஜரிஷியே! அக்நியைமட்டும் ஸகாயமாகவைத்துகொண்டு தோலா டையுடுத்துக் கனிகளைப்பக்ஷித்து ஜபம்செய்துகொண்டிருந்த அத்ரி என்னும் பிராம்மணரால் செய்யப்பட்டகாரியத்தைப் பார். சிறந்த மஹாத்மாவான அந்த அத்ரியினுடையகாரியத்தையும் விரிவாகச் சொன்னேன். மற்றொருவரைச் சொல்லட்டுமா? அல்லது, அத்ரிக்கு மேற்பட்டக்ஷத்திரியனை நீ சொல்லுகிறாயா?' என்றான். இவ்வாறு சொல்லப்பட்ட அர்ஜுனன் பேசாமலிருந்தான். பிறகு, வாயு சொல்லலானான்.

'ராஜனே! மஹாத்மாவான ச்யவனருடைய சிறந்தகாரியத்தைக் கேள். ச்யவனர் அஸ்வினீதேவர்களுக்கு வாக்குத்தத்தம்செய்து இந்

திரனைப்பார்த்து, 'அஸ்வினீதேவர்களையும் தேவர்களுடன்சேர்ந்து ஸோமபானம்செய்விக்கக்கடவாய்' என்று சொன்னார். இந்திரன், 'சிறந்ததவமுள்ளவரே! இந்தஅஸ்வினீதேவர்கள் எங்களால் இகழப்பட்டவர்கள். இவர்கள் ஸோமபானம்செய்வதெப்படி? இவர்கள் தேவர்களுக்குச்சமமானவரல்லர். ஆதலால், எங்களை நீர் இப்படிச் சொல்லலாகாது. அஸ்வினீதேவர்களுடன்சேர்ந்து ஸோமபானஞ் செய்ய ஒப்பமாட்டோம். பிராம்மணரே! நீர் வேறுஎதுசொன்னாலும் அதை உமதுசொற்படி செய்வோம்' என்று சொன்னான். ச்யவனர், 'தேவேந்திரனே! இந்த அஸ்வினீதேவர்களும் உங்களுடன்சேர்ந்து ஸோமரஸத்தைக் குடிக்கட்டும். இவ்விருவரும் சூரியபுத்திரர்கள்; தேவர்கள். ஓ! தேவர்களே! நான்சொல்வதை நான் சொன்னபடி செய்யுங்கள். இதைச்செய்தால் உங்களுக்கு நன்மையுண்டாகும்; செய்யாவிடில் உண்டாகாது' என்றுசொன்னார். இந்திரன், 'பிராம்மணோத்தமரே! நான் அஸ்வினீதேவர்களோடுகூட ஸோமபானஞ் செய்யேன். மற்றவர்கள் இஷ்டமிருந்தால் குடிக்கட்டும்; எனக்குக் குடிக்கஇஷ்டமில்லை' என்றுசொன்னான். ச்யவனர், 'பலாஸுரனைக்கொன்றவனே! நான்சொன்னதைச்செய்யாவிட்டால் என்னால் நிர்ப்பந்தம்செய்யப்பட்டு இப்போதே யாகத்தில் ஸோமரஸத்தைக் குடிப்பாய்' என்றுசொன்னார். பிறகு, அஸ்வினீதேவர்களின் நன்மைக்காக ச்யவனரால் ஒருயாகம் ஆரம்பிக்கப்பட்டது. அதில் மந்திரங்களினால் தேவர்கள் அவமதிப்பை அடைந்தனர். அந்தக்கிரியையாரம்பித்ததைக்கண்டு பகவானான இந்திரன் கோபத்தினால் கண்கள் கலங்கிப் பெரியமலையையும் வஜ்ராயுதத்தையும் ஓங்கிக்கொண்டு ச்யவனரிடம்ஓடினான். சிறந்ததவமுள்ளச்யவனர் அவன்வரவைக்கண்டவுடன் ஜலத்தினால் ப்ரோக்ஷித்து வஜ்ராயுதத்தோடும் பர்வதத்தோடுங்கூடவே இந்திரனை நிறுத்திவிட்டார். அம்மகரிஷி உடனே தமது ஆஹுதிகளினால் வாயைத்திறந்துகொண்டிருக்கும் மிகக்கொடியவனை மதனென்னும்இந்திரசத்துருவைஉண்டுபண்ணினார். அவனுக்கு நூறுயோஜனைநீளமுள்ள ஆயிரம்பற்களிருந்தன. அவனுடையகோரப்பற்கள் இருநூறுயோஜனை நீளமுள்ளவை; மிக்க பயங்கரமானவை; அவனுடையமேவாய் பூமியிலிருந்தது; வாயின்மேற்பாகம் ஆகாயத்தைத்தொட்டது. இந்திரன்முதலிய தேவர்களனைவரும் பெருங்கடலில் பெரியமீன்வாயில்அகப்பட்டசிறுமீன்கள்போல் அவன்தொண்டையிலிருந்தனர். அந்தமதனுடையஸமீபத்தில்கப்பட்ட தேவர்கள் ஒன்றுசேர்ந்து ஆலோசித்து இந்திரனைப்பார்த்து, 'இந்தப்பிராம்

மணரை நமஸ்காரம்செய்.' அஸ்வினீதேவர்களுடன் நாம் ஸோமத்தைக்குடித்துப்பயமில்லாமலிருப்போம்' என்றுசொன்னார்கள். பிறகு, இந்திரன் அந்தச்யவனருக்குவணங்கி அவர்சொன்னதைச்செய்தான். ச்யவனர் இப்படி இந்த அஸ்வினீதேவர்களை ஸோமபானத்திற்குரியவர்களாகச் செய்தார். பிறகு, அம்முனிவர் அந்தக்கிரியையை முடித்தார். பிறகு, சக்தியுள்ளஅம்முனிவர் அந்தமதனைச் சூதாட்டங்களிலும் வேட்டையிலும் மதுபானத்திலும் ஸ்திரீகளிடத்திலும் பிரித்துவிட்டார். ராஜனே! அதனால்தான், மனிதர்கள் (சூதாட்டமுதலிய) இந்தத்தீமைகளால் நிச்சயமாய்க் கெடுகின்றனர். ஆதலால், மனிதன் இக்குற்றங்களை எப்போதும் தூரத்தில்விடவேண்டும். ராஜனே! இந்தச்யவனருடையசெய்கையையும் உனக்குச் சொன்னேன். மற்றொருவரையும் சொல்லட்டுமா? நீயாவது பிராம்மணனுக்கு மேலானக்ஷத்திரியனைச் சொல்லுகிறாயா?'' என்றான்.

## இருநூற்றுமுபத்திரண்டாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(வாயுவுக்கும் கார்த்தவீர்யார்ஜுனனுக்கும்ஸம்பாஷணை ; பூமியும் ஸ்வர்க்கமும் கபர்களால் ஆக்ரமிக்கப்பட்டதும், தேவர்கள் ப்ராம்மணர்களால் அவற்றைத் திரும்பப்பெற்றதும், கார்த்தவீரியார்ஜுனனுக்கு ப்ராம்மணர்களால் பயமுண்டாகப்போவதும்.)

"கார்த்தவீர்யார்ஜுனன் பேசாமலிருந்தான். வாயுபகவான் திரும்பவும் பேசலானான்.

'ராஜனே! பிராம்மணர்களிடத்திலேயே முக்கியமானகிரியையிருப்பதை என்னிடங்கேள். எப்போது இந்திரன்முதலானதேவர்கள் மதன்வாயில் அகப்பட்டுக்கொண்டனரோ அப்போதே ச்யவனரால் அவர்களின்ஸ்வர்க்கமும் பூமியும் எடுத்துக்கொள்ளப்பட்டன. இரண்டுலோகங்களும் அபகரிக்கப்பட்டதைக்கண்டு அந்தத்தேவர்கள் துன்பமடைந்தனர். அவர்கள் வியஸனத்தினால்வாடி மகாத்மாவானபிரம்மதேவனைச் சரணமடைந்து, 'உலகங்களால்பூஜிக்கப்பட்டவரே! பிரபுவே! நாங்கள் மதனுடையவாயிலகப்பட்டுக்கொண்டிருக்கையில் ச்யவனர், கபர்களைக்கொண்டு பூமியையும் ஸ்வர்க்கத்தையும் அபகரிக்கச்செய்தார்' என்றுசொன்னார்கள். அதைக்கேட்டு, பிரம்மா, 'ஓ! இந்திராதிதேவர்களே! உடனே பிராம்மணர்களைச்

சரணமடையுங்கள். அவர்களைஸந்தோஷப்படுத்தினபிறகு முன்போல இரண்டுலகங்களையும் பெறுவீர்கள்' என்றுசொன்னார். பிறகு, அந்தத்தேவர்கள் பிராம்மணர்களைச் சரணமடைந்தனர். அந்தப்பிராம்மணர்கள், 'நாங்கள் யாரை ஜயிக்கவேண்டும்?' என்றுகேட்டனர். இவ்வாறுகேட்க, அந்தத்தேவர்கள் அந்தப்பிராம்மணர்களைப்பார்த்து, 'இப்போது கபர்களை நீங்கள் ஜயிக்கக்கடவீர்கள்' என்றுகூறினர். பிராம்மணர்கள், 'பூமியிலிருப்பவர்களை நாங்கள் ஜயிப்போம்' என்று சொன்னார்கள். பிறகு, அந்தப்பிராம்மணர்கள் கபர்களை அழிப்பதற்காக ஒருகிரியைசெய்யத்தொடங்கினர். அதைக்கேட்ட கபர்களால் தனியென்னுந்தூதன் பிராம்மணர்களிடம் அனுப்பப்பட்டான். அந்தத்தனியென்பவன் அந்தப்பிராம்மணர்களைப் பார்த்துக் கபர்கள் சொல்லியனுப்பியபடி, 'கபர்களெல்லாரும் உங்களுக்குச்சமமானவர்கள். இங்கே என்னகாரியம் நடக்கிறது? கபர்களெல்லாரும் வேதந்தெரிந்தவர்கள்; எல்லாரும் ஞானிகள்; எல்லாரும் யாகஞ்செய்பவர்கள்; எல்லாரும் ஸத்யத்தையே வ்ரதமாகக்கொண்டவர்கள்; எல்லாரும் மகரிஷிகளுக்கொப்பானவர்கள்; அவர்களிடத்தில் லக்ஷ்மியானவள் அன்புவைத்திருக்கிறாள். அவர்கள் லக்ஷ்மியைக் காப்பாற்றிக்கொண்டிருக்கிறார்கள்; ஸந்ததியுண்டாகாமல் வீணாக மனைவிகளைச் சேருவதில்லை; வீணாகப் புலாலுண்பதில்லை; ஜ்வலிக்கின்ற அக்நியில் ஹோமஞ்செய்கின்றனர்; ஆசாரியர் சொல்லில் அடங்கியிருக்கின்றனர்; எல்லாரும் மனத்தைஜயித்தவர்கள்; சிறுவருக்கும் பங்குகொடுத்து அனுபவிப்பவர்கள்; மெதுவாகவந்து மெதுவாகப்போகின்றனர்; ரஜஸ்வலையாயிருக்கும் பெண்ணைச் சேருவதில்லை; ஸ்வர்க்கம் போகிறவர்; நற்கருமங்களுள்ளவர்; கர்ப்பமுள்ள பெண்கள் கிழவர் முதலானவர்கள் புசியாமலிருக்கத் தாங்கள் புசிப்பதில்லை; முற்பகல்களில் சொக்கட்டான் ஆடுவதில்லை; பகலில் தூங்குவதில்லை; இவையும் இன்னும் பலவுமான குணங்களுள்ளகபர்களை நீங்கள் எப்படி ஜயிப்பீர்கள்? திரும்புங்கள். திரும்பினால்தான் உங்களுக்கு ஸுகம்' என்றான். பிராம்மணர்கள், 'கபர்களை நாங்கள் வெல்வோம். தேவர்களென்பவர் நாங்களே. ஆதலால், கபர்கள் எங்களால் கொல்லப்படத்தக்கவர். தனியே! வந்தவாறே செல்' என்று சொன்னார்கள். தனியானவன் கபர்களிடத்திற்சென்று, 'பிராம்மணர்கள் உங்கள் விருப்பத்தைச் செய்கிறவர்களாயில்லை' என்று சொன்னான். பிறகு, கபர்களனைவரும் அஸ்திரங்களை எடுத்துக்கொண்டு பிராம்மணர்களை எதிர்த்துப் போயினர். கொடிகளெடுத்துவருங்கபர்களைக்கண்டு பிராம்மணர்க

ளனைவரும் கபர்களின் உயிரைப் போக்குவதற்காக ஜ்வலிக்கின்ற த்ரேதாக்னிகளை அனுப்பினர்,ராஜனே! அழியாத அக்னிகள் பிராம் மணர்களாலனுப்பப்பட்டுக் கபர்களைக்கொன்று ஆகாயத்தில் மேகங் கள்போல விளங்கின. தேவர்களனைவருஞ்சேர்ந்து போரில் அஸுரர் களைக்கொன்றனர்,கபர்கள் பிராம்மணர்களாற் கொல்லப்பட்டனரென் பதை அப்போது அந்தத்தேவர்களறியவில்லை,பிரபுவே! பிறகு, சிறந்த மகிமையுள்ள நாரதர் வந்து, 'மஹானுபாவர்களான பிராம்மணர்கள் தங்கள் பிரம்மதேஜஸினால் கபர்களை அழித்தார்கள்' என்றுசொன் னார். தேவர்களனைவரும் நாரதர்சொல்லைக்கேட்டு, சிறந்த புகழ்பெற்ற வேதந்தெரிந்த பிராம்மணர்களைத் துதித்தனர். அதன்பிறகு, அந்தத் தேவர்களுக்கு ஒளியுஞ்சக்தியும் அதிகரித்தன. மூன்று உலகங்களி லும் கொண்டாடப்படும் அமரத்தன்மையையும் அவர்களடைந்தனர்' என்றான்.

சிறந்தகைகளையுடைய தர்மராஜனே! இவ்வாறுசொல்லிமுடித்த வாயுபகவானைக் கொண்டாடி, கார்த்தவீர்யார்ஜுனன் மறுமொழி சொன்னதைக்கேள். அவன், 'பிரபுவே! நான் எக்காலமும் எல்லாவகை யாலும் பிராம்மணர்களுக்காகவே பிழைத்திருக்கிறேன். பிராம்மணர் கள்மேல் அன்புவைத்து எக்காலமும் பிராம்மணர்களுக்கு நமஸ்காரம் செய்கிறேன்.தத்தாத்ரேயருடைய அனுக்கிரகத்தினாலேதான் நான்இந் தச் சக்தியையும் உலகத்தில் சிறந்தபுகழையும் அடைந்து பெருந்தர் மத்தைச் செய்திருக்கிறேன். ஆ! ஆ! வாயுபகவானே! பிராம்மணர் களின் செய்கைகளை எனக்கு நீ உண்மையாகச் சொன்னாய்! நானும் ஊக்கத்துடன் முழுதும் அவற்றைக் கேட்டேன்' என்றுசொன்னான். வாயுபகவான், 'இந்திரியங்களையடக்கி க்ஷத்திரியதர்மத்தோடு பிராம்மணர்களைப் பரிபாலனஞ் செய். உனக்குப் பிராம்மணர்களாலே கொடிய பயமிருக்கிறது. ஆனால், அது காலங்கழித்துவரும்' என்று சொன்னான்" என்றார்.

## இருநூற்றுறுபத்துமூன்றாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(கிருஷ்ணபகவானுடைய மகிமை.)

யுதிஷ்டிரர், "அரசரே! நியமந்தவறாத பிராம்மணர்களை நீர் எக்காலமும் பூஜிக்கிறீர். ஜனங்களுக்கதிபதியே! என்ன விசேஷதர் மத்தைக்கண்டு அவர்களைப் பூஜிக்கிறீர்? சிறந்த விரதமுள்ளவரே!

சிறந்த கைகளையுடையவரே! பிராம்மண பூஜையில் என்னபலனைக் கண்டு அவர்களைப் பூஜிக்கிறீர்? அதை முழுதும் எனக்குச்சொல் லும்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"சிறந்த நியமமுள்ளவனே! பிராம்மணபூஜையிலுள்ள லாபத் தையும் நன்மையையும்கண்டிருக்கும் சிறந்தஞானியான இந்தவாஸு தேவர் உனக்கு எல்லாவற்றையும்சொல்வார். எனக்கு இப்போது தேகவன்மையும் காது வாக்கு மனம் கண்களின் அறிவுமாகிய இவை யொன்றும் தெளிவாயில்லை. தேகத்தை விடுவது இனி அதிகதாமத மிராதென்று நினைக்கிறேன். இப்போது சூரியன் அதிகவிரைவாகப் போகவில்லை. ராஜனே! குந்திபுத்திரனே! தர்மத்தை அனுஷ்டிக்கும் பிரம்மக்ஷத்திரியவைஶ்யசூத்திரர்களுக்குப் புராணங்களிற்சொல்லப் பட்டசிறந்ததர்மங்களைக் கிருஷ்ணனிடத்தில்தெரிந்துகொள். இந்தவா ஸுதேவர் யாரென்றும் இவருடையபூர்விகமானசக்திஎதுவென்றும் இவருடையஉண்மையை நான்தானே அறிவேன். கௌரவராஜனே! கிருஷ்ணபகவானுடையஸ்வரூபத்தை அறியமுடியாது. அவர் இப் போது இந்தத்தர்மமெல்லாவற்றையும் உனக்குச் சொல்வர். இவர் பூமியையும் ஆகாயத்தையும் ஸ்வர்க்கத்தையும்படைத்தவர். இவரு டைய தேகத்திலிருந்துதான் பூமியுண்டாயிற்று. இவரே எதிரிகளுக் குப்பயங்கரமான பலமுள்ள ஆதிவராகர். இவர் தாம்மலைகளையும்திசை களையும்உண்டாக்கினவர். காற்றும் ஆகாயமும் மேலுலகமும் நான்கு திசைகளும் நான்குமூலைகளும் ஆகிய இவ்வுலகமனைத்தும் இவரிடத் திலிருந்து பிறந்தவை. எல்லாவற்றிற்கும் முதன்மையான இவர்தாம் இவ்வுலகத்தைப் படைத்தவர். குந்திபுத்திரனே! தாமே அளவற்ற மகிமையுள்ளபிரம்மதேவராகஎந்தக்கமலத்திலுண்டானாரோ, அந்தப் பயங்கரமான பிரளயகாலத்திருள் இவரால் எதனால் போக்கப்பட் டதோ, அவருக்குப்படுக்கையாயுள்ள கடல்கள் எதிலிருக்கின்றன வோ அந்தக்கமலமானது இவரதுநாபியிலிருந்து பிறந்தது. குந்தி புத்ரனே! இந்தக்கிருஷ்ணமூர்த்தி கிருதயுகத்தில் நிரம்பினதர்மமா யிருந்தார்; த்ரேதாயுகத்தில் யாகரூபத்தையடைந்தார்; த்வாபரயுக த்தில் தேகவன்மையாயிருந்தார்; கலியில் அதர்மமாகப் பூமியிலேயே அவதரித்திருக்கிறார். இவர்தாம் முற்காலத்தில் அஸுரர்களைக் கொன்றார். இவரே தேவர்களையெல்லாம்ஆளும் தேவராகவுமிருந்தார். பிராணிகளையுண்டாக்குகிறவரும் பிராணிகளுக்கு மங்களங்களைக் கொடுக்கிறவரும் இவரே. இவ்வுலகமனைத்தையும்காப்பவரும் இவரே. 1 தேவர்களின்பக்ஷத்தில் தர்மம் எப்போது குறைகிறதோ அப்போது

1 யோக்கியர்கள்.

இவர் மனிதரிற்பிறக்கிறார்; பரிசுத்தாத்மாவான இவர்தாம் தர்மத்தி லிருந்துகொண்டே மேலுலகங்களையும் கீழுலகங்களையும் காப்பாற்று கிறார்; அஸுரர்களைவதஞ்செய்து விடவேண்டியவற்றைவிட்டுக்காரிய காரணங்களையும் நித்தியமான ஆத்மாக்களையும் காப்பாற்றுகிறார். செய்யப்பட்டதும் செய்யப்படுகிறதும் இனிச்செய்யப்படுவதும் இந்தக் கிருஷ்ணன்தான். ராகுவும் சந்திரனும் இந்திரனும் இவரே என்றறி. எல்லாநற்கருமங்களையும் பெறுகிறவரும் உலகம்யாவுந்தாமாயிருப்பவரும்எல்லாவற்றையுங்காப்பவரும் படைப்பவரும் எல்லாவற்றையும் ஜயிப்பவரும் இவர்தாம். இவர்தாம் சிவன். இவர்தாம் ரத்தத்தைப் போஷிக்கும்தேகவியாபியான பிராணன். புண்ணியகர்மம்செய்தவர் இவரையறிந்து துதிக்கின்றனர். அநேகநூற்றுக்கணக்கானகந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் தேவர்களும் எக்காலமும் இவரைப்பணி கின்றனர். ராக்ஷஸர்களும் இவரையே பேசுகின்றனர். அரசர்களை எல்லாம் வெல்லக்கருதுகிற ஒப்பற்றவீரர் இவர்தாம். யாகங்களில் சஸ்திரமந்திரங்களைச்சொல்லித்துதிப்பது இவரைத்தான். ஸாமகர்களும் ரதந்தரமென்னும் ஸாமத்தினால் இவரையே துதிக்கின்றனர். பிராம்மணர்கள் காயத்திரிமுதலானமந்திரங்களினால் இவரையேதுதிக்கின்றனர். அத்வர்யுக்களென்னும் ரித்விக்குக்கள் ஹோமஞ்செய்யப் படும்நெய்முதலியவற்றை இவருக்காகவே ஹவிஸாகஉண்டுபண்ணுகின்றனர். பாரதனே! இவர்தாம் பிரளயகாலத்தில் அநாதியாயுள்ள பிரம்மருகைஎன்னும்மூலப்ரகிருதியில் பிரவேசித்தார். ஆதிகாலத்தில் இவர்தாம் பூமிஸ்ருஷ்டியைக் கண்டவர். சிறந்தசெய்கையையுடைய இவர்தாம் தைத்தியர்களையும் தானவர்களையும் நாகர்களையும்ஜயித்துக் கடலில்முழுகினபூமியைத்தூக்கினார். பாரதனே! இந்திராதிதேவர்கள், இடைச்சேரிக்காகக் கோவர்த்தனம்எடுத்த இவரை வேதவாக்குக்களினால்துதித்தனர். இவர்ஒருவர்தாம் [1]பசுக்களுக்கு ஈஸ்வரர். இவருக்கே பலவகைப்பக்ஷணங்களைநிவேதனம்செய்கின்றனர். இவரையேயுத்தங்களைநடத்துகிறவராகநினைக்கின்றனர். ஆகாயம் பூமி மேலுலகம்இவை அனைத்தும் நித்யரானஇவருக்கு உட்பட்டிருக்கின்றன. இவர்தாம் [2] குடத்தில் (மித்திராவருணரென்னும்) தேவர்களின்ரேதஸை விடுவித்தவர். அதிலிருந்துதான் வஸிஷ்டமஹரிஷியுண்டானதாகச்சொல்லுகின்றனர். இவரே காற்று. வேகமுள்ளகுதிரையாகச்சொல்லப் படும்அக்கினியும் இந்தப்பிரபுவே. கிரணங்களோடுகூடிய சூரியனும்

1 கோலோகத்திற்கும் ஆத்மாவிற்குமென்பது. [பது.

2 இவர்சக்தி பிரவேசிக்காமல் அவ்வளவுமகிமையுள்ளரிஷி உண்டாகாரென்

இவரே. இவரே ஆதிதேவர். இவரால்அஸுரர்களனைவரும் வெல்லப் பட்டனர். இவர்காலடிகளால் மூன்றுலகங்களும் ஜயிக்கப்பட்டன. தேவர்களிலும் மனிதர்களிலும் பித்ருக்களிலும் இவரே இருப்பவர். யாகத்தை அறிந்தவர்கள் இவரையே யாகமென்றுசொல்லுகின்றனர். காலத்தைப்பிரித்துக்கொண்டு உதயமாகும்சூரியபகவான் இவரே.உத்தராயணம் தக்ஷிணாயனம்இரண்டும் இவருடையவையே. இவருடைய கிரணங்களே பூமியில் ஒளியையுண்டாக்கிக்கொண்டு மேலும் கீழும் குறுக்கிலும் பரவுகின்றன.வேதந்தெரிந்தபிராம்மணர்கள் இவரையே அடைகின்றனர். இவருடையகிரணங்களை உபயோகப்படுத்திக்கொண்டுதான் சூரியன் பிரகாசிக்கிறான். இவர்தாம் யாகங்களுக்காக [1]ஒவ்வொருமாஸத்தையும்பிரிக்கிறார். வேதந்தெரிந்தவர்கள் [2]இவரையே யாகங்களில் ஓதுகின்றனர். [3]மூன்றுநாபிகளோடுகூடியதும் ஏழுகுதிரைகள்பூட்டியதுமாகிய இந்தக்காலசக்கரத்தை நடத்துகிறவரும், [4]மூன்றுஇடங்களையுடையவரும் இவரே. [5]ஹிரண்மயரும் [6]ஏழுதாதுக்களுள் மறைந்திருப்பவரும் ஸர்வஜ்ஞரும் நாலுகைகளுள்ளவரும்.ஆதிசேஷரூபியும்பத்மநாபரும் பேரொளியுள்ளவரும் ஸர்வவியாபியும் எல்லாவற்றையும் ஸம்ஹரிப்பவருமாகிய கிருஷ்ணன் ஒருவரே உலகங்களைத் தாங்குகிறவர். வீரனே ! குந்தீபுத்ரனே ! இந்தக்கிருஷ்ணனையே இருளைப்போக்கும் ஹம்ஸன்என்னப்படும் ஸூர்யனாகவும் சிருஷ்டிகர்த்தாவானபிரம்மதேவராகவும் எப்போதும் அறி. மஹாத்மாவான இந்தப்பிரபுதான் ஒருகாலத்தில் காண்டவவனத்தில் அக்னியாக ,மரங்களில்பற்றித திருப்தியடைந்தவர். எங்கும்வியாபியான இவர்தாம் ராக்ஷஸர்களையும் நாகர்களையும்வென்று எல்லாவற்றையும் காண்டவாக்னியில் ஹோமம்செய்தவர். இவர்தாம் அர்ஜுனனுக்கு வெள்ளைக்குதிரைகொடுத்தவர். எல்லாக்குதிரைகளையும் உண்டு பண்ணினவர் இவர்தாம். [7]மூன்றுசக்கரங்களும் [8]மூன்றுதலைகளும்

---

1 சந்திரனாயிருந்து தம்கலைகளால் தேவர்களுக்குஅமிருதம்கொடுத்து அமாவாசைவரையிலும் ஒவ்வொருமாஸத்தையும் பிரிக்கிறார்என்பது.

2 மந்திரமூர்த்தியென்பது.

3 அச்சுப்போடுங்குழை; 'த்ரிநாபி' என்பதற்கு 'குளிர், வெப்பம்மழை என்னும்மூன்றுகாலங்களை நாபியென்கிற கர்ப்பத்திலுடையது' என்பதும், 'த்ரிஸாமா' என்பதற்கு, மழை காற்று வெப்பம் என்று மூன்று விதமும் சூரியனோடுகூடியதுமாகிய ஸம்வத்ஸரசக்கரத்தை நடத்துகிறவரும் இவரே' என்பதும்பழையவுரை.

4 வைகுண்டம், திருப்பாற்கடல்,சூரியன்.

5 எல்லாருக்கும இதமாகவும் ரமணீயமாகவுமிருப்பவர்.

6 சாந்திபர்வம், 629-ம் பக்கம்குறிப்பிற்காண்க.

7 முக்குணங்கள். 8 ப்ரகிருதி புருஷன் காலம்.

[1] மூன்றுநாபிகளுமுள்ளதும், மூன்று [2]சுற்றுள்ளதும்[3]நான்குகுதிரைகள்கட்டினதுமாகிய அழகான [4]ரதம் இவருடையது. பஞ்சபூதங்களுக்கும்ஆதாரமாயுள்ள இவர் பூமியையும் ஸ்வர்க்கத்தையும் ஆகாயத்தையும் இடைவெளியையும் காடுகளையும் மலைகளையும் படைத்தார். இவரே ஐம்புலன்களையும் நடத்துகிறவர்; ஜ்வலிக்கின்ற அக்னிக்கொப்பான அளவற்றஒளியுள்ளவர்; பகைவரைக்கொல்வதற்கு [5] நதிகளைக்கடந்தார்; [6]வஜ்ராயுதத்தைப்ரயோகிக்கும் இந்திரனை ஜயித்தார். பெரியயாகங்களில் பிராம்மணர்களால் பழமையானஅநேகமந்திரங்களைச்சொல்லி மஹேந்திரனென்று துதிக்கப்படுகிறவர் இவரே. ராஜனே! பெரியமகிமையுள்ள துர்வாஸமுனிவரைவீட்டில்வைத்துக்கொள்வது இவர்தவிரமற்றெவராலும் முடியாது. இவரையே ஒப்பற்ற ஆதிரிஷிஎன்று சொல்லுகின்றனர். உலகங்களைப்படைக்கும் இவரே ஜனங்களைத் தம்மிடத்தில் பக்தியுள்ளவர்களாகச் செய்கிறார். தேவருக்குந்தேவரானஇவரே வேதங்களைஉபதேசிப்பவர். இவரே பழமையானசாஸ்திரோக்தகர்மங்களை அனுஷ்டிப்பவர். வேதத்திற்சொல்லப்படுபவையும்உலகத்திலுள்ளவையுமாகிய காம்யபலன்களனைத்தும்இந்தக்கிருஷ்ணனேஎன்றறி. எல்லாஉலகங்களிலும்தெளிவாகப்பிரகாசிக்கும் சூரியன் அக்நிமுதலானதேஜஸுகளும் மூவுலகங்களும் உலகங்களைக்காப்பவராகியமும்மூர்த்திகளும் த்ரேதாக்நிகளும், 'பூ: புவ: ஸுவ:' என்னும் மூன்று வியாஹ்ருதிகளும் எல்லாத்தேவர்களும் கிருஷ்ணனே. வருஷம், ருது, பக்ஷம், இரவுபகல்கள், [7]கலை, [8] காஷ்டை, [9]மாத்திரை, [10]முகூர்த்தம், [11]லவம், [12]க்ஷணம்இவைஎல்லாம் கிருஷ்ணன்என்றே அறி. குந்திபுத்திரனே! சந்திரசூரியர்கள், மற்றக்கிரகங்கள், அஸ்விநிமுதலியநக்ஷத்திரங்கள், ஸாதாரண நக்ஷத்திரங்கள், அமாவாஸை, பூர்ணிமை, நக்ஷத்திரங்களைச்

---

1 மூன்றுகாலங்கள். 2 மூன்றுஉலகங்கள்.

3 அறம், பொருள், இன்பம், வீடு.

4 மூலப்ரகிருதி,ஸம்ஸாரத்தைப்பூட்டுகிறவர்; 'ஸத்வம்,ரஜஸ்,தமஸ்என்னும்மூன்றுசக்கரங்களுடையதும் மேல்நடுகீழ்என்னும் மூன்றுபலகையுடையதும் காலம், அதிருஷ்டம், ஈஸ்வரஸங்கல்பம், தனதுஸங்கல்பம் என்னும் நான்குகுதிரைகளையுடையதும் சுக்கிலம் கிருஷ்ணம் சுக்கிலகிருஷ்ணம் என்று மூன்றுகர்ப்பத்திலுடையதுமானரதம் அவருடையது' என்பது பழையவுரை.

5 ராமாவதாரத்திலென்பது. 6 கருடரூபியென்பது.

7 முப்பதுகாஷ்டைகள். 8 பதினெட்டுநொடிக்காலம்.

9 ஒருநொடி. 10 பன்னிரண்டுக்ஷணம்; அல்லது, இரண்டுநாழிகை.

11 இமைகொடிக்கும்சிறியகாலம்; அணுஎன்னப்படுவது.

12 முப்பதுகலைகள்.

சேர்ந்த த்ருவ்முதலியயோகங்கள், வஸந்தமுதலியருதுக்கள் இவையனைத்தும் கிருஷ்ணனிடத்திலிருந்து உண்டானவை. ருத்ரர்கள், ஆதித்யர்கள், வஸுக்கள், அஸ்வினீதேவர்கள், ஸாத்யர்கள், விஸ்வே தேவர்கள், மருத்துக்கள், ஸ்ருஷ்டிகர்த்தாவான கஸ்யபர், தேவமாதாவான அதிதி, ஸப்தரிஷிகள் இவரனைவரும்கிருஷ்ணனிடத்திலுண்டானவர். விஸ்வரூபியான இந்தக்கிருஷ்ணன் காற்றுயிருந்து எல்லாவற்றையும் தள்ளுகிறார் அக்னியாயிருந்து எரிக்கிறார். ஜலமாகி எல்லாவற்றையும் நனைக்கிறார். பிரம்மாவாக விருந்து உலகங்கள் எல்லாவற்றையும் படைக்கிறார். தாமே அறியத்தக்க பரம்பொருளாயிருந்து அறியத்தக்கபரம்பொருளை அறிவிக்கிறார். தாமே சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டகர்மரூபியாயிருந்து சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டகர்மங்களைச் செய்கிறார். தர்மத்திலும் வேதத்திலும் பலத்திலும் இவரே சிறந்தவர். சராசரங்களனைத்தும்கிருஷ்ணனேயென்று நீ அறி. விஸ்வரூபரான இந்தப்பரமபுருஷரே முதலில் சூரியனுயிருந்து ஒளியினால் பிரகாசித்தவர். எல்லாப்பிராணிகளுக்கும் ஆத்மாவாகவும் காரணமாகவுமிருக்குமிவர், முதலில் ஜலத்தைச்சிருஷ்டித்துப் பிறகு எல்லா உலகங்களையும்படைத்தார். வஸந்தமுதலானருதுக்களும் உத்பாதங்களும் பலவகைஆச்சரியங்களும் மேகம், மின்னல், ஐராவதம், ஸ்தாவரம், ஜங்கமம்அனைத்தும் கிருஷ்ணனிடத்திலிருந்து உண்டானவை என்றுஅறி. இவரை எல்லாருக்கும் ஆத்மாவானவிஷ்ணுவென்றுஅறி. [1] குணங்களென்றுசொல்லப்படும் ப்ரகிருதிக்குவெளிப்பட்டவரான இவரை உலகங்களுக்காதாரமாகவும் உலகங்களுக்குஅந்தர்யாமியாகவும்இருப்பதனால் வாஸுதேவரென்றும் ஜீவாத்மாக்களுக்கு அதிஷ்டானதேவதையாயிருப்பதனால்ஸங்கர்ஷணரென்றும்('த்யும்நம்' என்னும் தனம்போன்ற ஸுகத்தைத்தருவதனால்) பிரத்யும்னரென்றும் (தடையை நீக்கிப் பிரவ்ருத்தியையுண்டாக்குவதனால்) நாலாவதான அநிருத்தரென்றும் சொல்லுகின்றனர். தாமே தமக்குஆத்மாவாயுள்ள இம்மகாத்மாவானவர் எல்லாவற்றையும் ஆஜ்ஞாபிக்கிறார். குந்திபுத்திரனே ! [2]ஐந்து குணங்களோடுகூடி இவ்வுலகத்தைப் படைக்கத்தொடங்கி [3]ஐந்துவகைகளால் நடத்துவதற்காகப் பூமி காற்று ஆகாயம் தேயு அப்பு இவற்றை உண்டுபண்ணினார். அவர் ஜங்கமத்தையும்ஸ்தாவரத்தையும் [4]இந்நான்குவகைப் பிராணிகளையும் படைத்து அதன்

---

1 'நிர்க்குணம்' என்பதுமூலம்.

2 சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்தங்கள்.

3 சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், நிக்ரஹம், அனுக்ரஹம்.

4 ஆதிபர்வம் 57-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

பிறகு ஆகாயம், பூமி, அக்நி, ஜலம், வாயுவென்னும் ஐந்துகாரணங்க ளடங்கியபூமியைப் படைத்தார். ராஜனே! *இவ்வுலகம் இவரால் படைக்கப்பட்டதென்றறி. தம்க்குத்தாமேகாரணமாகவுடைய இவர் தம்மாலேயே இவற்றைக் காப்பாற்றுகிறார். மேன்மேலும் சிருஷ்டிக் கக்கருதின இந்தஈஸ்வரர் தேவர்கள் அஸுரர்கள் மனிதர்கள் ரிஷிகள் பித்ருக்கள்முதலான ஜனங்களையும் பர்பலஉலகங்களனைத்தையும் எப் போதும்காப்பாற்றுகிறார். நன்மை தீமைகள் ஜங்கமஸ்தாவரங்கள் இவையனைத்தும் கிருஷ்ணனாலுண்டானவையென்றறி. இவ்வுலகத் தில் எது இருக்கிறதோ, எது வரப்போகிறதோ அவையனைத்தும் கிருஷ்ணனென்றறி. தேகமெடுத்தபிராணிகளுக்கு முடிவுக்காலத் தில்வரும்யமனும் ஸாக்ஷாத் விஷ்ணுவாகியகிருஷ்ணனே. இவ்வுல கத்தில் நமக்குத்தெரியாதபொருள்கள் என்ன இருக்கின்றனவோ அவையனைத்தும் கிருஷ்ணனாலுண்டானவையென்றறி. உலகங்களில் சிறந்தவைகளும் புண்ணியமும் ஸுகதுக்கங்களும் ஆகியஎல்லாம் சிந்தைக்கெட்டாத இந்தக்கிருஷ்ணன்தான். இவருக்கு மேலானது ஒன்றுமில்லை. கிருஷ்ணன் இப்படிப்பட்டவர்; இங்கே சொல்லிய வைகளுக்கும் மேற்பட்டவர். எல்லாரிலுஞ்சிறந்தவரும் குற்றமற்ற வரும் சராசரங்களின் ஆதிமத்தியாந்தங்களுக்குக் காரணமானவரும் மோக்ஷத்தைவிரும்புகிறவருக்கு ஆதாரமும் அழிவில்லாதவருமான நாராயணர் இவர் தாம்" என்றார்.

---

## இருநூற்றறுபத்தொன்காவது அத்யாயம்.

### தான தர்ம பர்வம். (தொடர்ச்சி.)



(கிருஷ்ணன் பிராம்மணபூஜையின் சிறப்பையும் துர்வாஸமகரிஷி யைப்பூஜித்ததனால் தமக்கு உண்டான மேன்மையையும் தர்மபுத்ரருக்குச் சொல்லியது.)

யுதிஷ்டிரர், "மதுஸூதனரே! பிராம்மணபூஜையிலுள்ள பிரயோஜனத்தைச் சொல்லும். இந்தவிஷயம் உமக்குத்தானேதெரி யும்? உம்மையறிந்திருப்பவர் எமது பிதாமகரன்றோ?" என்று கேட்க, வாஸுதேவர் சொல்லலானார்.

"வேந்தரே! பரதஸ்ரேஷ்டரே! மிக்கஸத்புருஷரானகௌரவரே! பிராம்மணர்களுடைய குணங்களை உள்ளபடி சொல்லுகிறேன்; ஊக் கத்துடன்கேளும். கௌரவரைமகிழ்விப்பவரே! முன்னர் நான் துவா ரகாநகரத்திலிருக்கையில் பிராம்மணர்களால் கோபமூட்டப்பட்ட

ப்ரத்யும்னன், "மதுஸூதனரே! பிராம்மணர்களைப் பூஜிப்பதில் என்ன பலனிருக்கிறது? இம்மைக்கும் மறுமைக்கும் அவர்களே அதிகாரிகளாயிருப்பது எப்படி? எப்போதும் பிராம்மணர்களைப் பூஜிப்பதனால் என்னலாபம்? கௌரவத்தைக் கொடுப்பவரே! இவற்றையெல்லாம் தெளிவாகச் சொல்லும். இதில் எனக்கு மிகப்பெரிய ஸந்தேகமிருக்கிறது' என்றுகேட்டான். மகாராஜரே! பிரத்யும்னன் இவ்வாறு சொன்னபோது நான் அவனுக்கு மறுமொழி சொன்னதைக் கவனித்துக்கேளும். 'ருக்மிணியின் மைந்தனே! பிராம்மண பூஜையிலிருக்கும் பயனை என்னிடம் தெரிந்துகொள். ருக்மிணியின் புதல்வனே! குழந்தாய்! பிராம்மணர்கள் சந்திரனை அரசனாகப் பெற்றவர்கள். இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும் அவர்களே ஸுகதுக்கங்களுக்கு அதிகாரிகள். பிராம்மணன் தலைமையாயிருக்குங்காரியம்தான் சீர்பெறுவது. அதில் எனக்கு ஸந்தேகமில்லை. ஸௌக்கியம், ஆயுள், புத்தித்தெளிவு, புகழ், தேகவன்மை ஆகிய எல்லாம் பிராம்மணர்களால் உண்டாகின்றவை. உலகங்களும் உலகங்களுக்குஈஸ்வரர்களான தேவர்களனைவரும் பிராம்மணரைப் பூஜிப்பவரே. தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷமென்னும் நான்கு புருஷார்த்தங்களுக்காகவும், புகழ் ஐஸ்வர்யம் பிணிநீக்கம் இந்தக்காரியங்களுக்காகவும், தேவதாபூஜைகள் பித்ருஸ்ராத்தங்களுக்காகவும் பிராம்மணர்களையே நாம் திருப்தி அடைவிக்கவேண்டும். புத்திரனே! 'நான் ஈஸ்வரன்' என்றுநினைத்து அந்தப்பிராம்மணர்களை எப்படிப் பூஜியாமலிருக்கலாம்? சிறந்தகைகளையுடையவனே! உனக்கு இவ்வுலகத்தில் பிராம்மணர்களின் மேல் கோபமுண்டாகக்கூடாது. பிராம்மணர்கள்தாம் இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் பெரும்பொருள். அவர்கள் கோபித்துக் கண்ணால்பார்த்தால் இவ்வுலகத்தை நீறாக்கிவிடுவர். அப்படியே உலகங்களையும் உலகங்களுக்கீஸ்வரர்களான தேவர்களையும் அவர்கள் அழிக்கவும் ஆக்கவும்கூடும். அவர்களில் நல்லஞானமுள்ளவரும் நல்லமகிமையுள்ளவரும் ஏன்இரார்? அப்பா! பசும்பொன்னிறமுள்ளவரும் மரவுரிதரித்தவரும் வில்வத்தடிபிடித்தவரும் நீண்டமீசைதாடியுள்ளவரும் இளைத்தவரும் நெட்டையானவருமான ஒருபிராம்மணர் என்கிருகத்தில் வஸித்தார். அவர் பூமியில் உயரமாயுள்ளமனிதர்களெல்லாரையுங்காட்டிலும் அதிகஉயரமானவர். தேவலோகங்களிலும் மானிடலோகங்களிலும் நினைத்தபடி ஸஞ்சரிப்பவர். துர்வாஸஸ் என்னும்பிராம்மணரைப் பூஜித்து வீட்டில்வைத்துக்கொள்ளத்தக்கவன் எவன்? சிறியதவறுசெய்தாலும் எல்லாப்பிராணிகளின்மேலும்

அவர் கோபிப்பவர் இந்த என்னுடைய நிச்சயமானசொல்லைக் கேட்டபிறகு எனக்கு எவன் இடங்கொடுப்பான்? எவன் எனக்கு இடங்கொடுப்பானே அவன் என்னைக் கோபிக்கச்செய்யாமலிருக்க வேண்டும்' என்னும் பொருளடங்கிய ஸ்லோகங்களை நாற்சந்திகளிலும் ஸபைகளிலும் பாடிக்கொண்டிருந்தார். அவரை யாரும் ஆதரியாமல்போனதனால் நான் வீட்டில் வைத்துக்கொண்டேன். அவர் ஒருவேளை அநேகமாயிரவர்புஜிக்கும்அன்னத்தைப் புஜிப்பார்; மற்றொருவேளைஸ்வல்பம் புஜிப்பார்; ஒருவேளை வீட்டிற்கே வரார்; காரணமில்லாமல்நகைப்பார்; காரணமில்லாமல் அழுவர்; பிராயத்தில் அவருக்கீடானவர் பூமியிலில்லை; சிறந்தமகிமையுள்ளரிஷி ஒருகால் தம்மிடம் போய்க் கட்டில் மெத்தைகளைஎரித்துத் தாமும் அவற்றிலிருந்துவிழுந்தார். உக்கிரமானதவமுடைய அந்தமுனிவர் திரும்பவும் ஒருகால் என்னைப்பார்த்து, 'கிருஷ்ண! பாயஸம்சாப்பிடவிரும்புகிறேன்' என்று ஆவலோடுசொன்னார். அதற்குமுன்னமே நான் அவர்மனத்தையறிந்து எல்லாவகைஉணவுகளையும் பானங்களையும் பலவகைப் பக்ஷணங்களையும் நன்றாகச்செய்துவைக்கவேண்டுமென்று வீட்டிலிருக்கும் வேலைக்காரர்களுக்குக் கட்டளையிட்டிருந்தேன்; அதனால் அவருக்கு உஷ்ணமானபாயஸத்தைக்கொடுத்தேன். அதை அவர் விரைவாகச்சாப்பிட்டு,உடனே என்னைப்பார்த்து, 'பாயஸத்தை உன்னுடையஅங்கங்களில் சீக்கிரம் தடவிக்கொள்' என்றுசொன்னார். நான் சங்கியாமலே அவர்சொன்னதை அப்படியே செய்தேன். அவர் எச்சிலை உடம்பின்அங்கங்களில் பூசிக்கொண்டேன். அவர் அப்போது அழகானமுகமுள்ள உன் தாய் என்ஸமீபத்திலிருப்பதைக் கண்டார். புன்னகையோடிருக்கும்அவள்மேலும் அம்முனிவர் பாயஸத்தைத் தடவுவித்தார்; உடம்பில்பாயஸம்பூசப்பட்ட அவளைத்தேரில்கட்டி அந்தத் தேரின்மேலேறி என்கிருகத்திலிருந்து விரைவாகவெளியிற் சென்றார். அக்கினிறமாகஜ்வலிப்பவரும் சிறந்தஞானமுள்ளவருமான அந்தப்பிராம்மணர்சிறுமியானருக்மிணியை என்கண்முன்னே தேர்க்குதிரையைப்போலச் சாட்டையால்அடித்தார். அப்போது எனக்குக் கோபத்தினால் சிறிதும் வருத்தம் உண்டாகவில்லை. அப்படியே அவர் விசாலமான ராஜமார்க்கத்தின்வழியாக வெளியிற்சென்றார். அந்தப் பெரிய ஆச்சரியத்தைக்கண்டு, யாதவர்கள்சிலர் கோபமுள்ளவராக ஒருவரைஒருவர்அழைத்து, 'பிராம்மணர்களே உண்டாகவேண்டும். வேறுவர்ணம் எவ்வகையிலும் உண்டாகவேண்டாம். இவ்வுலகத்தில் வேறுஎந்த ஆண்பிள்ளை இவளைக்கட்டினதேரில் ஏறிப் பிழைப்பன்?

பாம்பின்விஷம் கொடிது. அதிலும் மிகக்கொடியவன் பிராம்மணன். பிராம்மணனென்னும் பாம்பின்விஷத்தினால் எரிக்கப்பட்டவனுக்கு வைத்தியன் ஒருவனுமில்லை'என்று ரகஸ்யமாகப் பேசிக்கொண்டனர். யாராலும் வெல்லமுடியாதஅம்முனிவர் போகும்போது வழியில் ருக்மிணி தடுக்கிவிழுந்தாள். [1]மகிமையுள்ள துர்வாஸஸ் அது பொறு மல் அவளை விரைவாக ஓட்டினார். பிறகு, அந்தப்பிராம்மணர் மிக்க கோபமுற்றுத் தேரிலிருந்து குதித்துக் கால்நடையாய் வழியில்லாத வழியில் தென்றிசையைநோக்கி ஓடினார். நான் 'வழியில்லாவழியில் போகும் பிராம்மணோத்தமரை, 'பகவானே! கோபிக்கவேண்டாம்' என்று சொல்லிக்கொண்டுபாயஸம்பூசிக்கொண்டபடியே தொடர்ந்து ஓடினேன். சிறந்தமகிமையுள்ள அந்தப்ராம்மணர் உடனே என்னைப் பார்த்து, 'கிருஷ்ணா!சிறந்தகைகளையுடையவரே! நீர் இயற்கையாகவே கோபத்தைஜயித்தவர். சிறந்தஉறுதியுள்ளவரே! இப்போது உம் முடையபிழையொன்றையும் நான் காணவில்லை. கோவிந்தரே! உம் மிடத்தில் அன்புள்ளவனாகிறேன். வேண்டினவரங்களைக் கேளும். ஐயா!' நான்ஸந்தோஷமடைவதின்பலன் எப்படிப்பட்டதென்பதைப் பாரும். மனிதர்களுக்கு ஆகாரத்தில் விருப்பமிருப்பதுபோல உம் மிடத்திலும் விருப்பமிருக்கும். உம்முடைய பரிசுத்தமானகீர்த்தி எவ்வளவுகாலம் உலகத்திலிருக்குமோ அவ்வளவுகாலம் மூவுலகங் களிலும் மேன்மையை அடைந்திருப்பீர். ஜனார்த்தனரே! எல்லா உலகங்களுக்கும் மிக்க அன்பராவீர். ஜனார்த்தனரே! உடைக்கப்பட் டும் எரிக்கப்பட்டும் அழிக்கப்பட்டும் போனவையெல்லாவற்றையும் முன்போலவும் முன்னைவிடச்சிறந்தவையாகவும் பார்ப்பீர். மதுஸூ தனரே! அச்சுதரே! உம்முடைய அங்கங்களில் பாயஸந்தடவப்பட் டிருக்கும்இடங்களில் நீர்நினைக்குங்காலம்வரையில் மரணபயமில்லை. நீர்உள்ளங்கால்களில்மட்டும் தடவிக்கொள்ளவில்லை.அதனால், அங்கே தான் உமக்குமரணம். அது எனக்குப் பிரியமாயில்லை' என்று அன் புடன்சொன்னார். அவரால் இவ்வாறுசொல்லப்பட்டநான் என்தேகம் சிறந்த ஒளியோடிருப்பதைக்கண்டேன். அவர் ருக்மிணியைப்பார்த் தும் அன்புடன், 'ஓ! சிறந்தவளே! எல்லாஸ்திரீகளுக்கும்மேலான மகிமையையும் உலகத்தில் மிகச்சிறந்தபுகழையும் அடைவாய்.பெண் ணரசியே! மூப்பு, பிணி, நிறமாறுதல் இவைசிறிதும் உன்னை அணுகா. இனியமணமுள்ளவளாகிக் கிருஷ்ணனை ஸந்தோஷப் படுத்துவாய். கிருஷ்ணனுடையபதினாயிரம்ஸ்திரீகளுள் மிகச்சிறந்த

1 வேறுபாடம்.

வளும் அவரோடொருலோகத்திலிருப்பவளும்ஆவாய்' என்றுசொன்னார். மிகச்சிறந்த மகிமையுள்ளவரும் அக்னிபோல ஜ்வலிப்பவருமான தூர்வாஸமுனிவர் உன்தாய்க்கு இவ்வாறுசொன்ன பிறகு, புறப்பட்டுப்போகும்போது திரும்பவும் என்னைப் பார்த்து, 'கேசவரே! பிராம்மணர்கள்விஷயத்தில் இதேஎண்ணம் உமக்கு இருக்கவேண்டும்' என்று சொன்னார். புத்ரனே! அவர் இவ்வாறு சொன்னவுடனே அங்கேயே அந்தர்த்தானமானார். ஸமர்த்தனே! அவர்மறைந்தபிறகு பிராம்மணன் எதைச்சொன்னாலும் நான் அதையெல்லாம் செய்யக்கடவேனென்று எனக்குள் விரதம்வைத்துக்கொண்டேன். புத்ரனே! இந்தவ்ரதஞ்செய்துகொண்டு மிக்க மனமகிழ்ச்சியோடு உன் தாயுடன் வீட்டிற்குள் சென்றேன். புத்ரனே! வீட்டில் பிரவேசித்தவுடன் அந்தப்பிராமணரால் உடைக்கப்பட்டவை எரிக்கப்பட்டவையனைத்தும் புதியவையாயிருக்கக்கண்டேன். எல்லாம் புதியனவாகவும் உறுதியுள்ளனவாகவுமிருப்பதைக் கண்டபிறகு நான் ஆச்சரியமடைந்தேன். ருக்மிணியின் மைந்தனே! நான் எப்போதும் பிராம்மணர்களை மனப்பூர்வமாகப் பூஜிக்கிறேன்' என்றேன். பரதஸ்ரேஷ்டரே! ருக்மிணியின் மைந்தனை பிரத்யும்னன் கேட்டபோது பிராம்மணஸ்ரேஷ்டரான தூர்வாஸரின்மகிமையனைத்தையும் அவனுக்கு இவ்வாறு உரைத்தேன். குந்திபுத்திரரே! பிரபுவே! அப்படியே நீரும் மகானுபாவர்களான பிராம்மணர்களை எப்போதும் சொல்லினாலும் கொடையினாலும் பூஜிக்கக்கடவீர். பரதஸ்ரேஷ்டரே! பிராம்மணர்களுடைய அனுக்கிரகத்தினால் இவ்விதமானபலனை நான் அடைந்தேன். இந்தப்பீஷ்மர் என்னைப்பற்றிச் சொன்னது உண்மை'' என்றார்.

---

## இருநூற்றுமுப்பத்தைந்தாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம் (தொடர்ச்சி.)

(கிருஷ்ணன் யுதிஷ்டிரனுக்குச் சங்கரர்மகிமையைச்சொல்லியது.)

யுதிஷ்டிரர், "மாதவரே! சங்கரருடைய அம்சமான தூர்வாஸருடைய அனுக்கிரகத்தினால் நீர் அடைந்த ஞானத்தை எனக்கு உரைக்கக்கடவீர். புத்திமான்களிற் சிறந்தவரே! மகாத்மாவான அந்தச் சங்கரருடைய மகிமையையும் நாமங்களையும் தெளிவாக முழுதுந் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்" என்றுகேட்க, வாஸுதேவர் சொல்லலானார்.

"அரசரே! சிவனுக்கு வந்தனம் செய்து, நான் அடைந்த நன்மையையும் ஸம்பாதித்த புகழையும் உமக்குச்சொல்வேன். அரசரே! காலையிலெழுந்து அநுஷ்டானங்களைச்செய்து கரங்குவித்துச் சதருத்ரீயத்தைப் படிப்பவனுக்குக் கிடைக்காதது ஒன்றும் இல்லை. எங்கும் வியாபித்திருப்பவரும் உலகத்தைப் படைப்பவருமாகியருத்ரரென்னப்படும்சிவனைப்பற்றிச் சொல்லுகிறேன்; கேளும். பிரம்மதேவர் பெருந்தவம்செய்து அத்தவத்தின்முடிவில்சங்கரரைப்படைத்தார். ஐயா! அந்தச்சங்கரர் ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமாகிய பொருள்களனைத்தையும் படைத்தார். அரசரே! மஹாதேவருக்கு மேற்பட்டபொருள் ஒன்றுமில்லை. மூவுலகங்களிலுமுள்ள பிராணிகளுக்குக் காரணம் அவரன்றோ? அம்மகாத்மாவின்முன்னிற்க யார்க்கும்முடியாது. அவருக்குச்சரியானபொருள் மூவுலகங்களிலுமில்லை. யுத்தத்தில்கோபித்த அவருடையவாஸனையினாலும் பகைவர்கள் மூர்ச்சித்துப் பெரும்பாலும் உயிர்போய் நடுங்கிவிழுகின்றனர். யுத்தத்தில் மேகமுழக்கத்திற்கொப்பான அவருடைய உக்ரமானகர்ஜனையைக் கேட்டுத் தேவர்களின்மனங்களும் சிதறிப்போகும். அவர் கொடிய பார்வையினால் எவனைப்பார்த்தாலும் அவன்எரிக்கப்பட்டுக் கீழேவிழுவான். அவர்கோபித்தால் உலகத்தில் தேவர் அஸுரர் கந்தர்வர் நாகர் யாவரும் குகைகளிற்புகுந்தாலும் ஸுகப்படுவதில்லை. தக்ஷப்ரஜாபதிசெய்த பெரிய யாகத்தில் கோபித்தசிவன் பயமில்லாமல் வில்லினால் அம்பைஏவி அந்தயாகத்தை அழித்து மிகப்பயங்கரமாகக் கர்ஜித்தார். மஹேஸ்வரர்கோபித்து அந்தயாகமும் அடிக்கப்பட்டபோது அந்தத்தேவர்கள் ஸுகத்தையும் ஸமாதானத்தையுமடையாமல் துயரமடைந்தனர். குந்திபுத்திரரே! அப்போது நாண் உள்ளங்கையில்படுஞ்சத்தத்தினால் எல்லாஉலகங்களும் ஸ்வாதீனந்தப்பிக் கலங்கிப்போயின; தேவர்களும் அஸுரர்களும் துன்பப்பட்டனர்; ஜலங்கள் குழம்பின; பூமி நடுங்கிற்று; மலைகள் உருகின; ஆகாயமெல்லாம் பிளந்துபோயிற்று; உலகங்கள் மிக்க இருளினால் மூடப்பட்டு மறைந்துபோயின; பாரதரே! ஸூர்யன்முதலான கிரகங்களின் ஒளி மழுங்கிற்று. அப்போது ரிஷிகள் மிக்க பயமுற்று எல்லாப்பிராணிகளுக்கும் தங்களுக்குநன்மையைக்கருதித் தோஷபரிகாரத்தையும் மங்களகாரியங்களையும் செய்தனர். பயங்கரமான பராக்கிரமமுள்ள அந்தருத்ரர் அப்போது தேவர்களை எதிர்த்துப்போனார்; கோபத்தினால் அடித்துப் பகதேவதையின் கண்களை உதிர்த்தார்; பயங்கரமானவடிவத்துடன் சூரியனை எதிர்த்துச் சென்றார்; புரோ

டாசமென்னும் ஹவிஸைப் பக்ஷிக்கும் சூரியனுடைய பற்களை உதிர்த்தார். உடனே அந்தத் தேவர்கள் நடுங்கிக்கொண்டு சங்கரரை நமஸ்கரித்தனர். திரும்பவும் சங்கரர்மிகக்கூர்மையுள்ள ஜ்வலிக்கும் பாணத்தைத்தொடுத்தார். ருத்ரருடைய பராக்கிரமத்தைக்கண்டு தேவர்களும் ரிஷிகளும் பயந்தனர். பிறகு, தேவசிரேஷ்டர்கள் சிவனைப் பிரார்த்தித்தனர். அப்போது தேவர்கள் கரங்கள்குவித்துச் சதருத்ரீயத்தை ஜபித்தனர். தேவர்களால துதிக்கப்பட்ட மஹேஸ்வரர் கோபம்நீங்கினர். பிறகு, தேவர்கள் யாகத்தில் சிவனுக்குச் சிறந்த பாகத்தை ஏற்படுத்தினர். அரசே! பயத்தினால் தேவர்கள் அவரைச் சரணமடைந்தனர். அவர் ஸந்தோஷமடைந்து அந்தயாகத்தை [1] ஓட்டினர். அந்தயாகத்தில் எது எப்படிக் கெடுக்கப்பட்டதோ அதை அப்படியே திரும்பவும் பிழைப்பித்தார். பராக்கிரமசாலிகளான (மூன்று) அஸுரர்களுடைய மூன்றுபட்டணங்கள் ஆகாயத்திலிருந்தன. ஒன்று எஃகு; ஒன்று வெள்ளி; மற்றென்று பொன். அவற்றை இந்திரன் எந்த ஆயுதத்தாலும் பிளக்கமுடியவில்லை. அப்போது அஸுரர்களால் பீடிக்கப்பட்ட தேவர்களனைவரும் ருத்ரரைச் சரணமடைந்தனர். மஹாத்மாக்களானதேவர்களனைவரும் அவரிடம் வந்து, 'ருத்ரரே! எல்லாக்கிரியைகளிலும் பசுக்கள் ருத்ரரைச்சேர்ந்தவைகளே ஆகக்கடவன. பெருமையைக்கொடுப்பவரே! அஸுரர்களையும் அவர்கள் பட்டணங்களையும்அடித்து உலகங்களைக் காப்பாற்றக்கடவீர்', என்று பிரார்த்தித்தனர். அவர்களால் வேண்டப்பட்ட சங்கரர், 'ஆகட்டும்' என்றுசொல்லி, விஷ்ணுவைச் சிறந்த அம்பாகவும் அக்னியை அதற்குமுனையாகவும் ஸூர்யபுத்திரனை யமனை அம்பின்காம்பாகவும் ஓங்காரத்தை வில்லாகவும் உத்தமமான காயத்ரியை நாணைகவும் பிரம்மாவை ஸாரதியாகவும்வைத்துக்கொண்டு மூன்று கணுக்களும் மூன்றுமுனைகளுமுள்ள அந்தப்பாணத்தைப்பிரயோகித்து அந்தப்பட்டணங்களெல்லாவற்றையும் பிளந்தார். பாரதரே! சூரியனுக்கும் பிரளயகாலாக்கினிக்கும்ஸமமான ஒளியுள்ள அந்தப் பாணத்தினால் அந்தஅஸுரர்களையும் அவர்கள் பட்டணங்களையும் எரித்துவிட்டார். திரும்பவும் [2]ஐங்குடுமியுள்ள தலையோடுகூடிய சிறுவனைத் தன்மடியில்படுத்திருக்கும் அவரைக்கண்டு உமாதேவி அறியக்கருதி, 'இவன்யார்?' என்றுகேட்டாள். இந்திரன் கோபித்து வஜ்ராயுதத்தினலடிக்கத்தொடங்கினபோது கதவின்குறுக்கு

[1] யாகபுருஷனுடைய அறுத்ததலையை ஓட்டினரென்றகதை.

[2] 'பஞ்சசிகம்' என்பது மூலம்.

மாத்திற்கொப்பான அவன்கையை வஜ்ராயுதம்பிடித்தபடியே அசை வற்றிருக்கச்செய்தார். 'தேவர்கள் உலகங்களுக்கு ஈஸ்வராகிய அவரோடு யுத்தம்செய்யமாட்டாமற்போயினர். பிரம்மாமுதலியவ ரனைவரும் அந்தஈஸ்வரரையறியாமலும் மயங்கினர். பிறகு, பகவானை பிரம்மா அளவற்றமகிமையுள்ள அந்தப்பாலகனை த்யானம்செய்து, 'இவர் எல்லாரிலும்சிறந்தவர்' என்றறிந்து அந்தஉமாபதிக்கு வந்த னம்செய்தார். பிறகு, தேவர்கள் உமையையும் சங்கரரையும் வேண்டி னர். மறுபடியும் அவர் முன்போலப் பாலராகிச் சென்றார். அவர்தாம் மகிமையுள்ள் துர்வாஸரென்னும் பிராம்மணராகித் துவாரகையில் வெகுநாள் என்கிருகத்திலிருந்தார்; என்வீட்டில் மிகவும்அதிகமான தீமைகளைச் செய்தார். மிகவும்பொறுக்கக்கூடாத அந்தத்தீமைகளை நான் அவருடையமேன்மையினால் பொறுத்தேன். அவர்தாம் ருத்ரர். அவர்தாம் சிவன். அவர்தாம் அக்னி. எல்லாம் அவரே. அவர் எல்லாவற்றையும்ஜயித்தவர். அவரே இந்திரன். அவரே வாயு. அவரே அஸ்வினீதேவர்கள். அவரே மின்னல். அவரே சந்திரன். அவரே ஈசானனென்னுந்திக்பாலகர். அவரே சூரியன். அவரே வரு ணன். காலபுருஷன் அவரே. எல்லாவற்றையும்அழிக்கும் மிருத்யு என்னப்படும்யமனும் அவரே. இரவு, பகல், மாதம், பக்ஷம், ருது, இரண்டுஸந்தி, வருஷம்ஆகியஎல்லாம் அவரே. அவரே தாதா. அவரே விதாதா. அவரே விஸ்வகர்மா. அவர் ஸர்வஜ்ஞர். நக்ஷத்திரங்களும் நவக்கிரகங்களும் திசைகளும் மூலைகளும் அவரே. அவர் உலகங்களை வடிவமாகவுடையவர்; அறிவுக்கெட்டாதஸ்வரூபமுள்ளவர்; சிறந்த மகிமையுள்ளவர்; சிறந்தவொளியுள்ளவர். அவரே ஒன்றாகவும் இரண் டாகவும் பலவாகவும்நூறாகவும் ஆயிரமாகவும் லக்ஷமாகவுமிருப்பவர். அம்மஹாதேவர் இப்படிப்பட்டவர்; இதற்கும்மேலான மகிமையு முள்ளவர். அநேகநூற்றாண்டுகளாலும் அவர்குணங்களைச் சொல் வது இயலாது.

---

## இருநூற்றறுபத்தாறாவது அத்தியாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(கிருஷ்ணன் சங்கரர்மகிமையைத் தர்மபுத்திரனுக்குச் சொல்லியது; தொடர்ச்சி.)

சிறந்தகைகளையுடைய யுதிஷ்டிரரே! பலஉருவங்களும்பலநாம ங்களுமுள்ள மகாத்மாவான சங்கரருடைய மகிமையை என்னிடம்

தெரிந்துகொள்ளும். உக்ரரென்றும் மகாதேவரென்றும் ஸ்தாணு வென்றும் மகேஸ்வரரென்றும்ஏகாக்ஷரென்றும்த்ரியம்பகரென்றும் விஸ்வரூபரென்றும் சிவனென்றும் அவரைச் சொல்லுகின்றனர். அவருக்கு ஒருமூர்த்தி உக்ரமென்றும் மற்றொருமூர்த்திசிவமென்றும் இன்னும் பலமூர்த்திகளும்உளவென்றும் வேதந்தெரிந்தபிராம்மணர் கள் அறிந்திருக்கின்றனர். அக்கி மின்னல் சூரியன் இவைதாம் அவரு டையகொடியமூர்த்திகள். தர்மம் ஜலம் சந்திரன் இவை அவருடைய ஸௌம்யமான சிவமூர்த்திகள். அவர்தேகத்தில் ஒருபாதி அக்னி யென்றும் மற்றொருபாதி சந்திரனென்றும் சொல்லப்படுகின்றன. அவருடையமூர்த்திகளில் ஒன்றாகியசிவமூர்த்தியானது பிரம்மசாரி விரதத்தைச் செய்துகொண்டிருக்கிறது; மிக்க உக்ரமானமூர்த்தி உலகங்களுக்கு ஸம்ஹாரத்தைச் செய்கிறது. அவர் மகானாகவும் ஈஸ்வரராகவுமிருப்பதனால் மகேஸ்வரரென்று சொல்லப்படுகிறார். எல்லாவற்றையும் எரிப்பதனாலும் கோபித்திருப்பதனாலும் தாங்க முடியாமலிருப்பதனாலும் பராக்ரம மிருப்பதனாலும் மாம்ஸத் தையும், ரக்தத்தையும், கொழுப்பையும் புசிப்பதனாலும் [1]ருத்ர ரென்று சொல்லப்படுகிறார்; தேவர்களுக்கெல்லாம்மிகப்பெரியவரா யிருப்பதனாலும் எல்லா உலகங்களையும் ரக்ஷிப்பதனாலும் மகாதேவ ரென்று சொல்லப்படுகிறார்; அவருடைய ஜடை தாம்ரவர்ணமென்னும் செம்மட்டைநிறமாயிருப்பதனால் தூர்ஜடையென்று சொல்லப்படு கிறார்; எல்லாரையும் அவரவர்கள்கர்மங்களினால் எப்போதும்விருத்தி செய்து மனிதர்களின்க்ஷேமத்தையேவிரும்புவதனால் சிவனென்று சொல்லப்படுகிறார்; தாம்உயரமாயிருந்து மனிதர்களின்உயிரைஎரிப்ப தனாலும் தாம்அழியாமலிருப்பதனாலும் தமதுலிங்கம் எக்காலமும் அழியாமலிருப்பதனாலும் [2]ஸ்தாணுவென்றுசொல்லப்படுகிறார்; பூதப விஷ்யத்வர்த்தமானங்களும் ஸ்தாவரஜங்கமங்களுமாகப் பலரூபங்கள் அவருக்கிருப்பதனால் பஹுரூபரென்று சொல்லப்படுகிறார்; எல்லாத் தேவர்களும் அவரைச்சார்ந்திருப்பதனால் விஸ்வரூபரென்று சொல் லப்படுகிறார்; ஆயிரம்பதினாயிரம்கண்களுள்ளவராகவும் எங்கும்கண்க ளுள்ளவராகவும்இருப்பதனாலும் அவர்கண்ணிலிருந்து ஒளியுண்டா வதனாலும் ஸர்வதஸ்சக்ஷு என்று சொல்லப்படுகிறார்; [3]பசுக்களெல் லாவற்றையும்காப்பதனாலும் அவற்றுடன் மகிழ்ந்திருப்பதனாலும் அவற்றையாளுவதனாலும் பசுபதியென்று சொல்லப்படுகிறார். அவரு டையலிங்கமானது பக்தர்களையனுக்கிரகிப்பதற்காக நித்யப்ரம்மசாரி

---

1 அழவைப்பவர். 2 ஸ்திரமானவர். 3 ஆத்மாக்கள்.

விரதத்தோடிருப்பதனால் [1]கூடலிங்கரென்று சொல்லப்படுகிறார். அவருடைய லிங்கத்தை உலகம் பூஜிக்கிறது. அந்தமகாத்மாவுக்கு அந்தலிங்கம் பிரியமானது. அந்தமகாத்மாவினுடையவிக்ரகத்தைப் பூஜிப்பவன் லிங்கத்தையும் பூஜிக்கவேண்டும். நாள்தோறும் லிங்கத்தைப்பூஜிப்பவன் பெரியஐஸ்வர்யத்தையடைவான். ரிஷிகளும் தேவர்களும் கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் மேனோக்கியிருக்கும் அந்த லிங்கத்தையே பூஜிக்கின்றனர். லிங்கத்தைப்பூஜித்தால் மகேஸ்வரர் ஸந்தோஷமடைகிறார். பக்தர்களிடத்தில் அன்புள்ளசங்கரர் ஸந்தோஷமடைந்து பக்தர்களுக்கு ஸுகத்தைக் கொடுக்கிறார். இவர்தாம் மயானங்களில் எரித்துக்கொண்டிருப்பவர். வீரஸ்தானமென்னப் படும்வீரலோகத்தைவிரும்புகிறஜனங்கள் அவரை அங்கே பூஜிக்கின்றனர். இவ்வுலகத்தில் பிராணிகளின்தேகங்களில் அவரே மரணகாலத்தில் மிருத்யுவாயிருக்கிறார். பிராணிகளின் உயிரைக்காப்பாற்றும் பிராணவாயுவாகத் தேகங்களில் இருப்பவரும் அவரே. அவருடைய உக்ரமாகஜ்வலிக்கும்பலஉருவங்கள் உலகத்தில்பூஜிக்கப்படுகின்றன. அவற்றையறிகின்றவர்கள் வித்வான்களானபிராம்மணர்கள். அவருடைய நாமங்களநேகங்கள் வேதங்களிலிருக்கின்றன. அவருடைய மகிமையினாலும் சக்தியினாலும் செய்கைகளாலும் அந்நாமங்கள் அர்த்தமுள்ளவைகளாகப் பகுத்துரைக்கப்படுகின்றன. வேதத்தில் அவரைப் பற்றியஉத்தமமானசதருத்ரீயத்தைப் பிராம்மணர்கள் அறிகின்றனர். அம்மகாத்மாவைப் பூஜிக்கும்வகையும்வ்யாஸரால்சொல்லப்பட்டிருக்கிறது. அவர் எல்லாஉலகங்களுக்கும் வேண்டினவற்றைக்கொடுப்பவர்; எல்லாவற்றிற்கும் ஸாக்ஷி; குறைவில்லாதவர். பிராம்மணர்களும் ரிஷிகளும் மற்றவர்களும் அவரை ஜ்யேஷ்டரென்று சொல்லுகின்றனர். அவர் தேவர்களுக்குமுதல்வர். அவர் தம்முகத்திலிருந்து அக்நியையுண்டாக்கினார். அவரே அனேகப்ராணாயாமங்களினால் மூச்சை அடக்கிவிடுகிறார். ரக்ஷிப்பதில்ஸமர்த்தராகிய அவர் மகிழ்ந்து அனுக்ரஹம்வைத்துச் சரணாகதர்களுக்கு முக்தியளிக்கிறார். மனிதர்களுக்கு ஆயுளையும் ஆரோக்யத்தையும் ஐஸ்வர்யத்தையும் ஸுகத்தையும் நிரம்பினபோகங்களையும் கொடுப்பவரும் திரும்பியெடுப்பவரும் அவரே. அவருடையஐஸ்வர்யந்தான் இந்திராதிதேவர்களிடத்திலும் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. மூவுலகங்களுக்கும் நன்மைதீமைகளின் பலன்களைக்கொடுப்பவர் அவரே. வேண்டினவற்றையெல்லாம் பெறும்சக்தியிருப்பதனால் ஈஸ்வரரென்று சொல்லப்படுகிறார். பெரிய

[1] மறைவானலிங்கமுள்ளவர்.

உலகங்களுக்குஈஸ்வரராயிருப்பதனல் மஹேஸ்வரரென்றுசொல்லப் படுகிருர். அவருடையபலவகையானரூபங்களாலேயே இவ்வுலகமனைத்தும் வியாபிக்கப்பட்டிருக்கிறது. கடலிலுள்ளவடவாமுகாக்கினியும் அந்தஈஸ்வரரதுவாய்தான்'' என்ருர்.

## இருநூற்றறுபத்தேழாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் தர்மத்தைப்பற்றி ஸந்தேகம் வந்தால் நிச்சயிக்கும் வகையைத் தர்மபுத்ரருக்கு உரைத்தது.)

தேவகீபுத்ரரானகிருஷ்ணபகவான் இந்தச் சொல்லை இவ்வாறுசொன்னபிறகு, யுதிஷ்டிரர் சந்தனுபுத்திரரான பீஷ்மரை நோக்கி, "ஓ! சிறந்த புத்தியுள்ளவரே! தர்மந்தெரிந்தவர்களிலெல்லாம் சிறந்தவரே! ஒன்றைநிச்சயிப்பதற்குப் பிரத்யக்ஷம் சாஸ்திரம் இவ்விரண்டினுள் எது ஸரியானபிரமாணமாகும்?'' என்று திரும்பவும் கேட்க, பீஷ்மர் சொல்லலானுர்.

"சிறந்த புத்தியுள்ளவனே! நீ நன்ருகக் கேட்கிருய். இதுவிஷயத்தில் ஸந்தேகமொன்றுமில்லையென்று எனக்கு அபிப்பிராயமிருக்கிறது. அதை உனக்குச் சொல்வேன்; கேள். இந்த விஷயத்தில் ஸந்தேகமுண்டாவது எளிது; நிச்சயம்வருவது கடினம். பார்ப்பதற்கும் கேட்பதற்கும் முடிவில்லை. அதனல், ஸந்தேகமுண்டாகிறது. ப்ரத்யக்ஷம் பிரமாணமாக யாவராலும் காணப்படுகிறது. பண்டிதனுக நினைத்திருப்பவனுக்கு யுக்திவாதம் பிரமாணமாகிறது. அவர்கள் ஸத்யவாக்யத்தையும் சாஸ்திர்த்தையும் இல்லாதவையாக நிச்சயிக்கின்றனர். அவர்கள் நினைப்பது பிழை. அவர் தங்களைப் பண்டிதராக நினைத்திருக்கும் அறிவீனர். எதையும், 'இது ஸரியானபிரமாணமாகுமா' என்று ஆராய்ந்து பார்க்கவேண்டுவதுதான். உலகவாழ்க்கையை நடத்தும் மனிதன் யுக்திகளாலும் சாஸ்திரவிசாரணைகளாலும் நீண்டகாலத்திஞல் நிச்சயிக்கமுடியும். ஒரு விஷயத்திலேயே ஊக்கம் வைத்தாலன்றி அந்தப்பிரமாணத்தை நிச்சயிக்க முடியாது. ஹேதுவாதங்களை 'நிறுத்தினபிறகுதான் எல்லா உலகங்களுக்கும் ஒளியாயிருக்கும் சிறந்த பேரறிவைத் தடையின்றி அறியலாம். வேந்தனே! யுக்திகளைக்கொண்டு அறிவது சரியான அறிவன்று. நம்பத்தகாததும் முடிவில்லாததுமான யுக்திவாதத்தை வாக்கினுல் சொல்லாமல் விடவேண்டும்'' என்ருர்.

யுதிஷ்டிரர், "பிதாமஹரே! பிரத்யக்ஷம் உலகத்தில் ஏற்பட்டிருக்கிறது. உலகம் வேதத்தை முன்னிட்டதாயிருக்கிறது. சிஷ்டாசாரங்கள் பலவகைகளாயிருக்கின்றன. 'இவற்றைப்பற்றி எனக்குச் சொல்லும்" என்றுகேட்க, பீஷ்மர், 'துஷ்டர்கள் வலியர்களாகித் தர்மத்தைக் கெடுக்கும்போது எவ்வகைமுயற்சிகளினால் அதற்கு வியவஸ்தைசெய்தாலும் அது காலத்தினால் உடைபட்டுப்போகிறது. யுதிஷ்டிர! கிணறு புல்லால் மூடப்படுவதுபோல அதர்மமும் தர்மத்தின் வேஷத்தால் மூடப்பட்டிருக்கிறது. அதனாலேதான் சிலருடைய ஆசாரங்கள் வேறுபடுகின்றன. அவற்றையுங்கேள். சில புத்தியீனர் பிழைப்பில்லாமையால் சாஸ்திரத்தை விடுவதையே கார்யமாகக்கொண்டு தர்மத்தைப்பகைத்து இகழ்கின்றனர். அவர்களுக்குத்தான் இவ்விதமான ஸந்தேகமுண்டாவதாகச் சொல்லப்படுகிறது. ஸத்புருஷர்களை மேன்மேலும் விரும்பிக்கொண்டு சாஸ்திரங்களெல்லாவற்றிலும் நம்பிக்கையுள்ளவரும் அதுவே சிறந்ததென்று திருப்தியடைந்திருப்பவரும் எவரோ அவரையடுத்துக்கேள். பொருளாசையையும் அறியாமையையும் அனுஸரித்திருக்கும் அர்த்தகாமங்களைவிட்டுத் தர்மமொன்றையே பார்ப்பவர் எவரோ அவரையடுத்துக் கேள். அவர்களின் ஆசாரமும் மாறுவதில்லை. யாகம் வேதாத்யயனம் ஆசாரம் இம்மூன்றும்பிரமாணங்கள்மூன்றும் ஒரே தர்மம்தான்" என்றுசொன்னார்.

யுதிஷ்டிரர், "கரையில்லாத ஸந்தேகத்தில்மூழ்கி அக்கரையைக் காணாமலிருக்கும் மனம் இந்தவிஷயத்தில் திரும்பவும் மயங்குகிறது. வேதம், பிரத்யக்ஷம் சிஷ்டாசாரம்இம்மூன்றும் பிரமாணங்களாயிருந்தால் இம்மூன்றும் வெவ்வேறாக இருக்கின்றனவே? மூன்றும் தர்மமாவதெப்படி?" என்றுகேட்டார். பீஷ்மர், "அரசனே! துஷ்டர்கள் வலிமையுற்றுத் தர்மத்தைக் கெடுப்பதனால் நீ இப்படி தர்மத்தைப் பற்றி மூன்றுவகைகளில் ஸம்சயமிருக்கிறதென்று நினைக்கிறாய். தர்மம்ஒன்றென்றும் அதைஅறியும்வகை மூன்றென்றும் அறி. அம்மூன்றுவகைகளும் ஒன்றுக்கொன்று வித்தியாஸப்படுவதாக நான் நினைக்கவில்லை. மூன்றுபிரமாணங்களின்ஒழுங்கையும்உனக்குச்சொன்னேன். அதைஅப்படியே அனுஷ்டிக்கக்கடவாய். பரதஸ்ரேஷ்டனே! தர்க்கங்களினால் தர்மத்தைவிசாரிப்பது ஒருபோதும் தகாது. உனக்கு இதில் ஸந்தேகம் வேண்டாம். நான் எதைச்சொல்லுகிறேனோ அதைக் கண்தெரியாதவன்போலவும் மூடன்போலவும் விசாரிக்காமல்செய். அஜாதசத்ருவே! கொல்லாமை, ஸத்யம், பொறுமை, கொடை இந்நான்கையும் அனுஷ்டிப்பாயாக. இவைதாம் அழியாத

தர்மம். சிறந்தகைகளையுடையவனே! பிராமணர்விஷயத்தில் உனது தந்தைபாட்டன்முதலிய பரம்பரையில்வந்த ஒழுக்கம்எதுவோ அதை அனுஸரி. அவர்கள்தாம் தர்மத்தின் வழியைக் காட்டுகிறவர்கள். அறிவில்லாதவன் பிரமாணத்தையும் அப்பிரமாணமாகச் செய்வானாயின் அவனைநம்பத்தகாது. அவன் துக்கத்தை உண்டுபண்ணுகிறவன். பிராம்மணர்களையே பூஜித்தும் வெகுமானித்தும் பணியக்கடவாய். இவ்வுலகங்களனைத்தும் அவர்களிடத்திலேயே இருக்கின்றன என்றறி" என்றுசொன்னார்.

---

## இருநூற்றறுபத்தேட்டாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி)



(தர்மபலன்களும் பலதர்மங்களும்.)

யுதிஷ்டிரர், "தர்மத்தை எவர் பகைக்கின்றனரோ, எவர் அதை அனுஷ்டிக்கின்றனரோ அவ்விருதிறத்தாரும் அடையும் கதிகள் எவை? அவர்கள் எங்கேபோகின்றனரென்பதை நீர் எனக்குச் சொல்லக்கடவீர்" என்று கேட்டனர்.

பீஷ்மர், "மகாராஜனே! ரஜோகுணத்தினாலும் தமோகுணத்தினாலும் மூடப்பட்டமனமுள்ள ஜனங்கள்தாம் தர்மத்தைப் பகைப்பவர்; அவர் நரகம்சேர்கின்றனர். சொல்சுத்தமும் மனச்சுத்தமுமுள்ளவர்களாகித் தர்மத்தையே எப்போதும் அனுஷ்டிக்கும் ஸத்புருஷர்கள்தாம் ஸ்வர்க்கலோகத்தையனுபவிப்பவர். அவர்களுக்குக் குருபணிவிடையினால் தர்மத்திலேயே விருப்பமுண்டாகும். மனிதராயினும் தேவராயினும் தேகத்தைவருத்தித் தர்மத்தைஅனுஷ்டிப்பவர்எவரோ அவர்தாம் ஸுகம்பெறுவர். பொருளாசையையும்வெறுப்பையும்விட்டுத் தர்மஞ்செய்கிறவர் ஸுகமாக அபிவிருத்தியடைகின்றனர். தர்மத்தைப் பிரம்மாவின் மூத்தகுமாரனென்று அறிஞர் கூறுகின்றனர். உண்ணுகிறவர் பழுத்தபழத்தைக் காப்பதுபோலத் தர்மிஷ்டர்கள் தர்மத்தைக் காக்கின்றனர்" என்றுசொன்னார். யுதிஷ்டிரர், "கெட்டவனுடையநடை எப்படிப்பட்டது? நல்லவன்நடை எப்படிப்பட்டது? ஸத்துக்களும் அஸத்துக்களும் எப்படியிருப்பவர்? இதனை நீர் எனக்குச் சொல்லக்கடவீர்" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார். "[1]கெட்டஆசாரமும் துஷ்டவாக்குமுள்ளவர்களும்

---

[1] 'துராசார' என்றபாடம் கொள்ளப்பட்டது.

அடக்கமுடியாதவர்களுமாயிருப்பவர்கள் அஸாதுக்கள். நல்லொழுக்கம் நிரம்பினவர்கள் ஸாதுக்கள். சிஷ்டாசாரத்தின் லக்ஷணத்தைக் கூறுகிறேன். அரசர்க்கரசனே! தர்மிஷ்டர் ராஜமார்க்கத்திலும் பசுக்கள்நடுவிலும்,ஜனங்கள்நடுவிலும் மலமூத்திரங்களைவிடார். ஸாதுக்கள் பஞ்சமகாயாகங்களைச் செய்தபிறகு அவற்றின் மிச்சத்தை உண்பர்; புஜிக்கும்போது பேசார்; ஈரக்கையோடு தூங்கார்; அக்நியையும் [1]வருணனையும் கொட்டிலையும் நாற்சந்தியையும் பிராம்மணனையும் தர்மிஷ்டனையும் பிராயமுதிர்ந்தவனையும் பிரதக்ஷிணஞ்செய்வர்; பிராயமுதிர்ந்தவருக்கும் சுமையினால்வருந்துகிறவருக்கும் பெண்களுக்கும் சிறுவருக்கும் பிணியாளருக்கும் பிராம்மணர்களுக்கும் பசுக்களுக்கும் அரசர்களுக்கும் வழிவிடுவார். எல்லா அதிதிகளுக்கும் வேலைக்காரருக்கும் சுற்றத்தாருக்கும் ஒரேபோஜனம் செய்விக்கவேண்டும்.. தான் சிறந்தபோஜனத்தைச் செய்யலாகாது. சொற்சுத்தம் மனச்சுத்தம்என்னும் தர்மங்களுக்குச் சரியானது மற்ற எதுவுமில்லை.. அந்தத்தர்மத்தினால் பஹுளையென்னும் பசு சிறந்தகதியையடைந்ததாகச் சொல்லப்படுகிறது. ஒரு பிராம்மணன் ரிஷிசாபத்தினால் புலியானான். அந்தப்புலி பகுளையென்னும்பசுவையடைந்து அதைப் பக்ஷிக்கவிரும்பிற்று; அதைச் சபதத்தின்மேல் விட்டது. அந்தப்பசு சபதப்படி கன்றுக்குஊட்டக்கொடுத்துத் திரும்பிவந்ததைக்கண்டு அந்தப்புலி தன்பூர்வஜன்மத்தை நினைத்தது.அதனால்விடப்பட்ட அந்தப்பசு திரும்பவும் தன்தேசத்திற்குச்சென்று பிறகு புண்யலோகங்களையடைந்தது. ராஜனே! பாரதஸ்ரேஷ்டனே! ஆதலால், நீயும்ஸத்தியத்தையும் மனத்தூய்மையையும்விடாமல்தேசத்தையும் அதிலுள்ளமனிதர்களையும் காப்பாற்றி எளிதில் ஸ்வர்க்கமடைவாய். அப்படியே சரணம்தேடுகிறவர்களுக்கு நல்வரவுசொல்லி அவர்களைக் காப்பாற்றவேண்டும். மனிதர்களுக்குக் காலைமாலைகளில் மட்டும் போஜனம் தேவர்களால் உண்டாக்கப்பட்டிருக்கிறது; இடையில்போஜனம் சொல்லப்படவில்லை. அப்படியிருப்பது உபவாஸம் செய்வதாகிறது. அக்நியானது ஹோமகாலத்தில் ஹோமத்தை எப்படி எதிர்பார்க்கிறதோ அப்படி பித்ருக்கள் ருதுகாலத்தில் கர்ப்பாதானத்தை எதிர்பார்க்கின்றனர். ருதுகாலமல்லாதகாலங்களில் ஸ்திரீஸங்கமம் செய்யாமலிருப்பது பிரம்மசாரிவ்ரதமாகச் சொல்லப்படுகிறது. அம்ருதம் பிராம்மணர்கள் பசுக்கள் இம்மூன்றும் ஓரினம்.

1 'வ்ருஷபத்தையும் தேவதையையும்' என்பது வேறுபாடம்; அதில், 'வருணன்' என்பது

ஆதலால், கோக்களையும் பிராம்மணர்களையும் எப்போதும் சாஸ்திரப் படி பூஜிக்கவேண்டும். யாகங்களில் மந்திர சுத்தமான மாம்ஸத்தைப் புசிப்பவன் பாவமடையான். முதுகுமாம்ஸமும் யாகத்தில்சேராத மாம்ஸமும் புத்ரமாம்ஸமும் ஸமமானவை. ஸ்வதேசத்திலாகட்டும் பரதேசத்திலாகட்டும் அதிதியை உபவாஸமிருக்கச்செய்யலாகாது. கர்மங்களெல்லாவற்றையும் செய்தபின் குருவுக்குத் தெரிவிக்கவேண்டும். குருக்களை நமஸ்கரித்துப் பூஜித்து அவர்களுக்கு ஆஸனங்கொடுக்கவேண்டும். குருவைப்பூஜைசெய்வதனால் ஆயுளும் புகழும் ஐஶ்வர்யமும் அபிவ்ருத்தியாகின்றன. முதிர்ந்தவர்களைஒருக்காலும் அவமதிக்கவும் அவர்களை வேலைகளில் ஏவவுங்கூடாது. அவர்கள் நிற்கும் போது உட்காரலாகாது. இப்படியிருப்பவனுக்கு ஆயுள் குறையாது. வஸ்திரமில்லாத ஆண்பெண்கள்யாரையும் பார்க்கலாகாது. ஸ்த்ரீ புருஷர்களின்கலவி எப்போதும்ரகஸ்யமாயிருக்கவேண்டும். தவஞ்செய்யவேண்டும். குருக்கள் தீர்த்தங்களுக்கும் தீர்த்தம். மனமே சுத்தங்களுள்சுத்தம். ஞானம் கண்களுக்கும்சிறந்தகண். திருப்தியேபெரிய ஸுகம். காலைமாலைகளில் தர்மம்கிரம்பினபெரியோர்களின் சொற்களைக் கேட்கவேண்டும். பெரியோரை எப்போதும் அடுப்பதனாலே தான் மனிதன் கல்வியையடைவது. வேதாத்யயனஞ்செய்யும்போதும் போஜனம்செய்யும்போதும் வலக்கையைவெளியில்எடுத்து (உத்தரியத்தை யஜ்ஞோபவீதமாகப்போட்டுக்) கொள்ளவேண்டும். வாக்கையும் மனத்தையும் ஐம்புலன்களையும் எப்போதும் அடக்கவேண்டும். நன்றாகப்பாகம்செய்யப்பட்ட பாயஸான்னம் யவான்னம் க்ருஸரம் நெய் இவை எப்போதும் சுத்தமானவை. பித்ருதேவதைகளுக்கு அஷ்டகாஶ்ராத்தமும் நவக்கிரகங்களுக்குப்பூஜையும் நித்தியமாகச்செய்யவேண்டும். க்ஷௌரத்தை மங்களமென்றுசொல்வதும் தும்மினபோது மங்களவசனங்களைச் சொல்வதும் வியாதியுள்ளவர்களுக்கெல்லாம் ஆயுள்வ்ருத்தியைச்சொலவதும் அவசியம். எந்தஆபத்திலிருந்தாலும் பெரியோரை நீ என்றுபேசலாகாது. நீ என்று பேசுவதிலும் கொலைசெய்வதிலும் வித்வான்களுக்குப் பேதமில்லை. தாழ்ந்தவர்களுக்கும் ஸரியானவர்களுக்கும் சிஷ்யர்களுக்குமட்டும் நீ என்று பேசுவது ஆசாரமாகும். பாபிஷ்டர்களினுள்ளம் எப்போதும் பாபத்திலேயேசெல்லும். தெரிந்து செய்தகாரியத்தையும் அயோக்யர்கள் மறைத்துவிடுவர். 'என்னை மனிதர்களும் பார்க்கவில்லை; தேவர்களும் பார்க்கவில்லை' என்றுநினைத்து, புத்திபூர்வமாகச் செய்த பாவத்தைப் பெரியஸபையில் பெரியோர்களிடத்தில் மறைப்பவர்

கெட்டுப்போகிறார். பாவஎண்ணத்தினால்மறைக்கப்பட்டபாவம் மேன்மேலும் பாவத்தையே உண்டாக்குகிறது. வட்டிவாங்கிஜீவிப்பவன் நாள்தோறும் வட்டியை எதிர்பார்ப்பதுபோலத் தர்மத்தினால் பாவம் மறைக்கப்பட்டுத் தர்மத்தையே விருத்திசெய்கிறது. ஜலத்திற்போட்டப்பட்டஉப்பு எப்படிக் கரைந்துபோகிறதோ அப்படியே பிராயச்சித்தத்தினால் அடிக்கப்பட்டபாவம் உடனே அழிந்துபோகிறது. ஆதலால், பாவத்தை மறைக்கலாகாது. மறைக்கப்பட்டால் மேன்மேலும் வளரும். பாவத்தைச்செய்தும் யோக்யர்களிடத்தில் சொல்வதனால் அதை நிவ்ருத்திசெய்யலாம். ஆசையினால் ஈட்டப்பட்டபொருளைத் தானிருக்குங்காலத்தில் அநுபவியாமற்போனால் அவன்இறந்துபோனபின் மற்றவர்கள் அதை அநுபவிக்கின்றனர். ஆதலால், தனம் தர்மத்திற்குச் சாதனமென்றே நினைத்து அதை எப்போதும் சம்பாதிக்கவேண்டும். தர்மமே மேன்மைக்குக்காரணமென்று எல்லாப்பிராம்மணர்களின்மனத்திலுமிருக்கிறதாகத் தெரிந்தவர் கூறுகின்றனர். அதனாலேதான் எல்லாப்பிராணிகளும் இயற்கையில் தர்மத்தையே பற்றுகின்றன. தர்மத்தைத் தனித்தேசெய்யவேண்டும். தர்மக்கொடிகட்டலாகாது. தர்மத்தைக்கொண்டுஜீவிப்பவர் தர்மத்தை வர்த்தகம் செய்பவராகிறார். தேவர்களை மனஉண்மையோடு பூஜிக்கவேண்டும். குருக்களை வஞ்சகமின்றிப் பணியவேண்டும். காப்பாற்றிவைத்திருக்கும்தனத்தைப் பரலோகத்திற்குரியநிதியாக யோக்யர்களிடத்தில் வைக்கவேண்டும்'' என்றார்.

---

## இருநூற்றுறுபத்தோன்பதாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(விதிக்கும் முயற்சிக்குமுள்ள வித்தியாசமுதலியன.)

யுதிஷ்டிரர், "பரதஸ்ரேஷ்டரே! அத்ருஷ்டமில்லாதவன்மிக்க வலிமையுள்ளவனாயிருந்தாலும் தனத்தையடைவதில்லை. அத்ருஷ்டமுள்ளவன் இளைத்திருந்தாலும் சிறுவனாயிருந்தாலும் மிகுதியாகத் தனங்களையடைகிறான். முயற்சிசெய்தாலும் லாபம்வராதகாலத்தில் பொருளையடைவதில்லை. லாபகாலத்தில் முயற்சியில்லாமலே மிகுதியான தனத்தை மனிதன் அடைகிறான். முயற்சிசெய்துபலனடையாத மனிதர்களனேகர் காணப்படுகின்றனர். முயற்சியில்லாமலே செல்வம் பெருகின ஜனங்கள்பலர் காணப்படுகின்றனர். முயற்சியேகாரணமாயிருந்தால் மனிதன் அதன்பலனையெல்லாம் அடையவேண்டும். மனி

தர்களுக்குக்கிடைக்காதது ஒன்றும் காணப்படாது. முயற்சிசெய்தும் பலனில்லாதமனிதர்களைக்காண்கிறோம். வரவுக்குரிய அநேக வழிகளினால் ஒருவன் பொருள்களைத் தேடுகிறான். மற்றொருவன் தேடாமலே ஸுகப்படுகிறான். செய்யத்தகாத காரியங்களைத் தொடர்ச்சியாகச்செய்தும் பொருள்பெறாதமனிதர்கள் காணப்படுகின்றனர். மற்றும்சிலர் ஸத்கர்மங்களிலிருந்துகொண்டே பொருளுள்ளவராகவும் காணப்படுகின்றனர். ஒருவன் ராஜநீதிசாஸ்திரங்களைக்கற்றும் நீதியிற்சேர்ந்தவனைக் காணப்படவில்லை. சாஸ்திரந்தெரியாதவனும் மந்திரிபதம்கொடுக்கப்படுகிறான். கல்வியுள்ளவனும் கல்வியில்லாதவனும் புத்தியில்லாதவனும் பொருளுள்ளவராயிருக்கிறார்கள். கல்வியைப்பற்றி மனிதன் ஸுகம்பெறுவானாயின் கற்றறிந்தவன் கல்வியில்லாதவனை ஜீவனத்திற்காக அடுக்கக்கூடாது. ஜலம்கிடைத்ததனால் மனிதன் தண்ணீர்த்தாகத்தைப் போக்குவதுபோல வித்தையினாலேயே வேண்டினபொருளையடையலாமானால் வித்தையையாரும்விடார். அநேகம்அம்புகளினாலடிக்கப்பட்டிருந்தாலும் காலம்வராமல் இறப்பதில்லை. காலம்வந்தபோது புல்முனைபட்டாலும் பிழைப்பதில்லை. இதற்கு என்ன காரணம்?" என்றுகேட்க, பீஷ்மர் சொல்லலானார்.

"யுதிஷ்டிர! அநேகமுயற்சிகளைச்செய்பவனும் பொருளையடையாமற்போவனாயின் அவன் கடுந்தவம் செய்யவேண்டும். விதையாமல் ஒன்றும் முளைப்பதில்லை. தானஞ்செய்வதனாலேதான் போகங்களையடையவேண்டும். பெரியோரைஅடுத்துத்தான் அறிவுள்ளவனாவான். அஹிம்ஸையினாலேதான் தீர்க்காயுள்பெறுவானென்றுதெரிந்தவர் கூறுகின்றனர். ஆதலால், கொடுக்கவேண்டும். யாசிக்கலாகாது. தர்மிஷ்டர்களைப் பூஜிக்கவேண்டும். இன்சொற்சொல்லியும் இனியதுசெய்தும் மனமடங்கியும் ஒருபிராணியையும் துன்பம்செய்யாமலுமிருக்கவேண்டும். கொசுகு புழு எறும்புகளுக்கும் ஸுகதுக்கங்களுக்குக்காரணங்கள் பிறப்பும் இறப்பும்தாம். நீ நிச்சயமாயிரு.

## இருநூற்றெழுபதாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(தர்மத்தை அனுஷ்டிக்கும்முறைமுதலியன.)

நல்லதாகிய புண்ணியத்தையும் கெட்டதாகிய பாவத்தையும் மனிதன் பிறரால் செய்வித்துக்கொண்டும், தானேசெய்துகொண்டுமிருக்கிறானன்றோ? அவற்றுள் நல்லதைச்செய்தபின் கவலையற்றிருக்

கலாம்; கெட்டதைச்செய்தபின் அவ்வாறு இருக்கலாகாது. காலந் தான் உள்ளிருக்கும்சக்தி. கெடுதலேயும் நன்மையையும் அதுவே கொடுக்கிறது. அதுதான் பிராணிகளின்புத்தியில்பிரவேசித்துத் தர் மத்தையும் அதர்மத்தையும் நடத்துகிறது. தர்மத்தின்பலனைக்காண் பதனுல் இவனுக்குத் தர்மநிச்சயமுண்டாகுமாளுல் அப்போதுதான் தர்மசிந்தையுள்ளவன் அதில்நம்பிக்கையாயிருக்கலாம். அவ்வாறன்றி உறுதியர்னஎண்ணத்தோடு நம்பலாகாது. மனிதர்களுள் தெரிந்த வர்களின் இலக்கணம் இவ்வளவுதான். காலத்தினுல் தூண்டப்பட் டாலும் தர்மாதர்மங்களிரண்டையும் அறிந்து அவற்றில் எது முடி வில் நியாயமாகஇருக்குமோ அதை அநுஷ்டிக்கவேண்டும். ராஜ் யத்தையடைந்தமனிதர்கள் ஜனங்களே எப்படி கௌரவிக்கின்ற னரோ அப்படியே இவ்வுலகத்தில் தர்மிஷ்டர்கள் தம்மாலேயே தம்மை மேன்மையாகச்செய்கின்றனர். தவத்தினுலும் தேவதா பூஜையினுலும் முந்தியபுண்ணியத்தினுலும் கல்வியினுலும் தானத் தினுலும் ஜபத்தினுலும் உள்ளம் சுத்தமாகிறது. இந்தச்சுத்தமில் லாதவன் தர்மகாலத்தில் தேவதாபூஜையை எவ்வகையிலும் செய்ய லாகாது. தர்மத்தைவிட்டால் தர்மபலனைக் காலம் எவ்வகையிலும் கொடாது. ஆதலால்தான், தர்மம்செய்யும்போது பரிசுத்தனுயிருப் பதைத் தெரிந்துகொள்ளவேண்டும். தொடர்ச்சியாகச் செய்யப்பட்ட அதர்மம் காலத்தினுல் காப்பாற்றப்பட்ட தர்மத்தை எரியும்தீயைப் போல அணுகாது. தவத்தையும் தேவதாபூஜையையும் தர்மமா கவே செய்யவேண்டும். ஜயத்தைத்தருவது தர்மந்தான். மூன்றுல கங்களுக்கும் ஒளியன்றே ஆதாரமாயிருப்பது? எந்தஞானியும் மனி தனைக் கையில்பிடித்துநடத்துவதில்லே. தர்மத்தினுல் தூக்கிக்கொண்டு போகப்பட்டுத்தான் எவனும் வழுவில்லாதமேற்பதத்தை அடைவது. நல்லவையாகக்காணப்படும்பலதர்மங்களில் நம்பிக்கைதான் வைக்க வேண்டும். சிலர், 'நான் சூத்திரன்; நான்குஆஸ்ரமதர்மங்களேயும் அநுஷ்டிப்பதில்எனக்கு அதிகாரமில்லை'என்னும்பகுத்தறிவை மன த்தில்வைத்துக்கொள்வதில்லே.நாலுவர்ணங்களின் விசேஷதர்மத்தை யும் குறிப்பாகச் சொல்லுவேன். ஐந்துபூதங்களால் உண்டானதேக முள்ளவர்களும் ஒரேஇயற்கையுள்ளவர்களுமான எல்லாவர்ணத்தா ருக்கும் உலகநடக்கையிலும் தர்மகாரியங்களிலும் வேறுபாடு செய் யப்பட்டிருக்கிறது. பிராணிகள் முடிவில் முக்தியடைவதற்கு ஒன்று கத்தான் இருக்கின்றன. அதற்குள் பிரிவிருக்கிறது. அப்பா! உலகம் நிலையற்றதாகவும் தர்மமட்டும் நிலைபெற்றதாகவும் சொல்லப்படுவது

எப்படியென்றால், காலம் அழியாது. ஆதலால், தர்மம் அழியாது. எல்லாரும் ஒரேதேகமும் ஒரேதன்மையுமுள்ளவர்களாயிருந்தாலும் காலமானது தர்மத்துடன்சேர்ந்து அவர்கள்பின்கதிக்குத் தானே வழிகாட்டுவதாகிறது. இப்படியிருப்பதனால் பிராணிகள் தம்தம் தர்மங்களை அனுஷ்டிப்பதில் பிழையொன்றுமில்லை. இப்படியிருக்கையில் தர்மத்தை அனுஷ்டிக்காமையினால் திரியக்ஜாதியில் பிறந்த பிராணிகளுக்குத் தோஷமில்லை. உலகம்தான் யாவருக்கும் ஆசாரியனாக நினைக்கப்படுகிறது" என்றார்.

---

## இருநூற்றெழுபத்தோராவது அத்யாயம்.

### தா ன த ர் ம ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(தேவநாமங்களும் ரிஷிநாமங்களும்.)

கௌரவராஜரும் பாண்டுபுத்திரருமான யுதிஷ்டிரர் பாவத்தைப் போக்குவதாகிய ஹிதத்தை அறியக்கருதிச் சரதல்பத்திலிருக்கும்பீஷ்மரை நோக்கி, "இவ்வுலகத்தில் எது மனிதனுக்கு நன்மை? எதைச் செய்தால் ஸுகத்தை மிகுதியாகப்பெறலாம்? எதனால் மனிதன் பாவமற்றவனாவான்? பாவங்களைப் போக்குவது எது?" என்று கேட்டார். புருஷஶ்ரேஷ்டரான ஜனமேஜயரே! திரும்பவும் கேட்கக்கருதின யுதிஷ்டரருக்கு உடனேபீஷ்மர் தேவர்களின் வம்சத்தை வரிசைப்படி சொல்லலானார்.

"குழந்தாய்! நான்சொல்லும் தேவவம்சத்தையும் ரிஷிவம்சத்தையும் காலை நடுப்பகல் மாலை இம்மூன்றுஸந்திகளிலும் படிப்பது பாவங்களைப் போக்குபவற்றுள் சிறந்தது. இந்திரியங்களினால் பிரவ்ருத்திக்கும் மனிதன் பரிசுத்தனாகி இதைச்சொல்வதனால் பகலிலும் இரவிலும் காலைமாலைஸந்திகளிலும் தெரிந்தும் தெரியாமலும், செய்யப்படும் பாவங்களெல்லாவற்றிலிருந்தும் உடனே விடுபடுவான். காலத்தில் இதைச் சொல்லுகிறவன் குருடனாவதில்லை; செவிடனாவதில்லை; எப்போதும் மங்களமுள்ளவனாயிருப்பான்; திர்யக்ஜாதிகளிலும் ஸங்கரஜாதிகளிலும் பிறவான்; நரகம்புகான். அவனுக்குத் துக்கமும் பயமும் இல்லை; மரணகாலத்தில் புத்திமயக்கமிராது. 'தேவருக்கும் அஸுரருக்கும்பிதாவும் எல்லாப்பிராணிகளாலும் நமஸ்கரிக்கப்பட்டவரும் சிந்தைக்கும் சொல்லுக்கும் எட்டாதவரும் எல்லாருக்கும் உயிரும் கர்ப்பத்தில் பிறவாதவரும் உலகங்களுக்கு நாதரு

மான பிரம்மதேவர், பிரம்மதேவருடைய பத்நியாகியஸாவித்ரிதேவி, வேதங்களால் சொல்லப்படுகிறவரும் ஜகத்கர்த்தாவும் பிரபுவும் ஜகத்வியாபியுமான நாராயணர், உமையின்கணவராகிய விருபாக்ஷர், தேவஸேனைக்குப்பதியாகிய விசாகரென்னப்படும் ஸுப்ரம்மண்யர், அக்நி, வாயு, ஒளியைச்செய்கிறவர்களாகிய சந்திரசூரியர்கள், சசியின் கணவனாகிய தேவேந்திரன், தூமோர்ணையென்னும் மனைவியுள்ள யமன், கௌரியென்னும் பத்நியுள்ளவருணன், ருத்தியென்னும் பத்நியுள்ள குபேரன், சாந்தமான காமதேனுவென்னும்கோதேவதை, விஸ்ரவஸ் மகரிஷி, ஸங்கல்பனென்னப்படுங்காமன், ஸமுத்ரராஜன், கங்கை, ஏழுமருத்துக்கள், தவஸித்திபெற்ற வாலகில்யர்கள், வ்யாஸர், நாரதர், பர்வதர், விஸ்வாவஸு, ஹாஹா, ஹூஹூ, தும்புரு, சித்ரஸேனன், [1]பெயர்பெற்ற தேவதூதன், சிறந்தமகிமையுள்ள தேவகன்னிகைகள், உர்வசி, மேனகை, ரம்பை, மிஸ்ரகேசி, அலம்புஷை, விஸ்வாசி, க்ருதாசி, பஞ்சசூடை, திலோத்தமையென்னும் சிறந்த அப்ஸரஸுகள், ஆதித்யர்கள், வஸுக்கள், ருத்ரர்கள், அஸ்வினீதேவர்கள், பித்ருக்கள், தர்மம், கல்வி, தவம், தீக்ஷை, முயற்சி, [2]பிதாமஹர், இரவுகள், பகல்கள்; மரீசியின்புத்திரரான கஸ்யபர், சுக்ரர், ப்ருகஸ்பதி, குஜன், புதன், ராஹு, சநி, நக்ஷத்திரங்கள், ருதுக்கள், மாதங்கள், பக்ஷங்கள், வருஷங்கள், விநதையின் புத்ரர்கள், கடல்கள், கத்ருவின்பிள்ளைகளாகிய நாகர்கள், சதத்ரு, விபாசை, சந்திரபாகை, ஸரஸ்வதி, ஸிந்து, தேவிகையென்னும் நதிகள், பிரபாஸதீர்த்தம், புஷ்கரதீர்த்தம், மகாநதியான ஆகாசகங்கை, வேணை, [3]காவேரி, நர்மதை, குலம்புனை, விசல்யை, எப்போதும் ஜலம் பிரவகிக்கும் கரதோயை, ஸரயு, கண்டகி, லோஹிதமென்னும்பெரிய [4]நதம், தாம்ராருணை, வேத்ரவதி, பர்ணாசை, கௌதமி, கோதாவரி, வேண்யை, கிருஷ்ணவேணை, அத்ரிஜை, த்ருஷத்வதி, காவேரி, [5]சக்ஷு, மந்தாகினி, பிரயாகை, [6]ப்ரபாஸம், புண்ணியமான நைமிசாரண்யம், பரிசுத்தமான புண்ணியதீர்த்தமாகவும் சிறந்த ஜலமுள்ளதாகவுமிருக்கும் நிர்மலமான தடாகமுள்ள அந்த ஈஸ்வரருடைய ஸ்தானமாகிய குருக்ஷேத்திரம், ஸிந்தூத்தமம், தபோதானம், ஜம்புமார்க்கம், ஹிரண்வதி, வித

1 விஸ்ருதன் என்னும் தேவதூதன் என்றும் கொள்ளலாம்.

2 பிரம்மதேவருக்குப் பிற்பட்டவர்.

3 இது இரண்டுமுறை வந்திருக்கிறது.

4 மேற்கடலில் விழும் ஆறு.

5 சக்ஷு, மந்தாகினி இரண்டும் கங்கையின் பிரிவுகள்.

6 இது இரண்டுமுறை வருகிறது.

ஸ்தை, ப்லக்ஷவதி, வேதஸ்ம்ருதி, வேதவதி, மாலவை,அஸ்வவதிஇந் நதிகளும், பூமியிலுள்ள புண்ணிய க்ஷேத்திரங்களும், கங்காத்வாரமும், ஸிந்துநதியைச்சேரும் ரிஷிகுல்யைகள் என்னும் பரிசுத்தமான நதிகளும் புண்ணியநதியான சர்மண்வதி, கௌசிகி, யமுனை, பீமரதி, மஹாநதியான பாஹுதை, மாஹேந்திரவாணி, த்ரிதிவை, நீலிகை, ஸரஸ்வதி, நந்தை, அபரநந்தை, தீர்த்தமகாஹ்ரதமென்னும் புண்ணியதடாகம், கயை, பல்குனீதீர்த்தம், தேவர்களாற்சூழப்பட்ட தர்மாரண்யம், புண்ணியமான தேவநதி, பிரம்மாவினுலுண்டாக்கப் பட்டதும் மூன்றுலகங்களிலும் பெயர்பெற்றதும் எல்லாப்பாவங்களையும் போக்குவதும் பரிசுத்தமும் ஸௌக்கியமுமான மானஸஸரஸ், சிறந்த ஓஷதிகளோடுகூடிய இமயமலை, பலநிறங்களான தாதுக்களும் புண்ணியதீர்த்தங்களும் ஓஷதிகளும் நிரம்பியவிந்தியமலை, மேரு, மஹேந்திரம், மலயம், வெள்ளிமயமான ஸ்வேதகிரி, ஸ்ருங்கவான், மந்தரம்,நீலம், நிஷதம்,தர்த்துரம், சித்ரகூடம், அஞ்சனபம், கந்தமாதனம், புண்ணியமான ஸோமகிரிமுதலான மலைகளும், திசைகளும், மூலைகளும், பூமியும், எல்லாமரங்களும், விஸ்வேதேவர்களும், ஆகாயமும், நக்ஷத்திரங்களும், கிரகங்களும் ஆகிய தேவர்களின் பேர்களை நான் சொன்னேன். இந்தத்தேவர்கள் என்னை எப்போதும் காப்பாற்றக்கடவர்' என்று இவர்களைப் பற்றிச்சொல்லும் மனிதன் எல்லாப் பாவங்களாலும் விடப்படுவான். துதிப்பவனும் அதைக்கேட்டு ஸந்தோஷிப்பவனும் எல்லாப்பயங்களிலிருந்தும் விடுபடுவார். இந்தத் தேவஸ்தோத்திரத்தைக்கேட்டு ஸந்தோஷிப்பவன் ஜாதிஸங்காரத்தினுலுண்டாகும் பாவங்களெல்லாவற்றிலிருந்தும் விடப்படுவான். தேவதைகளைச் சொன்னபின் சொல்லப்படுகிறவரும் தவஸித்தி பெற்றவரும் தவத்தில் சிறந்தவரும் எல்லாப்பாவங்களையும் விடுவிப்பவருமான பிராம்மணர்களைத் தேவர்களுக்கடுத்தபடியில் " சொல்வேன். யவக்ரீதர், ரைப்யர், உசிக்கின் புத்ரராகிய கக்ஷீவான், ப்ருகு, அங்கிரஸ், கண்வர், மகிமையுள்ள மேதாதிதி, குணங்கள் நிரம்பின பர்ஹியென்பவர் இவர்கள் கிழக்குத் திக்கைச்சார்ந்தவர்கள் ; உல்முசு, ப்ரமுசு, மஹானுபாவரான முமுசு, மகிமையுள்ள ஸ்வஸ்த்யாத்ரேயர், மித்திரனுக்கும் வருணனுக்கும் புத்ரரும் மகிமையுள்ளவருமான அகஸ்தியர், த்ருடாயுஎன்றும்ஊர்த்வபாஹுவென்றும் பெயர்பெற்ற இரண்டுரிஷிஸ்ரேஷ்டர்கள் ஆகிய இம்மஹானுபாவர்கள் தென்திசையைச்சார்ந்திருக்கின்றனர். இனி, மேற்குத்திசையைச் சார்ந்திருப்பவர்களைக் கேள். ஸஹோதரர்களோடுகூடிய உஷங்கு, சிறந்தமகிமை

யுள்ள பரிவ்யாதர், தீர்க்கதமஸ், கௌதமமகரிஷி, காஸ்யபர், ஏகதர், த்விதர், த்ரிதர் என்னும் மகரிஷிகள், அத்ரியின் புத்ரரும் தர்மாத்மாவும் ஸமர்த்தருமான ஸாரஸ்வதர் ஆகியஇவர்கள்மேற்குத்திசையைச் சார்ந்தவர்கள். இனி,வடக்குத்திசையைச்சேர்ந்து விளங்குகிறவரைக் கேள். அத்ரி, வஸிஷ்டர், சக்தி, சிறந்த மகிமையுள்ள வ்யாஸர், விஸ்வாமித்திரர், பரத்வாஜர், ஜமதக்நி, ரிசீகர்புத்ரரானபரசுராமர், உத்தாலகர்புத்ரரான ஸ்வேதகேதுமகரிஷி, கோஹலர், விபுலர், தேவலர், தேவசர்மா, தௌமியர், ஹஸ்திகாஸ்யபர், லோமசர், நாசிகேதர், லோமஹர்ஷணர், உக்ரஸ்ரவஸ், ப்ருகுவம்சத்தவரான ச்யவனர் இவர்கள் வடதிசையைச்சார்ந்தவர்கள். ராஜனே! ரிஷிகளும் தேவர்களும்சேர்ந்த இந்தக்கூட்டத்தைக்கீர்த்தனம்செய்வது எல்லாப் பாவங்களையும் விடுவிக்கும். ந்ருகன், யயாதி, நகுஷன், யது, பராக்ரமசாலியானபூரு, துந்துமாரன், திலீபன், பராக்ரமமுள்ள ஸகரன், க்ருசாஸ்வன், யௌவனாஸ்வன், சித்ராஸ்வன், ஸத்யவான், துஷ்யந்தன், பெரும்புகழ்பெற்ற பரதசக்ரவர்த்தி, பவனன்,ஜநகர், த்ருஷ்டரதனென்னும் அரசன், ரகுவென்னும் அரசன், தசரதமகாராஜர், ராக்ஷஸர்களைக்கொன்ற வீரராகிய ராமர், சசபிந்து, பகீரதன், அரிச்சந்த்ரன், மருத்தன்,த்ருடரதனென்னுமரசன்,மகோதர்யன், அலர்க்கன்,புரூரவராஜன்,கரந்தமராஜன்,கத்மோரராஜன், தக்ஷன்,அம்பரீஷன்,குகுரன், மிகப்புகழ்பெற்ற ரைவதன், குரு, ஸம்வரணன், தவறாத பராக்கிரமமுள்ள மாந்தாதா, ராஜரிஷியானமுசுகுந்தன், ஜாஹ்நவியானகங்காதேவியினாலடையப்பட்ட ஜஹ்நு, ஆதிஅரசனும் வேனன் புத்ரனுமானப்ருது, எல்லாருக்கும் பிரியத்தைச்செய்யும் மித்ரபானு,த்ரஸத்தஸ்யுராஜன், ராஜரிஷிகளிற்சிறந்த ஸ்வேதன், பெயர்பெற்ற மகாபிஷன், நிமிராஜன், அஷ்டகன், ஆயு, க்ஷுபனென்னும் ராஜரிஷி, கக்ஷேயுஎன்னுமரசன், ப்ரதர்த்தனன், திவோதாஸன்,கோஸலதேசத்தரசனான ஸுதாஸன், ராஜரிஷியான நளன்,பிரஜைகளுக்கதிபதியான மனு,ஹவித்ரன்,ப்ருஷத்ரன்,ப்ரதீபன்,சந்தனு,அஜன்,பிராசீனபர்ஹி, பெரும்புகழ்பெற்ற இக்ஷ்வாகு, அநரண்யராஜன், ஜானுஜங்கன், கக்ஷஸேனனென்னும் ராஜரிஷிஇவர்களையும் நான் சொல்லாத மற்றுமுள்ள ராஜரிஷிகளையும் நாள்தோறும் காலையில் எழுந்து ஸூர்யோதயம் ஸூர்யாஸ்தமனம் இரண்டு ஸந்திகளிலும் வீட்டிற்கு வெளியிலிருந்து பரிசுத்தனாகிக் கீர்த்தனம்செய்பவன் தர்மபலனை அடைவான். 'உலகத்திற்கதிகாரிகளாகிய தேவர்களும் தேவரிஷிகளும் ராஜரிஷிகளும் என்னால் துதிக்கப்பட்டு எனக்குத் தேகபுஷ்டி

யையும் ஆயுளையும் புகழையும் ஸ்வர்க்கத்தையும் கொடுக்கக்கடவர். எனக்கு இடையூறும் பாவமும் பகையும் இல்லாமலிருக்கக்கடவன. எனக்கு எப்போதும் ஜயமும் மறுமையில் நல்லகதியும் உண்டாகக் கடவன' என்று சொல்லவேண்டும். நீ மனத்தை அடக்கி எல்லாஜனங்களையும் காப்பாற்று. உனக்கு வ்யாஸர்கண்ணனும் கிருஷ்ணன் ஆதாரமாகவும் இருக்கவேண்டும்'' என்றார். சிறந்தபுத்தியுள்ள பீஷ்மர் இவ்வாறுசொல்லித் தியானம்செய்வதற்காக ஓய்ந்தார்'' என்றார்.



## இருநூற்றேழுபத்திரண்டாவது அத்யாயம்.

### தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மர் விடைகொடுத்ததும், யுதிஷ்டிரர் ஹஸ்தினபுரம் சென்றதும்.)

இந்தப்படி வைசம்பாயனர்சொல்லக் கேட்ட ஜனமேஜயர், "பிராம்மணரே! கௌரவர்களுக்குத்தலைவரானபீஷ்மர்வீரசயனமான சரதல்பத்தில்படுத்துப் பாண்டவர்களால அடையப்பட்டிருந்தபோது என்தந்தையின்பாட்டனரும்சிறந்தஞானமுள்ளவருமானயுதிஷ்டிரர், தர்மசாஸ்திரங்களையும் தானவிதிகளையும்பற்றிய ஸந்தேகங்களெல்லாவற்றையுங்கேட்டுதெரிந்து தர்மார்த்தஸந்தேகங்கள் தீர்ந்தபின் வேறு என்னகாரியம்செய்தார்; அதனை எனக்குச் சொல்லக்கடவீர்'' என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லலானார்.

"அந்தப்பீஷ்மர் பேசிஓய்ந்தபிறகு, அந்தராஜக்கூட்டமனைத்தும் படத்திலெழுதினசித்திரம்போலச் சற்றுநேரம் அசைவற்றிருந்தது. ஸத்யவதியின்புத்திரரான வ்யாஸர் சிலநேரம்சிந்தித்து, படுத்திருக்கும் அரசரான பீஷ்மரைப்பார்த்து அவஸரமாக, "புருஷஸ்ரேஷ்டரே! ராஜரே! கௌரவராஜனனயுதிஷ்டிரன் தைரியமடைந்தான்; ஸஹோதரர்கள் அடுத்திருக்கும் அரசர்கள்முதலியஎல்லாரோடும்சிறந்தஞானமுள்ளகிருஷ்ணனோடும் உம்மைக் காத்திருக்கிறான். பட்டணத்திற்குப்போகும்படி நீர் இவனுக்கு விடைகொடுக்கவேண்டும்'' என்று சொன்னார். வ்யாஸபகவான் இவ்வாறு சொல்ல, வேந்தரான பீஷ்மர் பிறகு யுதிஷ்டிரருக்கும் அவரோடுகூட இருக்கிறவருக்கும் விடை கொடுத்தார். சந்தனுபுத்ரரும் அரசருமானபீஷ்மர் தர்மராஜரைப் பார்த்து, "ராஜனே! பட்டணத்திற்குப் போ. மனத்தைத் தர்மத்தில்வை. நிரம்பின அன்னங்களும் தக்ஷிணைகளுமுள்ள பலவகை யாகங்களைச் செய். குந்திபுத்ரனே! அரசர்க்கரசே! யயாதிபோலவே

ஸ்ரத்தையோடு ஐம்புலன்களையும் அடக்கி க்ஷத்திரியதர்மத்தில் ஊக்கம்வைத்துப் பித்ருக்களையும் தேவர்களையும் திருப்திசெய். நன்மையையடைவாய். உனக்குமனத்தில் வருத்தம்விலகட்டும். பிரஜைகளை யெல்லாம் ஸந்தோஷிக்கச்செய். மந்திரிகள்முதலான ராஜ்ய அங்கங்களை நயப்படுத்திக்கொள். சிநேகிதர்களுக்குப் பிரயோஜனங்களைச்செய்வதனாலும் மர்யாதைகளைச்செய்வதனாலும் அவரவருக்குத் தக்கபடி திருப்திசெய். அப்பா! அன்புள்ளசிநேகிதர்கள் கிராமத்தின்பக்கத்திலிருக்கும் பழுத்தமரத்தைப் பறவைகள் அடுப்பதுபோல உன்னை அடுத்து ஜீவிக்கட்டும். ராஜனே! சூரியன் திரும்பி உத்தராயணம்வந்தபின் நான் குறித்தகாலத்தில் நீ வரலாம்?' என்று மதுரமானசொல்லைச் சொன்னார். அந்தத்தர்மராஜர், 'அப்படியே' என்று சொல்லிப் பீஷ்மரைநமஸ்கரித்துக் கூடஇருப்பவர்களோடுஹஸ்தினாபுரத்திற்குச் சென்றார். ஜனமேஜயராஜரே! கௌரவஸ்ரேஷ்டரான தர்மராஜர் திருதராஷ்டிரனையும் பதிவ்ரதையான காந்தாரியையும்முன்னிட்டுக்கொண்டு எல்லாரிஷிகளோடும் ஸஹோதரர்களோடும் கிருஷ்ணனோடும் பட்டணத்திலும்தேசத்திலுமுள்ளஜனங்களோடும் முதிர்ந்தவர்களான மந்திரிகளோடும் ஹஸ்தினாபுரப்பிரவேசம் செய்தார்.

தானதர்மபர்வம் முற்றிற்று.

---

இருநூற்றெழுபத்துமூன்றாவது அத்யாயம்.

## பீஷ்மஸ்வர்க்காரோஹணபர்வம்.



(உத்தராயணம் வந்தபின் தர்மபுத்ரர் பீஷ்மரிடம் சென்றது.)

பிறகு, குந்திபுத்திரரான தர்மராஜர் பட்டணத்துஜனங்களையும் தேசத்துஜனங்களையும் அவரவருக்குத்தக்கபடி மர்யாதைசெய்து தங்கள் தங்கள்வீடுகளுக்குப்போக அனுமதிகொடுத்தார். அப்போது பாண்டுபுத்ரரான தர்மராஜர் யுத்தத்தில் புத்திரர்களும் கணவர்களும் இறந்துபோனஸ்திரீகளை மிகுதியாகப்பொருள்கொடுத்து ஸமாதானப்படுத்தினார். சிறந்தபுத்தியுள்ளவரும் புருஷஸ்ரேஷ்டரும் தர்மிஷ்டரிற்சிறந்தவருமான அந்தச்சிறப்புற்றயுதிஷ்டிரர், பட்டாபிஷேகஞ்செய்யப்பெற்று ராஜ்யத்தையடைந்து தம்ஜனங்களெல்லாருக்கும் நல்ல வார்த்தைசொல்லிப் பிராம்மணர்கள் சேனைத்தலைவர்கள் நகரத்தில் முக்கியமானவர்கள் இவர்களெல்லாருடையசிறந்தஆசீர்வாதங்களையும் பெற்றுநகரத்தில்ஐம்பதுநாட்கள்வஸித்தபின்புகௌரவர்களிற்சிறந்த

வரான பீஷ்மர்குறித்தகாலத்தை நினைந்தார். அவர் உத்தராயணம் வந்து சூரியன் திரும்பினதைக்கண்டவுடன், புரோகிதர்களால் சூழப் பெற்று ஹஸ்திநபுரத்திலிருந்து புறப்பட்டார். பகைவரைஜயிப்ப வரே! குந்திபுத்திரரும் சிறந்தபுத்தியுள்ளவரும் சிறந்தபராக்கிரம முள்ளவரும் கௌரவருமான யுதிஷ்டிரர் பீஷ்மருக்குஸம்ஸ்காரம் செய்வதற்காக நெய், புஷ்பமாலை, வாஸனைத்திரவியங்கள், பட்டுக்கள், சிறந்த சந்தனக்கட்டைகள், கறுப்பும்வெளுப்புமான அகிற்கட்டை கள் இவற்றை முன்னேயனுப்பிப் பூமாலைகளையும் விலையுயர்ந்த பலவகைரத்னங்களையும் எடுத்துக்கொண்டு திருதராஷ்டிரனையும், புகழ்பெற்றகாந்தாரியையும், தம் தாயான குந்தியையும், புருஷ ஸ்ரேஷ்டர்களான ஸஹோதரர்களையும் முன்னிட்டுக்கொண்டு, கிருஷ் ணனும் புத்திசாலியான விதுரரும் யுயுத்ஸுவும் யுயுதானனும் பின் செல்ல, அரசர்களுக்குரிய சிறந்த பரிவாரங்கள்சூழவும் எல்லாரும் துதிக்கவும் பீஷ்மருடைய அக்நிக்குப்பின் சென்றார். தர்மராஜர் அந்நகரத்திலிருந்து தேவேந்திரன்போலப் புறப்பட்டுக் குருக்ஷேத் திரத்தில் பீஷ்மரிடம் சென்றார். ஜனமேஜய ராஜரிஷியே! பராசரர் புத்ரரும் சிறந்தஞானியுமான வ்யாஸராலும் நாரதராலும் தேவலரா லும் அஸிதராலும் பலதேசத்திலிருந்துவந்து அடிபடாமல் மிகுந்த அரசர்களாலும் ஸேவிக்கப்பட்டும் சுற்றிலும் காவற்காரர்களால் காப் பாற்றப்பட்டும் வீரசயனத்தில் படுத்திருக்கும் அம்மகாத்மாவைத் தர்மராஜர் கண்டார். உடனே, ஸஹோதரர்களுடன் ரதத்தினின்று இறங்கினார். பிறகு, தர்மராஜர் பகைவரையடக்குகிறவராகிய தமது பிதாமஹரையும் வ்யாஸர்முதலான பிராம்மணர்களையும் நமஸ்கரித்து அவர்களால் ஆசீர்வதிக்கப்பெற்றார். கௌரவரும் தர்மராஜருமான யுதிஷ்டிரர் ப்ரம்மாவுக்கொப்பான புரோகிதர்களோடும் ஸகோதரர்க ளோடும் ரிஷிகளால்சூழப்பட்டுச் சரதல்பத்தில்படுத்திருக்கும் பரத ஸ்ரேஷ்டரானபீஷ்மர் அருகில்சென்று, "கங்காபுத்ரரே! ராஜரே! நான் யுதிஷ்டிரன்; உம்மை நமஸ்கரிக்கிறேன். சிறந்தகைகளையுடைய வரே! நான்சொல்வது உமதுசெவியில் படுகிறதா? நான் என்ன செய்யவேண்டுமென்பதைக்கட்டளையிடும். ராஜரே! ஸமர்த்தரே! நீர் குறித்தகாலத்தில் அக்நியை எடுத்துக்கொண்டு வந்திருக்கிறேன். ஆசாரியர்களும் பிராம்மணர்களும் ரித்விக்குக்களும் என்ஸகோதரர்க ளும் வந்திருக்கிறார்கள். உமது புத்திரரும் சிறந்த பராக்கிரமசாலியு மான திருதராஷ்டிரமகாராஜரும் மந்திரிகளுடன் வந்திருக்கிறார். சிறந்தமகிமையுள்ள வாஸுதேவரும் வந்திருக்கிறார். யுத்தத்தில்

அடிபடாமல் மிகுந்த அரசர்களும் குருஜாங்கலதேசத்தார் அனைவரும் வந்திருக்கின்றனர். புருஷஶ்ரேஷ்டரே! கண்களைத்திறந்து அவர்களைப்பாரும். நான்செய்யவேண்டிய காரியத்துக்குரிய பொருள்களையெல்லாம் இங்கேகொணர்ந்து சேர்த்திருக்கிறேன். நீர் சொன்ன காலத்திலேயே எல்லாம்செய்யப்பட்டிருக்கின்றன'' என்றுசொன்னார்.

சிறந்தபுத்தியுள்ள தர்மராஜரால் இவ்வாறுசொல்லப்பட்ட பீஷ்மர் தம்மைச்சுற்றி நிற்கும் பாகவம்சத்தாரெல்லாரையும் பார்த்தார். சிறந்தவாக்குள்ள பீஷ்மர் பிறகு உடம்பைப்புரட்டித் தமதுபெரிய கையைத்தூக்கி நீருண்ட மேகமுழக்கம்போன்ற தொனியோடு அந்தக்காலத்தில் சொல்லலானார். "குந்திபுத்திரனே! யுதிஷ்டிரனே! மந்திரிகளோடு நீ வந்துசேர்ந்தது ஸந்தோஷம். ஆயிரம் கிரணங்களையுடைய ஸூர்யபகவான் திரும்பிவிட்டார். நான்படுத்து ஐம்பத்தெட்டுத் தினங்கள் இன்றையோடு சென்றுபோயின. கூரான முனைகளையுடைய பாணங்களின்மேல் இருப்பதனால் இவை நூறு வருஷங்கள்போலிருக்கின்றன. யுதிஷ்டிர! புண்ணியமான மாகமாஸம் இப்போது வந்திருக்கிறது. இதில் [1]மூன்றுபாகம் மிச்சமிருக்கும். இது சுக்லபக்ஷமாயிருக்கவேண்டும்'' என்றார். பீஷ்மர் தர்மபுத்திரரான யுதிஷ்டிரருக்கு இவ்வாறுசொன்னபின், தம்முடிவுக்காலத்தில் திருதராஷ்டிரனை அழைத்துப் பேசலானார். "ராஜனே! நீ தர்மங்கள் தெரிந்தவன்; ராஜ்யகார்யங்களில் ஸந்தேகமில்லாமல் தெளிந்தவன். கல்வியிற்சிறந்த பிராம்மணர்கள் அனேகர்களை நீ பணிந்தாய். ராஜனே! நுட்பமான சாஸ்திரங்களையும் தர்மங்களையும் ஆறு அங்கங்களோடுகூடிய நான்குவேதங்களையும் அறிந்திருக்கிறாய். கௌரவனே! விசனப்படவேண்டாம். அது அப்படி நடக்கவேண்டிற்று. வ்யாஸரிடத்திலிருந்து தேவரகஸ்யத்தையும் நீ கேட்டிருக்கிறாய். ராஜனே! பாண்டவர்கள் பாண்டுவுக்கு எப்படியோ அப்படியே உனக்கும் நியாயமாகப் புத்திரர்களாகிறார்கள். பெரியோருக்குப் பணிசெய்வதில் விருப்பமுள்ள அவர்களை, நீ, தர்மமாகநடந்து காப்பாற்று. தர்மராஜன் பரிசுத்தமான மனமுள்ளவனன்றோ? அவன் உன்கட்டளையில் நிற்பான். அவன் பிறருக்குத் தீங்குசெய்யாமையை முதன்மையாகக் கொண்டவனென்றும் பெரியோர்களிடம் பக்தியுள்ளவனென்றும் எனக்குத் தெரியும். உன்பிள்ளைகள் கெட்டமனமுள்ளவர்கள்; கோபமும் பொருளாசையும் மேற்கொண்டவர்கள்; பொறாமையால்மூடப்பட்டவர்கள்; ஒழுக்

[1] பீஷ்மர் ஸ்வர்க்கம்புக்கது சுக்லபக்ஷம் அஷ்டமி.

கங்கெட்டவர்கள். அவர்களைப்பற்றி நீ விசனப்படத்தகாது" என்றார். அவர், புத்திசாலியான திருதராஷ்டிரனுக்கு இவ்வாறுசொன்ன பிறகு,மகாவீரரான கண்ணபிரானைப் பார்த்துச்சொல்லலானார். "பகவானே! தேவஸ்ரேஷ்டர்களுக்கும் ஈஸ்வரரே! தேவர்களாலும்அஸுரர்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவரே! திரிவிக்கிரமரே! சங்கசக்ரகதாதரரே! உம்மைநமஸ்கரிக்கிறேன். பொன்னுருவமுள்ளவரும் தேகங்களினுள்ளிருப்பவரும் உலகத்தைப்படைப்பவரும் விராட்புருஷரும் தமக்குத் தாமே ஒப்பானவரும் எக்காலமும் அழியாத பரமாத்மாவும் விஷ்ணுவுமாகியநீர் மனிதராகப்பிறந்திருக்கிறீர். தாமரைக்கண்ணரே! புருஷோத்தமரே! எக்காலமும் உம்மிடத்தில் பக்தியுள்ளவனும் நீரே கதியாயிருப்பவனும் ஆசையற்றுப் பற்றுக்களைவிட்டு உயர்ந்திருப்பவனுமாகிய என்னைக் காப்பாற்றும். கிருஷ்ண! வைகுண்டரே! புருஷோத்தமரே! எனக்கு விடைகொடும். உம்மையே முக்கியமான தஞ்சமாகக்கொண்டபாண்டவர்களை நீர் காப்பாற்றக்கடவீர். கெடுமதியுள்ளவனும் அறிவில்லாதவனுமான துர்யோதனனுக்கு அப்போதே, 'புத்ரனே! வாஸுதேவர் எங்குஇருக்கிறாரோ அங்கே தர்மமிருக்கும். தர்மம் எங்கிருக்கிறதோ அங்கே ஜயமிருக்கும். வாஸுதேவரையே இழியுந்துறையாகக்கொண்டு பாண்டவர்களுடன் ஸந்தி செய்துகொள். உனக்கு ஸந்திசெய்துகொள்ள இது நல்ல தருணம்' என்று பலமுறை சொன்னேன். சிறிதும் புத்தியில்லாதஅந்தமூடன் நான்சொன்னதைச் செய்யாமற்போனான்; பூமியையெல்லாம்ஒழித்துத் தானும் அழிந்தான். தேவரே! நீர் ஆதிதேவதை. நரனுடன் பதரிகாஸ்ரமத்தில் வெகுகாலம்வஸித்தரிஷிஸ்ரேஷ்டரானநாராயணரென்று நானறிவேன். நாரதரும், மிகச்சிறந்ததவமுள்ள வ்யாஸரும், 'இவர்களிருவரும் நரநாராயணர்கள்; மனிதரிற்பிறந்திருக்கிறார்கள்' என்று எனக்குச் சொன்னார்கள். கிருஷ்ண! அப்படிப்பட்டநீர் எனக்கு விடைகொடும்.தேகத்தைவிடப்போகிறேன்.உம்மாலனுப்பப்பட்டு நான் உயர்ந்தகதியை அடையக்கடவேன்" என்றார்.

வாஸுதேவர், "பீஷ்மரே! வேந்தரே! உமக்கு அநுமதிகொடுக்கிறேன். நீர்வஸுக்களையடையக்கடவீர். உமக்குப் பாவமொன்றுமில்லை. பரிசுத்தாத்மாவானநீர் உம்முடையவஸுலோகத்தின்ஐஸ்வர்யத்தை அடைந்திருக்கிறீர். ராஜரிஷியே! நீர் இரண்டாவதுமார்க்கண்டேயர்போலத் தந்தையினிடம் பக்திவைத்திருக்கிறீர். அதனால், யமன் சேவகன்போல வணங்கி உமதுஸ்வாதீனத்திலிருக்கிறான்" என்றுசொன்னார். கிருஷ்ணனால் இவ்வாறுசொல்லப்பட்ட

பீஷ்மர் பாண்டவர்களையும் திருதராஷ்டிரன்முதலானவேண்டினவர்க ளெல்லாரையும்பார்த்து, "நான் உயிரை விடப்போகிறேன். அதற்கு நீங்கள் அநுமதிகொடுக்கவேண்டும். நீங்கள் ஸத்யத்திற்கே முயல வேண்டும். ஸத்யந்தான் சிறந்தபலம். எப்போதும்மனத்தையடக் கித் தயையை முக்கியமாகக்கொண்டிருக்கவேண்டும். பாரதர்களே! பிராம்மணர்களிடத்தில் அன்புவைத்துத் தர்மத்தையும் தவத்தையும் ஒருபோதும் விடாமலிருக்கவேண்டும்" என்றுசொன்னார். ஜனமே ஜயராஜரே! புத்திமானான பீஷ்மர் இவ்வாறுசொல்லி. வேண்டினவர்க ளெல்லாரையும்பூஜித்துப்பிராம்மணர்களுக்கு அநேகவிதமான தனங் களைக்கொடுத்துத் தர்மராஜரைநோக்கி, "ராஜனே! நீ பிராம்மணர் களையும் முக்கியமாகஅறிஞர்களையும் ஆசார்யர்களையும் ரித்விக்குக்களை யும் எப்போதும் பூஜிக்கவேண்டும்" என்றுசொன்னார்.

---

## இருநூற்றேழுபத்துநான்காவது அத்யாயம்.

## பீஷ்மஸ்வர்க்காரோஹணபர்வம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர்ஸ்வர்க்கம்சென்றதும்,அவர் உத்தரக்ரியைகளும், கங்கைபுலம்பியதும், க்ருஷ்ணர்தேற்றியதும்.)

வீரரானஜனமேஜயரே! கௌரவரும் சந்தனுபுத்ரருமானபீஷ் மர் கௌரவர்களெல்லாருக்கும் இவ்வாறுசொல்லிச் சற்றுநேரம் பேசாமலிருந்தார்; கிரமப்படி த்யானத்தில் மனத்தைநிறுத்தினார். மகாத்மாவின் அடக்கப்பட்டமூச்சு மேலநோக்கிச்சென்றது. பிர புவே! வ்யாஸர்முதலானரிஷிகளுடன்சேர்ந்த அந்தமகாத்மாக்களின் நடுவில் அது ஓர் ஆச்சரியமாயிருந்தது. த்யானத்திலிருந்த பீஷ்மர் எந்தஎந்தஅவயவத்தை முறையேவிட்டாரோ அந்தஅந்த அவயவங்க ளில் அம்புகளில்லாமற்போயின. அவர்கள்பார்த்திருக்கும்போதே ஒருநொடியில் அவருக்குப் பாணங்களே இல்லாமற்போயின. ராஜரே! வ்யாஸர்முதலான ரிஷிகளனைவரும் வாஸுதேவர்முதலானவர்களும் அதைக்கண்டு ஆச்சரியமடைந்தனர். அவரால் எல்லாஇடங்களிலும் அடக்கப்பட்ட பிராணனானது தலையைப்பிளந்துகொண்டு சென் றது. அவருடைய ஆத்மா ஸ்வர்க்கத்திற்குக் கிளம்பிற்று; தேவதுந் துபிகள் முழங்கின; பூமாரிபெய்தது. ஸித்தர்களும் பிரம்மரிஷிகளும் மகிழ்ந்து, 'நல்லது! நல்லது' என்றுகூறினர். ராஜரே! பெரியஅக்னி ஜ்வாலைபோன்றதோர்ஒளி பீஷ்மர்தலையிலிருந்துபுறப்பட்டு ஆகாயத்தில்

பிரவேசித்து ஒருநொடியில் மறைந்தது ஜ்யேஷ்டரோ சந்தநு புத்திரரும் பரதவம்சத்தில்சிறந்தவரும் அரசருமான அந்தபீஷ்மர் இவ்வாறு தமதுவஸுலோகத்திற்சேர்ந்தார். கௌரவரே! அதன் பிறகு, மகாத்மாக்களானபாண்டவர்களும் விதுரரும் யுயுத்ஸுவும் பலசந்தனக்கட்டைகளையும் பலவிதவாஸனைகளையும் கொண்டுவந்து சிதைசெய்தார்கள்; மற்றவர்கள் பார்த்துக்கொண்டிருந்தனர். யுதிஷ்டிரரும் திருதராஷ்டிரனும் அழுதுகொண்டு பட்டுக்களாலும் பூமாலைகளாலும் கௌரவராஜபீஷ்மரை மூடினர். யுயுத்ஸு அவருக்கு உயர்ந்தகுடைபிடித்தான். பீமஸேனன் அர்ஜுனன் இருவரும் இரண்டுவெண்சாமரங்கள் வீசினர்; நகுலஸகதேவர்கள் இருவரும் கிரீடம்வைத்தனர்; திருதராஷ்டிரன் யுதிஷ்டிரரோடுசேர்ந்து காலண்டையிருந்தான். பிராயமுதிர்ந்தகௌரவஸ்திரீகள் குருவம்சத்திற்கு ஶ்ரேஷ்டரான பீஷ்மருக்கு நாலுபக்கங்களிலும் விசிறிகளையெடுத்துக்கொண்டு விசிறினர். அதன்பிறகு, அந்தமகாத்மாவுக்குப் பித்ருமேதமென்னும் ஸம்ஸ்காரத்தைச் சாஸ்திரப்படிசெய்தனர். ரித்விக்குக்கள் அக்கியில் ஹோமம்செய்தனர். ஸாமகர்கள் ஸாமங்களைப் பாடினர். பிறகு, சந்தனக்கட்டைகளாலும் மரமஞ்சளாலும் காரகில்முதலான கட்டைகளாலும் பலவாஸனைகளாலும் பீஷ்மரை மறைத்துத் தீமூட்டித் திருதராஷ்டிரன்முதலானவர்கள் அந்தச்சிதையை அபஸவ்யமாகச்சுற்றினர். கௌரவஶ்ரேஷ்டர்கள் கௌரவஶ்ரேஷ்டரானபீஷ்மருக்கு ஸம்ஸ்காரம்செய்து, வ்யாஸரும் நாரதரும் அஸிதரும் வாஸுதேவரும் பரதவம்சத்துஸ்திரீகளும் வந்திருந்தபட்டணத்துஜனங்களும் பின்செல்ல, ரிஷிகளால் அடையப்பட்டதும் புண்ணியமுமானகங்கைக்குச் சென்றனர். அந்தக்ஷத்திரியஶ்ரேஷ்டர்களனைவரும் அந்த ஜனங்களெல்லாரும் மகாத்மாவானபீஷ்மருக்கு விதிப்படி ஜலதர்ப்பணம்செய்தனர். அப்போது, கங்காதேவியானவள் தன்பிள்ளைக்குஜலம் விட்டவுடன், துயரந்தாங்காமல் அந்தஜலத்திலிருந்துஎழுந்து அழுது புலம்பிக்கொண்டு கௌரவர்களைப்பார்த்துச் சொல்லலானாள். 'அரசர்களே! நான் நடந்தபடி சொல்வதைக் கேளுங்கள். இவன் அரசஒழுக்கத்திலும் அறிவிலும் குலத்திலும் சிறந்தவன்; கௌரவவம்சத்துப் பெரியோர்களைப் பூஜிப்பவன்; பித்ருபக்தியுள்ளவன்; எடுத்தவிரதத்தை விடாதவன்; பரசுராமர் முற்காலத்தில் சிறந்த அஸ்த்ரங்களைப் பிரயோகித்தும்வெல்லமுடியாதமகாவீரன். அவன் இப்போதுசிகண்டியினால் கொல்லப்பட்டான். அரசர்களே! என்மனம் எஃகினாற்செய்யப்பட்டிருக்கிறது; திண்ணம். என் அன்புள்ளபுத்திரனைப்பாரமம

ருந்தும் அது வெடித்துப்போகவில்லையே. காசிப்பட்டணத்தில் வயம்வரத்திற்காகச்சேர்ந்திருந்த க்ஷத்திரியஜாதியான அரசர்களை வன் ஒருதேராளியாகி யுத்தத்தில் ஜயித்துக் கன்னிகைகளைக் கொண்டுவந்தான். பலத்தில் இவனுக்குச்சரியானவன் பூமிமுழுமை லும் எவனுமில்லை. அவன் சிகண்டியினுல்கொல்லப்பட்டதைக் கட்டும் என்மனம் வெடிக்கவில்லையே. இந்தமகாத்மாவினுல் பரசு ராமர் குருக்ஷேத்திரத்தில் அதிகப்பிரயாஸமில்லாமலே யுத்தத்தில் பீடிக்கப்பட்டார். அவன் இப்பொழுது சிகண்டியினுல் கொல்லப்பட் டான்' என்ருள். அப்போது, இவ்வாறு மிகுதியாகப்புலம்பும் அம் பிகாநதியைப் பிரபுவான வாஸுதேவர் இன்சொல்லினுல் தேற்றிஞர். சிறந்தவளே! தைரியப்படுத்திக்கொள். காட்சிக்கினியவளே! பயரப்படாதே. உன்னுடையஅந்தச்சிறந்தபுத்திரர் மேலானஉலகத் திற்குப் போனுர். ஸந்தேகமில்லை. சிறந்தவளே! மிகுந்தபராக்கிரம சாலியான அவர் வஸுவாயிருப்பவர்; சாபதோஷத்தினுல் மானிட ஜன்மத்தையடைந்தவர். அவரைப்பற்றி நீ துயரப்படவேண்டாம். தேவியே! அவர் க்ஷத்திரியதர்மத்தைப்பற்றிப் போர்க்களத்தில் யுத்தம்செய்து தனஞ்சயனுல் கொல்லப்பட்டார்; சிகண்டியினுல் கொல்லப்படவில்லை. பெரும்போரில் பாணத்தையெடுத்துக்கொண் டிருக்கும் கௌரவப்புலியான பீஷ்மரையடிப்பதற்குத் தேவேந் திரனே நேரில் வந்தாலும் முடியாது. அழகியமுகமுள்ளவளே! உன் புதல்வர் தம்மிச்சையினுல ஸ்வர்க்கம்சென்ருர். எல்லாத்தேவர்களும் சேர்ந்தாலும் யுத்தத்தில் அவரைக்கொல்லமுடியாதன்ருே! நதிகளிற் சிறந்தவளே! ஆதலால், அந்தக் கௌரவஸ்ரேஷ்டரைப்பற்றி நீ துயரப்படாதே. தேவியே! உன்னுடைய இந்தப்புத்திரர் வஸுக்களைச் சேர்ந்து விட்டார். துயரமற்றிரு' என்ருர்.

மகாராஜரே! கிருஷ்ணனுலும் வ்யாஸராலும் இவ்வாறு சொல் லப்பட்ட அந்தக் கங்காதேவி துயரத்தைவிட்டுத் தன்ஜலத்திற்குள் இறங்கினுள். அரசரே! அந்தவாஸுதேவர்முதலான அரசரனைவரும் அந்தக்கங்காதேவியைப் பூஜித்து அவளால் விடைகொடுக்கப்பெற் றுத் திரும்பிச்சென்றனர்" என்ருர்.

பீஷ்மஸ்வர்க்காரோஹணபர்வம் முற்றிற்று.

---

அநுசாஸனபர்வம் முற்றிற்று.